# சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்

## தொகுதி ஒன்று



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

# சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம்

## தொகுதி – 1




## அ – ஔ

*முதன்மைப் பதிப்பாசிரியர்*


முனைவர் இரா. சாரங்கபாணி
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.
சிறப்பு நிலைப் பேராசிரியர் & தலைவர்
இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.





தமிழ்ப் பல்கலைக் கழகம்
தஞ்சாவூர்

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 52-1

திருவள்ளுவராண்டு 2032 மாசி - மார்ச்சு 2001

| | | |
|---|---|---|
| நூல் | : | சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் தொகுதி ஒன்று |
| பதிப்பாசிரியர் | : | முனைவர் இரா. சாரங்கபாணி |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | களஞ்சியம் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு 1986<br>மறுபதிப்பு 2001 |
| பக்கம் | : | 580 |
| தாள் | : | டிஎன்பிஎல் எக்ஸ் எல் மேப்லித்தோ |
| அளவு | : | 1/4 டெம்மி |
| நூற்கட்டுமானம் | : | காலிகோ |
| விலை | : | உரு. 400/- |
| படிகள் | : | 500 |
| அச்சு | : | தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம், தஞ்சாவூர். |

தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்

*முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியனார் அவர்களின்*

# முன்னுரை

சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் என்ற இந்தத் தொகுப்பு நூலின் ஒரு பகுதி சித்திரைத் திங்கள் முதல் கிழமை வெளியாகிறது.

கிரேக்க இலக்கிய ஆய்வு, தொகுப்பு நூல்களால் வலுப்பெற்றது. வேதகால சமத்கிருத ஆய்வும் புளூம்பீல்டு, பி.வி.கானே முதலியவர்கள் தொகுத்த நூல்களால், திட்டமும் வரையறையும் பெற்றது. தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் தமிழ்மொழிக்கு வாய்த்த இரு கண்கள். அவற்றின் படிப்பு பெருகிட வேண்டும்; அழுத்தம் பெற வேண்டும். சங்க இலக்கியச் சொலலடைவுகள் பல, பல்கலைக் கழகங்களில் உருவாகி விட்டன. பாண்டிச்சேரி பிரஞ்சு இந்தியக் கழகம் ஒன்றை வெளியிட்டும் இருக்கிறது. கேரளப் பல்கலைக் கழகம் புறநானூறு, சிலப்பதிகாரம், அகநானூறு ஆகியவற்றை வெளியிட்டுள்ளது. எனவே பொருளடிப்படையில் களஞ்சியம் ஒன்றைத் தொகுத்தால் உள்நாட்டு ஆய்வாளர்களும் பிற நாட்டு ஆய்வாளர்களும் பயன்பெறுவர் என்ற உந்தலால் இந்தத் திட்டம் தமிழத்துறையில் செயற்படுத்தப்பட்டது.

தொகுப்புப் பணியில் பழக்கமுடைய பேராசிரியர் இரா. சாரங்கபாணி இந்தப் பொறுபபை 1982, மே மாதம் ஏற்றார். பல மணி நேரம் இதன் அமைப்புமுறை விவாதிக்கப்பட்டது. வல்லுநர் குழுக்கள் மூன்று முறை கூடிப் பொருள் நிரல், சானறுதரும் சங்க நூல் பட்டியலை வகை செய்தல் முதலியவற்றைப் பற்றி விவாதித்தன. கருத்தரங்கு ஒன்றும் இது பற்றி நடந்தது. அதன் கட்டுரைகளும் வெளியாகியுள்ளன.

பொருளைத் திரட்டுதற்குக் கொள்கை வரைவொன்றை வரையறை செய்ய முயற்சி நடந்தது. பெயர்ச் சொல்லடிப்படையின் செய்தியைத்

தொகுத்தல் என்பது முதற்படி. அதனை அடுத்து, குறிப்புப்பெயர், தொழிற்பெயர், வினையாலணையும் பெயர் ஆகியவையும் சேர்க்கப் பட்டன. செய்யுட் செய்தி, உரையாசிரியர் தந்துள்ள செயதி, பதிப்பாசிரி யர் குறித்துள்ள செய்தி என்று வேறுபாடு செயது சேர்க்கப்பட்டுத் தனித் தனி எழுத்து வடிவில் பதித்திட முயற்சி மேறகொள்ளப்பட்டது. பெரும் பாலும் இந்தக் கொள்கை வரைவு இத்தொகுப்பில் பின்பற்றப்பட்டுளது.

எந்தத் தொகுப்பிலும் செய்திகள் முழுமையாக இருக்க வேண்டும்; நம்பகமாக இருந்திட வேண்டும; நூற்சான்று தந்திட வேணடும். குறிட் பாக இம்மூன்று கூறுகளையும் இந்தக் களஞ்சியம் மேற்கொண்டுளது.

இக் களஞ்சியத்தைப் பல தொகுதிகளாக வெளியிட்ட பின ஆங்கிலத்திற் பொருளும், சான்றுகளை எழுத்துப் பெயர்ப்பிலும் கொடுத்தால் இரண்டாயிரமாண்டிற்குக் குறையாத காலப் பழமையுடைய சங்க இலக்கியங்கள் உலக இலக்கிய வரிசையில் மதிப்பும் உயரிடமும் பெறுதற்குத் துணை செய்யும்

குறித்த காலவரம்பில் நூற்கள் வெளியிட்டு ஆய்வைத் தூண்டித் துணை நிற்க வேண்டும் என்ற உறுதிப்பாட்டை இப்போது தான் என் இளவல்கள் உணர முற்பட்டுள்ளனர். முதல் தொகுதி சற்றுக் காலதாமத மாகி விட்டது. பிற தொகுதிகள் விரைவில் வெளிவருதற்கு வழியமைக்கப் பட்டுளது.

இந்தத் திட்டத்தில் முனைந்துழைத்த பேரா. இரா. சாரங்கபாணி, துணைநின்ற புலவர் சி. செல்வத்தாண்டவன், வ. குருநாதன், நா. செல்வ ராசு முதலியவர்களுக்கு நான் நன்றி தெரிவிக்க வேண்டும்.

இத் தொகுப்பு நூல் அறிஞர் முன்னிலையில் சித்திரை நன்னாளில் படைக்கப்படுவதை வரவேற்கிறேன்.

தஞ்சாவூர்
4 — 4 — 86

வ. அய். சுப்பிரமணியம்

# பதிப்பு முகவுரை

சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம் என்பது ஒரு குறிப்பிட்ட கால இலக்கியக் களஞ்சியம் ஆகும். இஃது ஏறத்தாழ கி. மு. ஒன்றிரண்டு நூற்றாண்டுக்கு முன்னரும் கி. பி. ஓரிரு நூற்றாணடுக்குப் பின்னரும் எனக் கருதப்பெறும் சங்கப பாடல்களின தொகுப்பான பத்துப்பாட்டு, எட்டுததொகை என்னும் சங்க இலக்கியங்களிலுள்ள செய்திகளைத் தருவது.

பணடைச் சங்க இலக்கியக்கலவி, ஆயவுவளமும் திட்பமும் பெறச் சங்க இலககியம் குறித்த சொல்லடைவு பொருளடைவு முதலிய கருவி நூல்கள இன்றியமையாதன. பேராசிரி யர் பி. வி. கானே செய்த அறநூல்களின் வரலாறும் ஒசியாப்பூர் வடமொழி நிறுவனமும் மாரீசு புளூம் பீல்டும் வெளியீடு செய்த சொல்லடைவும் வேத மந்திர மாற்றுருவ அடைவும முதலான கருவி நூல்கள பழைய வடமொழிக்கல்வி திட்பம் பெற உதவியுள்ளன. இவ்வகை யில் பொருள்களின் செயதிகளை விளக்கமாக அறியத் தமிழிலும் அறிஞர் பெருமக்கள் நூல களை வெளியிட முன்வந்தனர். 1910 –ஆம் ஆண்டில் தோனறிய அபிதான சிந்தாமணி தமி ழில் எழுந்த முதல் கலைக்களஞ்சியம் என்று கருதுவோரு முளர். தமிழ வளர்ச்சிக் கழகம் கலைக்களஞ்சியத்தைப் பத்துத் தொகுதிகளாக 1954 – இல வெளியிட்டது. 1958 - இல மர்ரே பதிப்பாளா வெளியிட்ட பாட்டும் தொகையும் என்னும நூல் புலவர் அகரவரிசை, பாடப் படடோர் பெயர் அகர வரிசை, சொல்-தொடர் விளக்க அகர வரிசை ஆகிய அடைவினைத் தனனகத்தே கொணடது. 1965-இல் சங்க இலககியத்திற்கு அகர முதல் ஔகார இறுவாயுள்ள உயிர் எழுததுககளுக்கு மட்டும் சொல்லடைவு ஒன்றை முதுமுனைவர் ச தணடபாணிதேசிகர் வெளியிட்டுள்ளார். முனைவர் ந. சுப்பிரமணியன (Pre-Pallavan Tamil Index) 1966 - இல வெளியிட்டுள்ளார். பாண்டிசசேரி பிரெஞ்சு இந்தியப் பணபாடடுக் கழகம் தொல்காப்பியத் திலிருந்து பதினெணகீழ்க்கணக்கு வரையுள்ள நூல்களுக்கு 1967 - இல் சொல்லடைவொன றினை வெளியீடு செயதுள்ளது. அணணாமலைப் பல்கலைக் கழகத்தில் சங்க இலக்கியச் சிறப்புப பெயர் அகராதி ஒன்று கையெழுத்துப் படிநிலையில் உள்ளது. அது சங்க இலககி யச் சிறப்புப பெயர்களை மட்டும் தந்து அவற்றின் தொடர்பான பாடலடிகளை மட்டும் குறிததுளளது. அபபல்கலைக் கழகம் புலவர் வரலாறுகளைத் தொகுத்துத் தமிழப் புலவர் வரலாற்றுக்களஞசியம முதல பகுதியை 1974-இல வெளியிடடுளளது. முதுமுனைவர் வ. அய. சுப்பிரமணியமும் முனைவர் ச. அகத்தியலிஙகமும் முனைவர் ச. வே. சுப்பிர மணியமும் கேரளப் பல்கலைக் கழக ஆய்வாளர் கிருட்டினாம்பாளும் பேராசிரியர் மு. இளையபெருமாளும் முறையே புறநானூறு, பதிற்றுப்பத்து, அகநானூறு, குறுந் தொகை, ஐங்குறுநூறு நூல்களுக்கு ஆய்வுக்குப் பயன்பெறும் முறையில் சொல்லடைவு வெளி யிட்டுள்ளனர். பிற சங்க நூல்களுக்கும் சொலலடைவுகள் வெளிவராத கையெழுத்துப் படி களாக உள்ளன. முனைவர் உ. வே. சா. பதிப்பித்த சங்க இலக்கியங்களில் பாடினோர் வரலாறு, பாடப்பட்டோர் வரலாறு, விலங்கு, பறவை, மலை, அணி, தெய்வம் முதலிய தலைப்பில செய்திகள் தொகுத்தளிக்கப் பெற்றுளளன. புலவர் கா. கோவிந்தன சங்கத

தமிழ்ப் புலவர் வரிசை, சங்ககால அரசர் வரிசை என்ற வகையில் நூல்கள் வெளியிட்டுள்ளார். திரு. பி. எல். சாமி சங்க இலக்கியத்தில செடி கொடி விளக்கம், சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம் என்ற வகையில் நூல் வெளியிட்டுள்ளார். விததுவான் செ. வேங்கடராமச் செட்டியார் பழந்தமிழ் நூல்களில் உயிர் வகைகள என்னும நூலையும் கவிஞர் கோ. கோவை இளஞ்சேரன் இலக்கியம் ஒரு பூக்காடு என்னும் நூலையும் வெளியீடு செய்துள்ளனர். இவையெல்லாம் சங்க இலக்கியப் பொருட் களஞ்சியத்திற்குத் துணை நின்றன. ஆகவே இவற்றின் ஆசிரியர்க்கு நன்றி.

பேராசிரியர் பி. வி. கானே செயத அறநூல்களின் வரலாறும் ஒசயாப்பூர் வடமொழி நிறுவனமும் மாரிசு புளும் பீல்டும் வெளியீடு செய்த சொலலடைவும் வேத மந்திர மாற்றுருவ அடைவும் முதலான கருவி நூல்கள முற்கூறியாங்கு, பழைய வடமொழிக் கலவி திட்டம் பெற உதவியது போலச் சங்க இலக்கியக கலவி திட்டம் பெறவும் சங்க இலக்கிய அறிவு பலரிடம் பரவவும் சங்க இலககியத தொடர்பாய ஆய்வு நூல்கள் மேலும் பல எழவும் வாய்ப்பாக இருக்கும என்னும் சீரியநோககில் சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் உருவாக்கத் திட்டமிட்டு, அப்பணியினைத் தமிழ்ப் பல்கலைக் கழகம், இலக்கியததுறைக்கு அளித்தது.

**இக்களஞ்சிய உருவாக்கத்திற்கு மேற்கொண்ட நெறிமுறைகள்:**

1 இக்களஞ்சியத்திற்காக முதற்கண் பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளையின் சங்க இலககியப் பதிபபை அடிப்படையாகக் கொண்டு பத்துப்பாட்டு, எட்டுததொகையிலுள்ள 2381 பாக்களுக்குப் பொருட் குறிபபட்டைகள் உருவாக்கப் பெற்றன.

2. பொருளை உணர்த்துவதில் பெயர்ச் சொற்களே பெரும்பாலும் முதன்மை பெறுதலின், சங்க நூலகளிலுள்ள பெயர்ச சொற்கள் அகர வரிசைப்படி முறையாகத் தொகுக்கப்பெற்றன. பொருள, இடம், காலம், சினை, பண்பு, தொழில் என்னும் அறுவகைப் பெயர்களுள் முதலன நான்கும செய்தி விளக்கத்திற்குத் துணை நிற்றலின், அவை பெரிதும் தேர்ந்தெடுக்கப பெற்றன. பணபுப்பெயர், தொழிற்பெயர்களுள அறம், பண்பாடு, நாகரிகம் முதலியவற்றைப் புலபபடுத்தும் பெயாகளே இடம் பெற்றுள்ளன. சானறாக, இனிமை, ஆற்றுதல் முதலிய சொற்களைக் கொள்ளலாம். பொருளுக்கு விளக்கமாக அமையும் சில வினையாலணையும் பெயரும் எடுத்துக் கொள்ளப்பட்டன. சானறு: அறிவோர், ஈன்றோள். குறிப்பு வினையின் பகுதியாக வரும் சில பெயர்கள் ஒரோவழி, செய்தியினைத் தருதலின் அவையும் இடம பெற்றன. காட்டு. ஊர், யாணர். பெயரெசச வினையெச்சங்கள், முற்றுக்கள் ஆகிய சொல் வடிவஙகள் பெரிதும் செய்திகள் தராத காரணத்தால இடம் பெறவில்லை.

3. சொற்பொருள் மட்டும் தரும் வகையில் ஆட்சி பெற்ற எச்சொல்லும் களஞ்சியத்தில் இடம் பெறவில்லை. சங்க இலக்கியங்களில் வரும் அனைத்துச் சொல்லையும் அகர வரிசைப்படுத்திப் பொருள் கூறுவது சொல்லடைவாக அமையுமாதலின் அம்முறை இங்குப் பினபற்றப் பெறவில்லை.

4. விளக்கத்திற்குத் தேர்ந்தெடுத்த பெயர்கள் அடையொடு அமைந்தனவாயின் அடைகளை நீக்கித் தனிச்சொல்லே கொள்ளப் பெற்றன. அடையிலமையும் பொருட் சிறப்புக்கள் அப்பெயர் விளக்கத்தில் புலப்படுத்தப்பெறும்.

5. அடைமொழிகள் சேர்ந்து வரும் சொற்கள் அவையின்றியே பெயர் விளக்கத்திற்கு மேற்கொள்ளப் பெற்றுள்ளமையால் அடையொடு சேர்ந்த சொற்களின் விளக்கத்தை

அடைநீங்கிய சொற்களிலேயே காணலாம். காட்டாக, ஆடவர் என்ற சொல்விளக்கத் திலே( ) கண்மாறாடவர், கொடுவில் ஆடவர், செங்கண் ஆடவர், வன்கண் ஆடவர் போன்றவற்றின் விளக்கமும் இடம்பெறும்.

6. அடைமொழிகள் இடையிட்ட அரிய தொடர்மொழிப் பெயர்களைக் காட்டும் போது அடைமொழிகளை விடுத்து வேண்டிய அளவில் பெயர் அமைக்கப்பெறும். சான்றாக, 'காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப், பூவிரி கச்சைப் புகழோன் தம்முன்' என்ற தொடர்முழுதும் நின்று வீமனைக் குறிக்கின்றது. இப்பெயரையமைக்கையில் நீண்ட இம்முழுத்தொடர் வேண்டாமையால் இடைப்பட்ட அடைமொழிகள் விடப்பட்டுச் சுருக்கமாகக் காவெரியூட்டிய ... புகழோன் தம்முன்' எனக் கொள்ளப்பெற்றது.

7. மரபுப் பொருள் உணர்த்தும் அறைபோதல், அடிதொடுதல், ஊர்கொளல் போன்றவை தொடர் மொழிகளாகவே எடுத்தாளப் பெறுகின்றன.

8. பெயர்ச் சொற்களை அடிப்படையாக வைத்து அகர வரிசைப்படி விளக்கம் எழுதுவ தால் ஒரு பொருளைத் தரும் பல பெயரும் ஓரிடத்தே இடம் பெறா எடுத்துக்காட் டாக, அசோகம், செயலை, பிண்டி என்னும் ஒருபொருள் குறிக்கும் பல பெயர்கள், இக்களஞ்சியத்தில் அகர வரிசைப்படியே குறிக்கப்பெறும். சங்க இலக்கியத்திற் காணப்பெறும் அசோகம் பற்றிய எல்லாச் செய்தியையும் ஒருவர் அறிய விழைந்தால், அப்பொருள் தரும் பல பெயர்களையும் அகர வரிசைமுறையிற் காண வேண்டும். பல வேறிடங்களில் வரும் அப்பெயரின்கீழ் ஒத்த பிற பெயர்களைக் காணக எனவும் குறிப்பிருக்கும். அசோகம் பற்றிய பரியாயப் பெயர்களும் அவை வரும் பக்கங்களும் பின்னிணைப்பில் பின்னர்க் குறிக்கப்பெறும்.

9. புறநானூற்றுப் பாடல்களுக்கு அடியிற் காணப் பெறும் திணை துறை நிகழ்ச்சிகள் பற்றிய விளக்கக் குறிப்பு, பதிற்றுப்பத்துப் பதிகம், பதிகத்தின் கீழ் வரும் உரைக் குறிப்பு, பத்துப்பாட்டின் இறுதியில் காணப்பெறும் வெண்பாக்கள், பதிற்றுப்பத்து, ஐங்குறுநூறு, பரிபாடல் இவற்றில் காணப்பெறும் திரட்டுப் பாடல்கள் ஆகியவையும் களஞ்சிய விளக்கத்திற்கு மேற்கொள்ளப பெறுகின்றன. புறநானூற்று அடிக்குறிப்பு இல்லையெனின் சில நிகழ்ச்சிகளும் மன்னர் பெயரும் அறிய வாய்ப்பில்லாது போயி ருக்கும். சங்கப்பாடல்களைத் தொகுத்தவரோ பிறரோ அக்குறிப்புக்களை எழுதி யிருப்பினும் அவற்றைப் புறக்கணிக்க இயலாது. 'இயல்தேர்ச் சென்னி' (புறம். 61:13) என்றவிடத்துச் சென்னி எச் சோழனைக் குறிக்கிறது என்பது அறிய முடியவில்லை. அடிக்குறிப்பால்தான் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி என்று அறிய முடிகிறது. புறம். 80-ஆம் பாடலுக்குத் துறைக்குறிப்பு இல்லையெனில் போர் யார் யாருக்கு நிகழ்ந்தது என்பது தெரியாமற் போயிருக்கும். அக்குறிப்பினால் தான் சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளிக்கும் முக்காவனாட்டு ஆமூர் மல்ல னுக்கும் அப்போர் நிகழ்ந்தமை தெரிகிறது. ஆதலினால்தான், அடிக்குறிப்புக்களையும் பாடல் போல மதித்து அவற்றிற் காணப் பெறும் பெயர்களையும் விளக்கத்திற்கு எடுத்துக் கொண்டுள்ளோம். அதியமான் நெடுமானஞ்சி என்னும் பெயர் பாட்டுக் குள் வரவில்லை. அடிக் குறிப்பில்தான் வருகிறது. எனவே அதியமான் நெடுமானஞ்சி என்னும் பெயர் எடுத்துக்கொள்ளப்பட்டது. களஞ்சியத்தில் வரும் பெயர் சங்கப் பாடலில் காணப்படாவிடின் அடிக்குறிப்பு முதலியவற்றில் உள்ளது என்று கொள்ள வேண்டும்.

10. சங்கப் புலவர், அரசர் முதலியோர் பெயர்கள் களஞ்சியத்தில் அகர வரிசை முறையில் இடம்பெறும்.

11. பொருளுக்கு விளக்கம் எழுதும்போது புறநானூறு, பதிற்றுப்பத்து, முருகாற்றுப் படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாறறுப்படை, முலலைப் பாட்டு, மதுரைக் காஞ்சி, நெடுநல் வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப் பாலை, மலைபடுகடாம், அகநானூறு, குறுந்தொகை, நறறிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை, பரிபாடல் என்னும் நூல் முறை பின்பற்றப்பெறும். ஒரு சில இடங் களில் நூலின் முறை பிறழ்சசி இருக்குமேல், அது கருத்துத் தொடர்பினைக் கருதிச் செய்யப்பட்டது எனக் கொள்ளல் வேண்டும்.

12. எடுத்தாளும் சொல்லுக்கு முதலில் பொருள் எழுதி அச்சொல்லின் பயிலிடங்கள் பலவற்றிற்கும் பொருள் விளக்கம் கூறுகையில், முதலாவதாக வரும் இடத்தில் மட்டும் சொல்லினை யடுத்துப் பொருளும் இடையே கொடுக்கப்படும். இம் முறை பெரிதும் பினபற்றப்பட்டுள்ளதாயினும் அணில், எலி போனற வெளிப்படையான சொற்களுக்கு வேண்டாமையால் விடுக்கப்பட்டது.

13. எடுத்த ஒரு பொருளைப் பற்றிய செய்தி தரும்போது அப்பொருளுக்குரிய சங்க இலக்கியச் சொல்லைப் பயன்படுத்துவதே இக்களஞ்சிய மரபாகும். 'ஆ' பற்றிய செய்திகளைத் தொடர்ந்து தரும்போது பசு என்ற சொல்லைப் பயன்படுத்தாமல், பாடலிற் பயின்றுவந்த 'ஆ' என்ற சொல்லே யாண்டும் பயன்படுத்தப் பெறும்.

14. பரந்த பொருளைச் சுட்டும் சொல் ஓரிடத்தில் ஒரு குறிப்பிட்ட பொருளைச் சுட்டு மேல் அபபொருள் பிறைக்குறிகளுக் கிடையே கொடுக்கப்படும். சான்றாகத் தெய் வம் என்னுமபரந்த பொருளைக் குறிககும் 'அணங்கு' என்னும் சொல் இல்லுறை தெய்வம், யாழ்த்தெய்வம், வீற்றுத்தெய்வம் ஆகியவற்றைச் சுட்டி வருமிடங்களில் அவை பிறைக்குறிகளுக்குள் அமையும்.

15. சங்க இலக்கியத்தில் பலதேவன், வீமன் முதலிய பெயர்கள் ஆட்சி பெறாமையால் அங்குப் பயின்ற 'வாலியோன்' 'வளிமகன்' முதலிய சொற்களையே பொருள் விளக்கத்தில் மேற்கொண்டு அடைப்புக் குறிகளுக்குள் அவையுணர்த்தும பெயர்கள் குறிக்கப்பெறும்.

16. பத்துப்பாட்டு, கலித்தொகை, பதிற்றுப்பத்து, பரிபாடல் ஆகிய நூல்களின் விளக் கங்கள் பெரிதும் பழைய உரையாசிரியர் கருத்துக்களைத் தழுவியே தரப்பட்டுள்ளன.

17. இலக்கியங்களில் தெளிவாகப் புலப்படுத்தப்பெறாத செய்திகளை உய்த்துணர்ந்து உரையாசிரியரோ, திறனாய்வாளரோ தெரிவித்திருப்பின் அவை பகர அடைப்புக் குறிக்குள் தரப்பெறும்.

18. சங்க இலக்கியப் பாடலின் உரைகளில் அப்பாடலொடு பொருந்தாக் குறிப்புக்களோ, விளக்கமோ காணப்படின், அவற்றை விடுத்துப் பொருந்திய விளக்கங்களே தரப்பட்டுள்ளன. புறம். 310 - ஆம் பாடலில், 'பால்கொண்டு மடுப்பவும் உண்ணான் ஆகலின், செறாஅது ஓச்சிய சிறுகோல் அஞ்சியொடு' என்னுமிடத்து வரும் அஞ்சிக்கு ஒரு குறுநில மன்னன் என உ. வே. சா. குறிப்புத் தந்துள்ளார். இச்சொல் பயின்று வருமிடத்தை நோக்கும் போது, அஞ்சி என்பதற்கு

அஞ்சுபவன் எனப் பொருள் காண்பதே இயைவதாகும். மற்று, அகநானூற்றின் 115-ஆம் பாடலிலும், 'வயமானஞ்சி' என்னும் பாடமுள்ள இடத்திற்கு 'வாமானஞ்சி' எனப் பாடங்கொண்டு அஞ்சி-வள்ளல் என்று வேங்கட விளக்கு (ந. மு. வேஙகடசாமிநாட்டார், கரநதைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை ஆகி யோர் உரை) உரைக்கும். 'யானை சினமிகு முன்பின் வாமான் அஞ்சி இனங்கொண் டொளிக்கும்' என வரும் இயைபு கருதின், யானை புலிக்கு அஞ்சித தன் இனத்திற் சென்று மறையும் என்பதே பொருந்தும். எனவே, இங்கு அஞ்சி என்பதைப் பெய ராகக் கொள்ளாது வினை எசசமாகக் கொள்வதே இயைநததாகும். ஆகவே, இக் களஞ்சியம் புறம். 310-இல வரும அஞ்சியையும் அகம். 115-இல் வரும் அஞ்சியை யும் வள்ளல் அதிகமானாக ஏற்கவில்லை. ஔவையாரால் பாடபபெற்றவரைக் குறிப் பிடுகையில் வையாபுரிப்பிள்ளை அதியமான நெடுமானஞ்சி, பொகுட்டெழினி, எழினி ஆகியோரையும் குறிப்பிட்டுள்ளார். எழினி என்ற பெயரால மூவர்குறிக்கப் பெறுவர். அவருள் நெடுமானஞ்சியும் ஒருவனாவான. எழினியை அதிகமானின் வேறாக எல்லாவிடங்களிலும் கூறுவது பொருந்தாது. எழுவள்ளல்களைத் தொகுத்துக் கூறும்போது 'ஊராதேந்திய குதிரைக் கூர்வேல, கூவிளங் கண்ணிக் கொடும் பூண எழினி' (புறம். 158 : 8, 9) எனப் பெருஞ் சித்திரனார் அதிகமான நெடுமானஞ்சியை எழினி யென்னும் பெயரால் குறிப்பர். இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் எழுவள்ளலைக் குறிப்பிடும் போது, அதிகமான நெடுமா னஞ்சியைக் 'கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி, அமிழது விளை தீங்கனி ஔவைக் கீந்த, உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ நெடுவேல், அரவக கடல தானை அதிகன்' எனச சிறுபாணாற்றுப்படையில் (100-103) குறிபபிடுகிறார். இவ்விரு புலவரும் கூறுவதை ஒப்புநோக்கிக் காணின, எழு வளளலுள ஒருவனாகிய எழினியும் அதிகனும் ஒருவனையே குறிக்கும் என்பது தெளிவு. பொருநதாக் கருத் துக்களை எடுததுக் காட்டும்போது அவை பிறைவளைவுக்குள் காட்டப்பெறும். எடுத்துக் கொண்ட பெயர்ச் சொல்லுக்குரிய பொருள் முதலில் எழுதபபெற்று அது பற்றிய செய்திகள் பின குறிக்கப் பெறும்.

19. ஒரு பெயர் பல பொருளில் வழங்குமாயின, அப்பொருள்களை 1, 2, 3 என எண் ணிட்டு, ஒன்றன் கீழ் ஒன்றாக அவை எழுதப்பெறும். சான்றாக, ஆம்பல்-1. நீரில் வளரும் கொடியினம். 2. ஒருவகைப பண. 3. குழல் எனும் இசைக்கருவி. 4. பேரெண்ணினைக் குறிக்கும் பெயர் எனக் கொடுத்து அவற்றின் செயதிகள் தரப் பெறும்.

20. விளக்கத்திற்கிடையே அரிய சொல் வரின், தெளிவிற்காகப் பொருள் பிறைவளை வுக்குள் தரப்பெறும். சான்றுகள்: மான்மதம் (கத்தூரி), பத்தல் (கூன்).

21. ஒருமை பன்மை வேறுபாடு மட்டும் காட்டும் பெயர்களை, அகர வரிசைப்படி எதனை முன் அமைக்க வேண்டுமோ அதனை முனனமைத்து, மற்றைய பெயருக் குள்ள செய்தியை அதனகீழ்க் குறிததல் முறையாகப் பின்பற்றப் பட்டுள்ளது. சான்றாக, 'அகவன்மகள்' 'அகவன் மகளிர்' என்ற சொற்களைக் கொண்டால் நிரல்படி முதலில் அகவன் மகளைக் குறிப்பிட்டு, அவளைப் பற்றிய செய்தியைத் தந்தபின் அகவன் மகளிர் பற்றிய செய்திகளும் எழுதப்பட்டிருக்கும். அடுத்து, அகவன் மகளிர் என்ற தலைப்பைத் தந்து அகவன்மகள் காண்க எனக் குறிக்கப் பெறும்.

22. பாடவேறுபாடு இருப்பின் அவை பிறைவளைவுக்குள் காட்டப்பெறும்.

23. ஒரு சொல்லுக்கமைந்த பாடபேதமும் சிறப்புடையதா யிருந்தால் அப்பேதச் சொல்லும் தள்ளரியலாத நிலையில் கொள்ளப்பட்டு அதற்கும் பொருள் விளக்கம் தரப்பட்டுள்ளது. சான்று: அங்கணாட்டி-அளைகணாட்டி.

24. ஒரு சொல்லின் விளக்கமாக ஒரே செய்தி பலவிடங்களில் வருமாயின் அதனை மீண்டும் குறிப்பிடாமல் வந்த பாடலெண், அடியெண் மட்டும் குறிக்கப் பெறும்.

25. சினைப்பெயர்களைக் காட்டுமிடங்களில் உயர்திணை-அஃறிணை, பயிரினம்-விலங்கினம் ஆகிய வேறுபாடின்றி விளக்கப் பெறும். சான்றாக, அடியென்ற தலைப்பில் சங்க நூல்களில் காணப்பெறும் மக்கள், யானை, மான், நாரை, மயில், காட்டுப் பூனை முதலிய எல்லா உயிரினங்களின் அடியும் தொகுத்து நூலின் வரிசை முறைப் படி தரப்பெறும். கண், செவி முதலிய சினைப் பெயர்களும் இம்முறையே அமையும்.

26. சொற்புணர்ச்சியில் வலி மிகும் இடமாயினும் பிறைக்குறி, சிறுகோடு ஆகியவற்றுக் கும் இடைப்பட்ட சொற்கள் விட்டிசைத்தலால் அச்சொற்களுக்கு அவ்விதி பின் பற்றப் பெறவில்லை.

27. பொருளுக்குரிய செய்தி பாடலில் ஓரடியில் மட்டுமிருப்பின், நூல் பாடலெண் அடியெண் என்ற முறையில் (கலி. 10 : 3) என்றும், ஈரடியில் இருப்பின் (கலி. 10: 3,4) என்றும் ஈரடிக்கு மேல் தொடர்ந்திருப்பின் (கலி. 10: 3-6) என்றும் குறிக்கப் பெறும்.

சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம் என்னும் சீரிய நூலை உருவாக்க வேண்டும் என்பது தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், முதுமுனைவர் வ. அய். சுப்பிரமணியனாரின் நெடு நாளைய வேணவா. அத்திட்டத்தை நிறைவேற்ற என்னையும் இலக்கியத்துறையினையும் ஈடு படுத்தி, அவ்வப்பொழுது கலந்துபேசி ஆர்வத்துடன் அரிய பல செய்திகளை வழங்கித் தக்க நெறிமுறை காட்டி நல்லாற்றுப்படுத்துதவிய அப்பெருந்தகைக்கும் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவிற்கும் முதற்கண் என் நன்றி. ஐயங்கள் எழும்போதெல்லாம் இன்முகத்தோடு விளக்கங் கூறியும் சில இடங்களில் புத்துரை கூறியும் எங்கள் பணிக்கு ஆக்கமும் ஊக்கமுந் தந்த முன் னாள் இலக்கியத்துறைத் தலைவர், திருமுறைச்செல்வர் க. வெள்ளை வாரணனார்க்கும் நன்றி யைப்புலப்படுத்திக் கொள்கிறேன். களஞ்சியம் செம்மையுறுதற்குத் துணைவேந்தர் அவர்கள் எங்கள் பணியைச் சீர்தூக்கிப் பார்க்க மதிப்பீட்டுக்குழு ஒன்றமைத்தார்கள். நூலின் செப் பத்திற்கு ஆக்கமான கருத்துக்களை வழங்கிய குழுவினரான பேராசிரியர் அ. ச. ஞானசம் பந்தன், பேராசிரியர் அ. கோபாலையர், திரு. ம. முத்துசாமிப்பிள்ளை இ. ஆ. ப. (ஓய்வு), முனைவர் குளோரியா சுந்தரமதி ஆகியோர்க்கும் என் உளமார்ந்த நன்றி உரியதாகும். களஞ்சியத்தின் எடுத்துக்காட்டுப் படிவம் ஒன்று அமைத்துத் தமிழகம், பிற மாநிலம், அயல்நாடு ஆகிய இடங்களில உள்ள பேராசிரியப் பெருமக்களுக்கு 15. 8. '83-இல் அனுப் பித் தங்கள் கருத்துரை வழங்குமாறு வேண்டப்பெற்றது. அவ்வேண்டுகோட்கிசைந்து நல்ல பல கருத்துக்களை வழங்கிய அறிஞர் பெருமக்களின் நன்றியையும் மறவாது போற்றுகின் றேன்.

ஓராண்டுக்காலம் சிறப்பாய்வாளராக இருந்து சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம் முதல் தொகுதி வெளிவரச் செவ்விய நெறியில் எழுத்துப் பணி செய்துதவிய முனைவர் அ. மா. பரி

மணம் அவர்கட்கும் குறிப்பட்டை உருவாக்கியதோடு விளக்கக்குறிப்பு எழுதித் துணைபுரிந்து வரும் முதுநிலை ஆய்வாளர் புலவர் சி. செல்வத்தாண்டவன் எம். ஓ. எல்., அவர்கட்கும், குறிப்பட்டை உருவாககத்தில் பெரும்பங் கேற்ற முதுநிலை ஆய்வாளர் முனைவர் பழனியம் மாள், உதவியாளர் திரு. கு. திருமாறன் எம். ஏ., ஆகியோர்க்கும் விளக்கக் குறிப்பு எழுதிய தோடு ஒப்பு நோக்கல் முதலிய பணிகளிலும் துணைபுரியும் சிறப்புதவியாளர்கள், திரு. வ. குருநாதன் எம். ஓ. எல்., பி. எட்., திரு. நா. செல்வராசு, எம். ஏ., எம். பில., புலவர் இரா. சொக்கலிங்கம் எம். ஏ., ஆகியோர்க்கும் கையெழுத்துப் படிகளைத் தட்டச்சுச செய்துதவிய உதவியாளர் திருமதி விமலா கிறித்தபெல் பி. சயி., செல்வி இரா. மலர்விழி பி. சயி., ஆகியோர்க்கும் நன்றியுடையேன். இக்களஞ்சியச் செம்மைக்குத் துணைநினற பேராசிரியர் முனைவர் சோ. ந. கந்தசாமி அவர்கட்கும், மெய்ப்புத்திருத்தம் செய்துதவிய புலவர் இரா. கணபதி பி. லிட்., அவர்கட்கும் உரிய காலததில் விரைந்து செம்மையாக அச்சிட்டுத் துணை புரிந்த அண்ணாமலைநகர் சிவகாமி அச்சகத்தார்க்கும் நனறியன.

அரசர், புலவர், குறுநில மன்னர், விலங்கினங்கள், புளளினஙகள், பயிரினங்கள பற்றிய செய்திகளையும் அறம், சமயம், அரசியல, வரலாறு, சமூக இயல், பண்பாடு, கலை, நாகரிகம் முதலியன பற்றிய செய்திகளையும் அறிய இககளஞசியம துணை புரியும். மலைகள், ஆறுகள், ஊர்பபெயர்கள், உணவு வகைகள், குடிவகைகள, ஆடை, அணிகலன, தெயவம், மரபுகள், நானில மக்களின பழக்க வழக்கஙகள, வாழவியற கூறுகள் முதலிய பிறவற்றையும் அறியலாம். சுருங்கக் கூறின, சங்ககாலத தமிழ மககளின் பல்வேறு செய்திகளையும் அறிநது கொள்ளுதற்குரிய கருவியாக இக்களஞசியம் அமையும். சங்ககால அரசியல், சஙக காலச் சமயம, சங்க கால நாகரிகமும் பணபாடும போனற நூல்களுக்கு வேணடிய அடிப்படைச செயதிகள இககளஞசியத்தில ஆங்காங்கே காணபபடும். அவறறைத் தொகுததுப் பலவகை நூல்கள் எழுத இக்களஞ்சியம் கை கொடுக்கும். சங்கவிலக்கியததின் மூலச் செயயுட்களை நேரடியாக வைததுப் பட்டாங்குச் செய்திகள் தொகுக்கபபட்டுள ஆதலின் இக் களஞ்சியம் மெய்யான ஆதாரமாகக் கொள்ளும் தகுதியுடையது.

அகர முதல் ஔகார இறுவாயுள்ள உயிரெழுத்தினை முதலாகக் கொண்ட பெயர்கள் இம்முதல் தொகுதியில இடம் பெற்றுள்ளன. அடுதது வரும் தொகுதிகளில் ககரம் முதலிய உயிர் மெய்களை முதலாகக் கொண்ட பெயர்கள இடம் பெறும். இக்களஞ்சியத்தைக் காணும் அறிஞர் பெருமக்கள் ஆக்கத்திற்கும் செம்மைக்கும் உரிய வழிமுறைகளைத் தெரிவிததால் அவை நனறியுணர்வோடு ஏற்றுக் கொள்ளப் பெறும். அவை அடுத்த பதிப்பின செம்மைக்கு உதவியாக அமையும்.

**இரா. சாரங்கபாணி**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | — | அகத்திணையியல் |
| அகம். | — | அகநானூறு |
| அ.சி. | — | அபிதான சிந்தாமணி |
| உ.வே.சா. | — | உ.வே. சாமிநாதையர் |
| ஔவை.து. | — | ஔவை. துரைசாமிப் பிள்ளை |
| ஐங். | — | ஐங்குறுநூறு |
| ஐங்.தி. | — | ஐங்குறுநூறு – திரட்டு |
| க.க. | — | கலைக் களஞ்சியம் |
| க.வா. | — | கடவுள் வாழ்த்து |
| கலி. | — | கலித்தொகை |
| குறி. | — | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | — | குறுந்தொகை |
| ச.சி.பெ. | — | சங்க காலச் சிறப்புப் பெயர்கள் |
| சிறு. | — | சிறுபாணாற்றுப்படை |
| சூ. | — | சூத்திரம் |
| த.பே. | — | தமிழ்ப் பேரகராதி |
| த.வ.க. | — | தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் |
| தி. | — | திரட்டு |
| தொல். | — | தொல்காப்பியம் |
| நச். நச்சர் | — | நச்சினார்க்கினியர் |
| ந.சு. | — | ந. சுப்பிரமணியன் |
| ந.மு.வே. | — | ந.மு. வேங்கடசாமி [illegible] |
| நற். | — | நற்றிணை |
| நெடு. | — | நெடுநல் வாடை |
| பக். | — | பக்கம் |
| பட். | — | பட்டினப் பாலை |
| பதி. | — | பதிற்றுப் பத்து |
| பதி.தி. | — | பதிற்றுப பத்து - திரட்டு |
| பதி.ப. | — | பதிற்றுப் பத்து - பதிகம் |
| ப.மு. | — | பல்லவர் காலத்துக்கு முன் (Pre-Pallavan Tamil Index) |
| பரி. | — | பரிபாடல் |
| பரி.தி. | — | பரிபாடல - திரட்டு |
| பி.நா. | — | பின்னத்தூர் நாராயண சாமி ஐயர் |
| புறம். | — | புறநானூறு |
| பெரு. | — | பெரும்பாணாற்றுப்படை |
| பெருமழை. | — | பெருமழைப் புலவர் பொ. வே. சோம சுந்தரனார் |
| பொரு. | — | பொருநராற்றுப்படை |
| பொருள். | — | பொருளதிகாரம் |
| மது. | — | மதுரைக் காஞ்சி |
| மலை. | — | மலைபடுகடாம் |
| முரு. | — | முருகாற்றுப்படை |
| முல்லை. | — | முல்லைப் பாட்டு |
| மொ.அ.து. | — | மொ. அ. துரையரங்க சாமி |
| வ.பி.அ. | — | வரலாற்றுப் பின்னணி [illegible] (Ahanan[illegible] [illegible] [illegible] [illegible]) |
| வெ. | — | வெண்பா |
| வே.வி. | — | வேங்கட விளக்கு |
| வை.பி. | — | வையாபுரிப் பிள்ளை |

# பிழை திருத்தம்

| பக்கம் | பத்தி | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 6 | 2 | 24,25 | இருக்கம் | இருக்கும் |
| 13 | 1 | 19 | உரைந்தான் | உரைத்தான் |
| 17 | 2 | 24 | அருவிளி | அருவி |
| 27 | 2 | 37 | முதாய் | மூதாய் |
| 45 | 2 | 39 | அளவிற் கூட்டமும | களவிற் கூடட்மும் |
| 47 | 2 | 9 | கொடைப் பொருநன் | கோடைப் பொருநன் |
| 51 | 1 | 48,49 | பகைவுரை | பகைவரை |
| 54 | 1 | 1 | தாமன் | தாமான் |
| 90 | 1 | 33 | அல்லறுத்தியவன் | அல்லலுறுத்தியவன் |
| 101 | 2 | 21 | நப்பசைலயார் | நப்பசலையார் |
| 121 | 1 | 32 | தாமன் | தாமான் |
| 122 | 2 | 6 | நெஞ்சிற் | நெஞ்சிற்கு |
| 141 | 1 | 35 | சிறப்புறத்தானாக | சிறைப்புறீத்தானாக |
| 195 | 1 | 1 | ஆன்றோருலகம் | ஆனறோருலகும் |
| 224 | 1 | 4 | மடவர் | மடவார் |
| 225 | 1 | 27 | கண்ணை | கண்ணை |
| 241 | 1 | 13 | வளைத்து கொண்டு | வளைத்துக் கொண்டு |
| 316 | 1 | 3 | இன்னுடன் | இனனுடன் |
| 339 | 2 | 15 | கிலுப்யைபாக | கிலுப்பையாக |
| 349 | 1 | 6 | என்னுரை | என்னுயிரை |
| 366 | 1 | 39 | கருங்குரலை | கடுங்குரலை |
| 408 | 1 | 12 | குமரனார் | குமாரனார் |
| 417 | 2 | 47 | பொறது | பொறாது |
| 425 | 1 | 29 | பெடையை | பெடைகளை |
| 433 | 2 | 47 | ஊதிர் | ஊர்தி |
| 434 | 2 | 38 | பின்னின் | பின்னின |
| 444 | 2 | 19 | கூறியமுள் | கூரியமுள் |
| 456 | 1 | 30 | நகை | நகைப் |
| 470 | 2 | 46 | தேங்கும் | தங்கும் |
| 478 | 2 | 24 | எல்லைக்கழித்த | எல்லையைக்கழித்த |
| 481 | 1 | 34 | பிறிவாற்றாமை | பிரிவாற்றாமை |
| 481 | 2 | 16 | குறிப்பிட்ட | குறிப்பட்ட |
| 483 | 2 | 49 | மாட்டாமைகூனால் | மாட்டாமையினால் |
| 502 | 2 | 28 | சிறப்புறத் | சிறைப்புறத் |
| 503 | 2 | 3 | பெற்றார்போல் | பெற்றாற்போல் |
| 504 | 2 | 16 | உள்ளுரிற் | உள்ளூரிற் |
| 507 | 2 | 39 | வேல்கெழுகுட்டுவன் | வெல்கெழுகுட்டுவன் |
| 529 | 2 | 3 | கொட்பால் | கொட்டால் |
| 530 | 2 | 7 | தாமன் | தாமான் |
| 548 | 2 | 35 | புள்ளித்துஞ்சிய | பள்ளித்துஞ்சிய |
| 554 | 1 | 48 | நெறியடுகூந்தல் | நெறிபடுகூந்தல் |
| 560 | 2 | 16 | கருதப்படும் | கருதப்படுவர் |

# சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம்

## அ

**அஃதை - 1. குறுநில மன்னன்.** அஃதை என்னும் பெயர் அகுதை என்றும் வழங்கும். கபிலர், கல்லாடனார், பரணர், மருதம் பாடிய இளங்கடுங்கோ, வெள்ளெருக்கிலையார் ஆகியோர் இவனைப் பாடியுள்ளனர். 'இன்கடுங்கள்ளின் அஃதை' நாளோலக்கத்தில் வீற்றிருக்கும்போது பறை முழக்கிச் செல்லும் பொருநர்க்குக் களிறுகளையும் அணிகலன்களையும் வழங்குவான் என்று பரணர் குறிப்பிடுவர் (அகம். 76:3-5). அகவுநர்களுக்கு இளம்பிடிகளையும் குதிரைகளையும் நல்கி மகிழும் அஃதையை அகவுநர் பெருமகன் எனக் கல்லாடனார் பாராட்டுவர்; அவனைப்போற்றிக் காத்தவர் கோசர் என அப்புலவர் குறித்துள்ளார் (அகம். 113:3-5). அகுதை காண்க. (இன்கடுங் கள்ளின் அஃதை என்று அகநானூற்றிலும் (76:3) இன்கடுங்கள்ளின் அகுதை என்று குறுந்தொகையிலும் (298:5) பரணர் பாடலில் காணப்படுதலினாலும் யானைக் கொடை அஃதைக்கும் அகுதைக்கும் உரியதாகப் பல பாடல்கள் குறிப்பிடுதலினாலும் அஃதைக்குப் பாட வேறுபாடாக அகுதை காணப்படுதலினாலும் அவ்விரு பெயர்களும் ஒருவனையே குறிக்கும் எனக் கோடல் பொருந்தும்).

**2. சோழன்மகள்.** அஃதை-சோழன்மகள்-செம்பொன்னாலாகிய சிலம்பினையும் செறிந்த தொடையினையும் அழகொழுகும் மாமையினையும் உடையவள் (அகம். 96:11,12).

**அஃதை தந்தை - அஃதை என்பாளுக்குத் தந்தை** (சோழ வேந்தன்). அண்ணல் யானைகளையுடைய போராற்றல் மிக்க அஃதை தந்தை பருவூர்ப் பறந்தலையில் சேரனையும் பாண்டியனையும் வாட்போரில் வென்று பகைவேந்தரிடமிருந்து களிறுகளைக் கவர்ந்த போது பேராரவாரம் எழுந்தது (அகம். 96:12-17).

**அக்குரன் - வள்ளல்.** குமட்டூர்க் கண்ணனார் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதனைப் பாராட்டும் பொழுது அக்குரன் அனைய வள்ளல் என்றும் போர்புரிதலிற் சிறந்த நூற்றுவர்க்கு (துரியோதனன் முதலியோர்க்கு) துணையாக இருந்து, துணிபும் ஆண்மையும் காட்டிப் பொருதவன் என்றும் சுட்டுவர் (பதி. 14:5-7). ['பாரதத்தில் கூறப்படுபவனும் தலையெழு வள்ளல்களுள் ஒருவனுமாகிய அக்குரன் போலும்; கர்ணன் என்று நினைத்தற்கும் இடமுண்டு; ஆதாரம் கிடைக்கவில்லை' என்று அப்பாடல் உரையில் உ.வே.சா. கூறுவர். இடையெழு வள்ளல்களில் ஒருவன் எனத் தமிழ்ப் பேரகராதி குறிக்கும் பக். 7.]

**அகடு - 1. வயிறு.** ஆமையின் வெள்ளிய அகடு-வயிறு-புதிதாகப் போர்த்தப் பெற்ற தோற்போர்வையுடைய கிணைப்பறைக்கு உவமை (புறம். 387:1-4). களிறு சிறுநீர் கழித்த ஈர நிலத்தில், பால் வற்றித் தோல் சுருங்கிய முலையை யுடைய அகடு பொருந்துமாறு பசியுடைய செந்நாய் முடங்கிக் கிடக்கும் (நற். 103:4-6). புதல்வற் பெற்றமையால் தாயாம் நிலையடைந்து பெருமையுற்ற தலைவியைத் தலைவன் உறங்குகின்றாயோ எனக் கேட்டு அவள் அகட்டினைக் குவளைப் பூக்கொண்டு தடவினான் (நற். 370:5-8). யாமையின் அகடு வெண்ணிறம் வாய்ந்தது (ஐங். 81:1). 'நாம் அகடு பொருந்துமாறு இறுகத் தழுவுவோம்' எனக் குறளனிடம் கூனி கூறினாள் (கலி. 94:41).

**2. நடுவிடம்.** அகடு-நடுவிடம்-நனைந்த வேங்கைவீ போன்றது செந்நெல் (புறம். 390:21,22). பொல்லம் பொத்தலின், அகடு சேரப்பெற்று அளவினில் திரியாது அகத்திட்டு உயர்ந்து வளைந்த உந்தியினையுடையது யாழ் (மலை. 33,34). முகிலின் அகடு நீங்கிய மதி, உறைகழித்த வள்ளத்துக்கு உவமை (பரி. 10: 74,75).

**அகநாடு - நாட்டின் உட்பகுதி.** நலங்கிள்ளியின் அகநாடு - நாட்டின் உட்பகுதி-கூத்தரின் ஆடுகளம் ஒத்தது (புறம். 28:14,15). நெடுஞ்செழியன் பெரிய மலைக் காடுகளைக் கடந்து மாற்றாரின் அகநாடு புக்கு அரண்களைக் கைப்பற்றினான் (மது. 148,149).

**அகப்பா - உள்ளரண்.** செங்குட்டுவன் பகைவரது அகப்பா-உள்ளரண்-எறிந்து பகலில் தீ வைத்தான் (பதி. 22:26,27; பதி. ப. 3:3). செம்பியன், குட்டுவனது அகப்பா எறிந்து பகலில் தீ வைத்தான் (நற். 14:3-5).

**அகம் - 1. உள்ளம் என்னும் அகவுறுப்பு.** முதுகுடுமிப் பெருவழுதி பல வெற்றிகளை யெய்தி, அப்பெருமிதத்தினைத் தன் அகத்தில் - உள்ளத்தில் - அடக்கியவன் (புறம். 6:25,26). பாடிவருபவர் வருந்தோறும் சோணாட்டு அண்ணல் அகம் மலர்வான் (புறம். 337:1-4). நெஞ்சம் நிறைந்த உவகை அகமலி

உவகை எனப்படும் (புறம். 394:10; மலை. 184; அகம். 86:28). தலைவன்செய்தஅளிநிலைபொறாது தலைவி மாறிய முகத்தளாய் வறிதகத்தெழுநத வாயல முறு வலொடு அவனிடம் சென்றாள் (அகம. 5:1-5). தலை வன் பிரிந்து செலவதைக் கேட்ட போதெலலாம் தலைவி பல நினைந்து அகத்திடும்பை எயதினாள் (அகம். 107:1-3). 'தலைவியின் நலலகம் தனித்து வருந்தப் பிரிந்து வாழ்வேனாயின எனக்கு இரவலர் வாரா வைகல் பல உளவாகுக' எனத தலைவன் வஞ்சினம் உரைததான் (குறு. 137). தலைவன தலைவியின மேனியும கதுப்பும உண்கண்ணும் தோளும் காணுநதோறும் அகம மலிந்து அறம நிலைபெற்றோரை நிகர்த்தான (நற். 166:1-6). யானுற்றது இதுவென நும் மனததிறகுப பொருந்தக் கூறும் அறிவு என் அகத்து உணடாயின் யான இங்ஙனம் வருந்திக் கண் பசபபேனா எனத் தலைவியுரைத்தாள (கலி. 142.20-23).

2. மார்பு என்னும் புற உறுப்பு. தலைவன் சந்தனமும் மாலையும் அணிந்த மார்பினனாயத் தலைவியின் நல்ல அகம்-மார்பு - வடுககொள முயங்கி இரவில் திரும்புதல் அவளுக்கு இனபநதரும் (அகம். 100:1-4). தலைவன தன் நெஞ்சை நோக்கி, 'நீ தலைவியின் நல்ல அகம்பொருந்தி அவளுடன உறையின் வறுமை வரும் என்று அஞ்சுகின்றாய்' எனக் கூறினான் (அகம். 123:5-7). தலைவியின் நலல அகம் விரும்பித் தலைவன இரவில வருதல் (அகம். 258: 9-11). தலைவன தலைவியின் நல்ல அகம் முயங்குந்தோறும் உயிர் தளிர்க்கும் (அகம. 367:14,15). தலைவன தலைவியுட னிருநது கிளி யோப்பி மாலைபபொழுதில் அவள் நலலகம் நயந்து வருந்தினான (குறு. 346:5-7). தலைவன் மெல்ல வந்து தலைவியின நலலகம் எயதினான் (நற். 297:8,9). தலைவன் பிரிவில தலைவி நல்லகத்து இளமுலை நனையக் கண் பனித்தாள் (நற். 398:8-10). தோள் குளிரினால் நடுங்கி அகம்சேருமாறு மழை பெய்தது (கலி. 31:16).

3. வீடு. தலைவன் தன் புதல்வனைத் தழுவி இனி அகத்து – வீட்டிற்கு - செல்க என்றான் (அகம். 66: 15). தலைவன் நலலகம் சேர்தல் (குறு. 370:5). வயலில நெறகதிர் கவர்ந்த நண்டு தண்ணக மண்ணளையிற் புகும் (ஐங். 27:1,2). நண்டினது தணணக மண் அளை நிறைய நெல்லின் பூ உறைக்கும் (ஐங. 30:1-3).

4. உள்(இடம்). ஆம்பலின் அகஇதழால் - உள்ளிதழால - அமைத்த தழையை மகளிர் ஆடையாக அணிந்தனர் (பதி. 27:3). பனையின அகமடலிலிருந்து அன்றில் அகவியது (குறி. 219,220). வேதமுதல்வன் உலகமாக இயன்ற எல்லாம் பயினறகததடக்கினான (நற். க. வா. 5, 6). கதிரவன அகம கொதித்து எழுந்து இருளைப் போக்கிப் பின பாடு சாயகினற ஞாயிறறின் அலகுபோலத தாழைமடல் காணபபட்டது (நற. 163:9-12). பழனத்திலுளள பறவைகள் தாக்கத் தாமரை மலர்கள சாய்ந்து பக்கத்தில் இணைந்திருநத தாமரை மொட்டின மீது அகஇதழின நீரைத் துளிக்கும் (கலி. 77:5-7).

5. இடம். பலவாகிய பெரிய படைக்கு நடுவே அரசனுக்காக வேறோர் அகம்-இடம்-கோயிலாக அமைக்கப்பட்டது (முலலை. 43,44). தலைவி நலலக வனமுலை நனைய அழுதாள் (நற. 33:11,12).

அகம்பன் மாலாதனார் - புலவர். சங்கப் புலவர் பெயர் நிரலில முதலிடம் பெறுபவர். இவர் பாடலாகக் கிடைததிருப்பது ஒரு பாடலே (நற். 81). அது முலலைத் திணையில வினைமுறறிய தலைவன் தோப்பாகற்கு உரைத்தது எனனும் துறையைச் சார்ந்தது. குதிரையின கதிவகையுள் ஒனறாய ஆதி என்பது குறித்தும் மன்னர் தாம் ஊர்ந்து செல்லும் குதிரையை மிக மதிததமை குறிததும் அப்பாடல் தெரிவிக்கும்.

அகமடல் – உள்மடல். அன்றில் பனைமரத்தின் அகமடலில-உள்மடலில்-இருந்து அகவியது (குறி. 219,220). கழனியில் வெண்ணெல் அரிவோரின் தணணுமை யொலிக்கு வெருவிய நாரை அருகிலுளள பனையின அகமடலில சென்று தங்கும் (அகம். 40:12-16). துணைபுணர் அன்றில் மணல் மேட்டிலுள்ள பனையின் அகமடலில் சேர்ந்து தங்கியது (அகம். 260:6,7). தாழையின் முள்ளுடை நெடுந் தோட்டு அகமடலில பூத் தோனறும் (நற். 203.2,3).

அகரு - அகில். வையையாறு அகரு - அகில் – முதலிய மரங்களை அடித்துக்கொணடு கடல் நோககிச் செல்கினறது (பரி. 12:5). அகில், பூழில் காணக.

அகல் – 1. சட்டி. புதிய அகலில - சட்டியில் - கொண்ட புலிக்கண் நிறமுடைய சூடான உணவை வெட்சி வீரர் உண்டனர் (புறம். 269:4,5). வீரன் அகலி விட்டுச் சுழற்றப்பட்ட குன்றிமணி போன்று சுழலும் கண்ணை யுடையவன் (புறம். 300:4). அபபவணிகர் கரிய அகலில் பாகொடு கூட்டிச் செய்த நூல்போல் கிடக்கும் இடியப்பத்தைப் பாலிலிட்டு வைப்பர் (பெரு. 377,378).

2. விளக்கு. யவனரால் செய்யப் பெற்ற பாவை கையிலேந்தி யிருக்கும் அகலில்-விளக்கில்-எண்ணெயிட்டுப்பருத்த திரியினைக் கொளுத்தி எரியவிடுவர்.

என்ணெய் குறைந்தவிடத்தும் திரி ஒளி மங்கிய காலத்தும் எணணெய வார்த்துத திரியைத் தூணடுவர் (நெடு. 101-104). பொன தகட்டினாற செய்த அகல் விளக்கு பயனபடுத்தபபெறறது (அகம். 19'17). செஙகாந்தள் அரும்பு மலர்வது சுடரினைக் கொண்ட அகல விளக்குப் போலத தோனறும் (அகம. 235:7,8).

அகலம் - 1. மாாபு. 'நின சாந்து புலர் அகலத்தை - மார்பை-மகளிா தோள் முறறுக' எனச் சோழன் நலஙகிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாதத னார் வாழ்த்துவர் (புறம. 29.6,7). நலஙகிள்ளி சேட் சென்னியின் மாலையணிநத அகலதனதப் பொருவோர் உளரெனின் அவர்தம் அழிவைத் தாமே அறிகுவர் (புறம். 61:13-15). நெடுஞ்செழியனின பொருதற்கரிய அகலத்தை மதியாராய ஆர்தெழுந்து எள்ளி வநத வீரர் தோற்றோடினர் (புறம. 78:4-8). கதிரவன் இருககுந் திசை நோக்கி நெருஞ்சிப் பூ திருமபுவது போல இரவலர் கையிலுள்ள பிசசைப் பாத்திரம கொண்பெருஙகானத்துக் கிழவன் அகலதனத நோககித் திரும்பும் (புறம். 155:4-8). குமணனின சந்தனம பூசிப பல்பொறிக் கொணட ஏந்தெழில் அகலதனத மாணிழை மகளிர் புல்லுந் தொறும் மகிழுமாறு பெருஞ்சித்திரனார் வாழததினர் (புறம. 161:26-32). வருபடை தடுத்த வீரனின விளங்கும் மாலையணிநத அகலத்தை வயவர் எறிந்தனர் (புறம். 282:5,6).வேந்து உடன் றெறிந்த வேல் தலைவனின் சந்தனம் பூசிய அகலத்தை ஊடுருவியது (புறம். 308:6,7). சிவன கொன்றையம் பைநதார் அகலத்தர் (பதி. க. வா. 2). பகையரசர் எழுவர் முடிகளைக் கொண்டு கலஞ்செய்து சேரவேநதர் அகலத்தில் அணிந்தனர் (பதி. 14: 11; 16: 17; 40: 13). திருமகள் உறையும் அகலதனதயும் மணங்கமழ துளசி மாலையையும் உடையவர் திருமால (பதி. 31.7-9). செல்வக் கடுங்கோ வாழியாதனின் முயககின்பம் பெறுதற்குரிய அகலம் இன்பத்திற்காக மகளிர்க்கு மலர்நது விரியுமே யன்றிப் பகைவர்க்கு மலர்ந்து காட்டும் எளிமையுடைய தன்று (பதி. 63: 4, 5). போரில் பகைவரை வென்று அடுதறகுக் காரணமான வலிமைமிக்க அகலம முருகனுடையது (முரு. 272). நறுஞ்சாந்து நீவிய கேழ்கிளர் அகலம் (மது. 493;அகம.26:14). தலைவனின் சந்தனம் பூசிய வலிமை கொண்ட, விரிந்துயர்ந்த அகலத்தில நறுந்தார் பூணொடு பொலிந்தன (குறி. 120-122). தலைவன் தன் கேழ்கிளரகலத்தில் நறுஞ்சாந்தணிந்தான் (அகம் 26:14). இருங்கோவேண்மான தேங்கமழ அகலத்துப் புலர்ந்த சாந்தினன் (அகம். 36: 18, 19). திண்தார் அகலம் (அகம். 56:8). தலைவன் தலைவியின் உயங்குபடர் அகலம் முயங்கினான் (அகம். 102:14). திருமால அகலததிலுள்ள பன்னிறங் கொண்ட மாலை போல விணணிடத்தே வானவில தோனறியது (அகம. 175:14-16). காற்றுப் போல பரக்கும் குதிரை வாயிலிருநது தோன்றிய பால் போனற வெண்ணுரை, குதிரை மீதேறிச செலலும் வீரனின சந்தனம் பூசிப புலர்ந்த அகலத்தைக கறைப்படுத்தியது (அகம. 224:5-9). புலவர் பாடும புகழுடைய விழுப் புண்பட்ட பொலநதார் அகலத்தில தணகமழ் சந்தனததையும் நறுமபொடியையும் பூசுவர் (அகம. 354: 8-10). சாநதாா அகலம் (அகம. 388:16). தலைவனது அகலத்தை நினைததால் மனத்திலுளள காதலநோய மிதுகினறதென றும் அதனை முயஙகினால அநநோய் நீஙகுகினறதெனறும் தலைவி கூறினாள் (குறு. 150: 3-5). மலைநாடனது ஒணதாரகலம வெறியாட்டில் கொடுக்கும பலியை ஏறகுமோ எனத்தோழி வினவி அறததொடு நினறாள் (குறு. 362.5-7). தணதார் அகலம (நற. 235:8; ஐங. 33:4). தலைவனின சுடாப்பூண விளங்கும் ஏந்தெழில அகலத்தைத தலைவி இனிது முயஙகப பிரிநத தலைவர் வநதார் (ஐங. 353.2-4). தலைவனது மயஙகிய மலரணிந்த அகலதனதத் தலைவி இனிது முயஙக அவன வருவான எனத தோழி உரைததாள (ஐங. 465.2,3). திருமகளின அழகிய அகலதனத ஆரம் அணி செயதது (கலி. 28: 5). தலைவன் அகனற அகலததால் பூணாகம பொருநதத் தலைவியைத் தழுவினான் (கலி. 39:4). புதல்வனின மணிபுரை செவ்வாய் நின மார்பகலத்தை நனைக்கு மாதலால் அவனைக் கொளளாதே எனத தலைவி ஊடி உரைத்தாள் (கலி. 79: 7,8). புலவியால் புலலாதிருந்த ஒருத்தி வணடினம் ஆர்ப்ப அலவுற்றுத் தன காதலனின் தண்தார் அகலம் புகுநதாள் (கலி. 92.39-41). 'நீ பரததையர் பால் செலலாதொழியின் நின் நலல மாலையையுடைய அகலததிற்கு ஒரு முடடுப்பாடு உணடாகும்; ஆதலால அஙகே விரைநது செலக' எனத தலைவி புலந்துரைத்தாள் (கலி. 93·33-36). யான நின் அகலம புலலின என் நெஞசில் நின் கூன் ஊனறும எனக் குறளன் கூனியிடம் கூறினான (கலி. 94:18,19). மலலரை மறஞ்சாய்த்த மலர்த்தண்தார் அகலததோன் திருமால (கலி. 134:1). மணி விளங்கும மாலையும் பூவாற்றொடுத்த மாலையும் அகலத்திற்குப் பொலிவும் மணமும் தருகின்றன (கலி. 135:17,18). திருமகள் தங்கிய அகலத்தை நித்தில மதாணி (முத்துப் பதக்கம) அணி செய்கிறது (பரி. 2:29-31). திருமாலின தோற்றமும் அகலமும் நீரின் உள (பரி. 4.30). தண்பரஙகுனறு அடியுறை மகளிர்க்குப் பூவினகண் திரியும் மகன்றில் போல

மைந்தர் அகலத்தை அகலாத நல்ல புணர்ச்சியை அளிக்கும் சிறப்பினது (பரி. 8:43-46). முருகன் வரையனைய அகலத்தினன் (பரி. 9:58). நீராடற் கமைந்த அணியினையும் தண் தாரினையும் வரையனைய அகலத்து ஆடவர் அணிநதிருந்தனர் (பரி. 11·62,63). ஊடல்கொண்ட ஒருத்தி அரக்குநீர் நிறைந்த வட்டைத் தலைவன் மார்பில் எறிய, அவன் ஆற்றானாய் நிலத்தில் வீழ்நது இறைஞ்சி ஊடலுணர்த்த, அவள் மல்லார்நத அகலத் தெறிநத வட்டால வீழ்ந்தானென்றஞ்சித துனி நீங்கிக் கூடினாள் (பரி. 12:67-74). மின்னல போன்ற பொன்னணிகளும் அருவியின் உருவை ஒத்த முத்து மாலைகளும் பொருந்திய திருமாலின் அகலம் தன்னைத் தொழுவார்க்குத் துறக்கவின்பந் தரும் (பரி. 13:10-13). வையையில் புனலாடும்போது பரத்தையரைப் பன்முறை தலைவன் புல்லுதலின் அவன் அகலத்திலுள்ள கலவைச் சாநது மலையிலிருந்து தேன் கசிவது போலக் கசிந்தொழுகும் (பரி. 16:43-46). தலைவன் அகலம் பரத்தைத தொடர்புடையது எனறாலும் அதனை முயஙகேன் எனக் கூறிப் புறக்கணித்தல் தலைவிக்கு இயலாதது (பரி. 20:91-93).

2. பரப்பு. உதியஞ் சேரலாதன் விசும்பு போன்ற சூழ்சசியது அகலம்-பரப்பு-உடையவன் (புறம். 2:2, 7). வியன்ஞாலத்து அகலத்தை அளந்தறியினும் யானைக்கட்சேய மாந்தரஞ் சேரல் இரும்பொறையின் அறிவு, ஈரம், கண்ணோட்டம ஆகியவற்றை அளத்தல் இயலாது (புறம். 20:2-6).

**அகலறை - 1. பாசறை.** முரசம் அகலறையில்-பாசறையில்-அதிர்ந்து முழஙகுகிறது (பட். 236,237).

2. அகன்றபாறை. மழை பெய்து கழுவித் தூய்மையாக்கிய அகலறையில்-அகன்ற பாறையில்-மகளிர் பல பூக்களையும் குவித்துள்ளனர் (குறி. 98).

**அகலிகை - கவுதமன் மனைவி.** திருப்பரங்குன்றத்திலுள்ள ஓவியங்களைக் காண்பவர் தமக்குள்ளே சுட்டிக்காட்டி, 'இப்பூனை இந்திரன், இவள் அகலிகை, இவன் அஙகுச் சென்ற கவுதமன், இம் முனிவன் சினந்து சவித்தலால் அகலிகை கல்லுருவமான படிவம் இது' என்றெல்லாம் உரையாடினர் (பரி. 19:50-52).

**அகலுளாங்கண் - 1.** பெருந்தெரு. பெருஞ்சேரலாதன் புணபட்டு வடக்கிருந்தபோது அகலுளாங்கண் - பெருந்தெரு-உடைய சிற்றூர் விழாவெடுக்கவில்லை (புறம். 65:4,5).

2. அகன்ற ஊர். அகலுளாங்கண்-அகன்ற ஊரில்-வெள்ளெலாம்பகள் கிடக்கும் களர்நிலத்தில் காக்கையும் கூகையும் கூடிப் பகற்காலத்திலும் கூவும் (புறம். 362:16-18). அகலுளாங்கண் கழிகளை நிரைத்துப் புல் வேயப் பெற்ற குடிசைகளைக் கொணடது (மலை. 438, 439). அகலுளாங்கண் வாழும் கட்டு, கழங்கு முதலியவற்றால காரணம் அறிகின்றவரைத் தலைவியின் நோயக்குக் காரணம் யாதெனச் செவிலி வினவினாள் (குறி. 4,5). அகலுளாங்கண குறுந்தொடி மகளிர் புனல் விளையாட்டினை வெறுப்பின் பொய்கையிலுள்ள கோரைகளைக் கோதிக் கழனியிலுள்ள நாரையை விரட்டுவர் (அகம். 226:3-6). தலைவன அகலுளாங்கண் தலைவியிடம் அச்சமறக் கூறிய சொல பழுதாகும் என்றஞ்சாது அவளைப பிரிநது சென்றான (அகம். 281:2,3,12). எம்மூர் கொல்லையிலுள்ள குராமரத்தின வெண்பூக்களை ஆயர் அணியும் அகலுளாங்கணாகிய சிற்றூராகும் (நற். 266:1-4). (அகலுளாங்கண் என்ற சொல்லை அகலுள் எனப் பிரித்து அதற்குத் தெரு, ஊர் எனப் பொருள் கூறுவாருமுளர்).

**அகவர் - பாணர்.** அகவர்-பாணர்-விடியற் காலத்தே அரசனைப் புகழ்ந்து தேரும் குதிரையும் பரிசிலாகப் பெறுவர் (மது. 223, 224). அகவர் நீல நிறமுடைய முல்லைக்கொடி படர்ந்த காட்டு நிலங்களைப் பாராட்டிப் பாடுவர் (பொரு. 220, 221). அகவுநர் காண்க.

**அகவலன் - பாணன்.** ஊரிலுள்ள பொதுவிடத்திற் குச் சென்று பண்ணிசைத்து, நுணகோல் கொண்டு போர்க்கள வென்றியைப் பாராட்டி வாழ்த்தி அகவலன்-பாணன்-குதிரைப் பரிசு பெறுவன் (பதி. 43:26-28).

**அகவன்மகள் - தெய்வங்களை அகவி (அழைத்து) பாடும் கட்டுவிச்சி.** சங்குமணி போன்ற நரைத்த நீண்ட கூந்தலையுடைய அகவன்மகள்-கட்டுவிச்சி - தலைவன் குன்றத்தைப் புகழ்ந்து பாடுதல் தோழிக்கு இன்பம் தருதலின் மீண்டும் பாடுமாறு வேண்டுகிறாள் (குறு. 23). வெண்முனை யுடைய சிறு கோலைக் கொண்ட அகவன் மகளிர் அகுதையைப் பாடி அதன் பயனாக மடப்பிடியைப் பரிசிலாகப் பெறும் நோக்குடையவர் (குறு. 298:5-8).

**அகவன்மகளிர் - கட்டுவிச்சியர்.** அகவன்மகள் காண்க.

**அகவிதழ் - உள்ளிதழ்.** பழனத்தில் பறவைகள் மோதியதால் சாய்ந்து வளைந்த தாமரைப் பூக்கள் தம் அகவிதழில் - உள்ளிதழில் - நின்ற நீரைத் தம் கீழுள்ள முகைகளில் சிந்தும் (கலி. 77:1-7).

**அகவுநர் - பாணர்.** மூங்கிற் சிறுகோலையுடைய மகளிரொடு அகவுநரை - பாணரை - நன்னன் புரந்தான்

(அகம். 97 : 10-12). அகவுநரைப் புரந்தமையால் அஃதை, 'அகவுநர் பெருமகன்' எனப்பட்டான் (அகம். 113:3,4). கையில் நுண்கோலுடைய அகவு நரைத் தித்தன் வெளியன் புரந்தான் (அகம. 152: 4,5). நள்ளிரவில் கடைவாயிற்கண் நின்று குன்றம் பாடும் நுண்கோல் அகவுநரின விருப்பப்படி வெளி யன் வேண்மான் ஆஅய் எயினன் யானையை நல்கி மகிழ்வான் (அகம. 208 : 1-5). கிணைப்பறை முழக்கிப் பாடும் அகவுநர் இரந்தால், பொற்குப்பி செறித்துப் பொன்னரி மாலை சூட்டிச் சந்தனம் பூசிய இமிலேற்றினை முன்னிறுத்தி, உணவு படைத்து, நெடுந்தேரினைக் களிற்றொடு நல்கு பவன் முசுண்டை (அகம். 249 : 3-9). குழல் ஒலியும் அகவுநர் மிடற்றுப் பாடலும் போலக குயிலோசை இருந்தது (பரி. 15 : 41—43). அகவர் காண்க.

அகழ் - 1. அகழி. காவற் காட்டை அடுத்த ஆழ மான அகழ் - அகழி - சூழந்த நெடுமதிலை உடை யது ஊர் (புறம். 379 : 18). செவ்வாய் எஃகம் அக ழிற் சூழ்ந்துள்ளது (பதி. 33:9). ஏறுதற்கும் இறங்கு தற்கும் அரிய காட்டாற்று வழிக்கு அத்தன்மை யுடைய அகழ் உவமை (மலை. 214). அகழி காண்க.

2. குளம். மழை பெய்யாத காலத்து நீர் வற்றிக் குழிவாக இருக்கின்ற அகழை-குளத்தை-சூழந்து குழிகள் உள்ளன (பெரு. 107, 108).

அகழி - கிடங்கு. வன்னிலத்தைக் குந்தாலியால் உடைத்து ஆழப் படுத்திய அகழி - கிடங்கு -நீர் நிறைந்துள்ளது (புறம. 14 : 5, 6). கரையிலுள்ள காஞ்சிமரத்தின் தாழ்ந்த கிளையிலிருக்கும் பூவைக் கௌவும் வாளையுடன் ஆரல், வரால், கெடிறு ஆகிய மீன்கள் ஆழமான அகழியில் உள்ளன (புறம். 18:7-10). அகழியின ஆழம் நிலத்தின கீழெலலை யைக் கடந்து (பாதலம வரை) சென்றதாகப் புனை யப் பெற்றுள்ளது (புறம். 21:2). அகழியில் கராம் (முதலை வகை) செருக்கித் திரிகின்றது (புறம். 37:7). குண்டுகண் அகழி (பதி. 45:7;71:12). உயிரைக் கவரும் இயல்புடைய வலிய முதலைகளை யுடையது அகழி (பதி. 53:8). பண்டங்களைக் கொண்டு வரும் நாவாய்கள் அவற்றை இறக்குதற்கும் நிறுத்து தற்கும் ஏற்ற ஆழமான கடற்பகுதி கடற்குண்டகழி எனப்படும் (மது. 81-86). அகழ்-1, கிடங்கு காண்க.

அகளம் - 1. யாழின் உறுப்பாகிய பத்தர். அகளத்தின்-பத்தரின்-நடுப்பகுதி ஒழுங்குபட்ட தொழில்வகை யமைந்தது (சிறு. 224).

2. நீர்ச்சால். நீர் நிறைந்த சுனைக்கு நீர் நிறைந்த அகளம்-நீர்ச்சால்-ஒப்புமை (மலை. 104).

அகன் - உள்ளம். அகன்-உள்ளம்-மகிழாமல் முகம் மாறித் தரும் பரிசிலை முயற்சியில்லாதோரே விரும் புவர் (புறம். 207:4,5). 'மந்தி தன் குட்டியால் தழு வப் பெறுவது போலத தன் கருத்தை அகனுறத் தழுவிக் கேட்போரைப் பெற்றால உன்பூசல் பெரு மையுடையது' என்று தலைவன தன் நெஞ்சு நோக கிக் கூறினான் (குறு. 29:4-7). அகம், உள்ளம், நெஞ்சம், மனம் காண்க.

அகில் - மணமுடைய மரவகைகளில் ஒன்று. அருவி ஓடுகையில் அகிலைச் சுமந்து செல்லும் (முரு. 296). மழை அற்ற காலத்தும் காவிரி அகில் முதலிய வற்றை அடித்துச் செல்லும் (பொரு. 236-238). அகில் புனலாடு மகளிர்க்குப் புணையாக உதவும் (சிறு. 116,117). மகளிர் தம் கூந்தலுக்கு அகிற்புகையூட்டு தல் வழக்கம் (சிறு. 263). மணமுள்ள மயிர்ச்சநதன விறகில் நெருப்பை உணடாககி அதில் அகிற்கட்டை யையும் அயிரையும் (கண்ட சருக்கரையும்) சேர்த்துப் புகைத்து மகளிர் நறுமணம் பெறுவர் (நெடு. 55,56). பெண்டிர் தம் கூநதலில மயிர்ச் சநதனததைப் பூசி ஈரம்புலர அகிற்புகை யூட்டுவர் (குறி. 108 -110). கூந்தல் அகில் மணங் கமழும் (குறு. 286 : 2, 3). மகளிர் அகிற்சாந்து, கருப்பூரம் முதலியவற்றைச் சாந்தம்மியில் குழவிக்கலலால் அரைதது நறுமணக் கலவை செய்வர் (பரி. 10 : 81-84). வையையில நீராடச் செல்வோர் சநதனச சாநதினை மாற்றி அகிற் புகையினாலாகிய சாந்தினைப் பூசுகின்றனர் (பரி. 12 : 13, 14). அகிலும சந்தனமும் புகைத்து முரு கனை வழிபடுவது வழககம் (பரி. 18:53, 54). திருப் பரங்குனறதது முருகனுக்கு அன்பர் எழுப்பிய அகிற் புகை மேலே எழுநது பரவியமையால் விணணவர் கண் இமைக்கினறனர்; கதிரவன மண்டிலத்தையும் காண இயலவில்லை (பரி. 17: 30-32). அகிலின் நறும் புகை கபில நெடுநகரில் கமழும் (புறம். 337:10,11). அகிற்புகையும் சந்தனப்பூ நாற்றமும் கமழும் நாடு (ஐங். 212:1,2). தினை விதைக்கக் குறவர் புனத்தி லுள்ள மரங்களை அகிலோடு சேர்த்து எரித்தலால் எழும் நறும்புகை வெண்மேகம போல் தவழ்ந்து சென்று விணணை மறைக்கும் (குறு. 339:1-3;நற். 282: 7-9). தினைப்புனத்திலுள்ள பரண் மீதேறிக் குறவர் புகைத்த அகிற்புகை பட்டு வானிடத்தே தவழும மதி ஒளி மழுங்கும் (கலி. 39:7, 8). காவிரிப்பூம் பட்டினத்தில் வாணிகத்திற்காக வந்து குவிநத பொருள்களில் அகிலும் ஒன்று (பட். 188). அகரு, பூழில் காண்க.

அகுதை — குறுநில மன்னன். அகுதை யானைகளைப் பரிசிலர்க்கு வழங்குபவன்; பெருமுயற்சியுடையவன். இவன் போரில் பொன்புனை திகிரிப்படையால்

புண் பட்டான் என்ற செய்தி பரவியது. உண்மையை ஆராய்ந்த போது அது பொய் எனப்பது புலப்பட்டது (புறம். 233: 1-4). அகுதை தும்பை மாலை யணிந்த மணங்கமழும் மார்பினையுடையவன்; மறப்போர் புரியும் இயல்பினன்; போர் புரிந்தவையின் நுதி சிதைந்த வேலினன்; நீர் சூழ்ந்த பரப்பை எல்லையாக வுடைய கூடல் அவனுக்குரிய பேரூர் (புறம். 317·3-5). வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் என்பான் பாழிப் பறந்தலையில் மிஞிலியொடு பொருது மாய்ந்த போது எயினன் குடியில் தோன்றிய வேண்மகளிர், தாம் சூடியிருந்த மாலைகளை அறுத்தெறிந்து கணவீரும கமபலையுமாக அரற்றினர்;அந்நிலைகண்டு அகுதை வேண்மகளிரது துன்பந் துடைத்தான் என்று பரணர் கூறுவர் (அகம். 208.5-9; 15-18). அகவன் மகளிர் இன்கடுங் கள்ளின் அகுதையைப் பாடி நிற்றல், பிடிகளைப் பரிசிலாகப் பெறும் நோக்குடையது என்று பரணர் குறிப்பிடுவர் (குறு. 298:5-8). அகுதை காப்பாக. [அகுதையின் கூடலை மதுரை என்று உ.வே.சா. குறிப்பர். புறம். 347. அடிக்குறிப்பு; மேற்கு நாட்டுக் கூடல், அதாவது கூடனமங்கலம் - கூடலூர் பழைய நகரம் - என்று ஔவை. து. குறிப்பர். புறம். 347-ஆம் பாடல் குறிப்பு].

**அங்கணாட்டி** – கண்ணோட்டமுடையவள். மகள் உடன் போக்குச் சென்றமையால் துன்பம் மிகுந்து, அறக் கடவுளை வெறுத்துப் பழிக்கும் தாய அங்கணாட்டி –கண்ணோட்டமுடையவள்-எனச் சுட்டப் பெறுகிறாள் ('அளைகணாட்டி' என்ற பாடமும் உண்டு). (ஐங். 393 : 1, 2).

**அங்கணாளன்** - கண்ணோட்டமுடையவன். அறநெறிச் செல்லும் அங்கணாளனை – கண்ணோட்டமுடையவனை - தீயவர் கூறிய பழிமொழி யாவும் நல்லோரவை ஆராய்ந்த போது நீங்கினாற் போலத் தலைவியின் நுதற்பசப்பு தலைவன் வர நீங்கியது (கலி. 144:70-73).

**அங்காடி** - 1. கடைவீதி. (பகலில் மட்டும் விற்பனை செய்யும் கடைவீதி நாளங்காடி). மதுரை நாளங்காடி பண்டங்களை மக்கள் வாங்குதலினால் குறைவுபடாமலும் அங்குப் பொருளை வணிகர் கொண்டு வருதலினால் மிகுதிப்படாமலும் இருந்தது; நாளங்காடி ஒலிமிக்கது (மது. 426-430). கூடலில் உள்ள நாளங்காடி மணங்கமழும் இயல்பினது; இது நறுமணங்கமழும் நெற்றிக்குவமை (அகம. 93: 9, 10). (இரவில் மட்டும் விற்பனை செய்யுங் கடைவீதி அல்லங்காடி). பல்வேறு பறவைகள் மாலைக் காலத்தில் ஒலிப்பது போல அல்லங்காடியில் பல்வகைப் பொருளும் விற்போர் வாங்குவோரின் ஒலி நிறைந்துள்ளது (மது. 543,544).

2. கடை. அங்காடியில்-கடையில்-விற்பனைக்கிருந்த பசுமையான இறாலமீனைக் காக்கை கவர்ந்தது (நற். 258:7,8) நீராடுமிடத் தமைந்த அங்காடியில் புனலாட்டுக்குரிய பொருளெல்லாம் விறகப்பெறும் (பரி. தி. 2·9). அங்காடியில் பல்வேறு கொடிகள் கட்டப் பெற்றிருந்தன (மது. 372-374).

**அங்கி** - 1. கார்த்திகைமீன். காரகாலத்தில் மழை பெய்தற்குரிய கோள் நிலையைக் குறிப்பிடும் போது அங்கி - கார்த்திகைமீன் - உச்சநிலையில் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது (பரி 11·7).

2. வேள்வித்தீ முனிவர் செய்யும் அங்கி - வேள்வித்தீ - எழுப்பும் புகையை வெறுத்துச் சோலையிலுள்ள குயில் தன் பெடையொடு வேறிடத்திற்குச் சென்றது (பட். 54-56).

**அங்குசம்** - தோட்டி. முருகன் கைகளில் ஒன்று அங்குசம் - தோட்டி - கடாவுகின்றது (முரு. 110).

**அங்கை** - 1.உள்ளங்கை. (அகம் + கை) நாஞ்சில வள்ளுவன் அன்புடை நண்பாக்கு அங்கை - உள்ளங்கை- போல் நெருக்கமானவன் (புறம். 380:11). இந்திரன இறைவனிடத்துப் பெற்ற கருப்பத்தினை அககினி அங்கை ஏற்றான் (முரு. 254). அங்கையில் சாதிலிங்கம் பூசினாற்போலச் செந்தாமரை இதழ்கள் இருக்கும (சிறு. 73-75). செங்காந்தள் அரும்பு அங்கை போல மலரும் (முல்லை. 95). சிறு குழந்தையின் அங்கை தாமரைப் பூவின் அகவிதழைப் போன்றது. (அகம். 16:1-3). இடையன் கொள்ளியில் அங்கையைக் காட்டிக் குளிர் காய்வதுண்டு (அகம. 94:4,7). குறத்தி காக்கும் தினைப்புனம சென்று மந்தி கவர்ந்து வந்த கதிரைக் கடுவனுடன் சேர்ந்து அங்கையில் வைத்துக் கசக்கித் தினையை உண்ணும (நற். 22:1-5). சிவபெருமான் அங்கையில் அயனின தலையை ஏந்தி ஆடிய கூத்து காபாலம் (கலி. க. வா. 12). மங்கையர் மதுக்கிண்ணத்தை அங்கையிலேந்தி மது அருந்தினர் (பரி. 10:76-78).

2. அழகிய கை. (அம+கை) பெருஞ்சேரல இரும்பொறை பகையரணைக் கைப்பற்றி ஆண்டுப் பெற்ற ஆநிரைகளை வீரர்க்குத் தர, அவர்கள் அவற்றைத் தம் அங்கையினின்றும் - அழகிய கையினின்றும் - பிறர்க்கு நல்கினர் (பதி. 71: 14,15). சிறுவன் தன் அங்கையால் பெற்றோர்க்குச் சிறப்புச் செய்தல் (கலி. 83: 18, 19).

**அச்சம்** - பயம். அறங்கூறவையத்தார்க்கு வேண்டிய இயல்புகளுள் முறை வேண்டி வந்தோர்தம்

அச்சத்தை - பயத்தை - நீக்குவதும் ஒன்றாகும் (மது. 489). ஊர்காப்பாளர் மழை பெய்த நாளில், நள்ளிரவிலும் அச்சமின்றிக் காவல் புரிந்தனர் (மது. 647-652). பகை கொண்ட இருபெரு வேந்தரை அமைதிப் படுத்த முயலும் சான்றோர் போலச் செவிலி, தலைவி ஆகிய இருவர்க்கும் உண்டாகிய வருத்தத்தால் ஏற்பட்ட இரண்டு அச்சத்தோடு ஆற்றவியலா நிலையில் தோழி இருந்தாள் (குறி. 27-29). 'நன்மொழிக்கு அச்சமில்லை' என்பது ஒரு பழமொழி (குறு. 392:2). அறத்தின்வழி நடக்கும் அரசனின் ஆணைச் சக்கரத்துக்குத் தடையாக இருப்பனவற்றுள் அச்சமும் ஒன்றாகும் (பதி. 22: 1-4). தலைவன் மனம் அச்சத்தின் நீங்கி அசைவினால் மீண்டும் ஆயமகளைச் சுற்றிச் சுழலும் (கலி. 110.8-11). அச்சு-1 காண்க.

**அச்சிரம் - பனிக்காலம்.** அச்சிரக் காலத்தில் - பனிக் காலத்தில் - மழைமேகம் இந்திரனது வான வில்லைத் தோற்றுவிக்கும் (பரி. 18:38,39). (அச்சிரம், அற்சிரம் எனவும் வழங்கும்). அற்சிரம் காண்க.

**அச்சு - 1. அச்சம்.** கள்ளிகள் ஓங்கியுள்ள பிணஞ்சுடு களம் கண்டார்க்கு அச்சு - அச்சம் - உண்டாகுமாறு பாழ்பட்டுக் கிடந்தது (புறம். 360: 14-16). இளஞ்சேரலிரும்பொறை உயிர்க்கு அச்சு இல்லாமல் காவலாகித் துன்பம் தீர்த்து இன்பம் பெருக ஆட்சி செய்தான் (பதி. 90:2,3). ஊரின்கண் தங்கியிருந்த நாளில் தலைவியது பிரிவின் அச்சு நீங்குமாறு தலைவன் தேறுதல் கூறினான் (அகம். 281:2). தலைவன் கூறிய பொய்ச் சூளுக்குத் தலைவி அஞ்சும் அச்சு, அவள் ஊடலை நீக்கத் தலைமகற்குக் காரணமாயிற்று (கலி. 75: 20, 21). கடல் தான் தோற்றுவித்த இருநிலத்தை உலகமெல்லாம் நடுக்கமுற்று அச்சுறும்படி தன்னிடத்தே ஒடுக்கிக் கொள்ளும் தன்மையுடையது (கலி. 134: 9, 10). திருமாலின் மோகினி வடிவைக் கண்டு அவுணர் மகிழ்ந்த மகிழ்ச்சியே அவர்க்கு அச்சாயிற்று (பரி. 3:33). அச்சம் காண்க.

2. **அச்சுமரம்** (வண்டி, தேர் முதலியவற்றின் சக்கரங்களைக் கோக்கும் மரம்). பாரம் மிகுதியால் பார் அச்சு மரத்தோடு பொருந்தும் (புறம்.90:6,7). அச்சுமரம் பழுதுபடின் அதற்கீடாகப் பயன் படுத்தும் அச்சுக்குச் சேம அச்சு என்று பெயர் (புறம். 102:5). அச்சுடைச் சாகாட்டின் ஆரத்தில் பலவி பொருந்தியுள்ளது (புறம். 256:2,3).

**அசா - 1. துன்பம்.** அழிவில் உள்ளம் வழிவழிச் சிறப்ப வினையை முடித்தனமாயின் விரைவில் சென்று தலைவியின் பணைத்த தோளில் பரவிய பசப்புநோய் அசா-துன்பம்-நீங்க முயங்குவோம் எனத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறல் (அகம். 47: 1,2,18,19). இரவுக்குறிக்கண் தலைவி தலைவனைக் கண்டு காற்றினால் அலைக்கப் பட்ட தளிர்போல நடுங்கிக் காதல் நோய் அசா நீங்க முயங்கினள் (அகம். 162:15,16). தலைவியின் புலம்பு அசா நீங்கத் தலைவனின் தேர் அச்சிரக் காலத்தே வந்தது (குறு. 338:5-8). அசாஅ-1 காண்க.

2. **இளைப்பு.** பாலைநிலத்தே உலறிய அருநிழலில் தங்கி, மழையின்மையால் உணவின்றி வருந்திய மடமானின் அசா-இளைப்பு-உற்ற கூட்டம் வாடிய மரலைச் சுவைக்கும் (அகம். 49.11-13). பல வடிவினவாய புள்ளினம் இரைதேர்ந்து துண்டு தாம் விரும்பும் பெடை துணையாக மணலமேட்டில் அசா நீங்கும் (கலி. 132:1-3). அசாஅ - 2 காண்க.

**அசாஅ - 1. துன்பம்.** கவணை போன்ற பூட்டுப் பொருத்தமையாலே வண்டியிலுள்ள உமணர் எருது அசாஅ-துன்பம்-எய்தியது (குறு. 388.3,4). அசா - 1 காண்க.

2. **இளைப்பு.** வழிப்போக்கர் யாமரத்தின் பெருநிழலில் வெயில் கொடுமை நீங்கத் தங்கிப் பண்டத்தைச் சுமந்துவந்த கழுதையின் பொறையை இறக்கி வைத்து அதன் அசாஅ-இளைப்பு-களைந்தனர் (அகம். 343:10-13). அசா-2 காண்க.

**அசுணம் - இசை அறியும் விலங்கு.** புலியைக் கொன்ற யானையின் கன்னத்திலிருந்து வழியும் மதநீரை வண்டினம் மொய்த்தது ஆரப்பரித்தது. அவ்வொலியினை யாழிசையெனக் கருதி மலைக்குகையிலுள்ள அசுணம் கூர்ந்து கேட்டது (அகம். 88 8-12). கூதிர்க் காலத்தில் மலைச்சாரலிலுள்ள கூதாளி மலரின் மணம் வீசுகின்ற வண்டின் இனிய ஒலியை மலையிலுள்ள அசுணம் செவி சாய்த்துக் கேட்கும் (நற். 244.1-4). முதலில் யாழை இசைத்து இன்பம் செய்து, பின் செவியில் ஏற்க இயலாத இன்னா ஓசையைப் பறையில் எழுப்பி அசுணத்தைத் துன்புறுத்திக் கொல்பவரின் கை, புணரின் இன்பமும் பிரியின் துன்பமும் செய்யும் தலைவன் மார்புக்கு உவமை (நற். 304:8-10). [அசுணத்தை விலங்காகக் கொள்ளாது பறவையாகக் கொள்வாருமுளர். ஔவை. து. உரை. நற். 244; அ. சி. பக. 25.]

**அசும்பு - 1. சேறு.** பாரியின் பறம்பு மலையிலுள்ள மனைமுற்றம் நறவினைப் பிழிந்திட்ட சக்கையினால் அசும்பு-சேறு-ஆகியது (புறம். 114:4-6). அசும்பின் வள்ளைக்கொடி பின்னுமாறு இறால

மீன் பாயும் வளமிக்க ஊர் குட்டுவன் மாந்தை (அகம். 376:13-18). (மாந்தை என்ற பாடமு முண்டு).

2. நீர்வற்றாக் குழி. சுரபுன்னையும் வாழையும் செழித்த அசும்பில்-நீர்க்குழியில-களிறு வீழ, அதனைக் கரையேற்றுதற்குப் பெண்யானை மரத்தை ஒடிக்கும் ஓசை மலையில எதிரொலிக்கும் (அகம். 8:8-12).

3. இடையறா தொழுகுநல். 'நெறிநீர் அருவி அசும்புறு-இடையறா தொழுகும-செல்வ' (பரி. 8:128). அசும்புமு அருவி (பரி. 21:52).

**அசோகம்** – மரவகையுள் ஒன்று. அசோகந்தண பொழில் பாண்டியன கூடலில் விளங்கியது (கலி. 57:12). செயலை, பிண்டி காண்க.

**அஞ்சன உருவன்** – மை போன்ற நிறத்தையுடைய கண்ணன். விண்ணவர்க்கும் அவுணர்க்கும் போர் நடந்த போது, அவுணர் குழாம கதிரவனை மறைததத்தால இருள் எங்கும் பரவி உலகம துன்புறறது. அப்பொழுது அஞ்சன உருவன்–கண்ணன்–கதிரவனை மீண்டும் கொணடுவந்து நிலை நிறுததி உலகத்தின் துயா துடைததான (புறம. 174.1-5).

**அஞ்சனம்** – மை. காயாம்பூ அஞ்சனம்-மை-போல் மலர்ந்தது (முல்லை. 93). துளையுடைய கொறுக் காந்தட்டையில் மகளிர் அஞ்சனம பெய்து வைத்தல வழக்கம் (ஐங. 16:1,2).

**அஞ்சி** - குறுநில மன்னன. ஏழு வள்ளல்களுள் ஒருவன். முனைசுடும் புகை தவழும் களிறுடைய பகைப் புலதது அஞ்சி தங்கினான (புறம. 103.6-8). மாரி போன்ற கொடையினையும யானைபபடை தேர்ப் படைகளையும் உடைய அஞ்சி, பகைவர் அசசமுறறு துயிலுந் துயிலாதவாறு போர்முனை சென்று தங்குவான (குறு. 91 5-8). அஞ்சியின புகழுக்குரிய செயலகளைப் பாடுபொருளாகக் கொணடு புலவர் செய்யுளியற்றினர்; அவற்றிற்குப பாணர் பண்ணும் திறமுமாக இசைநூலின எண்ணிய முறையில் இனிமையான பணணமைத்துப் பாடினர் (அகம். 352:12-17). குதிரை மலைககுத தலைவனாகிய கூர் வேல அஞ்சியின் மறவர் ஆனிரைகளைக் கவரும் போரில் துடிகொட்டி ஆர்ப்பரித்தனர் (அகம. 372: 9-12). அஞ்சி பகைவரை நேர்நின்று பொருது வென்றவன; கழல்தொடி தடக்கையன்; அதியரின் கோமான்; வீரச் செல்வத்தினையும் பொன் மாலையினையும் உடையவன்; ஔவைக்கு அரிய நெல்லிக் கனியீந்தமையான் 'நீலமணிமிடற்று ஒருவன் போல மன்னுக பெரும' என அவரால் வாழத்தப் பெற்றவன் (புறம். 91:1-7). யானைப் படையும் குதிரைப் படையுமுடைய அஞ்சி ஈரநெஞ்சத்தோடு நாளோலக்கத்தில் வீற்றிருநது பரிசிலர்க்குத் தேர் வழங்கினான (நற். 381:7-9).

[புறநானூறு 101 - ஆம பாடலின் நான்காவது அடி 'அணிபூண் அணிநத யானை இயலதேர்' என்று உ. வே. சா. பதிப்பில் காணபபடுகின்றது; ஆனால வையாபுரிப்பிள்ளை பதிப்பில. 'இழையணி யானை இயலதோ அஞ்சி' என்றுள்ளது. அஞ்சி என்பது அதியமானுககுரிய பெயரே என்பதனை இப்பாடம் வலியுறுததும். புறம. 310-ஆம் பாடலில வநதுள்ள அஞ்சி என்னும பெயா ஒரு குறுநில மன்னனைக் குறிககும் என்பர் உ. வே. சா. அச்சொல அசசுறுத்திப் பாலூட்டுதற் பொருட்டு அன்னை ஓச்சிய சிறு கோலுககு அஞ்சி ஓடிய ஒரு வீரனின இளம் பருவச செயலைச் சுட்டுதற்கு வந்த பெயராகும். அகம். 115-ஆம் பாடலில் 'வயமான் அஞ்சி' எனப் பாடமுள்ள இடத்தில் 'வாமானஞ்சி' எனப்பாடங் கொணடு அஞ்சி ஒருவன் பெயரைக குறிக்கும என்று வே. வி. கூறும். அசசொல வரும் சூழலை நோககின வினை யெசசமாகக கொள்வதே பொருநதும். வினையெசசமாகக் கொணடுரைககும் உரையையும் பாட வேறுபாட்டுடன் வே. வி. குறித்துள்ளது. நெடுமிடல் எனபது அஞ்சியின் இயற்பெயர் என்று பதிற்றுப்பத்தின பழைய உரைகூறும் (பதி. 32.10). அதியமான் தகடூரிற பொருது பெருஞ்சேரலிரும் பொறையால் மாய்ந்ததாகப பதிற்றுப பத்தால் (ப. 8) அறிகிறோம். இரும்பொறைக்குமுன் ஆணட களங்காயக் கண்ணி நார்முடிச் சேரல் சாய்தத நெடுமிடல என்னும் அஞ்சி பெருஞ்சேரலிரும பொறை வென்ற அதிகமானினும வேறான அதியர் குடியில தோன்றிய முன்னோன எனக் கொள்ள வேணடும். மிஞிலி அதிகனைக் கொன்றான் என அகம் (142) குறிப்பிடும். 'அதிகற் கொன்று' என்பதற்கு 'எயினற் கொன்று' என வே. வி. கூறும் பாடம் பொருந்தியதே. மததி எழினியின பல்லைப் பறிததான் என்றும், கொங்கர் அதியனைக் கொன்றனர் என்றும் வருதலால இவ்வெழினியும் அதிகனும் வேறானவர் என்று கருதலாம். சங்க நூலகளுள் அதிகமான்கள் பலர் குறிககப் பெற்றுள்ளனர். 'தொகை நூல்களில் அதிகமான் பற்றி வரும் எல்லாப் பாடல்களும் ஒரே அரசனைப் பற்றியவை எனக் கருதுதல் தவறாகும்' என்னும் மா. இராச மாணிக்கனார் கருத்து ஒப்புநோக்கத்தகும் (பத்துப் பாட்டு ஆராய்ச்சி. பக். 430).] அதிகமான், அதியமான், அதியமான் நெடுமானஞ்சி, அதியர் கோமான, அதியன, எழினி, நெடுமிடல காண்க.

**அஞ்சியத்தை மகள் நாகையார்** – பெண்பாற் புலவர். இவர் பாடியது அகநானூறு 352-ஆம் பாடலாக உள்ளது. இப்பாடல் மணமானபின் தலைவி வீட்டுக்குச் சென்ற தோழிக்குத் தலைவி கூறியது என்னும் துறையில் அமைந்தது. இவர் கடுவன் பலாப் பழத்தைக் கவர்ந்துகொண்டு பாறை மருங்கில் மலையின் பின் நிற்பது விறலியின்பின் முழவன் நிற்பது போல் உள்ளது என்று புனைந்துள்ளார்.

**அஞ்சிலஞ்சியார்** - புலவர். இவரியற்றிய ஒரே பாடல் நற்றிணையில் (90) இடம்பெற்றுள்ளது. மருதத் திணையில் தோழி கூற்றாக இப்பாடல் அமைந்துள்ளது. ஆடை வெளுப்பவள் வெளுத்த ஆடைக்குக் கஞ்சி தோய்ப்பது பற்றியும் ஊஞ்சலாட்டம் பற்றியும் வேந்துடை அவை பற்றியும் பாட்டில் குறிப்புக்கள் உள. [இவர் பெயரிலுள்ள அஞ்சில் ஊரைக் குறிக்கும் (த. வ. க. பக். 16). அஞ்சிலோதி என்ற பெயரை ஆண்டமையின் இப்பெயர் பெற்றார் என்பர் (ச. சி. பெ. பக். 128, 129).]

**அஞ்சிலாந்தையார்** - புலவர். இவர் குறுந்தொகை 294, நற்றிணை 233 ஆகிய இரு பாடல்களைப் பாடியவர். இரு பாடல்களும் வரைவினை வற்புறுத்தும் தோழி கூறியவை. கடலாடல், கடற்கரைச் சோலைக்குச் சென்று உலாவுதல், மகளிரொடு குரவையாடுதல் முதலியன மகளிரின் பொழுதுபோக்கு ஆகும் (குறு. 294). இவர் அன்புடை யுள்ளத்துடன் அருளொடு ஆராய்ந்து, ஆன்றோர் சென்ற வழியில் வாழ்பவன் சான்றோன் என்பர் (நற். 233:7-9). ('அஞ்சில்' என்பது ஆந்தையாரின் ஊர்ப்பெயராக இருக்கலாம். இவர் பெயரை நோக்கின் அஞ்சில் என்னும் ஊரினர் என்பதும் ஆதனுக்குத் தந்தை யார் என்பதும் பெறப்படும்).

**அஞ்செவி** – 1. உட்செவி (அகம்+செவி). தலைவனது தேர்மணியின் ஒலி தலைவியின் அஞ்செவி-உட்செவி-நிறைய ஆலின் (முல்லை. 89).

2. அழகிய செவி (அம்+செவி). ஆமானின் அஞ்செவி -அழகியசெவி-உடைய குழவி கானவர் கைப்பற்ற இனத்தின் நீங்கி அஞ்சி ஓடியது (குறு. 322: 1, 2). யானைக் கன்றின் அஞ்செவி நெய்தல் இலைபோல் உள்ளது (நற். 47:1-4).

**அஞ்ஞை** – அன்னை. தலைவியைச் செவிலி அருமை பாராட்டி அஞ்ஞை - அன்னை - என்று குறிப்பிடுகின்றாள் (அகம். 15: 19). செவிலி தலைவியை அஞ்ஞை எனல் (அகம்.145:22).

**அஞர்** - 1. துன்ப நடுக்கம். மாரிக்காலத்து இரவில் மரக்கலங் கவிழ்ந்த நிலையில் பொறுத்தற்கரிய அஞர்-துன்ப நடுக்கம் - உற்ற நெஞ்சமொடு கரை இல்லாத ஊமன் கடலில் மூழ்கினாற் போலத் துன்பமாகிய மறுசுழியிற்பட்டுச் சுழலுவதிலும் இறத்தல் நன்று என வெளிமான் துஞ்சியபின் பெருஞ்சித்திரனார் வருந்தினர் (புறம். 238:14-19). பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு கொழுநன் மாயத் தீப் பாயும்போது அணங்குடை முன்றிலில் நீர்வார் கூந்தல் புறத்தே தாழப் பெரிய அஞர்மிக்க கண்ணளாய்ப் புறங்காட்டைப் பார்த்துச் சுழன்றாள் (புறம். 247: 4-7). இன்னகை மகளிர் பொலங்கலம் நிறையத் தந்த கள்ளை நிறைய உண்ட பொருநன் பெரிய அஞர் நீங்கிச் செருக்கோடு நின்றான் (பொரு. 85-89). வலிய அஞர் பொதிந்த பொருநனது மனம் மகிழ்ச்சியுறுமாறு இளைஞர் திருமாவளவனின் விருந்தோம்பற் சிறப்பை எடுத்துக்காட்டினர் (பொரு. 99,100). தலைவியைத் தலைவன் சிறுபுறந் தழுவ அவள் மழை பெய்த மண்போல் நெகிழ்ந்து அவனுக்கு இணங்காமை குறித்து அஞர் உற்றான் (அகம். 32:9,10). காவிரிப் பேரியாற்று வெள்ளத்தில் திளைத்தாடுபவள் போலத் தலைவி தன் நடுங்கஞர் தீர முயங்கித் தலைவன் மார்பிலே பொருந்திக் கிடந்தாள் (அகம். 62:9-12). ஆரஞர் எய்துபவரது மார்பில் வேலெறிந்து வருந்துபவரைப் போலப் பிரிவில் வருந்தும் தலைவியை மாலைப்பொழுது வருத்தியது (அகம். 71: 9-12). 'நீ வளை நெகிழ மெலிந்து நாளும் கலங்கஞர் உழந்து தனித்திருப்பத் தலைவர் தாம் சென்ற நாட்டில் நெடுநாள் தங்கியிரார்' என்று தலைவியைத் தோழி ஆற்றுவித்தாள் (அகம். 127;1,2,12). இருள் மிக்க கல்லதர்ச் சிறுநெறியில் அஞ்சாது இரவுக்குறி வரும் தலைவனை நினைந்து தலைவியும் தோழியும் ஆரஞர் எய்தினர் (அகம். 202:13-15). மனையின்கண் உறையும் புறாச்சேவல் தன் பெடையோடு பறந்து செல்லுமாறு விளையாடும் தோழியர் கூட்டத்தைக் காணுந் தோறும், 'இதனைக் கண்டு களிக்கத் தலைவர் நம்முடன் இல்லையே' என நினைந்து புலம்பொடு வதியும் தலைவியின் கலங்கஞர் அகல அவன் வேந்துவினை முடித்து விரைவில் மீண்டான் (அகம். 254: 5-11). குளிர்ந்த வாடைக்காற்று வீசும் கடும் பனியுடைய அச்சிரக்காலத்து 'நான் நடுங்கஞர் உறுமாறு தலைவர் பிரிந்து செல்வதாகச் சொல்கின்றாரோ' எனத் தலைவி தோழியை வினவினாள் (குறு. 76:2-6). தன்பாற் சென்றாரை ஆழ்த்திவிடும் பண்பினால் பிறர்க்கு நடுங்கஞர் செய்யும் சேற்றினிடத்தே நாரை மீனிரை தேரும் (குறு. 103:1-3). தலைவரைச் சென்று முயங்குதற்கு இயலாதவாறு அவரைக் காண்டல் அரியதாயிற்று; அவரும் எளிவந்து அஞர் களைதலைச் செய்யார்; நாமுற்ற

நோயைக் களைவோர் யாருமிலர் எனத் தலைவி கூறினாள் (குறு. 305:2-4,8). எம்மூரில், கடும்பாம்பு திரியும் தெருவிடத்து இரவில வநது முன்பு எம் நடுங்கஞர் களைந்த நீ, இப்பொழுது பிரிவாயா யின எமமை எம் வீட்டிற்கே கொண்டு விடுக' எனத் தலைவி தலைவனிடம் வெறுத்துக் கூறினாள் (குறு. 354:3-6). 'நின பிரிவைத் தாங்காது பரத்தையர் பலர் கவஙறு நினனைப் பற்றி இழுத்தபோது நீ, எயதிய மிக்க அஞரை நான் நேரிற்கணடேன' எனத் தலைவனிடம் தோழி கூறினாள் (நற். 30: 1,5-10). தன கூந்தலைப் பறறியிழுதது வளையைக் கழற்றிய தலைவனின பூசலைத் தலைவியிடம் சென்று சொல் வேன எனப் பரததை கூறலும் அவன் நடுங்கஞர் எயதினான் (நற். 100:5-7,12). தலைவன் பொருள் வயிற் பிரிவதைக கூறக் கேட்ட தலைவி தன் கண் களில் வருத்தம் மிக, ஏங்கிக் கலங்கஞர் உற்றாள் (நற். 113). பிரிவிடை யாற்றாத் தலைவி பேரஞர் உறுவி (பெருந்துனபம உறுபவள) எனக் குறிக்கப் பெறல் (நற். 130:9; 193:9). 'பேரஞர் தாக்கிய நம் நெஞ்சம் நீர் பெய்த நெருப்புப்போலத் தணியுமாறு இன்று தலைவர் இரவுக்குறி வாராராயின் நன்று' எனத தலைவன் சிறைப்புறமாக நிற்கும் நிலையில் தோழி ஆற்றாது அருமை கூறி வரைவு கடாயினாள் (நற். 154.8-12). தோளவளை நெகிழ்த்த கலங்கஞர் நோக்கி எள்ளி நகுவது போல மின்னி மேகம் இடித்து முழக்கஞ் செய்தலைப் பொருள்வயிற் பிரிந்த காதலர் கேளாரோ எனத் தலைவி நொந்து கூறினாள் (நற். 214:8-12). பிரிவில் வருந்தும் தலை வியின் பேரஞர் உள்ளம் நடுங்குதலைக் காணுதற்கு அன்பில்லாத மேகம் பருவ மல்லாத காலத்துப் பொயயாக முழங்கியது (நற.248:5-7). தன் பண் பினால் நின தீமை காத்த தலைவியின் அரிய அஞரைத் தீர்க்கும் மருந்தாகிய நாம் விரைந்து செலவோம் எனத தோழி தலைவனிடம கூறி வரைவு கடாயினாள் (கலி. 44:18-21). தலைவனின பிரிவால் தலைவிக்குப் பகலிலே அழகு கெடும்படி நலிதலைத் தந்த நடுங்கஞர் இரவிலே கனவிலும வருத்தியது (கலி. 53: 18,19). உன் தோழியாகிய தலைவி உறுததின ஆரஞர் செய்யும் வருததம் என உயிரை வாங்கியது; அநநோய் தீரும் மருந்தருள் வாய எனத் தலைவன் தோழியிடம் வேண்டினான் (கலி. 60:16-18). கலங்கஞர் உற்று நின் கமழ் மார்பு விரும்பியவளின் தொடி முன்கையினின்றும் கழலு தலைக் காணுமிடத்து, உன்னைச் சூழ நின்றார்க் கெல்லாம் நீ பொருளைத் தவறாது வழங்குவாய் எனறு உலகம் கூறும் சொல் கெடாதோ என அரச னாகிய தலைவனிடம் சான்றோர் வினவினர் (கலி. 100:11-14). 'முதற்சூல ஈன்ற பசு பொழுது விடிந்த காலத்திலும் வெளியே சென்று மேயப் போகாது தொழுவில் கட்டி வைக்கப்பட்ட தன் கன்றினைச் சூழ்ந்து திரிவது போல நின்னைக் கண்டு என் நெஞ்சம் சூழ்ந்து திரிந்து நடுங்கஞர் உற்றது' எனத் தலைவன தலைவியிடம் கூறுகிறான் (கலி. 110:12-15). 'மாலைப்பொழுதே, அருளில்லாத காதலர் என்னிடத்திலிருந்து அகன்றுவிட்ட இப் போது ஆரஞருற்ற என்னை வருத்துதற்காக வந் தாயோ என்று தலைவி வினவி நோதல் (கலி, 120: 13-15). அறிவு அஞரில் அழுந்தி உழல, ஆய்நலம் வறிதாக, செறிவளை தோளினினறும் கழன்று விழத் தலைவியைத் தலைவன துறந்தான் (கலி. 127: 12,13). நீரில் அலரும் நீல மலர் என்று தலைவர் புகழ முன்னர் அவர்க்குப் பேரஞர் செய்த என் கண்கள் இப்பொழுது பீர்க்கம்பூப் போலப் பசந் தன எனத தலைவி கூறுதல் (கலி. 143:49-51). கடல் நோக்கிப் புலம்பிக் கொண்டிருந்த தலைவியின் கலங்கஞர் தீரக் காதலர் விரைந்து வந்ததால் அவ ளது பிணியும் பசப்பும் நீங்கின (கலி. 144:66,68-73).

2. கலக்கம். காதலியின் அறிவஞர்-அறிவுக் கலக்கம்- பொருந்திய நோக்கத்தையும் புலவியையும் நினைந்த தலைவன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சினை நோக்கிச் 'செலவேமோ, தவிர்வோமோ' என வினவினான் (அகம். 225:14-17). தலைவன் பிரி வுணர்த்திய நிலையில் தலைவி அறிவஞர் உற்றனள் (நற். 106:4-9).

**அட்டவாயில்** - ஓர் ஊர். செல்வரின் தேர் செல்லுத லினால் குழிபட்ட தெருக்களை யுடைய அட்ட வாயில் வயல்வளம் நிறைந்தது (அகம. 326:3-6).

**அட்டில்** - சமையலறை. கண் திறவாச் சிறுகுட்டிகள் முலையை உண்ணுதலைத் தனது பசி மிகுதியால் பொறுகக மாட்டாமல் குரைக்கும் புனிற்று நாய் தங்கியிருந்த அட்டிலின முதுசுவரில் தோன்றிய கரையான அரித்தலையால் கட்டப்பெற்ற கழிகள் கட்டுக் குலைந்து சோர்ந்தன; அங்குக் காளான் பூத்திருநதது (சிறு. 130-134). காவிரிப்பூம்பட்டினத் தில் புகழ் கருதியும அறங் கருதியும் அட்டிலில் சோறு சமைத்தனர் (பட். 42,43). விருந்தினர் தலைவாச லில் நெருங்கியிருந்து பின் உட்சென்று உண்ட பின்னரும் மிக்குக் கிடக்கும் பெருஞ் சோற்றினை யுடையது அட்டில் (பட். 261, 262). குழுமூரில் வாழ்ந்த உதியனின் அட்டில் எப்பொழுதும் ஆர வாரமாகவே இருக்கும் (அகம். 168:5-7). ஒப்புர வுக்கு ஒல்காத தலைவி, தலைவன் விருந்துடன் வந்தபொழுது தன் ஊடலை மறந்து, விருந்தோம் புதற்கு வேண்டும் உணவமைக்க அட்டிலுக்குச்

சென்றாள் (நற். 120:5-9). ஓலையால் வேயப்பட்ட சிறு அட்டிலும் உண்டு (நற். 300:12).

**அடக்கம்** - மன மொழி மெய்கள் அடங்கியிருத்தலாகிய மக்கட் பண்பு. காலம் வரும்வரை மலராது அடங்கி யிருக்கும் அரும்புகளைக் காட்டி ஆன்றவர் அடக்கம் சிறப்பிக்கப்படுகிறது (கலி. 32:8). கலைவல்ல ஆசிரியரை வழிபட்டுப் பொருள்களை அறியும் மாணவர், அவ்வாசிரியரிடம் அடக்கமுடையராய் ஒழுகுதலும் தலைமைப் பண்புடையார் நல்லவர்க்கு அடங்கி ஒழுகுதலும் வற்புறுத்தப் பெறும் (கலி. 47: 3,4). இளமகளிர் அடக்கமில்லாது ஓரையாடினர் (கலி. 82:9,10). அறிவும் அறிவின் பயனாகிய அடக்கமும் நாணமும் மகளிர்க்குரிய பண்புகள் (கலி. 138:3).

**அடகு** - இலை. கணவனை இழந்த மகளிர் குளிர்ந்த நீரில் மூழ்கிப் பசிய அடகினை - இலையை - உணவாக மிசைந்து கைம்மை நோன்பு நோற்பர் (புறம். 62:14). அடகினை உணவாகச் சமைக்கும்போது வறுத்த அரிசிமாவை (பொரிமா) மேலே தூவிச சமைத்துணபது வழக்கம் (புறம. 140:3-5). குப்பைக் கீரைக்கு உப்பிட்டுச் சமைக்கவும் வழியில்லாமல் வறியவர் பாசடகினை வறிதே தின்றனர் (புறம். 159:9-12). வேலியில் படர்ந்து ஆடுமேய்ந்து எஞ்சிய முன்னையடகும் வரகுசசோறும் எளிய உணவாகும் (புறம. 97:10-12). பெருந்தகை ஊர் கொய் யடகு வாடப் பசித்தது (புறம. 318:1-3). பலவகைக் காயகளோடும் கனிகளோடும் சேர்தது அடகும் சிறந்த உணவுப் பொருளாக எண்ணப்பெற்றது (மது. 531).

**அடர்** - தகடு. அழல்புரிந்த அடரால் - பொற்றகட்டால் - ஆகியது தாமரை (புறம. 29:1). உருககி அடராகத் தட்டிச் செய்யப்பெற்றது, வெணகலத்தாலாகிய தாளம் (மலை. 4). செப்படர் போன்றது இருப்பையின் தளிர் (அகம. 9:3,4). அடரால் அகல் விளக்குச் செய்தனர் (அகம. 19:17). அடர்பொன் போல விளங்குவது அழகிய சுணங்கு (கலி. 22:19). அடர் பொன்னாலானது செம்புக்கலம் (கலி. 51:7). அடர்பொன் விளக்கத்தை ஒக்கும் ஆவிரம் பூவாற் கண்ணி செய்தனர் (கலி. 140:7). பொன் அடரால் செய்யப்பெற்றது பூவாகிய அணி (பரி. 12:12). கண்ணொளிர் திகழ் அடர் இடுசுடர் (பரி. 21:54).

**அடாஅர்** - விலங்குகளை அகப்படுத்தும் பொறி. பன்றி முதலிய விலங்குகளை அகப்படுத்தக் குறவர் அடாஅர் - பொறியை - பயன்படுத்துவர் (நற். 119: 1,2). அடாார் காண்க.

**அடார்** - விலங்குகளை அகப்படுத்தும் பொறி. புலிவேட்டுவன பயன்படுத்தும் பெருங்கல் அடார் என்னும் பொறி ஆடவர் மார்புக்கு உவமை (புறம. 19:5,6, 18). அடாஅர் காணக.

**அடி** - 1. பாதம். கழல் உராயும் திருந்திய அடி - பாதம் - உடையவன் கரிகாற் பெருவளத்தான் (புறம. 7:2). நெய்தலங் கானல இளஞ்சேட் சென்னியின் அடி பொருந்தி வணஙகி நினறால் மிகுதியாகக் குற்றஞ் செய்தாரின் தண்டததை முன்னையினும் குறைப்பான் (புறம். 10:5,6). யானை பரந்த அடியினையுடையது (புறம். 15:8;22:4; 233:2; குறு 180:1). உழவரின் குடியைக் காத்து அந்தக் காவலாலே ஏனைய குடிமக்களையும காக்கும் அரசனின் அடியை அவன் பகைவர் வணங்குவர் (புறம். 35.32-34). கறையடி யானை (புறம். 39:1,2;135:12, 323:6; பதி. 28:3; பெரு. 51,52; அகம். 142:9). கிள்ளிவளவன் அடிபொலியக் கழல் அணிந்தான் (புறம. 40:4). நலங கிள்ளி சேட்சென்னியின் திருநதடி பொருந்த வணங்கியோர் என்றும வருந்துவாரல்லர் (புறம. 61:17-19). யானை பரநத அடியையும் பணைத்தாளையும உடையது (புறம். 72:3,4). நலங்கிள்ளி தன நலலடி பொருந்தி இரபபவர்க்குத் தன் அரசையும் எளிதில வழஙகுவான (புறம். 73:1-3). போர்வைககோப் பெருநற்கிள்ளி அடியில கழல புனைந்திருநதான (புறம. 83:1). காரி கழல்புனை திருந்தடியுடையவன (புறம். 122:2). தேர்வண மலையன் கழலணிப பொலிந்த சிவந்த அடியுடன் விரைந்து வந்து பொருதான் (புறம். 125: 12-14). விறலியர் அடிவருநத நெடிது சென்றனர் (புறம். 139.3,4). கழல்புனை திருந்தடிக் கடுமான் கிளளி (புறம. 167:10). நன்மாறனின் அடிநிழல் பழகிய அடியுறை எனறு தமமை வடமவண்ணககன் பேரி சாத்தனார் குறிப்பர் (புறம். 198:25-27). வேள் எவ்வியை இழநத அவன மனைவி பிடி அடி போன்ற சிறிய இடத்தை மெழுகிப் புல்மேல பிணடம் வைத்துப் படைததாள (புறம். 234:2-4). யானையின் அடிபோல ஒருகண் இரும்பறை தோன்றும் (புறம். 263:1,2). யானைக்கன றின் அடிக்குத் துடி உவமை (புறம. 369:26; பொரு. 125, 126). அஞ்சத்தகும் போர்க்களத்தில மாய்ந்த வீரரின் குடர் தன் அடியைச் சுற்றிக்கொள்ள அழுகுரற் பேய்மகள் ஆடினாள் (புறம். 370:23-25). திருந்து கழற் சேவடி (புறம். 387:18; அகம். 309:11). நெடுமானஞ்சியின் திருந்தடியைப் பரிசிலர் வாழ்த்தினர் (புறம். 390:25). யானையின் அடிவழிபோன்றது ஒரு கண் மாக்கிணை (புறம். 392:4,5). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் தேவியது மலரின் அகவிதழை யொக்கும் சீறடியைக் கிண்கிணியின் சிறிய பரடு

அலைக்கும் (பதி. 52:18-20). மறவர் பிறக்கடி இடாத ஆற்றலுடையவர் (பதி.80:8,9). 'நினக்கு உவமை யில்லாப் புலமையோய், நின்னடி உள்ளி வந்தேன்' என்று முருகனிடம் கூறுமாறு அன்பன் ஆற்றுப் படுத்தப் பெற்றான் (முரு. 279-281). குடாவடி யுளி யம் (முரு. 313). பாடினியின் சீறடிக்கு ஓடியிளைத்த நாயின் நாக்கு உவமை (பொரு. 42). பரிசிலரை வழியனுப்புங்கால் ஏழடி பின் சென்று அனுப் புதல் வழக்கு (பொரு. 166). ஓடி யிளைத்த நாயின் நாக்குப் போல் விறலியின் அடி தோன் றியது (சிறு. 16-18). விறலியின் மெல்லிய சீறடி நடையால் மெலிந்து தளர்ந்தது (சிறு: 31,32; மலை. 42,43). நல்லியக்கோடனின் கழல் விளங்கும் திருந் திய அடியில் களிறு செலுத்துதலால் உண்டாகிய தழும்பு இருந்தது (சிறு. 122,123). பேய்மகள் கவைத்த அடியினையுடையவள் (சிறு. 197; மது. 162, 163). அடிக்குக் காப்பாக அணியும் தொடுதோல் அடிபுதை அரணம் எனப்படும் (பெரு. 68, 69). மயங்கிய வழியில் மானடி பதிந்திருந்தது (பெரு. 106). விடாது தொடுதோல் (செருப்பு) அணிந்தமை யால் அடியில் வடு இருந்தது (பெரு. 169). களவேள் வியில் சோறு அமைத்த வாலுவன் (பேய்மடையன்) அடிஒதுங்கிப் பின்பெயராத வீரர்க்கு அச்சோற்றை வழங்கினான் (மது. 35-39). கோத்துக்கட்டிய கச்சுக் கிடந்த தழும்பிருந்த வீரக்கழல் அசையும் அடி யினை யுடையவர் வளங்கெழு செல்வர் (மது. 436, 442). அரச மாதேவியின் நல்லடியை மெல்லியல் மகளிர் வருடினர் (நெடு. 151). நுண்வினைக் கச்சை கட்டிய பொன்னாலான வீரக்கழ லணிந்த திருந்திய அடியினன் தலைவன் (குறி. 125-127). வேட்டை நாய் ஓடி வந்ததும் தலைவியும் தோழியும் நல்லடி தளர்ந்து நடுங்கினர் (குறி. 131-133). மகளிர் சேவடியினையும் செறிதொடையினையும் உடை யவர் (பட். 146). ஓங்கெழில் யானை உகிர் பொருந் திய அடியை உடையது (பட். 231). கொடுவில் எயினர் தொடுதோல் அடியர் (பட். 265, 266). குளக்கரையி லுள்ள பாசி அங்கு நடப்பார் அடியை வழுக்கி விடும் (மலை. 220-222). ஒருவர் மலைக் காட்சிகளைக் கடுகப் பார்த்தால், மெல்லடியால் முறையே செல்லும் வழி தப்பும் (மலை. 235-241). தலைவன் செய்த அளிநிலை பொறாது தலைவி நலமிகு சேவடி நிலம் வடுக் கொள நடந்து அவனைக் குறுகினாள் (அகம். 5: 1-4). தன்மகள் நடப்பதைப் பொறாத தந்தை அவள் நடக்குங்கால 'சீறடி சிவப்ப எங்குச் செல் கின்றாய்' என்று அவளை வினவுவான் (அகம். 12: 2,3). சிறுமுதுகுறைவியின் சிலம்பணிந்த சீறடி பாலையில் நடக்க வல்லுநவோ' என மகட் போக் கிய செவிலி கவன்றாள் (அகம். 17:9,10). உளிமுக வெம்பரல் செல்வாரின் அடியை வருத்தும் (அகம். 55:3). கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான் (அகம். 61:11). கறையடி மடப்பிடி (அகம். 83:3). மெல்லிய சேவடி மெலியுமாறு செல்லுதற்கு வல்லு நள் கொல்லோ என மகட்போக்கிய செவிலி வருந் துதல் (அகம். 89:18,19). அடிபுனை தொடுதோல் சிதையச் சென்று மறவர் ஆனிரை கவர்ந்தனர் (அகம். 101:9-11). பல்லடிச் சில்பரிக் குதிரை பந்து புடைத்தல் போன்ற செலவினையுடையது (அகம். 105:9,10). பாணன் கல்லைப பொருது மெலி வுறாத ஓசை யினிய வலிய அடியினன் (அகம். 113:10). சேவடியின் சிலம்பொலிப்பத் தலைவி தலைவனுடன் போயினள் (அகம். 117:8, 9). தலை வன் இரவுக்குறி வரும்போது குழியுள்ள வழியில் மிதிப்புழி அவன் தளரடியைத தாங்கத் தன் நெஞ்சம் சென்றதெனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 128:6, 13-15). மழவர் செருப் புடை அடியர் (அகம். 129:12, 13). 'பாலையின் அரிய வழிகள் நல்லடிக்கு அமைந்தன அல்ல; மெல்லியல் மகள் அங்கு நடக்க வல்லுநளோ' என மகட் போக்கிய செவிலி நினைந்து வருந்தினாள் (அகம். 153:11-13). உமணர் செருப்பு ஒலிக்கும் அடி யினை உடையவர் (அகம். 191:4). களிறு பறை கண்டன்ன பரந்த அடியினை யுடையது (அகம். 211:3, 4). பொன்னாலான கிண்கிணி யணிந்த நலந்தரு சேவடி நிலம் வடுக்கொள மணல் மலி முற்றததுத் தலைவி நடந்தாள் (அகம். 254:3, 4). இருப்பை அரும்பு பூனையின் அடி போன்றது (அகம். 267:6). பொய்கையில் இரையை விரும்பி வாளைப் போத்தினை உண்ணச் சென்ற நாரை தன் அடி யொலியை அம்மீன அறிதற்கஞ்சி மெல்ல நடக்கும் (அகம். 276:1-5). தலைவர் வருதற்குரிய கார்ப்பருவ மேகம் காலிறங்கியுள்ளது; நின் அழகிய சிவந்த, வலியற்ற சிறிய அடிகள் நிலம் பொருந்த அஞ்சி மெல்ல நடக்கும் நடை அழகுபெற நடந்து அதனைக் காண வருவாயாக எனத் தோழி தலைவியை அழைத்தாள் (அகம். 323:4-7, 13). யானை குவவு அடி யினையுடையது (அகம். 347:11, 12). குவியடி வெருகு (அகம். 367:8). வேழத்தை ஊடுருவும்படி எய்த சிவந்த அம்பொடு காட்டுமான் அடிவழியைத் தேடி வேட்டுவர் வேட்டைக்குச் செல்வர் (அகம். 388:23-26). தலைவியின் சிறுபரட்டு அஞ்செஞ் சீறடியி செம்பஞ்சுக் குழம்பு தடவப்பெற்றது (அகம். 389:6, 7). வரகின் கதிருடன் கூடிய தட்டைகளைத்

தொகுத்த பொலியைக் கவர்த்த அடியினையுடைய மாடுகளைக் கொண்டு துவைத்தனர் (அகம. 393:5,6). தொடியோள் மெல்லடியில் சிலம்பணிந்துள்ளாள் (குறு. 7:1, 2). மயிலடி போன்ற இலையை யுடையது நொச்சி (குறு. 138:3; நற். 115:5;305:2). செலவச் சிறாரின் சீறடியில் கிணகிணி பொலிந்தன (குறு. 148: 1, 2). மலையின் அயலிலுள்ள சிறுவழியில தம நலல அடி சுவடு செயயத தலைவர் சென்றார் (குறு. 207: 5-7). அடும்பின கவட்டிலை மானின அடிபோன்றது (குறு. 243:1). பெருங்களிற்றின் அடிவழித தங்கிய நீர் கரும்பு நடு பாததி போன்றிருக்கும் (குறு. 262:7,8). தலைவியின் மெலலென் சீறடி மாந்தளிர் போனறது (குறு. 278:1, 2). திருமால மாநிலத்தைச் சேவடியாக வுடையவர் (நற். க.வா.1, 7). கொலகளிறு தன பரநத அடியால் பெருந்தண் குளவியை (காட்டுமலலிகையை) குழைத்தது (நற். 51:8,9). 'கல்லுறச் சிவநத நின் மெல்லடி உய்வதற்கு ஆலநிழலில் களைப்பு நீஙகத் தங்கி அஞ்சாது செலக' என உடன்போக்கில் தலைவன் இடைச்சுரத்துத் தலைவியிடம் உரைத்தான் (நற். 76: 3-5, 9). தலைவன் அடியறிந்து ஒதுங்கா ஆரிருளில வந்தான் (நற. 156:1). நடத்தலைப் பயினறறியாத சீறடியினை யுடையவன் புதல்வன் (நற். 221:10,11). வளைந்த சிறகையுடைய பறவைகளின உள்ளடிச் சுவடுகள் நீர் வற்றிய இடங்களில் காணப்படும் (நற். 241:1-3). முயல் வேட்டு விரைந்தோடிய கத நாயின் நல்ல நாக்கை யொககும் சீறடியினை யுடையவள் தலைவி (நற். 252.10-12). தலைவியின அடியில் அணிந்த சிலம்பு கழிக்கும் விழவு பிறர் வீட்டில் நிகழ்ந்தமை குறித்துத் தாய் வருந்தினாள் (நற். 279: 10,11). தலைவி தன தந்தையின் இடனுடை வரைப்பில் ஆடுபந்து உருட்டுபவள போல ஓடிப் பஞ்சு போன்ற மெல்லிய அடிகளால் நடை பயில்வாள் (நற். 324:6-9). தலைவியின அஞ்சிலம்பணிநத அடி பாலை வழியில் தலைவனொடு செல்வதற்குப் பொருந்தினவோ எனச் செவிலி வருநதினாள் (ஐங். 389). மையற விளங்கிய கழலடியினை யுடையவன் தலைவன் (ஐங். 399:4, 5). காடு அடி தாங்கும் அளவின்றி அழல் போன்ற வெம்மையுடையது (கலி. 11:6, 7). யானைக்கன்றின் அடி துடி ஒக்கும் (கலி. 11:8). யானையின் அடி உரல் போன்றது (கலி. 13:6;21:1). தலைவனுடன் தலைவி பாலை வழிச்செல்லின், மெல்லியல் வாய்ந்த அவள் சீறடி அங்குள்ள பரற்கற்கள் பட்டுச் சிவப்புறும் (கலி. 13:11-13). தலைவியின் அடி காட்டில் செல்லுதற்கு எளிய அல்ல என்பது தலைவன் கூற்று (கலி. 20:7,8). தலைவனின் கழலடியைப் பணியாத பகைவர் அச்சத்தால் நடுங்கினர் (கலி. 30:20-22). தலைவன் யானை முதலியவற்றின் அடியைத் தேடுவான் போல வில்லுடன் தலைவியிருக்குமிடம் வநதான் (கலி. 37:1-3). புனததில மேயும யானையின் அடி ஒதுங்கும் இயககங கேட்ட கானவன பரண் ஏறி அதன்மீது கவண்கல் எறிந்தான் (கலி. 41:7-10). வாழையின வளைநத காய் புலியின் அடிபோலக் குலை தொறும் தொஙகும் (கலி. 43:24, 25). 'நின் அடியில் யான் உறைதற்கு நீ அருளாதிருததல் நினககு ஒத்ததோ' எனத் தலைவியைத் தலைவன் வினவினான் (கலி. 54:4). தலைவனின் நோயதீர்க்கும் மருநது தலைவி யாதலின அவன் அவள் அடிமீது வீழந்து இரப்பான (கலி. 63:10, 11). காதலன் தன் அடி வீழந்து வணஙக நகும் காதலியின் முகம் போலத் தாமரை முகை மலர்ந்தது (கலி. 71:5-8). தலைவனின் குறைகளைக் கூறி இசைவிப்பார் இலலாதவிடத்துத் தலைவன் தலைவியின் அடி பணிநது ஊடல் உணாததுவான் (கலி. 73:14-15). குழந்தையின் கழனறு வீழும் ஆடை கிண்கிணியொலி மாறாத அடியினைத் தடுக்கும் (கலி. 81:5, 6). திருந்தடியில நூபுரம் ஒலிப்பச் சென்று பரத்தை தலைவன புதலவனை விருப்பினால் உச்சிமோந்தாள் (கலி. 83·16,17). புதல்வன் அடியில் கட்டிய தேரைவாய்க் கிண்கிணி ஆர்ப்ப நடந்தான (கலி. 86:8, 9). பரத்தை, அணிகலன்கள் சுமையாக, ஒடிவதுபோலும இடையோடு நள்ளிரவில் அடி தளரச் சிலமபொலிபபத் தலைவன இலலம ஏகினாள (கலி. 90:8-12). தன் காதலியின் சிறிய அடியைச சேர்ந்து 'யான் தீயேன அலலேன்; அதனை நீ தெளிவாயாக' எனக கூறித் தலைவன் அவளிடததே தங்கினான் (கலி. 90:17,18). ஒருத்தி ஒருகையால அடிதாழும் ஆடையைத் தழுவி மற்றொரு கையால தன கூநதலைப் பறறிக் கயம் பாய்ந்தாள் (கலி. 92:42-44). பெண்டிர் புலக்கத் தலைவன அவர் அடிவீழ்நது ஊடல உணாத்தினான் (கலி. 93:55,56). அடியில பொனனாற் செய்த சதங்கையும் சிலம்பாகிய கெசசையும் அணியப்பெறறன (கலி. 96:16,17). நுதல், அடி, நுசுப்பு எனற மூன்றும் சிறுகியிருத்தல மகளிர்க்குச் சிறப்பு (கலி. 108:3). மலையொதத மார்புடைய செல்வனாகிய திருமாலின் அடியைத் தலையினால் வணங்கிக் கையினால் தொட்டுத் தலைவன் சூளுற்றான் (கலி. 108:55, 56). முதல்வனாய திருமால ஞாலம் மூன்றையும் தன் அடியால் தாவினார் (கலி. 124:1). வலையுறு மயில்போல் தலைவி பெரிதும் வருந்தினாளென அவளைத் தலைவன் தலையுற முன்னடி பணிந்தான் என்று தான் கண்ட கனாவினைத் தலைவி தோழிக்கு உரைத்தாள் (கலி. 128:16,17). பல மலைகளைக் கடந்து செனற தலைவன் வந்து

தன் அடியைச் சேர்கையினால் தலைவி அவனால் இழந்த நலத்தை இனிய அகமகிழ்ச்சியோடு எய்தி னள (கலி. 143:57-60). திருமாலின் அடியைத் தலை யுற வணங்கி ஏத்துவோம் எனக் கீரந்தையார் பாடு வா (பரி. 2 72-74). திருமாலின மாசில் சேவடி மறு பிறப்பறுக்கும் (பரி. 3:2). திருமாலின் சேவடியைத் தொழாதார் இலா; கீழேழ உலகத்தையும் திருமா லின் அடி பொருநதியது (பரி. 3:18-20). பொய்சசூள் எனறு கருதிச செவவேள் தனனைத துனபம் செய் யாதிருககத தலைவன தோழியைச் செவ்வேளின் அடிசோந்து ஆற்றுமாறு வேணடினான் (பரி. 8:78, 79). இகலிச் சினநதவளைத் தலைவன் தன் தலைக் கணணி அவள திருந்தடி தோயத் திறையாகக் கொடுததான் (பரி. 9.36, 37). ஒருத்தி அடிமேல் அடி மேல ஒதுஙகித் தன் கூநதலில உளள கண்ணி திருத் தினாள் (பரி. 12:90,91). திருமாலின் அடி தாமரை மலரை ஒக்கும (பரி. 13:50, 51). திருமாலை அன்னை என நினைத்து அடிதொழுதார் நல்லெழுநியார் (பரி. 13:61). விருப்பம் உடைய சுற்றத்தோடு செவ் வேளின அடிக்சண் உறைதல இன்றுபோல் என்றும் இயைக என நல்லச்சுதனார் வேண்டுவர் (பரி. 21: 68-70). இருந்தையூர் அமர்நத செலவனைத் திருந் தடி தலையுறத் தொழுது பரவுவோம் எனப் புலவர் பாடுவர் (பரி. தி. 1:5, 6). ஆடவரும் மகளிரும் இளையரும் முதியரும் வரைகெழு செல்வன் நகர் சென்று இடையறாது அவனது அடியின்கண் பொருந்தித தொழுது இன்புறுவர் (பரி. தி. 1:42-49). ஆயிரம் தலையை விரிதத கணங்கொள் சுற்றத்து அணணலை வணங்கி நல்லடி ஏத்திப் பரவுவோம் எனப் புலவர் பாடுவர் (பரி. தி. 1:79-82).

**2. அடிச்சுவடு.** பாலைவழியில் செல்லும் புதியவர் சேற்றைக் கிண்டி ஊறிய நீரையுணட சிறு கேணி களைப் பிடியின் அடி-அடிச்சுவடு-என்று விரும்பிக் களிறு தொட்டுப் பார்ததுக் காட்டாற்று வழியைக் கடக்கும் (அகம். 137.1-3). மானின அடி பதிந்த பள்ளங்களில் வெட்டுண்டு மாயந்த வீரரின் குருதி தேங்கியிருக்கும் (அகம். 144:16). நீர் வேட்கை தணித் தற்கு வேறிடம் காணாமல் களிறு சென்ற அடியில புலி கால் வைத்து நடக்கும் (அகம். 155:10-12). அடிவழி – 1 காணக.

**3. கீழ்ப்பகுதி.** சீறியாழ் அடி - கீழ்ப்பகுதி - வரை புணர்க்கபபட்ட வளைந்த கோட்டினையுடையது (புறம். 285:2, 3). பரநத அடியை யுடையது உரல (குறு. 89:1). மலரின் தேனால் மரங்கள் நனையும்படி குனறத்து (மாலிருங் குன்றத்து) அடியில் உறைதலை விரும்புவோர் தேவருலகத்து உறைதலையும் வேண டார் (பரி. 17:5-8). பரங்குன்றத்து அடியின்கண் உறைதல் எமக்கு இயைக என நல்லச்சுதனார் செவ்வேளைப் பரவுவர் (பரி. 21:16).

**4. கட்டிற்கால்.** உள்ளிபோன்ற வடிவிற் செய்த திரணட வலியினை யுடைய அடியை – கட்டிற் காலை – பாண்டிலில் தைத்தனர் (நெடு. 121-123).

**5. குதை.** அடி - குதை - அமைந்த அம்பினை முழுதும் இழுதது விடுத்து வழிச்செல்வோரைக் கொடிய மறவர் கொலவர் (அகம். 161:2-4).

**அடிசில்** – அரிசி முதலியவற்றால் சமைக்கப்படும் உணவு. சுவையால் அமுததத்தினை வெல்லும், தாளிப்பை யுடைய அடிசில-உணவு - விருநதினாககு வழங்கப் படும் (புறம். 10:7, 8). அடிசில் நுகர்தற்கு இனி தாகிய தாளிப்பினைக் கொண்டது (புறம். 127: 7). தாளிப்புச் சேர்ந்த கொழுவிய துவையலொடு கூடிய நெய் சேர்த்துச் செய்த அடிசில பொற்கலங் களில பாணர் சுற்றத்திற்கு அளிக்கப்படும (புறம். 160:7-11). மயக்குறு மக்கள நெய்யுடை யடிசிலை மெய்பட விதிர்த்து உண்பர் (புறம். 188:5,6). தாளிப்பு ஓசை மிக்க கொழுவிய துவையலொடு கூடிய அடிசில இரவலர்க்கு மிகுதியாக வழங்கப் படும் (புறம. 250:1, 2). அமிழ்தினை ஒத்த ஊன துவை அடிசில் வெள்ளியால் செய்யப்பெற்ற உண கலத்தில் அளிக்கப் பெறும் (புறம். 390:17, 18). அடிசில் நெய்கலந்தும் (புறம. 188:5) பால் கலந்தும் (அகம். 394:11) ஊனும் நெய்யும் இடைகலந்தும் (குறி. 204) அமைககப்பட்டது. சமைத்த சோற்றில இஃது அரசர்க்குரிய வேறு சோறு என்று கருதப் படாமல் ஊன்துவை அடிசில் சமைக்கப்பெறும் (பதி. 45:13, பழைய உரை). ('சோறுவேறென்னா ஊன் துவை அடிசில்' என்பது சோறு இது, ஊன் இது எனறு பிரித்தறியாவாறு கலந்து அடப்பட்ட அடி சில எனறும கொள்ளத்தக்கது). பனிவரைமார் பன (வீமன) கண்ட மடைநூலின்படி சமைத்த பலவகைப்பட்ட அடிசில்களையும பாணன் பொற் கலங்களில் உண்ணுமாறு புரவலன் வழங்கினான் (சிறு. 240-244). கைவலலோன் சமைத்த இறைச்சி, சோறு, தீஞ்சுவை அமுது முதலிய அடிசில்களைத் தொண்டைமான் இளநதிரையன பாணர்க்குத் தானே நேர் நின்று முக மலர்ந்து மகவு முறையில் ஊட்டினான் (பெரு. 472-479). மென்பாவையர் தாம் அமைதத சிற்றிலில் அட்ட சிறு அடிசிலை மற்ற வர்க்கு வழங்குவர் (பரி. 10:104, 105).

**அடிசேர்தல்** – வணக்கஞ்செய்தல். தலைவன் தன் தலையைத் தலைவி சேவடி சேர்த்தின் – வணக்கஞ் செய்தால் – தலைவி அவனைப் பற்றி வினாவி

அறியக்கூடும் என்று தோழி கூறுகின்றாள் (நற். 342:9,10). ஊடல் தீரும் தலைவி, தலைவனொடு மாறுபட்டுச் சினந்தால அவன் தப்பினேன என்று தன் அடிசேர்தலும உலைடு என அவள நெஞ் சொடு உரைத்தாள் (கலி. 89:13-15).

**அடிதொடுதல் - 1. சூளுரைத்தல்.** குறளன் கூனியிடம் இனி உன-ைன இகழந்து கூறாமைகக் கோனடி தொட்டேன-சூளுரைததேன-எனறான (கலி. 94:36). ஓர் அகபபுறத் தலைவன் தலைவியைத் தெளிவித் தற்கு மலைபோலும மார்புடைய செல்வனடியை, (திருமாலடியை) தலையால் வணங்கியும் கையால் தொட்டும் சூளுரைத்தான (கலி. 108: 55,56). தலை வன தோழியிடம் வையை மணல் தொட்டேன்; பரங்குன்றத்து அடிதொட்டேன் எனச் சூளுரைத் தான் (பரி. 8:61,62). அறவர் அடிதொடினும் முருகன் ஊரும் மயிலையும் அவன வேல நிழலையும் நோக்கி அவற்றின்மேல் சூளுறாதே எனத் தலைவனிடம் தோழி கூறினாள் (பரி. 8: 67,68).

**2. வணங்குதல்.** சூளுறல் வேண்டின் அடிதொடும்-வணங்கத தகும் - குன்றொடு வையைக கேற்ற சீர் மணலைச சூளுறாதே எனத தலைமகனைத் தோழி சூள் விலக்கினாள் (பரி. 8:70,71).

**அடிபுதையரணம் - செருப்பு.** அடிபுதையரணம் எய்தி மெய்ப்பை யணிந்து வம்பலர் அம்பு விடுத்தனர் (பெரு. 69,70).

**அடியுறை - 1. வழிபட்டுறைதல்.** மடலேறுவேன் என்ற தலைவன் தலைவிக்குத் தான் அடியுறைதலை-வழி பட்டுறைதலை-உலகத்தார்க்குக் காட்ட வேணடி மடலேறிச் செல்வேன் என்று கூறுகின்றான் (கலி. 140:10-12). எம் சுற்றத்துடன் பொருந்தி அடியுறை எமக்கு என்றும் பொலிவதாக எனப் புலவர் திருமாலை வேண்டுவர் (பரி. 1:65,66). 'குமரனே, எம் அடியுறை நாடொறும் சிறப்பதாக' எனச செவ்வேளிடம் குன்றமபூதனார் இரப்பர் (பரி. 9: 82-85). 'திருமாலையும பலதேவரையும் தொழுது இருங்குன்றத்து அடியுறை எங்கட்கு இயைக' என இளம்பெருவழுதியார இறைஞ்சுவர் (பரி. 15: 65,66). குன்றம் பூதனார் சுற்றத்தோடு பொருந்திச் செவ வேள் அடியுறையை வேண்டுவர் (பரி. 18: 54-56).

**2. அன்பன் எனக்காட்டும் பணிமொழி.** 'கோப்பெருஞ் சோழனின் அரண்மனையிற் புகுந்து அவன் கேட்ப 'ஆந்தையின் அடியுறை' - அன்பன் - என்று கூறின் அவன் நின் பேடை அணியப் பெருங்கலம் நல்கு வான்' என்று பிசிராநதையார் அன்னச் சேவலிடம் கூறி ஆற்றுப்படுத்துவர் (புறம். 67: 12-14). இலவந் திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனிடம் வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் 'உன் அடிநிழலிற் பழகிய அடியுறை ஆவேன்' எனக் கூறுவா (புறம. 198: 26).

**அடியுறை மகளிர் - வழிபட்டுறையும் பெணடிர்.** அடியுறை மகளிரின் தோள்கள் மலைபபக்கங்களில உளள மூங்கிலை ஒததன (பரி. 14.5,6).

**அடியோர் - மகளிர்.** தணபரங்குன்றம் பூவில் திரியும் மகனறில போல அடியோர் - மகளிர் - ஆடவர் மார்பை அகலாதபுணர்ச்சியைத் தரும் சிறப்பினது (பரி. 8: 43-46).

**அடிவழி - 1. அடிச்சுவடு.** யானை அடிவழியில-அடிச் சுவட்டில்-தங்கிய நீர் கரும்பின் பாததியில தங்கிய நீரைப் போனறுள்ளது (குறு. 262: 7,8). களிற்றின உடலை ஊடுருவிச் சென றமையால் அரக்கு ஊட் டியது போல ஊன பொருந்திய அம்புடன் காட்டு விலங்குகள் சென்ற அடிவழியினைத தொடர்நது சென்று தலைவன் வேட்டையாடினான (அகம. 388: 23-26). யானையின அடிவழி போனறது ஒருகண மாககிணை (புறம. 392: 4,5). அடி-2 காணக.

**2. செலநெறி.** பெரியோர் சென்ற அடிவழி-செல நெறி-பிழையாதொழுகல (மது. 192).

**அடுக்கம் - 1. பக்கமலை.** குட்டிகளை யுடைய பெண மான அநதிக்காலத்தில அநதணர் ஆவுதி செய்யும முததீயாகிய விளககொளியில அடுககததில - பககு மலையில - உறங்கும் (புறம். 2: 20-23). தெய்வம அமைந்த அடுககததில மேகம மழை பொழியும (புறம. 151. 10,11). அருவி ஒலிதது இறங்கும மூங்கில் நிறைநத மிளகுக்கொடி வளரும அடுககததில காநதள் மலரும் (புறம. 168: 1,2). மலையில பலாப் பழததைக் கவர்நதுண்ட கடுவன தன மநதியுடன் பொலிந்து, முகிலாலும் உச்சியறிய முடியாத அடுக கததிலுள்ள மூஙகிலின உச்சியில் உறங்கும (புறம. 200: 1-5). அடுக்கத்தில், அரும்பற மலர்நத வேங் கைப்பூ பரநது கிடககும் கல்லிறகுப் பெரிய புலியின வரியை யுடைய புறபபகுதி உவமை (புறம். 202: 17-20). கிணைப் பொருநன் தெண்கண் மாக் கிணையை மானினம கூர்ந்து கேட்க இசைததுக் குறிஞ்சி அடுக்கத்தைப் பாடினான (புறம். 374: 6-8). மலைப்பிளவுகளையும் குகைகளையுமுடைய அடுக கத்தே சநதனக் கட்டையைக் கிணைப பொருநர் விருநதிறையாகப் பெறுவர் (புறம. 374: 12, 15). மநதிகளும் மரங்களின் உயர்சசியால் ஏறி யறிய இயலாத மரங்கள் நெருங்கப் பெற்றது அடுககம (முரு. 42). மேகம் தவழும் மூங்கில் வளரும் அடுக கத்தில, யாளி பாயந்தமையால் யானைகள கலங் கிப் பிளிறுவது போலக் கரும்பாலை ஒலிககும

(பெரு. 257-260). சிறுபறையை யொப்பப் பேராந்தைப் பேடும் சேவலும் மாறி மாறிக் கூவும் மலையடுக்கத்தே பலாக்காய்கள், கூத்தரின் மத்தளங்கள் போலக் கீழும் மேலு மாகத் தொங்கி முற்றுதல் கொண்டு தாழ்ந்தன (மலை. 140-144). நெடுவரையில் தெய்வம் விரும்பின அடுக்கத்தில் தேருருள் போல் தேனிறால்கள் காணப்பெற்றன (மலை. 238, 239). புதிய மாந்தர் கண்ணால் பார்த்தாலும், தலை நடுங்கச் செய்யும் இயல்பினது அடுக்கம் (மலை. 288,289). இன்குரல் விறலியர் நறிய கரிய அடுக்கத்தில் குறிஞ்சிப் பண்ணைப் பாடினர் (மலை. 358,359). பாறையிடத்து நெடுஞ் சுனையில் உண்டாகிய தேனை அறியாதுண்ட ஆண்குரங்கு, மிளகுக்கொடி வளரும் சந்தன மரத்தில் ஏறமுடியாமல், நறுமலர்கள் உதிர்ந்த அடுக்கத்தில் மகிழ்ந்துறங்கும் (அகம். 2: 4-7). பன்றியினைக் கொன்ற புலி, அதனை இழுத்துச் செல்வதால் பலாமரம் நிறைந்த அடுக்கம் புலால் நாற்றம் வீசும் (அகம். 8: 5-7). மலையிடத்து உண்டாகிய தீ, அடுக்கத்தில் பரவுதலால் மூங்கில் கணுக்கள் வெடித்தெழும் ஒலி, மான் கூட்டங்களை வெருண்டோடச் செய்யும் (அகம். 47: 5-7). பொறையனது கொல்லி மலையின் அருவியுடைய அடுக்கத்தின் அகன்ற இடம் பொலியத் தெய்வமாக அமைத்த பாவை யிருந்தது (அகம். 62: 13-15). மூங்கில் வளரும் அடுக்கத்தில் உலாவி ஆடும் மயில்கள் களத்திற் புகுந்தாடும் விறலி போலத் தோன்றின (அகம். 82:9, 10). நெடுமலையின் அடுக்கத்தில் கண்ணொளி கெடுமாறு மின்னிப் பெருமழை பொழிந்தது (அகம். 92: 1,2). ஞாயிறு தெறுதலின் காடு கவினழியுமாறு தேக்கின் கிளைகளிலுள்ள இலைகள் மேற்காற்றால் உதிரும் அடுக்கத்திடத்தே தூறுகளில் தோன்றிக் காற்றினால் வளர்ந்தோங்கிய தீச்சுடர், மேலே எழுந்து மலைக் குகைகளில் முழங்கும் (அகம். 143. 2-7). சோலையின்கண் மூங்கிற் குருத்தைத் தின்னும் பெருங்களிறு இயங்குகின்ற மலையடுக்கத்தில் சிறு பாறைகள் செறிந்திருக்கும் (அகம். 148: 12-14). நள்ளியின் சோலை மிக்க அடுக்கத்தில் கடவுட்குரிய காந்தள் மலர்கள் நிறைந்து மணம் வீசின (அகம். 152: 15 16). ஓங்குவரை அடுக்கத்தின்கண் இரவில் மீனொடு தோன்றும் வான் போலப் பூங்கொத்துக்களை யுடைய கோங்கு தோன்றிப் பின் காற்று வீச விழுந்த புதுமலர்கள், கையினால் எறியப் பெற்றுக் கீழே விழும் சுடர்ப்பொறிகள் போலத் தோன்றின (அகம். 153:14-16). நள்ளியின், அரும்புகள் மலர்ந்த நறிய கரிய அடுக்கங்களில் பனையின் அடிப்பக்கத்தே நிலைத்த காந்தளின் தண்கமழ் புதுமலர் போலத் தலைவியின் நுதல் நறுமணம் கமழும் (அகம். 236: 14-18). தண்கமழ் சோலைகளையுடைய பெருவரை அடுக்கத்தில் புலி நடுங்க ஆளி யானை முகத்தினைத் தாக்கி அதன் கோட்டினைப் பறிக்கும் (அகம். 252: 2-5). கனிமுதிர் அடுக்கம் (அகம். 288: 7). மந்தியின் வருத்தும் பசியினைக் களையக் கடுவன் பலாப்பழத்தின் சுளையினைத் தோண்டினும் மிக்க துன்பம் வந்து பொருந்தும் நடுக்கம் மிக்க அடுக்கத்தில் உள்ள கன்னியர் உறையும் மாங்காடு என்னும் ஊரின் காவலைத் தலைவியைக் காக்கும் தந்தையின் காவல் ஒக்கும் (அகம். 288: 12-17). பெரிய கற்களையுடைய அடுக்கத்தில் தமையன்மார் உழுதவிடத்தே தினை கரும்பு போலத் திரண்டு அழகுற விளைந்தது (அகம். 302:9,10). மூங்கில் நெருங்கிய அடுக்கம் மறையுமாறு மழை கால வீழ்த்துப் பெய்தது (அகம். 312:9,14). பலா மரங்கள் திரண்டுள்ள, மூங்கில் நெருங்கிய அடுக்கத்தில், செல்லுகின்ற யானையினம் போல, வானின்கண் ஞாயிறு மழுங்கப் பரவி, பாம்பின் படம் அழிய இடிக்கும் இடியேற்றோடு மிக்க துளிகளைப் பெய்து, தலைவியின் கூந்தலை யொத்த மேகம் கால் வீழ்த்தது (அகம். 323: 8-13). சுரபுன்னை நிறைந்த அடுக்கத்தின்கண் வலமாக எழுந்த மேகம் நள்ளிரவில் கூத்தர் முழவுபோல அதிர்ந்த இடியோடு பெருமழையைப் பொழிந்தது (அகம். 328: 1-3). கனமுகை யடுக்கத்து யானை மெல்ல நடந்தது (அகம். 332- 2,6). தன்மேல் புலி பாய்ந்ததமையால் களிறு செய்த ஒலியினைக் கேட்டஞ்சிக் கன்றினை விட்டோடிய பிடி, குழந்தையைக் காணாது தேடும் பெண்டிரைப் போல மயங்கி, மூங்கில் திரங்கிய அடுக்கத்தில் தேடும் (அகம். 347: 10-15). தனது பிடியை இழந்த களிறு தெய்வம் விரும்பியுறையும் அடுக்கத்தில் இடியோடு மாறுபட முழங்கும் ஓசை சுரநெறியில் தங்கிய கூத்தரின் வாச்சிய ஒலி போலிருந்தது (அகம். 359: 8-11). தலைவியும் ஆயமும் மூங்கில்கள் நெருங்கிய பெருவரை அடுக்கத்தில் குருவிகளை ஓட்டினர் (அகம். 388: 5). ஆண்குரங்கு இறந்துபட்டதும் கைம்மைத் துன்பத்தினை ஆற்றமாட்டாத பெண் குரங்கு தன் குட்டியைச் சுற்றத்திடத்தே சேர்த்து ஓங்கிய அடுக்கத்துப் பாய்ந்து உயிர் நீத்தது (குறு. 69: 1-4). மிளகின் கொடி படரும் அடுக்கத்தில் இராக்காலத்தே முழக்கத்தைச் செய்த மேகம் மழை பெய்தது (குறு. 90:2,3). ஓங்குவரை அடுக்கத்தில் தேனிறாலைக் கிழித்த கூட்டமாகிய பசிய மூங்கில்களின் குருத்தை யானை தின்றதனால் அவை கூழையாயின (குறு. 179: 4-7). பிரிந்த தலைவன் மீண்டு

வந்து தன்னுடன் வாழ்வதற்காகத் தலைவி, விடர் முகை அடுக்கத்திலுறையும் கொற்றவைக்குப் பலிக் கடன் கழித்தலும், கையில காப்பு நூல கட்டு தலும் வழககம் (குறு. 218:1,2). தொண்டையரின் சுரபுனனைகள் நெருங்கிய அடுக்கத்தில், கன்றில் லாத ஒற்றைப் பசுவை நிழலினால் தம்பால வரச் செயது தடுத்த ஓமை மரங்களையுடைய பாலை நிலங்களைக் கடந்து தலைவன் சென்றான் (குறு. 260:6-8). மிளகின் கொடி வளர்கின்ற அடுக்கத்தில தளிரை உண்ணும் குரங்குகள ஒருங்கு திரணடிருந் தன (குறு. 288:1,2). பொதியில் மலையின் தெய்வ முறையும் அடுக்கத்திலுள்ள சந்தனம் போலத் தலைவி குளிர்ச்சியுடையவள் (குறு. 376:1-3). அடுக கத்தில் பலாப்பழம் உணட மந்திகள் வேடர் விடும் அம்பிற்கு அஞ்சிப் போர்க்களக் குதிரை போலச சாரலிலுள்ள மூங்கில் அசையப் பாயும் (குறு. 385: 1-4). பெரிய மூங்கில்களை யுடைய அடுககததே அருவிகள் ஆரவாரிக்குமாறு மழை பெயதறகு வானம் இடிதது மின்னியது (நற் 7:2-6). நீலமணி போலத் தெளிந்து இழியும அருவியையுடையதும் பொன்போலும் வேங்கைமலர் உதிர்ந்து பரவியது மான ஓங்குமலையடுககததில் தோன்றிய மூங்கில மேலே செலலும் முகிலைக் கிழிக்கும் (நற். 28:5-8). குவளை மலரொடு காந்தள் மலரைச்சேரத்தொடுத துச் சூடிய சூர்மகள் அருவியொலியை இனனிய மாகக் கொணடு பெருவரையடுக்கம் பொலிய ஆடு வாள் (நற். 34:2-5). மலைச்சாரலில மலர்நத வேஙகை மரத்தினகண் சுரும்புகள் முரல்கின்ற அடுககத தில் உள்ள உயிரினமெலலாம் அஞசுமபடி அரிமான் களிற்றினைக் கொன்று திரியும் (நற். 112:1-4). பெரிய மலையின் அடுக்கத்திலுளள இருள்செறிநத குவட்டின்கண குறிஞசி நிலைதது நலல ஊர் இருந் தது (நற். 116:10,11). பெரிய மலையினது அடுக கத்திலே தலைவியின் ஐயன்மார் உழுது விததிய செந்தினைக் கதிர்கள் கொய்யப்பட்டன (நற. 122: 1,2). செம்முக மந்தி தன் சுற்றம் அறிதற்கஞ்சிக கறி வளரும் அடுக்கத்திலே சென்று கடுவனொடு களவிற் புணர்ந்தது (நற். 151:5-8). அருவி ஆரவா ரிக்கும் பெருவரை யடுக்கத்திலே ஆளிமான் புலி தொலைத்த களிற்றினை இரையாகக் கொண்டு இழுத்துச் செல்லும் (நற். 205:1-4). கடுவன் நடுங்கு மாறு மந்தி தன் குட்டியொடு சென்று கொடுமுடி உயர்ந்த அடுக்கத்தில் தவழும மேகங்களிடையே ஒளியும் (நற். 233:1-3). ஓங்கிய மலைவழியில் உயர்நத மலையடுக்கத்தே விளக்கமுற மின்னி மழை பெய்த நடுயாமததே அரவு மணியை யுமிழ்ந்து உழலுமாறு இடிமுழங்கி மோதும (நற். 255:8-11). தலைவி தலைவனொடு மலைச்சாரலி டததுத் தினைப்புனத்தின்கண தங்கியிருந்து கிளி களை யோப்பிப் பின பெருவரையடுக்கத்து அருவி ஆடினாள் (நற். 259:2-5). சந்தனமரம் மிகுதியு முடைய உயர்ந்த மலைச்சாரலில் குறுக்கிட்டுக் கிடக்கும் மலை அடுககததினகண விறலியாடுவாள (நற். 328:9-11). மந்திகளாகிய பெரிய சுறறம பெருவரை யடுக்கதது அருவியில் நீராடும் (நற. 334: 1, 2). வரையகசு நாடனாகிய தலைவன மழை பெய யும் இருள்நிறைநத நடுஇரவில வேலேந்தி மின்ன லொளியிலே அருவியையுடைய அடுககதது நெறியில இரவுக்குறிககண வருவான் (நற. 334:5-8). 'தலை வனது மலையிலுளள வருடையும் பாய்ந்தேற மாட்டாத சூருடைய அடுக்கததிலேயிருந்து பிறரால கொயதற கரிதாகி அவனால கொண்டு வநது கொடுககபபட்ட இததழை வாடலாமோ' எனத தோழி தலைவியிடததே குறைநயபபப பேசினாள் (நற. 359:7-9). வேழம் தினைககதிரைக கவர்தலால கானவன் எறிநத விரைநத செலவினையுடைய எரி கொள்ளி மூங்கில் நிறைநத அடுககம விளஙகுமபடி யாக மினனி நிலைபெயர்நது வீழும விணமீன போலத் தோனறும (மீனின என்பதற்கு மாறாக, 'மின்னின்' எனறும பாடமுணடு) (நற. 393:4-7). அருவி. ஆரவாரிககும பெருவரை யடுககததில காநதளின் பூககள் வணடுகள தேனுணணுமாறு மலரும (நற. 399:1-3). அசையும மூஙகில நிறைநத அடுககததில் பெரிய அருவி இழிதரும (ஐங. 220:1,2). மலைநாட்டில் மென்தினைககதிரை மேயநத பனறி வலிய கலலடுககததில துஞ்சும (ஐங. 261: 1, 2). சிறுதினைககதிரை மேயநத தறுகணமையுடைய பனறி துறுகலஅடுக்கததிலே துணையொடு வதியும (ஐங். 262.1,2). பனறியொருததல துறுகல அடுககத் தில காவலரைப் போககுக காட்டி மாற்றிவிட்டு ஐவன நெலலைக கவரும (ஐங். 267:1-3). புலி முழங குதலால் கடுவன விரைந்து குனறுயர்ந்த அடுககத் தின்கண பாயந்தேறும (ஐங. 274.1-3). அடுக்கத திலே தினைப்புனங் காககும கொடிச்சியின இனிய குரலைக்கேட்டுக கிளிகள் தம்மினத்தின குரலாகக கருதிக் கதிரகளில வநது படியும் (ஐங. 289.1,2). காதலி உறையும் நல்லூர், மயிலகள ஆடுதறகேற பப பேராநதைகள் சேவலும் பேடுமாக மாறி மாறி யொலிக்கும் துறுகல் அடுககத்திலே உள்ளது (ஐங். 291). 'நமககு நோயைச் செய்தவனுடைய ஏறுதற் கரிய உச்சிமலைகளமைந்த அடுக்கத்தை நாம் இனி இயற்பழிததுப் பாடுவோம' என்று தலைவி தோழி யிடம் கூறினள் (கலி. 40:20, 21). எதிரெதிரே ஓங்கிய மலைகளின சாரலில அமைந்த அடுக்கத்தில

அருவிகள் நீர்சொரிய நின்ற வேங்கைமரம் யானைகள் பூநீர் சொரியத் தாமரையில வீற்றிருக்கும திருமகளை யொத்துத்தோன்றுதல (கலி. 44:1-7). களிற்றோடே புலிபொருது துகைக்கும் தலைவனது அகன்ற மலையின் அடுக்கத்தில் உள்ள மூங்கிலை யொத்திருநதது தலைவியின தோள் (கலி. 45:12-15). ஞாயிற்றைத் தொடும்படியாக மிகநீண்ட சுரும புகள் ஒலிக்கின்ற முழைஞ்சுகளை யுடைய தலைவனது மலையின் அடுக்கததில் உள்ள வேங்கையின் பூங்கொததைத தலைவியின நல்ல எழுச்சி அழகு ஒததிருந்தது (கலி. 45:16-19). மலையில் பொழியும் மழையையுடைய அடுக்கத்தில் யானைத் திரளோடு புலி போர் செய்யும் (கலி. 48:4-7). 'மஞ்சு பரக்கின்ற அடுக்கத்தை ஊடறுத்து அணங்குடைய அருவழியிலே நீ வரும் நிலைமை எமக்கு இன்னாமையைத் தருகின்றது' எனத் தோழி தலைவனிடம் கூறி இரவுக்குறி மறுத்தாள் (கலி. 49: 15-17). அடுககமெல்லாம் மணம் கமழகின்ற காந்தளின் குளிர்நத எழுச்சியமைந்த வடிவினையுடைய துடுபபென்று கூறும்படி தலைவியின் முனகை ஒத்திருநதது (கலி. 59:3, 4). திருப்பரங்குன்றத்தின் அடியுறை மகளிர்தம் தோள்கள் நெடுவரை அடுக்கதது மூஙகிலகளைப் போன்றன (பரி. 14:5, 6). அடுககல 2 காண்க.

2. அடுக்கு. உயர்நத பாறையின் அடுக்கம-அடுக்கு-உடைய இருண்ட குகையினைக் கொணடது சிலமபு (அகம. 52:5). நெடிய மலை யடுக்கத்தை உடையது நாடு (பதி. 55:18). அடுக்கல் 1 காண்க.

**அடுக்கல்** - 1. அடுக்குதல். பலவாக அடுக்கல - அடுக்குதல்-பெற்ற ஆம்பலென்னும் பேரெண். (பரி.3:44). அடுக்கம் 2 காணக.

2. பக்கமலை. அடுக்கலின் - பக்கமலையின் - மிக உயர்ந்த இடத்தில் கலலை உடைத்துச் செய்த வழியினை அரிதென்று கருதாமல் பாணர் கடந்து செல்வர் (மலை. 19, 20). தம் மகளிர் தந்த தோப்பிக் கள்ளைப் பருகிய குறவர் அடுக்கலில அமைந்த தினைப்புனக் காவலை மறக்க, யானைகள் தினையைக் கவர்ந்தன (அகம். 348:8-11). அடுக்கலில் விளைந்த பைந்தினையைக் கொடிச்சி காததாள் (நற். 22:1). அடுக்கலில் மழையின் வரவினை அறிந்து மயில் ஆடும் (ஐங். 298:1, 2). அடுக்கம 1 காண்க.

**அடுகலம்** - சமைக்கும் கலம். சோழன நலங்கிள்ளி, பரிசிலர் சுற்றததின் அடுகலத்தை நிறைக்கும் பொருட்டு விலையாக; நெடிய துகிற்கொடி அசையும் வஞ்சி மாநகரையும் கொடுப்பான் (புறம். 32:1, 2).

**அடுகளம்** - போர்க்களம். முடித்தலை அடுப்பாகவும், குருதிப புனல் உலையாகவும், தோள் துடுப்பாகவும் கொணடு, அடுகளத்தில் - போர்க்களத்தில் - தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன களவேள்வி புரிந்தான் (புறம். 26:8-11). 'வென்று அடுகளத்து உயர்க நும் வேலே' என வாழ்த்துதல் (புறம. 58:29, 30). தேனீக்கள் மொய்க்குமாறு மதநீர் மிக்குப் பெருகும் தலைமை சானற யானைகள் இறந்துபடப் போரிட்ட அடுகளததில் வெற்றி கொண்ட அதியமான் நெடுமான் அஞ்சி விழுப்புண எய்தினான் (புறம. 93:12-15). எழினியின உயிரைக் கூற்றுவன் உணணானாயின் அடுகளத்தில் அவன் பகைவர்தம் பல்லுயிரைப் பருகுவான் (புறம. 230:14-16). களிற்றினது மருப்பின தொடி அடுகளத்தே பாய்ந்தமையின் சிதைந்தது (அகம. 99:12, 13). மகளிர் பாய்ந்து நீராடி விளையாடும் கடலின் அலையோசைக்குக் குட்டுவன், தன் பகைவரைக் கொன்ற அடுகளத்தில் அவனுடைய வெற்றி முரசு அதிரும் ஓசை உவமை (நற். 395:4-6)

**அடுநன்** - கொல்லுபவன. பாண்டியன இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் இகழுநர் அடுநனான திருமாலைப் புகழால ஒத்துளளான் (புறம். 56:13)

**அடுப்பு** - சமைக்கத் தீ மூட்டுமிடம். கோடியர் அடுப்பு (புறம். 164:1). பரிசு பெறுதற்குரிய கூந்தல் விறலியரும் அடுப்பில் சமைத்தனர் (பதி. 18:6). எயின் குடி மகளிர் இடிந்துபோன அடுப்பில் சமைதத சோற்றை உப்புக் கண்டத்துடன் இரவில் செலலும் வழிப்போக்கருக்குத் தேக்கிலையில் வைத்துக் கொடுத்தனர் (பெரு. 99 - 105). உப்பு விற்கும உமணர் கூட்டம சுரநெறியில் சமைத்து விட்டுச் சென்ற கல்லடுப்பில் மழவர் ஊனை அவித்து உண்டனர் (அகம். 119:8, 9). உறந்தையில் பங்குனிவிழாக் கழிந்த பின்னாளில் சமையல் செய்யாமையால் தீயின்றி வெற்றடுப்புக்களுடன் விழாக்களம் பொலிவற்றிருந்தது (அகம். 137:6-12). பல கிளைகளையுடைய அடுப்பில் பாலை உலையாக வைத்துப் புது மணமகள் சமைத்தாள் (அகம். 141:14, 15). உப்பு வணிகர் விட்டுச் சென்ற கலலடுப்பில் பகைவரிடமிருந்து ஆனிரைகளை மீட்ட கரந்தை வீரர் ஊனைப் புழுக்கி உண்டனர் (அகம். 159:4-10). புல்லி நாட்டில் பனையை வெண்பழத்து அரிசி போன்ற தீட்டிய வரகரிசியைச் சுனைநீர் பெயத பானையிலிட்டுக் கல்லடுப்பிலேற்றி ஆக்கிய சோற்றைக் குடநாட்டினர் பசும்பாலோடு பிறர்க்கு வழங்கினர் (அகம்.393:9-18). நெடுஞ்செழியன் முடித்தலை அடுப்

பாக, குருதி உலையாக, தொடித்தோள் துடுப்பாக அட்டுக களவேள்வி செய்தான (புறம். 26:8-11). பகைவர் தலையை அடுப்பாக வைத்துக் கூவிள விற கினால் எரித்து வனனிமரக்காம்பிலே மண்டை ஓட் டைப் பொருத்தி அகபபையாக்கிக் கிண்டி ஈனாத பேய்மகள் சமைத்த நிணச் சோற்றைப் பேய்மகள் ஏந்திக் கொற்றவைக்குப் படைக்குமாறு நெடுஞ் செழியன் களவேள்வி செய்தல் புனையபபடுகிறது (புறம். 372:5-12). பகைவீரரின் தலையாகிய அடுப் பில் வேந்தரின் குருதியாகிய உலைநீரில் தோளாகிய துடுப்பால் ஊனாகிய சோற்றைப் பேய்மடையன (சமையலாளி) போரில் புறங்கொடாத வீரருக்கு உணவு படைத்தான் என்பதும் களவேள்விப் புனைவு (மது. 29-38).

அடும்பு – நெய்தல் நிலத்துக் கொடிவகைகளுள் ஒன்று. அடும்பு நெய்தல் சார்ந்த மணற் பரபபில அடர்ந்து படரும் இயல்பினது (பதி. 30:4-6; 51:6; நற. 145:1; கலி. 132:6). இக்கொடியின் நிறம் சிவப்பு; கவட்டி லையை உடையது (அகம். 80:8,9), இலைகள் மான குளம்பு போல் பிளவுபட்டிருக்கும் (குறு. 243:1). இதன மலரை நெய்தல் முதலிய மலர்களோடு விரவி மாலையாகக் கட்டி விளையாட்டு மகளிர் அணிவர் (குறு. 401:1-3). பரதவர் அடும்பின் மலர் அணிவர் (பட். 65). தலைவன் அடும்பு மலரைக் கோதையாகப் புனைந்து தலைவிக்குத் தருவான் (கலி. 144:30). இம்மலரைப் பாவைக்குச் சூட்டுவதற் காகவும் அளிபபான் (நற். 254:2). நோன்பு மேற் கொள்ளும் மகளிர் நோன்பிற்காக அடுப்பங் கொடியைக் கொய்வர் (நற். 272:2). மகளிர் அடும்பு மலர் கொய்து விளையாடுவர் (நற். 349:2). தலைவி ஆயத்துடன் பறித்த மலர்களுள அடும்பும் ஒன்று (குறி. 87). நாரை அடும்பின் மலரைச் சிதைத்து மீனை உண்டு மணல் மேட்டில் தங்கும் (குறு. 349: 1,2). நிறைந்த சூலுடைய யாமை மணல்மேட்டில் உள்ள அடுப்பங் கொடியைச் சிதைய இழுத்து அதன் மறைப்பில் முட்டை யிட்டுப் புதைக்கும் (அகம். 160:3-6). இரையைத் தேடித் துழாவும் அன் னம் அடும்பின் கொடி படர்ந்துள்ள மணல் மேட் டில் சிறகினை உலர்த்தும் (அகம. 320:8, 9). தலை வன் தேர் மணல்வழியே செல்லும்போது அடும் பின் கொடியை அறுத்துச் செல்லும் (அகம 330: 11-14; ஐங். 101:2, 3; நற். 338:2). கதிரவன சுடுமென்று கருதிய அலை, அடும்பின் கொடியை விரைந்து சேர்த்துக் கரையைக் குளிர்ச்சியாக்கும் என்று புனையப் பெற்றுள்ளது (கலி. 127:20,21). வறள் அடும்பு (பொரு. 195). அடும்பிவர் மணற் கோடு (குறு. 248:5).

அடுமகள்–சமைப்பவள். அடுமகள்-சமைப்பவள்-முகநத அளவாத வெண்ணெலலை உலக்கையால் குற்றி அரிசியாக்குதல் (புறம். 399:1,2).

அடை - 1. இலை. மலைச்சாரலில அடை - இலை - மல்கு குளவியொடு மலர்ந்த காந்தள் கமழும் (புறம. 90:1, 2). ஆமபலின அகலமான அடை மதுப் பருகப பயனபட்டது (புறம. 209:3,4). அடை இடைக் கிடநத கையாற் பிழிநது கொள்ளப்பட்ட நீர்ச் சோற்றுத திரளைக் கைம்மை மகளிர் உணவாகக் கொளவர் (புறம. 246: 6-10). கழனி நாட்டில் ஆம்பல் அடையின் நிழலில ஆண நத்தை இளைய பெணசங்குடன் கூடி மகிழும் (புறம். 266:3-5). அடைச்சேமபினை மடாவில சமைத்தனர் (பதி 24:20). நெயதற் பாசடை உள்ள பனிக்கழியைக் குருகு இரைக்காகத துழாவும (பதி. 30: 2-4) ஆம்பல் எனனும் பேரெண அடையடுப்பு அறியா அருவியாம்பல எனச் சுட்டப்பெறுதல் (பதி. 63:19). தாமரையின பாசடையில் கயல்மீனை எறிந்த சிரற் பறவையின் நகம் கிழித்த வடு இருந்தது (சிறு. 181-183). அடைக்குமேலே உயர்நதுள்ள முள் செறிந்த தாளையுடையது தாமரைப்பூ (மது. 248, 249). வராற்போதது தூணடிலின் இரையைப் பற்றியதால் ஆம்பல மெலலடை கிழியப் பாய்ந்து கயத்தை உழககியது (அகம். 36:1-8). எருமை ஆம் பல் மெல்லடை கிழியக் கயத்திற் சென்று குவளை மலரைத் தினறது (அகம. 56:2-5). சிறுமீனகளை உணணுதற்காகக் கயத்திலுள்ள வெறிகொள் பாச டையில பறத்தற்கியலாத முதிய சிரறபறவை தங்கி யிருககும் (அகம. 106:1-5). யாமை பழனத்தை உழக்கி அயலிலுள்ள ஆம்பல் மெலலடையில் ஒதுங் கும் (அகம். 256: 2-7). பொயகையில் அடைக்குமேல் எழுந்து மலர்ந்த நீலமலர் காற்றினால அசைவது போன்ற அமர்த்த நோககினையுடையவள் தலைவி (அகம. 357:13-16). பாசடைககு மேல உயர்ந்த நெய் தல் மலர் உப்பங்கழியின் ஓதம் பெருகுந்தோறும மறைதலால் கயம் மூழ்கு மகளிரின கண்ணினை ஒககும் (குறு. 9:4-6). களிற்றுச் செவியன்ன பாச டையை மயக்கிச் சிறுவெணகாக்கை பனிக்கழி யைத் துழாவும் (குறு. 246:1-3). ஆமபல அடையின புறம் வெளவாலின் சிறகினை ஒக்கும் (குறு. 352:1,2). கடவுட் கறசுனையில உள்ள அடைக்குமேல தோன்றி மலர்ந்த பறியாத குவளைப் பூவொடு காந்தட்பூவையும் கட்டிச் சூரரமகள் சூடினள (நற். 34:1-4). யானைக்கன்றின் செவி நெய்தற் பாசடை ஒக்கும் (நற. 47:1-4). ஆம்பலின் பாசடை யானைச் செவி போன்றது (நற். 230:1-3). கொடுங் கழிப் பாசடை நெய்தற் பனிநீர்ச் சேர்ப்பன

(நற். 287:4, 5). சுனையின் பாசடைக்கு மேல் எழுந்த பனிமலர்க் குவளையின் மணங்கமழும் கூந்தலள் தலைவி (ஐங். 225:1-3). தலைவன் செல்லும் வழியி லுள்ள நீரற்ற வறுவிய சுனையிடத்தே அடை யொடு வாடிய அழகிய மலர்கள் தலைவியைப் பிரிந்து செல்லும் அவன் போக்கைத் தடுக்கும் (கலி. 3:6-9). பொய்கையில் அடையை விடுத்து முதிர்ந்த தாமரை முகைக்கு அதன் அலர்ச்சி கூற்ற மாகும் (கலி. 17:11, 12). தாமரை முறுக்கு அவிழ்ந் ததும் அரும்புகள் நீருக்கு மேல் ஓங்கின பாசடை யினையுடையதுமாகும் (கலி. 59:1) தாமரை அடை அன்னச் சேவலை மறைக்கப் பெடையன்னம் தன் துணையைக் காணாது கலங்கியது (கலி. 70:1-3). பாசடைத் தாமரையின் மலர்ந்த மலர் காதலன் அடிபணிந்து அளிசெய்ய நகுவோள் முகம் போலத் தோன்றியது (கலி. 71:5-8). பாசடைத் தாமரை நறுந்தேறல் உண்டவள் முகம்போலக் கட்டவிழ்ந்து மலர்ந்தது (கலி. 73:2-5). வயலிடத்தே பாசடை யினை யுடைய தாமரை செய்தியற்றியது போல மலர்ந்தது (கலி. 74:2,3). பழனத்திலுள்ள பாசடைத் தாமரையின் மலரைத் தும்பி ஊதும் (கலி. 78:1, 2). நீரிடத்தே அடையின்கீழ் மறைந்து நின்ற அழகிய தாமரைப் பூப் போலப் பச்சைக் குடைநிழலில் சிறுவன் தோன்றினான் (கலி. 84:10, 11). அடைக்கு மேல் தோன்றி மலர்ந்த தாமரை திருமாலின் அடிக்கும் கைக்கும் கண்ணுக்கும் வாயக்கும் உவமை (பரி. 13:50, 51).

2. சேர்த்தல். தந்தையும் தமையன்மாரும் ஒருங் கிசைந்து, தலைவியை முல்லை நிலத் தலைவன பக்கம் அடை - சேர்த்தலை - முடிவு செய்தனர் (கலி. 107:32-34). தலைவனின் கண்ணியைத் தலைவி சூடியதால் அதற்கேற்ப அவள் சுற்றத்தார் அவளை அவன்கண் அடை சூழ்ந்தனர் (கலி. 115:17, 18).

3. மூளை. வலைச்சியர் அரிசியினால் அட்ட களித் துழவையைப் பிழாவில் ஊற்றிப் புலரச் செய்து புற்றின் குரும்பியைப் போன்ற பொலிவுபெற்ற நல்ல அடையை - முளையை - கலந்து கள் சமைத் தனர் (பெரு. 275 - 281).

4. பணிகாரம். நலல வரிகளையுடைய தேனிறாலை ஒதத அடையையும் - பணிகாரததையும் - மோத கததையும் நடுயாமத்தில் விற்கும் அப்ப வணிகர் தூங்கி விழுநதனர் (மது. 624 - 627).

5. மருதநிலத்தூர். இரவலர்க்கு ஆம் இருந்த அடை-மருதநிலத்தூர்-பரிசிலாக வழங்கப்பெறறது (புறம். 362:13).

6. தட்டையான படிவம். இரவலர் உண்கலத்தில் கொழுநிணம் படிந்திருப்பது மெழுகு மெல்லடை - தட்டையான படிவம் - போல் தோன்றும் (புறம் 103:9,10).

7. அடைப்பு. கோவலா மாட்டின் கழுத்திற் பூட்டிய மூங்கிற் குழாயில் வைத்த தீம்புளிச் சோற்றை வழிப்போக்கரின் பசி மிகுதியினால் தோன்றும் செவியின் அடை-அடைப்பு-நீங்கத் தேக்கிலையில் பகுத்துக் கொடுப்பர் (அகம். 311:9-11).

**அடைகரை** - நீர்நிலை சார்ந்த கரைப்பகுதி. அடை கரையில் மேய்ந்த கொக்கின் குஞ்சு ஆரல்மீன் முட்டையையும இறால்மீன் குஞ்சையும் உண்ணும் (புறம். 342:7 - 10). வார்மணல் அடைகரையில் சோலைகள உள்ளன (புறம். 366:20, 21). மருதமரம் ஓங்கியுள்ள மணல்செறிந்த அடைகரையில் காஞ் சிப்பூவும் முள்முருங்கையின் சிவந்த பூவும் சிதறிக் கிடக்கின்றன (பதி. 23:18-20). கானலின் அடை கரையில் ஞாழல மரம் ஓங்கிய பெருந்துறைக்கண் நெய்தல் மிக்க உப்பங்கழியில் இரைதேடியுண்ட குருகு புன்னைக் கிளையில் தங்கும் (பதி. 30:1-5). கடற்பரப்பில் அடுப்பங் கொடி படர்ந்த அடை கரையில் ஒடித்திரிந்த நணடின் அடிச்சுவட்டினை ஊதைக்காற்று நுணமணலைக் கொண்டுவந்து வீசி மறைக்கும் (பதி. 51:6-8). பெருங் காற்றால் எழும் அலை நுண்மணல் அடைகரையை உடைக்கும் (பதி. 88:40, 41). பொய்கையின் அடைகரைப் பககத்தே உள்ள கடம்பமரம் மாலைபோல மலர அதிலிருந்து இந்திரகோபம் போன்ற தாது நீர்த் துறையில் உதிர்கின்றது (சிறு. 68-71). பரதவர் அடை கரையில் அகபபட்ட சுறாமீனைப் பக்கத்திலுள்ள வர்க்குப் பகுத்துக் கொடுப்பர் (அகம். 10:10-12). செம்படவா பலரும் கூடி அடைகரை ஒலிக்குமாறு வலையை இழுத்துப் பல்வகை மீன்களைப் பிடித்து அவற்றை இரந்தவர்களுக்கு வழங்கி மீதியை விலைக்கு விற்றுப பின் மணல் மேட்டில் உறங்கு வர் (அகம. 30:1-11). ஆண்மான் அறுகம்புல்லைத் தன் பெண்மானுக்கு ஊட்டி, மணற்பாங்கான அடைகரையில் அப் பெண்மான் உறங்கும்போது அதற்கு ஊறு நேரிடாமல் காவல புரியும் (அகம். 34:4-8). ஊதைக் காறறு அடித்து மேடாக்கிய உயர்மணல் அடைகரையில் தோழியர் கூட்டத்து டன் வந்து தலைவி சிற்றிலிழைத்து விளையாடுவள் (அகம். 60:9-14). நீர்முள்ளியும் அடுப்பங்கொடியும் அடைகரையில் நிறைந்திருககும் (அகம். 80:7-9). பழனப் பொய்கை அடைகரையில் படர்ந்த முள் செறிநத பிரப்பங்கொடி பொய்கையிலுள்ள ஆம் பல் இலையைப் பற்றிக்கொள்ள வாடைக்காற்று வீசும்போது அவ்வாம்பல் இலை உயர்ந்தும் வீசாத போது தாழந்தும ஊதுலைத்துருத்திபோலக் காட்சி

யளிக்கும். (அகம். 96:3-7). இளவேனிற் காலத்தே ஆற்றின் அடைகரை மருத மரமும் மாமரமும் செழித்தோங்கிப் பூத்தலால் பொலிவு பெறும்; குயில் சோலையிலிருந்து மஞ்சு ஊர அகவும் (அகம். 97: 17-23). கழிமுள்ளி நிறைந்த மோட்டு மணல் அடைகரையில் தாழை மலர்ந்து அங்குள்ள புலவு நாற்றத்தை நீக்கி மணம் பரப்பும் (அகம். 130:4-8). அயிரியாற்று அடைகரையில் கருவுற்றிருக்கும் மயிற்பேடை பாகற்கனியை விரும்பி ஊதுகொம்பென ஒலிக்கும் (அகம். 177:9-11). தண்புனல் அடைகரையில் தூண்டிலிட்டு வரால்மீனைப் பிடித்த பாணமகள் அதனை வஞ்சிமர விறகிற் சுட்டுக் கட்குடித்திருந்த தந்தைக்குக் கொடுப்பாள் (அகம். 216:1-4). செருந்திப்பூ அணிந்த தலைவி அடைகரையில் அலவனைப் பிடித்து விளையாடி இளைப்பாறுவள் (அகம். 280:1-4). வண்டு தேனை விரும்பி அடைகரைப் பக்கத்தே நீரால் நனைந்த புன்னை மலர் நிறைந்த கிளைகளில் கூடியிருக்கும் (குறு. 175:1-4). நெய்தல் தலைவன் நெடுந்தேர் ஏறி அடைகரைப் பக்கத்துத் தலைவி காணுமாறு வந்து மீள்வான் (குறு. 212:1-3). குன்றம் போன்ற உயர்ந்த மணல் மேட்டு அடைகரையில் நின்ற புன்னையின் நிலந் தோயும் கிளையில் நாரை தங்கும் (குறு. 236:3-5). உப்பங்கழியில் உணவுண்ட குருகு அடைகரையிலுள்ள தாழையிற் கூடி அலையொலி கேட்டு உறங்கும் (குறு. 303:1-3). விளையாட்டு மகளிர் தாம் பிடித்த நண்டுடன் விளையாடி அலைக்கும்போது அடைகரையில் கடலலை விரைந்து வந்து அதனை அடித்துச் செல்லும் (குறு. 316:4-7). அடைகரையில் நிலாவொளி வீசுதலால் தேரின் சக்கரத்தில் நண்டு சிக்காத வண்ணம் விலக்கிப் பாகன் இரவிலே தேரை விழிப்புடன் ஓட்டுவான் (நற். 11:6-9). பூந்தாதில் விழுகின்ற வண்டுகளை ஓச்சித் தலைவி தோழியருடன் அடைகரையில் விளையாடுவாள் (நற். 27:1-4). அடைகரையில் நாவற்கனியைத் தம் மினம் எனக் கருதி மொய்த்த வண்டுகளைக் கனியென நண்டு கவரவே வண்டுகள் நண்டின் பிடியிலிருந்து விலகவியலாது ஆர்ப்பரித்தன; அவ்வமயம் இரைதேடி நாரை வரவே நண்டு ஓடி விட்டது (நற். 35:1-5). மாமரங்கள் செழித்தோங்கியுள்ள அடைகரையில் சேவலோடு குயிற்பேடும் மாறி மாறிக் காதலுணர்வுடன் கூவும் (நற். 118:1-4). மலையின் அருவியைத் தழுவிய துறுகல்லின் பக்கத்தே உள்ள தூமணல் அடைகரையின் மாஞ்சோலை தோறும் குயில் கூவும் (நற். 243:1-8). புலால் நாற்றம் வீசும் அடைகரையில் யாமைப் பார்ப்போடு நண்டும் வளையிற் புகும் (நற். 385: 2,3). குதிரையின் தலையிலணிந்த வெண்கவரிபோல் வேழவெண்பூ அடைகரையில் பூக்கும் (ஐங். 13:1,2). அடைகரையில் நண்டு ஆம்பற் கொடியை அறுக்கும் (ஐங். 21:1,2). வலம்புரி ஈன்ற முத்து அடைகரையின் இருள் நீக்கும் (ஐங். 193:1,2).

**அடைநெடுங் கல்வியார் - புலவர்.** புறநானூற்றில் மகட்பாற் காஞ்சித் துறையில் இருபாடலும் (344, 345) தும்பைத்திணைப் பாண்பாட்டுத் துறையில் ஒரு பாடலும் (283) ஆக மூன்று பாடல்கள் இவர் பாடியவை. போரினால் ஏற்படும் அழிவு விரித்துப் பாடப்பெற்றுள்ளது. பாண்பாட்டுத் துறையில் அமைந்த பாடல் சிதைந்திருத்தலின் பாடப்பெற்ற தலைவன் பெயர் தெரிய வில்லை; அழும்பில் எனனும் ஊர் குறிக்கப் பெற்றுள்ளது. வலம்புரிக் கோசர் அவைக்களம் இவரது பாடலில் சுட்டப் பெறுகின்றது. (இயல்பாக அடைந்த நெடிய கல்விப் பயிற்சியுடையார் எனனும் பொருளில் வழங்கிய காரணப் பெயர்). [அண்டர் நெடுங்கல்லினார் என்னும் பாடங்கொண்டு வீரனொருவனுக்கு ஆயர் கல்நட்டுச் சிறப்புச் செய்ததை அண்டர் நடுங்கல் எனப் பாடியதால் இப்பெயர் பெற்றார் என்பர் ஔவை. து.] (இவ்வாறு கொள்ளுதற்குரிய சான்று கிடைக்கவில்லை).

**அடையல் - காலுக்கு அடையாகிய** செருப்பு. முருகன் திருவடியில் அணிந்த அடையல்-செருப்பு-தைத்தற்கு ஏற்பத் துவர்நீரில் ஊறவைத்துப் பதப்படுத்திய தோலால் இயன்றது. மயிர் செறிந்த முதுகுப் புறத்துள்ள தோலைப் பாம்புரியைப் பிளந்தாற்போன்று இரண்டாகப் பிளந்த வார்களைப் பெற்றது; மயிற்பீலியால் அணி செய்யப்பட்ட மேற்புறத்தினை உடையது (பரி. 21:3-7).

**அண்கணாட்டி - கண்காண முன் இருப்பவள்.** மகள் பிரிந்து சென்றதனால் துயரம் எய்தி மெலிந்து அறக்கடவுளை நொந்து பழிக்கும் தாயைக் குறிக்க அண்கணாட்டி என்ற சொல்லாட்சி வந்துள்ளது (அளைகணாட்டி எனவும் பாடமுண்டு). (ஐங்.393: 2)

**அண்கணாளன் - கண் காண முன் இருப்பவன்.** இரந்து பின் நிற்கும் தலைவனைத் தலைவி எள்ளி நகையாடத் தோழியை அழைக்குமிடத்து அண்கணாளன் என அவனைச் சுட்டுகிறாள் (அகம். 32:21).

**அண்டர் – இடையர்.** குதிரைகளையுடைய அண்டரையும் அவர்தம் தலைவனான கழுவுளையும் இளஞ்சேரல் இரும்பொறை புறங்காட்டி ஓடச் செய்தான (பதி. 88:7-9). யமுனை யாற்றின் துறையில் புனலாடிய அண்டர் மகளிர் தழையை ஆடையாக உடுத்துக் கொள்ளக் கண்ணன் மரக்கிளை மீதேறி

அது வளைந்து கொடுக்குமாறு மிதித்தான் (அகம். 59:4-6). கொக்கிற்கு அஞ்சிய நண்டு தாழையின் வேர்ப்பக்கத்துள்ள வளையில் மறைய விரைந்தோடுவதுபோல அண்டர் கட்டிவைத்திருந்த எருது கன்றை சில அறுத்துக் கொண்டு விரைந்து ஓடின (குறு. 117:1-4). நள்ளியின் காட்டில் வாழ்ந்த அண்டர் பசுநெய்யைத் தொண்டியில் விளைந்த வெண்ணெல் அரிசிச் சோற்றில் பெய்து தரும் உணவு சிறப்புடையது (குறு. 210:1-4).

**அண்டர்மகன் குறுவழுதியார்** - புலவர். இவர் பாடியன வாக உள்ளவை புறம். 346; அகம். 150, 228; குறு. 345- ஆகிய நான்கு பாடல்களே. இவர் பெயரில் வழுதியென்னும் குடிப்பெயர் சேர்ந்திருத்தலின் இவரை அரசனால் சிறப்புப் பெற்றவர் என்றும் 'ஆர்' விகுதி சேர்ந்திருத்தலின் புலவர் என்றும் மொ. அ. து. கூறுவர் (ச. இ. பெ. பக். 152). அகம். 150, 228 ஆகிய இரு பாடல்களையும் இயற்றியவர் குறுவழுதியார் என உ. வே. சா. குறுந்தொகைப் பதிப்பு (பாடினோர் வரலாறு) கூறும். ஆனால் அகம். 150-ஐக் குறுவழுதியாரும் 228-ஐ அண்டர் மகன் குறுவழுதியாரும் இயற்றினாரென இராச கோபாலார்யன் பதிப்பும் வே. வி. பதிப்பும் குறிக்கும். அகம். 150, குறு. 345 ஆகிய இரு பாடல்களிலும் நெய்தல் திணைப் புனைவும் 228 இல் மலை மீது கிடக்கும் வேங்கை மலர்களைப் புலியெனக் கருதிப் பிடியானை இரிந்தோடுதலாகிய குறிஞ்சித் திணைப் புனைவும் இவரால் அழகுறுத்தப்படுகின்றன.

**அண்டிரன்** - கடையெழு வள்ளல்களுள் ஒருவன். ஆய் என்றும் ஆய் அண்டிரன் என்றும் வழங்கப் பெறுவான். இவனைப் பாடிய புலவர்கள் இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார், உமட்டூர் கிழார் மகனார் பரங்கொற்றனார், உறையூர் ஏணிச்சேரி முடமோசியார், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், குட்டுவன் கீரனார், துறையூர் ஓடைகிழார், பரணர், பெருஞ்சித்திரனார், மோசிகீரனார் ஆகியோராவர். சுரபுன்னைக் கண்ணி இவனுக்குரியது (புறம். 131:2). இவனது காட்டிலே யானை நிறைய இருப்பக் கண்ட முடமோசியார் இக்காடும் அண்டிரன் குன்றினைப் புகழ்ந்து பாடிப் பல யானைகளைப் பரிசிலாகப் பெற்றதோ என இவன் கொடையை வியந்து பாராட்டுவர் (புறம். 131). இவன யானையேயன்றி இரவலருக்குத் தேரும் வழங்கியவன் (புறம் 41:1). உலகில் வாழும் உயிரினம் மகிழ மேகங்கள் பலப்பல உருவத்தோடு விண்ணிடைத் தவழும் காட்சி போல இரவலருக்கு அளிக்க இவன் தொகுத்து வைத்திருக்கும் யானைக் கூட்டம் காட்சியளிக்கும் (நற். 237:7-10). மோசியார் தம் கையறுநிலைப் பாடலில் வச்சிரப்படையுடைய இந்திரனது கோயிலில் அண்டிரன் வருவான என எதிர் கொண்டழைக்க முழக்கிய முரசொலி விண்ணிடை ஆர்த்தது எனக் கூறுவர் (புறம். 241). ஆஅய், ஆய், ஆஅய அண்டிரன், ஆய் அண்டிரன் காண்க.

**அண்ணல்** - 1. தலைவன். கறைமிடற்றண்ணல் (புறம். 55:4). அடுபோரண்ணல் (புறம். 42:1;67:2;129:5; மது. 207). அண்ணலெங் கோமான் (புறம். 95:9). வென்வேலண்ணல் (புறம். 141:7). நிரைத்தாரண்ணல் (புறம். 174:23). திண்தேரண்ணல் (புறம். 198:6). விறற்போரண்ணல் (புறம். 201:12). இயல்தேரண்ணல் (புறம். 202:13;203:6). அகல் நாட்டண்ணல் (புறம். 249:7). மலர்தாரண்ணல் (புறம். 311:4;393:9). சோணாட்டண்ணல் (புறம். 337:1). வெல்போரண்ணல் (புறம். 353:6; பதி. 70:22;81:18). ஆடுநடையண்ணல் (பதி. 44:7;86:8). வௌவேலண்ணல் (பதி. 51: 23). கொடித்தேரண்ணல் (பதி. 55:9). கழலதொடியண்ணல் (பதி. 64:15). திருந்து வேலண்ணல் (மலை. 319). ஆணெழிலண்ணல் (கலி. 9:10). செருமேம்பட்ட செயிர்தீரண்ணல் (பரி. 1:27). நாற்கை யண்ணல் (பரி. 3:36). மறுமிடற்றண்ணல் (பரி. 8:127). மணிமிடற்றண்ணல் (பரி. 9:7). கணங்கொள் சுற்றத்தண்ணல் (பரி. தி. 1:80). அண்ணல் கோயில் (பரி. தி. 7:4).

2. பெருமை. அண்ணல்யானை (புறம். 93:13;115: 5;126:20;130:4;287:5;388:15,390:28;பதி.42:8; சிறு.200; குறி.171;அகம.61:9;96:13;208:4;251:15;373;16,குறு.260: 5;343:2,நற்.194:5;273:6). அண்ணல் நெடுவரை (புறம். 116:15;158:2;அகம. 75:8; குறு. 392:3;நற். 236:8;பரி.17: 14). அண்ணலங் கொண்மூ (புறம். 205:11). அண்ணல் நல்லேறு (புறம். 288:2). அண்ணல் மழகளிறு (பதி. 12:12). அண்ணலம் பெருங்கோட்டகப்பா (பதி. 22:26). அண்ணல் மரையா (பதி. 23:14). அண்ணல் நெடுங்கோடு (குறி. 54). அண்ணல் இரலை (அகம். 34:4;304:9). அண்ணல் ஏறு (அகம். 64:11; 146:1). ஆமான் அண்ணல் ஏறு (அகம். 238:7). திரிமருப்பிரலை அண்ணல் நல்லேறு (குறு. 338:1). அண்ணல் ஏறு (குறி. 344:3). கண்ணி மருப்பின் அண்ணல் நல்லேறு (குறு. 363:1). அண்ணல் உள்ளம் (நற். 372:7).

**அண்ணா** - உள்நாக்கு. யாழுறுப்பாகிய வறுவாய் அண்ணா - உள்நாக்கு - இல்லாதது (பொரு. 12)

**அணங்கியோய்** - வருத்தியவளே. தினைப்புனங்காத்த தலைவியைத் தலைவன் 'சூரர மகளிரின் நின்ற யாரையோ, எம அணங்கியோய்- வருத்தியவளே'

எனக்கூறி அவள் சிறுபுறம் தழுவினன் (அகம். 32: 5-9).

**அணங்கியோள - வருத்தியவள.** அல்ல குறிப்பட்டுப் போகுமாறு தலைவன் தன் நெஞ்சினை நோக்கி, எம் அணங்கியோள் - வருத்தியவள - நெடுஞ்சிமைப் புகலரும் பொதியில் போலப பெறற் கரியள் என உரைத்தான் (அகம். 322: 13-15). அலலகுறிபபட்டுச் செல்லும் தலைவன் தன் நெஞ்சிறகு, 'நம்மை அணங்கியோள் வேந்தரது மதிலரண் போலக் காவல சிறந்து நம்மால் எய்துதற் கரியள்' என மொழிந தான் (அகம. 372:14 - 16). தலைவன் பாங்கனிடம் எம் அணங்கியோள் இளையள், முளைவாள் எயிறள், வளையுடைக் கையள் எனக கூறினான் (குறு. 119: 3, 4). தலைவன் 'எம அணங்கியோள் வேங்கை மலர் கொண்டு மலையுறை கடவுள் குலமுதல் வழுத்தித் தேம்பலிச் செய்த ஈர நறுங்கையினள் என றும் மலர்ந்த காந்தள் மலரின் மணம் கமழநது கலஙகிய கண்ணினள் என்றும் உவகையுடன் தனககுள்ளே சொல்லிக் கொண்டான் (ஐங். 259).

**அணங்கியோன் - வருத்தியவன்.** பெருந்துறையிற்கண்டு தலைவியை அணங்கியோன் - வருததியவன - அருந திறற் கடவுளலலன்; நெயதல் மலரைச் செருநதி மலரொடு விரவி ஒப்பனை செய்தணிந்த நறுந்தார் கமழும் மார்பனே எனக கூறித் தோழி அறத்தொடு நின்றாள் (ஐங. 182). தலைவியை அணஙகியவனுக்குக் கழங்கு மெயப்படுத்துப படிமஞ்செயது கொடுத்து முருகென மொழிந்து வேலன் வெறியாட்டெடுத்தால் அது தலைவனுககு உரிமையாகுமா என்று தோழி தலைமகன் சிறைப்புறத்தானாக வெறியறிவுறுதது வரைவு கடாயினாள (ஐங. 245). தலைவியை அணஙகியோன விறலவேள் அலலன், வள்ளியங்கானங் கிழவோன எனக கூறித தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள் (ஐங. 250:3-5).

**அணங்கு - 1 வருத்தம்.** செல்வக்கடுங்கோ வாழியாதன் மகளிர்க்கு ஆற்றுதற்கரிய அணங்காகிய-வருத்தமாகிய - மார்பினை உடையவன் (புறம். 14:16, 17). வஞ்சினங் கூறிய இருபெரு வேந்தரை நெடுஞ்செழியன் அணங்கரும் பறந்தலையில் மாயுமாறு பொருது அவர்தம் முரசத்தைக் கைப்பற்றினான் (புறம். 25:5-7). அணஙகுதற் கரிய பேராற்றலை புடையவன் நெடுஞ்செழியன் (புறம.78:2). அணங்குடைய முருகனின் கோட்டத்தைப் பூப்பெய்திய மகளிர் அணுகுதற்கஞ்சி நீங்குவர் (புறம. 299:6, 7). தந்தை மகட்கொடை மறுத்தலால் போர் எழுந் தமையின் அப்பெண் தான் பிறந்த ஊருககு மரம்படு சிறுதீப் போல அணங்காயினள் (புறம. 349:5-7). போர்க்களத்தில் அரசராகிய பாம்புகள் அஞ்சி நடுங்கும் அணங்குறு பொழுதில் வில்லி னின்று அம்புமழை பொழிந்தது (புறம. 369:6-9). பகைவரை அழித்து அணங்கு செய்த வலிய முயற்சியை யுடையவன் இமைய வரமபன நெடுஞ்சேரலாதன் (பதி. ப. 2:12). மறவர் அணஙகுடைத் தடக்கையினர் (பதி. 62:11). நோககினாரை அணங்கு செய்யும் அழகுடைய மகளிரை வயபபடுத்தும் மணம கமழும் மார்பினன் செலவக கடுஙகோ வாழியாதன் (பதி. 68:19,20). முருகன அணங்க மைந்த தெய்வத்தனமை உள்ளடககி மணஙகமழ தெய்வத்தனமையுடைய பணடைத்தன் இளநலங் காட்டி அனபர்க் கருள்வான (முரு. 289-295). பிறர்க்கு அணங்கெனத தோறறின, சுணஙகணி ஆகத்து அழகிய இள வனமுலையுடையவள விறலி (பொரு. 35, 36). ஆளியின் அணஙகுடைக் குருளை முலையுணடலைக கைவிடாத இளைய பருவததே மிகுந்த வலிமையோடு செருககி முதல வேட்டையிலே களிற்றைக கொன்றது (பொரு.139-142). எயிற பட்டின நாடனது தோள் அணியிழையார்க்கு ஆரணங்காகியது (சிறு. வெ. 1) மலைபபக்கத்தில் அணஙகுடை யாளி தாக்கலின் யானைக் கூட்டம அச்சுற்றோடியது (பெரு. 256-259). மறவர் தலையாகிய அணஙகடுபபில போர்க்களத்தில பேய மடையன சமைததான் (மது. 28-36). பகைவா கலங்கச் சென்று அஞ்சும்படியாகப பொரும அணஙகுடைத் துபபினை யுடையவன நெடுஞ்செழியன் (மது. 139, 140). நாடடைச் சூழநத நல்லெயிலில அணஙகுடைக் கதவுகள இருநதன (மது. 693, 694). பெருங காவ லமைநத சுங்கச் சாவடியில வலியுடைய வலலணஙகினோன (இலச சினை பொறிபபோன) பொருள்களைப புலிபபொறி யிட்டுப் புறத்தே போககினான (பட. 133-135). அரிமா அனன அணங்குடைத துப்பினையுடையவன் திருமாவளவன் (பட். 298,299). அணஙகரு மரபின் பேயைப் போல வன்கண ஆடவா விளர்த்த ஊனைத் தினற வேட்கை நீஙகத தோப்பிக்கள் பருகினர் (அகம. 265:14-17). அணங்குடைய ஆளியேறு, தலைமை யானை வருந்த அதன் வெண்கோட்டைப பறிதது அதன குருத்தைத் தின்னும் (அகம். 381:1-3). காமம் அணங்குமபிணியும் அனறு (குறு. 136:1,2; 204:1,2). 'நினகுரல நள்ளிரவிலும் கேட்கின்றது; நீ யாரால அணங்குற்றாய்' எனக் கடலை விளிததுப் பிரிவால வருநதி ஆற்றாமை கொணட தலைவி வினவினாள் (குறு. 163:1-5). வானதோய் வெறபன மார்பைப பிரிநதமையால வந்த அணங்கு ஏதுவாகத் தலைவி அழுதாள் (நற்.1 7:5,12). தலைவிககுத தலைவன மார்பு தரவந்த படர்மலி அருநோய் முருகனால

வந்த அணங்கன்மை யறிந்தும் அவன் வெறி யாட்டுப் பலிகொள்ள வருவானாயின் மடவனா வான் எனத் தோழி கூறி வெறியினை விலக்கி னாள் (நற். 34:5-11). நாகத்து அணங்குடை யருந் தலை துணியுமாறு சார்ப்பருவத்தின் மாலைக் காலத்து இடியேறு குழுறியது (நற். 37:8-11). தலை வியின் கரும்பெழுதிய தோள் தன்னை அணங்கு செய்தன எனத் தலைவன் கூறுதல் (நற். 39:11). 'தன்வயின் ஆர்வமுடையராகித் தன் மார்பால் அணங்கு உறுநரை அறியாத தலைவன் என்ன மகன கொல்' எனத் தலைவி தோழியிடம் உரைத் தாள் (நற். 94:7-9). அணங்குடை அரவினையுடைய மயக்கந்தரும் வழியில் ஆரிருள் நடுநாளில் தலை வன் எஃகு துணையாகச் சாரல் சிறுகுடிக்குச் சென் றான் (நற். 168:8-11). தலைவன் தான் நம்மை அணங்குதல்லை அறியானாய் நம்மிடம் தான் அணங் குற்றமை கூறிச் சோலையிடத்துத் தொழுது நின் றான் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 245:9-12). முதுவாய் வேலன் அணங்கிற்குமுன் இடப்பட்ட கழங்கினைக் கொண்டு ஆராய்ந்து தலைவியின் நோய் முருகனை வழிபடுதலால் தணி யும் என்று கூறிய அவன் கூற்றுப்படி நோய் தணி யின் நன்றுமன் எனத் தோழி கூறினாள் (நற். 282: 5,6). நெஞ்சு நடுங்கும்படி பலகாலும் கேட்டும் ஐயுற்றும் அஞ்சியிருந்த பொருள் அணங்காகும் (கலி. 24:1,2). பாம்பின் பொறி போலும் பொறி களும் பகைவரை அணங்குதலும் கூடிய வலியினை யுடைய வில்லின்மேல் தலைவன் கையை வைத் திருந்தான் (கலி. 50:6.7). மூங்கில் போலவும் அணை போலவும் புணைபோலவும் அமைந்த நின் தட மென்தோள் நின்னைக் கண்டார்க்கு அணங்காகும் என்பதை நீ அறிவாயோ, அறியாயோ எனத் தலை வியைத் தலைவன் வினவினான் (கலி. 56:18-21). தலைவியின் யாதொன்றும் தெரியாத இடைக்குக் கொடி, மின்னல், (கட்புலனாகாத) அணங்கு உவமை (கலி. 57:4,5). நெஞ்சழிந்து வருத்தமிக்குக் கெடும்படி அணங்காகி மேன்மேலும் அடர்கின்ற தன் காம நோயைக் குறிப்பான் அறிதலன்றிச் சொல் லினும் அறியாதவள் தலைவி எனத் தலைவன் கூறு கின்றான் (கலி. 58:15,16). நின்னால் அணங்குற்ற பரத்தையர் நீ செய்யும் கொடுமைகளை என்னிடம் வந்து நொந்துரையாமையை யான் பெறின் இயற்கை நலத்தையும் இழந்து பசந்த என்கண் துயில்பெறுதலை விரும்பேன் எனத் தலைவி ஊடிய நிலையில் தலைவனிடம் கூறினாள் (கலி. 77:12-15). நீ கூறிய பொய்ச்சூள் அணங்காகின் (வருத்தத்தைச் செய்யுமாயின்) பின் அதுதான் எங்கள் மேலன்றி வேறு யார்மேல் வரும் எனத் தலைவி தலைவனைக் கேட்டாள் (கலி. 88:20,21). அணங்குடைய வச்சிரப் படை உடையவன் ஆயிரங் கண்ணினன் (கலி. 105: 15). இப்பெண் தன்னை நோக்கினார் எல்லார்க்கும் அணங்காதல் அமைந்தவள் எனத் தலைவன் கூறு தல் (கலி. 109:22). நோக்குங் காலத்து அப்பார்வை யாலே பிறர்க்கு அணங்கைத் தரும் சாயலுடைய வள் தலைவி (கலி. 131:5). தனக்கு வலியைத் தரும் என்று கருதித் தான் வழிபட்ட தெய்வம் தன்னைச் சார்ந்தார்க்கு நெஞ்சழியும் நோய் கைமிகும்படி அணங்காகியது போலத் தலைவனைத் தனக்கு வலியென்று வழிபட்ட தலைவிக்கு அவனால் உண்டாய பழி எங்கும் பரந்து அலர் தூற்றுகை யினாலே எழுந்த வருத்தத்திற்கு அவன் காரண மாயினான் (கலி. 132:21-24). 'ஏடி, நீ என்ன அணங்குற்றாய், யார்தான் நினக்கு இவ்வருத்தஞ் செய்தார், நினக்குற்ற வருத்தத்தை எனக்குரைப் பாயாக' எனத் தலைவியைச் சிலர் கேட்டனர் (கலி. 144:9-11). மகளிர் நலத்தைக் கைக்கொண்டு பின்பு அவர்க்குக் கொடாத தலைவர் பிரிந்த தனிமையில் துயருழக்கும் அம்மகளிர்க்குத் துணையாகாது அணங்காதல் தக்கதோ என மாலைப்பொழுதை நோக்கித் தலைவி வினவினாள் (கலி. 148:12-15). ஆயிரம் விரித்த அணங்குடை யருந்தலை திருமால் முடிமேல் கவிக்கப் பெறுதல் (பரி. 1:1, 2). திருமால் மாற்றலர்க்கு அணங்காவார் (பரி. 1:40). ஐந்தலை உயரிய அணங்குடை அருந்திறல் மைந்துடை யொருவன் (சிவன்) (பரி. 1:43,44). அணங்குதல் சான்ற தெய்வ சாதிக்கு இறையாகிய இந்திரன் வடதிசை யிலே உள்ள இமய மலையைத் துளங்காமல் காத்தல் (பரி. 9:1, 2). தலைவன் தலைவியுடன் எய்திய புணர்ச்சி தலைவிக்குப் பாங்காயினார் கேட்டு அணங்குறப் பரத்தையராலே பழி கூறப்படும் (பரி. 9:20, 21). திருமால் அணங்குடை நேமியைக் கொண் டவர் (பரி. 13:6). அணங்குடை யருந்தலை ஆயிரம் விரித்த கணங்கொள் சுற்றத் தண்ணலை வணங்கி ஏத்திப் பரவுவோம் எனப் புலவர் பாடுவர் (பரி. தி. 1:79-82).

2. தெய்வம். அணங்கு-தெய்வம்-உடைய நெடுஞ் சிகரங்களைக் கொண்ட மலையின் முழையில புலி துயிலுதலை வெறுத்தது (புறம். 52:1, 2). அணங்கு சால் அடுக்கம் (புறம். 151:10, 11). அணங்குடை முன்றில் (புறம். 247:4). திரண்ட சேனை அணங்கு சினந்தெழுந்தாற் போன்று எழுந்தது (புறம். 362:6). அணங்குடை மரபின் இருங்களந்தோறும் பொகுட் டெழினி கழுதை பூட்டி உழுது வெள்வரகும் கொள்ளும் வித்தினான் (புறம். 392:8-10). அணங்கு வருத்தினாற் போன்ற மோகூர் மன்னனது

முரசத்தைச் செங்குட்டுவன் கைப்பற்றினான் (பதி. 44:13-15). பெருஞ்சேரலிரும்பொறையைப் பகைவர் மெய்நடுங்கி அணங்கெனப் பரவுதலின் பலியைக் கொண்டு பெயரும் பேய் போல அவன் அவரிடம் திறைகொண்டு பெயர்ந்தான் (பதி. 71:22-24). அணங்குடை மரபின் கட்டில் (பதி. 79:14). இளஞ் சேரலிரும்பொறை அணங்குடைக் கடம்பு மரத்தின் அடியை வெட்டிக் கழுவுளைப் புறங்காட்டி ஓடச் செய்தான் (பதி. 88:6, 7). அணங்கு (யாழ்த்தெய்வம்) நிலைபெற்ற அழகினையுடைய யாழ் மணமகளை ஒப்பனை செய்தாலொத்து விளங்கியது (பொரு. 19, 20). அணங்கு உறையும் சாரலில் இனிய தாளத் திலே கின்னரப் பறவைகள் பாடும் (பெரு. 493, 494). ஊரிடத்தே அணங்கு (இல்லுறை தெய்வம்) உலாவும் (மது. 164). தொல்வலி நிலைபெற்ற அணங்குடை நெடுநிலையுடையது வாயில் (மது. 353, 356). பூத் தொழிலமைந்த தொடியினையுடைய மகளிர், அழ கிய பொன்னாற் செய்த அணிகலன்கள் அணிந்து வானுலகத்தி லிருந்து இறங்கி வந்த அணங் கினை (தெய்வமகளிரை) ஒத்தனர் (மது. 445, 446). மணம்புணர்ந் தோங்கிய அணங்குடைய நல்லில் இடத்துக் கொழுங்குடிச் செல்வரும் பிறரும் இருந் தனர் (மது. 577, 578). நள்ளிரவில் பேயும் அணங்கும் உருவங் கொண்டு திரிதரும் (மது. 631-633). அணங்குறு மகளிரின் வெறியாடு களம் போலப் பொழிலிடம் தோன்றியது (குறி. 175, 176). சுறவின் கோடுநட்டு மனைச்சேர்த்திய வன்மையுள்ள அணங் கிற்குப் படைத்துத் தாழை மலர் மலைந்தும் பெண்ணைப் பிழி மாந்தியும் பரதவர் விளை யாடினர் (பட். 86-90). மூப்புடை முதுபதியின்கண் தாக்கணங்குகள் உள்ளன (அகம். 7:4). வானத்து அணங்கரும் கடவுள் அன்னோள் எனப் பரத் தையைத் தலைவி சுட்டுதல் (அகம். 16:17, 18). அணங்குடை நெடுவரை (அகம். 22:1). மூங்கில் ஒலிக்கும் அணங்குடை பக்கமலையில் தன் கருக் கொண்ட பிணவின் பசிநீக்கப் புலி யானையை அட்டு வீழ்த்தியது (அகம், 72:11-13). வழிபடு தற்குரிய அணங்குடை நகர் போலக் கானத்தில் பல்வேறு மலர்களின் மணம் கமழ்ந்தது (அகம். 99: 8-10). நம் தோட்டத்திலே சிலம்பின் சுடர்ப்பூ வேய்ந்து தாம் வேண்டிய உருவில் அணங்குகள் வரும் எனத் தோழி செவிலியிடம் கூறினாள் (அகம். 158:7-9). பிரிவுணர்ந்த தலைவி தன் சுணங்கு சூழ்ந்த மார்பில் அணங்கு (வீற்றுத்தெய்வம்) போல் உருவங்கொண்டெழுந்த நன்றாகப் பருத்த இள முலை நனைய அழுதாள் (அகம். 161:11-14). அணங் குடை வனமுலை (அகம். 177:19). ஆஅய் நன்னாட்டு அணங்குடைச் சிலம்பு (அகம். 198:14). அணங் குடைப்பனித்துறை (அகம். 240:8; ஐங். 174:1). அணங் குடை வரைப்பகம் (அகம். 266:19). அணங்குடை நெடுங் கோடு (அகம். 272:3). தலைவி அணங்கென உருத்த நோக்கினள் (அகம். 319:6). அணங்குடை உயர் நிலைப் பொருப்பு (அகம். 338:6). தலைவி அணங்கன்னாள் (அகம் 366:16). அணங்குடை வரைப் பிற்பாழி (அகம். 372:3). கடுந்திறல் அணங்கினை யுடையது நெடும் பெருங் குன்றம் (அகம். 378:22). அணங்குடை அருந்தலையினை வருட வலியழிந்து மையல் வேழம் மயங்குதுயருற்றது (குறு. 308:2, 3). புன்கின் தளிரைத் தலைவியின் சுணங்கணி வன முலையில் அணங்கு கொள்ளத் தலைவன் அப் பினான் (நற். 9:5, 6). அணங்கறி கழங்கினால் தலைவியின் மாறுபாட்டை யறிந்து வெறியாட் டெடுத்தனர் (நற். 47:8-10). தலைவியைக் கண்ட தலைவன் அவள் எழில் நலம் வியந்து தெண்டிரைப் பெருங்கடற் பரப்பின் அமர்ந்துறை அணங்கோ என அவளை வினவினான் (நற். 155:5-8). 'அணங்கு மலையினின்றும் வெளிப்போந்து நின்றது; மழை பொழிய அத்தெய்வத்தை வழிபடுவோம்' எனக் கூறிக் கானவன் சுற்றத்தோடு சென்று தெய்வப் பலி கொடுத்து மகிழ்ந்தான் (நற். 165:2-5). தலை வியின் நன்னுதற் பசந்த நோய்க்குக் காரணம் அணங்கு என வேலன் கூறினான் (நற். 322:9, 10). வெறி யெடுத்தலினாலே அணங்கும் தங்களை வருத்தும் என்று தோழி சிறைப்புறக் கூற்றினால் தலைவி இற்செறிக்கப்பட்டமையைத் தலைவனுக்கு உணர்த்தினாள் (நற். 376:10-12). அணங்குடை அருஞ்சூள் தருகுவன் எனத் தலைவன் தலைவி யிடம் கூறினான் (நற். 336:6). தலைமகன் முதலில் நம்மைத் தெளிவித்துப் புணர்ந்து இப்பொழுது தாக்கணங்காவது ஏனோ என தலைவி தோழியிடம் கேட்டாள் (ஐங். 23:2-4). தலை வியின் நோய்க்குக் காரணம் நீருண் துறையிலுள்ள அணங்கு எனக் கருதுதல் (ஐங். 28:1). எயினரின் தங்கையாகிய தலைவியின் முலையிலுள்ள சுணங்கை அவள் சுணங்கென்னு மாத்திரையே நினைக் கின்றாள்; ஆனால் தலைவியின் துன்புறு நெஞ்சு அணங்கென் நினைக்கின்றது (ஐங். 363:2-4). மஞ்சு பரக்கும் பக்கமலையை ஊடறுத்து இயற்றப்பெற்ற அணங்குடைய அரிய வழியில் தலைவன் வந்தான் (கலி. 49:16,17). தாமரைக்கண்ணி சூடித் தண்ண றுஞ் சாந்து பூசித் தலைவன் தலைவி கூறிய இரவுக் குறி வரின் மணங்கமழும் மலையில் நின்று பலி கொள்ளும் அணங்கெனச் சிறு குடியிலுள்ளோர் அஞ்சுவர் (கலி. 52:7-10). தலைவன் மார்பு அணங்கு போற் கமழும் (கலி. 71:20). 'நீ முருகன் மேல் ஆணை யிடின் அவனைச் சார்ந்த அருளில்லாத

அணங்குடனே அவன் வேலும் மெய்யாக வருத தும்; அவன்மேல் ஆணையிடாதே, எனத் தலை வனிடம் தோழி கூறினாள் (பரி. 8:65-68). காரிகை கணடார்க்குத் தாக்கணங்கு போல் காட்சியளித் தாள் (பரி. 11:122). அமிர்தை ஒத்த நோககால் அணங்கு போல்வாள் ஒருத்தி வேறொருததியின் கணவனை நோககினாள (பரி. 12:57).

3. **துனபம்.** அணங்கு-துன்பம-செய்த அவுணர்கருக் காவலாக இருநத மாமரத்தின அடியைச் செவ் வேள் வெட்டி வீழ்த்தினான் (பதி. 11:4-6). மயிலுக் கஞசி அரவின அணங்குடைய தலைகள படம விரிநதாற போலக் காயா மரக்கிளையைத் தோயக் காநதள மலர் கொத்தாக விரிந்தது (அகம். 108:12-15). பிரிவில வருந்தும் அணங்குசால் அரிவையைக காணத் தேரைச செலுததுமாறு வினைமுடித்த தலைவன் பாகனிடம கூறினான (அகம. 114:8,15, 16). கொடுவில் ஆடவர் அணங்குடை நோன்சிலை வளைததுப பொருது ஆனிரை கவர்நதனர் (அகம். 159:5-7). கொடுவில ஆடவர் அணங்குடைப பகழி யால வணிகர் கூட்டததைக் கொன்று பொருளைக் கொள்ளை கொணடனா (அகம. 167:7-9). பிணவுப் புலி நடமாடும் அணஙகரும் கவர்த்த வழியில நள்ளிரவில தலைவன தலைவியைக் காண வநதான (நற். 144:6-10). தலைவன் தலைவியால் அணங் குற்றான் (ஐங. 58:3). சுணங்குவளர் இளமுலை மடநதைக்கு அணங்கு வளர்த்து அகலற்க எனத தோழி தலைவனை வேண்டினாள் (ஐங. 149:2,3). நெயதல மணம் கமழும் கூந்தலையுடைய தலைவி யால அணங்குற்றோர் இரவிலும் இன்துயிலறியாது அரவுறு துயரம் எயதினர் (ஐங. 173). தலைவியின் முலையிலுளள சுணங்கைத் தலைவனின் அணங்குறு நெஞ்சு வருத்தும் தெய்வமாகக் கருதும் (ஐங. 363: 2-4).

4. **அச்சம்.** பிறரை வருத்தும் அணங்கு-அச்சம்-உடைய அவுணர் கூட்டம் ஞாயிற்றைக் கொண்டு சென்று மறைததமையால் உலகம் துன்புற்றது (புறம். 174:1-4). இடியேறு அணங்குடை அரவததின் தலை யைத் துமித்தது (புறம். 211:1, 2). அருவியார்க்கும் அணங்குடை நெடுங்கோட்டின் பக்கம் இள வெயிலை நுகர மயில் பெடையோடு உலாவும் (நற். 288:1-3).

5. **பேய்.** முருகனைப் பெற்ற இறைவிக்கு அணஙகு-பேய - சில நொடி சொலவது தொண்டைமான இளந்திரையனுடைய புகழ்களிற் சிலவற்றைப் பாணர் கூறுவதற்கு உவமையாக வந்துள்ளது (பெரு. 457-461). இவ்வூரில் வாழும் அலர் தூற்றுதல் எனனும் நல்ல அணங்கு பிடித்த, பிறர்க்குத் தீங்கு செய்தலையே அறிந்த பெண்டிர் சிலரின் சொற் கொணடு அன்னை தலைவியைக் காவல் மேற் கொண்டாள் (அகம். 20:11-13). அணங்கு கால் கிளரும் மயங்கிருள் நடுநாளில குறுமகளின் வன முலையை முயங்கக் கருதித் தலைவன் உறங்க வில்லை (நற். 319:6-11).

6. **அழகு.** அரிவை, அணங்கு - அழகு - நிறைநதவள் (அகம. 181:25). தலைவியின தடமென தோளில் அணங்கு நிலைபெறறது (அகம். 295:22)

7. **தெய்வத்தன்மை.** தலைவி, அணங்கு - தெயவத் தன்மை - நிறைந்த கற்பினள் (அகம. 73:5). அணங் குடை முந்நீர் (அகம. 207:1). அணஙகுசால அரிவை (அகம். 212.8).

8. **வெறியாடல்** (ஆகுபெயர்). காடுகெழு நெடுவேளுக் குப் பாடும் பணணிற் கேறப அணங்கு - வெறி யாட்டு - அயர்கின்ற களம் பொலிய மகளிர் ஆட விழைந்தனர் (அகம். 382:5-7).

9. **நோய்.** தலைவியின் மெலிவுக்குக் காரணம் முரு கனால் விளைநத அணங்கு-நோய்-எனப பொய்வல் பெணடிர் உரைததனர் (அகம். 98:6-10).

10. **வடிவு.** அருந்திறல அணங்கின - வடிவினை யுடைய - ஆவியர் குடியில பிறந்த பெருமகன பேகன் (சிறு. 86,87).

**அணல் - 1. கழுத்து.** குறுங்காலினையும் கரிய அணலி னையும் - கழுததினையும - உடைய காடை, உழவர் பயிரை அறுக்கும்போது உண்டாகும் ஆரவாரத திறகு அஞசிக் கடம்ப மலர் போனறு வெணணிற முடைய பறக்கமுடியாத பிள்ளைகளைத் தழுவிக் கொணடு, காட்டிலே சென்றுதங்கும் (பெரு. 202-205).

2. **மீசை.** தமது வல்லமையால் பகைவரைக் கொள்ளைகொண்டு உணணும் வாழ்க்கையினை யுடையனாய், வாள் தொழிலே செய்யும் குடியிற் பிறந்த ஆண்புலி போன்ற புல்லிய அணலை-மீசையை - உடையனாய்க் குறிஞ்சி மறவன் விளங் கினன் (பெரு. 137, 138).

3. **கன்னம்.** பிரிந்த தலைவனை நினைந்து தலைவி சிந்தும் கணணீர் கணகளினின்றும் விலகிக் காத ணியில் விழுமாறு தன் முன்கையை அணலில் - கன்னத்தில் - ஊன்றிப் படுக்கை மீதிருந்தாள் (அகம். 351:11-14).

4. **தாழ்வாய்.** தினையின முற்றிய கதிர்களைக் கொய்துகொண்ட மந்தி கடுவனொடு வரைமீது ஏறி அங்கை நிறையக் கசக்கித் தூயமை செய்து திரைத்த அணலையுடைய - தாழ்வாயையுடைய - கன்னம் நிறைய அடக்கிக்கொண்டு உண்ணும்

(நற். 22:1-5). கரிய வாலினை யுடைய ஒந்தியின் அணலை ஒத்துக் குவளைப்பூ மலர்ந்தது (அகம். 125:5,6) மனைக் கூரையில் தங்கும் கரிய அணலை உடைய குருவிச்சேவல் வேற்றுப் புலத்துப் பெடையொடு புணர்ந்தமை அறிந்த பேடை, தன் பிள்ளைகளுடன் சேர்ந்து சேவலைக் கூட்டினுள் புகாதபடி தடுத்தது (நற். 181:1-5).

**அணி - 1. அழகு.** ஆரம் தாழ்ந்த அணி - அழகு-கிளர் மார்பு (புறம். 59:1). அணிகொள் தேர் (புறம். 68:14). அணிநிற ஓரி பாய்தலால் பாரியது நெடியமலை தேனைப் பொழியும் (புறம். 109: 7, 8). அணிநெடுங் குன்று (புறம். 150:26). புகழ்மிக்க மறவன் பெயர் மயிலினது அணிமயிராகிய பீலி சூட்டப்பட்ட நடுகல்லின் மேலதாய் இருந்தது (புறம். 260:25-28). கரந்தைப் போரில் மாண்ட தலைவனது பேரில்லம் அவனின்மையாலே கைம்மை நோன்பு மிகக் கலக்கமுற்ற கழிகல மகடூஉவாகிய அவன் மனைவியையொப்பப் பல்லணியுமிழந்து பொலிவழிந்தது (புறம். 261: 1, 15 -19). அணிமயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்து மறவர்க்கு நடுகல் நாட்டப்பெற்றது (புறம். 264:3). இளையோள் இடையிலணிந்த அணித்தழையாடை அசையுமாறு ஓடினாள் (புறம். 340: 1, 2). இளையோள் அழகமைந்த பூக்கள் விரவித் தொடுத்த அணித்தழையாடையுடுத்த அல்குலினள் (புறம். 341: 2, 3). இளையோளது அணி நல்லாகத்தில் சுணங்கு அரும்பியது (புறம். 350:10, 11). காட்டுவழியில் பாண்குலச் சிறுவர் கடவுளைப் பழிச்ச, அதனைப் புலிக் கூட்டத்தின் குரலாகக் கருதிய வயக்களிறு மலைப் பக்கத்தே வளர்ந்திருந்த பூத்த வேங்கைமரத்தை அக் குரலுக்குரிய புலியெனக் கொண்டு சினந்து அதன் பூவுடைப் பெருங்கிளையை வளைத்துப் பிளந்து தன் தலையிலே அணிபெறச் சூடியது (பதி. 41: 6-10). சிலம்புகளோடு அணித்தழையாடை கட்டித் தொங்கவிடப் பெற்றது கோட்டை வாயில் (பதி. 53: 6, 7). செல்வக் கடுங்கோ வாழியாதன் நட்பின் நிலையில் ஒருநாளும் தாழாத உள்ளமொடு அணியுறப் பொருந்தி நட்புச் செய்தோர்க்கல்லது பிறர்க்குக் கண்ணோட்டம் கருதி அஞ்ச மாட்டான் (பதி. 63:2, 3). 'அண்ணலே, நின் அரிவையது ஒளிபொருந்திய நுதல் அணிகொள்ள அவள் நின்னைக் காணுமாறு நின் புரவி தேரினைப் பூண்பதாக' என இளஞ்சேர விரும்பொறையைப் பெருங்குன்றூர் கிழார் போர்க்களத்தே கண்டு பாடினார் (பதி. 81:28-32). மண்மகளுடைய மலையாகிய அணி பொருந்திய முலையிற் கிடந்தசையும் முத்துவடம் போல மலைத் தலையினின்றும் கானயாறு இழிதரும் (சிறு. 1-3). அருவிகள் இன்மையால் மாமலை அணியில்லாததாயிற்று (மது. 306). அணிகிளர் மார்பு (மது. 439). அணி மயில் அகவ வைகறை புலர்ந்தது (மது. 675, 686). யாழிசையின் அணி மிகுகின்ற பாட்டினை யுடைய மிஞிறுகள் ஆர்த்தன (குறி. 110, 111). தலைவன் தலைவியைக் காணப் புதிய ஆவினைக் காணும் ஏறுபோல அணிபெறவந்தான் (குறி. 135, 136). தலைவன் கடுவிசை யம்பினை வலித்து அண்ணல் யானையினது அணிமுகத்தே எய்தான் (குறி. 170, 171), தலைவன் தலைவியின் அணிநலத்தை நுகர்வேன் என்று கூறி அவளது நுதலை நீவினான் (குறி. 181, 182). தலைவன் அருவி கொழிக்கும் அணிமலை நாட்டினன் (குறி. வெ. 1:3). கொம்பில் பீலியாகிய அணி யுடைய தழை கட்டப்பெற்றது (மலை. 5). தலைவன் தான் ஆகத்து ஒடுக்கியிருந்த புதல்வனின் தலையில் அணியப்பட்டிருந்த செங்கழுநீர்ப் பூவின் பிணையலைத் தலைவி மோந்து பிரிவுத் துயரால் பெருமூச்சு விட்டபோது அம்மலர் தன் மணிநிறம் இழந்து அணியழிந்தது (அகம். 5:22-25). தலைவியும், தோழியும் அணித்தகப் பல் பூங்கானலில் தங்கி வந்தனர் (அகம். 20: 9,10). நீர்முள்ளியின் உதிர்ந்த மலரைப் பொய்தல் மகளிர் தமது விளையாட்டு விழாவிற்கு அணிசெய்யத் தொகுப்பர் (அகம். 26: 1-3). 'காடு அணிகொண்ட காட்சி பொருந்திய காலத்தே தன் காதலி தோள்நலந் தொலைந்து வருந்தினளோ' எனத் தலைவன் இரங்கினான் (அகம். 41:9-12). திருப்பரங்குன்றப் பைஞ்சுனையில் பெரிய அணியால் தண்ணறுங் கழுநீர்ப் பூக்கள் பொலிவுற்றுத்திகழ்ந்தன (அகம். 59:11-14). கானலம் பெருந்துறையில் நெய்தற் பூக்களை விழாவிற்குத் தம்மை ஒப்பித்துக் கொள்ளும் மகளிர் தம் தழையுடைக்கு அணியாகும் பொருட்டுச் சேர்ப்பர் (அகம். 70:10-12). பாசறையில் யானையின் அணி முகத்தில் கட்டப்பெற்ற முகபடாம் ஒளிமிக்கிருக்கும் (அகம். 100:8-10). காந்தளினது அணிமலர் நறுந்தாதினைத் தும்பி ஊதும் (அகம். 108:15,16). மேகம் மழைபொழியக் காடு கவின்பெற்ற நிலையில் காயாவின் அணிமலர்களுக்கு இடையிடையே செம்புறமூதாய் பரந்து திரியும் (அகம். 134: 1-4). ஈயல் மூதாய் நீரொழுகிய ஈரமருங்கில் அணிதிகழப் பரந்தது (அகம். 139:13-15). நாடுபல கடந்து தலைவனுடன் போன தலைவியைக் குறித்து அவளது ஆயமும் அணியிழந்து வருந்தியது (அகம். 165:6,7). குடிபோன வளனற்ற பாழிடத்தில் சிற்றிலின்கண் எழுதி அணிசெய்யப் பெற்ற கடவுள் புறம்போய் விட்டமையால் அவ்விடம் பலிமறக்கப் பெற்றுப் பொலிவிழந்தது (அகம். 167:10-16). குறுமகள் அணியிழையினையுடையவள் (அகம். 172: 16). பொன்னின் அவிரெழில் அசையும் அணி கிளரும்படியான நெற்றிப்பட்ட மணிந்த போர்ச்செய்யல் பயின்ற

யானைகளையுடையவன் பாண்டியன் (அகம். 201:1-3). விசும்பினை அணிசெய்வது வில் (அகம். 210:4). தம காதலரைப் பிரிந்துறையும் மகளிர் அணிதுறநது நடுங்க அற்சிரப் பொழுது வநதது (அகம். 217:12, 13). விசும்பினை அணிசெயவன விண்மீன்கள் (அகம. 235.10). ஆறறாமை வாயிலாகப் புகுநத தலைவன் இரவிலே அணிகிளர் சந்தனத்துடன் பட்டாடை ஒளிசெயய மகளிரைப் போல ஒடுங்கியிருந்தான் (அகம். 236: 10-12). 'நினது நனமா மேனி அணிநலம் ஒழியுமாறு வருநதுதலைத் தவிர் வாயாக' எனத் தோழி பிரிவினகண வேறுபட்ட தலைமகளை வற்புறுத்தினாள் (அகம. 237: 6-8). வேங்கையின் பூநதாதுகள நீலமணியை யொத்த தோகையில் உதிர்ந்திட அணி மிகுநது மயில சோலையில் ஆடும் (அகம். 242:1-4). கள்விறகும் மகளிர் வயிற்றினை அணிசெய்யும் திதலையினை யுடையவர் (அகம. 245:8,9). கள்ளூரின்கண் திருநுதற் குறுமக ளொருத்தியின் அணிநலததை நுகர்ந்த அறனிலாள னொருவன் அவளை அறியேன் என்று சூளுரைததான (அகம். 256:15-18). தலைவனுடன் போகும தலைவி அணிகொளத தோள்களை விளக்கமுற வீசி நடநதாள் (அகம். 257:9-12). புணர்நதுடன போகுங்காலத்து இடைச்சுரததிலே தலைவன தலைவியை, 'நின் அணி மாட்சிமைப் பட்ட சிறுபுறத்தை யான் காணுமாறு சற்றே முன் செலவாயாக' என்றான் (அகம. 261:6-8). முளைக ளால அணி பெறுவது மூங்கில் (அகம். 268:11). மலர்ந்த வேங்கைககிளை பொலிய மயிலிருந்து அக வும் அணிமலை நாடன் தலைவன (அகம். 272:17-19). தலைவனுடையது அணிகிளரும் நெடுவரை (அகம். 278:14,15). அணிநடையமைந்தது அன்ன மான் பெடை (அகம். 279:14,15). மணலில் மணிமிடை பவளம் போல அணி மிகுமாறு காயாம்பூச் செம்மல் பரவியவற்றுடன் ஈயல் மூதாய் சேர்ந்து தங்கியது (அகம. 304:12-15). தலைவியது அணிக்கவின் வளர அவளை முயங்கி அவளது நெஞ்சைப் பிணித துத் தலைவன் பிரிந்து சென்றான் (அகம். 313:2,3). பெருந்துறையைப் புன்னையின் தாது அணி செய்யும் (அகம. 320:10). ஆரம் போலும் அணி கிளரும் புதிய கமுகம் பூக்கள் வண்டு தேனுண்ணுமாறு விரியும் (அகம. 335:18,19). தலைவி மகிழ்சசியினை அணிபெறக் கொணட முறுவலுடன் சேக்கையில் இருநது தலைவனுடன் நன்மொழி நவில்வாள் (அகம். 353·21-23). அந்தி வானின் அழகொடு கடலின அணியையும் கொண்டு மாலைக்காலம் வந்தது (அகம். 360:8,9) அணிவளை முன்கையினள் தலைவி (அகம். 361·4) 'கடல்கெழு செல்வி கரையிலே நிற்பது போல நீ கானலிடத்தே தனித்து நிற்க யான் அணி துறந்து பெயர்தலை ஆற்றேன் எனத் தோழி தலைவியிடத்துக் கூறினாள் (அகம். 370:12-16). மூதாய குறுகுறு ஓடி நீலமணியுடன் சேரும் பவழம் போலக் காயாவின் அணிமிகு வாடற் பூக்களில் ஒளிந்து மறைந்தது (அகம். 374:12-14). புனலில் விரும்பியாடிய அத்தியென்பானது அணியை நயந்து காவிரியாறு அவனை வௌவிக் கொணடு போய்க் கடலில ஒளித்தது (அகம். 376:10,11;396:13,14). அருஞ் சுரத்தில் குருதியாடிய எருவைச் சேவலின இனம் மேலே பறந்தெழுநது செவ்வானம் போல விசும்பினை அணி செயயும் (அகம. 381:9-13). 'தலைவர் பண்டு புனைந்த எனது கூநதல் முடியைக் காணுந் தோறும் முன்புளள என பழைய அணி நினைககப படுகினறதே' எனத் தலைவி பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குரைத்தாள் (அகம. 391:6-8). மலைபபக்கம் வெண்கடப்ப மரத்தைத் தனக்கு அணியாகக் கொண்டது (குறு. 22:3). மாக்குரல் நொச்சியின அணிமிகு மென்கொம்பு மலர்களை உதிர்த்தது (குறு. 138:3-5). தலைவன் நெஞ்சம் தலைவியின கரிய பலவாகிய கூந்தலின் இயறகை அணியைக் கண்டு, கள்ளுணடு அறிவிழந்து களித்ததன் மேலும் கள்ளை உணடாற்போல ஒருமுறை விரும்பியதன் பின்னும் விரும்பியது (குறு. 165). தலைவியின் அணி முலை ஆகத்தை உள்ளிச் செல்லின் இனனா கானமும் இனியவாகும் எனத் தலைவன் தன்னெஞ்சிற் குக் கூறினான் (குறு. 274:6-8). குரவம், புன்கமரத் தோடு பொழில் அணிகொண்டு கிளைகள் கானடறகு இனியவாயின (குறு. 341:1-3). புலியேறறை அண்ணல யானையின அணிமுகததே பாய்ந்து தாக்கியது (குறு. 343:2,3). தடந்தாள் நாரை அடும்பின் அவிழந்த அணி மலரைச் சிதைத்தது (குறு. 349:1,2). பொயகை ஆம்பலின் அணி நிறத்தை யுடைய கொழுமுகையை வண்டுகள் வாய் திறக்கும் (குறு. 370:1,2). தும்பி அணிச் சிறகுகளை யுடையது (குறு. 392:1). தலைவனது நெடுங் குன்றத்தினின்றும் இழிதரும் அருவி கானிடத்தே தங்கியோடும் அணியை நோக்கித் தலைவியின் ஏந்தெழில் மழைக்கண் கலுழ்ந்தது (நற். 17:1-5). காடெங்கும் அணியமைநத மலர்கள் மணம் வீசின (நற். 48:5). தலைவன் தலைவிக்கு நெய்தல் தழையை அணிபெற உடுத்தினான (நற். 96:7,8) தலைவி, கானலிடத்துத் தன ஆயத்தோடு காலையிற் சென்று கொய்து கொணர்ந்த நெய்தல் தழையை அணிபெற உடுத்தினாள் (நற. 123:5-7). அணி நுதற் குறுமகள் (நற். 147:1). குறமகள் அணி யுடைய சாயலள் (நற். 184:8). மணிக்கழியில் நாளை முண்டக மலரைக் கொய்யேனாயின், அணி யாகிய கவின் உளதாவது அரிதாகும் என

இற்செறிப்புற்ற தலைவி வருந்தினாள் (நற். 191:8-10). மணிகெழு நெடுவரை அணிபெறுமாறு அசோகு உயர்ந்திருந்தது (நற். 244:9,10). அணிமலர் முண்டகத்தை மகளிர் கூந்தலிற் சூடினர் (நற். 245:2,3). முல்லையின் தேங்கமழும் பசுமலர்கள், தண்புநல் அணிபெறுமாறு மலர்ந்தன (நற். 248:1-3). மயில், தன் அணி விளங்கும் கலாவத்தை வியப்புடையதாக விரித்தாடும் (நற். 264:3,4). தன் அணித்தகையல்லது தலைவனைப் பிணித்தல் தேற்றாதவள் தலைவி (நற். 270:5,6). கொன்றையின் கிளைகளில் அணியமைந்த கொடி போன்ற பூங்கொத்துக்கள் பெருமலை உயரிடங்களில் மேம்பட மலரும் (நற். 296:4,5). தலைவியின் மாமை கெடுமாறு அணி நலத்தைப் பசலை சிதைக்கும் (நற். 304:6,7). கடல் நீராடுகின்ற அகன்ற இடத்தில் பேரணியுடன் பொலிந்து தோன்றும் நின் திதலை அல்குல் நலனை' பாராட்டத் தலைவன் வருவான் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 307:3-5) தலைவி வேங்கையின் புதுமலர்களைக் கூந்தல் அணி பெறப் புனைந்தாள் (நற். 313:1,4). மலையிலுள்ள வேங்கையின் அணிநறுமலர் சுனையில் விழுந்தது (நற். 334:3,4). அணி நிறங்கொண்ட மணிபோன்ற ஐம்பால் தளர் நறுங்கதுப்பு (நற். 337:7,8). அணி வரை மருங்கில் தினை வளர்ந்தது (நற். 344:1,2). அணிகிளர் ஆகத்தில் சந்தனம் பூசப்பெற்றது (நற். 344:6). அணிமிகு கானம் (நற். 362:4). ஆம்பல் தழை அல்குல் மேல் அணி பெற உடுத்தப்பெற்றது (நற். 390:4,5). வேங்கைமலர் குன்றின்மீது வீழுந்து அணி செய்தது (நற். 396:3). வரியணி சிறகின் வண்டு (நற். 399:3). மாமரத்தில் அணிமயில் இருக்கும் (ஐங். 8:4). தலைவன் மலர்களைக் கொய்து வருதற்கிடனான நீர்நிலைகளால் அணி எய்திய ஊரையுடையவன் (ஐங். 23:2). தலைவன் தேனூர் அன்ன தலைவியின் நல்ல அணியை விரும்பிப் பின்பு பிரிந்து போனதால் அவளின் நெற்றி பலரும் அறியப் பசந்தது (ஐங். 55:2-4). மலர்கள் அணிசெய்யும் துறையமைந்த பொய்கை ஊரன் தலைவன் (ஐங். 81:3). புன்னையின் அணி மலர்கள் கடற்றுறை தோறும் கோலம் செய்யும் (ஐங். 117:2,3). தலைவியின் அணிமலர் போன்ற நெடுங்கண் தலைவனின் மலை அந்திப் பொழுதில் மறையுந் தோறும் கண்ணீரால் நிரம்பின (அறைமலர் நெடுங்கண் என்ற பாடமுமுண்டு) (ஐங். 208:2-5). தலைவியின் இயல் அணி கெட்டொழியும்படி தலைவன் பிரிந்து சென்றான் (ஐங். 232:1,2). கொடிச்சி அணிமயில் போன்ற அசைநடை உடையவள் (ஐங். 258:2). கோங்கம் ஈன்ற அணிமிகு அரும்புகள் இளவேனிற் பருவத்தில் மலரும் (ஐங். 343:2,3). கானம், குரா மரங்கள் மலர்ந்தமையானும் மராமரங்கள் மலர்ந்தமையானும் அணிகொண்டது (ஐங். 357:1,2). அணிமிக்க இழைகளை அணிந்த தலைவியை எண்ணிக்கொண்டு வந்ததால் பாலைநில வழி தலைவனுக்கு மிகவும் சுருங்கியதாகக் காணப்பட்டது (ஐங். 359:4,5). புறவு பூவணி கொண்டுள்ளது (ஐங். 412:3). புறவணி நாடன் (ஐங். 424:1). அணிநிற இரும்பொறை மேல் மயில் உள்ளது (ஐங். 431:2,3). பொன் போன்ற நிறமுடைய அணிமலர்களைக் கொண்ட கொன்றையும் பிடவமும் உடையது தலைவர் சென்ற நெறி (ஐங். 435:1-3). மலரணிப் புறவு (ஐங். 485:4). நீரற்ற சுனையில் உள்ள இலையொடு வாடிய அணிமலர் பிரிந்து செல்லும் தலைவன் போக்கைத் தடுக்கும் (கலி. 3:8,9). மரத்திலுள்ள அணி நீங்க வாடிய அந்தளிர் தலைவன் போக்கைத் தடுக்கும் (கலி. 3:16,17). காமநோய் அடுகையினாலே தலைவியின் அணி கெட்டது (கலி. 17:9). குளனுக்கு அணி தருவது தாமரை (கலி. 22:15). தலைவியின் அணிநுதல் பிரிவில் வேறாகியது (கலி. 26:17). கலம்பூத்த அணியவர் (கலி. 27:11). திருமகள் அணி அகலத்து ஆரம் அணிந்திருந்தாள் (கலி. 28:5). கிளைகள் தோறும் அணிகொள்ள அரும்புகள் விரிந்தன (கலி. 30:1,2). அணிகிளர் நெடுந்திண்டேர் (கலி. 30:19). பொழில்கள் தெளிந்த நீராலும் தூய மதியுடைய நாளாலும் அணிபெற்றன (கலி. 32:6). உலகத்து அணியைத் தான் காண வேண்டி யாறு கண்களை விழித்துப் பார்த்தல் போல் பக்கத்திலுள்ள குளங்கள் நீர்நிறைந்து பூக்களால் அழகு பெற்றன (கலி. 33:1,2). முருக்கின் இதழ்கள் அணி கயத்தில் காம்பினின்று கழன்று வீழ்ந்தன (கலி. 33:4). தலைவர் குறித்த நாள் தோன்றித் தலைவியின் அணியைச் சிதைத்தது உண்டென்று கருதித் தோழி நெட்டுயிர்த்தாள் (கலி. 36:23-26). 'தலைவன் வரின் அருள் வல்லான் ஆக்கம் போல் தலைவி அணி பெறுவாள்; அங்ஙனம் பெற்ற அணியைத் தெருளாமல் காப்பதோர் இறனைக் கூறுக' என்று தலைவனைத் தோழி வேண்டினாள் (கலி. 38:16). ஆய்நுதல் அணிகூந்தல் உடையவள் தலைவி (கலி. 40:8). அணிபெற்ற மைபடு சென்னிப் பயமலை நாடன் (கலி. 43:5,6). இலங்குதாழ் அருவியோடு அணிகொண்ட மலை (கலி. 46:25). நீர் இழியும் அணிமலை (கலி. 48:1). புதுவதாக மலர்ந்த வேங்கையைப்புலியெனக் கருதி யானை அதன் அணிநலத்தைச் சிதைத்தது (கலி. 49:1-6). பள்ளங்களில் நீர் நிறைந்து அணிபெற அருவி யார்த்து இழியும் (கலி. 53:6). ஊர் அலர் தூற்றலின் ஒளி கெட்டு நறுநுதல் பீர்க்கம்பூவின் அணிகொண்டது (கலி. 53:14,15). தலைவி அணிமயிற் பெடைபோன்ற

சாயலினள் (கலி. 56:15). சுணங்கணி வனமுலை (கலி. 60:1). அணிமுகம் மதியை ஒத்தது (கலி. 64:1). கங்குலில் அந்துகில் போர்வையை அணிபெற உடுத்தல் (கலி. 65:3,4). அன்னம் தன் அணிநடைப் பெடையொடு பொய்கையில் திரியும் (கலி. 69:6,7). பொய்கையில ஆடிய அணிமிகு அன்னச் சேவலைத் தாமரையிலை மறைத்தது (கலி. 70:1,2). அகன்துறை அணிபெறப் பதலொடு பகன்றைபபூ, தாமரை முகை ஆகியவை மலர்நதன (கலி. 73:1-3). தலைவன் தலைவிக்கு அணிவரி (தொய்யில) எழுதினான் (கலி. 76:2). அரங்கின மேல ஆடுவாளது அணி நுதலில தாழும்படி வயந்தகம் செருகப் பட்டது (கலி. 79:4, 5). ஆலமர் செல்வனின் அணிசால் பெருவிறல் (முருகன்) (கலி. 81:9). ஆலமர் செல்வன் அணிசால மகன் விழா (கலி. 83.14). புதலவனின் மெலவிரற் சீறடி அணிக்கு அணியாகத் திகழ்ந்தது (கலி. 85 17-19). வையைக் கரையைச் சோலை அணி செயதது (கலி. 92:12, 13). கெடாத படிவததால் குதிரைமுகம், மக்களுடல் ஆகிய இரண்டு அணிக்குப் பொருந்திய சூரைக் கொன்றவன் முருகன் (கலி. 93:25, 26). ஆயசுதை மாடத்து அணி நிலாமுற்றம் (கலி. 96:19). யானை அணியுண்டாகத் தலைவன ஊர்ந்தான (கலி. 97:25). கோவலர் காயாவும் பிற மலர்களும் அணிகொள மலைந்த கண்ணியினர் (கலி. 101:1,2). அணி மாலைக் கேளவன் (கலி. 101:34). அணி வரம் பறுத்த வெணகாற காரி (கலி. 103:12). பெரும் பெயர்க் கணிசசியோனின் நீலமணி போலும திருமிடற்றின அணிபோல இருமபிணர் எருத்தினையும ஏநதிய இமிலையும் உடையது குரால் நிறமுடைய ஏறு (கலி. 105:13,14). 'தோழீ, தயிர் கடையப் பரநத புள்ளிகளின் மேல் கொலலேற்றைத தழுவினவனது குருதி மயககமுறும்படி தழுவுதல் எம தோளிற்கு அணியோ' எனத் தலைவி கேட்டாள (கலி. 106:37-39). கதிரவன மலையைச் சேர்தலின இருள் படர அதனைப் பொறாமல் தன் நிலவினால் ஓட்டிப் புறங்காண்பாரைப் போல அணிமதி தோன்றியது (கலி 119:1-4). தணகதிர் மதியதது அணிநிலா எங்கும் நிறைந்தது (கலி. 121.3). பாலன்ன மேனியன் (பலதேவன) அணி பெற உடுத்த நீல ஆடை (கலி. 124:2,3). பீரலர் அணிகொணட பிறைநுதல் (கலி. 124:8). அணிச் சிறை இனக்குருகு (கலி. 126:6). அன்று தான் எழுதிய கருமபினது அணி கெடத் தலைவன் தலைவியின் மென்தோளை மெலிவித்தான் (கலி. 131:29,30). அடும்பிவர் அணி எக்கர் (கலி. 132:16). கொல்யானை அணிநுதல் (கலி. 134:3). வேல் தைத்துச் செறிந்த நெடுங்கதவமைத்து அதனால் அடைத்து அணிகொண்ட எயில் (கலி. 135:3,4). ஆய்மலர்ப் புன்னைக்கீழ்த் தலைவி அணிநலம் தோற்றாள் (கலி 135:9). அணிகிளர் நெடுவரை (கலி. 135:17). மணல் எக்கரில் தலைவன் அளி செய்தபோது ஆக்கம் பெருகிய தலைவி அவன் அளி செய்யாதகாலை அணி வாடித் துயருழந்தாள் (கலி. 136:5-8). அணிப்பூளை (கலி. 138:9). அணியலங்கு ஆவிரைப்பூ (கலி. 139:8). ஒருத்தி அணி நலம் பாடி வருதறகு அணிநிலைப பனையின் மடலூர்ந்து வருவேன் என்று தலைவன் கூறினான் (கலி. 141:5,6). ஊரில் இருள் நீங்க அணிநிலா திகழ்ந்தது (கலி. 143:1). தலைவியினுடைய அணி நீங்கும்படி அவள் மேனியைப பசலை மறைத்தது (கலி. 143:5,6). பிறங்குநீரைச் சடையிலே மறைத்தவனை ஒத்த பொருள் தேடச் சென்றவர் பிரிவால் தலைவி தன் அணியுடைய நலங்கெட்டுப் பசந்து வருந்தக் கைவிட மாட்டார் (கலி. 150:8-10). ஏற்றூர்தியானை ஒத்த விழுப்பொருட்கு அகன்றவர் ஒள்ளியதாகிய அணியினையுடைய தலைவி உருவையிழந்து வருந்த அப்பொருளை நினைக்கமாட்டார் (கலி. 150: 11-14). ஆதிரையான் (சிவன) அணிபெறச் சண்பகம் பருவம் பொய்யாது மலர்ந்தது (கலி. 150: 20-22). அங்கண் வானத்து அணிநிலாத் திகழ்தரும் திங்களும் தெறுகதிர்க் கனலியும் திருமாலே (பரி. 1: 41, 42). அணிகொண்ட முத்துமாலைகளால் இயற்றப்பட்ட நித்திலமதாணியை உடையவர் திருமால் (பரி. 2:29,30). அணிநிழல் விளங்கும் ஒளியாகிய பதினாறு கலைகளையுமுடைய திங்களைத் தேவர் உணவாகக் கொள்வர் (பரி. 3:51,52). திருமால் அணி மணிகளால் இயற்றிய பசிய அணிகலன்களை உடைய தேவர்களுக்குத் தலைவன் (பரி. 3:53). இந்திரன் செவ்வேளுக்குத் தன் மெய்யினின்றும் ஒரு கூற்றைப் பிரித்துப் புள்ளிகளையுடைய தோகை கொண்ட அணி மயிலைக் கொடுத்தான (பரி. 5:59,60). வையைப் புனல் உயிர்கட்கு நன்மை மிகுமாறும் மென்புலங்கள் அணி பெறுமாறும் வன் புலங்கள் விளையுமாறும் வந்தது (பரி. 7:8-10). வையை நீராடிய தலைவியது மேனியைத் தலைவன் பாராட்டினான் (பரி. 7:73). மகளிரது மார்பினை அணி செய்வது கொங்கை (பரி. 9:46). மகளிர் சிலர் வையை யாற்றின் நீரணியைக் கணடு நின்றனர் (பரி. 10:27). அணிநிலை மாடம் (பரி. 10:41). வையைப் புனலாட்டின்கண் மகரவலையம் என்னும் தலைக்கோலத்தால் அணி திகழும் நெற்றியுடைய மகளிர் சிலர் நீரிலே விளையாடி இளைத்தனர் (பரி. 10:71,77). வையையில் வெள்ளம் வநதது கேட்ட மதுரை மகளிருள் சிலர் புனலாடச் செல்லும் பொருட்டுக் கொக்குவாய் அணிசெய்த வடங்களைப்

பூண்டனர் (பரி. 12:10,18). நீலமலைக்கண் எழுந்த இளஞாயிற்றினுடைய அணியைப்போலும் வளப் பமைந்த பூந்துகிலையும் புனைமுடியையும உடை யவர் திருமால் (பரி. 13:1,2). மேகம், காயாம்பூ, கடல், இருள், நீலமணி என்னும் ஐந்தையும் ஒக்கும் அணிகிளர் திருமேனியை உடையவர் திருமால் (பரி. 13:42,43). திருமால் தேன் துளிக்கும் அணிபசும் துளவமாலையினை உடையவர்; கருடப் பறவை எழுதிய அணி பொலங் கொடியை உடையவர் (பரி. 15:54,56). வையையின் நீர்ப்பெருக்கால் அயலி லுள்ள வயல்கள் விடுமலர் சுமத்தலானும் பூவும் நீரும் நிறைதலானும், நாடக அரங்கின் அணி நலத்தை ஒக்கும் (பரி. 16:11-13). மகளிரும் மைந் தரும் சுனையிற் பாய்ந்து நீராடலால் வண்டுகள் அஞ்சி அச்சுனைமலர் தாதினை ஊதா; பரங்குன் றத்தின் அணி அத்தகையதாய் இருந்தது (பரி. 17: 35-39). இறைவனே, நின் புகழினை ஏத்தி நினது அணி நெடுங்குன்றத்தைப் பாடுகின்றோம் என்று நல்லழிசியார் முருகனைப் பாடுவார் (பரி. 17:49-51). ஐந்து வளமும் பொலிந்து அணிதிகழ்வது பரங் குன்று (பரி. 18:15). அச்சிரக் காலத்து அணிமழை (மேகம்) ஆர்த்து வானவில்லை வளைத்தது (பரி. 18: 38,39). பரங்குன்றத்தின்கண் இயன்ற அணியுடை யது வள்ளியது வதுவை (பரி. 19:5-7). 'குருகு பெயர்க் குன்றத்தை உடைத்தவனே, நீ இப்பரங்குன்றத்தின் மருங்கிலே கடம்பின்கண் அமர்ந்த அணிநிலையை யாம் வாழ்த்தினேம்' என முருகனை நப்பண்ண னார் பாடினார் (பரி. 19:103-105). அணிநீர்ச் சூழி (பரி. 21:14). காரணி கூந்தல் (பரி. 22:29). ஏரணி இலங்கெயிற்று இன்னகையவர் (பரி. 22:31). சீரணி வையைக்கு மகளிர் அணிசெய்தாரா, மகளிர்க்கு வையை அணி செய்ததா, எனத் தேர்தற்கு அரிது (பரி. 22:31-34). அணிமலர் வேங்கை (பரி. தி. 1:7).

**2. அணிகலன்.** மணிக்கோவையாகிய அணியி னால் - அணிகலனால் - பொலிந்த ஏந்து கோடு அமைந்த அல்குலையுடையவள் விறலி (புறம். 89: 1, 2). அணியாகிய பூண் அணிந்த யானையை யுடையவன் அதியமான் (புறம். 101:4, 5). வீரக் கழலாகிய அணிப்பொலிந்த சேவடியாலே விரைந்து வந்து போரைத் தடுக்க வல்லவன் மலையன் (புறம். 125:12-14). காதலரொடு கூடிய மகளிர் பூவாகிய அணியை அணிதல் (புறம். 194:3). இராமன் மனைவி யான சீதையை வலித்தகை யரக்கன் வவ்விச் சென்றபோது, அவளால் நிலத்திலே எறியப்பட்டு விழுந்த கதிர்த்த அணிகளைக் கண்ட குரங்குக் கூட்டம் அவற்றை அணியும் முறைமையன்றி அணிந்து மகிழ்ந்தது (புறம். 378:18-21). ஆணும் பெண்ணுமாகிய இருவகை உருவும் ஒருருவிற் பெற்று அவ்விருவகை உருவிற்கேற்பத் தோடும் குழையுமாகிய இருவகை அணிபொலிந்த அழகை யுடைய சூலம் பிடித்த சுடர்ப்படைக் காலக் கடவுளுக்கு வென்றி மிக்கு உயர்வதாக (பதி. க. வா. 7-12). உடைக்கு மேலேயணியும் அணியால் துகில் பொலிவு பெறும்படி தாழ்வின்றாகப் பாண்டியன் உடுத்திருந்தான் (மது. 721, 722). பொன்னாற் செய்யப்பட்ட அணிகளுள் பொலிவு பெற்ற வீரக் கழல் அடிபெயர்த்திடுந்தோறும் ஏற்றிழிவு செய்யத் தலைவன் சென்றான் (குறி. 126, 127). புன்றுன்ற பொன்னணி அணிந்திருந்தான் (அகம். 44:9). வது வைக்குரிய ஈரணிப் பொலிந்த பரத்தையொடு தலைவன் காவிரிப் புதுப்புனலில் தலைப்புணை தழுவியாடினான் (அகம். 166:12-15). தலைவன் இளந் துணை மகளிரொடு ஈரணியணிந்து புதுப்புனலில் தலைப்புணை தழுவி நீர்பெயர்ந் தாடினான் (அகம்.266:2-6). வெண்கடுகை யப்பிய நெய் தேய்த்து ஆடும் நீராட்டினால் ஈரிய அணியையுடையவள் தலைவி (நற்.40:7-9). தம்மை நட்புக் கொண்டவர் செல்வமடையவும் அடைக்கலமாகப் புகுந்த தலைவி யின் தோள்கள் அணிகளை எய்தவும் தலைவன் பொருள்வயிற் பிரிந்தான் (நற். 286:7-9). மலர் களையுடைய வேங்கை மரத்தின்மேல் வீற்றிருந்த தோகையை யுடைய மயில், அணி யணிந்த இள மகள் போன்று தோன்றும் (ஐங். 294:1, 2). ஐம் பாலில் பல ஒளிகளையுடைய அணிகளுக்கிடையே பொன்னாற் செய்த கண்ணி சூட்டப் பெற்று (கலி. 32:3,4). பொன்னணி யானை (கலி. 42:[illegible]). ஒளிபூத்த நுதலாரோடு கூடுதலான் உண்[illegible] வடு அவருக்கும் தலைவனுக்கும் ஓரணியாய் பொலிவு பெற்றது (கலி. 66:19). 'பரத்தையரிடத்து அணிந்த அணியொடு வந்து ஈங்கு எம்புதல்வனை எடுக்காதே' எனத் தலைவனிடம் தலைவி உரைத் தாள் (கலி. 79:7). 'நீ நெடுங்கடையில் நில்லாதே; நின் றால் எம் புதல்வன் நின் அணியைச் சிதைப்பான் ஆதலின் அவனைத் தந்து பரத்தையர்பால் செல்க' எனத் தலைவி தலைவனிடம் ஊடிக் கூறினாள் (கலி. 79:21-23). நான்மாடக் கூடல் மகளிரும் மைந்தரும் சோலையில் கூடி ஆடுதற்கு விருப்பத்தோடே அணி அணிவர் (கலி. 92:65-67). 'நெறிந்த கொத்தாகிய மயிர்க்கு நாட்காலத்து அணியும் அணிக்குப் பொருந்த நீ முதல் நாட்பூவைப் பலிவிட்ட கடவு ளரைக் கண்டாயோ' எனத் தலைவி தலைவனை வினவினாள் (கலி. 93:22-24). தலைவன் சேக்கையில் அளிசெய்து கூடிப்பின் நீங்குதலின் தலைவி தான் அணிந்த அணிகளைத் துறந்தாள் (கலி. 146:4,5). ''இணை பிரி அணி துணி பிணி'' (பரி. 1:14).

"கடல்தரு மணியொடு" (பரி. 1:17). "விரறாரணி மணி துணிமணி" (பரி. 1:20). வானகத்து உள்ள வளைந்த இந்திர வில்லை ஒத்த பூணப்படும் அணி களையுடையவன் திருமால் (பரி. 2:28,29). வையை யில் வெள்ளம் வந்தபோது மகளிர் புகை முதலியன ஏந்தித் தம காதலரை அணியொடு கூட்டினர் (பரி. 6:11-13). வையையில் வெள்ளம் வந்தபோது மகளிர் முலையிடத்தும மைந்தர் மார்பிடத்தும் பொருந்திய அணிகள் தமமுள் மயங்கின (பரி. 6:20). போர்க்கு அணியும் அணியினையுடைய களிற்றினம சிறந்து நின்றது (பரி. 6:25). வையை நீராட்டிற்காக அணிகள பூணட பிடிகள் வரிசை வரிசையாகச் சென்றன (பரி. 6:26). வையையில வெள்ளம் வந்தபோது அழ காக அணிந்த அணிகளையுடைய மைந்தரும மகளி ரும் அவற்றை நீக்கிப் புனலாடுதற்கமைந்த அணிக ளுடன் யானை மேலும் குதிரை மேலும் சென்றனர் (பரி. 6:27-33). கூர் எயிற்று மகளிர் தம் குவிமுலைப் பூணோடு அவர்தம் கணவருடைய மார்பணிகள் மயங்கின (பரி. 8.118, 119). வையைப் புனலாடிய மகளிர் மாலைப்பொழுதில மதுரைக்குத் திரும்பக் கருதி நாளணிகளை நீக்கிப் பூமாலை வேய்ந்து தோளணி முதலானவற்றை அணிந்தனர் (பரி. 10: 112-115). வையை நீராட்டுக்குச் சென்ற மகளிர் நீராடுதற்கேற்ற அணிகலன்களோடு மாலைகளை யும மார்பிலணிந்திருந்தனர் (பரி. 11:62,63). பொன் இதழ் அணிந்த மணிமடல பேரணியை (கிமபுரியை) உடைய மருப்பமைந்த களிறாக (வராகமாக) வந்தவர் திருமால (பரி. 13:35-37). மெய அழகு பூததற்கு ஏதுவாகிய விழைதகு பொனனணியை உடை யவன் பாணன (பரி. 18:19-21). இயலணி அணிந்த மககட் கூட்டம வையைக் கரையில நினறது (பரி. 20:31). அயலார் அணிந்த அணிநோக்கி வையைக் கரையில் சிலர் செலவர் (பரி. 20:32). ஆடை அசைய அசையும் கொம்பு போல மார்பின் முததாரம அசையத் தன் கேள்வன் முழக்கும் துடியின தாளத் திறகேறப ஒருத்தி ஆடினாள் (பரி. 21:60-63). வையைப புனலாடுவோர் நறவு, அணி, பூந்துகில முதலிய பல பொருள்களை ஏந்திச சென்றனர் (பரி. 22:19,20). அணியணிந்த கோவேறு கழுதை யில சிலர் ஏறிசசென்றனர் (பரி. 22.24,25). ஆதி சேடன் தன் தலையினமேல அணிபோல் உலகைத தாங்கினார் (பரி. தி. 1:74,75).

3. ஒப்பனை (கோலம்). ஆடுகோட்பாட்டுச் சேரலா தன் போநதைப் பொழிலின்கண் அணியால் - ஒப் பனையால் - பொலிவுபெற்றுத தங்கினான (பதி. 51: 9). தலைவனது மார்பினில வதுவைக் காலத்து அணியையுடைய புதிய பரததையரைப் புணர்க்கும் பொருட்டுப் பாணன் பரிவொடு வந்தான் (அகம். 56:8-10). தலைவன் பின்முறை வதுவை அயர்தல் வேண்டிப் புதுவதின் இயன்ற அணியனாய்த் தலை வியின் தெருவைக் கடந்து சென்றான (அகம். 66:7-9). இன்னியங்கள் ஒலிக்கக் களனை இயற்றி அங்கு ஆடுதற்கேற்ற அணிசெய்த அகன்பெரும் பந்தரின் கீழ் வேலன் வெறியாடுவான் (அகம். 98:14-19). வாலிழைமகளிர் மாலைக் காலத்தில் விழவுக்குரிய அணிகளைக் கூட்டுவர் (குறு. 386:3, 4). 'மைதவழ வெற்பன மணஅணி காணாமல் கையால் புதைத் தலைப்பெறும் கண்களும் கணகளோ' என்று தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 39:41,42). கூரிய எயிற் றினையுடைய இளைய மகளிர்க்கு நடுவே வகுப் புடைய அணியினால் தலைவி பொலிந்து நின்றாள் (கலி. 59:12). தலைவனுடைய அணி நேறறையினும இன்று நன்றாயிருந்தது என்று தலைவி அவனிடம் ஊடியுரைத்தாள் (கலி. 91:4, 5). தலைவன் வதுவை விழவணியை வைகலும் காட்டினான் (கலி. 93.3). வையைக்கு நீராடச் சென்ற மகளிர் அந் நீராட்டிற் குரிய அணிகளையுடைய மார்பில அழகிய அணி யையும் அதற்கேற்ற நேரிழைகளையும கொண்டி ருந்தனர் (பரி. 11: 62, 63).

4. அணிமை. குட்டியை யீன்ற அணி - அணிமை - உடைய பிணவு பசித்ததாகக் கங்குலில் மறப்புலி களிற்றினைக் கொன்று முழங்கும (அகம். 112:4-6). பெருமலைச் சிலமபில் களிறு ஈன்றணி கொண்ட பிடியானையைத் தழுவிக்கொண்டு கன்று உறங்கு கின்ற இடத்தைக் காத்திருக்கும் (அகம. 168:8-10). ஈன்றணிமையுடைய காரான் கன்றை விட்டகலா திருந்தது (குறு. 181:3,4). தலைவன் மார்பை உரிய தாகப் பெற்றமுறுவில் நட்பு எழில் மிகவுடையது; அஃது அணிக்காலததே (அணமையில) உணடாகும் எனத் தலைவிக்குத் தோழி கூறினாள் (குறு. 247:1, 7). வையைப் புனலாட்டிற்குச் சென்ற யானைகளுள் ஒரு களிறு தனக்குப் பாங்கான பிடியைக் கணடு காமத்தால் மயங்கி அழகிய நிலையமைந்த மாடத தின் அணி நின்றது (பரி. 10:41-43).

5. வரிசை. ஒணபூங்கலிங்கத்தின் இழைகளின் அணி- வரிசை - அறியவியலாது (புறம். 383:10, 11). பகை மறவர் நின்ற அணியிற் புகுந்து அதனைக் குலைத் தல் நல்லியக்கோடனின் மறத்திறன்களுள் ஒன்று (சிறு. 211). வையைப் புனலைப் போர்க்களமாகக் கொண்டு மதுரை மக்கள் அணி அணியாகிய தூசிப் படையினர் போல் சென்றனர் (பரி. 6:29-31). வள்ளியின் தோழியர் தேரின் அணி வருதல் போல வடிக்கயிற்றை எடுத்துக்கொண்டு வந்தனர் (பரி. 9:52). வையை நீராட்டிற்குச் சென்ற மகளிருள்

சிலர் ஆடவரோடு செய்யும் புனலாட்டுப் போர்க்குப் பேரணி வகுத்து நின்றனர் (பரி. 10:28).

6. திரட்சி. கோடைவெம்மையால குளிர்ச்சியை விரும்பி அணி - திரட்சி - கொள்ளும வருந்திய யானைக் கூட்டம் தங்கிய மலை வெமபியது (கலி. 20:3-5). அணிமலை நன்னாட (கலி. 46:9). நல்லவர் அணிகொண்டு நின்றனர் (கலி. 101:12). ஆயர் பரண்களின் மேலே முறைமையாலே அணியாக (திரளாக) மகளிரை நிறுத்தினர் (கலி. 104:26-28). கோதையர் நிரை நிரையாக அணிகொணடு நின்றனர் (கலி. 105:26). வையை நீராடச் செனறோர் அணியாக நின்றனர் (பரி. 11:50). வையைத் துறை முன் நிறைந்த அணியாக நின்றவர் பேசும் மொழி ஒன்றை யொன்று ஒவ்வாது பலபலவாக ஒரு காலத்து எழுந்தது (பரி. 12:36,37). அணிகலன்களை அணிந்த மக்கள் அணியாக வையைக் கரையில நின்றனர் (பரி. 20:31).

7. ஆடை. பழையர் மகளிர் தழையாற் செயயப் பெற்ற அணியினால் - ஆடையினால் - பொலிந்த கோடேந்து அல்குலையுடையவர் (அகம். 201:6,7). தழையாற் செய்யப்பெறும் அணிக்கு நொச்சியிலையையும் கூட்டுவர் (அகம். 275:16, 17). பரதவரின் தங்கையர் தழையாற புனைந்த அணியை உடுத்திய அல்குலினர் (அகம. 320: 2,3) தழையணியாற பொலிவு பெற்ற ஆயம் (குறு. 295: 2). வையை யாற்றினில் அமபாவாடலை யுடைய கன்னியர் வேதியர் வளர்கும் தீயில் தம் ஈர அணியைப் புலர்த்தினர் (பரி. 11:81-86).

8. ஒப்புமை. விண்ணின்கண் நின்று அளித்தல தொழிலைக் கொண்ட நிறைமதியது குளிர்ச்சியை அணி - ஒப்புமை - கொள்ளுமாறு தணணளியைக் கொணடவர் திருமால் (பரி. 13: 5,6).

9. சூழ்தல். கயன் அணி-சூழ்தல்-அமைந்த பொதும்பரில் வண்டுகள் மலரை ஊதின (கலி. 36:6).

10. பக்கரை (சேணம). 'குதிரையுடலின் அணி - பக்கரை-போல் நின் மெயக்கட் கவ்வியது குதிரையோ' எனத் தலைவனைத் தலைவி வினாவினாள் (கலி. 96: 28,29).

**அணில்** - ஒருவகை விலங்கு. இலவங்காய் முதிர்ந்து விரிந்து பஞ்சு தோன்றினாற் போன்ற வரியை முதுகிலே உடையது அணில் (பெரு. 83-85). அணிலின் பற்களைப் போல் முள்ளிச் செடியின் முட்கள் இருக்கும் (குறு. 49:1). அணிலின வால் போன்றது ஊகம் புல்லின பூ (புறம. 307:4,5).

**அணில் வரிக் கொடுங்காய்** - வெளளரிக்காய். அணிலினது முதுகுக்கோடு போலும் கோட்டினையுடைய வளைநத வெள்ளரிக்காயின் விதை வெண்மையான நெய்க்கு உவமை (புறம. 246:4,5).

**அணிலாடு முன்றில்** - அணில் விளையாடும் முற்றம். தலைவன் உடனுறையும் காலததுத் தலைவி விழாவெடுக்கும் ஊாபோலப் பொலிவோடிருந்தாள்; அவன் பிரிந்த காலத்தில குடியிருந்த மக்கள் விட்டுச் சென்றமையால அணில விளையாடும பொலிவற்ற தனித்த இல்லம் போலப் பொலிவிழநது வருநதினாள் (குறு. 41).

**அணிலாடு முன்றிலார்** - புலவர். இவர் இயறபெயர் தெரியவிலலை. குறுந்தொகை 41-ஆம பாடல மட்டுமே பாடியுளளாா. அபபாடலில, மக்கள விட்டு நீங்கிய பொலிவறற இலலததின முறறததை 'அணிலாடு முன்றில' எனச சிறபபிததததனால அணிலாடு முனறிலாா எனப பெயர் பெறறார். அணிலாடுமுனறில காணக. [இவரைப பெணபாற புலவர் எனவும் கொளவர்: த. வ. க பக. 28].

**அணை** - 1. படுக்கை. எருமைக கொமபு போனற பயற்றின கோதினா லாய வளைநத அணையில-படுக்கையில-கனறுடை மரையாத துஞசும் (புறம. 297:1-4). கடல் பிறகோட்டிய செஙகுட்டுவன மகளிர் விரிமென கூந்தலாகிய மெலலிய அணையில வதிநதான (பதி .50.18-20). திருமால பாம்பு அணையாகிய படுக்கையில கிடநதோன் (பெரு 373). பாணடில என்னும் வட்டக்கட்டிலில் இணைதல அமைநத அணைமீது அனனத் தூவியைப் பரபபி அணைகளை இடடுத் தூய வெள்ளாடையை மேலே விரித்தனர் (நெடு. 132-135). அகனற வயலிடத்துள்ள நெற்கதிர், வரப்பை அணையாகக் கொணடு அசையும் (அகம. 13 19,20). விலலும் அம்பும கையிற் கொணடு, தனனால எயயப்பெற்ற அமபுடன ஓடிய யானை சென்ற வழிகேட்டு நினறவனைப் பார்த்த மகளிா பலருள்ளும யான ஒருததி மட்டும இரவின்கண அணையிற கிடநது கணணீா சிநதி மெலிகின்றேன்; இதறகு யாது காரணம் எனக கேட்டுத் தலைவி தோழிககு அறததொடு நினறாள் (அகம. 82:11-18). பிரிவிடை ஆற்றாத தலைவீ குறற மகன்ற படுக்கையில் அழகிய மெலலிய அனனததின சிறகா லாய அணையினைச் சேர்ந்து மயங்கி வலிமையழிந்து இருந்தனள் (அகம. 289.12-14). தலைவியின் கூந்தலாகிய மெலலிய அணையில் துயினறு பகற்பொழுதைக் கழிததுச செலலுமாறு தோழி தலைவனிடம் கூறிப் பகற்குறி ஒருப்படல் (அகம். 308·13-15). பிரிவினால் வருந்தும தலைவியின் கணணீர் காதிலணிந்த பொற்குழையில் தெறித்து விழ, முன்கையைக் கவுளில் பொருநத வைதது

அவள் அணைமீது கிடந்தாள் (அகம 351:11-14). 'பகறபொழுது கழியவே குவியும் மலர்போல வாடி அணை அணைந்து துஉபம கொள்ளறக' எனத தோழி தலைவியைத தேற்றினாள (அகம. 363 4,5). பிரிவில தலைவி முழநதாள்களைக கையாற் பூட்டிய தனிநிலை இருக்கையோடு நள்ளிரவில அணை யொடு பொருநதிக் கிடநது வெய்துயிர்ததாள (அகம. 373 8-12). தொணடி மகளிர் பசிய அவலை இடித்த வயிரம் பொருநதிய உலககையை நெல்வயலின வரப்பாகிய அணையிற் கிடததி விளையாடினர் (குறு. 238 1-3). 'நின நிலையுணரின நெகிழ்ந்த நூலாற் கட்டிய மலர் மாலைகள் சேர்ந்த அணை யிடததே இருநது வருநதி நின பெருங்கவின நீங்கு மாறு தலைவர் தஙகார்; விரைந்து வருவர்' எனத தலைவியைத் தோழி ஆற்றினாள (குறு. 253 2-4). வினைமுற்றி மீணட தலைவன தலைவியின் நறு மென கூநதலாகிய மெலலிய அணையிற் கூடி மகிழ்ந் தான் (குறு 270:8). நறுமணமிகக, விரிப்பு விரிதத மெலலிய அணைமீது செவிலியுடன புதலவன் துயில, இரவில தாயும இமை பொருந்தி உறங்கி னாள் (நற. 40·5-9). மிகப பலவாகிய மெலலிய கூநதலாகிய அணை (நற. 366.7). தலைவன பிரிவுக குரிய செயலின நினைவாலே தலைவியை முயங்கு தலைத் தவிர்நது பரத்தல மாட்சிமைபபட்ட பல வாகிய அணையிலே கிடந்தான (கலி. 17.1,2). நலலவர் (பரததையரின) கதுப்பாகிய அணையில் துஞசி வந்தமையால் தலைவன மார்பு கமழ்நதது எனத் தலைவி புலநது கூறினாள் (கலி. 71:19,20). துணைபுணர் அனனததின் தூவியால் அமைநத மெலலிய அணை (கலி.72:2). வெற்றி கொணட சக்கரததினை யுடையோன (திருமால) கடலகதது அரவாகிய அணையில இருபபவன (கலி: 105:71,72).

2. தலையணை. பிரிவிடை வேறுபட்ட தலைவியின் தோள அழகிழநத அணை- தலையணை-போலப பொலிவிழநதன (அகம. 197:2). தலைவியை முயங் குங்கால அவள அணை போனறு மெனமையை உடையளாய இருககினறாள எனத தலைவன கூறல (குறு. 70:1,5). மூஙகில போனற அழகினையும அணைபோனற மென்மையினையும உடைய தோள (கலி 1 9,30.9) இனிய துயிலையுடைய அணையை யும அழகிய மூங்கிலையும ஒதத பெருமையினை யுடையது தலைவியின மெனறோள (கலி. 14.1). அணைததோள (கலி. 54:3). மெனமையால் நுண ணிய துகிலினையுடைய அணைபோனற தோள (கலி. 56:19,20). அணை மெனறோள (கலி. 66·9; 124:12,பரி 7:55;17.34). 'அணைத தோளாய' எனத தலைவியைத தலைவன விளிததல (கலி. 87:9). 'அணைமென்றோளாய்' என்பது தலைவன விளி (கலி. 91:6).

3. வரப்பு. உழவர் கோலகொண்டு புடைத்தற்கும் அஞசாது வாளை மீன அணை-வரப்பு-அடியில ஓடி அபபாற் போக இயலாது வரபபடியிற புரளும் (நற்.340:4-8).

**அத்தக்கள்வர் – ஆறலை கள்வர்.** அததக் கள்வர் - ஆறலை களவா - ஆக்களைத் தொழுவினின்றும கைககொணடு செலல ஆக்களுககுரிய மறவர் அவறறை மீட்கத தேடிப பினசெனறு போர் செயவா (அகம். 7 14-15). ஆறலைகளவா காணக.

**அத்தம் - 1. காடு.** நெடிய பாலை வழியிலே செல கினற புதியவருடைய நெஞ்சததை மறவர் வாழும் மலைக் குறும்பில் எழும் தண்ணுமை ஓசை நடுஙகச செய்யும்; இவவியலபு வாய்ந்த கவர்தத வழிகளை யுடையது அததம்-காடு- (அகம. 87:7-10). அததததில சிறிய கறையான்கள் பெருமுயறசி செயது அமைதத புறறில் இருக்கும புற்றாஞ சோற்றைத் தினறு வெறுத்த கரடிக் கூட்டம் இருப்பையின துளை பொருந்திய வெண்பூவைக் கவர்நது உணணும் (அகம 149:1-5). வேனிலாற் காயந்த அத்ததததே, மேகம பெய்யாமையால் அருவியற்ற சிறறூர்களில கார்ததிகை விளககுபபோல இலவம மலர்நது விளஙகும் (அகம. 185:8-13). பெண நாயின பசியைப் போககுதறகுப் பிணைமான அலற, ஆணமானின தொடையைச் சிதைத்த செந்நாயும் வெறுக்கும வெபபமுடையதும் பருநது உணவு எற்றுதறகு வானில் பறநது சமயம் பார்க்கும் நிலைமை உடை யதுமாகிய அத்த வழிகளில ஆறலை களவரால துன்புறுததப் பட்ட வம்பலர் மரத்தில ஏறிக் கொணடனா. (அகம. 285.1-7, 10-15). 'பாலை வழி யில செலலும தலைவரும் ஏவலரும இற்றியின் விழுது காறறில் அசைநது கலலைத் தூய்மை செயத இடததே நிழலிலே தஙகி இளைபபாறிச் செல்லு மாறு மழைபொழிநது அததமகவின பெறுக' எனத் தலைவி வேணடினாள் (அகம். 345:18-21).

2. வழி. ஆளறற அததததில-காட்டு வழியில-ஆண மான புலியால் இறநதுபடத தன் குட்டியினைத் தழுவிய பெணமான, பூளைச் செடி நிறைந்த பாழ் பட்ட இடத்தில வேளைப்பூவினை உணணும் (புறம். 23·18-22). அத்தம-பாலைவழி–வாழும் கோட்டான் களின் துடிபோலும ஓசை, உழிஞசில மரத்திலிருந்து பெடைப் பருந்தையழைக்கும சேவலின் குரலொடு ஒலிக்கினற நீணட வழியில, மூங்கில் நீரின்மையால உலறிக் கிடககும (புறம. 370:6-9). சுரபுனனைகள் நெருங்கிய காடு, எதிரொலிக்குமாறு களிறுகள்

பிளிறும் இடத்தே மழை பெய்யாமையால் வாடிய மூங்கிலை உடைய அரிய பல அத்தத்தைக் கடந்து பரிசிலர் சென்றனர் (பதி. 41:13-16). உயர்ந்த மலைப் பக்கத்தில் மராமரங்களை உடைய அத்தத்தில மரையா தன வலப்பக்கம் வீழுமாறு கொன்று வீழ்த்திய புலி, அதன குருதியைக் குடித்தபின், விட்டுச் சென்ற மூட்டினின்றும கழிக்கப்பட்ட ஊனைக் கொள்ளையரைப் போன்று கழுகுகள் கவரும் (அகம 3:6-11). பவளம போன்று சிவந்த மேட்டு வழிகளில் காற்றினால விழுந்து பரவிக் கிடக்கும் இருப்பைப் பூக்கள், இரத்தத்தின்மேல கிடக்கும் கொழுப்பினைப போன்று அத்தத்தில் காணப்படும (அகம். 9:3-9) ஓர் ஊரினகண வாழும மாந்தரனைவரும ஒருங்கே குடிபெயர்ந்து போவது போன்று, காண்பார்க்கு அச்சம் உண்டாகுமாறு செல்லும் உப்பு வாணிகர் நீரற்ற அத்தத்தில் செல்ல முடியாமல் தயங்கிய எருதுகளை உரப்புகின்ற ஒலி மலையில் எதிரொலிக்கும் (அகம. 17:11-14). அரிய அத்தத்தினையுடைய காட்டில் கிணறு தோண்டுவோர் நீர் ஊறாமையால விட்டுச் சென்ற பெருங் குழிகளைச் சருகுகள் நிறைத்தன; அவற்றைத் தந்தங்களைக் கொள்ள விரும்பிய கானவர் தம்மைப பிடிக்க அமைத்த குழிகள் என்று கருதி யானைகள் தூங்கும் (அகம். 21:23-27). மழை இன்மையால வற்றிய யாமரத்தின் உயர்ந்த கொம்பில் இருக்கும் பருந்து பெடையினை ஒலி செய்து தன்னிடம் அழைக்கும்; அவ்வொலி மேற்செம்பாலை என்னும் பண்போல் தோன்றும்; இக்காட்சியை அத்தத்தில (பாலை வழிகளில) காணலாம் (அகம். 33:3-7). மலையில் நீர் வற்றிய ஆற்று வழியில் செல்லும பெரிய யானைகளைக் கொன்று ஆள்வழக்கற்ற அத்தத்தில் புலி திரியும் (அகம. 45:1-5). வேனிற்காலத்து அத்தத்தில நெல்லிக்காய்களை மரைமானின் கூட்டம் நீர் நசையினால் கவர்ந்து உண்ணும் (அகம். 69:7-9). ஒலிக்கும் துடியையும் வளைந்தவில்லையும உடைய எயின மறவர் கற்கள் நிறைந்த அத்தத்தில செல்வதைக் கண்டு பெடைப்பருந்து தன் சேவலைப் பலகாலும் கூப்பிடும் (அகம். 79:12-15). அணில் விளையாடும் மூங்கில் வளர்ந்துள்ள இடத்தில் எயினனின அம்புபட்டு இறந்தவரின் எண்ணற்ற உடலை மூடியுள்ள பதுக்கைகள் நிறைந்த சுரத்து நெறிகள் ஆறலைக்கும் பகுதியாக்கப்பட்டமையால் அவ்வத்தம் சென்றோர் மாய்வர் (அகம். 109:6-10). சுரத்தின் நீண்ட அத்தத்திலுள்ள பாறைமீது கிடக்கும் கொன்றையின் முற்றிய நெற்றுக்களுக்கு உடைந்த யாழ்க் கோட்டின் துண்டுகள் உவமை (அகம். 115:9-12). வழிப்போக்கர் அறுத்துப் போட்ட பிரண்டைக் கொடிகள் இடியால் தாக்குண்ட பாம்புத் துண்டுகள் போல கிடக்கும் அத்தத்தில உமணர் சமைத்துண்டு கைவிட்டுப்போன கல்லடுப்பில மறவர் ஊனைப் புழுக்கி உண்பர் (அகம். 119:5-10). மிளைநாட்டின அத்தத்தில் மேட்டு நிலத்திலுள்ள மரலை இளைய பெண்மானும் ஆண்மானும் தின்னும் (அகம. 133:16-18). காட்டாற்று அத்தத்தில் செலலும் புதியவர் சேற்றைக் கிண்டி ஊறிய நீரை உண்ட சிறிய கேணிகளைத் தம் பிடியின் காலடிச் சுவடெனக் கருதிக் களிறுகள் தொட்டுப் பார்த்துக் கடக்கும. (அகம். 137 1-3). ஆளற்ற அத்தத்தில் தேரின் மணியொலி போலச் சிள்வீடு ஒலிக்கும வற்றல மரத்திலுள்ள ஒந்தி வெயில மிகுதியால் அழகுகெட்ட ஊரிலுள்ள காட்டின் ஞெமை மரத்தினது உச்சிமேல மெல்ல ஏறும் (அகம். 145:2-6). முழவினை எடுத்துக்கொண்டு வேற்றுநாட்டு விழவுக்குச் செலலும கூத்தர்போலக் களிறு பலாப்பழத்தை ஏந்திப் [illegible] கூடிய கொடிய அத்தத்தில் செலலும் (அகம். 189 3-6). நிறைந்த சூலினை உடைய இளமபிடியைத் தழுவிக் கிடக்கும களிறு தன்மீது கன்று ஏறி இறங்கப் பள்ளி கொண்டிருக்கும அச்சம் தரும் இடத்திற்கு அப்பால கொன்றை ம[illegible] மலையை அடுத்த அத்தத்தில தலைவன பொருள தேடச் சென்றான (அகம். 197:13-16). சினமும் மதமும் கொண்ட களிறு, புலியின நிறத்தைக் கொண்ட வேங்கை மரத்தின் பூக்கள் நிறைந்த கிளைகள் தனிமையுறுமாறு அடிமரத்தில பாய்ந்து செந்நிலப் புழுதியைப் பூசிக் கொண்டு போர் புரிந்து வெற்றி கொண்ட மள்ளர்போல அத்தத்தில முழங்கும் (அகம. 227:6-11). பேய்த்தேரை நீர் என்று கருதி ஓடிய கலைமான் நீர்பெறாமல் வருத்தமுற்று வேற்றிடமும் செல்லாமல் தங்கும் அத்தத்தில நெல்லிக் காய்களைக் கழங்காகக் கொண்டு மந்திகள விளையாடும் (அகம. 241 9-15). பாலையில வறட்சி மிக்க அத்தம் செலலும் புதியோரின நீர்வேட்கையால் நீங்கவிருக்கும் உயிரைக் காக்கும நெலலிக்காய் நிறைந்த மரக்கிளைகளிலிருந்து புறாக்கள் அகவும் (அகம். 271:6-8). அத்தத்தில உதிர்ந்து பரந்து கிடக்கும் இனிய நெல்லிக் காய்களைப் பெண்மான் உண்ண விரும்பிய ஆண்மான் தன் தோல் பொதிந்த, மீண்டும முளைக்கும் புதிய கொம்புகள் அதிருமாறு கூவி அழைக்கும் (அகம 291:16-20). கடுங்காற்றில் உதிர்ந்த தேக்கிலைகள் வானிடம் மறையப் பரவிப் பின்னர்க் காடெங்கும் பரவிக் கிடத்தலின கவர்த்த நெறிகள் மறைந்தன; அதனால் அத்தம் செல்வோர் வழியறியாது மயங்கினர் (அகம. 299:5-9). நீர் வேட்கை கொண்ட புறாக்கள் கோடைக்கண நீர் பெறாமையினால்

கொத்தித் தின்றற்குரிய நெல்லி மரங்களிலிருந்து உதிர்நத காய்கள நூல் அறுந்த துளையை யுடைய பளிஙகுக் காசுகள் போல அதத்த்தில கிடநதன (அகம். 315:10-12). வடககில் உள்ள வேலேநதிய பாணன நாட்டில் இருக்கும் வெப்பம் மிகக அதத்த்தில் ஆளைக கொலலும் யானை வழிப் போககர் வருகையை எதிர்பார்த்திருககும (அகம. 325:16-20). உமணர் எயினரின் ஊர்களில பகலில் தஙகிப புறப்படுவதற்கு வணடி மாடுகளை உரப் புதலையும் மணல் துகளைத் தொகுதது எறியும் சூறைக் காறறு வீசுவதையும் அத்தத்தில் காணலாம் (அகம. 329 5-8). ஞாயிற்றின் வெம்மையால இலை உதிரநத இருபபைக் கிளையில தீத்தழைததாற் போலப புதிய பசுந்தளிர்கள் தோன்றுகினறன. உட்டுளை அமைந்த பூககளையும் பொந்துகளையும் உடைய இருபபை மரங்கள் அத்ததில நிறைநதுளளன (அகம. 351:6-8). மாவண புல்லிககுரிய பெரிய மலையைச் சார்நத வழியிலுள்ள வரகு விளையும மேட்டு நிலததைச் சூழநத காட்டினைச சுடுவதால் எழுகின்ற புகை அருவித் துளியொடு கலக்கும அத்ததில் தலைவர் சென்றார் (அகம. 359: 12-16). அதத்த்தில் ஆனிரைகளை மேயககச் சென்ற கோவலர் கொமபை ஊதி வறணட இடத்திற்புக்க ஆனிரைகளை ஒனறு சேர்த்து வற்றிய கொன்றை மர நிழலில இளைபபாற விட்டுக் குழலினை ஊத, அவ்வோசையைப பளிஙகுபோலும் நெல்லிககாய்களைத் தின்று அசைபோடும் மரைமான் செவி சாயததுக் கேட்கும (அகம்: 399:8-15). அத்தத்திலுளள சிற்றூர்களில் வாழும் மக்கள் மழையினமையால் நீர், உணவு முதலியன பெறாராயின தாம இருந்த வீட்டைவிட்டுச் செல்வர் (குறு. 41:3-5). அதததநில் யானைகள் படடையை விருமபியுணட ஓமை மரங்களின் உலர்ந்த கொம்பில அமர்ந்து தனிமையும் வருத்தமும் தோன்றப் பெணபுறாக்கள் தம் துணைகளை அழைக்கும் (குறு. 79:1-5). மழை தவிர்நத அத்தத்தே கள்ளியின காய் வெடிக்கும் கடிய ஒலி காதற் றுணைகளாகிய புறாக்களைப் பிரிநதோடச் செய்யும் (குறு. 174:1-4). மலையை அடுத்த அத்தத்தில செல்லும் தலைவனுககுத் தன இனத்தைப் பிரிந்து ஓமைக்கிளையிலிருந்து வருந்தும் பருந்து தன் தனிமை தீர எழுபபும் ஓசை துணையாகும (குறு. 207:2-5). தலைவன சுறாமீன் திரியும நீர் அத்தத்தைக் கடந்து முனபோல வருவதில்லை (குறு. 230:5,6). நீணட வழியையுடைய அத்ததில் ஆண்யானை பெண்யானையின பசி வருததம் போக்க யாமரத்தின் பட்டையை உரித்துச் சுவைத்துப் பார்த்து நீரினமையால் வருத்தத்துடன் முழஙகும் (குறு. 307:4-9). அத்தத்திலுள்ள வாகை நெற்றுக்கள் சிலம்பு போன்று ஒலிக்கும்படி மேறகாற்று வீசும் (குறு. 369:1-3). அத்தத்திலுள்ள குமிழ மரத்திலிருநது வீழ்ந்த கனிகள் ஆங்குள்ள இளமானுககு உணவாகும் (நற். 6:7,8). வாடிய சிறு தூறுகளைக் கொணட அத்தத்தில் உணவின்றி வாட்டமுறற நிரையிலுள்ள ஓராவினது மணியோசை மெலலென ஒலிககும் (நற். 37:1-3). வெட்பாலையினுடைய நெறறுக்கள் காற்றிலாடும்போது மலையினின்று விழுகினற அருவிபோல ஒலிப்பதும் ஓமை மரஙகள் நிறைந்த இடத்தை உடையதும் ஆகிய அத்ததில் புலிகள் இயங்கும் (நற். 107:3-7). பாழ்பட்ட ஊரினையுடைய பாலை அத்ததில் ஈத்தமரங்கள் மிகக களர்நிலத்தின புழுதிபடிந்த களிறு கொலவதறகுச் சுரவழியிற் செல்வோரைக் காணாமையினால பனை மரததினைத் தாக்கித் தன் சினம் தணியும் (நற். 126:2-6). அததததில் இற்றி மரததினது நெடிய விழுது, வைகறையில் கோடைக்காற்று வீசுந் தோறும் ஊசலாடுதல் போனறு கிழே துயிலுகினற பிடியானை மீது புரளும (நற். 162:9-12). ஆறலைகள்வர் ஏதிலாளரைக கொன்றமையால் வீழநத பிணங்கள், கொடிய அத்தத்தில் சருகுகளால் மூடப்பட்டு முடை நாற்றம் வீச, அவற்றைத் தின்னவந்த பசிமிக்க குறுநரிகள முடை நாற்றம் தாங்காமல் திரும்பிச் செல்லும் (நற். 164.6-10). ஈந்தின குலைபோன்ற கவர்த்த அததத்தில் அமைந்த தாளிப் பனையின் மடலிலிருநது ஆண்பறவை கூவினால் அவ்வொலியைக் கேட்டுப் புலி எதிரொலி செய்யும் (நற். 174:1-4). அத்ததில வேட்டுவன் அமைத்த வலையைக் கண்டஞ்சிய கணந்துள் என்னும் பறவை தனிமையிலிருந்து கூவும் தெளிந்த ஓசை, சுரவழிச்செல்லும் கூத்தர் தம் வழி வருத்தம் நீங்குமாறு இசைபாடுகினற யாழோசையோடு சேர்ந்து ஒலிக்கும் (நற். 212:1-4). மழை பெயத மலைச் சாரலில் பெண்மான குமிழமரங்களில் உராய்வதால குமிழம் பழங்கள் பொன்னணிகளைப் பரப்பினாற்போல உதிர்ந்து கிடக்கும குறுகிய பலவழியையுடையது அத்தம் (நற். 274:1-6). அத்தத்தில் நாட்காலையில் புலியொடு பொருத யானையின் புண்பொருந்திய கால் போல மேற்பட்டையைப் பெயர்த்தெடுத்த ஓமையின் சிவந்த அடிமரம் விளங்கும் (நற். 279: 5-8). அத்தத்தில் பருந்து உதிர்த்த இறகைத் தம் சிவந்த அம்பிலே வைததுக் கட்டிய மறவர் வழிச் செலவோரை வெற்றி கொள்ளும கருத்துடன் வழி பார்த்து உறைவர் (நற். 329:4-8). நீர் வேட்கை மிக்கு வருந்தும் யானை அத்தத்தில வங்கியம் எனனும இசைக் கருவியின் குழாய் போலத் துதிக்கையை உயர்த்திப் பிளிறும் (ஐங். 377.1,2). வேடர்

பிணங்கள் மறைய இட்ட இலைக்குவியல் வேலி போல் நிறைந்துள்ள அத்தத்தின், நீரற்ற சுனையில் நீரருந்த இட்ட தம் கைகள் சுடப்பட்டு வரிசை குலைந்து யானைகள் மலைச்சாரல் தோறும் ஓடியதால் பழைய வழிகள் மயங்கின (கலி. 12:1-7). பாலை அத்தத்தில் வழிப் போக்கரின் பொருள் களையெல்லாம் பறித்துக்கொண்டு புண்படுத்திப் போகவிடும் அன்பும் அருளும் அறவே இல்லாத ஆறலைப்பார் இருப்பர் (கலி. 15:7-9).

**அத்தன்** - தந்தை. நம் பெண்மை நலம் கெடவும் மேனியழகு மெலியவும் இன்னுயிர் நீங்கினாலும் தலைவனிடம் பரிவுமிக்க சொற்களைக் கூறாதே; அவர் நமக்கு அன்னையும் அத்தனும் - தந்தையும்- போன்றவர் அல்லரோ என வினவித் தலைவி தோழி யிடம் வாயில்மறுத்துக் கூறினாள் (குறு. 93). ஆயர் மகன் சூடிவந்தமுல்லைத் தொடையையும் கண்ணி யையும் தலைவி கூந்தலுக்குள் வைத்து முடித்துக் கொண்டாள்; வெண்ணெய் தேய்க்கத் தலைவியின் கூந்தலைச் செவிலித்தாய் விரித்தபோது அன்னை யும் அத்தனும் வீட்டிலிருக்கத் தாய் நாணுமாறு அம்முல்லைக் கண்ணி செவிலி முன்னே வீழ்ந்தது (கலி. 115:4-9).

**அத்தி - 1. ஆதிமந்தியின் கணவன்.** ஆட்டனத்தி என்றும் அழைக்கப் பெறுவான். கணவனை இழந்த ஆதி மந்தி அவனைக் கண்டதில்லையோ என ஊர் தொறும் நாடுதொறும் அலைந்து கேட்டுக் கடல் கொண்டதோ நீர் மறைத்ததோ என அரற்றி மயங்கிக் கண்ணீர் சிந்திக் கலங்கினள் (அகம். 236: 16-21). பாகன் பழக்காத யானை நீரில் விளை யாடக் கற்றுக் கொண்டதுபோல் அத்தி புனைகழல் சேவடியிலே புரளக் கருங்கச்சு கட்டிய வயிற்றில் அணிந்திருந்த மணியுடன் தாள ஒலியெழப் புன லாட்டயர்ந்தான். அதனைக் கழார் என்னும் பதியில் கரிகாலன் சுற்றமொடு வந்து கண்டு களித் தான் (அகம். 376:2-11). ஆதிமந்தி அனைதனையும் வெறுத்து அழுது கொண்டிருக்க அத்தியைக் காவிரி வெள்ளம் கொண்டொளித்தது (அகம். 396:11-14). கழாஅர்ப் பெருந்துறையில் புனலாட்டு விழாவில் ஆடிய ஆட்டனத்தியின் எழில் நலம் விழைந்து காவிரிப்பெண் அவனைக் கவர்ந்து கொண் டாள். அதனால் மதிமயங்கித் திசையெங்குந் தேடி வருந்திய ஆதிமந்திக்கு மருதி என்பாள் அத்தியைக் காட்டினாள் (அகம். 222:5-12).

**2. குறுநிலமன்னன்.** நன்னன், ஏற்றை, அத்தி, கங் கன், கட்டி, புன்றுறை ஆகியோர் ஒன்றுகூடிப் பொருது சோழன் படைத்தலைவனான பழை யனை வீழ்த்தினர். இதனைக் கண்டு சினந்து பெரும்பூட் சென்னி சேரர் தலைவனான கணை யனை அகப்படுத்துச் சேரநாட்டுக் கழுமலத்தைக் கைப்பற்றினான (அகம். 44:7-14).

**அத்திரி-கோவேறு கழுதை.** தலைவன அத்திரி-கோவேறு கழுதை - பூட்டிய மணி நெடுந் தேரூர்ந்து செல்வ துண்டு (அகம். 350:6-9). தலைவன ஏறிவந்த அத்திரி உப்பங் கழியிலுள்ள சுறா தாக்குதலினால் காலில் ஏற்பட்ட புண்ணுடன் விரைந்து செல்ல முடியாமல் நடை தளர்ந்தது; அதனால தோழி அவனை இளைப்பாறிச் செல்லுமாறு வேண்டுகிறாள (அகம். 120:10-13). தலைவன அத்திரி மீதேறிக் கடற் பக்கம் விரைந்து வரும்போது இதன் காலில் உப் பங்கழிச் சேறுபட்டது. வழியிற்கிடந்த சிவந்த இறாமீன்கள் இதன குளம்பில் பட்டு அழிந்தன (நற். 278:7-9). வையைக்குப் புதுப புனலாடச் சென் றோா அத்திரி மீதும் ஏறிச சென்றனர் (பரி. 10-16).

**அதட்பள்ளி** - தோற்படுக்கை. இலையால் வேயப்பெற்ற குடிலில் மான அதடபள்ளி - தோறபடுக்கை - மீது வீரர் உறங்கினா (மது. 310,311). ஆட்டுத தோலை யுரித்துச் சேர்த்துத் தைத்த வார் மிதித்த அதட் பள்ளி பயன்படுத்தப்பெற்றது (மலை. 418,419).

**அதர் - 1. வழி.** பாணன் ஆனினம நிறைந்த அதர்-வழி- பல கடந்து நாஞ்சில வள்ளுவனைக காண வந் தான் (புறம். 138:1). காட்டிறந்து வேட்டையாடத தலைவனுடன சென்ற ஏவலா அதர் மயங்கியதால வரக் காலந்தாழ்த்தனர் (புறம். 150.10, 11). ஊருணி ஆவும் மாவும் உண்டு கலக்கிய சேறொடுபட்ட சிறுமையுடையதாயினும அதற்குச் செலலும அதர் பல உண்டு (புறம். 204:5- 9). காட்டு அதரில களிறு திரியும் (பொரு. 49). அதரில மானின் அடிச்சுவடு பதிந்திருக்கும (பெரு. 106). அதரிலுள்ள பாததி யனன குடுமிக் கூர்ங்கல் நடபபோரின் விரல நுதி யைச் சிதைக்கும் (அகம். 5:13, 14). மான் சென்ற அதர் (அகம். 8:13). சேற்றை வாரி இறைத்துக் கொண்ட யானை உராய்ந்த யாமரம ஓங்கிய அதரில இலவ மலர் உதிர்ந்து கிடக்கும (அகம். 17:16-19). மாமரக் கிளையிலுள்ள குஞ்சுக்குக் கழுகு அதரில மறவர் அம்புபட்டு வீழ்ந்தோரின கண்ணைப பறித்து வந்து கொடுக்கும் (அகம. 31:5-11). உளிவாய் வெம் பரல் அதர் உடைய குன்று பல நீந்தித் தலைவன் பொருள் தேடச் சென்றான் (அகம. 83:11). காற் றொடு கூடிய கடுநதீ பரவியதைக் கண்டு அதர் விடுத்து அலறிக் கொண்டோடும் வணிகச் சாத் தோடு ஒருபெற்றியே புலியைக கண்டு அஞ்சிய யானைக் கூட்டம் ஓடியது (அகம. 39:6-11). பகைவர் கவர்ந்து சென்ற ஆநிரையை மீட்கப் போர் செய்து

மாண்ட வீரரின் பெயரினையும், சிறப்பினையும் நடுகலலில் பொறித்து மயில் தோகை அணிவித்து அதர்தொறும் நட்டிருந்தனர் (அகம். 67:8 10;131·6-11). போரில வென்று வீழந்த வீரரின் குடலைப் பருந்து கலனுடை அதரில கணடோர் அஞ்சுமாறு பற்றி இழுக்கும் (அகம. 77·9-12). ஆறலைப்போர் மூரி மனறதது ஆறலைபப அதர்பார்த் திருப்பர் (அகம் 103.6, 7). பகைதலை மணந்த பல்லதர் (அகம். 105:17) கொடுவில ஆடவர் வணிகச் சாத்தினை எறிந்து அதர் கூட்டு உணபர் (அகம. 167:7-9). மான் அதர்சசிறு நெறி (அகம். 168:11). மால்வரைச சீறூர் ஞெமை மரஙகளுடைய அதரைச் சார்ந்திருந்தது (அகம. 171:7, 8). பேய்த்தேர் ஓடும எரிபரநத காட்டில யானை கைநீட்டி வானை நோக்கி வாய்திறந்து வருநதி நீர்பெறாது காட்டை வெறுத்து நீங்கும் பாலை நில அதரில் மறவரது வெற்றி பொறித்த நடுகல் நிற்தும் (அகம. 179:2-8). களிறு தன் இனத்தை அதாப்படுதகிச் சென்றது (அகம். 189:6). கலலதர்ச் சிறுநெறி (அகம்: 202:13). மான (விலஙகுகள்) செல்லும் அதர் மயங்கிக் கிடக்கும (அகம. 203:13). புலியொடு பொருது யானை ஒதுங்கும் காட்டதரில பரல்மின் மினி போல ஒளிரும்; பருந்து வெமமைக் காற்றாது அஞ்சி ஓடும்; ஆறலைகளவர் பொருள்களைக் கொள்ளையடித்தலின வணிகச் சாத்து நடமாடாது (அகம. 291:5-15). சுனை வறண்டு போகக் குன்றின்கோடு சிதறக் கதிரவன சுடுதலினாலே, புலியை வெனற யானை வருந்தி மறந்தேம்பிப் பிடியைத் தழுவிக் கொண்டு காட்டு அதரின் ஒருபககத்தே தங்கும் (அகம். 295:1-8). கானததிலுள்ள மான் (விலங்குகள்) செல்லும் அதர் (அகம். 318·1). வெம்மைமிக்க நெடுஞ்சுரத்தில ஆளைக கொல்லும் யானை அதர் பாாத்துத் தங்கியிருக்கும் (அகம. 325:18,19). வழிப்போக்கரை அம்பெய்து கொன்றுவிட்டு அவர் தம் சாவுக்கு வருநதாமல் அம்பின் தொலைவுக்கு வருந்தும் ஆறலை கள்வர் பொருந்திய அதரையுடையது அழுவம் (அகம. 327:17-19). கடுவளி கல்லதர் மருங்கிற் புல்லிலை நெல்லிப் பசுங்காயை உதிர்த்தது (அகம். 363:6, 7). கொடுநதொழில் மறவர் ஆறுசெல மாக்கள் வரும் அதர்பார்த் திருப்பர் (அகம. 363·9). புழுதி நிறைந்த அதரில் உபபு விலை கூறி விறகும் வணிகருடைய கூட்டு வாழ்க்கை சிறப்பு வாய்ந்தது (அகம. 390:1-4). காய்நது வாடிய காந்தளையுடைய, அனல் வீசும் நீணட கடத்தில குட்டிகளை ஈனற பெண புலியின மிக்க பசியைப் போக்க ஆணபுலி ஆளைக்கொல்ல அற்றம் பார்க்கும் புல்லதர்ச் சிறு நெறியில நடக்க வலலுநளோ என மகட்போக்கிய தாய் வருந்தினாள் (நற். 29: 1-6). கொள்ளையடிப்பவர் பொழுது சாய்ந்த வேளையில், அச்சந்தரத்தக்க வழியில் தங்கி வழிப்பறி செய்ய ஆளை அதர்பார்த்து நிற்பர் (நற். 33·1-7). காம்பு தலைமணந்த கல்லதர்ச் சிறுநெறி (நற். 55:2; 333:2; 343:1). கல்லதர் மனனும் கான் (நற். 158:3). தலைவி மாலைப்போதில் மாலதர் எய்த மாமழை வநதது (நற். 238:4, 5). பிடி உதைத் ததனால் மேற்பட்டை நீங்கிய ஓமை மரம், ஞாயிறு தோன்றியவுடன புலியுடன பொருத களிற்றின் புணபட்ட கால்போல் தோன்றும் அத்தததுள்ள அதரில நடக்கத் தன் மகள் அடி வல்லுந கொலலோ என மகட்போக்கிய தாய வருந்தினாள் (நற். 279: 5-11). வன்கணாடவர் வெற்றி கொள்ளும் நெஞ்சமொடு அதர்பார்த் திருப்பர் (நற். 329.6, 7). கானவன் கல்லதர்ச் சிறுவழியில் பதுங்கியிருநது பன்றி வேட்டம் செய்தான (நற. 336·3, 4). சேய்நாட்டிற்குச் செல்லும் அதரில் உதிர்நது கிடக்கும் வேஙகைப் புதுமலர்ப் பரப்பினமீது தலைவி அனனம போல் நடந்தாள் (நற். 384: 6-8). கல்லடர்ந்த கவர்தத அதரில் கோவலர் கோலால் தோண்டிய பள்ளத்திலுள்ள நீரை யானை பருகும் (ஐங். 304, 1-3). ஓமை மரம் ஓங்கிய கானத்து அதரில் புலி உலாவும் (ஐங். 316:4, 5). யானை திரியும் மயங்கிய அதரையுடையது கானம் (ஐங. 355:4, 5). பெருங் கல்லதர் (ஐங். 359:2). பாணன் கதழ்பரி நெடுந் தேரை அதர்படச் செலுத்தித் தலைவனொடு வருவேன் என்று கூறினான் (ஐங். 474·3, 4). விலங்குகளும் மறவரும் மயங்குகையினாலே தூறுகள் அதர்ப்பட்டுப் பழைய வழிகள் மயங்கின (கலி. 5:3). மூங்கிலையுடைய உயர்ந்த மலையைச் சூழ்ந்த அழலினகண அகப்பட்ட களிறுகள் அதர்ப்படும்படி மிதித்துத் தம் இனததோடே தப்பின (கலி. 25:9-11). ஞாயிற்றின் வெம்மையால் மூங்கில் பற்றி எழுந்த காட்டுத்தீயின் வெம்மை தாங்காது விலங்குகள் பலகாலுந் திரிதலினால் சுரம் மயங்கிய அதரை உடையதாயிற்று (கலி. 150:1-6). விரையும் அருவியாய் வீழ்கின்ற மிக்கநீர் வரும் அதர்பல பொருந்தியது சாரல் (பரி. 6:5,6).

2. சக்கை. உழுந்தின் அதரை - சக்கையை–குதிரை தின்னும் (புறம. 299:2).

3. முறைமை. தலைவன் மாயாக் காதலொடு அதர்ப்பட - முறைமை பொருநத - கூறித் தலைவியைத தெளிவிததான் (நற். 218:5).

**அதரி – கடாவடி.** வஞ்சிநகர் களமாகப் பகைமறவரின் பிணமாகிய போரை அழித்துக் குடநாட்டில் கிளளி வளவன் அதரி - கடாவடி - விட்டான் (புறம. 373;

24-26). அதரி கொள்பவரின் ஓசை பரதவமகளிர் ஆடும் குரவைக் கூத்தின் ஒலியொடு சேர்ந்து ஒலித்தது (மது. 94-97).

**அதரிதிரித்தல்** - நெற்கதிரைக் கடாவிட்டு உழக்குதல். போர்க்கருவியாகிய மழைமுகில தலையாகிய கனியைப் பொழியக் குருதி வெள்ளம் நிலததிற் பரவிச் செல்லக் கதிராகிய கழுத்தையறுததுப பிணங்களாகிய பல போர் அழியுமாறு யானையை எருதாகக் கொண்டு வாளாகிய பனைமடலை ஓச்சிப புணை கட்டிக் காலாட்கள உக அதரிதிரிததான இளஞ்சேட்சென்னி (புறம். 370:13-17). தலைவெட்டுண்ட கவந்தம் குவியப் பிணககுவியலாகிய போரை யழித்து யானையாகிய எருதை வாளாகிய பனைமடல் கொண்டு செலுத்தி ஆட்சா மாயுமாறு களத்திலே அதரிதிரித்தான் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன (புறம். 371:14-16).

**அதலைக்குன்றம்** - ஒரு குன்றின் பெயர். ஒருகண்மாக் கிணையை முழககும் பாணர் முதலிய இரவலரின் தலைவனுக்குரியது இக்குன்றம்; இக்குன்றின் சுனையில் மலர்ந்த குவளையொடு சேர்த்துக் கட்டிய காட்டுமல்லிகையின் மணம் தலைவியின் நெற்றியில கமழும் (அரலைக் குன்றம் என உ. வே. சா. பாடங் கொள்வர்) (குறு. 59:1-3).

**அதவம்** - அத்திமரம். அதவத்தின பழம்போல மந்திமுகம் சிவப்பாயிருக்கும் (நற. 95:3, 4). ஆற்றங்கரையில் நிற்கும் அதவத்திலிருந்து விழுந்த பழம் நண்டு மிதித்தலால குழைந்தது (குறு. 24:3-5).

**அதள்** – தோல். நெடுவெண்களர் அதளை-தோலைப்புடைதது வைத்தாற் போன்று இருக்கும் (புறம். 193:1). முன்றிலிற் கிடக்கும் பெருங்களியாளனுக்கு அதளேனும் பாயேனும் கொடுமின் என வேம்பற்றூர்க் குமரனார் பாடுவர் (புறம். 317:2-4). மான் அதளில் காயவைத்த தினையைக் கானக்கோழியும் கவுதாரியும் கவர்ந்துண்டன (புறம். 320:10, 11). ஆய அண்டிரன் முள்ளம்பன்றியின் ஊன், சநதனம், யானைத் தந்தம் ஆகிய மூனறையும் புலியின் அதளில் வைத்து விருந்தினர்க்கு நல்குவான் (புறம. 374:10-16). முதியோன் கிடாயின் அதளில் படுத்திருந்தான் (பெரு. 151). மான்தோலாகிய அதளையும் கண்ணியையும் கடுஞ்சொல்லையும் உடைய இளையோர் கவர்த்த வழிகளைக் காத்தனர் (மது. 310-312). வெள்ளாட்டு மறியின ஒட்டிய வயிறு உள்ளீடு இலலாத அவரைப் பொய்யதள் போன்றது (அகம். 104:7-9). பாலைவழிச் சென்றோரிடம் பொருளில்லை என்பதற்காக அவரது உயிரைக் கவராதுவிட்ட தவற்றுக்காக யானைத் தநதத்துடன் புலியதளைக் கொண்டு வநது தருமாறு அவர்க்குக களவர் தலைவன் தணடனை வழஙகினான் (அகம. 109:10-14). புலியதள போல வேங்கையின புதுமலர் மலையில உதிர்ந்து கிடக்கும் (அகம. 205 19,20). இடையன் அதளைப் பயன் படுததுதல் (அகம. 274.6) தீககடைகோல முதலிய கருவிகள இடப்பெறற சிறுபையை அதட்பைககுள் வைத்துச் சுருககிக கடடி இடையன் எடுத்துச செலவான (நற. 142:2-4). வேஙகைக் கிளையில சந்தன மரம கொணடமைத்த, யானைககஞ்சாத புலியின் அதள பரபபிய பரணில தஙகிக்கொணடு தலைவி தினைப்புனங காக்கினறாள (நற 51:6-8). உரிதத அதளால மிதியடி செயதனர் (மலை. 419). புலியின அதள் படுககைக்குப் பயன்பட்டது (அகம. 58:4).

**அதிகமான்** - குறுநில மனனன. எழுவளளலகளுள ஒருவன. பெருஞ்சேரல இரும்பொறை தகடூர எறிந்து அதிகமானை வெனறு முரசுங கலனுங கொணடு களவேளவி செயதான (பதி. ப. 8 4-7). அதிகன் அதியமான. அதியமான நெடுமானஞ்சி, அதியர் கோமான, அதியன, அஞ்சி, எழினி, நெடுமிடல காணக.

**அதிகன்** - குறுநிலமன்னன். எழுவள்ளல்களுள் ஒருவன். மலைசசாரலில் இருந்த நெலலியின அமிழது விளை தீங்கனியை ஔவைக் கீநதவன, ஒளிதிகழ நெடுவேலையும், கடல்போனற தானையினையும உடையவன (சிறு. 99-104). பசும்பூண பாணடியனுக குத் துணையாகச் சென்று வாகைப பறந்தலையில பொருத அதிகன் களிற்றுடன மாயநதான் (குறு. 393:3-5). மிஞிலி புள்ளிற்கு ஏமமாகிய அதிகனைக கொன்று ஆர்ப்பரித்தான ('அதிகற்கொனறு' என பதினும் 'எயினற்கொனறு' எனற பாடம் சிறபபுடைதது) (அகம் 142:11-14). புரவலருக்குப புகழைததரும இரவலரின் விருப்பப்படி அதிகன வழங்கினான (அகம. 162:17,18). அதிகமான, அதியமான், அதியமான் நெடுமானஞ்சி, அதியர்கோமான், அதியன், அஞ்சி, எழினி, நெடுமிடல் காணக.

**அதியமான்** - குறுநில மன்னன. எழுவள்ளல்களுள் ஒருவன. தவமகன் பிறந்தவனைக் கண்டும் அதியமானுக்குப் போாச் சினம் மாறவிலலை (புறம. 100:10). ஒருநாள் இருநாளன்றிப பலநாள பலரொடு தொடர்ந்து சென்றாலும முதல்நாள்போல விருபபொடு அதியமான் விருநதோம்புவான்; இவன் பரிசில் அளிக்கும் காலம் நீட்டினும அளிப்பது உறுதி (புறம். 101:1-8). அதிகமான் அதிகன், அதியமான் நெடுமானஞ்சி, அதியர் கோமான, அதியன், அஞ்சி, எழினி நெடுமிடல காணக.

**அதியமான் நெடுமான் அஞ்சி** - குறு நில மன்னன். எழுவள்ளல்களில் ஒருவன். இவன அதியமான் (புறம். 101, 5); அதிகமான் (பதி. ப. 8:4); அதிகன (சிறு. 103); அதியன் (அகம. 325:8); அதியர் கோமான் அஞ்சி (புறம். 91:3,4); நெடுமானஞ்சி (புறம். 92:6); அதியமான் நெடுமானஞ்சி (புறம். 87 துறைக் குறிப்பு); எழினி (புறம. 158:9); நெடுமிடல் (பதி. 32:10) எனனும் பெயர்களால சுட்டப்பெறுவான். இவனுக்கு வழங்கிய அதியர் கோமான, எழினி என்னும் பெயர்கள இவன மகன் பொகுட்டெழினியையும் சுட்டும (புறம. 392:1,2). ஔவையாரும் அரிசில கிழாரும இவனைப் பாடியுள்ளனர். பரணர், மாமூலனாா, இடைக்கழிநாட்டு நல்லூர் நததத்தனார் பெருஞ்சித்திரனார், அஞ்சியததைமகள் நாகையார் பாடல்களில இவனைப பற்றிய குறிபபுணடு. இவன் போர் செய்தலில் வல்லவன் (புறம். 87:1). மழவர் பெருமகன்; யாராலும் வெல்லற்கரியவன் (புறம். 88:1-3). போருக்கஞ்சா மறவரையுடையவன் (புறம. 89:5,6). ஔவையார் வாய்ச்சொற்கள் புதல்வரின் மழலை தந்தைக்கு இனபம் செய்தல் போல, இவனுக்கு இன்பம் செயதன (புறம. 92). தான விழுப்புணபடப் பொருதமையால் பகைவர் துறக்க இன்பம் எய்தினர் (புறம். 93:9-15). நண்பர்க்கு இனியவன்; பகைவர்கருத் தீயவன் (புறம் 94:3-5) தொண்டைமானிடம் ஔவையைத் தூது விடுத்தவன் (புறம. 95:துறைக்குறிபபு). பகைவரை அழித்தமையால் இவன் படைக்கலங்கள் கொல்லன் உலைக்களத்தில் சிதைந்து கிடந்தன (புறம். 95:4,5). வளம் பெருகிய காலத்தில் மிகுதியாகத தரலும், வளம் சுருங்கிய காலத்தில் உடன உணணுதலும் இவன் இயல்பு (புறம. 95:6-9). அமரரைப் பேணுதல், வேள்விசெயுதல், அரிய முயற்சியால் அயலகத் திருநத கருமபு கொணர்தல் ஆகியவை இவன் முன்னோர் செயலகள் (புறம். 99:1-4). பனைமாலை இவனுக்கு உரியது (புறம. 99:5). இவன ஏழரசரை வென்று கோவலூரை அழித்தமையைப் பாணர் பாராட்டியுள்ளார் (புறம. 99:6-14). இவன் பகை நாட்டைச் சுடுதலால எழும் புகை யானைகளைச் சூழ்ந்தது; வறுமைக்காலத்தும் பரிசிலரைக் காத்தான் (புறம். 103:6-12). இளையனாயினும் அரசியல சூழ்ச்சித்திறன் உடையவன (புறம. 104:5,6). தன் ஆற்றலை அடக்கிக் கொள்ளவும் வேண்டுங்காலத்தில் வெளிப்படுத்தவும் வல்லன் (புறம் 315:5-7). தீமைகள் நீககிச் செங்கோலாட்சி புரிந்தவன் (புறம. 350:4). குதிரை மலைக்குரியவன; கூவிளம் (விலவம) கண்ணி அணிந்தவன் (புறம். 158:8,9). இவன பரிசில் நீட்டித்தபோது ஔவையார் 'எத்திசைச்செல்லினும் அத்திசைச் சோறே' எனக் கூறிச் சென்றார் (புறம். 206:13). இவன் காணாது கொடுத்த பரிசிலைப் பெறாது பெருஞ்சித்திரனார் வாணிகப் பரிசிலன அலலேன் எனப் பீடுறப் பாடினார் (புறம், 208). அஞ்சியின் புகழ மறையாதது (புறம. 231:6). இவன் இறந்தபின்னர் ஔவையார் இவனது கொடை, வீரம், அன்பு முதலிய பண்புகளை நினைத்து உருகி வருந்தியுள்ளார் (புறம. 235). இவன்புத்தாடை, கள், ஊன் றுவையடிசில், செந்நெல் முதலியவற்றைப் பொருநர்க்கு நல்கினான் (புறம். 390:14-22). [அதியமான தகடூர் பொருது வீழ்ந்த எழினி என்பான் அதியமான் நெடுமானஞ்சியின வேறானவன் என்பா உ. வே. சா.] (வள்ளல் எழுவரையும் தொகுத்துப் பாடும் பெருஞ்சித்திரனார் அதியமானை 'ஊராதேந்திய குதிரைக் கூர்வேற் கூவிளங்கண்ணிக் கொடும்பூண் எழினி (புறம். 158:8,9) என் எழினி என்னும் பெயராற குறித்தலின் அவ்விரு வரும் ஒருவரே எனக் கருதலாம்) அதிகன் அதிகமான், அதியமான், அதியர் - கோமான், அதியன் -அஞ்சி, எழினி, நெடுமிடல் காண்க.

**அதியர்கோமான்** - குறுநில மன்னன். எழுவள்ளல்களில் ஒருவன் மலைமீது அரிதிற் பெற்ற நெல்லித் தீங்கனியைத் தானுண்டு நெடிது வாழக் கருதாது, ஔவையார் நீடுவாழக்கருதி அதனை அவர்க்கு அளித்தான். அதனைப் பெற்ற ஔவையார் 'நீலமணிமிடற்று ஒருவன் போல மன்னுக' என இவனை வாழ்த்தினார் (புறம். 91:5-11). அதியர் கோமான் மகன் எழினி (பொகுட்டெழினி) யாவான். (புறம். 392:1;2). அதிகன் அதிகமான், அதியமான், அதியமான் நெடுமானஞ்சி, அதியன, அஞ்சி எழினி, நெடுமிடல் காண்க.

**அதியன்**-குறுநில மன்னன். எழுவள்ளல்களில் ஒருவன். அள்ளனை நாடு கொள்ளப் பணிதத அதியன் இறந்தான்; மாக்கிணை ஒலி அடங்கியது (அகம். 325:8,9). அதிகன் அதிகமான், அதியமான், அதியமான் நெடுமானஞ்சி, அதியர் கோமான், அஞ்சி, எழினி நெடுமிடல் காண்க.

**அதியன் விண்ணத்தனார்**-புலவர். அகநானூறு 301-ஆம் பாடலாக அமைந்துள்ள இவர்தம் ஒரே பாடல் பிரிவிடை வேறுபட்ட தலைமகள், வற்புறுத்தும் தோழிக்குச் சொல்லியதாக அமைந்துள்ளது. இவரை அதியர் குடியினைச் சார்ந்தவர் என்றும், அதியனுடைய மகன் விணணத்தனார் என்றும் கருதலாம். [அதியன் என்பான் விணணத்தனாரின் தந்தை என்றும, விண்ணத்தன் என்பதற்கு விண்ணன் என்பானின தந்தை என்றும் பொருள் கொண்டு இப்பெயர் தநதை மகன். பெயரன்என்ற

முறையில் மூவரையும் உட்கொண்டதாக அமையு மென்று த. வ. க. கூறுகின்றது: பக. 31, 32.]

**அதிரல் - புனலிப்பூ.** காட்டு மல்லிகை என்றும் மோசி மல்லிகை என்றும் கூறுவர். அதிரற் பூக்களை யுடைய கொடி படர்ந்த சிறுபுதர் காற்று வீசுங் காலை அசைந்தாடியது (முல்லை. 51,52). கற்குவியல் பக்கத்துள்ள கோங்கின்மீது படர்ந்து இரவில் மலர்ந்த அதிரற் கொடியை அரும்பொடு வளைத்துக் காட்டுயானை விடியலில் கவளமாக உண்ணும் (அகம. 157:5-8). பதுக்கையின் மீது படர்ந்த அதிரற் கொடி பூத்த மலரினை நடுகலலுக்குக் காலைப் பலியாகப் பயனபடுததினர் (அகம. 289:2,3). அதிரலின் கூரிய அரும்பு குயிலின அலகு போன்றது (புறம், 269:1). காட்டுப் பூனையின் கூர்மையான பல் போன்றது அதிரல் (அகம். 391:1,2). பாதிரிமலரை வேனிற்காலத்து மலரும அதிரல் மலரொடு மகளிர் கூந்தலிற் செருகிக் கொளவர் (அகம், 261:1-3; நற். 52:1,2). குவளைப் போதொடு அதிரற் பூவை அணிவர் (அகம். 393:23-25). அதிரல அரும்புடன குவளை மலரை வைத்துத தொடுத்த மாலையைத் தலைவி தன் கூநதலில் சூடியிருநதாள் (அகம். 223: 14-16). விடியலில மலர்நத அதிரறபூவை ஆடவா தம் தலையிற் சூடுவா (அகம். 213:4,5). அதிரல் அரும்பையும முலலை மலரையும் வட்டியிற் கொண்டு சென்று விற்பதுணடு; அவற்றை மகளிர் வாங்கிக் கூந்தலிற் சூடுவர் (அகம். 391:2-6). அதிரல் மலரைத் தலைமாலையாக (கண்ணி) அணிவர் (பரி. 20:81). அதிரல் பூக்களாலாகிய மாலையை ஆடவர் தலையிற் சூடுவது வழக்கம் (புறம். 269:1-3). அதிரல், பாதிரி, செங்கருங்காலி ஆகியவற்றின மலர்களைச் செபபினில் மூடிவைத்துப் பின்னர் அதனைத் திறந்து நறுமணம் நுகர்வது வழக்கம் (நற். 337:3-6). காட்டில அதிரல, பாதிரி, கடம்பு முதலிய மலர் கலநது கிடந்து மணப்பது பரவுக் கடன பூண்ட தெய்வமுடைய கோயிலில பூக்கள் விரவிக் கிடந்து மணபபது போன்று உள்ளது (அகம். 99:5-10). பாதிரி மலருடன் அதிரல் மலர் நுண்மணலை அழகு செய்தது (அகம். 237;1,2). கூதிர்க்காலத்தில் மணல் மேட்டில் சிதறிக் கிடக்கும் ஈங்கை அரும்பும் அதிரல் மலரும் மான் குளம்பு பதிதலால் நீர்க்குமிழியை வெளிப்படுத்தும (நற். 124:4-9).

**அந்தணர் - 1. ஆறு அங்கங்களையும் துணையாகக் கொண்டு வேதத்தைப் பயில்வோர்.** சிவபெருமான் மிடற்றை அழகு செய்யும் நஞ்சுக்கறை வேதத்தைப் பயிலும் அந்தணரால் புகழப்படும் (புறம். க. வா:5, 6). இமயமலைச் சாரலில் மாலைக் காலத்தே அந்தணர் முத்தீ ஓம்பி அருங்கடனாய ஆவுதி புரிவர் (புறம். 2:22-24). பகைவரால் கொள்ள முடியாத காரியின நாடு, வேளவித் தீயினைப் புறந்தரும அநதணருடையது (புறம். 122:1,3). வேதக்கலவி நிறைந்து வேளவி புரியும் 'அந்தணர்க்கு மனனா அருங்கலங்களை நீரவார்த்துக கொடுத்தனர் (புறம். 361:4, 5). வயலில மலர்நத செந்தாமரையோடு ஆறு தொழிலுடைய அநதணா அறங்கருதிச செய்யும வேளவிததீ விளங்கும் நாடு சோழன் குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுடையது (புறம். 397:19-21). பலயானைச செல்கெழு குட்டுவன ஓதல், ஓதுவிததல, வேட்டல, வேட்பிததல, ஈதல், ஏற்றல் எனும ஆறு தொழிலையுடைய அறமபுரி அந்தணர்ககுப் பணிவான சொறகூறி ஒழுகினான (பதி. 24:6-8). புகழமிகக வேள்விகளைச செயது முடிதது, வேதம் நிறைந்த அநதணர்ககு அரிய கலங்களை நீா சொரிநது அளிததமையினால செலவக கடுங்கோ வாழியாதனுடைய அரண் மனை முறறம சேறுபட்டதாகக் கபிலர் புனைவர் (பதி. 64.4-6). முருகனுடைய ஒருமுகம. வேத மரபு தவறாத அநதணருடைய யாகங்களில தீங்கு நிகழா வணணம நினைக்கும் (முரு. 95, 96). முருகனை அந்தணரின செல்வமாக நககீரா குறிப்பிடுகினறார் (முரு. 263). ஓயமான் நாட்டு நலலியக் கோடனுடைய, அகழி சூழந்த ஆமூா காவலமைநத அந்தண ரிலலஙகளைக் கொணடது (சிறு. 187, 188). பொருநா, புலவா, அரிய வேததை யுடைத்தாகிய நாவினையுடைய அநதணா முதலியோர்க்கு அடைககபபடாவாயினும ஏனையோா எளிதின உள்ளே சேறறகரிய தலைவாயிலையுடையது நலலியககோடனின மூதூா (சிறு. 203-206). விளையாடு மகளிர் நீராடித துறையில் விட்டுச் சென்ற மகரக் குழையினைத் தனது உணவெனக் கருதிக் கவர்நத சிசிலிப் பறவை, பனைமரததின் மடலிடத்துச் செலலாமல், அந்தணர் யாகசாலையில் நட்ட வேள்வித் தூணில தங்கியது (பெரு 311-316). வேதங்களைத் தெளிவுற ஓதி, அவ்வேத நெறியில வாழநது, அறம் பிழையாது, அனபுடை நெஞ்சொடு விளங்கும் பெரியோரைச சார்ந்தமையால இனிதாகத் தங்கியுள்ள அந்தணர் உறையும் பள்ளி மதுரையினகண உளளது (மது. 468-474). அந்தணர் தெயவங்களை வேதம ஓதித துதித்துப பாடுதற்குப் பொயகை மலரில பூநதாதுணணும் தும்பி முரலவது உவமை (மது. 655, 656). அந்தணர் அநதிக் காலத்துச் செயயும் வினைகளைச செய்தனர் (குறி. 225). ஆறு அங்கங்களையும் அறியும் அந்தணர்க்குச் சிவபெருமான் அரிய வேதஙகள பலவற்றையும அருளிச் செய்தார் (கலி. க. வா:1).

அந்தணர் உறியில தங்கிய கமண்டலத்தையும் முக்கோலையும தோளிற் கொண்டு, குடை நிழலில் வெப்பமிகு காட்டுவழியிற் செலவர் (கலி. 9:1-4) தலைவியது ஆற்றாமை கண்டு ஆற்றாமையடைநத தோழியின நெஞ்சம் பெருமூச்சுவிடுவதற்கு, வேத நூற கேள்வியினை யுடைய அநதணர் விரும்பிச் செயயும வேள்வி யிடத்துத் தோன்றும் புகை உவமை (கலி. 36.23-26). அநதணர் மாலையில் செநதீச் செவ்வழல் தொடங்க அந்திக் காலத்தை எதிர்கொள்வர் (கலி. 119:11-13). அநதணரின வேதம் திருமாலின் பெருமையை விளக்கும் (பரி. 1:12,13). திருமால் அந்தணர் போற்றிக் காக்கும் அறமாக விளங்குகின்றார் (பரி. 1:40, 41). எலலோரிடத்தும பூத்து விளங்கும் திருமாலின அருள், நீர் நிறைந்த மேகத்தை ஒக்கும் என்று அநதணர் வேதம் உணர்த்தும் (பரி. 2:56,57). வேள்வித் தீயை முறையாக மூட்டிச் சுடரினது பெருக்கத்தை உண்டாக்கிக் கோடல அநதணர் காணகின்ற திருமாலின வெளிப்பாடாகும் (பரி. 2:63-68). வேதமெனும ஓடையில் மலர்ந்த தாமரைப் பூவில் தோன்றிய அயனும் அவனுடைய தந்தையும் திருமாலே என்று அநதணர் அருமறை மொழியும் (பரி.3:12-14). அந்தணரின அருமறைப் பொருள திருமாலை ஒதது விளங்கும் தன்மையது (பரி. 4:65). மைந்தரும் மகளிரும் கூடி நீராடுவதால் அவர் சூடிய பூக்களாலும் எணணெய முதலிய பூச்சுக்களாலும் வையை கலங்கி வேறுபட்டது; அதன் தூயமை யற்ற தனமை கண்டு அநதணர் நீராடாமல் கலக்க முற்று அகன்றனர் (பரி. 6:43-45). முன்பனி மிகக மாாகழித திஙகளின் நிறைமதி விளங்கும் திருவா திரை நாளின்கண் ஆகமங்களை யுணர்நத அநத ணர் சிவபெருமானுககு விழாச் செய்யத் தொடங் குகின்றனர்; புரிநூலந்தணர் பொனனா லாய கலததை ஏநதுகினறனர் (பரி. 11·74-79). இரணடு பிறப்பினையும் அபபிறப்பினால வநத இரணடு பெயரையும் அனபுடை நெஞ்சத்தையும உடைய அநதணரின் அறத்தை முருகன விரும்புவன் (பரி. 14:27,28). தருமத்தோடு வேதங்கூறும தவத்தைப் புரிநது, அதனால நிலைத்து நிற்கும் புகழையும் தம்நிலையில் திரியாத் தனமையையும் உடைய அநதணர் வாழுமூா இருநதையூர் (பரி. தி. 1:18-21). வையை மைந்தரும் மகளிரும் கொணட மணப் பொருள்களின் நாறறத்தை வீசியதெனறு அநதணர் அதனகண் நீராடாமல நீங்கினர் (பரி. தி. 2·60,61).

2. **காவியுடை அணிந்த துறவியர்.** மாலைக் காலத்தில் கடற்கரை மணல் மேட்டில் நாரைகள் அமர்ந்திருப் பதற்கு, முக்கோலைக் கையிற் கொணட அந்தணர்-துறவியர்-முதுமொழி நினைந்து அந்திக் காலத்தில் விளங்கும் காட்சி உவமை (கலி. 126:3-5).

**அந்தணரிருவர் - வியாழனும் வெள்ளியும்.** கள்ளுண் டலை விலக்கிய தேவர்க்கும் அதனை விலக்காது மேற்கொணட அசுரர்க்கும் அந்தணரிருவர்-வியாழ னும் வெள்ளியும்-அறநூல செய்தனர் (கலி. 99:1-3).

**அந்தணன் - 1. கடவுள்** (சிவன்). செவ்வான் போன்ற மேனியும் வானப் பிறை போன்ற எயிறும் பிறை யொடு ஒளிரும் சடைமுடி யுடைய சென்னியும் புலித்தோலாடையும் கொணடு யாவரும் அறியாத பழமை இயல்புடனும் நீலமணி போலும் மிடற்று டனும் விளங்கும் அந்தணன் - கடவுள் - என்று சிவபெருமான குறிககப்படுகின்றார் (அகம். க. வா. 8-15). இமயவில்லை வளைத்தவனும் கங்கை யைச் சடையில் உடையவனுமாகிய அந்தணன் உமையம்மையோடு கயிலை மலையினில இருந்த போது, பத்துத் தலையுடைய அரக்கர்கோமானாய இராவணன் தன்னுடைய கையால் இமயமலையைப் பெயர்க்க முயன்று முடியாது துன்புற்றான் (கலி. 38:1-5).

2. **வியாழம் என்னும் கோள்.** அந்தணன் - வியாழம் - சனியின் இரணடிலலமாகிய மகர கும்பங்களுக்கு அப்புறத்துள்ள மீனத்தைச் சேர்ந்தான் (பரி. 11:7,8).

3. **பார்ப்பனன்** பாரி மகளிரை விசசிக்கோனிடம் கொண்டு சென்ற கபிலர் தம்மை ஒரு பரிசிலன் என்றும அநதணன் - பார்ப்பனன் - என்றும அறி முகப்படுததிக் கொள்வர் (புறம். 200:13). கபிலர் இருங்கோவேளிடம் சென்ற போதும, தம்மை ஓா அந்தணனாகிய புலவனென்றே குறிப்பிடுகின்றார் (புறம். 201:7). பொயகையில புதிதாய் மலர்ந்த தாமரைமலரை ஆண்அன்னம் தன் பெடையன்னத் தோடு சுற்றிவருவதற்குத் திருமண நாளில் தன் வாழ்க்கைத் துணையான மணப் பெண்ணொடு அந்தணன் ஓமத்தீயினை வலம் வருவது உவமை (கலி. 69:1-7).

**அந்தணாளன் - அந்தணன்.** மாறோககத்து நப்ப சலையார் மலையமான் திருமுடிக்காரியைப் பாடிய புறப்பாட்டில, உலக மககள் அனைவருள்ளும சிறந்த மாசற்ற அறிவுடைய அந்தணாளன் - அநத ணன் - எனறு கபிலரைக் குறிபபிடுகினறார் (புறம். 126:10,11).

**அநதரம் - விண்ணிடம்.** அநதரம் - விணணிடத்தில் துந்துபி ஒலிக்கவும் சங்குமுழஙகவும இடிபோலும் முரசம் முழங்கவும் முருகன் வென்றெடுத்த கொடி யில மயில அகவும் (முரு. 119-122). பதினொன் வகை யினரான உயர்ந்த நிலை பெற்றவர் அந்தரத்தே

சுழற்சியுடையராய் ஏரகத்தில் முருகனைக் காண விழைவர் (முரு. 168-174). அந்தர வானியாறு (பரி. தி. 2:95).

**அந்தரமகளிர் - வான மங்கையர்** நின்னைக் கூடிப் புனலாடியதனால் பரத்தை அந்தர மகளிரும்-வானமங்கையரும் வணங்குதற்குரிய தெய்வம் போன்று நலத்தில் மேம்பட்டாள் என்று தோழி தலைவனிடம் அவனுடைய பரத்தைமை ஒழுக்கம் தான் அறிந்தமை தோன்ற நகையாடிக் கூறுகின்றாள் (ஐங். 76).

**அந்தி - 1. மாலைப் பொழுது.** அந்தியில் - மாலைப் பொழுதில்-அந்தணர் எரியோம்பி ஆவுதி செய்வர், (புறம். 2:22, 23). காலைப்பொழுதிலும் மாலை அந்தியிலும் பாணர் தம் சுற்றத்துடன் உணவயின்றனர் (புறம். 34:8-14). வானக் கடலைக் கதிரவன் கடக்கும் போது அவனுடைய கதிர்கள் ஒளி குறைய அந்திக் காலம் சிவந்துதோன்றும் (புறம். 376:1-3). மாலைப் பொழுதில் போர்க்களத்தில், பெடையொடு கூடிய பருந்தினம் தசை உணவை உண்ணும்; அதன் ஒருபக்கத்தில் தலையற்ற கவந்தங்கள் ஆடும்; அப்போது அந்திமாலை விசும்பு போலச் சிவந்து தோன்றும் குருதி மன்றத்தில் பேய் ஆடும் (பதி. 35:3-9). ஈரைம் பதின்மரும் (துரியோதனன் முதலியோரும்) சண்டை செய்து இறந்த போர்க்களத்தில், இளம்பிறையினை அணிந்த மேகம் அந்தியில் செக்கர்வானத்திற் செல்லுதல் போலத் தந்தத்தைக் கொண்ட யானையைக் குருதி வெள்ளம் இழுத்துச் சென்றது (பெரு. 412-415). தெய்வத்திற்கு எடுக்கும் திருவிழாவில் ஏழாம் நாளாகிய இறுதி நாளில், அந்திக் காலத்து மக்கள் நீராடி மகிழ்வர் (மது. 427,428). மதுரை நகரில் மாயோன், முருகன் முதலிய தெய்வக் கோயில்களில், பலிகளைக் கொடுப்பதற்காக அந்திக் காலத்தில் எடுக்கப்பெறும் விழாவில் இசைக் கருவிகள் முழங்கும் (மது. 458-460). பகைவரிடத்தினின்றும் கொண்டு வரப்பெற்ற மகளிர் நீர்த்துறையில் நீராடி அந்திக் காலத்தில் பலரும் தொழும் அம்பலத்தின்கண்ணே யுள்ள தெய்வம் உறையும் தூணுக்கு விளக்கேற்றிப் பூக்களைச் சூட்டுவர் (பட். 246-249). உலையிற் காய்ச்சப்பெற்று மெதுவாக ஆறிவரும் பொன்னின் நிறத்தைப் போல அந்திக் காலத்தில் செக்கர்வானம் மலர்ந்தது (அகம். 71:6) மாலை அந்தியில் காவலர் முரசு முழக்கிக் காவல் புரிவர் (அகம். 124:13-16). தழையுடை யணிந்து பரதவப் பெண்டிர் நீர்த்துறைக்கண் ஞாயிறு மறைந்த நிறைமதிநாளின் அந்திப் பொழுதில், கடல் தெய்வத்தை முத்தமொடு வலம்புரியும் சொரிந்து வழிபடுவது மரபு (அகம். 201:5-8). இரு பெருந்தெய்வங்களாகிய சிவன், திருமால் ஆகியோரின் செந்நிறமும் கருநிறமும் ஒருங்கே பொருந்திய தோற்றத்தினைப் போல, அந்திவானத் தழலையும் கடலழகையும் ஒருங்கே கொண்டு மாலைக்காலம் வந்தது (அகம். 360:6-9). அந்திக் காலத்தில் ஞாழல்மலர்க்கண்ணி சூடி, நெய்தற்பூ மாலை அசையக் கடல் தெய்வம் கரையில் நிற்பது போல், தலைவி கடற்கரைச் சோலையில் தனித்து நின்றாள் (அகம். 370:9-13). வண்டு தேனுண்ணப் பிடவம் அந்தி மாலைப் பொழுதில் மலரும் (நற். 238:3,4). தெய்வத் தன்மை பொருந்திய ஆலமரத்திற்கு இட்ட பலியுணவைத் தின்ற காக்கைகள் அந்திக் காலத்தில் தத்தம் சுற்றம் இருக்கும் இடத்தைச் சேர்ந்தன (நற். 343:4-7). இரையினை உண்டு, அதனால் ஒய்ந்து பறக்கும் மடநடை மாயினம் (அன்னக்கூட்டம்) இமயமலையின் ஒரு பக்கத்தே அந்திக்காலத்தில் தங்கியிருப்பது போன்று மணல் மேட்டில் மகளிர் ஆயத்தாருடன் தங்கினர் (கலி. 92:16-19). வெண்ணிறப் புள்ளிகளையுடைய சிவந்த காளைக்கு, விண்மீன்கள் விளங்கும் அந்திக்கால மேகத்தையுடைய சிவந்த விசும்பு உவமை (கலி. 103;13,14).

**2. காலைப்பொழுது.** பாலொடு கலந்து சமைத்த வரகுச்சோற்றினைத் தேனொடு கலந்து, முயற்கறியோடு காலையந்தியிலும்-காலைப்பொழுதிலும்-மாலை அந்தியிலும் பாணர் தம் சுற்றத்துடன் இலந்தைமர நிழலில் உண்டனர் (புறம். 34:8-14).

**3. நன்பகல்.** நன்பகலாகிய அந்தியில் (உச்சிக் காலத்தில்) அரக்கை உருக்கினது போன்ற செந்நிலத்தில் நடந்தமையால் அங்குள்ள சுக்கான்கல் மலர் மரல் பழுத்தது போலப் பாடினி பாதத்தில் கொப்புளம் உண்டாயது (பொரு. 43-46).

**4. ஊழிக்காலம்.** பல்லுயிரும் வருத்தங் கொள்ளும் அந்தியில் - ஊழிமுடிவில் - பசியநிறத்தைத் தன் பாகத்துக் கொண்ட கடவுள் (உருத்திரன்) எருமையினை ஊரும் கூற்றுவனுடைய நெஞ்சைப் பிளந்து அவனது குடலைக் கூளிக்கிடுவன் (கலி. 101:24-26).

**5. மலர்.** வெந்து ஆறும் பொன் போல அந்தி மலர்ந்தது (அகம். 71:6). ['வெந்தாறு பொன்னின் அந்தி பூப்ப என்னுமிடத்தில் 'அந்தி ஒரு மலருமாம்' என்று பழைய உரை குறிக்கும்.]

**அந்திஇளங்கீரனார் - புலவர்.** பாலைத் திணையில் அமைந்த இவர் ஒரே பாடல் அகநானூற்றில் (71) உள்ளது. 'மையில் மானினம் மருளப் பையென, வெந்தாறு பொன்னின் அந்திபூப்ப' என்று இவர் வரைந்த மாலைக்காலச் சொல்லோவியத்தில் இடம்

பெற்ற அநதி என்ற சொல், இளங்கீரனார் என்னும் இயறபெயருக்கு முன்னடையாக அமைநதுள்ளது. மேலும் இநத அடைமொழி தொகை நூலகளில் இடம பெற்ற இதே பெயருடைய புலவரினின்றும் பிரித்துக் காணபதறகு வாய்ப்பாகவும் அமைந்துள்ளது. சுனைப் பூவைத் துறந்து, சினைப் பூக்களை நாடும் வண்டுகளுக்குச் செல்வங் குறைந்தவரைத் துறநது செல்வமுடையாரை நாடும நயனின் மாக்களையும், மாலைக் காலத்தின் செக்கர்வானத் தோற்றத்திறகு வெந்தாறு பொனனின் தோற்றத்தையும உவமை காட்டியிருப்பது நயமிக்கதாகும். தலைவன் பிரிந்தமையால் மெலிந்த தலைவியின் உயிர் மெல்ல மெல்ல வலிமையை இழப்பதற்குக் கண்ணாடியில் ஊதப் பெற்ற ஆவி சிறிது சிறிதாகக் குறைவதனை உவமங் காட்டியிருத்தல் சிறப்பானது (அகம். 71:1-6;13-16).

**அந்திப் பசுங்கட் கடவுள் - உருத்திரன்.** காரி எருது, ஏறு தழுவும் ஆயனைக் குதத, அவன் குடர்சொரிய நிற்கும் காட்சிக்கு, அநதிப் பசுங்கட் கடவுள் -உருத்திரன்- உவமை (கலி. 101:21-24).

**அந்துவஞ் சாத்தன் - குறுநில மன்னன்.** இப்பெயர் அந்துவன் மகனாகிய சாத்தன் என்று பொருள்படும். இவன் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் நண்பருள் ஒருவன 'உரைசால் அந்துவஞ் சாத்தன்' என்று சிறப்பிக்கப் பெறுவன (புறம். 71:12,13).

**அந்துவஞ் செள்ளை - சேரமன்னன் மனைவி.** பதிற்றுப் பத்தின் ஒன்பதாம் பத்தினுடைய தலைவனான இளஞ்சேரலிரும்பொறைக்குத் தாயும், குட்டுவன் இரும்பொறைக்கு மனைவியும், மையூர் கிழானுக்கு மகளுமாவாள் (பதி. ப. 9). இது மக்கள் தாய முறையை அடியொற்றிய விளககம். இங்ஙனமன்றி மருமக்கள் தாயம் கொள்வோர் இளஞ்சேரலிரும பொறைக்குத் தாயும் மையூர் கிழானுக்கு மனைவியும் குட்டுவன் இரும்பொறைக்கு உடன்பிறந்தாளுமாவாள என்று கூறுவர்.

**அந்துவன் - 1. புலவர்.** நல்லந்துவனார் என்றும் வழங்கப்பெறுவர். அகநானூற்றுப் பாடலொன்றில் முருகனுடைய பரங்குன றதனைக் குறிக்கும் போது மதுரை மருதனிளநாகன 'அந்துவன பாடிய சந்து கெழு நெடுவரை' என்று இவரைப் பாராட்டிப் பாடியுள்ளார் (அகம. 59:12). நலலந்துவனார் காணக.

**2. சேரமன்னன்.** அநதுவஞ்சேரல் இரும்பொறை என்றும் குறிக்கப்படுகின்றான். பொறையன் பெருநதேவியின் கணவனும் செல்வக்கடுங்கோ வாழியாதனின் தநதையுமாவான். இவ்வாறன்றி மருமக்கள் தாயங் கொள்வோர் இவனைச் செல்வக் கடுங்கோவிற்குத் தாய் மாமனாகவும் பொறையன் பெருந்தேவிக்கு உடன் பிறந்தோனாகவும் கூறுவர் (பதி. ப. 7:1,2).

**அந்துவன் கீரன் - வள்ளல்.** அந்துவன் மகனாகிய கீரன் என்பது பொருள். புறநானூற்றில் இவ்வள்ளலைப் பெருங்காஞ்சித்துறைப் பாடலில் காவேட்டனார் பாராட்டி யுள்ளார். இரவலர்க்குக் குறையாமல் கொடுத்தலால் எய்தும் புகழ இவன் இறந்த பின்னரும் இவ்வுலகத்து நெடிது நிலைத்து விளங்கும் என்று கொடைப்பகழ் கூறிச் செவியறிவுறுத்தி யுள்ளார் (புறம் 359:15-18).

**அப்புநுனை - அம்பின் தலையில் இடும் குபபியின் நுனி.** இருப்பையின் அரும்பிற்கு அபபு நுனை-அம்பின் தலையில் இடும் குபபியின் நுனி-உவமை (அகம. 9:3).

**அம்பண அளவை- மரக்கால் அளவை.** செல்வக் கடுங்கோ வாழியாதன் தன்னாட்டில் விளைநத அம்பண அளவையால - மரக்கால அளவையால் - அளக்க முடியாத நெல்லாலமைந்த உணவினைத் தருவான (பதி. 66:7-9). கிளையுடன கூடிய குளவிக் கூட்டிற்குக் கடா விடும் களத்தில அம்பண அளவைக்கு உறையாகக் குவித்துள்ள செந்நெல் தொகுப்பு உவமை (பதி. 71:4-6).

**அம்பணம் — 1. நீர் விழும் தூம்பு.** நிலாவின் பயனை அரசன நுகரும் பெரிய நிலாமுற்றத்தினில் விழும் மழை நீர், திறந்த வாயுடைய சுறாமீன் வடிவில் இருககும் அம்பணம் -நீர் விழும் தூம்பு - வழியாக அருவி போல் விழும் (நெடு. 95-97).

**2. மரக்கால்.** அம்பணம்-மரக்கால்-போனற ஆமையின முதுகில் ஏறி அதன் குட்டிகள் உறங்கும் (ஐங். 43:1,2).

**அம்பர் — சோழ நாட்டு ஊர்.** இது காவிரி பாயவதால் பயன்தரும் தோட்டமும் கழனியும் சூழ்ந்தது; இஃது அருவந்தை எனனும் வள்ளலுக்கு உரியது (புறம. 385:8-10). அம்பரைச் சுற்றி அரிசிலாறு ஓடுகிறது (நற். 141:9,10).

**அம்பர் கிழான் அருவந்தை - வள்ளல்.** இவன் காவிரி பாய்வதால பயன்தரும் தோட்டமும் கழனியும் சூழ்ந்த அம்பா என்னும் ஊருக்குரியவன் (புறம். 385:8-10). அருவந்தை காண்க.

**அம்பல் - சிலர் அறிந்து புறங்கூறும் மொழி.** தலைவன் தலைவியோடு கூடிய கேண்மையினை முன்பு அலர் வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்றப் பலரும் அறிந்தனர்; இப்பொழுது வதுவை கூடிய பின்னர் பாண்டியரது திருவணைக் கரையில் வெல்போர் இராமன் மறையை ஆராய்வதற்காகக் கையைக்

கவித்தவுடன் ஆலமரத்திலிருந்த பறவைகள் ஒலியடங்கியது போல அழுங்கல் ஊரினர் ஒலியடங்கினர் (அகம். 70:4-7, 13-17). கடற்றுறையில் நாரை ஒலித்தது போல எம்முடைய ஆரவாரம் மிக்க ஊரில் அம்பல் எழுந்தது என்று தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாவினாள் (அகம். 100:13-18). தலைவன் இன்று ஒருநாள் வந்து அருள் செய்யாமையின் ஒருங்கே வந்து அம்பல் ஆகுமாறு ஒண்ணுதலில் பசப்பு உண்டாயது என்னையோ, எனத் தலைவி தோழியை வினவினாள் (அகம். 102:16-19). புறங்கூறும் அம்பல் ஒழுக்கத்தினையும் வெவ்விய சொல்லினையும் உடையவர் சேரிவாழ் பெண்டிர் (அகம். 115:2-4). தலைவியின் தாய் உவந்தாலும் சினந்தாலும், அவளே ஆய்ந்துணரட்டும் என்று கருதாமல் அலர் கூறுந் தொழிலை விரும்பும் அம்பற் பெண்டிர் தம் கொடிய வாயால் உன் மகள் இத்தகையள் என்று தாயிடம் பல நாளும் சென்று கூறினர் (அகம். 203:1-5). 'அன்னை அறியினும் அலர்வாய்ப் பெண்டிரது அம்பலை மூதூர் கேட்பினும் தண்பெருஞ் சாரலின்கண் பகலில் வருக' எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் (அகம். 218:18-22). 'முசுண்டை என்பானது வேம்பி அன்ன எனது இளநலம் தொலையினும் தலைவர் நல்காராகவும் பல நாளாக இவ்வூரார் செய்யும் அம்பல் ஏனோ' எனத் தலைவி தோழியை வினவினாள் (அகம். 249:1-10). நாணின்மையாகிய பெருமரம் ஊரவர் கூறும் அம்பலாகிய கிளை கொண்டு, காதலாகிய தளிர் பரப்பி, உலக மெல்லாம் நிழல் செய்து, அலராகிய மலர்களைத் தோற்றுவித்தது (அகம். 273:13-17). அலர்வாய் ஊரும் தலைவனோடு தலைவியைச் சேர்த்தே அம்பல் கூறும் (அகம். 282:12,13). 'முரசுக்கண் அதிர்ந்தாற்போன்ற மூதூரில் பழியினைத்தூற்றும் வெவ்வாய்ச் சேரிப் பெண்டிரது அம்பலும் அலரும் நம்மிடத்தே ஒழிய, நம்மைப் பிரிந்து சென்றார் ஆயினும் அவர் செய்யும் வினை கைகூடுவதாக' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 347:5-9). அம்பல் ஊரும் தலைவியைத் தலைவனோடு சேர்த்தே கூறும் (குறு. 51:6). பரத்தையராற் கூறப்படும் அம்பல் கோழிப்பேடை, வேலிக்கு அயலிலுள்ள காட்டுப்பூனை யினம் மாலைக் காலத்தில் உற்றதெனப் புகுமிடம் அறியாது, ஒருங்கு கூடும் பொருட்டுத் தன்னுடைய பிள்ளைகளை அழைத்துக் கூவினாற் போன்று இன்னாதிசைக்கும் (குறு. 139). 'பிறர் பிறர் அறியும்படி கூறுதல் அவர் மனம் அமைந்தாங்கு அமைக; அவர் கூறும் அம்பல் என்ன துன்பத்தைச் செய்யும்' எனத் தலைவி தோழியிடம் உரைத்தாள் (குறு. 175:5-7). 'தலைவன் சொல்லின் தேறி, யாம் எம் நலனை இழந்ததனாலே துயிலினை இழந்தனம்; அலர்வாய்ப் பெண்டிரின் அம்பலோடு ஒன்றிய இவ்வழுங்கல் ஊர் தீய சொற்களைக் கூறுதற்கு வேண்டிய உரைகளை யெடுத்து அழியாத பழிமொழியை யுடையதாக எம்மைப் போல் எதனை இழந்தது; இந்நடுயாமத்திலும் துயின்றிலதே' எனத் தோழி கூறினாள் (நற். 36:4-9). தலைவியின் நுதற்கவினை அழிக்கும் பசலையையும் அயலோர் தூற்றும் அம்பலையும் அளித்துத் தலைவன் பிரிந்து சென்றான் (நற். 73:10,11). கண் தெண்பனி யுறைப்பத் தோள் இழை நெகிழ அம்பல் மூதூர் அலரெடுத்தது (நற். 85:1-5). அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிரின் இன்னாத இன்னுரையினைக் கேட்டும் அறியேன் போலிருந்தேன் என்று மகட்போக்கிய தாய் புலம்பினாள் (நற். 143:7-9). தெருவிலுள்ள மகளிர் சிலரும் பலரும் கூடிநின்று கடைக்கண்ணாலே நோக்கி வியப்புடையவர் போல மூக்கின் நுனியில் சுட்டு விரலை வைத்துத் தலைவியைப் பற்றி அம்பல் கூறுவர் (நற். 149:1-3). அம்பல் மூதூர் துஞ்சாக் கண்ணராகிய பெண்டிரை உடையது (நற். 223:8,9). தலைவன் தேர் அம்பல் மூதூர் அலரெழச் சென்றது (நற். 249:10,11). தலைவன் அளி செய்யாமையின் விருப்பம் பழுதாகச் செயலழிந்த தலைவி நோய், அலர்வாய் அம்பல் மூதூரினரால் அறியப்பட்டு முன்பு கொண்டிருந்த நோயினும் கொடிய நோயாகின்றது (நற். 272:6-10). தலைவன் ஊரவர் தூற்றும் அம்பலுக்கு அஞ்சானாய் இரவில் வருவதோடு தினைப்புனத்தின்கண் பகலினும் வருவானாயினான் (நற். 285: 9-11). 'அன்னை ஆதன் அவினி வாழ்க என விரும்பினாள்; யாம் தலைவன் நட்பு அம்பலாகக் கூடாது என விரும்பினோம்' என்று தோழி கூறினாள் (ஐங். 9). தலைவி ஊர் கல்லகத்தது; அஃது அம்பல் தூற்றும் சேரியை யுடையது (ஐங். 279: 4,5). தலைவனைப் பிரிந்தமையால் அயலிலுள்ளோர் தம் நெஞ்சில் அறமில்லாது வெளிப்படையாகக் கூறும் அம்பல் மொழிக்குத் தலைவி நாணினள் (கலி. 3:1). தலைவியின் மென்றோள் பசலையும் அம்பலும் பொய்யாகிய களவிற் கூட்டமும் ஒருசேர நீங்கும்படி தலைவன் வரைய வந்தான் (கலி. 39:48-50). மாட்சிமை யில்லா இவ்வூரில் அம்பல் இனி அலரினால் அலர்க என்று கருதி நாணும் நிறையும் விரும்பாத பிறப்பிலி எனத் தலைவி தலைவனைக் குறித்தாள் (கலி. 60:28,29).

**அம்பலம்-மன்றம்.** திருப்பரங்குன்றத்திலுள்ள எழுதிய அழகையுடைய அம்பலம் - மன்றம் - காமவேள் படைபயிலும் இடத்தை ஒக்கும் (பரி. 18:27-29).

அம்பாவாடல் - தாயரொடு தைந்நீராடல். முன்பனிப் பருவத்து மாாகழி மாதத்தில் ஞாயிறு பூராடத்தில நிற்குங்கால் நிறைமதியும திருவாதிரையும கூடிய நாளின்கண் அந்தணர் சிவனுக்கு விழாச் செய்யத் தொடங்கினர். முப்புரி நூல் அந்தணர் பூசைப பொருள்களைப் பொறகலங்களில் ஏந்தி நின்றனர். கனனிப பெண்கள மழைவளம் சுரக்க வேண்டினர். நோன்பு பூணடு நீராடும் முறைமையைச் சடங்குகளை அறிந்த முதுபெண்டிர் கன்னியர்க்குக் காட்ட அவர் அருகே நினறு காலைப் பொழுதினைப் பாடிய வணணம் தைந்நீ ராடினர் (பரி. 11:75-86). (அம்பாவை ஆடல் என்பது அழகிய பாவையைக் கொண்டு ஆடல் என்னும் பொருளுடையது. இது பினனர் அம்பாவாடல் என ஆயிற்று எனக் கொள்ளலாம).

அம்பி - ஓடம். மதுவும் சோறும் வருவார்க்கு வரையாது வழங்கும் வள்ளலின் வீட்டு முற்றம் அவனிறந்த பினனர்ப் பொலிவற்றுக் கிடப்பதறகு நீரற்ற ஆற்றில் கிடக்கும் அம்பி உவமை (புறம். 261:1-4). மீன்விறறு நெலலைக் குவித்து வைத்த வீடு அம்பி போல் உளளது (புறம். 343:1,2). பெரியவராயினும் சிறியவராயினும அவரிடம் காசு பெறாமல அறத்திற்காக அவரை மறுகரை கொணடு சேர்க்கும அமபி போனறவன் கருமபனூரன் மகன் (புறம். 381:23-26). நீர் வற்றிய ஆற்றின்கண வெயிலில கிடக்கும் அம்பிபோல வெபபமிக்க பாலை வழியில் செல்லும் யானை நீர்நசையால் வாடி அசைவற்றுக் கிடந்தது (அகம. 29:15-18). கடலிடத்தே அசைந்து தோன்றும் அம்பி போலப் பாலைவழியில் செயலற்று யானை அசைந்து கொண்டிருக்கும் (அகம. 187:18-23). திணணியதாயக் கட்டப்பட்ட நீரில் மிதக்கும் அம்பி போல, நீராடும் எருமை காட்சியளிததது (ஐங. 98:1,2). கடற்கரையில் உள்ள சிறுவெணகாககை துறையின்கண இருக்கும் அம்பியின உள்கட்டைக்கண முட்டையிடும் (ஐங. 168:1,2). வலிய கயிற்றால் பினனிய பெரிய வலையை ஏற்றிய அமபி, பரிக்கோல்காரர் பிணிததுச் செல்லும் அடக்குதற்கரிய களிறுபோலத் தோன்றும (நற். 74:1-4). ஆணடுகள் பல கழிந்தமையாலும் கடல அலைகளால தாக்கப பட்டமையாலும் தொழில் செயய உதவாத முரிந்த வாயை யுடைய அம்பியைத் துறையருகே யுள்ள புன்னை மரத்தின் வேரடியில கட்டி வைபபர்; அதறகு நலல மணப் புகையும் கொடார் (நற். 315: 1-6). சடற்கரைச் சோலையின் மணல் முனறிலில் உள்ள கரிய புன்னையினது அடி மரத்தில் அமபி கட்டப்பட்டிருநதது (நற். 354:5-7). ஏறு தழுவும் போது காளையின மேலிருந்து ஆடி அடக்கிய பின்னா அதனைத தழுவிக் கிடக்கும ஆயர்மகன் நீர்த்துறையில் இருக்கும் அம்பியைப் பொருந்தி அதனைத் தள்ளுகின்றவனைப் போன்று காணப்பெற்றான (கலி. 103:38,39). ஏறு தழுவுவோர் காளையை அடக்குகின்ற போது கொம்பினால் துளைக்கப் பட்ட துளையிலிருந்து ஒழுகும் குருதியினால் காளையைப் பிடித்த பிடி நழுவியது; மண்கொண்டு கைபிசைந்து குருதி போககி மறுபடியும காளை மீது பாய்ந்து ஏற்றைத் தழுவிய செயல், பரதவர் கடவுள் அம்பியின் மீது ஏறினாற் போலக் காணப் பட்டது (கலி. 106.23-25). வையை நீர் தேவர் வாழும் வானிடததே ஊர்ந்து செல்லும அம்பியாகிய விமானததையும் கரவாமல் காட்டவல்ல தெளிவுடையது (பரி. 11:70, 71).

அம்பு - கணை. வன்கணாடவர் அம்பு-கணை - விடுதலால வீழ்ந்த வம்பலரது உடல் மூடிய கற்குவையின மேல் பருந்து இருநது வருநதும் (புறம். 3:20-22). பரிசைகள தம்மேல தைத்த அம்பினால துளைபட்டு இலக்கத்தைப் போன்று இருந்தன (புறம்.4:5,6). 'எம அம்பினை யாம் விரைந்து செலுத்துவோம்; நீர் நுமககு அரணாகிய இடததைச் சேர்மின்' என்று பகைநாட்டு ஆன, ஆனியல் பார்ப்பன மாக்கள் முதலியோரைக் குறிததுக் கூறும அறநெறியாளன் முதுகுடுமிப் பெருவழுதி (புறம. 9:1-8). போரில் யானையின் மேல் தைதது நிற்கும் அம்பு குன்றத்தின்கண் தங்கியிருந்த குருவியினம் போன்றிருந்தன (புறம். 19:8,9). அம்பு தங்கும் காவல் அமைந்த அரணுடையவன யானைக்கட் சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை (புறம். 20:16). தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் மறவர் கூர் நலலம்பினையும் வளைந்த விலலினையு முடையவர் (புறம. 23:4,5). சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதனும் சோழன் வேறபல் தடக்கைப் பெருவிறற் கிள்ளியும் பொருது வீழ்ந்த போர்ப்புறததில பலயானைகளும் அம்பால கலங்கி இனி விளைக்கும போரின்றி மாணடன (புறம். 63:1,2). அதியமான நெடுமானஞ்சியின் மறமைந்தரது வலிமையைக் கணட அவன பகைவர் புண்பட்ட குருதியையுடைய அம்பைத் தூணியகத்தே அடக்கிக் கொள்வர் (புறம. 98:12-14). 'புகழசால் சிறப்பினை யுடைய அம்பு ஏவும் தொழிலிலே மிகத் திளைக்கும் கொலைவன்' என வல்வில ஓரியை வனபரணர் சுட்டுவர் (புறம். 152:7,8). வடிததல் பயின்ற அம்பினையுடைய வில்லோர்க்குத் தலைவன் பிட்டங்கொற்றன் (புறம். 168: 16). வாயவாட் பண்ணன் புலால் நாறும் அம்பினையும் பொருதற் கரிய காவற் காட்டினையும் உடைய வலாரென்னும் ஊரினன் (புறம. 181:5,6). அமபோடு வேல் தைத்து உருவுமிடமாகிய போர்க்

களம் முழுதும் அதியமான் தானே சென்று நிற்பன் (புறம். 235:7). போரில் மாண்டு அரிதுசெல் உலகிற் குச் சென்ற தலைவனொருவனது உடம்பு கானச் சிற்றாற்றின் கரையிடத்தே காலுற நினறு நடுக்கத் துடன் சாய்ந்த இலக்கத்தைப் போல் அம்பால் சலிக்கப்பெற்றுச் செருவிடை வீழ்ந்தது (புறம்.260: 21-24). காலமாரியைப் போல் அம்பு சென்று தைத் தல் (புறம். 287:3). முன்னைநாளில் பகைவரொடு புகழுண்டாகப் பொருது வீழ்ந்த உரவோர் மக னான போர்மறவன் களத்திலே தனது மார்பின் புண்ணிடத்தே தைத்து நிற்கும் அம்பினைப் பிறர் காட்டிய போது அதனைத் தான் கருதவில்லை என்று கூறினான் (புறம். 310:5,6). வேட்டுவச் சிறுவர் உடைவேலினது முள்ளை ஊகம்புல்லினது கோலில் செறித்துச் செய்த அம்பினை வளாரினால் ய்த வில்லில் தொடுத்துக் காட்டெலியை எய்யக் குறி பார்ப்பர் (புறம். 324:3-7). சிறுவர் தாம் தொடுத்து விளையாடிய அம்பு அழிந்தபோது தமர் முகத்தைக் காணார் (புறம். 373:16,17). கையுறைகளைக் களைந்தறியாத மறவர் சுற்றத்தோடு இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் அம்பினைத் தெரிந் தெடுத்துப் போர்புரியும் தொழிலையே விரும்பி யிருந்தான் (பதி. 19:9,10). அம்புடை ஆரெயில் (பதி. 20:19). அம்பினைக் கொண்டு போர்ப்பயிற்சி பெறு வோரது ஆரவாரத்தைத் தமது நீர்விளையாட்டுப் பூசலால் அடக்குவோராய் மக்கள் இன்புற்றிருந்த பகைவர் நாடுகளின் வளமெல்லாம் பல்யானைச் செல்கெழு குட்டுவனால் பாழ்படுத்தப்பட்டன (பதி. 22:29-31,38). போர்வேட்கையால் எப்பொழுதும் நாணியேற்றியே கிடக்கும் வில்லினை யேந்திய வயவர் கையினின்றும் அம்பினைக் களைதலறியாத பாசறையில் பல்யானைச் செல்கெழு குட்டுவன் தங்கியிருப்பான் (பதி. 24:12-14). விற்கள் விசை யுடன் வெளிப்படுத்திய கூரிய முள் போலும் அம் பாகிய அகழியைக் கொண்டது களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் படையாகிய அரணம் (பதி. 33:7-11). அம்புகள் தைத்த உடம்பினை உடையவரோ டன்றி ஏனையோருடன் போரிடு மாறு தும்பை சூடாத மாண்பினையுடைய மற வர்க்குப் பெருமகன் ஆவான் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. 42:5-7). புற்றில் அடங்கிக் கிடக்கின்ற அரவினைப் போன்று தூணியில் ஒடுங்கிக் கிடக்கின்ற அம்பினை யுடையவர் செங்குட்டுவனின் படைமறவர் (பதி. 45:1-5). அம் புடை வாயில் (பதி. 53:7). 'காத்தலை ஏற்றுக் கொள்வோனாகிய எம்மரசனுக்குத் திறையிடுக' என்று பகைவர்முன் கூறுகின்ற அம்புடைய வெற்றி யாளரால் பரவப் படுபவன் பெருஞ்சேரல் இரும் பொறை (பதி. 80:9-12). கூர்மையமைந்த அம்பினை உமிழும் அரண்களைச் சென்று கைக்கொண்ட விழுச்சிறப்பினன் நெடுஞ்செழியன் (மது. 67-69). தலைவன் தனது தடக்கையில் வண்ண வரிவில் லினை ஏந்தி அம்பைத் தெரிந்தெடுத்து வந்தனன் (குறி. 123,124,136). நாடு காக்கும் வேடர் கூப்பிடு தொலை சென்று தாக்கும் அம்பினையுடையவர் (மலை. 421,422). கூர்மை வாய்ந்த அம்பினையுடை யவன் கோடைப்பொருநனாகிய பண்ணி (அகம். 13:10,11) எதிர்ப்பட்டோரது அரிய மார்பகத்தே அழுத்திய அம்பினரான பகைமறவர் பலரைக் கள் வர் கோமான் புல்லி கைப்பற்றிக் கொணர்ந்தான் (அகம். 61:8-12). அரத்தினால் அராவப்பட்ட முனை யையுடையது வாளியம்பு (அகம். 67:5). பலவாகிய மாட்சியுற்ற அம்புடைய கையினராய்ப் பகைவரு டைய அரண்கள் பலவற்றை அழித்து நன்கலங் கொணரும் வயவர்க்குப் பெருமகன் ஆய் (அகம். 69:15-18). தலைவன் வில்லினைக் கையில் பற்றிச் சிறந்த அம்பினை ஆய்ந்து கொண்டு தன்னால் எய்யப்பட்ட யானை சென்ற நெறியினைத் தினைப் புனங் காத்திருந்த தலைவி தோழி ஆகியோரிடத்து வினவி நின்றான் (அகம். 82:10-14). வினைவல் அம் பின் விழுத்தொடை மறவர் (அகம். 105:13). நிணம் பொருந்திய வெண்முனை அம்பின் விசையால் வீழ்ந் தோர் பலர் (அகம். 109:7,8). சீழ்க்கை போலும் ஒலி யுடன்செல்லும் அம்பினைத் தப்பாது எய்யும் வெட்சி மறவர் விடியற்காலையிலே ஆக்களைக் கவர்ந்து கொண்டு சுரநெறியில் போயினர் (அகம். 131:6,7). மலையடிவாரத்துச் சீறூர்க்கண் வாழும் மருட்சி யுடைய மாக்கள் பலரும் கரடியேற்றையின் ஒலி யினை யுணர்ந்து திருத்திக் கொண்ட அம்பினை ராய் வில்லைத் தோளிலே கொண்டு இடந்தொறும் படர்ந்தனர் (அகம். 171:8-11). வீளை அம்பின் இளையர் (அகம். 182:4). மாரி அம்பின் மழைத்தோல் பழையன் (அகம். 186:15). வடிநவில் அம்பின் ஏவ லாடவர் (அகம். 215:10). செங்கண் ஆடவர் தீக் கொள்ளியுடன் பிடித்த நீண்ட திரண்ட அம்பின ராய் இரவிடைச் சென்று மாற்றார் ஊரை எறிந்து ஆக்களைக் கொணர்ந்தனர் (அகம். 239:3-5). மறவர் அம்பினைக் கொண்டு அறுத்த ஆத்தி நாரால் கரந்தைப் பூவைக்கண்ணி தொடுத்து நடுகல்லுக்குச் சூட்டினர் (அகம். 269:10-12). செறிமடை அம்பின் வல்விற் கானவன் (அகம். 282:2). ஆறலை கள்வர் தாதுண்ணும் தும்பியின் முரலிசை ஒப்ப, விரைந்து செல்வதாய் ஒலிக்கும் அம்பினை யுடையவர் (அகம். 291:12). அம்பினை வில்லில் தொடுத்து எய்து கரந்தை மறவரை ஓடச்செய்து அவர்க்குரிய ஆனிரைகளைக் கடுங்கண் மழவராகிய வெட்சி

மறவர் கவர்ந்து கொண்டனர் (அகம. 309:1-3). மாரிஅம்பின் மழைத்தோல் சோழர் (அகம. 336:20). தூதுபோகும பார்ப்பானது கையிலிருந்த மடிவெள் ளோலையைப் பொன்னாகுதலும் கூடுமெனக் கருதி அவனைக் கொன்னே வீழ்த்திய கடுங்கண மழவர் அவனது குருதியிற் குளித்துச் சிவந்த கோலாகிய அம்பினையுடையராய்க் கைந்நொடிததுப் போயி னர் (அகம 337:8-13). வழிப்போகும் வம்பலா கல னிலராயினும் ஆறலை கள்வராகிய கல்லா இளையர் தம் அம்பு தொடுக்கும் அமைதியைக் காணபதற கெனறு அவ்வம்பலரைக் கொல்வர் (அகம. 375:3-5). செந்நிற மூட்டினாற் போன்ற ஊன் பொருந்திய அமபுடன் காட்டுமான் அடிவழி ஒற்றித் தலைவன் வேட்டம் போயினன் (அகம. 388:24-26). போர்க் களம குருதியாற் சிவக்க அவுணரைக் கொன்றழித்த முருகக் கடவுள் செங்கோல அமபினை யுடையவர் (குறு. 1:1-3). மறவர் வடிநவில அம்பின் வினையர் (நற். 48:7). தலைவியின் தநதை வலிய வில்லையும் அம்பையுமுடையவன் (நற் 198:10,11). வீளை அம் பின் விலலோர் பெருமகன் மிஞிலி (நற். 265:3,4). குற்றத்தை யுடைய மறவர்தம் மூட்டுவாயினை யுடைய அம்புகள் அருநெறியிற் போவார்மேல் அழுந்துதல் (கலி. 6:2,3). பிரியக் கருதிய தலைவன் தான மருவிய புனைதல் மாட்சிமைப்பட்ட அம் பினை ஆயந்தான (கலி. 7:9,10). 'காமனே, நின அம்பு தனககுரிய நெஞ்சினைத் தன்மேல் அன்பில் லாதவன் ஒருவன் பொருட்டு வருத்துவித்தல் எலலார்க்குமாம் தனமையை உடையதோ' என்று அவனைப பெருநதிணைத் தலைவி வினவினாள் (கலி. 147:46,47). வெள்ளி, பொன், இருமபென் னும் மூவகையையு முடைய அரிய மதிலகள் ஒரு அம்பினால் வேவும்படி அவற்றைப் பைங்கட் பார்ப பான் (சிவபெருமான) எய்தான் (பரி. 5:25-27). திருமால் வரிகளமைந்த வில்லொடு வெற்றி மிக்க அம்பினை யுடையவர் (பரி. 15 60). முருகனது பரங்குன்றத்தில் உள்ள எழுதிய அழகையுடைய அம்பலம் அமபின் ஏத்தொழில நிலைபெற்ற காமவேள சிரமச் சாலையை (படைப்பயிற்சி செயயுமிடம) ஒக்கும்; அக் குனறததின் சோலைகளும் சுனைகளும பூவணிந்த செறிவினால அழகு துளும்புகின்றவை ஆர்மிகக கூரிய அம்பு நிறைந்த அககாமனது தூணியையொக் கும (பரி. 18:27-33). மணம் மிகக மலரம்பினோன் காமன் (பரி. 22:26).

**அம்புலி** - நிலா. அம்புலியை - நிலாவை - வாவென அழைத்து மகனுககுக் காட்டி மகிழ்ச்சி செயதல தாயககு இன்பந் தரும (கலி. 80:18, 19).

**அம்மூவனார்** - புலவர். அம்மூவன் எனவும் வழங்கப் படுவர். ஐங்குறுநூற்றில் இரண்டாவது நூலாகிய நெயதல திணைப் பாடலகளைப் பாடியவர். அக நானூற்றில ஆறு பாடல்களும் (10, 35, 140, 280, 370, 390) ஐங்குறுநூற்றில் நூறுபாடல்களும் (101-200) குறுநதொகையில பதினொரு பாடல்களும் (49, 125, 163,303, 306, 318, 327, 340, 351, 397, 401) நற்றிணையில் பத்துப் பாடல்களும் (4, 35, 76, 138,275, 307, 315, 327, 395, 397) ஆக 127 பாடல் களைப பாடி யுள்ளார். குறிஞ்சித் திணையில அமைநதுள்ள குறுநதொகை 327 ஆம் பாடலும் பாலைததிணையில் அமைநதுள்ள நறறிணை 397 ஆம பாடலும் தவிர்தது ஏனைய பாடல்கள் அனைததும் நெயதல் திணையில் அமைந்திருப்ப தால், அகப்பாடல்களே பாடியுள்ள இவர் நெய்தல் திணை பாடுவதில் வலலவர் எனபது புலனாகும். தம் பாடலகளில கொற்கை, கோவலூர், கோயில வெண்ணி, மாந்தை ஆகிய இடங்களையும், பெணணையாற்றையும் சிறப்பித்துள்ளார். ஐங்குறு நூற்றுத் தொண்டிப்பத்தில் தொண்டி சிறப்பிக்கப் பட்டுள்ளது. கபிலருக்கு அடுத்தபடியாக மிகுதி யான சங்கப்பாடல்களைப் பாடிய சிறபபு இவருக் குண்டு. 'நெல்லும் உப்பும் நேரே ஊரீர் கொள் ளீரோ' என்று கூறி உப்பு விற்பவளைத் தடுத்து நிறுத்தி, 'நின்மெய்வாழ உப்பின் விலை எய்யாம்' என்று தலைவன் உரையாடியதாகப் பாடி யுள்ளமை நயமுடையதாகும். [சேரர்க்குரிய மேலைக் கரையினைச் சிறப்பித்துள்ளமையால் இவர் சேர நாட்டினராகலாமென்றும் அம்மூ, திம்மு, திப்பு போல அம்மு என்பது இவர்தம் இயற்பெயராகலா மென்றும் பி. நா. கருதுவர்: (நற்றிணை, பாடினோர் வரலாறு பக். 17). அம் என்பது சிறப்புப் பற்றி வந்த அடையென்றும், மூவன் எனபது மும்மூர்த்திகளைக் குறிக்கும் பெயராகலாமென்றும் கருதப்படுகின்றது: (த. வ. க. பக். 70). 'அம்மூலன்' என்ற பெயர் 'அம் மூவன்' என்று தவறுபட எழுதப்பட்டு அதுவே இப்புலவரின் இயறபெயராக வழங்கப்பட்டிருக்க லாம் என்றும் கருத்துரைப்பர்: (ச. சி. பெ. பக். 130).]

**அம்மெய்யனாகனார்** - புலவர். [நாகன் என்பது இயற் பெயரென்றும் நாகனார் என்னும் பெயருடை யார் பலராதலால அவரின் இவர் வேறாவர் என்ப தறிய இயற்பெயருக்கு முன்னர் அம்மெய்யன் என்னும் பெயர் புணர்த்தப்பட்டது என்றும் (அ. சி. பக். 76) அம்மெய்யன் என்னும் தந்தை பெய ரொடு சேர்த்து இவர் அம்மெயயனாகனார் என வழங்கப்பட்டாரென்றும் (த. வ. க. பக். 70) கூறப் படும்.] நற்றிணையில் இடம் பெற்றுள்ள இவர்தம் ஒரேபாடல் (252) பாலைத்திணையில் தோழி

கூற்றாக அமைந்துள்ளது. ஓமை மரக்கிளையில் தங்கிச் சிள்வீடு ஒலிக்கும் வழியே சென்று வேற்று நாட்டில முயன்று ஈட்டுப்பவர்க்கலலாது, வீட்டில இருப்போர்க்குப் பொருள் சேராது என்று பொருளீட்டலின் அருமையினைக் குறிப்பிட்டுள்ளார் (நற். 252:1-4).

**அமர் - 1. போர்.** மருதம் பாழ்படுமாறு காவலமைந்த நாட்டிற்குத் தீயிட்டு அமர்-போர்-புரிய விருமபிய சோழன இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளியின கருத்திற் கேற்ப அவனுடைய யானைகள் போரிட்டன (புறம. 16:16-19). உலகம் நெளியத் திரண்ட பெரும்படை கூடிய தலையாலங கானத்தே அமர் வென்ற பாண்டியன் நெடுஞ் செழியன் காலனைப் போலும் வன்மையன் (புறம. 23:15-17). கடல் கிழித்துச் செல்லும் கலம்போல யானை சென்று அகலபபடுத்திய போர்க்களத்தில வேலேந்திச் சென்று, பகையரசர் அழிய அமர் செய்து புகழ் பரவுமாறு அவர்தம் முரசத்தைக் கைப்பற்றிப் பாணடியன் நெடுஞ்செழியன் கள வேள்வி செய்தான் (புறம. 26:1-7,11). தம் புரவலன் அமர் வென்று மேம்பட்டு விளங்கும்போது, புலவர் அவன் புகழைப் போற்றி மேம்படுத்துவர் (புறம். 48:8,9). சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும பொருத போர்க்களத்தில், இருமன்னரும் இறக்கப் போர் முடிந்த நிலையில் 'தூசிப்படையினைத் தடுத்து அமரிடை ஒருவரை ஒருவர் வெலலுவோம' என்று மிகுதல எங்ஙனம் என வினவி இரங்குவர் கழாத்தலையார் (புறம. 62:1,7,8). அகனற பாசறைக கண் களங் கொளறகுரியோர் ஒருவரு மினறிக கனடார்ககு அச்சம் வர அமர் உடன வீழ்ந்தது (புறம. 62:11-13). 'சென்றமர் கடந்த நின ஆறறல் தோற்ற வெனறோய்', எனக் கரிகாறபெருவளத் தானை வெண்ணிக குயத்தியார் பாராட்டுவர் (புறம். 66:4). 'எனனொடு பொருவோம் எனற பகைவரை அரிய அமரில் அலறத் தாக்கித் தேரோடு அவர்ப்புறம் காணே னாயின் பேரமர் உண கண்ணினளாய இவளைப் பிரிவேனாகுக' எனப் பூதப்பாண்டியன் வஞ்சினமுரைத்தான் (புறம். 71: 2-6). அடுத்துப் பொரும் அமரைப் பொறுக்கும் மனவெழுச்சியுடைய வலிய முயறசியைக் கொணட விழுமியோன் அரசுரிமையைப பெறுவா னாயின் அது வற்றிய கயத்திடத்துக் கிடந்த நெட்டிச் சுள்ளியைப் போல நொய்தாய்த் தோனறும (புறம். 75:6-10). படையெடுத்துச் செல்வோர் முரசம் முழங்கச் சென்று அமர் புரிவர் (புறம. 93:1,2). 'நோயினாற் பட்டாரது உடம்பை, அவர் வாளாற் படாத குற்றம் நீங்க அவ்வுடமபைத் தருப்பைப் புலலிற் கிடததித 'தமது ஆணமையே பற்றுக் கோடாக நலலமரில படட மறவர் செல்லும உல கிறகுச செலக' என்று வாளினாற் போழந்து அடக்கஞ் செய்வர் (புறம. 93.5-11). அதியமான நெடுமானஞ்சி அரசர் எழுவரொடு பகைத்து மேற்சென்று அமரில வென்ற அநநாளிலும் புல வர்க்குப பாட அரியனாக விளங்கினான (புறம. 99: 9-11). 'வல்வேல் மலையன அலலனாயின நல்ல அமரைக் கடததல் நமக்கு எளிது' என்று தோற்ற பகைவா மலையனைப் புகழநது கூறினர் (புறம். 125:14-16). மலையன, காரி எனனும குதிரையைச் செலுத்திய பெரிய அமர் வெனற வீரனும வளளலு மாவான (புறம். 158.6,7). வாளமர் உழந்த தானை (புறம 161:31). ஏனாதி திருககிளளி, அமரைக் காணின், அவவமரை வெனறு, படையை விலக்கி எதிர்நிற்றலின, வாள்வாய்ககத் தைத்த வடுவழுந திய உடம்புடன கண்ணுககு இன்னானாகவும் செவிக்கு இனியனாகவும காணபபட்டான (புறம். 167:1-4). 'குதிரையினையுடைய பிட்டனின அமர் கடக்கும் வேல் நெடிது வாழ்க' என வடம வண்ணககன் தாமோதரனார் வாழத்துவர் (புறம. 172:8,9,11). அரண், அமரெனின திங்களும நுழையப் படாத பொறிகளைப் பொருந்திய இட்டிய வாயிலையுடையது (புறம். 177:4,5). மடுத் தெழுந்த அமரினகண பகைவரைக் கொன்ற மிகுதி பொருநதிய வலிய முயறசியை உடையவன கோப பெருஞசோழன் (புறம. 213:1,2). 'அமரின்கண விருமபிய காட்சியுடனே நினனோடு வேறு பட்டெழுந்தவர் பகைவ ரல்லர்' எனக் கோப் பெருஞ் சோழனிடம் புலலாற்றூர் எயிற்றியனார் கூறினார் (புறம். 213:5,6). கோபபெருஞ சோழனை 'அமர்வெஞ செல்வ' எனப் புலலாறறூர் எயிற் றியனார் விளிப்டர் (புறம். 213:17). கரிகாற பெரு வளத்தான் அரணகளைப் பேணாது அமர் கடந் தவன் (புறம். 224:1). கிள்ளிவளவன மண்டிய அமரின்கண எதிர்நினறு வெலலும் தானையினை யுடையவன (புறம. 226.5, 6). கூறறம அதியமான் எழினியின் உயிரை உண்டதால் அவன் அமரில் பகைவரைக் கொலலும களததின்கண பல்லு யிரையும் பருகுதலை இழந்தது (புறம். 230:14-16). முரசொலி கேட்ட மறவர் வெலலும வேட்கை யராய் மன்றங் கவரச் செனறு பேரமர் உழந்த போர்க்களத்தில், வெட்டுண்ட மரமபோல் வீழ்நது பட்ட வீரனை நினைநது வேந்தர் இரங்கினா (புறம். 270:9-13). மகன் அமரில் புறங்காட்டினான எனப் பலர் கூறக்கேட்ட தாய, சினந்து அவ்வா றாயின் அவன பாலுண்ட மார்பினை அறுத்திடு

வேன் எனக் கூறி, வாளொடு போர்க்களம் சென்று அவன இறந்து கிடப்பது கண்டு பெற்ற பொழுதினும் பெருவகை எய்தினாள் (புறம். 278:3-9). ஆரமர் மயங்கிய ஞாட்பு (புறம். 288:5). 'எதிர்த்தோர் தமரென்றும் பிறரென்றும் பாராமல் வீரர் கைகலந்து போரிடும் அமரில், அரசன் புகழையும் தம் புகழையும் தோற்றுவித்து, வாழ்நாளை முடித்துக் கொண்டவர் எனனொடு போரிட வருவாராக' என்று சூளுரைத்துப் போர் புரிவது வீரனின் இயல்பு (புறம். 294:4-7). அமர் கருதி இடப்பட்ட கடத்தற்கரிய முள் வேலி சூழ்ந்தது பாசறை (புறம். 301:3,4). 'நேற்றைய போரில் என் தமையனைக் கொன்றவனை அவனுடைய தம்பியொடும் சேர்த்து நாளை அமரிற் கொல்வேன்' என்று சூளுரைத்த வீரன உணவும் உண்ணாமல், குதிரையினைச் செலுத்துகின்றான் (புறம். 304:4-8). தலைவி தன்பொருட்டு வேந்தர் கடத்தற்கரிய அமர் செய்வதை விரும்பினள் போல வேந்தரின் மறங்கெழு நெஞ்சினைக் கவர்ந்தாள் (புறம். 339: 12-14). வேந்தன ஆரமர் உழக்கிய மறங்கிளர் வலியினை யுடையவன் (புறம். 341:13). வேந்தர் மகட்கொடை பெறாமையின பேரமர் எழுந்தது (புறம். 342:11,12). அமர் பல கடந்து, தும்பை சூடி எதிர்த்த பகைவர்தம் போரினையும் பெருமையினையும் அழித்த வலிமிக்கவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன (பதி. 14.8, 9). பல்யானைச் செல்கெழு குட்டுவன் குதிரைகள், களிறுகள், தேர்கள், மற்றும் அமரை எதிர்நோக்கி யிருந்த விருப்பத்தை யுடைய மறவரொடு சென்று பகைவரது அகப்பா என்னும் அரணத்தை வென்று கைக்கொண்டான் (பதி. 22:17-27). போர்முரசு கடுமையாக ஒலிக்க அமரினை விரும்பி ஏற்றுக் கொள்வதில் தனக்கு ஒப்பாவார் ஒருவரும் இல்லை யாம்படி பகைவரது அரிய மதில்களை வென்று கைக்கொள்ளும் பெருமை படைத்தவன் பல் யானைச் செல்கெழு குட்டுவன் (பதி. 29:12-14). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் வளமை கொண்ட ஊக்கத்தோடு சென்று பகைவர்தம் புது முறைப்பட்ட அமரை யெல்லாம் கடந்தான் (பதி. 36:3). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் வலிமை வாய்ந்த நல்லமரைக் கடந்து வெற்றியைத் தந்தான் (பதி. 42.9). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் அமர்கடந்து பெற்ற பொருள்கள் பெரியவாயினும், அரியவெனக் கருதாமலும் தனக்கெனக் காவாமலும் வழங்கும் பண்பினன் (பதி. 44:3,4). மலையிலும் கடலிலும் பிறவிடத்துமுள்ள அரண்களை வென்றும் அமர் புரிந்து சினஞ்சிறந்தும் விளங்கும் வீரர் மிக்க நாடுகளைக் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் வென்றகப்படுத்தினான் (பதி. 50:12-14). நல்லமரைக் கடந்த இடியையொத்த தடக்கையமைந்தவன ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 52:10). தலைவர் படைகளை ஆராயவும் தேரில் கொடி அசையவும் கொம்பும வலம்புரியும் முழங்கவும் யானைகள் திரியவும் அமர் செய்யும் நிணமிக்க பரப்பில் பருந்துகள் இரத்தம் பருகவும் கவந்தங்களும் பேய்மகளும் கண்டார் நடுங்க ஆடவும் பலபோர் செய்து வென்ற சான்றோர் தலைவன் செல்வக்கடுங்கோ வாழியாதன (பதி 67:5-12). பனையின வெண்குருத்தணிந்து, குவளைமலர் சூடிப் பகை மன்னருடைய அமர் வென்று அவர்தம தலைமையினை அழித்த பெருமகன் செல்வக்கடுங்கோ வாழியாதன் (பதி. 70:6-11). பகைவர் உடம்பினின்றும் ஒழுகி நிலத்திலே தோய்ந்த குருதியால போர்க்களம் புலால் நாற்றம் வீசுமாறு அப்பகைவரைக் கொன்று அமரைக் கடந்த வெந்திறல வாய்ந்த தடக்கையினன் இளஞ்சேர லிரும்பொறை (பதி. 86: 1-3). மிக்குச் செல்கின்ற அமரைக் கடந்த வென்றாடும் அகலத்தையுடையவர் செவ்வேள் (முரு. 272). யானை உடலகளைக் குருதி வெள்ளம் இழுத்துச் செல்ல நூற்றுவரும் பொருது களத்தில் இறக்கும்படி பெரிய அமரினை ஐவர் (பாண்டவர்) வென்றனர் (பெரு. 414-417). பாசறை இல்லத்தில விளக்கெரியும் உள்ளறையில மிலேச்சர் சூழ்ந்தியங்க அரசன் அமர் செய்யும் விருப்பத்தால் படுக்கையில் உறக்கங் கொள்ளாது புண்பட்ட யானை குதிரைகளையும் இறந்துபட்ட வீரரையும் எண்ணிக் கையில் தலை வைத்துப் படுத்திருந்தான் (முல்லை. 62-76). அமர் கடக்கும் வியன்தானை யுடையவன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன (மது. 39, 42). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன நெடுஞ்செழியன் காற்றினைப் போல் கடுகிச் சென்று, பகைவர் நாடுகட்கு எரிபரப்பித் தலையாலங்கானத்தில பகையரசர் அனைவரும் இறக்கும்படி அமர் செய்து வென்று அவர்தம் முரசினைக் கைக்கொண்டு வேள்வி வேட்டனன் (மது. 125-130). பருந்துகள் சூழும்படி பகைமன்னரொடு அமர் புரிந்து வென்றவேல் இரத்தத்தில் தோய்ந்து பிறழ்வது, தலைவி கண்ணின மாறுபட்ட பார்வைக்கு உவமை (அகம். 27:14-17). தலைவி விலங்கமர்க் கண்ணள் (அகம். 54:20). நல்லமர் கடந்த நாணுடை மறவரின் பெயரும பீடும் நடுகல்லில் பொறிக்கப் பட்டுப் பீலி சூட்டப் பெற்றது (அகம். 67:8-10). நல்ல அமர் கடந்த வீரரின குடரைச் செஞ்செவி எருவை ஈர்த்தது (அகம். 77:9-11) பகையரசரிட்ட முற்றுகை பல்லாண்டு நீட்டித்த போதும் பாரி போரிடத் திலிருந்து பெயராமல் முயற்சியால வாளினால

செய்யும் அமரினை வென்று அப்பகைவரை ஓட்டிய வீரனும் வள்ளலுமாவான (அகம். 78: 19-22). அஃதை தந்தை பருவூர்ப் பறந்தலையில் சேரனும் பாண்டியனும் ஒழிய நல்லமர் கடந்தான் (அகம். 96:12-15). வாட்படை மிக்க செழியன் படைப்பயிற்சி சிறந்து அமர் புரியும்போதெல்லாம் பாணன் களிற்றைப் பரிசிலாகப் பெறுவான் (அகம். 106:10-12). அமர் அழுவத்தில் இராக்காலத்தே கைக்கொண்ட வீரரின மார்பிலமைந்த புணகளை விளக்கின் துணையால் ஆராய்ந்தனர் (அகம். 111:13,14). தலைவன் வேலினைத் துணையாகக் கொண்டு ஊக்கஞ் சிறநது பகைதணிவிகக அமர் அழுவம் செல்வான (அகம். 119:13,14). பிரிந்த தலைவன் இன்னும் வரவில்லையேயென வருந்திப் புலந்தாலும், அவன் அமரிடத்தே பகைவரை அழித்தமையால் பெற்ற செல்வத்தைத் தமர் கூறக் கேட்ட தலைவி உவந்தனள் (அகம். 144:8,18,19). பண்ணன் தன் வேலின் இலைபோலும் முனை நிறம் மாறிச் செந்நிறங் கொள்ளுமாறு செலுத்திப் பகைவரின் யானைகளை அமரில அழித்து வென்றான் (அகம். 177:13-16). பாண்டியன் பாசறையில் வென்று அமர் உழந்தான் (அகம். 204: 2,3). வெளியன் வேண்மான் ஆஅய் எயினன் பாழிப் பறந்தலையில் மிஞிலியொடு நண்பகல் செய்த வாளமரில் புண்ணுற்றிருக்க, அவன் உடலில் வெயில் படாதவாறு பறவைகள் தம் சிறகுகளால் பந்தலமைத்தன (அகம். 208:5-12). 'வேந்தன் புகழை விரும்பிப் பாசறையில் உறங்கவில்லை; அமரினை நடத்தும் பொறுப்பு நம்பால் உள்ளது' எனத் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறினான் (அகம். 214: 5-8), தலைவி பேரமர் மழைக் கண்ணினள் (அகம். 326:2,3; 337:3; 395:3). மறப்படை மன்னர் பலருள்ளும் செங்கோலாட்சியும் பகைவர்தம் அமர்மறத்தை அழித்துயர்ந்த தோளும் பலர்புகழ திருவும் மிக்குடையவன் பசும்பூட் பாண்டியன் (அகம். 338:2-5). கிள்ளி வளவன் பழையன் மாறனைக் கூடல் மாநகரத்தே அமரினில் சாய்த்துக் குதிரை யானைகளைக் கவர்ந்தனன் (அகம். 346:20-23). பேரமர்க் கண்ணி (குறு. 131:2; ஐங். 412:4; 496:3). பேரமர் மழைக்கண் (குறு. 286:4; நற். 29:9; 44:2; 390:10; ஐங். 214: 4;282:2). வீரவளை யணிந்த மறவர் அஞ்சாது அமரிடை உறுதரத் தலைவன் விலக்கினான (நற். 48:6-8). உடன்போக்கிற் செல்லும் தலைவன் தலைவியிடம் 'வழியிடையே அமர் வந்தால் அஞ்சாது போர் செய்து விலக்குவேன்' என்றும், 'நும் தமர் தேடி வந்தால் மறைந்து கொள்வேன்' என்றும் கூறினான் (நற். 362:9, 10). பேரமர் மலர்க்கண் மடந்தை (ஐங். 427:1). சிவன் மண்டமர் பல கடந்தவர் (கலி. 1:8). மயங்கிய அமரிலே மாறாகிய பகைவரைக் கொன்று வென்ற தலைவன் நாட்டைக் கைக்கொண்டு களிற்றின்மேல் வந்தான் (கலி. 31:9, 10). அமர்க்கண் நகைமொழி நலலவர் (கலி. 40:1, 2). நீலததலர் வெனற அமருண்கண (கலி. 57:9). பேரமர் உண்கண (கலி. 60:16; 108.16; 146:7). தலைவன், மிக்குச் செல்கினற அமரிலே பகைவரைக் கொன்ற களிறு போனறவன (கலி. 61:19). பேரமர்க்கண்ணார் (கலி. 74:14). அமர்க்கண மகளிர் (கலி. 75.7). மிக்குச் செல்லும் அமரில் தன் கையில் வாளோடே அகப்பட்டவ்னை எனக்கு ஒவ்வான் என்று வெட்டாமல் மீளும மறவனைப போன்று, தனமுன்னே வீழ்ந்தவன் மேற்செல்லாது ஏறு மீளும் (கலி. 104: 47-50). அலமரல் அமருணகண (கலி. 113:2). திருமால் அமரினை வெனற கணையினர் (பரி. 1:28). முருகன பிணிமுகம் என்னும யானைமீது சென்று பனிக்கடலில அமர் உழக்கிச் சூரனை வேலால தடிந்தார் (பரி. 5:1-4). 'எம் கணவர் தாம மேற்கொள்ளும் வியக்கத்தக்க அமரை வெலவாராக' என்று மகளிர் திருப்பரங்குன்ற முருகன் அடிமலரைத் தொழுது அருச்சித்தனர் (பரி. 8:102, 108). மாற்றாரை அமரின்கண அழிதத வேற்படையை யுடையவர் செவ்வேள் (பரி. 21:66).

**2. விருப்பம்** அமர்-விருப்பம் - காட்டும் கணகளையுடைய ஆமானின் கன்று கானவர் எடுப்ப அஞ்சித தன் இனத்தின நீங்கி ஊரகம் ஓடியது (குறு. 322: 1-3). அமர்க்கண் ஆமான (நற். 165:1).

**அமரகம்** - போர்க்களம். தன் அரசுற்ற போர்த் துன்பத்தைத் தான் பொறுத்து, அமரகத்தே - போர்க்களத்தே-படைக்கலத்தாலடைந்த புண்ணின் நோய் நீங்கித் தழும்பு விரவிக் கிடக்கும் உடலினை உடையவனாக ஈர்ந்தூர் கிழான தோயன மாறன் விளங்கினான் (புறம்.180:3-6).

**அமரர்**-தேவர். மலையை வில்லாகவும் பாம்பை நாணாகவும் கொண்டு ஓரம்பினால் மும்மதிலையும் எய்து சிவபெருமான் அமரர்க்கு-தேவர்க்கு-வெற்றி நலகினார் (புறம். 55:1-4). அதியமான் நெடுமானஞ்சியின் முன்னோர் அமரரைப் பேணியும் வேள்வியில் ஆவுதி அருத்தியும் கரும்பினை அயல நாட்டிலிருந்து தமிழகம் கொண்டு வநதும் பெருமை பெற்றவராவர் (புறம். 99:1-4). அமரர் பாதுகாவலினால் நாவாயில் கொண்டுவரப் பெற்ற குதிரைகள் புகார் மறுகில் விளங்கின (பட். 184,185,193). புகாரில வாழநத வேளாண் மக்கள் அமரரைப் பேணுதல், வேள்வி செய்து ஆவுதி அருத்துதல், பகடோம்புதல் முதலியவற்றைச் செய்யும் தணணிய வாழ்வினர் (பட். 200,201). முப்படைதலில்லாத அமரரும், முனிவரும் பிறரும் அறிய முடியாத பழமைச் சிறப்புடையவர் சிவபெருமான் (அகம். க. வா. 12-15). நான்முகன்

முதலிய அமரர் வேண்டிக் கொண்டமையால் சிவ பெருமான் திரிபுரத்தை அழித்தார் (கலி. 2:1-5). அமரர் சாவா இயல்பினர் (பரி. 2:71). காவலாய் நின்ற அமரரை ஓட்டிக் கருடன் அமிழ்தினைக் கொண்டுவந்து தன் தாயின் துன்பம் அகற்றினான் (பரி. 3:15,16). அமரர் மதியினை உண்டியாக உடையவர் (பரி. 3:51-53). முப்புரங்களை ஓரம்பினா லெய்த சிவபெருமான் அமரர்க்குச் செய்யும் வேள்வி யில் அவிபாகத்தை உண்டார் (பரி. 5:25-27). அமரர் உள்ளிட்ட பலரும் முருகனை வணங்குதல் காரண மாகத் திருப்பரங்குன்றத்தின்கண் குழுமினர் (பரி. 8:1-11).

**அமரர் உண்டி - சந்திரன்.** அமரர் உண்டி-சந்திரன்-தேய்பிறைப் பக்கத்தில் குறைவது போல் வையை யில் நீர்வரவு குறைந்தது (பரி. 11:35,36).

**அமரர் செல்வன் - இந்திரன்.** அரிதமர் சிறப்பின் அமரர்செல்வன் - இந்திரன் - முருகன் பிறந்த ஞான்றே அவன்மீது வச்சிரப் படைகொண்டெறிந் தான் (பரி. 5:50-52). தேவருலகத்துக்குரியவனாகிய அமரர்செல்வனது புகழின எல்லையைக் குழவிப் பருவத்திலேயே கடந்த பெருமையினையுடையவர் முருகன (பரி. 5:69, 70).

**அமலை- 1. சோற்றுத்திரள்.** சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை பாசறையில் பாணர் சுற்றத்திற்குத் தசையொடு கூடிய அமலை - சோற் றுத் திரளை-வழங்குவன் (புறம். 33:14, 15). குளமுற் றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இலந்தை மர நிழலி லுள்ள மன்றத்தில் அமலைக்கொழுஞ்சோறு உண்ட பாணர்க்கு நீங்காத செல்வம் நிறைய வழங்கி னான் (புறம். 34:12-15). ஆதியின் குட நாட்டு மறவர் எயப்பன்றியின் தசையொடு கலந்த புதிய வெண் மையான அமலையை வருவோர்க்கு வழங்குவர் (புறம். 177:12-14). பூண்மைந்த உலக்கையால் அரிசி யைக் குற்றிச் சமைத்த வெணசோற்று அமலையை (நண்டின்) கலவையொடு ஆமூர் உழவர் தம்பால் வரு வார்க்கு நல்குவர் (சிறு. 193-195). கருங்கை வினை ஞரின் சிறுவர் பழைய சோற்றின் அமலையை வெறுப்பின் தம் குடில் முன்றிலில் அவலிடிப்பர் (பெரு. 223-226). வெள்ளாட்டை எறிந்து சமைத்த அமலையை இழுது இட்டுத் தினைமாவொடு கலந் துண்ணுமாறு விருந்தினர் நாடொறும் பெறுவர் (மலை. 440-443). திருமண இல்லத்தில் உழுத்தம் பருப் பினை இட்டுச் செய்த குழைந்த களியொடு அமலை உண்ணுதல் இடையறாது நிகழும் (அகம். 86:1, 2). வரால் மீன் துண்டத்தை விற்றுக் கள்ளுண்டு மகிழ்ந்து வேட்டை மறந்துறங்கும் கொழுநர்க்குப் பாணமகளிர் ஆம்பல் இலையில் வெண்சோற்று அமலையைப் பிரப்பம் பழம் இட்டு விடியற் காலத்தே நல்குவர் (அகம். 196:2-7). வீட்டு வாசலில் பிச்சையாக வெண்சோற்று அமலையை (அறிவர்) பெற்றனர் (குறு. 277:1-3). சிறுகுடியினர் பாறை யிடத்து வீழ்ந்த பலாப்பழத்தினை அமலையுடன் உணவாகக் கொள்வர் (கலி. 50:12, 13).

2. ஒலி. அமலை - ஒலி - உடைய வாகை வெண் ணெற்றுக்கள் பரலினைக் கொண்ட சிலம்பினைப் போல் ஓசை செய்யும் (குறு. 369:1, 2).

3. நெருக்கம். வெள்ளிய பனைக் குருத்தினை வேம் பின் அமலை - நெருக்கமான-வெண்பூவோடு சேர்த் துத தலைவன் தன் முடியில அணிந்து கொள்வ துணடு (குறு. 281:3-4). மிளகின் அமலையங் கொழுங் கொடி துஞ்சுபுலி வரிப்புறம் தைவரும் (நற். தி. 1:8,9).

**அமளி - படுக்கை.** குழந்தை சிறுதேரினை உருட்டிய வருத்தம் நீங்கச் செவிலித்தாயரிடம் பாலுண்டு அம ளியில்-படுக்கையில்-உறங்கும் (பெரு. 249-252). பிரிந்த தலைவன் திரும்பி வந்து தன்னொடு கூடியது போலக் கண்ட கனா மயக்கியமையால் உறக்கத்திலிருந்து எழுந்து, தலைவ னெனக் கருதி அமளியினைத் தட வியதாகத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 30: 1-4). வையைக் கரை யடைந்த மகளிரிற் சிலர் காம மாகிய மழுப்படை உடைப்பதனால், ஊடல் நீக்கித் திரையினை விழச் செய்து அமளியில் சேர்ந்தனர் (பரி. 10: 33, 34).

**அமிர்தபானம் - காமபானம்.** தத்தம் கணவரொடு கூடிய தலைவியர், மகளிர் ஆக்கிய அமிர்தபானத் தையும் - அமிழ்தம் போன்ற காமபானத்தையும்- மடையர் சமைத்த உணவையும் அருந்திக் கணவ ரால் வந்த சோர்வு நீங்கப் பெற்றனர் (பரி. 8:120-123).

**அமிர்தம் - இறவாமை அளிக்கும் இனிய தேவருணவு.** திருமால் அமரர்க்கு உணவாகிய அமிர்ததைக் கடைந்து கொடுக்க நினைத்த அளவில், அவர்க்கு அதன் பயன் உரியதாயிற்று (பரி. 2: 69-71).

**அமிர்து - இறவாமை அளிக்கும் இனிய தேவருணவு.** (அமிர்தம், அமிழ்தம், அமிழ்து, அமுதம், அமுது என்றும் வழங்கப் பெறும்.) இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதனின் பெருந்தேவி ஊடல் கொண்ட போதும் இனிய மொழி கூறும் அமிர்து பொதிந்த வாயினள் (பதி. 16: 11, 12). மோகினி வடிவு கண்டு மகிழ்ந்த மகிழ்ச்சியே அவுணர்க்கு அச்சமாக முடியத் தேவர்க்கு அமிர்தும் நல்கியமையால் திரு மாலின் ஒருகை நடுநிலைமை தவறியது (பரி. 3: 33, 34). மடையர் தாம் ஆக்கிய அமிர்தினை (உணவை) மகளிர்க்குக் கொடுத்தனர் (பரி. 8: 121). அமிர்து அன்ன நோக்கத்து அணங்கொருத்தி (பரி. 12: 57).

**அமிழ்தம் - 1. இறவாமை அளிக்கும் இனிய தேவருணவு.** பண்புடையவர் தேவர்க்குரிய அமிழ்தமே கிடைத்தாலும் அதனைத் தனித்துண்ணார் (புறம். 182: 1-3). அதியமான் நெடுமானஞ்சியின் மகன் பொகுட்டெழினி மேலிடத்திலிருந்து அரிய அமிழ்தம் போனற கரும்பினைத் தமிழகத்திற்குக் கொண்டு வந்தோன் வழித்தோன்றல் (புறம். 392: 19-21). தலைவனது மார்பு விரும்பியோர்க்கு அமிழ்தம் போன்றது (அகம். 332: 12,13). குறுமகள் கூர் எயிற்று அமிழ்தம் ஊறுஞ் செவ்வாயை உடையவள் (அகம. 335: 25). தலைவன் வரைவொடு வந்தமை உணர்த்திய செவிலித்தாய் அமிழ்தத்தை உணவாகப் பெறுகவென்னத் தோழி உரைத்தனள் (குறு. 83: 1, 2). தலைவன் வரவினைக் கூறிய அயலிலாட்டி அமிழ்தம் உண்கவென்று தலைவி கூறினள் (குறு. 201: 1). தலைவியின் சொல்லும் குணனும் அமிழ்தம போல் இனியன (குறு. 206: 1, 2). கொடிச்சி முள்ளெயிற்றையும் அமிழ்தம் ஊறும் சிவந்த வாயையும் உடையவள் (குறு. 286: 1-4). குழந்தையின் மழலைகேட்டு இனிமை மாறா மனததிற்கு அதன் திருநதிய சொற் கேட்டல் அமிழ்தம் அருந்தியது போல இன்பஞ்செய்யும் (கலி. 81:13,14).

**2. உப்பு.** உப்புவயலில் கடல்நீர் பாய்ந்து வற்றியமையால் விளைந்த உப்பாகிய அமிழதம் குடபுலத்திற்குக் கழுதைகள் வாயிலாகக் கொணடு செல்லப்பெறும் (அகம். 207:1-5).

**அமிழ்து - 1. இறவாமை அளிக்கும் இனிய தேவருணவு.** அமிழ்தினைச் சுவையால் வெல்லும், தாளிப்புடைய அடிசிலை இல்லற மகளிர் விருந்தினர்க் களிப்பர் (புறம். 10:7-9). ‘நீ விரும்பியுண்ணும் நறவு நல்ல அமிழ்தாகுக’ என்று கூறித் தேர்வண மலையனை வடம வண்ணக்கன் பெருஞ்சாத்தனார் வாழ்த்தினர் (புறம். 125‘8). கணடீரக்கோப் பெருநள்ளி காட்டினில் அளித்த ஊனுணவை வன்பரணர் தமது சுற்றத்துடன் அமிழ்து போல உண்டு காய்பசி நீங்கினார் (புறம். 150:13,14). மகளிர் தந்த மதுவைப் பொலங்கலத் தேந்தித் தலைவன் அமிழ்தென மடுத்தனன் (புறம். 361:16-19). அதியமான் நெடுமானஞ்சி இரவில் வந்து வாயிலில் நின்ற பொருநர்க்குக் களிப்பூட்டும் கள்ளையும் அமிழ்து போலச் சுவையுடைய ஊன் துவையலொடு கூடிய அடிசிலையும் வெள்ளிக் கலத்தில் அளித்தான் (புறம். 390:16-18). அசைநடை விறலியர் அமிழ்து பொதி துவர் வாயினர் (பதி. 51:21). யாழின் நரம்பு அமிழ்தத்தைப் பொதிந்து துளிப்பது போல இன்னிசை நல்கும் (சிறு. 227). பொய்யினால் தேவருலகை அமிழ்தத்தோடு பெறலாமாயினும் அதனை விடுத்து மெய்யுடன் நட்புச் செய்யும் சால்பினன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் (மது. 197, 198). வணடினம் நெயதறபூவின இதழ் நாற்றத்தை அமிழ்தென விரும்பிச சென்று தண்தாது ஊதியது (அகம. 170:4-6). அரிய தேவருலகினை அமிழ்தொடு பெற்றாலும், தலைவியைப் பிரிநத தலைவன் பொருள்தேடுமிடத்தில் நீட்டித்திரான் (அகம். 213: 17-19). சினமொழியரிவை அமிழ்துபொதி செந்நா அஞ்ச வந்த கூரிய எயிற்றினள் (குறு. 14:1, 2). ஆமபல் மலர் அமிழ்தம் போன்ற மணமுடையது (நற. 230:3). காதலற்குத் தன் காதலியின் எயிறூறிய அமிழ்தம் போலும் இனிய நீர் கள்ளினும் மகிழச்சி தரும (கலி. 4.13,14). தலைவி, ஊறு நீர் அமிழ்து ஏயக்கும எயிற்றினள் (கலி. 20:11). காவலாக நினற அமரரை ஓட்டி, எடுத்துவந்த அமிழ்தினால தாயினது துனபங் களைந்த கருடனை ஊர்தியாக உடையவர் திருமால் (பரி. 3 15,16),

**2. அமிழ்தின் தன்மை.** மலைச்சாரலிற் பெற்ற நெலலியின அமிழதுவிளை தீஙகனியை அதிகன் ஔவைக் கீந்தான் (சிறு. 99-103).

**3. நீர்.** அமிழது-நீா–முதலிய தொகுதியை உடைய மேகம பொழியப பெருங் காற்று வீசும் வானத்தை வெணகொற்றக் குடை தோயும் (பதி. 17:11-13).

**4. உப்பு.** கடலில விளையும அமிழதமாகிய உப்பினைக் கொண்டு செலலும உமணர் கூட்டம புலி உண்டெஞசிய யானைத தசையினைத் தீயில வதக்கிச் சுனைநீர் உலையிற் கூட்டிச் சமைககும (அகம. 169:3-7).

**அமுதம் - 1. இறவாமை அளிக்கும் இனிய தேவருணவு.** பிரிந்த தலைவன் வருவான எனறு கூறிய அயல் மனைப் பெண் அமுதம் உணபாளாக எனறு நற்சொல் கேட்ட தோழி தலைவியிடம் கூறினள் (நற். 65:1, 9).

**2. பால்.** செல்வக் குடிப் பெணடிர் சிலர் தம் இளமுலையில் அமுதமாகிய பால் சுரக்கப் புலால் நாறும் ஈன்றணிமை நீங்கியபின் குளத்தில நீராடுவர் (மது. 601-603).

**3. உப்பு.** கடல்விளை அமுதமாகிய உப்புக்குவடு மழையினால கரைந்தொழிவது போல, வரையா தொழுகும் தலைவனை நினைந்து தலைவி உள்ளம் உருகியது (நற். 88:4, 5).

**அமுது - 1. இறவாமை அளிக்கும் இனிய தேவருணவு.** மலையினைக் கடலில் நட்டு அமரரும் அவுணருமாகிய இருசாராரும் அமுது கடைவதற்கு முற்பட்ட போழ்து நாணாக விளஙகியவன் ஆதிசேடன் (பரி. தி. 1:64-68).

2. செல்வம். 'தாமான் தோன்றிக்கோ, நின்புகழால் நின்பால் அன்பு கொண்டுவிட்டானாதலின் நீ விரும்பும் செல்வமாகிய அமுதினைப் பெற்றுணக' என்று அறிந்தோர் பரிசிலனிடம் கூறினர் (புறம். 399:21).

3. கண்டசருக்கரை. சமைத்த இறைச்சியும் அரிசிச் சோறும் சுவை மிக்க கண்ட சருக்கரையாகிய அமுதொடு பிறவற்றையும் வெள்ளிக் கலங்களில் இட்டுத் தொண்டைமான இளந்திரையன் பாணர்க்கு வழங்குவன் (பெரு. 473-479).

அமை - மூங்கில். குறவர் அமையின்-மூங்கிலின்-குழாயில் வார்த்திருந்து முதிர்ந்த தேறலைக் குடித்து மகிழ்ச்சியுடன் வேங்கை முற்றத்தில் குரவை யாடுவர் (புறம். 129:1-3; நற. 276:8-10) வாங்கமை மென்றோள் (பதி. 12:22). விறலி வீங்கிய சந்துகளையுடைய திரண்ட அமை போன்ற பெருத்த தோளினள் (பதி. 54:3,6). கானவர் நீண்ட அமையிலிருந்து முற்றின தேக்கட்டேறலைத் தன சுற்றத்தோடு உண்டு மகிழ்ந்து குரவை யாடுவர் (முரு. 194-197). பாடினி ஆடமை பணைத் தோளினள் (பொரு. 32). வாங்கமை திரள்தோள் (மலை. 57). திருந்திய அமையில முற்றிய தேக்கட்டேறல் (மலை.522). தலைவியின தோள் அமையின் கணுக்களின் இடையே உள்ள தணடினை ஒக்கும் (அகம். 18:17,18; 152:14,23). தலைவி சிறிய அமையை யொத்த பணைத்தோளினள் (அகம். 33:15). மூங்கில் ஒனறோடொன்று உராய்தலால் எழுந்த தீ, மலைப்பக்கங்களில் பரவி அமையின் கணுககளை வெடிக்கச் செய்தலின் எழும் ஓசை கலைமான்களைத் துரததும் (அகம். 47: 4-7). வண்டு துளைதத அமையின் துளை வழியே மேலைக் காற்று எழுப்பும் ஒலி புலலாங்குழலின் இசைபோல் அமையும் (அகம். 82:1,2; 225:5-8). நீண்ட அமை போன்ற அழகினையுடையது தோள் (அகம். 87:16). தலைவி அமை புரையும் பணைத் தோளினள் (அகம. 114:14;343:1;குறு.131:1,2;நற. 352: 10,11). வாங்கமை நோன்சிலை (அகம். 182:2). நீண்ட அமை உயர்ந்த நிழல்படு சிலம்பு (அகம். 205:16). ஆயர் எருதின் கழுத்தில் தொங்குமாறு பூட்டிய உட்டுளையுடைய அமைக்குழாய் நிறைய உணவு கொண்டு செல்வது வழக்கம் (அகம். 253:15, 16). மகளிர் இருப்பையின் வெண்ணிற மலர்களை அமைக்குழாயில அடைத்துக் குன்றிடையே உள்ள தெருக்களுக்கு எடுத்துச் சென்று விலை கூறி விற்பர் (அகம். 331:1-7). மாங்கனிச் சாறு, பலாச்சுளைக் கசிவு, தேனிறால் ஆகியவற்றைக் கலந்து வடித்த அரியலை அமைக்குழாயிலிட்டு நெடுநாள் முதிர வைத்த தோப்பியை மலைத தெய்வத்திற்குப் படைத்தபின குறவர் குடிபபர் (அகம். 348:2-9). கடிய வீசும் வெப்பமுள்ள மேலைககாற்று அமையின் அசையும் தண்டினைத் தாக்கி, ஞெமை மரத்தின் இலைகளை உதிர்க்கும் (அகம். 353:7-9). மயில் நீண்ட கணுக்களையுடைய அமையின்கண் அது வளையத தங்கியிருக்கும் (அகம். 378:5,9,10). தூம் பாகச் செயயப் பட்ட அமை வழியாக ஒழுகும் நீரைச் சாலில் முகநது வந்து ஊற்றி வயலைக் கொடியைத் தலைவி வளர்த்தாள் (அகம். 383:9-13). தலைவி, மலையின் அமையை அறுத்து இயற்றிய வெவ்விய ஓசையையுடைய தட்டையால் தினைக் கதிர்களைக் கவரும் குருவிகளை ஓப்பினாள் (அகம். 388:1-5). 'அவ்வாங்குந்தி அமைததோளாய' எனத் தலைவி விளிக்கப் பெறுதல் (அகம். 390:10). புலியேற்றைத் தாக்கியதால் புணமிகுந்து பிடியானையால் தழுவபபடும் களிற்றியானை வளைந்த அமையிற் செயத தூம்பு போல ஒலிக்கும் (அகம. 398:22-24). தணணறுஞ சாரலில அசையும் அமை நீண்டு வளர்ந்தது (குறு. 115.4). கானவனுடைய அம்புக்கு அஞ்சிக் குரங்குகள் மலைசசாரலிலுள்ள பெரிய அமையின் நீண்ட கோல் அசையுமாறு பாயும் (குறு. 385:1-4). அசைகின்ற அமையின் உரியை மடித்து மெல்லிதாகப பிசைந்து வைததாற போன்ற தூவியையுடையது நாரை (நற். 178:1,2). புதிய அமையால் செய்யப்பட்ட வலிய வில்படையை உடையவன் தலைவன் (ஐங். 373:5) அமையின் அழகைத் தம்மிடத்தே கொண்ட தோளினள் தலைவி (கலி. 21: 13,14). குறவர் மடமகளிர் மலையிடத்து வளைந்த அமைபோலும் மெல்லிய தோள்களை உடையவர் (கலி. 39:15,16). ஆடமை வெற்பன் (கலி. 43:31). தலைவியின் தோள்கள் அகனற மலையின் அடுக்கத்தனவாகிய அமையை ஒக்கும் (கலி. 45:13,15). தலைவியினுடைய தடமெனதோள் நுணங்கமைத் திரளை ஒக்கும் (கலி. 56:19,20)

அமையார் - பொருந்தார் (பகைவர்). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன அமையார்க்கு-பொருந்தார்க்கு-வருததத்தைச் செய்து அழித்த வலிய முயற்சியை யுடையவன் (பதி. ப. 2:12,13).

அயம் - 1. நீர். அயம் - நீர்-பொருந்திய வெள்ளருவி சூடிய உயர்வரை (அகம. 38:16). பள்ளத்தில் அயம் நிறைந்து அழகுபெற அருவி ஆரவாரித்து ஓடிவரும் (கலி. 53:6). அயத்தில் வளர்ந்த வெள்ளாம்பல் இலைதழையுடைக்குப் பயன் பட்டது (குறு. 293:5,6). வழிப்போவா ரற்ற அயம் திகழும் சிறு நெறியில் கூடுமா நடமாடும் (நற். 257:8,9).

2. சுனை. மலையில் அயம்-சுனை-விளங்கும் (ஐங். 264). அயத்துக்கருகேயுள்ள கொன்றையின் மலரை யணிந்தவர் சிவன் (கலி. 150:1). பூவினை அடித்துக்

கொண்டு வரும் அருவி விழும் அயம் விளங்கும் மலையில் நீர்த்திவலை புதரை நனைக்கும் (அகம். 262:13-15). மழை பொழியாவிடினும் அருவி ஒலிக்கும் அயம் மலையில் திகழும் (நற. 365:6,7).

3. குளம். அயத்தில-குளத்தில்-வளரும் பைஞ்சாய்க் கோரையின அடிககுருததினை ஒதததுபல (அகம. 62:1,2). தோட்டத்திலுளள அயத்தில் வளரும் கூதளஞ் செடி குழையுமாறு அருவி ஒலிக்கும் (அகம்.68:2,3)

**அயரியோர் - கூடாஒழுக்கமுடையோர்.** தவவிரதததை அழித்த அயரியோர் – கூடாஒழுக்கமுடையோர்-முருகன் திருவடி நிழலை அடைய இயலாது (பரி. 5: 75, 76).

**அயல் – பக்கத்திலுள்ளவர்.** ஆயத்தாரும அயலும்-பக்கத்திலுள்ளவரும்-மயங்கக் கணணீர் மாாபில் சிநதக கண்கள பசநது தாய ஓம்பிய நலனைப பரத்தை இழநதாள (அகம. 146.11-13). அறவுணர் வினறி அயல் தூற்றும் அம்பலைக் கேட்டுத் தலைவி நாணுவள் (கலி. 3.1). களவொழுக்கமுடையவள் என்று பலரறியத தூற்றும் அயலமுன கலைவியின் கணகள நீர் சொரிகினறன (கலி 48:14,15). வையைக் கரைக்கு மாலை, கணணி, வலையம முதலிய அணிகளை மகளிர் அணிநது வநதனர்; அயல் அணிநத அணிகளைக கூாநது பாாததுத் தலைவி பூணும வளையையும ஆரததையும தலைவனிடமிருநது பெறறவள யாவள் எனத் தோழி தேடிக கணடுபிடிததாள் (பரி. 20:29-35).

**அயலார் - பக்கத்திலுள்ளவர்.** தலைவன மயங்கியதைக கணடு தானும மயங்கி அவன துன்பத்திற்குக் காரணம் யாதென்று தலைவி அருளகொணடு வின வாளாயின அயலார் - பககத்திலுள்ளவர்-பழிப்பர் (கலி. 59:10,11).

**அயலிலாட்டி - பக்கத்துவீட்டுப்பெண்.** தலைவியை விளித்துப பரததை, 'நானும் நின் தெருவில வாழ்கிறேன; அயலிலாட்டியேன்-பக்கத்து வீட்டுப் பெணணாவேன-உனக்குத் தங்கையாவேன்' எனக் கூறித் தன் மணியாழி செறித்த விரலால் தலைவியின் நெற்றியையும் கூந்தலையும் தடவிக் கொடுத்தாள் (அகம். 386: 10 - 14). மலைகெழு நாடன மணக்க வருவான் என்று கூறியமையான் அயலிலாட்டி அமுத முண்பாளாக எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 201). மலைநாடன குறிதத பருவத்தில வாராமையின் வருவனோ என எதிர்நோக்கிக் கவனறபோது, அயலிலாட்டி பிறரிடம் பேசிய பேசசில் வருவான் எனற சொல்லைக் கூறினாள்; அச்சொல்லை (நற்சொலலை) கேட்டு மகிழ்ந்த தோழி தலைவியிடம் அயலிலாட்டி அமுதமுணக எனக் கூறித் தன்மகிழவைப் புலப்படுத்தினாள் (நற். 65:1).

**அயலிற்பெண்டிர் - பக்கத்து வீட்டுப் பெணடிர்.** தலைவி ஆராயாது தலைவனிடம கொணட நட்பு, பழிச் சொற் கூறும வாயையுடைய அயலிறபெண்டிர்-பககததுவீட்டுப பெணடிா-தலைவியின மேனிப் பசபபுக் கணடு இழிவாகப பேசுமாறு செயது விட்டது (நற. 378:6-12).

**அயலோர் - பக்கத்துளளோர்.** அயலோா - பககததுள் ளோர்-தூற்றும அம்பலைத தலைவன தலைவிககு அளித்தான் (நற. 73:11). அயலோா கூறுமஅமபலைக் கேட்டும தலைவன தினைபபுனத்துக்குப் பகலில நீங்காது வருவான் (நற. 285: 10, 11).

**அயறு - புண்வழலை** (நீர் கசியும புண). தேனீ ஒலிககும் மணநாறும் மதத்துடனே யானையின தலையில அயறு - புண்வழலை - கசிந்தது (புறம. 22 6,7).

**அயா - வருத்தம.** தலைவியைத் தலைவன் உடன் போககாகக் கொணடு செல்லக் கருதிய செய்தியைத் தோழி வாயிலாக அறிந்தபோது தலைவி அனபுடைய நெஞசதது அயாவின - துனபததின்-சுமையால மெலிநதாள (அகம 107: 1-3). உமணர் வணடியிற பிணிதத பகடு அயாக கொணடு இழுககும் (அகம. 329: 5 - 7). மழையின்றி வறண்ட பாலையில கதிரவன வெமமையால நிலம பிளவுபட உலகு வருநதி அயா உறறது (அயாவிறத உயா எனற பாடமுணடு) (நற். 164:1 - 3). இரவில தனதுணையைப பிரிநது அயாவும தனிகருகு தலைவிகருத துணையாகி உசாவும (கலி. 121: 15, 16).

**அயாவுயிர்த்தல் - நெட்டுயிாத்தல.** மையல யானை அயாவுயிர்த்தல - நெட்டுயிர்ததல - நெயயுலை சொரிந்த ஆட்டிறைசசியின ஓசைககு உவமை (புறம. 261: 7, 8). புலலூறு தாக்கலுக்கு அஞசி ஓடிய குறுமபூழச் சேவல சீறூரின பாழ்மனையின இறபபு நிழலின ஒருபக்கததே தங்கித தனிமையால அயாவுயிாக்கும் (அகம. 103: 1 - 9). யானை மீதேறிப் புலையனின பெருநதுடி கறங்கப பிறபுலம் புகுந்த மறவர் பகைவர் அரணை யழித்து அயாவுயிர்த் தனர் (நற். 77:1-3). முன்பனிபபருவத்தில உழுநதின இலை சிதைய வீசி வருத்தும் வாடைககாற்று பருமயானை அயாவுயிர்த்தது போல வரும் (நற் 89:5-9).

**அயிர் - 1. கண்டசருக்கரை.** பருபபு, தேங்காய ஆகிய உள்ளீடுகளுடன் அயிர் - கண்டசருககரை - சேர்த்து மோதகம் செய்யப்பெற்றது (மது 625,626). குளிருககாற்றாது மகளிர் கோதை புனையாமல்

கூந்தலிற் சில மலர் செருகிக் கொணடு மயிர்ச் சநதனமாகிய விறகிலே நெருப்புண்டாககி அதிலே அகிலொடு அயிர் சேர்த்துப் புகைததனர் (நெடு. 53-56)

2. நுணமணல். கடற்பரப்பில அடும்பு படர்நத கரையில நணடு ஆடியதால் ஏறபட்ட அடிச் சுவடடை ஊதைக் காற்று வீசி, அயிர் - நுண மணல - கொண்டு வந்து மறைககும் (பதி 51:6-8). அயிரிடத்துக் காயாமலர் அஞ்சனம்போல மலரும் (முலலை. 92, 93). அயிர் செறிநத அடைகரையில் ஆரவாரம பெருகப் பரதவர் சுறறத்துடன சேர்ந்து வலை யிழுத்து மீன் பிடிப்பர் (அகம. 30:1-8). அயிர்க்கண் உள்ள சிறு புதரில பன்றி உறஙகும போது அதன் முதுகு மறையுமாறு மூல்லை மலர் உதிரும (அகம. 84:6-8). பாணன என்பானது நாட்டினுக கபபால் வழிப்போக்கரைக் கொன்ற படைக் கலங்களைக் கழுவியதால் சிவந்த நீராக ஓடும் ஆற்றின் அயிர் செறிநத கரை வழியே தலைவன் சென்றான் (அகம. 113:17-20). செந்நிலப்பகுதியிலுள்ள அயிர் மீது பிடவமலர் உதிர்ந்து அழகு படுத்தும் (அகம. 154:4,5). நீரோடு மிடத்துள்ள அயிர் மிக்க மேடு கரைந்திடுவது போல நெஞ்சம் நெகிழ்ந்து இளகியது (அகம். 163:10,11). காவிரிப் பேரியாறு அடித்துககொணடு வந்த அயிர் குவித் துள்ள எக்கரின் வெணமணற்பகுதி வளம் சானறது (அகம். 181:11-14). மழை பொழிநது நீர் திகழும் காலத்து நுண்ணிய அயிர் பரநதுகிடககும குளிர்ந்த சுனைப பககத்தே அன்னம தஙகியிருக்கும (அகம். 234:1-3). புன்னைத் தாதணிந்த பெருந்துறையின் அயிரை அறுததுககொணடு ஓடும் தேர் வணடிற் பாவையைச் சிதைககும் (அகம. 320:10-12). வலவன ஓட்டிய தேர் விரைந்து வெணமணற் பாதையைக் கடந்து சென்று அயிர்ச சேற்றுப பரப்பையும் கடக்கும் (அகம். 400:12-17). கடற்கரையிலுளள அயிாச் சேறு கூந்தலிற் பெய்யப் பயனபடுகினறது (குறு. 372.4,5). வீசும ஊதைக காறறு அயிரை நாடோறும் வாரி இறைககும் (நற. 163.1,2). நீர்ப பறவைகளின் அடிச்சுவடு படுதலால வரிகளை யுடைய நீர் வற்றிய பக்கஙகளில் தணணிய அயிா பரநது கிடககும (நற. 241:1-3). கருநிறம் பொருந்திய அயிர் அசைவுற்று நுடங்கக் குயில அகவ இள வேனிற் பருவம் வரும் (ஐங 341). குளததின அயலே யுள்ள அயிரின் மேல் அழகு விளங்க ஈங்கையின பூ உதிர்நது கிடககிறது (கலி. 31:2,3). பூபபரநத நீர்த்துறைகளை அணுகி அயிரினைக் கோலஞ் செய்து நீர் ஓடுகிறது (கலி. 35:6).

**அயிர்ப்பு - ஐயம்.** பறை முழககும் குறுநதடியோ என அயிர்ப்பு - ஐயம் - அடையுமாறு கொன்றைக்கனி பாறையில் விழுந்து கிடக்கிறது (நற். 46:5-7). உடன் போககுச சென்ற மகளைப பற்றிப் பின் நினைந்த தாய கூந்தல் வளர்சசி, முலை வளர்ச்சி முதலியன கணடு இமமகள் பெணமையின் முழு வளர்ச்சியும் பெற்றுவிட்டாள் என்பதனை என் கண்களால நோககியுணர்நது நேற்றுத்தான அவளைப் புறததே போகவிடலாமா, போகவிடாது தடுக்கலாமா என அயிர்பபுறறேன் என்று கூறுகிறாள் (அகம். 315.1-5). பகைவருடைய தலை துணியப் போர் செய்து வெலலும மறவர் தம வேலைக் கதவிற் சார்த்தி வைததுக காககும நன்னன் மூதூரின் கோபுர வாயிலுள பரிசிலர் அயிர்பபுறாமல புகலாம் (மலை. 488-491).

**அயிரியாறு - ஓர் ஆறு.** காட்டில் வாழும் நிறைந்த சூல கொண்ட பெடை மயில, அயிரியாற்றின் கரையில் நின்று பாகற் பழததைத தின்ன விரும்பி ஊது கொம்பு ஒலிபபது போல் அகவும் (அகம. 177:9-11). வடுகர் தலைவனுக்குரிய எருமை நாட்டில் உள்ள அயிரியாறறைக் கடந்து தலைவர் பொருள் தேடச் சென்றாா (அகம. 253:18-20).

**அயிரை - 1. சேரநாட்டில் உள்ள மலை.** செங்குததாக உயர்ந்த பக்கமலை உடையது அயிரை மலை (பதி. 21:29). பறையோசை போல் ஒலிக்கும அருவிகள் நிறைநது விளங்கும் உயர்ந்த அயிரைமலை போல வாழக எனச் செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் வாழத்தியுள்ளார் (பதி. 70:24-27).

**2. அயிரை மலையில் உறையும் கொற்றவை** (ஆகு பெயர்). பல்யானைச் செல்கெழுகுட்டுவன் அயிரை - அயிரை மலையில் உறையும் கொற்றவையை - பரவினான் (பதி. ப. 3:8). பகைவரது குருதி கலந்த சோற்றைப் பிண்டஙகளாக வைத்து அயிரையைச் சேரர் வழிபட்டனா (பதி. 88:11,12). உருகெழு மரபின் அயிரை பரவினர் (பதி. 90:19).

**3. ஒருவகை மீன்.** குமரிததுறையிலுள்ள அயிரையை -மீனை- அன்னம உணணல (புறம். 67:1,6). அயிரை மீனை உணணக குருகு மரந்தொறும் குழுமியிருக்கும் (பதி. 29 4,5). கீழைக்கடலிலுள்ள சிறகிழநத நாரை ஒனறு சேர மனனனது தொண்டிப்பட்டினததைச் சார்நத கடறகரையில உள்ள அயிரையாகிய பெறற்கரிய உணவை உணணக் கனவு கண்டது (குறு. 128:1-3). பொயகையில் அயிரை பரந்திருத்தல (குறு. 178:1). மாந்தையூரில் கடலலை மோதுதலால நாரை வரிசையாகப் பெயர்ந்து வேறிடம் சென்று அயிரையை உண்ணும் (குறு. 166:1-3). கடற்காக்கை தலைச்சூல் கொணட தன பேடைக்குச் சேற்றிற்

புதைந்திருக்கும் அயிரையைப் பிடித்துத் தருவதற்கு உப்பங்கழியில் மூழ்கித் துழவும் (நற். 272:1-6). அயிலை காண்க.

**அயில் - 1. கூர்மை.** விளைந்த நுணா மரத்தின் கட்டையை அயில் - கூர்மை - பொருந்திய உளி கொண்டு கடைந்து, செந்நிறம் பொருந்தச் செய்த மணிகளால் ஆகிய மாலையை உமணர் வளர்ப்பு மந்திக்கு அணிவர் (சிறு. 51-56). யானைகள் பாகன் இட்ட கரும்பு, நெற்கதிர், அதிமதுரத் தழை ஆகிய வற்றை உண்ணாமல் அவற்றால் தம் நெற்றியைத் துடைத்துக் கொண்டு அயிலுடைய முனைக் கொம் பின்கையில் அவற்றைக் கொண்டன (முல்லை. 31-34). செவ்வேளுக்குரிய திருப்பரங்குன்றத்தில் உள்ள சோலைகளும் சுனைகளும் பூக்களின் செறிவால் செவ்வேளின் அயில் வாய்ந்த அம்பு நிறைந்த தூணியை ஒக்கும் (பரி. 18:30-33).

**2. சூட்டு (ஆகுபெயர்).** சிற்றுளிகளால் அமைந்த வடி வங்கள் பொருத்தப்பட்ட வலிய குறட்டிடத்துத் தைத்த ஆர்களைச் சூழ்ந்த அயில் - சூட்டு - பொருந் திய உருளைக்கு முழுமதி உவமையாகும் (சிறு. 251-253).

**3. வேல்.** வெம்பரல் அயில் - வேல் - காய்ந்த தன்மையவாய் நடப்போர் அடியைக் கிழிக்கும் (சிறு. 7, 8). நெடுஞ்செழியன் காவற்காட்டினையும் கிடங்கினையும் நெடிய மதிலையும் அயில் அம்பு களை எறியும் அரண்களையும் உடைய பகைவர் நாட்டிடத்தே சென்று அங்கு அவர்களை வென்ற சிறப்புடையவன் (மது. 64-69). மலையைச் சார்ந்த பாலை வழியில் தீயிடைக் காய்ந்த அயில் போன்ற வெப்பம் மிகுந்த உச்சியை உடைய கற்களோடு கூடிய பாறைகள் நெடுநேரம் வெப்பத்தைத் தாங்கி இருக்குமாதலால் வெப்பம் குறைந்த மாலைக் காலத்தே அவ்வழிச் செல்ல வேண்டும் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றார் (மலை. 373-375). அயில் முனை போன்ற கூரிய முகத்தையுடைய கறையான் புற்றுமண்கொண்டு மூடியதால் அம்பலத்தின் கூரை சிதைந்து காணப்பட்டது (அகம். 167:18-20). அயில் தைத்துச் செறிந்த நெடிய கதவம் (கலி. 135:3).

**அயிலை - ஒருவகை மீன் (அயிரை மீன்).** மீன்பிடித்துவந்த தந்தைக்கு நெற்சோற்றையும் புளியிட்டுச் சமைத்த அயிலை மீன் குழம்பையும் மகள் சென்று கொடுத் தனள் (அகம். 60:3-6). பரதவர் தாம் பிடித்துவந்த அயிலை மீனைத் தம் சுற்றத்தினர்க்குப் பகுத்துக் கொடுத்தனர் (அகம். 70:1-4). அயிரை காண்க.

**அயினி - உணவு.** தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் இளமை வீரத்தைப் பாராட்டுமிடத்துச் செழியன் பால்குடி மறந்து இன்றுதான் அயினி - உணவு - உண்டான் எனினும் பகைவரை வெற்றி கொண்டான் என இடைக் குன்றூர் கிழார் கூறினார் (புறம். 77:7-12). முள் நீக்கிச் சமைத்த மீன் துண்டத்துடன் கூடிய வெள்ளைச் சோறு நன்னனுக்கும் ஏற்ற அயினியாகும் (மலை. 465-467). உப்பு விற்றுக் கிடைத்த நெல்லைக் குற்றி ஆக்கிய அயினியை (அரிசிக் காணத்தை) குதிரை உண் ணும் (நற். 254:6, 7).

**அர - பாம்பு.** அருமணியுடைய அர - பாம்பு - வழங் கும் பெருமலை (பதி. 51:12, 13). சீறியெழும் அர படம் விரித்தது போலக் காந்தள் குலை விரிந்தது (பரி. 20:99). வரிபொருந்திய கழுத்தையுடைய அர உறையும் புற்றைப் போன்றது பகைவரால் நெருங் குதற்கரிய தலைவனது ஊர் (புறம். 329:5-9). இரை தேடிச் சென்ற ஆண்கரடி கறையான் எடுத்த அர உறையும் புற்றை இரவிலே நகத்தால் தோண் டிப் புற்றாஞ் சோற்றை உண்ணும் (நற். 325:1-5). இடி முழக்கத்தால் அர வருந்தும் (அகம். 274:1, 2). செவ்வேள் அணியும் பதப்படுத்திய தோலால் செய்யப்பெற்ற அடையற் செருப்பின் முதுகுப்புறத் துள்ள தோற்பட்டை அரவுரியைப் பிளந்தாற் போன்று இரண்டாகப் பிளக்கப்பெற்ற வாரினை யுடையது (பரி.21:5-7). அரவம் 4, அரவு, அரா, அராஅ காண்க.

**அரக்கர் கோமான - அரக்கர் தலைவனாகிய இராவணன்.** இமய மலையை வில்லாக வளைத்த கங்கையை முடியிற் கொண்ட சிவபெருமான் உமையோடு க்யிலை மலையில் இருந்தபோது பத்துத் தலை யுடைய அரக்கர் கோமான் (இராவணன்) தன் பெருங் கைகளால் அம்மலையைத் தூக்க முயன்று முடியாது வருந்தினான் (கலி. 38:1-5).

**அரக்கன் - கொடியவன் (இராவணன்).** இராமனுடன் கானகம் சென்ற சீதையை வலிய அரக்கனாய - கொடியவனாய - இராவணன் கவர்ந்து சென்ற போது சீதை கழற்றி யெறிந்த நகைகளைக் குரங் குக் கூட்டம் கண்டோர் நகைக்குமாறு முறைமாறி அணிந்து கொண்டது (புறம். 378:18-22).

**அரக்கு - இங்குலிகம்.** செம்மையான அரக்குப் போன்ற நிறமுடைய நுண்மணற் குவட்டில் மகளிர் கழங் காடினர் (பதி. 30: 27, 28). செந்நிலம் அரக்கு உருக்கினாற் போன்றது (பொரு. 43). உள்ளங் கையில் அரக்குத் தோய்ந்தாலொத்த செவ்விதழ் சூழ்ந்த தாமரைப் பொகுட்டில் தும்பி பெடையைத் தழுவிக்கொண்டு காமரப்பண் பாடும் (சிறு. 74-77). தேர்த்தட்டு மறையுமாறு பொருத்திய பலகையில் அரக்குப் பூசுவது வழக்கம். (சிறு. 256-258). குவளை அரக்கின் நிறத்தைப் போன்ற இதழையுடையது

(பெரு. 293). அரக்குப் பரப்பினாற் போன்ற செம்பூக்களை மகளிர் பாறையில் குவித்தனர் (குறி. 96-98). அரக்கைப் பரப்பினால் ஒத்தது சிவந்த நிலம் (மலை. 507). அரக்கினை யொத்த சிவந்த நிலத்தில் காயாம் பூக்கள் வாடிக் கிடக்கும் (அகம். 14:1,2). அரக்கு நிறமுடைய தம்பலப் பூச்சிகள் பரப்பிவைத்தாற் போல ஒருங்கு சேர்ந்து ஈரமுள்ள இடத்தை அணி செய்கின்றன (அகம். 139:13-15). யாமரத்தின் தளிரில் அரக்குப் பொடியினைச் சிதறினாற்போலத் தலைவி மேனியில் பசப்புப் பரவியது (அகம். 333: 1,2). சங்கின் முதுகில் அரக்கைத் தீற்றினாற் போன்ற செவ்வரி பொருந்திய இதழையுடையது பிடவம்பூ (நறவம்பூ என்றும் பாடம்) (நற்.25:1,2). அரக்குக் குழம்பில் தோய்த்த ஓவியரின் எழுதுகோல் போல நுண்ணிய பஞ்சினைத் தலையிற் கொண்ட பாதிரிமலர் மலரும் (நற். 118:7-9). உருக்கிய அரக்கினாலாய வட்டுப் போன்றது ஈங்கையின் சிவந்த அரும்பு (நற். 193:1). செம்புள்ளிகளையுடைய அரக்கின் வட்டுப் போன்றது நாக்கு (நற். 341:2,3). தலைவனுடன் தலைவி பாலைவன வழியிற் சென்றால் மெல்லியல்பு வாய்ந்த அவள் சிற்றடிகள் வழியிலுள்ள கற்கள் பட்டுத் தாமரைப் பூவின் உள்ளிதழ் அரக்குத் தோய்ந்தது போல் சிவந்து காட்டும் (கலி. 13:10-13). கையினாலே புனையப் பெற்ற அரக்கு மாளிகையை நெருப்புச் சூழ்ந்தாற் போல மலையை அங்குப் பற்றியெரிந்த தீ சூழ்ந்து கொண்டது; தீப்பற்றிய அரக்கு மாளிகைக்குள் அகப்பட்ட வளிமகன் (வீமன்) அதனை உடைத்துத் தன் சுற்றத்தைக் காத்தது போன்று மலைத் தீக்குள் சிக்கிய யானை தீயினை அணைத்துத் தன் சுற்றத்தை ஓம்பியது (கலி. 25:4-8). அரக்கு இருந்த செப்பை ஊடல் கொண்ட பெண் தலைவன் மார்பில் எறிந்ததால் மார்பு செந்நிறமாகியது (கலி. 72:15,16). குருதியின் நிறம் போலும் செந்நிற அரக்கு நீரைப் பாய்ச்சும் பீச்சாங் குழலினையும் வையைப் புனலாட்டுக்கு எடுத்துச் சென்றனர் (பரி. 10:12).

**அரங்கம் - ஆடுகளம்.** உறந்தையில் பங்குனி விழா நடந்த பின்னாளில் சமையல் செய்யாமையால் தீயின்றிக் கிடக்கும் வெற்றடுப்புக்களை யுடைய அரங்கம் பொலிவற்றுக் காணப்படும் (அகம். 137: 6-12). பாடுபவர் தாள ஓசையும் ஆடுவார் அரங்கத்தில் எழுப்பும் தாள ஓசையும் உடையது பரங்குன்றம் (பரி. 8:109).

**அரங்கு - ஆடுகளம்.** வேம்பின் நிழலில் கட்டளைக்கல் போன்ற வட்டாடும் அரங்கு - ஆடுகளம் - அமைத்து இளஞ்சிறார் நெல்லிக்காயை வட்டாகக் கொண்டு ஆடுவர் (நற்.3:2-4). வயலில் செந்நெல் இடையே பூத்த தாமரை மலரில் சாய்ந்து கிடக்கும் நெற்கதிர் அரங்கில் ஆடுபவளது தலைக்கோலத்தி லிருந்து நுதலிலே தாழும்படி வட்டமாகச் செருகிய வயந்தகம் என்னும் அணிபோல் திகழும் (கலி. 79:1-5). ஆடுமகளிர் தூவிய மலர்களும் அருச்சனை செய்வோர் இடும் பூவுடன் கூடிய நீரும் அரங்கில் நிறைந்திருக்கும் (பரி. 16:11-13).

**அரசயானை – பட்டத்துயானை.** அரசயானை மீதுள்ள துகிற்கொடி போல ஞெமை மரத்தில் பின்னப் பெற்ற சிலம்பியின் கூடு காட்சியளிக்கும் (அகம். 111: 3-5).

**அரசர் - மன்னர்.** நீர் வேட்கையுடையார் கடற்கரையில் இருப்பினும் கடல் நீரையுண்ணாது குடிக்கும் நீர் உள்ள இடத்தையே நாடுமாப் போல, அரசர் பக்கத்தில் இருப்பினும் வள்ளலையே புலவர் நாடுவர் (புறம். 154:1-5). வடதிசை இமயத்திலிருந்து தென்திசைக் குமரிவரை யுள்ள அரசரை வென்று அவர்தம் நாட்டைக் கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன் அழித்தான் (பதி. 43:7-11). வீரப்படைகளையுடைய அரசருள்ளும் செங்கோலாட்சி புரிந்து பகைவர் வீரத்தைக் கெடுத்துத் திண்டோளையும் பலரால் புகழப்படும் திருவினையும் உடையவன் பசும்பூட் பாண்டியன் (அகம்.338:2-5). நீதிமுறைப்படி ஆளும் அரசனின் செங்கோன்மையுடைய அறங் கூறவையத்துச் சான்றோர் துணைக்கொண்டு மடலேறி இவளை மணப்பேன் எனத் தலைவன் கூறுகிறான் (குறு. 276:5,6). வரிசையாகச் செல்லும் அரசரின் கேடயம் போல மலையில் தேனடை தொங்கும் (குறு. 392:6-8). அறிவிலா அமைச்சன் அரசவினையை வெளிப்படுத்தப் பீடில்லாத அரசன் நாட்டின் மீது பகையரசன் படையெடுத்து வருவான் (கலி. 27:7,8). அறநெறிப்படி உலகாண்ட அரசன் மாய்ந்த பின்னர்த் தீநெறி வழி ஒழுகி அறநெறியை நிலைநாட்டாத குறுநில மன்னன் செய்யும் ஆட்சி போல ஞாயிறு மறைந்தபின் இருள் பரவியது (கலி. 129:1-6). நீதியும் வாய்மையும் நடுவுநிலைமையும் கொண்டு இனிதாண்ட அரசன் மாயும்போது நல்லூழின் பயனாக அவன் பெற்ற செல்வமும் உடன் மாயும் (கலி. 130:1-5). அரசனை நெறிப்படுத்தித் தவஞ் செய்வித்த சான்றோர், அவன் வழுவித் துறக்க இன்பம் பெறுதலை நெகிழவிட்டபோது மீண்டும் வற்புறுத்தித் தவஞ்செய்வித்துத் துறக்க இன்பம் பெறச் செய்து அவனது துயர் துடைத்தனர் (கலி. 139:33-37) வடமொழிப் பெயர் பெற்ற வயக்குறு மண்டிலம் போலும் முகத்தவன் (திருதராட்டிரன்) மக்களுள்

மூத்தவன் (துரியோதனன்) சூழ்ச்சியால் ஐவர் என்று உலகம் பாராட்டும் பாண்டவ அரசர்கள் அரக்கு மாளிகைக்குள் இருந்தபோது தீ சூழ்ந்துகொண்டது (கலி. 25:1-4).

**அரசர்கள்** - அரசர் காண்க.

**அரசவை** - அரசர்சபை. அரசவை-அரசர்சபை - பணியு மாறு அறத்தையே விழைந்து வீரத்தை விரும்பிய கொள்கை யுடையவன் இளஞ்சேர லிரும்பொறை (பதி. 85:9,10). யாழிசையும் மிடற்றுப் பாடலும் ஆடலும் ஒன்றுபட்டு நிகழ்ந்த செயலுக்குச் சேர சோழ பாண்டியர் மூவரும் பொதுநலம் குறித்து ஓரவையில் ஒருங்கு கூடி அரசவையில் ஆராய்தல் உவமை (பொரு:54,55).

**அரசன்** - மன்னன். அரசர் காண்க.

**அரசியல்** - அரசு நெறிமுறைக் கொள்கைகள். இளஞ்சேர லிரும்பொறையைப் பெருங்குன்றூர் கிழார், 'நின் செங்கோலாட்சியினால நாடோறும் நாடு தொழுது பாராட்ட, உயர்நிலை உலகத்துள்ள தேவர் புகழ, அரசியல் தவறாது போரில் மேம்பட்டு நோயின்றி வாழ்க' என வாழ்த்துகிறார் (பதி. 89:9-13). 'நாவலந் தீவிலுள்ள பல மண்டலங்களைக் கைப்பற்றி அர சியல தவறாமல அறநெறியைக் காட்டிப் பெரியோர் சென்ற வழியில் பிழையாதொழுகி வெற்றிபெற்று வழிவழிச் சிறக்க' என மாங்குடி மருதனார் நெடுஞ் செழியனை வாழ்த்துகிறார் (மது. 190-194).

**அரசு** – 1. அரசர். பகையுடைய அரசு-அரசர்-பணிசெய் வதற்கு ஏதுவான ஆற்றல் மிக்கவன் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி யன் (புறம். 17:31,32). கீழ் கடல் பின்னதாக, மேல் கடலின் அலை நலங்கிள்ளியது குதிரையின் குளம் பினை யலைப்ப வலமாக வருதலும் உண்டெனக் கவன்று நெஞ்சு நடுங்க வடபுலத்தரசு அச்சத்தால் கண்ணுறங்கவில்லை (புறம்.31:13-17). பறம்பு மலைக் கோமான் பாரி அரசுடன் போர் செய்தான் (புறம். 158:1-4). ஒரு குடியிற் பிறந்த பலருள்ளும் மூத் தோன் வழி நடவாது அறிவுடையோன் சென்ற வழியிலே அரசு நடக்கும் (புறம். 183:5-7). முரசு முழங்குதானையுடைய அரசும் ஓம்புமின் (புறம். 301: 5). அரசாகிய பாம்புகளை அஞ்சச் செய்தல் (புறம். 369:6). வீரர் வீழ வாட்போர் செய்து, தன் நாட் டைக் கவர்ந்த அமைச்சர் முதலிய சுற்றத்தையுடைய பகையரசு நடுங்கக் காவல் மரமாகிய கடம்பினைத் தடிந்தவன் நெடுஞ்சேரலாதன (பதி. 12:1-3). முரசு முழங்கும் நெடுநகரில் பகையரசு கண் துயிலாமல் சேரலாதனுக்கு அஞ்சியது (பதி. 12:7,8). வஞ்சினம் முடித்த சேர மறவர் முரசுடைப் பெருஞ்சமரில் அரசு மாயக் கொன்று வென்று, தலையை உலக் கையால் இடித்த மிளகைப் போல அவர்தம் தலை யைத் தோமரத்தால் இடித்தனர் (பதி. 41:18-21). மக்கள் வியக்குமாறு பகையரசை அழித்தான (பதி. 42:16). பகையரசு பல வென்று கடல் சூழ் உலகினை ஆணடு இறநத மன்னரைக கவிதத தாழி களையுடையது இடுகாடு (பதி. 44:20-23). படை கெட்டோட அரசைப் போர்க்களத்திலே பிண மாக்கி வெற்றிப் பெருமிதததில இரும்பொறை களத்தில் துணங்கைக் கூத்தாடினான் (பதி. 77: 3,4). களிறு, குதிரை, தேர் ஆகியவை சூழத் தம் பகை வர்க்கு உதவியான அரசு பககத்தே வந்து தங்கினாலுமமனநடுக்கமின்றிப் பொரும திண்மை வாயந்தவர் சேர மறவர் (பதி. 81:6-9). பகையரசு இருந்து நடுஙகுதற்குக் காரணமானது பாசறை (முல்லை. 79). பகைவா நாடுகெடத் தீயிட்டு ஆலங கானத்தில் அரசுபடப் போர் செய்து முரசு கைக்கொணடு நெடுஞ்செழியன களவேள்வி செய தான (மது. 126-130). பொரவநத அரசின நிலை யுடைமையைக் கெடுக்கும் அரண (மலை. 378) அரசு முறை செய்க எனத் தாய விருமபினாள் (ஐங. 8: 2,3). முரசொலிககப் பொருது பகையரசு கெடப் போரில வெலலுதல (ஐங். 426:3,4). அரசு பகை தணிந்து எல்லோரும் மீளும் வணணம் காாப பருவம் வந்தது (ஐங். 455: 1,2) வேந்தர் பொருட்டு செல்லும் தூதினை மேற்கொணடு சென்று, பணி முடித்துப் பின்னர் அரசிடம் விடை பெற்று குறித்த நாளில் தலைவன வருவான் எனத் தெளிந் தேன் எனத் தோழி தலைவியிடம் கூறி ஆற்று விக்கிறாள் (ஐங். 466). படைகொண்டு அரசு போர் செய்தாலும் மறவர் தம் வில்லின நாணொலியா லேயே அவரைப புறங்காண்ட லன்றி அம்புவிடுத்து அவரைப் புறங்காண நாணுவர் (கலி. 15: 1-4). பாண்டியன சீறறத்தோடு அரசு மாயப் பொருத போது முரசு முழங்கியதுபோல இடி முழங்கியது (பரி. 22: 3,4).

2. நாடு. தமிழ் நாட்டினை யாண்ட சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தருள்ளும் அரசு என்னும் சிறப்பிற்குரியது சோழ அரசே - சோழ நாடே-எனக் கிள்ளி வளவனிடம் வெள்ளைக்குடி நாகனார் கூறியுள்ளார் (புறம். 35: 3-5). யானை, குதிரை, தேர், மறவர் என நால்வகைப் படைச் சிறப்புடைய தாயினும் அரசுக்குக் கிடைக்கும் வெற்றி அறநெறியை அடிப்படையாகக் கொண்டது (புறம். 55: 7-10). மெல்ல வந்து நல்லடிபொருந்தி நலங்கிள்ளியை ஈக என ஒருவன் இரந்து கேட்பின் சிறப்புடைய அரசையும் எளிதிற் கொடுப்பான (புறம். 73: 1-3). நெடுஞ்செழியன பகைவரது

அரசைக் கைப்பற்றிக் கொள்வான் (மது. 132). நன்னன் தன்னைப் புகழும் பரிசிலர்க்குத் தான் வென்ற அரசுமுழுவதையும் அளித்தாலும் அமைதி பெறாத அறிவோடிருந்து மழை பெய்த மேகம் மீண்டும் பொழிவது போல் வழங்குவான் (மலை. 73-76).

3. அரசாட்சி. முரசுடை மூவேந்தரின் அரசு-அரசாட்சி - ஆகிய செல்வத்தை ஊக்கமில்லாதவன் பெற்றால அது கனமுடையதாகத் தோன்றும்; அதனை ஊக்கமுடைய சீரியோன் பெற்றால் நொய்தாகத் தோன்றும் (புறம். 75). சோழநாடு அரசிழந்து அல்லற்பட்ட போது, மலையமான் சோழிய ஏனாதி திருக்கிள்ளி துன்பந்துடைத்துச் சோழர் ஆட்சியை மீண்டும் நிலைநாட்டினான் (புறம். 174: 6-9). பெருஞ்சேரலிரும்பொறை குடிகளைக் காத்தற்குப் பொருந்திய அரசின துறைகளை முற்றக் கற்றவனும் பிறர்க்கு அமையாத சிறப்பினை எய்தியவனு மாகிய புதல்வனைப் பெற்றான் (பதி. 74:20, 21).

**அரசுகட்டில் - அரியணை.** பெருஞ்சேர லிரும்பொறை தன் பெருந்தேவியுடன் வெளியே வந்துநின்று அரண்மனையிலுள்ள எல்லாவற்றையும் கொள்க எனக் கூறி ஒன்பது நூறாயிரம் காண த்தையும் அரசுகட்டிலையும் - அரியணையையும்-அரிசில் கிழாருக்குக் கொடுப்ப அவர் ஏலாது யான் இரப்ப நீ ஆள்வாயாக என அவற்றை அரசனுக்கே நல்கினார் (பதி. ப. 8).

**அரசுவா - பட்டத்து யானை.** பகையரசரின் அரசுவா-பட்டத்துயானை - கதறும்படி அதன் தந்தத்தை வெட்டி அதனா லியற்றப்பட்ட தெய்வத் தன்மையுடைய கட்டில் மீதிருந்து தும்பை சூடிய மறவர் மார்பிலிருந்து குருதியை வெளிப்படுத்தி அயிரை மலையிலுள்ள கொற்றவைக்குப் பலி கொடுப்பர் (பதி. 79:12-18).

**அரண் - காப்பு.** 'பசுவும் பார்ப்பனரும் பெண்டிரும் பிணியாளரும் புதல்வர்ப் பெறாதவரும் தங்கள் அரணினை - காப்பினை – அடைவாராக; நாங்கள் அம்பு செலுத்தப் போகின்றோம்' என்று பகை நாட்டவர்க்கு அறநெறி கூறும் கொள்கையுடையவன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி (புறம். 9:1-6). பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி பகையினை அழிக்கும் வெம்மையுடைய அரணை அழித்து, வலிமையோடெதிர்ந்தவரைப் புறங்கண்டான் (புறம். 11:8-10). சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை அம்பு நிறைந்துள்ள காவலுடைய அரணை உடையவன் (புறம். 20:16). பகைவருடைய காவல் பொருந்திய மதிலைக் கொண்ட அரண் பலவற்றையும் வென்றவன் அதியமான் நெடுமானஞ்சி (புறம. 92: 4-6). குறும்பர் சேர்ந்த அரண்களை வென்று அப்பகைவர் நாட்டை அழித்தமையால், அதியனுடைய வேல்கள் சுரை பொருந்திய காம்புடன் ஆணி கலங்கிச் சிதைந்தன (புறம். 97:4-7). முரண்மிகு கோவலூரை யழித்து வென்று அரண் பலவற்றையும் அழித்த அதியமானின் திகிரி ஏந்திய தோளைப் பரணர் போற்றிப் பாடினார் (புறம். 99:12-14). வறுமையாற் செயலற்ற புலவர் நிலைக்குச் சேரமான் குடக்கோச் சேரலிரும்பொறையினைச் சினப்பித்த பகைவரின் அணுகற்கரிய காவன்மிக்க முனையிடத்துள்ள செயலற்ற அரண் உவமை (புறம். 210:13-15). மன்னர் தமக்கு அரணாகக் காட்டினைக் கொள்வதுண்டு (புறம். 257:6, 7). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், வேலினால் பிளப்புண்ட பகைவருடைய மார்பிலிருந்து பெருகிய இரத்தத்தால் கழியிலுள்ள நீர் நிறம் மாறிக் குங்குமக் கலவை போலாகுமாறு பொருது அரணகளை அழிதது்த் தலைமையும் முயற்சியுமுடையவனாக விளங்கினான் (பதி. 11:7-11). புலித்தோலுறை கழித்த வேலினைக் கையிலேந்திப் பகைவர்தம் அரண்களை வென்ற தார்ப்படையால் அழித்தற்கரிய படைமன்னர் படைவகுப்பினை வெற்றி கொள்ளும பெரும்படைக்குத் தலைவன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன (பதி. 24:2-5). கடலிலும் காட்டிலும் உள்ளனவாகிய அரண்பல உடையராக இருப்பினும், அவற்றால் வலிமை பெறாதவராய், முடியுடைய வேந்தரும் குறுநில மன்னரும் தமமுள் ஒன்றுபட்டு நடுங்கும்படி பல் யானைச் செல்கெழுகுட்டுவன் முரசு முழங்கும் (பதி. 30:30,31,44). பகைவரின் கைப்பற்றுதற்கரிய அரண் அழியும்படி போரின மேறசெல்லும் காலன் அனைய கடுஞ்சின முன்பினை யுடையவன் களங்காய்க்கண்ணி நார்முடிசசேரல் (பதி. 39:7,8). மோகூர் மன்னனது அரணகளை வருத்தமுறச் செய்தான் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. 44:13,14). போரினைக் கைவிட்டுப் பணிய முன்வராமலும் மாறுபட்டு எதிர்க்க முடியாமலும் உள்ள வீரரொடு தம் குலத்தையும் அழித்தற்கு அஞ்சிய பகைமன்னர், தம் அரண்களைப் பாதுகாப்பாகக் கொண்டு, அவற்றில் கண்துயிலாது உறைந்தனர் (பதி. 81:33-36). வீரர்க்கு நடப்பெற்ற நடுகல்லிற்கு அரணாகச் சுற்றிலும் வேலை ஊன்றிக் கேடகங்களை நிரல்பட வைப்பது வழக்கம் (பட். 78,79). பகைவருடைய காவலமைந்த அரண்களும் கதவுகளும் யானைகள் கொண்டு அழிக்கப்படும் (பட். 229-231). தலைவன் பிரிந்தமையால்

தலைவி அடைந்த அச்சமிக்க வருத்தத்திற்கு, வேலேந்திய வான வரம்பனின் போர் முனையிற் கலங்கி உடைந்த மதிலையுடைய அரணிலுள்ளாரின் வருத்தம் உவமை (அகம. 45:16-19). ஆஅய் என் பானின் வில்வீரர் அம்புடையாராய்ச் சென்று பகைவர் அரண் பலவற்றை அழித்து நல்ல அணிகலன்களைக் கவர்ந்து வருவர் (அகம். 69:15-18). அரண பல கடந்த முரணகொள் தானையுடையவன் வழுதி (அகம். 93:8,9). பகைவர் ஓமபிக் காக்கும் அரணகளை அழித்த பெரிய படைகளை வென்ற ஆற்றல மிக்க மிஞிலியொடு போர் செய்து எயினன் இறந்து பட்டனன (அகம். 181.3-7). பகைவரின் போர் முனையாகிய அரணை வென்ற போர்ததொழில் வல்ல படையினைக் கொணடவன் சேரமன்னன் (அகம். 381:13-15). அரணமிகக மதிலிடத்தில் பகைவர் வந்துற்றபோதும் செழியன அஞ்சாது தாககி, அவர்தம முரசத்தைக் கைப்பற்றி அரணகளை வெனறான் (நற். 39.7-9). பகைவரின் காவற்காடு சிதையுமாறு யானைகளைச் செலுத்தி அவர் காக்கும் அரண்களைக் கைபபற்றிய வலிமை மிக்க சேனையினைக் கொண்டவன் வழுதி (நற். 150:2-4). சேந்தன் பகைவருடைய அரிய அரணகளைக் கடந்தவனும் மாரிபோலும் வண்மையுடையவனும் கள்ளுணவையும வேற்படையையும் உடையவனுமாவான் (நற். 190:1-3). விணணுற உயர்ந்த அரண் பலவற்றை வெளவிய வேந்தன் (ஐங். 443:4,5). பகைவரின் கடத்தற்கரிய அரணைக் கடந்த சீர் கெழு தானையை யுடைய வெல்போர் வேந்தனொடு தலைவன் வினைவயிற் பிரிந்து சென்றான் (ஐங். 459:2-5). பகைவரின் செய்யப்பட்ட அரணைச் சிதைத்த செருமிகு தானையொடு தேர்செலுத்திச் சென்றான் தலைவன் (ஐங. 474:1-4). வேப்பந்தாரினையுடைய பொருப்பனாகிய பாணடியன் பொருத பகைப்புலத்து அரண் உடைந்தது (கலி. 92:27,28).

**அரணம்** - காப்பு. 'தமக்கு அரணம்-காப்பு-எதனையும் காணாது திசையெங்கும் தேடித் திரியும் உலகினர் யாவரும் இந்நிழற்கண வந்தடைவாராக' என்று வெண்கொற்றக் குடையினது அருட்சிறப்பினை இயவர் முரசறைந்து கூறுமாறு ஞாலங் காப்பவன் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. 17:7-14). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் படை அன்புடையார்க்கு அரண மாகவும் பகைவர்க்கு வருத்தம் செய்வதாகவும் விளங்கியது (பதி. 31:34, 35). தம் பகைமன்னரின் முரசொலி கேட்டு அஞ்சி வந்தடைந்த வேந்தர்க்குக் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனின் தூசிப்படை அரணமாய் அமையும் (பதி. 50:10,11). ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் தன்னைச் சேர்ந்தோர்க்கு அரணமா... விளங்குபவன் (பதி. 59:10). கூடமாகக் கால்களை நட்டுக் கயிற்றை இழுதது்க் கட்டிய கூடாரத்தில் வலிய வில்லினைச் சேர ஊன்றி அவற்றில் அம்புத் தூணிகளைத் தொங்கவிட்டு, எறிகோல்களையும் நிறுத்திக் கிடுகுகளையும நிரையாகக் குத்தி வைக்கப் பெற்று விளங்கும் விற்படையாகிய அரணமே தங்களுக்கு அரணமாகத் தலைவனது பாசறை அமைந்தது (முல்லை. 39-42). மன்றத்திலுள்ள மரா மரத்தில கூகை குழறினாலும் தலைவி அஞ்சி நெஞ்சழிநது அரணம் சேருவாள் (அகம. 158:12-14). பகைவரது வெலகொடி பறக்கும் அரணையழித்த லன்றிப பிற தொழிலைக் கல்லாத யானைகளை யுடைய வேந்தனின் பகையை வெல்லத் தலைவன செனறான (ஐங. 429:2-4). நீணட மதிலாகிய அரணததைத் தாக்கியதனால் யானையின கோட்டிலணிந்த தொடி பிளநது நுனி மழுங்கியது (ஐங. 444:2,3). காவலை யுடைய அரணததைக் குததாதது தலைவியினுடைய மகன் வைத்திருந்த கைபுனை வேழம (கலி. 86:7). 'அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே' எனறு திருமால் போற்றபபடுகிறார் (பரி. 4:73).

**அரந்தை** - துன்பம். புரவலன் நடுகல்லாயினமையின உலகம் அரந்தை-துன்பம்-எய்தியது. (புறம். 221 11-13). நாடு பாழாயினமை கணடு அரந்தை யுடைய பெண்டிர் வருநதினர் (மது. 166).

**அரம்** - அராவிச் செம்மைப் படுத்தும் இரும்புக் கருவி. கொல்லன் அரத்தினால் கூர்மை செய்யபபெற்ற அழகிய வாயினை யுடையதும் நெடிய கைபபிடியினையுடையதுமான கோடரியால் அடிமரம் வெட்டப்படும் (புறம. 36:6-9). முழவினைப போன்ற பருத்த அடியினை யுடைய பனைமரத்தின மடலிலுள்ள கருக்கு அரததின் வாய் போன்றிருககும் (புறம். 375:4). அரம் போழ்கல்லா மரம்படு தீங்கனி (பதி. 60-5). கரிய கொம்புகளை யுடைய வேம்பின் குழை, அரத்தின் வாய் போன்ற விளிம்புடையது (பொரு. 143,144). சஙகு வளையல அரத்தினால போழ்ந்து அமைக்கப்பெற்றது (மது. 316). பேரியாழின் வளைந்த கோடு அரததால் அராவிச் செய்யப் பெற்றது (மலை. 35-37). வேளாப் பார்ப்பான கூரிய அரததால அரிந்து வளையல் செய்வான் (அகம். 24:1,2). அரத்தால் அராவிப் பிளந்த பிறைவாயம்பினையும் இடுங்கிய நோக்கினையும் உடையவர் மறவர் (அகம். 67:5,6). பொய்கைக் கரையில் படர்ந்து, அரத்தின் வாய் போன்றுள்ள முட்களைக் கொண்ட பிரப்பங்கொடி அருவி நீரில் படர்ந்துள்ள ஆம்பலின அகன்ற இலையைக்

கோத்துக் கிடக்கும் (அகம். 96:3-5). நிரம்பா இல் வாழ்க்கையை முற்றுவிக்க வேண்டி, அரததால் பிளக்கப்பட்ட அழகிய வளையல்கள் தலைவியின் தோளில நிற்றலினின்று கழன்று விழுமாறு தலைவன் பொருள் தேடிச் சென்றான் (அகம. 125:1,2,15). செந்நாயின பற்கள அரத்தால் அராவப் பெற்ற ஊசியின் திரண்ட நுனியைப் போன்று கூரியனவாகவும் திட்பமான நிலை உடையனவாகவும் விளங்கும் (அகம். 199:8,9). அரம்போழ் அவ்வளை (அகம். 6:2; 251:20;349:1; ஐங். 185:3; 194:1). புனல் ஆடிய மகளிர் கணகள் அரத்தால கூர்மை செய்யப்பெற்ற காமன் அம்பு போன்றன (பரி. 10:97,99).

**அரம்பு – 1.** குறும்பு. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனுடைய வலிமையை அறியாது எதிர்த்துவந்த அரம்புடைய-குறும்பினையுடைய-பகைவரின் நாட்டின் அழிவினைக் கண்டுவந்ததாகக் குமட்டூர்க் கண்ணனார் கூறுவர் (பதி. 15:13-15).

**2.** குறும்பர். பாலை நிலவழியில் அரம்பு-குறும்பர்-செய்யும் கலகம் நீக்கிக் காப்பார் யாரையும் காண முடியாது (அகம். 179:6,9).

**3.** துன்பம். யாமரத்து நிழலில் தலைவன தங்கியிருக்க மாலைக்காலம் அரம்பு - துன்பம்-செய்து அலைக்கும் (அகம். 287:11-13).

**அரமகள் -** தேவமகள். அரமகள்-தேவமகள்-திங்களின் கலையை உணவாக உட்கொள்ளுவாள் (பரி.10:78). கொடுமையுடைய அரமகளிர் பலர் சோலையிற் கூடி மலையிடமெல்லாம் ஆரவாரிக்கச் 'சேவற் கொடி வாழ்கவென வாழ்த்திப் பாடி விளையாடுவர் (முரு. 38-41). முருகனுடைய கைகளில் ஒன்று வானத்திலுள்ள அரமகளிர்க்கு மணமாலை சூட்டியது (முரு. 116,117). நன்னனுடைய மலைநாட்டுப் பகுதி, தெய்வம் விரும்பும் குவளை மலரை அறியாமல் தொட்டாலும் மலையில் உறையும அரமகளிரின் இருப்பினைக் கண்டாலும் வழிச்செலவோர் உயிர்போகுமாறு வெதும்பி நடுங்கும் இயல்பினைக் கொணடது (மலை. 189-191). மலையிடத்துப் பல பண்டங்களையும் கொண்டு வரும் அருவியில் நீராடும் வானத்திலுள்ள அரமகளிர், அதனைக் கையாற் குடையுந்தோறும் கூத்தர் இன்னியங்களின் இசைபோல இனிய ஓசை எழும் (மலை. 294-296). 'சிறுகிளியோப்பும் தட்டையினைப் புடைத்துக் கொணடு கொடுமையுடைய அரமகளிரைப் போல நின்ற நீ யார்; நின்னை நுகர்வேன்' எனக் கூறித தலைவன் தலைவியின் சிறுபுறத்தினைத் தழுவினன் (அகம். 32:6-9). அச்சம் தரும் அரமகளிரைப்போல் பெறுதற்கரியள் தலைவி (அகம். 162:25). பாண்டியனின் தோண்டப் பெறாத அருவி விழும் பொய்கையினை யுடைய மலைக்குகையில் மறைந்த இடத்துள்ள அரமகளிரைப் போலத் தலைவி அருமையுடையள் (அகம். 342.10-12). நீர்த்துறையில் தலைவன தலைவியின் முன்கை பற்றி அஞ்சத்தக்க அரமகளிரைச் சுட்டிச் சூளுரைப்பதுணடு; சூளுரை தவறினால் அது செய்தாரைத் தெய்வம் வருத்தும் (குறு. 53:1,6, 7). கடலருகே இரையருந்திய அன்னங்கள், இமய மலையின் உச்சியிலுள்ள வானைச் சார்ந்த அரமகளிர் விளையாடுதற்குரிய தம் இளைய பார்ப்புகளுக்கு உணவினைக் கொடுக்கச் செல்லும்போது அவற்றின் வலிய சிறகுகள் வருந்தின (நற். 356:1-7). ஆயத்தார் வரையில் உள்ள அரமகளிர் போன்றவர் (ஐங். 204:2). குன்றக் குறவன் காதல் மடமகள் மலையில் திரியும் அரமகளைப் போன்றவள் (ஐங். 255:1, 2). விண்ணைத் தொடும் உயர்ந்த மலையிடத்தில் அரமகளிர் பந்தடித்து விளையாடிய இளைப்பு நீங்கக் குளிர்ந்த, தாழ்ந்த அருவியில் நீராடுவர் (கலி. 40:22,23).

**அரமகளிர் -** தேவமகளிர். அரமகள் காண்க.

**அரமியம் -** நிலாமுற்றம். கம்பத்தில் கட்டிய கொடிகள் கடலலை போல அசையுமாறு காற்று அடிக்கையினால் மாடங்களின் அரமியத்தில் -நிலாமுற்றத்தில்- உள்ள செல்வக் குடிப் பெண்டிரின் முகம் முகிலில் மறையும் திங்களைப் போல, ஒரு கால் தோன்றி ஒரு கால் மறையும் (மது. 448-452). தலைவனது நெடிய மதிலைக் கொண்ட ஊரில் மாலையில் கோவலர் புல்லாங்குழலில் எழுப்பும் இசை அரமியத்தில் ஒலிக்கும் (அகம். 124:13-16).

**அரலை –** ஒருவகை மலர் (அலரி). வெறியாட்டெடுப் போர் முருகனுக்கு அரலைமாலை சூட்டுவது வழக்கம் (குறு. 214:6,7).

**2.** கொடி முறுக்கு. வெண்சிறு கடுகின் அளவும் அரலை - கொடிமுறுக்கு - இல்லாதவாறு உருவிச் செம்மையாக்கப் பெற்ற முறுக்கின நரம்பு யாழில் கட்டப்பெறும் (மலை. 21-24).

**3.** விதை. நன்னன் நாட்டிற்குச் செல்லும் வழியில் ஆசினிப்பலா வெடித்து உள்ளேயுள்ள அரலையை-விதையை-சிதறும் (மலை. 138,139). காட்டிலுள்ள பாறையில், யானை தன் புறத்தினை உராய்ந்த கரிய அடியினையுடைய இலவமரத்தின் அரலையாகிய வெள்ளிய கொட்டைகள் ஆலங்கட்டி போலப் பரவிக் கிடக்கும் (அகம். 309:6-9). வரகின் கதிரை உண்ட அழகிய பெண்மான், (மரல்) விதையாகிய அரலை உதிர்ந்து கிடக்கும் காட்டில் தன் ஆண்மானொடு மகிழ்ந்து விளையாடும் (நற். 121: 2-4).

4. குற்றம். விரலால் நொடிக்கும் நொடிவிசையின் மேம்பட்ட அரலை-குற்றம்-இல்லாத தாளத்தோடு கூடிய பாட்டால் வறுமை நீக்க முடியாதெனக் கிணைவன் வருந்தினான் (புறம். 381:14,15).

அரவணை - பாம்புப் படுக்கை. வெற்றிமிக்க சக்கரத் தண்ணலாகிய திருமால் அலை முழங்கும் கடலிடத்தே அரவணை - பாம்புப் படுக்கையில் - பள்ளி கொண்டுள்ளார் (கலி. 105:71, 72).

அரவம் - 1. ஒலி. பாம்பின் தலை துணிபடுமாறும் நெடிய மலை பிறழுமாறும் குன்று தூவுமாறும் இடிக்கும் இடியின் அரவம் - ஒலி - சேரமான் குடக்கோச் சேரவிரும்பொறையின் படைமுரசம் முழங்கும் ஒலிக்கு உவமை (புறம். 211:1-5). முரசமும் வலம்புரியும் முழங்கக் கடையாமம் கழிந்த, இருள் நீங்கும் விடியற்காலத்தின் அரவங்களைக் கேட்டு மன்னன் துயில் எழுகவென்று குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை அவன் பாசறையில் சென்று கிணைப்பொருநன் கிணை முழக்கிப் பாடுவது வழக்கம் (புறம். 397:5-11). அரவக் கடற்றானை அதிகன் (சிறு. 103). அரவ வாய் ஞமலி (அகம். 122:9). வலிய வாயினால் அலராகிய அரவத்தை யெழுப்பும் சீறூர்ப் பெண்டிர் பலரும் காணுமாறு தலைவனது தேர் தலைவியை வரைதல் குறித்துப் பகலிலேயே வந்தது (அகம். 160:16-18). நள்ளிரவில் மேகம் முழங்கி இடித்த அரவங்கேட்ட யானை அதனைப் புலியின் ஒலி என்று கருதி, அஞ்சி மலைக்குகைகள் எதிரொலிக்கக் கதறி ஓடும் (அகம். 232:2-5). தலைவனின் நெடுந்தேர் வாராதாயினும் வருவதுபோலத் தலைவியின் செவியில் ஒலிக்கும் அரவத்தால் அவள் விழித்தெழுந்தாள் (குறு. 301:5-8). இரவில் தலைவன் வரும் வழியில் புலி களிற்றினைத் தாக்கிக் கொன்றமையால் அதன்பிடி, மேகம் இடிப்பது போலப் பிளிறும் அரவங் கேட்டுத் தலைவியின் நெஞ்சம் அஞ்சக் கண்கள் நீர்சிந்தும் (நற்.144:1-4). உயரிய மதிலிடத்துள்ள சுருங்கையில் வையைப் புதுநீர் ஓடிய அரவத்தினால் மதுரை மக்கள் துயில் நீங்கி நீராட வையைக்கு விரைந்தனர் (பரி. 20:15).

2. ஆரவாரம். பழுத்த மரத்தில் புள்ளினம் ஒலித்தாற் போலப் பண்ணனுடைய மனைமுற்றத்தில் உண்ணுதலால் எழும் ஒலியாகிய அரவம் - ஆரவாரம் - கேட்கும் (புறம். 173:3, 4). இல்லக்கிழத்தி பாணரை உண்பித்தலிலும் பரிசிலரை ஓம்புதலிலும் ஈடுபட்டு, அவர்கள் உண்பதாலாகிய அரவத்திடையே அச்செயலில் நீங்காது விளங்குவள் (புறம். 334:5-7). 'மேகமே, நீ நாளும் பயனின்றி அரவம் செய்து ஒழிவாயோ' என்று தோழி வினவினாள் (அகம். 188:1,7, 8). நடு இரவில் மேகம் முழங்கும் அரவத்தைக் கேட்ட யானை அதனைப் புலியின் ஒலியெனக் கருதி வெருவிப் பெரிய மலை முழைஞ்சு எதிரொலிக்குமாறு பிளிறிப் பெயர்ந்தோடும் (அகம். 232:1-4). அரவ வண்டினம் ஊதுதொறும் குரவ மலர்கள் கோங்கின் பூவகத்தே உதிரும் (அகம். 317:10,11). தலைவியின் தோளணி நெகிழ மூதூர் அரவம் செய்தது (நற். 85:2, 3). இடியேறு பாய்ந்து கொன்றொழித்த களிற்றி யானையின் கோட்டினை எடுத்துப் பாறையில் வைக்கவும் அதன் பச்சூனைக் கெண்டி உகிரைப் புதைக்கவும் ஆகிய இவற்றால் தலைவியின் சிறுகுடியில் மறுகுதொறும் அரவம் எழுந்தது (நற். 114:1-3, 9-12). ஓயாத அரவத்தோடு மழை மிகுந்து இடியிடித்து மேகம் மேலெழுந்து சென்று மலையில் பெய்யத் தொடங்கியது (நற். 257:1, 2). பொருள்வயிற் செல்லுதலின் விரைவால் உண்டாகிய அரவத்தினைக் கேட்டுத் தலைவியின் மலர் போன்ற கண்கள் நீர் சொரிய, அதுபற்றி வினவிய தலைவனுக்கு ஒன்றுங் கூறாமல் நாணமுற்றவளாக அவள் அவனைச் சேர்ந்தாள் (நற். 308:1-5). தலைவன் பிரிவு கருதிச் செய்த அரவத்தால் தலைவி கலக்கமுற்று வருந்தினள் (கலி. 7:18). தலைவனது இளமைச் செல்விக் கொத்த பரத்தையரை இல்லம் கொணர்ந்து அவன் சுற்றமாகிய ஏனைப் பரத்தையர் நின்று பாடும் துணங்கைக் கூத்தில் எழுந்த அரவம் தலைவியின் அரிய துயிலையும் போக்கும் (கலி. 70:11-14). வேந்தன் இனிதிருந்து ஆளுமாறு எம் ஆயர் தெய்வத்திற்கு மடைகொடுக்கும் அரவத்தால் வந்த நின் பெண்டிர் காணாமல் நீ எம் படப்பைக்கண் காஞ்சி மரத்தின் கீழ் யான் செல் குறியிடத்தே வருவாய்' என வினைவல பாங்கி தலைவி தலைவனிடம் கூறினள் (கலி. 108:58-60). முருகன் குன்றத்திலுள்ள கோட்டத்தில் போர் அரவம் போல இசைக் கருவிகள் தாளத்தோடொத்து அரவஞ் செய்ய மேகங்கள் அதற்குப் பொருந்த முழங்கின (பரி. 18:42-45).

3. பாம்பு. நிரை மீட்டுப் புகழொடு வந்த தலைவன் சட்டை உரித்த அரவம்-பாம்பு-போலத் தானொருவனேயாகத் தேவருலகம் சென்றனன் (புறம். 260:19-21). தலைவனுடைய மலைமுழைஞ்சில் இரைதேர் அரவம் உளது (குறி. 255) ஐந்தலை அவிர்பொறி அரவம் (பரி. 19:72). அர, அரவு, அரா, அராஅ காண்க.

அரவிந்தம் - தாமரை. வையை அடித்துச் சென்ற மலர்களுள் அரவிந்தமும்-தாமரையும்-ஒன்று (பரி. 12:78).

அரவு - பாம்பு. நஞ்சு கரந்துள்ள பல்லினை யுடைய அரவின் - பாம்பின் - தலைநடுங்க இடியெனக்

கருதுமாறு முரசு முழங்கும் (புறம். 17: 38,39). அடிக்கும் கோலுக்கு அஞ்சாது சீறியெதிர்த்து மண்டும் அரவினைப் போலும் இளைய வலிய வீரர் அதியமான் நெடுமானஞ்சியின் நாட்டில் விளங்கினர் (புறம். 89: 5,6). முட்போலும் பல்லினை யுடைய அரவினை எறியும் இடியேறு போல முரசு முழங்கும் (புறம். 126: 18,19). இடியேறு அச்சமுடைய அரவின் அணுகுதற்கரிய தலைதுணியுமாறு மோதும் (புறம். 211: 1-4). அரவு உமிழ்ந்துவைத்த மணியினிடத்தே எவரும் அணுகமாட்டார் (புறம். 294: 7,8). வண்மையினை யுடைய உரைசால் நெடுந்தகை ஓம்புகின்ற ஊர், வரிபொருந்திய கழுத்தினை யுடைய அரவு தங்கும் புற்றத்தை யொக்கும் (புறம். 329: 5-9). அரவினை இடி எறிதல் (புறம். 366:3; அகம். 182:9). அரவினைப் போலும் உருவினை யுடையது ஆரம் (புறம். 368:18; 398:27). அரவு சீறினாற் போலும் களிப்பு மிக்கது தேறல் (புறம். 376: 14). பழமையுற்றுக் கிழிந்து இழைசிதர்ந்த கூந்தை யாடை ஈனப்பட்ட அரவினது நாவினை யொக்கும் (புறம். 393:15,16). புற்றினுள் அடங்கிய அரவினைப் போல் தூணியினுள் அம்பு ஒடுங்கியிருத்தல் (பதி. 45:1,2). இடியேறு குன்றத்தின்கண் குற்றமுடைய அரவினையெறிந்து அதன் மிக்க சினம்பொருந்திய வன்மையைக் கெடுக்கும் (பதி. 51:25-28). அரவின் உரிபோன்றது துகில் (பொரு. 83). வெண்டாமரை மலரில் தேனுண்ணும் வண்டொழுங்கு திங்களைச் சேர்ந்த அரவினை யொக்கும் (சிறு.183-185). தொண்டைமான் இளந்திரையன் ஆணையிற் காக்குமிடங்களில் அரவும் தீண்டிக் கொல்லுதலைச் செய்யாது (பெரு. 41, 42). தாம் சூலுற்ற நிலையில் அரவு தம் மேலே சென்றாலும் அஞ்சி மாறாத பண்புடையவர் மறக்குடிப் பெண்டிர் (பெரு. 134-136). அரவு போன்ற வில் (குறி. 158). அரவினது குறும்பாகிய வலிமையைக் கீரி அழித்தது (மலை. 504). மயிலைக் கண்டு அஞ்சி அரவு அணங்குடை அருந்தலைப் படத்தை விரிப்பது போல் காயாமலர்க் கொத்தினையடுத்துக் காந்தள் மலர்ந்து நின்றது. (அகம். 108:12-15). திங்களை அரவு பற்றி விழுங்குதல் (அகம். 114:5;313:7; குறு. 395:4). கொடிய சினமுடைய அரவினது படம் மேலெழுந்தாற் போன்று கோடற்பூவின் தாது கட்டவிழ்ந்து விரியும் (அகம். 154:6,7). அருவியாற் கொண்டு வரப்பட்ட அரவு உமிழ்ந்த அழகிய மணி பெருமலைச் சிறுகுடியின் தெருவினை இருளகற்றி விளக்கமுறுத்தும் (அகம். 192:11,12). நடு இரவில் அரவினது உத்தியாகிய படம் பொருந்திய தலை துணிபடுமாறு வலிய இடி முழங்கும் (அகம். 202:9-11). அரவினது பல்போன்றது குராவின் முதிர்ந்த அரும்பு (அகம். 237:3). அரவு இரைதேடித் திரியும் அச்சம் தோன்றும் சிறுநெறியில் இராப்பொழுதில் சென்றும் தலைவன் தலைவியை எய்தப் பெறாமல் அல்லகுறிப்பட்டான் (அகம். 258:10,11). இரவுக்குறிக்குத் தலைவன் வரும் சிறு நெறியில் அஞ்சத்தகும் அரவும் புலியும் உள்ளன (அகம். 318: 3,4). செங்குத்தான மலையினின்றும் கொழித்து வரும் அருவிநீர் போல அரவின் அழகிய வரிகளை யுடைய தோல் பாறைகளில் பொருந்தி யிருக்கும் (அகம். 327:12,13). அரவினது பைந்தலையை இடறித் தள்ளியவாறு இரவிலே வந்து தலைவன் தலைவியைத் தழுவினான் (அகம். 328:3-5). தலைவன் குறியிடத்து வந்து மீளும் வழியிலுள்ள கழிகளில் கூரிய பற்களையுடைய அரவொடு வய்மீன்கள் திரியும் (அகம். 340:9,10). சிறு வெள்ளரவின் அழகிய வரிகளையுடைய குட்டி பெரிய கான யானையை வருத்தினாற்போல இளையளும் முளைத்த வெள்ளிய எயிற்றளுமாகிய தலைவி தலைவனை வருத்தினாள் (குறு. 119). புள்ளிகளையும் வரிகளையும் வெவ்விய சினத்தையு முடைய அரவின் பைந்தலை துணிபட நள்ளிரவில் இடியேறு முழங்கும் (குறு. 190:3-5). பல நிறங்கள் விளங்கிய படப்பொறியை யுடைய அரவின் தலை நடுங்குமாறு இடி முழங்கும் (நற். 129:7,8). புள்ளிகளமைந்த அரவினது செல்புறத்தை யொத்து வேனிற்காலத்தில் யாற்று நீர் நுணங்கியோடும் (நற். 157:3,4). ஆரிருள் நடுநாளில் வருத்தும் தன்மையுடைய அரவு இயங்கும் (நற். 168:8). மழை பெய்யும் நள்ளிரவில் அரவு மணியை யுமிழ்ந்து அதனைத் தேடி வருந்துமாறு இடி முழங்கி யெறியும் (நற். 255:9-11). ஆரிருள் நடுநாளில் அரவு இரைதேரும் (நற். 285:1). கரடிக் கூட்டம் அரவினது ஈரிய புழையை யுடைய புற்றத்தை மேகம் போல் சூழ்ந்து இரைதேடி அகழும் (நற். 336:8-10). அரவு படமெடுத்து எழுந்தாற் போன்ற அல்குலையுடையவள் தலைவி (நற். 366: 1-3). வானத்தின்கண் அரவினால் சிறிதே விழுங்கப்பட்டு ஒளிவீசும் திங்களின் நிலாப் போன்று தலைவியின் அளகம் சேர்ந்த சிறுநெற்றி விளங்கும் (நற். 377:6-8). தலைவியால் காதல் நோயுற்றவர் இரவிலும் துயில்பெறாது அரவு தீண்டினாற் போன்ற துயரத்தை எய்துவர் (ஐங். 173). பருந்து வீழ்ந்தெடுத்த பைந்தலை யரவம் காதற்ற கவணை யொக்கும் (ஐங். தி. 1:2,3). வருதற்கரிய வழியெனக் கருதாமலும் அங்குள்ள அரவினை யஞ்சாமலும் தலைவன் இரவுக் குறியிடத்து வந்தான் (கலி.38:10). சுனையிடத்து மலர்ந்துள்ள காந்தள் குலையினைப் பெறுதற்கரிய மணி விளங்குகின்ற பொறியினை யுடைய அரவு நீருண்ணுவதாக்க் கருதி இடியேறு இடிக்கும் (கலி. 45:2-5). அரவின் பொறி போலும்

புள்ளிகள் அமைந்த வில்லினை யேந்தி வந்தான் தலைவன் (கலி. 50: 6,7). 'ஐந்து வாயினை யுடைய அரவின் பார்வையிலே அகப்பட்டு வருந்தி மேற் செய்யும் செயலை அறிகலலேன' என்று தலைவன் தலைவிமுன் தனது காம நோயைக் குறிததுக் கூறி னான் (கலி. 62:12,13). தலைவியது பினனிய முடி யில வைககப்பெறற நூலாற கட்டிய பூககள, கரிய அரவிடத்தே அதன நிறததோடு மாறுபட்டு விளங் கும் ஆரலமீன (காாததிகை) ஒபபத தோனறும் (கலி. 64:2-4). ஏறுதழுவலினகண வெள்ளை யெரு தின் கழுத்தில் பாயநதவனைப் பொறாமல மேற் சென்று கோட்டினால குததும கரிய இளங்காளை யின தோறறம், பாலபோலும திங்களைச் சேர்நது மறைதத அரவினை விடுவிக்கும நீல வணணனாய திருமாலை யொககும (கலி. 104:35-38). அரவினால சிறிதே விழுஙகப்பட்டு அதனுடன விசுமபிற் செல லும மதிபோல வெளளேறு தனது கழுத்தில தழு விக் கிடநதவனோடு பரணமீது தாவியது (கலி. 105: 43-46). முழங்கும கடலில் அரவாகிய அணையிலே பளளிகொணடவன நேமியான (திருமால) (கலி. 105. 71,72). பல பசுவினத திரளுககுள அரவு சேர்ந்தத னால ஏறு இடிபோல முழங்கியது (கலி. 113 27,28). திங்களை அரவு மறைககுஙகால அவ்வருததததைத தீர்கக மாட்டாராயினும சானறோா அததிஙகளி டததே அனபு காட்டி வருந்துவர் (கலி. 140:17,18). ஆயிரமாகிய கிளாநத தலையை யுடைய அரவைத திருமாலின ஊர்தியாகிய கருடச் சேவல வாயிலே கொணடது (பரி. 3:59,60). விடமுடைய அரவினது உடலையும உயிரையும உணணுவது உவணம (கருடன) (பரி. 4.42). அரவினால பற்றப பட்ட முழுததிங்கள் போலத தோனறுமபடி மகளிர் தம அஙகையில வெள்ளிககிணணததை யேநதி நறவுண டனர் (பரி. 10.75-78). அரவு வெகுணடு படமெடுத தலைபோல காநதட்குலைகள் மலாநதன (பரி. 20: 99).

**அரவுரி - பாம்பின சட்டை.** இழை சென்ற வழி இஃ தென்று குறிததுப் பாாகக இயலாத அளவு நுணணியதாய, வேலைபபாடு மிககமையால அர வுரியை – பாமபின் சட்டையை - ஒதததாய விளங கும துகிலினைக் கரிகாற பெருவளததான தன்பாற் போநத பொருநாக்கு வழஙகினன (பொரு. 82, 83).

**அரா – பாம்பு.** தான் இளையதாயினும் சுற்றததுடனே அரா - பாம்பு - எறியும இடிபோலப் பகைவரைக் காணப் பொறாத போரில மாட்சிமைப் பட்ட பாணடியா குடியுள ஏறுபோல்வான் பாணடியன் வெள்ளியமபலததுத் துஞசிய பெருவழுதி (புறம். 58: 6-8). வாளைமீனை நாளிரையாகப் பெற்றுணட நீர்நாய் அங்கேயுறையும் அராவை வராலமீன் என மயங்கி மாறுகொள்ளும் முதலைகளோடு முறை முறை மாறுபட்டு நீஙகும (புறம். 283: 2-4). முரசு இடியாக முழங்கப பகையரசராகிய அரா அஞசும் (புறம். 369 5,6). மலையில் புதர் படர்ந்த புற்றிடத்து இரை பெற விரும்பி வெளிய அரா பிறழுமபடி கரடிக குட்டி கைகளால அகழநதெடுககும (அகம். 257 19-21). இரைதேடும ஆணகரடி புறறிலுள்ள நல்லரா நடுங்க முழங்கி இருமபுசெய் கொலலன ஊதுலைத துருததி போலப பெருமூசசெறிநது அத னைத் தோணடும (நற. 125.1-4). அராவின மெல லிய தலையாற் கவிக்கபபட்ட பலதேவன மாாபில வெணகடமபமலர் அழகுசெயகிறது (பரி. 15.19,20). அராஅ காணக.

**அராஅ – பாம்பு.** எழுசசியையுடைய மணியையும் நிறம பொருநதிய பொறிகளையும கணணிற பொருநதிய செவியையும பிளவுபட்ட நாவையுமுடைய நிறம் பொருநதிய அராஅ-பாமபு - தன தோலை யுரிதது நீககுதல போனறு வறுமையின நீங்கிப பிறாககு வழஙகப் பொருள் நலகுமாறு சோழன நலங கிள்ளியைப் பொருநர் வேணடுகினறனர் (புறம. 382:13-17). அரா காண்க.

**அரி – 1. பரல்.** செறிநத அரி - பரல - உடைய சிலம பையும குறிய வளையையும அணிநத மகளிர் ஆன பொருநையாறறு மணல மேட்டில கழஙகாடுவர் (புறம. 363 -5). தெள்ளரிப பொறசிலமபு (மது. 444). அரி பெய சிலம்பு (அகம. 6 1). தநதையின காவல மிகக பெருமனையில அரியுடைய சிலமபுகள ஒலிக குமபடி தலைவி தோழியரோடு விளையாடினாள (அகம. 49:15-18). அரி பெயதுள்ள கெசசை ஆாபப விரைவினால ஆதியெனும கதியிலே சிறநத குதிரை களை உடையவன திததன (அகம. 122. 19-21). அரி பொருநதிய சிலம்பு (அகம. 257:3). சிலமபொலி கேட்டுத தாய தனனை அறிநது கொளவாள் என்று அஞசிய தலைவி அரியிட்டு மூடிய ஆராய்ந தெடுதத சிலமபினைக காலினினறும அகற்றிக கையிற் கொணடு தலைவனுடன உடனபோககிற சென்றாள (அகம. 321:15-17). அரியமை சிலமபு (நற். 12.5). முத்தரிப பொறசிலமபு (நற. 110 5). அரி பெயத கிணகிணி ஒலிககுமபடி தெருவில சிறு தேரைப பறறிக கொண்டு புதலவன நடைபயின றான (நற. 250.2, 3). அரியுடைய சிலமபு போன்று வாகை நெறறுககளின விதைகள் ஒலி செயதன (குறு. 369:1, 2). சிலமபின அரி ஆர்ததது (கலி. 57; 3;58:5). அரிபபெய அழகமை புனைவினை ஆய சிலமபு (கலி. 59.6, 7). தெளளரிசசிலம்பு (கலி. 69.8 )

புதல்வன் கையாற் புனைந்த வேழத்தைத் தன் காலிற் கட்டின அரி புனைந்த கெச்சை ஆரவாரிப்ப ஈர்த்து வந்தான் (கலி. 80.6-9). அரியொலி கிண் கிணி (கலி. 81'6). உருக்கிய பொன்னாற் செய்த சிலம்பி விட்ட முத்தரி ஒலிக்கத் துடி ஓசைக்குப் பொருநதுமாறு அடிபெயர்தது ஒருத்தி திருப்பரங் குன்றில் ஆடினாள் (பரி. 21 18). நித்தில அரிசசிலம்பு (பரி. 22:49).

2. செவவரி. பேகனால் துறக்கப் பெற்ற அவன் மனைவி அரி - செவ்வரி - பரந்த கணகளும் எண ணெய் பூசப் பெறாத கூந்தலும் உடையவளாக இருந்தாள் (புறம். 147. 5, 6). அரிமதர் மழைக்கண (புறம. 349: 5; அகம். 114:14; 149:19; 312:6; 334:17; 381:21; 387:2; நற். 8:1; 160:10; கலி. 77:4). அரியேர் உண்கண் (சிறு. 215; அகம். 144:2). விறலியர் மானோடு மாறுபட்டுப் பொருந்தின சேயரிக் கணணினர் (மலை. 45, 46). அரிவேய் உணகண் (அகம். 27: 17; 230:14; 276:8; 390:13). சேயரி மழைக் கண் (குறு. 86:1; நற். 13: 4; 16:9; ஐங. 52:2). தலைவி மிக்க அரி பரந்த மையுண் கண்ணினள் (ஐங. 174: 3). விலங்கு அரி நெடுங்கண் (ஐங. 200:3). பலரும் பாராட்டுதற்குக் காரணமான அரி படர்ந்த கண நீர் சிந்தும்படி நீ பிரிந்து செல்லுகின்ற நாடு தொலைவி லுள்ளது எனத தோழி செலவு உடன் படாது கூறினாள (ஐங். 257:3,4). அரிமதர் உண கண் (கலி. 82:20). அரிமதர் உண்கணணார் (கலி. 91:13). அரியார் ஞெகிழம் (கலி. 92:38). அரியுண்ட கண்ணார் (பரி. தி. 1:53).

3. அழகு. கண்ணைப் போன்று விரிநத அழகிய சுனைப பூக்களிலே, வண்டின் அரி-அழகிய - கூட் டம் ஒலி செய்யும் திருபபரங் குன்றிலே முருகன் விளங்குவான் (முரு. 75-77). பொற்பூவால செய்யப் பெற்ற கோதையினையும் தொடி செறிந்த கட்டு வடங்கள் அமைந்த அரி முனகையையும் மூங்கில் போன்ற மெல்லிய தோளையும் உடையவள் தலைவி (கலி. 54:2,3). அரி நீரில் அலர்ந்த அல்லியினை யுடைய நீலம், அனிச்சம், முல்லை ஆகிய மலர் களை நறவம்பூவோடு சேர்த்து மார்பிலணியும் தார் அமைக்கபபடும் (கலி.91:1,3). அரிமாண் அவிர்குழை (கலி. 92:36). தலைவி அரிக்குழை அணிந்த ஆடல் தகையள் (கலி. 109:15).

4. வண்டு. இலைக்கு மேல் ஓங்கி நிற்கும் தாமரை, நெய்தல், நீலம், அரியை-வணடினை-உடைய ஆம் பல் ஆகியவற்றோடு வண்டு மொய்க்கும் பிற மலர் களும் நிறைந்த பொய்கைகளில் வலைஞர் மீன் பிடித்து விற்றனர் (மது. 248-253). மணல் முற்றத்தில் அரிகளும் மிஞிறுகளும் ஆர்த்தன (மது. 684, 685). சந்தனம் பூசப்பெற்ற மார்பினில் அரி ஒலிக்க மாலையையும் கண்ணியையும் சூடித் தலைவன் இரவில் காவலர் அறியாமல் வந்து தலைவியைக் கூடிச் சென்றான் (அகம். 102:10-15). தும்பியாகிய அரியினம் போன்ற சரிந்து வளைந்த கரிய கூந்தல் முதுகு மறையும்படி தாழ்ந்து தலைவியின் தோள் களிலே கிடந்தது (அகம. 223:10-12). அரியமர் வனப் பின் கானம் (நற். 326:8). பூவில் விழும் அரி பின்னர் அப்பூவை விட்டுப் போவது போல எம்மால் விருமபப்படும் கணவர் எம்மை விட்டுப் போகாமல் காப்பாராக என வையையில் நீராடும் மகளிர் வேணடினர் (பரி. 11:118,119).

5. மென்மை. அரி-மென்மை-உடைய மயிர்பொருந் திய முனகையையும் அணியையும் உடைய வஞ்சி மகளிர் கோட்டுபபூப் பறித்து மணற்பாவைககுச் சூட்டிப் பொருநையாற்றில விளையாடுவர் (புறம். 11:1-5) அரிமயிர்முன்கை (பொரு. 32). ஆண்மான் அரியையும் மடபபத்தையும் உடைய பெணமா னோடு தங்குதற்குரிய நிழலில் தங்கித் தூறறின் கண் துயின்று மாலையில் பயற்றினைக் கறிததுத் தினனும் (குறு. 338:1-4). அரியுடைய நரைத்த கூந் தலை யுடையவர் செவிலியர் (நற். 110:6). அரிமுன் கை (கலி. 59:4; 147:36).

6. ஓசை. அரிக்கூடு மாக்கிணை (புறம். 378:8). அரிப் பறை (புறம். 396:4; ஐங. 81:2). அரிக் கூடு இனனியம் (மது. 612). அரித்தெழும் அரியைக் கூட்டுதலையுடைய இன்னிசைக் கருவிகள் முழங்க, ஆடுமகள விழாக் களத்தில் கழாய்க் கயிற்றில் ஆடித தளர்ந்தாள் (குறி. 193,194) சில்லரி கறங்கும சிறு பல்லியம் (அகம். 301:20).

7. விளக்கம். அரி - விளக்கம் - உடைய மலர் ஆம்பல் (அகம். 176:14;316.2) அரிமணல் இயவு (அகம். 271.3).

8. வரி. மணங்கமழும் காட்டு மல்லிகையையும் பிடி யைச் சூழ்ந்த அரி-வரி-பொருந்திய வண்டுகளை ஓட் டும் யானைகளையும் உடையது குன்று (பதி. 12:10-13). வெண்ணெல்லை அறுப்போர் மடுவிற் கவர்ந்த பெருமீனின் அரி பொருந்திய நிறத்தினை யுடைய கொழுங் குறையை உணடனர் (அகம். 236.2-4). பாதிரியின் அரி நிற மலர்கள் அதிரலோடு மணலி டததைக் கோலஞ் செய்யும் (அகம. 237:1,2).

9. நுண்மை. விலங்கு வீழ் அரி - நுண்மை-உடைய பனி பொலங்குழையில் தெறிததது (அகம. 351:12). தலைவி அழுதலால் விழுகின்ற அரிப்பனி பெருந் தோளை நனைககும் (அகம. 373:14).

10. பகை. அரி - பகை - மிக்க ஏறுகளை விரும்பிப் போக்குவன வாகிய ஏற்றினங்களினது குருதி

தோய்நத கொம்புகளுடனே குடர்கள் சுற்றிப் பிணித்தன (கலி. 103:24-27).

11. அரிசி. பலா விதை. மான்தசை, பன்றித்தசை, உடும்பின் கறித்துண்டம் ஆகியவற்றைப் புளியினைக் கலந்த மோருலையில் இட்டு, நெல்லரியையும் - அரிசியையும் - கூட்டி மலைச்சாரல் முழுவதும் மணங்கமழுமாறு துழாவிக் குறமகள் சமைத்த உணவினை விருந்தினர் பெறுவர் (மலை. 174-181). பண்டமாற்றிப் பலரிடம் பெற்ற நெல்லின் அரியைப் போலக் காட்டில் கிடாய் விரவிய செம்மறியாடுகளும் வெள்ளாடுகளும் கலந்த கூட்டம் காணப்பட்டது (மலை. 413-415).

12. தேறல். நாரால் வடிக்கப்பெற்ற அரியை தேறலை - குளிர் போக்குதற்குக் குடித்துக் குதிரையேறி வீரன் போருக்குச் சென்றான் (புறம். 304:2-4). பரதவர் கடலில் மீன் பிடிக்கும்போது மீனுடன் வலையிற் கிடைத்த முத்துச் சிப்பிகளை முன்னர்க் கடனாகப் பெற்றுண்டு மகிழ்ந்த அரிக்கு விலையாகக் கொடுக்கும் புகழ் வாய்ந்தது கொற்கைப் பட்டினம் (அகம். 296:7-10).

13. நெல்லரி. அரியை - நெல்லரியை - அவியச் செய்து மருத மரத்தின் அடி வீழும்படி மோதிப் பரவிய புதுப்புனலை மக்கள் அணைகட்டித் தடுத்து மகிழ்ந்தனர் (பதி. 30:15-18). குதிரையின் தலையின்மேல் தைக்கப்படும் கவரி போன்ற நெல்லின் சிவந்த அரியின் கதிர்களை முதிய பசு தின்னாவண்ணம் அதனை வேறிடத்தில் கட்டி வைத்தனர் (அகம் 156:1-6).

14. நீர். கணவனைப் பிரிந்த ஒருத்தி கயல்போலும் தன் கண்களினின்றும் விழுகின்ற அரி - நீர் - மழையைச் சேர்ந்த மதிபோன்ற தன் முகத்தே வழியும்படி அழுதாள் (கலி. 145:5,6).

15. ஞாயிறு. நிறத்தால் அரி - ஞாயிறு - ஒத்து உலர்ந்த செந்நெல் அரிசியாலாகிய இடை முரியாத சோற்றினைத் தொண்டைமான் இளந்திரையன் இரவலர்க்கு ஊட்டினான் (பெரு. 473-475).

16. பொன். சிறந்த இலக்கணங்களையுடைய நான்கு குதிரைகள் பூட்டப்பெற்ற அரியால் - பொன்னால் - செய்த தேரைப் பாணர்க்குத் தந்தும் கொடுத்தலில் நிறைவுறாத மனம் உடையவன் தொண்டைமான் இளந்திரையன் (பெரு. 488-490).

17. கண். குரால் நிறக் கண்ணுடைய கொல்லேற்றினைத் தழுவுபவன் பிணைமானின் நோக்குப் போலும் ஈரரி - இருகண்களை உடைய - தலைவியை அடைவான் (கலி. 104:21-23).

18. நிறம். வெள்ளரி - வெண்ணிறம் - உடைய வெண் சோறு (மலை. 465).

19. வெண்மை. அலகின் அன்ன அரி - வெண்மை - நிறமுடையது ஆலி (ஆலங்கட்டி) (அகம். 335:21).

**அரிக்குரல்** - விட்டு விட்டு ஒலிக்கும் ஓசை. அரிக்குரல் விட்டு விட்டு ஒலிக்கும் ஓசை - உடைய தடாரிப் பறையின் முகம் போன்ற யாமை பிறழ்ந்தது (புறம். 249 4). அரிக்குரலை யுடைய தண்ணுமை ஓசை கேட்ட மறவர் வெற்றி பெறும் விருப்பத்துடன் சென்று பொருதனர் (புறம். 270.8-10). அரிக்குரல் தடாரி (புறம். 369:21; 378 8; 390: 8; 395 25; 398 12). குழலோடு அரிக்குரல் தட்டையும் ஒலித்தது (மலை. 8. 9). நெற்றியில் வெண்மையுடையதும் அரிக்குரல் உடையதுமான கம்புட் கோழி தன் இனத்தோடு பழனத்தில் ஆடும் (ஐங். 85:1,2). பாடினியின் கிழமை, நிறை, குறைகளின் தோற்றத்திற்கு மாறாக மயிலின் அரிக்குரல் தோன்றியது (பரி. 17:17-19).

**அரிக்கோல்** - விட்டுவிட்டு ஓசையைப் பறையில் எழுப்பும் கோல். வாகைக் கிளையில் விளைந்த நெற்று ஆடுமகள், அரிக்கோலால் - விட்டு விட்டு ஓசையைப் பறையில் எழுப்பும் கோலால் - முழக்கும் பறையொலி போல ஒலித்தது (அகம். 151:8-10). வாரினால் இழுத்துக்கட்டிய அரிக்கோலையுடைய தெண்கிணையுடனே இனிய குரலால் பாடி அகவுநர் இரப்பர் (அகம். 249.3, 4).

**அரிகால்** - பயிரின் அரிந்த தாள். அரிகாலின் - அரிந்த தாளின் - கீழ்க் கிடக்கும் வரகை யுண்ணும் எலியைக் கொல்லுதற்கு அம்புடன் வேட்டுவச் சிறுவர் காத்திருப்பர் (புறம். 322.3,4). பிற நாட்டு விளை நிலங்களில் விளையும் நெல்லெல்லாம் கரிகாலன் நாட்டகத்துள்ள விளைநிலத்தே அரிகாலின்கீழ்ச் சிந்தும் நெல்லின் அளவுக்கு ஒப்பாகும் (பொரு. வெ. 1). நெல்லரிந்த பின்னர் அரிகால்களை உடைய நிலம் பிளக்குமாறு வலிய எருதுகளைக் கொண்டு உழவர் உழுதனர் (அகம். 41; 4-6). அரிகால் மாறிய வயலில் மறுசால் உழுத ஈரச்சேற்றில் விதைத்தற்கு விதை கொண்டுவந்த கூடையில் மீன் கொண்டு செல்லும் புது வருவாயுடையது தலைவனது ஊர் (நற். 210:1-4).

**அரிசி** - 1. ஒருவகை உணவுப்பொருள் (நெல்லரிசி தினை. யரிசி, மூங்கிலரிசி, வரகரிசி என நான்கு வகை). இலைக்கறியில் தூவுவதற்கு ஔவையார் சிறிது அரிசி கேட்க நாஞ்சில் வள்ளுவன் யானையை அளித்தான் (புறம். 140:4-8). மனையுறை சேவற் குருவி தான் இழைத்த கூட்டில், வயலில் விளைந்த நெல்லரிசியை உண்டு தன்பெடையொடு வதியும் (புறம். 318: 4-8). அரிசியுடன் நெய் கலந்து சமைத்த வெண் சோற்றுடன் ஊன் துணடம் முதலியவற்றைச் சீறூர் வேந்தன் அளித்தான் (புறம். 328:7-10.)

போர்க்களம் பாடும் பொருநன் அரிசி இன்மையின் ஆரிலை நீந்தி வந்து பாசறையில் உள்ள புரவலனைப் பாடுதல் (புறம். 371:9-12). ஆடுமகள், வெண்ணெல்லினைப் பூணுடைய உலக்கையால் குற்றிய அரிசிகொண்டு சோறாக்கினாள் (புறம். 399:1,2). குற்றந் தீர்ந்த யாழ்நரம்பிற்குத் தினையின குத்தலரிசி உவமை (பொரு. 16,17). முல்லை யருமபு போன்ற வரியற்ற, இடை முரியாத அரிசியினால அமைந்த நீணட சோற்றினைக் கரிகாற் பெருவளத்தான பொருநர்ககு அளித்தான் (பொரு. 112-114). உலக்கையாற குற்றிய மாட்சிமைபபட்ட அரிசியாலாக்கிய வெண சோறறுத் திரளை அலவன் கலவையோடு தந்து உழவர் பாணரை விருந்தோம்புவர் (சிறு. 190-195). வலைஞர் குற்றாத கொழியலரிசியைக் களியாக அட்ட கூழைத் தட்டுபபிழாவிலே யிட்டு உலர வைத்து முளையைக் கலநது நறும்பிழி செய்தனர் (பெரு. 274-281). அரியை உலரவிட்ட பெருஞ்செந்நெல அரிசியைக் கொணடு சமைத்த சோற்றைத் தீஞ்சுவை அமுதொடு புரவலன பெரும்பாணனுக்கு வழங்கினான் (பெரு. 473-479). புதுமெழுக்கினையுடைய மஞசிகையில் வெள்ளிய அரிசிப் பலியினைத் தூவினர் (பட். 163-165). மூங்கிலரிசி நெல்லரிசியுடன அவரைவிதை விரவிச் சமைக்கப்பெற்ற புளிங்கூழைப் புல்வேய்ந்த குடிசையில் வாழ்வோர் தம்பால் வந்தவர்க்கு இரவு உணவாக நல்குவர் (மலை. 435-439). பொன்னை நறுக்கினாற் போன்ற நுணணிய, தம்முள் ஒத்த அரிசியொடு வெள்ளாட்டிறைசசி கலந்து புலால் உணவு சமைக்கப் பெறறது (மலை. 440,442). பெணநாய் கடித்துக் கொண்டுவந்த நிணத் தசைகளோடே நீணட வெணணெல அரிசிச் சோற்றைக் கூத்தர் பெறுவர் (மலை. 563-566). பாலைவழிச செல்வோர் மூஙகில் அரிசியுடன் புலிதின்று எஞ்சிய மான்தசை வற்றலைக் கலந்து, தயிர் கூட்டிச் சமைத்த, உருகிய நிணததோடு சேர்ந்த சோற்றைத் தேக்கிலையில வைத்து உண்டனர் (அகம். 107:6-10). அன்னையா வரகைப் பண்ணை வெண பழத்தின் அரிசிபோலத் திரிகையிலிட்டும் உரலில் இட்டுக் குற்றித் தீட்டியும வெணமையாக்கினர் (அகம. 393:5-11). தீட்டப் பெற்ற வரகரிசியுடன் ஆட்டுத் தயிரையும் ஈயலையும் சேர்த்துச் சமைத்த இனிய புளிச்சோற்றில் வெணணெய் கிடந்து உருக, அதனை இளையர் உண்டபின்னர் உணண வருமாறு இரவுக்குறித் தலைவனிடம் கூறித் தோழி மணததை விரைவுபடுத்தினாள் (அகம். 394.2-7). உழவா வயலில் பயிர்நடச் செலலுமுன விடியலில் வரால் மீன் துண்டங்களை உணவுககுரிய அரிசியாலாககிய சோற்றுத திரளுடன நிறைய உண்பர் (நற். 60:2-6). வயலருகில் உள்ள பலாமரத்தில் கூடு செய்து வாழும் முயிற்றின் முட்டையை நாரை சென்று உரிஞ்சுதலான் முயிறும் முட்டையும் செந்நெல்லோடு கலந்த அரிசி போல வயலில் உதிரும் (நற். 180:1-3).

2. வாகை நெற்றின் விதை. அரிய பாலை வழியில் உள்ள வாகை மரத்தின் வெண்மையான நெற்றுக்களில் உள்ள அரிசி சிலம்பின் உள்ளீடு பரல்போல் ஒலி செய்யும் (குறு. 369).

**அரிசில்** - ஓர் ஆறு. கிள்ளிவளவனுக்குரிய சோழ நாட்டிலுள்ள அம்பர் நகரைச் சூழ்நது செலலும அரிசிலாற்றின் தெள்ளறல் போன்றது தலைவியின் கூந்தல் (நற். 141:9-11).

**அரிசில் கிழார்** - புலவர். சேரமான் பெருஞ்சேரலிரும்பொறையின் அமைச்சராகவும் விளங்கியவர். புறநானூற்றில் ஏழு பாடல்களும் (146, 230, 281, 285, 300, 304, 342) பதிற்றுப்பத்து எட்டாமபத்தின பாடல்களும் (71-80) குறுந்தொகை 193-ஆம் பாடலுமாகப் பதினெட்டுப் பாடல்கள் இவராற் பாடப்பட்டனவாகும். இவருடைய புறப்பாடல்கள் பெருந்திணை (புறம். 146), பொதுவியல் (230), காஞ்சி (281, 342), வாகை (285), தும்பை (300, 304) ஆகிய திணைகளிலும், அகப்பாடல் முல்லைத் திணையிலும் (குறு.193) அமைந்துள்ளன. பேகனால துறக்கப்பெற்ற கண்ணகியை அவன அன்பு கூர்ந்து ஏற்றுக் கொண்டு அவனிருப்பிடத்திற்குத் தேரைச் செலுத்துவதே தாம் விரும்பும் பரிசில் என்பதாகப் பாடியுள்ள புறநானூற்றுப் பாடல் (146) சிறப்பு மிக்கது. இவர் அதியமான் நெடுமானஞ்சி, கழுவுள் ஆகியோரைப் பாடியுள்ளார். தகடுரெறிநத பெருஞ்சேரலிரும்பொறை என்னும் சேர வேந்தரைப பதிற்றுப்பத்து எட்டாம் பத்தாற் சிறப்பிததுள்ளார். தன்னைப் பதிறறுப் பத்தின் எட்டாம் பத்தாற் பாடிய அரிசில கிழாருக்குப் பரிசிலாக, அவனும் அவன் மனைவியும் அரண்மனைக்கு வெளியே வந்து அரண்மனையிலுள்ள எல்லாவற்றையும் கொள்ளுங்கள் என்று ஒனபது நூறாயிரம் காணத்தோடு அரசு கட்டிலையும் வழங்கினான். அரிசில்கிழார் அரசு கட்டிலை ஏலாது அரசனே ஆளுமாறு வேணடிக் கொண்டு தாம் அம்மன்னர்க்கு அமைச்சுத் தொழில் பூண்டு விளங்கினார் (பதி. ப. 8). கபிலர், பரணர், பெருங்குன்றூர் கிழார், மருதனிள நாகனார், ஔவையார் முதலியோர் இவர்காலப் புலவராவர். [இவர் பெயரிலுள்ள அரிசில் இப்புலவரின் சொந்த ஊராகலாமென்றும் அது கொள்ளிடத்தின வடபால் உள்ள அரியலூர் என்பதன் மரூஉவாகலாமெனறும்

மைசூர் நாட்டிலுள்ள அரிசிற்கரை என்ற ஊரே அரிசிலாகும் எனறும் சோழ நாட்டுக் கும்பகோணத் திற்கு அருகிலுள்ள ஊர் என்றும் பலவாறாகக் கருதுகின்றனர்: த. வ. க. பக். 89; அ. சி. பக். 86.]

**அரிஞர் – (நெல்)** அறுப்பவர். வெண்ணெல் அரிஞர் அறுப்பவர் - எழுப்பும தணணுமை ஒலிக்கஞ்சி மட லிற் கட்டிய தேன கூட்டினின்றும் தேனீக்கள பறந் தோடின (புறம். 348 1, 2). எரியை ஒதத தாமரை முதலிய பல்வேறு மலர்களை அரிஞர் தாம் அரிநத நெலலரியோடு மாறுபட வைத்துக கட்டுவர் (அகம். 84:11, 12). அரிநா காணக.

**அரிநர் - (நெல்)** அறுப்பவர். மருதநிலத்தூரில வாழ்பவர் கீழ்மடைக்கண் அரிநர் - நெல்லறுப்பவர் - பிடிதத வாளைமீனைப் பெற்று வந்து வன்புலததிலிருந்து வநத சுற்றத்தினர்க்கு விருநதோம்புவர் (புறம். 42:12, 17, 18). வயலில தாமரை, ஆமபல, நெயதல் ஆகி யவை பூததிருத்தலின் அரிநர் நெல் அறுவடை செயயுமபோது அரிவாள் வாய்மழுங்கி விடுகிறது (பதி. 19.22). முதுவெள்ளிலை என்னும் ஊரில பல் வகை ஒலியோடு நெலலரிநருடைய ஓசையும் ஒலித் துக் கொணடே இருக்கும (மது. 110). வெண்ணெல் அரிநர் கொட்டிய பறையொலி கேட்டு வெருவிய கடா எருமைக் கூட்டத்திலிருந்து பிரிந்து ஆரவாரம் செயயும் (மலை. 471-473). நெல்அரிநர் ஒலிக்கும் தண்ணுமை ஒலிக்கஞ்சி நாரை கொம்பு போல ஒலித்துக்கொணடோடி பனைமடலில தங்கும் (அகம். 40:12-16). வெணணெல் அரிநா தணணுமை ஒலி பன்மலர் பூத்திருக்கும பொய்கையிலுள்ள பறவை களையும விரட்டுகிறது (அகம. 204:10, 11). நெல் அரி நராகிய உழவர் களததில் கொண்டு வந்து போட்ட பனி தோயந்த நெற் கட்டுக்கள் மீது பக்கத்திலுள்ள மாமரததின் மலர்கள் உதிர்ந்து பரவிக் கிடககின் றன (அகம. 236:4-8). அரிநர் செந்நெல் அறுபப அத னோடு சேர்ந்து அறுப்புண்ட நெயதல், நெற்கூட் டோடு சென்று நெற்கட்டிலே தன் துனபம் கருதாது கிடநது, கதிரவன தோன்றியதும் மெல்ல மலரும் (நற். 275:1-5). வெண்ணெல அரிநர் தணணுமை ஒலிக்கஞ்சிய வயலிலுள்ள பறவைகள் ஓடுதலால் கழனியிலுள்ள மருதமரத்தின பூங்கொத்துக்களி லுள்ள மலர்கள் உதிரும் (நற. 350:1-3). நெல்லி டையே தோன்றிய நெயதற்பூவை விடுத்து நெல்லை மட்டும் அரிநர் அறுவடை செய்கின்றனர் (ஐங. 190. 1, 2). அரிஞர் காணக.

**அரிமணவாயில் உறத்தூர் - ஓர் ஊர்.** நீடூர்த் தலைவ னான எவ்வி தன் பகைவரைத் தோற்கடிதத அரி மணவாயில் உறத்தூரிடத்துத் தன் படைவீரருக்குப் பகற்பொழுதில் கள்ளும் பெருஞ்சோறும் வழங்கிய தால் பேராரவாரம் எழுந்தது (அகம். 266:10-15).

**அரிமா - சிங்கம்.** வேங்கை மரம் ஓங்கிய மலைப்பக்கம் எதிரொலிக்க யானையைக் கொன்று ஊக்க மிகுதி யுடன அரிமா-சிங்கம்-முழங்கித் திரியும் (நற். 112:3, 4). பல ஏறுகளை யுடைய தொழுவம் அரிமா, குதிரை, யானை முதலியன சேர்ந்துள்ள குகையி னை யுடைய மலைபபககம போலும (கலி. 103:18-21). திருமாவளவன் பகைவரை வருததும அரிமா போன்ற வலிமையுடையவன (பட். 298). அரிமான காணக.

**அரிமான் – சிங்கம்.** பிடரி மயிருடைய அரிமான்-சிஙகம்-உலாவும் மலைச சாரலில யானை முதலிய பிறவிலஙகினங்கள் அச்சத்தால நெஞ்சு நடுங்கும (பதி. 12:5,6). அரிமா போனற வீரம் மிககவன இளஞ்சேரலிரும்பொறை (பதி. 88:15). வழிப்பறி செயயும் மறவர் அரிமான் இடித்தாற் போனற தம் வில்லின நாணொலியாலேயே அரசனையும் புறங் காணபர் (கலி. 15:1,2). அரிமா காண்க.

**அரியல் 1. கள.** ஆமபல இலை அரியல-கள்-குடிக்கப் பயனபட்டது (புறம. 209:3,4). அரியல் பருகுவோர் ஊன் கறியைத் துணடித்து உண்டு இனபுறுவர் (புறம. 391:5,6). உழவா நெற்சோற்றினின்று இறக் கபபட்ட அரியலைப பருகுவர் (புறம. 395.8). உழவர் அரியல பருகுதல (பதி. 27.5) களிபபுக்காக இடப் படும் பணடததைச் சிறிதளவாகச் சேர்க்கபபட்ட அரியல இரவலரை மேலே செல்ல வியலாதவாறு தடுககிறது (பதி. 40.18). களை பறிப்பவர் அரியல ஆர்ந்து மகிழந்தனர் (அகம. 184:13,14). மாஙகனி, பலாச்சுளை, தேன் ஆகிய இவறறைக் கலந்து செய்த அரியலைக் குறவா மலைதெய்வததுக்குப படைததுப பருகுவர் (அகம. 348:5-9). மலைபபககத் துள்ள சிறு குடியில வாழ்வோா அரியல பருகும இயல்பினராயினும் வனகணமையினும சினததினும பெரியராவர் (நற். 106:7,8).

2. **தேன.** பழுத்த பலாவின கனியிலிருநது அரிதது விழுகினற அரியல்-தேன-மீது படிநது வாடைக் காறறு வீசுதறகிடனாயது பறம்புநாடு (பதி. 61:1,2). நெறகதிர்களினிடையே வணடு மொயககும் நெய் தற பூவிலிருநது அரியல வடியும வயல சூழநதது ஆர்ககாடு (நற. 190:5,6).

3. **அரித்தல். (வடிகட்டுதல).** பெரிய சாடியிலுள்ள விரலாலே அலைககும் அரியலை-அரித்தலை-செய்த முதிர்ந்தகள்ளை பரிசிலர்கரு வழங்குவர் (பெரு. 280-282).

4. **திரட்சி.** தலையின் அரியல்-திரட்சி-பொருநதிய மயிர்ச் சுருளில் ஊகம் புலலினின்றும் உதிர்நத பூ பறநதுவநது படிநதுள்ளது (புறம். 307:5,6).

**அரியலாட்டியர்** – கள்விற்கும் பெண்டிர். வணிகர் கூட்டத்தை வருத்தும் மறவர் தலைவர், அரியலாட்டியர் - கள்விற்கும பெண்டிர் - இல்லத்தே கள்ளுக்கு விலையாகக் கொடுக்க யானைத் தந்தம் கொண்டு வரத் தம் புதலவரை ஏவுவர் (அகம். 245:6-12). அரியற் பெணடிர் காண்க.

**அரியற் பெண்டிர்** - கள்விற்கும் பெண்டிர். அரியற் பெண்டிரிடம் - கள்விற்கும் பெண்டிரிடம்-கள்ளைப பெற்றுக் குடித்து வீராபோர் செய்ய விரும்புவர் (அகம். 157:1-4). அரியலாட்டியர் காண்க.

**அரியினம்** - வணடின் கூட்டம். கூந்தலுக்கு அரியினம்-வண்டின்கூட்டம - உவமை (அகம. 223:12) அரியினம் மொயக்க முல்லை மலர்ந்தது (ஐங். 489:1,2).

**அரில்–1. தூறு.** பிணங்கிய அரில்-தூறு- பொருந்திய காட்டையுடைய குடநாடு ஆதிக்குரியது (புறம. 177: 12). முட்கள் செறிந்த கொடிகள் பினனிக் கிடக்கும் அரில் பொருந்திய பாழிடத்தே பெயயும் மழை பயனபடாது (புறம. 381:9,10). தாமரைமலர் மிக்க வயலில வளளைக் கொடியை யுழக்கி வாளைமீனைத் தின்ற நீர்நாய் முள்செறிந்த பிரம்பு அரிலில் தங்கும் (அகம். 6:16-20). புல்லூற்றினால் கொள்ளக் குறிக்கப் பட்ட குறும்பூழச் சேவல் தான் தங்கிய காய்ந்துபட்ட அரில் தனித்தொழியச் சென்று வன்னிலத்துப் பழம் பெரும் மன்றிலே தங்கும் (அகம். 103:1-7). தேக்கு மரம் நிறைந்த மலைப்பக்கத்தில் காய்ந்த அரிலில் தோன்றிய தீ, காற்றால் மேலெழுந்து பரவிக் குகை களில் ஒலிக்கும் (அகம். 143:5-7). கிளைத்த அரிலாகிய நாணறகிழங்கு மணலிடத்தே ஈன்ற முளையை யொத்த கூரிய பற்களையுடைய சிவந்த வாயினள் தலைவி (அகம். 212:4,5). அரில் பற்றி யிழுத்தலால் அறுபட்டுப் பூக்கள் உதிர்ந்த மாலை தோளில் அசையக்களவுக்காலத்தில் தலைவன் தலைவி இல்லம் செல்வான (அகம. 248:10-14). பிணங்கிய அரில் களையுடைய வள்ளைக் கொடியின் இலைச்செறிவில் உறங்கிய யாமை அதனை வெறுத்து வேற்றிடம் சென்றது (அகம. 256:1-3). அரில் படர்ந்த புற்றிடத்துள்ள வெள்ளரவத்தை இரவு உணவிற்காகக் கரடிக்குட்டி கையாற் பற்றும் (அகம். 257:19-21). பசுங்காட்டில் அரில முதலியவற்றை உழக்கிப் பகடு பூணட ஏரால் நிலம் உழவு செய்யப்பட்டது (அகம். 262:1,2). அரிலிடத்து மறைந்து. ஒலியெழுப்பி வேட்டுவர் பறவைகளைப் பிடிப்பர் (அகம. 387:8-10). ஆண்மான் தன் துணையுடன நிழலிடைத தங்கிப் பூக்கள் செறிந்த அரிலிடத்துத் துயின்று கதிரவன் மறையும் போதில் பயற்றினைக் கறித்துத் தின்னும் (குறு. 338:1-4). பிணக்குணட அரில்களும் பரந்த விடத்தில் தம் பழைமையான நலல தோற்றம் வாடின (நற். 37:1). மூங்கில் வெட்டிச் செறித் தாற் போனறு பின்னிக் கிடக்கும் அரிலையுடையது விடர்முகை (நற். 322:3,4). அரில்படு கள்ளியங்காடு (ஐங். தி. 3:4). தலைவி தன் காதலனுடன் காடேகின், உலர்ந்த அரிலை மறைத்த முழங்கும் தீயின் நடுவே புகுந்து வந்த காற்றுப்படின் அவள் எழில் நலம் சிதையும் (கலி. 13:20,21).

2. **பிணக்கம்.** நூலாற் கட்டாத நுண்மையையும் அரிலையும் - பிணக்கதையும் - உடையது பொன் னரிமாலை (பொரு. 161). வெண்சிறுகடுகு ஐவன நெல்லோடு அரில கொண்டு வளர்ந்தது (மது. 287, 288). தூணடிலிலுளள கூற்றமாகிய இரையினை விழுங்கிய வரால போத்து அரில் மேவிய வள்ளைக் கொடியையும் கலககியது (அகம். 36:1,2,5). அரில் மிக்க பிரப்பங் கொடியிலுள்ள பழத்தைக் குளத் திலுள்ள கெணடைமீன் உண்ணும் (குறு. 91:1,2). அறுகினது பிணங்கரில் மென்கொம்பினை மானேறு பிணையோடு உண்ணும் (குறு. 256: 1-3). அரில் கொடியை உடைய பிரம்பினை யொத்த வரிகள் பொருந்திய முதுகையுடையது நீர்நாய் (குறு. 364:1).

3. **நெருக்கம்.** வாள் அரில் - நெருக்கம் - கொண்ட போரில் வீரரை வீழ்த்தினான் நெடுஞ்சேரலாதன (பதி. 12:1). பரதவர், புன்னை நிழலில் தங்கிக் கடலிற் செலலுதற்குக காலம் பார்த்து அவ்விடத்து அரில் பொருநதிக் கிடந்த வலையைப் பிரித்து உலர்த்துவர் (நற். 4:1-4).

4. **சிறுகாடு.** அரணகளில் பின்னி வைத்தாலொத்த கொடி பிணங்கின அரில் - சிறுகாட்டு - வழியில முன்னே சென்றவன் வளைத்துவிட்ட மூங்கில் மேலே படாதவாறு பரிசிலர் மெல்லச் செல்வர் (மலை. 379-383). கொடிகள் பின்னிய அரில் இடத்தில் இருணட நிறத்தையுடைய யானையின் சோருமகாலததை வயமான் பார்த்திருக்கும் (அகம். 73:12, 13).

**அரிவை** - பெண். மலையமான் திருமுடிக்காரி அருந்ததி போன்ற கற்பினையும் மடமொழியினையும் உடைய அரிவை - பெண் - தோளல்லது பிறவற்றைத் தனக்கெனப் பெற்றிலன் (புறம். 122:8-10). பேகனின் அருந்துயருழக்கும் திருந்திழை அரிவையின் கூந்தலில் கமழ்புகை யூட்டிக் கோதை புனைக என அவனை அரிசில் கிழார் வேண்டுவர் (புறம். 146:7-10). அரிமதர் மழைக்கண்ணும் அழகிய மாமையும் உடைய அரிவையாகிய தன் மனைவிக்கு நெய் துறந்த மையிருங் கூந்தலில் புதுமலர் அணிதலையே பேகனிடம் தாம் பெறும் பரிசிலாகப் பெருங்குன்றூர் கிழார் குறிப்பர் (புறம். 147:5-9). அம்குடிச் சீறூரிலுள்ள தலைவி ஒலிமென் கூந்தலையும் ஒண்

நுதலையும உடைய அரிவையாவாள் (புறம். 306:2,3) அழகிய மாமைமையும் கூரிய பற்களையும் அரிமதர் மழைக்கண்ணையும் உடைய அரிவை போர் விளையக் காரணமாய் அமைந்தமையின், தான் பிறந்த ஊருக்கு மரம்படு சிறுதீப் போல் அணங்காயினள் (புறம. 349:4-7). வாளநுதல அரிவை பெருஞ்சால்பு ஒடுங்கிய நாணுமலி யாக்கையினள் (பதி. 19:13,14). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் துணங்கைக் கூத்தில் தழுஉப் புணையாகத் தலைக்கை தந்தமைக்கு அவனது ஈரிதழ் மழைக் கணணை யுடைய பேரியல் அரிவை உடன்றனளாகிச் சீறடியில சிறுபரடு அலைப்ப நடுங்கினள (பதி. 52·14-21). 'ஒடுங்கீர் ஓதி ஒணணுதல அணி கொள்ளக கொடுங்குழைக்கு அமர்தத நோக்கினையும் பெருநதகைககு அமர்ந்த மென்சொலலையும் திருமுகததினையும் உடைய மாணிழை அரிவையைக் காண நின்புரவி தேர் பூணக' என இளஞ் சேரலிரும்பொறையைப் பெருங் குன்றூர் கிழார் வேண்டுவர் (பதி. 81:28-32). இளஞ் சேரலிரும்பொறையின் தேவி மீனொடு புரையும் கற்பின் வாள்நுதல் அரிவையாவாள் (பதி. 89: 19,20). பாணடியனின் கோப்பெருந்தேவியாகிய நலங்கிளர் அரிவை பிரிவில நெடிதுயிர்த்துக கடைக் கண் நீரைச் செவ்விரலால் தெறித்துப் புலமபொடு வதிந்தாள் (நெடு. 163-166). தலைவி ஆயதொடி அரிவை என விளிக்கப் பெறுதல் (அகம். 4:17). கூரெயிற்றரிவை தேர்வழங்கு தெருவில பொலந்தொடிப் புதலவன் தனியனாய் வருதல் கணடு குறுகினாள் (அகம். 16:5-7). நாணுடை அரிவை இலலத்திலுள்ளவர் அறிதற்கு அஞ்சிக் கிளியை முன்கையில் ஏந்தி, 'பிரிந்து சென்றவர் இன்று வருவார் என்று உரைப்பாயாக' என மெலலென மழலை இன்சொல் இயம்பினாள் (அகம். 34:14-18). நன்னுதல அரிவை இரவில் மனைசேர் பனையில் தஙகும் அன்றில், துணை ஒனறு பிரியினும் துஞ்சுவதிலலை எனக் கூறிக் கண்ணில நிறையும் நீரினை மறைப்பாள (அகம. 50:10-14). நறுநுதல் அரிவையின் பாசிழைக்கு விலையாகக கோசரது நியமம என்னும் ஊரை நலகினும் ஏற்றுக் கொள்ள மாட்டார் (அகம், 90:12-14). நீர்வார் கணணினளாய்ப் புலந்துறையும் ஆய்தொடி அரிவை கூந்தலில தலைவன பூச்சூட்டினான் (அகம். 104:15-17). தலைவி மாசில் கற்பினையும் அரிமதர் மழைக்கணணையும் மூங்கிலை யொத்த தோளினையும் உடைய அரிவையாவாள் (அகம. 114: 13-15). 'அம்மா அரிவையைத துனனுதற்கு விரைந்து தேரைச் செலுத்துக' எனப் பாகனைத் தலைவன் ஏவினான் (அகம். 154·13-15). தலைவி நறுமணம கமழும் ஐம்பாலையும் மூங்கில போலும் இனிய மெலலிய தோளையும மிக்க அழகையும் உடைய அரிவையாவாள் (அகம். 181:23-25). தலைமகன் யாமத்து முயங்கிச் செலபவளை நோககி இவள் ஆன்ற கற்பின் சான்ற பெரியளாய அம்மா அரிவையோ அல்லள்; சுனையிலுறையும் சூர்மகளே எனக் கருதினான் (அகம். 198:11-17). 'வேய்போன்ற தணணிய திரணட பெருந்தோள் அரிவை ஒழிய, வளம பெரிது பெறினும் வாரேன்' எனத தலைவன நெஞ்சிடம கூறினான (அகம். 199 16-24). பாவை யனன பேரெழிலையும திரணட கூநதலையும முள் ளெயிற்றையும் இன்தீங் கிளவியையும கொணடு தெயவ இயலபுடன் விளஙகும அரிவை என்று தலைவியைத்தலைவன பாராட்டினான (அகம். 212.1-8). 'கவர்த்தவழிகளை யுடைய கானம நீந்தி அம்மா அரிவைஒழிய நெஞசமே, நீசெல்க; யான் வரமாட்டேன எனத் தலைவன் நெஞ்சு நோககிக கூறினான (அகம். 245: 19-21). விளையாடும் ஆயத்து இளையவரைக் காணுநதோறும் தன்னை நினைககும நல் நுதல அரிவையின புலம்பொடு வதிகினற கலஙகஞர் அகலத் தலைவன் வினையைமுடிதது்ப் பாகனைத் தேரை விரைவிற் கடாவுக எனப பணிததனன் (அகம். 254 6-17). தலைவனைக காட்டிலும் காமம் தலைமயங்கியவள் அமமா அரிவையாகிய தலைவி (அகம. 284:11-13). திருநதிழையையும் தடமென பணைத தோளையும் மென்மொழியையும உடைய அரிவை விருநதும பெறுகுவள போலும (அகம. 324: 1,2) 'ஔநுதல் ஒலகியல அரிவை' எனத தலைவியைத் தலைவன விளிததான (அகம. 325·12,13). முள்ளெயிறறுச் சினமொழி அரிவையின் தோள துனபம் மிகத் தலைவன சுரநெறி கடநது சென்றான் (அகம. 361:13-16). நலம்பெறு பணைததோள நல்நுதல் அரிவையொடு தலைவன மணங்கமழ் தணபொழிலின்கண தஙகினான (அகம. 366:13,14). பெருநதோளினையும நுணுகிய நுசுபபினையும திருந்திய இழையினையும உடைய அரிவை எனத் தலைவியைத தலைவன பாராட்டினான (அகம. 374:17,18). தோபபாகன் தலைவனைச சீறூரில் மெல்லியல அரிவையின இலலததே விரைவிற் கொண்டுவந்து நிறுத்தி, 'இழிமின' எனறனன் (அகம. 384:6-8). சாந்து அருநதி இருளி இமையக் கானம் நாறும் கூந்தலை யுடைய நலநுதல அரிவை எனத் தலைவி விளிக்கபபெற்றாள் (அகம. 399:1-3). 'மயில்போலும சாயலையும செறிநத பறகளையுமுடைய அரிவையின கூந்தலைபபோல நீயறியும் பூக்களுள் நறுமணம வீசும பூககள உளவோ' எனத் தலைவன் தும்பியிடம் கேட்டான் (குறு. 2: 3-5). 'அமிழ்துபொதி செநநா அஞ்ச வந்த வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி அரிவையை யானே பெறுவேனாக' எனத் தலைவன கூறினான்

(குறு. 14:1-3). 'பொருள் கடைக்கூட்டும் வினைக்கு அம்மா அரிவையும் வருமோ, உரைப்பாயாக' எனத தலைவன் தன் நெஞ்சை வினாவினான் (குறு. 63: 3-4). 'மெலலியலரிவை, நின் நல்லகம் பிரிந்து வருந்த நான உன்னைத் துறப்பேனாயின், இரவலர் வாரா வைகல் பல எனக்கு வாய்ப்பவாகுக' எனத் தலைவன் வஞ்சினமுரைத்தான் (குறு. 137). நீராடச் சென்ற ஒணணுதலரிவை புனல்தரு பசுங்காயைத் தின்ற தப்புககு நன்னன் பெணகொலை புரிநதான் (குறு. 292: 1-5) மடவரல் அரிவையின் மாாபை விரும்பிய தலைவன் நடுநாள் வந்து கூடினான (குறு. 321: 2-4). முல்லைமணம் கமழும் நறுநுதலை யுடைய அரிவை தோளணை துஞசிய நாளை வாழும் நாளாகத் தலைவன் கருதினான் (குறு. 323: 4-7). அடங்கிய கற்பின் நலங்கேழ் அரிவையின் தனிமைத்துன்பம் நீங்கத் தலைவனின் தேர் வந்தது (குறு. 338;6-8). 'சுடர்வேற் காளையொடு மடமா அரிவை போகிய சுரனிடத்தே தண்மழை பொழி வதாகுக' என மகட்போக்கிய செவிலி தெய்வத் திற்குப் பராயினாள் (குறு. 375: 3-5). கிளரிழை அரிவையின் நெற்றியில் விருந்திற்காக நெய் துழந் தட்ட விளரூன் அம்புகைபட்டு நுண் பல் வியர்வை தோனறின (நற். 41: 6-9). மணணாக் கூந்தலை மாசறக் கழுவிச் சிலமலர்களை அதில் முடிக்கும் நிலையில் தலைவன் உள்ளே செல்ல, மெய் துவள, அவிழ்பூ முடியினளாய், மடமா அரிவையாகிய தலைவி தன்னை அணைத்த மகிழ்நிலை மறத்தற் கரியது எனத் தலைவன் கூறினான் (நற். 42: 8-12). 'நன்னுதலரிவை' எனத் தலைவி விளிக்கப் படுதல் (நற் 50:10). பிரிவின்கண் அம்மா அரிவையாகிய தலைவி தன் ஆக வனமுலைக் கரையிடத்தே கண் ணீர் தெறிப்பக் கலுழ்ந்தனள் (நற். 81: 6,7). அம்மா அரிவை பிறைநுதல் பொறித்த சிறு நுண் பல வியர்வையைத் துகிலால் துடைத்துக் கொண்டு அட்டிலிடத்திருந்தாள் (நற். 120: 7-9). கொடிய மலைச்சுர நீளிடைத் தலைவன் தலைவியைக் காண நயந்து வருதல் குறித்து அமமா அரிவை (தலைவி) புலந்தழுதாள் (நற். 192: 5-7). 'கதிரவன் மறையும் மாலைப போதில் பொலிவற்ற வறுமனை நோக்கித் திருந்திழை அரிவை வருந்துவளோ' எனத் தலைவன நினைத்தான் (நற். 321: 5-7). 'மணங் கமழும கூந்தலையுடைய மடமா அரிவையின தடமென் தோளை நினைந்து மகிழ்கினறனை போலும்; அவை அடைதறகரியன' என்று தலைமகன் இடைச சுரததே தன் நெஞசிறகுக் கூறினான் (நற். 346: 7-11). சிறுகுடி மெலலியலரிவை தன் பல்லிருங் கதுப் பில மாலை சூடினாள் (நற். 367:6-8). திருந்திழை அரிவைத் தேமொழியாகிய தலைவி தலைவன் பிரி வில் கண்ணீர்த் துளி ஆகம் நனைப்பத் தலை வனுக்கு விருந்தயரும் விருப்பினால் வருந்தினாள் (நற். 374:7-9). 'மடலமா வூர்ந்து மாலைசூடி நாடும் ஊரும் ஒண்ணுத லரிவையின் நலம் பாராட்டி அம் மடலேறலையும முற்றச் செய்யாது காமநோயால் மாய்ந்து போக மாட்டோமோ' எனத் தலைமகன் கூறினான் (நற். 377:1-5). 'ஊரனே, நின்மார்பினை விலக்குவோளாகிய நின் மாணிழை அரிவை மது மயக்கம் மிக்கமையால் செயல்மயக்கம் கொண்ட னளோ' 'என்று தலைவி பரத்தையைக் குறித்துத் தலைவனிடம் வினவினள் (ஐங். 42). 'நினது மார்பை நயந்த நன்னுதல் அரிவையின குறிபபையுடைய னாய் நீ அபபரத்தையிடத்தே தங்கியிருத்தல் நினக் கேயன்றி எமக்கும் இனிதே' எனத் தோழி தலை வனிடம புலந்து கூறினாள். (ஐங். 46). 'தூய அணி களணிந்த ஒண்ணுதல் அரிவை தன் தழையுடை நுடங்கப் புனலிலே பாய்ந்தாளாக அப்புனல் முழு தும் குவளை மணம் கொண்டு தண்ணென்றது' என்று தலைவியின் களவுக்காலத்துப் புனலாட் டினை நினைந்து தலைவன் உரைத்தான் (ஐங். 73). 'தண்ணந்துறைவன நலகினால் ஒணணுதலரிவை பாலருந்துவாள்' எனத் தோழி செவிலியிடம் அறத் தொடு நின்றாள் (ஐங. 168:3, 4). 'தொண்டியன்ன பணைத்தோளையுடைய ஒணடொடியரிவைஎனது நெஞ்சினைக் கவர்ந்து கொண்டாள்' எனபது தலை வன கூற்று (ஐங். 171:3, 4). 'ஒண்டொடி யரிவை எனது நெஞ்சைக் கவர்ந்து கொண்டமையால் யான் இரவிலும் துயிலறியேன்' என்று பாஙகனிடம் தலை வன் கூறினான் (ஐங். 172). 'எமக்கு நயந்தருளினை யாயின் மடந்தையே, நீ பணைத்தோளையுடைய நனனுதலரிவையாகிய நின் தோழியொடும் வரு வாய்' எனத தலைவியிடத்துத் தலைவன் வேண்டி னன் (ஐங். 175). 'வெறபனே, கரிய பலவாகிய கூந் தலையும திருநதிய அணிகலன்களையும் உடைய அரிவையின் திதலையமைந்த மாமை நிறம் மழுங் கவும் பசலை பரவவு மிடமான பிரிவினை நீ எவ் வாறு செய்ய வல்லவன் ஆயினையோ' எனத் தலை வனைத் தோழி வினவினாள் (ஐங. 231). தலைவனின் பொருள்வயிற பிரிவினைப் பெருநதோள் அரிவை யாகிய தலைவி தடுத்து நிறுத்துதற்கும் உரியவள் (ஐங். 302:1, 2). 'ஒணணுதல் அரிவையாகிய தலை வியை நினையுநதோறும் சுரநெறி தண்ணியவா யின' என்று தலைவன இடைச்சுரத்தே உவந்தனன் (ஐங். 322:4, 5). 'தெரியிழை அரிவையே, நின் பண் புகளை நினைந்து தலைவர் அரிய சுரத்தினின்றும் விரைந்து வந்தார்' எனத் தோழி தலைவிக் குரைத் தாள் (ஐங். 354:3,4). 'திருந்திழையரிவையே, பொருள் வயிற் பிரிந்தவிடத்து நின நலத்தை யெண்ணி

யான் உடன் இருந்தோரிடமும் சொல்லாது மீண்டு வந்தேன்' என்று தலைவியிடம் தலைவன் மகிழ்ந்துரைத்தான் (ஐங். 355:1-3). வாணுதல் அரிவையாகிய தலைவி தன் மகனுக்கு முலையூட்டியிருக்கையில் தலைவன் அவளது சிறுபுறத்தைத் தழுவினன் (ஐங். 404:1,2). ஒளியுடைய அணிகலன்களையணிந்த வாணுதல் அரிவையாகிய நம் மகள் தன் கற்பின் மிகுதிபற்றி முல்லைமலரை அணிய, அவள் கணவனாகிய நெடுந்தகை தன் புதல்வனொடு இனிது இருந்தான்' என்று செவிலி நற்றாய்க்குரைத்தாள(ஐங். 408). 'பேரியல் அரிவையே, நாம் நயக்குமபடி கார்காலம் தொடங்கியது' என்று தலைவன் தலைவியிடம் உரைத்தான் (ஐங்.413:3,4). 'மெல்லியல் அரிவையே, வளம் திகழகின்ற மணம் கமழ் முல்லைப் பரப்பினைக் கண்டு களிப்போமாக' என்று தலைவியிடம் கூறினன் தலைவன் (ஐங். 414:3,4). 'முல்லை நிலமே, யாம் எம் வாணுதல அரிவையொடு நின் நலங் காண வருகின்றோம்' எனத் தலைவன் உவந்து மொழிந்தான் (ஐங். 420: 3-5). 'பெண்ணியல்புகளையும் அழகிய விளக்கம் மிக்க சுடர் நுதலையும் உடைய தேமொழி அரிவையே' என்று தோழி தலைவியை விளித்தாள் (ஐங். 466:3-5). 'தெரியிழை யரிவைக்குப் பெருவிருந்தாக மிகவிரைந்து, தேரைச் செலுத்துவாயாக' எனத் தலைவன் பாகனிடம் கூறினன (ஐங். 482:1, 2). 'நன்னுதல் அரிவையின் நலத்தை யாம் பெறுமாறு தேரை முன்னுறக் கடவுக' என்பது பாகனிடத்துத் தலைவன் கூறிய கூற்றாம் (ஐங். 483:3, 4). 'நன்னுதல் அரிவையே, நின்னை நினைந்து யான் காரினும் விரைந்து வந்தேன்' எனத் தலைவன் தலைவியிடம் கூறினான (ஐங். 492:4,5). 'முள்ளெயிற்று அரிவையே, நின் பின்னிருங் கூந்தலை நன்கு நலமுறப் புனையக் கருதி யான் வந்தேன்' என்பது தலைவன உவகைமொழி (ஐங. 495:3-5). 'பேரியல அரிவையே, நினனை நினைந்து போர்வெங் குருசிலாகிய தலைவர் வந்த அளவிலே கார்ப்பருவமும் தொடங்கியது' என்றாள் தோழி (ஐங். 497:3-5). மாணிழை அரிவை (உமை) காப்ப ஆடிக் காத்தற்றொழிலை நிகழ்த்தும் காலத்து ஒரு வடிவு கொண்டு நேயமில்லாத பொருளுக்கும் இறைவன் பொருந்தி நின்றான் (கலி. 1:16,17). வையைப்புனல் வேணடுவழி நடந்து செல்லுதறகு ஆடலறியா அரிவை உவமை (பரி. 7:17,19). திருமருத நீர்ப்பூந்துறை வையையாகிய அரிவையின ஆடை போனறிருந்தது (பரி. 11:28-30).

**அரிவையர் - மகளிர்.** வேட்டுவன் மான தசை சொரிந்த கடகமும் ஆய்மகள் தயிர் கொணர்ந்த மிடாவும் நிறையுமாறு ஏரினால் வாழ்வாரின் பேரில் அரிவையர் - மகளிர் - வெண்ணெல்லை முகந்து கொடுப்பர் (புறம. 33:1-6). ஆயதொடி அரிவையர் (பாரிமகளிர்) தந்தை நாடு மழை பிழைப்பறியாப் புன புலத்தது (புறம். 117:7-10). செலவக் கடுங்கோ வாழி யாதன், அணங்கெழில் அரிவையரைப் பிணிக்கும் மணங்கமழ் மார்பினன் (பதி. 68:19,20). ஓய்மா னாட்டு நலலியக் கோடனின சிறப்பியல்புகளை அரியோர் உணகண் அரிவையர் புகழநதனர் (சிறு. 213-215). அரிவையர் ஆக்கும் அமிர்தம் போலும காமபானத்துடன, மடையா ஆக்கிய அமிர்ததகை மகளிர்க்குக் கொடுக்க, அவறறையுணடு அம்மகளிர தம் கணவரால வநத செலலல தீரவர் (பரி 8:120-123). வங்கியத்தின் இசையெழ, முழவு முதலிய வற்றின் ஓசையையுடைய தாளததை அளநது, சீர் தூக்கி, நிருத்தத்தினகண ஒக்கத் திகழும் அரிவையர் தம் நேரிறை முன்கையால அத்தாளததைத் தூககி அளந்தனர் (பரி. 12:40-44).

**அருச்சிப்போர் - வழிபடுவோர.** முருகனை அருசசிப் போர், 'எம் தலைவர் போரில பகைவரைக் கொனறு வாகை சூடுக' என வேண்டுகின்றனர் (பரி. 8:108).

**அருந்ததி - வசிட்டர் மனைவி.** உயர்நிலை உலகத்துள்ள அருந்ததி போன்ற கற்புடையவள தலைவி (ஐங. 442:3-5).

**அருந்தவத்தோன்- அரிய தவத்தையுடைய சிவன்.** எல்லா உயிர்க்கும் காவலாகிய நீர் அறாத கஙகையைச் சடையில தாங்கியவன் அருந்தவததோனாகிய சிவ பெருமான். அவன் தலையிற சூடிய கணணி கொன்றை; மார்பிலணிந்த தாரும கொன்றை. ஊர்தி காளை; கொடியும் காளைக் கொடியே. கண்டத்தில கறை அழகு செயகினறது; அநதக் கறை வேதத்தைத் தும் அநதணரால போறறப் பெறும். பெணணை ஒரு பாகத்தில் கொணடவன்; அப்பெணணுருவைத் தன்னுடமபிலே மறைததுக் கொள்ளவும கூடும. நுதலிற சூடிய பிறை அழகாக உள்ளது; அபபிறையைப் பதினெண் கணனும புகழ்ந்து பாராட்டும (புறம. 1.)

**அருந்தவ முதல்வன் – அரிய தவமுதல்வனாகிய சிவன்.** யாவரிடத்தும பொய் கூறாது வாயமை யறம் பேணும அருந்தவ முதல்வனாகிய சிவபெருமான் தலைவனுக்குவமை (கலி. 100.7).

**அருப்பம் – 1. அரண்.** நெடுஞ்செழியன் வெகுணடு நோக்கின், கொடியுடைய உயரிய மதிலையும் காடும அகழியும் முதலாய காவலையுடைய அருப்பத்தையும் -அரணையும்-பகையரசு இழக்க நேரும (புறம. 17: 27-30). கரிகாலன பகைவருடைய அரிய அருப்பத தைப் பேணாமல் எளிதில் வென்றான் (புறம. 224:1).

வீரனின் திண்ணிய தோள் அருப்பத்திலுள்ள கதவைக் காக்கும் கணையமரம் போன்றது (பதி.45: 9-11). செங்குட்டுவன மலைமேலுள்ளனவும் கடலிடத்துள்ளனவும் பிற இடங்களில் உள்ளனவுமாகிய அருப்பம் அமைத்த போரில் பகைவரை வென்று அவர்தம் நாட்டைக் கைப்பற்றினான் (பதி. 50:12-14). மலையிலும் மருத நிலத்திலுமுள்ள அருப்பங்களைக் கைப்பற்றிப் பகைவர் ஆற்றலைக் கெடுத்தவன் இளஞ்சேரலிரும்பொறை (பதி. 90:22-24). வேட்டுவர் தம் சிறுவாயில்களை யுடைய அருப்பம் அழித்துப் பாசறை அமைத்தனர் (முல்லை. 26-28). காவற காட்டினையும் சூழ்ந்த கிடங்கினையும கோபுர வாயிலையும் நெடிய மதிலையும் ஞாயிலையும் உடையது கூரிய அமபுகளை உமிழும் அருப்பம் (மது. 64-67). பகைவர் நாடுகொளக் கருதி மலையிடத்துள்ள காடுகளைக் கடந்து பகைவர் உள் நாடுகளிலே புகுந்து அவர் அருபபத்தைக் கைப்பற்றினான் நெடுஞ்செழியன் (மது. 147-149). மேகமெனறு மயங்குமாறுள்ள பல யானைத் திரளையுடையதும் பொருதற்கு வந்த அரசரது நிலையுடைமையைக் கெடுக்க வல்லதும் அருப்பமாகும் (மலை. 377, 378). தலைவியின் துன்பம் பிறரால் அழித்தற்கரிய அருப்பத்தின் தன்மையது (கலி. 146: 48). அரண், அருபபு காண்க.

2. அருமை. மலையிடத்து மிக்க உயர்ச்சியினையுடைய அருநிலத்தில் உயர்ந்த வழியைப் போதற்கு அருப்பம்-அருமை-கருதாமல் சென்றனர் (மலை. 19, 20). மலைச்சாரலில் வீழநதோரை மறைக்கும் குளங்களும் அருகில் பாசியும் ஊன்றிவைத்த அடியைத் தளரச் செய்யும் அருப்பமும் (அருமையும்) உடையது வழி (மலை. 219-222).

3. திண்மை. யாழின பாடலும் ஆடலும் மனக் கோட்டையின அருப்பத்தை - திண்மையை - அழித்தன (பரி. 10:56,57).

அருப்பு - அரண். மணனாலியன்ற புற்றினையுடைய காட்டருப்பை-அரணை-திறந்து மறவர் பகைவர் பசுக்களைக் கவர்வர் (அகம். 342:4-6). அருப்பம் 1, அரண் காணக.

அரும்பு - மூகை. அடுக்கத்தில் அருமபு - முகை-அற மலர்ந்த வேங்கைப்பூ பரவிய துறுகல் இரும்புலிவரிப் புறம்போல் தோன்றியது (புறம். 202:18, 19). அரும்பு இல்லையாக இதழ மலர்ந்த தாமரையை யுடைய பொய்கையும் தீயும் எமக்கு ஒருதன்மைததே என்று தீயினுள் பாயும் பெருங்கோப்பெண்டு கூறினாள் (புறம். 246:13-15). அரும்பலர் செருந்தி (புறம். 390:3). நீர்க்கீழ் உள்ள செநநிற அரும்பை மாலையாகக் கட்டிச் சூரரமகளிர் கொண்டையில் சூடிக் கொள்வர் (முரு. 29, 30). பெருமுது பெண்டிர் முல்லையின் அரும்புகள் அவிழ்ந்த மலர்களை நாழியில் கொண்டு போன நெல்லோடு தூவிக் கைதொழுது விரிச்சி கேட்பர் (முல்லை. 9-11). கூதிர்ப்பருவத்தில் மகளிர், பிச்சியின் அலரும் செவ்வியை யுடைய அரும்பின் அழகிய இதழ்கள் மலர்ந்து மணஞ் செய்யும் செவ்வியை நோக்கிப் பொழுதறிந்து விளக்கேற்றுவர் (நெடு. 39-42). விண்மீனைக் கண்டாலொத்த மெலலிய அரும்புகள் புன்னையின் பெருங் கிளையில் மலர்ந்தன (அகம. 10:1-3). பாறையில் வேங்கையின் முதிர்ந்த அரும்புகள் மலர்ந்தன (அகம்.105:1). ஈங்கையின் முதிர்ந்த அரும்புகள் இரவம் வித்தினை ஒக்கும் (அகம். 125:3). கோங்கின் மீது படர்ந்து இரவிற் பூத்த அதிரற்கொடியைக் கானயானை விடியற் பொழுதிலே அரும்புடன் வளைத்துக் கவளமாக உண்ணும் (அகம். 157:5-8). குவளையின் அரும்பினை விரித்துக் கட்டிய சுரும்பார்க்கும் கண்ணியினைத் தலைவன் தலைவிக்குச் சூட்டினான் (அகம். 180:5-7). அழகிய அரும்புகள் ஈன்ற கிளைகளை உடையது முருக்க மரம் (அகம். 229:15,16). வேங்கை மரங்கள் மண நாளாகிய காலத்தே மணியையொத்த அரும்பு மலர்ந்த பொன் மலர்கள் அகன்ற பாறையிடத்தே விழுந்து பரவி அழகுறுத்தும் (அகம். 232:7-9). அரவின் பல்லனைய அரும்புகள் முதிர்ந்த குராவின் நறுங்கிளையில் தென்றல் ஊடறுத்துச் செல்லும (அகம். 237:3,4). வேங்கையின் முதிர்ந்த அரும்பைச் சுரும்பு வாய் திறந்தது (அகம். 242:1,2). மராஅத்தின் அரும்பற மலர்ந்த பூவைச் சுரும்பு சூழ்ந்தது (அகம். 257:6,7). முலையிடத்துத் தோன்றிய வேட்கை நோயாகிய வளரும் இளமுளை, நெஞ்சிடத்தில் வருத்தமாகிய திரண்ட அடியாய் நீணடு, ஊரவர் அமபலாகிய கிளைகளைக் கொண்டு, ஆராக் காதலாகிய தளிர்களைப் பரப்பிப் புலவர் புகழ்ந்த நாணில்லாப் பெருமரமாகி, நிலவரை கவிந்து அலராகிய அரும்புகளை ஊழ்த்தது (அகம். 273:11-17). பெண்புலியின் கூரிய நகம் செம்முருக்கின் அரும்பு போன்றது (அகம். 362:5). அருமபற மலர்ந்த கருங்கால் வேஙகை (குறு. 26:1; நற் 112:2). பெருந்தண மாரிக் காலத்திற் குரிய அறிவின்மையுடைய பிச்சியின் அரும்புகள் தாம் சிவக்க வேண்டிய காலத்திற்கு முன்பே சிவந்தன (குறு. 94:1,2). தாழையின் முதிர்ந்த அரும்பு பெருங்களிற்றினது மருப்புப் போன்றது (நற். 19:2,3). அரும்பு மலர்ந்த புன்னை, துறையில் மேயும் இப்பியினது ஈர்ம்புறத்தில் தாதினை உதிர்க்கும் (நற். 87:6,7). 'நின் நீலமணி

போலும் கூந்தலிடத்துக் கார் காலத்து அரும்பு மலர்ந்த இதழ்களில வண்டுகள் தேனைப் பருகும் பலவாய மலர்களை அணியும் பொருட்டு யாம் வருவேம்' எனத் தலைவன் தலைவியிடம் கூறிச் சென்றான் (நற். 214:4-6). அருமபு வாய் அவிழ்ந்த கருங்கால் வேங்கையின் பொன்போலும் நறுமலர் கல்லின்மேல் பரவிக் கிடக்கும் (நற். 257:5,6). நொச்சியின் கரிய அரும்பு போனற கணணையுடையது நண்டு (நற். 267:1,2) புன்னையருமபு வாய் அவிழந்த மலரைத் தொடுத்து மகளிர் சூடினர் (நற் 278:1-4). மாலைப்பொழுதில முல்லையரும்பு வாய திறந்து மலரும் (நற. 369:3,4). கரிய நிறத்தை யுடைய அருமபு மலர்ந்த கணிவாய் வேஙகையில பரண அமைததனா (நற். 373:6,7). புனனையரும்பு மலியப்பெற்றது கானல (ஐங. 132:1,2). எக்கரிலுள்ள ஞாழலின் அரும்புமுதிர்ந்து மலரும் பூங்கொதது நன் மணம கமழும் துறையினை யுடையவன் தலைவன (ஐங். 146:1,2). முலலை, தளவின் பைங்கொடியைத் தழுவிக் கொணடு நிலாப் போனற வெண்மையான அரும்புகளைப் பேணிக் கார்காலத்தை நயக்கும (ஐங. 454:1-3). அரும்பவிழ்ந்த நறுமுலலையில் தேனினம் ஒலிககும் (கலி. 30:11,12). கரையில நினற மரங்கள், அரும்பு அலர்ந்து பல மணிகளைச சூடினாற் போலப் பூக்களைச் சூட இளவேனில் வநதது (கலி. 33:6,8). தலைவியின் கூந்தலி விருந்த அரும் பவிழ் நறுமுல்லையை வண்டு ஊதியது (கலி. 66:2, 6,7). விளிமபிடத்தே விளங்குகின்ற ஒளியையுடைய முத்தை அரும்பாக அழுததிப் பவழத்தாற் செய்த வட்டப் பலகை சுமந்து நிற்ப நின்ற கைபுனை வேழததைப் புதல்வன் ஈர்தது வநதான் (கலி. 80:4-8). அரும்பவிழ நீலம் (கலி. 85:15). அரும்பு அவிழந்த பூஞ்சினைகள் தோறும் இருநது குயில்கள் அமையாது கூவும் (கலி.92:63,64). தணபுலத்தே நின்ற முதற்பெயலுக்கு அரும்பு ஈனற பிடவ மலரைச் செங்காந்தட்பூ, காயாம்பூ முதலிய பிற பூக்களோடு சேர்த்துக் கட்டிய கண்ணியை ஆயர் அணிகொள மலைநதனர் (கலி.101:1-6).

**அருமன் – ஒரு வள்ளல்.** ஆதி அருமன் எனவும் வழங்கப் பெறுவான. நககீரர் நறறிணை 367-ஆம் பாடலில் இவனைப் பாராட்டியுளளார். கருனைக் கிழங்குப் பொரியல், செந்நெற்சோறு ஆகியவற்றைத தெய்வத்திறகளிக்கும் பலியோடு கவர்வதற காகக் காக்கைகள் தம் குஞ்சுகளைத் தழுவி, இவன் வீட்டிடத்துக் கூடியிருக்கும் என்று நக்கீரர் குறிப்பிட்டுள்ளார். அத்தகு வீடுகள் பொருந்திய சிறுகுடி என்னும் ஊர் இவனுக்குரியது (நற். 367:1-6). ஆதி அருமன் காண்க.

**அருவந்தை – வள்ளல்.** அம்பர்கிழான் அருவந்தை எனறும் வழங்கப் பெறுவான. கல்லாடனார் இவனைப் புறநானூறு 385-ஆம் பாடலில பாடியுளளார. சோழ நாட்டதாகிய அம்பர் எனனும் இவனுடைய ஊர், காவிரி பாயும் நெல் விளையும் கழனிகளைக் கொணடது. வெள்ளி தோனறும் விடியறகாலையில் பகடு வாழத்திப் பாடிவரும இரவலர்ககு அவ ரணிநத நீலநிறக கநதையை நீககி வெளளிய ஆடை நலகிப பசியகற்றும பணபுடையன் எனறு இவனைச் சிறப்பிதது, வானத துளியினும பலகாலம வாழ்வானாக எனறு கலலாடனார் வாழததியுளளார (புறம். 385).

**அருவாளர் – அருவாளநாட்டார்.** தொனமையான அருவாளர் - அருவாளநாட்டார் - கரிகாற பெருவளததானிடம, தாம் செயய வேணடிய தொழில யாதெனக கேட்டுப பணிநது நினறனா (பட. 275).

**அருவி - மலையில் இழிதரும் நீர்க்கால.** மழை பெய்யினும் பெயயாவிடினும பாரிபறம்பில அருவி மலைச சிகரந்தோறும இறஙகிக் கொளளினுககு உழுத நிலத்திடை நீரோடுகாலாக ஓடும (புறம். 105 4-6). பறமபு மலையில ஒருசார் அருவி ஆர்பப, ஒருசார் பாணரது கலததில நிறையப் பெயத தேக்கட்டேறல் கல்லலைத்து ஓடும (புறம். 115:1-4). மலையமான் திருமுடிக்காரி ஓசை நிறைநதொலிக்கும அருவியினையுடைய மலைக்குரியன (புறம். 124:4,5). பலநு இசை அருவியையுடையது முள்ளூர் மலை (புறம். 126:8). நாஞ்சில் வளளுவன சிறிய வெள்ளிய அருவியையுடைய பெரிய மலை நாட்டையுடையவன (புறம். 137:13). உயர்ந்த மலையிலுள்ள அருவி, கோலினாலடிக்கப்பெறற முரசினைப போல ஒலிக் கும் (புறம். 143:9,10) கல் முழையினினறு ஓடும் அருவிகளை யுடைய பல மலை கடநது சென்று பெருங்குன்றூர் கிழார் சீறியாழில் செவ்வழிப பண பாடியதைப் பேகன் மனைவி தமியளாயக கேட்டு வருந்தினாள் (புறம.147:1-5). ஒலிதது இறங்கும் அருவி விளங்கும் மலையினைக கொணடவன கணடீரக கோப் பெருநள்ளி (புறம். 148:1). வனபரணர் நளளி நலகிய ஊனையுணடு காயபசி நீஙகிக கலமிசை அருவியைத தணணெனப் பருகினார் (புறம். 150:14-16). வல்விலோரி அருவியினை யுடைய சாரலைக் கொணட மலைக்குத தலைவன் (புறம. 152 11,12). துகிலின் விரிபபினை ஒபப மலைமுகட்டிலிருநது பலவாய இறங்கும குளிர்நத அருவிகளையுடையது கொணபெருங்கானம (புறம். 154:11-14). பாரியின பறம்பு, நெடிய மலையில் கற்களை உருட்டியோடும் அருவியுடையது (புறம. 158.2-4). கழைசெறிநத கறிவளர் அடுக்கததில அருவி ஆர்ககும் (புறம. 168:

1,2). மாலையொடு விளங்கும் மார்பிற்கு அருவி தாழ்ந்த பெரிய மலை உவமை (புறம். 198:1,2). வேனிற்காலத்தில் அருவி நீர் அறுவதனால் உலகத்தார் அஞ்சுமாறு வெம்மையுற்று வறுமை மிகும் (புறம் 224:12,13). பறை இசையருவி நல்நாட்டுப் பொருநன் யானைக்கட் சேஎய் மாந்தரஞ் சேரலிரும் பொறை (புறம். 229:14). தவஞ்செய்வான் நெடிய அருவியில்நீராடி யானை தந்த விறகால் எரியோம்பித் தன் சடையினைப் புலர்த்துவன் (புறம். 251: 4-7). வெள்ளிய அருவி நீரை ஏற்றலால் தவத்தோன் சடை தில்லந்தளிர்போல நிறம் மாறியது (புறம். 252: 1,2). மேகம் தவழும் பொற்கோட்டிமயம் இசையொலிக்கும் அருவியினைக் கொண்டது (புறம். 369: 23,24). வேங்கடநாடு ஒலித்திடும் வெள்ளிய அருவியினை உடையது (புறம். 381: 22). வேங்கடம் அருவி இழியும் மலையுடையது (புறம். 389:11; அகம். 213:3). பறையிசை யருவியினையுடையது பாயல் மலை (புறம். 398:30). இழுமென முழங்கி இறங்கும் அருவி பாயும் வான்தோயும் உச்சியினை யுடையது தோன்றிமலை (புறம். 399: 33, 34). இமயமலையிலுள்ள முள்முருக்கு நிறைந்த பகுதியில் அஞ்சாது உறங்கிய கவரிமான், தான் நீருண்ட பெரிய அருவியையும் நரந்தம் புல்லையும் கனவிற் கண்டது (பதி. 11: 21,22). அமைவரல் அருவி இமயம் (பதி. ப. 2:4). நெடிய தேரிற் கட்டப்பெற்று அசையும் கொடிக்குப் பெரிய மலைப்பக்கத்தில் இறங்கும் அருவி உவமை (பதி. 25: 10,11). கோடைநீடக் குன்றம் பொலிவழிய அருவியற்ற வறுமைக் காலத்தும் பேரியாற்றில் வெள்ளம் மிகும் (பதி. 28: 8-10). அருவி நீரற்று வறுமைமிக்க நாளிலும் பேராறு நீர் அறாது பாயும் (பதி. 43: 14,15). மலைமேலிருந்து வீழும் அருவிபோல மாடங்களில் கட்டப்பெற்ற கொடிகள் காற்றில் ஆடும் (பதி. 47: 3,4). பல அருவிகளாலாயது கங்கை (பதி. ப. 5:7). உழவர் அருவி ஓரத்தில் மலரும் ஆம்பல் மலரைத் தலையிற் சூடுவர் (பதி. 62:17). மலையைப் போன்ற யானையின் மீது ஏற்றப் பெற்ற வெற்றிக் கொடி, மலைமேலுள்ள அருவிபோல அசையும் (பதி. 69: 1,2). இழுமென இறங்கும் அருவியொலி பறையோசை போன்றது (பதி. 70:24). மலையிலிருந்து இழிதரும் வெள்ளிய அருவி முரசம்போல முழங்கும் (பதி. 78: 1,2). அருவியினை யுடைய அரியமலை போன்றது மார்பு (பதி. 88:35). வரிபுனை நெடுந்தேர் அருவி போல ஒலிக்கும் (பதி. தி. 2:7). குறத்தியர் முருகாற்றுப்படுத்து மிடத்தில் முழங்கும் ஓசையுடைய அருவியொடு வாச்சியங்களும் ஒலித்தன (முரு. 240). பழமுதிர் சோலை மலைமுகட்டினின்றும் இழும் என ஒலித்து இறங்கும் அருவியுடையது (முரு. 316, 317). மாமலையின் அருவி நீரற்றுப் போனாலும் காவிரி வெள்ளம் பெருகி ஓடும் (பொரு. 235,240). பாரி வெள்ளருவி வீழும் சாரலை யுடைய பறம்பிற் கோமானாவான் (சிறு. 90,91). விடர்கால் அருவி வியன்மலை (சிறு. 170). ஓய்மானாட்டு நல்லியக் கோடனுடைய மூதூர்த் தெருக்களில் எழுந்த துகளை, யானையின் மதநீராகிய அருவி அவித்தது (சிறு. 200). தொண்டைமான் இளந்திரையன்பால் மன்னர் திறை கொண்டுசென்று பணிவதற்கு, மலையிலிருந்து இறங்குகின்ற அருவி கடலுக்குச் செல்வது உவமை (பெரு. 427,428). ஒளிறிலங்கு அருவிய மலைகிழவோன் தொண்டைமான் இளந்திரையன் (பெரு.500). தன் தலைவனின் வரவு நினைந்திருந்த அரசி, மூட்டுவாய்களினின்றும் இறங்கும் அருவிகளின் இன்னோசையினை, எழுநிலை மாடத்திருந்து கேட்டனள் (முல்லை. 86-88). 'வரைதாழ் அருவிப் பொருப்பின் பொருந' என நெடுஞ்செழியன் விளிக்கப் பெறுதல் (மது. 42). இலங்கும் அருவியுடைய மலை நீந்தியவன் நெடியோன் (மது. 57,61). பள்ளமும் மேடுமான பகுதியிலுள்ள மழை நீர் திரண்டு கவலைக் கிழங்கு அகழ்ந்த குழியிலே அருவி ஒலிப்பது போல் விழுந்தது (மது, 240,241). அருவியின் ஒலி சிலம்பகத்து இரட்டியது (மது. 299). பாலைநிலத்தில் மலைகள் அழகற்றும் அருவியின்றியும் இருந்தன (மது. 306). பெருமலையிடத்துள்ள அருவி போலக் கொடியும் பதாகையும் அசைந்தன (மது. 373,374). அரண்மனை நிலா முற்றத்தி லுள்ள, மகரப் பகுவாய் போன்ற நீர் விழும் தூம்பிலிருந்து மழைநீர் விழும் ஓசை, கலங்கி விழும் அருவியோசை போன்றது (நெடு. 95-97). மழை பொழிந்தவுடன் நெடுமலையிலிருந்து இறங்கும் வெள்ளிய அருவி வெண்டுகிலினை ஒக்கும் (குறி. 54,55). அருவி கொழிக்கும் அணிமலை நாடன் (குறி. வெ. 1:3). அருவி கொண்டுவந்த பலாப் பழத்தின் வெள்ளிய விதையின் மாவு, உணவாகப் பயன்பட்டது (மலை. 174). இனிய ஓசைமிக்க அருவிகளையுடைய பயங்கெழு மலையில் கானவர் தங்கினர் (மலை. 278,279). வானர மகளிர் அருவியாடுவர் (மலை. 294). சேயாறு நெடிய மலையிலிருந்து இறங்கும் அருவியின் நீர் வரவினைக் கொண்டு, கண்ணிற்கினிமையாக விளங்கும் (மலை. 554,556). கான்கெழுநாடு நெடுவரை உச்சியினின்று இழிதரும் பல அருவிகளையுடையது (அகம். 22:1,2). உயர்வரை நீர்மிக்க வெள்ளருவி யுடையது (அகம். 38:16). 'நம் தோட்டத்திலுள்ள பள்ளத்தில் நிறைந்த கூதளஞ் செடியில் விழும் அருவியின் இனிய ஒலியைக் கேட்டனையோ' என்று தோழி தலைவியை வினவுவதன் வாயி

லாகத் தலைமகன் இரவுக்குறி வந்ததை உணர்த்தினாள் (அகம். 68:1-4). மந்தி மலையடுக்கத்தே கண்ட இயற்கை நாட்டியத்தில அருவி நீரின் இனிய ஓசை முழவின் இசையாக அமைந்தது (அகம். 82:3,4). அருவி நீர் வற்றிய மலைப் பக்கத்தில் யானை சூருடைய சுனையில் நீரைத் துழாவிக் காணாது தன்பிடியோடு ஒருபக்கத்தே ஒடுங்கும் (அகம. 91:3-6). மந்தியும அறியா மரமபயில காட்டில் தணபல் அருவித தாழ்நீர்ப் பக்கம் தலைவி கூந்தலின ஏமுறு துயிலைப பெறலாம எனத் தோழி தலைவனிடம கூறினாள (அகம. 92:8-13). பிறங்குமலைப்பக்கம அருவி ஒலித்தோடியது (அகம. 118:1). பொதியமலையின உச்சியினின்றும இழி தரும் அருவி போல இனிமையும் ஒலிக்கும் (அகம. 138.7-9). பசும்பூட்பாணடியனின களிற்றின் மேலுயர்த்திய வெல்கொடி ஒபப நெடுவரையினின்று இழிதரும அருவி தோன்றியது (அகம். 162:21-24). சேரனுடைய குழுமூர்ச் சமையற்கட்டில் எழும் ஓசை போலப் பெரிய மலைபபக்கத்து அருவியின் ஒலி விளங்கும் (அகம். 168:5-8). மலையில் தேனொடு கலநதிறங்கும் அருவி இன்னிசையுடைய இயமபோல் ஒலித்து விடரகம எதிரொலிக்க விழும் (அகம. 172.1-4). தேரிலமைந்த மணிகளின் ஓசைக்கு, மலையினின்று ஓடிவரும் அருவி ஒலி உவமை (அகம். 184:17, 18). பாலை வழியிலுள்ள மலையின் அருவிகள் நீரற்றுக் கிடந்தன (அகம். 185: 9, 10). அரவு உமிழ்ந்த திருமணியை அருவி கொணர்ந்து தந்து சிறுகுடியிலுள்ள தெருவினை ஒளி செய்தது (அகம். 192:11, 12). வயங்கு வெள்ளருவிய குன்றம் (அகம். 202:1). மலையில் வண்டினங்கள ஆரவாரிக்கக் கலலென்னும ஓசையுடன் வரும் அருவி சந்தன மரத்தில் மோதி அதனைத் தண்ணிதாக நனைக்கும் (அகம. 228:1-3). வேனிலால் நீர் வறறி அருவி வறணட அச்சமிக்க இடத்தில பேயத் தேர் தோனறும் (அகம. 241:8, 9). மோரியர் தேர் செலலுதற்குக் குறைத்த மலைப்பகுதி அருவிகளை யுடையது (அகம். 251.12-14). பூக்கள் நிறைந்து, அருவி ஒலித்துவிழும் சுனையினையுடைய பககமலையில், நீர்த்திவலைகள் புதரினை நனைக்கும் (அகம. 262:13-15). அணங்குடைய நெடிய மலை புலியைத தொலைத்த யானையின புலவு நாறும புகர் நுதலைக் கழுவ அருவியைத் தந்தது (அகம். 272:1-3). 'குணகடல முகந்த வானம் நள்ளிரவில தலைவனது மலையில் மழை பொழிந்தால் இலங்கும் அருவி பரந்து மூங்கில தண்டு வளையத் தீணடி ஓடிவரும் போது நம்மூர் முன்துறையில் மழைககண் சிவபப மூழ்கித் திளைக்கலாம்' எனத தலைவன் சிறைப் புறமாகத் தலைவிககுத் தோழி கூறினாள் (அகம. 278). நெடிய பெரிய மலையில் குறுகிய நெறியில் ஒலிக்கும் இடையிட்டு விளங்கும் அருவி விழுமிடத்தில தூறுகள் உள்ளன (அகம். 288:9-11). நலவரை நாடனொடு தலைவி அருவியாடினாள் (அகம். 302: 4). பெரிய கொல்லி மலையின் உசசியிற் பரவி நெருங்கி, இறங்கி வரும் அருவி ஓசைபோல அலர தோனறும (அகம. 303:6, 7). இரவு ஆலங்கட்டியோடு பெருமழை பொழிநதமையால அருவியில நீர மிகுநது வந்தது (அகம். 308:3,4). மலையினின்று இறங்கும அருவியின ஒலியும் வணடின ஒலியும் கூடி ஒலிப்பது, முழவோசையொடு யாழ நரமபின இசை கூடியது போலும் (அகம. 318:5, 6). நுணாவின பூக்கள, வெள்ளருவியின் நீர்த்திவலைகள் போல விளங்கும (அகம. 345:15, 16). பாடிமிழ் அருவிப பாறை (அகம. 352:3). நனனன ஆஅயின பறமபு, அருவிநீரபரவு மிடத்துள்ள ஆம்பல தழைததுளள முனறுறையினைக் கொணடது (அகம. 356:18, 19). பெரிய மலையிலுள்ள வெள்ளருவி முகபடாம் அணிநத யானையின மீது உயர்ததப்பெறற ஆடுகொடியினை ஒக்கும் (அகம. 358:12-14). பெருவரை அத்ததத்தில கான சுடும் நிறப்புகை அருவித் துவலையொடு மயங்கும் (அகம். 359:14-16). திஙகளின கதிர் மலைச்சோலையில் பரவியமை, குளிர்ந்த வெள்ளிய அருவிபோல விளங்கும் (அகம். 362:13-15). நெடுமபெருங் குன்றத்து வான்தோய் சிமையம இனிய ஒலிபொருந்திய அருவி சூடித் தோனறும (அகம. 378:22-24). அருவியில பாயந்த மநதி பலாவின்பழத்தைத் தெப்பமாகக் கொணடு ஊர்ததுறையில வந்து இறங்கும் (அகம். 382:9-11). நளளிரவில மழை பெய்தமையால், நீர் பெருகி, மலைமுழைஞ்சுகளில அருவி ஒலிக்கும் (குறு. 42:2,3). மலையுசசியில தோன்றிய நெடுவெள்ளருவி கூததரது முழவினை யொப்ப ஒலித்துப் பக்கமலையில் வீழும் (குறு. 78:1-3). ஒலி வெள்ளருவி ஓங்குமலை நாடன் (குறு. 88:1). குரங்கு தொட்டமையால விழுந்த பலாப்பழத்தை மலைப பககத்தருவி நீருணதுறைக்குக் கொணடு வரும (குறு. 90:4-6). அருவி நீர மாமலையினின்று ததத்தி விழுமாறு மேகம் மழை பொழிந்தது (குறு. 94:6). பெரிய மலையிடத்து வீழும் அருவி, பாறைவெடிப புக்களில் ஒலிக்கும் (குறு. 95:1,2). பெருமலை அருவியும வேங்கையுமுடையது (குறு. 96:1). அருவி பாயும் பரநத நிலத்தில மலைநெலலை விதைபபர் (குறு. 100:1). கற்களில் படரும் இற்றிமரததின் வேர், மலைபபக்கத்தில் வீழும அருவிபோலத் தோனறும் (குறு. 106:1,2). கற்களில் மோதி விரைந்து வீழும் அருவி, நிலத்தினைத் தன்னிடமாகக கொணடு ஊர்ந்து செல்லும் பாம்பு போன்றது (குறு. 134: 5,6). அருவி கொணரும் கொறுக்காந் தட்டையை

யானை கவளமாகக் கொள்ளும் (குறு. 170:2,3). தேர்ச்செலவின் விரைவிற்குக் குன்றினின்று வீழும அருவி நீரின் விரைவு உவமை (குறு. 189:2). அருவி சேர் மருங்கின் முல்லை பூத்தது (குறு. 220:3) தூய வெள்ளிய அருவி பாம்பின உரியினை ஒக்கும் (குறு. 235:1,2). மழை பொழிந்த மலையில் அருவியினருகே காந்த ளரும்புகள் மணம் வீசின (குறு. 259:1-3). அருவி போன்ற பெருந்துளிகளைச் சிதறி யாறுகள தம் வெள்ளத்தை ஊருக்கு நல்கும் (குறு. 271:1,2). அசசநதரும் அருவி இலைக்குடிலின் அருகே ஓடியது (குறு. 284:6,7). மலையில் விளங்கும் அருவிக்குக் கடலில் எழும் மதியம் உவமை (குறு. 315:1,2). நெடுவரைப்பக்கததே பகலில வெற்பனின் மார்பு புணையாக இன்னோசை யுடைய அருவியாடுதல் இனிது எனத் தலைமகன் சிறைப்புறத்தானாகக் கூறித் தோழி வரைவு கடாயினாள் (குறு. 353:1-3). பெரிய மலைப்பக்கத்தில் ஒலிக்கும அருவி தண்ணிய முழவோசையை வெளிப்படுத்தும (குறு. 365: 3,4). மழை தொடங்கலின் தலைவர் நாட்டில் ஆர வாரத்தை யுடைய மகளிர்குழ விரும்பி யிறங்கும் அருவியினால் துறுகல் ஓங்கிய மலை கழுவப்பட்ட மணிபோலத் தோன்றும (குறு. 367:4-7). மேகம் பொருநதும் மலையின்பக்கத்தில் மலை நெல்லை விதைத்து அருவி நீர் கொண்டு விளையச் செய்வர் (குறு. 371:2,3). கடலில் வீசிய கருமணற செறறை யுடைய அருவி, தலைவியின் கூந்தலிடததே அதனை ஏக்கர் போலக் குவிக்கும் (குறு. 372:4,5). பெருவரை அடுக்கத்து அருவி ஆர்ப்ப வானம் முழங்கி விரைவிற் பெய்ய மின்னியது (நற். 7:2-6). விடியற காலத்தில் மழை பெய்த மலையினின்றும், கடல் அலை போல அருவி ஓடிவரும் (நற். 17:1,2). மதநீரொழிந்த சினந்தணிந்த யானையின் ஒரு மருப்புப் போன்ற ஒன்றாக விளங்கும் அருவியை யுடையது குன்றம (நற். 18:8-10). அருவி நீலமணி போலத் தெளிநது தோன்றும் (நற். 28:5) அருவி வெண்ணிறங் கொணட பலதேவனைப் போனறது (நற். 32:2). மலையடுக்கததில் சூர்மகள், அருவியின் ஒலியாகிய இனனியங் கொண்டு ஆடுவள் (நற். 34:4, 5). ஆயமோடு தலைவி அருவியாடிக் கண் சிவந்தாள் (நற். 44:1,2). ஒளிறு வெள்ளருவியின் துறையிற் பாய்நது யானை புலியொடு பொருது புணபட்டது (நற். 65:4,5). சிற்றூரில் மனைவி இரவு நேரத்தில முற்றத்திடததே அருவியின் ஒலி கேட்டு உறங்குவாள் (நற். 77:6,7). தலைவியின் துயர்கண்டு ஆற்றாது பழமுதிர் குனறம, கணணீர் அருவியாய்ப் பெருகும்படி அழுகினறது என்று புனைவர் (நற். 88:7-9) அருவி மலையினின்றும மாலைபோல இறங்கும் (நற. 93:2). காற்று அசைத்தலால் இலையுதிர்ந்த கிளையிலுள்ள வெட்பாலையின் நெற்றுக்கள், மலையினின்று விழும் அருவியைப் போல ஒலிக்கும் (நற். 107:3-6). மணிநிறத்து அருவியின் நீர் பரந்த இடமெல்லாம் மறையும்படி பரவ மழை பொழிநதது (நற். 112:6-9). செவ்விய மலையருவியிடத்து அமைந்த நீரில்லாத நீளிடையில் ஓமைமரம் அருஞ்சுரம் செல்வோர்க்குத் தங்கு நிழலாகும் (நற். 137:4-8). அருவி ஆர்ககும் பெரு வரை (நற். 147:6; 205:1; 213:1; 399:1). புலியைக் கொன்ற களிற்றியானை தன கோட்டில் பட்டுள்ள குருதிக் கறையை மலையினின்று வரும் அருவி நீரிற் கழுவும் (நற். 151:2-4). யாழோசை போன்ற இனிய குரலையுடைய வணடினம் அருவியாகிய முழவொலியோடு பொருநதி மெதுவாக ஒலிக்கும் (நற. 176:8-10). கொல்லிக் குடவரையில் தெய்வங் காககும் தீதுதீர் நெடுங்கோட்டினின்று அவ்வெள்ளருவி இழிதரும் (நற் 201:5-7). குதித்துவீழ் அருவி யுடைய மலைக்குரியவன தலைவன் (நற. 228:9). பெரிய மலையிடத்து நெடுநீர் அருவியின் ஒலி மிக்குத் தோன்றும் (நற். 251:1,2). வானுயர் நெடுங் கோட்டு இலங்கு வெள்ளருவி பாயும் மலைப் பக்கத்து வேங்கையின் மலர் கல்லினமேல் உதிர்ந்து பரவிக கிடக்கும் (நற். 257:3-6). தலைவி மலை நாடனொடு பெருவரை அடுககத்து அருவியாடினாள் (நற். 259:3-5; 373: 4,5). அருவியார்க்கும் அணங்குடை நெடுங்கோடு (நற். 288.1). தலைவியும் தோழியும் கூவிக் காக்கும் தினைபபுனத்திடமெல லாம், இலை காய்ந்து மலையருவிபோல ஒலித்தல் நீங்காது (நற். 313:9-11). மந்தி தன கிளையொடு மலைப்பக்கத்து அருவியில விளையாடும் (நற். 334: 1,2). புலையன் தணணுமையின கணகளில் அடித தெழுப்பும் ஓசைபோல, அருவிநீர் ஓசை செயது இறங்கும் (நற். 347:5-8). காநதளின பூங்கொத்தோடு பொருந்திய வாழை மடலில அருவிபோலப் பெருகும இனிய நீரை மந்தி பருகும் (நற். 355:2-5). வானம் பெயயாதாயினும பககமலையில் அருவி ஆர்க்கும் (நற். 365:6,7). இமயததின உச்சியில விளங்கும் வெள்ளிய அருவியை உடையது கங்கையாறு (நற. 369:7-9). அருவிகள் தேம்படு நெடுவரையில் மணி போலத் தெளிவுற்றன (நற. 389.2). தேன்தூங்கு உயர்வரையில் அருவி ஆர்த்தது (நற். 396:2). கணங் கொள அருவிக கான்கெழு நாடன (ஐங். 183:1). மழை பெயததால் அகனகண அருவி மூங்கில் செறிந்த பக்கமலையில் இழிதரும் (ஐங. 220:1). மாமலை வெற்பில் தெளிநத நீரருவியில் தலைவியோடு தலைவன் ஆடுதல் முனபு எளிதாயிருந்தது (ஐங். 224:2-4). நிரநதிலங்கு அருவிய நெடுமலை நாடன் (ஐங். 228:2). அரிய மலைபபக்கததில மணிகளை வாரிக்கொண்டு ஒல்லென்ற ஒலியுடன

அருவி இறங்கும் (ஐங். 233:2,3). மாஅல் அருவித் தண் பெருஞ் சிலம்ப (ஐங். 238:3). இலங்கும் அருவிச் சூர் மலை நாடன் (ஐங். 249:3,4). நெடுவரைப் படப்பையில் தலைவனது ஊரிலிருந்து விரைந்து வரும் அருவியைக்காணினும் தலைவி அழுவாள் (ஐங். 251:3,4). குன்று ஒளியால் அழகு பெற்ற அருவியை யுடையது (ஐங். 312:3,4). மலைகெழு நாட்டிலுள்ள சோலையில் அருவி ஒலித்துக் கொண்டு வீழும் (ஐங். 395:5,6). தண்ணருவியின் பக்கத்தே உள்ள நறு முல்லை மகளிர் எயிற்றினை ஒக்கும் (கலி. 32:16). பிரிந்த தலைவன் திரும்பி வரும் காலம், வையை யாற்றின் மணலிடத்து அருவியால் மலர்ந்த முல்லை மலரில் வண்டுகள் தாதுண்ணும் இளவேனிற் கால மாகும் (கலி. 35:9-12). தலைவனுடைய மலை, விண்ணைத் தொடும் மலைச்சாரலில் தெய்வ மகளிர் தாம் பந்தடித்த இளைப்பு நீங்க நீராடும் அருவி யைக் கொண்ட சாரலையுடையது (கலி. 40:22,23). புலியைக் கொன்ற யானை தழையினை உண்டு, ஒலிக்கும் வெள்ளிய அருவிநீரைப் பருகி, அதன் ஓசையில் உறங்கும் (கலி. 42:1-3). எதிரெதிரே ஓங் கிய மலைச்சாரலின் மாணிக்கப்பாறையில் இரண்டு மலையினின்றும் விழுகின்ற அருவி தன் இலை களின் மேலே விழுதலால், மலர்க்கொத்துக்கள் அலர்ந்துள்ள, முழவு போன்ற அடியினைக் கொண்ட வேங்கைமரம், யானைகள் பூவோடு கூடிய நீரை மேலே சொரியத் தாமரை மலரின் அல்லியில் விரும்பி உறையும் திருமகள் போலக் காணப்படும் (கலி. 44:1-7). கறங்கிசை அருவியை யுடைய மால்வரை (கலி. 45:8,9). அயம் இழி அரு விய அணிமலை நன்னாட (கலி. 46:9). இலங்கு தாழ் அருவியோடு அணிகொண்ட மலை (கலி. 46: 25). பள்ளங்கள் நீர் நிறைந்து அழகு பெறும்படி அருவிகள் ஆரவாரித்து இறங்கும் மலை நாட்டினை உடையவன் தலைவன் (கலி. 53:6,7). மணிகளை யுடைய மலையினின்று வீழும் அருவி போன்றது வெண்கால் காரி எருது (கலி. 103:11,12). இமயம் ஆரவாரத்தோடு அமைந்துவரும் பல அருவிகளைக் கொண்டது (கலி. 105:74,75). மலையின் மாசு நீங்குமாறு விரையும் அருவியின் நீர் ஓடுதற்குரிய பல வழிகளைக் கொண்டது மலைச்சாரல் (பரி. 6:5,6). திருப்பரங் குன்றத்தில் எல்லை கடந்து இழியும் வெள்ளருவி பரங்குன்றத்தில் தாலாட்டக் காதலர் இன்புற்றுத் துயின்றனர் (பரி. 6:52-55). மலை தோறும் தொடுத்த அருவிநீர் பெயலாற் பொலிந்து செல்லுமிடம் அரிதெனக் கருதாது இரவும் பகலும் சென்று மற்றையிடங்களிற் சேரும் புனல் பலவற் றோடு கூடிப் பெருகியது (பரி. 7:4-8). திருப்பரங் குன்றத்திலுள்ள அருவி தாழும் சுனை, இமயக் குன்றில் சிறப்பெய்தி முருகனைப் பெற்ற தாமரை யினை யுடைய வற்றாத பொய்கையினை ஒக்கும் (பரி. 8:12-16). 'பரங்குன்றமே, மண்வருந்த மழை வறந்தாலும் நெறிப்பட்டொழுகும் அருவி இடை யறாது ஒழுகுவதாகிய பெரிய செல்வம் நினக்கு நிலைபெறுவதாக' என்று நல்லந்துவனார் வாழ்த் துவர் (பரி. 8:128-130). பலவகை மரங்களின் மலர் களைச் சாரலிற் சோலைக்கண்ணே அருவி கொண்டுவந்து சொரிந்தது (பரி. 11:16-23). பரு மணலையுடைய அருவியிடத்து வாடை வீசுதலால் நோன்பு மகளிர் கரையிலே அந்தணர் வளர்த்த வேள்வித் தீயில் ஈர ஆடையைப் புலர்த்தினர் (பரி. 11:81-86). திருமால் நீலமலையினின்றும் விழும் பொன்னையும் மணியையும் உடைய அருவியின் நிறத்தோடு மாறுபட்ட மாலையினை அணிந்துள் ளார் (பரி. 13:3,4). பொன்னாரத்தினை, மலை யருவியைப் போல விளங்கும் முத்தாரத்தொடு திருமால் தம் மார்பில் அணிந்துள்ளார் (பரி. 13:10-12). பலதேவனுடைய மார்பில் அணியப்பெற்ற வெண்கடம்ப மாலை போன்ற அருவி ஆரவாரித்து இழிவதால் சிலம்பாறு அழகுபெற்றது (பரி. 15:19-22). மலையி னிழிந்த அருவி போந்து கரையிடந் தோறும் உள்ள பூ மரங்களைச் சேர்ந்து அவற்றின் பூவும் மகளிர் கூந்தலினின்று வீழ்ந்த மலரும் மைந்தர் மார்பினின்று உதிர்ந்த மலரிதழ்களும் பரவி விளங்க அவ்வருவி விண்மீனாகிய முத்து விளங்கும் வானத்திலுள்ள கங்கையை ஒத்தது (பரி. 16:32–37). திருப்பரங்குன்றத்தின் ஒரு பக்கத்தில் மலையருவியின் நீர் ஒலிக்கும் (பரி. 17:14). திருப் பரங்குன்றத்தினின்றும் நெடிய வெள்ளிய அருவி இடையறாது ஒழுகி உழவர் வயலில் பாயும் (பரி. 17-40). வெள்ளருவி யணிந்த பரங்குன்றில் தலை வியர் தெய்வ விழா எடுத்து விருந்தயர்ந்தனர் (பரி. 17:42,43). திருப்பரங்குன்றத்தின் சிகரங்கள் வெள்ளிய அருவிகள் ஆர்த்தலால் முத்தணிந்தன போன்றன (பரி. 18:46). மலையினின்று ஓடிவரும் அருவி, காந்தள் முதலிய பல்வேறு மலர்களைக் கொணர்ந்து வையையில் சேர்த்தது (பரி. 20:100-103,111). பரங்குன்றத்தில் அருவிநீர் தாளத்தை யுடைய முழவுபோன்று இசைத்தது (பரி. 21:36). பரங்குன்றத்தில் இடையறா தொழுகும் அருவி அரிய விடரின்கண்ணே பரந்தது (பரி. 21:52,53). பூமுடிநாகர் கோயிலில் அருவி யிசையும் முழ வொலியும் ஒருங்கே ஆர்க்கும் (பரி. தி. 1:52,59).

2. நீர். புதுவருவாய் அறாத வயலில் வேலை செய் யும் மகளிர் அருவியில்-நீரில்-நின்ற ஆம்பலோடும் நெய்தற்பூவோடும் நெல்லை அறுத்தனர் (பதி. 71:

1-3). அருவி அற்ற பச்சையான அடிப்பகுதி தோறும் தினை முதிர்ந்து அறுக்குமுன்னர் பல தட்டைகள் தோனறின (அகம். 28:3-5). பொய்கைக கரையில அரததின் வாய்போன்ற முட்களை யுடைய பிரப் பங்கொடிகள் அருவி யாம்பலின் அகன்ற இலை யினைச் சுற்றும் (அகம். 96:3-5).

3. அறறதாகிய வீ (அருவீ என்பதன் திரிபு). 'செல்வக் கடுங்கோ வாழியாத, உலகததுச் செயத அறம் உணட.ாயின், அடையானது அடுததலை அறியாத, அருவி - அற்றதாகிய வீ-உடைய ஆம்பலெனனும் எணணின அளவுள்ள பல ஊழி வாழ்க' என்று கபிலர் வாழ்ததினர் (பதி. 63:19-21).

4. உருவற்றது. அருவி-உருவற்றது-ஆகிய காறறு தாலாட்டிப பாராட்டப் பரஙகுனறில் காதலர் இனபுற்றுத் துயினறனர் (பரி. 6:53-55).

அருள் - அன்பின முதிர்ச்சி. 'அருளையும் அன்பையும் நீக்கி அதனால நரகம் எயதுபவரோடு பொருந தாமல், நாட்டினைக் குழந்தை வளர்பபவர் போலக காப்பாயாக' என்று நரிவெரூஉததலையார் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ் சேரலிரும் பொறைககுச் செவியறிவுறுததினார (புறம். 5.5-7). சோழன நலஙகிள்ளியின வெறறி விழைநது அவனுக்குப் பகையாய மாறுபட்டோர் அருள இலராய்க கொடாமை வலலராகுக என உறையூர் முதுகணணன சாத்தனார் வேணடுவர் (புறம். 27: 17,18). பிளளைகளின மழலைச்சொல் யாழிசை போல இனபஞ் செயயா; காலத்தொடும பொருநதி வாரா; பொருளும் அறிய வாரா; எனினும தநதை யர்க்குத் தம குழந்தையின் மழலை அருளுதலைச செய்யவலலது (புறம. 92:1-3). பேகன் தன மனை விககு அருள செயயாதிருததல் கொடிது எனப் பரணர் கூறினார் (புறம. 144.1). வையாவிக்கோப் பெரும் பேகனை 'அருள வெய்யோய' என விளித்து 'அறஞ்செயக' எனப பரணர் வேணடுவர் (புறம். 145: 7). மன்னவன் தன் அருள் பாடுநர்க்குக் குதிரை, யானை முதலயன நலகுவன (புறம. 361:7,8). அருளின் மாறுபட்டது மறப்பணபு எனப்படல (பொரு. 21,22). நூலோரின அருளநெறி பிறழாத வாறு இசையை எக்காலமும் நுகரும் செலவததை உடையவர் அரசர் (மலை. 38,39). 'காதலரின காதல் நமமைக காட்டிலும் பொருளின்மேல அமைநது கிடக்க, நீ அவா நமககு அருள செயவதனை விரும்புவதாகக் கூறுகினறனைய' என்று, வற் புறுததிய தோழியிடம தலைவி கூறினள் (அகம. 53: 14-16). கடகக நினைபபவா நடுஙகத் தக்க அசச மிகக சிறுவழியில தலைவியைக் காணத தலைவன் அருள்வைத்த நெஞ்சமோடு வேல் துணையாக வந்தனன் (அகம். 72:17-19). 'உண்மையான பொருள் அருள் அன்று; ஆள்வினையே' என்று நினைதது ஆடவர் பொருளவயிற் பிரிவது உண்மையற்ற அறிவென்று தலைவனின் பிரிவறிந்து வருந்தும் தலைவி எணணுவாள் (அகம். 75:1,2). அஞ்சததக்க கவர்த்த வழியிலுள்ள பருந்து, ஓமை மரததின மீதேறி, அருள் தோனறாத தனது பெடையினை அழைக்கும (அகம. 117:5-7). 'தலைவர் நம்பால் அருள இலர் ஆயினும ஆகுக; அறன அஞசலரே' எனக் கூறித் தலைவி புலபபாள் எனத் தலைவன் கருதினான (அகம. 144:6-8). 'தமமை விருமபுவோ ரைத தாஙகியும இனிய உறவினரோடு விருமபிப் பொருநதியும மகிழநது வாழதலை அறியாதோர் வறியா' எனக் கருதி அதறகாகப பொருள தேடு தலை எணணித தலைவர் அருள நீஙகப பெறுவர் என்று பிரிவிடை வேறுபட்ட தலைவி கூறினள் (அகம. 151:1-5). பிரிநதவரை அஞசததக்க, பனிமிக்க பண பிலலாத வாடை மயங்கிய மாலைக் காலததோடு அருளினறி வருத்தும (அகம. 235:14-16). அலலகுறிப் பட்ட தலைவன தன நெஞ்சைப்பார்தது 'நினனைக் காணபவாகலெலலாம நின்பால் அருளதோனறும் படி பொலிவிழந்த கண்களைக் கொணடுள்ளாய' என்றான (அகம. 258:11,12). தான தனிதது வருந்து மாறு, பொருளவயிற பிரிநத தலைவரை அருளி லாளர் என்று தலைவி உரைபபள (அகம. 305:9). தலைவன் தலைவியை அருள் மொழியால் தேற்றிப் பொருளவயிற பிரிவன் (அகம. 311:14). பொருள விருமபித தலைவன் பிரிநது சென்றாலும, அருள விருமபித தலைவியை வநதடைவன என்று கூறித் தோழி தலைவியைத் தேறறினள் (அகம். 313:9,10). 'தலைவியின் துனபம நீஙக நீ அவளுக்கு அருள் செய்யாது பொயபபினும அவள் தோள்நலம் உணடபோது உரைத்த சூள பொயயாகுமோ; அது கடலறி கர்யனறோ 'எனத தோழி தலைவனிடம கூறினாள் (அகம். 320.6-14). இருளபட்ட மனத துயரைத தீககும் அருளமிகப பெறறவராயினும, ஈதல பொருளிலலாதவர்ககு இயலாது (அகம. 335: 1-3). 'தலைவனிடம செனறு நாம தமிததிருபப, நீ பொனனைநயநது அருளிலலாமல் இருததல உன பெருநதனமைககுப பொருநதாது எனச் சொலலி வருவோம வா' எனத் தலைவி தோழியை அழைத் தாள (அகம. 355:11-14). தலைவன தன நெஞசு தலைவியின் தொனனலம் அழியத் தெளிவின்றித் தொடு பொருந்தி அருள நங்க வலிமையோடு பொருள் ஈட்டுதலை விருமபியதாகக கூறினான (அகம. 379:1-4). அருளும அனபும நீககிப் பொருளுக் காகப பிரிநது செலபவர் திணணிய அறிவினர் ஆகமாட்டார் என்று செலவுணர்த்திய தோழியிடம

தலைவி கூறினள் (குறு. 20). 'பொருள் ஒன்றே உறுதிப் பொருளாவது போலும்; அருள் என்பது தனனை மேற்கொள்வோர் யாருமில்லாத பயனற்ற பொருள் போலும்' எனப் பிரிவுணர்த்தப்பட்ட தலைவி கூறினாள் (குறு. 174:6,7) தலைவர் அன்பின்மையால் அருளைப பொருளெனக் கருதாது கொடுமை மேற்கொண்டு பொருள்வயிற் பிரிந்து வரையாராயினர் என்று கூறிப் பிரிவிடை ஆற்றாத தலைவி வருந்தினள் (குறு. 395:1-3). ஆயரின குழ லோசையுடன் சேர்ந்து மெல்லியதாக வந்து ஒலிக் கும் மாலைப்பொழுது அருள் இல்லாதது எனப பிரிவாற்றாத தலைவி கூறினாள (நற. 69:8,9). பிறர்க்கென முயலுகின்ற பேரருள் நெஞ்சமொடு அழகிய பொருளாசை பிணித்தலால் தலைவர் பிரிந் தார் (நற். 186:8-10). தலைவன் தலைவியிடம் காட்டுகின்ற அருள் கௌவை யாயிற்று எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (நற்.227:9). தலைவர் நம்மாட்டுச் சிறிதும் அருள் இலலாதவர் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 261:1). 'தலை வர் அருள் பெற்றிலேன்; அளியேன்' எனத் தலைவி கூறுதல் (நற். 289:9). தலைவன் அறவோன் எனவும அருளுடையோன் எனவும் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங். 152:5). இருள்செறிந்த இரவுப் பொழுதில் அருள்மிகு நெஞ்சம் ஊக்குவித்தலால, நீ எப்படி வந்தனை எனத் தோழி தலைவனை வியநது வினவினாள் (ஐங். 362:4,5). பிரிவுணர்ந்து வருந்திய தலைவிநிலை கேட்டும் பிரிய முற்பட்ட தலைவனிடம் தோழி, அவன் செலவினைத் தடுப் பதற்காகக் கணடவர்க்கு அருளைத் தோற்றுவிக் கும் காட்சிகளைக் காட்டிக் காடு அவன செல வினைத் தடுக்கும் என்று கூறினள் (கலி. 3:20-22). தலைவனின் அன்புடைமையால் தோன்றிய அருட் பார்வை சிறிது அழிநது போயினும் நெஞ்சழிபவள தலைவி (கலி. 10:18,19). கடுஞ்சினங் கெடாத மறவர் வழிப்போவார் பொருளைப் பறித்துக் கொண்டு அவரைப் புண்செய்யும் அன்பும் அருளும் நீங்கிய இடம் பாலைநிலக் காடு (கலி. 15:7-9). வேறு புலம் சென்று பொருள் தேடுகின்ற இடத்தே தலை வியைப் பிரிந்திருத்தலைத் தன் நெஞ்சு விரும்பியது என்று சொல்லும் அருளில்லாத சொல்லையும் தலைவன் கூறினான் (கலி. 21:3-5). அருள் வல்லவ னுக்கு ஆக்கம் பெருகும் (கலி. 38:16). நீராடிய தலைவி கால் தளர்ந்து அந்நீரோடு சென்றதால், தலைவன் தன் அருளினால அந்நீரில் குதித்துத் தலைவியின் மார்பை அணைத்துக் கொண்டுவந்து கரைசேர விட்டான் (கலி. 39:1-4). தான் வருத்த முற்றபோதும் தலைவன் செய்த அருளின்மையைத் தோழிக்கும் அறியாமல் மறைக்கும் பண்பினள் தலைவி (கலி. 44:8,9). தலைவி காமநோய் மிகவும், தலைவன் செய்த அருளின்மையைச் சேரி அறியாத படி மறைத்தாள் (கலி. 44:11,12). தலைவி காம நோய் வருத்தவும், தலைவன் செய்த அருளின்மையை ஆயத்தாரும் அறியாதவாறு மறைத்தாள் (கலி. 44: 14,15). தலைவன் அரிய செலவினையுடைய வழி யிடத்தே தலைவியை அருள்செய்து வந்து அவளது அளியைப் பெறானாய் வருந்தினான் (கலி. 46:14,15). அருளிலலையென்று அயலார் பழிக்கும் நிலையடைந் தவர்க்குத் தைந்நீராடிய தவப்பயன் நீங்கும் (கலி. 59:11-13). அருளிலலை யெனறு அயலார் பழிக்கும் நிலை அடைந்தார்க்குப் பிறர் மனைபாற் பாடிப் பெற்றவற்றைப் பலாகுமு அளித்த கொடையும் பயன் தராது (கலி. 59:15-17). 'தலைவியால் வந்த நோய உயிர்வாங்கும்; இந்நோய் தீரும மருநதரு ளாய்' எனத் தலைவன் தோழியிடம வேண்டினான் (கலி. 60:16-18). தலைவி தன்மீது அருள் செய்வதைத தான விரும்புவதாகத் தலைவன தோழியிடம் கூறி னான (கலி. 61:16,17). முடமுதிர்பாாப்பான் ஒரு வன் தோழியிடம் வந்து 'நான் ஆண்பாற் பிசாசு; எனக்கு அருள்செய்க' எனக கேட்டான் (கலி. 65: 16,17). பரத்தையர் வீடு செனறு வந்த தலைவன் தலைவியைப பார்த்து, 'எனது களவைக் கையோடு பிடிததுக் கொண்டாய; யானும் பிழை செயதேன்; இனி எனககு அருள் செய்க' என வேணடினான (கலி. 95:27, 28). அருள் நீஙகின அறிவால அறஞ செயதலைக் கருதாதவனாய் நன்மை செய்யாமல யாரும் அஞசுமாறு நடநதவன உள்ளம் மருட்சி யுற்று இருளும் (கலி. 120.1-3). மடலேறுவேன் என்ற தலைவன கண்டாரைப் பார்த்துக், 'காமநோயால் உண்டாகிய என் மயக்கம் நீஙக இருள்நிறக் கூந்த லையுடைய தலைவி எனக்கு அருள் செய்யும்படி பண்ணுக' என வேண்டினான் (கலி. 140:32-34). பிரிவாற்றாமையால் கலஙகிய தலைவி காயும் சுட ரைப் பார்த்து, 'யான இங்கு வருந்த நீ என்னை யின்றி மறைந்துவிட்டாய்; உன்னிடம் அருள் இல்லை; ஆயினும் வாழ்க' எனக் கூறினாள் (கலி. 143:42,43). எழில் மார்பனாகிய தலைவன் அருள் கொண்டு முயங்கியதால் தலைவி பிரிவுத் துயரி னின்றும் நீங்கினாள் (கலி. 146:51-55). தீவினையைப் போக்குகின்றவனுடைய அருள் கொண்ட முகம் ஒளி மிக்குத் திகழும்; அது கடலில் தோன்றி இருளை அகற்றும் திங்களுக்கு உவமை. (கலி. 148:4,5). 'யாம் கூறியவற்றைப் பொருளற்றன வென்று வெறுக்கா மல் திருமறு மார்ப, நீ அருள் செய்தல் வேண்டும்' எனப் புலவர் பாடுவர் (பரி. 1:34-36). காயாம்பூ நிறமுடைய திருமால், அருள் குடையாகவும் அறம காம்பாகவும் கொண்டு மூவேழுலகங்களையும்

தாமொருவராகவே காத்தளிப்பார் (பரி. 3:74-76). முருகனிடம் தாம் இரப்பவை பொன், பொருள், போகம் ஆகியன அல்லவென்றும் அருள், அன்பு, அறம் ஆகிய மூன்றுமே யென்றும் கடுவனிளவெயினனார் உரைப்பர் (பரி. 5:78-80). சூள்பொய்ப் பாரை முருகனைச் சார்ந்த அருளில்லாத் தெய்வமும் அவனுடைய வேலும் வருத்தும் (பரி. 8:65,66). சூள் பொய்த்த தன் தலைவனை முருகன் சினந்து வருத்துமுன் தலைவி கோயிலிற் சென்று மணியடித்துத் தலையால் திருவடி வணங்கி அருளை வேண்டி நிற்க, அவன் அருள் புரிவான் (பரி. 8:87-89). திருமாலின் அருண்மொழி வலம்புரிச் சங்கததின் முழக்கத்தை ஒக்கும் (பரி. 13:44,45).

**அரை - அடிமரம்.** மன்றவேம்பு திரள் அரையினை-அடிமரத்தை-உடையது (புறம். 76:3,4). பனையின் அரை முழவு போன்றது (புறம். 85:7; 375:4). கருஞ்சினை வேம்பு முழவு போன்ற அரையினை யுடையது (பதி. ப. 5:13,14). வேல மரத்தின் பொரி அரையில் ஓசையிடும் சிதடி (சிள்வீடு) பொருந்தியிருக்கும் (பதி. 58:13,14). பராஅரைப் பாதிரி (பெரு. 4). பரியரைக் கமுகு (பெரு. 7). நீளரை இலவம் (பெரு. 83; அகம். 17:18; 245:14). திரள் அரைப் பெண்ணை (பெரு. 360). திணிநிலைக் கடம்பின் திரண்ட அரையை மகளிர் நெருங்கிச் சூழ்ந்தனர் (குறி. 175,176). நல்லரை மராஅம் (மலை. 395). புல்லரைக் காஞ்சி (மலை. 449). களிறுகள் உராய்ந்ததால் யாமரத்தின் அரை சேறுபட்டது (அகம். 17:16). யாகைமரத்தின் அடிப்பகுதியைச் சிறுநத்தைகள் மூடிக் கொண்டதால் அது பொரியரை யுடையது போல் தோன்றியது (அகம். 53:7-9). நெல்லி புல்லிலையும் பருத்த அரையும் உடையது (அகம். 69:6,7). புல்லரை இத்தி (அகம். 77:13). பொரி கால் பொகுட்டு அரை இருப்பை (அகம். 95:5,6). புகர் அரைத் தேக்கு (அகம். 107:10). பருத்த அரையிற் கிளைத்த கிளையில் பறவை கூடு கட்டியுது (அகம். 113:23,24). தாழை பேய் போன்ற தலையினையும் சருச்சரை பொருந்திய அரையினையும் உடையது (அகம். 130:5). புல்லரை இருப்பை (அகம். 149:3). பொரி அரை விளவு (அகம். 219:14). வார்குசினை மலிந்த திரள் அரை மராஅம் (அகம். 221:4). கவர்த்த தளிர்களை யுடைய யாமரத்தின் நார் பொருந்திய அரையிடத்து நீர்வரப் பொளித்துக் களிறு சுவைக்கும் (அகம். 257:14-16). பராஅரைப்புன்னை (அகம். 270:6). திரள் அரை இருப்பை (அகம். 275:11). பொரி யரை ஆலம் (அகம். 287:7). பராஅரைப் பெண்ணை (அகம். 305:12). தெய்வம் சேர்ந்த பராரை வேம்பு (அகம். 309:4). காய்ந்த கிளைகளையுடைய மரத்தின் அரையில் புற்றுக்கள் கட்டப்பெற்றுள்ளன (அகம். 317:14). நீடுநிலை அரையினை உடைய செங்குழை இருப்பை (அகம். 331:1). திரள்அரை மா (அகம். 348:2). திருந்து அரை நிவந்த கருங்கால் வேங்கை (அகம். 349:10). கணைஅரைப் புல்லிலை நெல்லி (அகம். 363:5,6). பொரியரை வேங்கை (அகம். 365:13). அரை சேர் யா (அகம். 375:9) திருந்து அரை ஞெமை (அகம். 395:13). யானை குத்தியதால் சிதைந்த புள்ளிகளைக் கொண்ட ஓமை மரத்தின் பட்டை நீங்கிய அரையை ஊன் எனக் கருதிப் பருந்து வந்து தங்கியது (அகம். 397:10-13). கடற்கரைச் சோலையில் மேலைக்காற்று கொணர்ந்த மணற்குவியல் அரை புதையுமாறு பரத்தலால் பனைமரம் குறியவாயின (குறு. 248:3-6). காழ்ப்பினை யுடைய யாமரத்தின் பொரியரை முழு முதலை யானை கோட்டினால் ஊடுருவக் குத்தித் தடக்கையினால் வளைத்து யானைக் கூட்டத்தின் உறுபசி தீர்க்கும் (குறு. 255:1-5). முழவு முதல் அரைய தடவுநிலைப் பெண்ணை (குறு. 301:1). புல்லரை உகாஅய் (குறு. 363:4). பொரியரை வேம்பு (நற். 3:2). முள்ளரை இலவம் (நற். 105:1; ஐங். 320:1) புல்லரை இரத்தி (நற். 113:2). தொங்கும் ஓலையையும் நீண்ட மடலையுமுடைய பனையின் கரிய அரையைக் காற்று மணலை வீசிப் புதைத்தது (நற். 135:1,2). பொரியரை ஞெமிர்ந்த புழற்காய்க் கொன்றை (நற். 141:3). பரியரைப் பெண்ணை (நற். 218:7). பராரை வேம்பு (நற். 218:7). பிணிமுதல் அரைய பெருங்கல் வாழை (நற். 251:2). படுகாழ் நாறிய பராரைப் புன்னை (நற். 278:1). பிடி உதைத்துப் பட்டையை நீக்கிய ஓமையின் சிவந்த அரை புலியேற்றோடு பொருத யானையின் புண்ணுடைய காலைப் போலிருந்தது (நற். 279:5-7). வளைந்த குடமுழாப் போன்ற முதலையுடைய புன்னையின் கரிய அரையின் பின்னே சென்று மறைந்துகொள்ளத் தோழி தலைவியை அழைத்தாள் (நற். 307:6,7). ஆடும் அரைப் பெண்ணை (நற். 338:9) நீடிரும் பெண்ணையின் காற்றால் அசையும் அரையில் உள்ள மட்டைகளை நீக்கியமையால் அம்மரம் நெடிதாகத் தோன்றியது (நற். 354:1,2). தோணி இரவு போன்ற இருண்ட நிறத்தையுடைய புன்னையின் அரையில் பிணிக்கப்பெற்றது (நற். 354:5-7). புல்லரை ஓமை (ஐங். 316:4). பொரியரைக் கோங்கு (ஐங். 367:1). பரங்குன்றில் ஆட்டுக்கடா செவ்வேளின் கடிமரமாகிய கடம்பின் அரையில் கட்டப் பட்டிருந்தது (பரி. 17:3).

**2. இடுப்பு.** பாணன் அரையில் இடுப்பில் வேற்றிழை ஊடுசென்ற வியர்வையால் நனைந்த ஆடையை உடுத்திருந்தான் (புறம். 69:2-4). அரையில் அணிந்

திருந்த பழைய ஆடையினை நோக்கி இப்பாணனை அளிக்கத் தக்கவன் என்றறிந்து அவனது வறுமை நீங்க நல்குபவன் ஓய்மான் நல்லியக்கோடன் (புறம் 376:9-15). தன்னைப் பாடிய கிணைப்பொருநர்க்கு இளஞ்சேட்சென்னி நல்கிய அணிகலன்களை அவர் தம் சுற்றத்தினர் அணியுமுறை யறியாமல அரையில் அணிவதனைக் கழுத்திலும் கழுத்தில் அணிவதனை அரையிலுமாக மாற்றியணிந்து மகிழ்ந்தனர் (புறம். 378:16,17). அம்பர்கிழான் அருவந்தை பொருநனின் தடாரி முழக்கங் கேட்டு உவந்து அவன் அரையிலிருந்த நீலநிறக் கந்தையை நீக்கி வெள்ளாடை உடுக்கச் செய்து பசி போக்கினான (புறம். 385:4-7). அதியமான் தன்னைப் பாடிய பொருநனுக்கு அவனது அரையிலிருந்த பாசி போன்ற ஆடையை நீக்கிப் பூப்போன்ற புத்தாடை நல்கினன் (புறம். 390:13-15). சேரன் வஞ்சன் தடாரிப் பொருநனின் அரையிலிருந்த துரும்புபடு சிதாரைப் போக்கித் தன் அரையிலிருந்த புகை விரிந்தாற் போன்ற பொங்கு துகிலை அணிவித்தான் (புறம் 398.8,18-20). சோழன நலங்கிள்ளி கிணைப் பொருநனின் பழைய ஆடையை நீக்கிச் சிறந்த கலிங்கத்தை உடுப்பித்து அவன அரையை நோக்கி மகிழ்ந்தான் (புறம். 400: 10-14). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பரிசிலர் அணிந்திருந்த பழைய கந்தலாடையை அகற்றி நூலாக் கலிங்கத்தினை (பட்டாடையை) அரையில் அணியக் கொடுத்தான் (பதி. 12: 19-21). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் தொல்புகழ் மூதூர் கல் விளங்கும் இடங்களையுடைய காடுகளைத் தன அரையில் கட்டினாற போன்று விளங்கியது (பதி. 53:4,5). பெரும்பாணன தன் அரையிலிருந்த பாசியன்ன சிதைந்த ஆடையை நீக்கி, ஆவியன்ன கலிங்கம் அணிந்தான் (பெரு. 467-470). நுணணிய நூலாற் செய்த ஆடையைக் கூத்தர் தம் எள்ளறு சிறப்பின் வெள்ளிய அரையில் உடுத்தினர் (மலை. 561,562). தொங்கர் உள்ளி விழாவில மணியினை அரையிற் கட்டி ஆடி ஆரவாரஞ்செய்வர் (அகம். 368: 16-18). வீரர் தம் அரையில் கச்சினை அணிவர் (நற். 21:1,2).

3. **அடிப்பக்கம்.** கவைமுள்ளை யுடைய கள்ளிமரத்தின் பொரிந்த அரை - அடிப்பக்கம் - பொருந்தியிருந்து புதுவரகு அரிகாலில் மேயும் எலியைப் பிடிக்கச் சிறுவர் காலம் பார்ப்பர் (புறம். 322: 2-4). பொருள் தேடச் சென்ற தலைவன் முட்பொருந்திய கள்ளியின் அரையில் தங்கிச் சென்றான் (அகம. 151: 12). ஓமை மரத்தைக் குத்திய உயர் கோட்டுக் களிறு வேனில் குன்றத்தின் வெம்மையாகிய அரையில் மேகக் குரலைக் கேட்கும் (குறு. 396:4-6). தலைவி வீட்டின் அழகமைந்த புள்ளிகளை யுடைய வெறுமையாகிய அரையையுடைய நெற்கூடுகளில் நெல் நிரம்பியிருந்தன (நற். 26: 2,4).

4. **நடுவிடம்.** சிறிய உரலின் அரை-நடுவிடம்-துளை பொருந்தியது (பெரு. 54). மழுவாள் நெடியோன் (பரசுராமன) செல்லூரில் அரிதிற் செய்து முடித்த வேள்வியில் அரையில் கயிறு சுற்றப்பெற்ற வனப்புடைய வேள்வித் தூண், யாவரும் காணுதற்கரிய தலைவியின் மார்பிற்கு உவமை (அகம். 220: 3-9).

5. **பக்கம்.** முறறுகையிடப் பெற்ற ஆவூரிலுள்ள யானைகள் உணவு பெறாதனவாய்த் திருந்திய அரையை-பக்கத்தை-உடைய வலிய கம்பம வருந்தச் சாய்த்து வருந்தின (புறம். 44: 2-5). பாணர் பரிசில் பெற்றுப் போனதால் களிறுகள் நீங்கிய புலவிய அரையையுடைய நெடிய தறியில் காட்டு மயிலகள் இனத்தோடு தங்கின (புறம. 127: 2-4).

6. **தண்டு.** தாமரை முள்ளினை அடியாகயில - தண்டில-உடையது (சிறு. 183; பெரு. 114; கலி. 79:2). முள்ளரைப் பிரம்பு (அகம. 6: 19).

7. **வயிறு.** கன்று அரையில்-வயிற்றில்-உண்டான மெலவிய பிடி மலையிடத்தில் தன் களிற்றைப் புலி தாக்கியபோது சுற்றத்தோடே இடி போலப் பிளிறியது (மலை. 307-310)

8. **அரைத்தல்.** தலைவன் அரை-அரைத்தல்-உற்று அமைந்த சந்தனம் பூசிய மார்பினன் (அகம். [illegible] 1,2).

9. ஒரு வகை மரம். வேனிற் காலத்துக் காற்றால் அரைமர இலைகள் அசைந்து ஒலிக்கும் (ஐங். 325: 1)

**அரைசர் - அரசர்.** நீர் வற்றிய சேற்றிலிருந்து மீன் உண்ணவேண்டி நாரையினம் குவிந்த வெள்ளிய மணல் மேட்டில் ஏறியிருப்பது அரைசரின்-அரசரின்-ஒள்ளிய காலாட்படையின் கூட்டம் போலத் தோன்றும் (நற். 291:1-4). நயனும வாய்மையும் நடுநிலைமையும் இனி ஒழிந்தன என்று இரங்கும் படியாக இனிதாணட அரைசனோடு, நலலூழால் உண்டாகிய செலவமும் ஒருசேர மாயும் (கலி. 130: 1-4).

**அரைசன் - அரசன்.** அரைசர் காண்க.

**அரைசு - 1. அரசர்.** பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், களிறு சென்று அகலப்படுத்திய போர்க் களத்தில் வேலேந்திச் சென்று அரைசு-அரசர்-மாயப் போர்செய்து களவேள்வி வேட்டான (புறம. 26:4-6, 11). சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் உலகின் தணணுள்ள அரைசு தலை நடுங்குதற்கு ஏதுவாகிய

வலிமையுடையவன் (புறம். 42:4,5). சேரமான் குடக் கோச் சேரலிரும்பொறை முரசு முழங்கும் படை யொடு சென்று அரைசுபடப் பொருது வெல்லும் புகழமைந்தவன் (புறம். 211:5,6). மகட்கொடை மறுத்த தந்தை, அரைசு பொரவரினும் அமையாத வீரர் கூடிய அளவில், வேலினை நீர்ப்படை செய் வதற்கு அனுப்பினன் (புறம. 354:1-3). களங்காய்க் கணணி நார்முடிச் சேரல் பகைவர் அழிய, போர் முரசம் சிதற, வீரர் ஆரவாரிக்க, அரைசுபட எதிர் நின்று பொருது வெல்லும் ஆற்றல் மிக்கவன் (பதி. 34:9-12). அரசர்க்கு உயர்ச்சி மிகும்படி தம் பயனைப் பாராது முயலும் அமைச்சரை அரசர் சினந்து கண்ணோடாது பொருள் முதலியனவன்றி அவருயிரையும் கொள்ளின் அவ்வரைசு நிலைத்து நிற்காது (கலி. 8:15-17). தமக்குப் புகழ் சிறந்து விளங்கும்படியாக, அறிவினால் மிக்குச் சேர்ந்த அமைச்சரை முன்னர் நடுக்கமொழி கூறிப் பின்னர்த் துன்பங்களைச் செய்து கொல்வது கொடிய அரைசுக் கியல்பு (கலி. 146:1-3). படையெடுத்துச் செல்லும் அரைசின் செலவு போன்று மரக்கலம் களிறாகவும் அலையோசை பறையாகவும் கரைசேர் பறவைகள் காலாட்படையாகவும் கொண்டு செல்லும் செல வினை உடையது கடல (கலி. 149:1-3).

4. அரசுகள். அரைசு - அரசுகள் - படும்படியாக வென்று கொன்று, முறைமையால் கொணடுவந்த தலைமைமிக்க சிறப்புக்களையுடையவனின் பழைய குடிக்குரியது பாண்டி மண்டலம் (கலி. 105:1-3).

**அரைநாள் - 1. நடுநாள்** (நள்ளிரவு). பாலைநிலக் கானவர் பன்றியினை எதிர்பார்க்கும் அரைநாள்-நள்ளிரவு-வேட்டையினை ஒழிந்தால, மறுநாள் வேலியில் வலைகளை மாட்டி வளைத்து, நாயோடு சென்று முயல்களைப் பிடித்து உண்பர் (பெரு. 110-116). தேரோடுந் தெருவில் நீர் திரண்டோடுமாறு மழை மிகப் பெய்த அரைநாளிலும் வாயிற்காவலர் தவறாது காவல் புரிவர் (மது. 647-650). கரடிக் கூட்டம் கறையான் புற்றின் உச்சியைத் தாக்கி இரையினை விரும்பிச் சூழ்நதுகொண்டிருக்கும் அரைநாளில் ஈன்றணிமை உடைய பெண்புலியின் பசி நீக்க ஆண்புலி களிற்றினைக் கொன்று முழங் கும் (அகம். 112: 1-7) அரைநாளில் மணிகளை உமிழ்ந்த நாகம், காந்தளின் தாதுபடிந்து வேறு பட்ட வண்டினைத் தன் மணியென மயங்கியது (அகம். 138: 15-19). தலைவன் கூறிய மொழியினை விரும்பித் தலைவி அரைநாளில் மழையில் மறைந்து, சிலம்போசையினை அடக்கிக் கொணடு, இளமயில் போல வந்து தலைவனைத் தழுவிச் சென்றனள் (அகம். 198: 4-11) பேய்கள் இயங்கும் அரைநாளில் பசுமையான மரத்தி லிருந்துகொண்டு பெரிய ஆந்தை ஒலி எழுப்பும் (அகம். 260: 11-13). வண்டுகள் கிளைகளில் அசையா துறங்கும் முன்பனிக் கால அரைநாளில் அரசன் பாசறையில் தங்கிய, நம் நோயினை அறியாத அறனிலாளரான தலைவர், தன துயர்துடைக்க வருவரோ என்று எண்ணி, வாடைக்காற்றால் வருந்துந் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 294: 11-16). அணிந்த மாலையில் வணடுகள் ஊதுவதனால் அரும்புகள் மலரும் அரைநாளில், களிறியங்கும் பெருங்காட்டு வழியில் இருள் கெடுமாறு வெள்ளிய வேலேந்தித் தலைவன் இரவுக் குறியிடத்துத் தலைவியை அடைந்தனன் (அகம். 298: 10-14). பேய் இயங்கும் அரைநாளில் தலைவன் பரிசிலர் போலக் காப்புடை வாயிலில் நின்று, மனைக்காவலர் அயர்ந்த போது கதவந் திறந்து உட்புகுந்து தலைவியைக் கூடினன் (அகம். 311: 1-5). ஒரு பெண் தன் காதலனொடு மகிழ்ந் திருப்பதனைக் கண்ட பாசறைத் தலைவன், 'போர் முனையில் மழைபெய்ததாக நீர் ஒலித்து வரும் அரைநாளில் பனிக்கால வாடைக் காற்று நலியப் பாசறையில் துணை யின்றித் தனிததுள்ளேன' என்று ஆற்றானாகிக் கூறினன் (நற். 341: 6-10).

2. **நண்பகல்** (நடுப்பகல்). மனையமைக்கத் தொடங் குவார், சித்திரைத் திங்களின இடைப்பத்து நாட் களின் ஒரு நாளில், ஞாயிறு மேல்திசைச் சேர்தற்கு எழுந்த நிலையில் இருகோல் நட்டு அவற்றை நேர் கயிற்றால் இணைத்து, அவறறின் நிழல் சாயாமல் தரையில் விழுவதனால் அரைநாள் - நடுபபகலை - அறிந்து திருமுளைச்சார்த்துச் செயது தொடங் குவர் (நெடு. 72-75).

3. **நாளின் அரைப்பகுதி**. தன் காதலியின் ஆகத் தினை ஒரு நாளாவது கூடும் வாய்ப்பினைப் பெற் றால் பின்னர், அரைநாள்-நாளின அரைப்பகுதி-வாழ்க்கையும் வாழ விரும்பவில்லை என்று, தன்னை இடித்துரைத்த பாங்கனிடம் தலைவன தலைவியின் அருமை கூறினன் (குறு. 280:3-5).

**அரையம் - 1. ஒரு நகர்.** இஃது இருங்கோவேளின் முன் னோர்க் குரிய பழம்பெரும் நகரம; சிற்றரையம் பேரரையம் என இரு கூற்றாற் பெயர் கொண்ட தும் அளவற்ற பொன்னை நல்க வல்லதுமாகிய இந்நகர், நெடிய மலைப்பக்கததைச் சார்ந்தது; இருங்கோவேளின் முன்னோருள் ஒருவன் கழாத் தலையார் என்னும் புலவரை இகழந்ததன் பய னாக அரையமெனும் பெருநகர் அழிவுற்றது என் னும் செயதியைக் கபிலர் இருங்கோவேளிடம் அவன் பாரி மகளிரை ஏற்க மறுத்தபொழுது புலப்படுத்தியுள்ளார் (புறம். 202:4-13).

**2. அரசமரம்.** வேனிற்காலத்து அரையத்தின்-அரச மரத்தின்-இலை ஒலிக்கு அஞ்சிப் புள்ளினம் இரை யுண்ணாது வேற்றுப்புலம் செல்லும் (ஐங். 325:1,2).

**அரையிரவு – நடுயாமம்.** பங்குனி மாதத்தின் முதற் பதினைந்து நாட்களில் ஒரு நாள் இருள் மிக்க அரையிரவில் - நடுயாமத்தில்-விண்மீன் விழுந்ததன் விளைவாக, விழுந்த ஏழாம நாள் கோச்சேரமான் யானைக்கட் சேஎய் மாந்தரஞ் சேரலிரும்பொறை இறந்துபட்டனன என்று கூடலூர் கிழார் கணித் துக் குறிப்பிட்டுள்ளார. (புறம. 229:1-11). அரை நாள், அரையிருள காண்க.

**அரையிருள் - நள்ளிரவு.** எங்கும் ஒளியைப் பரப்பி இடிமுழங்குகினற அரையிருள் - நள்ளிரவு - ஆகிய நடுநாளில் மேகம தலைவன குன்றத்தில் தங்கி மழை பொழிநதது (நற். 68:7-10). பாம்பின் தலை துமியுமாறு இடியிடிக்கும் அரையிருளில் தெ.்பு வினுள் ஏறு இயங்குகின்ற போதெல்லாம் ஒரு மணி யின் ஓசைகேட்டுத் தலைவி துன்பமெய்தினள் (குறு. 190:4-7). அரைநாள் 1, அரையிரவு காண்க.

**அல்-1. இரவு.** 'கானவர் சிறுகுடியில் தங்கின் இருமப்பர் ஒக்கலோடு உணவுகளை மிகவும் பெறுகுவீர்; அவற்றைப் பெற்று, அற்றைய நாள் அல்-இரவு-தங்கிப் பின் செல்க' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 155-158). 'காட்டில அற்கிடை (இராப்பொழுதில) செல்லுதலைத் தவிர்த்து, வழி யிடத்தனவாகிய, இல்லிலே புகுந்தாற் போன்ற கன்முழைஞ்சுகளிலே அல்லில் தங்கி இளைப்பாறி. விடியலில் துயிலுணர்ந்து பின் செல்க' எனக் கூத் தரிடம் ஆற்றுப்படுத்துவோர் கூறினர் (மலை. 254-258). கூத்தர் அவரைவிதை, மூங்கிலரிசி, நெலலரிசி, இவற்றைச் சொரிந்து ஆக்கின புளிங்கூழைப் பகற் பொழுதில் வந்த வருத்தம் போம்படி அற்காலத்தே புல்வேய் குரம்பைக் குடிதொறும் பெறுவர் (மலை. 434-437). நிறைந்த மழை கண்டறியாமல் குறைந்த உணவுடன் அல்லில் துவர்த்த நிறங்கொணட ஆடையையும் அம்புத தொடையையும் உடைய மறவர் ஆறலைத்தற்கு வழியினை நோக்கியிருப்பர் (நற். 35:5-7).

**2. துன்பம்.** மகளிர் தம் கணவரோடு கூடிக் குள வாய் அமர்ந்த இறைவனை இறைஞ்ச அல்-துன்பம்-கெடப் பிணி நீங்க, நல்லவை எல்லாம் இயையும் (பரி. தி. 1:61-63).

**அல்கல் - 1. நாள்.** ஆய்அண்டிரனிடம் பாசு பெற்ற ஓடைகிழார் அவனைப் பார்த்து, 'நீ தந்த செல் வத்தை அல்கலும்-நாள்தோறும்-தண்புனல் வாயில் துறையூர் முன்றுறை நுண்பல மணலினும் பல நாள் வாழ்க என வாழ்த்தி உண்பேம்' எனச் கூறினார் (புறம். 136:24-27). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் பகையரசர் அல்கலும் தமது தூசிப் படை அழிபட்டு அலறப் போர் செய்து மலையகத துளள நாடுகளைக் கைக்கொண்டான (பதி. 55:16-18). செல்வக் கடுங்கோ வாழியாதனின் வீரா அலகலும் துன்பம் விரவாத இன்பம பொருந்தி யுறையும் பொழுதுகளைப் பெறுத லரிது (பதி. 68: 12-14). 'வெள்ளாட்டிறைசசியினை அரிசியோடு சமைத்த உணவினை இழுது உள்ளீடாகப புல் வேயந்த குரமபை தொறும அலகலும் பெறுகுவிர்' எனக் கூத்தர் ஆற்றுபபடுததபபட்டனா (மலை. 440-443). தலைவர் கானத்திறகுத தலைவியொடு செல்லின அவள கணகள் அலகலும் அழுதல பொருந்தாவாகித் துயிலும் (அகம். 11.13-15). இள வேனிற காலததில, மாவின் தாதினைக் கோதின குயில அலகலும முறைகொணடு கூவும (அகம. 25: 6-8). அலகலும வருத்ததைச் செயயும் மாலைப பொழுதில் கோவலா ஊதும் குழலோசை பிரிநத வரை வருத்தும (அகம. 74:14-17). 'அருஞ்சுரம கடந்து சென்ற தலைவரைக் கருதி அலகலும் அலர்முலை ஆகம் புலம்பப பல நினைநது வருந் தாதே' எனத தோழி தலைவியிடம் கூறித தேறறி னாள் (அகம. 97:8-15). 'இலங்குவளை நெகிழ மெலிந்து அலகலும் நாம் கலஙகஞர் எயதி வருந்தி இங்கே இருக்கத தலைவர் சென்ற நாட்டில நீட்டித திராது விரைவில் மீள்வர்' எனத் தலைவியைத் தோழி வறபுறுததினாள (அகம. 127:1-12). முரு கனது பனந்தோட்டையும கடப்ப மாலையையும கைககொணடு இனனியம் கறஙகக் கைதொழுது முருகனை மனைககு அழைக்கக் கடம்பும் களிறும் பாடி அலகலும் வெறியாடினர் (அகம. 138:9-13). தொன்னலம கெடும்படி மெலிநது அலகலும் தலைவர் வாராமை கருதித தலைவி பெரிதும வருநதினாள (அகம். 177:1-3). முனனர் அல்கலும் பிரியாத காதலை உடையராயத் தலைவர் தலை வியின் பக்கததிலே இருந்தார் (அகம். 241:3-5). தலைவன் அலகலும் தலைவியிடம், 'நின்னிற் பிரியேன்' என அச்சம் தீரும்படி கூறிய சொற் பழுதாகும் என்றும் அஞ்சாது பிரிந்து சென்றான (அகம். 281:1-3,12). தலைவர் பிரிந்து சென்ற நெறியை இடையறாது நினைத்துத தலைவி அல்கலும் குளித்துப் பொருசின்ற கயல்மீனைப் போன்று கணணீர் பெருக்கினாள் (அகம். 313:3,4). அனபு செய்யாத வாடை அல்கலும அலைக்குப் (நற். 89.7). உயிர்வெங் காதலியினது திருமுகத்து அலமரும் கண்கள் அலகலும தம்மைப் பிணிக்குமே என்று கருதாது தலைவர் குன்றம் கடந்து சென்றார்

(நற். 269: 5-8). அற்சிரக் காலத்து அல்கலும் பொறுத்தற் கரிய பனி மிகுந்து காணப் பெறும் (ஐங். 470:1,2).

2. இரவு 'வஞ்சித்துச் சென்ற அறிவினை யுடைய தலைவன்பால் அல்கலில - இரவில் - புலத்தலும் கூடுமோ' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 26:4, 5). அல்கலில் புலி உலாவும் இருளிடைத் தலைவன் தனியனாக வருதல தலைவிக்கு அச்சந் தரும் (அகம். 108:9-11). அலகலில் அழகிய சந்தனததோடு பட்டாடை ஒளி செய்ய மகளிரைப் போல நாணி இருந்த தலைவனின் இருக்கையைக் கண்ட தலைவி நெஞ்சழிநதாள் (அகம. 236:10-13). 'அல்கலில் நிகழ்ந்த நகைச்சுவைச் செய்தி ஒன்றைக் கேளாய்' எனத் தோழி தலைவன சிறைபபுறமாகத் தலைவிக்குக் கூறினாள் (அகம. 248.1). தலைவன் தலைவியைக் கூடுவது போன்று மெய்போலும் தனமையுடைய பொய்க்கனா அலகலில் தோனறித் தலைவியை மருட்டியது (குறு. 30:1-3). அல்கல் வருதலும் ஆரல் மீனைத் தினறு நிறைந்த வயிற்றையுடைய நாரை தன் மகளாகிய பாவையினது நுதலை மிதிக்கும் எனத் தோழி தலைவனிடம கூறினாள் (குறு. 114.3-5). பெருந்துறையில் அல்கல் தோறும் அலைபொருத தாழைவெண்பூ குருகென மலரும் (குறு. 226:4-6). தலைவி துறைவனோடு நகைத்து விளையாடியதால் தொன்மைக் கவின் அழிந்து தோள் நலம் கெட்டு அல்லல் நிறைந்த நெஞ்சத்துடன அல்கலும் துயிலவில்லை (குறு, 381; 1, 2, 7). அல்கலில் காதல் வேட்கை துன்புறுத்தத் தலைவி வெய்துயிர்த்து அம்புபட்ட மானபோல் வருந்தினாள் (நற். 61:1-3). குன்ற நாடனாகிய தலைவன் அல்கலில் வநதான் (நற்.114:5, 6). அல்கலில் இளையரும் முதியரும் தம் உறவினருடன் கூடியிருநது சுறாமீன் கிழித்த வலையை மெல்லிய நரம்பினை (நாரினை) கொண்டு முடிவர் (நற். 207; 6-9). அல்கலில் ஒரு பெருநகை நிகழ்ந்தது; அந் நகை ஊர்க்கெலலாம் கொண்டாடுதற்கமையும் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி.65; 1,2). 'ஒருத்தி அல்கலில் தன் காற்சிலம்பு ஒலிக்க வந்து கதவைத் தட்டிய அது ஒன்று போதாதோ எனத் தலைவி, பரத்தையரிடத்து மறைந்து ஒழுகி வந்த தலைவனைக் கேட்டாள் (கலி. 90:10-12). 'யான் தவறு உடையேனல்லன்; அல்கல் நீ கண்டது தான கனவு போல் இருந்தது' எனப் பரத்தையரிடத்து மறைந்து ஒழுகி வந்த தலைவன கூறினான் (கலி. 90:20, 21). கடலின் மதிலைச் சூழ்ந்த வையைக் கரைச் சோலையில் நனவிற் சென்றாற் போல அல்கலில் கனவிற் சென்றதாகத் தலைவன கூறினான் (கலி.92:10-13). 'களவு வெளிப்பட்டதென அஞ்சிய தலைவியிடம் தோழி அல்கலிலும் நாங்கள் ஆராய்ந்த செயல் நின்னை நின் தலைவனொடு மணம் செயவதேயாம்' என்று கூறி அச்சம் நீககினள் (கலி. 115:20, 21)

3. உணவு. பறவைகள் பிளந்து போட்ட பஞ்சினையுடைய வெள்ளிய பருத்திக்கொட்டையை வறுமை மகளிர் அலகலாக - உணவாக - சேர்ப்பர் (அகம். 129·9, 10).

4. எப்போதும். பாம்பினைத் தாக்கும் இடியோடு காலிறங்கி மழை பொழிந்த நள்ளிரவில தலைவன் தனியாக வந்த வழியினை நினைத்துத தலைவியின கணகள் அல்கலும் - எப்போதும் - அழும் (அகம். 182:9-12).

5. தஙகுதல். ஊரிலுள்ளார் கூறும் அலருககு வருந்தாமல் தலைவன் அல்கலை - தங்குதலை - உடைய மார்பிலுள்ள மாலை யிடத்தே கையினாலே அணைததுப் பரத்தையரை அகப்படுத்துவான் (கலி. 95:14,15; கலி. 113:24; பரி. 6:54).

**அல்கிரை - வைத்துண்ணும் உணவு.** நள்ளிரவில் வீட்டெலிகளை உணவிற்காகப் பார்த்திருக்கும் காட்டுப் பூனைக்குச் சேவல் அல்கிரை - வைத்துண்ணும் உணவு – ஆகும் (குறு. 107:1-4). பொற்கோட்டு இமயத்தின் உச்சியிலிருக்கும் வானர மகளிர் விளையாடுதற் கமைந்த இளைய குஞ்சுகளுக்கு அன்னம் அல்கிரை கொடுக்கச் செல்லுங்கால், அதன் வலிய சிறகு வருந்தும் (நற். 356:2-6). அல்குபதம் காண்க.

**அல்குநர் - குடியிருப்பவர்.** மனம் விரும்பி அருளின கணவரால் நலத்தை நுகர்ந்து விடப்பட்ட மகளிர் அல்குநர் - குடியிருப்பவர் - போகிய பாழூரை ஒப்பர் (கலி. 23:10,11).

**அல்குபதம் - வைத்துண்ணும் உணவு.** 'மலைபோன்ற பெரிய போரினைக் காலையில் அடித்துக் கடாவிட்ட தானியக் குவியலை வில்மறவர்க்கு அல்குபதமாக - வைத்துணணும் உணவாக – அளிக்கும் பழங்குடியில் வந்த மன்னன் மகள்' என்று மணம் பேசும் மகளைப் புலவர் சிறப்பித்துக் கூறுவர் (புறம். 353:8-12). அல்கிரை காணக.

**அல்குல் - இருப்புறுப்பு.** இழையணிப் பொலிந்த ஏந்து கோட்டு அல்குலினை - இருப்புறுப்பினை - உடையவள் விறலி (புறம். 89:1,2). மொட்டலர்ந்த குவளை மலரின் புறவிதழ் நீங்கிய முழுப்பூவாற் செய்யப் பெற்ற தழையுடையினை மகளிர் அல்குலில் அணிந்தனர் (புறம். 116:1-3). கோடு ஏந்து அலகுல் (புறம். 240;4; நற். 213:11). நொச்சியின அழகிய நிறமுடைய தழையினை மகளிர் தம் அழகிதாக அகனற அலகுலில் ஆடையாக அணிந்தனர் (புறம். 271:2-4;

272:1-5). தொடலை அல்குல் தொடித்தோள் மகளிர் (புறம். 339:6). இளையோள் ஏந்து கோட்டல்குலில் அழகிய பூக்கள் விரவித்தொடுத்த தழையுடையினை உடுத்திருந்தாள் (புறம். 341:1-3). வேங்கைத்தாதினை விரும்புந் தலைவியின் அல்குலிற் பரந்த அழகிய வரிகள் ஊர்களுடனே நிறைசால் விழுப்பொருளைத் தருவதற்கு ஏதுவாகும்; அல்லது புகைபடு கூரெரி பரப்பிப் பகைமேற்கொண்டு பொரும் பண்பிலாண் மையினைத் தருதற்கு ஏதுவாகும் (புறம். 344:3-9) பொலம்செய் பல்காசு அணிந்த அல்குல் (புறம். 353:2). ஐது அகல் அல்குல் (புறம். 389:16; நற். 200:10; கலி. 52:16). ஆடுமகள் அல்குல் (புறம். 393:21). ஏந்து கோட்டல்குல் முகிழ்நகை மடவரல் கூந்தல் விறலியர் (பதி. 18:5,6). விறலியர் பூந்துகில் அல்குலினர் (டி. 54:5,6). மாண்வரியல்குல் உடையவள் தலைவி (பதி. 65:7; குறு. 101:5). சூரர மகளிர் தம் அல்குலில் பன்மணிகள் கோத்த ஏழு வடமாகிய மேகலை அணிந்திருந்தனர் (முரு. 16,41). மாசில் மகளிர் (கநதருவ மகளிர்) தாழ வேண்டிய இடம தாழ்ந்து உயரவேண்டிய இடம் உயர்ந்து விளங்கும் அல்குலில் ஒளியினையுடைய பதினெண் கோவையாகிய மேகலையினை அணிந்திருந்தனர் (முரு. 145:147). குல்லைப்பூவையும் பூங்கொத்துக்களையும மராமரத்தின வெள்ளிய கொத்துக்களை இடையிடையே வைத்துத் தொடுத்த அழகிய தழையையும் வடஞ்சேர்நத அல்குலினிடததே மகளிர் சூடினர் (முரு. 201-204). வண்டு இருப்பன்ன பலகாழ் அலகுல் (பொரு. 39). துகிலணி அல்குல் துளங்கியல் மகளிர் (சிறு.262). கொன்றையின கொமபுகளில் பனிமாசு கிடந்து தவழ்வது போலப் பசிய மணிகளைக் கோத்த வடங்களை யுடைய அல்குலில் நுண துகில் கிடந்தசைந்தது (பெரு 328, 329). பாண்டியமாதேவி முன் பூந்துகில் மரீஇய ஏந்து கோட்டல்குலில பிரிவுக்காலத்தே அழகிய மாசேறிய அவிர்நூல் கலிங்கம உடுத்திருந்தாள் (நெடு. 145, 146). அலகுலுக்குப் பாம்பின படம் உவமை (குறு. 102). மகளிர் பாசிழைப் பகட்டல்குலினர் (பட். 147). அசோகந் தளிராலாகிய தழையுடை அல்குலில அணியப்பெறும் (அகம. 7:19). தலைவி அகன்ற அலகுலினள் (அகம். 21:3; நற். 101:7; 245:5; கலி. 14:5). திதலை அல்குல் (அகம. 54:21; 119:1; 189:9; நற். 6:4; 77.11; 161:12). பல்காசு நிரைத்த கோடேந்து அல்குல் (அகம. 75:19; 269:15). அவ்வரி அல்குல் (அகம். 33:16;117:3,342:13; ஐங். 481:1). பசுங்காழ் அல்குல் மாயோள் (அகம். 167:2) தலைவன் பிரிவில் தலைவியின திதலை அல்குலின் அவ்வரி வாடுதல் (அகம். 183:2-4; 227:2; குறு.180:5,6). பழையர்மகளிரின் கோடேந்து அல்குலில் தழை அணி பொலிந்தது (அகம். 201:6.7). தலைவி அல்குலில் நெய்தற்பூவோடு கூடிய தழையாடையை அணிந்தாள் (அகம. 230:1-3). தலைவி நொச்சித் தழையைப் பறித்துத் தன ஐது அகல் அல்குலுக்குத் தழையாடை செய்வாள் (அகம். 275:16,17). அகலெழில் அல்குல் அவ்வரி வாடப் பகலும கங்குலும் மயங்கிக் கண்பனி வாரத தலைவி பிரிவில் வருந்துவாள் (அகம். 307:2-5). வேங்கை மலரால் தொடுத்த சிவநத மாலையை ஐது ஏந்து அலகுலில் மகளிர் அணிந்து மகிழவர் (அகம். 345:8,9). அல்குலில் அணியும் தழையுடைக்குத் தளிர் உதவும் வயலைக் கொடிக்கு மூங்கிற் குழாய் வழி வந்து விழும் நீரினைத் தலைவி பெரிய சாலில் முகந்து ஊற்றி வளாத்தாள் (அகம. 383:6-13). தலைவன் தலைவியை அவளது வளையுடை முனகை பற்றியும் முத்துவடத்தையும் மேகலையையும் உடைய அகலம் அமைந்த அல்குலைக் கையால பற்றியும் ஊசலில் வைத்து ஆட்டினான் (அகம. 385:11-15). தலைவன் பிரிந்தமையால தலைவியின பூந்துகில் பொருநதிய பொன்வடம் மிளிரும அல்குலிற் கிடக்கும் அழகிய திதலை அழிநதது (அகம். 387:7,8). உமணபெண் ஐதகல் அலகுலில கவின பெறப் புனைநத தழையாடை அசையச் சென்று உப்பிற்கு நெல்லினை மாறுகூறி விறறாள் (அகம். 390:5-9). பொறிவரி அல்குல மாயோள (அகம். 397:7). தலைவியின திதலை அலகுலிடத் துளள மாமைக்கவினைப் பசலை உணண விருமபும (குறு. 27'4,5). தழை யணிந்த அல்குல (அகம. 320:3, குறு. 125.3; 345:4; ஐங 291 3). அலகுலிடத்து அணிந்த தழையைப பொறுக்க முடியாத சிறு நுசுபபினள தலைவி (குறு. 159:1,2). கொடிச்சியின திருநதிழை அல்குற்கு அசோகு பெருந்தழை உதவியது (குறு. 214.3-5). பொனனொடு மணிமிடை அலகுல மடநதை (குறு. 274:6, 7). மகளிர் துததி பரநத விரிநதகன்ற அல்குலில் அணிந்த திருநதிய அணிகலனுக்கும் பக்கததே பசுங்குழையாகிய தழையுடை அணிந்திருந்தனர் (குறு. 294:5-7). தலைவி பல்பூம் பகைத் தழை நுடங்கும் அல்குலினள (நற். 8 1-3). காஞ்சி யணிந்த அலகுலின்மேல தொங்கும் பொற்காசு முறை பிறழ்ந்து கிடநதாலும் திருத்தத் தெரியாது குறுமகள் மாணலங் கெடக் கலுழவாள் (நற். 66:9-11). தலைவியின் திதலை அலகுலைத் தலைவன் பல பாராட்டினான (நற். 84:2, 3). மாயோள் திதலைச் சிலபொறி அணிநத பலகாழ் அலகுலினள் (நற். 133:3-5). நுணணிய வேலைப்பாடமைந்த கலனணிந்த அல்குலையுடைய மகளிர் விழாக்காலத்தில் தாள அறுதிபட ஆடுவர் (நற். 188:8-10). உடன் போக்குச் சென்ற தலைவி நுண்பல கோடேந்து அல்குலில் அரும்பிய திதலையுடையவள் (நற்.198:5-8). 'தலைவி

ஊசலில் வைத்து அவளது பசுங்காழ் அல்குலைப் பற்றி நீளச்சென்று மீளும்படி அதனை ஆட்டினால் தலைவனது குறைத்தைப் பார்க்கலாம்; அங்ஙனம் செய்யட்டுமா' என்று தோழி தலைவியைக் கேட்டாள் (நற். 222:5-10). மெல்லிதாகப் பொருந்தி அகன்ற அல்குல் (நற். 252:8; ஐங். 135:2; 176:3). தலைவியின் பேரணிப் பொலிந்த திதலை அல்குலின் நலம் பாராட்டத் தலைவன் வருவான் (நற்.307: 3-5). பரத்தை அல்குலில் அணிந்த தழை அசையத் தெருவிற் சென்றாள் (நற். 320:3, 4). பல மணிக் கோவையாகிய மேகலை அணியப்பெற்ற, நடத்தலால் ஒதுங்கும் நுண்துகிலின் உட்புறம் விளங்கும் இழையணிநத அலகுலுக்குப் பாம்பு சீறியெடுக்கும் படம் உவமை (நற். 366:1-3). கோடேந்து அல்குலில் தழையணிந்து வேங்கை மரத்தில் ஊசலாடித் தலைவனோடு விளையாடிவருதல் தலைவிக்கு மிகுந்த இனிமை தரும் (நற். 368:2-4,. புதல்வனை ஈன்று தலைவி அவ்வரித் திதலை அல்குல் முதுபெண்டாயினள் (நற். 370:5, 6). காமக்கிழத்தி வயலிலுள்ள வெள்ளாம்பலின் அழகிய நெறிப்புடைய தழையை ஐதகல் அல்குலில் அணிபெற உடுத்தினாள் (நற். 390:4, 5). திதலை அல்குலையுடைய தலைவி பசலையெய்தினாள் (ஐங். 29:4, 5). வயலில் மலர்ந்த ஆம்பலின தழையைத் தலைவி திதலையல்குலில அணிந்தாள் (ஐங். 72:1-3). தலைவன் பிரிந்தால் பல்காழ் அல்குல் அவ்வரி வாட மாயோள் குழலினும் வருந்துவள் (ஐங். 306). பொலம்பசும் பாணடில காசுநிரை அல்குல் (ஐங். 310:1). தலைவியின் பொன செய பாண்டில் பொலங்கலம அழகுகெடத் தேரகல் அல்குல் அவ்வரி வாடத் தலைவன் கானங்கடந்து சென்றான் (ஐங். 316). தலைவன் வரவால மடந்தையின் நல்லெழில அல்குல் வாடிய நிலை தீரும் (ஐங். 351:3-5). கோடுயர் அகல் அல்குல் கொடி புரை நுசுப்பினாள் (கலி. 1:6, 7). இழையணி அல்குலினள் தோழி (கலி. 50:24). ஒணஇத்தி வரியார்ந்த அல்குலாய் (கலி.60:3, 4). கோடெழில் அகல்அல்குல் கொடியன்னார் (கலி. 67:10). தலைவனால் கைவிடப்பட்ட மகளிருடைய அலகுலின்வரியை (பசப்பொழுங்கை) காணுங்காட்சி இன்னாதது (கலி. 80:20,21). திதலை திறைந்த அகன்ற அல்குலில் ஒருத்தி அணிந்திருந்த துகிலினை மற்றொருத்தியின் சிலம்பிலுள்ள மூட்டுவாய் இரும்பு தடுக்கியது (கலி. 92:37, 38). அகல அல்குல், தோள், கண என்னும் மூன்றும் பெருத்திருத்தல் மகளிருக்குச் சிறப்பு (கலி. 108:2). ஆயமகள் தலைமுடியில் செருகிவைத்த கணணியைச் சுமக்க வியலாத கோடேந்து அகல அல்குலினள் (கலி. 109:10,12). 'தலைவி அல்குலின் நுண வரி வாடும்படி வாராமல் கைவிடுபவனே' எனத் தலைவன் விளிக்கப்பெறுதல் (கலி. 125:17,18).

2. பக்கம். மருதநிலத்து ஊர் பசுக்கள் ஈன்ற கன்றுகளைக் கட்டிய நெடிய தாமணி கொண்ட நீண்ட தாம்புகள் தறியில் கட்டப்பெற்றுள்ள அல்குலை-பக்கத்தினை-கொண்டிருந்தது (பெரு. 243,244).

3. பின்புறம். திருமாலின் மார்பும் அல்குலும்-பின்புறமும்-மனமும் பருமையுடையன (பரி. 13:64).

4. இடை. போரினைவிரும்பி ஆரவாரிக்கும் வீரர், கள்விற்கும் மகளிர் தம அல்குலில்-இடையில-சுமந்து வந்த பானையிலிருந்த கள்ளின வண்டலை நிறையக் குடித்தனர் (அகம. 157:1-4).

5. மேகலை (ஆகுபெயர்). முள்ளெயிற்று மகளிர் அல்குலினை - மேகலையினை - தாஙகமாட்டாது தளர்ந்து தேறலைப் பொலங்கலததேந்தி மெல்லச் சென்றனர் (புறம். 361:16-18).

**அல்லங்காடி** - இரவுக்கடை. மதுரையில் இருந்த சோற்றும் சாலைகளில் உணவு வழங்குவோரிடத்து எழும் ஓசையும் மரக்கலங்களில் பொருள்களை இறக்குவோர் ஏற்றுவோர் செய்யும் ஓசையைப் போல அயல்நாட்டு வணிகர் அணிகலன்களை விலைபேசி வாங்குதற்கண் உண்டான ஓசையும் பிற ஓசைகளும் கலந்து பல்வேறு வகைப்பட்ட பறவைகள் ஒருங்கு கூடி ஆரவாரிப்பது போல அல்லங்காடியில - இரவுக்கடையில் - ஆரவாரம் எழுந்தது (மது. 536-544).

**அல்லங்கீரனார்** - புலவர். அல்லம் என்பது ஊரின் பெயரென்றும் அஃதிப்போது மலையாளப் பகுதியில் உள்ளதென்றும ஊர்ப்பெயரால் இப்புலவர் பெயர் பெற்றார் என்றும் கூறப்படும். [அல்லன் என்பது புலவரின் தந்தை பெயரென்றும் அது பற்றி அல்லங்கீரனார் எனப்பட்டார் என்றும கருதுவர்: த. வ. க. பக். 124, 125.] நற்றிணை 425-ஆம பாடலாக அமைந்துள்ள இவருடைய பாடல் நெய்தல் திணையில் தோழி கூற்றாக அமைந்துள்ளது. 'தலைவன், தான் நம் அணங்குதல அறியான்; நம்மின் தான் அணங்குற்றமை கூறினான்' என்னும் தோழி கூற்று உளவியலை நன்கு புலப்படுத்துவதாகும்.

**அல்லல்** - துன்பம். சோழன் குளமுற்றத்துஞ் சிய கிள்ளி வளவன், புறாவின் அல்லலை – துன்பத்தை-நீக்குதற்குத் தன்னையே அளித்த சோழன் மரபில் வந்தவன் (புறம். 39:1-3). கிள்ளிவளவன புறவின் அல்லல் அன்றியும் பிறவும் உற்ற இடுக்கண் பலவும் தீர்த்த சோழன் மரபில வந்தவன (புறம. 46:1,2). நனவில அல்லல் அடையும தம் மனைவி வளம் பெற மிக்க செல்வத்தைத தருமாறு குமணனைப்

பெருஞ்சித்திரனார் வேண்டுவர் (புறம். 160:24-27). சோழ வேந்தன் பகைவரிடம் தோற்று முள்ளூர் மலையில் ஒளிந்தபோது சோழநாடு அல்லலுற்றது; மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணனை முள்ளூர் மலை சென்று அவனைக் கொணர்ந்து அரசை நிலை நிறுத்திச் சோழ நாட்டின் துயர் தீர்த்தான் (புறம்.174:6-15). 'என் உயிரைப் பாது காக்கும் என் நண்பன் சேயமைக்கண பாண்டிய நாட்டில் உள்ள வளமிக்க பிசிர் என்னும் ஊரில் உள்ளான் என்று சொல்லுவர்; செல்வமுடைய காலத்து அவன் வாராது நிற்பினும் நான் அல்லல் அடையுங்காலத்தில் தவறாமல் வருவான்' எனக் கோப்பெருஞ்சோழன் கூறினான் (புறம். 215:6-9). தலைவர் உறுவித்த அல்லலைக் கண்டு நெடுவேள் அருள்வான் எனின், தலைவி உற்ற துன்பம் பிறி தொன்றான் எய்தியது எனத் தலைவன் கேட்டறி யின் தான் உயிர் வாழ முடியாது எனத் தலைவி கூறினாள் (அகம். 98:26-30). 'நீ வளர்த்த செடி, கொடிகளின் வாட்டம் பற்றியும் உன்னை மிகவும் விரும்பிய அன்னை அடையும் அல்லலை உள்ளத்திற் கொண்டு உன் தமையன்மாரது புலியை யொத்த அச்சம் தரும் தலைமையை நோக்கியும் கலங்காது உடன்போக்கு இசைவாயாக' எனத் தோழி தலை விக்குக் கூறினாள் (அகம். 259:13-19). தலைவர் பிரிந்து செல்ல மாட்டார் என்னும் துணிவால் அவர் செலவைத் தவிர்த்தலில் சோர்ந்திருந்தேன்; பிரிவு பற்றிச் சொன்னால் இவள் உடம்பட மாட்டாள் என்று நினைத்துக் கூறாது பிரிந்தார்; இவ்விரண்டு பெரிய ஆளுந்தன்மையினால் என் நெஞ்சும் இப்பொழுது பாம்பு கடித்தாற் போன்று அலலலுறுகிறது எனப் பிரிவிடை மெலிந்த தலைவி தோழிக்குக் கூறினாள் (குறு. 43). தலைவனொடு நகைதது மகிழ்ந்ததனால ஆய பயன் தலைவி தொல்கவின் தொலைந்து தோள் நலங் கெட்டு அல்லல் நெஞ்சமொடு இரவுதோறும் துயிலாது பசலை உண்டாக அழிவதோ எனத தோழி கூறி னாள் (குறு. 381). 'வளமலை நாடன நேற்றுத் தினைப்புனத்தில் கிளி கடிந்து தங்கிச் சொல்லிடம் பெறாது பெயர்ந்தது அல்லல் குறித்ததன்று; அவன் காட்சி கண்டு கழன்ற தொடியைச் செறித்த என் பண்பில் செய்கையை எனது உள்ளம் கருதுவது வியப்பாக உள்ளது' எனத் தோழி தலைவியிடம் குறை நயப்பக் கூறினாள் (நற். 25:5-12). 'என் வளை நெகிழ்வித்தவரைக் கருதி அல்லலுறுதலின் அவரிடம் சென்ற என் நெஞ்சு அவர் செய்யும் வினைக்குச் சூழ்ச்சி சொல்லுந் துணையாயிருந்து முற்றுவிதது அவருடன் ஒரு சேர வர விருபப முறறு வருந்தி யுள்ளதோ' எனத் தோழியிடம் தலைவி வினவினாள் (நற். 56:4-6). திருவிழா நடப் பதனை ஊரார்க்குத் தெரிவிக்கும் குயவனை நோக்கி, அச்செய்தியுடன் ஆங்குள்ள மகளிர்க் கெல்லாம், இப்பாணன் பொய்யை மெய்போல் சொல்லி அலலல் விளைவிப்பவன் ஆதலால இவன் சொல்லை நம்பவேண்டா எனச் சொல்லு வாயாக என்று தோழி பாணன் கேட்குமாறு கூறினாள் (நற்: 200: 4-11). தலைவன் வரவை அவன் ஊர்ந்து வரும் தேர்மணி ஓசை மூலம் அறிந்த தோழி, 'குறியிடத்து நம்மைக் காணாமையால தலைவன் படுகினற அல்லலை நாம் காணுமாறு புன்னையின் அடிப்புறத்தில் மறைந்து கொளவோம்' எனத் தலைவியிடம் சொன்னாள (நற். 307: 5-10). தலைவன் பொருட்டு எல்வளை நெகிழ மெலிந்து அல்லல் உழப்பது ஏன் எனத் தலைவியைத் தோழி வினவினாள் (ஐங. 27: 2-4). புறாவின பேடை, சேவல் இன்புறுமாறு அரசர் அருகிருக்கும் இய வரைப் போல இசைக்கும் காட்டினை விரைநது கடபபாயானால் தலைவியின மிக்க அலலலைத தீர்த்தல் எளிதாகும் என வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகற்குக் கூறினான (ஐங். 425) தான் கூடின மகளிரின் இயறகை நலம் கெட்டால அவரினும் மிக அலலலுறும் சிறப்புடையவன தலைவன் (கலி. 40: 17,18). 'தலைவன என் மெய் முழுதினையும் தடவியதால் யான் அலலல் களைந் தேன' எனத் தோழியிடம் தலைவி கூறினாள (கலி 54: 14-16). அல்லல கூர்நது அழிவுற வருததுமாறு மேனமேலும் அடர்ந்து வரும் காம நோயைக் குறிப பினால் அறிதலன்றிச் சொனனாலும் அறியாதவன் தலைவி எனத தலைவன உரைத்தல (கலி. 58:15, 16). அறிவுடையோர் செல்வம் குறைநது வறுமைப் பட்டுத் தம் அல்லல் நீக்கத் தக்க உறவினரிடம் சென்று தம் குறையை அவர்க்குச்சொல்லத் தொடங்கி முழுதும சொல்ல முடியாமல் இருத்தல் போலத் தலைவன தோழியிடம் தான கூறக் கருதியதனைக கைவிட்டு அவளையே பார்த்து நின்றான (கலி. 61: 2-5). 'நீ செய்யும் குறையை அறிந்து அழிந்து கெடும் நெஞசத்தினை உடையேம்; அதன் மேலே அலலல உழபப நீ செய்து கழிந்த குறைகளைக் கருதாது உன்னைக் கணட இடத்தே நெஞ்சழிந்து நினனைப பேணிக் கொணடேம்' எனத் தலைவனிடம் காமக கிழததி உரைத்தாள் (கலி. 72: 22-25). ஆயர்மகன் ஆயத்தோடு ஆடும் குரவைக் கூததில தலைவியை அருமை செய்தான் போலே நோககி அலலல செய் தல் கொலையேறு அடக்கிய தருக்கனறோ எனத தலைவி கருதினாள் (கலி. 104: 70-73). 'நின்னைத் தகைத்தேன்' எனத் தலைவன் கூறக்கேட்ட தலைவி, 'இவன நம்மிடத்து நிகழ்தததுகின்றதோர் அல்லலைப

பாராய்' எனத் தன் நெஞ்சொடு கூறினாள் (கலி. 108: 20). பிரிவிடை யாற்றாத தலைவி மாலைப் பொழுதைப் பார்த்து அல்லலில் அழுந்தியிருந்த என்னைக் கையறவு எய்துவிக்க வந்தாயோ எனக் கேட்டாள் (கலி. 120: 10,12). தலைவன் சிறிதாகப் புல்லி அளிக்கின் அல்லல் நெஞ்சம் அடங்கலுங் காண்பேன்' எனத் தலைவி கூறினாள் (கலி. 122: 18,19). தலைவி தன் நெஞ்சும் மாலைக் காலத்தே அல்லலை யுடைய காம நோயைச் செய்த தலைவனிடம் சென்றதாகக் கூறினாள் (கலி. 123:10). 'இக்கனங் குழையது அல்லலை யுடைய குணம் நம்மை வருத்தும் என்று பாராது நம் நெஞ்சழியும் படியாக வந்து அவளைக் குறுகினேம்' எனப் பிரிவாற்றாது வருந்தும் தலைவியைக் கண்டவர் கூறினர் (கலி. 142: 13,14). நான்படும் அல்லலை எனக்கு அளித்தவனுடைய மார்பைத் தழுவி இன்புறும் வாய்ப்பினை நான் பெற்றால் பின்னர் நீங்கள் இகழ மாட்டீர்கள் எனப் பிரிவாற்றாது வருந்தும் தலைவி கூறினாள் (கலி.142:16-18). 'என்ன வருத்த முற்றாய், இதனை உனக்குச் செய்தவர் யார், நீ உற்ற அல்லலை எனக்குரைப்பாயாக' என வினவியவர்க்குத் தலைவி காரணம் கூறத் தொடங்கினாள் (கலி. 144:9-11). 'திங்களில் உள்ள குறுமுயலே, என் தலைவன் உள்வழிக் காட்டி மதி திரிந்து என் அல்லல் தீராயெனின் உன்னை நாய் கொண்டு பற்றச் செய்வேன்; வேட்டுவரிடமும் உன்னை அறிவிப்பேன்; உனக்கு அரணாகவுள்ள திங்களையும் விழுங்கும்படி பாம்பை மடுப்பேன்' எனத் தலைவி கலங்கி மொழிந்தாள் (கலி. 144:18-23). புல்லியகேளிர் புணரும் காலம் அறியேன்; பகலையும் இரவையும் வெறுப்பேன்; யானுற்ற அல்லல் களைவாரைப் பெற்றிலேன் எனத் தலைவி கலங்கி மொழிந்தாள் (கலி 144:51-54). 'என்னை அல்லலுறுத்தியவன் தான் வேண்டுபவரோடு துஞ்சுவானோ; என் படர் மிக்க நெஞ்சு துஞ்சாது வானும் நிலனும் திசையுமெல்லாம் அவனைத் தேடிச் செல்லும்' என்பது தலைவி கூற்று (கலி. 145:41-44). நல்லெழில் மார்பன் முயங்கியமையின் தலைவியின் அல்லல் தீர்ந்தது (கலி. 146:54,55). 'காதலருடன் கூடி இன்புற்ற மகளிர்க்குத் துணையாய் உதவிய மாலைக் காலமே, இப்பொழுது தாம் அழும்வண்ணம் காதலர் பிரிந்து சென்றதனால் அல்லலுறும் மகளிரை நீயும் வருத்துதல் உனக்குத் தகாது' என்று தலைவி கூறினாள் (கலி. 149:8-11). செவ்வேளுக்கு அல்லல் இல்லாத தீக்கடவுள் தனது உடலின்கண் தீத்தன்மையினின்றும் ஒரு கூற்றைப் பிரித்து வளப்பமான கோழிச் சேவலாக்கிக் கொடுத்தான் (பரி. 5:57,58). மலையில் பெய்த பெருமழையால் வையை புது வெள்ளத்துடன் உலகில் பசி முதலிய அல்லல் நீங்கக் கடலை நோக்கிச் சென்றது (பரி. 10:1-3).

**அல்லி - 1. நீர்ப்பூ வகைகளில் ஒன்று.** அல்லியிடத்து உண்டாம் புல்லரிசி கைம்மை மகளிர்க்கு உணவாயிற்று (புறம்.248:3-5). தலைவனொடு தலைவி காடேகின் அவள் சீறடித் தாமரை அல்லியைச் சேர்ந்த அழகிய இதழ்கள் அரக்குத் தோய்ந்தவை போலப் பரற்கற்கள் பட்டுச் செந்நிறமெய்தும் (கலி. 13:10-13). கருநீலம், அல்லி, அனிச்சம், முல்லை, நறவம் ஆகிய மலர்களைச் சேர்த்துக் கட்டிய கண்ணியும் தாரும் தலைவர் அணிந்தார் (கலி. 91:1-3). மல்லிகை, முல்லை, சண்பகம், அல்லி, செங்கழுநீர், தாமரை, ஆம்பல், துளவு, வகுளம், குருக்கத்தி, பாதிரி, நாகம், நறவம், சுரபுன்னை ஆகிய மலர்களெல்லாம் மணக்கின்ற இருகரைகளிடையே வையையாறு ஓடுகின்றது (பரி. 12:77-81).

**2. பூவின் அகவிதழ்.** தாமரையின் அல்லி—அகவிதழ்-போன்ற அகங் கையினையும் பவளம் போன்ற வாயினையும் குதலைச் சொற்களையும் கொண்டு, கண்டார் யாவரும் விரும்பும் இயல்புடைய புதல்வனைத் தலைவனின் பரத்தை தெருவிற் கண்டு தழுவிக் கொண்டாள் (அகம். 16:1-7). தண்புதற் பகன்றை மலரின் அல்லியைப் பாகற்கொடி அசைத்தது (அகம். 255:11-13).

**3. பூந்தாது.** பூக்களின் பலவகை இதழ்களைக் கிள்ளி அவற்றை அல்லியொடு - பூந்தாதுடன் - தலைவி வனமுலையில் தலைவன் அப்பினன் (அகம். 389:4,5).

**அல்லிப்பாவை – ஆண்கோலமும் பெண் கோலமும்** கொண்டு கூத்தாடுதற்குரிய பாவை. திறமை மிகுந்தவனால் புனைந்து செய்யப்பெற்ற, எழுதிய அழகு பொருந்திய அல்லிப்பாவை ஆடும் அழகினை ஒத்துத் தலைவனும் தலைவியும் இரவில் பனிமலர்ச் சோலையில் சென்றனர் (புறம். 33:16-19).

**அல்லியந்திரு - தாமரையில் உள்ள திருமகள்.** 'அல்லியந் திரு மறுவாக விளங்கும் மார்பை உடைய திருமாலே, யான் கூறுவன புன்மையுடையன என்று கருதாது ஏற்று அருள் புரிய வேண்டும்' எனப் புலவர் வேண்டுகின்றார் (பரி. 1:35,36).

**அல்லியுணவு - அல்லியரிசியாகிய உணவு.** கணவன் இறந்த பின்னர்க் கைம்மை மேற்கொண்ட மனைவி அல்லியுணவு கொள்ளுவாள் (புறம். 250:5,280:13-15). அல்லி 1. காண்க.

**அல - கலப்பைப்படையுடையவன் (திருமால்).** ஆய்ச்சியரோடு குரவைக் கூத்தாடுங்கால் அவர்க்கு வலமும் இடமுமாக இருந்தாடியவனே, கூத்தாட எடுத்த

குடத்தினை யுடையவனே, பகைவரைக் கொல்ல் எடுத்த அல-கலப்பைப் படை யுடையவனே- எனத் திருமால் விளிக்கப்படுகிறார் ('அலவ' என்பது 'அல்' என விகாரமாயிற்று) (பரி. 3:83).

**அலகு - 1. அளவு.** பலவகைப்பட்ட ஆரவாரங்கள் ஒன்றுபடுதலால் அலகு–அளவு-கடந்தனவும் தனித்துக் காண்பதற்கு அரியனவு மாகிய மலைகளாகிய யானை உண்டாக்கும் ஒலிகள் திசைகள் எல்லாம் ஒலித்தன (மலை. 345-348).

**2. பலகறை** (சோழி). மயில் தோகையின் அடிச் குருத்து அலகு-பலகறை-போன்று விளங்கும் (மலை. 234,235). பாக்கு மரத்திலுள்ள அலகு போன்ற பசுங்காயில் உள்ள நீரினும் தலைவியின் பற்களில் ஊறும் நீர் சுவை மிக்கது (அகம். 335:21-25).

**3. பறவை மூக்கு.** கார்காலத்தில் உலாவுகின்ற கொக்கினது அலகு ஆழமான நீர் நிலையில் தோன்றிய ஆம்பல் பூவுக்கு உவமை (நற். 100:1-3).

**அலகை - அளவு.** மன்னர் பொருத போர்க்களத்தில் கேடகம் அல்கை -அளவு- கெட்டுச் சிதைந்து வேறு வேறாகக் கிடந்தது (புறம். 282:8-10).

**அலங்கல் - 1. கதிர்.** வயலி லுள்ள தீக் கொழுந்து போன்ற தோகைகளையீன்ற நெல்லின் அலங்கல்-கதிர்-வரப்பை அணையாகக் கொண்டு சாய்ந்து கிடக்கும் (அகம். 13:17–20).

**2. மாலை.** மணங்கமழ்கின்ற துளசியலங்கல்-மாலை-அணிந்தவர் திருமால் (பதி. 31:7-9).

**3. அசைதல்.** முதுமரம் நிலம் பக வீழ்ந்த அலங்கல்-அசைதல்-உடைய பலவேர்களை யுடையது (புறம். 364:10,11; பதி. 39:13; அகம். 113:24; 129:4; 199:6; 229:18; 242:1; 302:2; குறு. 76:3; 79:3; நற். 169:8; 189:10; 314:10; 372:8; கலி. 150:1).

**அலந்தலை - வாட்டம்.** அலந்தலை-வாட்டம்-உடைய இரத்தி (புறம். 325:11). அலந்தலை உன்னம் (பதி. 23:1). அலந்தலை வேலத்து உலவை அஞ்சினை (பதி. 39:12). அலந்தலை ஞெமையம் (அகம். 111:5; 171:7). ஞாயிறு மறையும் மாலைப் பொழுதில் அலந்தலை யுடைய முதிய கலைமான் மனைவளர் நொச்சியின்கண் இருந்த பெடைமானை அழைத்தது (அகம். 367:1-4). உடன்போக்கிற் செல்லும் தலைவி நெறியிலுள்ள ஆலமரத்தின் அலந்தலை விழுது தேமல் பொருந்திய தொடையில் உராய்ந்திடத் தலைவனுடன் சென்றாள் (அகம். 385:8-10). மரங்கள் நெருங்கிய இடமகன்ற காட்டில் உள்ள அலந்தலை ஞெமைமரத்தின் மேலிருந்த பேராந்தை, பொற்கொல்லன் தொழில் செய்யுங்கால் எழுகின்ற ஓசை போல இனியவாய் ஒலித்தது (நற். 394:1-3).

**அலர் - பலர் அறிந்து கூறும் பழிமொழி.** வையைத் துறையில் மருத மரம் ஓங்கிய சோலையில் தலைவன் பரத்தையை ஒருநாள் கூடியதனால் எழுந்த அலர், ஆலங்கானப் போரில் பாண்டியன் எழுவரை வென்று களவேள்வி செய்தபோது வீரர் செய்த வெற்றி ஆரவாரத்திலும் பெரிது (அகம். 36:9–23). காதலன் பிரியத் தலைவியின் மேனி பசப்பால் பீர்க்கம்பூ நிறமெய்தியது; அப்பொழுது தோன்றிய அலர் குறுக்கைப் பறந்தலையில் அன்னி என்பான் திதியனது புன்னை மரத்தை வெட்டிய போது கூத்தர் எழுப்பிய இன்னிசை ஆர்ப்பினும் மிக்கது (அகம். 45:8-12). தலைவன் தலைவியைப் புணர்ந்த களவொழுக்கத்தை அலர்வாய்ப் பெண்டிர் அம்பலாக்கித் தூற்றினமையால் பலரும் அறிந்தனர் (அகம். 70:4-7). தலைவனிடம் கொண்ட களவுக் கூட்டம் பற்றிய செய்தி சிலர் செவிப்பட்ட அளவிலேயே அஃது அலராய் எங்கும் பரவத் தலைவி இற்செறிக்கப்பட்டாள் (அகம். 90:4,5). பரத்தையர் கூட்டத்து ஓர் இளையவளைத் தலைவன் மணந்ததனால் ஊரிலெழுந்த அலர் பழுவூர்ப் பறந்தலையில் சேர பாண்டியரை வென்ற சோழ வேந்தனின் மறவர் பகைவர்தம் களிறுகளைக் கவர்ந்தபோது தோன்றிய ஆரவாரத்தை ஒத்திருந்தது (அகம். 96: 9-18). வெறியாட்டெடுத்த பின் தலைவியின் மேனி முன்போன்று செழிப்பாக இல்லாவிட்டால் களவொழுக்கம் பற்றி அலர் எழாதிருத்தல் அரிது (அகம். 98:22-25). அலர்வாய் அம்மென் சேரி (அகம். 110:1,2). தலைவியின் தோள் மணந்தமை குறித்து மூதூர் அலர் பரப்பவும் தலைவன் அருளாது பிரிந்து சென்றனன் (அகம். 113:7–9). தலைவனை வாயில் மறுக்கின்ற தோழி நேற்று ஒருத்தியோடு புனலாடியதாகப் பிறர் கூறும் செய்தியை நாங்கள் மூடி மறைத்தாலும் செழியன் கூடற் பறந்தலையில் இருபெரு வேந்தரைத் தாக்கி அவரைப் புறங்கண்ட போது எழுந்த வெற்றியார்ப்பரிப்புப் போல் அலர் தோன்றியது எனக் கூறினாள் (அகம். 116: 9-19). ஊர் தன் கொடுமைப் பண்பினால் தலைவியைத் தலைவனோடு சேர்த்து அலர் பாடும் (அகம். 190:3,4). தலைவன் பிரிந்த போது ஊரார் எழுப்பிய அலர் நிறைமதி நாளின் கடலாரவாரம் போன்றது (அகம். 201:9,10). 'மகிழ்ந்தாலும் வெறுத்தாலும் தாயே ஆராய்ந்து உணர்க எனக் கருதாமல் அலர் கூறுதலை விரும்பும் பெண்டிர், நின் மகள் இப்படிப்பட்டவள் எனப் பல நாள் வந்து கூறவும் அவள் நாணுவாள் எனக் கருதி அவளிடம் களவுச் செய்தியைக் கூறிற்றிலேன்' என்று மகட்போக்கிய செவிலித்தாய் கூறினாள் (அகம். 203:1-6). தலைவியின் தோள் பழைய வனப்பை இழந்தமை

யால் தோன்றிய அலர் செழியன் எழுவரை வென்ற போது ஆலங்கானத் தெழுந்த ஆரவாரம் போன் றிருந்தது (அகம். 209:1-6). வெண்மணிஊரில் மத்தி என்பான் நாட்டிய கல் பொருந்திய பனித்துறையில் நீர் மோதி ஒலிப்பது போல அலரின் ஆரவாரம் எழுந்தது (அகம். 211:14-17). 'தண்டுறையூரன் பெண் டிர் தாம் விரும்பியபடி எம்மை இகழ்ந்து பேசு கின்றனர் எனக் கூறுகின்றனர்; அவ்வலர் மொழி யைப் பொருந்தப் பெற்றேமாயின் இனி யாதேனு மாகுக; அப்பெண்டிர் வாழும் தெருவினை யாம் அடைந்தால் அவர் வருந்துவர்' எனப் பரத்தை தலைவிக்குப் பாங்காயினார் கேட்பக் கூறினாள் (அகம். 216:5-16). அலர்வாய் அம்பல் மூதூர் (அகம். 218:18,19). தலைவன் தேரொடு வந்து திரிந்தும் குறையிரந்தும் செல்லுதலால் ஊரிலும் சேரியிலும் அலரெழுந்தது (அகம். 220:1,2). தலைவன் தான் விரும்பியவளோடு யாற்றில் நீராடினான் என்ப; அதனால் எழுந்த அலரோ வெண்ணிவாயில் என்னு மிடத்துக் கரிகாலன் பதினொரு வேளிரோடு வேந்தர் சாய வென்றபோது அழுந்தூரில் எழுந்த ஆரவாரத்தினும் மிக்கிருந்தது (அகம். 246:5-14). தலைவியின் மேனியில் நாளும் பசலை படர, மேனி யும் தளர்ந்து சாக்காடு எய்துகிறது; அதனால் எழுந்த அலரோ கொங்கரைப் புறந்தந்து அவர்தம் நாட்டைக் கைப்பற்றிய பசும்பூட் பாண்டியன் கூடலில் வெற்றிக் களிப்பில் ஆடியபோது எழுந்த இன்னிசை ஆரவாரத்தினும் மிக்கது (அகம். 253: 1-7). முலையிடத்தே தோன்றிய காதல் நோயாகிய இளையமுளை தளர்ந்த நெஞ்சிலே வருத்தமாகிய திரண்ட அடியாய் நீண்டு ஊரார் எடுத்த அம் பலாகிய கிளையைக் கொண்டு காதல் என்னும் தளிர் பரப்பிப் புலவர் புகழும் நாணமில்லாத பெரிய மரமாகி அலராகிய மலரைச் சொரியவும் தலைவர் வரவில்லை எனத் தலைவி கூறினாள் (அகம். 273:10-17). பறை யறைந்தாற் போன்ற அலரைக் கொடுத்துவிட்டுத் தலைவர் மலைப் பாறைகளைக் கடந்து வேற்றுப் புலம் சென்று விட்டார் எனத் தலைவி கூறினாள் (அகம். 281:12,13). 'தலைவனுக்கு மகட் கொடையை எந்தையும் ஏற்றனன்; அலர் பரப் பும் ஊராரும் என்னைத் தலைவனுடன் இணைத்தே பேசுகின்றனர்; என் தாயும் எனக்குரியவனாக அத்தலைவனையே கூறுகின்றாள்; ஆதலால் நாம் இல்லுறை தெய்வத்துக்குப் பலி செலுத்துவோம்' எனத் தலைவி தோழியை அழைத்தாள் (அகம். 282: 10-18). மாயோளோடு பொழிலில் துயின்று மறு நாள் வையையில் புனலாடி அந்த ஈரத்துடன் இங்கு வந்து தன் பரத்தைமையைத் தலைவன் மறைக்க, கொற்கைச் செழியன் மதுரையிடத்து ஆடிய வெற்றி ஆரவாரம் போலப் பலர்வாயாலும் அச்செய்தி கூறப்பெற்று அலராகியது (அகம். 296: 3-14). கொல்லி மலையிலிருந்து ஓடிவரும் அருவி யொலி போல அலர் வெளிப்படத் தலைவன் பிரிந் தான் (அகம். 303:6,7). தலைவி அலர் கூறுவோரின் வாயினின்றும் நீங்கித் துன்பத்தினின்று உய்யுமாறு அருளாது தலைவன் பொய்ம்மொழி கூறி ஒழுகினன் (அகம். 320:6,7). 'பெரிய அலரை நம்மிடத்தே பரப் பிய இவ்வூரினரின் செருக்குடைய சொல் அழியக் காதலர் வருவதுண்மை; இதோ மேகம் கால் இறங்கி யுள்ளது' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 323:1-3,13). சேரலாதன் பகைவரைக் கூடலிற் புறங்கண்டு அவர்தம் கடம்ப மரத்தை வெட்டிச் செய்த முரசு ஒலிப்பது போலப் பழி தூற்றும் மூதூரிலுள்ள சேரிப் பெண்டிரின் அம்பலும் அலரும் நம்மிடத்தே தங்கத் தலைவர் பிரிந்து சென்று விட்டார் எனத் தலைவி கூறல் (அகம். 347: 3-8). தலைவியோடு சுனையாடித் தலைவன் வேறி டம் சென்று சில நாள் ஆவதற்குள்ளே அந்நிகழ்ச்சி பலர் வாய்ப்பட்டுக் கொங்கு நாட்டினர் மணி யினை இடையில் கட்டிக் கொண்டு தெருவில் ஆடும் உள்ளி விழாவின் ஆரவாரம் போல அலராய்ப் பெருகியது (அகம். 368:10-19). 'நீ கானலிடத்தே நின் றொழிய யான்மட்டும் தனித்து ஊர்க்கு மீளேன்; ஆகையால் இனி இவ்வூர் அலர் எழுப்புவதாக' எனத் தோழி தலைமகளிடம் கூறுவாள் போன்று தலைமகன் கேட்பக் கூறினாள் (அகம். 370:13-16). தன்னை வளர்த்தெடுத்த தாயையும் நினையாமல் ஊரும் சேரியும் அலர் தூற்றத் தலைவி தன் துணைவனோடு உடன் போக்கு மேற்கொண்டனள் (அகம். 383:1-5). மனையைக் கடந்து தங்கினும் அல ராகும் என்று கூறப்படவும் களவொழுக்கம் நீங்கு மாறு முன் செய்த நல்வினையால் தலைவன் தலை வியை மணந்து கொண்டான்; அதன்பின் ஆர வாரம் மிக்க ஊர் அலர் கூறுவதனை விடுத்துத் தன் பழைய இயல்பு மாறிப் புதிய இயல்பினை உடையதாயிற்று (அகம். 400:1-4,25,26). தலைவனுக் கும் தலைவிக்கும் இடையே இருந்த மறைவான நட்பு அலராகிப் பலரு மறியுமாறு பொதுவிடத்தே பரவியது (குறு. 97:3,4). அழிசியின் ஆர்க்காடு போன்ற தலைவியின் நலம் தொலைதல் கண்டு அலர் பரவியது (குறு. 258:2-8). 'ஊரில் அலரெழ அதுபற்றிப் பேசித் தெருவினர் ஆரவாரம் செய்ய நம்மை விடாது வருத்துந் தாய் தன் மனையில் தனியே இருக்கட்டும்; உடன் போக்குக் குறித்துத் தலைவனிடம் உடன்பட்டு விட்டேன்' எனத் தோழி தலைவனிடம் உரைத்தனள் (குறு. 262:1-3). கடலாடியும் கடற்கரைச் சோலையில்

தங்கியும் மகளிர் கூட்டத்தோடு குரவை யயர்ந்தும் அயலாரைப் போல வந்து தலைவியைத் தழுவிச் சென்றதால் அலர் தோன்றியது (குறு. 294). 'இவனும் இவளும் பிரியா நண்பினர்' என்று என்னுடன் தன்னைச் சேர்த்து ஊரார் சொல்லும் அலர்க்குத் தலைவன் அஞ்சினன் போலும் என்றாள் தலைவி (குறு. 302:4-6). புன்னை மலர் கொய்யும் ஆயத்தார் எல்லாம் தலைவன் வந்த தேரைக் கண்டனர்; ஆகவே அலர் எங்ஙனம் நீங்கும் என்று அலரறிவுறுத்துத் தலைவனைத் திருமணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்துதல் (குறு. 311). 'தலைவனொடு ஒரு நாள் மகிழ்ந்து விளையாடிய பழியும் இலேனாகவும் இவ்வூர் கொடிய இயல்பினால் அலர் தூற்றுகிறதே' எனத் தலைவி வருந்துகிறாள் (குறு. 320:4-8). தலைவன் தண்ணளி செய்த நாள் சிலவே; ஆனால் அலரோ விச்சியர் தலைவன் வேந்தரொடு பொருத போது, குறும்பூரிலுள்ளார் செய்த ஆரவாரம் போல் பெரிது (குறு. 328: 3-8). கானலிடத்தே தலைவன் வந்து போன அடிச்சுவடு பட்ட எக்கர் புலர்வதன் முன்னமே தலைவியின் ஊரில் அலர் எழுந்தது (குறு. 372:3-7). தலைவன் கோதை குழைய முயங்கிய நாள் சிலவே; ஆனால் அதுபற்றியெழுந்த அலர் வாகைப் பறந்தலையில் பசும்பூட்பாண்டியன் ஏவலால் பொருத அதிகன் யானையொடு மாய்ந்த போது கொங்கர் விளைத்த வெற்றி யாரவாரத்தினும் மிக்கது (குறு. 393). அலர் கூறுவதை அன்னை அறிந்தால் களவொழுக்கம் நிகழ்தலரிது என்பதைத் தலைவனுக்குத் தெரிவித்தால் தன் ஊருக்கு அழைத்துச் செல்வானோ எனத் தோழி தலைவன் கேட்குமாறு கூறித் திருமணத்தை வற்புறுத்தினாள் (நற். 4:5-7). செங்குட்டுவனது மதிலை அழித்துச் சோழன் பகலில் தீவைத்த போரைக் காட்டிலும் மிகப் பெரிதாக அலர் உண்டாகுமாறு தலைவர் தலைவியைப் பிரிந்தார் (நற். 14:3-6). 'நெடுநாள் எம்முடன் இருந்துவந்த நாணத்தையும் யாம் கைவிட்டேமாதலால் இனி இவ்வூர் அலர் கூறுவதாக' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 15:9, 10). தலைவன் சொல்லை நம்பி நான் நலனிழந்தேன்; அலர்வாய்ப் பெண்டிரின் அம்பலொடு பழிமொழி கூறி இரவிலும் துயிலாத இவ்வூர், எதனையிழந்து இவ்வாறுள்ளது எனத் தோழி வினவினாள் (நற். 36:4-9). இம்மென்னும் ஒலியுடன் கூடிய பெரிய அலரைத் தூற்றுவது தலைவியின் ஊர் (நற். 76:6). மலைநாடன் நட்பு பன்னாளுக்குமுன்னே நீங்கியது; அதனையறியாது குறிஞ்சி நல்லூர்ப் பெண்டிர் இடையறாது என்னைப்பற்றி அலர் தூற்றுகின்றனரே எனக் கவன்று தலைவி தோழிக்குக் கூறினாள் (நற். 116: 6-12). அம்பல் மூதூர் அலர்வாய்ப் பெண்டிர் (நற். 143:7). தலைவனுடன் தலைவி உடன்போக்கு மேற்கொண்டால் இவ்வூர் வேண்டுமாயின் அலர் தூற்றட்டும் என்பது ஒரு தோழியின் கூற்று (நற். 149:8-10). தான் கொண்ட காமம் பனங் கருக்காற் செய்த குதிரையைத் தந்தது; ஊரார் தூற்றும் அலர் (ஆவிரை, பூளைமுதலிய) மலர்களை இடையிட்டுக் கட்டிய எருக்கம் பூமாலையைத் தந்தது என்று தலைவன் உரைத்தான் (நற். 152:1,2). சிறுகுடித் தெருவில் தேர் வந்தது என்னும் செய்தியைச் சொல்லி ஊரார் அலர் பரப்பினர்; அவ்வலரைக் கேட்ட தாய் தோழிமார் பலருள்ளும் என்னை மட்டும் குறிப்பாக நோக்கினள்; ஆதலால் இனித் தலைவியைப் புறம்போக விடாது இற்செறிப்பர் என்று தோழி சிறைப்புறமாக இருந்த தலைவன் கேட்ப மொழிந்தாள் (நற். 191:5-10). 'ஊரார் அலர் தூற்றின் தலைவி இற்செறிக்கப்படுவள் ஆதலின் பகற்குறி வாராது தலைவியை மணந்து செல்க' எனத் தோழி தலைவனை வற்புறுத்தினாள் (நற். 223:5,6). அறிந்தவராகக் கருதப் பெறும் தலைவர் அறநெறி நிற்பவ ரல்லர் என்று அலர் பரந் தோங்கியது; அவ்வலர் தலைவி இறந்த பின்னும் இன்னாமை தரவல்லது (நற். 227:1,2). அம்பல் மூதூரில் வளமையுடைய சேரியிலே அலரெழத் தலைவன் தேர் சென்றது (நற். 249:9-11). ஊரலர் தூற்றுகின்ற பழிச்சொல்லை நாணத்தால் நாம் தலைவற்கு உரையாவிடினும் மறைப்பினும் வெளிப்பட்டுத் தோன்றும் நம் கண்ணீர் அதனை உரைத்து விடும் எனத் தோழி தலைவிக்குக் கூறுவாளாய்த் தலைவனை வரைவு கடாயினாள் (நற். 263:3-10). தலைவன் குறித்த பருவத்தில் வந்து கூடி அருள் செய்யாமையால் என் நோய் மூதூரிலுள்ள அலர்வாய்ப் பெண்டிரால் பழி தூற்றப்பட்டு முன்னைய நிலையினும் மிகுகின்றது என்றாள் தலைவி (நற். 272:6-10). 'அலர்வாயினை யுடைய அயலில்லத்துப் பெண்டிர் நம் பசலையைக் குறித்துப் பாடுமாறு தலைவனோடு நாடாது கொண்ட நம் நட்பு அமைந்தது' எனத் தோழி அவன் கேட்குமளவில் தலைவியிடம் கூறினாள் (நற். 378:6-12). கதிரவனொளியை மறைக்க முடியாதவாறு போலப் பரத்தையொடு புனலாடியதால் எழுந்த அலரைத் தலைவன் மறைக்க முடியாது என்பது தலைவி கூற்று (ஐங். 71:2-5). மருதத்துப் பெருந்துறையில் தலைவனோடு பரத்தை புனலாடினாள் என ஊர் அலர் கூறியது (ஐங். 75:2-4). 'பேரூர் அலரெழப் புனலாடுவோம்; நீ உன் வீட்டிற்குச் செல்லாதே' எனத் தலைவனிடம் பரத்தை கூறினாள் (ஐங். 77: 2-4). தலைவன் தலைவிக்கு அருள் செய்தது ஊரில் அலர் தோன்றக் காரணமாயிற்று (ஐங். 132:1-3).

தலைவனது புறத்தொழுக்கம் அலர் தோன்றக் காரணமாயிற்று (ஐங். 164). ‘அன்னையும் அறிந்தனள்; அலரும் எழுந்தது; உடன்போக்கு மேற்கொள்ளலாம்’ என்பதுபடத் தலைவனிடம் தோழி கூறி வரைவு கடாவினாள் (ஐங். 236). தலைவன் இரவுக்குறி வரின் சேரியிலுள்ளார் அலர் கூறுவர் (ஐங். 272:3-5). தலைவன் தலைவியைப் பிரிந்தமையால் மூங்கிலிற் பற்றிய தீயைப்போல அலரெழுந்தது (ஐங். 340:3,4). சோலையின்கண் தலைவன் பரத்தை ஒருத்தியோடு கூடியிருந்ததனால் தோன்றிய அலர் குரவ மரக் கிளையில் தங்கிய குயில் ஒலியினும் பெரிது (ஐங். 369). மூதூர் அலரெழக் குன்று கடந்து உடன் போக்கு மேவிய மகள் தன்னையும் நினைத்தனளோ என நற்றாய் தனக்குள் வினவினாள் (ஐங். 372). மனையில் உள்ளவரால் அடக்க வொண்ணாத அலரைத் தலைவிக்குத் தந்துவிட்டுத் தலைவன் பிரியக் கருதினான் (கலி. 19: 4,5). ஊர் அலர் தூற்றும்படியாகத் தலைவியின் நலம்கெடும் (கலி. 27:13,14). ‘நம் தலைவர் நம்மைப்பிரிந்து நினையாமையால் அயலார் அலர் கூறுவராயின் அவர் நம்மிடத்துச் செய்யும் அளி என்ன பயனைத் தரும்’ எனத் தலைவி ஆற்றாது உரைத்தாள் (கலி. 28: 13-15). இயற்கைப்புணர்ச்சியில் தெளிவகப் படுத்தி அகன்றபின் தலைவன் அருமை செய்து அயர்த்தமைகண்டு ஊரிலுள்ளோராகிய அயலார் அலர் தூற்றுகையினால் தலைவியின் ஆய் நல மிழந்த கண் கயலுமிழ் நீர்போலக் கலுழ்ந்தது. அவ்வலரால் நறுநுதல் ஒளி கெட்டுப பீர்க்கம் பூவினைப்போலும் பசலையினது அழகைக் கொண்டு பிறையின வனப்பை இழந்தது (கலி. 53: 8-15). மாட்சிமைப் படாத இவ்வூரில் அம்பல் இனி அவரினால் அலர்வதாக எனக்கருதித தோழியிடத்துத தலைவி கூறினாள் (கலி 60:29). பிறர் கூறும் அலருக்கு நாணி மறைத்த காமநோய் ஒழுக்கத் தெல்லையினைக் கடந்து நிற்கும் (கலி. 78:17). அலரெடுத்த ஊராரை உச்சிமிதித்துத் தலைவியை அவள் விரும்பிய கொல்லேறு தழுவிய வீரனுக்கே திருமணம் நடத்த உறவினர் ஆர்வத்துடன் இசைந்தனர் (கலி. 104: 75-76) யாய் தன் கண்ணாகிய கோல் கொண்டு வருத்தியதற்கு இவ்வூர் என்னை ஆயர் மகனொடு கூட்டம் உண்டென்று எண்ணி அலரை உண்டாக்கியது; அதனினும் மகிழ்வு தருவது வேறு யாதுளது எனத் தலைவி நினைந்து மகிழ்ந்தனள் (கலி. 105: 62-65). ‘இம்மாலையையும ஊரார் கூறும் அலரையும் பொறாமல் நம் நெஞ்சம் நம்மை விட்டுத் தலைவனிடத்தே போனது’ எனப் பிரிவிடை ஆற்றாத தலைவி வருந்திக் கூறினாள் (கலி. 118: 22-25). ஊரிலுள்ளார் தம்மில் கூடி அலரையெடுத்து அரற்றவும் தூற்றவும் தலைவன் துறந்தமையாலான வருத்தத்தைத் தலைவி தோழிக்கும் புலப்படுத்தாது மறைத்தாள் (கலி. 124: 5,6; 9,10, 13,14). தனக்குத் துணையெனக் கொண்ட தலைவிக்குத் தலைவன் செய்த பழியினைப் பிறர் அலர் தூற்றி வருத்தம் செய்தனர்; அந்நிலையில் அவளைத் தலைவன் பிரிதல் கொடிது (கலி. 132: 23,24)... நீலமலர் என்று புகழ்ந்த தலைவனை அந்நாளில் அழகால் வருத்திய கண்கள் இன்று ஊரார் தூற்றும் அலரால் நேர்ந்த துன்பத்தால் பீர்க்கம் பூப்போலப் பசலைகொண்டன (கலி. 143: 48-51). கள்ளருந்தியோர் தம்முள் அக்கள்ளின களிப்பு மிகுகையில் அதுகண்டு ஊரினர் அலர் தூற்றுதற்கு அஞ்சி அதனைப் பிறர் அறியாமல் முயலும் முயற்சியால் யாவரும் அறியும்படி தாமே பரவிப் பின் உலகம் அலர்தூற்றக் கேட்டுத் தம்முள்ளே நடுங்கி அக்களி மதரைக் காத்து மறைப்பர் (பரி. 10: 65-68). ‘நின் பரத்தைமையாகிய கொடிய திறம் ஊரின்கண்ணதாகிய அலர் வாயிலாய் வந்து தலைவியுடைய செவியிற் படுமாயின் அவள் ஊடமாட்டாளோ’ எனத் தோழி தலைவனை வினவினள் (பரி. தி. 2: 55,56).

2. மலர். சேற்றில் வளரும் நூற்றிதழ்த் தாமரை அலரின்-மலரின்-வரிசையாய் ஏற்றத் தாழ்வில்லாத சிறந்த குடியிற் பிறந்தவர் வேந்தர் (புறம். 27:1-4). நீர் உண்ணுகின்ற துறையினிடத்தே மலையலரைக் கொணர்ந்து ஒதுக்கும் தலைநீரால் வளம் பொருந்திய நாட்டினை யுடையவன் அதியமான் நெடுமானஞ்சி (புறம். 390:24-26). கூத்தீர் மலையடுக்கத்தே அலர் பரந்த வரிநிழலில் இளைத்திருப்பின் பல ஓசைகளைக் கேட்பீர் (மலை. 289-291). குன்றில் மலர்ந்த கர்ந்தள் அலர் போல மணக்கும் மேனியள் தலைவி (அகம். 4:15-17). வண்டினம் ஊதுந்தோறும் கோங்கினது அலரில் குரவ மரத்து நறுமலர்கள் உதிரும் (அகம். 317:10,11). ‘நம் தோட்டத்துப் புதரில் மலர்ந்த பீர்க்கின் அலர் சிலவற்றைக் கைக்கொண்டு தலைவரிடத்தே போய் நும் காதலி இத்தன்மையினள் ஆயினள் என்று என் பசலையைக் குறித்து அவர்க்கு அறிவிப்பாரைப் பெற்றால் நன்று’ எனத் தலைவி தோழியிடத்தே கூறினள் (குறு. 98). இலையில்லாத கிளைகளில் வண்டின் கூட்டம் ஆரவாரிக்க முலையை ஒத்த கோங்கின் முதல் அலர் விரிந்தது (குறு. 254:1-3). அலர் நிறைந்தது தாழை (குறு. 340:4). விரிந்த அலரையுடையது புன்னை (குறு. 351:5,6). தண்ணிய நறிய காவி (நெய்தல) தேன்மணம்வீசும் அலரையுடையது (நற். 123:6) ‘காதலர் பகைவரித்தே திறை பெறுமாறு வினைவயிற் பிரிந்த

முயற்சி நம் தோளழகு மறையப் பொன் நிறத்தை யுடைய பீர்க்கினது அலர் போலும் பசலை படரச் செய்தது' எனத் தலைவி வருந்தி மொழிந்தாள் (ஐங். 452:3-5). வழிகள் வனப்பெய்துமாறு கார் காலத்தே அலர் பரவின (ஐங். 483:1). மகளிரது ஐம்பாலிடத்துக் கிடந்த அணிகளும் பொன்மாலை யும் போல் இளவேனிற் காலத்தில் கட்டவிழ்ந்து மலர்ந்த பலவகை அலரும் வேங்கைமலரும் மண லிலே ஒழுங்குபடக் கிடந்தன (கலி. 32:3-5). இள வேனிற் காலத்தில் அலர்பரந்த துறைகளை யணுகி நுண்மணலைக்கோலம் செய்து நீரொழுகியது (கலி. 35:6). தேனினம் மொய்க்கும் அலரை யுடைய வேங்கை அழகுடையது (கலி. 48:1). ஊரில் உள் ளோர் பழி கூறுகின்றமையால் தலைவியின் நறு நுதல் ஒளி கெட்டுப் பீர்க்கினது அலர் போலும் பசலையினது அழகினைக் கொண்டு பிறையின் வனப்பை இழந்தது (கலி. 53:14,15). நீல அலரை வென்ற கண்ணுடையவள் தலைவி (கலி. 57:9). அடுக்கமெல்லாம் மணம் நாறுகின்ற கூரிய அழகி னையுடைய அலர் கொண்ட காந்தளின் வடிவ மைந்த துடுப்பென்று கூறும்படியான திரண்ட முன்கைகளையுடையவள் தலைவி (கலி. 59:3,4). அலர் மலிந்த நீலமணியை யொக்கும் நிறத்தையுடைய நெடிய தோள்களால் தலைவன் ஏறு தழுவினான் (கலி. 102:25,26). தலைவன் பிரிந்த வருத்தத்தைத் தலைவி தோழிக்கும் புலப்படுத்தாது மறைத்தாளா யினும் பீர்க்கினது அலர் போலும் பசலையால் அணி கொண்ட அவளுடைய பிறைநுதல் அவ் வருத்தத்தினைப் புலப்படுத்தியது (கலி. 124:5-8). நீலமென்று தலைவன் புகழ அவனை வருத்திய கண்கள் இப்பொழுது பீர்க்கலர் போலப் பசந்தன (கலி. 143:49-51). தலைவன் அடும்பின் அலரைக் கொண்டு கோதை புனைந்து தலைவிக்குக் கொடுப் பான் (கலி. 144:30-32). திருமாலின் கண்கள் தாமரை அலர் இரண்டினைப் பிணைத்த தொக்கும் (பரி. 2: 53). அலரிடத்துத் திரியும் மகன்றிற் போலப் பிரி யாது காதலன் மார்பைப் புணர்ந்து இன்புறும் சிறப்பினை நல்குவது பரங்குன்றம் (பரி. 8:43-46). தலைவி கயத்திலுள்ள நெய்தல் அலர்போன்ற கண்ணினள் (பரி. 8:74,75). சுனையில் பாய்ந்தாடும் பாவையருடைய அழகிய இதழ்களமைந்த மை யுண்ட கண்ணாகிய தாமரை அலர், தாள் தோள் முதலிய உறுப்புக்களாகிய தாமரைக ளெல்லாம் புனல் தாமரைகளொடு வேறுபாடு தோன்றாது விளங்கின (பரி. 8:112-117). முகைப்பருவ மகளிரும் தங்கிய மணத்தையுடைய புதிய அலர்வாய் அவிழ்ந் தாற்போலும் பருவ மகளிரும் ஆகிய இளையவ ரெல்லாம் வையைப் புனலாட்டிற்குச் சென்றனர் (பரி. 10:19-21). விளையாடுவோர் இளந்தளிரைப் போட அவை அலரையும் அரும்பையும் சார்ந்து கிடந்தன; அலரைச்சார்ந்து கிடந்தது ஐந்தலைப் பாம்பு போலவும் அரும்பைச் சார்ந்து கிடந்தது அப்பாம்பின் குட்டிபோலவும் தோன்றின (பரி. 10: 68-73).

3. மலர்தல். அறிவால் அமைந்தவர் தம் செயலை முடித்தற்கு அக்காலம் வருமளவும் அடங்கியிருக்கு மாறு போலக் காலம் வருந்துணையும் அலர்-மலர் தல்-செல்லாத அரும்புகளை யுடைய கொம்புகளால் இளவேனிற் காலத்தில் பொழில்கள் மிகுந்த அழகு பெற்றன (கலி. 32:8,13).

4. மாலை. ஊரார் தூற்றும் அலர் ஆவிரை, பூளை முதலிய பூக்களை இடையே சேர்த்துக் கட்டிய எருக்கின் அலரை-மாலையை-தந்தது எனத் தலை வன் கூறினன் (நற். 152:1,2).

**அலர்வாய்ப் பெண்டிர்** - அலர் கூறுதலைத் தம் தொழிலாக உடைய மகளிர். தலைவி துறைவனோடு கொண்ட நட்பை முன்னே அலர்வாய்ப் பெண்டிர் அம்பல் தூற்றுதலினாலே பலரும் அறிந்தனர்; இப்பொழுது தலைவி திருமணம் செய்து கொண்டமையால் ஆரவாரமுடைய அவ்வூரில் அலர் அவிந்தது (அகம். 70:5-17). அம்பல் மிக்க மூதூரிலுள்ள அலர்வாய்ப் பெண்டிர் கூறுவதைக் கேட்டு யாதொன்றும் அறி யாதேன் போலப் பெருமூச்சு விடவுமில்லை என்று நற்றாய் உரைத்தாள் (நற். 143:7-8). தலைவனது பண்பியலை ஆராயாது கொண்ட நட்பு பக்கத் துள்ள அலர்வாய்ப் பெண்டிர் தலைவி மேனி மீது படர்ந்த பசலை குறித்துப் பழித்துப் பேசும்படி யாகி விட்டது (நற். 378:7-12).

**அலர்வாயவிழ்ந்தன்னார்** - பூத்த மலர் போன்ற பருவ மெய்திய பெண்கள். புனலாட வையைக்குச் செல்லும் பெண்களை முகைப் பருவத்தார் என்றும் அலர் வாய் அவிழ்ந்தன்னார் என்றும் பாகுபடுத்திக் கூறுவர் (பரி. 10:19,20).

**அலரி** - 1. மலர். புதரிலுள்ள கிளையில் வெண் ணாரை இருப்பது போலக் கூதளஞ் செடியில் அலரி பூத்துள்ளது; அப்பூவின் பொன்னிறப் பொடி கருநிறப் பன்றியின் மீது விழ அது பொன் உரைக் கும் கட்டளைக்கல் போலத் தோன்றுகிறது (அகம். 178:7-11). ஓவியனின் அரக்குத் தோய்ந்த எழுது கோல் போன்ற தலையில் நுண்ணிய பஞ்சைக் கொண்ட பாதிரியினது வெள்ளிதழை யுடைய அலரியை மகளிர் தெருவில் விலை கூறி விற்பர் (நற். 118:7-10) குமிழின் அலரி மகளிர் காதில் அணி யும் குழை போன்றிருக்கும்; அப்பூ மலைவழியில் கல்

லென்னும் ஒலியுடன் உதிர்ந்து கோலஞ் செய்தாற் போல் பரவிக்கிடக்கும் (நற். 286:1-3). விண்ணளாவிய சிகரங்களில் தோன்றிய செங்காந்தளின் மணங் கமழும் அலரி வரையர மகளிர் விளையாடுதலால் மலையடிக்கீழே வீழ்ந்து பரவிக் கிடப்ப அது கச்சுப் பரந்த களம் போல அழகாய்த் தோனறியது (குறி. 195-199). முதிய குரங்கு கிளைகளில் தாவும்போது உதிர்ந்த அலரி பரந்து கிடக்கும் மலைச்சாரல் வேலன் வெறியாட்டுக் களம் போன்றுள்ளது (அகம். 182:16-18). பிடவஅலரி செந்நிலத்தே யுள்ள நுண் மணல் மீது உதிர்ந்து அழகு செய்யும் (அகம். 154:4, 5). கூந்தலிற் சூடும் மாலை தொடுக்க அடும்பின் அலரி பறிப்பதுணடு (நற். 145:2,3). தொண்டை நாட்டினர் விடியுற் காலத்தில் மலரும் அதிரல் அலரியைத் தம் சுருண்ட கரிய மயிரில் வண்டு மொய்க்கச் சூடுவர் (அகம். 213:1-5). மாரிக் காலத்து மலரும் பிச்சிஅலரியை (பித்திகம்) மாலையாகக் கட்டிச் சந்தனம் பூசிய மார்பில் அணிந்துகொள்வர் (நற். 314:3,4). பிச்சிஅலரியைத் தொடுத்த தொடையாகிய வடத்தைத் தலையிலே சூடுவர் (குறி. 117,118). காட்டிலுள்ள முல்லை அலரியைப் பறித்து மலைச் சாரலிலுள்ள பார்ப்பன மகளிர் சூடிககொள்வர் (நற். 321:3,4). மாசறக் கழுவிய கூந்தலில் கூதிர்க்காலத்து மலரும் முல்லையின் அலரியை வண்டும் சுரும்பும் மொய்க்க மகளிர் வைத்துக் கொள்வர் (நற். 366: 4-6) பெருமணம் கமழும் சிறு முல்லை அலரியைத் தலைவனும் சூடினன்; இளைஞரும் அணிந்தனர் (நற். 361:1,2). தலைவி சூடியது போலக் குவளை அலரியொடு இடையிட்டுத் தொடுத்த முல்லை மலராலாகிய மணங்கமழ் மாலையை இளையராகிய வீரரும் சூடினர் (நற். 367:7-10). அரும்பற மலர்ந்த வண்டு மொய்க்கும் வெண் கடம்பின அலரியைத் தொடுத்துச் சீவிய கூந்தலில் தலைவி சூடிக்கொள்வாள் (அகம. 257:5-8). தாழைத்தாது அப்பிய கூந்தற் பின்னலில் தான் விரும்பும் அலரின இதழைழ நலத்துடன பின்னிய தலைவி படுக்கையறையில தலைவனுடன புன்னகை பூத்து நன்மொழி பேசி மகிழ்வாள் (அகம். 353:19-23). ஆய் கானத்து அன்றலர்ந்த அலரியென மணக்கும் மார்பினள் தலைவி (அகம். 69:18-20). பொருள்வயிற் பிரியும்போது தலைவன் தலைவியின் கூந்தலில் கார்காலத்தில் வண்டு தேனைப் பருக மலர்ந்த அலரிகளைச் சூட்ட வருவதாகச் சூளுரைத்துச் செல்வான (நற. 214:3-6). மாலையிலே வண்டு வாய்திறப்ப மலரும் பிடா அலரியினது மணத்தைப் பனிக்காலத்து ஊதைக் காற்றுக் கொண்டுவந்து வீசத் தலைவனைப் பிரிந்த தலைவி வருந்துவாள் (அகம். 183:10-15). இளவேனிற் பருவத்திலே செம்முகைகளை யுடைய முருக்க மரத்தில் விரிந்த அலரியினைக் கோதி அதன் பொடிகளை யுண்டு மாமரக் கிளையின் உச்சியிற் றங்கிச் செங்கட் கருங்குயில் இனிமை தோன்றக் கூவியது (அகம். 229:16-20). மலைச் சாரலில் கூதிர்க்காலத்துக் கூதள அலரியின் மணங் கமழும் வண்டின் இனிய ஒலியைக் குகையிலிருந்து அசுணமா கூர்ந்து கேட்கும (நற். 244:1-4). யாழிசை போல ஒலிக்கும் வண்டும் சுரும்பும் மணத்தை விரும்பித் தங்கும் அலரிகளை யுடைய தழைமிக்க கொம்பை முறித்துத் தலைவன் வேட்டை நாயை அடித்து அதன் குரலை யடக்கித் தலைவியின் சொல்லை எதிர்நோக்கி நின்றான் (குறி. 149-152). இனவண்டுகள் ஆரவாரிக்கும்படி மலர்ந்த முல்லை அலரியை நாழியிடத்தே கொண்டு வந்த நெல்லுடனே தூவித் தெயவத்தை வணங்கி மாலைக் காலத்தே விரிச்சி (நற்சொல) கேட்பது வழக்கம் (முல்லை. 6-11). திருமணத்தின்போது புதல்வனைப பெற்ற மகளிர் நாலவர் கூடிக் 'கற்பு வழுவாமல் கணவன் விரும்பும் துணையாகுக' என்று நீரொடு அலரியும் நெல்லும் சேர்த்து மணமகளின தலைமீது சொரிந்து வாழ்த்துதல் வழக்கம் (அகம். 86:11-16).

2. அல்லிப்பூ. அலரியை-அல்லிப் பூவை-நாரினாற் கட்டித் தலையிற் சூடிக் கொண்டனர் (புறம். 371:3, 4). பாதிரிப் பூவினை அலரிப் பூவுடன் கலந்து வெள்ளிய தாழை மடலில் கண்ணியாகத் தொடுத்து உமணர் அணிந்தனர் (அகம். 191:1-3).

3. கதிரவன் ஒளி. இருட் காலத்தே தங்கி அலரி - கதிரவன் ஒளி - விரிநத விடியற் பொழுதிலே செல்க எனக் கூத்தர் ஆற்றுப் படுத்தப் பெறுகின்றனர் (மலை. 195, 196).

**அலவன்** - நண்டு. யாழ்ப்பத்தர்த் துளையின் வாய் மறைய முடுக்கிய ஆணி அலவனின்-நண்டின் - கண் ஒக்கும் (பொரு. 9,10). தலைவி கையிலணிந்துள்ள தொடி அலவன் கண் தன்மை பெற நெருங்கப் பல தொழிற்பாடமைந்து இரண்டாய்ச் சேர்ந்துள்ளது கலி. 85:6,7). பொன்வரி அலவன் (குறு. 303:6,7). செந்நிறத்தினையும் புள்ளிகளையுமுடைய தேர்ச் சக்கரம் போன்ற அலவன் (கலி. 146:23). கொல்லனின் உலைக்களத்தில் முறிந்து கிடக்கும் குறடு போன்ற கவைத்த காலையுடையது அலவன் (பெரு. 207,208). பக்கத்தே நீண்டுள்ள பெரிய கொடுக் கினையுடைய அலவன் வளையிலிருந்து வெளிப் படுகிறது (அகம். 350:3,4). மாலைப் பொழுதில் கரையில் ஆடிக்கொண்டிருந்த அலவன் வளையில் புகுகிறது (அகம். 260:5). ஈர மணல் மேட்டில் ஆடித் திரியும் அலவனின் காலபட்டு அமைந்த வரிகள் சூதாடும் வட்டுப்பட்ட வடுப்போல் இருக்கும் (கலி. 136:1-4). கடற்பரப்பிலுள்ள அடைகரையில்

அலவன் ஓடியதால் உண்டாய அடிச்சுவட்டினை ஊதைக்காற்று நுண்மணலை வீசி மறைக்கும் (பதி. 51:6-8). அலவன் நகத்தாற் கீறிய மணற்குவடு அழியுமாறு அலை வீசியது (குறு. 351:2-4). ஞாழல் மர வேரின்கண் அமைந்த அலவனின் மனை அழிய அலை முரசுபோல் முழங்கி வீசுகிறது (குறு. 328: 1-3) அலவனின் வளை சிதையுமாறு பச்சைக் கோரையின் அடியைக் கடாக்கள் கொம்பில் குத்தி யெடுக்கினறன (பெரு. 208-210). கடற்கரையில் புலால் நாற்றத்தை யுடைய அலைகள் அலவனை அடித்துக் கொணடு திரும்பி வரும் (நற். 219:5). விளையாட்டு மகளிர் கடற்கரையில் அலைக்கும் காலத்து அஞ்சி ஓடிய அலவனை மீண்டும் அம் மகளிர் பிடிக்க இயலாதவாறு கடலலை அடித்துக் கொண்டு சென்றதால் அதன் வருத்தம் நீங்கியது (குறு. 316:4-7). பரதவருடைய சிறுகுடி புலவு நாற்றத்தை யுடைய அலவன் விளையாடும் மணல் பரந்த முற்றத்தைக் கொண்டது (நற். 239: 4, 5). தொண்டி நகரம் அலவன் தாக்குதலால் இறால்மீன் புரளும் துறைகளையுடையது (ஐங். 179: 2, 3). ஆமூரில் வாழும் உமணர் அரிசிச் சோற்றை (அலவன்) கலவையுடன் பாணர்க்கு அளித்து விருந்தோம்புவர் (சிறு.193-195). காவிரி கடலிற் கலக்கும் புகாரிடத்தே மகளிர் பகற்பொழுதில் அலவனை ஆட்டி விளையாடுகின்றனர் (பட். 97-103). திரை மோதும் தாழை வேர்ப்பகுதியில் இருக்கும் வளையிலுள்ள இரட்டை அலவனை மகளிர் நோக்கி மகிழ்ந்து விளையாடினர் (நற். 123:9-12. தலைவி தோழியொடு புன்னை நிழலில் பொன்னரி அலவனை ஆட்டி விளையாடினாள் (குறு. 303:6,7). செருந்தி மாலையணிந்த குறுமகள் அடைகரையில் அலவனோடு விளையாடி ஓய்வு கொள்கிறாள் (அகம். 280:3, 4). மணம் வீசும் மணல்மேட்டில் அலவன் ஓடுமிடமெல்லாம் ஓட வியலாது களைப்புற்று அதனைப் பிடிக்கும் விருப்பம் நீங்கிய இளமையுடையவள் தலைவி எனத் தலைவன் அவளது இளமையை நினைவு கூர்கிறான் (நற். 106:1-5). தான் உடுத்தியுள்ள தழையாடை சிதைய, மலர்மாலை வாட, வளை கழலத் தலைவனுடன் அலவனைப் பிடித்தாட்டியபோது தலைவியின் சிலம்பு உடைந்து விட்டது (நற். 363:7-10). இடந்தலைப் பாட்டில் தலைவி வளை யொலிக்க அலவனாட்டி நாணித் தலைகுனிந்து நின்றாள் எனத் தலைவன் கூறினான் (ஐங. 197:1, 2). நீர்த்துறையில் உதிர்ந்த நாவற் கனியை இழுத்துக்கொண்டு தாழையின் வேர்ப் பக்கத்திலுள்ள வளையில் தங்கிய தன் பெடைக்குக் கொடுக்கும் அலவனைத் தோழிக்குக்காட்டி அதன் நல்லியல்பை நினைந்து தலைவன் சென்றான் எனக் குறை நயக்கும் தோழி கூறல் (அகம். 380:4-8). கடற் கரைச் சோலையில் தேர்ச் சக்கரத்தில் சிக்கி இறவாதவாறு அலவனமேற் படாமல் பாகன் தேரைச் செலுத்துதற்கு வாய்ப்பாக நிலா எறித்தது (நற்.11: 6-9). தலைவி காமம் மிக்க கழிபடர் கிளவியால அலவனை நோக்கித் தன் துன்பம் நீங்குமா எனக் கேட்கினறாள் (அகம. 170:8-14). நிலாப போன்ற வெண்மணலில ஓடும் அலவன, தலைவன கொடுமைக்கு நாணி விரைந்து வளைக்குள் புகுவதாகப் புனையப்பட்டுள்ளது (கலி. 131:15-18). அலவன தன் பெடையொடு மகிழ்ந்தது; இதனைக கணடு தலைவனொடு தலைவி கூடி மகிழ்ந்தாள்; பின் அவளுடைய நாணமும் நலனும் உள்ளமும் அவனோடே தங்கின (கலி. 146: 20-24). நாவற் கனியைத் தன் இனமெனக் கருதி மொய்த்த வணடினைக் கனியென்று எண்ணி அலவன பற்றிக்கொள்ள அது ஒலித்தது; அவ்வொலியைக் கேட்ட இரைதேடும் நாரை வரவே நணடு வணடினை விடுதது ஓடியது (நற். 35:1-7).

**அலை** - திரை. அலைநீர்த்தாழை அன்னம் போல் பூத்தது (சிறு. 146). தலைவனைப் பிரிந்து காம நோயால் துயிலாது வருந்தும் தலைவி கடலை நோக்கி, 'தாழையை அலைகள் அலைக்கினற நளளிரவிலும் நின் குரல் கேட்கின்றது; நீ யாரால் துன்புற்றாய்; கூறுவாயாக' என்று வினவுகின்றாள் (குறு. 163). கல்லை உருட்டிக்கொண்டு ஓடி வரும் காட்டாற்று வெள்ளததில் எழும் அலை காட்டில் மோதுகிறது (நற். 7:3, 4). நத்தை, நணடு, இறால், வாளை ஆகியவற்றைப் பொன்னாற் செய்து வையை அலையிலிட்டு விளைக, பொலிக என்று புனலாடுவார் வாழ்த்துவார் (பரி. 10:85, 86).

**அலைவாய்** - திருச்சீரலைவாய். (இது செந்தில் என்றும் திருச்செந்தூர் என்றும்வழங்கபபெறும்). திருப்பரங் குன்றத்தி லுறையும் முருகன் ஆறு திருமுகங்களையும் பன்னிரு திருக்கைகளையும் உடையவனாய்க் காற்றுப் போல் விரைந்து செலலும் வேழம் மேற் கொண்டு அடியார்க்கு அருள உலகம் புகழும் சிறப்பினையுடைய அலைவாய்-திருச்சீரலைவாய்-சேறல் நிலைபெற்ற பண்பாகும் (முரு. 78-125). வயலில் வேலை செய்யும் உழவர் மகிழ்ந் தெழுப்பிய ஆரவாரத்திற்கு அஞ்சி, மயில் பறந்து வந்து அலைவாயிலுள்ள மலையகம் பொலியத் தங்குகிறது; அங்குத் திருமணி விளக்கு ஒளிருகின்றது; இப் பதி போர் செய்தலிற் சிறந்த முருகனுக்குரியது; இம் முருகன் பேரில் சூளுரைத்தலும் உண்டு (அகம். 266:17-21).

**அவரை**-ஒருவகைக் கொடி. அவரைக கொடியில் பவழம் கோத்தது போலப் பூக்கள் மலர்ந்திருக்கும்

(சிறு. 164). புதரில் படர்ந்துள்ள அவரையின் ஒளியுடைய மலர் கிளி மூக்கை ஒத்திருக்கும் (குறு. 240: 1, 2). மணிபோலும் பூக்களையுடையது அவரை (மது. 293). மழைக்காலத்து அவரைப் பூவைப் போல வெண்மேகம் மலையைச சூழ்ந்துள்ளது (ஐங். 209.3, 4). மலைப்பக்கத்தே குறவர் தினையரிந்த மறுகாலில் பனிக்காலத்தில அவரை மலர்ந்துள்ளது (குறு. 82:3-6). அவரையரும்பு பனிக்காலத்து மலரும் (அகம். 217: 9, 13). அவரை மலர் உதிர வாடைக்காற்று வந்தது (அகம். 243:1, 9). தினையரிந்த தாள்தோறும் முற்றிய தயிரின் விதிர்ச்சி போன்ற பூக்களை உதிர்த்து, அரிவாளை யொத்த வளைந்த காய்களை அவரை கொண்டிருந்தன (மலை 109, 110). வெள்ளாட்டுக் குட்டியின வற்றிய வயிறு, அவரைக் கொடியிலுள்ள உள்ளீடில்லாத காய் போனறுள்ளது (அகம். 104:8, 9). பறம்புமலை வளத்தை நினைவு கூரும் கபிலர், அவரைக் கொழுங்கொடியில் வெள்ளிய காய்கள் அறுக்கும் செவ்வியிலுள்ளதைக் குறிப்பிடுகிறார் (புறம். 120:10, 11). தினையைக் கொய்த அரிகாலில் விளைந்த அவரையிடத்துப் படியும் கிளியை ஓப்பும் மலைநாடன் புதுவருவாயுடையவன் (ஐங். 286:1-3). அவரைத தளிரைத் தின்னும் ஆமாவைக் கானவர் ஓட்டும் ஆரவாரம் மலையகத்து எதிரொலிக்கும் (மது. 292-299). சிறப்பாகக் கருதப்பெறும் வரகு முதலிய உணவுப் பொருள் நான்கனுள் அவரையும் ஒன்றாகும் (புறம். 335:4-6). வரகரிசிச் சோற்றையும் வேளைப் பூவைத் தயிரிற் பெய்து இடைமகள் சமைத்த புளிங்கூழையும் பாண்டிய நாட்டில் அவரை பறிப்பார் நிறைய உண்பர் (புறம. 215:1-6). வரகுச் சோற்றுடன் வேங்கை மலர் போன்ற வரிகளை யுடைய அவரை விதையை வேகவைத்துக் கொடுத்து முலலை நிலத்தவர் பாணருக்கு விருந்தயர்வா (பெரு. 190 – 195). வேங்கைபபூப் போன்ற அவரை விதை, மூங்கிலரிசி, நெல்லரிசி ஆகியவற்றைச் சேர்த்தாக்கிய புளியங் கூழைக் குடில்களில் இரவில கூத்தர் பெறுகுவர் (மலை. 435-439). மந்தி அவரையை நிறையத் தின்று வாயில் அடக்கி வைத்திருப்பது பணட வணிகா பை போன்றுள்ளது (ஐங. 271: 1,2). தலைவி தோழியருடன் பறித்த மலர்களுள் அவரையும் ஒன்று (குறி. 87).

**அவல் - 1. உணவுப்பொருள்.** ஆம்பல் தண்டாற் செய்த வளையலணிந்த மகளிர் அவலை வாயிற் பெய்து தின்று கொண்டு புனல் பாய்ந்தாடுவர் (புறம். 63: 12,13). அவலெறிந்த உலக்கையை வாழைமரத்திற் சார்த்திவிட்டு மகளிர் வள்ளை கொயவர் (பதி. 29: 1,2). கரும்பையும் அவலையும் பண்டமாற்றாகக் கொடுத்துவிட்டு மான் தசையையும் கள்ளையும் பெற்றனர் (பொரு: 216,217). வைக்கோல் வேய்ந்த குடிலின் முற்றததே அவலிடிப்பதனால் எழும் உலக்கை யோசையைக் கேட்டுப் பக்கத்திலுள்ள கிளி அஞ்சும் (பெரு: 225-227). காட்டில் உள்ள மூங்கில்நெல் அவலிடிக்கும செவ்விபெற்றுள்ளது (மலை.120,121). புதுமணபபெண் பிற பெணகளுடன் கொணர்ந்த நெறகதிரை அவலாகக் குற்றும் உலக்கையிடிக் கஞசிய குருகு வாழை மடலில் தங்காது மாமரத்திறகுப பறநது செலலும் (அகம். 141:14-21). கருபபஞ் சாறறையும் பாலையும் பெய்து கலந்த அவலைப் பாணர் முதலியோர்க்கு உறந்தையில் பகுத்துக் கொடுத்தனா (அகம. 237: 11-14). தொண்டி நகரில பச்சை அவலிடித்த உலக்கையை நெல்வயலின் வரப்பில சாய்த்து வைத்துவிட்டு மகளிர் விளையாடினர் (குறு. 238: 1-4).

**2. பள்ளம்.** பண்டம் பெரிது பெய்யப் பெற்ற சகடம் அவல-பள்ளம் - இழியினும் மிசை ஏறினும் அவ்விடத்து வரும் இடையூறறை நினைந்து உமணர் அச்சுமரத்தினகண் சேம அச்சைக் கட்டிவைப்பர் (புறம். 102: 2-5). நாடாயினும், காடாயினும், அவலாயினும், மேடாயினும எந்நிலத்து ஆடவர் நலலவரோ அந்நிலமே நல்லது (புறம. 187). அவலாகச் செயயப்பட்ட பசிய ஓலைக்குடை புதரிடத்தே யுள்ள முல்லை மலரைப் பறிக்கப் பயனபட்டது (புறம். 352: 3,4). பகைவரது உடலிற் பதிந்த படைக் கருவிகளைப பறிக்கும்போது குருதி வெளிப்பட்டு மழைக் காலதது ஓடுகினற கலங்கற் செந்நீரைப் போல நிலத்தே பரநதோடி அவலிற் புககது (பதி. 49: 10-12), அவலும மேடுமாகிய பல நிலத்துள்ள நீர் ஒன்று சேர்நது கவலைக் கிழஙகு கல்லின குழியிலே அருவிபோல விழுந்தொலிககும் (மது. 240,241). நெகிழ்ந்த அவலில் நீலமணி போன்ற நெய்தல், தொய்யிற் கொடியுடன் மலர் கிறது (மது. 282,283). மேட்டு நிலம் பிளவு பட்ட அவலில் பாம்பு மறைந்து கிடக்கும குழிகளும் உள்ளன (மலை. 198,199). பரற்கற்களுடைய அவலில் ஆண்மான் துள்ளித் திரியும் (அகம். 4:4). அவலில் சங்குடைநதாற் போன்ற கோடற்பயிர் வளரும் (அகம். 23:5,6). முல்லை நிலத்திலுள்ள மழைநீர் நிறைந்த அவலில் தேரை சிறு வாத்தியங்சள பல ஒலிப்பதுபோல் ஒலிக்கும் (அகம். 154:1-3). கட் பருகிய உழவர் காஞசிமரத் துண்டுகளை நட்டுக் கருப்பங்கழிகளைக் குறுக்கே வைத் தடைத்து நெல் வயலாகிய அவலில் நீரைத் தேக்கி வருந்திக் கட்டிய வளைந்த அணைமீது கொககு

அமர்ந்து வழிந்தோடும் நீரில் வரும் மீனைப் பிடிக்கக் காத்திருக்கும் (அகம். 346:5-11). திசையெல்லாம் மறையுமாறு காலிறங்கி மேகம் மழைபொழிய அவல் தோறும் ஆடுகளத்தே ஒலிக்கும் பறையைப் போலத் தேரை ஒலிக்கும் (அகம். 364:1-3). பருக்கைக் கற்களுடைய அவலிலுள்ள நீரை ஆணமான் தன் துணையொடு குடித்துத் துள்ளித் திரியும் (குறு. 250:1-3). நீர் நிறைந்த அவலில் தவளைச் சுற்றம் ஒலித்தலின், தலைவி தேர்மணி ஒலியைக் கேளாள் (நற். 42:3-5). சிச்சிலிப் பறவையின் வாய போன்ற அரும்புடைய முல்லையும் பரல்களும் நிரம்பிய அவல உடையது காடு (நற். 61:8,9). சூடுற்ற பரற்கல் மிக்க அவலின ஒருபுறத்தில் குந்தாலியாற் குழித்த கிணற்றை எயதி ஆனிரை காக்கும் இடையர் தோணடிய சிறு குழியி லுள்ள நீரை யானைக் கூட்டம் பருகும (நற். 240:6-9). மூங்கில் வாடி அழகிழந்த சுரநெறியிலுள்ள மலைப்பாதையில் அவலில் ஊறும் சின்னீரை யானையொடு பொருது புலி உணணும் (நற். 333:2-4). மெல்லிய அவல் மருங்கின் முல்லைக் கொடிகள மலர்நதுளளன (ஐங். 448:3). அவல் தொறும் தேரை தெவிட்டக் கார் தொடங்கியது (ஐங். 453:1)

3. விளைநிலம். பலயாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி புகரும் சிறுகண்ணுமுடைய யானையைப் பகைவர் தேயத்துச் செலுத்திப் பசிய அவல்-விளைநிலம்-சூழ்ந்த அரிய மதிலரண் பலவறறையும் கொண்டான் (புறம். 6:9-15). நன்னனின தண்பணை நாடு புனல்பொரு புதவுகளையும மெல்லிய அவலினையும் கொணடிருந்தது (மலை. 450-453).

அவலம் - 1. துன்பம். 'நும்முனாகிய தந்தை இறந்தானாகவின் திசையெங்கும் சூழ்வரும் கவலையுற்ற மனத்தின்கண் அவலம்-துன்பம்-தீருமாறு நீ வந்து தோன்றினாய்' என மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணனை மாறோக்கத்து நப்பசலையார் பாராட்டுவர். (புறம். 174:18-23). சேரமான் குடக்கோச்சேரலிரும்பொறை பரிசில் நீட்டித்தமையால் வருத்தமுற்ற பெருங்குன்றூர் கிழார் தாம் அவல நெஞ்சமொடு மீணடு செல்வதாகக் குறிப்பிட்டார் (புறம். 210:13). வெளிமான் துஞ்சிய வருத்தம் தமக்குக் கண்ணில்லாத ஊமன் கலங்கவிழ்ந்து கடலில் விழுந்த வருத்தம் போன்றதெனக் குறிப்பிட்ட பெருஞ்சித்திரனார், 'அவலமாகிய மறுசுழியின் கண் பட்டு இவ்வாறு சுழல்வதைவிட இறந்துபடுதலே நன்று' என நொந்துரைத்தார் (புறம. 238:14-19). சுரத்திடையே கணவனை யிழந்த அரிவை அவனைக் குறித்துப் புலம்புகையில், 'யான் நின்னைப் பிரிந்து ஆற்றேனாகின்றேன்; அதனால் இப்பொழுது நீ என் திறத்திலே அவலங் கொள்ளற்க' என்றாள் (புறம். 253:1). வருவோர்க்குத் தோல்வியினால் நெஞ்சில் தோன்றும் அவலத்தைப் போக்கித் துலாக்கோலை யொத்த நடுவுநிலைமையை உடையது அறங்கூறும் அவையம் (மது. 489-492). குறவரும் மருளும் குன்றத்தின்கண் திசைமயக்கத்தினால் கலங்கி அறிவழிந்த நெஞ்சில் அவலம் கெடும்படி காடுகாத்து உறையும் கானவர் கடுக வந்து கூத்தர்க்கு உதவுவர் (மலை. 275-286). 'என் அவலம் பலரும் அறியும்படி விளங்கித் தோன்றும்' எனத் தலைமகள் போக்குடன்பட்ட நிலையில் தோழியிடத்துக் கூறினள் (அகம. 95.3). 'கவர்த்த நெறிகளிலே காதலர் பிரிந்து சென்றார் என்று மிகவும் அவலம் கொள்ளாதே' எனத் தோழி தலைவியைப் பிரிவிடை வற்புறுத்தினாள் (அகம. 159:11,12). 'நீ தனித்திருக்கத் தலைவர் பொருள்வயிற் பிரிந்து செலவார் என்று துன்புறும் அவல நெஞ்சத்து வருத்தம் அகலுமாறு அவர் தம்மொடு நீயும் வருவாய என உடன்போக்கு நேர்நதனர்' என்று தோழி தலைவியிடம் உவந்துரைத்தாள் (அகம். 289: 1-3,13-15). தலைவன் தான் பொருள்வயிற் பிரிவதனைத் தலைவிககு உரைத்தானாக, அவளது முகம் வைகறைக காலத்து மதியம் போலத் தனிமை கொள் அவலமொடு மெலல மெல்லப் புதுக்கவினை யிழந்தது (அகம. 299:10-13). கவர்த்த வழிகளில் யாமரஙகளை யுடைய அவலம் மிக்க நீண்ட சுரததிடையே பிரிநது சென்ற தலைவனது கொடுமையை நினைந்து தலைவி துஞசா நோய கொண்டாள் (குறு. 224:1-3). 'நீர் அன்பினறிப பிரிநது போவீராயின் கார்காலத்து மாலைப் பொழுது வருங்கால, இத்தலைவியது அவலத்தைத் தாங்குதல் என்னால் இயல்வதனறு' எனத் தோழி தலைவனிடம் சொன்னாள் (நற். 37:7-11). கையற வந்த மாலைப்பொழுதில் தலைவியும் தோழியும் மெய்சோர்ந்து குறியிடத்தினின்றும அவல நெஞ்சினராய்ப பெயர்ந்து செல்வர் (நற். 58:8,9). 'யானுற்ற காம நோயாகிய அருந்துயர் அவலத்தைத் தீர்க்கும் மருந்து தலைவியே யன்றிப் பிறிதில்லை' என்று தலைவன் தன்னெஞ்சொடு புகன்றான் (நற். 140:9-11). தலைவனுடன் ஏகிய தலைவியைக் குறித்து வருந்திய தாயை நோக்கி, 'இனி நின் அவலத்தை அடக்கிக் கொள்வாயாக' எனறு அறிவுடையோர் கூற, 'அஃது யாங்ஙனம் இயலும்' என அவள எதிர்வினாவினள் (நற். 184:4,5). 'தன மகளை நயந்தோளாகிய தாய் நொநதழி அவலமொடு இனி எனனாகுவளோ' என இடைச்சுரத்திலே தலைவனுடன் தலைவியைக் கண்டோர் கூறினர் (நற். 324:1-3). 'நள்ளென்னும் யாமத்திலே

யாம் நினையுந்தோறும் இல்லச் சுவரைப் பொருந்தி நயவரு குரலையுடைய பலலி நல்ல சொற்களைக் கூறுகின்றதாகலின் அரும் பொருள் குறித்து அகன்ற காதலர் மீணடு வந்து நின தோளைப் பெறுவர் போலும்; எனவே நின அவலம் நீங்குவதாக' என்று தலைவியைத் தோழி வற்புறுத்தினாள் (நற். 333:7-12). 'யான் அணிநத கலன்களை நெகிழ்த்த தனிமை கொண்ட அவலமொடு இரவிலும் கணதுயின்றிலே னாகலின், என்னொடு இவ்வுலகம் போரிடுமோ, இவ்வுலகத்தொடு என் அவலமுறும் நெஞ்சு போரிடுமோ' எனத் தலைவி வேட்கை பெருகிய நிலையில் ஆற்றாமை மீதூர்ந்துரைத்தாள் (நற். 348: 7-10). மிக்க துயராகிய அவலத்தாலே உயிர் போய்விடு மளவிற்குத் தேயந்து பாழபட்ட தாயர்தம் நெஞ்சங்களைத துன்ப நினைவுகள் வருத்துமாறு தலைவி தலைவனுடன் போனாள (ஐங். 313:2-5). 'பாகனே விலக்குதறகரிய நினைவுகளினால உணடாகும அவலத்தை என் காதலியும் தீர, யானும் என் பெருநதோள் அழகு பெற அவளை முயங்கத் தேரினை விரைந்து ஏவுவாயாக' என்றான் வினை முற்றி மீளும் தலைவன (ஐங். 485.1-3). மனத்திற்கு இருளைத் தருகின்ற பார்வை இடையினறித் தலைவனது அருட்பார்வை நீங்கினாலும் அவலங் கொண்டு அழிபவள தலைவி (கலி. 10:18,19). நீ வினைமேற் செலலுமிடததே இங்கிருந்து வருவோரிடம் தலைவி பற்றிய செய்தியை வினவாதே; வினவினால், இவளது இறப்பினை ஆர் கூறவும் கூடுமாகலின் அவ்விடத்தே நின் வினை முடியாமல ஓர் அவலம் பிறத்தலும் உண்டாம' எனத் தோழி தலைவனிடம் சொன்னாள் (கலி. 19: 7-13). 'யான நுமது ஆகத்திடத்து முயக்கத்தையே அளியென உடையேனாதலால், நீர் பிரிநது சென்ற பின் அவலங்கொணடு நெஞ்சழிவேனோ' எனத் தலைவி தலைவனை வினவினாள் (கலி. 20:9, 10). விலக்குதற்கரிய நினைவுகளா லுணடாகும் அவலததைச் செய்யும் காம நோயகku, 'இவள ஆற்றுவள' எனறு கருதாது, 'இவள இறநதுபடுவள்' என்று தோழி வருநதும்படி தலைவிக்கு அநநோய் மிகுநதது (கலி. 28:10,11). விலக்குதற்கரிய நினைவுகளாலுண்டாகும் அவலத்தைத தருகினற காம நோயைச் செயத தலைவனைப பெறத் தலைவி நெஞ்சு விழைநது வருநதும (கலி. 123:16-18). 'யான கலககததை யடையக கடல அதனை நோக்கி என்னுடைய இநத அவலததைத் தனனுடைய மெயயிலே கொண்டது போல அரற்றுதற்குக் காரணம் எனனோ' என்று பிரிவிடையாற்றாத தலைவி புலம்பினள் (கலி. 134:13,14). தலைவன பகைவரிடத்துச் செயயுப போாத் தொழில்களை முடித்து அவர் மண்ணைக் கவர்ந்து கொண்டு இருட் பரப்பினை ஞாயிறு போக்கினாற் போலத் தலைவியின் அவலம் அகலுமாறு வந்தனன (கலி. 148:21-24).

2. **கவலை.** கீழ்கடல் பின்னதாக மேலகடலின் அலை தன் குதிரைக் குளம்பை அலைக்குமாறு சோழன் நலஙகிள்ளி படையெடுதது வலமாக முறையே வருதலு முண்டாமென மனஞ்சுழன்று நெஞ்சு நடுங்கும் அவலம-கவலை-பாய வடபுலத் தரசுகள் துயிலாத கணணை யுடையவாயின (புறம். 31:13-17). 'நேற்று நீ புதுபபுனலில தலைப்புனை தழுவி இளந்துணை மகளிரொடு ஆடினையென்ற அலர் பெரிதாயினும எமககு இபபொழுது அஃது அவலமன்று; மறறு, அலைவாயின்கண அமர்நத முருகனொடு நீயுற்ற சூளே கவலையைத் தருகின்றது' எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (அகம். 266). 'கழி நீர் பெருகப் பெற்றுள்ளது; மற்றும் பாம்புகளுடன் சுறாமீனகளும் திரியும்; பொழுது மயஙகியது என நின காதலியாகிய தலைவி நீ வரும வழியைக் குறித்து நினனைப் பற்றிக் கொள்ளுகினற அவலம் ஒழியுமாறு நீ இன்று எம்மூரில தஙகிச் சென்றால் என்னோ' என்று தோழி தலைவனை வினவினள் (அகம. 340: 9-13). தலைவன் பிரிந்து போன வழிக் கொடுமையைக் குறித்து அவலங் கொள்ளாது தனனைத் தோழி இடித்துரைததமை பற்றித் தலைவி வெறுதது கூறினாள் (குறு. 12:3-5). 'பருவ வனப்புற்ற தலைவி யாஙகாகுவளோ என்னும் அவல நெஞ்சமொடு உசாவாத வேறு பல கவலைகளை யுடைய மக்களைக கொண்டது இப்பேதையூர்' எனத் தோழி சிறைப்புறத் தலைவன கேட்குமாறு சொனனாள (குறு. 109.4-7).

3. **வறுமை.** 'தொனனைமான் இளந்திரையனது நிலைமையைக கேட்பாயாக; அதனால நின அவலம - வறுமை - கெடுவதாக' எனறு பெரும் பாணன் ஆற்றுப்படுததப் பெற்றனன (பெரு. 38).

4. **கேடு.** 'துயிலிடையே தோன்றி அருந்துயரை யுண்டாக்கும் கனவினால் நேரும் அவலத்தை-கேட்டை-எண்ணிப் பார்க்கில் அஃது எலலையறிய வொண்ணாத மலையினும் பெரிதாயிருத்தலின் தலைவி கண்ணுறங்குதற்கும் யான அஞ்சுகின்றேன்' எனத தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாவினாள் (கலி. 48·21-24).

5. **மாயை.** 'யான கிளக்கும் இதனைக் கேட்பாயாக; நின்னிடத்து உண்டாகிய அவலம்-மாயை-அதனால் கெடுவதாக' என்று மாங்குடி மருதனார் பாணடியன நெடுஞ்செழியனுககுக் காஞ்சிப் பொருளுணர்த்தினார் (மது. 207, 208).

6. நீநு. ஊரிடத்தே அலமந்து தலைவி மோர் விற்றுத் திரிதலைக் குறித்துத் தலைவன் அவளிடம் சொலலாடிய போது, 'அஃது எமது குலத்திற்கு அவலம்-தீது-அன்று' என்றாள் தலைவி (கலி. 108: 5-8).

அவவு - ஆசை. தலைவி கையிலணிநத செம்பொன னாற் செய்த சுழலும் தொடியை நோக்கி, மகன் அணைத்துக் கொணடு அழும் இனிய குரல் அவவு-ஆசை-மனமுடைய நமக்கு மகிழவு தரும் எனத் தோழி தலைவியிடம கூறினாள் (நற். 212: 7-10). அவவு மிக்க தலைவன் நெஞசு தலைவியின் முயக் கத்தை விரும்புதலால சுரநெறி அரிய வாயினும் குதிரை பூட்டிய தேரைச் செலுத்தி வருதற்கு எளிய வாயின (ஐங். 360). 'முயங்கிய முயக்கத்தை விடுத் துத் தேடும் பொருளினிடத் துள்ள அவவினைக் கைவிடுவாயாக, அதுவே நிலைபெறும் பொருள்' எனத் தோழி தலைவனிடம் உரைத்தாள் (கலி. 14: 17-19).

அவா - ஆசை. 'முரசினையும் யானையையும உடைய மூவேந்தரை இன்னமும் யானொருவனே பாடும் அவாவை அறியேன்' என ஒருசிறைப்பெரியனார் கூறுகின்றார் (புறம். 137: 1-3). 'மழைநீரை ஏற்ற பசுமட் பாண்டம் போல அவா வெள்ளத்தினைத் தாங்க வியலாத உள்ளததுடன் பெறுதற் கரிய இரவுக் குறியை விரும்புகின்றாய்; அது கிட்டாது' என இரவுக்குறி மறுக்கப்பட்ட தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுகிறான் (குறு. 29: 1-4). இரவில் வேட்கை மிகுதியால் உற்ற அவா தலைவியை வருத்த அவள் பெருமூச்செறிந்து அம்புபட்ட பெண்மான் போல வருந்தினள் (நற. 61: 1-3). மழையை அவாவுற்று வாடும் நெறபயிருக்கு அப் பருவத்தே மழை பொழியாது சிறுதூறல் தூறினால் வருத்தம் தோன்றும்; அதுபோல, நீங்காத முயக் கத்தை அவாவும் மகளிரிடம் ஓர்யாண்டிற்கு ஒரு கால் தலைவன் வருதல துன்பம் பயக்கும் (கலி. 71: 23-25). பரத்தை, வேட்கையால் தலைவனை எதிர் கொண்டு வந்து முயங்கிப் பினனும் அவாவினால் வருந்தத் தலைவன், அவளை முயங்கி வருத்தந் தீர்த்தான் (கலி. 97: 22-25).

அவி - தெய்வத்திற்கு வேள்வியிலிடும் உணவு. தேவர் அவியுணவினோர் எனப்படல் (புறம். 377:5). இந் திரன் கேட்ட வரததின்படி சிவபெருமான் சிதைதத கருவை மாதவர் வாங்கிச் சென்று தாம் செய்த வேள்வித் தீயில் அவியுடன் இட்டனர்; பினனர் அவ்வவியை மாதவர் மனைவியர் அருந்தினர் (பரி. 5: 37-41). புனலாடு மகளிர் வைகையில் நீர்ப் பெருக்குக் கண்டு அகில், பூ, ஆராதனைப் பொரு ளாகிய அவி முதலியவற்றை ஏந்திச் சென்றனர் (பரி. 6: 11-13). முருகன் திருவடியை யாவரும் தொழும் பரங்குன்றம் சென்று மலரைத் தூவி அவியூட்டி வழிபட்டால் பொய்சூள் செய்ததனால் உளதாம் தீங்கு நேராது என்று நம்பிக்கை சுட்டப் பெறுகிறது (பரி. 8: 80-84). குங்குமச் சேறு, அகிற் சாந்து, கற்பூரம், ஆகியவற்றைச் சாந்தம்மியில் குழவியால் அவி பொருந்திய குண்டத்திலெழும் தீ நிறம் பெற அரைப்பர் (பரி. 10: 81-84). ஆடவரும் மகளிரும் செய்த தானப் பயனைத் தூய்க்கச சாநது, மாலை, புகை, அவிபுணவு முதலியவற்றை நலகி 'வையை யாற்றில வானம மழை பொழிவதாகுக; வெள்ளப் பெருக்கு வையையில் எனறும் நீங்கா திருப்பதாகுக' என வையையை மக்கள வேண்டு கின்றனர் (பரி. 16: 50-55).

அவிப்புழுக்கல் - வேகவைத்த உணவு. சுடுகாட்டில புலையன் உபபிலலாத அவிபபுழுக்கலைப் பின் நோககாமல் நிலததின மீது வைததுப் படைத்தல் வழககம (புறம. 363: 12-15).

அவியன் - குறுநில மன்னன் (வளளலுமாவன). மாறோக் கத்து நப்பசலையார் புறநானூறு 383-ஆம் பாடலிலும், காவிரிப்பூம்பட்டினததுச் செங் கண்ணனார் அகநானூறு 271-ஆம் பாடலிலும இவனைப பாராட்டியுள்ளனர். தனது புகழ்பாடுங கிணைப பொருநர்க்குத தேறலையும் உயர்நத ஆடையையும நலகுவதோடு அவர் பிற வள்ளலை நாடிப் பாடாதவாறு பெருஞ செல்வம வழங்கு வான். அவியனைப பெற்றுள்ளமையால், வெள்ளி நிலை திரிநதாலும கவலை இல்லை என்று கிணை ஞர் கூற்றில வைததது மாறோக்கத்து நப்பசலையார் பாராட்டுகினறார் (புறம. 383). களிப்பு மிக்க கள் ளில எனனும் ஊரினையும நலல தேரினையும் உடையவன அவியன் எனறு இவனைக் காவிரிப பூமபட்டினத்துச் செங்கணணனார் சிறப்பிததுள் ளார் (அகம். 271:12).

அவியுணவினோர் - தேவர் விடியலில் கிணையிசைத் துத் தன்னை அவியுணவினோர் - தேவர் - புறங காப்ப அறநெஞ்சினோன நெடிது வாழ்க என வாழத்தி வந்த பொருநர்க்குக் கரவாது வழங்கும் மாணபினன சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி (புறம். 377:3-8).

அவிர் - விளக்கம். திங்களின் அவிர-விளக்கம்-பகலில் கெடும் (அகம். 277:1,2) பொன்னின் அவிர் போன்றது பசலை (கலி. 22:19).

அவிழ் - சோறு. பசிமிகக, வியர்வையுடைய உடலில் அவிழ்-சோறு- புகாமையால வாடிமுடங்கிய குடர்

முழுகுமாறு, தாளிப்புடைய துவையலொடு நெய் கலந்த உணவினைப் பொற்கலத்தில் குமணன் இரவலர்க்கு நல்கினன் (புறம். 160:4-11). கள்ளி மிக்க சுடுகாட்டில் பாடையை நிறுத்திப் பின், புல்லினைப் பரப்பி அதில கள்ளும் அவிழும் வைத்து உண்ணுமாறு, புலையன் படைத்துப் பின் எரி யூட்டுவது வழக்கம் (புறம். 360:16-20). சூட்டுக் கோலிலிட்டுச் சுட்ட இறைசசியினைச் சமைத்து, அதனை வேண்டுவோாக்குக் குறையாமல் கொடுத்தும் அவிழ் வேண்டி வருபவர்க்கு உரிய இடமளித்து உண்பித்தும் உணக என்று கோதமனார் தாம் பாடிய வள்ளற்கு அறிவுறுததினார் (புறம். 366:18-20). முழ்ப்பப் பெயத முழு அவிழப் புழுக்கல் (புறம. 399:9). தம்மனையகத்துத் தங்கிச் செல்லும் பாணர்க்கு, எயினர் மேட்டு நிலத்தே விளைந்த நெல்லின அவிழாகிய சோற்றை, நாய் பற்றிக் கொணடு வந்த உடும்புப் பொரியலொடு வழங்குவர் (பெரு. 131-133). பெரும்பாணர் முல்லை நிலத்துச் சீறூரில் வரகின் சிறிய அவிழுடன் அவரைப பருப்புப் புழுககலையும் பெறுவர் (பெரு. 192-195). முல்லை நில மக்கள் தம் மனையகம் போந்த பாணர்க்குக் கழைவளர் நெல்லின் அவிழாகிய சோற்றை மகமுறை தடுப்ப வழங்குவர் (மலை, 178--185). வேனிற் காலத்தில் வயல்வேலை செய்வோர் கொள்ளும் புயுறும் பாலொடு கலந்து ஆக்கிய, வெள்ளிக் கம்பியை நறுக்கி யிட்டது போன்ற வெள்ளிய அவிழ்க் கஞ்சியை நிரம்பக் குடித்து மர நிழலில் ஓய்வு கொள்வர் (அகம். 37:12-16) ஆய் இரவலர் உண்கலம் நிறைய அவிழ் வழங்குவான் (அகம். 152;19-21). குத்தித் தீட்டிய வரகரிசியினைச் சுனைநீர் கொண்ட பானையிலிட்டுக் கல்லடுப்பிலேற்றிச் சமைத்த அவிழாகிய சோற்றைப் பசுமபாலுடன் கலந்து இடையர் வழிச்செலவுார் பசி நீஙக வழங்கினர் (அகம். 393:3, 10-17), பல் வேறுபட்ட நிறத்தையுடைய சிலவாகிய அவிழ் மடையொடு சிறுமறியைக் கொன்று முருகனை வணங்கி வெறியாட்டெடுப்பர் (குறு. 362:2-4).

**அவிழ்ப்பதம்** - சோறாகிய உணவு. வறுமையுற்ற பாணன் மனைவி குபபையில் முளைத்த கீரையினை உப்பினறி வேக வைத்ததனோடு நீர் உலையேற்றி வெந்த அவிழ்ப்பதத்தை மோரும் இன்றி உண்டனள் (புறம். 159:9-12). நாளும் கள்ளுண்டலிலே கழித்த பொருநனை ஒருநாள் அவிழ்ப்பதம் கொள்க எனப புரவலன் வேண்டினான் (பொரு. 111, 112).

**அவினி** - சேரநாட்டுக் குறுநில மன்னன். இவன் ஆதன் அவினி எனப்படுவான். ஓரம்போகியார் தாம் பாடிய ஐங்குறுநூற்று வேட்கைப் பத்தில் இவனைப் பாடியுள்ளார். அதன் பத்துப் பாடல்களும், 'வாழி யாதன் வாழி அவினி' என்றே தொடங்குகின்றன. [இவன் ஒரு சேர இளவரசன் என்றும் ஆதனுடைய மகனாகலா மென்றும் ந. சு. குறிப்பர்: ப. மு. பக். 80.]

**அவுணர்** – அசுரர். பிறர் வருந்த அச்சத்தைச் செய்யும் அவுணர் கூட்டம் ஞாயிறறைக கொணடு போய் மறைக்க, உலகம் இருள் பட்டது; அதனாலேற் பட்ட உலகின் துன்பம நீங்குமாறு அஞ்சனவண்ணன் அதனை மீட்டுக் கொணர்ந்து, இருள் நீங்கும்படி வானில நிறுத்தினான் (புறம. 174:1-5). பேரலைகள் திவலையாயச சிதறுமாறு பெருங் காற்று வீச, நீர் மிக்க கடல நடுவில துன்புறுத்தும் அவுணர்க்குப் பாதுகாப்பாக அமைந்த சூருடைய மாமரத்தின அடியினை முருகன் தடிநதான் (பதி. 11:1-5). அவுணர்களின் வெற்றி இல்லையாகுமாறு, பூங்கொத்துக்களைக் கொண்ட மாமரததினை முருகன் வெட்டினன் (முரு. 59-61). அவுணர் கூட்டத்தை அழித்து வென்ற மாயோன் பிறந்த ஓண நாளில் ஊர்களிலுள்ளார் விழாவெடுபபர் (மது. 590, 591). போர்க்களம் இரத்தத்தால் சிவக்குமாறு அவுணரைக் கொனறழித்த அம்பையும் யானையையும் வீர வளையினையும உடையவன் முருகன (குறு. 1:1-3). தேவர் முதலியோர் இரந்தமையால் அவுணரின் வலியினை அழித்தற்கு முக்கண்ணனாகிய சிவபெருமான் அவர்தம் முப்புரஙகளையும் அழித்தனன் (கலி. 2:1-4). (புண்ணியசனம் என்னும்) ஒரு கூற்றினாற் பெயர் பெற்றவரும் கொனறுணணுதலை அஞ்சாதவரும் கொடுஞ்செயலுடையவருமான மாயம் வல்ல அவுணர் கிளையினை முருகன் வேலினால் தடிந்தனன் (பரி. 5:5-7). திருமால், நான் முகன், சிவன முதலியவரோடு அவுணரும் முருகனை வழிபடுவதற்கு வந்துறைபுமிடம் திருப்பரங் குன்றம் (பரி. 8:1-10).

**அவுணர்க்கு முதல்வன்** – திருமால். உலகினை அளந்த போது அப்பெருமை கணடஞ்சிக் கடலிற்பாய்ந்த அவுணர்க்கும் அவ்வாறு கடற் பாயாது நின்ற அவுணர்க்கும் திருமால் முதல்வன் (பரி. 3:54-56).

**அவை** - அறிஞர் ஆராயுமிடம். வீரஞ்சான்ற சோழரது உறையூரின்கண் விளங்கிய அவைக்களத்தில், அறம் நிலைபெற்று விளங்கியது (புறம். 39:8-10). சேரமான் குட்டுவன் கோதையின் நாளவைக்கண்ணே தலைநிமிர்ந்து செல்வது இரவலர்க்கு எளிது (புறம். 54:3,4). 'அறநிலை கலங்காத அன்பினையுடைய அறங்கூறவையத்தில அறக்தன்மையில்லாத

ஒருவனை வைத்து முறை கலங்கிக் கொடுங்கோல் செய்தவனாகுக' என்று பூதப்பாண்டியன் வஞ்சினம் கூறினான் (புறம். 71:7-9). சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளியைக் கைக்கிளைத்திணையில் பாடுங்கால் பெருங்கோழி நாய்கன்மகள் நக்கண ணையார், அவனுடைய தோளைத் தழுவுவதற்கு அவைக்கண்ணுள்ளாரை நாணுவேன் என்று குறிப் பிட்டுள்ளார் (புறம். 83:3). ஏறைக்கோன் அரசர் பொருந்திய அவையில் மேம்பட்டு விளங்கும் சிறப் பினன் (புறம். 157:4,13). சோழன் கரிகாற் பெரு வளத்தான் அறத்தைத் தெளிவுறவுணர்ந்து ஒழுக்க மிக்க அந்தணரது அவையத்து வேள்விக்குரிய முறையறிந்தவர் காட்டப் பல வேள்விகளைச் செய்து முடித்த பயனை நன்கறிந்த அறிவினை யுடையவன் (புறம். 224:4-10). அரசருடைய அவைக் களத்தில் தன் உயர்ந்த புகழை வெளிப்படுத்திய வன் நம்பி நெடுஞ்செழியன் (புறம். 239:10). சான் றோர் கூடியிருக்கும் அவையிடத்துச் சென்ற ஒரு வனுடைய பூசலை அவையோர் விரைந்து தீர்ப்பர் (புறம். 266:8,9). செல்வக் கடுங்கோவாழியாதன, தன் முன்னோரைப் போல அரசவைகள பணியும் படி, அறத்தை விரும்புவதோடு மறததையும் விரும் பிச் செயற்படும் கொள்கை யுடையவன் (பதி. 85:5, 9-11). சேர சோழ பாணடியர் தம்மிற் பகை நீங்கி அரசிருத்தற்குரிய அவையாக இருந்து நாட்டின் பொது நலத்திற்குரியனவற்றை ஆயவர் (பொரு. 54, 55). பகை முற்றியவர் தன அரசவையிற் புகுந்தால அவர்கள் மாறுபாட்டைப் போக்கும்படி, சோழன கரிகாற் பெருவளத்தான் சிறப்புற ஆண்டனன் (பொரு. 188,189). சான்றோர் விளங்கிய பெரிய அவைகளில் பேயாகிய மகளிர் உலவி ஆடுமாறு பகைநாட்டினை நெடுஞ்செழியன் பாழ செய்தனன (மது. 161-163) புகழமிக்க அறங்கூறவையத்தார் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை வாழ்த்தினர் (மது. 778). இசை யினை எக்காலமும் கேட்கின்ற செல்வமிக்க அரச ரவையில் அவர்கள் விரும்பிக் கேட்குமாறு பாணர் பணணிசைப்பார் (மலை. 39,40). நல்லவர் கூடியிருப் பதும் கற்றோர் தாம் கற்ற அறிவினை நன்கு எடுத் துரைத்தற்கு ஏற்றதுமாகிய அவை நன்னன் நாட்டில் விளங்கியது (மலை. 77-79). கள்ளினை மிகவுடைய அஃதை, தன் நாண்மகிழிருக்கையாகிய அவைக் கண் வரும் பொருநர்க்குக் களிற்றையும் அணி கலன்களையும் நல்குவன் (அகம். 76:3-5). சோழரின் உறையூரில் அறம்பொருந்திய நல்லவை நிலை பெற் றிருந்தது (அகம். 93:4,5). பாணன் என்பானொடு கூடிக் கட்டி என்பவன் தித்தன் வெளியனுடன போர் புரிய வந்து, அவனுடைய நாளவையில் எழுந்த கிணையோசைகேட்டு அதன்வழி அவன் பெருமை யுணர்ந்து அஞ்சிப் போர் செய்யாது ஓடி னான் (அகம். 226:13-17). தலைவியின் நலம் வெளவி அறியேன் என்ற அறனிலாளனை மரத்திற் பிணித்து நீற்றினைத் தலையிற் பெய்த போது அவையத்து ஆர்ப்பு பெரிதும் எழுந்தது (அகம். 256: 16-21). சீறியாழ் இசைததுப் பாடிய பாணர் மகிழ்ந்து ஆர வாரம் செயயுமாறு பலகலன்களை அளித்து நாள வையில் விளங்கிய திதியன் வேளிரோடு போர் புரிய வாளுறை கழித்தனன் (அகம்.331:10-14). தலைவன் வரைவினைத் தமர் ஏற்றுக் கொண்டதனைத் தோழி தலைவியிடம் கூறுமிடத்து, 'நம் அவையில் பிரிநதவர்களைக் கூட்டுவிக்கும சான்றோரும் இருந் தனர்' என்று தந்தையர் தனனையரைச் சுட்டிக் கூறினாள் (குறு. 146:2-5). தலைவன் முறையுடையர சனது செஙகோல் அவையததுத் தன் காதல் கைகூட முறையிடுவதாகக் கூறலு முணடு (குறு. 276:5-7). மாறுபட்டு ஊஞசலாடாது அழுது மீளும் பரத்தை யாகிய இளம்பெண்ணைத தலைவனொடு கூட்டி மீணடும ஊசலாடுமாறு செயயாத மக்களொடு கூடிய இவ்வரசனின் அவை பயனற்றது என்று தலைவறகு வாயிலாக வந்த பாணனிடம் தோழி, தலைவனின் பரததைமையைக் கடிநது வாயில் மறுத்தாள (நற். 90: 7-12). வீரஞ்சான்ற சோழரு டைய உறையூரிலிருந்த அறஙகூறவை அறப்பணபு கெடாது நிலைத்திருநதது (நற். 400:7, 8). தாமரை மலரில் நெற்கதிர் சாயநது கிடப்பது அவைபுகழ் அரங்கின் மேல் ஆடுவாள் நுதலில் செருகிய வயந தகம் போல் தோனறும் (கலி. 79:2-5). பாம்பும் அவைப்படில் உயயும (கலி. 140:22). அறநெறி அறிந்து நடக்கும் கணணோட்ட முடையவனைப் பற்றி அஃதில்லார் கற்பித்துரைதத மொழிகள் அனைத்தும், நன் மக்கள் கூடிய அவையில் ஆராய் கின்றபோது கெட்டொழியும் (கலி. 144:70-72). தலை வனை மாலையாகிய மத்திகையால் புடைத்து வழக் குரைக்கும் அவையத்தில் அவனைக் கொணர்நது தமக்கு உரிமையைத் தோழிமார் நிலைநாட்டினர் (பரி. 20:61-63). அவைக்களம், அவையகம், அவையம் காண்க.

**அவைக்களம்** - அவையினர் கூடும் இடம். கோசரின் அவைக்களம் குறிப்பிட்டுப் பாராட்டும் சிறப்பு டையது (புறம். 283:7). அவை, அவையகம், அவையம், காணக

**அவைப்பு** - குத்துதல். வரகின் அவைப்புறு வாக்கலை யும் - குத்தி வடிக்கப் பெற்ற சோற்றையும் - வேளைப் பூவினைத் தயிரில இட்டுச் செய்த புளிங் கூழையும் அவரை பறிப்பார் உண்டனர் (புறம்.

215:1,5). இரும்புப் பூண் பொருந்திய வயிரம் பாய்ந்த உலக்கையால் அவைப்புச் சிறந்த அரிசியா லாகிய வெண்சோற்றை நண்டுடன் கூடிய கலவை யுடன் உழவர் வழிச்செல்லும் பாணர்க்களித்தனர் (சிறு. 193-195). செம்மறியாட்டுத் தயிராகிய உலை யில் அவைப்புச் சிறந்த வரகரிசியையும் புற்றீ சலையும் இட்டுச் சமைத்த இனிய புளிப்பு வாய்ந்த சோற்றில, பசு வெண்ணெயினை உருக்கிப் பெய்து தலைவனுடன வரும் இளையர் உணண எம்மூரார் வழங்குவர் எனத் தோழி கூறல் (அகம. 394:2-7).

**அவையகம் -** நன்மக்கள் திரளிடம் பழையன் என்னும் குறுநில மன்னனுடைய மோகூரிலுள்ள அவையகம் திகழுமாறு நான்மொழிக் கோசர் வீற்றிருந்தனர் (மது. 508,509). அவை, அவைக்களம், அவையம் காண்க.

**அவையத்தார் -** அவையிற் கூடும் சான்றோர். குற்றமற்ற அறங்கூறும் அவையத்தார் ஓலையின் தலையைக் கட்டி, அதன்மேல் அரக்கு இலச்சினை இடுவது மரபு (கலி. 94: 42,43).

**அவையம் -** நன்மக்கள் திரளிடம். மதுரையில் விளங்கிய அறங்கூறவையம் அச்சத்தையும் வருத்தத்தையும் பற்றையும் அகற்றி, விருப்பு வெறுப்பின்றித் துலாக் கோல போன்ற நடுவுநிலையோடிருந்து அறமுரைக் கூற தன்மையது (மது. 489-492). அவை, அவைக களம், அவையகம் காண்க.

**அவையல் -** குத்தலரிசி. யாழிற் கட்டப் பெறும் குற்றம் நீங்கிய நரம்பினுக்குத் தினையின் அவையல்-குத்தலரிசி - உவமை (பொரு. 16,17).

**அழகியல் -** அழகின் தன்மை. திருப்பரங்குன்றத்திற்கு வழுதியுடன் சென்றோரிற் சிலர் அங்கு நிகழ்ந்த பூசையின் அழகியலைப் பாராட்டினர் (பரி. 19:43),

**அழகு -** வனப்பு. விறலியின் எண்ணெய் தட வப் பெற்று இருண்ட கூந்தல், மெல்லிதாக விழுந்து தாழும் மழையின் அழகினைக் கொண்டுள்ளது என்று புனைந்துரைக்கப் பெற்றது (சிறு. 13,14), சிறு தேருருட்டி விளையாடிய பிள்ளைகள் செவிலித் தாயிடம் முலைப்பாலுண்டு தமது படுக்கையில துயிலுதற்கிடனான அழகுடைய வீடுகளைக கொண டது மருத நிலதது ஊர் (பெரு. 249-252). பரலிட்ட அழகமைந்த சிலம்பார்ப்பத் தலைவி இயங்குவாள் (கலி. 59: 6,7).

**அழல் – 1. தீ.** அழலில் - தீயில் - இட்டுச் செய்த பொற்றாமரைப்பூவை வெள்ளி நாரால் தொடுத்த மாலையைப் பாணன பெற்றான் (புறம். 11:17,18). அழலால ஆக்கப்பட்ட, தகடாகச் செய்த தாமரைப் பூவுடனே சம்பியாகச் செய்த நூலிலே யிட்டுப் புனைவினைப் பொலிந்த பொன்னாலான நறிய மாலையைப் பாணன் தலையிற் பொலியச் சூடி னான (புறம். 29:1-5). மலையமான திருமுடிக் காரியின் நாடு வேள்வி அழலை ஓம்பும் அநதண ருடையது (புறம். 122:2,3). பொததியார் மனைவி அழலால் விளங்கிய வயங்கிழைப பொலிந்த மேனியள் (புறம். 222:1,2). கரிபுற விறகின் ஈம ஒள்ளழல் அதியமான் உடலைப்பற்றி எரித்தாலும் எரிக்க; எரிக்காது விசும்புற நீளினும் நீளக; அவனுடைய புகழ் மாயாது' என ஔவையார் பாடியுள்ளார் (புறம். 231). வெளிமான் என்னும் வள்ளலைக் காண விரும்பிச் சென்ற பெருஞ் சித்திரனார், அவன் இறந்தமையினால அடைந்த ஏமாற்றத்திற்குச் சோறாக்கிய பானை யிலிருந்து சோறு வாராமல் அழல் வந்தது உவமை (புறம். 237:7). சுடுகாட்டில் ஈம ஒள்ளழலாகிய பாயலில் சேர்த்தித் தன் மனைவி முன்னர் மாய்ந்தமைக்குச் சேரமான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக் கோதை வருந்துதல் (புறம். 245:4-7). ஈமத்தில் அழலூட்டுவதன் முன் இறந்தோரது உடலைப் பாடையினின்றும் நீக்கித் தருப்பைப் புல்லின்மேல் கிடத்தி, எதிரே தருப்பையைப் பரப்பி அதன்மேல் சோற்றை வைத்துப் புலையன் படைப்பது வழககம் (புறம். 360:16-19). அழலைக் கக்கினாற் போன்ற ஒன்றும் பெறுதல் இல்லையாயின் உண கலத்தில் தெளிந்த கட்டெளிவைப் பொருநனுக்குச் சேரமான் வஞ்சன் அளித்தான் (புறம். 398:21-23). நாள், கோள், திங்கள், ஞாயிறு, கனையழல் என்னும் ஐந்தும் ஒருங்குபுணர்ந்த விளக்கம் போன்றவன் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. 14:3,4). இமையவரம்பன பகைவர் நாட்டை எரிபரப்பி அழல் கவர்மருங்கின் உருவறக் கெடுத்து அதன் தொலகவின் அழித்தான் (பதி. 15:7,8). பழனந்தொறும் அழல் போன்ற தாமரை ஆம்ப லொடு மலர்ந்தன (பதி. 19:19,20). அழல மருள் பூவின் தாமரை (பதி. 23:23). கானம் தீந்த கடிய வழி மிகுந்த காற்று வீசுதலால் சுடர் சிறநது சினந்து பசும் பிசிரையுடைய ஒள்ளழல் வழங்கும் இடத்தையடையது (பதி. 25:6-8). நாடெல்லாம் நின்று காணும்படி காட்டில் எரிகின்ற சுடர் போலும் அழல் யானையின் சினததி போன்றது (பதி. 40:28-31). பசும பிசிரையுடைய ஒள்ளழல் ஊழியினிறுதிக் காலததில் ஞாயிறு பலவாகத் தோன்றி மாயத்தோடு ஒளி திகழப் பெற்றுப் பொறுத்தற் கியலாத மயக்கத்தைச் செய்தலோடு ஒலியைச் செய்து திரிகின்ற ஊழித் தீயின் வண்ணத்தைக் கொள்ளுதற்குக் காரணமான கடுந்திறலால் பகைவர்களை அழித்த கொற்ற

வேந்தன செல்வக்கடுங்கோ வாழியாதன (பதி. 62: 5-9). அழலிலே உருக்கினமையால் குற்றமற்று ஒளிர்கின்ற பொற்கட்டிகளை இளஞ்சேரலிரும பொறை தானை மறவாக்குத் தரம்அறிந்து கொடுப்பான் (பதி.81:16,17). அழலென உயிர்க் கும் அஞ்சுவரு கடுந்திற லுடையது பாம்பு (முரு. 149,150). யாழின்மேல் போர்க்கப பெற்ற தோல் அழல் நிற உரு ஒக்கும் (பொரு. 5). அழல் திகழ்ந்து இமைக்கும் அஞ்சுவரு நெடுவேலையுடை யவன காரி (சிறு. 94,95). வண்டொலிக்காத அழல விர் தாமரையை (பொற்றாமரையை) பெரும்பாண னுக்குச் சூட்டுதல் (பெரு. 481,482). ஒள்ளழலில் இட்டுக குற்றமில்லாது விளங்கிய பொனனாலாய அணிகலன்களைச் செல்வ மகளிர் அணிந்தனர் (மது. 444-446). அழல்வாய் ஓரி (பட். 257). அழல் போல் காய்கதிர் (அகம். 1:10). வளவயலில் அழலின் கொழுந்து போல நெல் தோகையை யீன்றது (அகம். 13:17-19). அலங்கு கதிர் வேய்ந்த அழல் திகழ் நனநதலை (அகம். 169:2). அழற பிழம்பு போன்றது அசோகின் அந்தழை (அகம். 188:12). அழல் அவிர் அருஞ்சுரம் (அகம். 213:10). அழல் எறிகோடை (அகம. 219:15). காற்றினால் முருக்க மலர் உதிரபபெற்ற பெருங்கல் காட்டில அழல் பொதி யானை போலத் தோன்றும் (அகம. 223:5-7). இலவதது அழல அசைந்தன்ன அலங்குசினை ஒணபூ (அகம். 245:14,15). அழல தளிர்த்தாற் போன்ற மனையுறையும் சேவற்கோழி, போரிடுங்கால் அதன் கழுத்தில அழகாகக் காணப்பெறும் நிமிர்ந்து செறிந்த மயிர் போல முருக்க மரத்தில் பொங் கழல் மலர் செறிந்து காணபபெறும் (அகம். 277: 14-17). காட்டுத தீயாகிய முழங்கும அழலின ஒளி யுடைய காட்டில் ஆவிரை மலரால தொடுதத கோதையை மகளிர் மார்பில அணிவர் அகம. 301: 13-15). அழல் தளிர்த்தாற் போன்றது இருபபைத் தளிர் (அகம். 351:7,8). 'கரியாப் பூவிற் பெரியோர் (தேவர்) நுகர அழல் எழும வேள்விக குழியில் இடப்பட்ட யாமை, நிழலுடைய நெடுங்கயம் புக விரும்புவது இயலாத செயலாதல் போலத் தலை வியை எய்த வேண்டும் எனச் கருதும் நின் கருத் தும் இயலாத தொன்றாம் எனப் பொருள் தேடச் சென்ற விடத்துத் தலைவன் நெஞ்சு நோக்கிக கூறினான் (அகம். 361:10-13). பாலை நிலத்தில் மழை பொழிந்தமையால ஞாயிற்று மணடிலம் அழல் வீசித் திரியும் (அகம. 381:4,5). ஞாயிறு காய்ந்த நீரற்ற நிலப்பரப்பில அழல் மேய்நதுண்ட நிழலில்லாத வழியில ஆண்மான் நீர் வேட்கையில் பேய்த் தேரை நாடி ஓடி வருந் தும (அகம் 395:5-10). புன்கின் ஒளி மிகக தளிர் அழற் பிழம்பு போலும் (அழல தகைககு, எழில் தகை என்றும் பாடமுண்டு). (நற். 9.5). அழலவிர் நீளிடை (நற். 29.2). காடுகள் அழல கவர்ந்த மரங் களை யுடையவாய நிழலும் அழகும் இழந்து தனிமை நிலைபெற்று நலம சிதைநதன (நற. 256: 3,4). அழல்போலும் சிவந்த செவியுடையது கழுகின் சேவல் (நற. 352:4). அழலவிர் மணிப்பூண (ஐங. 232: 3). மூங்கில உராய்ந்து எழுநத முழங்கும அழலுக் குப் புலி அஞ்சும் (ஐங். 307:1). முழங்கழல் அசை வளி எடுப்ப இலவம்பூ மரத்திலிருநது இடியிறபட்ட தீயைப போல நிலத்தில் விழும் (ஐங. 320:1-3). அழ லவிர் நனந்தலையில் நிழலிடம் பெறாது பிணை மான் மறியொடு வாடியது (ஐங. 326:1,2). அழலவிர அரிய வழியே காதலியைப் பிரிந்து செல்லத தலைவர் துணிந்தார் (கலி. 2:8-10). அடிதாங்கும அளவினறி அழலன்ன வெம்மையாற் காடு கடியது (கலி.11.6,7). உயர்ந்த சிறு தூற்றை மறைதத முழங்கும் அழலின் நடுவே ஊடறுத்து வந்த காற்றுப் படின் தலைவி யின் மேனி வாடும் (கலி. 13:20,21) செறிந்த அழலை யுடைய காட்டில மலை வெம்ப, மண பிளக்க, நீர் நிலைகளில் துகள் உணடாயது (கலி. 20 5,6) யானை அகத்தே யிருநதகாலை மூங்கிலகள செறிநத உயர்ந்த மலை அழல்பிடிதது வளைதது்க் கொண டது (கலி. 25:5,6). காடு சூழந்த புகையழலை வேழம அதர்பபட மிதித்தது (கலி. 25:9,10). யானைக குழு வொடு குன்றழல வெஞ்சுரத்தை வேழம் கடநது சென்றது (கலி. 25:11). அழலிலிட்டு உருக்கிச் செயத பொற்றகட்டா லான கோட்டுப்பூ கொடிபபூக்கள் கொண்டு மாலை செய்யப் பெற்றது (கலி 54:1,2). புதல்வன் காலில் சுடும் பொனனாலே வளைதது ஈரமை சுற்றொடு கொடியழலினால் நிறமுணடாக கப் பட்ட கிண்கிணி கிடந்தது (கலி 85:1,2). ஐயர (முனிவர்) மாலையில் விளங்கும் அழலை ஆவுதி பணணினர் (கலி. 130:8,9). அழலவிர் வயங்கிழை (கலி. 137:5). தலைவனொடு கூடி நக்கதன் பயன் சேக்கையிற் கிடந்து வருந்த அழல் (காமத்தீ) உண் டாகிறது என்று தலைவி தோழிககுரைத்தாள் (கலி. 137:6,7). காமமாகிய பொறுத்தற்கரிய நோய் அறு தியாக அழலே (கலி. 139:30). 'வளியாகிய தெய்வமே, என் நலனுண்டு ஒளித்தானை நீ காட்டாயேல், என் கண்ணீரைத் தெளித்து அதன்கண் எழுகின்ற அழலாலே நின மேனியெல்லாம் சேரச் சுடுவேன்' என்று தலைவி கூறினாள் (கலி. 144:40-44). உலர்ந்த மூங்கில் தம்முள் இழைதலால் எழுந்த அழல் அவ் விடத்தைக் கைக்கொண்டு மயங்கிய வழியை வெம்மை செய்யும் (கலி. 150:3-5). திருமால் ஏந்திய ஆழிபபடையின் நிறம் சுடும் பொனனொடு எழுந்து விளங்குகின்ற அழல் நுடக்கத்தை ஒக்கும் (பரி. 2:

49-51). ஆலங்குழை அழலை ஒக்கும் (பரி. 4:66,67). பனிக்கடலிற் பாறைகள் துகள்படப் புக்குப் பிணிமுகம் ஊர்ந்து, அமர் செய்து தீயழல் ஒலிப் பத் திரியவிட்டுச் செவ்வேள் சூர்மாவின் முதல் தடிந்தான் (பரி. 5:1-4). மூவகை மதில்கள் ஓர் அழல் அம்பாலே வேவத் திசைகள் அழலச் செய்தவர் அமரர் வேள்வியிற் பாகமுண்ட பைங்கட் பார்ப் பான (சிவபெருமான) (பரி. 5:25-27). புனலாடு மகளிர் புகைத்தற்கு அழலும் சூடுதற்குப் பூவும் ஆராதனைப் பொருள்களாகிய அவியும் பொனமீன் முதலிய பலவும் ஏந்தி வையைக்குச் சென்றனர் (பரி. 6:11-13). குங்குமச் சேறு, அகிற்சாந்து, பச்சைக் கருப்பூரம் ஆகியவற்றைச் சாந்தம்மியிலிட்டு அழல் போனற நிறம் அமையும்படி குழவியினால் அரைத் தனர் (பரி. 10:81-84). வேதியரது நெறி முறைப்படி வளர்ந்த நுடங்கு அழலைப் பேணிய சிறப்புடன் மகளிர் அதன்கண் தம் ஈர அணியைப் புலர்த்தினர் (பரி. 11:84-86). அழல்போல் விளங்கும் அவிரிழை (பரி. 21:24).

2. **செவ்வாய்க்கோள்.** இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் காக்கும் நாட்டில் அழலும்-செவ்வாய்க் கோளும்-வெள்ளியும் ஒன்று சேராமையால் மழை வளம் சிறக்கும்; பசியும் நோயும் நீங்கும்; நாடு பொலிவு பெறும் (பதி. 13:25-28).

3. **மலர்** (உவமையாகு பெயர்). அழல்-மலர்-மிக்க கிளைகளையுடைய வேங்கை மர நிழலில் தங்கிக் களைப்பாறுதல் (அகம். 398:17).

4. **நஞ்சு** (உவமையாகு பெயர்). பூம்பொறிப் பொலிநத அழல்-நஞ்சு-உமிழும் அகன்ற படத் தையுடையது பாம்பு (நற். 75:2,3).

5. **விளக்கு** (ஆகுபெயர்). மகளிர் செந்தீயால் உண் டான செம்மையான அழலை-விளக்கை-ஏற்றத் தொடங்கினர் (கலி. 119:13)

6. **வேள்வி** (ஆகுபெயர்). மாதவர் அழல்-வேள்வி- வேட்டு வசிதடியை அவியுடனே அதன்கட் பெய் தனர் (பரி. 5:38-41).

7. **விளக்கம்.** சேற்றில் அந்தூம்பு வள்ளையின் அழல்-விளக்கம் - பொருந்திய கொடி பின்னிக் கிடக்கிறது (அகம். 376:13,14).

8. **அழுதல்.** பல்கதிர் ஞாயிறு மேற்கு மலையை அடைநதது; தலைவி மாணலம் கெட ஏங்கி அழல் -அழுதல்- தொடங்கினள் (அகம். 120:5-9). (குறு. 35:5; நற். 371:7).

**அழற்குட்டம் - கார்த்திகை நாள்.** பங்குனித் திங்கள் முன்பாதியில் அழற்குட்டம்-கார்த்திகை நாள- வரும்போது விண்மீன் எரிபரப்பி விழுமாயின் அர சன் அழிவான் எனக் கூடலூர் கிழார் கூறுகிறார் (புறம். 229:1).

**அழற்கொடி - தீயில் உண்டான கொடி** (தீப்பிழம்பு). வானத்தில் தோன்றும் மின்னல் அழற்கொடி போன்று தோன்றிற்று (அகம். 162:4). பனிபடர்ந்த செந்நிறம் பொருந்திய இமயமலை புகை சூழ்நத அழற்கொடி போலத் தோன்றும் (அகம். 265:1-3).

**அழி – 1. வைக்கோல்.** தான் தேடிய பொருள்களில நல்லனவற்றைப் பரிசிலர்க்கு வழங்கி எஞ்சிய பொருள்கொண்டு இனிது வாழும் தேர்வண்மலை யனுக்கு, உழுத பின்னர் அழி - வைக்கோல்-உணடு வாழும் காளை உவமை (புறம. 125:7).

2. **இரக்கம்.** பாரி முதலிய ஏழு வள்ளல்களும் மாய்ந்த பிறகு, கண்டார்க்கு அழி-இரக்கம்-வரப் பாடிவரும் பாணர் முதலியவரின் துனபம் நீககிய வன் குமணன் (புறம. 158:17,18).

**அழிசி – சிற்றரசன்.** இவன் சோழ மரபினன் (நற். 87: 3). சோழநாட்டுக் காவிரிக் கரையில் உள்ள வயல் வளம் சிறந்த ஆர்க்காட்டை ஆண்டவன்; சேந்த னின் தந்தை; கொடையிற் சிறந்தவன் (நற். 190: 2-6). வீரர்களின் தலைவன்; வேட்டையாடுதலில் வல்லவன் (குறு 258: 5,6). [ஆதன் அழிசி (புறம். 71:13) என வருதலின் ஆதனின் மகன் எனக் கூறு வர்: ப. மு. பக். 63.]

**அழிசி நச்சாத்தனார் - புலவர்.** அழிசி என்பதனை ஊர் என்றும் (அ. சி. பக். 106) நச்சாத்தனாரின் தந்தை பெயரென்றும் (த. வ. க. பக். 141) குறிக் கும். குறுந்தொகை 271-ஆம் பாடலாக அமைந்த இவருடைய பாடல் தலைவி கூற்றாக அமைந்துள் ளது. அதில் தலைவனைத் தெளிந்து அவனொடு கூடிய காலம் ஒருநாளே யாயினும், அது மிகப் பல நாள் அழகினைக் கொள்ளை கொள்ளும் நோய் ஆகின்றது என்று தலைவி கூறுவது நயமிக்கது.

**அழிபடை தாங்கல் - கெட்டோடும் தன்படையை நிறுத் துதல்.** ஓய்மானாட்டு நல்லியக்கோடனின் மறச் சிறப்புக்களைப் போர் மறவர் புகழுங்கால், அச் சிறப்புக்களில் ஒன்றாக அழிபடை தாங்கலைக் கூறினர் (சிறு. 210-212).

**அழிபு – வருத்தம்.** தலைவன் பொருள்வயிற் பிரிந் திருக்கையில் தலைவி தன் நோய்க்கு வருந்துவ தோடன்றித் தோழியின் அழிபு-வருத்தம்-பறறியும் இரங்கினாள் (அகம். 73: 6-8). 'பயமலை நாடனாகிய தலைவன் பிரிந்து சென்றிருப்பினும் நம்மைப போலவே அழிபு பெரிதும் உடையன்; பழியும் அஞ்சுவன்; ஆதலின் விரைவில் வருவன்' எனத்

தோழி தலைவியிடம் கூறி ஆற்றுவித்தாள் (குறு. 143: 1,2).

**அழிவு - 1. சிதைவு.** 'நம் நல்லெழிலாகிய, அழிவு-சிதைவு-இல்லாத தொல்கவினை நாம் மீண்டும் எய்துதற்கு வரையக வெற்பன் முன்னம் நம்மை முயஙகிய மார்பினை இளமுலை மூழ்கச் சென்று பனமுறையும் முயங்குவமோ' எனத் தோழி சிறைப் புறத் தலைவன் கேட்பத் தலைவியிடம் கூறினாள் (அகம். 242: 15-17,22). பிரிவு ஆற்றாத தலைவி தன் மேனியில் பசலை பரவ அழிவு மிகுதியும் உடையளானாள் (அகம். 333: 2,3). தலைவன் பிரிதலைக் கேட்டவுடன தலைவிககு அழிவு வந்தது (நற். 43: 7,12). தலைவன் புணாச்சிக்குப் பின் நிகழ்த்திய மிகப்பெரிய தலையளி ஒரு பிரிவையுடையதென உட்கொணடு தலைவி நெஞ்சழிவாலே கலங்கிய வருத்தத்தை மேற்கொண்டாள் (கலி. 4:22,23). தலைவியின் துயிலின்றிப் பசநத கண்கள் வருத்ததையுடையனவாய் நீர்மல்க, நிறம் வாடி, அழகு கெடுகையினால் வளைகள் முன் கையினின்றும் கழல, வெற்றியையுடைய அழகின் அழிவுக்கு அஞ்சாமல் தலைவன் பிரிந்தான (கலி. 16: 1-3). வருத்தம மிக்கு நெஞ்சு அழிவுற அணங்காகி அடர்ந்து வருவது காமநோய் (கலி. 58:15).

2. வருத்தம். கிள்ளிவளவனை உள்ளிச் சென்ற வறுமை மிக்க கிணைஞன் அழிவு - வருத்தம் - கொணடு ஒருபக்கததே இருந்தான் (புறம். 399: 13, 17,18). நெடுநதகை நீர்மையும் தொழத்தகு தோற்றமும உடைய தலைவன் அவற்றுக்கொவ்வாதபடி அழிவு முநதுறுத்துத் தலைவியிடம் பன்னாள் வந்து பணிமொழி பயிற்றினான் (அகம. 310: 2-4). பகலிலே அழகு கெடும்படி தலைவியை நலிவித்த நடுங்குதற்குக் காரணமான பிரிவுத்துயர் இரவில் கனவின்கணணும் நலிவிகக அதனால் அழிவுற்று அவள் ஆற்றாதவளானாள் (கலி.53:18,19). மாலைப் பொழுதில் தலைவியின் நெஞ்சம் தலைவனை நினைத்தலால அழிவோடு பிறநினைவின்றிக் குவியும் (கலி. 130: 11-13).

3. சோர்வு. அழிவு - சோர்வு - இல்லாத உள்ளம் மேன்மேல சிறக்குமாறு தலைவன் வினைமுடித்தனன் (அகம. 47:1, 2).

4. இறப்பு. 'நின காதலி நின பிரிவைத் தாங்கி அழிவு-இறபபு - இல்லாதவளாய் உயிருடன் இருப்பாளாயின், நீ குறிப்பிடும் இளவேனிற்கால இனப நுகர்ச்சியை எம்மொடு கொளவாயாக' எனத் தோழி தலைவனிடம் கூறினள் (ஐங். 368:3-5).

**அழுக்கு - மாசு.** புலன் அழுக்கு - மாசு - அற்ற அந்தணாளனாகிய கபிலன் மலையமான் திருமுடிக்காரியை இரந்து செல்லும் புலவர்க்கு இடன இல்லையாகப் பரந்து புகழ் நிற்பப் பாடியுள்ளான என மாறோக்கததது நபபசலையார் பாடியுள்ளார் (புறம். 126:11-13).

**அழுகை - அழுதல்.** முள்ளம் பன்றியைக் கானவா வேட்டையாடும்பொழுது குறி தவறிவிட்டமையால அது தனது முள்ளால் கானவரை வருத்த அவர் அழும் அழுகை ஒலியும் மலையில் தோன்றிய ஆரவாரங்களுள ஒன்றாகும் (மலை. 300,301). அழுகை மகளிர்க்கு அழுகையை நிறுத்தத் தாயர் புலி புலி என்று சொல்லுமாறு வேங்கை மலர்கள் பாறைகளில் பரநதன (பரி. 14:11,12).

**அழுங்கல் - 1. ஆரவாரம்.** தலைவன் மணம்பேச வந்தமையால் அழுங்கல்-ஆரவாரம்-உடைய ஊர் ஒலியடங்கியது (அகம். 70.8,17). தாழைவேலி பொருநதிய அழகிய தோட்டங்களையுடைய அழுங்கலூரில நாரையின கூட்டம் ஒலித்தாற் போன்று அலா எழுந்தது (அகம். 100:14-18). அழுங்கல மூதூர் அலரெடுதது அரற்றியது (அகம. 113:8). அழுங்கல் மூதூர் விழவின்றாயினும் துஞ்சாது (அகம். 122:1,2). 'அழுங்கல உடைய ஊர் புனனைப பூவின் பொன்னையொத்த நுண்தாதினைப் பார்த்து எனமேனியையும் பார்க்கும்' எனத் தோழி தலைவி குறைநயககுமாறு கூறினாள் (அகம. 180:13-15). கூத்தர் இரும்பேரொககலுடன் தங்கிச் சென்ற பொலிவற்ற மன்றத்தினை வழிநாள் காணின், அக்காட்சி அழுங்கல மூதூர்க்கு இன்னாதாகும (அகம். 301:23-25). நீடிரும பெணணை அழுங்கலூர், மெல்லம்புலம்பன வளை வொடு வந்த ஞான்று அலரினை விடுத்து மிகவும் புதியதன்மை உடையதாயிற்று (அகம. 400:19,24-26). தலைவன் சென்ற வழியின் கொடுமையைப் பற்றி அவலங் கொள்ளாது இவ்வழுங்கலூர் நொதுமல் கூறிக்கழறும் எனபது தலைவி கூற்று (குறு. 12.4-6). காதலர் சுரன் செனறனர்; இங்கிருந்து பிரிவால யான் தாங்கிய துனபத்தை இவ்வழுங்கலூர் எவ்வாறு அறிந்தது எனத் தலைவி தோழியிடம் கேட்டாள் (குறு. 140:3-5). கொடிசசியின அல்குற்குப் பெருந்தழையுடை உதவிய அன்பு செய்தான ஒருவன் இருப்ப, இவ்வழுங்கலூர் அரலை மாலையை முருகனுக்குச் சூட்டி மயக்கமுற்றது என்று தோழி செவிலி கேடபக கூறினாள் (குறு. 214:3-7). 'மடலேறி அரசன் அவையத்து யான் தலைமகளை வினாவினால் யாங்காவது; இவ்வழுங்கல் ஊர் பெரிதும் பேதைமையுடையது; இரங்கததக்கது' எனத் தலைவன் கூறினான (குறு. 276:5-8). நமர் துறைவற்குத் தலைவியை உரிமை செப்பினர்; ஆதலால் இவ்வழுங்கலூரின சேரி இன்னகை ஆயத்தாரோடு இனியும் அலர் கூறுமோ எனத் தோழி

வினவினாள் (குறு.351:4-8). கூழைபெய் குவியல் புலர் பதம் கொள்ளுமுன இவ்வழுங்கலூரில் அலர்எழுந் தது என்று தோழி கூறினாள (குறு. 372:5-7). மலைநாடன் அன்றிருந்ததைப் போன்று மாறு பாடில்லாத நட்புடையனாக இருப்பவும் இவ் வழுங்கலூர் என் மணங் குறித்துவந்த புதிய வர்களை யுடையது வியப்பாக உள்ளது எனத் தலைவி கூறினாள் (குறு. 385:5-7). யாம் கல்லக வெற்பன் பொயம்மொழியை மெய்யென நம்பி எம நலமிழந்ததால துயிலொழிந்தனம்; அலர் வாய்ப் பெண்டிரின் அம்பலொடு கூடிய இவ் வழுங்கலூர், தீமொழி பயிற்றிய உரையெடுத்து ஆனாத பழியுடையதாக நடு யாமத்தும் துயின் றிலதே; அஃது எதனை இழந்தது எனத் தலைவன் சிறைப்புறமாகத் தோழி கூறினாள் (நற். 36:4-9). வெண்மணற் படப்பை அழுங்கலூர் மெல்லம்புலம் பன் பிரிந்த காலத்தில் வருத்தமுடையதா யிருந்தது (நற். 38:5-10). அழுங்கலூர் அறமுடைய தன்று (நற். 63:5). அழுங்கல மூதூர் கூத்தயர்கின்ற விழா வின் ஒலியுடையது (நற். 90:1). அழுங்கலமூதூரில் விழாக்களத்துத் துணங்கையாடும் மகளிரினுடைய இனிய தாள அறுதி கடலோசை போலப் பரவும் (நற். 130:9-11). 'கொண்கனொடு நள்ளிரவில் உடன்போக்கிற்கு யான் உடன்பட்டேன்; அங் ஙனம் செல்லின் இவ்வழுங்கலூர் யாது செய்யற் பாலது; வேணடுமேல் அலர் தூற்றிக் கொண்டு போவதாக' என உடன்போக்கு வலித்த தோழி கூறினாள் (நற். 149.8-10). அலரால் தலைவனை வாரா வண்ணம் செய்த தப்புடைய அழுங் கலூர், ஒரு தேர் வருவதன் காரணந்தான் யாதோ வென்று ஆராய்ந்து அதனால வருத்தம் அடை கின்றது (நற். 203.9-11). 'தன் நெஞ்சுகொளத் தேற்றிய காளையொடு அழுஙகல் மூதூர் அல ரெழச் சென்ற என் மகள் என்னையும் நினைத் தாளோ' என்பது மகட்போக்கிய தாயின் இரக்க வுரை (ஐங். 372). வையை யாற்றால அழுங்கல் மூதூரில் வாழ்வார்க்கு இனபமும கவினும் நன்பல உளவாயின (பரி. 12·100.101).

2. வருத்தம். அழுங்கல்-வருத்தம்-உடைய இவ்வூர் தலைவர்பொருட்டு இரங்கும் நம்மினும் மிகுதியாக நம் திறத்து இரங்குகின்றது எனத் தலைவி தோழி யிடம் கூறினாள் (குறு. 289:7,8). பிடியது பசிவருத் தம் நீககக் கருதிய களிறு யாமரததின நாரைக் கையிற் கொண்டு நீரினமையால வறுங்கையைச் சுவைததுத் தன் பிடியின் துயாபோக்க இயலாமை நினைதது அழுங்கல் நெஞ்சத்துடன முழங்கும் (குறு. 307:4-9). நீ அஞ்சுமாறு எம அன்னை கணுக் களை யுடைய சிறிய மூங்கிற் கோலைக் கையி லேந்தி வெருளி பெரிதும் உடையள்; சிறிதும் அழுங்கல் இலலாதவளாதலின் அவளால் தலைவன ஏறுக்கப்படுவதும் உணடு எனப் பரத்தை பாண னுக்கு உரைத்தாள் (நற். 150:9-11).

3. கேடு. துறைகெழு கொண்கன் வரைந்து அருள் செய்யின அழுங்கல்-கேடு-உடைய இவ்வூர் உறைவு இனிது என்ற தலைவி கூறினாள் (ஐங். 181:4,5).

4. இரக்கம். பெருஞ்சோறு தந்து பல்யாண்டு காத்த பெருங்களிற்றினை யிழந்த பாகன் அவ் வியானை சேர்ந்து தங்கிய அழுங்கலை-இரககத் தினை-உடைய கூடத்தைக் கணடு கலஙகினான (புறம. 220:1-4).

**அழுந்தூர்** - சோழ நாட்டில் உள்ள ஓர் ஊர். கரிகால் வளவன் தன்னொடு எதிர்த்துவந்த பதினொரு வேளிரொடு சேரனையும் பாண்டியனையும் வெண்ணிவாயில் என்னும் போர்க்களததே வெற்றி கொண்ட பொழுது அழுந்தூரில் பேராரவாரம் உண்டாயிற்று (அகம். 246:8-14). (அழுந்தூர் இப் பொழுது தேரழுந்தூர் என வழஙகுகிறது. அழுந்தை எனவும் மருவி வழங்கும்). [கரிகாலனைப் பெற்ற தாய், அழுந்தூர் வேள்மகளாதலின் கரிகா லன் வெற்றிகண்டு அழுந்தூர் பேராரவாரம் செய் தது: தொல். பொருள். அகத். சூ. 30-உரை. நச்சர்.] அழுந்தை காண்க.

**அழுந்தை** - திதியனின் ஊர். இஃது அழுந்தூர் என வும் வழங்கப்பெறும் (அகம. 196: 11). அழுந்தூர் காண்க.

**அழும்பில்** - ஓர் ஊர். மானவிறல்வேள் என்னும் குறுநில மன்னனுக்கு உரியது; மிகச் சிறந்த நிலவளமும் பயிர் வளமும் உடையது (மது. 343-345). அழும்பில போன்று புதுவருவாயையும் பழைய நெல்லினையும உடைய பல குடிகள் வாழும் நிலபபரபபினையும குளத்தினையும் காவற் காட்டையும குடவாயில பெற்றிருநதது (அகம. 44: 15-18). [இபபெயருள்ள ஊர் சோழ நாட்டி லொன்றும் சேர நாட்டி லொன்றும் உணடென்று தெரிகிறது: உ. வே. சா. புறம். 283; உரைகுறிபபு; பாண்டிநாட்டூர்: வே. வி. அகம. 44; அழும்பில் இபபொழுது 'அமபுக் கோயில்' என வழங்கப்படுகிறது: அகம. 44-உரை. பெருமழை.]

**அழுவம்** - 1. ஆழம். ஆழமான அகழியில் நீரினது அழுவத்தின-ஆழததின-உயர்ச்சியைக் கருதி அதன் கண செல்லாமல குதிரைகள் குசை தாங்கி வேண்டு மளவில் பிடிக்கப் பட்டன (புறம. 14: 5-7). குறிஞசி நிலத்தைக் கடக்கும்போது குன்றின் பக்கத்தில் உள்ள அழுவத்து நின்று நோக்கினால் கண்ணொளி மழுங்கும் (மலை. 368,369). காவிரி கடல் மணடு

அழுவத்துப் புகார் முகம் போன்ற நன்னனுடைய அரண்மனைத தலைவாயிலில் மனனர் தந்த திறைப்பொருள்கள் நிறைந்திருந்தன (மலை. 527-530).

2. காடு. தோளில் கோத்த கட்டுச் சோற்றினை யுடைய வலிய ஆடவர் தீப்பொறி பறக்கும்படி பாறைகளை வெட்டிக் கலலி யெடுதத உவர்நீர்க் கிணறறில ஊறிய நீரைக குடிப்பதற்குக் கொங் கருடைய சிவந்த பசுக்கள் செல்லுதலால எழுநத செந்நிறத் தூசிபட்டு அழுவம்-காடு-சிவந்த வானம் போல தோனறுகிறது (அகம. 79: 1-9). தலைவன சென்ற அழுவம, தயிர் கடையும்போது எழும ஒலியைப போனற குரலை யுடைய ஆணபுலி, பெணபுலியின் பசியைக கணடு பொறுக்க முடி யாமல் கரிய பனையின செறும்பு (சிலாமபு) போனற பருத்த மயிரையும் சிறிய கணணையும் உடைய பனறிகள வரும் வழியைப் பார்த்திருக்கும் பல வழிகளை யுடையது (அகம. 277:5-9). தோழி தலைமகனிடம், 'நீ நின் சீறூர் அடைந்த பின், மூஙகில மிக்க அழுவத்தில பிரிந்த நின் வேட்டுவ ரோடு நாய்களை அழைக்கும் ஊதுகொம்பை ஊத வேணடும்' என வேணடினள் (அகம. 318: 11-15). கானலை நீரெனறு நினைத்து விலங்குகள் ஓடி அலைதற் கிடமான பாலைப பரபபில், மலை யினின்று வீழும் அருவி போலப் பாம்பின் அழகிய வரியமைந்த சட்டை தோன்றும்; புற்றுக்கள் மூடிய அடிப் பகுதியை உடைய மரததிலிருக்கும் கரிய காகஙகள உண்ணுமாறு பிணஙகள் கிடக்கும் கவர்தத வழியில, வழிசசெலவோரைப பின்னிருநது அமபு எயது கொன்ற ஆறலை களவர் இறநத வர்க்கு இரஙகாது தம அமபுகள கழிந்தமைக்கு வருநதினா; இத்தகைய கொடுமையுடையது தலை வன் சென்ற அழுவம (அகம. 327:8-19). கொடிய காற்று வீசும் மூஙகில மிக்க அழுவத்து எவ்வம் மிகும அருஞ்சுரம் கடநது தலைவன் சென்றான் (நற. 46:8, 9). அழுவம் சூழ்ந்த குன்றுகளைக் கொண்ட அழலும் சுரத்தைத தலைவன் கடப்பின் தலைவியின் நிலை என்னாகும் எனத் தோழி வருந்தினாள் (கலி. 25:10-12).

3. பரப்பு. பெரியதாய் ஒலிக்கின்ற அழுவத்தை யுடைய - பரப்பையுடைய - கடல் குறைபட நீரை முகந்துகொண்டு விரைந்து செல்லும மேகங்கள் வேணடிய இடத்துக் கூடிச் சூல் முதிர்ந்து இடித்து மழை பெயயும் (புறம். 161.1-5). போர்க்களததில பொருது அழுவத்துச் சிதைநது வேறாகிய சிறப் புடை மகனைக் கணடு தாய முலை ஊறினள் (புறம. 295.2, 8). காந்தள் பூத்து விளங்கும கரையை யுடைய நீர் அழுவத்து நின்ற மூங்கிலை நிகர்க்கும் தோளை யுடையவள தலைவி (பதி. 21:36, 37). வேயா மாடத்திடத்தே இரவில் ஏற்றிய விளககு, பெருநீர் அழுவமாகிய கடலிலே திசைதபபிப் பிற துறைக்கணணே ஓடும் மரக்கலங்களை 'இது நம் துறை' என அழைக்கும் (பெரு. 346-350). தன் தந்தை கடல் அழுவத்துச் சென்று கொணர்நத கொழுமீன் உணங்கலில வந்து வீழும் பறவை களைத் தலைவி ஓப்பினாள் (அகம். 20 1, 2). பரத வர் எறிந்த உளியால புண்பட்ட பெரியமீன் தன் உடம்பிறபட்ட புண்ணினின்றும் பெருகும் குருதி யினால புலால் நாற்றமுடைய நீர் நிறம மாறும் படி திரைபயில அழுவத்தைக கலககி எழுநது வில லைப் போனறு வானததில தாவி மீண்டும கடற் பரப்பில் வீழ்ந்து வலி குறைநது கரையிலுளள தோணிகளின் பக்கத்தே வநது கிடந்தது (அகம. 210·1-6). 'கணமழை துறந்த கான மயங்கு அழு வம் உடன்போக்குச் சென்ற தலைவிககு எளிய வாகுக' என மகட்போக்கிய செவிலிததாய் வேண டினாள் (அகம 397.5, 6). தலைவன் அயிர்ச் சேற்று அள்ளல் அழுவத்தைக் கடந்து வந்தான் (அகம. 400:17-19). கடறகரை அழுவத்தில நினற தாழை கழி பெயருகினற இடததில் தளர்ந்து வெளளம பெயரும் பொழுது தானும் பெயரும் (குறு. 340· 4-6). தெண்கடல் அழுவத்தில திரையை நீக்கிக் கொண்டு தண்கதிர் மதியம் தோன்றியது (கலி. 121:2, 3). நிலததால தாஙகப்படும கடல் அழுவத் தில் கார்ப்பருவத்தை எதிர்ந்து மேகம் நிறைநத சூல கொணடது (பரி. 18·2,3).

4. பாலை. தலைவர் அருள் செயயாராய்த தலை வியைத் துறந்து அருநெறிகளை யுடைய அழுவம் - பாலை-நிலததைக் கடநது தொலைவிற் சென்றார (அகம. 183:3, 4). ஆரியக கூத்தர் கயிற்றில ஏறி ஆடுங்கால் முழஙகும பறையின ஓசைபோல, மேல காற்று மோதுதலாலே நிலை கலங்கி வாகைமரத் தின வெணமையான நெறறுக்கள் ஒலிககும் இயல புடையதும் அடர்நத மூஙகிலை உடையதுமான அழுவததில் தலைவன சென்றான் (குறு. 7:3-6). வேய்பயில அழுவத்துக் காற்று மோதுதலால் மூங்கிலினினறெழும் ஓசை யானை பெருமூச்சு விடு வது போனறிருநதது (நற. 62:1-3).

5. போர்க்களம். முழுத்திங்கள நிலவைப் பொழியும் வேளையில படைவீரர் ஒருங்கு கூடியிருந்த கடல போனற பாசறையிலிருந்து புறபபட்டுச் சென்ற மறவர் புதிய போர்க் கருவிகளைக கையிலேநதி எதிர்பபவா உறவினர் எனறும பிறர் என்றும் பாராமல் கைகலநது அழுவத்தில-போர்க்களத்தில்-

கூடினர் (புறம். 294:1-4). முரசு முழங்கும் வேற்படை மிக்க அழுவத்தில் பனை மாலையையும் பொலங்கழலையுமுடைய தானைமறவர் பகைவரது மனவெழுச்சி கெடச் செய்து அவர் புறங்காட்டும் போது படை எறிந்திலர் (பதி. 31:30-33). பிணம் குவிந்து கிடக்கின்ற அழுவத்தில் மறவர் துணங்கைக் கூத்து ஆடினர் (பதி. 45: 12). செல்வக் கடுங்கோ வாழியாதன் வஞ்சினங்கூறிச் சென்று, வேற்படையுடைய பகைமறவர் கெட்டோடுமாறு அழித்துப் பிணங்கள் மலிந்த அழுவத்தில் தோற்ற பகைவர் தந்த களிறுகளையும் உணவுப் பொருள்களையும் தன்னை வந்து இரந்தோர்க்குத் தருவான் (பதி. 66:4-9). போரினை மேற்கொள்ளுமாறு தண்ணுமை ஒலித்தலாலே போரினை மேற்கொண்ட மாற்றார் மறவர் நெருங்கிய அழுவத்தில் மறவரோடு யானைகளும் மடிந்து வீழுமாறு நிலையாமை அமைந்த போர் பல செய்து வெற்றி பெற்றவன் இளஞ்சேரல் இரும்பொறை (பதி. 84: 15-20). மாவண் கடலன் பகைவரது ஒளிறுவேல் அழுவத்துக் களிறுபடப் பொருது வென்றான் (அகம். 81:11-13). செந்நாய், ஆண்பன்றியினைக் கொன்று இழுத்துச் செல்லும்போது வழியெல்லாம் ஒழுகிய இரத்தத்தைப் பருகிய பருந்தின் தூதுகள், அழுவத்தில் மருமத்து விழுப்புண்பட்டு வீழ்ந்த மறவரின் புண்ணை ஆராய்வதற்குக் கையில கொண்ட விளக்குகள் போல் தோன்றுகின்றன (அகம். 111:10-14), 'தலைவர் பகையைத் தணிவிக்கச் செல்லும் அழுவத்திற்கு நாமும் துணையாகிச் செல்லத் துணிவரோ' எனத் தலைவி தோழியைக் கேட்டாள் (அகம். 119;14,15).

6. கடல். வேந்தர் அழிந்த பாசறையில் வேற்படையாகிய அழுவத்தில்-கடலில்-போர்செய்து மறவர் புண்பட்டனர் (நற். 349:6-8).

அள்ளல் - சேறு. காவற் சகடத்தைச் செலுத்த மன்னன் அறியாவிடின் பகையாகிய செறிந்த அள்ளலில் - சேற்றில் - அழுந்தி நாடோறும் பல தீமைகள் மேன்மேல் அடைவான் (புறம். 185:2-6). நெல்லறுக்கும் உழவரின் அரிவாள் கூர்மை மழுங்கின் மறுபடியும் அறுப்பதற்காகத் தீட்டுங் கல்லெனக் கருதி அள்ளற்கண் படிந்துள்ள யாமையின் முதுகோட்டில் அதனைத் தீட்டுவர் (புறம். 379:3-5). மயில் போன்ற சாயலையுடைய மகளிர் கிளியை ஓட்டினால் அள்ளலிடத்தே தங்கியிருந்த புறவையினம் பறந்தோடும் (புறம். 395:13-15). அள்ளற்கணடு அஞ்சாதும் அயராதும் தேரினை இழுத்துச் செல்லும் வலிய எருதொன்றினையே கிணைஞன் வேண்டியதாகத் தன் விருப்பம் தெரிவிக்கத் தாமான் தோன்றிக்கோன் உடனே பல ஆனிரைகளை நல்கினான் (புறம். 399:27-34). அள்ளல் வயலில் சகடத்தின் உருளை சிக்கிக் கொள்ள நலலெருது அதனைக் கடக்க முயன்று இழுக்கும்போது சாகாட்டாளர் அதனை ஓட்டுகையில் எழும் ஒலியல்லது பிற ஒலிகள் இல்லாத நல்லநாடு குட்டுவனுடையது (பதி. 27:10-15). மருதநிலப் பகுதியில் கட்பருகிய உழவர் மூப்பால் அள்ளலில் சிக்கி வருந்திய எருதுற்ற துன்பத்தைப் போக்கும ஆரவாரம் கேட்கும் (மது. 259, 260). தினைப்புனம் உண்டாக்க வேட்டுவர் காட்டைக் கொளுத்தும் போது எழும் புகை நிழல் போன்ற கரிய அள்ளலில் அழுந்திய வண்டியினைக் கடத்தற்கு வண்டி ஓட்டுபவன் கையிலுள்ள கயிற்றைப் பற்றியிழுக்க மாடு பெருமூச்சுவிட்டு வருந்தி இழுத்தது (அகம். 140:11-15). தாமரை பூத்த, பறவைகள் ஒலிக்கின்ற பழனத்தில் நணடு குருகுக்கு அஞ்சிப் பக்கத்திலுள்ள பகன்றைக் கொடி படர்ந்த கரிய அள்ளலில் தேமல் போன்ற வரிகள் தோன்றுமாறு ஓடி விரைந்து வளைக்குள் புகும் (அகம. 176: 7-12). கடுஞ்சேறாகிய அள்ளல் நிலத்தே கா லையில் வேட்டைக்குச் சென்ற பரதலச் சிறுவர் வைத்த வலையில் ஆண் கொக்கு சிக்கிக் கொள்ள, அதன் பெடை நரலும் (அகம். 290:1-7). பொய்கையில் ஆம்பல் மேய்ந்த எருமைக்கடா அள்ளற் குழம்பலில் படுத்துறங்கிப் பொழுது பட்ட வரால்மீன் மிதிபட்டழியப் பகன்றைக் கொடியைக் கொம்பிலே சூடிக் கொண்டு போர் புரியச் செல்லும் வீரன் போல் நடந்து செல்லும் (அகம. 316:1-7). உழவர் போரடித்து நெல் தூற்றும்போது பறந்த துரும்பு பக்கத்துள்ள உப்பளப்பாத்தி மீது படிய உப்பு சிதைவது கண்டு பரதவர் சினநது சேற்று அளளலை வாரி வீசிச் சண்டையிட்டபோது வயதான பெரியவர் சண்டையை விலக்கினர் (அகம். 366:2-10). கடும் புனல் தொகுத்த நடுங்குதற்குக் காரணமான துன்பந்தரும் அள்ளற்கண் இரையைத் தேடுகின்ற நாரைக்குத் துன்பமாக வாடைக்காற்று நீர்த் துளியைக் கொண்டுவந்து வீசியது (குறு.103:1-4). பறவைகள் அமர்தலால் உதிர்ந்த பூக்கள் கலந்த அள்ளல மிக்க கழி நிலத்தில் தலைவன் தேர் ஓடும் போது அதில் பூட்டப்பெற்ற குதிரையைக் கடலலை கழுவும் (நற். 63:8-11). பனைமரத்தின் மடலில் தங்கிய குருகு யாமத்தில் ஒலிக்குந்தோறும் அள்ளலாகிய குழம்புபோன்ற என் உள்ளமொடு மனமும் உடைந்து இன்னும் வாழ்கிறேன் எனத் தலைவி தோழிக்குக் கூறுகிறாள் (நற். 199:1-5). உலர்ந்த புல்லை மேய்ந்த மானை முற்றிய அள்ளற் பகுதியிற் செலுத்தி மறவர் அதன் மீது அம்பு எய்வர் (நற். 265:1-3). கடற்கரையில் நீர்வற்றிய

செறிந்த அள்ளலில் உள்ள நிணமிக்க தலையுடைய கொழுத்த மீனை யுண்ணக் குருகு மணல் மேட்டி லேறி அரசரின் காலாட்படைக் கூட்டம் போல் தங்கியிருக்கும் (நற். 291:1-4). செழியனின் பெயரைக் கொண்ட பெருங் குளத்தின் மடையைத் திறக்கக் கால்வாய் வழியே வநது பின்னர் எதிர்த்துச் சென்ற வாளைமீன் அள்ளற் கழனியின் உட்பக்கம் ஓடி எருமைக்கடாவின் காற்சேறு பட்ட மேற்புறத் தோடு உழுகின்ற உழவர் கோல் கொண்டு புடைத்தற்கும் அஞ்சாது வரப்படியில புரளும் (நற்.340:2-8). கடற்கரைச் சோலையிலுள்ள பனை யின கனிந்த பழம் காமபற்று நெய்தல் மலர் சிதைய அளளற் சேற்றில புதையுமாறு விழ, நாரை தன் இனததோடு அஞ்சி ஓடும் (நற. 372:2-5). எருமை உழககிய அள்ளல நிலத்தில நீலமணி போன்ற நெய்தலும் ஆம்பலும் செழித்து வளரும் (ஐங. 96:1,2).

**அள்ளன் - குறுநில மன்னன்.** வெற்றியொழுக்கத்தால் விளங்கிய விருப்பத்தினால் தான் கொண்ட நாட்டையே அள்ளன் என்பானுக்கு அதியன் திருப்பிக் கொடுத்தான (அகம். 327:7,8). [அதியனுக்குப் போரில் வெற்றி கிடைக்க உதவிய அள்ளன அவனிடமிருந்து நாட்டைப் பெற்றதாகக் கருதுவர்: ப.மு.பக. 64.]

**அள்ளூர்-ஓர் ஊர்.** (பாணடிய நாட்டில் சிவகஙகைக்குப் பக்கத்திலுள்ளது; நன்முலலையார் என்னும சங்கப் பெண்பாற்புலவர் பிறந்த இடம்). பகைவர்தம் யானைகளை யழிதத தானையைக் கொணட வெற்றியுடைய செழியனது நெற்குவியலைப் பெற்ற அள்ளூர் போன்றவள் தலைவி (அகம. 46:11-14).

**அள்ளூர் நன்முல்லையார் - புலவர்.** அள்ளூர் இவருடைய ஊராகும. புறநானூற்றில ஒரு பாடலும (306) அகநானூற்றில ஒரு பாடலும (46) குறுநதொகை யில் ஒனபது பாடலகளும் (32,67,68,93,96,140,157,202,237) ஆகப் பதினொரு பாடலகள் தொகை நூலகளில் இடம பெற்றுள்ளன. இவர்தம அகப் பாடல்கள் மருதம் (அகம. 46; குறு. 93; 157; 202) குறிஞ்சி (குறு. 32; 68; 96) பாலை (குறு. 67; 140;237) ஆகிய திணைகளிலும் புறப்பாடல வாகைததிணை யில் மூதின்முல்லைத் துறையிலும் (புறம. 306, அமைந்துள்ளன. 'காலையும பகலும் கையறு மாலையும் ஊர் துஞசு யாமமும விடியலும் என்றிப் பொழுதிடை தெரியின் பொய்யே காமம்' (குறு.32) என்றும, 'தோள்தோய் காதலர்ப் பிரிக்கும் வாள்போல வைகறை (குறு. 157) என்றும இவர் கூறும அகப்பொருள் நுட்பங்கள் அறிநதினபுறத் தக்கன. முன்பு இனிய செய்த காதலர் பினனா இன்னா செய்தமைக்கு, முன்பு இனிமை செய்யும் மலரையும் பினபு இன்னா செய்யும் முள்ளையும் தரும் நெருஞ்சியினை உவமை கூறியுள்ள திறம் நயமிக்கது (குறு. 202:2-5).

**அளக்கர் - கடல்.** அளக்கரால்-கடலால்-சூழப்பெற்ற நிலத்திற்கு விளக்காகக் கனை எரி பரக்கக் காற்றாற் பிதிர்ந்து கிளர்ந்து விசும்பினின்றும் ஒரு மீன வீழ்ந்தது (புறம். 229:10-12).

**அளகம் - கூந்தல்.** விண்ணிடத்தே பாமபினால் விழுங்கப் பெற்றுக் குறைப்படுத்தபபட்ட மதியத தின நிலாப் போலத் தலைவியின அளகம்-கூந்தல-சேர்நத நெற்றி காணபபடுகிறது (நற. 377:6-9).

**அளகு - பறவைபபேடு.** பாணர் மருதநிலப் பகுதியைச் சேரின், ஓய்வின்றி வேலை செயபவர் தநத வெண ணெற் சோற்றை அளகினால-பெட்டைக் கோழியி னால்-சமைத்த பொரியலோடு பெறுகுவர் (பெரு. 254-256). போர்க்களததில் அளகுடை-பெடையை யுடைய-ஆணபருந்தின இனம் தசையாகிய இரை யையுண்ணும் (பதி. 35.4,5).

**அளம் - உப்புளள இடம்.** கடற்கரையில் கடும வெயி லால் கொதிககும கலலாக விளைநத உபபை அளத்திலே-உபபுள்ள இடத்திலே - செலுததும் வணடிகளை உப்பு வணிகர் உரபபி ஓட்டுகினற பேரொலி கேட்கும் (நற. 354·6-10).

**அளறு - 1. சேறு.** யானை மதததாலே அளறு-சேறு-பட்ட தலையுடையது (மது. 44,45). சககரம வயலி லுள்ள அளற்றில ஆழ, வணடியை இழுககும் எருது வருநதிச சேற்றைக் கடத்தறகாக வணடி ஓட்டுபவர் எழுப்புமு ஒலியலலது வேறு ஒலியை யறியாதது செஙகுட்டுவனுடைய நாடு (பதி. 27: 10-15). தாமரைப் பூவை இடையிடையே அரிந்து செநநெலலை அரி அரியாகப போட்ட உழவா, களளைக் கொணடு செலலும வணடி அளறறிற் சிககினால கரும்பைச சேற்றிலடுககி அதனைக் கடபபர் (அகம். 116.1-4). திருமாலின படையால் அரக்கனின தலைகள் உருணடு நிலததை அளறு செயதன (பரி. 2:44-49). முலைககணிந்த குங்குமக் குழம்பாகிய அளறு வையைக் கரையோரததே வணடலிடுகிறது (பரி. 6:18). முலை முகட்டிற் பூசிய அளறு (கலவைக குழமபு) மடைதிறந்து திசை முழு வதும கமழ்கிறது (பரி. 10:73,74). புனலாடுவோர் மார்பினின்று அழிந்து வீழ்ந்த தகரச் சாநதால மணல அளறாகிறது (பரி. 12:96,97)

**2. நீர்.** பனைமரததிலிருந்து பலகாய்கள் உதிர்வன போலத் திருமாலின ஆழிப்படையால அவுணர் தலைகள் உடமபிலிருந்து அறுபட்டுக் கீழே விழ

அளறு - (குருதி) நீர் - படிந்து போர்க்களம் செந்நிறமாகியது (பரி. 2:43-47). மழை பெய்தமையால் குளிர்ந்த பொய்கை அளறு நிரம்பியது (பரி. 8:93).

அளி - அருள். உதியஞ்சேரலாதன் ஐம்பெரும் பூதத்தின் இயல்பு வாய்க்கப் பெற்றவன்; நீர்போன்ற தண்ணிய அளி-அருள்-உடையவன் எனக் கூறுவர் முடிநாகராயர் (புறம். 2:6-8). கூடகாரத்துத் துஞ்சிய நன்மாறனின் அருள் பெறாதவர் மிக இரங்கத் தக்கவர்; சிதல் முயன் றெடுத்த புற்றின் ஈசல் போல விரைந்தழிவர் என்பர் ஐயூர் முடவனார் (புறம். 51:8-11). இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனிடம் வடம வண்ணக்கன் பேரிசாத்தனார் மழைத் துளியை விரும்பும் சாதகப் புள் போல அவன் அளிக்கிரங்கி அடிநிழலில் தங்கியிருப்பதாக உரைத்துத் தம்மை மறவாதிருக்க வேண்டுகிறார் (புறம். 198: 25-27). 'பாரி இரவலர் வருந்த இறந்துவிட்டான்; அதனால் என்னை அளிசெய்து காப்பாயாக' என்று கூறி இரப்பதற்கு யான் வரவில்லை எனக் கபிலர் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் மொழிவர் (பதி. 61:8-11). இளஞ்சேரல் இரும்பொறை நீரிடத்துச் செல்லும் கருப்பந் தெப்பத்தினைக் காட்டிலும் அளி புரிவதில் வல்லன் என்று இயம்புகிறார் பெருங்குன்றூர் கிழார் (பதி. 87:4,5). இளந்திரையன் தன்னை விரும்பியோர் நாடு பொன் கொழிக்க அளி புரிவான் (பெரு. 421-424). தலைவன் செய்யும் அளிநிலை கண்டு தலைவி உட்குறிப்பு உளதாகக் கருதி முகம் வேறுபடுவள் (அகம். 5:1). 'இன்துயிலுக்கிடமான துறைவன் மார்பிற் சென்ற நெஞ்சு அவன் அளி செய்யாததால் அவனிருக்குமிடத்தை வெறுத்து இங்கு வாராதொழிக; துயரம் செய்து அருளானாயினும் நட்பு நீங்காதொழிக' எனத் தன் நெஞ்சு நோக்கித் தலைவி உரைத்தாள் (அகம். 40: 9-12). பொருளீட்டுதற்காகத் துணைவியை அளியின்றிப் பிரிந்து செல்லும் மடவோர் இரங்கத் தக்கவர் எனப் பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிற்குத் தலைவன் கூறுகிறான் (அகம். 43: 13-15). கிளியும் பந்தும் கழங்கும் விரும்பிய தலைவி முன்னாள் போல் அளியும் அன்பும் சாயலும் இயல்பும் பெற்றிலள் என உடன்போக்குச் சென்ற மகளை நினைந்து தாய் கூறுகிறாள் (அகம். 49:1-3). தலைவி பல நாளும் புணர்தற்கிடனாக இருந்த தினைப்புனத்தில் கிளி ஓட்டுதற்குப் பாடிய பாடலும் நீங்கினாள்; தலைவன் அளியன்றிப் பிறிதொரு துணையுமில்லாத அவள் இரங்கத் தக்கவள் (அகம். 118: 11-14). வெளியன் வேண்மான் ஆய்எயினன் பாடி வருபவர்க்கு யானை நல்கி மகிழும் அளி பொருந்திய வாழ்க்கையுடையவன் (அகம். 208: 3-6). 'பேருதவி செய்தவரை எல்லாரும் போற்றுவர்; அதில் சிறப்பில்லை; சிறிதளவு நன்மையுடையவ ளாயினும் தலைவியைப் புலவி தீர அளிசெய்வாயாக எனத் தோழி தலைவனை வேண்டுவள் (குறு. 115:1-3). 'மழையே, துணையின்றி வருந்துந் தலைவி இரங்கத் தக்கவள் எனக் கருதாது பெய்து வருத்துவது ஏன், உனக்கு அளியில்லையா' எனத் தோழிக்குச் சொல்பவள் போலத் தலைவன் கேட்பத் தலைவி கூறினாள் (குறு. 158:3-6). மலை நாடனை விரும்பி அவனுடைய தண்ணளி மிக்க அன்பினால் தினைக் கதிர்களைக் கிளி கொய்யாதவாறு தலைவி ஓம்பிப் பாதுகாத்தாள் (நற். 251:4-6). தன் மேலுள்ள கண்ணோட்டத்தினாலாவது தலைவி தோளில் துயில்வதை இன்பமாகக் கொண்டு தலையளி செய்யுமாறு தலைவனைத் தோழி வேண்டுகிறாள் (நற். 355:8-10). தலைவியிடத்து அளிசெய்தலைத் தவிர்த்துப் பொருளிடத்தே வேட்கை கொண்டு தலைவன் பிரிந்துள்ளான் (கலி. 16:13, 14). தலைவனின் ஆகத்தையே அளியென உடையவளாகத் தலைவி கருதுகிறாள் (கலி. 20:10,11). தலைவன் அளி செய்யும்போது முன்கை சிறந்து நின்று, பிரியுங்காலை மெலிதலால் கைவளை கழலுகிறது (கலி. 25:17, 18). குயில் கூவ, இளவேனில் வருத்தத் தலைவிக்குக் காமநோய் மிகுமாயின் தலைவன் செய்யும் அளி என்ன பயனைத் தரும் (கலி. 28. 8-11). மழைத்துளியை விரும்பும் வானம்பாடி போலத் தலைவன் அளியைத் தலைவி விரும்புவள் (கலி.46:20, 21). தேர், யானை ஆகியவற்றைத் தலைவன் தன்னிடம் வந்த புலவர்க்கு அளி சிறந்து நல்கினான் (கலி.50:15-17). சிறுதினை மழை பெய்ய அழகு பெற்றாற் போலத் தலைவன் அளி காட்டத் தலைவியின் நெற்றி அழகாற் பொலிந்தது (கலி. 53: 23, 24). உயிரைப் போக்குதலை யறிந்தும் நஞ்சுண்டாற் போல அளியின்றி வருத்துதலைக் கணடும் தலைவன் பொய்ம்மொழியைப் பெண்டிர் நம்பினர் (கலி.74:8, 9). தலைவன் நினைவு வருத்துகையினாலே அவனளியை விரும்பிக கலங்கிய வளுடைய குற்றமற்ற முகம் பசப்பூர்தலைக் காணுங்கால் முறை செய்பவன் என்னும் பெயர் கெடாதோ எனத் தலைவனைச் சான்றோர் வினவினர் (கலி:100:15-18). ஞாயிறு சுடுமென்று அலை விரைந்து கரையிலுள்ள அடும்பை அளி செய்தாற் போலத் தலைவியின் வளைகழலும் வருத்தம் தீரத் தலைவன் அளிசெய்தான் (கலி.127: 19-22). தோளைப் பிரிந்து அருளாத தலைவர் போல் வாடைக் காற்று வீசத் தாழைமரக் கிளையிலிருந்த நாரை இரவில் தலைவியின் துயரறியாமல

அளியின்றி நரலும் (கலி. 128:1–5). 'திங்களே, அளியைக் கைவிட்டு அருள் செய்யாது பிரிந்த காதலர் செய்த நோய்க்குப் பிறரெல்லாம் மருந்தறியார்; நீ என் நிலையை அவருக்கு அறிவித்து உதவுக' என வேண்டுகிறாள் தலைவி (கலி. 145:47-50). ஆர்வ முடைய அடியவர்க்குத் திருமால் அளியாக உள்ளார் (பரி. 1:41). திருமால் திங்களில் அளியாக இருக்கிறார் (பரி. 3:67). விண்ணிலிருந்து கொண்டு மதி மக்களுக்கு அளி செய்கிறது (பரி. 13:5).

அளை- 1. குகை. தெய்வங்கள் உறையும் மலையிலுள்ள அளையை-குகையை-வெறுத்து ஆணபுலி ஊனுண்ணும் வேட்கையுடன இரை குறித்துத் தான் விரும்பும் இடததிற்குச் சென்றது (புறம. 52:1-4). அளையிலிருநத புலி நிமிர்நதெழுந்து இரைக்குப் புறப்பட்டதுபோல நெடுஞ்செழியன பகைவரிடம் போருக்கெழுந்தான் (புறம. 78:1-5). உன்மகன எங்குள்ளான் எனககேட்ட ஒருத்திக்குக் காவற்பெண்டு என்னும் பெண்பாற்புலவர் புலி தங்கிச் சென்ற மலை அளை போல் பெற்ற வயிறு இது, அவன் போர்க்களஞ் சென்றிருப்பான் என விடை கூறினார் (புறம. 86). வஞ்சன என்பான் நண்பர் நெருங்குதற் குரியவன்; ஆனால், பகைவர்க்குப் புலியினம் தங்கிய மலையளை போல நெருங்குதற்கரியவன் (புறம. 398:8-11). ஆண்பன்றியுடன் பனையின் செறும்பை யொத்த கரிய மயிரினையும் வளைந்த அடியினையு முடைய கரடி மலையின் அளையிலே சேருமாறு பழமுதிர் சோலையில் மலையுச்சியிலிருந்து அருவி கீழே ஓடி வருகிறது (முரு. 312-317). கூத்தரை ஆற்றுப்படுத்துவோர் அவரிடம் இல்லத்திலே புகுந்தது போன்ற வழியிலுள்ள மலையளையில் இரவில் தங்குமாறு கூறுகின்றனர் (மலை. 254, 255). நீணட அளையாகிய இருப்பிடத்தில் தங்கிய முள்ளம்பன்றி தன் கூரிய முள்ளால் கானவரை வருத்தும் (மலை. 300,301). நன்னனுக்குக் கையுறைப் பொருளாக அளை வாழ் புலியின பாய்ச்சலுக்கு அஞ்சும் மரையானினது குட்டியை அவனைக் காணவநதோர் நலகினர் (மலை. 505,506) மலைச்சாரலில் வேங்கை மலர் வேண்டிய குறமகள் புலி புலி என்ன, இருளாக உள்ள அளையமைந்த மலையில் வாழும பசுவைக் கொல்லும் புலி வந்துள்ளது எனக் கருதி வில்லையெடுத்துக்கொண்டு அதனை வேட்டையாடத் தலைவன புறப்பட்டான் (அகம். 52:1-8) புலியைக் கொன்ற யானையின் கன்னத்தே இழிதரும் மதநீரில் வணடினம் ஒலிப்ப அதனை யாழிசை எனக் கருதி மலையின் பிளப்பான அளையிலுள்ள அசுணம் கூர்ந்து கேட்கும் (அகம். 88:9-12). பாறையின் பிளப்பாகிய அளையில் மூன்று குட்டிகளையீன்ற புலிக்குப் பசிமிகுந்ததென, ஆண் புலி உழைமான் குரலை உற்றுக் கேட்கும் (அகம். 147:3-7). ஈன்றணிமை யுடைய பிடியைத் தழுவிக் கொண்டு களிறு அங்கு உறங்கும் தன் கன்றைக் காவல் புரியப் புலி தான் இருந்த அளையை விடுதது வெளியே வந்து மலைக் குகையில முழங்கும் (அகம். 168:9-12). மழை பொழிய அருவி ஓடும் பரநத இடத்தைக் கொண்ட கடுங்காற்று வீசும் பெருங் குன்றத்தில் இருண்ட அளை மீதுள்ள கல விழுநது சிதறுவது போலச் சிதறுக எனத் தலைவன் தன் நெஞ்சு நோக்கிக் கூறுகிறான் (அகம. 258:5-8). புகழ் வாய்ந்த பாண்டியனின் தோண்டப்படாத அருவி விழும் மலை அளையில் மறைந்த வரையர மகளிர் போலத் தலைவி அரியள் (அகம. 342:10-12). வெண் கோட்டு யானை குத்தியதால் புண மிகுநது ஆண் புலி கலலளையில் ஒடுங்கியிருககச் செம்முருககின் அரும்பு போன்ற கூரிய நகததையுடைய பெணபுலி காவல் ட ரிகின்றது (அகம். 362:3–6). மூங்கிலுயர்ந்த மலைச் சாரலில புலி தன் இரையைச் செறித்து வைத்தமையின் மலையளை புலால நாற்றம் வீசும் (குறு. 253:5,6). முள்ளம்பன்றி போனற கழுத்தில பருத்த மயிருடைய பன்றி மலையிலுள்ள தினைப் புனம் மேய வேட்டுவர் வைத்த பொறியின சிறு வாயில் வழியே நுழையும் போது பககததிலிருநது பல்லி சொல்ல, அச்சொல்லைத் தடையெனக் கருதி மெலலப் பின்வாஙகி மலை அளையாகிய தன் உறைவிடம் வந்து தங்கும் (நற். 98.1-7). பலாக் கிளையிலிருந்த பெரும்பழம் மலைப பிளவாகிய அளையில் வீழந்து பயன்படா தொழிநதது போலப் பல நாளுக்கு முனபே மலை நாடன நட்பு சென றொழிந்தது (நற். 116:6-9). மலையளையிற் கிடநத பெணபுலியின் ஈனறதனா லாகிய பசியை நீக்க ஆண்புலி சினமிகுந்து யானை முகததே பாயும் (நற். 148:7-10). வேங்கை மரத்தில் தொடுத்த தேனடை தேனீக்கள் மொய்த்தலால் கசிந்து மலை அளையிலே சிந்திய தேனைக் குறச்சிறுவர் வழித்துண்டது போக எஞ்சியதைக் குரங்குக்குட்டி நக்கும் (நற். 168:1-5). ஆண்பன்றி கானவர்தம் தினைப்புனம் சென்று மேய்ந்து மலையின் விடர் அளையில் தங்கும் புலிக்கஞ்சாது மூங்கில் வளரும் மலைச் சாரலில் துயிலும் (நற். 386:1-5). மலைச்சாரலிலுள்ள பலாப் பழம் கல் அளையில் விழ மலையில் பெருந்தேனடை சிதையும் (ஐங். 214:1-3).

2. வளை. விளைந்த சமயம் பார்த்து நெற்கதிரைத் தன் அளையில-வளையில்-கொணடு வநது சேர்க்கும் எலி போன்ற சிறிய முயற்சியாராகித் தம் செல்வத்தை நுகராது இறுகப்பிடிக்கும் ஊக்கமில்லாதாருடைய நட்பு இல்லாதொழிக எனபான் சோழன் நல்லுருத்திரன் (புறம் 190:1-5). அளையிலே வாழும் நண்டின கண் போன்று பத்தலினைச் சேர்த்

தற்குத் துளைகளின் வாய் மறைய முடுக்கிய ஆணி இருககும் (பொரு. ௪,10). கவர்த்த காலையுடைய அலவனது சேற்று அளை சிதையுமாறு கோரையின் அடியிலே கடா குத்தியதால் அதன் கொம்பு மண்ணாகியது (பெரு. 208-210). நெய்தல் நிலத் தலைவி சிவந்த நணடு தங்கும் பள்ளததிலுள்ள அளையைத் தோண்டி விளையாடினாள் (அகம். 20:4). கரடி இருப்பைப் பழத்தை வெறுத்தால் கறையான் எடுத்த அளைப் புற்றின் உச்சியினைப் பெயர்த்துக் கொல்லனது உலைக்களத்திலுள்ள துருத்தி போல உயிர்த்துப் புற்றாஞ்சோறாகிய இரையினைத் தேர்நது உண்ணும் (அகம. 81:1-5). தாமரை பூத்த பறவை ஒலிக்கும் கழனியில் நண்டு, இரையைத தேடும வெணணிறக் குருகுக்கஞ்சி அயலில் தழைத்துள்ள பகனறைக் கொடி படர்ந்த சேற்றுக் குழம்பில் தேமல போல் வரியுண்டாக ஓடித் தன் ஈரஞ்செறிநத மண்அளையுட் புகுந்து கொள்ளும் (அகம். 176:7-12). கரையில் ஓடியாடிய நண்டு மாலையில் அளைக்குள் நுழையும (அகம். 260:5). கரிய சேற்றிடத்தே ஈரமான அளையிலுள்ள நண்டு மேலே வெளிப்பட மக்கள் நடமாட்ட மின்மையால் கடற்றுறை ஒலியடங்கியது (அகம். 350: 3,4). வறண்ட நிலத்துதிர்ந்த வித்தாத சிறு புல்லரிசியை எறும்புகள் அளையிற் சேர்க்கும் (அகம். 377:1-3). நீருண் துறையில் உதிர்ந்த நாவற் கனியை அழகு சிதையக் கொண்டு சென்று தாழை வேர்ப் பக்கத்திருக்கும் அளையிலுள்ள தன பெடைககுக் கொடுக்கும் நண்டைக் காட்டி, இது நல்ல பான்மை யுடையது என்று தலைவன் கூறி அதனை நீடு நினைத்துச் சென றதைத் தோழி தலைவிக்குக் கூறி னாள் (அகம். 380:1-4). எறுமபின அளைகள் போலப் பாறையில் குறிய பல சுனைகள் உள்ளன (குறு. 12:1). மாரிக்காலத்து ஆம்பல் போன்ற கொக்கின் பார்வைக் கஞ்சித துன்புற்ற நண்டு தாழையின் வேர்ப்பக்கத்துள்ள அளையிற் புக, ஆயர், கயிற்றால் கட்டிய எருது அறுத்துக்கொண்டு ஓடுவதுபோல விரைந்தோடும் (குறு. 117:1-4). ஞாழல் மரத்தின் வேரிடத்து அளையிலுள்ள நணடின் சிறுமனை சிதைய அலை முரசுபோல் முழங்கி மோதும் (குறு. 328:1-3). அளையில் வாழும் நணடு நகத்தால் கீறிய ஈரமணலையுடைய நீரொழுகும் வழி சிதைய இடியோசையுடைய அலை முழங்கித் தாக்கும் (குறு. 351:1-4). பாம்பு அளையை அடைய முழஙகி, வல மாக எழுந்து மேகம் மழை பொழிந்த காலத்து அழகிய தோகையை விரித்து மயிலாடும் (நற். 264: 1-4). பாம்புறையும் ஈர்அளைப் புற்றைக் கார்மேகம் போல சூழந்துகொண்டு இரையைக் கரடியினம் தோண்டியெடுக்கும் (நற். 336:8-10). பொழுது போனபின் மலரும் கூம்பின; புலால நாற்றமுள்ள அடைகரையில் யாமைப பார்ப்போடு அலவனும் அளையிற் சென்று சேர்ந்தன (நற். 385:1-3). சேற் றில் விளையாடிய நண்டு முள்ளி வேரளையிற்புகும் (ஐங. 22:1,2). முள்ளி வேர்ப்பக்கத்துள்ள அளை யிலிருக்கும் நண்டைப் பிடித்து அலைத்து மகளிர் விளையாடுவர் (ஐங். 23:1). வயலிலுள்ள நெற்கதிரை நணடு தன் அளைக்குள் கொண்டு வைக்கும் (ஐங. 27:1,2). வேம்பினரும்பு போன்ற நீண்ட கண்ணை யுடைய நண்டு மண்அளை நிறைய நெல்லின் பூவை உதிர்க்கும் (ஐங. 30:1-3). நிலாப் போன்ற வெண்மணல் மேட்டில் ஓடிய நண்டுகள் ஞாழல் பூப் போலத் தலைவியின மேனியில் பசப்புண் டாகச் செயத தலைவனது கொடுமைக்கு நாணி அளையில் சென்று புகுகின்றனவோ எனத் தோழி தலைவியை வினவினாள் (கலி. 131:15-20). அலை மோதும்போது அளையைவிட்டு வெளிவந்த நண்டு மணல மேட்டில் விளையாடியபோது உண்டான வடு சூதாடுமிடத்து வட்டினால் உண்டாய வடுப் போல் காணபபட்டது (கலி. 136:1–4).

3. **பள்ளம்.** மழையற்ற வறண்டகாலத்துப் பயிர் செய்யாத கரம்பை நிலத்தில் வெடிப்புள்ள அளை யில் - பள்ளததில் - பேரியாற்று நீர் பாயந்து நிறை யும் (பதி. 28:7-10).

4. **மோர்.** பாரியின் பறம்புநாடு புற்றிலுள்ள ஈயலை இனிய அளையுடன - மோருடன் - சேர்த்துச் சமைக் கப்பெற்ற புளிங்கறியை யுடையது (புறம். 119:3,4). இடைச்சியர் அளை விற்றதனாலுண்டாய நெல் முதலியவற்றைக் கொண்டு சுற்றத்திற்கு உண வளிப்பர் (பெரு. 162, 163). புலி தின்று துறந்த பாறையிற் கிடநத மானின் உலர்ந்த இறைச்சியை மூங்கி லரிசியொடு அளை பெய்து சமைத்து அவ் வுணவைத் தேக்கிலையில் வைதது வடுகர் உண டனர் (அகம. 107:5-11). தன் கணவன் கொல்லேற் றைத் தழுவினவன் என்னும் புகழச்சொற் கேட்டு ஆயமகள அளைவிறறு வரும் செல்வத்தை அவன் தருவனோ என வினவுகிறாள் (கலி. 106:43-45). அழகிய ஆயர்மடந்தை ஊரில் அளைவிற்றுத் திரும் பும்போது நகைத்துத் தன் உயிர் போம்படி படை தொடுத்ததாகத் தலைவன் கூறுகிறான் (கலி 108: 4-7). அளை விற்று மீளுகின்ற ஆய்மகள் மாவடுப் போன்ற கண்ணால் தலைவன் நெஞ்சைத் தனக்கு இருப்பிடமாக வாங்கிக் கொண்டு அடிமைத் தொழில் கொண்டாள் (கலி. 108:26-29). தலைவி நகைததால் தலைவன் அவளைத் துய்ப்பதற்கு எளிமையாகக் கருதிவிட்டான்; அப்போது தலைவி 'அளைக்கு எளியளாகஇருப்பவள் வெண்ணெய்க்கும்

எளிய ளாவளோ' எனக் குறிப்பு மொழியினாற் கருத்தினைப் புலப்படுத்துகிறாள் (கலி. 110:4-7).

**அளைகணாட்டி** - நீரளைந்த கண்ணையுடையவள். அளை கணாட்டி யாகிய செவிலித்தாய் தன்னை மகள் துறநது சென்றமையினால் துன்பம் வருத்த மெலிநது அறககடவுளை வெறுத்துப் பேசுகின்றாள் (ஐங. 393.1, 2).

**அற்சிரம்** - பனிக்காலம். குறவர் முற்றத்தில் அற்சிரத்தில - பனிக்காலத்தில் - மூங்கில மலர் உதிர, காந்தளின் துடுப்புப் போன்ற மலர் அசைய, தண்ணென்று வாடைக்காற்று வீசும் (அகம். 78·7-10). அறசிரக் காலத்தில் குரவ மலர் பூக்கும் (அகம். 97: 16, 17). மேகம் பெருமழை பொழிந்த விடியலில அற்சிரம தனித்திருப்போர்க்குத் தாங்கற் கரியது என உணர்ந்து தலைவன் கனவிலும் பிரியான் (அகம். 178:18-20). மாலைப் பொழுதில பிடவ மலரினை வண்டு வாய்திறக்கக் கூதிர் அற்சிரக் காலங்களுக்குரிய வாடைக் காற்று அம் மலரின் மணத்தைத் தூற்றுகிறது (அகம். 183:10-13). மழை போலப் பனி பெய்யும் அற்சிரக் காலத்து இருள் நீங்க மூங்கில் நிறைந்த பக்கமலையில மதக் களிற்றின் கனனத்தின் பக்கம் ஒபப நீர் ஊர்ந்திறங்கும் உச்சி மலையில் புலியின்தோல் போல வேங்கை மலர் உதிரும் (அகம. 205:15-20). மழை பொழிந்த வெண் மேகம் கடையப் பெற்ற பஞ்சு மென்மை யுற்றாற் போலச் சிறுதுவலை தூவலும் ஒழியக் கரும்பின் வெண்பூ கோடைக்காலப் பூளைப்பூப் போல வாடைக் காற்றால் அசைய, பகன்றை கிடுகுப் படை போல் வெண்மையாக மலர, அவரை அரும்பு பூக்க, தோன்றி மலர, குருகினம் நரல, காதலரைப் பிரிநதோர் அணி துறந்து நடுங்க, அற்சிரம் வந்தது (அகம். 217:1-13). கூதாளியின் மாலைபோல விணணில் வெணகுருகு சிறகினை வளைத்துக் கடற் பக்கத்தே காலையில் அமர, விளைநிலம் கதிர் ஈன அற்சிரம் வந்தது (அகம். 273:1-4). அற்சிரக் காலத்தில் புகை போன்ற புள்ளியாய பனித்துளி பூவினுள் நிறைய, காதலரைப் பிரிந்த மகளிரின் நீரொழுகும் கண்களைப் போலக் கருவிளை மலர, இண்டைத்தளிர் அசைய, அவரைப் பூக்கள் எங்கும் செறிய, வயலில் நெல் தலைசாய, வண்டுகள் கிளையில் அசையும் (அகம். 294:2-11). வானிடத்து மழை பெய்து முடிய அற்சிரக் காலம் பகலினும் இருளைப் பரப்பிப் புகையின் நிறம் போலும் உருவினையுடையதாய்த் தோன்றும் (அகம். 317:1-3). தேரின் உருளை ஆழ்ந்த சுவட்டில் பாம்புபோல விரைந்து நீர் ஓட, குவிநது ஒட்டுதல் நீங்கின விரல்போலப் பயற்றங்காய் முதிர அற்சிரம் எழுந்தது (அகம். 339: 1-5). வாடைக்காற்று வீசும் அற்சிரக் காலத்து ஒளியுடைய ஞாயிற்று மண்டிலம் மழுங்கித் தோன்றும் (அகம. 378:13,14). காடையின் கால் போன்ற செங்கால் உழுந்தின் முதிர்ந்த காயை மானினம் கவர்தற்குரிய காலம் அற்சிரம் (குறு. 68:1-3). சேம்பின் இலை அனசய அற்சிரததில் வாடை வீசும் (குறு. 76·4-6). அற்சிரக் காலத்து அவரை பூக்கும் (குறு. 82:5,6). 'குற்றமற்ற தெருவில ஓரில்லத்தில் பெற்ற செநநெற் சோற்றுருண்டையும் வெள்ளிய நெய்யும் ஆகிய பிச்சையை வயிறார உண்டு அற்சிரக் காலத்து விரும்பத்தக்க வெந்நீரைச் சேமச் செப்பில் பெறுவாயாக' என அறிவனிடம் தோழி கூறுகிறாள் (குறு. 277:1-5). அற்சிரக காலத்தே பின்பனிக் கடைநாளில் தலைவன தேர்வருதல் (குறு. 338:5,6). நிலம் நீர் நிரம்ப, குன்று பசுமை யுற்றுத் தழைக்க, சுனைநீர் பெருகிப பயிர்வளம் பெருக்க, குறவர் வெட்டிய நறைககொடி தழைததுச் சந்தன மரததைச் சுற்ற, பெருமழை பொழிந்து நீங்கிய அற்சிரக் காலத்து மேகம் பூமாரி தூற வாடைக்காற்றடிக்கும் (நற்.5:1-6). தோலையுடைய கேடயம் போனற பகனறை மலர் அற்சிரக காலத்துப் பூக்கும் (நற். 86:2-4). பனி மூடிய புதரிலுள்ள இண்டங்குழை வருடும் பார்வைக் குருகின காற் கட்டை வேட்டுவன அவிழ்ககவும் அது வெளியே பறவாது சிறகு குவிந்திருககும் மழை பொழிகின்ற மயக்கந தரும் காலம் அற்சிரம் (நற். 312:2-5). மலைப்பக்கத்து நீர் இழியக் காந்தள் செழிக்கக காதலரைப் பிரிந்தோா செயலறறு வருந்த அற்சிரக் காலத்தில் வாடைக்காறறு வீசும் (ஐங். 223: 1-4). அறசிரக் காலத்தில் கணணெனக் கருவிளை மலரும்; புதரில் பொன்னெனப் பீர்க்கம் பூ பூக்கும் (ஐங். 464:1-3). அரும்பனி மிக்க அறசிரக் காலத்து இருநிலம் குளிர்பப வாடைககாற்று வீசும் (ஐங். 470:1,2). அசசிரம் காண்க.

**அற்பு** - அன்பு. கற்புடைய தேவியரது அற்பு - அன்பு- பொருந்திய ஊடலுரிமையை விரும்புகின்ற பண்புடையவன் செவ்வேள் (பரி. 9:81,82). அன்பு காண்க.

**அற்றம்** - 1. சோர்வு. ஆண் காட்டுப் பூனை ஊனை விரும்பும் தன் பெண பூனையின் பசி நீக்கச் சேவற்கோழியைப் பற்றுதற்கு மாலைக் காலத்து, அற்றம்- சோர்வு - பார்ககிறது (அகம். 367:8-13). வழிப் போவாரின் அற்றம் பார்த்திருககும் மறவர் தாம கொள்ளுதற்கு அவரிடம் பொருளில்லாவிடினும் துள்ளித துடிப்பதைக் காணபதற்காக அவருடைய உயிரைக் கவர்வர் (கலி. 4:3-5). என்னை அற்றத்திட்டு ஆற்றறுத்த தலைவன் மார்பு இங்ஙனம்

துன்பம் செய்யும் என்று அறியின் முன் முயங்கி யிருக்க மாட்டேன் எனத தலைவி கூறினாள (கலி. 144.64-66).

2. துன்பம். ஏழு வள்ளல்களும் மாய்நத பிறகு குமணன் 'இரந்தோரது அற்றம் - துன்பம் -தீர்க்கக் கடவேன யான்' என்று இருத்தலின பலரும் பரிசில் பெற அவனை நாடினர் (புறம. 158:17-20).

3. காலம். வாடைவீசும் இருட்பொழுதில் மழை பெய்து சேறாகிய தொழுவத்தில் கூழைப் பசுவை மாற்றிக்கட்டும் அற்றததே - காலததே – அவ்வாறு கட்டாமல், உச்சியில் தூககிக் கட்டியதால அது பெரிதும் வருந்தியது (நற. 109:5-9).

**அறங்காவற் பெண்டிர் – கற்புடை மகளிர்.** பாண்டியரின் கூடல் நகரில் நீலமணி போலும் கூந்தலும் மாந்தளிர் போனற மேனியும் முலலை போன்ற பற்களும் பவளம் போன்ற வாயிதழ்களும் கொணடவராய் அறங்காவற் பெண்டிர் - கற்புடை மகளிர் - பலர் இருந்தனர் (பரி. 2:46-50).

**அறங்கூறவையம் – அறத்தை உரைக்கும் அவை.** அச்சமும் அவலமும் ஆர்வமும நீககிச் செற்றமும உவகையும் செயயாது காததுத துலாககோல போல நடுநிலையுடையதாய்ச சிறநத கொளகை யுடைய அறங்கூறவையம் - அறத்தை உரைககும் அவை - மதுரையில இருந்தது (மது.489-492).

**அறங்கெழுநல்லவை – அறம் பொருந்திய சான்றோரவை.** அறங்கெழு நலலவை - அறம் பொருந்திய சானறோரவை - ஆததிமாலை புனைந்த சோழரின உறையூரில் விளங்கியது; அவவுறையூர் தலைவன் தேடிய அருங்கலன்களுக்கு உவமை (அகம. 93:4-6).

**அறஞ்செய்திங்கள் – அறஞ்செய்தற் குரிய கார்த்திகை மாதம்.** கார்த்திகை மீன்களோடு கூடிய, அறஞ் செய திங்களின - கார்த்திகை மாதத்தின் - நிறை மதி நாளில் மகளிர் விளக்குகளை வரிசையாக ஏறறுவர் (நற். 202:9-11).

**அறத்தாறு – அறவழி.** பாணடியன் பல்யாக சாலை முதுகுடுமிப பெருவழுதி படையெடுக்கு முன், 'ஆக்கள, அந்தணர், பிணியாளர், பிளளைகளைப் பெறாதார் ஆகியோர் பாதுகாப்பான இடஞ் சேர்வாராக' எனறு பகை நாட்டவர்க்கு அறத்தாறு - அறவழி - கூறும் கொள்கையினன் (புறம.9: 1-6). தலைவன பொருள்வயிற பிரிய முற்பட்ட போது, தலைவி அவவாறு பிரிந்து செலவது அறத்தாறு அன்று எனனும பழமை பொருந்தின சொலலைக் கூற்றினால் உரையாது, முகக்குறிப்பினால உணர்த்துவள் என்று தலைவன் தன நெஞ்சிற்குக கூறினான (அகம். 5:16-19).

**அறத்துறை – அறத்தின் கூறுபாடு.** 'நாடோறும் பலரையும் காத்தலை ஏற்றுக்கொண்டு ஒரு பெற்றியே விளங்கும் அறத்துறை யாகிய - அறததின் கூறு பாடாகிய - நின்னை எஞ்ஞான்றும் மறவேன்' என்று ஆதனுங்கனைக் கள்ளில் ஆத்திரையனார் பாடியுள்ளார் (புறம.175:5-10). செல்வக் கடுங்கோ வாழியாதன புகழ்தலமைந்த செல்வத்தையுடைய வேள்விகளைச் செயத பொழுதில் மற்றை அறத் துறைகளையும் செய்து முடிததான் (பதி. ப. 7:6,7).

**அறத்துறை அம்பி – நீர்த்துறைக்கண்ணே அறத்திற்காகச் செயல்படும் தெப்பம்.** நீர்த்துறையினைக் கடக்க விரும்புவோர் பெரிய ராயினும் சிறிய ராயினும் அவர்களை இருகரைக்கும் மாறி மாறிக் கொணடு சேர்க்கும், அறத்துறை அம்பி போன்றவன் கரும் பனூரன் (புறம். 381:23-26).

**அறத்தொடு நிற்றல் - தலைவன் தலைவியர்க்கிடையே தோனறிய களவை முறைப்படி வெளிப்படுத்திக் கற்பு வழிப்படுத்துதல்.** 'எங்களொடு நீராடிய தலைவி கால தளர்நது, நீரொடு அடித்துச் செல்லும்போது ஒரு தலைவன எதிர்பாராதவாறு ஆண்டுத் தோன்றி நீருட் பாயந்து தலைவியின் உடலை அணைத்துப் பற்றிக் கொண்டு வந்து கரையிற் சேர்ததனன; அவள் மாாபு அவன் மீதுறறமையால் அவள மழையினைப் பெயவிக்கத் தகக கற்புடைய வள ஆயினள்; உதவிய அவனுக்குத் தலைவியை மணஞ் செயய நினையாது, வேறொருவனுககுக் கொடுகக நினைததுப் பெற்றோர் அறமலலாதன செய்ய முறபடுவதால், அதன் விளைவாக மலையில் தேனும் தினையும் உண்டாகா; குறவரும் அம்புக் குறி பிழைப்பர்' என்று கூறித் தோழி தாய்க்கு அறதொடு நிற்ப, அவள் தன ஐயர்க்கு அறத தொடு நின்றாள் (கலி. 39:1-21).

**அறந்தெரி திகிரி – அறத்தின் வழிச் செலுத்தும் ஆணைச் சக்கரம்.** சினம், காமம், மிகக கணணோட்டம், அசசம், பொய், மிகக பொருட்பற்று, மிகுதணடம் ஆகிய இவற்றொடு பிறவும் அறநதெரி திகிரிக்கு-ஆணைச் சக்கரததுக்கு - தடைகளாகும் (பதி. 22:1-4).

**அறநெறி – அறத்தின் நெறிமுறை.** யானையும் குதிரையும் தேரும் மறவரும் எனனும் நான்கினைப் பெற்றிருப்பினும் அரசின் வெறறி அறநெறியை - அறத்தின் நெறி முறையை-முதனமையாக உடையது (புறம. 55:7-10). 'அரசிலக்கணம் தவறாமல, பெரியோர் சென்ற நெறிமுறையில பிறழாமல அறநெறி விளக்கி நின் வலம்படு கொற்றம் வழிவழி சிறக்க' என நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் வாழ்த்துவர். (மது. 191-194). அந்தணர் பள்ளியில் அறநெறி பிழையா அன்புடைய நெஞ்சின் பெரி

யோர் உறைந்தனர் (மது. 472-474). பண்டங்களை விற்கும் வணிகரும் அறநெறி பிழையாது இல்லறத்திற்குக் கூறிய வழியிலே நடந்தனர் (மது. 500, 506). 'தலைவன்பின் உடன்போக்கு மேற்கொள்ளுதலே அறநெறியெனத் தெளிந்து பிறைநுதற் குறுமகள் சுரநெறியிற் சென்று விட்டாள்; அநநெறி இனிய தாகுக' எனத் தாய வேண்டுவள் (ஐங். 371:3-5). நல்ல அறநெறியினை உலகத்திலே நிலைநிறுத்தி ஆண்ட அரசன் சென்றபின், நீதி அல்லதனை ஏறட்டுக் கொண்டு அறநெறியை நிலை நாட்டாத குறுநில மன்னன் காலம் போலக் கதிரவன் மாய்ந்த பின் இருள் பரவ மாலைக்காலம் வந்தது (கலி. 129: 3-7).

**அறம் – 1.** மனமாசு அகற்றிய மக்களது ஒழுகலாறு. சேரமான் யானைக்கட்சேய மாந்தரஞ்சேரலிரும் பொறை அம்பு தங்கிய அரிய அரண்களையும் அறம் தங்கிய செங்கோலையுமுடையவன் (புறம். 20: 16,17). வேலிக்கு வெளியேயுள்ளோர் விரும்பினால், வயலிற் கரும்பு எடுப்போர் அறங்கருதிச் சில கரும் பினைப் பிடுங்கி அவர் பெறுமாறு வீசுவர் (புறம். 28:11,12). சிறப்புடை மரபின பொருளும் இன்பமும் அறத்துவழிப்படும தோற்றம் போலச் சேர பாண்டி யர்தம் இருகுடை பிற்பட ஓங்கி விளங்கும் ஒரு குடை யுடையவன் சோழன் நலங்கிள்ளி (புறம். 31:1-4). சோழரது உறையூரின்கண் விளங்கிய அவையில் அறம் கேடின்றி நிலைபெற்றிருந்தது (புறம். 39:8,9; நற். 400:7,8). சோழன் குராபபள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன் அறந் தங்கிய உறையூர்க்கு அரசனாவன் (புறம். 58:9). மன்னர் தம்மில் மாறு பட்டுப் போரிடுங் காலத்தும் அறநெறியினை மேற்கொண்டனர் (புறம். 62.7,8). போரில் ஈடுபட்டு இறவாது, நோயால் இறந்த அரசன் உடலை, அறததை விரும்புங் கோட்பாடுடைய அந்தணர் தருப்பைப் புல்லிற் கிடத்தி, வாளினாற் பிளந்து அடக்கஞ் செய்வர் (புறம். 93:5-11). இரவலர் வேண்டி இரந்தால் கொடையறஞ் சான்ற பாரி, தன்னையே அவர்க்கு நல்கி அவர்வழிப் படரும் தன்மையன் என்று கபிலர் பாரியைப் போற்றுவர் (புறம். 108:4-6). இம்மையிற் செய்தது மறுமைக் குதவும் எனக் கருதிப் பொருளை விலையாகக் கொடுத்து அறத்தினை வாங்கும் அறவிலை வணி கன் ஆய் அல்லன் (புறம். 134:1, 2). வையாவிக் கோப்பெரும்பேகன், அருளாமையினால் வருந்தும் அவன் மனைவிபாற் சென்று அவளுடைய துய ரைத் துடைத்தலே அறம் என்று பரணர் கூறினர் (புறம். 145:7-10). இனமாகிய எருதுகளைத் தொழு வத்தொடு வேண்டினும் களமலி நெல்லின் குப்பை வேண்டினும் அருங்கலம் களிற்றொடு வேணடி னும் தமக்கு மட்டுமன்றிப் பிறர்க்கும் அத்தகைய அறஞ்செய்யும் கூற்றை யுடையவன் பிட்டங்கொற் றன என்று அவன் கொடைச் சிறப்பைக் காரிக கண்ணனார் பாராட்டுவர் (புறம். 171:8-11). 'மன் பதையைக் காக்கும் உயர்ச்சியை நோக்காது அன்பு கண் மாறிய அறனில்லாத காட்சியொடு நும்ம னோர் அருள் மாறுவாராயின் எம்மனோர் இவ் வுலகத்துப் பிறவாதொழியக் கடவர்' என்று சேர மான் குடக்கோச் சேரலிரும் பொறையிடம் பெருங் குன்றூர் கிழார் கூறினார் (புறம். 210:1-4). 'நான விரைவில் இல்லம் செல்லேனாயின அறனில கூற் றம் திறனினறு துணிய இறந்துபட்டேனோ என் றெணணித தனனுயிர் கெடுவதாக எனப் பல புலந்து கூறி உறையும் என் மனையோளின் துன் பம் போக்க விடை பெற்றேன' என்று பரிசில் நீட்டித்த சேரமான குடககோச் சேரலிரும் பொறையிடம் பெருங்குன்றூர் கிழார் உரைத்தார் (புறம். 210:6-12). சோழன கரிகாற் பெருவளத்தான், அறத்தினைத் தெளிவு பெற உணர்நது ஒழுக்கஞ் சிறந்த அந்தணர் அவைக்களத்தில், வேள்வி முறை யறிந்தவர்கள் வழிகாட்டப பல வேள்விகளைச் செய்து முடித்து அவற்றின் பயனை நனகறிந்த அறிவுடையனாவன் (புறம். 224:4-10). தமககுத் துணையாவார் இறந்த நிலையில, உயிரைக் கொண்டு செல்லும் கூற்றுவனை அறமிலலாதவன் என்று இகழ்ந்து அரற்றுவது இயலபு (புறம. 237: 9, 10). இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளியை, 'அவியுணவினோர் (தேவர்) புறங்காப்ப அற நெஞ்சத்தோன் பன்னாள் வாழ்க' என்று உலோச் சனார் கிணைப் பொருநன் கூற்றில் வாழத்துவர் (புறம. 377:4-6). வேண்மானுக் குரிய அரிய காவல் மிக்க பிடவூரி லுள்ள சாத்தன அறத்தா லுண டாகிய புகழ் வாய்ந்தவன் (புறம். 395:20,21). குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் அறுவகைத் தொழிலை யுடைய அந்தணர் அறத்தினை விரும்பிச் செய்யும் வேள்வித் தீ விளங்கும் நாட்டை உடைய வன் (புறம். 397:20, 21). அறுதொழிலை யுடைய அந்தணர் அறத்தினை விரும்பி ஒழுகுவர் (பதி. 24: 6, 8). களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரலின் தேவி அறஞ்சால் கற்பினள் (பதி. 31:24). மலையிடத்தவும் கடலிடத்தவு மாகிய பண்டங்களைப் பலர்க்கும் பகுத்துக் கொடுக்கும் வழி முட்டுப்படாமல தனது நாட்டைக் காத்தலாகிய அறத்தை விரும்பி ஒழுகு பவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன (பதி. 59: 15, 16). அந்தணர் அறத்தினையே கூறி விளங்கும் நாவினையுடையவரும் அரிய வேள்விகளைப் புரிந் தவரும் நிறைந்த கேள்வியினை யுடையவருமாவர்

(பதி. 64:3-5). செல்வக் கடுங்கோ வாழியாதன் புகழ் மிக்க வேள்விகளைச செயதபோது, ஏனைய அறச் செயல்கள் பலவறறையும் செயது முடித்தனன் (பதி.7.6, 7). செலவக் கடுங்கோ வாழியாதன் அரச வைகள் பணியுமாறு அறததையும் வீரத்தையும் விருமபிச செய்யும் கொள்கையுடையவன (பதி. 85. 9, 10). தொணடைமான் இளந்திரையன் பாவத் தினைப் போக்கி அறத்தினை விரும்பும் செங் கோலினை உடையவன் (பெரு. 36, 37). வேதமோதி, ஒழுக்கஞ்சிறந்து, இறை தாமேயாகி உயர்ந்த தேவருலகத்தை இவ்வுலகத்திருந்தே அடையும் அற நெறிகள் தவறாது, பலவுயிர்க்கும் அன்புடைய உள்ளங்கொண்டு வாழும் பெரியவர் பலர் அந்த ணர் பள்ளியுள் உறைநதனர் (மது.468-474). [இப் பெரியோரை நச்சினார்க்கினியர் ஒன்றாகிய பிர மம் தாங்களேயாய் விளங்கும் சீவன் முத்தர் என் பர்: மது. 470-473-உரை.] விருந்தினர் உண்டு மிகுந்த உணவைத் தலைவி இடத் தலைவன் உணணும் இல்லற வாழ்க்கை அவர்களைக் கரை யேற்றும் (குறி. 206-208). குறிஞ்சிப்பாட்டு ஆற்றல் சால கேள்வி அறம் பொருள் இன்பத்தைப் போற் றிப் புனைந்த பொருளை யுடையது (குறி. வெ. 2). இம்மைக்குப் புகழ்மொழியும் மறுமைக்கு அறமும் நிலைபெற விளங்கும பெரிய சோறிடுஞ்சாலை புகார் நகர்க்கண் விளங்கியது (பட். 42, 43). வீர மிக்க போரில் வல்ல பாண்டியர் அறநெறி வழாது காத்தலையுடையது கொற்கைத துறைமுகம் (அகம. 27:8, 9). நாளும் மெய்வருந்தி உழைக்கும் ஊக்க மில்லாதவர்க்கு, அறநெறியினின்றும் நீங்காது இல்வாழ்க்கை நடத்துதலும், சுற்றத்தார் துன்பங் களைத் தாங்கலும் இல்லையாகும் (அகம். 173:1-3). 'நாம் உறையும் இடத்தின் நீங்கிக் கானலம் பெருந்துறைப் பரதவனோடு உப்புடன் உழந் தும் கடலில் புணையொடு புகுந்தும் மீனை அகப் படுத்துப் பணிந்து அடுத்து வாழ்ந்தால் அறந் தெரிந்து அவன் தன் மகளைத் தருவானோ' எனத் தலைவன் தன் நெஞ்சிடம் கூறினான் (அகம். 280: 6-11). வீரமிக்க படையினையுடைய அரசருள்ளும் அறத்தினைக் கைக்கொண்ட செங்கோலாட்சியும் பகைவரின் அஞ்சாமையை அழித்துயர்ந்த தோளும் புகழமிக்க செலவமும் உடையவன் பசும்பூட் பாண்டியன் (அகம். 338:2-5). வேனிலில் வழிச்செல் வோர் எவரும் உண்டு உயிர் தாங்குதற்குதவியாக அமைந்த நெல்லிக்காய் 'அறந்தலைப்பட்ட நெல்லி யம் பசுங்காய' என்று சிறப்பிக்கப்பட்டது (குறு. 209:1). திறவோர் செய்வினை அறவதாகும் (குறு. 247:2). நாடு அறத்தொடு வருந்திய அலகுதொழி லைக் கொள்ள மழை பொழிந்தது (நற். 42:2,3): 'நின் நன்மேனியும் நறுங்கதுப்பும் மாதர் உண் கணும் வனப்புடைத்தோளும் காணடொறும் அகம் மலர்நது அறத்தில் நிலை பெற்றோர் எய்தும் இன் பப் பயனை எய்தினேன்' எனத் தலைவன் கிழத்தி யிடம் மொழிந்தான் (நற்.166:1-6). பொருள்வயிற் பிரிதல ஆடவர்கது இயல்பெனின் அறத்தைக் காட்டிலும பொருள் தெளிவாக அரியது போலும் எனப் பிரிவிடை மெலிந்த தலைவி உரைத்தாள் (நற்.243:9-11). நாட்டில் அறஞ்சிறக்க வேண்டு மெனறும் அறமல்லது அழிதல் வேண்டுமென்றும் மனையுறை தாய்மார் வேண்டுவர் (ஐங். 7:2). 'கொடிச்சியால் நோக்கப்படுதலானும் அவளால ஓபபப் பெறுதலானும் கிள்ளை அறம்புரி செங் கோல மனனனின் மிகச் சிறந்தன போலும்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங்.290). உடன போக்கில் தலைவனுக்குத் தமையன்மாரால் ஊறு நேராத வண்ணம் மறைத்த குனறினை 'அறஞ் சாலியரோ, அறஞ்சாலியரோ, வறனுண்டாயினும் அறஞசாலியரோ' எனத் தலைவி வாழ்த்தினாள் (ஐங்.312). அந்தணர். அறததினை உரைக்கு அரிய மறையினை ஓதிய நாவினையும் அது விதிக்கும செயல்வகை தெரிந்தாற்றும் ஒழுக்கத்தையும் உடை யவர் (ஐங்.387:1, 2). தன் மகள் தலைவனொடு உடன்போக்கிற் சென்றமை அறிந்த தாய் வருந்தி, அறத்தினை வெறுத்துப்பழிப்பது இயல்பு (ஐங. 393: 1-3). உடனபோய தலைவியைத் தேடிச் சென்ற செவிலிக்கு, முக்கோற்பகவர் சிறந்தவனாகிய கண வனை வழிபட்டு அவன்பின் செலவது அறத்தின் திரியாத நெறியாகுமாதலின் மகளுக்காக வருந் தாதே என்று அறுவுறுத்தினர் (கலி.9:22-24). 'என னுடன் காட்டிற்கு வந்தால், நீ தண்ணீர் பருக விரும்பின் வெஞ்சுர நெறியில் நீரில்லையே' எனறு அறம நோக்கித் தலைவன தன்னிடம் கூறுவான் எனத் தலைவி கருதினாள் (கலி. 20:11,12). தலை வன் அளிபெறாத தலைவி பொலிவு இழத்தற்கு, அறஞ்சாராது முதுமையெய்தியவன் மறுமைச் செல வப் பொலிவிழத்தல் உவமை (கலி. 38: 19, 20). ஒருபக்கமும் சாயாது நேர்நிற்கும் துலாக்கோல் போல ஆராய்ந்து அறத்தையே விரும்பும் நெஞ் சததை யுடையவன் தலைவன் (கலி. 42:14,15). பொருள்வயிற் செல்ல முயலாதே வருந்தியிருந் தார்க்கு அவர் இருந்த இடத்தில் பொருள் தானே செல்லுதல் அரிதா யிருத்தலால் உலகம் தமக்கு உரித்தாக அறத்தைச் செய்யாதிருக்கவும் அறஞ் செய்தற்கு அமைந்தோர் அறுதியாக அவ்வறத்தைச் செய்தலும் கனவிடத்தின்றாய்ப்போக, முயங்கிய நல்லார் முலையிடை மூழ்கிய கணவரை மகளிர் ஊடலாற் பிரிதலும் ஊடல் தீர்ந்து புணர்தலு

மாகிய இன்பத்தைக் கனவிடத்தே தருதலை அது விலக்காதாம்; அதனால் கனவெனப்பட்டது அழகிய இயல்பினது (கலி. 92:2-9). கள்ளுண்ணாத் தேவர்க்கு அதனை நீக்கி வியாழனும், கள்ளுண்ணும் அசுரர்க்கு அதனை நீக்காது வெள்ளியும், அறத்தொழிலாக இனபமுறுத்தும் அறநூலகளைச் செய்தனர் (கலி. 99:1-3). முற்பிறப்பில மனம் வேறுபட்டுத் தீவினை செய்து அறம் பொருள் இன்பங்களில அறமாகிய பகுதியைச் சாராதவர் இபபிறப்பில செய்து உழலும் தொழில்களுள் மடலேறுதலும் ஒன்று என்று அறநூல்கள் உரைக்கும் (கலி.141:1-6). கள்ளையும் நறவையும உணடவர் அறமல்லாத மொழி பேசியும் அறம் தோன்றா வண்ணம் செயல் புரிந்தும் உலகியல் கெட்டு மயங்குவர் (கலி.147:1,2). 'எண்ணியதை எய்துதல் வேண்டும் எனனும் வேட்கையால் அறந்துறந்து வெஞ்சுரம் கடந்து பிறங்கு நீர் சடைக் கரந்தானை (சிவனை) ஒத்த பொருளாக்கத்திலே பிரிநதவர் நீ நிறம் பசந்து வருந்தக் கைவிட மாட்டார்' எனக் கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (கலி. 150:7-10). திருமால் அறத்தினுள் அனபாகத் திகழ்வர் (பரி. 3:65). திருமால் அருளைக் குடையாவும் அறத்தைக் குடைக்காம்பாகவும் கொண்டு மூவேழுலகங்களையும் காக்குந் தொழிலை உடையவர் (பரி. 3:74 - 76). முருகன் குணத்தை ஏற்றுக் கொணட அறமுடையவர் அவனது தாள்நிழலை எய்துவர்; அறததினைச் சேராத புகழில்லாதவர் அவன தாள் நிழல் எய்தார் (பரி. 5:71,74,76). திருமால் கேள்வியும் அறிவும் அறத்தொடு நுண்ணியர் (பரி. 13:55). மதுரை மைந்தரும் மகளிரும் இரவு நீங்கி விடியலில் பரங்குன்றம் நோக்கிச் செலவது அறம் புரிந்தோர் அதனபயன் துய்க்கத் தேவருலகம் செல்வதனை ஒக்கும் (பரி. 19:1-11). திருமால் எழுந்தருளியிருக்குமிடத்தில், அறத்தொடு வேதங்கூறும் தவத்தினை முடித்துப் புகழ்மிக்கவரும தம் நிலையில் திரியாதவருமான அநதணர் வாழும் அறநெறி திரியாத ஊர் விளங்கியது (பரி. தி. 1.18-21). அறன 3 காண்க.

2. அறக்கடவுள். அறம் – அறக்கடவுள் - பொருந்தி ஆய்ந்தது போலச் செங்கோலினால் ஆராயும் ஆராய்ச்சியும் நீதியினைக் கேட்கவேண்டுங் காலத்தில் செவ்வி எளிமையும் கொண்டு விளங்கும் மன்னர், வேண்டுங்காலத்தே பெற்ற மழைக்கு ஒப்பாவார் (புறம். 35:14-16). பெருஞ்சிததிரனார் குமணவள்ளலிடம் தம் வறுமையைக் கூறும் போது தம்மனைவி இடையிற் கொண்ட பல குழந்தைகள் உண்டமையால் பாலின்றி உலர்ந்த மார்பினளாய்ச் சோறாகிய உணவை மறந்து, உப்பின்றி வெந்த குப்பைக்கீரையைத் தின்று, மாசுடைய கிழிந்த துணியினை உடுத்தி, அறம் பழித்து உண்ணாதிருப்பவள் என்று அவள் நிலையினைப் பாங்குறச் சித்திரித்துக் காட்டியுள்ளார் (புறம். 159:6-14). 'கடலே; என்னைப் பேணாது துறந்து சென்ற கணவரைத் தேடிக் காணுமிடம் காட்டாயாகில் உன்னுடைய இடமெலலாம் மணலாகுமாறு நீரைக் காலால் இறைப்பேன்; அதற்கு அறம் துணை செயயும்' என்று பிரிவாற்றாது அவரைத் தேடி வருந்தும் தலைவி கடலை நோககிக் கூறினள் (கலி.144:45-48). தலைவனைக் கணடீரோ எனறு வினவி வருந்தும் தலைவியின மிக்க வருத்தத்தில் அறம் வந்துதவுவது போலத் தலைவன் வந்துதவ அவனோடு கூடிய போது அவள் துன்பம் அகன்றது (கலி. 145:61-66).

3. அறநூல். ஆன்முலை அறுத்தல், மகளிர் கருச்சிதைத்தல், பார்ப்பாரைப் பிழைத்தல் போன்ற பாவங்கள் செய்தார்க்கும் கழுவாயுணடு; ஆனால் செயத நன்றியைச் சிதைததோர்க்குக் கழுவாய் இலலை என்று அறம்-அறநூல்-கூறும் (புறம். 34: 1-7). வேள்வியைச் செய்பவரின் மனைவியர் அறம் புகழப் பெற்ற வலையாகிய சாலகத்தை அணிவர் (புறம். 166:14). 'அந்தணாளிர், போருககெழும் தானை மறவர் முழககததைக் கேணமின; இஃது அருட்செயல் அன்மையின நும் நான்மறை குறிகக விலலை; புறத்துறையாகிய பொருள் குறிததலின் ஒழுக்கம கூறும் அறம் குறியாதாயிற்று' எனறு சிறுவெண்டேரையார் புலப்படுததுவர் (புறம. 362: 7-10). தலைவன் காமக் கிழத்தியரையும், அறம் கூறிய வழியே மணம் செய்து கொள்ளும் வழக்கம் உண்டு (கலி. 96:33,34). நல்லற வழியே உலகினை ஆண்ட அரசன் இறந்தபின், அறமல்லாதவற்றை மேற்கொணடு, உலகில அறத்தை நிறுத்த முடியாத 'நுறுநில மனனன் ஆட்சிக் காலத்தில் உலகம் மயக்கமுறும்; இது பகல மறைய வந்த மயக்கந்தரும் மாலைக்கால இயல்பிறகு உவமை (கலி. 129:4-7).

4. கற்பு. அறத்தினை-கற்பினை-காவல் பூண்டொழுகும் மகளிர் (அறங்காவற பெணடிர்) தம உரிமையுடைய கணவரொடு வையையில் புனலாடினர் (பரி. தி. 2:48-50).

அறல் - 1. கருமணல். கைம்மை நோன்பு கொள்ளும் மகளிர் அறல்-கருமணல்- போன்ற தம் கூந்தலைக் கொய்தனர் (புறம். 25:12-11). அறல ஒக்கும கூந்தல் (பதி. 74:3; பொரு. 25; மலை. 304; அகம். 35:16,17; 142:18; 162:10; 191:15; 213:23; 265:8; 299:18, குறு. 286:3; நற். 141:11,12). கூந்தலை விரித்தாற் போன்ற அறல் பரவிக்கிடந்தது (சிறு. 6) ஈச்ச

மரத்தின் கொழுவிய மடலின் முதுகுப்புறத்துக்கு யாற்றின் அறல் உவமை (பெரு. 86). அலையில் விளங்குகின்ற அறல் போன்று மடித்த புடவைகள் காணப்படும் (மது. 519,520). அறல் விளங்கும் வார் மணலை யுடையது அடைகரை (அகம். 97:18). தலைவன தலைவியின கூந்தலில் பன்மலரைப் புனைநது பின்னிவிட அது கான்யாற்று அவிர்அறல போன்று சிறுபுறம் புதைய நெறிந்து தாழ்ந்தது (அகம். 117: 12-14,19). தலைவியின் தமையன்மார் காவிரிப் பேரி யாற்றினது அறல் ஒழுகும் நெடுங்கயத்தின அருநிலை கலங்க நள்ளிரவிற் சென்று வாளைமீன் கொணர்வர் (அகம். 126:5-8). பாதிரிப்பூவும் அதிரற் பூவும் அறல் மீது உதிர்ந்து அழகு செயயும் (அகம். 237:1,2). காற்று கிளையினின்றும் பூக்களை உதிர்க்க அவை அறல மேல் சிதறி அழகாய்த் தோன்றுவது சிச்சிலிப் பறவையின் சிறகுபோல் உள்ளது (அகம். 324:9,10). சோழர் உறந்தையின் பெருந்துறையி லுள்ள நுண்ணிய அறல் பரந்து கிடப்பதுபோலக் கூந்தல் நெறிப்புடன் தணணி தாய் உள்ளது (குறு. 116). வேளைக்கு வேளை உணவுண்ணாமல் தலைவி வேளை மறுத்து உண்ணுதலுக்குத் தொடர்ச்சியாகப் படியாமல் இடையிட்டுப் படியும் அறல் உவமை (நற். 110; 12,13). அதிரலின் புதுப்பூப் பரந்து கதுப்புப் போன்ற அறலை அணிசெய்யும் கார்ப்பருவம் வந்தது (ஐங். 345:2,3). உதிர்ந்து வீழ்ந்த தாதாலும் தளிராலும் அறல் காதலரைக் கூடினவருடைய கூந்தல் போல் தோன்றியது (கலி. 27:5,6). இடையிடையே செம்மணல் செறிந்து அவிரறல் விளங்கும் வையையாற்றில வேனிற் காலத்தில் நீர் வளைந் தோடும் (கலி. 28:6,7). யாற்றிடைக் குறையைப் புடைசூழ்ந்து வையை அறலுணடாகும்படி ஒழுகும் (கலி. 30:15,16). ஒழுகும் அறல் கூந்தலாக, கயல் உண்கணணாக, கமழ்பூம் பொழிலிடத்தே நாணா கிய அணையை முறித்துப் பலரும்காணப் பகலில் வந்த புதுபபுனலை (பரத்தையை) தலைவன் பாணன் புணையாகப புக்கு ஆடினான் (கலி. 98:14-19).

2. நீர். கயல்மீன் அறலை-நீரை-எதிர்த்துச் செல்லப் பெருமழை பொழிநதது (நெடு. 18). குவளை மலர் போல் இருந்த தலைவியின் கண்கள் பிரிவுத்துய ரால் நறவம் பூப்போல் சிவந்த இதழை உடைய வாகி உள்ளங் கொதித்தலான் வெப்ப அறல் உகுத் தன (அகம. 19:9-14). இரலைமான் தன் பிணையைத் தழுவித் தண்ணிய அறலைப்பருகி ஓரிடத்தே சென்று தங்கியது (அகம. 23:8,9; 154:8,9; 184:11,12). தெளிந்த அறல் தழுவிச் செல்லும் வார்மணல் அடைகரை யினகண் இரலைமான் மடப்பிணையின துஞ்சு புறத்தைக் காக்கும் (அகம். 34:4-8). செந்நில மருங்கில் தேக்கி வைத்தாற் போன்ற தெள்ளறலைப் பருகிய மடப்பிணை இரலையோடு குருந்த நிழலில் வதியும் (அகம். 304:6-10). மழைநீர் ஓடுவதுபோல வாய்க்காலில் ஓடும் அறலை, அறுகம்புலலை மேய்ந்த இமிலுடைய நலல ஏறு களைபபுத் தீரப் பருகிக் காஞ்சியின் பொன்போன்ற தாது தனமீது படிய மணல் மேட்டில உறங்கும் (அகம. 341:6-11). அழகிய ஆண்மான் அறல்பட ஒழுகும் குறைந்த நீர்போல விளங்கித தோன்றும பேயத்தேரை விரும்பி ஓடி நீர்பெறாது வருநதிக கலஙகிய உள்ளததோடு பிணையை அழைக்கும் (அகம. 395:8-11). வனபரற் களிடையே உளள தெளிநத அறலைப் பருகிய ஆண்மான் இன்புறுந் துணையொடு துள்ளிக் குதித் தாடுமாறு மழை பொழியுங் கார்காலம் வநதது (குறு. 65.1-3). அவிர் அறல ஒழுகும் விரைசெலல் கான்யாறு (நற். 144:7). பாம்பு ஓடும போது அதன் முதுகு நெளியுமாறு போல ஆற்றறல் நுணங்கி யோடும் (நற். 157:3,4). அணிகலன் நெகிழ விம்மி அழும் அறலாகிய முத்து இடைமுலை நனைப்பத் தலைவி வாடி வருந்தினாள (நற். 208:1-4). பலா மரத்திற் கட்டப்பெறற சிவந்த பசுவின் கனறு வேரிற பழுத்த பலாப் பழத்தைத் தினறு பககத்தி லுள்ள மூங்கில் செறிந்த காட்டிலுள்ள அறலைப் பருகும் (நற். 213:2-5). சிலம்பின் துறுகல் தெள்ளறல் சூழப்பெற்றது (நற். 243.1,2). குயிற்பேடை இன் குரலுடன கூவக் கருமணல் பொருந்திய நுண்ணிய அறல் அசைந்தோட இளவேனில் வநதது (ஐங. 341). இளவேனிற் காலத்து அறல் அற்று ஓடுதல் சுருங் கியது (கலி. 26:17). இளவேனிறகாலத்தில் அற்று வருதலை யுடைய அறல் மணலிடத்தே செறிந்தன (கலி. 28:16). இளவேனிலில இளைய மகளிருடைய கூந்தல் போல இடுமணலை ஊடறுதது அறல ஒழுகி யது (கலி. 29:6,9). 'என்கணபோல அறுதியுடைய அறல் இற்று ஒழுகும் இளவேனிற்காலததும் தலை வர் வந்திலர்; என் காதல்நோய மிகும் போலும்' எனத் தலைவி கூறினாள் (கலி. 33:19-21). தமககுப் பெரிதும் உதவிய ஒருவரின் இறுதிக் காலத்து அவ் வுதவி நினைந்து அவருக்கு உதவும் பெருமையுடை யவர்போல உயிர்களெலலாம் இன்புற உலகத்தைப் புரக்கப் பல வாயககாலாகப் பிரிநதோடி மிகுந்த நீர் தந்த யாறு, அறல குறைந்து சிறு வாய்க காலாக ஓடும்போது முன பயன்பெற்ற மரங்கள் அவ்வுதவி நினைந்து மலரை உதிர்த்து வணடொ லிக்கச் செய்து அநத ஆற்றை அழகுபடுத்தியது (கலி. 34:1-6). பூப்பரந்த துறைகளை யணுகி நுண மணலைக் கோலஞ்செய்து அறுதியையுடைய அறல் ஒழுகும் (கலி. 35·6). மிகுதியாக அறலொழுகும் வேனிற்பருவம் என்று கருதி அதற்கெதிரே வெப்ப

மான நீரைத் தலைவியின் கண்கள் சொரிந்தன (கலி. 36:14,15).

3. **அறுதல்.** நீர் அறல் - அறுதல் - உள்ள இடத்துச் செல்லாதது கொக்கு (பதி:21:26, 27). துனி மிகுத லாலே பெருக்கு மாறாது வீழுகின்ற தலைவியின் கண்ணீர் காமத்தீயாற் சுவறி அறலுடைத்தாய் ஒழுகியது (கலி. 71·4). பிரிவில் தலைவிககு முன்னர்க் கூடியதாகிய நீர் பின்னர்ச் சுவறுதலின் அறலு டைத்தாய்க் கயலை யொத்த கண் நீர் மலகுகின்ற அளவாயிருநதது (கலி. 127:8).

4. **நெறிப்பு.** நொய்தாகப் பிடித்து விட்டாற் போன்ற அறல - நெறிப்பு - விளங்கிய நீண்ட ஐம்பாலில அணிநகை யிடப்பட்டன (கலி. 32:3,4). ஒளிர்கின்ற மின்னினது விளஙகுகின்ற அறலின இடையே மேகம் பிளந்தோடியது (கலி. 55:1). கணங்குழை நலல வரது அறலை யுடைய கதுப்பாகிய அணையிலே துஞ்சியதால் தலைவன மார்பம் அணங்கு போல் கமழும் (கலி. 71:19, 20).

5. **அரித்தொழுகல** செங்கண் ஆடவர் களாப்பழத் தோடு துடரிப் பழததை வெறுததால கரைமரத்துப பைந்தேன அறல - அரித்தொழுகும் - நல்யாறறு எக் கர் ஏறிக் கருஙகனி நாவல பறிததுண்பர் (புறம். 177: 8-11). விளஙகும அறலாந தனமை கொண்ட விரவு மணல் அகனதுறை (அகம. 25:2).

6. **ஆடை.** (ஆகுபெயர்). ஊர்காப்பாளர் கருமையான நுண்ணிய வேலைப் பாடமைந்த மென்மைத் தன்மை கொண்ட அறலினை – ஆடையினை - அணிந்திருந் தனர் (மது. 638).

7. **தாள அறுதி.** அறல் - தாள அறுதி - உடைய குழ லோசையின் தாளததிற் கொப்ப மகளிர் ஆடினர் (சிறு. 162).

**அறவர் 1. அறநெஞ்சினர்.** தாமன் தோனறிக்கோன் அறவரின்-அறநெஞ்சினரின் - சிறந்த அறவனாவன் எனறு ஐயூர் முடவனார் போற்றுவர் (புறம. 399: 19). பிரிநது சென்ற தலைவர் அறவரல்லர் என்று கூறி வெறுததுத் துயரில் அழுந்தாதே என்று தோழி தலைவியை வற்புறுத்தி ஆற்றினள் (அகம். 85.3–5). கார் காலத்தில மீணடுவநது அருளாமல நமமைப் பிரிந்து பாசறையில வினைமேற் கொண்டிருபபோர் அறவர் அலலர் என்று கூறி, ஈண்டு நாம் எய்தும் துன்பத்தை அறியாமல வெறுப்பாளோ எனத் தலைவன் தன் நெஞ்சொடு கூறினான் (அகம. 304: 16-21).குறித்த பருவத்தில் தலைவன் வினைமுடித்து வந்தமை அறிந்த தோழி அவனை அறவர் என்று பாராட்டி மொழிநதாள் (நற. 86:1, 9). தலைவன அறவனாயினும் அல்லனாயினும இசசிறுகுடியிலுள் ளோர் அவ்வாறிருக்கும் இயல்பு குறித்து, நம்மைப் பழிப்பவர் அறிவிலலாதவர் போலும் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 284:3-5). தலைவன் ஒரு பரத்தையை வரைவான் என்று கூறக் கேட்டுத் தலைமகள் வாயில மறுத்தபோது, தன்னிடம் வற் புறுத்திய தோழியிடம் அவள் தலைவன் அறவன் என்று குறிப்பில இகழந்துரைத்தாள் (ஐங. 152:4,5). தலைவன வரைவினைத் தமர் உடன்படாது மறுத்த விடத்துத் தோழி செவிலியிடம், தலைவன் அறவனா தலின்அவனுககு மகட்கொடை மறுத்துரைததல எவ் வாறு என்று கூறி அறததொடு நினறாள் (ஐங்.212:3).

2. **பார்ப்பார்.** அறவர் - பார்பபார் - அடிதொட்டுச் சூள உரைத்தாலும் உரைக்கலாம்; முருகனுடைய மயிலையும வேலையும் சுடடிச் சூளுரைததல கூடாது எனறு தோழி தலைவற்குரைததனள (பரி. 8·67,68).

**அறவன் – அறத்திற முடையவன்.** அறவர் காணக.

**அறவிலை வணிகன்** - பொருள் கொடுத்து அறத்தினைக் கொள்ளும் வணிகன். இம்மையில செயதது மறு மைக்கு ஆம் என்று கருதிப பொருளை விலையாகக் கொடுதது அறததைக கொளளும வணிகன் ஆகான் ஆய் மனனன் (புறம. 134:1,2).

**அறவை - அறம்.** அறவை நெஞசத்து ஆயர் (புறம். 390:1).

**அறவோர்** - அறத்திறமுடையவர். கோபபெருஞ சோழ னுடைய நடுகலலைக கணட பொததியாா, அவன அறவோர் புகழநத நீதி நூலுக்குத தககவாறு ஆட்சி புரிந்த செஙகோலன எனறு போற்றினார் (புறம. 221:3). அறவோர் அருமறை காத்தல (பரி. தி. 3).

**அறவோன் - 1. மருத்துவன்.** அறவோன்-மருத்துவன்- தீர்க்கற்கரிய நோயைக் கொண்டவர்க்கு அவர் விருமபுவன கொடாது, ஆராய்ந்து நோய நீங்கத் தக்க மருந்தளிப்பவன; இது தலைவி வளையலை விரும்பிக கேட்டபொழுது அதனைத் தராமல ஆராய்ந்து சிறிய பொனவளைகள் செய்து தந்த தந்தை செயலுக்குவமை (நற். 136:1-3,7-9).

2. **இயமன்.** தருமபுத்திரன் அறவோன-இயமன்-மகன (புறம. 366:6).

**அறவோன் மகன் - தருமபுத்திரன்.** தருமபுத்திரனைக் கோதமனார் 'அறவோன் மகனே' என்று விளித்து அறமுரைத்துள்ளார் (புறம். 366:6).

**அறன் - அறக்கடவுள்.** இளஞ்சேரலிரும்பொறை அறன் -அறக்கடவுள்-போறற ஆணட மாநதரன் என்பா னுடைய வழித்தோன்றல் ஆவான் (பதி. 90:12,13).

தெய்வத்தை வேண்டுவது தக்கதோ எனக் கேட்ட தலைவிக்குத் தோழி, 'மழையினைத் தரவலல கற்புடைய தலைவியின நிறங்கெடப் பசலை தோன்றும் என்று கருதி அறன்-அறக்கடவுள்-விரைந்து சென்று தலைவனின் பொருள் தேடும் முயற்சியினை விலக்கினமையால அவன் மீண்டனன்; அதனால் வருந்தாதே' என்று கூறினாள் (கலி. 16:20-22).

2. அறநூல். மறுவற்ற மதியினைப் போல விளங்கும் முகத்தினையுடைய பெண்களை வலிதில் பற்றிக் கூடுதலும் ஒருவகை மணம் என்பது அறனில்-அறநூலில-கண்டதாகும் என்று அடியோர் பாங்கிலமைந்த தலைவன் அத்தகு தலைவியிடம் கூறினான் (கலி. 62:15,16).

3. அறம். வேற்றரசர்க்கு இன்னாவாக அவர் நிலத்தைக் கைபபற்றிப் பாணர் பொற்றாமரை சூடவும், புலவர் யானை தேர் ஏறுகின்ற நிலை பெறவு மாகப் பரிசிலர்கட்கு இனிய செய்வது அறனோ - அறமோ - என்று நெட்டிமையார் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் குறிப்பில புகழ்வர் (புறம். 12). அறனும் பொருளும் இன்பமும் எனப்பட்ட மூன்றையும் செய்வதற்கு உதவுவது செல்வம் (புறம். 28:15,16). எதிர்த்த பகைவரை வெல்லா விடின், 'அறன் நிலை கலங்காது அன்பினையுடைய அவைக் களத்தில் அறத்தின் திறனறியாத ஒருவனை வைத்து முறைகெடக் கொடுங்கோல் செலுத்தியவன் ஆகுக' என்று ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் வஞ்சினம் கூறினன் (புறம். 71:7-9). அதியமான் தகடூரில் பொருது இறந்தபோது, 'அறனில்லாத கூற்றமே, நீ நோயுழந்து வருந்தும் உலகினும் மிகுதியாக இழந்தாய்' என்று கையறு நிலைக் கூற்றில் இரங்கி உரைத்தார் அரிசில் கிழார் (புறம்: 230:10,11). தலைவன் இறந்த நிலையில் அவன் உயிரைக் கவர்ந்த கூற்றுவனை அறனில்லாத கூற்றுவன் என்று கையற்றுக் கூறுவது மரபு (புறம். 255:4). மகள் மறுத்தமையால் மூளும் போரினைத் தடுக்க முயலாது தாய், தந்தையோடு சேர்ந்து அதற்கு உடன்பட்டிருந்தமையால் அவளை அறனில்லாதவள் என்று பரணர் குறிப்பிட்டுள்ளார் (புறம். 336:8). குற்றமின்றி அறனொடு கூடிய வழியை உலகம் அறிதற்குக் காரணமான, செவ்விய கோலாலும் குடையாலும் நட்புடனே நெடுங்காலம் உலகாண்ட தலைவன் என்று வாழ்த்தி நிற்கும் இரவலர்க்குக் கரிகாற் பெருவளத்தான் நாட்டொடு வேழம் நல்குவன் (பொரு. 170,173,228-231). அன்பையும் அறனையும் நீங்காமற் காத்து, பழியைத் தம்மிடத்தினின்றும் நீக்கி, அதனால் மற்றையோரினும் உயர்ந்து, தலைப்பாகை அணிந்து அமைச்சராகிய காவிதிமாக்கள் விளங்குவர் (மது. 497-499). 'வருவேன் எனறுரைத்த நாளும் பொய்த்தனர்; அறனுக்கு அஞ்சாதவராக உள்ளார்; அவரிடமிருந்து அருள் மாறினும் மாறுக' என்று கூறிப் பிரிவுத துன்பத்தால் தலைவி புலம்பி வருந்துவள் எனத் தலைவன் தனது நெஞ்சிற்கு உரைப்பானாயப் பாகனிடம் கூறினன் (அகம். 144: 6,7). இருண்டு வானில உயர்ந்து முழங்கும் மேகம், செங்கோன்மை மேற்கொண்டு அறனெறி தவறாத மன்னருடைய வீரர் உறையினின்றும் உருவி வீசும் வாளினைப் போன்று மின்னியது (அகம. 188:1-6). அறனில்லவற்றை ஒரோவழி உள்ளம் விரும்பினாலும் தன் கேள்வி அறிவாகிய அங்குசத்தால் அதனை மீட்டு, அறம் பொருள் வழுவாமையை ஆராய்ந்து, தம் தகுதி உணர்ந்து பினனரே தாம் கருதியதை முடிப்பர் பெரியோர் (அகம். 286:8-13). 'தினை விளைந்ததனை அறிந்தும் புனக்காவலுக்குச் செல்கவென்று நம்மை அனுப்பாதவளாய், அறனில்லாத அன்னை நம் மார்பினையும் கூந்தலினையும் நோக்குவாள்' என்று தோழி சிறைப்புற மாகத் தலைவனுக்குக் கூறினாள் (அகம். 302:10-15). 'மயில் வலைப்பட்டது போன்று யாம் வருந்தும்போதெல்லாம் அறனில்லாத அன்னை எம்மைத் தழுவுவள்; அதனால் உன் குறிப்பறிந்து உன்பால் வர இயலவில்லை' என்று தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாவினாள் (குறு. 244:3-6). ஊரில் அலர்தோன்றவும் அறனில்லாத அன்னை வீட்டில் தனித்திருக்கவும் யான் தலைவனுடன் செல்ல ஒருப்பட்டேன் என்று தோழி தலைவியிடம் கூறி, உடன் போக்கிற்குத் தன் உடன்பாட்டினைப் புலப்படுத்தினாள் (குறு. 262:1-5). கூற்றுவனது அறனில்லாத கொலைத் தொழிலை அறிந்தவர், பெருஞ்செல்வத்தைப் பெறுவதாயினும் தலைவியைப் பிரிந்து செல்லார் என்று கருதித் தலைவன் தான் கருதிய பிரிவினைத் தவிர்த்தான் (குறு. 267). அலர் கூறுகின்ற ஊர் அறமுடையதில்லை யாதலால், அறனில்லாத தாய் தலைவியை இற்செறிப்பாள்; அதனால் தலைவனொடு தலைவி கொண்ட நட்பு' பசலையாகி அழியத் தக்கது போலும் என்று தோழி சிறைப்புறத்திருக்கும் தலைவனுக்குச் செறிப்பினை அறிவுறுத்தினாள் (நற். 63: 5-11). 'தோழியர் கூட்டத்தோடு விளையாடாமல் தலைவி இற்செறிக்கப்பட்டிருப்பது அறனெறியும் அன்று; செல்வமும் தேய்ந்து விடும்' என்று அன்னைக்கு யாரேனும் கூறினால், அதுகொண்டு அவள் நம்மை விளையாட ஏவினால் நாம் புது வெள்ளத்தில் ஆடித்திளைக்கலாம் எனத் தோழி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தினாள் (நற். 68:1-5). 'தலைவன் தொடர்பில்லாதிருந்தும் அவன் நம்மொடு

கூடினான் போல வெளிப்படக் கூறி அறனில்லாத அன்னை, 'அவன் இப்போது எங்குளன' என்று வினவும்; இரவில் தலைவனுடைய தேரின் மணி யொலி கேட்கும், என்று சிறைப புறங்கூறித தோழி வரைவுகடாவினாள் (நற். 145: 4-11). பலவற்றை அறிந்திருந்தும் வரைவு மேற்கொள்ளாது களவு நீட்டித்தலால தலைவா அறனிலலாதவர் என்று குறிப்பிடப் பெற்றுள்ளார் (நற். 227:1). தலைவன் அருளாவிட்டாலும் தலைவி அவனுடைய மார் பினை நோக்கி வாழுந தனமையுடை யளாதலால, தலைவன் அதனை உணர்ந்து ஒழுகுவது தலை விக்கு ஆக்கமாவதோடு அவனுக்கு அறனுமாகும் (ஐங. 44). தலைவியின் நுதல இரவில, பொன் போல அழகு கொண்டமையால் பிரிந்து சென்ற அறனிலாளனாகிய தலைவன் வந்தனனோ என்று தோழி தலைவியை வினவினாள் (ஐங. 229:2-4). காதலியைப் பிரிதல் கொடுமையான செயலாத லால், நீ பிரிந்து செல்லாதே என்று கூறாத காட்டு விலங்குகள் எத்துணையும் அறனில்லாதன வாகும் என்று தலைவன சுரத்திடைப் பிரிந்து சென்றமை அறிந்த தலைவி தோழிக் குரைத்தனள் (ஐங். 332). என் மகளை உடன் போக்கிறகு ஊககிய அறனில் லாத ஊழ், நாளும் வருந்துகின்ற என்னைப் போலக் காட்டிடை நின்று, ஆணடுத் தோன்றும் தீயில் எரிநதொழிவதாக என்று, தலைமகள் தலை மகனொடு உடன போக்கிற் சென்றுவிட்டபோது நற்றாய் விதியை வெகுணடுரைத்தனள் (ஐங். 376). 'புலிகள் வழங்கும் மலைகள் பிறபட, உன்மகள், சுரங்களைக் கடநது தலைவனுடன் தேரில் சென்ற னள்' என்று அறனில்லாத அன்னைககுக் கூற வேண்டும் என்று உடன் போக்கிற் செல்லும் தலைவி சுரததிடைக் கண்டவரிடம கூறினாள் (ஐங. 385). மாணபில்லாத கொள்கையால் மயங்கு துயர் செய்த அன்பில்லாத அறனும் அருளுடைய தாயிற்று என்று தலைவனுடன சென்ற தலைவி திரும்பி வந்தபோது தாய் தன சுற்றததிற் குரைத் தாள (ஐங். 394:1,2). அயலிலுள்ளார் தம் நெஞ்சில் அறனிலலாது கூறும் அமபல மொழிக்கு நாணித் தலைவி தன் நலன அழிநதனள (கலி. 3:1,5). அருள் புரிந்து வந்தவர்க்கு அறன செய்தலும், பெரிய பகையினை வென்று அச்செருககினால், வழிபடாத வர்களை அழித்தலும, மனம் பொருந்திய காதலி யொடு கூடும் கூட்டமும் பொருளினால அமையு மென்று கூறித் தலைவன் பொருள் தேடப் பிரிந்து சென்றனன் (கலி. 11:1-4). இடைச் சுரத்தே தண ணீர் உணண விரும்பினால அவ்வழியில கிடைப் பது அரிதென்று அறன்கருதிப் பொருள் தேட விரும்பிய தலைவன் தலைவியின் மென்மையும் காட்டின் கடுமையும் நினைந்து கூறினான் (கலி. 20:11,12). தலைவன அன்பிலன, அறனிலன் என்று கூறப்படாதவன் என அவனைப் புகழ்ந்து பாடும் இயல்பினன் பாணன்; இப்பாணனும் பிததேறினன என்று தலைவனொடு ஊடிய காமக் கிழத்தி கூறினாள் (கலி. 74:6,7). பரததையிடமிருந்து வந்த தலைமகன், புதலவனைத தனனிடம் தருமாறு கேட்டபோது, அப்புதல்வன் தந்தையிடம் தாவிச் சென்றனன்; அது கணட தலைவி அறனிலலாத அனபிலி பெற்ற மகன் என்று கூறித தலைவி மகன வாயிலாக ஊடல் தவிர்ந்தாள் (கலி. 86.33,34). அரச னான தலைவன் தலைவியை நீங்கி யிருந்தபோது, 'குடையின நிழல் அறனைச் செயயுமென்று உயர்த் தினாய் ஆதலால், அக்குடையின் நிழலில விளங் கும் இவளுக்கு அருளவேணடுமெனச் சான்றோர் கூறினர் (கலி. 99:8,9). அருளற்ற அறிவால அறன செய்தலைக் கருதாதவனாயப பணபு செயயாத வனாய்ப் பிறர் அஞசுமாறு உளளவன மனம மருட்சி யுறுவது, உலகம் மெதுவாக இருள் நிறை வதற்குவமை (கலி. 120:1-3). பிறர் துனபததையும தம துன்பம் போல எநநாளும் பேணி அதனாற பெறும் அறனை அறிதல சானறோர் கடனாகும (கலி. 139:1-3). யான கூறிய என வருத்தங்கேட்டு யானுற்ற காம மயககம் நீங்கத் தலைவி எனக் கருளுமாறு செய்வீராயின அது நுங்கட்கு அறனும புகழுமாகும் என்று மடலேறுவேன எனற தலைவன கணடாரிடம் கூறினான் (கலி. 140.30-34). அற னெறியறிந்து நடக்கும் கணணோட்ட முடைய வனை அங்ஙனமிலலாதார் படைததுமொழிநத பழி மொழிகள் நன்மககள் அவையில் ஆராயக் கெடும். இது தலைவன் வரத தலைவியின நுதற் பசப்பு இல்லாது போதற்கு உவமை (கலி. 144:70-73). சிறப்புமிக்க அந்தணர்களாற் காக்கபபடும் அற னும் திருமாலாகும் (பரி. 1:40,41). செவ்வேளிடம தாம் வேண்டுவன பொருளும் பொன்னும் போ கமும் அல்ல; அருளும் அனபும் அறனும ஆகிய மூன்றுமேயாம் என்று கடுவன இளவெயினனார் கூறுவர் (பரி: 5:78-81). மூலப் பகுதியும் அறனும் அநாதியான காலமும் ஆகாயமும் காற்றும் கனலும் கூடிய மூவேழுலகத்து உயிாகள அனைத் தும் திருமாலிடத்தில தோனறின (பரி. 13: 23-25). இருபிறபபினையும் அப்பிறப்பினால வந்த இரு பெயரையும் அன்புடைய நெஞ்சத்தையுமுடைய, ஒப் பற்ற புகழ்கொணட அநதணரின் அறனைச் செவ் வேள் பொருந்தி விளங்குவர் (பரி. 14:27,28). அறம் 1 காண்க.

4. இல்லறநெறி. கொடைத் தொழிலில பொருட்

குறை காட்டாமல் கொடுத்து, அறனறிந்து-இல்லற நெறி - அறிந்து ஒழுகிய தீவினை யில்லாதவ னுடைய செல்வம் பெருகுதல், ஆற்றங்கரையி லுள்ள மரங்கள் செழித்துத் தழைப்பதற்குவமை (கலி. 27:1,2).

5. வேதம். இருபிறப்பாளராகிய அந்தணர் நாற்பத் தெட்டாண்டிளமையை, வேதங் கூறிய பிரமச்சரிய நெறியில் கழித்து, எப்போதும் அறன் - வேதம் - கூறுகின்ற கோட்பாட்டினையுடையவர் (முரு. 178-182).

6. வேள்வி முதல்வன். ஐம்பூதங்களும் ஞாயிறு திங்களும் அறனும் – வேள்வி முதல்வனும் - பிற ரும் திருமாலிடத்திருந்து தோன்றினவென்று வேதம் கூறும் (பரி. 3:4-5).

**அறன் கடை – பாவநெறி.** அறன்கடைப்படாத - பாவ நெறிப்படாத - வாழ்க்கையும் எக்காலத்தும் பிற ரிடம் சென்று இரவாத செல்வமும் ஆகிய இரண் டும் பொருளால் அமையும் என்று கூறி நம்மைத் தெளிவித்துப் பிரிந்து செல்பவர் சென்றவிடத்துச் செயல்கள் பல செய்து முடிப்பாராக எனத் தலைவி கூறினாள் (அகம். 155:1-6).

**அறனிலாளர் – அறமில்லாதார்.** பருவ வரவின்போது வருந்திய தலைவியைத் தோழி வற்புறுத்துங்கால், 'நம்நோய் அறியாது பாசறையில உறையும் அறனி லாளர் - அறமில்லாதார் – (தலைவர்) வருவரோ' என்று தலைமகள் தனிமை பொறாதவளாய் உரைத்தனள் (அகம். 294:12-14). பாலைவழியிற் சென்றபோது அறினிலாள னாகிய தலைவன தோணடிய கிணற்றில் நீரினை என் மகள் எவ் வாறுண்டனளோ என்று மகட் போக்கிய தாய் புலந்து கூறினாள் (அகம். 207:11-13). மகட் போக்கிய தாய் தன் மகள் அறனிலாளனொடு சென்று விட்டாளென்று புலம்பினாள் (அகம். 219: 9,10). ஒரு பெண்ணின் நலன் நுகர்ந்து பின் அவளை அறியேன் என்று பொய் கூறிய அறனி லாளன தலையில் நீற்றினைப் பெய்து மரக்கிளை யொடு சேர்த்துக் கள்ளூரிலுள்ள அறங் கூறவையம் தண்டிதது ஆரவாரிததது (அகம். 256:15-21). பிரி வால் வருந்தும் தலைவி அருளாது பிரிந்த தலை வனை 'அறனிலாளன்' என்று வெறுத்துத் தோழி யிடம் கூறுவதுண்டு (நற். 275:8). அறனிலாளனைக் கண்டபோது சினந்து, 'இங்குவாராதே' என்று கூற நினைத்துச் சென்றும், நமக்கு இழிவா மெனக் கருதி அவ்வாறு கூறாது மீண்டேன எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 118). அருளாது தலை வியைப் பிரிந்த தலைவனை அறனிலாளன் என்று தோழி வெறுப்பால் குறிப்பிடுவதுண்டு (ஐங். 229:2).

**அறனிலாளன் - அறனில்லாதான்.** அறனிலாளர் காண்க.

**அறனிலி – அறனில்லாதவன்.** தலைவனை இயற்பழித்த தோழியிடம் தலைவி என் நெஞ்சங் கவர்ந்த தலை வன் அஞ்சத் தக்கனவற்றிற்கு அஞ்சாத அறனிலி - அறனில்லாதவன் - அல்லனென்று இயற்படக் கூறி னாள் (கலி. 42:26,27). ஆன்முலை அறுத்த அறனி லோர்க்கு அத்தீவினையினை நீங்குதற்குரிய கழு வாய் இருந்தாலும் ஒருவன் நன்றி கொன்றார்க்கு அதிலிருந்து நீங்குதற்குரிய கழுவாய் இல்லை (புறம். 34:1-7).

**அறனிலோர் – அறனில்லாதவர்.** அறனிலி காண்க.

**அறனெறி – அறத்தின் வழிமுறை.** செங்கோன் முறைப் படி நடந்து அறனெறி - அறத்தின் வழிமுறை - பிழையாத திறனறிந்த மன்னரின் போரில் பகை வரை எதிர்த்த வீரர் உறையினின்றெடுத்த வாள் போல் மின்னல் ஒளிர்ந்தது (அகம். 188:3-7).

**அறிஞர் - அறிவினையுடையோர்.** சென்ற காலத்தையும் வருங்காலத்தையும் இன்றைய உலகத்தில் நிகழும் ஒழுக்கத்தோடு அறிந்தவர், வானுலகத்தையும் நில வுலகத்தையும் அவற்றின் செய்கையோடு அறிவ தற்குக் காரணமான அறிவினை உடையவர், விர தங்களையும் அவற்றிற்குத் தளராத உடம்பினையு முடையவர், மேலும் கல்வி நிறைந்த, களிப்பின்றி அடங்கிய அறிவு மிக்கார் என்று மதுரையில் விளங் கிய சமணர் பள்ளியில் உறைந்த அறிஞர் - அறி வினையுடையோர்-தன்மையினை மாங்குடி மருத னார் குறித்துள்ளார் (மது. 477-481). தொன்மருங்கு அறிஞர், குண நலமும் மேம்பாடும் ஒழுக்கமும் கெட் டால் அதனால் அழியும் புகழை மீண்டும் நிலை நிறுத்துவது தூய அறிவினையுடைய இருடிகட்கும் எளிய என்னார் (குறி. 15-18). புதியராய்ச் செல் பவர்க்குத் திசைமயக்கம் செய்யும் மலையிடத்து வழிகளை அறிஞர் கூறிய திசையினை மேற் கொண்டு கூத்தர் முதலியோர் கடப்பர் (மலை. 287). தம் வாழ்நாளின் வகை அளவினை அறியும் அறிஞர் யாருமில்லை (நற். 314:2).

**அறிதுயிலோன் - யோக உறக்கமுடைய திருமால்.** பாற் கடல் நடுவே, சுடர்மணி விளங்கும் ஆயிரம் தலை யினையுடைய பாம்பு என்னும் ஆதிசேடனாகிய படுக்கையில் துளசி மாலை அணிந்த அறிதுயிலோன் -திருமால்-பள்ளி கொண்டுள்ளான் (பரி. 13:26-29).

**அறிந்தார் - அறிந்தவர்.** வாழ்நாளின் கடைநாள் இது வென அறிந்தாரும் இல்லை (கலி. 12:15).

**அறிந்தோர் - அறிந்தவர்** *(சான்றோர்).* குருடும் உறுப்பிலலாத பிண்டமும கூனும குறளும் ஊமும் செவிடும் மாவும் மருளும ஆகிய இவை எட்டும் மக்கட் பிறப்பில குறையுடையன என முன்னும் அறிந்தோர் கூறினர் (புறம. 28:1-6). ஞாயிற்றின வீதியையும் இயககத்தையும் பாாவட்டம, திக்கு, ஆகாயம் ஆகியவற்றையும அவ்விடததே சென்று அளந்து அறிநதோர்-அறிந்தவர்-போல கூறும அறிவுடையோராலும அளநது காண முடியாத அடக்கததை யுடையவன சோழன் நலங்கிள்ளி (புறம. 30:1-8). 'அரசன கணணிய பொருளை அறிநதோர் யாவரு மிலலை' எனபது தானைவீரன கூறறு (புறம். 301:10). முருகன் அறிநதோர் புகழ்நது கூறபபடும் சொலமலை (முரு. 263). எககாலததும் தனனுடன செறிநது விளங்கும் சிறபபினை யுடைய அறிநதோர் ஓயமானாட்டு நல்லியக் கோடனின செய்ந்நன்றி அறிதல, சிற்றினமினமை, இன்முகமுடைமை, இனியனாதல ஆகிய பணபுகளை ஏததினர் (சிறு. 207-209). ஊாககாவலர் அறிநதோர் புகழநத ஆணமை யுடையவர் (மது. 645). அறிநதோர் எல்லாம அறனிலர் எனறு எங்கும் பரநதோங்கியது எனத தலைவனைக் குறிததுத தோழி கூறினாள் (நற். 227:1).

**அறிபவர் - அறிந்திருக்கின்றவர்** *(சானறாவாா).* உலகில் கண்டவர் யாருமிலலை யென்று தீவினைகளைச் செய்து பிறர் அறியாதவாறு மறைத்தாராயினும், அவற்றை அறிபவருடைய - சான்றாவாருடைய-நெஞ்சத்தைக் காட்டிலும் நெருங்கிய சான்று வேறில்லை (கலி. 125:1-4).

**அறியாதோர் - அறியாத மடமை யுடையவர்.** வளர்ந்தது குறைதலும் குறைநததுவளர்தலும் பிறந்தது இறத்தலும் இறநதது பிறததலும் ஆகிய உணமைகளை அறியாதோர்க்கும் - அறியாத மடமை யுடையவர்க்கும்-அறியுமாறு நிலையாமை காட்டித் திங்கள் தெய்வம் வானிலே இயங்கும் (புறம. 27:11-14). சிறுசினமும் சில சொல்லும் பல கேளவியும் நுணணுணர்வும் பெருங் கொடையும் கொணடு, உணவளித்து, இனசொலலராயப் பலர்க்கும் பயனுணடாகும செயலைச் செய்து நிலத்திற்குப் பாதுகாப் புணடாகுமாறு ஆட்சிபுரிந்த வேந்தர் சிலராவர்; அவ்வாறு வாழும் திறம அறியாதோர் பலராவர் (புறம். 360:1-10). தலைவி அடைந்த நோயின் உண்மைக் காரணம் உணராது, முருகன் அணங்கினான் என அன்னைக்குரைத்த வேலன் அறியான் ஆகுதலை அறியாத் தலைவன் இரவுக்குறி வாரறக என்று தோழி உரைத்தனள் (குறு. 360). விருப்பமினறி, அருகிற் கண்டும் அறியாதவரைப் போல மனம் மகிழாமல் முகம் மாறிக் கொடுக்கப் பெறும் பரிசிலை முயற்சியிலலாதவரே விருமபுவர் (புறம். 207:2-5).

**அறியார் – உண்மையறியாதவர்.** அறியாதோர் காண்க.

**அறியான்- உண்மையறியாதவன.** அறியாதோர் காண்க

**அறியுநர் –அறிபவர்.** எருதுகள இளையன; பொருள்கள் மிகுதியாக வணடியகத்து இடப் பெற்றுளளன; அதனால வணடி பளளம் மேடுகளில இறங்கியும் ஏறியும செல்லும் போது அதறகு வரும் இடையூற்றை அறியுநர்-அறிபவர்-யாரோ என்று எணணித தங்கள் வண்டியில சேம அச்சினைக கட்டியிருப்பர் (புறம. 102:1-5). அலை மோதும கடற கரை யருகே நடநது சென்றாலும, குடிககும் நீர் கிடைக்குமிடம அறியுநரைக் கணடால அதன இருப்பிடத்தைக் கேட்டறிநது செலவது மக்கள் இயல்பு (புறம. 154:1-3). அறத்தினைத தெளியவுணர்ந்த ஒழுக்கம் மாட்சிமைப்பட்ட அநதணா அவையில், வேள்விக்குரிய முறைமையை நனகு அறியுநர் முன்னினறு காட்ட இயற்றப் பெற்ற வேள்விப் பயனை அறியும் அறிவுடையவன சோழன கரிகாற பெருவளத்தான (புறம். 224: 4-10). 'பெரும, நின் உணாந்து அறியுநர் எனனை உணர்ந்து கூற, யான உன்னைக் காண வநதேன்' எனப் பொறையாற்றுக கிழானிடம் கலலாடனார் கூறினார் (புறம. 391:13,14). பகைவர் நாட்டின செழுவளததை முன்பு நன்கு அறியுநர் இனறைய அழிநிலை நோக்கின நோவர் (பதி. 26:4,5). தலைவி அடைநதுள்ள நீங்காத கடியநோயின் பொருட்டு அகன்ற ஊரினுள், கட்டினுங் கழங்கினும் எணணி அறியுநராகிய கட்டுவிச்சி, வேலன ஆகியோரிடம் நோயக் காரணம் யாதெனச் செவிலி வினவுவாள (குறி. 2:4). 'காமததைத் தாங்கிக் ...ள்' எனறு அறிவுரை கூறுவோர் தாம் அதனை அறியுநரோ' என வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி அழிவுற்றுக் கூறினாள் (குறு. 290:1,2). 'பெருமலை நாடன் கேண்மை நமக்குத துனபமாக இருககவும் அதனை அறியுநர் இல்லை என்று நீ கூறுகினறாய' எனத் தோழியிடம் தலைவி உரைததாள் (நற். 309.6-8).

**அறிவர் - சானறோர்.** அறிவர்–சான்றோர் - எடுத்துக் கூறும் தலைவியின அல்லல கண்டு முருகன் அருள்வான் எனறு நமபினர் (அகம். 98:26,27).

**அறிவன் - கணி.** நூல நெறியால் அறியப் பெற்ற தலைவன் தலைவியர் கூடுதற்கான முழுத்தம் வேறுபட்டுத் தவறுவதனை ஒருகாலத்தும அறியாத அறிவனை-கணியை-முன் வைத்துத் தொகுத்தும்

வகுத்தும் கூறுதலிற் சிறந்த சான்றோர் சுற்றமாகத் தலைவன தலைவியை மணம் பேசி வருவன் (கலி. 39 46-50).

அறிவு - 1. பொருளைப்பகுத்துணரும் உயிராற்றல். கடலின ஆழத்தையும் நிலத்தின் அகலத்தையும் திசை, ஆகாயம ஆகியவற்றையும் அளந்தறிந்தாலும் சேரமான யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறையின அறிவு, அன்பு, கணணோட்டம் ஆகியவற்றை அளந்தறிதல் இயலாது (புறம். 20:1-6). நாலை கிழவன் நாகன், வேந்தனுக்குப் படை வேணடும்போது படை அளித்தும் வினை ஆராய்ச்சி வேண்டும்போது அறிவு அளித்தும் உதவினன (புறம். 179:6,7). அறிவுடைய அரசன் வரியினைப பெறும் வழியினை அறிந்து பெறுவா னாயின் அவனுடைய நாடு கோடிப் பொருளை ஈட்டிக் கொடுத்துத் தானும் செழிப்படையும் (புறம். 184: 5,6). நாங்கள் பெரிய துன்பமுற்றாலும் அறிவிலாருடைய செலவத்தைப் பெற நினைக்க மாட்டோம்; நல்ல அறிவினை உடையோரது வறுமை பயனபடுதலால் அதனை உவந்து பெரிதும் நினைப்போம் என்று கோனாட்டு எறிசசிலூர் மாடலன மதுரைக் குமரனார், பரிசில நீட்டித்த சோழன குராப் பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன்பால் கூறினார் (புறம். 197:15-18). பாரி மகளிரை ஏற்க மறுத்த இருங்கோவேளிடம் கபிலர், 'நும்மை ஒத்த அறிவுடைய நும் முன்னோரில் ஒருவர் கழாத்தலையாரை இகழ்ந்ததன் பயனாக அரையம் என்னும் பழைய ஊர் அழிந்தது; இவர் பாரி மகளிர் என்று கூறிய என் சொலலைப் பொறுப்பாயாக' எனக் கூறித் தம்மை இகழ்ந்தமையால் தீங்குண்டாகும் என்பதனைக் குறிபபின் உணர்த்தினார். (புறம். 202:11-16) அதியமான் நெடுமானஞ்சி பரிசில் நீட்டித்தபோது ஔவையார், 'அறிவும் புகழும் உடையோர் இறந்தாராக உலகம் வறுமைப் படவிலலை; அதனால என் கலங்களைக் கட்டி எடுத்துச் செல்வேன்' எனக் கூறிச்செல்ல முற்பட்டார் (புறம். 206:8-10). 'வழுவினறிப் பழகிய உரிமையுடையோராயினும் அவ்வழுவாத தன்மையிலே பட வொழுகுதல் அரிதே எனறு பிசிராந்தையார் இங்கு வருவதைக் குறித்து ஐயப்படா தொழிமின், நிறைந்த அறிவினையுடையீரே' எனக் கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த நிலையில் அருகிருந்த சானறோரிடம் கூறினன் (புறம். 216:3-5). கோப்பெருஞ்சோழன் வடக்கிருக்குமுன் கூறியவாறே வடக்கிருந்த பின்னாப் பிசிராந்தையார் அங்கு வந்து சேர்ந்தமை அறிந்த பொததியார், 'வருவன் எனக் கூறிய அரசன பெருமையும், அதற்கேற்ப வந்தவன் அறிவும் வியக்குந்தோறும் வியக்குந்தோறும் வியப்பு மிக்கதாக இருந்தது' என்று குறிப்பிட்டார் (புறம். 217:7-9). பொறிகள் குறைவினறிப் பொருந்திய உடலில் வறுமை தோனறின் விருந்தினரைக் கணடு ஒளிக்கும்படி அறிவு கெடவும் செய்யும் (புறம். 266:11-13). மக்கட் செல்வம் பெற்றவராய்ச் சிலம் பணிந்து அடங்கிய கொள்கையையும் நிறைந்த அறிவையும் புகழையும் உடைய மகளிர் ஊடலால் சினந்து நோக்கும் நோக்கிற்கு அஞ்சுவதைக் காட்டிலும் மிகுதியாக இரவலர் துன்பத்திற்கு அஞ்சிக் குடியோம்புதலைக கடனாகக் கொண்டவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 57:10-15). பெருஞ்சேரலிரும்பொறை அறிவுடையோர் அறிவிலாதோர் ஆகியவருடைய அறிவுநிலையினை ஆராய்ந்து எணணி அறிந்து அருள் செய்யும் பணபினன் (பதி. 71:25,26). பெருஞ்சேரலிரும் பொறை தன்குடியில் முன்னராண்ட அரசர்க்குப் பாதுகாபபுச் செய்தவராய் வாழ்ந்து, மக்களைக் காப்பதற்குரிய அறிவுரையினை வற்புறுத்திக் கூறி, அறமறிந்த உள்ளத்தினராய் விளங்கும் அமைச்சரைப் போலவே சூழ்ச்சிப் பண்பு மிக்கவன் (பதி. 72:4-6). பெருஞ்சேரலிரும்பொறை, பேரறிவினை விரும்பிச் சாலபும் செம்மையு மாகிய பணபிற சிறந்து விளங்கும், நாடு காத்தற்குரிய அரசுதுறை முற்றிய புதல்வனைப் பெற்றனன் (பதி. 74:18-21). பலவற்றையும் கற்றோர் சிறிதும் அறியப்படாத இயல்பான அறிவினரான முனிவர் முன்னே புகத் தேவரும் பிறரும் திருவாவினன் குடியில் முருகனைக் காணச் சென்றனர் (முரு. 132-137). ஓய்மானாட்டு நல்லியக் கோடன் தன்னைப் போல் அறிந்தோரிடத்தே அறிவு நன்குடையனாய் இருந்தான் (சிறு. 216). 'தலைவனிடத்து நெகிழ்ந்து கலுழ்ந்து நெஞ்சறை போகிய அறிவை யுடையேனாகிய எனக்கு அவனைப் புலத்தல் கூடுமோ' என்று தலைவி தோழிக்குச் சொன்னாள் (அகம். 26:5,25,26). துன்பம், வியக்கத்தக்க அறிவினைப் போக்குகின்ற செயலறவைச் செய்யும் (அகம. 71:7). தலைமகன் பிரிந்தமையால் தலைவி, ஆதிமந்தியினைப் போல அறிவு வேறுபட்டுக் கணணீர் வாரத் துயரம் மிக்கு வருந்தினள் (அகம். 135:4-6). தலைவனை நமர் என்று கருதி அறிவு தெளிந்தவள் தலைவி (அகம். 214:8,9). 'தலைவியை ஒருசேரத் தழுவி இன்று இங்குள்ள நாம் நாளை அவளது அறிவு கலங்கிய பார்வையினை நினைந்து அருஞ்சுரத்துச சீறூரில் தங்கியிருப்போம்' எனறு தலைவன் தன் நெஞ்சொடு நொந்துரைத்தான் (அகம். 225:3,4,13-17). 'நெஞ்சு நெகிழும் துன்பினைச் செய்த

அன்பில்லாத் தலைவனது அறிவு மொழிகளை யான மெய்யென நம்பினேன்' என்று தலைவி இரங் கினாள் (அகம். 260:14,15). விரைந்த காற்று வீசு தலால் காம்பினின்றும் கழிந்த தேக்கிலைகள் ஒரு சேர விழுந்து வானம் மறையும்படி பரவி, வழிச் செல்வோர் நெறி அறிந்து செல்லும் அறிவு கெட்டுப் போகுமாறு வழியிற் சிதறிக் கிடக்கும் (அகம. 299:5-8). 'காமத்தையுடையோர் இருவரும் உடனுறைதல் அரிதாயிருத்தலின் அறிவுடையீரே, அதனை அனுததலைத் தவிர்வீராக' என்பது பாங்கனிடத்தில் தலைவனின கூற்று (குறு. 206:4,5). தலைவியது அறிவு அவளைத், 'தலைவனிருக்கு மிடத்திற்குச் செலவோம; எழுக' என்று இயலாத தொனறனைக் கூறி எழுப்பியது (குறு. 219:3-5). காமம் நாணத்தை அழிதது நல்லறிவை இழக்கச் செய்யும் (குறு. 231:4,5). 'உன்னுடைய அறிவு முதிர்நத பருவததில் நீ எமமுடைய வீட்டிற்கு இல்லறம் நடத்த வருவாய' எனறு தலைவன் தலைவியிடம் கூறித் தேற்றிப் பிரிந்து சென்றனன் (குறு. 379:4,5). 'நீயும எணணித் தோழியொடும் சிந்திதது, அறிவினால் தக்கது இதுவென்று ஆராயந்த பினனரே தலைவனுடன் அளவளாவி யிருததல் வேண்டும்; அவ்வாறின்றி முன்னர் விரும்பி இப்போது வெறுத்தல் தகாது' என்று தலைவியிடம் குறைநயப்புக் கூறிய தோழி கூறினள் (நற். 32:5-7). 'என் அறிவும் உள்ளமும் தலைவ ரிடத்தே செனறமையால் எனது உடம்பு உள்ளே யாதுமின்றி வறிதாயிற்று' எனத் தலைவி தோழி யிடம் சொன்னாள் (நற்.64:7-9). தலைவியை, 'அறிவ ஞர் உறுவி' எனச் சுட்டல் (நற். 106:9). 'மணத்திற்கு முன் பாலூட்டவும உண்ணாளாய் ஏவல மறுத்த தலைவி, மணத்தின பின்னர்க் கணவன் குடி வறுமையுற, தந்தை அளிக்கும் வளமிகக உணவை உண்ண விரும்பாதவளாய்ப் பொழுது மறுத் துண்ணும் வனமை கொண்ட அறிவையும் ஒழுக் கத்தையும் எவ்விடத் துணர்ந்தாளோ' என்று தலைவி வீடு சென்று வந்த செவிலி வியந்து நற்றாயக் குரைத்தனள (நற. 110). 'கூர்வேற் காளை யோடு உடனபோக்குச் சென்ற என் மகளைக் குறித்த வருத்தத்தைத தாங்குமாறு எனக்குக் கூறும் அறிவுடையீரே, அஃது யாங்ஙனம் இயலும்' என்று தாய் மனைமருண்டு உரைத்தாள் (நற். 184:2-5). காதலியர் செயலறும்படி பிரிந்து போகும் காதலரை நோக்கி, 'அறிவுடையீரே, நிலையில்லா வாழக்கை யின் பொருட்டுப் பொருள்வினை கருதி நீர் நும் காதலியரைவிட்டு அகன்று போதலைத் தவிர்வீராக' என்பன போல் குயிலகள் கூவின (நற். 243.4-8). 'தும்பியே, நின் மெய்யே யன்றியும் அறிவும் கரிதோ' எனத் தலைவி, தூதுபோய்த் தலைவனை வருமாறு கூறாத தும்பியைக் கழறினாள் (நற். 277:1-4). 'நெஞ்சம் தலைவிபால் செலவோம் என்று கூற, அறிவு வினையை முடிக்காது இடையே செலவது அறியாமையோடு இழிவுமாகும எனத் தடுக்க, இரண்டற்கும் இடைபபட்ட என உடமபு இரு களிறுகளால பற்றி இழுககப்படும தேயநத புரியு டைய பழங்கயிறு போனறுளளது' எனறு பொருள் ஈட்டல முற்றுப பெறாத தலைவன் ஆற்றாது உரைத்தனன (நற. 284). 'என அறிவும் எனனைக கைவிட்டு மயங்கி வேறுபட்டது' என்பது பிரிவாற் றாத தலைவியின் கூற்று (நற. 397:3,4). 'வினை யிடத்துப் பிரிந்து சென்ற தலைவரை யான இப் பொழுதே அழைத்து வருவேன' எனக கூறும் பாணனின் அறிவு மிகவும் நனறாயிருககின்றது என்று தலைவி எள்ளியுரைத்தாள் (ஐங். 474). 'என் அறிவைத் தன்னிடததே அகப்படுததிக கொண்டு தனனுடைய மனையிடததே பெயர்நது போனாள' என்பது காமஞ்சாலா இளமையோளைக் குறிதத கைககிளைத் தலைவன் கூற்றாகும் (கலி. 57·24). 'தலைவனின் புகழகளைக் கேட்க வேணடாதார் இல்லங்களிலும் அவற்றை ஒரு பயனினறியும மிகுத துக் கொணடாடும அறிவுடை அந்தணன' என்று தலைவனுடைய பார்ப்பனப் பாஙகனைப் பழித துரைத்தாள் காமககிழததி (கலி. 72:17, 18). 'நின னைப் போக விடுதலை நினையாமல இப்போது என் அறிவு இளைததிருககின்றது' எனக கூறித் தலைவன தலைவியைக் கூட்டததிற்கு உடன படுத தினன் (கலி. 117:12-15). தன அறிவு வருததததிலே யழுந்தி அழுது ஆயநலம் வறிதாகவும் வளைகழல வும தலைவியைத் தலைவன் வரையாது களவு நீட் டித்தான் (கலி. 127:12, 13). அறிவென்று சிறப்பித் துச் சொலலபபடுவது அறியாதவர் தன்னைப் பார்த்துச் சொல்லும் சொல்லினை ஒருவன பொறுத்தலாகும் (கலி. 133:10). தலைவனுடைய அறிவும் அறிவால் ஆராய்ந்த அடக்கமும் இயல் பாகிய நாணும் கைகடக்க, அவனுடைய நெஞ்சத் தைக் கவர்நது தலைவி மறைந்தாள் (கலி. 138:3-7). 'எம்முடைய அறிவு கொடும்பாடு அறியாமல, மெய் யுணர்வே உணடாக அருள்புரிய வேணடும்' எனறு திருமாலை வேணடினார் கீரந்தையார் (பரி. 2:75, 76). திருமாலின் கேள்வியும் அறிவும் அறததொடு நுணமை வாய்ந்தன (பரி. 13:55). திருமால் உறையும் இருந்தையூரின் ஒருபக்கததே யுள்ள வயல்களில் உழவுத தொழில புரிவோருள் சிலர் கள்ளுணட மையால் அறிவிழநது திரிவர் (பரி. தி. 1:15-17).

அறிவுடையாளன்- அறிவினையுடையோன். கரிகாற் பெரு வளத்தான் பகைவரை வெனறான்; பாணர் சுற்றம்

காத்தான்; வேள்வி பலசெய்து முடித்தான்; எனவே இவற்றானாய பயனை உறுதியாக அறிந்த அறிவுடையாளன் - அறிவினையுடையோன் - ஆவான் (புறம். 224:1-10).

**அறிவுடையோன் – அறிவினையுடையோன்.** ஒருகுடிப் பிறந்த பல்லோருள்ளும் மூத்தோன்வழிச் செல்லாது அறிவுடையோன் - அறிவினையுடையோன் - ஆறு அரசும் செல்லும் (புறம். 183:5-7). 'யாம் மிகப் பெரிய துன்ப முறினும் உணர்ச்சி யில்லாதவருடைய செல்வம் பயன்படாமையின் அதனை நினையேம்; நல்ல அறிவுடையோர் வறுமை பயன்படுதலின் அதனை உவந்து பெரிதும் நினைப்பேம்' எனக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் கூறியுள்ளார் (புறம். 197:15-18).

**அறிவுமடம் – அறிந்தும் அறியாதார் போலிருத்தல்.** ஓய்மானாட்டு நல்லியக் கோடன், தான் கூறுகின்றவற்றை உணரும் அறிவில்லாதாரிடம் அறியாமைப் பட்டு நிற்கும் அறிவு மடம்–அறிந்தும் அறியாதார் போலிருத்தல் - உடையவனாக விளங்கினன் (சிறு. 216).

**அறிவோர் - அறிபவர்.** 'தலைவர் நம்மிடத்து முயங்கியிருப்பாராகவும் குளிரின் கடுமையால் நாம் வருத்த முற்றுத் துஞ்சாதிருத்தலையும் அறிவோர் - அறிபவர் - இப்பொழுது நம்மைக் கைவிட்டு அகன்றமையின் அன்பிலர்' எனத் தலைமகள் தோழிக் குரைத்தாள் (நற். 281:8-11). அமரர்க்கும் அவுணர்க்கும் திருமால் முதல்வர் ஆனமையால் அவர் மரபை அறிவோர்க்குப் பகைவர் இவர், நட்டோர் இவர் என்னும் கூறுபாடு இல்லை (பரி. 3:53-58).

**அறுகாற்பறவை – ஆறு கால்களையுடைய வண்டு.** மணத்தினை ஆராயும் ஆராய்ச்சியினை யுடைய அறுகாற் பறவை - வண்டு - வெள்ளாம்பல் மீது ஊதும் (புறம். 70:11,12). புலியைத் தொலைத்த களிறு யாழிசையினை யுடைய அறுகாற்பறவை இமிர அடுக்கத்து மென்மெல நடந்து பிடியைப் புணர்ந்தது (அகம். 332:2-8). இரவிடை வந்து தலைவியைத் தலைவன் கூடியமையால் ஏற்பட்ட புதிய மணத்தினைக் கருதி அவளுடைய தோளில் அறுகாற் பறவை மொய்த்தன (நற். 55:3-5).

**அறுகு - சிங்கம்.** ஆய்வேளின் பொதினி மலை அறுகை - சிங்கத்தை - ஓட்டிய (வென்ற) யானையை உடையது (அகம். 1:4). ['அறுகோட்டு யானை' என்னும் தொடரை அறு + கோட்டு + யானை எனக் கொண்டு அறுத்துத் திருத்தின கோட்டை யுடைய யானை என்று இராசகோபாலார்யன் உரைப்பர்.]

**அறுகை– 1. குறுநில மன்னன்.** உழிஞைப் பூவைச் சூடி வெல்லும் போரினைச் செய்யும் அறுகை என்னும் பெயரிய குறுநில மன்னன், நெடுந்தொலையில் உள்ளா னாயினும் கடல் பிறக்கோட்டிய செங் குட்டுவனை நண்பன் என்று கூறினன் (பதி. 44: 10-11).

**2. அறுகம்புல்.** நீலமணி ஒழுகினாற் போன்ற கரிய நெடிய அறுகையை - அறுகம்புல்லை - மான்கள் விரும்பி உண்ணும் (குறு.256:1-3). திருமாவளவன் போர் செய்தழித்த மன்றங்கள் அழிந்து சிறிய பூக்களை யுடைய நெருஞ்சியும் அறுகையும் பரவிக் கிடந்தன (பட். 255,256). வாகை யிலையினையும் அறுகையின் கிழங்கிலுள்ள அரும்பினையும் சேர்த்துக் கட்டிய வெண்ணூலை மணமகளுக்குச் சுற்றத் தார் சூட்டுவர் (அகம்.136:10-14).

**அறுதொழிலந்தணர் - ஆறு தொழிலைச் செய்யும் அந் தணர்.** வேதம் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறுதொழிலந்தணர் அறத்தை விரும்பிச் செய்த வேள்வித் தீயினைப் போல வயல்களில் பூத்த செந்தாமரை விளங்கும் நாட்டை உடையவன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் (புறம். 397:19-21).

**அறுமீன் – கார்த்திகை மீன்.** உழுதல் தொழில் நிறைவுற்று, மழை பெய்வது நீங்கி நிறைமதி அறுமீனை-கார்த்திகை மீனை - சேரும் நாளின் நள்ளிரவில் தெருக்களில் விளக்குகளை நிரல்பட ஏற்றி மாலைகளைத் தொங்கவிட்டு ஊர்களில் பலருங்கூடி விழா வெடுப்பர் (அகம். 141:6-11). அறுமீன் என்னும் நாண்மீனாற் பெயர் பெற்றதும் அறஞ்செய்தற் குரியதுமான கார்த்திகைத் திங்களில் ஒளியுடைய விளக்குகளை நீண்ட வரிசையாக ஏற்றுவது மரபு (நற். 202:9, 10).

**அறுமுகம் – முருகனுக்குரிய ஆறு முகங்கள்.** முருகன் அறுமுகமும் பன்னிரு தோளுங் கொண்டு வெற்றியெய்தி வள்ளியை நயந்தவன் (பரி. 14:21,22). செவ்வேள் மாறுபட்டவரை அமரில் கொன்றவனும் வீரவேலுடையவனும் பன்னிரு தோளும் அறுமுகமும் கொண்டவனுமாவன் (பரி. 21:66,67).

**அறுமுகவன் – ஆறுமுகத்தையுடைய முருகன்.** முருகன் 'அறுமுகவா' என விளித்துப் போற்றப்படுகிறான் (முரு. வெ. 8).

**அறுவர் - மாதவர் மனைவியர் அறுவர்.** பெரிய மலையில் நீலப் பைஞ்சுனை யிடத்து அருந்ததி நீங்கிய அறுவர்-மாதவர் மனைவியர் அறுவர் - பெற்ற ஆறு வடிவுபொருந்திய செல்வன் முருகன் (முரு. 253-255). எழு முனிவரும் சிவன் சிதைத்த கருவை, வேள்வி

செய்து அவியுடன் பெய்து எடுத்துக் கொடுக்க முனிவர் மனைவியர் எழுவருள் அருந்ததி யொழிய மற்றைய மனைவிமார் அறுவரும் அதனை உண்டு கருவுற்றனர் (பரி. 5:37-47). அறுவரும் முருகனைப் பெற்றநாளிலே இந்திரன் வச்சிரப் படைகொண்டு எறிய. ஆறு துண்டமும் அறுவராகிப் பின் ஒருருவ மாக முருகனாயினன் (பரி. 5:50-54).

அறுவை – ஆடை. அறுவையின் - ஆடையின் – தூய விரியை ஒப்ப உச்சியினின்றும் பலவாய் இழிதரும் அருவியையுடையது கொண்பெருங்கானம் (புறம்.154. 10-13). 'தன்னையொத்த வீரர் பலரிருக்க என் மக னைத் தேர்ந்தெடுத்துக் கள் கொடுத்தான் தலைவன்; அவன் செய்த சிறப்பு என் மகனைக் கால்கழி கட்டி லாகிய பாடையிற் கிடத்தித் தூய வெண்ணிற அறு வையை அவன்மேல் போர்த்தும்படி செய்யவில்லை யே' என ஒரு வீரத்தாய் கூறினாள் (புறம். 286:2-5). தூய அறுவையுடன் மாய்ந்து கிடக்கும் கரியவனை அணுகிப் பறவைகள் செய்யும் ஆரவாரத்தை நீக்கு மாறு சிறுவரையும் துடிகொட்டுவோரையும் பாணர் மக்களையும் அவன் மனைவி வேண்டினாள் (புறம் 291:1-3). களர்நிலத்துண்டாகிய கூவலைத் தோண்டி நாடோறும் வண்ணாத்தி துவைத்து வெளுத்த தூய வெள்ளறுவையில் எருப்பொடி பரந்த தெரு வின் அழுக்குப் படியப் பல செயல்களைச் செய்து உதவிய தலைவனுக்குப் போர்க்களத்தில் துணை யாக ஒருவருமில்லை (புறம. 311:1-5). கழற்கால் மற வர் இருநிலந் தோயும் அறுவை யணிந்து மாவூர்ந்து பொருதனர் (பதி. 34:2-4). பொருநன் அணிந்திருந்த ஈரும்பேனும் கூடிய வேர்வையால் நனைந்த தைக்கப் பெற்ற பழைய ஆடையைக் களைந்து கண் பார்வை நுழையாத நுண்ணிய பூவேலைப்பாடமைந்த பாம் பின் தோல் போன்ற சிறந்த அறுவையைத் திருமா வளவன் அவனுக்கு நல்கினான் (பொரு. 79-83). பாணர்க்கு நல்லியக்கோடன் மூங்கில் உரிபோன்ற அறுவையைக் கொடுத்தான் (சிறு. 236). திண்ணிய தோளையும முறுக்குண்ட உடம்பையும் உடையவர் கள்ளுண்டு முன்னும் பின்னும் தொங்கவிட்ட அறுவையுடையராய் மூதூர் நெடுந்தெருவில் பெய் யும் மழையையும் பொருட்படுத்தாது திரிந்தனர் (நெடு. 31-35). தலையிலே மயிர்க்கட்டாகச் சுற்றி ஒருபக்கம் தொங்கவிட்ட அறுவை தோய்ந்த குடுமி யினையும் சிறுபை தொங்கவிடப் பெற்ற வளைந்த கோலினையும் உடையனாய் மேல் நிகழ்வதனை அறிந்து கூறுபவன் வேலனாவான் (அகம். 195:12-14). மணங்கமழ அறுவை விரிக்கப் பெற்ற மெல் லணைமீது செவிலியின் பக்கத்தில் புதல்வன் படுத் துறங்கினான் (நற். 40:5,6). நீர்த்துறைக்கண் அலைத்து விடப்பட்ட வெண்ணிற அறுவையின் தூய மடியைப் போன்ற வெண்ணிறச் சிறகுகளை யுடையது வெள்ளாங் குருகு (உள்ளாங் குருவி) (நற். 70:2,3).

அறை – 1. பாறை. பறம்பு மலையிலுள்ள சிறுகுளம் அறையும்-பாறையும் – சிறுகுவடுங் கூடிய தலையை யுடையதாகிய எட்டாம் பக்கத்துப் பிறைபோலும் வளைந்த கரையையுடையது (புறம். 118:1-3). பொந் தாகிய அறையுள் கூகை சுட்டுக்குவி எனச் செத் தோரை அழைப்பது போலக் கள்ளியை யுடைய பாழிடமாகிய புறங்காட்டுள் ஒருபக்கம் குழறும் (புறம். 240:7-9). தீப்போலக் கதிர் தெறுதலின் பாறையிலுள்ள பைஞ்சுனை நீரற்று அறை காய்ந்து கிடத்தலின் அதன் மேல விழும் நெல் பொரி யாகின றது (அகம். 1:11-13). மழைபெயது கழுவித் தூயதாக் கிய அறையில் மகளிர் குருநது, அனிச்சம் முதலிய மலர்களைப் பறித்துக் குவித்தனர் (குறி. 95-98). கால மல்லாத காலத்திலும் மரம் பயன் தருதலின் அகன்ற அறையில் நாவற்பழங்கள் காற்றால் உதிர்ந்து கிடந்தன (மலை. 133-135). பெரிய மலைப்பக்கத்தில தீப்போலப் பல இதழ் பரவிக் கிடத்தலினால வெறி யாடுகளம் போலத் தோன்றும அகன்ற அறை தோறும் மணவீடு போல நறுமணம கமழும் (மலை. 149-151). விண்ணளாவும் பெருமலைகளில் மோரி யரின் பொன்னாலியன்ற தேர்ச சக்கரம தடையில் லாமல் செலல வெட்டி வழியமைத்த அறைகளைக் கடந்து தலைவர் சென்றார் (அகம். 69:10-12). அகன்ற அறையிலுள்ள வேங்கையின் இலை விர விய மாலையினை மலைநாடன் அணிநதுள்ளான் (அகம. 105:1-3). பெரிய புலி கரிய கற்களை யுடைய அகன்ற அறையிற் கிடத்தி மானின தசையைத் தின்றது (அகம். 107:4, 5). காட்டு வழியில எவ்வி இறந்த போர்க்களத்தில் யாழினுடைய வளைநத கோட்டை ஒடித்துப் போட்டாற் போலக் கொன் றையின நெற்றுககள் அறைமேல பரவிக் கிடக்கும் (அகம். 115:8-12). கவுதாரியின் காலில் உள்ள முள் ளைப் போன்ற அரும்பு முதிர்ந்த வெட்சிப் பூககள குருந்த மலரொடு கல்லறையில் பரவிக் கிடக்கும 'அகம். 133:14, 15). ஞாயிறு சுடுதலால் இருப்பையின் குவிந்த வெணபூக்கள் யானை மருப்பினாற் செய்து கடைந்த கழங்கு போல அறைமேல் பரவிக்கிடககும் (அகம. 135:7-9). பிட்டனது குதிரைமலைப் பக்கத்து அகன்ற அறையின் நெடுஞ்சுனையில் மலர்ந்த நீல மலர் போலத் தலைவியின் கண்கள் நீர் சொரிந்தன (அகம். 143:12-16). புல்லி என்பானது வேங்கட மலைக்கு அப்பாலுள்ள அறைகளைக் கடந்து செல் லினும் தலைவன் தலைவியை நினையாதிரான் (அகம். 209:8-11). வெண்கடம்பினை யானை உரா யுந் தோறும் மழையொடு விழும் ஆலங்கட்டி போல

அறைமேல் பூ உதிர்ந்து சிதறி வெண்ணெல் விதை போல் காய்ந்து கிடக்கும் (அகம். 211:2-6). வேங்கையின் பொன்போன்ற மலர் பரவி அறையை அழகு செய்யும் முற்றத்தே மகளிரொடு குறவர் குரவையாடுவர் (அகம். 232:7-10). காட்டில் ஈனறு இளைத்த புலியின் பசிக்கு மானுணவை இரையாகக் கொண்டு வரச் சென்ற ஆண்புலி, காட்டுப்பசு அலற ஆமான் ஏற்றினை வலப் பக்கத்தே விழுமாறு அடித்து மலையின் அகலறை சிவப்ப இழுதது வரும் (அகம். 238:1-9). புதிய மோரியர் தேர்ச் சக்கரம் செல்ல உடைத்து வழியாக்கிய அருவியைக் கொண்ட அறையுடையது மலை வழி (அகம்.251:12-14). மலையில் மைபூசினா லொத்த கரிய முகத்தையுடைய ஆண் குரங்கு மூங்கிலிற் பாய அதிலிருந்து வெண்ணெல் வெம்மையுடைய அறையில் உதிர்ந்து நகத்தை நெரிப்பது போன்ற ஓசையுடன் பொங்கிப் பொரியும் (அகம். 267:9-12). மோரியர் தென்திசை நாடுகளைக் கவர எண்ணி விண்ணுற ஓங்கிய பெரிய மலையினைச் சக்கரம் தடையின்றிச் செல்லக் குறைத்து வழியாக்கிய அறைகளைக் கடந்தனர் (அகம். 281:8-12). வளமிக்க அறை மருங்கு அமைந்த சுனையில குவளை மலர்ந்தது (அகம்.308:11). மழவர் தெய்வம் தங்கிய வேமபில் கொழுப்புடைய பசுவை வெட்டிக் குருதி தூவிப் பலியிட்டுப் புலாலைப் புழுக்கி உண்ட அகன்ற அறையில் களிறு உராய்ந்ததால் இலவ மரத்து வெள்ளிய விதை ஆலங்கட்டி போற் பரவிக் கிடக்கும் (அகம். 309:2-8). அறையிலுள்ள இனிய தேனைக் குறவர் அறுத்தெடுக்க முயல்வர் (அகம். 322:12). இண்டஞ்செடியும் பிரப்பங் கொடியும் செறிந்த காட்டில் சூல்வேட்கையுடன் கிடந்த பெண்புலியின் வருத்தந் தீர ஆண்புலி யானையை வலப்பக்கம் வீழ வீழ்த்தி அகன்ற அறை குருதியாற் செந்நிறமடைய இழுத்து வரும் (அகம். 357:1-6). பலமலைகளுக்கும் வெம்மையான அறைக்கும் பக்கத்தே கிடக்கின்ற வியனசுரத்தைக் கடந்து தலைவன் சென்றான் (அகம. 361:14-16). மூங்கிலும் நெல்லியும் உளள மலை அறையின் பக்கத்து ஆல மரம் உள்ளது (அகம். 385:7-9). காட்டுமயில் அறையில் ஈன்ற முட்டையை வெயிலில் விளையாடும் குரங்குக் குட்டி உருட்டி விளையாடும் (குறு. 38:1,2). கதிரவன் காயும் வெம்மையுடைய அறையிடத்துக் கையில்லாத ஊமன் கண்ணினால் காக்கும் வெண்ணெய் உருகுவது போலக் காமநோய் பரந்துள்ளது (குறு. 58·3-6). மகளிர் மலையிலுள்ள அகனற அறையிடத்துச் செந்தினை பரப்பிச் சுனையிற் பாயும் போது அவர்களின் சோர்வு நோக்கி மந்தி தன் குட்டியோடு அதனைக் கவரும் (குறு. 335:1-4). வேனிற்குன்றததின் வெம்மையான அறைகொண்ட மலையடிவாரத்தில் களிறு மேகம் முழங்கும் கடிய முழக்கத்தைக் கூர்ந்து கேட்கும் (குறு. 396:4-6). பறையை முழக்கும் குறுந்தடியோ எனப் பாணர் ஐயுறும்படி கொன்றையந் தீங்கனி அறைமீது கடுங்காற்று வீச விழுந்து கிடக்கும் (நற். 46:5-8). இண்டையின் தேன் துளி மிக்க மலர்கள் மகளிர் தம் முன்றிலில் விளையாடுதற்கிட்ட கழங்கு போல அறை மீது உதிர்ந்து பரவும் (நற். 79:1-4). இடியேறு யானையை எறிந்து கொல்ல, அதன் வெண் கோட்டைப் பறித்து அதன்மீது ஒட்டியுள்ள ஊன் காயுமாறு அகன்ற அறையில் குன்றவர் வைத்தனர் (நற். 114:1,9-12). மருத நில மாந்தர் களம் செப்பம் செய்தாற் போன்ற அகன்ற இடத்தையுடைய பசிய அறையில் மெல்லிய தினையைத் துவைத்து அதன் தாளை நெடிய போராக இட்டனர் (நற். 125:9-11). தன் வளையை நெகிழ்த்த தலைவன் குன்றத்தின் கொடு முடியில் பரவிக் குளிர்ச்சியுறும்படி அகன்ற அறையில் அளாவிய காற்று, தன் பசலை மேனியில் சிறிது படுதற்கு விரைந்து சென்று நம் முற்றத்தில் கிடத்தினால் தன் நோய் நீங்கும் என்று தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 236:3-10). வயலிலுள்ள யாமையின் முதுகு பசிய அறை போன்றது (நற். 280:6). மயில் உலாவும் சோலை சூழ்ந்த அறையின் பைஞ்சுனையிடததிலுள்ள கண்ணை ஒத்த குவளை மலரைப் பறித்துத் தலைவனுடன் தலைவி அருவியாடினாள் (நற். 357:6-10). வேங்கை மலர்ந்த அழகிய மலையில அப்பூவின தாதிற் படிந்த மயில் அறையின் உச்சியில் தன் கூட்டத்தோடு கூடிக் கதிரவனின் இளவெயிலைத் துய்க்கும் (நற். 396:3-7). வேங்கை மலர் அகன்ற அறையில் அழகாகப் பரந்து கிடக்கின்றது (ஐங். 219:1-2). குரங்கின் தலைவனான கடுவன் பிரப்பங்கோல் கொண்டு அறையிலுள்ள மாரி மொக்குளைப் புடைக்கும் (ஐங். 275:1-3). தளிரினை மேய்ந்த மந்திக் காதலனாகிய கடுவன் நறைக்கொடி கொண்டு அகன்ற அறையில் தவழும இளமுகிலைப் புடைக்கும் (ஐங். 276:1-3). புனத்திலுள்ள வேங்கையினது பொன் போன்ற பூப்பொடி உதிரும் அறையின் முன்றிலில் காதலரின் புணர்ச்சி நிகழும் (கலி. 39:33,34). 'யானை மருப்பு உலக்கையாகச் சேம்பின் இலை சுளகாக, மூங்கில் நெல்லை அறையாகிய உரலிற் பெய்து 'குற்றுவோம்' என்று வள்ளைப்பாட்டுப் பாடத் தலைவியைத் தோழி அழைத்தாள் (கலி. 41:1-4). வேங்கையைத் தொலைத்த யானை மருப்பினாலும் சந்தன மரத்தாலும் செய்யப்பெற்ற உலக்கைகளைக் கொணடு ஐவனமாகிய வெண்ணெல்லை அறையாகிய உரலிலிட்டுக் குற்றி முருகனைப் புகழ்வார்போல் மலைநாடனைப்புகழ்ந்து

தலைவி தோழியாகிய இருவரும் வள்ளைப் பாட்டுப் பாடினர் (கலி. 43:1-7). அறையிலிருந்த கருங்குரங்கை வெருண்டு பார்த்து இருள் செறிந்த பக்க மலை மீது ஏறியிரங்கி வருடைமான் குழவி ஆடும் (கலி.43:12-14). வெங்கதிர் காயும் மூங்கில் நெருங்கிய அகன்ற அறையிடத்துச் சுனையிலுள்ள காந்தளங் குலையைப் பாம்பு நீருண்ண வந்திருப்பதாகக் கருதி இடி முழங்க, அது கேட்டுச் சிறு குடியிலுள்ளார் துயிலெழுந்தனர் (கலி. 45:1-7). மலைச்சாரலிலுள்ள அகன்ற அறையை விரவிய பூக்கள் கோலஞ் செய்யும் (கலி. 49:23,24). பலாப்பழம் வீழ்ந்து கிடக்கும் அறையிடத்தே அதனை எடுத்துண்ணும் உணவினையும் சோற்றுத்திரளையும் உடைய சிறு குடியில் வாழ்பவள் செல்வமகளாய தலைவி (கலி. 50: 11-14). சுரபுன்னையுள்ள மலைச் சாரலின் பக்கத்தேயுள்ள அறையில் தான் விரும்பிய பெண்யானை பக்கத்திருக்கக் களிறு வலிமையினால் தன்னொடு மாறுபட்ட யானையை நெற்றியிற் குத்தி வாங்கிய கொம்பைப் போலக் காந்தள் முகை புதிதாகத் தோன்றும் (கலி. 53:1-5). தூங்கும் பிடியை யொத்த அறையிடத்திலுள்ள நுங்கினது வெட்டிய கண் போன்ற நீர் நிறைந்த குறுஞ்சுனையின்கண் ஆடிச் செம்முல்லையொடு முல்லை மலரையும் பறித்துத் தண்பொழிலில் எம்மொடு தங்கி நும் ஊர்க்குக் குளிர்ச்சியுண்டாகச் செல்வாய் எனத் தலைவியிடம் தலைவன் கூறினான். (கலி. 108:40-44). முல்லை, குருந்த மலர்களை முடியில் வேய்ந்து கான்யாற்று மணலை யுடைய தண்பொழிலிடதது முன்னர்த் தங்கும் அகன்ற அறையில் ஆயமோடு ஆடியதால் பகற்பொழுது கழிந்து இரவு வந்தது (கலி 113:23-26). வானவன் மகளின் (தேவசேனையின்) தோழியர் வள்ளியின் தோழியருடன் சண்டையிட்டபோது அறையிலுள்ள சுனையில் தேனுண்ணும் வண்டாய் மாறி முரன்றனர் (பரி. 9:62,63). அழுகின்ற மகளிர்க்கு அழுகையைப் போக்கத் தாயர் 'புலி புலி' யென்று சொல்லுமாறு வேங்கைப் பூக்கள் அகலமான அறையிடத்தே பரவிக் கிடந்தன (பரி. 14:11,12). பலப்பல சித்திரத்தையுடைய மணடபம் பரங்குன்றில் செழித்த மூங்கிலையும் விரிந்த அறைகளையு முடைய இடத்தே அமைந்திருத்தலின் மங்கலநிலை எய்தியது (பரி. 19:53-56).

2. பாத்தி. அறையில்-பாத்தியில்-விழுந்த கரும்பு கணுக்களின் இடைவெளிபோன்ற வளர்ச்சியற்ற ஒற்றை மூங்கிலுள்ள சுரநெறியைக் கடநது தலைவன் சென்றான் (குறு. 180:3,4). உப்பு அறையிலே கிடந்த உப்பினால் இயன்ற பாவை மழைத்துளியை உற்ற தன்மை போலத் தலைவன் உயிர் நிறையழிதற்குக் காரணமான காமநோயை நீந்திக் கரைந்து விட்டது (கலி. 138:14-17).

3. அம்மி. புனலாடச் சென்ற மகளிர் குங்குமச் சேறாகச் செய்த அகிற்சாந்து, கருப்பூரம் ஆகிய இவற்றை ஒன்றுபட அறையில்-அம்மியில்-வைத்து அரைத்தனர் (பரி. 10:81-83).

4. பாசறை. (பாசறை அறை என்று விகாரப்பட்டு வந்தது). அறை-பாசறை-அளவிடப்படாத எல்லையுடைய நல்ல இயல்புகளைக் கொண்டது (பதி. 24: 14;81:14). பேயின் கண்ணை ஒத்த முரசம் அறையிடத்து மலைப்பக்கத்தே நடுங்குவதாய் முழங்கும் (பட். 236, 237).

5. தங்குதற்கெனத் தடுக்கப்பட்ட சிறு இடம். வலிமிக்க உடம்பினையும் தறுகண்மையையும் கொண்டயவனர் திரியப் புலிச்சங்கிலி விடப்பட்ட நல்ல இல்லத்தில் திருமணி விளக்கை எரிய வைத்துக் கயிற்றினால் திரையை வளைத்த புறவறைக் குள்ளே உள்ள அறையில் - தங்கும் சிறு இடத்தில்- மன்னன் படுக்கச் சென்று போர் வேட்கையினால் உறங்காதிருநதான (முல்லை. 61-67).

6. வஞ்சனை. தான் வாசித்த யாழிசையைக் கேட்ட மானை (அசுணமாவை) இன்பமுற்றது என்று அருள்பணணாது முன்பு செய்த அறையை- வஞ்சனையை-கெடுததுப பினனை அதன உயிர் போம்படி பறையைத் தட்டினாற் போலத் தலைவன முன்னர் வஞ்சித்து இனபததை உணடாககிப் பின் அவ்வினபம் போமபடி தலைவியை விடுத்து வருத்தினான் (கலி. 143:10-12).

7. துணுக்கு. பொறகொலலனின துலாககோலிலுள்ள கிண்ணங்கள் பொலிவுறும்படி வெள்ளியின நுண்ணிய கோலை அறுத்த அறை-துணுககு-உதிர் வதுபோல வண்டினம் ஊது தொறும் குரவமலர்த் தாது கோங்க மலரில உதிர்ந்தது (அகம. 317:8-11).

8. கொட்டில். வடுகர் பெருமகனாகிய எருமை கோவலரின் தொழுவமாகிய அறையில-கொட்டி லில் - உள்ள கனறுடைப் பெருநிரையைக் கவர்நது தன்னூர் மன்றம் நிறையக் கொணர்நதான (அகம். 253:16-19).

9. அறுத்தல். மருதநிலம் அறை-அறுததல்-உற்ற கரும்பின இனிய பாகின இடையறாத வருவாயை வருநர்கு வரையாது வழங்கும வளமுடையது (பதி.75.6-8; சிறு. 52; பெரு. 50; மலை. 118).

அறை கொல்லல் – வஞ்சித்தல். நான செய்த நலங்களைத தலைவர் அறை கொன்றார்-வஞ்சித்தார்- என்று கருதி என் துன்பம் கண்டு ஆரவாரிக்

கிறாயா. எம்போல இனிய துணைவரை நீயும் பிரிந் ததனால ஆரவாரிக்கிறாயா, என்று தலைவி அன் றிலை விளிதது வினாவினாள் (கலி.129:12-15). மறை வில் தன யாழோசை கேட்ட அசுணமாவை அரு ளாது அறை கொன்று பறையினையறைந்து கொல லுதல் போனறு முனகூடி இன்பஞ் செயத தலைவன பிரிநது துனபம் செயதான (கலி. 143·10-12).

**அறை கோடல்** - கீழறுத்தல். வருததததைப் போக்கும் மருநதினது திறம அறிநத ஒருவன் அம்மருநதை அறியேன என்று அறைகோடலின் - கீழறுததலைக் காட்டிலும்-இனபந துய்தத தலைவியைத் தலைவன கைவிடுதல் கொடியது (கலி. 129:23-25).

**அறைநர்** – அறுப்பவர். கரும்பு அறைநர் - அறுப்பவர்- கருமபினின்றும் எடுத்த தேன விருநதாக வந்த சுற்றத்தார்க்கு விருப்புடன் கொடுக்கப் பெற்றது. (புறம். 42.14,17). கரும்பை அறைநர் இனிய சாறறை எடுககும் கரும்பாலையின பத்தல (கூன) பலகாலும சாறோடி நனைந்து வருநதியது (பதி. 19:22,23).

**அறைபோதல்** – கீழறுத்தல். 'பெருமழை வாய்ததுப் பலமுறை உழப பெற்ற வயலினது செம்மண நெகிழவது போன்று நெகிழநது பிரிவாறறாது கலங்கி, நெஞ்சினால் அறைபோகிய - கீழறுககப பட்ட-அறிவினையுடைய எனக்குத தலைவனிடம புலததல கூடுமோ' எனத் தலைவி கூறினாள் (அகம். 26:23-26). தனக்குத் துணையா யிராமல் அறை போகும் மனமுடைய மகளிர்க்கு நினைத்தவற்றை யெலலாம் செயது முடிக்க முடியுமோ எனத் தலைவி வினவினாள் (கலி. 67:19-21).

**அன்பன்** – காதலன். புனலாட்டின்போது தன்னுடைய அனபன் – காதலன் - சநதனச் சேறாடிய மேனியை நிலத்துய்த்து வணங்க, அவனது தலை மிதித்துப் பினனும் வெகுளிதீராது தலைவி ஊடினாள் (பரி. 7:73-76). பரததை தலைவியை நோக்கி, 'நீ அன்பு பூண்டவன எனக்கும் அனபன; ஆதலால் இவ் வளையும் ஆரமும் புணர்தற்கு விலையாகத் தந தான; அவன இவற்றையே யன்றி நாளை நின் காலில உளள சிலமபையும் கழற்றுவான்; அவன் களவன; நான களவியலலேன' என்று கூறினாள் (பரி. 20:79-82).

**அன்பு** – தொடர்புடையாரிடத்துக் கொள்ளும் பறறு. 'அருளையும அனபையும் நீககித் தீவினை செய்து நீங்காத நரகததைத் தமககிடமாகக் கொளபவ ரோடு பொருநதாது, குழநதையை வளர்ப்பவர் போல நாட்டினைக் காததோமபுக' எனறு நரி வெரூஉத தலையார் கோபபெருஞசேரல் இரும் பொறைக்கு அறிவுரை கூறினார் (புறம. 5:5-8). ஒலலையூர் தநத பூதப் பாணடியன் வஞ்சினம் கூறும்போது 'என்னுடன் போர் செய்ய வரும் வேந்தரைப் புறங்காணா விடின் அறம் நிலை கலங்காத அன்புடை அவைக்களத்து அறத்தின் திறப்பாடிலலாத ஒருவனை வைத்து முறைகெடு மாறு கொடுங்கோல ஆட்சி புரிந்தேன் ஆகுக, என மொழிநதான் (புறம. 71.1-9). எவரிடமும் அன பில்லாத ஆறலைககுங் கள்வர் வழிப்போக்கரைக் கொனறு பொருள பறிப்பர்; அவ்வருஞசுர நெறி யில தம்முயிர் மேல அனபின்றிக் கலைமானகள் அசையிடும் (புறம். 161:9-11). சேரமான் குடக் கோச் சேரல் இரும்பொறை பரிசில் நீட்டித்த போது அன்பு மாறிய அறனில்லாத பார்வையுடன் நும்மனோர் அருள் மாறி நடப்பராயின் எம் போன்ற புலவர் இங்குப் பிறவா தொழிவாராக என்று பெருங்குன் றூர் கிழார் கூறினார் (புறம்.210: 1-4). கூத்தர்க்கு வழங்கிய பேரன்பினன என்று கோப்பெருஞசோழனின் சிறபபைப பொததியார் குறிப்பிடுவர் (புறம். 221:2). வடககிருந்த கோப் பெருஞ்சோழன் நடுகல்லாயின பினனர் அவனை நோககிப் பொததியார, 'நின் மனைவி புதல்வனை ஈனறபின் வா எனப் பணிதது நான் வடக்கிருத் தலைத் தவிர்த்த அன்பிலலாதவனே, இப்பொழுது எனக்குரிய இடம யாது' என மகன பிறந்தபின சென்று வினவினார் (புறம. 222:2-6). கருமபனூர் கிழான தநத விருநதுணடு நன்னாகனார் விடை பெறுமபோது பேரனபுடைமையின அப்புரவலன அவரது பிரிவுக்கஞ்சினான் (புறம. 381:6,7). உலகில அறத்தையே உணர்நது செலுததும் ஆணைச் சக்கரததுக்குத் தடையாக உளளவற்றுள் அன்பு மிக உடைமையும ஒன்றாகும் (பதி.22:1-4). அன் புடையவாகிய நன்மொழிகளை யருளிப் பழமுதிர் சோலை மலைக் குரிய முருகன் பெறலரும் பரிசி லாகிய வீடுபேற்றினை யளிக்க வல்லவன் (முரு. 292–295). அறநெறி பிழையாத அன்புடை நெஞ்சம் வாய்ந்த பெரியோர் கூடியிருப்பது அந்தணர் பள்ளி (மது. 472-474). நன்மையும தீமையுங் கண்டு ஆராய்ந்து அடங்கி, அன்பும் அறமும் எப்பொழு தும் நீங்காமல் காததுப் பழி தம்மிடம் நேராமல் நீக்கிப் பரந்த புகழ் நிறைந்த செம்மை சான்றவர் காவிதிப் பட்டம் பெற்ற அமைச்சர் (மது. 496-499). மலைவழியில் கோவலர் தோண்டிய கிணற்றை, யானை மருப்பினை விரும்பிய அனபில் கானவர் யானைபிடிக்க அகழ்ந்த குழியெனக் கருதிய களிற் றினம் அதனைத் தூர்க்கும் (அகம். 21:22-27). கிளியும் பந்தும் கழங்கும் விரும்பிய தலைவியிடம் அளியும் அன்பும் சாயலும் இயலபும் முன்னாளபோல் இல்லை எனத தலைவனுடன் சென்ற மகளை நினைந்து செவிலி வருநதுகிறாள் (அகம். 49:1-3).

புல்லியின் வேங்கடம் செல்லினும் தொலைவிற் பிரிந்துள்ளார் என்று எண்ணாமல் அன்பு மிகச் செலுத்திட, தலைவியின் குணங்கள் நினைவுக்கு வந்தன எனத் தலைவன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற்குக் கூறினான் (அகம்.83:9-14). தலைவன் பொருள் வேட்கையினால் அகன்றாலும் தலைவி யிடம் பெரும் பேரன்பினன் (அகம். 91:8,9). அன் பால் உள்ளங் கலந்து விருப்பமிக்க சாயலையுடைய வள் தலைவி (அகம். 94:12-14). நன்னன் வேண் மான் சிறுகணுக்கள் கொண்ட நுண்ணிய மூங் கிற் கோலினையுடைய மகளிரொடு பாணரையும் புரந்த அன்பினன் (அகம். 97:10-12). தலைவன் உடன் கொண்டு செல்லுதலை விரும்ப அவ்விருப்பினைக் கேட்குந் தோறும் அன்பு நெஞ்சத்தால தலைவி பலவற்றையும் எண்ணினாள் (அகம். 107:1,2). 'நீ தலைவியிடத்து அன்பிலை என்பதனை முன பறியேன்; இப்பொழுது அறிந்தேன்; அவள்பால் அன்பிருந்தால் அழகுகெடப் பொன்போற் பசலை அவள் மேனியிற் பரவாது' என்று தலைவனிடம் தோழி கூறுதல் (அகம். 172:14-18). அன்பும் மடமும் மென்மையும் ஒழுக்கமும் எலும்பை நெகிழ்விக்கும் சொல்லும் பிறவும் தலைவன் தலைவி ஆகிய இருவர்க்கும் ஒத்திருந்தன (அகம். 225:1-3). வாடைக் காற்று இரவில் வீசித் தலைவியின் அணிகளை நெகிழ்த்தலான் அழகு சிதைய வளை நெகிழ்ந்து வீழும் என்னும் சொல்லைக் கொண்டு தூது செல்லும் அன்பரைப் பெறுவோமாயின் தலைவர் துன்பம் நீக்க வருவர் (அகம். 255:15-19). முதிய மரத்தில் தங்கிய பேராந்தை குழறுகின்ற பேய் நடமாடும் நள்ளிரவில மனமுருகும் வண்ணம் துன் பத்தினைச் செய்த அன்பில்லாதவனது அறிவுடை மொழியை மெய்ம்மையென விரும்பினேன் என்று தலைவி கூறினாள் (அகம. 260:11-15). நெஞ்சு நெகிழ்வனவற்றைக் கூறி அனபினால் உள்ளம் கலந்து தாம் என்றும் பிரியாமைக்குரிய வஞ்சினம் செய்த தலைவர் பொருளீட்டுந் தொழிலை விரும்பி வேறு தன்மையினராயது ஏன் என்றெண்ணித் தலைவி வருந்துவள் (அகம். 267:1-3). சிறுவர் வைத்த வலையில் சேவற் கொக்கு சிக்கிக் கொள்ள அதன் பெடை இரவில் இரை கொள்ளாமல் பிள்ளை யைத் தழுவிக்கொண்டு பனைமரத்தில் அன்புற நரலும் (அகம். 290:1-7). 'பேரன்பினளாகிய தலைவி, பிரிந்து செல்வேன் என்று கூறும் நும் மெதிரே ஆற்றியிருப்பேன் என்று கூறும் அறிவு பெறா தவள்' எனத் தோழி தலைவனுக்குச் செலவழுங்கக் கூறினாள் (அகம். 319:10-16). நாடுபல கடந்து சென்ற தலைவர் அன்பிலர் எனத் தோழிக்குத் தலைவி கூறினாள் (அகம். 331:9,14). 'நின் உயர் வுக்குத் தக்க மென்மையுடையவன் என நீ அன்பால் உரைத்து அமைதியுறக் கூறிய தலைவ னுடைய இன்சொற்க ளெல்லாம் உண்மையாயின' எனத் தலைவி தோழியிடம் கூறுகிறாள் (அகம். 332:10-12). 'தலைவன் நல்ல குடிபபிறப்பு உடையவன், கூடிய. வரைப் பிரியமாட்டான்; நாவால கெடுமொழி கூறான்; அன்புடையவன் எனறு அவன சிறபபுக் களைக் காட்டி மணம் செய்து வைத்த நீ நலலி யல்புடையாய்' என்று தோழியிடம் தலைவி கூறி னாள (அகம. 352:7-11). 'தலைவியின முயக்கத்தினை ஒரு நூல இடையே தடுப்பினும் அதனை வெறுத் துறையும் காதலோடு இன்பந் துய்ககும் நுகர்சசி யினும் சிறந்ததொரு இன்பமில்லை என அனபுடன் மொழிந்த என் சொலலை ஏறறுக் கொள்ளாது பொருளை விரும்பி வந்த மயககமுடைய நெஞசே' எனத தலைவன தன் நெஞ்சு நோக்கிக் கூறுகிறான் (அகம். 361:4-8). அருளும் அன்பும் நீக்கித் துணைவி யைத் துறந்து பொருள்வயிற் பிரிவோர் அறிவுடை யோராயின் ஆகுக; நாம் அறிவிலேம ஆகுக எனத தலைவி தோழியிடம் மொழிநதாள் (குறு. 20). தலைவர் சென்ற வழி பிடியின பசியை நீக்க யானை யாமரததின் பட்டையை உரித்துக் கொடுக் கும் அனபினை யுடையது (குறு. 37:2-4). தலைவன் தலைவியருடைய அனபுடை நெஞ்சங்கள் செந நிலத் தில் பெயத மழைநீர்போல ஒனறாகக் கலநதுவிட் டன (குறு. 40:4,5). பாணனது வாயபபேசசில் தலை வன் யாரினும் இனியனாகவும பேரன்பினனாகவும இருக்கிறான எனத தோழி தலைவனைக் குறிபபிற குறை கூறுகிறாள் (குறு. 85:1,6). தலைவர் இப பொழுது தாயும் தந்தையும போலுளளார்; அன பிலலாதவரிடததுப் புலவி என்ன பயனைத் தரும் எனத் தலைவி தோழிக்குக் கூறி வாயில் மறுக் கிறாள் (குறு. 93:3,4). தலைவி வேபபங்காய் தந் தாலும் வெல்லக் கட்டிபோல் இனிக்கிறது எனறு முன்கூறிய தலைவர், இபபொழுது பாரியின் பறமபு மலைப பனிச்சுனையில் தைததிங்களில் குளிர்நத நீரைக் கொண்டுவந்து தந்தாலும் வெம்மையுடைய தாய் உவர்க்கிறது என்கிறார்; அனபின தன்மை அவ்வாறுள்ளது என்று தோழி கூறுகிறாள் (குறு. 196). தலைவர் என்னிடம் அனபிலலாமையால அருளைப் பொருளென்று கருதவிலலை; வன கணமை கொண்டு என்னை வற்புறுத்திப பிரிந்தன றார்; தன நெஞ்சத்தை ஒருபால் நிறுத்த இயல வில்லை எனத் தலைவி கூறுகிறாள் (குறு. 395:1-3). 'நீர் நிரம்பிய குவளைமலர் போலக் கணகள் அழக் கலையைப் பிரிந்த பெண்மானைப் போனறு கலங்க, மாறுபட்டு அன்பில்லாது நீ பிரிவாயாயின கார்ப் பருவத்து மாலைப்பொழுது வருமபோது தலைவி

படுந் துன்பத்தை என்னால் தாங்க முடியாது' எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 37:4-11). 'அதிரற் பூவும் பாதிரிப்பூவும் வேய்ந்த கூந்தல் மணத்தைப் பொருந்தி யாம் இவள் சுணங்கணி மேனியை முயங்கி நீங்கோம்; நீயோ முயற்சியைப் பெரிதாக மதித்து நாளும் பிரிந்துறையும் வாழ்க்கையையே மேவி என்னொடு தங்கவில்லை; அன்பிலை' எனத் தலைவன் நெஞ்சு நோக்கிக் கூறிச் செல வழுங்கினான (நற். 52:1-8). 'வெண்குருகே! நான் சொல்வதைக் கேட்பாயாக; சிறு மாலைப் பொழுது பெருந்துன்பததை விளைக்கிறது; அதனை நீ அறியின் என்னிடம் அன்புடையை யாத லால் வேறுபட்ட மனம் கொள்ளாமல் என் குறையை இத்தன்மைய தென்று தலைவற்குக் கூறுக' எனத் தலைவி காமம் மிக்க கழிபடர் கிளவியால் உரைத்தாள் (நற். 54:4-8). அன்பு மிகுதியான் உள்ளங் கலந்து நம்மிடம் விரும்பிய கொள்கையுடனே என்றும் தன்னுடைய நெஞ்சத்து எம்மை நினைந்துறையும் காதலியின் ஊர் காடு சூழ்ந்த நாட்டிலுள்ளது என வினைமுடித்து மீள் பவன் தேர்ப்பாகற்குச் சொல்கிறான் (நற். 59:6-8). அருவித்துறையில் புலியொடு சண்டையிட்டுப் புண்பெற்ற யானையின் தந்தத்தை விரும்பிய அன்பில்லாத வேடர் விடுத்த அம்பு பட்ட யானையின் பிளிறல் இடியொலிபோல் முழங்கும் (நற் 65: 4-8). சிறு வெள்ளாங்குருகே! தலைவர்க்கு என் இழை நெகிழ்த்த துன்பத்தை இதுவரை சொல்லாதோய; எம் ஊர் வந்து நீர்த்துறையைத் துழாவிச் சினையுடைய கெளிறுமீனை யுண்டு பின் தலைவனது ஊர்க்குச் செல்வாயாக; சென்று எம் ஊரில் மீனுண்ட நனறி மறவாது அவரிடம் என் நிலை கூறுதற்குரிய அன்புடையையோ, அன்றேல் பெரு மறதியையுடையையோ, கூறுக எனக காமம் மிக்குத் தலைவி கேட்கிறாள் (நற். 70:3-9). காதலர் மிகத் தொலைவிலுள்ள நாட்டி விருப்பினும் நம்மிடம் மிகப் பேரனபின ராதலின் தாம் மேற்கொண்ட செயலை முடித்துப் பெரும்புகழ் அடைவதாயினும் குறித்த பருவததே வாராது அங்குத் தங்க மாட்டார்; நொச்சியும் முல்லையும் மலரக் கார்ப் பருவம் எதிர்நதது ஆதலின் வந்து விடுவார் எனப் பருவங் காட்டித் தோழி தலைவியை வற்புறுத்துகிறாள் (நற்.115:5-10). 'நீயே அடியறிந்து வைத்து நடகக இயலாத ஆரிருளில் என் காவலுடைய வீட்டின் காவலையும் கடந்து வந்து கூடிய பேரன்பினையுடையாய், நாங்கள் சிறுதினை காக்கச் செலகிறோம; அதனால் துன்பம் நீங்கப் பகல் வருக' எனத் தோழி இரவுக் குறி மறுத்தாள். (நற். 156:1-6). பிற மாதரை விரும்பாத கொள்கை யோடிருந்து தன்னை விரும்பிய பரத்தைக்குத் தன் மார்பினைக் கொடுத்துவிட்டான்; என்னிடம் அன்பில்லாதவனிடத்து முயக்கம் என்ன பயனைத் தரும்' எனத் தலைவி ஆற்றாது சொல்கிறாள் (நற். 174:9-11). பிரிந்து செல்லும் குறிப்பறிந்து தலைவி வருந்தத் தோழி, நம் காதலர் செல்லமாட்டார்; செல்லினும் துன்பத்தைத் தாங்கமாட்டார்; சிறந்த அன்பினர்; மென்மைத் தன்மையும் உடையவர்; பிரிந்த நம்மினும் இரங்கி அரும்பொருள் தேடும் முயற்சி முடியாதாயினும் வருவர்; அதற்குமேல் மழைக்குரல் கேட்கிறது எனப் பல செய்திகளைக் கூறித் தேற்றுகின்றாள் (நற். 208:5-12). தலைவி காம மிகுதி காரணமாகக் காலை வருக என்னாள்: நின் பேரன்பு காரணமாக அருள் செய்தல் வேண்டிப் பூங்கானலுக்குப் பகலும் வருகிறாய்; இத்தன்மை இனியது எனினும் அலர் காரணமாகத் தலைவி இற்செறிக்கப்படுவாள் எனக் கூறித் தோழி தலைவனிடம் திருமணம் செய்துகொள்ளச் சொல்கிறாள் (நற். 223:1-5). 'நம்மிடம் பிரியமாட்டோம் எனத் தெளிவு பெறக் கூறிப் பின் பிரிந்தவரிடத்து நாம் என்ன சொல்வது? நம் காதலர் அன்பினர்; மிகப் பெரியர்' என்று தலைவீ தோழியிடம் கூறுகிறாள் (நற். 224:1, 6-8). மலைநாடனை விரும்பி அவனது பேரன்பினால் தினைக்கதிரைக் கிளி கொய்யாத படி ஓச்சித் தினைப்புனத்தைக் காத்து வருகின் றோம் எனத் தோழி தலைவன் சிறைப்புறமாகக் கூறினாள் (நற். 251:4-6). 'பாலைநில அரியவழியைக் கடந்து சென்றவருக்கு என் நிலையை உரைப்பாயாக; அவர் அன்பிலர்' எனத் தும்பியிடம் தலைவி கூறுகிறாள் (நற். 227:1,10-12). மழைபெயத இருள் மிக்க நள்ளிரவில் தலைவர் நம்மிடம் கூடியிருப்பவும் நாம் பனிக் கடுமையினால் மிகவும வருந்தித் தூங்காதிருந்ததை அறிந்தவர் கைவிட்டுச் சென்று விட்டார்; ஆதலின் அவர் அன்பிலாதவர் எனத தலைவி வருந்தியுரைத்தாள் (நற். 181:7-11). தலைவியின் நெகிழந்த தோளும் வாடிய வரியும தளிர் போன்ற வனப்பிழந்த நிறமும் நோக்கித் தன்னால் இததுன்பம் வந்தது என்று கருதித் தோழி பேரன்பு காரணமாக அழுதபோது தலைவி ஆற்றுவிக்கி றாள் (நற். 309:1-4). தலைவியுள்ள சேரிக்கு வருந் தலைவனுக்கு நீ என்றும் அருளல் வேண்டும் என்று அன்புடையோய் எனத் தலைவியை விளித்துக் கணணினால சாடை காட்டிக் குறிப்பாகச் சொல் லியும் அவள் உணரவிலலை என்று தோழி கூறினாள் (நற். 342:4-6). தலைவனை இன்ன நிலைமையுடையவன்; பேரன்பினன் என்று அவனுடைய மாண்புகளை எல்லாம் கூறும் பரிசிலரின சீரிய மொழிகள் வேனிற்காலத தேரை போல அளிக்கத்

தக்கனவாயினும் அவற்றின் மெய்ம்மை காணுமளவு ஆற்றாமை என் நலத்தை இருக்கவிடுமோ எனத் தலைவி கூறுகிறாள் (நற். 347:7-11). அன்பில்லாத ஆடவர் வில்லைக் கொண்டு அலைததலின் புதிய வர் சுரநெறியில் இறந்து கிடககின்றனர் (நற். 352: 1-3). 'நீ அன்பிலை; அன்புடையையாயின் என்னிட மும சில கூறுதற்கு நாணும் தலைவி உளமுவபபத் திங்களைக் கண்டு கடலலை வீசுவதுபோல அலை மோதும் மணல் நிரம்பிய கொலலைகளையுடைய ஊருக்குத் திருமணம் செயது கொள்ள வரின் நன்று எனத் தோழி தலைவனிடம் இயம்பினாள் (நற். 375: 3-9). காதலர் மிகுந்த பேரன்பினர் ஆதலால் நடு நாள் யாமததுத் தலைவியை வருத்தும் துனபத்தைப் போகக வேணடுமெனினும் போக்க வலலர் (நற். 392: 9-11). தலைவன ஊர் தன் பாரப்புத் தின்னும் அனபில்லாத முதலையோடு வெள்ளிய பூக்களைக் கொண்ட பொய்கையுடையது (ஐங. 41:1, 2). தலை மகன் மணந்து கொள்ளும நனனெறியைப பின் பற்றாமல அதற்கு ஏதுவாகாதவற்றை மேற் கொணடொழுகின அனபில னாவன் (ஐங. 119). இவ்வூர் அன்பிலலனவும கடியத்தககனவு மாகிய இடிககுரு சொறகளைக் கூறித தலைமகனைத தலைவியிடம் சேர்ககாததால் பாணன பணபில லாதானாகச சுட்டப பெறுகின்றான் (ஐங. 138). காந்தளின தேனையுண்ணும் வணடைப்போல நம் மிடமிருந்து நீங்கி மிக்க அழகினைக் கவர்ந்து கொண்ட அனபிலி யாகிய தலைவன் வநதான எனத் தலைவிக்குத் தோழி கூறினாள் (ஐங. 226). குறவர் விதைததுக் கொய்யபபடும் தினையின் அரிதாள் நிற்கும் தினைப புனத்தைக் கண்டும் கிளிகள் பிரிதலறியாத பேரனபினவாக இருததலின அவை இரங்கத தககன (ஐங். 284). சிறு கருங்காக் கையே, அன்புடைய நின் முறைமைக் கேற்ப நின் சுற்றத்தோடுணணப் பசிய ஊன் கலந்தாக்கிய பலியுணவினைப் பொன்னாலாய கலததிலிட்டுத் தருவேன்; வீரனோடு சென்ற என் மகள மீண்டு வரக் கரைவாயாக எனத் தலைவி மீள்வதற்காகத் தாய் காகத்திற்குப் பரவுக்கடன் உரைககின்றாள் (ஐங். 391). மாணபில்லாத கொள்கையால் துய ரிழைத்த அன்பொடு கூடாத அறனும் அருளுடைய தாயிற்று; சுரங்கடந்த மான்பிணையை ஒத்த இளையவள் மீண்டு வந்தவளைக் காட்டுவேன் எனத் தாய் சுற்றத்தார்க்கு உரைத்தாள் (ஐங. 394). தொடிநிலை கலங்கி வாடிய தோளும் மாவடுப் போலும் அழகிழந்த கண்ணும் நோககிப் பாணன் மிகப் புலம்பினன்; அவன் எம்மைப் பிரிந்த காத லர் போலல்லாது பேரன்பினனாக உள்ளான் எனத் தலைவி கூறினாள் (ஐங. 475). தலைவர் சென்ற நாட்டில் கோவலர் இலைமாலை தொடுக் கும் அனபில்லாத மாலைப்பொழுதும் உள்ளதோ எனத் தலைவி அன்பில்லாத பாணனைக் கேட் டாள் (ஐங. 476). பொருள் தேடப் பிரிவது உனக் கனபன்று எனத் தோழி சொல்லியதும் தங்காத தலைவன் தலைவியின இயறகை நலம் நீங்கு மெனக் கூறியதும் குததுக்கோலுக் கடங்காத யானை யாழிசைக்கு அடங்கியது போல அவள் சொலலுக கடங்கித தங்கிவிட்டான் (கலி. 2:25-29). 'அன்பு நீங்கப் பிரிதலைக் கருதாது எம்மையும் துணையாகக் கொணடு செலவதைக கருதின் அது வல்லது எமக்கு வேறு இன்பமுணடோ' எனத தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி 6:9-11). காட்டில் அன்பு கொணட மடப்பெடைக்கு உண டாய வருத்தததைப் புறா மென்சிறகினை விரிதது அதன் நிழலாலே போக்கும் (கலி.11:12,13). காட்டு வழியில் கடுஞ்சின மறவர் வழிபபோக்கருடைய பொருளைப பறித்துககொண்டு அவரைப புண் படுததியனுப்புவர். அவ்வழி அனபோடு அருளும் நீஙகியது (கலி. 15:7-9). நீ செயயும் வினை முடிதத பின் அனபு நீங்கும்படி மனம் வேறுபட்டு உன னால துறககப்பட்டவருடைய செயதியும அறி வீரோ என என்னைப பற்றி யாரையும் ஒனறும் கேட்காதே; கேட்டால் அவலம் தோன்றவும் கூடும எனத் தலைவனிடம் தலைவி கூறினாள் (கலி: 19: 7-13). மழை மேலுள்ள வேட்கையால வானத்தைப பாடும் வானமபாடி போலத் தலைவன செயத அளியை விரும்புதலால் அவனி த்துத் தலைவி அன்புடையளாயினள் (கலி. 46:20,21). தலைவி இன புறுமாறு தலைவன் அளி செய்தானாதலின் அவ ளிடத்து அனபுடையன எனக கூறுஞசொல இனிது எனத் தோழி கூறினள் (கலி. 49:15). பரத் தையர் தம் கோதைகளாலே அடித்த புண் ணாலாகிய வடுவைக் காட்டித் தலைவன் என்னிடத்து அன்பினறி வரின் புலபபேன் என்றிருப்பேன; ஆனால அவனைக கணடதும நெஞ்சு அவனைக் கூடுவேன எனகிறது எனறு தலைவி தோழியிடம் கூறுகிறாள் (கலி. 67:6-9). தலைவனை அனபிலன் என்றும அறனிலன் எனறும் கூறலாகாது என்று அவன புகழ் பலவற்றைப பாராட்டிக் கூறும் பாணன் பித்தேறினான எனக் காமக்கிழததி கூறுகிறாள் (கலி. 74:6,7). புதல் வனைத் தன்னிடத்தே தருக எனத தலைவியைக் கேட்க, அப்பொழுது அவன தன் தந்தைமேல் பாய அன்பிலி பெற்ற மகன் தான் தடுக்கவும் மலையடிவாரத்தில் சிங்கம் பாய்வது போலத தந் தையின் அகன்ற மார்பில் பாய்ந்தான் என அவள் மகனை நோக்கிக் கூறினாள் (கலி. 86:31-34). அன்

புற்று காதலர் கையைப் பிணைத்துக் கொண்டு ஆய்ச்சியர் இன்பமுற்றுக் குரவைக் கூத்தயர்வர் (கலி. 106:32,33). அன்பெனப்படுவது தன் சுற்றத் திறரும் கேடு செய்யா திருத்தலாம் (கலி. 133:9). நின்னிற் பிரியேன் என்று சொல்லி அன்பினாலே வயப்படுத்தித தலைவர் தமது மென்மையால் சுடு தலன்றித் தீயாற் சுடுபவரல்லர்; அவர் மென்மை யாற் சுடும் காம-நோய் தீயினும் கடிது என்கிறாள் தலைவி (கலி. 137:18-22). மடலேறிய தலைவன் பாடக்கேட்டு அன்பான சொல்லைக் கூறும் தலைவி அருளி செய்தலின் துனபத்திற்குத் துணையாய மடல் அவளையடைதற்குதவியது. (கலி. 138:26-29). அறனில்லாத தலைவன் நின்னைப் பிரியேன் எனத் தெளிவித்து மெல்ல முயங்கி நீங்கினான். தலைவி அப்பொழுது வீசிய காற்றை நோக்கி, நீ எங்கும் செல்லுதிற் குரியாய், உயவுத்தேர் ஊர்ந்து வந்து எனனுள்ளத்தே காம நோயினைச் செய்துவிட்டுச் சென்ற அன்பிலாதானை என் முன்னே காட்டுக எனக் கேட்டாள் (கலி. 144:37-42). தன் புகழுயரக் காரணமாயிருந்த அறிவுடை அமைச்சரை நடுங்கும் படியான வன்சொற்கூறித் துன்புறுத்திக் கொல்லும் கொடுங்கோல் மன்னனினும் அன்பில்லாத காமம் கொடிது (கலி. 146:1-3). மாலைப்பொழுதே, நீ கூடி யின்புற்றவர்கு நேயமாய் இனியவதே செய்தாய்; இப்பொழுது அனபுற்ற மகளிர பிரிவால் வருநதி அழ அல்லற்பட்டுக் கலங்கித் துன்புறும்பொழுது நுயர்செய்தல் தக்கதோ எனத் தலைவி அதனை வினவுகிறாள் (கலி. 148:8-11). திருமால் அறத்தினுள் அன்பாகத் திகழ்கிறார் (பரி. 3:65). கடுவனிள வெயினனார் செவ்வேளிடம் வேண்டுபவை பொரு ளும் பொனனும் போகமு மல்ல; அருளும் அன்பும் அறனும் ஆகிய மூனறுமாகும் (பரி. 5:78-81). தலை வன் தான பரத்தமையிலன் என்று பரங்குன்றத்து அடியைத் தொட்டுச் சூளுற்றான். அப்பொழுது தோழி ஏழுலகும் ஆளும் முருகனது பரங்குனறின் மேல் கொண்ட அனபு அளிக்கத்தக்கது. பொய்ச் சூள் செயதால் முருகனின்வேல் வருத்தும் எனக் கூறினாள் (பரி. 8:64-66). வழிச் செல்லும் ஒருவர் பின் நெஞ்சைப் போக்கினாள் ஒருத்தி. பெணடிரின் அன்பு மிகுநதால நிறையழியும்; அதனால் அன்பு மிகுதியை நீக்குவம் அல்லமோ என றார் சிலர் (பரி. 12:53,54). எலலா உலகினும் தோன்றி அவ்விடத்தே உயிர்களது பிறவிததுன்பத்தைத் நீக்குபவன் அனபு பொருநதி இருங்குன்றத்திருக்கும திருமாலாவான் (பரி. 15:51-53).

**அன்றில்-ஒருவகைப் பறவை.** நெருப்புப் போன்ற சிவந்த தலையையுடைய அன்றில் இறால்மீன் போன்ற வளைந்த வாயையுடைய பெடையொடு தடாமரத்தில் கட்டியிருந்த கூட்டில் தங்கிப் பிரிந்தவர் செய லற்று வருநத ஒலிக்கும் (குறு. 160:1-4). கொமபு போன்ற ஓசையையுடைய வளைந்த வாயினைக் கொண்ட அன்றில் மாலைக்காலத்தில் பனைமரத் தின் உள்மடலில் இருந்து கொண்டு தனது பேட் டினை அழைக்கின்றது (குறி. 219,220). பனையின் கொழுமடலில சுள்ளிகளாலிழைத்த கூட்டில் தங்கிய கரிய காலை யுடைய அன்றிலினது விருப்பத்தை யுடைய கடுஞ்சூலினைக் கொண்ட பெடை தன் துணையை நள்ளிரவில் அகவும் (நற். 301:1-4). நெய் தல் மலர்ந்த கழி சூழந்த நாட்டில பனைமரங்கள வளர்ந்த வெண்மணல் தோட்டங்களில் அன்றில் தன னுடைய துணையை அழைக்கும் (அகம. 120:14-16). தன் துணையைப் பிரியாது சேர்ந்திருக்கும் அன்றில் மணல் மேட்டிலுள்ள பனைமரத்தின் அகமடலில் இரவில தங்கும் (அகம். 260:6,7). மீனினங்களை யுண்ணும நாரையொடு அன்றில் தங்கும் பனையை யுடைய முற்றத்தகத்துப் பொன்போலப் புன்னை மலர் உதிர்ந்து பரவிக்கிடக்கும் சோலையிடத்து வருக எனத் தோழி தலைவனிடம் இரவுக்குறி உரைப்பாள் (அகம். 360:16-18). காமம மடலைத் தந்தது; அலர் எருககம்பூ மாலையைத தந்தது; கதிரவன் மணடிலம் துன்பந் தந்தது; எல்லாம் தந்ததன் மேலும் வாடைக்காற்று பனித்துளியைத் தூவுதலால் கூடடில் பெடையைப் புணர்ந்த அன்றி லின் குரலொடு சேர்ந்து கொண்டு இரவுப்பொழுது செயலற்ற நிலையைத் தந்தது; யான் எவ்வாறு பிழைப்பேன் எனத் தலைவன் கூறினான (நற். 152: 1-9). ஒன்று இல்லாதகாலத்தில் மற்றொன்று பிரிந்து வாழாத இயல்புடையது அன்றில் (நற். 124:1). 'வளைந்த வாயினை யடைய அன்றில்கள் இரவில் மனையைச் சார்ந்துள்ள பனைமரத்தில் கூடியிருத் தலினின்று துணை ஒன்று பிரிந்தாலும் உறங்கா (அகம். 50:10-12). பனைமரத்தில் தனியே தங்கியிருக் கும் கூர்மையான வாயினை யுடைய அன்றிலின் வருத்தக் குரல் பிரிந்த தலைவியின் கொதிக்கின்ற உள்ளத்தில் தீயை மூட்டி விடுகின்றது (அகம். 305: 12-14). மன்றத்திலுள்ள பனையின் மடலில் வாழ் கின்ற அன்றிலும் மெல்லக் கூவுகிறது; காம இன பத்தை என்னை அலைத்துப் பெற்ற தலைவா இன்று வருவரோ எனத்தலைவி தோழியை வினவு கிறாள் (குறு. 177:3-6). வேப்பங் கிளையிலிருந்த சேவற் கோட்டான் இரவு முழுதும் குழறுகிறது. பனையிலிருநது அகவும் அனறிலின் குரலையும் காதல் நோய் வருத்தத் தனியேனாய்க் கேட்பேனோ எனப் பிரிவில் தலைவி மனமழிந்து மொழிகின்றாள (நற். 218:7-11). பாக்கத்துள்ளார் யாமத்தே ஒலி யடங்கி உறங்குகின்றனர். கடவுள் தங்கும் பழைய

பொதுவிடத்துள்ள பனையின் மடலிலுள்ள கூட்டில் துணை புணர்ந்த அன்றிலின் வருத்தந் தரும் குரலைக் கேட்குந்தோறும், கண்ணை மூடாமல் பெருந்துன்ப முற்றுத் தலைவி வருந்துவாள் (நற். 303:1-8). வானத்தே திங்களும் திகழ்கிறது; கடலில் அலை ஒலியும் நீங்கிப் பாடில்லை; ஓதமும் ஒலி சிறந்து பெயர்கின்றது; தாழை முகை மலர அம் மலர் மணத்தோடு பனைமேலுள்ள அன்றிலும் துன்பந் தருவதாய் நரலும்; நள்ளிரவில் யாழொலி யும் எழுகின்றது. இவை எல்லாவற்றுக்கும் மேலே யானுழக்கும் காமமோ பெரிது; அதனைத் தீர்க்குந் தலைவரோ இங்கில்லை எனக் காமமிக்கு கழி படர் கிளவி வாயிலாகத் தன் கருத்துக்களைத் தலைவி புலப்படுத்துகின்றாள் (நற். 335). மன்றி லுள்ள பனை மடலில் வாழும் அன்றிலை விளித்து, நாம் செய்த நலங்களைத் தலைவர் கெடுத்து விட்டார் என்று எண்ணிக் கலங்கிய எனது துயர் கண்டு ஆரவாரிக்கின்றாயா அல்லது எம்போல நீயும் இனிய துணையைப் பிரிந்து தனித்தமை யால் ஆரவாரிக்கின்றாயா என்று தலைவி கேட் டாள் (கலி. 129:12-15). தலைவியின் மெல்லிய தோள்களை மெலிவித்தவனின் துறையில், தன் துணைவனை நீங்கினவள் வருந்தினாளோ என்று நினைந்து இனிய துணையொடு கூடிய அன்றில் இரவில் அகவுதலை நிறுத்திக் கொண்டது (கலி. 131:27-30). நமக்குத் துன்பம் செய்யும் யாமங்களிலே துயிலாதவாறு துணையைப் பிரிந்து வருந்தி நம் மோடு உசாவுகின்ற அன்றிலகளும் சில உள்ளன; ஆதலால் நாம் நாளைத் தாங்கியிருத்தல் அரிது; காமம் பெரிது; உயிர் தவச் சிறிது என்று தலைவி கூறுகிறாள (கலி. 137:1-4).

**அன்னச்சேவல்** – ஆண் அன்னப் பறவை. 'அன்னச் சேவலே, குமரித் துறையில் அயிரைமீனை உண்டு நின் பெடையோடு வடவிமயம் செல்வா யாயின், இடையே சோழ நாட்டின்கண்ணுள்ள உறையூர் அரண்மனை வாயிலில் தங்கி, வாயிற் காவலருக்கு உரையாமலேயே உட்புகுந்து எம்மரசராகிய கிள்ளி கேட்குமாறு 'ஆந்தை அடியுறை' என்று கூறுவா யாக; அவ்வாறு கூறினால நின் இன்புறுபெடை அணிதற்குரிய அணிகலன்களை உனக்கு அளிப்பன்' என்று பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழனைப் பாராட்டிப் புனைநதுள்ளார் (புறம். 67). ஆய் என் பானது மேகந்தவழும் பொதியின் மலை, மன்றத் திலுள்ள பலாமரத்தின் கிளையி லுள்ள குரஙகு, ஆண்டுப் பரிசிலர் தூக்கிவைத்துள்ள மத்தளத்தி னைப் பலாப் பழமென்று கருதித் தட்டினால், அன்னச் சேவல் அதற்கு மாறாக எழுந்து ஒலிகக்கும் வளமுடையது (புறம். 128:1-5). தேரிற் பூட்டப் பெற்றுக் காற்றினைப் போல விரைந்தோடும் குதிரைகளுக்கு, ஞாயிற்றினை அடையக் கருதிக் காற்றினைக் கிழித்து வானம் மறையுமாறு விசும் பில் பறந்து செல்லும் அன்னச் சேவல்கள் உவமை (மது. 384-387). விடியற்காலையில் வண்டாழங்குரு கினுடைய சேவலும் விருப்பத்தையுடைய அன்னச் சேவலும் தத்தமக்குரிய பெடைகளை அழைக்கும் (மது. 674,675). இளையபெடை அன்னம் விரைந்து செல்ல அதனை அன்னச் சேவல் கூடியது (கலி. 147: 64-66). 'வானினின்றும் மேகங்கள் பெய்தலால் இடையறாது ஒழுகும் மிக்க நீரில், அன்னச் சேவல் வலிகொண்டு சிறகுகளால் வறண்டெடீழியுமாறு செய்த 'திருமாலே' என்று முனிவரும் தேவரும் விரும்பிப் புகழ்ந்தனர் (பரி. 3:25-28).

**அன்னம்** – ஒருவகைப் பறவை. அலை நீரினையுடைய கடற்கரைசோநத மணலடத்தே தாழை அனனம் போல மலரும் (சிறு. 146). வரிசையாகப் பறந்து செல்லும் அன்னப் பறவைகள், தேரிற் பூட்டப் பெற்று விரைந்து செலலும் குதிரைகளுக்கு உவமை (அகம். 234:3-7). அன்னக் கூட்டம் வானத்தில் பறந்து செலவதுபோல், விரைந்து செல்லும் நான்கு குதிரைகள் பூட்டப்பெற்ற தேரில் தலைவன் சென் றனன (அகம். 334:10-12,15). வானத்தில் செல்லும் அன்னப்பறவை பறத்தலில் உயாநதது போலப் பொன்தட்டினால் பொலிவு பெற்ற வெள்ளிய தேரூர்ந்து தலைவன் சென்றனன் (குறு. 205:1-5). தலைவி மாண்புறற அனனப் பெடையினைப் போலும் அழகிய நடையினை உடையவள் (அகம். 279:15). மகளிர்க்கு அன்னப்பறவை உவமை (பரி. 10: 44: 12:27). மெல்லிய தூவியினை யுடைய அன்னம் தன் பெடையொடு, பொய்கையிடத்து மலர்ந்துள்ள தாமரை மலரின் புறத்தே சேர்ந்து திரிவதற்குத் திருமண நாளில் மணப் பெண்ணோடு மணமக னாகிய அந்தணன் ஓமத்தீயை வலம் வருவது உவமை (கலி.69:1-7). கூட்டு சங்கினைத் தன்னுடைய பெடையெனக் கருதி ஆண் அன்னம் தன்காலை அதன்மீது வைத்து மிதித்து நோக்கியது (ஐங்.106: 2, 3). மணிகள் போலும் நிறங்களையுடைய மலர் நிறைந்த பொய்கையில் தன் சேவலொடு மகிழ்ந்து அன்னப்பேடை விளையாடுகையில் அதனுடைய சேவலை, அகன்ற தாமரை இலை மறைத்தது; அதனாற் கலங்கிய பெடையன்னம் நீரில் தெரிந்த மதியின் நிழலைத் தனது சேவலென் றெண்ணித் தழுவ உவந்தோடியது; அங்குத் தன் சேவல் தன னைக் கூடுவதற்கு வருவதனைக் கண்டு நாணங் கொண்டு பூச்செறிவினுட் புகுந்து ஒளிக்கும் பழ னஞ் சார்ந்தது மருத நிலம் (கலி. 70:1-6). பேட்டி னைப் புணர்ந்த அன்னச் சேவலின தூய நிற

முடைய தூவியாகிய சூட்டுமயிர் கட்டிலில் பரப்பப்பட்டது (நெடு. 131-133). செல்வக்குடியினர் நீலப் பட்டினாற் செய்த மெல்லிய படுக்கையில் துணையொடு கூடிய அன்னத்தினுடைய தூவியால் செய்த அணையினைப் பொருந்திக் கிடப்பர் (கலி. 72: 1,2). அன்னமென் சேக்கையில் தலைவியொடு கூடித் தலைவன் இன்புற்றான் (கலி. 146:4). அன்னத்தின் மென்மையான தூவியாற் செய்யப்பெற்ற மெல்லிய படுக்கையில் தலைவி உறங்குவள் (கலி. 13:14-16). பாணடியன் நெடுஞ்செழிய னுடைய, புது மணல் பரப்பிய முற்றத்தில் நெடிய மயிரினை யுடைய கவரிமான் குறிய காலினை யுடைய அன்னத்தோடு தாவித் திரிந்தது (நெடு. 90-92). சாய்க் காட்டில செந்நெற் கதிர்களை யுடைய வயல்களில் அன்னப்பறவை உறங்கும் (நற். 73:7-9). குறிய காலினை யுடைய அன்னம் கடல் சூழ்ந்த மணற் பரப்பில் தங்கும் (குறு. 300:6). உப்பங்கழியினைத் துழவி மீன்பிடித் துண்ணும் குறிய காலையுடைய அன்னம், அடுப்பங்கொடிகள் பொருந்திய மணல் மேட்டிலிருந்து தன் சிறகுகளைக் கோதி உலர்த்தும் (அகம். 320:8, 9). எறியுளி பொருத்தப்பெற்ற மூங்கிற் கம்பினை நீர் வழியில் வீசி மீனைக் கைக்கொள்ளும் பரதவர் அதனைக் கொம்பினையுடைய சுறா மீன் மீது எறியக் கரையிடத்திருந்த குறுங்காலை யுடைய வெண்ணிற அன்னக் கூட்டம் பறந்தோடும் (குறு. 304:1-6). கடலருகே இரையினையுண்ட மெல்லிய சிறகையும் செங்கால்களையும் உடைய அன்னப்பறவைகள் இமய மலையின் உச்சியிலிருக்கும் வானர மகளிர் விளையாடுதற்குரிய இளைய அன்னப் பார்ப்புகளுக்கு அல்கிரை கொடுக்கத் தம் சிறகு வருந்தப் பறந்து செல்லும் (நற். 356: 1-7).

**அன்னி** – குறுநில மன்னன். அன்னி என்பவன் குறுக்கைப் போர்க்களத்தில் திதியன் என்பவனுடைய பழமையான புன்னைமரத்தின் அடியினை வெட்டிய காலத்தில் கூத்தர் இன்னிசை முழங்கச் செய்தனர் (அகம். 45:9-12). பல வேற்படையினை யுடைய எவ்வி நயமிக்க நன்மொழிகளால் அடக்கவும் அடங்கானாகி அனனி என்பான் திதியனுடைய புன்னை மரத்தினை விரும்பிப் போர் செய்து விளிந்தனன் (அகம். 126:13-17). 'அன்னி குறுக்கைப் போர்க்களத்தில் திதியனுடைய தொன்மையான புன்னை மரத்தினை வெட்டிய போது அப்புனனை துன்புற்றது போன்று, தன் மகளை அலைத்த கைகள் துன்பம் அடைவனவாகுக' என்று மகட்போக்கிய தாய் கூறினள் (அகம். 145: 10-14, 22). பெருமையுடைய அன்னியும் திதியனுமாகிய இருபெரு மன்னரும் போர்புரிந்த களத்தில் திதியனுடைய புன்னை மரம் அழிந்துபட்டமையால், அவ்விருமன்னர்பாலும் தோன்றிய பகை நீங்கியது (நற். 180:6-9).

**அன்னி மிஞிலி** – அன்னியின் மகள். தன் தந்தையாகிய அன்னியின் கணகளை அழித்த தவற்றிற்காகக் கோசரைத் திதியன் அழுந்தை என்னு மிடத்துப் போர் செய்து கொன்றமையால், அன்னி மிஞிலி தன் மாறுபாடு நீங்கிக் களிப்புற்றாள் (அகம். 196: 8-12). காட்டில பயிர்செய்யப் பெற்றிருந்த பயற்றில் அன்னியின் பசு புகுந்து மேய்நதது; அறியாது நிகழ்ந்த அச்சிறிய பிழையினைப் பொறாது, அருளின்றிக் கோசர் அன்னியின் கண்களைப் பிடுங்கிக் கொடுமை செய்தனர்; தன் தந்தைக்குச் செய்யப்பெற்ற கொடுமை கண்டு கலத்தில் உண்ணாமலும், தூய உடை உடுத்தா மலும் இருந்து வஞ்சினங் கூறிய அன்னி மிஞிலி, வீரமிக்க திதியனிடம் உரைத்து அக் கோசர்களை அழிக்குமாறு செய்து சினம் மாறி மகிழ்வுற்றாள் (அகம். 262:2-13).

**அன்னை** – 1. தாய். 'தன் மகனுடைய செல்வமும் வளமும் எல்லாம், பறவைகள் கூடுமாறு பழுத்த ஆலமரத்தின் புதுவருவாய் போன்றன என்று நாளும் புகழும் உனனுடைய தாய் உன் இறப்புச் செய்தி அறிநதால் எனனநிலை உறுவளோ! அவள் இரங்கத்தக்காள்' என்று போர்க்களத்தே இறந்து கிடககின்ற வீரக் கணவனைக் கணடு வினவி மனைவி அரற்றினாள் (புறம. 254:6-11). மனையிடத்தே பந்தாடினாலும் தோழிமாரொடு கழங்காடினாலும் 'அம்மா எனஉடல் வருந்திற்று' என்று கூறி, வியர்வரும்பிய நெற்றியுடன் அன்னையைத் தழுவிக் கொள்வாள் (அகம். 17:1-5). 'நாம் தலைவனோடு கடற்கரைச் சோலையில் தங்கி வருவது பற்றி ஊரில் அலர் கூறும் பெண்களின் சொற்கேட்டு அன்னை குதிரைபூட்டியதேர் ஒன்று மணற் பரப்பில் வந்து செல்லும் என்றெண்ணி வீட்டில் காவலை அமைத்துள்ளாள்' என்று தலைமகட்குக் கூறுகின்ற பாங்கில் தோழி பகற்குறிவந்த தலைமகற்கு அறிவித்தனள் (அகம். 20:10-16). (அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய நூல்களில் 'அன்னை பற்றி வருமிடங்களிற் பெரும்பாலன சிறைப்புறக் கூற்றாகவும் அறத்தொடு நிலைக் கூற்றாகவும் அமை துளளன). 'நீ தலைவனை எய்துமளவில் அமை ாய்; கிளி ஓட்டும் ஒலி யெழுப்பி ஆங்காங்கே சென்று வாராதிருப்பின், இவளுக்குக் கிளி யோப்பத் தெரியவில்லையென்று அன்னை வேறு ஒருவரைக் காவலுக்கு அனுப்பினால் நீ தலைவன் மார்பினை அடைய முடியாமற் போகும், என்று தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 28:8-14).

தலைவி பாலும் உண்ணாது துன்புற்று மேனி பசந்திருக்கும் காரணத்தைச் செவிலித்தாய் தோழியிடம் வினவினள். 'அன்னையே, அதனை யான் அறியேன். ஒருநாள் நாங்கள் வேங்கை மலர் பறித்தற்குப் புலி புலி என்று கூற, எங்கே அவ்விலங்கென வினவி ஒரு தலைவன் வந்து செல்ல, அவன் மறைந்த திசைநோக்கி இவன் ஓர் ஆடவனே என்று தலைவி கூறினள். ஆய்ந்துணர்கின்ற அறிவுடையோர்க்கு அதுகொண்டு அறியுங்கொள்கை ஒன்று உண்டு போலும்' என்று தோழி அறத்தொடு நின்றனள் (அகம். 48). செவிலித் தாய்க்குத் தோழி அறத்தொடு நிற்கக் கூடும் என்றறிந்த தலைவி, 'இனிய உயிர் போவதாக இருப்பினும் நீ தலைவியின், பசலை காம நோயின் விளைவு என்று அன்னையிடம் கூறாதே' என்று வேண்டினள் (அகம். 52:13-15). தலைவன் உடன்போக்கிற்கு உடன்பட்டமையால், நம் கருத்தினை உணர்ந்த அறிவுடன் தான் அறிந்தவற்றை வெளிக்கூறாது மறைத்துச் செயல்படும் அன்னையின் கடுஞ்சொல்லினின்றும் தப்புவோம் என்று தோழி தலைவியிடம் கூறினள் (அகம்.65: 1,2). 'அன்னையும் மிக்க துயிலில் அழுந்தியுள்ளாள்; ஏனையுயிர்களும் துயில்கின்றன; ஆகலின் காதலர் வருவராயின் அதற்குரிய பொழுது இதுவேயாம்' எனத தலைவி நெகிழந்திருந்தாள் (அகம். 68:9-12). பிரிந்து சென்ற தலைவர்கு இரங்குவது இயல்பு எனக் கருதாது, நிரையம்போலும் இழிந்த பெணகள் கூறுகின்ற இன்னாத சொற்கள் தன் மகளுக்குப் பொருந்துவன அல்லவென்று கருதிய தாய் தெய்வத்தைப் பரவி அமைந்திருக்கும் கொள்கை கொண்டிருப்பள் (அகம். 95:10-15). தலைவனாலாகிய வருத்தம் அவன் மார்பினை அடைவதால் நீங்குமென்பதனை அறியாது அன்னை, வளை நெகிழ்ந்தமை நோக்கிக் கட்டுவிச்சியைக் காரணம் வினவினள்; அவள் முருகனால் வந்தது என்று கூற, அதனை உண்மை எனக் கருதித் தாய், தன் இல்லத்தில் தெய்வம் பரவி மகள் பண்டை நிலை அடைய வெறியாடுதலை விரும்பினால் என்னாமோ என்று தோழி தலைமகளுக்குக் கூறினள் (அகம். 98:4-21). 'அன்னை அறியினும் அறிக' எனத் தொடங்கித் தோழி செவிலியிடத்து அறத்தொடு நின்றாள் (அகம. 110:1). 'கடைத்தெரு ஏனைய தெருக்களுடன் ஒருங்கே ஒலியடஙகி மடிந்தாலும் வல்லுரைக் கடுஞ்சொல் வழங்கும் அனனை துஞ்சமாட்டாள்; பிணித்தலைக் கொணட அருஞ்சிறை போன்ற அன்னை துஞ்சினும் துஞ்சாக்கண்ணராய்க் காவலர் கடுகுவர்' என்று தலைவி இரவுக்குறியின் இடையீடுகளைக் கூறினாள் (அகம். 122:3-6). இரவுக்குறியில் தலைவன் வரும் வழியின் கடுமை நினைநது தலைவி கண்ணீர்ப் பனித்ததை அன்னை இது தெய்வத்தாலாகியதோ என்று கருதி வணங்கி முருகனை மனையில் வரவழைத்து அவனுடைய கடம்பும் களிறும் பாடி மாலை சூடி ஆடச் செய்தது தகுமோ என்று தலைவி தோழியிடம் வினவினள் (அகம். 138:2-13). 'அலரும் மன்றின்கண் பரவியது; அன்னையும் துயிலாக் கண்ணளாய்ப் பெருமூச் செறிவாள்' எனத் தலைவி செயலற்று வருந்தினள் (அகம். 201:10-12). அம்பற் பெண்டிர் தலைவி ஒழுக்கம் பற்றிப் பல நாள் கூறியபோதும், தலைவி நாணுவள் என்று எண்ணி அன்னை அது பற்றிக் கூறாதிருந்தாள்; அன்னை உண்மையினையறிந்தால் தலைவனொடு கூடும் வாழ்க்கை இலலாதுபோகும் எனக் கருதிய தலைவி உடன்போக்கிற் சென்றனள்; அதனை அறிந்த தாய் அவ்வாறில்லாமை உண்மையாகும்படி, உடன் போயவர்களைச் சிற்றூரில் விருந்தேற்று உண்பித்துத் தங்குமிடத்திருக்குமாறு செய்யத் தான் அம்மனைக்குரிய பெண்ணாக வேண்டுமென விரும்பினள் (அகம். 203). தலைவன் பிரிந்தமையால் கவின் தொலைந்து வேறுபட்ட தலைவியைக்கணடு அன்னை நாளும் அருந்துயருற்றனள் (அகம்.209:1,2). 'புலி இயங்கும் மலைவழி கடத்தற்கு அரியது என்றெண்ணாது எளியதென்று தலைவன் கருதுவன்; தலைவனை முயங்காவிட்டால தலைவி அணி நெகிழ மெலிவள்; அதனால் அன்னை அறிவதாயினும் அலர் எழுவதாயினும் தலைவன் மலைச் சாரலிடத்துப் பகலில் வருவானாக' எனறு கூறித் தோழி வரைவு கடாவினள் (அகம். 218:10-22). தலைவியின் காமவேறுபாடு முருகனால் உண்டானதெனக் கருதிச் சிறுகுடியிடத்து முன்றிலில பல வகைப் பூக்களாகிய பலியொடு பொருந்தி அன்னை வேலனை வெறியாடலுக்கு அழைததனள (அகம். 232:6-14). தலைவியின வருத்தம் தலைவன் நல்லியல்பால் வந்தமை அறியாத அன்னை வெறியாடுங் களம் பொலிய வேலனை அழைத்துப் பல பிரப் பரிசியினைப் பலியாக வைத்து, ஆட்டின் உயிரைப் பலியிடு முன்னர் நாம் தலைவன் மார்பினைப் பன்முறை தழுவுவது தக்கது என்று தோழி தலைவியிடம் கூறினள் (அகம். 242:6-17,22). இரவுப் பொழுதில் தலைவியின் இல்லத்தருகில் வந்து நின்ற தலைவனைக் கண்டனளாய் அன்னை தோழியின் முகம் நோக்கி, 'நீ மிக்வும் நலலை' என்று நகைத்துச் சென்றாள் (அகம். 248:10-16). தலைவன் வரக் கூடுமென்று கருதி அன்னை மழைபொழியும் நள்ளிரவில், நீர்மிக்க பெரிய குளத்தினைக் காவல் புரிபவனைப் போலத் துயில் மறந்து காத்துநின்றனள் (அகம். 252:11-14). 'நாளும் பசலை பரவ என்னுடம்பும் விரைய இறப்பினை

எய்தி வருகின்றது; அன்னையும் வெறுத்த முகத்தி னளாகின்றாள்; அலரும் பெரிதாகின்றது; இனி யான் உயிர் தரித்திருக்க மாட்டேன் போலும்' எனத் தலைவி பலவற்றையும் நினைந்து அழுதாள் (அகம். 253:1-9). தலைவியினும் மடவள் அவளை மிகவும் நயந்த அன்னை ஆதலின் தலைவியினது உடன்போக்கினால் அவள் மிகவும் வருந்துவாள் என்பது தோழி கூற்று (அகம. 259:15,16). மலைவழி யில், வேலின ஒளி வழிகாட்ட, மணங் கமழத் தனியாக மனையிடத்தே வந்து புகுந்த தலைவனை முருகன் என்றெண்ணி அன்னை முகமன் கூறி நெடு வேளைப் பரவினள் (அகம். 272:3-15). தலைவியின் நோயினை வேறாகக கருதி அன்னையும் பொரு ளைச் சொரிந்து அலமரலுற்றாள் (அகம. 292:1,2). தலைவன் திரும்பி வந்ததும் அன்னையும் அறியு மாறு தலைவிபால் தோன்றி வருத்திய பசலை நோய் அகன்றது (அகம். 317:17-24). அன்னை தலை வியின் களவினைக் கருத்துட் கொண்டு நீங்காதவ ளாய் அவளைக் காத்திருந்தாள் (அகம். 325:4,5). 'தோழீ, நீ ஆயத்துடன் கூடி ஆடாமல் வருந்திய மனததையுடையையாய்த் தனிமை கொண்டு இத் தன்மையுற்ற வேறுபாட்டினை நோக்கி அன்னை அதன் காரணத்தை வினவினளாயின், தலைவன் செய்த இந்நோயினை யான் என்னென உரைப் பேன்' எனத் தோழி சிறைப்புறத் தலைவனை கேட்பத் தலைவியிடம் சொன்னாள் (அகம. 358:7-15). 'தலைவன் பிரிந்ததனாலான தனிமைத் துன்ப மும் மாறுபட்ட அன்னையின் பொருந்தாத நோக் கமும் துன்பம் மிக்க மாலைப்பொழுதும் ஆகிய யாவும் கூடி வருத்த நீ எங்ஙனம் உயிர் வாழ் கின்றாய்' எனத் தலைவியைத் தோழி வினவினாள் (அகம். 378:11-17). தலைவனது மார்பினையும் அழ கினையும் மிக நயந்து தலைவி வருந்தும் வருத் தத்தை யுணராளாய் வெறியென மயங்கி அன்னை வேலனைத் தந்தாள் (அகம். 388:15-19). 'தலைவன் வரைதற்கு வருவான் என்று கூறிய அன்னை அமிழ்தினை உணவாக உண்ணும் புகழ்மிக்க வானுலகம் எய்துவாளாக' என்று தோழி செவிலித் தாயை வாழ்த்தினள் (குறு. 83). தலைவன் தனக்கு அன்னையும் அத்தனும் போன்றவன் எனத் தலைவி புலந்து கூறுதல (குறு. 93:2,3). 'தலைவியின் தோளை மெலிவித்த நோய் முருகனால் வந்தது என்று வேலன கூறுவதனை அன்னையும் உண்மை யென உணருமாயின், வீட்டிலுள்ளோரின் நகைபடு செயலைக் காண நீ இங்கு வருவாயாக' என்று தோழி சிறைப்புறமாக உள்ள தலைவனிடம் கூறினள் (குறு. 111). கிளிகளைத் தினையிடத்துப் படாமல் கடியும் பொருட்டு அன்னை தலைவியை யும் தோழியையும் புனத்திற்குச் செல்க என்றாள் (குறு. 141:1,2). அன்னை 'புலிப்பல் கோத்த தாலியை அணிந்திருந்த புதல்வனைத் தழுவித் தலைவியை 'அன்னையே' என்று அழைத்தபொழுது தலைவன் மாரி யானையைப் போல வந்து நின்றனன் (குறு. 161). நினக்குத் தக்கன இவை என்று கூறிக் கிளி கடி கருவிகளாகிய தழல், தட்டை ஆகியவற்றையும் தழையையும் அன்னை தலைவிக்குக் கொடுத்து அவளுடைய நலத்தினை ஓம்பிக் காத்தனள் (குறு. 223:4-6). கடறகரையருகே நள்ளிரவில் தனிமையாக ஒரு தேர் வந்து சென்றது என்று அயலார் கூறக் கேட்ட அன்னை என்னைத் துனபுறுத்துகின்றனள்; அவ்வாறு துனபுறுத்தாத தாயரோடு இருக்கும் ஏனைய பெண்கள நற்பாலோர் என்பது தலை வியின் சிறைப்புறக் கூற்று (குறு. 246:3-8). ஊரில் அலர் தோன்றத் தெருவிலுள்ளார் ஆரவாரிக்கத் துன்புறுத்தும் அன்னை வீட்டில் தனித்திருக்கத் தலைவி தலைவனொடு உடன்போதலுக்குத் தோழி இசைந்தனள் (குறு. 262:1-5). ஒரு நாள் தலைவன தலைவியின் வீட்டிற்கு விருந்தினனாக வந்தமை கணடு அன்னை போர் முனையிலுள்ள ஊரினர் போல உறங்காமல் விழித்திருந்தனள்; அவள் பெண் கொலை புரிந்த நன்னனைப் போல நரகஞ்சேர்ந்து துனபுறுவாளாக என்று தோழி கூறினள் (குறு. 292:5-8). 'வளைகள் நெகிழவும் அயர்வு மெய்யின் கண் நிலைக்கவும் ஆன நோய்மிக்க என் வருத் தத்தை அன்னை அறிவாளாயின் யான் உயி ருடன் இருப்பேனோ' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 316:1-3). 'மரையாவைக் கொன்று புலி முழங்கும் வழியில் இரவு நேரத்தில் தலைவன் வருவதனால், நம் கள வொழுக்கத்தை மறைக்கும் காலம இஃதன்று எனக்கொண்டு வேற்றவர் வரைவு வரின் களவினை வெளிப்படுத்துவேன், அன்னையே! என்று தோழி தலைவியிடம் கூறினள் (குறு. 321:3-8). (தோழி தலைவியைஅன்னையென்று கூறி விளிப்பது முண்டு). 'பகலில் தலைவன் மார்பினைத் தெப்பமா கக் கொண்டு அருவியில் நீராடுவது இனியது; இர வில் பஞ்சாலாகிய வெள்ளிய திரியையுடைய விளக் கினைக் கொண்ட வீட்டில் அன்னை, பிடரியை அணைக்க, இமை பொருந்தாக் கண்ணொடு துயி லுவது இன்னாதது' என்று கூறிப் பகற்குறியையும் இரவுக்குறியையும் மறுத்துத் தோழி தலைவனிடம் வரைவு கடாவினள் (குறு. 353). 'தல்லவர் வாராமை யினால் இன்று நாம் அரும்படர் எவ்வம் அடைந்தா லும் வெறியாடற்குப் பின்னும் இந்நோய் மிகு மாதலின் இதனைப்போக்கும் மருந்தினை வெறி யாட் டெடுக்கும் வேலன் அறியானாதலை அன்னை காணும் பொருட்டாகவேனும் தலைவர் இரவுக்குறி

யில் வாராதொழிக' எனத் தலைவி விரும்பிக் கூறி னள் (குறு. 360:1-4). 'தோழீ, நம் தலைவருடைய மலையிலிருந்து வந்த ஆற்றினொடு அடித்து வரப் பட்ட காந்தளை இலைகுழைய நாம் தழுவியதையும் அதன் கிழங்கினை இல்லத்திற் கொணர்ந்து நட்ட தையும் விலக்காதவளாகிய அன்னைக்குக் கைம் மாறாகக் கருதுமிடத்து உயர்நிலை உலகமும் சிறிதேயாகும்' என்றாள் தலைவி (குறு. 361). தலை வனொடு கொண்ட தொடர்பு பற்றிய அலர் மொழியினை அன்னை அறிந்ததால் இங்குத் தங்கிக் களவொழுக்கத்தில் வாழ்வது அரிதாகும் என்று தலைவனிடம் கூறினால், அவன் தன் னூர்க்கு அழைத்துச் செல்வானோ என்று தோழி தலைவியிடம் வினவினள் (நற். 4:4-7). தலைவனை எதிர்பபட்ட இடத்தைக் கண்டு அழும் தலைவியை நோக்கி 'நீ ஏன் அழுகின்றனை' என அன்னை கேட்டாள் (நற. 17:3-6). அன்னை காக்கும் தொனனலம் சிதையக் காண்டொறும் தலைவி அழு தாள் (நற். 23:4,5). 'தோழீ, நீயும் நானும் கடற் கரைச் சோலையில விளையாடியதன்றி, மறைத்துச் செய்த செயல் வேறொன்றில்லை; அவ்வாறிருப் பினும் அதனை அறிநதவர் யாருமில்லை; அங்ஙன மிருப்பவும் நெயதல் மலர் பறித்துச் சூடுக என்று அன்னை அனுபபாமை என் கருதியோ' என்று கூறித் தோழி தலைவனுக்கு இற்செறிப்புணர்த் தினாள் (நற. 27:4-7,12). இனிய கூறுவது அன்னை யின் இயல்பு; அது தலைவிபால தலைவன இனிய கூறுதற்குவமை (நற். 28:3). தலைவன் பிரியத் தலைவி உடலில் ஏற்பட்ட வேறுபாடு கண்ட அன்னை அது தெயவத்தானாயது எனக் கருதி, அதனை நீக்க மறியினை அறுத்து முருகனை வழி பட்டும் நீங்காதிருந்தது; அதனைத் தலைவனிடம் நின் அருளாமையால் இநநோய் தோன்றியது என்று கூறினால் தவறுண்டாமோ என்று தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்குக் கூறினாள் (நற். 47:6-11). 'யாற்றில் வரும் புதிய நீர் தலைவி உற்ற நோய் தீர்ககும் மருந்தாகும். அதனைப் பருகி அதன்கண் நீராடினால அவள் மெய்ந் நடுக் கம் தீர்வாள்; ஆதலின் அங்குச் செல்க' என்று அன்னை அனுப்பியதனால், அவள் நம்முடைய கள வொழுக்கததை அறிந்தனளோ என்று தோழி சிறைபபுறங் கூறினாள் (நற். 53:1-3,6-11). தலைவி இரவில வேட்கை நலிய வெய்துயிர்த்து அம்புபட்ட மான்பிணை போல வருந்தியபோது அனனை, 'நீ இனனும் தூங்கவிலலையோ' என அவளைக் கேட் டாள் (நற். 61:3-5). அலர் கூறும் இவ்வூர் அற முடையதனறு; அவ்வலரைக் கேட்ட அறனில்லாத அன்னை தலைவியை இற்செறித்தமையால், தலைவ னொடு கொண்ட நட்புப் பசலையாகி அழிய வேண்டியதுதானோ என்று சிறைப்புறமாக உள்ள தலைவன் அறியத் தோழி கூறினள் (நற். 63:5-11). பொய்கையில் பூப்பறிதது வருந்திய ஆயர்குழாம் உறங்கும் பொருட்டு அனனையும் கொண்ட சினம் சிறிது தணிந்தாள் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 115:1-3). மின்னி இடி முழங்கும் இரவில தலைவன் வருவான் என்பது உண்மையா, அன்றா எனறு ஆராயும உள்ளத்தோடு, அயலார்க் குத்தெரியாதவாறு அனனை கொடுமை தோன்றும் முகத்தினளாக இருந்தனள் (நற். 122 5-9). நம் தலைவனுடைய நட்பு இப்போது நம்பாலில்லா திருந்தும, அறனில்லாத அனனை, நம்மொடு அவன புணர்ந்தனன போல வெளிப்படையாகக் கூறி அவன் இப்பொழுது எங்குள்ளான்' என்று வின வினள் எனறு தோழி சிறைப்புறமாகக் கூறினள் (நற். 145:4-7). தினைக் கதிர்களைக் கிளிகள் கவர்ந்து செல்கின்ற அளவு நீ எங்குச் சென்றிருந் தாய என்று அன்னை தலைவியை வினவ, 'நான தலைவனை அறியேன், அவனைக் காணவுமில்லை, மலர் பறித்துச் சுனையில் ஆடவுமிலலை' எனறு பொய் கூறாது உண்மை கூறக கேட்ட தாய் தலை இறைஞ்சி நினறனள் (நற. 147:3-12). தலைவியைப் பற்றி அம்பல் மகளிர கூறிய பழிசசொல் கேட்ட அன்னை சிறிய கம்பினை ஏந்திச் சுழலும்படி வீசி அலைகக அதனால் துன்புற்ற தோழி தலைவியின் உடன் போககிறகு உடனபட்டனள் (நற்.149:1-5,8,9). நெய் கலந்த பாலூற்றித் தலைவி வளர்த்த புன்னை அவளுக்குத் தங்கை முறையின தாகும் என்று அன்னை கூற, அதனால் அதன் அருகி விருந்து தலைவனொடு நகைத்து விளையாடி மகிழ்தற்குத் தலைவி வெட்கமுற்றனள் (நற். 172:1-6). தலைவி அடைந்துள்ள நோய் முருகனால் வந்தது என்றும் வெறியாட்டெடுத்தால் நீங்கும் என்றும் அன்னை எண்ணியுள்ளாள்; மலர் பறித்து மாலை கட்டியும் காந்தள் கண்ணி சூட்டியும் வழிபடும் நமக்கு அருளி, முருகன் தாயின் கனவில் தோன்றி, 'இநத நோய் தன்னால் வந்தது அன்று என்றும், தலைவ னால் வந்தது என்றும் கூறினால குறறமாமோ' என்று தோழி கேட்டாள் (நற். 173:4-10). மகள் துறைவனுடன் கொணட களவிற் புணர்ச்சியை அன்னை அறிந்திலள்; சேரிப்பெண்டிர் சிறுசொல் நம்பி மகளது பசலை மேனியை அவள் சுடுவான் போல நோக்கினாள் (நற். 175:5-9). 'பாவையன்ன நம்மைப் புறங்காக்கும் சிறந்த செல்வத்து அன்னை யும் துயின்றனள்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 182:3-4). 'நேற்றிரவு ஒருதேர் வந் தது எனச் சொல்லி ஊரில் அலர் எழ அதனை

ஏறட்டுக் கொண்ட அன்னை என் போல்வார் பலரும் இருப்ப அவருள் என்னையே குறிப்பாக நோக்கினாள்' எனத் தோழி தலைமகன் சிறைப்புறமாகக் கூறினாள் (நற். 191:6-8). 'ஏனல் முற்றி விளைந்ததால் கிளியோப்பத் தட்டை, கவணை கொண்டு செல்க' என மகளிடம் தந்தை கூற 'இனி நல்ல நாளை அறிவுறுத்துகின்ற வேங்கையும் மலர்க' என அன்னை கூறினாள் (நற். 206:1-7). தலைவனால் எய்திய நோய் மிகவும் பெரியது; வெப்பமிக்கது; நோய செய்த தலைவனுடைய மலையினின்றும வீசும் குளிர்காற்று உடம்பில் படுமாறு, மனை முற்றத்தில் கிடத்தினால் நோய் நீங்குவள் என்று அவ்விடத்திற்குப் போகுமாறு தன்னை அனுப்பி, அதனை நரகம போன்ற நெஞ்சுடைய அன்னைக்கு உரைக்க வேண்டுமென்று தலைவி தோழியிடம கூறினாள் (நற். 236). தன் உடம்பின் அழகு கெடுமாறு செய்த பசலை நோயைக் கண்டு அதனைத் தலைவனுக்குக் கூறுவதோ, அன்றித் துன்ப மிகுதியை அறியாத அன்னைக்கு இந்த நோய் தணியும் வழி இதுவென்று கூறுவதோ செய்யாதிருக்கும் தோழியைக் கொடியவள் என்று தலைவி குறிப்பிட்டாள (நற். 244:5-11). தலைவியின் உடலெங்கும் பரந்து மயஙகிய துயரத்தை அன்னை நோக்கித் தானும் வருத்தமடைநது நிகழ்ந்தது அறியாது வெறியாட் டயர்ந்த அன்னைக்கு வேலன் முருகணங்கு என உரைக்கும் (நற். 273:1-5). மலைநாடனாகிய தலைவன் பிரிவால் தலைவியின் நுதலில் உண்டான பசலையை நோக்கி அன்னை செம்முது பெண்டிருடன் நெல்லைப் பரப்பிக் கட்டு வைத்துக் குறி கேட்டாள் (நற். 288:4-7). தலைவன் மெல்ல வந்து தலைவியின் நல்லகம் பெற்றமையால் ஆயசில குறிகளை நோக்கிய அன்னை, மையலுறறுப் பின் ஐயமின்றிக் கடுங்குரலிற் கூவினாள் (நற். 297:8-11). தலைவனுடன் தலைவிக்குள்ள களவொழுக்கத்தை அன்னை அறிவாளாயின், தலைவியின் குவளை மலரொத்த கண்கள் நீர் கலந்து என்னாகுமோ எனத் தோழி கூறினாள் (நற். 317:5-10). பெரிய அழகிய மனையிடத்து வந்த அன்னை, தோழியை அன்பொடு தழுவித் தலைமகளின் வேறுபாடுபற்றி வினவ, அவள் அது சுனையாடியதால் தோன்றியதென்றாள். நாளையும் சுனையாடினால் என்னவாகுமோ என்று அனனை கூறியமையால் அவள் தலைவியின் களவொழுக்கத்தை உணர்ந்தனளோ என்று தோழி தலைவன் கேட்ப உரைத்தனள் (நற். 339:4-12). தலைமகள் இளமைப் பருவம் நீங்கப் பெற்றாள் என்று அவளை வளமிக்க மனையகத்தே அன்னை காவல் செய்தா ளாயினும், அவள் பசலை நோயுற்றதனை உணராதவளாய்த் துன்பமுறும் நெஞ்சொடு முருகவேளை விரும்பி வெறியாட்டயர்ந்து வருந்துவள் (நற். 351:1-5). 'அரிய காவல் புரியும் அன்னையின் காப்பைக் கடந்து மன்றம் சென்று தலைவன் ஊரை வினவி யறிந்து அவனை 'நீ சான்றோய் அல்லை' என்று கூறி வருதற்குச் செல்வோமா' எனத் தலைமகளைத் தோழி வினவினாள் (நற். 365). அன்னை தந்த அலங்கல் வான் கோடு (கோல்) உலைந்ததற்குத் தலைவி வருந்துகின்றாள் என ஊர் பிறழக் கருதியது (நற். 372:8-10). தந்தை இளையரொடு வேட்டைக்குச் சென்றமையால், அன்னை தோழியைத் தினைப் புனக் காவலுக்கு அனுப்பத் தோழியும் தலைவியும் தினைப் புனஞ் சேர்ந்து காவல் மேற்கொண்டனர் (நற்.389:3-7). தலைவற்குப் பெண்டாயினாள் என்று தலைவியைப் பற்றி ஊரார் அலர் கூறக்கேட்ட அன்னை, தலைவியை நோக்கி அதுபற்றி வினவும் பாங்கில், 'அன்னை' என்று விளிக்கத் தலைவி மெதுவாக அது எம்மைத்தான் என்று கூறினள் (ஐங். 113). 'அன்னையின் அரிய காவலிடத்தேயும் தலைவன் மறைந்து வந்து நின்றனன்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 115:3, 4). தலைவியின நுதல் ஒளி மழுங்கி வேறுபட்டமை கொண்டு அதற்கொரு காரணம் உளதாதல் வேண்டுமென அன்னை ஐயுறுவள் (ஐங்.194:3, 4). 'நின்னொடு தலைவி கொணட களவொழுக்கத்தை அன்னையும் அறிந்தனள்; அலரும் பரந்தது; வாடையும் அலைக்கின்றது' எனத் தலைவனிடம் கூறி வரைவு கடாவினாள் தோழி (ஐங். 236:1-3). தலைவியது நோயினை நோக்கி அன்னை வெறியாட்டயர்தற்கு வேலனைத் தந்தாள் (ஐங். 241:1,2). மலைநாடன் செய்த தலைவியின் நோயை அவனால் உண்டானதெனு அறியாமையால் வெறியென மயங்கி அன்னையும் அருந்துயர் உழந்தனள் (ஐங். 242). அன்னை தந்தது வெறியாடல் (ஐங். 247: 1). பெய்ம்மணல் வரைப்பிலே கழங்குகளை இட்டு எண்ணி வேலன் தலைவியின் நோய்க்குக் காரணம் முருகனேயென்று அன்னைக்குக் கூறினன் (ஐங். 249:1, 2). 'நாம் நோவத்தக்க தொழில்களைச் செய்யும் சிறுபட்டி முன்னொரு நாளில் அன்னையும் யானும் இருந்த அளவில் இல்லிலே வந்து, 'உண்ணுநீர் விரும்பினேன்' என்று கேட்க, அன்னை 'உண்ணுநீர் ஊட்டி வா' என்றாளாக யானும் அவனையறியாதே சென்றேன், அவ்வாறு சென்ற என்னை அவன் முன்கை பற்றி நலிய யான் அலமந்து, 'அன்னாய், இவன் செய்ததைப் பார்' என்று கூற, அன்னை அலறி ஓடி வர, யான் அவன் செயலை மறைத்து, 'உண்ணுநீர் விக்கினான்' என்று பொய் கூறியதை உணமையாய்க் கொண்டு

அன்னையும் அவன் முதுகைப் பல்கால் தடவினாள்' என்று தலைவி தலைவனுடன் நேர்ந்த நகைக் கூட்டத்தைத் தோழியிடம் உரைத்தாள் (கலி. 51:4-14). தன்னிடம் அறத்தொடு நின்ற தலைவியை நோக்கித்தோழி 'நின் தலைவன் ஆயர் மகனாயின், நீயும் ஆயமகளாயின, அவன் நின்னை விரும்பு வனாயின், நீயும் அவனை விரும்புவையாயின், அது தாய் மிகவும் நோவத்தக்கதொரு செயலில்லை' என்று கூற அது கேட்ட தலைவி, 'அன்னையது நெஞ்சு நின்னெஞ்சாகப் பெறின் அவள் நோவத் தக்கதோ இல்லை' என்றாள் (கலி. 107:20-23). ஆயர் மகனாகிய தலைவன சூடிய மாலையினும் கண்ணியிலும் இருந்த மலரினைத் தலைவி தன் கூந்தலிலே முடித்திருந்தாள்; அன்னையும் அத்தனும் வீட்டிலிருந்தபோது, செவிலி தலைவிக்கு வெண் ணெய் தேய்க்கக் கூந்தலை விரித்தபோது அம்மலர், நற்றாய் நாணுமாறு செவிலியின் முன்னர் விழுந் தது (கலி. 115:4-9). தலைவன் பிரிந்தமையால் தோழியர் கூட்டமும் அன்னையும் அறியுமாறு தலைவியினுடைய பூவினது அழகு பொருந்திய கண்கள் நலன் இழநதன (கலி. 122:1-3).

2. தாய் (அண்மைவிளி). அன்னாய் வாழிவேண்டு அனனை (குறி. 1; அகம். 68:1; ஐங். 201-210:1;366:1). கேட்டியோ வாழிவேண்டு அன்னை (அகம். 68:4). அலையல வாழிவேண்டு அன்னை (அகம். 158:7; 190:6). திறப்பல வாழி வேண்டு அன்னை (குறு. 321: 8). அன்னை வாழி வேண்டு அன்னை (ஐங். 101-110: 1). அன்னை (நற். 50:1; ஐங். 367:5; பரி. 20:72).

**அனந்தர்** - 1. மயக்கம். முன் வாயிலிடத்தே தானுண்ட கள்ளை வாழத்தி அக் கள்ளாலுண்டாகிய அனந் தரொடு-மயக்கத்தொடு-உறங்கும் தலைவன் நேற் றுத் தன்பால் வந்த விருந்தினரைத் தனது பழமை யான வாட்படையை அடகுவைத்து ஓம்பினன் (புறம். 316:1-6). வேனிற் காலத்து விடியலில் உழவர் வைக்கோலைப் பிரித்துக் கடாவிட்டுத் தூற்றப் பொலியினின்றும் நெலலினைத் தூற்றியமையால் ஏற்பட்ட தொழிற் செருக்கால் வநத அனந்தர் நீங்கு தற்காக மாங்காயொடு புளிப்பதன் அமைத்துச் செய்த சாரத்தினைப் பனங்குடையிலிட்டுக் குடித் துக் கொள்ளிட்டுச் சமைத்த கஞ்சியினை உண்ட பின்னர் மருதமர நிழலில் எருதொடு தங்குவர் (அகம். 37:2-17).

2. கள்ளுண்ட செருக்கினால் ஏற்பட்ட மெய்ந்நடுக்கம். சோழன் கரிகாற் பெருவளத்தானால் ஓம்பப் பெற்ற பொருநன் இரவு அரண்மனையில் தங்கி, வழிவந்த வருத்தம் முற்றும் நீங்கப் பெற்று அனந்தர்-கள்ளின் செருககாலுண்டாகிய மெய்ந் நடுக்கம்-அல்லது வேறு மனக்கவற்சியின்றி உறங்கி விழித்தெழுந்தனன் (பொரு. 88-95).

**அனந்தல்** - 1. செருக்கு. நன்னன் மலைநாட்டு மக்கள் தம் இல்லத்திற்கு வந்தோர்க்கு விடியற்காலத்தே உடும்பு, கடமான், எய்ப்பன்றி ஆகியவற்றின் கொழுவிய தசையோடு மூங்கிற்குழாயில உள்ள கள் தெளிவையும் பின்னர் நெல்லாற் செய்த கள் ளையும் உண்ணக் கொடுப்பர். அக்கள்ளுண்ட அனந்தல் நீங்கப் பலாவிதை மாவையும் புளியை யும் அளவாக மோருலையில் கலநது மூங்கிலரிசி யிட்டுச் சமைத்த சோற்றுணவை வழங்குவர் (மலை. 170-185).

2. மந்தமான ஓசை. களத்தில போர் செய்திறந்த வீரர்களின் புண்ணினைக் குடைந்த இரத்தம் பொருந்திய கையால் தலைமுடியைக கோதிய பேய்ப் பெண்டிர், அனந்தர் - மந்தமான ஓசை- உடைய பறையின் தாளத்திற் கேற்ப ஆடினர். (புறம. 62:2-5).

**அனம்** - அன்னப்பறவை. தலைவியின் அழகு நலம் நடையால அனம் - அன்னத்தையும்-சாயலால மயி லினையும், மடப்பத்தால புறாவினையும், போன்றி ருந்தது (கலி. 56:15,16). அனனம் காண்க.

**அனலன்** - அங்கி (தீக்கடவுள்). முருகன் குழந்தைப் பருவத்தில படைக்கலங்கள் இன்றியே விளையாட் டாகச் செய்த போரில தோறற இந்திரன் இவனே தேவசேனைக்குத் தலைவனாம எனக் கருதி மயிலி னைத் தந்தான. இயமன மறியையும் அனலன கோழியையும் தத்தம உடம்பினின்றும் வாங்கிப படையாகத் தந்தனர். (பரி. 5.55-62).

**அனிச்சம்** - ஒருவகை மலர். மலைச்சாரலில் தினைப் புனங்காத்த தலைவியும் தோழியும் சுனை நீராடிப் பின் பலவகை மலர்களைப் பறிக்கையில் அனிசச மலரையும் பறித்தனர் (குறி. 62). தலைவன நறவம பூவொடு அல்லி, நீலம, அனிச்சம், முல்லை ஆகியபூக களைக் கொணட மாலையையும் நறுமலராற செயத கணணியையும் அணிந்திருநதனன (கலி. 91:1-3).

## ஆ

**ஆ** - பசு. ஆவினை - பசுவினை - போரில் கொல்லுதல் கூடாது என்பது போர் அறம் (புறம. 9:1-6). உண் ணும் நீர்நிலை, ஆவும் மாவும் சென்றுணணக் கலங்கிச் சேற்றொடு கூடிய சிறுமையுடையதாயி னும் அஃதுள்ள இடத்திற்குச் செல்லும் வழி பல வாகும் (புறம். 204.7, 8). பகைவரிடமிருந்து ஆக்க ளைக் கவர்ந்து வருதலான் மேனியில தூசி படிவ துண்டு (புறம். 258:10). பல ஆவின கூட்டத்தை வில வீரர் கைப்பற்றினர் (புறம். 261:11). பல ஆநிரையை

மீட்ட போது இளையவீரர் நீங்கவும் தலைவன் நீங்காதிருந்தான் (புறம். 263:5, 6). புலியிடத்தகப் பட்ட காட்டுப் பசுவின் கன்றுக்கு முதிய ஆ பால் கொடுக்கும் (புறம். 323:1, 2). வியன்புலம் சென்ற பல ஆக்களும் ஏறுகளும் மரநிழலில் தங்க, இடையர் முல்லைப்பூப் பறிப்பர் (புறம். 339:1-3). ஆக்குரல் காண்பின் அந்தணாளர் (புறம். 362:8). துணங்கைக் கூத்து ஆடிய விடத்துக் கிடந்த ஆம்பற் பூக்களை வளைந்த தலையையுடைய முதிய ஆக்கள் உண்டன (பதி. 13:5, 6). இடையர் புல்லுடை வியன்புலத்தே பல ஆக்களைக் கொண்டு சென்று மேய்த்தனர் (பதி. 21:20, 21). கொங்கர் ஆக்களை மிகுதியாக உடையவர் (பதி. 22:15). உழவர் புல்லுடை வியன்புலத்தே பல ஆக்களைப் பரப்பினர் (பதி. 62:13). மேட்டு நிலத்தில் கொங்கரின் ஆக்கள் பரந்து நிற்றல் போலப் பெருஞ்சேரலிரும்பொறையின் சேனையில் யானைகள் மிகுந்து காணப்பெறும் (பதி. 77: 10-12). பெருஞ்சேரலிரும்பொறை ஆ பரந்தன்ன யானை யுடையவன் (பதி. 78:14). கரிகால் வளவன் தாள் நிழலை அணுகித் தொழுது நின்றால் கன்றினை ஈன்ற ஆப்போல் விருப்பத்தொடு நோக்கிப் போற்றிப் பரிசில் அளிப்பான் (பொரு. 148-156). மறக்குடியின்கண் தோன்றிய வீரன் சுற்றத்தோடு பகைப்புலம் புககு விடியற் காலத்தே ஆக்களைக் கவர்ந்து வந்து கள்ளுக்கு விலையாகக் கொடுப்பான் (பெரு. 136-141). பெருமையுடைய ஆக்கள் ஈன்ற கன்றுகள் தாம்பிலுள்ள தாமணியில் கட்டப் பெற்றன (பெரு. 243, 244). செந்நிற ஆவின் மோரிலிருந்து வெண்ணெய் எடுக்கப் பெற்றது (பெரு. 306). நெடுஞ்செழியன் பகைப் புலத்தை அழித்ததால் ஆ தங்கியவிடத்து (புலி முதலிய கொடிய) விலங்குகள் தங்கின (மது. 157). வேற்றுப்புலத்திருந்து வந்த ஆவைக் கண்ட காளையைப் போலத் தலைவியைக் கண்டு தலைவன மிகுந்த காமங் கொண்டான் (குறி. 135, 136). பாலை வழியிலுள்ள கள்வர் ஆக்களைத் தொழுவினின்றுங் கொண்டு செல்ல, அவர் செலலுமிட மெல்லாம் சென்று கரந்தையார் அவற்றை மீட்கப் போர் புரிவர் (அகம். 7:14, 15). மழவர் போர் முனையில் கவர்ந்து சென்ற ஆக்களை மீட்டு வெட்சியாரைக் கொன்று குவித்தனர் (அகம். 35:4-6). புலி ஆவைப் பற்றும் இயல்பினது (அகம். 52:6). அண்மையில் கன்றையீன்ற ஆ தெருவில் பாணன் மீது பாயக் கலங்கிக் கையிலிருந்த யாழினைக் கீழே போட்டுவிட்டு அவன் தலைவி வீட்டில் புகுந்து கொண்டான்(அகம். 56:10-12). காளை இளைய ஆவைத் தழுவிக் கொண்டு ஊர் திரும்பும் போது கனறினை அழைக்குங் குரலொடு தொழுவத்தே புகும் ஆக்கள் கழுத்தில் பூண்டுள்ள மணி இயம்பும் ஒலியை மாலையில் தலைவி கேட்குந் தோறும் கலங்குவாள் (அகம். 64:11-17). பாறைகளை வெட்டியுண்டாக்கிய கிணற்றிலுள்ள உவர் நீரைப் பருகக் கொங்கரின் மணி கட்டியுள்ள ஆக்கள் வன்னிலம் துணிபட நிமிர்ந்து நடந்து செல்லும் போது செந்நிலத்தில் எழுகின்ற புழுதி விசும்பில் படர்ந்தது (அகம். 79:4-8). சிற்றூரில் ஆ நிறைந்திருக்கும் (அகம். 103:7). பகைவர் காத்தோம்பும் அரணிற்குச் சென்று இமிலுடைய காளைகளுடன் கூடிய ஆக்களைப் பாணன் என்பான் கவர்ந்து சென்றான் (அகம். 113:12-17). மழவர் ஆவின் ஊனை உண்டனர் (அகம். 129:12). வெட்சியாராகிய மழவர் விடியற் காலையில் ஆக்களைக் கவர்ந்து சென்ற பாலை நிலத்தில் நடைமெலிந்துழந்த கன்றின் துயரைத் துடைத்த கரந்தையார் பொருது வீழ்ந்தனர் (அகம். 131:6-10). வயலிலுள்ள நெற்கதிரை முதிய ஆ தின்பதற்கஞ்சிக் காவல் புரிவோர் அதற்குக் கரும்பை அருத்திப் பாகற் கொடியையும் பகன்றைக் கொடியையும் அறுத்து அவற்றைக் கொண்டு அதனைக் காஞ்சிமரத்திற் கட்டினர் (அகம். 156:3-6). ஆக்களை மீட்டு ஓட்டி வரும் கோவலர் புல்லாங்குழல் இசைப்பர் (அகம். 214:12). மறவர் இரவில் மாற்றாரின் ஊரினைப் போரில் வென்று ஆ நிரைகளைக் கவர்கின்ற ஆரவாரம் பாலை நிலத்து வழியில் மாறி மாறியொலிக்கும் (அகம். 239:3-6). மழவர் இளைய ஆவைக் கொன்று அதன் ஊனை உண்பர் (அகம். 249:12, 13). வடக்கிலுள்ள பகைமுனை யிடத்து நள்ளிரவிற் சென்று வடுகர் பெருமகனாகிய எருமை என்பான் ஆக்களைக் கவர்ந்தான் (அகம். 253:10-19). பயற்றங் கொல்லையில் ஆ மேய்ந்ததற்காக முதிய கோசர் அருளாது அன்னிமிஞிலி யுடைய தந்தையின் கண்ணைப் பிடுங்கித் துன்புறுத்தினர் (அகம். 262:4-6). ஆநிரையைக் கைக்கொண்ட மழவர் தெய்வம் சேர்ந்த வேப்ப மரத்தடியில் ஆவினை வெட்டிக் குருதி தூவி அதன் ஊனினைப் புழுக்கி உண்டனர் (அகம். 309:2–6) பகைவரின ஆக்களைக் கவர்ந்துகொள்ளும் மூதூர்க் கள்வர்கட்கு முதல்வன் தென்னன் (அகம். 342:6-10). சிறப்பும் சீரும் இல்லாத சிற்றூரில் வறுமையுற்ற பெணணின் புல் வேய்ந்த சிறு குடிசையிலும் ஒற்றைத் தூணில் ஓர் ஆ கட்டப் பெற்றிருந்தது (அகம். 369:22-24). வில்லையுடைய வீரர் பகைவரிடமிருந்து ஆநிரைகளைக் கவரும் போரில் பெருந்துடியினை முழக்குதல் வழக்கம் (அகம். 372:10-12). மேய்வதற்குப் பிரிந்து சென்ற ஆக்கள் மாலைக் காலத்து மீண்டு வருதலை அவற்றின் கன்றுகள் எதிர் நோக்கித் துன்புற்றிருக்கும் (குறு. 64:1-4). தாளிக்

கொடியைப் பனி வீழ்கின்ற விடியற்காலத்தில் ஆ மேயும் (குறு. 104:3,4). மேட்டுநிலத்து வளர்ந்த முற்றாத இளம்புல்லை முதிய ஆ கறித்துத் தின்ன இயலாமல் நாவினால் தடவி இன்புறும் (குறு. 204:3,4). நள்ளியினது காட்டிலுள்ள இடையரின் ஆக்கள் நல்கும் நெய் சிறப்பினது (குறு. 210:1,2). தொண்டைமான்களுக்குரியசுர புன்னை நெருங்கிய மலைப்பக்கத்துள்ள பாலையில ஒற்றைப் பசுவை நிழலால் தம்பால் அழைக்கும் ஓமை மரங்கள் உள்ளன (குறு. 260:6-8). பகைப் புலத்து ஊர் முனையிலுள்ள ஆ நிரைகளைத் தேர்வண்மலையன் விற்போர் செய்து வென்று செலுத்திக்கொண்டு வந்தான் (நற். 100:7-9). வாடைக்காலத்து இராப் பொழுதில் சேறு மிக்க தொழுவத்தினின்றும் மாற்றிக் கட்டாமல், அவ்விடத்திலேயே படுக்கவும் விடாமல், நின்றுகொண்டே இருக்குமாறுஉச்சியிலே தூக்கிக் கட்டப்பெற்ற குறிய ஆவின் வருந்தும் நிலை, பிரிந்து வருந்தும் தலைவிநிலைக்கு உவமை (நற். 109:6-9). மனையகத்து முளைத்த வயலைக் கொடியைக் கன்றை யீன்ற ஆ தின்றதனால் பந்தை எறிந்துவிட்டு ஆடிய பாவையையும் நீக்கி வயிற்றில் அடித்துக் கொண்டு தலைவி தேனொடு பாலுண் ணாது விம்மியழுதாள் (நற்.179:1-3). மன்றப் பலவில் கட்டப்பெற்ற செந்நிற ஆவின் கன்று அதன் வேரில் பழுத்த பலாப்பழத்தைத் தின்று பக்கத்திலுள்ள நீரைக் குடித்தது (நற். 213:2-5). மூங்கில் நிறைந்த மலையில் கோவலர் கட்டிய ஆக்கள் அணிந்துள்ள மணி சிறுநல்லூரில் ஒலிக்கும் (நற. 264:7-9). வயலில் மள்ளர் அறுத்துப்போட்ட அரிச்சூட்டோடு வந்த ஆம்பலின் புதுபபூவைக் கன்றுடைய ஆ தினறு எஞ் சிய மிச்சிலை உழுது ஓய்ந்த பகடு தின்றது (ந [illegible]90: 1-3). மலரின் தாதுக்கள் உதிர்நத [illegible] சன்ற ஆநிரை முதுகில ஆலமரத்தின் வி[illegible]னடியது (நற். 343:3,4). மலையில் மேய்ந்த செந்நிற ஆ காந்தளைத் தீண்ட அதன் தாதுபட்டு நிறம் மாறி யமையின் அதனைக் கண்ட அதன் கன்று மயங்கி யது (நற். 359:1-3). ஆக்களின கழுத்தில் கட்டியிருக் கும் மணியின் இனிய ஓசை ஊரிலே ஒலிக்க ஆநிரை களைத் தெருவிலே ஓட்டிவரும் ஆயர் மாலைப் போதில் கொன்றையந் தீங்குழலினை இசைப்பர் (நற். 364:7-10). கடலாடுமகளிர் அணிந்து கழித்த மலர்களை உண்ட ஆ மாலைக் காலத்து மீண்டு தன் உறைவிடம் புகும் (நற். 395:6-8). கருங்கோட்டி னையுடைய எருமைப் புனிற்று ஆ தன் கன்றுக்குச் சுரக்கும் முலை தந்து பாலுட்டும் (ஐங். 92:1,2). கன்று கட்டியிருக்குமிடத்தே மிகுந்த விருப்பொடு ஆ செல்லுதல் இயல்பு (கலி. 81:36,37). பல ஆக் களையும் தெவிட்டாது கூடும் காளைபோல் நாடோறும் தலைவன் பலரைக் காமுற்றுச் செல் வான் (கலி. 108:48,49). விடிந்தும் வீட்டை விட்டுப் போகாமல் தொழுவினுட்பட்ட கன்றினைச் சுற்றி வரும் முதல் கன்றினை ஈன்ற ஆ நாளும் தலைவ னைக் கண்டு வருந்தும் தலைவியின் நெஞ்சுக்கு உவமை (கலி. 110:12-15). ஈன்ற ஆ தன் கனறைச் சேர்ந்தவரிடத்துச் சினத்துடன் பாயும் இயலபு, தலைவியிடம் களவில் வந்துற்ற தலைவனைத தாய் சீறுதற்குவமை (கலி. 116:8,9).

ஆஅம் – ஆச்சாமரம். 'ஆஅம் - ஆச்சாமரம் - தளிர்க்கும் காட்டிடைச் சென்ற தலைவர் வரின் யாம் மகிழ வேம்' எனத் தலைவி கூறினாள் (கலி. 143:29,30).

ஆஅய் – வள்ளல். குறுநில மன்னனுமாவன். ஆஅய் அண்டிரன், ஆய் எனவும் வழஙகப் பெறுவான். ஆஅய் பாணருககுக் களிறுகளை யெலலாம் நலகிய மையின் அவை கட்டியிருநத இடம பொலிவழிந்து நிற்ப, அங்கு மயில்களை கூட்டமாகத தஙகின. அவனது அரண்மனை கொடுத்தற்கரிய அணிகலன் மட்டும் அணிந்திருநத மகளிரொடு பொலிவற்றிருந் தது (புறம். 127:2-6). ஆஅய்ககுரிய பொதியில் மலை யை ஆடுமகள் நெருங்கலாமே யன்றி மனனர் நெருஙக இயலாது (புறம. 128:5-7). ஆஅய மிகுதியாக யானைக் கொடை செய்தமை கண்டு 'நின நாட்டில இளம்பிடி ஒரு சூலில பததுக் கன்று ஈனுமோ' என முடமோசியார் வியந்து வினவினார். பாடி வரு பவர்க்கு ஆஅய் அளிதத யானைகளை எண்ணின கொங்கர் அவனுக்குப் புறங்காட்டி ஓடியபோது தம்மிடத்தினின்றும் பெயர்த்திட்ட வேலினும் பல வாம் (புறம். 130:1-7). இம்மைச் செய்தது மறுமைக் கும் பயன்படும் எனறு பொருளைக் கொடுத்து அறத்தைப் பெறும் அறவிலை வணிகன் அலலன் ஆஅய; சான்றோர் சென்ற நெறி என்றுணர்ந்தே கொடை செய்தான் (புறம். 134). ஆஅய் பரிசிலரைக் கண்டால் கன்றொடு யானையைப் பரிசிலாகத் தரும் மலைநாடன் (புறம். 135:11-13). பகைவரின் மிகுந்த வலிமையை வெனற ஆற்றலும் புகழும் உடையவன (புறம். 135:20-22). தேனடை தொங்கும் நீங்காத வரு வாயினை யுடைய மலை சேர்ந்த படப்பையினைக் கொண்ட நல்ல நாட்டுக்கு உரியவன்; ஈகையுடைய வன்; கழல் தொடியணிந்தவன்; ஆஅயைப் 'புலவர் புக்கில் ஆகி நிலவரை நிலீஇயர்' எனறு முடமோசி யார் வாழ்த்துவர் (புறம். 375:9-16). பகைவரின் அரண்கள் பல அழித்து நன்கலந் தரும் வீரர் தலை வன்; சுடர்மணிப் பெரும்பூண் அணிந்தவன் (அகம். 69:16-18). வல்லவராயினும் அல்லவராயினும் வந்தவர்க்கு உண்கலம் நிறையும்படி சோறு வழங்கு வான்; யானையுடையவன்; ஆஅயின் கானத்தி

லுள்ள தலையாற்றில் இருக்கும் அமையின் (மூங்கில் வகை) கணுக்களின் இடைபபகுதி தலைவி தோளுக் குவமை (அகம். 152:19-21). தெற்கிலுள்ள ஆஅய் நாட்டு அணங்குடை மலையில் கவிரம் என்னும் பெயருடைய பக்கத்து மலையிடத்துள்ள மலர்கள் நிறைந்த சுனையில சூரரமகள் உறைவாள் (அகம். 198:15-17). மேகம் தவழும ஆஅயினது பொதியில் மலையிலுள்ள வேங்கை மலர், காந்தள் மலர் ஆகிய இவற்றின் மணம் கமழ்பவள் தலைவி (குறு. 84:3-5). ஆஅய் வள்ளலின பெருமகிழ்சசி செய்யும நாளவை யில் இரவலர் பரிசிலாகப் பெற்ற அணி செய்யப் பட்ட தேரின ஒலி புன்னையில் தங்கிய நாரை ஒலிக்குவமை (நற். 167:1-4). அண்டிரன, ஆஅய் அண்டிரன், ஆய், ஆய்அண்டிரன் காண்க.

**ஆஅய் அண்டிரன்-வள்ளல்.** குறுநில மன்னனுமாவான். குறவர் தேறல் பருகி வேங்கை முற்றத்தின் குரவை யாடுதற்கு இடனாயதும தீஞ்சுளைப் பலவினைக் கொணடதுமான மலைக்கு உரியவன்; அடுபோர் அண்ணல்; இரவலர்க்கு ஈந்த யானைத் தொகைக்கு, வானம் ஓரிடத்தும் கருமையினறி முழுவதும் மீனா கப் பூத்தால் அம்மீன் தொகை ஒப்பாகலாம் (புறம். 129). குதிரை, யானை, தேர், நாடு, ஊர் ஆகிய வற்றைப் பாடி வருபவர்க்கு அருகாது கொடுத் தவன்; அவன் இறந்ததால் புரவலரைக் காணாது புலவர் வாடிய பசியராய்ப் பிறர் நாடு போந தனர் (புறம். 240:1-3;11-14). கிணைமுழக்கி அவன் மலையினைப் பாடுவோர்க்கு முள்ளம பன்றியின இறைச்சி, சந்தனம், யானையின் தந்தம் ஆகிய மூனறையும் புலித்தோலில் குவித்து வழங்குவான். முடமோசியார் ஞாயிற்றை நோக்கி, 'நீ ஆஅய அண்டிரன் போல வண்மையும் உடையையோ, விண்ணில் ஏன் வீணே விளங்குகின்றாய்' என்று வினவுவதன் வாயிலாக அவனது பெருவண்மை யைச் சிறப்பிப்பர் (புறம். 374:11-15). அண்டிரன், ஆஅய், ஆய், ஆய் அண்டிரன் காண்க.

**ஆஅய் எயினன்:** குறுநிலமன்னன். யாம இரவில் கடைவாயிலில் நினறு தன்குன்றம் பாடும் அகவு நர்க்கு யானைகளை அளித்து மகிழ்பவன். வெளி யன வேண்மான ஆஅய எயினன் என்று கூறப் படுவான். இரக்க உணர்வினன். பாழிப் பறந் தலையில் மிஞிலியொடு நண்பகலில் செய்த வாட் போரில் புணபட்டு வீழ்ந்தான். பறவைகள் சிறகு களால் கதிரவன வெம்மை தாக்காமல் அவனுக்கு நிழல் செய்தன. (அகம. 208 1-12). பாழியிற் போர் செய்த நன்னனிடம் 'அஞ்சல' என்று கூறிய ஆஅய் எயினன், சொன்ன சொல் தவறாமல் மிஞிலியொடு பொருது தன்னுயிர் கொடுத்தான (அகம். 396:3-6). மிஞிலியுடன் செய்த போரில் எயினன் படவே, பறவைகள தொகுதியாக வந்து அவன் மேனிமேல் கதிரவன் வெம்மைபடாது விணணிடைப் பறந்தன (அகம். 18: 5-10). பகலில் வெளியே செல்ல இயலாத கூகையை, மிஞிலியொடு பொருது இறந்துபட்ட ஆஅய் எயினனைப் பார்க்க நாணிப் பகலில் புறம் செல்லவில்லை எனப் புனைந்துரைத்துப் பாடுவர் பரணர் (அகம். 148.7-10).

**ஆஅய் குடி- ஊர்.** தென்திசைக்கண் ஆஅய் குடி என்னும ஊர் உள்ளது. இஃது அணடிரனுக்கு உரியது. வடதிசைக்கண் உள்ள இமயம் போன்ற சிறப்புடையது (புறம. 132:7-9). (இஃது ஆய்குடி என்று வழங்கும்).

**ஆஅல்- கார்த்திகை மீன்.** ஆரல் எனபது ஆஅல் என வந்தது. முசுணடைக் கொடி விண்ணிடததே உள்ள ஆஅல - கார்த்திகை மீன் - போல் வெண்மையாக மலரும் (மலை. 100,101).

**ஆக்கம் – 1. செல்வம்.** இரவலர் வாட்டாற்றெழினி யாதனிடம் பெற்ற ஆக்கத்திற்கு-செல்வத்திற்கு- எல்லை யில்லை (புறம். 396:25). கீழததிசைககண் தோனறும் மதி நாடோறும் தேயுமாறு போல நெடுஞ்செழியனின பகைவர் ஆக்கம் நாடோறும் கெடுக என்றுரைப்பர் மாங்குடிமருதனார் (மது. 195, 196). விளையாடுந தோழியரோடு சேர்ந்து விளை யாடாமல் இற்செறிக்கப்படுதல் அறனனறு; ஆக்க மும தேயும் எனறு வல்லிதின்வணங்கித் தாயிடம் சொல்பவர் உளராயின் விளையாட விடுவளோ எனத் தோழி கருதினாள் (நற். 68:1-7). நணபர்க்கு ஆக்கந தந்துதவத் தலைவன் பிரிந்தான் (நற்.286: 7-9). தமக்கு உயர்ச்சி மிகுமாறு பயனைக் கருதாது அரசர் ஆக்கத்திற்கு முயலுபவரை, (அமைச்சரை) கொலையான் ஒறுத்தல் கொடிது (கலி. 8:15-17). சுற்றம் அழிய வாழ்பவனது ஆக்கம் பொலிவழியும் (கலி.34:18). அருள வல்லான ஆக்கம் அழகு பெறும் (கலி. 38:16). அறத்திறம் சேர்ந்தான ஆக்கம் பொலிவுறும் (கலி.38:20). கேடில் லாத ஆக்கங்கருதித் தலைவன் பிரிதல் (கலி. 150:8).

2. பொருள. காழகத்தில் (கடாரம்) உணடான ஆக்கமும்-பொருளும்-பிறவும் புகார் நகரம் வநது சேர்ந்தன (பட். 191). மூங்கிலில் விளைந்த நெல் ஆக்கம் எனக் கூறப்பெறறுள்ளது (நற். 178:1).

3. பெருகுதல். காதலையுடைய காமம் எப்பொழு தும் ஒரு தன்மையிலே நிற்காது; சிலர்பால் விரை யச் சுருக்கமும் சிலர்பால் விரைய ஆக்கமும்-பெருகு தலும்-கொள்ளுதலான் அக்காதலங்காமம் அவ் வியல்புடைய வைவையைப் பெருக்கை ஒக்கும் (பரி. 6:71-74).

**ஆகம் – 1. இடம்.** அகலிரு விசும்பின் ஆகம்-இடம்- அதிருமாறு பாசறையில் முரசம் முழங்கியது (பதி. 68:3,4).

**2. உடம்பு.** தலைவி நள்ளிரவில் கூந்தலிலும் ஆடையிலும் தன்னுடைய ஆகத்தை-உடம்பை-மறைத்துக் கொண்டு சிலம்பொலியை ஒடுக்கி வந்து தலைவனைக் கூடி மனையகம் திரும்பினாள் (அகம். 398:4-11). தலைவன் மலையிலிருந்து வரும் குளிர்ந்த காற்று, பசலை படர்ந்த தனது ஆகத்தில் படத் தலைவி விழைந்தாள் (நற். 236:8-10). பிரிவுணர்ந்த தலைவி அது பற்றித் தலைவனை வினவாமலும் தடுக்காமலும் கலக்கமுற்றுத் தலைவனின் ஆகத்தில சாய்ந்தாள் (நற். 308:5-8).

**3. முலை.** 'தலைவியின் சுணங்கணிந்த ஆகத்தை-முலையை - அணைத்துக்கொண்டு அவள் கையால் அணைத்திருத்தலினின்றும் நீங்க முடியாதவனாகத் தலைவன் இருந்தான (நற். 52:4,5). தலைவியின் பூண்கள் தாழ்ந்த ஆகம், நாணம் துன்புறுத்துவதால் பசலை கொண்டது (நற். 93:8-10). தலைவன் பிரிவினால் தலைவியின் சிறிய மெல்லிய ஆகத்தில் பெரிய பசலை பரவியது (நற். 358:2). பிரிவுத் துன்பத்தால் வருந்தும் தலைவியின் கண்ணீர்த் துளி அவள் ஆகத்தை நனைக்கும் (நற். 374:7).

**4. மார்பு.** சூரரமகளிர் நுண்பூண் ஆகம்-மார்பு-திளைக்குமாறு பிண்டியின் தளிர்களைத் தங்கள் காதில் அணிந்தனர் (முரு. 31:32). யாழிசை பயின்று பாடுவார் தம்முடைய ஆகத்தில் முகையவிழ்ந்த மாலை சூடினர் (முரு. 139:142). போரில் கணவர் இறக்கக் கைம்மையுற்ற மகளிர் தம் முலைபொலி ஆகத்தில் அடித்துக் கொண்டு அழுவர் (புறம். 25:10-12). மகளிர் ஆகம் அணிகள் அணியப் பெற்றும் செம்பொறி அமையப்பெற்றும் விளங்கின (புறம். 68:4-6). இளையவள் ஆகத்தில் சுணங்கு தோன்றிப் பரவுவது பருவமுற்றமையின் அடையாளம் (புறம். 350: 10, 11). பாடினியின் ஆகத்தில் அமைந்த சுணங்கு பிறர்க்கு வருத்தம் தந்தது (பொரு. 35). வரைவின மகளிர் தம்மை விரும்பி வரும் செலவ இளைஞரின் நுண்பூண், தம் ஆகத்தில் வடுக்கொளுமாறு முயங்கினர் (மது. 569, 572). தன் கணவன் பிரிந்திருந்த போது பாண்டிமாதேவி, மாலைதாங்கிய தன் ஆகத்தில், நெடிதாகப் பின்னிய கூந்தல் விழுமாறு சேக்கையில் இருந்தனள் (நெடு. 135-137). களவுக் காலத்தில் நாணமும் அச்சமும் அடைந்தமையால் தலைவி நீங்கவும் நீங்காதவனாகத் தலைவன் அவளைக் கையால் அணைத்து, ஆகம் அடைய முயங்கினன் (குறி. 184-186). தலைவன் வரும் வழியின் துயர் நினைத்துத் தலைவி தன் கண்களில் அரித்து விழும் நீர்த்துளி ஆகத்தில் துளிக்குமாறு கலங்கினள் (குறி. 248, 249). மடந்தையது அழகிய ஆகத்தின், மயிர் ஒழுங்கு பொருந்திய வயிற்றிடம், உந்தி என்னும் யாழுறுப்பிற்கு உவமை (மலை. 31-34). தலைவன் பிரிவிற்கு உடன்படாத தலைவி தன் ஆகத்தில ஒடுக்கிய புதல்வனுடைய தலையில் சூட்டிய மலர் வாடுமாறு பெருமூச்சு விட்டுக் கண்ணீர் ததும்ப நின்றாள் (அகம். 5:21-24). பரத்தையுடன் ஆகத்துப் பூந்தார் குழையப் புனலாடிய தலைவன், மறுநாள் தலைவியை, 'ஆகத்திலுள்ள முலையில் தோன்றிய தேமலையும் மாசில் கற்பினையுமுடைய புதல்வன்தாய்' என்று பாராட்டி வணங்கினன் (அகம். 6:10-14). தலைவன் தலைவியின நல்ல அழகு பொருந்திய ஆகத்தினைச் சேர்தல் (அகம். 43:12). தலைவியின் ஆகத்திடத்து இனிய துயில் பெறுதற்குத் தலைவன் விரைந்து செலலுதல் (அகம். 44:6, 19). உடன்போக்கினைக் கருதிய தலைவி தன ஆகத்திலுள்ள முலைகளுக்கிடையே வியர்வுண்டாகுமாறு தன் தாயை நன்றாகப் பன்முறை தழுவினாள் (அகம். 49: 7-9). ஒளி விளங்கும் வனமுலை பொலிய நுண்ணிய பூணினை அணிநத ஆகத்தின முயக்கததை மறந்து தலைவன் வேற்றிடததே தங்கியிரான். (அகம். 61:14; 17, 18). தலைவி ஆகத்தில் தோனறிய முலையினையுடையவள் (அகம். 62:3). தலைவியின பரந்த முலையினையுடைய ஆகம் அன்றலர்நத மலரென மணகமும் (அகம. 69:19, 20). ஆயிழை மகளிர் தம் அலர்முலை ஆகத்தில மாலை பூணடிருநதனர் (அகம். 75:11, 12). தலைவியின் அலர் முலை ஆகத்திற்கு வயலை வேலி வியலூர் உவமை (அகம. 97: 13, 14). மழை பெய்த மலர்போலத் தலைவியின் கணகள் பசந்து. அவள ஆகத்தில் நீர் சொரிந்தன (அகம். 146:10, 11). தலைவியின ஆகத்தில் தோன்றிய சுணங்கு பொன்போலக் காணபபட்டது (அகம். 150: 1, 2). பிரிந்து சென்ற தலைவன் அணிகலன்களைத் தாங்கிய ஆகததினைக் கூடுவதை மறந்து தங்கியிரான் என்று கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (அகம். 159:20, 21). இளைய தலைவியினது திதலை படர்ந்த ஆகத்தில வீற்றுத் தெய்வம் போன்று உருக்கொண்ட முலைகள் நனையுமாறு கண்கள் நீர் சொரிந்தன (அகம். 161:11-14). தலைவியின ஆகத்தில் அரும்பிய சுணங்கு வேங்கை மலரின் நிறம்போலத் தோன்றியது (அகம். 174: 10-12). தலைவியின் மாந்தளிர் போன்ற ஆகத்தின கண் அழகுபெற எழுந்த முலையினிற் பரவிய சுணங்கிடையே தொய்யில் எழுதப்பட்டது (அகம். 177:17-20). பரத்தையரின் மாலைதங்கிய முலையினையுடைய ஆகத்துப் பூமாலை குழையுமாறு தலைவன் ஆராக் காதலொடு முயங்கினன் (அகம். 206:8-10.)

தலைவியின் ஆகம் பிறர் எவரும் காண முடியாது விளங்கும் தன்மைக்குச் செலலூரிலுள்ள காவல் மிக்க வேள்வித தூண உவமை (அகம். 220:6-9). தலைவியின் ஆகம் கோங்கு அரும்பினாற் போன்ற முலையினையுடையது (அகம். 240:11). தலைவியின் கண்ணீர் ஒழுகவிடப்பெற்ற முலையுடைய ஆகம் புல்ம்பத் துறந்தோர் அருளில்லாதவர் (அகம். 247: 1-3). தலைவன் பிரிவது பற்றிக் கேட்ட தலைவி, முகம் தாழந்து நிலங்கிளைத்துக் கண்ணீர் தன் ஆகத்தில் துளித்து வீழத் துன்புற்று நிற்றல் (அகம். 299:13-16). தலைவியினது ஆகமேனியில பசலை பரந்திருப்பது யாமரத்தின் தளிரில் அரக்கினைச் சிதறினாற் போன்றுள்ளது (அகம். 333:1,2). தலைவியின் ஆகம் சிலவாய தேமலைக் கொண்ட பல பூண்களையுடைய மெல்லிய முலையினையுடையது (அகம். 343:2,3). தலைவியின் ஆகத்தினை மிக்க காதல் உள்ளத்தோடு பினனித் தழுவுதல் இன்றித் தலைவர் பிரிந்து சென்ற இடத்தில நீட்டித்திரார் (அகம். 399:3-5). தலைவியினது சிறிய இடைக்குத் துன்பமுண்டாக்குமாறு ஆகம் முழுவதும் பருத்துத் திரண்ட முலை அமைந்திருந்தது (குறு. 159:2-4). வளையணிந்த இளைய தலைவியின் மாட்சிமைப் பட்ட ஆகத்தை நாளை மணந்து மகிழ்வோம் என்று தலைவன் பாகனிடம் கூறினான் (குறு. 189: 6,7). தலைவியின் அணிமுலை ஆகம் முயங்கிச் செல்வதாயின் இன்னாக் கானமும் தலைவனுக்கு இனியவாகும் (குறு. 274:6-8). தலைவியின சிறுமெல் ஆகத்தினை ஒருநாள் புணரும் வாய்ப்புக் கூடுமாயின் பின் அரைநாள் வாழகக்கையையும் தலைவன் விரும்பவில்லை (குறு. 280:3-5). இன்பமும் இளமையும் கழியும்வரை தலைவியின் பூணணிந்த ஆகம் தனிமை யுறுமாறு தலைவன் பிரியாமல் இருக்க வேண்டும் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 46:4,5). தலைவியின் பொறிகிளர் ஆகத்தை முயங்கியதனால் உண்டாகிய புதிய மணத்தை நாடி வண்டுகள் மொய்த்தன (நற். 55: 4,5). தலைவன் பிரிந்த காலத்தில் தலைவி, பூண்கள் தாழ்ந்த ஆகத்திலுள்ள அழகிய முலை முகட்டில கண்ணீர் தெறிக்கும்படி அழுதாள் (நற். 81: 5-7). இரவில, கலனணிந்த ஆகம வடுக்கொள்ளுமாறு தலைவன் முயங்கி அருகிருப்பினும் தலைவி நடுங்குவள் (நற்.229-6-8). தலைவன் பிரிவால் ஏங்கி உயிர்க்கும் தலைவியின பருத்த முலையினையுடைய ஆகம், தனியே துயிலவேண்டியிருத்தலின துன்பப் படும் (நற்.240:3-5). தலைவன் பிரிவால் தலைவியின் அழகிய ஆகம், நிறத்தால் கடற் சங்கினும் மிகுதியாகப் பசநது காணப்படும் (ஐங். 106.3,4). மகளிர் தும்பைமலர் மாலையைத் தம் இளமுலை ஆகத்தில் அணிவதுண்டு (ஐங். 127:2,3). அலவனாட்டித் தலை குனிந்து நின்ற தலைவி மாலைப் பொழுது மறைந்த பின் ஆகத்தைத் தனக்குத் தருவாள் என்று தலைவன் கூறினான் (ஐங். 197). தலைவியின் முலையாகத்தைப் பிரியாதிருப்பது தலைவற்குப் பொருளாகும் (கலி. 2:14). துணையாவாள் என்று கூடியவளின் ஆகத்தைப் பிரியாதிருத்தல் தலைவற்குப் பொருளாகும் (கலி. 2:18). அழகிய மாமை நிறமுடைய சுணங்கணிந்த ஆகத்தை இமையாது பார்த்தும் அமையாது, தலைவன் தலைவியின் நுதலை நீவினன் (கலி. 4:17-19). தலைவி ஆகத்திடத்தே பருத்த முலையினை யுடையவள் (கலி, 14:5). நீரில் அடித்துச் செலலும் தலைவியை அவளுடைய பூணணிநத ஆகம் தன் மார்பொடு பொருந்துமாறு அணைத்துக்கொண்டு வந்து தலைவன் கரை சேர்த்தான் (கலி. 39:2-4). தலைவியின் மென்முலையாகம் கவின் பெறுமாறு தலைவன் வரைவொடு வந்தான் (கலி. 40:33). தலைவன் தலைவியின் ஆகத்தில் புணர்ச்சியை மனத்தால் கருதி இரவிலும் துயிலாது விருப்புற் றிருந்தனன் (கலி. 60:30,31). 'முற்றெழில் கொண்ட சுணங்கணிந்த பூணுடை ஆகத்தால் பசலை நீங்கப் பொய்த்தாகிலும் ஒருகால் முயங்கிச் செலக' எனத் தலைவியைத் தலைவன் வேண்டினான் (கலி. 64: 28-31). வையையுட் புனலாடச் சென்றவருட் சிலர், மலர் நிறைந்த ஆற்றிடைக்குறையிற் சென்று தம் மால் விரும்பப்படும் கணவரின் ஆகம் தழுவினர் (பரி. 10:30,31). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் அழகுபொருந்திய ஆகததையுடைய வீரர்க்குக் கவசம் போன்றவன் (பதி. 58:11). ஏந்தெழில் ஆகத்திலுள்ள பூமாலை அழகு கெடுமாறு, தலைவன் பரத்தையோடு மகிழ்ந்து தெப்பத்தில் புனலாடினன் (அகம். 6:10,11) பெண்டிரின் முலைகள் மண்டுதற்குரிய தனது ஆகத்தில் தலைவன் செஞ்சாந்து பூசினான் (அகம். 48:11). காவிரி வெள்ளத்தில் நீராடுபவள் போலத் தலைவி தன் நெஞ்சம் நடுங்கும் துன்பம் போகத் தழுவித் தலைவன் ஆகத்தில் பொருந்திக் கிடந்தாள் (அகம். 62:9-12). கட்டிலின் மேல் விளக்கொளியில் நன்மை பொருந்திய ஆகத்தே அணிகள் வடுப் பொருநதுமாறு தலைவன் கூடுவன் (அகம். 93:14-16). தலைவனுடைய சந்தனம் பூசி அழகு விளங்கும் ஆகத்தில் வண்டுகள் ஆர்க்கும் (நற். 344.6,7). தலைவன் ஆகத்திடத்துப் பெறும் முயக்கத்தையே தன வாழ்நாளாக உடையவள் . தலைவி (கலி. 20:9,10). வணங்கி வீழ்ந்த தலைவன் தான் எறிந்த வட்டினால் தளர்ந்தான் எனக் கருதி மயங்கி, ஊடல் முழுதும் நீங்கிய காதலி அவனுடைய அழகிய ஆகத்

தைச் சேர்ந்தான் (பரி. 12:71-74).

**ஆகாயம் – வானம்.** திருமாலின் உருவமும் ஒலியும் ஆகாயத்தினிடத்தே-வானத்திடத்தே-உள்ளன (பரி. 4:31).

**ஆகுலம் - 1. துன்பம்.** இந்திரன் மகளுடைய பாங்கியர் ஆகுலம்-துன்பம்-எய்துமாறு குறவர் மகளிராகிய வள்ளியின் பாங்கியர் போர்புரிந்தனர் (பரி.9:66-68).

2. பேரொலி. உப்பேற்றிச் செல்லும் உமணர் வண்டிகள் உப்பளத்திற் செல்லும் ஆகுலம்-பேரொலி-தலைவன் தலைவிபால் கொண்ட நட்பு, பழிச் சொல்லாகிய அலராதற்குவமை (நற். 354:9-11).

3. வருத்தம். தனித்த மகளிரைக் கண்டால் காமத்தால் அவர்மேல் விழுகின்ற முதுபார்ப்பானுடைய கருங்கூத்து குறியிடத்தே தலைவியைத் தலைவன் காணுதற்குத் தடையாகி ஆகுலமாய்-வருத்தமாய்-முடிநதது (கலி. 65:25-29).

**ஆகுளி - சிறுபறை.** பாணர் தம் யாழையும் ஆகுளியையும்-சிறுபறையையும் - ஒருதலை மாக்கிணையோடு சேர்த்துக் கட்டி எடுத்துச் செல்வர் (புறம். 64:1). விறலியர் இசைக்கும் கருவிகளில ஆகுளியும ஒனறு (புறம். 152:16). பாணன் முகவைப் பாட்டுப் பாடும் போது தடாரி, ஆகுளி ஆகிய இசைக்கருவிகளை இசைத்தல் (புறம். 371:17,18). பூசை செய்யுங்கால் யாழ், குழல் ஆகியவற்றோடு நுண்ணிய நீர்மையுடைய ஆகுளியும் இசைக்கப்படும் (மது. 605,606). கூத்தர் வள்ளலை நாடிச் செல்லுங்கால் மூட்டை கட்டி எடுத்துச் செலலும் இசைக் கருவிகளுள் ஒன்று ஆகுளி (மலை. 3). விரல தீண்டி முழங்கும் கணணையுடைய ஆகுளியின் ஓசை, பேராந்தைப் பேடும் சேவலும் மாறி மாறி ஒலிக்கும ஓசைக்கு உவமை (மலை. 140,141).

**ஆசான் – வேள்வி முதல்வன்.** வேதத்திற் சொல்லப்பட்ட ஆசான் - வேள்வி முதல்வன் - சொல் திருமாலின் உருவமாகும் (பரி. 2:61).

**ஆசிரியர் – குற்றங்களை நீக்குபவர்.** வேள்வித்துறை போகிய தொல்லாணை நலலாசிரியர் கூடிய கூட்டத்துப் பயனை அவரிடத்தே பெற்று நுகர்நத புகழும் தலைமையும் கொண்டவன் பலயாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி (மது. 759-762). புகார் நகரத்துக் கட்டப்பட்ட கொடிகளுள் பல்கேள்வித் துறைபோகிய தொல்லாணை நலலாசிரியர் வாதிடுவது கருதி உயர்த்திய கொடியும் ஒன்று (பட். 169-171).

**ஆசிரியன் பெருங்கண்ணன் – புலவர்.** ஆசிரியன் என்னும் சிறப்படைமொழி பெற்றுள்ள இப்புலவரின் ஒரே பாடல் குறுந்தொகை, 239. குறிஞ்சித் திணையில் அமைந்த இப்பாடல் தலைவியினது சிறைப்புறக் கூற்றாக உள்ளது. காந்தள் மலர்த் தாதினை ஊதும் தும்பி பாம்புமிழ் மணி போலத் தோனறும் என்னும் புனைவு, உள்ளுறை நயமிக்கது.

**ஆசினி – ஒருவகை மரம்.** ஈரபபலா என்பாருமுளர் (புறம்.158:22 பழையவுரை). குமணனின் முதிரமலையில் சுரபுனனையுடன் ஆசினியும் பலாவும செழித்திருந்தன (புறம. 158:21-22,25). குட்டுவனுக்குரிய ஒடுங்காடு எனனும் ஊரில் ஆசினிமரஙகள் இருந்தன (அகம். 91:11,12). நன்னனுடைய தலைவாசலில் நிறைந்திருந்த கையுறைப் பொருள்களில ஆசினிப் பலாவும் ஒன்று (மலை. 526). ஆசினிப் பலாவின் காய் குடம் போன்றது (நற். 44:9). நீணட அடியையுடைய ஆசினிப் பலாவின பழங்கள் வெடிக்க அவற்றின் விதைகள் சிதறிக் கிடந்தன (மலை. 138, 139). கானவன் ஆசினிப் பலாமரத்தின் மீது அமைத்த பரணில் ஏறிப் புன்செயயிலே மேயும் யானைகளைக் கவண்கல் எறிந்து விரட்டினான்; அக்கலபட்டுக் கனிந்த ஆசினிப பழங்கள் உதிர்ந்தன (கலி. 41:8-12). பழமுதிர் சோலையில வீழும் அருவி ஆசினியின முறறிய சுளைகளையும் அடித்துச் சென்றது (முரு. 301). களிறு ஆசினி மரததை முறித்துப் பூககள் சிந்தும் வேஙகை மரத்தினகீழ நின்றது (நற். 51:9-11).

**ஆசு – 1. குற்றம்.** ஆசு-குற்றம்-இலலாத பொற்கொல்லன் பழுதறச் செய்த பொனனாலாகிய பல மணிகளால் இயனறது மேகலை (புறம். 353:1,2). ஆசில்லாத அஙகை அரக்குத தோயந்ததுபோலத தாமரையின் உள்ளிதழ்கள் விளஙகின (சிறு. 74). சால்பும் மேம்பாடும ஒழுக்கமும் கெடுமாயின அதனால் தோன்றிய பழி நீககிப் புசழை நிலை நிறுத்தல் ஆசற்ற அறிவினையுடைய சானறோர்க்கும் எளிதன்று (குறி. 15-18). கார்கால மாலைப் பொழுதில் முல்லைநிலத்துள்ள ஆசற்ற வெள்ளிய முல்லைப்பூ செக்கர் வானத்துச் செவ்விகொணடது (குறு. 108:3,4). ஆசிலலாத தெருவில அறிவர் ஓரிற் பிசசை பெறுவர் (குறு. 277:1-3).

2. பற்றுக்கோடு. அதியமான் அஞ்சி இறந்தானாக ஔவையார், எமக்கு ஆசாக-பற்றுக் கோடாக-விளங்கிய எம் தந்தையாகிய அதியமான் எவ்விடத்துள்ளான் என்று புலம்பினார் (புறம். 235:16). துன்பமுற்ற ஒருவன் சானறோர் நிறைநதிருக்கும் அவையை அடைந்து எனககு நீங்கள் ஆசாக வேண்டும் எனின் சான்றோர் அத்துன்பத்தை நீக்குவர் (புறம். 266:8-10). 'ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ' (புறம். 307:1; குறு. 176:5; 325:4),

**ஆசை – விருப்பம்.** தலைவியைப் பிரிந்து பாலை நிலத்தைக் கடந்து சென்று பொருள் ஈட்டப் போவதே நன்மைதரும் என்று ஆசை - விருப்பம் – உடைய உள்ளம் தலைவனைத் தூண்டியது (அகம். 199:13-15). ஆட்டுக்கிடாய் தன்பால் வாராது மாறினும் அது மறுபடியும் வரும் என்னும் ஆசையால் புருவை (பெண் யாடு) வாழும் என்று புனைந்துரைக்கப்பட்டது (ஐங். 238:1,2). 'மனமே, பரங்குன்றத்து முருகனைக் கண்டு ஆசையால் முருகாற்றுப்படையினைப் புகல்க' என்பது புலவர் வேண்டுகோள் (முரு. வெ. 4)

**ஆட்டனத்தி – ஆதிமந்தியின் கணவன்.** அத்தி என்றும் அழைக்கப்பெறுவான். கச்சினன், கழலினன், தேன் தார் மார்பினன், வகையமைப் பொலிந்த வனப்புடைய மாலையன், சுழன்ற கரிய தலைமயிரினை உடையவன் (அகம். 76:7-9). எழிலாற் பொலிந்த திண்தோளினன் (அகம்.222:6). ஏறுபோன்ற எழில் நடையன்; பொலிவுபெற்ற தோளன்; மலர் சூடிய சுரிந்த தலைமயிரை உடையவன் (அகம். 236:14,15). இவ்வாறு ஆட்டனத்தியின் தோற்றம் கூறப்பெற்றுள்ளது. கணவனை இழந்த ஆதிமந்தி, அவனைக் கண்டதில்லையோ என ஊர்தோறும் நாடுதோறும் அலைந்து கேட்டுக் கடல் கொண்டதோ, நீர் மறைத்ததோ என அரற்றி மயங்கிக் கண்ணீர் சிந்திக் கலங்கினள் (அகம். 236:16-21). கழாஅர்ப் பெருந்துறையில் புனலாட்டு விழாவின்கண் ஆடிய ஆட்டனத்தியின் எழில்நலம் விழைந்து காவிரிப் பெண் அவனைக் கவர்ந்துகொண்டாள்; அதனால் மதி மயங்கித் திசையெங்குந் தேடி வருந்திய ஆதி மந்திக்கு மருதி என்பாள் ஆட்டனத்தியைக் காட்டினாள் (அகம். 222:5-12). அத்தி 1 காண்க.

**ஆட்டு - 1. கூத்து.** மதுரை மகளிர் மன்றுதொறும் நிகழ்த்திய குரவையாட்டும் அவர் சேரிதொறும் நிகழ்த்திய புனைந்துரைகளும் இனிய பாட்டுக்களும் ஆட்டுக்களும்-கூத்துக்களும்-தம்முள் கலத்தலினால் எழுந்த வேறு வேறாகிய ஆரவாரம் நன்னனது பிறந்தநாள் விழவின்கண் எழுந்த ஆரவாரம் போன்றிருந்தது (மது. 615-619).

**2. நீராட்டு.** ஈன்றணிமையுடைய தலைவியை வெண் கடுகு கலந்த எண்ணெய் தேய்த்து ஆட்டுதல்-நீராட்டுதல்-மரபு (நற். 40:6-8).

**3. விளையாட்டு.** விளாமரத்திலிருந்து பசிய பயிரில் வீழ்ந்துகிடக்கும் விளாம்பழங்களுக்கு ஆட்டு-விளையாட்டு-ஒழிந்த பந்துகள் உவமை (நற். 24:2-4). வையையில் தம் காதலரொடு நீராட்டயர்ந்த மகளிரின் முகமும் முலைக்கண்களும் சிவந்தன; அம் மகளிர் அத்தகைய ஆட்டினை மேலும் விரும்பினர் (பரி. 10:95-97).

**ஆட்டுவருடை - மலையாடு.** கான்யாற்றின் கரையில் பெரிய கலைமான் கூட்டம் ஆட்டுவருடை-மலையாடு–இனத்துடன் துள்ளிக் குதிக்கும் (நற். 119:6,7).

**ஆடணி - ஆடற்கேற்ற அழகு.** முருகனை வேண்டிப் பல இயங்கள் முழங்க வெறியாடும் களம் அமைத்து ஆடணி-ஆடற்கேற்ற அழகு-செய்யப்பட்ட பெரிய பந்தலில் வேலன் வெறியாடினான் (அகம். 98:13-15). அத்தியின் ஆடணி கண்டு விரும்பிய காவிரிப்பெண் அவன் மனைவியாகிய ஆதிமந்தி வருந்துமாறு அவனைக் கவர்ந்து சென்றாள் எனப் புனைந்துரைக்கப்பட்டுள்ளது (அகம். 396:11-14).

**ஆடல் – 1. ஆளுதல்.** வேந்தரும் வேளிரும் பெருஞ்சேரலிரும்பொறையைப் பணிந்து அவன் கருத்தின் படி நடவாராயின், தத்தமக்குரிய நாட்டினை ஆடல்-ஆளுதல்-அரிது (பரி. 75:3,4,14). மடலேறி வந்த தலைமகன் கண்டோரிடம் 'நீவிர் பாடு என்றால் பாடுவேன், ஆடு என்றால் மடன்மாவை ஆடலும் செய்வேன்' என்று கூறினான் (கலி. 140: 13,14).

**2. கூத்து.** ஓரி வள்ளல், பாணர் சுற்றத்தினர்க்கு வறுமை தீர வழங்கியமையால் இனிய இசைக் கருவிகள் ஒலிப்ப ஆடலையும் - கூத்தையும் - பாடலையும் அவர் மறந்தனர் (புறம். 153:4-12). ஆடுகோட்பாட்டுச்சேரலாதன் பகைவரை வென்று போர்க்களத்தில் ஆடுவான்; கூத்தரது முழவின் முன் ஆடல் வல்லானல்லன் (பதி. 56:2,3,8). முழாக்களும் பெரும்பறைகளும் ஒலிக்க, ஆடல் இயல்பு அறியாத நங்கை தான் வேண்டியவாறு ஆடுதல் போல் வையை வெள்ளம் விரும்பியவாறே பரந்தது (பரி. 7:17). யாழொலி, மிடற்றுப்பாடல், குழலொலிகளுடன் முழவு ஆர்ப்ப அரங்கேறிய தலைக் கோல் மகளிரும் பாணரும் ஆடல் தொடங்கினர். (பரி. 7:78-80). திருப்பரங்குன்றின்மீது ஆடல் பயின்றாரை அவ்வாடல் பயின்றார் வென்றனர் (பரி. 9:71,72). மைந்தரும் மகளிரும் கொண்டுள்ள மனத்திண்மையை அழித்து ஆடல் காமத்தை உண்டாக்கும் (பரி. 10:56,57). ஆடுவாரின் ஆடல் அதற்குப் பொருந்திய சீருடன் கூடிய தாளத்துடன் பொருந்தி நின்றது (பரி. 10:117). வண்டும் தும்பியும் யாழ் போல் ஒலிக்க, அருவி முழவம்போல் ஒலிக்க, மகளிரும் மைந்தரும் விரும்புதற்குரிய பாடலுடன் ஆடல் நிகழ்த்தினர் (பரி. தி. 1:50-54).

**3. விளையாட்டு.** குன்றுதோறும் ஆடல்-விளையாட்டு-புரிவது முருகனுக்குரிய பண்பு (முரு. 217). தலைவி

யினது உடற்சோர்வு ஆயத்தாரோடு ஆடலால் உண்டானதன்று; தலைவன் பிரிவாற்றாது விளைந்ததே என்று கூறித் தோழி வரைவு கடாவினாள் (நற். 23:1-3). அருவியிலும் சுனையிலும் நம்மொடு ஆடல் தலைவர்க்கு முன்பு எளிதாயிருந்தது; இனி அரிது எனத் தலைவி சிறைப்புறமாகக் கூறி இற்செறிப்பு உணர்த்தினாள் (ஐங். 22:). 'என் சிவந்த கண்களைக் கண்டு அஞ்சுபவனைச் சினவாதே; துனி நீங்கி அவனொடு ஆடல் தொடங்கு' எனக் காதற் பரத்தைக்கு முதுபெண்டிர் கூறினர் (பரி. 6:96,97). ஆடலுள் (நீர் விளையாட்டில) தன்னுடைய கணவன் மீது ஆசை கொண்ட பெண்மீது பகைகொண்டு மகளிர் பலரும் காணத் தலைவி தன் மாலையைப் பிய்த்து எறிந்தாள் (பரி. 7:71,72). வையைநீரில் ஆடல் புரிதற்கேற்ற பொருள்களைக் கொண்டு மக்கள் சென்றனர் (பரி.10:9). மதுரையார் இடையே புகுந்து ஆடற்கு ஏற்றது வையையாறு (பரி. 11:48, 49). மையோலை பிடித்த இளைய பிள்ளைகளின் ஆடலுக்கு மாறாக எழுந்து காமக் குறிப்பில்லாத ஆடலை இளைய மகளிராயம் செய்தது (பரி. 11:88, 89). கூடல் நகரினர் புகழப் புனலில் ஆடல் மேன் மேலும் சிறக்க வையை நீர் மிகுந்தது (பரி. 12.30-32). மைந்தரும் மகளிரும் ஈகையின் பயனைத் துய்க்க நாளும் வையைப் புனலில் ஆடல புரிவர் (பரி. 16: 50-52).

4. ஆடுதல். கழுத்தில் அழகுடைய குழை ஆடலால்- ஆடுதலால் - அழகினை யுடையவள் தலைவி (கலி. 109:14,15).

**ஆடல்மகளிர் – ஆடல் தொழிலுடைய மகளிர்.** ஆடல் மகளிர் தம்மிடற்றொலியை யாழ் இசையுடன் கூட்டுதற் கேற்பக் குளிர்ச்சியால் நிலை குலைந்த நரம்பைத் தம் முலை வெப்பத்தே தடவி நிலை நிறுத்தினர் (நெடு. 67-70).

**ஆடலன் – ஆட்டத்தை உடையவன்** (சிவன்). இருள் செறிந்த முதுகாட்டில் ஆடிய ஆடலன்-ஆட்டத்தை உடையவன் - (சிவன்) (பதி. க. வா. 4).

**ஆடவர் – 1. ஆண்மக்கள்.** ஆதியின் குடநாட்டு ஆடவர்-ஆண்மக்கள்-கள்ளை நிரம்பக் குடித்தமையால் புளிப்பை விரும்பிக் களாப்பழத்துடன துடரிப் பழம் தின்றனர் (புறம். 177:8-12). எங்கு ஆடவர் நல்லவராக உள்ளனரோ அங்கு நிலம் சிறந்திருக்கும் (புறம். 187:4,5). நாள்தோறும் பழுமரம் நாடும் பறவை போன்ற இரவலரைக் காத்தற்கு எதிர்கொள்ளும் ஆடவர் பெற்ற செல்வம் இரப்போர் செல்வ மாகும் (புறம். 199: 3-6). அந்தப்புரம் மன்னரல்லது பிற ஆடவர் அணுக முடியாத அரிய காவலை யுடையது (நெடு. 106, 107). அருளைப் பொருளாகக் கருதாது ஆள் வினையைப் பொருளாகக் கருதும் ஆடவர் பாலையைக் கடந்து பொருளதேடச் செலவர் (அகம். 75: 1,2). ஆடவர் வினைமேற்கொண்ட உள்ளத்துடன் பொருளீட்டப் பிரியும்போது மகளிர் உடன்படுவதே சிறந்த பண்பு (நற். 24:7-9). பிரிந்தார்க்குத் துன்பம் தரும் இளவேனிற காலத்தும் பொருள் வயிற் பிரிவது ஆடவர்க்கு இயலபெனின் அறத்தினும் பொருள் அரிது போலும் எனத் தலைவி கூறுகிறாள் (நற். 243:9-11). தொழிலே ஆடவர்க்கு உயிராகும் (குறு. 135:1). ஆடவர் மகளிருடன் கூடி விரும்புதற்குரிய பாடலுடன ஆடல் நிகழ்த்தினர் (பரி. தி. 1:53, 54).

2. வீரர். சோழன் நலங்கிள்ளி மென்மையான் மகளிர்க்குத் தாழ்ந்து வன்மையால் ஆடவரை - வீரரை - அகப்படுத்தும் பெருமை பொருந்தியவன் (புறம். 68:6,7). வலவேற சாத்தன் தனது ஆண்மை விளங்க ஆடவரை எதிர நின்று கொன்றான (புறம். 242:4,5). முள்ளம் பன்றியைக் கொன்ற ஆடவர் உடும்பின் தசையை அறுத்தெடுத்து மனைமுற்றத்தில் கூறுசெய்வர் (புறம. 325.6-8). மின்னலைப போன்று ஒளிர்கின்ற வாளை உறையினின்றும உருவி ஏந்தியுள்ள அரசன் ஏவியவாறு செய்யும் ஆடவா பகைவரின் அரிய அரண்களை வென்றனர் (பதி. 24.1-4). வீரமுரசு ஒலிக்க, எப்போதும் போர் செய்தலால் புண் பொருந்திய தோளையுடைய ஆடவர் களங்காயக் கண்ணி நார்முடிச் சேரலின் பாசறை வந்து தங்கினர் (பதி. 40:3-6). அஞ்சாமையை உடைய ஆடவர் கவசம் வேண்டுமென்று கருதாதவராய் வேலைத் தாங்கிப் போர்க்களத்தில் முற்பட்டுச் சென்றனர் (பதி. 52.5-7). வெல்லும போரைச் செய்யும் ஆடவர் மறத்தை விரும்பிப் பாதுகாக்கும், விற்படைகள் நிலைபெற்ற காவற் காட்டை உடையது தகடூர் (பதி. 78.7-9). ஆடவர் வெட்சி மறவர் கவர்ந்து சென்ற ஆனிரையை மீட்டு வந்து பாலைவழியில் நடக்க முடியாமல் தாயைவிட்டுத் தனித்த கன்றுகளின கண்ணீரைத் துடைத்தனர் (அகம். 131:6-9). கள்விலையாட்டியர் தந்த கள்ளை நிரம்பப் பருகிச் சிவந்த கண்களை உடைய ஆடவர் போர் விரும்பி ஆரவாரித்தனர் (அகம். 157:1-4). அறநெறி தவறாத மன்னருடைய, வெல்லுதற்கரிய போரினகண பகைவரை எதிர்த்த ஆடவர் உறையினின்று உருவி வீசுகின்ற வாளைப் போன்று மின்னல் தோன்றியது (அகம். 188:4-7). உமண ஆடவர் உப்புக் கற்களாகிய உணவுப் பொருளை விற்பதற்குக் கழுதைமீதேற்றி நல்ல நிமித்தம் பார்த்துப படைக்கலன்களுடன் புறப்பட்டனர் (அகம். 207:2-5). அன்பில் ஆடவராகிய

ஆறலை கள்வர் வழிப்போக்கரைக் கொன்று பொருள்களைப் பறிப்பர் (புறம். 161:9). அன்பில் ஆடவர் அம்பை வில்லிலே இருத்தி அருஞ்சுர நெறியில் வம்பலரைப் பலருடன் மாய்த்தனர் (நற். 352:1-3). தாம் எய்த அம்பு குறிபிழைத்தால் தொடுத்த கைவிரலைக் கடிக்கும் வன்கண்மை யுடைய, வில்லையும் அம்பையும் கொண்ட ஏவல் ஆடவர் பலரைக் கொன்றழித்தனர் (அகம். 215: 7-11). கடுங்கண் ஆடவராகிய ஆறலை கள்வர் கொள்ளையடிக்கப் பதுங்கிக் கிடக்கும் வெஞ்சுரத் தில் வழிப்போவார் யாவருமின்மையால் அவர்தம் வறுமையைக் களைபவரைக் காண வியலவில்லை (அகம். 365:7-9). கண்மாறு ஆடவர் (கண் இமைக்கும் அளவில் மறையும் கள்வர்) காரிருளில் கல்லையும் மரத்தையும் வெட்டும் கூரிய வாளையும் தொடு தோலையும் தொடையிலே பதித்த உடைவாளை யும் அறலின் நிறத்தைக் கவர்ந்து புனைந்தா லொத்த நீலநிறமுள்ள ஆடையையும் நூலேணியை இடையிற் சுற்றிய சுற்றினையும் நிலன் அகழ் உளியையும் கொண்டு அணிகலன்களை விரும்பிக் களவு கோடற்கு அற்றம் பார்த்துப் பதுங்கிக் கிடப்பர் (மது. 634-642). தோளில் கோத்த கட்டுச் சோற்றையுடைய கருங்கை ஆடவர் கற்பாறையில் தீப்பொறி பறக்கும்படி கல்லினைத் தோண்டி யெடுத்துக் கிணறு வெட்டினர் (அகம். 79:1-3). பாசறையிலிருந்து நீங்கிச்சென்று செம்மை செய்யப் பெற்ற போர்க்கருவிகளைக் கொண்ட கூற்று வினை ஆடவர் தமர், பிறர் என அறியாத கை கலப்பு நடக்கும் போர்க்களத்தில் வேந்தன் புகழையும் தம்புகழையும் நிலைநிறுத்தி 'வாழ்நாள் முடிந்தவர் பொரற்கு வருக' என்று அழைத்து அவருடன் பொருது வென்றனர் (புறம். 294:2-7). ஆனேற்று ஊனைத் தின்ற வேட்கை நீங்கத் தோப்பிக்கள் பருகி வல்வில்லைக் கொண்ட கொடு நோக்கு ஆடவர் புலால் நாறுகின்ற கையராய்க் கழுவாத வாயராய்த் தமது சிற்றூரில் தங்கினர் (அகம். 265:12-20). தீட்டிய அம்பினைக் கொண்ட கொடுவில் ஆடவர் வில்லை வளைத்துப் பொருது ஆநிரை கவர்ந்து துடிகொட்டி மகிழ்ந்து உமணர் சமைத்து விட்டுச் சென்ற கல்லடுப்பில் ஊனைப் புழுக்கி உண்டனர் (அகம். 159:4-10). அணங்குடைப் பகழியைக் கொண்ட கொடுவில் ஆடவர் வணிகச் சாத்தைக் கொன்று வழிப்பறி செய்து உண்பர்; அதனால் அவர் பகைக்கு அஞ்சி வணிகச் சாத்து குடிபெயர்ந்து சென்றது (அகம். 167:7-10). சிவந்த அம்பினை உடைய கொடுவில் ஆடவரின் நல்ல வெற்றியை எழுதிய நடுகல் உடைய வெஞ்சுர வழியில் குறும்பரின் கலகத்தை நீக்கிக் காப்பார் யாருமில்லை (அகம். 179:7-10). குதிரைமலைத் தலைவ னான அஞ்சியின் பகைவரைப் போர்க்களத்தில் அலைத்த கொடுவில்லுடைய ஆடவர் ஆனிரை களைக் கவர்ந்த பூசலில் துடி முழக்கினர் (அகம். 372:9-12). கொடுவில் ஆடவர் சிவந்த அம்பினால் வம்ப மாக்களின் உயிரைப் போக்கியமையாலே மலைவழியில் பிணங்களின் முடைநாற்றம் மிகவே அவற்றைத்தின்னவந்த குறுநரிகளும் குறுகாது மீண் டன (நற். 164:6-10). கொலைவில் ஆடவர் இரவிலே குறும்பிலுள்ள வீரரை அழித்து ஆநிரையைக் கவர்ந்து பகுத்துக் கொடுத்துக் கற்பாறையின் முடுக்கிலே இறைச்சியுண்பர் (அகம். 97:4-6). புலியென முழங்கும் செங்கண் ஆடவர் தீக்கடைகோலுடன் அம்பும் உடையராய் இரவில் பகைவரது ஊர் சென்று பொருது ஆநிரைகளைக் கவர்ந்தமையால் எழுந்த ஆரவாரம் வெஞ்சுரத்தில் எதிரொலித்தது (அகம். 239:3-6). வலிய வில்லையும் சிவந்த அம்பையும் கொண்ட செயிர நோக்குடைய ஆடவர் அம்புவிட்ட மையின் இறந்த பெண்மானை நினைத்து ஆண்மான் உணவுண்ணாது நெய்தலம் படுவில் நீரும் பருகாது வருந்தியது (அகம். 371:1-8). வம்பமாக்கள் வருதிறம் நோக்கிச் சிவந்த அம்பைத் தொடுத்த செயிர்நோக்கு ஆடவரின் தண்ணுமை ஒலிகேட்டு ஆண்பருந்து தன் சுற்றத்திடத்தே திரும்பியது (நற். 298:1-4). உயர்ந்த யானைக் கூட்டத்தைக் கவர்ந்த புலர்ந்த சாந்தினையும் பல பூக்கள் விரவிய மாலையையும் உடைய பெருஞ்செய் ஆடவரை அழைத்து மன்னன் சிறப்புச் செய்தான் (மது. 744-746). ஓடையொடு பொலிந்தவினைநவில் யானையின் தடக்கை நிலத்தே புரள வெட்டி வீழ்த்திய பெருஞ்செய் ஆடவர் போரில் பட்ட விழுப்புண்ணைக் காணப் பாண்டி யன் பாசறைக்கு வந்தான் (நெடு.169-172). அறனெறி பிழையாது முறையுடன் ஆளும் மன்னரின் போரில் பகைவரை எதிர்த்த பெருஞ்செய் ஆடவர் உறையி னின்றும் கழித்த வாள்போல் மின்னல் மின்னியது (அகம். 188:3-7). நீரில்லாத நீண்ட வழியில் வம்ப லரை நலியப் பார்க்கும் இருக்கையினையும் கையாற் கவித்துக் கண்ணால் குறித்துநோக்கும் நோக்கினை யும் உடைய குறிபிழையாது அம்பு தொடுக்கும் வன்கண் ஆடவரின் அம்பினால் இறந்தோர்தம் உடல்மூடிய பதுக்கையில் பருந்து தங்கி வருந்தும் (புறம். 3:18-22). வளைந்து சுருண்ட மயிரினை யுடைய வன்கண் ஆடவர் வில்லிற் றொடுத்த அம் பால் பாலைநிலத்தே வம்பலரைக் கொன்று குவித் தனர் (அகம். 161:1-4). விசையமை வில்வில்வைத்துக் குறிபிழையாது அம்பு தொடுக்கும் வன்கண் ஆட வர் அம்புகளை விடுக்குந் தோறும் அவை ஒலித்துச் சென்று வழியிற் செல்லும் வம்பலரின் உயிரைக்

கவரும் (அகம். 175:1-4). உகாய் மரக் கிளையில் விடுகணை வில்லொடு ஏறி வழிப்போக்கரைப்பார்க் கும் வன்கண் ஆடவர் நீர் வேட்கையால் அம்மரத் தின் நாரை மென்று வேட்கை தணிவர் (குறு. 274: 1-5). பருந்தின் இறகைச் சிவந்த அம்பிலே கட்டிய வன்கண் ஆடவர் வெற்றி எய்தும் கருத்துடன் வழிபார்த்துத் தங்குவர் (நற். 329:4-7). அஞ்சத்தக்க காட்டு வழியே வழிப்போக்கர் செல்வதைக் காண் பதற்கு வில்வல் ஆடவர் யாமரக் கிளையில் ஏறி மறைந்து கொள்வர் (அகம். 263:5-8).

**ஆடாப்படிவம்** - நீராடா நோன்பு. உண்ணா நோன்பி னால் ஒட்டிய விலாவும் ஆடாப்படிவமும் - நீராடா நோன்பும் - உடைய துறவியர் பாலை நிலத்துக் கவினழிந்த யானைகட்கு உவமை (அகம். 123:1-4).

**ஆடாமேனி** – ஆடாத உடம்பு. [அசையாது தியான நிலை யிலிருக்கும் உடம்பு: பி. நா. உரை. நற். 141.] நீண்ட சடையுடன் ஆடாமேனி - ஆடாத உடம்பு- உடைய தவசியர் போலக் காய்கள் நிறைந்த கொன்றை மரங்கள் தோன்றும் (நற். 141:3-5).

**ஆடி** - கண்ணாடி. ஆடிப்பாவை காண்க.

**ஆடிப்பாவை** – கண்ணாடியில் தோன்றும் உருவம். ஆடி யின் முன் நின்று கையும் காலும் தூக்கினால் அதில் தெரியும் உருவமும் கையும் காலும் தூக்கும்; அந்த ஆடிப்பாவை - கண்ணாடியில் தோன்றும் உருவம்- தலைவன் காதற் பரத்தையிடம் பெருமொழி கூறி விட்டு வீட்டிற்குச் சென்றதும் தலைவியின் சொற் படி நடப்பதற்கு உவமை (குறு. 8:3-6).

**ஆடு** - 1. வெற்றி. ஆடு - வெற்றி - பெறுதற்காகத் தும்பைசூடிப் போருக்கெழுதல் மரபு (புறம். 21:10). ஆடு குடியொடு (வெற்றிக் குடியொடு) மூத்த குடி யிற் சிறந்த வீரர் நெடுஞ்செழியனின் முயற்சி வலியை வாழ்த்தினர் (புறம். 24:28, 29). சேரன் மாந் தரஞ் சேரலிரும்பொறை பகைவரை வென்ற வெற் றியை அவனது ஆடுகொள் வரிசைக்கு (வெற்றி கொண்ட சிறப்புக்கு) ஏற்பப் பாடுவேன் எனப் பொருந்திலிளங்கீரனார் கூறினர் (புறம். 53:14, 15). 'சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளிக்கு ஊர் இஃது அல்லாமையாலும், நாடு இஃது அல லாமையாலும் அவனுக்கு இயல்பாய் அமைந்த ஆடு (வெற்றி) அவனது ஆடு எனச் சிறப்பாகச் சொல்லுவர் ஒரு சாரார்; அவனது ஆடு அன்று எனச் சொல்லுவர் ஒரு சாரார்; பனைமரத்தைப் பொருந்தி நின்று வளை, ஆடை ஆகியவற்றைத் தோற்றமையின் அவனது ஆடு ஆகுதல் கண் டேன்' என நக்கண்ணையார் கூறுவர் (புறம். 85). அதியமான் நெடுமான் அஞ்சியை இளையன் என்றிகழ்ந்தால் ஆடு பெறுதல் அரிது (புறம். 104:6). குமணன் காட்டில் கொடுத்த வாளைப் பெற்ற பெருந்தலைச் சாத்தனார் ஆடு மிக்க உவகையொடு திரும்பினார் (புறம். 165:12-14). நுணங்கு செந்நா வினால் புகழ்ந்து பாடப்பாடப் பின்னரும் பாடு தற்குரிய புகழை யுடைய குடக்கோச் சேரலிரும் பொறையின் ஆடுகொள் வியனமார்பைப் பெருங் குன்றூர் கிழார் தொழுதார் (புறம். 211:14-16). பிறரிடம் பொருது ஆடு பெற்ற செல்வக்கடுங்கோ வாழியாதனிடம் பொருது வீரர் அழிந்தனர் (பதி. 63:13). ஆடு நெருங்கும் திருநாளில் ஆரவாரம் மிகும் (மது. 428). ஆடு கொண்ட போர்க்களத்தில் ஆரவாரம் மிகுந்திருக்கும் (அகம். 116:19). கரிகாலன வாகைப் பறந்தலையில ஆடு பெற மனனர் தம் ஒன்பது குடையையும் பகலில் போட்டுவிட்டு எதிர்நிற்க லாற்றாது ஓடினர் (அகம. 125:18-22). ஆடு நடையால் (வெற்றி ஒழுக்கத்தால்) மேம்பட்ட விருப்பத்தினால் அதிகன் அள்ளனுக்கு நாடளித் தான் (அகம். 325:7,8). ஆடு கொண்ட முரசு முழங் குதல் (அகம். 334:2). ஆடுகொள் முரசினையுடைய வன் செழியன் (அகம். 335:10). வன்கண்மையுடைய மறவர் ஆடு கொள்ளும் நெஞ்சத்தோடு வழிபார்த் துப் பாலை நிலத்துத தங்கியிருப்பர் (நற். 329:6-8). தலைவன் தலைவியின் ஆடெழில் (வெற்றியையுடைய அழகு) கெடுதற்கு அஞ்சாது பிரிந்தான் (கலி. 16:1). ஆடு கொள்ளுதற்குரிய சககரப படையுடையவன் திருமால் (கலி. 105:72).

2. கொல்லுதல். ஆடு-கொல்லுதல் – பொருந்திய வென்றியை யுடையவன் கோபபெருஞ் சோழன் (புறம். 67:2).

3. சமைத்தல். பெருநதலைச் சாத்தனார் வீட்டி லுள்ள அடுப்பு ஆடு - சமைத்தல் - மறந்து புடை ஓங்கியிருந்தது (புறம். 164.1). பாணர் இசைக் கருவி களோடு சிதைந்த வாயினை யுடைய ஆடுறு (சமைத்தற்குரிய) பானையைக் கெடாதவாறு உடன் கொண்டு செல்வர் (புறம். 371:5,6). ஆடுறு கலததில் சேம்பினைச் சமைத்தனர் (பதி. 24:20). மெலலிய அடை பாகினாலே ஆடமைநதது (சமைத்தல் அமைந்தது) (மது. 624,625).

4. மேட இராசி. ஆடு - மேட இராசி - பொருந்திய கார்த்திகைநாள் 'ஆடியல் அழற்குட்டம்' எனக் குறிக்கப்பட்டுள்ளது (புறம். 229:1). உறுதியான கொம்புடைய ஆடு முதலாக ஏனை இராசிகளில் ஞாயிறு சென்று திரியும் (நெடு. 160-162).

5. யாடு. கரடிகளின் கூட்டம் ஆடுகள்-யாடுகள்- பரவியிருப்பது போல் தோன்றும் (அகம். 331:3). காட்டாற்றுக்கரையில் கலைமான் கடும்பு, ஆட்டு வருடையொடு துள்ளும் (நற்.119:6,7). குராமரததின்

வெண்பூ ஆடுகள் மேய்க்கும் இடையன் அணிந்து கொள்ளுமாறு பூக்கும் (நற். 266:2,3).

**ஆடுகளம் – 1. கூத்தாடுமிடம்.** வேலிப்புறத்தே உள்ளவர்க்கு அறுங்கருதி வயலகத் துள்ளோர் பிடுங்கியெறிந்த கரும்பு அங்குள்ள தாமரைப்பூ சிதைய வீழ, அவ்விடம் கூத்தர் ஆடுகளம்–கூத்தாடுமிடம்-போல் தோன்றியது (புறம். 28:11-14). நாடகமகளிர் ஆடுகளத்தே உள்ள வாரால் இறுகக் கட்டிய முழவு, கயிற்றால் வரியப்பெற்ற காடி வைத்த கலனுக்கு உவமை (பெரு. 55-57). வாகையின் முதிர்ந்த நெற்றுக்கள் கூத்தரது ஆடுகளத்தில் ஒலிக்கும் பறைபோல ஒலித்தன (அகம். 45:1,2). ஆடுகளப் பறையொலி மழைநீர் பாய்ந்த பள்ளங்களில் தோன்றும் நுணல் (தேரை) ஒலிக்குஉவமையாகும் (அகம். 364:2,3). வரைவாழ் வருடையின் ஒலி கேட்டு அஞ்சிய மயில் ஆடுகளத்தில் ஒலிக்கும் கொம்பு போல இனிமையாக ஒலித்துப் பறந்தது (அகம். 378:5-9).

2. வெறியாடுமிடம். குறமகளிர் ஆடுகளம்-வெறியாடுமிடம்-எதிரொலிப்பப் பாடினர் (முரு. 245). அம்பு பட்டுப் புண்ணுமிழ் குருதி முகத்திலிருந்து பாய்ந்து வரிநுதலைச் சிதைக்க, அயர்ந்து புறங்காட்டிச் சென்ற யானை நின்ற இடம், முருகனால வருத்தப் பெற்ற மகளிர்க்காக (மறியறுதது) வெறியாட்டெடுக்கும் ஆடுகளத்திற்கு உவமையாக வந்துள்ளது (குறி. 170-175).

**ஆடுகள மகள் - விறலி.** தலைமகள் தன்னை ஓர் ஆடுகள மகளாக - விறலியாக - குறிப்பிடுகிறாள். தலைமகனை வீரர் கூடியுள்ள விழாவிடத்தும் மகளிர் துணங்கைக் கூத்தாடிய விடத்தும் தேடி எவ்விடத்தும் அவனைக் காணவில்லை யென்றும் தன்னுடைய கையிலணிந்த சங்குவளையை நெகிழத்த பெருமையுடைய தலைவனும் ஓர் ஆடுகள மகனே என்றும் தலைவி தோழிக்குக் கூறி அறத்தொடு நின்றாள் (குறு. 31).

**ஆடுகள மகன் - கூத்தாடுபவன்.** ஆடுகள மகள் காணக.

**ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் - சேரவேந்தன்.** வானவரம்பன் என்னும் சிறப்புப் பெயர் உடையவன். தந்தை குடக்கோ நெடுஞ்சேரலாதன்; தாய் வேளாவிக்கோமான் தேவி; இவன்மீது காக்கை பாடினியார் நச்செள்ளையார் பதிற்றுப்பத்தின் ஆறாம்பத்தைப் பாடி யுள்ளார். இபபுலவர்க்குக் கலனணிய ஒன்பது காப்பொன்னும் நூறாயிரம் காணமும் சேரலாதன் நல்கினான்; தண்டாரணியத்திலிருநது வருடைகளைத் தொண்டிக்கு மீட்டு வந்து வழங்கினான்; பார்ப்பார்க்குக் கபிலைப் பசுக்களையும் குட நாட்டிலுள்ள ஓர் ஊரையும் வழங்கினான்; மழவரை அழித்தான்; மன்னரைப் புறங்கண்டான்; குழவி கொள்வாரின் குடி புறந் தந்தான்; முப்பத்தெட்டாண்டுகள் அரசு புரிந்தான் (பதி. ப. 6). [ஆடற்கலையில் ஆர்வலன் என்பதால் இப்பெயர் பெற்றிருக்கலாம் என்ப: ப. மு. பக். 77.] [சேரர்க்கு மருமக்கள் தாயம் கூறுவோர் இமயவரமபன் நெடுஞ்சேரலாதனை ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மாமனாகவும், வேளாவிக் கோமான் தந்தையாகவும், அவன் தேவி தாயாகவும் கூறுவர்.]

**ஆடுதுறை மாசாத்தனார் - புலவர்.** ஆடுதுறை இவரது ஊர்ப்பெயர். இவர் பாடிய ஒரேபாடல் புறம். 227. சோழன்குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பற்றிக கையறு நிலையில பாடியுள்ளார். ஆலததூர்கிழார், மாறோக்கதது நபபசலையார், இடைக்காடனார், கோவூாகிழார், நல்லிறையனார், வெள்ளைக்குடி நாகனார் முதலியோா சமகாலப் புலவர்கள். கூற்றுவனை நோககி அவர், 'இனி யார் நின்பசி தீர்ப்போர், விரகின்மையின் விததட்டு உணடனை; நீ நனிபேதை' எனப் பாடியிருப்பது அவர்தம் புலமையினைக் காட்டுவதாகும். [ஐயனாரது திருநாமமாகிய மாசாத்தனார் என்பது இவருக்குப் பெயராய் அமைநதது போலும் என்பர் உ. வே. சா. புறநானூறு-பாடினோர் வரலாறு.]

**ஆடுநர் – 1. கூத்தர்.** விழாவின்கண ஆடுநரது–கூத்தரது-வேறுபட்ட கோலம் போல முறை முறையாகத் தோனறி இயங்கி மாய்வது இவ்வுலகத்தியலபு (புறம். 29:22-24). ஆடுநர்க்கு வழஙகிய பேரன் பினன கோப்பெருஞ்சோழன் (புறம் 221:2).

2. ஆடுபவர். தேவசேனையின் பாங்கியருட் சிலர் மயில வடிவமெடுத்துத் தோகை விரித்து ஆடுநர்–ஆடுபவர்-ஆயினர் (பரி. 9:64).

**ஆடுமகள் – 1. தேவராட்டி.** கடவுட்கு இட்ட புதிய தினைக்கதிரை உண்ட மயில், ஆடுமகள்-தேவராட்டி- வெறியாடுவது போன்று வெம்மையுற்று நடுங்கும் (குறு. 105:2-4).

2. விறலி. ஆயினுடைய பொதியில் மலை, ஆடுமகள்-விறலி-அணுகினல்லது அரசர்கள் அணுகுவதறகு அரியது (புறம். 128:6,7). கோடையில நாடு வாடுவதற்கு, ஆடுமகளுடைய அலகுல் வாடுவது உவமை (புறம். 393:21). இன்னியங்கள் ஒலிக்க ஆடுமகள் கயிற்றில் ஏறித் தாளத்திற்கேற்ப ஆடுங்கால் தளர்ச்சி யடைவாள்; இது தேறலை உணடமயில் தளருவதற்கு உவமை (குறி. 190,194). உழிஞ்சில் நெற்றின் குலை ஆடுமகள் அரிக்கோலால் அடிக்கும் பறை போல ஒலிக்கும் (அகம். 151:9,10). தலைவி

கானலில் தனித்திருக்கத் தோழி தன் அணி துறந்து ஆடுமகள் போல அங்கிருந்து பெயர இயலாதவளா யினள் (அகம். 370:13-16). குழல் ஒலிக்க இன்னியம் முழங்க ஆடுமகள், கயிற்றின் மீதேறி ஆடுவாள் (நற். 95:1,2).

**ஆடுவார்** - ஆடுபவர். வையையில் பெருகிய வெள்ளம் ஆடுவார்-ஆடுபவர்-உள்ள சேரியை அடைந்தது (பரி. 7:32). திருப்பரங் குன்றில் பாடுவாரது தாள ஒலியும் ஆடுவாரது தாள ஒலியும் மலையின் எதிரொலியோடு கலத்தலால் அங்குப் பெரிய முழக் கம் உண்டாயது (பரி. 8:109,110). பாடுவார் ஒலியும் ஆடுவாரது ஆடலுக் கொத்த தாள வொலி யும் தேனீக்களின் ஓசையோடு கலந்து மிக்கொலித் தன (பரி. 10:116-118). புது வெள்ளம் வந்த போது புனல் விளையாட்டிற்குச் சென்றவருட் சிலர் ஆடு வாராய்ச் சென்றனர்; வையை நீர் தன்பால் ஆடு வார் காதில் தளிரைச் செருகியது (பரி. 7:43-45). தன்பால் நீராடுவாரது நெஞ்சத்தில் காமத் தன் மையை உண்டாக்கும் இயல்பினது வையை (பரி. 6:105,106). வையை யாற்றில் நீராடுவா ராகிய பெண்கள் ஒருவரை ஒருவர் துரத்தி நீரை அள்ளி வீசினர் (பரி. 7:51,52). தலைவன் வையைப் புனலில் நீராடுவாராய பரத்தையரைப் பன்முறை தழுவினன் (பரி. 16:43). வையைத் துறையில் புனலாடுபவராகிய பரத்தையர் காதலருடைய தோளைப் புணையாகக் கொண்டு அவர்க்குரிய மகளிர் அறியாமல் மறை வாகப் புனலாடினர் (பரி.தி. 2:28-30).

**ஆடூஉ** – ஆண்மகன். இளஞ்சேரலிரும்பொறை வெம் மையுடைய ஆடூஉ - ஆண்மகன்–என்று கூறுமாறு வன்மை மிக்குடையவன் (பதி. 86:4). ஆடூஉ சென் னியில் எருக்கமலர்க் கண்ணியைச் சூடுதலுண்டு (அகம். 301:11,12).

**ஆடை** - துகில். ஆடை–துகில் – பூத்தொழில் செய்யப் பட்டிருந்தது (புறம: 274:1). தலைவன் வளைந்து திரைந்த ஆடையினை உடுத்தியிருத்தல் (புறம. 275:1). முருகன் சிவந்த ஆடையன் (முரு. 206). அம்புத் தொடையினை யுடைய மறவர் (ஆறலை கள்வர்) துவராடையினை அணிந்தனர் (நற். 33:6). எயினர் செந்துவராடை அணிந்தனர் (ஐங். 363:1). ஓராடையை இரு கூறாக்கி உடுக்கும் வறிய நிலை மையிலும் காதலர் பிரியாது வாழும் வாழ்க்கையே வாழ்க்கை (கலி. 18:10,11). தலைவன் ஈர்ந்தண் ஆடை அணிதல் (கலி. 52:11). ஊரவர் ஆடைகளை வெளுக்கும் புலத்தி பரத்தையர்க்குத் தூதாகச் செல்வதும் உண்டு (கலி. 72:14). பரத்தையர் முடி யினின்றும் உதிர்ந்த துகள் சிந்திக் கிடக்கும் தலை வனுடைய ஆடை அவன் பரத்தைமையைக் காட் டும் (கலி. 81:30-32). இடையன் அழகிய துவரூட்டிய ஆடையணிதல் (கலி. 102:37). ஆயர் துவரூட்டிய கரிய ஆடையினை யுடுத்தனர் (கலி. 108:10). தலைவி இழைத்த கூடல் பிறை போலத் தெரிய, அது வளர்ந்து நிறை மதியாகிச் சுடும் என்றெண்ணித் தலைவி அக்கூடலைத் தன் ஆடையால் மூடி மறைத் தனள் (கலி. 142:24-26). திருமால பொன்னிற ஆடையினை உடையவர் (பரி. 3:88). திருப்பரங் குன்றில் ஒருத்தி ஆடை அசைய, அணிகள் பலவும் அசைய, ஆடினாள் (பரி. 21:62). ஐயெனும் ஆவியர் ஆடையர் (பரி.தி. 2:12).

**ஆண்** - 1. **ஆண்மகன்.** ஆணுகரு - ஆண்மகனுக்கு- கூறிய அழகினை யுடையவன் தலைவன் (கலி. 9:10).

2. **ஆண்மை.** வலியஆண் – ஆண்மை - உடைய சிறு வன கல்வியறிவுடையேன என்று கூறினான் (புறம. 346:3). ஆண் மலி யூபம் (தலைவெட்டப்பட உடல் மட்டும் எஞ்சிய ஆண்மைமிக்க கவந்தம்) கணடார்க்கு வருத்தம் செய்யும (பதி. 67:10,11). வல்லாண வாழ்க்கை யுடைய தமிழகெழு மூவர் விற்போரில் பகைவரையழித்து அவ்வெற்றியால் பெற்ற பொருட் களைத் துய்ப்பர் (அகம். 31:13,14). வெட்சியாரை அழித்து ஆனிரை மீட்ட கரந்தை மறவர் வல்லாண் பதுக்கையில தம் ஆண்மையால் அமைத்த பதுக் கையில் கடவுளை வழிபட நடுகல நட்டுப் பரவுவர் (அகம். 35:4-9). தலைவன் சென்ற சுரம் கலலா நீண் மொழிக் கதநாய வடுகரின வலலாண் விளங்கும் அருமுனை கொணடது (அகம. 107:11,12). காமனது ஆணையால வந்த படை தலைவனது ஆண (ஆண்மை) உடைய அழகாகிய மதிலை முற்றி உடைத்துப பின உள்வாயை அழித்தது (கலி. 139: 20-23).

3. **வீரர்.** வீரர் புகழ்ந்த ஒய்மான் நாட்டு நல்லியக் கோடன் பண்புகளில் ஆண - வீரர் - அணி புகுந்து நிலைகுலைத்தலும் ஒன்றாகும் (சிறு. 211).

4. **விலங்கின் ஆண்.** ஈன்ற புலிப்பிணவின் பசியை நீக்கக் கருதிய புலியேற்றை உழைமானின் ஆண் குரலினை உற்றுக் கேட்கும் (அகம். 147:4-7). செந் நாய் தாக்கியதால் அலறி ஓடிய தன் இனத்தினைக் கூட்டுதற்குக் கலைமான் மாலைப் பொழுதில் தன் ஆண் குரல தோன்ற அழைக்கும் (அகம். 199:9-12). பிணைமான் உண்ணுதற்கு அதனபால் விருப்ப முடைய ஏறு இருப்பைப பூவினைத் தான் உண ணாது, தன் ஆண்குரல் தோன்ற அதனை அழைக் கும் (அகம். 321:4-6). ஞாயிறு வெப்பம் தணிந்து மலைசேரும் மாலைப்பொழுதில் கலக்கமுற்ற முதிய மானேறு தனது ஆண்குரல் தோன்ற விளிக்கும் (அகம். 367:1-3). புலியிடத்திருந்து தப்பிய கலை

மான், பிணைமான் தன்னை அடையமாறு தன் ஆண்குரல் தோன்ற அழைக்கும் (ஐங். 373:2,3).

**ஆண்கடன்** - வீரர் செய்ய வேண்டிய கடன். புலி கடிமால் ஆண்கடன் - வீரர் செய்யவேண்டிய கடன் - உடைமையால் பாணர்க்குச் செய்ய வேண்டியவற்றைச் செய்தனன் (புறம். 201:14,15). ஆண்கடன் இறுத்துப் பூண் விளங்கும் அகன்ற மார்பினன் களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் (பதி. 31:14).

**ஆண்குரல்** – ஆண்பறவை. பனைமரத்திலிருந்து ஆண் குரல் - ஆண்பறவை - தன் பெண்பறவையை விளித்தால், அவ்வொலி கேட்ட புலி எதிரோசை உண்டாகுமாறு முழங்கும் (நற். 174:2-4).

**ஆண்டகை 1** - ஆடவரிற் சிறந்தவன். 'தலைவியை வருத்தியவன் வள்ளியங்கானற் கிழவோனாகிய ஆணடகையே; விறல்வேள் அல்லன்' எனத் தோழி செவிலி கேட்பக் கூறினாள் (ஐங். 250:3-5).

2. ஆளுந் தகைமை, மதுகை, அடக்கம், வன்மை முதலிய பண்புகள் உடைய தலைவன் ஆண்டகையை - ஆளுந்தகைமையை - கைவிட்டுச் சில சொல் கூறினான எனத் தோழி தலைவிக்குரைத்தாள் (கலி. 47:2-8).

3. ஆண்மைக் கூறுபாடு. தான் பூண்ட நுகம் ஒரு பாற் கோடித் தளராமற் செலுத்தும் பகடு போலத் தளராத ஆண்டகை - ஆணமைக் கூறுபாடு - பொருந்திய ஊக்க முடையவன் நாலைகிழவன் (புறம். 179:9, 10).

**ஆண்டகையன்** - ஆடவரிற் சிறந்தவன். ஆண்டகையன்- ஆடவரிற் சிறந்தவன் - தன் முறைக்குக் காததிராமல், எழுந்து வருகின்ற பெரும்படையை விரைந்து சென்று விலக்கி முனநின்றான் (புறம. 292:6-8).

**ஆண்டலை** - ஆண்மகன் தலை போன்ற தலையுடைய பறவை. ஒள்ளழல் பற்றி எரிந்த காடு தீந்த கடுவழியில் ஆணடலைப் புள் திரியும் (பதி, 25:6-8). பெருவிழாக்கழிந்த அச்சந்தரும் மன்றத்தில் அழுகுரலையுடைய கூகைகளுடனே ஆண்டலைப்புள் கூவும் (பட். 256, 259). கூனி, 'ஆண்டலைப் புள்ளுக்குத் தன் பெடையீன்ற பறழாகிய மகனே' எனக் குறளனைக் குறிப்பிட்டாள், (கலி. 94:6).

**ஆண்டார்** - காத்தவர். நல்கூர்ந்தார் செல்வ மகளை முன் ஆண்டார் - காத்தவர் - இப்பொழுது காவாராய் அவளைப் புறப்படவிடுதல் கொடிது என்று தலைவன கூறினான் (கலி. 56:9-12). தன் குடையால் நிழல் செய்து உலகை ஆண்டானுக்கும் - காத்தவனுக்கும் - அவ்வுலகை இனி ஆளவரும் அரசனுக்கும் இடைநின்று வருத்தம் தரும் காலம்போல் மாலைக் காலம் தோன்றித் தலைவியை வருத்தியது (கலி. 118:7,8).

**ஆண்டான்** - காத்தவன். ஆண்டார் காண்க.

**ஆண்டு** – அவ்வுலகம் (துறக்கம்). நின்பகைவர் நின்னொடு மாற்றார் எனனும் பெயர் பெற்றுப் போர் புரிய ஆற்றாராயினும் தோற்று இறந்தபின் ஆணடு - துறக்கத்து-வாழ்பவர் ஆதலின் உறுதியாகத் தவஞ்செய்தோரேயாவர் என நெடுஞ்செழியனிடம் மாங்குடிமருதனார் கூறினார் (புறம். 26:16-18). குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனிடம், ஆலூர்மூலங்கிழார் பகைவர் நாட்டிலிருந்தும் ஆண்டுச் செய் நுகர்ச்சி (துறக்க இன்பம்) இங்கும் எய்துதலின் நின் நாட்டையே பரிசிலர் உள்ளுவர் என்று உரைத்தார் (புறம். 38:16,17). மலையமான் சோழியவேனாதியின் தந்தை ஈண்டுச் செய்த நல்வினையினை ஆண்டுச் சென்று துய்ப்பதற்குச் சென்றனன் (புறம். 174:18-20). 'இழை யணிந்த நெடுந்தேரை இரவலர்க்கு அருகாது நல்கியதால் ஆணடு (துறக்கத்து) நீ சென்ற பின்னும் ஈண்டு நீ எய்திய புகழ் நீடு விளங்கும்' எனக் காவட்டனார் அந்துவன் கீரனிடம் இயம்பினார் (புறம். 359:15-18).

**ஆண்டோர்** - ஆட்சி புரிந்த மன்னர். தென்குமரி வட இமயம், குணகுட கடல் எல்லையாக நடுவுபட்ட குன்று, மலை, காடு, நாடு என்னும் இவற்றையுடையோர் ஒன்றுபட்டு வழிமொழியத் தீது நீக்கிச் செங்கோலாட்சி செய்து உரிய வரி பெற்று நடுவு நிலையுடன் சுடர் நேமியால் நிலம் முழுவதையும் ஆண்டோரது – ஆட்சிபுரிந்த மன்னரது - மரபைக் காத்தவன் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை (புறம். 17:1-8). பலர்க்குப் பயனுண்டாகத் தக்க செயல்களைச் செய்து இவ்வுலகம் இன்ப நிலையமாகுமாறு ஆண்டோர் சிலரேயாவர் (புறம். 360:7-9). நின் முன்னோர் நின்போல் அசைவில் கொள்கைய ராதலின் இம்மண்ணுலகினை நின் புகழெல்லாம் உளவாக ஆண்டோராவர் எனச் செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் சிறப்பிப்பர் (பதி. 69:11-17).

**ஆண்மகன்** - ஆடவன். காதல் நோய் அலைத்தலால் கலக்க முற்று வலிமை யழிகின்ற போது தனது காமத்தை வாய்விட்டுக் கூறுவது ஆண்மகனுக்கு- ஆடவனுக்கு-அமையும் (நற் 94:1,2).

**ஆண்மலியூபம்** - ஆண்மை மிக்க கவந்தம். போர்க்களத்தில் தலைவெட்டப்பட்ட உடல் மட்டும் மிஞ்சிய ஆண்மலியூபத்தோடு-ஆண்மை மிக்க கவந்தத்தோடு-அழகிய வடிவில்லாத பேய்மகள் கண்டவர்க்கு வருத்தத்தைச் செய்தது (பதி. 67:10-12).

**ஆண்மை 1 - வீரம்.** ஞாயிறு போன்ற வெந்திறல் ஆண்மையுடன் - வீரததுடன் - நீடு வாழியர் என மருதனிளநாகனார் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை வாழ்த்துவர் (புறம். 55:13,17). மூத்தோர் இறநதாராக, விதி தர வந்த தாயத்தினை (அரசுரிமையை) குடிமக்களை வரி வேண்டி இரக்கும் ஆண்மை குன்றிய உள்ளம் சிறியவன் பெற்றால் அத்தாயம் அவற்குக் கனமுடையதாகத் தோன்றும் (புறம். 75:1-5). போர்க்களத்தே எறிபடைக்கு ஓடாத ஆணமை யுடையவன் கொண்பெருங் கானங கிழவன் (புறம். 154:10). தனது ஆண்மை தோன்ற வீரரை எதிர்நின்று கொன்று வென்றவன் பெருஞ் சாத்தன் (புறம. 242:4,5). ஒரு பெண்ணின் அழகு பகைமை மேற்கொண்டு புகைபடு கூரெரி பரப்பிப் பண்பிலாண்மையை (அருட்பண்பிலலாத மறச் செயலை) புரிதற்குக் காரணமாயிற்று (புறம். 344: 5-9). குராப்பளளித் துஞ்சிய கிள்ளி வளவன் பகைவர் புகழ்ந்த ஆணமையுடையவன் (புறம். 373: 35). துப்புததுறை போகிய துணிபுடைய ஆண்மை கொண்டவன் அக்குரன் (பதி. 14:6). பிறருக்குப் பகுத்துணணும் உணவை ஒருசேரக் கொடுத்த ஆணமையுடையவன் களங்காய்க் கணணி நார் முடிச் சேரல் (பதி. 38:15). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் வணங்கிய சாயனும் வணஙகா ஆணமையு முடையவன் (பதி. 48:9). வேந்தர்தம் தூசிப்படை அழிநது அலற மலையடுக்கத்திலுள்ள நாடுகளைக் கைக் கொண்டு பொருது சினந் தணிநத போர் விருமபும் ஆணமை பெற்றவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 55:17-19). வணங்கிய சாயலும் வணஙகா ஆண்மையும் செல்வக் கடுங்கோ வாழியாதனுக்கு உரியன (பதி. 70:20). பெருஞ்சேரலிரும்பொறையின் வளனும் ஆண்மையும் கொடையும உலக மக்கள் அளவைக் கடந்தன (பதி. 73:16,17). பெருஞ்சேரலிரும்பொறை பகைவரை அழிதத ஆணமை யுடையவன் (பதி. 79:6). வேலெறிந்து பகைவர்க்குத் துன்பஞ் செய்தலை விரும்பும் நீங்கா ஆணமையுடைய நிலையாமை எணணம் மிக்க வீரரின் தலைவன் இளஞ்சேரலிரும் பொறை (பதி. 90.37-39). வணங்காத பகைவரை அழித்த பணிவில்லாத ஆண்மையுடையவன நன்னன் (மலை. 423,424). இல்லத்தில் சோம்பியிருப்பார்க்குத் தம்மைச் சேர்ந்தோர்க்கு உற்றிடத்து உதவுதலாகிய ஆண்மை இல்லை (அகம். 231:1-3). ஆள்வினைக் கெழுந்த அசைவில்லாத உள்ளத்திலுள்ள ஆணமை முனனே இழுக்கக் காமம் பின்னே நின்று தடுக்கத் தலைவனின் இருபாற்பட்ட நெஞ்சம் இருதலைக் கொள்ளி எறும்பு போல் ஒரு தலைப்படாது வருந்தியது (அகம். 339:6-10). தலைவர் பிரிந்து செல்லார் என்று கருதித் தலைவி பிரிவைத் தடுக்கவில்லை; பிரிவைத தெரிவித்தால தலைவி உடன்படாள் எனக் கருதி அவர் அதனைக் கூறவிலலை; அந்நிலையில தலைமக்கள் இருவரிடமும் எழுந்த இரண்டு பெரிய ஆணமைகள் செய்த பூசலினால் நலல பாம்பு கதுவியது போல் தலைவி நெஞ்சம் கலக்கமெய்தியது (குறு. 43).

2. **ஆள்வினை.** பெரியவர் தம் நெஞ்சத்துக் கருதிய ஆணமையை-ஆள்வினையை-நிறைவேறறுவர் (குறு. 341:4,5).

**ஆண்மையர் – ஆளுந்தன்மையுடையவர்.** ஊர் காப்பாளர் (களவுத் தொழிலை அறிந்தவர்களாலே) புகழப்பட்ட ஆண்மையர் - (களவுத தொழிலை) ஆளுந்தன்மையுடையவர் – (மது. 645).

**ஆண்மையோன் - வீரன்.** பேரமர் உழநத போர்க்களத்தில் கோடரி பாய்ந்த மரம்போல் வாளின மேல் வீழ்ந்து கிடந்த ஆணமையோனை-வீரனை-கண்டோர் வருந்தி அவன தாயாகிய பேரிற்பெணடை நோக்குமாறு வேணடுவர் (புறம. 270:11,13).

**ஆணணி புகுதல் - வீரர் அணியிலே சென்று அவ்வணியைக் குலைத்தல்.** ஒய்மான நாட்டு நல்லியக் கோடனுடைய பணபுகளில ஆணணிபுகுதல-வீரர் அணியிலே சென்று அவ்வணியைக் குலைத்தல-ஒனறாகும் (சிறு. 211).

**ஆணம் – அன்பு.** ஆணம்-அனபு-இலலாத பொருளாகிய தமக்கும் ஒருருவந் தாங்கி வநது சிவபெருமான் அருளிய திறத்தை நல்லந்துவனார் வியநது போறறுகினறார் (கலி. 1:17).

**ஆணி - 1. சுள்ளாணி.** யாழ்ப் பததலினைச சேர்ததற்கு முடுக்கபபெற்ற ஆணி-சுளளாணி-நண்டின் கண போன்றிருக்கும் (பொரு. 9,10). யாழப பத்தலில் அமைக்கப்பட்ட துளைகள் நிரமபும்படி ஆணிகள இறுகத் தைக்கப பெற்றன (மலை. 27).

2. **ஆதாரம்.** யாவரும தொழத்தக்க மேகம் இவ்வுலகிற்கோர் ஆணியாக-ஆதாரமாக - விளஙகுகினறது (நற். 139:1).

**ஆணு - அன்பு.** வரிகளை யுடைய வணடின ஆணுவினால்-அன்பினால் - மாவின் அரும்பு மலருமா (பரி. 10·5).

**ஆணை - 1. கட்டளை.** தொன்மையான ஆணை-கடடளை-உடைய நல்லாசிரியர் நலல வேளவிததுறை போகியவர்களாக விளங்கினர் (மது. 761). தொல்லாணை நல்லாசிரியர், கேட்டல தொழிலை யுடைய நூல்களை முழுதும் கற்றுத் துறைபோகியவர்

(பட். 170). 'நான் செய்யாத குறைகளைக் கூறிச் சினவாதே; உன் ஆணைவழி ஒழுகுதலன்றி அதனைத் தப்புவார் யார்' என்று ஊடலுணர்த்தும் தலைவன் தலைவியிடம் கூறினான் (கலி. 81:27,28). காமனது ஆணையால் வந்த படை தலைவனது ஆண்மை யுடைய எழிலாகிய மதிலை முற்றி உடைத்தது (கலி. 139:20-23).

2. சூளுரை. ஆணை கூறுவார் வள்ளியின்மேல் ஆணை-சூளுரை-கூறுவதுண்டு (பரி. 8:69).

**ஆத்தி** - ஒருவகை மலர். தலைவியும் தோழியும் மலைச் சாரலில் பறித்த மலர்வகைகளில் ஆத்தியும் ஒன்று (குறி. 87).

**ஆத்திரள்** - பசுக்கூட்டம். ஆத்திரளை-பசுக்கூட்டத்தை-மீட்குங்காலை, வீரர் இரிந்தோடவும் தான் ஓடாது நின்று, அம்புபட்டிறந்த வீரனின் நடுகல்லை வழிச் செல்வோர் தொழுது செல்வர் (புறம். 263:3-8).

**ஆத்திரை** - பயணம். (யாத்திரை என்பதன் மரூஉ). கள்ளைக் குடிக்கும் விருப்பொடு ஆத்திரை - பயணம் - செல்வோர், நுங்கினைக் கைக்கொண்டு பெயர்வர் (குறு. 293:1-3).

**ஆதன்** – சேரமன்னர்களின் குடிப் பெயர்களுள் ஒன்று. செல்வக் கடுங்கோ வாழியாதனை 'ஆயிர வெள்ள ஊழி வாழி யாத வாழிய பலவே' எனக் கபிலர் வாழ்த்துகின்றார் (பதி. 63:20,21). (ஆதன் என்பது குடிப் பெயராதலை ஆதன் அவினி (ஐங். 1:10), ஆதன் அழிசி (புறம். 71:13), ஆதன் எழினி (அகம். 216:4), ஆதனுங்கன் (புறம். 153:4) என்னும் சேர மன்னர் பெயரால் அறியலாம).

**ஆதன் அவினி** - சேரமான்களில் ஒருவன் (ஐங். 1. பழைய உரை). ஓரம்போகியாரால் ஆதன் அவினி ஐங்குறுநூற்று வேட்கைப் பத்தில் பாட்டுடைத் தலைவனாகப் பாடப் பெற்றவன்.

**ஆதன் அழிசி** - குறுநில மன்னன். ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் குறிப்பிடும் நண்பர்களுள் ஆதன் அழிசி ஒருவனாவன் (புறம். 71:13).

**ஆதன் எழினி** – குறுநில மன்னன். வளம்பொருந்திய செல்லூர்க்குத் தலைவன்; 'ஆதன் எழினி கைவேல் தைத்த யானை வருந்துவதுபோலச் சேரியில் தன்னைக் கண்டு தலைவன் பெண்டிர் வருந்துவாராக' எனப் பரத்தை கூறுகின்றாள் (அகம். 216:11-14).

**ஆதன் ஓரி** - குறுநில மன்னன். வல்விலோரி என்றும் குறிக்கப் பெறுவான் (புறம். 152 துறைக்குறிப்பு). (கொல்லி) மலையின் தலைவன். இரப்போர்க்கு யானைகளைப் பரிசாக அளிப்பவன்; இடையறாது போர் செய்பவன்; இவன் பாணர் சுற்றம் மகிழுமாறு வெள்ளி நாராற் கட்டப்பெற்ற பொன்மாலைகளையும் யானைகளையும் அளித்தமையால் அச் சுற்றம் வறுமை நீங்கிப் பாடலையும் ஆடலையும் மறந்தது எனப் பரணர் அவனைப் பாராட்டுவர் (புறம். 153).

**ஆதனுங்கன்** - குறுநில மன்னன். கள்ளில் ஆத்திரையனார் இவனை அறம் விளங்கும் துறையாக உருவகிக்கிறார்; 'என் நெஞ்சந் திறப்போர் நின்னைக் காண்பர்; என்னை யான் மறக்குங்காலை தான் உன்னை மறப்பேன்' எனக் கூறி ஆதனுங்கன்பால் உள்ள ஈடுபாட்டினைப் புலப்படுத்தியுள்ளார் (புறம். 175:1-5,10). அப்புலவர் ஒரு வள்ளலைப் பாடும்போது ஆதனுங்கனைப் போல நீயும் என் சுற்றத்தின் பசித்துன்பம் நீங்க நன்கலம் வழங்குவாயாக' என அவனைப் படர்க்கையில் வைத்துப் பாராட்டுவர் (புறம். 389:13-15).

**ஆதி** - 1. குதிரையின் நேரோட்டம் (கதிவகைகளுள் ஒன்று). மதுரைமாநகரத்து வீதிகளில் பிற படைகளுடன் வலவனால் முறையாகப் பயிற்றப்பெற்ற குதிரைப் படை ஆதி என்னும் செலவில் ஓடியது (மது. 390,391). வினைமுற்றி மீளும் தலைமகனின் தேரில் பூட்டப்பட்ட நான்கு குதிரைகளின்மீது தாற்றுக் கோல் தீண்டினால் அவை செல்லத் தொடங்கும் ஆதி என்னும் ஓட்டத்திற்கு இவ்வுலகிடம் போதாது (அகம். 104:4-6). தித்தன், நடையாற் சிறப்புற்றனவும் ஆதி என்னும் நேரோட்டத்தில் புகழ்பெற்றனவும் ஆகிய குதிரைகள் உடையவன் (அகம்.122:19,20). 'நிலம் வடுக்கொளும்படி விரைந்து ஆதி என்னும் செலவிற் போகும், அரசரால் மதிக்கத் தக்க குதிரைகளைத் தேரிற் பூட்டுவாயாக' என வினைமுற்றிய தலைவன் தேர்ப்பாகற்குச் சொல்கிறான் (நற். 81:1-5). பரத்தையைக் குதிரையாகவும் தலைவனை வாதுவனாகவும் உருவகம் செய்த தலைவி அத் தலைவனை நோக்கி, 'நீ காதலித்து ஏறிய குதிரைக்குச் சென்டு வெளியிலன்றி நிலா முற்றத்திலே ஆதி என்னும் நெடுஞ் செலவைக் கற்பித்து இளைத்தாய்' எனப்புலந்து கூறுகிறாள் (கலி. 96:18-21).

2. பழமை. பரத்தையோடிருந்து வந்த தலைவன் தன் மெய் வேறுபாட்டுக்குக் காரணம் குதிரையேறி வந்தமையே என்று மறைத்துக்கூற, உண்மையறிந்த தலைவி, பரத்தையாகிய குதிரையின் மீது இனி ஏறி வரின் அஃது உன் ஆதி - பழமை-உருவை அழிக்கும் என்று கூறுகிறாள் (கலி. 96:36,37).

3. காரியாதி (குறுநில மன்னன்). இவன் மல்லி என்னும் ஊர்க்குத் தலைவன்; பரிசிலர்க்குப் புன்றித் தசையுடன் வெண்சோற்றை விடியற் காலையில்

வழங்குவான் (புறம். 177:13-17). காரியாதி காண்க.

**ஆதி அந்தணன்** - நான்முகன். சிவன் முப்புரங்களை எரித்தபோது ஆதி அந்தணன்-நான்முகன் - தேர்ப் பாகனாகத் தேரைச் செலுத்தினான் (பரி. 5:22-25).

**ஆதி அருமன்** – வள்ளல். அருமன் எனவும் அழைக்கப் பெறுவன. கள்ளில் ஆத்திரையனார் குறுந் தொகையில் இவனைப் பாராட்டியுள்ளார்; இவ னது பனைவளம் சான்ற பழைய ஊர் 'ஆதி அருமன் மூதூர்' எனச் சிறப்பிக்கப்பட்டுள்ளது; அவ்வூர் சேயிழையாகிய பரத்தைக்கு உவமை (குறு. 293). அருமன் காண்க.

**ஆதி மந்தி** - கரிகாலன் மகள். 'தன் காதலனை இழந்து வருந்திய ஆதிமந்திபோல அறிவு மயங்கி வருந்தி உழல்வேனோ' என்று வற்புறுக்குந் தோழிக்குத் தலைவி கூறினாள் (அகம். 45:13-15). ஆதிமந்தி தன் கணவனைக் காணப்பெறாமல் 'வனப்பமை மாலையணிந்த சுருண்ட மயிரினையுடைய பொரு நனைக் கண்டீரோ' என்று எதிர்வருவோரை யெல்லாம் வினவிப் பெரிதும் மயங்கி வருந்தினாள் (அகம. 76:7-10). 'கண் நீர் மல்க நோய கூர்ந்து ஆதி மந்தியைப் போல நானும் அறிவு வேறுபட் டுத் துன்புறுகின்றேன்' எனத் தலைவி தோழிக்கு உரைத்தாள் (அகம். 135:5,6). கழாஅர்ப் பெருந் துறையினில் ஆடிய ஆட்டனத்தியைக் காவிரி கவர்ந்து கொள்ள, அவனைக் காணாது திசை யெல்லாம் தேடி மயங்கி வருந்திய ஆதிமந்தி அவனை மருதி என்பாள் காட்டக் கண்டாள் (அகம். 222:5-12). கணவனை இழந்த ஆதிமந்தி 'என் கணவன் ஆட்டனத்தியைக் கண்டீரோ' என்று வினவியும் நாடுதோறும் ஊர்தோறும் சென்று தேடியும் காணமாட்டாமையின் அவனைக் கடல் கொண்டதோ, புனல் ஒளித்ததோ என்று அரற்றி அழுதனள் (அகம் 236:16-20). இவர் பாடல் குறுந்தொகை 31-ஆம் பாடலாக அமைந்துள்ளது. ஆதிமந்தியார் காண்க.

**ஆதி மந்தியார்** - புலவர். ஆதிமந்தியெனவும் வழங்கப் பெறுவர். நொதுமலர் வரைவுழித் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது என்னும் துறை யில் இவர் குறுந்தொகைப் பாடல் (31) உள்ளது. ஆதி மந்தி காண்க.

**ஆதிரை** – திருவாதிரை நாள். முன்பனிப் பருவ மார் கழி மாதத்து ஆதிரையில் - திருவாதிரை நாளில் - சிவபெருமானுக்கு விழா வெடுக்கத் தொடங்கினர் (பரி. 11:76-78).

**ஆதிரை முதல்வன்** - திருவாதிரை நாளுக்குத் தலைவன் (சிவபெருமான்). இவ்விறைவன் பெயரால் குறிக்கப் பெறுவோர் பதினோருருத்திர ராவர் (ஏகாதசருத் திரர்) (பரி. 8.6).

**ஆதிரை முதல்வனிற் கிளந்த நாதர் பன்னொருவர்** - சிவபெருமான் பெயராற் சொல்லப்பெறும் உருத்திரர் பதினொருவர் (ஏகாதசருத்திரர்). இவர் பரங்குன்றத் தில் முருகனை வழிபடவந்த வானவரில் ஒரு வகை யினர் (பரி. 8:6, 7).

**ஆதிரையான்** - ஆதிரை நாளுக்கு உரியவன் (சிவபெரு மான). ஆதிரையானின் - சிவபெருமானின் - மேனி யது நிறமொப்பச் சண்பகம் மலர்ந்தது (கலி. 150: 20).

**ஆந்தை** - 1. கோப்பெருஞ்சோழனின் நண்பராகிய புலவர். பிசிராந்தையார் அன்னச் சேவலைத் தூது விடுக் குங்கால், 'நீ கோப்பெருஞ்சோழன்பாற் சென்று, பிசிர் என்னும் ஊரைச் சேர்ந்த ஆந்தை - பிசிராந் தையார் - என்பாரின் அடியுறை என்று கூறினால், அவன் நினக்கும் நின் பெடைக்கும் அணிகலன்கள் நிரம்ப அளிப்பான்' என்று கூறினார் (புறம். 67: 11-14).

2. குறுநில மன்னன். ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியனுடைய நண்பர்களில் ஆந்தை-குறுநில மன்னன் - ஒருவனாவான். அவன் எயில் என்னும் ஊர்க்குரியவன் (புறம. 71:12).

**ஆநியம்** - நல்லநாள். சிறிது வடக்காகச் சாய்ந்த வெள்ளி, மழைக்குப் பயன்படும் மற்றைக் கோள் களுடன் கூடும் ஆநியத்தில் - நல்ல நாளில் - மழை பெய்யும் (பதி. 24:24-26). பயங்கெழு வெள்ளி மழைக்கு உடலான மற்றைக் கோள்களுக்குச் செல்லும் ஆநியத்தில் நிற்க மழை பெய்யும் (பதி. 69:14).

**ஆப்பி** - சாணாகம் (சாணம்). இறந்துபட்ட தன் கண வற்கு உணவு படைத்தற பொருட்டு, முறம் போலுஞ் சிறிய இடத்தினைத் துடைத்துத் தன் கண்ணீரால் ஆப்பி - சாணம - கொண்டு தலைவி மெழுகினாள் (புறம. 249:10-14).

**ஆம்** - 1. ஈரம். பாலை நிலத்துள்ள நீரற்ற சுனைகள் ஞாயிற்றின் கதிர் ஆம் - ஈரம் - அறக் காய்வ தால் அச்சுனைகளிற் சொரியப் பெறும் நெல பொரியத்தக்க வெப்பமுடையன (அகம். 1.12).

2. நீர். அந்தணர்க்குப் புரவலன் ஆம்-நீர் - இருந்த தண் அடை (மருதநிலத்தூர்) நல்கினான் (புறம. 362: 8, 13). பெரிய மலையிலுள்ள ஆம் அறப்புலர்ந்த கலவழியில் தலைவன் பிரிந்து சென்றான (அகம்.75: 8, 9). உயர்ந்த மலையின் அழகிய உச்சியிடத்தே ஆம் ஊர்ந்து இறங்குவது யானையின் கவுளின

இடத்தே மதநீர் இழிவதற்கு உவமை (அகம். 205: 16-18). தன் மடப்பிடி முதுகினைத் தைவர ஆம் இறங்கி யோடும் மலைப் பக்கத்தில் வேழம் அரிதில் துயிலும் (குறு. 308:3-5). குளிர்ச்சி மிகவுடைய வாடை அலைக்கும் முன்பனிப்பருவத்தில் மலைப் பக்கத்தே ஆம் மிக்கு ஒழுகுதல் (ஐங். 223:2,4). மலையினிடத்தே ஆம் இறங்கி விழும் (கலி. 48:1).

3. குளிர்ச்சி. இளங்கன்றை யுடைய சிவந்த பசு மன் றத்துப் பலாப்பழத்தை உண்டு சிறிய மலையின் கண்ணுள்ள ஆம்-குளிர்ச்சி-மிக்க நீரைப் பருகும் (நற். 213:2-5).

**ஆம்பல் - 1. நீரில் வளரும் கொடியினம்.** தண்ணிய மருதத்தில் தோன்றிச் செழிப்பனவற்றுள் மலர்ந்த ஆம்பலும் ஒன்றாகும் (புறம். 16:13-16). பொய்கை யில் தாமரை, நெய்தல், நீலம் ஆகியவற்றோடு மெல்லிய இலையினையும் வண்டுகளையு முடைய ஆம்பல் மலர்கள் நிறைந்திருந்தன (மது. 249-253). பழனங்களில் நெருப்பினைப் போன்ற தாமரை யோடு ஆம்பல் மலர்ந்து விளங்கின (பதி. 19:19,20). எருமை புகுந்துழக்கிய சேற்றினை யுடைய கழனி யில் நெய்தலும் ஆம்பலும் தழைத்தன (ஐங். 96:1, 2). நீர் நிறைந்த வயலில் மலர்ந்த நெய்தற் பூவோடு நிறைத்த இதழ்களையுடைய ஆம்பல் மலர்களை மகளிர் பறித்து விளையாடுவர் (கலி. 75:1-4). வையை யாற்றின் இருசார் கரைகளிலும் மலர்ந்து மணம் வீசிய மலர்களில் ஆம்பலும் ஒன்று (பரி. 12:78-81). மணத்தினை ஆராயும் நாட்டமுடைய வண்டு சிறிய வெள்ளிய ஆம்பல் மலரில் ஊதும் வளமுடை யது பண்ணனது சிறுகுடி (புறம். 70:11,12). மேகம் பெய்யாமல் நீங்குதலால் நீர்நிலைகள் சேறு உலரும் காலத்திலும் துளையுடைய தாளைக் கொண்ட ஆம்பல் இலையின் நிழலில் ஆண் நத்தை சங்கினை மணக்கும் வளமுடையது என்று சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னியின் நாட்டுவளம் புனையப்பட்டுள்ளது (புறம். 266:1-5). பல்யானைச் செல்கெழு குட்டுவனால் அழிக்கப்பெற்ற பகைவர் நாடு, முன் தாமரையையும் ஆம்பலையும் அறா யாணராகக் கொண்டிலங்கியது (பதி. 23:23-25). அருவிநீர் பெருகுமிடத்தில் ஆம்பல் தழைத்து விளங் கும் முன்றுறை உடையது அழகிய பறம்பு (அகம். 356:18,19). தேனூர் பகலில் தோன்றும் தீயினைப் போன்ற ஆம்பல் நிறைந்த வயல்களையுடையது (ஐங்.57:1,2). ஆம்பல் நிறைந்த வயலும் பொய்கையு முடையது தலைவன் ஊர் (நற். 200:6,7). விளையாட் டாயத்திலுள்ள வளையணிந்த மகளிர் கேழற்பன்றி உழுத சேற்றினைக் கிளறினால், அதன்கண் ஆமை முட்டையும் ஆம்பற் கிழங்கும் பெறும் வளமிக்கது மாவிலங்கை (புறம். 176:1 4). செவ்வேளின் குன்றில் மகளிர் வாய்போன்ற ஆம்பல் மலர்ந்திருக்கும் (பரி. 19:75). மாலைக்காலத்தில் ஆம்பலின் அழகிய இதழ்கள் தளையவிழும் (குறி. 223,230). திரண்ட தண்டினை யுடைய ஆம்பல் கன்னி விடியலில் தாம ரையினைப் போல மலரும் (ஐங். 68:1,2). வெள்ளிய ஆம்பல் மலர் மதிநோக்கி மலரும் (கலி. 72:6). கொக் கின் புல்லிய புறத்தினை ஒத்த நீராம்பல் மாலை யில் குவியும் (குறு 122:1-3). அழகு பொருந்திய மலரையும் உட்டுளையுடைய திரண்ட தண்டினை யும் கொண்டது ஆம்பல் (குறு. 178:2,3). பெண்யா னையின் காதைப் போன்ற இலையினையும் கொக் குப் போன்ற கூம்பிய அரும்பினையும் அதற்கேற் பத் திரண்ட தண்டினையும் கொண்டு விடியற் காலத்தே வானில் தோன்றும் வெள்ளியைப் போலப் பொய்கையில் ஆம்பல் மலர்ந்து விளங்கும் (நற். 230:1-4). ஆழமான நீரில் முளைத்த ஆம்பலுக்கு (அரும்பு) கொக்கின் கூரிய அலகு உவமை (நற். 100: 2,3). ஆம்பலின் அரும்பு கொக்கின் குவிந்த நிலை போன்றது (நற்.280:1,2). பொய்கையி லுள்ள ஆம் பலின் அழகிய நிறமமைந்த அரும்பினை வண்டுகள் ஊதி மலரச் செய்யும் (குறு. 370:1,2). கடற்கானலி லுள்ள கண்டல் மரத்தின் காய், மிக்க காற்றினால் உப்பங்கழியினில் விழ, அதனால் மோதப்பெற்று அசையும் ஆம்பல் சிறுவெண்காக்கை கொட்டாவி விட்டாற்போல வெளிதாக மலர்ந்தது (நற். 345:1-5). குவிந்திருந்து விரியும் அரும்பு மலர்ந்த ஆம்பற்பூ தேன் பரந்துள்ள கள்ளுண்ணும் வள்ளத்திற்கு உவமை (புறம் 383:7,8). தலைவி ஆம்பல் மலரினும் மெல்லியள் (குறு. 84:5). அழகு குறைந்த மாமைக்கு நார் உரித்த ஆம்பல் தண்டு உவமை (நற். 6:1,2). பகலில் தோன்றும் தீயினைப் போன்றது ஆம்பல் (ஐங். 57:1,2). மகளிர் வாய் போன்றது ஆம்பல் (பரி. 19:75). ஆம்பல் மலர் மணம் வீசும் தேன் பொதிந்த சிவந்த வாயை யுடையவள் தலைவி (குறு. 300:2). மகளிர் ஆம்பலைப் போன்ற சிவந்த வாயினையுடை யவர் (பரி.8:116). வையைக்குச் சென்ற மகளிரிற் சிலர் ஆம்பலைப் போன்ற தங்கள் வாயில் மதுவள் ளத்தை வைத்து மதுவை உண்டனர் (பரி. 10:78). பசப்புற்ற தலைவியின் கண்கள் உட்டுளை பொருந் திய தண்டினை யுடைய ஆம்பல் தாதினது நிறங் கொண்டன (ஐங். 34:2,3). வீட்டில் தங்கும் குருவி யின் சிறகு வாடிய ஆம்பல் மலர்போன் றிருந்தது (குறு. 46:1,2). கொக்கின் புல்லிய புறத்தினை ஒத்தது நீராம்பல் (குறு. 122:1-3). மாரிக் காலத்து ஆம்பல் மலர் கொக்கின் தோற்றத்திற்கு உவமை (குறு. 117:1, 2). மகளிர் மலர்ந்த ஆம்பற் பூவின் அகவிதழால் அமைந்த தழையாடை யணிந் தனர் (பதி. 27:3). மகளிர் கழுநீர், ஆம்பல் ஆகிய

வற்றின் இதழ் ஒடியாத பூக்களுடன் கூடிய தழை உடை ஆகததின்கண் அலைத்திட விளையாடுவர் (அகம். 156:9-11). வயலைக் கொடியை ஆம்பல் தழை யொடு ஆடையாக அணிந்து மகளிர் விழாவில் ஆடினர் (அகம். 176:13-15). வயலிலே மலரும் ஆம்ப லின், தொடுக்கப்பெற்ற மூட்டுவாயமைந்த அசை யும் தழையினை மகளிர் தம் அல்குலில் ஆடையாக அணிவர் (ஐங. 72:1, 2). நீரில் மலர்ந்த வெள்ளாம் பலினா லாகிய தழையுடை தன் தொடையில் மாறி மாறி அசையுமாறு அணிந்து பரத்தை தலைவ னைக் காணற்குச் சென்றாள் (குறு. 293:5-8). விழாக் காணச செலலும் மகளிர் வயலிலுள்ள வெள்ளிய ஆம்பலின அழகிய நெறிப்பினையுடைய தழை யினை அல்குலின்மேலே அழகுபெற உடுத்துச் செல வர் (நற். 390:4-6). தலைவியும் தோழியும் அருவியா டிய பின்னர்ப் பறித்துக் குவித்த மலர்களில் ஆம்ப லும் ஒன்று (குறி. 62). தலைவி ஆம்பற் பூவின் பகுக் கப்பட்ட இதழ்களால் ஆகிய நிறம் பொருந்திய பருத்த மாலையை அணிதல் (அகம். 136:27, 28). மக ளிர் ஆம்பல் மலரைக் கூந்தலிற் செருகிப் புதுவெள் ளம வரும் பெரிய நீர்த்துறையில் புனல் விளை யாட்டயர்வர் (குறு. 80:1-3). திதகன் மகளாகிய ஐயை ஆம்பல் மலரானாகிய மாலையினை அணிந் திருந்தாள் (அகம. 6.1). பரதவர் பிள்ளைகள் மண லிற் படர்ந்த அடமபம் பூவையும் நீரில மலர்ந்த ஆம்பல் மலரையும் அணிநதனர் (பட். 65,66). உழ வர் நீரில் மலர்ந்த ஆம்பற் பூவினைத தலையிற் சூடுவர் (பதி. 62:16, 17). துணங்கையாடிய மகளிர் தாங்கள் ஆடிய இடங்களில் அணிநது வீழ்த்திய ஆம்பல் மலர்களை, வளைந்த தலையினையுடைய முதிய பசுக்கள் உண்டன (பதி. 13:5, 6). கலத்தி னைக் கழித்த கைம்மை மகளிர் இளமையில் தமக குத் தழையுடை நலகிய ஆம்பலினிடத்தே தோன் றும் அல்லி யரிசியை உணணுவது மரபு (புறம். 280: 12-14). இளைய மகளிர் ஆம்பல இலையுடை அணி வதும் கைம்மை மகளிர் ஆம்பலின அல்லியிடத் துள்ள புல்லரிசியை உண்பதும வழக்கம் (புறம். 248). ஆம்பல மலராற் செய்யப் பெற்ற அவியலை நெல்லரிசிச் சோற்றுடன் உண்ணும் வழக்கமுண்டு (அகம. 78:17,18). ஆழமான நீரில வளாந்த ஆம்பல் இலையின புறம், கூரிய நகங்களை யுடைய வெள வாலின் சிறகிற்கு உவமை (குறு. 352:1,2). வயலில் நெல்லறுக்கும் உழவர், முகையவிழும மெல்லிய இதழ்கள நெகிழ்ந்த ஆம்பலின அகனற இலையால் மதுவைப் பருகுவர் (புறம. 209:2-4). பாக்கதது மகளிர் ஆம்பலின அகன்ற இலையில் சோற்றையும பிரப்பங் கனியையும் பெய்து, விடியற் காலத்தில தம் கணவர்க்கு அளிபபர் (அகம். 196·4-7). வள்ளை இலைச் செறிவில் உறங்கிய ஆமை அதனை வெறுத்து, நீர்த்துறையில் உண்போரால் சிந்தப் பெற்ற பனங்கள்ளை உண்டு, களிநடையொடு வயலைக் கலக்கிச் சென்று ஆம்பலின் மெல்லிய இலைகளுக்குள் ஒடுங்கிக் கிடக்கும் (அகம் 256: 1-7). தூணடிலிலுள்ள இரையை விழுங்கிய வரால்மீன் ஆம்பலின மெலலிய இலை கிழியுமாறு துள்ளி யது (அகம். 36·1-4). கரிய கொம்பினை யுடைய எருமை ஆம்பலின் மெல்லிய இலை கிழியுமாறு குளத்தினுட் புகுந்து குவளைமலரை நிறைய உண் டது (அகம. 56:3-5). அரத்தின் வாயபோனற முள்ளு டைய பிரப்பங்கொடி பொய்கைநீரில உள்ள ஆம் பலின் அகனற இலையினைச் சுற்றிக்கொள்ளுமாறு வாடைக் காற்று வீசியது (அகம். 96.3-6). தலைவியின் மேனியில் பரவிய அழகிய மாமை, நார் உரிக்கப் பெற்ற ஆம்பல் தண்டின நிறத்தினும் மிக்கு ஒளிரும் (ஐங. 35:2-4). கழனியில் தோனறிய ஆம்பல் தண்டி னாற் செயத வளையணிந்த மகளிர் அவலை உண்டு குளிர்ந்த நீரில் பாய்ந்துஆடுவர் (புறம. 63:12,13). ஆம்பல் தண்டினை வளையலாகச் செயது கையில் அணிந்து கொணடு மகளிர் மணற் குன்றேறி நீரில் பாய்நது விளையாடுவர் (புறம். 352:5,6). நீர்மிக்க அடைகரையிலுள்ள நண்டு, அந்நீரிற் படிந்து கிடக்கும் ஆமபல் தண்டை அறுககும் (ஐங். 21:1,2). கடைசியர் வயலில் வளர்ந்த நெயதலை ஆம்ப லோடு பறித்து அகற்றினர் (புறம. 61.1, 2). வயலில் வேலை செய்யும் மகளிர் ஆங்கே நீரில மலர்ந்த ஆம்பலோடும் நெய்தலோடும் நெல்லை அறுத்தனர் (பதி. 71 1,2). வயலில் நெற்கதிரோடு அறுபட்டுக் களத்திற் கொணடு வநது போடப்பெற்ற ஆம்பல மலர்களைக் கன்றை ஈன்ற பசு உண்ணும; அவற் றில எஞ்சியவற்றை உழுது, ஓயந்த நடையுடைய எருது தின்னும் (நற். 290:1-3). எருமைக்கடா மீன் திரியும் பொய்கையிலுள்ள ஆம்பல் மலரை மேயும் (அகம். 316:1, 2). மணம் மிக்க மலர் நிறைந்த பொய்கையிலுளள ஆம்பலை எருமைப் போதது சிதைத்தது (ஐங. 91:1, 2). எருமைக் கடாக்கள் ஆம்பல மலரை உண்ணும் (ஐங்.93:1, 2). கெண்டை மீன் பாயவதனால் மலர்நத ஆம்பல் வண்டுகளைக் கவரும் (ஐங். 40:4, 5). கரும்பு நடுவதற்கு அமைக்கப பெற்ற பாத்தியிடத்தே ஆம்பல செழித்து வளர்ந்து சுரும்பு பசி களையும் (ஐங். 65:1). மிக்க காறறு மோதியதால் ஆம்பல் குவிந்து தாமரை மலரிடத்தில தாழ்ந்து நின்றது; இதற்கு இளவரசி சினந்த போது தோழியர் குழாம் கைதொழுதிறைஞ்சும் காட்சி உவமை (நற். 300:1-4).

2. ஒருவகைப் பண். மாலைக் காலத்தில் ஆயர்,

ஆம்பல் என்னும் பண்ணினைக் குழலிடத்தே எழுப்புவர் (குறி. 221, 222).

3. குழல் எனனும் இசைக் கருவி. விழுப்புண் எய்திய வீரனை அவன் மனையிடத்தே சேர்த்து, மகளிர் இரவந் தழையோடு வேப்பந் தழையினையும் மனைக்கண் செருகி, வெண்சிறு கடுகைச் சிதறி, பல்லியத்தோடு ஆம்பல் - குழல் என்னும் இசைக் கருவி-ஊதி, மணியடித்துக் காஞ்சி பாடி மணப்பொருளைப் புகைத்துக் காப்பது மரபு (புறம். 281). ஆக்களை மீட்டு வரும் கோவலர் ஆம்பலொடு பொருந்த யாழில செவ்வழிப் பண் பாடினர் (அகம். 214:12, 13). ஒலிககின்ற போர்க் களத்தில (களம் பாடுவாரோடு) இன்னியம் இசைப் போர் ஆம்பலந்தீஙகுழல் இசைப்பர்; ஆற்றாளாய தலைவி வருந்தி அழுவதற்கு இஃதுவமை (நற். 113: 10-12). மாலையில் தழல, தட்டை ஆகிய கருவிகளின் பின்னர் வாச்சியக்காரர் இனிய குழலாகிய ஆம்பலினை இசைப்பர் (ஐங். 215:3, 4).

4. பேரெண்ணினைக் குறிக்கும் பெயர். அடையடுத் தலையறியாத, பூக்களில்லாத ஆம்பல் என்னும் எண்ணும் ஆயிர வெள்ளம் என்னும் எண்ணும் ஆகியவற்றின் அளவுளவூ பல ஊழிக் காலம் வாழகவெனச் செல்வகக்டுங்கோ வாழியாதனைக் கபிலர் வாழ்த்தினர் (பதி. 63:19-21). பகைவர் திறையாகத தநத அணிகலனகள, பொற் பாவை, வயிரம் ஆகியவறறைச் சேரலாதன் ஆம்பல் என்னும எண்ணளவு மாந்தை நகர் மனை முற்றத்தில் குவித்தனன (அகம. 127:3,6-9). நெய்தல் குவளை, ஆமபல, சங்கம, கமலம், வெள்ளம் என்று கூறப்பெறும் எணகள் குறிக்கும் கால அளவு கழிந்தபின் உயிர்கள் உளவாதற் பொருட்டுத் திருமால் கேழல் (வராகம்) வடிவங் கொணடு நிலத்தினை எடுத்தார் (பரி. 2:13-16). பலவாக அடுக்கும் ஆம்பல எனனும் எண் இத்துணையதென்று எணண முடியாத அளவு பல வடிவினையுடையவர் திருமால் (பரி. 3:44,45).

**ஆம்பலங் குழல் - ஆம்பலென்னும பண்ணையுடைய புல்லாங்குழல்.** இஃது ஆம்பற்தழல் எனவும வழங்கும் (கலி. 108:62). [வெண்கலத்தால ஆமபற் பூ வடிவாக அணைசு பண்ணி நுனியில் வைக்கப பெற்ற புல்லாங்குழல் என்றும் கூறப்படும்: நற். 113.11, பி.நா. உரை.] தலைவன் பிரிவினாற் கலங்கும் தலைவி, போர்ககளம் பாடும் இசைவாணர் விரைவாக ஊதும ஆம்பலங் குழலின இசை போல அழுது வருந்தினள (நற். 113.10-12). 'குரவையாடும மனறததிலுளள நின பெணடிர் கேளாமல் ஆம்பற்குழலால் குறி செயது வருக' என அகப்புறத் தலைவனிடம் அத்தகு தலைவி கூறல் (கலி. 108:60-63).

**ஆம்பி – 1. காளான்.** பெருந்தலைச் சாத்தனார் சமைத்தலை மிக மறந்த தமது வீட்டின் புடையுயர்ந்த அடுப்பில ஆமபி-காளான்- பூததததாகக் குறிப்பிட்டுள்ளார் (புறம். 164:1,2). ஆம்பியின் வெண்முகை போன்றது கட்டித்தயிர் (பெரு. 157, 158).

2. பன்றிபபத்தர். (நீர் இறைககும் ஒருவகைக் கருவி). ஏற்றத்துடனே உலாவும் அகலமான ஆம்பியின்- பன்றிப்பத்தரின் - ஓசை ஊரில எழும் பலவகை ஒலிகளோடு சேர்ந்து ஒலிததது (மது. 90,91).

**ஆமா - காட்டுப்பசு.** பாரியின செங்கோற் செம்மையினால் மனையிடத்துக் கன்றீன்ற ஆமாவின்- காட்டுபபசுவின - கூட்டம் நன்புல்லை வயிறார உண்டது (புறம். 117:4-6). கரிய கொம்பினையுடைய ஆமாவின ஏறு முழங்கப் பழமுதிர் சோலை மலையுச்சியிலிருந்து அருவி இழுமென இழிதரும் (முரு. 314-317). மணி போலும பூக்களை யுடைய அவரையின தளிரைத் தின்னும் ஆமாவை ஓட்டும் கானவர் ஆரவாரம் மலையகத்தே இரட்டும (மது. 292,293,299). ஆமான், மரையா காணக.

**ஆமான் - காட்டுப்பசு.** மராமரத்திடத்தே கிடந்த இனமெல்லாம் போக வலிந்து அகப்பட்ட மடநடையுடைய ஆமான்கன்று நனனனுககு நல்கப்பெறற கையுறைப் பொருள்களுள் ஒன்றாகும் (மலை. 498-500). ஆமான் கனறு கானவர் எடுப்ப அஞ்சி இனத்தினின்று நீங்கிக் காட்டிலுள்ள சிறிய ஊரில் அகப்பட, அதனை மகளிர் வளர்க்க அஃது அவருடன் கலந்து பழகி அம்மனையிடத்தே வாழத் துணிந்தது (குறு.322). புலியிடத்தகப்பட்ட ஆமானின் கனறுக்கு முதிய பசு தனது கன்றெனக் கருதிப் பால் கொடுக்கும் (புறம். 323:1,2). வளைந்த கொம்பையுடைய ஆமானின் நடுங்கும் இளங்கன்றைச் சிறுவர் தம் சிறுதேர்க்குப பூட்டி விளையாடுவர் (புறம். 319:10). தான விடுத்த அம்பு ஆமானின் நெஞ்சிற் பாயாமல் குறி தப்பியதற்காக வேட்டுவன் தன் சுற்றத்தொடு சென்று தெய்வத்திற்குப் பலியிட்டு வழிபட்டான் (நற். 165:1-5) வேங்கை மரத்தடியில் ஆமான் தன் கன்றொடு தங்கி உறங்கியபோது மந்தி தன் சுற்றத்தைக் கை கவித்து வாளாவிருக்கச் செய்து ஆமானின் பால் சுரந்த மடியை அமுக்கித் தன் குட்டிக்குக் கை நிறையப் பாலைப் பொழியும் (நற். 57:1-6). வேலூர் எய்தின் ஆமான் சூட்டுடன் எயிற்றியர் சமைத்த புளிக்கறியிடப்பட்ட சோற்றை இரவலர் தம் மகளிர் ஆயத்துடன் பெறுவர் (சிறு. 173-177). கொலைவில் வேட்டுவர் சிவந்த கொம்புடைய

ஆமானின் இறைச்சியோடு யானைத் தந்தத்தையும் தாம் பெற்ற கள்ளுக்கு விலையாகக் கொடுத்தனர் (பதி. 30:9-12). ஈன்றுள்ள பெண்புலியின் பசி நீக்க மானையடித்துக் கொண்டுவரப் புறப்பட்ட ஆண் புலி சேய்மையில் ஆமான் அல்ற வளைந்த கொம் பினையுடைய ஆமான் ஏற்றை வலப்பக்கம் வீழக் கொன்று மலையையடுத்த பாறைகள் குருதியால் சிவப்ப இழுத்துவரும் (அகம். 238:2-9). ஆமா, மரையா காண்க.

**ஆமான் புகல்வி** - **ஆமான் ஏறு.** தலைவனின் மலைக் குகையில் புலி, யாளி, கரடி, ஆமான் புகல்வி- ஆமான் ஏறு - யானை முதலிய துன்பந்தரும் விலங்கினங்கள் உள்ளன (குறி. 252,253).

**ஆமூர்** – சோழநாட்டகத்துள்ள ஊர். இனிமையும் கடுப் பும் உடைய கள்ளால் பெயர் பெற்றது ஆமூர் (புறம். 80:1). நல்லியக் கோடனுக்குரிய ஆமூர் அந்தணர் நிறைந்தது; கிடங்கினையும் காவலையும் பெரிய வீடுகளையும் உடையது; அவ்வூர்க்குச் சென்றால் உழவர் தங்கையர் நன்றாகக் குற்றப்பட்ட அரிசியா லாக்கிய வெண்சோற்றை (நண்டுக்) கலவையொடு அளித்து விருந்தோம்புவர் (சிறு. 186-195). இது குறும்பொறை மலைக்குக் கிழக்கேயுள்ளது; வான வனின் (சேரனின்) யானையது மருப்பு ஒடிய அதனை அழித்த கொடும்பூண் என்பானால் காக்கப்பெற்றது; நெடுந்தொலைவிலும் தன்பெயர் விளங்கும் சிறப் பினது: இத்தகைய சிறப்புடைய ஆமூரைப் பெறி னும் தலைவியின் மார்பு முயக்கத்தை மறந்து தலை வன் பிரிந்திரான் (அகம். 159:14-21). பகற்பொழு தைப்போல் ஒளியுடைய விளக்குகள் இருப்பதால் இரவுப் பொழுதை அறிய முடியாதவாறு இலங்கு வது ஆமூர். அது சோழர்க்குரியது. தலைவிக்குவ மையாக வந்துள்ளது (ஐங். 56:1,2).

**ஆமூர் மல்லன்** - **ஆமூரிலுள்ள ஒரு வீரன்.** ஆமூர் மல்ல னுக்கும் போர்வைக்கோப் பெருநற் கிள்ளிக்கும் மற்போர் நிகழ்ந்தது (புறம். 80 துறைக் குறிப்பு). இவ் விருவருக்கும் நிகழ்ந்த போரில் எழுந்த ஆரவாரம் கடலினும் பெரிது (புறம். 81:1). ஊரைக் கைப்பற்ற வந்த மல்லனொடு ஆத்திப்பூ மாலையணிந்த பெரு நற் கிள்ளி செய்த போரின் விரைவுக்குக் கட்டில் பின்னுவோனின் கையிலிருந்த ஊசியின் விரைவு உவமை (புறம். 82:3-6).

**ஆமை** - **நீரிலும் நிலத்திலும் வாழும் ஓர் உயிரினம்.** கூரிய நகத்தினையுடைய வயலாமையின் வெள்ளிய வயிறு போன்றது கிணைப்பறை (புறம். 387:1). பர தவர் வயலிலுள்ள ஆமையைப் புழுக்கின இறைச் சியைத் தின்பர் (பட். 64). யாமை காண்க.

**ஆய்** – **1. வள்ளல். குறுநில மன்னனுமாவான்.** விறலி யர் இவனைச் சென்று காணின் பரிசில் பெறுவர் (புறம். 133). ஈருடன் கூடிய பேன்பகை, சுற்றத்தை யும் தன்னையும் வருத்தும் பசிப்பகை, ஆறலைக்கும் பகை ஆகிய எத்தன்மையவாகிய பகையையும் ஆய் அறிவான் என்றெண்ணி அவ்வள்ளலைப் பாராட்டி யதாகத் துறையூர் ஓடை கிழார் கூறுவர் (புறம். 136:4-17). இவன் திருந்து மொழியுடைய மோசி யாரால் சிறப்பித்துப் பாடப்பெற்றவன் எனப் பெருஞ்சித்திரனார் பாராட்டுவர் (புறம். 158:12,13). நாகம் நல்கிய ஒளிமிக்க நீல ஆடையை ஆலமர் செல்வனாகிய சிவனுக்கு விரும்பிக் கொடுத்தவன்; வில்லைத் தாங்கிய சந்தனம் புலர்ந்த தோளினன்; கேட்போர் விரும்ப நன்மொழி இயம்புபவன் (சிறு. 95-99). அண்டிரன், ஆஅய், ஆஅய் அண்டிரன், ஆய் அண்டிரன் காண்க.

**2. ஆயர்.** தும்பி துளைத்த மூங்கில் துளைவழிக் கோடைக்காற்று வீச, அஃது ஆனிரை பின் செல் லும் ஆய்-ஆயர்-குழல்போல் இனிது இசைக்கும் (அகம். 225:5-8).

**ஆய் அண்டிரன்** - **வள்ளல்; குறுநில மன்னனுமாவான்.** அண்டிரன், ஆஅய, ஆய், ஆஅய் அண்டிரன் காண்க.

**ஆய் எயினன்** - **குறுநில மன்னன்.** ஆஅய எயினன் காண்க.

**ஆய்குடி** - **தென்பாண்டி நாட்டிலுள்ளதோர் ஊர்.** ஆஅய்குடி காண்க.

**ஆய்ச்சி** - **இடைக்குலப் பெண்.** ஆய்ச்சியர் காண்க.

**ஆய்ச்சியர்** - **இடைக்குலப் பெண்டிர்.** மேய்ச்சல் நிலத்தில் ஏறுகளைப் பரவவிட்ட தம் அன்புறு காதலரோடு ஆய்ச்சியர்-இடைக்குலப் பெண்டிர்-கைபிணைத்து இன்புற்றுக் குரவைக் கூத்தாடுவர் (கலி. 106:30-33). ஆய்ச்சியர் ஏறுதழுவாத ஆடவரின் தோளை விரும் புவதில்லை (கலி. 106:40-42). குன்றெடுத்த திருமா லின் நிலையை ஆய்ச்சியினுடைய கண் என்று காணுமோ என்று வருந்துதல் (முல்லை. வெ. 1). ஆய்த்தியர் காண்க.

**ஆய்த்தியர்** - **ஆய்ச்சியர்.** தலைவன் பரத்தைமை கண்டு ஊடிய தலைவி, 'மான் நோக்கும் மழைக் கண்ணும் உடைய நின் சொல்லில் மயங்கும் சிறிய ஆய்த்தி யரிடம் - ஆய்ச்சியரிடம் - நின் மொழிகளைக் கூறு' எனத் தலைவனிடம் கூறுகின்றாள் (கலி. 108:46,47). ஆய்ச்சியர் காண்க.

**ஆய்மகள்** – **இடைக்குல மடந்தை.** ஆய்மகள்-இடைக்குல மடந்தை-தயிர் கொண்டு வந்த மிடா நிறையுமாறு

பாண்டி நாட்டு மகளிர் தயிரைப் பெற்றுக்கொண்டு வெண்ணெல் அளித்தனர் (புறம். 33:2-6). வேளைப் பூவும் வெண்தயிரும் கொண்டு ஆய்மகள் அட்ட புளிமிதவையை வரகுச் சோற்றுடன் அவரை கொய் வோர் உணடனர் (புறம. 215:1-5). ஆய்மகள் உகிரினால் தெறித்த உறை (மோர்) குடப்பால் முழுமையும் கலங்கிக் கெடுதற்குக் காரணமானாற் போலப் பகைவர் படைகெடுதற்கு முது பெண்டின காதலஞ் சிறுவன் காரணமாயினான் (புறம். 276:3-6). அழகிய மேனியையும் சிறுகுழை அசையும் காதினையும மூங்கில் போன்ற தோளினையும் குறிய அறல்பட்ட கூந்தலையும் உடைய ஆய் மகள் விடியறகாலையில தயிரைக் கடைந்து, மோர்ப்பானையைத் தலையில் சுமந்து சென்று விற்பாள்; மோர் விற்றதனால் கிடைத்த உணவுப்பொருளால் சுற்றத்தாரை உண்பிப்பாள்; நெய் விற்ற விலைக்குப் பொன் வாங்காமல எருமையினையும் நல்ல ஆன்களையும் அவற்றின் கன்றுகளுடன் வாங்குவாள (பெரு. 155-165). சிறு தாம்பினால் கட்டப்பெற்ற இளங்கன்றுகள் மிக்கதுயரால் தாய் வருமென்று அலமருகின்ற தன்மையைக் கண்ட ஆய்மகள் குளிரால் நடுங்கித் தோளினைக் கையினால் இறுகக கட்டிக் கொணடு அவற்றை நோக்கி இடையர் பினனே நினறு செலுத்த நும் தாயர் இப்பொழுதே வருகுவர்' எனறு கூறினாள் (முலலை. 12-16). ஆய்மகள் நலத்தைச்சூழ்ந்து கொண்டு மத்தைச் சுற்றும் கயிறு போல்த் தலைவன நெஞ்சு சுழலும் (கலி. 110:9-11).

**ஆயத்தவர்** – மகளிர் கூட்டத்தார். மாரிக்காலத்துப் பூத்த பல மலர்களைக் கொணடு தழை, கோதை, இழை என்பனவாகக் கட்டி அணிநது விளையாடும் மடமொழி ஆயத்தவருள் - மகளிர் கூட்டத்தாருள் - இன்று உடமபோடே உயிர்க்குள் புகுநத இவள யார் எனத் தலைவன பாங்கனைக் கேட்டான் (கலி. 102:4-8). ஆயத்தார், ஆயத்தோர், ஆயம் 4 காணக.

**ஆயத்தார்** - மகளிர் கூட்டத்தார். கடற்றுறையை உடைய நம் தலைவர்கத நமர் வரைவு நேர்ந்தமையால் புலால் நாறும் சேரியிலுள்ள இன்னங்க ஆயத்தாரோடு - மகளிர் கூட்டத்தாரோடு - இனியும இவ் வழுங்கலூர் முன்புபோல அலர் கூறுமோ எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 351:4-8). தலைவியின் உடனபோக்குக்குத் துணையாய் இருந்த ஆயத்தாரால 'நான் தலைவியின தாயார் எனப் பெயர் பெறறேன்' எனச் செவிலி கூறினாள் (ஐங். 380). 'காவல் புரியும் ஆயத்தாரின் காவல் பொய்யாகும்படி இவ்வூரார் கூறும் கூற்றைக கேட்டு நீ அலமந்தாயோ' எனத் தலைவனுடன கூட்டம் உண்மையைத் தோழியிடம் கூறுதற்கு அஞ்சித் தலைவி கூறுகின்றாள் (கலி. 76:16,17). அறல் மணல் பொருந்திய முன்றுறையில் ஆயத்தார் சிற்றில் அமைத்து விளையாடினர் (கலி. 114: 15,16). தலைவி, தன்னுடனே விளையாடும் ஆயத்தார் எல்லோரும் கூடி விளையாடும்போதும் பல்தோன்றச் சிரிப்பதை அடக்கிக் கண்ணாலும் முகத்தாலும் நகும் இயல்புடையவள் (கலி. 142:5-8). காதற் பரதத்தையைச் சுற்றிநின்ற ஆயத்தார் மூங்கிற் குழாயினால் செந்நீரை அவள்மீது பீசசத் தனமீது பட்ட நீரை அவள் துடையாமல் துகில கொணடு ஒற்றியபோது தலைவன் அங்கு வர 'இவள பூப்பெய்தினாள்' எனத் தோழியர் பொய்யாகக் கூறி நகைத்தனர் (பரி. 16:20-24). ஆயத்தவர், ஆயத்தோர், ஆயம் 4 காண்க.

**ஆயத்தோர்** - மகளிர் கூட்டத்தார். உடன்போக்குக்கு இயைந்த தலைவி, தயிர்கடையும் விடியற் காலையில் தன் உடம்பை மறைத்துத் தன்கால் அரியமை சிலம்பு கழித்து வரிபுனை பந்தொடு வைக்கச் சென்றபோது, 'நான் சென்றவுடன் என்னுடைய ஆயத்தோர் - மகளிர் கூட்டத்தினர் – இவற்றைக் காணுந்தோறும் வருந்துவார் அல்லரோ' எனக் கலுழ்ந்தாள் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 12:4-8). தலைவிகதத் தாயர் என்னும் பெயரை யான் எடுத்தேன்; ஆனால அவளைத் தலைவனுக்குக் கொடுத்தோர் அவள் ஆயததோரே எனக் கூறி மகட்போக்கிய செவிலி இரங்கினாள் (ஐங். 380). உடன்போகும் தலைவியை எதிர்வரும் அந்தணரிடம், தான் தலைவனுடன் இனிதே செல்லும் செயதியைத் தன் ஆயத்தோர்க்குச் சொல்லுமாறு வேண்டினள் (ஐங். 384). உடன் போய் மீள்கின்ற தலைவி தன்னூர்க்குச் செல்கின்றாரைக் கண்டு, விரைந்து முனனே செல்லும் நீர் இன்னகை முறுவல் என் ஆயத்தோரிடம் உம் தோழி வருகின்றாள் என்று கூற வேண்டுகின்றாள் (ஐங். 397).

**ஆயத்தவர்** - ஆயத்தார். ஆயம் 4 காண்க

**ஆயம்** - 1. ஆனிரை. கோவலர் வேனிற்காலத்துப் பசித்த ஆயத்தை - ஆனிரையை - காக்க வேங்கை மரத்தின் பூக்கள் உதிருமாறு அதன் கொம்புகளைக் கழித்துத் தழைகளை யிட்டனர் (புறம். 224: 13-16). எழினி ஆட்சியில் கன்றோடு கூடிய ஆயம் காட்டில் துன்பமின்றித் தங்கியது (புறம். 230:1). வீரன் ஒருவன் கந்தாரம் என்னும் மதுவைத் தான் கொணர்ந்த ஆயத்தைக் கொடுத்து உண்டான (புறம். 258:2,3). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன நாட்டைச் சார்ந்த

முல்லைக் காடுகள் புல்லருந்தும் பலவாய ஆயத் துடன, விலவீரர் காவலிருக்கும் குறும்புகளையும் பெற்றிருந்தன (புறம். 386:12,13). பெருஞ்சேரலிரும் பொறை கானளகளோடு கன்றுகளை யுடைய ஆயததைக் கைபபற்றிக கொணர்நது வீரருககுப் பாதீடு செய்தான் (பதி. 71:13-15). நிரை காத் திருந்த வீரரைக் கொனறு அவர் ஊரைச் சுடுகின்ற வெளிசசத்தில் கவர்நத ஆயததுடன் பிறபொருள் களுமம நிறைநது மதுரை தேவருலகம போன்று அழகுடனும் வளப்பத்துடனும் காணப்பட்டது (மது. 690-692, 697-699). பாறபயனைத் தரும் ஆயமாகிய ஆக்கள் தம் கன்றுகளை நினைநது பால்சுரந்த மடியொடு கழுததில் உள்ள மணிகள் ஒலிககக கோவலா பினனே வர வீடுகள் நோககி மாலைபபொழுதில விரைந்தன (அகம. 54:6-12). கருங்கை ஆடவா கற்பாறைகளைப பிளநதமைத்த உவாககிணற்றில் ஊறிய நீரைப் பருகக் கொங் கரது படுமணி ஆயம் செலலும் (அகம். 79:1-6). மழைவளங் கரநதமையாலுமகானம உலறி இலை இனமையாலும் ஏறுகளை யுடைய ஆயத்தினம் பலவும் பசியால் வருநதின (அகம. 291.1-3). சிறு தூறுகளுடன வாடிய அகன்ற இடததையுடைய அதததில உணவினறி வாடிய ஆயத்திலுள்ள ஓராவினது தெளிந்த மணியோசை மெல்ல ஒலிக் கும் (நற. 37:1-3).

2. சூதாட்டம். ஆயம்-சூதாட்டம-நிகழும் இடம் கழகம எனவும் சூதாட்டத்தில உருட்டும் கருவி கவறு எனவும் பெயா பெறும் (கலி. 136.3,4). கவறு இடும போது கிடைககும பேரெண வித்தம் எனவும் சிறறெண சிறுவித்தம் எனவும பெயர் பெறும் (கலி. 136:14,16).

3. திரள் (கூட்டம்). இடையன சிறுதலை ஆயத்து டன்-ஆட்டுத்திரளுடன்-புலிதங்குமிடததை அணுக முடியாதவாறு போலச் சேரமான் குட்டுவன் கோதை நாட்டை அவனை எதிர்ப்போர் குறுக முடியாது (புறம். 54:11-14). துணையாய்க் கூடிய ஆயத்துடன மதுக் குடஙகளைச் சேர நுகர்நது பெரிய பாண் சுற்றததைக் கரிகாற் பெருவளத தான் காப்பாற்றினான (புறம. 224:2,3). கழுகின சேவலும் பொதுவல் எனனும் புளளும் காககை யும் கோட்டானும் கூடிப் பேய் ஆயமோடு தாம் விருமபியபடி முதுகாட்டில் இயங்கின (புறம். 238: 1-5). ஒளித்துச் செய்வதறியாத வஞ்சனையிலலாத இளைஞர் ஆயத்தோடு மருத மரத்திலேறி மடுவின கண பாயநது ஆடிய இளமைக்கால நிகழச்சியை நினைந்து தொடித்தலை விழுத்தண்டினார் இரக் கம் கொள்வர் (புறம். 243:5-11). வெள்ளத்திற்கு அணையாக வைக்கோற் புரிகள் சூழந்த மணற் கோட்டைகள் அமைக்கும் ஆரவாரததுடன் விருப் பம் கொண்ட மக்கள்ஆயம் அணைகோலிய பின னர் மூதூருக்குச் சென்று விழாககணடு பெயர்நதது (பதி. 30:17-20). 'பொருநதிய சுற்றததுடன உண்டு மகிழும் ஆயம ஆடுகினற காஞ்சியாறறின பெருந் துறையில உள்ள மணலினும் பலகாலம் வாழ்க' எனக் கடல பிறக்கோட்டிய செஙகுட்டுவனைப் பரணர் வாழத்துகின்றார் (பதி. 48:16-18). 'யாம எம ஊர்நகருச செல்ல விழைநதோம்' எனப் பொருநர் கூறக் கேட்ட கரிகாலன 'எம ஆயம் விட்டுச் செல்கின்றீரோ' எனக கேட்டுத தன தகு திககேற்றவாறு பரிசில கொடுத்தான் (பொரு. 121-124,127). ஓயமானநாட்டு நலலியக கோடன பரி சிலர் புகழநதேதத, மகிழசசியைச் செயயும் ஆயத தின் இடையே பன்மீன நடுவிற பானமதிபோல இருந்தான (சிறு. 198-220) தலையாலஙகானத்துச செருவென்ற பாணடியன நெடுஞ்செழியன் தடா ரிப் பொருநாககுக கனறும் பிடியுமாகிய இருபேரா யத்துடன களிறுகளையும் பொறறாமரைப பூவை யும் பிற கலனகளையும் வழங்கினான் (மது. 99-105). பலவகைப்பட்ட மககள ஆயததுடனும் பல வேறு நாடுகளுடனும் பழகி அறிவு நிரம்பப பெற்ற சுறறததினை உடைய சான்றோரா ஓர் ஊரில விழாக கொணடாடக குழுமியது போனறு பல்வகை மொழிபேசும் பனனாட்டு வணிகர் பல ரும் காவிரிபபூமபட்டினததில குழுமினர் (பட். 213-218). திருபபரங்குனறததில கடபபமரத்தின கண (செவ்வேள) அமாநத நலலநிலையை உடன மேவிய ஆயததுடன தொழுது வாழ்ததினேம் என நப்பண்ணனனாா பாடுகின்றார் (பரி. 19:103-105). 'பகைவரை அழித்த அறுமுகனே, விரும்பிய ஆயத துடன் நினனடியுறைதல் இன்றுபோல என்றும எமக்கு அமைக' என நலலச்சுதனார் வேணடு கின்றார் (பரி. 21:67-70).

4. மகளிர் கூட்டம். நல்லியக் கோடனுக்குரிய மாவி லங்கையூரில் ஓரை ஆடும் ஆயம - மகளிர் கூட்டம- பன்றியுழுத சேற்றைக் கிளறின் அதன்கண் ஆமை முட்டையையும் ஆம்பற் கிழங்கையும் பெறும் (புறம். 176:1-7). கோச்சேரமான யானைககட சேஎய் மாநதரஞ்சேரல இரும்பொறை தேவருலகம எயதியமையால அங்குளள மகளிாககு உறுதுணை யாகித் தனக்குத் துணையாய ஆயததை மறந்தன னோ எனக் கூடலூர் கிழார் கூறுகிறரர் (புறம. 229:23-25). இருவாட்சி மலருடன பசசிலையையும் விரும்பிச் சூடி, ஒளிவிடுகின்ற அணிகள அணிநத ஆயத்தினிடையே இளஞ்சேரலிரும்பொறையின் மாதேவி அணி திகழ விளங்கினாள் (பதி. 18:25-29).

வண்டலாடும் ஆயத்துடன் கூடி நீராடிய மகளிர் போகட்டுச் சென்ற பொன்னால் செய்த மகரக் குழையினைச் சிரற்பறவை இரையெனக் கருதி எடுத்தது (பெரு. 311-313). வேலூரைச் சேர்ந்தால, எயின மகளிர் சமைத்த புளிக்கறியுடன் கூடிய சோற்றையும் ஆமாவினது சூட்டிறைச்சியையும் சிலவளை ஆயமொடு பாணர் பசிதீர்ப் பெறுவர் (சிறு. 174-177). புதுநீர் விழாவில, ஆரவாரம மிக்க ஆயம தம கோதையும் தம் கணவர் மார்பின் மாலையும அழகுபெற மயங்க நீராடியது (மது. 264-266). 'நீ பருவம அடைந்தாய், ஆதலால் சுழன்று திரியும் நின் ஆயத்துடன் எவ்விடத்தும போகாதே' எனச் செவிலித்தாய் தலைவியைக் கட்டுப்படுத்தினாள (அகம. 7:1-3). காட்டில் உள்ள இலையற்ற இலவமரங்கள் அருமபற மலர்ந்துள் ளமை, ஆரவாரததைக் கொண்ட ஆயம் மகிழந்து எடுத்த அழகிய விளக்கு ஒழுங்கு (கார்த்திகை விளக்கு வரிசை) போலத் தோன்றும (அகம். 11:2-5). தலைவி தன்னை ஒத்த இளைய ஆயத்துடன் கழங் காடுவது வழக்கம் (அகம். 17:2). தலைவி கடலநீரில ஆயத்தோடு விளையாடியும் தழையுடை அணிந்தும் கடற்கரைச் சோலையில் தங்குவாள (அகம. 20:8-10). 'தலைவன் தலைவியை உடனகொண்டு போதலை அறியின் அவள் கோதையையுடைய ஆயத்தோடு விளையாடும் இடமெல்லாம் மெய்ந்நிழல்போலச் சென்று அகலாது காப்பேன், அது கழிந்ததே' என்று செவிலித்தாய் வருநதுகிறாள் (அகம. 49:15-18). கடற்கரையில் தலைவி மாலையுடைய ஆயத் தோடு வண்டல் இழைத்து ஓரையாடினாள் (அகம. 60:9-11). கழங்கு ஆடும் ஆயம (அகம். 66:24). ஒண தொடி ஆயத்துள் (பரததையர் கூட்டததில) ஒருத தியைத் தலைவன் மணந்தான் என்ற செயதி பருவூரப் பறந்தலையில் எழுந்த களிறு கவர் கம் பலைபோலப் பரவியது எனத் தலைவி கூறினாள் (அகம். 96:9-18). மாலைபோன்ற ஆயத்துடன் கடலில நீராடியும் கடற்கரைச் சோலையில சிறுவீடு கட்டியும் சிறுசோறு சமைத்தும் தலைவி விளையா டினாள (அகம். 110:6-9). மௌவலொடு மலர்ந்த நொச்சியையும் அவ்வரி அல்குலையுடைய ஆயத்தை யும் பொருட்படுததாது ஏதிலன் பொய்ம்மொழி நம்பித் தலைவி சென்றனள் (அகம். 117:1-4) கணபசந்து ஆயமும் அயலும் மருளத் தாய் ஓம்பிய நலனைப் பரத்தை இழந்தாள் (அகம. 146:11-13). தலைவி ஆயத்துடன் கூடிச் சிறிது நேரம் பந் தாடினும் வருநதும் மென்மையுடையவள் (அகம. 153:1-3). பல நாடுகளைக் கடந்து உடன்போய தலைவியின் பொருட்டு ஆயமும பொலிவிழந்து வருந்துகின்றது (அகம். 165:6, 7). கோதையை உடைய ஆயத்துடன் மணலமேட்டில ஏறிக் கடற் கரைச் சோலையில் தலைவி வண்டல் ஆடினாள் (அகம். 180:2, 3; குறு. 245-1). தலைவி வேங்கைமலர் சூடிப் பொலிந்த ஆயத்துடன் அழகுற நடநதும தழலையாலும் தட்டையாலும் கிளி கடிந்தும அசோகந்தழை ஆடையை உடுத்தும் தினைப்புனத திருநதாள (அகம. 188:9-13). கடலாடித் தளர்ந்த நிரைவளை ஆயமொடு மைந்தர் உபபுமேட்டில் ஏறிநின்று கரைகரு மீளும் படகுகளை எண்ணுவா (அகம. 190:1-3). சிறப்புப் பொருந்திய பெரிய இல் லததில சிலம்பொலிக்க ஓடி விளையாட்டு ஆயத் தோடு பந்து சிறிது விளையாடினாலும் வாராயோ, என அன்புடன் அழைத்துச் செவிலி பாலூட்டு வாள (அகம். 219:1-7). சாய்க்கானத்து விளையும் அழகிய மூங்கில்போன்ற தோள் உடையாள் என்று தலைவியை ஆயம் பாராட்டியது (அகம். 220:18-21). வாணுதற் குறுமகள விளையாட் டாயமொடு வெணமணலுதிர்தத புன்னைத் தாதினைப் பொன னெனக் கொணடு மணல்வீட்டில் தங்கி இரவலர் போல வரும் தோழிமாருக்கு அளித்து இல்லறம் பேணுவள (அகம். 230:5-8). பனித்துறைக்கண உள்ள தெய்வததைக் கை தொழுதேத்தி யாயும் தன் ஆய மொடு விழாக்கொண்டாடுவாள் எனத் தோழி தலைவனிடம கூறினாள் (அகம். 240.8, 9). புன்னை யின் நுண தாது அழகு செய்யும மணங்கமழ் மணல் மேட்டில கணங்கொள் ஆயமொடு தலைவியும் தோழியும் கூடி மணல் வீடுகட்டி விளையாடினர் (அகம். 250.2-5, 8). மணல் முற்றததே சேவடி வடுக் கொளவும் மனையுறை புறாக்கள் அஞ்சிச சிறிது சிறிது தொலைவில பறந்து செல்லவும் விளை யாடும் ஆயத்து மகளிரைக் காணுந்தோறும் உட னிருந்து மகிழத் தலைவன் இல்லையே எனத் தலைவி வருந்துகிறாள் (அகம. 254:4-8). நேற்று நீ வையையில் பரத்தைமகள் ஒருத்தியொடு நீராடி யமையைப் பரததையாயம் மறைக்கவும அது மறை படாமல் ஊரெலலாம் நன்கறியபபட்டது எனத் தலைவனுக்கு வாயில் மறுதத தோழி கூறி னாள் (அகம். 256:9-13). மயில்கள் இனிய குரலைப் பெற்று ஒருங்கு கூடி ஆடியது போலக் குவளை மலரால் தொடுத்த சிறு மாலைகளைக் கூந்தலில் அணிந்த தலைவி தன் ஆயதமொடு கூடிச் சுனையில் நெடும் பொழுது நீராடலிலலை (அகம். 358:5-7). மயிலபோலும் சாயலையும் சிவந்த அணி களையும் உடைய மகளிர் ஆயம், தலைவி உடன் போயமைக்கு வருந்தி விளையாடுதலை ஒழிந்தது (அகம். 369:4, 5). மயில்போன்ற சாயலையுடைய தலைவி தன்னையொதத ஆயமும் என்னையொத்த தாயரும் கண்டுமகிழுமாறு மணவினையை இவ்

லூரில் செய்துகொள்ளாமல் அறியாத இடத்தில் செய்து கொள்ளுதல் கொடிது' என்று மகட் போக்கிய செவிலி கூறினாள் (அகம். 385:1-7,18). களவுக் காலத்துப் பிரிவால் வருந்தும் தலைவி யிடம், 'பூந்தாதாற் செயயப்பெறற குளிர்ந்த விளையாட்டுப் பாவை காலை வெயிலில் கிடந்து வருந்துவதை நீக்குவாயாக' என்று ஓரை ஆயம் கூறியும் அவள் விளையாட்டில் மனமின்றிக் கவலையுடன் இருந்தாள் (குறு. 48:1-4). தலைவியை விட்டுப் பிரியாத ஆயம் கழியிடத்து மலர்ந்த காவி மலர்களைப் பறித்துப் பின கடலாடியது (குறு. 144: 1-3). கடல் மருங்கிலுள்ள அழகிய சோலையில் ஆடிய ஆயம் ஆயந்து பாராட்டிய நலம் வாய்ந் தவள் தலைவி (குறு. 245:1,2). நீர்விழாவில தழை யணிப் பொலிந்த பரத்தையர் ஆயத்துடன் தலைவன நீராடினான (குறு. 295:1-3). உயர்ந்த வெணமணல் மேட்டில் உள்ள புன்னையின தாது மிக்க மலரைக் கொய்யும் ஆயம் எல்லாம நள்ளிர வில் தலைவன் தேர் வந்ததைக் கண்டது (குறு. 311: 4-7). தலைவர் நாட்டில ஆரவாரமுடைய ஆயம விரும்பி அருவியில் இறங்கி ஆடும் (குறு. 367:4,5). விளையாடு ஆயமொடு இடையறாது விளையாடும் தலைவி இப்பொழுது பாலும உண்ணாளாய்ப் பந் தினையும விரும்பாளாய உடன் போக்கினை மேவினள் (குறு. 396: 1-3,7). தலைவியின் காமத் தால் வந்த உடறகளைப்பை ஆயத்தோடு விளை யாட்டயர்ந்தமையினால வநததென்று காட்டி மறைததல் (நற். 23:2,3). தலைவி ஒப்பற்ற ஆய மோடு அருவியாடிக் கண சிவந்தாள் (நற். 44:1,2). விளையாடும் ஆயமோடு ஓரையாடாது தலைவியை இற்செறித்திருததல் அறநெறியுமன்று; ஆக்கமும் தேயும் (நற். 68: 1-3). முன் அனனைக்கு அஞ்சி நம்மைப் பிரிந்துபோகாத தலைவன இபபொழுது நம் கானல் ஆயம் அறியினும் ஏதம் வரும் என அஞ்சுகிறான் எனத் தோழி சிறைபபுறமாகத் தலை விக்குக் கூறினாள் (நற். 72:5-9). இழையணி ஆய மொடு நாண் தடுககத் தலைவனைப் பெறுதற் காகத் தலைவி தைத திங்களில் தணகயம் படிந்தாள் (நற். 80:6-8). ஆயம் பூப்போலும் கணகளை உடை யது (நற். 90:7). பொய்கை மலர்களைக் கொய் தமையால் வருந்திய ஆயம் உடல் சோர்வு நீங்க உறங்கியது (நற்.115.1-3). ஆயமும் தலைவியும் புதிய நெயதல தழை பறித்துத தழையாடை செய்து உடுத்தினர்; அழகிய சிற்றில அமைத்து விரைந் தோடி விளையாடினர்; கண்டல் மரத்து வேரின் கீழ் இரட்டையாக நெருங்கியிருக்கும் நணடுகளைப் பார்தது மகிழநதாடினர் (நற. 123:5-11). கடற்கரைச் சோலையில் ஈனாப் பாவையைத் தலையிட்டுத் தலைவி வண்டல் விளையாட்டினை ஆயமொடுஆடு வாள் (நற். 127:6-9). சாந்தம் பூசப்பெற்ற கூந்தலை யும் பெருங்கண்களையும் உடையது ஆயம் (நற். 140: 2-5). ஆயம் நொச்சி வேலியின் பக்கம்ஓரையாடும் (நற். 143:3). விளையாடுகின்ற ஆயமொடு புன்னை விதையை மணலில் அழுத்தி மகளிர் விளையாடி னர் (நற். 172:1,2,5). 'மகள் உடன் போக்குச் சென் றது கணட தாய் தன்மகளுடன் விளையாடிய பூங்கண ஆயததை விழாக் கொண்டாடும் மூதூரில் காண்டொறும் துன்புறுவதுபோலத் தலைவனைப் பெற்ற தாயும் துன்புறுக' எனக் கடுமொழி கூறி னாள் (நற். 293:5-9). தலைவியின் களவொழுகக மறிந்து அவளை இற்செறித்தமையின் தாழிருங் கூந்தலையுடைய ஆயம் வருநதியது (நற். 295:2-4). அரசமகள் சினநதவுடன் மடததங்கை ஆயம் கை தொழுது இறைஞசினாற்போலக காற்று மோது தலால் ஆம்பல் குவிநது தாமரை மலரிடத்தே சாய்ந்து நின்றது (நற். 300:1-4). மலைச்சாரலிலுள்ள தீஞ்சுனையில ஆடித தலைவி ஆயமொடு குவளை பறித்தனள் (நற். 317:8,9). இரவுக்குறிககண தலைவி யுடன் செல்லும் ஆயம ஒருவரை ஒருவர் அறியாத படி அங்கு இருக்கும் (நற். 323 3). ஆயமும் தலைவி யும் மீன உணங்கலைக் கவரவரும் பறவைகளை ஓட்டிப் பின் உபபுக்குவியலின மீதேறி நினறு மீன் பிடித்து மீளும் படகுகளைப் பார்த்து 'இஃது என் தந்தை படகு,' 'இது நின தந்தை படகு' என எண்ணுவர் (நற். 331:1-6). முளைபோன்ற, வரிசை யாக அமைநத பற்களையுடைய ஆயம் தலைவியின இளமையைப் பாராட்டியது (கலி. 15:25,26). பரத் தையர்பால் இனிச் சேரேன எனத் தலைவன் சூளு ரைததபோது ஆயமும் உடனிருந்தது (ஐங். 31:4). தலைவன் பாணன் போலப பலபொய் கூறுதலை மாணிழை ஆயம் அறியும் (ஐங். 47:3-5). சுழலகின்ற ஆயத்தோடு அமர்ந்த பரததையரைத தழுவித தலைவன் புதுப்புனலாடினான் (ஐங. 64:1,2). 'ஒண் டொடி முன்கையையுடைய ஆயததையும் பரத்தை யரையும் நின் மனைவி எனறு சொல்லுதலினின்றும நீங்குவாயாக' எனத் தலைவனிடம தலைவி புலநது கூறினாள் (ஐங். 83). ஒணணுதல் ஆயம் ஆரவாரம் செய்யத் தலைவனிடம் உறவாக உள்ள பரத்தை பெருங்கடலின் திரையிடத்துப பாயந்து விளையாடி னாள் (ஐங். 123). 'தனக்குப் பொருநதிய ஆயமொடு இனிதாக நன்மணத்தை நுகர்தலினும் சோலை யிடையே தலைவனுடன தலைவி உடன்போக்குச் சென்றது இனிதாமோ' எனததாய நொந்து வின வினாள் (ஐங. 379). கோலஞ் செய்தலையுடைய மகளிர்தம் (பரத்தையர்தம்) ஆயத்தோடு மனம் பொருந்தி விளையாடும் வையையாற்றின் மணல்

மேட்டிடத்து நுகர்ச்சியைத் தலைவர் நினைந்து வருவார் (கலி. 27:17-20). காம நோய் வருத்த வருந்தியும் பிறரது பழி கூறல் நாணித் தலைவன செய்த அருளின்மையைத தலைவி ஆயத்திடத்துக் கூறாது மறைத்தாள் (கலி. 44:14-16). துறையிடத்து உயர்ந்த மணற் குன்றில அநதிககாலத்தே மகளிர் தாம் விரும்பும் ஆயத்தோடு நிறைநதிருந்தனர் (கலி. 92: 16-19). காட்டாறறில மணலையுடைய தணபொழிலிடத்து அகனற பாறையில ஆயமொடு தலைமக்கள் மலர்சூடி இரவு வரும் வரை விளையாடினர் (கலி. 113:23-26). கோதை ஆயமும் அன்னையும் அறியும்படி முனனர்த் தலைவன் புகழ்ந்த தன் கனை நலனைத தலைவி இழந்தாள் (கலி. 122:1,2). துன்பமறியாது தானே வருபுனற்கு விருந்து செய்யும் கூடலின்கண் இசைக்குரிய பாணரும் கூத்தரும் பொருந்திய ஆயமொடு ஏத்தித தொழ வையை யாறு வயலிற் பொன்னைப் பரப்பும் இயல்புவினை மாறாதொழிக எனப் புலவர் வேண்டுவர் (பரி. 10: 128-131). வையையில ஒருவன் வாழைத் தண்டைத் தழுவிக் கொண்டு ஆடும்பொழுது ஒருத்தியைக் கணடு மனமிழந்து நீரோடும் போககில செல்ல, அதனைக் கணடவள ஆயததுடன் நில்லாது நீங்கி அவனைப் பின்தொடர்ந்தாள்; அதனைத் தாய அறிந்து 'தனித்துச் செலலாது ஆயத்திற் கூடுக' என மகளை அறிவுறுத்தினாள் (பரி. 11:106-113). தலைவியின் அணிகலனைத் தலைவனிடமிருந்து பெற்ற பரத்தையைத் தேடிப் பிடித்து ஆயத தொருத்தி 'மாயபபொய்கூட்டி மயக்கும் விலைக் கணிகை' எனபது முதலாகப் பலவாறு வசை மொழிநதாள் (பரி. 20:33-49). ஆயத்தவர், ஆயததார், ஆயததோர் காண்க.

**ஆயமகள்** - ஆயர்குடிப்பெண். மதம் கொண்ட களிற்றினும் மிகக வலலமையுடைய காளையை அடக்கித தலைவன வெறறி கொண்டால ஆயமகள் - ஆயர் குடிப்பெண் - தோள் ஏனைமகளிர் தோள்களைக் காட்டிலும வெற்றிக் கொடியை உணடாககினவாகும் (கலி. 101:36-38). கொலலேற்றின் கொமபுக்கு அஞ்சுபவனை மறுமையிலும் ஆயமகள் தழுவமாட்டாள்; ஆயமகள தோள உயிரசசம் இன்றிக் கொல் லேற்றைக கொளபவர்க்கே உரியது; உயிரைக் காற்றாக உணராது அதனைக் காவல் கொண்டு, ஏறு தழுவுதறகு அஞ்சும நெஞ்சத்தார்க்கு ஆய மகள் தோள எளிதாகாது (கலி. 103:63-70). பருத்த திமிலுடைய நலலேறறைத தழுவின புகழ் பொருந்திய குலததில வநத பொதுவன் முகத்தை ஆய மகள் கண்கள் இமையாமல் நோக்கின (கலி. 105:50-52). 'அவன் ஆயர்மகனாயின நீ ஆயமகளாயின் நினனை அவன விரும்பினால் அவனை நீ விரும்பினால் தாய் வருந்த வேண்டா' என்பது தோழி கூற்று (கலி. 107:19-21). 'தமர் சூட்டிய கண்ணியைத் தாங்கல் ஆற்றாத ஆயமகள், புண்ணில்லாரும் (மனத்திற் காம வேட்கை இல்லாத இருடிகளும்) புண்பட்டு வருந்துமாறு நோக்குவாள்; அத்தகையவள் உடம்பு முழுதும் கணகளை உடையவளோ' என்று தான் படும துன்ப மிகுதியால் தலைவன் கூறினான் (கலி. 109:9-12). ஆயர்மகள் காண்க.

**ஆயமகன்** - ஆயர்குடிமகன். 'தன்மேல் மிக்குச் சென்ற ஏற்றின் கொம்புகளிடையே சென்ற ஆயமகனுடன் - ஆயர் குடிமகனுடன் - அன்றே என் நெஞ்சம் சென்றது' எனத் தலைவி கூறுகின்றாள் (கலி. 105: 66-69). புல்லினத்து ஆயமகன் சூடிவந்த தொடையையும் கண்ணியையும் கூந்தலிலே யிட்டுத் தலைவி முடித்தாள் (கலி. 115:4-6). ஆயர் மகன் காண்க.

**ஆயர்** - இடையர் (முல்லைநிலதது மக்கள்). ஆயர் - இடையர் - அறம் புரியும் நெஞ்சததை யுடையவர் (புறம். 390:1). 'ஆயர் ஊதும் குழல், காயாமபூ மாலை அணிந்த கேள்வனை நமககுத் தருதற்கேறற நனனிமித்தமாக இசைததது' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 101:34,35). ஏறுதழுவும் இடததில் ஏறுகளும் வருந்தித தளர்நதன; ஆயர் பலரும் புண்பட்டனர், அதனால் பொதுவருடன ஆயமகளிர் சோலையுட் சென்றனர் (கலி. 101:47-49). 'முன்னை நாளிலே கொல்லுதலுடைய ஏற்றின் கழுத்தில தங்கினவரைக் கணடும இன்றும் ஏற்றைத் தழுவ அழைக்கும் ஆயர்மக்கள் மிகவும் அறியாதவரே' எனறு ஏறு தழுவினமை கணட சுற்றத்தார் கூறினர் (கலி. 102:30-32). ஏற்றுக் கொம்பினிடையே தாம் விரும்பும் மகளிரின் முலையிடை விழுமாறு போல வீழ்ந்த ஆயர் தம்மகளிர் முலைக்கு விலைவேணடார் (கலி. 103:71-73). பாண்டியன குடியின் பின்பு தோனறிய பெரிய குடியிற் பிறந்த ஆயர் தெய்வத்திற்குரிய சிறப்புக்களைச செய்து மகிழ்ச்சியுடன் பலவேறு நிறமுடைய ஏறுகளைத தொழுவிடததே விட்டனர் (கலி. 104:4-6; 105:5-8, 22). ஆயர் தமக்குரிய முறையினாலே நாண்மீன் சூழ்ந்த மதி போலப் பரண்களின் மீது மகளிரை ஆயம்சூழ நிறுத்தினர் (கலி. 104.25-27). 'ஆயர் எமரானால யாம் ஆய்த்தியேம்' எனறு தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 108.9). பொருப்பனது சிறுகுடியில் வாழும் ஆயர், வேந்தன் இனிது வாழ நிலத்தெய்வத்திற்கு மடை கொடுத்ததால் அரவம் எழுந்தது (கலி. 108:58, 59). ஆட்டினத்தை உடைய ஆயர், காவலுடைய பெரிய குறும்பில இருப்பர் (கலி. 110:1). ஆயர் பகைக்கஞ்சாதவர்; ஆட்டி

னத்தை யுடையவர்; குடம்பால் கறக்கும் பசுக்களை உடையவர் (கலி. 113:6-10).

**ஆயர் மகள் -** ஆயர் குடிப்பெண். 'நெற்றிச் சிவலையின் ஆற்றலை அடக்கியவனின் மார்பில் சாராது அமைய மாட்டேன்; பசுவையுடைய ஆய்ச்சியர் கூறும் அலரினை ஆயர் மகளாகிய - ஆயர் குடிப் பெண்ணாகிய - நான பெரிதாக எண்ண மாட்டேன்' என்று தலைவி கூறினாள் (கலி. 104:65-68). தலைவி பால கறந்து வைத்துக் கன்றுகளைத் தாம் பால் கட்டிய பின்னர், பாங்கர்க் கொடியும் முல்லைக் கொடியும் பரந்த தோட்டத்தில் ஆட்டினத்தை உடைய ஆயர் மகளிரோடு சிற்றிலமைத்து விளையாடுவள் (கலி. 111:1-6). ஆயர் மகளிர் இயல்பினைத் தலைவனுக்குரைத்துத் தன் தந்தையும் தாயும அறிய அறததொடு நின்றால் தன் நோயும் நீங்கும் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 111:22-24). அரிய நெறிபேணும் ஆயர் மகளிர்க்கு இருமணம் கூடுதல் குடிப்பிறப்பிற்கு ஏற்ற தனறு (கலி. 114:20, 21). ஆயமகள காண்க.

**ஆயர் மகளிர் -** ஆயர் குடிப்பெண்டிர். ஆயர் மகள் காண்க.

**ஆயர்மகன் -** ஆயர் குடிமகன். ஏற்றினது கழுத்திலே பாய்ந்து அதற்கிட்ட மாலை போல அதனைத் தழுவியவன் கோட்டினத்து ஆயர் மகன - ஆயர் குடிமகன் - (கலி. 103:33-35). ஏற்றின்மேலிருந்து ஆடிய பின் நீர்த்துறையிடத்துத் தெப்பத்தின் மேல் கிடநது தள்ளுபவனைப் போல ஏறுதழுவித் தோன்றுகினறவன் ஆயர்மகன் (கலி. 103:36-38). புள்ளி செறிநத வலிய வெள்ளேற்றினது அழகிய பக்கததே திங்களில் கிடக்கும் மறுப்போலப் பொருநதியவன் புலலினத்து ஆயர் மகன் (கலி. 103:47-49). 'ஆயததோடே நாம் ஆடுங் குரவைக் கூத்தில் ஆயர்மகன் அருமை செய்தான் போல் நோக்கி அலலல நோய செய்தல் தான் கொல்லேற்றைத் தழுவிய செருக்கினாலேயேயாம்' எனத் தலைவி கூறுதல் (கலி. 104:70-73). எருமைஇனததையுடைய ஆயர் மகளோடு யாம் கூடியதற்கு எம்முடைய சுற்றத்தாரும் பொறுப்பர்; அதுபொறாத அயலார் கணகள் அனல் கக்குவதேன எனத் தலைவி வினவினாள் (கலி. 105:58-60). 'ஆயமகளாகிய உன்னால் விரும்பப் பெற்றவன் ஆயர் மகனாயின, அவனும் உன்னை விரும்புவானாயின் நினதாய் வருநதத்தக்க தொன்றுமில்லை' எனத் தோழி கூறினாள (கலி. 107:20-22). 'ஆயர்மகனையும் காதலிக்கின்றாய்; யாயையும் அஞ்சுகின்றாய், இனி நீ உற்ற காமநோயக்கு மருந்து அரிது' என்று தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 107:25-27). 'முனனின்று என்னை விலக்கும் நீ யார்' என வினவிய தலைவிக்குப் 'பகையஞ்சாப் புல்லினத்து ஆயர் மகன் யான்' எனத் தலைமகன் மாற்ற முரைத்தான் (கலி. 113:5-7). ஆயமகன காண்க.

**ஆயிரங் கண்ணினான் -** இந்திரன். பாண்டியன் மதுரை மக்களொடு வையையில் புனலாடியது ஆயிரங் கண்ணினான் - இந்திரன் - அந்தரவான்யாற்றில் (ஆகாயகங்கையில) ஆடிய தொக்கும் (பரி.தி.2:91-96).

**ஆயிரம் -** பத்துநூறு கொண்ட எண். பொறையாற்றுக் கிழானை, 'நெல் வளம் நிறையும் செவ்வியறிந்து மழைபொழிய நின்வயல் வேலி ஆயிரம் விளைக' எனக் கல்லாடனார் வாழ்த்துவர் (புறம். 391:19-21). வேலி நிலம் ஆயிரம் (கலம) விளைக எனக் காவிரி புரக்கும் நாடு கிழவோனாகிய திருமாவளவனை முடததாமக் கணணியார் வாழ்த்துவர் (பொரு. 246-248). நெடுஞ்செழியன் ஒரு விதைப்பில் விதைத்த விதை ஆயிரமாக விளையுமாறு ஆண்ட உயர்ந்தோர் மரபில் வநதவன் (மது. 11). வச்சிரப் படையோனாகிய இநதிரனின் ஆயிரங கண போன்ற திரட்சி கொணட பலவாகிய புள்ளிகளை யுடையது கடுஞ்சின ஏறு (கலி. 105:15,16). ஆயிரம் முடியையுடைய பாமபு (ஆதிசேடன்) தீயுமிழ திறனொடு திருமாலின முடிமேல தலைகள கவிழநது பொருந்தியுள்ளது (பரி. 1.1,2). செநநெருப்பு, கூற்றம, நமன, ஆயிரம்கதிர் ஞாயிறு ஆகியவை எல்லாம் ஊழி முடிவில ஒனறு கூடும் (பரி. 3:21-23). ஆயிரம் கைகளையுடைய மாய மளஎன திருமால் (பரி. 3:41). தன் நீல நிறத்தோடு மாறுபடும் வெணணிறப் பாற்கடல் நடுவே, மின்னை யொத்த ஒளிரும் மணியொடு தலை ஆயிரத்தினை விரிதத பாம்புப் படுக்கையினை உடையவன் துளவஞ் சூடிய அறிதுயிலோன் (பரி. 13:26-29). அணங்குடை அருநதலை ஆயிரம் விரித்த கூட்டமாய சுற்றத்தை யுடைய அணணலை (ஆதி சேடனை) வணங்கினர் (பரி.தி. 1.79,80).

**ஆயிரம் வணர்தலை அரவு -** ஆயிரம் கிளர்ந்த தலையுடைய பாம்பு (ஆதிசேடன்). திருமாலின ஊர்தி (கருடன) ஆயிரம் வணர்தலை அரவை-ஆதி சேடனை-வாயிற் கொணடுள்ளது (பரி. 3:59,60).

**ஆயிர வெள்ளம் -** பேரெண். (ஆயிர வெளளம என்பது அளவிறந்த எணணைக் குறிக்கும்). 'பல் யானைச் செல்கெழு குட்டுவனைத் தன் துணைவியோடு ஆயிர வெள்ளம் வாழிய' எனப் பாலைக் கௌதமனார் வாழ்த்துவர் (பதி. 21:37,38). செல்வக் கடுங்கோ வாழியாதனை 'ஆயிரவெள்ள ஊழிக காலம் வாழிய' எனக் கபிலர் வாழ்த்துவர் (பதி. 63:20,21). வெள்ளம் காணக.

ஆயிழை - 1. அணிகலன். ஆயிழையை-அணிகலனை-உடைய மடந்தை (அகம். 3:16). ஆயிழை மகளிர் (அகம். 75:11; 206:8). ஆயிழைக் குறுமகள் (அகம். 161:11). ஆயிழை நல்லாய் (கலி. 60:15). ஆயிழை மடவரல் (கலி. 148:21).

2. அணிகலனை உடையவள் (அன்மொழித்தொகை). 'ஆயிழை-அணிகலனை உடையவள்-கணவ' என்று கிள்ளிவளவன் விளிக்கப் பெறுதல் (புறம் 34:7). ஆயிழை கணவன் என நாஞ்சில் வள்ளுவன் குறிக்கப்பெறுகின்றான் (புறம். 138:8). ஆயிழை (அகம். 129:18; 144:7; 185:1; 277:13; குறு. 143:1; 366:7; நற். 75:8; 128:6; 279:11;286:6; 308:2; 344:4; 371:7; கலி. 25:29; 90:13; 137:11; 16,21; 145:66; 146:9,55).

ஆயுள் - வாழ்நாள். ஒன்றைப் பத்துமுறையாக அடுக்கப்பெற்றதாகிய கோடி என்னும் எண்ணை இறுதியாக இருத்திய பேரெண்ணை உடையதாகுக நினது ஆயுள்-வாழ்நாள்-எனக் குடபுலவியனார் நெடுஞ்செழியனை வாழ்த்துவர் (புறம. 18:5,6). காவிரி எக்கரிட்ட மணலினும் பலவாக நின் ஆயுள சிறக்க எனத் தாமப்பல் கண்ணனார் மாவளத்தானை வாழ்த்தியுள்ளார் (புறம். 43:21-23). அருந்தொழில் முடித்த செம்மலுள்ளமொடு வந்து நின்ற தலைவனைக் கண்டு தலைவிக்கன்றியும் தனகும் அவ்வருகை இனிமை பயக்கின்றது என்த் தோழி கூறி அவன் ஆயுள் சிறக்க என்று வாழ்த்துகின்றாள் (அகம். 184:3-5).

ஆர் - 1. ஆத்தி. ஆர் - ஆத்தி-மாலையைச் சோழர் அணிந்தனர் (புறம். 43:13; அகம். 93:4; நற். 265:5, 6). ஊரைக் கைப்பற்ற வந்த பொருநனாய ஆமூர் மல்லனொடு ஆத்திமாலை யணிந்த நெடுந்தகை (போர்வைக் கோப்பெருநற் கிள்ளி) செய்த போர் விரைந்து நடந்தது (புறம். 82:4-6). சோழன் நலங்கிள்ளிக்கும் நெடுங்கிள்ளிக்கும் போர் நிகழ்ந்தபோது அவர்களை நோக்கிக் கோவூர் கிழார் ஒரு குடியிற் பிறந்த நீவிர் இருவீரும் ஆத்திமாலை அணிந்துள்ளீர். ஒருவர் தோற்றாலும் சோழர்குடி தோற்றது எனவே உலகு கூறும். நும் போன்ற அரசர்க்கு இப்போர் மெயம்மலி உவகையைச் செய்யும். ஆதலின் போர் தவிர்க எனக் கூறினார் (புறம. 45:3-9). நாரினால் தொடுக்கப்பட்ட ஆத்திப்பூவால் இயன்ற கணணி அணிந்ந வீரன் கைப்பட்டவர் இரங்கத் தக்கவராவர் (புறம். 81:3-5). வேம்பு, ஆர், பனை எனனும் மூன்றின் கண்ணியைத் தலையில் அணிந்த வேந்தர் வரினும் தன தகுதிககேறப வணங்காதவருக்குத தன் மகளைச் சிறார் மனனன மணஞ செயது கொடுக்க மாட்டான (புறம். 338:6-9). ஆநிரைமீட்டு மாய்ந்த வீரரின் நெடுங்கல்லுக்கு அம்பினால் அறுத்த ஆத்தியின் பட்டையிலிருந்தெடுத்த நாரினால் சிவந்த கரந்தைப் பூவைத் தொடுத்தியற்றிய கண்ணியைச் சூட்டினர் (அகம். 269:10-12). வெள்ளாட்டுக் குட்டி மன்றின்கண் கவைத்த இலையினையுடைய ஆத்தித் தளிரைக் கடிக்கும் (அகம். 104:11,12).

2. காம்பு. நெய்யிழுது போன்ற இருப்பைப் பூக்கள் ஆர்-காம்பு - கழன்று பனிக்கட்டி சிதறிக் கிடப்பதுபோல் சிவந்த மேட்டு வழியில் சிதறிக் கிடக்கும் (அகம். 9:5-9). காட்டில் வளர்ந்த இருப்பையின் வெண்பூ காற்று வீசுதலால் கிளையினின்று ஆர் கழன்று வீழ்ந்து களிறு செல்லும் வழி மறையுமாறு பரந்து கிடக்கும் (குறு. 329:1-3). அருஞ்சுரத்திலுள்ள இருப்பையின் ஆர்க்குக் கழன்ற புதிய பூக்களைக் கரடிகள் தின்னும் (அகம். 15:13, 14). காட்டிலுள்ள கள்ளியிற் படர்ந்த முல்லைக் கொடியின் ஆர்க்குக் கழன்று நீரில் விழுந்து கிடக்கும் புதுப் பூவைப் பெருமூச்சினால் ஒதுக்கிக் கலைமான் நீர் பருகும் (அகம்.184:8-11). நீர்திகழ் மலையில் ஒரு படித்தாக மலர்ந்த கூதாளத்து அழகிய புதுமலர் ஆர்கழன்று உதிர்தல் கைவளைகள் சோர்ந்து விழுதலுக்கு உவமை (குறு. 282:4-8). மாமரத்தின் கிளையிலுள்ள வடுக்கள் மிகுந்த காற்றால் ஆர் முறிந்து பால் சொட்டுதல் போலத் தலைவியின் முலைப்பால் சுரந்து சொட்டியது (கலி. 84:1-4).

3. ஆர்க்கால். ஆர் - ஆர்க்கால் - சூழச் செருகப் பட்டுத் தோன்றும் குடம், வேல் பல செருகப் பட்டிருக்கும் வீரன் மார்புக்குவமை (புறம்.283:10). குதிரை விரைநது செல்லும்போது பல ஆர்க்கால் களை யுடைய தேர்ச்சக்கரம் கற்களில் மோதுதலால் உண்டாகும் ஒலி கார்காலத்து இடி முழக்கம் ஒக்கும் (அகம். 14:18-20).

4. அழகு. ஆர் - அழகு - ததும்பும் அயில் அம்பு (பரி. 18:30).

ஆர்க்காடு - ஓர் ஊர். வீரர் பெருமகனாகிய அழிசிக்குரிய ஆர்க்காடு தலைவியின் பழிதீர் மாணலத திற்கு உவமை (குறு. 258:6-8). இது சேந்தன் தந்தையாகிய அழிசி என்பானுககுரியது. நெல்லிடையே மலரும் வண்டு மொய்க்கும் நெய்தற் பூக்களிலிருந்து தேன் வடியும கழனியுடைய ஆர்க்காடு தலைவிக்கு உவமை (நற். 190:3-8). சோழன் கொடியாடும் தெருக்களை யுடைய ஆர்க்காட்டில் கள்ளுடைச் சாடியில் வணடுகள் ஒலித்தலானும் தேர் இடையறாது ஒடுதலானும் எப்பொழுதும் தெருவில் ஆரவாரம் மிகும் (நற். 227: 5-9).

**ஆர்க்காடு கிழார் மகனார் வெள்ளைக் கண்ணத்தனார்** புலவர். அகநானூறு 64-ஆம் பாடல் மட்டும் இவர் பாடியதாகக் கிடைத்துள்ளது. முல்லைத் திணையில் வினைமுற்றி மீளுந் தலைவன் தேர்ப்பாகற்குச் சொல்லியது என்னுந் துறையில அப்பாடல் அமைந்துள்ளது. விரைந்தோடும் குதிரையை 'உலகு கடப்பனன புள்ளியற் கலிமா' எனக் குறிப்பிடுவர். பாம்புறை புற்றின ஈாம்புறத்தைக் குத்தி மண்ணைக் கோட்டிற் கொண்ட ஏறு வேட்கையுடன் பசுவைத் தழுவிக்கொண்டு ஊரிடம் திரும்பும்போது, கன்றினைக் கதறி அழைத்துக்கொண்டு தாய்ப்பசுவும் வரும் என மாலைப்பொழுதினைப் புனைவர்.

**ஆர்கலி** - 1. மிக்க ஆரவாரம் ஆர்கலி - மிக்க ஆரவாரம் - உடைய நறவின அதியர் கோமான் (புறம். 91:3). இடியினது ஆர்கலி யுடைய புதுப்பெயலைத் தரவேண்டிக் காலவீழ்த்துக் கடலிடத்துத் திரண்ட மேகம் நீரினறிப் பெயராது (புறம். 205: 10-12). 'ஆர்கலியினனே சோணாட்டண்ணல்' (புறம். 337:1). ஆர்கலி வானம் தளி சொரிதல (பதி. 43:18). மேகமும் இனிய பெயலை ஆர்கலியுடன் பெய்தது (அகம். 54:2,3). ஆர்கலி நறவின் வெண்ணிவாயில் (அகம். 246:9). ஆர்கலி வெற்பன (குறு. 257:4,353:1). கார்காலத்தில நாகத்தின அணங்குடை அருந்தலை துண்டுபட வலமாக எழுந்து, ஆர்கலியுடைய இடியேறு குமுறும் (நற். 37:8-11). ஆர்கலியுடைய இடியேறு பாம்பு கவினழித்துப பிடிவருந்தக் களிறெறிந்தது (நற். 114:9-12). ஆர்கலி வானம் நீர் பொதிந்து இயங்கல் (நற். 364:3). பழங்கொல்லையை உழுத ஆர்கலி உழவர் காலையில விதை எடுத்துச் சென்ற குறுவட்டியில் மாலையில் விதைத்து மீளும்போது அவ்வட்டி நிறைய மலர் கொணர்ந்தனர் (குறு. 155:1-3). ஆர்கலியுடைய இடியேற்றோடு மேகம் மழை பொழிந்தது (குறு. 186:1). பேரூரில் ஆர்கலி மிக்க விழா நிகழ்ந்தது (குறு. 223: 1). தலைவியின் ஊர் பரதவர் வலைவளத்தால் வரும் பொருளை விற்றுப் பனங்கள்ளைப் பெற்று மகிழும் ஆர்கலி யாணர்த்து ஆயினும், தலைவன் பிரியின் பொலிவழியும் (நற். 38:1-6). குறச்சிறார் எறிந்த தொண்டகச் சிறுபறை ஒலி பக்கத்துள்ள செந்தினையைக் கவரும் கிளிகளை ஓட்டும் ஆர்கலியையுடையது மலைநாடு (நற். 104:4-7). இந்திரவில்லை வளைத்து ஆர்கலியுடைய மேகம மழை பொழியத் தொடங்கியது (ஐங. 428:1,2).

2. நிறைந்த செருக்கு. பெரிய குடியிற் பிறந்த ஆயர் ஆர்கலி-நிறைந்த செருக்கு-உடைய உவகையராய் ஒருங்கு கூடினர் (கலி. 105:5-7).

3 வெள்ளம். மேகம் கார்காலத்து மழை பொழிய ஆர்கலியை-வெள்ளத்தை-வெறுத்த கோவலர் ஏறுடைய இன நிரையை மேட்டு நிலத்திற்கு ஓட்டிச் சென்று மேய்த்தனர் (நெடு. 1-4).

4. கடல். கரிய உப்பங்கழி வழியே வந்திறங்கும் ஆர்கலியில்-கடலில்-செலலும் ஓடங்களை யாற்றைச் செம்மை செய்து செலுத்தித் துறைதோறும பிணித்து நிறுத்தினா (புறம். 400 20-23). வானில எறிந்த கூதளமாலை போலப் பசுங்கால வெண்குருகு சிறகினை வளைத்து வளம் பொருந்திய ஆர்கலியின் கரைப்பக்கத்தே நாட்காலையில பரவி அமரும் (அகம். 273:1-3).

**ஆர்ப்பு** -- ஆரவாரம். தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் பகைவீரரை அழுந்தப பற்றி மேலே எறிய அவர் அகல்விசும்பு ஆர்ப்ப-ஆரவாரம்-எழக் கவிழ்ந்து நிலஞ் சேரும்படி பொருதான் (புறம். 77:10-12). போர்வைக் கோப்பெருநற்கிள்ளிக்கும் ஆமூர்மல்லனுக்கும நிகழ்ந்த போரின ஆர்ப்பு, எழு கடலினும பெரிது (புறம். 81 1). அணடிரன வருவான என எதிர்கொளளுதற்கு இந்திரன கோயிலில முரசும முழங்க விசும்பில ஆர்ப்பும் எழுந்தது (புறம். 241:2-5). மனறத்தினைகண விளையாடும சிறுவர் ஆர்ப்புக்கு அஞ்சிய முயல வைககோற் போருக்குள பதுங்கும் (புறம். 334:2-4). யானைமீதுள்ள முரசங்கறங்க ஆர்ப்புச் சிறந்த பகைவர் நாட்டிலிருந்து தன நாட்டிற்கு நன்கலங்களைக் கொணடுவந்தவன பல்யானைச் செல கெழுகுட்டுவன (பதி. 21.17-19). பகைவரது வலியழிய முரசுடைப் பெரிய போர் கெடும்படி ஆர்ப்பெழ அரசுபடக் கடக்கும் ஆற்றலுடையவன் களங்காயக் கண்ணி நார்முடிச்சேரல (பதி. 34:10, 11). எப்பொழுதும் ஆர்ப்பு எழுகின்ற மைபடு கடற்பரப்பு ஒலிக்கும் முரசுக்கு உவமை (பதி. 41: 22,23). வடதிசை எல்லை இமயமாகத் தென்னங்குமரியொடு இடைப்பட்ட அரசர் முரசுடைப் பெருஞ்சமம் அழிய ஆர்ப்பெழப் பலநாட்டை அழித்தவன கடல பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. 43:7-11). தேரிற் கட்டிய வான்தோய வெல்கொடி நிலத்தைப் புடைப்பது போன்ற ஆர்ப்போடு விசும்பைத் துடைத்துக் காற்றில் அசைந்தாடியது (பதி. 44:1,2). போர்க்களத்தில போர்ப்புறு தண்ணுமையின் ஆர்ப்பெழுந்தது (பதி. 84:15,16). தண்புனல் ஆடுநர் ஆர்ப்போடு வெம்போர மள்ளர் தெண்கிணை ஒலியும் சேர்ந்து ஒலித்தது (பதி. 90: 43,44). கடல்போன்ற பரந்த தானையுடன முருகன பகைவர்மேற் செல்லுமாறு சென்று அகல்விசும்பில் படை எழுந்த ஆர்ப்பு ஒலிப்ப நெடுஞ்செழியன அம்புகளை விடுத்தான் (மது. 180-188). சேற்றில தங்கிய வலியற்ற மூத்த எருது எயதிய வருத்தத்

ளைதக் கள்ளுண்ட களமர் பெயர்க்கும் ஆர்ப்பு மருதத்தில் எழும் (மது. 259,260). பேரிசை நன்ன னின புகழ சான்ற பிறந்தநாள்ல சேரியிலுள்ளார் கொண்டாடும் விழாவில் ஆர்ப்பு எழுந்தது (மது.618, 619). செழியன் ஆலங்கானத்தில் எழுவர் நல்வலம் அடஙக ஒரு பகலில் முரசொடு வெண்குடை அகப் படுததுக் களவேள்வி செய்தபோது வெற்றிவீரர் எழுப்பிய ஆர்ப்பினும் அலர் ஆரவாரம் மிகுந் திருந்தது (அகம். 36:12–23). அன்னி குறுக்கைப் பறநதலையில் திதியனின புன்னைமரத்தை வெட் டியபோது வயிரியர் எழுப்பிய இன்னிசை ஆர்ப் பினும் அலர் பெரிது (அகம். 45:8-12). செழியன் கூடற் பறநதலையில் இருபெருவேந்தரிை, பெரும் படையைத் தாக்கி அவரைப் புறங்கண்டபோது போர்சகளத்தெழுந்த ஆர்ப்பினைப் போல அலர் எழுந்தது (அகம். 116:12-19). முசிறியை ஆர்ப்பெழ வளைதது அருஞ்சமம் கடந்து அங்குள்ள பொற் பாவையைச் செழியன் கவர்ந்து கொண்டான (அகம. 149:11-13). செழியன் எழுவரை வென்ற ஆலஙகானத்து ஆர்பபினும் அலர்பெரிது (அகம. 209 2-6). கட்டி என்பான் வலிமை மிகுந்த பாண னொடு கூடிப் பொருதற்கு வந்தும தித்தன வெளியனின் உறந்தை நாளவையில தெணகிணை யொலிகேட்டு அஞ்சிப போர் செய்யாமல் ஓடிய போது எழுந்த ஆர்ப்பினும் கவ்வை பெரிது (அகம். 226:14-17). தலைவன் பரததையொடு புனலாடிய தால் எழுந்த அலர், கரிகாலன் வெண்ணி வாயில் எனனுமிடததுப பதினொரு வேளிரொடு இருபெரு வேநதரையும் சாயத்த நாளில அழுநதூரில் எழுநத ஆர்பபினும் பெரிது (அகம. 247:5-14). கொஙகரை ஓட்டி நாடுபல தந்த பசும்பூட் பாணடியன கூட லில எடுதத விழாவில் எழுநத இனனிசை ஆர்ப் பினும் அலர் பெரிது (அகம. 253:3-7). கள்ளூரில் ஒருத்தியின நலம வவ்விப் பின அறியேன் என்ற அறனிலாளனை மரக்கிளையில் செறியப பற்றி நீறு தலைப்பெயதபோது அவையததெழுந்த ஆர்ப் பினும் கவ்வை பெரிது (அகம். 256:15-21). குட்டுவன் மரந்தையிலுளள யானையங் குருகின் கூட்டம் போரில வென்ற வீரரின ஆர்பபிசை கேட்டு அஞுசும் (குறு. 34:4-6). விச்சியர் பெருமகன வேந்த ரொடு பொருதபோது இருபககத்துப் பாணரும் புலிபோல உறழநது நோககியதைக கணட குறும் பூர மககள செயத ஆர்பபினும அலர் பெரிது (குறு. 328.4-8). வாகைப பறந்தலையில அதிகன் களிற் றொடு பட்டபோது கொஙகர் செயத ஆர்ப்பினும் அலர் பெரிது (குறு. 393 2-6). புனனையில தஙகிய குருகு ஆர்பபின அவ்வார்பபு ஆய வளளலது நாளவையில இரவலர் பரிசுபெறற ஓபபனையுடன கூடிய நெடுந்தேரின் ஒலிபோல் தோன்றும் (நற். 167:1-4). கடிய துடியினது ஆர்ப்பினையும் கலை மான் கொமபுபோன்ற முறுக்குண்ட மீசையினை யும் கடுஞசினத்தையு முடையவர் மறவா (கலி. 15: 4-7). குழந்தையின இடையில கட்டிய அவிழ்ந்த ஆடை உள்ளிடுமணியாற் பொலிநத சதங்கை ஒலிக்கும ஆர்பபு மாறாத அடியைத் தடுத்தது (கலி. 81:5,6). கூடலில் மணம் பொருந்திய முரசின் ஆர்ப்பெழ அது காற்றொடு மயங்கிய கடலெனவும் கடலைக் குடிக்கும் மேகக்குரலெனவும் இந்திரனது உருமேறு எனவுமு முழங்கியது (பரி. 8:29-35)

**ஆர்பதம்** – உணவு. பசி தின்ன வாடிய இரும்பெருஞ் சுற்றத்திற்கு ஆர்பதம்-உணவு-தேடித்திசையெலாம் திரிந்து வருந்தியதாக ஊன்பொதி பசுங்குடையார் பாடியுள்ளார் (புறம். 370:2-4). அரசர் திறை தந்த களிற்றொடு மரக்காலால் அளந்து உறையிட முடி யாதபடி மிகுந்த நெல்லின ஆர்பதத்தையும் செல்வக்கடுஙகோ வாழியாதன பரிசிலர்களுக்கு வழங்குவான (பதி. 66:7-9). அரும்பெறல அமிழதம் ஆர்பதமாகப் பெரும்பெயர் உலகமும் அனனை பெறுக என்று தலைவன் வரைந்தெய்துதலை உணர்த்திய செவிலியைத் தோழி வாழ்த்துகிறாள் (குறு. 83:1,2). தலைவனின் ஏவலனால் வரைவு மலிநத செய்தியை உணர்ந்த தோழி அவன நெயமிக ஊறிய குறுமபூழைக் கறியாக உணணும் ஆர்பதம் பெறுவானாக எனத் தலைவிக்குக் கூறினாள் (குறு. 389). பைங்கிளியை நோக்கி 'நீ அஞ்சாது ஆர்பதம் கொண்டு நினகுறை முடித்தபின் என் குறை முடிக்க வேண்டும்' எனத் தலைவி காமமிக்க கழிபடர் கிள வியாற் கூறினாள் (நற். 102:1-4). ஆர்பதன் காண்க.

**ஆர்பதன்** – உணவு. இரவலர் வாராராயினும் அவரைத் தேடித் தேரிற் கொணர்நது ஆடுகோட்பாட்டுச் சேரலாதன ஆர்பதன - உணவு - நலகினான் (பதி. 55:10, 11). ஆர்பதம் காணக.

**ஆர்வம்** - ஆசை. ஆர்வம் - ஆசை - உற்றுத் தனனை நினைந்து வருபவரது வறுமை நீஙகத தவிராது கொடுக்கும் வண்மையுடையவன் நள்ளி. (புறம். 158, 13-16). வாள்கொண்டு போர் செய்யும் மறவரும் ஆர்வத்துடனே கூடியிருத்தலால் தானையுடைய குரிசிலை (இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளியை) நெடிது நிலைபெறுக என உலோச்சனார் வாழ்ததுவர் (புறம். 377:28-30). கேட்போர்க்கு விருப்பத்தைச் செய்யும ஆர்வ நன்மொழி பேசுபவன் ஆய (சிறு. 99). அசசமும அவலமும் ஆர்வமும் நீக்கியவர் அறங்கூறவையத்தார் (மது 489, 492). குறமகளாக் கிய சோற்றைக் கூத்தர்க்கு ஆர்வமுடன் நெஞ்சு நிறைநத மகிழ்ச்சியராய் மலைவாழநர் மனை

தொறும் வழங்கினர் (மலை. 183-185). உடன் போககு மேறகொணடு அருஞ்சுரம் சென்ற தலைவியின் நலனைத் தலைவன் ஆர்வ நெஞசத்துடன் துயத்துத் தன் மார்பு துணையாகத் துயில்விப்பானாக என நற்றாய தெய்வத்தை வேணடினாள் (அகம். 35.10-13). அன்புகலநது ஆர்வம் சிறநத மென்மைத தன்மையுடையவள் தலைவி (அகம. 94: 12-14). 'ஆடையால மேனி முழுவதும் போர்த்துக் கொணடு புழுக்குற்ற தலைவியின் நுதலில காற்றுப் படச் சிறிது திற' என ஆர்வ நெஞசமொடு தலைவன் போர்வையை அகற்ற அவள நாணித தன்னைக், கூந்தலிருளால் மறைத்துக் கொணடாள் (அகம். 136:20-29). 'ஒறுக்கும் கடவுள் முன்னிலையில என் முனகை பற்றித தேற்றிய சொல் கடநது ஆர்வ நெஞசம் மேன்மேலும மகிழநது சிறக்க நின் மார்பைத் தராது ஏதிலன் ஆயினையே; இனி உனனை விடேன' எனக் காதறபரத்தை கூறினாள் (அகம. 396·7-11). அழிவிலாத செயலை முயலும் ஆர்வ மாக்கள் அசசெயல முடியத் தாம் வழிபடும் தெய்வத்தைக் கணணாற் கணடாற்போலத் தலைவியின் அழகிய பணைத்தோளை முயற்சியினாலாய வருத்தந் தீர எய்தினம் எனத தலைவன் கூறினான் (நற். 9·1-4). தலைவனிடம் ஆர்வமுடையராகி அவன் மார்பால் வருத்தமுறுவோரை அறியாத தலைவன் எனன மகனோ எனத் தலைவி கூறினாள் (நற். 94:7-9). அருளோடு நெருங்கும் ஆர்வ மாக்களால் பாராட்டுப் பெற்ற ஓவிய வல்லுநன எழுதியது போனற வனப்பினை உடையவள் தலைவி (நற். 146:7-10). பேய் மகள் உலாவும் நளளிரவில் ஆர்வ நெஞ்சத்துடன் கலந்து தலைவன் மார்புறப் பொருந்திய கண் அவன் அருஞ்சுரம் கடந்து செல்லின் எவ்வாறு துயிலும் வன்மை பெறும் எனத் தோழி தலைவிக்குரைத்தாள் (நற். 171:6-11). 'நின் வரலாற்றை யறிதல் அருமை என்பதை நன்கு அறிந்தே மாயினும் நினபால் உள்ள ஆர்வம பெரிதாதலின சொல்லுதற்குரிய ஆற்றலிலலாத யாம் சொல்பவற்றைப் பொருளற்றவை எனறு வெறுக்காது ஏற்றருளல் வேண்டும்' எனப புலவர் திருமாலை வேணடுவர் (பரி. 1:36-39). ஆர்வு 1. காண்க.

**ஆர்வலர் – அன்புடையவர்.** முதுகுடுமிப் பெருவழுதி பிறர் மண்ணை இன்னாவாகக் கொண்டு ஆர்வலரிடத்து–அன்புடையவரிடத்து-இனியவற்றைச் செய்தான் (புறம. 12:3-5). நெடுமானஞ்சி நெடுமனை முற்றத்து ஆவலர் நெருங்கி னலலது காவலர் கனவினும் நெருங்க இயலாது (புறம்.390:4-6). முருகனின ஆறுமுகங்களுள் ஒனறு ஆர்வலா ஏத்த அமாந்தினிது ஒழுகிக் காதலின உவந்து வரங்கொடுத்தது (முரு. 92-94). தன்மேல ஆர்வலர் ஏத்துதலாலே தன் மனமபொருந்தும் இடததில முருகன உறைவான (முரு. 219-221). தலைவர் கல்வரை அயலது சிறுநெறியில அடிச்சுவடுபடச் சென்றார் எனக் கேட்ட ஆர்வலர் பலர் ஆவர் (குறு. 207:5-7) ஆர்வலர்க்கு அளியாகத் திகழகிறார் திருமால (பரி. 1:41). இநதிரியம ஐந்தையும மயககமற நீக்கி, நான்கினால (மைததிரி, கருணை, முதிதை, இகழச்சி) உள்ளத்தைத் தூய தாக்கித் தம்மை ஒருநெறிப படுததிய ஆவலர் திருமாலைத தொழுதேததி அவர் புகழ் பாடினர் (பரி. 4·1-3). ஆர்வலர் தொழுத கையினது தாழசசிக்கண் அகபபட்டவரும் திருமாலே (பரி. 4 69,70).

**ஆர்வு - 1. ஆசை.** முதிரமலையில வழையொடு நீடி ஆசினியொடு அழகுபெற்ற பலாவினகண் ஆவு-ஆசை–உற்று முட்புற முதுகனியைப பெறற கடுவன் தன் மந்திககுக் கொடுபபதறகாகக கை காட்டி யழைககும (புறம். 158 21-25). இரநதோாககு ஆர்வுற்று ஈயாது ஈட்டியோன பொருள பலருககும புலப்படாமல புகழதராமல வருநதும் (அகம. 276: 12-15). ஆாவம் காணக.

**2. நிறைதல்.** மழைததுளி மேலுள்ள வேட்கையால் வானததைப பாடும வானமபாடி போலத தலைவன் செயயும அளியால அவன மேல ஆாவு-நிறைதல்-உறற அனபுடையளானாள தலைவி (கலி. 46: 20,21). ஆாவுறற பூசலில தலைவியிருநதபோது தலைவன் அறக்கடவுள் போல உரியநேரததில துயர் துடைததான (கலி. 145.62).

**3. நுகர்தல.** துலாக்கோலபோல ஓர்தலுற்று அறம புரியும் நெஞசததனாய தலைவன் தன்னால் -ஆாவுற்றார் – நுகரப்பட்டார் - நெஞசழிய விடமாட்டான (கலி. 42:13-15).

**4. மகிழ்ச்சி.** காரி ஏற்றின் சினததிற்கு அஞ்சானாய்ப் பாயந்த ஆயர்மகனுக்கே அலரெடுதத ஊராரை உசசிமிதித்து எமர் ஆர்வு–மகிழ்சசி-எயதி மகட்கொடை நோந்தார் எனத தோழி கூறினாள (கலி. 104:74-76).

**ஆரங்கண்ணி - ஆத்திப் பூவாலாய தலைமாலை.** காஞ்சியின் குளிர்ந்த தளிருடனே ஆரங்கண்ணி-ஆததிப பூவாலாய தலைமாலை – அணியப் பெறறது (புறம. 344:8). போரிற் சிறந்த சோழர் ஆரஙகண்ணி அணிந்தனர் (அகம். 93:4).

**ஆரம் - 1. சந்தனம்.** குறத்தி அடுப்பில் வைததெரித்த கொள்ளிக்கட்டை ஆரம்–சந்தனம்-ஆதலின் அதன் அழகிய புகை வேங்கையின் கிளையில தவழந்தது (புறம. 108.1-3). ஆரத்தின் கட்டையா லெழுபபிய

நெருப்பில இறைசசியையும் ஆரல் மீனையும் சுட்ட தால் மீன் நாற்றம தோன்றியது (புறம். 320 12,13). பழமுதிர்சோலை அருவி அகில் சுமந்து ஆரத்தின் கட்டைகளை உருட்டிக்கொண்டு ஓடும (முரு. 296, 297). பஞ்சம் வந்த காலத்தும் காவிரி நறையும நரந்தமும் அகிலும் ஆரமும் ஆகியவற்றை அடித் துச செலலும் (பொரு. 238,239). வையையாறு அகில், வாழை, ஞெமை, ஆரம் ஆகிய மரங்கள் வருந்த விரைந்தோடியது (பரி. 12:5). அகிலும் ஆரமும் துறையாடு மகளிர்க்குத் தோட்புணையாயின (சிறு. 116,117). மலையினின்று இழிதரும் அருவி ஆரம் தீண்டிப் பக்க மலையைத் தண்ணென நனைக்கும் (அகம்.228:2,3). குறவன் ஆரத்தை அறுத்துத் தீயூட்ட நறும்புகை சூழநதது (ஐங. 254:1,2). மணமிக்க ஆரததை வெட்டி அவ்விடத்தை உழுது தினை விதைத்தனர் (அகம். 388:2,4). குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும் காவிரிப்பூம்பட்டினம் வந்து சேர்ந் தன (பட். 188). நாகம், திலகம், நறுங்காழ ஆரம் எல்லாம் நன்னனது முற்றத்தில் குவிந்தன (மலை. 520). வையை கொணர்நத ஆரத்தின் புகை செவ் வேள் மார்பினைச் சூழ்ந்தது (பரி. 9:27,28). எரியில் உருகும் அகிலோடு ஆரமும் கமழும் செருவேற்றா னைச் செலவன் முருகன (பரி. 18:53,54). குறவர் தந்த சந்தின் ஆரத்தைத் திருவீழ் மார்பில் தென்ன வன அணிந்தனன (அகம். 13:4-6). மறவர் திண்காழ் ஆரத்தைப் பூசினர் (மது. 715). முருகாற்றுப்படுத்த இடததில் ஆரம் கமழ்ந்தது (அகம. 22:11,12). தலை வன் ஆரங்கமழும் மார்பினன் (அகம. 102:10; நற்.168: 10). தலைவன் தன்மலை ஆரம் நீவிய மார்பினன (அகம். 288:1,2; குறு. 161:5,6; நற். 344:5-7). மலையன் கானத்து ஆரம் நாறும் மார்பினன் (குறு. 198:6,7). தலைவன் வயிரம் முற்றிய ஆரம பூசிய மார்பினன் (நற். 314:4). பல நறுமணப பொருள்கள் கூட்டி யரைக்கப்பெற்ற ஆரம் கமழும் மார்பினன் தலை வன் (அகம். 100.1; 218:14,15). தலைவி (கொடிச்சி) ஆரம் நாறும் அறல்போற் கூந்தலள் (குறு. 286:3,4). பொதியில மலையிலுள்ள தெய்வங்கள் தஙகும் அடுககத்தின் ஆரம் போல வேனிற் காலத்தில் தலைவி தணணியள் (குறு. 376.1-3). மலைச சாரலில் தலைவனோடு தலைவி அருவி யாடி ஆரம் பூசுதல (நற். 259:5,6). குறவர் வெட்டி யழித்த நறைக்கொடி மீணடும் தளிர்த்து மணம் கமழும் வயிரம் முற்றிய ஆரத்தைச சுற்றிப் படரும் (நற். 5.3,4). நெடிய கணுககளையுடைய ஆரத்தின கிளை யில படர்ந்த தமாலக் கொடியைத் தேனெடுக்கும் வேடர் வளைதது அறுததுச் சென றனர் (நற. 292: 1-3). தலைவி பறித்துக் குவிதத பூக்களுள் ஆரத் தின் பூவும் அடங்கும (கலி. 93)

**2. முத்துமாலை.** நெடுஞ்செழியனது கழுவி விளங் கின ஆரம்--முததுமாலை-கிடந்த மார்பைக் குடபுல வியனாா முயங்கினார் (புறம. 19:7,18). கண்டீரக் கோப்பெருநள்ளி மார்பிற் பூண்ட வயங்கு காழ ஆரத்தைக் கடகமொடு வன்பரணர்க்கு நல்கினான் (புறம. 150:20,21). அருவி தாழந்த பெருவரை போல ஆரமொடு பொலிநத மாாபு (புறம. 198:1,2). மதி போனற ஆரம் மாாபிற் புரணடது (புறம. 362:2). நிலவுத் திகழ ஆரம் முகக்குவம் எனப் பரிசிலர் தடாரி கொட்டி நெடுஞ்செழியனைப் பாராட்டி னர் (புறம். 372:1,2,13). மாநில மடநதையின் மலை யாகிய முலையில் அசைந்து கிடககும் ஆரம்போல மலையினினறும் கானயாறு ஓடிவருகிறது (சிறு. 1-3). மாணிழை மகளிர் தம் கணவரொடு புலந்து பரூஉக்காழ் ஆரததை அறுக்கக் கீழே முத்துக்கள் சிநதின (மது. 680, 681). கதிர்விடு ஒண காழ ஆரம் கவைஇய மார்பு (மது. 716). தன்கடற்பிறந்த முத் தின் ஆரத்தைக் குறவர் தந்த சந்தின் ஆரததோடு தன் மார்பில தெனனவன் அணிந்தான் (அகம். 13: 1-6). நெடுவேள் மார்பின ஆரம்போலச் செவ்வா னத்துக் கொக்கினம் பறந்தது (அகம். 120:1-3). ஆர மாலை போன்றது கமுகம் பாளையிலுள்ள புதுப் பூங் கொத்து (அகம. 335:18). திங்களங் கதிர் முலை யிடைச் சுணங்கணி முற்றதது ஆரம் போன்றது (அகம. 362:11,12,15). தலைவியின் ஆரமாலை முலை மேல கிடத்தல (கலி. 4.9). திருமகள் மார்பில் ஆர மாலை யணிதல (கலி. 28:5). தலைவன் மார்பிலுள்ள ஆரமாலையைப் புதல்வன் பற்றி அறுக்கலானான (கலி. 79:11,12). தலைவன் மார்பில் ஆரவடம பூமாலையோடு அசைதல் (கலி. 135:17,18). சந்தனப் புகைசூழ்நத மார்பில் முத்தாரம் அழகு செய்தது (பரி. 9:28,29). ஒரு பெண் பூண்ட முத்தாரத்தின் அழகை நோககி இதற்கேற்றன இவை என நெருங்கிய முலைகளைப் பார்த்தான் ஒருவன் (பரி. 12:55). திரு மால் அருவியுருவின் ஆரம் அணிதல் (பரி. 13:11). வானம் மீனாகிய முத்துப் பூத்து விளங்கியது (பரி. 16:36). முலைககண அணிந்த முத்தாரம் அசைய ஆடினாள் ஒருததி (பரி. 21:61).

**3. மாலை.** நன்மாறன் ஆரம் - மாலை - தாழ்நத அணிகிளர் மார்பன் (புறம். 59:1). ஆரம் தாழ்நத அம்பகட்டு மார்பன் வல்வில ஓரி (புறம. 152:10-12). பரிசிலர் தடாரித தெணகண் முழக்கி வந்தது தோளில் கிடக்கும் பாம்பு போன்ற ஆரததை பரிசு பெறுவதற்காக எனக் கூறப்பட்டுளளது (புறம். 368:15-18). விரவுமணி ஒளிர்வரும அரவுறு ஆரம் அணிந்தவன் சேரமான வஞசன் (புறம். 398: 26,27). சேரலாதன் ஆரமா ர்பினன (பதி. 11:15,16)

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஒண்ணுதல் விறலியர்க்கு ஆரம் பூட்டினான் (பதி. 48:2). ஆரந் தாழ்ந்த அம்பகட்டு மார்பினன் முருகன (முரு. 104). செல்வர் அணிகிளர் மார்பில ஆரம் அணிந்தனர் (மது. 439). ஆரந்தாங்கிய அலர்முலை ஆகததள் அரசமாதேவி (நெடு. 136). ஆரந்தாங்கிய அலர்முலை ஆகத்தள் தலைவி (அகம். 75:12; 206:9). ஆரமார்பு (அகம். 102:10; நற். 265:5; கலி. 52:15). ஆரநன்னன் (அகம். 152:12). மலைச் செஞ்சாநதின் ஆர மார் பினன (குறு. 321:1). ஆரந்தாழ மார்பு (பரி. 11:26). தலைவியின் வளை, ஆரம் ஆகியவற்றைத் தலைவன் பரததைக்கு நல்கினான் (பரி. 20 33,34). 'எநதை எனக்குக் கொடுத்த வளையும் ஆரமும் நினபால் வநத வழி களவு இலதாயின் அவற்றை உனக்குக் கொடுததவனைக் கூறுக' எனத் தலைவி பரத்தை யிடம் வினவினள் (பரி. 20:76-78).

4. ஆர்க்கால். அசசுடைச சாகாட்டின் ஆரததில - ஆர்ககாலில - சிறுவெணபல்லி பொருந்தியுள்ளது (புறம். 256:2,3). வயிரததாற் செய்யப்பட்ட குறட்டில் மணிகளாலாய ஆரததையுடைய பொனனாற் செயத ஆழிப் படையைப்போரின் முன்னே செலுத தினர் (புறம. 365:4,5). உளி செதுககிய வடு அழுந திய குறட்டில ஆரம் சூழநத சூட்டினையுடையதுசக் கரம் (சிறு. 252,253). கொழுஞ சூட்டடருந்திய திருந்து நிலை ஆரத்தில வளைந்த மரம சூழந்து கிடககப் படுவது உருளை (பெரு. 46, 47).

5. சகடம். (ஆகுபெயர்). உமணரது ஆரததை - வண்டியை - இழுததுக்கொணடு முயற்சிமிகக எருது அருஞ்சுரதது மேட்டுப் பகுதியில ஏறிச் செலலும் போது மணியொலி கேட்கும (அகம. 191:4-7).

**ஆரல்** - 1. ஒருவகை மீன். குழிநத கிடங்கில் வாளை, நுண்ணிய ஆரல், வரால், கெடிறு முதலிய மீன்கள் உள்ளன (புறம். 18:8-10). கதிர்நுனை போலும் மூசகை யுடைய ஆரல சேற்றின்கீழ்ச் செருகிக் கொள்ளும் (புறம். 249:1). ஆட்டுக்கிடை கட்டிய வயல நீர்நிரம்பி நிற்றலின் ஆரல்மீன் உகளுதற்கு இடமாயிற்று (பதி. 13:1). ஆணசங்கு ஒளியுடைய மூககைப் பெற்ற ஆரலைச் சான்றாக வைத்துப் பொயகையில் தன் துணையைப் புணரும் (அகம். 246:1-3). தலைவன் தலைவியைக் கூடிய காலத்து ஓடும் நீரிலுள்ள ஆரலைக் கவரும் வாய்ப்பைக்குருகு பார்ததுக கொண்டிருந்தது (குறு. 25:3-5). 'நெய்தற் பரப்பில் தலைவி செயதிட்ட பாவையை ஆரல் மீனை அருநதி நிறைந்த வயிற்றினையுடைய நாரை மிதிககும் ஆதலின் அவளை அங்குப் போகவிடு' எனத் தோழி தலைவனிடத்துக கூறினாள் (குறு. 114). சேற்றடைகரையில் மேய்ந்த கொக்கு, தன் குஞ்சுக்கு ஆரல் ஈன்ற வெண்சிறு கடுகு போன்ற முட்டைகளையும் இறாலமீன் குஞசுகளையும் உண்ணக் கொடுக்கும (புறம். 342:7-10). வயலில் நெய்தலோடு நீண்ட ஆமபல் இதழைப் பறிக்க ஓடும் விளையாட்டுப் பெண்களின் ஒலியைக் கேட்டு ஆரல் மீனை உண்ணும் பறவைகள் உயர் மரம் ஏறி ஒலித்தன (கலி. 75:1-8). களமர் ஆரலமீனாகிய கொழுவிய சூட்டைக் கன்னத்திலே அடக்கி மது வுணட மயக்கத்தால் செய்தொழில் மறப்பர் (புறம. 212:4,5). சந்தனக் கட்டையாலாகிய நெருப்பில் ஆரல்மீன் மணங்கமழ அதனையும் இறைசசியையும சுடடு ஊனுணவைப் பெருஞசுறறததோடு தங்கி உண்டு செலலுமாறு பாணனிடம கூறினர் (புறம். 320:12-15).

2. கார்த்திகை மகளிர். மணி மிடற்றணணலாகிய சிவபெருமானுக்கு மதிக்கபபடும் ஆரலிடத்தே-கார்த்திகை மகளிரிடததே - பிறந்தவன செவ்வேள் (பரி. 9:7).

**ஆரல் மீன்** - கார்த்திகைமீன். மயிர்பபினனலிலே கிடக்கும மலர்ந்த பூக்கள, கரும் பாம்பிடததே கிடநது அதன் நிறத்தோடு மாறுபடும் ஆரலமீனின்-காாத்திகை மீனின-அழகை ஒககும (கலி. 64:2-4).

**ஆரற்பிறந்தோன்** – முருகன். கார்ததிகை மகளிருககுப பிறநதமையான முருகனை 'ஆரற்பிறநதோய' எனக் குன்றம்பூதனார் குறிபபிடுவர் (பரி. 9.7).

**ஆராதனை** - பூசைபபொருள. வையையில் நீராடுதற்கு, மகளிர் அகில மரம முதலிய புகைப பொருளையும் அவை புகைத்தறகுரிய அழலையும மலர்களையும ஆராதனை - பூசைபபொருள – ஆகிய அவியையும் ஏநதிச சென்றனர் (பரி. 6:11, 12).

**ஆரியர்** – ஓர் இனத்தவர். இமயத்தில ஆரியர் நிறைந் திருந்தனர் (பதி. 11:23). இமய வரம்பன நெடுஞ் சேரலாதன் பேரிசை மரபின ஆரியரை வெனறான (பதி. ப. 2:7). ஆரியர் பழககிய பிடியானையைக் கொண்டு களிறுகளைப் பிடிபபா (அகம. 276:9,10). சோணாட்டில உள்ள வலலததின புறததே ஒரு கால் ஆரியர் படையெடுத்து வநது தோற்றோடி னர் (அகம. 336:20-22). இமயவரமபன நெடுஞசேர லாதன் ஆரியரைத் தாககி வென்று இமயததில விற்பொறித்து அப்பகை மன்னரைப் பிணித்து வந்தான் (அகம். 396:16-18). பொன்படு நெடுவரை (இமயம்) ஆரியருடையது (அகம். 398:18,19). ஆரியர் (ஆரியக் கூத்தா) பறைமுழக்கத்திற் கேற்பக் கயிற்றின் மேல் ஏறி ஆடுவர் (குறு. 7:3,4). ஆரியர் பலர் முள்ளூர் மலையனை எதிர்த்து அவனது ஒருவேலுக்கு அஞ்சித் தோற்றோடினர் (நற். 170:6,8).

**ஆரிய அண்ணல் ஆரிய மன்னர் தலைவன.** செங்குட்டுவன் கண்ணகியின் படிவம் அமைத்தற்குரிய கலலெடுக்க இமயம் சென்றபோது எதிர்த்த ஆரிய அண்ணலை - ஆரிய மன்னர் தலைவனை-வென்று கல கொணர்ந்தான் (பதி. ப. 5:3-6).

**ஆரியஅரசன் பிரகத்தன் – வடநாட்டு அரசன்.** பிரகத்தன என்னும் இயற்பெயருடையவன். இவனுக்குத் தமிழின அகப் பொருளிலக்கண மரபைக் குறிஞ்சிப் பாட்டுக் கொண்டு கபிலர் உணர்த்தினார் (குறி. நச. உரைககுறிபபு).

**ஆரிய அரசன் யாழ்ப் பிரமதத்தன – வடநாட்டு அரசப் புலவர்.** குறுநதொகை 184–ஆம் பாடல் மட்டும் பாடியுள்ளார். கழறிய பாங்கற்குத் தலைவன் உரைப்பதாக இப்பாடல் அமைநதுளளது. 'தலைவி வாழும் சிற்றூரில செல்வோர் யாரும் தலைவியின் கண்வலையிற் படுவர். எனது நெஞ்சமும் அதிற் பட்டதில் வியப்பிலலை' என்று தலைவன் கூறுகிறான.

**ஆரியப்படை - வடவாரியர் படை.** பாண்டியன் நெடுஞ்செழியன் ஆரியப்படை - வடவாரியர் படை - வீரர்களை வென்றான. பாணடியருள் நெடுஞ்செழியன் என்னும் பெயருடைய வேந்தர் பலர் இருத்தலின் அவரின் வேறுபடுத்தற்கு இவனைச் சான்றோர் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் என்று சிறப்பித்தனர் (புறம. 183: அடிக்குறிப்பு).

**ஆரியப் பொருநன் - ஒரு மல்லன்.** இவன் மற்போரில் வலல பாணன் என்பானொடு பொருது தோள் களற்று மாய்ந்தான் (அகம. 386:3-7).

**ஆரேறு - சோழனது ஊர்.** சோழனது ஆரேறு – ஊர் - போன்றவள் தலைவி (நற். 265:6, 8).

**ஆரை - 1. உருளை** (ஆகு பெயர்). ஆரை - உருளை - உடைய சகடம் குழியில் புதைந்து ஆழ்ந்துவிடாமல் வலிய நோனபகடுகள் அதனை இழுத்துச் செல்லும் (புறம. 60:8,9).

**2. தொத்துளிபபாய** (வண்டிபபாய்). உமணர் சகடத்தின் மீது ஆரை - தொத்துளிப்பாய் - வேய்ந்துள்ளனர்; அது மலை முகிலைச் சுமப்பது போனறு உள்ளது (பெரு. 49, 50). முதலை கொட்டாவி விட்டாற்போனறு ஆரை (பாய்) வேயப்பெற்ற சகடத்தில் கூத்தர் ஊர்தோறும் செல்வர் (அகம். 301:6-8).

**ஆல் - 1. ஆலமரம்.** ஏறுகள் கொம்பினால் தோண்டிய குடர்களைப் பருநதுகள் எடுத்துப் பறக்கும் போது அக்குடர்கள் அவற்றின் வாயினின்றும் தப்பி ஆலின - ஆலமரத்தின - கொம்புகளிலும் கடம்பமரத்தின கொமபுகளிலும் விழுந்து மாலை போல் காட்சியளிக்கின்றன (கலி. 106:26-29). ஆலம் காண்க.

**2. கார்த்திகை மீன்.** ஆரல் என்பது ஆல் என வந்துள்ளது. வானத்தே விளங்கும் ஆல் - கார்த்திகை மீன் - போல முசுணடைக் கொடியின் வெள்ளிய பூக்கள விளங்கின (மலை. 100, 101). வானத்து வடபபக்கம் உறைகினற ஏழு மகளிரில் அருந்ததியொழிந்த ஆல் (கார்த்திகை மீன) ஆகிய அறுவரும் அவிப்பிண்டத்தை அயின்றனர் (பரி. 5:43-45).

**ஆல்கெழுகடவுள் - ஆலின் கீழ் அமர்ந்த கடவுள்** (சிவன்). முருகன ஆல் கெழு கடவுளின - சிவனின - புதல்வனாவான் (முரு. 256). ஆலமர்கடவுள், ஆலமர் செல்வன் காண்க.

**ஆல்கெழு கடவுள் புதல்வன் - முருகன்.** முருகனை 'ஆல் கெழு கடவுள் புதல்வ' என்று நக்கீரர் விளிக்கிறார் (முரு. 256).

**ஆலங்கானத்தமர் – ஆலங்கானத்தில் நடந்தபோர்.** (ஆலங்கானம், தலையாலங்கானம் என வழங்கும்) பாணடியன் நெடுஞ்செழியன் ஆலங்கானம் என்னும் ஊரில், சேரன், செம்பியன், திதியன், எழினி, எருமையூரன், இருங்கோவேண்மான், இயலதேர்ப் பொருநன ஆகிய எழுவரையும் ஒரு பகலில வென்று அவர்களுடைய முரசுகளையும் வெணகுடைகளையும் கைப்பற்றிப் படைகளைக் கொன்று வெற்றி கொணடான் (அகம். 36:14-22). உலகம் நெளியும் படி திரண்ட பரநத படையை ஆலங்கானத்தமரில பாண்டியன் நெடுஞ்செழியன் காலன் போல் அழித்து வென்றான் (புறம. 23:15-17). விரைந்து செல்லும் தேரையும் கைவண்மையையும் உடைய நெடுஞ்செழியன் ஆலங்கானத்தமரில் பகைவர்களை வென்றான் (அகம். 175:10,11). ஆலங்கானம் காண்க.

**ஆலங்கானம் - சோழ நாட்டில் உள்ள ஊர்.** நெடுஞசெழியன் பகைவர் நாட்டை எரிபரப்பி யழித்து ஆலங்கானத்தில் தங்கிப் பகையரசர் பட வெனறு அவர் முரசம் கொண்டான் (மது. 126-129). நெடுஞசெழியன் ஆலங்கானம் சிவப்புறும்படி சேரன், சோழன் ஆகிய இருபெருவேநதரையும் குறுநில மனனர் ஐவரையும் வென்று அவர்களின் முரசும் குடையும் கொண்டான் (அகம். 36:14-22). நெடுஞ்செழியன் ஆலங்கானத்து அமர் கடந்து உயர்த்திய வேலைப்போல மின்னல மின்னியது (அகம். 175: 10-12). அழகிய தேரும் திணிதோளும் உடைய நெடுஞசெழியன் ஆலங்கானத்தில் பகைதத எழுவரை வென்றான் (அகம். 209:4-6). ஆலங்கானத்தில வேல்வீரருடன் பகைவர் அஞ்சப் பாசறை கொணடிருந்த நெடுஞ்செழியன் உறையினின்று கழித்த

வாள்போல மின்னல் மின்னியது (நற 387:6-9). ஆலங்கானத்தமா காண்க.

**ஆலங்குடி வங்கனார் – புலவர்.** ஆலங்குடி என்னும் ஊரினைச் சேர்ந்த, வங்கனார் எனனும் இயற் பெயருடையவர். சங்கப பாடலில அகம், புறம் என்னும் இரு திணையையும் பாடியவருள் ஒருவர். புறநானூற்றில் ஒன்றும் (319), அகநானூற்றில ஒன்றும் (106), குறுநதொகையில இரண்டும் (8,45), நற்றிணையில் மூனறும (230,330,400) ஆக ஏழு பாடலகள் தொகை நூல்களில இடம பெற் றுள்ளன. மருதத திணையில அமைநதுள்ள இவர் தம் ஆறு அகபபாடல்களும், பரத்தை, தோழி ஆகியோர் கூற்றுககளாக உள்ளன. இவருடைய புறநானூற்றுப் பாடல வாகைத திணையில வல லாண் முலலைத துறையினதாகும. அகநானூறு 106-ஆம் பாடலில் செழியற் பற்றியும, நறறிணை 400-ஆம் பாடலில் சோழரின உறையூரிலிருநத அறங்கெழு அவையம் பறறியும் குறிபபிட்டுளளார்.

**ஆலத்தூர் கிழார் - புலவர்.** ஊரினாற் பெயர் பெற்ற சங்கப புலவர்களில் ஒருவா. ஆலததூரினராகிய இவா அகம், புறமாய இரு திணையிலும பாடி யுள்ளார். புறநானூற்றில ஐநது பாடலகளும (34,36,69,225,324) குறுந்தொகையில இரணடு பாடலகளும (112, 350) ஆக ஏழு பாடலகள தொகை நூலகளில இடம பெற்றுளளன. புறப பாடல்கள பாடாணடிணை (புறம. 34,69), வஞ்சி (புறம. 36), பொதுவியல (புறம. 225), வாகை (புறம. 324) ஆகிய திணைகளிலும், அகப்பாடலகள் குறிஞ்சி (குறு. 112), பாலை (குறு. 350) ஆகிய திணை களிலும் அமைநதுள்ளன. சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (புறம. 34,36) சோழன் நலங்கிளளி (புறம. 225) ஆகியோரைப பாடி யுளளார். பொருநை என்னும் ஆறு பறறியும் (புறம. 36) உறநதை எனனும் ஊர்பறறியும (புறம. 69) இவர் தம பாடலிற குறிப்பிட்டுளளார்.

**ஆலம் - 1. ஆலமரம்.** ஆலமரம் பொரிநத அடி மரத் தையுடையது (அகம். 287:7). ஆலமபழததின நிறம புதுப்பானை நிறததினை ஒததிருக்கும் (ஐங். 303.1). ஆலம்பழததை நேற்றுத் தினறோம் என்று அமை யாது மீணடும் அதனகட் செலலும் இயல்பினது புளளினம் (புறம. 199:1-3). தன மகனுடைய செல் வமும் தலைமையும் ஊரின் முன்னர்ப் பழுத்த கோளி ஆலததில், புட்கள் வந்து மிகுமாறு அமைந்த புதுவருவாயினை ஒத்தனவாகும் எனறு தாய் தன் மகனைப புகழநதனள (புறம. 254:7-10). பழுங்கள் நிறைந்த ஆலமரததில, வாசசியங்களைப் போனற பல ஓசையுடைய பறவைததிரள ஒலித தது (மலை. 268, 269). பாண்டியர்க்குரிய கோடிக் கரையில், ஒலிக்கும் கடற்றுறை முறறததே, மறை ஆயவதற்கு இராமன் ஆலமரததிலுள்ள பறவை களின ஓசையை அடககினான் (அகம. 70.13-15). அடி சிதைநத ஆலமரத்தின நெடிய சினையை அதன் விழுது தாஙகும். இது, தன முனனோா இறக்கத் தளராது நினறு தன குடியைக காக்கும பாணடி யன வெளளியம்பலததுத் துஞ்சிய பெருவழுதிககு உவமை (புறம. 58:2-5,8). ஆலமரததின் அசையும் நெடிய விழுது, தன தேமல பொருநதிய தொடை யில உராயநதிடத் தலைவி தலைவனுடன உடன் போக்கிற சென்றனள (அகம. 385 9, 10,15,16). சிற் றூரிலுளளோர் பலியிடுதல மறநத வெளிய பலி பீடததை அடுதது, மதில போலச சூழநத பொரிகள் பொருநதிய ஆலமரததின நீணட தனிதத விழுதினை மோதிய கோடைககாறறு, துணை யொடு கூடியிருநத புறாவினை ஓடச செயதது (அகம். 287:5-9). மழை பெயயா தொழிநத வெளிய வானில துளிமாறிய காற்று வீசும காட்டுவழியி லுள்ள ஆலமர நிழலில தஙகி இளைபபாறிச் செலலுமாறு தலைவன இடைசசுரததே தலைவிக் குக கூறினான (நற. 76.1-5). தொனமுது ஆலததின அடியிலுளள பொதுவிடததில நானகு ஊரிலுளள கோசா தஙகினா. அவா வாயமைககுப பெயா போனவர் (குறு. 15 1-3). தேரினையுடைய கோசர் தொனமை வாயநத ஆலமரததின் கிளைகளையு டைய மனறததில முரசம முழஙகப பகைவா போா முனையை அழிததனா (அகம. 251.7-10). ஆலமரத தின கிளையிலிருநது மறவா அமபு செலுத்த, இறநதவரின பிணஙகளைக காககைக கூட்டம கவர்நதுணணும (அகம. 319.1-5). பூந்தாதுகள் எரு வாக உதிாநது கிடக்கும சிறறூர்த் தெருவில் செல லும ஆனிரையின முதுகினைக் கடவுள உறையும் ஆலமரத்தின நெடிய விழுது தீணடியது (நற். 343: 2-4). ஏறு தழுவுவோர் நீாததுறையிலும ஆலமரத் தின் கீழும் மாமரததின கீழும உறையும தெயவங கட்குச் செய்யும் முறைமைகளைச செயது பரவித் தொழுவினுட பாயநதனா (கலி. 101:13, 14). ஆல மரமும கடபப மரமும ஆறறிடைக் குறையும் குனறும் ஆகிய இடஙகளைப பொருநதிய பல தெயவங்களாக வகுததுச் சொலலபபெறும் பெயர் அனைததையும் உடையவர் திருமால (பரி. 4 67-70). ஆல 1 காணக.

**ஆலம்பேரி சாத்தனார் - புலவர்.** மதுரை ஆருலவிய நாட்டு ஆலமபேரி சாத்தனார் எனவும் குறிககப் பெறுவா. இவர் மதுரை ஆருலவிய நாட்டு ஆலம பேரி எனனும ஊரிலுளள சாததனார் எனனும் இயற பெயரினர். அகததிணை மட்டும பாடிய

வர்களில் ஒருவர். அகநானூற்றில் நான்கு (47, 81, 143, 175) நற்றிணையில் நானகு (152, 255, 303, 338) ஆக எட்டுப் பாடல்கள் பாலை, நெயதல், குறிஞ்சி ஆகிய திணைகளில் அமைந்துள்ளன. அவை தலைவன், தலைவி, தோழி ஆகியோர் கூற்றிலமைந்த களவியற் பாடல்களாக உள்ளன. நற்றிணை 303, 338 ஆகிய இருபாடல்களின் ஆசிரியர் மதுரை ஆருலவிய நாட்டு ஆலம்பேரி சாத்தனார் என்று பி. நா. பதிப்பில குறிப்பிடப்பட்டுள்ளது. அவறறில செழியன் (அகம். 47,175) கடலன் (அகம். 81) வானவன மறவன பிட்டன் (அகம். 143) ஆகியோர் பற்றியும் சிறுமலை (அகம். 47) குதிரைமலை (அகம். 143) ஆலங்கானதது அமர் (அகம். 175) பற்றியும் அமைந்துள்ள குறிப்புக்கள் இடம் பெற்றுள்ளன.

**ஆலமர் கடவுள்** - ஆலிலையின் மேவிய திருமால். 'ஆலமர் கடவுளை – திருமாலை - போன்ற நின்னுடைய செலவத்தைக் கணடேன' என்று பாணடியன் இலவநதிகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனை வடமவண்ணக்கன் பேரி சாததனார் போற்றுகின்றார் (புறம். 198:9,10). [இதெொடர்க்கு 'ஆலின் கீழ் அமர்ந்த முக்கட் செல்வனாகிய கடவுள்' எனக் கொணடு அவனை ஒப்ப என்றும் நிலைபெறறிருபபேனெனறு இருக்கும நன்மாறன் என்றும கூறுவர் (புறம. 198 பழைய உரை).]

**ஆலமர் செல்வன்** – ஆலின் கீழிருந்த இறைவன் (சிவன). நாகம் நல்கிய நீலக் கலிங்கத்தினை ஆய், ஆலமர் செல்வற்கு - சிவனுக்கு - விருமபிக் கொடுத்தனன் (சிறு. 96-99). ஆலமர் செலவனுடைய அழகமைந்த மகன முருகனாவான் (கலி. 81:9; 83:14).

**ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல்** - ஆலின் கீழ் அமர்ந்த இறைவனுடைய மகனாகிய அழகமைந்த முருகன. 'ஆலமர் செல்வன் அணிசால் பெருவிறல் –முருகன்–போல என உயிர் வரும்' என்று தலைவி, நடைத்தேர் உருட்டிவரும் தனபுதல்வனை ஆர்வ மொழியாற் கூறி மகிழகின்றாள (கலி. 81:9).

**ஆலமர் செல்வன் அணிசால் மகன்** - ஆலின்கீழிருந்த இறைவனுடைய அழகமைநத பிள்ளையாகிய முருகன். தலைவனுடைய மகன், பனங்காயாற் செயத உருளையை இழுதது வருகின்ற விளையாட்டுப பிளளைகள் சூழத தேரேறி வீடு திருமபும் காட்சியைச் சாளரததிலிருந்து கணட பரத்தையர் ஆலமர்செலவன அணிசால மகனின - முருகனின் - காலகோள் விழாக் காடசி எனக கருதி வாசலில் விரைந்து வநது கணடனர் (கலி. 83:14,15).

**ஆலமுற்றம்** - ஒரூர். காவிரியாற்று நுண்மணல திரணட எக்கருடையதும் செல்வமிக்க வேந்தரால் புரக்கப் படுவதும் நான்மறை அருளிய முக்கட் செல்வற் குரியதுமான ஆலமுற்றம் என்னும் ஊரில் அழகுற இயறறப்பெற்ற பொய்கையைச சூழ அமைந்த பொழிலில் சிற்றிலிழைத்து விளையாடும் மனை மகளிர் தங்கினர் (அகம. 181:12-19).

**ஆலி - 1. ஆலங்கட்டி.** மேகம், பெரிய மலையில் விலங்குகள் நடுங்குமாறு இடித்துக் காற்றொடு மயங்கிய விரைந்த துளிகளை ஆலியொடு-ஆலங்கட்டியொடு-சிதறிப் பெய்தது (பதி.50:1,2). இருப்பைப் பூக்கள் காம்பினின்றும் கழன்று, வானிலிருந்து விழும் ஆலி போலக் காற்றால் சிதறுணடு சிவந்த வழிகளில பரவிக்கிடககும் (அகம். 9:3-7). இருப்பையின் குலையினினறுங கழன்ற உட்டுளையுடைய பூக்கள் ஆலியினைப் போனறு தரையிற் கிடககும (அகம். 95.6-8). கோடைக்காற்றால் உதிர்நத முருஙகைமலர் ஆலங் கட்டிபோலப் பரநதன (அகம. 101:15,16). யானையின் புள்ளியினையுடைய முகத்தில் மோதி விழுந்த புதிய ஆலங்கட்டி பளிங்கினைச சொரிவதுபோலப பாறையில் விழுந்து அழகு செய்தது (அகம். 108:3-5). இரவத்தின் விதையினைப் போனற அருமபுடைய ஈங்கையின் வெள்ளிய மலர் ஆலியைப் போனறு விளங்கும (அகம். 125:3,4). வெண்கடம்ப மரத்தை யானை உராயுந்தோறும, அதன மலர்கள் மழையோடு வீழும் ஆலிபோல உதிர்ந்து, நெல்விதை போலப பாறைமீது பரவிக காயநது கிடக்கும் (அகம். 211:4-6). யானைக் கொமபினைக் கொண்டு, மலையினை அகழ்நதபோது அக்கொம்பிலிருநது சிதறிய முதது்க்கள ஆலியினைப் போன்று காணப் பட்டன (அகம். 282:3-7). வானில் எழுநத கரிய மேகம், கண சிதறிய நுங்கினைப் போல, மிக்க குளிர்ச்சிபொருந்திய ஆலியோடு பெரிய துளிகளைப பொருந்த விடியறகாலத்தே பெய்தது (அகம். 304: 1-5). புலியொடு பொருது வருநதிய களிற்றின் விழுப்புண்ணைக் கழுவி இரவில மேகம் ஆலியொடு கூடிய மிக்க மழையைப் பெய்தமையால, விடியற் காலத்தில அருவியிற புனல மிக்குச சென்றது (அகம. 308:1-4). களிறு தன் முதுகினை உரசிக் கொணட அடியினையுடைய இலவமரத்தில் வெள்ளிய விதைகள, ஆலிபோல அகன்ற பாறைகளில பரவிக் கிடக்கும் (அகம. 309:6-8). கூநதலை ஒத்த மேகம் ஞாயிறு மழுங்குமாறு வானில பரவிப் பாம்பின் படம அழிய இடிக்கும் கடுங்குரல் இடியுடன் ஆலியொடு மிகக துளிகளைப் பெயது கால இறக்கியது (அகம. 323.10-13). மேகம் பிடிக கூட்டம் போலத் திரணடு, களிற்றுக் கைபோலக கால் இறககி, மகளிர் ஆடும் கழஙகினைப போன்ற ஆலியோடு துளிகளைச் சிதறிப் பெயயத தொடங்கல்

(அகம். 334:5-9). கமுகின புதுபபூ விரிய அதன் வெள்ளிய மலர்கள பரவிய பலகறை போன்ற ஒளளிய நிறத்தையுடைய ஆலி போன்று மகிழவைத தரும் (அகம். 335:18-22). நறிய வடுக்கள் நிறைநத மாமரததின் காமபற்று உதிர்நத வடுக்களைப் பாலை நிலத்தியங்கும குறவர், மழையொடு விழும் ஆலியைப போலப பொறுககித தொகுபபர் (ஐங. 213:1-3). ஆலியினை யுடைய மழை பெய்தலால தலைவர் சென்ற வழி வெளிதாய் மலர்ந்த முல்லை மலர்களை யுடையது (ஐங. 437).

2. நீர். மேகம நீல மணியை ஒதத நீர் நிறைநது சூல கொணடு, வானிடததே இடிததுப பொழிநத ஆலியினால-நீரால-நிலம தட்பம எயதிக காடு தழைத்தது (அகம. 314:1-3).

ஆலியார் - புலவர். இவர்தம் ஒரே பாடல் புறநானூற் றின 298 ஆம் பாடலாக அமைநதுள்ளது. இவர் ஆலி யெனனும ஊரினராகக் கருதப்படுகினறார் (புறம.உ.வே.சா. பாடினோர் வரலாறு). கரநதைத திணை யின நெடுமொழிததுறையி லமைநத இவா பாடல ஒரு வீரன கூறறாக அமைந்துளளது. தன் தலைவன் தனககுச சிறநத உணவை அளிககின்றானேயனறி, முநதிச செனறு போர் புரியத தனனை அனுபப விலலையே யெனறு கூறும பாஙகில, தலைவனு டைய கொடையும் வீரமும தன வீரமும் ஒருங்கே வெளிப்படக் கூறுகினறான

ஆலை – 1. கொட்டில். 'கரும்பு பிழியும இயநதிரததின ஓசையுடைய, கருப்பஞ்சாற்றைக் கட்டியாகக காய்ச சும புகை சூழநத ஆலை – கொட்டில - தோறும அசசாறறினை உணணுவீராக' எனறு செலலும பாணருககு ஆறறுபபடுததுவோன கூறினன (பெரு. 260-262). கருமபின பாகை அடுகின்ற ஆலையின தீப்புகை சுடுவதால வயலில நெயதல மலா அழகு கெட வாடியது (பட. 8-12). வேற்படைமிகக சேனை கெட்டது எனனுமாறு, காறறால கவிழநது சாய்நது குறைநது போதலும், அறறொழிதலும் இல்லாத வளாச்சியோடு, வெடடப்பெறறு ஆலையிற் சென்று பயனபடுதற்குக் கருமபு அசைநது நிறகும (மலை. 119). கரும்பினைச சாறாக்கும ஏத்தததினையுடைய ஆலை, மேகததைக் கணடதுபோல விளஙகியது (மதுை. 340,341).

2. யானைக் கூடம். மிகக உணவினைக் கொடுத்துப பலயாண்டுகள் புரந்த களிற்றினை இழநத பாகன் அது தஙகிய ஆலையில்-யானைக் கூடத்தில-உளள யானைகட்டுகினற கம்பம் வறிதாக நிற்பதனைக் கண்டு கலஙகினான் (புறம. 220:1-4).

ஆவணம் - 1. அங்காடி (கடை வீதி). செல்வக கடுங்கோ வாழியாதனின வீரர் பகைவேநதர் ஊர்ந்து செல லும் யானையின் வெணகோட்டினைக் கொடி அசையும் ஆவணததில-அஙகாடியில-கள விலை யாகத் தநது கள பெற்றுணடு மகிழநதனர் (பதி. 68: 9-11). மகளிர் விளக்கேறறி நெலலும் மலரும் தூவி ஆவணததில மாலைககால வழிபாடு செயதனர் (நெடு. 42-44). மகளிரின குரலோசையுடன வஙகியம இணைநது இசைகக, யாழ, முழவு, முரசு ஆகியவை ஒலிபபக் கொணடாடும விழா ஆவணததில இடை யறாது நிகழும் (பட. 155-158). வளம மிகுநத ஆவணததில உளளவரும தெருவில உளளவரும உறஙகினாலும, கடுஞ்சொல கூறும அனனை துஞ் சாள் (அகம. 122·3,4). செலவம் நிறைநததும உபபங கழிகளாலும் தோட்டஙகளாலும சூழப பெற்றது மாகிய மருஙகூர்ப பட்டினததே ஒளி நிறைநத ஆவணம இருநதது (அகம 227.19-21).

2. எழுத்துச் சானறு. (மககளது உடைமை, உரிமை முதலியவறறைக குறிபபதறகு ஓலையில அமைதத எழுத்துச சானறு). கயிறறால வரிநது கடடப பெறற குடஙகளில வைதத பொறிகளை ஆயநது நீககி, அவறறிலிருநது ஆவணஙகளை - எழுததுச சானறுகளை-எடுதது (ஊாசசபையினரைத) தோவு செய தல மரபு (அகம 77.7,8).

ஆவண மாக்கள – ஓலையைத் தேரும் மககள. வாரியத திறதரிய உறுபபினரைத தேரும பொருட்டுக குடததின மேல இடபபட்ட இலசசினையை ஆய்நது நீககிக் குடததில இடபபட்ட வோலையை எடுததுத தேரும மககள ஆவணமாககள - ஓலை யைத தேரும மககள-ஆவர் (அகம 77.7,8).

ஆவம் - 1. அம்பறாதநூணி செலவக கடுங்கோ வாழி யாதன ஆவம-அமபறாததூணி-சோநத முதுகை யுடையவனாயத தோமீது நினறு கையிடத்து நாணால வடு உணடாகுமபடி அமபு எயயும ஆற றல உடையவன (புறம. 14 8,9).

2. போர் பரிசிலர் விருமபியவாறே கொடுக்கும் கொடையுடைய வீரன், வெளவேல கொணடு செய யும் ஆவம்-போா-நேருமிடத்து யானையைக் கொல வதறகே வாளை உறையினினறு நீககுவான் (புறம. 323·4-7).

ஆவி - 1. நீர்ப்பொருள் (திடபபொருளகள மாறும ஆவிநிலை). உருவம் காணடறகுரிய சிறநதகணணாடியில ஊதப் பெறற ஆவி - நீராவி – மெலலமெலலக குறைவது போலத் தலைவன பிரிவைத தாஙகும என ஆறறல குறைகின்றது எனத தலைமகள கூறுகினறாள (அகம. 71 : 13 - 15). தொனமைடமான இளநதிரையன தூரததே நிற்கும் பாணனைத் தனபால அழைததுக

கொட்டைப் பாசியின் வேரை ஒத்த கிழிந்து சிதறிய ஆடையை நீக்கி ஆவி (பாலாவி) ஒப்ப விளங்கும் நூலாடையை நல்குவான் (பெரு. 467-470). மாடத் தினுள்ளிருந்து எழுந்த அகிற்புகை மலையில் பூங் கொடிக்கண் தங்கி மேலெழும் ஆவி (பனியாவி) போல் இருத்தல் (பரி. 10:122-125).

2. புகை. குறித்த பருவத்தில் தலைவன் வாராமை யால தலைவியின் அழகு கெடும் என்று கருதிய தோழி, அந்தணர் செய்யும் யாகத்திடத்து ஆவி-புகை-போல நெட்டுயிர்ப்புக் கொண்டாள் (கலி. 36:24-26). வையையில் நீராடிய மகளிர் அகிலின் ஆவி கொண்டு ஈரம் புலர்த்தினர் (பரி. 10:72). திசை யெங்கும் பரந்துள்ள குன்றுகளில் மேவிய முருகன், உலகத்தார் பலவிடத்தும் செயயும் பூசைக்கண் எழும அகிற்புகையை ஆவியாகக் கொளகின்றான் (பரி. 17:29,30). வையையில் நீராடச் செல்வோர் மென்மை வாய்ந்த ஆவியை - புகைப்பொருளை - எடுத்துச் செல்லல் மரபு (பரி. தி. 2:12).

3. பேய்த்தேர். ஞாயிற்றின் மிகக கதிரால் தோன் றும் ஆவியின்-பேய்த் தேரின்-அலைகளை நீர் என விலங்குகள் மயங்கி ஓடி அலையும (அகம. 327:8-10).

ஆவியர் - ஆவி என்பானை முதல்வனாகக் கொணடு தோன்றிய குடியினர். ஆவியர் குடியில் தோன்றிய நெடுவேளாவி பொதினி மலைப் பகுதியை ஆண் டான் (அகம். 1:3,4,61:15,16). மயிலுக்குப் போர்வை அளித்த பேகன் ஆவியர் குடியிற் பிறநதவன் (சிறு. 85,86).

ஆவியர்கோ – ஆவியர் குடியில் தோன்றிய தலைவன் (பேகன). 'ஆவியர் கோவே, நினனால் துறக்கப் பட்ட கணணகியை நீ அடைவதே யாம் விரும்பும் பரிசில்' எனப பேகனிடம் பெருங்குனறூர் கிழார் வேண்டுகின்றார் (புறம. 147:7-9). ஆவியர் பெரு மகன காணக.

ஆவியர் பெருமகன் - ஆவியர் குடியில் தோன்றிய தலைவன் (பேகன). ஆவியர் பெருமகனும் மலை நாட்டை யுடையவனுமாகிய பேகன, கார்காலத்தே மகிழச்சியால் அகவிய மயில, குளிரால் வருந்து வதாக எணணித தன் போர்வையை அதற்கு அளிததான் (சிறு. 84-87). ஆவியர்கோ காணக.

ஆவிரங்கண்ணி - ஆவிரம் பூவாலாய தலைமாலை. மட லேறும் தலைவன் பொற்றகடு போல் விளங்கும் ஆவிரங்கண்ணி - ஆவிரம் பூவாலாய தலைமாலை யை - அணிவான் (கலி 140:7).

ஆவிரை - ஒருவகைச் செடி. தலைவி ஆயத்துடன் விளையாடப் பறித்த மலர்களுள் ஆவிரையும் ஒன்று (குறி. 71). விறலியர் கூத்தரொடு ஊர்தோ றும் சென்று ஆவிரைச் செடியில் விளங்கும் மல ரால் தொடுத்த மாலையணிந்து காட்டுத்தீயின் ஒளியில் ஆடுவர் (அகம். 301:13-15,21). தோழி குறை மறுத்த போது தலைவன், 'நான் ஆவிரையின் பொன்னிறமுடைய மலர்களாலாகிய மாலை சூட் டப்பெற்ற பனை மடலாலான குதிரைமீது ஏறி நும்மூர் வந்து தலைவியைப் பெறுவேன்' என்றான் (குறு. 173). பூளை, ஆவிரை, எருக்கு ஆகியவற்றின் மலர்களுடன் மயிற்பீலியைச் சேர்த்துத் தொடுத்த மாலையை மடன் மாவிலே கட்டி, மடலூர்ந்து தலைவியைப் பெற்றதாகத் தலைவன பாங்காயி னார்க்குக் கூறினான் (கலி. 138:8-10, 29). மூங் கிலை வென்ற தோளையுடைய தலைவி எனக்குப் பூளைப் பூவும் ஆவிரையின் பொனனிறப் பூவும் தந்தாள் என்று தலைவன் உரைத்தான் (கலி. 138: 18,19). தலைவன் ஆவிரைபபூ, எருக்கம் பூக்களால் தொடுத்த கணணியணிந்து மடனமாவேறிச் சான றோர் முன் வந்து தனகுறை கூறினான் (கலி. 139: 8-13).

ஆவினன்குடி - ஓரூர். (முருகனுடைய படைவீடுகள ஆறில் ஒன்று). அந்தரக் கொட்பினர் (பிரமன் முதலாயவரும் தேவரும்) சேர்ந்து வான் வழி வந்து காணும்படியாக முருகன ஆவினன்குடியில் அருட்கற்பினையுடைய மடந்தையுடன் (தெயவயானையாருடன) சில நாள் இருத்தற்கும் உரியவன (முரு. 174-176).

ஆவுதி - 1. அவியுணவு. அதியமான் நெடுமானஞ்சியின் முனனோர் தேவர்களைப் போற்றி வழிபட்டு அவர்கட்கு வேள்விக்கண ஆவுதி அருத்தினா (புறம். 99:1). இருடிகள் தீயின கணணே வேட்டலைச செய்யும் (நெய முதலிய) ஆவுதியின நறும்புகையை வெறுத்த குயில தன பெடையுடன நீங்கிப போய், இளமரக்காவி லுள்ள பூதம காககும் கடிநகரில் (காளி கோட்டம்) தங்கும் (பட். 53-58). புகார் நகரில் வாழநத வணிகரின் பணபுகளில் தேவரை வழி பட்டு, வேளவிகளைச செயது, அவற்றால ஆவுதி களை அவர் நுகருமாறு செயவதும் ஒனறு (பட். 200).

2. புகை. அறநூலிலும் நான்மறையிலும் கூறப் பெற்றதும் அரிய சமிதையும் பொரியும் இட்டு நெய்மிக்க ஆவுதி-புகை-கிளர்நதெழுமாறு செய்யப் பெறுவதுமாகிய வீயாச் சிறபபினையுடைய வேள்வி களைச் செய்து, அவ்வேள்விச சாலையில் யூபத் தூண நடுவது மரபு (புறம். 15:17-21). தேவரை வழிபடுமபொருட்டு எடுத்த வேளவித்தீயின் சுடர் எழுந்தோறும மெயயிற்பரந்த ஆவுதியும் விருந்தி னர் உண்பதற்காக ஆட்டிறைசசியைப் பொரிககுந் தோறும் ஓசையொடு எழும் அடிசில் நெய்யாகிய ஆவுதியும் ஒருங்கே கமழுமாறு, பலயானைச்

செல் கெழுகுட்டுவன் வேள்விகள் இயற்றித் தேவரை யும் மக்களையும் பேணினன் (பதி. 21:5-7, 9-15).

3. வேள்வி. சந்தனம் பூசப் பெற்ற மார்புடைய வராய் ஆவுதி - வேள்வி - செய்து மயிர்க்கட்டு அணிந்து மாவிசும்பு (சுவர்க்கத்தே) ஏறப் போகும் சான்றோர் போன்று நன்றுந் தீதும் ஆராய்ந்து மனத்தை அடக்கிச் செயற்படும் காவிதிமக்கள் விளங்கினர் (மது. 494-499).

**ஆலூர் – ஓரூர்.** தமிழகததில் இப்பெயரிலமைந்த ஊர் பல உள. இவ்வூர்த் தொடர்புடைய பெயர் கொண்ட சங்கப் புலவர் சிலர் உள்ளனர். காரி யாற்றுத் துஞ்சிய சோழன் நெடுங்கிள்ளி இவ்வூரிலி ருந்த காலததில் சோழன் நலங்கிள்ளி இதனை முற்றுகையிட்டான் (புறம். 44 அடிக்குறிபபு).

**ஆலூர்கிழார் - புலவர்.** இவருடைய ஒரே பாடல் புறம் 322–ஆம் பாடலாக அமைந்துள்ளது. ஊர்ப்பெய ரோடு கிழார் என்னுஞ்சொல் சேர்ந்து அமைந்த பெயர் பெற்றுள்ள புலவர்பலருள் ஒருவர். வாகைத் திணை, வலலாண்முல்லைத் துறையிலமைந்த இவர் பாடல், வேல்வீரனொருவனுடைய வீரத்தைச் சிறப் பிககின்றது. கவைத்த முள்ளை யுடைய களளி மரததின பொரிந்த அடிக்கு, நிலததை உழுது ஓய்ந்து நடக்கும காளையின் கொமபினை உவமை கூறியிருப்பது நயமிக்கதாகும். இவருடைய மகன் கண்ணனாரும் சங்கப் புலவருள் ஒருவராயத் திகழ்கின்றார். [இப்பெயர் ஆலூரமுகியார் என்று சில ஏடுகளிற் காணப்படுவதாக உ. வே. சா. குறிப் பர்: புறநானூறு-பாடினோர் வரலாறு.]

**ஆலூர் கிழார் மகனார் கண்ணனார் – புலவர்.** கண்ண னார் என்பது இபபுலவர்தம இயற்பெயர். ஆலூர் கிழார் இவருடைய தந்தையார். தந்தையைப் போலவே புலமைசான்று, சங்கப் புலவர் வரிசை யில் இடம் பெற்றுத் திகழும் இவருடைய ஒரே பாடல் அகநானூறு 202 – ஆம் பாடலாக அமைந் துள்ளது. தோழி வரைவு சுடாவும் கூற்றிலமைந்த இபபாடலில், 'தன் பிடி இனத்துடன் இன்பமடை யப் புலியோடு போர் செய்து, வென்று புணணுற்ற யானை, கையினை உயர்த்திப் பெருமூச்செறிவ தால் வேங்கை மலர்கள், கொல்லன் துருத்தியை மிதித்து ஊதும் உலையிற் பிதிரும் தீபபொறி போலப் பொங்கியெழுந்து, மின்மினி போலப் புத ரிற் பரவும்' என்று கூறிய கற்பனை நயமிககது.

**ஆலூர்க் காவிதிகள் சாதேவனார் – புலவர்.** அகநானூற் றில் ஒன்றும் (159) நற்றிணையிலொன்றும் (264) ஆக இவருடைய இரண்டு பாடல்கள் சங்கத் தொகை நூல்களில் இடம் பெற்றுள்ளன. 159 - ஆம் அகநானூற்றுப் பாடலில் பெயர் ஆமூர்க் கவுதமன் சாதேவனார் என்று காணப்படுகின்றது (வே. வி). இப்பாடலையும் ஆலூர்க் காவிதிகள் சாதேவனா ருடையதாகவே கொண்டு நாராயணசாமி ஐயரும் வையாபுரிப்பிள்ளையும் குறிப்பிட்டுள்ளனர் (நற் றிணை நாராயணசாமி ஐயர் பதிப்பு - பாடினோர் வரலாறு; வையாபுரிப்பிள்ளை சங்க இலக்கியம்). சாதேவன் என்பது சகதேவன் என்னும் பெயரின் மரூஉ என்பதும் காவிதி என்பது பாண்டிநாட்டு வேளாளரில் உழுவித்துண்போர் அரசராற் பெறுவ தொரு பட்டம் எனபதும ஆமூர்க் கௌதமன் சாதேவனார் என்றிருக்கவேணடிய பெயர், ஏடெ ழுதுவோரின் மிகையால் ஆலூர்க் காவிதிகள் சாதே வனார் என்று எழுதப்பட்டது போலும் என்பதும் நாராயணசாமி ஐயர்தம் கருத்துக்களாகும். இரு பாடல்களும் (அகம. 159; நற். 264) பாலைத்திணை யிலமைநதுள்ளன. அகநானூற்றுப் பாடலில் கொடு முடி என்பவன் பற்றியும் அவன காக்கும சிறப்பு டைய ஆமூர் பற்றியும குறிபபுக்கள் இடம பெற் றுளளன. உடன்போககில தனனுடன் வந்த தலை வியிடம் தலைவன் 'மலர் சூடிய கூந்தலில காற்று வீச மயிலபோலச செல்லுக' எனறு கூறுவது சிறப் பாக உள்ளது.

**ஆலூர் மூலங்கிழார் - புலவர்.** மூலம் என்னும் நாண் மீனால் அமைநத பெயராகு மெனறும் ஆலூர் மூமை எனபது ஓர் ஊரின் பெயராகுமெனறும் கூறபபடுகினறது (ச. சி. பெ. பக். 132). புறநானூற் றில எடடுப பாடலகளும் (38, 40, 166, 177, 178, 196, 261, 301) அகநானூற்றில் மூனறு பாடல்க ளும (24, 156, 341) ஆகப் பதினொரு பாடல்கள் தொகை நூல்களில் இடம் பெற்றுள்ளன. அகப் பாடலகள் முல்லை, மருதம், பாலைத்திணைகளில, தலைமகன், தோழி, தலைமகள் ஆகியோர் கூற் றுக்களில அமைந்துள்ளன. அகம் 156-ஆம் பாடல மருதததிணையி லமைந்த களவுப்பாடலாக இருப் பது குறிப்பிடத் தக்கது. அகம் 24 - ஆம் பாடல வேளாப்பார்பபான் சஙகில வளையலறுக் கும் தொழில் மேற்கொண்டிருந்தமை பற்றிக் குறிப்பிடுகினறது. புறப்பாடலகள் பாடாண் (38,40, 177 196) வாகை (26,166,178) தும்பை (301) ஆகிய திணைகளில் அமைந்துள்ளன. குளமுற்றததுத் துஞ்சிய கிள்ளி வளவன (புறம். 38,40) சோணாட் டுப பூஞ்சாற்றூர் பார்ப்பான் கௌணியன் விண் ணந்தாயன் (புறம். 166) மல்லி கிழான் காரியாதி (புறம். 177) பாண்டியன் கீரன சாத்தன் (புறம். 178) பாண்டியன் இலவந்திகைபபள்ளித் துஞ்சியநன் மாறன் (புறம். 196) ஆகியோரைப் பாடியுள்ளார்.

**ஆவூர் மூலங்கிழார் மகனார் பெருந்தலைச் சாத்தனார்** - புலவர். பெருந்தலைசசாத்தனார் இவர் பெயர். தநதையார் ஆவூர் மூலங்கிழார். இவருடைய ஒரே பாடல் அகநானூறு 224ஆம் பாடலாக அமைந் துள்ளது. வையாபுரிப்பிள்ளை தம் சங்க இலக்கியப் பதிபபில் இப்பாடலைப் பெருந்தலைச் சாத்தனார் என்னும புலவர் பாடல்களுள் ஒன்றாகக் குறிப் பிட்டுள்ளார். முல்லைத்திணையி லமைந்த இவ் வகப் பாடல் வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாக னுக்குக் கூறியதாக உள்ளது. தலைவன் ஏறி வரும் தேரிற் பூட்டிய குதிரைகள் பெருமூச்சிற்குக் கொல் லுலைத் துருத்தியின் வெப்பக் காற்றையும் விரைந்த ஓட்டத்திற்குக் காற்றினது விரைந்த செலவையும் வாயில் தோன்றிய வெண்ணுரைக் குப் பால்கடையுங்கால திரளும் வெண்ணெய மிதப்பையும் உவமையாகக் கூறியிருப்பது சிறப் பாக உள்ளது.

**ஆழி** - **1. தேர்ச் சக்கரம்** (உருளை). துணங்கையாடிய பகைவர் இறக்க அவர்தம் பிணங்களின்மேல் உருண்டு செல்லும் தேயாத ஆழியை-உருளையை-உடைய எணணற்ற தேர்களையும் குதிரைகளை யும் வீரர்களையும் உடையவன் தகடூரெறிநத பெருஞ்சேர விரும்பொறை (பதி.77:4-7). ஓவியம போல இந்திர கோபம் பரவிய சிவந்த நிலத்தில் தேரின் வலிய ஆழி பதிந்து உருணடு செல்லுமாறு தேரினை ஓட்டுதற்குப் பாகனைத் தலைவன் ஏவினான (அகம. 54:3-6). நீர் முள்ளி தழைத்த கடற் கரையிலுள்ள அருமபின் சிவந்த மெல்லிய கொடி களைக் குதிரைகள் பூட்டிய தேராழி அறுக்குமாறு தேரினைச செலுததித தலைவன் வருதல் (அகம். 80: 7-10). இரவில் தலைவன் வரும் தேரின் குதிரை கழியினைக் கடந்து வருஙகால் அத்தேராழியின் நுனியினால அறுபட்ட அரும்பினையுடைய நெய் தல் வாடியது (அகம். 160: 11-13). தேரின சுழலும் கதிரினையுடைய வட்ட ஆழி வரிமணலில் அறுத் துக்கொண்டு செலலும் போது உண்டாகும ஓசை, மரத்திரிகையில அரிசியை இட்டுச் சுற்றும்போது எழும் ஓசையைப் போன்றிருக்கும் (அகம. 224:12-14). குதிரைகளை மென்மையுறப் பூட்டிய கடிவாள வாரினைப் பற்றிச் செலுத்தப் பல ஆரங்களை யுடைய அதன ஆழி மெனனில வழியை அறுததுச் செலலும (அகம.234:4-6). போர்த தொழில பயின்ற குதிரை பூட்டிய நெடிய தேரின ஆழி மினனற கொடிபோலச செலுததபபடுவதால வழியிலுளள பசிய பயிர்கள் அறுபட்டு விலகின (அகம. 254:12-14). விரைந்து செலலும் நானகு குதிரைகள பூட் டப்பட்ட தேரின் ஆழிகள வேகநதளராது, முல்லை நிலத்தில் ஈரமான நிலத்தைக் கிழித்துச் சென்றன (அகம். 334:11-14). விரைந்த குதிரைகள் பூட்டப் பெற்ற தேரின் வலிய ஆரையைக் கொண்ட ஆழி ஆழ்ந்து செல்லும் சுவட்டில் பாம்புபோல நீர் வேகமாகச் செல்லும் (அகம். 339:1-3). மேகம் மழை பொழியப் பொற்படைகளால் பொலிவு பெற்ற தேரேறிக் கடலலையின் நீர்த்துளிகள் தேராழியை நனைககத் தலைவன் பிரிநது சென்றான் (குறு. 205: 1-5). தலைவனின் தேர்ப்பாகன் மணலை அடுத்த கடற்கரையில நண்டுகள் தேரின் ஆழியில் படாத வாறு தேரைச் செலுத்துவதற்கு உதவியாக நிலவு விரிநதது (நற். 11:6-9). தலைவன தேராழி கழி நீரில உள்வாயளவு அமுங்கப்பெற்றாலும் பறவை பறந்தாற்போலக் குதிரை தாறறுக்கோலால் தூண டாமலே விரைந்து செலலும (நற். 78.7-9). அடும் பங் கொடிகள் துணிபடும்படி, தலைவனுடைய தேராழி (மணலைப) போழந்து வரும இனியஒலி இரவாகியும் தோன்றவில்லையே எனறு தலைவன வரவை எதிர்நோக்கும் தலைவி வருநதிக் கூறினாள் (நற். 338:2,3).

**2. கடல்.** நெற்கதிர்களையுடைய கழனியின நடுவே மதில் அமைந்திருப்பதற்கு ஆழியின - கடலின் - நடுவே புறம் உலர்ந்த கப்பல இருப்பது உவமை (புறம். 338:10-12). தாழையினைக் கொண்ட கரையை யுடைய ஆழியின் அருகிலிருக்கும் புகார்த தெருவில, அரசன் பொருள்களைப பாதுகாக்கும் மககள் (சுங்கம கொள்வோர்) இளைபபின்றிச் செயல்பட்டனர் (பட். 118-125). கடற்கரையில ஆழி வீசிய கரு மணற்சேற்றையுடைய அருவியால் கூந்தலில எக் கராகச் சேற்றுமணல் குவிககப்பட்டது. (குறு. 372: 2-5). ஊழி முடிவில ஆழியுள் அழுநதும் நிலமக ளைத திருமால அழகிய கேழலாகி (வராகமாகி) கொம்பினால் எடுத்தார் (பரி. 3:23,24).

**3. ஆணைச்சக்கரம்.** கடல் சூழ்ந்த நிலத்தின்கணணே தம் ஆழியை - ஆணைச் சக்கரததை - செலுததிய தொனமை பொருந்திய மரபினைச் சேர்ந்தவர் அதியமான நெடுமானஞ்சியின முனனோர் (புறம். 99:3,4). பகலைச் செயயும் கதிர்களை யுடைய ஞாயிற்றின் ஆணையாகிய ஆழி உலகைக் கிழிததுச் சென்றதால் நீணட வழிகள் நீரினறி வறண்டன (அகம். 229 1-3).

**4. கரை.** போரில் தனவேநதன் படைகெடுமாறு பகைவர்படை நெரிதர, வாளினை ஏநதித தான் ஒருவனே ஆகி நினறு அதனைத் தடுததால் வீரன பெரிய கடல நீரைத தடுதது நிறகும் ஆழி – கரை – போன்றவனாவான (புறம. 330:1-4).

5. வட்டம். தலைவன் பிரிந்த நிலையில் வருந்தும் தலைவி சுவரில் செய்குறியாக ஆழி - வட்டம் - இழைத்து, அதனை நாளும் அழுது கொண்டே எண்ணிப் பார்த்திருக்குங்கால் சிதறுங் கண்ணீ ரால் அச்சுவர் நனையும் (அகம். 341:10-12).

6. சக்கரப் படை. மல்லர் மறங்கெடுத்த மாயவன் பகைவர் தன்னை எறிகையினால், சினந்து அவர் ஓடுமாறு அவர்தம் யானையினது மத்தகத்தில் தன் ஆழியை - சக்கரப்படையை - அழுத்தினான் (கலி. 134:1-3). ஆழிப்படையுடைய முதலவன் திரு மால் (பரி. 2:19). ஆழிப்படையுடையவன் திருமால (பரி. தி. 1:69).

7. தலைக்கோலம். வையைப்புனல் தன்பால் நீரா டும் மகளிரிடம் கவர்ந்து சென்ற பொருள்களில் ஆழியும் - தலைக்கோலமும் - ஒன்று. (பரி. 7:46).

8. தோள்வளையாகிய சக்கரம். தேவசேனையின் பாங்கியரோடு பகைத்த வள்ளியின் பாங்கியர் தோள்வளையாகிய ஆழியைச் சுழற்றினர். (பரி. 9: 55).

**ஆழி முதல்வன்** - சக்கரப் படையுடைய முதல்வனாகிய திருமால். திருமாலைக் கீரநதையார் 'ஆழி முதல்வ' - சக்கரப் படையுடைய முதலவனாகிய திருமால் - என்று குறிப்பிடுகினறார் (பரி. 2:19).

**ஆழியான்** - சக்கரப்படையுடைய திருமால். தேவரும் அசுர ரும் அமுதம் கடைய ஆயிரந்தலையுடைய அண்ணல் (ஆதிசேடன்) நாணாக விளங்கியபோது, அவ்விரு சாராரும் அதன் இருபக்கங்களையும் பற்ற, எஞ்சிய நாணபகுதியைத் தன் கைகளால் ஆழியான் - திரு மால் - பற்றி இழுத்தல (பரி. தி. 1:68,69).

**ஆள்** - 1. ஆண்மை. தலை வெட்டப்பட்டு எஞ்சியுள்ள குறையுடம்பும் ஆள்-ஆண்மை-மலிந்து காணப்படு தல் (பதி. 67:10).

2. மக்கள். ஆள் - மக்கள்-அற்ற அருஞுசுரமாகிய காட்டுவழி (புறம். 23:22; அகம. 51.1;145:6; நற. 174:2). பாகர் முதலாயின ஆளில்லாத யானைகள் வெளி மான் இறநதமையால் மருப்பிழந்தன (புறம. 238:9). ஆளற்ற அருஞ்சுரத்தே புலி திரியும் (அகம. 45:5). காய்ந்த ஞெமை மரங்களுடைய பாக்கம் ஆள் வழக்கற்றது (அகம். 187:11,12). வழிப்போகும் ஆட் களை அழித்து அமைத்த பதுக்கைகளில் சேவற் கழுகுகள் தஙகின (அகம். 215:11). பெணபன்றியைக் கிளையுடன் தப்பச் செய்த ஆண்பன்றி அரியவா யிலாகிய முடுக்கிலே ஆளைத் தாக்க எதிர்நோக்கி நிற்கும் (அகம். 248:3-6). கணந்துள் என்னும் பறவை யின் கூட்டம் ஆள் இருப்பதை ஆறுசெல் வம்பலர் கட்கு அறிவுறுத்தும் (குறு. 350:4-6). வழிச்செல்லும் ஆட்களைக் கொல்ல விரும்பிய யானை விடியற் காலத்தில் சுரவழியின் குறுக்கே நிற்கும் (நற். 126: 3,4). பெண்புலியின் கடும்பசியைப் போக்குதற்கு ஆளியங்கும் சிறு வழியை அடுத்து ஆண்புலி பதுங் கியிருக்கும் (நற். 322·5-7). அரசரது பகையால் அழி வுற்ற முனையிருப்பை அடுத்துள்ள சீறூர் மன்றம் ஆளின்றிக் காணபபட்டது (நற். 346:3-5). அருஞ் சுரத்தில சிறுகண் யானை ஆளைக் கொனறு திரி யும் (ஐங். 314:3,4). ஆள் வழக்கற்ற பாழபட்ட அகன்ற இடம் (ஐங். 329:1).

3. மகன். இறந்து பிறநத பிள்ளையையும் பிறந்த ஊன் பிண்டத்தையும் ஆள்- மகன - எனறு கருதி வாளால் போழ்ந்து அடக்கம் செய்தல் அரசர் மரபு. (புறம். 74:1,2). மாலைநேரத்தில் யானை காட்டு வழியில் உள்ள நடுகலலை ஆள் என நினைத்து உதைத்தது (அகம். 365·3-5). நீருககாக அலைநது சென்ற கலைமான் தன் பெண்மானை அழைககும துன்பக் குரலைச் சுரம் செல்வோர் ஆளின குர லென்று கருதி ஆராய்வர் (அகம். 395 8-12).

4. வீரர். கடலரண, மலையரண் முதலிய அரண்கள் மிக்கதும் நேர் நினறு பொரும் ஆள-வீரர்-மிக்கது மாகிய இடஙகளைக கடல பிறக்கோட்டிய செங குட்டுவன கைககொணடான (பதி.50:12-15). போர்க் களததில ஆள் ஆகிய வைக்கோலைக கடாவிடுதல் (புறம். 368.12,13,370:17;371.16;373.25). பாணடிய வீரர் கையிலுள்ள வேலே கோலாகக் கொண்டு ஆணடு நிரைகாத்த ஆளை (வெட்சிவீரரை) கொன்று நிரை தந்தனர் (மது. 690-692). போரில் இறநத ஆட்களின்மீது தழைகளை இட்டு மூடிய பதுக்கை கிடுகுப்படை போல் இருந்தது (அகம். 67:13,14). ஆட்களைத் தப்பாமல கொல்லும் யானைப் படையை உடையவன் சேரன் (அகம். 93:19, 20).

5. கணவன். ஆளில் பெண்டிர் (நற். 353:1). ஆளில் பெண்டிர் காணக.

**ஆள்பவர்** - அரசர். ஆள்பவர் - அரசர் - தாம் பின்பு கலக்கமுறும்படி அவரால் அலைக்கப்பெற்ற நாடு பாழ்பட்டதுபோல் தலைவி பொலிவழிந்தாள் (கலி. 5:12, 13). முமமுரசுடன் ஆள்பவராகிய பாணடி யரின் யானைப்படை பகைவர் படைகளின் நடுவே பகைகெட நின்றது (கலி. 132:4, 5).

**ஆள்பவன்** - நுகர்பவன். என் மெல்லிய தோளை ஆள் பவன் - நுகர்பவன் - (தலைவன்) அவற்றின் மீது கரும்பு எழுதவும் வலலவன எனத் தலைவி கூறுகி றாள் (கலி. 143:31-35).

**ஆள்வினை** - முயற்சி. கொடுக்க முடிந்ததை இயலும் எனக் கொடுத்தலும் கொடுக்க முடியாததை

இல்லையென்று மறுத்தலும் ஆள்வினை யுடையார்க்குரிய நற்செயல்களாம் (புறம். 196:1-3). பகற்போதில் ஆள்வினை செய்வார்க்கு உதவியும் இரவில் பலரொடும் இருந்து மறுநாள் செயயக் கூடியவற்றை ஆராய்ந்து கூறியும் வினை செய்வார்க்குத் துணையாகுமாறு கோதமனார் தரும புத்திரனுககுக் கூறுகிறார் (புறம. 366:10-12). அருளைப் பொருளாக மதியாமல் பொருள்தேடும் ஆள்வினையையே பொருளாகக் கருதும் ஆடவர் அறியாமை உடையவர் என்பது தலைவியின் கருத்து (அகம். 75:1, 2). தலைவியின் நன்னுதல் பசப்பவும் அவளைப் பிரிந்து ஆள்வினையால் பொருள திரட்டத் தலைவன் நெஞ்சம் துணிந்தது (அகம். 77:1-3; 379:1-4). உறவினர்களின் துன்பம் போக்கவும் சுற்றம் பெருகவும் ஆள்வினைக்குப் பொருந்திய ஊக்கத்துடன தலைவன பொருள் திரட்டுவான் (அகம். 93:1-3,6). தன் கடமையாகிய பொருள் ஈட்டுகின்ற ஆள்வினை காரணமாகத் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்வான (அகம். 255:7). பிரிவால் தலைவி வருநதுவதைக் கண்டும் ஆள்வினையால பொருளீட்டுதற்கு எஃகு துணையாகக் கெடாத ஊக்கத்துடன் தலைவன பாலை வழியே சென்றான் (அகம். 277:3,4,9). உள்ளததைச சுடும் பிரிவுத் துனபமாகிய தீ, தலைவனின் ஆள்வினையாகிய மாரியால அவியும் (அகம். 279:7,8). ஆள்வினைக்கு எழுந்த தளரா நெஞ்சத்து ஆண்மை ஒருபுறமும் தலைவிபால் கொண்ட காமம் ஒரு புறமும இழுக்கத் தலைவன் இருதலைக் கொள்ளியின் இடைப்பட்ட எறும்பு போன்று வாடினான் (அகம. 339:6-10). உபபு வணிகர்க்கு உயவுத் துணையாகி உயர்ந்த ஆளவினை புரிந்த நெஞ்சம் இடைச் சுரத்துத் தலைவியை நினைந்து மீளக் கருதியது (அகம. 343.14-16). 'ஆள்வினை காரணமாகப் பிரிதலும் உண்டோ' எனத் தலைவன் நெஞ்சினை வினவுதல் (அகம். 353:1, 2). நிலையாமையை உணர்ந்தோர், ஒரு பொழுதிலே உலக வளமெல்லாம் கிடைபபதாயினும் இன்பச் செல்வியும் இளமையும் உடைய தலைவியைப் பிரிந்து பொருள் தேடும் ஆள்வினையை மேற்கொள்ளார் எனத் தலைவன நெஞ்சிற்குச் சொன்னான (குறு. 267:1-6). தலைவியை முயங்கி இன்புறுதலினினறும் நீங்கிச் செலலத் தலைவனால் இயல வில்லை; அவன் நெஞ்சமோ ஆள்வினையைச சிறபபாக எணணிப் பிரிதலை இடையறாது எணணியது (நற். 52:3-7). என்னை வருத்தும அருளில்லாத இம்மாலைப பொழுது ஆளவினைக்கு அகன்று சென்ற தலைவர் இருககும நாட்டிலும் இபபடித தோனறுமாயின அவர் விரைந்து மீளவர் எனபது தலைவி கூற்று (நற்.69:9-12). 'யாம்இப்பொழுது புதிய காட்டிலிருந்து வருந்துகின்றோம்; ஆள்வினை மேற்கொள்வோம் என்றாலும் கொள்ளாது ஊர் திரும்புவோம் என்றாலும் நீயே துணிந்துசொல்' என இடைச்சுரத்து ஆற்றாத நெஞ்சினைத் தலைவன் வினவுகின்றான் (நற். 103:9-11). ஆளவினை மேற்கொள்ளும் தலைமகன் தலைவியை மென்சொல்லால் தேற்றியும் சுரத்தின் வழி வருதலை அவள ஆற்றாள் என்று தெளிவித்தும் பிரிநது செலலல் வழக்கம (நற். 148: 1-3). தலைவன் ஆள்வினைக்கு அகன்றால் தலைவியின்மாமைக்கவின அழியும் (நற.205:6,7,11). வறுமையால உண்டாகும் இளிவரவினைத் தலைவனுக்கு எடுத்துக் காட்டி நெஞ்சம் ஆள்வினைக்கு இழுக்கின்றது (நற். 262:8-10). கடலிலே காற்று, தாம் ஏறிச்சென்ற கலத்தைச் சிதற அடிக்குமாயின ஆள்வினை கொண்டோர் அதன் காரணமாக நெஞ்சம் அழிவர் (கலி. 5:6,7). சிறந்த கற்பினையுடைய தலைவியின் துன்பத்தைக் கருதி அறக் கடவுள் தலைவனை ஆளவினைத் திறத்தினின்றும் விலககிற்று (கலி. 16:20-22).

**ஆளி** - 1. ஆள்பவன். ஏழுலகமும் ஆளி - ஆள்பவன்- ஆகிய முருகனின் திருப்பரங் குன்றத்தின்மீது ஆணையிட்ட தலைவன அன்பு இரங்கத்தக்கது எனத் தோழி கூறுகிறாள் (பரி. 8:64).

2. விலங்கு. [யானையின தந்தமும் துதிக்கையும் சிங்கத்தின் முகமும் உடைய விலங்கு. தமிழ் அகராதி பக். 3404]. ஆளிநனமானின் குருளை முலைக் கோள் விடாத இளம்பருவத்திலேயே மிக்க வலிமையுடன முதல் வேட்டையிலே யானையைக் கொன்றது (பொரு. 139-142). இரவுக் குறிக்கண் வரும் தலைவருடைய மலைமுழைஞ்சில் புலி, ஆளி முதலிய விலங்குகள் இருக்கும் எனத் தோழி தலைவிக்குக் கூறினாள் (குறி. 252). இளவெளிமான் சிறிது கொடுப்பக் கொள்ளாத பெருஞ்சித்திரனார் 'நெஞ்சமே, உள்ளம் உள்ளவிந்தடங்காது மீளி முன்பின ஆளி போல எழுக' எனறு கூறுகிறார் (புறம. 207:1,8,9). வயக் களிறறு ஒருத்தல, கடுஞ்சூல் மடப்பிடியை ஏமமாகத் தழுவிப் பாதுகாக்கவும் நனந்தலைக் கானத்து ஆளியை அஞ்சி நடுங்கும் (அகம். 78:1-6). ஆளி, தான வீழ்த்தும் விலஙகு இடப்பக்கம் வீழதலை அறியாதது; புலி நடுங்கும் படி யானைமீது பாய்ந்து தாக்கி அதன வெண கோடு பறிக்கும் இயலபுடையது (அகம். 252:1-4). ஆளிநன்மான் யானையின் தலைவனான களிறு வருந்த அதன் வெண்கோடு பறித்துக் குருத்தினை தினனும் (அகம. 381:1-3). கடிய காட்டில் புலி கொன்ற யானையை ஆளி நன்மான் இழுத்துச் செல்லும் (நற். 205:2-4).

**ஆளில்பெண்டிர் - கணவனை யிழந்த மகளிர்.** பொருள் தேடுதற்குரிய ஆளில் பெண்டிர் - கணவனையிழந்த மகளிர் - முயன்று நூற்கும் நுண்ணிய பஞ்சு போன்ற மேகம் மலைமேல் தவழும் (நற். 353:1-3).

**ஆற்றல் - வலி.** பகைவேந்தர் ஏவல் செய்யத் தொடங்கும் ஆற்றலுடன் - வலியுடன் - புகழை வாழ்த்திக் காணவந்ததாகக் குறுங்கோழியூர் கிழார், யானைக் கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறையிடம் கூறினார் (புறம். 17:31-33). யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை புலவர்கட்கு ஓம்பாதளிக்கும் ஆற்றலுடையவன் (புறம். 22:33,34). பகைவர் மேற்சென்று, போரில் எதிர் நின்று கொன்று தன் ஆற்றல் தோன்ற நின்றவன் சோழன் கரிகாற் பெருவளத்தான் (புறம். 66:3-5). ஆற்றலுடையோர் ஆற்றல் போற்றாது என் உள்ளத்தை இகழ்ந்த அறிவிலி, துயிலும் புலியை இடறியவன் போலாவான் என்று சோழன் நலங்கிள்ளி வஞ்சினங் கூறுங்கால் மொழிந்தான் (புறம். 73:4-6). அதியமான் நெடுமானஞ்சி ஏழு அரசரொடு பகைத்து மேற்சென்று போரில் வென்று தன் ஆற்றலைத் தோற்றுவித்த போதும், பாடுவார் பாடுதற்கு அரியவனாக விளங்கினான் என்று ஔவையார் சிறப்பித்தார் (புறம். 99:9-11). ஆய், பகைவரது மிக்க மாறுபாட்டை வென்ற ஆற்றலுடையவன (புறம். 135:20,21). 'இடமகன்ற உலகத்து வலமுறையாகச் சூழ்ந்து, மன்னர்தம் வலியினைக்கெடுத்த மேம்பட்ட வேலை யுடைய சேனையொடு கூடிய ஆற்றல என்பதன் தோற்றம் இப்போது பெரிய புறங்காட்டின் கணணதாயிற்று' என்று சோழன் நலங்கிள்ளி இறந்தபோது ஆலத்தூர் கிழார் கையற்றுக் கூறினார் (புறம். 225:4-8). 'பகைவரின் வீரர், யானை, குதிரை ஆகியன அழிய, நாடோறும் அமையாது எதிர்நின்று கொன்று போரை வென்று, சுற்றத்தின் பசி தணிய ஊட்டிய ஆற்றலுடையவன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன்' என்று ஆடுதுறை மாசாத்தனார் சிறப்பித்துள்ளார் (புறம். 227:4-9). பகைவர்ப் பிணிக்கும் ஆற்றலும் விரும்பியவர்க்கு அளந்து கொடுத்தலை அறியாத ஈகையும் உடையவன் கோச்சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை (புறம். 229:25-27). திருந்திய கழலையும் நோன்றாளையும் உடைய சோழன குளமுற்றத்துத துஞ்சிய கிள்ளிவளவன் வென்வேல் அருஞ்சமம் கடக்கும் ஆற்றல் மிக்கவன் (புறம். 397:26,27). நெடும்பாரதாயனார் முனனே (துறந்து) காடுசெல்ல, (துறவறத்தை) ஆற்றுதலுக்குப் பொருந்திய ஆற்றலொடு துறந்து, பல்யானைச் செல்கெழு குட்டுவனும் காடு சென்றனன் (பதி. ப. 3:8-10). களங்காய்க்கண்ணி நார் முடிச்சேரல், மன்னர் போர்க்களத்தில் மடியும்படி, வஞ்சியாது எதிர்நின்று வெல்லும் ஆற்றலை யுடைய உயர்ச்சிமிக்க மைந்தனாவான் (பதி. 34:11,12). களங்காய்க்கண்ணி நார் முடிச்சேரல் கடம்பின் பெருவாயில் என்னும் ஊரையுடைய நன்னன் என்பவனை நாடோறும் செய்த போரில் ஆற்றலைக் கெடுத்து அவனுடைய வாகை மரத்தின் அடியை வெட்டினான் (பதி. ப. 4: 7-9). வலிமிக்க தொலையாத போரில் சோழர் குடிக்குரிய ஒன்பதுபேர் வீழும்படி, நேரிவாயிலில் தங்கி நிலைச் செருவின் ஆற்றலை அறுத்தான கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. ப. 5: 18-22). அருவியுடைய மலையில் அரசரை வென்று, பகைவர் காடுகளைப் பாலையாக்கி மாறுபட்ட போர் ஆற்றல் உடையவன் நிலந்தரு திருவிற் பாணடியன் (மது. 57-61). ஆற்றலசால கேள்வி அறம், பொருள், இன்பம் ஆகியவற்றைப் போற்றிப் புனையப் பெறற பொருளினைக் கொண்டது குறிஞ்சிப் பாட்டின் இயல்பு (குறி. வெ. 2:1). பல் குனறக் கோட்டத்துச் செங்கண்மாத்து வேள் நனனன் சேய நனனன தன்னை இகழ்நதிருக்கும் பகைவரை அரசு ... மற சுருக்கும் அறிவாற்றலுடையவன் (மலை. 73). தென்னன், பகைவரின் அரிய அரணை அழித்த ஆறறலொடு, பருநதுகள வந்து கூடுமாறு பல போரினையும் வெனற மேகம போலும் கையினையுடையவன் (அகம. 342: 7-10). தலைவன் பிரிநதபோது, ஆறறலுடைய காமநோய் அடுகையினால் தலைவியின் அழகு கெட்டது (கலி. 17:9). 'பணிந்து எனது தீயனல்லாத் தன்மையை உன் நெஞ்சில் முறையாலே நிறுதது வேன்' என்று தலைவன் காமக் கிழத்தியிடம கூற, அவள், 'இவன் கருத்து அதுவே யாயின இவனுடைய ஆற்றலை நெஞ்சே காண்பாயாக' எனறு தனது நெஞ்சொடு கூறினாள் (கலி. 91:16-18). திருமால நூறு கையுடைய ஆறறல் மிக்கவர் (பரி. 3:40).

2. நடத்தல். வடிம்பலம்ப நின்ற பாண்டியன் மாறுபாட்டை ஆற்றலுடைய (நடத்தலுடைய) பகைவர் காடுகளைப் பலவழியாகப் பிளநத சிறப்பினால் நாட்டிலுள்ள அரசர் நிலங்களை யெலலாம் கொண்டவன் (மது. 58-61).

3. பொறுத்துக் கொள்ளுதல். தலைவன் பிரிந்தமையால் பெருகும் கண்ணீரொடு அப்பிரிவை நினைந்து வருந்தாமல் ஆற்றல் - பொறுத்துக் கொள்ளுதல் - வல்லோர்க்கு மட்டும் அத்தலைவன் நட்பு நல்லது (குறு. 38:3-6).

**ஆற்றாமை 1. உதவாதொழிதல்.** அறம். பொருள்

இன்பம் செய்வதற்குரிய செல்வத்தைப் பிறர்க்கு ஆற்றாமை - உதவாதொழிதல் - அஃதுடையாரைப் பாதுகாவாமையாகும் (புறம். 28:15-17).

2. இயலாமை. நீங்கிய பகையரசன் மீண்டுவந்து மதிற்புறததே சூழ, மதிலரண் அப்பகைவரை எதிர்த்து நிற்றல் ஆற்றாமையால்-இயலாமையால்-காட்டில் வந்திருந்த நன்னன் தன் வேலின் வலிமை யமைந்த தன் தோற்றம் பிழையாதவாறு அப் பகைவனொடு பொருது வென்று புகழை நிலை நிறுத்தினான் (அகம். 392:21-27).

**ஆற்றார்** - 1. செய்ய மாட்டாதார். தலையாலங்கானத் துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் பகைவர் மாற்றார் என்னும் பெயர்பெற்றுப் போரினை ஆற்றாராயினும் - செய்யமாட்டாதா ராயினும் - துறக்கததே வாழ்வோராவர் (புறம். 26: 16-18). தம்மை விரும்பி யிருப்போரைப் புரந்து. தாம் நட்புக்கொண்டாரொடு இன்பம் மிகுமாறு பொருந்தி மகிழ்ந்திருத்தலை ஆற்றார் வறுமையுற் றோராவர் (அகம். 151:1-3).

**ஆற்று** - 1. வலி. '(காமநோய்க்குத் துணையாகும்) அற்றத்தில் என்னை இட்டு வைத்து என் ஆற்று - வலி - அழித்தவன் மார்பை, அஃது இவ்வாறு வருத்துமென்று முன்னர் அறிந்திருந்தால் யான் முயங்கேன்' என்று தலைவி கூறினாள் (கலி. 144: 65,66).

2. ஆறுதல். 'நீ, ஆற்று - ஆறுதல் - அடைய மையல் நெஞ்சிற்குத் துன்பம நீங்க நினக்கு மருந்தாகிய யான இப்பொழுது தலைவி நோய்க்கு மருந்தாக அமைய வில்லை என்றும் என்நெஞ்சு நோகின்றது என்று தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 59).

3. ஆற்றல். வையையில் வந்த புதிய வெள்ளங் காணச் சென்றவரில், வேற்போர் செய்யும் வலியுடை யோனாகிய முருகனைப் போல, ஆற்றொடு-ஆற்ற லொடு-கூடிய வலியினையும் புனைகழலினையும் உடைய மைந்தர் ஒருசாரார் (பரி. 22:26,27).

4. தணித்தல். தலைவன் பொய்ச்சூள் உரைத்த தனால் வரும் துனபம் தாக்காதவாறு தலைவி மணியடித்து முருகனை வணங்கி ஆற்று (தல்) - தணித்தல்-செயதாள் (பரி. 8:88,89).

**ஆற்றுக்கவலை** - ஆற்றுத்துருத்தி (ஆற்றிடைக்குறை) ஆற்றுக் கவலை-ஆற்றுத்துருத்தி-இடத்தே நம் காம நோய்க்கு மருந்தாக மாட்டாத பிற தெயவங்களை வாழத்துவது வருந்துவதற் குரியதென்று தோழி தலைவியிடம கூறினாள் (குறு. 263:2-6).

**ஆற்றுதல்** - 1. பொறுத்திருத்தல். 'நம்மை விட்டு அகன்ற மாமையின் இழப்பினை நமது வன்மை யானே ஆற்றுதல் - பொறுத்திருத்தல் - அல்லாமல் அத்துன்பத்தைச் சொல்லினால் எடுத்துக் கூறும் வன்மை இலேம்' என வரைவு மலிநத தோழிக்குத் தலைவி கூறினாள் (குறு. 368:2-4).

2. இல்வாழ்க்கையை நடத்துதல். ஆற்றுதல் - இல் வாழ்க்கை நடத்துதல் - என்பது வறியவர்கு யாதானும் ஒனறை உதவுதல் (கலி. 133:6).

**ஆற்றுப்படுத்தல்** - 1. வழிப்படுத்தல். குறமகள் இன்னியங் களை இசைத்து முரண்பட்டவர் அஞ்ச முருகனை உருகெழு வியனகரில் ஆற்றுப்படுத்தினள் - வழிப் படுத்தினள் - (முரு. 242-244). மன்னன பாசறையில் துயில கொள்ளாமல் அவனது நெஞ்சம் ஆற்றுப் படுத்திய வழியில் செலுத்துதலால் தனக்குண்டான தனிமையாலே அரசியைப் பிரிந்தால்வினைமுடியாது என்று நீடு நினைந்தான் (முல்லை. 79-82). தலைவியின் தமர், களன் நன்கிழைத்துக் கண்ணி சூட்டிப் பாடிப் பலி கொடுத்துச் செந்தினையைக் குருதி யொடு தூவி நள்ளிரவில் முருகாற்றுப்படுத்தனர் (அகம். 22:8-11). புனறலைச்சிறார் மன்றத்திடத்துக் கன்றினை ஆற்றுப்படுததினர் (குறு. 241.2,3). அழகு பெற்ற விழாவினை ஆற்றுப்படுததிய இடம் வழி நாளில பொலிவழிந்தது (கலி. 5.10,11).

2. போக்குதல். இன்பம் தரும் மாலைக்காலம் ஞாயிற்றினை ஆறறுப்படுத்தியது - போக்கியது- (அகம் 71:9;365:2,3). சுரும்பாற்றுப்படுதத மணிமருள் மாலை (கலி. 85:16).

**ஆற்றுவோர்** - வல்லவர். 'ஆண்பருந்து பதுக்கையில் கிடக்கும் பிணங்களின் கணணைப் பறித்துப் பெடை யினுக்குக் கொடுக்கும் அருஞ்சுர நெறியில் சென்ற தலைவனைக் கருதி இரங்கும் உள்ளத்தோடு, பிரிநது உறைதலைஆற்று வோர்க்கு-வல்லவர்க்கு - (தலைவனுக்கு) வெற்றி மேவுக' என்று கூறி விடுத்தல் இயலும்; பிரிவாற்றுதல் இயலாது எனத் தோழி உரைத்தாள் (அகம். 215:11-17). பொருள் வேட்கையால் வந்துற்ற இரவலர் இரந்த பொருளகளைப் புகழ் உணடாக அளித்தலை ஆற்றுவோர் பொருளதேடப் பேஎ முதிர் பொதியிலில் தங்கி, ஏதிலர் ஆகியும் செல்வர் (அகம். 377:10-15).

**ஆறமர் செல்வன்** - ஆறுவடிவு பொருந்திய செல்வன் (முருகன்). (அருந்ததி ஒழிநத) அறுவராற் பெறப்பட்ட 'ஆறமர் செல்வ' என்று முருகனை நககீரர் விளிக் கின்றார் (முரு. 255).

**ஆறலை கள்வர்** - வழிப்போவாரை அலைக்கும் கள்வர். பாலையாழ், ஆறலை களவர் தம் கையினின்றும் படைக்கலன்களை நீக்குமாறு அருளின் மாறாகிய

மறத்தினை அவர்களிடத்திருந்து பெயர்க்கும் (பொரு. 21,22).

**ஆறறி கடவுள் - திருமால்.** ஆறுவேதங்களாலும் அறியப்படும் கடவுள் திருமால் (பரி. 3:43).

**ஆறறி அந்தணர் - ஆறு அங்கங்களை அறிந்த அந்தணர்.** சிவபெருமான் ஆறறி அந்தணர்க்கு-ஆறு அங்கங்களை அறிந்த அநதணர்க்கு-அரிய வேதங்கள் பலவற்றையும் அருளிச் செய்தார் (கலி. 1:1).

**ஆறிய கற்பு - அறக் கற்பு.** ஆறிய கற்பினையும்-அறக் கற்பினையும் - அடங்கிய மென்மையையும் உடையவள் நெடுஞ்சேரலாதனின்மாதேவி (பதி. 16:10). அடங்கிய கொள்கையினையும் ஆறிய கற்பினையும் நல்ல புகழையுமுடைய சேரமாதேவியின் கணவன் இளஞ்சேரல் இரும்பொறை (பதி. 90:48-50).

**ஆறிருகை - பன்னிருகை.** அக்கினிதேவன், இந்திரன், இயமன், முதலியோர் படையாகத் தந்த மறி, மயில், கோழிச் சேவல், வில, தோமரம், வாள், ஈட்டி, கோடரி, மழு, கனலி, மாலை, மணி ஆகியவற்றினை முருகன் தன ஆறிருகைகளில் கொண்டிருந்தான (பரி. 5:63-68).

**ஆறிருதோள் - பன்னிருதோள்.** ஆறுமுகத்தையும், ஆறிருதோளையும் உடையனாய் அழகாற் பிறமகளிரை வென்ற வள்ளியது நலத்தை விரும்பியவன் முருகன் (பரி. 14:21,22). முருகன ஆறிரு தோளையுடையவன் (பரி. 21:67).

**ஆறு – 1 எண்ணுப் பெயர்.** ஆறு அங்கத்தாலும் உணரப்படுவது முது நூலாகிய வேதம் (புறம. 166:4). அறம் புரியந்தணர் ஓதல், வேட்டல, ஓதுவிததல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்று ஆறு தொழில் புரிவர் (பதி. 24:6-8). அருநததி யொழிநத ஆறு மகளிர் பெற்ற ஆறு வடிவம பொருந்திய செல்வன செவ்வேள் (முரு. 255). ஆறு அஙகத்தையும் அறியும் அந்தணாககு அருமறை பலவற்றை அருளிச்செய்தவன் மணிமிடற்றன் (சிவபெருமான) (கலி. க. வா.1). ஆறாகவும் (மனமாகவும) திருமால் போற்றப் பெறுவர் (பரி. 3:79,80). (ஆறு என்னும் எணணுப் பெயர் குறிப்பினால ஆறாவது பொறியாகிய மனத்தை உணர்த்தும).

2. **யாறு.** உள்ளாற்றுக் கவலை - யாற்றிடைக் குறையுள்-புள்ளி பட்ட மரநிழலில இருந்து கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்தான் (புறம. 219:1,2). மூங்கில் வாட மழை பெய்யாமையானும குன்று வறங்கூரச் சுடர் திகழதலானும் அருவியற்ற வறண்டகாலத்தும் புனல நிறைந்து பேராற்றின் கரையையுடைத்து மழை பொழிந்தது (பதி. 43:12-17). மாடமோங்கிய மலலல மூதூரின அகன்ற நெடிய தெரு ஆறு கிடந்தாற்போல் தோனறும் (நெடு. 29,30). கோடைமிக்க பெரியகுன்றில், நீரில்லாத ஆற்றில் செல்லும் உயர்ந்த களிற்றினைக் கொன்று மக்கள் இயங்குதற்கரிய சுரத்தில் புலி திரியும் (அகம். 45:3-5). ஆற்றயலில் வளர்ந்த அத்தியின் பழம் பல நண்டு மிதித்தலால் குழைந்ததுபோலத் தலைவி அலரால் வருநதினாள் (குறு. 24:3-5). மறியறுத்துத் தினையைப பலியாக வைத்து ஆற்றுக்கவலையில் (ஆற்றுத் துருத்தியில) பல்லியங்கள் ஒலிக்க அன்னை வெறியாட்டெடுக்கக கருதினாள் (குறு. 263:1,2). கானத்திடத்துச் சிற்றாற்றின் அயலே இளமாங்காய பிளந்தாற் போனற கண்ணாலே தலைவன் நெஞ்சத்தைத் தனக்கிடமாகக் கொண்டு தலைவி ஆணடமையின அவளை அவன களவி என்றான (கலி. 108:27-29). ஆற்றுக்கண் அணி அணியாக நெட்டியாற் செய்த படைக் கருவிகள் கொணடு விளையாடினர் (பரி. 11:50,51). மைந்தரும மகளிரும் மணவிரை தூவினர் என்று ஆறறில் அநதணர் நீராட-விலலை (பரி தி. 2:60,61). தேன பொருந்தி நீர் வடிவழுபபுறற தெனறு ஐயர் ஆற்றில வாய கழுவவில்லை (பரி.தி. 2:60,63).

3. **நெறி.** அறத்தாறு - அறநெறி - சொல்லும் மேற்கோளினை உடையவன முதுகுடுமிபபெருவழுதி (புறம. 9:6). 'பறம்பு மலையைக கைபபறறும் ஆறு யான் அறிவேன; சீறியாழ பணணி விறலியர் பின வர ஆடிப்பாடிச் சென்றால பாரி நாடும் குன்றும் ஒருங்கீவான' எனக கபிலர் கூறியுள்ளார் (புறம். 109:14-18). ஆறு (நனனெறியை) அழித்த திசையெங்கும் சூழந்த கவலை நெஞ்சதது அவலம் தீர மலையமான சோழிய ஏனாதி திருககணணன் தோன்றினான் (புறம். 174:21-23). ஒரு குடியில் தோன்றிய பலருள்ளும மூததோன வருக என்னாது அறிவுடையோன ஆற்றில் அரசும் நடக்கும் (புறம. 183:5-7). நலலது செய்தல் இயலாவிடினும் அல்லது செய்தலைத் தவிர்த்தல் வேணடும்; அதனை ததான் எல்லோரும்உவப்பர், அல்லாமலும நல்லாற்றுப படுத்தும் நெறியும் அதுவேயாகும் (புறம். 195:6-9). பல்வேறு வகையவாகிய பகைவர் நாட்டிலுள்ள மலையிடத்தவும், கடலிடத்தவும் ஆகிய பண்டங்களைப் பகுத்துக் கொடுக்கும் ஆறு முட்டுறாமல் அறம்புரிந்து ஒழுகியவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 59:14,17). நாறபததெட்டாணடு களை ஆறினில (வேத நெறியில) போககியவர் இருபிறப்பாளராகிய அந்தணர் (முரு. 177-180). பண்டங்களை விற்கும் வணிகர் அறநெறி பிழையாது ஆற்றின் (இலலற நெறியில) ஒழுகினர் (மது. 500,506). அறத்தொடு நின்றபின் தலைவனுக்குத் · தலை

வியைக் கொடுக்கவேண்டும் என்றும் ஆற்றின் வாரார் ஆயினும் (நெறிக்குப் பொருந்திப் பெற்றோர் மகட் கொடை நேரார்ராயினும்) தலைவி வருத்தத்தைத் தாங்கிக் கொண்டு ஏனையுலகத்தும் இயையும் எனக் கூறிக் கலங்கி மெலிவாள் (குறி. 23-26). கானம் கடந்து செல்லக் கருதிய தலைவனிடம் தலைவி 'பிரிதல் அறத்தாறு அன்று என மொழிந்த முன்னைய சொல் யாதாயிற்று' என வினவுவாள் போலக் குறிப்புக்காட்டி முகத்தால் கேட்டனள் (அகம். 5:16-20). தலைவியும் தோழியும் ஒருவர் செய்வது ஆறன்று என்று எண்ணாத வேற்றுமையற்ற அறிவினை யுடையவராவர் (அகம். 73:9,10). உடன்போக்கில் வரும் தலைவியிடம் தன்னுடன் ஓராறு (ஒரு நெறியால்) பொருந்தி வருதற்கு அவள் சீறடி சிவப்பக் கூந்தல் வாரி வெண்கடம்பமலர் சூடி வந்ததாகத் தலைவன் கூறினான் (அகம். 257: 3-7). 'இடைச்சுரத்தில் செவிலியிடம் தலைவி சிறந்தவனை வழிபட்டுச் சென்றனள்; அதுவே தலையாய அறம்; பின் பிரியாமலிருப்பதற்குரிய ஆறும் அதுவே; அவருக்குத் துன்பம் சூழாதீர்' என முக்கோற் பகவர் கூறினர் (கலி. 9:22-24). வருத்த முற்றுக் குடிமக்கள் கூவுமாறு கொலையஞ்சா வினைஞரால் (அமைச்சரால்) ஆறின்றிப் பொருளைப் பெற்றுச் செங்கோல் கோடிய அரசன் குடை நிழலில் தங்கிய உலகம் போல் உலறிய மரத்தை யுடையது வெஞ்சுரம் (கலி. 10:5-7). துன்பத்திற்கு அஞ்சித் தன் நிழல் சேர்ந்த குடிமக்களுக்கு வருத்தம் வராமல் காத்தோம்பி, ஆறின்றிப் பொருள் விழைந்து கைப்பற்றிய பகைவர்நாட்டில் தலைவன் தங்கினான் (கலி. 26:19-20). 'நல்லாற்றினின்றும் பிறழ்ந்து தெருவில் நின்று கூறுமொருவன் கூற்றை, உண்மையெனக் கொண்டு அதன் இயல்புணராமல் தெளிதல் எளிது என்பாம் நாம்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 60:24-26). 'முயக்கத்தால் வாடிய பூவொடு எம்மனையிடத்து வாரற்க' எனத் தலைவனிடம் கூறி ஊடியிருப்பேனாயின், தான் கூறிய பொய்ச்சூளுக்கு நாம் அஞ்சும் அச்சத்தையே ஆறாகக் கொண்டு ஊடலுணர்த்த வருவான் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 75:13-21) தான்தீயன் அல்லன் என்பதைக் காமக்கிழத்தியிடம் தாழ்ந்து, ஆற்றின் அவள் நெஞ்சிடத்து நிறுத்துவேன் எனத் தலைவன் கூறினான் (கலி. 91:16,17). பகை அரசுபடப் போரில் கொன்று வென்று, ஆற்றின் செல்வங்களைக் கொண்டுவந்த தலைமைமிகு சிறப்புடையோன் பாண்டியன் (கலி. 105:1-3). புகழ்மிக்க மன்னவன் ஒழுக்கத்தால் நல்லாற்றின் உயிர் காத்துப் பின் தான் செய்த தொல்வினைப் பயனைத் துய்க்கத் துறக்கம் செல்ல விரும்பி மேற்செல்லுதல்போல ஞாயிறு பகல் செய்து மலை சேர்ந்தது (கலி. 118:1-4). ஆறல்ல மொழிகளைப் பேசுதற்கும் அறமாகிய தொழில்களைச் செய்யாமல் தடுப்பதற்கும் தெளிந்த கள்ளையும் நறவையும் உண்பதுண்டு (கலி. 147:1,2).

4. வழி. அன்பில்லாத ஆறலை கள்வர் வழிப்போக்கரைக் கொன்று ஆற்றில் - வழியில் - பொருளைப் பறிப்பர் (புறம். 161:9). உலகத்தின்கண் காவற்சாகாடு செலுத்துவோன் மாட்சிமைப்படின் ஊறுபாடின்றி ஆற்றினை இனிதாகக் கடப்பான் (புறம். 185: 1-3). உள்ளாற்றுக் கவலை (வழிக்குள்ளாகிய நாற்றிசையும் கூடிய இடத்து) புள்ளி நீழலில் உடம்பாகிய முழுத்தசையையும் வாட்டி வடக்கிருந்தான் கோப்பெருஞ்சோழன் (புறம். 219:1,2). வறநிலை ஆறு வண்டுகள் மேம்பட்டு வாழும் (புறம். 263:4). காடும் புறவுமல்லாத ஆறு கடவுளும் ஒள்ளிழை மகளிரொடு மள்ளரும் உறையும் இடமாயின (பதி. 13:20-22). பல்யானைச் செல்கெழு குட்டுவனின் புகழறியாது மலைந்த வேந்தர்தம் புதுவருவாயுடைய நாடுகள், மக்கள் நடமாட்டமின்றிப் புல்நிறைந்து முட்செடி மண்டித் தூர்ந்து பெருங்கவின் இழந்த ஆற்ற (வழிகளையுடையவாய்) மரையா ஏறுகளுடன் கூடியுறையும் காடாயின (பதி. 23:10-15). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் களிறு தடுத்தற் கரியதாதலின் வளைந்து செல்லினும் பிறிதாறு செல்க என அவனை வேண்டுவர் (பதி. 53:13-21). முருகன் விரைந்து செல்லக் கருதி விசும்பு ஆறாக உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்ச் சேறலும் நிலைத்த பண்பாகும் (முரு. 123-125). வழியறியாமையால் தப்பி வேறு வழியிற் போகாது என்னை ஆற்றெதிர்ப்படுதல் நீ முன் செய்த நல்வினைப் பயன் என்று பொருநனிடம் ஆற்றுப்படுத்துவோன் கூறினான் (பொரு. 58,59). பொருநனின் ஆறுசெல் வருத்தம் அகற்றி மனமகிழ விருந்தோம்புவான் திருமாவளவன் (பொரு. 93). நன்னனைக் காணச் செல்லும் பொருநனுக்கு, ஆற்றின் அளவு (செல்லும் வழியின் நன்மை தீமைகளின் அளவுகள்) உணர்த்தப் பெற்றன (மலை. 64-67). பன்றி விளைபுனத்தை அழித்தலால் அதனை அகப்படுத்தற்குப் புழை தொறும் செல்லும் ஆற்றில் இருங்கல்லாலாய பொறியை வைத்தனர் (மலை. 193-195). ஊறு நிரம்பிய ஆற்றில் கானவர் முற்படச் சென்று வழிகாட்டுதலால் பொருநர் சுற்றத்தொடு அவலம் நீங்கி இன்பமெய்தினர் (மலை. 284-286). வெங்கதிர் தெறுகையினாலே நிழல்தேய்ந்து உலறிய மரத்தையுடையதாயும் காய்ந்த பாறை

யிலுள்ள நீரற்ற சுனையில் உதிரும் மூங்கில் நெல் பொரியும் வெம்மைமிக்கதாயும் மக்கள் நடமாட்ட மில்லாததாயும ஆறலை கள்வர் மடியும் இயல்பின தாயும் தலைவர் சென்ற சுரத்தின் ஆறுகள் இருந் தன (அகம். 1:10-15). மென்தோள் அன்னை சென்ற ஆறு இருப்பையின் ஆர்க்குக் கழன்ற புதுப்பூவைத் தினறு கொன்றைப் பழததைக் கோதிக் கரடிக் கூட்டம் திரியும் அருஞ்சுரத்தது (அகம். 15:13-19). 'பிரிகின்ற அன்று நம் இயலபு அறியாயாயினும் இன்று நாம் செயயும் வினையை ஆறுஉற்ற அளவில் விலக்கினால் பிறர் இகழத்தக்க இகழசசியடைவாய்' என்று தலைவன் இடைசசுரத்தே தன நெஞ்சிற்குக் கூறினான் (அகம. 33:18-20). பொருள் வயிற் பிரிந்து சேயமையில் தங்கிய தலைவர் சென்ற ஆற்றில் மடப் பிடி உண்ணுதற்குக் களிறு யாமரத்தை வளைத் துக் கொடுக்கும் (அகம. 59:7, 8, 18). மெலிந்த யானையின் முதுகில் நடப்பது போன்ற ஏறியிறங் கும் சிறு நெறியினை யுடைய பாறைமிக்க அருஞ் சுரத்தில் களிறு ஆற்றினைக் காவல கொள்ளும் (அகம். 65:14-17). தலைவர் சென்ற ஆறு ஆநிரை மீட்க இரவிற்சென்று நலலமர் புரிநது மாயநத நாணுடைமறவரின் பெயரும் பீடும எழுதிய பீலி சூட்டிய நடுகல், ஊன்றிய வேலும் சார்ததிய பலகை யும் கொண்டு பகைவரின போர்முனை போல் தோன்றும் (அகம். 67:7-11, 18). தலைவன் சென்ற ஆற்றில கிடுகுப்படை வரிசை போல் இறநத ஆட் களைத் தழையிட்டு மறைத்த கறகுவியல் நிறைநத பறந்தலையில் பேயத்தேருடன பரற்கற்கள் மின் மினிபோல இமைக்கும் (அகம். 67:13-18). இருள் கிழிப்பதுபோல மினனி மழை பொழிந்த நள்ளிர வில் புற்றினை மொய்த்த மின்மினி இரும்பைக் காய்ச்சி யடிக்குமபோது சிதறும் பிதிர்போல் ஒளி விட, புற்றாஞ்சோற்றினைத தோணடும் ஆண் கரடி இரும்புவேலை செய்யும் கொலலன்போல் தோன்றும் ஆறு செலலுதற்கரிய மரபின (அகம். 72:1-7). மறபபுலியுடன் பொருதமையால் புண் பட்ட தலையிடத்து உற்ற நோயாலாய வருத்தத் துடன் நீர் பருகச் சென்று முழங்காலை மடித்தூன றிய நெடுநல் யானை தன்கை தோயத்து நீரின்மை யால் பெருமூச்செறியும் வறுஞ்சுனையுடைய, மேகம் தோயும் உயர்ந்த மலையிடத்துச் செல்லும் ஆற் றில தலைவர் செல்லத் துணிவரோ எனத் தலைவி தோழியை வினவினாள் (அகம. 119:16-20). மூங்கில் முளை தின்னும பெருங்களிறு இயங்கும் மலைச் சாரலிலுள்ள சிறு பாறைகள செறிந்த ஆற்றில மாலையில வருதல வேணடும் எனறு தோழி தலை வனுக்கு இரவுக்குறி கூறினாள (அகம. 148:12-14). மேகம் பாம்பினை எறியும் இடியொடு கூடிக் கால் வீழ்த்து மழை பொழியும் நள்ளிரவில் தலைவன் தனியனாய் வந்த ஆற்றின் துனபம் நினைந்து தலைவி அழுதாள் (அகம. 182:9-12). பலநாள் இடி யேற்றுடன் கூடி இரவெல்லாம் மழை பொழிநத மையால் ஈரமிக்க ஆற்றில் தலைவனைத் தேடிச் செல்வோமா எனத் தோழி தலைவியிடம் வினவி னாள் (அகம. 222:13-15). வானிடத்துப பகல்போல் எறிக்கும் நிலவொளியில பிரப்பங்காடுள்ள சாரல பொருநதிய ஆற்றில் மலைமேல உள்ள வேஙகை யின் பூக்கள் புலியின் உடமபிலுள்ள புள்ளிபோல் தோன்றுதலின் அங்குள்ள பெணயானை அஞ்சி ஓடும் (அகம. 228.8-12). புலிபோன்று முழஙகும் செஙகண் மறவர் தீககோலுடன அம்பினையும் கொணடு செனறு இரவில் பகைவர் ஊரினை அழித்துப் பல ஆனினங்களையும கவர்நததால எழும் ஆரவாரம் வெஞ்சுரத்து மாறிமாறி ஒலிககும் வேறுபட்ட மொழி வழங்கும் பலநாடு களின ஆறுகளைத தலைவன கடநது சென்றான (அகம. 239·2-7) போர் செயது ஊர் பாழபட்ட விடத்துக் கொலைவலயானை ஆள்பார்த்துக் காவல் கொள்ளும் பாலைநிலததே இடையூறு மிக்க கவர்த்த பல ஆறுகளைத தலைவன கடநது சென்றான் (அகம. 247:7-10). மலைபபக்கத்தே எழுந்த மேற்காறறின் ஒலியை இரைவேட்டெழுநத புலி மானைப பற்றியதால அரறறும் ஒலியெனக் கருதி வேறுவேறாய கவாத்த ஆறுகளில பிரிநது மானகூட்டம் அலறி ஓடியது (அகம. 249:15-18). கிளைத்த கொம்புகளை யுடைய பல முதுமான களைப் போககிச் 'சிறிய உணவுப் பொருளகளைக் கொணர்நத சீறூர்ப் பெணடிர் திரியுமிடததுச சேய்மையிலிருந்து ஒலிக்கும் பேராநதையின மென குரல் கேட்குந்தொறும் வழிசசெலவார் வருநதும் ஆறு ஏகுதற்கு அரியதாகும் என்னாதபடி வானம மழை பொழிந்து வெமமை தணிநது இனியதாகுக' எனத் தோழி தலைவனிடம கூறினாள (அகம. 283·4-9). கொடியோர் தங்கிய நெடும் பெருஙகுன்றத் தின், இட்டு ஆற்றில் (குறுகிய வழியில) ஒலிக்கும் அருவி மலையினினறு இழிநது அச்சநதோன்றும் சிறு ஆற்றில் விழும் (அகம. 288:9-11). புலியின முரண தொலைத்த யானை மதஞ் செருக்கி வலிமிகுநது வழிப்போவாரைக கொல்லும் முள்ளம்பனறி யுள்ள பரந்தவிடத்தில் கரடிக் கூட்டம் புற்றாஞ் சோற்றினைத தேரும் புற்றுடைச் சுவரினைக் கொண்ட புதர்கள் படரப பெற்ற பொதியி லிடததே தெய்வம் போயவிட்ட தூணில தாம் நெடுங்காலம் தங்கியிருநத பழமை கருதி நீங்காமல புறா பெடையொடு ஒலிக்கும் பெருங்கற்களை யுடைய ஊர்கள் பொருந்திய மலையடியிலுள்ள

ஆறுகடந்து தலைவன் நீங்கினான் (அகம். 307:6-15). 'அஞசுதலைத் தவிர்க' என அழகிய ஒளி பெருக முயங்கி நெஞ்சங் கவர்ந்த தலைவர் சென்ற ஆறு நினைந்து நாள்தோறும் தலைவி கண்பனித்தாள் (அகம. 313:1-4). யானை பொருது தாக்கிய புண்ணால் ஆண்புலி கற்குகையில் ஒடுங்கச் செம்முருக்கின் அரும்பு போனற கூரிய நகத்தினை யுடைய பெண்புலி காவல் புரிகின்ற ஆற்றில் யாவரும் இயங்கார் (அகம். 362:3-6). வேந்தனின் அருந்தொழிலை முடித்துக் காதலொடு பெருந்தேரில் ஏறியது தெரியுமேயன்றி வந்த ஆறு பற்றி ஒன்றும் தெரியாதவாறு பாகன் விரைவில் தலைவி மனையில் சேர்த்தனன் எனத் தலைவன் கூறினான் (அகம். 384:1-4). தலைவர் சென்ற ஆறு எறும்பின் வளை போலக் குறுகிய பலசுனைகளையுடைய உலைக்கல் போன்ற வெம்மையான பாறையேறிக் கொடுவில் எயினர் தம் அம்பைத் தீட்டும் கவர்த்த பாதைகளை யுடையது என்பர் (குறு. 12:1-4). தலைவர் சென்ற ஆற்றில் பெண்யானையின் பசி களையப் பெருங்கை வேழம் யாமரப் பட்டையை உரிக்கும் (குறு.37:2-4). தலைவர் சென்ற ஆறு வெந்திறற் கடுங்காற்று வீசுதலின் உழிஞ்சிலின் வற்றிய நெற்று ஆர்ப்பரிக்கும் மலையுடைய அருஞ்சுரம் ஆகும் (குறு. 39). தலைவர் சென்ற ஆற்றில் கலைமான் பசிநீக்க வளைத்த மரப்பட்டையைத் தன் குட்டி உண்டபின் எஞ்சினால் உண்டு அதற்கு நிழலாக நின்று வெயில் மறைக்கும (குறு. 213:2-7). யானை யாமரத்தின பொரிந்த அடியை உருவுமாறு குத்தித் தடக்கையின் வாங்கித் தன் கூட்டத்தின் உறுபசி தீர்க்கும் வெம்மையது தலைவன் சென்ற ஆறு (குறு. 255:1-4,8). சேயாறு (சேய்மையிலுள்ள வழி) கடந்து நடையினால் வருந்தாமல் சென்று தலைவி இப்பொழுது பெறுதற்கு எளியள் என்னும் தூது மொழியைத் தலைவனுக்குக் கூறி உசாவுநரைப் பெற்றால் நன்று எனத் தலைவி கூறினாள் (குறு. 269:1,2,8). தோழி தலைவியிடம் 'வினைமுடித்த செம்மல் உள்ளமொடு தலைவன் வல்வில் இளையர் பக்கம் போற்ற ஈர மணல் மிக்க காட்டாற்றில் வரும் தேர்மணி ஓசையா, புல்மேயும் நல்ல ஆன்பூண்ட மணி ஒலியா என்று கண்டறிவோம் வா' எனக் கூறினாள் (குறு. 275). கூற்றத்தன்ன கொலைவேல் மறவர் வழியிடத்தே தங்கி வழிப்போவாரைக் கொன்றதனால் உணடான புலாலைப் பருந்து பார்த்திருக்கும் நீரிலலாத ஆற்றில் (வழியில) தலைவர் சென்றார் (குறு. 283:5-8) 'சேயாறு (நெடியவழி) கடந்து செலலாவிட்டால் துன்பமினறித் தலைவியின் காமநோயைக் களைய மாட்டோம்' என்று கருதிப் பாகன் புதுவழி உண்டாக்கித் தேரைச் செலுத்தித் தலைவனைத் தலைவியிடம் சேர்த்தான் (குறு. 400). 'நாம் செல்லும் ஆறு மாமரத்திலுள்ள அரும்பைக் கோதி மகிழும் குயில் கூவி விளையாடும் நறுந்தண் பொழிலை யுடையன; அடுத்தடுத்துப் பல ஊர்களை யுடையன' என்று உடன்போக்கில் தலைவன் தலைவிக்கு உரைத்தான் (நற். 9:10-12). சாரலிலே குறுக்கிட்ட மலையின்கண் செல்லும் ஆற்றினை நினையுந்தோறும் நிலையில்லாத நெஞ்சம் நிலத்தின்கட் பரந்துசெல்லும் எனத் தோழி தலைவன் கேட்பத் தலைவிக்குக் கூறினாள் (நற். 154;10-12). தலைவன் வரும் ஆற்றில் புலி யானையை வருந்தத் தாக்கிக் குருதி பருகிய வாயை வேங்கையின் அடிமரத்தில் துடைக்கும் (நற். 158:5-9). கல்லூற்று நீரைத் தன் தடக்கை நீட்டி முகந்துகொண்டு களிறு பிடியின் எதிரே ஓடும் கானம் வெம்பிய வறண்ட கறசுரத்தில காதலர் சென்ற அசசமுடைய ஆற்றில் வேனிற்காலத்தே நிறம் வேறுபடும் ஓந்தி பாணர் இசைக்கும் யாழொலி கேட்டு வருத்தம் தீர்ந்து யாமரததில் ஏறும் (நற். 186). குடவரைப் பாவை போன்ற தலைவியினது நலம் உள்ளி வரின் மலையடியிலுள்ள ஆறு தனக்கு ஏமமாகும் எனத் தலைவன் கூறினான் (நற். 192.8-12). 'சேர்ப்பன் குதிரையைச் செலுத்தி வரைவொடு வரும் ஆற்றினை மணற்குன்றேறிக் கண்டு வருவோம் வா' எனத் தோழி தலைவியை அழைத்தாள் (நற். 235:6-10). மலை யாற்றில் (மலை வழியில) மின்னி மழைபொழிந்த நள்ளிரவில தான வெளிப்படுத்திய திருமணியை அரவு தேர்நதுழல இடி இடிக்கும் (நற். 255:8-11). ஓமையை ஒடித்துண்ட யானை தடக்கை சுருட்டித் தூக்கிப் பிறிதோர் ஆறு சென்று மறைந்த அளவில் வேறாக நினைந்து விடரகம் சிலம்ப மடப்பிடி பிளிறியது (நற். 318:5-9). 'வரும் ஆறு ஈது' எனத் தலைவன் வரும் வழி சுட்டப்படுகிறது (நற். 323:11). ஆற்றின்கண் ஆறலைப்போர் மக்களைக் கொன்று துறநத பிணஙகளின் மிக்க நாற்றத்தால அருகே சென்று பறித்துத தின்ன இயலாது, ஈன்றணிமையால் நெருங்காது, முதுபருந்து கடந்துசென்றது (நற். 329:2-5). காட்டில் வேங்கைப்பூக் கொயவோர் பஞ்சுரம் (பாலைப் பண) விளிப்பினும் அவ்வழியிடைச் செல்வோர் ஆறு செலவதற்கு மிகவும் அஞ்சுவர் (ஐங். 311). தலைவர் சென்ற ஆறு தொடியணிந்த பேய்மகள் இறந்தோர் தலையைத் தேடித் திரியக் காக்கையொடு கழுகு விசும்பில் கத்தித் திரிய, யானை எதிர்ப்பட்டவரைக் கொன்று திரியும் அருஞ்சுரம் என்பர் (ஐங். 314). தலைவனுக்குச் சுரத்திடை ஆறு, ஒண்ணுதல் அரிவையை உள்ளுதொறும் தண்ணிய ஆயின (ஐங். 322.4,5). அருஞ்சுரம் கடந்து செல்வோர்

தம் துணைவியரை நினைந்து அழுங்குமாறு மராம ரத்தின் வெண்பூ இனிய மணம் கமழும் மலையிடத் துத் தலைவர் சென்ற ஆறு இன்னாது என்ப (ஐங். 331). குருதிபோலச் சிவந்த செவியுடைய கழுகுகள், கறகளின மருங்கில் முடைநாற்றமுடைய ஊன் துண்டங்களைப பார்க்கும் காடு தலைவர் சென்ற ஆறு ஆதலின் தலைவி வருந்தினாள் (ஐங். 335). 'சுரத்திடை ஆறு, தலைவியைப் பிரிநத காலை நெடிய வாயின; அணியிழையை உள்ளி வருங்கால் நணிய வாயின' எனத தலைவன் கூறினான் (ஐங். 359). காதலர் சென்ற ஆறு மயில் உடையது; கொன்றை சூடிக் கடிமனை புகும காவலர் போல் மள்ளர் உடைதது; மேகம் வீசும் மழையினை ஏற்று வளமுடைய கானம் உடைத்து; மறியுடை மான்பிணை உகள மழை பொழிந்த இன்பமும் உடைத்து; நெயதல் மலரக் கொன்றையும பிடவ மும் உடைதது; பொனபோன்ற கொன்றை இண ருடன் மலாநத குருந்தும் உடைத்து; ஆலங்கட்டி மழை பொழிதலான வெண்மையாக மலர்ந்த முலலையும் உடைத்து; புதரில பலபூ மலர இன் புறத் தரும் பண்பும உடைத்து; குருநதங்கண்ணிக கோவலர்தம் ஊரும உடைதது; மழை பொழிந்த போது ஒணசுடர்த தோன்றியும் தளவமும் உடைதது (ஐங். 431-440). தலைவன செல்லும் ஆறு வனப்பெய்த மலர்கள பூததுப் பரவின (ஐங். 483·1). கணிச்சியோன (சிவன) சினந்த போது முப்புரம் அழிந்து உதிாந்தனபோல ஞாயிற்றின வெம்மை யால மலை பிளந்து போவார்ககு வழியிலலையாக ஆறுகெட அடைத்தது (கலி. 2:6-8). தலைவன் கடந்து செலலும் ஆற்றிடை நீர் நீத்த வறுஞ் சுனை இலைகளோடு வாடிய அழகிய மலர்போல நிலம் வறண்டு கிடக்கும்; மரம்வாடப பற்றுக் கோடாகப படர்நத பூங்கொடி வாடிக் கிடக்கும்; மரததின் அழகு கெட்டு அதன் தளிரும வாடிக் கிடக்கும் (கலி. 3:8-17). யானைக் கூட்டத்தோடு மறவர் மயங்குதலினாலே தூறுகளெல்லாம வழிப் பட்டு ஆறு மயங்கிய அருஞுசுரங் கடந்து தலைவர் சென்றார் (கலி. 5:1-3). 'ஆற்றிடைத் துனபத்திற்கு எம்மையும் நும்மொடு துணையாகக கொண்டு போதலை ஆராயின் அதுவலலது வேறோர் இன் பமும் எமக்கு உளடோ' எனத் தலைவி தலைவ னிடம் மொழிநதாள் (கலி. 6:9-11). இடுமுள் நெடு வேலி போல வேடர் விலலால கொல்லபபட்டவர் தம் உடமபை மறைத்த பதுககை நிரைத்துக் கிடக் கும கடிய குற்றம் நிறைந்த ஆற்றில் நீரறுஞ்சுனை யைச் சூழ்ந்து நீர் வேட்ட யானை கை சுடப்பட்டு மலைசசாரல் தோறும் நெறிமயக்குற்ற தொலை யாத நீணட காட்டிடையே தலைவன சென்றான் (கலி. 12:1-7). 'காதலர் சென்ற ஆற்றிடையில் சினை வாடச் சிறக்கும் நினது சினந் தணிக எனக் கதிரவனை வேண்டுதல் நம் கற்புக்கு இயைவதோ' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 16: 10-12). உடனழைத்துச் செல்க என்ற தலைவியி டம், தண்ணீருண்டலை விருமபின் ஆற்றில (சுரநெறி யில) நீரில என்று அறனோக்கித் தலைவன் கூறுவான் என்பதை உணர்ந்தாலும் அவனைப் பிரிந்து வாழ முடியாத நிலையைத் தலைவி குறிப்பிடுகின்றாள் (கலி. 20:11-14). தன இனத்தைப பிரிந்த யானை ஆற்றினைக் காவல் கொள்ளும வேறுபபுலத்திற் குப பொருள் வயிற் பிரிதல வேணடும் எனனும் அரு ளிலலாத சொல்லைத் தலைவன் கூறினான எனத் தலைவி உரைததாள் (கலி. 21:1-5). 'நாறிருங கூந் தலையுடைய பரததையர் இல்லத்திற்குச செல்லும் நீ போகினற ஆறு (வழி) தவறி இங்கு வந்தது போலத் தெரிகிறது; அஙகேயே செலக' எனத தலைவனிடம் தலைவி கூறுதல் (கலி. 95 1-4). 'மழை யிடை மின்னல போல தோனறி ஒருத்தி ஒளியொடு உருவை எனச ந்க் காட்டி அளியளாய என நெஞ சாறு (நெஞ்சை வஈ ·வழியாக) கொணடாள்; அத னால உறஙகேன்' எனத் தலைவன கூறினான (கலி. 139:5-7). வெந்த கரியினை யுடைய பல வழி களைக் கொணடதாயக் கறகள காயநத காட்ட கத்தை அஞ்சததகக ஆறு எனனாராய் விழுப் பொருள ஈட்டும பொருட்டுத் தலைவர் பிரிநது சென்றார் (கலி. 150.11,12). வையைநீர் தலைவனை அவன் விருமபியவளிடததுக் கொணடு செலுததா மல தான வேண்டும் ஆறு (வழியில) செலுததியது (பரி. 11:109,110). ஆறுசெல மாககள, ஆறு செல வம்பலர் காண்க.

**ஆறுசெல் மாக்கள் – வழிப் போக்கர்.** வண்டு புறம் மொய்க்கவும் தீஞ்சுவை திரியாது அரிவாளாலும பிளக்க முடியாத இனிய பலாக்கனி ஆறுசெல் மாக்களின வழிநடநத களைப்பைத் தடுககும் (பதி. 60:4-7). ஆறுசெல் மாக்கள் அறுதத பிரணடைக் கொடி இடியேறுணட பாம்பின துணடம போல வழியில் வாடிக்கிடக்கும (அகம. 119.5-7). கானததில மழவரின சகடம் சென்ற சுவட்டில் செலலும ஆறு செல் மாக்களின் சோறு பொதி பனைஓலைக்குடை யைச சூறாவளி எடுததலினா லாய ஓசையைத் தனது துணையின் ஒலியெனக் கருதி ஆண்குரங்கு அழைக்கும (அகம். 121·11-15). வழிபாாததிருநத கொடுந்தொழில் மறவர் ஆறுசெல மாககளின மார்பில வேலெறிய, அவர்கள விழுபபுண் பட்டு மாய, பருநதின சேவல முடைநாற்றஙகணடு இனத் தைக் குரல்கொடுத்து அழைக்கும் இன்னாவெஞ

சுரத்தைத் தலைவர் கடந்து சென்றார் (அகம். 363: 9-15). கருக்கரிவாளைப் போன்ற முதுகினை யுடைய ஆண் முதுஒந்தியும் பாலை வழியி ரில் ஆறுசெல் மாக்களுக்கு நிமித்தம் பார்க்க உதவ் பது (குறு. 140: 1-3). புலி தன் உணவை வைத்திருக்கும் புலால் நாறும் கல்லளையுடைய மூங்கிலுயர்ந்த மலைச் சாரலில் ஆறு செல் மாக்கள் தங்குவர் குறு. 253:5-7). பெருந்தண் குன்றத்து ஈச்ச மரங்களையுடைய காட்டின்கண் ஆறுசெல் மாக்களின் தலையைப் பிளந்துண்டதால் சிவந்த மறுப்பட்ட தலையையும் குருதி தோய்ந்த வாயையும் உடைய புலிக்குட்டி திரியும் (நற். 2:1-6). உடன்போக்கு மேற்கொண்ட தலைவி இடைச்சுரத்து ஆறுசெல் மாக்களை நோக்கி தான் வீரத் தலைவனோடு தேரேறி மலைப்படட அருஞ் சுரம் கடந்ததை அறனில் யாய்க்கு கூறுமின் என்றனள் (ஐங். 385).

**ஆறுசெல் வம்பலர் - வழிச்செல்லும் புதி . இரும்** பொறை எத்துணைப் பெரும் படையன் என வினவும் ஆறுசெல் வம்பலர்க்கு - வழிச் செல்லும் புதியவர்க்கு-அவனுடைய தேரும் மாவும் மாக்களும் எண்ணுதல் அரிது; அவன் தானையில் கொங்கர் ஆ பரந்தன்ன யானை பல காணப்பெறும் என அரிசில் கிழார் கூறுவர் (பதி. 77). ஆறுசெல் வம்பலர் காய் பசி தீரச் சோறு சமைக்கும் பானை அடுப்பிலிருந்து அசைந்து விழும்படி தெங்கின் காய் நிலத்தே விழுந்தது (பெரு. 365-367). இருப்பையின பூக்களைப் புனிற்றுக் கரடிகள் உணணுதலினால் ஆறு செல் வம்பலர் அஞ்சி அப்பக்கம் செல்லார் (அகம். 95: 6-10). காட்டாற்றினை யுடைய வழியில் ஆறுசெல் வம்பலர் சேறுகிளைத்துண்ட சிறு கேணிகளைத் தனது பிடியின் அடிச்சுவடென விரும்பிக் களிறு தொட்டுப் பார்த்துக் கடந்து செல்லும் (அகம். 137: 1-3). வில்லினின்று விடுக்கும் அம்பு பிழையா வன்கண் ஆடவர் வீடுதொறும் ஒலிக்கும் வெவ்வாய் வாளி ஆறுசெல் வம்பலர் உயிரைப் போக்குதலின் பருந்து தன் கிளையை அழைத்து முடைப்புலாலை உண்ணும் (அகம். 175:1-6). வறண்ட காலத்துப் பல கவர்த்த வழிகளையுடைய காட்டில் ஆறுசெல் வம்பலர் வருந்திறம் காண வில்வல் ஆடவர் யா மரக் கிளையிலேறி மறைந்து கொள்வர் (அகம. 263: 3-8). வெஞ்சுரத்தில் ஆணபுலி தன் துணையின் பசி பொறாது சிறுகட் பன்றி வருதிறம் பார்க்கும் வழியில பொந்துடை மரததின் புளளிபட ட நிழலில் ஆறுசெல வம்பலர் தளர்ச்சியுடன தங்குவர் (அகம். 277:5-12). புலலியது குன்றத்தில வன்னிலத்தை யிடித்துத் தோண்டிய கிணறு ஆறுசெல் வம்பலர் தளர்சசி நீங்க நீரூறும் (அகம். 295:10-13). தெய்வம் தம் அடியில் தங்கும் ஓமை மரங்களை யுடைய காட்டில் மறவர் பகழியைத் தேய்த்ததால் பக்கம் மெலிந்த அச்சம் மிக்க நடுகல்லில் பெயரும் பீடும் பொறித்த எழுத்துக்களை ஒருங்கு சேர்த்து நோக்க மாட்டாராய் ஆறுசெல் வம்பலர் தளர்ச்சியுடன் சென்றனர் (அகம். 297:6-11). கவர்த்த நெறிகளை யுடைய காட்டில் உமணரின் வண்டிச் சக்கரம் சிதைத்த நடுகல்லில் சூட்டிய கண்ணி வாடப் பெற்றதும் நீராடப் பெறாததுமாகிய இடத்தில் கூரிய உளியால் இயற்றப்பெற்ற கோடு மறைந்த எழுத்துக்கள் ஆறுசெல் வம்பலர்க்கு வேறு பொருளின வாகப் பிறழ்ந்து காணப்படும் (அகம். 343:4-9). வானவரம்பனது நல்ல நாட்டுக் கப்பாலுள்ள வெப்பமிக்க காட்டினை யடைந்தவிடத்து ஆறுசெல் வம்பலர் வேறு வேறாகப் பிரிந்தலறப் பெருங்களிற்றைத் தொலைத்த ஆண்புலி செம்புல மருங்கில் வெற்றிப் பெருமிதத்தினால் வெற்பு எதிரொலிக்க இடிபோல் முழங்கும் (அகம். 389:16-23). குன்றுபல நீந்தி வேறுபுலம் படர்ந்த வினைசெய்யும் உள்ளத்தினையுடைய ஆறுசெல் வம்பலரின் காய்பசி நீக்க வரகரிசியைச் சுனைநீர் முகந்து பானையைக் கல்லடுப்பி லேற்றிக் குடவர் புழுக்கிய உணவைப் பாலொடுபகுத்துப் புல்லியின் நாட்டினர் கொடுப்பர் (அகம. 329:1-19). கொடுஞ்சிலை மறவரின் கூரிய அமபுப் பகையினின்றும் தம்மைக் காவாமல் எதிர் நின்று இறநதுபட்ட ஆறுசெல் வம்பலர் மீது தழையையிட்ட பதுக்கைகள் ஊர் போலத் தோன்றும் (குறு. 297:1-4). மூஙகில் வாடிய நீரில்லாத வழியில் ஆறு செல் வம்பலர் தொலைய எதிராக நின்று கொடுஞ்சிலை மறவர் கொள்ளையடிப்பர் (குறு. 331:1-3).காட்டு வழியின் அயலில் இருந்த கணந்துள் பறவை ஊறு விளைக்கும் வேட்டுவர் இருத்தலை அறிவுறுத்தி ஆறுசெல் வம்பலரது படையினை இடம்பெயரச் செய்யும் (குறு. 350:4-7).

**ஆறுணர்ந்த ஒரு முது நூல் – ஆறங்கத்தாலும் உணரப்** பட்ட பழைய வேதம். ஆறுணர்ந்த ஒரு முதுநூலாகிய வேதத்துக்கு உணமைப் பொருளைச் சொல்லி இருபத்தொரு வேள்வித் துறையையும் முட்டின்று முடித்த சிறப்பினை யுடைய மரபில் வந்தவன் கௌணியன் விண்ணந்தாயன் (புறம். 166:4-9).

**ஆறுமுகம் – முருகனின் ஆறுமுகங்கள்.** முருகா என்று ஓதுவார் முன் முருகனின் ஆறுமுகங்களும் தோன்றும் (முரு. வெ. 6).

**ஆறெழுத்து - முருகனுக்குரிய ஆறெழுத்து மந்திரம்.** (நமோகுமாராய என்பர் நச். முரு. 186). தோய்க்கப்பட்ட ஆடை உடம்பிலே புலர உடுத்துத் தலை மேல் கை கூப்பிப் புகழ்நது முருகனுக்குரிய ஆறெழுத்து

மந்திரத்தை - அடக்கிய அருமறைக் கேள்வியை மறையவர் நாவினால் பாடினர் (முரு. 184-187).

ஆன் - பசு. எருமை போல் தோன்றும் பெரிய கருங் கல்லின இடையே ஆன் - பசு - போல யானைகள் பரவி நிறகும் கானக நாடன் பெருஞ்சேரல் இரும் பொறை (புறம். 5.1-3). ஆனியல பார்ப்பன மாக் கள்மீது வீரர் அம்பு தொடார் (புறம். 9 1,5). ஆன் முலை யறுத்த அறனிலோர்க்குக கழுவாய் இருப் பினும் நனறி கொன்றோர்கது உய்தியிலலை (புறம். 34:1,6). ஆவினநெய்யை உருக்கினாற் போன்ற மதுவை வன்பரணர்க்கு ஓரி நலகினான (புறம். 152: 27). தெய்வம் மெய்யினகண் ஏறிய புலைமகளை ஒப்ப ஆன தாலிக் குதிக்கும் (புறம. 259.5,6). பகை வரைக கொனறு நிரையை மீட்டுப் பாம்பிடமிருந்து உய்ந்த மதியைப போல மறவர் கையகத்தினின்றும் உயநத கனறுடைப் பல ஆனிரையைக கொண்டு வநதவன தேவருலகம செனறான (புறம. 260:15-21). வேங்கையின பூவைப் போந்தைத தோட்டுடன் புனைநது பல ஆனகளை யுடைய கோவலர் வீர னது நடுகல்லுக்குச் சூடடினர் (புறம். 265:2-5). கரந்தைப போரில பலலான் இனநிரை கவர்நத மறவரைப பருந்து ஆரவாரிககும்படி கொன்று மாறுபாட்டினைப் போககியது இக்கருங்கை வாள் என வீரனது சிறப்புக் கூறபபடும (புறம். 269·9-12). வியன்புலத்தில மேயநத ஆககளோடு கூடிய ஆனேறு மரங்களின நிழலில் தங்கி அசையிடக் கோவலா முலலைப் பூவைப் பறித்தனர் (புறம. 339·1-3). ஊனைப் பெயதுவைதத வெளளிய கலததில ஆன் பால நிறைநது வழிநதது (புறம. 386:5,6). முலலைக கணணி சூடிய பலலான் கோவலர் புல்லுடைவியன புலம் ஆனிரைகளைப் பரபபிக் கல்லுயர் காட்டில கதிர்மணி பெறுவர் (பதி. 21:20-22). ஆன்பயன் வாழ்நர் (கோவலர்) தலைவனாவான கழுவுள் என் பான (பதி. 71:17). உரிய காலத்தே மழை பொழிந் தமையான் பல்லான்கூட்டம் புல்லருந்தித் துள்ளி யது (பதி. 89:1,5). நலலினமென்று ஆராயபபட்ட பல ஆன்களைக் கன்றுகளொடு கவாந்து இடும் பாத வனத்தில் தங்கினான் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன (பதி.ப. 5:8,9). ஆய்மகள மோர் விற்றுப்பெறற பொருளினால் சுற்றமோம்பி, நெய் விற்ற பொருளால் பசும்பொனனை வாங்காமல் எருமை நல்ஆன் கருநாகு வாங்கினாள் (பெரு. 162-165). கதிரவன் மறையும் மாலைக் காலத்து ஆனகணம் கன்றினை அழைக்கும் குரலொடு மன்று நோககி வரும் (குறி. 216-218). உழவர் நல்லா னொடு பகடு ஓம்பினர் (பட். 201,205). கானத்தைக் கடந்து சென்றால், வேற்றுப்புலம் சென்று மேயநத ஏற்றையுடைய நிரையி விருக்கும் சங்கு போன்ற வெள்ளை ஆனின் தீம்பாலைக் கோவலர் வளை யோர் உவபபத் தருதலின் பரிசிலர் வருததம் நீங் குவர் (மலை. 408-412). அறுகம்புலலை மேய்ந்த பருத்த மடியையுடைய நல்ல ஆன் தீம்பால் சொரி யக் கன்றை அழைககின்ற குரலுடன மாலைக் காலத்தே மனறம் புகும (அகம. 14:9-11). கொடுவில் ஆடவர் மாற்றார்கது வருத்தத்தை விளைககும் விலலை வளைத்துப பலலான் நெடுநிரையைக் கவர்நதுகொணடு ஒலியுடன வருகினற மறவரைப் போரில அலைதது ஓட்டிய பெருஞ்செருககுடன் துடி ஒலிககேற்ப ஆடினர் (அகம. 159 5-9). பெண் யானை குழியில அகபபடக் களிறு பிளிறிய ஓசைக்கு அஞ்சி விரைநதெழுந்த யானைக்கன்று மூதூரிடத் துள்ள எருமை நல்லான் பாலை உணணும் (அகம. 165.1-5). பலலான குன்றின படு நிழலில தங்கிய ஆனிரைப் பரபபினைக் கொண டது குழுமூர் (அகம. 168:4,5). கோவலர் வெண கோடறபூ அணிநது, பகலிற் பெயத மழையால் வருநதிய ஆனிரையொடு நீாதிகழ கண்ணியராய ஊர் திருமபினா (அகம. 264 3-6). புனிற்றாக்களைக் கவர்ந்து வரும் வீரர்தலைவன மிகுந்த போர் களைச செயயும் சோழனாவான (அகம. 338 18,19). ஆனிரை பல குழுமிய புலலியின நாட்டில ஆறு செல வம்பலர் பசிதீாககக குடவர் புழுககிய சோற்றை மதர்த்த நலலான பாலொடு பகுத்துக் கொடுபபர் (அகம. 393·16-19). செம்மறியாட்டுத தயிரில வரகரிசியுடன ஈயல பெய்தட்ட இனபுளி வெஞ்சோறறின் மேல சேதானின் (செநநிறபபசுவின) வெணணெய் உருகபபெயது ஏவலர் உணடனர் (அகம. 394 2-7). பல்லான கோவலர் ஊதும குழ லோசையை நெல்லிக்காயைத் தின்று அசையிடும் மரைமான கூர்நது கேட்கும (அகம. 395 11-15). நலலான தீமபால கனறும் உண்ணாது கலததினும் படாமல நிலத்திறபட்டுப் பயனிழததல போல மாமைக்கவின் தனக்கு முதவாது தலைவனுக்கு முதவாது பயனிழததலைத தலைவி தோழிக்குக் கூறினாள் (குறு. 27). எழினி போர் முனையில் ஆனிரையை மீட்டுக் காத்ததுபோலத் தன் கொழு நன மார்பைத் தலைவி கிளையொடுங் காக்க எனப் பரத்தை கூறினாள் (குறு. 80:5-7). மழை பெய்து ஊதைக்காற்றடிக்கும் கூதிர்யாமத்து ஆன் ஈயை ஓட்டும்போது தலையசைத்தலால எழும் மணியொலியைப் பிரிவுத் துன்பொடு கேட்கும் பிறரும் உளரோ எனத் தலைவி தோழியை வினவினாள் (குறு. 86:2-6). சுரப்புடைய நல்ல ஆனைக் கன்று காண்டற்கு விரும்பியது போலத் தலைவி தலைவனைக் காணடற்கு விரும்பினாள் (குறு. 132:4-6). நள்ளிருளில் அரவினது தலை

துமிய உரும்ஏறு இடிக்குந் தோறும் பல்லான் தொழுவத்து மணிக்குரல் இயம்பும் (குறு. 190:4-7). கிணற்றில் வீழ்ந்த செந்நிற ஆன் படுதுயரை இரவில் கண்ட உயர்திணை ஊமன போலத் துயர் பொறுக்கல்லேன் எனக் கிழத்தி கூறினாள் (குறு. 224:4-7). 'மாலைக் காலத்து ஊர் வந்தடையும் புல்லுண்ணும் நல்லான் பூண்ட மணி ஓசையா, செய்வினை முடித்து இளையர் போற்றத் தலைவன் ஊர்ந்து வரும் தேர்மணி ஓசையா எனக் கண்டு வருவோம் வா' எனத் தோழி தலைவியை அழைத்தாள் (குறு. 275). காட்டு வழியில் உணவின்றி வாடிய நிரையிலுள்ள ஓர் ஆனினது தெண்மணி மெல்ல ஒலிக்கும் (நற். 37:1-3). மதர்த்த நல்ல ஆனின் தெண்மணி ஓசை கொடுங்கோற் கோவலர் குழலோசையுடன் மாலைப்பொழுதில் மெல்லிதாக இசைக்கும் (நற். 69:7-9). வேனிற்காலத்துக் குன்றின் பக்கத்தே நீர் வேட்கையாற் செல்லும் பிடியொடு செல்லவியலாத யானைக் கன்று சேரியம் பெண்டிர் திடுக்கிட ஊர் ஆன்கனறொடு வந்தது (நற். 171: 2-5). வெம்மையான பரல்மிக்க பள்ளத்தில் குந்தாலியால் வெட்டிய கிணற்றில் ஆன்வழிப்படுநர் (பசுவைப் பாதுகாக்கும் ஆயர்) தோண்டிய சிறு குழியிலுள்ள நீரை யானையினம் பருகும் (நற். 240:6-9). பல்லான் கோவலர் கரும்பைக் குணிலாகக் கொண்டு மாங்கனி உதிர்ப்பர் (ஐங. 87:1, 2). கல்பொருந்திய கவர்த்த வழியில் கல்லாக் கோவலர் கோலினால் தோண்டிய பள்ளத்திலுள்ள ஆனீரை (பசுவிற்குரிய நீரை) யானைகள் வௌவின (ஐங. 304:1-3). பல்லான் கோவலர் மாலைப்பொழுதில் படலைமாலை தொடுத்தணிவர் (ஐங். 476:3). ஏறுகொள்வாருள் என்னை ஒப்பாரில்லை என நம் ஆனுள் (பசுநிரையில்) தன் தாளாண்மை கூறும் தலைவன் ஒருநாள் நமக்குக் கேளாளன ஆவான் எனத் தோழி தலைவியிடம் கூறி ஆற்றுவித்தாள் (கலி. 101:43-45).

**ஆன்பயம் – பசுவின் பால்.** ஊன் வைத்திருந்த வெள்ளிய கலத்தில் ஆன் பயம் - பசுவின்பால் - நிறைந்திருந்தது (புறம். 386:5-6). மத்துக்கயிறு ஆடாத வைகறைப் பொழுதில் ஆன்பயம் கொண்டு வாழ்க்கை நடத்தும் இடையர் தலைவனாகிய கழுவுள் தலைவணங்கப் பெருஞ்சேரல் இரும்பொறை வென்றான் (பதி. 71:16-18).

**ஆன்பொருநை - ஓர்யாறு.** குறுந்தொடி மகளிர் பொன்னாற்செய்த கழங்கினால் வேதிகை போல உயர்ந்த தணணான பொருநை மணல் மேட்டில் விளையாடியதால வெண்மணல் சிதைந்தது (புறம். 36:3-5). 'சேரனது கருவூரின் துறைமுன் தெண்ணீரையுடைய தணணான் பொருநையாற்றின் கரையிற் குவிந்துள்ள மணலினும் பலவாக நலங்கேழ் ஆகத்திலுள்ள பூண் வடுப்பொறிப்ப முயங்குகம்' எனத் தலைவன் இடைச்சுரத்து நெஞ்சு நோக்கிக் கூறினான் (அகம். 93:15, 16, 20-23).

**ஆன்றவர் - பண்புகளால் அமைந்தவர்.** 'வானோர் உலகத்தின்கண் ஆன்றவர் – பண்புகளால் அமைந்தவர் (தேவர்) - விருப்பத்தோடு விருந்தாக ஏற்றுக் கொள்ளுமாறு நல்வினையை மயங்காது செய்க' எனப் புல்லாற்றூர் எயிற்றியனார் கோப்பெருஞ் சோழனுக்கு உரைத்தார் (புறம். 213:21-24). ஆனறவர் அடங்கியிருப்பதுபோலக் காலம் வருந்துணையும் அரும்புகள் மலராது கொம்புகளில் இருந்தன (கலி.32:8). பெறுதற்கரிய இறைமை வாய்ந்த ஆன்றவர் (தேவர் பெறும் இன்பம் மக்களும் பெற வேண்டும் என்பதற்காக முருகன திருப்பரங் குனறின்கணணே வள்ளியை மணந்தான் (பரி. 19:3-5). ஆன்றோர் காண்க.

**ஆன்றோர் – பண்புகளால் அமைந்தவர்.** (இச்சொல் சங்க இலக்கியத்தில் கணவர், துறவியர், தேவர், சான்றோர் எனப் பொருள் கொள்ளுமாறு ஆட்சி பெற்றுள்ளது). ஆய் அணடிரனது பொதியின் மலையில் வாழும மகளிரின் ஆன்றோர் (கணவர்), விருந்தினர்க்கு முள்ளம் பன்றியின் ஊன், சந்தனக் கட்டை, யானைக கொம்பு ஆகிய மூன்றையும் புலித தோலில வைதது வழஙகுவர் (புறம். 374: 10-15). நீராடா-நோன்புடைய ஆன்றோர் (துறவியர்) போன்று கானயானைகள் கவினழிந்து காணப் பட்டன (அகம். 123:1-4). ஆன்றோர் (தேவர்) விண்ணுலகை அங்குள்ள அமிழ்தத்துடன் பெறுவதாயினும் தலைவியின் தோள் நலம் சிதையுமாறு அவளைப் பிரிந்து தலைவர் தங்கமாட்டார் என்த் தோழி கூறுகிறாள் (அகம. 213:17-19). தம் நெஞ்சறிந்ததனை மறைத்துக் கூறுதல் ஆனறோர்க்கு (சான்றோர்க்கு) இயல்பில்லை (குறு. 184:1). அன்பும் அருளும் பொருந்திய மனத்துடன ஆனறோர் செல்லும வழியில் தலைவன் செல்லவிலலை என்று, வரையாது காலம் நீட்டித்த தலைவனைப்பற்றித் தோழி கூறுகிறாள் (நற். 233:7-9). 'தவம் செய்யுங்கால் வழுவும் அரசனைத் தாங்கி அவனை மீட்டுந் தவநெறிப்படுததி உயர்நிலை யுலகம் பெறச் செய்யும் ஆன்றோர் போல நீவிர் என் துன்பம் தீர்த்தல் வேண்டும்' என்று மடலேறுகினற தலைவன் சான்றோரை வேண்டுகின்றான் (கலி. 139:34-37). ஆன்றவர் காண்க.

**ஆன்றோருலகு-தேவருலகம்.** சோம்பியிருப்போர்க்குப் பொருளும் இயல்பாக அறஞ்செய்யாதவர்க்கு

ஆனறோருவகும் - தேவருலகமும்-கனவில் கைகூடும் (கலி. 92:5,6,9).

**ஆன்றோள் - கற்பிற் சிறந்தோள்.** 'ஆன்றோளின் - கற்பிற் சிறநதவளின் - கணவ' என்று ஆடு கோட் பாட்டுச் சேரலாதனைக் காக்கை பாடினியார் நச்செளளையார் விளிக்கின்றார் (பதி. 55.1).

**ஆனிலை உலகம் - கோ உலகம்.** நிலம், வானம், துறக்கம் என்னும் முப்புணர் அடுககில துறக்கத் தின மேலுளளது ஆனிலை உலகம் - கோஉலகம்- (புறம. 6 5-7).

**ஆனிலைப் பள்ளி – ஆயர்சேரி.** சுரத்திடைச் செல் வோர், காயநத மானின் தசையை மூஙகில அரிசி, ஆனிலைப பள்ளியின - ஆயர் சேரியின - தயிர் சோததுச சமைத்து வெள்ளிய நிணத்துடன் தேக் கிலையில் உண்டனர் (அகம. 107.6-10).

**ஆனினம் – பசுககூட்டம்.** பாணன், ஆனினம - பசுக் கூட்டம் – மிகக வழி பலவற்றையும மானினம் நிறைநத மலைகளையும நீர் நிலைகளையும் கடந்து நாளுசில வளளுவனைக காண்டல (புறம். 138:1-3). பலவகையான ஆனினததின திரளுககுள பாம்பி னைக் கணடு அதிரும இடிபோல நலலேறுகள் முழங்கி நாகுடன் கூடி நினறன (கலி. 113:27–29).

**ஆனுருக்கு- ஆன்நெய்.** வல்விலோரி பாண் சுற்றத் திற்குப் புழுக்கிய மானதசையும் ஆனுருக்கு-ஆன்- நெய்–போனற மதுவும் நலகினான (புறம. 152:27).

**ஆனேற்றுக்கொடியோன் – காளைக்கொடியுடைய சிவன்.** இளவேனிற் காலத்தில் ஆனேற்றுக கொடியோன- சிவன்-போல் செந்நிற இலவமபூ மலர்நதது (கலி. 26:5).

**ஆனேறு - காளை.** தலைவனை நினைந்து தலைவி வருநதுதலை அறியாத குன்ற நாடன அவளை நினைநது வேனில ஆனேறு-காளை-போல வருந்தி மெலிநதான (குறு. 74:3-5). தலைவியின் மகன் பவழத்தால் செய்யபபெற்ற அழுக்கறத் திகழும் ஆனேறு விளஙகிய பூண் அணிநதிருந்தான் (கலி. 85:10,11).

**இக்கரை - இவ்வுலகம்.** புணையினைக் கைவிட்டவர் களுக்கு, இயமன தம்முயிரைக கவருங்காலத்தே இககரையிலிருந்தும் - இவ்வுலகத்திலிருந்தும் – இவர்ந்து அக்கரையாகிய வீட்டுலகம் அடைதல் அரிது (புறம். 357:7-9).

**இகணை – ஒருவகை மரம்.** வானளாவிய உயர்நத கரிய அடியினை யுடைய இகணைமரத்தின் பசிய மெலலிய இலைகளை நெருஙகச் செறித்து வைத் தமை வணடுகள் மொய்த்து இருண்ட தலைவியின் கூநதலுக்கு உவமை (அகம.131:1-3).

**இகந்தோர் - நெகிழ்ந்திருந்தோர்.** பாரியினது பறம்பு மலையிலுள்ள குளிர்ந்து தெளிந்த நீர் ஒருரில இருத்தலின் வேணடியபோது பருகலாம் என இகந தோர்-நெகிழ்ந்திருநதோர்-போல ஓயமான நாட்டு நல்லியக் கோடனைப் பன்னாள் காணாமல் நெகிழ்ந்திருந்தமைக்கு நனனாகனார் வருந்தினார் (புறம். 176.9-12).

**இகல்-1. மாறுபாடு.** சோழன் நலங்கிள்ளி நெடுங்கிள் ளியின உறையூரை முறறுகையிட்டபோது, 'இவ்வி கல்-இம்மாறுபாடு-நுமமை ஒததவேந்தர்கரு உடமபு பூரிககும உவகையை உணடாக்கும்; அதனால இத னைததவிர்க' எனறு அவனுக்குக கோவூர்கிழார் அறி வுறுத்தினார (புறம். 45: 8, 9). திருவாவினனகுடியில, முறபடச் சென்ற முனிவர் இகலொடு செறறதனை நீக்கின மனத்தை உடையவராவர் (முரு. 131, 132). பகுத்துக காணடலில வேறுபடத் தோனறும், தம் முள இகலிலலாத அறிவினை யுடையவர் முபபதது மூவராகிய தேவர்கள் (முரு. 166, 167). வடிம்பலமப நின்ற பாணடியன் இகலாறறுத லுடைய பகைவரின் காடுகளைப் பல வழியாகப பிளநத சிறப்புடை யவன (மது. 58). இகல மிகக இரணடு பேரரசரைச் சந்து செய்விக்கும தொழிலில நினற அறிவுடை யோர் போல, தாயககும் தலைவியின் வருததத திற்கும் அஞ்சும் அசசததால தோழி வருநதினாள் (குறி. 27-29). பெரிய போரில இகல மிகக மொய்ம் பினோராகிய வீரர் வீசுகின்ற கவண்கற்களுககு அஞ்சிப் பனைமரததில் உள்ள பறவைகள அவ விடத்தை விட்டு நீங்கும் (பட்.72-74). மருதமரத தொடு இகலகொள மாமரம ஓங்கித் தழைததிருந தது (அகம். 97: 19-21). 'அனனியும திதியனும பொருத களத்தில் புன்னை அழிய அவர்களுடைய பகைமை முடிந்தது போல, யான அழிந்தால தலைவன தலைவியரிடையே தோன்றிய இகல் அகலும்' என்று தோழி வருந்திக் கூறினாள் (நற். 180: 6-9). ஏறுகளின் மேலே தோன்றிய மிக்க இகலினால, பரணினின்றும் இறங்கி, வேல் போனற கொம்புடைய ஏற்றின் கழுததில ஒருவன பாய்நதேறினான் (கலி. 104: 33,34). நலலாறறின உலகினைக் காத்த மன்னர் மறைந்த பின்னர், மற்றோரரசன தோன்றி அதனைச சிறிது காத்தமை போன்று, ஞாயிறு பகலை முறையாற் செலுததி மலையில் மறைந்த பின்னர், மதிதோனறி இகல் இருளைப் போக்கியது (கலி. 118: 1-6). இனமான மீன்களின இகல்கெடத் தாககி வென்ற சினமிக்க சுறாமீன் மருப்பினைக் கோத்து ஊஞ்சற் பலகை அமைக்கப்பட்டது (கலி. 131: 6, 7, 11). நோய் செய்த தலைவனை நெஞ்சு நினைத்தலான்

அதனைத் தனக்கிடமாகக் கொண்டு இகல் கொடுக் கும் பனிக்காலம் அறிவினை அழிக்கும் (கலி. 134:11, 12). இகழ்ந்தவரைக் கடந்தட்ட இகல் நேமியை யுடையவர் திருமால் (பரி. 1:58). தலைவரைப் பிரி யாத அணியிழை நல்லார் இகலுதலைக் கொண்டு துனிக்குந் தவறிலர் (பரி. 9:23,24). தன்னொடு பொருது இகலும் புலியைப் போழ்ந்த புகர்நுதல் யானையுடைய இரத்தம் படிந்த கொம்பிலுள்ள கறையினை மழைநீர் தெளிவுறக் கழுவிற்று (பரி. 20:1,5). மகளிர் நீலமணிபோலும் நிறமுடைய மயிலைத் தொழிலாலும் அழகாலும் இகலி, மிகுதி யாக ஒளிவிட்டு விளங்கினர் (பரி. தி. 1:62). தம்முள் இகலும் பல நுகர்ச்சிகளைத் தலைவனுக்களித்து நிற்கும் இற்பரத்தையரைக் கண்டு வையைப் புனல் செல்லும (பரி. தி. 2:32,33).

2. போர். அழகினால் அவளை ஒப்பவள் யானே என்று வானரமகளிர் தம்மில் இகல்–போர்–கொள் ளுமளவு, இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் மனைவி அழகுமிக்கு விளங்கினாள் (பதி. 14:13-15). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் எனறும் இகல் வினையை விரும்புபவன் (பதி. 43:29). ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் இகலவினையை விரும் புபவனாய், ஆண்டுப்பெற்ற அரிய பொருள்களை அமையாது வழங்குவான் (பதி. 60:1,2). அரிய பறை யையுடைய தொழில் செய்வோர், புல்லிய இகலில் பகைவரைத் தோல்வியுறச் செய்து, அவர்பாற் கொண்ட பொருளைக் கள் விற்கும் கடைத் தெரு வில நல்ல விலைக்குக் கொடுப்பர் (பதி. 75:9,10). உயர்ந்த அழகினையும புகர்மிக்க மத்தகத்தையுங் கொண்டு இகல் மீக் கூறும் (போரில் மேலாகச் சொல்லப் பெறும்) நாறபதாண்டுகள் நிறைந்த யானையின் கோட்டால கட்டில் அமைக்கப்பட்டது (நெடு. 115-119). பிடியொடும் கனறொடும் கூடிய யானையைக் கொள்ளுதல் பிழைத்து, அதனால் அவற்றை இகல் பொருநத, மறைந்திருக்கும்படி செய்த அடுபுலி இயங்கும் நளளிரவில் தலைவன் வருதற்குத் தலை வியும் தோழியும் அஞ்சுவர் (அகம்.118:7-10). கான வன் மராமரத்தைச் சார்ந்து நினறு அம்பு செலுத்தி இகலடும் வலிமையுடைய யானையினைக் கொனறு அதன் வெளளிய கொமபைப் புல்வேயந்த தன் குடி சையில புலால நாற ஊனறினான் (அகம். 172:6-10). பகைவர் இகல முனையில் ஏறுடை ஆனிரைகளைக் கவாந்து வருதறகாக, நிணச சோற்றினை யுடைய வடுகர் விடியறகாலத்தில கள்ளினைப் பலியாகச் செலுத்துவர் (அகம். 213:6-8). நனனன் புனனாட் டினரை வெருணடு எழப் பாழி என்னும் நகரில் நினறு ஆஅய எயினன தான சொல்லிய சொற் பிழையாது இகல் வெல்லும் பயிற்சியுடைய மிஞிலி யொடு தாக்கித் தன்னுயிரையும் தந்தான் (அகம். 396:2-6). பெரிய புலி மாறுபாட்டால யானைத் திரள்களோடே இகல் செய்கின்ற மலையினை யுடைய நாட்டிற்குரியவன் தலைவன் (கலி. 48:6,7). 'இகலிடத்தே சென்றுவிட்ட வேந்தன (பாண்டியன) சேனை, உயிரோடு போகும்படி படையினைத் தொடுப்பது போல, என் உயிரோடு போகுமபடி படையினைத் தொட்ட இகலாட்டி' (மாறுபாடுடை யவள்) என்று அடியோர் பாங்கின் தலைவன் அத் தகு தலைவியிடம் கூறினான் (கலி. 108:1,6,7). கதிர வன மறைநதபின்னர், இகலில மிகும் சக்கரப்படை யினையுடைய மாயோன நிறம்போல இருள பரவி யது (கலி. 119.2,3). மைநதரும் மகளிரும் நீராட அணிந்த அணியுடனே விளையாட்டு இகலை விரும்பி யானை குதிரைகள் மீதேறி வையைக்குச் சென்றனர் (பரி. 6:25-30).

3. பகை. இகல் - பகை – பெரிதாகையினால் பெருஞ் சேரலிரும்பொறையின் பகைவர் அஞ்சாதவராய்ப படை கொள்வதனை ஆராயாமல் நிசசயித்தலே அல்லாமல், அவர் தம்முள் ஒன்றுகூடி நின்றும், தம் நாட்டைச சிறிது காலமும் காததுக் கொள்ளு தலை இயலாதவராவர் (பதி. 72:1-3).

4. புலவி. தேவசேனை, நின்நலம் நுகரேன் என்று வெந்நோக்கால் சுட்டிச் சொலலி, வள்ளியின் கார ணமாகச் செவ்வேளொடு இகல் - புலவி – கொணடு சென்றாள் (பரி. 9:35,36).

5. பகைவர் (ஆகுபெயர்). இகலை - பகைவரை - கொன்று கணிசசியொடு விளங்கும் மழுப்படை சிவபெருமான் கையிடத்தது (அகம். க. வா. 4).

6. மாறுபட்ட நூல். சிவபெருமானது வாக்கைவிட்டு நீங்காத வேததிற்கு இகல் – மாறுபட்ட நூல் - கண்டவராகிய (புத்தர் முதலிய புறச்) சமயத்தோ ரைச் சாய்க்க வேண்டி, அவர்தம் மெய்போன்ற பொய்யை அறிநது, உணமைப் பொருளை அவர்க் கேற்பச் சொல்லி, இருபத்தொரு வேள்வித்துறை களைக் குறைவினறி முடித்த அறிஞர் மரபில் வந் தவன் சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப பார்ப்பான் கௌணியன விணணநதாயன் (புறம். 166:1-9).

இகலாட்டி – மாறுபாடுடையவள். 'என் உயிரோடு போகும்படி படையினைத் தொட்ட இகலாட்டி'- மாறுபாடுடையவள் - என்று அடியோா பாங்கின் தலைவன், அத்தகு தலைவியை விளிதுதுப் பேசு கின்றான் (கலி. 108:6,7).

இகழ் - 1. இகழச்சி. நின் இகழ் -இகழ்ச்சி - பாடுவோர்

தலை கவிழவும், புகழ்ந்துரைப்போர் பொலிவு பெறவும் இன்றுபோல் நின்னைக் காண்போம் என்று சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை ஆலூர் மூலங்கிழார் பாடினார் (புறம். 40: 6-8). 'தலைவனைக் கூடியமையால் தன் திருநலம் தோற்றாளை, இகழ் மலர்க் கணணள் ஆகுமாறு செய்து, தலைவியைத் தலைவன் துறந்தால அது அவன் புகழுக்கொரு குற்றமாக அமையும்' என்று கூறித் தோழி தலைவனை வரைவு கடாவினாள் (கலி. 135.12-14). இகழவு காணக.

2. அயர்வு. பரிக்கோலுடையார் இகழ்பதம்-அயர்வு நிலை-நோக்கிக் கடுஞ்சூல் மந்தி யானையின் நெய்ம் மிதி கவளத்தைக் கவர்ந்துணணும் (பெரு. 393-396). இரவுககுறியில் அருங்கடிக்காவலர் இகழபதம் நோக்கித் தலைவன் தலைவியின் பெரிய வீட்டின் ஒருபுறத்தே வாடைக்காற்று அலைக்கத் தங்கியிருந தான் (அகம. 162:7-9). தநதையின் காவல் மிக்க பெரிய வீட்டில் காவலர் இகழ்பதம் நோக்கி இர வின்கண் வந்து தலைவியை முயங்கிச் செல்லும் கொடுமையினும், தலைவனபாற் சென்று மீளாத என் நெஞ்சம கொடுமையானது என்று தலைவி கூற்றைத் தன் கூற்றாகக் கொண்டு தோழி கூறி னாள் (நற். 98:8-12).

இகழ்வு – இகழ்ச்சி. கோப்பெருஞ்சோழன் பிசிராந் தையாரை, இகழ்வு-இகழ்ச்சி - இல்லாதவன், இனி யன், யாத்த நண்பினன, புகழ்கெட வரும் பொய் வேண்டாதவன் எனப் பாராட்டி யுள்ளான் (புறம். 216:6,7). பொலங்கலத்தில தேறலை அமிழ்தெனப் பருகினாலும் உலக நிலையாமையைத் தலைவன் இகழ்விலன் (புறம். 361:18,19). இகழ் 1 காண்க.

இகழ்வோன் – இகழப்படுவோன். பற்பல பிணிகள் படும் படி பிருங்கலாதனை அவன் தந்தை வருத்தியபோது அப்பிருங்கலாதன், இகழ்வோன்-இகழப்படுவோன் (இரணியன்) - தன் தந்தையாதலின இகழாத நெஞ் சினனாக நின்றனன் (பரி. 4:12-15).

இகழுநர்- 1. மதியாத பகைவர். கானப் பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியை இகழுநர்-மதியாத பகைவர்-தம் புகழொடு அழிய, அவனுடைய வேல் வென்றிப் புகழுடன் விளங்கிப் பொலிகவென ஐயூர் மூலங்கிழார் வாழ்த்தினார் (புறம். 21:12,13). பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன் மாறன் புகழால், இகழுநரைக் கொல்லும் மாயோ னை ஒத்தவன் என்று மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் போற்றியுள்ளார் (புறம். 56:13). கோப்பெருஞ்சோழன் தன் மக்களொடு போர் செய்ய முற்பட்டபோது, 'நீ அவர்க்குத் தோற்றால் நின் இகழுநர் மகிழுமாறு பழியை உலகில் நிலை நிறுத்தியவ னாவாய்' என்று புல்லாற்றூர் எயிற்றி யனார் அறிவுரை கூறினார் (புறம். 213:17,18). நன் னன்சேய் நன்னன் தன்னை இகழுநரைத் தன் ஆட்சிக் குட்படுத்தும் அறிவுவன்மை யுடையவன் (மலை. 73). நன்னனுடைய மூதூர், திருநாள் என் னும்படி இகழுநர் செல்ல அஞ்சும், கவர்த்த தன் மையுடைய மறுகினைக் கொண்டது (மலை. 481,482).

2. புறக்கணிப்பவர். இகழுநராலும் - புறக்கணிப் பவராலும்-இகழ்ந்து பிரிய ஒணணாத நலம்மிக்கது இளவேனிற் காலம் (அகம். 25:12).

இகுப்பம் - திரட்சி. பெரிய கல்லின் இகுப்பத்து-திரட் சியில்-முனிநது நின்ற மலைகளைச் சேராதே செல் லுமாறு ஆற்றுப்படுத்துவோன் கூத்தரை நன்னன் பால் ஆற்றுப்படுத்தினான் (மலை. 367).

இகுளை - தோழி. தலைவி தோழியை இகுளை-தோழி- என விளித்துக் கூறல் (அகம். 8:5; 136:1; 376:2). தோழி தலைவியை இகுளை என விளித்துக் கூறல் (அகம். 201.12; 359:5; குறு. 251:4; கலி.103:32,38,46). 'இகுளையே, பட்டை அறுக்கப்பெற்ற சந்தன மரம வறனுற்று வறிதாவதுபோல, என அறிவும் உள்ளமும் தலைவனிடம் சென்றனவாதலின் என் னுடம்பு வறிதாயிற்று' என்று தலைவி தோழி யிடம் கூறினாள (நற். 64:5-9). தான் பொருள கருதிப் பிரிய இருப்பதனை, 'வளையணிந்த உன் னுடைய இகுளைக்கு (தலைவிக்கு) சொல்லுவாயாக' என்று தலைவன் தோழியிடம் வேண்டினான (நற். 71:1-3). தோழி தலைவியை இகுளை என்று விளித்து, வருந்தி அழாதே என்று கூறினாள (ஐங். 467:2). தலைவி தோழியை இகுளை என விளித்து, 'நாம் தலைவன் திறத்தை வள்ளைப்பாட்டால் பாடுவோம் வா' என்று அழைத்தாள் (கலி. 42:8). தலைவன் தலைவியை 'நல்லாய்' இகுளையே, கூறு கின்றதனைக் கேள்' என்று கூறல (கலி. 54:23).

இகுளைத் தோழி - இகுளையாகிய தோழி. 'இகுளைத் தோழி' என்று தலைவி தோழியை விளித்துக் கூறல் (நற்.332:1).

இகுளையர் - தோழியர். தலைவியை விட்டுப் பிரிந்து சென்ற இகுளையரை - தோழியரை - மீண்டும அவள்பால் வந்து, அவளை ஆற்றுவிக்குமாறு வாடைக்காற்று செய்யும் (நற். 5:7,8).

இச்சம் - ஆசை. ஊடலைத் தானுணர்த்த உணராத மாதரைக் கூட்டுவித்தற்கு முயலும் கணவனது இச் சத்தின் - ஆசையின் - பெருக்கம்போல் வையை வெள்ளம் விரைந்தது (பரி. 7:36,37).

**இசை - 1. புகழ்.** 'நீ ஒப்பற்றவனாக விளங்கல் வேண்டினும் நல்ல இசை - புகழ் - நிறுத்தல் வேண்டினும் நான் கூறுகின்றவற்றைக் கேள்' எனக் குடபுலவியனார் பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு அறிவுரை கூறினார் (புறம். 18:15-17). கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதியை இகழுநர் இசையுடன் மாயந்துபட அவனது வேல வெற்றிப் புகழுடன் விளங்குவதாக என்று ஐயூர் மூலங்கிழார் வாழ்த்துவர் (புறம். 21:12,13). மாந்தரஞ் சேரல் இரும்பொறை தன்னைப் பாடிய செந்நாப்புலவர் பிறரிசை நுவலாமல் ஈயும் ஆற்றல் உடையவன் (புறம். 22:31-33). உலகில் தோன்றித் தொல்லிசை பரக்க ஒழுகாதவர் வாழ்ந்தோரெனப்படார் (புறம். 24: 34-36). 'நீ தேடிய பொருள் இசை தருக' எனச் சோழன் நலங்கிள்ளியை உறையூர் முது கண்ணன் சாத்தனார் வாழ்த்துவர் (புறம். 29:26). நல்லிசை வேட்டம் வேண்டிப் பாசறையை விட்டுச் சோழன் நலங்கிள்ளி அகலுவதில்லை (புறம். 31:5,6). இவ்வுலகத்து இசையுடையோர்க்கே உயர்நிலை உலகம் வாய்க்கும் (புறம். 50:14,15). இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறன் தோலா நல்லிசையுடைய சிவன், பலராமன், மாயோன், முருகன் ஆகிய நால்வரையும் போல விளங்கினான் (புறம். 56:10). பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி நல்லிசை முதுகுடியைத் துன்பமின்றிக் காத்தான் (புறம். 58:5). அரசரை வாழ்த்தும்போது 'நும் இசை நெடுங்காலம் வாழ்க' என வாழ்த்துதல் மரபு (புறம். 58·19). 'கிள்ளிவளவன் நல்லிசையை நினைத்து விறலியொடு சென்றால் பெருஞ் செல்வனாகுவை' எனப் பாணனைக் கோவூர்கிழார் ஆற்றுப்படுத்துகிறார் (புறம். 70:10,15, 16). இசை விளங்கும் கொடுக்கும் கையையுடையவன் பொகுட்டெழினி (புறம். 102:6). மலையமான் திருமுடிக்காரி தொலையாத நல்லிசை உடையவன் (புறம். 123·3). கபிலர் மலையமான் திருமுடிக் காரியைப் பரந்திசை நிற்கப் பாடினர் (புறம். 126: 11 - 13). என்வறுமை துரத்த நின்இசை நின்முன் கொண்டு வந்து நிறுத்த நின் புகழைப் பாடினேன் என்று மலையமான் திருமுடிக் காரியிடம் மாறோக்கத்து நப்பசலையார் கூறுகிறார் (புறம். 126:17,18). ஆய்வள்ளலின் நல்லிசையைக் கேட்டதோடன்றிக் கண்டின்புறுதற்கு எத்தகைய இடர்ப்பாடுமின்றி அவன் இருக்கையை அணுகலாம் என விறலியை முடமோசியார் ஆற்றுப்படுத்துவர் (புறம். 133: 1-3). வேள் ஆயின் புகழ்தற் கமைந்த தலைமையுடைய நல்லிசையை உள்ளி வந்ததாக முடமோசியார் கூறுவர் (புறம். 135:9, 10). துறையூர் ஓடைகிழார் தம் வறுமைப் பகைகளையெல்லாம் அறிந்து ஆய்வள்ளல் ஒருவனே ஈவான் என்று கருதி வாயார அவன் இசை விரும்பி வாழ்த்துகிறார் (புறம். 136:15-17,19). இசைமேம்பட்ட வண்மையுடன் பகையிடத்து வெற்றியும் பெறுமாறு குமணனைப் பெருஞ்சித்திரனார் வாழ்த்துவர் (புறம். 158:27,28). குமணன் வென்றிப் புகழுடைய சிறந்த குடியிற் பிறந்த இசை மேம்பட்ட அண்ணல் (புறம். 159:26-28). முதிரமலையில் உள்ள நல்லிசைக் குமணன் பெருஞ்சித்திரனாரைச் சிறந்த நண்பராகக் கொண்டவன் (புறம். 160:12,13). குமணனை நோக்கி, 'இன்மை துரப்ப இசை தரவந்து நின் வண்மையைப் பாடும் பாடலைக் கேட்பாயாக' எனப் பெருஞ்சித்திரனார் கூறினார் (புறம். 161:20-22). குமணன் கேடில்லாத நல்லிசை பொருந்திய வலிய குதிரை உடையவன் (புறம். 165:8). நற்போர் செய்தற்குரிய திருந்திய வேலையுடைய நாலைகிழவன் தோலா நல்லிசை உடையவன் (புறம்., 179:10). இரவலர்க்கு ஊரை வழங்கியும் முல்லைக்குத் தேரை வழங்கியும் பாரி அழியாத நல்லிசை பெற்றான் (புறம். 201:2,3,5). மூவனின் நச்சப்படும் தன்மையால் கொண்டுவரப்பட்ட பெருந்தலைச்சாத்தனார் அவன் இசை நுவன்று பரிசில் விழைவர் (புறம். 209: 11). கோப்பெருஞ்சோழன் பரந்துபடு நல்லிசை பெற்றுத் தேவருலகம் எய்தினால் பின்பு அரசுரிமை அவன் மக்கட்கே உரியது என்பதைப் புல்லாற்றூர் எயிற்றியனார் தெளிவு செய்தார். அவனை 'இசை வெய்யோய்' என விளித்து இன்னும் கேண்மதி எனக் கூறுகிறார் (புறம். 213:9-13). மறுபிறப்பில்லை யாயினும் இமயக் கோடுயர்ந்தன்ன தம் இசை நிலைபெறச் செய்து தீதில்லாத யாக்கையொடு மாய்தல் சிறப்பாகும் எனக் கோப்பெருஞ்சோழன் கூறுவன் (புறம். 214:11-13). வேற்று நாட்டுச் சான்றோனாகிய பிசிராந்தை இசை மரபாக நட்புப் பற்றுக் கோடாகக் கோப்பெருஞ் சோழன் வடக்கிருக்கும் இடத்திற்கு வந்தது பெருவியப்பாகும் (புறம். 217:4-6). பிறநாட்டுச் சான்றோனது நெஞ்சைத் தனக்கு உரிமையாகப் பெற்ற தொன்றிசை மன்னனை இழந்த நாடு இரங்கத்தக்கது (புறம். 217:10-13). கோப்பெருஞ்சோழன் இல்லாத பேரிசை உறையூர் மன்றம் களிறு இருந்து நீங்கிய கூடம் போலப் பொலிவற்றிருந்தது (புறம். 220:3-7). கோப்பெருஞ்சோழன் கேடில்லாத நல்லிசை சூடி நடுகல்லாயினான் (புறம். 221:12, 13). 'இசை வெய்யோய' எனக் கோப்பெருஞ்சோழனைப் பொத்தியார் விளித்தல் (புறம். 222:6). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை யுடையான் (புறம். 228:7). உயர்ந்த இசை மிகுதியாகப் பெற்ற மறவன

பெயர் நடுகல்லில் தீட்டப்பெற்றது (புறம். 260:25, 28). மறவன் ஒருவன் சேண்விளங்கு நல்லிசையை நிறுவிப் புலவா பாடும் செய்யுளிடத்தே நிலைபெற் றான் (புறம். 282:10-13)' இவ்வுலகில ஒருவன் செயத வசையும் இசையும் நிலைபெறும்; அதனால் வசை நீக்கி இசை நிறுவவேண்டும் (புறம். 359:10, 11). வில் லோர் உழவு செய்யும் தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனின் நலலிசை யைக கல்லாடனார் பாராட்டுகிறார் (புறம். 371:13). தென்னவர் மறவனாகிய நாஞ்சில வள்ளுவன கடலபோனற தானையும் இனிய இசையுடைய புகழ வென்றியு முடையவன (புறம. 380:3-5). வல வேற்கநதன நலலிசை வாய்ந்தவன் (புறம். 380.12). உலகில நிலைபெறும் இசை தனககே உரிததாகு மாறு குளமுற்றததுத் துஞ்சிய கிள்ளிவளவன ஈந் தான (புறம. 386:9). ஆதனுங்கன் இசை சால நெடுந்தகை (புறம. 389:6). கிணைபபொருநன் தன் னைப் புரபபோர் ஒருவரும் இல்லாமையால குள முறறத்துத் துஞ்சிய கிளளிவளவனின் நல்லிசை நினைநது அவனை அணுகினான (புறம. 393:5,9). தித்தனுககுரிய உறநதை (உறையூர்) கெடாத நல லிசை வாயநதது (புறம. 395:18,19). மாரிக் காலத்து வானில பன்மீனகளின நடுவே விளங்கும பால மதி போல வாட்டாற்று எழினியாதன் நல்லிசையுடன் எலலாரும் நனகறிய விளங்குமாறு மாங்குடிகிழார் வாழ்த்துவர் (புறம. 396:26-28). காவிரிபாயும் நாட் டைய்டைய கிள்ளிவளவன மாயாநலலிசை உடை யவன் (புறம். 399:12,13). தாமான் தோன்றிக்கோன் ஐயூர் முடவனாரின் இசை காரணமாக அவர்பால் அன்பு கொணடான (புறம். 399:20,21). பேரிசை கொண்ட முருகன் மாமர வடிவில் நின்ற அவுண னைக் கொன்றான (பதி.11:5,6). பேரிசை பொருநதிய இமயத்தில ஆரியர் நிறைந்திருந்தனர் (பதி. 11:23). 'உன்குல முனனோர்போலக் கெடாத நல்லிசையை நிலைபெறச் செய்து உலக முள்ளளவும் வாழவா யாக' என இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைக் குமட்டூர்க் கணணனார் வாழ்த்துகிறார் (பதி. 14:20-22). இமயவரம்பன் நெடுஞ சேரலாதன் திருமாலை ஒதத நல்லிசை உடையவன (பதி.15:39). இமயவரம் பன நெஞ்சேரலாதன் பேரிசை பொருநதிய மர பினை உடைய ஆரியரை வென்றான் (பதி.ப.2:7). பல் யானைச் செலகெழு குட்டுவன் நாடு முழுவதும் விளங்கும் நலலிசையுடையவன் (பதி.24:10). நெடும் பாரதாயனார் ஒடுங்கா நல்லிசையும் உயர்ந்த கேள்வியும் உடையவர் (பதி.ப.3:9,10). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் வான்றோய் நல்லிசை உலகம் உள்ளளவும் நிலவும் (பதி. 37:6). களஙகாய்க் கண்ணி நார்முடிச்சேரலின் நல்லிசை உலகத்துச் செல்வர் பலருள்ளும் மேம்பட்டு விளங்கும் (பதி. 38; 1,2). கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன் பகையர சர் அரணகளைக் கைக்கொணடு அவர்தம் நலலிசை உலகத்தினின்றும கெட்டோடச் செய் தான் (பதி. 50:13-15). ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் பகைவரும் விரும்பும வாயமொழியை யும் இசையையும் உடையவன் (பதி. 55:12). உலகத் தாரும் புலவரும் பாராட்டும் செலவக்கடுங்கோ வாழியாதனின் நல்லிசை கபிலரை அவன்பாற் செலுததியது (பதி. 61:14). இரவலர் சுறறததின பசியை நீக்கிய இசை மேமபட்டவன செலவக் கடுஙகோ வாழியாதன (பதி. 64.19,20). முத்துக் களையுடையது பேரிசையுடைய பநதர் எனனும மூதூர் (பதி. 67:2,4). பல திசைகளிலும பரவியுளள பெருஞ்சேரலிரும்பொறையின நலலிசை, கனவிலும் பிறரை விருமபுதல அறியாது (பதி. 79·4). பெருஞ சேரலிருமபொறை நிலததின பரபபு முழுதும் நிறுததிய நலலிசை யுடையவன (பதி. 80.16). பெருஞசேரலிருமபொறை தகடூரை வென்ற இசை உடையவன் (பதி. ப. 8:9,10). கெடாத நலலிசை யுடைய தம குடிப்பெருமையை நிலை நிறுததும் பொருட்டுப் பாசறையில கூடிய வீரர் சுழனறு திரிந் தனர் (பதி. 81·13,14). சானறோர் விருமபிய பாராட் டும் கெடாத நல்லிசை உடையவன இளஞசேரல் இருமபொறை (பதி. 82.13-16). செவ்விய நாவினா லும் கவலை யிலலாத நெஞ்சததாலும் மெயம் மையாற் பாடும் கபிலன நல்லிசை யுடையவன (பதி. 85:10-13). உலகில நல்லிசையை நிலைநிறுததும் பொருட்டுஇளஞசேரலிருமபொறை பாடுநரை அன புடன் புரநதான் (பதி. 86:5-8). 'நெடுந்தூரம் விளங் கும் நலலிசை உடையாளின் கணவ' என்றும் (பதி. 88:36). 'தெளிவாக அறியப்பட்ட நலலிசையினை யுடைய ஒண்டொடி கணவ' என்றும் பெருஞ்சேர லிரும்பொறை விளிக்கபபெறுகின்றான் (பதி. 90:49, 50). முருகன ஒருவராலும் அளககு வொணணாத நல்லிசை உடையவன் (முரு. 61). வீடுபேற்றை நச்சி வந்தார்க்கு அதனை நுகர்விக்கும் இசை பேராளன் முருகன் (முரு. 270). ஓயமாநாட்டு நல்லி யக் கோடன் ஐயுற்று ஆராயப்படாத உலகமறிந்த நலலிசை பெற்றவன (சிறு.82). பிறரிடதது நிலலாத புகழ் தன்னிடத்தே நிலை பெறுதற்கான நலல பண்பினை நல்லியக்கோடன் பெற்றிருந்தான் (சிறு. 268,269). சீரிய செல்வத்துடன் உழவு, வணிகம் என்னும் இரு தொழிலகளிற் சிறந்த இசை சான்ற பெருங்குடி மக்கள் பாணடிய நாட்டில இருந்தனர் (மது. 120-123). பாண்டியன கொடை செய்யும் உள்ளத்துடன் இசையை விரும்பினான் (மது. 204, 205). 'நெடுந்தொலைவு சென்று விளங்கும் நின்

நலலிசை ஒரு காலமும் கெடாது நிலை பெறுவ தாக' எனத தலையாலங்கானததுச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருத னார் வாழ்த்துவர் (மது. 209). பேரிசை மன்னன நன்னன பிறநதநாள் விழா கொண்டாடப்பெற்றது (மது. 618). நூலகளைக் கற்று எவ்வுலகத்தும் இசை விளககிச சுறறமொடு பொலிகவென மாங்குடி மருதனார் வாழத்துகிறார் (மது. 767,770). மாறன் பொயயா நல்லிசையை உலகில நிலைநிறுத்தியவன (மது. 771,772). தொல்லிசை பெற்ற சுங்கம் கொள் வோர் அரசன பொருளைக் காத்தல் (பட். 120,121). செல்லா நலலிசையுடைய தேவர்களின் காப்பினாலே குதிரைகள் மரக்கலஙகளில் வந்தன (தீதின்றி வந்த மரககலஙகளைத் தெய்வம் காததது என்று கொள் ளல மரபு) (பட். 184,185). பரிசிலர் இசை விதைத் துப் பொருளை அறுவடை செய்வர் (மலை. 60). தொலையா நல்லிசை உலகதது நிலைபெறுமாறு பகைவர் பலரை நன்னன் வென்றான் (மலை. 70,71). காரியுணடிக் கடவுள் (சிவன்) பேரிசை உடைய நவி ரம் என்னும் மலையில இருததல் (மலை. 82). நடுகற்களில் செல்லா நலலிசையுடைய பெயர்கள பொறிககபபட்டன (மலை. 388). நனனன் வாய் மையிற் குன்றாத நல்லிசையுடையவர் மரபிலே வந் தவன (மலை. 540). அறிவார்நத மக்களைப் பெற் றோர் இவ்வுலகத்து இசையொடும விளங்கி, மறுமை உலகமும் குற்றமின்றிப் பெறுவர் (அகம். 66 1-4). உலகெலாம் பரக்கும் பலரும் புகழும் நல லிசையினையும் மெயம்மொழியினையும் உடையவர் கபிலர் (அகம். 78:15,16). நலலிசை பெறுதறகுக் காரணமானது செல்வம் (அகம. 141:24). திததன வெளியன் பாணர்களைப் புரந்தமையால் உண டான பேரிசை வாய்ந்தவன் (அகம. 152:4,5). இசை பொருந்திய ஈகையுடையவன் பாரம என்னும் ஊர்த தலைவனாய நன்னன (அகம. 152:11,12). அதிகன நலலிசை உணடாக்கும் இரவலர் கருதிய வாறே அளிககும வள்ளலாவான (அகம், 162:17,18). முசுகட் செல்வன நிலவுலகம் முழுதும பரவும் நல லிசையுடையவன் (அகம். 181.15,16). கோசர் நிலை பெறறதும சேய்மைககணணும் சென்று விளஙகு வதுமான நல்லிசை உடையவர் (அகம. 205:8,9). தொலையாத நலலிசையை நிலைநிறுத்திய வல்வி லோரியைக் காரி கொன்றான (அகம. 209:12-14). தூஙகல ஓரியாராற் பாடப்பெற்ற பெரு நல்லிசை யுடையவன தழுமபன (அகம. 227:16,17). தலை மகன் நல்ல இசை பெறவேண்டும் என்ற துணிந்த மனத்தை உடையவன (அகம. 231:4). பாணடியன் பகைவரை வென்று பெறற செல்லா நல்லிசை உடையவன (அகம. 231 10-12). உதியஞ்சேரலின முன்னோர் புறங்கொடாப் போராற்றலால் விழுப்புண் பெற்றுத் துறக்கம் எய்திய அழியா நல்லிசை உடையவர் (அகம். 233:6-8). பெரிய இசை வாய்ந்த எருமை எனபவனின் நாட்டில் அயிரியாறு ஓடுகிறது (அகம். 253:19,20). நிரை காத்த வீரர்களின் நலலிசை குன்றின் பக்கத்தில் உள்ள நடாககல்லில (இயல்பாய் அமைந்த கலலில) பொறிக்கப் பெற்றது (அகம. 269:4-8). பேரிசை உடைய கொற்கைப் பட்டினத்தில் உள்ள பரதவர் சிப்பியினைக் கொடுத்து நறவு அருந்துவர் (அகம். 296:8-10). திரையன கெடாத நல்லிசை உடையவன (அகம. 340:6). கெடாத நல்லிசையுடையவன் தென னன் (அகம். 342:10). தொல்லிசை வாயந்த நுண்பனு வற்புலவன் பாடிய சிறப்புடையது ஏழிற்குன்றம் (அகம். 345:5-7). அஞ்சியின தொல்லிசையைப் பாடு பொருளாகக் கொண்டு பாணன் பாடினான் (அகம். 352:12-14). புல்லி பொய்யாத நல்லிசையும சிறந்த வண்மையும் உடையவன் (அகம். 359:12). சோழரது உறையூர் கெடலரும நலலிசை வாயந்தது (அகம். 369:13,14). பொருள் நசையால் வந்த இரவலர் இரந்தவற்றை இசைபடக் கொடுக்க விரும்புபவர் பாழமன்றததில் தங்கித் தலைவியின் பேரழகினை நினைநது ஏதிலராகவும் செல்ல நேரும் (அகம். 377: 10-15). விற்போரில பகைவரை அழிதது நல்லிசை நிலைநாட்டி மடிந்த மானம் மிக்க வீரர்க்கு நடுகல் அமைத்தல மரபு (அகம. 387:13-15). தன்பால நல லிசையை நிலைநிறுததும் பொருட்டுத் தலைவன் மலை கடந்து செலலல் (அகம். 389:15). பேரிசை வாய்ந்த வடவரையில் (இமய மலையில்) வஞ்சிவேநதன் வில இலச்சினையைப பொறித்தான் (அகம. 396:16-19). நலலிசை விரும்பிய கடப்பாட்டாளன பெற்ற செல்வம் போல் தலைவி பசபபு தங்குதற்குரியதன்று (குறு. 143:4-7). மழை பேரிசை இமயததையும் அசைக் கும் இயல்புடையது (குறு. 158:3-5). இரவில வந்தநல் லிசை விருந்து உண்பதற்காகத தலைவி கொழுவிய தசையை நெயவிட்டுச் சமைத்தாள் (நற. 41:6,7). கிளளி இசையை விரும்பியவன (நற்.141:9). பேரிசை முள்ளூரில் மலையன ஆரியரை வெனறான (நற். 170: 6-8). இம்மைக்குரிய இசை, இருமைக்குரிய இனபம், அவை பெறுதறகுச் செயயும் கொடை ஆகிய மூன றும் சோம்பியிருப்போர்க்கு அருமையாகவும் கிட்டு வதில்லை (நற். 214:1,2). இசைபட வாழ்பவர் செல் வம பொலிவடையும் (நற். 217:1,2). அருமன் பேரிசை யுடைய சிறுகுடி என்னும் ஊர்க்குத தலைவன் (நற். 367.6). உலக ஒழுக்கததைக் கடந்து யாவரி டத்தும தீங்கு செயது இசை கெட்டவன இறுதியில் கிளையுடன அழிவான (கலி. 10:3,4). விருபபுடன் தன்னிழல அடைந்த பிற நாட்டாரைக காத்துத்

தன் இசை பரந்து உலகு போற்றத் தலைவன் அயல் நாட்டில் தங்கியுள்ளான் (கலி. 26:16,17). பாண்டியனுக் குரிய, தொல்லிசையை நிறுத்திய குடிகளுள் ஆயர்குடியும் ஒன்று (கலி. 104:5,6). தலைவனிடத்துக் கொண்ட விருப்பத்துடன உயிர்துறந்து துறக்கத்தில் தலைவனைப் பெற்று எங்கும் இசை பெறுவேன் என்று தலைவி கூறு கிறாள் (கலி. 143:45-47). வாயமொழிப் புலவர் நான்மறைப் பொருளை விரித்து அதன் நல்லிசை யைப் பரப்புவர் (பரி. 9:12,13). தொலலிசைப் புல வர் ஆராயந்துரைத்த குன்றுகள் பல (பரி. 15:3,4).

2. ஓசை. சோழன் நலங்கிள்ளியின வென்றியை வலம்புரிச் சங்கம இனிய இசை - ஓசை - உடைய பறையொடு முழங்கியது (புறம். 225:10). பறை இசைபோல அருவி ஒலிக்கும் நன்னாட்டுப் பொரு நன் மாந்தரஞ்சேரல் இருமபொறை (புறம். 229:14). அரித்த குரலையுடைய தணணுமையின் இசை கேட்ட மறவர் வெறறி பெறும் நோக்கோடு மன் றததில் கூடினா (புறம். 270:8-10). நெடுந்தகையின் போர்ப் புண்ணை இசை மணி இயக்கிக் காஞ்சி பாடி மணப்புகை யூட்டி மகளிர் காத்தனர் (புறம். 281.5-7). மேகத்தின் இசை முழக்கமபோல் முரசு முழங்கும் (புறம. 373:1). உலகம கூலம் இனறிக் கெடுமாறு நின்ற கோடை நீங்குமாறு முழக்கிசை யுடன் மழை பெயதது (புறம். 381:17,18). முரசு இனிய இசையுடையது (பதி.ப. 2:2; பதி. 40:3; பதி.ப. 9:17). பாசறையில ஓயவு இனமையின சிறுதுயில கொள்ளும் கடல பிறககோட்டிய செங்குட்டு வனைச் சங்கிசை எழுப்பும் (பதி. 50:23-25). பேரிசை உடைய பல அருவிகளைக் கொண்டது கங்கையாறு (பதி. ப. 5:6,7). கடலலைகள் இன்னிசையுடன் ஒலிக் கும் (பதி. 55:3). வேல மரத்தின் அடிப்பகுதியில் கறங்கிசையுடைய சிள்வீடு தங்கும் (பதி. 58.13,14). முரசு இடியைப் போனற இசையுடையது (பதி. 66:4). வணடு இசைபாடாத (பொனனாலாய) பனங் குருத்தைச் செலவக்கடுங்கோ வாழியாதன அணிந் திருந்தான (பதி. 70:6,7). ஒலிக்கினற இசையுடன கூடிய ஊது கொம்புடன் சங்கு ஒலித்தது (பதி.தி. 2:10). இமிழிசை அருவியொடு இனனியம் கறங்கப் பூக்கள தூவிக் குறமகள் வெறியாட்டு எடுத்தாள் (முரு. 240-243). கரும்பு வெட்டுவோரும் நெல் அரி வோருமாகிய களமர் எழுப்பும இசை எங்கும் பர வியது (பொரு. 193,194). கொல்லன் சம்மட்டியை விசைத்து எறிந்தமையால கூடததில் உண்டான திண்ணிய இசைககு அஞ்சி, மாடத்து இறப்பில் உறையும புறாச் சேவல துயில் நீத்தது (பெரு. 437-440). வணடுகள் யாழின் இசை போல முரன் றன (முல்லை. 8,9; குறி.110). அரசனைப் பிரிநத மாதேவி, மாளிகையில் உள்ள கூடல் வாயிலகளி னின்றும் விழும் அருவிகளின் இமிழ இசையைக் கேட்டவாறு கிடநதாள் (முல்லை. 86-88). இனிய இசையை உடைய முரசம் முழங்க மரக்கலஙகளி லிருந்து பண்டங்கள் இறக்கப்பட்டன (மது. 80-83). உழவர் நீரிறைத்துப பாடுதலால் உணடான இசை யும் அதரி கொள்பவர் புள் ஓப்புதலால எழுநத இசையும் பிறவும் ஊர்களில் நிறைநதன (மது. 89, 90,94,95). பறவைகள் ஒலித்தலினாலே எழுநத இசையும் பிறவும் முதுவெள்ளிலை எனனும ஊரில நிறைந்திருநதன (மது. 111,119). மகளிர் தமமுடைய கணவருடன் புதுப்புனல் விழாவினைக கொண டாடும் போது எழுந்த இசையும் பிறவும வானத்தே சென்று முழங்கி அங்கு வாழ வார்க்கு இன்பம் செயதன (மது. 264-267). இனனிசை முரசத்தை இடைப்புலததே விடுதது வீரர் புறங்காட்டி ஓடினா (மது. 349). பல மொழி பேசுவோரின் இசை நாளங்காடியில மிகவொலித தது (மது. 360). கடலொலிபோல முழங்கிசையுடைய முரசறைந்து விழா அறிவிககப்படுதல (மது. 361, 362). குளத்தைக கையாற குடைந்தாடும்போது எழும் ஒலிபோன்ற வாச்சியஙகளின இசை கேட்டு அங்காடித் தெருவில் உள்ளோர் மகிழநது ஆடினா (மது. 363,364). அல்லங்காடியில பிறநாட்டு அணிகல வணிகர் விலைபேசி வாங்குமபோது எழுமஒலி, மரக்கலஙகளிலிருநது பண்டஙகளை இறக்குமபோது உண்டாகும் இசையை ஒததிருந்தது (மது. 537-539). அல்லங்காடியில் எழும மிகுநத கமபலைககுப் பல வகைப்பட்ட பறவை எழுபபும இசை உவமை (மது. 543,544). கொம்பூதும இனனிசைபோல மயில அகவிற்று (நெடு. 99). இனனிசை முரசமபோல மேகம் முழஙகியது (குறி. 51, நற். 197:10). மேகம் முழங்கும் இசைபோல முழவு ஒலிக்கும (மலை. 2,3). அருவியாடும தெய்வமகளிர் அதனைக கையாற குடையுநதொறும் வாசசியங்களைப போல் இன னிசை பிறககும (மலை. 295,296). தோகள ஒடுஙகால உண்டாகும ஒலிபோலக் கலலில் ஓடிவரும் யாறுகள் முழைஞசுகளில் வீழநது இசை உணடாககும (மலை. 323,324). இன்னிசைநலயாழ் (மலை. 381). உறநதை யில் கறங்கிசை பொருநதிய விழா நடைபெறும (அகம். 4:14). கல்பொருநதிய வழியில தேர் செலலும போது உண்டாகும் ஒலி காரகாலதது மேகததின முழக்கிசை ஒக்கும் (அகம். 14.18-21). அருவி இனிய இசையுடைய இயம்போல ஒலிககும (அகம். 25 21,22; 172:1-3; 264.9,10; குறு. 365:4). விடியறகாலம் கறங் கிசை உடையது (அகம. 37:1,2). அனனி, திதியனின புன்னை மரத்தை வெட்டி வீழத்தியபோது வயிரி

பர் ஆரவாரித்து இன்னிசை எழுப்பினர் (அகம். 45: 9-12). கூதிர்க்காலத்தில் இன்னிசையுடைய இடியுடன் மழை பெய்தது (அகம். 58:1,2;264:9,10;குறு.200: 5,6). தொழுவிலே வந்து புகும் ஆவின் தெண்மணி மெல்ல ஒலிக்கும் இசையை மாலையில் கேட்குந் தோறும் தலைவி செயலற்றுக் கலங்குவாள் (அகம். 64:14-17). படப்பையில் தழைத்த கூதளஞ் செடியினமீது இனிய இசையையுடைய அருவி விழும் (அகம். 68:1-3). மூங்கில் துளையில் மேல்காற்றுப் புகுந்து குழலிசை உண்டாக்கும் (அகம். 82:1,2). அருவி நீரின் இனிய இசை, கூட்டமான் மத்தளங்களின் முழக்கம் போலிருக்கும் (அகம்.82:3,4;172:2,3). இனிமையாக ஒலிக்கும் பல இசைகளைக் கேட்டு மந்திக் கூட்டம் வியப்புடன் பார்த்தது (அகம். 82: 7,8). மலையிலுள்ள கற்கள் உருணடு விழும்போது எழும் இசைபோல ஆந்தைச் சேவல் மாறி மாறி ஒலிக்கும் (அகம். 89:3,5). பாண்டியன் தன்னை எதிர்த்த மன்னர் ஒலிக்கும் இசையுடைய தம் முரசங்களை விட்டுப் படைகளுடன் புறங்கொடுத்து ஓடுமாறு அவரை வென்றான், (அகம். 116:17-19). அந்திப் போதில் கோவலரது குழலிசை நிலாமுற்றத்து ஒலிக்கும் (அகம்.124:13-15). தேர் மணிகளின் இசைபோலச் சிள்வீடு கறங்கும் (அகம். 145:2). மனையாட்டி நன்றாக உலர்ந்த கூலத்தைத் திரிமரததில் இட்டுத் திரிக்குங்கால் எழும் இசைபோலத் தேராழி மணலை அறுத்தியங்கும்போது ஒலி உண்டாயிற்று (அகம. 224:11-14). தழும்பன் வாட்போரால் தமிழகம் முழுவதும் அகப்படுத்திக் கொண்டமையால் இமிழ் இசையுடைய வெற்றி முரசம் பெற்றான் (அகம். 227:13,14). இன்னிசை முரசம் கடிப்பினால அடிக்க முழங்கியது (அகம். 251:9). பாண்டியன் வெற்றி விழாவின போது எழுந்த இன்னிசை ஆர்ப்பினும் பெரிதாக அலர் எழுந்தது (அகம். 253:3-7). நீடுர் யாழின் இசையோடு கூடிய தெருக்களை உடையது (அகம். 266:10). இடிபோன்ற இசையோடு கூடிய அலைகளை உடையது கடல் (அகம். 310:16,17; குறு. 351:4). இன்னிசை முரசம் போல் ஒலித்து மழை பரந்தது (அகம. 312:10,14). வண்டுகள் கோங்க மலர்களிலிருந்து எழும்போது விட்டு விட்டு ஒலிக்கும் தும்பியின் இசை விளரிப்பணணை எழுப்புதற்கு விசைத்துவிட்ட யாழ் நரம்பின் இசையை ஒக்கும் (அகம். 317:11-13). இடி இசைபோல் முழங்குகின்ற யானைகள் போர்ககளத்தில் திரணடன (அகம். 322:6,7). வண்டுகள் யாழின் இசைபோல முரலும் (அகம.332:7,8,கலி.131:9). புலிதாக்குணட களிறு பிளிறிய இசை கேட்டுப் பிடி தன் கன்றினைத் தனியேவிட்டு ஓடியது (அகம். 347:11-13). அத்தி அணிந்திருந்த கழலகள் இன்னிசையும் (ஓசையும்) நல்ல வேலைப்பாடுகளும் உடையன (அகம். 376:6,7). வேங்கை மரத்திலமைந்த பரணில் இருந்து மகளிர் வண்டின் இசை கேட்டனர் (அகம். 388:7-9). யாழிசையோடு கூடிய தெருக்களை உடையது பாழி (அகம். 396:3). குட்டுவனின மறவர் பகைவரை வெனறதால எழுந்த ஆர்ப்பிசைக்குக் கடற்கரைச் சோலையில் உளள வண்டானங் குருகின் தொகுதி அஞ்சியது (குறு. 34:4-6). வங்கா (வக்கா) பேடை தன சேவலைக் காணாமையால் குழலிசை போன்ற குரலில் விட்டுவிட்டு அதனை அழைக்கும் (குறு. 151:1-3). மூங்கில்களிலே காற்று மோதுதலால் உண்டான இசை, தறியிலே கட்டிக் கிடக்கும் யானை வருந்தி உயிர்ப்பது போன்று இருந்தது (நற். 62:1,2). முழவின் இசை போன்று அலை ஒலிக்கும் (நற். 67:11). மலையமான் முன் வேற்று நாட்டிலிருந்து வந்த பேரிசை வயிரியர் (கூத்தர்) மார்ச்சனை அதிர மத்தளத்தை முழக்கினர் (நற். 100:9-11). ஒலிக்கின்ற இசையுடைய இனமணிகளை ஒரு சேரக் கோத்துக் குதிரையின் கழுத்தில் பூட்டினர் (நற. 163:4,12). காட்டில் கொன்றையும் பிடாவும் மலர இன்னிசை வானம் பெய்யும் (நற். 246:8,9). பேரிசை இடியொடு மாரி பெய்யும் (நற். 253:6). சிறு நாவையுடைய மணியின் தெள்ளிசை போலக் கூட்டமாகிய மீனைத் தின்னும் புள் ஒலி இருந்தது (நற். 267:9, 10). இற்செறிப்புற்ற தலைவி நடுயாமத்தில் பறவை யொலி கேட்குந் தோறும் இது தலைவன் ஊர்ந்துவரும் தேரின் மணி யோசையோ என்று எண்ணித் துயிலாதிருந்தாள் (நற். 287:9-11). வண்டுகள் முரலுகினற இன்னிசை மிக்கொலித்தலால் தலைவன் ஏறிவரும தேர்மணி யோசை கேட்கவில்லை (நற். 323:8-10). இடியின் இசை கேளாது பெய்த மழையுடன் மணி ஓசை ஒலிப்பக் கோவலர் ஆனிரையை ஓட்டிக்கொணடு ஊதிவந்த குழலிசை மன்றில் ஒலித்தது (நற். 364: 7-10). புலி களிற்றைக் கொன்று இடி இசை போல முழங்கும் (நற். 383:3-5). தொண்டியில் உள்ள தெருத் தோறும் அலையின் இன்னிசையுடன் முழவின் இன்னிசை கலந்தொலிக்கும் (ஐங். 171). தீ, இசையுடன் எழுந்து விரைந்து படர்நது அழித்த பாழிடமும் வறணடமலையும் பொருந்தியது பாலை (ஐங். 318:3-5). ஆரவாரிக்கும் இனிய இசையுடைய அருவி மலைநாட்டில் விழுகிறது (ஐங். 395:5, 6). இனிய இசையுடன் கூடியது மேகம் (கலி. 16:8). யாழினது இசையை ஒத்துக் கரியதும்பி முழங்கும் (கலி. 29:16, 17). நரம்பின் இனிய குரலைத் தானத்திலே நிறுத்தும் வங்கியம்போல இரங்கிசை மிஞிறொடு தும்பி தாதை ஊதியது (கலி. 33:22, 23). முழங்கும் இசையுடன் அருவிகள் வேங்கை மரத்தின்மீது வீழ்கின்

றன (கலி. 44:3). இரங்கிசையும் இன்னிசையும் உடையது முரசம் (கலி. 100:6;105:73). இடியிசையோடு மாறுபட்டு எழும் ஏற்றினது முழக்கத்தோடு வாச்சியங்கள் மிக்கொலித்தன (கலி. 104:54). கோவலர் 'ஊதை' என்னும் ஓசையுண்டாகக் குழலிசை எழுப்புவர் (கலி. 118:13). காதலன் பிரிவுக்கு இரங்கும் தலைவியின் அலைவு பெற்ற மொழிகள் போலச் செவ்வழி யாழிசை சீர் கெட்டிருந்தது (கலி. 143:38). பூதலங்களின் பரமாணுக்கள் வளர்கின்ற வானமாகிய முதல் ஊழி இசையுடன தோன்றிற்று (பரி. 2:5). திருமாலிருஞ் சோலையில் எழுகின்ற ஒலிகளும் முழையின்கண் அலற்றுக்கு எதிராகச் சிலம்பும் இசைகளும் எந்நாளும் கேட்கும் (பரி. 15:44). வண்டினங்களின் இமிரிசை யாழிசைக்கு இணையாக ஒலிக்கும் (பரி. 17.9, 10; 21:35). தும்பிகளின இசை குழலோசைக்கு இணையாக ஒலிக்கும் (பரி. 17:11, 12). முழவிசை அருவியோசை போல் ஒலிக்கும் (பரி. 17:13, 14; 21:36). பெற்றோரைப் பிரிந்த பேதைப் பெண் தன் பெறறோரை விளிக்கும இசையை மலைக் குகைகள் ஏறறு எதிரொலித்தன (பரி. 19: 58-66). மேகத்தின் இசை கேட்ட மயிலகள் சாந்தாற்றி (விசிறி) போனற தம் இறகை விரித்தாடும் (பரி. 21:30-32). புதுநீர் விழாவினகண எழும இசைக்கு எதிராக உழவர் உழவுககுரிய ஓசையை உணடாக்கினர் (பரி. தி. 1:14, 15).

3. இசைப்பாடல். தம் நாவால புகழ்ந்து பாடும் இசையை - இசைபபாடலை - ஓய்மான் நல்லியாதன் ஒருவனே பெற வேண்டும் எனப் புறத்திணை நன்னாகனார் விரும்புவர் (புறம். 379:2). இசையை எக்காலமும் கேட்கும் அரசர் அவைக்களத்தே அவர் செவிக் கொள்ளும்படி பல துறை அமைத்துப் பாணன் பண இசைத்தான (மலை. 39, 40). தினையைக குற்றும் மகளிர் பாடும் இசைமிகும் வள்ளைப்பாட்டு மலையிடத்து எதிரொலித்தது (மலை. 342-344). இசைக்கலையை விரும்பும் கலைஞனின் நல்ல யாழினின்று பிறக்கும் செவ்வழிப் பண்ணிசை போலப் பேசும் இயலபுடையவள் தலைவி (அகம். 212:6, 7). கோவலர், ஆம்பலங் குழலோசையுடன் யாழினிடத்தே செவ்வழிப் பண்ணை வகுத்துப் பாடும தெள்ளிசை தலைவியின் ஆருயிரை வருத்தும் (அகம். 214:12-15). உழவர் பாடிய கறங்கிசைக்கு வெருவிய மயில்கள் அணங்குடைக் கோட்டங்களில் சென்று தங்கும் (அகம். 266:17-19). பாணன நல்ல இசைகளை வரையறை செய்த இசை நூலில் உள்ள பண்ணினும் புதுவதாகப் புனைநது திறம் அமைத்தான் (அகம். 352:13-16). தினைப்புனத்தில் கிள்ளைகளையோட்டும் தலைவியின் கையிலுள்ள குளிர் என்னும் கருவி இசையொடு பொருநதிய இனிய தாளம போன்று ஒலித்தது (குறு. 291:1-4). பாணர் வாசித்த படுமலைப பாலைப் பண்ணிசையினது நல்ல உசச ஒலியை ஒத்த ஓசையுடன் மேட்டு நிலததில மழை பெயதது (குறு. 323: 2-4). ஏழு நரம்பால கூட்டிய இன்னிசை பாடுவார்க்குப பயன்தரும்; யாழுக்குப பயன தராது (கலி. 9:18,19). பாலை யேழினையுமுடைய புரிநரம் பின்கண் இனிய கொளையைத தருகினற யாழும இசையும (மிடற்றுப் பாடலும) இயைந்தன (பரி 7 77, 78). எழுதுளையான வங்கியததும் ஐந்து துளையான வங்கியததும் யாழினும் பிறநத இசையை ஒததுத் தும்பியும் வணடும் மிஞிறும ஆர்த்தன (பரி. 8 22, 23). குற்றமின்றி இசைககினற இசைககுரிமையுடைய பாணரும் கூத்தரும மேவிக கூட்டததுடன வையையை வழிபாடு செயதனர் (பரி. 10 130,131). குரல், கிளை, உழை என்னும் மரபினைக கொண்ட பாலைப் பண்ணின் இசையமைதி தோனற வணடுகள முரலும் (பரி. 11.127). விளரிப பாலையில தோன்றும யாமப் பணபாடி அவ்விசைக கேற்பத் தாளத்தோடு வண்டுகள் ஆடும் (பரி. 11: 126-130). இன்னியல மாண தேர்ச்சி இசைபரி பாடலையுடையது நறுநீர வையை (பரி. 11 137,140).

இசைமை - இசைத்தனமை. திருமால சுவைமை, இசைமை-இசைத்தனமை-முதலாகிய புலனகளாக விளங்குகினறார் (பரி. 13.14).

இஞ்சி - 1. இஞ்சிக கிழங்கு. கட்குடங்கட்கு இஞ்சியினையும்-இஞ்சிக கிழங்கினையும - பூவையும் கலந்து தொடுதத மாலையைப் பூட்டினர் (பதி 42:10). மலையிடததே இஞசி, மஞசள, மிளகு முதலிய விளைபொருள்கள குவிககபபட்டன (மது. 289,290). குறுமபலவூர்ச் சோணாட்டுக் கழனிகளில சேமபு, இஞ்சி முதலிய பொருள்கள விளைநதன (பட். 19). இஞசிக் கிழங்கு ஒருவராற் பணணப்படாத பாவை போல் முதிர்ந்து அழுகுகொண்டது (மலை. 126). [இஞசிக் கிழங்கைப் பாவையென்றல மரபு: பததுப் பாட்டு நச். உரை. மலை. 126.]

2. மதில். அரைத்த மண்ணால இஞசி - மதில- அமைக்கப் பெற்றது (புறம. 341.5, பதி. 58 6). பழைய ஊர் தூர்ந்துபோன அகழியினையும் தளாநத மதிலுறுப்பினையும் சிதைந்த இஞ்சியையும் உடையது (புறம. 350:1,2). மலையைப் போன்று கட்டியவளைந்த இடங்களை உடையது இஞ்சி (பதி. 18'1). பகைவர் மதிலைப் பொருகினற நீர் நிறைந்த அகழியையும் மலைபோன்ற இஞ்சியையும் உடையவர் (பதி. 62: 10). அரண்மனை மண்ணாற் செய்யப்பெற்ற உயர்ந்த இஞ்சியை உடையது (பதி. 68: 16). இஞ்சி

மலையை யொத்த உயர்ச்சியை யுடைய வானைத் தீண்டும் (மலை. 92; அகம். 35:2).

3. புறச் சுவர். உடன்போக்கிற் சென்ற தன் மகள் தலைவனுடன் திரும்பி வருவாள் என்று தாய் அழகுடைய இஞ்சி-புறச்சுவர் - மீது செம்மண் பூசி மனையை அழகு செய்தாள் (அகம். 195:1-5).

**இட்டிகை** – 1. செங்கல். யானையின் பிடரி உராய்தலினால் இட்டிகையால் – செங்கல்லால் - அமைந்த தளர்ந்த நீண்ட சுவரிலுள்ள விட்டமரம் வீழ்ந்தது (அகம். 167:11-13).

2. பலிபீடம். சீறூர் விடியற்காலத்தேயிடும் பலியை மறந்தமையால் இட்டிகை - பலிபீடம் - வெளிறிக் காணப்பட்டது (அகம். 287:5,6).

**இட்டு** - சிறுமை. பொளிந்த கல், இட்டு - சிறுமை-பொருந்திய வாயுடைய குண்டிகைக்கு உவமை (மது. 482,483). கற்றரையைப் பொளிந்து பண்ணின இட்டிதாகிய நீர்வரும் வாயையுடையது கிடங்கு (மது. 730). வழியை எடுத்து நிறுத்தியது போன்றது இட்டருஞ் சிறுநெறி (மலை. 16). கடற்கழியையும் இட்டுச் சுரத்தையும் (சிறிய வழியையும்) கடந்து தலைவன் இரவுக்குறி வந்தான் (அகம். 80: 2,3). சிறு காடாய் இருண்டது இட்டரும் சிலம்பு (சிறிய செலற்கரிய பக்கமலை) (அகம். 128:8). தலைவன் சென்ற வழி இட்டரும் இடத்தில் படுகுழி உடையது (அகம். 128:13). குன்றின் இட்டாற்றில் (சிறு நெறியில்) அருவி இழிகின்றது (அகம். 288:9-11). மலைவிடர்களினின்று வரும் குளிர்நீர் இட்டுத் துறைகளின் வழியாகத் தேனுடன் கலந்து ஒழுகுதலான் யாறுகள் நிறைவுற்றன (அகம். 362:1,2). இருண்ட நீரினையுடைய இட்டுச்சுரம் நீந்தி மெல் லம்புலம்பன் வந்தான் (அகம். 400:18,19). இட்டு வாயுடைய சுனையின்கண் உள்ள தேரைகள் மட்டையாகிய பறைபோல ஒலிக்கும் (குறு. 193:2,3).

**இடங்கர்** - முதலைவகை. வளைந்த கால்களையுடைய முதலை, இடங்கர், கராம் முதலியன ஆழமான சுழியிடத்தே திரியும் (குறி. 256,257). இராக்காலத்தினை யொத்த இருள் செறியும் மிளைகளில், யானையை விழுங்கும் இடங்கர்கள் தங்கின (மலை. 211,212).

**இடத்தர்**- இடப்பக்கத்தில் கொண்டவர். குறுமகள் வேங்கைப் புதுமலர் விரும்பிப் புலிபுலி என்னும் குரல் கேட்டு, ஆக்களைக் கொன்று தின்னும் புலி வந்ததெனக் கருதி வில்லையுடைய இடத்தர்-இடப்பக்கத்தில் கொண்டவர் (குறவர்) - குரல்வரும் திசை நோக்கிச் சென்றனர் (அகம். 52:3-8).

**இடம்** - 1. நிலம். எதிரியை எறியும் காலமுடையான் குதிரைக்கு இடத்தை-நிலத்தை-காட்டினான் (புறம். 4:7). தன் நாட்டின் இடம் சிறிது என்னும் மேற்கோள் சேரமான் கடுங்கோவாழியாதனை ஊக்கம் கொள்ளச் செய்தது (புறம். 8:3). முதலைகள் இடம் கரிதான ஆழமான அகழியில் ஒன்றுசேர்ந்து யாமத்துக் காப்பாருடைய விளக்கு நிழலைக் கவரும் (புறம். 37:8). சோழநாட்டில் ஒரு பிடி கிடக்கும் சீறிடத்தில் ஏழு களிற்றுக்குரிய உணவுப் பொருள் விளையும் (புறம். 40:10,11). குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் தான் விரும்பிய இடத்திலே பகைவரைக் கொல்லும் ஆற்றல் வாய்ந்தவன் (புறம். 41:3). அகன்ற இடத்தில் (உலகில்) பரவும்படி இங்குப் புகழ் உடையோரே உயர்நிலையுலகத் துறையும் நிலைபெறுவர் (புறம். 50:13-15). இடம் இல்லையாம்படி படையினது தொகுதி பாசறையில் நிறைந்தது (புறம். 62:11). பெய்ய வேண்டிய குளம், விளைநிலம் முதலிய பொருந்திய இடத்தும் உவர் நிலமாகிய பொருந்தா விடத்தும் மேகம் வரையறை யின்றிப் பெய்யும் (புறம். 142:1–3). விளைந்த சிறிய இடத்திலுள்ள உணவுப் பொருளை எலி முழையின்கண் சேர்த்து வைக்கும் (புறம். 190:1-3). 'பிசிராந்தை இப்பொழுதே வருவான்; அவற்கு இடம் ஒதுக்கிவைக்க' எனக் கோப்பெருஞ்சோழன் கூறினான் (புறம். 216:12). கோப்பெருஞ்சோழனின் நடுகல் முன்நின்று எனக்குரிய இடம் யாது எனப் பொத்தியார் கேட்டார் (புறம். 222:6). நடுகல்லாகிய பொழுதும் பழைய நட்புடையோர் தம்பால் வரின் இடம் கொடுத்தளிப்பர் (புறம். 223:4-6). குரிசில் உணவினைப் பகுத்தளிக்கும் இடத்தைக் கருதிப் பலரும் முன்பு ஒருங்கிருந்தனர்; அது கழிந்தது (புறம். 249:7-9). கணவனை இழந்தோள் இறந்த தன் கணவற்கு உணவு படைக்க வேண்டிச் சுளகு போன்ற சிறிய இடத்தை மெழுகினாள் (புறம்.249:12). பிறர் இடம் கொள்ளப்படாத சிறியவிடத்துப் புடவையாற் செய்யப்பெற்ற பந்தர்க் கீழ் நடுகல் உள்ளது (புறம். 260:27,28). இடம் சிறிதாதலால் இனி இயங்குதற்கு இயலாதென்று கருதி உயர்ந்தோர் உலகிற்குத் தம் உடம்பொடு செல்வதற்காக வீரர் பொருகின்றனர் (புறம். 362:21, 22). தனக்குரிய இடத்தைக் கவர்ந்த பகையரசர் நடுங்கும்படி கடம்பினை இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தடிந்தான் (பதி. 12:2,3). கரிகாற் பெருவளத்தான் அளித்த இன்சோற்றுணவைப் பொருநர் உயிர்க்கும் இடம் பெறாது உண்டு வெறுத்தனர் (பொரு. 119). நெல்மூடைகள் வெற்றிடம் இல்லையாம்படி யாண்டும் கிடந்தன (பொரு. 245). எழுநிலைமாடம் தனக்குரிய இடமெல்லாம் பொன்னா

லும் மணியாலும் சிறந்து உயர்ந்து விளங்கியது (முல்லை. 86). களிறு மறலிபோல் எங்கள்மேல் வந்த மையால் உய்யும் இடம் அறியாமல் விரைந்தோடித் தலைவனைப் பொருந்தி நின்றோம் எனத் தோழி கூறுகிறாள் (குறி. 165-168). இடமுண்டாகிய மலையில் நின்று கண்ணாற் பார்க்கினும் கண்ணொளி மழுங்கும் (மலை. 368,369). திரிதற்கு வியலிடம் பெறாதது சீரிய பெரிய அங்காடித் தெரு (மலை. 480). மூங்கிலாகிய பெருவங்கியத்தின் கண்ணிடம் ஒலித்தது (மலை. 533). பரந்து இடம் கொடுக்கும் ஆகாயத்தை ஒத்த பெரிய உள்ளம் உடையவன் நன்னன் (மலை. 558). ஞாயிற்றினை மறைத்த பெரிய முகில்கள் வாடைக் காற்றால உந்தப்பட்டு, வானத்தின் தோல் உரிவது போல வானின் பரந்த இடத்தே தென் திசையிற் படரும் (அகம். 24:6-8). தண்ணுமையினது இடங்கண்பாணி பாலைவழிச் செல்லும் வம்பலரை நடுங்கச் செய்யும் (அகம். 87:8-10). கோசரின் படைக்கருவிகள் தம்மிடம் உண்டாக்கிய வடுக்களோடு கூடிய முகத்தையுடையவா (அகம். 90: 11). சீறூர் மக்கள் வில்லைத் தோளிற்கொண்டு கரடி ஏற்றின் ஒலியை உணர்ந்து இடந்தொறும் தேடுகின்றனர் (அகம. 171:8-11). ஏர்களால இடம் உண்டாக உழப்பெற்ற செம்மண்ணின் நிலத்தில விதைத்த விதைகள் முளைத்தெழுந்தன (அகம். 194: 2-5). ஆதன் எழினி மாற்றார் மீது எறியுமிடத்துச் சிதையாத சுரை செறிந்த வேலையுடையவன் (அகம். 216.13, 14). நடாத நெடுங்கல்லின் அகலிடத்தில் வீரரின் பல்பெயர் (புகழ்) பொறிக்கப்பெற்றன (அகம். 269:7, 8). அருவிநீர் ஒழுகும் அரிய இடத்திலுள்ள காட்டு மலலிகையுடன் கூதளமலரையும் சேர்த்துக் கண்ணி அமைத்தனர். (அகம. 272:7, 8). வன்னிலத்தை இடித்த இடத்திலே அகன்ற வாயினை யுடைய கிணறுகளைத் தோண்டுதல் (அகம். 295:10, 11). பாலையிடத்தில செல்லும் மக்கள் அடிச்சுவடு அறியாது மயங்கும்படி தேக்கிலை உதிர்ந்து கிடக்கும் (அகம. 299:5-9). பூ விற்கும் பெண்டிர், வாங்கும் இடம் பெறாராய் விஞ்சிய வற்றைக் கொண்டுதந்த பூவைத் தலைவி சூடினாள் (அகம. 391:3,4). அழல் வீசுகின்ற நீண்ட சுரத்திலே நிழலிடமும் பெறாது குட்டிகளை ஈன்ற பெண்புலி அவற்றைக் காவல் செய்யும் (நற. 29: 2, 3). இளைய மகளிர் ஆயமோடு விளையாட முடியாமல் இலலிடத்து இற்செறிக்கப்படுதல அறமன்று என்பது தோழி கூற்று (நற். 68:1-3). ஈந்தின் காய்கள் மேலிடமெல்லாம் உள்ள பசுமை நிறம் மாறிச் செங்காயாகிப பின்னர்க் கரிய பழமாகின்றன (நற். 126:1, 2). சாந்தம் பூசிய கூந்தல் உலர்ந்தவிடத்துத் துகள் உதிர்தல் (நற். 140:2-4). குறவர் மலைச் சார்பிடத்தில் அகலப்படுத்தி உழுதல் (நற். 209:1, 2). தலைவி தனியே இருந்து வருந்துமாறு கண்ணிடத்து (அகன்ற இடத்து) ஈண்டியது மேகம் (நற். 229:9, 10). 'தினையே, இப்பொழுது நினது கதிர்த் தோட்டினிடம் சாயாமல் மெலலக் கதிரீன்று விளைவாயாக' எனத் தோழி கூறுகிறாள (நற. 251:10, 11). செல்வத் தந்தையின் இடனுடை வரைப்பில பந்து உருட்டுநள் போலத் தலைவி நடை பயின்றாள (நற். 324:6-9). பருந்து கொலையுண்ட பிணங்களின் நிறைந்த முடைநாற்றத்தால நெருங்கித் தின்ன இடமின்றி அகன்று போய் இருக்கும (நற. 329.2-4). தண்ணுமையின் இடந்தொட்டன்ன அருவி இழிதரும் (நற. 347:6). விருந்தினரை எதிர் கொள்ளுதலாலும தலைவனின் பொய்ச சூளால வருத்தம வருமென்று அஞ்சுதலாலும் புதலவனை முயங்கிக கொண்டு தலைவன் வருந்தக் காணகையினாலும் அவ்வவ்விடத்துப் புலவி கெட்டுப் போகும் என்பது தலைவி கூற்று (கலி. 75.27-30). கள்ளுண்டு கண் செருகி நிற்பவள், மொய்க்கும் வண்டுகளை ஓட்டும இடம் தெரியாமல ஓட்டி ஓட்டிக் கை சோர்ந்தனள (கலி. 92: 48-50). 'நீ ஏறும யானை மதம் கொள்ளுமிடத்து அதனைக் காப்பாய' என்பது தலைவி கூற்று (கலி. 97:31). பாண்டியன பகைவா நாட்டினமீது படையெடுத்து இடம் பட வென்றான (கலி. 104 2). ஏறுகள தம்மை ஆயர் தழுவ இடம கொடாமல நின்றன (கலி. 105:34). 'கடலே, என்னைத் துறந்தானைத் தேடுவதற்கு நீ இடம கொடாயாயின நின நீரையெலலாம் புறங்காலால இறைப்பேன' என்று தலைவி கூறினாள் (கலி. 144:45-47). கூட்ட மிகுதியால் யானைகளும் குதிரைகளும தமக்குரிய கதியில் செலல முடியாமல ஊர்ந்து ஊர்ந்து இடந்தொறும திரிந்தன (பரி. 6:37). வையை செலலும் இடம் அரிதென்னாது இரவுபகலாக ஓடுகிறது (பரி. 7:5). விரிந்த பாறைகளையுடைய வியலிடத்தமைத்த சித்திர மண்டபங்கள் திருப்பரங்குன்றில் இருந்தன (பரி. 19:55). இடன் 1 காண்க.

2. இடப்பக்கம். தான் கொன்ற பன்றி இடம்–இடப்பக்கம்-வீழின் புலி அதனை உண்ணுவதிலலை (புறம். 190:6,7). இன்குரற் சீறியாழைச் சிறுபாணன இடவயின தழுவிச் சென்றான் (சிறு.35). பெரும்பாணன யாழை இடவயின தழுவிச் செல்லல் (பெரு.16). தன்னால தாக்குண்டு வீழ்கின்ற களிறு இடம் வீழ்ந்தால் அதனைப் புலி உண்ணாது (அகம. 29.2,3). கானவர் வில்லை இடக்கையில பிடித்திருந்தனா (அகம. 52:8). மொழிபெயர் தேயத்துக் கல்லா மறவர் விலலை இடம தழுவி வழியே வருவோரைப் பார்த

திருப்பர் (அகம். 127:15,16). புலி தான் வீழ்த்தும் விலங்கு இடம் படுதலை யறியாத வேட்டம் உடையது (அகம. 252 1). இடன 2 காண்க.

3. காலம். பொயயா மேகம் பெய்யும் இடம்-காலம்-நோககி எறும்பு முட்டை கொணடு வலிய நிலத்தே சேரும (புறம. 173:5,6). அகலிரு விசும்பில் பகலிடம் (பகறகாலம) தோனற ஞாயிறு கதிர்பரப்பும் (பதி.52: 28,29). குறிதத காலததில தலைவன் வாராமையால் அவனே வரும் இடம் நோககித் தலைவி இரவிலும் துயிலாது மனைமரத்தைப் பிடித்தவாறே நினறாள் (அகம. 58:12-14). 'தான் கெட்ட இடத்துப் பிறர் செயத உதவியை, அரசுரிமை யெய்திய மன்னன் மறநதது போல நீ எம்மால பெற்ற உதவியை மறவாது விரைநது மணந்துகொள' எனத் தோழி தலைவனுக்குக கூறினாள (குறு. 225:3-5). தாழியில் மத்தால தயிர் கடைகின்றபோது வெப்பமிகும் இடதது வெணணெய் திரளாமல் சிதறிக்கிடக்கும் (நற். 84.6,7). தலைவன் தோழி வாயிலாகத் தலைவியின வருததததை அறிநது வேங்கைமலரும் இடம் பார்த்துத தலைவியை மணகக வருவான (கலி. 38: 23-26). 'நாம நோக்குங்கால் நம்மைத் தொழுகின்றான; தொழுதால அச்செயல் நமக்குப் பழிதரும் என்று கருதி நீங்கக் கருதுகின்றான்; நீஙகின் தனக்கு வருத்தம் செய்யும் என்று நீங்காமல இருககின்றான்; ஆதலால் தலைவனை நம்பால வாராமற் காககும இடம் அனறு' எனத் தலைவி கூறுகிறாள் (கலி.63: 1-4). தலைவன தலைவியை நீங்கி அருளாத இடம் பார்தது அவளை மாலைபபொழுது வருததும் (கலி. 120:13,15). இடன் 4 காண்க.

4. செவ்வி. பகைவரின் குறும்பு சேய்மைக்கண்ணதாயினும் பாணன எனனும் காட்டுத் தலைவன் இடம்-செவ்வி-பார்த்துக் குறும்பிலுள்ள ஆக்கஙகளைக கவர்ந்து வருவான் (அகம. 113: 12-14, 17). தாழைகளை உடைய நெய்தல் நிலத்தலைவர் 'நீயிர் ..மையீர்' என்று உசாவி நம் குறை தீர்ப்பதற்கு ஏற்ற இடம இதுவேயாகும் என்பது தலைவி கூற்று (குறு. 219:6, 7). நேற்றைப பொழுது நம்மொடு கூடிக கிளிகடிந்து தங்கியிருப்பினும் தன் குறையைக் கூறும் இடம் பெறானாய்த் தலைவன் பெயர்நதான் என்று தோழி கூறுகிறாள (நற். 25, 5-7).

5. பொருள். கௌணியன் விண்ணந்தாயன் மனை ..ருடன ஈரேழுவகையான, இடம் – பொருள் – முட்டுபபாடு இனறி வேள்வி செய்தான் (புறம். 166'20).

..ர் - வருத்தம். குன்றிடததுளவாகிய பொறுத்தற் .. ர் - வருத்தம் – செய்யும் குழிகளிடக்கை நின்று நோக்கின் கண்ணொளி மாயும் (மலை. 368, 369). பழைய நெடிய வழியாகச் சென்றால் தலைவியின் இடரை இன்றே களைய முடியாது என்று புதிய குறுகிய வழியே வலவன் தேரைச் செலுத்தினான் (குறு. 400:1, 2, 5). பசுங்கட் கடவுளாகிய சிவன் இடரிய (வருத்தத்தைச் செய்த) ஏற்றெருமை ஏறும் கூற்றுவன் நெஞ்சினைப் பிளந்தான (கலி. 101:24, 25).

இடவலவன் - திருமால். ஆய்ச்சியரோடு குரவைக் கூத்தாடியபோது அவர்க்கு இடமும் வலமும் ஆடினமையின திருமால் 'இடவல' என்று விளிக்கப் படுகிறார் (பரி. 3:83). (இடவலவ என்பது செய்யுள் விகாரத்தால் குறைந்து நினறது. பரி. 3:83 பழைய உரை).

இடன் - 1. இடம். இரந்து செல்லும் மக்கட்கு இனிப் பாட இடன்-இடம்-இல்லாதவாறு கபிலர் மலையமானைப் பாடியுள்ளார் (புறம. 126:11-13). குமணனின் தாள் நிழல் வாழவோரும் நாட்காலையே முரசு முழங்கும் இடனுடைத்தாய எல்லைக்கண் நன்கலம் வழங்குவர் (புறம்.161:29,30). ஓவியம் போலும் அழகிய இடனுடைய இல்லத்தில் குறுநதொடி மகளிரின் அணியை மன்னன் நெகிழ்த்தான் (புறம். 251:1-3). வளைந்த கரிய தண்டினையுடைய, இனிய நரம்புக் கட்டுக்களைக் கொண்ட இடனுடைப் பேரியாழை முதுவாயிரவலன் வாசித்தான் (பதி. 66:2,3). இலக்கணங்களைத் தன்னிடன் உடைய பேரியாழைப் பாணன முறையாக இசைத்தான் (பெரு. 462). 'பாகனே, நீ விரைந்து தேரைச் செலுத்துவாயாயின் காதலியின் துன்பநிலை களைதற்கு இடனாகும்' என்பது தலைவன் கூற்று (அகம். 64:1). தலைவியின் அறல்போன்ற கூந்தல் இடன் இல்லாத சிறிய முதுகில் அணிகளுடன் அசையும் (அகம். 142:18,19). களத்தில் இடனில்லாத படி நெற்கதிர்க் கட்டுக்கள் நெருங்கிக் கிடந்தன (அகம். 236:5,6). தன் குஞ்சுகளைக் காட்டுப பூனை பற்றவந்த மாலைக் காலத்தில் புகுமிடன் அறியாத கோழி அவற்றை ஒன்றுகூடுதற் பொருட்டுக் கூவி அழைத்தது (குறு. 139:1-4). சான்றோரைக் கண்டவழி வரவேற்று ஓம்பும் கடனறி மக்கள் போல வண்டுகளுக்கு இடனவிட்டு இதழ்கள் தளையவிழ்ந்தன (குறு. 265:3-5). ஓவத்தனன இடனுடை வரைப்பில் அன்னை துஞ்சினள் (நற். 182:2-4). மடநடையுடைய மாயினம் (அனனத்திரள்) மாலைக் காலத்தே இடன்விட்டு இயங்காமல் இமயமலையின் ஒரு பக்கத்தே தங்கியது (கலி. 92:17-19). ஆற்றுதற்கோர் இடனின்றாக மாலைக் காலம் தலைவியைத் துன்புறுத்தியது (கலி. 120: 20). இடம் 1 காண்க.

2. இடப்பக்கம். தாம் கூறியதனை நினைத்து அவற்றின் குறிகளை யறிந்து இடனும்-இடப்பக்கமும்-வலனும் பார்த்து அவற்றை அணுகாமற் போகுமாறு கூத்தரைக் கூத்தர் ஆற்றுப்படுத்தினர் (மலை. 266,267). 'நல்ல அழகை யுடைய மையுண்ட கண்ணும் இடம் துடித்தமையின் தலைவர் நம் நலம் கெடாவாறு விரைந்து மீள்வர்' என்பது தோழி கூற்று (கலி. 11:20, 22). இடம் 2 காண்க.

3. உலகம். ஞாயிறு மறைதலால் வருந்திய இடன்-உலகு-நோககி, அவ்வுலகம் கொணடாடும்படி திங்கள் தோன்றியது (கலி. 126:1,2).

4. காலம். மேகம் கீழைக்கடல் நீரை முகந்து கொண்டு மேற்றிசை மலையில சூழந்து இரவும் பகலும் முடியும் இடன்-காலம்-இதுவென அறியாவாறு மழை பெயதது (மது. 238-240). முடிவு இடன் அறிய முடியாதவாறு நளளிரவில் மழை பெய்தது (அகம. 162:6). மெலிந்து வருந்தும் தலைவியின் துன்பததைத தலைவன தேர்வந்து களையுமாயின் இடன் (நல்லகாலம்) ஆகும் (கலி. 121:22,23). இடம் 3 காணக.

5. பொருள. பாணர் முதலிய சுற்றம் உவப்பப் பொருளகளை மிகுதியாகக் கொடுத்தும் குறையாத, இடனுடை வளன்–பொருளுடைய வளத்தை-பெற்றவன் களங்காயக் கண்ணி நார் முடிச் சேரல் (பதி. 32:5,6). புகழ்தலமைந்த இடன் பொருந்திய வேள்விகளைச செய்தபொழுதில மற்ற அறத்தின் கூறுபாடுகளையும் செலவக் கடுங்கோ வாழியாதன் செய்து முடித்தான (பதி.ப. 7:6,7). இல்வாழ்க்கைக்கு வேண்டும் இடன் இல்லாமையால இரந்தோர்ககுச் சிறிதும் கொடாதிருத்தல் இளிவாகும் (கலி. 2:19).

இடி – 1. மேகத்தில் தோன்றும் இடி. நஞ்சு ஒடுங்கும் பல்லையுடைய அரவம் தலை நடுங்குமாறு இடியெனக் கருத முழங்கும் முரசினையுடையவன் குடவர்கோ, யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும பொறை (புறம. 17:38-40). மேகத்தினின்று இடிக்கும் இடியைப் போல அரணத்தில் முரசு முழங்கியது (பதி. 33:10,11). இடியிசை போல் முழங்கும் முரசமொடு வீரர் வஞ்சினம் மொழிந்தனர் (பதி. 66:4). திருச்சீரலைவாயில கொம்பு ஒலிக்கச் சங்கு முழங்க வலிமை கொண்ட உருமேற்றினது இடி போலும் ஓசையுடைய முரசுடனே வென்றெடுத்த கொடியில் மயில் அகவியது (முரு. 120-122). தனக்கு உணவு தேடிச்சென்ற களிற்றைப் புலி தாக்கக கருக்கொணட பிடி இனததோடு மலையிடத்தே இடிபோலப் பிளிறும் (மலை. 307-310). இடிகளை யுமிழும் வானம் வெம்மை மிக மழை பெய்யாது நீங்கியதால் பாலை நிலத்தில் குடிகள் தத்தம் இடத்தைவிட்டுப் பெயர்நது போயின (அகம். 77:4-6). காதலர் மீண்டு வருவோம் என்றது, மேகங்கள் இடிகளைக் கொண்ட இக்கார்ப்பருவம் அன்றோ என்று தலைவி தோழியிடம் கேட்டாள் (அகம். 139: 17-19). கடலைக் கணடாலொத்த பெரிய வானத்துத் தீயின் கொடியன்ன மின்னல் மேகத்தைப் பிளக்கக் கடுமையாக இடிக்கும் இடியுடன் விரைந்த நீரைச் சிதறி மழை பொழிந்தது (அகம். 162:3-6). ஆலங்கானத்துப் போரில் வெனறெறி முரசென விசும்பிடைக் கடியிடி பலகாலும் முழங்கியது (அகம். 175:11-13). யானை போர்விரும்பி மாறுபடும் பாசறையில் இடியென ஒலிக்கும் வெற்றி முரசம் போர்க்களத்து இயம்ப அரசனும் போர்வென்று கொடி யுயர்த்தினான் (அகம். 354:1-3). இடியும் முழக்குமின்றிப் பாணர் நல்யாழ் நரம்பிசைததாற் போல இனிய குரலுடன் நல்லமழை பொழிந்தது (அகம். 374:7-10). மழை நீங்கிய காட்டில் விரைநது இடிக்கும் உருமேற்றால் பாம்பு படமழிய இடியொடுகலந்து மழை இனிது பெய்தது (குறு. 391: 2-4). அருவித்துறையில் புலியொடு பொருத புண்மிக்க யானையின் கொமபை விரும்பிய அன்பற்ற வேடரின அம்புபட்டு அது பிளிறிய அச்சந்தரும் பேரொலி இடியின் பெருமுழக்கம் ஒத்தது (நற். 65: 1-8). பரதவர் வலிய கயிற்றால பினனிய பெரு வலையை இடி போல முழங்கும் அலைகளையுடைய கடலில் இடுதற்குத் தோணியிலேற்றிச் செலவா (நற். 74:1-4). மாமழையை விளித்துத் தலைவி, 'நீ சான்றோரை ஒத்திலலை; பாமபின் படம் மழுங்கியடங்குமாறு செயவதன்றித் தலைவன் நெஞ்சம கனியுமாறு செய்யும் வல்லமை உனக்கில்லை; ஆதலின் நின் இடி நவில் குரல் எனக்கு இனிய அல்ல' என்றாள் (நற். 238:5-11). 'தலைவியின் பேரஞர் உள்ளம் நடுங்குதலைக் காணபதறகு அன்பின்மையின் இயல்பின்றிப் பொய்மையாக இடிக்கும் முழக்கத்தை உண்மை யெனக் கருதி மடமை பொருந்திய மயிற் கூட்டம் ஆடும்; அதுகண்டு யான் மயங்கேன்' எனத் தோழி கூறினாள் (நற். 248:5-9). மலைப்பிளப்பிடத்தில இரும் புலி களிறு தொலைத்து முழங்கும் ஒலிகேட்டு மேகத்தின் இடி முழக்கமென்று பிறழ உணர்ந்து உலரவைத்த செந்தினையை ஊர்மக்கள் தொகுத்தனர் (நற். 344:9-12). இடிபடுதலுற்று நெருப்பை யுமிழ்ந்து ஒலிக்கும் மழைபொழிந்த நள்ளிரவில் மின்னல் உண்டாக்கிய ஒளியில பிடியொடு யானை புன்செய்யில் மேயும் (கலி. 41:5-7). மினனொளி கொண்டு வழியை ஆராய்ந்து இடியென்று எணணாமல் மழையென்றும் பாராமல் தலைவன்

அரிய வழியிலே வருதல் இன்னாதது எனத் தோழி உரைத்தாள் (கலி. 49:11-23). ஏறுகளைத் தொழுவத்தில புகச் செய்த போது அவை மழை முழக்கென, இடியென, ஆரவாரஞ் செய்தன (கலி. 101 9, 10). ஏறுதழுவும் போது இடியொடு மாறு படும (ஏறறினது) முழககோடே வாச்சியங்கள் ஆர வாரித்தன (கலி. 104 54). கார்காலத்து உருமினது இடிபோல வாச்சியங்கள் ஒலித்தன (கலி. 105'24). இரவில இடியை உமிழும் மேகத்தில் இருக்கும் இருளைப் பிளக்கும பின்னலை வாங்கிக் கொள் வேன என்று ஒருவன கருதும் தன்மையனாய் (பெறற் கரியவனாய) தலைவி உள்ளாள் எனத் தலைவன கூறி னான் (கலி. 141:17, 18). பொருதற்கெழுந்த அவு ணர் கொடியற்று விழச செவிகள் செவிடுபட முடியதிரத திருமாலின் சங்கு இடிபோல முழங்கி யது (பரி. 2:36-40). (இரணியனது) மலைபோன்ற மார்பின் பகைவலி கெடச் சென்று அவனது இடி போன்ற முரசியம்பத் திருமால் தூணைப் பிளந்து அவனை அழித்தான (பரி. 4'16-21). யாழிசை யும மிடறறுப் பாடலும குழலும முழவும் ஒலிக்க மகளிரும பாணரும் ஆடல் தொடங்க, அவ்வாாப் பொடு கரையைப் பொருது ஓடும் வையைப்புனல் ஆரபபும் சோந்து இடியொலி சோந்த மழை முழக்கை ஒக்கும (பரி. 7:78-82). அரசுபடக் கடந்த பாணடியனின் போா முரசு ஆர்ப்பதுபோல மேகம் இடிமுழககம செயதது (பரி. 22.3, 4).

2. குத்துதல். குதிரை மெல்ல நடககுமாறு தாற்றுக் கோலால இடி - குத்துதல - விடுத்துச் செலுத்து வாயாக எனப பாகனிடம் தலைவன் கூறினான (அகம.134·7-9). குறுந்தொடிமகளிர் பசிய அவலிடிக் கும் உலககையின் இடிக்கு அஞ்சிய குருகு, வாழை மடலில தங்காது மாமரத்துக்குப பறக்கும் (அகம. 141'16-21)

3. தாக்குதல். மூங்கிலின தணடு உடைதற்கேது வாய சுவணகலின கடியிடி - விரைந்த தாககுதல்- கொணட வெபபமிக்க பகறபொழுதில நடமாடா மல இரவில தினைபபுனம் மேயநத யானை பெருந் தூற்றினைக் கணடு அஞ்சியது (அகம. 309,12-16).

4. இடித்தல். கருப்புக் கட்டியைக் கொழித்த பொடியை ஒததது உணணுநரைத் தடுக்கும் இடி - இடித்தலால்-நுண்ணிதாகிய தினைப பிணடி (மலை. 44,445).

பொடி. இடிக்கலப்பனன - பொடி செய்யப்பட்ட தகணடில) கலப்பையொத்த - சாறுமுற்றிய மாம் பழத்தைக் கையுறைப் பொருளாக நன்னனுக்களித் னர் (மலை. 512, 513).

இடிப்பு - களைப்பு. ஆயத்தாருடன் விளையாடியதா தலைவிக்கு உடம்பில் இடிப்பு - களைப்பு - தோன்ற யது (நற். 23:2,3).

இடுக்கண் - துன்பம். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன புறாவின் அல்லல் அனறியும் பிற வுயிர்கள் உற்ற இடுக்கண் - துனபம்-பலவற்றையும் தீர்த்த சோழன் மரபில வந்தவன (புறம. 46:1,2). தன வருகை காணாது பலகூறி வெறுததுறையும் மனைவியின் இடுக்கண தீர்க்க இப்பொழுது விடை பெற்றேன்; அவல நெஞ்சோடு என வறுமையை முன் போகவிட்டுச செலகிறேன் என்று குடக கோச் சேரல இரும்பொறை பரிசில் நீட்டித்த போது பெருங்குன்றூர் கிழார் கூறினார் (புறம். 210:10-15). கிணைமகன் இடுக்கண் கெடக் கொடுத்தவன சிறு குடி கிழான் பணணன் ஆவான் (புறம். 388:6,7). மலைவழியிற் பாறையிடத்தே சிறுநெறியிற் செல்லு பவரைத் தம் மனைவியரோ டிருக்கும் தொடுத்த அம்புடைக் கானவர் இடுக்கண செய்யாது வழிப் படுத்துவர் (மலை. 14-18). 'இடுககண் அஞ்சி இரந் தோர் வேணடியவற்றைக் கொடுத்துப் பின்னர் அவற்றைத் தா எனக் கேட்டலினும இன்னுயிரை இழததல் இன்னாதோ' எனத் தோழியிடம் தலைவி கேட்டாள் (குறு. 349:5-7). தன் உற்றார் இடுக்கண் தவிர்ப்பான் மலையில காந்தளில தொடுத்த தேன் சொட்டும் (கலி. 40:12-14). தன்னை யீன்றவளின் (வினதையின்) இடுக்கண் களைந்த கருடப்பறவையை ஊர்தியாகவும கொடியாகவும் உடையவர் திருமால் (பரி. 3:16-18). தலைவன் விடுத்த புனல்வழி வந்த பூமாலையைக் கொண்டையில் நாடறியச் சூடிக் கொண்ட பரத்தையின் செயல் தலைவனைப் பிரிந்து நினைவாரது நெஞ்சுக்கு இடுக்கண் செய்யும் செய்தியாயிற்று (பரி. தி. 2:51-56).

இடுதேள் மருந்து - தேள் கொட்டுக்கு இடும் மருந்து. முல்லைத் தலைவனை நோக்கி, 'நீ புலவினத்தாயர் குடிதோறுமுள்ள மகளிரை விரும்புகிறாய்; நின் காமவேட்கை இடுதேள் மருந்து-தேள் கொட்டுக்கு இடும் மருந்து - போல வேட்கை தோன்றிய அப் போதே தீரக்க வேண்டிய தொன்றோ' எனத் தலைவி வினவினாள் (கலி. 110:1-3).

இடும்பில் - இடும்பாதவனம். கடல்பிறக்கோட்டிய செங் குட்டுவன் பல ஆன்களைக் கன்றுடன கொண்டு இடும்பின்-இடும்பாதவனத்தின் - புறத்துத் தங்கி னான் (பதி. ப. 5'8,9).

இடும்பை - துன்பம். சிறியாழை உலர்ந்த மருங்கிலே தழுவிக்கொண்டு என இடும்பை-துன்பம்-தீர்க்க உணர்வோர் யார் என்று வினவிய பாணனைக்

கொண்கானங் கிழானிடம் ஆற்றுப்படுத்துவதாக மோசிகீரனார் பாடியுள்ளார் (புறம் .155:1-3). 'நின்னைக் காணலாகும் காலம அரிது; என் சுற்றததின் இடும்பை பெரிது, ஆதலால இப்பொழுதே பரிசில தந்து விடுக' என ப பிட்டங்கொற்றனைக காவிரிப் பூமபட்டினததுக் காரிக் கணணனார் வேண்டுவர் (புறம். 169:6-8) ச நடுமபினது இடும்பையைப பாணர் காணக (புறம். 17.2). அவுணர் ஞாயிறறை மறைத்த போது உலகின் இடும்பைகொள் பருவரல்தீர அஞ் சன வணணன கதிரவனை விணணிலே மீணடும் கொணடுவந்து நிறுத்தினான (புறம. 174:1-5). எழினி பொருது மாய்ந்ததால் தன் சுற்றம் வருந்தக் கடும்பசி கலக்கிய இடும்பை கூர் நெஞ்சததுடன் உலகு வருத்தமுறறது (புறம். 230:6-10). முனிவர் இடும்பை யாவதும அறியா இயல்பினராவர் (முரு 135,136). முன்னர்க் குனறெறிந்த நெடுவேலை எடுத்துத் தன இடும்பைக குன்றைத தொலைகக வேணடுதல் (முரு. வெ. 4). பழுமரம் உள்ளிய பறவை போலப் பொருநன தன் இடும்பை தீரக் கரிகாற் பெருவளத்தானிடம் சென்றதாகக் கூறினன் (பொரு. 64-67). நாயைக் கண்டு அஞ்சியபோது தலைவி நடுங்கி அடிதளர்ந்து இடும்பை மிகக மனத்துடன் மருண்டாள் (குறி. 129-134). தலைவி தோழியின் உள்ளததிடும்பை நீக்குதற்குத் தலைவனுககு இன் துணையாகி மணமனை போன்று கமழும் கானத் திற்கு அவனோடு உடன சென்றாள் (அகம். 107:1-3,21,22). ஆய எயினன் மிஞிலியொடு பொருது களத்தில் மாய அவனைக் காணச் செலலாத கூகை நாணிப பகலிற் செல்லாது துன்புறறாற்போலத் தலைவிக்குப பகற்குறிக்கட் செல்லாத இடுமபை பெரிதாயிற்று (அகம். 148:7-11). அச்சநதரும கானத் திற்கு நம்மொடு வருவேன் எனற தலைவியின் மகிழ்மட நோக்கு நள்ளிரவிலும் மாலையிலும் ஆறாத வருத்தத்தோடு மிகக துன்பத்தாற் கலங்கி நம்மை நினையும் இடுமபை அளவு கடத்தலின் யாதாமோ என நெஞ்சை நோக்கித் தலைவன் கூறினான். (அகம். 297:1-4,18,19). அருளில்லாத தலைவன பொருளவயிற் பிரிய வருததததைச் சுமந்த இடும்பையுடைய நெஞ்சத்தளாய் யான் எங்ஙனம் ஆற்றுவேன எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 305:9-11). 'தலைவன் இரவில்வரும் இடும்பை நீங்க வரைந்து கொள்ளக் கருதுவானாயின பெரிது உவந்து மலையருவி நீரில் அவன் மார்பு புணையாக ஆடுகம வா' எனக்காதலந் தோழியிடம தலைவி கூறினாள் (அகம். 312:2-8). இன்பமும் இடும்பையும், புணர்வும் பிரிவும், பகலும் இரவும் போல வேறு வேறு இயல்பினவாகி மாறாய் எதிர்ப்பட்டு நிற்பன (அகம். 327:1-4). இருள்மிகுந்த நெஞ்சத்து இடும்பை தீர்க்கும் அருள் நன்குடையராயினும் பொருளிலார்க்கு ஈதலாகிய சிறப்பு இயையாது (அகம. 335:1-3). 'நீ இரவு வருதலின் இடையூற்றுக்கு அஞசுவன; தலைவியின இடும்பை நோயினை எவவாறு நீககலாம்' எனத தலைவனிடம் யான கூறியதற்கு அவன் பிறிதாகக் கருதிப பெருமூச்செறிந்தான எனத தோழி தலைவியிடம கூறினாள் (குறு. 217.2-5). மலைச குகையிற் செறிந்த பெண்புலியின் புனிற்றிடுமபை தீர ஆண்புலி யானையின முகத்தே பாயும் (நற். 148:7-10). மழை கணடு தலைவி, கரையை மோதி ஓடும் கானயாற் றின்இடிகரையில் உளள காறறில ஆடுமமாநதளிா போல நடுங்கும் நெஞசொடு இடுமபையை யாஙஙனம் தாங்குவேன எனறாள (நற். 381:3-6) தலைவன் இரவில வரும இடும்பையின்றும் நாம உயய அவன வரைய வநத வாய்மொழிக் கேறப நமா கொடை நேர்நதமையின் தலைவனுடன் அவர் மகிழ்ந்து பேசுவரோ எனத தோழி கூறினாள் (நற். 393:8-11). 'வெஞசுரத்தே என மகளைக் கொணடு சென்ற தலைவனின தாய நினைதொறும் அழும இடும்பை எயதுக' எனபது நற்றாயின எணணம் (ஐங். 373). 'இடுமபை உறுவி-துன்புறும நற்றாயே-நின் மகள யானையொடு புலி நடமாடும காட்டு வழியில் தான் விரும்பும் காதலனைக கூடிச் சென றனள்' என் இடைசசுரததுக கணடோா தாயிடம கூறினர் (ஐங். 386). தலைவனொடு வந்த வழி எல்லையிலலாத இடும்பை தரும் எனத் தலைவி தோழிககுரைததாள (ஐங். 392:4,5). இடும்பையால் தம் வறுமை உரைத்தார்க்கு அதனைத தீர்க்க இயலாவிடின இறநதுபடுவோனது மனையில் புலியடிபோல வாழைக்காய் குலைதொறும் தொங்கும் (கலி 43:24-27). எததனமை உடையோரது இடும்பையையும் களைபவன் தலைவன (கலி. 100:23). தன வலிமை மழுஙகித் தன இடும்பையால் ஒருவனை இரப்பவன் நெஞ்சமபோல் மரம் எல்லாம பொலிவிழந்தன (கலி. 120:4-5). துறையில் ஒதுங்கிய மீனை அலை வருந்தாமற் கொண்டதுபோல மெலிந்து வருந்தும் தலைவியின் இடும்பையைத தலைவன களைவதே நல்லது எனத தோழி கூறினாள (கலி. 121:20-23). கயலொத்த கண் நீரறறு மலகுகின்ற அளவாய் நிற்க இடும்பையோடு வருந்தி எங்கத தலைவியைத் தலைவன் துறந்தான் (கலி. 127:8,9). மயங்கின இருள் உலகிடத்தே வரும்படி பகறபொழுதிற்கு ஓரெல்லையாகி இடும்பை மிகுதறகுக் காரணமாயது மாலைக் காலம் (கலி. 129 6-7). தலைவி குழலை நோக்கித் 'தனியவர் இடும்பை கணடு இனைதியோ, எம்போல் இனிய செய்து அகன றாரை உடையையோ' எனக கேட்டாள் (கலி. 129: 16-19). அலையால் கரையும் மணற்குன்றை நோக்கித்

தலைவி பிரிவினாலாய தன் இடும்பை நோய்கனடு அது கரைவதாகக் கருதினாள் (கலி. 134:15-18). தலைவன் காம நோயைத் தாங்க மாட்டாமை யால் 'உண்டான இடும்பைக்கு இளைப்பாறுத லாக மாதர் திறத்து மடலேறுதலை மனத்தில் இருத்திப் பாடுவேன் என்றான் (கலி. 139:10-13). நெஞ்சிடத்துள்ள இடும்பை தணிக்கும் மருந்தாக இம்மடன் மாலைத் தலைவி தந்தாள் என்பது தலைவன் கூற்று (கலி. 140:15, 16). தலைவன் தனது இடும்பையைக் கண்டார்க்கு அறிவுறுத்தி நீக்குமாறு வேண்டுகிறான் (கலி. 140:30-34). உல கினைக் காக்க முயலும் ஊக்கமுடைய என்னைத் தலைவி ஒருவர்பால் இரக்கும்படியான இன்னாத இடும்பையைச் செய்துவிட்டாள் என்று தலைவன் கூறினான் (கலி. 141:13, 14). நாண் கைவிட்டுக் கணணீர் துடைத்துக் கவிழ்ந்து நிலம் நோக்கி அன்னபல இடும்பை செய்தாள் தலைவி (கலி. 144: 2-5).

**இடை** - 1. நடு. பசிய இலையை இடை - நடுவே - இட்டுத் தொடுத்த மலராத முகையினையுடைய மாலையினது பந்து போன்று ஊனோடு கூடிய பெருஞ்சோற்றுத் திரள் இருந்தது (புறம்.33:12-14). கோட்டிடை வைத்த கவளம் போல அதியமான் தரும் பரிசிலைப் பெறும் காலம் நீட்டினும் நீட்டா தாயினும் அது கையகத்தது என்று ஔவையார் கூறுவர் (புறம். 101:6-8). இழை சூழ்ந்த பல தைய லினது இடையில் உள்ள புரைகளைப் பற்றிப் பிணிப்பு விடாமல் ஈரும் பேனும் தங்கி யிருந்தன (புறம். 136:2-4). செருப்பிடைச் சிறுபரல் பகைவரை மேற்செல்லாதவாறு துன்பஞ் செய்தவற் குவமை (புறம். 257:1) யானைக் கோட்டைச் செதுக்கித் தச்சன் உளியாற் செய்த பெரிய இலைத் தொழிலை இடையே செய்து வட்டக் கட்டிலில் பொறித்தனர் (நெடு.117-119). வட்டக் கட்டிற்காலின் குடத்திற்கும் கட்டிற்கும் இடைப்பகுதி திரணடிருந்தது (நெடு. 121). நீலமணி போன்ற காயாமலர்களின் இடை இடையே செம்புற மூதாய் பரவிக் கிடந்ததுடன் முல்லைப் பூவும் பரவிக் கிடந்தமையின் முல்லை நிலம், வல்லோன் தீட்டிய ஓவியமெனத் தோன் றியது (அகம். 134:3-6). பாதிரிப்பூவை அலரியுடன் இடையே கலந்து தாழம்பூவின் தோட்டில் வைத் துக் கட்டிய கண்ணியினை உமணர் அணிந்தனர் (அகம். 191:1-4). 'இருதலைக் கொள்ளிபோல் இடை நின்று வருந்தி ஒருதலைப்படா எறும்பு போன்ற னம்' எனத் தலைவன் நெஞ்சுக்குக் கூறினான் (அகம். 339:9-11). கூட்டத்திற்கு இடையே தலைவன் பொருள்வயிற் பிரிந்தான எனத் தலைவி கேட்பின் நெஞ்சழிநது இறந்து படுவள் (கலி. 10:8,9). ஒளிரும் மின்னினது விளங்கும் அறுதிகளிடையே பிளந் தோடும் மேகம் பொன்னைக் கூறுபடுத்தின வகிர் களை யுடைய ஐம்பால் கூந்தலுக்கு உவமை (கலி. 55:1-3). நிறததை எருசாமல், இடையே காட்டும் அந்துகில் கழன்று கிண்கிணி ஒலிக்கும் சிறுவனின் அடியைத் தடுத்தது (கலி. 81:5, 6).

2. இடம். நிழலில்லாத நீண்ட இடையில் - இடத் தில் - தனிமரம் போலப் பாரி வேந்தரைவிட மிகுதியாக இரவலர்க்கு ஈந்தான் (புறம். 119:5-7). சோறுவேண்டி வருபவருக்கு இடையருளி (உரிய இடமளித்து) உண்பித்து நீயும் உண்பாயாக எனத் தருமபுத்திர னிடம் கோதமனார் கூறியுள்ளார் (புறம். 366:18, 19). அரிசி இன்மையின் ஆரிடை நீந்திப் பரிசிலன் சென்றான் (புறம். 371:9). கடத் திடையுள்ள பிடாமரத்தின் பூக்குலையில் வண்டு தங்கும் (பதி. 66:16,17). மாயோள் நல்மணல் மிக்க வியலிடை (அகன்ற இடத்தே) நடந்த சிலவாய மெல் லிய நடையினை யுடையவள் (அகம். 174:13,14). மற வர் கொன்ற பிணத்தைப் பருந்து பார்த்திருக்கும் நெடிய, மூதிடைய (பழைய இடத்தையுடைய) நீரில்லாத வழியே தலைவர் சென்றார் (குறு. 283:4-8). சிறுவ னுக்கு எறியா வாளையும் எற்றா மழுவையும் செறியக் கட்டி ஈரிடை (இரண்டு இடங்களில்) தொங்க விட்டனர் (கலி. 85:8,9).

3. இடுப்பு. கொடிபோனற நுண்ணிய இடை- இடுபபு- அங்குமிங்கும் அசைய மெல்லிய கரும்புலக் கையால காஞ்சி நிழலில் வெண்மணலைக் குவித்து ஊர்க்குறுமகளிர் குற்றுவர் (அகம். 286:1-5). நுடக் கத்தால் கொடியென, விளக்கத்தால் மின்னென, கட்புலனாகாமையால் அணங்கென, யாதொன்றும் தெரியாத இடையிடத்தே கண் விரும்பிச் சென்றது (கலி. 57:4,5). இளைக்கும் 'இடையை யுடைய நின் வடிவை அறிந்துவைத்தும் அதன்மேல் ஒப்பனை செய்து செல்வச் செருக்கால் நுமர் உன்னைப் புறப் படவிட்டது தவறில்லை என்னலாமா' எனத் தலை வியைத் தலைவன் கேட்டான் (கலி. 58:13,14).

4. நடுநிலைமை. இடை-நடுநிலைமை-தெரிந்துணரும் மயக்கந் தீர்ந்த அறிவாலே முறை வேணடுநர்க் கும் குறைவேண்டுநர்க்கும் விரும்புவனவற்றைத் தொண்டைமான் இளந்திரையன அளித்தான் (பெரு. 443-445). இடைத் தெரிந்துணரும் பெரிய வள்ளல்கள் மாய்ந்தாராக உலகம் உள்ளளவும் பெயர் நிற்கும்படி கொடை புரிந்தவன் நன்னன் (மலை. 542, 543).

5. பொழுது. பகல் இடை-பொழுதில்-தெய்வங்களுக் கிட்ட பலிபோல வழிச்செல்வோர்க்குச் சோற்றை வாடூனோடு தேக்கிலையில் குவித்துத் தருவர் (பெரு.

66, 100, 102). பகலோன் மறைந்த அந்தி ஆரிடைக் கடல ஆரவாரிததெழுநதது (அகம. 201:8,9).

6. செவ்வி. 'குட்டுவன கோதை இருந்த மூதூரிடத்து அதனை உடையவர் போல இடையின்று - செவ்வி பாராமல-நெருங்கிய பெருமையுடைய நாள வையில் செமமாநது செலலுதல எம்மைப் போலும் வாழக்கை யுடைய இரவலர்க்கு எளிது' எனக் கோனாட்டு எறிசசிலூா மாடலன் மதுரைக் குமரனாா கூறுவா (புறம 54:1-4). 'நினனை உயிராக உடைய தலைவி நீ பிரிநதால உயிரவாழாள என இடைகொண்டு (செவவியறிநது) யாமிரப்பவும் எமமுடைய சொறகளைப் பொருட்படுததவிலலை' எனத் தோழி தலைவனிடம் கூறினாள (கலி. 3.6,7).

7. வேறறுமை தமமில், இடை-வேறறுமை-தெரியாளா இருவர் (பெயரால வேறறுமை தெரிந்து அழகால ஒனறி விளஙகுப உருபபசியும திலோததமையும) தம்முடைய வனப பெல்லாம தலைவிகதந்தனா என அவள எழினலம் புனையபபெறும் (கலி. 109' 17, 18).

8 இடையீடு. 'தலைவர், கூட்டததிற்கு இடையாக-இடையீடாக - கொணடது பொருளவயிற பிரியும் பிரிவாயின, அவரையினறி வாழும வன்மையிலேம்; அவர்மீது பழி நிறபத தமது உயிா போம எனறு அவருககுக கூறுக' எனத் தலைவி தோழியிடம கூறினாள (கலி.24'13-17).

இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் - புலவர். பததுப் பாட்டின் மூனறாம பாட்டாகிய சிறுபாணாற்றுப் படையைப் பாடியவா. இடைககழி நாட்டிலுள்ள நலலூரில பிறநதவர் சிறுபாணனை ஓயமானாட்டு நலலியக கோடனிடம் ஆற்றுபபடுத்துவதாகச சிறு பாணாறறுப படை அமைநதுளளது. விறலியின முடிமுதல அடிவரையுள்ள உறுபபுககள சிறபபாகப் புனையபபட்டுள. வஞசி, கொறகை, மதுரை, உறநதை ஆகிய தமிழ வேநதாதம நகர்கள் நனகு போற்றபபெறுகின்றன எழுவளளல்களின்கொடைமையும நாளில இயலபும யாழின புனைவும நலலியக கோடனன பணபுநலஙகளும் இபபாட்டின கண சுட்டப பெறுகினறன. விருநதோமபு முறை சிறப்பாக இடம பெற்றுளளது.

இடைக்கழிநாடு - சிறுநாடு. சென்னைக்குத் தென்மேற் கில உபபஙகழிகளுககிடையே உள்ளது (க.க. தொகுதி 1. பக. 537). இநநாட்டிலுள்ள நலலூரில் தோன் றிய நததத்தனார் என்னும் சஙககாலப் புலவர் சிறுபாணாறறுபபடை பாடியவா.

இடைக்காடன் - புலவர். இவர் பெயரை இடைக் காடனார் எனறு கொண்டு, மலையாளம் சில்லா விலுள்ள இடைககாடு எனனும் ஊரினர் எனறு பி. நா. குறிப்பிடுவா. இவருடைய ஒரே பாடல குறுந்தொகை 251-ஆம் பாடலாக உள்ளது. இடைக்காடன் என்பதனை இடைக்காடனார் எனறே கொணடு இப்பாடலையும் இடைக்காடனார் பாடலோடு சேர்த்துப பி. நா., வை. பி. முதலியோர் எண்ணி யுளளனா. 'பருவ மழை பெயய மயில ஆலவும் பிடவு பூக்கவும் செய்தன; எனினும் பழைய நீரை உகுததுப புதுநீர் கொள் வதற்காக முழஙகும் இடிககுரலைக் கேட்டு இது காாபபருவம் எனறு எணணி வருநதாதே' எனக் கூறித தோழி தலைவியை ஆற்றுவிப்பது நயமுடையதாகும (குறு. 251). இடைககாடனார் காணக.

இடைக்காடனார் - புலவர். இவா பெயரை இடைக காடன் எனறு கருதுவாருமுளா (நறறிணை. பி. நா. பதிபபு - ஆசிரியா வரலாறு). நறறிணை 221-ஆம பாடலின் ஆசிரியர் இளவேட்டனாா எனறு நூலினுள் பி. நா. குறிபபிட்டிருநதபோதிலும், அப பதிப்பில தாமெழுதிய பாடினோா வரலாறறில அபபாடலின ஆசிரியர் பெயர் இடைககாடனாா எனபதனைத் தெரிவுற விளககியுள்ளாா. குறுந் தொகை 251- ஆம பாடலாசிரியன பெயர் இடைக் காடன எனறு மாறே பதிபபுக கூறுகினறது. இவ விருபாடலகளையும இடைககாடனா பாடலாகவே பி. நா. குறிபபிட்டுள்ளாா. வை. பி. பதிபபுப்படி, புறம். 42, அகம. 139, 194, 274, 284, 304, 374 குறுந்தொகை. 251, நறறிணை. 142, 316 ஆகப பத்துபபாடலகள இடைககாடனாா பெயரில உள் ளன. நறறிணை 221 - ஆம பாடலும இவருடையதாயின இவர் பாடியுள்ள பாடல்களின தொகை பதினொனறாகும. அகம். 194, 274, 284, 304, 374, குறு. 251, நற. 221 ஆகிய பாடல கள் முலலைத் திணையிலும அகம 139 - ஆம் பாடல பாலைத் திணையிலும் அமைநதுள்ளன. அவை தலைவன, தலைவி, தோழி கூறறுககளாக உளளன. புறம. 42 - ஆம்பாடல வாகைத திணை அரச வாகைத துறையில் சோழன் குளமுறறததுத் துஞ்சிய கிளளிவளவனைச சிறபபிககின்றது. வள வனின் வீரமிக்க காவற சிறபபிறகுப புலி தன குட்டிகளைக் காபபதையும புலவரெலலாம அவன வண்மையை நாடி வரும சிறபபிறகு மலையில் தோனறிய ஆறுகள பலவும் கடலைநோககி இழி வதனையும் உவமையாகக்காட்டியுள்ளாா். இரவில இடையன் மழை பெயயவும் நீஙகாது, உறி முதலி யவற்றைச் சுமநது, ஊன்றுகோலில ஒருகாலவைத்து நினறு, சீழ்க்கை எழுப்பித தன ஆட்டுக் கிடையினைக காத்து நினற காட்சி சிறபபாகப் புனையப பெற்றுள்ளது. (அகம். 274:1-11; நற. 142:1-7).

இடைக்குன்றூர் கிழார் - புலவர். இடைக்குன்றூர் எனனும் ஊரினா, இவருடைய நானகு பாடல்

புறநானூற்றில் 76, 77, 78, 79 - ஆம் பாடலகளாக அமைந்துள்ளன. வாகைத்திணை அரசவாகைத் துறையி லமைந்த அந்நான்கு பாடல்களும் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் போர் வீரத்தைச் சிறப்பிப்பன. இப்பாடல்களில், நெடுஞ்செழியன் மிகவும் இளை யனாக இருந்தபோது அவனை எதிர்த்துப் போர் செய்ய வந்த சேர சோழ மன்னர் இருவர், பெரு வேளிர் ஐவர் ஆகிய எழுவரையும் தனியே எதிர்த்து நின்று போரிட்டுக் கொன்று வென்ற வெற்றி யினை இடைக்குன்றூர் கிழார் விளக்கியுள்ளார்.

**இடைகழி** - இடைக்கட்டு (அற்றவாயில). மோரிய மன்ன ரின் தேர்ச் சக்கரம் செலவதற்காகக் குறைக்கப் பட்ட வெள்ளிமலைக்கு அப்பாற்பட்ட உலகத்திற் குச் செல்லுகின்ற இடைகழியில் - அற்றவாயிலில் - ஆதித்த மண்டிலம் நிறுத்தப்பட்டு விளங்குகின்றது. அஃது ஆதனுங்கனுக்கு உவமை (புறம. 175:6-10). புகார் நகர அங்காடித் தெருவிலிருந்த மழை தோயும் உயர்மாடங்கள் பலகட்டுககளையும் சிறிய பெரிய வாயில்களையும் பெரிய இடைகழிகளையும் கொண்டிருந்தன (பட். 143,144).

**இடைச்சுரம்** - பாலை நிலத்தின் நடுவிடம். இளையரும் முதியரும் வேற்றிடம் செல்ல, இடைச்சுரத்தில் – பாலை நடு இடத்தில் – இறந்துகிடக்கும் வீரனை அவன் மனைவி எடுக்கவும் எழாது கிடக்கும் தனமை அறிந்து வருந்துகின்றாள் (புறம். 254:1-3).

**இடைப்படை** - படையின் இடைப்பகுதியாகிய பரப்பு. பாசறையினின்று சினந்தெழுந்து வேலினை உயர்த் திச் சேனையைச் செலுத்திப புரியும் போரில் முன் வரும் படையைப் பிளந்து இடம் உண்டாக்கி இடைப்படை - இடைப் பகுதியாகிய – பரப்பில் பொருது இறநத தனிச்சிறபபுடைய வீரனைக் கண்டதாய், வாடுமுலை சுரக்க உவகைக் கண்ணீர் உகுத்தாள் (புறம. 295).

**இடைப்புலம்** - போர்க்களத்தே இடைப்பட்ட நிலம். ஆர மர் நிகழும் போர்க்களத்தின இடைப்புலத்தே - இடைப பட்ட நிலத்தே - ஏற்றின் தோல்போர்த் திய திணபிணி முரசம் முழங்கு (புறம். 288:3-5). மதுரை நகரைச் சூழ்ந்து கிடந்த அகழி தன்பால் படைகொண்டு வநத வேந்தரின் மாறுபாடுகளை அகற்றி, அவர்தம் முரசம் இடைப்புலததே கிடக் கும்படி மீளச் செய்து, புறங்காணும் தனமையுடை யது (மது. 348-352). தோள்வலி யுடைய மழவர் போரில் தோற்றோட, அவர்கள் விட்டுச் சென்ற மையால் இடைப்புலத்தே நினறு கவரப் பெற்ற யானைகளும் குதிரைகளும் மதுரையில் நிறைந் திருநதன (மது. 688, 689, 699).

**இடைமகன்** - ஆயர்மகன். ஆட்டினை மேய்ப்பவர் குட்டிகளை யுடைய ஆட்டினத்தோடே தங்குதற்கு மாலைக்காலத்தில் இடைமகன் - ஆயர்மகன் - பாலைக் கொண்டுவந்து கொடுத்துப் பாற்சோற் றோடே மீண்டும் அவர்களிடம் செல்வான்; சென் னியில் சிறு பசு முகை சூடுவான் (குறு. 229:2-5). கொல்லைகளிலுள்ள குராமரத்தின் வெள்ளிய பூக் களை ஆடு மேயக்கும் இடையன் சூடுவான் (நற். 266:1-3).

**இடைமதில்** – கோட்டை மதிலின் இடைப்பகுதி. புரி சையில் இடைமதிலில்-மதிலின் இடைப்பகுதியில்-பருந்துகள் இளைப்பாறி யிருக்கும் (புறம. 343:15,16).

**இடைமுறை** - இடைக்காலம். 'உலகில் முதன்முறை யிலும் இடைமுறையிலும் - இடைக்காலத்திலும் - கடைமுறையிலும் படைப்பு, அளிப்பு, அழிப்பு என்னும் தொழில் வேற்றுமை பற்றி நீ பிறவாத பிறப்பிலலை; எனினும் நினனைப் பிறப்பித்தோர் எவருமில்லை' என்று திருமாலைக் கடுவனிள வெயினனார் சிறப்பிப்பர் (பரி. 3:71,72).

**இடையன்** - ஆயர் மகன். பசிய இலையால் தொடுக்கப் பட்ட கண்ணியையும் மாசுண்ட உடையையும் மடித்த வாயையும் உடைய இடையன் - ஆயர் மகன் - சிறிய தலையை யுடைய ஆட்டினத்தோடு இருத்தல் (புறம். 54:10-12). வெள்ளாட்டுப் பிழுக் கைகள் பரந்துகிடக்கும் வண்கால்கள் நிறுத்தப் பெற்ற பந்தர்க்கீழ் இடையன் ஏற்றிய சிறிய விளக்கொளியில் பாணர் சூழ்ந்திருக்க, அவர் களின் நடுவே தலைவன் வீற்றிருந்தான் (புறம். 324: 9-12). குளிர் மிகுவதால் புல்லென்னும் மாலைக் காலத்தில் கல்லா இடையன் தீக்கடை கோலாற் கடைந்து தீயை உணடாக்குவான் (புறம். 331:3-5). தொடுதோல் அணிந்த வடுப்பொருந்திய அடி யினையும் தண்டு ஊன்றியதும் கோடரித் தழும்பு பட்டதுமான கைகளையும் உறி சுமந்த தோள் கட்டினையும் பால் மணக்கும் தலை முடியினை யும் பலபூக்களாற் செய்த மாலையையும் ஒன் றாய்ப் பொருந்திய உடையையும் கொண்டு பாற் சோறுண்ணும இடையன் பசுத்திரளோடு காட்டில் தங்குவான் (பெரு. 169-176). முசுண்டை மலர்ந்த நள்ளிரவில் ஆட்டுக் குட்டிகளைச் சேரத் தொகுத்து வைத்துள்ள, ஓலைப்பாயை முதுகிற் கொண்ட இடையன் முல்லை, தோன்றி ஆகிய மலர்களால் தொடுத்த கண்ணி அணிந்து, கொள்ளித் தீயில் உள்ளஙகையை வெம்மையாக்கிக் கொண்டு நரி வாராமல் காவலபுரிவான் (அகம். 94:2-8). இடித்து மழை பொழிந்த நள்ளிரவில, செம்மறித் தொகுதி பாதுகாப்படையத் தீக்கடை கோலால் தீ மூட்டி

உறியும் பானையும் தோற்படுக்கையுமுடைய இடையன் தன் கோலைக் காலுடன் சார்த்தி ஊன்றி நின்று, சீழ்க்கை யெழுப்பி நரி வாராமல் காவல் செயவான் (அகம். 274:2-11). காட்டில் உறையும் இடையன் ஆடுகளை ஒருவழிக்கூட்டற்கு எழுப்பும் சீழ்க்கை ஒலி கேட்டுச் சிறு முயல் அஞ்சிப் புதரில் மறையும் (அகம். 394:13-15). உறியினைக் கையிற் கொணடு தீக்கடை கோலை இட்டுவைத்துள்ள தோற்பையைச் சுருக்கிப பனையோலைப் பாயொடு முதுகில் கட்டியுளள பால விற்கும் இடையன் மழைத்துளி ஒரு புறம் நனைக்க, ஒரு கையிற் கோலை யூன்றி அதன மேல் ஒரு காலை வைத்து ஆடுகள் பிற புலத்திற்குச செல்லாதவாறு காத்துநிற் பான் (நற். 142:2-7). களளியின மேல் படர்நத முலலையின் மலரை ஆட்டினத்தை மேயக்கும் இடையன் இரவில் பறிதது, வெளிய பனங் குருத தின் போழொடு சேர்த்து மாலை கட்டி அணிவான் (நற். 169:4-8).

**இடையன் சேந்தங் கொற்றனார் - புலவர்.** கொற்றன் இவரது இயற்பெயர். சேந்தன் எனபாரின மகனா கிய இவர் இடையன் என்னும அடைபெற் றுள்ளமையால இடைக குடியினர் எனபது தெரி கின்றது. இவருடைய ஒரே பாடல் அகநானூற்று 375 ஆகும. பிரிவிடை வேறுபட்ட தலைமகள தோழிககுச் சொலலும பாங்கில், பாலைத் திணை யில் அமைந்த இப்பாடல், தாம விடுக்கும் அமபின் அமைதி காணபதறகாக, வழிச்செலவோர்பால் அணிகலன் இலலாவிடினும், கல்லா இளையர் கொல்வர் என்று ஆறலை கள்வரின் இயலபினை நன்கு புலப்படுத்துகினறது. இதனகண சோழா பெருமகனாகிய இளம் பெருஞ்சென்னி, யானை யைக் கொணடு வமப வடுகரின பாழியை அழித்து அவர்தம் தலையினைச் சவட்டிக் கொனற வர லாற்றுக் குறிப்பு அமைநதுள்ளது.

**இடையன் நெடுங்கீரனார் - புலவர்.** நெடுங்கீரனார் எனனும் இயற்பெயருடைய இவர் இடையன என் னும் அடைமொழி பெற்றுளளமையால் இடைக் குடியினைச் சார்ந்தவர் என்பது தெரிகின்றது. அக நானூறு 166-ஆம பாடலாக அமைநதுளள இவரது ஒரே பாடல் மருதத்திணையில பரததை கூற்றாக அமைந்துள்ளது. இப்பாடலில் பழைய பலவகை நெறகளையும் கொணட வேலூர் பறறியும் காவிரி நீர் பற்றியும் குறிப்புக்கள் உளளன. பரததையொடு புனலாடிய தலைமகன் தலைவியிடம் தான அவ் வாறு ஆடவில்லை என்று சூளுரைக்கும் செய்தி பாடலில நயம்பெறச் சுட்டப்பெற்றுள்ளது.

**இடையார் - இடையினை உடையவர் (மகளிர்).** தாம் இழைத்த சிற்றிலில் அட்ட சிறுசோற்றை முன் இட்டுப் பின் மறுக்கும் சிறு இடையாரின்-மகளிரின்-பந்தையும் கழங்கையும் களவு கொண்டோடி மைந்தர் சிலர் நீருட் பாய்ந்தனர் (பரி. 10:105-108).

**இடையாறு - ஓரூர்.** குடிதாங்கும் புகழையும் வெல போரையு முடைய கரிகாற சோழனது இடை யாற்றினை ஒதத புகழ்வாயந்த செலவத்தினை ஈட்டுதற்காகத் தலைவன் அரிய சுரநெறி கடநது செனறான் (அகம். 141:22-24,29).

**இடையோர் - இடைச்செல்வோர்.** படை முனனே சென் றோர் பனை நுங்கின் செறிவை உண்ண இடை யோர்-இடைசசெலவோர்-பனம் பழத்தின கனியை நுகர்ந்தனர் எனபதன வாயிலாகச் சோழன் நலங் கிள்ளியின படைப பெருக்கத்தை ஆலத்தூர் கிழார் புலப்படுத்தியுள்ளார் (புறம. 225:1-5).

**இண்டு - ஒருவகைக் கொடி.** தலைவன தலைவியர் உடனபோகும் சுரம், புலிக்குட்டிகள மாலைப் பொழுதில தாம பதுங்கியிருக்கும் மரல தூறுகளை யும் இணடங் கொடியுடன படர்நத ஈங்கையையும உடையதாகும் (நற. 2.5,7)

**இணர் - 1. பூங்கொத்து.** ஆடவர், புனனையின மெல் லிய இணரால-பூங்கொததால-கட்டிய கணணியைச சூடினர் (புறம. 24.7,8). குவிநத இணரையும புலலிய இலைகளையுமுடைய எருககம பூவாயினும கடவுள அவறறை விருமப மாடடேம எனறு கூறமாடடார (புறம. 106.1-3). கோவலா முரமபு நிலமாகிய பறந தலையில அமைககபபடட நடுகலலிறகு, வேஙகை யின ஒளளிய இணராகிய நறுமபூவினைப பனை யோலையால் அலஙகரிததுத தொடுததுச சூட்டி வழிபட்டனர் (புறம. 265.1-5). விரிநத இணராக உளள கொனறை மலராலாகிய மாலையை அணிநத மாாபினை உடையவா சிவபெருமான (பதி. க. வா. 1,2). பெரிய துறையுடைய கழியின கரையி டததே இணாததைநத ஞாழல செழிததிருநதது (பதி. 30·1). பனிககழியில தன இரையைத துழாவி யுணட குருகு அருகிலுளள புனனை மரததில வெள்ளிய இணருடைய தாழநத கிளைகளில தங் கும் (பதி. 30:3,4). கூவலில் இரையினைத துழாவிய நாரை குவிநத இணர்களையுடைய ஞாழல மரத தில தங்கும் (பதி. 51.4,5). மணங்கமழும இணரு டைய கொன்றை மலரை வெளளிய பனங்குருததில வைத்துத் தைதத கணணியினை வீரர் சூடியிருந தனர் (பதி. 67:13). ஒப்பனை செயயும் சூரரமகளிா, கரிய புறவிதழையும் மேலே துயயினையு முடைய மருதத்தின் ஒள்ளிணர்களைத தலையில இட்டு ஒபபனை செயது கொண்டனர் (முரு. 27,28). முரு கன அவுணர்களின் வெறறி இலலையாகும்படி கவிழந்த இணருடைய மாமரத்தினை வெட்டிய

வெற்றியையும் புகழையு முடையவன் (முரு. 59,60). முருகனைச் சேவிக்கும் மகளிர் இலையுடைய நறிய பூங்கொத்துக்களையும் மராமரததின் வெள்ளிய இணர்களையும் இடையிடையே வைத்துத் தொடுக்கப்பட்ட தழையைத் தம் அல்குலில் அணிந்திருந்தனர் (முரு. 201-204). வண்டிகளில உப்பினை ஏற்றி விற்கச செல்லும் உமணப் பெண்டிர், கொம்பிடத்தே இணருடைய வேம்பின் இலையினைத் தம் பிள்ளைக்குக் காவலாகக் கொண்டு செல்வர் (பெரு. 58-60). முலலைநில மக்கள் தம்பால் வருவோர்க்கு வரகுச் சோற்றுடன இணருடைய வேங்கைப் பூவினைப் போன்ற அவரை விதையினை இட்டுச சமைத்த உணவினை வழங்கினர் (பெரு. 193-196). முலலை நிலத்தில் மழை பெய்யத் தளிரையும் இணரையுமுடைய கொன்றை பொன்போல மலர்களைப் பூத்துச் சொரிந்தன (முலலை. 94). தலைவி தோழியுடன விளையாடப் பறித்த பூக்களுள் தூங்கிணர்க் கொன்றையும் ஒன்று (குறி. 86). காவிரிப்பூம் பட்டினததே வெள்ளிய இணரையும் மடலினையு முடைய தாழையை உடைய கரையினைக் கொண்ட கடலின் அருகே பரதவரின் அகனற தெரு விளங்கியது (பட். 118-120). கூத்தரின் சுற்றம் கனனற தீயினைப் போன்று விளஙகும ஒள்ளிணரினைச் சூடிச் சென்றது (மலை. 159). நனனன மலையிடத்தே தோன்றும் ஒலிகளில், தலைநாளில் மலர்ந்த பொன் போலும் இணருடைய வேங்கைப் பூவினைச் சூடுதற்கு மகளிர் (புலிபுலியென்று) கூப்பிடும ஆரவாரமும் ஒன்றாகும் (மலை. 305, 306). தேன் பட மலர்ந்த மெல்லிணரையும் யானை முறித்த ஒள்ளிய தளிருடைய யாம்பூவினையும் மரல நாரில் தளிரோடு தொடுத்த கணணி அணிந்து செல்லுமாறு, நன்னனைக காணச் செல்லும் கூத்தர் ஆற்றுப் படுத்தப் பெறறனர் (மலை. 428-433). வேஙகை மரம் ஒள்ளிணர் விரித்தமையும் திங்கள் ஊர் கொண்டமையும் கூறித தோழி தலைவனிடம் வரைவு கடாயினாள் (அகம. 2:15, 16). பொருள் வயிற் பிரியும் தலைவன் தலைவியை அழைததுக் கொண்டு உடன்சென்றால, கச்சினை விரித்து வைததாற் போல விளங்கும மணலமிக்க காட்டாறறின், இணருடைய பெருங்கிளைகள் தாழந்துளள மணலமேட்டில் அவளைக் கூடுதல் கூடும (அகம். 11:8-10). இணர் மெல்லென மலர்ந்த மராமரத்தின் கொம்பிலுளள பூக்களை, வலலோன் கோல் கொண்டு தாக்கி உதிரச் செய்வது போல மணவாய்த் தென்றல் தீண்டி உதிர்த்தது (அகம். 21:9-12). தலைவன் விரியிணர் வேங்கையின் பூவினாலாகிய கண்ணி சூடியவன (அகம். 38:1). காடு அணிகொள்ளுங் காலத்தில் (இளவேனிலில) மரங்கள் அழகுற்றுச செழித்த இணர்களுடன் நின்றன (அகம. 41:8,9). ஒளியுடைய இலையோடு பொலிந்து விளங்கும் இணருடைய புன்னை மரம் கடற் கானலில் பொனபோனற பூந்தாதினைச் சொரியும் (அகம். 80:11-13). இளவேனிற் காலத்தில் சோலையிடத்தே, அழகிய தளிர்கொண்ட பெரிய கிளைகளையுடைய மாமரத்தின் இணர் நெருங்கிய புதுப்பூக்கள் செறிந்து விளங்கின (அகம். 97:20,21). பெரியன என்பாளின் புறந்தை (புறையாறு எனுமூர்) விரியிணர்ப் புன்னையங் கானல சூழ்ந்தது (அகம். 100:12,13). ஒள்ளிணருடைய சுடரும் பூககளைக் கொண்ட கொன்றையின் நெற்றுக்கள் பாறை மீது பரவிக்கிடந்தன (அகம். 115:10-12). மலைச் சாரற் சிறுகுடியின் தெருக்களில் தேன்கமழும் இணர்களையுடைய வேங்கை மலர் சூடி ஆடவரும் பெண்டிரும் ஆடுவர் (அகம். 118:1-4). யானை சிவந்த காம்பினையுடைய வாலிணர் அசையுமாறு வெண்கடம்பினைத் தன் துதிக்கையால் பற்றித் தினவு பொருந்திய தன் முதுகினைச் சொரிந்து கொள்ளும் (அகம். 121:6-8). எவ்வி எனபான அறமொழி கூறித் தணிக்கவும் தணியாதவனாகிப் பொன்போலும் இணர்களாகிய மலர்களையுடைய (காவனமரமாகிய) புனனையை விருமபி அன்னி திதியனொடு போரிட்டு இறந்தான் (அகம். 126:13-16). கல்லா மறவர் வெணகடம்பின வெள்ளிய மெலலிணரைத் தம தலைமுடியில் அழகு பெறச் சூடினர் (அகம. 127:13-15). மலைச் சாரலில உள்ள சுனையில் அரும்புகளை விரித்த வணடுகள் வேங்கையின் விரியிணரில ஊதிக் காந்தள் குலையில் உறங்கி, யானையின் கன்னத்தில் தோன்றும் மத நீரை உண்பதாகக் கனவு காணும் (அகம். 132:9-13). அன்னி என்பான் குறுக்கைப் பறந்தலையில் திதியனுக்குரிய மெல்லிணர் கொணட புன்னை மரத்தின் அடியினைத் துணித்தான் (அகம. 145:11,12). இரவுக்காலத்தில மலைச்சாரலில் வணடு மொய்க்கும் இணருடைய கோங்க மரததின் உசசியில், மீனொடு விளங்கும் வான எனத் தோன்றிப பின்னர்க் காற்றினால உதிரும் மலர்கள் விண்வீழ் சுடர்ப் பொறிபோலக் காணப்படும் (அகம. 153:13-18). உருகெழு தெய்வததிற்கு இடப்பெற்ற, நறுமண நீர் தெளிககப்பெறற, மணம் வீசும இணர்களாலாகிய பூமாலையை வணடுகள் ஊதாது கழியும் (அகம. 166:5-7). வேட்டைக்குச் சென்ற குறவன் வேங்கை மரத்தின் பொன்போலும் இணர்களைச சூடினான் (அகம். 182:1,6). சுரநெறியைக் கடந்து ஒள்ளிணர்க் கொன்றை மரங்களுடைய மலையை அடுத்த நெறியில் தலைவன் பொருளீட்டச் சென்றான் (அகம். 197:15,16). புலிப்பகையினை வென்று

யானை கை உயர்த்திப் பெருமூச்சு விடுவதால் வேஙகையின் மலர்கள் உதிரும் (அகம். 202:3-8). தலைவன் தலைவியொடு உடன்போகின்ற போது தலைவியின முடியில் வெண்கடம்பின் தேம்பாய் மெலலிணரைத் தளிரோடு சூட்டுவான் (அகம். 221: 6-9). அமபறாத்தூணி தலை திறந்தது போலப் பூத்துள்ள இருப்பையின் தளிர் பொதியப் பெற்ற குவிஇணாகள், நூலினினறுங் கழன்று விழும் முததுக்களைப் போலச் செநநிலத்தில உதிர்ந்தன (அகம். 225:10-12). பொன்போலும் இணருடைய புலிநிற வேங்கைமரம் தனககு முன்னே நிறகப் பொறாது பகைதது அதன் மலர்கள் உதிருமாறு களிறு அடிமரததில பாயநதது (அகம. 227:7-9). புன்னை மரததின வணடுகள் ஒலிக்கும் இணர்களி லுளள பூந்தாதுகள உதிர்ந்து மணங்கமழ் எக் கரினை அழகுசெயயும் (அகம். 250:2-4). தலைவ னொடு புணர்ந்துடனபோகிய தலைவி மெல்லிணர் கொணட தேன் பொருந்திய மராமரத்தின் மலர் களைச் சூடிச் சென‌றாள் (அகம். 261:3, 4). பொற் பூக்கள் நெருங்கியிருநதாற் போன்ற ஒள்ளிணர்ச் செருந்தியின் மலர்களைத் தலைவி கூந்தலிற் சூடி யிருந்தாள் (அகம. 280:1,2). விரி இணரில் தாதுண் ணும் தும்பி ஒலிக்கும் இசைபோல விரைந்து செல்வதால் ஒலிககும அம்பினை யுடையவர் ஆற லைப்போர் (அகம. 291:10-12). இரவில் மேயவரும் யானையைக் காவல் புரியும வேட்டுவன், கவணில் எறிந்த சிறுகல், சிறகினைப் பொருந்திய அம்பு போலச சென்று சாரல் வேங்கையின் விரியிணரைச் சிதறித்தேனை அழித்துப் பலாப்பழததில் தங்கியது (அகம். 292:8-14). பரத்தை மாலைபோன்ற இணர் களையுடைய காஞ்சியின் நறுந்தாதினைக் கூந்தலில் அணிந்திருந்தாள் (அகம.296:1.2). கூததருள் ஆடவர் குவியிணர் எருககின் நெருங்கிய பூக்களாலாகிய கண்ணியை அணிவர் (அகம். 301:11,12). நீர்த்துறை யில் குடத்தினை வைத்துவிட்டுத் தம் கணவரின பரத்தைமையைப் பாடி மகளிர், விரிந்த இணரு டைய காஞ்சி மர நிழலில் குரவையாடினர் (அகம். 336:7-9). மழை பொழிந்த பின்னர் வாய்க்காலில் தங்கிய நீரினை, அறுகம்புல்லை யுண்ட ஏறுகள் பருகிக் காஞ்சிமரத்தின் மாலைபோன்ற இணர்களி னின்றும் உதிர்ந்த நுணதாது மேலே உறைப்ப மணல எக்கரில் துஞ்சும் (அகம். 341:6-11). கார் காலத்தில் சிறந்த பொன்னணிகளைத் தொங்க விட்டாற்போல, நீடிய இணர்களையுடைய கொன் றை அழகு பெற மலர்ந்தது (அகம். 364:4-6). மகளிர் ஊஞ்சலாடுதற்குக் கிளைபோக்கிய, கொம்பில் மலர்ந்த இணர் நிறைந்த வேங்கைமரம் மயிலின் உச்சியிலுள்ள குடுமிபோலத் தோன்றும் (அகம். 368:4-7). மலைச் சாரலில குருவிகளை ஓட்டி, ஒள்ளி ணர்களில் நறுமலர்களுடைய வேங்கையின் கவை யிடத்தே, உயரக் கட்டிய பரணில் வண்டின் இசை கேட்டுத் தலைவியும் தோழியும் இருந்தனர் (அகம். 388:5-9). இணர் நிறைந்த கொன்றையின் நிறைந்த பூந்தாது போலச சமைத்த சோற்றினை இடையர் பசும்பாலொடு கூட்டி அளிப்பர் (அகம். 393:15-17). காஞ்சியின் மென்சினையில் மணஙகமழும் பூக்களு டைய இணர், பயற்றின கொத்துப் போல விருக்கும் (குறு.10:2,3). வணடுகள வீழுமாறு செறிந்து மலர்நத புதுப் பூவையுடைய நீண்ட இணரைத் தழை களின் இடையே கொணட கொன்றை, தலையணி சேர்ததுக் கட்டிய மகளிர் கூந்தல் போலத் தோன் றும் (குறு. 21:1-3). கார்பபருவம் வருமுன் பெய்த வம்பமாரியைக் கணடு கொனறை மரங்கள் தம் கொமபுகளில ஒழுஙகுபட்ட இணர்களைத் தோற்று விததமையால் அவை பேதைமையுடையன என்று கூறித தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (குறு. 66). குவிந்த இணர்களை யுடைய செங்காநதளின (தோனறி) ஒளளிய பூசேவலின் சிவந்தகொண்டைக்கு உவமை (குறு. 107:1,2). வேனிற் காலத்தே தீய்ந்த மராமரத்தின வெவ்விய கிளையில மலர்ந்த ஓர் இணரைத தேனுணணும சாதி வண்டி னோடு ஊதி, அதில ஒன‌றுமின்மையால் தும்பி மீளும் (குறு. 211:4-6). கடற்கரைச் சோலையில் இணர்மலர்நத புன்னைமரம் வளர்ந்த எக்கரில் தலைவனைத் தலைவி கூடப்பெறல (குறு. 299:2-4). மின்னும் இணருடைய புன்னை மரத்தின் அழகிய புள்ளியை யுடைய நிழலில் தோழியும் தலைவியும் அலவன் ஆட்டி விளையாடினர் (குறு. 303:6,7). தலைவியின் ஊர் செவ்வியரும்பு மலர்ந்த பொன் போல் இணர் பொருந்திய வண்டுகள் ஒலிக்கும் கிளையையுடைய புன்னை மரங்களைக் கொண்ட சேரிகளையுடையது (குறு. 320 3-7). பரத்தை தன் கூந்தலில் வண்டுகள் மொய்க்கும் மணமுடைய வெண்கடம்பின் இணர்களைச் சூடியிருந்தாள் (நற். 20:2,3). மலையில் மழை பெய்தமையால் சருகுகளோடு முகிழ்த்த இணர்களையும் சூடிக் கொணடு வரும் ஆற்றின புதிய இனிய நீர் தலைவிக்குற்ற நோய் தீர்க்கும் மருந்துமாகும் (நற். 53:4-8). பரதவர் சேரியை அடுத்து விழாவுக்குரிய மணங்கமழ்வதும் புன்னையின் விளங்கிணர் ஒரு சேர மலர்ந்து மணங் கமழ்வதுமாகிய ஊர் அலர் எடுத்ததனால் அறனில்லாதது என்று தோழி கூறி னாள் (நற். 63:1-5). குவிந்த இணருடைய புன்னை யில் புலவு நாற்றமுடைய நீர் தெறித்தலால் மலர்ந்த கடற்கரையினை யுடையவன் தலைவன்

(நற். 94:5,6). தலைவன் செலவு பற்றித் தோழி கூறக் கேட்ட தலைவி, மறுமொழி கூற இயலாத வளாய, ஞாழலின் அஞ்சினையில் தாழ்ந்துள்ள இணரைப் பறித்து, அதனோடு இளந்தளிரையும் சேரப்பிசைந்து உதிர்த்து மயங்கினாள் (நற். 106: 5-9). பிடி தின்னுதற் பொருட்டுப் பட்டையினைப் பறித்துக் கொண்டதால் நாரில்லாத வெள்ளிய கிளைகளையும் பற்றுக்குறடு போன்ற காய்களை யும் கொண்டுள்ள வெள்ளிய இணருடைய வெட் பாலையின நெற்றுக்கள் அருவிபோல் ஒலிக்கும் (நற். 107:2-5). இளவேனிற் காலத்தில் மரங்கள் இணருற்று மலரும (நற். 118:6). மழை பெய்து தழைத்த சிறிய கிளைகளிலே இணர்களை யுடைய பெரிய தண்ணிய சந்தன மரத்தின் வெட்டப்பெற்ற கட்டையோடு பலபொருள்களையும் சேர்த்தமைத்த சாந்தினைத் தோழியர் தம் தலையில் பூசினர் (நற. 140.1-3). களவில கடுவனைப் புணர்ந்த மந்தி புணர்ச்சி வேறுபாட்டினைச் சுற்றம அறியாதிருப் பதற்காகப் பொன்போன்ற இணர்களை யுடைய வேஙகையின கிளை மீது ஏறிச் சுனை நீரை நோககித் தன தலைமுடியைத் திருத்தியது (நற்.151: 7-11). இளவேனிற் பருவத்தே இணர் நிரம்பிய மாமரததிலுள்ள குயில் கூவும்போதெல்லாம் தலைவி பெரிதும் துன்பமுறுவள் என்று பொருள்வயிற் பிரிந்த தலைவன் தன் நெஞ்சிற் குரைத்தான் (நற். 157:4-7). சிறிய பூவையுடைய ஞாழலின் ஒள்ளிணர் சிறுமியர் வண்டலயருங்கால் வண்டற் பாவையின் கொங்கையிடத்துச் சுணங்குபோல மெல்லிதாகப் படுமாறு பரவும் (நற். 191:1-4). கருவிளை ஒள்ளிய காந்தளுடன் புதரில் அழகுற மலரப் பொற்காசி னைத் தொங்கவிட்டாற் போல அழகிய நல்ல மல ரையுடைய கொன்றையினது ஒள்ளிணர் அதன் கிளைகளில் தொங்க இவற்றால் மணமிக்கது முல்லை நிலம (நற். 221:1-5). குரா அரும்ப (மாவின) இணர்மேல் குயில்கள் எதிரெதிரே யிருந்து, 'கூடிய வாகளே இன்னும் கூடுங்கள்' என்பது போல இசைக்க இளவேனில் வந்தது (நற். 224:3-6). புன்னைமரம் நீலமணி போலும் இலையில் வெள்ளி போன்று விளங்கும் இணரிலுள்ள பொன் போன்ற பூந்தாதினை உதிர்த்தது (நற். 249:1-4). கோவலரின் சிறிய புனத்தைச் சேர்ந்த குராமரத தின குவிந்த இணரிலுள்ள வெள்ளிய பூ இடையன் அணிநதுகொளளுமாறு மலரும் (நற. 266 2,3). அரசனுடைய யானையின் முகததிலணிந்த பொன் னாலாகிய ஓடையினைப் போல உட்டுளையுடைய காயினைக் கொண்ட கொன்றை மரக்கிளைகளில் கொடிபோனற இணர்கள் உயரிய மலையிடங் களில மலரும் (நற். 296:1-5). யாவரும் விரும்புமாறு மலர்ந்த நீண்டு சுரிந்த இணருடைய கொன்றைக் காடு பொற்கலன்களை மிகுதியாக அணிந்த மகளிரைப் போல அழகுமிக்கிருந்தது (நற். 302:1-3). மழை நோக்கி மலர்ந்த நல்லிணர்களை யுடைய எறுழ மலர் மழை நீங்குதலால் நிறம் மாறி வெண்மையாயிற்று (நற். 302:4,5) தலைவன் இரவுக் குறி வந்து, மெல்லிணருடைய நறும் பொழிலில் நம்மைக் காணாது படும் துன்பத்தை நாம் புன்னை மரத்தின் பின்னே மறைந்து நினறு சிறிது காண் போம் என்று தோழி தலைமகளிடம் கூறினாள் (நற். 307:9-11). மந்தியின கல்லாத குட்டி எரி கப்பு விட்டது போல் விளங்கும் மலர்கள் நெருங்கிய இணருடைய வேங்கையின் கிளையில் மறைந் திருந்து, தலைவி தன்கையில் வைத்திருந்த தேன் கலந்த பாலைக் கலத்தோடு பறித்துச் சென்றது (நற். 379:1-5). தலைவன மார்பிலுள்ள அவிழிணர் நறுமாலையில் தேனுண்ட வண்டினம் தலைவியின் கூந்தலில் தங்கின எனக் கேட்ட பரத்தை சினந் தனள் (ஐங். 82). எக்கரிலுள்ள இறங்கிய இண ருடைய தாழ்ந்த கிளைகள் வருந்துமாறு பறவைகள் தங்கின (ஐங. 142:1,2). எக்கரிலுள்ள ஞாழலின் இணர்படு சோலையின்கண், துணையிற் பிரிந்த தனித்த குருவி தங்கி உறங்கியது (ஐங். 144:1,2). எக்கர் ஞாழலின் அரும்பு முதிர்ந்து மலர்ந்த இணர்கள் நீர்த்துறையில் மணங்கமழும் (ஐங். 146: 1,2). கடறகரையி லுள்ள சிறுவெண் காக்கை பொன்னிணர் ஞாழலை வெறுத்தால் புன்னை மரக்கிளையில் தங்கும் (ஐங. 169:1-3). வெள்ளில் ஒத்திரத்தின் (பாலை நில மரத்தின்) குற்றமற்ற வெள் ளிய இணரைச் சுரவழியிற் செல்வோர் வெப்பந் தீரத் தலையில் அணிவர் (ஐங். 301:1,2). முருகன் விரும்பும் பெரிய மலைப்பககத்தில் விரியிணருடைய எறுழம் பூக்கள் பரந்து கிடந்தன (ஐங. 308:2,3). இலவ மரத்தின் ஒள்ளிணரில் மலர்ந்த மலர்கள் காற்று வீசுதலால் இடியில் தோன்றும் நெருப் பினைப் போல நிலத்தில் உதிரும் (ஐங். 320:1-3). சுரத்திலுள்ள அவிழ் இணர் உடைய மராமரத்தின் பூக்கள் அவ்வழி ஏகும் தலைவர், தம் தலைவியரை நினைக்குமாறு மணங் கமழும் (ஐங். 331:1-4). தலைவிபால் ஏற்பட்டுள்ள வேறுபாடு தனிரும் இணரு முடைய கோங்க மலரைத் தலைவன் கொடுத்தமையால் ஆகியது என்று தோழி செவி லிக்கு அறத்தொடு நிற்குங்கால் கூறினாள் (ஐங் 366). தலைவன் கோங்க மரத்தின் பொன்போலும் பசிய பூக்கள் விரிந்த இணர்களை, வேங்கைப் பூ வோடு வேறுபட அணிந்து தேர் ஏறித் தலைவிபால் வந்தான் (ஐங். 367:1,2). வண்டு மொய்க்கும் மரா மரத்தின் கிளையைப் பற்றி, வலமாகச் சுழித்து

மலர்ந்த அதன் இணர்களைத் தலைவி கொய்வதற்காக உடன்போகிய தலைவன் செலவினைச் சிறிது தவிர்த்தான் (ஐங். 383:1-3). புலிப்பொறியினைப் போன்ற வேங்கையின் பொன்னிணர் கொய்து தலைவன் தலைவியின் கூந்தலருகே அணிந்தான (ஐங். 396:1,2). தலைவன் சென்றவழி பொனபோல ஒளிவிடும் இணருடைய கொன்றை மரங்களையும் குருந்த மரங்களையும் உடையது (ஐங். 436). குறித்த பருவததில் தலைவன் திரும்புங்காலை வரகு இணர் சிறந்து விளங்கியது (ஐங். 496:1). ஒரு குழை ஒருவனை (பலராமனை) ஒப்ப இணர்பொருந்தின வெண்கடம்ப மரம் இளவேனிலில் மலர்ந்தது (கலி. 26:1). இளவேனிற் காலத்தில் பெருமையுடைய இணர்களை உடைத்தாகிய ஆற்றிடைக் குறையினைப் புடை சூழ்ந்து வையை அறலுண்டாகுபடி ஒழுகும் (கலி. 30:15,16). (நிலையாமையை) உணர்ந்தவரின் ஈகையைப் போல இணர்விரிந்து எல்லார்க்கும் பயன்படும் மரங்களால் பொழில் அழகுபெற்றது (கலி. 32:11). எதிரெதிரே ஓங்கிய மலைச் சாரலில் இளஞாயிற்றின் கதிரால் அழகு கொண்ட மாணிக்கப் பாறையில் நின்று, இருமலையினின்றும் வீழும் அருவிகள் தன் கொமபுகளில் வீழ்தலால் முதிர்ந்த இணர் மலர்ந்து விளங்கும வேங்கை, அழகிய யானைகள் பூவோடு கூடிய நீரைச் சொரியத் தாமரையின் அழகிய அல்லியில் விரும்பியிருக்கும் திருமகளை ஒத்திருந்தது (கலி. 44:1-7). தலைவியின் நல்லெழில் பக்கமலை யிடத்தனவாகிய எரியினைப் போல விளங்கும் வேங்கையின் இணரை ஒக்கும் (கலி. 45:16,17). தலைவி இளமரக்காவில் நீரோடும் காலிடத்தே நின்ற கொழுவிய நிழலையுடைய ஞாழலின் முதிர்ந்த இணர்களைத் தலையில் முடித்திருந்தாள் (கலி. 56:1-3). குளிர்ந்த மாலையை அணிந்தவன் மலையிடத்துள்ள (பாண்டியனின் பொதிய மலையிலுள்ள) அழகிய இணர்களையுடைய இளவேங்கை மலரைப் போன்ற சுணங்கினை உடையவளே, என்று கைக்கிளைத் தலைவன் தலைவியை விளித்தான் (கலி. 57:16,17). 'பூ நெருங்கின மெல்லிணர் நீங்காத கொடியை ஒத்தவளே' என்று பெருந்திணைத் தலைவன் தலைவியை விளித்தான் (கலி. 62:4,5). கார்காலம் முதிர்கையால் இணர்கள் மலர்ந்து மணம் வீசும் இதழ்களையுடைய மலர்களைச் சூடிப் புலவர் தம கவிகளைப் பெற்று, ஊரைச் சூழந்து வையை வருவது, நிலமடந்தை ஒரு பூமாலையைச் சூழ்ந்து கொண்டதுபோல இருந்தது (கலி. 67:1-3). இணர் நிறைந்த குளிர்ந்த பொழிலில் தலைவன் செய்த குறியிடத்தே வந்த தலைவியைப் புணர்ந்து கொண்டாடி, அப்போதே புனலாடும்படி செய்தவன் மனத்தில் வேறொன்று கருதிப் பரத்தையர்க்குப் பயன்படும் சொற்கூறினான் (கலி. 69:16-19). வண்டுகள் ஒலிக்கும் வகை அமைந்த இணர்களிலுள்ள பூக்களைத் தலையிற் சூடித் தலைவன பரததையிடமிருந்து வீட்டிற்கு வநது தன புதல்வனைத் தூக்க, அவன் அதனைப் பற்றிச் சிதைததான் (கலி. 79:15-18). கொடியை ஒத்த அழகுடையார் சோலையில தோன்றிய பூங்கொடியை வளைத்து இணர்பறிக்க அதன கண்ணுள்ள வண்டின திரள் உடைந்து சிதைந்தது (கலி. 92:25-27). ஒத்த இணர்களில் மொய்த்த வண்டுகளெல்லாம் பெண்கள் நலத்தைக் கைககொண்டு நுகர்வன போல மொய்த்தன (கலி. 92:30,31) தலைவியுடன் கூடி விளையாடும் ஆயத்தார் வாங்கிணர்க் கொன்றை முதலிய மலர்களை அணிந்திருநதனர் (கலி. 102:3-6). மெல்லிணர்க் கொன்றை முதலிய மலர்களைச் சூடி, ஏறுதழுவலைக் காணப் போந்த ஆய மகளிர் பரணமீதேறி அமர்ந்தனர் (கலி. 103:1-9). தலைவன் கடற்கரையில தெரியிணா ஞாழல், புன்னை முதலிய மலர்கள மலர்ந்து மணம் வீசும துறையை உடையவன் (கலி. 127:1,5). மலாந்த துளசியின் மணம் வீசும் இணராலாகிய மாலையைத் திருமால் நீலமணி போலுந் தம் மேனியில் உடையவர் (பரி. 4:57,58). உருள்போலும பூக்களையுடைய கடம்பின் இணராலாகிய மாலையினை முருகன் சூடியுள்ளார் (பரி. 5:81). வையையில் பெருகிய புனல நரந்தம் புல்லில பரவியும் வேஙகை மரத்தின் இணரிலிருந்து உதிர்ந்த பூக்களை மேற்கொண்டும மலை உச்சிகளில் உள்ள பெரிய மரங்களை வேரோடகழந்தும் சென்றது (பரி. 7:11-14). இமயக் குன்றில் முருகனை ஈன்ற தாமரையின் மினபோலும் இணர் உதிராத வற்றாப் பொய்கையை ஒககும் அவனுடைய திருப்பரங்குன்றத்தில் விளங்கும் அருவியையுடைய சுனை (பரி. 8:12-15). திருப்பரங்குன்ற வழியிடையே கொன்றை மரம் மாலை போன்ற இணர்களை மலர்ந்தது (பரி. 8:24). நல்ல இணர்களைக் கொணட நாகம் (சுரபுன்னை) வையை யாற்றின் இருகரைகளிலும் மணம் வீசியது (பரி. 12:80). அழுகின்ற பெண்களுக்கு அதனைத் தீர்த்தற் பொருட்டுத் தாயர் புலி புலி என்று சொல்லுமாறு, பாறைகளில் மெல்லிணர் வேங்கை மலர்கள் பரந்து கிடந்தன (பரி. 14:11,12). மணம் வீசும் இணருடைய துளசி மாலை யணிந்த திருமால் அருள் புரிந்தாலலலாமல் வீடுபேறு அடைதற் கரியதாகும் (பரி. 15:15,16) சுனையெல்லாம் நீலம் மலர்தலாலும் சுனையைச் சூழ்ந்த இடமெல்லாம் அசோகமும் காய்கனியோடு நிறம் வேறுபடும் அரும்பினை யடைய இணர்

கொண்ட வேங்கையும் மலர்வதாலும் திருமாலிருஞ் சோலை திருமாலை ஒத்திருக்கும் (பரி.15:30-33). கரையிடத்துள்ள இணர்மிக்க மரங்களின் பூக்களும், மகளிர் கதுப்பிலிருந்து நீங்கிய மலர்களும், மைந்தர் மார்பிலிருந்து நீங்கிய மலர் இதழ்களும் பரந்து விளங்கச் செல்லும் வையையாறு வானத்தில் செல் லும் கங்கை யாற்றினை ஒக்கும் (பரி. 16:32-36). மிக விரும்பப்படும் நுனி சாய்ப்பினை யுடைய. மணங்கமழும் இணர் கொண்ட மரக் கிளை யினைப் போழ்ந்து புறப்பட்ட இளந்தளிர்களை மகளிர் சுனையில உதிர்த்தனர் (பரி. 19:67,68). சுனை யருகே மற்ற மலர்களோடு தீப் போலும் இணரினைக் கொண்ட வேங்கையும், ஊழ் இணர் நறவும் மலர்ந்து விளங்கின (பரி. 19:77,78). சுருளுந லுடைய வள்ளிப் பூவினை இடையிட்டுத் தொடுத்த உருள் இணர்க் கடப்பம் பூவாலாகிய மாலையினை முருகன் அணிந்துள்ளார். (பரி. 21:10, 11). நெடுவேளாகிய முருகன் உருள் இணர்க் கடம் பினையுடையவர் (பரி. 21:50). காற்றாகிய நட்டுவன் மெல்லிணர்ப் பூங்கொடியாகிய விறலியை ஆடச் செய்தான் (பரி. 22:42,43).

2. பூ. சந்தனத்தை உரைத்தது போல் நிறமுடைய குழம்பினைக் கோங்கரும்பு போன்ற இளங்கொங் கையில், மணம் நாறும் மருத இணரை – பூவை – அப்பினாற்போல அப்பி ஒப்பனை செய்வர் (முரு. 33-35).

3. பூவிதழ். தலைவி ஆயத்தொடு பறித்துப் பாறை யில் தொகுத்த மலாகளில் பல்லிணர் - பூவிதழ் - கொண்ட குரவமும் ஒன்று (குறி. 69). பரததையிட மிருந்து வந்து தன் தவறு யாதென்று வினவிய தலைவனிடம் அவள் (பரதகை) 'நின் மார்பில் கிடந்த மணம் வீசும் இணருடைய மாலையை அறுத்தமை நின் தவற்றிற்கு அமையுமா' என்று காதற் பரத்தை வினவி அவன் தவற்றினைச் சுட்டினாள் (கலி. 90: 15,16).

4. ஒழுங்கு. திருமால் ஏந்தியுள்ளவற்றுள் புகர் இணர் - ஒழுங்கு – சூழ்ந்த பாரா வளை (சுழல் படை) ஒன்றாகும் (பரி. 15:61).

5. குலை. சோணாட்டு வயலருகே இணர் - குலை – உடைய பனைமரம் வளர்ந்திருந்தது (பட். 18).

6. வலிமை. 'காதலர் பிரியின், நலன் நுகர்ந்து கை விட்ட, பாழ்பட்ட மேனிகண்டு நோய வருத்த, இணர் – வலிமை - இற்றுடையும் நெஞ்சததோடு அவர் புணர்தலை விரும்பிப் பற்கடித்து நடுங்கு வோம்' என்று தலைவி ஆற்றாளாய்த் தோழியிடம் கூறினாள் (அகம். 217:16-20).

**இணை** - இரண்டு. காவிரிப்பூம் பட்டினத்தில் இம்மை மறுமைகளில் உண்டாகிய இன்பத்தைத் தரவல்ல இணை - இரண்டு – ஏரிகள் (சோமகுண்டம், சூரிய குண்டம) இருந்தன (பட். 39). 'குதிரையின் தாவிச் செல்லும் இணையொத்த கால்கள் மெதுவாக நடக்குமாறு, தாற்றுக்கோலால் குத்துவது மறந்து செலுததுவாயாக' என்று வினைமுற்றி மீளும் தலைவன் தன் தேர்ப்பாகனிடம் கூறினான (அகம். 134:7-9). 'வாணன் சிறுகுடியிலுள்ள சோலை போல் மணக்கும் கூந்தலையும், ஒளி பொருந் திய கொடியையு முடைய தலைவியின் தோளி ணையை முயங்க விரைந்து செல்லுவாயாக' எனத் தலைவன் தேர்ப்பாகனுக்' குரைத்தான் (அகம். 204:12-14). 'நீரில் தோன்றிய நிரையாக வுள்ள இதழுடைய குவளையின் எதிர்மலர் இணைப் போது போன்ற செவ்வரி படர்ந்த கணகள் நீர் கொள்ளுமாறு பெருமூச்செறிந்து வருந்துவளோ' எனத் தலைவன் இரங்கினன் (அகம். 381:19-21). தலைவியின் தோள் இணையிலே துயின்று வாழும் நாளே நாள்களாகும் என்று வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப் பாகனிடம் கூறினான் (குறு. 323: 6, 7). 'சுணங்கணிந்த மார்பையும் குழையையும் பிரிவுப் பிணியுற்ற தோளிணையையும் குழைந்த மாலையையு முடையவளாய்க் கொடிபோன்ற நும் முடைய காதற் பரத்தை எமது தெருவில் செல்லக் கண்டேன்; அவள் வாழ்வாளாக' எனத் தலைவி தலைவனிடம் கூறினாள (நற். 20:8-11). தலைவி பிரிந்தமையால், தேமொழியையும் துணையின்றி வருந்தும் நெஞ்சையும் இணையேர் உண்கண் களையும் கொண்டு வருந்தும் தோழிக்காக நற் றாய் வருந்தினாள் (ஐங். 378:3-5). தலைவியின் தோளிணை மூங்கிலின் அழகினைத் தம்மகத்தே கொண்டன (கலி. 21:14). பரத்தையை யானையா கக் கூறிய தலைவி, 'தலைவன் தொடிசெறிந்த தோளிணையாகிய மருமத்தே பொருந்தித் தழுவிக் கொண்டு தத்தி யானை மீது ஏறினான' எனக் கூறல் (கலி. 97:22, 23). திருமாலின் கண்கள் தாமரை மலர் இணைகளைப் பிணைத்ததனை ஒக்கும் (பரி. 2:53). வீடளிக்குங்கால் திருமாலினும் சிறந்தன அவருடைய தாளிணை (பரி. 4:62).

2. இணைதல். இரட்டைக் கதவினைச் சேர்த்து இணை - இணைதல் - மாட்சிமைப் பட்டுப் புதிய போதாக அவிழ்ந்த் குவளைப் பூவோடு, பிடிகளைத் தன்னிடததே பண்ணி, உத்திரம் என்னும் பெயர் பெற்ற கற்கவியில் செருகப்பட்ட நெடிய நிலை அமைக்கப்பட்டது (நெடு. 81-83). மெல்லிதாக விரிந்த இணை அணைந்த படுக்கையின் மேல அன் னத்தின் தூவி பரப்பப்பட்டது (நெடு. 132, 133).

3. **கடைஒப்பு.** ஆயத்தார் நன்றெனறு ஆராயந்த சூரர மகளிரின் இணை - கடையொத்த - நெய்ப் பினையுடைய மயிரில் வெட்சியிதழும குவளையித ழும் கிள்ளி யிடப் பெற்றன (முரு.20-22). தலைவி அழகிய வளையலையும் இணை ஈரோதியையும் உடையவள் (ஐங். 269:3, 4).

4. **ஒப்பு.** தாமரையின் தனித்த மலர்கள் இரண்டு தம்மில் சேர்ந்து இணை-ஒப்பு-அமைநத அரும்பு களுக்கு நடுவே வேறொரு பூ தம் அருகு சேர்தலின்றி மலர்ந்திருந்தன (கலி. 77:1,2). மகளிர், துணை இணை இரண்டும் தம்முள் ஒப்பான சிலம்பினை அணிந்திருந்தனர் (பரி. தி. 1:61).

**இணைப்பு - கூட்டுதல்.** சூரர மகளிர் அழகு பெற்றுத் தோன்றும் நீக்கீழ் நின்ற சிவந்த அரும்பினை இணைப்பு - கூட்டுதல் - பொருந்திய மாலையினை வளைய வைத்து ஒப்பனை செய்தனர் (முரு. 29,30).

**இத்தி – இத்திமரம்.** தலைவன தலைவியைப் பிரிந்து செல்லுங்கால் சுரநெறியுள்ள சீறூரின் பக்கத்தே புல்லிய அடியினையுடைய இத்தியின் புகர் நிழலில் இருள மிக்க மாலைப் பொழுதில் அவளுடைய நீர் சிநதும் கண்கள் தோன்றித துயர்தரும (அகம். 77: 12–14,19).

**இதக்கை - நுங்கின் தலையிலுள்ள தோடு.** நடுகல்லினை ஆள் எனககருதி உதைத்த காட்டு யானையின வலிய நகம் பெரிய பனை நுங்கின இதக்கை-தோடு-போல ஒடிந்தது (அகம. 365:4-6).

**இதண் - பரண்.** தினைபபுனததில் மகளிர் கிளி கடிதற்குக் களிறு கை நிமிர்த்து முயலினும் பற்ற முடியாதவாறு உயர்ந்த மலைக்குகைமேல் இதண-பரண - அமைத்தல் (அகம. 308:9, 10). இதணம காண்க.

**இதணம் - பரண்.** மரததின உச்சியில் சேமோன் (பரண மேலிருபபவன) புலி அஞ்சுதற்குக் காரண மான இதணம் - பரண - அமைததனன (குறி. 40, 41). தினைப் புனத்தைக் காக்குங் குறவர், பகலில உயர்ந்த நிலையினை யுடைய இதணம் ஏறிக் கையைக் கொட்டிக் கவண கல வீசி யானையை விரட்டுவர் (மலை. 203-206). மலையில வேங்கைமரக் கவட்டில அமைக்கபபட்ட இதணததில் தலைவி யும தோழியும் பொன் போலும் பூந்தா தாதும் தும்பியின் இசைகேட்டிருப்பர் (அகம். 388:7-9). மலைமேலே கட்டப்பட்டுத் தனியாக நிலைபெறும் இதணம் தனிமையுறுமாறு கவலை நீங்கிச் சென்று தலைவியும தோழியும் தலைவனுடன் விளையாட் டயர்ந்தனர் (நற். 194:5-8). வேங்கை மரத்திற் கட்டிய இதணததின் அருகில அயலானொருவன் காதற் பரத்தையைக் கூடினான (நற். 216:6-8). வேங்கைமரம் நிறைந்த குன்றில் சந்தன மரத்தால் செய்யபபெற்ற இதணம், களிற்றின் வலிமைக கஞ்சாத புலித்தோலால் வேயப்பட்டது (நற. 351: 5-7). தலைவனொடு மலைபபக்கத்தில் அருவியாடி, வேஙகை மரத்தின்மேல கட்டிய பரபபமைநத இதணம ஏறித தினைப்புனததில கிளி கடிவது இன்றும் கூடுமோ' எனறு தோழி செறிப்பறி வுறுததினாள (நற. 373:5-9). தினைபபுனத்தில இட்ட இதணத்தில எரிக்கபபட்ட அகிறபுகையால மறைபபுணடு ஒளிகுறைந்த மதியம மலையில இழைதத தேனிறால போலத் தோனறும (கலி. 39: 7-9). இதண காண்க.

**இதல் - சிவற்பறவை** (காடை). படலை முற்றத்தில் சிறு தினையைப் பெய்து அவற்றைப் புறாவும் இதலும்-சிலறபறவையும்-உணணுமபோது பிடிததுச சமைத துப் பாணாக்குணவு அளிப்பதுணடு (புறம். 319.5-7). மனையோள புறம் போநது ஓட்டாமையால மனை முனறிலிடத்தே, மான தோலில் உணர்த்திய தினை யாகிய உணவைக் கானக் கோழியொடு இதல கவாநது உண்டது (புறம். 320 9-11). இதலின முள் செம்முலலையின் சிவந்த அரும்பு போனறது (அகம். 23:3). வெட்சியின அருமபு இதல முள போன றிருககும் (அகம. 133 14) வேடடுவரின விளியோசைக கஞ்சி, வரி பொருந்திய புறததினை யுடைய இத லின மணிபோலுங கண்ணுடைய பேடை, நுண ணிய புளளிகள அழகு செயயும் கழுததினையும் கூரிய முள்ளைக் கொணட செங்காலையு முடைய சேவலை அழைககும் (அகம. 387:9-12).

**இதழ் - 1. பூவிதழ்.** சேற்று வளா தாமரை பூத்த ஒள்ளிய நிறததையுடைய நூறு இதழ் - பூவிதழ - கொணட மலரின நிரை, வேற்றுமை இல்லாத சிறநத குடியிற் பிறந்து வீற்றிருநத அரசர்கட்கு உவமை (புறம. 27: 1-4). சுனையில தழைதத மா யிதழக குவளையின் வணடு மொயக்கும் புதிய மலரில துளி கலககுமாறு மழை பெயயும (புறம. 105: 2-4). 'நும் போனறார்கசு ஈமததீ அரிதாகட்டும், கணவன இறநதுபடவே அரும்பு இலலாதபடி வளளிதழ் மலாநத தாமரையினுடைய நீர் மிகக பொய்கையும் தீயும் எனககு ஒரு தனமையவாகும்' எனறு தீப்பாய்வதினினறும் தம்மைத் தடுத்து வேண்டிக்கொணட சான்றோரிடம்பூதபாண்டியன தேவி பெருங்கோப் பெண்டு கூறினாள் (புறம். 246: 11-15). வயலில் மலாநத சிவந்த இதழுடைய தாமரை, அநதணர் அறங்கருதிச் செயயும வேள் வித்தீயோடு விளங்கும் வளமிக்க நாட்டிற்குரியவன் கிள்ளிவளவன (புறம். 397:19-21). நீர்த்துறையிடத் தில நீலமணியிற் செய்த கலததினைப் போன்ற

மா இதழ் பொருந்திய நெய்தலின் பசிய இலை நிறைந்த கழியில் துழாவி இரையுண்ட குருகு புன்னையின் கிளையில் உறங்கும் (பதி. 30:1-4). பகைவர் போர் முனைகளைச் சுடும் நெருப்பு வெதுப்புதலால், கடல்பிறக்கோட்டிய செங்குட்டு வன் அணிந்துள்ள மாலையின் மலரிதழ் பெரிதும் அழகிழக்கும் (பதி. 48:10,11). ஆடு கோட்பாட்டுச் சேரலாதனின் ஈரிதழ் மழைக்கண் உடைய மனைவி ஒள்ளிய இதழையுடைய மலர்ந்த பூவினை யொக்கின்ற சிறிய அடியில் கிண்கிணி அணிந் திருந்தாள் (பதி. 52: 18-20). செல்வக் கடுங்கோ வாழியாதன் கழியில் மலர்ந்துள்ள கரிய நிறமுடைய நெய்தல் மலரிதழின் அழகினை ஒத்த தோற்றங் கொண்டவன் (பதி. 64:16,17). மெல்லியல் மகளிர் அசைந்து நடந்து சென்று (மருதநிலத்தி லுள்ள) வள்ளிதழ்த் தாமரையினை நெய்தலோடரிந்து பின், (முல்லை நிலத்தில்) கிளி கடிதலை விரும்பி அதற்குரிய பாட்டைப் பாடுவர் (பதி. 78:4-6). சூரரமகளிர் தம் முடியில் வெட்சி மலர்களை விடு பூவாகத் தூவி, அதற்கு நடுவே குவளையினது தூய இதழைக் கிள்ளி இட்டு அணி செய்தனர் (முரு. 21,22). பாடினியின் துவர்வாய் இலவின் இதழினை ஒக்கும் (பொரு. 27). எருமை கொழுவியமீன் துணி பட நடந்து சென்று வளவிய இதழுடைய கழு நீர்ப் பூவை உண்டது (சிறு. 41,42). அங்கையினைச் சாதிலிங்கம் தோய்த்தது போலச் சிவந்த இதழ் சூழ்ந்த தாமரையிடத்தே பொன்னால் செய்தது போன்ற பீடத்தில் (கொட்டையில்) தும்பி தன் பெடை யுடன் துயின்றது (சிறு. 73-76). யாழின்தோல் வள் ளிதழ் கொண்ட பாதிரி மலரின் வயிற்றிடத்தைப் பிளந்த உள்ளிடத்தினைப் போன்ற நிறமூட்டப் பெற்றிருக்கும் (பெரு. 4-6). குறிய முயலின் நெடுஞ் செவி, தாமரையின் புறவிதழை ஒக்கும் (பெரு. 114, 115). அரக்குப் போன்ற இதழுடைய குவளையோடு நீல மலரும் நிறமாறுபடும் ஏனைய பல மலர்களும் முதுநீர்ப் பொய்கையில் மலர்ந்திருந்தன (பெரு.293, 294). நான்முகனைப் பெற்ற நீல வண்ண நெடி யோனின் (திருமாலின்) திருவுந்தியாகிய பல இதழு டைய தாமரையின் பொகுட்டினைப் போன்றது, செங்கல்லாற் செய்யப்பட்டு உயர்ந்த புறப்படை வீட்டைச் சூழ்ந்த மதில் (பெரு. 402-405). பொய் கையில் தாமரையும் நெய்தலும் வள்ளிதழ் விரிந்த நீலமும் ஆம்பற்பூவும் வண்டுகள் தங்கும் மண நாறும் பிறபூக்களும் விளங்கின (மது. 249-253). இரவு வரக் கூட்டத்தை விரும்பியிருப்பவர், தம் கண வரைக் கூடுதற்கு ஆயிதழ்களை யுடைய குளிர்ந்த நறிய கழுநீர் மலர்களை மாலையாக்கிச் சூடுவர் (மது. 549-551). மகளிர் முகத்திற்குக் குளத்தில் மல ரும் சுடரிதழ்த் தாமரைப் போது உவமம் (மது. 710,711). ஏறுடை இன நிரையை முல்லை நிலத் தில் மேயவிட்டுப் புலம் [illegible]ர் தனிமையோடிருக் கும் கோவலர் அணிந்த [illegible]ந்தள் நீடிதழ்க் கண் ணியை அலைக்குமாறு மழை பெய்தது (நெடு. 3-6). (பொழுதறிய மு[illegible]ாதபடி மேகம் மூடிய மழைக் காலத்தில்) மகளிர், பிடகத்தில் இட்டுவைத்த பித்தி அரும்பு இதழ் அவிழும் செவ்விநோக்கிப் பொழுதறிந்தனர் (நெடு. 39-41). தலைவியும் தோழியும் பறித்துப் பாறையில் குவித்த மலர்களில் வள்ளிதழ் ஒண் செங்காந்தளும் ஒன்று (குறி. 61,62). புற இதழ்களை அகற்றிப் பாம்பின் படம்போலும் அல்குலில் தழை யைக் கூட்டி மகளிர் உடுத்துவர் (குறி. 101,102). பசிய காம்பினையுடைய பிச்சியின் அழகிய இதழ் களையுடைய பூவைத் தொடுத்த தொடையாகிய வடத்தைத் தலைவன் சென்னியில் சுற்றியிருந் தான்(குறி. 117,118). ஆம்பலின் அழகிய இதழ்கள் தளை அவிழும் மாலைக் காலத்தில் மகளிர் தம் மனைகளில் விளக்கேற்றுவர் (குறி. 223,224). முதலைகள் செருக்கித் திரியும் பொய்கையில் மா இதழ்க் குவளையொடு நெய்தலும் மயங்கிக் கிடத் தல் (பட். 241,242). புதிய காந்தள் அரும்புகளைத் தசை எனக் கருதி எடுத்த பருந்து அவற்றை ஊன் அன்மை அறிந்து தின்னாமல் சிந்திய காந்தளின் பல இதழ்கள் பாறைகளில் பரவி, வெறியாடுங் களத்தைப் போல மணம் வீசின (மலை. 145-150). நன்னன் மலையிடத்தே நிரைத்த இதழையுடைய, தெய்வம் விரும்புதலால் கடியவாகிய குவளைப் பூக்களைத் தொட்டாலும், வரையரமகளிர் இருப் பினைக் கண்டாலும், உயிர்போகும்படி வெதும்பி நடுங்கும் நிலை உண்டாகும் (மலை. 189-191). மலை யில் தோன்றிய பல்வகை ஆரவாரங்களில் நல்ல ஏறுகள், வள்ளிதழ்க் குளவியும் குறிஞ்சியும் குழையு மாறு போர் செய்யும் ஆரவாரமும் ஒன்றாகும் (மலை. 334,335). காந்தட் பூவின் வள்ளிதழ், உடைந்த வளையல்போலக் காணப்படும் (மலை. 519). தலைவியின் இனிய சிவந்த வாய்க்கு முள் முருக் கின் இதழ் உவமை (அகம். 3:15). குழந்தையின் மாசில் லாத அகங்கைக்குத் தாமரையின் பூந்தாதாகிய அல்லியின் அகவிதழ்உவமை (அகம். 16:1-3). குவளை யின் கரிய இதழினை ஒத்து நீர்மிக்கு விளங்கிய தலை வியின் கண்கள், உள்ளம் கொதித்தலால் நறவம் பூவின் சிவந்த இதழைப் போலாயின (அகம். 19:9-12). உழவர் வயலில் வேலை செய்யுங்கால் வெயி லில் பின்புறம் தோன்றுமாறு வைத்துப் பதத்தில் எடுத்துச் செய்யப்பட்ட மிக்க இதழ்களையுடைய பசுங்குடையினைப் புதுக்குடத்தில் மாவடு இட்டுப் புளிப்பதன் அமைத்த நீரைக் குடிக்கப் பயன்படுத்

தினர் (அகம். 37:9-11). தலைவன் வேங்கைப் பூவி னாலாகிய வண்டு மொய்க்கும் கண்ணியையும் தெரி இதழ்க் குவளை மாலையையும் அணிந்திருந் தான் (அகம். 38:1,2). சுனையில் நீடிய இதழ்கள் பொருந்திய அழகிய நீலமலர் கண்போல மலர்ந் தது (அகம். 38:10,11). மகளிரின் கண்போன்றுள்ள இதழ்களை யுடைய ஒண் செங்கழுநீர்ப் பூக்களை ஊசியால் சேர்த்துச் சுற்றிக் கட்டிய மாலையைத் தலைவன் அணிந்திருந்தான் (அகம்.48:8,9). பல இதழ் கொண்ட பூப்போலும் குளிர்ந்த கண்ணை உடைய மாமை நிறத்தினள் தலைவி (அகம். 51:9,10). பனிக்காலத்தில் வீசும் வாடைக்காற்றால் மூங்கில் மலர்கள் உதிரும்; காந்தளின் நீடிய இதழுடைய பெரிய மலர் முறியும் (அகம். 78:8-10). திருமணத் தில் நீரொடு சொரிந்த ஈரிதழ் அலரி நெல்லொடு மணமகள் கூந்தலில் விளங்க மங்கல மகளிர் நால் வர் வாழ்த்துதல் மரபு (அகம். 86:12-17). தலைவி பல இதழ்களை யுடைய மெல்லிய மலர்போலும் மையுண்ட கண்களை உடையவள் (அகம். 109: 1). மழையால் தழைத்த அறுகின் நீலமணி போன்ற கரிய இதழுடைய பாவை போலும் கிழங் கிடத்துள்ள அரும்புடன் கட்டிய வெண்ணூலை மணமகளுக்குக் கட்டினர் (அகம். 136:12-14). கண் போனறு மலர்ந்த நெய்தல் மலர்கள் மாலைக் காலத்தில் மணி இதழ் கூம்பின (அகம். 150:8,10). தலைவன் பிரிவான எனக் கேட்டமையின் தலைவி யின் பல இதழ்களுடைய மலர் போன்ற மையுண்ட கண்கள் அவளுடைய முலைகள் நனையுமாறு நீர் சிந்தின (அகம். 161:10-14). கழியில் கணபோல் மலர்ந்த நெயதற்பூவின் கமழும் இதழ் மணத் தினை அமிழ்தம் என விரும்பிச சென்று வணடுகள் தாதினை உண்டன (அகம. 110:4-6). மிளகின் தளிரை உண்டு வெறுத்த முதிய ஆண்குரங்கு உயர்ந்த மரக் கிளைகளில் தாவுதலால் உதிர்ந்த மணம் நாறும் இதழ்களுடைய மலர்கள் பரவச் சாரல் வெறியாடு களத்தினை ஒக்கும் (அகம். 182: 14-17). உமணர் வழியிலுள்ள பாதிரிப்பூவை நெருப்புப் போன்ற இதழினை யுடைய அலரிப் பூவுடன இடையிடையே கலநது தாழை வெண தோட்டில கட்டிய கண்ணியை அணிவர் (அகம்.191: 1-4). பக்க மலையிலுள்ள கண் போல் மலர்ந்த கரிய இதழினை யுடைய குவளைமலர் கொண்ட சுனையில் தலைவனும் தலைவியும் விளையாடினர் (அகம். 288:3-5). தலைவனின் பிரிவால் வருத்தமிக்க தலைவியிடம் தோன்றிய கணணீர் பல இதழு டைய (தாமரை) மலர் போன்ற குளிர்ந்த கணணி லுள்ள கருமணியை மறைத்தது (அகம. 229.11,12). வாடைக காற்றால செங்காந்தள், சுடர்கொள் அகலினைப் போலச் சுருங்கிய இதழ் விரிந்தது (அகம். 235:7,8). தலைவன் பிரிந்தமையால் தலைவி, தன் பல இதழுடைய தாமரை மலர் போலுங் கண்ணின் உள்ளிடமெல்லாம் சிவக்குமாறு துன்ப முற்றாள் (அகம். 244:9,10). மீன்வேட்டுவர் கழியில் மலர்ந்த வள்ளிதழுடைய நீல மலரை ஞாழல் பூக்க ளொடு அணிவர் (அகம். 270:1-3). மாரிக் காலததில் மலரும் பிச்சியின் குளிர்ந்த இதழை ஒக்கும் அழகிய குளிர்ச்சி பொருந்திய சிவநத கடைபபகுதி கொண்ட கண்ணுடையவள் தலைவி (அகம். 295:19, 20). தலைவனொடு அருவியாடலும் சுனையில் பல்லிதழ நீலமலர்களைப் பறித்துச சோலையில் விளையாடலும் இனி அரிய ஆகலாம் எனறு தோழி தலைவியிடம் கூறுகினறவளாயச் சிறைப் புறம் உரைத்தாள் (அகம. 302:4-8). குவிந்த அரும்பு களையுடைய முள் முருக்க மரத்தின் கூரிய முனை யுடைய முதிராத இதழ, செம்பஞ்சுக் குழம்பூட்டிய மகளிர் நகததை ஒக்கும் (அகம். 3-7:4-6). தாழையின் தாதாகிய பொடி அபபிய தலைவி கூந்தலின மெல் லிய பின்னலில் விரும்பப்படும் பூவிதழை வைத்துப் பினனுவர் (அகம். 353:19,20). கண் போன்ற இதழு டைய தண்ணறுங் குவளையாலாகிய சிறிய மாலை யினைச் செருகிய நறிய கூந்தல பரக்கத தலைவி ஆயத்தொடு சுனை ஆடுவதுணடு (அகம. 358:5-7). தலைவியின் அழகிய முகததிடததே சுழலும பெரிய கணகள், தூய தாமரைப பூவில கரிய இதழகளு டைய குவளை மலர் இரணடினைப் பிணைதது வைத்தாற் போனறு விளஙகும் (அகம். 361:1-3). தலைவனைப் பிரிநத தலைவி, நிரையாகவுள்ள இதழகளைக் கொணட குவளையின் இரண்டு பூக் களைப் போன்ற செவ்வரி பரந்த குளிரநத கணகள் நீர் கொளளுமாறு வருந்துவள (அகம. 381.19-21). தலைவன மனையில் இருநதபோது, பகற்போதும் நீங்காதவனாகிப் பல இதழகளையுடைய எதிர் மலர்களைக் கிளளி அவ்விதழகளுடன் நிறம் வேறு பட ... வலியோடு, வனமுலையில் அப்பித தலை விக்கு ஒபபனை செய்தான (அகம். 389:4, 5). மயிர்ச் சாநது பூசப்பெற்ற தணணறுங் கூந்தலில குவ ளைபபூவோடு விளஙகும் இதழ்களுடைய காட்டு மலலிகைப் பூவினை அணிநதுளள தலைவியொடு புணரும் இனதுயில் மறநது தலைவன் சென்ற விடத்தே தங்கியிரான் (அகம். 393:23-26). தலைவன பிரிந்தமையால் பல விதழ்களை யுடைய மலர் போன்ற தலைவியின கணகள் இமை பொருந்தா திருநதன (குறு. 5:4, 5). காந்தள் மலரையும அரும்பு மலர்ந்த முலலை மலர்களையும் மணக்கும இதழ் களையுடைய குவளைமலரோடு இடையிடையே பொருந்துமாறு கலந்து அமைத்த மாலை, தலைவி

மேனிக்கு உவமை (குறு. 62). சிவந்த வாயினை யுடைய நாரையின் தூவிக்கு முள்முருக்க மலரின் இதழ் உவமை (குறு. 103:2). தேரில வந்து மீளும் தலைவன் சென்ற சோலை, தேர்ச்சக்கரத்தால் வளவிய இதழ் ஒடிந்த நெய்தல் மலர்களை உடை யது (குறு. 227). காநதள் மலர்ந்து மணம் வீசும் நன் னுதலையும் பல்லிதழ்களையுடைய மலர்போலும் கணகளையு முடையவள் தலைவி (குறு. 259:2-4). காந்தள் அரும்பு வண்டு வாய்திறக்கும் போது இதழபிணி யவிழந்து தேனை உதவும் (குறு.265:2,5). அழுத தலைவியின் கண்கள் ஆழ்ந்த சுனையிற் பூதத குவளை... இதழ்கலைந்து, மழைததுளியை ஏற்றுக்கொணட மலர்களைப் போன்றன (குறு. 291:5-8). தலைவன் பிரிந்ததனால தலைவியின் மாஇதழ்க் குவளை மலர் போன்ற உணகண் அழு தன (குறு. 339:5, 6). தலைவி, பசிய சுனையில் கட் டவிழ்நத வளவிய இதழுடைய நீல மலரைப் பார்த்து நெஞ்சுள்ளே வருந்தி அழுத கணணை உடையவளாயினாள் (குறு. 366:4-6). நீரைத் தன்ன டியில் கட்டப்பட்டுள்ள வரிசையான இதழ்களு டைய குவளை மலர் மேல்காற்று வீசினாலும் வாடாது (குறு. 388:1, 2). நறவின் சிவந்த வரி பொருந்திய இதழ, சங்கின முதுகில் அரக்கைத் தீற்றினாற் போன்றிருக்கும் (நற். 25:1, 2). புல்லிய புறவிதழுடைய கோங்கின் மெல்லிய இதழ்மிக்க குடைபோன்ற மலர்கள் விடியற் காலத்தில வானத்தே விளங்கும் விண்மீன்களைப் போலத் தோன்றும் (நற். 48:3, 4). உழவர்மகள் அழகிய பஞ்சுபோன்ற புறவிதழ்களுடைய பசிய குருககத்தி யோடு சண்பக மலர்களைக் கடகப் பெட்டி யிலிட்டு விற்பதுணடு (நற். 97:6-9). குட்டுவ னின் குடமலையிடத்தே யுள்ள சுனையில் மலர்ந்த கரிய இதழினைக் கொண்ட குவளை மலரி னைத் தன் கூந்தலில தலைவி மணங்கமழச் சூடி யிருந்தாள் (நற். 105:7-10). வள்ளிதழ் உடைய நெய்தல மலர் குவியப் பறவைகள் தம் கூடுகட் ்குச் செல்லக் கதிரவன் மறைந்தான் (நற். 117:3-6). ஓவிய ரின் அரக்கூட்டப் பெற்ற எழுதுகோல் போன் றது தலையில் நுண்ணிய பஞ்சினையுடைய பாதிரி யின் வெள்ளிய இதழ்கொணட மலர் (நற். 118:7-9). அடுமபின கரிய இதழுடைய மலர் பெண்கள் கூந் தலில அணியும் மாலையில் சேர்க்கப்படும் (நற். 145: 2, 3). தலைவி வள்ளிதழுடைய நெய்தல் மாலை அணிவதுணடு (நற். 155:2). சங்கு உடைந்து கிடப் பது போலக் கிடக்குமாறு, காந்தளின் வளவிய இதழகளைக் குதிரைக் குளம்புகள் மிதித்து அறுத் தன (நற். 161:6,7). வாழையின் வளைந்த மடலி னினறும் போநத கூர் வாய்க் குவிமுகை, பெணக ளின் வளையலோடு பிணிப்புற்ற விரலணி போலக் காந்தளின் வள்ளிதழில் தோய்ந்திருக்கும் (நற். 188: 1-5). தலைவியின் கண்கள் ஈரம்க்குக் கலுழும் தோற்றத்திற்கு, அரிவாளில் அறுபட்டதனால் பல் லிதழ் குவியாத நெய்தல மலர் நீரில் அழுங்கி அலை யும் தோற்றம் உவமை (நற். 195:6-9). அழகிய சிறு குடி வழியில் நீலமணிப் பொதியினை விரித்துப் பரப்பியது போலுள்ள நெய்தலின பல்லிதழ் மூடிய மலர்கள் கெடுமாறு மிதித்துத் தலைவன் நடந்து சென்றான் (நற். 239:5-7). உடைமரங்கள் மிக்க வழியில் மகளிர் குண்டலத்தில் பொருந்திய ஊச லைப் போன்ற குமிழின் ஆயிதழ மலர்கள் அழகு செய்தன (நற். 286:1-3). மாரிக்காலத்தே மலரும் பித்திகத்தின் ஈரிதழ் மலர்களைத் தலைவி தன் சந்தனம பூசப் பெற்ற மார்பில் மாலையாக அணிந் திருந்தாள் (நற். 314:3,4). தலைவியின் கண்கள் சுனைக் குவளையின் கரிய இதழ்களை யுடைய சிறந்த மலர் போன்றன (நற். 317:8-10). கடற்கரை யிலுள்ள பனையின் பழம் மூக்கிற்று வள்ளித முடைய நெய்தல் வருந்துமாறு விழுந்து சேற்றில் புதைந்தது (நற். 372:2-4). மாலையின் நீல நிற முடைய நெய்தலின் நிரையாகிய இதழ்கள் குவிந் தன (நற். 382:1,2). தலைவனுடைய தணணிய துறையில பல இதழ்களை யுடைய நீலத்தோடு ஒப்ப நெய்தல் மலரும் (ஐங். 2:4,5). நூற்றிதழ்த் தாமரைப் பூவில் தும்பி ஈன்றுள்ள சினைகளை மூங்கில் போல உட்டுளை யுடைய வேழத்தின் பூச் சிதைக்கும் (ஐங். 20:1-3). கொற்கை, அசைகின்ற இதழகள் பொருந்திய நெய்தல் நிறைந்தது (ஐங். 185:1). 'எம் பலவிதழ் உண் கண்கள் நீர் வார்ந்து வருந்துமாறு செய்தவன் மெல்லம் புலம்பனாவன்' என்று கூறித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின றாள் (ஐங். 190:3,4). தலைவன் மார்பை முயங்காது கழிந்த நாட்களில் தலைவியின் இணையொத்த மல ரிதழபோலும் கண்கள் நீர் சொரியும் என்று கூறித் தோழிசெவிலிக்கு அறத்தொடு நின்றாள் (ஐங். 220.3, 5). மலைமீதுள்ள குறுங்காற் கொனறை பொறறகடு போனற ஒளியிடும் இதழ்கள் பொருந்திய மலரைச் சொரிந்தன (ஐங. 430:1,2). வெண்மையான இதழ் களையும் பகலில் தோன்றும் திங்களைப் போனற உருவினையும் உடைய பகன்றை மலர் ஈங்கைப் புதரில் மலரும் (ஐங். 456:1-3). அசையும் இதழுடைய கோடற்பூ வீழுவது போல, அழகிய ஒலிபொருந்திய வளை தலைவியின் முன்கையிலிருந்து கழலும் (கலி. 7:15,16). தலைவி தலைவனுடன் சுரத்திடத்தே சென்றால் மெல்லிய இயலபுடைய சீறடி அங்குள்ள கல்லினைத் தீணடும்; தீண்டினால் அவ்வடி, தாமரையின் அல்லியைச் சேர்ந்த அழகிய இதழகள்

இங்குலிகம் தோய்ந்தன போலச் சிவப்புறும் (கலி. 13:10-13). இளவேனிற் காலத்தில் மாமை நிறத்தை உடையவளின் திதலையைப் போல, மாந்தளிரின் மேல அழகிய இதழ்களுடைய பல மலர்களின் தாதுகள் உதிர்ந்தன (கலி. 29:7,8). வண்டுகள் திறந்துணணுமாறு நிரைத்த இதழகள் அலர்ந்த மலர்களின் மணம், நிலா விளங்கும இரவில் பரவி வந்து பிரிந்துள்ள தலைவியை வருத்தும் (கலி. 29:20,21). பளிங்கு மணியை ஒத்த கண்ணாடிக்குள் அழுத்தப் பட்ட பவளம் தோன்றினாற்போல அரும்பவிழும் முருக்கிதழ்கள் காம்பினின்றுங் கழன்று அழகிய குளங்களில் விழுந்தன (கலி. 33:3,4). நெயதல் இதழ் போலும் மையுண்ட கண்ணையுடைய தலைவியின் கண தன் கண் ஆவதாக என்று தோழி கூறினாள் (கலி. 39:44). புணர்ச்சி பெறாமையால வருந்தின தலைவியின் பல்லிதழ் மலருணகண பசபபெய்தியது (கலி. 45:10,11). ஒத்த இதழாற் கட்டின கோதையினையுடைய தலைவி செய்த குறியிடத்தில் தலைவன் வந்தால் அவனை ஓர் அணங்கென்று கருதிச் சிறுகுடியிலுள்ளார் அஞ்சுவர் (கலி.52:8-10). தலைவியின் பின்னலிடததே நூலாற் கட்டின ஈரமான இதமுடைய அலர்நத பூக்கள், கரிய பாமபினிடததே கிட்க்கும் கார்ததிகை மீனை ஒத்திருக்கும் (கலி. 64:2-4). பரத்தையின் இடைமுலைத் தாதுகள் உதிர்ந்து இதழ் அழகிழநத தலைவனுடைய கண்ணி, அவன பரத்தைமையைத் தலைவிக்குணர்த்தியது (கலி. 73:8,9). வயலில் வளர்ந்த ஒத்த இதழுடைய நெய்தற் பூவோடு நிரைத்த இதழுடைய ஆம்பற் பூவையும் பறிப்பதற்கு ஓடும் விளையாட்டு மகளிரின் ஆரவாரத்தை அஞ்சிப் பறவைகள் உயர் மரத்தில் அமர்ந்தன (கலி. 75:1-6). தம்மில் இணையொத்த இரண்டு தாமரை முகைகளுக்கு இடையே மலர்ந்த பூ, பறவைகள் தாக்க மிகவும் சாய்ந்து, அம்முகைகளின் மேல் தனது உள்ளிதழில் நின்ற நீரைத் துளித்தது (கலி. 77:1-7). வயலினுள்ள செந்நெல்லிடையே பூத்த தாமரையின் இதழைப் பொருந்தும்படி ஒரு நெற்கதிர் சாய்ந்து கிடந்து விளங்கியது; அஃது அரங்கிலாடும் மகளின் தலைக் கோலத்திலிருந்து தாழும்படி வைத்த வயந்தகம என்னும் அணிபோன்று காணப்பட்டது (கலி. 79:1-6). தலைவனுடைய குழந்தை பச்சைக குடையின்கீழ் இருப்பதற்கு நீரில் பசிய இலையின் கீழே மறைநது நின்ற, அழகிய இதழுடைய தாமரைமலர் மலர்ந்திருப்பது உவமை (கலி. 84: 10, 11). புதல்வனுக்கு அரும்பவிழ்ந்த நீல மலரின் இதழ் நாணுமாறு விளங்கும் வண்டுகள் நீங்கின நீலமணிமாலை அணிவித்தல் (கலி. 85:15, 16). நகவடுக்களும் எயிறு பதிந்த வடுக்களும் ஒள்ளிய இதழ் வாடிய கண்ணியும் பரத்தையர் சினந்து அடிக்கச் சிவந்த மார்பும் தலைவன் பரத்தையர் பாற் சென்ற தவற்றினைக் காட்டும (கலி. 88:11-14). தலைவன் கூறிய சொல்லைத் தெளிந்த தலைவியின பல்லிதழ் மலருண்கண் நீர் நிறையுமாறு செயதால் அது, தலைவன் பொய் கூறான என்று உலகம் புகழும் புகழைக் கெடுக்கும் (கலி. 100:8-10) துடுப்பினைப் போன்ற செங்காந்தள் அரும்பு, பின்னர்த் தீயினைக் கடைந்து அதிற் பிறந்த நெருப்பினைச் சேர நிரைத்ததுபோல, அலர்ந்த இதழ் விளங்க மலரும் (கலி. 101:3, 4). ஏறுதழுவுவோர் தொழுவினை விட்டு நீங்கிய பினனர், நெருங்கின இதழகளை யுடைய மலாபோலும் மையுண்ட கண்ணையுடைய மகளிரும் அவர்தம் கணவரும் மன்றத்தில் குரவைக் கூத்தாடினர் (கலி. 103:58-62). புறவிதழ் ஒடிநத மணத்தைக் கொண்ட ஒத்த இதழாற் கட்டின மாலையினை யணிந்த மகளிர் நிரைநிரையாக நிற்கப் பொதுவர் ஏறு தழுவத் தொழுவினுட் பாயந்தனர் (கலி. 105: 26-29). தலைவன் மார்பில கமழும் மாலையை வருததிய தலைவியின அழகிய இதழ் போலும் கணகள் பசந்தன (கலி. 112:23, 24). பெரிய கழி இதழ்குவிந்த பெரிய நீல மணிபோன்று விளங்கியது (கலி. 121:5). முனகையினினறும் கழலும் வளையலுககு இதழ்கள் வீழும் குலையுடைய கோடல் மலர் உவமை (கலி. 121:13, 14). இதழபோன்ற கண தன்னிடத்தே கொண்டுநின்ற காம நோயை உறுகின்ற வெவ்விய நீரை மறைப்பேன் என்று தலைவி கூறினாள் (கலி. 142:52, 53). மாலைக் காலம் வந்தபோது பெரிய கழியில் நெயதல் இதழ் குவிந்தது (கலி. 145:39). திருமால், அவருடைய உந்தியில் தோன்றிய நிரைஇதழ்த் தாமரையினைப் போன்ற கண்ணை உடையவர் (பரி. 4:60). திருப்பரங்குன்றத்தி லுள்ள அருவி வீழும் சுனை, இமயமலையில் முருகன் எழுந்தருளிய நிரை இதழ்த் தாமரை மலர்ந்த பொய்கையை ஒக்கும் (பரி. 8: 12-16). தலைவி நெய்தல் பூவையும் நறவம் பூவின இதழையும் ஒத்த கண்களையும் ஒளிபொருந்திய நுதலையும் உடையவள் (பரி. 8:74, 75). ஊதைக்காற்றால் அலர்ந்த இதழுடைய நீல மலரைச் சாரற் சோலையின்கண் அருவி கொண்டுவந்தது (பரி. 11: 22, 23). பூமி நடுக்கமற எடுத்தற்குப் பொன்னிதழ் அணிந்த மணிமடல் கிம்புரியுடைய மருப்பினைக் கொண்ட களிறாகவும் (வராகமாகவும்) திருமால் விளங்குகின்றார் (பரி. 13:34-36). திருமாலின் அடியும் கையும் கண்ணும் வாயும் வளவிய இதழுடைய தாமரைப் பூவினை ஒக்கும் (பரி. 13:50,51). நெருங்கிய மொட்டுக்களையுடைய காந்தளாலும் நிரையாகக்

கொடியில் விளங்கும் குலையவிழ்ந்த வள்ளிதழை யுடைய தோன்றியாலும் (செங்காந்தளாலும்) செவ்வேளின குன்றம கார்காலத் தன்மை பெற்றது (பரி. 14: 13-17). மடவார கூந்தலின் நீங்கிய போதுகளும், மைந்தர் மார்பின் நீங்கிய மலரிதழ்களும பரக்கப்பெற்று வையை செலவது வானத்தில் கங்கை செல்வதனை ஒத்தது (பரி. 16:34-38). வையைக் கரையிற் கூடிய மகளிரிற் சிலர் வாடாது விளங்கும் வெட்சி இதழால் அமைந்த மாலையை அணிந்திருந்தனர் (பரி. 22:22). திருமால எழுந்தருளியிருக்கும் மலையினை ஒருசார் அமைந்துள்ள குளத்தில, தாமரைப் பூவின இடையிடையே அழகிய வரி இதழப் போதுகளில் வண்டுகள் ஒலிக்கும (பரி. தி. 1:10,11). திருமாலின் உந்தியில் தோன்றிய தாமரையை ஒத்த சீரூரின் (மதுரையில) அதன் இதழகளைப் போன்றன தெருக்கள (பரி. தி. 7:1-3).

2. பூ. சூரரமகளிர் தம் முடியில் சிவந்த காலை யுடைய வெட்சியின சிறிய இதழை-பூவை - விடுபூவாகத் தூவி அதற்கு நடுவே குவளையின் தூய இதழை இட்டு அணி (செய்)தனர் (முரு. 21.22). பாண்டி மாதேவி மா இதழ் (நீலமலர்) வீரும்பின தன் கடைக்கண்களிடத்தே தோன்றிய சில நீர்த் துளிகளை விரலால் தெறித்தாள் (நெடு. 164,165). களிறு காவல் பூண்டிருக்கும் அரிய சுரநெறி. மூங்கில் போன்ற தோளையும் கூந்தலையும் திரண்ட தேமல் பொருந்திய மார்பினையும் நிரைஇதழ் உண்கண்ணையுமுடைய மகளிர்க்குச் செலவரிதாகும் (அகம். 65:16-20). சுனை யாடும்போது நீர் மோதி அலைத்தலால் தலைவி அணிந்த ஈரிதழ் மாலை கலைந்தமை (நற். 339:7). தலைவற்குப் புறத்தொழுக்கமின்று எனக் கூறிய தோழியிடம் தலைவி, அவன நல்லனாயின் என் புல்லிதழ் உண்கண பசலை பாய்வது எதனால் என்று வினவினள் (ஐங். 170:2-4). 'பல்லிதழ் உண்கண் மடந்தையே' என்று தோழி தலைமகளை விளித்தாள் (ஐங். 351: 4). தலைவன் பிரிந்தமையால் தலைவியின் வளை நெகிழ மேனி வாடப் பலலிதழ் உண்கண்கள் நீர் சொரிந்தன (ஐங். 471:1,2) குழந்தையின் சிவந்த விரல் நறாஇதழ்போனறது (கலி. 84:22). தலைவன் தலைவியை உயர்ந்த இணையொத்த இதழ்நீலம் (நீலமலர்) தொடுத்தது போன்ற கண்ணியை உடையவளே எனறு விளித்தான் (கலி. 96:5). வினைவல பாங்கின் தலைவனிடம். 'உன் சுற்றத்தார் நல்ல பெண்களைக் கண்டால் தடுத்து அவர்களின் பல்லிதழ் உண கணணையும் தோளையும் புகழ்ந்து பாட (உனக்குக்) கற்பித்தனர்' எனறு தலைவி கூறினாள் (கலி. 112:8-10). தைந் நீராடுங்கால் ஒருத்தி தன் காதில் மர இதழ் (நீல மலர்) அணிந்துகொண்டு மற்றொருத்தியைப் பார்த்தாள் பரி. 11:93,94).

3. கண்ணிதழ் (இமை) வறுமையால் திரங்கிப் பாலின்மையால வறிதாய மார்பினைச் சுவைக்குந்தோறும் அழும் குழந்தையின் முகம் நோக்கி, நீரொடு நிறைந்த ஈரிதழ்-கண்ணிதழுடன்-கூடிய மழைக் கண்ணுடையவளாய வருந்தும் தன மனைவியின் துன்பம் கண்டு அதனை நீக்குதற்குக் குமணன்பால் சென்றதாகப பெருஞ்சித்திரனார் கூறினார் (புறம். 164:3-8). ஆடுகோட்பாட்டுச் சேரலர்தன் மனைவி குளிர்ந்த இதழும், மழைபோன்ற கண்களையும் உடையவள் (பதி. 52:18). தன் கணகள் பெருந்துளியால் அழகுகெட்ட மலர்போன்று அழகு கெட்டு இதழ் சோர்ந்து ஈரமுடையவாகக் கலங்கத் தலைவி வருந்தினாள் (குறி. 247,248) தலைவி கரிய தண்டினையுடைய குவளை மலர்களை இணைத்து வைத்தாற் போன்ற கரிய இதழினை யுடைய குளிர்ந்த கண் பொருந்தியவள் (அகம். 62:4,5). கானவரின் தங்கையாகிய தலைவி. ஆயிதழுடன் கூடிய குளிர்ந்த கண்ணை உடையவள் (அகம் 132:5,6). தலைவி நீலமலர் போன்று முகத்தில் சுழலும் அழகிய இதழினையுடைய கண்களை உடையவள் (அகம். 162: 10,11). தலைவி ஆயிதழ்களை யுடைய மையுண்ட கண்களைக் கொண்ட இளையவளாவள் (அகம். 172:16). வருந்திய தலைவிதன் அழகிழந்த முகம் கவிழ்ந்து கால் விரலால் நிலத்தைக்கிளைத்து, நீருடன் கூடிய ஈரம்பொருந்திய இதழினையுடைய குளிர்ந்த கண் சிந்தும் நீர்த்துளி மார்பில் துளித்து விழுமாறுநிற்றல் (அகம். 299: 12-15). பரத்தை தலைவனை இகழ்ந்த சொற்கூறிச் சிவந்த அழகிய இதழுடைய கண்ணால் வருத்தமிகப் பார்த்து, அவன மார்பிலணிந்த மாலையை அறுத்தாள். (அகம்.306:10-13). தலைவியின் ஆயிதழ மழைக்கண் கடற்குப் பொய்கையில் மலர்ந்து காற்றினால அசையும் நீல மலர்கள்உவமை (அகம். 357:15-16). தலைவனைப் பிரிந்த தலைவி, நள்ளிரவில், படுக்கையில் கிடந்து வெய்துயிர்த்து, ஆயிதழ் மழைக்கண் நீர் பெருக வருததம் மிகுந்து, தன் தோளை நனைக்கும் கண்ணீரை விரல் நகத்தால் தெறித்துத் துயிலாதிருந்தாள் (அகம். 373:10-15). இதழைக் கடந்து ஊறும் கண்ணீரின் துளி, அணி பொருந்திய அழகிய மார்பில் பொருந்தி இருப்பதற்கு, யானைக் கொம்பிடத்தே முறிந்து தங்கியுள்ள சிறிய பூக்களையுடைய முல்லைக் கொம்பு உவமை (குறு.348:2-5). இரவில் விளக்குடைய இல்லில் தாய், பின்னல் தாழ்ந்த பிடரியைத் தழுவி அணைப்ப, வரிசையான இதழ்கள் பொருந்தாத் கண்ணோடு துயிலல் இன்னாது எனத் தோழி, தலைமகன் சிறைப்புறத்தானாக வரைவு கடாயினாள் (குறு. 353:4-7).

வாடைக் காற்றினால் வருந்திய இதழ்களையுடைய மழைபோல் நீர் வடிக்கும் தலைவியின் கண்கள், தலைவன் பிரிந்து செல்லாதவாறு (ஒரு குறிப்பாகிய) தூதினைத் தோற்றுவித்து அனுப்பின (நற். 5:8,9). 'நீ யார், அணங்கோ, நின்னை வணங்கி வினவு கின்றேன்' எனக் கேட்ட அளவில் தலைவி புன் முறுவல் பூத்துப் பல்லிதழ் உண் கணணில் நீர் பனிக்கப் பெற்றாள்' என்று தலைவன் தன நெஞ் சொடு கூறினான (நற். 155:6,10). தலைவன பொருள்வயிற பிரிய யாமத்தில தலைவி தன் பல் லிதழ் உண்கண நீர் பெருக வருந்தி அழுதிருத் தல (நற். 241:10-12). மை எழுதபபெற்று (நீல) மலரை எதிரிட்டுப் பிணைததாற் போல மாயித ழுடைய மழைககண்ணுடையவள் தலைவி (நற். 252: 8,9). (நெய்தல) போதின் நிறம் விளங்கிய ஈரிதழ் பொலிநத மையுண்ட கண்ணையுடையவள் தலைவி (நற். 284:1,2). தலைவியின் மாயிதழ் மழைக்கண் சுனையிலுள்ள குவளை மலரை எதிர்வைத்துப் பிணைத்தது போன்றிருககும் (நற். 301:2,3). தலை வன் பிரிவினைத் தோழி உணர்த்திய அளவில தலைவிக்கு முனகையில் வளை கழலக கணணீர் இதழினினறும் முன்னர்ப பெருக வீழும் (கலி. 3:3). தலைவன் பரத்தையிற் பிரிந்து சென்று வாராமையால், வருந்தித் துயிலைத் துறந்த தலை வியின் கண்கள் நீர் வீழ்கின்ற இதழினைப் போலக் கண்ணீர் மாறாதிருக்கும் (கலி. 70:15,16). கண்ணை மறைத்த இதழக்குள்ளே மறைந்த அப் போதே தலைவன் மறைநது விடுகின்றான் என்று தலைவி கூறினாள் (கலி. 87:6). தலைவன் கனவிற் கண்ட பெண்களில் ஒருத்தி மிகுந்த கள்ளுண்ட களிப்பால் இதழ் மூடப் பார்வை மறைநத கண் ணுடையவளாகி மொய்க்கும் வண்டுகளை ஒட்டும் இடமறியாது கை தளர்நதாள் (கலி. 92:48-50). பூ மலர்ந்த தன்மையை ஒத்த புகழ்மிக்க அழகிய கண்கள் இதழ் நீர மல்குமாறு தலைவி அழும் (கலி. 142:11,12). திருப்பரங் குன்றச் சுனையில் ஆயிதழ் உண கணணாகிய தாமரைப் பூவும், முகமாகிய தாமரைப் பூவும் தாளாகிய தாமரைப் பூவும் முதலியன கொணட மகளிர் தம் கணவ ரோடாடினர் (பரி. 8:112-115). பரத்தையின் நேரி தழ் உண்கண்கள் சீற்றங்கொண்டு செருச் செய்யும் அம்புகளை ஒக்கும் (பரி. 20:37,38). இமை காண்க.

4. வாயிதழ். தலைவி அழகிய வளையலையுடைய முன்கையினையும் அழகிய இதழினையும் - வாயி தழினையும் - உடையவள் (அகம. 361:4). தலைவன் தோள் சேர்ந்த பரத்தையரின் எயிறு அழுந்திய இதழினைப் பாணன் எனக்குக் காட்டெனறு கூறி னான் எனக் காமக்கிழத்தி உரைத்தாள் (கலி. 72: 10-12). பரத்தை, ஐம்புலத்தையும் நுகரும் காமுக ராகிய பன்றிகள் நுகரும் இதழ்வாயை யுடைய தொட்டி யாவாள் (பரி. 20:50, 51). வையைக் கரை யிற் கூடிய மகளிரிற் சிலர் முள் முருக்கினையொத்த இதழுடையவர் (பரி. 22:29).

5. மாலை. மகளிர் கூந்தலினின்றும் மைந்தர் குஞ் சியினின்றும் வீழ்ந்த இதழின் - மாலையால் - இயங்கு நெறி யில்லையாயிற்று (பரி. 17:26, 27).

**இதை – 1. கப்பற்பாய்.** கடுங்காறறால வளையும் அலையைப் பிளந்தோடுவதற்காகக் கப்பலில் இதை - பாய - விரிக்கப்படும (மது. 77-79). இறு கிய பிணிப்புடைய வலிய பாய் கட்டின கயிறறை அறுத்து இதையைப் புடைத்துப் பாயமரம் முறியும் படி கடலில் கடுங்காற்று வீசும் (மது. 375-378). நனறாக இதை விரித்த மரக்கலம் காற்றினால் தள்ளிச் செலுத்தப்பெற்று வரும் (மது. 536). இதை யும் கயிறும் பாய்மரமும் நீங்கச் சிதையும் நிலையி லுள்ள மரக்கலத்தினை மீகாமன் பயினால் திருத் திச் செம்மை செய்வான் (பரி. 10:53-55).

2. **புதுப்புனம்.** சிறிய பக்கமலையில் கொலலையா கிய இதை - புதுப்புனம் - அமைநதது (அகம். 133.7). கரிய பழஞ்சேறு இதை உண்டாக்க முயலும் புன வன் சுட்டெரிக்கும தீயின் புகை நிழலை ஒக்கும் (அகம். 140:11, 12). இதையாகிய புதுக் கொல்லை யில் ஈரிலையுடைய நெடுந்தோட்டு வரகின பிளவு பட்ட கதிர் செழித்து விளையும் [முதையை இதை என்று பாடங் கொள்ளும் வே. வி.] (அகம். 393:4, 5). முல்லை நிலத்தில் செம்மறி ஆட்டுத் தயிர், இதைப் புனததில் விளைந்த வரகினைக் குற்றிய அரிசிச்சோறு ஆகியவற்றோடு புறநீசல் கூட்டிச் சமைத்த புளிச்சோறறை வெண்ணெய் உருக்கிய நெயயோடு இளையர் உண்பர் (அகம. 394:2-7).

**இந்திரர் - தேவர்.** இந்திரர் - தேவர் - அமிழ்தம் கிடைப் பதாயினும் இனிதெனத் தமியராய் உண்ண மாட்டாத பணபுடையோர் இருத்தலினால்தான உலகம் வாழகிறது (புறம். 182.1-3).

**இந்திர விழவு - இந்திரர்க்காக எடுக்கும் விழா.** இந்திர விழாவில - இந்திரர்க்காக எடுக்கும் விழாவில் - பலநிறப் பூக்களும் பயன்படுத்தப் பெற்றன; மகளிர் பலரும் கலந்துகொள்வர் (ஐங். 62:1,2).

**இந்திரன் - தேவர் தலைவன்.** இந்திரனின் - தேவர் தலைவனின் - பேரிடிமுழக்கம் போலக் கூடலில் எழுந்த ஆர்பபு பரங்குன்றத்தில் எதிரொலித்தது (பரி. 8:33-35). 'சாபத்தால் மாறிய இநதிரனின் பூனை உருவம் இது; இவள் அகலிகை; இவன் கவுதமன்; இவன சினத்தால் கலலுருவாய

அகலிகையின் படிவம் இது' என்று சிலர் பரங்குன் றத்தின் மண்டபத்திலுள்ள ஓவியங்களைக் கண்டு உரையாடினர் (பரி. 19:50-53). பாண்டியன் கூடலவ ரொடு வையையில் புனலாடியது அந்தரவான் யாற் றில் (ஆகாய கங்கையில்) ஆயிரங் கண்ணினனான இந்தி ரன் புனலாடியது போன்றிருந்தது (பரி. தி. 2:91-97).

**இப்பி** - சிப்பி. இப்பி - சிப்பி - ஈன்ற முத்துக்கள் போலும் வெளிய மணலில் மகளிர் வேதிகைக்கண் விளையாடுவர் (புறம். 53:1-3). கொற்கையில் கட லிடத்தே பல்வகை மீன் பிடிப்போர் கொணர்ந்த இப்பியைத் தாம் பருகிய நறவினுக்கு விலையாகக் கொடுப்பர் (அகம். 296:7-10). தலைவர் நாட்டில் புன்னையின் அரும்பு உடைந்த தாது துறையில் மேயும் இப்பியின் புறத்து உதிரும் (நற். 87:5-7).

**இம்பர்** - இவ்விடம். புறங்காட்டி ஓடாத வீரர் போரில் பட்டால் உயர்நிலை யுலகத்தில் மாசற்ற தெய்வ மகளிரது மணத்தை மிகுதியும் நுகர்வர்; அதனால், பகையரசனுடைய சேனை இம்பர் - இவ்விடம் - நின்றும் வருதலைப் பார்ப்பீராக எனத் துடியெறி யும் புலையனையும் பறையடிக்கும் குறுந்தடி கொண் டுள்ள இழிசினனையும் நோக்கிக் கூறுவதாகச் சாத்தந்தையார் பாடியுள்ளார் (புறம். 287:7-14).

**இம்மென்கீரனார்** - புலவர். அகநானூறு 398 - ஆம் பாடலின் ஆசிரியர். இயற்பெயர் கீரனார்; இப் பெயருடையார் பலர் இருத்தலின் வேறுபிரித்தறிய இவர் இம்மென்கீரனார் என அழைக்கப்பட்டார். 'இம்மென்று அலமரல் மழைக்கண் தெண்பனி மலக' என்று இம்மென் சொல்லைப் பயன்படுத்தி யதால் இப்பெயர் பெற்றார் எனக் கருதலாம். குறிஞ்சித் திணையில் தலைமகள் காமமிக்க கழி படர் கிளவியால தலைமகன் வரையினின்றும் போந்த ஆற்றொடு புலந்து சொல்லியது என்னும் துறையில் இவர் பாடல் அமைந்துள்ளது.

**இம்மை** - இப்பிறப்பு. ஆய், இம்மை - இப்பிறப்பில் - செய்தது மறுமைக்குப் பயன் தரும் என்று எண் ணும் அறவிலை வணிகன் அலலன் (புறம். 134:1,2). வடக்கிருநத கபிலர், 'இம்மையிலே இன்புற்றிருந்த வாறுபோலக் காட்டி மறுபிறப்பினும் பாரி யோடு உடனுறைவாககுக' என நல்ல ஊழினை வேண்டுவர் (புறம. 236:10-12). பகைவரும் விழை யும் மாசற்ற காட்சியினை யுடைய சிறுவரைப் பயந்த செம்மலோர் இம்மை யுலகத்து இசை யொடும் விளங்கி மறுமையுலகமும் மாசின்றி எய்து வர் (அகம். 66:1-5). இம்மையில நன்று செய்தால் தீது வருவதில்லை (அகம். 101:1, 2). வீட்டின் கதவை நள்ளிரவில் காவலர் சோர்ந்த சமயம் பார்த்துத் திறந்து நம்மைப் புணர்ந்து நம் மிற் சிறந்தோர் இம்மை யுலகத்தில்லை' என்று ஓதியைத் தடவிக் காதலொடு கூறிய தலைவன் காலம் நீட்டியாது வருவான் எனத் தோழி தலை மகட்கு உரைத்தாள் (அகம். 311:2-7). இம்மை மாறி மறுமை வரினும் நீயே என் கணவன் ஆகுக. யானே நின் நெஞ்சு நேர்பவள் ஆகுக எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (குறு. 49:3-5). நடுநிலை பிறழ்ந்து பொருளீட்டுவார்க்கு அப்பொருள் இம் மையும் மறுமையும் பகையாகிவிடும் (கலி. 14:14,15).

**இமயக் குன்றம்** - இமயமலை. திருமால், சிவன், அயன், மற்றும் அமரர், அவுணர் எல்லாரும் கூடிச் செவ் வேளைக் காணவருதலின் பரங்குன்றம் இமயக் குன்றம் நிகர்க்கும் (பரி. 8:1-11). இமயக் குன்று, இமயம், இமையம் காண்க.

**இமயக் குன்று** - இமயமலை. இமயக் குன்றினும் சிறந்த முருகனை ஈன்ற தாமரையையும் மின்னல்போல் திகழும் இணரையும் கொண்ட ஒருநிலைப் பொய் கையினைப் பரங்குன்றின் அருவிதாழ் மலைச் சுனை ஒக்கும் (பரி. 8:12-16). இமயக் குன்றம், இமயம், இமையம் காண்க.

**இமயம்** - இமயமலை. அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும் முத்தீ ஒளியில் மான் பிணை துஞ்சும் பொற் கோட்டினையுடைய இமயம் - இமயமலை - போன்று நடுக்கின்றி வாழியர் என உதியஞ் சேர லாதனை முரஞ்சியூர் முடிநாகராயர் வாழ்த்துவர் (புறம். 2:20-24). 'இவ்வுலகத்துச் சான்றோர் செய்த நல்வினை உண்டாயின் இமயத்தில் மேகம் இன்குரல் எழுப்பி மாமழை பொழிந்த நுண்பல் துளியினும் வாழிய' எனக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவள வனை ஆலத்தூர் கிழார் வாழ்த்துவர் (புறம். 34: 19-23). எல்லையளந்து காணமுடியாத பொன்படு நெடுங்கோட்டு இமயத்திலே காவலாகிய விற் பொறி பொறித்தான் சேரன் (புறம். 39:13-16). வட திசையிலுள்ள வான்தோய் இமயத்தில் நரந்தம் புல் மேய்ந்த கவரிமா குவளைப் பைஞ்சுனை பரு கித் தகரமரத் தணணிழலில் தன் பிணையொடு வதியும் (புறம். 132:4-7). 'மழை, தலையெடுபப நீடிய பக்க மலைகளையுடைய கழைவளர் இமயம்போல நிலீஇயர்' எனக் கவுணியன் விண்ணந் தாயனை ஆவூர் மூலங்கிழார் வாழ்த்துவர் (புறம். 166:32-34). மறுபிறப்பு உண்டோ, இல்லையோ என ஐயு றாமல் இமயத்துக் கோடுயர்ந்தன்ன நல்லிசை நட்டுத் தீதற்ற உடம்பொடு சாதல் மிகச் சிறந்தது (புறம். 214:10-13). முள்முருங்கை செறிந்த மலையில் தூங்கும் கவரிமான் தான் நுகர்ந்த அருவியொடு நரந்தம் புல்லையும் கனாக் காணுதற் கிடனாய

ஆரியர் துவன்றிய பேரிசை இமயம் முதல் தென்னங் குமரி வரையுள்ள இடைப்பட்ட நாட்டின் மன்னரை வென்றவன் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. 11:21-25). ஊசலாடும் மகளிர் இமயமலையில் களிற்றை விரும்பிப் புதுவதாக வரும் பிடியை எண்ணுவர்; அவர்தம் எண்ணு முறைக் கடங்காது பிடி மிகுந்துள்ள கடவுள் நிலைபெற்ற உயர்ந்த மலையுள்ள வடதிசை எல்லையான இமயமுதல் தென்னங்குமரி வரையுள்ள நாடுகளை யாண்ட அரசரை வென்றவன் குட்டுவன் (பதி. 43:2-11). குட்டுவன் பகைவருடைய வடபுல இமயத்தில் தன் வில் இலச்சினையைப் பொறித்தான் (சிறு. 47-50). இமயத்தில் சேரலாதன் தன் முன்னோரை ஒப்ப வில் இலச்சினை பொறித்தான் (அகம். 127:3-5). தலைவன் துணிந்து சென்று ஈட்டும் பொருள் அகன்ற வானில் உயர்ந்து புகைபோலப் பொலிவுற்றுப் பனி தவழும் தீச்சுடர் ஒப்பத் தோன்றும் இமயமாகிய செந்நிறமலையை ஒக்குமோ எனத் தோழி வினவினாள் (அகம். 265:1-3, 23). 'மாமழையே! உனக்குக - கருணையில்லையா? நீ பேரிசையுடைய இமயத்தையும் அசைக்கும் இயல்பினை; துணையற்ற பெண்டிர் இரங்கத் தக்கவர்; நீ பெய்து வருத்துவதேன்' எனத் தோழி கேட்டாள் (குறு.158: 3-6). 'ஞெமை மரம் உயர்ந்துள்ள இமய உச்சியினின்றும் இழிதரும் அருவியை யுடைய கங்கைப் பேரியாற்றின் தடுத்தற்கரிய கரைகடந்து வரும் கடும்புனல போல என் நிறையை யுடைக்கும் காம ஆற்றினைக் கடத்தல் யாங்ஙனம்' எனத் தலைவி கவன்றாள் (நற். 369:7-11). மேகமும் விசும்பும் நிலனும் நீடிய இமயமுமாகத் திருமால் திகழ்கின்றார் (பரி. 1:50,51). உயர்ந்தோங்கும் இமயமலையினுள்ள நீலப் பைஞ்சுனைக்கண் தோன்றிய தாமரைப் பாயலில் அறுவர் (கார்த்திகை மகளிர்) செவ்வேளை ஈன்றனர் எனப் (பரி. 5:48-50). விடைப்பாகனாய சிவன் திரிபுரம் எரித்த போது கலனுயர்ந்த உச்சியினையுடைய இமயமாகிய வில்லுக்கு நாணாகித் தொல்புகழினைத் தந்தவர் (ஆதிசேடனாவர்) (பரி. தி. 1:76-78). இமயக் குன்றம், இமயக் குன்று, இமையம் காண்க.

**இமயவரம்பன்** - சேரமன்னன். இவன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் (பதி: ப. 3:1). இமையவரம்பன் காண்க.

**இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்** - சேரமன்னன். இமயவரம்பன், இமையவரம்பன் காண்க.

**இமில்** - 1. திமில் (ஏற்றின் கொண்டை). ஆனிரையினின்றும் பிரிந்த அசையும் இமிலினை - திமிலினை - உடைய காளையும் போர்த் தொழில் கைவந்த மறையான் ஏறும் கோவலருடனும் குறவருடனும் ஆர்த்துப் பொருதன (மலை. 330-333). பாணன் என்பான் பகைவர் அரண்களிற் சென்று திரண்ட இமிலுடைய ஏறுகளுடன் கூடிய வேற்றுப்புல ஆக்களைக் கவர்ந்தான (அகம். 113:12-17). தலைவன் தோளிடத்தே தூறு பறறியிழுக்க அறுந்து கிடக்கும் பூமாலை எருதின் இமிலிடத்துக் கிடக்கும் கயிறுபோல் அழகுறத் தோன்றும (அகம். 248.11-14). கிணை எழுப்பிப் பாடுவோர் இரப்பின முசுண்டை என்பான் நாடோறும் பொன்பூணினைக் கொம்பிலே செறித்துப் பொலந்தாரினைக் கழுத்திலே பூட்டிச் சந்தனம் பூசிய உயர்ந்து அசையும் அழகிய இமிலுடைய ஏற்றினை முன் நிறுத்தி மிக்க உணவினைக் குவித்து நெடுந்தேரினைக் களிற்றொடு நலகுவான (அகம. 249:3-9). தம்மையழைக்கும விளிப பொலியறிந்து பசுவினத்தைக் கூட்டிவரும அசையும இமிலுடைய நலலேற்றின் கழுத்தில பூட்டப் பெற்ற மூங்கிற் குழாயில கோவலர் உணவெடுத்துச் செலவர் (அகம. 253.12-16). அறுகம்புல்லை மேய்ந்த அசையும இமிலுடைய ஏறு நீரபருகித் தளர்ச்சி நீங்கிக் காஞ்சித் தாது மேலே உதிர வேனிறகாலத்து மணலமேட்டில உறங்கும் (அகம். 341:7-12). ஏறு தழுவ வந்தவருள் ஒருவன் தோள்களாலே ஏற்றின கழுத்தை இறுகத் தழுவி அக்கழுத்தோடு கூடக் கிடக்கின்ற இமிலிடைத் தோன்றி அதனை வருத்தினான (கலி. 102:25-27). தொழுவத்திலே பெருமபெயர்க் கணிச்சியோனாகிய சிவபெருமானின் நீலமணி மிடற்றழகு போன்ற இமிலையுடைய குரால்நிறக் காளையையும் சேர விட்டனர் (கலி. 105:13,14,22). ஏறு தழுவுவோர் அதன் இமில் முறியும்படி தழுவினர் (கலி. 105:31). கழுத்தை மறைக்கும் அசையும் இமிலைக் கொண்ட நலலேற்றினைத் தழுவிய ஆயன் முகத்தை ஆயமகள் கண்கள் இமையாது நோக்கின (கலி. 105: 50-52). அசையும் இமிலையுடைய நல்ல காளையினம் காலாலே நிலத்தை வெட்டித் துகளெழுப்பியும் கோட்டு மண கொண்டும் ஒன்றோடொன்று மாறுபட்டு முழங்கியும் பாய்ந்தும் களம்புகும் வீரர் அழகை ஒத்தன (கலி. 106:7-10).

**இமிழ்** - 1. ஆரவாரம். அரிமணவாயில உறத்தூரிடத்து எவ்வி தன் படைஞர்க்களித்த கள்ளுடன கூடிய பெருஞ்சோற்றினால பகலில் எழுந்த இமிழ் - ஆரவாரம்-போன்று அலர் எழுந்தது (அகம். 266:11-15).

2. ஒலி. உமணர் நீரற்ற காட்டுவழியில் தடையுறும் பகடுகளை உரப்பி ஓட்டும் ஒலி பெருங்குன்றத்து இமிழ்கொள - எதிரொலி உண்டாக- இசைக்கும் (அகம். 17:12-14). இயங்களின இமிழும் பாட்டும்

பயின்ற மகளர் அரங்கில் ஆடுவர் (பரி. 16:12,13). இமிழ் - 2 காண்க.

**இமிழ்வு** - ஒலி. முழவின் இமிழ்விற்கு-ஒலிக்கு-எதிரே இடியேறு மாறாய் முழங்கியது (பரி. 22:36,37). இமிழ் - 2 காண்க.

**இமை** - கண்ணிமை. குவளை நிற மொத்த கரிய நீர் மிகுந்த குளிர்ந்த இமைகள்—கண்ணிமைகள்-நறவம் பூவின் செவ்விதழ் அனைய வாகித் தலைவியின் உள்ளம் கொதித்தலான் வெம்மையான நீரைச் சொரிந்தன (அகம். 19:9-14). தலைவி பிரிவுத் துன்ப மிகுதியால் இமையைத் தீய்த்து விடுவது போன்ற வெம்மை மிகுந்த கண்ணீரைத் தாங்கி நெஞ்சு நொந்தாள் (குறு. 4). ஆண் புறா பன்முறையும் அழைத்துப் பெடையொடு இமைப் பொழுதில் மிகுநத இன்பந் துய்க்கும் (குறு. 285:4-6). மடந்தை ஈரிமை பொருந்த உறஙகுகின்ற நள்ளிரவில் தலைவன் கள்வன்போல வந்தான் (நற். 40:9-11). தலைவன் வாராமையால் துயில் துறந்து கண்ணீர் வடிக்கும் கண் படுக்கையில் இமை பொருந்தவும் கூடும்; அதனையும் பரத்தையரை இலலத்துக்குக் கொண்டுவரும் தேரிற் பூட்டிய குதிரையின் மணியொலி போககி விடுகிறதே எனத் தலைவி கூறுகிறாள் (கலி. 70:15-18). இமை கணணை மறைத்த இமைப்பினுள்ளே தலைவன் தோன்றாமற் போகிறான் எனத் தலைவி கூறுகிறாள் (கலி. 87:6). 'அறனிலாதவன என் கண்ணுள்ளே தோன்ற யான் இமையை விழிததுப் பறறிக் கொள்வேன என்று கருதி விழிக்குங்கால் பின்னும் என் நெஞ்சத்துள் ஓடி ஒளிந்துகொண்டு காம நோயால் வருத்துகிறான்' எனத் தலைவி கடலை விளிததுக் கூறுகிறாள் (கலி. 144:55-58). மையணிந்த இமைபொருந்திய கணகளைக் கொண்ட வள்ளியை முருகன் மணந்தான் (பரி. 9:8). இதழ் - 3 காண்க.

**இமைத்தோர்** - கண் இமைத்தவர். இமைத்தோர் - கண் இமைததவர் - கண விழிக்கும நேரத்திற்குள் விரைவாகக் கிழககே தோனறிய மதியம் செறிந்த இருளை நீக்கியது (புறம். 376:7,8).

**இமைப்பு** - 1. கண் இமைத்தல். தலைவி தலைவனை இனறி இமைப்பு-கண் இமைத்தல்-நிகழும் காலத்தளவும் வாழவியலாதவள் (குறு. 218:5,6; கலி. 21:12,13).

2. விளக்கம். மின்னோடு மாறுபடும் இமைப்பொடு-விளக்கத்தொடு-முருகன முடியில் திருமணி பொலிவு பெற்றது (முரு. 84,85).

**இமையம்** - இமயமலை. 'மேகந் தோயகின்ற அருவியுடைய பொனனுடை நெடுங்கோட்டு இமையம்-இமயமலை-போனற கன்றை யுடைய பிடியோடு கூடிய பெருங்களிற்றினைப பரிசிலாக நல்குக' எனப் பரணர் குட்டுவனை வேண்டுவர் (புறம். 369: 23-28). இமையத்தில் விற்பொறித்துத் தமிழகம் விளங்க ஆண்டவன் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. ப. 2:4-6). தலைவியின் கூந்தல் இமையக்கானம்போல மணக்கும் (அகம். 399:2,3). தென் கடல் நிலந்தாழ் மருஙகில் மேய்ந்த அன்னம் பொன் படு நெடுங்கோட்டு இமையத்து உச்சியிலுள்ள வானர மகளிர் விளையாட வைத்திருந்த சிறகு வளராத அன்னக் குஞ்சிற்கு இரையெடுத்துப் பறந்து செல்லும் போது வருந்தியது (நற். 356:1-7). இமைய மலையை வில்லாக வுளைத்தவன் ஈர்ஞ் சடை அந்தணன் (சிவபெருமான்) (கலி. 38:1). இளைப்பால ஓய்ந்து பறக்கும் மட நடையினை யுடைய மாயினம (அனனத்திரள) அந்திப்பொழுதில் இமையத்தொருபால் இடம் விட்டியங்காது தங்கியிருக்கும் (கலி. 92:16-19). 'அருவி யார்கமும் இமையத்துக்கப்பாலும் பாண்டியன் நாடுகொண்டு மன்னி விளங்குக என்று நேமியானைப் பரவுதும்' எனத் தலைவி கூறுதல் (கலி. 105:71-75). இமயக் குன்றம், இமயக் குன்று, இமயம் காண்க.

**இமையவர்** - தேவர். இமையவர் - தேவர் - இருக்கும் உச்சியையுடைய சிவந்தமலையில் சிகரத்தினின்றும் பொன் கொழித்துக் கங்கை இழிதரும் (பெரு. 429-431).

**இமையவரம்பன்** - சேர வேந்தன். இவ்வேந்தன் இமயவரம்பன் எனவும் வழஙகபபெறுவான. நெடுஞ்சேரலாதன் இமையம வரை செங்கோலோச்சிய சிறப்பால் இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் எனப் பெயர் பெற்றான். தந்தை உதியஞ் சேரல்; தாய் வெளியன் வேணமாள் நலவினி. இவன் இமய விற் பொறித்து, ஆரியரை வணக்கி, யவனரைப் பிணித்து, நெய் தலைப்பெய்து கையைப் பின்னாற் கட்டி நன்கலமும் வயிரமும் தம் மூதூருக்குக் கொண்டு வநது பிறர்க்குதவிப் பகைவரை வென்றான் (பதி. ப. 2). இவன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் (பதி. ப. 3:1). குமட்டூர்க் கண்ணனார் இவனுடைய வீரம், கொடை முதலிய சிறப்புக்களைப் பதிற்றுப்பத்து இரணடாம் பத்தில் விரிவாகப் பாடியுளளார். மருமக்கள் தாயங்கொள்வோர் வெளியனைத் தநதையாகவும் வேண்மாள் நல்லினியைத் தாயாகவும் உதியஞ்சேரலை மாமனாகவும் கூறுவர்.

**இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன்** - சேரவேந்தன். இமயவரம்பன காண்க.

**இமையவில்** - இமையமலையாகிய வில். சிவபெருமான் இமைய மலையையே வில்லாக வளைத்தார் (கலி. 38:1). [சிவன் இமையத்தில தோன்றிய மூங்கிலை வில்லாக வளைத்தார் எனபர் நச்.]

**இமையா நாட்டம் - 1. இமைக்காத கண்.** அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர் மாய்ந்ததால் வாடாத பூவை யணிந்த, இமையா நாட்டம் - இமைக்காத கண் - கொண்ட, மணமிக்க உணவினை யுடைய தேவர்தம் அரும்பெறல் உலகம் நிறைய விருந்து பெற்றனர் (புறம். 62:7,8,16–19). வாடாத பூக்களை யும் இமையாத நாட்டத்தையும் அவியுணவினையும் உடைய அச்சம் பொருந்திய பெரியோர்க்கு (தெய் வங்களுக்கு) பலி கொடுத்தல் (மது. 457-459). நுதலி டத்து இமையா நாட்டம் உடையவர் சிவன் (அகம். க. வா. 4).

2. **சிவன்** (ஆகுபெயர்). இமையா நாட்டத்திடம் - சிவனிடம் - இந்திரன் ஒருவரம் பெற்று உமை யொடு புணர்ந்த அமையாப் புணர்ச்சியில தோன் றிய கருவையழிக்க வேண்டினான் (பரி. 5:28-31).

**இமையா முக்கண் – இதழ் குவியாத மூன்று கண்.** இமையா முக்கண் - இதழ் குவியாத மூன்று கண் - உடைய செல்வன் சிவபெருமான் (முரு. 153,154).

**இயக்கம் - 1. இயங்குதல்.** குறையாக இருந்த வினையை முடித்த நிறைவுடன் கூடிய தன்இனிய இயக்கத்தை -இயங்குதலை-நிமித்தம் பார்த்து வழிபடும் தலைவி யின் செவியிடத்துப் பல்லி அறிவிக்குமோ எனத் தலைவன் நெஞ்சு நோக்கி வினவினான் (அகம். 351: 4,5,16,17). தயிர்ப்பானையில் மத்திட்டு வெண் ணெய் தோன்ற இயக்கம் செய்தலின் (கடைதலின்) விடியற்காலத்தே கட்டுத் தறியிடத்து ஓசை கேட் கும் (நற். 12:2-4). ஆசினிப்பலா வுடைய தோட்டத் தில் பல மரங்களின் உயர்ந்த கிளைகளில் மின் மினியை விளக்காகக் கொண்டு விசும்பிடையே செல்லும் மேகத்தின் இயக்கத்தை மலை நாடனின் அன்புமகள் அறிவாள் (நற். 44:9-12). இயக்கு காண்க.

2. **வழி.** வேல் காய்ந்தாற் போன்ற கூர்ங்கற் பாறையில் வெயில் துன்பந்தரும் இயக்கத்தில் – வழியில் – கதிரவன் வெம்மை தணியும் அந்திப் பொழுதில் செல்லுங்கள் எனக் கூத்தரை வழிப் படுத்தினர் (மலை. 373-375).

3. **ஓசை.** இரவில் வயலிற் சென்று மேயும் யானை யின் காலூன்றி நடக்கும் வலிய இயக்கத்தை - ஓசையை – கூர்த்தறிந்து கானவன் பரண்மீதிருந்து கவண்கல் எறிந்தான் (அகம். 292:7-11). மழை பெய்யும் நடு இரவில் மின்னொளியில் பிடியொடு மேயும் யானையின் அடி ஒதுங்கும் இயக்கம் கேட்ட கானவன் கவணைக் கல்லெறிந்தான (கலி. 41:5-10).

**இயக்கன் - இயற்பெயர்.** வெஞ்சினத்தையுடைய இயக் கன் என்பான் ஒல்லையூர் தந்த பூத பாண்டியனின் கண்போல் நண்பின் கேளிருள் ஒருவன் (புறம். 71: 14,15).

**இயக்கு - செலவு.** வான வண்கை வளங்கெழு செல்வர், தேரிற் பூட்டிய காற்றின் இயக்கினை செலவினை – ஒத்த விரைந்தோடும் குதிரைகளைச் செலுத்தினர் (மது. 440,442). நீரின் இயக்குப் போன்று விரைந்து செல்லும் இயல்பினது நெடுந் தேர் (மலை. 571). பெருந்திரை முழக்கமொடு அதன் இயக்கு ஓயந்திருந்த இரவில் பரதவர் அம்பி யில் விளக்கொடு மீன் பிடிக்கச் செல்வர் (அகம். 100:5-7). ஈங்கை மலர் மணலாடு கழங்குபோல் பாறைமேல் பரவிக் கிடக்கும் அழகுபொருந்திய இயக்கருங் கவலையில (மக்கள் செலவுதற்கரிய கவர்த்த வழியில்) தலைவர் பிரிந்துசென்றார் (நற். 79:1-5). இயககம் - 1 காணக.

**இயங்கள் - வாச்சியங்கள்.** குறவரும் மருளும் குன்றத் துக்குச் சென்றால அவ்விடத்தைவிட்டு நீங்கி அகன் கட் பாறையிலே நெருங்கிக் கல்லெனனும் ஓசை யுண்டாக நும் இயங்களை-வாசசியஙகளை-வாசிப் பீராக எனறு கூத்தர் ஆற்றுபபடுதகப்பட்டனர் (மலை. 275-277). இயம் காணக.

**இயங்குநர் - வழிச்செல்வார்.** பக்கமலையில் கற்பாறை யின் பக்கததேயுள்ள சிறு வழியில் இயஙகுநரை -வழிச்செல்வாரை- இடுக்கண் செயயாமல் அம்பு டைக் கானவர் வழிப் படுத்துவர் (மலை. 15-18). வேங்கையின் முரண்தொலைத்த நெடுநல் யானை மதமிக்கு இயங்குநரைக் கொலலும் (அகம். 307:6-9). இயங்குநர் இல்லாத நீர்திகழ் சிறுநெறியில் கொடிய விலங்குகள் திரிதலை அறிநதும் தலைவன் நள்ளிர வில் வருதற்குத் தோழி நொந்தாள் (நற். 257:8-10). கதிரவன் சுடுதலால் மலைபிளந்து இயங்குநர்க்கு வழி யில்லையாகக் குறுககிட்டு வீழ்ந்து கிடந்த வெம்மை மிக்க வழியிடத்தே தலைவர் பிரிந்து சென்றார் (கலி. 2:7-10).

**இயம் - வாச்சியம்.** வல்வில் ஓரி கூத்தச் சுற்றத்திற்குப் பொலன் கலன்களும் யானையும் நல்கியதால், அச் சுற்றம் வாரால் பிணிக்கப் பெற்ற, பலகூடி இயங் கும் இனிய இயம்-வாச்சியம்–முழங்கப் பாடலும் மறந்து ஆடலும் கைவிட்டது (புறம். 153:6-12). வீரன் போரிற் பெற்ற புண்ணைக் காக்கும்போது இரவமரத்தின் தழையையும் வேப்பிலையையும் மனையிற் செருகி யாழொடு பலலியம் கறங்க ஐயவி சிதறி ஆம்பற் குழலூதி மணியடித்துக் காஞ்சிப் பண் பாடுதல் மரபு (புறம். 281). வாச் சியக்காரரும் அறியப்படாத பலலியம் முழங்க மூதூர் பெருங்கலக்கம் எய்தியது (புறம். 336:6,7).

விசும்பில் பதினைந்து நாள் முறையே—முதிர்ந்த திங்களைக் கடல் நடுவே கண்டாற் போன்ற இய மாகிய தடாரிப் பறையை விடியலில் கிணைஞன் இசைத்ததை நலங்கிள்ளி கேட்டுக் கொடை வழங் கினான் (புறம். 400:1-11). வயவர் சினந்தெழுந்த நாட்டில் தயிர்கடையும் மத்தோசை கேட்ட மனை யில் இன்னியங்களின் ஒலி எழா (பதி. 26:3). ஆகா யத்தில பல்லியம் கறங்கக் கொம்பு இசைப்பச் சங்கு முழங்க முருகன் திருச்சீரலைவாயில் எழுந் தருளுவான் (முரு. 119,120,125). குறமகள் மலைப் பக்கததில் நன்னகர் வாழ்த்தி நறும்புகையெடுத்துக் குறிஞ்சிப் பண் பாடி, இமிழிசை அருவியொடு இன்னியம் ஒலிக்கப் பல்பூத்தூவினள் (முரு. 238-242). முருகன் உவக்கும் இயங்களைக் குறமகளிர் இயக் கினர் (முரு. 242,243). பல இயங்களை உடைய கூத்தரைப் புரத்தல் வல்லவன் நல்லியக் கோடன் (சிறு. 125,126). தன்பயன் விளங்குகின்ற இசை களைத் தான் கூடுதல் கொண்ட இன்னியத்தை (இனிய யாழை) இசைநூல் கூறும் முறையாலே செம் பாலையாகப் பாணர் வாசித்தனர் (சிறு. 228-230). நாடக மகளிர் தாம் ஆடும் களத்திற்கு வாராற் பிணித்தல் இறுகின இன்னியம் (இனிய முழவு) எடுத்து வருவர் (பெரு. 55,56). துறக்கம் போன்ற பூமலி பெருந்துறையில் இளைப்பாறி அங்குள்ள அருந் திறற் கடவுளை (திருமாலை) வாழ்த்திக் கருங் கோட்டு இன்னியம் (யாழ்) இயக்கிச் சென்மின எனப் பாணனிடம் கூறி ஆற்றுப்படுத்தினர் (பெரு. 388-392). வாச்சியக்காரர் தம் இயம் வாசித்தா லொத்த ஓசையை மலையிலுள்ள மூங்கில் கணு திறக்கப்பட்டு உடைந்து தோற்றுவிக்கும் (மது. 304,305). கயத்தைக் கையாற் குடைந்து விளை யாடுந் தன்மையவாக இயங்களை முழக்கி இசை கேட்டு மகிழ்ந்தனர் (மது. 363,364). வாடாப் பூவினையும் இமையாத கண்ணினையும் அவியாகிய உணவினையும் உடைய அச்சம் பொருந்திய பெரி யோர்க்கு (மாயோன், முருகன் முதலிய தெய்வங்களுக்கு) உயர்ந்த பலிகளைக் கொடுத்தற்கு அந்திக் காலத் தெடுத்த விழவில தூரியம் - வாச்சியங்கள் - ஒலித் தன (மது. 457-460). தலைவிக்கு நோய் முருகனால் வந்ததெனக் கூறி வேலன் அரித்தெழும் ஓசை பொருந்திய இன்னியம் (சலலி, கரடி முதலியவும் பிறவும்) முழங்க, கார் மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின் நெடுவேளைப் பேணினன (மது. 611-614). பறவை களின் ஓசையாகிய நிறைந்த இயங்களை உடைய மலைப் பக்கத்திலுள்ள தினைபபுனத்தே மகளிர் தெள்விளி பயிற்றிக் கிளி ஓப்பினர் (குறி. 99-101). விழாக் கொள்ளும் ஊரில் அரித்தெழும் ஓசையைக் கூட்டுதலை யுடைய இன்னியம் ஒலிப்ப ஆடுமகள் ஆடினாள் (குறி. 191-193). ஆற்றுக் கரையில் உள்ள கோயிலில் பராவுதற்கரிய முறைமையினை யுடைய கடவுளைக் காணின் வணங்கி இயத்தினை இயக் காது செல்லுங்கள் எனக் கூத்தரை ஆற்றுப் படுத் தினர் (மலை. 229-232). பழங்களைக் கொண்ட ஆல் மரத்திடத்துக் கூடிய பல இயங்களை ஒத்த பல ஓசையுடன் கூடின பறவைக் கூட்டம் உள்ளது (மலை. 268,269).-மலையருவி ஆடும் வானர மகளிர் கையாற் குடையுந்தோறும் கூத்தரது இயம்போல இன்னிசை எழுந்தது (மலை. 294-296). கரிய மேகத் திரள் துவலைகளைத் தூவுதலால் காவிக் கொண்ட இயம் நனையாமல் கிணறு போன்ற முழைஞ்சு களில் புகுந்து செல்க எனக் கூத்தரை ஆற்றுப்படுத் தல் (மலை. 362-366). பொலந்தேர்த் திதியனின் இன் னிசை இயம் (முரசு) போல மலைமீதுள்ள அருவி முழங்கும் (அகம். 25:20-22). இணைந்த பல இன்னி யம் கறங்கக் களனிழைத்து வெறியாட்டெடுத்தனர் (அகம். 98:14,19). தென்னவன் பொதியில் மலையிலி ருந்து ஆர்த்து வரும் அருவிபோல ஒலிக்கும் இன் னியம் முழங்க வெறியாட்டெடுத்தல் (அகம். 138: 7-10). முல்லை நிலத்து நீர் நிறைந்த பள்ளங்களில் பிளந்த வாய்த் தேரைகள் சிறு பல்லியம் போல ஒலிக்கும் (அகம். 154:1-3). இன்னிசையுடன் முழங் கும் இயம் (முழவு) ஒப்பத் தேனொடு கலநது வரும் அருவி மலைக் குகைகளும் பிளப்பிடங்களும் ஒலிப்ப வீழும் (அகம். 172:2-4). கள்ளின் களிப்பினையுடைய நல்ல பாணரின் ஒன்று கூடி ஒலிக்கும் இயம் ஊரில் தேரோடும் தெருவிடத்து முழங்கும் (அகம்.189:12-15). நீரின்கண் ஒலிக்கும் தேரை ஒலியைப் போலத் தாளம் அமைத்து அரித்த ஓசையோடு ஒலிக்கும் சிறிய பல இயஙகளைப் பல ஊருக்கும் கொண்டு சென்று கூத்தர் ஆடுவர் (அகம். 301:18-23). அருஞ் சுரத்தில் கவர்த்த வழியில் தங்கிய கூத்தர்தம் இயத் தின் ஒலி பெருமலையின மேலிடத்தே தோன்றியது போலப் பிடியை யிழந்த களிறு மலைப்பக்கத்தே இடியுடன் மாறுபட முழங்கும் (அகம். 359:8-11). கடம்ப மரத்தில் கொடி கட்டிக் கண்ணி சூட்டிப் பல்வேறு குரலை யுடையனவாகிய தாளத்தின் வழிபபடும் ஒரு தூக்கினை யுடைய இனிய இயங் களைக கொண்டு காடுகெழு நெடுவேளைப் பாடு தல் (அகம். 382:3-5). ஆட்டையறுத்துத் தினையைப் பலியாக வைத்து யாறறின் இடைக்குறையில் பல் லியம் கறங்கத் தெய்வம் வாழ்த்தி வெறியாட்டு எடுத்தனர் (குறு. 263:1-4). சூரர மகளிர் அருவியின் ஒலியை இன்னியமாகக் கொண்டு மலைப்பக்கம் பொலிவுபெற ஆடினர் (நற். 34:4,5). பக்கத்தே குழல் ஒலிக்கப் பல்லியம் முழங்க, ஆடுமகள் வலிய கயிற் றின் மீது நடந்தாள் (நற்.95:1,2). தலைவி நோய்க்குச்

காரணம் அணங்கென்று கூறி வேலன் இன்னியம் கறங்கப் பாடிப் பன்மலர் சிதறிப் பலி கொடுத்துப் பரவுவான் (நற். 322:9-12). காட்டு வழியில் நீர் வேட்கை தீர முயன்ற உயவல் யானை இயத்தில் ஒன்றாய தூம்பு (நெடுவங்கியம்) போல நெட்டுயிர்க்கும் (ஐங். 377:1,2). இடிபோன்ற இசையுடன் இயம் எழுந்து ஆரவாரிக்க ஆயர் ஏறு தழுவினர் (கலி. 104:54,55). ஏறுகளைத் தொழுவில் அடைத்தபோது கார்காலத்து இடியொலி போல இயம் முழங்கியது (கலி. 105 22-24). ஒனறற்கொன்று வேறுபாடுடைய இயங்கள் மெதுவான நடையை யுடைய தாளகதியால் மென்னடையாய்ச் செல்லுதல போன்று முதியர், இளையர், மகளிர் முதலிய பலரும் மக்கள் நெருக்கத்தால் வையைக் கரைக்கு மெலலச் சென்றனர் (பரி. 10:22-26). இயன் காண்க.

இயல் - 1. தன்மை. ஆவையும் ஆனின் இயல்-தன்மை-உடைய பார்ப்பன மாக்கள் முதலியோரையும் காவலான இடத்திற்குச் செல்லுங்கள் எனக் கூறிப் பின் பிறர்மீது அம்புவிடுவான முதுகுடுமிப் பெருவழுதி (புறம். 9:1,5). அசையும் இயலுடன் பணைத்த கழுத்தினையுடையது களிறு (புறம. 15:7). விசும்பில் தன்னியல் வழாது கதிரவன் செல்லும் (புறம்.25:2). மெல்லியல் குறுந்தொடி மகளிர் (புறம். 97:22,24). மெல்லியல் விறலி (புறம். 133:1). காற்றுப் போலும் இயலுடைய புரவி (புறம.178:2). மெலலியல் குறுமகள் (புறம். 196:14; அகம். 258:9;274:14; நற். 93:8;142:11). மெல்லியல் மகளிர் (புறம். 224:17; பதி. 40:23;78:5; நெடு. 151). காற்றினைப் போன்ற இயலுடைய கலிமா (புறம். 229:21). தண்ணியல எழிலி (பதி. 18:10;20:25). அசையும் இயலகொண்ட உளையவிர் கலிமா (பதி. 42:14, 15). துளங்கியல் விறலியர் (பதி. 49:2). எணணியல முற்றிப் புதல்வரைப் பெறுதல் (பதி. 74:18). உளரியல ஐம்பால் உமட்டியர் (சிறு. 60). துளங்கியல் மகளிர் (சிறு. 262). அசையும் இயல் உடைய பெருநாவாய் (மது. 83). தூஙகியல மகளிர் (நெடு. 120). நாயின் நாக்குப் போன்ற அசையும் இயல் கொண்ட சீறடி (மலை. 42,43). மெல்லியலோர் (அகம். 12:14). மெல்லியல் மடந்தை (அகம். 43:11). ஆடியல் மடமயில் (அகம். 69:13,14). ஆடியல் யானை (அகம். 100: 9). தளரும் இயல் உடைய கொடிசசி (அகம. 132:7). ஓட்டியல பிழையா வயநாய் (அகம். 182:5). செரு இயல் நல்மான் திதியன் (அகம். 262:10). ஆடு இயல் இளமழை (அகம். 271:13). மெல்லியல் ஒலிவரும் கதுப்பு (அகம். 302:14). தளிர் இயல் கிள்ளை (அகம். 324:3). தளரும் இயல கொண்ட அரிவை (அகம். 325: 13). மெலலியல் அரிவை (அகம். 384:7; குறு. 137:1; ஐங். 414:3). துன்புறுத்தும் இயல் கொணட பகழி (அகம். 388:11). மெல்லியல் மடநல்லோள் (அகம். 392:7). கால் இயல் செலவு (குறு. 189:5). அசை இயல் கொடிச்சி (குறு. 214:3). மெல்லியல் துணைமலர்ப் பிணையல் (குறு. 229:5,6). கால் இயல கடுமா (குறு. 250:3,5). கூந்தல் அசையும் இயல உடையது (நற். 20:3,4). 'வல்லுவம் கொல்லோ மெல்லியல் நாம்' (நற். 33:9). ஆடியல் விழவின் அழுங்கல் மூதூர் (நற். 90:1). குவளை உணகண ஏர் மெலலியல (ஐங். 72:3). மெல இயல ஏர் திகழ் ஒண்ணுதல (ஐங். 225:3,4). மெலலியற்கொடிசசி (ஐங. 288:3). மெலலியல் புயல் நெடுங்கூந்தல் தேம்பும் (ஐங. 304:3,4). பெணணியல் ·காமம சுடர்நுதல் விளங்கும் தேமொழி அரிவை (ஐங். 466:3-5). மெல்லியல் மேவந்த சீறடி (கலி. 13:11). புள் இயல் காமர் கடுந்திண் தேர்ப் பொருப்பன் (கலி. 35:23,24). கொடியியல் நல்லள் (கலி. 88:1). தொங்கும் இயல் உடைய மென்காதிற் கிடக்கும் புல்லிகை என்னும் பூண் (கலி. 96:11). அசையியல கூந்தல் (கலி. 101:18). வெல்புகழ் உயர்நிலைத் தொல் இயல் பொதுவன் (கலி. 105:50,51). மெலலியல ஆயமகள் (கலி. 110:9). தளிர் இயால (கலி. 113:6). மெல இயால (கலி. 113: .3; 115.5). (இயலபினையுடையாய எனும் விளிப் பொருளில் வந்துள்ள இயல இயால் என நீண்டது). மாழை மடமான பிணை இயல் வென்றாய் (கலி. 131:12). ஞாயிறு தன் கதிர்களால் உலகததில் பழைய இயல் உடையதாயப் பொருளை விளக்கும் தொழில் செய்யும் (கலி. 148:1). கண் இயல் கண்டேத்தினர் (பரி. 7:65). கயம்படு கமழ் சென்னிக் களிற்று இயல் கைம்மாறுவார் (பரி. 9:50). புள் இயல மா (பரி. 10:14). துமபியின் காய் சினத்து இயல்காண்மின் (பரி. 11:132). மெல்லியல் (பரி. 12: 64). ஈரமாலை இயல் அணியார் (பரி. 17:36). வேள்வியின் அழகியல விளம்புவாா (பரி. 19.43). ஏரணி கொண்டார் இயல் (பரி. தி. 2:9,10).

2. இயற்றுதல். இயல் - இயற்றுதல் - வாய்நத தேர் வளவ (புறம். 7:10). பொன்னியல் புனை தோட்டி (புறம். 14:3). இயலதேர் வழுதி (புறம். 52.6). இயல் தேர்ச் சென்னி (புறம. 61:13). இயல்தேர் அஞ்சி (புறம். 101:4). இயல்தேர்க் குமண (புறம். 158:26). ஆடு இயல் யானை (புறம். 165:7). இயலதேர் அண்ணல் (புறம். 202:13; 203:6). பொன இயல பெரும் பூண் வளவன் (புறம். 227:8,9). இயலதேர்க் குருசில் (புறம். 290:2). இயல் தேர்த் தநதை (புறம். 394:8). இயல் தேர்ப் பொறைய (பதி. 75:3). இயல் தேர்ப் பொருநன் (அகம். 36:19). இயல் தேர் மோரியா (அகம். 69:10). பொன் இயல்புனை படை (அகம். 124:9). இயல் தேர் நன்னன (அகம். 173:16). இயல் தேர்ச் செழியன்

(அகம். 209:4). நொவ்வியல் (துன்பத்தினை இயற்றும்) கணைகுரல் இசைக்கும் விரைந்து செல்லுகின்ற கடுங்கணை (அகம். 281:6, 7). இயல்தேர்க் கொண்க (குறு. 114:2). இயல்தேர்ச் செல்வக் கொண்கன் (ஐங். 104:3, 4). சேடியல் (பெருமை இயன்ற) வள்ளத்துப் பெய்த பால் (கலி. 72:3). உப்பியல் பாவை மழை உற்ற தன்மை போல் காம நோயை நீந்தித் தன் உயிர் கரைவதாகத் தலைவன் கூறினான் (கலி. 138:15-17). சூட்டும் கண்ணியும் மோட்டு வலையமுமாகிய இவற்றான, இயல் (இயன்ற) அணிகளை அணிந்தனர் (பரி. 20:30, 31).

3. இயங்குதல். இயல் - இயங்குதல் - உள்ள தேர்ப் பொறைய (பதி. 75:3). புள்ளியற் கலிமா (அகம். 64:2; ஐங். 481:4). தொன்றியல் சிறுகுடி (அகம். 75:7). தொன்றியல் மரபின் மன்றல் அயர்தல் (அகம். 112:16). பாவை இயல் கற்றன்ன ஒதுக்கினள் (அகம். 142: 21, 22). துயத்து இயல் வாழ்க்கை (அகம். 145:16). கால் இயல் நெடுந் தேர் (அகம். 175:10). ஒல்கு இயல் மடமயில் (அகம். 281:4). வளியின இயல் மிகும் தேர் (கலி. 50:15). இருங்குன்று பெருங்கலி ஞாலத்துத் தொன்றியல் புகழது (பரி. 15:35, 36). இயல் தேர்ப் பொருநன் (பரி. தி. 2:71).

4. சாயல். மெல்லிய இயல் - சாயல் - பொருந்திய கலிமயில் அகவும் (நெடு. 98, 99). மயிலியல் மானோக்கின் கிளிமழலை மென்சாயலோர் (பட். 149, 150). மெல்லியல (அகம். 12:14). மயிலியல் சேயிழை மகளிர் (அகம். 369:4, 5). மயிலியல் என்னோரன்ன தாயர் (அகம். 385:1, 2). மயில் இயல் செறி எயிற்றரிவை (குறு. 2: 3, 4). அசையியல் கொடிச்சி (குறு. 214:3). தலைவியின இயல் நோக்கித் தலைவன் நினைந்து, மெலல இயலும மயிலும் அன்று எனப் புனைந்தான (கலி. 55:8, 13). மயிலியல (கலி. 57:2). பெண்ணின இயலை மயில் களவிற் கொண்டதென அவளழகு புனையப்படுகிறது (பரி. 18:11).

5. இலக்கணம். 'அரசின் இயல் – இலக்கணம் - பிழையாது செருமேந் தோன்றி நோயிலையாகியர்' எனப் பெருங்குன்றூர் கிழார் இளஞ்சேரல் இரும்பொறையை வாழ்த்தல் (பதி. 89.12, 13). 'அரசியல் பிழையாது அறநெறி காட்டி வழிவழி சிறக்க' என மாங்குடி மருதனார் நெடுஞ்செழியனை வாழ்த்தினார் (மது. 191, 194). நூல இயலின்படி செய்த நோக்குவார் நோக்கத்தில் அகப்படாமல் ஓடும் பண்ணமை நெடுந்தேர் (அகம். 234:7, 8). மெய்யூர் அமைச்சியல் கொண்ட மையூர் கிழான் (பதி. ப. 9.11).

6. இயற்கை. திருந்திய இயல் - இயற்கையான-மொழி (பதி. 24:11). இயலறைக் குரிசில் (பதி. 24: 14). இயலணிப் பொலிந்த ஈகை வான்கழல் (குறி. 126). நல்லியற் பாவை (குறு. 89:6). இரும்பல் கூந்தல் இயலணி (குறு. 165:5). போதார் கூந்தல் இயல் அணி (ஐங். 232:1). தண்பரங் குன்றத்தில் இயலணி கொண்ட மயில் போலும் வள்ளியின் வதுவை நிகழ்ந்தது (பரி. 19:5-7). இன்புற்றணிந்த இயலணி (பரி. தி. 6:2). இயல்பு - 2 காண்க.

7. அசைதல். தண் நறுங்கழுநீர்ப் பூவாற் பொலிவு பெற்ற கொண்டை இயல் - அசைதல் - பொருந்திய சிறு புறம் (அகம். 59:14).

8. இயற்பாட்டு (இலக்கியம்). 'தொல்இயல்-இலக்கியம்- அறிந்த புலவ' எனத் திருமால் விளிக்கப் பெறுதல் (பரி. 3:86). இன்னியல் மாண்டேர்ச்சி இசைபரி பாடல் (பரி. 11:137). முருகனின் பூசைக்கண் நரம்பினது ஒலியும புலவர் பாடிய இயலும் இடம் பெற்றன (பரி. 18:51).

9. பொருந்துதல். களிஇயல்-பொருந்திய - யானைக் கரிகால் வளவ (புறம். 66:3). ஆடு இயல் அழல் குட்டம் (புறம். 229:1). அளி இயல் வாழ்க்கையை உடையவன் வெளியன் வேண்மான் ஆஅய்எயினன் (அகம். 208:5,6). மதுரையில் நனிகூடும் இன்பம் இயலகொள அமைந்திருந்தது (பரி. தி. 1:28,29).

10. அழகு. பேரியல் - பேரழகு - மிக்க அரிவை (ஐங். 413:4; 497:4; பதி. 52:18).

11. ஒப்பு. ஏற்றுக்கு இயல் – ஒப்பு - உடைய எழில் நடைப் பொலிந்த மொய்ம்பினன் ஆட்டனத்தி (அகம். 236:14,16).

12. அன்பு. தொல் இயல் – அனபு – வழுவாமல துணையெனக் கூடியவளைப் பிரியாமையே பொருளாகும் (கலி. 2:17,18).

இயல்பு-1. தன்மை. இவ்வுலகம் இன்னாதது. ஆதலால் இவ்வுலகின் இயலபு - தன்மை-அறிந்தோர் வீட்டின் பத்தைத் தரும் நல்ல செய்கைகளை அறிந்து செய்து கொள்க (புறம். 194:6,7). ஊரின்கண தனக்குப் பொய்யாயுள்ள இரவுக் குறியில் கூடுதற்கு வரும் வரவின் இயல்பு நினைந்து வரைந்து கொள்ளத் துணிதல் (குறி. 245,246). அன்பில்லாத இயல்பினையுடைய பொய்ம் மொழிகூறும் சேரியம் பெண்டிரின் கௌவை மொழிதல் (அகம். 65:3,4).

2. இயற்கை. பேணுதகு சிறப்பின் பெண்ணுடைய இயல்பு-இயற்கை-ஆயினும் என்னொடு ஒத்தவள் அல்லள் (பதி. தி.4:1,2). பொருள்வயிற் பிரிதல் ஆடவர்க்கு இயல்பு எனின் அறத்தினும் காட்டில் பொருள் அரியது போலும் (நற். 243:9-11). ஆயர் மகளிர்க்கு இருமணம் கூடுதல குடிப்பிறப்பிற்கு இயல்பு அன்று

(கலி. 114:20,21). மடவாரின் கூந்தல் மலரையும் மைந்தரின் மார்பு மலரையும் கொண்டு மீனாகிய முத்துப் பூத்துவிளங்கிய வானத்தின்கண் கங்கை பெயர்ந்த கூற்றை ஒத்தல் வையைக் கியல்பு (பரி. 16:33-38). நீராடும் பரத்தையரை அடிக்கடி முயங்கு தலால் குழைந்து வடுப்படும் கத்தூரிக் குழம்பு நிறைந்த மார்பு, பனியால் வளைநத மூங்கில பனி நீங்க மேலே விசைத்தெழுந்து தாக்கத் தேன் சோர்ந்து விழும் மலையினை ஒத்தது. இத்தகைய நிகழ்ச்சி பாண்டியன் வையைக் கியலபு (பரி. 16:43-47). ஊடல் கொண்டாரைக் காரணங் காட்டி உணர்ப்பித்தல் ஆய்தேரான் குன்றத்தின இயல்பு (பரி. 18:13, 14). தாம் விருமபும் காதல ரொடு புனலாடுமாறு முன்பிரிந்தவரைக் கொண்டு வந்து கூட்டுதல் பூமலி வையைக்கு இயல்பு (பரி. 20:110, 111). வழி மயங்கி மருளுதல் நெடியான் நெடுமாடக் கூடற்கு இயல்பு (பரி. தி. 13:5,6). இயல்-2 காண்க.

3. ஒழுக்கம். சால்பும் மேம்பாடும் இயல்பும் - ஒழுக் கமும - குன்றின் மாசு நீக்கிப் புகழினை முன் போல் நிலை நிறுத்துதல ஆசறு காட்சி யுடைய ஐயர்க்கும் எளிய செயல் என்னார் பழையதாகிய நூலை அறிவார் (குறி. 15-18). தலைவி அளியும் அன்பும் சாயலும் இயல்பும் முன்நாள் போலாள் (அகம். 49:2, 3). அன்பும் மடனும் சாயலும் இயல்பும் என்பு நெகிழக்கும் கிளவியும் பிற பண்புகளும் ஒன்றிக் கலந்துவிடுகின்ற ஒரு கோட்பாட்டோடே தழுவி இன்புற்றிருந்தோம் எனத் தலைவன் நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 225:1-4).

4. இலக்கணம். இருபிறப்பாளராகிய அந்தணர் ஓதல் முதல் ஏற்றல் ஈறாக உள்ள ஆறு நனமை பொருந்திய, இயல்பில - இலக்கணத்தில - வழுவா திருந்தனர் (முரு. 177, 181). கடவது அறிந்த இன் குரல் விறலியர் தொன்றுதொட்டு ஒழுகிய மரபின் தம் இயல் வழுவாது அருந்திறல் கடவுட் போற்றி னர் (மலை. 536-538). தலைவனிடம் ஆயர் மகளிர் இயல்பு உரைத்து எந்தையும் யாயும் அறிய அறத் தொடு நிலைவகையான் உரைப்பாயாயின் யான் உற்ற நோயைப் போக்கினை ஆவாய் எனத் தோழிக்குத் தலைவி கூறினாள் (கலி. 111:22-24). தள்ளாப் பொருள் இயல்பினைக் கொண்ட தண் டமிழினை ஆய்வு செய்யாதார் களவினபத்தை ஏற்றுக் கொள்ளார் (பரி. 9:25,26).

**இயலவர்** - இயல்பினை யுடையவர். தலைவனைப் பொருது தளர்ந்த இயலவராகிய - இயல்பினை யுடையவராகிய – பரத்தையரொடு அவன் துணங் கைக் கூத்தாடினான் (கலி. 66:17, 18). மென்சீர் மயில் இயலவர் ஆகிய வள்ளியின் பாங்கியர் தேவ சேனையுடன் பொருத போது களிற்றியல்பைத் தம்பாற் கொள்ளுதல், புரவியின கதியால் வருதல், முதலிய செயலகளை மேற்கொண்டனர் (பரி. 9: 50-59).

**இயலார்** - இயல்புடையார். தலைவி துயிலின்றி யாமக் கடலை நீநதத் தலைவன மயில்இயலாரான - இயல புடையாரான – பரத்தையரை நுகர்ந்து புனலாடி அவளை மறந்திருப்பன் (கலி. 30:5, 6). தார் மார பின் தகையியலார் மனமகிழ்ந்து பரங்குன்றின் சுனையில் பாய்ந்தாடினர் (பரி. 17:35-39). கொடி இயலார் கைபோல் குவிந்த காநதள் முகைகள் இருந்தன (பரி. 20:98). வையைக்குத் தளிர் இயலார் யானை மீதேறிச் சென்றனர் (பரி. தி. 2·14,15).

**இயலியாள்** – திரியும் நிலையினாள். தலைவி தோள்நல முண்டானைக் கெடுத்தாள்போல தெருவிற் புறப் பட்டு வெயில தன்மேலே படச் சீறடிச சிலமபார்பப எங்கும் இயலியாள - திரியும் நிலையினாள் - ஆயி னாள் (கலி. 147:4-7).

**இயலோர்**–தன்மையோர். மயிலின் இயலோரும் - தன் மையோரும்-மடமொழியோரும் தமமைக் கோலஞ் செய்துகொண்டு மெலல நடந்து கையைத் தட்டிக் கல்லா மாந்தரொடு இன்பந் திளைத்தனர் (மது. 418-420).

**இயவர்** – வாச்சியக்காரர். இயவராலும் - வாச்சியககார ராலும் – அறியப்படாத பல்லியங்கறங்க மூதூர் மயங்கியது (புறம். 336:6,7). தொடிததோள் இய வர் கடிப்புக்கொண்டு முரசு முழக்குவர் (பதி. 17: 5-7). செந்தினையைக் குருதியொடு தூவி நீராட் டப் பெற்ற முரசத்தை அடிக்கும் பக்கம் திறந்து வைத்து இயவர் குறுந்தடி கொண்டு கையால் ஓச்சுவர் (பதி. 19: 6-8). சுழிந்த மயிருடைய தலை யினையும் பூவாற் செய்த கண்ணியையும் களளா கிய உணவையுமுடைய சுருதியோடு இனிது கூடு கின்ற வாச்சியங்களையுடைய இயவர் உள்ள துறையிடத்து மருதமரத்தில் ஏறியுள்ள மயிலகள் மகளிர் தம்மை ஓட்டும் ஓசைகேட்டுப் பாட்டென மருண்டு ஆடின (பதி. 27:4-8). விற்படைகள் நிலை பெற்ற காவற் காட்டையுடைய தகடூரை அழிததுப பகைவர் படைததோற்றத்தை நேரே நோக்காமல எடுத்தும் படுத்தும் வளைத்தும் பலபட மாறுபட நோக்கும் அச்சததையுடைய பார்வையையும் வாத் தியங்களையும் கொண்ட இயவராகிய பகைவர் தம் மாறுபாட்டினைப் பெருஞ் சேரலிரும்பொறை யழித்தான் (பதி. 78:9-12). மலைப்பக்கததே மூங்கிற் புதரினைப் தீப்பற்றி அழித்தலான் யானை மேய் புலம் சென்றது; அப்பொழுது மகிழ்நத இயவர்

இசைக் கருவிகளை முழக்கினாற்போல மூங்கிலின் கணுக்கள் உடைநத ஒலி எழ மூங்கில் அழகு அழிந்தது (மது. 301-306). உதியன் சினந்து ஒலிக்கும் போர்க்களத்தில் இயவர் ஊதும் ஆம்பலங் குழலின் இசைபோலத் தலைவி வாயவிட்டழுது துன்புற்றாள் (நற். 113.9-12). தட்டை தண்ணுமைகளின் பின்னர் இயவரின இனிய குழலினது ஆம்பல் பண்ணைப போலத் தும்பி இமிரும் (ஐங். 215:1-4). காட்டில பெணபுறா தன் துணை இனபுற மன்னரின் இயவரைப் போல ஒலிக்கும் (ஐங். 425:1, 2). மேல்துறையில் கள்ளின் கலங்களைக் கழுவுதலின் கீழத்துறையில ஒழுகும் கள்ளின் கலஙகல் நீரை அருந்த பிளந்த வாயினையுடைய யாமை சம்பங் கோழி இயவனாக இறுகப் பிணித்த தெணகண் கிணைப்பறை போலப பிறழும் (அகம். 356:1-4).

**இயவன் - வாச்சியக்காரன்.** இயவர் காண்க.

**இயவு - வழி.** குறுகிய இயவினை-வழியினை-யுடைய சுரம்பைகள் நிறைநத சிற்றூர்கள் பாணருககு அளிக்கப் பெற்றன (புறம். 302:6,7). விற்படையிருக்கும் ஊர்களில் அகன்ற காட்டு இயவில அணிலொடு எலி திரியாதபடி ஈந்தின இலை வேயநத குடில் இருககும் (பெரு. 82-88). மலையிடத்து உயர்நதுள்ள நெறியில் போகும அருமை கருதாமல் கூததர் கலலை இடித்த சுரததின் உச்சியின் இயவுக் கொணடொழுகினர் (மலை. 19,20). எருமை கிடந்தாறபோன்ற கல்பிறங்கு இயவில் வரகு அறுவடை செயதுள்ளனர் (மலை. 111-113). மடுககளையுடைய ஓயாற்று இயவினகண் அமைந்துள்ள கோயிலில் கடவுளைக் காணின் இறைஞ்சி இயத்தினை இயக்காது செலலுங்கள் எனக் கூததரை ஆற்றுபபடுத்தல (மலை. 228-232). நல்லெழில் நெடுந்தேர் இயவில் ஓடிவந்த தன்மை போலக் கல்லின மேல் ஓடிவரும யாறுகள் ஆர்ப்பரித்தலின் முழைஞ்சுகளில் எதிரொலி ஆரவாரம் கேட்கும (மலை. 323,324). இருப்பைப பூககள பவழம் போன்ற சிவநதுயர்ந்த இயவில குருதியின் மேற்கிடக்கும் நிணங்கள் போல விரவிக் கிடக்கும் (அகம். 9:3-9). காட்டில் யானையின வெணகோடு நயந்த அனபிலலாத வேட்டுவர் விழிப்பினநிச்செலலும இயவில கிணறுவெட்டியவர் நீரின்மை கண்டு விடுதத தழை மூடிய குழியைத் தம்மை வீழத்த அகழந்த குழி எனக கருதிக் களிற்றினம் அதனைத் தூர்க்கும (அகம். 21:24-27). அரிய சுரததில் நததை உழிஞ்சிலின் அடிமரத்தைப்பற்றிப் புதைததுக் கொணடிருக்கும தனித்த இயவில் மறவர் விலலினால் மாயநதோர்க்கு நட்ட நடுகல்லின் நிழலில் செநநாய் பிணவொடு வதியும் (அகம். 53:6-11). நெருபபுப் போன்ற சிறு கண்களையுடைய பன்றி சிறு தூற்றிலே உறங்கும் போது அதன் முதுகு மறைய முல்லை புது மலர்களை உதிர்க்கும் காடு சார்ந்துள்ள அருமுனை இயவில் அமைந்துள்ள சிற்றூரினள் தலைவி (அகம. 84:6-10). யானை முதுகின் கயிற்றுத்தழும்பு போன்ற மலைமேல் செல்லும் சிறிய செல்லுதற்கரிய இடங்களிலுள்ள படுகுழி இயவில் இருளிடத்துத் தலைவன் மிதிக்கும்பொழுது அவன் அடியைத் தாங்கிக் காக்கத் தன நெஞ்சம் சென்றதாகத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 128: 10-15). உப்புக் கலலாகிய உணவுப் பொருளைக் குடபுல மருங்கின் விறறற்கு நன்னிமித்தம் பார்த்துப் படைக்கலனகளையும செப்பம் செய்துகொணடு உமணர் உப்பு மூட்டையைச் சுமநத கழுதைகளின் குளம்பு மிதித்தலால் பருக்கைக்கல பிறழ்ந்து கிடக்கும் இயவின வெஞ்சுரததே சென்றனர் (அகம். 207: 2-7). தலைவன் இருள் மயங்கு யாமதது இயவு தடுமாறுதலால் விலகிப் புலி அங்கு வருவாரை எதிர்பார்த்தற் கிடனான பெருமலையில் குகைகள் உள்ளஇடம் வருதல் அரிதென்று எண்ணாமல் எளிதாகக் கருதி வநதான (அகம். 218:9-13). மழை பெயல் மறந்த மூங்கில் வாழும் இயவில் வணிகர் கூட்டததைப் பண்பில்லாத வாழககை யுடைய எயினர் கொள்ளையடிபபர் (அகம். 245:5-7). புறவின சேவல பெடையொடு தொலைவிடம் சென்று நுண்மணலுள்ள இயவில பரற்கற்களைத் தேர்ந்துணடு மரல வாடிய மழை நீங்கிய வறண்ட சுரத்தைப பறநது கடந்தது (அகம். 271:1-5). ஆறலை கள்வரின அம்பால் மாய்ந்த வழிப்போக்கர்தம் பிணததை மறைத்த உயர்நத பதுக்கையில படர்ந்த அதிரல மலரைப் பறித்து விழுப்புணபட்டு மாய்ந்த மறவரின் நடுகல்லுக்கு விடியலில் பலி கொடுத்தற்கு இடனான பாலை நிலத்துக் குறுக்கிட்டுச் செலலும் மரங்கள் ஓங்கிய இயவில் தொழில மேற்கொண்டு தலைவன் செல்லுதல (அகம். 289:1-5). பகை விலங்குகளைக் கொனறு சினம் தணியாமலும் வெனறு வலிமை மெலியாமலும் பிடிக்கூட்டததில் சேராமலும் மதத்தினால் செருககிக் களிறு நடமாடும் பெருங்காட்டு இயவில் இருள் கெட ஒளிர் வேலேந்தித் தலைவன் வருவான (அகம. 298:7-11). தலைவர் சென்ற நாடு இரவுப் புனம் மேய்ந்த வேழம் தண்பெரும் தூற்றுக்கு அஞசும் குன்று குறுக்கிட்டுக் கிடக்கும் இயவினை உடையது (அகம். 309:15-17). தூது சென்ற பார்ப்பான்பால் இருந்த மடித்த வெளளோலையைப் பொன்னாகுமெனக் கருதி மழவர் அவனைக் கொன்று பின அவன் வறுமை நோக்கிக் கை நொடித்துப் பெயர மரலுடைய இயவிலிருந்து ஓர் ஆண் நரி அவன் குடலைக் கடித்துத் தின்னும் (அகம். 337:7-15). கடுவெயிலுள்ள

வேனிற்காலத்து வெம்மைமிக்க காட்டில் பிணையைத் தழுவிய ஆண்மான் கயம் நோக்கித் தண்ணீர் பெறாது வருந்திய துன்பத்தால் தழை தின்னு தலை மறந்து யாணடும் நீரின்மையின தளரும் மர னிழல அற்ற இயவினையுடைய சுரம்போகத் தலைவன் நெஞ்சம் நினைத்தது (அகம். 353:10-16). நல்ல மழை பெய்து கழிந்த பூமணம் கமழும வைகறைப் பொழுதில் மணல் செறிந்த களர் உள்ள இயவில் இநதிரகோபப் பூச்சிகள் மணிமண்டு பவழம் போலக் காயாமலரில் மறையும் (அகம். 374:9-14). ஞாயிற்றின் வெயில் ஈரமின்றிக் காய்ந்த நீரற்ற பாலைப் பரபபில காட்டுத் தீப்பற்றி எரிந்தமையின் நிழலற்ற இயவில் கலைமான் நீர்போலத் தோன்றும் பேய்த் தேரைப் பருக ஓடி வருந்திய உள்ளத்தோடு பிணையைக் கூவி அழைக்கும் (அகம். 395:5-11). யாமரத்தை வெட்டிச சுட்ட இயவில் செந்தினையிற் படியும் கிளி கடியச் செல்வோம் எனத் தோழி தலைவனிடம் கூறல் (குறு. 198:1-5). மிளகை இட்டு வைத்தாற் போன்ற சுவையுடைய உகா மரத்தின் காயை வண்டுகளைப் போக்கி அறியாது உண்ட புறா நெடுங்கிளை ஏறித் தன் தவற்றைக் கருதிப் பிடரி சிலிர்த்து வருநதும் வெம்மையுடைய புழுதி மிக்க இயவில நயந்த காதலரைப் புணர்ந்து சென்றாள் தலைவி (நற். 66:1-6). அரசரது பகையால் அழிந்ததென்று சொல்லப்படும் அரிய ஊர் முனையடுத்த இயவில் குடிகள் அழிந்த சீறூரில் ஆளில்லாத மனறததில் வீரத்தனமையுடைய இருக்கையில் பொறையன் இருத்தல் (நற். 346:3-8). பரல் நிரம்பிய, சென்று சேர்தற்கியலாத இயவில் உமணர் நிறைந்துள்ள சிறுகுடிகள் உள்ளன (நற். 374:1,2). இருள் மறைதத அஞ்சுவரும் இயவில் பாம்பு மீது விழுந்து கொல்லும் இடி இடிக்கும் பொழுது மலை நாடன் வந்தான் (நற. 383.7,9). நெருப்புப் பரந்த இடத்தில நிழல் காணாமல் பெடைமான குட்டியொடு வாட, நீரற்ற நிரம்பா இயவினையுடைய சுரம் துன்பம் தருவதாகும் (ஐங். 326:1-4). வையையிற் புனலாடச் செல்வோர் யானைத் திரளும் குதிரைத் திரளும் தம் கதியிற் செல்லுதல் தவிர்நது ஓர் இயவிற் செல்லுபவரை நெருக்கும் வகையில் அவ்வூர்திகளின் மேல் ஏறிச் செனறனர் (பரி. 6:36,37).

**இயவுள்** - 1. **வழி**. வெம்மை குறையாத எரிபரந்த பாழிடத்தே பெருமையொழிந்த இயவுள் - வழி - செல்லும் யானை நீருள்ள இடமறியாது பேய்த்தேர் தோன்றுமிடத்தே ஓடி வருந்தும் (அகம். 29:15-18).

2. **இறைவன்**. தேவரும் முனிவரும் ஏத்தும் பெரிய திருநாமத்தையுடைய இயவுள்-இறைவன் - முருகன (முரு. 274).

3. **தலைமை**. வெம்மை மிக்க பறந்தலையில் இயவுள் -தலைமை-பொருந்திய யானை நீரிருக்கும் இடம் அறியாது கானல் நீரை நீரென மயங்கி ஓடியது (அகம். 29:15-17).

**இயற்கை** - இயல்பு. பெருஞ் சோற்றுதியன் சேரலாதன் நிலன், விசும்பு, வளி, தீ, நீர் எனனும் ஐம்பெரும் பூதத்து இயற்கை–இயல்பு - போலப் போற்றாரைப் பொறுத்தலும், சூழ்ச்சிய தகலமும், வலியும், தெறலும் அளியுமுடையயவனாகத்திகழந்தான். (புறம். 2.1-8). மழை பொய்த்தாலும் விளைவுகுனறினும் இயற்கை யல்லன செயற்கையில் தோன்றினும் இவ்வுலகம் நாடுகாக்கும் மன்னரைப் பழித்துரைக்கும் (புறம். 35:27-29). போரில் இருவர் வெல்லுதல் இயற்கையுமன்று (புறம். 45:6). ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று; உலகத்தியறகை (புறம். 76:1,2). முருகன அணிநத பொலங்குழை சேண்விளங்கும் இயற்கையையுடைய ஒளிமிக்க மதியத்தைச் சூழ்ந்து நீங்காத மீன்கள் போல் ஒளி திகழ்ந்தது (முரு. 86-88). நால்வேறு இயற்கையை யுடையவர் முப்பத்து மூவர் (முரு. 167). நனனனிடம் செல்லும் கூத்தனிடம் நவிர மலையைப் பொருந்தி உறையும் நஞ்சை ஊணாகவுடைய கடவுளது இயற்கையைக் கூறி விடுத்தனர் (மலை. 82,83). கப்பலைப் பெருங்கடல் நீரிடைப பிளந்து செலல, இரவும் பகலும் ஓரிடத்தும் தங்காமல விரைநது செல்லும் இயற்கையுடைய காற்று அதனை அசைத்துச் செலுத்தியது (அகம். 255:1-4). நாள் செல்லுதலையும் மூப்பு வருதலையும் அரிது பெருஞ் சிறப்பினை யுடைய காமத்தின இயற்கையையும நீ அறிந்திலை எனத் தலைவன நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 353.4-6). தேரை விரைநது செலுத்திய பாகனை வானில் இயங்கும் இயற்கை யுடைய காற்றினைக் குதிரை வடிவாகப் பூட்டினையோ, மனத்தைப் பூட்டினையோ எனத் தலைவன் வினவினான் (அகம். 384:9-11). முன் காதற் செவிலியர் தடுப்பவும் பூச விட்டுக்கொண்ட இருவர் இப்பொழுது மணம் புரிந்து கொண்டு மகிழும் இயற்கையை ஊழ் காட்டியதால் அதனை நன்மையுடையது எனப் பாராட்டினர் (குறு. 229). புயல் வீசினாலும் மிகுந்த மழை பொழிந்தாலும் இடி இடித்தாலும் ஊறுபல தோன்றினாலும் உலகம் கிளர்ந்தாலும் தெயவங் காக்கும் கொலலி மலையிலுள்ள பாவை நல்ல வடிவங் கெடாத இயற்கையுடையது (நற. 201:5-11). வாங்கியுண்ணும் கடனை வழிமொழிந்து வாங்கும்போது முகம மலர்தலும், வாங்கியது கொடுக்குங்கால் முகம் வேறு படுதலும் பண்டும் இவ்வுலகத் தியற்

கையாகும் (கலி. 22:1-3). தொன்முறை இயற்கை யினையுடையது மதியம் (பரி. 2:1).

**இயற்றியாள் - செய்யப்பட்டவள்.** (அயனாலே) நல்ல மகளிருடைய் உறுப்புக்கள் எல்லாவற்றையும் ஒருங்கு கொண்டு ஒருவடிவாக இயற்றியாள் - செய்யப்பட்டவள் - ஒருத்தியோ எனத் தலைவியைத் தலைவன் பாராட்டினான் (கலி. 56:8, 9).

**இயன் - வாச்சியம்.** கயங்கள் சூழ்ந்த இளமரக் காவில் மணமுடைய மலர்களைத் தேனினம் இயன் – வாச்சியம் - எழுப்பிய ஓசைபோல எவ்விடமும் இம் மென இசைத்துப் பொருந்தும் (கலி. 36:5, 6). இயம் காண்க.

**இயன்மொழி – இயல்பாகவே குற்றத்தினீங்கிய மொழி.** 'நாடு முழுவதும் விளங்கிய ஐயுற்று ஆராயாத நல்லிசை எய்திய, திருந்திய இயன்மொழி - இயல் பாகவே குற்றத்தின் நீங்கிய மொழி - உடைய திருந்திழை கணவ' எனப் பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் பாராட்டுவர் (பதி. 24:10, 11).

**இர - 1. இரவுக்காலம்.** தலைவன் இயற்கைப் புணர்ச் சிக்குப்பின் முதல் நாள் போன்ற விருப்பத்தோடே இர - இரவு - வருதலைத் தனக்கு இயல்பாக உடை யன் (குறி. 239). தலைவன் தேர் இதுகாறும் இர (வில்) வந்து கொண்டிருந்தது; சீறூர் காண இன்று பகலிலும் வந்தது என்பது தோழி கூற்று (அகம். 160:15-18). இர(வில்) புலி முதலிய நடமாடும் சிறு நெறியில் தலைவன் தனியாய் வருதல் (அகம். 318: 3,4). சுழியும் கராமும் உடைய கற்பாறைவழி ஓடு கின்ற கான்யாற்றை நீந்தி இர(வில்) வரும் தலை வற்கு உண்டாம் ஏதம் அஞ்சித் தலைவி கலங்கி னாள் (நற். 292:7–9).

**2. இரவமரம்.** செம்முதுபெண்டு இர - இரவமரத் தின் - விதைபோலச் சுருங்கிய கண்கள் பொருந்திய வற்றிய முலையையுடையவள் (புறம். 276:2,3). இரங் காழ் (விதை) போன்று ஈங்கையின் அரும்பு இருக் கும் (அகம். 125:3). இரவம் காண்க.

**இரக்கம் – வருத்தம்.** தொடித்தலை விழுத்தண்டி னார் தம்முடைய இளமைக்காலம் கழிந்தது குறித்து இரக்கம் - வருத்தம் - கொள்கின்றார் (புறம். 243:1).

**இரங்குநர் - இரக்கம் கொள்பவர்.** ஆடவரின் பொருள் வயிற் பிரிவு காரணமாக மகளிர் இழக்கும் பேரழ கினை நினைந்து இரங்குநர் - இரக்கங்கொள்பவர் - அல்லது அதனை மீட்டுத் தருபவர் இலர் என்று கூறித் தலைவி வருந்துவாள் என்பது தலைவன் கூற்று (அகம். 75:13-16).

**இரணிய முட்டம் - ஒரு சிறிய நாடு.** [இது மதுரையைச சார்ந்த யானை மலை முதலிய இடங்களைத் தன் பாற் கொண்டது என்பர் உ. வே. சா. (பத்துப்பாட்டு, பாடினோர் வரலாறு). தொண்டைநாட்டில் உள்ள தென்பர், பி. நா. (நற்றிணை, பாடினோர் வரலாறு). மலைபடு கடாம் பாடிய பெருங்கௌசிகனார், இர ணிய முட்டத்தில் உள்ள பெருங்குன்றூரைச் சார்ந்த வர்.

**இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிக னார் - புலவர்.** இரணியமுட்டம் இவர் வாழ்ந்த ஊர். இவரைக் கௌசிக கோத்திரத்துப் பிரா மணர் எனக் கருதுப (ப.மு. 108). இவர் பத்துப் பாட்டின் இறுதிப் பாட்டாகிய மலைபடுகடாத்தை இயற்றியவர்; செங்கண்மாத்து நன்னன் சேய் நன்னனிடம் கூத்தரை ஆற்றுப்படுத்தும் முறையில் இப்பாடல் அமைந்துள்ளது. பலவகை இசைக்கருவி களையும், பண்வகைகளையும் இப்பாடலில் ஆசிரி யர் குறிப்பிட்டுள்ளார். முழவின் ஒலியும் மேகத்தின் ஒலியும் ஒன்றுபோல் ஒலித்தலை மலைபடு கடாத் திலும், இவர் பாடியதாக உ. வே. சா. கருதும் நற்றிணை 139-ஆம் பாடலிலும் காணலாம். பெருங்கௌசிகனார் என்னும் பெயரில் நற்றிணை யில் காணப்பெறும் இரு பாடல்களையும் (44,139) பாடியவர் இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனாரினும் வேறாவர் என் வையா புரிப்பிள்ளை கருதுவர். ஆனால் உ. வே. சா இரு வரையும் ஒருவராகவே கொள்வர். நவிர மலையி லுள்ள காரி உண்டிக்கடவுள் பற்றிய குறிப்பு காணப்பெறுகிறது. குறமகளிர் தம் கணவர் புண் ணாறப்படும் வருத்தத்தைப் பாட்டுப்பாடித் தணித் தலை இப்புலவர் தெரிவிக்கின்றார். இரணிய முட்டம் காண்க.

**இரணை – இரண்டு.** கண்டல் மரத்து வேரின்கீழ் இரணையாக - இரண்டாக-நெருங்கியிருக்கும் நண் டைப் பார்த்துத் தலைவி மகிழ்ந்தாள் (நற். 123:9-11).

**இரத்தி - இலந்தைமரம்.** குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் இரத்தி - இலந்தைமரம் - ஓங்கிய மன்றத் தில் கொழுஞ்சோறும் செல்வமும் பாணர்க்கு அளிப்பான் (புறம். 34:12-15). மன்றத்தில் நிற்கும் இரத்தி மரத்தின் நிழலில் சிறுவர் அம்பெய்து விளை யாடுவர் (புறம். 325:10-12). மானினம் நிமிர்ந்து தழை யுண்ணுதலினாலே சிறிது வளைந்த கிளை களையும் புல்லிய அடியையு முடைய இரத்தி மரங் களினின்று உதிரும் பசுங்காய் சிறு வழியில் பரவிக் கிடக்கும் (நற். 113:1-3).

**இரதி - காமன் மனைவி.** திருப்பரங்குன்றத்திலுள்ள சித்திரசாலைகளில் காணப்பெறும் சித்திரங்களைப்

புற்றிக் கேட்ட மனைவியர்க்கு, 'இவள் இரதி காமன்மனைவி - இவன் காமன்' எனக கணவன் மார் கூறுகின்றனர் (பரி. 19:48,49).

**இரந்தார்** - வேண்டிப் பெறுவோர். தம்பால் இரந் தார்க்கு - வேண்டிப் பெறுவோர்க்கு - ஒரு சிறிதும் கொடாது உயிர் வாழ்தலின் சாதலும் கூடும் என்பது தலைவன் கூற்று (கலி. 61:11,12). இரந் தோர் காண்க.

**இரந்தூண்** - இரந்துண்ணும் உணவு. இள மாணாக் கனாகிய பாணன், இரந்தூண கொள்ளும் இயல் பினனாதலின் அவன்மேனி நன்கு வளர்ச்சி பெற வில்லை (குறு. 33).

**இரந்தோர்** - இரந்தார். வள்ளல் எழுவரும் மாய்ந்த பின்னர் இரந்தோரது- இரந்தாரது - துன்பததைக் குமணன் தீர்த்தான் (புற. 158:17-19). நம்பி நெடுஞ் செழியன் பிறரிடம் இரநததறியான்; இரந்தோர்க்கு இல்லையெனச் சொல்லி அறியான் (புறம். 239:8,9). பெருஞ்சேரல் இரும்பொறை முன்புவந்து இரந் தோர் மகிழும்படி கொடுததுப் பின்னர் வந்து இரப்போர்க்கும் மறுககாமல வழங்குவான் (பதி. 76:7,8). இரந்தோரின் வறிய கலங்கள் நிறையுமாறு தாம் பிடித்த மீனைப் பரதவர் நல்குவர் (அகம. 30:9). இரந்தோர்க்கு ஈயாது திரட்டியவன் செல்வம் புகழ்பெறாது அழியும் (அகம். 276:13-15). தாமுற்ற துன்பத்திற்கு அஞ்சி இரந்தோர்க்குக் கொடுத்த வற்றை மீட்டும் கேட்பதினும் உயிர் விடுகை துன்பம் தராது (குறு. 349:5-7). தம்மிடம் வந்து இரந்தோரின் விருப்பத்தை நிறைவேற்ற முடியாத இல்வாழ்க்கையில் தலைவன் பயிலாதவன் ஆதலின் அருஞ்சுரம் கடந்து பொருள் தேடச் செல்கின்றான் (நற். 84:9-12). 'எமக்கு உதவாத அன்பற்ற தலை வன் மார்பை நம்பில இரந்தோர் யார்' என்பது தலைவி கூற்று (நற். 225,6,9). வந்து இரந்தோர்க்கு ஒரு பொருளும் இல்லை யென்று கொடாதிருத்தல் இளிவாகும் (கலி. 2:11,15,19). இரந்தார் காணக.

**இரப்பவன்** - வேண்டிப் பெறுபவன். வறுமையால் மனவலிமை கெட்டு ஒருவனிடம் சென்று இரப் பவன்-வேண்டிப் பெறுபவன்-நெஞ்சம்போல் மரம் பொலிவழிந்திருந்தது (கலி. 120:4,5).

**இரப்பவை** - இரந்து கேட்பவை. கடுவனிளவெயின னார் முருகனிடம் இரப்பவை-இரநது கேட்பவை- பொன்னும் பொருளும் போகமும் அல்ல; அருளும் அன்பும் அறனுமாகும் (பரி. 5:78-81).

**இரப்பான்** - வேண்டுபவன். 'காண்போர் இகழும்படி எளியனாக வந்து தன்னிடம் ஒரு காரியத்தை இரப்பான் - வேணடுபவன் - போல் தலைவன் சிலமொழிகளைச் சொலவான்' எனக் குறைநேர்ந்த தோழி தலைமகளுக்குச் சொல்கிறாள் (கலி. 47:1).

**இரப்பு** - இரத்தல். நம்பி நெடுஞ்செழியன் பிறர்பாற் சென்று இரப்பு-இரத்தல-அறியாதவன் (புறம்.239:8).

**இரப்போர்** - வேண்டிப் பெறுவோர். 'பகை வேந்தரை வெற்றி கொள்ளேனாயின் எமனாற் புரக்கப்படு வோர் துன்பம் அடைய, இரப்போர்க்கு-வேண்டிப் பெறுவோர்க்கு-கொடாத வறுமையை நான அடை வேனாக' எனத தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வஞ்சினம் உரைத்தான (புறம. 72:17,18). கொல்லி மலைத தலைவனாகிய வல்வில் வோரி இரப்போர்க்கு நாளதோறும் இழையணிந்த யானையை நல்கினான் (புறம். 153.1,2). வறுமையால் இரப்போர்க்கு ஈயாத செலவர், வண்மையுடைய மக்கள் போலத் தம் பெயரை உலகில் நிலைபெறச் செய்ய அறியாதவராவர் (புறம். 165:3-5). தனககு இயலாததனை இயலும் என்றலும், இயலும பொருளை இல்லையென மறுத்தலும் ஆகிய இரண டும் இரப்போரை வருத்தும்; ஈவோரின் புகழையும் குறைக்கும (புறம. 196:4-6). நெடுமான அஞ்சியின் மார்பில தைத்த வேல் இரப்போர் கையிடததும ஊடுருவிச சென்றது (புறம். 235.11-15). அதியமான நெடுமானஞ்சி தான தரக் கடமைப் பட்டவர்க்குக் கொடுப்பதைவிட, தனனை இரபபோர்ககு மிகுதி யாக ஈவான (புறம். 315:2). பாணர்ககு அணி வழங் கியும் ஊன் தின்று நறவு அருந்தியும் இரபபோர்ககு ஈந்தும் மகிழவோம் எனக கூகைக் கோழியார் ஒரு வேநதனுககு வாழும் முறை கூறுகிறார் (புறம. 364; 1-8). இருபுறத்து வேந்தரும பொருது வீழநதமை யால் போர்க்களத்தில பெறுதற்குரிய பரிசிலொன் றும் இன்மையின உவகையின்றி இரப்போர் இரங் குவாராயினர் (புறம். 368:11,12). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் கை, அவன்பால் வநது இரப்போர்க்கு வேண்டியவறறைக் கொடுப்பதற்குக கவியுமே யல்லாது பிறரிடம் சென்று இரததற்கு விரியாது(பதி. 52:10-12). பெருஞ்சேரல் இருமபொறை முனபுவந்து இரந்தோர் மகிழும் வணணம கொடுதது, பின வநது இரப்போர்க்கும் மாறாது கொடுப்பான் (பதி. 76:7,8). இரப்போர்க்கு அணிகலன், தேர், களிறு முதலியவற்றைக் கைம்மாறு கருதாமல் நாள்தோ றும் நள்ளி ஈவான் (அகம. 238:11-14). தன்னை இரப்போரின் கை நிறையப் புதிய பொருளைத் தந்து மகிழ்வதற்குக் காரணமாகிய பொருளைத் தேடித் தலைவன் அரிய மலைவழிகளைக் கடந்து செல்வான (அகம். 389:11-13,24).

**இரலை** - புல்வாய்க்கலை (மானவகை). பாணனின்

தலைமயிர்க்கு இரலையின் - புல்வாய்க்கலையின் - நெற்றி மயிர் உவமை (புறம். 374:2,3). கவைமரம் போனறு கிளைத்த மருப்பினை உடைய இரலை யின தோல ஊனும் பிற தீய பகுதிகளும் நீக்கப் பெற்று ஒளிவிடுமாறு அமைக்கப்பெற்றது (பதி. 74: 9-11). பருவ மழையால் விளைந்த வரகிட்டதே முறுக்குணட கொம்பினை உடைய இரலையொடு மடமான்கள் துள்ளி விளையாடும் (முல்லை 98,99). திருமாவளவன செயத போரால் மருதம் திரிந்த முலலையில அறுகோட்டு இரலையொடு மட மான்கள துள்ளி விளையாடின (பட். 244,245). இரும் பினைக் காய்ச்சி முறுக்கி விட்டாற்போன்ற கரிய கொம்புகளை உடைய இரலை, முல்லைநிலத்தே பரற்கற்களை உடைய பள்ளத்தே துள்ளிக் குதித் தது (அகம். 4:3,4). முறுக்கேறிய கொம்புகளை உடைய இரலை தன் பிணையுடன் புல்லருந்தி விளையாடும் (அகம். 14:5,6). செருக்கிய நடையும் தலைமைத் தன்மையுமுடைய இரலைகள் பிணை மான்களைத் தழுவிச சென்று நீரருந்திக் கூட்டமா கத் தங்கும் (அகம். 23:7-9; குறு. 65:1,2; 250:1,2). கவைத்த, கரிய, முறுக்கேறிய கொம்பையும் தலை மைத்தனமையும் உடைய இரலை கருககொணட பிணைமானை அறுகம்புல உணபிதது அஃது உறங்கும்போது காவல் செய்யும் (அகம. 34:4-8). மடபபிணை காமுற்று இரலையை நோக்குதலைக் காணும தலைவன, தலைவியை நினைந்து விரைந்து மீளவான என்பது தோழி கூற்று (அகம. 74:9-12). கரிய நிறமுடைய இரலை பரற்கற் குவியலில உறங் கும் (அகம 91:9,10). இளைய பிணையுடன் கூடிய திரிமருப்பினையுடைய இரலை பாலை வழியிலே ஈரமான மேட்டுநிலத்தில தழைததுள்ள மரலைத் தின்னும் (அகம். 133:16-18). வெண்மையான முது கினையும முறுககிய கொம்பினையும் உடைய இரலை அறுகம்புலலருந்தி நீர் குடித்துப் பிடவின் நிழலில பிணையுடன தங்கும (அகம. 139:9-12;154: 8,9). கொமபுகளுடன் கூடிய தலைக்குடை அணிந்த தொழிலாளர் வரகுக் கொல்லையில் களைபறிப்பது இரலைமான்கள் பரவி இருப்பது போன்று தோன றும் (அகம். 194:6-9). மடப்பிணை தன் சிறிய குட்டி களைத தழுவித் திரிநத மருபபும் தலைமையும் உடைய இரலையொடு குருந்த மரத்தின் நிழலில் தஙகும் (அகம. 304:7-10). முல்லைநிலத்தில், குட்டி களையுடைய இளைய பிணைமானைச் சூழ்ந்து திரிமருப்பு இரலை பசிய பயிர்களினூடே திரியும் (அகம. 314.5,6). மறவரால பிணையை இழந்த இரலை தன பககத்தில விளையாடும் குட்டிகளைக் கணடு மிகவும் துனபுற்று, அவற்றின் அறியா மைககு இரஙகி, வருத்தமிகுதியால் உணணாமலும் நீர் பருகாமலும் இருந்தது (அகம். 371:2-8). கார் காலத்தில் தம்மைப் போலப் பெண்மானைப் பிரிந் திருக்கும் இரலையைப் பார்க்கும் தலைவர் உடன் மீள்வர் எனத் தலைவி கூறுகிறாள் (குறு. 183:2-4). இரலை மேய்ந்து சென்ற வரகினது தாள் அரிந்த பகுதியில் முலலைக் கொடி பூத்துள்ளது (குறு. 220: 1-3). பெரிய பிடரையுடைய இரலை மரலை உண்டு யாமரத்தின வரி நிழலில் துஞ்சும் (குறு. 232:3-5). இரலை நல்லேறு பூக்களை உடைய அகன்ற தூற்றின்கண பிணையுடனே பகற் பொழுது துயின்று ஞாயிறு மறைந்தபின் பயற்றினைத் தின்னும் (குறு. 338:1-4). முல்லை நிலத்தே மாலைக் காலத்தில் கரிய பிடரியை உடைய இரலை பெண் மானைத் தழுவும் (நற். 69:4). வரகின் கதிர்களைத் தின்ற பெண்மான் மரல் வித்துக்கள் உதிர்ந்து கிடக்கும் காட்டின்கண் இரலையோடு விளை யாடும் (நற். 121:2-4). பெண்மான் தன் குட்டி களுடன் கூட்டத்தை விட்டு நீங்கிவிட, இரலை அதன்பால் கொண்ட விருப்பத்தால் தேடுகின்றது (நற். 242.7-10). சார்காலத்தில் பெண்மானைப் புணர்ந்த இரலை வேலமரத்தின் நிழலிலே தங்கும் (நற். 256:8-10). இரலையின கொம்பு போனற முறுக்குணடு தாழநத தாடியினை உடையவர் கடுஞ்சின மறவர் (கலி. 15:5-7).

**இரவம்** - இரவமரம். தலைவனின் புண்ணைப் பேய் நெருங்காதவாறு காக்க இரவம் - இரவமரத்தின் - தழையையும் வேம்பின் தழையையும மனை இறப் பில் மகளிர் செருகினர் (புறம. 281:1). இர-2 காண்க.

**இரவலர்** - ஒன்றை வேண்டிப் பெறுபவர். இரவலரின் முகத்தால் குறிப்பை அறிந்து அவரின் வறுமை தீர்க்க வல்லவன கருங்கை யொள்வாட் பெரும் பெயர் வழுதியாதலின் அரிய வழியையும் கடந்து இரவலர் அவனை நாடுவர் (புறம். 3:23-26). குட்டு வன கோதையின் மூதூரின்கண் அவ்வூரை உடைய வர் போலக் காலம் பாராது புகுதல் இரவலர்க்கு எளிதாவதல்லது பகைவர்க்கு எளிதாகாது (புறம். 54:1-5). இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாணடி யன் நன்மாறன் இரவலர்க்கு அரிய கலன்களைப் பெரிதும் வழங்கி, யவனர் தந்த நல்ல தேறலையும் பொற்கலத்தில் வழங்குவான் (புறம். 56:17-19). முர சுடைய மூவேந்தரினும் மிகுதியாகப் பாரி இரவலர்க் கீவான (புறம். 119:6, 7). மலையமான் திருமுடிக் காரி மூவேந்தருள் ஒருவர்க்குப் போர்த் துணை யாகச் சென்று பெற்ற பொருளைத் தன்னை வாழ்த்தும இரவலர்க்கு அளிப்பான் (புறம். 122: 5-7). மன்றத்தில் உள்ள பலாமரத்தின் பெரிய

கிளையில் இரவலர் முழவினைக் கட்டிவைத்து இளைப்பாறுவர் (புறம். 128:1, 2). ஆய் அண்டிரன் அளவற்ற யானைகளைப் பரிசிலாக இரவலர்க்கு வழங்குவான் (புறம். 129:5-7). கொண்பெருங் கானம் தன்பால் பரிசில் விரும்பிவந்த இரவலர்க் குக் கடன் கொடுத்தோரால் பரிசில் பெற்றபின் அக்கடனைத திரும்பப் பெறும் பொருட்டு வளைக் கப்பட்டுக் கிடக்கும் (புறம். 156:2-4). 'இரவலரைக் காப்பவனும் நீ அல்லை; காப்போர் இரவலர்க்கு இல்லையுமல்லர். இரப்போர் இருப்பதையும் இரப் போர்க்கு ஈவோர் இருப்பதையும் காண்' எனப் பெருஞ்சித்திரனார் இளவெளிமானுக்கு அறிவுறுத் துகிறார் (புறம். 162:1-4). இரவலர் நாளும்வண்மை யுடையோரை நாடிச் செல்வர். அவரை எதிர் கொள்ளும் செல்வரின் பொருள் இரவலரின் பொருளாகும். செல்வரின வறுமை இரவலரின் வறுமையாகும் (புறம். 199:4-7). பாரி தனக்குரிய ஊர்கள் அனைத்தையும் இரவலர்க்கு ஈந்தான் 'புறம்.201:2). 'இரவலரைக் காபபதைக் கடமையாகக் கொள்ளுமாறு, ஊன்பொதி பசுங்குடையார் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல இளஞ்சேட் சென்னிக்கு அறிவுரை கூறுவர் (புறம. 203:12). வானத்திலிருந்து தீப்பரக்க ஒரு மீன் வீழ்ந்த பொழுது கூடலூர் கிழாரும் இரவலர் பலரும் யானைக்கட் சேஎய் மாந்தரஞ் சேர விரும் பொறைக்கு உண்டாம் தீமைக்கு அஞ்சி அவன் தீதின்றி வாழ வாழ்த்தினர் (புறம்.229:11-15). இர வலர்க்குத் திண்தேர் நலகியவன் அண்டிரன் (புறம். 241:1, 2). ஒரு செல்வனின் வீடு அவன் உயிருடன் இருந்தபோது இரவலரைத் தன்னிடத்தே நிறுத்தி வைக்கும் சுவைமிக்க கொழுந்துவை அடிசிலைப் பெற்றிருந்தது (புறம். 250:1,2). புகழமைந்த தலை வன் ஒருவன் புரவலர்க்குள்ள துன்பத்தினை பொருட்படுத்தாமல் நாளும் இரவலர்க்குக் குறை வறக் கொடுத்தான் (புறம். 329:6-8). நிலையாமையை உணர்ந்து, பொருட் பற்றின்றி, இரவலர்க்குக் களிறும் குதிரையும் தேரும் வழங்கி நிலைத்த புகழைப் பெறுமாறு காவட்டனார் அந்துவன் கீரனுக்கு அறிவுறுத்தியுள்ளார் (புறம். 359:11-17). இரவலர்க்கு அரிய கலன்களைக் குறையாமல் தந்து வாழ்க என்று மூவேந்தரிடம் ஔவையார் கூறியுள்ளார் (புறம். 367:8, 9). பிறர் கடைத்தலைச் சென்று அவர் புகழ்பாடிச் சிறுகிணையை ஒரு நாளும் முழக்காதவாறு நல்லியக் கோடன் இர வலர்க்கு இல்லை யென்னாது கொடை வழங்கு வான (புறம். 376:20-22). களிப்புக்காக இடப்படும் பண்டங்கள் சிறிதளவாகச் சேர்க்கப்பட்ட கள் இரவலரை மேலே செல்ல வொட்டாமல் தடுத்தது (பதி. 40-18). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் நாள் தோறும் இரவலர் துன்பம் நீங்கும்படி சிறப்பு மிக்க அணிகளைத் தனக்கென வரைதல் இல்லாது வழங்குவான் (பதி. 54:7, 8). இரவலர் வாராத பொழுதும் தேரை அனுப்பி வரச் செய்து, அவர் களுக்கு நிறைந்த உணவை ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் அளிப்பான் (பதி.55:10,11). 'இரவலரின் துன்பத்துக்கு மகளிர் துனித்த கண்ணினும் அஞ்சு பவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 57: 13,14). இரவலர் துன்பம் அடையுமாறு பாரி வாரா உலகத்திற்குச் சென்றான் (பதி. 61:9, 10). பெருஞ்சேரலிரும்பொறை கொடை போற்றாது இரவலர்க்கு அளவின்றிக் கொடுபபான் (பதி. 79:2). வளம் வாய்ந்த குடியிற் பிறந்த செல்வர் தம்பால் வரும் இரவலர்க்கு மகிழ்ச்சியுடன் ஈவர் (பதி. 81: 22, 23). குதிரையுடன் தன் நாட்டையும் ஈர நன் மொழியினையும் இரவலர்க்களித்தவன் காரி (சிறு. 92-95). பெரிய சுற்றத்தைக் காக்கும் இரவலர்க் கெலலாம் தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் தேரும் களிறும் வழங்குவான் (மது. 751, 752). பாண்டியன் படைத் தலைவன் பண்ணி என்பான் யானைகளைப் பிடித் துப் பழக்கியவுடன் இரவலர்கு ஈவான் (அகம். 13: 6-11). அதிகன், வாய்மொழியால்நல்லிசை உண்டாக் கும்இரவலர் விரும்பியவாறே அளிக்கும் வள்ளன்மை உடையவன் (அகம். 162:16-18). அறிவு பறறுக் கோடாக வரும் இரவலர்க்குப் பாரி களிற்றொடு அணிகலன்களை வழங்குவான (அகம். 303: 8-10). 'நின்னைப பிரிந்து நெடிதுநாள் இருபபெனா யின் இரவலர் வாராத நாள் பல உணடாகுக' எனக் கூறித் தலைவன் தலைவியைத் தேற்றுகின் றான் (குறு. 137). பாணரின் பரிசில் பெறற குதிரைக் குளம்பு பட்டுச் செப்பம் அடைந்த மலைச்சிறு வழியில் இரவலர் சோர்வின்றிச் செல வர் (நற். 185:3-6). இரவலர்க்கு வழங்குதற்காக ஆய் அணடிரன் யானைகளைத் தொகுப்பான் (நற். 237:7,8). 'அரசன் வாழ்க; வயல் வளம பெரு குக; இரவலர் வருக'-எனத் தலைவி வேணடினாள் (ஐங். 2:2). இரவலன் காண்க.

**இரவலன்** - ஒன்றை வேண்டிப் பெறுபவன். 'இரவ லனே, எம் தலைவனாகிய சேரமான கோக்கோதை மார்பனைக் காணும் போது எம்மையும் நினைப் பாயாக' எனப் பொய்கையார் வேண்டுகின்றார் (புறம். 48:5-7). கிள்ளிவளவன் நல்லிசை நினைந்து இரவலன் அவன்பாற் சென்றால் செல்வனாவான் என்பது கோவூர் கிழார் கூற்று (புறம். 70:5,10,16). 'கடும்பசியையுடைய இரவலனே, பேகனைக் காணா முன்னர் யான உன்னினும் வறியவனாக இருந்

தேன்; இப்பொழுது நன்னிலையில உள்ளேன். நீ சென்று அவனைக் காண்' எனப் பரணர் பாணனை ஆற்றுப்படுத்துகின்றார் (புறம். 141:6-9). ஈர்நதை என்னும் ஊரிலிருக்கும் ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறனைக் கண்டு வறுமை போக்க இரவலனைத் தம்முடன வருமாறு கோனாட்டு எறிசசிலூரா மாடலன மதுரைக் குமரனார் அழைக் கிறார் (புறம். 180:7-9). 'பெரிய பறையை யுடைய இரவலனே, நீ போகும் போது நிரைமீட்பதில் உயிர்விட்ட மறவனின் நடுகலலைத் தொழுது செல்வா யாயின் வளம சுரக்கும்' என்பது சானறோரா கூறறு (புறம். 263:2-4). இரவலன பேரியாழில பாலைப் பண்ணமைத்துச் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடினால, அவன் திறையாகப் பெற்ற களிறுகளையும் தன் நாட்டில விளைந்த நெல்லையும் தருவான் (பதி. 66.2-9). 'நின புகழை நயந்துவந்த இரவலன் அளிக்கத் தககவன' எனக கூளியர் முருகனிடத்துக் கூறினர் (முரு. 284,285). தன்னூரில் வள்ளியோரின்மையா லும் வறுமை ஆற்றுப படுத்தலாலும் இரவலன் பரிசில் தருவாரை நாடி, இனிய பாலைப் பண்ணைப் பாடி வழி நடநதான் (சிறு. 36-40). ஆறலை கள்வா இடி, பாம்பு, விலங்கு ஆகிய வறறால விளையும துன்பம் தொண்டைமான் இளநதிரையன நாட்டில இல்லை. ஆதலால் இரவலனே, அச்சமின்றி நீ விரும்பிய இடததில் தங்கிச் செல்வாயாக எனப பாணனைப் பெரும் பாணன் ஆறறுபபடுத்துகிறான (பெரு. 39-45). இரவலா காணக.

**இரவன் மண்டை** - இரத்தலுக்குரிய கலம். 'வணமை யுடையோர் மாய்நததமையால பிறாபாற் சென்று ஏலாது கவிழந்திருககும் என இரவனமண்டையை -இரததலுக்குரிய கலததை-இட்டு மலாதத வல்லார் யார்' என வட நெடுந்தததனார் வினவுகின்றார் (புறம். 179:1-3).

**இரவன் மாக்கள்** - இரக்கும் பரிசிலர். 'வாள்வீரர் வாழத்த, இரவன் மாககள்-இரக்கும்பரிசிலர்-நின் வணமையைச் சொல்லத் தேறல் மாந்தி மகிழ்சிறக்க வாழவாயாக' எனறு தலையாலங்கானத்துச செரு வென்ற பாண்டியன நெடுஞ்செழியனைக் கலலாட னாா வாழ்த்துகினறார் (புறம். 24.29-33). இரவன் மாககள (புறம. 241 3). பெருவிறல ஒருவன் கையில் பொருளில்லை யாயினும் தனனிடம வநத இரவன் மாக்கள் களிறும் தேரும் விருமபினும் தரும தகுதி உடையவன (புறம. 313 1-4). புனபுலததில விளைநத வரகும தினையுமாக்கட்கு உள்ளனவெலலாம இரவன் மாககட்கு ஈநதமையால குறைநதன (புறம. 328:3,4). மனையோள் இரவன் மாக்கட்கு வரகும் தினையு மாகத தன்னில்லில் உள்ளவற்றை அளித்தமையால் அவை தீர்ந்தன (புறம. 333 8-10). மககளின் வருத் தமும உலகின் இருளும் நீங்கக கதிா பரப்பி ஞாயிறு கீழ்ததிசையில தோன்றியதுபோல, இரவன மாகக ளின துனபம் நீங்கிக் குடி பெருக ஆடுகோட்பாட் டுச் சேரலாதன் தோன்றினான (பதி. 59.4-9). தினைபபுனதது மணி ஒளிரும பூணொடு வநத தலைவன புரவலன் போலும தன் தோற்றத்திற்கு மாறுபட இரவன மாக்களபோல தலைவியிடததுப பணிமொழி கூறினான் (அகம. 32:1-4).

**இரவு - 1. இரவுபபொழுது.** கரிகாறபெருவளததான பகல் இரவு-இரவுப்பொழுது-எனறு பாராமல பகைவர் ஊரைச சுட்டெரிதது அங்குள்ள பொருள களைக் கவாநதான (புறம. 7:7-9). மேடஇராசி பொருநதிய காாததிகை நாளில நிறைநத இருளை யுடைய பாதி இரவில் புனர் பூசத்துக் கடைசியில விண்மீன் விழுந்தது (புறம். 229:1-3,12). மாரிக் காலத்து இரவில கலத்தில சென்ற கண்ணிலலாத ஊமன் கலம் சிதைதலால கடலில் வீழ்ந்து கலங்கி யதுபோல வெளிமான இறந்தபோது பெருஞ்சித் திரனார் கலங்கினார் (புறம. 238:14-16). 'பகற் போதில் வினை செய்வார்க்குதவியும் இரவில் மறு நாள் செய்ய வேண்டியவறறை ஆராய்ந்தும் வினை ஞர்க்குச் சொல்லுவாயாக' என மன்னன் ஒருவற் குக் கோதமனார் அறிவுறுத்துவர் (புறம். 366:10-12). இரவில் தன்னிடம் வந்த பாணனுக்குக் கள்ளும் இறைச்சியும் தந்து வேணடும் பொருளையும் நல்லி யக் கோடன வழஙகினான் (புறம். 376:14-16). இர வில தகடூரைக் குறுகித் தடாரிப் பறை கிழியும்படி முழக்கிய பொருநனுக்கு அதியமான் நெடுமானஞ்சி புத்தாடையும் கள்ளும் இறைச்சியும் நல்கினான (புறம. 390:8-23). இரவுப் புறமாகிய கடையாமம் கழிந்து காலைப்போது தோன்றிப் பாசறையில் எஞ்சிநின்ற இருளைப போக்கியது (புறம். 397:6,7). இரவுப் பொழுது நீங்கும் விடியற்காலையில பொய் கைபபூ முகைமலரப பாணர் சீறியாழை முறையுடன் இசைத்தனர் (புறம் 398:4-6). பொயகைப் பூப்போ லனறி இரவுக் காலத்தும் மலர்ச்சி நிலைபெற்ற மலர்கள் போன்ற கணகளை உடையவள் பல்யா னைச் செல்கெழு குட்டுவன் மாதேவி (பதி. 21:34,35). மாக்களெல்லாம் குளிரால் நடுங்குகின்ற மாசி மாதத் தில் பகற்பொழுது குறைந்து இரவுப்பொழுது நீண்டிருககும் (பதி. 59:1,2). புகார் நகரின பலவிடங் களிலும் மகளிர் இரவும் பகலும் குரவைக் கூத்து ஆடுவர் (பதி. 73:5-11). இரவும் பகலும் இறைச் சியைத் தின்றமையால் பொருநரின் பறகள நிலததை யுழுத கொழுப்போல மழுங்கின (பொரு. 117,118).

அரிசிக கூழுடன் இடித்த நல்ல நெல முளை யைச சேர்தது இரணடு பகலும் இரணடு இரவும வைதது முற்றச செயது அரியல் செய்வர் (பெரு. 275-281). கடற்கரையில விளக்குமாடததது இரவில் ஏற்றி வைக்கப்பட்ட விளக்கு கலங்களைக் கரை காட்டி அழைக்கும் (பெரு. 348-350). பாசறைககண் உள்ள மகளிர் இரவைப பகலாக்கும் ஒளிபொருந் திய வாளைக் கச்சினில அணிநதிருநதனர் (முல்லை. 46,47). பகறபொழுதை உணடாககும் ஞாயிறும இரவினகண ஒளி செயயும வெணமையான திங் களும் குற்றமற்றுத் தோனறி விளங்கின (மது. 7-9). மேகம குணகடல நீரை முகந்து குட்கடற்கரை மலையை வளைத்துககொணடு இரவும் பகலும முடி யும் பொழுது அறிய முடியாதவாறு மழை பெய தது (மது. 238,239,244). ஞாயிறு மறைதலின கீழ்த் திசைககண் நிறைமதி தோனறி நிலவைப பரப்பு தலால இரவு பகலபோலத் தோனறியது (மது. 547-549). ஊடல் கொண்ட மகளிர் அறுத்தெறிந்த வடத்தில் இருக்கும் முததும பிற மணிகளும் மலர் களுடன சிநதிக கிடககும் முற்றத்தை, இரவு கழிநத விடியற்காலத்தில தூயமை செயவர் (மது. 680-686). இரவும பகலும் தெரியாதவாறு பொழுது மயங்கிய கூதிர்பபருவததில, வீட்டுப்புறா மன்றில சென்று இரை தேடாமல வீட்டில தங்கியது (நெடு. 45-48). இரவு போல இருள் செறிநத மிளைகளில யானை களை விழுங்கும் முதலைகள் இருந்தன (மலை. 211, 212). தலைவன தேர் பகலும் இரவும பெருந துறைக்கண் வருதலை அவர்வாய்ப் பெண்டிர கூறககேட்ட தாய் தலைவியை இற்செறித்தாள் (அகம. 20:12-16). வாளினையும் இரவில் அயர்ந்து உறங்கும சேனையினையும் உடைய வேநதன பாசறையில் நாம் உள்ளோம் என வினை முடியா மையை நினைத்துப் பருவங்கணட தலைவன வருந துகினறான் (அகம. 24:14-18). முதலையும் சுறா மீனும் வழங்கும் உப்பங்கழியாகிய குறுகிய வழியைக் கடநது தலைவன இரவில வருகிறான் (அகம. 80.1-3). கொலைவில ஆடவர் இரவிலே காட்டரண் களில உள்ளவரைக் கொனறு தாம் கைபபற் றிய ஆனிரைகளைப் பகுத்துக் கொள்வர் (அகம. 97.4-6). மேகம் சூழ்நத இரவில் பரதவர் அம்பி யில் ஏற்றிய ஒணசுடர்க்கு யானையின் முகத்து விளங்கும் நெற்றிப்பட்டத்தின் சுடர் உவமை (அகம. 100:6-10). திருமணம் நடநத நாளாகிய தலைநாள் இரவிலேயே தலைவனும் தலைவியும் ஒன்று கூடி னர் (அகம. 136:18). பகலிலும் இரவிலுமாகத் தொடர்நது மேகம் பெருமழை சொரிந்தது (அகம. 178.17,18). 'அரவு உமிழ் மணி எமது சீறூர்த் தெருவினை இரவெல்லாம் விளங்கச் செயதலால் நின மார்பினைக் கூடும் வாய்ப்பைத் தலைவி இழந்தாள்' என்பதன் வாயிலாகத் தோழி இரவுக் குறி மறுத்தனள் (அகம. 192:11-13). இரவின கடை யாமததில தன் குன்றினைப் பாடும அகவுநர்க்கு வெளியன் வேணமான ஆய் எயினன சிறநத யானையை வழங்குவான் (அகம். 208:1-5). நடு இர வில தலைவியின் தோளை விரும்பிவந்தபோதெல் லாம் தலைவியைக் கூடுதற்கு ஏறற இடமாய அமைந்த சோலையுடன் கூடிய பெரியதுறையைத் தலைவன பாராட்டினான் (அகம. 210:7-9). இர வெல்லாம் மழை பொழிநதமையின் உணடான சேற்றுவழிச சென்று நாம தலைவனைத் தேடு வோம் எனபது தோழி கூற்று (அகம. 222:15). தலைவர் பகறபொழுதை நம்முடன் ஆடிக் கழிதது இரவினில அவர் ஊர் செல்வராயின நமக்கு நன்றாம் எனபது தோழி கூற்று (அகம. 228 6,7). தான கட்டிற பிடித்த மீனகளை என தலைமயன் மார்க்குக காட்ட எநதை வீட்டிற்கு வருவான என்று கூறித தோழி இரவுக்குறி மறுககினறாள் (அகம. 240:6,7). உலகு நகர்ந்து செலவதை ஒத்த பெரிய நாவாய ஓரிடத்தும தஙகுதலினறி இரவும் பகலும் காற்றால செலுததப பெறுகிறது (அகம. 255:1-4). அரவு இரை தேரும் அஞசத்தக்க சிறு நெறியில இரவுபபொழுதில குறியிடம சென்று தலைவியைக காணப் பெறாமையால் தலைவன நெஞசு துனபுறுகின்றது (அகம. 258:10,11) இரவில் தினை மேயவரும யானையின் வலிய நடையைக கூர்ந்து அறிநது கானவன கவண எறிகிறான (அகம். 292:8-11). அரைநாள் இரவில் தலைவன வநத தைக காட்டிலும தோழி தலைவியை ஆறறுவித் தது தலைவிக்கு இனிதாகின்றது (அகம. 298.12,14). 'நெஞசமே, பகலும இரவும் நினைநத, பழகிய பதியை மறந்து உறைதல் நமக்கு எளிதாகாது' என்பது தலைவன் கூற்று (அகம். 299:1-4). 'புலியும யானையும் போர் செயயும், வெள்ளம் மிக்கோடும் அரிய வழியில் இரவு வாரற்க' எனத் தலைவனுக் குத் தோழி கூறுகின்றாள் (அகம. 308:1-3,7). புனங் காவலர் பகலில எறியும் கவண் கற்களுக்கு அஞசி இரவிலே சென்று தினையை மேயும் வேழம் தூறுகண்டு அஞ்சும் (அகம. 309.13-16). இன்பம் ஒன்றனையே விரும்பி இரவில் மறைநதுவரும் துன்பம் நீங்குமாறு தலைவன் மணந்துகொள்ள வேண்டும் என்று தோழி கூறுகிறாள் (அகம. 312:1-3). தலைவன் பொருள்வயிற் பிரிந்தபோது தலைவி இரவும் பகலும வருந்திப் பெருமூச் செறிந்து வருந்துவாள் (அகம். 313:5,6). 'விலங்குகள் இயங்குகினற காட்டிலுள்ள சிறு வழிகளினூடே இரவில் நீ தனியே வருதலைத் தவிர்த்து மணங்

கொள்வாய்' என்பது தோழி கூற்று (அகம். 318: 1-4). இன்பமும் துன்பமும், புணர்வும் பிரிவும், பகலும இரவும் போல மாறி மாறி வரும் (அகம். 327:1-3). தலைவன மழை பொழிந்த இரவில பாம்பின் தலையைக் காலால் இடறிவந்து தலைவி யோடு இன்புறுகிறான் (அகம். 328:3-5). தேரினைச் சேயமையில் நிறுத்திப் புன்னை மரங்களுள்ள சோலையில குறியிடத்து இரவில வருமாறு தலை வனைத் தோழி வேணடல (அகம். 360:13,15). பகற்பொழுதில புனனை நிழலில ஆயமோடாடி இரவில் இலலினகண துன்பத்துடன் இருப்பே னாயின் தந்தையால இற்செறிபபுக்கு ஆளாவேன் எனபது தலைவி கூற்று (அகம. 370.4-7). இரவில் பெயத மழை, குரஙகு தொட வீழந்த பலாக் கனியை நீருணணும துறைககண கொணடுதரும் (குறு. 90:2,5). அஞ்சியின பகைப்புலத்து இரவூர் மககள போலத் தலைவி பல நாள் உறஙகவிலலை (குறு. 91:6-8). இரவுக் காலததில் தலைவன் வரும் வழியில உணடாகும துன்பத்தை எண்ணித் தலைவி கலங்குவாள (குறு. 217:2). இரவில் கிணற் றில விழுந்த பசுவின் படுதுயர் கண்டு ஊமன் மனந்தாஙகாது வெளியிட முடியாமல் வருந்துவான் (குறு. 224:3-6). பலரும உறங்கும இரவில வநது தாழிட்ட கததைவைத் தலைவன திறக்க முயலும ஓசை கேட்டுத் தலைவி வருநதுவாள் (குறு. 244. 1-3). தலைவர் நமமைப பொருளாக எணணிப் பறவையின மூலம் நமக்கு ஒன்றைச் சொலலி விடாராயினும் இரவில அவர்க்குத் துணையா யிருநத வேங்கை மரத்திறகும தூது சொல்ல மறநதனரே எனத் தலைவி கூறுகினறாள் (குறு. 266). இரவில் அனனை முயங்கப பொருந் தாக கணணொடு துயிலுதல் துனபம் தருவதாகும் எனத் தலைவி கூறுகினறாள் (குறு. 353:4-7). நாம் துனபம அடைநதாலும் வெறியாட்டெடுககும் தாய் உணமை யறிய உதவுமாறு தலைவன் இரவில் வாரா திருபபானாக எனறு தலைவி தோழிக்குக் கூறுகிறாள (குறு. 360:3, 4, 8). இரவில தினைக் கதிரை அரிபவர் பறை முழக்குதல போல யாமம் காவலர் தொணடகப் பறையை முழக்குவர் (குறு. 375·4-6). மலைவழியில உறுபகை பேணாது இர வில வந்து தலைவன் தலைவியின் ஆகம புலலி னான (நற. 55.2-4). காவலர் அயாந்திருக்கும் நேரம் பார்த்து இரவில தலைவன் வருவது கொடிது எனபது தலைவி கூறறு (நற். 98:9, 10). தலைவியைப புணர்நது இன்பம் நுகருமாறு இர வில மழை பெய்து உதவிய மேகததைத தலைவன் வாழ்த்துகினறான (நற். 139:8-10). புலி வழங்கும் கவாதத வழியில கானயாறறை நீநதித தலைவன் இரவில் வருதலை அதுகாறும் அறியாத தலைவி யின் நெஞ்சம்அறிந்து வருநதுகிறது (நற். 144:6-10). 'குன்றநாடனே, நுதல் பசப்பினும் பசலை பாயி னும் விலஙகுகள் இயங்கும் சாரல் நெறியில் இர வில் வரவேண்டா' என்பது தோழியின வேண்டு கோள் (நற. 151:1-12). 'கழுத்தில பூட்டப் பெற்ற மணிகள ஒலிக்க இரவும் பகலும் இடையறாது மணற குன்றுகளில் வருநதி ஏறி வரும் குதிரைகள் வரைவு மலிநதமையால இனிக களைப்பாறட்டும்' என்று தோழி கூறுகின்றாள (நற. 163:3-7). பாம்பு இரை தேடும இருள்மிக்க இரவின நடுயாமத்துத் தலைவியைக் காண வருதலால எழும் அலர் கேட் டும் அகலானாய்த தலைவன பகலிலும் தினைப் புனம் வருவான (நற. 285:1,2,10,11). இரவினில் இரை தேடிச் செல்லும் ஆண்கரடி, பாம்புகள் வாழும கரையான் புற்றை அழித்து இரை பெறும் (நற். 325.1-5). சினம் பொருந்திய யானை புலியை எதிர்பார்த்து நிற்கும் இரவினகண தலைவன் அஞ் சாது வருதற்குத தலைவி அஞ்சுகின்றாள் (நற். 336.7, 8). தலைவன் ஏறிவரும் தேரொலி கேளா மல் இரவு நேரம் கழிதறகுத் தலைவி வருந்துவாள் (நற். 338.3). இரவுபபொழுதில் திங்கள் தோனறப் பெரிய கடலில வலிய அலைகள் பொங்கி எழுந்தன (நற. 375:6-8). யாமமும காமமும் அலையோசையும் வருத்த, இரவைக் கடநது ஞாயிறு தோனறவில் லையே எனபது தலைவியின் கவலை (நற. 378:4-6). காதலர் இரவில் வரும் துன்பத்தினின்றும் நாம் பிழைக்க, அவர் பெணகேட்டு வரும்போது நமர் மகட்கொடைககு உடன்படுதல் வேணடும் எனபது தோழி விருப்பம (நற. 393:8-11). அரிவை தலைவ னின நெஞ்சத்தைக் கொணடமையால் அவன இர விலும் துயிலறியான் ஆயினான் (ஐங். 172). நறு மணம் கமழும் கூந்தலையுடையவளால தீண்டப்பட் டவர் இரவிலும துயிலாது துனபுறுவர் என்பது தலைவனின் பட்டறிவு (ஐங். 173). தலைவியின் நுதல பொலிவு பெற்றிருபபதால் பிரிந்த தலைவன இரவில் வந்தனனோ எனத் தோழி வினவுகினறாள் (ஐங. 229:3,4). மலைநாடன இரவில வருதற்குரிய முறை (தந்திரம்) அறியானாகவும் நம் தாய காளை ஒருவன் வரும் வரும் என்று கூறுகிறாள் என்பது தலைவியின சிறைப்புறக் கூற்று (ஐங. 272:3-5). வழி இடையூறுகளைப் பொருட்படுத்தாது, தலைவி யிடம கொணட அருள் காரணமாக, இருள் செறிந்த இரவுப் பொழுதில தலைவன் வநததை நினைத்து அவள கலங்குகினறாள் (ஐங. 362:3-5). இருள் செறிந்த இரவில வநது தலைவன அருளு தலால் தலைவி அழகு பெறுகிறாள (கலி. 38:14,16). மேகம் இடிக்கின்ற இருள் செறிநத இரவில் செவ்வி

பெறானாய்ச் சென்ற தலைவனை நினைந்து அல்ல குறிப்பட்ட தலைவி வருந்துகிறாள் (கலி. 46:10,11). 'யானை உலவுகின்ற அரிய வழியில் தனியனாக நீ இரவில் வாரற்க' எனறு தோழி தலைவனிடம் கூறி இரவுக்குறி விலக்குகின்றாள் (கலி. 49:21-23). பானாள் இரவில் அழகுடன் கூடிய ஒருத்தி வந்து அழைத்தபோது தலைவன் அவளுடன் சென்றான் என்பது தலைவியின் குற்றச் சாட்டு (கலி. 90:6-12). ஆயத்தோடு விளையாடியும் மலர் பறித்துத் தலையில் சூடியும் வருதலால் இரவு வந்துற்றது என்பது தலைவி கூற்று (கலி. 113:24-26). ஆற்றுதற்கோர் இடமின்றி அலைக்கும் துன்பம் செயயும் மாலைப் பொழுதாலே வெறுப்புக் கொண்ட வருத்தந்தீரக் காதலர் விரைந்து வந்ததால் அம்மாலை இரவுக் காலத்திடத்தே சென்றொளித்து இல்லையாயிற்று (கலி. 120:20-23). இனிய துணையாகிய தலைவன் பிரிவால் வருந்தும் தலைவிக்கு இரவில் சேவலைப் பிரிந்து வருநதும் குருகு துணையாகும் (கலி. 121:15, 16). தலைவியின் நெஞ்சம், பகலும் இரவும தூக்க மினறித் தலைவன்பாற் பலமுறை சென்று வநதும் அவனை அடையாமையால் வருந்துகின்றது (கலி. 123: 16-19). மணல் மேட்டில் விளையாடிய நண்டு நம்பால் துறைவன் செய்த கொடுமைககு நாணி வளைக்குள் புகுந்து இரவெல்லாம் தங்கியிருக்கும் எனத் தோழி தலைவியிடம் தலைவனை இயற் பழிததாள் (கலி. 131:15-20). துணையோடு கூடிய அன்றில், துணையின்றித தலைவி வருநதினாள் என்று நினைத்துத் தாமும வருந்தி இரவில அகவா (கலி. 131.26-28). இடுமணலால் காவி வருந்தத் திரைகள் அம்மணலைக் கரைத்து இரவெலலாம் அருளினவா யிருக்கும் (கலி. 131.36-38). ஞாயிறு மறைய இருங்கடல் ஒலித்தெழுந்து உலகை ஒடுக் கிககொள்வது போன்ற இரவுக காலத்தைத் தான் படைப்பதுபோல் மாலை தோனறியது (கலி. 134: 4-10). இரவில் மேகத்திருளைப் பிளக்கும் மின்னற் கொடி போன்றவள் தலைவி (கலி. 141:17,18). இரவும் பகலும் கூட்டமினறிக் கழிந்தமைக்குத் தலைவி அறிவழிந்து புலம்புகின்றாள் (கலி. 142: 60,61). பிரிதலும் சேர்தலுமாகிய இரண்டும் மாறி மாறி வருதறகு இரவும் பகலும மாறி மாறி வருதல உவமை (கலி. 145:13-16). பரங்குனறின்கண அருவி தாலாட்டக் காற்று பாராட்டத் தலைவன இரவில் தலைவியின் மார்பில் துயில் கூடுகின்றான் (பரி. 6:52-55). வஞ்சனை செய்யும் படையானாகிய மனமதன இரவிற் செயதவெலலாம் ஊர் காப்பார்க் குப் புலபபடத் தெருவெங்கும் வையை பரந்தது (பரி. 6:57-60). பரத்தையா விரும்பியவாறு ஒழுகும் தலைவன் அச்சமினறி இரவு முழுதும பரத்தை வீட்டில் தங்கினான் (பரி. 6:80,81). வையை அரிய இடமென்று பாராது இரவு பகலாக ஓடி எங்கும் பரந்தது (பரி. 7:5,10). புணர்ச்சியொடு வந்த இரவு நீங்கிய வைகறைக்கண் மகளிரும் மைந்தரும் கலனணிந்து துகிலுடுத்துப் பரங்குன்றை நோக்கிச் செல்கின்றனர் (பரி. 19:9,18). இர-2, இரா, இராஅ காண்க.

2. இரத்தல். 'பாணனே, தலைவன் இறந்தமையால் அவன் அளித்த நிலங்களைக் கொண்டு உண்ணு தலோ, அவனில்லாது வாழ்தலை வெறுத்து இரவு-இரத்தல்-செய்து வாழதலோ உன் விருப்பத்தைப் பொறுத்தது' என வடமோதங்கிழார் கூறுகிறார் (புறம். 260:8-11). தாமாகப் பொருளை ஈட்டாது முந்தையோர் தேடிய பொருளைக் கொண்டு வாழ்தல் இரவினும் (இரத்தலினும்) இழிவாகும் (குறு. 283:2). ஞாயிறு மணடிலம் போன்ற தலைவி உலகத்தை யெலலாம் காக்கும் ஆற்ற லுடைய தலைவனை இரவு செயயும் நிலைக்கு உள்ளாக்குகிறாள் (கலி. 141:12-14).

**இரவுப்புறம்** - கடையாமம். இரவுப் புறம் - கடையாமம்-கழிநத காலைப் போழ்தில முரசமொடு வலம்புரிச சங்கம் முழங்கும் (புறம. 397:5,6).

**இரவுத்தலைமண்டிலம்** - திங்கள் மண்டிலம் (மதி நிறை நாள). இரவுததலை மணடிலம் - திஙகள மண்டிலம - கடலிடததுத தோன்றும்போது அலைகள மிக்கு எழும் (நற். 375:6-8).

**இரவுமலர்** - இரவிலும் மலர்ச்சிபெற்ற மலர். பல யானைச் செல்கெழுகுட்டுவன மாதேவி, பொய் கைப் பூபபோ லனறி இரவுமலர் - இரவிலும் மலர்ச்சி பெற்ற மலர் - போனற கண்களையுடைய வள் (பதி. 21.34,35).

**இரவுரை** - இரப்புரை (வேணடிக கேடகும் உரை). சேரமான வஞ்சனின மூதூரை அடைநத பொருநன் தன் இரவுரை - இரபபுரை - புலப்படுமாறு தடாரிப் பறையை முழககினான் (புறம. 398.8-13).

**இரவூர்** - இரவுப் பொழுதை உடைய ஊர். தலைவன் பரததையிற் பிரிந்தானாகத் தலைவி பல நாட்கள் துயில் இல்லாது இருபபதற்கு, அஞ்சியின் பகைப் புலத்து, அச்சம் தரும் இரவூர்-இரவையுடைய ஊர் - மக்கள பலநாள் உறங்காமை உவமை (குறு. 91:6-8).

**இரா** - இராப்பொழுது. கிணற்றில வீழநத ஆன்படுந் துயரை இராவில - இராபபொழுதில்-கண்ட ஊமை அதை வெளியிட முடியாமல் வருந்துவான (குறு. 224:3-6). சோழ மன்னனின ஆமூரில் பகல் போன்ற ஒளியைக் கொணட விளக்குகள இருப்பதால் இராப்

பொழுதை அறிய முடியவில்லை (ஐங். 56:1,2). பொயகையினின்று அகற்றப்பட்ட தாமரை மலர் ஓர் இரா வைகலுள் வாடாது; தலைவனாற் பிரியப்பெற்ற தலைவியோ உடன் இறந்துபடுவள் (கலி. 5:14,15). 'நின் தந்தைக்கு நீ செய்யும் சிறப்புப் போலவே எமக்கும் சிறப்புச் செய்து இராவில் எம்மொடு தங்கிப் போக வேண்டும்' என்று மகனை வேற்றுத்தாயர் வேண்டினர் என்பதுதோழி கூற்று (கலி. 83.19,20).விளக்கமுள்ள இராவில் தன் கேள்வனது மார்பினைச் சார்ந்து தலைவி தெளிந்து நலம் பெற்றாள் (கலி. 142:61-66). தன் காதலன் தன்னை வந்து கூடுங்காலம் பகலோ என அறியாமையினால் முதலில் பகற் பொழுதைத் தலைவி வெறுத்தாள். அவன் வாராமையினால இராவை வெறுககிறாள் (கலி. 144:51-53). இர – 2, இரவு, இராஅ காண்க.

**இராஅ** - இராப்பொழுது. தலைவர் வருவதாகக் கூறிச் சென்ற பருவமும் கழிந்தது; வேப்பமரத்திலிருந்து கூகையும் இராஅ – இராப்பொழுது - முழுதும் குழறும்; இந்நிலையில் தமியேனாய் அன்றிலின குரலை எவ்வாறு பொறுப்பேன் என்பது தலைவியின் கவலை (நற். 218:7-11). இர-2, இரவு, இரா காண்க.

**இராசசூயம்** - அரச வேள்வி. வெற்றிபெற்ற வேந்தன், தனனால் வெல்லப்பட்ட அரசர் சூழவிருந்து செய்யும் பெரும்வேள்வி (ப. மு. பக். 318). பாணடியன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி காண்க.

**இராமன்** - தசரதன் மகன். இராமனுடன் காடுபோந்த சீதையை அரக்கனாகிய இராவணன கவர்ந்து சென்றான் (புறம். 378:18,19). இராமன் திருவணைக் கரையில் உள்ள ஆலமரத்தின் கீழிருந்து அரிய மறையினை ஆய்தற் பொருட்டு அம்மரத்திலுள்ள பறவைகளின் ஒலியடங்கச்செயதான் (அகம்.70:13-17).

**இருக்கை** – 1. இருப்பு. ஆறலைப்போர் வழிச்செல்வோரைத் துன்புறுத்துவதற்காகச் சேய்மையில், அவர் வரவினை எதிர்பார்த் திருக்கும் இருக்கையையும்- இருப்பினையும் - கவிந்த கண்ணோக்கினையும் அம்புக்குறி தவறாத தறுகண்மையையும் உடையவர் (புறம். 3:19,20). நாட்காலையில் மகிழ்ந்திருக்கும் நின் இருக்கை (திருவோலக்கம்) பொன்மாலையைத் தலையிற் சூடிப் பாண்சுற்றம் சூழ்வதாக எனச் சோழன நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் வாழ்த்தினார் (புறம். 29:3-5). சோழன் குளமுற்றததுத் துஞ்சிய கிள்ளிவளவன் பகலில பரிசிலர்க்குத தேர் வழங்கியிருக்கும் இருக்கையைப் பாணர்சென்று கண்டால, பொன்னாலாகிய தாமரைப் பூவினைச் சூடாதிருத்தல் இயலாது (புறம். 69:17-21). முனறில்ல தேரை வழங்கியிருக்கும் இருக்கையினை யுடைய வேள்பாரியின் குன்றம், இவ்விடத்து நின்று காண்போர்க்கும் சிறிது எல்லை கடந்து சென்று நின்று காண்போர்க்கும் தோன்றும் சிறப்புடையது(புறம்.114:1,2,6). மூவனுக்கும் தமக்குமுள்ள மிக்க அணுமையை அவனது மகிழ்ச்சியுடைய இருக்கை (நாளோலககம்) காண்பதாக என்று அவன் பரிசில் நீட்டித்த வழிப் பெருந்தலைச் சாத்தனார் கூறினார் (புறம். 209:14,15,19). வறிய பொருநன் சமைக்கும் பானையைத் தோளில் தாங்கி வேறு எச்செயலும் செய்ய விருமபாது பொருள்பெற விரும்பிய இருக்கை உடையனாய் நெடுஞ்செழியனைக களத்தில் காணவந்தான் (புறம். 371:6-14). இஞ்சியையும் பூவையும் இடைவிரவித் தொடுத்த வாடாத மாலையைச் சூடிப் புறத்தே சந்தனம் பூசப்பெற்ற கட்குடங்கள் அசையும் இருக்கையில் நீல மணி போலும் நிறமுடைய கள் வீரருக்கு வழங்கப்படுதல் (பதி. 42:10-14). (நன்றா என்னும்) நெடிய வரையில். நறவினையுடைய நாண்மகிழ் இருக்கையில் (ஓலக்க இருப்பு) அரசவை பணிய, அறமபுரிந்து விளங்கிய செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடிப் பரிசிலாகப் பல ஊர்களைப் பெற்றார் (பதி. 85:7-13). யாழுறுப்பாகிய திவவு, கரிய நிறத்தையுடையவளின் முன் கையில் உள்ள வளையலைப போனறதும் ஒன்றோடொன்று நெருங்கிய இருக்கையுடைய திண்ணிய பிணிப்பினைக் கொண்டதும் ஆகும் (பொரு. 14,15). பாசறையில் கூடமாகக் கால்களை நட்டுக் கயிற்றை வலித்துக் கட்டின இருக்கைக்கண், வில்லைச் சேர ஊன்றி அவற்றில தூணிகளைத் தூக்கிப் பூவேலைபபாடுடைய குந்தத்தை ஊன்றிக் கிடுகுப் படையினை வரிசையாகக் குத்தி, அரணம் அமைக்கப் பட்டது (முல்லை. 39-42). கருமேகம் சூழ்ந்த மலை போல நாவாய கடலில் அசையும் இருக்கையினையும் ஆழ்ந்த கிடங்கினையும் உடையது சாலியூர் (மது. 83-88). நாள்மகிழ இருக்கையில் வண்கையினை யுடைய வளப்பம் பொருந்தின செல்வர், மேகம்போல வரையாமல கொடுப்பர் (மது. 442, 443). தண்கடல் நாடன் ஒண பூங்கோதையின் (சேரனின்) பெருநாளிருக்கையில் (ஓலக்கம்) விழுமியோர் கூடி அவன் கேட்டிருப்பச் சொற்போர் நிகழ்த்துவர் (மது. 524-526). புகார் நகரத்தின் கடல் துறையில் நிறைந்த இருக்கை உடைய அசையும் நாவாயின் பாய்மரத்தின் மேல் கொடிகள் கட்டப்பெற் றிருந்தன (பட். 173-175). நனனனது நாண்மகி ழிருக்கை பருவம் பொயயாத மேகம் பின்னரும் பெய்வதுபோலப் புகழுநர்க்கு ஈயும் தன்மையது (மலை. 75,76). நன்னன் நாட்டிற்குச் செல்லும் வழியிலுள்ள மலையின் சிலவிடங்களில் செல்வோர் குவளை மலரைத் தொட்டாலும், வரையர

மகளிர் இருக்கையைக் கண்டாலும் உயிரபோகும் படி வெதும்பி நடுக்க முறுவர் (மலை. 189-191). இனிய கள்ளையுடைய அஃதை நாணமகிழிருக்கை யிலிருந்து பரிசிலர்க்குக் களிறும் கலனும் வழங்கு வான் (அகம. 76:3,4). நெடுமானஞ்சி அன்புள்ளத் தால் ஆராய்ந்து நெடுங்காலம் புகழ விளங்கும்படி இரவலர்க்குத் தேர்களை வழஙகும இருக்கை போல மேகம் பெயல் தொடங்கி மாறாது ஒரு தன்மை யாகப் பெய்தது (நற். 381.7-10).

2. குடியிருப்பு. கிள்ளிவளவன படையெடுத்து வரு தல் நோக்கிப பகைவர் மயக்கம பொருந்திய காவ லில்லாத இருகதை - குடியிருப்பு - உடையராக இருந்தனர் (புறம. 41 12,13). தலைவனது ஊர் மன் றத்தே இரத்தி மர நிழலில சிறுவர் அம்பெய்து விளையாடும காவற் காடுகளை யுடைய இருக்கை யதாகும் (புறம. 325'10-13,15). பெருஞ்சேரலிரும் பொறையைப் பணிநது வாழாத பகைவர் நெல் மிக்கு வளர அறுத்த கருமபின் பாகாகிய வரு வாயை வந்தார்ககு வரையாது கொடுக்கும வள மிக்க இருககை துறநது வணபுலததிற் பொருநதி வாழும் நிலை அடைவர் (பதி. 75'5-8). கரிகாற் பெருவளத்தான தன்னை அடைநத பொருநர்க்கு நீர்மிக்க மருத நிலஞ் சூழ்ந்த தளராத இருக்கை யுடைய நல்ல ஊர்களைக் கொண்ட நாட்டையும் யானையையும் கொடுபபான் (பொரு. 169-173). தும பிகள இசை முரலும் மருதநிலஞ் சூழநத அசை யாத இருககையுடையது குணபுலம (சோழநாடு) (சிறு. 77-79). வீரர் கள்ளையும் ஏறறின இறைசசியை யும் உணடு தங்கடகிடையே மத்தளம் முழங்க, விலவலி மிகக தம இடத்தோளை வலப்பக்கத்தே வளைத்துப் பகற பொழுதில் மகிழ்சசியுடன் ஆடும் தன்மையது, குறிஞ்சி வீரருடைய இருககை (பெரு. 142-146). மருத நிலததிலுள்ள பெரிய ஊர், தூற றாப் பொலி பொனமலை (மேருமலை) போலத் தோனறும் மருத நிலஞ் சூழ்ந்த அசையாத இருககை கொண்டது (பெரு. 240-242). மேலும அஃது ஊராத் தேரினை உருட்டிய புதல்வர் நடைவருததம் நீங்கச் செவிலியரைத் தழுவிககொண்டு, பாலுணடு படுக் கையில் உறங்கும் அழகிய வீட்டையும பசியறியாத அசையாத இருக்கையையு முடையது (பெரு. 249-254). சூல் கொண்ட கமுகினைப் போலத தோனறும் பசசைக் குபபிகளில் உள்ள கள்ளை உணடு நாள் தோறும் மகிழ்ச்சியோ டிருக்கும் இருககைகளை மருவி யிருநது செலலுமாறு பெரும பாணரை ஆற்றுப் படுததினர் (பெரு. 381-383). அறலையுடைய வையைத் துறைதோறும பலவகைப் பூத்திரளை யுடைய பூநதோட்டம சூழ்நது, பாணர் இருக்கை இருநதது (மது. 340-342). வடுவஞ்சி வாயமொழிந்து, கொள்வதும் மிகுதியாகக் கொள்ளாது, கொடுப பதும் குறைவாகக் கொடுககாமல ஊதியத்தைக கூறி விற்கும் நல்ல உள்ளங்கொணடோர் நெருங்கிய இருக்கை யுடையது புகார் நகரம் (பட். 208-212).

3. இருத்தல். அதியமான் நெடுமானஞ்சியின் முன் னோர் அமரரைப் பேணியும் ஆவுதி அருத்தியும் கரும்பினை இவ்வுலகின்கண் கொணடுவந்து கொடுத்தும் கடலுக்குட்பட்ட இருக்கையில-இருத் தலுடைய நிலவுலகத்தில் - ஆணைச சக்கரததை நடததிய பழமையான மரபினராவார் (புறம. 99: 1-4). செல்வககடுஙகோ வாழியாதனின், ஓலகக இருப்பின்கணணே, அவனுடைய நாள மகிழ இருககையின் (இருததலின) செலவச் சிறப்பினைக கணடதாகக் கபிலா கூறியுள்ளாா (பதி. 65:13,17). பெருஞ்சேரலிரும்பொறை தனனிடம வந்து இரந தவருக்குக் கொடுத்துப் பின வநது இரபபோாக் குக கொடுப்பதிருநது மாறாத அவனுடைய இருக்கையை (பாசறையிலிருததல) காண வந்ததாக அரிசில் கிழார் பாடுவார் (பதி 76 7-9). யாமரததின உயர்சினையினமேல புலால விருபபததுடன இருக கையுடைய தனது பெடைமுகம பார்தது ஆண பருந்து எழும (அகம. 51.3-6). விறலி பாணா களைப புரககும அனபினையும கழலும தொடி யினையும கள்ளுணடு மகிழும் இருககையினையு முடையவன் நனனன வேண்மான் (அகம. 97.10-12). பிரிவால் வருநதும தலைவி கண்பனி முலை தெறிபபப படுககையில அணை தழுவி மையல கொணடு வலியழிந்த இருககை உடையளானாள் (அகம. 289:10-14). தலைவன பிரிந்த நிலையில தலைவி, முழந்தாளகளைக் கையாற் பூட்டிய தனி நிலையினதாகிய இருககையொடு தன நிலையையே எணணி இருத்தல (அகம். 373:8-10). மலையில பெருநதேனடை கணட இருககை (இருத்தலையுடைய), முடவன தன் உளளஙகையாகிய பாததிரத்தைக குவித்து வைத்து, அத்தேனடையைச சுட்டி நக் குதல், அருளாத தலைவனைக் காணடல் தலைவி மனததிற்கு இனபம் பயததற்குவமை (குறு. 60). மந்தி தினைக் கதிரைக் கவர்நது செனறு, பாறை மேல ஏறியிருந்து அங்கையிற் கதிரைப் பிசைந்து கடுவனுககும் கொடுத்து மழைநீரால் நனைநத முதுகுடன இருத்தலுககு, நீராடிய நோனபியா கையூண் இருககை (கையில உணவை ஏந்தி உணடிருத்தல) உவமை (நற. 22:1-7). நலல தேரினையுடைய பெரி யன் எனபான் கள்ளினை உணடலால் மகிழும் இருக்கை உடையவன் (நற். 131.7). ஆண்குருவி வேற்றுப் புலத்தில தங்கிவர, அதனை உணர்ந்த பெடை தன குஞ்சுகளுடன் அதனைத தன் கூட் டினுள நுழையாதவாறு தடுத்தது. மழையால

நனைந்த புறத்தோடு குளிரால் நடுங்கும் அவ்வாண் குருவியின் இருக்கை (இருத்தல்) கண்டு பெட்டை அருள் மிகுந்து அன்புடன் அழைத்தது (நற். 181:1-8).

4. இருப்பிடம். பாசறையில் சோழன் நலங்கிள்ளி விரும்பித் தங்கியுள்ள இருக்கை - இருப்பிடம் - பாணர்சுற்றத்தைத உண்பிக்கும் தலைமை யுடையது (புறம். 33:14, 15). பகைவர் வலி தொலைத்த ஆண்மையுடையவனாய் தேர்வண் மலையனை, அவனுடைய நாண் மகிழ் இருக்கையில் காண வந்ததாக வடம் வண்ணக்கன் பெருஞ்சாத்தனார் பாடுகின்றார் (புறம். 125:5, 6). பெரிய மேகத்திற்கு இருக்கையாகத் கமைந்த உயர்ந்த மலையையுடைய முருகனை ஒத்தவன் தேர்வண்மலையன் (புறம். 125: 18-20). இருட்டில் காட்டுப்பூனையைக் கண்டஞ்சிய பெட்டைக் கோழி அரற்றிச் சிறு தீ விளக்கத்தில் சேவலைக் கண்டு அச்சந் தணியும் காவற்காடு சூழ்ந்த இருக்கையுடையது தலைவனது ஊர் (புறம். 326:1-7). தலைவனின் சில்குடிச்சீறூர் நடுகல்லுக்கு நீராட்டிப் பலியூட்டி நெய்விளக்கிடுவதால் தெருவில் மணம் வீசும் இருக்கையதாயினும், பகைவர்க்குப் பாம்புறையும் புற்றினைப் போன்றதாகும் (புறம். 329:1-6). பொன்னரி மாலை பெறும் பாடினி கட்டும் பொற்றாமரை பெறும் பாணர்க்கும் வேண்டுவன நல்கித் தலைவன் இருக்கையில் விளங்கல் (புறம். 361:11-13). நாணினை வள்ளத்தலினின்றும் நீங்காத வீரர் அம்பு களைதலை அறியாதவராய்ச் செறிந்து விளங்குதலின் அசையும் இருக்கையுடைய பாசறைக்கண் தங்கும் குரிசில் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் (பதி. 24:12-14). தினைக்கொல்லையை உழுபவர் வரகின் மேலே இட்ட, மண மிக்க காட்டு மல்லிகையையுடைய வலிய இருக்கை கொண்ட புன்புலங்களில் விருந்தினர்க்குத் தினைமாவைப் பகுத்தளித்து உண்பர் (பதி. 30:22-24). மன்னன் பாசறை இருக்கையில் தங்கி இரவலர்க்குக் கரி, பரி, தேர், நன்கலன் ஆகியவை நல்கினான் (பதி. தி. 3:2, 3). 'திருமண நாளிரவில் நீ உன் உள்ளத்தில் நினைத்ததனை மறையாது கூறுக' எனத் தலைவன் வினவக் கேட்ட தலைவி, இன்னகை இருக்கைக்கண் குழை காதில் அசைய, உளம் நிறை மகிழ்ச்சியோடு முகம் தாழ்த்துத் தலைவணங்கினாள் (அகம். 86:25-29). தலைவியைப் பிரிந்துசென்ற தலைவன் உள்ளம், அரசர் பகையால் அழிந்த அரிய ஊர்முன்னைய அடுத்த வழியிலுள்ள சிற்றூரில், ஆளில்லாத மன்றத்தே காற்றுவீச வீரத்தன்மையுடைய இருக்கையின்கண்ணே தலைவியின் தோளினை நினைந்து மகிழ்தல் (நற். 346:3-7, 11).

கண்ணைக் கொள்ளும் இருளுக்கு இருக்கையாகிய நீலமணிபோன்ற மேனியர் திருமால் (பரி. 4:57)

5. ஊர். பண்ணனின் அரண் சூழ்ந்த வன்புலத்தின் கண் உள்ள வல்லார் என்னும் இருக்கை - ஊர் - புல்லால் நாறும் அம்பினையும் அரிய காவற் காட்டினையுமுடையது (புறம். 181:4-6). குட்டுவன் காக்கும் குட்டநாடு பசி என்பதனை அறியாத மருதவளம் மிக்க இருக்கை உடையது (அகம். 91:13-17). வண்டற் பாவையை நீருண் துறையில் கொணர்ந்து வைத்து அழகிய பெண்களொடு குரவைக் கூத்தாடும் கடற்கரைச் சோலை சூழ்ந்த இருக்கை வாணனின் சிறுகுடி யாகும் (அகம். 269: 19-22).

6. பாசறை. (வாடைக்காலத்தே) இருக்கையில் - பாசறையில் - நீண்ட நாட்கள் தங்கும் வீரர் (குளிர் மிகுதியால்) காட்டிலுள்ள மரங்களை விறகாக எரித்துத் தீக் காய்ந்திருப்பர் (பதி. 82:9, 10). இடிதாக்கிய மலை போல் யானைகள் வீழ நிலையாமை தம் நெஞ்சில் அமையச் செய்யும் காஞ்சிப்போர் பலபுரிந்து இளஞ்சேரல் இரும்பொறையின் சேனைக்குழாம் ஆரவாரிக்கும் இருக்கையினை இனிது கண்டேன் எனப் பெருங்குன்றூர் கிழார் கூறுகின்றார் (பதி. 84:18-20). மூன்று முரசை ஆளும் பாண்டியர் தம் பகைவர் வலிகெடக் களிறுகள் ஏனைப் படைக்கு நடுவே நிற்கும்படி கம்பத்தோடு கட்டிய இருக்கை (பாசறை) அமைந்திருந்தது (கலி. 132:4, 5).

7. அரண். போர் ஒழிய நீங்கிய பகைமன்னன் படையுடன் மீளவும் வந்து மதிற்புறத்தே தங்கினான். தன்னைப் பற்றுக்கோடாக வுடைய நிலை பெற்ற மதிலைக் கொண்ட இருக்கை - அரண் - அவனை எதிர்க்க ஆற்றாதாயிற்று. காட்டில் வதிந்திருந்த நன்னன் தோன்றிப் பொருது தன் பழம் புகழை நிலைநிறுத்தினான் (அகம். 392:21-27).

8. இராசிவீடு. ஒவ்வொன்றும் ஒன்பது நாட்களைக் கொண்ட மேடம், இடபம், மிதுனம் என்ற வீதிகள் மூன்றிடையே அமைந்த பன்னிரு இருக்கையுள் - இராசி வீடுகளுள் - இடபத்தில் வெள்ளியும் மேடத்தில் செவ்வாயும் மிதுனத்தில் புதனும் சிம்மத்தில் ஆதித்தனும் மீனத்தில் வியாழனும் மகரத்தில் சனியும் மதியும் இராகுவும் கடகத்தில் கேதுவும் சேர்ந்த ஆவணித் திங்கள் அவிட்ட நாளில் விதிமுறையே வைய மலைக்கண் மழை பெய்தது (பரி. 11:1-14).

9. பரப்பு. நன்னன் மலையினின்றும் வீழும் அருவிகள் வென்றெடுத்த கொடி போலத் தோன்றும் மலை சூழ்ந்த இருக்கை - பரப்பு - உடைய நாட்டிற்கு உரிமை யுடையவன் (மலை. 581-583).

10. இருக்குந் தனமை. இரவில அழகு விளங்கும் சாந்தினுடன் அழகிய பட்டாடை ஒளி செயயத் தலைவி மகளிரைப் போல நாணி ஒடுங்கிய தலைவனின் இருக்கை - இருக்குந்தனமை - கணடு மடமையால உருகும நெஞசினள ஆனாள (அகம. 236: 10-13).

**இருகாமம்** - இம்மை மறுமையில் உணடாகிய காம இனபம். பூம்புகார் நகரில இருகாமம - இம்மை மறுமையில உணடாகிய காம இன்பம் - கொடுத்தறகுரிய இணை ஏரிகள இருநதன (பட். 39).

**இருகாமத்திணையேரி** - இம்மை மறுமைகளில் உண்டாகிய காம இன்பத்தைத் தரும் ஏரிகள. பூம்புகார் நகரில இருகாமததிணையேரி - இமமையிலும் மறுமையிலும் உணடாகிய காம இனபததினைக கொடுத்தற்குரிய இணைநத ஏரிகள இரணடு - இருநதன (பட். 39). [அவறறை நசசினார்க்கினியர் சோம குணடம சூரிய குணடம என்றும் வளகாமரேரி, வணிகாமரேரி எனறும் குறிப்பா (நச. உரை).]

**இருங்குன்றம்** - 1. பெரிய குன்றம். முரண்மிகக வடுகர் முனனே துணையாக வர மோரியர் தெனதிசை நாடுகளைப பறற நினைதது வந்த வருகைக்கு, வானுற ஓங்கிய இருஙகுனறத்தினை- பெரியகுனறத்தினை - இடைபோழநது, ஆழி தடையினறிச் செலல வழி அமைத்தனர் (அகம. 281:8-11). நீணட இருஙகுன்றத்தின்கண் ஆறலைப்போர் பொருநதி நெருஙகியிருபபா (அகம. 288.9). குளிர்சசி மிக்க இருஙகுனறம கடநது பொருள்வயிற் பிரிநதவர்களுக்கு அது, தலைவியை முயங்குவதனினும் இனியதாகும (ஐங. 337).

2. மாலிருங்குன்றம் (அழகர்மலை). குலவரைகள் சில வற்றினும மாயோனையும் அவன் முன்னோனையும் தாஙகும் இருங்குன்றம - மாலிருங்குன்றம் - சிறப்புடையது (பரி. 15:10-14). அரிதிற்பெறும் துறக்கததை எளிதில பெறுதல் உரிமையால மாலிருங்குனறம் அனைவரும் ஏததத் தககதாகும் (பரி. 15.17,18). மகளிரும் மைந்தரும் காமததை விதைதது விளைக்கும் யாமத்தியலபுடையது இருங்குனறம (பரி. 15.24,26). 'இருங்குனறத்தின அடியிடததே உறைதல எய்துவதாக' எனறு பெரும் பெயர் இருவரை (திருமால பலதேவரை) தொழுது வேண்டுவர் இளம பெருவழுதியார் (பரி. 15:65,66).

**இருங்குன்று** - 1 கரிய மலை. பாரியின இருஙகுன்று- கரியமலை- வேநதா தம வேலால வெலலற்கரிது; விறலியர் பாடி வந்தால பெறுவதறகு எளிது (புறம். 111).

2. திருமாலிருஞ்சோலை. பெருங்கலி உலகத்தில தொன்று தொடடியலும் புகழுடைய இருங்குனறு என்னும பெயர் பெற்ற திருமாலிருஞ்சோலை காண்போர்தம் மயககத்தை அறுககத் தககதொரு தெயவமாகும் (பரி. 15:35-37). அவுணரை நேரே பொருது கொனறவனின (திருமாலின) நிறததையுடைய இருங்குன்றததில் மயில் அகவ, குயில கூவச் சிலமபுகினற எதிரொலி ஓவாது விளங்கும் (பரி. 15 40-45).

**இருங்கோ** - குறுநில மன்னன். இவன் புலிகடிமால் எனனும் பெயரையு முடையவன. 'தாரணிந்த யானையுடைய பெருமைமிக்க இருஙகோவே' எனறு கபிலர் விளித்துப புலிகடிமாலிடம, பாரி மகளிரை அறிமுகபபடுததி, ஏற்றுக கொளளுமாறு வேணடினாா (புறம. 201:13-16). இருஙகோவேள காணக.

**இருங்கோ வேண்மான்** - குறுநில மன்னன். தலையாலங்கானததுச் செருவென்ற பாண்டியன நெடுஞ்செழியனது இளமைக காலத்தே எதிர்ததுப போர் செயத ஏழு பேர்களில் ஒருவன். குதிரை பூணட கொடிததேர்ச் செழியன ஆலஙகானத்துப போர்க்களம சிவககுமாறு சேரல், செமபியன, திதியன், எழினி, எருமை யூரன், தேன்மணங் கமழும் சாந்து பூசிப புலாநத மார்புடைய இருங்கோ வேணமான, பொருநன் ஆகிய எழுவரை ஒரு பகலிலே வென்று அவர் தம் படைகளைக் கொனறு முரசையுங் குடையையுங் கைப்பறறினான (அகம. 36:13-22)

**இருங்கோவேள்** - 1. குறுநில மன்னன். துவராபதிப பதினெணகுடி வேளிருள வேள்குடியில வந்தவன. வடபககதது முனிவ ரொருவரது ஓமகுணடத்தில தோனறித் துவராபதி (துவார சமுததிரம்) எனனும படை வீடடை ஆணட கொடையாளராய்த் தொனறுதொட்டு நாறபத்தொனபது தலைமுறை வநத வேளிர் மரபினன. தவமியற்றியிருந்த முனிவரொருவருக்கு இடையூறாய வநததொரு புலியை அவர் கட்டளையினபடி கொன்றமையால இவனுக்குப புலிகடிமால என்றும் ஒரு பெயருணடு. வேள்பாரி இறநதபின் அவன் மகளிர் இருவரையும் இவனிடத்து அழைதது வந்த கபிலர் அவ்விருவரையும் மணந்து கொள்ளுமாறு இவனை வேணட, இவன் அதற்கு இசையாமையால அவரால் வெறுததுப பாடபபட்டான் (புறம். 201,202). இருங்கோ காணக.

2. ஐம்பெரு வேளிருள் ஒருவன். திருமாவளவன

இருங்கோவேளைச் சுற்றத்தோடு வீழுமாறு வென்றான் (பட். 282).

**இருங்கோன் ஒல்லையாயன் செங்கண்ணனார் - புலவர்.** செங்கண்ணன் என்பது இவர் இயற்பெயராகும். பெயரிலுள்ள ஆயன் என்பது கொண்டு இவர் ஆயமரபினர் எனக் கூறப் பெறுவர் (அ. சி. பக்.198). இவர் பெயரில், இளங்கோக் கண்ணனார்' என்னுமொரு பாட வேறுபாடு காட்டப் பெற்றுள்ளது (இராச கோபாலாரியன், வே. வி. ஆகிய பதிப்புக்கள்). இவருடைய ஒரே பாடல் அகநானூற்றின் 279-ஆம் பாடலாக அமைந்துள்ளது. தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறும் கூற்றாக அமைந்த இப் பாடலில், 'முலைமுற்றம் விரும்பிப் பொருள் தேடச் செல்லாதவர், நண்பர் வறுமையையும், சுற்றத்தார் துன்பத்தையும், பகைவர் பெருமிதத்தையும் கண்டு வைத்தும் ஒரே இடத்தில் மடிந்து வாழ்வதனைப் பொறுத்திருப்பர்; உள்ளத்தில் தோன்றி நெஞ்சினைச் சுடும் (கவலைத்) தீயினை, ஆள்வினை மழையால் அவித்து ஒழுகுபவர் இரவும் பகலும் காட்டில் வருந்திப் பிரிந்திருப்பர்' என்று பொருள் வயிற் பிரிந்தவனுடைய மனநிலை நயம்படக் காட்டப்பட்டுள்ளது (அகம். 279).

**இருசுடர் - 1.** ஞாயிறும் திங்களும். உவாவந்து கூடிய பெருநாளில் இருசுடர்களும் - ஞாயிறும் திங்களும்- தம்முள் எதிர் நின்று பார்த்து அவற்றுள் ஒரு சுடர் மாலைப் பொழுதில் மலையின்கண்ணே ஒளித்தல். இஃது இருமன்னர் எதிர்த்து நின்று பொருது, அவருள் ஒருவர் ஒழிந்தமைக்கு உவமை (புறம். 65:6-8,11). நிலமகள் விசும்பினை முகமாகவும், இருசுடரைக் கண்ணாகவும் கொண்டவள் (புறம். 365:1-3).

2. நாண்மீனும் விண்மீனும். திருப்பரங்குன்றத்துச் சித்திரசாலைகளுட் சென்றவரிற் சிலர் இருசுடருடைய - நாண்மீனும் விண்மீனும் உடைய - சுடர்ச் சக்கரத்தைப் பொருந்திய கதிரவன் முதலான கோள் நிலை எழுதிய காட்சியினைக் கண்டறிந்தனர் (பரி. 19:46,47).

**இருண்மை** - இருளின் தன்மை. தலைவி, தன் பெற்றோர்க்கு ஒரே மகள் எனத் தோழி கூறக் கேட்ட தலைவன், 'இருண்மை-இருளின் தன்மை-கொண்டமையுண் கண்ணுடைய தலைவி ஈன்றார்க்கு அருமை யுடையவள் என்பதனை நீ கூறுமுன் அறிந்திலேன்' என்று குறிப்புமொழி கூறினான் (பரி. 8:58-60).

**இருதலைக் கொள்ளி** - இருமுனையிலும் தீயுள்ளகட்டை. ஆண்மை முன்னே வாங்கக் காமம் பின்னே நின்று தடுக்கத் தலைவனுடைய இருபாற்பட்டநெஞ்சம் இருதலைக் கொள்ளியின்-இருமுனையிலும் தீயுள்ள கட்டையின் - இடைநின்று வருந்தும் எறும்புபோல ஒருபாற்படாது வருந்துதல் (அகம். 339:7-10).

**இருதலைப்புள்** - இருதலையுடைய பறவை. பிரிவின்றி ஒன்றிவாழும் உவர்த்த லில்லாத நட்பினையுடைய இருதலைப் புள் - இருதலையுடைய பறவை-போலத் தலைவியும் தோழியும் ஈருடல் ஒருயிராவர் (அகம். 12:4, 5).

**இருந்தையூர்-ஒரூர்.** மதுரையிலுள்ளார் எதிர்கொள்ளுமாறு வையைத் துறையிடத்துள்ள 'இருந்தையூர் அமர்ந்த செல்வனே' என்று திருமால் விளித்துப் போற்றப் பெறுகின்றார் (பரி. தி. 1:3-5).

**இருந்தையூர்க் கொற்றம்புலவன் - புலவர்.** இவரை 'இருந்தையூர்க் கொற்றன் புலவனார்' என்றும், 'இருந்தையூர் கொற்றம் புலவன்' என்றும் உ. வே. சா. குறிப்பிடுகின்றார் (குறு. உ. வே. சா. உரைப் பதிப்பு - பாடினோர் வரலாறு; பரி உ. வே. சா. பதிப்பு. பரி. தி. 1-5 குறிப்புரை). இருந்தையூர் இவருடைய ஊராகத் தெரிகின்றது. இவ்வூர்ப் பெயரொடு 'இருந்தையூர்க் கருங்கோழி மோசியார்' என்னும் சங்கப் புலவர் ஒருவர் இருந்தாரென அறிகின்றோம். இருந்தையூர் என்பது திருக்கோவலூர் வட்டத்தில் இருக்கும் இருந்தை என்னும் ஊராகலாமென்று உ. வே. சா. குறிப்பிடுகின்றார் (குறு. உ. வே. சா. பாடினோர் வரலாறு). பரிபாடலிலுள்ள 'இருந்தையூரமர்ந்த செல்வ' (பரி. தி. 1-5). என்னுந் தொடரில் வரும் இருந்தையூர் என்பது மதுரை அருகே வையைக் கரையிலுள்ள திருமால் திருப்பதி என அறியப்படுதலின், இப்புலவரின் ஊர் இந்த இருந்தையூராக இருத்தல் கூடும். கொற்றன் இவருடைய இயற்பெயராகும். இவருடைய ஒரே பாடல் குறுந்தொகையில் 335-ஆம் பாடலாக அமைந்துள்ளது. செறிப்பு அறிவுறுத்திய தோழி கூற்றில் அமைந்த அப்பாடலில், மலைப்பாறையில் தினையைப் பரப்பி உணங்க வைத்த மகளிர், சுனையில் நீராடும் அற்றம் பார்த்து மந்தி தன் பார்ப்புடன் தினையைக் கவரும் காட்சி அழகாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது (குறு. 335).

**இருப்பு - 1. பூண்.** (ஆகுபெயர்). யானையின் கொம்பு நுனியில் இருப்பு - பூண் - செறிக்கப்பெற்றது (புறம். 369:1;370:20).

2. இருத்தல். வண்டு இருப்பு - இருத்தல் - போன்ற பல்காழ் அல்குல் (பொரு. 39). மதியிருப்பன்ன மாசறு சுடர் நுதல (அகம. 192:1).

3. குடியிருப்பு. தெனதிசையில் வாழும் பரதவர் வஞ்சினம் கூறுதலையும ஒலிமிக்க இருப்பினையும்- குடியிருபபினையும் - உடையவர் (மது. 143,144).

இருப்பை - 1. இலுப்பை மரம். முல்லை நிலத்து விளையும் வரகின் அரிகாலில் வாழும எலியைப் பிடிக்க முயலும் குறுமபூழ்ப பறவையின் ஆரவாரங்கேட்டு அங்கு வாழும் முயல் அஞ்சியோடுதலின் அயலில் உள்ள கரிய கிளையிலுளள இருப்பைப் பூககள் உதிரும் (புறம். 384:4-7). குபபி செறிக்கப் பெற்ற அம்பு நுனைபோல் அரும்பிய இருபபையின் செந்தளிர் செப்புத் தகடு போன்றது. நெயயிழுது போன்றன இனிய துளை யுடைய துயவாய்ப் பூக்கள். அபபூக்கள் காம்பு கழன்று, ஆலங்கட்டி போல சிதறிப் பவழம் போனற செந்நிற மேட்டு வழியில், குருதி மேல் கிடக்கும் நிணம்போல தோன்றுகின்றன (அகம். 9:3-9). கரடிக் கூட்டம் காட்டு வழியிலுள்ள இருப்பை மரததிலிருந்து காம்பு கழன்றுதிரும் புதிய பூக்களைத் தின்னும (அகம். 15:13,14). விடியலில இரைதேட எழுந்த கரடி இருப்பைத் தீமபழத்தை வெறுததால் புற்றாஞ் சோற்றினை உணணும் (அகம. 81:1-5). சுரநெறியில் பொரிந்த அடியையும் முருடுகளையுடைய அரையினையும் கொண்ட இருப்பையினது குலையிலிருந்து உதிர்ந்த ஆலங்கட்டி போனற துளையுடைய திரண்ட மலர்களை ஆறுசெல் வம்பலர் நெடிய வழியில் தடைபபட்டுத் தங்குமாறு குட்டிகளை ஈன்ற கரடிக் கூட்டம் கவர்நதுண்ணும் (அகம. 95:5-10). ஏறறமான பாதையில் வழுக்கி வீழ்ந்து முடம்பட்டுத் தனியாகக் கிடந்த உரனுடைய எருத்துக்கு, மலைப்பகுதியின் சீறூரில் வாழ்ந்த சிறுவர் இருப்பைக் குழையையும் பூவையும வில்லாலடிதது உதிர்த்து, அவற்றைத் தின்னவரும் மரைமாவை விரட்டியடித்து அவற்றை எடுததுச் சென்று ஊட்டுவர் (அகம். 107:13-18). கதிரவன் காய்தலால் காற்று விரைந்து வீச இருப்பையின வெண்பூ யானை மருப்பினாற் கடைநது செய்யப் பெற்ற கழங்குகளை ஒப்பக் கற்பாறையில் விழுநது பரவிக் கிடக்கும் (அகம. 135:7-9). பாலைவழியில் கரடியின சுற்றம் சிதலை முயன்றெடுதத புற்றிலுள்ள பழைய புற்றாஞ் சோற்றுணவை வெறுத்தால் புல்லிய அடிப் பகுதியையுடைய இருப்பையின் தொளையுடைய வெண்மலர்களைக் கவர்ந்துண்ணும் (அகம. 149:1-5). கரடி பாலை நிலத்தில் வீழ்ந்து கிடக்கும் பொருள்களை உண்ணாமல கிளைகளிலுள்ள பழம் போலும் சேறுமிக்க இனிய துளையுடைய மலர்களைத் தினனும பொருட்டுக் கருங்கோட்டினையுடைய இருப்பை மரம ஏறும் (அகம். 171'12-15). பாலைநில வழியில், கட்டப் பெற்ற அம்பறாத் தூணியின் மூடி திறந்துவைக் கப்பட்டவை போல பூத்துள்ள இருபபையின தளிரால் பொதியப்பட்ட குவிநத பூங்கொததுககள் மாலையிலிருநது உதிரும் துளையுளள முதது்க்கள் போல் செநநிலத்து வீழும் (அகம். 225:9-12). அரிய கானத்தில பெருஞ்சுற்றமுடைய கரடிகளுள் வெப்பமிக்க வாயினையுடைய ஆணகரடி, கருஙகோட்டு இருப்பையின வெணபூவினை வெறுததால பெரும் புற்றினைக் கையால அகழும (அகம. 247:4-7). மேற்றிசைக் காறறு மோதும பாலை நிலததே பூனையின் அடியொத்த குவிநத அரும்புகளை யுடைய இருப்பையின, யானைமருப்பைக கடைந்து செய் தாற்போன்ற வெண்பூக்களைக் கரடிக் கூட்டம் கவர்ந்துணணும் (அகம. 267:5-8). வெம்மலை அருஞ்சுரததில் திரணட அடிபபகுதியுடைய இருப்பையின துளையுடைய வெளளைப பூக்களைக குட்டிகளை யுடைய கரடிக் கூட்டம் உணணும் (அகம. 275:11-13). காம வேட்கை கொணட ஆணமான குதிர் போன்ற அடியையுடைய இருபபையின் வெண பூவை உணணாமல தன பெடைமான உண்ணுதற்காக அதனைத் தன் ஆணகுரல கொணடு அழைக்கும் (அகம். 321:4-6). நீணடு நிற்கும் அடிமரததினை யுடைய செந்தளிர்மிக்க இருபபையின, வெள்ளைப பூக்களைக் குட்டிகளைக் கொணட கரடிகள் பெருங் கிளைகளில் ஏறி உருவித் தினறன (அகம. 331 1-4). வெயில சுடுதலால் காமபு கழனறு விழும் இலைகளை உதிர்த்த காறறினால தாககபபட்ட கிளையில, அழல தழைத்தது போனற அழகிய தளிர்களையும் பொநதுகளையும் உளதுளையுடைய பூககளையும் கொணட இருபபை மரம் உளள காட்டு வழியே பொருளீட்டிய தலைவன மீணடு வநதான (அகம். 351.5-8). காட்டில் வளர்ந்த இருப்பையின வேனிற் காலதது மலரும் வெணபூககள் காறறுவீச ஆர்க்குக கழன்று யானைகள் நடமாடும் சிறியவழி மறையும்படி பரவிக்கிடக்கும (குறு. 329:1-3). சுரத் திடத்துள்ள இருபபைபபூப் போனற மெலலிய தலையுடையது இறாமீன் (நற. 111:1,2). வேபபம் பழத்தை வெறுத்து இருப்பையின தேனபோலும் பால்வற்றிய இனிய பழத்தை விரும்பிப பனியில வெளவால கிளைதொறும் பறகும் (நற. 279:1-3).

2. ஓரூர். பகைவரையழித்த செவ்வேலையுடைய வீரனாகிய விராஅனின் நிறைந்த புனல வாயிலை

அடுத்துள்ள இருப்பை-இருப்பையூர்-போன்றவள் தலைவி (நற. 260 6,7). இரவலர்க்குத்தேர் வழஙகும் விராஅன் என்பானுக்குரியதும் வெண்ணெல அறுப் பவரின தணணுமை ஒலிக்கு அஞ்சிப் பழனத்துளள பல பறவைகள் ஓடக் கழனி மீது வளைநத கிளை யுள்ள மருதமரததில தொங்கும பூங்கொததுககள் உதிருவதற்கு இடனாயதுமாகிய இருப்பை என் னும ஊர் போன்றவள் தலைவி (நற. 350:1-5). மலை போனற வெண்ணெற் போரினை யுடைய கைவணமை மிக்க விராஅனின் இருப்பை ஒததவள் தலைவி (ஐங. 58:1-3).

**இருபிறப்பாளர்** – இருபிறப்பினையுடைய அந்தணர். வீடு பேற்றினை விரும்பி ஆசைகளை யடககிய இரு பிறப்பாளர் - அந்தணர் - வேட்கும் முததீ ஒப்பக காணபதறகு அழகாக மூவேநதர் வீறறிருந்தனர் என ஔவையார் குறிப்பிட்டுளளார் (புறம. 367: 12-14). ஓதல முதலிய ஆறியல்பில் வழுவாமல் தாயும் தநதையுமாகிய இருவர் குலததையும உலகத்தார் நனறென்று மதிதத பலவேறுபட்ட பழைய குடி யில தோனறி நாற்பத்தெட்டாணடு வேத நெறி யிற் கழித்த அறததைக் கூறும் கோட்பாட்டினையும் மூன்று வகை குறித்த முததீச் செலவததினையும் உடைய இருபிறபபாளர் தாம் வழிபடும காலம் மறிநது பாடி வழிபட்டனர் (முரு. 177-182).

**இருபிறப்பு** - பூணூல் அணிவதற்கு முன்னும் பினனுமாக அந்தணர்க்குளள இரு பிறப்பு. இரு பிறப்பினையும் அப்பிறப்பான் வந்த இரண்டு பெயரையும ஈரநெஞ் சத்தினையும் ஒபபில்லாத புகழினையும் உடைய அந்தணரது அறத்தைப் பொருநதியவர் செவ்வேள் (பரி. 14:27,28).

**இருபெருந்தெய்வம்**- இரண்டு பெரிய தெய்வங்கள். பெருந் திருமாவளவனும் பெருவழுதியும் பால்நிற உரு வினையுடைய பனைக்கொடியோனாகிய பலதேவ னும் நீலநிற உருவினை யுடைய ஆழிப்படையோ னாகிய கணணனும் ஆகிய இருபெருந் தெய்வம் ஒருங்கு நினறாற்போல அச்சம பொருநதிய காட்சி யொடு விளங்கினர் (புறம. 58:14–17). பகைவர்க்கு அச்சம் வருதற்குக் காரணமான ஆற்றலுடைய இரு பெருநதெய்வங்களின (திருமால, சிவன) இரு வேறு நிறமுடைய உருவங்களும் ஒருங்கிணைநத காட்சி போலச செககா வானததோடு நீல நிறக் கடல் இயைந்து தோன்றியது (அகம். 360:6-8).

**இருபெருவேந்தர்** - இரண்டு பெரிய அரசர். பலவேலினை யுடையாறானையைக்கொணட அதிகமானோடு இரு பெருவேநதரையும-சோழரையும் பாணடியரையும - பெருஞசேரலிரும்பொறை வெனறான (பதி. ப. 8:4, 5). (சோழ பாண்டியராய) இருபெரு வேந்தரும் விசசி என்னும குறுநில மனனனும் வீழ இளஞ்சேரல இருமபொறை பொருதான (பதி. ப. 9:4,17). வெண ணிப் பறநதலையில் சேர பாணடியராகிய இரு பெருவேநதரும் கரிகால் வளவன் தாககியதால மடிநதனர் (பொரு. 146-148). தலையாலங்கானத்துச் செருவெனற பாண்டியன நெடுஞ்செழியன் இரு பெருவேநதரொடு (சேர சோழர்) வேளிர். சாயப் பொருது வெனறான் (மது. 55,56). மிகுந்த மாறு பாடு கொண்ட இரு பெருவேந்தரிடம் சான்றோர் சென்று சந்து செயவிததல மரபு (குறி. 27, 28). பருவூர்ப் பறந்தலையில் அஃதை என்பாளுக்குத் தநதையாகிய அடுபோர்ச் சோழரிடத்துச் சேர பாணடியராகிய இருபெரு வேந்தரும் பொருது மாயநதனர் (அகம. 96:12-15). மறப்போர்ச் செழியன் கூடற் போர்க்களத்தில் தம்முள் ஒருங்கியைந் தெழுந்த சோழ சேரராகிய இருபெரு வேந்தரது கடல போன்ற பெரும் படையைக கலங்கத் தாக் கிப் புறங்கண்டான் (அகம். 116:13-18). இருபெரு வேந்தர் மாறுகொண்டு பொரும் பறந்தலையில் எதிர்த்துவரும் படைகளை யெல்லாம் தம் கையகத துள்ள ஒரு படைக்கலததால புறங்காட்டச் செய்யும் மறச்செலவம் உடையோர்க்கே வெற்றி கிட்டும். அத்தகு மறமுடையோர் பொற்பூ பெறுக எனத் தணணுமை முழக்குவர் (அகம். 174:1-4). அன்னியும் திதியனும் ஆகிய இருபெருவேந்தர் பொருத போர்க் களத்துப் புனனை மரம வெட்டிச் சாய்க்கப் பெற் றதும் அவ்விருவரது பகைமை ஒழிந்தது (நற். 180: 6-9). ஏறும் ஆயரும் தம்மில் மாறுபடுதலால் தொழு, இருபெருவேந்தர் இகலிப் பொருகின்ற போாக்களம் போனறது (கலி. 105:47-49).

**இரும்** - இருமல். 'பூண் செறிந்த தலையை யுடைய பருத்த கோலினை ஊன்றித் தளர்ந்து இருமிடையே - இருமலிடையே - சில சொல் கூறும் பெரிய முது மையுடைய எங்களுக்கு இளமை எங்கிருககின றதோ, இரங்கத்தக்கதாகிவிட்டதே' எனத் தொடித் தலை விழுததண்டினார் கையற்றிரங்குவர் (புறம். 243·10-14).

**இரும்பிடர்த்தலை** - பெரிய கழுத்திடம். பொன்னா லான பட்டத்தையும் புகர் நுதலையும் நெருங்கற் கரிய திறலையும் மணங்கமழும் மதத்தினையும் கயிற்றாற் பிணிக்கப்பெற்ற மணியணிநத பக்கத் தையும் பெருங் கையையும் உடைய யானையின இரும்பிடர்த்தலையிருந்து - பெரியகழுத்திடமிருந்து - கூற்றத்தினது கொலைத் தொழிலுக்கு இளையாத வாறு உயிர்களைக் கொன்றவன் கருங்கை ஒள வாட் பெருமபெயர்வழுதி (புறம். 3:7-13).

**இரும்பிடர்த்தலையார்** – **புலவர்.** புறநானூற்று 3-ஆம் பாடல் இவர் பாடியது. யானையின் பெரிய கழுத்தை இரும்பிடர்த்தலை என்று சிறப்பித்ததால் இப்பெயர் பெற்றார். கரிகாற் சோழனின் அம்மான் என்ப. கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதியின் குடிப் பிறப்பு, மனை மாண்பு, கொடைத் திறன் முதலியவற்றைப் பாராட்டியுள்ளார். இரவலரின் முகக்குறிப் பறிந்து ஈகை செய்யும் சிறப்பு இவ் வழுதியின்பால் உள்ளதைப் புலப்படுத்தியுள்ளார். 'நிலம் பெயரினும் நின் சொற் பெயரல்' எனக் கூறுவதன் வாயிலாக வாய்மை யறத்தினை வற்புறுத்துகிறார்.

**இரும்பு** – **1. ஐம்பொன்களுள் ஒன்று.** வலிய கையை யுடைய கொல்லனால் செந்தீயில் மாட்டப் பெற்ற இரும்பு உண்ட நீரினும் காணப் பெறாயில் மீட்டற்கரிதென வேங்கை மார்பன் இரங்கினான் (புறம். 21:6-9). இரும்பாற் புனைந்து செய்யப்படாத மிக்க புகழையுடைய தோட்டிமலை நள்ளிக்குரியது (புறம். 150:25,28). பிட்டங் கொற்றன் பகைவர்க்கு இரும்பைப் பயன்படுத்தும் வன்கையுடைய கொல்லன் விசைத்து எறியும் கூடத்தோடு ஏற்று மாறுபடும் உலையிடத்து அடைகல் போலும் வலிய ஆண்மையுடையவன் (புறம். 170:14-17). ஒருதலைவன் நேற்றுவந்த விருந்திற்குத் தன் இரும்புடைப் பழைய வாளை ஈடுவைத்துப் பெற்ற பொருளால் உணவு நல்கினான் (புறம். 316:5,6). பெண்யானை மூச்சு விட்டாற் போலக் காற்று விடும் கைகோப்புப் பொருந்திய வாயிரும்பு போலும் இரட்டைக் கதவமைந்த கருங்கை வழி காக்கப்படுவது கருதிப் புதுவேந்தர் வந்தோர் பலராவர் (புறம். 345:7-9). இரும்பைத் தகடாக்கினா லொத்த திரைதல் இல்லாத மெல்லிய தோலையுடையவர் கருங்கை வினைஞரின் காதலஞ் சிறுவர் (பெரு. 222,223). மீன் பிடித்தலில் வல்ல பாணமகனது நெடிய மூங்கிற் கோலாகிய தூண்டில நடுங்கவும் கயிற்றிலே பொருத்தப் பட்ட வளைந்த வாயினை யுடைய தூண்டில் இரும்பினது மடித்த தலை இரையின்றித் தனிக்கவும் தூண்டில் இரும்பு மறையப் பொதிந்த இரையைக் கௌவி அகப்படாமல் வாளை மீன் தப்பி ஓடியது (பெரு. 284-287). மாலைப் பொழுதறிந்து இரும்பினாற் செய்யப்பட்ட விளக்கில் திரி பொருத்தி நெல்லும் மலரும் தூவிக் கை தொழுது மகளிர் வழிபட்டனர் (நெடு. 41-44). இரும்பினை முறுக்கி விட்டாற் போன்ற கரிய பெரிய கொம்புகளையுடையது இரலைமான் (அகம். 4:3,4). யானை மருப்பிவிட்ட இரும்பாற் செய்த கிம்புரி என்னும் பூண் தலையின் கரிய முலைக்கண்ணுக்கு உவமை (அகம். 29:6-8). வரால் யோத்து வளைந்த வாயுடைய தூண்டிலிரும்பிற் பொருந்திய இரையை விழுங்கி ஆம்பல் இலை கிழியக் குவளை மலர் சிதையப் பாய்ந்தெழுந்து வள்ளைக் கொடியை மயக்கித் தூண்டில் வேட்டுவன் இழுக்க வாராமல் செருக்கு மிகுந்து கயத்தை உழக்கும் (அகம். 36:1-8). எருமையின் கரிய கொம்பு இரும்பாற் செய்தது போன்று இருக்கும் (அகம். 56:3). மின்மினி மொய்த்த புற்றில குறும்பியைக் கிண்டும் ஆண்கரடி சுடர் தெறிக்க இரும்பினை யடிக்கும் கொல்லன் போலத் தோன்றும் (அகம். 72:3-6). கரடி புற்றில் இரும்பு உலையில் ஊதும் துருத்தி போல நெட்டுயிர்த்து இரையைத் தோண்டும் (அகம். 81:1, 5). கானவன் இரும்பினை உருக்கி வார்த்தியற்றினாற் போன்ற வலிய கையை யுடையவன் (அகம். 72:6). இரும்பினா லியன்ற இனிய உயிரையுடையவரைப் போலத் தலைவர் அன்பின்றி வன்னெஞ்ச முடையராய்ப் பிரிந்துள்ளார் (அகம். 185:4,5). தலைவர் துயரம் செய்ய மாட்டார் என்று தோழி கூறிய சொல் இரும்பு செய் கொல்லன் வெம்மை மிக்க உலையில தெளித்த நீரைப் போல நோயமலி நெஞ்சிற்குச் சிறிது ஏமமாயிற்று எனத் தலைவி கூறினாள் (நற். 133:7-11). புன்னையின் கரிய கிளை இரும்பு போன்றது (நற். 249:1).

**2. இரும்பினாலாய கருவிகள், அணிகள்** (ஆகுபெயர்). ஈர்ந்தூர் கிழான தோயன் மாறன் தன அரசுக்குப் போரால் வரும் இடும்பைகளைத் தான பொறுத்துப் போரில் இரும்பு (படைக்கருவி) சுவைக்கொண்ட விழுப்புண்ணாகிய நோய்தீர்ந்து மருந்து கொள் மரம்போல் வாள்வடு விரவிக் கிடக்கும் வசையற்ற உடம்பினன் (புறம். 180 3-6). இரும்பு (படைக்கருவி) வாய் மடிந்து சிதையும்படி பகைவரைக் கொன்று அருஞ்சமம் வெலலுதல் ஏனை வீரர் எல்லோருக்கும் எளிது (புறம். 309:1,2). புள்ளிமான தோலை ஊனை ஒழித்துத் தீய பாகத்தைக் களைய எஞ்சிய ஒளிவிடும் தோலினது வட்டமாகப் போன விளிம்பிலே இனமாகக் கட்டி, கூரிய இரும்பு (கருவிகள்) அதத்தோலுட் செய்யும் தொழில்களை யெல்லாம் செய்து அமைத்து வேள்வி செய்யும்போது அத்தோலைப் போர்த்திக் கொள்ளல் வழக்கம் (பதி. 74:10-14). கரிய வயிரங்கொண்ட உலக்கையில் இரும்பு முகம் தேயுமாறு குற்றிய அரிசியாலாய சோற்றைக் கலவையொடு பாணர்க்கு நல்கினர் (சிறு. 193-195). வலிமை யுடைய வயிரங்கொண்ட இரும்பு (பூண்) தலையிலே பொருத்தியதும் திருந்திய திரட்சியை யுடையதுமாகிய சீரிய கோலினை யுடைய உளி போன்ற வாயைக் கொண்ட பாரை

யால் எயின மகளிர் கரம்பு நிலத்தைக் குததிப் புல்லரிசியை எடுத்தனர் (பெரு. 90-94). வளைந்து கிடக்கும பூணை யானைக்குச சேர்க்கும கொல்லன் இரும்பு (சம்மட்டி) விசைத தெறிநத கூடத்தில் எழுந்த வலிய ஓசைககு அஞ்சி அரணமனை மாடத்தின இறப்பில வதிநத சேவற்புறா துயில் நீங்கும (பெரு. 436-440). பருத்த இரும்பு (ஆணி, பட்டம) சேர்தது அரணமனைக் கதவு அமைக்கப் படடது (நெடு. 80,81). தருக்கங் கூறுவான் கைவிரல் இணைநதாற் போன்று இணைநத கவைத்த வர கின் கதிரகளை இருமபு (அரிவாள) கொணடு அரிந் தனர் (மலை 112,113). இரும்பு (படைக்கலஙகள்) உண டாக்கிய வடுககள் கொண்ட முகத்தினை உடை யவர் கோசர் (அகம. 90:11,12). கொடுவில் ஆடவர் இருமபுகளால (படைககருவிகளால) செயயும் போரை விலக்குபவர் இல்லாத சுர நெறியிற செலலத் தலைவன விரும்புதல் (அகம். 179:7-10). தினைக் கதிரை இரும்பால் (அரிவாளால) அறுத்தனர் (நற். 194.9,10). இருமபு (கததி) பிளநத மாவடு கண் ணுககு உவமை (கலி. 64:21; பரி. 7.58).

**இரும்பொறை** - 1. சேரவேந்தன். பெருஞ்சேரல் இரும் பொறை பதிற்றுபபத்து எட்டாம் பத்தின் தலை வன. இளஞ்சேரல் இருமபொறை ஒன்பதாம் பததின தலைவன். இருமபொறை என்பது இளஞ் சேரல் இரும்பொறையைக் குறிக்க வந்துளளது (பதி. 88:9). பருவ மழை பொழிய, காட்டில் ஆண் மான் துணையொடு கூடிச்செல்ல, புள்ளும் வண்டும் கிளைகளில் ஆர்ப்பரிக்க, பழங்களும் கிழங்குகளும் எப்பொழுதும் கிடைக்க, ஆனிரை புல்லருந்த, பல தானியங்கள் நெருங்க, நனபல ஊழிகள் நடுவு நிலையில் நிலைபெற் றொழுக இரும்பொறை செங்கோல் செம்மையின் ஆட்சி புரிந்தான் (பதி. 89:1-6). இளஞ்சேரல் இரும்பொறை, பெருஞ்சேரல் இரும்பொறை காணக.

2. பெரியமலை. மூங்கில் குழல் ஒலிப்ப, பலலியம் கறஙக, ஆடுமகள நடந்த கயிற்றில செம்முக மந்தி யின குட்டி அசைந்து நடக்க, அதனைக் கண்ட குறக் குறுமாக்கள் இருமபொறையில் - பெரிய மலையில் - உள்ள மூங்கிலின மேல் விரைந்தேறித் தாளஙகொட்டுவர் (நற். 95:1-6). அழகியநிறத்தை யுடைய இரும் பொறையில மணிநிற அழகுடைய மயில் உளளது (ஐங். 431:2,3).

**இருமருந்து** - சோறும் தண்ணீருமாகிய இரு பொருள். சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் இருமருந்து – சோறும் தணணீரு மாகிய இரு பொருளை - விளைக்கும் நலல நாட்டுக்கு வேந்தன் (புறம. 70 9).

**இருமை வினை**- இருவகை வினைகள் (நல்வினை, தீவினை). திருமாலை வழிபடும் அனபருக்குப் பிறப்பிற்குக் காரணமான இருமை வினைகளும் - நல்வினை தீவினைகளும் - இலவாகும் (பரி. 13:48).

**இருவி** - தினையரிந்த தாள். குடில் இருவியால் - தினையறிந்த தாளால் – வேயப்பட்டது (குறி. 153). அவரைக் கொடிகள் இருவிதோறும் முற்றின தயி ரின் பிதிர்ச்சி போலும பூககளை உதிர்த்து, அரி வாளை ஒக்கும் வளைநத காயைக் கொண்டன (மலை. 109, 110). நீரற்ற பைங்கால்தோறும் தினைக் கதிர் முதிர்ந்து கொய்வதன் முன்னும் கிளி கடியா மையின் பலவும் இருவியாக (தட்டையாக) தோன் றின (அகம். 28:3-5). கிளி தூக்கிச் செல்ல இயலாத பெருங்கதிராகிய வளைநத பாரத்தை முறித்த இருவி பொருந்திய கொய்தொழிந்த தினைப்புனங் கண்டு தலைவன் துன்புற்றான் (அகம். 38:12-15). குறவனுக்குரிய தோட்டததில் விளைந்த பொன் போற் சிறு தினையைக் கிளியுண்டதால் கூழை யாக இருந்த இருவி மழை பொழிந்தமையால் இலை தழைத்தது (குறு. 133:1-3). பழைய மழையி னால் தழைத்த புதுப்புன வரகினை ஆணமான் மேய்ந்தமையால் குறைதலை யுடைய நுனியைக் கொணட இருவியின் பககம் முல்லை மலர்ந்தது (குறு. 220:1-3). கானவர் தினை கொய்தமையால் வளைந்த கதிர்களாகிய பொறை நீங்கப்பெற்ற தட்டையாகிய தலையையுடைய இருவி திருவிழா நீங்கிய பரந்த இடம் போல் தோன்றியது (நற். 306:5-7). குன்றக் குறவர் கொய்த தினையினது அடியையுடைய இருவி மட்டும் புனத்தில் நிற் பதைக் கண்டுவைத்தும் கிளிகள் பேரன்பு உடை யன வாதலின் பிரியாதுள்ளன (ஐங். 284). சிறு தினை கொயத இருவியில வெள்ளிய தாளின்மேல் படர்ந்து காய்த்த அவரையின் மேல் விழுகின்ற கிளியை மலைவாழ்நர் ஓட்டுவர் (ஐங். 286:1-3). புனவர் கொள்ளிககு அஞ்சிச சென்ற மயில் இரு வியிலிருந்த குருவி வருந்தப் பந்தாடுமகளிர் போல் ஆடிவரும் (ஐங். 295:3-5).

**இருவேறு மண்டிலம்** – கதிரவனும் திங்களுமாகிய இரு சுடர். கார்ப் பருவம் வாய்ந்த பெரிய மேகத்தின் இருபக்கமும் இரு வேறு மண்டிலம் - கதிரவனும் திங்களு மாகிய இருசுடர் - விளங்குதல் போலக் கரிய திருமாலின் இருபக்கமும் ஆழியும் சங்கும் இலங்கின (பரி. 13:7-9).

**இருள்** - 1. இருட்டு. பால் புளிப்பினும் பகல் இருளி னும் - இருட்டாயினும் - மந்திரச் சுற்றத்தோடு விளங்கி இமயமும் பொதியமும் போல் நடுக்கின்றி நிற்பாயாக என வாழ்த்துதல் (புறம. 2:17-24). மீன்

திகழ்விசும்பிற் பரநத இருள் அகலத் தன மரபில வழுவாது செல்வது ஞாயிறு (புறம். 25:1-5). அங் கண் விசும்பில் ஆரிருள் அகறறும் வெங்கதிர்ச செல்வனபோல் நிலை பெறுக என வாழ்ததுதல் (புறம. 56:22-25). ஞாயிறு சினந்தால் இருள் எதிர் நிற்கலாற்றாது (புறம. 90:5). இராப்பொழுது ஓரி டத்தே உறஙகுவது போனற செறிந்த இருளை யுடைய சிறுகாட்டைக கொணடது முள'ளூர் (புறம். 126:6-8). பேகனின் பெருஙகல நாடு இருள் செறிநத குகையினை யுடையது (புறம. 158:10, 12). பிட்டங் கொற்றனின காட்டு நாட்டில் ஐவன நெல்லைக் காவல் புரிவோர் இட்ட தீ கெட்ட பொழுதில, ஒளிதிகழும் மணி செறிநத இருளை யகற்றும் (புறம. 172:6-8). அவுணாகணம ஞாயிறறை மறைக்க அதனைக் காணாமையால் இருள உல கத்தார் கணணை மறைத்தது. அந்த இடும்பை தீர அஞ்சன உருவனாய கண்ணன ஞாயிற்றை விண்ணில் மீணடும் கொணடுவநது நிறுத்தினான் (புறம. 174:1-5). சூளையினினறெழுந்த புகை இருள் செறிந்து நின்றாற் போன்ற நிறமுடையதாய வானத்திற் சென்று தங்கும் (புறம. 228:2, 3). மேட இராசி பொருந்திய கார்த்திகை நாளில் முதற் காலின்கண நிறைந்த இருளையுடைய பாதியிர வில முடப்பனை போலும வடிவுடைய அனுட நாளில் காற்றால பிதிர்நது கிளர்நது ஒருமீன் வீழந்தது (புறம. 229:1-11). கீழ்த்திசை எழுந்த திங்கள் செறிநத இருளை அகற்றியது (புறம. 376:8). இருட்போதும நிலவுப் போதும கழிந்த பகற் போதினைச செயயும விடியற் காலததில ஒரு கண தடாரிப் பறையை ஒலித்துக் கிணைப பொருநன வாடாவஞ்சி பாடினான் (புறம. 394:6-9). கடை யாமம் கழிந்து காலைப் போது தோனறி எஞ்சிநினற குறையிருளைப் போக்கும் வைக றைப் போதில ஏமப் பாசறைககண் ஒலிகள் எழும் (புறம. 397:6-8). பயில் இருள்காடு அமர்ந் தாடிய ஆடலன சிவபெருமான் (பதி. க. வா. 3, 4). கூந்தல் விறலியர் இருள் வணர் ஒலிவரும் புரியவிழ் ஐம்பாலையுடையவர் (பதி. 18.4, 6). மேற்றிசையில் மறைந்து கீழ்த்திசையில் தோன்றிப் பரநத இருள் அகற்றும் பயன்கெழு பண்பினை யுடையவன் கதிர வன் (பதி. 22:32-34). நீலமணி போனற மையிருள் அகல நிலாவைப் பரப்பி இரு பக்கமும ஒன்றுபட்ட முழுமதி விண்ணிலே தவழநதது (பதி. 31:11, 12). புல்லிருள் விடியப் புலம்பு சேண அகலப பரந்த இருள் நீங்கப் பல்கதிர் பரப்பி ஞாயிறு கீழ்த்திசை யில தோனறியது (பதி. 59:4-6). உயிர்களை அழிக் கச் சினந்தெழும் ஊழி வெள்ளம் எலலை இன்ன தென்று வரையறுத்தறிய இயலாத திசைகளில் இருளுடன் சேர்நது பரந்தது (பதி. 72:10, 11). கார காலதது முதற்பெயல பொழிந்த தணநறுங் கானத்து இருள் உண்டாகத் தழைத்த செஙகடம் பின் பூவாலாய மாலையை முருகன் மாாபில அணிந்துள்ளான் (முரு. 9-11). வெள்ளி முளைதத நள்ளிருள் விடியலில கரிகாற் பெருவளததான் பொருநனை ஓம்பினான் (பொரு. 72-75). விசுமபிற் பரநத இருளை விழுங்கிய பகற்பொழுதைத தோற் றுவித்த கதிரவன் முதிரவேனிலில கடுகிய சினத தொடு திகழவான (பெரு. 1-3). சுனைவற்றி உள இருண்டாலொத்த இருள் செறிநதது யாழின வறு வாய் (பெரு. 10). நளளிருள விடியலில புள துயி லெழும் (பெரு. 155). கீழத்திசையில தோனறிய நிறைநத இருளைத் தரும் மதி நாடோறும் தேயு மாறு போலப் பகைவர் ஆக்கம் நாடோறும தேய்ந்து கெடுக என மாங்குடி மருதனார் குறிப பிட்டுளளார் (மது. 195, 196). யவனரியற்றிய பாவை விளககில நெயசொரிந்து திரி கொளுத்தி எரிகின்ற விளக்கு பலவேறுபட்ட இடங்களின பரநத இருளை நீககிற்று (நெடு. 101-105). நிலவடைந்த இருளபோல வெண்மணலில் வலை உணங்கியது (பட். 82, 83). பரந்த இருள் நீங்கப் பகற் பொழுதைச் செயது தோன்றும் ஞாயிற்றை ஒத்த பகையாகிய இருளைக் கடிந்து குற்றமிலலாத தலைமையும உடையவன நனனன (மலை. 84, 85). நள்ளிருளில தஙகி விடியற பொழுதில செலவீராக எனக கூத்தரை ஆறறுப் படுத்தல் (மலை. 195, 196). காவறகாடு இரவு போன்று இருள் செறிந்திருககும (மலை. 212). இருள துணிபட்டுக் கிடநதாறபோல பனறி தோனறும (மலை. 247). மலை இருணட குகையினை உடையது (அகம். 52:5). இருளற விசும்பில விளங்கும ஞாயிற்று மண்டிலத்தின வெயில் எறித்தலால் பிளநத நிலத் திடை முருங்கை வெண்பூ பரவியது (அகம. 53:1-4). இருள் கிழிப்பது போல மினனி வானம் மழை பெய்தது (அகம. 72:1, 2). காட்டுபபூனை இருளி டத்து விழிததுப் பார்த்தாற் போல ஒளிவிடும் முத்துக்களாலான ஒற்றை வடம் தலைவியின முலைமேல் திகழந்தது (அகம். 74:3,4). பெரிய காற றலைக்கும் இருள் மிகுநத மாலைப் பொழுதில தலைவியின் நீரொழுகும கண் துயர்தரும் எனத் தலைவன நெஞ்சிடம் கூறினான் (அகம. 77:14,19). மலர்தார் மார்பனைக் கண்டோர் பலர்; அவருள் ஆரிருட் கஙகுலில் அணையொடு பொருநதி உறங் காமல் நீர்வார் கண்ணொடு மெலிநத தோளை யுடையவள் யானொருத்தியே எனக் கூறித தலைவி தோழிக்கு அறத்தொடு நின்றாள் (அகம. 82.14-18). கனையிருள் அகன்ற கவின் பெறுகாலை தீய கோள்கள் நீங்கத் திங்கள் நலல நாளில (உரோகி

ணியிடத்து) வந்தெய்தியபோது திருமணம் நிகழ்ந்தது (அகம். 86.5-7). காட்டில் மிகுந்த இருளில் ஆயர் குறுநரிகளை ஓட்டுதற்கு எழுப்பிய ஓசை புனங்காவலர் தினையுண்ண வரும் பன்றியை விரட்ட ஊதும் கொம்பின் ஓசையோடு இசைக்கும (அகம. 94:8-12). பரதவர் மீன் பிடிகக இரவில் தம் தோணியில் கொளுத்தி வைத்த இருள் நீக்கும விளககு, வேந்தன பாசறையிலுள்ள யானை முகததிலணிநத ஓடையின் ஒண்சுடர் போல் தோன்றும (அகம. 100:6-10). மழை பொழிந்த நள்ளிரவில புலி முதலிய கொடிய விலங்குகள நடமாடும் இருளில் தலைவன் வருதல் துன்பந் தரும் எனத தோழி கூறுகிறாள் (அகம். 108:8-11). புலி உலாவும் நிறைநத இருளில் அதனொடு பகை கொள்ளுதற் கஞ்சிய களிறு பிடியோடும் கனறினோடும் தப்பியோடிப் பின அவற்றை மறைத்து வைப்பதற்குக காரண மான நள்ளிரவில் தலைவன் வருதலுக்குத் தோழி அஞ்சுகிறாள (அகம்.118:7-10). திங்கள் மலைசேர்ந்து மறைவதனால் உலகில் பேரிருள் படர்ந்த பொழுது பேய்கள் திரியும் நள்ளிரவில் இல்லிலுள்ள எலிகளை இரையாகக கொள்ளக் கூகை குழறும் (அகம். 122:12-14). நெடுங்கயம் கலங்கக் கரிய இருளினகண நள்ளிரவிற் சென்று பாணர் கணைக் கோட்டு வாளையைப் பிடிதது வருவர் (அகம். 126:6-8). மழை பொழிந்தமையால் செல்லுதற்கரிய குறுகிய பாதையிலுள்ள குழிகளை யுடைய வழியில் தலைவர் இருளில் நடந்து வந்து மிதிக்கும்போது அவரது தளரடியைத தாஙகிக் காக்கத் தன் நெஞ்சு சென்றதாகத் தலைவி கூறுகிறாள் (அகம. 128:10-15). தலை நாளிரவில தலைவியின புழுங்கிய நுதலில காறறுப் படச் சிறிது ஆடையை அகற்றச் சொல்லித் தலைவன ஆடையைக் கைப்பறற, மறைதிறன் அறியாளாகி மலர் வேய்ந்த கரிய கூநதலை இருள் மறையாக (இருண்ட போர்வையாக) போர்ததிக் கொண்டு நாணி இறைஞ்சினாள் (அகம. 136:18-29). மலையுச்சிக்கு வரும வழி தெரியாத செறிந்த இருளில திருமணி உமிழ்ந்த நாகம் காந்தட்பூ ஊதும் தும்பியின் நிறங்கண்டு மாணிக்கமோ என மயங்கும் வெடிப்புக்களையுடைய துனபமிக்க நெடுவழியில நள்ளிரவில இரவுக் குறி வரும் தலைவனை நினைந்து தலைவி வருந்துகிறாள் (அகம. 138:14-20). மதி நிறைநது அறுமீனகளாகிய கார்த்திகை சேர்ந்த இருளகனற நளளிரவில தெருவிலே விளக் கேற்றி மாலை தூககி ஊர்மக்கள (கார்த்திகை) விழா அயர்வர் (அகம. 141:7-11). மழை பொழிந் தொழிந்த செறிநத இருளில நளளிரவில தலைவனை இரவுக குறியிற் கூட, மினனல் போல் குழை இமைப்ப மலையினின றிறங்கும மயில் போலத் தலைவி அசைந்து சென்றாள் (அகம். 158: 1-5). அடர்ந்த கரிய மயிருடைய கரடிக்குட்டி, இருள் துணிந்து கிடந்தாற் போல் சுரவழியில் தோன்றும் (அகம. 201:16, 17). நள்ளிரவில் அரவின் தலை துமிய இடி இடிக்கும் அஞ்சத்தக்க வழியில் ஊக்கத்துடன வேலைத் துணையாகக் கொண்டு கனையிருள் பரந்த கலலதர்ச் சிறு நெறியில தலைவன வருதல் (அகம. 202:9-14). மழை போலப் பனி பெய்யும அற்சிரக் காலத்துக் கரிய இருள் நீங்க மூங்கில் வளர்நத நிழல்படுமலையில் மதநீர் பொழியும யானையின கவுள்போல அருவிநீர் இழியும் (அகம. 205:15-18). மலையின் உசசி அதிரச் சூழ்ந்து கொண்டு மேகம் இடியேற்றுடன் பரநத இருள் மிகக நடுநாளில் தலைவியின் தோள சோநதா லலலது என் கண்கள் உறஙகா எனத் தலைவன் இருள் மயங்கு யாமதது வழி தவறி விலகிப் புலி ஆளபார்த்திருக்கும் மலைவழி வருதல் அரிதெனக் கருதாது எளிதெனக் கருதி வருகினறான் (அகம். 218:5-13). பெடைமானின பசிக்குக் கலைமான் உணவு தருதற்கு நடுநாள் இருள்போன்ற குகையுடைய மலையில் இரைவேட்டெழுந்தது (அகம். 238:2-4). வடுகர் பெருமகனாய எருமை என்பான் ஆரிருள் நடுநாளில் வடதிசையிலுள்ள ஆனிரைகளைக் கவரச சென்று பகைவரை வெனறு அவற்றை மன்றில் நிறைத்தான (அகம். 253: 9-11, 17-19). பெரு மலையில் எப்பொழுதும் இருள் உடைய குகையின கண்ணே மணி ஒளியின்றிக் கிடத்தல் (அகம. 258:5-8). தெய்வங்கள் உறையும் நெடிய மலையுசசியிலுள்ள அஞசத்தக்க குகையின் ஆரிருளை அகற்றிய மின்னொளிர் வேல வழி காட்டத் தலைவன தமியனாய் வநதான் (அகம. 272:3-6). புதரில் படரும் ஈங்கையின் நெய்யில் தோயத்தாற் போன்ற நீரால் நனைந்த அழகிய தளிர்கள், இருபிளவாகிய இருளைப் போல ஈரமுடையவாய அசைந்தன (அகம. 294:6-8). மலையில் யானை நடமாடும் காட்டு வழியில ஆரிருள் கெட வெள்வேல ஏந்தித் தலைவன நள்ளிரவில் இரவுக் குறி வருதல் (அகம. 298:9-14). மழைபெய்து நீங்கப் பினனர்ப் புகைநிற உருவின் அற்சிரம் பகற்பொழுதிலும் பரப்பி வைததாற் போல இருளைப் பரப்பியது (அகம். 317:1-3). நடுங்கச் செய்யும் இருளில் பெரிய ஆரவார முடைய மேகம் மழை பொழிநதபோது தலைவி மிகுந்த குளிரால் வருநதுதல (அகம. 337:19-21). வானத்தில் மயக்கத்தைத் தரும் இருள் பரவ ஞாயிற்று மண்டிலத்தை மறையச் செய்து, பசிய தோற்றத்தோடு மாலைக் காலம் பிரிந்து தனித்திருப்போரைச் சினந்து துன் புறுத்தும் (அகம். 365:1-3). தலைவி கனையிருள் நடு

நாளில அணையொடு பொருந்திப பெருமூச்
செறிநது கண்ணீா மலகத தோள்நனைதது அழுது
வருந்துவள (அகம. 373: 10–14). உச்சியிலுள்ள பூங
கொததுககளை உடையவாய் மயிாச சாநதினைக
கொணடு இருள்நிற முற்று இமயமலையிலுள்ள
கானம் போலத் தலைவி கூநதல மணங கமழநதது
(அகம. 399:1,2). நிலவும் இருளும்போலப புலவுத்
திரைக்கடலும் கானலும் தோனறும (குறு. 81·5,6).
பிரிநது மீணட தலைவனுடன கூடியிருநதபோது
சேவல துயிலெழுபபியமையின, 'நளளிருள யாமத
தில் இலலெலிபார்க்கும் காடடுப பூனைக்குட்டிககு
இரையாகித் துன்புறுக' எனறு அதனைத தலைவி
வெகுண்டுரைததாள் (குறு. 107). நிலவுக குவித
தனன வெண்மணல பககததில இருள் செறிந்தாற்
போன்ற தண்ணிய கொழுநிழ லுடைய கருங்
கோட்டுப புன்னை மரஙகள அடர்நதிருந்தன
(குறு. 123:1-3). யானையின கடும்பகையால உழநத
ஆணபுலி செநநாயைக் கொலல வாயபபுப் பாாக
கும ஆரிருள் நடுநாளில தலைவன இரவுக குறி
வருதல (குறு 141:4-8). தலைவன ஆரிருட் கங்குலில
சாரல நெடுவழியில செலலுதல குறித்துத் தலைவி
அஞசுவள் (குறு. 153·3-5). அரவின பைநதலை
துமிய இடி முழங்கும் இருள செறிநத நடு இரவில்
ஆன்தொழுவததது நலலேறு இயங்குநதோறும ஒரு
மணியோசை கேட்டுத் தலைவி வருந்தினாள (குறு.
190·4-7). இருளகெட மினனி, தண்ணெனத் துளி
சிதறி, முரசென இடி முழங்கி, வானம் பெய்தது
(குறு. 270:1-4). சுரநெறி சென றவரை நினைந்த
தலைவியின கண்களுக்கு இருள் மிகக நளளிரவில
துயில் அரிதாகி அழுதல் எளிதாயிறறு (குறு. 329:
4-7). கதிரவன் மறைநதமையால இருள மிக உண்
டாயிற்று (குறு. 355 3). குனறத்தில ஒளி பரப்பி
இடி முழங்கும இரவிருளில நடுயாமததில கொடி
நுடங்கினாறபோல ஒளிர்ந்து மினனி மழை பெய
தது (நற. 68 7–10). புலிக்கு அஞசி யானை தன்
கனறினைக் காககும் கரிய இருளமிகக அஞசததகக
சிறு நெறியில் தலைவன வரலாகாது எனபது தலை
வியின உட்கோள் (நற. 85.4-7). வாடைவீசும இருள்
மிக்க இராப் பொழுதில் சேற்றையுடைய தொழு
வத்தினின்று வேறிடத்து மாறறிக் கட்டவேணடிய
நிலையில் கீழே படுக்கவிடாது நிலைகாலிலே இருக
குமாறு தலைக் கயிற்றை இழுதது உசசியிலே
பிணிதத குறிய பசுவின் நிலைபோலத் தலைவி
மாலைக காலத்துத் துன்புறறாள (நற. 109.5–10).
பெரிய மலைப் பக்கத்துள்ள இருள செறிநத குவட்
டில இருந்த குறிஞ்சி நல்லூரப பெணடிர் தலைவி
குறித்து அலர்கூறுதலை இன்னும் ஒழிந்திலா (நற.
116:10-12). மின்னொளியுடன இடி முழங்கும
அச்சந் தரத்தகக நளளிருளில மலைநாடன் வரு
வான எனபது உணமையோ பொயயோ எனக
கூறிககொணடு அனனையும அமரா முகததினள்
ஆயினள் (நற். 122 5–9). வெணமணற படப்பையில்
உளள பனை மரஙகளின மடலில கடடிய கூடுகளில்
குருகின் கூட்டம இருட் செறிந்த பொழுதில உறை
யும (நற். 123.2-4). வானம மலைமுழை போனற
கரிய இருளைப பரபபிப பல குரலை யுடைய
மேகம் முழங்குவதும் நீங்கிய பாடிலலை (நற்.
154: 1-3). தலைவன் அடியறிநது ஒதுங்க
இயலாத அரிய இருளில வநது கடியுடை வியன
நகர்க காவலகடநது தலைவியைக கூடிய பேரன
பினனாவன் (நற. 156;1-3). தலைவன வரும் வழி
மிகுநத இருள வடிவமாய நினறு இதுதான இவன
வரும் இருட்பொழுது எனறு தன கணகளைக்
கொலலும எனறு தோழி கூறினாள் (நற. 158.4,9).
'வருததும் பாமபுகள இயங்குகின்ற ஆரிருள் நடு
நாளில மயக்கந தரும வழியில வேறபடையே
துணையாகக் கொணடு சாரற் சிறுகுடி வருதல
பணபெனபபடுமோ' எனத் தலைவனைத் தோழி
வினவுகிறாள (நற. 168:6–11). 'நிலவு மறைநதது,
இருளும் வநதது; அன்னையுந துஞசினள, தலை
வனின நன மார்பு முயங்கி வருகம் செனமோ'
எனத தோழி தலைவியை அழைததாள் (நற். 182·
1-7). மினனலாலே இருளைப பிளநது முழஙகும்
மேகம தன கடமை தீர்ககச் சூல முதிாநது கண
ணொளி மறையுமபடி பரததலினாலே கனையிருள
நடுநாளில இயலபிலலாத அரிய வழியில வநது
தலைவன அருளுவானோ எனத் தோழி தலைவன
சிறைபபுறமாகத தலைவியிடம் வினவினாள
(நற. 228.1-5). பொயகையில ஆமபறபோது கீழத்
திசைத தோனறும வெளளி போல இருளகெட
மலரும் (நற. 230.3-5). மினனல பிளநதெழுநது
இருள் நிறைந்த விசுமபில இடி முழக்குடனே கதிர
வனை மறையச செயத மேகம நடுயாமத்தில
மலையிடத்தே மழை பொழிந்தது (நற. 261:1-5).
மழை பெயத மயககததை யுடைய இருளின நடு
யாமத்தில தலைவன உடனிருப்பவும் தலைவி
குளிரின கடுமையால வருநதி உறங்காதிருநதனள்
(நற். 281:7-10). அரவம் இரை தேடும் ஆரிருள்
நடுநாள இரவில தலைவன வருதல (நற். 285 1,2).
பேய் வெளிப்பட்டு உலவுகினற மூதூரின பெரிய
தெருவில ஆணகூகை பெடையோடு சதுக்கத்தில்
குழறுகின்ற மயஙகிருள நடுநாளில் குறுமகள்
வனமுலை முயஙகலைக் கருதித தலைவன உறங்க
விலலை (நற. 319:3-11). எருமைக்கடா நாரை
யினம பறநதோடவும் தொழில செய்த வருத்தம
நீங்கவும பொய்கையில பாயநது கிடந்து,

பின் இருள நிரமபிய மருதமரத்தின இனிய நிழலில் வதியும (நற. 330 1-5). ஈன்ற பெணபுலியின பசியைப போககு ஆணபுலி இரை வேட்கையால பதுஙகியிருககும மலைமுதற சிறு நெறியில இயற கைப புணாசசிக்காலததுப போலவே காதலுடைய னாயப பல நாளும் ஆரிருளில தலைவன் வருகின றான (நற். 332:6-9). 'மாரிபெயத இருள்மிக்க நளளிரவில அருவியையுடைய மலைப்பக்கததில ஒரு வேல ஏந்தி மினனல இருளைப பிளககு மலைநாடன வருவானெனின நம உயிா எவ்வாறு நிலைததிருக்கும்' எனபது தோழி கூறறு (நற் 334.5-9). பகறபொழுதும இருளமிகக நடுயாமத்துக் காரிருளோடு ஒனறி இடிமுழககுடைய மேகம நீர் நிறைந்தியங்க வாடைக காற்றுடன் பனி தலைவியைத் தாக்கியது (நற். 364.1-4). கனையிருள் மறைத்த அஞ்சதக்க வழியினில பாம்பின மீது விழுநது கொலலுகின்ற இடி இடிக்குமபோது தலைவன வருதல் (நற். 383: 7-9). வலம்புரி உழுத வார்மணல் அடைகரையிற் கிடககும் முத்துக்கள இருளகெட ஒளிரும (ஐங். 193: 1,2). ஆரிருள மிகுநத யானை உலாவும காட்டக நெறியில வாராதே எனத தோழி தலைவனைத் தடுததல (ஐங. 282:3,4). இருள் பொர நினற இரவில பதுககை நிறைந்த கவாத்த வழியில் யானையின் தீங்கினைக கருதாது எங்ஙனம வந்தாய எனத தோழி தலைவனை வினாவினாள் (ஐங். 362). தலைவன இருளிடத்து இரவென்று கருதாமல் அஞசாது வரின விடியற் காலத்தே அருள செயவானுககு உணடாய ஆக்கம் போலத் தலைவி அழகு பெறுவாள (கலி. 38.14-16). வெறபன தலைவியைத் துறவான; அவன் கொணட உறவில கொடியவை தோன்றுமாயின விண்ணில திரியும் ஞாயிற்றினுளளே இருள் தோனறிய தனமைதது (கலி. 41: 35-38). தலைவன தலைவியைச் சார்ந்ததும ஞாயிறறு முனனர் இருள் போல அவளது மேனிப பசபபு நீங கியது (கலி. 42:30-32). பாறையி லிருநத கருங் குரங்கை வெருணடு பார்த்து இருள செறிந்த பக்க மலையில வருடைமான் குட்டி ஏறி இறங்கி ஆடும் (கலி 43:12-14). இடி இடிககும் இருளையுடைய இரவினில் செவ்வி பெறானாயப் பகற் குறியையும் யான மாறினேன எனத தலைவன் எண்ணுவான எனத தோழி கூறினாள் (கலி. 46:10,11). வருந்து தறகேதுவாய இருள் எனறு ஏங்கித் தலைவனின வருகையை விருமபி நினைததலால் உணடான துயருழநது தலைவி துயிலபெறாதிருநதாள் (கலி. 48:12,13). இருள் செறியும் சோலை (கலி. 50:5). ஞாயிறு கடல்மீது தோன்றி இருளைக் கெடுக்கும் (கலி. 100:1). அரிய கங்குலில ஆரிருள் எனறு கருதாமல வநது தநதையை (துரோணாசசாரியை) கொன்றானை (சிகணடியை) தன முயறசியால வென்று தன தோளால தலையைத் திருகினான (அசுவததாமன) (கலி. 101.30-32). உலகம் கலக்கங் கொளள ஆணட அரசனைப் பினனர் அவனுக்குப பகைவனாகிய அரசன வநது அவவுலகைச் சிறிது அளிப்பது போலத தனககு மாறுபாட்டையுடைய இருளை மதி போக்கித் தண்ணளி செய்தது (கலி. 118.5,6). கதிரவன மறைய இகலமிகு ஆழிப்படையுடைய மாயோனின் நிறமபோல இருள் படர்ந்தது (கலி. 119:2,3). அருள் தீர்ந்த அறிவாலே அறம கருதானாய் நயமும செயயானாய எலலாரும அஞ்சும் படி நாளைப பயன படாமற் செலுததினவனது நெஞ்சின் மருட்சிபோலச் சுடர் மறைய மெலல இருள நிறைநதது (கலி. 120.1-3). கண்கள் பொருள் களைக் காணாதபடி கங்குல இருளைப் பரபபி உயிர்களெலலாம் செயலறக் காரணமாயிற்று (கலி. 123.6). நல்லற நெறியை நிலைநிறுத்தி உலகாண்ட அரசன் போயபின் நீதி யலலதனை ஏறட்டுக் கொண்டு அறநெறியை உலகதது நிலை நிறுத்த மாட்டாத குறுநில மனனன காலம் போல கதிரவன மாய, உலகத்தே மயங்கிருள் வந்தது (கலி. 129:3-6). பனியோடு கூடிய இருள் சூழ்ந்து வருதலினால பிரிநதிருபபவர் வருந்துவர் என்று அவர் வருததங்கணடு நீயும் வருநதுகிறாயா எனறு சிறு குழலை விளித்துத் தோழி வினவினாள் (கலி. 129.16 - 18). பிரியேன என்று கூறி என்னை அவர் அன்பினாற் பிணித்துந தம் மென்மையாலே சுடுத லலலது பரநத இருளை முற்றும் நீககும் நெடுஞ்சுடர்த் தீயினால சுடுதல் இலர் எனத் தலைவி கூறினாள் (கலி. 137:18-21). இரவில் இடியை உமிழும் மேகத்தில் இருளைப் போழும் மினனற் கொடியை வாங்கிக் கொள்வேன் என்று ஒருவன கருதிய தனமையளாய்த் தலைவி இருநதாள (கலி. 141:17,18). தலைவர் என்னை நினைதது வருவரோ, வந்தால உடனபடாது அவரை இகழ்நதிருப்பேனோ எனறு நினைத்து நள்ளிருளை யுடைய ஊர்க்காவலர் காத்தலைக் கொண்ட கங்குலிடத்துக் கனவிலே நான் உள்ளியவாறு தோன்றப பிடித்துக் கொண்டேன்; பின் கண் விழித்து மெலலப் பார்க்கப் பிடித்த கையினுள்ளே மறைந்துவிட்டார் எனத் தலைவி கூறுதல் (கலி. 142:31-36). களவின்கண் தலைவனோடு கூடி இன்புற்றபொழுதில் இராக்காலத்து இருள் நீங்கப் பொலிந்த நிலாவுடைய மதியம போல திகழ்ந்து பிரிநதபொழுதில் பகலில ஒளி மங்கிய மதியம் போல பொலிவிழந்தாள் (கலி. 143:1,2). மாலைப் பொழுது காலன்போல் வந்தது; கதிரவனே, நீ இருளொடு யான் இங்கு வருநத எனனைவிட்டு

மறைந்தனை; உன்னிடம் அருளில்லை; வாழ்வாயாக' எனத் தலைவி பிரிவாற்றாது கலங்கி மொழிந்தாள் (கலி. 143:40-43). மக்களுக்கு விரும்பத்தக்க சிறப் புப்போல் இருக்கும் காமம், நள்ளிருளிலே கண்ட வருக்கு நனவின்கண் உதவாமல் வேறுபட்டுப் போம் கனவினும் நிலையின்று (கலி. 145:1-3). செறிந்த இருளையுடையது வானம் (கலி. 145:55). தலைவன் வரவே மாயவன் மார்பில் திருப்போல் பவள் சேர, ஞாயிற்றின் முன் இருள் போல் தலை வியின் துயர் நீங்கியது (கலி. 145:63-66). 'ஞாயிறே! ஆரிருள் நீக்கும விசும்பிடத்து மதி தோன்றுமாறு போல நீயும் நீருள்ளும் தோன்றுவாய்; அப்போது அங்கு வாழும் தேரை இரையெனத் தின்னப்படு தலை விலக்கிக்கொள்' எனத் தலைவி கதிரவனி டம் கூறுகிறாள் (கலி. 147:30-32). கதிரவன் மறைந் ததும் தீவினையைப் போக்குபவனது அருள் கொண்ட முகம் போலக் கடலின் திரைமேலே திங்கள் தோன்றி மயக்கத்தை யுடைய இருளைப் போக்கியது (கலி. 148:1-5). இருட் பரப்பினை ஞாயிறு போக்கினாற் போலத் தலைவியின் துன் பத்தைப் போக்கத் தொலைவிற் சென்ற காதலர் நாடு கைப்பற்றித் தம் வினை முடித்து மீண்டார் (கலி. 148:21-24). பொருளைக் கரந்து கொள்ளும் இருட்கு இடமாகிய நீலமணி போலும் திருமேனி யுடையவர் திருமால் (பரி. 4:57). முதுபெண்டிர் பேதைப் பருவத்தாளிடம் காதலன்பால் கொண் டுள்ள துனி நீங்குவாயாக; துனி மிகின் காமம் கெடும்; இவனைக் காய்ந்து மனம் வெறுப்படையச் செய்து நீ வன்மையான இருளில் பிரிந்து போதல் தவறாகும் என அறிவுரை கூறினர் (பரி. 6:96-100). இருளையுடைய இரவும் பகலாகத் தான் செல்லு மிடம் அரிதெனக் கருதாது பாண்டியன் சேனையின் நிமிர்ச்சி யொப்பப் பெயலாற் பொலிந்து பெரும் புனல் பெருக, நாடும் புலமும் நலம் மிக, வையைப் புனல் வந்தது (பரி. 7:5-10). உலகிருள் அகற்றிய பதின்மரும் இருவரும் (பன்னிரு ஆதித்தரும) முரு கனை வழிபடத் திருப்பரங்குன்றம் வந்தனர் (பரி. 8:4,10). மாலைப் பொழுதில் மயக்கந் தரும் இருளை மதி நீக்கிய அளவில் கூடுதற் குரிய தொழில்களைக் காதலர் தொடங்கினர் (பரி. 10:112,113). வையைநீர் எட்டாம் நாள் தேய்பிறை அளவாதலன்றி இருள் உவா (அமாவாசை) போல முற்றும் குறைபடும நாளை யாருங் காண இயலாது (பரி. 11:36-38). வளியாற் பொரப்பட்ட வானம் மின்னையும் இருளையும் மாறி மாறிப் பரப்பி மழை பொழிந்தது (பரி. 12:1-3). பலவகை மலர் களும் கமழும் இருபக்கக் கரைகளுக் கிடையே தேறித் தெளிந்து செறிந்த இருளையுடைய மயக்கந் தரும் மாலைப் பொழுதில் பாறைப் பரப்புப் போலச் சலியாத அணைகளால் தேங்கி நின்று வையைநீர் நிழலில் துறக்கத்தின் எழிலைக் காட்டும் (பரி. 12:81-84). யாமத்தியலபுடைய திருமாலிருஞ் சோலை மலையில் நிலைபெற்ற குளிர்ச்சியை யுடைய இளவெயில் சூழ அதனிடை இருள் வளர் தலை ஒப்பக் கரிய திருமால பொலம்பூ ஆடை யணிந்த தோற்றம் உள்ளது (பரி. 15:26-28). மழை முழங்கிய மலையும் அங்குத் தோன்றும் கண்ணைப் பறிப்பது போல மின்னி இருள போழும் மின்ன லும் முருகனின் ஊர்தியாகிய யானையையும் அதன முகததிலணிந்த ஓடையணியையும் ஒக்கும் (பரி. 18: 23-27). கூடல மகளிரும் மைந்தரும் மாட்சிமை யுடைய புனைகலங்களையும் நலல துகில்களையும் அணிந்து பரஙகுன்றை நோக்கிக் குதிரையிலும் தேரிலும புறபபட்டனர். அவர்கள மார்பில மாலைகள் விளங்கின. அவர்களுடைய உடம்பின் விளக்கம தெருவின் இருளை நீக்கியது (பரி. 19:12-14).

2. கருமை. இருள்-கருமை-நிற முநநீர் வளை இய உல கம் (முரு. 293). கரிய பிடியின மேந்தோல போன்ற இருள் நிறத்தை இயல்பாக உடையவர் கள்வர் (மது. 634, 642). மழை பெய்த இருள நிற மேகம் விண ணதிர முழங்கியது (மலை. 1,2). இருள் மென கூந்தல் (அகம் 92:13). இருளேர் ஐம்பால (அகம். 155:4). இருளைங் கூந்தல (அகம. 233:15). பாலகண்டன்ன ஊதை வெண் மணலில வாய்க்கால ஓடுவதுபோலத் தேர் வழிச்சுவடு தெரியச் சேற்றுக் குழம்பலுடைய பரப்பில இருள்நிறமுடைய நீருள்ள ஒடுக்கமான வழியைக் கடநது தலைவன குதிரை பூட்டிய தேரில வந்தான் (அகம. 400:13-19). எருமை முறுக்குண்ட கொம்பினையும் இருள் நிறத்தையும் உடையது (குறு. 279:1). தண்புனத்தில பருவம் வாய்த்த வரகு நாற்றினது கரிய இருள் போன்ற நிறத்தை யுடைய ஓரிலையை மான்குட்டி கவ்விக் கடன் கழிக்கும் (குறு. 282:1-4). இருள் புரை கூந்தல் (நற். 270:3). புன்னை இரவு போன்ற இருள் நிறம் உடையது (நற். 354:5). இருள் போன்ற கரிய கூந் தலுடையவள் தலைவி (கலி. 49:18). இருளுறழ் இருங்கூந்தல் மகளிர் (கலி. 122-12). இருள் உறு கூந்த லாள் (கலி. 140:33). தலைவி இருள் நிறமுடைய மையுண்ட கண்ணை உடையவள் (பரி.8:59). திரு மாலின் மேனிக்கு இருள் உவமை (பரி. 13:42,43). திருமால இருள் நிற மேனியர் (பரி. 15:50). பெண் களின் பனிசசைக்கு (கூந்தலுககு) இருள் உவமை (பரி. தி. 1:36).

3. மயக்கம். தொண்டைமான் இளந்திரையன் இடைத்தெரிந் துணரும் இருள் - மயக்கம் - தீர்ந்த

காட்சி யுடையவன் (பெரு. 445). செவி முதலாகிய பொறிகள் ஐந்தையும் இருளற (மயக்கமற) நீக்கி (மைத்திரி, கருணை, முதிதை, இகழ்ச்சி எனனும) நான்கினால் மனத்தை மாசறுத்துத் தம்மை (சமாதியாகிய) ஒரு நெறிக்குட்படுத்திய அன்பர் திருமாலைத் தொழு தேத்தி அவர் புகழ் விரித்தனர் (பரி. 4:1-3).

**4. துன்பம்.** நிறைமதி யனைய பொகுட்டெழினி யின் நிழலில வாழபவர்க்கு இருள - துன்பம் - தோன்றாது (புறம். 102:7, 8). உயிர்க்கு அச்ச மிலலாமல காவலாகிய இருள் தீர்ந்து இனபம் பெருகத் தோன்றி யரசு புரிந்தவன மாநதரஞ்சேரல (பதி. 90.2, 3, 12, 13). இருள்மிக்க நெஞ்சத்தின் இடும்பை தீர்க்கும் அருள் நன்குடையராயினும் பொருளிலராயின் ஈதல் இயலாது (அகம். 335:1-3). மனத்திற்கு இருளைத் தருகின்ற பார்வை இடை யீடு இன்றி அருளிடத்துச் சென்ற பார்வை விளை யாட்டாகச் சிறிது நீங்கினும தலைவி வருத்தங் கொண்டு நெஞ்சழிவாள் (கலி. 10:18, 19).

**5. மாலைக் காலம்.** இருள் - மாலைக்காலம் - வரப் பாணர் சீறியாழில் செவ்வழிப்பண் வாசித்துப் பேகனது கானத்தைப் பாட அவன் மனைவி அழு தாள் (புறம். 144.1-5).

**6. இரவு.** இருளின்கண்-இரவில-இன மணிபூட்டிய நெடுந்தேர் ஏறிச்சென்று காணடற்கு இன்னாதாக உறைகின்றவளது நோயைத் தீர்த்தலே தாம் வேணடும் பரிசிலெனப் பரணர் பேகனிடம் கூறி னார் (புறம். 145:8-10). தலைவன வாராமையால வருந்திய மேனியுடைய தலைவிக்கு ஆரிருளில் (இரவில) அசைந்து வரும் காற்றுந துணையாகி வருத்தும் (கலி. 121:11, 12).

**இருள் மதி** – அமாவாசை. வையைப் புனல் நிறைமதி தேய்ந்து வரும் எட்டாம் நாள் திங்கள் அளவு இருக்குமேயனறி இருள்மதி - அமாவாசை - போல அறவே குறைபடும் நாளை ஒருவரும் காண முடி யாது (பரி. 11:36-38).

**இரை** - **1. உணவு.** உயர்ந்த மலை முழையில துயிலு தலை வெறுத்து மூரி நிமிர்நதெழுந்த புலிஏற்றை, ஊனை விரும்பிய உள்ளம் செலுதத இரை-உணவு- குறித்துத் தான வேண்டிய இடததே விரும்பிச் சென்றது (புறம். 52:1-4). நெடுஞ்செழியன் மூரி நிமிர்ந்து குகையிலுள்ள புலி இரைக்கு எழுந்தது போலப பகைவர்மேல ஆர்த்தெழுநதான் (புறம். 78.1-4). புலி தான்தாக்கிய களிற்றிரை பிழைபபின அதறகாக எலியைத் தாக்காது (புறம். 237:16,17). நீர்நாய் கயததைக் கலக்கி வாளை மீனைக் காலை யிரையாகப் பெறும் (புறம. 283.1,2; ஐங். 63:1,2). நெல் வயலில் தடந்தாள் நாரை இரை கவரும் (பதி. 32:12,13). பாணமகன் தூண்டிலில் மறைதது வைத்த இரையைக் கதுவி அகப்படாமல் தப்பிய வாளை பக்கத்துள்ள காற்றாலசையும் பிரம்பின் நிழலை நீரிற்கணடு தூணடிலென அஞ்சும் (பெரு. 284-288). நீராடுமகளிர் இட்ட பொலங்குழையை இரையைத் தேடும் சிசசிலிப் பறவை இரையெனக் கருதியெடுத்துப் பனையின் மடலில் தங்காது அந் தணர் வேள்வித தூணில் தங்கும் (பெரு. 312-316). தலைவன் இரவுக்குறி வரும்வழி இரை தேரும் அரவுடையது (குறி. 255). கிடங்கில் இரை தேடியுலா வும் முதலைகள் கிடந்தன (மலை. 90,91). ஈன்று வருந்திய பேடைக்கு இரை தருதற்குப் பருந்தின் சேவல மரையாவைத தொலைத்துக் குருதியைப் பருகிப புலிதுறநத முடைநாற்றமுள்ள புலாலை, கொள்ளை யடிககும் மக்கள் போல விடாது கவரும் (அகம். 3.3-10). களிற்றிரையைக் கொள்ள ஒதுங்கிய பார்வையோடு மறைந்தியங்கும் புலிபோலத தலை வன் இரவில் தலைவியின இல்லத்திற்குக் காவலர் அறியாமல் மறைந்து வநதான (அகம். 22:14-16). வராற் போத்து தூண்டில இரையை விழுங்கி ஆம்பல் இலை கிழிய, குவளை மலர் சிதையப் பாய்ந்து, வள்ளைக் கொடியை மயக்கித் தூணடில் வேட்டுவன இழுக்க வாராமல், கயிறிட்டுப் பிடிக் கும் சினமிக்க காளைபோல மதஞ்செறிந்து வீடியற் காலததே குளததை உழக்கும் (அகம. 36:1-8). கரடி இருப்பைப பழததை வெறுத்தால் புற்றினைத் தோணடி இரை தேடும் (அகம. 81:1-5). கரடிக் கூட்டம் சிதலெடுத்த நெடும் புற்றினை நள்ளிர வில்அழித்து இரையை விரும்பிச் சூழ்நது கொள்ளும் (அகம். 112:1-4). புற்றாஞ் சோற்று இரையை வெறுத்தால் கரடிச சுறறம் இருப்பைப் பூவை உணணும் (அகம. 149:1-4). வயலிலுள்ள நண்டு இரைதேடும் குருகுககு அஞ்சிச் சேற்றிலோடி மணணளையில் மறையும் (அகம. 176:7-12). களிற் றிரை பிழைத்தலின் வேங்கை சினமிகுந்து முழங்கு தலின் பிடி சோலையிடத்து நிலைகுலைநது ஓடும் (அகம். 221:11-13). காட்டில் ஈனறு இளைப் பட்ட பெணபுலி பசித்ததென மானுணவு தரு தற்கு நள்ளிரவில் இரை வேட்டெழுந்த புலி ஆமான் ஏற்றை வலம்படத் தொலைச்சி அதன் பிணை அலறப் பாறை குருதியாற் சிவக்க இழுத்துவரும (அகம. 238.2-9). மேலைக் காற்றின் ஒலியை மலையில் இரைவிரும்பிச் சென்ற புலி மானைப் பிடித்ததால் எழும் ஒலியெனக் கருதி மான் கூட்டம் கவர்த்த நெறிகளில அலறி ஓடும (அகம். 249:14-18). மலையிடத்துளள புற்றில வெள் ளரவம் பிறழும்படி குட்டிக் கரடிகள் இரையை

விரும்பியெடுக்கும் (அகம். 257:19-21). அரவம் இரை தேடும் அஞ்சத்தக்க சிறுநெறியில் தலைவியை விரும்பித் தலைவன் வருதல் (அகம். 258:9-11; நற். 285:1,2). பொய்கையில் இரை விரும்பிச் சென்ற நாரை வாளைப் போத்தை உண்ண, ஒலி கேட்கா மல் மெல்ல அடியிட்டுக் காவல் வீட்டிற்புகும் கள் வனைப் போலத் தளர்ந்து நடக்கும் (அகம். 276: 1-5). பரதவச் சிறுவரிட்ட வலையில் கொக்குச் சேவல் அகப்பட அதன் பெடை இரையுண்ணாது குஞ்சுகளைத் தழுவிக் கொண்டு பனைமரத்தில் தங்கி அன்புற நரலும் (அகம். 290:1-7). பாரியின் பறம்பு மலையில் குருவியினம் காலையிற் சென்று நெற்கதிரைக் கொணர இரையுள்ள இடத்தைத் தேர்ந்து திரிந்து கதிர்கொண்டு மாலையில் மீளும் (அகம். 303:10-14). குட்டியுடன் தங்கிய பெண்நாயின் பசிவருத்தம் போக்க இரை தேடிச்சென்ற நீர் நாய் வாளையைப் பற்றிப் போர் செய்தமையின் நீர் கலங்கியது (அகம். 336:2-5). பொய்கையிடத் துள்ள புலால் நாறும் ஆண் நீர்நாய் வாளையாகிய நாளிரையைத் தேரும் (அகம். 386:1,2). நடுகல்லைப் பொருந்தி முதுவாய்ப் பல்லி கண்ணிமையாது இரையை விரும்பிக் கிடக்கும் (அகம். 387:15,16). ஞாயிறு மறைந்த மாலைப் பொழுதில் பறவைகள் கடம்பமரத்திலுள்ள குஞ்சுகளுக்கு வாயிலுண வூட்ட இரை தேடியமையின் விரைந்து செல்லும் (குறு. 92). இரை தேரும் நாரைக்குத் துன்பமாக வாடைக்காற்று நீர்த்துளிகளைத் தூவும் (குறு. 103. 3,4). தலைவனுடன் கூடியிருந்தபோது சேவல் இன்துயிலெழுப்பியமையின் யாமத்தில் இல்லெலி பார்க்கும் காட்டுப் பூனைக்கு அஃது இரையாகட் டும் என்று தலைவி வெகுண்டுரைத்தாள் (குறு. 107). பொழிலில் இரைதேரும் வெண் குருகன்றி வேறெது வும் நெருங்கவில்லை (குறு. 113:3,4). கீழைக்கடல் அலைக்கருகிலுள்ள சிறகிழந்த நாரை சேரனது மேலைக்கடல் தொண்டித் துறையிலுள்ள அயிரை மீனாகிய இரையைப் பெறத் தலையை மேலே தூக்கியது (குறு. 128:1-3). இரை வேட்டெழுந்த சேவலை நினைந்து புறாப்பேடை கள்ளிக் கவட்டி லிருந்து தனிமை தோன்றக் கூவும் (குறு. 154:3-6). கடற்கரையிலுள்ள சிறுவெண்காக்கை கழியிடத்து இரை தேர்ந்துண்டு பூக்கமழும் சோலையில் தங்கும் (குறு. 313:1-3). கொடிப்பிரம்பு போன்ற கோடு களையுடைய நீர் நாய் வாளையை நாளிரையாகப் பெறும் (குறு. 364:1,2). மழை பெய்து நீர் வடிந்த காட்டில் கானங் கோழி ஈரமணலைக் கிளறி நாட் காலையில் இரையை (நாங்கூழ்ப் புழுவை) கொன்று தன் பெடைக்கு நல்க அதனை நோக்கும் (நற். 21:8-12). நாவற்கனியைத் தன் இனம் எனத் தும்பி மொய்த் தது; அதனை நண்டு கைக்கொள்ள வண்டு ஒலித் தது; அவ்வமயம் இரைதேர் நாரை வந்ததும் வண்டை விடுத்து நண்டு ஓடியது (நற். 35:2-6). பெடையொடு கடலைத் துழாவி இரை தேரும் நாரை சிறு மீனைப் பிடித்துச் சென்று, கிளையி லுள்ள கூட்டிலிருந்து தாயைக் கூப்பிடும் குஞ்சுக்கு ஊட்டும் (நற். 91:3-7). இருங்கழியில் இரையுண்ட குருகின் கூட்டம் பெண்ணை மடலில் உள்ள கூடு களில் தங்கும் (நற். 123:1-4). இரைதேரும் ஆண் கரடி புற்றிலுள்ள நல்லரவம் நடுங்க முழங்கிக் கொல்லனது ஊதுலைக் குருகு போலப் பெருமூச் செறிந்து நள்ளிரவில் புற்றினைத் தோண்டும் (நற். 125:1-5). கழியிடத்தே இரை விரும்பிச் சென்ற குரு கின் குத்துக்குத் தப்பிய இறாவின் ஏற்றை கடற் கரையிலுள்ள தாழை மலரைக் குருகெனக் கருதி யஞ்சும் (நற். 211:3-8). இரையை விரும்பிக் கடுஞ் சூல் வயவொடு கானல் செல்லாமல் கழனியில் தங்கிய பேடைக்கு முடமுதிர் நாரை கடல்மீனைக் கொண்டுவந்து கொடுக்கும் (நற். 263:4-7). ஆண் கரடி இரை தேரும் ஆசையால் இரவிற் சென்று கரையான் கூட்டமெடுத்த பாம்பு வாழும் புற்றினை நகத்தால் பறித்துக் கறையானெல்லாம் ஒருங் கொழியப் புற்றாஞ்சோற்றை யுண்ணும் (நற். 325: 1-5). மலைப் பிளவுகளில் குட்டிகளை யீன்ற பெண் புலியின் பசியைப் போக்க ஆண்புலி இரையை விரும்பி மலையடிவாரத்தில் பதுங்கியிருக்கும் (நற். 332:5-7). மலையை யடுத்த சிறுநெறியில் பாம்புறை யும் புற்றை மேகம் போலச் சூழ்ந்து கொண்டு இரை தேரும் கரடியினம் தோண்டும் (நற். 336:8-11). கழியில் இரையை யருந்திய குருகு பனைமடலில் ஏறிக் கூட்டை யடைவதற்குப் பேடையை ஓயாமல் அழைக்கும் (நற். 338:7-12). இமையத்துச்சியிலுள்ள வானரமகளிர் கையிலுள்ள குஞ்சுகளுக்கு அன்னப் பறவை கடலகத்துள்ள இரையைக் கொடுக்கப் பறந்து சென்றபோது சிறகு வலிக்க வருந்தியது (நற். 356:1-7). இறாவின் முடங்கலைச் சிறுவெண் காக்கை நாட்காலையில் இரையாகப் பெறும் (நற். 358:8,9). உப்பங்கழியில் இரையை விரும்பிய வருத்தம் நீங்க மரத்தின் மேல் பறவைகள் பிள்ளையொடு வதிந்தன (நற். 385:3-5). பாணன் உப்பங்கழியில் தூண்டிலின் நாணில் இரையைப் பொருத்திச் சினையுடைய கயல் மீன்களைப் பிடிப்பான் (ஐங். 111:1-3). கடற்கரையி லுள்ள காக்கை உப்பங்கழியில் இரைதேர்ந்துண்டு பூக் கமழ் சோலையில் தங்கும் (ஐங். 163:1-3). புள்ளினம் இரையுண்டு தங்கும் இடங்களைச் சேர்ந்தது (கலி. 121:4). உப்பங்கழியிடத்துப் பறவையினம் திரை மோதுதலால் இறந்தனவும் புலால் நாற்றத்தை

யுடையனவுமாகிய மீனைத் தின்னுமதலலது தான் ஒன்றன் உயிரைப் போககி அதனை இரையாக உண்ணாது (கலி. 131:31-33). இரையைத் தேடித் தினறு இளைப்பாறும் பறவையினஙகள தாம் விழைநத பேடுகளைத தமக்குத் துணையாகக் கொணடு மணல மேட்டில் தங்கின (கலி. 132:1-3). திருமாலின் கொடி மீதிருக்கும் கருடன எறிந்தெடுக்கும் இரை பாம்பாகும் (பரி. 4:48). இளவேனிற்கண குருகுகள் இரை தேடும் அளவினதாய் வையையில் நீர் குறைந திருக்கும் (பரி. 6:76-77).

2. இரைச்சல் (ஒலி). கரையை அழித்துக் கொண்டு வையைநீர் விரைந்து ஓடுமபோது இரை-இரைச்சல்-எழுநதது (பரி. தி. 2:64).

இல் – 1. அகம் (வீடு). பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன நெடு நகரில் வினைபுரி நலல இலலில் - அகத்தில - வெவ்வெரி நைககுமாறு போர் செய்யும் ஆற்றலுடையவன் (புறம. 23:9-13). வேட்டுவன் தசைகொணர்ந்த கடகமும் இடைமகள் தயிர் கொணடு வந்த மிடாவும் நிறையுமாறு பேரில் அரிவையர் நெல்லினை முகநது கொடுத்தனர் (புறம. 33:1-6). ஆவூர் முற்றுகையின் போது, ஊரினுள் நீரில்லாத தொழில புனைநத நலல இலலிடத்தே யிருப்போர் வருநதிக் கூவினர் (புறம. 44:8). அழகிய சிலமபொலிககு ஓடிசசென்று தம் இலலின்கண பனைமரத்தைப் பொருநதி நின்று, சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளியின் வெற்றியைக் கணடதாக நக்கண்ணையார் பாடுகின்றார் (புறம. 85:6-8). ஒரு பெண் மறக்குடிப் பிறந்த தாயினிடம், சிற்றில நற்றூண் பறறிநினறு, 'நின் மகன் யாணடுளன' என வினவ, 'அவன போர்ககளத்தே தோன்றுவன்' என்று அததாய் விடைகூறினாள் (புறம. 86). பாரிமகளிர் சிற்றிலின் கண பீர்க்கு முளைத்துச் சுரை படர்ந்த குப்பை மீதேறி உமணர்தம உப்பு வண்டிகளை எண்ணி நிற்றல் (புறம். 116.5-8). உணவு இலலாத இல்லிலுள்ள சிறுவன் அதனை இகழ்ந்து புறத்தே உறைந்தனன் (புறம. 160:16-18). ஓரிலலின்கண சாப்பறை ஒலிக்க, ஓரில்லின்கண மணமுழவின் ஓசை முழங்கியது (புறம. 194:1,2). நாடோறும் உணவின்மையால் இடந்தோறும் மாறிமாறி அகழ்தலால், இல்லெலி மடிநத பழைய சுவராகிய எலலையுடையது வீடு (புறம. 211:17-19). இப்போது புல்லென சடையோடு தாளி இலையைப் பறிபபோன் முனபு இல்வழங்கு மடமயிலைப் பிணிககவலல சொல்வலை வேட்டுவனாயினன (புறம. 252:2-5). தலைவன் இறந்த பின்னர், அவனது பேரில முற்றம் நீரற்ற ஆற்றின் ஓடம்போலக காணபபட்டது (புறம. 261:1-5). பொரச சென்ற எல்லார் மாவும வநதன, எம் இல்லின் புல்லுளைக்குடுமிப் புதலவனைப் பெற்ற கணவன் ஊர்ந்து சென்ற மா வரவில்லையே என மனைவி வருந்திக கூறினாள் (புறம. 273:2-4). நேற்றுத் தன அண்ணனைக் கொன்ற வீரனை அவன் தம்பி, கள்ளைப் பெறுதற்கு இல்லிற் புகுநது, கள் முகக்கும் கலயத்தைத் தேடுவது போலத் தேடுகினறான் (புறம். 300:3-6). நெடுமானஞ்சி இல்லின் இறப்பில் செருகப்பட்ட தீக்கடை கோல் போலத் தன் வலிமை தோனறாது ஒடுங்கி இருக்கவும் வல்லன் (புறம். 315.3-5). செம்மண நிலத்து மடுவில உளள நீர்நிலையைத் தோண்டியதனால் உண்டாகிய சிவந்த இடததில ஊறிய நீரை, சிறிய இல்லின் முற்றத்திலிருந்த சாடியில பெய்து வைத்திருந்தனர் (புறம. 319:1-3). பலா நிழலில் யானை வேட்டுவன உறஙகப் பார்வை மடப்பிணையைத் தழுவிய கலைமானின் இன்புறு புணர்நிலையைக் கண்ட மனைவி தன் கணவன் எழுதலுமஞ்சிக கலைமான் பெடையை நீங்சுதலுமஞ்சி இலலில் நடமாடாதிருந்தாள் (புறம். 320:2-9). சீறூர் இல்லங்களில் கள் அடப்படுதல (புறம். 329:1). புகழ்கருதிய மறவர் இலலிடத்தே தமக்கு இடமில்லையென்று அதனின நீங்கக கருதியும வீரத்தாற் சிறந்த உயர்நதோர் உலகிறகுத தம் உடம்பொடு செல்வது கருதியும் போர் செய்தனர் (புறம். 362:20-22). கணவர் போரில் இறக்க அவர்தம் மென்றோள் மகளிர் நெடுஞ்சுவர் நல்லில புலம்ப அகன்று கணவன் புணையைக் காணச் சென்றனர் (புறம். 373:11-13). பலவகையாகக்கட்டப்பட்டு மாண்புற்றது நல்ல இல் (புறம. 398.2). சிததிரத்தைப் போனற தொழில் புனைநத நலல இலலின்கண்ணே கொல்லிப் பாவை போலும் தலைவி இருத்தல (பதி. 61:3,4). சோற்றையுடைய நல்ல இலலங்களில ஏறுகள் ஒன்றோடொன்று மாறாக முழங்கின (பதி. 90:45). புலிப் போத்தினைப் போன்ற வீரர் விடியற் காலையில், பகைவர் நிலத்தே, பசுக்களைக கவர்ந்து வந்து அவற்றைக் கள்ளுக்கு விலைப்படுத்திய பின், தம் இல்லில் சமைதத தோப்பிக் கள்ளினைப் பருகினர் (பெரு. 138-142). இல்லஙகளில நீண்ட ஏணிக்கு எட்டாத நெடிய வடிவினையும் தலை திறநது உள்ளே சொரியப் பெற்ற பழைய நெல்லினையுமுடைய முதிர்நத நெற்கூடுகள் இருநதன (பெரு. 245-247). நல்ல இல்லில ஊராததேர் உருட்டிய புதலவர் நடைவருத்தம் நீங்கச் செவிலியரிடம் பாலுண்டு அமளியில உறங்கினர் (பெரு. 249-252).நெல்லைப் பெற உழும் எருதுகளுடன் பசுக்கள் நெருங்காதன வாய ஏழகக கிடாயும் நாயும் திரியும சோறுடைய நல்ல இல்லங்களைக் கொணடது பட்டினம் (பெரு. 325-327). மாட்சிமைப்பட்ட பாசறை இலலில,

வன்கண யவனரின் புலிச் சங்கிலி தொங்கவிடப பட்டது(முல்லை.61,62) பலபெயர்களைப பெறுமாறு யர்நது, வானம் முழகித தெனறற் காற்று ஒலிக்கும் பல சாளரங்களை யுடைய நலல இல்லஙகளைக் கொணடிருநதது மதுரை மாநகர் (மது. 357-359). பருநது தங்கி இளைபபாறி யிருநது, பினபு உயரப பறககும் பல தொழில மாட்சிமைபபட்ட நலல இல்லில பண்ணியம விறறனர் (மது. 502-506). கொழுங்குடிச் செல்வரும பிறரும் மேவபபட்ட இல லுறை தெய்வங்களையுடைய நலல இலலில, கண் டார் நெஞ்சினை வருத்தமுறச் செயயும் பரத்தையர் மனமகிழந்தாடினர் (மது. 577-583). கறபுடைப் பெண்டிர் விடியலில சிலம்பு முதலிய பொற்கலன் ஒலிப்ப வெளியே வந்தமையால திணணிய சுவர் களையுடைய இலலஙகளில் கதவுகள் ஒலித்தன (மது. 662-667). செமபினால செய்ததுபோலத தொழில செய்யப் பெற்ற நெடிய சுவரில அழகிய பல பூககளையுடைய கொடி எழுதிக கருவொடு பெயர் பெற்ற (கருப்பக் கிருகம) காட்சிக் கினிய நலல இல்லில அரசி இருத்தல (நெடு. 111-114). சாநது பூசப் பெற்ற நலல இலலின் உயர்நத திண்ணைகளிலிருந்து பசிய கிளிகள பேச்சுப பேசுதற்குக் காரணமான வளவிய ஊர் (பட். 263,264). பெரிய மலைப்பக்கத்துச சிறுகுடி மணம் செயத இலலினைப் போலக் கமழும் (மலை. 151,156). சிறுகுடிக்குச் சென்று, நனனனு டைய கூத்தன என்று கூறினால், அங்குளள வீடு களில் உங்களுடைய இலபோல வாயிலில நில்லாது புகுநது, முன்பே கிழமை உடையாரைப் போல அவரைக் கேளாமலே உறவு கொள்ளலாம் என்று கூததரிடம் ஆற்றுப்படுத்துவோர் கூறினர் (மலை. 164-166). மலை சேர்ந்த வழியினையுடைய காட்டி டத்தே செலலும்போது, இரவுக் காலத்தில் செலலு தலைத் தவிர்த்துக் கற்குகைகளில நும் இலலிற புகுந்தாற் போலப புக்குத் தங்குவீராக என்று கூத்தரை ஆற்றுப்படுத்தினர் (மலை. 254,255). தலைவியின குற்றத்தினை (களவு) செவிலி அறிநத மைக்கு அஞ்சி மிக்க ஒளி பொருந்திய நலல இல்லின் அரிய காவலைக் கடந்து தலைவனோடு சுரநெறியில் தலைவி சென்றனள் (அகம். 7.8-12). தலைவன பிரிநத காலததில் தலைவி, பல கட்டுக் களால் மாண்புற்றுயர்ந்த நல்ல இலலின் ஓரிடத்தே நின்று, பக்கத்தே பல்லி ஒலிக்குந்தோறும் அதனைப் போற்றியிருந்தாள் (அகம். 9:18,19). கூதிர்காலத் தில மழை பெய்ய உயிர்கள் துயிலும் பாதி இரவில் தலைவியரின் தந்தையர் விலங்கு வேட்டை யில் துயிலுமிடம் பெறாமல், புலித்தோல் விரித்த படுக்கையில் இல்லததே வந்து தங்கியிருப்பர் (அகம். 58.1-6). நீண்ட கொடிகள் அசையும் அங்காடிகளை யுடைய பழமையான ஊரில் கள் விற்கும நல்ல இலலின் வாயிலிடத்தே தாம் பிடிதது வந்த யானையினை வேடர் கட்டுவர் (அகம. 83:7-9). திருமணம் முடிநத பின்னர் அதததலைநாள் இரவில், சுற்றத்தார் விரைநது புகுந்து, பெரிய இற்கிழத்தி ஆவாயாக என்று தலைவியைத் தலைவனுடன கூட்டுவர் (அகம. 86:17-19). சிலா செவியளவே அறியப்பெற்ற கூட்டம அலரான அளவில் அன்னை தலைவியை இறசெறித்தாள (அகம. 90:4,5). ஓவியத் தைப் போனற புனைநத தொழில் திறம் உடையது தலைவியின நல்ல இல் (அகம. 98:11). மாலை யினைப போன்று தொடரும் ஆயததோடு தலைவி யும் தோழியும் கடலில விளையாடியும கானலில் சிற்றில அமைத்தும சிறு சோறாக்கியும் விளை யாடினர் (அகம. 110:5-8). தலைவன இரவுக் குறி வருதறகான இடையூறுகளில, திங்கள மேற்கு மலையினை யடைநது மறைந்தால இல்லிலுள்ள எலிகளை இரையாகக கொணட வல்வாயக் கூகைச் சேவல யாமத்தே குழறுவதும் ஒனறாகும் (அகம. 122:12-14). நனவின கணணும், புனையப பெறற நலல இலலில, புள நிமித்தங்கள நல்லவாகின்றன என்று தலைவி கூறினாள (அகம. 141.2,3). எந்தை இலலிடததிருபபத தலைவி இரவில தனியாகப் படப்பை செலல அஞ்சுவள எனத் தோழி செவிலி யிடம் கூறல (அகம. 158.17,18). எழுதப பெற்ற கடவுள் நீஙகியமையால பொலிவற்றுப பலி மறககப பெற்று, மெழுகாத திணணையைக கொணட சிறிய இல்லின் பறிநத இடத்தில குட்டி யீனற நாய தஙகியது (அகம. 167.15-17). மகரக கொடி யினை உச்சியிற் கொணட, முடியினை அறிய முடியாத உயர்நத மாடங்களை யுடைய நலவில் களைப் புகார் நாடு கொணடிருந்தது (அகம. 181: 20-23). வதுவை அயருங்கால் புனையபபட்ட வினைத்திறம அமைந்த நல்ல இலலில மணல கொணடு வநது பரப்புவது மரபு (அகம். 221:2-4). பகைவர் செருககினை அழிப்பதும் சேர்நதாரக்குத துன்பம் வருங்கால உதவுதலும் ஆகிய இரணடும் இலலினகணணே மடிநதிருபபோர்கது உளவாகா (அகம். 231:1-3). தாறுகள் பற்றியிழுததலால புரிய விழ்ந்த பூவுதிரபபெற்ற மாலை திரணட தோளில் அசைய, இலலின்கணணே வந்து நின்ற தலைவனை அன்னை கண்டாள் எனத தோழி சிறைப்புறங் கூறினாள் (அகம். 248:11-14). 'நாமும் நல்லிறை மெல் விரலைக் கூப்பி இல்லுறை தெய்வத்திற்குப பலி செலுத்துவோமாக' என்று தோழி, தலைவன சிறைப்புறமாகத் தலைவியிடம் கூறினாள் (அகம. 282:15-18). பகற்குறி வந்து நீங்குந் தலைவனிடம், 'எம மனைக்கு வந்தால நும் இளையரும் நீயும்

புரவியும் இன்பமுற, எம்மில்லில் தங்கும் நல்ல விருந்தாக ஏற்றுப பேணுவோம்' என்று தோழி கூறினாள் (அகம. 300:20-22). ஆறலைபபோரால் இறந்து பட்டோரின் புண்ணிலிருந்து இழியும் குருதியை உணட காக்கை ஒற்றர்போல உள்ளடங்கின குரலினவாய் இல்லிடத்தே வந்து தங்கும் (அகம. 313:13-17). அகனற இடத்தின்கண்ணே யாமரத்தின் அழகிய தளிர்களையுடைய பெரிய கிளைகள், இல்லில் இருப்பது போன்ற நிழல் செய்யும் (அகம். 343:10,11). இல்லம் காய்ந்த புலலால் வேயப்பட்டது (அகம். 370:5). தலைவியின் இல், முயற் குட்டி தாவிக் குதிக்கும் முல்லை நிலத்தே கவைக்கதிர் வரகினைக் கொணட சிற்றூரிலுள்ளது (அகம். 384: 5-7). தலைவனின பரத்தை தலைவியிடம் மெல்ல வந்து முகமனகூறி, 'நானும் நின் சேரியில் உள்ளவளே, அயலிலாட்டியாவேன, உனக்குத் தங்கையாவேன்' எனறு கூறித் தன்கையால அவளுடைய நுதலையும் கூந்தலையும் தடவினாள் (அகம். 386: 8-15). எம்முடைய இல்லின்கணணே எம்மை வயமாக்கும் சொற் கூறித தம்முடைய இலலில கையுங் காலுந் தூக்கத் தூக்கும் ஆடிப் பாவை போல மனைவி விருமபியவற்றைச் செய்கின்றான் என்று பரத்தை தலைவனை இகழ்ந்தாள் (குறு. 8.3-6). தலைவன் பிரிந்தபோது, அணிலாடு முன்றிலையுடைய தனிமையுள்ள இல்லைப போல் பொலிவழிந்து வருந்துவேன் என்று தலைவி கூறினாள் (குறு. 41:4-6). மனையுறை குருவி முற்றததே உலரும் கூலங்களை உணடு, எருவின் நுண்தாதினைக் குடைந்து இல்லின் இறப்பில் குஞ்சுகளோடு தங்கும (குறு. 46:2-5). தம் இல்லின்கணணே இருநது, தம் முயற்சியால் ஈட்டிய பொருளை உண்டது போன்ற இன்சுவை கொணடது பலாப்பழம் (குறு. 83.3,4). நள்ளிருள் யாமத்தில இல்லிலுள்ள எலிகளை உண்ணற்கு ஆராயும் காட்டுப் பூனைக் குட்டிகளுக்குக் கோழிச் சேவல் அல்கிரையாகும் (குறு. 107: 2-4). தலைவியின் இல்லிற்கருகில் நொச்சியினையுடைய ஏழிற்குன்றம் இருப்பதாகத் தோழி சிறைப்புறங் கூறினாள் (குறு. 138:2,3). தலைவன் வருவான் எனக் கூறிய நம அயலிலாட்டி அமிழ்தம் உண்க என்று தலைவி கூறினாள் (குறு. 201:1). அறிவரிடம் அறசிரக் கால வரவு கேட்ட தலைவி, அவர் ஓரிற்பிச்சை ஆரமாந்தி அக்காலத்திற்குரிய வெப்பத் தெண்ணீரைச் சேமச் செப்பில பெறுவாராக எனறு கூறினாள் (குறு. 277:3-5). இரவில் பஞ்சித் திரியேற்றிய விளககினைத கொணட நல்ல இலலில் அனனை நம முதுகினைத தழுவி அணைத்துக் கொள்ள இமைகள் பொருந்தாமல துயிலுதல இன்னாதது எனத தோழி கூறினாள (குறு. 353:4-7). நீ யெம்மைப் பிரிவாயாயின் எம் தந்தையின ஊரிடத்துள்ள எம் இல்லிற்கு அழைத்துச் சென்று விடுவாயாக' என்று தோழி தலைவனிடம் வாயில மறுத்துக் கூறினாள் (குறு. 354:3-6). தலைவன் நாடடிலிருந்து வந்த காந்தளின் இலை குழையத தழுவுதலையும் அதன் கிழங்கை இலலிற் கொணர்ந்து நடுதலையும் விலக்காத அன்னைக்கு உயர்நிலை உலகினைக் கைம்மாறாகக் கருதுங்கால் சிறிதாகும் என்று தலைவி கூறினாள் (குறு. 361). 'செறிநத வளையினையுடைய தலைவியே, நின் அறிவு முதிரும் பருவத்தில் எம் இல்லிற்கு இலலறம் நடத்த வருவாய' என்று தலைவன தலைவியிடம் முன்னர்க் கூறியதனைச் சுட்டித் தோழி அறததொடு நின்றாள் (குறு. 379). தன் வருகையை முன் சென்று அறிவிக்குமாறு தலைவனால் அனுப்பப் பெற்ற இளையர் விரைந்து சென்று தலைவியின் இற்புககு அதனை அறிவித்தல் (நற். 42:6,7) தலைவன் இனனே வருவான் என்று கூறிய நம் அயலிலாட்டி அமுதம் உண்க என்று தோழி கூறினாள் (நற். 65:1). ஆயத்தோடு இளையோர் விளையாடாமல் இல்லிடத்து இற்செறிந்திருத்தல் அறனும் அன்று; ஆக்கமும் தேயும் (நற். 68:1-3). செலவரின பல கட்டுக்கள் அமைந்த நல்ல இல்லின் உள்ளிறப்பிலிருக்கும் சேவற் புறா தன் பெடையினைக் கூட்டத்திற்கு அழைக்கும் (நற். 71:6-9). தமபால் எய்தி இரந்தவர் விரும்பும் பொருளைக் கொடுத்து அவர்தம் விருப்பத்தை ஒழித்தற்கு அரிய இல்வாழ்ககையைப் பயின்றறியாதவர் தலைவர் (நற். 84:10-12). மாலைக் காலததில் கரிய கழியிலுள்ள நீர் இல்லின் எல்லையைக் கடநது வரும் (நற். 117:2). தலைவியின இல் வளைந்த கொம்பினையுடைய எருமையின் கனறு தூண தோறும் கட்டியிருக்கும் காட்சி கொண்டது (நற். 120:1,2). தலைவி நெறிப்புடைய நெயதல் தழையை உடுத்திக் கோலம் இடுதலையுடைய சிற்றில் புனைந்து சிறந்தோடி விளையாடுதல் (நற். 123:7,8). 'இல்லிடத்தே முளைத்த வயலைக் கொடியினை ஈனற பசு தின்றதாக, அதனைக் கண்டு, தான் ஆடிய பந்தினை நிலததே போட்டு, விளையாட்டுப பாவையையும் அங்கேயே வைதது்த் தன் அழகிய வயிறறிலடித்துக் கொணடாள் என இளம் புதல்வி, இன்று தலைவனொடு அரிய சுரநெறியில் சென்றாள்' எனறு தாய் வருந்திக் கூறினாள் (நற். 179:1-3,9). தலைவன், பரததை மகளிர் பலரை முயங்கல் விரும்பித் தலைவியின் இல்லிற்கு வாராதிருக்கிறான் (நற். 180:3,4). ஓவியன சித்திரித்தாற் போன்ற வேட்டுவன் இல்லிடத்துத் தேனடை இழைக்கப்பட்டிருந்தது (நற். 268:4,5). எம் இலலில் விருந்த பொம்மலோதி யாகிய தலைவியைத தன்

சொற்படி ஒழுகச் செய்து, அழைத்துச் சென்ற வன்கண் காளையின் தாயும் எம்மைப் போலப் பெருந்துன்பம் உறுவாளாக என்று அன்னை கூறினாள் (நற். 293:6-9). கள்ளின் சாடிபோன்ற தலைவியின் இளநலம் இல்லிடத்தே தங்கிக்கெட அவள் முதிர்ந்து முடியட்டும் எனத் தோழி தலைவனிடம் கூறல் (நற். 295:7-9). உயர்புகழ் மிக்க நல்ல இல்லின்கண் தலைவி தலைவனை நினைக்குந்தோறும் சுவரைப் பொருந்தியிருந்து பல்லி நற்சொல்லைக் குறிப்பால் கூறியது (நற். 333:10-12). அருமன் என்பானது புகழ்மிக்க சிறுகுடி, குறிய கால் நட்டுக் கட்டிய மிக்க உணவையுடைய மனையின்கண்ணே கூடிய பழமையான இல்லினையுடையது (நற். 367: 4-6). அலர் கூறும் வாயையுடைய அயலிற் பெண்டிர் தலைவியின் பசலையைக் குறித்துப் பலவாறாகப் பாடி இழித்துப் பேசல் (நற். 378:6-8). தலைவன் ஒருநாள் நம் இல் வந்ததற்காக அவன் பெண்டிராய பரத்தையர் ஏழு நாள் அழுதனர் என்று தலைவி வாயில் வேண்டி வந்தவர் கேட்பக் கூறினாள் (ஐங். 32:2,3). தலைவனுடன் தலைவி உடன் போய தறிந்த அன்னை நெடுஞ்சுவர் நல்லில்லின் கண்ணே மயங்கி ஒடுங்கும் துன்பமுற்றனள் (ஐங். 386:2-4). ஐவர் (பஞ்சபாண்டவர்) என்று உலகேத்தும் அரசர் உள்ளேயிருக்க (துரியோதனன்) சூழ்ச்சியால் கைபுனை அரக்கில்லினை நெருப்புச் சூழ்ந்தது (கலி. 25:1-4). தீப்பற்றிய அரக்கில்லினை வளிமகன் (வீமசேனன்) அழித்துத் தன் சுற்றத்தோடே தப்பிச் சென்றனன் (கலி. 25:7,8). தலைவனுடைய தாரினை வாங்கிக் கொண்ட பரத்தையின் தலைக்கோதையினைத் தலைவன் (விடியற்காலத்தே வருதலால்) மனந் தடுமாறி அணிந்து கொண்டு இரண்டு அணியுங் கெடாமல் தலைவியின் இல்லிடத்தே வந்து நின்றான் (கலி. 66:15,16). பரத்தையர் இல்லினை வினவிப் பாகன் தேரோடு கூடத் திரிகின்றான் என்றும் ஆரவாரத்தினால் தலைவன் மணஞ் செய்யும் மனை என்று கருதிப் பாணன் தன்னுடைய இல்லில் புகுந்தான் என்றும் பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைவனொடு ஊடிக் காமக்கிழத்தி கூறுகின்றாள் (கலி. 68:16-19). பரத்தையர் இல்லில் வாசித்த யாழைத் தழுவிக்கொண்டுகல்லாத வாயினை யுடைய பாணன் தன்மனைக்கண் வருதல் தலைவிக்கு வருத்தத்தைச் செய்தது (கலி. 70:21-23). பாணன் கொண்டு வரும் பரத்தையரனைவரும் வருதற் கமைந்த இல்லில் விட்ட பரத்தையர், தலைவனொடு கொண்ட புலவியினாலே அழுந்தின வடுக்கள், அவன் மெய்யிற் கிடந்து பரத்தைமையைக் காட்டி நிற்றல் (கலி. 71:11,12). 'பரத்தையர் ஒழுக்கமாசிய நின் புகழ்களைக் கேட்க வேண்டாத எங்கள் இல்லத்தே, ஒரு பயனுமின்றி அறிவில்லாத அந்தணன் மிகுத்துக் கொண்டாடினான்' என்று தலைவனிடம் காமக் கிழத்தி ஊடிக் கூறினாள் (கலி. 72 17,18). தலைவி புனைந்த அணிகளைத் திருத்தியும் நீரில் விளையாடுங்கால் புறத்தே பாதுகாப்பாகச் சூழ்ந்தும் அழகிய தொய்யில் எழுதியும், தலைவியின் இல் வந்து வைகாங்கியும், தலைவன் வருந்துவது கொண்டு தோழி தலைவிக்குக் கூட்டமுண்மை உணர்தல் (கலி. 76:1-3). 'நின்பாணன் நோய் சேர்ந்த திறப்பண்ணைப் பாடி எம்மனை சேர்ந்து நின் பரத்தையர் இல்லை வினாவாமலிருந்தால் நன்று' எனத் தலைவி தலைவனிடம் கூறல் (கலி. 77:18,19). . பிறர் கூறும் அலருக்கு நாணி மறைத்த காதல் நோய் கைம்மிகப் பிறர் கூந்தலின் மண்ம வீசும் மார்பினையுடையவனாகத் தலைவன் காமக் கிழத்தியின் இல்லிற்கு வந்தான் (கலி. 78: 17,18). முடியிற் சூடிய கோதைபோலக் காமக்கிழத்தி வாடப் பரத்தையர்பால் சென்று வந்த தலைவன் தொடியினால் ஏற்பட்ட வடுவினைக் காட்டிக் காமக்கிழத்தியின் இல்லிற்கு வந்தான் (கலி. 78:21, 22). தலைவியொடு ஒப்பவளாகித் தலைமைப்பாடு கொண்டு அவளைக் காய்ந்திருக்கும், புலக்குந் தன்மையுடைய புதியவள் (பரத்தை) இல்லினுக்குத் தலைவனின் புதல்வன் சென்றான் (கலி. 82.22-24). தலைவி தன் புதல்வனிடம், 'நின் தந்தையின் காதற் பரத்தையிடம் செல்வதனைத் தவிர்த்து, நீ செல்வதற்குத் திறவதாகிய இல்லிலும் பரத்தையர் இல்லிலும் செல்லுவதனைத் தவிர்த்து எம்மைப் போலக் கையாற்றை உடையவர் இல்லில் சேறலன்றி வேறோர் இல்லில் செல்லாதே' என்று கூறினாள் (கலி. 82:31-34). தலைவி தன் புதல்வனிடம், 'ஏடா, பணைத்த தோளுடைய நின் தாய்மார் (பரத்தையர்) சூடிய கண்ணியோடே எம்மில் வருவையோ' என்று வெறுத்துக் கூறினாள் (கலி. 83:26,27). காலந்தாழ்த்துப் புதல்வனைக் கொண்டு வந்த தோழியைக் கடிந்து 'பாலூட்டும் நேரங் கடந்தமையால் பால் சுரந்து பாழாகுமாறு, இவள் தந்தையின் பரத்தையருள் யாருடைய இல்லில் தங்கியிருந்தாய் கூறுக' என்று தலைவி வினவினாள் (கலி. 84.4-9). தலைவனின் பரத்தைமை அறிந்து ஊடிய காமக்கிழத்தி, நீ பண்டைய நிலையிலில்லை; நினது பொய்ச் சூள் நினக்குப் பயன்தராது; நினக்குப் புகும் இல் பலவாகும்; ஆண்டே செல்க' என்று கூறினாள் (கலி. 90:23-25). கண்டார்க்கு இறந்துபடும் நிலையைச் செய்யும் வடிவோடு நும் இல்லிற் சேரும் முறையோடே வந்த கடவுளரை (பரத்தையரை) கண்டாயோ எனத் தலைவனைத் தலைவி கேட்டாள் (கலி. 93:18-20).

பரததையரிடமிருந்து வந்த தலைவனைத் தலைவி, 'மணக்கும் கூநதலுடைய பரததையர் இலலின்கண் செல்கின்றவனாய், இவ்விடத்துத தப்பி வந்தாய போல உள்ளாய, இவ்விடத்துப் பாராதே, நில்; பரத்தையர் மனைககண் போ' எனக் கூறினாள் (கலி. 95:1-4). 'குறியிடத்துப் பலமுறை வந்து பார்ககவும் உன்னைக் காணவில்லையே, எங்குச் சென்றாய்' எனத் தலைவனைப் பரத்தை நாட் காலையில் தலைவியின் இறகடை சென்று கடுஞ்சொற் கூறிப் புலந்தாள் (கலி. 97:3-5). தலைவன்மீது வேட்கையால் எதிர்வந்து கூடிப் பின வருநதும் பரதஹையருடைய இறகடை வழியாகக் கொண்டு போய் யானையை (பரத்தையை) அழகுண்டாகத் தலைவன் ஊர்நதான (கலி. 97:24, 25). தலைவன தன் பெண்டிர் சினவாதபடி எம் முடைய இல்லிற்கு வந்தான என்று தலைவி கூறினாள் (கலி. 97:30). தன் இல்லில் நுழையும்புதிய மலரை நாடும் வண்டினைப் போன்ற தன்மை யுடைய தலைவனை, 'நீ யார்' என்று தலைவி வினவினாள் (கலி. 98.1,2). முதிற்சூல் கொண்டபசு, அருகிலுள்ள தொழுவினுள் கட்டி வைத்துள்ள கனறினுக்காகப பொழுது விடிந்தும் இல்லிடத்தி னின்றும மேயப் போகாது சூழ்ந்து திரியும் (கலி. 110:12-14). 'நல்லாய் நீ இழைதது விளையாடும் சிறறிலைச் சிறிது புனையட்டுமா' என்று வினவிய தலைவனிடம், 'மணந்து கொண்டு ஓரில்லினை அமைக்க அறியாத நீ, பிறர் எடுதத இல்லில் இருப் பவனாவாய்' என்று தலைவி கூறினாள் (கலி. 111:9, 10). தருமணல் பரப்பி இலலினைச் செம்மண் பூசி எருமைப் பேட்டின் கொம்பினைத் தெய்வமாக வைத்துச் சுற்றத்தார் பெருமணம் நடத்துவர் (கலி. 114:12,13). வரிமணல் மிகக முன்றுறையில் சிற்றி லிழைத்து ஆயத்தாரொடு தலைவி விளையாடுவாள் (கலி.144:15,16). புதிதாக நுகர்ந்த பரத்தை இலலின் கண் தலைவன்இருக்கும்போது செவ்வணி பூட்டித் தன் சேடியை அனுப்பிப் பூப்பினை அறிவிக்க அதனால் அவன் வந்து கூடும் கூட்டத்தையுடையது கற்புமணம் (பரி. 9:19,20).

2. குடி. போர்க்களத்தில் போர் செய்து, தலைவ ரோடு தம் புதல்வர் இறந்து கிடப்பதறிந்து மூதில-மூத்தகுடி - பெண்டிர், இன்புற்று உவகையால் அழ அது கண்டு கூற்றம் இரஙகியது (புறம். 19:13-16). போரில் இறந்த வீரனின் தாயைப் 'பேரிற் பெண்டே' எனக் கழாத்தலையார் விளிக்கின்றார். (புறம. 270:6). முனனாட் போரில் தனனையும் நேறறைய போரில கணவனையும் இழநது இன்றும் போர்ப்பறை கேட்டுத் தன் ஒரே புதல்வனைப் போர்கரு அனுப்பும் தாய் 'மூதின மகளிர்' எனத் தக்காள் (புறம். 279). படை வீரர் வருக என வேந்து விடு தூதுரைக்கக் கேட்ட மூதிலாளன் (மறக்குடி மற வன்) தான் கொன்ற யானையின் கோட்டிடையே கொடுத்துத் தன் வாளின் வளைவினை நிமிர்த்திக் கொண்டு தன் வரவுகண்டு அஞ்சி ஓடுபவனைப் பார்த்துச் சிரித்தான் (புறம். 284). உலகினைப் பெறு வதாயினும் அரிய நெறியுடைய ஆயர் மகளிர்ககு இருமணம் கூடுதல் இற்பிறப்பிறகு இயைநதது ஆகாது (கலி. 114 19-21).

3. இல்வாழ்க்கை. தலைவன் தன்னிடம் உள்ளது சிறிதாக இருந்தாலும் பரிசிலர் பலராதல் பற்றி மயங்காமல, பநதர்க்கீழ் இருதநி முறை முறையாக உண்பிக்கும் இல - இல்வாழக்கை-பொலி மகடூஉப் போல அவரவர்தம வரிசைக்குத் தக அளிப்பான (புறம். 331:7-10).

**இல்லது** - 1. இன்மை (வறுமை). இரப்போரின் இல்லது -இன்மை-நோக்கி அவர் ஈயென்று கூறுதற்கு முன் குறிப்பறிந்து நல்லவர் அறத்தை விரும்பி அவர் விரும்பும் தானங்களைச் செய்வார் (பரி. 10:87,88).

2. இல்லாதபொருள். இலலதை-இல்லாதபொருளை-தேடி நிரப்பமாட்டாத வறியோரினும் பரிசில் உள்ளி வருவார்க்குப் பரிசில் கொடாதவர் இரப் போரால நச்சப்படும இன்பத்தை இழப்பர் (புறம். 203:7,8). மாலையில் தீக்கடை கோலைக் கடைந்து தீயுண்டாக்கும் கல்லா இடையன்போல மனையில் இலலதைக் குறிப்பறிநது விரையப் படைத்துக் கொள்ளும் வல்லமை யுடையவன் சீறூர்ததலைவன் (புறம. 331.4-6). பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் தனனிடம உள்ளதும் இல்ல தும் அறியாது பிறர்க்கு வரையாது வழங்குவான் (புறம். 395:39,40).

**இல்லம்** - 1. தேற்றா மரம். கார்காலத்தில் இல்லத் தின்-தேற்றாமரத்தின்-அரும்புகள் தோன்றிக் கட் டவிழ்ந்து மலர்நதன (அகம. 4:1,2). கார்காலததில் கொன்றை, தோன்றி, முலலை ஆகியவற்றோடு இல்லமும் மலர்ந்தது (அகம். 364:5-7). தலைவன் குல்லை, குளவி, கூதளம், குவளை, இல்லம் என்பன வற்றின் மலரால் புனைந்த கண்ணியை உடை யவன் (நற். 376:5,6). இல்லததின் விதை கொண்டு கலத்தில் மெல்லத் தேற்றக் கலங்கிய நீரின் சிதைவு தெளியுமாறு போலத் தலைவி தலைவனைக் கூடித் தன் சிதைவு தெளிந்து பழமை நலம் பெற்றாள் (கலி. 142:64-66).

2. வீடு. பசிபபிணி மருத்துவன் இல்லம்-வீடு-அணி யதோ சேயதோ எமக்குக் கூறுமின எனப் பரிசில பெறப் போகின்றான் பெற்று வருவானைக் கணடு வினவினன் (புறம். 173:11,12). பெருவிருநது வழங்கும்

எம் இல்லத்துத் தங்காது ஏதிலாளன் காதல் நம்பி உடன்போக்கு மேயினளே என மகட்போக்கிய தாய் வருந்தினள் (அகம். 275:9-15). உடும்பைக் கொன்று, புற்றிலுள்ள ஈயலைக் கெண்டி எடுத்து, முயலை எறிந்த வேட்டுவன் தோளில் சுமந்து வந்த பண்டங்களை இல்லத்திலே போட்டுவிட்டு மறந்து அங்கு மிகுதியாகப் பருகிய கள்ளினால் செருக்குண்டு கிடப்பான் (நற். 59:1-5). குறளன் கடும்பகல் வந்து கூனியின கையைப் பிடித்து இல்லத்துக்கு வாவென அழைத்தான் (கலி. 94:14,15). அந்தணன் (வியாழன்)பங்குவின் (சனியின) இல்லம் இரண்டாகிய மகர கும்பங்களுக்கு உப்பால மீனத்தைச் சேர்ந்தது (பரி. 11:7,8). வையை பிறந்தகமாகிய மலையை விடுத்து இருத்தற்தரிய கடலாகிய தலைவன் இல்லத்துத் தனியே செல்லுதல் இளிவரவாகும் (பரி. 11: 43,44).

**இல்லவர் - 1. பொருளில்லாதவர்.** இல்லவர்-பொருளில்லாதவர்-நிகழ்த்தும் இல்லற ஒழுக்கம் போலக் கரிய கழியில் மலர்கள் குவிந்தன (கலி. 148:6).

**2. வீட்டில் உள்ளவர்.** காவலமைந்த மனையகத்தே கிளியை முன்கை ஏந்தி நாணுடை அரிவை இல்லவர் - வீட்டில் உள்ளவர்-அறிதல் அஞ்சிப் பிரிந்த தலைவர் திறத்தில் இன்று வருவார் என்று கூறுவாயாக என மழலை இன்சொல் பயிற்றினாள் (அகம். 34:13-18).

**3. மகளிர்.** ஊடல் கண்டு அஞ்சுபவளிடம் துனி நீங்கி ஆடல் தொடங்குக; துனி நனி மிகின் காமம் கெடும்; தலைவனை வெறுப்படையச் செய்து இருளிற் பிரிந்து சேறல் பிழையாகும் என முது மகளிர் அறிவுரை கூற இல்லவர் - மகளிர் - புனலாடினர் (பரி. 6:96-101).

**இல்லாதார் - இல்லாதவர்.** கையில் பொருளில்லாதார்க்கு - இல்லாதவர்க்கு-காதலார் என்ன காரியம் செய்வார் என ஏதிலார் கூறும் சொல்லைப் பொருளாக மதித்தாயோ எனத் தோழி தலைவனைக் கேட்டாள் (கலி. 14:12,13).

**இல்லார் - இல்லாதவர்.** கண்ணியைத் தாங்க முடியாத ஆயர்மகள், மனத்திற் காம வேட்கை இல்லார் - இல்லாதவர் - ஆகிய இருடிகளும் புண்பட்டு நெஞ்சு வருந்தும்படி பார்க்கும் அதுவேயன்றி மெய் முழுதும் கண்ணை யுடையவளோ எனத் தலைவன் கூறினான் (கலி. 109:10-12).

**இல்லாள் - இல்லாதவள்.** தன் துணையை இல்லாள்-இல்லாதவள்-வருந்தினாளோ என்று கருதி இராக்காலத்து இன் துணையை யுடைய அனறில் அகவவில்லை (கலி. 131:27,28).

**இல்லான்-இல்லாதவன்.** நடுநிலையைக் கைவிட்டு நயன இல்லானாய-இல்லாதவனாய - அமைச்சன் சொற் கேட்டுக் கொடுந் தொழில் சூழ்ந்த மன்னவனின் கொடுங்கோல் போல் ஞாயிறு கதிரைச் செலுத்திச் சுடும் (கலி. 8:1-3). பொருளில்லான் இளமைபோல் தலைவன் அணி பெறாது தலைவி பொலிவழிந்தாள் (கலி.38:15). மனத்தில அறனில்லான், 'தையால், நின்னைப பிரியேன, நீ தெளிவாயாக' எனத் தெளிவித்து, என்னை மெல்ல முயங்கிய இடததிற் சென்று பாராய எனத் தலைவி திங்களிடததுத் தோன்றிய குறுமுயலைத் தலைவனைத தேடிப் பார்க்குமாறு வேணடினாள் (கலி. 144:18,35,36).

**இல்லி - துளை.** பாலின்மையின தோலொடு திரங்கி இல்லி - துளை - தூர்ந்த வற்றிய முலையைச் சுவைக்குந்தோறும் அழுகினற தன் பிள்ளை முகம் நோக்கிக் கண் கலங்கினாள் தம் மனைவி எனப் பெருந்தலைச் சாத்தனார் தமது குடும்ப வறுமையினைக் குமணனிடம் புலப்படுத்தினார் (புறம். 164:3-8).

**இல்லுறை கடவுள் - வீட்டுத்தெய்வம்.** சானறோர் குறிப்பிட்ட திருமண நாள் **விரைவில் வருக** என மெல் விரல் கூப்பி வணங்கி இல்லுறை கடவுளுக்கு - வீட்டுத் தெய்வத்திற்கு - பலி செலுத்துவோம் எனத் தோழி தலைவியிடம் கூறினாள (அகம். 282:16-18).

**இல்லெலி - வீட்டெலி.** உணவில்லாததால் தம வீட்டில பல இடத்தையும் தோணடிப் பார்த்து இல்லெலி - வீட்டெலி-பழைய சுவரிடத்து மடிந்து கிடக்கும் எனத் தம் வறிய நிலையைப் பெருங்குன்றூர் கிழார் சுட்டுவர் (புறம். 211:18,19). ஊரனொடு வதிந்த போது இனிய துயிலை எழுப்பிய சேவல நள்ளிருள் யாமத்து இலலெலி பார்க்கும் காட்டுப் பூனைக் குட்டிக்கு இரையாகித் துன்புறுக எனத தலைவி கடுமொழி கூறினாள் (குறு. 107).

**இல்லோர் - வறியோர்.** விண்ணுலகத்தவர் தாம் செய்த நல்வினையால் இனபமெயதுவ தல்லது செல்வமுடையோர் ஈதலும் இல்லோர்-வறியோர்-இரத்தலும் ஆகிய செயலகள் விண்ணுலகிற் செய்யக் கடவ தன்மையின் அவ்வாழ்க்கை கையறவுடைத்தெனக் கருதுவர் (புறம். 38:12-15). 'ஆண்மையும் சாயலும் வண்மையும் கொண்டு இல்லோர் இலலையாக நீ வாழ்க' என இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை மருதனிள நாகனார் வாழ்ததினார் (புறம். 55:13-17). செல்வம உண்டாயின உணவினைக் கொடுத்து இல்லாயின் உள்ளதனைப் பலரோடு கூட உணணும் இலலோர் சுற்றத்திற்குத் தலைவன் அதியமான் நெடுமான் அஞ்சி (புறம்.

95:6-9). சீறியர்மையுடைய இல்லோரின் புகழ்மாலை சூடுபவன் நல்லியக் கோடன் (புறம். 176:6,7). நல்ல புகழை நிலை நாட்ட உலகத்தில் இல்லோர் துன்பம் நீங்க நல்குபவன் இளஞ்சேரலிரும்பொறை (பதி. 86:5,6). இல்லோர்க்கு இல்லையென்று மறைக்கும் வலிமையில்லாத நெஞ்சம் தூண்ட அருஞ்சுர வழிகளைக் கடந்து ஈட்டும் பொருளிடத்திலேயே தலைவருக்கு நம்மிடமுள்ள காதலினும் மிகுந்த காதலுள்ளது என்பது தலைவி கூற்று (அகம். 53: 12–15). இருள்படு நெஞ்சத்து இடும்பை தீர்க்கும் அருள் நன்குடைய ராயினும் பொருளில்லோர்க்கு ஈதல் தன்மை இயையாது (அகம். 335:1-3). ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கில்லை என்று தலைவன் நெஞ்சம் பொருளீட்ட விரும்பியது (குறு. 63:1,2). தம் முயற்சியால் பொருளீட்டாது முன்னோர் ஈட்டிய பொருளைச் சிதைப்பவர் உயிருடையவர் எனக் கருதப்படமாட்டார், இல்லோர் வாழ்க்கை இரத்தலினும் இளிவு எனக் கருதித் தலைவன் பொருளீட்டப் பிரிந்தான் (குறு. 283:1-4). இல்லோர் தம் துன்பத்தை ஈகையால் தணிக்க வல்லவன் போன்ற வன்மையுடையவன் தலைவன் (கலி. 47:5,6).

2. மகளிர். இல்லோர் - மகளிர் - தாம் நயந்த காதலரின் முயக்கப் பிணிப்பில் துயின்று விடியலில் துயில் நீங்கிக் கண்ணைப் பறிக்கும் மின்னுக்கொடி போன்ற பொலங்கலம் ஒலிப்ப நடந்துவந்து கதவந் திறந்தனர் (மது. 662-667).

3. இல்லாதவர். மயக்குறு மக்களை இல்லோர்க்கு - இல்லாதவர்க்கு - தாம் வாழுநாளில் பயனாகிய முடிக்கப்படும் பொருளில்லை (புறம். 188:6,7). மிகப் பெருந் துன்ப மெய்தினும் சிறிதும் உணர்ச்சி இல்லோரது உடைமையை உள்ளோம்; நல்லறிவுடையோர் நல்குரவை உள்ளுவோம் என மாடலன் மதுரைக்குமரனார் கூறுவர் (புறம். 197:15-18). கசடு நீங்காத உள்ளத்தினையுடைய தெளிவு இல்லோர் நல்வினை செய்வோமோ மாட்டோமோ என்று கருதி ஐயம் நீங்கார் (புறம். 214:1-3). இவ்வுலகில் நாணும் நட்பும் இல்லோரைத் தேடிப் பார்த்தால் என்னை யல்லது வேறு யாருமில்லை எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 268:8,9).

4. வீட்டிலுள்ளோர். நம் இல்லோர் - வீட்டிலுள்ளோர்-செய்யும் நகைப்புக்கிடனான வெறியாட்டுச் செயலை நாம் சிறிது காணத் தலைவன் வெறியாடு மிடத்து வருவானாக எனத் தலைவியிடம் தோழி கூறினாள் (குறு. 111).

**இல்லோள் – இல்லாதவள்.** ஒரு மகனல்லது வேறு மகனை இல்லோள்-இல்லாதவள் - இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கித் தன் மகன் கையில் வேல் கொடுத்து வெள்ளாடை உடுத்திக் குடுமியில் எண்ணெய் நீவிச் செருமுகம் நோக்கிச் செல்கென விடுத்தாள் (புறம். 279:7-11).

**இல்லோன் - இல்லாதவன்.** மடியால் மேற்கோள் இல்லோன்-இல்லாதவன்-யாக்கை போலப் பாணனின் சுற்றம் பொலிவிழந்திருந்தது (புறம். 69:4-6). பொருளில்லோன் இன்பத்தைக் காமுற்றால் அது கைகூடாது (குறு. 120:1).

**இல - இலவம்.** கான்யாறு எரிபரந்தது போன்ற இல-இலவம்-மலர் விரவப்பெற்ற பூ நீர் சுமந்து சென்றது (அகம். 133:9,10). செந்நாவிற்கு இலமலர் உவமை (அகம். 142:1). இலவம், இலவு காண்க.

**இலக்கம்- 1. விளக்கம்.** கார்ப்பருவம் வாய்த்தலையுடைய மேகம் இருபாலும் அணிந்த இருசுடர்களின் இலக்கம் – விளக்கம் - போலச் சக்கரமும் சங்கும் ஏந்திய கையொடு கரிய திருமால் விளங்குவர் (பரி. 13:7-9).

2. குறி. கிடுகுப் படைகள் தைத்த அம்புகளால் துளை தோன்றுவன நிலையில் தப்பாத இலக்கத்தை -குறியை– ஒத்தன (புறம். 4:5,6). காட்டுச் சிற்றாற்றின் கரையிடத்துக் காற்று மோத நடுக்கத்தோடு சாய்ந்த இலக்கத்தை ஒப்ப உடம்பு அம்பாற் சலித்து வீழ்ந்தது (புறம். 260:21-24).

**இலங்கை - ஓர் ஊர்.** இது மாவிலங்கை எனவும் வழங்கும். பன்றி உழுத சேற்றை விளையாட்டு மகளிர் கிளறின் யாமையின் புலால் நாறும் முட்டையை ஆம்பலின் கிழங்குடனே பெறுதற் கிடனானதும் நீர் வழங்கும் வாய்த்தலைகளை யுடையதுமான பெரிய மாவிலங்கை என்னும் ஊர்க்குத் தலைவன் நல்லியக் கோடன் (புறம். 176:1-7). பழைய பெருமை மிக்க இலங்கையின் பெயரைக் கருப்பதித்த நல்ல வேளையில் தனக்கும் பெயராக உடைய இலங்கையை யாண்ட மன்னருள்ளும் மறுவின்றி விளங்கியவன் ஓவியர் குடியில் வந்த நல்லியக் கோடன் (சிறு. 119-122).

**இலங்கை கிழவோன் – இலங்கைக்குரியவன் (வில்லியாதன்).** நெல்லை அரியும் உழவர் அரிவாள் மழுங்கினால் பின் மறங் குன்றாது அரிவதற்காகக் கல்லெனக் கருதி யாமை முதுகில் தீட்டும் நெற்பயிர் விளையும் வயலை யுடைய இலங்கை கிழவோன் வில்லியாதன் (புறம். 379:3-7).

**இலஞ்சி - 1. மடு.** நீர் மிக்க இலஞ்சியின்-மடுவின்-ஆழத்தில் முதலைகள் ஒன்று சேரத் திரண்டோடி, இடையாமத்தில் காவல் புரியும் ஊர்க்காவலரின் விளக்கு நிழலைக் கதுவும் (புறம். 37:8-10). கழனிகளிலும் இலஞ்சிகளிலும் பொய்கைகளிலும் வலைஞர்

மீன்களைப் பிடித்து விற்பர் (மது. 247,248,253, 256). ஒளி விளங்கும் பூக்களை யுடைய இலஞ்சியைக் கொண்ட ஆற்றின் கரையில ஒரு வழியினை யுடைய ஊரில, கோயிலில் வணங்கற்குரிய கடவுளைக் கண்டால, நும் வாத்தியங்களை ஒலிக்காமல் வணங்கிச் செல்க என்று கூத்தரை ஆற்றுப்படுத்தினர் (மலை. 228-232). நீலமணி போலும் மலர்களைக் கொண்ட முள்ளி நிறைந்திருக்கும் நீர் நிறைநத இலஞ்சியில பிடித்த மீனின கொழுங்குறையினை நெல அறுப்பவர் உண்பர் (அகம். 236: 1-4).

2. குளம். வலைஞர் வலையால் முகநது கொள்ளுமாறு மீனகள் மிக்க இலஞ்சியில - குளத்தில் - உயர்ந்து விளங்கும் தாமரை இலை காற்று வீசுந்தோறும் யானையின காதுபோல அசையும் (அகம். 186:2-6). பிணங்கிய கொடியினைக் கொண்ட பிரம்பின் கனியினை, ஆழமான நீரினைக் கொண்ட இலஞ்சியில் கெண்டை மீன பற்றி உண்ணும் (குறு. 91:1,2). குரங்குக் குட்டி தன்மீது இருத்தலால வளைந்த மூங்கில், அது பாய்தலால இலஞ்சியில் மீன் எறியும் தூண்டில் போல நிமிர்ந்து உயரும் (ஐங். 278:1-3).

3. பொய்கை. பழமையான நீர் பொருந்திய இலஞ்சியில் - பொய்கையில் - பூத்த குவளையின் மலர்களை எதிர்வைதததுத் தொடுத்தது போனறன தலைவியின செவ்வரி படர்ந்த கணகள் (நற். 160: 8-10).

4. மகிழமரம். நிழல் முதிர்ந்த இலஞ்சி - மகிழமரம் - பொருநதிய பழனத்தில் வீரனைப் போனற கொம்புடைய எருமை, மகளிரனன தன் துணையொடு தங்கியிருநதது (ஐங். 94:1-3).

**இலம்** 1. வறுமை. இலமபடு - வறுமை பொருந்திய - புலவரின் (யாழ்ப்புலவரின்) ஏற்கும் கலங்கள் கொண கானங கிழானுடைய மார்பினை மலர்ந்து நோக்கின (புறம். 155:6-8). நாஞ்சில் வள்ளுவனைப் பாடியமையால புலவர் சுற்றம், உலகம் இலம்படு காலையாயினும், புலம்பல் நீங்கப் பெற்றது (புறம். 380:14-16). இலம்படு புலவர் ஏற்றகை நிறையும்படி பேரணிகலனகளைச் சொரிதலினால் கவிழ்ந்த கழல் தொடிக் கையை உடையவன் நன்னன் (மலை. 576, 577). இலத்தாற் பற்றப்பட்ட புலவரின் ஏற்றகை நிறையுமாறு வழுதி பொன்னைச் சொரிநதனன். இது, வையையாறு வயலில் பொன்னைப் பரப்புதற்குவமை (பரி. 10:126-128).

2. இல்லம். பொய்கையில் இரை விரும்பி எழுந்த நாரை வாளைமீனை உணபதற்காக, தன் அடி (பெயர்த்திடும்போது உண்டாகும்) ஒலியை அறியாதிருக்கும்படி, காவலமைந்த இலம் - இல்லததில - புகும் களவனைப் போனறு மெலல இயங்கும் (அகம். 276 1-5).

**இலம்பாடு** – வறுமை. மருத நிலத்தூர்களை முன்னர் இரவலர்க்கு கொடுததமையால தலைவன, இலம பாடு - வறுமை - உறற சுற்றததினையுடையவனுககுக் கரம்பை யுடைய சிறிய ஊரைக் கொடுததான (புறம். 285,15-17). சோழன் செருபபாழியெறிந்த இளஞசேட் சென்னியைப் பாடிய ஊன பொதி பசுங்குடையாரின் இலம்பாடுழநத சுறறம் அரிய கலனகளை இனிதாகப பெறறது (புறம. 378:11-13). ஈயாத செலவம் மிக்க வேந்தர் முற்றததில நினறு தடாரிப் பறையறைந்து தாளத்தோடு கிணைஞன் பாடினாலும் இலம்பாட்டினை யகற்றுவது இயலாது (புறம். 381:11-15).

**இலவந்திகைப் பள்ளி** - ஓர் இடம். சோழன் நலங்கிள்ளி சேட்சென்னி இவ்விடததினில துஞ்சியமையால சோழன் இலவந்திகைப் பள்ளித துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி என்று பெயர் பெறறான (புறம். 61. அடிக்குறிப்பு). பாண்டியன் நனமாறன் இவ்விடத்தில் இறந்தமையால் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித துஞ்சிய நன்மாறன எனப் பெயர் பெற்றான் (புறம. 55,56,196,198 - ஆம பாடலகளின அடிக்குறிபபு).

**இலவம்** – ஒருவகை மரம். நீணட அடியுடைய இலவத்து – இலவமரத்தின் - காயத்த பஞ்சினையுடைய பசிய காய முதுகு விரிநது பஞசு தோனறும காடசி வரிப்புற அணிலின் தோற்றததிறகு உவமை (பெரு. 83-85). தலைவியும் தோழியும் பறித்துப பாறை மருஙகில் தொகுதத மலர்களில இலவம் பூவும் ஒனறு (குறி. 86). காட்டில் இலை அற மலர்ந்துள்ள அரும்பில்லாத இலவம் பூககள் மகளிர் எடுத்த (கார்த்திகை) விளக்கின வரிசை போலத் தோன்றின (அகம். 11:2-5). அருஞ்சுர வழியில் நீணட அடியினை யுடைய இலவத்து முதிர்ந்த பூககள் விழவுடைய ஊரில் ஏற்றப்பட்ட நெய் பெறற விளககின சுடர் விழுவது போலக் காற்றால உதிர்ந்தன; எஞசிய மலர்கள் விடியற் காலத்தே காணபபடும் விண்மீன் போனறு தோன்றின (அகம். 17:17-20). கூட்டமான வண்டுகளால் உதிர்க்கப்பட்ட இலவம் பூக்களின்மேல் கோங்கினுடைய நுணணிய தாதுககள் படிந்து கிடப்பது, பொன் விறபவர் பவளச செப்பில பொன் சொரிந்து வைத்தது போலக் காணப பட்டது (அகம். 25:9-11). இலையிலலாதனவாய, பல இலவம் ஒருங்கே மலர்ந்திருப்பது (கார்த்திகை) பெருவிழாவிற்கு இடும் விளக்குப போலக் காணப

பட்டது (அகம். 185:11,12). நிழல்படக் கவினிய நீணட அரையினை யுடைய இலவத்தின் மலர்கள் எரி தளிர்த்தாற் போலத் தோன்றும். அவற்றில் வணடுகள் குழல்போல இசைக்கும் (அகம். 245:14-16). களிறு தன் முதுகினை உராய்ந்து கொண்ட கரிய காலை யுடைய இலவத்தின் விதையாகிய வெள்ளிய கொட்டை ஆலங்கட்டியைப் போலப் பாறையிலே பரவிக் கிடக்கும் (அகம. 309:6-8). காய்நத கொடி சுற்றிய முட்கள் பொருந்திய அடியையுடைய இலவத்தின் கிளை நடுங்கி முறியும் படி காற்று வீசுதல் (நற். 105:1-3). முள்ளுடைய அடியினைக் கொண்ட இலவத்தின் கொத்தான பெரிய பூக்கள வெப்பக் காறறு வீச இடியில் தோன்றிய தீயைப் போல உதிரும (ஐங். 320:1-3). இலை யில்லா நனவாய் மலர்ந்த ஓங்குநிலை இலவம் மலையில் தோன்றிய தீயினைப் போலச் சுரத்தில காணப்பட்டது (ஐங். 338:2, 3). வேனிற் காலத்தே நெருப்புப் போன்று உதிர்ந்த இலவத்து மலர்கள் புனக மரத்தின் புகர் நிழலில் அழகு செய்யும் (ஐங். 368:1-3). மலர்ந்த முள்ளுடைய இலவ மரத்தில ஏறிய மயில எரிபுகு மகளிரைப் போன்று காணப்படும் (ஐங. தி. 3·1-3). இலவமலர் இடபக் கொடியுடையோனை (சிவனை) போன்று விளங்குதல் (கலி:26.5). நெருப்பின் உருவினைப் போல இலவம் மலர்ந்தது (கலி. 33.10). பரங்குன்றில் கோஙகும் அதனோடு நிறத்தால் மாறுபட்ட இலவமும் வரிசையாக மலர்ந்திருந்தன (பரி. 19:79, 80). இல' இலவு காண்க.

**இலவு** – இலவ மரம். பாடினியின் இன் மொழித் துவர் வாய்க்கு இலவிதழ் உவமை (பொரு. 27). இல, இலவம் காணக.

**இலாட்டி** – மனைக்கிழத்தி. மலைகெழுநாடன் மணக்க வருவான் எனக் கூறிய அயலிலுள்ள இலாட்டி–மனைக்கிழத்தி – அமிழ்தம் உண்க எனத் தலைவி வாழ்த்தினாள் (குறு. 201:1).

**இலை** - 1. மரஞ் செடி கொடிகளின் உறுப்பு (இலை). கார் காலத்து நறிய கடம்பின் பசிய இலையொடு விரவிய மாலை உடையவன் முருகன் (புறம். 23:3, 4). நூறறிதழ்த் தாமரை நிரைபோலச் சிறந்த குடியிற் பிறந்து உரையும் பாட்டும் உடையர் சிலர்; அதன் இலை போலப் பயன்படாது மாய்ந்தோர் பலர் (புறம். 27:2-6). புலராத பசிய இலையை இடையிட்டுத் தொடுத்த மலரா மாலைப் பந்து போன்றது, தசையொடு கூடிய பெரிய சோற்றுத் திரள் (புறம். 33 14-11). பெரிய மரத்தின் இலையில்லாத நெடிய கோடு வற்றல் பற்றுவது, தீயது காட்டுங் குறிகளில் ஒன்று (புறம: 41:5). இடையன் பசிய இலையால் தொடுக்கப்பட்ட தழைக் கண்ணியையும் மாசுண்ட உடையையும் அணிந்திருந்தான (புறம. 54:10, 11). நெலலி சிறிய இலையினை உடையது (புறம. 91:9). குவிந்த பூங்கொத்தினையும் புலலிய இலைகளையும உடைய எருக்கம் பூவாயினும் கடவுள் விருமபேம் எனக் கூறா (புறம். 106:1-3). பாரியின் பறம்பு உழவர் உழாமல் பெற்ற வளங்களில ஒன்று, சிறிய இலையை யுடைய மூங்கில நெல (புறம. 109 3, 4). பாரி மகளிர் சிறிய மனையிடததே பீர்க்கு முளைத்துச் சுரை படர்ந்த இடததில, ஈத்திலை யுடைய குப்பையினகணணே ஏறி உமணரின் உப்பு வணடியினை எணணினர் (புறம். 116:6-8). பசிய இலையை யுடைய முல்லை, இளைய வெருகின் பல்லினைப் போல அருமபினை ஈனும் (புறம். 117:8-10). குதிரை மலைக்குத் தலைவன், சமைத்த உணவினை மல்லிகை மணக்கும் முற்றத்தில் வளவிய குலையுடைய வாழையின் அகன்ற இலையில் பலருக்கும் பகுத்துக் கொடுத்துண்பான் (புறம. 168:12-14). படைக்கலம் கற்கும் இளைய கோசர் அகன்ற இலையை யுடைய முருகக மரத்தினால் செய்யப்பட்ட தூணினை இலக்காக நிறுத்தி அதனொடு மாறுபட்டுப் பொருது பயில்வர் (புறம்.169:9-11). மலையில் ஓங்கிய பசிய இலையுடைய பலவின் கனியை உணட கடுவன் மநதியொடு மூங்கிலில உறங்கும் (புறம். 200: 1-5). இப்போது புல்லென் சடையொடு அள்ளிலைத் தாளி கொய்பவன் முன்பு மகளிரைப் பிணிக்கும சொல்வலை வேட்டுவனாக விளங்கினன (புறம. 252: 2-5). நிரை கவாநத வீரர் ஆநிரையோடு போகாமல், மீட்க வருவாரைக் குறித்து, இலை புதை பெருங்காட்டில் தலைகரந்திருப்பர் (புறம். 259: 1-3). வீரர் பசிய இலையோடு மணங் கமழும் தும்பைப்பூ மாலையினை நுதலில அணிதல் (புறம. 283: 14, 15). உடைமரம் சிறிய இலை உடையது (புறம. 324: 4). கடல் சூழ்ந்த இப் பெருங்கண் மாநிலத்தில் உடை மரத்தின் இலையளவும் பிறர்க்கின்றி ஆணட மன்னர் மணலினும் பலராவர் (புறம். 363: 1-4). பாணனின் கநதல ஆடைக்கு, ஊருணு கேணியிலுள்ள பெரிய இலையுடைய நீர்ப்பாசியின் வேர் உவமை (புறம். 392:13, 14). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை அறியாமையால் எதிர்த்த பகைவர் நாடு புல்லிலை வைப்பினைக் கொண்டது (பதி. 15:13). கறங்கும் இசையுடைய சிள்வீடு பொருந்திய பொரிந்த அடிமரத்தினையும் அதன்கண சிறிய இலைகளையும் உடைய வேலமரத்தினை மிகுதியாக உடைய காட்டினைக் கொண்டது ஆடு கோட்பாட்டுச் சேரலாதனின் புன்புலம் (பதி. 58:12-15). உன்ன மரம் பொன் போன்ற பூவையும் சிறிய இலைகளையும் புல்லிய அடியையும் உடையது (பதி. 61:5,6). சிறிய இலை

யினைக் கொண்ட உழிஞைமாலை சூடிக் கொள்ளை மிகுதியாக உண்டாகத் தமிழ்ப் படை யனைத்தை யும் இடையறப்படுத்திக் குனறினை நிலைதளரச் செய்யும் இடியினைப் போலச் சினந்து, ஒரே வளைப் பில் சோழ பாண்டியரை வென்ற ஒள்ளிய வாளை யுடையவன் செல்வக் கடுஙகோ வாழியாதன் (பதி. 63:8-12). இலையினைக் கொண்ட நறிய பூங் கொத்து, தழையுடையின் இடையிட்டுக் கட்டப் பெறும் (முரு 201). வலையினை மேலே கட்டினது போன்றுள்ளது, இலையில்லாத மரா மரத்தின் நிழல் (பொரு. 50). கெர்ழுமீன் துணிபட நடந்து சென்று கழுநீர்ப் பூவினை உண்ட எருமை, மிளகுக் கொடி படர்ந்த பலா நிழலில், மஞ்சளின இலை முதுகினைத் தடவ, அசைபோட்டுக கொணடு காட்டு மல்லிகைப படுக்கையில துயிலும் (சிறு. 41-46). பாதிரி பின்பனிக்காலத்தில் பசிய இலைகளை உதிர்த்தது (பெரு. 4). உமணமகளிர் வண்டிகளிற் செல்லுங்கால் கொமபிடத்தே பூங்கொத்துடைய வேம்பின் மேன்மையான இலையைப் பிள்ளை களுக்குக் காவலாகக் கொண்டிருப்பர் (பெரு. 59,65). வேலின தலைபோன்ற கூரிய முனையுடைய ஈநதின் இலையால் வேயப்பட்ட குடிசையின புறம் எய்ப் பன்றியின் முதுகு போல இருந்தது (பெரு. 87,88). பாணர் எயிற்றியரின் இடத்தை யடைந்தால், தெய்வங்கட் கிட்ட பலியைப் போலத் தேக்கிலை யில் குவித்துவைத்த புழுக்கலையும் வாடூனையும் பெறுவர் (பெரு. 94, 104,105). இள மரக் காவில் காஞசி மரத்தைச் சூழந்த நெடிய கொடி யையும் பசிய இலையையும் உடைய குருக்கத் தியின் பூக்கள் வட்டமான குழிகளில் இருந்த நீரில் விழுந்தன (பெரு. 374-379). முலலை நிலத் தில் நுணமண விடத்தனவாகிய இலையினை யுடைய காயா அஞ்சனம் போல மலாந்தன (முல்லை. 92,93). பொயகையில் வண்டுகள் தங்கும மணமிக்க தாமரை, நெய்தல், நீலம், மெல்லிலை அரி ஆம்பல முதலிய மலர்கள் இருந்தன (மது. 249-253). இலை வேய்நத குடிலில் (மான்) தோல் படுக்கையையும் உவலைக் கண்ணியையும் கடிய சொலலையுமுடைய இளையர் இருந்து வழியினைக் காத்தல் (மது. 310 312). நாளஙகாடியில நீடிய கொடியிலை (வெற்றிலை) விற்போரும் இருந்தனர் (மது. 401). தலைவியும் ஆயமும் பறித்துப பாறை யில தொகுத்த மலர்களில குருகிலையும (முருககிலை) ஒன்று (குறி. 73). கோழிலை யுடைய வாழையின் பெரிய குலையிலுள்ள பழங்களும் பலாச சுளையும் கலந்ததால் விளைந்த தேறலைப் பாறையின் கண்ணே அமைந்த சுனையில ஊறிய நீரெனக கடுவன் உண்டது (அகம. 2.1-5). பாலை நிலததின் நெடிய வழியில் புல்லிய இலைகளை யுடைய மரா மரங்கள் இருநதன (அகம். 3:11). ஞாயிற்று மண டிலம் நெருப்பெனச் சிவநது வெப்பம் மிக்கு விளங் குங் காட்டில் இலையிலவாய் மலர்நதுள்ள இலவம் பூக்கள், மகளிா எடுத்த (கார்த்திகை) விளககின் நிலை போலத் தோன்றின (அகம். 11:1-5). மழை மாறிய வேனிற் காலத்தில இலையின்றி உயாந்து விளங்கும் யாமரததின் மேறகிளையிலிருநத குஞ்சு கட்குக் கழுகு, வயவர் வில்விட இறநதவரின கண களைப் பறித்து உணணக் கொடுக்கும் (அகம. 31: 4-11). நெருங்கிய இலையுடைய அறுகின் சிவந்த தண்டினொடு மெலலிய கொத்துககளைக் கலை மான் தனபெடையை உணணச் செயதது (அகம். 34:4-6). புலலிய இலையையும் பருதத அடியினையு முடைய நெலலியின் இனிய புளிபபுடைய திரண்ட காயினை மரைமான் கூட்டம உண்ணும் (அகம. 69:6-8). கடற்கானலில் ஒளியுடைய இலையொடு பொலிந்து விளங்கும் புன்னையின் பூங்கொத்து பொன்னைப் போனற தாதுக்களைச் சொரியும் (அகம. 80:11-13). உடன போகிய தலைவன தலை வியர் சென்றகாடு சிறிய இலையுடைய வேலமரத் தின் முற்றிய நெற்றுக்கள் உதிர, சிளவீடெனனும வண்டு ஒலிக்கும ஆரவாரம் மிக்கது (அகம். 89: 6-8). உசசி மலையின பக்கத்தில செறிநது குவிந்த இலைகளையுடைய முசுணடையின வெணபூக்கள, வானம் மீன பூததது போல நளளிரவில மலாநதன (அகம். 94:1-3). வெள்ளாட்டுக குட்டி புனறலைச் சிறாரொடு குதித்துச் சென்று மனறில் கவையிலை யுடைய ஆததியின் அழகிய தளிரைக கடிககும (அகம. 104:9-12). தலைவன் பாறையிடத்தே அரும்பு முதிர்ந்து மலர்ந்த வேஙகையினது ஒள்ளிலை விரவிய மாலையை அணிநது வநது தலைவியைப் பாராட்டல் (அகம. 105:1-3). புலியுண டெஞ்சிய காய்ந்த தசையை வழிசசெலவோா, மூங்கில அரிசி யோடு கூட்டித் தயிர் பெய்து சமைத்த நிணத தினை உருகச்செய்த வெண சோற்றினைத் தேககின அகன்ற இலையில வைத்து உணபர் (அகம. 107: 5-10). தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்குங்கால, 'மெல்லிய இலைபபரப்பில நீவிர் அளிககும் விருந தினை உணடு இச்சிறுகுடியில தஙகினால் குறை யாகுமா' என்று தலைவன தம்மிடம் கூறியதனை உரைத்தாள் (அகம.110:12,13). காட்டில பாறையைச சேர்நதிருந்த சிதைநத சிறுகுடிலில தாழியில தழைத்த இலையுடைய பருத்தியின இளங்காய களை ஆணபறவைகள தம் பெடைகட்கு ஊட்டும் (அகம். 129:5-8). தலைவியின் தாழந்திருணட கூந் தற்கு, இகணை மரத்தின பசிய மெலலிய இலை களை நெறிதது வைததிருப்பது உவமை (அகம.

131:1-3). மென்பூ வாகையின் புன்புறத்தை யுடைய கவட்டிலையினை அறுகம்பாலை அரும்புடன்வெண் ஆூலிற் கட்டி மணமகளுக்குச் சூட்டுவர் (அகம். 136:10-14). பங்குனி விழாவிற்கு அடுத்த நாளில் மலர்களும் இலைகளும் செறிந்த மரமடர்ந்த காட்டில் நெருப்பில்லாத வறிய அடுப்புக்களை யுடைய ஆற்றிடைக் குறைபோலத் தலைவியின் நுதல் அழ கிழந்து வறிதாயிற்று (அகம். 137:9-12). வேனிலில் கடுங்கதிர் தெறுதலால், நெடிய சினைகள் வறிதாகு மாறு தேக்கின் அகன்ற இலைகள் காற்றால் உதிர்க்கப்படும் (அகம். 143:2-5). பன்றி நீலமணியைப் போன்ற அகன்ற இலையுடைய சேம்பின் வளமான கிழங்கினை உண்டது (அகம். 178:2-5). வெனிலால் துயருழந்த காட்டில் இலையில்லாதன வாய் ஒருங்கே மலர்ந்த இலவ மரங்கள் பெருவிழா (கார்த்திகை) விளக்குப் போலக் காணப்படல் (அகம். 185:9-12). இலஞ்சியில் தழைத்த தாமரையின் நீருக்கு மேலே உயர்ந்த நெடிய காம்பினையுடைய அகன்ற இலை காற்றடிக்குந் தோறும் யானைக் காது போல அசையும் (அகம். 186:3-6). கொல்லை உழுபவர் கூழ் உண்டற்கு நிலையாக விட்டு வைத்த வலிய இலையுடைய குருந்த மரத்தின் கிளையிலிருந்து மகளிர் கிளி கடிவர் (அகம். 194: 13-15). வரால்மீன் துண்டினை விற்றுக் கள் ளுண்டு, மீண்டும் மீன் வேட்டைக்குப் போகாமல் உறங்குங் கணவர்க்கு மனைவியராகிய பாண் மகளிர், ஆம்பலின் அகன்ற இலையில் சோற்றைப் பிரப்பங்கனி பெய்து விடியற் காலத்தே வழங் கினர் (அகம். 196:3-7). அற்சிரக் காலத்தில் பசிய இலை நெருங்கிய புதல்தோறும் பகன்றை மலர்கள் வெளிதாகக் கிடுகிற் பதித்த வட்டக் கண்ணாடி போல மலரக் கொழுத்த இலையுடைய அவரையின் வளவிய அரும்புகளும் மலர்ந்தன (அகம். 217:6-9,13). பால் பெய்த கிண்ணம் நிரம்பியமைக்குப் பெரிய இலையினை யுடைய பகன்றைப்பூ பனிநீர் நிறையப் பெற்றமை உவமை (அகம். 219:3-5). மலைவிடர் களில் வளர்ந்த சிறிய இலைகளை யுடைய சந்தன மரத்தின் மெல்லிய கிளைகள் தீண்டுமாறு, தேனடை தொங்கும் உச்சியினை யுடைய மூங்கி லைக் கொண்டது தலைவனுடைய மலைநாடு (அகம். 242:19-22). கருவிளைப் பூவினொடு மாறு பட்ட பகன்றை மலர்களின் அகலிதழை அசைத்துப் பாகற்கொடிகள், கூதாளியின் முதிய இலைகளை யுடைய கொடிகளின் கூட்டத்தில் கிடந்து அசையும்படி வாடை வீசும் (அகம். 255:11-15). பின்னிய தூறுகளையுடைய வள்ளைக் கொடியின் நீண்ட இலைச் செறிவில், யாமை துயில் மடிந்து கிடக்கும் (அகம். 256:1,2). நிலம் நீரற்றமையால் உண்டான வெப்ப மகல மழை பெய்தலின், மரங்கள் முதிர்ந்த இலைகளை நீத்துக் குறிய தளிர் களை ஈன்றன (அகம். 259:3-5). பல எருதுகள் கொண்டு உழுத புன்செய் நிலத்தில், இடப் பெறுவன இடப்பெற்றமையால் தழைத்து இலைகள் நிறைந்த பயற்றில் பசு புகுந்து மேய்ந்தது (அகம். 262:1-4). முருமுயலின் கண்களுக்குச் சிறியிலை நெல்லியின் காய்கள் உவமை (அகம். 284:1,2). கோடையில் வானம் பெயல் வளம் கரப்பக் கானம் காய்ந்து இலைகள் இல்லாதன வாயின (அகம். 291: 1,2). சுரநெறியில் சிறியிலை நெல்லித் தீங்கனித் திரள்காய் உதிர்ந்து கிடப்பனவற்றை மான்பேடு உண்ண நினைத்துக் கலைமான் கூவி அழைக்கும் (அகம். 291:16-20). இலைகளை உதிர்த்துப் பொலி வற்ற உச்சிகளை யுடைய உலவை (வேல) மரத்தில் வலை கட்டியது போலச் சிலம்பி நூல் பலவும் ஒருங்கே சூழ்ந்திருந்தன (அகம். 293:1-3). கடிய காற்றாற் பறிக்கப்பட்டுக் காம்பின் நீங்கிய தேக் கிலைகள், பருந்தின் வட்டம் எழுந்தது போல விசும்பு நிறையப் பரவி ஒன்று சேர்ந்து பாலை வழியிற் செல்வோரது சுவடு அறியாது அறிவு மயங்குமாறு பரந்து கவர்த்த நெறிகளை மறைக்கும் (அகம். 299:5-9). புதிய வழிப்போக்கர் வந்தால் அவர்களைப் போற்றிப் புல்லியின் நன்னாட்டுக் கோவலர், இளைய எருதுகளின் கழுத்திற் கட்டி யுள்ள மூங்கிற் குழாயி லுள்ள புளிச்சோற்றை அவர்களின் காதடைப்பு நீங்கத் தேக்கிலையிற் பகுத்தளிப்பர் (அகம். 311:9-12). கான்கெழு சிற் றூரில் வாழ்வோர், புதர் போலுங் குடிசை முன்றிலில், தேக்கின் அகன்ற இலையில் புழுக்கிய ஊனினை உண்பர் (அகம். 315:15-18). துளைகள் பொருந்திய தண்டினை யுடைய சேம்பு, கொழு மடல் அகலிலை கொண்டது (அகம். 336:1). ஞாயிறு வெதுப்ப இலையுதிர்ந்த கிளைகளில், தீ கப்பு விட் டது போன்ற தளிர்களுடைய மரச் செறிவில், உட்டுளை கொண்ட பூவினை யுடைய இருப்பை மரம் இருத்தல் (அகம். 351:5-8). வெப்பமான கோடைக்காற்று மூங்கிலின் தண்டினைத் தாக்கி ஞெமை மரத்தின் இலைகளை உதிர்த்தது (அகம். 353:7,8). இளவேனிலில் முதிர்ந்த இலைகளை உதிர்த்த மலர் விரிந்த பெரிய கிளையில் வண்டுகள் முரலும் (அகம். 355:3-8). திரண்ட அரையினை யும் சிறிய இலையினையும் உடைய நெல்லியின் பசுங்காயினைக் கல்லதர் மருங்கில் காற்று உதிர்த் தது (அகம். 363:5-7). அகன்ற இலையுடைய புன் னையின் நிழல் புகரில்லாதது (அகம். 370:3). தலை வன் நாட்டுக் குன்றத்தில் நெருங்கிய இலையுடைய பலாவின் பழத்தினைக் கவர்ந்தெடுத்த கையினை

யுடைய மந்தியும் கடுவனும் துள்ளித் திரிந்தன (அகம். 378:20-22). காற்றால் மிக்கெழும் தீப் பொருந்திய இலையற்ற காட்டில, மானின் முதுகிலுள்ள புள்ளி போன்ற புள்ளியினை யுடைய மர நிழலில தலைவன் தங்கிச் சென்றான் (அகம். 379: 18-21). அகன்ற இலையுடைய நாவல் மரம நீருண்ணுந் துறையில உதிர்தத கனியை நண்டு அதன் அழகுகெட இழுத்துச் சென்று, தாழையின வேர்ப் பக்கத்துள்ள வளையி லிருக்கும் தன பெடைக்கு அளித்தது (அகம். 380:4-7). புதுக் கொல்லையில தழைத்த வரகு ரிய இலையின் நீண்ட இதழையுடைய கவைத்த கதிருடன கூடிய தட்டைகொண்டது (அகம். 393.4-6). கோடைக் காற்றால் அசையும புலலிய இலையுடைய மூங்கில நெலவிளையும காட்டினகண தலைவன தலைவியை உடன் கொண்டு செலலத் துணிந்தான் (அகம. 397:15,16). சிலமபிலுள்ள சேமபின, வளவிய இலையைக களிற்றுச் செவிபோலத் தோன்றுமாறு தடவி வாடைக் காற்று தூக்கும் (குறு. 76:3-5). சிறுகுடியிலுள்ளோர் அருவிப பரபபில் மலை நெலலை விதைத்துக் களையாக முளைத்த பருத்த இலையுடைய மலை மலலிகையோடு மரலையும களைந்தெறிவர் (குறு. 100:1-3). புறவில பாசிலை முல்லையின் ஆசில வானபூ, செககர் வானத்தின் அழகு கொணடது (குறு. 108:2–4). மூங்கில அசையும் சாரலில மெல்லிய நடையுடைய மரையா இலைகளை விரும்பி உண்டு உறங்கும் (குறு. 115:4,5). குறவன தோட்டத்தில் விளைநத பொன போலும் தினைக் கதிரைக் கிளி உணடலால, குறைபட்ட தாளில மழை பெய்ய அதன்கண் இலை தழைத்து வளர்ந்தது (குறு. 133:1-3). நொசசி இலை மயிலடி போன்று இருக்கும (குறு. 138:3; நற. 115.5). புன்புலத் தமனற சிறியிலை நெருஞசியின கண்ணுக்கு இனிய புதிய மலர் முள்ளைப பயநதது (குறு. 202:2,3). தலைவன பருத்த அடியுடைய முளபொருந்திய இலையினைக் கொணட தாழையினை உடைய கடற்கரைக்கு உரியவன் (குறு. 219:5,6). அடும்பின கவட்டிலை மானின் அடிபோன்றிருககும் (குறு. 243.1). கோங்க மரத்தின இலையில்லாத சினையில் இனவணடு ஆரவாரிக்க நகிலை ஒத்த மெலலருமபுகள விரிநது மலர்ந்தன (குறு. 251:1-3). கார் காலத்தில் செமமண மேட்டில் தழைத்த வரகு நாற்றின ஓரிலையை நாட்காலே வநத மான்குட்டி தினறு தின்றலாகிய கடனைத் தீர்த்துக் கொள்ளும் (குறு. 282:1-3). சிறுகுடியில் மலையினின்றும் தாழ்ந்து வீழும் தூய வெளளிய அருவி இலையால வேயபபெற்ற குடிலின அருகில் இறஙகி ஓடும (குறு. 284:6,7). பெரிய இலையுடைய பகன்றைப் பூ, வணணாத்தி பசை தோய்த்தெடுத்து, முதல் தப்பினைத் தப்பி நீர் நிலையிலிடும் ஆடை முறுக்கினை யொக்கும் (குறு. 330:1-4). கூருகிர்ப் பறவை (வெளவால) அகன்ற இலையுடைய பலா மரங்களைக கொணட மலைச் சாரலை நோக்கிப பகற் காலத்தில தான உறைநத பழைய மரம தனிககுமாறு செலலும (குறு. 352: 2-4). தலைவன நாட்டிலிருந்து வரும் ஆற்றொடு வநத காந்தளின மெல்லிலை குழையுமாறு தழுவுதலையும் அதன் கிழஙகை வீட்டில நடுதலையும விலககாத தாய்க்கு உயர்நிலை யுலகினை (தேவருலகததை) கைம்மாறாகக கொடுப்பினும அது சிறிதாகும் (குறு. 361). மூங்கிலின வெணணெல்லை அருநதிய யானை சிறிய இலையுடைய சநதன மரம் வாடி நிறகும் மலைக காடடிடததே உறஙகும் (நற். 7:7-9). சுறாவின கொம்பு போன்ற முளளுடைய இலையைக் கொணடது தாழை (நற். 19:2). மணல் பரப்பப் பெற்ற பந்தா ஒலிககும இலையால் (தெனனஙகீற்றால) வேயபபெற்றது (நற. 40:2). கொலலையில நீடிய இலையுடைய முற்றிய கதிரைத தாங்க மாட்டாது சாய்நத தினையின தாள்கள கதிர் அறுக்கப்பட்டவுடன நிமிர்ந்து நிறறல (நற. 44.5-7). தலைவன் மலைபபக்கத்தில இரவு மழை பொழியக் கானயாற்றில முளியிலைகளையும் (சருகுகளையும) பூஙகொத்துக்களையும் அடித்துக் கொணடு வரும் புதுநீர் தலைவியின உற்ற நோய் தீர்க்கும் மருநதாகும (நற். 53.4–8). அறியாமையால குறவரால் மேறபட்டை அறுககப பட்ட சிறிய இலையையுடைய சந்தன மரம வற்றல் தொடங்கி வறிதாகுமாறு, அறுபட்ட வாயவழி நீர் வடிநதது. இது பிரிவால துனபுறும் தலைவி நிலைக்கு உவமை (நற். 64:4–9). கார்ப்பருவததின இறுதியில மிகக முனபனிக காலததே மயிர்களை யுடைய காய்களைக் கொணட உழுந்தின் அகன்ற இலை சிதையுமாறு வாடை வீசியது (நற். 89:4-7). மதச் செருக்குற்ற யானை புலலிய காமபினையும சிறிய இலையையுடைய வேபபமரததின் பெருங்கிளைகளை முறித்துத் தள்ளியது (நற. 103 1-3). வெட்பாலையின் இலையுதிர்நத கிளையிலுள்ள நெற்றுககள காற்று அடிததலினால் மலையினின்று விழும் அருவிபோல ஒலிப்பதும் புல்லிய இலையினையுடைய ஓமை மரத்தினைக் கொண்டதுமான புலி இயங்கும் சுர நெறியில் காதலன சென்றான் (நற. 107:3-7). சூலமுதிர்ந்த இளம்பிடி மூங்கிலில் முளைத்த இலை யிலலாத கொழுமுளையை விடியற் காலததில உணடதால் அதன் வயிற்றிலுள்ள சூல் அழிநது பிணடமாகி வெளியே விழுநதது (நற். 116'3–5). கொலலையில விதைத்த ஈரிலை நிரம்பிய வரகின கவைத்த கதிர்களைத தின்ற பெணமான் மரலின் விதை பொருந்

திய காட்டில் கலைமானொடு மகிழ்ந்து விளையாடும் (நற். 121:1-4). கொல்லிமலைக்கண் அகன்ற இலையுடைய காந்தளின் அசையும் பூங்கொத்தில் பாய்ந்து தேன் நுகர்ந்த வண்டுகள் பல கண்களை யுடைய தேனிறால் அமைத்தன (நற். 185:7-9). சருச்சரை பொருந்திய அடியை யுடையதும், அரம் போன்ற முள் பொருந்திய இலை மிக்கதுமான தாழைமலர் புன்னை மலரோடு கடற்கானலில் மணக்கும் (நற். 235:1-4). கார் காலத்தில் இலையில்லாத பிடவ மரங்களில் மெல்லிய மலர்கள் நிறையுமாறு அரும்புகள் முகிழ்த்தன (நற். 242:1-5). இரும்பு போன்ற கரிய கிளையுடைய புன்னையின் நீலம்போன்ற பசிய இலையிடமெங்கும் வெள்ளி போன்ற பூங்கொத்தின் பொன்போன்ற தாதுக்கள் உதிர்ந்தன (நற். 249:1-4). தலைவனுடன் செல்லுங்கால் வெப்பந் தணிந்த மாலையில் இலையுதிர்ந்த மரக் கிளையில் தங்கிய வரிப்புறாவின் தெள்விளி கேட்டு ஆற்றாது அமர்ந்த பார்வையுடன் நோக்கித் தலைவனை (பல வினாக்களைத் தொடுத்து) வருத்துவளோ என்று தாய் கூறினாள் (நற். 305:6-10). வாழையின் கொழுவிய மடலகன்ற கட்டைக் குருத்தாகிய இலையில் (தாற்றின் கண்ணுள்ள) இனிய நீர் கலந்து தங்கி இருக்கும் (நற். 309:4,5). கானலில் முள் இலைத் தாழை சோற்றைச் சொரியும் குடம் போலப் பருத்த உள்ளீட்டினையுடைய கூம்பிய அரும்பு மலரக் காற்று அப் பூமடலில் உள்புகுந்து வீசியது (நற். 335:4-6). தலைவன் பசிய இலைகளையுடைய செருந்தி பரந்த பெரிய கழியினை உடையவன் (ஐங். 112:1,2). எக்கரிலுள்ள ஞாழலின் சிறியிலைப் பெருஞ்சினையைக் கடல் ஓதம் பெருகிப் போந்து வளைக்கும் (ஐங். 145:1,2). வேனிற்காலத்தே எழுந்த காற்றால் அரையத்தின் (அரசமரத்தின்) இலைகள் அசைவதனால் எழும் ஓசையை அஞ்சிப் பறவைகள் இரை தேடி உண்ணாது வேற்றுப் புலம் படரும் (ஐங். 325:1,2). தலைவர் சென்ற கல் காயும் கடத்திடைச் சிறியிலை நெல்லி மரங்கள் மிக்கிருந்தன (ஐங். 334:1,2). இலையிலவாய் மலர்ந்த உயர்ந்த இலவ மரம் மலையில் பொருந்திய தீயினைப் போலச் சுரத்தின்கண் தோன்றும் (ஐங். 338:2,3). நெருங்கிய இலைகளையுடைய வாழையின் முழுமுதல் அசையும்படி துன்பஞ் செய்யும் வாடைக்காற்று அலைக்கும் (ஐங். 460:3,4). காடுகள் இலை பசுமை நீங்கித் தீந்த கொம்புகளால் இன்பத்தின் நீங்கிச் சென்றாரை வருத்தும் (கலி. 11:10,11). 'மூங்கில் நெல்லைப் பாறையாகிய உரலிலிட்டு யானைக் கொம்பாகிய உலக்கை கொண்டு குற்றிச் சேம்பின் இலையாகிய சுளகினைக் கொண்டு புடைப்போமாக' என்று தலைவி கூறினாள் (கலி. 41:1-3). மூங்கிலின் கோலை அதன் நெல்லுடன் வளைத்துத் தின்ற யானை, மலையில் செறிந்த இலையினையுடைய வாழையினைக் கொண்ட இடத்தே புகுந்து, வருடைமான் மறி பரந்து திரியும் இடத்தில் விடியற் காலத்தே உறங்கும் (கலி. 50:1-4). பொதுவர் கொன்றை, காயா, புல்லிலை வெட்சி முதலிய மலர்களாலாகிய கண்ணி சூடினர் (கலி. 103:1-5). கரப்பவர் நெஞ்சம் போல மரத்தின் இலை எல்லாம் கூம்பின (கலி. 120:6). நலனுண்டு வாராத தலவனை நினைத்தலின் யான் செயலற்றநெஞ்சினேனாய்க் கலக்கத்தில் அழுந்த, அதுகண்டு மரம் வருத்தத்தால் செய்தது போல இலை குவிதற்குக் காரணம் என்னோ என்று தலைவி கூறினாள் (கலி. 134:20-22). 'நீண்ட இலையினை யுடைய தாழை நிற்கும் கானலின் பொழில் தோறும் நான் ஓடிச் சென்று தலைவனைத் தேடிப் பார்ப்பேன்' என்று தலைவி கூறினாள் (கலி. 144:27,28). வையையில் மாந்தீந் தளிரொடு வாழை இலையினை மயக்கி வெள்ளம் வந்தது (பரி. 10:6-8). சோலை மலையின் குகையில் குருக்கத்தியின் இலை உதிர அதன்கண்ணிருந்து குயிலினம் கூவுதல் முதலிய வற்றால் முழங்கும் எதிரொலி ஒழியாது (பரி. 15: 41, 44). முருகன் விரும்பி வீற்றிருப்பது, ஏழிலைப் பாலையை யுடைய தாழ்வரையாகிய இலகடத்தையும் அருவியாகிய முக படாத்தையும் உடைய யானையைப் போன்று விசும்புற நிவந்த திருப்பரங் குன்றமாகும் (பரி. 21:12-15).

**2. இலைபோலும் படைக்கருவியின் உறுப்பு (ஆகுபெயர்).** களிறு சென்று போர்க்களத்தை இடமகலச் செய்ய அதன்கண், ஒளிரும் இலை - இலைபோன்ற வேலின் உறுப்பு - உடைய எஃகத்தைக் கையிலேந்தி அரசர் பட அமருழக்கினான் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் (புறம். 26:4-6,11). ஈர்ந்தூர் கிழான்தோயன் மாறன் பாணர் தன்னை இரக்கும் போது, அவர்தம் உண்ணாமருங்குல் காட்டி, உண்பிப்பதற்காகத் திருந்திய இலைவேலினை வடித்துத் தருமாறு கொல்லனிடம் இரப்பான் (புறம். 180:10-13). தலைவன் தன் இலங்கிலை வேலை வேந்தூரும் யானைக்கல்லது பிறவற்றிற்கு ஏந்தமாட்டான் (புறம். 301:15,16). சீறூர்மன்னனின் சிறியிலைவேல் வேந்தர் ஊரும் யானையின் ஏற்று முகத்தில் பாய்ந்தது (புறம். 308:4, 5). ஆரமர் உழக்கிய வீரம் விளங்கும் வலிமையோடு நீளிலை வேல் மறுத்த வீரர், உடம்பொடு வாரா உலகம் (வீர சுவர்க்கம்) புகுவர் (புறம். 341:13-15). மறப்போர் அகுதை பகைவரைஎறிந்து இலைமுறிந்து வடுப்பட்ட வாயையுடைய வேலினை

யும் மணம் வீசும் மார்பினையும் உடையவன் (புறம். 347:4, 5). இலை ஆராயந்தமைககப்பட்டது வேல் (பதி. 69:6). முருகன் ஏந்தியவேல், சூர்முதலை (சூரபன்மாவை) கொன்ற சுடரிலை நெடுவேலாகும் (முரு. 46). சூர்மருங்கு (சூரபன்மனையும் அவன் சுற்றத்தையும்) அழித்த சுடரிலை நெடுவேலை உடையவன் முருகன் (அகம். 59:10, 11). தலைவனின் இளையர் அழகாக விளங்கும் அகன்ற இலையினையும் எண்ணெய் கனியப் பெற்ற தண்டினையும் உடைய வேலினை ஏந்தியிருந்தனர் (அகம். 64:5,6). நெய்தல் மலர்போலும் உருவினை யுடைய அழகிய அகன்ற இலையினையும் தொடையமை மயிற் பீலியால் விளக்கமுற்ற காம்பினையும் மூட்டுவாய் அமைந்த சுரையினையும் கரிய தண்டினையு முடையது வேல் (அகம். 119:11-13). நெய்கனிந்த நெடிய வேலின் கூரிய இலைப் பகுதி நிலவினைப் போல விளங்கும் (அகம். 123:8,9). தென்னன் திருந்திலை நெடுவேலினைக் கொண்டவன் (அகம். 138:7). வெற்றி வேலின் இலைமுனை நிறம் மாறுபடுமாறு செலுத்திப் பகைவர்தம் மலைபோலும் யானைகளைப் பண்ணன் அழித்தான் (அகம். 177:13-16). பாசறையில் நிமிர்ந்த இலையினை யுடைய ஒளி விடுகின்ற வேல் மின்னி விளங்கும் (அகம். 214:5,6). தலைவன் புதிதாகச் செய்யபபட்ட இலை பொருந்திய வேலினைக் கொண்டிருந்தான் (அகம். 221:5). வேலின் இலங்கிய இலையை மாசு போகத் துடைத்தலும் கிடுகிற்குப் பீலி சூட்டி மணி அணிவித்தலும் ஆகிய தலைவனின் செயல்கள், அவன் தலைவியைப் பிரிந்து செல்வான் என்பதனைக் குறிப்பால் உணர்த்தும் (நற். 177:4-8). விடலை இலங்கிய இலையைக் கொண்ட வெண்வேலை யுடையவன் (நற். 305:9). அன்பில்லாத மறவர் இலைமாண் பகழியை வில்லிற் பூட்டிக் கொன்றமையால் வம்பலர் சுர நெறியில் இறந்து கிடந்தனர் (நற். 352:1-3). கிள்ளி ஒளி வீசும் இலையினை யுடைய நெடுவேலினைக் கொண்டவன் (ஐங். 78:1). முருகன் பன்னிரு கைகளிலும் படையாக ஏந்தியவற்றுள் செறியிலை ஈட்டியும் ஒன்று (பரி. 5:66). தேம்படுமலர், குழை, பூந்துகில், மணி, ஏந்திலை ஆகியவற்றை அன்பர் பரங்குன்றத்திற்குச் சுமந்து வநதனர் (பரி. 17:1,2).

3. இலைத்தொழில், அரசியின் கட்டிலில், தச்சன் சிற்றுளியாற் பண்ணின இலை - இலைத் தொழில் - இடையே பொருந்தியிருத்தல் (நெடு. 118,119). முருகன் அசுரரைக் கொல்லுதற்கு ஏந்திய விளங்கிலை எஃகம் போல மேகம் மின்னியது (குறி. 52,53). கலைவியின் நீர் ஒழுகும் கண்கள், பகைமன்னர் போரில் பிட்டன் எடுத்த திருந்திலை எஃகம் போலத் தலைவனுக்குத் துன்பந் தரும் (அகம். 77:16-19).

4. படலைமாலை. இலையும் - படலை மாலையும் - குவிந்த மயிரும் (காதலர்) பூசிய சாந்தத்தைச் சிதைத்தன (பரி. 6:19).

**இவுளி** - குதிரை. உருவப் பஃறேரிளஞ்சேட் சென்னி, அசைந்த தலையாட்ட மணிந்த கதியை யுடைய இவுளி - குதிரை - பூட்டிய பொற்றேரில், கடலமேல் எழும செஞ்ஞாயிற்றின் ஒளியுடையவனாக உள ளான் (புறம. 4:13-16). இவுளி காற்று இயங்கினாற் போலும் தாவுதலைக் கொண்ட கதி யுடையது (புறம். 197:1). 'அசைகின்ற' தலையாட்ட மணிந்த இவுளிகளை யுடையவன் நலங்கிள்ளி (புறம். 382:4,5). காற்று கிளர்ந்தது போன்ற கடிய செலவினை யுடைய இவுளி எரி அவிழ்ந்தது போனற தலையாட்டம் சூட்டப் பெற்றிருத்தல் (பதி. இ. 2.3,4). தொண்டைமான் இளந்திரையன் தன் பகைவர் புறமுதுகிட்டு ஓடியபோது விட்டுப் போன, ஆகாயத்தே செல்கினற இவுளியொடு, பொன்னாலாகிய பக்கரைகளையும் (சேணம்) பாணர்க்குத் தந்தனுப்பு வான் (பெரு. 491-493). அடங்கிச் செல்லுதற்குரிய கடிவாளக் கயிற்றைப் பாகன் பூட்டக்கொல்லனின ஊதுலைபோலப் பெருமூச்சுவிட்டுக் கடிய நடையினையும் காற்றின் வேகததை ஒத்த விரைந்த ஓட்டத்தையு முடைய இவுளிகளின வாய்நுரை, சிலந்தி நூல் போலச் சிதறிச் சாந்துபுலர் மார்பில் மறுச் செய்தது (அகம். 224:2-10). வரிசையாகச் செல்லும் இவுளியை விரைவாகச் செலுத்தி, வானிற் பகற்பொழுதைக் கழியச் செய்து ஞாயிறு பெரிய மலையினில் மறைந்தது (அகம். 363:1-3). புட்களால் உதிர்ந்த பூக்கலந்த சேற்றினை யுடைய கழியாகிய இடத்தின் மேலோடும் தேரிற் பூட்டிய இவுளிகள், அலை எழும் கடல் நீரால கழுவப் படும் (நற. 63:8-10).

**இழவு** - இழத்தல், துன்பத்திற்கஞ்சி, 'இரந்தோர்க்கு வேண்டியவற்றைக் கொடுத்துப் பின அவற்றைத் தா எனக் கேட்டலினும் இன்னுயிர் இழவு - இழத்தல்-இன்னாததிலலை (குறு. 349:5-7). இழவு-இழப்பு என்றும் பாடம்.

**இழிசினன்** - புலைமகன். ஊரில் விழாத் தொடங்கு மனைவி மகப் பெறுதலைப் பொருந்தினாளாக, மழை பெய்யத் தொடங்க, ஞாயிறு மறையும் பொழுதில் கட்டில் பின்னும் இழிசினன-புலைமகன்-கையில் வாரைச் செலுத்தும் ஊசியினும் விரைவாகச் சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளியின் போர் நடைபெற்றது (புறம். 82). குறுநதடி கொண்டு பறைமுழக்குபவனை இழிசினன் என்று சாத்தந்தையார் விளித்துப் பாடுகின்றார் (புறம். 287:2). 'பாணனே, பாசறையில் இன்று பூக்கோள் என்று அறிவிக்கும் இழிசினனின் தண்ணுமை ஓசை

யைக் கேட்பாயாக' என்று கழாத்தலையார் பாடு வர் (புறம். 289:8-10).

இழிபிறப்பாளன் - இழிந்த பிறப்பினை உடையவன (புலையன). இழி பிறப்பாளன-புலைய்ன்-தன வலிய கைகளின் வலிமையால் வலிய கண்ணுடைய துடி யின் கண்ணை அசச முண்டாகும்படி அடிப்பான் (புறம். 170:5-7).

இழிபிறப்பினோன் - இழிந்த பிறப்பை உடையவன் (புலை யன), கள்ளி பரவிய முது காட்டில் உப்பில்லாது வேகவைத்த உணவைக் கையிற் கொண்டு, பின் புறம் பாராது நிலத்தையே கலமாகக் கொண்டு புலி உணவு இறந்தோர்க்கு இழிபிறப்பினோனால்- புலையனால் - கொடுக்கப்படும் (புறம். 363:10-15).

இழிபு - 1. குன்றுதல். பகைவரின் காவலமைந்த பொழிலின் நிலை கெடுத்து இழிபு-குன்றுதல் - அறி யாத பெரிய மருதநிலங்களை நெருப்புண்ணச் செய்தல் (மது. 153-155).

2. களைதல். நாண் இழிபு-களைதல்-அறியாத வில் லையும் கையினின்றும் களைதல் அறியாத அம்பை யும் உடைய வீரரைப் பெற்றவன் பல்யானைச் செல்கெழு குட்டுவன் (பதி. 24:12,13).

3. இழிந்தது. செவ்வேளை ஒழிந்த மற்றவர் (நல்வி னையால்) சிறப்பினுள் உயர்பாகலும் (தீவினையால்) பிறப்பினுள் இழிவு - இழிந்தது - ஆகலும் ஆகிய இவை அவனுடைய ஆணைக்கண் உள (பரி. 5: 19-21).

இழிவு - தாழ்வு. கொடை செய்து பொருளை யிழந்து பின் இறந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு-தாழ்வு- எனக் கருதித் தலைவன் பொருள்வயிற் பிரிந்தான் (கலி. 2:11,12). இல்லென இரந்தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு எனத் தலைவன் பொருள் தேடப் பிரிந்தான் (கலி. 2:15,16). வேறுவழியின்றி இரந் தோர்க்கு ஒன்று ஈயாமை இழிவு என்று தலைவன் பொருள் தேடச் சென்றான் (கலி. 2:19,20).

இழுக்கு - வழுக்கு நிலம். இரவில் தலைவன் வரும் வழியில் இடும்பை உண்டாக்குவனவற்றில் இழுக் கும்-வழுக்கு நிலமும்-ஒன்றாகும் (குறி. 258).

இழுது - 1. நெய்விழுது. சேரமான் பெருஞ்சேரலா தன் வடக்கிருந்தமையால் பெரிய பானை பாலின் மையாற கவிழ்ந்து இழுது (வெண்ணெய்) கடைதலை ஒழிந்தது (புறம். 65:2,10,11). வல்வில் வேட்டுவனாக இருந்த நள்ளி காட்டில் தன்னைத் தொழுதெழுந்த புலவரைக் கைகவித்து இருக்கச் செய்து, இழுது போன்ற நிணத்தடியினைத் தானே மூட்டிய தீயில் சுட்டுப்பசித்ர உண்ணக் கொடுத்தான் (புறம். 150:7-13). கழங்குகளை அகழ்ந்தமையால் தேய்ந்த மருப் பினையும் இழுது போன்ற வெள்ளிய நிணம் நிறைந்த கரிய சருச்சரையுடைய கழுத்தினையும் உடைய பன்றி கானவன் அம்புபட்டு இறந்து வழியிற் கிடப்பதைக் காட்டுத் தீயில் வதக்கி மயிர் போகச் சீவித் தினபீராக என்று கூத்தனர ஆற்றுப் படுத்தினர் (மலை. 243-249). நன்னனை நாடிச் செல்வோர் புல் வேய்ந்த குடிசைகளில் தங்கினால், அரிசியை வெள்ளாட்டினை எறிந்து சமைத்த சோற்றுத் தடியினை, நுண் இழுதினை உள்ளீ டாக இட்டுண்ணும்படி நாள்தோறும் கொடுப்பர் (மலை. 440-443). இழுதினைப் போன்ற இனிய துளையுடைய இருப்பைப் பூக்கள் ஆர்க்குக் கழன்று, காம்பினை நீக்கித் காணத்தக்க துளை யினையுடையனவாய்ப் பனிக்கட்டி போலக் காற் றால் சிதறுண்டு சிவந்த வழிகளில் பரக்கும் (அகம். 9:3-9). 'காதலர் வருவரென்று கூறிய அறிஞர், ஆசில் தெருவில் ஆசில் வியன்கடை செந் நெல் திரள்ளியாகிய வெண்மை வெள் இழுதினை ஓரிற் பிச்சையாகப் பெற்றுண்டு, சேமச் செப்பில் பனிக்கால்த்திற் குரிய வெந்நீரைப் பெறுவாராக' என்று தோழி கூறினாள் (குறு. 277). இழுதொடு நின்ற மலிபுனல் வையையில் மகளிரும் மைந்தரும் ஆடினர் (பரி. தி. 2:80,81).

2. நிணம். முள்ளம் பன்றியைக் கொன்ற முழுச் சொல்லாடவர், ஒரு மரத்தின் கழிகளால் ஆகிய கட்டுக் கதவுடைய சிற்றிலின் முன்றிலில் அறுத்த உடும்பின் இழுதினை - நிணத்தை - பகுப்பர் (புறம். 325:6-8).

3. தேன். இழுதொடு - தேனொடு - செல்லும் மலி புனல வையையில் மகளிரும் மைந்தரும் நீராடினர் (பரி. தி. 2:80,81).

4. மெருகு. 'வேந்தன் விழுமம் தாங்கிய வீரன் புண்ணை இரவமும் வேம்பும் மனையிற் செருகி, யாழும் பல்லியமும் இசைக்க மை இழுது - மெரு கினை - இழுகி, ஐயவி சிதறி, ஆம்பல் பண் ஊதி, இன்சமணி எறிந்து, காஞ்சிபாடி, நெடுநகர் வரைப் பில் மணப்பொருள் புகைத்துக் காப்போம் வருக' என்று அரிசில் கிழார் பாடினார் (புறம். 281).

இழை - 1. அணி. 'வாலிய இழை - அணி - உடைய மங்கையர் முகத்தெதிரே நின்வெகுளி தணிவதாக' என்று பாண்டியன் பலயாகசாலை முதுகுடுமிப்பெரு வழுதிக்குக் காரி கிழார் கூறினார் (புறம். 6:23,24). வாலிழை மடமங்கையர் வண்டற்பாவைக்கு மலர் பறித்துப் பொருநை நீரில் பாய்ந்து விளையாடினர் (புறம் 11:2-5). அரசன் மறம் பாடிய பாடினி பொன் இழைப் பெற்றாள் (புறம். 11:13). இழைபெற்ற பாடி

ணியின் பாணன் வெள்ளி நாரால் தொடுத்த பொற் பூவினைப் பெற்றான் (புறம். 11:13,14). மாணிழை மகளிரின் கருச் சிதைத்தோர்க்கும் ஆராயுமிடத்து அகுற்றத்தினைப் போக்குதற குரிய கழுவாய் உண்டு (புறம. 34:2,4). பாணடியன் தலையாலங் கானத்துச செருவென்ற நெடுஞ்செழியன் பகை வரை எதிர்தத களததே கொல்லுதலை உடனபடா னாய, அவர்தம் மாணிழை மகளிர் நாணி அழியு மாறு தநதையரின ஊரிற சென்று அங்கே கொன றான் (புறம. 78.8-12). விறலி இழையணிப் பொலிந்த ஏந்து கோட்டு அலகுலையும் மடவரல உண்கண்ணையும் உடையவள (புறம். 89.1,2). இழையணி யானையையும் இயல தேரையும உடை யவன் அஞசி (புறம. 101'4). வாணுதல் விறலி பாரி யைப பாடிச சென றால் சேயிழை பெறுவாள் (புறம். 105.1,8). மலையமான் மது உணடு மகிழாது கொடுத்த இழையணி நெடுநதேர் மழைத் துளியி னும் பலவாகும (புறம். 123:3-6). பாணர் பரிசில் பெற்றுச் சென றமையால், ஈகையரிய இழையினை அணிநத மகளிரொடு ஆயின் கோயில் பொலி வழிந்தது என்று கூறுவர் (புறம். 127:2-6). பரிசில பெற்ற பாணன சூட்டிய பொற்றாமரை மாட்சி மைபபட்ட இழையுடைய விறலி மாலையுடன் விளங்கினாள் (புறம. 141.1,2). வையாவிக் கோப் பெரும் பேகனின் திருந்திழை அரிவை (கணணகி) அவன அருளாமையால் அருந்துயருழந்தாள (புறம். 146:6,7). கணவர் சேட்புலம் படரின, அவரின் பெணடிரும் இழையணிந்த புன்தலையுடைய பிடி யினைப் பரிசிலாக நலகும் வண்புகழுடையவன் கண்டீரசகோன் (புறம். 151:3-6). வல்விலோரி, இரப்போர்க்கு இழையணி யானையை நாளும் ஈவான் (புறம. 153:1, 2). குமணனின் ஏநதெழில மார்பினை மாணிழை மகளிர் தழுவுந்தோறும் விரும்புவர் (புறம். 161:27, 28). 'உலை ஏற்றுக; சோற்றை ஆககுக; மதுவை நிறைய உண்டாக்குக; ஒள்ளிழைப் பாடுவல் விறலியர் மாலை சூடுக' என்று பிட்டங் கொற்றனை வாழ்த்துங்கால வடம வண்ணக்கன் தாமோதரனார் கூறினார் (புறம. 172: 1-3). பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞசிய நன்மாறனின் மலையைப் போன்ற மார்பின்கண் வேட்கை தணியாத, கடவுள் சான்ற கற்பின் சேயிழை மடவோள் பெற்ற புதல்வர் பொலிக என்று பேரி சாத்தனார் வாழ்த்தினார் (புறம். 198: 1-5). நறிய தழைத்த கூந்தலையும் தேமொழியை யும் உடைய தெரியிழை மகளிர் புணர்தற்குச் செவ்வி பார்த்திருக்கும் மார்பை உடையவன் மூவன (புறம. 209:16–18). பொத்தியாரின் மனைவி, தீயால் விளங்கிய வயங்கிழை சிறந்த வடிவினை உடையவ ளாய்க் கணவனை நிழல்போல நீங்காதிருப்பவளா வள் (புறம். 222:1, 2). சோழன் கரிகாற் பெருவளத தான இறக்க, பூவுதிரக் கொம்பு கழித்துத் தழைச செறிவை நீக்கப் பெற்ற வேங்கை மரம போல, அவனுடைய மெலலியல மகளிரும் இழை களைந்தனர் (புறம. 224:15-17). அனறு ஓவததனன இடனுடைய இல்லில் பாவை போலும் குறுந்தொடி மகளிரின இழை நெகிழத்த மள்ளன், இனறு தீ வேட்டுப் புரிசடை புலர்த்து வோனாயினன் (புறம. 251). நொசசியின நிறம விளங்கும் தழையினை மெலலிழை மகளிர் அல் குலில தொடலையாக அணிவர் (புறம். 271.2-4). பூக்கள் விளங்கிழை மகளிர் கூநதலிற கொள்ளப் பட்டன (புறம. 302:2,3). 'கொடி போலும இடை யுடைய நினபாடினி வயங்கிழை அணிய நீ சென்று தலைவனுடன் விருந்துணடு, வாய சிலககு வருக' என்று ஒரு பாணன மறறொரு பாணனிடம் கூறி னான (புறம. 316:8-11). விளங்கிய இழைப் பொலிநத மணமாகாத மெலலிய இயலபினையும சுணங் கணிநத வனமுலையையும் உடையவளை நாளை மணபபது ஒனறு அல்லது போர் செயது மாறா உலகம புகுதல ஒன்று என்று சூளுரைததல் (புறம். 341.10-16). இழை கிளர் நெடுநதேரை இரவலாக் குக் குறைவறக கொடுப்போா மேலுலகம செனற பினனும் அவர்தம் ஈகைப் புகழ இவ்வுலகில நெடிது நிலைநிற்கும (புறம. 359.15-18). மூவேந்தரும் ஒருங கிருந்தபோது ஔவையார், 'பார்பபார்க்கு ஏற்றகை நிறையப் பூவும் பொன்னும் சொரிந்தும் பாசிழை மகளிர் பொற்கலத்தேநதிய தேறல் உணடு மகிழந தும இரவலாக்கு அருகாது கொடுத்தும் வரைந்த வைகல் நீவிர் இவண வாழ்தலே வேணடுவது, என்று கூறினார் (புறம். 367:4-9). சோழன் உருவப் பஃறேர் இளஞசேட் சென்னி பரிசிலாக அளித்த அணிகளைப் பாணர் சுற்றத்தினர் இடம் மாறி அணிந்து கொணடது சீதையை அரக்கன் (இரா வணன) வௌவியபோது கழற்றி வீசப் பெற்ற அணிகலன்களை எடுத்த குரங்கின் சுற்றம் இழைப் பொலிந்தது போல இருந்தது (புறம. 378:11-21). இமயவரமபன் நெடுஞ்சேரலாதன் வளைந்த கரிய கூந்தலையும் அமை ஒத்த மென் தோளையுமுடைய வசையில் மகளிர் வயங்கிழை அணியுமாறு அளித் தனன் (பதி. 12:22,23). புறவு, ஒள்ளிழை மகளிரொடு மள்ளர் உறையும் படைநிலையாயின (பதி. 13:21). இமய வரம்பன் நெடுஞ்சேரலாதனின் மனைவி, 'வயங்கிழை கரந்த வணடு படு கதுபபின் ஒடுங் கீரோதிக் கொடுங்குழை' என்று சிறப்பிககபபெற் றாள் (பதி. 14:14,15). இழையால பொலிந்தது களிறு (பதி. 22:18). கூத்தர் முதலியோர் பசி நீங்க உண்டு,

பொன்செய் புனை இழை ஒலிக்குமாறு நெஞ்சு நிறைந்த உவகையராய் மகிழ்ந்து கூத்தாடினர் (பதி. 23:6-8). 'திருந்திய இயன் மொழித் திருந்திழை கணவ' என்று பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் விளித்துப் பாடினார் (பதி. 24:11). தான் அணிந்துள்ள பொன்னாலாகிய இழைக்கு விளக்கந் தரும் மேனியை உடைய வள் கோப்பெருந்தேவி (பதி. 31:25,26). சேரமான் சூடிய முடி, சிலந்தி வலைபோல, விளங்கு மணிகள் விளிம்பில் கோத்த பொற்றகட்டால் செய்த கூட்டின் புறத்தே அவிர் இழை அணிந்து ஒளி சொரிந்து விளங்குமாறு முத்துவடம் கோக்கப்பட்டிருந்தது (பதி.39:13-17). மலர்ந்த வேங்கை மரத்தினைப்போல, மெல்லியல் மகளிர் (விறலியர்) வயங்கிழை அணிந்து அழகு சிறந்து விளங்கினர் (பதி. 40:22,23). சேயிழை மகளிர், தாமிருக்கும் காட்டகத்தே யானைகள் புகுமாயின அவற்றில் புதியவாய் வந்த பிடிகளை எண்ணுவர் (பதி. 43:2-5). மகளிர் இழையணிந்துள்ளனர் (பதி. 46:1). கணவனை இழந்த மகளிர் வாலிழை கழித்தல் (பதி. ப. 5.15). பணைத்தோளையும், மழைக் கண்ணையும் இளமுலையையும் பூந்துகில் அல்குலையும் தேம்பாய கூந்தலையு முடைய மின்னிழை விறலியர் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் மறப்புகழ் பாட அவன் வரையாது வழங்கினான் (பதி. 54:3-8). அரசன் படையில் யானைகள் இழையணிந்து எழும (பதி. 62:1). கூத்தரைக் கண்டால் வென்று, 'கொணர்ந்த குதிரைகளையும் தேர்களையும் இழையணிந்து கொடுமின்' என்று ஏவி ஈகையில் அமையாத கொள்கையுடையவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதி. 64:8-11). உறக்கமின்மையால் பொன்னால் செய்த இழை நழுவ, உயர்ந்த மதிலை யுடைய அரண்மனை எல்லையில் அழகிய சுவரில், தலைவன் பிரிந்து சென்ற நாட்களைத் தலைவி கோடிட்டுத் தன் சிவந்த விரல் மேலும் சிவக்குமாறு எழுதுவாள் (பதி. 68:15-18). மருதஞ் சான்ற விளைவயல்களாகிய செய்யில் நாரையினை ஓட்டும் மகளிர் இரவும பகலும் பாசிழை களையாதவராய்க் குரவை யயர்வர் (பதி. 73:8-11). மேகம் மின்னலினை உமிழ்ந்தாற் போல ஒளிவிடும் இழையை ஆயத்தார் அணிந்தனர் (பதி. 81:26). இளஞ்சேரல் இரும்பொறையின் தேவி, காதணியோடு போர் செய்த பார்வையும் பெருங்குணத்திற் கேற்பப் பொருந்திய சொல்லையும் திருமுகத்தையும உடையவள்; மாட்சிமைப்பட்ட இழைகளை அணிந்தவள் (பதி. 81: 29-31). சூரரமகளிர் நாவலொடு அடுத்துப் பெயர் பெற்ற பொன்னால் இயன்று விளங்குகின்ற இழை அணிந்திருந்தனர் (முரு. 18). இழையணிந்த தலைமையுடைய காடுகிழாளின் குழவி முருகன் (முரு. 259). இழையணிந்த அழகுடைய இனிய மகிழ்ச்சி செய்யும மகளிர் கள்ளினை வார்த்துப் பொன் வட்டில் நிறையத் தருவர் (பொரு. 85-87). விறலியின் அடி வறுமையால் வயங்கிழை இன்றிப் பொலிவிழந்திருந்தது (சிறு 18). அரசன் பிரிய அரண்மனையில் தனித்திருந்த அரசி அம்பு தைத்த மயில் போல் நடுங்கி இழை நெகிழ்ந்திருந்தாள் (முல்லை. 84). ஒள்ளிய நெருப்பில் வலியுற விளங்கிய அழகிய பொன்னால் செய்த இழையினையும் பூத்தொழிலையுடைய வளையலினையும் உடையர் மகளிர் (மது. 444-446). மதுரை நகரத் தெருவில் திரண்டவரில் சுடுதலுற்ற நல்ல பொன்னை விளங்கும் இழைகளாகப் பண்ணும பொற்கொல்லரும் இருந்தனர் (மது. 512). இரவில் தம் காதலரைக் கூடுவதற்கு மகளிர் இழைகளை அணிந்தனர் (மது. 551). பொன்னாலாகிய அவிர்தொடியையும் பசிய இழையினையும் மகளிர் (பரத்தையர்) அணிந்திருந்தனர் (மது. 579). முன் சாமத்திற்குப் பின்னர் சட்டக் காலை வாங்கிப் பண்டங்கட்கு விலையைக் கூறும் கடையினை அடைத்து மடப்பத்தையும் செருக்கையும் ஒள்ளிழையையும உடைய மகளிர் துயின்றனர் (மது. 621-623). விடியற் காலத்தில் மின்னற் கொடிபோல ஒண்பொன் அவிர்இழை ஒலிக்குமாறு இயங்கி மகளிர் இல்லக் கதவினைத் திறந்தனர் (மது. 664-667). மாணிழை மகளிர் புலவி கொண்டவராய் அறுத்த பருத்த வடமாகிய ஆரம் சொரிந்த முத்து சிதறிக் கிடத்தல் (மது. 680, 681). மகளிர் ஓட்டற்ற பொன்னின் நடுவே, அழுத்தின மணிகளைச் சூழ்ந்த விளங்கிழை அணிந்திருத்தல் (மது. 704). 'இலங்கிழை மகளிர் பொற்கலத்தில் தந்த மணங்கமழ் தேறலை உண்டு, வாழக' என்று தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் வாழ்த்தினார் (மது. 779-781). தலைவியின் இழை நெகிழச் செய்த (முருகனுக்கால) கெடுத்தற்கரிய நோய் பற்றிச் செவிலி அறிவாரை வினவி அறிதல் (குறி:3, 4). 'இலங்கிழையீர்' எனத்தலைவன் தலைவியை விளித்தல் (குறி.233). நேரிழை மகளிர் முற்றத்தே உலரும் நெல்லைத்தின்ற கோழியினைத் தம் காதணியைக் கொண்டு விரட்டியமை (பட்.22,23). பாசிழைமுதலியன உடைய மகளிர் சாளரங்களைச் சேர்ந்து கைகுவித்து வணங்கினர் (பட். 147). மெய் முழுதும் இழையணிந்த மகளிரின் முகிழ்முலை புணர்வதால சந்தனம் அழிந்த மார்பினையுடையவன் திருமாவளவன் (பட் 296-299) நன்னனைக் கண்ட விறலியர் அழகு பொருந்திய விளங்கிழைகளை அணிந்தனர் (மலை. 569,570). தலைவி முள்முருக்கம் பூவின இதழை ஒத்த இனிய சிவந்த வாயினையும் அழகிய இனிய மொழியினையும்

ஆயிழையினையும் உடையவள் (அகம். 3:15, 16). தித்தனுடைய மகள சிலம்பினையும் ஆம்பல் மாலை யையும வளையலணிநத முனகையினையும் இழை யணிந்த பணைததோளையுமுடைய ஐயை என்பவ ளாவள் (அகம. 6:1-4). தலைவன உறையூர்க் கருகே காவிரி நீரில் குழை முதலிய ஒள்ளிழைகளால் மாட்சிமைபபட்ட பரததையொடு வேழக் கரும பாலான தெப்பஙகொண்டு புனலாடினான் (அகம. 6:5-11). செழியன் இழைகள் அணியப் பெற்ற நெடிய தேரினையும் கை வணமையையும உடைய வன் (அகம. 47:15). கழியில சுறாமீன் செருக்கித் திரிந்தாலும் கௌவைப் பெணடிர் அலர் தூற்றி னாலும் மாணிழை நெடுநதேர் தாழந்து நிற்கப பகலிலும் தலைவியை நீங்காமல தலைவன் முன்பு பயின்று வருவான (அகம. 50.2-6). 'பொருள தலை வியைப் பிரிவதால கூடுவதாயின், அவளைப பிரி யாது முலைமுற்றம விமமச் சேயிழை ஒலிக்க மனைத் தொழிலில நாளும் மகிழும்படி நினைப்பா யாக' என்று தலைவன நெஞசிற் குரைத்தான (அகம். 51.8-14). மிகக மழை பொழியும் நள்ளிர வில், காட்டில் வேட்டையிடத்தே உறங்குமிடம் பெறாது, தேன நாறும் கதுப்பினை யுடைய தெரியிழை யணிநத கொடிச்சியரின் தந்தையர் புலிததோலினை விரித்த படுக்கையில் தங்குவர் (அகம. 58:1-6). தலைவர் தலைவியரைப் பிரிந்து கல்நெறியில் செல்வராயின, நன்னுதலையும் செயிர்தீர் கொள்கையையும் இன்மொழித் துவர் வாயையும் அவிர்தொடி முன்கையையும் உடைய ஆயிழை மகளிர் மார்பில் தம் தார் குழையச் செய்யாமையால் அழிந்துபட்ட அழகினை நினைந்து மிகவும் இரங்குவர் (அகம. 75:9-15). புதல்வரை ஈன்ற வாலிழை மகளிர் நால்வர் கூடிக் 'கற் பினின்றும் வழுவாது நல்ல பல பேறுகளையும் தந்து பெற்றோற் பெட்கும் பிணையை ஆகுக' என்று திருமணத்தின்போது வாழ்த்துவர் (அகம். 86:11-14). தலைவியின் பாசிழை விலையாகக் கோசரின் நியமம் என்னும் ஊரைக் கொடுத்தா லும் அமையும் எனக் கொள்ளார் (அகம். 90:12-14). கோங்கின் அரும்பு மதர்த்த அழகினையும மாணி ழையையு முடைய மகளிரின் பூண் அணிந்த முலை யினைப் போனறது (அகம். 99:3-5). வளையலையும் திருந்திழைகளையும் பணைத் தோளையும் தேன் மணக்கும் கூந்தலையும மையுண்ட கண்களையும் உடைய தலைவியொடு செல்ல அருஞ்சுர வழிகள் அரியவல்ல என்று தலைவன் கூறினான் (அகம. 129: 14-16). அறுகம்பாவை அரும்புடன் கட்டின வெண்ணூலைச் சூட்டி, உடையாற் பொலியச் செய்து விருப்பமுண்டாக நெருங்கி, மணப்பந்தலில் இழையணி சிறப்பினொடு தோன்றிய வியர் வையை ஆற்றித் தலைவியைத தமர் தலைவனுக் களித்தனர் (அகம். 136:11-18). தலைவியினுடைய அறலினைப் போனற கூநதல் அகற்சியிலலாத பிடரியிலுள்ள இழையொடு அசைந்தது (அகம. 142: 18,19). தலைவனுடைய நெடியதேர் ஒள்ளிழை மகளிர (பரத்தையா) சேரியினகண பலநாள் இயஙகு தல தவிராமை (அகம. 146.5-7). தலைவன பிரிய எண்ணியதனைக் கேட்ட அளவில் தழைத்த கூந்த லையும் அழகிய மாமை பொருந்திய மேனியையும் ஆயிழையையும் உடைய தலைவீயின கணகள் நீர் பரநதொழுகின (அகம. 161:10-14). தலைவன் தலைவி பால் அனபிலனாகுதலை முனனர் அறிநதிருந் தால அணி இழையையும் மையுண்ட கணகளையும் உடைய அவளது அழகு கெடப் பசலை பாய்தல் இலலையாகும் என்று தலைவனிடம தோழி கூறி வரைவு கடாவினாள (அகம. 172:14-18). வயலைக் கொடியினை ஆம்பலொடு சேர்ததுக கட்டிய தழையுடை உடுதது விழவில் ஆடும மகளிரொடு தழுவி யாடும் அணியால் பொலிவுற்று, மலர் போனற கணணையும் மாணிழைக குறுந்தொடி யையு முடைய பரததை முன்கையால் பிணித்த பிணிபபினை விடுத்துத் தலைவன சென்றதறகே மாறுபடுவாள் என்று தோழி கூறினாள (அகம. 176:13-18). குவளை உணகண் அழவும திருந்திழை அலகுலின அவ்வரி வாட்டமுறவும அருள் செயயா ராய்த் தலைவர் பிரிநது சென்றாலும ஆஙகுத தாழக்காது வருவர் என்று தோழி கூறினாள் (அகம. 183:1-5). பிரிந்து சென்ற தலைவர் ஆயிழை யும் நலமெழிலு முடைய பணைத் தோள வளை நெகிழுமாறு மெலிந்து அழகுகெட நம்மைக் கைவிட்டு இரும்பு நெஞ்சுடையவர் போலப் பிரிநதிருககும் வனமை யுடையராயினர் என்று தலைவி கூறினாள் (அகம். 185:1-5). மாரிக் காலதது ஈங்கையின் தளிர் போனற அழகிய மாமை நிறத்தையும் ஆயிழையையும் உடைய மக ளிராய பரததையர் மார்பில் தார் குழையப் பெரிய மனையில வதுவையினைப் பொருந்துதல் உடையவன் தலைவன (அகம். 206.7-12). கடல முன்று றையிடத்தே உள்ள உப்புக குவியல் மழையால் கரைந்தது போலத தலைவியின் திருநதிழைகள் நெகிழ்நதன (அகம. 206:13-16). வெளியன வேண் மான் ஆய்எயினன் பாழிப் பறந்தலையில் இழை யணி யானையையும் இயல் தேரினையும் உடைய மிஞிலியொடு நணபகலில போர் செயது வீழ்ந்தான் (அகம். 208:5-9). விறல் இழைப் பொலிந்த காண் டற்கினிய சாயல உடையதாய், வளைநது திரண்ட தலைவியின் தோளைச் சேர்ந்தாலல்லது கண்கள

துயிலா என்று கூறி, நள்ளிரவில் புலி வழங்கும் மலையிலுள்ள விடரகம் அரிது என்று நினையாது தலைவன தலைவிபால் வருவான (அகம். 218:7-13). சந்தனம தணணிதாய்க் கமழும தலைவன் மார்பை ஒரு நாள் தழுவாது விடினும் தலைவி விறலிழை நெகிழுமாறு மெலிவாள் (அகம். 218:14-17). நளளி, தனபால் இரபபவர்க்கு இழையணி நெடுந்தேரைக் களிறறோடு, மழைபோலக் கொடுக்கும வணமை யுடையவன (அகம். 238:11-14). ஒள்ளிழை மகளிர் புல்லென் மாலைக் காலத்தில பிறையினை வணங் குவர் (அகம். 239:9,10). வீங்கிழை நெகிழ மெலிந்து நாம் வருத்தத்துடன நினைவு மிகும் துயரினைத் தூதுவர் கூறக் கேட்பின, நந்தரின் செல்வத்தைப் பெறுவதாயினும் தலைவர் அங்குத் தங்கார் (அகம். 251:3-6). பநதியில நிற்றலை வெறுதத, போர்த தொழிலில் பயின்ற குதிரை பூட்டிய இழையணி நெடுந்தேர், மின்னுக் கொடிபோலச் செலுததப் படுவதால வழியிலுள்ள பசிய பயிர்கள் அறுபட்டு விலகின (அகம். 254:12-14). அறனின்றி வருததும நீங்காத வாடை கடிமனை மாடத்தில் இரவெல லாம் வீசுவதால், திருந்திழை நெகிழ்ந்து பெரிய அழகு கெடத் தோள் வளை நெகிழநது விழப் பெறும் என்னும் செய்தியைத் தலைவர்பால் சொல் லும் அனபுடையாரைப் பெறின் தலைவர் விரைநது வருவர் என்று தலைவி கூறினாள் (அகம். 255:15-19). தலைமகள் தோழியை, 'ஆயிழை' என்று விளிததுக கூறல் (அகம.277:13). மதிப்பானற ஒண்ணுதலஉடைய வயங்கிழை ஒருத்தி (பரத்தை) இகழநத சொற் கூறி, மழைககண் நோயுற நோககித தலைவன அணிந்த மாலையினை அறுத்து, அவனொடு ஊடிச சிறு துனி செய்தனள் (அகம். 306:10-14). தேரில வநத தெரியிழையினையும் நெகிழ்தோளகளையு முடைய, ஊர் தாஙகாத பரத்தையர், பரத்தைமையை மேன் மேலும் தலைவனபால எயதுவிகக அதனை அவன் தாஙகலாறறாதவனாக இருந்தான் என்று தலைவி அவனபால ஊடல் கொளளுதல (அகம். 316:8-11). தலைவர் தேர் செல்வதனால், திருந்திழையினை யுடையதடமென்பணை ததோள மடமொழி அரிவை இன்றுவிருந்து அயர்தலும கூடும் எனறு வினைமுற் றிய தலைவன கருததுணர்நது உழையர் கூறினர் (அகம். 324:1,2,14). வென்றி வேலையும் இழையணி யானையையு முடைய சோழன படைததலைவன் போர் என்னும் ஊருக்குத் தலைவனான பழையன் ஆவான் (அகம். 326·8-12). தலைவன தேர்தர வந்த நேரிழை மகளிராகிய இறபரத்தையர் என் அழ கினை ஏசுகினறனர் என்பா என்று நயப்புப பரத்தை கூறினாள் (அகம. 336:10-12). நெடுந்தேர் இழையணி யானைப் பழையன் மாறனைக் கூடலில் மிக்க சேனையொடு வநது தங்கிய கிள்ளிவளவன் போரில சாய்த்துப புரவி களிறுகளைப பற்றிக் கொள்ள அது கண்டு கோதை மார்பன் மகிழ்நதான் (அகம். 346· 19-25). சுழித்த செய்குறியாம் வட்டத்தை எணணித தலைவி நாடோறும் அஃதெழுதப்பட்ட சுவர் நனைதற்கு ஏதுவாகிய கணணீர் காதணியில் தெறித்து விழ, திருநதிழை முனகையைக் கவுளில பொருந்த வைத்துப் படுக்கையில கிடந்தபோது, வருததும் தோளகளின வாட்டம போகதம மருந தாகப் பலவி அவள் காதில அறிவுறுத்துமோ என்று தலைவன் நெஞ்சிறகுக் கூறினான (அகம. 351:10-17). தலைவர் பெரிய உமபற் காட்டினைக் கடந்து சென்றாராயினும் தலைவியின் திருந்திழைபபணைத் தோள வருந்துமாறு, தாழ்த்து நினையாதிருகக மாட்டார் (அகம. 357·9-12). கார்காலத்தில சிறந்த பொன்னாலாகிய அவிரிழைகளைத் தொங்கவிட் டாற் போல, நீண்ட பூங்கொத்துக்களை யுடைய கொன்றை அழகு பெறறு விளங்கியது (அகம. 364: 4,5). தலைவி தலைவனுடன உடன்போக்கிற் சென்றமையால், மயிலியற் சேயிழை மகளிர் ஆயம் விளையாட விலலையெனச செவிலி கூறினாள் (அகம. 369:4,5). தலைவன் பிரிநதபோது, இருமபல் கூநத லுடைய சேயிழை மடநதை, இரவில படுக்கையிற் பொருந்தி லெய்துறறுப புலககும் நெஞ்சமொடு, ஆயிதழ் மழைக்கண் நீர்மலகத் துன்புற்றுத தோளை நனைககும் கணணீரை நகத்தால தெறித்துத துயிலா திருநதாள (அகம. 373.10-15). பெருநதோளையும் நுணணிடையையும திருநதிழையையும் உடைய தலைவி விருநதெதிர் கொளளுமாறு, தேர் விரைந்து செல்வதாகவெனறு தலைவன கூறினான (அகம. 374: 16-18). செயயப் பெற்ற விளங்கிழையாற் பொலிந் தது தலைவியின் தோள (அகம. 379.13). தலைவியின் திருந்திழை நெகிழவும பெருநதோள் மெலியவும அரிபரநத கணகள நீர் ஒழுகவுமாகப் பிரிநது செல்லும் தலைவரே, 'ஆறறியிருகக வல்லார்க்கு நீர் விரைவில வருதலை உரைப்பீராக' என்று தலைவனிடம் தோழி செலவழுஙகுமாறு கூறினாள் (அகம. 387:1-3). இழை நெகிழத்த துனபம் மிக, நினைவுமிக்க வருததததுடன புலந்து கூறித் தோள மெலிய வருந்திப பசலை படாந்த மேனியுடைய ளாக நுதல பசநத நிலையினைத் தலைவி எயதல (அகம. 398:1-6). வண்டு உணணுமாறு செறிநது மலர்ந்த பூங்கொத்துககளை இடையிடையே மேற் கொணடு, பொனனாலாகிய புனையிழை கட்டிய மகளிர் கூந்தலைப் போலப் புதிய பூககளுடைய கொன்றை மரம் விளஙகும் (குறு. 21: 1-3). காலை எழுந்து தேரை ஆயத்தப் படுத்தி வாலிழை மக ளிரை (பரததையரை) தழுவும்பொருட்டுத் தலைவன

சென்றான் (குறு. 45:1-3). 'கார்ப்பருவம் வந்தும் என் இழை நெகிழச் சென்ற தலைவர் வாரார் என்று தலைவி அழிந்து கூறினாள் (குறு. 188). தலைவியின் திருந்திழை அல்குற்குப் பெருந்தழை உதவி அசோகு ஒழிய, அயலதாகும் அரலை மாலை சூட்டி இவ்வூர் ஏமுற்றது என்று வெறியாட்டு நிகழ்ந்தபோது தோழி அறத்தொடு நின்றாள் (குறு. 214:3-7). இரவில் ஒரு தேர் வந்து பெயரும் என்பதனால் அன்னை ஆராய்ந்து அலைக்கின்றாள்; இளையரும் மடவருமான மின்னிழை மகளிர் அவ்வாறு அலையாத தாயரொடு விளங்குகின்றனர் என்பது சிறைப்புறமாகக் கூறப்பட்டது (குறு. 246:4-8). அல்குலின் திருந்திழை அசைதலுடைய தழையைக் காட்டிலும் அணிமையிலிருந்து தலைவன் போகானாகிய காரணத்தால் தாய் தலைவியை இற்செறித்துக் காவல் புரிதலை உண்டாக்கினான் (குறு. 294:5-8). வளையணிந்த முன்கையுடைய நேரிழை மகளிர் அகன்ற பாறையில் தினையைப் பரப்பிச் சுனையிற் பாய்ந்தாடிய அற்றம் நோக்கி மந்தி மரக்கிளையிலிருந்து வந்து நன பார்ப்பினோடு அத்தினையைக் கவர்ந்துண்டது (குறு. 335:1-4) 'வீங்கிழை நெகிழுமாறு விம்மி இவ்வாறு நீர் சிந்தும் கண்ணோடு மயங்காதே' என்று தோழி பிரிவிடை வருந்தும் தலைவியை வற்புறுத்தினாள் (குறு. 358:1, 2). வாலிழை மகளிர் மாலைக் காலத்தில் விழவுக்குரிய அணிகளைக் கூட்டுவர் (குறு. 386:3,4). இழையணிந்த நெடிய தேர்களை யுடையவா சோழர் (நற். 10:5). முன்பு தலைவனின் மார்பு தலைக்கொண்ட மாணிழை மகளிர் (பரத்தையா) பலரும் அவன் தெருவில் வருதலை நோக்கி, அவனுடைய கைகளைப் பற்றி இழுத்ததனைக் கண்டதாகத் தோழி கூறினாள் (நற். 30:4, 5, 10). பிறந்த புதல்வனும் ஈன்ற தாயும் உறங்கத் திருந்திழை மகளிர் நனனிமித்தமாக நிற்ப நள்ளிரவில தலைவன் கள்வனைப் போல வீட்டிற்கு வந்தான (நற். 40:5–11). இரவில் வந்த விருந்தினர் உண்பதற்கு நெய் அளவித் தசையினைச் சமைத்த கிளர் இழை அரிவையின (தலைவி) கூட்டத்தினைத் ‸லைவன் விரும்பினான் (நற். 41:6-10). தலைவன் பிரிவால் தலைவி, தன இழை நெகிழ்கின்ற துன்பம் எய்தினாள் (நற். 70: 8, 9). தலைவன் தலைவியை 'வாலிழைக் குறுமகள்' என்று விளித்தான (நற். 76:5). தலைவி இழையணி ஆயமொடு நாணத்தால் வளைக்கப் பெற்றுத் தைத்திங்களில் தண்கயம் படிந்து நீராடுவாள் (நற். 80: 6-8). தலைவியின் தோளில் விறல் இழை நெகிழ, அது கொண்டு மூதூர் பழி கூறும் (நற். 85: 2, 3). பக்கங்கள் மறையப் பூண்ட திருந்திழை கொண்ட தோளினையும நுணுகிய இடையையும் மெல்லிய சாயலையும் உடையவள் தலைவி (நற். 93: 7, 8). நுணணிய வினை மாட்சிமைப்பட்ட இழையினை அணிந்த அல்குலை உடைய மகளிர் விழாவில தாள அறுதிக்குத் தக ஆடுவர் (நற். 138: 8-10). 'ஒள்ளிழை மகளிரொடு ஓரையாடாது, கானலின ஒரு புறம நிற்கும் நீ யார்' என்று இரண்டாம் கூட்டத்துத் தலைவியை எதிர்ப்பட்டுத் தலைவன கூறினான (நற். 155: 1-3). சிலம்பில் முளைத்த வாழையின் கூரிய முகை, ஒள்ளிழை மகளிர் வளையலொடு பிணிக்கப்பட்ட விரலிலணிந்த விரலணி போலக் காந்தள் இதழில தோயும் (நற். 188: 1-5). ஞாழலின் பெரிய பூங்கொத்துக்கள நேரிழை மகளிர் செய்த வண்டற் பாவையின முலையில் சுணங்கினைப் போல மெலிதாகப் படுமாறு பரவும் (நற். 191: 1-4). வலி குறைந்து விளங்கிழை நெகிழ அறல போற் கணணீர் இடை முலை நனைபப, நீங்காத வா॥ விம்மி விம்மித தலைவி வாடுதல் (நற். 208: 1-4). விருந்தினரை எதிரேறக விருப்பங்கொணட பெருந்தோட் குறுமகளாகிய தலைவி, மின் ஒளிர் அவிரிழையால நலல மாளிகை எங்கும் விளங்கினாள் (நற். 221: 8, 9). திருந்திய இழையணிந்த, தொய்யில எழுதப்பட்ட வனமுலையிலுள்ள வரியின அழகு கெடும்படி பசலை நோய தோனறியது (நற.225:6-8). நள்ளிரவில இழையணிந்த மார்பு வடுக கொள்ளுமாறு முயங்கித தலைவன் அருகில இருந்தாலும தலைவி நடுங்கும் இயலபுடையவள் என்று தோழி கூறினாள (நற். 229: 6-8). அகன்ற அலகுலையும மழைககண்ணையும நாயின் நாக்குப போன்ற சீறடியையும் செறிந்த கூந்தலையும புனையிழையையும் உடையவள் தலைவி (நற். 252: 8-12). ஒளளிழைக் குறுமகள் (தலைவி) பாரியின் குன்றம போல மிக்க அழகமைதலால், இற்செறிக்கபபட்டு அரிய காப்பினள ஆயினாள் (நற். 253:5-9). இழை மகள் ஒருத்தியின் பொற்கலன்களைப் பரப்பினாற் போல ஒள்ளிய குமிழம் பழங்கள் உதிர்ந்து கிடந்தன (நற். 274: 3-5). 'புனைந்த இழை நெகிழ விம்மி நொந்து நொந்து வருந்துவதனைப் பொறுப பாயாக' என்று தோழி தலைவியை வற்புறுத்தினாள் (நற். 286:5, 6). தாழைப புதரில் மேல காற்றுத் தாக்குவதால, நுண்ணிய மலரிலுள்ள தாதுக்கள் வயங்கிழை மகளிரின் வணடலிடத்துக் கடற்கரையில பரவிக் கிடக்கும் (நற். 299:2-4). இழையணிந்த மகளிர் போல நீணட, சுரிந்த கொத்தில மலர்கள் மலரப் பெற்றுக் கொன்றை மரம் இலங்கியது (நற். 302:1-3). தலைவியைத் தலைவன் 'திருந்திழை அரிவை' என்று குறிப்பிடல (நற். 321:7;374:9),

தலைவன மாணிழை மகளிரை (பரத்தையரை) தலைவி மனைக்கு அழைத்து வந்து, மணந்து தழுவி யிருந்தாலும் அவருடைய புனமனத்தில் உண்மை தோன்றுதல் அரிதாகும (நற். 330.6-8). மலைச் சிறுவழியில தலைநாள் போனற விருப் பொடு இருளில பலநாளும தலைவனின வரவு காணும் தனக்கு இலங்கிழையினைக் கழலாதவாறு செறிப்பது யாங்ஙனம் என்று தோழி கூறினாள் (நற். 332.7-10). 'தலைவனை இரவில நினைக்குந் தோறும் சுவரினைப் பொருந்திப் பலவி நறசொல் லைச் சொலலுவதனால் பிரிந்த தலைவன திருந்தி ழையின பணைத்தோளை இனறு வந்து கூடுவான போலும்' என்று தோழி தலைவியிடம கூறினாள் (நற். 333:7-12). 'யான புனைஇழை நெகிழ்த்த தனிமை வருத்தத்துடன் இரவிலும கண துயிலாது உளளேன' எனறு ஆற்றாமை மிக்குத் தலைவி கூறி னாள் (நற். 318.7,8). பாமபு படமெடுத்தாற்போலப் பலவாறாகக் கலந்த எணமணிக் கோவையாகிய மேகலை அணிந்து நடததலால ஒதுங்குதல அமைந்த நுண்ணிய துகிலினுள தோன்றி இமைக்கும இழை யணிந்த அலகுலையும் பெருந்தோளையும உடைய வள் தலைவி (நற. 366:1-3). தலைவி திருந்திழையி னையும் தேமொழியையும் உடையவள (நற். 374:9). வாலிழை மகளிர் (பரத்தையா) சேரியில தோனறும தேரினையுடைய தலைவன் கூடுதற்கரிய 'தகுதிப் பாடுயாம உடையவரலலோம் எனறு வாயில மறுக் கும் தோழி பாணனிடம் கூறினாள் (நற 380.5,6). கொணகானததின் கண்ணுள்ள நனனன நாட்டு மகளிர், எருமை தன கொம்பினால் அகற்றித தின றொழித்த மலைப்பச்சை இலைகளை இழைகளை அணிதற்குப பயனபடுமாறு சூடடுவர் (நற். 391: 3-6). பூட்டிய மணிகள ஒலிக்கும் இழைகிளர் நெடுந தேரின உருள், சுரத்திலுள்ள மேட்டு நிலத்தில அதிர்ந்து செலலத் தலைவன முன்பனி நாளிற் சென்றான் (நற். 394:3-6). தலைவன் மார்பு பல ருக்கு இழை நெகிழத தக்க இன்னாமையைத தரும (ஐங. 25.3,4). தலைவியின் திருந்திழைப் பணைத் தோள் நெகிழுமாறு தலைவன் பிரிந்தான் (ஐங். 39: 3,4). மாண்ட இழையணிந்த அரிவை (பரத்தை) தலை வன மார்பினை விலக்கத தொடங்கினாள் எனறு தலைவி தலைவனிடம கூறினாள் (ஐங். 42:2,4). பாண னைப போலத தலைவனும் பல பொய் கூறுதலை மாணிழை ஆயம அறியும் எனறு தலைமகள கூறி னாள் (ஐங. 47.4,5). வாலிழை அரிவை விளையாட் டயரப புனலில் பாயப பெருந்துறைப் புனல தேன பொருந்திய நறிய குவளை மணம் கமழந்து தண ணியதாயிறறு (ஐங. 73). பசுமபொன அவிரிழை பொலல ஒளிர மருத மரததில ஏறிப பணைணையா டிய தலைவியின் கூந்தல் விசும்பிலிருந்து இழியும் தோகை மயிலின் சீரை ஒத்திருந்தது (ஐங். 74). புன லாடு மகளிர் மணலமேட்டில களைந்து வைத்த மறைந்த இழைகளை எருமைகள கிளைத்து வெளிப் படுததும் (ஐங. 100:1,?). 'உன் தலைவி தன் ஒள் ளிழை மணலில் விழுநததாக வெள்ளாங் குருகினை நோக்கிக் கணடாயோ எனறு வினவுகின்றாள்' எனபபரத்தை தலைவனிடம் கூறினாள் (ஐங. 122). நுணங்கிழையையும் செவ்வரி படர்ந்த கண்களை யும அழகிய மேனியையும உடையவள் தலைவி (ஐங். 174:2-4). நீலமணி போலும் வயங்கிழை அணிந்த தலைவி துறுகலலில் ஏறித தலைவன் நாட்டிலுள்ள குனறததை நோக்கி நிறகப பெற்றால் அவள உற்ற நோய தணியுமெனத் தோழி செவிலிக்கு அறத் தொடு நின்றாள் (ஐங். 210). தலைவி கரிய பல கூந் தலையும் திருந்திய இழைகளையு முடைய அரிவை (ஐங. 231:2). தலைவியின் மினனவிர் விளங்கிழை நெகிழுமாறு மெலிந்து, நுதல பசப்பதற்குக் கனவில் தலைவன மார்பை முயங்கி நனவில் அதனைக் காணாமை காரணமாகும் (ஐங. 234). தெரியிழை ஒலிக்கக் காதலரை முயங்கல (ஐங. 235:3). ஒள்ளிய இழையினையும கரிய பலவாகிய கூந்தலையும் உடை யவள் கொடிச்சி (ஐங். 281:2,3). நெருப்பினைப் போல் மலர்ந்த வேங்கையில் இருந்த மயில இழையணிந்த மகளிர் போலத் தோன்றும (ஐங. 294:1,2). தலை வன் பிரிவால பொன்னாலாகிய பாணடிற் காசு களைச சுற்றி மணிகள் கோத்து அணியப் பெற்ற அலகுலையும் வளைய லணிந்த தோள்களையும் உடைய தலைவியின இழை நிலை நெகிழந்து நீங் கும் (ஐங. 310:1-3). தலைவன் பிரிவால தலைவி இழை நெகிழ துன்பம் எய்தல (ஐங். 315:3). தலைவி யின் நலங்கெட்டுப் பசலை பாயவும் நினைவு வருத்தலால் தோளில அணிந்த ஒளி பொருந்திய இழைகள் நெகிழ்ந்து நீங்கவும் தலைவன் பிரிந்தான் (ஐங. 318:1,2). தலைவியைத் தலைவன் 'திருந்திழை அரிவை' என அழைத்தல (ஐங். 315 1). உடனபோக் கிற் சென்ற தலைவி இரவில தங்குவதால், அச்சீறூ ரிலுள்ள புனையிழை மகளிரைப் பெற்ற மனைக் கிழத்தியர்க்கு அவளைக் காண மிகக வருத்த முண் டாயிற்று (ஐங. 382:2-5). பாணர் முலலைப்பண் பாடச் சுடரிழை வாணுதலரிவை முலலை மலர் சூடப் புதல்வனொடு தலைவன் இனிதிருந்தனன் (ஐங். 408). கார்ப் பருவம தொடங்கியும் தலைவன் வராமையால், தலைவியின் ஒளி பசந்து மின்னிழை நெகிழ மெலிந்து தோள் நலங் கெட்டது (ஐங். 455: 2-5). தலைவர் வினை முடிந்து கூடுதலில நம்மினும் விரைவர் என்று கூறப்படுதலின, புனை இழை நெகிழுமாறு உடமபு சுருங்கி உள்ளம் வருந்தற்க

என்று தோழி தலைவியை வற்புறுத்தினாள் (ஐங். 467:1-4). சேயிழை மாதரை நினைநது எய்தும் வருத்தம் நீங்கக் குதிரைபூண்ட தேரினை விரைநது செலுத்துக எனறு தலைவன கூறினான் (ஐங். 481: 2,3). தெரியிழை அரிவைக்குப் பெரு விருந்தாகுமாறு தேரை விரைந்து செலுத்துக என்று தலைவன் தோப்பாகனிடம கூறினான் (ஐங. 482:1,2). பாணி, தூக்கு, சீர் எனறு சொல்லபபட்டவற்றை மாணிழை அரிவை (உமை) காப்பச சிவன ஆடுதல (கலி. 1:15-17). தலைவர் வேட்கை தணியாதவராய்ப் புணர்ச்சியால் நிலை குலைந்த ஒள்ளிழையினைத திருத்துவர் (கலி. 4:14,15), தலைவி மாட்சிமைப பட்ட இழையணிநத மடபபத்தை யுடையவள் (கலி. 9:11). தலைவனைக் கூடுதறகுரிய தலைவி ஒளி வாட, காமன் விழாவில் தலைவன் விறலிழையவ ரோடு (பரததையரோடு) விளையாடுவான் (கலி. 30: 13,14). மதியின் கதிர பால்போல் விளஙகும் இரவில் வயங்கிழை குளிரும்படி அசையும வாடைக் காற்று வந்தது (கலி.31:11,12). பக்கமலையின் மேலே வைதத தேனைக் கொணட இறால இழைநெகிழத் துன பஞ்செயதவன் குன்றில மேகததில் மறையும் மதி யம் போலத் தோன்றும் (கலி. 42:22-24). பாராட் டிய தலைவன் பிரிநதால், இழையணி அல்குலை யுடைய தலைவியின கவின் நீங்குமென்று தோழி கூறினாள் (கலி. 50.22-24). அவிரிழை ஒளிவாட இளமை சான்ற தலைவி பந்தடித்துச் செலவுதல் (கலி. 57:3, 7). தோழி தலைவியை 'அலர்முலை ஆயிழை நல்லாய்' என விளித்துக் கூறினாள் (கலி. 60:15). 'திருநதிய இழையுடைய மென்தோளில நான எழுதிய கரும்பின தோற்றமெல்லாம் நின் முலைகள புணர்ந்ததன பயன்' என்று தலைவன தலைவியிடம் கூறினான் (கலி. 64.12-14). தலைவன் பிரிநதமையால் அரிதாகப் பெறும் தலைவியின் உறக்கத்தை அவன நேரிழை நலலாரை (பரத்தையரை) இல்லிற் கொண்டு வருகையால், குதிரை பூண்ட தேர்மணி ஓசை வந்து கெடுக்கும் (கலி. 70:17, 18). மகளிர் நீர் நிறைந்த வயலில், நெய்தலொடு ஆம்பற் பூக்களைப் பறிப்பதற்குச் சிறப்புடைய சேயிழை ஒலிக்க ஓடும் விளையாட்டுடையர் (கலி. 75:1-4). தலைவன தலைவி புனைந்த இழையினை நோககித் திருத்தினான் (கலி. 76:1). (புதலவன நின மாாபின் ஆரததை அறுத்தால்) 'மாணிழை மடநல்லாா் முயங் கிய முயக்கததை மார்பின் பூணால் கருதுபவள் புலப்பாள்' என்று தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 79:12-14). தோளும் முலையும் கூந்தலும் குழையும் ஏனைய இழையும் தமக்குச் சுமையாக முறிவதொரு வஞ்சிக்கொம்பு போலும் இடையைத் தாங்கிக் கொண்டு பரத்தை வருதல் (கலி. 90:7-10).

தலைவன் கண்டதாகக் கூறிய கனவில, விளை யாட்டு மகளிா தம்முட் பிணஙகிய கொடிபோல, தெரியிழை ஆர்பப மயங்கி வணடிறநத கெட்டு ஓடினர் (கலி. 92.52-54). தலைவன இழையணிநத கொடியினையுடைய தேரினையும் மணி கட்டின இனமான யானையினையும் உடையவன (கலி.99' 7). தழையும் கோதையும் இழையும் ஆகியவறறை யணிந்து மகிழநது விளையாடும ஆயததுள, உடம பொடு என உயிர் புககனன இவள யாா என று தலைவன வினவினான (கலி. 102:5-8). காரி கதனஞ் சாமல் அதனைத் தழுவுமவன் ஒள்ளிழை கூநதலில துயிலுதலைப பெறுவான் (கலி. 104:20, 21). பொது வனாகிய தலைவன, 'முற்றிழையுடைய அழகினை யும மடபபதததைபு முடையவளே, நீ இழைக்கும சிற்றிலை நானும சிறிது புனையட்டுமா' எனறு கேட்டான. (கலி. 111'7-9). பிரிவிடை மாலைப் பொழுது கணடு ஆறறாத தலைவி, 'வாலிழை மக ளிரின உயிரை உடலினினறும் போக்குங் காலத் தின இயலபை அறியாதவராய, அதனை மாலை எனறு அறிவு மயங்கியவர் கூறுவர்' எனத் தலைவி உரைத்தாள் (கலி. 119:14-16). ஒளளிழைமாதர் மகளி ரொடு (தொன்முறை மனைவியா) தலைவன பொருந்தி நம்மை நினைககும பணபிலன ஆதலை அறிவேன எனறு தலைவி கூறினாள் (கலி. 122:16, 17). மூங்கில் நலன இழத்தறகுக காரணமான தோளில விளஙகுகின்ற இழையின சுமையை ஆறறாத வளாய நுதல பசபபூரத் தலைவன தலைவி யைத் துறத்தல (கலி. 127:16,17). கடல தெயவததை நோக்கி, 'நினனிற் பிரியேன' எனறு தலைவியிடம சூளுரை கூறித் தெளிவிதது, அவளுடைய திருந திழை மென்றோளை மணநதான தலைவன (கலி. 131:1,2). தலைவன கூடியதனாற் பெறற பயன, வயங்கிழை (சிலம்பு) ஒலிக்கும்படி உலமரக் காமத தீயை உண்டாக்கியது ஒனறு மட்டுமே எனறு வரைவு நீட ஆற்றாளாய தலைவி கூறினாள (கலி. 137:5-7). மடலேறும் தலைவன தலைவியை வீங்கிழை மாதர், மாணிழை மாதராள், நேரிழை எனறு குறிப்பிடல (கலி. 139:12,22,31). ஆயிழையினை யுடைய மடவரல் வருந்தியவிடத்து அவள வருத் தம் நீஙகத் தலைவர் வநதார் (கலி. 148:21,24). ஊடலை உணர்ததவும் உணராத ஒள்ளிழை மாதரை ஆற்றுவிக்க முயலும் கணவரின் ஆசை வெள்ளம்போல வையையில் வெள்ளம் விரைநதது (பரி.7:36-39). கற்பில் தலைவர் நீங்குதல போலனறி என்றும் பிரிவின்றி அமையும் களவுப் புணாசசி யுடைய அணியிழை நலலார் தலைவரொடு மாறு படும் குற்றமுடையவரலலர் (பரி. 9.22-24). வையை யில் நீராடிய மகளிரிற சிலர் மாலையும சநதனமும்

கத்தூரியும் இழைகளும் ஆகியவற்றை நீரில் இட்டனர (பரி. 10:92,93). வையையில் நீராடிய மகளிரிற் சிலர் மாலைக் காலம் வந்தவுடன் தோளணியோடு சுடரிழை முதலியவற்றையும் அணிந்தனர் (பரி. 10: 115). வையையினைப் பெண்ணாக உருவகப் படுத்தி மாணிழை வையை என்று கூறல் (பரி.11:39). நீராடுதற் கமைந்த அணியினை யுடைய அகலத்து அவவழகிய ஒப்பனையையும் அதற்கேற்ற இழைகளையு முடைய பொன்னரி மாலையை மகளிர் அணிந்தனர் (பரி. 11:62,63). மின்னிழையையும் நறுநுதலையுமுடைய மகள் தன்மை மேம்பட்ட, கன்னிமை முதிராத, கைக்கிளைக் காமததைத் தரும் வையையிடம் தைந்நீராடுதலை, முற்பிறப்பிற் செய்த தவத்தால் இப்பிறப்பில் பெற்றதாகத் தோழி கூறினாள் (பரி. 11:134-138). வையைப் புனல வந்து மதுரை மதிலைப் பொரும் எனக் கேட்ட பெணகளிற் சிலர் மின்போல் ஒளி விளங்கும் இழை அணிநதனர் (பரி. 12:9–11). வேறொருததி தன் கணவனை அணங்குபோல் நோக்க, அதனைப் பொறாளாய்த் தன மாலையைக் கோலாகக் கொண்டு அவனை அடித்து, தன் மார்பிலுள்ள இழையால் அவன கைகளை இறுகக் கட்டினாள் (பரி. 12:57-59). வையைத் துறை முத்து வடம், தலைக் கோலமுத்து, பொன்னாலாகிய ஒளியுடைய இழை முதலியவற்றைக் கொண்டுவரும் வெள்ள நீரை உடையது (பரி. 16:5,6). வையைக் கரையினில ஆய மகளிர் பரத்தையினை நோக்கி பொருள் தருவாரை மயக்க யாழிசை நுகரச்செய்து, எம் இழையையும் வளையையும் பூண்டு, நின் அழகை நுகரச் செய்யும் இன்பத்தில் பொதுவாக உளள மகள்' என்று இழிததுக் கூறினர் (பரி. 20:57, 58). பரங்குன்றில் ஒருததி, தன் அழகைக் கண்ணாடியிற் பார்த்துத் தீப்போல ஒளி விளங்கும் தன் இழைகளைத் திருத்தினாள் (பரி. 21:23,24). செல்வன் நகர்க்கு வந்து திருவடி தொழுது இன்புற்றோரில இருண்ட கூந்தலையும் விலலொத்த புருவத்தையும் ஒளளிழை யணிந்த நுதலையும் கொணட மகளிர் ஒரு சாரரா வர் (பரி. தி.1.36,37). ஒப்பனை செயயப்பட்ட இழைகளையும் நில மகளையும் முடியினகண் கொண்டுள்ளவர் நாகர் (ஆதி சேடன) (பரி. தி.1.58,59). நுணங்கிழையாய் எனப் பெண் விளிககப் பெறுதல் (பரி. தி.2:38).

2. இழையணிந்த பெண். செயிர்தீர் கற்பினசேயிழை- சிவந்த இழையணிந்த பெணணின் - கணவன் (புறம். 3.6). 'நேரிழையாகிய இவளுடைய, தேமல் பரந்த அழகிய ாமுலை அழுநதப் புலலுபவர் யாரோ' எனறு மகட்பாற் காஞ்சித்துறையில கபிலர் பாடினா (புறம். 337:20-22). 'முட்டாச் சிறப்பின் பட்டினம் பெற்றாலும் வாரிருங் கூந்தல் வயங்கிழை பிரிந்திருப்ப நினனொடு வரமாட்டேன்' என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான (பட். 218-220). தலைமகன் தலைவியைப் 'புனைஇழை' எனறு விளித்துக் கூறினான் (அகம். 29:14), அனபு கலநத ஆர்வம் சிறந்த மென்மைத் தன்மையும் கரிய பலவாய கூந்தலையும் உடைய திருந்திழையின் (தலைவியின) ஊர் வனபுலக் காட்டு நாட்டதாகும (அகம். 94:12-14). அஞ்சிலோதி ஆயிழை என்று தோழி தலைவியை விளித்துக் கூறினாள (அகம். 129:18). 'புனையிழையே, அறன்கடைப படா வாழ்க்கையும் என்றும் பிறன்கடைச் செல்லாச் செல்வமும் பொருளால் உண்டாகும்' என்று தலைவன் கூறித் தலைவியின கூந்தலை நீவினான (அகம். 155:1-4). சுரத்திற் சென்ற நம்மை நினைந்து, திருந்திழை (தலைவி) பசலை பாயந்த மேனியளாயக் கதிர் மறைநத மாலைப் பொழுதில் விரலைச் சேர்த்த நுதலை உடையவளாயக கணணீர் சோரத் தோள நெகிழ்நத துன்பத்தொடு வருந்துவாள் என்று தலைவன் தன நெஞ்சொடு கூறினான் (அகம். 169: 8-14). ஒளியுடைய வளையலை ஒடுக்கி, காவலுடைய பெரிய மனைப்புறததே வந்து பார்த்து நம் திருந்திழை வருந்துவளாதலின விரைந்து செல்க என்று தலைவன தேர்ப்பாகனிடம் கூறினான் (அகம. 224: 16-18). தலைவியைத் தோழி 'ஆயிழை' என்று விளித்துக் கூறல் (அகம. 237:8; குறு. 143:1; 366:7; நற். 286:6; 344:4). பொலிவு பெற்ற கூநதலையுடைய 'புனையிழை' என்று தலைவன் தலைவியைக் குறிப்பிடல (அகம். 353:23). சுடர் மண்டிலம் மாமலையில மறைநதிட, 'புனைஇழை, பகற் பொழுது கழிநதபின குவியும் மலர்போல வாடிப் பள்ளியினை அடைந்து வருந்தாதே' என்று தோழி தலைவியை வற்புறுத்தினாள் (அகம். 363:3-5). 'சேயிழை' என்று தோழியைத் தலைவி விளித்தாள் (குறு. 281:6). வெள்ளாம்பலின நெறிப்புண்ட தழையுடைய குறங்கில் மாறி மாறி அலையும்படி கொழுநனை (தலைவனை) காண்பதற்குச் சேயிழை (பரததை) வருவாள் என்று தலைவி, வாயிலாகப புகுந்த தோழியிடம் கூறினாள் (குறு. 293:5-8). தலைவியைத் தோழி 'மாணிழை' என்று விளிததுக் கூறினாள் (குறு. 348:6). தோழி தலைவியைச் 'சேயிழை' எனறு விளித்தல (நற். 24:6). சேயரி பரந்த ஆயிழையின் (தலைவியின) குளிர்ச்சி யுற்ற கண்ணின் பொருந்தாப் பார்வையால் தலைவன் நெஞ்சம் வருத்தமுற்றது (நற். 75.8-10). தலைவி தோழியைப் 'புனைஇழை' என்று விளித்துக் கூறல் (நற். 109:4). ஆயிழையாகிய தலைவி பிரிவு பற்றிய சொல்லைக் கேட்டு, மலர் போனற மையுண்ட கண்ணில நீர் சொரிந்தாள் (நற. 308:1,2). நேரிழை (தலைவி) சுற்றத்

தார் சூழ ஒம்புகின்ற சிறந்த சூல் உடையளாய், மகவீன்று மாளிகையில் பாயலில் படுத்திருந்தாள் (நற். 370 1-4). நாம் குறித்துச் சென்ற கார்ப்பருவம் தொடங்கியமையால் ஆயிழை (தலைவி) சுடர்த் தொடி நெகிழ ஏங்கி அழுதலைத் தொடங்குவாள் என்று வினை முற்றிய தலைமகன் கூறினான் (நற். 371'6-7). தலைமகள் தோழியை 'நேரிழை' என்று விளித்துக் கூறினாள் (நற். 382 6). தலைவியைத் தோழி 'சேயிழை' என்று விளித்தாள் (நற். 398:7). சிவபெருமான் நீலமேனி வாலிழை பாகத்து ஒருவன் (ஐங். க.வா. 1). அணியிழையினை நினைத்து வரும்போது, சுரத்திடை வழிகள் அணிமை யுடையனவாகத் தோன்றும் (ஐங். 359: 4,5). ஆயிழையின் (தலைவியின்) கவின், தலைவன் அளி செய்தலை நீங்கும்போது மழை மாறுங்கால உலகம் போலக் கெடும் (கலி. 25'27,28). தலைவன் ஆயிழையின் சிறு புறத்தைச் சேர, அவள் மேனிப் பசப்பு ஞாயிற்றின் முன் இருள் போல மாய்ந்தது (கலி. 42:30-32). தலைவன் தலைவியை 'உருள் இழாய்' என்றும், 'சேயிழாய்' என்றும் விளித்தல் (கலி. 59:14,24). 'திருந்திழாய்' எனத் தோழி தலைவியை விளித்தாள் (கலி. 65:1). தலைவன் தலைவியை 'எல்லிழாய' 'ஆயிழாய' 'தெரியிழாய்' என்று விளித்துக் கூறல் (கலி. 81.16;86:29; 87:3). ஆயிழை (பரத்தை) ஆரவாரிக்கும் ஒலி கேட்டுத் தலைவன் விரைவாக எழுந்து சென்றமை (கலி. 90:13,14). தலைவன் தலைவியை 'ஆயிழாய' என விளித்தல் (கலி. 95'23). தலைவி தோழியை 'ஒள்ளிழாய' என்று விளித்தாள் (கலி. 105.66). வினைவல பாங்கின் தலைவியை அத்தகு தலைவன் 'தெரியிழாய' என்று விளித்துக் கூறினான் (கலி. 113:22). 'ஆயிழையே. தலைவன் தெளிவித்த சொல்லினால் பிறந்த நோய விலலினும் கடியதாக இருந்தது' எனத் தோழிக்குத் தலைவி கூறினாள் (கலி. 137:11,12). 'சுடரிழை (தலைவி) எனக்குத் தந்தவை துன்பமும் பனை மாவும் ஆகும்' என்று மடலூர்ந்து தலைவியை அடைந்த தலைவன் கூறினான் (கலி. 138'12,13). 'ஒள்ளிழை (தலைவி) எனக்குரித்தாகத் தந்த, என் இயல்பு அழிதற்குக் காரணமான வருத்தத்தை யுடைய காமநோயில் என் உயிர் தேயும்' என்று மடலூர்ந்து தலைவியை எய்திய தலைவன் கூறினான் (கலி. 138:20-23). தலைவன் மடலேறிப் பாட, திருந்திழையை (தலைவியை) பெறுதற்குப் பொருந்துதற்குரிய சொற்களைக் கூறக்கேட்டுத் தலைவியின் தமர் மகட்கொடை நேர்ந்தனர் (கலி. 141:22-25). தலைவியைத் தோழி 'ஆயிழாய' என்று விளித்துக் கூறினாள் (கலி. 105:8). 'இலங்கிழை' (தலைவி) ஈன்றாட்கு அரியள் எனபதனை நீ கூறுதற்கு முன் நான் அறிந்திலேன்' என்று தலைவன் தோழியிடம் கூறினான (பரி. 8:59,60). ஒள்ளிழை (வள்ளி) செவ்வேளின் கையைக் கட்டிக் கோதையைக் கோலாகக் கொண்டு அடித்தாள் (பரி. 9.39,40). வையையில நீந்தும்போது ஒருவன் ஒருத்தியைக் காண அவனது நெஞ்சத்தை அவள் கவர்ந்தாள். அதனால் கை சோர்ந்தது. அவனுடைய கண் அந்த நேரிழை நின்ற விடத்தே நின்றது (பரி. 11'109,110). ஆழ்ந்த சுனை நீரில் மூழ்கி எழுந்த விறலிழையாகிய ஒருத்தி தன் கணவனிடம் புணையாகிய மூங்கிலைத் தருமாறு கேட்டாள் (பரி. 21 40-42). ('இழை' பிறிதொரு சொல்லைச் சேர்ந்தே அன்மொழித்தொகைப் பொருள் தரும்).

3. நூல். வறுமையால் வருத்தத்தையுடைய பாணன் வேறு இழை - நூல் - ஊடே செலுத்தப் பெற்ற வியர்வையால் நனைந்த சீரை உடுத்தியிருந்தான் (புறம். 69 3,4). பாணன் உடுத்த கந்தலாடையில், யாழ்ப்பத்தரின் புறம்போல, வேற்றிழை சூழ்ந்த பல தையலின் இடையிலுள்ள புரைகளில் பேன் ஈரின் கூட்டம் தங்கியிருந்தது (புறம். 136 1-4). பாணன் உடுத்திய ஆடை பழமையுற்றுத் துளைகளுடன் பருத்த இழைகள் போகி, நைந்து, கரை கிழிந்திருந்தது (புறம். 376 9-11). பூங்கலிங்கம் பாம்பின் தோல் போன்ற வடிவினை யுடையதாய் மூங்கிலின் உட்புறத்திலுள்ள தோலபோன்று இழை வரிசை அறிய இயலாதவாறு இருத்தல் (புறம். 383: 10-12). பொருநன் உடுத்திய கந்தலுடை ஈரும் பேனும் இருந்திறைகூடி வியர்வையால் நனைந்து வேற்றிழை உள்நுழைதற்குக் காரணமான தைத்தல் தொழில் உடையதாயிருந்தது (பொரு.79-81). அப்பவாணிகர் வேண்டுவன கூட்டிச் சேர்க்கப்பட்ட இழைபோலச் சூழ்ந்து கிடக்கும் அப்பம் கரிய சட்டியில் கிடந்தது (பெரு. 377-379). அரசி இருந்த கட்டிலில் முத்தினைத் தன்னிடத்தே யுடைய இழை, அழகு பெறுமாறு, கட்டிலின் கீழே விழும்படி நாற்புறமும் தொங்க விடப்பட்டது (நெடு. 123-125). இழைபோன இடம் அறிய முடியாதபடி நுண்ணிய நூலாற் செய்த கலிங்கம் (மலை. 561).

4. துகில். தலைவியின் தடமென்றோள் (மென்மையால) நுண்ணிய இழை - துகிலினை - உடைய அணைபோன்றது (கலி. 56:19).

5. பொற்படை. இழை - பொற்படை - அணியப் பெற்ற தேர்த் தட்டினைக் கொண்ட நெடிய தேரினை ஊர்ந்து தலைவன் வருதல் (குறு. 345'1,2).

**இழைகள் - அணிகலன்கள்** - வையை நீராட வந்தோருட் சிலர் மாலையையும் சந்தனத்தையும்

கத்தூரியையும் இழைகளையும்-அணிகலன்களையும் -நீரில் இட்டனர் (பரி. 10:92,93). இழை- 1. காண்க.

**இழை சூழ் வட்டம்** - நூல் போலச் சூழ்ந்திருக்கும் அப்பம். கரிய சட்டியில் அப்ப வணிகர் பாகுடன் வேண்டுவன கூட்டிச் சேர்க்கப்பட்ட இழை சூழ் வட்டம் - அப்பம் - பாலில் கிடத்தல். இஃது இள மரக்காவில் குருக்கத்தியின் பூக்கள், நிறம் கிளர் கின்ற வார்ந்த மணலிடத்தே குழிகளில் நின்ற நீரில் விழுந்து கிடத்தலுக்கு உவமை (பெரு. 377–379).

**இழைதுகள்** - இழை பொடி. வையையாற்றில் நீராடிய வரிற் சிலர் எண்ணெய் நீங்க இழைதுகளை - இழை பொடியை - தேய்த்தனர் (பரி. 10:91).

**இளங்கண்டீரக்கோ** - ஒரு தலைவன். இவன் கண்டீரக் கோவின் இளவல். இவனும் இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்தவழிச் சென்ற பெருந்தலைச் சாத்த னார் இவனைத் தழுவி இளவிச்சிக் கோவைத் தழுவவில்லை. தழுவாமைக்குக் காரணங் கேட்ட போது இளங்கண்டீரக்கோவின் குடும்பக் கொடை யையும் இளவிச்சிக்கோவின் கொடாமையையும் அவர் சுட்டியுள்ளார் (புறம். 151).

**இளங்கீரந்தையார்** – புலவர். கீரன் தந்தையார் என்ற தொடர் கீரந்தையார் என மருவியது என்றும் கீரந்தையாரினும் இவர் இளைஞராயிருத்தல் பற்றி அவரினும் வேறுபடுத்த இவர் பெயர் இளங்கீரந் தையாரென்று வழங்கியிருத்தல் கூடுமோ என்று தோன்றுகிறது என்றும் உ. வே. சா. குறிப்பர் (குறு. பாடினோர் வரலாறு). கீரந்தையார் எழுதிய பாடல் பரிபாடலில் ஒன்று காணப்படுகின்றது. இளங்கீரந்தையார் பாடல் குறுந்தொகை 148-ஆம் பாடலாக அமைந்துள்ளது. செல்வச் சிறாரின் சீறடிப் பொலிந்த பொன்னாலாய கிண்கிணிவாய்க் குத் தவளையின் வாயை உவமை கூறியுள்ளார்.

**இளங்கீரனார்** – புலவர். எயினந்தை மகனார் இளங் கீரனாரும் இவரும் ஒருவரே என்பர் பி. நா. (நற். பாடினோர் வரலாறு). இருவரையும் வெவ்வேறாக மர்ரே பதிப்புக் கருதும். அகநானூற்றில் 3, 225, 239, 289, 299, 361, 371, 395, 399- ஒன் பதும் குறுந்தொகையில் ஒன்றும் (116) நற்றிணை யில் 3, 62, 113, 269, 308, 346-ஆறும் ஆகப் பதி னாறு பாடல்கள் இவர் பாடியனவாகக் கிடைத் துள்ளன. பாலைத்திணையையும் வேடர் வாழ்க்கை யையும் நன்கு சித்திரித்துள்ளார். ஆதலின் இவரை வேடர் மரபினர் எனக் கருதலாம். தலைவியின் இனிமைக்கு வினை முடித்தலால் வரும் இனிமை யையும் (நற். 3) மனம் கரைவதற்குப் பசிய மட்கலம் பெருமழையிற் கரைவதையும் (நற். 308) உவமை கூறுவர். மகளிர் பிறை தொழுதல் (அகம். 239) சுவ ரில் கோடிட்டு நாளெண்ணுதல் (அகம். 289) முதலிய வழக்குகள் கூறப்பட்டுள்ளன. உதியஞ்சேரலின் போர்ச் சிறப்பும் (நற். 113) சுட்டப் பெறும்.

**இளங்குமணன்** - குமணனின் தம்பி. இவன் தன் அண்ணனும் சிறந்த கொடைஞனுமாய குமண னிடம் பகைமை கொண்டு அவன் நாட்டைக் கைப் பற்றினான். பின் காடு பற்றியிருந்த குமணனைக் கொல்லக் கருதினான். பெருந்தலைச் சாத்தனார் காட்டிற்குச் சென்று குமணனிடம் வாள்பெற்று வந்து அதனை இளங்குமணனிடம் காட்டிப் பகைமை தவிர்த்தார் (புறம். 165. துறைக் குறிப்பும் காண்க).

**இளங்கோசர்** - இளையகோசர். நல்லிசை நிறுத்த பெரும் பெயர் மாறனைத் தலைவனாகக் கொண்டு போரில் வெல்லும் வாளைக் கொண்ட இளம்பல்கோசர் நெறி முறைப்படி அவனது வாய்மொழி கேட்டு நடந்தனர் (மது. 771-774). கடலாடுமகளிர் கொய்த ஞாழலும் உழவர் பறித்த குவளையும் காட்டில் அலர்ந்த முல்லையும் கொண்டு கண்ணி தொடுத்து இளங்கோசர் விளையாடுவர் (அகம். 216:8–11).

**இளஞ்சேட் சென்னி** - சோழ மன்னன். சோழன் செருப் பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி (புறம். 370,378) சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னி (புறம். 4,266) சோழன் நெய்தலங் கானல் இளஞ் சேட் சென்னி (புறம். 10,203) எனப் பல பெயர்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன. 'இளஞ்சேட் சென்னி' தனித்து யாரைக் குறிக்கும் என்பது தெரி யவில்லை. சோழன் செருப்பாழி எறிந்த இளஞ் சேட் சென்னி, சோழன் உருவப் பஃறேர் இளஞ் சேட் சென்னி, கோசன் நெய்தலங் கானல் இளஞ் சேட் சென்னி காண்க.

**இளஞ்சேரல்** – சேர வேந்தன். இளஞ்சேரல் இரும் பொறை என்று வழங்கப் பெறுவான். இளஞ் சேரல் இரும்பொறை காண்க.

**இளஞ்சேரலிரும்பொறை** - சேர வேந்தன். குட்டுவன் இரும்பொறைக்கு மையூர் கிழான் வேண்மாள் அந் துவஞ்செள்ளை யீன்ற மகன். சோழனும் பாண்டிய னுமாகிய இருபெரு வேந்தரும் விச்சியும் வீழப் பொருது மலையத்தமைந்த ஐந்து மதிலையழித்துப் பொத்தி என்னும் புலவரை யாண்ட கோப்பெருஞ் சோழனையும் வித்தை என்னும் புலவரை யாண்ட இளம் பழையன் மாறனையும் தான் எடுத்த வஞ் சினம் வாய்ப்ப வஞ்சி மூதூரில் வென்று கைக் கொண்டு வந்த பொருளைப் பிறர்க்குதவி மந்திர வழிபாட்டு மரபின்படி தெய்வங்களை வழிபட்டு மையூர் கிழான் என்னும் அமைச்சனைத் தன் புரோகிதனைக் காட்டிலும் அறநெறியறிபவனாகச்

செய்து அருந்திறல் வாய்ந்த பூதங்களை இவ்வுல கத்தே கொணடு வந்து கள வேள்வியாற் சாந்தி செய்து மன்னுயிர் காத்த மறுவில்லாத செங்கோ லினை யுடையவன். இவனைப் பெருங்குன்றூர் கிழார் பாடிய பததுப் பாட்டுக்கள் பதிற்றுப் பத்தின ஒன்பதாம் பத்தாக அமைநதுள்ளன (பதி ப. 9). சேரர்க்கு மருமக்கட்டாய முறை கூறுவோர் மையூர் கிழானை இவனுக்குத் தந்தையாகவும் வேண்மான் அந்துவஞ செள்ளையைத் தாயாகவும் குட்டுவன் இரும்பொறையைத் தாய் மாமனாகவும் கூறுவர்.

**இளந்தத்தன் – புலவன்.** இவன் சோழன் நலங்கிள்ளி யிடத்திலிருந்து உறையூர் புகுநதபொழுது இவனை ஒற்று வந்தவன எனக் கருதிக் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி கொல்லப் புகுந்தான். அவ்வமயம் கோவூர் கிழார், இவன் பரிசில் வாழ்க்கை யுடையான், பிறர்கருத் தீதறியாதவன் என எடுத்துக் கூறிக் கொலையினின்றும் உய்வித்தார் (புறம். 47. துறைக்குறிப்பும் காணக).

**இளந்திரையனார் - புலவர்.** தொண்டைமான் இளந்திரையன் என்னும் பெரும பாணாற்றுப் படைத் தலைவனும் இவரும் ஒருவரே என்பர் பி.நா. (நற். பாடினோர் வரலாறு, பக். 21). நெய்தல திணையைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இளந்திரையனார் பாடியனவாக நற்றிணையில் 94, 99 ஆக இரு பாடல்கள் உள்ளன. தொணடைமான் இளந்திரையன் பாடியவாக நற்றிணை 106, புறம் 185 ஆக இருபாக்கள் உள்ளன. பி.நா. கருத்துப்படி இப்புலவர் பாடியவை நற்றிணையில மூனறு பாடலாகும்.

**இளந்தேவனார் - புலவர்.** மதுரைப் பணட வாணிகன் இளந்தேவனார் என்பவரும் இவரேயாவர் என்பர் பி. நா. வணிக மரபினர். இவர் பாடிய பாடல்கள் நற். 41, அகம் 58, 298, 328 ஆக நான்காகும். மடப்பிடி மழை தவழ் சிலம்பில் கடுஞ்சூல் ஈன்று வாழையஞ் சிலமபில் களிறு தனது மேனியைத் தைவரத் துஞ்சும் என்று புனைந்துள்ளார் (அகம். 328). நற்றிணைப் பாடல் (41) பாலைத திணை பற்றியது. அகநானூற்றுப் பாடல்கள் மூனறும் குறிஞ்சித் திணை குறித்தன.

**இளநாகனார் - புலவர்.** நாகர் என்னும் பெயர் உள்ளவர் பலரிருத்தலின் அவரின் வேறு பிரித்தறிய இள நாகனார் என அழைக்கப் பெற்றார். இவர் பாடியனவாக நற்றிணையில் இரு பாடல்கள் (205,231) காணக் கிடக்கின்றன. அவை முறையே பாலைத் திணை பற்றியும் நெய்தல் திணை பற்றியும் பேசுகின்றன. ஊர்க்குருவி முட்டை உடைந்தது போலப் புன்னையரும்பு மலர்ந்துள்ளது என்பது அழகிய உவமையாகும்.

**இளநாள் - இளவேனிற் பருவம்.** சோலைகளிலெலலாம காஞ்சி மலர்களின் துகள்கள உதிரநது அழகு செய்யப்பெற்ற மணல்திடர்கள புதுமணங்கமழவும மாந்தளிர்களைக்கோதிய கருங்குயிலகள சேவலும் பெடையுமாய் மாறிமாறிக் கூவவும் இளவேனிற பருவம் வரும்; அபபருவததே வணடுகள கோங்க மலர்களைக் கிணடி உதிர்க்கும பூநதுகளகள இலவ மலர்களில் வீழந்து பவளச் செபபில பெய்துவைதத பொற்சுணணம போல் தோனறும்; காமக கூட்டத்தை இகழவோரும் இகழாது விருமபுதறகுரிய அந்த இளநாள-இளவேனிற் பருவம-மீணடுவரும் பருவமாகக் குறித்துத் தலைவன தலைவியைப் பிரிந்து சென்றான் (அகம். 25:1-13).

**இளநீர் - 1.** முதிராத் தெங்கின்காய். தென்னையின் இளநீரின்-முதிராத் தெங்கின்காயின்-குலையைச சிதையத் தாக்கி அருவி பழமுதிர்சோலை மலையினின்றும இறங்கும (முரு. 307,308). வளமிகு நனனாட்டில நெல்விளை கழனியில பறவைகளை ஓட்டுபவர் கழியிலுள்ள மீனைச் சுட்டும் உணடும் களளைப் பருகியும் அமையாராயத் தெனனையின இளநீரை உதிர்ப்பர் (புறம். 29: 13-16).

2. மெல்லிய இயல்பு. இளநீர்-மெல்லிய இயலபு-வாய்ந்த பொங்கு திரையினை யுடைய கடலும் ஒலியடங்க விலலை (நற. 335:1,2).

**இளம்பல்கோசர் – இளைய கோசர்.** 'இளங்கோசர்' காண்க.

**இளம் பழையன் மாறன் - ஓர் அரசன்.** விததை என்னும் புலவரை யாணட இளம பழையன மாறனைத தான் கொண்ட வஞ்சினம வாயபப இளஞசேரல இரும்பொறை மூதூரில் வெனறான (பதி. ப. 9:7-9).

**இளம்பாலாசிரியன் - ஓர் ஆசிரியர்.** இவர் மதுரை இளம்பாலாசிரியன் சேந்தன கூத்தனார் எனறும் வழங்கப் பெறுவர். இளம் பால் என்பது ஓர் ஊர் என்பர் பி. நா. (நற். பாடினோர் வரலாறு, பக். 62). இவர் பாடியனவாக அகத்தில (102, 348) இருபாடலும் நற்றிணையில் (273) ஒரு பாடலும் ஆக மூன்று பாடல்கள் கிடைத்துள்ளன. கூந தலைக் கோதிக் கொண்டு கொடிச்சி குறிஞ்சிப பண பாடத் தினைக்கதிரை யுணணாது நிலையினும் பெயராது களிறு உறங்கியது எனக குறிஞசிநிலக் காட்சியைப புனைவர் (அகம 102). தோபபியை மலைத தெய்வததிற்குப் படைத்துப் பின குறத்தியர் கொடுபபக் குறவர் அதனைப்

பருகி மகிழ்தல் குறிப்பிடப்பட்டுள்ளது (அகம். 348).

**இளம் புல்லூர்க்காவிதி** - புலவர். இளம்புல்லூர்க் காவிதியார் எனவும குறிக்கப் பெறுவர். இவருடைய ஊர் மிழலைக் கூற்றத்தைச் சேர்ந்த இலம் புல்லூர் ஆகலாமெனறு கருதுவர் ஔவை. து (நற். 89 - ஆம் பாடலுரை). காவிதி என்பது நல்லொழுக்கம், நற் செய்கை சானற பெருமக்கட்குப் பட்டமாக அளிக கப்பெறும் சிறப்புப பெயராதலின் இப்புலவரும் அச்சிறப்பினைப பெற்ற சானறோராவர் என்பது தெரிகின்றது. காவிதிப்பட்டமுடைமையால இவர், 'பாண்டி நாட்டு உழுவித்துண்ணும் வேளாளரா வார்' என்று கருதுவர் பி. நா. (நற். பாடினோர் வரலாறு) நற்றிணை 89-ஆவது பாடலாக அமைந் துள்ள இவர்தம ஒரே பாடல், முலலைத் திணையில், தலைவன் பொருள் முறறி மீண்டும் வந்தான் எனக் கேட்டதோழி தலைவிக்குரைத்ததாக அமைந் துள்ளது. முனபனிப் பருவத்தில், மயிர்பொருந்திய காயகளைக் கொண்ட உழுந்தின் அகன்ற இலைகள் சிதையுமாறு அன்பில்லாத வாடைக்காறறு வீசு வதற்கு, மாலைப் பொழுதையும் வருத்தத்தையும் முற்படவிட்டுக் கொணடு பருமம் அணிந்த யானை அயர்ச்சியால் பெருமூச்சு விடுவதனை உவமை காட்டியிருப்பது நயமுடைய தாகும் (நற். 89: 5-9).

**இளம்பூதனார்** - புலவர். இளம்பூதனார் இவர்தம் இயற் பெயராகும். இவர் பூதனார் எனனும் புலவரின வேறுபட்டவராவர் என்பதறிய இளம் என்னும் அடைசேர்த்து ~ ழங்கப் பட்டாராதல் வேணடு மெனறு அபிதா ` ந்தாமணி கூறுகின்றது (பக். 219). இவருடைய ஒரே பாடல் குறுந்தொகை 334-ஆம் பாடலாக அமைந்துள்ளது. சிவந்த வாயினை யுடைய சிறு வெண் காக்கைத் தொகுதி, வீசும் அலைகளின் நீர்த்துளிகள் தம் ஈரமான புறத்தை நனைப்ப அக்குளிரை வெறுத்துப் பல பூக்களை யுடைய கானலில் தங்கும் என்று ெ தற் காக்கை யியலபினைச சிறப்பாகக் காட்டியுள்ளார் (குறு. 334: 1-3). தலைவன் பிரிந்தால், தலைவி இறக்க நேரும் என்பதனைச் 'சேர்ப்பன நீப்பின் ஒருஉம் இன் னுயிரல்லது பிறிதொன்று எவனோ தோழி நாம் இழப்பதுவே' என்று தலைவி தோழியிடம் வினவும் பாங்கில நயம்படக் கூறியுள்ளார்.

**இளம்பெருஞ்சென்னி** - ஒரு சோழ மன்னன். சோழர் பெருமகனாகிய விளங்கு புகழ நிறுத்த இளம்பெருஞ செனனி, தன குடிக்குச செயயும செயலாதலின, போர் வினையை முடித்தற்குப் பாழி என்னும் அரணை அ த்து, வமப வடுகர்தம் தலையைத் தறித்து யானைகளைக்கொன்றான் என்று இவன் சிறப்பினை இடையன் சேந்தங்கொற்றனார் அக நானூறு 375-ஆம் பாடலிற் புலப்படுத்தியுள்ளார்.

**இளம்பெருவழுதியார்** - அரசப் புலவர். பாண்டியர் குடி யைச் சேர்ந்த இவர், இளமையிலேயே பேரறிவு வாய்க்கப் பெற்றமையால் இளம்பெரு வழுதியார் எனப் பெயர் பெற்றிருக்கலாம். இவர் திருமாலை வாழ்த்திப் பாடிய பரிபாடல் ஒனறே (15) இவரது பேரறிவிற்குப் போதிய சான்றாகும். கடலும் கானலும் போல வேறுவேறாகிய திருமேனி நிற முடைய திருமாலும் பலதேவரும் சொல்லும் பொருளும்போல வேறுபடாத தொழிலுடைய வர் என்று வேற்றுமையில் ஒற்றுமை காணும் இவ ரது உள்ளத்து உயர்வும் அவ்விரு தேவரும் எழுந் தருளியிருக்கும் சோலை மலையின் சிறப்பினை இவர் கூறும் நயமும் உணரத்தகும். துழாய் மாலை யணிந்தவரான திருமால் அருள் புரிந்தாலன்றித் துறக்கம் அடைதல் எளிதோ என்று வினவுவதனால் திருமாலிடத்து இவர் கொண்டிருந்த ஈடுபாடு விளங்கும். இருங்குன்றத்தில் திருமால் பலதேவ ரோடு நிற்கும் நிலைமையை நினைக்குமாறும் தன்னைக் கண்டாரது மயக்கத்தை அறுக்கும் தெய்வமாகிய அந்த இருங்குனறத்தைக் கண்டு பணி யுமாறும் திசை நோககித் தொழுது செல்லுமாறும் உலகத்தினரை அமமலையிடத்தே ஆற்றுப்படுத்து வர். திருமாலையும் பலதேவரையும் தொழுது அம் மலையடியில வாழதல தமக்கு உணடாகுகவென்றும் வேண்டுகிறார். 'உணடாலமம இவ்வுலகம்' என வரும் புறநானூற்றுப் பாடலினை (182) பாடியவ ரான கடலுள மாய்ந்த இளம்பெரு வழுதி என்ற புலவர்க்கு அவரது இறப்பின் பின்னரே 'கடலுள் மாய்ந்த' என்னும் பெயரடை ஏற்பட்டிருக்குமா தலின் அநத இளம்பெருவழுதியும் இவரும் ஒருவரே யென்று கொண்டனர் உ. வே. சா. (புறம். பாடி னோர் வரலாறு). வையாபுரிப்பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பிலும் இளம்பெருவழுதியார் பாட லாகவே இரண்டும காட்டப்பட்டுளளன. இரு பாடல்களுக்கும் இடைப்பட்ட பொருள் ஒற்றுமை யும் அவை ஒருவர் பாடலே யென்பதை வலி யுறுத்தும்.

**இளம்போதியார்**- புலவர், போதியார் என்பது புத்தர் பெயராகலாமென்று கருதப்படுகின்றது (ப. மு. பக். 120). அதனால் இவர் புத்த சமயத்தினர் என்று கருதப்படுவர் (அ. சி. பக். 220; பி. நா. நற். பாடினோர் வரலாறு). இவருடைய ஒரே பாடல் (நற். 72) நெய்தல் திணையில் தோழி கூற்றாக அமைந்துள்ளது; 'பேணுப பேணார் பெரியோர் என்பது, நாணுத்

தக்கன்றது காரணுங்காமல்' என்றும், 'உயிரோ ரன்ன செயிர்தீர் நட்பு' என்றும் அமைந்துள்ள தொடர்கள் நயமிக்கனவாகும்.

**இளமாணாக்கன்** - இளையமாணாக்கன். 'அன்னையே, இவன் ஓர் இளமாணாக்கன் - இளம் மாணாக் கன் - இரந்து பெறும் உணவால் முற்ற வளராத மேனியோடு இவ்வூர் மன்றத்தே பெருந்தலைமை உடையவனாக இருக்கும் இவன், தன்னூர் மன் றத்தில் எத்தன்மையனாக விளங்குவனோ' என்று தலைவி, தோழியிடம் பாணன் கேட்கக் கூறினாள் (குறு. 33).

**இளமை** - இளம் பருவம். கயமாடு மகளிரொடு கைபிணைந்தாடி மருத மரத்திலேறிக் கரையவர் மருள நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து குளித்து மணற் கொண்ட கல்லா இளமை - இளம் பருவம் - எவ்விடத்துள்ளதோ எனத் தம் இளமை ஒழிந்ததற்குத் தொடித்தலை விழுத்தண்டினார் கையற்றுப் பாடியுள்ளார் (புறம். 243:1-11). தன் வளமனையில் கொழுநன் சிறிது பிரிந்தாலும் இன் னுயிர் நடுங்கும் பூத பாண்டியன் தேவி பெருங் கோப்பெண்டு இளமை உணர்ச்சிகளை முடித் தொழுகி நீர்வார் கூந்தல் இரும்புறந் தாழத் துன்ப நிறைந்த கண்ணினளாய்ச் சுடுகாட்டை நோக்கிச் சுழன்றாள் (புறம். 247:5-10). இருபிறப்பாளராகிய அந்தணர் இளமை நல்யாண்டு நாற்பத்தெட்டை மெய்ந்நூல் கூறும் நெறியில் கழித்தவர் (முரு. 177-180). இரவுக் குறியில் தலைவியின் மென்தோளில் இன்துயில் பெறானாய்த் தலைவன் மீண்டாலும் வெறுப்படையான்; இளமை கடந்தது மிலன்; வளமையினால் தன் நிலை குலைந்தது மிலன் (குறி. 242-245). மத்தி என்னும் மன்னனது கழாஅர் என்னும் ஊரைப் போன்ற தன் இளமை நீங்கி மிகப் பழமையாகி விட்டது' என்று தலைவி ஊட லிற் கூறினாள் (அகம். 6:20, 21). இல்லக்கிழத்தியா கும் பருவமுடைய தலைவி வயலைக் கொடி படர்ந் துள்ள பந்தரின் கீழ்ப் பந்தெறிந்து விளையாடி இள மைத் தன்மை யுடையளாகவே காணப்படுகிறாள் (அகம். 275:3,4). 'இளமை பாரார் வளத்தை நச் சிச் சென்ற தலைவர் கூறியபடி கார்ப்பருவம் வந் தும் அவர் இவ்விடம் வரவில்லையே, எவ்விடம் உள்ளாரோ, என முல்லையரும்புகளைப் பற்களா கக் கொண்டு கார்ப்பருவம் நகைக்கிறது' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 126). குன் றைப் பொருந்திய சிறு நெறிகள் அரிய என்னாது மறத்தற்கரிய காதலி தனித்துத் தங்கப் பிரிந்து செல்வது நம் இளமைக்கு முடிவாகும் என்று பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சிற்குத் தலைவன் கூறினான் (குறு. 151:4-6). இன்பமும் இளமையும் இவ்வுலகத்து நாள்தோறும் எய்கணை நிழல்போலக் கழியும் (நற். 46:1, 2) பாழ்பட்ட பாலைவழி கடநது சென்று ஈட்டும் பொருளும் இன்பந் தரு மெனினும் இளமையிற் சிறந்த வளமையு மில்லை; இளமை கழிந்த பின்னர் வளமை காமஇன் பத்தைத் தருதல் இயலாது. அதனால் நிலையில் லாப் பொருளீட்டச் செல்லல் நன்றோ என நெஞ் சிற்குக் கூறித் தலைவன் செலவழுங்கினான் (நற். 126:6-12). வயது முதிர்ந்தவர் பின் இளமையை விரும்பினாலும் தவறியேனும் அடைய முடியாது (நற். 314:1). தலைவி இளமை நீங்கினாள் என்று புறத்தே போக விடாமல் அவளைத் தாய் இற்செறித்தாள் (நற். 351:1,2). தலைவியைப் புணர்ந்து இளமையை இனிதுடன் கழித்தால் அவ் விளமை இனிது (ஐங். 415:3,4). வறியவன் இளமை போல் மரங்களிலுள்ள தளிர்கள் வாடின (கலி. 10: 1). இளமையும் காமமும் கையிடத்து நில்லாவாய் நாடோறும் கழியும் (கலி. 12:12). வளமையை நாடோறும் செய்து கொள்ளலாம், தலைவியின் இளமை போயின் பின் அதனை மீட்க முடியாது எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (கலி. 15:24-26). மலரிருக்கும் தடத்திலுள்ள நீர் நாடோறும் குறையுமாறுபோல இளமையும் நாடோறும் குறை யும் (கலி. 17:15,16). இளமையும் காமமும் ஒருசேரப் பெற்றவர், செல்வத்தை விரும்பத் தக்கதொரு நன்மை அச் செல்வத்திற் கில்லை (கலி. 18:7,8). வறு மையால் ஒன்றன் கூறாகிய ஆடையை உடுப்பவரே யாயினும் பிரியாதிருப்பவர் வாழ்க்கையே சிறப் பினது; கழிந்த இளமை மீண்டும் பெறுதற்கரிது என்பது தோழி கூற்று (கலி. 18:9-12). யாறு நீர் கழிந்தாற் போல இளமையும் கழியும்; கழிந்தநீர் மீளாதது போல இளமையும் மீளாது (கலி. 20:13). கைப்பொருளில்லாதவன் இளமை போலத் தலைவ னது அளி பெறாமல் தலைவி பொலிவழிந்தாள் (கலி. 38:15). தலைவி இளமைப் பருவத்தால் தன தந்தை யின் வளமனையில் அடிக்கின்ற பந்துடன் தளர்ந்து ஒதுங்கி ஆடினாள (கலி. 57:6,7). வருத்தத்தினை யுடைய காம நோய் கைம்மிகச் சிறிது உயிருடனி ருக்கும்படி என்னைவிட்டு வைத்து என் உயிரை வாங்கிக் கொண்டு, தலைவி அதனைத் தன் இள மையால் அறியவில்லை எனத் தலைவன குறிப்பிடு கின்றான் (கலி. 58: 6-8).

**இளவிச்சிக்கோ** - ஒரு தலைவன். விச்சிக்கோன் தம்பி என்று கருதுவர் உ.வே.சா. (புறம். பாடப்பட்டோர் வரலாறு). இளங்கண்டீரக்கோவும், இளவிச்சிக்கோ வும் ஒருங்கு இருந்தபோது பெருந்தலைச் சாத்த

னார், இளங்கண்டீரக் கோவைத் தழுவி, இளவிச் சிக்கோவைத் தழுவாது விடுத்தார். ஏன் என்னைத் தழுவவில்லை என்று இவன வினவியபோது அவர், 'கணவன் நெடுந்தூரம் சென்றிருக்கும் காலத்தே பெண்களும் பரிசில் நல்கும் கொடைப் பண்பு சான்ற மரபில் வந்தவனாதலின் இளங்கண்டீரக் கோவைத் தழுவியதாகவும் பாடுநர்க் கடைத்த வாயிலினை உடையார் மரபினனாதலின் இளவிச் சிக்கோவைத் தழுவாது விடுத்ததாகவும் கூறினார் (புறம். 151. பாடல அடிக் குறிப்பு). இளவிசசிக்கோ என் பதற்கு இள வச்சிரக்கோ என்னுமொரு பாட பேதம் இருப்பதாக உ.வே.சா. குறிப்பிட்டுள்ளார் (புறம். 151. உரை அடிக் குறிப்பு).

**இளவெயினனார்** - புலவர். எயினன் என்பது கொண்டு இப்புலவர் வேட்டுவ மரபினர் எனத் தெரிகின்றது என்று பி. நா. கூறுகின்றார் (நற். பாடினோர் வரலாறு). நெயதல் திணையிலமைந்த இவருடைய ஒரே பாடல் நற்றிணை 263 - ஆம் பாடலாக அமைந் துள்ளது. 'களவின் விளைவாகப் பிறை வனப் பிழந்த நுதலும் இறைவரை நில்லாத வளையும் ஊர் அலர் தூற்றிய கௌவையும் பற்றி நாம் நாணத்தால் தலைவனிடம் கூறாது மறைத்தாலும், நம் கணணீர் அவற்றை அவற்குக் காட்டிக் கொடுத்து விடுகின்றது' என்று கூறும் தோழியின் சிறைப்புறக் கூற்று நயமிக்கது (நற். 263).

**இளவெளிமான்** - ஒரு தலைவன். இவன் வெளிமானின் தம்பி. ஈயாப் பண்புடையவன். கற்றோர்பால் அன்பில்லாதவன். வெளிமான் இறந்தபிறகு அவன் தம்பி இளவெளிமானைப் பரிசில் கொடு என்று பெஞ்சிததிரனார் கேட்க, அவன் சிறிது கொடுப்பக் கொள்ளாது, 'பெரிதே உலகம் பேணுநர் பலரே' எனறு கூறி அவனை விடுத்துச சென்றார் (புறம். 207: 7; துறைக குறிப்பு; 237-துறைக் குறிப்பு).

**இளவேட்டனார்** - புலவர். அடைமொழி இல்லாமை கொண்டு இவர் மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனாரின் வேறாவர் போலும் என்று குறிபபிடுகின்றார் பி. நா. (நற். பாடினோர் வரலாறு). அவர் தம் நற்றிணைப் பதிப்பில 33, 157, 221 ஆகிய மூனறு பாடல்களின் ஆசிரியர் பெயர் இளவேட்டனார் என்று பதிப்பித்துள்ளார். எனி னும், இப்போது அஃது (நற். 221 - ஆம் பாடல்) இடைககாடனார் பாடலென்று தெரிகின்றது. அதனை ஒழித்தால் இவர் பாடியவை நற்றிணை யில் இரணடு பாடல் (33, 157) என்று, அந்நூற் பாடினோர் வரலாற்றுப் பகுதியில் விளககியுள்ளார் (நற். பாடினோர் வரலாறு). இப்புலவரை 'மதுரை றுவை வாணிகன் இளவேட்டனார்' என்றே கொண்டுள்ளார் உ. வே. சா. (குறு. பாடினோர் வர லாறு). ஆனால் குறுந்தொகை 185-ஆம் பாடலில், அதன் ஆசிரியர் பெயர் 'மதுரை அறுவை வாணி கன் இளவேட்டன்' என்று பதிப்பித்துள்ளார். வையாபுரிப்பிள்ளையவர்கள், இளவேட்டனார் என் னும் பெயரைக் கொள்ளாது மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் என்னும் பெயர் மட்டுமே கொண்டு, அப்புலவர் அகநானூற்றில் 6 பாடல்கள் (56, 124, 230, 254, 272, 302) குறுந் தொகையில் ஒரு பாடல் (185) புறநானூற்றில் ஒரு பாடல் (329) நற்றிணையில் 4 பாடல்கள் (33, 157, 221, 344) ஆகப் பன்னிரண்டு பாடல் களைப் பாடியுள்ளதாகப் பதிப்பித்துள்ளார் (வையா புரிப்பிள்ளையவர்களின் சங்கநூற் பதிப்பு பக். 1092-1098). இந் நற்றிணைப் பாடல்கள் நான்கனுள் 37, 157 ஆகிய இரு பாடல்களின் ஆசிரியர் பெயர் இள வேட்டனார் என்றும் 221-ஆம் பாடலாசிரியர் பெயர் நூலுள் இள வேட்டனார் - பாடினோர் வரலாற்றில் இடைக்காடனார் என்றும் 344-ஆம் பாடலாசிரியர் பெயர் மதுரை அறுவை வாணி கன் இளவேட்டனார் என்றும் பி. நா. தம் நற் றிணைப் பதிப்பில் குறிப்பிட்டுள்ளார். அவர் பதிப்பிலமைந்த 33, 157 ஆகிய இரு பாடல்களும் பாலைத் திணையிலமைந்துள்ளன. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் காண்க

**இளவேனில்** - சித்திரை வைகாசி மாதங்களைக் கொண்ட பருவம். கிளைகளில் பசிய அரும்புகளை ஈன்ற முருக்கமரத்தின் மலர்ந்த பூக்களைக் கிண்டிப் பூந்துகளை யுண்டு மாமரத்தின் உச்சியிலிருந்து செங்கட் கருங்குயில் கேட்போர் விழையக் கூவும் இன்னிளவேனிலிலும்-சித்திரை வைகாசி கொண்ட பருவத்திலும் - தலைவர் வந்திலர் (அகம். 229: 15-20). ஒருகுழை யொருவன் (நம்பி மூத்தபிரான்) போல் பூங்கொத்துக்களையுடைய வெண்கடம்பு, பருதியஞ் செல்வன்போல் அரும்புகள் அலர்ந்த செருந்தி, மீனேற்றுக் கொடியுடைய காமன் போல் வண்டுகள் ஆர்க்கும் காஞ்சி, காமன் தம்பி சாம னைப் போல் நிறம் விளங்கிப் பூக்கள் நிறைந்த ஞாழல், ஆனேற்றுக் கொடியோன் (சிவபெருமான்) போலப் பூக்கள் மலரும் இல்லம் ஆகியவை தீது தீர் சிறப்பினை யுடைய ஐவர் நிறத்தின் தன்மை போலக் கரையிடத்து விரிந்த பிற மரங்களோடு அழகு பெறப் பிரிந்தார்க்கு நோவு பொருந்தக் கூடி யிருந்தார்க்குப் பெருமை பொருந்த இள வேனில் வந்தது (கலி. 26:1-8). ஈதலிற் குறை காட்டாமல் அறநெறி யறிந்து நடக்கும் தீதிலாதா னது செல்வம் மிகுமாறுபோல ஆற்றங்கரையில் மரம் செழிக்க, மகளிர் முறுவல்போல் மௌவலின்

முகை மலர, மணல் தாதொடுந் தளிரொடும் பொருந்திக் காதலரைக் கூடியவருடைய கூந்தல் போல அழகுபெறப் பேதையோன் (அமைச்சன) காரியத்தைப் புலப்படுத்தப் படைவலி யில்லா அரசனது நாட்டில் பகைய்ரசன் படை வந்துவிடு மாறு போல இளவேனில் வந்து தங்கியது (கலி. 27: 1-8). இளமகளிரிழைத்த வண்டற் பாவையும் பூவும் கலந்து கிடந்தாற் போல மணலில வடுக்கள் பொருந்தப் பூக்கள் உதிர்ந்து கிடந்தன. இளைய வர் கூந்தல்போல் எக்கர் போழந்து நீர் ஒழுகியது; மாமை நிறத்தை யுடையவள் திதலை போல் மா ஈன்ற தளிர்மேல் பல மலர்களின் தாது உதிர்ந்து கிடந்தன. இவ்வாறு நிகழ இளவேனில் வந்தது (கலி. 29:5-9). மகளிர் கூந்தலிற் பொன்னாற செய்த அணிபோல மணலில் பலபூக்களுடன் வேங்கை யின் பூக்களும் ஒழுங்கு கொள்ள, ஈன்றவள் திதலை போல நெய்ப்பினை உண்டாக்கும் மாந்தளிரொ டும ஆன்றவர் அடக்கம் போல் மலராத அரும்பு களையுடைய கிளையொடும் வலலவர் யாழ்போல் வண்டார்க்கும் புதலொடும் நலல மகளிரது கூத்துப் போல நயம் வநத கொம்பொடும் நிலையாமை உணர்ந்தவருடைய ஈகை போலப் பூங்கொத்து மலர்ந்து பலர்க்கும் பயன்படும் மரத்தொடும் புணர்ந்தவர் முயக்கம் போல பின்னுத லுற்ற கொடியொடும் பொழிலகள் அழகு பெற நயந்த வர்க்கு நன்மை தருவது இளவேனில (கலி. 32:3-13). உலகிடத்து உயிர்கள் வாழப் பல வாய்க்கால் களாகப் பரந்தோடி மிகுந்த நீரைக் கொடுத்துக் காத்தயாறு நீர் வற்றியபின் அறல் ஒழுகக் கிடநத போது, அழகுபெறச் சுரும்பிமிர்ந்து வண்டார்ப்ப முன் நீரைப் பருகிய மரங்கள் தம் கிளையினின் றும் மலர்களை ஆற்றிலே உதிர்க்க இனிமை பொருந்திய இளவேனில் வந்தது. இதற்கு, முன்னே தமகுதவி செய்தார்க்குக் கேடு வந்தபோது பின்பு அவ்வுதவியைத் திருப்பிச் செய்யும் பீடுடையாளர் செயல் உவமை (கலி. 34:1-7). கார்காலத்து மிகுந்த நீரையுடையதாய் இன்னிளவேனிற்கண் குருகுகள் இரை தேடும அளவு நீர் சுருங்கினதாய் இருததல வையையாற்றின் இயலபு (பரி. 6:76-78).

**இளி** - 1. **பண்.** பாலைநிலத்தில் யாமரத்திலிருந்து பருந்தின் சேவல் தன்பெடையைக் குறிப்பால் அழைக்கும் ஒலி இளி - பண் - தேர்ந் திசைக்கும் இனிய மேற்செமபாலை போன்று இருக்கும் (அகம். 33:3-7). பரங்குனறத்தில் யாழின்கண இளி வாய்ப் பாலையையும் குரலவாய்ப் பாலையையும் வலியவும் மெலியவுமாகத் தாக்காது சமனாகத் தாக்கி அதன் இனபத்தைக் கொண்டனர் (பரி. 19:42).

2. **நரம்பு.** பிற கருவிகளோடு இளியின்-நரம்பின்-ஒலியைத் தான் ஒலிக்கும் தூம்பு (பெருவங்கியம்) என் னும் இசைக் கருவியையும் கூத்தர் எடுத்துச் சென் றனர் (மலை. 7).

**இளிவரல்** - இழிவு. நெய்தல் தலைவன் கழிப்பூப் பறித்தும் கானலில் தங்கியும் வண்டற்பாவை செய்து விளையாடியும் இனபுறப் புணர்ந்தும் மகிழ்ந்ததோடு தன் பெருந்தகைமைக்கு இளிவர - இழிவு தோன்ற - பணிந்தும் நின்றான் (அகம். 330:1-3). மறையிற் புணர்ந்த மைந்தர் மாமயில் அன்னார் ஆகியோரது காமம சிறப்புடைய கள வொழுக்கத்தை விட்டுச் சிறுமை யுடைய கற் பொழுக்கத்தை உற்றாற்போல, வையை பிறந்தக மாகிய மலையை விட்டு இருத்தற்குரிய கடல் தலைவன இல்லத்துத் தனியே செல்லுதல் இளி வரல் ஆகும் (பரி. 11:41-44). இளிவரவு, இளிவு காணக.

**இளிவரவு** – இழிவு. வையைக்குப் புனலாடச் செல் வோர் இரப்போரது இன்மை நோக்கி அவர் தம் இளிவரவு - இழிவு - கூறாமுன்னர்க் குறிப்பறிந்து அறத்தை விரும்பி அவர் நயக்கும் தானங்களைச் செய்வர் (பரி. 10:87,88). பரத்தை தலைவியை ஏச முது மகளொருத்தி அவளை நோக்கிச் சிந்திக்கத் தீரும் பிணியாளை (தலைவியை) வெகுளாதே; தொழுக என அறிவுறுத்த அவள் பகைவரைப் பகைவர் தொழுதல் இளிவரவு; மாற்றாரை மாற் றார் வணங்குதலும் பெருமையின்று எனப பதில் இறுத்தாள் (பரி. 20:66-73). இளிவரல, இளிவு காண்க.

**இளிவு** - இழிவு. முன்னோர் ஈட்டிய பொருளைச் சிதைப்போர் உளர் எனப்படார்; பொருளிலலோர் வாழ்க்கை இரத்தலினும் இளிவு - இழிவு - எனக் கருதித் தலைவன் பொருளீட்டப பிரிநதான் (குறு. 283:1-4). தலைவியைப் பிரிந்தும் பொருளீட்டச் செல்வேன் என்று நெஞ்சம் கூறுமாயின வறுமை யின் இளிவு உறுதியாகக் கொடியதேயாகும் எனத் தலைவன் கூறினான் (நற். 262:8-10). தலைவன் நெஞ்சம் தலைவியின் துன்பந் தீர்க்கச் செல்வோம் எனறு கூறும்; அப்பொழுது அறிவு செய்வினை முடியாது இடையில் இகழ்நது அதனை விட்டு விடுதல் அறியாமையுடன் இளிவு தருமாதலின் விரையற்க என்று கூறும்; இதற்கிடையே களிறு மாறுபற்றிய தேய்புரிப் பழங்கயிறு போல என் வருந்திய உடம்பு அழிய வேண்டுவது தானோ எனத் தலைவன் ஆற்றானாய்க் கூறுகிறான் (நற். 284:3-11). இளிவரல், இளிவரவு காண்க.

**இனை**[2] - காவல். பகைவரது யானைக் கூட்டத்தை

அழித்த மறவர் அம்பு தொடுத்தலை மறந்து தம் இளை - காவலை - இனிமையாகச் செய்து நாட்டில் விளையுள பெருககினர் (பதி. 28:1-5). உப்பொய் உமணர் ஒழுகையொடு வந்த இளை படு பேடை அஞசி ஓடுமாறு கடலலை இடிபோல் முழங்கியது (அகம. 310·14-16).

**இளைஞர் - 1.** இளையவர். சிலவாய மயிரை யுடைய இளைஞர் - இளையவர் - பலரும் தோளா வடுபபட பல முட்டுக்களையும் சுமநது சென்றனா (புறம. 139:1,2). எருதுகளைப பிணிததுக் கடாவிடுதலன்றி இளைஞர் காலால் மிதித்தெடுதத சிலவாக விளைந்த புலலிய வரகின் குவியலை வளைத்துக் கொண்ட கடனகாரருக்குக் கொடுததது போக எஞ்சியதைப் பசித்த பாணர் உணணக் கொடுத்தான ஒரு சீறூாத் தலைவன் (புறம. 327:1-4). பரிசில் பெற்ற பொருநன மாலையி விருந்த வறிய நிலையையும் காலையில் மாறியிருநத செலவ நிலையையும் கண்டு கனவோ எனறு மயஙகி யிருந்தபோது, துனபம் நிறைநத நெஞ்சம மகிழும்படி கனவல்லாமைக் குரிய காரணஙகளைக் கலலா இளைஞர் சொல்லிக காட்டினர் (பொரு. 96—100). பாசறையில் காவல் நினற யானை கரும்பொடு கதிர் மிடைநது கட்டிய சாவியையும் குளகினையும் உண்ணாது நுதல் துடைததுத் தன் கையில் கொணடு செல்லக கலலா இளைஞர் வடமொழி பயிறறிக் கவளத்தைத் தினனுமாறு பரிககோலாலே குததினர் (முலலை. 28-36). சிறுவீ முலலையின பெரிதும் மணம் வீசுகினற மலரைத் தலைவனும் அவனுடன வநத இளைஞரும் சூடினர் (நற. 361:1,2).

2. வீரர். இலை வேயநத குடிலில் மானதோலாகிய படுக்கையினையும் தழை விரவின கணணியையும் வனசொலலையு முடைய இளைஞர்- வீரா -கையில விலகொணடு ஆறலை களவர் வாராமல் காததனர் (மது. 310-312). பகைபபுலத்தைப் பாழ்படுககும் பகைவரைப் புறஙகண்ட பலவேல் இளைஞரைப் போலச் செருககுறறு வெகுளும் நாய்கள் மகளிரை வளைததுக கொணடன (குறி. 128-132).

**இளைப்படுதல் – காவல் செயதல்.** எருவையின கொடு வாய்ப பேடை கருங்கால ஓமையின் காப்புடைய இடததில ஈனறு இளைப்பட்டு-காவல் செயது-தங்கியது (அகம. 3:2-4). சிதறிய தலையினை யுடைய ஓமை மரங்களில் பருநது ஈன்று இளைப்பட்டது (அகம். 21:15). பெரிய மலையின முழைஞ்சில் ஈனறு இளைபபட்ட பிணவு பசித்ததாகச் செநநாய ஏற்றை கேழலைத தாக்கியது (அகம். 21:16-18). காட்டில ஈனறு இளைப்பட்ட பெண் புலியின பசியைப் போககமடமானுணவைத தருதறகுப் புலி நள்ளிரவில் புறப்பட்டது (அகம். 238:1-5). கள்ளியில் அமைதத குடம்பையில் ஈன்று இளைப்பட்ட பேடை உண்ணப புறவின் சேவல் நெல்லைக் கொணரும் (நற். 384:1-5).

**இளையர் – 1.** வீரர். இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனிடத்துக் காரிக் கணணனார், 'நீ பிறர் நாடு கொள்ளுஙகாலை, அவர் நாட்டுக் கதிரை யுடைய கழனியை நின் இளையரும்-வீரரும்-கவர்க; பெரிய ஊரைத் தீயினாற் சுடுக; வேலால் பகை வரைச் செகுப்பினும் செகுக்க; ஆனால் கடிமரம் தடிதல ஓம்புக' எனக் கூறினார் (புறம். 57:5-10). காட்டு வழியில வழிமயஙகிப் போன இளையர் விரைய வநதெய்துவதற்குமுன் நள்ளி இழுதின் அன்ன கொழுவிய தடியைத் தானே கடைந்த தீயால விரைநது சுட்டு வன்பரணர்க்கு வழஙகி னான (புறம. 150:4-13). வாராற் சுற்றப்பட்ட கண்ணியையுடைய இளையர் போரில ஈடுபட்டனர் (புறம. 253:2). போர் முடிவில இளையரும முதியரும் வேறு புலம் படர ஒரு வீரன் மட்டும எடுப்பவும் எழாமல மாாபுநிலம பொருநதச சுரததிடை வீழ்ந்து மாயநதான் (புறம. 254.1-3). பல ஆநிரைகளை மீட்டுப பெயர்தரப பெயர்நது கல்லா இளையர் நீங்கவும் நீங்கானாய நீரைத தடுக்கும் அணைபோல் தடுததுக் கணைபட்டு இறந்து ஒரு வீரன் நடுகல் ஆயினான் (புறம. 263:5-8). 'வெணணிற வெள்ளாட்டுக்கிடாய போலத் தன்னை யொத்த இளையர் பலர் இருபபவும் பலருக்கு மேலாக என் மகனுக்குக் கொடுத்த கள் அவனைப் பாடையிற் கிடத்தி வெளளாடை போர்பபித்திலதே' என ஒரு வீரத தாய் கூறினாள் (புறம. 286). இவளை யார் மகள் எனறு வினவின, இவள் மலையைக் கண்டாற போன்ற பல நெறபோர்களை விடியலில் அழித்துக் கடாவிடப்பட்ட இடத்திற் குவிந்த நெல்லை வல்வில இளையர்க்கு நாளுணவாக நல்கும் தொல்குடி மன்னன மகளாவாள் (புறம. 353: 7-11). தோமரத்தை வலப்பககம் ஏந்திப் பகைவர்க்கு அசசம் செயய ஏவி இளையரொடு எழும் பகைவரது யானை காணின, நில்லாது பொரச் செல்லும் தானையுடையவன ஆடுகோட்பாட்டுச் சேரலாதன (பதி. 54:14-17). பெருஞசேரலிரும் பொறை ஏற்றுடன் கனறுகளை யுடைய ஆநிரையைக கைப்பறறி இளையர்க்குத் தந்தமையின் புலால நாற்றமுடைய வில்லைக் கொணட அவ் விளையர் தம் அங்கையினினறும் அபபடைக் கருவியை விடுத்தனர் (பதி. 71.13-15). வெல்லும் வேலுடைய இளையர் செல்லும் விரைந்த செலவை விடப் புள்ளியற் கலிமாவைச் செலுத்திச் சென்றால் கலங்கி உறையும தலைவியின கையறுநிலையைக்

களையலாம எனப் பாகனிடம் தலைவன் கூறினான் (அகம். 64:1-7,17). போர்வினையில் எயதிய வெற்றி யொடு மகிழ சிறநது போர்வல் இளையர் முயற் சியா லுணடாய வெறறியைக கூறி வாழத்தக் கார்பபருவத்தே தலைவா வருதல (அகம். 74:1-3, 12). கல்லா இளையா வெணகடம்ப மலரைத் தலை யிற் சூடி மடபபிடி காடடில் அலறக் களிற்றினைப் பிடிததுக் கடம்பநாராற் பூட்டிக் களவிலைககாக மூதூரின கள்ளுக கடையில் முறறததினகண் அத னைக கொணடுவந்து கட்டுவர் (அகம. 83.1-9). வேநது வினை முடித்தகாலைத தணணறும் முல லைப பரபபில் வெனவேல் இளையர் இனபுற வல வன நானகு குதிரைபூட்டிய தேரை விரைந்து செலுததினமையால தலைவன மாலைக காலததே அழுது புலநதுறையும் அரிவையின கூநதலில பூ வேயநதான (அகம. 104'1-7, 15-17). உபபங்கழி யிலுளள சுறாமீன எறிநததமையின புண்பட்ட தாளையுடைய கோவேறு கழுதை நடைமெலிந்து தளர்நததால வல்வில இளையரொடு இரவிற் செலலாது · கழிசூழந்த ஊரில் தங்கிச சென்றால கேடுணடோ எனத தலைவனிடம தோழி கேடடாள் (அகம. 120:10-16). இலங்குவேல் இளை யா உறங்கினால நாய குரைபபது இரவுக் குறி இடையூறுகளுள ஒனறாகச் சுட்டப பெறுகினறது (அகம. 122:7,8,23). வலவில இளையா தலைவன நளளி (அகம. 152:15). தலைவன தேர் மறையாது ஒல்லென ஒலிககும் இளையரொடு பழி தூற்றும வாயினைக் கொணட ஆரவாரமுடைய சிறறூா மககள் காண இபபொழுது பகலில வநதுள்ளது (அகம. 160'15-18). வேஙகைப் பூங்கொத்துக்கள் சூடி விலலைத் தோளில் மாடடிக கொணடு தீம் பழப் பலாவின சுளைவிளை தேறலை வீளையிட்டுப பாயும் அமபின இளையரொடு பருகி நாய பிற்பட வேட்டைக்குச சென்ற குறவன புதர் குருதிககறை யொடு அசைய அங்கிருநத முள்ளம் பனறியைக் கொனறான (அகம். 182:1-8). மழை பெயல் மறநத மூங்கில் வாடும வழியில செலலும் வணிகர் கூட்டததைக் கொலலும் பணபிலலாத வாழககை யுடைய வல்வில இளையர் தலைவா இரவில வரவே கள்விறகும் பெண்டிர் மனையில களபெறு தற்குப் பொருளினமையால தம்புதலவனை வீட்டில வைததிருககும யானைத் தநததை இடஙகுறிப் பிட்டு எடுதது வருமாறு அனுபபினாா (அகம. 245' 5-12). வேடடை நாயைத் தாககிக் குட்டிகளைத தழுவிக கொண்டு இளையர் தனனிடம வாராது மடக்கிச் சீற்றத்துடன பெணபனறி உய்நதுபோகக் காடடைக கடநது வாயிலை யுடைய முடுககில வேடரைக் கொலலத் தறுகட் பன்றி குறிக்கொண்டு நினறது (அகம். 248·2-6). புன்னைமலரின் மீது தாது கோலஞ செயய மணஙகமழ் இளமணல் எககரில் ஆயததோடு கூடித தலைவி விளையாடியபோது தலைவன தேரையும் உடனவநத இளையரையும விலககி அவர்கள கட்டிய மணலவீட்டைப பாராட்டி மறுமொழி பெறாது மீணடான (அகம். 250:2-9). ஆனிரைகளைக் கவர்நது சென்ற மற வரைத தாககி அவற்றை மீடகப் புறங்கொடாது பொருது மாயநத கரநதை வீரரின் நலலிசை நிறுதத நட்டபோலுள்ள குனறின பக்கததிருக்கும நடாத கல்விற செதுககிய உருவங்களை நன்னீ ராட்டி நறுவிரை மஞ்சள தடவி அமபு கொண் டறுதத ஆததி நாராற் கட்டிய செம்பூங் கரநதைக கணணியைச் சூட்டிக கழறகால இளையா தமது ஊர் மீளவர் (அகம. 269:3-13). 'எம சிறு குடிககு வநதால எமர் எதிரேறறுத தங்கச சொலலுவர்; யாம இனபுறவும இளையரும புரவியும இனபுறவும நீ தங்கின நலவிருநதயரும வாயபபுக கிடடும்' எனறு தலைவனிடம தோழி கூறினாள (அகம். 300: 13-22). தேரினை இளையரோடு நீககிவிடடுத் தமியனாய வநத தலைவன பெருநதனமையுடைய இனியவன (அகம. 310.1,2). பகைவா துறககவினபம பெற உறைகழிதத ஒளவாளை ஏநதி ஆனிரை களைக கவாநது வரும இளையா பெருமகன சோழனாவான (அகம. 338.17-19). ஏவல இளையா தலைவன அழியாத நலலிசை வாயந்த தென்னன (அகம. 342 7,10). தலைவர் நமமொடு பொயத்தா லும் அவரும திருநதுவேல இளையரும சூடிக் கொளளவும சுரும்பு தேனுணணவும நுணாவினபூ செமமணற சிறுநெறியில கமமென மணகக மலர்நது காடு கவின பெறுக; அபபொழுதுதான வெயிலுக்கு அவர் தங்கிச செலவா எனத தலைவி கூறுதல (அகம. 345.16-21). பாசறையில முரசம இயமப வேநதனும வென்று கொடி எடுத்தனன; கறவையினம காட்டிடை யுகளக கோவலா குழலூ தினர்; இளையர் மிகவிரைந்து முனனே ஏகக கடு நடைப புரவியின வாயிலிருநது நீா சிதறப பாகன தேரைச செலுததத தலைவிபிடததுத் தலைவன வெற்றியுவகையொடு மீணடான (அகம. 354.1-11). அமபு தொடுககும திறனையறிய வழிபபோககரிடம் அணிகலனிலலாவிடினும அவரைக கொனறு பற வைகளுக்கு உணவூடடும் கலலா இளையா ஆர வாரம செயயும கவர்த்த வழியிலே தலைவா பிரிநது சென்றார் (அகம. 375 3-5). 'நின காதலியை மனைவியாககிக கொணடபின ஒரு நாள அவள விருந்தயர வநது செலக. அவள் களாபபழமும விளாம்பழமும் தருவாள. செமமறியாட்டுத தயிரில வரகரிசியொடு ஈயல பெயதட்ட இனபுளி வெஞ

சோற்றைச் சேதான் வெண்ணெய் வெம்புறத்துருக இளையர் உண்ணக் கொடுப்பாள்; நீயும் சிற்றிலில அவள விருநதயரப பாலடிசில் உணணலாம்' எனத் தோழி தலைவனிடம் கூறினாள (அகம. 394.1-12). தேறலாகிய உணவினையும விலஙகினஙகளை வேட்டையாடுந் தொழிலினையும் நிரலபட்ட வாளி னையுமுடைய இளையர் பெருமகன் அழிசி (குறு. 258.5-7). செயவினை முடித்த செம்மல உளளமொடு வல்வில இளையர் பககம் போற்ற ஈரமணல் மிக்க காட்டுவழியில தேரில் தலைவன் வந்தான (குறு. 275:5-8). விரைநது செலலுதலால் வருநதிய இளை யர் இடையிற செறிததுக் கட்டிய உடையை நெகிழத்துக் களைப்பாறித் தாம விரும்பியவாறு மென்மெல வருக என்று தலைவன் பாகனிடம் கூறினான (நற.21·1-5). மழை பொழிநத பள்ளததில தவளைகள் கத்துதலின தலைவி தேரின் மணியொலி கேளாள் ஆதலின ஏகுமின எனறு தலைவன இளை யரை யனுபப அவர் சென்று அவன் வருகையை அறிவித்தனர் (நற். 42:3-7). அரசன தொழில முடித் துத திரும்ப நெடுந்தெருவை யொதத அழகிய நெடிய வழியில் அவனுடன் வந்த இளையர் ஆங் காங்கே தங்கிச் செனறனர் (நற். 161:1,5,6). குதிரை பூட்டிய தேர்மணியும் ஒலிககிறது; இளையருமஆர வாரம செய்கினறனர்; ஆகவே சோபபன வருவான் என அறிந்து தோழி தலைவியிடம கூறினாள் (நற். 307:1-5). குவளையொடு தொடுத்த முல்லை மலரா லாகிய மணமுடைய மாலையை யணிநது இளையரும வந்தனர். நம் காதலரும குதிரையைச செலுத்திப பனிமிக்க பருவத்தில் வருநதாது வருவா எனத் தலைவன் வருகை பற்றித் தோழி தலைவியிடம் கூறுதல் (நற். 367:8-12). யானையின முகததைப் பிளந்த அம்பையுடைய கொலைத தொழிலையனறிப் பிற தொழில் கலலாத ஏவலஇளையரொடு தநதை விலங்கு வேட்டைக்குச் செனறதால் தலைவிகுத் தினைப் புனங்காவல வாய்ததது (நற் 389:4-7).

2. **இளமையுடையவர்.** பாணரில் இளையர் - இளமை யுடையவர் - இனிய களிபபு வழுவாத மென சொலலை விரும்பி நெஞ்சில மிக்க உவகையராய் வியனகளம் வாழத்தக் களஙகாய்க் கண்ணி நார் முடிச் சேரல் யானை பல நல்குவன் (பதி. 40:24-26,31). முறுக்கிய நரம்பின் இனிதாகிய கட்டு முதிர்ந்த வளைந்த நல்யாழை இளையர் தாங்கிச் செலல முழவு, பதலை, தூமபு முதலிய பிற கருவி களைப் பையிலிட்டுச் சுருககிக் காவடியில கட்டிய ஆடற்றுறைக்கு வேண்டியன எல்லாம் கூடின முட் டுககளை யுடையராய் யாழ் வாசித்தலில் வலல இளையர் கடவுளை வாழ்த்தினர் (பதி. 41:1-6). கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன் கடலிற் பெற்ற பொருளை மனங் கொள்ளாப் பாடலுக்கு எளிதில ஈயும் கலலா வாய்மையன் இவன் எனக் கைவல் இளையர் தத்தம ஒத்த கைகளை வரிசை யாக நீட்டினர் (பதி. 48:5-8). மாற்றார் எய்த அம்பு கிழித்த கரிய கணணுடைய தண்ணுமை வாசித்த விற கைவலல இளையர் கையால வருந்துதல் தவிாநதனா (பதி. 51:33,34). முல்லைசானற கற்பின் மெலலியலாகிய வாணுதல விறலியரின நடநது களைதத மெலலடியைக கல்லா இளையர் மெலலத் தடவிக் கொடுத்தனர் (சிறு. 30-33). தருப்பை வேயநத குடிலின முற்றததே புன்னைக் கோடு துமிதது இயற்றிய மணற் பந்தலில இளையரும் முதியரும நெருஙகிக் கயலும இறாலும பிறழும் குளத்தில் மகவொடு செனறு மீன் பிடிபபர் (பெரு. 264—271). பரத மாக்கள இளையரும்முதியரும் சுற றத்துடன சேர்நது அடைகரை ஒலிபப வலையை யிழுதது மீன பிடிதது இரந்தோர் வறுஙகலம் நிறைய மீனகொடுத்து எஞசியவற்றைக் கூறுபடுதது விலைக்கு விறறு மணல மேட்டில உறங்குவர் (அகம். 30.3—11). குறமகளிர் நலகிய தோபபிக கள்ளைப் பருகிக குறவர் தினைபபுனங் காவலை மறககவே தினையை யானைகள வெளவின எனக கருதிப் பொறாது இளையரும முதியரும சுறறத்துடன கூடி யானையை ஓட்ட விலலும் அமபும தேடித திரிந் தனா (அகம. 348.7—13). 'நளளிரவில தேர்வந்து திரும்பியது எனற செய்தி கேட்டு அனனை என் னைத துனபுறுததும, பின்னப பெறற கூந்தலையு டைய மினனிழை மகளிர் இளையரும மடபபமுடை யருமாய உளளனர்; அவரைத் தாயர் துனபுறுத் தாமையின நலவினையுடையராவா' எனத தலைவி உரைததாள் (குறு. 246.3-8). இரவில இளையரும் முதியரும சுற்றததுடன கூடிச சுறாமீன கிழிதத வலையை மெலலிய கொடி கொணடு முடிந்தனர் (நற். 207:6-9).

3. **மகளிர்.** ஆமான் கன்று கானவர் எடுப்ப அஞ்சி இனத்தின நீஙகிக காட்டிலுள்ள சிறு குடியில் அகப்பட இளையர் - மகளிா - ஓம்ப அவரிடத்தே பழகி மனையுறை வாழக்கையை விரும்பித தங்கி யது (குறு. 322:1-5). வளையணிநத முன்கையை யும் வாலெயிற்றின் நகையையும் உடைய இளையர் ஆடும் கானற் சிறு துறையில் வினவிநின்ற தலை வனைக் கணடோம் எனத் தோழி கூறுதல் (ஐங. 198). முகைபோலும் பருவத்தர், புதுமலர் வரய விழந்தன்ன பருவத்தர் என இளையர் இருவகை யினராகவும் விரவு நரையோர், வெறு நரையோர் என முதியர் இருவகையினராகவும் பாகுபாடு செய்யப பெற்றுள்ளனர் (பரி. 10:19-22).

4. **ஆடவர்.** - அழகாக அணிகளை அணிந்த இளை

யரும் - ஆடவரும் - இனியரும் (மகளிரும்) தாம் அணிந்த அணிகளை நீககிப புனலாடற்குரிய அணி களுடனே விளையாட்டினை விரும்பினர் (பரி. 6: 27-29). யானைத் திரளும குதிரைத் திரளும மக்கள நெருககத்தால தம் கதியிற செலல இயலாது திரிந்தன. சேரியிலுள்ள இளையர் செல்லுதற்கரிய நிலையராயினர் (பரி.6:33-38).

5. ஏவலர். யாண்டு பலவாகத் தம் நரையின மைக்குக் காரணங காட்டியபோது பிசிராந்தை யார் தாம் கருதியவற்றையே தம் இளையர் - ஏவலர் - செயது முடிப்பதை ஒரு காரணமாகச் சுட்டுவர் (புறம. 191:1-4).

**இளையவர்** - 1. வீரர். மரததின மேலேறி மானினங களைக் கொலலும பொருட்டு வெநதிறல் இளை யவர் - வீரர் - விருமபி எழுநதாறபோலப் பரதவச் சிறாா திமில மேற்கொணடு திரைசசுரம் நீநதி மீன பிடிக்க எழுவா (நற். 111:2-7).

2. மகளிர். இளையவரின் - மகளிரின் - மயிர்போல இடுமணலை ஊடறுத்துச் சென்ற நீர் ஒழுகியது (கலி. 29:6). நெகிழந்த தொடியினையுடைய இளை யவா முலையிடையில தலைவன் சூடிய கணணி யின தாதுகள் உதிர்ந்து இதழகள அழகிழக்கும (கலி. 73:8,9).

3. சிறுவர். மணல மேட்டிடத்து இளையவர்-சிறு வர் - தமமிற் கூடி விளையாடுவர் (கலி. 83:3).

**இளையள்** - இளம் பருவத்தினள. 'பிரியின் தாங்கற கரிய மதுகையள்; மெலலியல; இளையள - இளம பருவததினள - நனிபேரனபினளாகிய தலைவி, தலைவனமுன் நினறு பிரியின் ஆற்றியிருப போம என்று கூறும் அறிவுடைமை இலலாதவள என்பது செலவழுங்குவிக்கும் தோழி கூறறு (அகம். 319:13-16). தன்னை வருததியவள் இளையள; முளைவாய் எயிறறள; வளையுடைக கையள எனத தலைவன பாஙகற குரைததான (குறு. 119:3-4). மலையுறை குறவன காதல் மடமகளாகிய இளை யள தலைவன கூறிய மொழிகளை ஏற்றுக் கொள்ளும் இயலபுடையள் அலலள் (நற். 201:1-3). குனறக குறவன காதன மடமகள் இளையளாயி னும் ஆரணஙகினள என்று தோழியிடம் தலை வன கூறினான (ஐங். 256:1,4). 'பூநதார் மார்ப, தலைவி இளையள், மெலலியள, கானயாறு சேறற் கரியது, ஞாயிறும் மறைந்தனன், அதனால இங்குத் தங்கிச் செலக' என இடைச்சுரததுக் கணடோர் தலைவனிடம் கூறினர் (ஐங். தி. 5).

**இளையன்** - இளம்பருவத்தினன். 'யான் வெறுக்குமாறு இவன் இளையன் - இளம்பருவத்தினன - என்று என்னைக் குறித்துச் சொல்லி என் மிகுவலிககு அஞ்சாமல் சினம பெருகிச் சிறுசொல கூறிய அரச ரைப் போரில சிதறப்பொருது முரசத்தோடு அவ ரைப் பற்றுவேன்' எனறு பாணடியன் தலையாலங் கானததுச செருவென்ற நெடுஞ்செழியன வஞ்சி னம் கூறினான் (புறம. 72:2-9). 'நாம சிறப்புடை யோம்; படைகளாற் பெரியோம்; நமமொடு எதிர்த் துப் போரிடுவோனும இளையன' என்று பாணடி யன நெடுஞசெழியனை இகழ்நது ஏனை இருபெரு வேந்தரொடு ஐம்பெரு வேளிரும் கூடி அவனமேற போருககு வநதனா (புறம். 78·5-7). 'என் இறைவ னது நுணணிய பல போர்ததொழிலையும நினை யாமல் அவனை இளையனென்று மதியாதிருப்பின் நுமக்கு வெறறி பெறுதலரிது' எனறு அதியமான நெடுமானஞசியைக குறித்து அவன் பகைவரிடத்து ஔவையார் கூறினார் (புறம. 104·4-6). 'சங்கின நிறத்தோடொத்த வெண்மை நிறததினனுககு (பல தேவனுக்கு) பிறபபு முறையில நீ இளையன என போர்க்கு அவ்வாறே இளையையாகினறாய' எனறு திருமாலைக் கீரந்தையார் பாடுகிறாா (பரி. 2.20, 21).

**இளையார்** - இளைஞர். நான உற்ற காமநோயக்கு உளையும்படி உசாவுநதுணை இளையாரும - இளை ஞரும - இக்காம நோயககு அயலானாருமே யன றிப பிறரிலலை எனத தலைவன் கூறினான (கலி. 138·24, 25).

**இளையோர்** - 1. புதல்வர். 'நின்னொடு பொருதற்கு வந் தோர் நின பகைவரலலர்; பரநதுபடு நலலிசை எயதி நீ உயர்நதோருலக மெய்தினால அரசுரிமை நின் மககளுக்குத்தானே உரியது; வலிமையொடு பொரவநத சூழசசியற்ற அறிவினையுடைய இளை யோர் - புதலவா - தோற்பின் நினபெரும் செல வத்தை யார்க்குக கொடுபபாய? நீ அவாக்குத் தோற்றால பகைவர் மகிழப பழிதான நிற்கும். அதனால மக்களிடம பொருதலைத் தவிர்கக' எனக் கோபபெருஞ் சோழனிடம் புல்லாறறூா எயிற்றிய னார் அறிவுறுததினார் (புறம. 213.14-19).

2. வீரர். ஒல்லையூர் கிழான் மகன வலவேல சாத்தன மாயந்தான; முலலையே, நீ ஏன் வறிதே பூககி றாய்? உன்னை இளையோர் – வீரர் - சூடார்; வளையோர் கொயயார்; பாணன சூடான; பாடினி அணியாள் என்று குடவாயிற் கீரத்தனார் கையற்று முலலையை நோக்கிப் பாடினார் (புறம. 242).

3. இளைஞர். தச்சன் செய்த சிறுதேரை ஊர்ந்தின புறாது கையினால் இழுத்தின்புறும் இளையோர் - இளைஞர் - போலத தலைவனைக் கூடி இனபுறா விடினும் நட்புச் செயது இன்புற்றேம் என்று தோழி கூறினாள் (குறு. 61).

4. மகளிர் கடற்கரையில் இளையோர் - மகளிர் - வண்டலயர்வர் (பொரு. 178,187). நல்லியக் கோட னைப் பாணன், 'முதுவோர்க்கு முகிழ்த்த கையினை; இளையோர்க்கு மலர்ந்த மார்பினை' என்று சில மொழிந்து பாராட்டு மளவில அவன் ஆடை, தேறல, அடிசில முதலிய நல்கி ஓம்புவான (சிறு. 231-241). நரைதத மூததோர் போன்ற வெள் ளிய தலையையுடைய கடல அலைகள் இளையோர் ஆடும் மணல் வீட்டினைச சிதைக்கும (அகம். 90:1,2). மணலமலி முற்றத்து நிலம் வடுப்பட நடந்து மனை யுறை புறவின சேவல துணையை யழைததுச சிறிது சிறிது பறநதோடுமாறு அவற்றோடு விளையாடிய ஆயத்து இளையோரைக் காணதொறும் தலைவிஇக் காட்சியைப்பார்ககத தான் உடனிலலையே என நினைநது தனிமையில் தலைவி வருந்துவாள் எனத் தலைவன எணணினான் (அகம். 254:3-10). வளைவு பொருநதிய மலர்மாலையணிந்த இளையோர் வண் டலயர்நது பொழுது சாயந்து இருணடமையின வீட் டிற்குச செலவர் (அகம. 370.1,2). 'இளையோர் தாம் விளையாடும தோழியர் கூடடததோடு ஓரையாடா மல இறசெறிக்கப்பட்டிருத்தல் அறனும் அன்று; ஆககமும தேயும்' என்று அன்னையிடம் தெரிவித தால தலைவன மலையினின்று ஓடிவரும் புதுப புனலாடலாம் எனத் தோழி கூறினாள (நற். 68: 1-6).

**இளையோள் - இளம்பெண்** இடையிலணிநத தழை யாடை அசைய ஓடிச் செம்மணி போன்ற நிற முடைய குன்றிமணிக் கொததுக்களை இளை யோள் - இளம்பெண - பறித்தாள் (புறம. 340:1,2). அழகிய பூககள விரவித தொடுத்த தழையினையும் ஏந்துகோட் டலகுலினையும் செம்பொறிச் சிலம் பினையும் உடைய இளையோள தந்தை, வேந்தன் தானே வநது குறையுற்று மகட்கொடை வேண்டி னும் கொடாஅ (புறம. 341:1-3). ஐயன்மார் ஏந்திய வடிவேலின இலைபோலச் சிவந்த உணகணகளை யுடைய தொடி பிறழும் முன்கையினைக் கொண்ட இளையோளின் அழகிய நலல மாரபில சுணங்கரும் பியதால வேந்தா மணகக விரும்பி நெடுநிலை வாயிலில சுற்றித்திரிவர்; இளையோளின தமையன் மார் பொறாது அமைகுவரலலர்; மூதூர் யாதாமோ என மகடபாற் காஞ்சித் துறையில கண்ணம புகுத் தாராயத்தனார் பாடியுள்ளார் (புறம. 350). கற்புடை மகளிர்கு வேணடிய பல மாணபுகள தங்கிய சாய லும் இன்மொழியும மயிலிறகின அடிப்பகுதி போன்ற பற்களையுமுடைய இளையோளாகிய தலைவியின் பெருநதோளின இனதுயிலை விடும் ஆற்றலிலலை எனத தலைவன் நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 193: 11-14). வினைமுற்றிப புகுந்த தலைவனைக் கண்டு வேலியாகச் சுற்றியுள்ள முல்லை மலரால் புனைந்த மாலை கமழும புதுமையுறத் தழைத்த கூந்தலையும் இனிய நகையையும் உடைய இடையோள் தழுவ 'நின மலர்நத மார்பு மன்னுக; இனிது செய்தனை; வாழ்க நின கணணி' என்று தோழி வாழ்த்தினாள் (அகம. 314:18-22). 'இளையோள் வழுவிலள்; அவள் கொணட காமம் வியபபாயுள்ளது; விளையாட்டு ஆயததையும் ஆடிடமாகிய நொசசி வேலியையும் காணதொறும் நீர்வார் கணணேனாய்க் கலுழும் என்னினும அவள் வளர்த்த கிளியும வருந்தும்' எனக கூறி உடன் போக்கு மேறகொண்ட தலை வியை நினைந்து நற்றாய புலம்பினாள் (நற். 143: 1-6). ஒருநாள தழையாடை யணிந்து அசையும் அலகுலினளாய் இளையோள் தெருவிற் சென்ற ஒரு காரணததிறகாக ஓரியைக் கொன்ற ஒரு பெருந தெருவில காரியின் பகைவா கூடி ஆரவாரஞ் செய்ததுபோல ஊர் ஆரவாரஞ் செயதது (நற். 320: 3-7).

**இளையோன் - வீரன்.** துமபைக கணணியையும வலிய மார்பையும் நீணட தடககையையு முடைய என இறை வனின் இளையோற்கு-வீரனுககு- (பொகுட டெழினிககு) இனபச சிறபபும வென்றிச் சிறபபும் காரணமாக ஒரு பகை எழுந்தன (புறம. 96.1-3). இடைச்சுரதது வீரன் பொருது இறநதுபட வளையலிலலாத கை யைத் தலைமீது ஓசசி இளையன் இன்னனாயினன என்று சுற்றததுககுக் கூறினால, நின அன்னை என னாவளோ எனக் கூறி அவன்மனைவி அரற்றினாள் (புறம. 254:3-11). வென்ற வேலினையும் அழகிய பலவாகிய தேர்களையும் உடைய இளையோனின் (இளஞ்சேட் சென்னியின) மகன் கரிகால் வளவன் (பொரு. 129,130). அன்னை யறியின காதல் வாழ்க்கை கடைபோகாதெனக கழறகாலையும மின்னொளிர் நெடுவேலையும உடைய இளையோன முன்னுறத தலைவி பின்னாகப பனமலை அருஞ்சுரங் கடந தாள் (அகம். 203:8-11). உடனபோக்கு மேறகொணடு மெல்லிய மடந்தையை முனனே விடுதது இரவில செல்லும் இளையோன உள்ளம காறறொடு கலந்து மழை பொழியும் காலததுப பெருமலையைச் சிதைத்து வீழும இடியினும கொடிது என்பது கணடோர் கூறறு (நற. 2.7-10).

**இற்கிழத்தி - மனைவி.** தலைவியின் திருமணவிழா முடிநததும் சுற்றததார் ஆரவாரத்துடன விரைநது வந்து பெரிய இறகிழததி - மனைவி - ஆக எனக் கூறித் தலைவனுடன் அவளைக் கூட்டினர் (அகம். 86:17-20).

**இற்றி - இத்திமரம்.** வாவற்பேடை நெடுந்தொலைவு பறந்து சென்று கனிபெறாது முன பெற்ற நாள

நினைந்து வருந்திப் பொலிவற்ற கிளைகளையும் குறிய அடியினையு முடைய இற்றி மரத்தில் வேறு புகலின்றித் தங்கியது. இற்றியின் விழுது துறு கல்லைத் தீண்டிக் காற்று மோத அசைவது, யானை யின் உயர்த்திய கை அசைவது போன்று தோன்றி யது (அகம். 57.1-8). அசையும் காற்றுக்கு ஆடும் இற்றியின் ஒரு தனி நெடுவிழுது துடைத்துத் தூய்மைப் படுத்திய மலைவழியில் நிழலில் தலைவன் தங்கிச் செல்வதற்குக் காடுகளின் பெறுக எனத் தோழி கூறினாள் (அகம். 345:18-21). புல்லிய விழுதையுடைய இற்றியின் மலையிற் படரும்வெண்ணிற வேர் மலையிழி அருவிபோல தோன்றும் (குறு. 106: 1,2). பாலை வழியில் நிலத்தில் படாது தொங்கும் வேல்போலும் இலையையுடைய இற்றியின் நெடிய விழுது வைகறையில் மேலைக் காற்று வீசுந் தோறும் ஊசலாடுவது போல அசைந்து கீழே துயிலும் பெண் யானையை வருடும் (நற். 162:9-11). மலையிடத் துள்ள இற்றிமேல் படர்ந்த மலை மல்லிகைத் தளிரை மரமீது ஏறி மேய்ந்த மந்தி, துணையொடு மலைமீது குதித்து ஆடும் (ஐங். 279: 1-3).

இறகு - சிறகு. மருத நிலத்தில் தெய்வத்தாமரையில் சேயிதழ் பொதிந்த செம்பொற் கொட்டையில் துணையைத் தழுவி இறகு - சிறகு - உதறித் தும்பி சீகாமரப் பண்பாடும் (சிறு. 73-78). நெய்தற் கான லில் விழுதுகள் அசையும் தாழையின் முதிர்ந்த கொழு முகைக்கு அன்னம் தன் இறகைக் கோது மிடத்து விரியும் அவ்விறகு உவமை (குறு. 228:1-3). கழியிலே இரைதேடித் துழாவிய நாரை, ஈர்ம்புற இறகை உதறும்போது படும் திவலை பாக்கத்தி லுள்ளவர்க்குக் குளிரையுண்டாக்கும் (நற். 127:1, 2). சுரநெறியில் கொன்று போட்ட பிணங்களின் முடைநாற்ற மிகுதியால் நெருங்கித் தின்ன இய லாமல் முதிய பருந்து இறகினை அடித்துக் கொள்ளும்போது உதிர்ந்த தூவியை வன்கண் ஆடவர் தம் சிவந்த அம்பிலே செறித்துக் கொள்வர் (நற்.329:2-6).

இறங்கு குடிக் குன்றநாடன் - புலவர். இவர் பாடல் அகநானூற்றில் (215) இடம் பெற்றுள்ளது. இயற் பெயர் தெரியவில்லை. இறங்குகுடி ஊர்ப்பெயராக லாம் (த. வ. க. பக். 304). தொடுத்த அம்பு பிழைத் தால் கைவிரலைக் கவ்வும் ஆறலை கள்வரியல்பும் எருவைச்சேவல் பிணத்தின் கண்மணியைப்பறித் துப் பேடைக்கு நல்கும் இயல்பும் இவர்பாடலில் சுட்டப் பெற்றுள்ளன.

இறடி - தினை. மலையை யடுத்த சிற்றூரினர் இனிய கூறிக் கூத்தர்க்கு நெய்யிற் கிடந்து வெந்த பரிய தசைப் பொரியலையும் நிறமிக்க வடிவினையுடைய இறடி - தினை - சோற்றையும் அளித்தனர் (மலை. 167-169). மரங்களை அழித்த கானவன் புனத்தைக் கொத்தி விதைத்த விளங்கும் கதிரையுடைய இறடியைக் கொடிச்சி காவல் புரிந்தாள் (குறு. 214:1-3).

இறவு - இறால்மீன். கொக்கின் குருகு மென்சேற்றடைகரையில் மேய்ந்தபின் ஆரலமீன் ஈன்ற முட்டையை நல்ல இறவின் - இறால் மீனின் - குருகு களோடு தன் தாய் கொடுக்க உண்ணும் (புறம். 342: 7-10). நாரைகள் மருதநிலத்தே கரும்பறுப்போர், நெல்லரிவோரின் இசை கேட்டு வெருவி முல்லை நிலஞ் சென்று பின் சுறா வழங்கும் கடலில் இறவு மீனருந்திப் புன்னைக் கிளையில் தங்கும் (பொரு. 195-205). மணல் மேடுகளில் பரதவர் மக்கள் கடலி லுள்ள இறவுமீனின் சூட்டிறைச்சியைத் தம் சுற்றத் தோடு தின்றனர் (பட். 60-63). கள்ளுண்ட மட் கலத்து நுடங்கி வைத்தலால் களவெறி கொண்ட இறவுமீன் செருக்கிப் பூட்டு அற்றுப் போன வில் போலப் பழனத்திடத்தேயுள்ள நெற்கூடுகளிடத்தே துள்ளி வீழும் (அகம். 96.1, 2). காவிரியாற்றின் வெள்ளம் கடலிற் புகும் பெருந்துறை யிடத்துக் கடல் வெள்ளம் இறவுமீனோடு வந்து மலாமாலையைக் கொண்டு மீளும் (அகம். 123:10-13). திந்தன வெளியனின் கானலம் பெருந்துறையில் பொன்னைக் கொண்டு வரும் மரக்கலத்தைச் சிறிய வெள்ளிய இறவு மீன் கூட்டம் தாக்கிச் சிதைக்கும் (அகம். 152: 5-8). நெடுங்கதிர்க் கழனிகளை யுடைய தண்ணிய சாயக்கானம் என்னும் ஊரில் பெரிய கழியினிடத்தே செவ்விய கோல்களை யுடைய அழகிய வலையை வீசி, வளைந்த முதுகினையுடைய இறவொடு இனமீன்களையும் பிடித்துக் குவிப்பர் (அகம். 220: 15-18). முள்ளைப் போன்ற காலை யுடைய இறவின் வளைந்த முதுகையுடைய பெரிய இனத்தைத் துறைக்குக் கடலலை கொணரும் (குறு. 109: 1, 2). நெருப்புப் போன்ற சிவந்த தலையை யுடைய அன்றில், இறவு மீன் போன்று வளைந்த வாயினையுடைய பெடையோடு தடாமரக் கிளை யில் கூட்டிலிருந்து பிரிந்தோர் செயலற்று வருந்த நள்ளிருளில் நரலும் (குறு. 160:1-4). உகாய்க் கனி இறவுச் சினை போன்றது (குறு. 274: 1, 2). பரதவர் பிடித்த மீன்களின் உலர்ந்த வற்றல் உப்பங்கழியிற் கொண்ட இறவின் வற்றலோடு நிலவுநிற வெண் மணற் பரப்புப் புலால் நாறும்படி கடற்கரையில் மணல்மேடு தோறும் பரவிக் கிடக்கும் (குறு. 320-1: 4). தாழையின் சருச்சரை பொருந்திய பெரிய அடிப் பக்கம் இறவு மீனின் புறம்போன் றிருக்கும் (நற். 19: 1, 2). கயந்தோறும் இறவுமீனைத் தின்னும் குருகினம் ஒலிக்கும் (நற். 27: 7, 8). இறவு மீன்

அருந்திய குருகுகள் வெளிய உப்புக் குவட்டின் மேலே பறந்து சென்று கரையினிலுள்ள கருங் கோட்டுப் புன்னையில் தங்கின (நற். 67: 3-5). முற்றாத மஞ்சளின் பசும்புறம் ஒப்பச் சுற்றியிருக் கின்ற சருச்சரையுடைய கழியிடத்துள்ள இறவு மீனின் கூட்டமான குவியலைப் புன்னையங் கொழு நிழல முன் எதிரே போட்டுப் பரப்பிய துறையே யனறிப பககமிருந்த பாக்கமும இனிதாயிருநதது (நற. 101: 1-6). பாலை நிலததுள்ள இருபபையின பூப்போன்ற மெலலிய தலையையுடைய இறவொடு திரளாயுள்ள மீனகளையும் பெறுதறகு வரிவலைப் பரதவரின் சிறார் திமில் மீதேறித் திரைசசுரம் நீநதி வாள் வாயச் சுறவொடு வலிய மீன்களையும் பிடிதது‌த் துணித்து அவற்றை மணற் பரப்பிற் கொனடு வந்து இறக்குவா (நற். 111: 1-8). இறவு மீன உணட இனக்குருகு தாழையின சுறவு மருப்புப போனற முள்தோடு சாயுமாறு தங்கி வீற்றிருக்கும் (நற். 131: 4-6). கழியிடத்து இரைவேட்டெழுநத குருகின் பிடியினினறு தப்பிச் சென்ற வளைநத புறத்தையும் மோவாயையும் உடைய இறவின ஏற்றை மணலமேட்டில கடற்கரை யிடததுளள மடல் பொதிநத வெள்ளிய தாழம் பூவைக் குருகெனக் கருதி அஞ்சியது (நற். 211: 3-8). பெரிய செவ்விய பஞசு போனற தலையைக் கொண்ட இறவின் முடஙகலைக் காக்கை நாட் காலையில் இரையாகப் பெறும் (நற். 358: 8, 9). வையைக்குப் புனலாடச் சென்றோர் பொன்னாற் செய்த நத்தை, நண்டு, காலையுடைய இறவு, வாளை ஆகியவறறை நீரின்கண விததி விளைக, பொலிக, எனபார் (பரி. 10: 85, 86).

இறா - இறால்மீன். தம் குடிலின் முற்றத்தே மணற் பநதரில இளையரும் முதியரும் சுற்றத்துடன கூடி அம்பும் விலலும் ஒத்த கயலும் பசிய இறாவும்-இறால மீனும்-பிறமும் குட்டையில் பிள்ளைக ளொடு செனறு மீன பிடிப்பர் (பெரு. 265-271). தாழையின் கிளையில இளைப்புற்றிருக்கும் கடற் சிறு காக்கை தன் பெடையொடு பரதவர் வேட்டம் செல்லாது மடிந்திருந்த போது சுறாமீன் திரியும் கடற்பரபபில நளளிரவிலே வெள்ளிய இறாமீன் தின்னக் கனவு காணும் (அகம். 170:9-12). கானலம் பெருநதுறையில் சிவந்த இறாமீன் துழாவிய நுரை யும பிதிரும் உடைய அலை, பருதத அடியினை யுடைய புனனையின் வளைந்த கிளையில் தோயும் (அகம். 270:5-7). நீர்க்கசிவுள்ள இடத்தில் படர்ந் துள்ள வளளைக் கொடியை மயககி நெற்பயிரின் சூல பிரியும்படி துய்த்தலையுடைய வளைந்த இறா துள்ளிக் குதிக்கும் (அகம். 376:13-16). கழியிடத்து நீர் தெளிய அஙகிருந்த சிவந்த இறாவைத் துழா வீப் பிடித்த சிறுவெண்காக்கை அதனைத் தன் பெடையை அழைத்துக் கொடுக்கும் (நற். 31:1-4). முடியிட்ட வலையால் முகக்கப்பட்ட முடங்குத லுடைய பாவை போன்ற இறாமீனைக் காயவைத் துப் பறவைகளை ஓட்டுதலின் பகல் மாய்ந்துவிட் டது (நற். 49:3,4). மகளிர் புறங்கடை யிட்ட சோற் றையுணடகாக்கை பொழுதுபடும் வேளையில் மீன் கடையில் குவித்த பச்சிறாவைக் கவர்ந்துண்டு தோணியின பாயமரத்தில தங்கும (நற. 258.5-9). கழிச் சேறுபட்ட திரணட காலையுடைய கோவேறு கழுதையின் குளமபில் பட்டுச் சிவந்த இறாமீன்கள் அழிநதன (நற். 278:7,8). நணடு தாககுதலினால இறாமீன துறையில் துன்பத்தால் புரளும் (ஐங். 179:2). கரிய கழியில சிவநத இறாமீன்களைப் புளளினம் கவர்ந்துண்ணும் (ஐங. 188:1). சேர்ப்பன் தெளிந்த கழியில் சிவநத இறாமீன்களை அகப் படுததுவான் (ஐங். 196:3,4).

இறாஅல்- 1. தேனடை. மதுரை நகரில் நல்ல வரிகளை யுடைய இறாஅல் - தேனடை-போலும் மெல்லடை யை அப்பவணிகர் விற்றனர் (மது. 624,627). நீலநிறத் தையுடைய ஓரிநிறம பரக்க நெடிய மலையில் சக் கரம போல் தோன்றும் தேன கொண்ட இறாஅல நன்னனுக்குக் கையுறைப் பொருளாக அளிக் கப்பட்டது (மலை. 524,525). சுரும்புணண மலர்ந்த வேங்கைக் கிளையில் தொடுத்த கொழுவிய கண் களையுடைய இறாஅல் தேனீக்கள் மொய்த்தலால் கசிநது கல்லின் குழியில் சொட்டிய தேனைக் குறச் சிறுவர் உண்டு எஞ்சியதை மந்தியின குட்டி நக் கும் (நற. 168:1-5). புகழமைந்த உயர்ந்த கொல்லி மலையின் மேற்குப் பக்கத்துக் காந்தள் மலரிலுள்ள தேனை வண்டு கொணர்ந்து பலகண்களையுடைய இறாஅலிற் சேர்க்கும் (நற். 185:7-9). பலாப் பழம் வீழ வெற்பிலுள்ள பெருந்தேன் இறாஅல் சிதறியது (ஐங். 214:1-3). கானவர் ஆசினிப் பலா வின் மேலிட்ட பரணில் ஏறிக் கவணையிற் கல் லை எறிய அது மலையிலுள்ள வேங்கைப் பூவைச் சிதறி ஆசினிபபழத்தை உதிர்த்துத் தேனிறாஅ லைத துளைபடச் செய்து மாநதுணரை உழக்கி வாழை மடலைக் கிழித்துப் பலாப்பழத்துள் தங்கி யது (கலி. 41:8-16). மலைமேல் தொடுத்த தேனைக் கொண்ட இறாஅல் மழை நுழை திங்கள் போல் தோன்றும் (கலி. 42:22,23). இறால்-1 காண்க.

2. மீன். சிறு பெண்கள் மணலைக் குற்றி விளையா டும்போதுஇறாஅல்-மீன-அருந்திய சிறுசிரற் பறவை மருதமரக் கிளையில் உறங்கும் (அகம். 286:5-7). இறால் - 2 காண்க.

இறால் - 1. தேனடை. விண்பொரு நெடுவரையில்

பரிதிபோல் தொடுத்த தண்ணிதாய் மணக்கின்ற விரிந்த இறால் - தேனடை - சிதையப் பழமுதிர் சோலை மலையின உச்சியிலிருநது அருவி இழிதரும (முரு. 299,300,316,317). கோடையில் காய்தத மாம் பழச் சாற்றில் பலாசசுளை கலந்து இறாலொடு கலக்கப்பட்ட வண்டு மொய்க்கும் அரியலை மலைக் கடவுளுக்குப் படைதது மகளிர் கொடுப்பக் குறவர் பருகினர் (அகம். 348:2-9). தினைப்புனத்தி விட்ட பரணிடத்தெரிந்த அகிற்புகையால் சூழப்பட்டு ஒளி மழுங்கிய மதியம் மலையைச் சேர்நதால, அதனைத் தேனிறால் என்றெணணி அதனை எடுத்தற்கு மலை நாடன் கண்ணேணி வைப்பன் (கலி 39:7-10) மலைச் சாரலிலுள்ள பலாப்பழம மலையின பிளப்பிடத்தில் வீழுகின்றபோது மலையில தொடுத்த பெருந்தேன இறாலைச் சிதைத்தது (ஐங். 214·1-3). இறாஅல்-1 காண்க.

2. மீன். பெருங்கடற் பரப்பில் சிவந்த இறால்-மீன்- நடுங்கக் கொடுநதொழில் செயது அகப்படுதத, சிவந்த கோலொடு அழகிய வலையையும் திமிலையும் கொணடு அங்கேயே தங்கிய தநதைக்குச் சோறு, அயிலைமீன புளிககறி, கொழுமீன தடி ஆகியவற றைக் குறுமகள் கொடுப்பாள் (அகம். 60.1-6). இறாஅல்-2 காண்க.

இறுதி - 1. முடிவு. எறிதிரைப பெருங்கடல் இறுதிக் கண-முடிவினகண்-செலவினும் தெறுகதிர்க் கனலி தென்திசை தோன்றினும் கிளளிவளவன் தாள் நிழலில இருத்தலால அஞ்சலம் என எருக்காட்டூர்த் தாயங் கணணனார் கூறுவர் (புறம். 397:23-27). யாரிடத்தும் உலக ஒழுக்கத்தைக் கடநது தீமை செய்து புகழ இழநதவனது இறுதிபோல மரம வேரொடு வெமபியது (கலி. 10:3,4).

2. கேடு. முன்னொரு காலத்தில தமககு உதவிசெய்து ஒப்புரவு மேறகொணடொழுகியவரின இறுதிககண -கேட்டிடதது-பின் உதவிசெயயும் பீடுடையாளர் போல், உலகம் செழிக்கப் பல காலவாயகளினால நீரூட்டி வளர்த்த யாறு வறண்ட போது அதன் நீர பெற்றுச் செழித்த மரஙகள் பல மலர்களை உதிர்த்து அழகுபடுதகின (கலி. 34:1-6).

இறும்பு - 1. குறுஙகாடு. இராப்பொழுது ஓரிடத்தே உறங்குவது போன்ற செறிந்த இருளை யுடைய இறும்பினை-குறுங்காட்டினை-கொணடது முள்ளூர் (புறம் 126:6-8). வெல்போர் ஆடவர் மறததை விரும் பிக் காககும் விற்படைகள் நிலைபெற்ற இறுமபினை யுடைய தகடூரை அழித்தான் பெருஞ்சேரலிரும் பொறை (பதி. 78:8,9). கினனரம் முரலும் அணங் குடைச் சாரலில் மயிலாடும் மரம்பயில் இறும்பில் குரங்கு பாய, மலர்கள் உதிர்ந்தன (பெரு. 494-496). புனங் காககும் குறவர் பரணிலே ஏறிக கைகொட்டி அகன்ற மலையிடத்தே இறும்பில நிறைந்த யானை களைப் பகலில கவணஎறிகல்லால விரட்டுவர் (மலை. 203-206). மிகுநத நிழலை யுடைய மரஙகள் செறிந்த இறும்பினால ஞாயிறு தெறுதலிலலை (மலை. 271,272). விலலொலிககு அஞ்சிய மரைஏறு முறபட்ட இறும்பில் விரைந்தோடியது (மலை. 406, 407). மூஙகில் நெருங்கிய இறுமபில பாம்புபடக கரடி புற்றைத் தன விரலால தோணடும (அகம். 88.13, 15). மந்தியும் அறியா மரமபயில இறும்பில் காநதள் மலர்ந்த இடததில் அருவி ஓடும் ஒரு பக்கததே தலைவியின் கூநதலில இனபுறு துயிலைப பாம்பின் திருமணி விளக்கொளியில தலைவன பெறுவான (அகம. 92·8-13). பெரிய மூங்கிலையுடைய இறும்பில ஆராய்நதெடுத்த மூஙகிலை அறுத்துச் செயத நுணு கிய கணுக்களை யுடைய சிறுகோலைக் கொண்ட கூத்தியரொடு பாணரையும புரந்தவன் நனனன வேணமான (அகம. 97:9-12). கான நாடன, இறும்பு மணடி இருணடு கிடககும் சிறிய வழியினையுடைய மலையிடததே குவளை மலா சூடி இரவுக் குறி வருவான (அகம. 128:8-10). சோழரின உறநதை யில பங்குனி (உததிர) விழா கழிநத மறுநாளில மல ரும இலையும் செறிநத மரமபயில இறும்பில நெருப்பிலலாத அடுபபுக்களை யுடைய அரங்கம் போலத் தலைவியின நுதல அழகிழநதது (அகம. 137:5-12). அகன்ற மலையின இறும்பில ஆயநது கொணடறுதத மூங்கில துணடு போனற தலைவி யின தோள தலைவன் பிரிவால அழகு கெட்டு மெலியும (அகம. 171:1-3). பினனியிருத்தலை அறிய வியலாதபடி மரங்கள் செறிநத இறுமபில் பெண புலி குட்டிகளை ஈன்று காவலாக இருந்தது (அகம. 238.1,2). திதியனது அருவி இறஙகுகினற மரம் நெருஙகிய இறும்பில புலி பனறியைக கொனறு தின்று முழங்கும (அகம. 322.8-11). உயிரினங்கள மீது பாயநது முதுகெலும்பை யொடிக்கும் புலிக குட்டிகளும யானை நீர் நசையால நீட்டிய கையைக கடிககும புலியீனற வறுஞ்சுனையிலுள்ள குட்டிக ளும் இருணட இறும்பில உளளன (அகம. 329 9-13). வளைந்த முளளோடு கூடிய ஈங்கை பிரபபங கொடியொடு பினனிககிடககும் வெளளிய அரும்பு களை யுடைய இறும்பில வயா வேட்கையோடு வதிந்த பெண்புலியின துனபந் தீர ஆணபுலி யானையை வலம்பட வீழ்த்திய பாறைகள் செந்நிற மடைய இழுத்துச் சென்று சோமபல முறித்துப் படுத்துப் புரளும் (அகம. 357:1-6). மலையிடத்துக் காந்தளஞ் சோலையுடைய குரங்குகள் ஏறியறியாத மரம்பயில இறும்பில் தெளிநத சுனை நீரில் பிடி புணர் களிறு போலத தலைவியுடன தலைவன்

பலநாள் நீராடி மகிழ்ந்தான் (அகம். 366:6-12). ஊது லையாற் செய்த பகுவாய்த் தெண்மணி மரம் செறிந்த இறும்பில் ஆர்ப்பச் சுரநெறியைக் கடந்து தலைவன தேர் வருகிறது எனும் உரை வந்திலதே எனப பருவம் கண்டு தலைவி அழிந்து கூறுகிறாள் (குறு.155:4-7). மேகந் தவழும் இறும்பில் களிற்றினை வலப்பக்கம் வீழ்த்திய ஆண்புலி யாவரும் அஞ்ச முழங்கும் (நற். 154:4-6)

2. சிறுமலை. செந்நிறப் பசுவின் கன்று வேர்ப்பலா வின் பெரும் பழததைத் தின்று அயலிலுள்ள மூங் கில் செறிந்த இறும்பின்கண் - சிறுமலைக்கண - உள்ள குளிர்நத நீரைப்பருகும் (நற். 213:2-5). 'மூங் கில் நிறைந்த இறுமபினகண்ணே பசுநிரை பூண்ட கோவலராற் கட்டபபெற்ற தெளிநத மணியோசை கேட்கிறது; எமசிறு நலலூர் இதுதான்' என்று உடன் போக்கிற் கொண்டு செல்லும் தலைவன தலைவியிடம் கூறுகிறான் (நற். 264:7-9).

**இறும்பூது - வியப்பு.** நெடுமானஞ்சியிடம் போர் செய் தோர் உய்தல் இயலாது; அவர் தம செம்மல் மூதூர் உரித்தாகல வேண்டின திறை கொடுகக வேண்டும்; கொடாவிடின் அவர் உரிமை மகளிரின் தோளைப் பிரிதல் இறும்பூது - வியப்பு - அன்று (புறம. 97:71-25). மந்திரங்கூறி அருநதிறல மரபின முரசுறை கடவுட் பேணுதற்கு உயர்நதோன் ஏந திய பிண்டத்தைக் கொள்ள மாட்டாது பேய் மகள் நடுங்கினாள்; கள்ளுடன் கூடிய இரத்தம நிறைந்த அப்பலியைக் கடவுள விரும்புதலால் எறும்பும் மொய்க்காமல் பேய்மகளும் பெறாமல் இருப்ப இறும்பூது மரபிற் காக்கையும் பருந்தும பிண்டத்தையும் பலியையும் உண்டன (பதி. 30: 33-39). தம் பகைவரைச் செற்றம் கொள்ள வேண் டாத காலத்தும் சினந்த பகைவரிடத்தும் களங் காய்க் கண்ணி நார்முடிச் சேரல் சினவாதிருத்தல் பெரிதும் இறும்பூதாகும் எனக் காப்பியாற்றுக் காப் பியனார் கூறுவர் (பதி. 32:15-17). வரம்பில்லாத தானை வெள்ளத்தையும் இடியைப் போன்ற முரசி னையும் உடைய நார்முடிச் சேரலின் எயிலைக் கருதின் போரெதிர்ந்து வந்த பகைவேந்தர் பொரா மலே தம் கருத்தழிநது நீங்குவர்; இது பெரிதும் இறும்பூதாகும் (பதி. 33:1,5-12). குளத்தைக் கண டாலொதத குளிர்ச்சியை யுடைய விளக்கமான கோயிலிடத்துச செம்பியன்றன்ன சுவரில் ஓவிய மெழுதி நோககுவிசை தவிர்ப்ப மேனிலம் உயர்ந் தோஙகி இறுமபூது சானற நறும்பூக்களை யுடைய சமண பளளி மலைகள பல திரணடு பொலிவன போல தோனறும் (மது. 484-488). நன்னனது மலைக காட்சியைக் கண்குளிரக கண்டும் மலை யொலியைச் செவி குளிரக் கேட்டும் எளிய உணவை உண்டும் பின்னர் அம்மலை பிற்பட இறும்பூது நிறைந்த இன்குரல் விறலியர் மலைப் பக்கத்தே குறிஞ்சி பாட நீவிரும் அவர்தம் தெய் வங்களைக் கை தொழுது இறைஞ்சிப் போற்றிச் செல்லுங்கள் எனக் கூத்தரை ஆற்றுப் படுத்தல் (மலை. 351-360). நள்ளியின் சோலை சூழந்த பக்கமலையில் சுரும்புண்ண மலர்நத கடவுட் காந் தள் மலரினும் இறும்பூது நிறைந்த நறுமலர் பல ஒருசேர மணக்குமாறு போலத் தலைவியினுடைய தோள்கள் மணங் கமழ்ந்தன (அகம். 152:14-18). 'திருமாலே, ஐம்பொறிகளின இருளொழித்து மன மாசு நீககி ஒரு நெறிக்கண் நிற்கும் ஆர்வலர் நின் னைத் தொழுதேத்தி நின் புகழ் விரித்தனர்; அவை நினக்கு இயல்பாவனவன்றி இறும்பூதன்மை நன் கறிநதனம; இதனை யறிந்தும் இங்கும் அங்கு மாகச் சிலவற்றைப் பிறழக் கூறுதல் கண்டு நீ நகைத்தலும் தகுதியே; அதனால் யாம் கூறுதலை விடேம' எனபர் கடுவனிளவெயினனார் (பரி. 4: 1-5).

**இறை- 1. அரசன்.** 'பகை வேந்தரைப் போரில் தாக்கி முரசமொடு அவர்களை அகப்படுத்தாவிடின் என் குடை நிழலில வாழ்வோர் தாம் சென்றடையும் நிழல் காணாது எம் இறை - அரசன் - கொடியன் எனக் கணணீர் விட்டுக குடிபழி தூற்றும் கொடுங் கோலேன் ஆகுக' எனப் பாணடியன தலையாலங் கானத்துச்செருவென்ற நெடுஞ்செழியன வஞ்சினம் கூறினான (புறம். 72:7-12). 'நின இறை இன்றுபோய் மறு நாள் பரிசிற்கு வா எனக் கூறான்' என்று பாணனிடம் கூறி அவனை ஆற்றுப்படுத்துகின்ற னர் (புறம. 138:6. 7). திருநதுவேல் பிட்டங் கொற் றன் தன இறை உவப்ப அருந்தொழில்களை முடிப் பானாக எனக் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார் வாழத்துவர் (புறம். 171:6, 7). பிட்ட னது வேலும் அவன இறை மாவள்ளீகைக் கோதை யும் மாறுகொள் மன்னரும் நெடிது வாழியர் என வடம வணணக்கன தாமோதரனார் வாழத்துவர் (புறம. 172:8-11). தன இறைக்கு வந்த போரான மைந்த துன்பங்களைத் தான் பொறுத்துப் பகைவர் எறிந்த படைக்கலங்களை ஏற்று மருந்துகொள் மரம் போலப் பல விழுப்புண் பெற்றவன ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறன் (புறம. 180:3-6). தமர், பிறர் என்றுபாராது இருசாராரும் பொரும் போரில் இறையின் புகழையும் நும்புகழையும் தோற்றுவித்து வாழநாள் முறை முடிந்தவர் பொர வருக என அழைத்து அவரொடு பொருது ஒரு பக்கம நிறபப் பின் அவ்வீரனை எவரும் குறுக விலலை (புறம். 294:

4-8). போரில் தன் இறை துன்புறுவானாயின் வீர னொருவன அக் காலததே கொடியுயர்த்தி நிறைக் கடங்காது முநதுற் றெழுதரும தானையைக் குறுக் கிட்டுத் தடுத்து அணையாய நிற்பான் (புறம. 314: 5-7). அஞசல எனறு கூறித் துணைக்கு வநத இறை கைவிட, யானையுடைய வேநதன் மதிற்புறததுத் தஙக, துன்பததைக் களைபவரைக் காணாது கலங கிய ஒரு மதிலை யுடைய மனனன போலத தலை வன பிரிநததனால தலைவிககு அழிவு நேர்நதது (நற். 43 7-12). இறையும் அருந தொழிலினை முடிதத மையால இளையர் நெடுவழியில இடையிடையே தங்கி வர, 'நின் தநதை வருகிறார் எனபபொய்ம மொழி கூறிப் புதலவனை அமைதிப் படுததும தலைவிபால் விரைவில வந்து சோநதான எனறு கூறும் தலைவி நிலையறிந்த தலைவன நம வருகை யைப் புள் அறிவித்ததோ என வியந்து பாகனை வினவினான (நற. 161:1, 8-12). மயக்குற்றாள் போலப் பிறர் துனபம் அறியாத இளையோளைக் கணடு தலைவன், 'நீயும் தவறிலை; நினனை வெளியே யனுப்பிய நுமருந் தவறிலர்; நிறையழிந்த கொலலும யானையை நீர்ககு விட்டாற பறை சாற்றிச செலல விடுதல போலப பறையறைநது நினனை விடுககாது பறையறையாமற செலலா தொழிக எனறு கூறாத இறையே தவறுடையான்' எனறு கூறினான (கலி. 56:27-33). தலைவி துன்பந தீருமபடி காதலா வந்த மாலைப பொழுது இராக் காலததே செனறொளிததுக கெட்டதறகு, மெலிநத மன்னர் மேல் நின்ற கடுமபகை அவனுககு உறு துணையாக நல்ல இறை தோனறக கெடுதல உவமை (கலி. 120.20-25).

2. இறபபு (இறவாணம). குறிய இறையை - இறப் பினை-உடையசிறுமனையில் வாழும் குறவர்முஙகில குழாயின் முதிாநத தேறலைப பருகி வேஙகை முனறிலில குரவைக் கூததயர்வர் (புறம. 129.1-3). வீட்டின இறையில செருகிய தீககடைகோல போல நெடுமானஞ்சி வலிமையைக் காட்டாமல அடஙகி யிருக்கவும் வலலன (புறம. 315:3-5). வேழககோலை நிரலபடச சார்த்தி வெள்ளிய மரக கோடு களை இடையிடையே கலநது தாழை நாராற கட்டித் தருபபை வேயந்து அமைககப பட்ட குறிய இறையை யுடைய இல்லத்தில நெயதனில மககள வாழநதனர் (பெரு. 263-265). யானைக குப பூண் செயயும கொல்லனின இருமபு விசைத தெறியும ஓசைக் கஞ்சி மாடத்து இறை யுறை யும புறவின சேவல் துயில் நீஙகும (பெரு. 436-440). வலலூறு தாககுதற கஞ்சிய குறுமபூழச் சேவல பாதுகாவலாய வன்னிலததைச சார்நத அம்பலத்தினில் வழிப் போககரை எதிர் நோக்கி ஆறலைகள்வர் தங்கியிருக்கும் பசுக்களை யுடைய சிறுகுடியாகிய ஊரில எலலோரும குடியோடிப போனதால் பாழபடடுக் கிடநத உயாநத நிலை யிலுள்ள பெரிய மனையில இறை நிழலின ஒருபக் கததே தனிமையால நெடடுயிாத்துத தஙகும (அகம. 103 1-9). தலைவியுடன் பொழுதினை இனிது கழித்த நாம் நாளை, வணிகச் சாததைக் கொனற கொடு வில ஆடவா பகைககஞ்சி ஊாவிட்டு நீங்க, பீாக் குப் படர்ந்த பாழமனையில யானை தனது சிறு புறததை உராய விட்டம் வீழ, மணிபபுறா துறநத மாடத்தில எழுதிய கடவுள போய விடடதால பொலிவிழகக, பலி கொடுபபது மறந்த மெழுகாத திண்ணையில் ஈனற நாய கிடகக,சிதலால புற்றுமூட, கூரைமடிந்த நல்ல இறை (இறவாணம) உடைய அம் பலததில தங்குவோமோ என நெஞ்சிறகுக் கூறி னான (அகம. 167:5-20). குறிய இறை யுடைய மனையில பரதவர் வாழதல (அகம. 210 1). தலை வன் இரவில துறுகலலை யுடைய மிளகு படாநத தோட்டத்திலுள்ள தலைவியின குறியிறைக குடிலா கிய இலலததுக்கு வநதான் (அகம. 272:10,11). வீட் டின இறை மேல மழைககாலததே சுதை பூசிய ஈர மான வெளிப்புறம போன்று கொககின இறகு இருககும (அகம. 346.1-3). மனையுறை குருவி முறறததில உலரவைதத கூலததையுணடு மனறததுது எருவாகிய தாதினைக குடைநதாடி இலலினது இறையிலுள்ள சேக்கையில தம் குஞசுகளொடு வதியும (குறு. 46·2-5). செலவரது பலகடடுககள அமைநத வீடடினகண உளள இறையில உறையும் வணணப் புறவின சேவல தன துணையை அழைக கும் (நற 71.6-9). வீடடின இறையிலுள்ள குருவிச சேவல் வேற்றுபபுலததில இருநத பெடையைப புணர்ந்து வநதமை யறிநது பெடை தன குஞ்சுக ளோடு சேர்ந்து அத்னைக கூட்டிறகு வாராமல் விரட்ட, பின அது மழையில் நனைநது வருநதியது கணடு நெடிது நினைந்து ஈர நெஞசத்துடன தன னிடம அழைகக அது செயலற்று வநதது (நற. 181: 1-9). கொழுமீன கொளபவர் பாககம் கழி சூழந்த கணடல மரங்களா லாய வேலியைக கொணட தோட்டத்திலமைநத முள்ளிச செடிகளால் வேயப பெறற குறியிறைக குடிலகளையுடையது (நற. 207: 1-3).

3. முன்கை. வணணம் நீவிய வணங்கு இறை - முனகை - உடைய பணைததோள் (புறம். 32:3). மூங கிலை ஒத்த அழகிய விளங்கிறைப் பணைததோள (பதி. 65 8). செம்பொறிககேற்ற வீஙகிறைத தடக கையில வண்ண வரிவிலலைத தலைவன ஏநதுதல (குறி: 123, 124). தலைவியை நேரிறை முனகை பற்றிச சுற்றததார் கொடுப்பத தலைவன மணந

தான் (குறி. 231-233). சில்வளை சொரிந்த மெல் இறை முன்கை (அகம். 19: 15). நுணங்கமை புரையும் வணங்கிறைப் பணைததோள் (அகம். 33:15). வீங்கிறைப் பணைத்தோள் நெகிழத் தலைவன் பிரிதல (அகம். 59: 16-18). நேரிறை நெடுமென் பணைத்தோள (அகம்.92: 5,6). வணங்கிறை மகளிர் (அகம். 97: 10; 334: 7). சாயிறைப் பணைத்தோள் (அகம். 213: 16; ஐங் 481·1). இறைவளை நெகிழதல் (அகம். 250: 13). மெல்லிறைப் பணைத்தோள் (அகம். 291: 25; ஐங. 459: 1). வாங்கமை புரையும் வீங்கிறைப் பணைததோள (அகம். 343: 1). இறையிறந்து இலங்குவளை நெகிழ்தல் (குறு. 50: 3, 4) இறைவளை நெகிழதத எவ்வம (குறு. 289: 2). இறையேர் எல வளை (நற. 167· 10; ஐங். 20: 5; 165: 4). இறைவரை நில்லாவளை (நற. 263: 2). இறைகேழ் எலவளை (ஐங. 140: 3). நேரிறைபபணைததோள் (ஐங். 181: 1; 239· 4, 468: 3) தலைமகள பிரிவுணாநது இறை நிலலா வளையோடத் தலைவி கண கலங்குதல் (கலி. 3:3). அலங்கிதழக கோடலவீ உகுபவைபோல இலங்குமஅழகிய வளை இறையினினறு கழலும் (கலி. 7: 15, 16; 121: 13, 14). தலைவன் பிரிவால் தலைவியின வனப்பு வாடி வணங்கிறை வளை கழனறன (கலி. 16:2). தலைவன கூடியிருக்கும போது இறையில வளை அழகுபெற்றுச சிறந்து பிரிவில கழலுதல் (கலி. 25:17, 18). 'நீ வருந்துமாறு எனக்குக் காமநோய் மிகுமாயின வணங்கின இறையுடையாய, அவர் செய்யும் அளி என்ன பயனைச் செயயும' எனத் தோழியிடம் தலைவி வினாதல் (கலி. 28:10, 11), வீஙகிறைப் பணைத்தோளுடையாளைத தலைவன் வரைநது கொள்ள வருவான் (கலி. 38.26). தலைவன துறநதபின இறைவளை நெகிழ்ந தோடுதல (கலி. 53:9). தடமெனதோளும் வணங் கிறையுமுடையவள் தலைவி (கலி. 56:20, 21). தலைவி வணங்கிறை நெடுமென தோளினள (கலி. 58:1). இறையிற கிடநத தொடியால தாம விரும்பிய கணவர் மேனி வடுககொள மகளிா முயங்கினர் (கலி. 66 5). தலைவன வணஙகிறை பறறித் தோளில் தொயயில் எழுதல (கலி. 76·14, 15). 'இவன தநதையின் இறையிலுள்ள தொடியை இவன கையிலணிநதவர் யாவர்' எனத தலைவி தலைவனைக கேட்டாள் (கலி. 84:31, 32). தலைவன மார்பை விரும்பியவளது அவிர்தொடி இறையினின்றும கழனறது (கலி. 100:13, 14). தலைவனிலலாவிடின் தலைவியது இறையின எலவளை நில்லாமல வளை நெகிழந்து விழும் (கலி. 125:21, 22). தலைவிக்கு இறைவளை நெகிழ்நத எவவநோய த்ரத தலைவன மணப்பன (கலி. 127·19,22). பிரிவில தலைவியின் நீடு இறை நெடுமென தோள் நிரைவளை நெகிழ்நதது (கலி. 132:15).

**4. கடவுள்.** ஒருதலைவனின் சந்தனம் பூசிய யாக்கையையும் அழகையும் கண்டு வருந்தும் துன்பமுணராது மயங்கி அன்னை வெறியாட்டெடுக்க அதற்கென வந்த வேலன எம் கடவுள் அணங்குதலின் இந்நோய் வந்தது; இதைத் தணிக்கும் மருநதறிவேன என்றால் அவனை யானையின் உடலை ஊடுருவி ஊன் புரள் அம்பொடு காட்டுவிலங்கின் அடியொற்றி நும் இறை – கடவுள் - வேட்டைககுச் செல்லுமோ என வினவின் எனன என்று தோழிக்குத் தலைவி கூறினாள (அகம். 388:16-26). துனி காரணமாகத் தலைவி கூறியதை ஏற்றுத் தான் சூள் பொய்த்ததாகக் கருதி எனக்குத் துயர் மிக இறை வருத்தும எனத் தலைவன் கூறுதல (பரி. 8.77-79). தாமரைப பூவில தோன்றிய இறையால (அயனால) வீழத்தப்பட்ட பெருவாரியை (ஆகாய கங்கையை) மலர்நது வீழும் பூவை ஒப்ப வேகந் தணியச் சடைப் பாரத்தின கண தாங்கியவர் மணிமிடற்றணணல் (சிவபெருமான்) (பரி. 9:4-6). இருங் குன்றதது அடியுறைதல இயைக எனப் பெரும் பெயர் வாய்ந்த இறை இருவரைத தொழுது பரவுவோம் (பரி. 15:64-66).

**5. தங்குதல்.** இழை சூழந்த பல தையலினது இடைக்கண் உளள ஓட்டைகளைப பற்றிப் பிணித்துக் கிடக்கும ஈரின் திரளோடு இறை கூர்ந்த– தங்கிய - பேனைத தமககு ஒரு பகையாகக் குறிப்பர் துறையூர் ஓடைகிழார் (புறம. 136:2-5). வீரர், ஆரிறை (அரிதாகத தஙகுதலை) அஞ்சாத, பகைவர் அஞசததக்க பாசறையை யுடையவன இளஞ்சேரல் இரும்பொறை (பதி.82:2). கிழிநது தைத்த ஆடையில் ஈரும் பேனும் இருந்து இறைகொணடன (தங்கின) (பொரு. 79). மன்றதறில தஙகியவரை நன்னனைக் கருதி வந்த சேட்புலப் பரிசிலர் என எண்ணிக் கணடோரெல்லாம் இனிது நோக்கி விருந்தினராக இறை கொள்ள எதிா கொணடழைபபர் (மலை. 492-496). தொன் மூதாலதததுப் பொதுவிடத்தில் இறைகொள்ளும் கோசர் வாய்மை பேசுமியல்பினர் (குறு. 15:1-3). கொடுஞ்சிறைப் பறவை இறை கொள்ள ஓங்கியுள்ளது கடம்பமரம் (குறு. 92:2,3). இறால் மீனருந்திய குருகுகள் புன்னை மரத்தில் இறைகொண்டன (நற். 67:3-5). இறாலைத் தின்னும் குருகினம் தாழையின தோடு தாழ இறைகொள்ளும் (நற். 131:4-6). தலைவன் பரத்தை அழப் பிரிந்து தன் கிழத்தியர் மனைக்கண் இறைகொண்டனன் (ஐங். 40:2,3). வண்டொடு தும்பி கிளைதோறும் தேனையுணடு வருத்தந் தீர்ந்து எங்கும் இறை கொண்டன (கலி. 30:2-4). பூவின் பாரத்தால்

தளர்ந்த கிளைகள் மேல் வண்டின் கூட்டம் இறை கொணடது (கலி. 34:12). பண்புடைய நல்ல நாட்டுக்குப் பகை வர அநநாட்டைக் கைவிட்டு நாட்டைக் காக்கும் மன்னனின குடைநிழலிலுள்ள ஊர் செனறு குடிகள் இறைகொள்ளும் (கலி. 78:4-6). அந்திப் போதில் இரை தேடிய களைபபால் ஓய்ந்து பறக்கும் மடநடை மாயினம் (அனனப் பறவைக் கூட்டம்) இமய மலையின ஒரு பககத்தே இறை கொணடிருந்தது (கலி. 92:16-19). மாலைப பொழுதில் நாரையினம மணல மேட்டில் இறை கொளளும் (கலி. 126:3-5). பாகு இறை (தங்கிய) இளமதுவை நுகர்ந்தனர் (பரி. 11:66).

6. **திறைப் பொருள்.** முள்ளம் பன்றி இறைச்சி, சந்தனக் கட்டை, யானை மருப்பு ஆகிய மூன்றினையும் புலித்தோலில் குவித்து விருந்தினர்க்கு இறையாக - திறைப் பொருளாக-நல்கும் நாட்டினை உடையவன் ஆய் அண்டிரன் (புறம். 374:11-15). நன்னனுக்கு விருந்து இறையாகக் கொடுக்கத் தொகுத்த பொருள்கள் அமையும் என மகிழ்ந்து கானவர் தம் பெணடிரொடு ஆடிப்பாடி மகிழந்தனர் (மலை.317-322).

7. **சந்து.** வீங்கு இறை - சந்து - பொருந்திய பணைத்தோள் (புறம. 354:9; அகம். 343:1). வீங்கிறைப் பருத்த அமை மருள் பணைததோள் (பதி. 54:3). வணஙகிறைப் பணைத்தோள் (மது. 414). வெள்ளிய சங்குவளை இறுகின இறைப் பணைத்தோள் (நெடு. 36). சாயிறைப பணைத்தோள் (அகம. (32: 18; 220:20; குறு. 168:5). எல்வளை நெகிழந்த முன்கை நேரிறைப் பணைத்தோள் (அகம. 242:13, 14). எல்வளை தெளிர்க்கும் முனகை மெல்லிறைப் பணைத்தோள் (அகம. 257:10,11). சாய இறைத் திரண்ட தோள் (அகம். 282:14). மெலலிறை முன்கை (அகம். 396:8). தலைவன் தலைவியின நேரிறை முன்கை பற்றிச் சூரர மகளிரைச் சுட்டிச் சூளுரைத்தல் (குறு. 53:6, 7). திருந்திறைப் பணைத்தோள் (குறு. 279:8). வணங்கிறைப் பணைத்தோள் எல்வளை மகளிர் (குறு.364:5). குறியிறைப் புதல்வர் (குறு.394:3). தலைவன பிரிய இறை ஏர் முனகை வளை நீங்குதல (ஐங். 163:3, 4). நேரிறை முன்கை (ஐங். 384:5; 493:4). வணங்கிறை வரிமுன்கை உடையவள் தலைவி (கலி. 60:4). நிறைவளையைக் கழலப் பண்ணினவன் செய்த வருத்தத்தால் தலைவிககு இறை இறை (சந்து தோறும்) காமத்தீ மூண்டது (கலி. 145:57, 58). அரிவையர் தம் நேரிறை முன்கையில் தாளத்தைத் தூக்கி அளத்தல் (பரி. 12:43, 44). நேரிறை முன்கை நல்லவள் (பரி. 12:92). வளை முன்கை வணங்கிறையார் (பரி. 17:33).

8. **இறைத்தன்மை.** வீரரோடு எழுகின்ற பகை வரது யானைப் படையைக் கணடால் நில்லாது அதன்மேற் செல்லும் தானையுடைய இறை - இறைத்தன்மைக்கு - உரியவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 54:15-17). இடியென முழஙகும் முரசினையும் யானைகளையும உடைய இறைகிழவோன் இளஞ்சேரல இரும்பொறை (பதி. 90.56, 57). வறிய புலவரின ஏறறகை நிறையப் பொன்னைச் சொரியும் பாண்டிய மனனன போலப் பாண்டியனுடைய இறை பரபபிக் கழனிகள தோறும் பொன்னைப பரபபும் வினையில் வையை ஓயற்க எனப் புலவர் வேணடுவர் (பரி. 10:126-128).

9. **சிறிது.** 'நீ நடுங்கியமையான் இறை இறை - சிறிது - பரிந்தனென் அலலெனோ' எனத தலைவன் தலைவியிடம் வினவினான் (குறு. 52:4, 5). மானினம் நிமிர்நது தழை உணணுதலின் இறை வளைந்த கிளையை யுடைய இலநதையின் காய், பரல் சேர்ந்த சிறு நெறியில பரவிக் கிடக்கும் (நற். 111:1-3).

10. **மூலை.** இடஞ் சிறந்து உயரிய எழுநிலை மாடத்து முடஙகிய இறையில - மூலையில - (கூடு வாயில்) மாத்திரள் அருவியென மழைபொழிந் தோடும் (முலலை 86, 87).

11. **கோடு.** நீடு வெயில உழந்த குறி இறை - கோடு- பொருநதிய கணைககால் (அகம. 335:12). நேரிறை முன்கை வீங்கின வளை (அகம. 336.23).

12. **தமையன்.** யமனை இறையாக - தமையனாக - உடைமையின் சனிக்கு இறையமன் எனறும் பெயர் (பரி. 11:8).

13. **உயர்ச்சி.** ஏந்துகொடி இறை - உயர்ச்சி - உடைய புரிசை (புறம். 17:27).

**இறைச்சி - நேயம்.** விரும்புவார்கரு இறைசசியாய் - நேயமாய் - விரலால் வாசிக்கப்பட்டு ஒலிககும் நரம்பு ஏழும் தம் பயன இன்றாம்படி அற்றுப் போம் யாழினைவிட நிலையற்ற பொருளை அறிவுடையோர் விரும்பார் (கலி. 8:9-11). மாலைப் பொழுது கூடி இன்புற்றார்க்கு இறைசசியாய இயைவதைச் செய்தது (கலி. 148:8,9).

**இறையமன் - யமனைத் தமையனாக உடைய சனி.** இறையமன் - சனி – விலலுக்குப் பின்னாகிய மகரத்தைச் சேர்ந்தது (பரி. 11:8,9).

**இறையனார் - ஒரு புலவர்.** குறுந்தொகையில 'கொங்கு தேர் வாழ்க்கை' எனத் தொடஙகும் இவரது செய்யுள் இரண்டாவது பாடலாக அமைந்துள்ளது. மதுரை சோமசுநதரக் கடவுள் இறையனார் எனற பெயரில் இப்பாடலைப் பாடித் தருமி பரிசிலபெறக்

கொடுத்ததாகக் கூறப்படுகிறது. இறையனார் என் றொரு புலவர் இப்பாடலை எழுதியதாகவும் கொள்ளப்படும். இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவியின் கூந்தல் இயற்கை மணம் பொருந்தியது என்பதைத் தலைவன் வண்டினை வினாவுதல் வாயிலாகப் புலப்படுத்தி நலம் பாராட்டுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

**இறைவன்** - 1. அரசன். நெல் முதலியவற்றை விதைத்து மழையை எதிர்நோக்கும் புன்புலம் இடமகன்ற நிலத்தை யுடையதாயினும் அது பொருந்தி யாளும் இறைவனது - அரசனது - முயற்சிக்குப் பயன் படாது (புறம். 18:24-26). நல்ல இறைவனின் பொருளைக் காக்கும் உலகு (சுங்கத் தொழில) புரிவார் பிறர் களவிற் கொண்டுபோகாதபடி நன்கு காத்த னா (பட. 120-125).

2. தலைவன். 'கானலந் தொண்டி எம்மூர்; அவன் எம இறைவன் - தலைவன் -' என்று புலவரை ஆற்றுப்படுத்துவோன் கூறுவதாகப் பொய்கையார் கூறுவர். இங்கு இறைவன் என்பது கோக்கோதை மார்பனைக் குறிக்கும் (புறம். 48.4,5). வல்வில் ஓரி இறைவன் ஆகலின் பாணரும் விறலியரும் இருபத் தொரு பாடல் துறையையும் முறையாற் பாடி முடித்தனா (புறம். 152:19,20). பகை வேந்தன் பொருது இறக்கவே கள்ளை வாழ்த்திப் பருகி முன்றிலில் கள் மயக்கத்தோடு உறங்குபவன் தான் எம் இறைவன்; யாம அவன் பாணர் என ஒரு தலைவனை மதுரைக் கள்ளிற் கடையத்தான் வெண்ணாகனார் பாணர் கூறுவதாக அமைத்துப் பாடியுள்ளார் (புறம்: 316:1-4).

**இன்சொல்** - இனிய மொழி. சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன், எந்நாளும் இன்சொல் லுடன் - இனியமொழியுடன் - எளிய செவ்வியை உடையவனாக இருத்தல் வேண்டும் என ஆவூர் மூலங்கிழார் செவியறிவுறுத்தினார் (புறம்.40:9). செந் தார்ப் பைங்கிளியைக் கையில் ஏந்தி, வீட்டிலுள் ளோர் அறிதற்கஞ்சி 'நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் இன்று வருவார் என்று மெல்ல உரைப்பாய்' என இன்சொல் பயிற்றும் அரிவை நலம் பெறுமாறு தேரை விரைந்து செலுத்துக என வினை முற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகற்குச் சொன்னான் (அகம. 34.14-18). அழகிய இளைய பெண்மானின் மருட்சியுற்ற பார்வையைக் காணுந்தோறும் தலைவன் தலைவியை நினைந்து தேரினை விரைந்து செலுத்துமாறு பாகற்குக் கூறுவான்; ஆதலால் வருந்தாதே எனத் தோழி தலைவிக்கு வன்புறை இன்சொல் நன்பல பயிற்றினாள் (அகம். 74:9-13). தாரும் எஃகும் உடைய தலைவன் இரவுக் குறிக் கண் காவலர் அறியா வண்ணம், தாழிடாத கதவின் அருகே தங்கித் தலைவியின் இல்லம் புகுந்து துன் பம் நீங்கத் தலைவியைக் கூடி இன்சொல் கலந்து பேசிச் சென்றான் (அகம். 102:11-15). 'தலைவன் தன் மார்பினாலே முற்ற வளைத்து இன்சொல் லாலே கட்டிவிட, அதனை நம்பி நம் துன்பம் நினையாது அவன்பின் சென்ற என் மகள் அரிய பாலை வழியில் விரைந்து செல்லும் ஆற்றல் உடையவளோ' எனக் கூறி மகட்போக்கிய செவிலி வருந்துகின்றாள் (அகம. 153:5-7,11-13). 'திரியும் இயல்புடைய நின் பெண்தன்மை அழிவதாக' என நான் கடிந்து கூறிய பொழுதும் கடுஞ்சொல் எதிர் கூறாளாய்த் தன் மழலையாகிய இன்சொல்லால் உயிர் கலப்பக் கூறியவள் ஏதிலாளனை நம்பி உடன் போயினளே என மகட்போக்கிய தாய் கவலையுறுகின்றாள் (அகம். 275:5-15). 'குன்றநாடன் உயர்வுக்குத் தகுந்த மென் மையுடையவன் என்று அவன் பெருந்தன்மையெல் லாம் அடங்கக் கூறிய நின் இன்சொல் உண்மையா யிற்று' எனத் தலைவி தோழியிடம் கூறுகின்றாள் (அகம். 332:10-12). இயற்கைப் புணர்ச்சியின்பின், தலைவன் 'மடந்தையே, பொழுது சென்றபின் தினைப்புனத்திற்கு வருவேனோ, நாம் பண்டு புணர்ந்த மலைப்பக்கம் வருவேனோ, நின் இன் சொல்லை விரும்பும் என் நெஞ்சு மகிழுமாறு கூறுவாயாக' எனத் தோழி கேட்ப நெஞ்சிற்குச் சொன் னான் (நற். 204:1-6).

**இன்பம்** - இனிமை. செல்வம் பெற்ற நீ அதுகொண்டு அறம், பொருள், இன்பம் - இனிமை - பெறுதல் வேண்டும். அங்ஙனம் செய்யாயாயின் உன்னைக் காவாதவனாவாய் எனச் சோழன் நலங்கிள்ளிக்கு உறையூர் முதுகண்ணன் சாத்தனார் அறிவுரை கூறல் (புறம். 28:15-17). சிறப்பு முறையால் பொரு ளும் இன்பமும் அறத்தின்பின் நிற்றற்குரியன (புறம். 31:1,2). பருவமழை தவறாமல் பெய்யவும் உயிர்கள் அச்சமின்றி இன்பம் பெருக அடையவும் சேரநாட்டில் உள்ள அந்தணர் தத்தமக்குரிய துறை நூல்களை முறையாக ஓதினர் (பதி. 90:1-4). மதுரை மாந்தர், உண்டு அமையாத உணவு மிகுகின்ற செல்வத்துடன், நோக்கி யமையாத கண்களுக்கு இன்பத்தைத் தரும் தோற்றமும் உடையவர் (மது. 16,17). அகனைந் திணை பற்றிக் கூறும் குறிஞ்சிப் பாடலில் சொல் லப்பட்ட பொருள் அறம், பொருள், இன்பம் பற்றி யதாம் (குறி. வெ. 2). மலைநாடனே, நின் மலையில் உள்ள விலங்குகளும் குறியா (எதிர்பாராத) இன்பம் எளிதில் எய்தும்போது, நீ குறித்து முயலும் இன் பம் உனக்கு அரிதாதல் யாங்ஙனம் எனக் கேட்டு, தோழி வரைவு கடாவுகின்றாள் (அகம். 2:8-10).

ஈதலால் பெறும் இன்பம் கருதித் தலைவன் பொருள் தேடச் செல்லல் (அகம். 69:5,6). சான்றோர் இன்பத்தை மிகுதியும் விரும்பினா ராயினும் பழி யொடு கூடிவரும் இன்பததை விரும்பார் (அகம. 112: 11,12). புலால் நாறும் எமபதி ஊரென உணரலா காத சிறுமையும் பொலிவற்ற உறையுளும உடைய தாயினும் இன்பம் தருமாற்றால் ஒருநாள் தங்கியி ருந்தார்க்கும் பிற்றைநாள் தம் பதியினையே மறக் கச் செய்யும் பண்புடையது எனத் தலைமகற்குக் குறை நயந்த தோழி கூறினாள் (அகம. 200:2-6). இன்பம் துன்பம், புணர்வு பிரிவு ஆகிய இவை பக லும் இரவும் போல ஒனறு முடிந்தவுடன் ஒன்றாக மாறிவரும் இயல்புடையன (அகம். 327:1-4). அலல குறிப்பட்டு மீளும் தலைமகன் தன் நெஞ்சை நோககி 'வறியவன் இன்பத்தை விரும்பினாற் போலப் பெறுதற்கரிய தலைவியை நீ விருமபினாய்' என்று கூறினான (குறு. 120:1,2). விலலினின்று எய் யப்படுமகணை செல்லும்போது உண்டாகும்கணை நிழல் விரைவில அழிதல் போல நாளதோறும் இன் பமும் இளமையும கழியும் (நற். 46:1,2). 'அரிய பாலை வழிச்சென்று ஈட்டும் பொருளும் இன்பம் தரும் என்றாலும் இளமையில நுகரும் காம இன் பத்தினும் சிறந்த இன்பம் ஆமோ' எனச் செல வழுங்கிய தலைவன நெஞ்சினை வினவினான் (நற். 126:6-8). பொருள் தேடாமல் இல்லின்கண் சோம்பி யிருப்போர்க்குப புகழும் இன்பமும் கொடையும் அருமையாகவும் கைகூடுவ தில்லை (நற். 214:1,2). மாவின் பூங்கொத்து மீதிருந்து குயிற்சேவலும் பெடையும் தலைவனும் தலைவி யுமா யமைந்து 'புணர்ந்தீர் பிரியாமல் புண ருங்கள்' என்று பலமுறை கூறும் இன்பமுடையது இளவேனில் (நற். 224:4-6). ஆற்றற்கரிய தீயையும் ஆற்றுதற்கினிய காற்றையும் விசும்பிலிருந்து பெறு வது போல மலை நாடன் மார்பு, பிரிவால் நோயும் உறவால் இன்பமும தருவது உண்மை என்பது மணமனையில் தலைவியின் பொலிவு கண்ட தோழி கூற்று (நற். 294:1-3). அசுணத்தை மகிழச் செய்து பின் கொல்பவர் கைபோலத் தலைவன் மார்பு புணர் வால் இனபமும் பிரிவால துன்பமும் தரும் இயல் புடையது (நற். 304:5-10). 'நீ வருந்துணையும் தலைவி உயிரோடிருப்பாளாயின் நீ மீட்டு வந்து எம்மொடு கூடி இளவேனிற்பருவத்து இன்பம் நுகர்வாயாக' என்று பிரியவுள்ள தலைமகற்குத் தோழி கூறினாள் (ஐங். 368: 3-5). இல்லத்து முன் வாசலில் இட்ட குறுங்கால் கட்டிலின்மேல் மனை யோள் பக்கத்திருப்பத் தன் மார்பில் புதல்வன் தவழத் தலைவன் பாயல் கொண்டிருக்கும் மாலைக் காலம் மகிழ்ச்சி மிக்க இன்பப் பொழுதாகும் (ஐங். 140). 'கார்ப்பருவம் தொடங்கியமையால் தலைவன் சென்ற நெறி மறியுடைமான்பிணை உகள இன்ப முடையதாயிருக்கும்; கலங்காதே' எனத் தோழி தலைவியைத் தேற்றினாள் (ஐங். 434). தலைவன் செலவுக் குறிப்பறிநத தலைவி, 'நீர் செல்லும் வழிக் கண் உளவாம் துன்பத்திற்குத் துணையாக எம மையும உடன்கொணடு செலலுதலே எமக்கு இன்பமாகும்' எனக் கூறினாள் (கலி. 6:9-11). காடு வெப்ப மிகுதியால் இன்பத்தினின்றும் நீங்கிச் செல்வாரைத் துன்புறுத்தும் தகைமை யுடையன எனத் தலைவன் கூறல் (கலி. 11:10). 'துனபத்திற் குத் துணையாயிருந்த மடல் இனி இவளைப் பெறு மாறு இனபத்திற்கு இடம் படுவதாக என்று தலைவி இரங்கி அருள செய்தாள்' என்று மட லூர்ந்து தலைவியை எய்திய தலைவன் பாங்காயி னார்க்குக் கூறினான் (கலி. 138:28,29). 'அறம் பொருள், இன்பம் என்ற மூனறில அறத்தின் வழி முற்பிறப்பில ஒழுகாதவன் இப்பிறப்பில் பனை மடலேறித் தான் விரும்பியவளைப் பெறுமாறு நூல் கூறிற்று; ஆதலால் மடலேறிப் பாடி வந்தேன் ' எனத் தலைவன கூறினான (கலி. 141:3-6). 'வையையே, மூதூரில வாழ்வார்ககு நின்னால் இனபமும் கவினும பலவாறு உண்டா யின. அதனால இவ்வகனற உலகினுக்குள் நின் புகழ் அடங்காது' எனத் தோழி கூறினாள (பரி. 12:100-102). 'வையைத துறை தனனை அடைந தார்க்கெலலாம் இன்பம் செயதல போலப பரத் தையும் எலலார்ககும பொதுவாய் இன்பம தருகி றாள்' எனபது தலைவி கூற்று (பரி. 20.56-58). திருமால எழுந்தருளி யிருக்கும் இருநதையூரில் எலலா நலங்களும் நலலவாகிய இன்பங்களும் நிறைந்திருந்தன (பரி. தி. 1:28,29). இனபு காணக.

**இன்பு** - இன்பம். 'அன்னச் சேவலே, கோப்பெருஞ் சோழனின் அரண்மனைக்குள தடை யினறிச் செனறு நான் பிசிராநதையின் அடியுறை என்று சொனனால் அவன் நின் இனபு - இனபம - பொருநதிய பெடை அணியத் தகுநத நனகலன் தருவான' எனப் பிசிராந்தையார் கூறினார் (புறம். 67:10-14). முகமாறிப் பரிசிலாகக் களிறு நலகினும பெறேன்; உவந்து இன்புற விடுத்தால குனறியும் கொள்வேன் எனக் குமணனிடம் பெருஞ்சித்திர னார் கூறினார் (புறம். 159:22-25). பார்வை மடப் பிணையைக் கலைமான் தழுவி இனபுறு புணர்ச்சி நிலையை வேட்டுவன் மனைவி கணடு, தன் இயக் கத்தால மான்கள் பிரிதலும் கூடும் என்று அஞ்சி மனையின் ஒரு புறத்திருந்தாள் (புறம். 320:4-9). குளிர் மிகுதியால் சேவற்புறா இன்புறு பெடை

யுடன் மன்றிற் சென்றுண்ணாமல இரவும் பகலும் மதலைப் பள்ளியின் மாறி மாறித் தங்கியிருந்தது (நெடு. 45-48). 'இன்புறு தாளத்தையுடைய பாட்டு நடுகல் தெய்வத்திற்கு விருப்பமாகும்படி முறைமையினையுடைய நும் யாழை வாசித்துச் சென் மின்' எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெறுகின் றனர் (மலை. 390:391). பொருள்வயிற் பிரியும் தலைவனைப் போகாமல் நிறுத்த 'தூய அறுவை விரிககப்பெற்ற படுக்கைககண் கவவு இன்பு உறாமல் பனிநாள் கழியினும் கழிக; நீ தேடுகின்ற பொருட்கு எக்குறையும் வாராதிருப்பதாக' எனத் தோழி கூறினாள் (அகம். 13:15-17). வேந்துவினை முடிதத தலைவன் வெல்வேல் இளையர் இனபுறத் தேரேறிவந்து தலைவியை இன்புறுத்தினான (அகம். 104:1-3,14). இளையரும் புரவியும் இன்புறத் தலைவனை மனைக்கண் தங்கிச் செலலுமாறு தோழி வேண்டல் (அகம. 300:20-22). நம்முடன் கழியிலுள்ள பூப்பறித்தும் கானலில தங்கியும் வண்டற்பாவை செய்து விளையாடியும் இன்புறப் பலகால் புணர்ந்தும் தங்கிய தலைவன் அயர்ந்த நெஞ்சமொடு சென்றான் எனத் தோழி தலைமகளுக்குக் குறைநயப்பக் கூறல் (அகம். 330:1-6). கூழி பெருங்காமத்து இனபுறு நுகர்ச்சியிற் சிறந்த தொன்றில்லை எனத் தலைமகன் பொருள்வயிற் பிரிந்தபோது தன நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 361:6-8). தச்சன் செய்த சிறுதேரினை இளையோர் ஊர்ந்து இன்புறாராயினும கையினால் இழுத்து இனபுறுவர் (குறு. 61:1-3). 'தலைவி தோளில துயிலுதலை நின் உள்ளத்து இன்புறாய் ஆயினும் என்பால் உள்ள கண்ணோட்டத்தால் அவளைத் தலையளி செயக' எனத் தலைவனைத் தோழி வேண்டல் (நற். 355:8-10). தலைவியின் துயர் நீங்கத் தலைவரின் தேரினுடைய மணிக்குரல் இன்புற இசைக்கும் (ஐங். 102:3,4). அரிய வழி வந்து தலைவி இன்புறும்படி அளித்தாயாகையினால் நீ அவளிடத்து அன்புடையாய் என்று கூறுகினற சொல் இனிது என்பது இரவுக்குறி விலக்கும் தோழி கூற்று (கலி. 49:14,15) 'மாலைப்பொழுதே, கூடி இன்புற்றவர்க்கு நேயமாய் அவர்கள் தம்மிற் கூடுதறகு முன்பு உதவிய நீ, ஆடவரைப் பிரிந்து துன்புறும் மகளிரை மேலும் வருத்துதல் நினக்குத் தக்கதன்று' எனத் தலைவியின் பிரிவு வருத்தம் கணடார் கூறினர் (கலி. 148:8-11). மொய் குழலை இனபுற்றணிநத இயலணி (பரி. 9.5). இன்பம் காணக.

**இன்மை - 1.** இல்லாமை. இவ்வுலகில் பரந்த புகழ் இல்லாதவர்க்கு உயர்நிலை உலகத்துள் உறைதல் இனமையை - இலலாமையை - நனகறிந்து புகழுக் குரிய செயலைச் சேரமான் தகடூர் எறிந்த பெருஞ் சேர விரும்பொறை செய்ததாக மோசிகீரனார் பாராட்டினார் (புறம். 50:14-17). வாரால் விசித்துக் கட்டப்பட்ட, தொழில் மாட்சிமைப்பட்ட, மயிர் சீவாது போர்க்கப்பட்ட முரசம் தாங்குநர் இன்மையால் இருந்து கெட்டன (புறம். 63:7,8). பாணன் கையின்கண் இலக்கண முறை நிரம்பிய யாழையும் ஈத்தளிப்போர் இன்மையால் மெய்யில் பசியையும் உடையன் (புறம். 69:1,2). பால் இன்மையால் திரங்கித் துளை தூர்ந்த பொல்லா வறுமுலையைச் சுவைக்குந் தோறும் குழந்தை அழுதது (புறம். 164: 3-5). நாடோறும் உணவு இன்மையால் பலவிடத் தும் மாறி மாறி அகழ்ந்த வீட்டெலி மடிந்து கிடக்கும் பழைய சுவர் பொருந்தியது வீடு (புறம். 211:17-19). பலமுறையும் சுவைத்துப் பால இன்மையால் சிறுவன் முலையுண்டலை மறந்தான (புறம். 211:20,21). நல்வினை செய்தோர் உம்ப ருலகத்தில் இன்பம் நுகர்தல் கூடும்; அவ்வுலகத்தின நுகர்ச்சி இல்லையாயின் மாறிப் பிறத்தலிலே கூடும் பிறப் பின்கண் பிறப்பு இன்மையாதல் கூடும் எனக் கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்த காலைச் சான் றோர்க்குக் கூறினான் (புறம். 214:8-10). விளைந்து பெரும்பயன் தரவல்ல விதையைக் குற்றிச் சமைத் துண்டல் அறிவின்மையாகும் (புறம். 227:2). நிரை மீட்டுவந்த வெல்வேற் காளை இன்மையான் (நடு கல்லாயினமையான) தலைவி கைம்மைக் கோலம் கொண்டாள் (புறம். 261:15-17). கிடங்கில் நீரின் மையால் கன்றுகள் மேய்ந்து துள்ளும் (புறம். 355: 2). இருபெருவேந்தரும் பொருதுவீழ்ந்த களத்துப் பெறுதற்குரிய பரிசிலொன்றும் இன்மையின் இரப் போர் இரங்கினர் (புறம். 368:11,12). போர்க்களம் பாடும் பொருநன் அரிசி இன்மையின இன்றி யமையாத எச்செயலையும் செய்யாது, பொருளை விரும்பித் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் போர் செய்யும் களம் நோக்கிச் சென்றான் (புறம். 371:8,9). 'நின்னை ஒப்பவர் இவ்வுலகிற் பிறர் இன்மையால் நீ பகைமன்னருடைய எயிலிடத்துக் கொண்ட பொருள்களைப் பரிசிலாகப் பெற வந்தேன்' எனக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் கோவூர்கிழார் கூறினார் (புறம். 373:33,34). பொய்யாத வளவன்மையுடைய ஆய் அண்டிரனே, யான கிணைகொட்டிப்பரவுதற்கேற்ப என்னைப் புரப்போர் பிறரின்மையின் ஒப்பற்ற நின்னை நினைந்து வந்தேன் என்பது ஏணிச்சேரி முடமோசியார் கூற்று (புறம். 375:11-14). 'சமைத்தலை மறந்த மட்பானையை உமிர்த்துச் சமைக்கச்செய்யும் கடனறிந்த செல்வர்பிறர் நாட்டின் மையின், மலர்தார் அண்ணல், நின்நல்லிசையுள்ளி

வநதேன்' எனக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனை நலலிறையனார் பாராட்டினார் (புறம். 393:4-9). உறக்கம் இனமையால் மெலிநத தலைவி யின் பசிய பொன்னாற் செயத இழை நழுவின (பதி. 68:15). ஒய்மானாட்டு நல்லியக் கோடன் செய்ந்நன்றியறிதல், சிற்றினம இன்மை, இன் முகம் உடைமை, இனிய செயல் உடைமை ஆகிய பண்புகள் உடையன் எனச் சான்றோர் ஏததினர் (சிறு. 207-209). ஒய்மானாட்டு நலலியக்கோடன அஞ்சி னவர்கது அருள செய்தலும் கொடியவெகுளி இன் மையும் போன்ற வீரப் பண்புகள் பல உடையன் என மறவர் பாராட்டினர் (சிறு. 210-212). உகுநெற் பொரியும் வெமமை மிக்க காட்டில் வழிச செல வோர் யாரும் இன்மையால் ஆறலைபபோர் வறு மையால வாடினர் (அகம. 1'13-14). சிறுதேர் உருட் டும சிறுவனைத தெருவிற கண்ட பரத்தை, அவன் தலைவனைப் போல இருக்கும் ஒபபுமை கருதி, காணபோர் யாரும் இன்மையின் 'உயிரே வருக' எனறு கூறி அணைத்துக் கொண்டாள் (அகம் 16: 5-11). தலைவன மார்பில் இன்துயில் பெறச் சென்ற தன நெஞ்சு, அவரது அளியின்மையால் அங்கே தஙகுதலை வெறுத்து இங்கு வாராதிருபபதாக என்பது தலைவியின வேணடுதல (அகம். 40:10-12). நனறியிலலாத மககள், ஈந்து வறியவரானோராற் பயனடைதல் இன்மையின் அவாபாலிருந்த பற் றினை விட்டு நீங்குவர் (அகம. 71.1-3). தலைவன ஒருவன் பகல முழுதும் எம்முடன் விளையாட்டயர்ந் தான்; மாலை வந்ததும் நும இலலில் தங்கி விருந் துண்டால் வரும் குறை யாது என்றான். இழிந்த கொழுமீன் உணவு உமக்கு ஏற்றதன்று எனச் சொலலிப் பெயர்ந்த பலருள்ளும் என்னையே அவன் பார்த்தான; இது தவிரப் பிறிதொனறும் இனமை யைத் தெய்வம நோககிச சூளுரைப்பேன் எனபது செவிலிககு அறததொடு நிறகும தோழி கூறறு (அகம. 110:3-22). தலைவன் பிரிய, உணவை வெறுத்து, உயிர்மெலிந்து அழகு கெடப் பிரிந்தோர் பெயர் வுக்கு இரங்கியிருநதும் அதனைப போககும் மருந்து பிறிதினமையின் வேறு செயலற்றவ ளானேன் என்று தலைவி வருந்தினாள் (அகம. 147:11-14). நம் மனத்தை ஒத்த மென்மைத் தன்மை தலைவர் உள்ளதது இன்மையின் நம் பெண்டிர் உலகத்தி யல்பினை அறிந்திலரோ எனத் தலைவி தலைவன் பிரிவால் அறிவு மயங்கிக் கூறினாள் (அகம். 273: 6-8). பக்கத்தே நீண்ட பெரிய கவர்த்த கோட்டி னையுடைய கரிய சேற்றின்கண் உள்ள ஈரமுள்ள வளையிலிருக்கும் அலவன் வெளிபபடச் செல்வோ ரின்மையின துறை ஒலியடங்கியது (அகம். 350:3-5). நீர் வேட்ட துனபத்தால் தழை உண்டலைக் கைவிட்டு, அறுகயம் நோக்கிச் சென்ற கலைமான ஆங்கு உணணும் நீரினமையின் தனபிணையுடன வருநதும் கொடிய சுரன் (அகம. 353:11-14). அம் புடன பதுங்கியிருக்கும ஆறலைகள்வர், வழி வரு வாரினமையின் தம வறுமை களையுநரைக் காண வியலாத கொடிய சுரம (அகம. 365:7-9). 'உலர்ந்த மரககிளைகளைப பிளக்கும வன்மை யினமை யின் யானை தன்கையை மடிதது வருந்தும் பாலை யாயினும் உமமொடு வநதால இனபம் தரும்' என்று கூறித் தோழி செலவுடம்படடாள் (குறு. 388:5-7). தலைவர் என்பால் அனபின்மை காரணத்தால அருளைப் பொருளெனறு கருதா ராயினர் எனறு பிரிவாற்றாத தலைவி கூறல் (குறு. 395:2). 'பயனிது எனறு கருதாமல் பாம்பு கடிதது வருந்தினாற் போன்று, சிறிதும நன்மை இனமையின, என் உளளம வருநதுமாறு நகைத் துக் கூறாதே' என்று சேடபடுககப்படட தலை வன ஆறறாது கூறினான் (நற. 75:1-5). 'உனககுத் தெரியாவண்ணம் மறைநது தஙகுதற்குரிய உலகம ஒனறு இனமையான, எனககுத தோனறாது கரந துறையும என காதலனிருககும் இடததைக் காட்டு வாயாக' எனப் பிரிவாறறாத தலைவி திங்களை வேண்டினாள (நற். 196.3-6). 'நினனுள்ளம சென்ற வழி நடக்கும் என தோழியின பசலை நோயககு நினனையனறிப பிறிதொரு மருந்தின்மையை நீ நன்கறிநதிருப்பின பிரிந்து செலவாயாக' எனபது செலவு மறுதத தோழி கூறறு (நற. 247 7-9). 'மேகமே, அனபின்மையால தலைவி நடுங்குமாறு பொய்யாக இடிதது வமபமாரி பெயதாய; ஆத லால இதனைத தலைவர் குறிததுச செனற காாப பருவம என நமபேன' எனறு தோழி கூறல (நற். 248.5-9). பீர்க்கம பூவில் தேன பருகிய வணடு, தலைவியின் மேனியில் உள்ள பசலையின நிறம பீர்க்கம்பூப் போல இருப்பினும மணம் இனமை யால் அதனமீது முரலவிலலை (நற். 277:7, 8). தலைவன் குறிததுச் சென்ற கார்காலம் வநதும அவன் வாராமையால, பிரிவுத் துன்பம் தாளாமல இறத்தல இன்மையால யான் அனபிலேன அல லேனோ எனறு தலைவி கூறல (நற். 381'1, 2) நெயதறறழையனறி அதன் பகைததழையை மெய் யில் அணிநது கொள்வாரின்மையால எம்மகளிர், அணிதற்குரிய சில பூக்களையே விரும்புவர் எனறு கூறித் தோழி கையுறை மறுத்தாள (ஐங. 187:3-5). நிழலின்மையால வருந்தும் மடபபிணைக்குக் கலை மான் தன்னிழலைக் கொடுத்துக காககும (கலி. 11: 16, 17). என் தோள்கள் மெலிந்து யானுற்ற வருத்தத்தாலே துணிந்து ஒரு நாணின்மையைச் செயதேன என்று கூறித தோழி தலைவியிடம்

உண்மை நாடினாள் (கலி. 37:11, 12). மிடியால் பொருளின்மையைச் சொன்னார்க்குக் கொடுத்த லாற்றாக்கால் தலைவன் இறந்துபடுவன் (கலி. 43: 25-27). நீ செய்த அருளின்மையால் தனக்குத் துன் பம் மிகினும் அது காரணமாக நின்னை யான் பிறர்முன் பழிப்பேன் என்று என் தோழி எனக்கும் (துன்பத்தை) மறைத்தாள் என்று தோழி தலைவனுக்குச் சொன்னாள் (கலி. 44:8-16). தலை வன்கண் அருளின்மை கண்டும் அவன் மொழியை நம்பிய பரத்தையர் பித்தேறினர் (கலி. 74.8, 9). பரத்தையொடு கொண்ட தொடர்பால் எம் மெய் யில் வேறுபாடு உண்டாயிற்று என்று நினை யாதே; அதற்குக் காரணமாம் அத்தீது என்கண் இன்மையே என்பதைத் தெளிவிப்பேன் என்று தலைவன் கூறல் (கலி. 88:15, 16). பரத்தைமை காரண மாக ஊடிய தலைவியை 'யான் செய்யாத செயலைச் சொல்லிச் சினப்பதேன்? என்னிடத்துத் தீதின்மை யைத் தெய்வத்தால் தெளிவிப்பேன்' எனத் தலை வன் ஆற்றுவித்தல் (கலி. 91:6-8). 'யான் தெளிவித் ததனை ஏற்றுத் தெளியாமல் சினந்தாய்; என்னிடத் துத் தீதின்மையை நின்னைப்பணிந்து நிலை நிறுத் துவேன்' எனத் தலைவன் கூறினான் (கலி. 91:16,17). 'நான் விரும்புதற்குரியராய் நின்னினும் சிறந்த மக ளிர் மண்ணுலகத்தில் இன்மையை நீ தெளிவாய்' என்று கூறி ஊடிய தலைவியைத் தலைவன் தேற் றினான் (கலி. 108:53, 54). 'என் இனிய உயிருக்கு ஒப்பான தலைவன் யாதொரு தீங்கும் இன்மைய னாய் இருத்தலை, அவன் உயிரோடு ஒன்றாகிய என உயிர் காட்டாதோ' என்பது தலைவி கூற்று (கலி. 143:20,21).

2. வறுமை. இரப்போரின் மனக்குறிப்பை அவர் முகத்தான் அறிந்து அவருடைய இன்மை - வறுமை - தீர்க்கும் வன்மையை உணர்ந்து, இரவலர் கொடுமை நிறைந்த அரிய வழிகளைக் கடந்தும் கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதியை நாடி வருவர் என இரும்பிடர்த்தலையார் பாராட் டுதல் (புறம். 3:23-26). 'இளையன் என்று சிறுசொற் கூறிய வேந்தரை வெற்றி கொள்ளேனாயின், என் னாற் புரக்கப்படும் கேளிர் துயரம் மிக, இரப் போர்க்குக் கொடாத இன்மையை நான் அடைவே னாக' எனத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் வஞ்சினமுரைத்தான் (புறம். 72:7-9, 17, 18). 'பெண்ணையம் படப்பை நாடு கிழவோய், இன்மை துரப்ப உன் புகழ் உன் பால் என்னை அழைத்துவர வந்து நீ செய்த கொடையைப் பாராட்டினேன்' என மாறோக்கத்து நப்பசலையார் மலையமான் திருமுடிக் காரியைப் பாடியுள்ளார் (புறம். 126:17, 18). 'விறன்மிகு குரு சில், எனது இன்மை பின்னே நின்று துரத்த, நின் புகழ் நின்பால என்னைக் கொண்டுவர வந்து நின் வண்மையிற் சிலவற்றைப் பாடினேன்' எனப் பெருஞ்சித்திரனார் குமணனிடம் கூறினார் (புறம். 161:21,22). குமணன் கூத்தரது இன்மை தீர்க்கும் குடிப்பிறந்தோன் (புறம். 164:12,13). இன்மையால் இரப்போர்க்குக் கொடாத செல்வர், முன்னோர் போல் புகழ் நிறுத்தி உயர்ந்த உலகம் செல்லுதலை அறியாதவ ராவர் (புறம். 165:3-5). 'பாணனே, இன்மை தீரவேண்டின் ஈர்ந்தையில் உள்ள தோயன் மாறனைக் காண எம்மொடு வருவாயாக' என்று கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமர னார் அழைக்கின்றார் (புறம். 180:7-9). இரப்போ ரைக் காத்தற்கு எதிர்கொள்ளும் மிக்க செய்கை யுடைய ஆண்மக்களின் செல்வம், இரப்போரின் செல்வமாகும்; அவ்வாண்மக்களின் இன்மை இரப் போரின் இன்மையாகும் (புறம். 199:4-7). கரிகாற் பெருவளத்தான் தான் அறிந்த அளவில் மிகுதி யாகப் பரிசளிக்க, யான் அறிந்த அளவானே வேண் டியவற்றை வாரிக்கொண்டு இன்மை தீர வந்தேன் என்று பரிசு பெற்றுவரும் பொருநன் கூறினான் (பொரு. 127-129). இன்பம் விரும்பி, ஆள்வினையாற் பொருளீட்டாதவர் நட்டாரது இன்மையையும் சுற் றத்தாரது துன்பத்தையும் பகைவரது பெருக்கத் தையும் களைதல் ஆற்றார் (அகம். 279:1-5). என் நெஞ்சம், இன்பம் நிறைந்த இவளைப் பிரிந்து பொருள் தேடச் செல்லத் துணியுமாயின் இன்மை யால் வரும் இளிவரவு மிகக் கொடிதே எனத் தலைவன் நெஞ்சழிந்தான் (நற். 262:8-10).

**இன்மொழி** - இனியமொழி. பாடினி பல்வேறு சிறப்புக் களுடன் இன்மொழி - இனியமொழி - கூறும் இயல் பும் உடையவள் (பொரு. 27). சுரன் நமக்கு எளிதா யினும் பன்மாண் தங்கிய இன்மொழி இளையோ ளின் தோளில் துயிலுதலைக் கைவிடுதலாற்றேன் எனத் தலைவன் நெஞ்சுக்குரைத்தான் (அகம். 193: 11-14). சேணிகந்த தலைவர் நாளிடைப்படாது வருவர் என்று தோழி கூறிய இன்மொழி உண்மை யாகுமளவு தலைவர் வந்திடுவாராயின் மிகவும் நல்லதே என்று தலைவி கூறல் (அகம். 333:13-17).

**இன்னர்** - இத்தகையவர்.. 'இல்லறக் கடமைகள் பல மேற்கொண்டுள்ள நமக்குப் புலவிக் காலத்திலே. தலைவர் இன்னர் - இத்தகையவர் - (பரத்தைமையுடை யவர்) எனக் கூறும் இன்னாக்கிளவி பொருந்துவ தன்று' எனத் தலைவி கூறினாள் (குறு. 181:1,2,6,7).

2. உற்பாதம். பிருங்கலாதன் தந்தையின் (இரணியனின்) பகைவலி கெடத் துன்பத்தைக் காட்டும் இன்ன

ரொடு - உற்பாதத்தோடு - அவன் இடிமுரசு ஒலிப்பத் திருமால் தூணில் தோன்றினார் *(பரி. 4:19,20).*

**இன்னல் - துன்பம்.** குளிர்ச்சி வாராமல் வெயில் பாதுகாக்கும் இன்னல் - துனபம் - செய்யும் வழியில் கதிர் வெம்மை தணிந்தபின் செல்லுமாறு பரிசு பெறறுவரும் கூத்தன் கூறுகிறான் *(மலை. 374,375).* 'நெஞ்சே, நாள்தோறும இனனா அருஞ்சுரம் கடநது நீ எனனை இன்னற் படுத்தினை' எனறு தலைவன் வருந்தினான *(அகம். 212:11,12).* திருமால பிருங்கலாதன தந்தையை (இரணியனை) தணடிக்கத் தூணினின்று புறபபட்டபோது இனனல்காட்டும் உற்பாதங்கள் தோன்றின *(பரி. 4:19,20).*

**இன்னா - துன்பம்.** பலயாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி வேற்றரசர்கு இன்னாவாக - துன்பமாக - அவர் மண்கொண்டு பரிசிலர்க்கு அளித்து இன்பம் செய்தான் *(புறம். 12:4,5).* கூடகாரததுத் துஞ்சிய மாறன் வழுதி வடநாட்டு வேந்தரைக கொன்று வெற்றி கொள்ள இனனா வெம்போர் புரிந்தான *(புறம். 52: 5, 6).* முதுகாட்டில் இழிபிறப்பினனால் ஈயபபெற்ற பலியை உணணும் இன்னா வைகல வருமுனனர்த துறவு நிலை பெற்று முன்னியது முடிக்கவேண்டும என ஐயாதிச் சிறுவெண்டேரையார் கூறியுளளார் *(புறம. 363:14-18).* இருபெருவேந்தரும் பொருது வீழ்ந்த களத்தில் பெறுதறகுப பரிசிலொனறும இல்லாமையால் அஃது இரபபோர் இரங்கும் இன்னா வியன் களமாயிற்று *(புறம. 368:11,12).* இனிய உயிருக்குணடான அச்சத்தால நெஞ்சிற் பிறந்த இன்னாவால் மக்கள் வெய்துயிர்த்தனர் *(மது. 403).* பிரிவுத் துன்பத்தால புனையா ஓவியம் போலிருக்கும் அரிவைக்கு இனனா அரும்படர்தீர, அரசன போர் முடித்து விரைவில் வருவானாக எனச் செவிலி (கொற்றவையை) வேண்டினாள் *(நெடு. 166-168).* வேங்கைமரததின் உயர்ந்த கிளையில் உள்ள பொன் நேர் புதுமலரைப் பறிக்க விரும்பிய குறமகள் (புலி புலி என்னும்) இன்னாமையைத தரும் ஒலியை எழுப்பினாள் *(அகம். 52:2-4).* 'நெஞ்சே, தலைவியின் நன்னுதல் பசப்பவும் அரிய சுரவழியில பொருள் ஈட்டுதற்குச் செல்லுதல நன்றென எண்ணினாயானால இனனாச் சூழந்தனை யாவாய்' எனத் தலைவன் கூறினான் *(அகம். 77: 1-4).* அலர் தூற்றலை விரும்பும் பெண்டிர் இன்னா கூறுவர் *(அகம. 95:11,12).* 'நம் தலைவர் வெறுப்பில்லாத கொள்கையுடன் நமக்குவந்து அளித்த இனிய உள்ளம இன்னாவாயிற்று' என்பது தோழியின சிறைப்புறக் கூற்று *(அகம. 98:2,3).* இடிந்து விழும் மணணின் இடையூற்றினை அஞசுவதான, ஒரே துறையினையுடைய ஓடையிலுள்ள இன்னா ஏற்றங்கொண்ட நெறியில் பகடு வழுக்கி விழுந்து முடம்பட்டு உரனழிநதது *(அகம. 107:13-15).* மணி உமிழந்த நாகம், காந்தள் ஊதும் வண்டினைத் தன் மணி என மயங்கும் அரிய பிளப்புக்களை உடைய இன்னாவழி *(அகம். 138:17-20).* இன்னா உறையுளை உடைய எம் சீறூர், ஒரு நாள் தன்னிடம் தங்கி இருந்தோரையும் மறுநாள் தம் ஊரையும் மறககச செய்யும இயலபுடையது என்பது குறை நயந்த தோழி கூற்று *(அகம். 200:3-6).* 'தலைவி பெறுதற்கரியள எனறு கருதாது வைகலும் இன்னா அரியவழி கடந்து என்னைத துனபத்திறகுளளாக்குகின்றாய்' என அலல குறிபபட்ட தலைவன் நெஞ்சுக்குக் கூறினான் *(அகம். 212:10-12).* வேனிற்காலத்து இராப்பொழுது, தலைவன் பிரிநததமையால் துயிலினறி இன்னா கழியும் என்று தலைவி வருநதினாள் *(அகம். 237:5,6).* பெரிய உலகம் அஞ்சி உயிர்த்தற் கேதுவாகிய இனனாக் கானததின வழி தலைவி தலைவனுடன செனறாள *(அகம். 275:14, 15).* 'தலைவ, இனனாப் பிரிவின்கண் நின்னொடு தலைவி வருதறகேற்றவாறு வானம் மழை பொழிந்தது; கானம தணியும்' என உடன போககிற்கிசைந்த தோழி கூறல *(அகம். 283:12,16,17).* 'இரக்கம் இல்லாத கோவலர் தாயைப் பிரித்துக் கட்டிய போது, அதனை நெஞ்சததுு விரும்பும் கனறுபோல யாம் நொநது இன்னா மொழிதும என்று ஊரார் புறங் கூறுவர்' எனபது தலைவன பிரிவுணர்ந்த தலைவி கூறறு *(அகம. 293:11-13).* 'இனப துனபம், புணர்வு பிரிவு, எனபன பகலிரவுபோல வேறு வேறு தன்மையனவாய மாறி மாறி வரும் என பதை நீ உணர்ந்தனை யாயின் தலைவியை நீங்கிப் பொருள் தேடும் ஆசையால இனனா வெஞ்சுர நெறியில் வநதது தகுமா' எனப பொருள கடைக் கூட்டிய நெஞ்சுக்குத் தலைவன் கூறினான *(அகம். 327:1-6).* இனனா வேனிலில் தன துணையாய பிடி உணணுமாறு, களிறு தனது கொம்பு ஒடியக் குத்தி யாமரத்தின் பட்டையைக் கிழித்து ஊட்டும் *(அகம். 335.4-7).* ஆறலை கள்வரால் வீழத் தப்பட்ட மக்களின நிணம தினனுதற்குச் சேவற் பருந்து தன் கிளையினை அழைககும் இன்னா வெஞசுரம் கடந்து தலைவன் பொருள் தேடச் செல்லல் *(அகம். 363:10-15).* புகழ் உண்டாகக் கொடை செய்ய விரும்பிப் பொருள் தேடுதற்குச் செல்வோர் பாழ்பட்ட மன்றத்திலுள்ள அழகு கெட்ட, அச்சமிக்க பொதியிலின் இனனா ஒருசிறை தங்கித் தம் மனைவியரின் அழகை நினைந்து செல்வர் எனப் பொருள் கடைக்கூட்டிய நெஞசினுக்குத் தலைவன சொனனான *(அகம். 377:10-13).* நீர்த் திவலையும் வாடைக் காற்றும் கூடிய இன்னா உறை

யுளை உடைய இச்சிறு நல்லூர் சில நாள் வாழ்வை உடையது என்பது தோழியின் சிறைப்புறக் கூற்று (குறு. 55). பெருமுது பெண்டிராகிய நமக்குப் புல விக்காலத்தி னிடையே தலைவர் இத்தகையவர் என்னும் இன்னாக் கிளவியால் பயனில்லை எனத் தலைவி கூறினாள (குறு. 181:1,2). முனபு இனிய வற்றைச செய்தொழுகிய நம காதலர் இப்பொழுது இனனா செய்து ஒழுகுதலால் என் நெஞ்சு நோகி றது என வாயில் மறுத்த தலைவி கூறல (குறு. 202). அமிழதம் போன்ற இனிமையுடையாளது குணம் இததகைய இன்னா அரும்படர் செய்யு மாயின் காமம் தாங்கற்கரிது எனபது தலைவன் கூற்று (குறு. 206:1-4). இன்னா இராக் காலங்களில் இனிய துணையாக இருந்த மனைததோட்டத்தினகண் உள்ள வேங்கை மரத்திற்கும் தூது சொல்லத் தலைவர் மறந்தனரே என்பது தூது பெறாத் தலைவியின் கூற்று (குறு. 266). ஆறலை கள்வர் நீர் நசை வேட்கையால் மரப்பட்டையை மென்று வேட்கை நீங்கும் இன்னாக் கானமும் தலைவியை நினைத்துச் செலலில் இனபந் தரும் எனப பொருள் வலிதத நெஞ்சிற்குத் தலைவன் உரைத்தான (குறு. 274:4-8). இனனா வைப்பின சுரன இறநதோர் குறிதத காககாலம் வந்தும் தழுவுவதற்கு வரவில லையே எனறு பருவங்கண்டழிநத தலைவி கூறி னாள (குறு. 314:3-6). இனிய துணைவியைப பிரிந்து இன்னா அருஞ்சுரம் கடத்தல் இனிதாகாது எனத் தோழி பிரிவுணர்த்திய தலைவனுக்கு உரைததாள் (குறு. 363.5,6). நீ இன்னா செயயினும் இனிதாகத் தலையளி செய்யினும் என் தலைவி நின்னாற் புரக் கப்படும் எல்லையில் உள்ளவள் எனப் பிரியப்புக்க தலைவற்குத் தோழி கூறல் (குறு. 397.6-8). தலை வனே, நீயினறி யான் பொருந்தி யிருப்பேனாயின் இன்னா நோக்கமொடு என்ன பிழைப்புணடு எனப் பிரிகினற தலைவனை நோக்கிப் பரத்தை புகழந் துரைத்தாள் (நற். 400:5,6). தாயும் நம் களவொழுக் கத்தை அறிந்தாள்; பழிச் சொலவும் உண்டாகி விட்டது. தனித்துறையும் எங்களை இன்னா வாடை யும் வாட்டுகினறது; ஆதலால் நும்மூர் செல்லப் புறப்படுவோம் என உடன்போக்கு நயந்த தோழி கூறல் (ஐங. 236). நிழலின்மையின் மடமான் தன் குட்டிகளுடன் வருந்துதற் கிடமான நீரற்ற பாலை இனனாவாகும் (ஐங். 326). காய்ந்த மூங்கிலின் கண தோன்றிக் காற்றால வளர்க்கப் பெற்ற தீயினது பிழம்புகள் மலை வெடிப்புக் களிலும் முழைகளிலும் முழங்குதற் கிடனானது இனனா அருஞ்சுரம (ஐங். 395:1-3). 'பாணனே, பலரும் புகழதற்குக் காரணமான சிறப்புடைய நும் தலைவனைக 'காணச் செலவாயாயின், இன்னா அரும்படர் எம் வயிற் செய்த அவன் எம்மை மறந்ததுபோல நீயும் மறவாதே (எம் நிலை யைக் கூறுவாயாக) எனத் தலைவி உரைத்தாள் (ஐங். 473). 'ஏடா, தமக்கு இனிதாயிருக்குமென்று கருதிப் பிறர்க்கு இன்னா வலிதிற் செயவது இனபம் தருமோ' என அடியோர் பாங்கின் தலைவனுக்கு அததகு. தலைவி உரைததல் (கலி. 62:7,8). ஆற்று தற்கோர் இடம் இன்றாக இனனா செயயும் மாலைப் பொழுது, பிரிந்து சென்ற தலைவன் மீண்டமையால இருளிடத்துச் சென்றொளித்தது (கலி. 120:20-25). உலகையெல்லாம் காககும் உள்ள முடைய தன்னை ஒருவர்பால் சென்று ஒன்றை இரத்தலைச் செய்யும் இன்னா வருத்தமுடையவ னாகத தலைவி மாற்றினாள் என மடலேறும் தலைவன கூறினான் (கலி. 141:13,14). பரநத சுணங்கினையும் பணைபோலும் தோளினையும் உடைய தலைவி மறைந்தபொழுது மட்டும் இன்னாநோய் செய்வாள். அவள் குணமோ எக் காலமும் இத்தன்மைத்து என மடலேறும் தலைவன் கூறினான (கலி. 141:15,16).

**இன்னா இன்னுரை** – இன்னாமையும் இனிமையும் உடைய உரை. பெருஞ்சேரலாதன், கரிகால் வளவனொடு வெண்ணிப்பறந்தலையில் பொருதுபட்ட புறப் புண ணுக்கு நாணி, பொருதழிந்த களத்தின் புறத்தே வாளொடு வடக்கிருந்தான் என்னும்இன்னா இன் னுரை - இனனாமையும் இனிமையும் உடைய உரை-கேட்ட சான்றோர் அவனொடும் செல்லும் பொருட்டு உயிர் நீத்தனர் (அகம். 55:10-15). அலர் வாய்ப் பெண்டிர் கூறும் இன்னா இன்னுரை கேட்ட யான் சின்னாளளவும் யாதொனறனையும் அறியாதேன் போல இருந்தேன் என்பது மனை மருண்டு கூறும் நற்றாய் கூற்று (நற். 143:7-9).

**இன்னாங்கு** - வருத்தம். புனைந்துரைகளால், பண் டையிற் காட்டிலும் அதிகமாகக் கொண்டாடி, இங்ஙனம் இனிய மொழிகளைக் கூறி என்னை இன்னாங்கில்-வருத்தத்தில்-செலுத்துகின்ற தன்மை, எம்மிடத்து வெறுப்பாகுதலை இப்போதறிந்தேன் என்று தோழி தலைவனிடம் செலவழுங்கக் கூறினாள் (கலி. 14:7-9).

**இன்னாமை** - துன்பம். உறவுடையாராற் செய்யப் படும் இன்னாமையினும் - துன்பத்தினும் - இனிது என்று கூறப்படும் புத்தேள் நாடு இனிமை யுடையதோ என்று தோழியைத் தலைவி வினவி னாள் (குறு. 288:3-5). சிறு மனையில் தலைவன் புணர்ந்த நட்பு ஒருநாள் துறப்பின் பலநாள் வரும் இன்னாமை உடையது (குறு. 326:3-5).

**இன்னார்** - 1. இனியரல்லாதார். ஏனாதி திருக்கிள்ளி

யைக் கண்டால் அவன் பகைவர் புறங்கொடுத்து ஓடுவதால், புண் அறியாத உடம்பொடு கண்ணுக்கு இனியவராகவும் செவிக்கு இன்னாராகவும்-இனிய ரல்லாதாராகவும்-உள்ளனர் (புறம். 167:5-7).

**2. பகைவர்.** செல்வக் கடுங்கோ வாழியாதனின் தாள் நிழலோர், இன்னாருடைய-பகைவருடைய-உறையுளைப் பெற்றா லல்லது, இனிய இன்பம் பொருந்திய பலநாள் உறைதலைப் பெற மாட்டார் (பதி. 68:8-14,20).

**இன்னான் - 1. கொடியவன்.** பகைவர் மதிலைச் சூழ்ந்து, இதழ் கடித்து முழங்கி, நீ செல்க என்று தன்னை அனுப்பாது, தானே முற்படச் செல்வ தால் தன் தலைவனை இன்னான்-கொடியவன்-என்று ஒரு வீரன் கூறினானென ஆலியார் பாடு வர் (புறம். 298:3-5).

**2. துன்பம் விளைப்பவன்.** பல வேற்படையுடன் தலைமையுடைய யானைகளைக் கொண்ட வேந் தர்க்கு இன்னானாகிய பாரியின் குன்றத்தில் பாணர் மண்டை நிரம்ப வாக்கச் சிந்திய கள்ளின் தேறல், கற்களை உருட்டிச் செல்லும் என்று கபிலர் குறிப்பர் (புறம். 115:2-6). தலைவன் நம் மைப் புணருங்காலும் இன்னான், மேலும் அவன் அருமையாக நம்மை வந்தடைபவன் எனத் தலைவி தலைவன் கேட்பத் தோழியிடம் கூறினாள் (ஐங். 150:3).

**இனம் - 1. கூட்டம்.** வாள் மறவருக்குச் சுறவின் இனம்-கூட்டம்-உவமை (புறம். 13:7). வென்ற மன்னன் தோற்றவருடைய தேர் வழங்கும் தெருவில் வெள் ளிய வாயுடைய கழுதையினத்தைப் பூட்டி அவர் தம் நல் அரண்களைப் பாழ் செய்தல் உண்டு (புறம். 15:1-3). இனவாளை நீரின்கண் தாழ்ந்துள்ள குறிய காஞ்சியின் பூக்களைக் கவரும் (புறம். 18 7,8). போர்க்களத்தில் அம்பு தைத்துப் புண்மிக்குக் கை அறுபட்டு நிலத்தில் கிடக்கும் யானைக்கு, மயங்கி மலைக்கண்ணே தங்கிய குருவி இனம் உவமை (புறம். 19:7-10). போர்முனையில் பகைவர் முனை யவியப் பொருதலால் குறுகிய நுனையுடைய கோட் டினைக் கொண்ட இனக்களிறு கண்டு மதிற் கதவிற்குப் புதிய கணைய மரம் இடப் பழையன போக்குவர் (புறம்.98:1-4). பிணங்கள் உருச்சிதையப் போர்க்களத்தை உழக்கிச் செல்வதால் வருந்திய குருதிக்கறை பொருந்திய குளம்புடைய குதிரை யினம் கண்டு கவைமுள்ளால் தெவ்வர் வாயிலை அடைப்பர் (புறம். 98:5-8). வேந்தர் இரங்கும் முரசி னையும் இனஞ்சால் யானையையும் உடையவர் (புறம். 137:1). நாஞ்சில் வள்ளுவனை நாடிச் செல் லும் பாணன் ஆனினம் மிக்க வழிகளையும் மானி னம் மிக்க மலையையும் மீனினம் மிகுந்த துறை பலவற்றையும் கடந்து சென்றனன் (புறம். 138:1-4). இனமணி நெடுந்தேரேறி இனறிரவே சென்று இன்னாதுறையும் மனைவியின் துயர் தீர்ப்பதே தான் விரும்பும் பரிசில் என்று பேகனிடம் பரணர் கூறினார் (புறம். 145:8-10). ஆதன் ஓரியைப் பாடிய பாணர் பொன்னாலான மணிமிடை குவளை தொடுத்த கண்ணியும் கலனும் யானை இனத்தோடு பெற்றனர் (புறம். 153.7-9). மாலையில் தன் இனத் தின் நீங்கி, இருப்பிடம் அறியாது மயங்கிய ஆண மான், தன் இளமபெணமானை அழைததால் அவ் வோசையை மலை முழையிலுள்ள புலியேறு ஓர்நது கேட்கும் (புறம். 157:9-12). பிட்டங்கொற்றன், இனம் மிக்க வெவ்விய பெற்றங்களைத் தொழுவததோடு விரும்பினாலுங் கொடுததுவிடும் இயல்புடையவன் (புறம். 171·7-11). ஒலிமிக்க புள்ளினம், கடவுள் ஆலத்தின் பெருங்கிளையிலுள்ள பலாப பழங்களை நேற்று உண்டோம் என்னாது, மேலும் அவ்விடத் துச் செலலுவதை நீங்காது (புறம். 199·1-3). புள்ளி னம் பழங்களை விரும்பி, வானிலே பறநது பிற விடஞ் சென்று அங்குள்ள பெரிய மரம பழுதது மாறியமை கண்டு பழஙகளைப் பெறாது வருநதித் திருமபும் (புறம். 209·7-10). தலைவன நாடகாலையில் பகைவர் தம் இனநிரை செல்லுமிடத்தைப்பார்ததுத் தனகையால சுட்டி எண்ணி, (கரந்தையார் செயயும) பூசலை மாற்றி வில்வலியால் அதைக் கொணடு வநதான் (புறம். 257:7-10). தலைவன கொணட கைவாள், கரந்தையார் மறைநதிருததலை அறிந்து, போரில் அவர்தம் பலலான இனநிரைகளைக் கவர்ந்து, பருந்துகள் ஆரவாரிக்குமபடி, அபபகை வர் தம் வில் மறவரைக் கொனறு மாறுபாட்டினைப போக்கியதாகும (புறம். 269: 9 - 12). வானத்தில முழங்கும் முகில் போல ஒலிககும் முரசினையும், இனஞ்சால் யானையினையும், ஆணைச் சககரத் தையும் உடையவர் வேந்தர் (புறம். 270:1-3). தலைவன் சினந்து செய்யும் போரினையும், இனக் களிற்றினையும் இயல் தேரினையும் உடைய வன (புறம். 290:1,2). போர்க்களத்தில துணிபட்டுக் கிடந்த கையினை எடுத்து உயர்ததி, அஞசாத வீரரினத்தின் காலைச் சுற்றிக் கொள்ளும் குடரை ஒருங்குசேர்த்துப் பேய்மகள் அழுகுரல எடுத்துப் பாடிக் கூத்தாடும் (புறம். 370:23-27). அதியமான பொகுட்டெழினி, போர்க்களந்தோறும் வெள் வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டி வெளவரகும கொள்ளும் விதைக்கும் உழவன் (புறம். 392:8-11). சேரமான் வஞ்சன் என்பானின் ஊர் பாணர் முதலி யோரும் நணபரும் குறுகினலலது,புலியினம் துயிலும்

கல்முழை போலப் பகைவர் குறுகுதற்கு அரியது (புறம். 398:8-11). அரிமா வழங்கும் மலைச் சாரலில் இனமாகத் தொகுதி கொண்டிருக்கும் பிற விலங்கின் கூட்டம் நெஞ்சு நடுங்கி உறையும் (பதி. 12:5-6). இமையவரம்பன நெடுஞ்சேரலாதன் வாழ்வு கொடாமையால் அவனுடைய பகைவர் நாட்டில் மக்கள் ஊருடன் எழுந்து ஓடுவதால், அவர்களுடைய ஆனினங்கள் தொகுதியாக வேறு திசையில ஓட நிலங்கள் கெட்டழிந்தன (பதி. 19:16-18). பல்யானைச் செலகெழுகுட்டுவனின் மதஞ்சொரியும் தலையையும் கடுத்த பார்வையையு முடைய யானையினம் பரவி நின்று பொருத வயல்கள் வளம் பயத்தல் இலவ்ாயின (பதி. 25:2-3). கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன் பகைவர்தம் இனந்தெரி பல்லான் கன்றுகளைக் கைப்பற்றினான் (பதி. ப. 5:8). நறவெனனும் ஊரில் சாய் இனத்தில் (மெலலிய மகளிர் கூட்டத்தினிடையே) ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தங்கியுள்ளான் (பதி. 60:12). பலவாகிய களிறுகளின் இனநிரை தத்தமக்குரிய இடத்தினின்றும் பெயர்ந்து போர் நிகழும் இடம் நோக்கித் திரிந்தன (பதி. 67:7). நெடுநதேரின் கோல் முனையில் கொடியினம் கட்டப்பெற்றிருத்தல் (பதி. தி. 2:5). சுறாமீன் திரியும் கடலில் இறாமீனை உணட இன நாரை புன்னை மரக் கிளையில் தங்கினால், அதற்கு மேலே எழும்பும் அலை ஓசையினை வெருவிச் சென்று பனை மடலில் தங்கும் (பொரு. 204-207). நறிய பூக்களையுடைய முல்லையரும்புகள் யாழின் ஓசையுடைய இனவண்டு ஆர்க்குமாறு மலர்தல் (முலலை. 8-10). பாண்டியன கொழுவிய தசையினைத் தின்றும் மிக்க கள்ளை உண்டும் அவ்விரண்டிலும் விருப்பமையாத இனத்தையுடைய பாணர் உவப்பக் களிறு வழங்கினன (மது. 211-219). மேகம் மூங்கில் வளரும் சாரலில் களிற்றினம் நடுங்க ஒலிக்கும இடியோடு பரந்து சிதறுதலை யுடைய பெரிய மழை மிக்குச் சிறந்தது (மது. 242-244). நுணதாதுண்டு, தாதற்ற வறுவிய பூவினைப் பின்னர் நினையாமல் துறக்கும் வண்டினம் போன்றவர் பரத்தையர் (மது.573-575,583). வானம் புதுப் பெயல் பொழிந்ததால் கோவலர் ஏறுடை இனநிரையை வேறு புலம் பரப்பினர் (நெடு. 2-4). விளை வறாத வியன்கழனிகளில் இனமான மாமரங்கள் விளங்கின (பட். 8,18). கூத்தர் நன்னனை நாடிச் செல்வதற்குக் கனிகள் மிகுந்த காட்டில் அவற்றை உண்ணற்குச் சுற்றத்தோடே விரைந்து பறக்கும் புள்ளினம் உவமை (மலை. 54,55,64). நன்னன் மலையில் தோன்றும் பல்வகை ஆரவாரங்களில் தினைப்புனம் புகுநதுண்ணும், இனத்திற் பிரிந்த தலைமை யானையைப் பிடிப்பதற்கு விரும்பின சானவர் அதனை வளைத்தலையுடைய ஆரவாரமும் ஒன்று (மலை. 297-299). நன்னன் மலையில் இனத்தின் நீங்கிய அசையும் குட்டேற்றினையுடைய ஏறும் போர்த்தொழில் மிக்க மரைஆன ஏறும் முதுகிடாத வலியுடன் முட்டிப் பொரும் ஓசையுடைய ஆரவாரம் எழும் (மலை. 330-333). வேற்றுப்புலத்திற்சென்று மேய்ந்த ஏற்றையுடைய இனத்திலுள்ள வெள்ளைப் பசுக்களின் பாலை இடையர் மகளிர் மனமகிழச் சொரிந்தனர் (மலை. 408-410). செம்மறித் திரள் வெள்ளாட்டுடன் கலந்து கல்லென்ற ஓசை உடைய காட்டிடத்தே கடலபோல ஒலிக்கும் பல்யாட்டின் இனநிரையுடைய இடையர் அவர்தம் இடத்திற்குச் செல்வோர்க்குத் தமக்கெனச் சமைத்த பாற்சோறும் பாலும் கொடுப்பர் (மலை. 414-417). நெலலறுப்போர் கொட்டும் பறை யோசைக்கு வெருவி எருமை யினத்தைப் பிரிந்த கடா ஆரவாரித்து விரைந்து ஓடும் (மலை. 471-473). கிணறு வெட்டுவோர் நீர் ஊறாமையால் கைவிட்டுத் தழைமூடிய கிணறுகளைக் களிற்றினம், தம் கொம்பினை விரும்பிய வேடர் தம்மைப் பிடிப்பதற்குத் தோண்டி மறைத்துவைத்த குழி என்று கருதித் தூர்க்கும் (அகம். 21:22-26). இனமான வணடுகள் இலவம் பூக்களிடத்து விழுமாறு உதிர்த்த கோங்கின் நுண்தாது, பொன் விறபோர் பவளச் சிமிழில் பொற் பொடியைச் சொரிந்து வைத்தது போலத் தோன்றும் (அகம். 25:9-11). பரதவ மக்கள் நெடுங்கயிறு கட்டப் பெற்ற குறுங்கண்ணுடைய வலையில், கடலின் பெருமை குன்ற, இனமான மீன்களை முகந்து உவந்தனர் (அகம். 30:1-3). ‘சூரர மகளிர் போன்று நின்ற நீ யார்’ எனறு கூறித் தலைவன் சிறுபுறம் அணைத்துக் கொள்ளத் தலைவி அதனை விரும்பினாலும், வெளிக்காட்டாது விலகி நின்ற தன்மை கண்டு அவன் ஒன்றும் கூற இயலாது, தன் இனத்தின் நீங்கிய யானைபோலத் தனித்து வருந்திச் சென்றான் (அகம். 32:7-16). செருக்குற்ற புலியினைக் கண்டஞ்சிய மயக்கம் பொருந்திய களிற்றினம் அகன்ற காட்டின் பலவிடத்திலும் திரிந்தது (அகம். 39:11,12). மேகத்தை வெறுத்து வருந்தும் தளர்ச்சியுற்ற மானினம் வற்றிய மரல் செடியினைச் சுவைக்கும் (அகம். 49:11,12). வானிடத்தே இடித்துப் பெய்தலைச் செய்த இனமான மேகங்கள் நீங்காது பெய்தமையால் வெள்ளம் இடந்தோறும் மிகுந்தது (அகம். 68:14-16). செல்வம் நிறைந்தவரைத் தேடும் உள்ளத்தோடு, அது குறைந்தவர் பயனின்மையால், அவர்பால் பற்றுவிட்டு நீங்கும் நயனில் மாக்களைப் போல வண்டினம் சுனைப்பூ நீத்துச் சினைப் பூப் படர்ந்தது. (அகம். 71:1-4). குற்றமற்ற மானினம்

மருளும் அந்திக் காலம் (அகம். 71:5,6). அகன்ற காட்டிடத்தே ஆளியினை அஞ்சி இனத்தைத் தன்னிடத்தே கூட்டிக்கொள்ளும் தலைமையான ஆண் யானை பாதுகாப்பாகத் தழுவிக் கொள்ளவும் முதற் சூலுடைய இளமபிடி நடுங்கும் (அகம். 78: 1-6). தலைவன் இனமணிப் புரவி பூண்ட நெடுந் தேரினைச் செலுத்திவருதல் (அகம். 80:10). மழவர் புறறுமண்ணை வாயிலடக்கி, அம்பினை விலலோடு கையில் பற்றி மதத்ினைக் கவர்ந்து, தம் செருப்புத் தேயுமாறு சென்று காவலுள்ள இடத்தில கவர்ந்த கன்றுகளுடன ஆனினத்தையும் கொண்டு செல்வர் (அகம். 101:5-11). குளிர்ந்த நறிய முல்லை நிலத்தில திசைதோறும் பரந்து இனவண்டுகள் ஆரவாரிக்கும (அகம். 104:1,2). மறவர் தேம்பிழி நறுங்கள் உண்ட மகிழ்ச்சியால பகைவர் முனையை வென்று, பருத்த மெலலிய மடியினையுடையனவும் ஏறுகளோடு கூடியனவுமாகிய ஆனினத்தைக் கொண்டு தருவர் (அகம். 105:13-15). அண்ணல் யானை சினமிக்க வலிமை யுடைய சிங்கத்திற்கு அஞ்சித் தன இனத்தைக் கொண்டு ஒளிக்கும (அகம். 115:13-15). (இதன கண அஞ்சி மன்னனைக் குறிப்பதாயின குதிரையையுமுடைய அஞ்சி வென்ற ஆனினத்தைக் கொண்டு தன வலி தோன்றாவண்ணம ஒளிப்பான, என்று அமையும்). மீன அருந்தும் கொக்கின் இனநிரை செவ்விய வானத்தைப் பொருந்திப் பறப்பது, நெடுவேள் மார்பில ஆரம்போலத் தோன்றும் (அகம். 120.1-3). மிகக மழை பொழிதலால பொறிவரி இனவண்டு ஆர்க்குமாறு முல்லை முதலிய மலர்கள் மலர்ந்தன (அகம். 164:4-6). நறுமண நீர் தெளிக்கப்பட்ட நாறும் கொத்துக்களாலாகிய பூமாலையைப் பொறிவரி இனவண்டு அஞ்சி ஊதாது கழிவதற்கு ஏதுவானது உருகெழுதெய்வம் (அகம். 166:5-7). கழியில மலர்ந்த நெயதல மணத்தை அமிழ்தென விரும்பிச் சென்று குளிர்ந்த தாதினை உண்ட வண்டினம களிப்பு மிகுதிப் பறக்க இயலாது சோரும் (அகம். 170:4-7). கடலில நீருண்டு மேற்கே எழும் மேகம், சூலுற்ற பிடியினம் போல இடந்தோறும தோன்றி ஒலிமிக்குப் பெயவதற்கு நெருங்கும் (அகம். 183:6-9). நலல கலை மான இனம பரந்து விளங்குவது போல, கோட்டினை யுடைய ஓலைக்குடையைத் தலையிற் சூடிய கொல்லை உழவர் விளங்கினர் (அகம். 194:6,7). நிறைந்த சூலுடைய இளம் பிடியினைத் தழுவிய, வெண்கோட்டை யுடைய இனஞ்சால் களிறு, தன மீது கன்று ஏறி இறங்கப் பள்ளி கொள்ளும (அகம். 197:13-15). செந்நாய தாக்குதலால் அலறி ஓடிய கானா தொழுந்த இனநிரையினைக் கூட்டுதற்குக் கலை மான மாலைப் போதில் தன் ஆணகுரல் தோன்ற அழைக்கும் (அகம். 199.9-12). தலைவியை விரும்பிக் கலங்கிய தலைவன உள்ளத்திற்குப் பெரிய களிற்றினம் படிதலால் கலங்கும நீர உவமை (அகம். 212:8,9). அற்சிரக் காலம் வந்தபோது புலந்தொறும குருகினம் கலலென ஒலித்தது (அகம். 217: 11,13). கழியில பரதவர் முடங்கிய புறத்தை யுடைய இறாவும் மீனினமும் பிடித்துக் குவிப்பர் (அகம். 220:16,17). தலைவியின் நீண்ட தோளில படிந்து கிடக்கும கூந்தல, தும்பி வரியினத்தை ஒத்து விளங்கும் (அகம. 223:11,12). மூங்கிலில் வண்டு துளைத்த துளையில மேல் காற்று புகுந்து வருதலால எழும் ஒலி, நீர் பருகச் செல்லும் இனநிரைக்குப் பின வரும் கோவலர் குழலிசை போல ஒலிக்கும் (அகம. 225:5-8). கொடியில் அரும்பு மலர்ந்துள்ள முல்லை, மணமகள் கூந்தல்போல மணம் வீசி, வண்டினங்களைச் செலலவொட்டாது தடுக்கும (அகம். 244:4-6). மேல காற்றின் ஒலியை, இரை கொள்ளுதற்கு எழுந்தபுலி (மானை) பற்றியதால எழுந்த ஒலி என்று கருதி உழைமான் இன நிரை வெவவேறு வழிகளில் அலறி ஓடும (அகம்.249: 14-18). இயங்குதற்கரிய நள்ளிரவில அழகிய பசுக்களைக் கவர்ந்து வரச்சென்று பகைப்புலத்தைக் கெடுத்து மறவர் பலவினங்களையும ஓட்டிவந்தனர் (அகம. 253:10,11). கூட்டமான கோவலர் தாங்கள் கூப்பிடும ஒலியை அறிந்து ஆனினத்தைத் தம்மிடத்து அணைத்துக் கொண்டுவரும நலல ஏறுகளின கழுத்தில தொங்கப் பூட்டிய மூங்கிற் குழாய நிறைய உணவினைக் கொண்டிருப்பர் (அகம. 253: 12,16). வண்டினம் மலரில பாய்ந்து ஊதவும தாழைகளை யுடைய சோலையின மேலேயிருந்து நாரையினங்கள ஒலிக்கவும் பிறவும் நிகழப் பகலை மெதுவாகப் போகச்செய்து இரவு வரும (அகம. 260: 2-10). இருப்பையின் வெள்ளிய பூக்களை மயிர்க் காலை உடைய கரடியின பெரிய இனம் கவர்ந்துண்டது. மை பூசினாலொத்த கரிய முகமுடைய முசுஇனம் மூங்கிலில பாய்தலால் மூங்கில நெல் வெப்பமிக்க பாறையில் உதிர்ந்து பொரியும் (அகம். 267:6-12). ஏருடைய இனநிரை மீளவும், மீளாது சென்று, வேலுடை வெட்சி வீரரைத் தடுத்துப் பொருது இறந்த வீரர்க்கு, நட்டபோல நடா நெடுங்கல்லில அகன்ற இடத்தைச் செதுக்கி இயற்றிய வடிவுகளை நீராட்டி இளைஞர் வழிபடுவர் (அகம். 269:3-13). புலால் நாறும் சிறுகுடிப் பாக்கத்திலுள்ள இனமீன் வேட்டுவர் கழியில மலர்ந்த நீலத்தை ஞாழற் பூக்களோடு சூடுவர் (அகம். 270: 1-3). திரண்ட அரையினையுடைய இருப்பையின் துளையுடைய வெண்பூக்களைக் கரடிக் குட்டி இனம் கவர்ந்து உண்ணும (அகம். 275:11,12).

வம்பலர் காடடின இயல்பறிய உயர்ந்த மரமேறி உணவை எற்றுதலை விரும்பி எழுந்த இனததிற் பிரிநத பருந்து வானில் அசையும் செவ்வி நோக்கு வர் (அகம 285:10--12). கோடையில வானம் வளங் கரபப, கானம காய்நது இலையில்லையாக, ஏறு களையுடைய ஆயத்து இனம் பலவற்றையும் ஒருஙகே பசி வருத்த, குளங்கள் நீர் வறறின (அகம. 391·1-4). பகையினைக கொனறு சினந் தணியாது பகையை வெனறு மாறுபாட்டினைப போக்கா மலும் பிடித் தொழுதியின் இனததொடு கூடாம லும மதததால செருக்குற்றுப் பெரிய களிறியங் கும காட்டு நெறியில தலைவன் வந்தான் (அகம். 398.7-10,14). நறிய பூக்களுடைய வேங்கையில் இனவண்டு ஒலிக்கும் மணங் கமழ் சோலையில் தலைவனுடன் தலைவி விளையாடினாள் (அகம்.303: 6,7). பாரியினது பறம்பு அரணில் வரிசையாகப் பறததலுடைய குருவியினம், காலையில் சென்று தினைக் கதிரைக கொண்டு வர அதற்குரிய இடத் தை ஆராயநது திரிந்து மாலையில் மீண்டு வரும் (அகம. 303. 10-14). கரடியினம புற்றுககளில் புற் றாம் பழஞ் சோற்றினை ஆராயும் (அகம. 307·10). கார்ப்பருவத்தில இனநதோ் உழவரின இனகுரல் ஒலிககும் (அகம். 314:4, 7). அரவ வணடினம் ஊதுந தோறும் கோங்கின பூவகத்தே, குரவம் பூககள உதிர்ந்தன (அகம். 317:10, 11). பெரிய மடியினையும் மணியினையு முடைய இனநிரை (ஆனிரை)பருக, ஆயர் விடுநிலததே கல்லை உடைத் துசசெயத கிணறறில் கனறுடைய மடப்பிடி களிற்று டன் தணணீருககாகத தடவிப் பார்க்கும் (அகம. 321: 7,9). பலா மரங்கள திரண்டுள்ள மூஙகில் நிறைந்த பக்க மலையில் செலலும் யானையினம் வானில சென்று இடித்து மழை பெய்யும் மேகததிற்கு உவமை (அகம. 323.8-13). இனமயில் அகவும் கார் காலததின் தன்மையுடைய முல்லை நிலத்தில் குதிரை பூட்டிய தேரை விரைநது செலுத்துமாறு தலைவன பாகனிடம் கூறினான (அகம். 344:6-11). மகளிரின் ஒழுஙகு மாட்சிமைப்பட்ட தோளி என் னும் விளையாட்டைபபோல மெல்லென மயிலினம் இயலும் (தோளியைத் தோணி எனப் பாடங் கொளளும் வே. வி.) (அகம். 344:4-6). இனமழை தவழும ஏழிற்குனறம் தொல்விசையுடைய நுண பனுவற் புலவன பாடிய சிறப்புடையது (அகம. 345: 5-7). கறவைப் பலவினம் கன்றுகளோடு காடுகளில் தாவி வரக கோவலர் குழல ஊதுவர் (அகம. 354: 3-5). யாழ் வலலோன் தடவும் நரம்பு இனிய பாலைப் பணணை ஒலித்தாற் போன்று வண்டி னம் முரலும் (அகம. 355:4, 5). புலால் நாறும் புலி கிடந்து புரண்டதால புற்கள் சாய்ந்த சிறு நெறி மிக்க காட்டில் பெருங்களிற்றின் நிரை இயங்கல் செலலாது, கைகளால் தோணடித் தினறு செல்லும் இனிய சுளையுடைய பலாமரக கூட்டத்தையுடை யது உம்பற காடு (அகம். 357:6-10). மாலையில் கழியிலுள்ள நெயதற் பூவின் நுண்தாதினை உணடு வண்டினம் ஏகியது (அகம. 360:3-5). இன மீன அருந்தும் நாரையொடு பனைமரத்தின்மேல் அன்றில் தங்கியிருக்கும் (அகம். 360:16, 17). பசிய இலைக்குமேலே உயர்ந்து தோன்றும் கணைக்கால் நெய்தல் மலர், இனமான மீன்களையுடைய பெரிய கழியில் வெள்ளம மிகுந்தோறும் கயத்தில் முழுகும் மகளிரின் கண்ணைப் போன்று தோன்றும் (குறு. 9:4-6). முன்பனிக்காலத்தில், குறும்பூழ்ப் பறவை யின் காலைப் போனற உழுநதின் மிக்க காய்களை உழைமான் இனம் கவரும (குறு. 68:1-3). மாலைக் காலத்தில் வேலிக்கயலிலுளள வெருகினம் வரக் கணடு, மனையுறை பெட்டைக கோழி புகுமிடம் அறியாமல், துனபமிக்க தன் குஞ்சுகளை அழைத் துக் கூவும (குறு. 139:1-5). பேயின பல்லைப் போன்ற பருத்த நகங்களையுடைய பரவிய அடி களைக் கொணட பெரிய களிற்றின் நிரையுடைய வன் தலைவன் (குறு. 180:1, 2). மரக்கிளையி லிருந்த பெரிய தொகுதியுடைய பறவையினங்கள் தாம துணையொடு சேர்ந்தமையால், துணை வரைப் பிரிந்தவரின் துன்பத்தை எண்ணாத வாய் இனிய குரலில் அகவும் (குறு. 191:2-4). பாலை நிலத்திலுள்ள ஓமை மரத்தின் கிளை யிலிருநத, இனத்தினின்று பிரிந்து வந்த பருந்தின் புலம்புகொள தனி ஒலி அவ்வழிச் செல்வார்க்கு உசாத்துணையாகும (குறு. 207:2-4). பறியோலை கொணட கையினையுடையார், குட்டிகளையுடைய மறியினத்தோடே தங்க, இடைமகன் பாலொடு வந்து பாற்சோற்றொடு மீண்டு செல்வான் (குறு. 221:2-4). தலைவியின் ஊர் நெலலிக் காயை மரை யினம் உண்ணும் முன்றிலை யுடைய புல்லால் வேயபபெற்ற குடிசைகளையுடையது (குறு. 235:3-5). இனமயில் அகவும் மரம் செறிநத காட்டில் வெண் முகக் கருங்குரங்கு குட்டியொடு குளிரால் நடுங்கு மாறு சாரலில் மழை பொழிந்தது (குறு. 249:1-3). புதுநீரைக் கொள்ளுதற்கு, எஞ்சிய பழைய நீரைப் பெய்யும் மேகத்தின ஒலிகேட்டுப் பருவமழை என்று தவறாக எண்ணி அறியாமையுடைய மயிலினம் ஆலின என்று தோழி கூறினாள் (குறு. 251). இலை யில்லாத அழகிய கிளையிடத்து இன வண்டுகள் ஆரவாரிககுமாறு முலைபோன்ற கோங்கரும்புகள் மலர்ந்தன (குறு. 254:1,2). இனத்தினின்றும் பிரிந்த துன்பததையும் மடப்பத்தையுமுடைய பெண்மான் நேரே இருக்கத் தலைவியின் தமையனமார் ஆண்

மானின் மார்பில் அம்பினைச் செலுத்தி இரத்தத் தோடு அதனைப் பிடுங்கினர். அந்த அம்பு தலைவி யின் மையுண்ட கண்ணிற்கு உவமை (குறு. 272:3-7). ஏறுடை இனத்துப் புல்லை உண்ட நல்ல பசுக்கள் கழுத்தில் பூண்ட மணி ஒலிக்க மாலைக் காலத்தில் ஊரினை வந்தடையும் (குறு. 275:3,4). இனததின் (உறவுடையவரால்) இயன்ற இன்னாமையைக காட்டி லும், இனிதென்று கூறப்படும் தேவருலகம் இனிமை தராது (குறு. 288:3-5). நள்ளிரவில் மன்றத்தைப் பிளந்து கொணடு வரும் இனமணி நெடுந்தேர் வாராதாயினும் வருவது போலத் தலைவியின் செவியில் ஒலிப்பதால் அவள் கண்கள் துயில் மறந் தன (குறு. 301:4-8). காட்டுப் பசுவின கன்று வேட் டுவர் எழுப்புவதனால் அஞ்சித் தன் இனத்தினின் றும் பிரிந்து காட்டிடத்துப் பொருந்திய சிறுகுடி யில் அகப்பட, அதனை இளைய மகளிர் பாது காக்க, அவரோடு கலந்து விரும்பி அங்கேயே வாழும் வாழ்க்கையில் வனமையுற்றது (குறு. 322: 1-5). ஆண்முதலை, வழியில பிறர் செல்வதைத் தடுக்கும் கடல் துறையில இனமீன் இருங் கழி யினைக் கடந்து தலைவன் தலைவியிடம் வருதல் (குறு. 324:1-4). பலாப்பழத்தை உண்ட இனக் கலை வேடரின் அம்புக்கு அஞ்சிப் போர்க்களத்துக் குதிரைபோல மேலே எழுந்து சாரலிலுள்ள நீணட மூங்கில் அசையப் பாயும் (குறு. 385:1-4). இனமணி நெடுந்தேரைப பாகன செலுத்தத் தலைவன் செல்லல் (நற். 19:6,7). பொய்கைதோறும் இறா மீனைத் தின்னும் குருகினம் ஒலிக்கும் (நற். 27:7,8). தோழி தங்களைப்பற்றிக் கூறுமபோது, 'நாங்கள் திணைத்தை யுடைய சுறாமீனை அறுத்திட்ட தசையைக் காயவைத்தவற்றை இனமான பறவை கவராதபடி காப்பவர்' என்று தலைவனிடம் கூறினாள் (நற். 45:6,7). மரத்தில் ஏறி நின்று, மானினங்களைத் தகைக்கும் பொருட்டு, வலிமை மிக்க வேட்டுவச் சிறார் விரும்பி எழுவர்; இது பரதவச் சிறுவர் படகில் மீன் பிடிக்கச் செல்லலுக்கு உவமை (நற். 111:2-7). சுறாமீன் கொம்பு போன்ற இருபுறம் முள்ளுடைய தாழை இலை முறிந்து சாயு மாறு இறாமீனை உண்ட குருகினம் தங்கும் (நற். 131:4-6). தினைப் புனத்தே உண்ணவரும் கிளியி னத்தை ஓட்டத் தட்டையொடு செல்லுமாறு அன்னை பன்முறை தலைவியை ஏவினாள் (நற். 134:3-5). ஊதைக் காற்றொடு இரவு பகல் எனக் கருதாது கல்லென்ற ஒலியுடன் இன மணிகள் ஒலிப் பத் தலைவன் குதிரை, நிலவு பரந்தது போலும் மணற்குன்றுகளில் ஏறிச் செல்லும் (நற். 163:2-5). இனவண்டின் இன்குரல் யாழோசை கேட்டாற் போன்றிருக்கும் (நற். 176:8). இனமான மீனை மிகவுண்ட வெண்ணாரை மிதித்த நெய்தல் மலர் போலத் தலைவி அழிந்துபடுவாள் (நற். 183:9-11). தலைவி தொழுது பார்த்தொழியுமாறு பொழுது பட்டவுடன் இனமணி ஒலிபபப் பூட்டித் தலைவன் செலலும் தேர் மறையும் (நற். 187:4-6). தினைக் கதிர் பால்நிறைந்து முற்றித் தலை சாய்ந்து அசை தலால் சிவந்த வாயுடைய கிளியினம் கவர்ந்து செல்லும் (நற். 206:1-4). சுறாமீனினம் நிறைந்தது கடற்பரப்பில் உள்ள நீர்த்துறை (நற். 223:7). சிறு கண் யானையின் களிறும் பிடியுமான இரண்டு இனம் நீர்ச்சுனையில் மெய் குழையத் தீண்டிச் சோலையிலுள்ள வாழையினை வெறுத்தால் அருகி லுள்ள சீறூரி லுள்ளார் அஞ்சுமாறு பலாவின் இனிய பழததை உண்ணும் (நற். 232:1-5). வெப்ப மிக்க பரலையுடைய பளளத்தில் அமைநத கிணற் றையடைந்து. அதனருகே பசு நிரை காக்கும் ஆயர் தோண்டிய சிறு குழியி லுள்ள நீரினை யானை இனம் வரிசையாகச் சென்று உண்ணும் (நற். 240.6-9). 'தலைவி நடுங்கும் பொருட்டுப பொய்யாக இடிக் கும் இடியொலியை உணமையெனக் கொண்டு ஆலும் அறிவிலலாத மயிலின மடக்கணம் போனறு நான் மயஙகேன்' எனறு தோழி மேகத்திடம் கூறு வது போலச் சொல்லிப பருவம் அனறெனத் தலை வியை வற்புறுத்துகின்றாள் (நற். 248:7-9). சிறிய நாவுடைய மணியின் தெளிநத ஓசைபோல, இன மீனை உண்பதற்கு வந்து கூடும் புட்கள் ஒலிக்கும (நற். 267:9, 10). மழை பெய்தால், எங்கும் உலவும் உழையாகிய மானினம் நிறையத் தோனறப் பெற் றுப பெருங்கதிரையுடைய நெல்லின புதுவருவாய் மிகவுடையது தலைவியின ஊர் (நற். 311:1, 2, 5). எருமைப் போத்து மடநடையுடைய நாரையினம் இரிந்தோடும்படி காலையில, உழுத தொழில் வருத் தம் நீங்கப் பொய்கையில் துடுமெனப் பாய்ந்தது (நற். 330:1-4). பாம்புறையும் ஈரமுடைய புழைகள் கொண்ட புற்றை, மேகம் போலச் சூழந்து கொண்டு இரை தேடும் கரடியினம் பறித்தெடுக்கும் (நற். 336:8-10). மாலையில, நிறைந்த சிறகுடைய குருகினம் வானில் நெருங்கிச் செலலும் (நற். 369:2). தலைவனொடு சிலம்பில் அருவி யாடி வேங்கை மரத்தின் மேலமைந்த பரண் மீதேறித் தினைப் புனத்தே வரும் பசிய கிளியினத்தைத் தலைவி கடிந தாள் (நற். 373:4-8). யானைக் கைபோல வளைந்து, தலை சாய்ந்த தினைக் கதிரை வள்ளியோன் வண் மைக்கு ஈண்டும் பரிசிலர் போல வளைந்த வாயு டைய கிளியினம் நெருங்கிவந்து உண்ணும் (நற். 376:1-4). மாலைப் பொழுதில் ஆனாது அலை யெறிந்துலாவும் கடல் மீனகளைத் தின்னும் புள்ளி னம் தம் காட்டகத்தே ஒரு சேரச் செனறு புகும் (நற்.

382:3,4). எருமையின் ஏற்றினம் மேய்ந்து விட்ட தனால வண்டுகள் மோரோடம, ஆம்பல ஆகிய வறறைப பொருநதாவாயின (ஐங். 93:1,2). தலைவி யின மையுண்ட கணகளை மலரென எணணி வணடினம மொய்த்து ஆரவாரித்தன (ஐங். 126). கடறகரையில வாழும சிறு வெணகாக்கை சழியில் வாழும இனமீனைக கவர்நதுண்ணும் (ஐங. 167: 1,2). நெயதல நிலததுக் கழியிலமலர்ந்த நெயதலை நீக்கி மீனுணணும குருகினம் கானலில் தங்கும் (ஐங. 184:1,2). நாரையின் நல்லினத்தைப் போல மகளிர் நீர்ஒழுகும் கூந்தலைப புலர்த்துவர் (ஐங். 186:1,2). கொறகையில, இனமாய குருகுகள் கரிய கழிக்கண் வாழும் செம்மையான இறாமீன்களை யுண்ணும் (ஐங. 188:1). மலை நின்ற வேங்கை மரத் தின் பொனபோலும் நறிய பூக்களை மானினத் தின் சுற்றம் பலவும் மேயநதுண்ணும் (ஐங. 217:1,2). தலைவியின் கூந்தல் பொறிவரியுடைய இறகுகளைக் கொணட வணடினம் மொயக்கச் சநதனத்தின் மணம் வீசும் (ஐங். 240:2,3). பெருந்தொகையாக உள்ள புள்ளினம, பிரிந்து செலலும தலைவ னிடம் நாஙகள் துணையொடு கூடியுள்ளோம், நீ எவ்வாறு பிரிந்து போந்தாய எனக் கூறித் தடுக்காததால் வன்மை யுடைய தன்று என்று தலைவி கூறினாள் (ஐங். 333:2-5). பனிவரையில் இனக்களிறு வழங்கும் சோலையின் வழியே தலைவி தலைவனுடன் புணர்நதுடன் சேறல் (ஐங். 379:2-4). பள்ளநதோறும் தேரை தெவிட்ட இடந்தோறும் புள்ளினம ஒலிப்பக் கார் தொடங்கியது (ஐங். 453: 1-3). பெய்யும் பனி வருத்துதலால் உய்யுமாறின்றி, குருகினம் ஒலிக்கும் (ஐங. 457:1,2). மாலையில் அழ கிய சிறையினை யுடைய வண்டின் அரியினம் மொய்கக மெனபுலங்களில் முல்லை மலர்கள் மலரும் (ஐங். 489:1,2). கோடையில (பகு) பிணியாற் சுடு தலையுடைய வருத்ததநினைக் கொண்ட பெரிய களிற்றினம அணிதிகழ் விறன்மலையில் தங்கும் (கலி. 20:4,5). பால்போலுங் கொம்பையும், உரலடி புரையும் பரவிய அடியினையும் மதத்தினையு முடைய இனத்தைப் பிரிந்த யானை காட்டுவழி யைக் காவல் கொணடு நிற்கும் (கலி. 21:1-3). எழு வுறழும் தடக்கையுடைய தன் இனங்களைக் காக் கும வேழும் மலையைச் சூழந்த தீயினை, வழியுண் டாக மிதித்துத் தன் திரளோடே கூடிப் போகும் (கலி. 25:9-11). பல்வரி இனவண்டு புதிதுண்ணும் பருவம் இளவேனில (கலி. 26:9). சோலையில் இன வணடுகள நிறைந்தனவாயின் பிரிந்த தலைவர் நம் மாட்டுச் செய்யும் அளி என்ன பயன் தரும் எனபது வற்புறுக்குந் தோழி கூற்று (கலி. 28:12-15). இளவேனிலில பூவின் பாரத் தால் தளர்ந்த கொம்பின்மேல் வண்டினம் தங்கி யது (கலி. 34:12). இனமான கிளிகள் தினைப்புனங் களில விழாமல் காவல் காக்கும் தலைவியும் தோழி யரும் ஊஞ்சல் ஆடினர் (கலி. 37:12-14). தொகுத் துக் கூறலையும வகுத்துக் கூறலையும் அறியும் சான் றவர் இனமாகத் தலைவன் வரைய வருதல (கலி. 39:47 50). இனவணடுகள ஒலித்துத் தாதினை ஊதும் சந்தன மரத்தால உலக்கை செய்யப்படுவ துணடு (கலி. 43:2,3). தலைவனுடைய மலையில் கமழகடாம் திகழும் பெருங்களிறறின் இனததொடு இரும்புலி போர் செய்யும் (கலி. 48:5-7). (இமயமலை யின் ஒரு பக்கததில) விசும்பில் இரை கவர்ந்த களைப் பால் ஒய்ந்து பறக்கும் மடநடைமாயினம் (அன்னத் தின் இனம) அந்தியில தங்கியிருத்தல் (கலி. 92:16-19). கொடி போல அழகுடையார் பூங்கொத்தினை வளைத்துப் பறிக்க விரைநது வரிவண்டின இனம், (பாணடியன) பொருத பகைப்புலத்து அரண் போலச் சிதைநதது (கலி. 92:25-29). புலவி கொண்ட ஒருத்தி வண்டினம் மொய்த்து ஆரவாரிக்கையால் வருத்த முற்றுப் புலவி நீங்கித் தன் கணவன் வணங்குகை யால் அவன் மார்பினை முயங்கினாள் (கலி.92:39-41). தலைவன் இழையணிநத கொடித் திண்டேரினை யும் இனமணி கட்டிய யானையினையும் உடைய வன் (கலி.99:7). ஏறுதழுவிய தலைவன் கோட் டினத்து ஆயர் மகன், கோவினத்து ஆயர் மகன், புல்லினத்து ஆயா மகன என்று குறிப்பிடப் பெற் றான் (கலி. 103:33,37,47). இரும்புலித திரளும், பெருங்களிற்றினமும் தம்முள் மாறுமாறாய்ப் பொருதாற்போலப பொராது பொதுவர் ஏற்றைத் தழுவிக் கொண்டு தொழுவை விட்டுச் சென றனர் (கலி. 103:56-58). ஏறு தழுவுவோர் கொலை யேற்றின் கோட்டில், தம் காதலியின் முலையிடைப் பாய்வார்போலப் பாயப்பெறறால் அவரிடம் எம் ஆயர் இனம் முலைவிலை வேணடாது (கலி. 103: 71-73). வாடாசசீர்த் தென்னவனின் பழைய புகழை நிலைநிறுத்திய குடியோடு தோன்றிய நல்லினத்து ஆயர் எல்லோரும் சேரத்திரணடு பல்வேறு எருது களைத் தொழுவிலே புகுதவிட்டனா(கலி.104:4-6,17). கோட்டினத்து ஆயர்மகன, புகரினத்து ஆயர்மகன் என்று முலலைநிலத் தலைவன் குறிக்கப்பட்டான (கலி. 105:58,66). கார் காலத்தோடே தோன்றிய மழையில் தத்தம் இனமாகிய பசுக்கள் நனைந்த வியன்புலத்தில் கோவலர் இருந்தனர் (கலி. 106:4,5). ஏறுகள் போர் செய்யாமல் பிரிதலை எண்ணி இரு கூறாக நீங்கும்படி இடையே சில ஏறுகளைச் செலுத்தி விலக்கி, மேயும் புலத்தில் ஏற்றிடையர் தத்தம் இனங்களைப் பிரிப்பர் (கலி. 106:15-17). ஆட் டிடையர்க்கும் பசுவிடையர்க்குமாகத் தலைவியின்

கோவினத்தையுடைய சுற்றத்தார் கொல்லேறு தழுவுதலே காரியம் என்று தொழுவில் ஏறுகளைப் புகுதலிட்டார் (கலி. 107:2-4). 'தன் நெஞ்சை வாங்கிக் கொண்ட கள்வி' என்று அடியோர் பாங்கிற் றலைவன் கூறக்கேட்ட அத்தகைய தலைவி, உன் நெஞ்சு பசுவினத் திடத்தானாகிய என் தந்தைக்குக் கறவைக்கலம் கொண்டு செல்லும் ஒன்றாகுமோ எனறுகூறினாள் (கலி. 108.28,29,32). மழை பெய்த வியன்புலத்தில் அறுகம்புல்லை நிறைய உண்டு நீர் நிறைந்த நிழல் பொருந்திய இடததில் குடஞ்சுட்டு இனம் (குடம்பால் கறக்கும் என்று கருதப் படும் பசுததிரள்) விளங்கல் (கலி. 109:1-3). பெரிய குறும்பில் உள்ள புல்லினததாயர் (ஆட்டிடையர்) குடி தோறும் உள்ளமகளிரை வினைவல பாங்கின் தலைவன் விரும்பினான் என்று அத்தகு தலைவி கூறினாள் (கலி. 110:1,2). தலைவி புல்லினத்தாயர் மகளிரொடு விளையாடி யிருந்தபோது அங்குக் குருந்தம் பூக்கண்ணி சூடிய பொதுவன் வந்தான் (கலி. 111: 5-7). நீ புல்லினத்தாயன் ஆயின், எமர் நலலினதது ஆயர் என்று தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 113:9-10). 'பல்லான் இனநிரைக்குள்ளே நலல ஏறு நாகுடன் தம்மில் கூடிநிற்றல் போல நாமும் கூடிச் சேரப போதற்குக் கூட்டத்துக்கு உடன்படுவாயாக' என்று வினைவல பாங்கின் தலைவன் அத்தகு தலைவியிடம் கூறினான் (கலி. 113:28,29). புள்ளினம் இரைமாந்தித் தம் புகல் சேர்கையால் ஆரவாரம் அடங்கிக் கழி துயில் கொண்டது போன்றிருக்கும் (கலி. 121:4-6). கானலிடத்தே கொல்லும் ஏறாகிய சுறாவினம் மாலைக் காலத்தில் அவ்வழிப் போவாரைப் போகாமல் தடுக்கும் (கலி. 123:9). கானலில் ஒழுங்கு கொண்ட புள்ளினம் மாலைக் காலத்தில் தாம் தங்குமிடத்தே சென்று சேரும் (கலி. 123:12). அழகிய சிறகுடைய இனக் குருகுகள் இரவில் ஒருகால் ஒலித்தால் தலைவி அதனைத் தலைவன் தேரின் மணியோசை என்று மதிப்பாள் (கலி. 126:6,7). இனமான மீன்களின மாறுபாடு கெடத் தாக்கி வென்ற சினத்தையுடைய மீனாகிய சுறாவின் மருப்பினால் ஊஞ்சற் பலகை அமைக்கப்படுவதுண்டு (கலி. 131:6,7). யாழிசை ஓசையைத் தம்மிடத்தே கொண்ட இனமான வண்டுகள் தாழை மலரில் இமிரும் (கலி. 131:9,10). கழியிடத்தே கண்கவர் புள்ளினம் அலைமோதுதலால் இறந்த மீனை உண்ணுவதல்லது தாம் ஒன்றைக கொன்றுண்ணாத அருள் உடையது (கலி. 131:31-33). இரை தேடி உண்டு இளைப்பாறும் பல்வேறு புள்ளினம் தம் பெடை துணையாகக் கடலை வந்து பொருந்தும்படி உயர்ந்த மணல் மேட்டில் தங்கும் (கலி. 132:1-3). வருந்தும் தலைவியின் நெஞ்சுபோல இனங்காப்பார் (கோவலர்) குழல் இசைத்தது (கலி. 143:37). வரிசையான திமிலகள் களிறாக, அலையோசை பறையாக, கரை சேர் புள்ளினம் காலாட் படையாக அமைய, அரசன் படை எடுத்துச் செல்வது போனற செலவினை யுடையது வலிய கடல் (கலி. 149:1-3). மலையிலுள்ள மானினம் கலங்கவும் மயிலினம் அகலவும் மலையின் மாசு கழியவும் அருவி விரைந்து இறங்கியது (பரி. 6:4,5). இசைச் சுருதியை ஒத்து நிறததாலொத்த இனம் விரும்பும் தும்பியும வண்டும் மிஞிறும் ஆர்ப்பச் சுனையில் பூக்கள் மலர்ந்தன (பரி.8:22,23). நீல நிறமுடைய தேன தங்கிய கோதையையுடைய மகளிர் விலககவும் செல்லாது வணடினம் அக் கோதையில உள்ள பூவினை யாழிசை போன்று ஊதும் (பரி. 11:124,125). தும்பியினம விளரிப் பாலையில தோன்றும் யாமப் பண்ணைத் தாளத்திற்கேற்பப் பாடி ஆடும் (பரி. 11:129,130). பகைவரைப் பொருது கொனறவனது நிறத்தை யுடைய குனறத்தில் மயில அகலவும் குயிலினம கூவவும் அதனால் முழையில் முழங்குகின்ற எதிரொலி ஒவாது (பரி. 15:40,41,44). மலர்கள் பலவரி வணடினம் வாய்சூழும் கவினுடையன (பரி. 16:41). சூல் முதிர்ந்த உடலும் மேகம் மலை ஒழுங்கினைச் சூழ்நது, கல் குறைபட எறிநது இடியினம ஆர்பபப் பெய்தது (பரி. 20.1-3). யாணர் வணடினம் யாழிசைபோல ஒலித்தது (பரி. 21:35). சோலையில் புகர்வரி வணடினம் பூக்களையுடைய கிளைகளில இமிர்ந்தது (பரி. 22:38,39).

2. வகை. வேறுவேறு இனதத - வகையினவாகிய- மலைவாழும் வருடையின் இளங்கடாவின் ஒலி கேட்டு மயில் அஞ்சி ஓடியது (அகம. 378:5-7).

**இனன்** - இனம். 'நல்வினையின் நன்மையும், தீவினையின் தீமையும் இல்லையென்று சொல்வோர்க்கு இனன் – இனம் – ஆகாது ஒழிவாயாக' என்று சோழன் நலங்கிள்ளிககு உறையூர் முதுகண்ணன சாத்தனார் அறிவுறுத்தினார் (புறம். 29:11,12). பாதிரியின் முதிர்ந்த அரும்பின் இதழ விரிநதாற் போலத் தோலை நீக்கி இனனொடு (இனமான காயம் சாந்து முதலியவற்றோடு) கலந்து உணவு அமைக்கப் பட்டது (புறம். 399:7,8). ஓரினச் சுற்றத்தையும் வலிய தொழிலையும் உடைய செருக்கின (பரதவர்) பிள்ளைகள் (பட். 61,62). பெரியனுடைய சோலை சூழ்ந்த புறந்தை (புறையாறு) முன்றுறையில் நாரை இனன் ஒலித்தது போன்று அலர் விடியற்காலையில் எழுந்தது (அகம. 100:12-15). வணடியினை எருதுகளின் பிடரியில் பூட்டி, ஏறறமான துறையிடத்துச் செல்லுங்கால் உமணர் உரப்பும் ஓசை கேட்டு ஆண்

மானும பெணமானும் ஆகிய இனன் கெட்டு ஓடும் (அகம. 173 9-11). மலைச் சாரலில கயநதலை மடப் பிடி இனனுடன் இன்பமடைய ஆண யானை புலி யாகிய பகையை வெனறு பக்கமலையில் கை உயர்த திப் பெருமுச் செறிவதால வேங்கைப் பூக்கள் பரவி விழும (அகம. 202:2-8). வழிபபோக்கர் அணிகலன் இலலாதவராயினும அவரை ஆறலை களவர் அமபு தொடுத்து வீழததும் அரிய வழியிடததே கூடட மான நரி, இனனோடு கூடி இறநதவர் நிணததைத் தினனும் (அகம். 375.3-6). மழை பொழிநத காட்டில் நள்ளிரவில தினைப பயிரை மேயும் யானை இனன் இரிநது ஓடுமாறு கானவன் விரைந்து கவண கல் லைச் செலுத்தினான் (அகம். 392:12-15). கழிநது பெயர்கினற கார் காலததில் சென்ற பிணைமான், விழிக்கணபேதையாகிய தன் குட்டிகளோடு இனன் (இனத்தினினறும) இரிந்தோட ஆண்மான் அதனைத் தேடியது (நற். 242:7-10).

**இனிசந்த நாகனார் — புலவர்.** இவருடைய ஒரே பாடல் நற்றிணை 66-ஆம் பாடலாக அமைந்துள்ளது. இது பாலைத் திணையில, மனை மருட்சி என்னுந் துறைக் குறிப்பில. நற்றாய கூறறாக அமைந துள்ளது. தன் மகள நயந்த காதலனொடு புணர்ந்து சென்றது அறததாறே எனறு அறிந்தும், அவன் சென்ற பாலை நிலததின வெப்பக கொடுமையால் அவளுடைய மலர் போலுங் கணகள் சிவந்து ஒளி மழுஙகுவதனை எணணி மனையிடத்தே நறறாய மருணடு கூறுகினறாள. தின்னத் தகாத உகாய் மரததின காயினை உணடபின வருத்த மிக்க புல்லிய புறா, மரக்கிளையில தன பிடரி சிலிர்தது மயக்க முறறு வருநதும தன்மை காட் டிப் பாலை நில இயலபினை ஆசிரியர் விளக்கி யிருப்பது சிறபபாக உள்ளது.

**இனிமை - இன்பம்.** நேற்றுக் காவிரியில் நின் பரத் தையரொடு புனலாடி, இனறு எம்மிடம் வநது, 'மாசில கற்பின புதல்வனதாய' என்று கூறி எம் முதுமையை எள்ளாதே; இளமை கழிநது பழமை யானதால், நின பொய்மமொழி எங்கட்கு இனிமை -இனபம - செயவது யாங்ஙனம் எனறு பரததையிற் பிரிநதுவநத தலைமகனிடத்துத் தலைவி கூறினாள் (அகம 6).

**இனியர் மகளிர்.** அழகிய அணிகள் அணிந்த மைந் தரும், இனியரும் — மகளிரும் - வையைக்குப் புன லாடச் சென்றனர் (பரி. 6:27-29).

**இனியவர் - இனிமையுடையவர்.** தம் இனியவரை - இனிமையுடையவரை — புணர்ந்து கழிக்கும் வாயப் புக் கூடுமாயின் இளமை இனிமையானதாகும் (ஐங். 415: 3,4).

**இனியவை - இனியபொருள்கள்.** இனியவை - இனிய பொருள்கள் - பெறறால் அவற்றை வேறு வேறாக அனுபவிபபோம், தருவாயாக என்று விரும்புதற்கு முனனே கேடிலலாத மனததோடு பகுத்துண்ணும் உணவைப் பரிசிலர்க்குச் சேரக் கொடுககும் ஆண் மையன களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல (பதி. 38:13-16).

**இனியோர் - இனிமையுடையோர்.** மலராத முகைப் பருவததவரும் மலர்நத பருவததினருமாகிய இரு திற மாந்தரும இன இனியோரும் - இனிமையுடை யோரும் - விரவு நரையோரும் வெறுநரையோரும் வையைக்கரைக்குச் சென்று கூடினர் (பரி. 10:19-22).

**இனியோள் - இனிமையுடையவள்.** அமிழ்தத் தன்ன அழகிய இனிய சொற்களையும் அத்தகைய குணத் தையுமுடைய இனியோள் - இனிமையுடையவள் - எனறு தலைவியைத தலைவன் குறிப்பிட்டான் (குறு. 206:1, 2). கருதிய வினையினை முடித்தது போன்ற இனியோள் தலைவி (நற. 63:8).

**இனியோன் - இனிமையுடையவன்.** பாரி அண்ணல் யானையுடைய அரசர்க்கு இனனான்; (நணபர்கடு) இனியோன - இனிமையுடையவன் - (புறம். 115:5, 6).

**இனை - வருத்தம்.** தாதினாற் செயத குளிர்சசி யுடைய விளையாட்டுப பாவை காலைப் பொழு தில வருந்துதலால் பிறநத கையாறு தவிர்க எனத் தோழியர் கூறக் கேட்டும் தலைவி பிரிவினால் இனை - வருத்தம் - பெரிதும் எயதி உழந்தாள் (குறு. 48:1-5).

**இனைமை — இத்தன்மை.** 'நீ இத்தன்மையை என்று நினனைச் (சாமவேதம) சொல்லுவதால் இனை மையை - இத்தன்மையை - நாங்கள் அறிந்தோம்' என்று திருமாலை நோக்கிக் கடுவனிளவெயின னார் பாடுவர் (பரி. 3:62).

## ஈ

**ஈ - தேனீ.** ஈ - தேனீ - பாய்தற்குரிய அடப்பட்ட நறவு வையை நீரில் கலந்ததாக எண்ணிப் பார்ப் பார் நீராடாமல் நீங்கினர் (பரி. தி. 2:58,59).

**ஈஇயாமை - கொடாமை.** பெருஞ்செல்வர் வறுமை யால் இரப்போர்க்கு ஈஇயாமையின்-கொடாமை யின் - பழைய வள்ளல்கள போல உலகில் தம் பெயரை நிலை நிறுத்தவில்லை (புறம். 165:3-5).

**ஈகை - 1 கொடை** (வணமை). ஒழியாத ஈகையினை -கொடையை—உடைய பாண்டியர் மரபில் வநதவன் கருங்கை யொள்வாட் பெரும்பெயர்வழுதி (புறம. 3:5). பாண்டியன பல்யாகசாலை முதுகுடுமிப் பெரு

வழுதி தான் பெற்ற வெற்றியை வியவாது மனத் தகத்தே அடக்கியவன்; தணியாத ஈகையுடையவன் (புறம். 6:25,26). சேரமான் கடுங்கோ வாழியாதன் ஒடுங்காத உள்ளத்தையும் பொருளைக் காவாது வழங்கும் ஈகையினையும் உடையவன் (புறம். 8:4,5). குடவர்கோவாகிய யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை எல்லார்க்கும் எப்பொருளும் வரையாது கொடுக்கும் ஈகையுடையவன் (புறம். 17:40). மாவேள் எவ்வி பொருளைப் பாதுகாவாத ஈகைக் குணம் உடையவன் (புறம். 24:18). மறக் குடிப்பிறந்த வாள்வீரர் நின்முயற்சியை வாழ்த்த வும், இரக்கும் பரிசிலன் நின் ஈகையைப் பாராட் டவும் மகளிர் பொற்கலத்தில் தரும் மதுவை உண்டு இன்புறுக என மாங்குடிகிழார் பாண்டியன் தலை யாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக் குக் கூறினார் (புறம். 24:28-33). சோழன் குளமுற் றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் ஆனா ஈகையையும் பகையைக் கொல்லும் போரையும் உடைய பெரு மகன் (புறம. 42:1). சோழன் மாவளத்தான், தனை யடைந்த புறாவின் அழிவைத் தடுக்கத் தன் அழிவிற்கு அஞ்சாது துலாவின்கட் புகுந்த வரையா ஈகையுடையவனது (சிபியினது) மரபில் வநதவன் (புறம். 43:6-8). சிறுகுடி கிழான் பண்ணன் கைவள்ளீ கையுடையான் (புறம். 70:13). சோழன் குளமுற்றத் துத் துஞ்சிய கிள்ளி வளவனின் ஈகை, விறகு கொணடு செல்வோர் காட்டில் எதிர்பாராமல பொன் பெற்ற தன்மை போன்ற தன்று எனக் கோவூர் கிழார் பாராட்டுவர் (புறம். 70:17,18). ஔவையார் நாஞ்சில் வள்ளுவனிடம் அடகின் கண்ணுறையாகச் சில அரிசி கேட்க, அவன் குன்றத் தன்னதொரு பெருங்களிறு தந்ததமையைத் 'தேற்றா ஈகை' எனப பாராட்டினார் (புறம. 140: 4-9). சினத்துடன் செய்யும் போரையும் கைவண மையாற் கொடுக்கும் ஈகையினையும் விரைந்து செல்லும் குதிரையினையும் பேகன் பெற்றிருந்தான் (புறம். 143:5,6). கொல்லிப் பொருநனாகிய வல்வி லோரி பாதுகாவாத ஈகையினையும் வெற்றி விருப் பத்தையும் உடையவன் (புறம. 152:31,32). மாரி போன்ற ஈகையினையும் மறப்போரினையும் உடை யவன் மலையமான் திருமுடிக்காரி (புறம். 158:7). பிட்டங்கொற்றன் கைவள்ளீகையினையும் விரைந்து செல்லும் குதிரையினையும் உடையவன் (புறம். 168: 17). பிட்டங்கொற்றனின் வேலும் அவன் தலை வனாகிய மாவள்ளீகைக் கோதையும் கோதையுடன் மாறுபட்ட மன்னரும் வாழ்கவென வடம வண் ணக்கன் தாமோதரனார் வாழ்த்துவர் (புறம். 172: 8-11). துவரை என்னும் படை வீட்டை யாண்டு, வெறுப்பில்லாத ஈகையினை உடையராய், நாற் பத்து ஒன்பது தலைமுறை தொன்றுதொட்டு வந்த வேளிருள் ஒருவன் இருங்கோவேள் (புறம். 201:10-12). பகைவரைப் பிணிக்கும் ஆற்றலும் நச்சியவர்க்கு அளந்து கொடுத்த லறியாத ஈகை யினையும் உடையவன், கோசசேரமான் யானைக் கட் சேஎய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை (புறம. 229:25-27). யானைக் கல்லது உறை கழிபபறியா வேலோன ஊர், பரிசிலர்கு அவர் கருதியவாறே இடைவிடாது அளிக்கும் ஓமபா ஈகையுடையது (புறம. 323:4-7). வேந்தன் தன் தானையுடன வரி னும் தாங்கக் கூடிய குனறாத ஈகையினை உடைய நெடுநதகையின ஊர், அரிய காவற்காடு சூழநத நாட்டின்கண உளளது (புறம. 325:13-15). குன் றாத ஈகையால வரும் புகழை விருமபியவன சேர மான் வெலகெழு குட்டுவன் (புறம. 369:28). பொய் யாத ஈகையினையும் கழல் தொடியையும் உடை யவன் ஆய் அண்டிரன் (புறம. 375.11). கடலபிறக் கோட்டிய செங்குட்டுவன் மறவாககுச் சுவை மிகக கள்ளையும் தனககென ஒனறைப பாதுகாவாத ஈகையால மகிழ்ச்சியையும அளித்தான (பதி. 42: 12,13). பூசிப்புலர்ந்த சாந்தையும வற்றாத ஈகை யினையும் உடையவன பாரி (பதி. 61:7,8). பேகன் முதலாக ஓரி யீறாக வாழநத வளளல எழுவரும் தாங்கிய ஈகையாகிய செவவிய நுகததை ஒருதா னாக நலலியக்கோடன தாங்கினான (சிறு.113-115, 126). அமையாத ஈகையினை யுடையவன தொண டைமா னிளநதிரையன எனப பெரும்பாணன் கூறல (பெரு. 460). நன்னன் நவிர மலையில கடுக மழை சொரிந்தாற் போலக் கூத்தர்க்கு ஈகையைத் தலைநாளிலேயே நலகுவான் (மலை. 580,581). வெற்றிவேலையும் புகழ மேவிய நலல ஈகையினை யும் களிறு வழங்கும் வண்மையானாய களிபபினை யும் உடையவன் நன்னன (அகம். 152:10-12). இரப் போர்க்குத் தேரையும் களிற்றையும் மழைபோன்று தரும் ஈகைக் குணம் உடையவன நள்ளி (அகம. 238:11-14). கடற்கரைச் சோலையினையும் கொல் லையினையும் வளமிக்க உணவினையும நலல ஈகை யினையும உடையது சிறுகுடி (நற். 91:8,9). (நிலை யாமையை) உணர்ந்தவருடைய ஈகைபோல, இளவே னிற் பருவததே மரங்களில் எல்லார்க்கும் பயன் தரும் பூங்கொத்துக்கள் அலர்நதன (கலி. 32:11). தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி, தலைவன இயல்புகளைத் தலைவிக்குக் கூறுங்கால, 'வறியோர் துன்பத்தை ஈகையால் போக்க வல்லான் போனற தொரு வலிமையு முடையன்' எனக் குறிப்பிட்டாள் (கலி. 47:5,6). ஒருநாட் கொடுத்தாற் போலன்றிப் புதியவாயிருக்கினற ஈகை (கொடை) செயயும் தலை வனைப் பாணன் பாராட்டிப் பாடினான் (கலி.

95:9). கைவண்மை யுடைய பாண்டியரது ஈகை போனறு வையை நீர்ப்பெருக்கு மிளகு, சந்தன மரம் முதலியவற்றைக் கரைமீது வீசிக் கொண் டிருக்கும (பரி. 16:1-4). மைந்தரும் மகளிரும் தாம் செய்த ஈகைப் பயனாகிய இன்பத்தை நுகர வேணடி நாடொறும் வையையில் நீராடினர் (பரி. 16·50,51).

2. பொன். அதியமான் நெடுமானஞ்சி ஈகையால் - பொன்னால - செய்யப்பெற்ற வீரக் கழலையும் பெரிய பனந்தோடாகிய தாரினையும் அணிந்தவன் (புறம். 99:5). களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், ஈகையால் செய்யப்பெற்ற வீரக் கழலை உடைய வன் (பதி. 38:7, 8). ஈகை வான்கழல் (பதி. 42:1). வீரன் ஈகையால் இயன்ற கழலை அணிந்திருந் தான் (குறி. 126). ஐம்பாலில் அணிகளுக் கிடையே இட்டுவைதத ஈகையால் இயன்ற கணணி போலக் கருமணலில் உதிர்ந்து கிடக்கும் வேங்கையின் விரிந்த பூக்கள் விளங்கின (கலி. 32:3, 4).

3. குறும்பூழ் (காடை). புலையன் கூறும் மந்திரம் முதலியன கேட்கையினாலே அவன் வழிப்பட்ட ஈகை - குறும்பூழ் - செய்யும் போர்களைத் தலை வன் கண்டு வந்ததாகத் தலைவி இடித்துரைத்தாள் (இங்குப் பரத்தையைக் குறும்பூழாககிக் கூறினாள்) (கலி. 95:10-12).

**ஈகையரிய இழை** — பிறர்க்கு ஈயமுடியாத அணி (தாலி). பாடிவந்த பாணர்ககு வரையாது ஈந்தமையான் வேறோர் அணிகலமு மின்றி ஈகையரியஇழை - தாலி - அணிந்த மகளிருடன் பொலிவழிந்திருந்த ஆய்கோயில், ஈயாமையால புகழில்லாத அரசரின் வளம் பொருந்திய கோயிலினும் சிறந்தது (புறம். 127:5-10).

**ஈகைக்கண்ணி** - பொன்னாலாய தலைமாலை. மகள் மறுத்துமொழியும் தந்தை தன் மகள் பொன் மேகலை யணிந்த இடையும் ஈகைக்கண்ணி - பொன்னாலாய தலைமாலை-விளங்கும தலையும் மெல்லிய சாயலும் உடையள் எனப பாராட்டி னான் (புறம். 353:2-4).

**ஈகைப்போர்** - குறும்பூழ்ப்போர். பரத்தையுடன் தங்கி வந்த தலைவன, குறும்பூழ்ப் போர்கண்டு வருவ தாகத் தன் பரத்தைமையை மறைத்துக் கூறிய பொழுது, 'பாணனது யாழிசைக்கு மயங்கிய ஈகை - குறுமபூழ் - செய்த போரினால் உன்மெய்யில் புண் உணடாயிற்றோ' எனத் தலைவன் குறும்பூழ்ப் போர் என மறைத்துக் கூறியது பரத்தையிடம் நிகழ்ந்த பிணக்கமே என்பதுபடத் தலைவி குறிப் பால் வினவி இடித்துரைத்தாள் (கலி. 95:10-13).

**ஈகைமாரி** - பொன்மழை. பகைவரை வென்று திறை யாகக் கொணர்ந்த அணிகலன்களைப் புலவோர்க்கு நன்னன ஈகை - பொன் - மாரி என்னுமாறு வழங்கினான் (மலை. 71, 72).

**ஈங்கை** - ஒருவகை முட்செடி. தோழியருடன் சுனை குடைந்தாடிய தலைவி பறித்துப் பாறையின்மேல் திரட்டிய பலவேறு மலர்களில ஈங்கை மலரும் ஒன் றாகும் (குறி. 86). மாரிக் காலததே விளங்கும் ஈங் கையின கரிய தளிர் தலைவியின் மாமை நிறத் திற்கு உவமை (அகம். 75:17,18;206:7, 8). ஈங்கை யின் போதுக்கு இரவம் வித்து உவமை; அதன் வெள்ளிய பூவுக்கு ஆலங்கட்டி உவமை (அகம். 125:3, 4). வளைந்த துளையை யுடைய சிவந்த பவளம் போன்று ஈங்கைப் பூக்கள் மலர்ந்தன (அகம். 243:1,2). ஈங்கையின் மலர் உதிருமாறு கடுமழைபெய்யும் நள்ளிரவிலும் நம்மைக் காவல் செய்யுமாறு தாய் துயில மறந்தனள் என்பது தலைவியின சிறைப்புறக் கூற்று (அகம். 252:9-14). ஈங்கை, பஞ்சுபோன்ற தலை பொருந்திய பூவை யுடையது; புதராகப் படர்வது; நீரால் நனைந்த அதன் தளிர்கள் இருபிளவாகிய ஈரல்போலக் காற் றில் அசையும் (அகம. 294:6-8). பொயகையில் பிரம் பொடு நீணடு வளர்வதும் முட்கொம்பு பொருந்தி யதுமாகிய ஈங்கையின் பஞ்சுபோன்ற உச்சியுடன் கூடிய புதுமலர் குருகினைத் தடவி உறங்கச் செய் யும் (அகம். 306:2-5). தலைவன் சென்ற குறுங்காட் டில வளைந்த முள்ளினையும் வெள்ளிய அரும்பி னையும் உடைய ஈங்கை பிரம்புடன் பின்னிக் கிடக் கும் (அகம். 357:1,2). நுண்ணிய முள்ளை யுடைய ஈங்கையின் நிறத்தையும துய்யையும் உடைய மலர் உதிரும்படி வாடைக் காற்று வீசும் பருவத்தும் தலைவன வந்திலனே எனப பருவங் கண்டழிந்த தலைவி கூறல (குறு. 110:5-7). நிறத்தையும் உளை யையும் உடைய ஈங்கை மலர்கள் உதிரும்படி கூதிர் காலம் வந்துள்ளது; இனிமேல் தோன்றும் கடிய பனிப் பருவத்தில் என்ன செயவோமஎனத் தோழி கூறல் (குறு. 380:5-7). இண்டங் கொடி ஈங்கைப் புதரில் படர்ந்திருக்கும் சுரத்தின்வழித் தலைவன் பொருள் தேடச் செல்லல் (நற. 2:6). மகளிர் மணலி டத்து விளையாடுதற்கிட்ட கழங்கு போன்ற ஈங்கை மலர்கள் கற்பாறையின மேல் உதிர்ந்து பரவிக் கிடக்கும் (நற். 79:1-3). இளவேனிற் காலத்து ஈங்கையினது தளிர் கண்டார்க்கு விருப்பம் வரு மாறு நுடங்கும் (நற். 86:7-9). ஈங்கையின் அரும் பும் புனமல்லிகையின் மலரும் மணல் மேட்டில் உதிர்ந்து மான்களின் வலிய குளம்பினால் மிதி பட்டு அழுந்துகையினாலே, வெள்ளியை மூசை யிலிட்டு உருக்கிச் சாய்த்தாற்போல் அவற்றினின்று

தெளிந்த நீர்க் குமிழி வெளிப்படும் (நற். 124:4-8). மனைக்குருவிப் பேடை, ஈங்கையின் பூப் போன்ற குஞ்சுகளுடன சேர்நது நின்று வேற்றுப் புலத்தில் தங்கிவந்த சேவலைக் கூட்டினுள் புகாதவாறு தடுத்தது (நற். 181:1-5). அரககினாலாகிய வட்டுப போன்ற மொட்டுக்களை யுடைய ஈங்கையின் துயத் தலைப் புதுமலரில தேன் துளியுடன கலநது நின்ற பனித்துளி எங்கும பரவுமாறு வாடைக காற்று வீசியது (நற். 193.1-4). கொல்லையி லுளள வளைந்த முளளையுடைய ஈங்கையின தளிரின மீது மழை பெய்தபோது உணடாகிய அழகிய நிறம் போனற மாமைக்கவின் உடையவள தலைவி (நற். 205 8-11). குளிாநத புதரிலுளள ஈஙகையின அங்குழை, கார் காலததில வேட்டுவன வைத்த பார்வைக் குருகின முதுகில வருடும (நற. 312.2-4). பாதிததிஙகள வடி வினையுடைய பூக்களோடு கூடிய வெண்ணிறப் பகனறைககொடி ஈஙகைப புதன்மிசைப் படர்நது அழகு செயயும (ஐங. 456:1-3). கூதிாக்காலத்தே நீர் வறறிக கால்களாய் ஓடுதலினால் தோனறும அறல் மறையுமபடி அழகு செயவது போல ஈங்கையின் வாடறபூ காம்பு கழனறு மணலிலே வீழ்ந்தது (கலி. 31:1-3).

ஈசன் – சிவன். முருகன ஈசன - சிவன் – மகனே என விளிககப பெறுகிறான் (முரு.வெ .7).

ஈட்டம் - தொகுதி. ஊழி வெள்ளத்துட் கிடநத நான்கு பூதங்களும் தோனறுதற் குரிய நெய்தல் முதல் வெள்ளம் ஈறாகிய கால ஈட்டம் – தொகுதி- கழிந்த பினனர் உயிர்கள உளவாதற் பொருட்டுத் திருமால கேழற் கோலத்துடன் தோனறி நிலததை எடுததார் (பரி. 2:12-16). நீர் விளையாட்டு இடந் தோறும் சிறபபுற நிகழவும் மதுரைமாநகரத்தினர் யாவரும் புகழவும் வையை பெருகியது. அதனைக் காண்பவர் ஈட்டம் அதன் கரையை ஒத்தது (பரி. 12:31-33).

ஈட்டி - படைக்கருவி. தேவர்கள் தம் மெயயினினறும் வாங்கித் தந்த மறி, மயில, கோழிச்சேவல், வில், மரன, வாள், ஈட்டி - படைக்கருவி – கோடரி, மழு, கனலி, மாலை, மணி ஆகிய படைகளை முருகன் பனனிரு கைகளிலும் தாஙகிப் படைத் தலைவன் ஆனான (பரி. 5:64-69).

ஈத்து – ஈச்சமரம். பஞ்சுபரநத முற்றத்தினையுடைய சிறிய மனையிடததே பீர்ககு முளைதத சுரை படாந்த இடததில ஈதது-ஈச்சமரததின்-இலைகளை யுடைய குபபை ஏறிப் பாரி மகளிர் உமணரின உப்புச் சகடததை எணணும் நிலையைக கணடு கபி லர் துனபுற்றார் (புறம. 116:6-9). எயினனின குடில், அணிலும் எலியும திரியாதபடி வேல போனற முனையையுடைய ஈத்திலையாலே வேயபபெற்றம் எய்ப்பன்றியின் முதுகுபோன்ற புறத்துடன காட்சி யளிததது (பெரு. 85-88). ஈந்து காண்க.

ஈதலின்பம் – ஈதலால் வரும் இன்பம். நம் தலைவர் ஈதலின்பம் - ஈதலால் வரும் இன்பம் – தமக்கு உரிமையாக விரும்பி அதற்கு வேணடும் பொருள திரட்டப் பிரிநதுள்ளாராயினும் விரைநது மீளவர். அதனால் அழகிழந்த மேனியையும் கண்ணினையும் திதலையையும் கண்டு வருநதாதே எனத் தோழி தலைவியைத் தேற்றினாள் (அகம. 69:1-7).

ஈதா - சொல்வதனைக் கேள். இநதா என்பது சுட்டு நீண்டு ஈதா என மருவியது (பரி.8.60. உரைககுறிபபு). ஈதா - கேள் – வருபுனல வையை மணல தொட் டேன எனத் தலைவன தோழியிடம கூறினான (பரி. 8:60,61).

ஈந்து – ஈச்சமரம். களர்நிலத்து விளைநத ஈநதின் – ஈசச மரததின - விதையைப போனற மேட்டு நிலதது விளைந்த நெலலினது சிவநத சோற்றினை எயினர் வருவோர்ககு வழங்கினர் (பெரு. 130-133). செநநாய் ஆண் பனறியினைத தாககியது கணடு அஞ்சிய பெணபனறி ஈநதினமீது மோதி ஓடிய தால அதன செங்காய்கள வன்னிலமெங்கும் பரவிக் கிடநதன (அகம.21:18 - 21). பெரிய குனறததிலுளள, வலியஈநதுதழைத்துளள காட்டில காறறு சுழன்று வீசும் (நற. 2.1, 2). ஈநதின் பசுமை நிறமுடைய காய் செந்நிற முடைய காயாக முற்றிபபின கருங்கனியாய் உதிர்கின்ற கனியாக மாறும் (நற. 126:1,2). ஈநதினது திரட்சியை யுடைய முறறிய குலை தாளிபபனையினது குலைககு உவமை (நற. 174:1,2). சிலம்பியின நூலால மூடப்பட்ட முள பொருநதிய ஈநதினது சிவநத காயககுத துகில மூடிய பவளம உவமை (ஐங். தி. 2.1-3). ஈதது காணக.

ஈமத்தாழி - முதுமக்கள் தாழி. (இறநதோரை இட்டுப் புதைக்கும பானை). சுரத்தில தலைவனை யிழநத தலைவி, ஊர்க் குயவனிடம் தன தலைவனுடன தன்னையும் புதைத்தற் கேறற வகையில ஈமத் தாழியை - முது மக்கள் தாழியை - பெரிதாகச செயயுமாறு வேண்டினாள (புறம. 256:4-7).

ஈமம் – பிணஞ்சுடுதற்குரிய விறகடுக்கு. கரிய புறததை யுடைய விறகால அடுக்கபபட்ட ஈமத்தினகண - பிணம் சுடுதற்குரிய விறகடுககினகண - எரிகினற அழல் அதியமான நெடுமானஞ்சியின உடலை எரிப்பினும் எரிக்காது போயினும் அவன் புகழ் மாயாது என ஔவையார் கையற்றுக் கூறி னார் (புறம். 231). 'புறங்காட்டின்கண உணடாக்கப் பட்ட, கரிய முருட்டால் அடுக்கபபட்ட ஈமம் நுமக்கு அரிதாகுக; கணவனை இழநத எனககுத் தாமரைப் பொய்கை நீரும் தீயும ஒனறாகும,

எனப் பூதபாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு கூறல (புறம். 246.11-15).

ஈமவிளக்கு - பிணஞ்சுடுதீ. கள்ளியும் புகையும் மிகுந்த புறங்காடு, பகலிலும் கூவும் கூகையாலும் ஈம விளக்காலும் - பிணஞ்சுடு தீயாலும் - அகன்ற வாயையுடைய பேய்மகளிராலும் காண்பார்க்கு அச்சம் தருவதாயிற்று (புறம். 356.1-4). செவ்வாய்க் கூகையும் பிணந்தின்னும் குறுநரியும் பொருந்திய சுடுகாட்டில் பேய்ப்பெண்டிர் பிணங்களைத் தழுவிப் பற்றிக்கொண்டு ஈமவிளக்கில் காலபெயர்த்தாடுதல் அச்சம் தருவதாகும் (புறம். 359.2-7).

ஈயல் - ஒருவகைக் கறையான் (ஈசல்). நுண்ணிய கறையான பல அரிதாக உழந்து எடுத்த செம்புற்றினின்றும் புறப்பட்ட ஈயல் - ஈசல் - ஒரு பகற்பொழுது வாழும் வாழ்க்கைக்கு உவமரும் (புறம். 51.9-11). பாரிவாழ்ந்த நாளில், பருவ மழையால் தழைத்தும் செம்புற்று ஈயலை இனிய மோரொடு கூட்டி அட்டபட்ட புளிங்கறியை யுடையதாயிருந்தும் விளங்கிய பறம்புநாடு இனி அழியுமே எனக் கபிலர் கையற்றுப் பாடினார் (புறம். 119:1-4). ஈயல்களையுடைய புற்றின் குளிர்ந்த மேற்புறத்தே தங்கிப் புற்றாஞ் சோறாகிய இரையினைப் பெருங்கையை உடைய ஆணகரடி உண்ணும் (அக. 8:1-3). செம்மறியாட்டுத் தயிராகிய உலையில் வரகரிசி பெய்து ஈயல் இட்டுச் சமைத்த இனிய புளிப்பு வாய்ந்த விரும்பத் தகும் சோற்றினைப் பசு வெண்ணெயுடன் முல்லை நிலத்து இளையர் அருந்தினர் (அகம். 394:2-7). வேட்டுவன், நெடிய கோடுகளையுடைய புற்றுக்களை வெட்டி (புகை மூட்டி) ஈயலைத் தாழியிற் சேர்த்தெடுத்தான் (நற். 59:2; 3). குறித்த பருவத்தில் தலைவன் மீண்டமையால், மாலைகள் போல கொன்றை மலரவும் நெடிய சிவந்த புற்றுக்கள் ஈயலை வெளிப்படுத்தவும் விலங்குகள் பசியை மறப்பவும் கார்காலம் தொடங்கிற்று எனத் தோழி தலைவனைப் பாராட்டி உரைத்தல் (ஐங். 497:1-3). நுண்ணிய குழிப்புற்றிலிருந்து புழுங்கல் நெல்லின் வெண்பொரிபோல வெளிவரும் ஈயல், கோலைக் கையில் பிடித்திருக்கும் குருடரை ஒத்து மயங்கித் திரியும் (ஐங். இ. 4).

ஈயல்மூதாய் - தம்பலப்பூச்சி. செந்நிலப் பெருவழியில் பரவிக் கிடக்கும் காயாவின் வாடிய மலர்களினிடை ஈயல் மூதாய் - தம்பலப்பூச்சி - வரிவரியாக ஊர்ந்து செல்லும் காட்சிக்குப் பவளமும் நீலமணியும் விரவிய கோலம் உவமை (அகம். 14.1-4,304:12-15).

ஈர் - 1. குளிர்ச்சி. ஈர - குளிர்ச்சி - மிக்க தண் சிலம்பு (புறம். 158.10). ஈரிதழ மழைக்கண் (புறம். 164:6). ஈர்ந்தண் முழவு (புறம். 194:2). எச்சில் ஈர்ங்கை (புறம். 258.5). ஈர்ங்கை (புறம். 367;4, 393:10). ஈர்ஞ்சிறகு (இருஞ்சிறகு என்றும் பாடம்) (பதி. 12:19). ஈரிதழ் மழைக்கண் (பதி. 52:18). ஈர்ம்படை (பதி. 77:10). ஈர்ஞ்சேறு (பெரு. 341). ஈரம்புறம் (அகம். 8:1; குறு. 334.2; நற். 87:7; 127:1). மாயிதழ் புரையும் மலிர் கொள் ஈரிமை (அகம். 19:11). ஈர்மணல் (குறு. 275,7; 351.3;நற்.21.10). ஈரிதழ் அலரி (அகம். 85:15; கலி.64:3). ஈர்நறும் புறவு (அகம். 114:3). ஈரங்கதிர் முதாம் (அகம். 130:9) ஈர்ஞ்சுவல் (அகம். 133:16). நீரொழுகும் ஈர் மருங்கில் தம்பலப் பூச்சிகள் பரவிக்கிடந்தன (அகம். 139:13-15). புலி அடியிட்டுச் சென்ற ஈர்வழி (அகம். 155:11,12). ஈர் ஞெண்டு (அகம். 176: 8, குறு. 117:2; 403:3). ஈர்ந்தண் முழவு (அகம். 186: 11). இரவுப் பெயல் பொழிந்த ஈர்ந்தண் ஆறு (அகம். 222.15). ஈரம்புதற பகன்றை (அகம். 243:3). நறுவிரை மஞ்சளை நடுகல்லின் ஈரம்புறம் பொலியப்பூசினர் (அகம். 269:7-9). மாரிப்பித்திகத்து ஈரிதழ புரையும் மழைக்கண் (அகம். 295:19, 20; 299:14). ஈயல் மூதாய் ஈர்ம்புறம் வரிப்ப (அகம். 304:15). ஈர்ம்புற இயங்குவழி (அகம். 314:11). ஈர்நதண் எருமை (அகம். 316:3). நோன் சூட்டாழி ஈர் நிலந் துமிப்ப (அகம். 334:14). மாரி ஈர்ந்தளிர் (அகம். 337:2). மாரிச் சுதையின் ஈர்ம்புறம் (அகம். 346:2). இருஞ்சேற்று ஈரளை அலவன் (அகம். 350,4). முதைச் சுவற் கவித்த ஈரிலை நெடுந்தோட்டுக் கலைக்கதிர் வரகு (அகம். 393:4,5; நற். 121:2). கார்வாய்த் தொழிந்த ஈர்வாய்ப் புற்றம் (அகம். 394:4). இருள் திணிந்தன்ன ஈர்ந்தண் கொழுநிழல் (குறு. 123:1). ஐயவி யணிந்த நெய்யாட்டு ஈரணி (நற்.40:7). ஈர்ங்குரல் (நற். 114:9). நீரழிமருங்கின் ஈரயிர் தோன்ற (நற். 241:3).இலையில் பிடவம் ஈர்மலர் அரும்ப (நற். 242:1). ஈர்மண செய்கைநீர்படு பசுங்கலம் (நற். 308: 9). மாரிப்பித்திகத்து ஈரிதழ் அலரி (நற். 314:3). ஈர் அளைப்புற்றம் (நற். 336:9). ஈர்ங்கரை (நற். 341:8). ஈர்மணி இன்குரல் (நற். 364.8). ஈர்ந்தண் கண்ணியன் (நற். 376:6). மாவின் ஈர்ந்தண் பெருவடு (ஐங். 213:1,2). ஈர் நறுங் கையள் (ஐங். 259:4). ஈர்நறும் கமழ கடாம் (கலி. 21:2). ஈர்ஞ்சடை அந்தணன் (கலி. 38:1). ஈர்ந்தண் ஆடை (கலி. 52:11). ஈர்ஞ்சாந்து (பரி. 6:19). இருணமை யீருண்கண் (பரி. 8:59). ஈரமைவெட்சி இதழ்புனை கோதையர் (பரி. 22:22).

2. நெய்ப்பு. ஒடுங்கு ஈரோதி (பதி. 14:15;74:17;81:28; அகம. 86:31;160:1; குறு. 70:1). இணையீரோதி (முரு. 20; ஐங். 269:4). மையீரோதி (அகம். 48:18; 173:5; 230: 5;279:17;386:10;388:10; குறு. 199:5; நற். 29:11;57:10; கலி. 150:23). துணையீரோதி (அகம். 107:22; 338:8).

மின் ஈரோதி (அகம். 356:20). பின் ஈரோதி (நற். 227:4). ஈன்றவள் திதலைபோல் ஈர்பெய்யும் தளிர் (கலி. 32:7). வயங்கீரோதி (கலி. 36:23).

3. இரண்டு. ஈர்-இரண்டு – ஐம்பதின்மர் (நூற்றுவர். துரியோதனன் முதலியோர்) (புறம். 2:15, பதி. 14:5; பெரு. 415). இறைவனின் வாக்கைவிட்டு நீங்காமல் அற மொன்றை விரும்பிய ஈர் இரண்டின் (நான்கின்) கூறு கொணடதாய் ஆறங்கத்தாலும் உணரப்பட்டது வேதம் (புறம். 166:2–4). ஈரறிவு (இம்மை மறுமைபற்றிய இரண்டறிவு) (பதி. 74:18). சுடுபொன்னால் வளைத்த ஈரமை (இரண்டமைந்த) சுற்றொடு பொடியழலினால் நிறம் உண்டாகப்பட்ட கிண்கிணி (கலி. 85:1,2). வாளும் மழுவும் நெருங்கக் கட்டி ஈரிடை (இரண்டு புறத்திலும்) தங்கின பவழத்தாற் செய்த ஆனேற்றி னையுடைய பூண்கள் குழந்தைக்கு அணியப்பட்டன (கலி. 85:8–11). ஈரெண (பதினாறு) தீங்கதிர்ப் பிறை வளர் நிறைமதி (பரி. 3:51).

4. பேன்முட்டை. இழை சூழ்ந்த பல தையலின் இடையிலுள்ள ஓட்டைகளைப் பற்றிப் பிணிப்பு விடாது கிடக்கும் ஈர்-பேன் முட்டை-குழாத்தொடு தங்கிய பேனை ஒரு பகையாக ஓடைகிழார் குறிப்பிட்டுள்ளார். (புறம். 136:2-5). ஈரும் பேனும் இருந்திறை கூடி வேர்வையொடு நனைந்து வேற் றிழையால் தைக்கப்பட்ட கிழிந்த ஆடையை நீக் கிப் பொருநனுக்கு அரவுரியன்ன ஆடையைக் கரி காலன் நலகினான் (பொரு.79-83). உழவர் பிள்ளை களின் தலை ஈருடை இருந்தலை எனக் குறிக்கப் பட்டுள்ளது (பெரு. 219).

5. பிளத்தல். ஈர் முள்வேலி (அகம். 297:12). கோடீர் இலங்குவளை (குறு. 11:1; 31:5;365:1). வாள் ஈர்வடி (நற். 133:2). கோடீரெல்வளை (ஐங். 196:1). இரும்பு ஈர் வடி ஒத்து விளங்கும் கண் (பரி. 7:58).

6. பசுமை. பலவாகக் கிளைத்த ஈர் - பசிய - எள் இளங்காய் முதிர்ந்து ஒரு பிடியில் ஏழுகாயாக நெய் மிக்கனவாய் வளர்ந்தன (மலை. 105,106). ஈர்ங் கழை (மலை. 207; ஐங். 280:2).

7. பெருமை (பெரிய). எண்ணியல் முற்றி ஈரறிவு - பெரிய அறிவு - புரிந்து (பதி. 74:18) ஈரறிவு - பெரிய அறிவு-எனினும் அமையும் (பதி. பழைய உரை). தச்சன் உளியாலே ஈரிலைத் தொழில் (பெரிய இலை வேலைப்பாட்டினை) அமைத்துக் கட்டில் செய்தான் (நெடு. 119). இருப்பைப்பூவைக் கரடியின் ஈரினம் (பெரிய கூட்டம்) கவர்ந்தது (அகம். 267:7,8; 275:11,12).

8. இழுத்தல். நிலன் ஈர் - இழுத்தல் - பொருந்திய தடக்கை அண்ணல் யானை (நற். 194:4).

9. அன்பு. ஈர்ம்பிணவு – அன்புடைய பிணாவை, புணர்ந்த செந்நாய் ஏற்றை மறியுடைய மான் பிணையை வேட்டம் கொள்ளாது செல்லும் சுர நெறி (ஐங். 354:1-3).

**ஈர்க்கு** – இலைநரம்பு. பாடினி ஈர்க்கு-இலை நரம்பு - இடைபோகாத அழகிய இளைய வளவிய முலை யுடையவள் (பொரு. 36,47). ஆய்தொடிமகளிர் தளிர்ப் புறத்து ஈர்க்குப்போல் அரும்பிய திதலையுடையவர் (மது. 708,712).

**ஈர்ஞ்சடை அந்தணன்** - கங்கையால் ஈரமான சடையை யுடைய அந்தணன் (சிவன்). ஈர்ஞ்சடை அந்தணன் -சிவன்–உமையுடன் வீற்றிருந்த கயிலைமலையை ஐயிரு தலையின் அரக்கர் கோமான் (இராவணன்) பெயர்த்தல் (கலி. 38:1-5).

**ஈர்ந்தை** - ஓரூர். தோயன் மாறனுக் குரியதாகக் கூறப் பட்டுள்ளது (புறம். 180:7). ஈர்ந்தூர் எனவும் குறிப் பிடப்பெறும் (புறம். 180. துறைக்குறிப்பு). இப்பொழுது கொங்கு நாட்டில் ஈஞ்சூர் என வழங்குகிறது (ஔவை. து. புறம். 180-ஆம் பாடலின் முற்குறிப்பு).

**ஈர்ந்தையோன்** - தோயன் மாறன். ஈர்ந்தையூர் கிழான் தோயன் மாறன் ஈர்ந்தையோன் எனக் குறிப் பிடப்பட்டுள்ளான் (புறம். 180:7). ஈர்நதூர்கிழான் தோயன் மாறன் காண்க.

**ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறன்** - சிறூர்த்தலைவன். இவனைக் கோயமான் எனக் குறிப்பிடுவர் ஔவை. து. இவன் நிரம்பக் கொடுக்கும் செல்வன் அல்ல னாயினும் இல்லையென மறுக்கும் சிறுமையுடைய வன் அல்லன். மருந்துகொள் மரம்போலப் போரில் பொருது வடுநிறைந்த யாக்கையன். நாம் அவனை இரந்தால் தன்னூர்க் கொல்லனிடம் நம் உணணா மருங்குலைக் காட்டி வேல் வடித்துககொடு; போர் செய்து பொருளீட்டி வந்து இவர் பசிதீர்க்க வேண் டும் எனக் கூறி இரப்பான் என்று கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் இவனைப் பாடியுள்ளார் (புறம். 180).

**ஈர்ம்படை** – நீருக்காகத் தோண்டும் குந்தாலி முதலிய கருவி. பருக்கைக் கற்களையுடைய மேட்டுநிலத்தில் நீரை வெளிப்படுத்தக் கொங்கர் ஈர்ம்படை - குந் தாலி முதலிய கருவிகளை - கொண்டிருந்தனர் (பதி 77:10).

**ஈரணி** – 1. குளிர்ந்த அணிகலன். வெண்சிறு கடுகை அப்பி எணணெய் தேய்த்துக் குளித்ததால் ஈர ணியை - ஈரமான அணியை-உடையளாய்த் தலைவி யிருந்தாள் (நற். 40:7-9).

2. ஈரமான ஆடை. அம்பாவாடலையுடைய கன்னியர்

வேதியர் வளர்த்த வேள்வித் தீயில் தம் ஈர ணியை - ஈரமான ஆடையை - புலர்த்தினர் (பரி. 11:81-86).

3. **புனலாடற்குரிய அணி.** வதுவையின் பொருட்டுத் தலைவனிடம் பெற்ற ஈரணியோடு - புனலாடற் குரிய அணியோடு - பரத்தை அவனுடன் காவிரி யில் புனலாடினாள் (அகம். 166:13-15). தலைவன பரத்தையரொடு ஈரணிகளுடன் கலந்து புது நீரின கண புடைபெயர்ந்தாடினான் (அகம. 266:2-6). மைந் தரும் மகளிரும் ஈரணி அணிந்து புனலாட்டை விரும்பியாடினர் (பரி. 6:27,28). விரும்பிய ஈரணியை யுடைய மெய்யீரந தீர வெய்தாக நுகர்தற்குச் சுரும் பார்க்கும நறவை ஒருததி ஏந்தினாள் (பரி. 7:61,62). மைநதரும் மகளிரும ஈரணியுடன மதுரையிலிருந்து புறபபட்டனர்; ஈரணிக் கேற்ற கள, அணிகலம், பூநதுகில் முதலிய ஏந்திப் பலர் பின தொடர்ந்த னர் (பரி. 22:18,22).

4. **இருவகையணி.** இரண்டு உருவாக, ஈரணி - இரு வகையணி - பெற்ற எழிலதகையன சிவபெருமான் (பதி. க. வா. 7,6). தலைவன பரத்தையின் தலைக் கோதையைப் பூணடு ஈரணி சிதையாமல் (ஆடவர் பெணடிர் ஆகிய இருவரது அணியும கெடாமல) தலைவியின் முன் வந்து நினறான் (கலி. 66:15,16).

5. **இரண்டழகு.** குதிரைமுகமும் மக்களுட லுமாகிய ஈரணிக்கு - இரணடு அழகுக்கு - பொருநதிய சூர பன்மாவைச செவ்வேலையுடைய முருகன கொன் றான (கலி. 93:25,26).

6. **பெரிய அணிகலன்.** வதுவையின் பொருட்டுத் தலைவனிடம் பெற்ற ஈரணியோடு - பெரிய அணி கலனகளோடு - பரத்தை அவனுடன காவிரியில் புனலாடினாள் (அகம். 166:13,15).

ஈரம் - 1. **நீராலாய நெகிழ்ச்சி.** கார்காலதது மழையால் மிகுந்த பெரிய செவ்வியையுடைய ஈரத்தில் சிவநத மேட்டு நிலத்தில புழுதி மயங்கப் பல சால்பட உழுது வரகு விளைததனர் (புறம. 120:1-3,9). ஈரச் செவவியில் உழுதற்கு உதவி செய்தனவாயினும் பல எருதுகளுள்ளும் உழவன் ஆராய்ந்து நல்ல எரு துகளைத தேர்ந்து கொள்வான (புறம. 289:1-3). ஈரச செருக்களத்தில் 'தேரை ஏராகக் கொண்டு படைச்சாலின்கண வேலையும கணையமரத்தையும் விதைத்ததாக உருவகம் செயயப்பட்டுள்ளது (புறம. 369:10-13). பகைமனனர் அரணகளைக கடநது செனறு,வீழ்நத வீரா உடற்குருதி தோயநத ஈரமான போர்க்களததைக கழுதை ஏாபூட்டி உழுது, வெள் வரகும் கொளளும விததிய உழவனாக அதியமான் பொகுட்டெழினியை ஔவையார் பாடியுள்ளார் (புறம். 392:6-11). ஈரவெண் மணலிடத்தே கொக்கின் கூட்டத்துடன் நாரையும் கயல் மீன்களைக் கவர்ந் தன (நெடு. 16-18). எண்ணெய் நீவியதால் சுரிந்து வளர்நது கருநிறம் அமையப் பெற்ற குஞ்சியில் மயிர்ச் சந்தனம் பூசி அந்த ஈரம் புலரத் தலைவன் விரலால் அலைத்துப் பிணிப்பு விடுத்தான் (குறி. 107-109). மேலகீழாகப் புழுதி மாறுமாறு உழப்பெற்ற செம்மண ஈரததில் படைச்சாலில விதைத்த விதை முளைத்தது (அகம். 194:2-5). வம்பலர் தங்கும் ஈரமில் வெஞ்சுரததே தலைவர் சென்றார் (அகம். 277:11,12). கானவன் சுட்டழித்த புனத்தில கரிந்த மேற்புறத் தைக் கழுவிய மழையினால் உணடான ஈரத்து விதைக்கபபட்ட தினையை மகளிர் காததனர் (அகம். 368:1-4). பாலைவழியில தெறுகதிரால் நீர்நிலைகள் ஈரமினறிக் காயநது நீரற்றுப் போயின (அகம். 395:5-7). ஈரம்பட்ட செவ்வியையுடைய புனத்தில் ஓரேருழவன் விரைந்து ஏருழுதான் (குறு. 131:4-6). களிறு நினறு செனற நீரலலாத ஈரதது (சிறுநீர் கழித்த ஈரமாய இடத்து) பால்வறறிய தோல முலை யுடைய வயிற்றைப் பொருததிப் பசிவருத்தச் செந் நாய் முடங்கிக் கிடந்தது (நற. 103:4-6). இருங்கழி பொருத ஈர வெண்மணலில் படர்ந்த அடுப்ப மலரை மகளிர் கூநதலிற் சூடும் மாலைக்காகப் பறித்தனர் (நற். 145:1-3). நெல்லறுதத வயலில் மறுமுறை உழுத ஈரச் சேற்றில கடகப பெட்டியில் விதையெடுத்துச் சென்று விதைத்தனர் (நற். 210: 1-3). தலைவன தோலிற் கிடந்த புண்கள் எல்லாம் புலராமல் ஈரமாயக் கிடந்தன எனத் தலைவி கூறி னாள் (கலி. 95:17,18). மகளிர் ஈரமாலை இயலணி யுடையவர் (பரி. 17:36).

2. **அன்பு.** அளத்தற்கரிய அறிவும் ஈரமும் - அன்பும்- பெருங்கண்ணோட்டமு முடையவன் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை (புறம். 20:5,6). இளஞ்சேரலிரும்பொறை ஈரமுடைமையின் நீரை ஒத்தவன் (பதி. 90:14). ஈர நனமொழி இரவ லர்க்கு ஈந்தவன் காரி (சிறு. 93-95). தலைவன் தலைவியின நேரிறை முன்கை பற்றி நுமர்தர நாடறி நன்மணம செயவோம், கலங்காதீர் என ஈர நன்மொழி கூறினன (குறி. 231-234). 'சிறிதும் ஈரம் சேரா இயல்பினை யுடைய பொய்ம்மொழி பேசும் சேரியம் பெணடிரின அலருக்கு ஆளாகாமல் உய்வேம்' எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 65:2-4). ஆணகுருவி மழையில் நனைநததைக் கண்டு பேடை அருளி நெடிது நினைந்து ஈர நெஞ் சொடு தன்னிடம் அழைத்தது (நற். 181:6-8). நெடு மானஞ்சி ஈரநெஞ்சத்துடன் நாளோலக்கத்தி லிருந்து புகழ்விளங்க இரவலர்க்குத் தேர் வழங்கி னான் (நற். 381:7-9). இருபிறப்பினையும் அப்பிறப்

பான் வந்த இருபெயரினையும் ஈரநெஞ்சத்தையும் புகழையு முடையவர் அந்தணர் (பரி. 14:27,28).

3. அருள். அன்புடை யுள்ளத்து ஈரம் - அருள் - பொருந்தி ஆனறோர் செலலும் வழியில வாழாச் சான்றோன் தலைவன எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 233:7-9). மனததிற்கு இருளைத் தருகின்ற பார்வை இடையினறி ஈரததின இயன்ற அருட்பார்வை சிறிது நீங்கினும்வருத்தங் கொணடு நெஞ்சழிபவன் தலைவி (கலி.10:18,19). தலைவனின ஈரத்துள்-அருளிடத்தே-இன்ன கொடியவை தோன றின் நிழற் கயத்துள் நீருட் குவளை வெநதது போலும (கலி. 41:30,31). தலைவி தன் கொழு நனைக் குறிப்பிடும்போது மகனைச் சுட்டிக்காட்டி ஈரமிலாத இவன் தநதை எனக் கூறுதல (கலி. 84:8). மாலைப் பொழுதை நோககி, 'ஈரமில காதலர் நீங்கு அருளாத காலம பாாத்து எள்ளி நகையாட நீ இபபொழுது வந்தாயோ' எனத் துன்புற்ற தலைவி வினவினாள (கலி. 120:13-15). ஈரமிலலாத கேளவன் உறுத்திய காமத்தீ நீருட்புகினும் சுடும் (கலி. 144:61,62).

**ஈரறிவு** – 1. இம்மை மறுமை பற்றிய அறிவு. வேளாவிக் கோமான பதுமன தேவியின் கருவில பத்துத் திங் களும் நிரமபி, ஈரறிவும- இம்மை மறுமை யறிவும்- சாலபும் செம்மையும் ஆடசித்திறனும் வாய்நதவ னாய் இளஞ்சேரலிருமபொறை தோன்றினான் (பதி. 74.17-21).

2. பெரிய அறிவு. ஈரறிவு - பெரிய அறிவு - புரிந்து என்பதற்குப பெரிய அறிவு எனினும அமையும என்று பதிற்றுபபத்தின் பழைய உரை கூறும் (பதி. 74:18).

**ஈருயிர்ப் பிணவு** – கருவுற்றிருக்கும் பிணா. ஈருயிர்ப் பிணவின – கருவுற்றிருக்கும பிணாவின் – வேட்கை மிக்க பசியினை நீக்க எழுந்த ஆண்புலி, தான கொனற ஆண பன்றியை, அரவு உமிழநத மணி விளககில இழுத்துச் செல்லும் (அகம். 72:13-15).

**ஈருள்** - ஈரல். நீரால் நனைந்த ஈங்கையின் தளிர்கள இருபிளவாகிய ஈருள் - ஈரல - போல ஈரமுடையன வாய அசைந்தன (அகம். 294:6-8).

**ஈரெழுவேளிர்** - பதினான்குவேளிர். கழுவுள் என்பானுக் குரிய காமூரை ஈரெழு வேளிரும் - பதினானகு வேளிரும் - ஒருங்கு கூடித தாக்கினர் (அகம. 135: 12,13).

**ஈரைம்பதின்மர்** – நூற்றுவர். பாண்டவர் ஐவருடன் சினந்து ஈரைம்பதின்மரும் - துரியோதனன முதலிய நூறறுவரும் - பொருது களததே படுந்துணையும் பெருஞ்சோறாகிய மிக்க உணவை இருபடைக்கும் சேரமான் பெருஞ்சோற்றுதியஞ் சேரலாதன் வழங் கினான் (புறம். 2:13-16). போராற்றல் மிகுநத ஈரைம் பதின்மருடன துப்புத்துறை போயவன அக்குரன் (பதி. 14:5-7). (துரியோதனன் முதலிய) ஈரைம்பதின மரும் பொருதுகளத்தே படும்படி வெற்றிகொண்ட ஐவர் (தருமன முதலியவா) போலத் தன்னை எதிாத்த பலரையும தொணடைமான் இளந்திரையன வென றான (பெரு. 415-420).

**ஈவார்** - ஈபவர். கூடலில் உளளவர் ஈவாரை - ஈபவரை - கொணடாடி ஏற்பாரைப் பார்தது உவபபா (பரி. தி. 11:1,2).

**ஈவு** - ஈதல். நுகர்தற் கினிதாகிய தாளிப்பை யுடைய அடிசிலைப பிறர்க்கு ஈவு - ஈதல - இனறித் தாம் மட்டும் உணடு வாழும் புகழ்பெறாத அரசர் கோயில் சிறப்பற்றதாகும் (புறம. 127:7-10).

**ஈவோர்** – கொடுப்போர். வறுமையுற்ற எமக்கு ஒன்றை ஈவோர் - கொடுப்போர் - பயன கருதாது பிறர்க்கு ஒனறை ஈவோராவர். எம்மை ஒழிநத பிறர்க்கு ஈவோர் பயன கருதி ஈதலால தமககே ஈபவரா வர் எனத துறையூர் ஓடைகிழார் கூறுவா (புறம். 136:20, 21). 'இரபபோர் இருததலையும் இரப் போர்க்கு ஈவோர் இருத்தலையும காணபாயாக' எனக குமணன்பால யானைபபரிசில் பெறறுவநத பெருஞ்சித்திரனார் அதனை இளவெளிமானின் காவல மரத்திற் பிணிததுப பாடினார் (புறம். 162: 3, 4). ஈவோர் அரியராகிய இவவுலகததினகண் விரும்பியவர் விரும்பியவாறே வாழுமாறு அளிக் கும் பிட்டஙகொறறனின உளளஙகாலில் முளைளும் உறாதொழிக எனக் காவிரிபபூம் பட்டினததுக் காரிக கணணனார் வாழததினார் (புறம. 171: 12-15).

**ஈழத்துப்பூதன் தேவன்** – புலவர். ஈழததுப பூதன் தேவ னார் காணக.

**ஈழத்துப் பூதன் தேவனார்** - புலவர். இவர் ஈழததிலி ருநது தமிழகம் போநத புலவராதலால் ஈழததுப பூதன தேவனார் எனபபெற்றாா. தேவன எனபது இவர் இயற்பெயர். பூதன எனபது இவரின் தந்தை பெயர். இவர் பாடியனவாக அகநானூறறில மூனறு பாடலும் (88, 231, 307) நற்றிணையில் ஒனறும் (366) குறுநதொகையில மூனறும் (189, 343, 360) ஆக ஏழு பாடலகள் தொகை நூலகளிற் காணப்படுகினறன. நற்றிணையில வரும் பாலைத் திணைப் பாடலில பொருளவலித்த நெஞ்சிறகுத தலைவன உலகியல் கூறுகிறான. அகநானூற்றுப பாடலகள் மூன்றும் தோழி கூறறாக அமைநதுள்

ளன. குறுந்தொகைப் பாடல்களுள் 189 - ஆம் பாடல் தலைமகனை பாகற்கு உரைப்பதாகவும் 343 - ஆம் பாடல் கிழத்தியை உடன்போக்கு நயக்கத் தோழி சொல்லியதாகவும் 360 - ஆம் பாடல் வெறியஞ்சிய தோழிக்குத் தலைவி சிறைப்புறமாகச் சொல்லியதாகவும் அமைந்துள்ளன. [ஈழத்துப்பூதன் தேவன், ஈழத்துப் பூதன் தேவனார், மதுரை ஈழத்துப் பூதன் தேவன், மதுரை ஈழத்துப் பூதன் தேவனார் ஆகிய நான்கு பெயர்களும் ஒருவரையே குறிக்கும். சங்க இலக்கியம் பக். 151-154 - வையாபுரிப் பிள்ளை; நற்றிணை, பாடினோர் வரலாறு, பி. நா.]

**ஈழம்** - இலங்கை. கடல், மலை, ஆறு, நிலம் இவற்றில் விளைந்த பொருள்களும் ஈழத்துணவும் - இலங்கை உணவும் - கடாரம், சீனம் முதலிய இடங்களில் இருந்து வந்த பொருள்களும் புகாரின் நடுவிடத்தும் கரையிடத்தும் நிறைந்திருந்தன (பட். 185-195).

**ஈற்றா** - கன்றை ஈன்ற பசு. தன் கன்றுக்குப் பால் சுரந்து கொடுக்க ஈற்றா - கன்றை ஈன்ற பசு - விரும்பி நோக்குமாறு போலக் கரிகாலன் பொருநரை விரும்பி நோக்கி வறுமை இன்றாம்படி பேணிக்காப்பான் எனப் பரிசு பெற்ற பொருநன் கூறல் (பொரு. 148-152). மனையகத்து முளைத்துப் படர்ந்த வயலைக் கொடியை ஈற்றா சென்று தின்றதைக் கண்டவுடன் தான் வைத்து விளையாடிய பந்தை நிலத்தில் எறிந்து, பாவையை நீக்கி, நேற்று அழுத இளம் பருவத்தினளாகிய தலைவி இன்று தலைவனுடன் சென்றனளே என நற்றாய் புலம்பல் (நற். 179:1-3,8,9). தன் கன்றை நெருங்கியவர் மீது சினமுடன் ஈற்றா சென்றாற் போல நீ என் மேலே வந்தது காணில் யாய் தறுகண்மையுடன் வந்து உன்னைச் சீறுவாள் எனக் கூறித் தலைவி தலைவனை விலக்கினாள் (கலி. 116:8,9).

**ஈற்று** - ஈனுதல். கட்டில் பின்னுவோன், தன் மனைவி ஈற்று - ஈனுதல் - காலம் பொருந்தினளாக வினை முடித்து ஊர் சென்று அவட்கு உதவ வேண்டி ஊசி கொண்டு வாரைச் செலுத்தும் விரைவு, போரவைக் கோப்பெருநற்கிள்ளி நிகழ்த்திய மற்போர் விரைவுக்கு உவமை (புறம். 82).

**ஈன்** - இவ்வுலகம். புதல்வன் நடுவே விளங்கத் தலைவனும் தலைவியும் கிடந்த கிடக்கை இன்பம், ஈன் - இவ்வுலகத்தும் - வானுலகத்தும் பெறுதற்கரியது எனக் கடிமனைச் சென்று வந்த செவிலி நற்றாய்க்குக் கூறல் (ஐங். 401).

**ஈன்றவள்** - மகப்பெற்றவள், வயவு நோயால் வருந்தும் தன்னைக் கண்டு வருந்திய சுற்றத்தார் மகிழுமாறு ஈன்றவள் - மகப் பெற்றவள் - அப்புதல்வனைக் கொண்டு குடியெல்லாம் பாதுகாத்தல், தனக்கு இடையில் வந்த நோயைக் கண்டு வருந்திய உழவர் மகிழுமாறு உலகு தான் ஈன்ற உணவுகொண்டு குடிமக்களைக் காத்தலுக்கு உவமை (கலி. 29:1-4). நெய்ப்பினை யுடைய மாந்தளிர்க்கு ஈன்றவள் திதலை உவமை (கலி. 32:7). ஈன்றாள், ஈன்றோள் காண்க.

**ஈன்றாள்** - ஈன்றவள். பொய்ச்சூள் உரைக்கப் புகும் தலைவனை நோக்கி, 'சூள் உரைக்குமுன் இது கேள். இவள் ஈன்றாட்கு - ஈன்றவளுக்கு - ஒரு பெண்' எனத் தோழி கூறத் 'தலைவி ஈன்றாட்கு அருமையானவள் என்பதை நீ கூறுவதற்குமுன் அறிந்திலேன்' என்றான் தலைவன் (பரி. 8:58-60). ஈன்றவள், ஈன்றோள் காண்க.

**ஈன்றோள்** - ஈன்றவள். அதியமான் எழினி பொருது வீழ்ந்தபோது ஈன்றோள் - ஈன்றவள் - கைவிட்ட குழந்தைபோல அவன் கிளை இடந்தோறும் மிகவும் கலங்கியது (புறம். 230:7,8). ஈன்றவள், ஈன்றாள் காண்க.

**ஈனல்** - ஈனுதல். கொல்லைக்கண் ஐவன நெல்லுடன் விதைக்கப் பெற்ற, கோடை மிகுதியால் ஈனல் - ஈனுதல் - பொருந்தாத தினை நந்துமாறு மழை துளியைச் சொரிந்தது (புறம். 159:15-19). வம்பலர் செல்ல அஞ்சும் நீளிடையில் ஈனல் சுரடிகளின் பெருங்கூட்டம் இருப்பைப் பூக்களைக் கவர்ந்து உண்ணும் (அகம். 95:6-9). வெள்ளிய இருப்பைப் பூக்களில் ஈனல் எண்குகளின் (கரடிகளின்) கூட்டம் உண்ட மிச்சிலை எயின மகளிர் மூங்கிற் குழாயில் திரட்டிச் சென்று தெருக்கள் தோறும் விற்பர் (அகம். 331:1-7).

**ஈனாத் தாயர்** - பெறாத தாயர் (செவிலித்தாயர்). மணி கனிழைத்த பொற்கலத்தில் பாலொடு தேன் கலந்து, ஈனாத் தாயர் - செவிலித்தாயர் - தலைவிக்கு ஊட்டுவர் (அகம். 105:4-6).

**ஈனாப் பாவை** - தான் பெறாத பாவை. இது கோரைப் புல்லால் செய்யப் பெற்று மகளிரால் மகவென முறை பாராட்டப் பெறுவது. மெல்லம் புலம்பன் அன்றியும் தலைவி ஈனாப்பாவை - தான் பெறாத பாவை - வைத்து விளையாடுதற்குக் கழிக்கரைச் சோலைக்குச் செல்லத் துணிந்தாள் என்று கூறித் தோழி தலைவற்கு வாயில் மறுத்தாள் (நற். 127:6-9).

**ஈனா வேண்மான்** - பேய்மகள். தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் செய்த மறக்கள

வேள்வியில் ஈனா வேண்மாள் - பேய் மகள் – வன்னித் துடுப்பால் துழாவி நிணச்சோறு சமைத்தாள் (புறம். 372:7-9).

**ஈனில்-** ஈனுதற்குரிய இடம். துள்ளுநடை யுடைய ஊர்க் குருவிச் சேவல் சூல் முதிர்ந்த தன்பேடைக்குக் கரும்பின் வெண்பூவைக் கோதிக் கொணர்ந்து ஈனில்-ஈனுதற்குரிய இடம்-அமைக்கும் (குறு. 85:2–5).

# உ

**உக்கம்-** 1. இடை. முருகன் பன்னிரு கைகளில் ஒன்றை உக்கத்தில்-இடையில்-வைத்திருந்தான் (முரு. 108).

2. தலை. உக்கத்திற்கு-தலைக்கு-மேல் நடு உயர்ந்து, வாள் போன்ற வாயையுடைய கொக்கை உரித்தாற் போன்ற வளைந்த மடிப்பை யுடையவளே எனக் கூனியைக் குறளன் விளித்தான் (கலி. 94; 17,18).

**உக்கரை -** மேலுலகம். இவ்வுலகத்தினின்றும் உயர்ந்து உக்கரை-மேலுலகம்-அடைதற்கு அறவினையாகிய துணையே தெப்பமாகும் (புறம். 357,6,9).

**உக்கிரப்பெருவழுதி -** பாண்டியமன்னன். கடைச்சங்கப் புலவர் நாற்பத் தொன்பதின்மருள் ஒருவன் குறிஞ்சியையும் மருதத்தையும் புனைந்து பாடிய இவன் அகநானூற்றைத் தொகுப்பித்தோனா வான். வேங்கை மார்பனை வென்று அவனுக்குரிய கானப்பேரெயில் (காளையார் கோயில்) என்னும் ஊரைக் கைப்பற்றியமையின் கானப்பேரெயில் கடந்த பாண்டியன் உக்கிரப் பெருவழுதியென இவன் சிறப்பிக்கப் பெற்றான் (புறம். 21). மாவண் கோவுடனும் இராசசூய யாகஞ் செய்த பெருநற்கிள்ளியுடனும் நட்புடைய இவனை (புறம். 367, அடிக்குறிப்பு) ஆவூர் மூலங்கிழாரும் ஔவையாரும் புகழ்ந்து பாடியுள்ளனர் (புறம். 21,367). பல்லியடிக்குஞ் சகுனத்தைப் பன்றி ஆராயுமென இம் மன்னன் கூறியுள்ளது பாராட்டற்குரியது (நற். 68). ஆற்றாமை வாயிலாகப் புக்குக் கூடிய தலைமகனின் நீக்கத்துத் தலைவி இவ்வாறு நிகழ்ந்ததென்று கூறியதாக இவன் கூறும் செய்தி யாவரையும் மகிழ்விக்கும் (அகம். 26). இவன் பாடியனவாக மேற்காட்டிய இரண்டு பாடல்களும் திருவள்ளுவமாலையில் ஒன்றுமாக மூன்று பாடல்கள் கிடைத்துள்ளன.

**உகவை – உகத்தல்** (உவகை). சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும் சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற் கிள்ளியும் பொருது வீழ்ந்த களத்துப் பெறும் பரிசில் இன்மையால் இரப்போர் உகவை -உகத்தல்- இன்றி இரங்கினர் (புறம். 368:11,12).

**உகாஅ -** ஒருவகைமரம். பாலை நிலத்திலுள்ள உகாஅ மரத்தின் காய்கள் குயிலின் கண்போன்றிருக்கும்; கனிகள் மணிக்காசு போன்ற நிறமுடையவாயிருக்கும் (அகம். 293:6-8). உகாஅய் காண்க.

**உகாஅய் -** ஒருவகை மரம். புறாவின் முதுகைப் போன்ற புலலிய அடியையுடைய உகாஅய் மரத்தின் பழம் மணிக்காசு போன்றிருக்கும் (குறு. 274:1,2). இனிய துணையைப் பிரிந்த மலையெருது, மலைப் பசுவைப் பார்த்துப் பெருமூச்சுவிட்டுப் புல்லிய அடியை யுடைய உகாஅய மரத்தின் புள்ளிகளை உடைய நிழலில் தங்கும் (குறு. 363:1–4). உகாஅய் மரத்தின் காய் மிளகின் தோற்றத்தினையும் சுவையினையும் உடையது (நற். 66:1,2). உகாஅ காண்க.

**உகாய்க்குடி கிழார் – புலவர்.** இவர் உகாய்க்குடி என்னும் ஊரிற் பிறந்தவர்; குறுந்தொகையின் 63-ஆம் பாடல் இவர் பாடியது. 'இரவலர்க்குக் கொடுத்தலும் இன்பம் துய்த்தலும் வறியவர்க்கில்லை' என்று இவர் கூறியதில் கொடுத்தலை முன்னும் துய்த்தலைப் பின்னும் கூறிய அருமை பாராட்டுதற்குரியது.

**உகிர் -** நகம். வளைந்த சிறகினையும் கூரிய உகிரையும்-நகத்தினையும்-உடைய பருந்தின் தாக்குதலுக்குத் தப்பத் தன்னிடம் வந்த புறாவைச் சோழன் காத்தான் (புறம். 43:4-8). இடைச்சி குடம் நிறைய வுள்ள பாலில் உகிரால் சிலுலுறை (சிலமோர்த்துளி) தெளித்தாள் (புறம். 276:4,5). கூரிய உகிர் உடையது ஆமை (புறம். 387:1; அகம். 256.2). சோற்றுப் பருக்கை கொக்கின் உகிர்போன்ற நீட்சியை யுடையது (புறம். 395:36,398:25). கூரிய நீண்ட உகிருடைய அரிமான் வழங்கும் சாரலில் உள்ள பிற விலங்குகளின் கூட்டம் அச்சத்தால் நெஞ்சு அதிரும் (பதி. 12:4-6). பேய்மகள் குருதி தோய்ந்த கூரிய உகிரோடு கூடிய விரலால், இறந்த அசுரரின் முகத்திலுள்ள கண்களைத் தோண்டி உண்பாள் (முரு. 51-53). பாடினியின் வளளுகிர்க்குக் கிளிவாய் உவமை (பொரு. 34). கிணைமகள் வள்ளுகிரால் பறித்த வேளைக் கீரையைச் சமைத்துச் சுற்றத்தாருடன் உண்டாள் (சிறு. 136-139). நீலமணி போன்ற சிச்சிலிப்பறவை நீரில் முழுகிக் கயல்மீனை எடுத்தபோது அதன் வள்ளுகிரால் தாமரையிலை கிழிந்தது (சிறு. 181,182). பிணங்களை உதைத்த யானையின் பணைத்தாளில் உள்ள சிவந்த பெருகிர்க்கு நிணன் உண்டு சிரிக்கும் பேய் மகளின் பல் உவமை (சிறு. 197-200). மூங்கில் முளைபோலும் ஒளியுடைத்தாகிய வள்ளுகிரையுடைய நாய், தன

மேலொன்று நெருங்குந்தோறும் வெகுளும் செயல் வீரரின் போர்ச்செயலுக்கு உவமை (குறி. 130,131). கூர் உகிரையும் வளைந்த காலையும் உடைய ஆணநாய் ஆட்டுக கிடாயுடன் பணடசாலையின் முறறத்தில் துள்ளித்திரியும் (பட். 140,141). புலிக குட்டி கூரிய உகிரினையும் வளைந்த வரிகளையும் உடையது (பட். 220,221). பகைமன்னரின அரண கதவுகளை அழித்த மருப்பினையும் முடியுடைக் கருந்தலைகளை உருட்டிய முன்காலினையும் உகிர் பொருந்திய அடிகளையும் உடையது திருமாவள வன் யானை (பட். 229-231). கரடி, தொங்கும்தோலு றைக்குள் பொருந்தியிருக்கும் வள்ளுகிரை உடை யது (அகம். 8:2,3). புலியின் உகிர்க்கு முள்முருக்கை யின செம்முகை உவமை (அகம. 99:1,2). புலிக்குட்டி பிறக்கும்போது அதன வளைந்த உகிர் தசையின் மறைப்புக்குள இருக்கும் (அகம். 147:3). பிடியானை கவிந்த உகிரினையுடையது (அகம.229:4; நற். 107:1,2). முசுவினம் கழைகளில பாய்தலால் கழைநெல் வெப்பம் மிகுந்த பாறையில் விழுந்து பொரியும் போது எழும் ஓசைக்கு உகிர்நெரி ஓசை உவமை (அகம. 267:9-12). மகளிரின் செம்பஞ்சிக் குழம்பு ஊட்டிய உகிர்போலச் செம்முருக்கையின் அரும்பு இருக்கும் (அகம. 317:4, 5). செம்முருக்கின் அரும்பு போன்ற குருதி தோய்ந்த வள்ளுகிர் உடையது பெண்புலி (அகம். 362:5). வளைநத வாயையும் கூரிய உகிரையும் உடைய சேவற் பருந்து ஊன் உண்ணுதற்குத் தன கிளையை வரச்செய்யும் குர லால் அழைக்கும் (அகம். 363:13, 14). மாலைப் பொழுதில் அத்தத்தில உள்ள நடுகல்லை ஆளென்று கருதி உதைத்த காட்டியானையின் சிதைந்த உகிர் பனை நுங்கின் தோடுபோல ஒடியும் (புறம். 365: 3-6). தலைவன் பிரிந்த காலத்தில் வெய்துயிர்த்து அழும் தலைவி ஒழுகும் கண்ணீர்த் துளிகளை மெல்லிய விரல் உகிரினால் தெறித்தாள் (அகம். 373:13-15). ஆடையழுககினை நீக்கியமையால் கறை பொருந்திய கூரிய உகிரினையும் பசை கொண்ட விரலினையும் புலைத்தி (வண்ணாத்தி) பெற்றிருத்தல் (அகம். 387:5, 6). ஆறலை கள்வர் தாம் தீட்டிய அம்பின் செப்பம் காணுமபொருட்டு உகிர் நுனியி னால் அதனைப் புரட்டிப் பார்ப்பதால் எழும் ஓசைககு ஆண்பல்லி தன் துணையை அழைப்ப தால உணடாகும் ஓசை உவமை (குறு. 16:1-4). தன் வளைநத அலகிடத்துக் கிளி கொண்ட வேப் பம் பழம், புது நாண நுழைக்கும் பொற்கொல் லன் தன் கையின் கூரிய உகிரிற்கொண்ட பொற் காசை ஒக்கும் (குறு.67:1-4). பேயின் பற்களைப் போன்ற பருத்த உகிர்களோடு கூடிய பரவிய அடிகளையுடையது யானை (குறு. 180:1, 2). வெள வால் கரிய மெல்லிய சிறகினையும் கூரிய உகிரி னையும் உடையது (குறு. 201:3). வளையின்கண் வாழும் வளைந்த காலையுடைய அலவன் தன் கூரிய உகிரினால் கீறிய சிறுநெறி சிதையும்படி அலை வீசும் (குறு. 351:1-4). வெளவாற் பறவை ஆம்பல் இலையின் புறத்தைப் போன்ற சிறகினை யும் கூரிய உகிரினையும் உடையது (குறு. 352:1,2). வளைந்த வாயையும் தெளிந்த கண்ணையும் கூரிய உகிரினையும்உடைய கூகை வாயாகிய பறையோசை யாலே பிறரை வருத்தும் என்பது தோழி கருத்து (நற்.83:3, 4). கார்காலத்து உலாவும் கூரிய உகிரை யுடைய கொககின் மூக்குப்போனறு ஆழ்ந்த நீரில் முளைத்த ஆம்பற்பூ தோன்றும் (நற். 100:1-3). குன்றவர் இறந்த யானையின் கோடுகளை ஊன் கெடுமாறு பாறையில் உலர்த்துவர்; ஊனழித்து மிகப்பெரிய உகிரினைப் புதைப்பர் (நற். 114:1, 2). பெரிய உகிரையுடைய பெண்புலி மலைமுழையிலே தங்கும் (நற். 148:7). கொல்லவல்ல உகிர்களையும் அழகிய வரிகளையும உடையது புலி (நற். 205:2, 3). பொற்றொடி மகளிர் முறறத்தில் பலியாகப் போகட்ட கொக்கினது உகிர்போன்ற சோற்றைக் காக்கைகள் தின்னும் (நற். 258:5, 6). ஆணகரடி, புற்றில் உள்ள சிதலை ஒருங்கே ஒழியுமபடி ஒடிந்த வாயையுடைய பெரிய உகிர்களால் பறித்து உள்ளிருக்கும் குரும்பி முதலாயவற்றை உண்ணும் (நற். 325:1-5). நீரில் உறைகின்ற நீலச் சேவற் கோழியைக் கூரிய உகிரினையுடைய பேடை விரும் பும் (ஐங. 51:1,2). நம்மைப் பேணுகின்றிலன் என்று உடன்ற பரத்தையர் நம்மைப் பேணுதற் காக உகிராற் செய்த வடுவினை உடையவன் தலை வன் என்று காமக்கிழத்தி கூறுதல் (கலி. 72:11). பரத்தை தொடியும் உகிரும் படைக்கலமாகக் கொண்டு தலைவன் மார்பிலும் பிற இடங்களிலும் தான் குறித்தபடியே வடுக்களை உண்டாக்கினாள் எனத் தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவி மகனைப் பார்த்துக் கூறினாள் (கலி. 82.28-30). நணடுகளின் நடையால் உண்டான வடு நீரருகைச் சேர்ந்து கிடந்தாற்போலப் பரத்தையின் பெரிய உகிராலும் எயிற்றாலும் பிளந்த வடுக்கள் தலை வன் மெய்யிற் கிடந்தன (கலி. 88:10,11). தலைவன் குறி பொய்த்தமையால் சினந்த பரத்தையர் தாம் விரும்பியாங்கு அவன் மார்பிற் கூருகிரால் வடுச் செய்தனர் (கலி. 91:10,11). 'நீ விரும்பும் குதிரை கூரிய உகிரால் மாட்சிமைப்பட்ட குளம்பினை யுடையதாதலின் அதனை ஏறுகின்ற நீ தப்பின்றி வாழ்வாயாக' எனப் பரத்தையைக் குதிரையாக உருவகித்துப் புறத்தொழுக்கமுடைய தலைவனைத் தலைவி இடித்துரைத்தல் (கலி.96:25,26). (இரணியனின்)

வலிகெட அவன் மார்பினை ஊனதடி பலபட வகிர்ந்த உகிரினை உடையவர் திருமால் (பரி. 4: 21). மகளிரின் உகிரினும் மைந்தரின் கொடிறறினும் எழுதிய செம்பஞ்சிக் குழம்பு அழிய ஆடவரும் மகளிரும நெருஙகி வையைப புனலாடச சென்ற னர் (பரி. 6:17).

**உச்சி - 1. முகடு.** உவாநாளில் விசும்பின உசசிக் கணணே - முகட்டினகணணே - நின்ற மதியைக கணட விறலியும பாணனும இது குராப்பளளித் துஞசிய பெருநதிருமாவளவனின வெணகொற்றக குடையை யொககும எனக கருதி வழிபட்டனர் (புறம. 60.3,10-12). பனையின உசசிக்கண கொள் ளபபட்ட வெளளிய தோட்டினை வெட்சிமலர், வேஙகைப பூவுடன அதியமான் அணிந்தான (புறம. 100:3-6). திருவேரகத்தின்கண் அநதணர் உச்சிக் கண கூபபிய கையினராய முருகனைப் புகழநது வழிபட்டனர் (முரு. 185). அணஙகுடை நெடுவரை யின் உச்சியினின்று கூட்டமாய அருவி இழிதரும் (அகம. 22·1,2). மணவினை செயயும் முது பெணடிர் உசசியில குடததையும் கையில புதிய அகன்ற மணடை எனனும கலததினையும கொண்டிருநத னர் (அகம. 86.8,9). இரவுக்குறி வரும் தலைவன கடககும குன்றின உசசியில் வழி தவறுமாறு மிக்க இருள சூழநதிருநதது (அகம. 138:14-16). வணடுகள் அரறறும மலாமாலையை உசசியின்கண உடைய வள தலைவி (அகம. 231:14,15). பொறையனுக்குரிய கொல்லிமலை உசசியிலிருந்து வீழும் அருவி பேரா ரவாரத்துடன இழிதரும (அகம். 303:4-7). குன்றத்து உச்சியின பககததில வேட்டுவச்சேரி அமைந் திருநதது (நற். 92:4,5). வாடைவீசும் இராப்பொழு தில சேற்றையுடைய தொழுவத்தினின்று மாறறி வேற்றிடததில் கட்டாமல், நினற நிலையில நிற்கு மாறு தலைக்கயிற்றை உச்சியில கட்டிய கூழை ஆவின் நிலை பிரிவால் வருந்தும் தலைவியின் நிலைக்கு உவமை (நற. 109:6-9). இமயமலையின உச்சியிலுள்ள தேவருலகத்து வாழும் மகளிர் அன்னப் பார்ப்புடன் விளையாடுவர் (நற். 356:2-4). ஞெமை மரங்கள் வளர்ந்துள்ள இமயதது உச்சியி னினறு கங்கை அருவியாக இழிகின்றது (நற். 369: 7-9). வம்பலர் உமண் சிறுகுடியில் உளள புளியின் கனியைச் சுவைத்துப் பசிபோககி உச்சி மேற் கொண்ட குடையுடன் சுரவழிச் சென்றனர் (நற். 374:2-4).

**2. நுனி.** தெருவிலுள்ள பெண்டிர் கடைக்கண்ணால் சுட்டி நோக்கி வியப்புடையார் போலத் தத்தம் மூக்கின் உச்சியில் - நுனியில் - சுட்டு விரலை வைத் துப் பழிச்சொல் கூறித் தூற்றுவர் (நற். 149.1-3).

**உச்சி மிதித்தல் - இழிவுபடுத்துதல்.** அலர் கூறும ஊரி லுள்ளாரை உசசி மிதித்து - இழிவுபடுததி - நீ விரும் பிய காரியின்மீது பாயந்த பொதுவனுக்கே நின் னைக் கொடுக்க நமசுற்றததார் இசைநதனர் எனறு தலைவியிடம தோழி கூறினாள (கலி. 104:74-76).

**உசாவுநர் - உசாத்துணையாவார்.** 'தந்தையும் மீனபிடிக் கக கடலபுககனன். தாயும உபபுவிளை கழனி சென்றனள். அதனால தலைவன இப்பொழுது வரின தலைவி பெறுதற்கு எளியள்' என்னும தூதி னைக கூறி உசாவுநரை - உசாததுணையாவாரை- பெறின நன்று எனத் தலைவி தோழியிடம தலை வன சிறைப்புறமாகக் கூறினாள் (குறு. 269).

**உட்கு - அச்சம்.** சோழன் குராபபள்ளித் துஞ்சிய பெருநதிருமாவளவனும பாணடியன வெளளியம் பலததுத துஞ்சிய பெருவழுதியும் பலராமனும் கணணனும ஒருஙகிருநதாறபோல உட்கு-அசசம- வர விளங்கினா (புறம. 58 14-17). முரசம இடி முழங கினாற்போல உடகுவர முழஙகும் (புறம. 197:5). நெடுநாள் களவொழுக்கம நிகழவேணடுமெனறு நினைததுத் தலைவியின் முகததைப் பாாததுத தலைவன நகைததபோது தலைவிககு நாணும உட் கும் மிகுந்தன (குறி. 182-184). கலலில மோதி மீளும் சுழிகளுடன், யானையை அதன மதஙகெட மோதிக் காணபோர்ககு உட்குத தோனறுமாறு செயது வெளளம் வநதது (அகம. 18:3-5). பாமபின தலை துணிபடுமபடி வலிய இடி முழங்குகினற உட்கு வரும இரவுக குறியிடததே தலைவன எஃகு துணை யாக வருதலினால உணடாம வருததம கூறிததோழி வரைவு கடாவுதல (அகம. 202.10-13). இலைகள் உதிருமாறு கோடைககாற்று வீசும் பாலை நிலம் காண்போர்ககு உட்கினைத் தரும (அகம். 267: 4,5). உட்குவரு நடுயாமததில, வயாவுடைய பெண் புலியின் பசியைப் போக்குதறகு ஆணபுலி புகர் முகக் களிறட்டு இடிபோல முழஙகும் (நற். 383 3-5). செக்கர் வானத்துப பிறையை எயிறாகக் கொணடு கூறறுவன் பலலுயிரையும் சேரக் கோடறகு நக் காற் போலும் உட்கு உடைய மாலைக காலம் தோனறியது (கலி. 120:7-9).

**உட்கை - உள்ளங்கை.** இருககை முடவன் மலைத்தேன இறாலின் கீழிருநது உட்கையை - உள்ளங்கையை - சிறுகலமாகக் கோலி அத்தேனிறாலைப பலமுறை சுட்டி உட்கையை நககி இன்புறும் செயல் தலைவ னின முயககினபம பெறாது அவனைக் கணடின புறும தலைவியின் செயலுக்குவமை (குறு. 60:2-6).

**உட்பகை - அகப்பகை.** உட்பகை-அகப்பகை-ஒருவகை யால நீங்கினமையின சோழன் நலங்கிள்ளி படை

மறலவரைப் போருக்கு ஏவானாயினான் (புறம். 68: 11,12).

**உட்பொருள்** – மறைபொருள். உலகில் உள்ள எல்லாப் பொருளும் அவற்றின் உட்பொருளுமாக - மறை பொருளுமாக - திருமால விளங்குகிறார் என்று அவரியல்பினைக் கடுவனிள வெயினனார் சுட்டுவர் (பரி. 3.68).

**உடம்படுவி** – உடம்பாக அடுத்தவள். தலைவியைத் தன் உயிர்க்கு 'உடம்படுவி' - உடம்பாக அடுத்தவள் - எனத் தலைவன் பாராட்டுதல் (அகம். 136:19).

**உடம்பாடு** - இசைவு. பொருது வருந்திய இருதிறத்துப் படையினரும் இணைதறகு மனத்தால் இயைந்தும் 'முன்னாக உடம்பாடு - இசைவு - செய்தவர் இவர்' என வரும் பழிசசொல் பிறத்தற்கஞ்சிப் பின்னும் துன்பத்துடன் நின்ற செயல், ஆடல் பாடலால் திண்மையழிந்த துனியுடைய மகளிரும் மைந்தரும் கூடுதற்கு விருமபியும் யார் முற்படுவது என நாணி யிருந்த செயலுக்கு உவமை (பரி. 10:56-62).

**உடம்பிடி** - வேல். முருகனை யொத்த வமபலர் கூற்று வனை யொத்த உடம்பிடியை - வேலை - கையிலே கொண்டிருந்தனர் (பெரு. 75,76).

**உடம்பு** – உடல். 'சேரமான் கருவூரேறிய ஒள்வாட் கோப்பெருஞ்சேரலிரும்பொறையைக கண்டபோது நின் உடம்பு பெறுவாயாக' என்று கூறப்பட்டி ருந்த முறையில் நரிவெரூஉத் தலையார் அவனைச் சென்று கணடு தம்முடம்பு பெற்று அவனைப் பாடினார் (புறம். 5. அடிக்குறிப்பு). நிலததையும் நீரை யும் ஒருவழிக் கூட்டியவர் இவ்வுலகத்து உடம்பை யும் - உடலையும் - உயிரையும் படைத்தோராவர் எனபர் குடபுலவியனார் (புறம். 18:22,23). உடம் பொடு உயிர் விருமபுமாறுபோல விரும்பும் தொன் னட்புடையாரிடம் செல்வின் நடுகல்லாகியக் கண் ணும் இடம் கொடுத்தளிப்பர் எனப் பொத்தியார் நடுகலலாகியும் இடம் கொடுத்த கோப்பெருஞ் சோழனைப் பாடினார் (புறம். 223:3-6). ஆய் அண் டிரன உயிரைக் காலன கொணடு சென்றமை யால், புறங்காட்டு ஈமத்தீயில் அவன் உடம்பு மாய்ந்தது (புறம. 240:9,10). விற்பயிற்சி பெறுவோர் காட்டுச் சிற்றாற்றின் கரையில அமைத்த இலக்க மரம் அம்பொடு சாய்ந்து கிடததல்போல் நிரை மீட்டுத் தந்த வீரனின் உடம்பு அம்பால் துளைக் கப்பெற்று வீழந்து கிடந்தது (புறம. 260:21-24). 'ஐம் பொறியும் குறைவின்றிய பொருந்திய என் உடம் பில் தோன்றி அவறறின் பயன் கொள்ளாதபடி என் அறிவுகெட நிலைபெற்று நின்ற வறுமையை விரைந்து நீக்குவாயாக' என உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியைப் பெருங்குன்றூர் கிழார் வேண்டினார் (புறம். 266:10-13). பகைவர் எறிந்த படைக்கலன்களை எதிரேற்ற வீரனின் உடம்பும் கட்புலனாகாத உயிரும் கெட்டன (புறம். 282:5,6). மகணமறுத்தமையால் போருக்கெழுந்த வேந்தன், 'நாளை அவளை மணம்புரிவேன்; இல்லையெனில் எஃகம் அறுத்த உடம்பொடு துறக்கம் புகுவேன்' என வஞ்சினம் மொழிந்தான் (புறம். 341:14,15). சுற் றம் பெருகியவழி இல்லிடத்தே தமக்கு இடமில்லை யென்று கருதியும் நிலவுலகு சிறிதாகலின் இனிதி யங்க இயலாமைக்கு அஞ்சியும் துறக்கவுலகம் உடம் பொடுஞ் செல்லல் வேணடி வீரர் பொருதனர் (புறம். 362:19-22). இறவாமல் உடம்போடே என்றும் இருந் தவர் யாரும் இல்லை; இறப்பு உறுதி; பொய்யன்று என ஐயாதிச் சிறுவெண்டேரையார் நிலையாமை உணர்த்தியுள்ளார் (புறம். 363: 7-9). செங்குட்டு வனின் படைவீரர் தழும்பார்ந்த மார்பினையும் அம்புகள் தைத்த உடம்பினையும் உடையவராய்த் தம்மை ஒத்தாரோடு போர்புரியும் இயல்பினராய் விளங்கினர் (பதி. 42: 4-6). மிக்க தவத்தைச் செய்யும் மக்கள் தம்முடைய தவஞ்செய்த உடம்புடனே பயனைப் பெறுவர் (பொரு. 91, 92). சட்டையணிந்த மிலேச்சர் தமது கருத்தை நாவினால் உரைக்க முடியாதவராய் உடம்பால் (கையாலும் முகத்தாலும்) உரைப்பர் (முல்லை. 65, 66). 'பொருளீட்டும விருப் பத்தினாலும் தொடங்கிய வினையை முடிக்க வேணடும் என்னும மான உணர்வினாலும் என் உடம்பு ஆங்குப பிரிந்து நின்றது; என் நெஞ்சம் நின்கண்ணதே' என வினைமுற்றி மீண்ட தலை மகன் 'எம்மை நினைத்தீரோ' என்ற தலைமகட்குக் கூறினான் (அகம். 29:20-23). தலைநாள் இரவில் தலைவன் தலைவியை, 'வெறுப்பு நீங்கிய கற்பினை உடையவளே, என் உயிர்க்கு உடம்பாக அடுத் தவளே' எனப் பாராட்டினான் (அகம். 136: 19). 'என் நெஞ்சம் அவர்பால் சென்றமையால் என்னுடம்பு இங்கு உணணுதலால் காக்கப்படுகின்றது' என்பது பிரிவிடை மெலிந்த தலைவி கூற்று (நற். 153: 6, 7). தலைவனின உடம்பு, நெஞ்சத்திற்கும் அறிவிற்கு மிடையே அகப்பட்டு வருந்தும் நிலைக்கு இரணடு யானை மாறாக நின்று ஈர்க்கும் தேயபுரிப் பழங் கயிற்றின் நிலை உவமை (நற். 284: 9-11). நீர் வேட் கையால் உடம்பு வருந்திய யானைகள் நீரற்ற சுனையில் நீர் குடிக்கத் தம் கையை விட்டபோது கைகள் சுடப்பட்டு நிலைகுலைந் தோடின (கலி. 12: 3-6). உடம்பு உயங்கிய யானைகள் நீருற்று அடங் கலின் வேறு நீர்நிலை காணாமல் சேறறின ஈரத்தை நுகர்ந்து தம் செல்லுயிரைக் காத்தன (கலி. 13: 6-8). 'இங்கு விளையாடும் ஆயத்தாருள் இன்று

உடம்போடே என்னுயிர்க்குள்ளே புக்கவளாகிய இவள் யார்' என்று தலைவன் பாங்கனிடம் கேட்டான (கலி. 102: 6–8). மன வேட்கை அடங்கித் தவத்தை முயனறோர் தம்முடம்பை, இவ்வுலகி விட்டு உயருலக இனபத்தை இனிதாகப் பெறுவர் (கலி. 138: 30, 31). இந்த உடம்பினின்று போகும் நிலையிலிருந்த என் உயிர் நிலைக்கும் வண்ணம், அலவன் தன பெடையுடன் நிகழத்திய பல மாட்சிமைகளையும் காட்டி அன்புடைய சொற்களைத் தலைவன் சொன்னான் எனத் தலைவி கூறினாள் (கலி. 146:22-24). முருகன் ஆரா வுடம்பினனாய் (குழவிப் பருவததனாய்) வறுங்கையுடன் இந்திரனோடு செய்த போரில் அவனைத் தோல்வியுறச் செய்தான (பரி. 5: 55, 56). உடல் காணக.

**உடல்-உடம்பு.** மகளிர் நெய்தலம்பகைத்தழை உடலகம்-உடம்பிடத்தே-கொள்ளாராதலின் நெய்தற் பூககளிலும் சிலவற்றையே பறிப்பர் (ஐங். 187: 2–5). ஒன்னாரை ஒரு சேர அழிக்கும் ஆழிப்படையின் உடல் கூற்றத்தை ஒக்கும (பரி. 2: 50). கருடன் நஞ்சுடைய பாமபின் உடலையும் உயிரையும் உணணும் (பரி. 4: 42). உடம்பு காண்க.

**உடலுநர் - மாறுபடுபவர் (பகைவர்).** யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறையின் படை, உடலுநர் -பகைவர் - அஞ்சுமாறு கடலெனப பரந்திருநதது (புறம். 17:36,37). மலையமான் திருமுடிக்காரியின நாடு கடலாற் கொள்ளப்படாது; உடலுநர் அதனைக் கொள்ளுதற்கு முயலார் (புறம். 122:1,2). இருங்கோவேள், உடலுநர் அஞ்சும் சேனையையும் நலல நாட்டினையும் உடையவன் எனக் கபிலர் பாராட்டல் (புறம். 201:19,20). பொன்னாற் செய்த தேரையுடைய இளஞ்சேர விரும்பொறை உடலுநரை அழித்தான (பதி. 88:20; 90:21). தென்னவன் உடலுநரை வென்ற கடல்போன்ற தானையினையும் இலைபோனற வேலினையும் உடையன் (அகம. 138:6,7).

**உடலுநள் - மாறுபடுபவள்.** உவப்பு அடைவாளாயினும் உடலுநளாயினும - மாறுபடுபவளாயினும் - தாயே தலைவியின செயலை ஆய்ந்துணர்க எனக் கருதாது அம்பல் பெணடிர் அலா தூற்றினர் (அகம. 203:1-3).

**உடலுமோர் - மாறுபடுவோர்.** தலைவனின் பரத்தைமை காரணமாகப் புலந்து பிரிந்துறைவோர் வறுமையால் வருநதுவர் என்பதை அறிந்தும் அவனொடு உடலுமோர்-மாறுபடுவோர் - அறிவில்லாதவராவர் என வாயில் நேர்நத தோழி தலைவிக்குக் கூறல் (அகம். 316:12-17).

**உடற்றியோர்-சின்முறச் செய்தவர்.** சோழன உருவப்பஃறேரிளஞ்சேட் சென்னியை உடற்றியோர் - சின முறச் செய்தவர் - நாடு, தாயில்லாத உண்ணாக் குழவிபோல ஓயாது அலறும் (புறம். 4:18,19). பகைவரை வெகுணடு பார்தத அதியமானின கண் சிவப்பு, புதல்வனைப் பார்த்த பிறகும் நீங்காமை யான் அவனை உடற்றியோர் பிழைக்கமாட்டார் என ஔவை கூறல் (புறம. 100:9-11). பெருஞ்சேர விரும்பொறையை உடற்றியோர் குளவிக் கூட்டைக் கலைத்த சிறுவர்போல துனபம் அடைவர் (பதி. 71:7,8). இளஞ்சேரலிரும்பொறையை உடற்றியோர் யானையின் காலில அகபபட்ட மூங்கில் முளை போல அழிவதல்லாமல் தப்புதலிலர் (பதி. 84:11-13).

**உடற்றுநர் - வருத்துபவர்.** நாடு காக்கும் வேடரைக் கணடு, 'நன்னனைக காணச் செலகினறோம்' என று கூறினால அவர் தசைகளையும் கிழங்குகளையும் உணணச் செய்து ஓமபுவார் அல்லது உடற்றுநர் - வருத்துபவர் - அல்லர் எனப பரிசு பெற்ற கூத்தர் பரிசுபெற விரும்பும் கூத்தர்ககுக் கூறி ஆற்றுபபடுத்தினர் (மலை. 422-426).

**உடன் வயிறு - உடன்பிறந்தோர் (ஆகுபெயர்).** பிறப்பு ஒரு தன்மைததாகிய உடன் வயிறுள்ளும் - உடன பிறந்தோருள்ளும் - கல்விச்சிறப்புக காரணமாகத் தாயும் மனம வேறுபடுவள் எனபது பாணடியன ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் கூறும் பொருண் மொழிககாஞ்சி (புறம. 183.3,4).

**உடனிலை - 1.** ஒரு புறத்துறை. உடனிருந்தார் இருவரையும் பாடுவது (புறம. 58).

**2.** ஒன்றுபடுதல். 'நீவிர் இருவீரும் ஒருவருக்கொருவர் உதவி உடனிலை-ஒனறுபடுதல்-திரியாது இருப்பின் இம்மாநிலம் நும் கையகபபடும்' எனக காவிரிப பூம்பட்டினத்துக காரிக்கணணனார், சோழன குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாணடியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்தவழி அறிவுரை கூறினார் (புறம். 58:21-23). தனனோடு உடனிலை வேட்கையுடைய இளைய பசுவினைத் தழுவிக் கொண்டு காளை மாலையில ஊர்திரும்பியது (அகம. 64:11-13).

**3.** ஒருங்கு. அதியமானையும் சோழன், பாணடியன் எனனும் இரு பெரு வேநதரையும் பெருஞ்சேர விரும்பொறை உடனிலை—ஒருங்கு-வென்றான (பதி. ப. 8:4,5).

**உடனுறை - ஒருங்கு உறைதல்.** 'எம்மூர்ப் பொய்கைத் துறையில் உள்ள முதிய மரத்தின மீதிருந்து என அருகே உடனுறை-ஒருங்கு உறை-கூகையே, என் தலைவனை நினைந்து துயிலாது நான் வருந்தும் போது அச்சம் உணடாகுமபடி நின் கடுங்குரலை

எழுப்பாதே' என அதனை விளித்துத் தலைவன் சிறைபுறத்தானாகத் தலைவி கூறினாள் (நற். 83: 1-4,7-9).

**உடனுறைவாழ்க்கை** - கணவனும் மனைவியும் இணைந்த வாழ்க்கை. (வானப்பிரத்தம்) (கலி. 93, நச். உரை). உடனுறை வாழக்கைக்கு - கணவனும் மனைவியும் இணைநத வாழ்க்கைககு - உதவுமாறு கடவுளை வேண்டி அலாபால தங்கினேன் எனப் புறத் தொழுக்கத தலைவன் கூறினான (கலி. 93:6,7).

**உடனுறைவு** - கூடிவாழ்தல். இப்பிறப்பில பாரியும் தாமும் கூடி இன்புற்றிருந்தது போல மறுமையி லும் உடனுறைவினை-கூடிவாழ்தலை-உயர்நத விதி கூட்டவேணடும் என வடக்கிருந்த கபிலர் விழைந் தார் (புறம. 236:10-12). தன்னை இடித்துரைதத பாஙகனிடம், 'தலைவியின அமுதம் போன்ற இனிய சொலலும் குணமும் மிக்க துன்பத்தைச் செய்யு மாயின் காமம் உடனுறைவுக்கு அரிது' எனத் தலை வன் கூறல (குறு. 206).

**உடு**- 1. நாணில் அம்பு பொருத்துமிடம். வில்லில் பொருந் தியுள்ள உடு-நாணிடம்-சேர்நத அமபினை நிரமப வலிததுக் கடுவிசையுடன், தலைவன் யானையின் முகத்தில் எய்தான் (குறி. 169-171).

2. இறகு. கானவன் இரவில் தினை உணணவரும் யானை மீது எறிந்த கவண்கல் உடு - இறகு - பொருநதிய அம்புபோல விரைந்து சென்றது (அகம. 292:8-12).

**உடுக்கை** - ஆடை. இடையன் தளைக் கண்ணியும் மாசுண்ட உடுக்கையும் - ஆடையும்-மடிததலாயும் உடையவன் (புறம. 54:10,11). பாணன் கிழிந்த உடுக்கை அணிநது சிறிய யாழைக் கொணடிருந் தான் (புறம. 138:4,5). தம் மனைவி மாசு பொருந் திய துணிபட்ட உடுக்கையளாய் இருப்பதைப் பெருஞ்சித்திரனார் குமணனிடம் கூறல் (புறம. 159: 13). திருவாவினன்குடியில் முருகனிடத்துச் செல் லும் முனிவர் மரவுரியை உடையாகச் செயத உடுக்கையர் (முரு. 126). இடையன ஒன்றாய்ப் பொருந்திய உடுக்கையை யுடையவன் (பெரு. 175). சுரவழிச் சென்ற வம்பலர் ஆறலைப்போரால் கல்லெறி பட்டுப் பல கிழிவுகளை உடைய உடுக் கையை உடுத்திருந்தனர் (அகம். 285:9, 10). குன்றி மணியை ஒக்கும் சிவந்த உடுக்கையன் முருகன் (குறு. க. வா.3). திருமால் கடலை உடுக்கையாகக் கொண்டவர் (நற். க. வா.2). மலையில வாழும் குற வர் மரப்பட்டையின் நாரானே பின்னிய உடுக் கையை அணிந்திருந்தனர் (நற். 64:4). கடலை உடுக் கையாக வுடைய உலகம் பெறுவதாயினும் இரு மணம் கொள்ளல் ஆயமகளிர்க்கு இயல்பன்று (கலி. 114:19-21). பனைக்கொடியோன் எல்லாப் பொரு ளையும் மறைக்கும் இருள்போன்ற உடுக்கையுடைய வன் (பரி. 2:22). திருமாலிருஞ்சோலையில் இள்வெயி லின் நடுவே இருள வளாதலை யொக்கப் பொன் புனை உடுக்கையில் திருமால் காட்சி தந்தார் (பரி. 15:27, 28).

**உடுப்புமுகம்** - உடும்பினது முகம். பிடியின் வாயைப் போனற வளைந்த வாயை யுடைய கலப்பையின் கொழு உடுப்புமுகம் - உடும்பினது முகம் - போன் றிருந்தது (பெரு. 199, 200).

**உடும்பு** - ஊர்வனவற்றுள் ஒருவகை. பாணனின் பசி மிக்க சுற்றம் உடும்பு உரித்தாற் போன்ற எலும் பெழுந்த விலாப்புடை உடையதாக இருந்தது (புறம். 68:1, 2). வல்விலோரி விடுத்த அம்பு யானையைக் கொன்று வீழ்த்திப் பெரிய புலியை இறக்கச் செய்து, புள்ளிமான கலையை உருட்டிப் பன்றியை விழச்செய்து அருகிலிருந்த ஆழ்ந்த புற்றில் கிடக் கும் உடும்பின்மேல் பதிந்தது (புறம். 152:1-6). முள் ளம் பன்றியைக் கொன்ற வீரர் தாம் அறுத் தெடுத்த உடும்பின் தசையை மனைமுற்றத்தில் பகுத்தளிப்பதற்கு, நெருப்பிலிட்டு வேகவைத்த நிணத்தின் மணம் தெருவெல்லாம் கமழும் (புறம். 325:6-10). வேட்டுவச் சிறார் மடுக்கரையில் பிடித்து வந்த குறுங்கால் உடும்பின் தசையை இட்டுச் சமைக்கப்பெற்ற தயிரோடு கூடிய கூழையும் பிற பொருள்களையும் பாணருக்கும் அவருடன வந்த விருந்தினர்க்கும் மனைக்கிழத்தி கொடுத்து உண் பிக்கும் பண்புடையவளாக விருந்தாள் (புறம். 326: 7-12). நெடிய தேரைச் செலுததவல்ல வீரர் உடும் புத தோலாற செய்யபபெறற கைச்சரடு அணிந்த னர் (புறம். 332:15, 16). எயினச் சாதியினர் தம அரணில் தங்கும் பாணர்க்கு நாய் கடித்துக் கொண்டு வந்த, அககுமணி போலும் முட்டை யினையுடைய உடும்பின பொரியலால மறைக்கப் பட்ட சோற்றினை வழங்குவர் (பெரு. 129-132). நன்னனது முன்றிலில காணப்பட்ட கையுறைப் பொருள்களில அரக்கினைப் பரப்பினாற் போன்ற சிவந்த நிலத்தில் சுக்கான் கல்லில் தவழும் வளைந்த காலகளையுடைய உடும்பின் ஏறு ஒன்றாகும (மலை. 507, 508). விளாமரம், அடியில் உடும்பு செறிந்தாற் போன்ற பொரிந்த செதில்களையுடையது (நற். 24: 2). வேட்டுவன் உடும்பினை ஈட்டியால குத்தியும் நுணலை மண்வெட்டியால் அகழ்ந்தும் புற்றை வெட்டிப் புகைமூட்டி ஈசலைத் தாழியிற் பெய்தும் முயலைத் தடியால் எறிந்தும் அவற்றை மூட்டை யாகக் கட்டிக் கொணர்ந்து மனையிலிட்டுக் கள் ளுண்டு செருக்கிக் கிடந்தான் (நற். 59:1-5).

**உடை - 1.** ஆடை. ஓய்மான் நல்லியாதன் தன்னைப் பாடிவந்த பாணன் இடையிலிருந்த பழைமை யுற்றுத் துளைகளுடன் பருத்த இழைகள் கெட்டு நைந்து கிழிந்த உடையினை - ஆடையை - பார்த்து இவன் அளிக்கத் தக்கவன் என்று கருதி அவன் கையிலிருந்த தாளத்தை வாங்கிக் கொண்டு கள் தெளிவினையும் சூட்டிறைச்சியினையும் கொடுத்து, நிரையம்போலும் அவனது வறுமையைப் போக்கினான் (புறம். 376:9-15). சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி தன்னை வாழ்த்தி வந்த பொருநர்க்கு வேறுவேறு வகைப்பட்ட உடைகளை நல்கினான் (புறம். 377:18). அதியமான் நெடுமானஞ்சி தன்னைப் பாடிய பொருநனுக்கு, அவன் அரையிலிருந்த பழைய நீர்ப்பாசிபோன்ற கிழிந்த ஆடையை நீக்கி அழகிய மலர் போன்ற புத்தாடை நல்கினான் (புறம். 390:14,15). (கந்தருவர்) புகையை முகந்தது போன்ற தூய ஆடையை உடுத்தியிருந்தனர் (முரு. 138). கரிகாற் பெருவளத்தான் தன்பால் வந்தடைந்த பொருநர்க்கு அவர்தம் கிழிந்து தைக்கப்பெற்ற அழுக்காடையை நீக்கிக் கொட்டைக் கரையுடைய பட்டுடையினை நல்கினான் (பொரு. 153-155). யவனர் குதிரைச் சம்மட்டி வளைந்து கிடப்ப மடங்கிப் புடைக்கும்படி நெருங்கக் கட்டப்பட்ட உடையையும் சட்டை யணியப் பெற்று அஞ்சத்தக்க தோற்றத்தையும் வலிய உடலையும் அஞ்சாமையையும் கொண்டு விளங்கினர் (முல்லை. 59-61). சோற்றுக்கஞ்சி இடப்பெற்ற கலிங்கம் பொலிவுறும்படி உடைக்குமேல் ஆடவரால் அணிகலன் அணியப்பெற்றது (மது. 721,722). மகளிர் தூசாகிய உடையினை அணிந்திருந்தனர் (பட். 148). தலைவி தழைத்த செயலைத் தழையால் ஆகிய உடையினை அணிந்திருந்தாள் (அகம். 7:19). மாலையில் கோலைக் கையிலுடைய கோவலர் கொடுமடி உடையராகக் குழலூதி ஆனிரையின் பின் மீள்வர் (அகம். 54:10). திருமணப் பெண்ணைத் தூய உடையால் பொலியச் செய்வர் (அகம். 136:15). உடைகளை ஆராய்ந்து அவற்றைக் கழுவுந் தன்மை நீங்காத வறுமையுற்ற புலைத்தி (வண்ணாத்தி) இரவில் தோய்த்த, சோற்றுக் கஞ்சியிட்ட சிறிய பூத்தொழிலுடைய கலிங்கத்தைப் புலர்த்துவாள் (நற். 90: 2-4). நெருங்கிய பிணிப்பவிழ்ந்த இலையையுடைய தாழைப்புதர் உருகெழு யானை உடையணிந்தது போன்றிருந்தது (நற். 299:1,2). சிவந்த காளையின் வெள்ளிய கால்கள், முருகனுடைய உடையாய் உயர்ந்த தாழ்ந்து விளங்குகின்ற வெள்ளிய துகிலை ஒத்திருந்தன (கலி. 105:17,18). பால்வண்ண மேனியன் (பலராமன்) அழகுற உடுத்த நீல ஆடையை ஒக்குமாறு அழகிய கடல் வெள்ளிய மணலிடத்தே சூழ்ந்து விளங்கியது (கலி. 124:2-4). திருமால் பொன்னை ஒக்கும் உடையை உடையவர் (பரி. 1:59). முருகனுடைய உடையும் மாலையும் செந்நிறமுடையன (பரி. 19:97).

**2.** ஒருவகை முள்மரம். வேட்டுவச்சிறார் சிறிய இலையுடைய உடைமரத்தின் உட்டுளையுடைய வெள்ளிய முள்ளினை ஊகம் புல்லின் ஈர்க்கில் செருகி அம்பு செய்வர் (புறம். 324:3-5). கடல் சூழ்ந்த இப்பெருங் கண் மாநிலத்தினை நடுவே உடைமரத்தின் இலையளவு இடமும் மற்றவர்க்கு இல்லாதவாறு தாமே தமக்குரியதாக ஆண்ட வேந்தர் கடலலை ஒதுக்கும் மணலினும் பலராவர் (புறம். 363:1-4). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் சினந்து அழித்த பேரூர்களின் கருப்பங்கழனிகள் பொலிவழிய விடத்தர், உடை ஆகிய முள்மரங்கள் வளரலாயின (பதி. 13:12-14). உடைமரங்கள் மிக்க நெறியில் பெண்டிரின் குண்டலத்திலுள்ள ஊசல் போன்ற குமிழ மலர் கல்லெனனும் ஒலியோடு அழகு செய்தாற்போல உதிர்ந்து கிடக்கும் (நற். 286:1-3).

**3.** உடுத்துதல். நிறத்தை ஒழியாது காட்டிநிற்கும் உடை-உடுத்துதல்-கழன்ற துகில், அதனை உடுத்தியுள்ள புதல்வனின் சலங்கை ஒலிக்கும் அடியினைத் தடுத்தது (கலி. 81·5,6).

**உடைமை - செல்வம்.** யாம் துன்பமுற்ற போதிலும், அறிவிலார் உடைமை - செல்வம் - பயன்படாமையின் அதனை நினைக்க மாட்டோம் என்று கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் கூறினார் (புறம். 197:15,16). பழுத்த மரத்தினை நாளும் நாடும் புள்ளினம் போன்ற இரவலர்க்கு அவரைக் காத்தற்காக எதிர்கொள்ளும் ஆடவரின் உடைமையே தம் உடைமையாகும்; அவர்களுடைய வறுமையே தம் வறுமையாகும் (புறம். 199.6,7).

**உண்கடன் - உண்பதற்காகப் பெறும் கடன்.** உண்கடனை - உண்பதற்காகப் பெறுங்கடனை-இரந்து பெறுங்கால் முகனும் அவ்வாறு வாங்கிய கடனைத் திரும்பக் கொடுக்குங்கால் முகனும் வேறாதல் முன்பும் இவ்வுலகத்துள்ளார் இயல்பு; அஃது இன்றும் புதிய தொன்றன்று (கலி. 22:1-4).

**உண்டி - உணவு.** நீரை இன்றியமையாத உடம்பிற் கெல்லாம் உண்டி - உணவு - கொடுத்தவர் உயிர் கொடுத்தவராவர். உணவா லாகிய உடம்பு உண்டியை முதலாகக் கொண்டுள்ளது (புறம். 18:18-20). முனிவர், உண்ணுதற்குரிய பகற்பொழுதுகள் பலவும் ஒரு சேரக் கழிந்தபின்னர் உண்ணும் உண்டியினை உடையவர் (முரு. 130,131). கடியலூர்

உருத்திரங் கண்ணனார் தொண்டைமான் இளந் திரையனை 'வாளினையுடைய பெருமை பொருந் திய கையினையும் பகைப்புலத்துக் கொள்ளை யாகிய உண்டியினையும் உடைய தொண்டையைச் சூடினோர் குடியில் உள்ளவனே' என்று விளிக் கின்றார் (பெரு. 453,454). மிகக புகழுடைய நவிர மலையில் நஞ்சினை உணவாகக் கொண்ட கடவுள் பொருந்தியுள்ளார் (மலை. 82,83). பார்ப் பன மகனே, நார் நீக்கின முருக்கின் தண்டினோடு கமண்டலத்தையும் கையில் ஏந்திப் படிவ (விரத) உண்டி கொள்பவனாக இருந்தனன் (குறு. 156:2-4). வேள்விக்குரிய பசுவினை (ஆட்டினை) கொள்ளு தல (யூபஉருவனனாகிய) திருமாலுக்கு உண்டியாகும் (பரி. 2:62,65). நிறைமதியை உணவாக உடைய அமரர்க்கு முதல்வன் திருமால் (பரி. 3:52,53). பிறபக்கத்து மதி அமரர்க்கு உண்டியாகும் (பரி. 11:35)

**உண்டிகை** - திரள். வையையில் நீராடுதற்குச் சென் றோரிற் சிலர் உண்டிகை - யானைத் திரளும் குதிரைத் திரளும் - தத்தம் கதியில் செல்லுதல தவிர்த்து ஒரே வழியில் செல்வாரை நெருக்கும் படியாகச் செலுத்தித் திரிந்தனர் (பரி. 6:36,37).

**உண்டுறை** - உண்ணும் நீர் கொள்ளும் நீர்த்துறை. உண்டுறைக் கண் - உண்ணுநீர் கொள்ளும் நீர்த் துறைக் கண் - மலையிடத்துப் பூத்த பூக்களைக் கொணர்ந் தொதுக்கும் தலைநீரால் வளம் பொருந் திய நாட்டை உடையவன் அதியமான் நெடுமா னஞ்சி (புறம். 390:23,24). கடம்ப மலரின் தாதுகள் உதிர்ந்ததனால் நருண்டுறை சித்திரத்தைப் போன்று விளங்கியது (சிறு. 69,70). நீரரமகளிர் உண்டுறையில் இட்டுச் சென்ற மகரக்குழையினைத் தன இரை என எடுத்த சிச்சிலிப் பறவை பனை மடலிறகுச் செல்லாமல யூபத்தூணின் மேல் தங்கி யது (பெரு. 311,316). தலைவன் துணைபுணர் ஏறு போல் எம்மொடுவந்து நம்மூர் வாசலில், உண்டுறை யில் எம்மை நிறுத்தி மீண்டு போனான என்று தோழி கூறி அறத்தொடு நின்றாள் (குறி. 235-237). பகைவரது மனையிடத்திருந்து கொண்டு வரப்பட்ட மகளிர், உண்டுறை சென்று நீராடி, அம்ப லத்தை மெழுகி, அந்திக் காலத்தில் விளக்கு ஏற றுவர் (பட். 246,248). ஊதுகொம்பின் ஓசை ஒலிக்க வண்டற பாவையை உண்டுறையில வைத்துத் திருநுதல் மகளிர் குரவை யயாதல (அகம். 269: 18-20). ஆண் நண்டு, நாவல்மரம் உண்டுறையில் உதிர்த்த கனியின அழகு கெடக் கவர்ந்து சென்று தாழைவேரின் கீழேயுள்ள தன்பெடை நண்டிற்குக் கொடுத்தது (அகம். 380:4-6). மலையினின்றும் இறங் கும் அருவி குரங்கு தீண்டியதனால் விழுந்த பலாப்பழத்தினை உண்டுறையின் கண் கொண்டு வந்து சேர்க்கும் (குறு. 90:3-5). காதலர் தொடுந் தொறும் நீங்கிப பிரியுந் தோறும் பரவுதலால் பசலை ஊருணக்கேணியின உண்டுறையில் கூடிய பாசி போன்றுள்ளது (குறு. 399). விளக்குப் போல ஒளிவிடும மலர்கள் பொருந்திய தாமரையின் யானைக்காது போன்ற இலை அலைபடுமாறும் உண்டுறையில நீர் புருக இறங்கிய மாதர் அஞ்சி யோடுமாறும் பொய்கையில வாளைமீன் பாயும் (நற்.310:1-4). உண்டுறையில் உள்ள தெய்வம் தலை வியுற்ற நோய்க்குக் காரணம் என்று கருதினால், அவளது தோளவளை நெகிழுமாறு தளர்ந்து மெலிந்த தோள்கள் பசந்து வேறுபடுவது என் னையோ என்று கூறித் தோழி செவிலியிடம் அறத்தொடு நின்றாள் (ஐங். 28). துணைபுணர்ந்த கரிய தும்பி உண்டுறையில அலர்ந்த தாமரைப் பூவை நீர் சாய்க்க, அப்பூவிலிருத்தலை வெறுத்து வேறொரு பொய்கையைத் தனக்கு இருப்பாக ஆராய்ந்திருந்து பழைய பொய்கையை நினைந்து அலமரும் (கலி. 78:1-3, 6,7).

**உண்மை** - 1. உளதாம் தன்மை. தோள் வளையினை விரும்பி அதனைப பெறாது யான் அழுதலும், காதலனும நாமும் ஒருவரை ஒருவர் இடைவிட்டுப் பிரிதல் உண்மை - உளதாந்தன்மை - சிறிது அறிந் தவன் போலத் தந்தை, தோட்பழி மறைக்கின்ற உதவியை யுடைய பொன்னாலான தோள்வளை தந்து செழிக்கச் செய்தனன என்று தலைவி தோழி யிடம சிறைப்புறம் கூறினாள் (நற். 136). தலை வன் நெஞ்சகத்துண்மை அறிந்தும் என்கண் எதற் காகப் பசக்கின்றது என்று தலைவி தோழியிடம் வினவினள் (ஐங். 169:3-5).

2. வாய்மை. பரத்தையரை எங்கள் மனைக்கண் கொணர்ந்து குல மகளிரைப் போலக் கருதி மணந்து தழுவி யிருந்தாலும் அவருடைய புல்லிய மனத்தில உண்மை - வாய்மை - தோன்றுதல அரி தாகும் என்று தோழி தலைமகனை வாயில் மறுத் துக் கூறினாள் (நற். 330:6-8). கூறிய பருவத்தில தலைவன வாராமையால அருந்துயர் நுகர்தலின் அறிகுறியாக இதுகாறும இறநதொழியின் அவர் பால் அன்புடையேன் ஆவேன் என்பது உண்மை யாகும்; இறவாமையின் அன்பில்லாதேன் அல் லேனோ என்று பருவவரவில ஆற்றாளாய தலைவி கூறினாள் (நற். 381:1, 2).

**உணங்கல்** - 1. உலர்த்தப்பெற்ற பொருள். படல் கட் டிய முற்றத்தில் சிறுதினை உணங்கலை - உலர்த் தப் பெற்றதை - பறவைகள் உண்கவென மனைக்

கிழத்தி தெளிதது வைத்தாள் (புறம். 319:5,6). குறும் பூழ்ச் சேவல் சுளகில் உள்ள தோல் நீக்கப் பெற்ற வெள்ளெள் உணங்கலைக் கவர்ந்துண்டது (புறம். 321:1-3). நெய்தல்நிலத் தலைவி தன் தந்தை தந்த கொழுமீன் உணங்கலைக் கவரவரும் பறவைகளை அகற்றினாள் (அகம். 20:1, 2). 'எம் தந்தை கடலி டத்தே துழவிக் கொணர்நத பல்மீன் உணங்கலில வீழும் பறவைகளை ஓட்டியிருப்போம்' எனத் தோழி இரவுககுறி வந்த தலைவறகுக் கூறினாள் (அகம். 80: 4-6). புலி தின்றுவிட்டுப் போன மான் உணங்கலைக் கணட வம்பலர் மகிழ்நது அதனைச் சமைத்து உணடனர் (அகம்.107.5-10). மனையுறை குருவி முலறிலிற் கிடககும உணங்கலை (உலாநத தானியத்தை) உணடு வீட்டின இறபபில் தங்கும் (குறு.46:2-5). பரதவர் கொண்ட மீன் உணங்கலும் இறா மீன் வற்றலும் மணல்மேடு தோறும் புலால் நாற்றததைப பரபபும் (குறு. 320:1-4). தலைவி தோழியருடன புலவுமீன உணங்கலைக் கவர வரும புள்ளை ஓபபுவாள் (நற். 331:4). களிற்றினை வீழ்த்திப் புலி முழங்கியதனை மேகமுழககம எனறு திரிபாக வுணர்நது, புலரவிட்ட செநதினை உணங் கலை மகளிா குவித்தனர் (நற்.344:9-11). பைந் தினை உணங்கலைச செமபூழப பறவை கவர்ந்தது (ஐங். 469:1).

2. உருகுதல். வெம்மையான பாறையில் வைத்த வெணணெய் கணணிற் காக்கும் கையில ஊம னால் தடுக்க முடியாமல் உணங்கல் - உருகுதல் - போலத் தலைவனின காமநோய் பரவியது (குறு. 58:3-6).

**உணர்ப்பவள் – ஊடல் தீர்ப்பவள்.** பால் உண்ணாமல் ஊடும் மென்கிளியைப் பால் உண்ணறகு வேண் டும் மொழி கூறி ஊடல் உணர்பபவள - தீர்பப வள் - முகம்போலத் தாமரை மலாநதது (கலி. 72:3, 4).

**உணர்ப்பான் - ஊடல் தீர்ப்பவன்.** தலைவன் மணங் கமழும் ஐமபாலாரின் ஊடலைக் கணடபோதே வணங்கி உணர்ப்பான் -தீர்ப்பான் - எனத தலைவி இயற்பழித்த தோழிக்கு இயற்பட மொழிநதாள் ( லி. 131:39,40).

**உணர்வு - 1. உணர்தல்.** நம்மைப் பிரிந்த தலைவர் வருதற்கு நினைப்பினும் வினைமுறறி மீளும் வாய்ப்பு உணர்வு இன்மையின - உணர்தல கூடாமையின் வாரா ராயினர் எனத் தோழி தலைவிக்கு வற்புறுததினாள் (குறு. 232:1,2).

2. உணர்ச்சி. ஒருவர்க்குச் செல்வமுணடான காலத்து அவருடன் செல்வத்தை நுகர்நது, அவர் வறுமைப்பட்டபோது உதவும உணர்வு-உணர்ச்சி- இல்லாதவர் தலைவனைப் பிரிந்தவிடத்துப் பிரி வின்கண் உதவாது கழன்றுபோம் வளையலுக்கு உவமையாவர் (கலி. 25:17-20). திருமால கேளவி யினாலும் (ஆகமஙகளாலும) வலியினாலும் மனத்தா லும் உணர்வினாலும மற்றும் எலலாவற்றாலும் அறியபபடாத மரபினை உடையவர் எனக கடுவ னிள வெயினனார் பாராட்டல (பரி. 3.48-50).

**உணவின் பிண்டம் -உணவால் ஆம் உடம்பு.** உணவின பிண்டம் - உடம்பு - உணவை முதலாக உடையது. ஆதலால் உண்டி கொடுததோர் உயிர் கொடுததோ ராவர் (புறம். 18:19,20).

**உணவு - உண்ணப்படும் பொருள்.** உடம்பு உணவை முதலாக உடையது. உணவெனப்படுவது நிலத் தொடு கூடிய நீர் (புறம. 18:20,21). ஞாயிறறின வெம்மை உயிாகளைத் தாககா வணணம் தாம் பொறுத்துக் காற்றையே உணவாகக் கொள்ளும் முனிவர் ஞாயிற்றுடன் சூழவருவர் (புறம. 43:1-4). கூந்தலையும் வளையலகளையும் நீககிய கைம பெணடிா அல்லியரிசியாகிய உணவினை உண்பர் (புறம. 250:4,5). வாட்டாற்றெழினியாதன அளிதத சிறபபுடைப பொருள்களில இடையறாது கொடுத் தலால மூடுதற்கு மறந்த நெற்கூட்டிலிருநது தநத உணவும் ஒனறாகும் எனக் கிணைபபொருநன் கூறினான (புறம. 396:19,20). கிணைக்கணணுறை யும் தெயவத்திற்கு வழிபாடாறறின் உணவைப பெறக் காலந தாழக்குமெனறு வழிபாடாற்றாது தாமான தோனறிககோனிடம பகடுபெறக் கிணை மகன சென்றான் (புறம. 399:26). இடப்படும உண வுப் பொருளுககுச் சிறியவாக இடப்படும உணவு உபபாகும (பெரு. 64). மோர் விறறதால கிடைத்த உணவினைக் கொணடு, ஆயமகள சுற்றததாரை உணபிததாள் (பெரு. 163). மூடியைத திறநது உள்ளே சொரியபபட்ட பழைய நெலலாகிய உணவுப் பொருள நிரம்பிய கூடுகளையுடைய வீடு பல பெரும்பாணன சென்ற வழியில இருநதன (பெரு. 246,247). மாயோன, முருகன முதலிய கடவுளர் வாடாத பூக்களையும் இதழ குவியாத கணணினையும் அவியாகிய உணவினையும அச்சம் தரும் தோறறத்தினையும் உடையவர் (மது. 456 -458). துளி உணவினை யுடைய தன்னைப் பாடும் வானம்பாடி வருந்தும்படி மேகம் பொயத்தமை யினால் வற்கடம் உண்டாயிற்று (பட். 3-5). காவிரிப்பயனும் ஈழத்துணவும பிறபொருளகளும் புகாரின நடுவிடத்தும கரையிடத்தும் நிறைந் திருந்தன (பட். 190-193). வேடர் கொள்ளை கொணடு உணடமையான உணவு (நெல்) இல்லாத

வறுவிய கூட்டின் உள்ளிருந்து கூகை நண்பகலில குழறும் (பட். 266-268). சிறிய எறும்புகள் அளையின் கண சேர்த்துவைத்த புல்லரிசி உணவை மறவர் எடுததுண்டனர் (அகம். 377:2-4). உணா காணக.

**உணா** - உணவு. 'மனைவி உணாவை - உணவை - கைவிடுதலான் புதலவன் வீட்டை இகழ்ந்து நினை யாதவ னானான்' எனத் தம் வறுமையைக குமண னிடத்துப பெருஞ்சித்திரனார் கூறினார் (புறம். 160: 17,18). வரகு, தினை, கொள், அவரை எனனும் இநநான்கல்லது வேறு உணாவும் இல்லை என மாஙகுடி கிழார் கூறியுள்ளார் (புறம். 335:4-6). தேரில கட்டப பெறுவனவும் பந்தியில் நிற்பனவு மாகிய குதிரைகள் விடியற்காலையில் புலலாகிய உணாவை மென்றன (மது. 659,660). கூதிர்ப் பருவத் தில் பந்தியிலே நிற்றலை வெறுத்த குதிரைகள் புலலாகிய உணாவைக் குதட்டிக்கொண்டு தனிமை யைத் தோற்றுவிக்கும் குரல் கொடுத்தன (நெடு. 93,94). முற்றத்தில் உலரும் உணா (நெல) தின்னும் கோழியை மகளிர் தம் காதிலணிநதிருந்த மகரக் குழை எறிந்து விரட்டினர் (பட். 22,23). எயின மகளிர் கிளையுடைய முதுமான்களை விரட்டி அவை உணடெஞ்சிய உணாவைக் கொண்டுவந் தனர் (அகம். 283:4,5). 'குறப்பெண்ணாகிய வள்ளியை மணநதோய், எம் வாழ்த்தினை நின் செவிககுச சிறப்பு உணாவாகக் கொள்ளல் வேண்டும்' என நப்பண்ணனார் முருகனை வேணடல் (பரி. 19:95,96). உணவு காண்க.

**உத்தரியம்** - மேலாடை. பரத்தைவழி ஒழுகிய தலை வன், குதிரையேறி வந்தேன் என மறைததுக் கூறி யதை அறிந்த தலைவி, 'நீ யேறிவரும் குதிரை, நூலாற் செயத உத்தரியததுடன்-மேலாடையுடன்- பிற அணிகளையும் அணிநதிருக்குமோ' என வின வித் தலைவன புறத்தொழுககத்தை இடித்துரைத் தாள் (கலி. 96:13).

**உத்தி** - 1. தலைக்கோலம்.மகளிர் தலையில உத்தி என் னும் பூணினை அணிநதனர் (கலி. 96:13). பரத்தை வழி ஒழுகிய தலைவன புதிய யானையைக் கணடு தங்கினேன் என மறைத்துக் கூறியபொழுது, 'நீ ஏறிய யானை உத்தி - தலைக்கோலம் - பொறித்த தலைப்பணியுடன் பருமத்தை உடையதாக இருக் குமோ' எனத தலைவி இடித்துரைத்தாள் (கலி. 97: 14).

2. நெற்றிச்சுட்டி. தலைவனின் தேரில் பூட்டிய குதி ரைகள் புரவிநூல் கூறும இலக்கணப்படி பிறந்த பிறப்பினையும் நீலமணியாலாகிய உத்தியையும் - நெற்றிசசுட்டியையும் - உடையன (அகம். 400:5,13).

3. படப்பொறி. பாம்பு எழுச்சியையுடைய மணியை யும் நிறம் பொருந்திய உத்தியையும் - படப்பொறி யையும் - கட்செவியையும் கவைத்த நாவினையும் உடையது (புறம். 382:12-14). பாம்பின் உத்தி பொருந்திய தலை துணி படும்படி இடி முழங்கும் (அகம். 202.10,11; நற். 129:7,8). சுனைபபக்கத்தி லுள்ள காந்தளினது அழகிய குலையை மணிவிளங் கும உததியையுடைய அரவெனறு கருதி உருமேறு இடிததது (கலி. 45:2 4). ஒளிதிகழும் உததியும் அச் சமும பொருந்தியது நாகம (பரி. 12:4). நிறம் மிக்க இரண்டு உத்தி பொருநதிய கழுததையுடைய வரை கெழுசெல்வன் (ஆதிசேடன) திருக்கோயில் துறக்கம போல விளங்கியது (பரி. தி. 1:47-49).

**உதவி**- நன்மை. 'நின் படைகொள் மாக்கள் சிறுமனை வாழககையின் நீஙகித் தனபால் வருவோர்க்கு உதவி - நனமை - செய்யும நட்பொடு கூடிய குணத்தை எயதுமாறு நின தொழில அமைவதாக எனறு சேரமான் யானைக்கட்சேய மாநதரஞ்சேரலி ரும்பொறையைக் குறுஙகோழியூர்கிழார் வாழத்தி யுள்ளார் (புறம். 29:17-22). நாட்டிலுள்ள அரசர் நிலங்களை யெலலாம் கொணட பெரிய உதவியை யும் பொலநதார் மாாபினையும உடைய வடிம்ப லம்பநின்ற பாணடியன வழியில் வந்தவன், தலை யாலங்கானத்துச செருவெனற பாணடியன நெடுஞ செழியன் (மது. 60,61). நாளோலக்கத்திலிருந்து சிறப்புச் செய்வதற்கத 'தேவருலகை ஒதத செலவத் தையுடைய ஊர்களை, முன்பு போலே நட்புடைய வர் ஆளும்படி உதவி செயதவரைக் கொணர்மின்' என்று தலையாலங்கானத்துச் செருவென்ற பாண் டியன் நெடுஞ்செழியன் கூறினான் (மது. 741,743). 'தலைவியை ஈனறவள் என்று அன்புசெய்து அதற் காக அருளாவிட்டாலும், அவளைத் தலைவாரி முடித்து, மருங்கில் ஏற்றிவைத்துப் பாதுகாத்த நன்மை பொருந்திய உதவி உடையவ ளாதலின் அதனை அறிநது, தலைவன தலைவியொடு வந்து தனக்கு அருளினால் நல்லதாகும்' என்று உடன் போக்கிய நற்றாய கூறினாள் (அகம். 195:7-11). பகைவர் செருக்கினை அழித்தலும் தம்மைச் சேர்ந் தோர்க்குத் துன்பம் வந்தபோது உதவி செய்வதா கிய ஆண்மையும் வீட்டகத்தே வாளா மடிந்திருப் போர்க்கு இல்லை (அகம. 231 1-3). 'தான் வறுமை யுற்ற காலத்துப் பிறரால் பெற்று மகிழ்ந்த உத வியை அரசு கட்டிலாகிய சிறப்புப் பெற்ற பினனர் மறந்த மன்னன் போல யாம் செய்த நன்றியை மறந்துவிடாமல் தலைவியை வரைந்து கொண்டால் இவளது ஒலிமென் கூந்தல் நினக்கே உரியதாகும்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (குறு. 225). என் தோளின் பழியை மறைக்கின்ற உதவி செய்யும்

தோள் வளையினைத் தந்தை செய்து தந்தனன் என்று தலைவி சிறைப்புறமாகத் தோழிக்குரைத் தாள் (நற். 136:8,9). 'விரவு மலர் உதிர வீசி இர வுப் பெயல் பொழிந்த உதவியையுடைய மேகமே, நீ யாவரும் தொழுமாறு குன்றின் கொடுமுடிகள் பலவும் பொருந்தி உலவுவாயாக' என்று வினை முற்றி மீண்டு தலைவியைப பெற்ற தலைவன் மேகத்தை வாழ்த்தினான் (நற். 139: 1, 2, 9, 10). தினைபபுனத்தில பரவிப் படியும் கிளிகள் செயத உதவி நன்று; அந்நன்றியினைத் தெளிந்து நாம் செயயக் கூடிய செயல் யாதோ எனறு தலைமகன் உவந்து தன் நெஞ்சிற் குரைத்தான் (ஐங. 288). நீ புறத்துப் போய்க் கண்டது யாது என்று வினவிய தலைவிக்குப் புறத்தொழுக்கததே பொருநதிவந்த தலைவன், 'உடனுறை வாழக்கைக்கு உதவியாயி ருக்கும் கடவுளரைக் கணடு அவரிடத்தே தங்கி னேன்' என்று கூறினான் (கலி. 93:6,7).

**உதள்** - கிடாய். ஆயர்களின குரம்பை உதள - கிடா யினது - தோல்களைப் பாயலாக வுடைய முதி யோன் துயிலகொளளும் காவலையுடையது (பெரு. 151).

**உதியஞ்சேரல்** – சேரமன்னன். மக்கட்டாய முறைப்படி இவன் பதிற்றுப்பத்து இரண்டாம்பத்தின் தலைவ னான இமயவரமபன நெடுஞ்சேரலாதனின் தந்தை யாவன. இவனை 'மன்னிய பெரும்புகழ் மறுவில வாயமொழி இனனிசை முரசின் உதியஞ்சேரல' எனறு இநநூலின் இரண்டாம் பதிகம் சிறபபிததுக் கூறுகினறது (பதி. ப.2:1,2). இப்போது கிடைக்காமல் அழிந்துபட்டதாகக் கருதப்படும் இந்நூலின் முதற் பதது இவன்மீது பாடப்பட்டிருக்கலாம் என்று கருதபபடுகின்றது. இவன் பிற நாடுகளை வென்று அவற்றால் தன நாட்டை விரிவாக்கிய செய்தி யினை 'நாடுகண் அகறறிய உதியஞ்சேரல்' என்று அகநானூறு குறிபபிடுகின்றது (அகம். 65:5). வீர மிக்க குதிரைப் படைகளோடும் பிறக்கிடாத வலிமையோடும் போரிட்டுத் துறககம் எய்திய புகழ மிக்க தன்முன்னோர்க்காகப பெருஞ்சோறு கொடுத துக் கடனாற்றிய இவனுடைய சிறப்பு அகம். 233- ஆவது பாடலில் இடம பெற்றுள்ளது. இப்பெருஞ் சோறு கொடுத்த சிறப்பினைப் பாரதப்போ ரில் இருதிறப் படைககும் பெருஞ்சோறு அளித் ததாகக கூறுவாரு முளர் (அகம. 233:9 வே. வி. உரை விளக்கம்) அங்ஙனமாயின இவனும் புற நானூறறு இரண்டாம் பாடல் தலைவனான சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலா தனும் ஒருவராவார். ஆனால இவ்விருவரும் வேறுபட்டவ ராவர் என்று ப. மு. கூறுகின்றது (பக். 132). சேரமான் பெருஞ்சோற்று உதியஞ சேரலாதன் காண்க.

**உதியன்** - 1. சேர மரபினைச் சார்ந்த ஒரு மன்னன். இப் பெயர் சேரமன்னரைக் குறிக்கும் எனறு ப. மு. கூறுகினறது (பக்.132). குழுமூரில கொடைககடன ஏன்ற கோடாத நெஞ்சத்தை யுடைய உதியனின் அடுககளை போல அருவிகள ஓசைமிக்கு மலை யினின்றும் இறஙகும் (அகம். 168.5-8). உதியன் சினந்து சென்ற ஒலிககும் போர்க்களத்தில், வாசசியம் வாசிப்போர் விரைந்தூதும் ஆமபலங் குழலிசை போலத் தலைவி வாய்விட்டழுது கலஙகினாள் (நற். 113: 9-12).

2. **நன்னன் உதியன்** என்ற பெயரில் விளங்கிய ஒரு சேரமன்னன். நன்னன் உதியன என்பவனுடைய அரிய காவலை யுடைய பாழிச சிலம்பில தொன் முதிர் வேளிர் பொனனைப் பாதுகாத்து வைத் திருந்தனர் (அகம. 258: 1-3). நனனன உதியன காணக.

**உதிர்வை** - உதிர்ந்த தானிய மணி. மாடுகளின் கவர்தத குளமபால துவைககப்பட்டுப் பல கிளைகளினின்றும் உதிர்ந்த உதிர்வை - தானிய மணியை - அகன்ற பாறையின செவ்விய இடததில் குவிததுவைத்தல (அகம. 393. 6, 7).

**உதிரல்** - உதிர்ந்த பூ. வையையில வந்த புது வெள்ளம் வேங்கை மரத்தில மலர்நத இணரின உதிரலை - உதிர்நத பூவை - அடிதது வந்தது (பரி. 7: 12).

**உதைப்பு** - தைத்தல். பாசறையிடததே நளளிரவில், யானையின் மணியோசையும் கழிகளுடன் பிணிக் கப்பட்ட தோறகேடகததில் பொழியும அமபுகளின உதைப்பால - தைத்தலால - எழும் ஓசையும் முர சத்தின ஓசையொடு சேர்நது ஒலிககும (அகம. 24: 13-15, 18).

**உந்தி** - 1. கொப்பூழ். அரசன் மனைவி பூணணிந்த மினனுபபோல வளைந்த இடையினையும் அழகிய சுழித்த உந்தியையும் - கொபபூழையும் - கொண்டி ருந்தாள் (புறம். 383: 12, 13). களங்காய்க்கணணி நார்முடிச்சேரலின் பெருநதேவி அறக கற்பினையும் ஒண்ணுதலையும் பொனனணிக்கு விளககம் அளிக் கும் அழகிய வளைந்த உநதியையும் உடையவள் (பதி. 31:24,26). தலைவி, தோழி ஆகியோரைத் தலைவன் ஒணடொடியையும் மெனசாயலையும் அழகிய வளைநத உந்தியையும உடைய மழைக்கண் இளையீர் எனறு விளித்தான (குறி. 139-141). அழகிய வளைந்த உந்தியினையும் அஞ்சொல்லினை யுமுடைய பாண்மகள் வாளைமீனுக்கு விலையாக நெல்லைப் பெறாமல் முத்துக்களையும், அணிகளை

யும் பெறுவாள் (அகம். 126:8-12). சேரிதோறும் உபபு விறபவள் அவ்வாங்கு உந்தியினையும் மூங்கில் போனறதோளினையும் பெற்றிருநதாள் (அகம். 390: 9, 10). திருமாலின் அடி, கை, கண், வாய், தொடி, உந்தி,தோளணி வலயம், தாள், தோள், பிடரி ஆகி யன பெரியனவாகும் (பரி. 13:51-53).

2. ஆறு. மலையிடத்தே மாலையில் பெய்த மழையி னால உண்டாகிய நறுமணங் கமழும் உந்தி - ஆறு- காலையில் காந்தளின் மெல்லிலையினைக் கொண்டு வநதது (குறு. 361:2-4). மலையில் பெய்யும் மழை யால் உந்தி குறிய நுரைகளைச் சுமந்துகொண்டு நறியமலர்களுடன் பொங்கிவரும் புதுநீருடன் ஓடி வரும் (நற். 68:4, 5).

3. ஆற்றிடைக்குறை. ஆறுகள் தாங்காமல் உந்தியில் - ஆற்றிடைக் குறையில் - ஓங்கிச் செல்கின்ற பெருக் குக் குளங்கள் கொள்ளுமாறு நிறைத்துக் கீழ் கட லுக்குப் பரந்து செலலும் (மது. 245, 246).

4. யாழுறுப்பு. பொல்லம் பொத்துதல் நடுவே சேரப் பெற்றுக் கண்ணிற் கினிதாய்த் தவக்குப் பொருந் திய அளவின் மிகாமல் பகுத்தல் உண்டாக உயர்ந்து வளைந்த உந்தியினை-யாழுறுப்பினை-கொண்டது பேரியாழ் (மலை. 33, 34).

**உந்தூழ்** - 1. பெருமூங்கில் நெல். குறிஞ்சியில் உந்தூழ் - பெருமூங்கில நெல் - முற்றிப் பயன்தரும் தன்மை எய்தி அசையும் (மலை. 132, 133).

2. பெருமூஙகிற்பூ. தலைவியும் தோழியும் பறிததுத் திரட்டிய மலர்களில், தனக்குரித்தாக மணம் வீசும விரிந்த கொத்தினை யுடைய உந்தூழும் - பெரு மூங்கிற் பூவும - ஒன்று (குறி. 65).

**உப்பு** - உவர்ப்புப்பொருள். கடற்கரையிடததே கழி நீரால் விளைந்த உப்பை முகந்துகொண்டு மலை நாடு நோக்கிச் செல்லும் வணடியினை இழுத்துச் செல்லும் பகட்டினைப் போன்றவன் சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமா வளவன் (புறம். 60:7-9), பாரி இறககுமுன் நெடுவரைஏறி அரசரின குதிரைகளை எணணும் இனனகை மகளிர் அவன் இறந்தபின், மனையிடத்தே பீர்க்கு முளைத்துச் சுரை படர்நத இடத்தில் ஈத்திலையுடைய குபபை யின் மீது ஏறி உமணர் உப்பினைக் கொணடு செல்லும வணடிகளை எண்ணுவர் (புறம. 116). உலைவில்லாமையால், குப்பையில முளைத்து முன் னரே கிளளப் பெற்ற கணணில கிளைத்த இளங் கீரையைப் பறித்து உப்பிலலாயல் அவிதத இலை யினை உண்டிருந்தாள் என்று வறுமை மிகவுற்ற பெருஞ்சித்திரனார் தம் மனைவிபற்றிக் கூறினார் (புறம. 159.9-12). உபபைக் கொண்டு செல்லும் வண்டிகளை யுடைய உப்பு வணிகரது காட்டி டத்ததாகிய கழிநீரால் சூழப்பட்ட குன்றம்போல இகழப்படாத சிறப்பினை யுடையது தலைவனின் உள்ளக் கருத்து (புறம். 313:5-7). பிணத்தை ஈமத்தில் இடுமுன் சுடுகாட்டின் அகன்ற இடத்தில் உப்பிலா அவிப்புழுக்கல் இழிசினனால் பின்புறம் பாராமல் பலியாகக் கொடுக்கப்படும் (புறம். 363: 10-14). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனது நாட்டின் கழிசார்ந்த பகுதியில், சிறு வெள்ளுப்பின் விலை கூறிப் பெரிய மலைநாடு கட்குக் கொண்டுசென்று விற்கும் உமணர்குடி செழிபபுற்று விளங்கியது (புறம். 386;16,17). வறுமை மிக்க பாணர் சுற்றம் குப்பையில் முளைத்துப் பறித்த, உப்பில்லாது வெந்த வேளைக் கீரையை மடவோர் காட்சி நாணிக் கதவடைத்துக் கொண்டு உண்டது (சிறு. 136-139). முதுவெள்ளிலை என்னும் ஊரில ஒழியாது விளஙகும் ஓசைகளில் பெரிய கழி யிடத்தே உப்புப் பாத்தியில் விளைந்த வெள்ளிய உப்பை விற்கும் அளவர் ஓசையும் ஒன்றாகும் (மது. 117-119). கரிய கழியிடததே அமைந்த பாத்தியில் வெள்ளிய உப்பு விளையும (மது. 318). வெள்ளிய உப்பின் விலைகூறி விற்றதால கிடைத்த நெல்லைக் கொண்டு வநத வலியபடகுகள் கழியில் நடப்பெற்ற தறிகளில் பிணிக்கப்பட்டன (பட். 29-31). கடலின் பெருமை அழியுமாறு வலையில் மீன்களை முகந்து அவற்றைக் கரை சேர்க்கக் கூடிய இளையரும் முதியருமாகிய நுளையருக்கு உப்பினைச செலுத் தும் வணிகர் சகடுகளில் பூட்டிய காளைகள் உவமை (அகம். 30:1-6). மீன்பிடிக்கும் தொழிலில் தங்கிய தந்தைக்கு இளைய மகள் உப்பு விற்றுக்கொண்ட நெல்லால ஆகிய சோற்றை, அயிலைமீன் இட்டுச் சமைத்த புளிக்கறியினைச் சொரிந்து கருவாட்டு டன் இடுவாள் (அகம். 60:3-6). பரதவர் உப்பங்கழி யாகிய வயலில் உழாமல் விளைவித்த வெள்ளிய கல்லுப்பினை உமணர், குன்றங்களைக் கடந்து கொணடுசென்று விற்பர் (அகம். 140:1-4). உமணர் மடமகள் தான் அணிந்த வளையலகள் ஒலிக்கச் சென்று 'நெல்லுக்கு ஒத்த அளவு உப்பு' என்று சேரியில் விலை கூறி விற்பாள் (அகம். 140:5-8). கழியில் விளைந்த வெள்ளுப்பின் விலை கூறி விற்ற உமணர் தம் வணடிகளிற பூட்டிய எருதுகளை மேயவிட்டு, இளைபபாறி அவ்விடத்தே விடுத்துச் சென்ற அடுப்பில கொடுவிலலுடைய ஆடவர் ஆநிரைகளைக கவர்ந்த ஆரவாரததுடன் வந்து ஊனினைப் புழுக்கி உண்பர் (அகம். 159:1-5,10,11). கடலலையில் விளையாடித் தளர்ச்சியுற்ற நிரை வளை ஆயத்தோடு மகளிர் உப்பு மேட்டின் ஏறி நின்று, மாலையில் கரைக்கு வரும் படகுகளை

எண்ணுவர் (அகம்.190:1-3). தலைவன் பரத்தையைப் பொருநதியமையால் புலந்த தலைவியின் தோள்கள் வீரை என்னும இடத்திலுள்ள வெள்ளை உப்பின் குவியல் பெரிய மழைக்குக் கரைந்தாற் போல மெலிந்தமையால் இழை நெகிழ்ந்தன (அகம். 206:12-16). தலைவியின நாணத்தின் எல்லையில் அடங்காத காமத்திற்கு உபபினாலாகிய அணை யில தடைப்பட்டு நிலலாத வெள்ளம் உவமை (அகம். 208:18-20). 'நாம் உறையும நாட்டின் நீஙகித் தலைவியின தநதையொடு கூடிப் பெரிய உப்புச செறுவில உப்புப பொதியுடன் திரிந்து வருநதியும் பணிந்தும் சார்ந்தும இருபபின் தலைவியை அவள் தநதை தருவானோ என்று தலைவன் தன் நெஞ சிற்குக் கூறினான் (அகம். 280:7-11). கடல நீரால விளைந்த உப்பினை விற்கும வணிகர், களிறு பிடியொடு தங்கும் கானததைக் கடந்து, தம எருதுகளை இளைப்பாறச செய்தனர் (அகம். 295: 6-8). உப்பினைக் கொண்டு செலலும உமணர் வண்டியுடன் வந்த (கோழி) பேடை அஞ்சியோடுமாறு இடிபோலும ஓசையுடைய கடல அலை ஒலித்து எழுநது சிதறும் (அகம். 310.14-16). உழவர் நெலலினைத் தூற்றியதனால் எழுந்த துரும்புகள் உப்பளததிலுள்ள பாத்தியில் பரவ, அதனால் ஆணடுள்ள வெள்ளுப்புக் கெட்டமை யால கடற்றுறையிலுள்ள நுளையர் சினந்து உழவ ரோடு மாறுகொணடு எதிர்ததுச் சேற்றை வீசி எறிந்து செய்த போரைக் கண்டு மருத நிலத்தே யுள்ள முதிய பெரியவர் அக்கைகலப்பினை விலக் கிக் கள்தெளிவை நுளையர்க்கு வழங்கினர் (அகம். 366:2-11). உவர் நிலததே விளைந்த உபபின் விலை கூறிப் புழுதிபடும் நெடிய வழிகளில உப்புவணிகர் செறிந்த கோல்களுடன செலவர் (அகம். 390:1-3). கூந்தல் அலையத தழையுடை அசைய நடநது, 'ஊரவர்கனே, நெலலும உப்பும் நேரே கொள் ளீரோ' எனச் சேரிதொறும் விலை கூறி விறகு மவளைத் தலைவன உன உடலினகண உளதாம உப்பின விலை அறிந்திலமே எனறு வினவித் தடைப்படுததினான் (அகம. 390:5,7-12). ஏறுதற கரிய கரையில் நினற உப்பினைச் செலுததும் வணடி பெருமழை பொழிநததால் அழிநதது போலத் தலைவியால் கொணட காமத்தால நாண அழிந்து, கள்ளுண்டு களித்ததறகு மேலும் கள்ளுண டது போலத் தலைவியை அடைய விருமபினாய் எனறு தலைவன தன் நெஞ்சிற் குரைத்தான (குறு. 165). சுறாமீன எறிந்த புண் ஆறித் தநதை கடலில் மீன் பிடிக்கச் சென்றனன். உபபை விற்று வெண்ணெல் பெறுவதற்காகத் தாயும் உப்பு விளையும் உப்பளத்திற்குச் சென்றாள். இப்போது தலைவன் வந்தால் தலைவியை எளிதில் பெறலாம் என்று யாரேனும் கூறினால நல்லது என்று தலைமகன் சிறைபபுறத்தானாகத தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 269). உப்பு வாணிகர் வெள்ளிய கல்லுப்பின விலை கூறிப் பசு நிரையை எழுப்பும் நெடிய நெறியில செல்லுகினற வணடிகள் செய்யும் ஒலியினைக் கேட்டுக் கழியருகே யுள்ள நாரைகள வெருவும (நற். 4:7-11). உவர் நிலத்து விளையும் உபபுக் குவியலை மலைநாட்ட கததே கொணடுசெனறு விலைகூறி விற்கும் உமணர் ஓரிடத்து நிலைததிராத வாழ்வுடையர் (நற். 138:1-3). மருத நிலத்து உமணர் தம் நாட்டில் விளைந்த நெல்லைக் கொடுதது அதன் விலையாகப் பிறநாட்டில் விளைநத உப்பினைப் பெற்று அதனை வணடிகளில் கொண்டு செனறு விலைகூறி விற்பர் (நற.183.1-5). ஊர்ந்து செலகின்ற கடல்நீர் ஓடிப் பரந்த உபபுத் தோனறுதலுடைய சேற்றி னைக் கொண்ட கழியில் குருகு இரைவேட்டெ ழுந்தது (நற். 211:1-4). உமணராற் கொண்டு வரப் பட்ட உப்பின விலையாகப் பெற்ற நெல்லைக் குற்றி ஆக்கிய அரிசிக் காணம குதிரைக்கு உணவாக அளிக்கபபட்டது (நற. 254:6,7). தலைவியின் ஊர்,மழை பெயயாது வறநது விட்டால் கழி யிடத்துள்ள முணடக மலா உதிர்ந்து பரக்கச சேறனைத்தும் காயநதுபோக, அககழியின சேற்றிட மெலலாம வெள்ளுபபு விளையும தனமையதாகும் (நற். 311:3,4). உழாது விளைக்கும் நெய்தல் நில மககளாகிய பரதவர், உவர் நிலததில விளையும உபபினை, உப்பு வணிகர் வாங்க வரும் காலம் நோககிக் கானலில குவியலாகக் குவிதது வைப்பர். பரதவ மகளிா ஆயததுடன உப்புககுவியலில ஏறி நின்று 'இங்கு வரும் படகு எம தநதையது; அங்கு வரும படகு நும் தந்தையது' என்று எணணி நிற்பர் (நற. 331:1-8). கரையிடததே கடுவெயிலி னால கொதிக்கும கலலாக விளைகின்ற உப்புக் களை ஏறறி நீணட நெறியிற் செல்லும் வணடிகள் நிரையாகச செலலுமாறு உபபு வணிகர் அவறறை உரப்பி ஓட்டும்போது உபபள வெளியில் பேரொலி உணடாகும் (நற. 354:6-9). 'தலைவி தநத காம நோயினை நீநதி என்னுடைய உயிா, உபபுப பாத்தியிற கிடந்த உப்பாலாகிய பாவை மழைத் துளியினை உற்றது போலக் கரைகின்றது' எனறு மடலேறித் தலைவியை அடைந்த தலைவன தன முனனையநிலை கூறினான் (கலி. 138:14-17).

2. **இன்பம்.** நெல்லும உபபும நேரே, ஊரீரே கொள்ளீரோ எனறு சேரிதொறும் உப்பின் விலை கூறி விற்பவளிடம உன்மெயயினகண் வாழும் உபபின் - இனபத்தின - விலை அறியாம எனத்

தலைவன் கூறி அவளைச் சிறிது தடைப்படுத்தினான் (அகம். 390:8-12).

**உப்பூரிகுடி கிழார் மகனார் உருத்திர சன்மனார்** - புலவர். பாண்டியன் உக்கிரப் பெருவழுதியின் வேண்டுகோளின்படி அகநானூற்றைத் தொகுத்தவர். இவர் ஊமையாயிருந்தும் ஐந்து வயதளவில் இறையனார் களவியலுரை கேட்டு அது சிறந்தவுரை என மெய்ப்பாட்டினால் உணர்த்தினார் எனக் களவியலுரை கூறும்.

**உம்பர்**- 1. உப்பால். குட்டுவன் காக்கும் குடநாடு ஈரப்பலா மரங்கள் மிகுந்த ஒடுங்காடு என்னும் ஊர்க்கு உம்பர்-உப்பால்-இருந்தது (அகம். 91:12-17). நீண்ட வேலினையும் வளமான உணவுகளையு முடைய பாணனின் நாட்டிற்கு உம்பர் உள்ள கொடிய சுரநெறி கடந்து சென்று பொருள்தேடும் தலைவன் பால் எனது உயிர் சென்றது எனத் தோழிக்குத் தலைவி கூறினாள் (அகம். 113:15-18,27). புல்லி என்பானுக்குரிய திருவேங்கடத்தின் உம்பர் உள்ள பாலை நிலத்தைக் கடந்து தலைவன் பொருள தேடச் சென்றான் (அகம். 209:8-10). சோலை சூழ்ந்த திருவேங்கடத்தின் உம்பர் உள்ள, மொழி மாறுபட்ட வேற்று நாட்டின்கண் தலைவர் இருந்தாலும் விரைந்துவந்து அருள்புரிவர் எனபது தலைவியை ஆற்றும் தோழி கூற்று (அகம். 211:7,8). 'வெள்ளருவியை யுடைய வேங்கடத்தின் உம்பர் உள்ள வடுக நாட்டில், சுரம்பல கடந்து பொருள் தேடத் தலைவர் செலல நினைத்தாலும் நின்னை மறவார்' எனத் தோழி கூறி, வேறுபட்ட தலைவியை வற்புறுத்தினாள் (அகம். 213:3;19,23). குறுக்கிட்டுக் கிடக்கின்ற குவடுகளை யுடைய மலைக்கு உம்பர் உள்ள வேறுபட்ட மொழி பேசும நாடுகளை நினைத்துப் பொருள்தேட வலிக்கும் நெஞ்சத்துடன் வேலேந்தித் தலைவன் சென்றான் (அகம. 215:1-5). வழுதுணைத் தழும்பனுக் குரிய ஊணூரின உம்பர் விழுநிதியோடு கூடிய மருங்கூர்ப் பட்டினம் இருந்தது (அகம். 227:17-20). மோகூர் பணியாமையின் அதன மீது படையெடுத்து வந்த மோரியர் தம் தேர் செல்லுதற் பொருட்டுப் பாறைகளை உடைத்து வழியுண்டாக்கிய மலைநெறிக்கு உம்பர் உள்ள நீண்ட சுரவழியே தலைவன் பொருள் தேடச் சென்றான (அகம. 251:10-15). புல்லியின் வேங்கட நாட்டிற்கு உமபர் உள்ள அரியசுரத்தின் வழி தலைவர் சென்றிருப்பினும் தாழ்க்காது விரைவில் வருவர் என்று கூறித் தோழி தலைவியைத் தேற்றினாள (அகம். 311:12-14; 393:18-21). தலைவன் சுனைநீரில் நம்முடன் பலநாளும் ஆடி, உம்பர் சென்று சின்னாள் கழிவதற்குள் அலர் மிகுந்தது என்பது தோழியின் சிறைப்புறக் கூற்று (அகம். 368:10-13;19). ஈந்து இன்புறுதற்கு வேண்டும் பொருள்தேடித் தலைவன் வானவரம்பனின் நாட்டுக்கு உம்பர் உள்ள மலைவழிகளைக் கடந்து சென்றான் (அகம். 389:15, 16,24). 'கட்டியென்பானுடைய நாட்டுக்கு உம்பர் உள்ள மொழி மாறுபட்ட நாட்டில் தலைவர் இருப்பினும் அங்குச் செல்லுதலை விரும்பினேன்' என்று பிரிவாற்றாத தலைவி கூறினாள் (குறு. 11:5-8). 'ஊரில் உள்ளார் துயின்றாலும் எமது வீட்டின் அயலிலுள்ள ஏழிலைப்பாலை என்னும் மரத்தின் உம்பர் உள்ள நொச்சிப்பூ உதிரும் ஓசை கேட்டு யாம் துயில வில்லை' என்று முதல்நாள் இரவுக்குறி பிழைத்து மறுநாள் வந்த தலைவற்குத் தோழி கூறல் (குறு. 138).

2. நெடுந்தூரம். 'நேற்று உம்பர் – நெடுந்தூரம் - சென்றுவிட்ட என் மகள்போல் இவள் தோன்றுதலின் என் கண்ணீர் பெருகியது' எனச் செவிலி இடைச்சுரத்துக் கண்ட தலைவன் தலைவியரிடம் கூறினாள் (நற். 198:3, 4).

3. மேல். பொருள்வயிற் பிரிந்த தலைவன், இடைச் சுரத்தில் மதியத்தைக் கண்டவுடன் கல் பிறங்கு மாமலையின் உம்பர் - மேல் - உள்ள தன் தலைவியை நினைந்து கவன்றான் (நற். 62:4-10). கான் யாற்றின் உம்பர் உள்ள கரையில் கலைமான் மலையாட்டினத்துடனே துள்ளிக் குதிக்கும் (நற். 119:6, 7).

4. வடதிசை. 'வெற்றி முரசினை யுடைய பாண்டியன் இமையத்து உம்பரும் - வடதிசையினும் - மன்னி விளங்குக என'த் திருமாலை வழிபடுவோம்' என முல்லை நிலத் தலைவி கூறினாள் (கலி. 105: 72-75).

5. அவ்வுலகம் (தேவருலகம்). புதல்வன் நடுவே விளங்கத் தலைவனும் தலைவியும் கிடந்த கிடக்கை இன்பம் தருவதாகும். இவ்வுலகமும் உம்பரும் - அவ்வுலகமும் - ஆகிய இரணடுலகின்கண்ணும் அவ்வின்பம் பெறுதற்கரிது எனக் கடிமனைச் சென்று வந்த செவிலி நற்றாய்க்குக் கூறல் (ஐங். 401). வையை யகம், உம்பர் (அவ்வுலகத்தில) திரியும் விமானங்களைக் காட்டும் தெளிநத நீரோட்டத்தை யுடையது (பரி. 11:70,71).

6. தேவர் (ஆகுபெயர்). திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளிய முருகன் உலகில் குன்றுதோறும் செய்யப் பெறும் பூசைக்கண்ணே ஏற்றுக்கொள்ளும் அகிற்

புகை மேலே போதலால் உம்பர்-தேவர்-இமைப்பர் (பரி. 17:29-31).

**உம்பல் - 1. யானை.** மராமரத்தின் மெல்லிய பூங் கொத்தையும் உம்பல்-யானை-முறித்த யாமரத்தின் பூவினையும மரல்நாரில் தளிர்களோடே நெருங்கக் கட்டின கண்ணியை அழகுபெறச் சூடிச் செல்லு மின் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 428-433).

**2. வழிதோன்றல்.** 'கடல் சூழ்ந்த பரந்த உலகத்தைத் தமது முயற்சியால கொணடு, புகழை நிலை நிறுத்தித் தாமே ஆணட வலிமை யுடையோரின் உம்பல்-வழிததோன்றல-பாணடியன் நெடுஞ்செழியன (புறம. 18.1-4). செங்கோலாட்சிக்கு இடையூறான வற்றை நீககி, நன்மைசெய்து, மக்கள் சிறப்பாக இலலறம நடத்திப பகுத்துணடு வாழுமாறு அரசியலை முறையே செலுததிய உரவோரின் உம்பல் பலயானைச செலகெழு குட்டுவன்' (பதி. 22:4-11) பெருஞ்சேரலிரும்பொறை கொற்றவையைப பரவியும் பகைவரை வென்று அரணகளைக கைப்பற்றிப் பெற்ற பொருளைப பலர்க்கும வழஙகியும் வாழ்ந்த முனனோரின் உம்பல் (பதி. 90:19-24). தொண்டைமானிளந்திரையன் கடல் வண்ணனாகிய திருமாலின வழிவநத பல்வேற்றிரையனின் உம் பல ஆவான (பெரு. 30,31). பொன்மாலை யணிந்த வடிம்பலம்பநின்ற பாண்டியனின் உமபல தலையாலங்கானத்துச செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன (மது. 61). 'வாய்மையிற் குன்றுதலில்லாத நலல புகழையுடைய வழியிற் சென்றவரின உம்பலே' என நனனன வேணமானை விறலியா பாடினர் (மலை. 539,540).

**உம்பற்காட்டு இளங்கண்ணனார் - புலவர்.** இளங்கண்ணனார் என்பது இயற்பெயர். உம்பற் காட்டில் வாழ்ந்தவ ராதலின் உம்பற் காட்டு இளங்கண்ணனார் எனப் பெயர் பெற்றார். பருவங்கணடு வன்புறையெதிரழிந்து தலைமகள் தோழிக்குச சொலலியது என்னும துறையில் இவரது ஒரே பாடல் (அகம. 264). அமைநதுள்ளது.

**உம்பற்காடு - ஓர் ஊர்.** இது சேரமன்னர்க்குரியது. இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனை இரண்டாம் பத்தாற் பாடிய குமட்டூர்க்கண்ணனார் உம்பற் காட்டிலுள்ள ஐந்நூறு ஊர்களைப் பிரமதாயமாகப் பெற்றார் (பதி.ப.2.உரை). பல்யானைச் செல்கெழு குட்டுவன் உம்பற்காட்டுப் பகுதியைத் தன் செங்கோற்கீழ்க் கொண்டுவந்தான் (பதி. ப. 3:2). பரணர், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனை ஐந்தாம் பத்தாற் பாடி உம்பற் காட்டின் வருவாயைப் பரிசிலாகப் பெற்றார் (பதி. ப. 5. உரை).

**உம்பற் பெருங்காடு - பெரிய உம்பற்காடு.** களிற்றின் நிரை தம் கைகளால் தோண்டித் தின்னும் இனிய சுளைகளை யுடைய பலாமரஙகள் நிறைநதுள்ள உம்பற் பெருங்காட்டைக் கடந்து தலைவன பொருள்தேடச் சென்றான (அகம். 357:8-10).

**உம்மை - மறு பிறப்பு.** 'இப்பிறப்பில் நீயும நானும் கூடி இன்புற்றிருநதவாறு போலவே உம்மையிலும - மறுபிறப்பிலும - நின்னொடு கூடி இன்புற்று வாழ்தலை விதி கூட்டுவதாக' எனப் பாரி துஞ்சிய பின் வடக்கிருந்த கபிலா கூறல (புறம். 236.10,11).

**உமட்டியர் - உமண்குடிப்பெண்டிர்.** உப்பு விற்கும - உமணகுடிப்பெணடிர் - உமணர் வளர்ககும் குரங்குகள், உமட்டியா பெற்ற பிள்ளைகளுடன முத்துக்கள் அகத்திடப் பெற்ற கிலுகிலுப்பையாகக கொணடு விளையாடின (சிறு.56-61).

**உமட்டூர்கிழார் மகனார் பரங்கொற்றனார் - புலவர்.** பரங்கொற்றனார் என்னும் இயறபெயருடையா இவர் உமட்டூா கிழாரின மகனாவார். பிரிவினகண கவன்ற தலைவியைத் தோழி ஆற்றுவிககும் அகநானூற்றுப பாடல (69) ஒன்று மட்டும் பாடியுள்ளார். ஈதலுககாகத் தலைவன பொருள தேடினான எனபதும் மோரியர் பாறைகளை உடைததுத் தேர் செலலுதறகேற்ற நெறி உணடாககினர் எனபதும் இப்பாடலில காணபபெறும அருஞ்செயதிகளாம.

**உமண் - உமணர் (உப்பு வாணிகர்).** சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன ஆட்சிககுட்பட்ட கழியைச் சார்நத பகுதிகளில, மலைநாடுகளிற சென்று உப்பு விறகும உமண் - உமணர் - குடி தழைததிருந்தது (புறம. 386:16,17). சுர வழியில உமண்சாதது விட்டுச் சென்ற கல்லடுப்பில மழவர் ஊனைப் புழுககி உணடனர் (அகம. 119.8-10). உப்பின் விலை கூறி விற்கும் உமண நுகததிற் பூட்டிய காளைகளை அவிழ்த்து மேயவிட்டுத் தாமும் சோறட்டு உணடு இளைப்பாறிச சென்றது (அகம். 159:1-4). கயிற்றால் கட்டிய சகடத்தை எருதுகளின் பிடரியிலே நுகத்தாற பிணித்து யாற்றின ஏற்றமான துறைகளில ஓட்டுமிடத்து உமணர் உரப்பும் ஒலி கேட்டு மான்கள் அஞ்சும. (அகம். 173:9-11). உமண் மகன ஏறிச் செல்லும சகடத்தின உருளையிலுள்ள பூண் உராய்நததமையின் நடுகல்லில உள்ள எழுததுக்கள் தேயநது படிபபோர்க்கு வேறுபொருள் பயக்கும் (அகம. 343:4-8). நுகத்தில உள்ள பூட்டு நெருக்கியமையால் வருந்தும் பகடுகள் பூட்டிய உமண் வண்டிகளின் குததுக்கோல்கள் பாலை நிலத்திலுள்ள உலர்நத சினைகளுக்கு உவமை (குறு. 388.3-5). பரல் பொருந்திய சென்று

சேர்தற்கரிய வழியில் உமண் வாழும் சிறுகுடி உயர்ந்து தோனறும் (நற். 374:1,2). உமணர் காணக.

**உமண் சாத்து** - உப்பு வாணிகர் கூட்டம். சுரம் உமண் சாத்து-உப்புவாணிகர் கூட்டம்-விடுத்துச் சென்ற கலலடுப்பில், வலிய விலலுடைய மழவர் நாற்ற முண்டாகுமாறு ஊனைப்புழுக்கி உணணும இடங் களை யுடையது (அகம. 119: 7-9).

**உமண் மகன்** - உப்புவாணிகன். உமண் மகனுடைய-உபபுவாணிகனுடைய - வண்டி உருளின் பொலி வற்ற பூண சிதைத்த வலிய பாறையிலுள்ள நடு கலலின கணணி வாடப் பெற்றதும் நீராட்டப் பெறாததுமாகிய இடத்தில் உளியால் இயற்றப் பட்ட கோடுகள் மறைநத எழுத்துக்கள் அவ்வழியே செல்லும புதியவர்களுக்கு வேறு பொருளவாகப் பிறழநது காணப்படும (அகம். 343:4-8).

**உமணர்** - உப்பு வாணிகர். சோழன் போர்வைக் கோப் பெருநற்கிள்ளி போர்க்களம் புகுந்தால அவனை எதிர்த்துப் போந்த வீரர்க்கு அவன உமணர் அஞ்சும் ஏற்றிழிவுடைய துறையினை ஒப்பான்' (புறம். 84:3-6). உமணர் தங்கள் அச்சு மரத்தின் கணணே அடுத்துக் கட்டப்பட்ட சேம அச்சினைப் போன்றவன், அதியமான் மகன் பொகுட்டெழினி (புறம். 102: 4-6). பாரி இறக்குமுன் வேந்தரின் பொலமபடைக் கலிமாவினை எண்ணும் பாரி மகளிர், அவன் இறந்தபின் பீர்க்கு முளைத்துச் சுரை படர்ந்த மனையிடத்தில் ஈததிலையினை யுடைய குப்பைமீதேறி உமணர் செலுத்தும் சக டத்தை எண்ணுவர் (புறம். 116: 3-8, 16, 17). முடம் பட்டதனால வாழும் திறனில்லாத எருதினை உமணர் நீரும் புல்லும் கொடாமல் யாருமில்லாத ஓரிடத்தே விட்டு விடுவதுண்டு (புறம். 307:7-9). இர வலர் யானை தேர்களை வேண்டினாலும், பகை வர்பாலுள்ள அவற்றைக் காட்டித் தரும் கடப் பாடுடைய தலைவனது உள்ளக் கருத்து, உப்பைக் கொண்டு செல்லும் வண்டிகளையுடைய உமணரின் காட்டிடத்ததாகிய கழிநீரால் அலைக்கப் பட்ட குனறம் போன்று இகழப்படாத தன்மையுடையது (புறம. 313:3-7). வலிய எருத்தினையுடைய உமண ரின் வணடி ஒழுங்கோடு வந்த மந்தி முத்தினைக் கிளிஞ்சிலிலிட்டுக் கிலுகிலுப்பையாக்கி, அவ்வுமணர் தம் பிள்ளைகளுடன் விளையாடும் (சிறு. 55-61). உமணர், சில்பத உணவின (உப்பின்) விலை கூறிப் பல எருதுகளையும் ஓட்டிக் கொண்டு நெடிய வழி களில் ஊர்தொறும் செல்வர் (பெரு. 64,65). ஊர் எழுநது செலவதுபோலச் செல்லும் உமணர் நீரற்ற காட்டின் அரிய இடஙகளில் தடைப்பட்ட எருது களை உரப்பி ஓட்டும் தெள்ளிய ஒலி பெரிய குன்றத்தே எதிரொலிக்கும் (அகம்.17:11-14). கடலின் பெருமை குன்றுமாறு குறுஙகண வலையில் மீன் களை முகநது, இளையர் முதியோர் சுற்றததினர் ஆகியோர் ஒன்றுகூடி ஆரவாரம செய்து உமணர் அரிய துறைகளில் செலுத்தும் வண்டிகளில் பூட்டிய எருதுகளைப போல இழுத்தனர் (அகம். 30:1-7). உமணர்தம் காதல் மடமகள் வளை யொலிக்கக் கைவீசி நடந்து, 'நெல்லுக்கு ஒத்த அளவினது உப்பு' என்று பணடமாற்றாக விலைகூறிச் சேரியில் விற்றுச் செல்லும் போது மனைகளிலே உள்ள நாய்கள் குரைத்தன (அகம். 140:5-9). பாலை நிலத்தே புலி கொன்று தின்று எஞ்சிய யானை யின் ஊனில் ஆறலைப்போர் கோலில் கோத்துக் கொண்டு ஏகியதுபோக எஞ்சியுள்ளதனைக் கடல் விளை அமுதாகிய உப்பினைக் கொணரும் உமணர் கூட்டம் தீக் கடை கோலால் உண்டாக்கிய தீயில் வதக்கிச் சமைத்துண்டது (அகம. 169:3-6). பாலை நிலததிலுள்ள பாதிரிப்பூவினைத் தீயைப்போன்ற அலரியுடன் இடையிடையே கலந்து வெள்ளிய தாழம்பூவின் தோட்டில் வைததுக் கட்டிய கண்ணி யினையும் தொடுதோல் அணிந்து ஒலிக்கும் அடி யினையும் கோலினையும் உமணர் கொண்டிருந் தனர் (அகம். 191:1-4). கள்வர் மிக்க பாலைநில வழியில யாமரத்தின் நாரினை யுடைய அடிப்பட் டையினை நீர் வரும்படி உரித்துக் களிறு சுவைத் துப் போட்ட சக்கையாகிய சுளளிகள் உமணர் தீ மூட்டுதற் குரியவாயின (அகம். 257:14-17). களிறு பிடியொடு வருந்தும் வெம்பிய கானம் கடந்து உப்பினை விற்கும் உமணர் தம் வருந்திய எருதுகள் இளைப்பாறத் தங்கிச் சென்றனர் (அகம். 295: 6-10). சுரநெறியில் வற்றல் மரத்தினைப் பொருந் திய சிள்வீடு என்னும் வண்டுகள் பலவும் ஒன்று சேர்ந்து உமணரின் கூட்டமான எருதுகளின் மணி யொலி போல ஒலிக்கும் (அகம். 303:16-18). தலைவி யின்சிறு நல்லூர், உப்பினைச் செலுத்தி வரும் உமணரின் வண்டியுடன் வந்த அடைகாக்கும் (கோழி) பேடை அஞ்சியோடுமாறு அலை ஒலித்து எழுந்து சிதறி விழும் கடலை எல்லையாக உடை யது (அகம். 310:14-17). வளைந்த நுகத்தில் கயிற் றால் பிணிக்கப்பட்ட உமணரின் பகடுகள் வண்டி களை வருந்தி இழுத்துச் செல்லும் (அகம். 329:5-7). உமணர் கூட்டமாக ஓட்டிச் செல்லும் (கழுதை) நிரை போன்ற பாறைகளின் வழியே பலகாலும் தூது செல்லும் பார்ப்பனன் கையில் ஓலைச் சுரு ளுடன் வருதலைப் பார்த்து, இவன் கையில் உள் ளது பொன்னாகும் என்று நினைத்துக் கடுங்கண் மறவர் அவனை வீணாக வெட்டி வீழ்த்தியமைக்கு

இரங்கினர் (அகம். 337:5-11). உமணர் உவர் நிலத்தில் விளைந்த உப்பின் விலை கூறிச் செறிந்த கோல்களைக் கொண்டு சேட்புலம் படர்வர் (அகம். 390:1-3). உமணர் தங்கிச் சென்ற பக்கத்தையுடைய, ஊர் பாழ்பட்டது போன்ற ஓமை மரம் நிறைந்த பாலை நிலம் எமக்கு இன்னாது என்று பிரிந்து தனியே செல்லக் கருதினால், தனித்திருக்கும் எமக்கு வீடுகள் இனிமை தருவன ஆகுமோ என்று பிரிந்து செலலவுறற தலைவனிடம தோழி வினவினாள் (குறு. 124). உமணர் வெண்கல் உப்பின் விலையைக் கூறிக் கூட்டமான ஆநிரையை எழுப்பும் நீண்ட வழிகளில் செல்லும் வணடிகள் மணலில் மடுதது முழங்கும் ஓசை கேட்டு வயலிலுள்ள கருங் கால வெண்குருகு வெருவும் (நற். 4:7-11). உவர் நிலத்தே விளைநத குன்றுபோலும் உப்புக்குவியலை மலைநாட்டிற்குக் கொண்டு செல்லும் ஓரிடத்தும் நிலைத்திராத வாழவினையுடைய உமணர், தங்கள் வண்டிகளின் பார் முறிந்தால் அப்பாரினை அவ் விடத்தே விட்டுச் செலவர் (நற். 138:1-4). தங்கள் நாட்டில விளைந்த வெண்ணெல்லைக் கொண்டு சென்று பிற நாட்டில் விளைந்த உப்பினை அந்நெல்லுககு விலையாகப் பெற்று வணடிகளை ஓட்டிககொண்டு நீண்ட மணற் பரப்பினைச் சுற்றததொடு கடப்பர் (நற். 183:1-5). உப்புப் பாத்தியில் கடல் நீரைப் பாய்ச்சி உப்பு விளைவித்துக் கொள்வதன்றி, மழை விரும்பாத வேளாண்மை யுடைய கடற்கரைச் சோலை சூழ்ந்த ஊரில் உமணர் உப்புக்கு விலையாகப் பெற்று வந்த நெலலைக் குற்றிஆககிய காணத்தைக் குதிரைக்கு உணவாகக் கொடுப்பதுண்டு (நற். 254:5-12). உழாது விளைவிக்கும் நெயதல் நிலப் பரதவர் தம் உவர் நிலத்து விளையும் உப்பினை, உமணர் வருகினற வரை கழிக் கானற் சோலையருகில் காவல் செய்து, குவித்து வைததுள்ள உப்புக் குவியலில் ஏறி நின்று பரதவ மகளிர கடலில் வரும் தம் தநதையரின் படகுகளை எணணுவர் (நற். 331:1-8).

**உமை** - இறைவியாகிய உமையம்மை. உமை - இறைவி- ஒருபாகததே பொருநதி விளங்கும் இமையா முக்கட் செல்வன் முப்புரததை எரித்தல (முரு. 153, 154). மணிமிடற்றந்தணனின (சிவனின) ஒரு கூற்றில உறைபவள் உமை (அகம். க. வா. 7). இமையவில வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணனாகிய இறைவன் உமையொடு பொருந்தி உயர்மலையில் (கயிலையில) இருந்த போது பத்துத் தலையுடைய அரக்காகோமான் (இராவணன்) தொடிப்பொலிந்த தன் கையால் அம் மலையினை எடுக்க முயன்று வருந்தினான் (கலி. 38:1-5). அமரர்க்குச் செய்யும் வேள்வியில் அவிப் பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான் (சிவன) உமையொடு புணர்ந்து காமம் நுகரும் வதுவை நாளில் அமையாப் புணர்ச்சி அமைய உண்டான கருவை இமையா நாட்டத்தான் (இநதிரன்) வேண்டுகோட்கிணங்கிப் பலவாகச் சேதித்து அருளினான் (பரி. 5:26-31).

**உய்தி** - கழுவாய். நிலம் புடைபெயரும் காலமாயினும் ஒருவன் செய்த நன்றியைச் சிதைத்தவர்க்குத் துன்பத்தினின்றும் உய்தி - கழுவாய் - இல்லையென்று அறநூல் கூறும் (புறம். 34:5-7).

**உய்வு** - பிழைத்தல். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் உயிரைக் கவர்ந்த கூற்றம தன் மனத்தே கறுவு கொண்டதாயினும் வெளிப்படவெகுணடதாயினும் கை தீண்டி மெயயுற்று வருந்திற்றாயினும் அதற்கு உய்வு - பிழைத்தல் - உணடாகாது என்று மாறோக்கத்து நபபசலையார் கையற்றுக் கூறினார் (புறம. 226:1, 2). வேடர் விரட்டுதலினால் சினமுற்ற யானை மரங்களை முறித்து இடி போல் முழஙகித் தன்கையைத தரையில் அடித்து வருவதால் செயவதறியாத தலைவியும் தோழியும உயவுக்குரிய இடம் அறியாது நாணம மறந்து தலைவனைச் சேர்நதனர் (குறி. 160-168). 'உன தநதை, மகளிர்நலஞ்சாய அவர் நலததை உணகையால உய்வினறிச் சாயநதுற்ற எவ்வந் தரும நோயினை யாம காணுமிடதது அககாட்சி இனனாதது' எனறு பரததையிற பிரிநதுவநத தலைவன சிறைபபுறத தானாகத் தலைவி தன மகனிடம் கூறினாள (கலி. 80.16,17).

**உயக்கம்** - 1. சோர்வு. செல்வக்கடுங்கோ வாழியாதனின் படை மறவர் நெஞ்சு விரும்பிய ஊக்கமுடையவராயச சென்று உடம்பு அசையும் உயக்கததை- சோர்வை - உடைய பகைவர் உறைவிடததைக் கைககொண்டனர் (பதி. 68:7,8). பெருஞ்சேரலிரும்பொறையின் மறவர், தும்பைப் போா செயது வெனறமையான் உடல அசைகினற உயக்கத்துத தம மார்பைக் கிழித்துக் குருதியைப் பலிபீடத்தில தெளித்த பினனரே அயிரை மலையிலுளள கொற்றவை படையலை ஏற்றுககொனடாள (பதி. 79:15-18). பிடியை இழநததமையால, உணணும் தழையினை உணணாது நீக்கிய களிற்றின உயக்கம போன்று இரந்து பின்னிற்கும் தலைவனின் உடம்பு சோர்வு அடைந்தது (அகம. 392.1-4).

2. துன்பம். 'ஆதரவற்ற தனிமைத் துயரத்துடனே வள்ளியோரைத தேடித் திரியும் உம் உயக்கததை- துன்பத்தை - யாம் தீர்ப்போம்; ஆதலால மறவாது மீண்டும் இவண் வருக' எனக் கரும்பனூர் கிழான, புறத்திணை நன்னாகனாரை வேணடினான (புறம். 381:15,16). 'நுதல் பசப்பவும் தோள மெலியவும்

உணணாமையாலாய உயக்கத்தால், உயிர்நீங்கு மாறு மெலிந்து நாம் இநநிலையடையவும் நம்மை விட்டுப் பிரிந்த தலைவர் அறவர் அல்லர்' எனத் தலைவி கூறல் (அகம். 85:1-4;147:11). பசியால் குட்டியுடன வருந்தும் பெண நாயின் உயக்கததைத் தீாப்பதற்குரிய இரையைக் கொணரக் காலைப் பொழுதில நீர்நாய் எழுந்தது (அகம். 336:2-4). சூல் வேட்கையுடன கிடந்த உணணாத பெணபுலியின் உயக்கம் நீக்க ஆணபுலி யானையைக் கொனறு இழுத்து வந்தது (அகம. 357:2-5). உயவு, உயா காணக.

**உயர்திணை ஊமன்** - ஊமையன். கிணற்றில் வீழ்ந்த குராற்பசு படுந்துன்பத்தை இரவிலகண்ட உயர் திணை ஊமன் - ஊமையன் - அதனை வெளியிட முடியாமல் துன்புற்றதுபோலத் தோழிபடும துன் பததைக் கணடு பிறருககுச் சொல்லும் வலியினறித் தலைவி கவன்றாள (குறு. 224:3-6). [ஊமன அஃறிணையாகிய கோட்டானுக்கும் வருதலின் அதனை விலகக உயர்திணை ஊமன என்றாள். உ.வே.சா. ஷெ உரை].

**உயர்நிலை** - தெய்வத்தன்மை. முருகனைக் காணச் சென்ற அடியவனைக் கூளியர் முருகன்பால் அழைத்துசசெலல, முருகன் அடியவனுககுத் துன்பம் தரும் தன் உயர் நிலையை - தெயவத தன்மையை - உள்ளடக்கிக்கொண்டு இளவடிவங் காட்டி அஞ்சலென உரைத்தான் (முரு. 287-290).

**உயர்நிலையுலகம்** - தேவருலகம். இவ்வுலகில் நிறைந்த புகழுடையோர்க்கே உயர்நிலையுலகத்து - தேவருலகத்து - உறைதல் வாய்க்கும் (புறம். 50:14,15). அடஙகிய கற்பினையுடையாள், கணவன் உயர் நிலையுலகம சென்றமையால அவனுககு உணவு படைக்க வேண்டிச் சுளகு போன்ற சிறிய இடத்தைத தன் கண்ணீராலே சாணததைக் கொணடு மெழுகினாள (புறம. 249:10-14). போரில் நேர் நினறு பொருது பட்டவர் உயர்நிலை யுலகத்துத் தேவமகளிரை மணநது இன்புறுவர் (புறம். 287:7-12). ஆடுகோடபாட்டுச் சேரலாதனை எதிர்த்த பகைவர் தும்பை விளங்கப போர் செய்து உயர்நிலையுலகம் எய்தினர் (பதி. 52:7-9). 'உயர் நிலையுலகம் செல்லாது, இரவலர் துன்பம் நீங்க வரையாது கொடுத்து இவவுலகில் நெடுங்காலம் நிலைபெறறு வாழ்வாயாக' என ஆடுகோட்பாட்டுச சேரலாதனைக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் வாழத்தினார் (பதி. 54:7-11). 'வேதததை ஓதினமையால உயாநிலையுலகத்து முனிவரை இன்புறச் செய்தாய்' எனச் செலவக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாராட்டல் (பதி. 70:18,19). 'உயர் நிலையுலகத்துத் தேவர் புகழும்படி, செங்கோல் செலுத்திய போரில மேம்பட்டுத் தோன்றி வாழ்க' வென, இளஞ்சேரலிரும் பொறையைப் பெருங் குன்றூர் கிழார் அறிவுறுததி வாழ்த்தினார் (பதி. 89:11-13). ஒரு பொயயுரைத்தலால் உயர்நிலை யுலகத்தை அமுததுடனோடு பெறுவதாயினும் அவற்றைத் தருகினற பொயயை நீககித் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன மெயயே உரைப்பான் (மது. 197,198). பெரியோர் (சீவன் முத்தர்) உயர்நிலையுலகம் சேர்தற்குரியஅறநெறி பிழையாமல் அனபுடை நெஞ்சத்துடன ஒருதாமாகி (தாமே பிரமமாய்) தமககுரிய ஒழுக்கங்களில் நிற்பர் (மது. 469-473). தலைவனின் மலையிலிருந்து ஆற்றினால் கொணரப்பட்ட காந்தட்கிழஙகை நட்டு வளர்த்தலை விலக்காத தாய்க்கு கைம்மாறு கருதுமிடத்து உயர்நிலையுலகும் சிறிதாம் (குறு. 361). 'தவம் செய்யத் தொடஙகி வழுவிய அரசனை, மீணடும தவததிலே ஈடுபடுத்தி உயர்நிலையுலகம் உறச் செய்த ஆன்றோரைப் போல என் துன்பததை நீககுதல் உம கடன்' எனச் சான்றோரிடம் மடலேறிய தலைவன் முறையிட்டான் (கலி. 139: 33-36). உயருலகு காணக.

**உயருலகு** - தேவருலகம். மனவேட்கை அடங்கித் தவம் செய்தோர் தம் உடம்பை இவ்வுலகத்தே விட்டு உயருலகு - தேவருலகு - இனிது பெற்றனர் (கலி. 138:30,31). உயர்நிலை உலகம் காண்க.

**உயவல்** - துன்பம். 'கையில் யாழையும் மெய்யில் பசியையும் இடையிற் கிழிந்த ஆடையையும் உடைய உயவல - துன்பம் - பொருந்திய பாணனே' என ஆலத்தூர் கிழார் பாணனை விளித்தார் (புறம். 69:1-4). 'கணவன் இறந்தமையால் எளிய உணவுண்டு பாயிலலாமல் துயிலும் உயவற்பெண்டிருள் ஒருத்தி யான் அல்லேன' எனப் பெருங்கோப் பெண்டு கூறினாள் (புறம். 246:8-10). அரசனிடம் தூது செலலும் இளைய பார்ப்பான் பசலைக் கொடி போனறு வாடிய இடையையும் உயவல் நடையையும் உடையவன் (புறம். 305:1,2). புரப்போரின்மையின், ஏரின் வாழ்வோரிடம் சென்று முறையே அவர் கொடுக்கும் உணவை உண்ணும் உயவல் வாழக்கை யுடையவன் பொருநன் (புறம். 375:6,7). யாமரங்கள் உயர்ந்துள்ள பாலையில் உணவின்மையால் யானைகள் உயவல உடைய வாய் இருந்தன (அகம். 65:13,14). நீர் உண்ணும் நசையுடைய உயவல் யானை வெவ்விய மலைபக்கம் தன் கன்றுடன் சென்றது (நற். 171:1,2). சுரத்தில நீர் வேட்கையைப் போக்கிக் கொள்ளுதற்கு முயனற உயவல்யானை நீர் பெறாமையின நெடு

வங்கியம்போல் பெருமூச்சு விட்டது (ஐங். 377:1,2). உயக்கம் - 2, உயவு, உயா காண்க.

**உயவு** – 1. துன்பம். பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர் வழுதி வறுமையைத தீர்ப்பான் என்று நம்பிய இரவலர், ஊரில்லாதனவும் பொறுத் தற்கரிய உயவு - துனபம் - உடையனவுமாகிய அரிய வழிகளைக் கடநது அவன்பால் வநதனர் (புறம. 3: 17,18,26). வாடைக்காற்றின வரவால தலைவியின முலையிடத்துத் தோனறிய காமநோயாகிய மரத் தின் முளை, நெகிழ்ச்சியை யடைய நெஞ்சி னிடத்தே உயவு என்னும் திரண்ட மரமாகத் தோன்றியது (அகம. 273:11,12). பனையில வாழும அன்றிலின் உயவுக் குரல், பிரிநத காதலர் உள் ளத்தே மிக்க தீயை மூட்டியது (அகம. 305:12,14). ‘இவ்வழுங்கலூர் அலர் எழுப்பித் தலைவன் தேர் வருதலைத் தடுத்ததோடு நில்லாமல் தேர் வருவதன் காரணத்தை ஆராய்நது அதனால் உயவு அடை கினறது’ எனத் தோழி சிறைப்புறத்தானான தலை வற்குக கூறி வரைவுகடாயினாள் (நற். 203.9-11). ‘பனை மடலில உள்ள குடம்பையில் வாழும்’ அன்றிலின் உயவுக் குரல் கேட்குந்தோறும் நம் காதலி கணணுறங்காது காமநோயால் வருந்து வளோ எனத் தலைவன் எண்ணுவான்’ என வேட்கை தாங்ககில்லாத் தலைவி கூறல் (நற். 303: 4-8). ‘நான்படும் உயவு தரும் காமநோயை யறி யாது துஞ்சும் ஊரை யான இன்னது செய்வ தென்றறியேன்’ எனத தலைவி கூறினாள் (குறு. 28). தலைவனை நினைக்குந் தோறும் நெஞ்சழியும் நின் உயவு நோய் நீங்குமாறு அவன குறித்த காலத்தில் வநதானெனத் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (கலி. 35:21,22). ‘காமஞ்சாலா இளமையோள் என் னுயிரை வாங்கிக் கொண்டு உயவு நோய் கைம் மிகும்படி செய்து, தன் இளமைப் பருவம் காரண மாகத் தான் செய்ததை அறியாமற் செலகின்றாள்’ எனக் கைக்கிளைத் தலைவன் கூறினான் (கலி. 58: 7,8). பிரிவாற் புலம்பும் தலைவி, ‘எவ்விடத்தும் தடையின்றிச் செல்லும் காற்றே, உயவுத தேரூர்நது வந்து என்னிடத்துக் காமநோயை உண்டாககிக் கைவிட்டுப போன தலைவனை நீ எதிர்ப்பட்டுக் கொண்டுவந்து காட்டுவாய்’ என அதனை விளித்து வேண்டினாள் (கலி.144:37-42). உயக்கம்-2, உயவல, உயா காண்க.

2. தளர்ச்சி. சிறுவயதில வள்ளத்தில் பால்கொண்டு உணபிக்ச, உணண மறுத்தபோது யான் சினந்த வளைப் போலச் சிறுகோலை எடுபபினும் உய வொடு – தளர்சசியோடு – வருந்தியவன இன்று போரில் களிற்றினை வீழ்த்தி மார்பில் அம்பு ணைதத்தையும் உணரானாய் இருக்கின்றான்’ எனத் தாய் கூறல (புறம். 310:1-5).

**உயவுத்துணை** - துன்பத்திற்குத் துணை. ‘நள்ளென் யாமதது எனக்கு உயவுத்துணையாக - துன்பததிற் குத் துணையாக-பசலையைப் பொறுததிருந்து, தலை வன மீண்டும் பொருள் தேடச் சென்றானாக அவன் பினனே சென்ற என் நலனையேனும் தலைவன் தாரானோ’ எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம.103:11-15). தலைவன் வாராத கொடுமையைத் தலைவி தாயறியாதவாறு மெலலெனத் தோழி யிடம கூறிய பொழுது தலைவன விரைவில் வரு வான எனறு அவள கூறி இரவில் உயவுத் துணை யாகி உறங்காதிருந்தாள் என்பதைத் தலைவி தலைவற்குக் கூறினாள (அகம. 298:20-23). துன்புறு கினற நமது நெஞ்சத்திற்குச் சேரனின் காட்டின் கண உள்ள கொலலி மலையைப போல உயவுத் துணை ஆகுமபொருட்டு அவள்பால் நமக்குள்ள நட்புக் கெடாது நிலைபெறுவதாகவென அல்ல குறிப்பட்ட தலைவன கூறினான (அகம. 338:13-15). யாமர நிழலில தஙகி இளைப்பாறிப புறப்படும் வணிகர்கு உயவுத் துணையாகி வநத நெஞசம், இடைச்சுரத்துத தலைவியை நினைந்து மீளக கரு திய பொழுது தலைவன் அதனைக கழறினான (அகம. 343.14-16) இலவாழக்கையே பொருளெனறு கருநாது வேறு பொருள்தேடப் பிரிநத தலைவர் எனனை நினையாதவராயினர்; யான் உறற துன் பம் அளவற்றது; உயவுத்துணையும வேறிலலை; ஆதலால் எவவணணம் உயவேன் என வன பொறை எதிரழிந்த தலைவி கூறினாள் (நற். 130. 10-12). இனததினின்றும் பிரிநது வந்த பருந்தினது தனிமையைப புலபபடுத்தும் தெளிநத குரல பாலை வழியே செலலும மக்களுக்கு உயவுத் துணையா கும (குறு. 207:2-4). துனிகொணட தலைமகளிடம் பாணனைத் தூதுவிடும் தலைமகன, ‘பாணனே, துனியால் பொறுத்தற் கரிய துன்புறும் தலைமக ளின நெஞ்சிறகு உயவுத்துணையாகச் சிறுபொழுது தங்குவையாயின் என்தேரை அங்குக் காணபாய’ எனக கூறினான் (ஐங். 477).

**உயவை** - காக்கணங்கொடி. நீர்வேட்கை யுற்றபோது உண்டார் வாயில் நீர் ஊறுதற்குக் காரணமான உயவைக்கொடி - காக்கணங்கொடி - கூத்தர் சென்ற வழியில் படர்ந்திருந்தன (மலை. 136).

**உயா** - துன்பம். உயர்ந்த யாமரங்களிலிருந்து, வழிச் செலவோர்க்கு உயா - துன்பம் - தரும ஓசையைப் பருநது பலகாலும் பயிற்றும (அகம. 19:2,3). உயக் கம் - 2, உயவல, உயவு காணக.

**உயிர்**- 1. உயிருடைய பொருள். தாழ்சடைப் பொலிந்த

அருந்தவத்தோ னாகிய சிவபெருமான் எல்லா உயிர்க்கும - உயிருடைப் பொருளுக்கும் - ஏமமாகி யவன் (புறம். 1:11,13). சோழன உருவப்பஃறே ரிளஞ்சேட் சென்னியின் களிறுகள், கதவினை முறிதது நுனி மழுங்கிய கோடுடைமையால உயி ருணணும் கூற்றுப போனறன (புறம. 4.10-13). பாணடியன நெடுஞ்செழியன தலையாலங் கானத் துப் போரில் மன்னுயிர்ப் பன்மையையும் கூற்றத்து ஒருமையையும் தன்னுடன் சீர்தூக்கிக் காட்டிய வெற்றி வேலை யுடையவன் (புறம். 19:3,4). சேர மான் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறை புதுப்புள் வந்தாலும் பழமபுள் சென் றாலும் அவறறால் நடுக்கமுறுதல் அறியாத ஏமக் காபபுடையவன். ஆதலினால் மன்னுயிரெலலாம் அவனுக்கு ஏதம் வருமோ என்று அவன் பால கொணட அனபினால் அஞ்சும் (புறம. 20:18-21). நீர் மிகுமாயின் அதனைத் தாங்கும் அரணில்லை; தீ மிகுந்தால் மன்னுயிர்கட்கு நிழல் செயயும் நிழல் இல்லை (புறம். 51:1,2). முன்பு பெய்தோம் என்று மழை பெய்யாது மாறினாலும் முனபு விளைந் தேம எனறு நிலம் விளைவினை ஒழிந்தாலும் எல்லா உயிர்கட்கும் வாழக்கை இலலை யாகும் (புறம. 203:1-3). பனித்துறைபி லுளள பகன்றை மலர் பிறரால் சூடப் பெறாது கழிந்தாற் போலப பிறர்க்கு ஒரு பொருளைக் கொடுககாது மாய்நது போகும் உயிர் மிகப் பலவாகும் (புறம். 235:18-20). கார் காலத்து இடிபோலத் தோன்றி உயிர்களை உண்டற் பொருட்டு ஆராக் கூற்றம் அலமரும் (புறம். 361:1,2). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மணனுடை உலகத்தே மன்னுயிர்க்குக் கொடுத்து நீங்காத கையினிடத்துள்ள மிககவலிமையால புரை வயின் (தேவாலயம் உள்ள இடஙகளில) உயர்நத அணி கலன் உள்ளிட்டவறறைக் கொடுததான் (பதி. 15:36, 37). உலகினைப் பாதுகாததலை மேற்கொண்ட தண்ணியல் மேகம் மனனுயிர் அழியப் பல ஆண்டு களாக நடுங்கச செய்து பெய்யாது பொயத்தாலும் சேரலாதன கொடுபபதில் பொய்க்க மாட்டான் (பதி. 18 8-12). மனனுயிர் அழிய யாண்டு பலமாறி மேகம் பெயயாவிட்டாலும, சேரலாதன் தன்னைச் சார்ந்தார் வயிறு பசி மிகுமாறு சிறிது ஈயான் (நிறைய ஈவன) (பதி. 20:24-26). மன்னுயிர் உயரும் பொருட்டுக் கமஞ்சூல் மேகம் வானத்தில் வல மாக எழுந்து முழஙகும் (பதி. 24:27,28). இளஞ் சேரலிருமபொறை மன்னுயிர் காத்த மறுவில செங்கோலை யுடையவன் (பதி. ப. 9-16). முருகன் இயலபினை யெல்லாம் முற்ற அளவிட்டறிதல் பல்லுயிர்க்கும் அரியதாகும் (முரு. 278). மலர்தலை யுலகத்து மன்னுயிர் காக்கும் முரசு முழங்கு தானை மூவர் (பெரு. 32). குறவர் விடும் கவண்கல் உயிர்களைப் போக்கு முறைமையால் கூற்றத்தை ஒக்கும் (மலை. 209). மன்னுயிர்க ளெல்லாம் மடிதற் கேதுவாகிய மழை பெயயா தொழிநத காலத்தில், பாலை நிலத்தைக கடந்து தலைவர் பிரிந்து சென்றார் (அகம. 31:4,11,12). குறத்தியர் தந்தை வேட்டையில் துயிலிடம பெறாமையால் இடி யோடு மழைபெயய மனனுயிரெல்லாம் துயினற கூதிர்க் காலத்து அரை இரவில இல்லிடத்தே புலித்தோற் படுக்கையில் தங்கியிருந்தான் (அகம். 58: 1-6). அன்னை துயிற்கண ஆழ்ந்துள்ளாள். அன்றியும் உலகில் எலலா உயிர்களும் துயின்றன. காதலர் வருதற் குரிய பருவம இதுவாகும் என்று இரவுக் குறியில் தலைவன் வந்தமை பற்றித் தோழி தலைமகளுக்குக் கூறினாள் (அகம். 68.9-11). கொல்லும் தொழிலுடைய விலங்குகள் இரவில அரிய உயிர்களை உணவாகக் கொள்ளும் (அகம்.108:9). மன்னுயிரால் அறியப்படாத துன்ன ரும் பொதிய மலையிலுள்ள சூருடை அடுக்கத்தே வளரும் சந்தனத்தைப் போல வேனிற் காலத்தில் தலைவி குளிர்ச்சியுடையவள் (குறு. 376:1-3). தோழி நகையாடிக் கூறியது கேட்ட தலைவன, பாம்பு உயிரைக் கொல்லும் பொருட்டுக் கடித்து வருத்தி னாற் போல நகையாடிக் கூறுவது தக்கதன்று எனறு கூறினான் (நற். 75:3, 4). அகன்ற யாறுகள் உலகில மன்னுயிர்களெலலாம வாழுமாறு பல கால்களால் நீரை உண்பித்துப் பாதுகாககும் (கலி. 34:1,2). போர்த்தொழில் வலல ஒழுக்கத்தால் வெல்லும் புகழ் வாய்நத மன்னன் நன்னெறியில் உயிர்களைக் காதது நடுக்கம் அறத் தான் செய்த தொலவினைப் பயனைத் துய்க்கத துறக்கத்தை விரும்பிச் சேறல் ஞாயிறு இருள் கெடுத்துப் பகற் பொழுதைச் செலுத்தி மலையினில் சேருதற்கு உவமை (கலி. 118:1-4). பலவுலகங்களில் உயிர்கள் எல்லாம் பழைய ஊழிககாலததே (பிறநது இறந்து) தடுமாறித் திரியும்படி படைதத முதல்வன், அவ் வுயிர்கள் தனனிடத்தில் வநது தொகுதலை விரும் பும ஊழி முடிவில தன்னிடததே ஒடுக்கிக் கொள் வான் (கலி. 129:1, 2). தன் உயிரைப் போல உலக உயிர்களை யெல்லாம் காக்கும் மன்னன், என் உயிர் போன்றவனை எனக்குக் காண்பித்து என் உயிரைக் காவாதிருப்பது ஏனோ என்று தலைவி கூறினாள் (கலி. 143:52-55). திருமால் மன்னுயிர் முதல்வன் (பரி. 1:53).

2. ஆவி. நீரின்றி அமையாத உடம்புகட்கெல்லாம் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுததோ ராவர் (புறம். 18:18, 19). இவ்வுலகத்தில நிலத்தையும் நீரை யும் ஒருவழிக் கூட்டியவர் உடம்பையும் உயிரை

யும் படைத்தவ ராவர் (புறம். 18:22, 23). பாண்டி யன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியனின் பழமையாய் முதிர்ந்த உயிரினும் சிறந்த உடம்பினை ஒத்தவர் அவனுடைய சிறந்த வாளின் வாழ்நராகிய வீரர் (புறம். 24:26-29). சோழன் நலங்கிள்ளி வஞ்சினங் கூறுங்கால் 'மெது வாக வந்து அடியடைந்து ஈக என்று இரவலர் இரந்து வேண்டினால் என் இனிய உயிரே யாயி னும் கொடுப்பேன்' என்று கூறினான் (புறம். 73:1, 2, 4). வல்விலோரி வேட்டையில் தானே உயிர் செகுத்த மானினது நிணத்தை யுடைய தசைப் புழுக்கினோடு மதுவினைப் பரிசிலர்க்குத் தருவான் (புறம். 152:25-27). பெருஞ்சித்திரனாரின் வயது முதிர்ந்த தாய் இன்னும் என் உயிர் போகின்ற தில்லையே என்று சொல்லி வாழும் நாளோடு வெறுத்துக் கூறி யிருந்தாள் (புறம். 159:1, 2). என் உயிர் என்னை விட்டு நீங்குங் காலத்தும் என்னை யான் மறக்குங் காலம் உண்டாயின் அப் போதும் யான் நினனை மறக்குங் காலம் உண் டாகும என்று கள்ளில ஆத்திரையனார் ஆதனுங் கனிடம் கூறினார் (புறம். 175:3-5). புகழ் கிடைப்ப தாயின் தம் உயிரைக் கொடுக்கும் மாண்பினர் உண்டாதலின் இவ்வுலகம் உளதாகினறது (புறம். 182:5). இவ்வுலகம அரசனை உயிராக உடையது; அதனால் இவ்வுலகத்தார்க்கு நெல்லும் உயி ரன்று; நீரும உயிரன்று; யான் உயிர் என பதனை அறிதல் வேந்தற்குக் கடனாகும் (புறம். 186). பேரியாற்று நீர்வழியே செல்லும் புணை போல ஆருயிர் ஊழின் வழிச் செல்லும் என்பது திற வோர் காட்சியில் (நூலில) தெளிந்த தாகும் (புறம். 192:8-11). என் மனைவி இறவாது உயிர் சிறிது உடையளாயின் எம்மை நினையாதிருத்தல் அரிது; அதனால் 'அறனில்லாத கூற்றம் உயிர் கொள்ளத் துணியக் கணவன் இறந்துபட்டனனோ; என் னுயிர் கெடுவதாக' என்று கூறும் துன்ப முடையவ ளாக மனையின்கணணே வெறுத்துறையும் மனை வியின் துன்பம் தீர்க்க இப்போது விடை கொண்டேன என்று பெருங்குன்றூர் கிழார் பரிசில் நீட்டித்த சேரமான குடக்கோச் சேரல் இரும்பொறையிடம் கூறினார் (புறம். 210:5-12). கோப்பெருஞ்சோழன் தான் வடக்கிருந்தகாலைப் பிசிராந்தையாரைத் தன் 'உயிர் ஓம்புநன்' என்று சிறப்பித்துக் கூறினான (புறம். 215: 7). தக்கோனா கிய கோப்பெருஞ்சோழனை அவன் தகுதி கருதாத கூற்றம் அவனுடைய இனிய உயிரைக் கொண்டு போயிற்று (புறம். 221: 7, 8). உடம்போடு இனிய உயிர் விரும்புமாறு விரும்பும் உரிமை கொண்ட நட்புடையார் தம்மிடம் வந்தால் நடுகல் ஆகியக் கன்னும் சான்றோர் இடம் கொடுத்தளிப்பர் (புறம். 223:2-6). கூற்றமே, எழினியாகிய ஒருவனது ஆருயிரை நீ உணணாதிருப்பா யாயின், பகைவர் பலருடைய உயிரைப் பருகி நிறைவு பெற்றிருப் பாயென அரிசிலகிழார் எழினி இறந்தபோது கையற்றுக் கூறினார் (புறம. 230: 14-16). தன் மனைவி இறந்தமையால் மிகக துன்பமுற்ற சேர மான் கோட்டம்பலத்துத் துஞ்சிய மாக்கோதை, 'யான் எய்திய துன்பத்திற்கு என்னுயிரைப் போக் கும் வன்மை இன்மையால் அதன அளவு எனைத்து' என்று கையற்றுக் கூறினான (புறம. 245: 1, 2). பூத பாண்டியன் தேவி அரணமனையில் சிறிது பொழுது தனித்திருப்பினும் இனிய உயிர் தளரும் இயல் பினள் (புறம். 247:8-10). வீரனுடைய கிளர்தார் மார்பினைப் பகைவர் எறிதலால (அம்பும் வேலும் மொய்த்து) உடம்பும் உயிரும் கெட்டன (புறம். 282: 5-7). ஆர்க்கால் சூழப்பட்ட குடமபோல வேல மார் பில் பாயந்து அழுநதித் தங்க, உயிர் உடம்பின் நீங்க ஊசலாடும் பாங்கறகாக வீரன் போருக் கெழுந் தான் (புறம். 285: 7-9). களிறெறிந்து தானும் புண பட்டு இயங்கமாட்டாது கிடக்கும் வீரன் அந் நிலையிலும் தன்னைச் சூழ்நத பகைவர் பலரின உயிர்களைக் கவர்நதான (புறம். 307: 2, 9, 10). ஊரிலுள்ள பழைய வேலியின் அடியில தங்கி இருளில வநது வருததும் மெத்தென்ற அடியு டைய காட்டுப் பூனையாகிய பகைக்கு அஞ்சி இளைய பெட்டைக் கோழி உயிர் நடுக்குற்றுக் கூவும் (புறம். 326: 1-3). உயிர் கூற்றுவனால் கவரப் படுங் காலத்தில் இவ்வுலகத்தினின்றும் உயர்ந்து வீட்டுலகைப் பெறுதற்கு அறவினையாகிய துணை யே தெப்பமாகும் (புறம். 357:6-9). இறவாமல உடம் போடே நின்ற உயிரும் இலலை (புறம். 363: 8). சேரமான குடக்கோ நெடுஞ்சேரலாதன, சோழன் வேற்பஃறடக்கை பெருநற்கிள்ளியொடு போர்ப் புறத்துப் பொருது வீழந்து உயிர்போகாது கிடநத நிலையில அவனைக் கழாத்தலையார் பாடினார் (புறம். 368. அடிக்குறிப்பு). பெருஞ்சேரலிரும்பொறை போரில் உயிரைப் பொருளாக எண்ண மாட்டான் (பதி. 79: 1). மதுரை அங்காடியில் நாற்படையாளர் நெருங்கிச் சென்றமையால் பொருள் விற்போர், இருபுறமும் படைவந்த பகைப்புலம் போலத் தம் இனிய உயிருக்கு அஞ்சி ஒதுங்கி அவை சென்ற பின்னர் நெஞ்சிற் பிறந்த வருத்த மொழிவர் (மது. 402, 403). மலைவழிச் செல்வோர் வரையரமகளிர் இருப்பைக் கண்டால் உயிர்போமாறு வெதும்பி நடுக்க முறுவர் (மலை. 190, 191). தலைவனின் புதல் வன் சிறுதேர் ஓட்டித் தெருவில் தனியாக இருப் பதைக் கணடபரத்தை 'என் உயிரே வருக' என்று

அவனைத் தழுவிக் கொண்டாள் (அகம். 16:5,6,10,11). காதலன் வந்து இன்னுயிர் குழையும்படி முயங்குந் தோறும், இயைபில்லாத வேலனுக்கு வெறியாட் டெடுத்து நமர் அழிந்தமை கண்டு யான் உடல் பூரித்துச சிரித்தேன் என்று தலைமகள் தோழியிடம் கூறினாள் (அகம். 22:18-21). பிரிந்து சென்ற தலை வர் வாராமையால் வெறுத்த நெஞ்சுடன் 'வருந் தாதே குறுமகளே, நின்னைத் துயரடையச் செய்த என்னுயிரா வருந்துவதாக' என்று கூறித் தலைவர் விரைந்து வந்தடைவர் எனத் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (அகம். 25:15-18). புலி பட்டினி கிடந்து உயிர் வருந்துவதாயினும் தான் வீழ்த்திய களிறு இடப்பக்கம் விழுந்தால் அதனைத் தின் னாது (அகம். 29:2,3). கிளி, பநது, கழங்கு, ஆகிய வற்றை விரும்பிக் கைவிடாத மகள் அருள், அன்பு, மென்மை, செயல் என்னும் இவற்றால் முன்னாட் போலாது வேறுபட்டுள்ளாள்; இஃதென்னோ, என்னுயிர் கழிவதாக என்று செவிலிததாய் வருந்தி னாள் (அகம்.49:1-3). 'இன்னுயிர் நீங்குவதாக இருப் பினும் நின் மகளின மையுண்ட கணணிற் படர்நத பசலை காமநோயால் உண்டாயது' என்று செப் பாதே எனத்தோழி செவிலித்தாயிடம் அறததொடு நிற்குங்கால் கூறினாள (அகம். 52:13-15). புணர்ந்து டன் சென்ற தன் மகளை நினைத்துத் தாய், 'இவ் வுலகத்து ஆசையை விரும்பி என்னைவிட்டுப்பிரிந்து போதலைச் செய்யாத என் உயிரொடு வருந்தி னேன்' என்று கூறினாள் (அகம். 55:15-17). சூறா வளிக் காற்று அலைப்ப, அசையும் மரத்திலுள்ள பறவைகளைப் போல மிக்வும் அழிவுற்று, 'என் உயிர் உடலை நீங்கிச் செல்லும காலம் இதுவோ' என்று தோழி கூறினாள் (அகம். 71:16-18). உயிர் வேறொரு திறத்தில் (நற்பதவி) புகுமாறு பகைவர் அஞ்சப் போரில் வென்று பட்ட வீரரின் குடரைக் கணடார் அஞ்சப் பருந்து இழுத்துப் போடும் (அகம். 77:9-11). தலைவன் பிரிந்தமையால் தலைவி யின் நுதல் பசப்பத் தோள் மெலிய, உண்ணாமை யால் ஆகிய வருத்தத்தால் உயிர் மெலியத் தலை வன் பிரிந்து சென்றான் (அகம். 85:1-3). 'நுதல் மெல்லப் பசந்தது; தளிரை ஒத்த மேனி நுணுகி மெலிதாகின்றது; துயரமும் பலரும் அறியுமாறு விளங்கித் தோன்றியது; இவை என உயிரைக கொண்டு போவதல்லது வேறென் செய்யும்' என்று தலைமகள் தோழிக்குரைததாள் (அகம். 95:1-4). வெறியாடிய பின்னும் வாடிய மேனி முன்பு போலச் சிறந்திடாதாயின் களவொழுக்கம் அலரா காமை அரிது. அன்றி, முருகன் துன்பத்திரங்கி முன்னை அழகினைத் தருவானென்னின், தலைவி யின் நோய் பிறிதொன்றான் எய்திய தெனறு தலைவன் கேட்டறிந்தால் யான் உயிர் வாழ்தல் அதனினும் அரிது' என்று தலைவி கூறினாள் (அகம். 98:23-30). வழிப்போவாரறற சுரநெறியில் அறி யாது வந்தவரிடம் கைப்பொருள் இல்லையாயினும் அவர்தம் உயிரைக் கொல்லாது விட்டுவந்த பிழைக் காக யானைக் கொம்பையும் புலித் தோலையும் தண்டமாகத் தருமாறு தன் ஏவலரை அறனில் வேந் தன் பணிப்பான் (அகம். 109:10-14). 'மரக்கிளையி லுள்ள கூடு பொலிவிழக்கப் பறவை தான் விரும்பும் புலத்திற்குப் பறந்து சென்றாற் போல என்உயிர் தலைவர் வினை செய்யுமிடத்திற்குச் செல்வதாகஅத னால் நாம் அழாமல் உறைதற்கும உரியம் ஆவோம்' என்று தலைவி தோழியிடம கூறினாள் (அகம். 113: 24-27). தலைவன் தலைவியை உயிர்க்கு உடம்பாக அடுத்தவள் என்று குறிப்பிட்டான் (அகம். 136:19). தலைவன் பிரிந்தமையால தலைவி பலவற்றையும் வெறுத்து உண்ணா வருத்தத்தால் உயிர் மெலியத் தோள் தொல்கவின் அழிந்தது (அகம. 147:10-12). உடன்போகிய மகளின் பொருட்டுத் தாய் 'என் உயிர்கெடுவதாக' என்று நொநதுரைத்து, மணலிற் கிடந்த பாவையை ஒப்பனை செய்து 'என்மகளே இன்தோள் தருவாயாக' என்று கூறித் தழுவி அழு தாள் (அகம். 165:7-13). குறி தவறாது அம்புவிடும் வன்கணாடவர் செலுத்தும் அம்பு, வழிசெல்லும் புதியவரின் உயிரை அழிப்பதால் அவருடைய உட லின் புலாலைப் பருந்து தன் கிளையினை அழைத் துண்ணும் (அகம. 175:2-5). நம் அழகு கெடுமாறு செயலறற நெஞசமோடிருக்கும் நம்மைத் துறந்து இரும்பினாலாகிய இனிய உயிர் உடையாரைப் போல வன்னெஞ்சததோடு காலம் நீட்டித்திருக்கும் வன்மையுடையோராயினர் நம் தலைவர் என்று தலைமகள் தோழிக்குக் கூறினாள் (அகம். 185:1-5). உயிர் கலந்து ஒனறிய பழமையான நட்பினால் குற்றமற்ற நெஞ்சத்தால் கூடியவர்போல 'நின்னை யாம பிரியேம்' என்று கூறிய தலைவர் நாம் அழப் பிரிந்துசென்றார் என்று தலைவி கூறினாள் (அகம். 205:1-4,7). கோவலரின் ஆமபலங்குழலோடு பொருந்த, பிரிந்தார்க்குத் துன்பினை நல்கும் யாழின்கண்ணே செவ்வழிப் பண்ணைப் பாட அத் தெள்ளிய இசை ஆருயிரை வருத்தும் (அகம். 214: 12-14). வேலன் வெறியாடும் களம பொலியுமாறு ஏத்தி மறியின் உயிரைப் பலியாக வழங்குவான் (அகம். 242:10-12). தலைவன் தன் உயிரினும் சிறந் ததாகப் பொருளை மதித்து அதனைத் தேடிவரச் சென்றான் (அகம். 245:1,2). புனத்தில் பசு புகுந்து பயற்றினை மேய்ந்ததற்காகக் கோசர் தன்னுடைய வாய்மொழித் தந்தையின் கண்களைப் பிடுங்கியமை யால் உண்ணாமலும் உடுத்தாமலும் சினத்திற்

கொண்ட நோன்புப் படிவம் நீங்காமலும் அன்னி மிஞிலி என்பாள் அதனைத் திதியனிடம் கூறி, அவன் கோசரின் இன்னுயிர் போக்கக் கண்டு சினம் மாறி னாள் (அகம். 262:4-12). தோழிக்குத் தலைவி இன் னுயிர் அனையவள் (அகம். 268:10). சுரத்தினைக் கடந்து நெடுந்தொலைவு வந்த நீர்வேட்கை மிக்க புதியவரின் செல்லும் உயிரைச் செல்லாது நிறுத் தியது நெல்லிக்காய் (அகம். 271:5-8). 'யான் தலை வியைக் கழறும்போதும் அவள் வன்சொல் கூறாது மழலை இன்சொல்லால் இன்னுயிர் பொருந்தும்படி யாகக் கூறினாள்' என்று மகட்போக்கிய தாய் உரைத்தாள் (அகம். 276:6-8). குளிர்ந்த வாடைக் காற்றால் துன்பம் மிக்க நள்ளிரவில் வளமிக்க படுக்கையில், காதலோடு ஒருவர் மெய்யில் ஒருவர் புகுந்தது போலக் கைகவர் முயக்கத்தால் ஈருடம் பிற்கு ஓருயிர் என்று கூறத்தகும் காதலரும் வருந் துவர் (அகம். 305:4-8). பாகன் நெடிது உயிர்வாழ் தல் யானை அவனைக் கொல்லாது அருள்செய்வ தால் ஆகும் (அகம். 336:13,14). தலைவி உடலோடு உயிர் ஒன்றினாலொத்த நட்பினையும் அவ்வுயிர் இன்புற்று வாழ்தல் போலும் காதலையும் உடைய வள் என்று தலைவன் கூறினான் (அகம். 339:11-13). வனமுலை பொருந்தப் புல்லுந்தோறும் உயிர் குழைவதுபோல மென்மை வாய்ந்த துணைவரைக் கூடி யிருப்போர்க்குப் புல்லென்னும் மாலையும் இனிது (அகம். 367:13-16). பொலம்பூண் நன்னன் புன்னாட்டிலுள்ளாரை வெகுண்டெழப் பாழியென் னும் நகரிடத்தே நின்று அஞ்சாதீர் எனக்கூறிய ஆஅய் எயினன் தான் கூறிய சொற் பிழையாது போர்ப்பயிற்சியுடைய மிஞிலி என்பானொடு போ ரிட்டுத் தன் உயிரைக் கொடுத்தான் (அகம்.396:2-6). சிறிய கொம்பில் பெரிய பழம் தொங்கியதுபோலத் தலைவியின் உயிர் மிகவும் சிறியது; அவள் எய்திய காமநோய் பெரியது (குறு.18:3-5). 'மகன்றிற் பறவை களின் புணர்ச்சி போலப் பிரிதல் அரிய நீங்காத காமத்தோடு என்னுயிர் ஒருங்கே கழிவதாக' என்று பிரிவாற்றாத தலைவி கூறினாள் (குறு.57:2-4). ஆண் குரங்கு இறக்கக் கைம்மைத் துயரைப் போக்கமாட் டாத பெண்குரங்கு தன் குட்டியைச் சுற்றத்தினிடத் தில் சேர்த்து, மலைப்பக்கத்திற் பாய்ந்து தன் உயிரை மாய்த்துக் கொண்டது (குறு. 69:1-4). நம் பெண்மைநலம் கெடவும் மேனியழகு மிக மெலிய வும் இன்னுயிர் நீங்கினாலும் அவர்பால் பரிவு கூர்ந்த சொற்களைக் கூறாதே என்று தலைவி தோழியிடம் வாயில் மறுத்துரைத்தாள் (குறு. 93: 1,2). வினையே ஆடவர்க் குயிராகும்; மனையுறை மகளிர்க்குக் கணவரே உயிராவர் (குறு. 135:1,2). தன்பால் பரத்தைமை இல்லை என்று கூறிய தலை வன் கூற்றொடு மாறுபட்ட தலைவி, 'பாணர் தாம் பிடித்த மீனைப் பெய்த மண்டையைப் போல எமக்கும் பெரிய வெறுப்பைத் தருவதாகி, எம் உயிர் அழிவதாக' என்று கூறினாள் (குறு. 169:4-6). மேகம் மழைபெய்ய முழங்கி என் இன்னுயிர் கொள்ளுதலைக் குறித்து மின்னியது என்று பருவ வரவின்கண் ஆற்றாத் தலைவி தோழிக்குக் கூறி னாள் (குறு. 216:5-7). நம் உயிர்க்கு உயிர்போன்ற வர் தலைவர் என்று தலைவனைப் பற்றித் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு.218:5). கார்காலத்திற் குரிய பெரிய மழை மாலைக் காலத்தில் வந்தது; நம் நலம் சிதைத்த தலைவர் இன்னும் வாராராயின் நம் இன்னுயிரின் நிலை யாதாகுமோ என்று தலைவி கூறினாள் (குறு.319:5-8). 'தலைவன் பிரிந்தால் நாம் இழப்பது நம் இனிய உயிரை யன்றி வேறு யாதுளது' என்று தலைவி கூறினாள் (குறு. 334:4-6). வறுமைத் துன்பத்திற்கு அஞ்சி இரந்தவர் விரும்பும் பொருள் களைக் கொடுத்துப் பின்னர் அவற்றைத் தருக என்று சொல்லுதலைக் காட்டிலும் இன்னுயிரை இழத்தல் இன்னாததன்று (குறு. 349:5-7). மாலைப் பொழுதினை உயிர்வரம்பாக நீந்தினால் கங்குல் வெள்ளம் கடத்தற் கரியது (குறு. 387:2-5). உயிரி னும் சிறந்தது நாண் (நற். 17:8). தலைவியும் தோழி யும் உயிர் ஒன்றாயிருந்தா லொத்த நட்பினை யுடையவர் (நற். 72:3). பிரிதல் சூழ்தலின் அரியதும் உண்டோ என்று நாம் தலைவனிடம் சென்று கூறி நம் விருப்பத்தைச் சொல்லுவோம்; சொல்லா திருப்பின் அவர் பிரிந்து செல்ல நம் உயிருக்கு ஏதம் வந்துறும் என்று தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 79:6-8). 'நின்பிரிவினால் தலைவி யின் ஆகம் மாமை கொண்டது; நின் மண முரசொலி கேட்டலினால் காதலன் வந்தனன் போலு மென்று அவள் கருதி நிற்பாள்; அந்நாளளவைக்குள் அவளுடைய உயிர் இருக்கும்படியான குறி காணு தல் அரியதாகும்' என்று கூறித் தோழி வரைவு கடாவினாள் (நற். 93:9-12). தோழியும் தலைவியும் உயிரை இரண்டுடலிற் பகுத்து வைத்தாற் போன்ற தொடர்ச்சியுற்ற மாண்புடையராவர் (நற். 128:3,4). காதலன் ஒருநாள் தலைவியைப் பிரிந்தாலும் அவள் உயிர் வேறுபடும் (நற். 129:2). கொடுவிலாடவர் வழியிற் செல்லும் ஏதிலாளரைக் கொன்று உயி ரைப் போக்கினமையால் கிடந்த பிணங்களின் முடைநாற்ற மிகுதியால் உண்ணவந்த குறுநரி அவ் விடத்தே நெருங்காது நீங்கும் (நற். 164:6-9). 'நின்னை விரும்பியுறையும் தலைவியின் இன்னுயிர் படுந்துன்பம் அறியாமல் நள்ளிரவில் எஃகு துணை யாக நீ வருவது பண்பெனப்படுமா' என்று தோழி தலைவனிடம் வினவினாள் (நற். 168:6-10). 'தொடி

நெகிழ்ந்தன; நுதல் பசந்தது; கண்கள் நீர் பனித தன; இவை இங்ஙனமாதல் என்னுயிர் தேயும் பொருட்டேயாகும்' என்று தலைவன் வரைவு நீட்டி யமையால் ஆற்றாளாய தலைவி தோழியிடம் கூறி னாள (நற். 197:1-4). தினைப்புனத்திலுள்ள தலைவி யின தீங்குரல் என்னருகிருந்து ஒலித்தால் என் நோய தீரும்; அது என்னிடத்திருந்து நீங்கினால் என் உயிரோடு எல்லாவற்றையும் உடனகொண்டு அகலும என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறி னான் (நற். 209:5-9). என் கண், தோள், கதுப்பு, ஆகியன நலமிழந்து பசலை பாய இன்னுயிர் இறந்து படுமாயினும் தலைவன்மீது புலததல் செயயேன் என்று பிரிவிடை ஆற்றாத தலைவி கூறினாள் (நற். 219:1-4). அலர் தலைவியது இன்னு யிர் இறந்துபட்ட பின்னும் இன்னாமையைத் தருந்தன்மையுடையது என்று வரையாது வந்தொழு கும் தலைவனிடம் வரைவு முடுக்கும் தோழி கூறி னாள் (நற். 227:1,2). பிரிவருங் காதலர் இன்னுயி ரனனர் எனத் தலைவி கூறல் (நற். 237:3). என் அரிய இனிய உயிரைக் கைக்கொண்ட நீ யார் என்று தேரில்வந்த தலைவன் வினவித் தொழுது வருந்தியதைக் குறை நேர்ந்த தோழி தலைவிககு உரைததல (நற். 245:6-8). காதலர் பிரிந்து செனற மையால் எனது உயிர் சென்றொழிவதாக என்று தலைவி கூறி வருந்தினாள் (நற். 286:4,5). நள்ளிர வில் மலைப்பக்கத்தே மின்னொளியில் தலைவன் வேலேநதி வரக் கருதினால் தலைவியின் இன்னுயிர் எவ்வாறு நிலைத்திருக்குமோ என்று தோழி கூறி னாள் (நற். 334:6-9). இரையருந்திய நாரை பனை யின மடலில் ஏறியிருந்து, தன் பேடை கூட்டில் வநது தன்னொடு புணரும் பொருட்டுத் தொடர்நது கூவுதல், பிரிவுத் துயரால் தனித்து வருந்தும் தலைவி உயிர்விடுமாறு அமைந்தது (நற். 338:7-12). பிரிநதவரின் உயிர் உடனே விட்டு நீங்கும்படி மாலை விரைந்து வந்தது (நற். 364:11). நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் முன்பு தங்கிய இடத்தே நாம் இருந்து பிரிவுக்கு வருந்தி ஆருயிர் அழிவதாயினும் அந்நோய் மற்றவர்க்குப் புலப்படாதவாறு மறைத் துக்கொள்ளுதல் வேணடும் என்று ஆற்றுவிக்க முற் பட்ட தோழிக்குத் தலைவி கூறினாள் (நற்.382.5-7). தலைவர் வரைவொடு வந்தால் யான் உயிர்வாழ் தல் கூடும் என்று தலைவி கூறினாள் (ஐங். 213:4,5). 'தலைவன் நமமூர் வந்து நம் தமர்பால் வேண்டும் குறை பெறாதவனாக மீணடால் நம் இனிய உயிர் நிலைபெறுவது எவ்வாறாம' என்று தலைவிக்குச் சொலவதுபோலத் தோழி அறத்தொடு நின்றாள் (ஐங். 228). தலைவி புணர்ந்துடன் செனறமையால் தாயின் நெஞசம் மிக்க துயரம் காரணமாகத் தோன்றும் அவலத்தால் உயிர் நீங்குமாறு மெலிந்து பாழ்பட்டு வருந்தியது (ஐங். 313:2, 3). 'கான் யாற் றில் யாங்கள் அமிழ்ந்துழித் தேர் ஏறிக் குறுக வந்த வன் பெயரொடு தலைவியின் உயிர் ஒன்றுபடுவ தாயிற்று' என்று கூறி நொதுமலர் வரைவின்கண் தோழி செவிலிக்கு அறதொடு நின்றாள் (ஐங். 367: 3-5). காட்டிடத்தே விலங்குகள் உயிர்கலந்து ஒன் றிய குற்றமற்ற நட்பினால் தம் துணை விலங்குகள் வந்தபோது அவற்றிற்கு விருநதயர்ந்து விருப்பம் வரப் புணாநதன (ஐங். 419). 'தலைவன் கொடிய னாயினும் ஆகுக, அவனே எனனுயிர்க் காவலனா வான்' என்று தலைவி கூறினாள் (ஐங். தி. 6:4). தலைவனை உயிராகவுடைய தலைவி அவன் பிரிந் தால வாழமாட்டாள் (கலி. 3:6). கடுங்கண் மறவர் வம்பலரிடததே கொள்ளும் பொருள் இல்லாவிட் டாலும், அம்புபட்டுப் பதைப்பதைக் கண்டு மகிழ தற்குத் தொடர்ந்து சென்று அவர்தம் உயிரைக் கவர்வர் (கலி. 4:3-5). தலைவன் எந்நாளில் பிரிந்து செல்கின்றானோ அந்நாள் கொண்டு தலைவியின் அரும் பெறலுயிர் இறக்கும் (கலி. 5:18,19). பிரிந்து செனறு தலைவன் தேடும் பொருள் இன்பந் தருமே யன்றித் தலைவியின் உயிரினைத தராது (கலி. 7: 19-21). அரசு அமைச்சினைச் சினக்கும்போது நம் காரியத்தில் உதவியவர் என்று கண்ணோடாது அவர் உயிரினைக் கொள்ளும் (கலி. 8:15-17). நீ பொருள்தேடும் வினை விரும்பிச் சென்றால் தலைவி உயிர் விடுவாள் என்று தோழி கூறக் கேட்ட தலை வன் தன செலவினைத தவிர்த்தனன் (கலி. 10:21-24). மழை துளி மாறியமையால் வறண்ட பாலை நிலத்தே உயிர் வருந்திய யானைகள் நீர் ஊற்று அடங்கியதால் வேறு நீர்நிலை காணாது சேற்றின் ஈரத்தைச் சுவைத்துத் தம் செல்லுயிரைக் காத்தன (கலி. 13:6-8). தலைவா மேற்கொண்டது பொருள் வயிற் பிரிவாயின் நாம் அவரைப் பிரிந்து உயிர் வாழும் வலியற்றவராயின, 'தலைவி மார்பில் தொய் யிலை நீங்காதவர் இப்போது நீங்கிச் சென்றார்' என்றுநொய்யமகளிர் கூறும் பழி அவரிடத்தே நிற்க என்னுயிர் அவரோடே போயிற்று எனச் சொல் லுக வென்று தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 24:13-17). தொடிநிலை நெகிழுமாறு செய்தவரிடம் தோயந்து நிற்கும் என் ஆருயிரை அவரிடத்தே செறியாமல் காக்கத் துணிவேன், ஆனால், நிலாவி னையுடைய இரவில் பொய்கையின் கணணே வண் டுண மலர்ந்த மலர்மணம் வநது வருத்தம் தருகின் றது என்று தலைவி கூறினாள்(கலி. 29:18-21). தலை வியின் இனிய உயிரைக் காக்கும் மருந்தாயும் காத லருடைய தூதாயும் இளவேனில் வந்தது என்று தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 32:13-18).

தலைவியின் பெருத்த இளமுலை, கண்டவரின் உயிரை வாங்கும் தன்மையது என்று கைக்கிளைத் தலைவன் கூறினான (கலி. 56:24-26). என் ஆருயிரைக் கைக்கொண்டு அதனை இளமையால் அறியாது செல்பவளே என்றும் யான்சிறிது உயிருடன இருக்கும்படி என்னுரை வாங்கிககொணடு இளமையால் அறியாது இருப்பவளே என்றும் தலைவன் தலைவியை விளித்தான் (கலி. 56:6-8). தலைவியின் வடிவு விரைவாக உயிரை வாங்குந் தன்மையது (கலி. 58:17). கணணிறைந்த நலத்தினையுடைய மகளிரைக் கணடவர்க்கு உள்நின்ற காம நோய் மிகும்படி அவர் உயிர்போம துயர் செய்தல் பெண்தன்மை அன்று எனத் தலைவன் கூறினான் (கலி. 60:5-7). பெரிய அமர்தத மையுண்ட கணணையுடைய தலைவி செய்த வருததம் கதுமென உயிரை வாங்கும் (கலி. 60:15-17). நஞ்சு, தன்னை உண்டவர் உயிரைப் போக்கும் (கலி. 74:8). பரத்தை காரணமாகத் தலைவன்பால் ஊடல் கொண்ட தலைவி தன் உயிர் நிலைததில்லாமல் சாதல் தன்மை எய்தியதாக உணர்தல (கலி. 77:10). 'ஆலின்கீழ் அமர்ந்த இறைவனுடைய அழகமைநத முருகனைப்போல வரும் என உயிரே' என்று தலைவி தன் மகனை விளித்தாள் (கலி. 81.9,10). தலைவியின் அருள் நோக்குப் பெற்றாலல்லது தலைவன் இன்னுயிர் வாழமாட்டான் (கலி. 88:8,9). உடலும் உயிரும் ஒன்றாய்த் தலை இரணடாகிய பறவையின் ஒரு தலை மற்றொரு தலையொடு போர் எதிர்நதாற் போலத் தலைவி தன்னொடு கொடுமை கூறுவதால் பயனில்லை என்றும் அதனை விடுததுத் தன் ஆருயிர் நிற்கும்வழி கூறுதல் வேண்டும் என்றும் தலைவன் தலைவியிடம் மொழிந்தான (கலி. 89.4-6). 'நின் அழகால் பொறுக்க முடியாத நோய் செய்தாய்; நான் ஆற்றி நிறுக்கமாட்டேன்; நீ அருளுவாயாயின் என் உயிர் உண்டு' என்று தலைவன தலைவியிடம் கூறினான் (கலி. 94:10-12). உயிரை உடம்பினின்றும் போக்குங் கூற்றுவன் முறை செய்வதுபோல, யாவரையும் உலகத்துறையும் எல்லையில் நிறுத்தின கோலால் முறை செய்வான் அரசனான தலைவன் (கலி. 100:15,16). தலைவியை, 'உடம்போடு என் உயிர்க்குள்ளோ புக்கவள்' என்று தலைவன் குறிப்பிடல் (கலி. 102:8). சினமிக்க கரிய காளையை வலியடங்கத் தழுவி அடக்கிய பொதுவனுக்கு, எருமைக் கடாவினை ஊரும் கூற்றுவனுடைய நெஞ்சைத் தன் வடிம்பாலே பிளந்து ஆருயிர் கொண்ட இறைவன் உவமை (கலி. 103:43-45). ஆயர் மகள் தோள், அஞ்சாது உயிரை வெறுத்துக் கொலைத் தொழிலையுடைய ஏற்றினைக் கொள்பவர் செறியத் தக்கது (கலி. 103:65-67). உயிரை ஒரு காற்றாகக் கொள்ளாதே அதனைக் காவல் கொண்டு, ஏற்றின் மருப்பினை அஞ்சும் நெஞ்சினை யுடையவர்க்கு ஆயமகளிர் தோளைத் தழுவுவது எளியதன்று (கலி. 103.68-70). ஊழித் தீயும் கணிச்சியும் காலனும் கூற்றுவனும் உயிர்களை விடாமற் கொல்லுகின்ற ஊழி முடிவாகிய காலத்தில், சேரச்சுழன்று திரிவதுபோலத் தொழுவினில் சுழன்று திரியும்படி ஏறுகளைப் புகுதவிட்டனர் (கலி. 105:19-22). தழுவுபவர்களைக் கோட்டால் சாகக குத்தி, இனித் தழுவுவாரைப் பெறாது நிற்கும் சிவந்த ஏறு, உயிர்குறைகின்ற நாளில் உயிரை உணணும் கூற்றுவனைப்போன்றது (கலி. 105:35-38). 'மோர் விற்று மீளுங்கால் சிரித்து, என் உயிரோடு படையினைத் தொடுத்த மாறுபாட்டினை உடையவளே' என்று தலைவியைத் தலைவன் விளித்தான் (கலி. 108:5-7). என்னுயிர் நெய் கடைந்தெடுத்த பால்போலப் பயன் யாதும் இல்லாமலும், மேல் செயவதொரு செயலை அறியாமலும் உள்ளது என்று வினைவலபாங்கின் தலைவன் அத்தகு தலைவியிடம் கூறினான் (கலி. 110:17-19). மகளிர்தம் உயிரை அவருடைய உடலினின்றும் போக்கும் காலநிலையை அறியாதவராய் அதனை மாலை என்றொரு காலமாகக் கூறுவர் மயங்கியோர் (கலி. 119:14-16). காமநோய் மிக்க நெஞ்சம் நள்ளிரவில் நம் துயிலைக் கொண்ட தலைவர்பால் பொருந்திவிடின இனி நாம் இருந்து உயிர்வாழ்வது பலரால் சிரிக்கததக்கதாகும் என்று தலைவி கூறினாள் (கலி. 122:21-24). 'கனவில் வந்த தலைவன் நனவில் வந்து கூடுவதும் உண்டு என்று கருதி அவன் அருளும் எல்லைக்கண் அதனை விரும்பிஎன் உயிர் நின்றது' என்று தோழி கூறினாள் (கலி, 128:24-26). கழியிடத்தே கணணைக் கவரும் அழகிய சில புள்ளினம், திரைமோதுவதால் இறந்த புலால் நாற்றதனையுடைய மீனைத தின்னுவதல்லது தாமாக ஒன்றன் உயிரைப் போககி இரையாக உண்ணா (கலி. 131:31-33). முறை யெனப்படுவது கணணோடாது செயத குறைக்கேற்ப உயிரைக் கொள்ளுத லாகும் (கலி. 133:13). நாணினை நம்மிடத்தே நிறுத்துதலைச் செய்வோம் என்று உணர்தல் அரிது; ஏனெனில் காமம் பெரிது; என் உயிர்தவச் சிறிது என்று தலைவி கூறினாள் (கலி. 137:1,2). நம் உயிரைப் போகாமல் மீட்கும் மருத்துவராயத் தலைவர் இருப்பாராயின் அந்நிலை எக்காலத்து அவருக்கு உண்டாகும் என்று தலைவி வன்புறை எதிரழிந்து கூறினாள் (கலி. 137:24,26). தன் உயிர் காமநோயை நீந்தி உப்புப் பாத்தியில் கிடந்த உப்பால் இயன்ற பாவை மழைத்துளியை ஏற்றுக் கரைவது போலக் கரைந்தது என்று தலைவன் கூறினான் (கலி. 138:

15–17). தலைவன் தன் உயிர் நெருப்புப் பரந்த நெய்யுட் கிடந்த மெழுகுபோல மெல்ல உருகித் தேய்ந்தது என்று கூறினான் (கலி. 138:21,23). தலைவியின் அழகால் அவளிடத்தைப் பற்றிக் கொண்ட தலைவனின் நெஞ்சிடத்தே உள்ளத்தைச் சுட்டெரிக்கும் காமத்தீ உயிர்போகும் வகையில் அமையாது நின்று சுடும் (கலி. 139:26–29). பிறரால் தாங்க முடியாத சினத்தொடு தன் வடிவினைக் காட்டிக் கடித்து உயிரைப் போக்கும் பாம்பும் பலரிருக்கும் அவைக்கண் பட்டால் உய்யக் கூடும் (கலி. 140:21,22). ஞாயிறே, என் தலைவரைத் தேடி என் கையிற் கொடுத்தால், உயிர் திரியாக என் நெஞ்சாகிய அகலில் கொளுத்திய காமத்தீ அவியும் (கலி. 142:37–40). காமமும் கௌவையும் என்று சொல்லப்படும் இரண்டு விழுமம், உயிரைக் காவாகக் கொண்டு இரண்டு புறத்திலும் தொங்கி என்னை வருத்தும் என்று தலைவி கூறினாள் (கலி. 142:56–58). ஒருவன், தன் யாழிசையைக் கேட்ட அசுணமாவை அருளின்றி வஞ்சனையால் அதன் அரிய உயிர் போகும்படி பறை அடித்தமை, தலைவன் தலைவிக்கு இன்பத்தை முதலில் உண்டாக்கிப் பின் அவளைக் கைவிடுதலுக்கு உவமை (கலி. 143.10–12). 'உயிர்போன்ற தலைவனுக்கு ஒன்றும் தீது நேராமையை எனது உயிர் காட்டும்' என்று தலைவி கூறினாள் (கலி. 143:20,21). தன் உயிரைப் போல உலக உயிர்களை யெல்லாம் காக்கும் மன்னன், என் உயிர் போன்றவனை எனக்குக் காண்பித்து என்னுயிரைக் காவா திருப்பது ஏனோ என்று தலைவி கூறினாள் (கலி 143:52–55). ஒருவன் 'யானுற்ற வருத்தத்தை நினக்கு வந்து கூறுமளவும் என் இன்னுயிர் போகாமல் தங்கிற்று' என்று கூறி அவனொடு யான் கூடுமாறு செய்தான் எனத் தலைவி கூறினாள் (கலி. 144:13,14). காதலன் செய்த காமநோய்க்கு அயலிலுள்ளார் ஒரு மருந்தினைத் தெரிவித்துக் கூறார்; அதனால் ஊரவர்க்கெல்லாம் இகழ்ச்சி உண்டாகுமாறு என் ஆருயிர் நீங்கும். ஆதலால் திங்களே, நீ அவன்பாற் சென்று என்குறை முடிப்பாயாக என்று தலைவி கூறினாள் (கலி. 145:45–50). உடம்பினின்று போகின்ற உயிர்க்கு உறுதியாம்படி அலவன் கூடி நிற்கும் காட்சி காட்டித் தலைவன் தன் அன்புடைமையைப் புலப்படுத்தல (கலி. 146.22–24). தலைவிக்கு உயிரினும் சிறந்தது நாண் (கலி. 147:8). எந்நாளும் என் கண் துயிலாமையைச் செய்தவன் நட்பு உண்டாக்கிய நோய், மடாநறவு உண்டவரைப் போல மயங்கும்படி என் உயிரோடு, விடாது பொருந்தியது என்று தலைவி கூறினாள் (கலி. 147:53–56). 'தேயும் என் உயிர்ப்புறத்தே வந்துவிட்ட மயக்கந் தரும் மாலையே' என்று தலைவி மாலைக் காலத்தை விளித்துக் கூறினாள் (கலி. 148:7). போரடு குரிசிலாகிய திருமால் ஏந்தியபடை அவுணரின் உயிர் செகுக்கும் (பரி. 2:48,49). திருமால் பகைவரின் உயிரொடு முரணிய நேமியை உடையவர் (பரி. 4:9). கருடன் விடமுடைய அரவின் உயிரையும் உண்ணும் (பரி. 4:42). திருமாலுக்குப் பகைவரும் நட்டோரும் இன்மையால் பகைவருயிரை நீக்குதலும் நட்டோருயிரைக் காத்தலுமாகிய தொழில் இல்லை (பரி. 4:52). மறமிக்க மாறடு தானையால் ஒழுக்கத்தைக் கடந்துவரும் பகைவர் உயிரை அகற்றும் விறல்மிகு வலியுடையவர் திருமால (பரி. 13.30,31).

3. ஓசை. சீறியாழ வள்ளிய உயிர்-ஓசை-உடையது (புறம். 138:4). கொடிச்சியர் கிளியை ஓப்புங்கால் வள்ளுயிர் உடைய தெளிந்த சொற்களை இடையிடையே கூறி ஓப்புவர் (குறி. 100,101). வள்ளுயிர்ப் பேரியாழ் களாப்பழத்தின் நிறத்தையும் வளைந்தேந்தின மருப்பையும் உடையது (மலை. 36,37). எவ்வி இறந்து வீழ்ந்த போர்க்களத்தில் பாணர், தொழும முறையில முன பராவிய யாழின் வள்ளுயிருடைய வணர் மருப்பினை ஒடித்துப் போட்டனர் (அகம். 115:8–10). அள்ளனை நாடு கொள்ளுமாறு பணித்த அதியன இறந்த பின்னர்ச் சிறந்த உயிருடைய பெரிய கிணை ஒலியடங்கியது (அகம். 325:7–9). யாழ் வல்லான இசைக்கும் நரம்பு இனிய உயிர் கொண்ட பாலைப் பண்ணை ஒலித்ததுபோலப் பெரிய மரக்கிளைகளில் வண்டினம் முரலும் (அகம். 355:3–5). தலைவனது சுழறசியுடைய பெரிய தேரிற் பூட்டப்பெற்ற குதிரைகளின் மணிகள் பிணைதத தாரின் ஒலி, புள் ஒலித்தாற் போன்ற வள்ளுயிர் கொண்டது (நற். 91:10,11). வாயிலாக வந்த விறலியின சொல், பாணன் கையிலுள்ள வள்ளுயிர்த் தண்ணுமை போல, உள்யாதுமில்லாத மேற்பார்வை யுடையது என்று தலைவி கூறினாள் (நற்.310:9–11).

4. உயிர்ப்பு. களிற்றுயிர் எனப்படும் பெருவங்கியம் கண் திறக்கப்பட்ட தூம்பினை உடையது. [களிற்றினது உயிர்ப்புப் போன்ற ஒலியுடையது ஆதலின் பெருவங்கியம் களிற்றுயிர் என வழங்கப்பட்டுள்ளது (ஆகுபெயர்). ஔவை.து. புறம். 152:15; மலை. 6.] 'இனிய முழக்கத்தைக் கொண்ட ஆண்மானாகிய இனத்தையுடைய உயிர் (உயிர்ப்பு) தோன்றும் இளையமானே' என்று மகட்போக்கிய செவிலி நவ்விப் பிணாவினை விளித்துக் கூறினாள் (அகம். 7:9,10). வேனிலில் நீரற்ற உயர்ந்த இடங்களில் உயிர் தோன்றும் இளைய பிடிகளைத் தழுவிக் களிறுகள், முழவினை எடுத்துக்கொண்டு வேற்றுநாட்டு விழா

விற்குச் செலலும் மள்ளரைப் போல அவற்றை நடத்திச் செலலும் (அகம். 189:3-6). காதலர் கை கவர்முயக்கம் மெய்யில் பொருந்த வேண்டாமென்று மாறுபடுதலான் ஏங்குயிர்ப்பட்ட கொங்கையுடைய ஆகம் தனியே கிடந்து துயிலுவதால் துன்பப்படும் (நற். 240:2-4).

5. மூச்சு. மையல் வேழம் வருந்தும் உயிருடைய - மூச்சுடைய - மடப்பிடி தன் முதுகைத் தடவ, தண்ணீர் இறங்கி ஓடும் மலைப்பக்கத்தில் துயிலும் (குறு. 308:3-5). மணம் நாறும் உயிருடைய பிடியினைத்தழுவித் தடக்கை யானை குன்றிடத்திலுள்ள சிற்றூரினகண் இறங்கிச செல்லும் (குறு. 332:3-5).

6. குறிப்பு. ஓவியன் உயிர் - குறிப்பு - கொடுத்த பாவை தான் அழியுமளவும் அக்குறிப்பு மாறாமல் நிற்கும் (கலி. 22:5,6).

**உயிர்த்துப்பு** - உயிரினமாகிய உணவு. அரிய உயிர்த்துப்பினை - உயிரினமாகிய உணவை - கொள்ளும் கோண்மா திரியும் காட்டில் தலைவன் நள்ளிரவில் வருதல் (அகம். 108:9).

**உயிர்ப்பு** – 1. மூச்சுவிடல். கைக்கோப்புப் பொருந்திய உலைத்துருத்தி, பிடி உயிர்ப்பு - மூச்சுவிடல் - போலக் காற்று விடும் (புறம். 345:6). முலலை நிலத்தில், கள்ளியின உச்சியினை மூடிய முல்லைக்கொடியின் ஆர்க்குக் கழனற பூககளைத் தன் உயிர்ப்பால் ஒதுககி ஆணமான தெளிந்த நீரைக் குடிக்கும் (அகம். 184:7-11).

2. இளைப்பாறுதல். தன்பால் வந்த பொருநர் தம் பற்களின முனை மழுங்குமாறு ஊனையும், பிறவற்றையும் உண்டு உயிர்ப்பு இளைப்பாறுதல் - இடம் பெறாது அவற்றை வெறுக்குமாறு கரிகாற் பெருவளததான் மிகுதியாக வழங்கினான் (பொரு. 118, 119). தலைவனை நினைக்கும்போ தெல்லாம் நெஞ்சழியும் வருத்த மிக்க காமநோய்க்கு உயிர்ப்பாகி அவன் வந்து சேர்ந்தான் எனறு தோழி தலைவியிடம் தலைவன் வரவுணர்ந்து கூறினாள் (கலி. 35: 22,23). மடல் ஏறி என்னை வருத்தும் காமநோயால் உண்டான மன வருத்தத்திற்கு உயிர்ப்பாக, மாதர் வருத்தின கூற்றில ஒன்றைப் பாடுவேன் என்று மடலேறும் தலைவன் கூறினான் (கலி. 139: 10-13).

3. வருத்த நீக்கம். நீர்ச்சுழியில் அகப்பட்ட ஒருவனுக்குக் கரையில் நின்றவர் சென்று எடுக்காமல் அஞ்சாதே என்று கரையிலிருந்து கூறினாலும் அவனுக்கு உயிர்ப்பு - வருத்த நீக்கம் - உண்டாகும் (கலி. 140: 25, 26).

**உரம்**-1. வலிமை. பல்யானைச் செல்கெழு குட்டுவனின் படைமறவர் பகைவரின் யானைநிரை அழியும்படி உரத்தால்-வலிமையால்-செலுத்தி வேலை எறிந்தனர் (பதி. 28: 1-4). உரத்தினைத் தன்னிடத்தே கொண்ட இடிபோலும் ஓசையுடையது முரசு (முரு. 121). தலைவன், விரைந்து செலலுங் குதிரைகளை உரத்தாற் செலுத்தி முடுக்கும் மடிதல இல்லாத போககினையுடையவன (அகம். 9: 14, 16). தலைவன் தலைவியை அணைத்துக் கொண்டானாகத் தலைவி தன் உள்ள நிலையை அவன அறிதலை அஞ்சி மனத்தொடு படாத கடிய சொல் கூறி அவன கையை அகற்ற அவள் உரத்தகைமை கண்டு கூசி ஒன்றும் ஆற்றாதவனாகி மீண்டு சென்றான (அகம். 32: 9-16). பாலை நிலவழி பெண்டிரொடு இயங்கற் கரிதென்று நினையாது உரம் சிறந்து வேல துணையாக, நாமும் தம்மொடு செலலத் துணிவரோ என்று பிரிவுணர்த்திய தோழியிடம் தலைவி கூறினாள் (அகம். 119: 10, 12-15). 'தொலையாத நீண்ட சுரத்திடைத் தங்கி, உரங்கெட மெலிந்து வருந்துவாய் அல்லவா' என்று மீண்டும் பொருள் தேட எண்ணிய உள்ளத்திடம் தலைவன கூறினான (அகம். 379: 26, 27). கிளி ஒடித்துண்டமையால் கூழையான தினைத்தாளில் மழைபெய்ய இலை தழைத்தது போலத் தலைவர் என் நலததை உண்டமையால் உண்டான தனிமைவருத்தத்தோடு என உரம் அழிந்தும் அவர் அருளுவர் எனனும் நினைவால உயிரோடு இருக்கின்றேன எனத் தலைவி கூறினாள் (குறு. 133). அரவின் பசுந்தலை துணிபடும்படி நள்ளிரவில் உரமுடைய இடி முழங்கும (குறு. 190: 4, 5). இவ்வுலகத்தே மாந்தர், மரம் பட்டுப்போமாறு அதன்பால் மருந்தினைப் பெறமாட்டார்; தம் உரம் முற்றும் கெடுமாறு உயர்ந்த தவததைச் செய்யார் (நற். 226: 1, 2). தலைவர் உரம மிகக உள்ளமொடு பல சுரங்களைக் கடந்து பொருள் தேடச் சென்றனராயினும் தாம் கூறிய சொற் பொய்க்காது குறித்த பருவத்தே மீள்வார் (நற். 246:5-7). 'மனையில உள்ள தலைமகளால் கொள்ளப் பெற்ற உரங்கெழு நெஞ்சம் அரிய காட்டினைக் கடந்து நம்மொடு வராது திரும்புவதனைக் கருதுமோ' என்று இடைச்சுரததே தலைவன் கூறினான் (ஐங். 329). பலர் முன்னிலையில் கொம்பு அனையாரின் குவி முலை நோக்குவான் உரமில்லாதவன் (பரி. 12: 50,51).

2. நெஞ்சு. உள்ளத்தே தோன்றி உரத்தை - நெஞ்சை - சுடும் கவலையாகிய மிக்க தீயினை முயற்சியாகிய மழையால் அவித்துத் தலைவன காட்டில தலைவியைப் பிரிந்திருந்தான (அகம். 279: 6-9).

**உரமிலி** - திண்மையில்லாதவன். அவையிடையிருந்து கொம்பு போனறவளின குவிமுலையை நோக்கு கினறவன உரமிலி - திணமையில்லாதவன - இள நெஞசன ஆவான (பரி. 12:50,51).

**உரல்** - இடிக்கும் உரல். கேழற்பனறி உரல் போலும் தலை யுடையது (புறம். 152:3,4). தம்மிடமுள்ள வரகு, தினை ஆகியவறறை இரவலர் கொணட மையாலும குறியெதிர்ப்பை பெற முடியாமை யாலும கதிரில முற்றி உலாநத தினையை உரலில் பெயது குற்றி, வநதவரை உணபிப்பாள் குறிஞசி நில மனையாட்டி (புறம. 333:9-13). யானை உரல் போனற காலகளை யுடையது (பதி. 43:3,4; குறு. 232.4; கலி. 13 6). சிறிய உரல பிடியின் முழந் தாளை ஒக்கும் (பெரு. 53,54). எயிற்றியர் பார்வை விலங்கு கட்டபபட்ட தேயநத அடியினை யுடைய விளா மரததின் நிழலுடைய முற்றத் திடத்தில் தோண்டிய நிலவுரலில புலலரிசியைச் சொரிநது வயிரம பாயந்த உலக்கையால குற்றினர் (பெரு. 94-97). மகளிர் தொடிமாண உலகையால் குற் றும் உரலினின்றும் எழும் ஒலி மலையிலுள்ள ஆந்தை ஒலியொடு மாறிமாறி ஒலிக்கும் (அகம். 9:12,13). தாயா் சுழல் மரதநிரிகையி லிடடு உமி நீக்கிய அரிசியை, உரலிற் பெயது பூண பொருந் திய உலகையால தீட்டிய அரிசியை மட்பானை யில சுனைநீரை முகநது, கலலடுப்பி லேற்றிக் கொனறை விறகால் இடையர் வரகுச் சோறு அமைததனர் (அகம. 393.8,10-16). தலைவி பரந்த அடியினையுடைய உரலின பகுவாயிடத்துத் தானி யம் இடிக்குமபோது பாடும் வள்ளைப் பாட் டைக் குறித்து அயலார் குறையும் கூறுவர் (குறு. 89:1,2). பால போனற வெளிய மருபபினையும் நிலத்தே பரவும் உரல போன்ற அடியினையும மதத்தினையும் கொணட இனத்தைப பிரிந்த யானை சுரத்தின் நெறியினைக் காவல கொணடு நிற்றல் (கலி. 21: 1-3). முறறித் தாழந்த கதிரை உருவிச் சந்தன மரத்தின உரலிற் பெய்து, முதது நிறைநத யானைக் கொம்பால் செய்த உலக்கை கொணடு குறறித தலைவனுடைய மலையை வாழ்த்திப் பாடுதற்குத் தலைவி தோழியிடம் இசைநதாள் (கலி. 40:3-7). மூங்கில் நெலலைப் பாறையாகிய உரலிலே பெய்து யானைக் கொம் பாகிய உலக்கை கொணடு குற்றிச சேம்பின் இலையினைச் சுளகாகக் கொணடு புடைத்துப் பாடுவோமாக எனறு தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 41:1-4). ஐவனமாகிய வெண ணெல்லைப் பாறையாகிய உரலிலே யிட்டுப் புலி யைக் கொனற யானையின் கொம்பாலும் சந்தன மரத்தாலும தனித்தனியே செய்யப பெற்ற உலக்கைகள் கொண்டு குற்றி முருகனைப் பாடு வதுபோல் மலைநாடனைப பாடுவோம் என்று தோழி கூறினாள் (கலி. 43:1-6).

**உரவர்** - அறிவுடையோர். பெருஞ்சேர லிரும்பொறை உரவரையும் - அறிவுடையோரையும் - மடவரையும் அவர்தம் அறிவை ஆராய்ந்து நினைத்தறிந்து அருளுவான் (பதி. 71:25-27).

**உரவு** – 1. வலிமை. ஞாயிறு, வானத்தில் பரந்த இருள் நீங்க உயர்ந்து செல்லும் முறைமை யுடைய தனித்தனமையில பிழையாது உரவு - வலிமை - உடைய சினம் பொருந்தி அஞ்சத் தக்கதாய் விளங் கும் (புறம். 25:1-3). பரிசிலர்க்குக் கொடுக்க உரவு வேற்காளை (தலைவன) கை ஓயமாட்டான் (புறம். 334:10, 11). வாளால் வெட்டப்பட்ட உரவுக் களிறு புலால் நாற்றம் வீசும் பாசறையில் இருந் தது (பதி. 61:14, 15). மலைச் சாரலிற் பழுத்த நெல்லிக் கனியை ஔவைக்குக் கொடுத்த அதிகன் உரவுச்சினங் கனலும ஒளிதிகழ் வேலையும் ஆர வாரமுடைய கடல் போலும் படையையும் உடை யவன் (சிறு. 100-103). காட்டாற்று வழி உரவுக் களிற்றினை விழுங்கும முதலைகளையும் இருள் செறிநத காவற காட்டினையும் ஆழந்த நீர் அறாத மடுக்களை உடைய முடுக்கர்களையும் கொண்டிருந்தது (மலை. 211-214). காட்டாற்றுச் சுழியில் வீழந்து அகப்பட்ட யானையின் உரவுச் சினத்தைத தணியச் செய்து, அதனைப் பெரிய கம்பத்தில் சேர்ததற்கு விரவுமொழி பயிற்றும் பாகரின் ஆரவாரம் மலையிடத்தே கேட்கும் (மலை. (325-327). உறையினின்றும் உருவி உள்ளே இடப் பெறாத வாளினைக் கோதத வலிய தோளினை யுடையவனும் இரவில் அயாந்துறங்கும சேனை யைக் கொண்டவனுமாகிய உரவுச்சின வேந்தனின் பாசறையில் தலைவன் உளன் (அகம். 24:16-18). உரவுக் கதிரின வெம்மை குறைந்து மாலையில் மறையும் ஞாயிறு பாம்பால் விழுங்கப் பெறும் திங்களைப் போன்று மெல்லென மறையும் (அகம். 114:4, 5). உரவு மழை (மேகம) இடியுடன் கூடிக் காலிறங்கிப் பெய்த நள்ளிரவில் தனியே தலைவன் வந்தான் (அகம. 182:8-10). உரவுப் பெயலுடன் இடி தங்கும் உயர்ந்த உசசியை யுடைய மலை நாட்டிற்குத் தலைவன (அகம. 192:13-15). நள்ளிர வினில் புள்ளியுடைய படம் பொருந்திய அரவின் தலைதுணிபட உரவு உருமு (இடி) முழங்கும் (அகம். 202:9-11). மின்னலால் வானைப் பிளந்து உரவு கொண்டு எழுகின்ற மேகம், பகைத்து வலிமை கொண்ட குட்டுவனுக்கு உவமை (அகம். 212:12, 13). உரவு உருமேற்றொடு கூடி இரவெல்லாம் மழை

பெய்வதால் ஈரம் மிக்க சேற்று நெறியில் தலைவனைத் தேடிச் செல்வோமா என்று தோழி தலைமகட்குச் சிறைப்புறமாகக் கூறினாள் (அகம். 222: 14, 15). மலைப்பககததில புலியொடு சினமிக்குப் போர் செய்து செருக்குடன் உரவுக் களிறு நடநத இடஙகளில பெரிய பரற்கற்கள் சிறிய மின்மினிப் பூசசிகளைப போல எங்கும் நிறைந்து இமைககும் (அகம. 291:6-9). கவண கல்லின தாக்குதலுடைய பகற்பொழுதில இயங்காது இரவில் தினைப் புனத்தை மேய்நத உரவுச் சின யானை பெரிய தூறறினை அஞசும (அகம. 309 13-16). சுர புன்னை மிக்க மலைச்சாரலில, கூததரின முழவு அதிர்நததுபோனற முழககததையுடைய இடியுடன் உரவுப் பெயல் பொழிநதது (அகம. 328:1-3). தலைவனைத தோழி 'உரவுநீரச சேர்ப்ப' எனறு விளித்தாள் (அகம. 360.15, நற. 15.3; கலி. 149:3). தலைவன பலரும உறஙகும நள்ளிரவில உரவுக் களிறுபோல வநது வீட்டின் கதவினைத திறக்க முயன்றான் (குறு. 244:1,2). உரவுக கடலால் மோதபபெறற மணல் விரவிய அடைகரையிடததே விளையாட்டுப பெணகள் அலைக்க மெலிந்த நண்டின விரைநத செலவினை உயர்நது வரும் அலைகள் நீக்கும் (குறு. 316:4-7). 'ஞாழலின திரணட மலர்களை, நெயதல மலரில் பெயவதைப போல ஊதைக்காற்று தூவும் உரவுநீர்ச சேர்ப்ப' என்று தலைமகனைத தோழி விளிததாள் (குறு. 397:1-3). தாழை அருமபு முதிர்நது பெண்மான போல வேறாகத தோனறி விழாககளமெஙகும மணம வீசும் உரவுநீாச் சேர்ப்பன தலைவன (நற். 19:2-5). பல்வகைப் பணடஙகள் இறககியிட்ட மணற்பரப்பிலுள்ள புன்னையின கிளையிலிருக்கும் சூல முதிர்ந்த வெள்ளிய குருகு அலையோசை கேட்டு அஞ்சுதறகிடமான உரவுநீர்ச சேர்ப்பன தலைவன் (நற. 31:9-12) கடல் 'உரவுக கடல' எனச் சிறபபிககபபடல் (நற். 63:1). ஒளி பரப்பி உரவு இடி முழங்கும் நள்ளிருள யாமத்தில் இயங்கும் மேகம் குன்றததில தஙகி மழை பொழியும் (நற். 68:7-10). உரவு பொருநதிய நம் அரசன மிக்க பகையைத் தணிததான் என்று தலைவன் தேர்ப்பாகனிடம் கூறினான (நற். 81.10). நீலமணி களஙகமறத் தெளிநதிருநதாற போனற கரிய பெரிய கடல் நீர்ப் பரப்பில உரவுத்திரை பொருந்திய பூமலி பெருந்துறைக்கண் மோட்டு மணல இடிகரையிலிருந்து குருகு வரிசையை எண்ணித தலைவியும் தோழியும் பகற்பொழுதைக் கழிபபர் (நற். 159:1-5). கானற சோலை உரவுத்திரை மோதிய தாழையின் மலர் புன்னை மலரொடு மணங்கமழும் (நற். 235:1–4). வன்கைக் கானவன நள்ளிரவில தன வெஞ்சிலையை வளைத்து உரவுக் கணையினை முள்ளம் பன்றியின் நெஞ்சிலே எய்து கொன்றான (நற. 285·1-4). உரவுச்சின யானை வரும் புலியை எதிர்பார்த்து நிற்கும இரவில் அஞ்சாது தலைவன் வருவதனை நினைத்துத் தலைவி அஞ்சுவாள (நற். 336.7,8). பெருஙகடலில் இரவுக் காலத்தே திங்கள் தோனறியதால் உரவுததிரைகள் மோதுவன போல உயர்ந்து எழுந்தன (நற். 375:6-9). உரவுக் கடலில் ஒலிக்கும் திரைகளைப் போல இரவின கண்ணும் துயில் அறியேன் எனறு தலைவன பாங்கனிடம் கூறினான் (ஐங: 172:3,4). உரவு நீரில (கடலில) மாமரத்தினைத் தடிந்த வெனறி வேலையுடைய முருகன திருபபரஙகுன்றத்தில் எழுந தருளியுளளான் (கலி. 27:15,16). புளளிகளும் பகைவரை வருததுதலும் கூடிய உரவுடைய விலலின் மேல வைதத கையினை உடையவனாயத தலைவன, தலைவிககுக் காமககுறிபபு நிகழ நோககினான (கலி. 50:6-8). வறுமையால இரத்தற்கு அஞசிபபின உரவுத தகைமை கெடடு ஒருவனை வேணடுகின்றவனது நெஞசமபோல மரமெலலாம் பொலிவிழநதன (கலி. 120:4,5). 'உரவுநீர்ச சேர்பபனே, கரையிலுளள அடுமபங்கொடி உரவுக் கதிரால் காயுமெனக கருதிக் கடலலை அதனை அளிததுக காப்பது போலத தலைவியை நீ காபபாய' எனத தோழி தலைவனை வரைவு கடாயினாள் (கலி. 127.19-21). உரவுநீர்த் திரைவநது பொருமாறு உயர்நத மணல்மேடடில, இரைதோநதுணடு இளைப்பாறும் புள்ளினம் தம் பெடைகள் துணையாகத தங்கின (கலி. 132:1-3). கடல வற்றுமாறு முகந்து உரவு இடி ஆர்ப்பப் பாரந்தாங்க மாட்டாது கரையுடைநத குளதது நீர் போல மேகம மழை பெய்தது (பரி. 7:1-4).

2. பரவுதல். உரவு - பரவுதல் - பொருநதிய தடக்கையையும் கொணடியாகிய உணவினையுமுடைய, தொணடையைச சூடியவர்களின குடியிலுளளவன தொணடைமான இளநதிரையன (பெரு. 453,454). தனமேல ஒன்று நெருஙகுநதோறும நாய உரவுச சினததால் செருக்கி வெகுளும (குறி. 130,131). உரவுச சினமுடைய அரவு அழகிய விலலுககு உவமை (குறி.158,159 நச். உரை). தலைவியும் தோழியும் நுரையுடைய ஆறறின் நீர்ப்பெருக்கில குதிததலால உரவுத்திரைமோதி இடிகரையில் நின்ற வாழைபோலக் கால தளர்ந்து நீரிற சென்றனர் (குறி. 178,179). பரதவர், மகளிரொடு புகார் முகத்தே நண்டுகளை ஆட்டியும் உரவுத் திரை உழககியும் பகற்பொழுதில விளையாட்டயர்ந்தனர் (பட். 101). உரவுநீர்ச் சேர்ப்பன் (தலைவன) (நற். 78:11).

3. மிகுதல். ஞாயிற்றின் உரவுக் கதிர் - மிக்ககதிர் - சுடும் வெம்மை விளங்குகின்ற பொழுதில், கிளிகடி

கருவிகளை வாங்கித் தலைவியும் தோழியும் கிளி முதலியவற்றை ஓட்டினர் (குறி. 44,45).

4. உலாவுதல். கொல்கின்ற களிறாகிய உரவுத்திரை-உலாவுதிரை - தம்மில மாறுபட்டுப் புடைபெயர அதற்கேற்ப அழகிய வீற்கள் அலைகளின பிசிர் போல் விளங்கின (பதி. 50:8). உரவுத்திரை விரைந்து சென்ற உயிர்களைக் கொல்வதற்கு வெகுண்டு எழுவதுபோல் வெள்ளம் பரவியது (பதி. 72:10). பாசறையில் உள்ள உரவுக் களிற்றினிடத்தே வேலலும் கொடிகள அசையும் (பதி. 88:17). உரவுக் கடல் பகைவரால் தடுத்தற்கரிய சேனைக்கு உவமை (பதி. 90:31). கடல் துறைக்கண உயர்ந்த மாடத்தில் இராக்காலத்தே கொளுத்திய விளக்கு உரவுநீர்க் கடலிலோடும் கலங்களைத் தம்பால் அழைக்கும் (பெரு. 348-351). உரவுக் கடல் முகந்த மேகத்தினின்றும பகலிற் பெய்யும் துளியில் மின் ஓடியதுபோல ஆடுமகளிர் தம் தலைமுடியினிடத்தே பொன மாலையைச் சூடினர் (பெரு. 483-485). தேனை விருமபிய வண்டுக் கூட்டங்கள் உரவுத் திரை பொருத திணிமணல் அடைகரையிலுள்ள புன்னை மரத்தின கிளைகளில் கூடும் (குறு. 175:1-3).

**உரவோர் - 1. அறிவுடையோர்.** சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் உரைசால் சிறப்பின உரவோர் - அறிவுடையோர்-மரபில் வந்தவன (புறம். 166:9). பலயானைச் செல்கெழு குட்டுவன், மக்கள் அறநெறியில் ஒழுகி, மனைவியொடு இல்லறம் நடத்திப பகுத்துண்டு விருந்து போற்றி, மூத்தயாக்கையும் பிணியுமில்லா மல அவற்றினின்று நீங்குமாறு நெடுங்காலம் வாழும்படி செய்த உரவோர் வழியிலவந்தவன் (பதி. 22.8-11). பெருஞ்சேரலிரும் பொறை உரவோரை எண்ணினாலும கொடை மடவோரை எண்ணினாலும் பிறர்க்கு உவமையாகப் பொருந்துவ னல்லது, பிறரை உவமமாகக் கூறுதற் கியலாத ஒப்பற்ற பெருமையினை யுடையவன் (பதி. 73.1-3). 'அன்பும அருளும் நீக்கித் துணையைத் துறந்து பொருள்வயிற் பிரிபவர் உரவோராயின் அவர் உரவோரே யாகட்டும்; பிரிதலை ஆற்றாத நாம் மடவம் ஆகுக' என்று தலைவி கூறினாள் (குறு. 20).

2. வலிமையுடையோர். பாண்டியன் நெடுஞ்செழியன கடல் சூழ்ந்த அகன்ற உலகினைத் தம் முயற்சியாற் கொண்டு புகழை நிலைநிறுத்தித் தாமேயாண்ட உரவோர் - வலிமையுடையோர் - வழித் தோன்றியவன் (புறம. 18:1-4). நாஞ்சில் வளளுவன் புறங்கொடாத மேற்கோளையுடைய உரவோர் மரபில வந்தவன் (புறம. 139.7). தலைவன முன்னாளில் பகைவரொடு புகழுண்டாகப் பொருது விழ்ந்த உரவோர் மகன ஆவான். அதற்கேற்ப யானைகளைக் கொன்று அமையானாய் விளங்கினான (புறம. 310:4,5). பகையரண்களிற் பெற்ற பொருள்களைப் பரிசிலர்க்குக் கொடுத்த வெற்றியால் வரும் செல்வத்தையுடைய உரவோர் மரபில் வந்தவன இளஞ்சேரல் இரும்பொறை (பதி. 90:22-24).

**உரவோன் - 1. அறிவுடையோன்.** தொண்டைமான் இளந்திரையன் கடலின திரை கொண்டுவந்து ஏற விட்ட உரவோனாகிய - அறிவுடையோனாகிய - சோழனின் மரபில் வந்தவன் (பெரு. 31). வெளிமான், தன்னை வந்தடைந்தவர்க்குக் கோடையின் குளிர் நிழலை ஒத்து, யாரிடமும் பொய் கூறுதல் அறியாத உரவோன் (அறிவையுடையோன) (புறம். 237: 3,4).

2. வலிமையுடையவன். சோழன் நலங்கிள்ளி உயிர்களின் நலங் கருதிச் சுடரொடு திரியும் முனிவரும் வியக்குமாறு, பருந்திற்கு அஞ்சித் தப்பித் தன்னை வந்தடைந்த புறாவின் அழிவிற்கு அஞ்சித் துலாத் தட்டின்கண் புகுந்த வரையாத ஈகையையுடைய உரவோனது-வலிமை உடையவனது-மரபில் வந்தவன் (புறம். 43:4-8). சோழன் கரிகாற்பெருவளத்தான் கடலில் மரக்கலத்தை ஓட்டி வளி தொழிலாண்ட உரவோன் மரபினன் (புறம். 66:1,2).

3. பெருமையுடையவன். மலையமான் திருமுடிக்காரி பகைவரது பட்டத்து யானையின் ஓடைப்பொன் கொண்டு பாணருக்குப் பொற்றாமரைப் பூவினைச் சூட்டிய சிறந்த தலைமையினையும் ஓடாப்பூட்கையையுமுடைய உரவோன்-பெருமை உடையவன-மரபில் வந்தவன் (புறம். 126:1-4).

**உரற்று - முழக்கம்.** இடி உரற்று-முழக்கம்-போன்று முழங்கும் அஞ்சத்தக்க முரசத்தினை உடையவர் அரசர் (புறம். 197:5).

**உரன்-1. அறிவு.** பேகன் முதலாகக் காரி யீறாகச் சொல்லப்பட்ட வள்ளல் எழுவரும் மேற்கொண்டிருந்த கொடையாகிய பாரத்தைக் குற்றமின்றி விளங்கிய உரனும் - அறிவும் - வலிய முயற்சியுமுடைய ஓய்மானாட்டு நல்லியக் கோடன் தாங்கினான் (சிறு. 113-115,126). 'ஆமூரில் வாழும் உழவர் வலி பொருந்திய பகட்டினையும் உரனையும் உடையவர். அவர் தங்கை உங்களை வரவேற்று அன்பு செய்வாள்' என இரவலரைப் பாணன் அவரிடம் ஆற்றுப் படுத்தினான் (சிறு. 188-192). பெருந்திணைத் தலைவியொருத்திசான்றோரிடத்துச் சென்று, 'யான் உற்றது இதுவென, எழுவகையான அறத்தொடு நிலைகளில ஒன்றை நும மனத்திற்குப் பொருந்துமாறுகூறும்உரன் என்னுள்ளத்திருக்குமாயின யான்

இங்ஙனம் வருந்தேன்' எனக் கூறினாள் (கலி. 142: 19-22).

2. ஊக்கம். நன்னன் உரன் - ஊக்கம் - மிக்க நெஞ்சத்துடன் பகைவா அரணை அழித்துக கொணட அரிய கலன்களைப் பாடுநரின் தகுதி முதலியன கருதாது வழங்கினான (அகம. 349:5-8).

3. திண்மை. சோழன குராபபள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவன, சகடம் குழிபபாயதலைத தீர்ததுச் செலுத்தும பாரம் சுமக்கும உரனுடைய - திணமையுடைய - பகடுபோனறவன (புறம.60:8,9). 'சுரததினவழி அனபினறிப் பிரிநதவாகரு இன றோடு கூடி ஓராணடு கழிக' எனறு சொலலி உர னழிநது தம மனைவி துனபுறுவதாகப பெருஞ சிததிரனார் கூறினார் (புறம. 161.11-14). தான் தாக்கிய பனறி இடபபககம் வீழநததால அன்று அதனை உணணாமல பிறறைநாள உணவை விருமபிக் களிறறை வலபபககம் வீழததும புலி பசிததாற போலும் குறையிலலாத மேறகோளையுடைய உர னுடையாளர் கேணமை தனககமைய வேணடும் எனச சோழன நலலுருததிரன விழைநதான (புறம. 190:10-12). தாம உளளியது முடிககும உரன பொருநதிய நெஞசும வரிசைககு வருநதும் இயல பும் உடையவர் பரிசிலர் என ஔவையார் கூறல (புறம். 206:3,4). இடி சினந்து தாககலின பாம்பு உர னழிந்தது (அகம. 92:11). உரனுடைய நோனபகடு ஒறறையடிப் பாதையில இனனாதாகிய ஏறறங கொணட நெறியில வழுககிவிழுந்து முடம்பட்டது (அகம். 107:13-15). உமணர் உரனபொருநதிய பிடரி யினையுடைய எருதுகள பலவறறை மேயும்படி வணடிகளிலிருநது அவிழ்த்து விட்டனர் (அகம. 159:3). பரதவரின எறியுளியால தாககப் பெறற பெரியமீன தாவிக குதிததுப் புணணுமிழ குருதி யால கடற்பரப்பைக கலக்கி உரனழிநது படகின பக்கம் வந்து சேர்ந்தது (அகம. 210:1-6). பெரிய மலைக்கு அப்பாலுள்ள, வேறுபட்ட பலமொழிகள் வழங்கும் தேயததிற் சென்று பொருள்தேடக் கருதிய தலைவன் உரன் மிகு நெஞசத்துடன வேலினைக் கையிலேந்திச சென்றான் (அகம. 215:1-4). 'சிறறூரிலுள்ள குறிஞசிநிலத் தலைவனுடைய குறுமகளின் நீரைப் போனற மென்மை, தீயை ஒத்த என உரனை அழித்தது' எனபது தலைவன் கூற்று (குறு. 95:3-5). காதலர் பிரிநது செனறமையால் யான உரனழிந்து, இங்கிருநது பொறுத்துக கொணடுள்ள துனபத்தை இவ்வழுங்கலூர் யாங்கறிந்தது என்று பிரிவினால துன்புறற தலைவி வினவினாள் (குறு. 140:3-5). தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேடச் சுரத்தின்வழிச செல்லுகையில் தோன்றிய மாலைபபொழுது அவன உரனைக் குறைத்தது (நற். 3:6). வணமையை விருமபிய தலைவன் கொடிய சுரவழிச் சென்று பொருள் ஈட்டுதல அரிதென்று நினையாமல் மகிழச்சியுறற உரன்மிகுந்த நெஞ்சுடன் சென்றான் (நற. 333:5-7). பிரிவுணர்த்திய தலைவனை த தோழி உரனுடை உள்ளத்தன் என்று சுட்டினாள் (கலி. 12:10).

4. பற்றுக்கோடு. சேரிபபரத்தையர் 'ஊரன நமக்கு உரன் - பற்றுக்கோடு - அல்லன்' என ஒருவர்பின ஒருவராயக் கூறினர் (கலி. 68.6).

**உரி** - 1. தோல. வெட்சியார் பறறிச சென்ற ஆனிரையைத தனியே சென்று மீட்டுவந்த புகழுக்குரிய கரநதை வீரன, உரி-தோல-உரித்த பாமபு போலத தேவருலகததுச் செனறான (புறம. 260.19-21). புலியின உரியாகிய வரிகளையுடைய தோலையொபப வேங்கையின் நாள் மலர்கள மலையில உதிர்ந்து கிடந்தன (அகம. 205.19,20). வடுகர் கன்றின உரியால ஆகிய குடிலினையும் சினமபொருந்திய நாயினையும உடையவர் (அகம. 381:7). பாமபின் உரியைக் கீறின வாரை யொபபப பீலிபபோழால புனையபபட்ட செருப்பை முருகன காலில அணிந்திருநதார் (பரி. 21 6,7). உரிவை - 1 காண்க.

2. பாம்பு சட்டை. பாமபின் உரி-சட்டை-போனற வடிவத்தை உடையதாகவும மூங்கிலின் உட்புறத தேயுள்ள வெள்ளிய தோலபோனறு இழைகளின வரிசை அறியபபடாததாகவும் கலிங்கம் (ஆடை) இருநதது (புறம. 383:9-11). பாம்பின் உரியனன சிறநத பூவாடை (புறம. 397:15). கரிகாற் பெருவளததான, பொருநர்ககு இழைபோனவழி காண முடியாத நுணமையுடையதும பூததொழில முற்றுப பெறற தனமையால பாமபின உரி ஒததததுமாகிய ஆடையை நலகினான் (பொரு. 82,83). தலைவன செனற பாலைநிலததில பாம்பினது உரி மேலெழுந் தாறபோனறு பகற்காலத்தில கானல எழுநதது (குறு. 154:1,2). உரிவை - 3 காணக.

**உரிக்குடம்பை** - தோலாலாகிய குடில. கன்றின் உரிக்குடமபை - தோலால் ஆகிய கூட்டினையும - சினம் பொருந்திய நாயினையும உடைய வடுகர் நடமாடும் அசசமதரும சுரம கடநது தலைவன பொருள் தேடச செனறான (அகம். 381:7,8).

**உரிது** - உரிமை. சீறூர்த் தலைவன் உரிதினின-உரிமையுடன-செல்வக் காலததில் யாவர்க்கும் வரையாது அளளி வழங்க வல்லவன் (புறம. 331:10-13). தலைவி தோழியர் ஆயத்துடன் பறித்த பூக்களில உரிது (தனககே உரிமையாக) நாறும் விரிந்த கொத்தினையுடைய பெருமூங்கிற்பூவும ஒன்றாம் (குறி. 65). 'பிரிய எணணினால் தொண்டியனன இவள்

அழகு இலளுககே உரிதினின் (உரிமையாக) மணந்து கொளளவேண்டும்' என, இரவுக்குறி வந்து மீளும் தலைவனபால் தோழி கூறினாள் (அகம். 10·6-8). உரிதினின ஈதலால் உணடாம இனபம் வெஃகிய தலைவன சுரவழியே பொருள்தேடச் சென்றான (அகம. 69 4,5). காமக கிழத்தியாம உரிதினின (உரிமையுடைய) யாம மனைக்கிழத்திக்குப பகையுடையேம ஆகேம எனபது பரதனை கூறறு (அகம. 186: 17,18). வையைப புதுபபுனலில தலைவன உரிதினின பரதனையுடன நீராடி இனபம் நுகர்நததைப பரதனை ஆயம மறைபபவும அலர் எழுநதது எனக கூறித் தோழி வாயில மறுத்தாள் (அகம. 256: 10-13). 'தலைவன் நமமைப பிரிநது செல்வானலலன; உரிது அல - உரிமையலலாத பணபினால ஒரோவழிப பிரிவானாயின அவனுடன் சேர்த்து வைதது உன் நலனை நான் காபபேன' எனக குறைநோந்த தோழி தலைவியிடம் கூறல் (அகம. 392 19,20,28). மலை நாடனது மாரபை உரிதினின பெறாமையால தலைவிக்குப பசலைநோய உண்டாயிறறு (நற். 322:7-9). சோம்பியிருநதவர்க்குப் பொருள கைகூடலும் அரிய அறததைச் செய்யாதவர் உரிதினின ஆனறோர் உலகு அடைதலும் மகளிரைக் கூடுதலும நன்வில கூடா வெனினும் கனவிலேனும கூடும எனப பரதனையிற பிரிந்த தலைவன ஊடல தீககும் பொருட்டுத் தலைவிக்குக் கூறினான் (கலி. 92·5-7). ஒள்ளிழையாள தந்த காமநோயால என் உரிது என வரைததன்றி அழிந்தது (கலி. 138:20,21). திருமாலைத் தொழுவோராகுந்த திருமாலுககு உரிது (உரிமையான) துறக்கமும் உரிமையுடைதது (பரி. 13.12,13). உரிமை காணக.

உரிமை - உரியநாந்நன்மை. 'நமா துறைவர்க்கு நினனை உரிமை செபபியதால மகிழநதேன; இனி ஊர் அலர் கூறுமோ' எனத தோழி தலைவியிடம வினவினாள் (குறு. 351 4-8). அரிவையர் உணடாகிய காம பானததையும் மடைத் தொழிலுக்கு உரிமையுடையவா சமைதத உணவினையும் உணடு தம கணவரால் வநத சோர்வினின்று நீங்கினர் (பரி 8 120-123). குற்றமின்றி இசைக்கின்ற இசைக்கு உரிமையுடைய பாணரும கூததரும சுறறததுடன ஒருஙகுநின்று பாண்டியனை ஏததினர் (பரி. 10: 130, 131). அரிதிற பெறுதற்குரிய துறக்கததை எளிதில்பெறுதல உரிமையான் மாலிருங் குன்றததை எலலாரும கேட்க ஏத்தக் கடவேம் என்று இளமபெருவழுதியார கூறுவர் (பரி. 15.17, 18). பாண்டியனின் மதுரையில உள்ள கற்புடைப் பெணடிர் தம உரிமை மைநதருடன் (கணவருடன்) வையையில நீராடினர் (பரி. தி. 2·46-50). உரிது காண்க.

உரிமை செப்புதல் – மணம் நேர்தல். தலைமகன் தமர் மணம்பேச வந்தபோது தலைவியின தமர் மணம் நேர்நததமையைத் தோழி 'துறைவர்க்கு நின்னை உரிமை செப்பினா - மணம நேர்ந்தனர் - நமர்' எனக் கூறினாள் (குறு. 351:5).

உரிவை - 1. தோல். திருவாவினன்குடியில இருந்த முனிவா மான உரிவை - தோல - போர்ததியிருந்தனர் (முரு. 128, 129). கோடுகள் விளஙகும் புலியின உரிவையை மணிமிடறறநதணன் (சிவன) அணிதல (அகம. க. வா. 14). தோறறோடாத வீரம மிக்க சிறநத ஏறறினது உரிவையால் போர்க்கபபட்ட வெற்றி முரசம இழுமென ஒலித்தது (அகம. 334: 1,2). உரி - 1 காணக.

2. பட்டைநார். அம்புகொணடறுத்த ஆத்தியின் பட்டையிலிருந்து எடுத்த உரிவையாகிய நாரினால் சிவந்த கரந்தைப பூவைக் கண்ணியாகக் கட்டி நடு கல்லிற்கு வீரர் சூட்டினர் (அகம. 269: 10-12).

3. பாம்புச்சட்டை. பாறை இடங்களிற் பொருந்தியுள்ள மலைப் பாம்பினது வரியுடைய உரிவை-பாம்புச் சட்டை - மலையினின்று வீழும் அருவி போலக் காட்சியளித்தது (அகம. 327: 12, 13). உரி-2 காண்க.

உரு – 1. அச்சம். 'மண்ணிலும் விணணிலும் உனனைப் பற்றிய உருவும் - அசசமும் - புகழும பரக்குமாறு ஒருபககம் கோடாமல துலாக்கோல போல் ஆட்சி செயக' எனப் பாணடியன் பலயாகசாலை முதுகுடுமிப் பெருவழுதிககுக் காரிகிழார் அறிவுரை கூறினார் (புறம. 6: 8-10). சோழன இராசசூயம் வேட்ட பெருநறகிள்ளி முருகனைப் போனறு சீறறமும் உருவும் பொருநதியவன் (புறம. 16: 12). வானததிருள நீங்கச் செலலும் முறைமையும் வெம்மையும உடைய ஞாயிறுகாணபார்ககு உருவருமாறு விளங்கியது (புறம். 25:1-3). உருகெழு வீரமுரசம் குருதிப்பலி கொள்ளும் விருப்பம் உடையது (புறம். 50. 5). 'சோழனும் பாண்டியனுமாகிய நீவிர் இரு வீரும் பலராமனும் கணணனுமாகிய இருபெருந தெயவம் போல ஒன்றுபட்டுக் காணபோர்க்கு உரு உண்டாகுமாறு விளங்கி யிருபபீராக' எனக காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கணணனார் கூறல் (புறம. 58:16, 17). வெயிலை மறைததற்கு வளவன் எடுதத உருகெழு வெண்கொற்றக குடை உவவு மதியை ஒககும் (புறம. 60.10-12). உருகெழு ஞாயிற்றின ஒள்ளெரி தின்றமையால் காய்ந்த காடு தழைக்குமாறு மழை பெய்தது (புறம. 160:1-3). சிற்றரையம், பேரரையம் எனனும் இரு கூற்றாற் பெயர் பெற்ற உரு கெழுமிய, நீடிய நிலையுடைய அரையம் இருங்கோவேள் மரபினர்க்குப் பலகோடிப்

பொன்னைக் கொடுத்துதவியது (புறம். 202:6-8). இற்செறிக்கப் பெற்ற வாணுதலின் உடன்பிறந்த வர், வஞ்சியாது போர் செய்து வென்ற உருப் பொருந்திய நெடிய வேலையுடையவர் (புறம்.337:17). மிக்க பிணங்களாகிய பெரிய வளத்தைக் கொடுத்த தலையாலங்கானத்துச் செருவென்ற பாணடியன் நெடுஞ்செழியன வானத்து மீனினும் பல்லாண்டு வாழியர்' என உருகெழு பேய்மகள் குரவைக் கூத்து ஆடினள (புறம. 371.25-28). அதியமான் பொகுட்டெழினியை அணுகிய பொருநன, 'பகை மன்னரின உருகெழு மதிலை அழித்துக் களவேளவி செய்தவனே' எனப பாராட்டினன் (புறம. 392:6). இனனா செய்யாமையும் வாயமையும் உடையராத லின காண்போர்க்கு உருப்பொருந்திய மரபுடன முனிவர் விளங்கினா (பதி. 21:3-5). களங்காயக் கணணி நார்முடிச சேரல் போா செய்த களத்தில உருகெழு கூளிக் கூட்டம் வேண்டும் பிணங்களை யுணடு கூத்தாடியது (பதி. 36:12). கடல பிறக்கோட் டிய செங்குட்டுவனின் படைவீரர் வெற்றியை விரும்பும் விருப்பத்தையும் பகைவர்க்கு உரு நலகும் சிறப்பினையும உடையவர் (பதி. 43:24). கதிர் விளங் கும உருகெழு ஞாயிற்றின் விளங்கிய தன்மை யைக் கொணடவர் வானதோய் வெணகுடை வேந்தர் (பதி. 52:29-31). கரியமேகம் உலகததைக் காக்கும் உருகெழுமிய சிறப்பினையும் வளம் பொருநதிய நீரினையும் உடையது (பதி. 81:1, 2). குருதி கலநத சோற்றை யிட்டு உருகெழு இயல புடைய அயிரை மலையிலுள்ள கொற்றவையைப் பரவிய பெரியோரின் மருகனாவான இளஞ் சேர விரும்பொறை (பதி. 88:11-14). இளஞ்சேரலிரும பொறை, உருகெழு இயல்பினையுடைய அயிரை மலையிலுளள கொற்றவையை வழிபட்டனன் (பதி. 90:19). பேயமகள் கணடார்க்கு உரு உண்டாக்கும் நடையை யுடையவள் (முரு. 51). உருப்பொருந்திய வியன்நகரில் குறமகள் முருகன உவக்கும் வாச்சி யங்களை வாசிக்கப் பண்ணி முருகாற்றுப் படுத்தி னாள் (முரு. 242-244). முதுவாய இரவலனான அடியவன, 'இரந்து வநதோரை வேணடுவன கொடுத்துப் பாதுகாக்கும் உருகெழு நெடுவேளே' என முருகனை விளித்துப் புகழந்தான் (முரு. 273). கரிகாறபெருவளத்தான முருகனை ஒத்த சீற்றமும் உருவும் பொருந்திய தலைவனாவான் (பொரு. 131). தலையாலங்கானததுச் செருவெனற பாண்டியன் நெடுஞ்செழியன், தடாரிப் பொருநர்க்கு உருவும் தலைமையும் பொருந்திய பெரிய யானைத்திரளை வழங்கினான் (மது. 100-102). உருப்பொருந்திய மாயோன் முருகன் முதலிய தெயவங்கட்கு உயர்ந்த பலிகளைக் கொடுத்தற் பொருட்டு அநதிப் பொழுதில் இசைக் கருவிகள் முழங்கின (மது. 458-460). உருகெழு நடுயாமத்தில கடல் ஓதம் பெருகிக் கழிகளில் பாய்ந்து மீளுதலால் ஆண்டுள்ள பலவேறு பறவைகள் எழுந்து ஆரவாரித்தன (மது. 540-543). காவிரிப்பூம்பட்டினத்துக் கேள்வி யறிவும் நூலறிவும் மிக்க சான்றோர் வாது செய் யக் கருதி உருகெழு கொடி உயர்ததினர் (பட். 169-171). திருமாவளவன், பகைவருடைய காவற் சிறைமதிலை ஏறிக் கடந்து வாட்போர் செயது உருகெழு தன அரசுரிமையைப் பெற்றான் (பட். 225-227). உப்புவாணிகர் ஓர் ஊரே எழுநது செல்வது போனற உருப்பொருந்திய செலவினை யுடையவராய் நீரிலலாத அததம் கடந்து செனறனர் (அகம். 17:11-13). வெறியாட்டயர்ந்த உருகெழுமிய நள்ளிரவில நோய தணிததற்குக் காரணமான தலைவன் வந்து தலைவியைக் கூடியபொழுது யாதும் இயைபிலலாத வேலனுக்குத் தமர் வெறி யாட்டெடுபபதை நினைததுத தலைவி சிரித்தாள் (அகம. 22:11; 18-21). முரசமென முழங்கும் மேகம் உருகெழு திருவிலலினை உடையது (அகம். 84.1,2). 'நினனால ஐயுறப் பெறற பரத்தையுடன் யான் புனலாடி வநதேனாயின எனனை உயர்பலி பெறும் உருகெழு தெய்வம் வருத்துவதாக' எனத் தலைவன் தலைவியிடம சூளுரைத்தான் (அகம். 166:7-9). ஆய்நாட்டுத தெயவமலையில கவிரம் என்னும் பெயரையுடைய உருபபொருநதிய பக்க மலை இருந்தது (அகம். 198:14,15). ஞாயிறு மறைந்த அந்திபபோழுதில் உரு வாயந்த பெருங்கடல் நிறை மதி நாளில ஆரவாரித்ததைப் போல அலர் பர வியது (அகம. 201:8-10). உருப்பொருந்திய போர்த தொழிலை உடைய நன்னன, மிஞிலியொடு பொருது வீழ்நத எயினனை அவன் வீழந்த களத் திற காணாமல் சினம் சிறந்து மறைந்தான் (அகம். 208:6-14). உலகு புடைபெயர்வது போல உருமிக்க மரக்கலம் கடலிற் செனறது (அகம. 255:1). வயங்கு கதிர் விரிதத உருப்பொருநதிய ஞாயிற்று மண டிலம் உலகு தொழத் தோனறியது (அகம். 263.1, 2). இரதததை உணணுமவேட்கையும் உருச செயயும் வலிமையும் உடையது புலி (நற். 192:1). ஊர்ககாவல் புரியும் கானவர் கேட்போர்க்கு உருத் தோன்றும் தன்மையிற் குறிஞ்சிப்பண்பாடிக்கொணடுதுயிலாது காவல செய்தனர் (நற். 255:2,3). உருபபொருந்திய யானை முதுகிலிடும் ஆடையை அணிந்து கொண் டாற்போலப் பிணிப்பு அவிழ்நத பெரிய தாழைப் புதல் காணப்பெற்றது (நற்.299:1,2). 'பகலில் மறைந் துறையும் உருகெழு தெய்வம் வெளிப்பட்டு இயங்கு மாறு மாலைக்காலம் வந்ததால் இலலம் செலல வேணடும்' எனபதைத் தோழி தலைவிக்குக் கூறி

னாள (நற். 398:1). தேன் பருக எண்ணித் தேனீக் களை எழுப்பிய குரங்குக் குட்டி அத்தேனீக்களுக்கு அஞ்சிப் பக்கத்தேயுள்ள உருகெழு நெடுஞ்சினையிற் பாயந்தது (ஐங. 272:1-3). வையை சயிலமலைச சாரலில் உதிர்ந்த மலர் மேற்பரக்க உருகெழு நாகம், அகில, வாழை, வெரைமை, சந்தனம் முதலிய மரஙகளை ஏந்திக் கொணடு வந்தது (பரி. 12:3-5).

2. அழகு. தலைவெட்டப்பட உடல் மட்டும் மிஞ்சிய ஆணமை மிகக கவநததோடு உரு - அழகிய - வடிவம இலலாத பேய மகள் கணடார்க்கு வருத் தம தோனற ஆடினாள் (பதி. 67:10,11). கல்விப் பெருமையுடைய பாடினி பெடை மயிலின் உருப் பெற்று விளஙகினாள (பொரு. 47). காவிரிப்பூம் பட் டினததில உயாத்திய துகிற்கொடி, காட்டாறறுக் கரையினின்ற உருப்பொருநதிய கரும்பினது ஒள்ளிய பூவை ஒதது விளஙகியது (பட். 161,162,168). தம் பலபபூச்சி அரக்கனைய நிறமும் உருவும் பொருந தியது (அகம. 139.13). உருப் பொருந்திய செலலூர் எனறும் நீங்காத வேளவித் தீயினை யுடையது (அகம். 220:3). தலைவியின் கூந்தல் உருப் பொருந திய மயிலின தொகுதியான தழைதத தோகையை ஒததிருந்தது (அகம. 393:21-23). திருமால் ஊழி முடி வினுள் ஆழிக்கண அழுநதுகினற நிலத்தை உரு கெழுமிய கேழலாகி (வராகமாகி) மருபபால எடுத் தார் (பரி. 3.23,24). பெண்டிர் தததம அன்பரொடு யானை, குதிரைகளின மீதேறிச சென்று அளவளா வித தினைககும் உருமிக்க தோறறத்தால் வையை போாக்களததை ஒததது (பரி. 11:59). பாணடியன உருப்பொருநதிய கூடலிலுள்ள மக்களொடு வையை யில நீராடியது அந்தரவான யாற்றில் (ஆகாய கங்கை யில) இநதிரன் நீராடியதை ஒத்தது (பரி. தி. 2·90-96).

3. நிறம். முகிலபோலும உரு-நிறம-வாய்ந்த பரிசை (கேடயம) பரபபி முனையிடங் கலங்கப் பகைவர் மேறசென்று அவர் நாட்டைச் சோழன் இராச சூயம வேட்ட பெருநறகிள்ளி அழித்தான் (புறம். 16.2-4). சோழன் நலங்கிள்ளியின் வெண்கொற்றக் குடை உரு வாய்ந்த, கலை நிறைந்த திங்களபோல ஓங்கிவிளங்கியது (புறம். 31:4). பனைக்கொடியோன் (பலராமன) பாலபோலும் உரு உடையவர் (புறம். 58: 14). நீலநிறம் போலும் உருஉடையவர் திருமால் (புறம. 58:15). கிள்ளிவளவன் ஒள்ளிய எரியை ஒக் கும் உருப்பொருந்திய பசும்பொன்னாற் செய்யப் பெற்ற பூணினை உடையவன் (புறம். 69:15,16). வானவில்லைத தோற்றி மாணிக்கம போல உரு விளங்கும் மின்னல் முதலிய தொகுதிகளுடன மேகம் விளங்கியது (பதி. 88.32,33). பொருநன் வைத்திருந்த யாழ் விளக்கினது எரிகின்ற உரு உடைய தோலால் போர்த்தப் பெற்றது (பொரு .5). பேரியாழின் வளைந்தேந்தின கோடு கரிய நிறத் தாலே களம்பழத்தின் நிறத்தை ஒத்ததாய்க் கடு கித் தோன்றும உரு உடையதாக விளங்கியது (மலை. 35-37). மழை பெய்தவுடன் குருதி போலும் உரு வாய்நத தம்பலப்பூசசிகள் வழிகள் தோறும் பரநதன (அகம். 74:3-5). களவுக்காலத்தில் தலை விக்கு உணடாய தடைகள் பலவற்றுள் ஒன்று, பகல உரு வாய்நத நிலவு ஒளி பரப்பியமை (அகம். 122:10). கார்காலத்தில் மேகம், திருமாலின் மார் பில உள்ள பன்னிறம் பொருநதிய மாலை போனறு உருப்பொருநதிய வானவில்லைத் தோற்று விததது (அகம். 175:14-16). உருப்பொருநதிய வேங்கை மலரின் நாற்றம் காட்டு மலலிகை நாற்றத்துடன் கலந்து குருதிச் செங்களததின் புலவு நாறறததை மாற்றியது (அகம். 268:3,4). மழை பெய்து முடிநதவுடன புகைநிறம் போலும் உரு வினை உடைய அற்சிரக காலம் வந்தது (அகம்.317: 1-3). மேகத்தின நிறம போலும் உருவினையும் நீல மணிபோலும் கண்களையும் உடைய காக்கைகள் பிணத்தின கொழுப்பினைத் தின்னும் நெறிகளை யுடையது காடு (அகம். 327·15,16). சிவன், திருமா லாகிய இருபெரு தெயவங்களின் உரு (செநநிறமும் கருநிறமும்) உடனியைந்த தோற்றம் போல அந்தி வானத்தழகுடன் கடலழகும் உடனியைந்த மாலைக் காலம் வந்தது (அகம. 360:6-9). நாரையாற் கௌவப்பட்டுத தபபி நீருட் குளித்த கெண்டை மீண்டும் நீரினமேல் எழும் போது உரு அமைந்த வெள்ளிய தாமரை முகையை நாரையென்று கருதி அஞ்சியது (குறு. 127:1,2). ஈங்கை முகை உருக்கிய அரக்குப போனற உருவும் வட்டமாகிய வடிவும் உடையது (நற். 193:1). இளவேனிற் காலத்து எரி உரு ஒத்து இலவம் பூத்தது (கலி. 33.10). ஆவணித் திங்கள் அவிட்டநாளில உருப்பொருந்திய வெள்ளி ஏற்றியலை (இடபராசியை) சேர்ந்தது (பரி. 11.4). அருவி யின உருவுடன் மாறுகொள்ளும தாரினை அணிந தவர் திருமால் (பரி. 13:11). தம உருவுடன (நீல நிறத்துடன்) மாறுபடும் வெணமை நிறததினை யுடைய பாற்கடல் நடுவே மின்னையொத்து அவிர் கினற ஆயிரம் தலையுடைய (ஆதிசேடனாகிய) மேச் கைக்கண திருமால் அறிதுயில் கொண்டுள்ளார் (பரி. 13:26-29). வேறு வேறாகிய உருவினையும் வேறு படாத தொழிலினையும் உடைய இருவரை (மாயோனையும் பலதேவனையும்) தாங்கும் இருங்குன்றம் சிறந்தது (பரி. 15:13,14). 'நின் உரு எரிகின்ற தீயை ஒக்கும்' எனச் செவ்வேளை நப்பணனனார் பாடி யுள்ளார் (பரி. 19:99).

4. வடிவம். சிவபெருமானுக்குப் பெண்ணுரு

–பொன் வடிவம் – ஒரு பக்கமாயிற்று; அவ்வுரு சிவனால் தன்னுள்ளே ஒடுக்கி மறைப்பினும் மறைககப படும் (புறம், 1:7,8). உவவுநாள் மதியின் உருப போன்றது பாணடியன் கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதியின் வெண்கொற்றக் குடை (புறம், 3:1), நிறம விளங்குகின்ற உரு வாயநத பேய்ப்பெணடிர் தாளநதிறகேறப ஆடினர் (புறம், 62:4,5). அதியமானின் வாள்கள் பகைவரின மதிலை அழித்ததால் அவா உடமபின்கண மூழகி உரு இழந்தன (புறம, 97:1-3). வேள்விச் சாலை, வட்ட மாகிய உருவுடைய பலபடையாகச செய்யப்பட்ட மதிலால சூழபபெறறது (புறம, 224;7). ஓய்மான் நல்லியககோடன் தன மனைககண கிணைப பொருநன ஒருவன பாடிநினற பொழுது, முனபிருந்த நிலையை அறிய இயலாதவாறு மாறியிருநதஅவனது உருவினையும் ஆடையையும் பாாதது இரங்கி உணவும பொருளும் ஈநதான (புறம. 376.9-16). கிணைப் பொருநனின ஆடை, முட்டையினின்று வெளிப போநத பாமபினது நாவின பிளவுபட்ட உருப போனறு கிழிநதிருநதது (புறம், 393:15,16). காலக் கடவுள (சிவன) ஆணும் பெணணுமாகிய இரண்டு உருவுக்கு ஏறறபடி தோடும குழையுமாகிய ஈரணி அணிந்த அழகுடையன .(பதி, க. வா. 7,8), இமைய வரம்பன நெடுஞசேரலாதன ஒனனார் நாட்டின பழைய உரு கெடும்படி எரியூட்டி அழிததான (பதி, 15.7). இளஞசேரலிருமபொறையின அரணமனை இரவலா கொளளக் கொள்ளக் குறைபடா இயல்பையும் ஓவியததில எழுதினாலொதத உரு அமைநத சிறபபினையும உடையது (பதி. 88,27,28), முருகாற்றுப படுததும குறமகள தமமில மாறுபட்ட உருக் கொணட இரு ஆடைகளை உள்ளொனறும் புறமொனறுமாக அணிநதிருநதாள் (முரு. 230). வேறு வேறாகிய பல உருவுடைய கூளியர் முருகன அருள்பெற விழையும அடியவனை முருகனபால அழைத்துச சென்றனர் (முரு. 282). முருகன தெய்வத தன்மை வாய்நத திறலவிளங்கு உருவினையும் வானைத் தீணடும வளர்ச்சியினையும் உடையவர் (முரு. 287,288). சோழன கரிகாற் பெருவளத்தான் இனிமையும் பல்வேறு உருவும உடைய பண்ணியாரங்களைப பொருநர்க்கு அளித்து உணபித்தான (பொரு, 107,108). மலையைச சார்நத பாலையில நிழல் தன் உரு இழத்தற்குக் காரணமான முதுவேனிற் பருவம் வநதது (மது. 313,314). தொன்முது பெணடிர் விருப்பம் அமைந்த உருவில் நுகர்வார் விரும்பும் நுகாபொருள்களையும நறு மலர்களையும ஏநதி மனைகள்தோறும உலாவினர் (மது. 422,423). பெருநிதிக் கிழவர், சிவநத நுண்ணிதாகிய உருபபொருந்திய கணனணைக கவநும் நுண்பூங் கலிங்கம் அணிநதிருந்தனர் (மது. 432,433), பல்வேறு உருப்பொருநதிய காய்களையும் கனிகளையும் சோறு, ஊன பிறவறறையும தரபபெற்றோர் ஆஙகாங்கே பலவிடங்களிலும் இருநது உணடனர் (மது. 529-535). கீழ்ததிசையிடததே நிறைமதி யெழுந்து நிலாப பரததலினாலே பகல் உரு அனைய இராக் காலம வநதது (மது. 547-549). காவிரிப்பூமபட்டினததுளள பொயகையின வலிமை பொருநதிய கரை, மழைமாசு நீஙகிய வானிடததே திஙகளைச சேர்நத மகமாகிய வெள்ளியமீன உருப போல விளஙகியது (பட். 34-38). தலைவன பிரிநது சென்ற வழியில உரு இலலாத, ஊாநது செலலபபெறாத பேயததேரும மினமினி போனற பரறசுற்களும் இருந்தன (அகம. 67 15-18). தலைவன கை வேல நெய்தற்பூப் போலும உருவுடைய அகனற இலையினையும மயில தோகையால விளககமுறற காம்பினையும மூட்டுவாய் அமைநத சுரையினையும உடையது (அகம. 119 11-13). மேகம வானின நிறத்துடனும உருவுடனும ஒளிவிட்டு மினனி மழைத துளிகளைச சிதறியது (அகம. 218 3). 'கூதிர்ப பருவமாகிய உருவுடைய சுறறம காதலர்ப பிரிநதிருககும் என்னைக கொலல வருகிறது, யாது செயவேன' எனத் தலைவி வருந்தினாள (குறு. 197:4,5). வாடைக் காலத்தில காட்டுப பூனையின பலபோனற உருவுடைய முலலை மலாகள் தோனறின (குறு. 240: 3,4). குவளை மலருடன குருதி போனற காநதளின் ஒளளிய மலர்களை உருபபொருநதக கட்டிச சூடிச சூரரமகள ஆடினாள (நற. 34 2-5). தெயவம காக்கும கொலலிமலைச் சாரலில் உள்ள பாவை காற்று, மழை, இடி முதலிய இயற்கை ஊறுபாடுகளாலும வேறு செயற்கை ஊறுபாடுகளாலும தன் திருநல உரு கெடாத இயலபுடையது (நற. 201:5-11). வியபபுடைய இரவலர் வருமபொழுது அவர்கட்குக் கொடுகக ஆய அணடிரன் சேர்த்துவைதத யானைத் திரளபோல உலகம உவக்குமாறு வேறு பல உருவோடு மேகங்கள் எழுநதன (நற. 237. 7-10). பாதிததிஙகள் உருவில் வெள்ளிய இதழை உடைய பகனறைபபூ மலரும் (ஐங. 456.1,2). (துரியோதனன) சூழசசியால ஒள்ளிய உருவுடைய அரக்கு மாளிகையைத தீச்சூழ்நதபோது வளிமகன் (வீமன) அதனை உடைத்துத் தன சுற்றததோடே பிழைத்து வெளியேறினான் (கலி. 25:7,8). பொறியின் உரு ஒப்பப் புனகுகள் பூத்தன (கலி. 33:11). கொடிய புலியின் உரு ஒபபப் பூத்த வேஙகை மரததைப் புலியெனறு கருதிச் சினநது அதன அடியிற குததிய மதயானை தன கொம்பை வாஙக முடியாமல வருந்தியது (கலி. 38:6,9). 'நினனால் நான் அடையும் துன்பததை அறியாதவளே, நிற்க மாட்டாது

இளைக்கும் இடையை உடைய நின உருவை அறிநதும் தமது செல்வச செருககினால நினனை வெளியே அனுபபிய நின சுறறததாா தவறுடைய ரலலா எனபாயோ' எனக கைக்கிளைத் தலைவன் கூறினான (கலி. 58 13,14). விரைந்து உயிா வாங் கும உரு உடையவள தலைவி எனபது கைககிளைத தலைவன் கூறறு (கலி. 58:17). அடுக்கமெலலாம் மலர்ந்த காந்தளினது எழுச்சி வாயநத உருவினை யுடைய துடுப்பு தலைவியின முன்கைக்கு உவமை (கலி. 59·3,4). பரத்தையரின் மாலை முயக்கத்தால மெனமையுறுதறகுக் காரணமான தலைவன உரு வின மேல அவன பரததையரின் முடியை வகிர்ந்து முடித்தமையால் உதிர்நத பூநதுகள பரவிக் கிடந் தன (கலி. 72: 19,20). 'கணடார்க்கு இறபபை உண் டாகும் உருவுடன, விழுநது முளைத்த பலவரிசை யுடையராய உன் பரததைமை இலலத்திற் சேரும கடவுளரைக் கண்டுவநதாயோ' என்பது, கடவுள ரைக கணடுவநதேன் எனறு பொய்யுரைத்த தலை வனிடம் தலைவி கூறிய இடித்துரையாகும (கலி. 93:19,20) 'கரையில் நினறதொரு பொருளின் நிழல நீருககுள் நுடஙகினாறபோனறு உரு சுருஙகிக கூன பட்டு நடபபவளே' எனக் குறளன கூனியை விளித் தான (கலி. 94:2-4). 'நீ ஏறிய பரததையாகிய குதி ரையால் நின பழைய உரு முற்றிலும் கெடும்; ஆத லால அக்குதிரையை இனி ஏறாதே, ஏறினால ஈணடு வாராதே' என்பது புலந்த தலைவியின் கூற்று (கலி. 96·37-39). பழைய உரு கெழுமும்படி பெரிய நிலததைப படைததறகு, அநநிலத்தை மறைததுக் கிடநது கடலைப்போக்கும் (நான்முகன) செயல, பகைகொண்ட ஏறுகளைப் பிரிததுப் பசுத் திரளோடே சேர்த்துப் பின இனங்களைப பிரிககும் இடையர் செயலுககுவமை (கலி. 106:16-19). மண் ணுலகும் பொன்னுலகும அழிய, ஊழிகள் முறை முறையாகக் கழிந்த பின்னர்த் தன் குணமாகிய ஒலியுடன உரு காணப்படாத வளியாகிய முதற் பூதம் தோன்றியது (பரி. 2:1-5). தேவரும் பிறரும் தநத மறிமுதல் மணியீறாகச் சொலலப்பட்ட வேறு வேறு உருவினவாகியவற்றைச் செவ்வேள் தம் ஆறிரு கைகளிற் கொண்டார் (பரி. 5:63-68). நீராலே குத்துணடு இடிந்த மலைகளைப் போன்று இருக்கும இருகரைகளின் நடுவே வெள்ளிப் பனி மலையின சிகரங்களை ஒத்த உருவுடைய நுரைபல சுமநது வையை சென்றது (பரி. 7:40,41). அறிதுயி லோன், நாஞ்சிலோன (பலதேவன), களிறு (வராக மூர்த்தி), என்னும் மூவுருவாகிய முதற்கடவுளும் நீயே எனத் திருமாலை நல்லெழுநியார் பாராட்டு கினறார் (பரி. 13:34-37). திருப்பரங்குன்றத்துச் சித்திர மண்டபம் சென்று காணபோர், 'இப்பூனை இநதிரன்; இவள் அகலிகை; இவன் அவ்விடத்துச் சென்ற கௌதமன; இவன் சினத்தால இவள் கல் லுருப பெற்றாள்' என மனைவியர்க்குக் கணவன் மார் உரைததனர் (பரி. 19:50-52).

**உருக்கு** - கட்டிபபொருள நெகிழ்ச்சிபெற்ற நிலை. வல்வி லோரி மானநிணப் புழுக்கலொடு ஆனின் உருககு (நெய) அனன தேனையும தநததாக வனபரணர் கூறியுள்ளார் (புறம். 152:26,27). பாடினி அரககின உருககுப போன்ற சிவநத நிலததில் நடகையில பரற்கற்களால் காலில கொப்புளம் உணடாயிற்று (பொரு. 43-45). புலவர், பாணர், பாணிச்சியர், கூததர் முதலியவர்களுக்கு உணவளிக்க மதுரை மாநகரதது மககள் நிணததை யுடைய தசைகளைச் சுடுதலால உண்டாகும் உருக்குடன் சேர்நதுப் பொரிக்கறிகள் அமைததனர் (மது. 755,756). கூத்தர் எடுததுசசென்ற இசைக் கருவிகளுள உருககுற்ற தகட்டாலான கஞ்சதாளமும் ஒனறாம் (மலை. 4). உருக்குறு நறுநெய்யில பாலைச் சிதறினாற் போன்ற நுணணிய பல புள்ளிகளை யுடையது கானங் கோழி (நற. 21:6-8).

**உருகெழுதெய்வம்** - அச்சமுறுத்தும் அணங்கு. 'நின்னால் ஐயுறப பெற்றாளுடன யான் புனலாடி வநதே னாயின் உயர்பலி பெறும் உருகெழுதெய்வம் - அச்ச முறுத்தும் அணங்கு-என்னை வருததுவதாக' என்று கூறித் தலைவியைத் தலைவன தெளிய வைத்தான (அகம். 166:7-9). ஆதித்த மண்டிலம் மேற்றிசைக் கண் மறைநதது; உருகெழு தெய்வமும் வெளிப் பட்டு இயங்கும்; ஆதலால் வீடு செலவோம் எனத் தோழி தலைவியை அழைத்தாள் (நற். 398:1).

**உருகெழு மண்டிலம்** - அச்சம் மிக்க ஞாயிற்று மண்டிலம். விளஙகும் கதிர்கள் விரிந்த உருகெழு மண்டிலம் –அசசம் மிகக ஞாயிற்று மண்டிலம் - உயர்ந்தோர் வணங்குமாறு கடலில் தோனறும் (அகம. 263:1,2).

**உருத்திரனார் – புலவர்.** இவர் குறுந்தொகையில் 274-ஆம் பாடல் ஒன்று மட்டும் பாடியுள்ளார்; பாலை யின் இனனாமையையும் தலைவியின் இனிய தன் மைகளை நினைந்து செல்லின அது கடத்தற்கு இனிதாதலையும் இபபாடலில சுவை பொருந்தக் கூறியுள்ளார்.

**உருப்பம்** - வெப்பம். ஆஅய் எயினன் பொருது மாய்ந்த பொழுது, ஞாயிற்றின ஒள்ளிய கதிரின் உருப்பம் -வெபபம்-அவன் உடலிற் படாதவாறு புட்களின் கூட்டம் விசும்பிடம் மறைய வட்டமிட்டது (அகம். 181:7,8). உருப்பு காணக.

**உருப்பு** - வெப்பம். கடல் பிறக்கோட்டிய செங்குட்டு வன் பகையரசரின் உருப்பு–வெப்பம்–ஆகிய சினத்தீ

அழியும்படி படையாகிய புனலை நிரப்பினான் (பதி. 50:15,16). வெயிலால் உருபபுற்ற பருக்கைக் கற்கள் தீயிற் காய்ந்த வேலின் உருப்புத் தன்மை உடையவாய நடப்போர் அடியைக் கிழிக்கும் (சிறு. 7,8). மிகுகின்ற வெயிலுக்கு உள்ளுறைவோரும் வருந்துமளவு உருப்பு அவிர் குரம்பையிலிருந்து எயிற்றியர் விருந்தோம்பினர் (சிறு. 174,175). கொம் மட்டி மாதுளையி னுடைய பசியகாய மிளகின் பொடி கலக்கப்பட்டுக் கருவேம்பினது நறிய இலை அளாவப்பட்டுச சிவந்த பசுவின் மோரில எடுத்த வெண்ணெயினகண்ணே கிடநது வேகலின் வகிர் உருப்புடன் இருநதது (பெரு. 306-308). ஒளி பொருந் திய சுடரும் உருபபும உடைய ஞாயிறு ஒளி குறைந்து மேற்றிசையில் உள்ள மலையைச் சென்றடைந் தது (மது. 545-547). பருப்பும் தேங்காயுமாகிய உள்ளிடு பொருள்களோடே கண்ட சருக்கரை கூட்டிப் பிடித்த வகுப்பமைந்த உருப்பு உறற மோதகங்களை விறபோர் அவறறோடே அல்லங் காடியில உறங்கினர் (மது. 624-626). தலைவி ஆயத் துடன கிளிகடிந்து ஞாயிற்றின் சுடர்கள் சுடுகின்ற உருப்பவிர் அமையத்து அருவி நீராடிச் சுனை குடைந்தனள் (குறி. 45). ஞாயிற்று மண்டிலம் தீயெனச் சிவநதெரிந்த காட்டில் உருப்புமிக்கு விளங்கியது (அகம். 11:1,2;31:1). வாவற்பேடை தாவிப் பறத்தலால் நெடிய வானைக் கடநது வெயிலவிர் உருபபொடு வந்து கனிகள் பெறாமல் தான் முன்பு கனிகளைப் பெற்ற நாளின வளனை நினைந்து ஏங்கிற்று (அகம. 57:1-5). பெரியவானா கிய கடற்கண் ஓடம்போனறு நின்ற பல்கதிர் ஞாயிற்றின் உருப்பு விளங்கிப் பரக்க மேல் காற்று வீசியது (அகம். 101:12-14). பாம்பின் உரி மேலெ ழுந்தாற் போன்று உருபபு விளங்கும் நண்பகற் காலத்தில இரைவேட்டுப் பறந்துசென்ற ஆண புறாவை நினைந்து புறாப்பேடு கூவும் (குறு. 154: 2-6). உருப்பம் மிக்க கோடை நீடிய மலைபபக்கத் தில் வெண்மை நிறமுடைய ஆடையை விரித்தாற் போன்று வெயில் விளஙகியது (நற். 43:1,2). தயிர்த் தாழியில மத்தாற் கலக்கியபோது உருப்பினால வெணணெய் சிதறிக் கிடந்தாற் போல உப்புப் பூதத களர்நிலம் காணப்பட்டது (நற. 84:6-8). நீரற்ற நீணட வழியில வெளளாடையை விரித்தாற் போனறு வெயில •வீசுகின்ற உருப்பு மிகுந்தது (நற். 99:1,2). 'இடைச்சுரத்து உருப்பு மிக்க பொழு தின்கண் என்மகள் புறவின புலம்புவிளி கேட்டுப், போர் செயயப் புகுந்தாற்போனற கணவனையுடை யவளாய் வேலேந்திய காதலனை நோக்கித் துனபம் செய்வாளோ' என நற்றாய் வருந்தித் தோழியிடம் வினவினாள் (நற். 305.7-10). தீத்திகழும் ஞாயிற்று மண்டிலத்தின் உருப்புச் சினம் தணியுமாறு யாமரத் தின் நிழலில் அமர்ந்து இளைப்பாறிச செல்க; நீ தேடிச் செல்வோரும் இளைப்பாறியே செலவரா தலின் சிறிது தொலை செல்லின் அவரைக் காண் பாய என இடைச்சுரததுக் கணடோர் செவிலிககுக் கூறல் (ஐங். 388). காதலர் நம்மைப் பிரிந்து செல் லும் வழியில் உள்ள கல்லில உணடான உருபபு நீங்குமபடி துளியைச் சிதறுவாயாக எனப் பரவி மேகத்திற்குரிய ஞாயிற்றை இரப்பது நம் கற்பிற்கு ஏற்றதோ எனத் தலைவி தோழியிடம் கேட்டாள (கலி. 16·6-8).

**உருபு - 1. நிறம்.** ஞாயிற்றின உருபு-நிறம்-விளஙகிய தனமையைக் கொணடவர் வானதோய வெண குடை யுடைய வேநதர் (பதி. 52:29-31). திருமாலநீல மணிபோல விளங்கும் உருபு உடையவர் (பரி. 3.3).

**2. வடிவம்.** ஞாயிறறின உருபு - வடிவம - கொண டவா வெணகுடையுடைய வேநதர் (பதி. 52:29-31). [உ.வே.சா, உரைக்குறிப்பு.] வேள்வி யாசானது உரை திருமாலின் உருபு ஆகும (பரி. 2:61,65).

**உரும் - இடி.** ஐந்தலை நாகம் பெருமலை விடரகத்துப புகுந்ததாக அங்கு விசும்பு தீப பிறபப உரும-இடி- எறிநதது (புறம். 37:1-4). பிடிக்கூட்டததோடு கயம் படியாமல் நெலலுடைக் கவளமொடு நெயம்மிதி பெறாமல கமபம் வருநதச் சாய்த்து நிலததினமீது புரளும் கையை யுடையவாய்ப் பெருமூசசெறிந்து சுற்றிவரும் யானைகள் உருமென முழங்கின (புறம. 44:1-5). தான் சிறிதாயினும் கிளையுடனே பாமபை எறியும் வெள்ளிய உரும் ஏறு போல இளமைக் காலத்தும் பகைவரைக காணப் பெறாத, போரிற் சிறந்த பாணடியர் குடியுள் ஏறு போலவான வெள்ளியமபலத்துத் துஞசிய பெருவழுதி (புறம. 58: 6-8). சோழன் போரவைககோப் பெருநறகிள்ளியின களிறுகள் கார்காலத்து மழையின் உருமைக் காட் டிலும் மிக்கு முழங்கின (புறம். 81:1,2). முள்ளெயிற்றி னையுடைய அரவினை எறியும் உருமைப போல முரசு கிளர்ந்தொலித்தது (புறம. 126·18,19). முகில்கள் கடல் குறைபட நீரை முகநதுகொணடு, வேண்டியவிடததே திரண்டு பெரியமலை போலும் தோற்ற முடையனவாயச் சூல முதிர்ந்து உருமேறு மின முதலிய தொகுதியுடன கூடி மழை பெயதன (புறம. 161:1-5). மலை பொடியக் கானம் வெம்பக் கயம்காயக் கோடை நீடிய பசுமை யற்ற காலத்தே பெரிய நிலங்குழிய உருமேறு மின் முதலிய தொகு தியையுடைய மழை பொழிநதது போல மலையமான சோழியவேனாதி தோன்றினான் (புறம. 174·23-28). உரும முழங்கினாற் போன்ற அஞ்சத்தக்க முரசத் தோடு போரில் மேம்படும வெற்றியுடையராயினும்

நல்லறிவுடையோர் நல்குரவினைத் தீர்க்கப் பயன் படாமையால் அவ்வேந்தர் வெண்குடைச் செல்வத்தை வியவேம் எனப் பெருந்திருமா வளவனிடம் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் கூறினார் (புறம். 197:5-8). உரும்போல முரசு ஒலித்தல் (புறம். 350:4; பதி. 25:10; 33:10;39:5,6; 90:56; பதி. தி. 1:4, 5; முரு. 121). கார்காலத்துத் தோன்றும் உரும் விரைந்து தோன்றி முழங்குவது போல உயிரைக் கவரும் கூற்றம் விரைந்து தோன்றி அச்சுறுத்தும் (புறம். 361:1,2). குறுந்தடியினால் அடிக்கப்பெற்ற பெருமுழக்குடைய முரசம் அரவு எறியும் உரும்போல் முழங்கியது (புறம். 366:1-3). உரும் இசையைத் தன்பாற் கொண்ட முரசம் மழையிடத்து முழக்கம்போல் முழங்கியது (புறம். 373:1). உரும் எறிந்த மலை விழுவது போலப் பகைவர் நிலத்தே விழுமாறு தலைவன் கொன்றான் (புறம். 373:20-22). கடற்பரப்புக் கலங்கக் காற்றடித்தலால் விளங்கும் பெரிய அலைகள் உருமென முழங்கும் (பதி. 51:1,2). குன்றின் நிலையைத் தகர்க்கும் உரும் போலச் சினந்து ஒரே வளைப்பில் சோழனையும் பாண்டியனையும் வென்றவன் செல்வக் கடுங்கோ வாழியாதன் (பதி. 63:10-12). உரும் எறிந்த மலை போலக் களிறு நிலஞ்சேர மாறாமைந்தினையுடைய வீரரொடு காஞ்சி சான்ற போர் பல செய்தவன் இளஞ்சேரலிரும்பொறை (பதி. 84:17-19). முப்பத்து மூவரும் பதினெண் வகையாகிய உயர்ந்தநிலை பெற்றவருமாகிய விண்ணோர் ஆவினன்குடி முருகனைக் காண மீன் பூத்தன்ன தோற்றத்தினராய் வளி கிளர்ந்தன்ன செலவினராய்த் தீயெழுந்தன்ன திறலினராய் உரும் இடித்தன்ன குரலினராய் வானத்தே சுழன்று வந்தனர் (முரு. 167-174). குறிஞ்சிக் கோமானாய நல்லியக் கோடனது முகில்தவழும் மூங்கிலை யுடைய மலைக்குவட்டினை உரும் தான் செல்லுதற்குத் தடையென இடித்துச் சென்றது (சிறு. 265-269). அறம்புரி செங்கோலாட்சியால் இளந்திரையன் நாட்டில் ஆறலை கள்வர் இலர்; உருமும் முழங்காது; அரவமும் தீண்டா; காட்டு விலங்கும் துன்பம் செய்யா (பெரு. 36-43). மரங்களைச் சுட்டு மலைகளை நீறாக்கும் உரும் நெடுஞ்செழியனுக்கு உவமை (மது. 62,63). கார்ப்பெயல் உரும் ஒலி களிறு பிளிறலுக்கு உவமை (குறி. 162). மலை முழைஞ்சு புலி, யாளி, கரடி, ஆமானேறு, யானை, வலியினாற் கெடுக்கும் வன்கண்மையும் வெஞ்சினமுமுடைய உரும், சூர் முதலியவற்றை உடையது (குறி. 252-261). பெருமலை உருமேறு முழங்கும் தொகுதியை யுடையது (மலை. 357). மன்னுயிர் மடிந்த நள்ளிரவில் இன்னிசை உருமொடு பெருமழை பொழிந்தது (அகம். 58: 1, 2). மறவர் உருமென ஆர்ப்பரிக்கும் ஊக்கம் உடையவர் (அகம். 61: 6, 7). தோட்டத்தின் அசோக மரக்கிளையில் கட்டிய ஊசற் கயிற்றைப் பாம்பெனக் கருதி அம்மரம் முழுதும் சிதைய உரும் எறிந்தது (அகம். 68: 4-7). அருஞ்சுரத்தில் புலியொடு பொருத புண் பொருந்திய யானை குருதியொழுக மலையுச்சியில் உருமென முழங்கும் (அகம். 145: 7-10). உரும் உரறும் மின் முதலிய தொகுதியை யுடைய பெருமழை பொழிந்து நள்ளிரவில் ஓய்ந்தது (அகம். 158: 1, 2). விசும்பில் அழற்கொடி போன்ற மின்னல் தோன்றி நுடங்கக் கடிது இடிக்கும் உருமொடு விடாது மழை பெய்தது (அகம். 162: 3-6). பாம்புகள் இறக்குமாறு உரும் இடித்தல் (அகம். 182:9,10; குறு. 158:1-3; 190: 3-5). தலைவன் மழையுடன் உருமும் தங்கும் உயர் சிமைப் பெருமலை நாடன் (அகம். 192: 13-15). நள்ளிரவில் உத்தி அரவின் பைந்தலை துமிய வலிய உரும் முழங்கும் அஞ்சத்தக்க வழியில் ஊக்கத்துடன் எஃகு துணையாகத் தலைவன் வருதல் (அகம். 202: 9-14). இரவில் வலிய உரும் ஏற்றொடு கூடி மழை பொழிந்தது (அகம். 222: 14, 15). கீழைக்கடலில் நீர் முகந்த மேகம் வேந்தர்தம் பல்படைத் தானை யானைப் படையை நிறுத்தி வைத்தாற்போல் தோன்ற, மின்னல் கொடிபோல மின்ன, உரும் நிலம் அதிர முழங்க, நடு இரவில் மழை பெய்தது (அகம். 278: 1-5). உரும் போன்ற ஒலியுடையது அலை (அகம். 310: 16; குறு. 351: 4). தலைவன் வரும் வழியில் காட்டு விலங்குகள் இருக்கும்; யானை உலாவும்; வானத்தின் மேல் உருமும் நன்கு முழங்கும்; அரவும் புலியும் உள (அகம். 318:1-3). உரும் ஒலிபோலக் களிறுகள் முழங்கும் (அகம். 322; 6, 7; நற். 353: 9, 10). களிற்றைத் தொலைத்த ஆண்புலி வெற்றிப் பெருமிதத்தால் உருமென முழங்கும் (அகம். 389:20-23; நற். 383:3-5). கார்ப்பருவ மழையை யுடைய மாலைப் பொழுதில் இன்னிசையுடைய உருமினம் முழங்கும் (குறு. 200: 5, 6). கடிதிடிக்கும் உரும் பாம்பின் படத்தை அழித்தல் (குறு. 391: 3; நற். 238: 8, 9). இரவிலே உடன்போக்கில் தலைவியை முன்னே நடத்திப் பின் செல்லும் இளையோன் உள்ளம் காற்றொடு கலந்து மழை பெய்யும் காலத்துப் பெரிய மலையைப் புரட்டும் உருமினும் கொடிதாகும் என்பது கண்டோர் கூற்று (நற். 2: 7-10). புலியொடு பொருத புண்மிக்க யானையின் கொம்பினை விரும்பிய அன்பில் கானவர் விடுத்த அம்பினால் களிறு பிளிற்றும் ஒலி உரும் ஒலியை ஒத்தது (நற். 65:5-8). ஒலியைப் பரப்பி வலிய உரும் முழங்கும் நள்ளிரவில் கொடிபோல் மின்னித் தலைவர் மலையில் முகில் தங்கி மழை பெய்தது (நற். 68:7-10). ஈர்ங்குரல் உருமின் நல்லேறு பாம்பு கவின்

அழிக்கும் (நற். 114' 9, 10). மின்னொளியுடன் கூடி உரும் முழங்கும் அசசந்தரும் நளளிருளில தலைவன் வருதல (நற. 122.5,6). நிறம் விளங்கும படப்பொறி யுடைய அரவின் தலை நடுங்குமாறு மழையொடு கூடி உரும முழங்கியது (நற. 129.7-9). கொல்லி யிலுள்ள குடவரையில காற்று மோதினாலும் மழை விரைந்து வீசினாலும உரும் சினநது எறி யினும் ஊறுபல தோனறினும் பெருநிலம் கிளர்ந் தாலும் அங்குளள பாவையின அழகிய நல்ல வடி வம கேடுறாது (நற்.201:5-11). பாரியின் குன்றத்தைப் பேரிசை உருமொடு மாரி சூழந்தது (நற. 253.6-8). உரும ஓசை கேளாது பெய்யும் மழையின் மணி யோசை கேட்க ஆனிரையை ஓட்டிக்கொண்டு கோவலர் ஊதும் கொனறையநதீங் குழல் மனறந தோறும் ஒலிக்கும் (நற். 364:7-10). வானம் மழை பொழியத் தலைவி தொடி நெகிழ அழத்தொடங் கினள்; அதனெதிர இரவில முழங்கும் உரும ஓசை போலக் கோவலர் குழலூதத் தொடங்கினர் (நற. 371:5-9). தலைவியின தூதுமொழி, பாசறைக்கண் பிரிநதிருநத தலைவனைக கார்காலதது உருமொடு சோநது வருத்தியது (ஐங. 441:1). உரும் உறழ முரசினை உடையவன் தென்னவன (கலி. 104:79). கார்காலத்து மிக்க ஒலியுடன இடிக்கும உரும் போல இயங்கள ஒலிததன (கலி. 105.24). பாம்பைக் கண்டு அதிரும உரும் குரல போல அதிரும் பொரு கினற முரணகொனட நலல ஏறுகள் ஆனினத்துள் நாதடன நின்றன (கலி. 113 26-28). பனிக்கடல வறற நீரை முகநத மேகம வலிய உரும் வெகுண்டு ஆரவாரிககத் தன் மேலேறின பாரந தாஙகாது கரையுடை குளமெனப பெருமழை பொழிநதது (பரி. 7:1-3). யாழும மிடறறுப்பாட லும இசைநது நிறபச் சுருதியோடு குழல்கள் ஒலிகக, முழவுகள் ஆர்த்தன. அரங்கேறிய தலைக் கோல் மகளிரும் பாணரும் ஆடலைத் தொடஙகி னா. அவறறால உணடாய முழக்கததோடு கரையை மோதி ஓடும் வையை நீரின் ஒலி உரு மிடி சேர்நத மழை முழக்கத்தை ஒக்கும் (பரி. 7: 77-82). கூடலில மனறல முரசு காறறொடு மயங் கிய புடைபெயர் கடலெனவும் கடலைக் குடிக்கும் மேகக் குரல எனவும் இந்திரனது பெரிய உரும் எனவும் அதிர்ந்தது (பரி. 8:29-34). சூல் முதிர்நத முகில, மலை வரிசையைச் சூழ்நது கல துணிபட எறிநது உடலும உருமேறறினம் ஆர்பப மழை பெயதது (பரி. 20:1-3).

உரும்பு - 1. வெம்மை (கொடுமை). உருப்பின் மெலித் தல. பிறிதொனறால உரும்பு - வெம்மை - உறாத கூற்றம போனற பல்யானைச் செல்கெழுகுட்டு வனின விரர் சீறிய நாடு பாழ்பட்டுப் பீர் படர்நது நெருஞ்சிக் காடாக மாறியது (பதி. 26: 10-14). கொடைக் கடமையைச செயது முடித்துக் கூம்பா உள்ளத்துடன உருமபு இலலாத சுறறத் தோடு இளநதிரையன அமர்நதிருந்தான (பெரு. 446, 447). உயரிய அரச உரிமையினையும் உரும்பு இலலாத அமைசசர் முதலிய சுற்றத்தையும கொணடிருந்தும் கொடை செயயாது மாயநதோர் பலராவர் (மலை 550-556).

2. அச்சம். சுருமபிமிரும் அடுககம புலமப உருமபு - அச்சம் - இலலாத உளளததை யுடைய அரிமா களிற்றினைக கொனறு திரியும (நற. 112:3, 4).

உருமு - 1. இடி. மறவர்குரல நிலததை அதிரச செய் யும உருமுவின்-இடியின - குரலை ஒத்தது (பதி 30: 41, 42). ஓங்கெயிற் கதவத்தில உருமு தன கழுத் தைத் தினவால் தேயக்கும பகைவா தூங்கெயிலை எறிநதவன நொடிவிளஙகு தடககையும் நலலிசையும நறறேரு முடைய செமபியனாவான (சிறு. 80-82). உருமுச சினநது முழங்குதலால உரனழிந்த பாமபு உமிழந்த திருமணியின ஒளியில் தலைவியின கூந்த லில தலைவன் ஏழுறு துயில பெறுவான (அகம. 92'11-13). பாமபு உறையும் பிளபபுக்களை யுடைய ஓஙகுமலை புரளுமபடி உருமுச சிலநதெறியும நள்ளிரவில தலைவன இரவுககுறி வருதல (நற. 104:8-12). நளளிரவில் பாமபு தனனிடமுளள திரு மணியைக ககுகி வருநதி உழலுமாறு உருமு சினங கொணடு முழங்கி மோதும (நற். 255.9-11). இலவ மரததின ஒளளிய கொததான பெரிய பூக்கள தீத் தனமை பொருநதிய காறறு வீச விணணிலிருநது உருமுவில தோனறிய தீயைபபோல நிலததில உதிரும (ஐங. 320.1-3). மாணிககப பாறையின சுனையிடதது வளாநத காநதளின் அழகிய குலையை மணி விளஙகும படபபொறியினை யுடைய பாமபு நீருணணுவதாகக கருதி உருமு இடிததலால எழுந்த ஓசை மலைசசாரலின எதி ரொலிக்கச சிறுகுடியினர் விரைவில துயிலெழுந் தனர் (கலி. 45:1-7). வடககிலுளள இநதிரனால காக்கபபடும இமயததின உயாநத கோட்டினை உருமுச் சூழதல (பரி. 9.1-3). களிறறின முழககம் உருமுப் போன்றது (பரி 10:49,50).

உருவப் பஃறேரிளையோன் - இளஞ்சேட்சென்னி (கரிகால னின் தநதை). வென்ற வேலினையும் அழகிய பல வாகிய தோகளையு முடையவன இளஞசேட் சென்னி. இவன் மகன் கரிகாற் பெருவளததான முருகனின் சீற்றம்போனற சீற்றத்தையுடைய உரு கெழு குரிசிலாவான் (பொரு. 129-131).

உருவம் - 1. வடிவம். கானப்பேரெயில வானைப் பொருநதும் மதிலையும் வானிடதது மீன் பூத்தாற்

போன்ற உருவம் - வடிவம்-உடைய ஞாயிலையும் காவற் காட்டையும கொணடது (புறம். 21.3,6). வானததிற பாற்கதிா பரப்பி உருவ வான்மதி பரநதிருநதது (சிறு. 250,251). நல்கூர்நதாரின் செலவ மகளைக கணடு கொல்லி மலைப் பாவையோ, நலலமகளிா தம உறுபபுக்கள் எல்லாவறறையும் ஒருஙகுகொணடு ஒருவடிவாக அயனால இயற்றப் படடவளோ, ஆடவர் மீதுளள வெறுப்பினால் பெண்ணுருவம கொணடுவநத கூற்றமோ எனத தலைவன ஐயுற்றுக கூறினான் (கலி. 56:7-12). 'பொறறகடு போலும உருவததினை யுடையாய, கணடோா இகழாதபடி கோவிலினின்றும நீஙகிக காவினகீழ வருக, புலலி முயஙகுவோம்' எனக குறளனிடம கூனி கூறினாள் (கலி. 94:40-43). உருவம (வடிவுடைய) ஏறாகிய ஊாதி யுடையானை (சிவனை) ஒதத சிறந்த பொருளைத் தேடுதற்குத் தலைவா காட்டகததே அஞ்சத்தக்க வழியெனக் கருதாதுபிரிநது சென்றார் (கலி. 150: 11-13). திருமாலின உருவமும ஒலியும ஆகாயத்துள (பரி. 4.31). உருவு-1 காணக.

2. நிறம். விசுமபில மீன்கள பூத்தாறபோல, உருவம-நிறம்-கொண்ட பலவாகிய ஆனிரைகளை ஊர்ந்து செலலற் கேற்ற காளையோடு தாமான தோனறிக்கோன கிணைஞனுககு நல்கினான் (புறம. 399.30-34). போர்க்களம் செல்லும விருப்பத்துடன மறவர், உருவச் செந்தினை குருதியொடு தூவி முரசினை வழிபட்டனர் (பதி. 19:3-7). தினியம் கறங்க உருவப் பல்பூ தூவிக குருதிச் செநதினையைப பரப்பிக குறமகள் முருகாற்றுப் படுத்தினாள் (முரு. 240-244). பலிகொடுதது உருவச் செந்தினை குருதியொடு தூவி வெறியாட்டெடுத்தல் (அகம். 22:9-11). சோழரின் உறையூரில் காவிரிப் பேரியாற்றின உருவ வெண்மணலுடைய மணங் கமழும சோலையில் பங்குனி (உத்திர) விழா நிகழநதது (அகம. 137:5-9). மறையும் கதிர் மழுங்கிய உருவ (செநநிறமுடைய) ஞாயிறறு மண்டிலத்தால் செவ்வானம் தோன்றியது (அகம். 184:15,16). இரவில வேலொடு நம்மனை புகுநத தலைவனை முருகனெனக் கருதித தாய் முகமன கூறி உருவச் செநதினை நீரொடு தூவி வழிபட்டாள் எனத் தோழி தலைவன சிறைபபுறததானாகத் தலைவியிடம் கூறினாள் (அகம். 272.11-15). பூழியரின் உருவ (நிறததையுடைய) ஆட்டுமந்தை போல மலைச் சுரவழியில மாரிககாலத்து விடியலில கரடிக் கூட்டம மேயும் (நற். 192.3-5). ஏறுகள் இடையரைக குத்திய போது எரிதிகழ கணிச்சியோன் சூடிய பிறையிடத்துக் கிடநத உருவ மாலை (சிவநத நிறமுடைய மாலை) போல ஏற்றினங்களின் குருதிக் கோட்டோடு குடர் சுற்றிப் பிணிததன (கலி. 103:25-27). ஆமபல், காந்தள் உருவ மிகு (நிறமிகுந்த) தோன்றி, முதலிய பல்வேறு நிறமலர் பூத்தலால் பரங்குனறம் விடியலில பலநிற மேகம் நிறைந்த வானம் போலப் பொலியும் (பரி. 19:75-84). முருகனின நிறம் உருவத் தீயை (எரிகினற செந்நிறத தீயினை) ஒக்கும் (பரி. 19:99). உருவு-2 காண்க.

3. அழகு. இளஞ்சேட் சென்னி வெலலும் வேலையும் உருவபபஃறேரையும் - அழகிய பலவாகிய தேரையும-உடையவன (பொரு. 129,130). அஙகாடித் தெருவில விழாநிகழததியெடுத்த உருவப பலகொடி அசைநதாடின (மது. 366,374). செம்பினாற் செய்தாலொதத நெடுஞ்சுவரில உருவப பல பூக்களை யுடைய ஒரு கொடி ஓவியமாகத் தீட்டப பெறறிருந்தது (நெடு. 112,113). உருவக் குதிரைகளை யுடைய மழவரை வேளிர்குலத்து ஆவி புறங்காட்டி ஓடச் செய்தான் (அகம. 1:2,3). உருவ வல்வில் பற்றி அம்பினை ஆராய்ந்து கையிற் கொணடு தலைவன் யானை சென்ற வழிபற்றித தலைவியை வினவினான் (அகம். 82:10-12). தனமாாபிற் பூசிய சந்தனத்தினின்றும் வேறுபட்ட மணமுடைய மலைச்சாரலிலுள்ள வேங்கைக் கிளையில பூத்த புதிய பூககளாலாகிய உருவக கணணியைத் தலைவன் சூடியிருநதான் (அகம். 288:2-4). கிள்ளியினது வெணணி சூழநத வயலிலுளள வெள்ளிய ஆம்பலின நெறிபபுடைய உருவத் தழையை அலகுலில அணிபெற உடுதது விழாககளததிற்குச் சென்று தலைவனைக கவர வேணடும என ஒரு காமக்கிழத்தி உரைததாள் (நற். 390:3-6). உருவு-3 காணக.

4. கவறு. முத்துப் போன்ற மணல் மிக்க எக்கரில் தலைவன் கூடுதலினால முறபட இடுகின்ற தாயம் முன்மனை கட்டலாம்படி பத்துருவம் பெற்றவன - கவற்றாலே ஈரைந்தைப் பெற்றவன் - மனம்போலத் தலைவி ஆக்கம் பெருகினாள் (கலி. 136:5,6).

5. உயிர் (ஆகு பெயா). கையில் பல இயங்கள் ஒலிப்பப் பல உருவங்களையும் - உயிர்களையும் - மீணடும் தன்னிடத்தே ஒடுக்கிக் கொணடு மணிமிடற்றான (சிவன்) கொடுகொட்டி ஆடினான் (கலி.க.வா. 5,6).

**உருவன்** - நிறமுடையவன். அவுணர் கூட்டம் ஞாயிற்றைக் கொண்டு சென்று மறைக்க அதனைக் காணாது வருந்திய உலகததினது துன்பந்தீர மிக்க வலிமையுடைய அஞ்சன உருவன் - நிறமுடையவன் - (திருமால்) ஞாயிற்றை விணணிடத்துக் கொண்டுவந்து நிறுத்தினான் (புறம. 174:1-5).

உருவு – 1. வடிவம். உவவுமதி போன்ற உருவு - வடிவம் - உடையது வெண்கொற்றக்குடை (புறம். 3.1). முன்பிருந்த என நிலையை அறிய முடியாதவாறு மாறியிருந்த உருவோடு என இடையிலிருந்த இழைகள் கெட்டுக் கரை கிழிந்த என் ஆடையைக் கண்டு நல்லியக் கோடன 'இவன் விருந்தினன்; அளியன்' எனக் கருதித் தேறல நல்கி வறுமை களைந்தனன் எனக் கிணைஞன் கூறுகிறான் (புறம.376:9 15). ஐந்தாகிய வேறுபட்ட உருவினையுடைய முடிக்குச் செய்புந தொழிலெல்லாம் முற்றுப்பெற்ற அணி கலன்களோடு முரண்மிகு திருமணிகள் விளக்கத்துடன் முருகன் சென்னியில் திகழ்ந்தன (முரு. 83-85). திருவாவினன குடியிலுள்ள முனிவர் மாசற விளங்கும் உருவினர் (முரு. 128). வேறுபல் உருவினையுடைய குறுமபல் கூளியர் (பணியாளர்) தோன்றி, முருகனைப் பலவாறு ஏததியவனை, 'இவன் அளியன், முதுவாயிரவலன்' என்று முருகன திருமுன் கூறினர் (முரு. 277-286). நெடியோனாகிய திருமால் நீலநிற உருவினர் (பெரு. 402). பேயும் அணங்கும் புறக்கண்ணாற் காணத்தக்க உருவு கொண்டு கூற்றுவனின் தேராகிய கழுதொடு நள்ளிரவில மதுரையில் திரிந்தன (மது. 631-633). பரவியும் தொழுதும் விரவு மலர் தூவியும் பல்வேறு உருவினையுடைய கடவுள்களைப் பேணி நறும்புகையும் விரையும் ஓசசியும் தலைவியின் நோய்க்குக் காரணம் அறியவியலாது நீ வருந்துகிறாய் எனச் செவிலியிடம் தோழி உரைத்தாள் (குறி. 5–8). தலைவி தலைநாளிரவில் உடல் முழுவதையும் ஆடையால் போர்த்துக கொணடிருந்தபோது, காறறுப்படச் சிறிது திற எனக் கூறித் தலைவன் ஆடையை வவ்விய போது உறைகழி வாளைப்போல அவள் உருவு விளங்கித் தோன்றியது (அகம். 136:20-24). தெய்வங்கள் உறையும் மலையிலுள்ள பெண் தெயவம் சுடர்ப்பூ வேய்நது தாம் வேண்டும் உருவில் நம் தோட்டத்திற்கு வரும்; அதனைக் கண்டு தலைவி தனியே நள்ளிரவில் சென்றாள் எனப் பிறழ உணர்ந்துஅவளை அலைக்காதே எனத் தோழி செவிலிக்குரைத்தாள் (அகம். 158:5-9). யாமை முட்டைக்கு யானைத் தந்தத்தால் கடைந்தியற்றிய வட்டின உருவு உவமை (அகம். 160:5,6). முருகனைப் புணர்ந்து சென்ற வள்ளி போன்ற நின் உருவின் ஒளி கண்ணில் வீசுதலால் நின்னை நோக்கிற்றிலன் எனத் தலைவன் தலைவியிடம் கூறினான் (நற். 82: 4,5). கைவல் கம்மியன் செய்த பொனனாலான சுரிதகம் என்னும் அணியின் உருவினவாகிய கோங்க மரத்தின் பெரிய குவிந்த முகைகள் மலர்ந்தன (நற். 86:5-7). காந்தளின் எழுச்சி கொண்ட உருவினையுடைய துடுப்பெனக் கூறும்படி தலைவியின் திரண்ட மெல்லிய தம்மில் ஒத்த முன்கைகள் இருந்தன (கலி. 59:3,4). அலைமோதும் மணலமேட்டில விரவுதலையுடைய, பல்லுருவினைக கொணட இரை தேர்ந்துண்ட புள்ளினங்கள் தாம விரும்பிய பெடை துணையாகத் தங்கின (கலி. 132:1-3). 'ஒருத்தி மழைக்கு நடுவில் மின்னுபபோல தோன்றித் தன் னொளியோடே தன் உருவையும் எனக்குக் காட்டி என் நெஞ்சைத் தான வரும வழியாகக கொண்டு விட்டாள்' என்பது தலைவன கூற்று (கலி. 139.5-7). மார்பணி மணமிக நாறும உருவின (பரி. 1.23,24). இந்திரனுக்குக் கொடுதத வரததினபடி சிவன் தன புணர்ச்சியில தோன்றிய கருவின உருவை மழுவினால் சிதைத்தான் (பரி. 5:30-35). உருவம - 1 காணக.

2. நிறம். மலையை யொத்த யானைமேல் விண ணைத் துடைப்பதுபோல் பல உருவின - நிறததை யுடைய-கொடிகள் நுடங்கின (புறம். 38:1-3). 'நொச்சித்தழை மெல்லிழை மகளிர்க்கு அலகுலி லணியத் தொடலையாகப் பயன்பட்டதையும்கண்டோம்; இப பொழுது குருதியொடு மயங்கி உருவு மாறித் துணி பட்டுக் கிடந்த நொச்சிமாலையை ஊனெனக் கருதிப் பருந்து கவர்தலையும் கண்டோம்' எனப போர்மலைநது மடிந்த மறவனின மாலையைபபற்றி வெறிபாடிய காமக் கணணியார் குறிப்பிட்டுள்ளார (புறம். 271:2-8). தலைவியும் தோழியரும பலவேறு உருவினையுடைய வனபபமை கோதைகளைக கூநத லில கட்டிக் கொண்டனா; எரிபோல் திகழும் உருவின தளிர்களைக் கொணட அசோகின தணணிழலில் தங்கினர் (குறி. 103-106). புகாரின அஙகாடித் தெருவிலுளள பலவேறு உருவினையுடைய கொடிகளின நிழல செறிநதிருததலின ஞாயிறறின ஒளி புக இயலவிலலை (பட். 182,183). வாள நிற உருவின (நிறம போல) மினனல் மினனி மழை பெய்தது (அகம். 218:3,4). அஞ்சததக்க வலிய திறல் கொண்ட இருபெருநதெயவஙகளின் (சிவன், திருமால) உருவு இயைந்து நினற தோற்றம போல அநதி வானததின செநநிறமும கடலின் கரிய நிறமும மாலைப பொழுதில் இயைந்த தோற்றம் விளங்கியது (அகம. 360:6-9). பல்வேறு உருவினைக் கொணட சில சோற்றையுடைய பலியோடு சிறு மறியைக் கொன்று வேலன வெறியாட்டெடுத்தனன் (குறு. 362 3-5). பகலமதி போனற உருவினை உடையது வெள்ளிய தழையுடைய பகனறை மலர் (ஐங். 456:1,2). நீலமணி நிறததைப் போன்ற உருவு கொண்டது மயில் (ஐங். 431:3). உருவை (நிறததை) ஒழியாமல் தன நடுவே தோற்றுவிககும் உடுத்துதல் கழனற அழகிய துகில், கிணகிணி ஆர்க்கும் குழநதையின் அடியைத் தடுத்தது (கலி. 81:5,6). காயாம்

பூக்கள் நீலமணி ஒக்கும் உருவின (கலி. 101:5). முரணமிகு குரால் ஏறு முக்கண்ணான் உருவு போன்ற நிறமுடையது (கலி. 104:12). 'விழுப் பொருட்கு அகனறவர் அழகினையுடைய நின் உருவு பசந்து நீ இத்தன்மையையாக நின்னைக் கைவிடுவாரோ' எனறு கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (கலி. 150:12-14). திருமால் தன் மலை போன்ற மார்பில அருவி உருவின் முத்து மாலை யணிந்துள்ளார் (பரி. 13:11,12). கடலும் கானலும் போல வேறு வேறாகிய உருவினையும் பிரிவிலலாத சொல்லும் பொருளும் போல வேறு படாத தொழிலினையு முடைய இருவரை (மாயோனையும பலதேவனையும்) உடையது இருங்குன்றம் (பரி. 15:11-14). உருவம்-2 காணக.

3. அழகு. நள்ளென் யாமத்து உருவு- அழகு - மிகுந்த ஏர் வினைப் பொலிந்த பாவை நடந்து வந்தது போலத் தலைவி நடந்து வந்தாள் (அகம். 142:20-22). உருவம்-3 காண்க.

4. உவமை யுருபு. அளவிறந்தமையால் நின் கைகள் நின் புகழை உருவின - ஒத்தன - எனத் திருமாலைக் கடுவனிள வெயினனார் புகழ்வர் (பரி. 3:32).

**உருள்** - 1. சக்கரம். கடம்பு உருள் - சக்கரம் - போல் பூக்கும் பூவினை யுடையது (பதி.ப. 4:7). முருகன் செங்கடம்பினது தேருருள் போலும் பூவாற செய்த மாலையசையும் மார்பினன் (முரு. 10,11). மழவரின் உருள் (தேர்ச்சக்கரம்) கிழித்துப் போட்ட வழிப் போக்கரின் சோறு பொதி வெண்குடையைச் சூறா வளி எடுத்தலான் எழும ஒலியைத் தன துணையின் ஒலியெனக் கருதிக் கரிய முகததையுடைய ஆண் குரங்கு அதனை யழைக்கும் (அகம். 121:11-15). முருகன் உருள போன்ற கடப்பம் பூவாலாகிய மாலை யுடையவன் (பரி. 5:81; 21:50). முருகன் அணிந்து கொண்டது வள்ளிப்பூவை இடையிட்டுத் தொடுத்ததும் உருள் போன்ற பூக்களை உடையது மாகிய கடப்பமாலை (பரி. 21:10,11). உருளி, உருளை காண்க.

2. உருண்டை. உருள் - உருண்டை - வடிவான துடிவகையைச் சார்ந்த மகுளி (இழுகு பறையின்) ஒலி கருங்குரலை யுடைய பேராந்தையின் ஒலிக்கு உவமை (அகம். 19:4,5). தலைவி தன்மகனுக்குப் பொன்னினாற் செய்த பிறையுட் சேர்த்த முத்து வடததோடே நெற்றியிடத்துத் தொங்கிய உருள்கலன் (உருண்டையான அணிகலனான சுட்டியை) அணிவித்தாள் (கலி. 81:3,4). கடலின் முத்தும் அத னுடனே பல மணிகளும் பிறவும் கோத்த உருளமை (உருண்டையாக அமைந்த) மூன்று வடத்தைத் தன் மகனுக்குத் தாய் சூட்டினாள் (கலி. 85:12,13).

**உருளி** - உருளை (சக்கரம்). ஆரைகள தைக்கப்பெற்ற மத்தளத்தைப் போன்று முழு மரத்தாலே கடையப் பெற்றது உருளி-உருளை (பெரு. 46,47). நெய்தல் மலர்களையும் வரிசையாக உள்ள வண்டுகளையு முடைய வயலில், வல்வாய் உருளி விரைவாகச் சென்றது (பதி. 27:10,11). உருள்-1, உருளை காண்க.

**உருளை** - சக்கரம். குறிய சகடத்திலுள்ள உருளைக ளோடே - சக்கரங்களோடே - கலப்பையினையும் சார்த்திவைத்தமையால் கொட்டிலின் நெடியசுவர் தேய்ந்திருந்தது (பெரு. 188,189). உருள் - 1, உருளி காண்க.

**உரை** - 1. உரைகல். மகளிரின் திதலை பொன்னுரை -உரைகல்- விளங்கினாற் போலத் திகழும் (முரு. 145).

2. பொன்னை உரைத்த உரை. மதுரை அங்காடியில் பொன்னுரையினை - உரைத்த உரையை - அறுதி யிட்டு மதிப்பிடுவோர் பலர் விளங்கினர் (மது. 513). இளவேனிலில் கரிய குயில் பொன்னின் உரை விளங்குகின்ற கட்டளைக் கல்லினைப் போல, மாமரத்தின கிளையில் நறிய தாதினைக் கிளறும் (குறு. 192:3-5). பசலையால் நுகரப்பட்டவளது மேனி யிற் பசலை பரந்த மாமை நிறம், பொன்னுரை மணிபோல விளங்கியது (கலி. 48:16,17).

3. சொல். அரண்மனையிடத்தே தலைவியின் ஆற் றாமை மிகுவதால், செவிலித்தாயர் ஒன்றுகூடிக் குறியவும் நெடியவுமான உரை-சொல்-பலவற்றைப் பலகாற் சொல்லி இன் துணையோர் இப்போதே வருவர் என்றனர் (நெடு. 153-155). சுரத்திடைக் கணவனை இழந்த மனைவி, 'வளையில்லாத என் கையைத் தலையில் மோதிக்கொண்டு, ஊர்க்குச் சென்று, உன் சுற்றத்தார்க்கு இதனைச் சொல் வேனோ, நின் உரை கூறுக' என்று அவனை நோக்கிப் புலம்பிக் கூறினாள் (புறம். 253:5,6). வளையில்லாத கையினைத் தலையில் வைத்துச் சுற்றத்திடம் சென்று இளையன் இவ்வாறாயினன் என்று யான் கூற உன் இறந்துபாடு கூடிய உரை செல்லுமாயின் கேட்குந்தாய் என்னாவளோ என்று சுரத்திடை இறந்த தலைவனின் மனைவி புலம்பி னாள் (புறம். 254:4-6,11). இமையவரம்பன நெடுஞ் சேரலாதனை, கள்ளுண்டமையால் உரை மாறிய மழலை பேசும் நாவையும் மென்சொல்லையும் உடைய பாணர் யாழிசையொடு வாழ்த்துக் கூறி னர் (பதி. 15:25,26). வெண்ணிப் போர்க்களத்தில், கரிகால் வளவனொடு போர் செய்து எய்திய புறப் புண்ணிற்கு நாணிய சேரலாதன, களத்தில் வடக் கிருக்க, அந்த இன்னா இன்னுரை கேட்ட சான் றோரும் உயிர் நீத்தனர் (அகம். 55:10-15). இரவுக்

குறி இடையீடு படுவதற்கான ஏதுக்களில வல்லுரைக் கடுஞ்சொல அன்னை துயிலா திருத்தலும் ஒன்றாகும (அகம. 122 : 4). 'மாடத் திடத்தே இரவில வாடை வீசுதலினால், இழைநெகிழந்து அழகு கெடத் தோள்வளை நெகிழ்நது விழும்' என்னும் உரை கொண்டு சென்று கூறும் அன்புடையாரைப் பெற்றால், தலைவர் விரைந்து வருவர் என்று தலைவி கூறினாள் (அகம். 255:15-19). 'நெஞ்சே, நல்லுரையின நீங்கி, புல்லுரைகள் பரவப் பெற்று, மழைநீரை ஏற்ற பசுமட் கலத்தைப் போலத் தாங்கமுடியாத வெள்ளத்தில நீந்தி அவா உற்றாய்' என்று தலைவன் தன் நெஞ்சினை நோக்கிக் கூறினான் (குறு. 29:1-4). மாலைப் பொழுதாயின் விருந்து நுகரும் பொருட்டுத தலைவனுடைய தேர்வரும் என்னும உரை வந்திலது என்று பருவம் வந்தமை அறிநத தலைவி வருந்திக் கூறினாள் (குறு. 155:3, 6, 7). 'தலைவர் குறி பிழைத்தமையால் சூடாது கிடந்த மாலைபோலத் தலைவி மெய்வாடி, அயலில எழும உரை (அலர் மொழி) கருதி, அவர் இனி வாரார் எனறு மனதநுட கொளளாதிருப்பாளாக' எனத் தோழி தலைமகட்குத தலைவன சிறைப் புறத்தானாகக் கூறினாள் (நற். 11:1-5). 'தலைவன கூறிய சொலலைத் தெளிநது யாம் எம் நலனிழநதோம்; அதனால் இரவில துயில ஒழிந்தோம்; அலர் வாயப் பெண்டிரின அம்பலொடு சேர ஒலிமிக்க இவ்வூர் புரையில்லாத தீய சொறகளைச் சொல்ல வேணடிய உரைகளை ஏறட்டுக் கொணடு பழி மொழியை உடையதாவதற்கு எதனை இழந்தது; இரவிலும் துயிலா துள்ளதே' எனறு சிறைப்புறமாகத தோழி கூறினாள் (நற். 36:4-9). அம்பல் மிக்க மூதூரில் அலர் தூற்றும் பெணகள் கூறும் இன்னாஇனனுரை கேட்ட சிலநாள் அளவும், ஒன்றும் அறியாதவளைப் போலப் பெருமூச்சு விடாதுமிருந்தேன என்று தலைவி உடனபோயின பின்னர் மனை மருணட தாய கூறினாள் (நற். 143:7-9). பொய்வலல பொதுவன் உரைத்த உரையெல்லாம் உணமையாயின் அவனிடத்து மனைவாழககையில் ஈடுபட்டேம் ஆகின்றேம் எனறு வினைவல பாங்கின் தலைவி கூறினாள (கலி. 112:21, 22). தலைவன் இவ்விடத்திலுளளான் என்னும் உரைகேட்கு மிட மெல்லாம் சென்று தேடுவேன என்று தலைவி கூறினாள (கலி. 146:29, 30). திருமால் கேழலாக (ஆதி வராகமாக) வெள்ளத்தில மூழகி எடுத்த நில மகளைக் கொம்பிடைக் கொணடு தழுவுவதால, புள்ளி அளவும அநநிலம வெளளத்தால வருநதவிலலை என்று உரைப்போர் உரையொடு அத்திரு மார்பு விளங்குகின்றது (பரி. 2:31-35). கேளவியுள (வேதததுள்) சொலலப்பட்ட (வேளவி) ஆசான் உரை திருமாலின வடிவம் (பரி. 2:61, 65). வையையின திரை கரையை உடைக்க, அதனை அடைக்க ஆள் வருமபொருட்டுப பறையறைக என்னும் கரை காவலர் உரை பறையொலியொடு எழுநதது (பரி. 6.22-24). வையையில தலைவர் மகளிரொடு இன்புறறு இரவில் கூடுகின்றார் என்னும் உரையை மதுரையில உளளாரக்குச சொல்வது போலத தமிழ வையைப் புனல் பரநது சென்றது (பரி. 6.54-56, 60). தலைவன் மெயசூள உரைக்கத தலைவி அதனைப் பொயச் சூளெனறு கருதி ஒலலுவ சொலலாது உரை வழுவச் சொனனாய எனக் கூறினாள (பரி. 12:64, 65). மைநதரும் மகளிரும் புனலாடிய உரை மூதூரில மலிந்தது; அவர்களுடைய அழகு அவ்வுரையிலும் மிக்கு விளங்கியது (பரி. 12:94,95). மலாகளையும குழைகளையும் பூந்துகில்களையும மணியினையும் வேலினையும் சுமநது வந்து முருகக் கடவுளின் கடம்பமரத்தைப் பரவின உரையொடு பலர் மாலை தோறும் திருபபரங் குன்றத்தே உறைகினறனர் (பரி. 17:1-5).

**4. சொல்லுதல்.** பாண்டியன் இலவநதிகைப் பள்ளித் துஞ்சிய நனமாறன் **வளவோனைப் போனற உரை** சால – சொல்லுதற்குரிய – **சிறப்பின்** புகழ் அமைந்தவனாவான் (புறம. 57:2,3). பிறர்க்கு ஈதல இன்றித் தம் வயிறருததி, உரைசால் ஓங்கு புகழினை நீங்கிய முரசம் பொருநதிய அரசர்தம் அரணமனைகள ஆயமன்னனின் அரண்மனையினை ஒவ்வா (புறம. 127:6-10). அறிவு பற்றுககோடாக இரவலர் செனறால, உரைசால் வணபுகழ்ப் பாரி களிறும் கலனும் நல்குவான் (அகம். 303:8–10). ஊர்மக்கள் மறைந்தாவது கூறாமல் நேராகவந்து அலர் தூறறும் பழிச்சொலலை உரையவற்கு (உரைததறகுரிய தலைவனுக்கு) நாணமிகுதியால் தோழி சொல்லா திருத்தல் (நற். 263:3,4). அந்தணர் உரித்தாழநத கமண்டலமும, உரைசான்ற முக்கோலும கொணடிருந்தனர் (கலி. 9:1,2). 'செல்வம் கழிநதமையால வறுமையுற்றுத் துயரை நீககததக்க உறவினரிடத்தே சென்று தம் குறையை வாய்விட்டுச் சொலலத் தொடங்கி உரைக்கல்லாதவரைப் போலத் தலைவன் தான் கூற நினைத்ததைக் கைவிட்டு எனனைப பார்பபான், நான் அவனைப் பார்த்ததும் தலை இறைஞ்சி நிற்பான்' என்று தோழி தமமிடம் வருகின்ற தலைவனைப் பறறித் தலைவியிடம் கூறினாள் (கலி. 61:2-6). திருப்பரங்குன்றத்தில முருகனை வழிபடுவதற்காக வநது கூடியவர்களில மருந்துரை இருவரும் அடங்குவர் (பரி. 8:5). 'நீ உரை செய் சூள் நீர்மையிலலாத கடுஞ்சூள்' எனகினறாய எனறு தலைவன தலைவியிடம் கூறினான் (பரி. 8:73).

**5. புகழ்.** தகடூரெறிந்த பெருஞ்சேர லிரும்பொறை தன்னொடு மாறுபட்ட அதிகமானோடு சோழ பாண்டிய வேந்தர் இருவரையும் ஒருங்கே வென்று அவர்தம் முரசு, குடை, கலன் (முடி) ஆகியவற்றைக் கைக்கொண்டு உரை - புகழ் - சான்ற சிறப்பினை யுடைய அடுகளத்தில் வேள்வி செய்தான்(பதி. ப. 8: 4-10). உரை எங்கும் பரவ மலர்தலை உலகத்தை ஆண்டு மறைந்தவர், கடற் கரையில் திரை குவித்த மணலினும் பலரேயாவர் (மது. 235,236). நன்னனு டைய பழமையான ஊர் உரை எங்கும் பரவுமாறு செறியும் இயல்புடையது (மலை. 93). உரை பரக்கும் படி செறிந்த நன்னனுடைய நீங்காத படைத்தலை வரொடு மேகம் போன்ற யானைத் திரள்களையும் உடையன அவனுடைய அரண்கள் (மலை. 376-378). பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வேந்தர் அழியப் போர்புரிந்து, உரை பரக்குமாறு அவர்தம் முரசங்களைக் கைக் கொண்டான் (புறம். 26:6,7). சேற்றில் வளர்ந்த நூற் றிதழ்த் தாமரையின் நிரையினைக் கண்டதுபோல், வேற்றுமையில்லாத சிறந்த குடியிற் பிறந்த அர சரை எண்ணுங்கால் அவருள் உரையும் பாட் டும் உடையவர் சிலரேயாவர் (புறம். 27:1-5). சேர மான் குடக்கோ நெடுஞ்சேரலாதனும், சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளியும் போர்க் களத்தே பொருது வீழ்ந்தபோது உரைசால் சிறப் பின் முரசங்கள் முழக்கொழிந்தன (புறம். 62:9). ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் நண்பருள் உரைசால் அந்துவஞ்சாத்தன் ஒருவனாவன் (புறம். 71:12,13). சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் இருபத்தொரு வேள் வித் துறையையும் குறைவின்றிச் செய்து முடித்த உரைசால் சிறப்பின் உரவோன் மருகனாவான் (புறம். 186:8,9). சேரமான் குடக்கோச் சேரலிரும் பொறை, மலை பிறழுமாறு இடிக்கும் ஓசைபோல முழங்கும் சேனையொடு சென்று அரசர்பட எதிர் நின்று கொன்று வெல்லும் உரைசால் தோன்றலா வான் (புறம். 211:4-6). உரைசால் சிறப்பின் வேந்தர் (புறம். 303:6). வேந்தர் தந்த செல்வத்தைப் பரி சிலர்க்கு அருகாது ஈயும் கொடையும் உரைசால் நெடுந்தகைமையும் தலைவன் கொண்டிருந்தான் (புறம். 320:16-18). தலைவன் புரவலர் புன்கண் நோக்காது, இரவலர்க்கு அருகாது கொடுக்கும் வண்மையும் உரைசால் தகைமையும் உடையவன் (புறம். 329:7-9). உரைசால் நல்ல கலன்களுக்கு மாவண் தித்தனுடைய உறந்தை உவமை (புறம். 352:9,10). உரைசால் பாசறையின்கண் இரை முர சார்க்கும் (புறம். 371:12). 'நாடோறும் யாமும் பிறரும் வாழ்த்திப் பாராட்டக் களிற்று நிரையொடு கூடிய நன்கலன்களைக் கொடுத்து உரை மேம்படு மாறு செல்வம் சிறப்பதாக' என்று வாட்டாற்று எழினி யாதனை மாங்குடி கிழார் வாழ்த்தினார் (புறம். 396:29-31). சேரமான் வஞ்சன் தன்பால்வந்த பொருநனுக்குத் தான் அணிந்திருந்த மணிபதித்த அரிய ஆரத்தையும் பூந்துகிற் கலிங்கத்தையும் உரை எங்கும் பரவுமாறு அளித்தான் (புறம். 398:27-29). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் பெருமை மிக்க வெற்றிகள் உரைசான்றன (பதி. 35:2). நன்னு தல் விறலியர் ஆடும் பழைய நகரங்களின் எல்லை யில், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின் உரை அமையாமல் விளங்கும் (பதி. 47:7,8). இரவலரின் துன்பம் நீங்குமாறு நாள்தோறும் உரைசால் நன் கலம் வரையாது வழங்கி நீண்டகாலம் வாழ்வா யாக என்று ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் வாழ்த்தி னார் (பதி. 54:7-9,11). உரைசால் வேள்வி முடித்த அந்தணர் அருங்கலம் ஏற்குமாறு நீர் வார்த்துக் கொடுத்தல் (பதி. 64:4,5). பெருஞ்சேரலிரும்பொறை பகைவர் தம் முரசு, குடை, கலன் ஆகியவற்றைக் கைக்கொண்டு உரைசால் சிறப்பின் அடுகளம் வேட் டனன் (பதி. ப. 8:7). பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானம் என்னுமிடத்தில் தன்னை எதிர்த்த எழுவருடன் போர் செய்து ஒரு பகலில் முரசங்களோடு அவரை அகப்படுத்தித் தன் உரை எங்கும் பரவ அவரைக் கொன்று களவேள்வி செய்தான் (அகம். 36:13-23). அஞ்சி யின் புகழை நிலைபெறச் செய்த உரைசால் பாணமகன், இசைகளை வரையறை செய்த இனிய நூலில் எண்ணுமுறை நிறுத்த பண்ணினைக் காட் டிலும் புதுவதாகச் செய்யப்பெற்ற திறத்தைக் காட்டிலும் வதுவை அயர்ந்த நாளைக் காட்டி லும் தலைவன் இனியன் என்று தலைவி கூறினாள் (அகம். 352:12-17). பொறையனது உயர்ந்த கொல்லி மலை உரைசான்றது (நற். 185:6,7). தலைவனின் உள்ளம் உரைசால் சிறப்பினது (கலி. 98:27). பொது வனுடைய தோளையும் முறுவலை யுடையாளின் மென்தோளையும் பாராட்டிச் சிறிய மன்றத்தில் உரைபரந்தது (கலி. 102:37-39). கொடுங்கோல் அரசன் தன் உரைபரவி உயர்ந்து விளங்குமாறு செய்த அமைச்சரை முன்னர் நடுங்கும் மொழி கூறிப் பின்னர் எல்லை யில்லாத் துன்பங்களைச் செய்வித்துக் கொல்லுதலை இயல்பாக உடைய வன் (கலி. 146:1-3).

**6. புனைந்துரை.** மதுரைச் சேரியில் உரையும் - புனைந்துரையும் - பாட்டும் பல்வகை ஆட்டும் கலந்திருந்தமையால் வேறுவேறு ஆரவாரம் மிக் கது (மது. 616-619).

7. முழக்கம். திருப்பரங் குன்றத்தின் குமுறிய உரை – முழக்கம் - கூடலின் மன்றல் முரசு அதிர அதிர அதற்கு மாறு மாறாக அதிரும் (பரி. 8:34,35).

**உரைகட்டளை** - பொன்னுரை மாற்று அறியப்படும் கட்டளைக்கல். கூதாளத்தின் கொத்திலுள்ள மலரின் பூம் பொடிகள் உதிரப் பெற்ற தினைக்கதிரை மேய்ந்துறங்கும் பன்றிக்குப் பொன்னுரை கட்டளை - கட்டளைக்கல் - உவமை (அகம். 178:2, 9-13). உரை - 1, உரைகல் காண்க.

**உரைகல்** - பொனனை உரைக்கும் கட்டளைக்கல். பிடவம் பூவின தாதினை ஆடிய துமபி பசிய நிற முடைய பொன உரைகல் - பொன்னை உரைக்கும் கட்டளைக்கல் - நிறம் போன்றிருந்தது [பிடவம் எனபதற்த நறவு எனறும் பாடம.] (நற். 25:2-4). உரை - 1, உரை கட்டளை காண்க.

**உரோகிணி** - உரோகிணி எனப் பெயரிய நாண்மீன். அரணமனையின்கணணே கட்டிலின மேலிருந்து, அரசி, பிரிந்து சென்றுள்ள தன் கணவனை நினைந்து 'ஞாயிற்றோடு மாறுபாடு மிகும தலைமையினை யுடைய திங்களொடு உரோகிணியைப் போல யாமும் பிரிவின்றி இருக்கப் பெறவில்லையே' என்று நெட்டுயிர்த்தாள (நெடு. 161-163).

**உரோடோகத்துக் கந்தரத்தனார் – புலவர்.** கந்தரத்தனார் என்பது இவரது இயற்பெயராகும். கநதரத்தன என்றும் குறிப்பிடப்படும். உரோடோகம் என்பது இவரது ஊராகும். இவ்வூர் ஒரோடோகம் எனவும் ஒரோடகம் எனவும் உரோடகம் எனவும் சுவடிகளிற் பலவாறாகத திரிந்து காணப் படுகின்றது. காஞ்சிபுரம வட்டத்திலுள்ள இவ்வூர் இக்காலத்தில் ஓடகடம் எனத் திரிந்து வழஙகுவ தாகத் தெரிகின்றது. இவருடைய பாடல்கள நற்றிணையில் ஒனறும் (306) குறுந்தொகையில் ஒன்றும் (155) அகநானூற்றில் மூனறும (23,95,191) ஆக ஐந்து பாடல்கள் சங்கத் தொகை நூல்களில் இடம் பெற்றுளளன. உரோடோகத்துக் கந்தரத்தனாரையும் கந்தரத்தனாரையும் ஒரே புலவராகக் கருதி வையாபுரிப் பிள்ளையவர்கள் தம் சங்க இலக்கியப் பதிப்பில் இவருடைய பாடலகள் எட்டு (அகம். 23, 95, 191; குறு. 155; நற். 116, 146, 238, 306) எனப் பதிப்பித்துள்ளார். ஓலைக் கூடைகளில் விதைப்பதற்கு விதையினை எடுத்துச் சென்ற உழவர் மாலையில் அக் கூடைகளில் மலர்ந்த மலர்களை நிரப்பிக் கொணர்வதனை அழகுறக் காட்டிய இப்புலவர், (குறு. 155) பாதிரிப பூவையும் அலரிப் பூவையும் இடைவிராய்த் தாழை மடலில் வைத்துக் கட்டிய கண்ணி சூடி, ஒலிக்கும் தொடுதோலைக் காலில் அணிந்து, கையிற் கோலுடன் செல்லும் உமணர் தோற்றத்தினை அழகுறப் புனைந்துள்ளார் (அகம். 191). கநதரத்தனார், ஒரோடோகததுக் கந்தரத்தனார் காணக.

**உல்கு** - சுங்கம். கழுதையின்மேல் மிளகுப் பொதியினைக் கொண்டு செல்லும் திரளோடு, வம்பலர் செலவுதற்கிடனானதும உல்கு - சுஙகம் - கொள்வோரை உடையதுமான பெரிய வழியிலுள்ள ஊர்களில் விற்படை அமைந்திருககும (பெரு. 80-82). பகலவன் தேர்பூணட குதிரைகளைப போலப் புகார்த் துறைமுகத்தில உலகு கொளவோர் நாடோறும் மடிநதிராது செயலபட்டனர் (பட். 122-125).

**உலக்கை** - பொருள்களை உரலில் இட்டு இடிப்பதற்குரிய கருவி. குற்றி அமையாத உலக்கை ஒலி எழும் ஆரவார மிக்க அகன்ற இடததே, துமபையொடு பனநதோட்டைச செருகிய சினமிகக வீரர் வெறியாடும் குரவைக் கூததொலி கடலொலி போலக் கிளர்நதது (புறம. 22:18-23). வெண்ணெல் லைத தொடிமாண் உலக்கையாற் குறறி எடுத்த அரிசியைக கொணடு சோறமைக்கப்பட்டது (புறம. 399:1, 3). நெலலைக குற்றுவதால் உலககைகளின் பூண்கள மழுங்கின (பதி. 24.19). அவல இடிதத உலககையை வாழை மரததில சார்ததிவிட்டு, வளையினைக் கையிலணிந்த மகளிர் வளளைக் கொடியினைப பறிப்பர் (பதி. 29'1, 2). பகைவர் தம் கருநதலைகள், மிளகினை யிடிக்கும் உலக்கையால இடித்த மிளகுபோல இடிககப்பெறறன (பதி. 41:20, 21). குறிஞ்சி நிலத்தே செலவோர்க்கு அநநிலமகளிர், கரிய வயிரமுடைய உலக்கையிலமைநத பூணின் இருப்பு முகம் தேயுமாறு குறறுதல் மாட்சிமைபபட்ட அரிசிச சோற்றினைக கலவையுடன் வழங்கினர் (சிறு. 193-195). பார்வை மான கட்டின தேய்நத அடியுடைய விளாமரத்தின் முற்றததில் தோணடிய நிலவுரலில எறும்பு ஈட்டிய நெல்லினை இட்டு, குறிய வயிரம் பாய்ந்த உலககையால் குற்றி உலையிலிட்டுச் சமைத்தனர் (பெரு. 95-97,100). வரப்பிடத்துப புதிய வைககோல வேய்ந்த கவிந்த குடிலுடைய முற்றத்தில அவலிடிக்கும் உலக்கையின் ஓசையினை, அருகிடத்தி லுள்ள கிளிகள் தமது பகையாக எண்ணி அஞ்சும் (பெரு. 225-227). சுரத்திற் பொருந்திய சிற்றூரில் பெணடிர் குற்றும் தொடிமாண உலக்கையால் எழுப்பப் படும் ஒலி நெடிய பக்கமலையிலுள்ள ஆநதை ஒலியொடு மாறிமாறி ஒலிக்கும் (அகம. 9'10-13). குறுநதொடி மகளிர், வயலில் விளைந்த நெற்கதிர்களைக் கொய்து அவலாகக் குற்றும் பெரிய

உலக்கையின் இடிக்கு அஞ்சிய சூல் முதிர்ந்த வெணகுருகு வாழை மடலில இராமல் மாமரத் திற்குப் பறந்து செல்லும் (அகம். 141:16-21). வெள்ளியினாலாகிய பூணுடைய மென்கருமபாகிய உலக்கையால கொடிபோலும் இடை அசைய, மீன்சினை போலும் மணலைக் குவித்துக் காஞ்சி மர நிழலில், மருத நிலத்தூர்களிலுள்ள சிறு பெணகள் தம் குடியினர் பெருமை பாடிக் குற்றுவர் (அகம். 286:1-5). தாயர் பண்ணை வெண்பழ அரிசியைப் போலத் திரிமரம் தேய்த்த, சுளகினால் கொழித்த வரகரிசியை உலக்கையால் தீட்டினர் (அகம். 393:8-11). ஒணடொடிமகளிர், பசிய ஆவலை இடித்த கருங் கால் உலகையை நெற்பயிர் கொண்ட வயல் வரப்பாகிய அணையில் கிடத்தி விளையாடுவர் (குறு. 238:1-3). மகளிர் முற்றித் தாழ்ந்த தினைக் கதிரை உருவிச் சந்தன மர உரலிற் பெயது யானைக் கொம்பால் செய்யப்பட்ட உலக்கையால் குற்றி மருந்தில்லாத நோய் செய்தவனுடைய மலையைப பாடுவோம் என்று கூறித் தலைவி தோழியிடம் பாடுதற்கு உடன்பட்டாள் (கலி. 40:3-7). மூங்கில் நெல்லைப் பாறையாகிய உரலிலிட்டு யானைக் கொம்பாகிய உலக்கையால் குற்றிச் சேம்பின் இலையாகிய சுளகில புடைத்துத் தலைவனின் புகழைப் பாடுவோம் என்று தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 41:1-4). ஐவனமாகிய வெணணெல்லைப் பாறை உரலிலிட்டுப் புலியைக் கொன்ற யானைக் கொமபாலும் சந்தன மரத்தாலும் பண்ணின உலக்கைகளால் குற்றி முருகனைப புகழ்வதுபோல மலை நாடனைப் பாடுவோம் எனறு தலைவி தலைவன் சிறைபபுறமாகக் கூறினாள் (கலி. 43:1-7).

**உலகத்தோர்-உலகமக்கள்.** உலகததோர்-உலகமக்கள் - ஆககததின பொருட்டுச சேரலாதனை, 'நீ வாழியர்' எனறு கூறி யாழிசையொடு பாணர் முதலியோர் வாழ்த்தினர் (பதி 15:23-26). இவ்வுலகததோரின ஆககததின பொருட்டு வாழ்கவென்று களங்காயக் கணணி நார்முடிச சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் வாழ்ததினார் (பதி. 37:13). உலகததோரில் செல்வர் பலர்; அவர் புகழ் தோன்றாமல் மறைந்தது. அவவெல்லாருள்ளும், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின ஈகையால் வந்த புகழ மேம்பட்டு விளங்கியது (பதி. 38:1, 2).

**உலகம் – 1.** ஞாலம். நீர்நிலைககன் ஓங்கிய நிலத்தின் கீழும் மேலதாகிய ஆனிலை உலகத்திடத்தும் - ஞாலத்திடத்தும்-முது குடுமிப பெருவழுதியின் உரு வும் புகழும் நிலைககட்டும் எனக் காரிகிழார் வாழ்த்துவர் (புறம். 6:5-8). செல்லும் உலகத்து (மறுமையுலகத்து) நுகரும் செல்வம் வேண்டின் நீர் நிலை பெருகத் தட்க எனப் பாண்டியன் நெடுஞ் செழியனுக்குக் குடபுலவியனார் அறிவுரை கூறியுள்ளார் (புறம். 18:13, 28). மாந்தரஞ்சேரலிரும்பொறை ஓம்பிய நாடு புத்தேளுலகம் போன்றது எனக் கேட்டு வந்து கண்டின்புற்றதாகக் குறுங்கோழியூர் கிழார் பாடியுள்ளார் (புறம். 22:34-36). மலர்தலையுலகத்துத் தோன்றிப் பழைய புகழ் பரக்க ஒழுகாது நின்று மாயந்தோர் பலர் (புறம். 24: 34-36). திங்கட்புத்தேள் திரிதரும் உலகத்து வறுமையால வருந்தி வந்தோர்க்கு அருளி வழங்குக என நலங்கிள்ளிக்கு உறையூர் முதுகண்ணன சாத்தனார அறங் கூறுவர் (புறம். 27: 14-17). இவ்வுலகததுச சான்றோர் செய்த நல்வினை உணடாயின் மழை பொழிநத நுண்துளியினும் பலகாலம் வாழ்க எனக் கிள்ளிவளவனை ஆலததூர் கிழார் வாழ்த்துவர் (புறம். 34: 19-23). உலகததில வேந்து தலை நடுங்குதற்கேதுவாகிய வலிமையுடையவன் கிள்ளிவளவன் (புறம். 42: 4,5). இவ்வுலகத்தில் இசையுடையோர்க் கலலது அவ்விடத்ததாகிய உயர்நிலை உலகத்து உறைதல் இலலை (புறம். 50: 14, 15). கல்வியால் விளகக முடையோர் பிறந்த இம்மலர் தலையுலகத்து வாழேம் எனறிருத்தலும் கூடாது (புறம். 53: 9, 10). விசும்பில் இருளகற்றும் ஞாயிறு போலவும் மேலைத் திககில தோன்றும் பிறைமதி போலவும் உலகமொடு உடனின்று நிலைபெறுக என இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய பாண்டியன் நன்மாறனை நக்கீரனார் வாழத்துவர் (புறம். 56: 21-25). போரில் பலரும் மாய்ந்ததால் இமையா நாட்டத்தினை யுடைய தேவர் அருமபெறல உலகம் நிறைய விருந்து பெற்றனர் (புறம். 62: 16-19). வெணணிப் பறந்தலையில் உலகத்துப் புகழை மிகப் பொருந்திப் புறப்புண் நாணிச் சேரலாதன் வடக்கிருநதான (புறம். 66: 6-8). தலையாலங்கானத்துச செருவெனற நெடுஞ்செழியன வஞ்சினம் கூறியபோது 'ஓங்கிய சிறப்பினையும் உயர்ந்த கேள்வியினையும உடைய மாங்குடி மருதன் தலைவனாக உலகத்தோடு நிலைபெற்ற பலர்புகழ் சிறப்பினையுடைய புலவர் என நிலவெல்லையைப் பாடாதொழிக' என உரைத்தான் (புறம். 72:13-16). சங்கிலியாற் பிணிக்கப்பட்ட நாய்போற் பிணித்துத் துன்புறுத்திய பகைவர் உதவிய தண்ணீரை மன வலியின்றி வயிற்றுத் தீத் தணிய இரந்து பெற்று வாழ்வாரை இவ்வுலகத்தில் அரசர் பிள்ளைகளாகப் பெறுவாரோ? (மாட்டார்) (புறம். 74: 3-7). ஒருவனை ஒருவன் கொல்லுதலும ஒருவற் கொருவன் தோற்றலும் புதுவதன்று; இவ்வுலகத்து இயறகையாகும் (புறம். 76: 1, 2). நிலையா உலகத்து நிலைபெறக் கருதினோர் தமது புகழை நிலை

நிறுத்தி இறந்தனர் (புறம். 165: 1, 2). ஈவோர் அரிய இவ்வுலகதது வாழவோர் வாழ அவன் தாள் வாழிய எனப் பிட்டங் கொற்றனைக் காவிரிப்பூம பட்டினத்துக காரிக கண்ணனார் வாழ்த்துவர் (புறம். 171: 14, 15). மலையமான் சோழிய ஏனாதி திருககணணனின் தந்தை ஈணடுச் செய்த நல வினையின் பயனை ஆணடுச் சென்று துயப்பதற் காக உயர்ந்தோருலகம பெயர்ந்தனன் (புறம. 174: 18-30). இவ்வுலகம் நற்பண்புகள பல உடைய வரைப் பெற்றிருத்தலாலதான் இயங்குகிறது (புறம். 182). ஒரு விட்டில பிணப்பறை கொட்டப் பிறி தொன்றில் மணப்பறை முழங்கப் புணர்ந்தோர் மகிழப் பிரிநதோா வருந்த உலகத்தைப் படைத தவன் பணபிலாளன. ஆதலால் இலவுலகம இன்னாதது; இதனியலபுணர்நது இனிய காணக எனப் பக்குடுககை நன்கணியார் அறிவுரை கூறு வர் (புறம். 194). அறிவும் புகழும் உடையோர் மாய்ந்தாராக உலகம் வறுமைப்பட்டு விடவில்லை; மூட்டை முடிச்சுகளை எடுத்துக் கொண்டு புறப்படு கிறேன்; எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே என்று பரிசில நீட்டித்த அதியமானிடம் ஔவை யார் கூறினார் (புறம். 206:8-13). மன்மலர்ச்சியின்றி முகமாறித் தரும் பரிசிலை முயற்சி யில்லாதோரே விருமபுவர்; உலகம் பெரிது; பேணுநர் பலர் என்று சிறிது பரிசு கொடுத்த இளவெளிமானிடம் பெருஞ் சித்திரனார் கூறினார் (புறம். 207:4-7). கடல் சூழநத இம்மலர்தலை யுலகத்தில உனனோடு பொர வநத இருவரை நினைப்பின அவர் பகைவரு மல லா; பரநதுபடு நலலிசை எய்தி உயர்ந்தோர் உல கம் எய்தின் நீ விட்டுச் சென்ற அரசுரிமை அம் மக்கட்கே உரியது; போர் செய்தால பழி வரும்; அதனால் மறம ஒழித்து வானோர் அருமபெறல் உலகத்து ஆன்றோர் விருந்தாக ஏற்றுக்கொள்ள நலவினை செய்க என்று மக்களிடம் பொர நின்ற கோப்பெருஞ் சோழனிடம் புல்லாற்றூர் எயிற்றிய னார் கூறினார் (புறம். 213:3-24). பிசிராநதை யாரின் நெஞ்சுறப் பெற்ற தொன்றிசை கொண்ட கோப்பெருஞ சோழனை யிழந்த இவ்வுலகம அளி யது; அஃது என்ன துன்புறுமோ எனப் பொத்தி யார் இரங்கிக் கூறினார் (புறம். 217:11-13). பலர்க் கும் அருளுடைமையான் நிழலை யொதது உலகத் தார் பாராட்ட உலகாணட கோப்பெருஞ்சோழன மறுமை நினைவால் அரசு துறந்தான் (புறம். 223: 1-3). வேத வேள்வித் தொழில் எல்லாம் அறிந்த கரிகாற் பெருவளத்தான் இறந்தான; அதனால் இவ்வுலகம் இரங்கத் தக்கது (புறம். 224:9-11). கிள்ளிவளவன் தேவருலகம் எய்தினன் ஆதலின அவனைக் கவிக்கும் மிகப் பெரிய தாழியைச் செய்ய விரும்பினால் பெரிய நிலவட்டம் திகிரியாக, பெரு மலை மண்ணாக வனைய இயலுமோ எனக் கலஞ் செய கோவை ஐயூர் முடவனார் வினவுவர் (புறம். 228:1, 10-15). யானைக்கட் சேஎய் மாந்தரஞ்சேர விரும்பொறை யானை கைவைத் துறங்கவும் முரசம் கண கிழிநதுருளவும் வெணகுடை கால் பரிந்து உல றவும் குதிரை கதியின்றி வைகவும மேலோருலகம் எய்தினன ஆகலின் ஒணடொடி மகளிர்ககு உறு துணையாகித தன துணை ஆயம் மறநதனனோ எனக கருதுகிறார் கூடலூர் கிழாா (புறம். 229:18-24). பாடுநர்ககுக குறைவறக் கொடுதத ஆஅயண டிரன் மகளிரொடு காலன எனனும கணணிலி உய்பப மேலோருலகம் எயதினன, அதனால புல வர் மிகக் கலங்கி வாடிய பசியொடு புரவலரைக் காணாது சுற்றத்துடன பிறாநாடு சென்றனர் (புறம். 240:3-6, 11-14). பலருககு விருநது படைத்த அகல நாட்டண்ணல உயா நிலை யுலகம புக அவன மனைவி சுளகின் அளவாகிய சிறிய இடததைத துடைத்து அழுத கணணீரால சாணாகம் கொண்டு மெழுகுகிறாள எனறு நிலையாமை சுட்டபபெறும (புறம். 249:7-14). போர் செயது மடியும் மறவர் உயர் நிலையுலகத்து மாசில மகளிரை மணநது இனபுறுவர் (புறம். 287:10-12). மகட்கொடை வேண் டிய குருசில நாளை மணமனை புகுதல அலலது ஆர மர் உழககி வேறபுணணோடு வாரா உலகம புகு தல எனற உறுதியுடன் படைகையேநதினன (புறம். 341:10-16). முதுகாடு எலலாரையும் புறஙகணடு உலகத்து மனபதைக் கெலலாம் தனி முடிவிடமா யிருந்து தன்னைப் புறங் கணடாரைக கணட தில்லை (புறம். 356:4-9). மணணுலகில பொது வெனக் கருதப்பட்ட மூவருலகமும (மூவேநதாதம் முந்நாடுகளையும்) பொதுவெனப பொறாது நமக்கே உரியவாக்கி ஆண்ட வேந்தரும வாழநாள் கழிந்து மாயநதனர் (புறம். 357.1-4). தலைவன் பொற்கலத்தில தேறல ஏந்தி மகளிர் தர உண்டு மகிழ்பவனாயினும நிலலா உலகதது நிலையாமை இயலபை மறபபதிலன (புறம். 361:16-20). நினனை யினறி வறிதாகக காணபபடும இவ்வுலகத்துப் புலவர் இலராகுக என ஆய அணடிரனை வாழத் துமபோது முடமோசியாா குறிப்பிட்டுள்ளார் (புறம். 375:16-18). நாவலந்தீவு முழுவதையும் ஆண்ட நின் குலத்து முதலவர் போல நீ நலலிசையை நிலை பெறச் செய்து இவ்வுலகததோடு பொருநதிக் கெடாமல் இருப்பாயாக என இமைய வரம்பன் நெடுஞ் சேரலாதனைக் குமட்டூர்க கண்ணனார் வாழத்துவர் (பதி. 14:19-22). இவ்வுலகத்து அறந் தெரி திகிரிக்குச் சினம், காமம், கழிகண்ணோட்டம், அச்சம, பொய்சசொல், அன்பு மிக உடைமை,

தெறல் கடுமை முதலியன தடையாகும் (பதி. 22.1-4). கடல் சூழ்ந்த இல்வுலகத்து வண்புகழ் நிறுத்த வகைசால் செல்வத்து வணடன் போன்ற வன களங்காய்க் கணணி நார்முடிச் சேரல் (பதி.31: 21-23). வானதோய நலலிசை உலகம் உள்ளளவும் நிறப வறுமை முதலியவற்றால் நடுக்கமுற்ற தன்குடி களை மேம்படுததிய வலமபடு வென்றியுடையவன் களங்காயக கணணி நார்முடிச சேரல் (பதி. 37:6,7). தோலவி யடையாமைக்குக் காரணமான தும்பை பகைவரிடத்தே விளஙகும்படி உயர்நிலை உலகம் எயதுமாறு ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் அவ ரைப் பொருதழித்தான (பதி. 52·7-10). இரவலர் தம் துனபந்தீர நனகலம மிகுதியாக அளிததலால் உயர் நிலையுலகததுச் செல்லாது இவ்விருநில மருஙகின் நெடிது வாழக என ஆடுகோட் பாட்டுச் சேரலா தனைக் காககை பாடினியாா நச்செள்ளையார் வாழ்ததுவர் (பதி. 54:7-11). இரவன் மாக்கள சிறு குடி பெருக உலகந் தாங்கிய மேம்பட்ட கலவினை யுடைய விற்படையோரது கவசம் போனறவன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன (பதி. 59:7-9). வேதததை ஓதினமையால உயர் உலகதது முனி வரைச் செலவக கடுங்கோ வாழியாதன இன்புறச் செய்தான (பதி 70.19). மாடோர் (கற்பகம முதலிய செலவததையுடைய தேவா) உறையும் உலகமும் கேட்பப் பறைகுரல் போனற ஒலியுடைய அருவி கோடு தோறும இழிதரும் அயிரை நெடுவரை போல நீ வாழும நாள அழிவில்லாததாகுக எனக் கபிலர் செல் வக்கடுஙகோ வாழியாதனை வாழத்துவா (பதி.70:23-27).கடலாற சூழப பெறற மலாதலை யுலகத்துத் தம்பெயர் பரவப் பகைவரைத தேயததான இளஞ் சேரல இரும்பொறை (பதி. 88·3,4). நினகோலினது செமமையின நாளதோறும் நாடு தொழுதேதத உயாநிலை யுலகதது உயாநதோர் பரவ அரசியல் பிழையாது போரில மேமபட்டு நோயிலை யாகியர் என இளஞசேரல் இரும்பொறையைப் பெருங் குனறூர் கிழாா வாழ்ததுவா (பதி. 89:9-13). இருள நிறக கடல்நீர் சூழந்த உலகத்து ஒருவனாகிய முருகனே பிறரால பெறற்கரிய வீடுபேறறினை நலகுவர் (முரு. 293-295). பரிசில் பெற்றுச செல்ல விரும்புபவரைத் திருமாவளவன் நில்லா உலகத்து நிலைமை தூககிச் செல்கென விடுககுவன் அல்லன் (பொரு. 175-177). மலாதலை யுலகதது மனனுயிர் காக்கும முரசு முழங்கு தானை மூவரினும் தொனமைடமான இளநதிரையன சிறந்தவன். (பெரு. 32-37). மலாதலை யுலகத்துள்ளும பலர் தொழ விழவு மேமபட்ட பழவிறல மூதூர்க் கச் சியோன் இளந்திரையன (பெரு. 410, 411,420). நாவலந் தணபொழில் கேடினறி விளங்க நிலலா உலகத்து நிலைமை தூக்கிப் பாணருக்கு ஆடை, உணவு, பொற்றாமரை, தேர், குதிரை முதலிய வற்றை இளந்திரையன் விருபபொடு அளிப்பான் (பெரு. 465-493). நனநதலை யுலகத்தை வளைத்து நேமியொடு வலம்புரி பொறித்த திருமகளை அணைத்த கையுடன மாவலி வார்த்த நீர் கைப் பட்டதும் திருமால விணணிடத்தே ஓங்கி வளர்ந் தார் (முலலை. 1-3). பொயயறியா வாய்மொழியாற் புகழ நிறைந்த நல்லமைச்சரோடு நெடுங்காலம் தம் செஙகோன்மையைப் புகழுமாறு உலகத்தை யாண்ட உயர்ந்தோர் குடியினில தோனறியவன நெடுஞ்செழியன (மது. 19-23). பேருலகத்து மேம் படத் தோன்றிப புகழுடைய விழுமிய சிறப் பினைக கொண்ட விளைந்து முதிர்ந்த முத்தினை யுடையது கொற்கை (மது. 133-138). உயர்நிலை யுலகம் அமிழதொடு பெறினும் பொய கூறாத மெய கூறும் நட்பினையுடையவன நெடுஞ்செழியன (மது. 197,198). புகழ பரவ மலர்தலையுலகம் ஆணடு மாயநதோர் கடலின் அலை கொழிக்கும மண லினும் பலராவர் (மது. 235-237). வேதமோதி அதற்குத் தக ஒழுகி வையததில ஒனறாகிய இறை தாமேயாய் உயர்நிலை யுலகமாய வீட்டினை இவ வுலகிலிருநதே எயதும் அறநெறி பிழையா அன புடை நெஞ்சிற் பெரியோர் உறையும் அநதணர் பளளி மதுரையில் இருநதது (மது. 468-474). வளப் பம பொருநதிய மிகுந்த பணடங்களோடே புத் தேளுலகம போனறு பொலிவெய்திப பிற நாட் டினா காணும்படி புகழ் வாயநதது பெரும் பெயர் மதுரை (மது. 697-699). அறத்தொடு நின்றபின் தலைவர்க்குப் பெற்றோர் மகட்கொடை நேர்நதில ராயினும் இப்புணர்சசி யினபம் ஏனையுலகததும் நமக்கு இயையுமெனக் கருதி மானமர் நோககங் கலஙகிக கையற்றுத தலைவி தேம்புவாள் எனத் தோழி செவிலியிடம் கூறுதல (குறி. 23-26). தொலையா நலலிசை உலகமொடு நிற்பப் பலரைப் புறங்கண்டு பெற்ற அருஙகலத்தை நன்னன புல வர்க்கு வழங்குவான் (மலை. 70-72). இனறையோடு புகழமாயாது உலகமொடு நிற்குமாறு நன்று இது, தீது இது என ஆராய்ந்துணரும் வள்ளல மாயந் தாராக அவர் மேற்கொண்ட கொடைக் கடனை யாறறிய செம்மல் நனனனாவான் (மலை. 541-543). கரிகால் வளவனொடு வெண்ணிப் பறநதலையில் பொருது புண் நாணிய சேரலாதன் வடக்கிருந்து உயிர்துறந்தான் என்னும் இன்னா இன்னுரை கேட்ட சானறோர் அரும்பெறல் உலகத்திற்கு அவ னொடுசெல்லுதற்காகஉயிர் துறந்தனர் (அகம 55:10-15).பகைவரும் விரும்பும்குற்றமற்ற நற்காட்சியினை யுடைய சிறுவரைப் பெற்ற செம்மலோர் இம்மை

யுலகத்து இசையொடும் விளங்கி மறுமையுலகமும மறுவினறி எயதுவர் என்பது பழமொழி (அகம்.66: 1-5). தலைவர் மலைவழியே தலைவியைப் பிரிந்து செல்லின் அவளது அழகு கெட்டதற்கு இரங்குபவ ரலலது மீணடும் அதனைத் தருவார் இவ்வுலகத்து யாருமில்லை என்று பிரிவர் என வேறுபட்ட தலைவியிடம் தலைவன் கூறினான் (அகம. 75:9, 14-16). 'நன்மலை நாடனைப் புணர்ந்த நீயும் நின் தோளழகு கெடாது என்றும் கூடி மறுமையிலும் கேடில்லாத உலகதது உறைவாயாக' எனத தலை வியிடம் தோழி கூறினாள் (அகம். 178:13-16). ஆன றோரின் (தேவரின) அரும்பெறல் உலகத்தை அமிழ் தொடு பெறினும் தலைவியின பணைத்தோள் பெருங்கவின சிதையப பொருள் தேடச சென்ற விடத்தே தலைவர் நீட்டித்திரார் எனத் தோழி தலைவியிடம் கூறினாள (அகம. 213:16-19). நெஞசே நீ இரவிற் சென்றும் தலைவியைப் பெறவிலலை; உலகத் துள்ளாாக் கெல்லாம் பெரும் நகையாகக் காமம் எலலை கடந்து மிகுதலால எனககு நீங் காத துன்பத்தைத் தந்தனை; ஆதலால் நீ பெருங் குன்றதது இருள் அளையில ஒளியினறி மறையும் மணிகள போல மாய்க என அலல குறிப்பட்ட தலைவன தன் நெஞ்சு நோக்கிக் கூறினான (அகம. 258:6-15). நாணும நட்பும இலலோரைத் தேரின இவ்வுலகத்தில என்னையல்லாது வேறு யாருமிலலை எனத் தோழி தலைவியிடம் குறை நயத்தற்காகக் கூறினாள் (அகம். 268:8,9). நும்போனற பெரியோரி டத்தும் இப்படிபபட்ட பொயயொடு கூடிய மொழி தோனறு மாயின இவ்வுலகத்து மெய் எவவி டத்து உளதாகும் எனத தோழி தலைவனை நோக் கிக் கேட்டாள் (அகம. 286.15-17). களவுக் காலத் தில் இரவில் காவலர் உறங்கிய அமையததுக கத வைத் திறநது நம்மைப் புணர்நது 'நம்மிற சிறந தோர் இம்மையுலகதது இலலை' எனப் பன்னாள் கூந்தலை நீவிப் பாராட்டிக் கூறிய தலைவன் பிரிந்து நீட்டித்திரான் எனத் தோழி பழைய நிகழசசி கூறித தலைவியை ஆற்றுவிததாள் (அகம. 311:3-7,13). கடலில் நீரை முகந்து திசைகளிற சென்று கருமை நிறமெயதி மலர்தலை யுலகம் மறைய வல மாகச் சுற்றி எழுநத முகிலகள் இருளைக் கிழிப்பன போல் மின்னி இடியும் முழக்கு மின்றி யாழிசை போன்ற இனிய ஒலியுடன நல்ல மழை பெய்தன (அகம். 374:1-10). இவ்வுலகத்து என் மகளும் அவள் காதலனும் அல்லாத பிறர் அகலிரு விசுமபின மீனி னும் பலராவர் என இடைச் சுரதது மகளைத் தேடிச் சென்ற செவிலிததாய் காணாது கையற்றுக் கூறினாள் (குறு. 44:3,4). கடனறிந்து இருவேமா கிய உலகத்து ஒருவேமாகிய புனமையினின்றும் உய்தற்கு நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப் பிரி வரிதாகிய தண்டாக் காமமொடு பிரிவு நேர்ந்த அபபொழுதே உடன் உயிர் போகுக எனக் காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாய்த் தலைவி கூறினாள் (குறு. 57:2-6). மலைநாடன மணந்து கொள்ள வரும் செய்தியைக் கூறிய செவிலித்தாய் அரும் பெறல் அமிழதத்தை உணவாகப் பெற்றுப் பெரும் புகழு டைய உலகத்தையும் (துறககத்தையும) எயதுவாளாக எனத் தோழி வாழத்தினாள (குறு. 83:1,2,5). தலை வியின் தோள்களைத தழுவு மின்பததிற்குக கட லாற் சூழப்பட்ட உலகமும் அரிதுபெறு சிறப்பிற புத்தேள நாடும் ஆகிய இரணடிடத்தும் பெறும இன்பமும ஒவ்வா எனத் தலைவன கூறினான (குறு. 101). காட்டுவழி அரிய வெனனாது நம்மைத் துறந்து பொருளவயிற பிரிவாராயின இவவுலகத் துப் பொருளே தலைவர்க்கு உறுதிப பொருள போலும்; அருள் தனனை மேற கொளவார் யாரு மிலலாத பயனிலலாப் பொருள் போலும் எனத தலைவி புலநது கூறினாள (குறு. 174 4-7). 'தலைவி யிடம் கொண்ட காதலநோய் அழியும் முறை ஒன றின்றி இன்றைய நிலைபோல மறுமையுலகததும மன் னுதல பெறும; இமமையிற பெறுவது இயையாதாயி னும உறுவ தொனறுணடு; நெஞசே, வாழி' எனத் தலைவன நெஞசை நோககிக கூறினான (குறு. 199). தலைவர் மலையிற் பெய்த மழைநீர் கொணர்நத காநதளின் மெலலிலைகுழைய முயஙகலையும அதன கிழஙகை இல்லத்தில நட்டு வளர்ததலையும தடுக் காத அனனைசெயத உதவிககு உயர்நிலையுலகமும் சிறிதாகும் எனத்தலைவி தோழியிடம மொழிநதாள் (குறு.361). உலகததுக் குளஙகள நீரறற காலை, சூலொடுவாடிய நெற்பயிருககு நடுயாமததது மழை பொழிநதாஙகு, தலைவன வரைநது கொளள வநத னன எனததோழி தலைவிக்கு இயம்பினாள் (நற். 22:7-11). இவ்வுலகதது எய்யும் கணையின நிழல விரைநது அழிவது போல இனபமும் இளமையும நாடோறும் விரைநது கழியும (நற். 46:1,2). 'மதியே, நீ சாலபும் செமமையும் உடையை; நினககு மறைநது உறையும் உலகம் இலலை யாதலால் மறநதுறையும தலைவர் உள்ள இடததை எனக்குக் காட்டுக' எனத தலைவி மதியை வேணடினாள் (நற். 196 3-6). இவ்வுலகத்து மரஞ்சாவ மருநதுங் கொள்ளார்; மாந்தர் தம் வலிமை கெட உயாதவம் செய்யார்; குடிமககள் வளஙகெட மன்னர் வரி கொள்ளார்; ஆதலால் நாம் இறக்குமாறு தலைவர் பொருளீட்டப் பிரியலாகாது எனத் தலைவி தோழி யிடம் உரைத்தாள் (நற். 226:1-4). மணமிக்க தலை வியின கூந்தலில் அருமபெறற் பெரும்பயன் கொள் ளாது பிரிந்து பொருளீட்டி வாழ்வோர் இவ்வுல

கத்தைப் படைத்த கால முதற்கொண்டு அடைந்தாரைக் காக்க வேண்டும் என்னும் அறத்தை மறந்தனரோ எனத் தோழி தலைவனை வினவினள் (நற். 337.1,2,8-10). தலைவியின் மலர் முடித்த ஐம்பால் மெல்லணை ஒழிய வடபுல வாடை வீசும் கூதிர்க் காலத்துப் பிரிவோர் இவ்வுலகத்து மடவோராவார் எனத் தலைவன் பொருள்வயிற் பிரிய வலித்த நெஞ்சிற்குக் கூறினான் (நற.366.5-12). விசும்பின உயர்நிலை யுலகத்து அருந்ததி யனைய கற்பின் புதல்வன் தாய் வேந்தனின் அருநதொழில் முடிவுறின் விருந்து பெறுதலும் உரியள் எனத தலைவன் கூறினான் (ஐங். 442). அரிய மணம் தலைவனை விட்டு நீங்காமல் நடைபெற, யாயக்கு அறத்தொடு நிலை வகையால் கூறின் நிலை நில்லாத உலகத்து நிலை நிற்பதொரு புகழ நமக்குப் பொருந்தும் என்று வேற்று வரைவிற்கு வருந்திய தலைவி தோழியிடம் உரைததாள் (கலி. 54:17-20). ‘கொலைத தொழிலை உடைய கண்ணையும் கூரெயிற்றையும் தளிர் மேனியையும் வருத்தும் வனப்பினையும் உடைய மாயோளே, நின்னினும சிறந்தார் நிலவுலகத்து இல்லாமையை நீயே தெளிக’ எனத் தலைவியிடம் தலைவன் கூறினான் (கலி. 108:52-54). கடலை ஆடையாகக் கொண்ட உலகத்தையே பெறினும் அருநெறி யுடைய ஆயர் மகளிாக்கு இருமணங் கூடுதல குடிப்பிறப்பிற்கு இயல்பனறு (கலி. 114: 19-21). உலகத்திற் கண்டவரில்லை எனக் கருதி அறியாதவர் தாம் செயயுந் தீவினைகளுள் கொடியவற்றை மறைப்பர்; மறைப்பினும் தம நெஞ்சைக் காட்டினும் அணுகிய சானறு வேறிலலை (கலி. 125: 1-4). தவஞு செய்வதற் குரியவன் எனறு கூட்டிக் கொள்ளப்பட்ட அரசன் தவம் நீங்கித் துறக்கத்தின் வழுவ, ஆன்றோர் அவனை அவ்வழுவுதலினின்றும் மீட்டுத் தவஞ் செய்வித்து உயர்நிலை யுலகம் போகவிட்டுத் துயர் தீர்த்தாற் போல என் துயர் தீர்த்தல் நும் கடன்’ எனச் சான்றோரை நோக்கி மடலேறும தலைவன் கூறினான் (கலி. 139:33-37). மன்றப் பனைமேலே தோன்றும் மலையிடத்து மாந்தளிர் போலும் நிறததை யுடைய வெயிலே, எனது மெனதோளை நெகிழ்த்தவன வடிவழகை விரும்பிக் காண்பதன்றி அவன் செய்த நன்று தீதெனறு கூறுகினற பிறவற்றைக் காணேன்; என்னைத் தவிரப் பழைதாக இவ்வுலகத்து மகளிரும் தத்தங் கணவரைக கண்டாற் கூடுதலன்றித் துனி கொண்டிருந்தார் எனக் கேட்டும் நீ அறிவையோ என வெயிலைத் தலைவி வினவினாள் (கலி. 142:47-50). ‘தன்னுயிர் போல உலகத்து மனனுயிரைத் தழுவிக காக்கும் மன்னனும் எனக்கு இனனுயிர் போனறானைக் கொணடு வந்து காட்டி என் உயிர் காவாதது என்னை’ எனத் தலைவி கலங்கி மொழிகின்றாள் (கலி.143:52,55). மூவேழுலகமும் உலகினுள் உயிர்ப்பன்மையும் திருமாலிடததுத் தோன்றிப் பரந்தவை யாகும் (பரி. 3:9,10). திருமால் உலகை அளந்த போது மூவேழுலகினுட் கீழுள்ள ஏழுலகத்தையும் பொருந்திய அடியினை யுடையரா யிருந்தார் (பரி. 3:20). திருமால் முன் வெள்ளத் தழுந்திய காலத்து (வராகமாய்) கழுத்தால தாங்கி இவ்வுலகத்தை அவ்வெள்ளத்தினின்றும் எடுத்துத் திருத்திய தொழில் மேருவின் தொழிலொடு ஒக்கும் (பரி. 4:22-24). இவ்வுலகம் செவ்வேளையே தலைவராக உடையது (பரி. 5:17). திருமால் புலனகளாகவும் பொறிகளாகவும் பூதங்களாகவும உள்ளார்; அதனால் மூலப்பகுதியும் அறனும் முதன்மையின் இகநத காலமும் விசும்பும் காற்றொடு கனலும் கூடிய இம் மூவேழுலகத்து உயிர்களெல்லாம் திருமாலிடத்த வாயின (பரி. 13:14-25). எல்லா உலகத்தும் வெளிப்பட்டு அவ்விடத்து உயிர்ப் பன்மையது மறுக்கத்தைச் செய்யும் பிறவித் துன்பத்தைக் களைவோர் அன்பு பொருநதி இருங்குன்றத்தில் உறையும் திருமாலேயாவர் (பரி.15.51-53). அறம் பெரிதாற்றி அதன் பயன் நுகரச் சிறந்தோருலகம் (தேவருலகம்) செல்பவர் போல மதுரை மகளிரும் மைந்தரும் ஆடை அணிகலன் அணிந்து குதிரையிலும் தேரிலும் பரங்குன்றம் நோக்கிச் சென்றனர் (பரி. 19:10-15). புலவர் அறிவாகிய கோலால் உலகம் ஒரு நிறையாக மதுரை ஒரு நிறையாக வைத்துச் சீர் தூக்கின உலகனைத்தும் வாடப் பாண்டியன் மதுரை வாடாது சிறந்திருக்கும் (பரி. தி. 6). உலகு -1 காணக.

**2. உலக உயிர்.** விழவில் ஆடும் கூத்தரது வேறுபட்ட கோலம்போல முறை முறையே தோனறி இயங்கி இவ்வுலகம் - உலக உயிர் - இறந்துபோகும் இயல்பினது (புறம். 29:22-24). வளஙகெழு சிறபபின் உலகத்தைக் காத்துக் காவிரி நேர் கிழககே ஓடுகிறது (பதி. 50:4-6). உலகம் புரக்கும் உருகெழு சிறப்புடையது மேகம் (பதி. 81:1,2). உலகம் உவப்ப வலமாக எழுந்து திரியும் பலர்புகழ் ஞாயிறு கடலிடத்தே தோன்றுவதைக், கணடாங்கு ஓவற இமைக்கும் சேண் விளங்கு அவிரொளியுடைய முருகனை அன்பர் கண்டனர் (முரு. 1-3). யாமம் செறிநத இருளை யுடையது; மாக்கள் சொல்லவிநது இனிதடங்கினர்; வெறுப்பின்றி நனந்தலை உலகமும் உறங்குகிறது; நான்மட்டும் உறங்காதுள்ளேன் எனத் தோழியிடம் தலைவி கூறினாள் (குறு. 6). நீரின்றி அமையாத உலகம்போலத் தலைவனை இன்றியமையாத வள் தலைவி (நற். 1:6,7). வீயபபுடைய இரவலர்

வருவரென அண்டிரன் அவர்க்குக் கொடுக்கத் தொகுத்து வைத்த யானைததிரள போல உலகம் உவபப வெவ்வேறாகிய உருவததோடு மேகங்கள் மேலெழுநதன (நற். 237:6-10). நிலவின கதிர் பாற்கடல போல விசும்பில் பரவி யுள்ளது; ஊர் விழா எடுககினறது; சோலையில் வண்டு துணை யுடன் இமிாகினறது; யான் இழை நெகிழ்நது புலம்பு கொள் அவலமொடு கண் துயிலேன; அதனால் உலகம் என்னொடு பொருகின்றதா, என் அவல நெஞசு உலகமொடு பொருகின்றதா எனறு தலைவி வினவுகின்றாள் (நற். 348). வானம் துளி மாறும் பொழுது இவவுலகம கெடுதல போலத தலைவன் அளி செயதல் நீஙகுங காலததுத தலைவி அழகு கெடுவாள (கலி. 25.27-29). தலைவன ஒரு காரி யத்தை இரப்பான போல எளியனாய்த் தோனறி யும உரையாடுவான; உலகம புரபபான் போல வலிமை தோனறவும இருபபான (கலி. 47:1,2). குழந்தையைக் கணடு இனபுறுநதாய அதறகு முலை சுரநது கொடுத்தலபோல, மழை வேணடுங்கால பெயது உலகத்தை அளிததுக் காககும (கலி. 99:4,5). நலல அரசன வினைபபயன துயககத துறககம் சென்றது போல ஞாயிறு மலை சேரக் கலக்கங கொண்ட உலகத்தே பினனை அவ்வரசனுக்குப் பகைவனாகிய அரசன தோனறி அவவுலகததைச் சிறிது அளிபபான போல இருளை மதி போககி யது (கலி. 118:2-6). மணணுலகமும் பசும பொன னுலகமும பாழபட ஒனறிற கொனறு மாறிவருத லாகிய பழைய இயலபினையுடைய மதியும ஞாயி றும் கெடுதலால அழகிழநத இயலபினதாக விசுமபு கெட்ட ஊழிகள முறை முறையாகக் கழிநதன (பரி. 2:1-4). அருள் குடையாகவும அறம காமபாக வும கொணடு மூவேழுலகததையும இரு நிழல படாது ஒரு நிழலிற காககும காபபை யுடையவர் திருமால (பரி. 3.74-76). உலகு - 2 காணக.

3. மககள். ஏனாதி திருக்கிள்ளி விழுப்புண் பட்டுக் கேள்விக்கு இனியன்; கண்ணுககு இனனான; அவன் பகைவர் புறங்கொடுததலின புணபடாது கணணுக்கு இனியர்; செவிககு இனனார்; பகை வரும் கிளளிபோல ஒனறில் இனியராய் ஒனறில் இன்னாராய இருப்ப, அவரை வியககாது கிள் ளியை மட்டும் இவ்வுலகம்-மககள் - வியபபானேன் எனக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் வினவுவர் (புறம். 167:3-12). வேந்தன அறிவில் மெல்லியனாகித தரம அறியாச் சுற்றத துடன் அன்பின்றி இறை (பொருள) பெற விரும் பின் யானை புகுநத நிலம்போலத தானும உண ணான; உலகமும கெடும் (புறம். 184:7-11). மலர் தலை யுலகம் மன்னனை உயிராக உடையது (புறம். 186:2). கோபபெருஞ் சோழனின் சிறபபறி யாது கூற்றம உயிர்கவர்நதது; நனநதலை யுலகம் துன்பமுற அவன் நலலிசை சூடி நடுகல்லாயினன; துனப மிகக சுற்றத்துடன சென்று அசசுற்றத்தை வைவோம்; வாயமொழிய புலவீர், வருக எனப் பொத்தியார் அவரை அழைத்தார் (புறம். 221:7-13). நனநதலை யுலகம செயத நனறு உண்டெனின் ஆமபல் என்னும் எண்ணும ஆயிரத்தாற் பெருக் கிய வெள்ளம் என்னும் எண்ணும் ஆகிய எண களின் அளவுள்ள ஊழிகள் வாழக எனச செலவக் கடுங்கோ வாழியாதனைக கபிலர் வாழத்துவர் (பதி. 63.16-21). நலலிசையை நிலைநாட்ட, நனந தலை யுலகத்து இலலோர் துனபநதீர நலகும அன்புடை மனததன இளஞ்சேரல இருமபொறை (பதி. 86.5-7). உலகம காககும ஒன்றுபுரி கொள கைப பலர்புகழ மூவரும் தலைவராக வேண்டித தேவா எலலோரும சூழ முருகனைக் காண ஆவி னன் குடி வநதனர் (முரு. 161-174). முழங்கு கடலா கிய எலலையை யுடைய மலாதலை உலகததொடு உயர்நத தேயததுத தேவா பகைவராய வரினும அவர்கு அஞசிப பணிநதொழுகாதவன நெடுஞ செழியன (மது. 199-201). அறசிரக காலததில பசலை நமமை வருத்தவும தலைவர் நம் துயரை அறியாரோ, தாமே அறியினும நம மனம போன்ற மெனமை அவாககு இனமையின் பெணகளாகிய நம உலகததை அவர் நினை யாரோ; அவர் தனமையை எஙஙனம உணாவேன் எனத தலைவி பிரிவில அறிவு மயஙகிக கூறினாள் (அகம். 273:4-9). 'எமமை நினைதத்ரோ' என வின வியதோழியிடம என காம விருபபம் அறுதியடைய எழுந்த விருபபால யான உனனை உளளினேன்; நினைததேன, நினைதது உலகததுப பணபால் மருளணடேன என்று தலைவன உரைததான (குறு. 99:1-3,6). மலையிலுளள தேனிறாலைக கொள்ளக கருதிப பழைய கணேணியில ஏறிய மட்வோன போல இவவுலகம் ஏமாநதது; நாம் உயிருடன் வாழலவதறகாகத தலைவன பிரியான; ஏமாறாது தெளிவாயாக எனத தோழி தலைவியை ஆற்று வித்தான் (குறு. 273.5-8). உணகடன வழி மொழிநது இரக்கும்போது முகனும் தானகொணடது திருப பிக் கொடுக்கும போது முகனும் வேறாகுதல் முனபும இவ்வுலகத்தியல்பாகும; அஃது இனறும் புதியதன்று (கலி. 22:1-4). வையததைக் காக்க முயலும் உள்ளத்தேனாகிய எனனை இரத்தலை முயலும் இனனா இடுமபை செயதவள், பொயதீர் உலகம் புகழந்த கீழததிசையில் தோன்றிய ஞாயிறறு மணடிலத்தை யான பெறுதற்கு விரும்

பிய தன்மையளாய் இருக்கிறாள் என்று மடலேறுந் தலைவன் கூறினான் (கலி. 141 11-14). உலகு - 3 காண்க.

4 உயர்ந்தோர். உலகம் - உயர்ந்தோர் - புகழ்ந்த ஒப்பற்ற விழுச்சீர் அலைவாயப்பதி செலவுதலும் முருகனின் நிலைபெற்ற பண்பாகும் (முரு. 124,125). சான்றோர் தம் கடமையிற் குறைபடார் என்று உலகம் கூறும் (நற். 327 4-6).

உலகவிடைகழி - உலகத்திற்குச் செல்லும் இடைகழி. விண்ணைத் தோயும் குடையினையும் கொடியணிந்த தேரினையுமுடைய மோரியர் தேர்ச்சக்கரம் இயங்குதற்குக் குறைக்கப்பட்ட வெள்ளி மலைக்கு அப்பாலுள்ள உலகவிடைகழி- உலகத்திற்குச் செலவும் இடைகழியாகிய - அறவாயிலின்கண் தேவர்கள் நிறுத்திய பரந்த இடத்தையுடைய ஆதித்த மண்டிலம் விளங்கும் (புறம். 175 6-9).

உலகு - 1. உலகம். இமயம் வடதிசையி லுள்ளது. தென்திசையில் ஆய்குடி இல்லையாயின் இமமலர் தலை உலகு கீழ்மேலதாகிக் கெடும் (புறம். 132·7-9). நிலையாத உலகத்து நிலைபெறக் கருதினோர் தம் புகழை நிலைநிறுத்தித் தாம் மாய்ந்தனர் (புறம். 165 1,2). மறவரிடமிருந்து கன்றுடைப் பல ஆனிரையைக் கவர்ந்த வீரன் சட்டை உரித்த பாம்பு போல உடம்பை விடுத்துத் தானே அரிது செல உலகிற்குச் சென்றனன் (புறம். 260:17-21). கடலாடையுடுத்த இப்பரந்த உலகு பெரும் அறிய நின்னதே எனச் சோழன் நலங்கிள்ளியிடம் கிணைப் பொருநன் கூறியதாகக் கோவூர் கிழார் பாடியுள்ளார் (புறம் 382·18). பகையரசர் அழியும்படி வென்று முற்பட்டபோர் எதிர்வருதலைக் காணும்பொருட்டு நீ களிறூர்ந்து வீரரோடு மன்னர் ஏத்த நினது தேரோடு நின் படைஞர் உலகு முழுதும் நெருங்கச் செய்தாய் எனக் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் குறிப்பிட்டுள்ளார் (பதி. 42.16-20). உலகையே கடந்து மேல செல்வது போலப் பறவையின் இயல்பினைக் கொண்ட குதிரையை யுடையவன் தலைவன் (அகம். 64:2). உலகுடன் திரிதரும் பலர்புகழ நல்லிசை வாய்மொழிக் கபிலன் என்று நக்கீரர் கபிலரைப் பாராட்டுவர் (அகம். 78·15,16). உலகில் நிகழும் தொழில் எஞ்சாமல் கெட, கலப்பைகள் வாளா கிடப்ப, மழை பொழியும் கார்ப் பருவம் நீங்கிற்று (அகம். 141.4-6). உலகு முழுதும் நிழல் செய்யும் வெண்குடையினையும் கடல்போன்ற தானையினையும் உடையவன் பாண்டியன் (அகம். 204 1,2). உலகு கிளர்ந்து இயங்குதல் போல அச்சந் தரும் மரக்கலம் கடல் நீரைக் கிழித்துச் சென்றது (அகம். 255 1,2). தலைவன் செல்லும் வெங்கானம் மலை போல் அச்சந் தருதலின் இவ்வுலகு படைத்தோன் அக்கானஞ் சென்று துன்புறுவானாக என்று பிரிவிடை மெலிந்த தலைவி கூறினாள் (நற். 240: 1,10). நீலமேனி வாலிழை பாகத்துச் சிவபெருமானின் இருதாள் நிழற்கீழ் மூவகையுலகும் முகிழ்த்தன (ஐங். க. வா.) தந்தை புதல்வனைத் தழுவிக் கிடந்தான்; புதல்வனின் தாய் இருவரையும் தழுவிக் கிடந்தாள்; அவர் தம் கிடக்கை இனிது; மிகுந்த பரப்பினை யுடைய இவ்வுலகு முழுதும் அதற்கு ஒக்கும் (ஐங். 409). பொருள்வயிற் சென்று முயலாது சோம்பி யிருந்தார்க்கு உயர்ந்த பொருள் கிடைத்தலும் பொருள்தேடி அறம் செய்யாமல் இருந்தோர்க்கு ஆன்றோர் உலகு கிடைத்தலும் கனவிலும் இல்லை (கலி. 92 2-9). 'பழைய நிலத்தை யாளும் உரிமை கொண்ட எம்முடைய பாண்டியன் இமமலர்தலை யுலகில் வாழ்வானாக என்று குரவையாடி முறைப்படி பாடித் தெய்வத்தைப் பரவுவோம், நீயும் வா' எனத் தோழி தலைவியை அழைத்தாள் (கலி. 103:75,79). 'எமர் பொதுவனுக்கு நின்னைக் கொடுக்க உடன்பட்டனர். உருமேற்றோடு மாறுபடுகின்ற முரசினை யுடைய பாண்டியனுக்கு இவ்வுலகு முழுதும் அவனுடைய ஒருமொழியைக் கேட்பதாக' என்று கூறிச் சக்கரப் படையினை வாழ்த்துவோம்; அதற்கு நீயும் வருக எனத் தலைவியைத் தோழி அழைத்தனள் (கலி. 104.74-80). ஞாயிறு மலையிலே சென்று மறையவும் உலகெல்லாம் ஒளி பரவக் கடற்பரப்பின் திரையை நீக்கித் தண்கதிர் மதியம் எழுந்து தன் நிலவை நிறைத்தது (கலி.121.1-3). செயற்கரிய தவத்தை முயன்றோர் தமமுடம்பை இவ்வுலகிலே விடுத்து உயருலகு (துறக்கம்) இனிது பெறுவர் (கலி.138 30,31). காமநோய் என மனத்தை நெருப்பாகச் சுட்டதாயினும் அதனை மனத்துக்குள்ளே மறைப்பேன; அதுபோலவே காம நோயால் சூடாகிக் கண்ணில் தோன்றும் வெவ்விய நீரையும் மறைப்பேன; அதற்குக் காரணம் அந்நீரைத் தெளிப்பின் அளிக்கத் தக்க இவ்வுலகு வெந்து விடுமே என்பது தான் எனத் தலைவி மொழிந்தாள் (கலி. 142:51-54). முருகனைக் காணப் பரங்குன்றிற்குத் திருமாலும் சிவனும் அயனும் உலகிருள் அகற்றிய பன்னிரு சூரியரும் (துவாதசாதித்தியரும்) மற்றும் பிறரும் சென்றனர் (பரி. 8·1-10). வையையால் மூதூரில் வாழ்வார்க்கு இன்பமும் கவினும் நன்பல உளவாயின; அதனால் இவ்வுலகு அகன்ற இடத்தை யுடையதாயினும் வையையின் புகழை அடக்க வியலாது (பரி. 12:100-102). ஈவாரைக் கொண்டாடி இரப்பாரைப் பார்த்துவக்கும் மதுரை, பரங்குன்ற நகர்களில் வாழ்வாரே வாழவாரெனப்படுவார்; மற்றையார் யாவரும் புத்தேளுலகு

செல்லவியலாது (பரி. தி. 12). உலகம் - 1 காண்க.

2. **உலகத்துயிர்கள்.** பாரி பாரி என்று பலவேத்தி ஒரு வனையே செந்நாப் புலவர் புகழுவர்; உலகை - உல கத்துயிர்களை - புரக்கப் பாரி ஒருவனு மல்லன்; மாரியு முண்டு எனக் கபிலர் குறிப்பிற் புகழுவர் (புறம். 107). கடைக் கங்குலில் பலர் உறங்கவும் தான் உறங்கானாய் உலகு காக்கும் உயர் கொள்கை யுடையவன் சோழன் நலங்கிள்ளி எனக் கோவூர் கிழார் சிறப்பிப்பர் (புறம். 400:5-8). யாழ் போன்ற குரலை யுடைய மணிமிடற் றந்தணனின் தாள் நிழ லில் உலகு உறையு மியல்பினது (அகம். க. வா. 15, 16). இரவில் பெயல் பொழிந்துதவிய மேகமே, 'நீ உல கிற்கு ஆதாரமாகப் பலர் தொழப் பலவிடத்தும் நிலைபெற்ற குன்றுகளின் கோடுதோறும் பொருந்தி உலாவுவாயாக' என அதனைத் தலைவன் வாழ்த் தினான் (நற். 139:1-3, 10). துன்புற்றுக் குடி கூவக் கொலை யஞ்சாத அமைச்சரால் நெறியன்றிப் பொருளைப் பெற்ற கொடுங்கோல் மன்னரின் குடைநிழல் தங்கிய உலகு போன்ற உலறிய உயர் மரங்களை யுடையது வெஞ்சுரம் (கலி. 10:5-7). பொன் பொருந்திய மேற்கு மலையிலே கதிரவன் மறையக் கதிரவன் இன்றி வருந்திய உலகை நோக்கி அவ்வுலகு கொண்டாடும் படியாகத் தகைமதி எழுந் தது (கலி. 126:1, 2). ஞாயிறு மறைந்த காலத்தே இருங்கடல் ஒலிக்க, ஓதநீர் கரைசேர, மலர்கூம்ப, இவ்வுலகெல்லாம் ஒருபடிப்பட்ட நடுக்கமுற்று அச்ச முறும்படி இராக்காலத்தைத் தான் படைப்பது போல மாலைக் காலம் வந்தது (கலி. 134:4-10). திருமாலை 'உலகாள மன்னவ' எனக் கடுவனிள வெயினனார் குறிப்பர் (பரி. 3:85). ஏழுலகும் ஆள் பவர் முருகன் (பரி. 8:64). வையை பிறை வளர்வது போல் நாளுக்கு நாள் பெருகி நிலவுப் பரந்தாங்கு நீரினை நிலத்தே பரப்பி உலகிற்குப் பயன்பட்டது (பரி. 11:31-34). உலகம் - 2 காண்க.

3. **மக்கள்.** எழினி பொருது மாயத் தாயை நீத்த குழவிபோல அவன் சுற்றம் வருந்தக் கடும்பசி கலக் கிய இடும்பை மிக்க நெஞ்சத்துடன் வருத்தமுற்றுக் கிடந்த உலகினும் - மக்களினும் - அறனில் கூற்றத் திற்கே பெரிய இழப்பாகும் (புறம். 230:6-11). 'உலகு புகுமாறு திறந்த வாயிலை யுடையவனும் பலரோ டுங் கூடியுண்ணுதல் பொருந்தியவனுமாகிய எவ்வி, தன் காதலி புல்மேல் வைத்த இனிய சிறு பிண் டத்தை உண்பானோ' என வெள்ளெருக்கிலையார் கையற்றுக் கூறுவர் (புறம். 234:3-6). உலகு தொழப் பெருங்கடலினின்றும் வயங்குகதிர் விரிந்த ஞாயிற்று மண்டிலம் தோன்றியது (அகம். 263:1, 2). சேவலங் கொடியுடைய முருகன் காத்தலான் உலகு இன்ப நாட்களை எய்தியது (குறு. க. வா. 5, 6). பலபுநாள் வறட்சியுற்ற உலகு தொழில் மேற்கொள்ளப் பழ மழை பொழிந்தது (நற். 42 1-3). மழை பெய்யா தொழிந்த பாலை நிலத்தில் செங்கதிர்ச் செல்வன் தெறுதலின் நிலம் பிளவுபட உலகு மிக வருந்தித் துன்புற்றது (நற். 164.1-3). ஐவர் என்று உலகேத் தும் சிறப்புடைய அரசர் பாண்டவர் (கலி. 25:3). முன்னர் நாட்டை ஆண்டவரால் துன்புற்றுப் பின்னர்த் தம்மை நிழலாக அடைந்த குடிமக்களை வருந்தாமல் காத்தோம்பி அக் கொடிய மன்னரை வென்ற புகழை உலகு ஏத்தப் புதிய நாட்டில் தங்கும் தலைவர் இளவேனிற் பருவத்துக் கவின் தொலைந்த என தடமென்தோளை நினைப்பார் எனத் தலைவி கூறுகிறாள் (கலி. 26: 9-12). விருப் புடன் தம் நிழல் சேர்ந்தாரைக் காத்துத் தம் புகழ் பரவி உலகேத்த அயல் நாட்டில் இருக்கின்ற தலை வர் திருமருதத் துறைமுன் என நலங்கெடாமல் அருளுவார் எனத் தலைவி கூறுதல் (கலி. 26.13-16). நலமற நெறியிலே நிறுத்தி உலகினை ஆண்ட அர சன் போயபின், நீதியல்லதனைஏறட்டுக் கொண்டு அறநெறியை நிலைநிறுத்த முடியாத குறுநில மன் னன் காலம்போலக் கதிரவன் மறைந்ததும் மாலை யில் உலகில் இருள் பரவியது (கலி. 129: 3-7). சிவன் உமையோடு புணர்ந்த அமையாப் புணர்ச்சியிற் றோன்றிய கருவை இந்திரனுக்குக் கொடுத்த வரத் தின்படி வாய்மை பிறழாது இவ்வுலகேழும் வியப்ப மழுவினாற் சிதைத்தார் (பரி. 5:28-35). உலகம்-3 காண்க.

**உலண்டு** – பட்டுப்புழு. உயர்ந்த கொம்பினிடத்தே வைத்த உலண்டின் - பட்டுப்புழுவின் - நிறத்தைப் புலவிய நிறங்கொண்ட எருது ஒத்திருந்தது (கலி. 101: 15).

**உலமரல்**- 1. **சுழலுதல்.** ஒரு நாள் நீ துன்புறினும் வழி நாள் தலைவி வாழாள்; நீ வரும் வழி அச்சந் தருவதா யிருத்தலால் உலமரல் வருத்தம் - (மனம் சுழலுவதற் கேதுவான துன்பம்) - உறுகின்றோம் எனத் தோழி இரவுக்குறி வரும் தலைவனிடம் உரைத் தாள் (அகம். 18: 8-13).

2. **வருத்தம்.** பெரிய காட்டில் ஞாயிறு மறைய வழி நடக்க இயலாது நான் உறங்கும் பாயலிடத்தே ஒரு பிணைமான் தோன்றினாற் போல நீ வளை செறித்துக் குனிந்த நோக்கமொடு நிலத்தைக் கிளைத்துக் கொண்டு வருத்தத்துடன் நிற்க, என்னிடம் ஊடல் எங்ஙனம் வந்தது என்று கூறி நுதலை நீவிக் கூந்தலைத் தடவிய அமையத்து விழித்தெழுந்து பொய்க்கனா என அறிந்தேன்; அக் கனாவினை நினைவு கூர்ந்து ஏங்கிய உலமரலை

-வருத்தத்தை - நீ அறிந்து கொள்ளாது ஊடுகின்றனை எனத் தலைவன தலைவியிடம் உரைத்தான (அகம். 39: 12-25). கலைமான் கானல்நீரைப் பருக ஓடி நீர் காணாது தனிமையுற்ற உலமரல் உள்ளத்துடன் பெண்மானைக் குரல் கொடுத்து அழைக்கும் (அகம. 395: 8-11).

3. உழத்தல். தலைவியை நோக்கி, 'நீ உற்றதனால் உலமரல - உழத்தலையுடைய - உயவு நோய்க்கு உயயும் நெறியைக் கூறிப் பின் செல்க' எனத் தலைவன கூறி விலககினான (கலி. 113: 1-3).

உலமருவோர்-சுழல்வோர். பாண்டியன் கூடகாரததுத் துஞசிய மாறன வழுதிக்குத திறை கொடுததோர் நடுககுறறனர். அவன அருளை யிழந்த அரசர் நுண்ணிய பல சுறையானகள் அரிது முயனறெடுதத செம்புற்றிலிருந்து புறப்பட்ட ஈயலபோல ஒரு பகல் வாழக்கைககு உலமருவோர்-சுழல்வோர்-ஆவர் (புறம. 51:6-11). 'தம்மைககணடு இரங்காத வனிடத்து நினறு திரங்கி உள்ளூறக் கனியாத வன பழததின பொருட்டு. உலமருவோர் யாரே, பெரிதே உலகம்; பேணுநர் பலரே; ஆதலின நெஞ்சமே எழுக' என இளவெளிமான் சிறிது கொடுப்பக் கொள்ளாது பெருஞ்சித்திரனார் பாடியுளளார் (புறம். 207:1,7-11). நின நறறோள் சேர்தற்கு உலமருவோர் அறசிரக் காலததை மறக்கமாட்டார் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங. 464: 3,4).

உலவை - 1. மரக்கிளை. வாவற்பேடை பகலிற் பறந்து வந்து கனிபெறாது, முன்பெற்ற நாளை நினைநது வருநதி வேறு புகலிடங் காணாது பொலிவிழநது உலவை - கிளைகள் - உடைய இற்றிமரத்தில தங்கும் (அகம. 57:1-6). நீர்நசையால் வருநதிய யானை வறிய உலவையின் கோடு கோடாக உள்ள நிழலில தங்கி மரலைக் கவ்வியது (அகம். 199:4-7). நிலம் வெம்மை நீங்க மழை பெய்தமையால் மரங்களின் உலவை முதிர்ந்த இலைகளை உதிர்த்துச் சிறிய தளிர்களை யீனறன (அகம. 259:3-5). இலைகளை உதிர்த்து உலர்ந்த பொலிவழிந்த உலவை வலையால் பினனப்பட்டது போலத தோன்றுமாறு சிலமபி நூலால் சுற்றியது (அகம. 293:1-3). ஓமை மரத்தின வறிய உலவை பொருந்திய இடத்தே அறியாத் தேயத்துத் தலைவன கிடுகினையும் வேலினையும் கைக்கொண்டு துணிவுடை உள்ளத்தோடு அருஞ்சுர வழியே தலைவியை அழைத்துச் சென றான (அகம். 369:17-20). பாலை வழியில் ஓமையின உலர்ந்த உலவையில ஏறி ஆண்புறாக்களைப் பெடைகள அழைககும் (குறு. 79:2-5). கல பிறங்கும் மலை கொடுங்காறறு வீச இலையுதிர்ந்து நிழலற்று வெறும் உலவையுடைய மரங்களைக் கொண்டது (நற். 62:8-10). ஓமை மரத்தின உலவையில் மறைந்து தங்கிச் சிள்வீடு கறங்கும் (நற். 252:1,2). கள்ளின் தெளிவைப் பருகிய மயக்கத்தால்உலவையை ஒடித்து ஓங்கிக் காட்டிச் சிலமொழி கூறிக் குன்றக் குறவனொடு அவன் மடந்தை குறுநொடி பயிற்றினாள் (நற். 341:4-6). காடுகள் பசுமை நீங்கித் தீந்த உலவையால் இன்பத்தின் நீங்கிச் சென்றாரைத் துன்புறுத்தும் தகையவாய் இருக்கும் (கலி. 11:10,11).

2. காற்று. தழைத்த ஈச்சமரங்களை யுடைய உலவை -காற்று-வீசும் காட்டிடத்து ஆறுசெல் மாக்களைக் கொனறதால் குருதி தோய்ந்த வாயையுடைய புலிக் குட்டிகள் மாலைப் பொழுதில் மரலின் தூறுகளை நிமிர்ந்து நோக்கும் (நற். 2:2-6). மழை பெய்யாதொழிந்த உலவை சுழன்றுவீசும் காட்டில் ஆலமர நிழலில தங்கிக் களைபபாறி, அஞ்சுமிடம் காணின் அஞ்சாது தங்குமிடத்துத் தங்கி வருந்தாதேகுக எனப் புணர்ந்துடன் போகுந் தலைவன் இடைச் சுரத்தே தலைவியிடம் கூறினான் (நற். 76:2-5). கொலைவல் வேட்டுவனின் வலையை யறுத்துக் கொண்டு ஓடிய புறாவின சேவல் சிலம்பி வாய் நூலாற் கட்டிய வலையுடைக் கிளையைக்கண்டு அஞ்சுதற் கிடனான சுழன்றடிக்கின்ற உலவையுடைய காட்டினைத் தலைவர் கடந்து சென்றார் (நற். 189:7-10).

3. உலர்தல். சிதைந்த தலையை யுடைய வேலமரத்தின் உலவை - உலர்தல் - உடைய கிளையில் சிலந்தி வலை பின்னியது (பதி. 39:12,13).

4. வேலமரம். இலையொழித் துலர்ந்த புன்தலை உலவையில் - வேலமரத்தில - சிலம்பி வலை பின்னியது (அகம். 293:1-3. வே. வி. உரை). உலவை, ஓமை முதலிய மரஙகளில ஒடுங்கியிருந்து சிள்வீடு கறங்கும் (நற். 252:1,2).

உலா - நடமாடுதல். விடியற்காலத்தே இரைதேட உலாவிற்கு - நடமாடுதற்கு - எழுந்த கரடி இருப்பைப்பழம் தின்று வெறுப்பின் புற்றாஞ்சோற்றினை யுண்ணும் (அகம். 81:1-5).

உலை - 1. சமைத்தற்கு வைக்கும் உலை. நெடுஞ்செழியன் வேலேந்தி வேநது படப் போர் செய்து, புகழ்பரவ முரசங்கொண்டு, முடித்தலையை அடுப்பாகக் குருதிப் புனலாகிய உலையில் தசை மூளை முதலியன பெய்து தோளாகிய துடுப்பால் துழாவி அடப்பட்ட உணவால களவேள்வி செயதான் (புறம. 26:5-10). முன் கொய்தவிடத்தே தளிர்த்த குப்பைக் கீரையின் முற்றா இளந்தளிரைக் கொய்து உப்பின்றியே நீரை உலையாகக் கொண்டு ஏற்றிக் காய்ச்சி மோரின்றி அவிழாகிய உணவை

மறந்து பசிய இலையை மனைவி அயின்றாள் எனப் பெருஞ்சித்திரனார் தம் குடும்ப வறுமை நிலை சுட்டுவர் (புறம். 159:9-12). பிட்டங் கொற்றன் தந்த பெருவளங் கண்டு பாணனொருவன் மகிழ்ச்சியில், உலையை ஏற்றுக; சோற்றை ஆக்குக; கள்ளையும் நிறைய உண்டாக்குக; விறலியர் கோதையும் புனைக; அன்னவை பிறவும் செய்க; சிறிதும் இரங்கல் வேண்டா எனக் கூறினான் (புறம். 172:1-4). வையம் காக்கும் வேந்தரின் வளங் கெழு திருநகரில் தலைவனொருவன் யானை உயங்குதலால் நெட்டுயிர்ப்புக் கொண்டாற் போன்ற நெய்யுலையிற் சொரிந்த ஆட்டிறைச்சியினது ஓசையுடைய பொரியலைப் புதுமாந்தருடைய ஒளி மழுங்கிய கணைகள் நிறைய நல்கினான் (புறம். 261: 6-10). வெண்ணெல்லைக் குற்றியெடுத்த அரிசியாலாக்கிய சோற்றைக் காடிநீர் பெய்த வெள்ளுலையிலிட்டு வைத்து அதனை மாங்கனிகளைப் பிசைந்து செய்த நறிய புளிக்குழம்பையும் வராலிறைச்சி, சுறாமீன் துண்டம் முதலியவற்றையும் கலந்து உழவர்கள் மயக்கத்தால் உறங்கி யெழுந்தபின் விடியலில் உண்டனர் (புறம். 399:1-11). புளியம் பழத்தின் இனிய புளிப்பைக் கலந்து உலையில் மோரை வார்த்து மூங்கிலரிசியைப் பெய்து மலைச் சாரல் கமழத் துழாவிக் குறமகள் ஆக்கிய உணவை மலைவாழ்நர் அகமலி உவகை ஆர்வமொடு பிறர்க்குத் தந்து விருந்தோம்புவர் (மலை. 178-185). புது மணமகள் திருமண இல்லத்தில பல் கோட்டடுப்பில் பால உலை வைத்து அதில் இடுதற்கு மகளிரொடு பெருஞ்செய் நெல்லின் கதிர் கொய்து பசிய அவலை இடிப்பாள் (அகம். 141:14-18). சுரநெறியில் புலி யானையைத் தொலைத்துண்டு எஞ்சிய ஊனில மறவர் உணடதுபோக விடுத்துச் சென்றதை உமணர் தீக்கடை கோலினால் உண்டாக்கிய தீயில் வதககிச சுனைநீரை உலையாக வைத்துச் சமைத்த சோற்றோடு உணபர் (அகம். 169:3-8).

2. கொல்லனது உலை. துருத்தியைக் காலாலே மிதித்து உலைக்களத்து – கொல்லனது உலையில்-வேலை செய்யும கொலலனின் முறிந்த கொடிறு (கொறடு) போன்ற கவைக்காலை யுடையது நண்டு (பெரு. 206-208). உடன்போக்குச் சென்ற தன் மகளைப் பிரிந்த தாய், 'கொல்லனின் ஊதுலைத் துருத்திபோல உள்ளிருந்து வெயதுயிர்த்து மெலிந்து வேவது போலும் நெஞ்சத்தோடு கண்துயில் பெறாது கனவு கண்டுள்ளேன்' என்று அயலிலாட்டியரிடம் கூறினாள் (அகம. 55:5-9). பொய்கையின் அடைகரையில் படர்ந்த பிரப்பங் கொடியிற் பிணிப்புண்ட ஆம்பலிலை கொல்லன் உலைக் கண் ஊதுகின்ற விசைக் கயிற்றால் இழுக்கபபடும் துருத்தி போல வீங்கியும் நெகிழந்தும காணப்பட்டது (அகம். 96:3-7). புலிப்பகை வென்ற புண்கூர் யானை மலையிடத்தே கையெடுத்துப பெருமூச் செறியும் போது, வேங்கைமலர்கள கொலலன் உலையில் துருததியால் ஊதப்பட்ட உலைத் தீயினின்று சிதறும் தீப்பொறி போனறு சிதறிச் சிறு மின்மினி போல நீலநிறமுடைய பெரிய புதலிற் பரவும் (அகம். 202:3-8). மெழுகாலியன்ற கருவினகன் அமைத்து ஊதுலையிற் செய்த பகுவாயத தெண் மணி ஒலி காட்டின்கண ஆர்த்தது (குறு. 155:3-5). ஏழூர்களில் பொதுவாகச் செயயவேண்டிய கொற்றொழிலுக்கு ஓரூரில் அமைக்கபபட்ட கொலலுலையில் செறித்த துருத்தி போன்று தலைவி நெஞ்சம் தலைவன் பிரிவால எல்லையறியாது வருநதியது (குறு. 172:5-7). நள்ளிரவில் இரை தேரும் பெரிய வாயை யுடைய ஆண்கரடி புற்றினை வாயப்ப வளைத்துக்கொணடு நலலரா நடுங்க முழஙகிக் கொல்லனின் ஊதுலைத் துருத்தி போல உள்ளே பெருமூச்செறிந்து அதனைத் தோண்டும் (நற். 125: 1-5). இரும்புசெய் கொல்லனின் வெவ்விய உலையில் தெளித்த சின்னீர் நெருப்பைச் சிறிதவிக்குமாறு போலக் காதலர்தம் பிரிவால துனபுறுததாது விரைவில் வருவர் என்னும் நின்சொல் நோய்மலி நெஞ்சிற்கு ஏமமாயிற்று எனத தலைவி தோழியிடம் உரைத்தாள் (நற். 133.7-11).

**உலைக்கல்** - உலையிடத்துள்ள அடைகல். பிட்டங் கொற்றன பகைவர்க்கு இருமபைப் பயன்படுத்தும கருங்கைக் கொல்லனின விசைத்தடிக்கப்பட்ட கூடத தோடே ஏற்று மாறுபடும உலைக்கல் - பட்டடைக் கல் - போனற வலிய ஆணமையுடையவன (புறம். 170:14-17). தலைவர் சென்ற நெறி உலைககல போனற வெம்மையுடைய பாறை ஏறிக் கொடிய வில்லையுடைய எயினர் அமபுகளைக் கூர்மையாகத தீட்டும் கவர்த்த வழிகளை யுடையது (குறு. 12 2-4).

**உலைக்குருகு** – கொல்லுலைத் துருத்தி. இரைதேரும் ஆண் கரடி புற்றிலுள்ள நல்ல பாமபு நடுங்குமாறு முழங்கிக் கொல்லன் ஊதுலைக் குருகு - துருத்தி - போலப் பெருமூச்செறிநது புற்றினை அகழும (நற். 125:1-4).

**உலைவு** - 1. தளர்ச்சி. உலைவிடத்து - தளருமிடத்து - பகைவர் ஆரவாரஞ் செய்ய அதுகணடு பொறாது மீணடும் பொருது உயிர் துறந்த நாணுடை மறவரின் நல்லிசைப் பெயரொடு நட்ட நடுகல கவர்த்த வழிகளில பல உள்ளன (மலை. 386-389). உலைவில்லாத உள்ளத்தோடு வினைவயிற் செல்ல வலிமை செய்துகொண்டு, நாம் நினைத்த நினை

வெல்லாம் பாழ்படத் தலைவர் பிரிந்து சென்று விட்டார் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 325:15-21). தான் செய்யுந் தொழிலில் வருத்த முறாத உலைவில் கம்மியன கலன பொறியற்றுப் போயின இணைத்து விடுவான (நற். 363:4, 5).

2. வறுமை. கிழிந்த ஆடை உடுத்திப் பலாமரத் தடியில் தங்கித் தன்னையும் நினையேனாய வேற்று நாட்டிற்குச் சென்ற என வருத்தத்தையும் உலை வையும் - வறுமையையும் - நோக்கி நள்ளி ஊன் தந்து பசி போக்கினான் என்று வன்பரணர் குறிப்பர் (புறம். 150.2-4, 9-13). ஆர்வமுற்றுத் தன்னை உள்ளி வருபவர் உலைவு நீங்கத் தவிராது கொடுக்கும் தகைசால் வண்மையுடையவன் நள்ளி (புறம். 158:13-16).

3. தோலவி. சேனைகளோடு பொருதற்குச் சினந்து வந்த பகைவர் உலைவிடத்து - தோலவியுற்ற விடத்து - இளந்திரையன் வெற்றிக் களிப்புடன் ஆர்த்துக் கச்சியில் உள்ளான் (பெரு. 418-420). இளந்திரையன் தன்னொடு பொருந்தாத பகைவர் உலைவிடத்து விட்டுச் சென்ற குதிரைகளைச் சேணத்துடன் பாணருக்குப் பரிசிலாகத் தந்தான (பெரு. 491-493).

**உலோச்சனார் - புலவர்.** சமண சமயத்தில் தலைமுடி யினைப் பறித்தகற்றும் சமயச் சடங்கு உலோச்சு எனப்படும். இப்பெயர்த் தொடர்பால் இவர் சம ணச் சார்புடையவராகலாம் என்பது தெரிகின்றது. இவருடைய பாடல்களில் 35 பாடல்கள் (அகம். 20, 100, 190, 200, 210, 300, 330, 400; குறு. 175, 177, 205, 248; நற். 11, 38, 63, 64, 74, 131, 149, 191, 203, 223, 249, 254, 278, 287, 311, 331, 354, 363, 372 ,398; புறம். 258, 274, 377) சங்கத் தொகை நூல் களில் இடம் பெற்றுள்ளன. அகம், புறம் ஆகிய இரு திணைகளிலும் இவருடைய பாடல்கள் அமைந் துள்ளன. இவர் பாடியுள்ள 32 அகத்திணைப் பாடல்களில் 31 பாடல்கள் நெய்தல் திணையிலும், ஒரு பாடல் (நற். 64) குறிஞ்சித் திணையிலும் அமைந்துள்ளன. இதனால் நெய்தல் திணையைப் பாடுவதில் நாட்டம் மிக்குடையவர் என்பது புல னாம். அதற்கேற்ப நெய்தற் புனைவும், மீன்கள் பற்றிய பல செய்திகளும் இவர் பாடலில் இடம் பெற்றுத் திகழ்கின்றன. கழி சூழ் படப்பை சூழ்ந்த காண்ட வாயில் என்னும் நெய்தல் நில ஊரினை இவர் குறிப்பிட்டுள்ளமை கொண்டு (நற். 38:7), அவ்வூர் இவரது சொந்த ஊராகலாமென்று கலைக் களஞ்சியம் கருதுகின்றது (பகுதி.2.பக்.362). பரதவர் பெரிய மீன்களை எறிஉளியினை வீசித் தாக்கிக் கவரும் குறிப்பு காணப்படுகின்றது (அகம். 210). 'சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி, மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்தி, மறுகிற் பெண்டிர் அம்பல தூற்ற' என்னும் பகுதியில் இவர் அம்பல் தூற்றுவோரின் இயல்பினை அழகுறச் சித்திரித் துள்ளார் (நற். 149). இவர் புறநானூற்றுப் பாட லொன்றில் (377) இராச சூயம் வேட்ட பெருநற் கிள்ளியைப் பாடாண்டினை வாழ்த்தியல் துறை யில் பாடியுள்ளார்.

**உவகை - 1.** மகிழ்ச்சி. உறையூர் முற்றியிருந்த சோழன் நலங்கிள்ளியையும், அடைத்திருந்த நெடுங்கிள்ளி யையும் கோவூர்கிழார் பாடுங்கால், 'நும் செயகை நும்மைப் போன்ற வேந்தர்க்கு உடம்பு பூரிக்கும் உவகையை - மகிழ்ச்சியை - செய்யும், அதனால் அது தவிர்க்கத் தக்கது' என்று அறிவுறுத்தினார் (புறம். 45:7-9). பலி தூவி மழைவேண்டிய குறவர் அம்மழை மிகுதியாகப் பெய்தமையால், பெயல் நீங்கி மேகம் மேலே செல்வதாக எனவேண்டிய அள வில் அது மாறியமை கண்டு, உவகையராயச் சார லில் புனத்தினையை உண்டனர் (புறம். 143:1-5). தன்னைக் கண்ட பெருந்தலைச் சாத்தனார்க்குக் கும ணன் தன் தலையைத் தருதற்காக வாளினைக் கொடுக்க அதனைப் பெற்ற புலவர், 'வெற்றிமிக்க உவகையொடு வந்தேன்' என்று அதனை இளங்கும ணனுக்குக் காட்டிக் கூறினார் (புறம். 165:12,14). முதி யவள் மகனாகிய சிறுவன் போரில் எதிர்த்த களிற் றினைக் கொன்று தானும் இறந்தான் எனக்கேட் டதனால் அத்தாய் அடைந்த உவகை, அவனை ஈன்ற பொழுது அடைந்த உவகையினும் பெரிதாயிருந்தது (புறம். 277:2-4). விடியற் காலத்தே ஒருகண் மாக் கிணை ஒலிக்குமாறு இசைத்து, அவன் தந்தையின் வஞ்சித்துறைப் பாட்டினைப் பாடிய அளவில், அகமலி உவகையோடு சோழிய ஏனாதித் திருக் குட்டுவன் அப்புலவருக்கு வேழம் நல்கினான் (புறம். 394:6-12). அறங்கூறவையம், அச்சமும் அவல மும் ஆர்வமும் நீக்கிச் செற்றமும் உவகையும் செய்யாமல் நெஞ்சினைப் பாதுகாத்துத் துலாக் கோலைப் போன்ற நடுவு நிலைமையைக் கொண்டி ருந்தது (மது. 489-492). நன்னனது மலை நாட் டகத்தே செல்வோர்க்குக் குறமகளிர் அகமலி உவகை யராய், விருந்தினரைப் பெற்றோம் என்னும் ஆசை யோடு தத்தம் பிள்ளைகளைக் கொண்டு முறை சொல்லித் தடுத்து மனைகள் தோறும் சோற் றுணவை நல்குவர் (மலை. 182-185). குடக்கோ இளஞ்சேரலிரும்பொறை தன்னைப் பாடிய பெருங் குன்றூர் கிழாருக்கு, மருளிலார்க்கு மருளக் கொடுக்க வென்று உவகையின் முப்பத்திராயிரம் காணத்தோடு பிறவற்றையும் நல்கினான் (பதி.ப. 9. உரை). வயிரிய மாக்கள் பசிநீங்க அணிந்த கலன்கள்

ஒலிக்க மிகவும் உவந்து நெஞ்சு மலி உவகையராய் உண்டு ஆடுமாறு, பலயானைச் செல்கெழு குட்டுவன் சிறிது கள்ளுண்டு மகிழ்ச்சிபெற்ற காலத்தும் பெரிய கலன்களை அவர்க்கு வழங்குவான (பதி. 23:6-10). துழாய மாலை அணிந்துள்ள (திருவனந்தபுரத்து) திருமாலைத் தம் கைகளைத் தலைமேலேந்தி வேண்டியும், மணியடித்துக் கொண்டு சென்றும் உண்ணா நோன்பொடு நீர்த்துறையில் ஆடியும் அவர் சேவடியைப் புகழ்ந்து வணங்கியும் நெஞ்சுமலி உவகையராய மக்கள் தத்தம் ஊர்களுக்கு மீண்டு செல்வர் (பதி. 31:4-10). மகளிர் இழையணிந்து சிறக்குமாறும் பாணர் பூச்சூடுமாறும் இளையர் மென்சொற் பொருநதி நெஞ்சுமலி உவகையராய வாழ்த்துமாறும் களங்காயக் கண்ணி நார்முடிச் சேரல் அவர்கட்கு யானைகளை நல்குவான் (பதி. 40:22-26,31). பரதவ மாக்கள், துணைபுணர் உவகையராய்க் கிளையுடன் கூடிக் கடலில மீனை முகந்து, நெடிய கயிறு கட்டிய குறுங்கண் வலையினை இழுத்தனர் (அகம். 30:1-4). தலைவன் வரைவு மலிந்து வந்ததமை அறிந்த தோழி, 'நாட்டில் வறுமை மிகக் கோடை நீடிய காலத்தில், பெரிய குளங்கள் நிறையுமாறு இரவில் பெரும்பெயல் பொழிய விடியற்காலையில் அதனைக் கண்ட பல்லோரும் உவந்த உவகையெல்லாம் என்னுள்ளே ஒருசேரப் பெய்து வைத்தாற் போன்றிருந்தது' என்று தான் எய்திய மகிழ்ச்சியைத் தலைவியிடம் கூறினாள் (அகம். 42:5-14). பரத்தை மனைக்குச் செல்லும் பாணன் தெருவில் பசு பாய்ந்தமையால் கலக்கமுற்று யாழைக் கீழே போட்டுத் தலைவியின் மனையுட் புகுந்தான். அது கண்ட தலைவி தானடைந்த உவகையை மறைத்து அவனிடம் சென்று 'உம்வீடு இதுவன்று, அது வாகும்' எனக் கூற அவன் மயங்கிய நெஞ்சத்தனாய்த் தொழுது நின்றான் (அகம். 56:10-16). வேட்டுவ இளையர், காட்டில பெண்யானை அலற யானைக் கன்றைப் பிரித்துக் கொண்ட உவகையராய்ச் செருக்கு மிக்கு அதனைக் கடம்பினது நாரால் கட்டிக் கொணர்ந்தனர் (அகம். 83:3-6). ஓரிற கூடிய உடன்புணர் கங்குலில், கோடிப் புடவையில் ஒடுங்கிக் கிடந்த தலைவியின் முகத்தினை மூடிய ஆடையை விலக்கி, 'நின் உள்ளம் நினைத்ததனைக் கூறுக' எனத் தலைவன் வினவிய போது தலைவி, இனிய இருக்கையில் அகமலி உவகையளாகி விரைந்து தலை வணங்கினாள் (அகம். 86:20-28). கானவன வெண்கடம்ப மரத்தினைச் சார்ந்துநின்று அம்பினை மார்பில் செலுத்தி யானையைக் கொன்று அதன் வெள்ளிய கொம்பினைக் கொண்டுவந்து தன் புல்வேய்ந்த குடிசையில் புலால் மணம் வீச ஊன்றி முற்றத்திலுள்ள பலாவின் பிழிந்த சாற்றையுண்டு உவகையுற்றான் (அகம். 172: 6-10). மாலையில், தழையினைத் தின்று வெறுத்த துள்ளு நடையுடைய பெண்மான்கள் ஆண்மானுடன் கூடிய உவகையவாய இடையூறின்றித் துள்ளித் திரிந்தன (அகம். 234:10-11). 'நாம வினை முடித்தமையால் விரைந்து தேரைச் செலுத்துக' எனக் கூறிய அளவில், யாம் உவகை பெறுமாறு காலந் தாழ்க்காது, குதிரையின் உள்ளம் அறிந்து ஊர் அணித்தாகத் தேரினைச் செலுத்திக் கொண்டு வந்தாய் என்று தலைவன் தேர்ப்பாகனிடம் கூறினான (அகம். 254:11,17-20). இருளில மின்னொளிர் எஃகம் வழிகாட்டத் தமியனாய வந்து, குளவியும் கூதளமும் கொண்ட கண்ணி சூடிக் குறிய இறப்பினையுடைய நம் குடிசையிடத்தில மெய்ம்மலி உவகையனாய்த் தலைவன புகுந்த நிலை கண்டு, அவனை முருகன என எண்ணி முகமன் கூறிச் செந்தினையை நீரொடு தூவி அன்னை பரவினாள (அகம 272 5-15). கயல் மீனைப் பெறுவதனைக் கருதிக் கொக்கின் சேவல, கள்ளுண்ட உவகைமிக்க உழவா காஞ்சி மரத் துண்டுகளை நட்டுக் கருப்பங் கழிகளைக் குறுக்கே வைத்துக் கட்டி வயலகளில தேக்கியுள்ள அணைமேல வழியும நீரினை நோக்கி யிருக்கும் (அகம. 346:3-11). பழையன மாறன எனப்பானைக் கூடல் நகரத்தே, கிள்ளி வளவன போரில சாய்த்துக் குதிரை யானைகளைப் பற்றிக் கொண்டு பகைவர் ஊரினைக் கொள்ள, கோதை மார்பன உவகை எய்தினான (அகம. 346.19-25). 'புலவர் புகழும் குறியாகிய விழுப்புண் கொண்ட அகன்ற மார்பில சந்தனமும நுண் பொடியும் அணிய வென்றிகொள உவகையோடு நீ மனையின்கண் புக விரும்பியமையால, தலைவியின நுதற பசப்பு இனிதது நீங்குவது எங்கே' என்று வினைமுற்றிய தலைவனிடம் உழையர் கூறினா (அகம. 354 8-14). பகைவர்க்கு உவகை உண்டாகவும் எமக்குத் துன்பமுண்டாகவும் அறிஞர் இவ்வாறு வருவரோ என்று இரவுக் குறியினை விரும்பிய தலைவனுக்குத் தோழி கூறினாள் (குறு. 336:1,2). மகளிர் தம் கை கருவியாக நெய வார்த்து ஏற்றிய விளக்கு துன்பததை எழுப்பும் மாலைக் காலத்தில தலைவர் வந்தாராக, விருந்து செய்து உவகையோடு கண்கலங்கியதால விழும் நீர்த் துளியைத் துடைப்போரை அறியேம் என்று தலைமகள் ஆற்றாமை மீதூர்ந்து கூறினாள் (குறு. 398 3-8). செந்நாய் மரையாவினைக் கொன்று தின்று எஞ்சிய மிச்சில் சுரஞ் செலவோர்க்கு உணவாகும் அரிய வழியிற் செல்லுதல நுமக்கு மெய்ம்மலி உவகையாகின்றது என்று செலவு அழுங்குவிக்கும் தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 43:3-7).

எமர், கோடுகளை யுடைய சுறா மீன்களைப் பிடித் தலானாகிய உவகையராய் மேலும் வேட்டைமேற் செலலாதிருந்து தம்மனையின்கண் தங்கிவிட்டனர் என்று தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித் துக் கூறினாள் (நற். 49:5,6). கானவன் அம்பு செலுத்திக் கொன்ற முட்பன்றி ஏற்றினைக் கைக் கொணடு வேட்டையிற் பெற்ற வென்றியாலாகிய உவகையனாய் நாய்கள் குரைத்து விளையாடத் தன் குடிசைக்குச் சென்றான (நற். 285:37). தோழி யும் தலைவியும் தலைவனையும் அவனுடைய மலை யையும் பாட, அவன் விருப்புற்றுக் கேட்டு மெய்ம் மலி உவகையனாய வரைவொடு வந்து சேர்ந்தான் (கலி. 40.30-34). புதல்வன், சினக்கக் கருதினவரை உவகைக்கூத் தாட்டுவிப்பான் (கலி. 85:34). பெரிய குடியிற் பிறந்த ஆயர் ஒருங்கு நிறைந்த செருக் குடைய உவகையராய்ச் சேரக் கூடி, ஏறுகளைத் தொழுவினிடத்தே புகுதவிட்டார் (கலி. 105:5-8,22). தலைவி தோழியிடம் தோழியே, 'தன் கண்ணைக் கோலாகக் கொண்டு என் தாய் வருத்தியதற்கு, இவ்வூர் பொதுவனோடு எனக்குக் கூட்ட முண் டென்று எண்ணி அலரை உண்டாக்கியது; இததன் மையதாகிய உவகை வேறு யாதுளது' என்று கூறி னாள் (கலி. 105:61-65). வையையில் வந்த புது வெள் ளம் ஆடல் அறியா அரிவை போலவும், ஊடல் அறியா உவகையள் போலவும் தான் விரும்பிய இடங்களி லெல்லாம் பரவிச் சென்றது (பரி. 7:17-19). வையையிற் கணவரொடு நீராடிய மகளிர்க்குப் பெண்கள் உண்டாக்கிய அமிர்தம் போலும் காம பானத்தோடு, சமைக்கும் மடையர் அமைத்த உவ கையைச் செய்யும் அமிர்தத்தைக் கொடுக்கத் தம் கணவர் மார்பினவழி வந்த செல்லலை அவர் நீங்கி னர் (பரி. 8:120-123). முருகனைக் காணப் பாணடிய னோடு வந்த மக்களிற் சிலர் தலையில் துகிலணிந் திருந்தனர்; அவர் முருகனைத் துதித்த நாவின ராய்ப் பெருகிய உவகையோடு வந்தனர் (பரி. 19: 25,26). புதுவெள்ளம் வர நீரணி கொணடது வையை என்றெண்ணி விரும்பி, மதுரையிலுள்ளார் உவகை தலைக்கூடி விளையாட்டிற்குரிய அணிகளை மேற்கொண்டனர் (பரி. தி. 2:4-6,10).

2. மகிழ்ச்சியில் ஆரவாரம். நன்னனுக்குப் புதிதாகக் கொடுக்கச் சிற்றரண்களிற் கைக்கொண்ட பொருள் அமையும் எனக் கருதிச் சென்று அரிய குறும் பினை அழித்த கானவரின உவகை - மகிழ்ச்சி ஆர வாரம் - ஏனைய ஆரவாரங்களோடு மலையிடததது மிக்கிருநதது (மலை. 318,319).

**உவணம்** - கருடன். திருமால், செவ்வாய் உவணத்து - கருடன்பொருந்திய - உயர் கொடியினை யுடைய வர் (பரி. 2:60). திருமாலின் உவணம் விடமுடைய அரவின் உடலினையும் உயிரினையும் உண்ணும் (பரி. 4:42).

**உவமம்** - உவமை (ஒப்பு). இராசசூயம் வேட்ட பெரு நற்கிள்ளி ஏனைய வேந்தர்கட்கு உவமம் - உவமை- ஆவானேயன்றி, அவனுக்குப் பிறர் உவமம் ஆதல் இலர் என்று கூறிச் சான்றோர் பாராட்டினர் (புறம். 377:10, 11). பல வகைப்பட்ட செய்திகளை யும் உவமம் காட்டி, நுணணிதின் உணர்ந்த கூரிய அறிவினையுடைய சித்திரகாரிகளும் பிறரும் மதுரை அங்காடியில் திரண்டிருந்தனர் (மது. 516-518). பெருஞ்சேரலிரும் பொறையினை அரிசில் கிழார், 'அறிவுடையோர் எண்ணினாலும் அறிவில்லா தோர் எண்ணினாலும் பிறர்க்கு உன்னை உவம மாகக் கூறுவதல்லாமல் நினக்குப் பிறரை உவம மாகக் கூறுவதற்கு இயலாதவாறு ஒப்பற்ற பெரு மையை யுடைய அரசே' என்று விளித்தார் (பதி 73:1-3).

**உவர்** – 1. இன்சுவை. மலர் மாலையணிந்த கூந்தலின் மணத்தைப் பெற்று யாம் அவளுடைய ஆகத்தை ஒரு சேர அணைத்துக் கொண்டு மிக்க உவருடைய – இன்சுவையுடைய - கையணைப்பினின்றும் நீங்க மாட்டாதவராக உள்ளேம் என்று தலைவன் கூறி னான (நற். 52:2-5).

2. உவர்ப்பு. கல்லை உடைத்துச் செய்த வலிய உவர் நீர் - உவர்ப்புநீர் - கிணறுகளையும் வில்லைக் கொண்டு வேட்டையாடி வாழும் வாழ்க்கையையும் உடையவன் சீறூர்க்குரிய தலைவன் (புறம். 331:1, 2). கருங்கை ஆடவர், தீப்பொறி உண்டாகப் பாறை களை வெட்டிக் கல்லுதல் செய்து அமைத்த உவர் பொருந்திய நீர் உடைய கிணற்றில் நீரை உண்ணக் கொங்கரது ஆக்கள் செல்லும் (அகம். 79:1-6).

3. உவர்நிலம். உமணர் உவரிடத்தே - உவர்நிலத் தில் - விளைந்த உப்பின் விலையைக் கூறிப் புழுதி யுடைய நெடிய வழியில் அதனைக் கொண்டு செல் வர் (அகம். 390:1-3). உவரில் விளைந்த உப்பின் குன்று போன்ற குவியலை மலைநாட் டகத்தே கொண்டு போய் விலை கூறி விற்கும் நிலையாத வாழ்க்கை உடையவர் உமணர் (நற். 138:1-3). உழாது விளைக்கும் உழவராகிய பரதவர் உவர் வீளை உப்பினை, உமணர் வரும் காலம் நோக்கிக் கானலில் குவடாகக் குவித்து வைத்துக் காவல் புரி வர் (நற். 333:1-3).

4. களர். நீர்வற்றிய குளததிற் பெய்தும் அகன்ற விளைநிலத்தின் கண்ணே சொரிந்தும் உவர் - களர் - நிலத்தை நிறைத்தும் மாரி வரையாது பொழி யும் மரபுடையது (புறம். 142:1-3). உவர்நிலம் காண்க.

5. வெறுப்பு. உவர் - வெறுப்பு - நீங்கிய கற்பினை யுடைய தலைவியை உயிர்க்கு உடம்பாக அடுத்தவள் என்று தலைவன் குறிப்பிட்டான் (அகம். 136:19).

6. உப்பு. உவர் - உப்பு- பூத்த களர்நிலம் மண ணா லாகிய தயிர்த் தாழியில மததாற் கலக்கப் பட்ட போது வெணணெய திரளாமல் சிதறிக் கிடப்பது போல இருநதது (நற். 84:6-8).

**உவர்க்கண்ணூர்ப் புலலங்கீரனார் - புலவர்.** இவரது ஒரே பாடல அகநானூறு 146 - ஆம் பாடலாக அமைந்துள்ளது. மருதத் திணையில தலைமகள் கூறறாக அமைந்துள்ள இபபாடலில, 'வலிமிகு முனபின அணணல ஏறு, பனிமலர்ப் பொயகைப் பகல் செல மறுகி மடக்கண எருமை மாண நாகு தழீஇப் படபபை நண்ணிப பழனத்தலகும் கலி மகிழ ஊரன்' எனனும் பகுதியிலமையும உளளு றைப பொருளால தலைவனின பரததைமை புலப படுமாறு காட்டியிருபபதும அததகு தலைவன கூற் றினை 'மாயப பரத்தன வாயமொழி' எனறு கூறி யிருபபதும நயமுடையனவாக உள்ளன.

**உவர் நிலம் - களர் நிலம்.** வற்றிய குளத்திற் பெய் தும் அகன்ற விளைநிலத்தே சொரிந்தும் களர் நிலத்தை - உவர் நிலததை – நிறைத்தும் எவவிடத் தையும் வரையாது பெய்யும் இயலபுடைய மழை, பேகனுடைய கொடைமைக்கு உவமை (புறம். 142:1 - 5). உவர் - 4 காண்க.

**_வர்ப்பு - உவர்மண.** தலைவன் பிரிந்து செல்லும் காட்டிடம் வண்ணார் எடுககும் வெவ்விய உவர்பபு - உவர்மண - ஒழியக களர்மண் பரநத தாகிய கறகளை இடையிடையே கொணட இடங் களைக் கொணடிருநதது (அகம். 89:7-9).

**உவரி - உப்புநீர்.** எயினர் குடிப் பெண்டிர், ஆழ மான கிணற்றில் குறைந்த அளவில ஊறும் உவரியை-உபபுநீரை-கொணடு வந்து சமைத்தனர் (பெரு. 94-99). 'பாலை நெறியில் உளள நீர் வறறிய கிணறறைத தலைவன் தோணடுதலால் ஊறிய உவரியை என் மகள் வெப்பப் பெருமூசசுடன, பிறைநுதல் வியர்ப்ப உணடனளோ' என மகட் போககிய செவிலி வருநதினாள் (அகம். 207: 11-13).

**உவல் - 1. சருகு.** நிறைநத நடுகறகளும் வீழ்ந்து கிடக்கும் உவலும் - சருகும் - பொருந்திய பறந் தலைகளை உடையது வனபுலச் சீறூர் (புறம். 314: 3,4). போரிற்பட்ட மறவரின உடமபை உவலிட்டு மூடி அதன்மேல கற்களைக் குவித்து அமைத்த பதுக்கைகள கேடயப்படை யுடைய மறவர் அணி வகுத்தாற் போலத் தோன்றும் (அகம். 67:13,14). ஆறலைப்போரின் அம்பு பட்டு மாய்ந்த மறவரின் உடலைப் புதைத்து உவலிட்ட பதுக்கைகள் பாலைப் பரப்பில் அளவிறநது காணப்படும் (அகம். 109:7-9). பாலை நிலததில இறந்த வழிபபோக் கரின் உடலை உவலிட்டுச் செயறகையாக அமைத்த பதுக்கைகளின் நிழலில் அங்குள்ள யானைகள தங்கின (குறு. 77:2-4). மறவரால மடிந்த ஆறுசெல் வம்பலா உடலமீது உவலிடடு அமைதத பதுக் கைகள் ஊர்போலத தோனறும (குறு. 297.3,4). அகிலைத் தீயிட்டுக் கொளுததும கானவன் அங்குள்ள உவலில் முதற்கண தீயிடுதலால உண டாகும் புகை இயங்கும மேகம போல் தோனறும் (நற். 282:7-9).

2. தழை. பகைவரை அழித்து நிரைமீட்டு வநத வீரரின இளைபபை நீககுதறகுப பசுமையான உவல-தழை-கொணடு வேயநத பநதரின கீழ இள மணல் பரபபவும் நறவு பிழியவும ஆட்டுவிடை வெட்டவும மதுரைப் பேராலவாயார் வேணடுதல் (புறம். 262:1-5). உவலை-2 காணக.

**உவலை - 1. இழிவு.** உவலை - இழிவு - மிகாமையும கவலை இலலாமையும் வாயநத சிறந்த மனததை யும் நல்ல புகழையும் பெற்ற கபிலன செலவக கடுஙகோ வாழியாதனைப பாடிப பெற்ற ஊர்கள் பலவாகும் (பதி. 85.11-13).

2 தழை. இடையன் பசிய இலையால தொடுககப் பெற்ற உவலைக கணணி - தழைமாலை - அணிந திருந்தான் (புறம. 54.10, 11). உவலை விரவித் தொடுத்த கணணியணிநத துடியன துடிகொட்டி வெட்சிபபோர் எழுசசியைத தெரிவிததான (புறம். 269·6). பேரியாறு உவலையை மேலே போகாதது வருகினற வெள்ளத்தினது பூசலலலது வேறு பூசல பலயானைச செலகெழு குட்டுவன நாட்டில இலலை (பதி. 28.10-14). உவலையால வேயநத கூரை ஒழுங் குற அமைநதுள்ள தெருவிடதது நாறசந்தியான முற்றதநதே யானை காவலாக நினறது (முல்லை. 29-31). குன்றததுப் பாலையில மான தோலாகிய படுக் கையினையும உவலைக் கணணியையும் உடைய இளைய மறவர் சிலையுடைக் கையராயப் பல வழிகள் கூடுமிடத்தே ஆறலை கள்வர் வாராமல காததனர் (மது 310-312). நீா ஊராமையின கிணறு வெட்டுவோர்விட்டுச் செனற உவலை மூடிய கிணறுகளைத் தம்மை அகப்படுத்த வேடர் அமைதத குழியெனக கருதிய யானைகள அவறறைத தூர்க் கும (அகம்.23:22-36). நிரை மீட்டலில வெற்றிபெறற கரந்தைவீரர் உவலைக் கணணியராயத் தாளத் துடன் ஆடிப் பின்னர் ஊன் புழுக்கு உண்டனர் (அகம்.159:7–10). ஆறலைப்போர் கழுகினது பெரிய

சிறகினை வைத்துக் கட்டப்பெற்றதும் வண்டுபோல் ஒலித்து விரைந்து செலலும இயல்பினது மாகிய அம்பினை யுடையவர்; உவலைக் கணணியைத் தலையில் சூடியவர் (அகம். 291:10-13). 'தலைவன் நாட்டிலுள்ள உவலை மூடிய கிணற்றிலுள்ளதும் மானுணடு எஞ்சியதுமாகிய கலங்கல் நீர் தேன் கலநத பாலினும் இனிது' என உடன்போக்கிற் சென்று மீணட தலைவி கூறினாள் (ஐங்.203). உவல் - 2 காணக.

**உவவு** - நிறைமதி நாள். பெருநாளின்கண் உவவு - நிறைமதி நாளில-வநது கூடிய ஞாயிறும் திங்களுமாகிய இரு சுடரும் தம்முள் எதிர்நின்று பார்த்து அவற்றுள் ஒரு சுடர் மாலைப் பொழுதில் மலைக்கண ஒளிததாற் போனறு இரு பெருவேநதர் பொருத விடத்து ஒருவர் தோற்றார் (புறம். 65.6-10). உவவு நாளில பரதவர் கடலில மீன் பிடிக்கச் செல்லாது கள்ளை யுண்டு தம்மகளிருடன விளையாடினர் (பட். 89-93). உவவு நாளிற் கடல் ஆரவாரித்தெழுந்தாற் போன்று ஊரார் கூறும் அலர் மன்றினகண் பரவியது (அகம். 201:9, 10). உவவுமதி, உவா - 1 காண்க.

**உவவுமதி** - நிறைமதி. பாண்டியன் கருங்கையொள் வாட் பெரும்பெயர்வழுதி உவவுமதி - நிறைமதி - போன்ற வடிவுடைய வெண்கொற்றக் குடை உடையான் (புறம். 3:1). விறலியும் பாணனும் விசும்பின் உச்சிநினற உவவுமதி கண்டு, இது சோழன் குராப்பளளித் துஞ்சிய பெருந்திருமா வளவனின் குடையை ஒக்கு மென்று கருதித் தொழுதனர் (புறம். 60:2-6, 12). மகளிர் மதுவை வார்த்துத் தம் கையில ஏந்தியுள்ள வள்ளத்திற்குப் பாம்பினால் பற்றப்பட்ட உவவுமதி உவமை (பரி. 10:75,76). உவவு, உவா - 1 காண்க.

**உவா** - 1. வளர்மதி. கானவர் கையிலுள்ள நாணேற்றிய வில்லுக்கு உவா - வளர்மதி - உவமை (புறம். 374.10, 11). வையை நீர் நாளுக்கு நாட் பெருகி உலகிற்குப் பயன் தந்தது; நீர குறைந்த காலத்தும் எட்டாம நாள் நிறை உவாப் போல ஒரு பகுதி குறைவதனறி இருணமதி போல முற்றுங குறைபடுதலைக் கணடாரில்லை (பரி. 11:33-38). உவவு, உவவு மதி காணக.

2. யானை. பெருஞ்சேரலிரும்பொறை, தன்னொடு இணங்கிவாரா மனனர்கரிய முரசின் கண்ணைக் கிழித்து அவர்தம் அரசு உவா-யானை-கதறும்படி அதன் கொம்பை வெட்டிச் செய்த அரசு கட்டிலின் மேலிருந்து அயிரை மலைக்கண் உள்ள கொற்றவைககுப பலியிட்டான் (பதி. 79.12-18). 'நின்னைக் கூடிப் பின்னர் வருந்துகின்ற பரத்தையர் வீதி வழியே உவாவைக் கொண்டுபோய் அஃது அழகு பெறும்படி நீ ஏறினாய்' எனப் பரத்தை வழியொழுகி யானை கணடு வந்தேன் எனக் கூறும் தலைவனைத் தலைவி இடித்துரைத்தாள் (கலி. 97: 24, 25).

**உவியல்** - அவியலுணவு. மருத நிலத்துழவர், பகடுகளை முல்லை நிலததில மேய்தற்கு விட்டுக் குறுமுயல் இறைச்சியுடன் வாளைமீன் உவியலை - அவியலுணவை - பழைய சோற்றுடன் உண்டனர் (புறம். 395:1-5).

**உழக்கு** - முகத்தலளவு கருவி. வண்ணங்களைக் கொணடு, மூங்கிலினாலாய உழககாலும நாழிகையாலும் குதிரையுடலில் சிததிரம அமைத்தல் (கலி. 96:27, 28).

**உழலை மரம்** - உழலை கோக்கும் மரம். உழலையை (குறுககு மரத்தை) இருபக்கமும் இழுத்துப் போடு மாறு துளைகளுடன் தொழுவத்தமைந்த மரம. தத்தம் இனங்களைப் பிரிக்கும் இடையர்கள் ஓடு மாறு ஏறுகள் மிதித்தன; ஓடாமல் நின்றவரைக் கொம்பினால் குத்தி உழலை மரம் போல துளைத்தன (கலி. 106:21-23).

**உழவர்** - உழுதொழில் செய்வோர். கொழுவிய மீனையும் விளைந்த கள்ளையும உடைய சோழன் முடித்தலைக் கோப்பெருநற் கிள்ளியின் நாட்டில் உழவர் - உழுதொழில் செய்வோர் - வயவிடத்துள்ள மயில்கள் உதிர்த்த பீலியை நெற்சூட்டுடன திரட்டினர் (புறம. 13: 10-13). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் நாட்டு உழவர் படைவாளினால் மறிக்கப்பட்ட ஆமையை வன்புலத்துள்ள விருந்தினர்க்கு அளிபபர் (புறம். 42: 13, 14, 17). சேரமான பெருஞ்சேரலாதன் புறப்புண் நாணி வடக்கிருந்த பொழுது, அவன் நாட்டுறையும் பிற மக்கள் துன்புற்றதைப் போல் உழவர் வருத்த மிகுதியால் உழவு செய்தலை மறந்தனர் (புறம். 65: 4). பாரியின பறம்புமலை உழவரால் உழுது விளைக்கப்படாதனவாகிய மூங்கிலின் நெல், பலாப்பழம், வள்ளிககிழஙகு, மலைததேன் என்னும் நான்கு விளைபொருள்களை உடையது (புறம். 109: 1-8). கரும்பனூர் கிழான் நிரம்ப வளம் பெற்ற கொடைஞ னாதலால் நாடு மிக வறட்சியுற்று விழா நிகழாக் காலத்தும் அவன் நாட்டு உழவர், கெடிற்று மீனுணவுடன கள்ளும் பெறுவர் (புறம். 384:8,9). மருத நிலத்து உழவர் ஆக்களை முல்லை நிலத்தில் மேயவிட்ட பின்னர்க் குறுமுயலின் சூட்டிறைச்சியையும் வாளைமீன் அவியலையும் பழஞ்

சோற்றுணவோடு உண்பர் (புறம். 395 1-5). வரகின் வைககோல வேயநத கூரைமீது மணமிக்க காட்டு மலலிகை படர்நதிருக்கும வீட்டில தஙகி ஏனல உழவர் தம்பால வரும விருந்தினர்ககுத தினை மாவை அளித்துண்பர் (பதி. 30:22-24). வயலிலுள்ள உழவர் தணணுமைப் பறையை அடிததலால எழும் ஓசையைப பழனத்திலுள்ள மயில மேகததின ஓசையெனறு எண்ணி ஆடும (பதி. 90.41, 42). வலிய பகட்டினை யுடைய உழவரின தஙகை உளளே யிருந்து தன பிள்ளைகளைக் கொண்டு சிறுபாணர் அனைவரையும் போகாது தடுத்து நிறுததி விருந் தளிததாள் (சிறு.190-195). வீடு நிறைநத உணவினை யுடைய முல்லை நிலத்து உழவா உழவுத தொழிலில் பயினற பகடுகளைப் பூட்டி உழுதனர் (பெரு. 197, 198). தென்னங் கீற்றால் வேயப்பட்டதும் மணம் நாறும் பூந்தோட்டங்களை யுடையதுமாகிய உழ வரின மனையில் தங்கிச் செலலுமாறு பெரும் பாணன் ஆற்றுப்படுததப் பெற்றான (பெரு. 353-355). காவிரிப்பூம் பட்டினத்திலிருநத வணிகா, உழவுத் தொழிலை விரும்பும் உழவரது நெடிய நுகத்திற் றைத்த பகலாணி போல நடுவுநிலை யெனனும் குணம் நிலைபெற்ற நல்ல நெஞ்சினை யுடையோர் (பட். 205-207). பிறர் பொருளை விரும் பும் பரிசிலராகிய உழவர் தாம பிறரைக் கூறும் புகழாகிய விதையை விதைபபர் (மலை. 60). வலை யால கடலில் முகநது வநத மீனகளைத் தம்மிடம் வந்து இரந்தோரின் வறுங்கலம நிறையச் சொரியும பரதவர் செயலுக்குப் பெருஙகளததில் நெல்லைத் தொகுத்துவைதது இரநதோர்ககு வழங்கும் உழவர் செயல் உவமை (அகம். 30: 8, 9). வைகறையில் உழ வுக்குரிய ஆள் அழைக்கும் ஆரவாரத்தினை யுடைய உழவர், விடியலில் வைக்கோலைப பிரித்துக் கடா விட்டு, நுணணிய கூளங்கள் பரந்து மேகம் போல திசையைமறைக்கும் வண்ணம் நெற்பொலியைத் தூற்றினர், புதுககுடத்திலமாங்காயினால் அமைதத புளிப்பதன் அமைந்த சாரத்தைத் தொழில் செய் தமையால் வந்த மயக்கம் தீரப் பசிய பனங்குடையி லிட்டுப் பருகினர்; கொளளும் பயறும் பாலுடன கலந்து ஆககிய வெள்ளிய அவிழுடன் கூடிய மித வையை வேண்டுமளவு உணட பின்னர் நெற்குவி யலை நெற் கூடாகச் சுற்றினர்; பின வெப்பம் தீர மருத மரத்தின் நிழலில எருதொடு தங்கினர் (அகம். 37:2-16). நெற்பயிரினை நட்ட கழனியிலுள்ள ஏர் களைத் தோட்டத்திற்குக கொணர்ந்து மண் பிற ழும்படி, அரிதாளையுடைய நிலத்தைப் பிளந்து உழுத உழவர் எழுப்பும் ஓதைத தெள்விளி இடந் தொறும் பரவியது (அகம். 41:4-7). ஆறலைப்போர் தம் தொழிலுக்கேற்பக் காட்டிடத்துள்ள கவர்த்த நெறிகளை விரும்புவதன்றி மழையை விருமபாத விலலேர் உழவ ராவர் (அகம. 193.1,2). வரகின கதிர்களை உண்ட மயில, உழவர் கூழ உண்டறகு நிழலாக வெட்டாமல விட்டு வைதத குருநதமரத் தின் கிளையிலிருந்து கிளியோட்டும் மகளிாபோல ஒலி யுண்டாகுமாறு அகவும் (அகம. 194:10-15). களிறு உராயுநதொறும் மழையொடு விழும் பனிக் கட்டிபோலப் பாறையில பரவிய வெணகடப்பம்பூ, உழவர் பாறையில் பரபபிய வெணணெல விதை போல வாடிக் கிடக்கும (அகம். 211.4-6). கடலாடு மகளிர் கொய்து வநத புலிநகக் கொன்றைப பூவி னையும் உழவர் வயலிலிருந்து பறிதது வநத குவ ளைப் பூவினையும் முல்லைப் பூவுடன சேர்த்துக் கணணியாகக் கட்டி இளைய கோசர் விளையாடி னர் (அகம். 216:8-11). பக்கத்தே யுள்ள கழனியில உழவர் எழுப்பிய ஆரவாரத்தினை அஞ்சிய மயில் தெய்வத் தன்மையுடைய குனறிடததே பொலிவுற வந்து தஙகும (அகம். 266:16-19). மழை பெய்து நிலம குளிர்நது காடு தழைத்தமையால உழுதொழி லுக்குரிய இனததை ஆராயும் உழவர் இனகுரலில பாடி மகிழநதனர் (அகம். 314:2-4). களளினை உண்டு செருககும் உழவர் காஞ்சி மரத்தின குறிய துண்டுகளை நட்டுக கருமபினைக குறுககே வைத்து அடைத்து வயல்களில நீரைத தேககினர் (அகம. 346.5-8). களமர் நெல தூற்றிய போது எழுந்த துரும்பு நெயதல நிலததிலுள்ள உப்பளப் பாததிகளில வீழநது பரத்தலின வெளளுப்புக் கெடப் பரதவர் கழனி உழவரொடு மாறுபட்டனர் (அகம். 366:4-8). கமழ்கினற காஞ்சிப பூக்களில் உள்ள பசிய பூந்தாதுகள் தஙகள் மேலே படும்படி அமமரத்தின கிளைகளை உழவர் வளைத்த னர் (குறு. 10.2,3). பழங்கொலலையை யுழுத உழ வர் காலையில விதையெடுததுச் சென்ற வட்டில நிறைய மாலையில முல்லைப் பூவைக் கொணர்ந் தனர் (குறு. 155:1-3). விலலேர் உழவரின் குடியிருப் புடைய சிற்றூரில் உள்ள சிறுவா வேபபமர நிழ லில் அரங்கிழைத்து நெல்லிக்காயை வட்டாகக் கொணடு ஆடினர் (நற். 3·2-5). உழவரின இள மகள் குருககததி மலருடனே விரவிய சணபக மலரையும் விலைக்குக கொள்வீரோ எனக் கேட்டு வண்டு சூழும் மலர் வட்டியைக் கையிற் கொணடு திரிந்தாள் (நற். 97:6-9). நல்ல எருது வினை செய்தற்கு ஏற்ற நிலைக்கு ஒவ்வாதா யின் உழவர் அதனைப் புல்லையுடைய தோட்டத் திலே தொழில் செய்யாதபடி விட்டொழிவர் (நற். 315:4,5). உழாது உவர்நிலத்தில் உப்பை விளை விக்கும் உழவர் பரதவராவர் (நற 331:1). திரண்ட கோட்டினையுடைய வாளைமீன சேறறையுடைய

வயலில் ஓடியபோது செவ்விய பலபடியாக மறித்துழுகின்ற உழவர் தம் கைக்கோற் கொண்டு அவ் வாளைமீனைப் புடைத்தனர் (நற். 340:4-7). வித்திய உழவர் தவறாமல் நெல்லொடு இல்லம் வருதற்கு ஏற்ற வளம் பொருந்திய ஊரினையுடைய தலைவன பொதுமனை வாழ்க்கை யொழிந்து தன் மனையில் வாழ்வானாக என நாங்கள் விரும்பினோம் எனத் தோழி புறத்தொழுக்க முடைய தலைவன்பால் கூறினாள் (ஐங். 3:3-5). தம் செவிகள விளைநிலமாகச் சான்றோர் கூறிய செய்யுட்கள வளர்க்கும் நீராக அறிவினை யுடைய நாவாகிய ஏராலே உழுதுண்ணும் உழவரின (புலவரின) புதிய கவிதைகளைக் கொள்ளை கொண்டுண்ணும் மதுரைக்குத் தலைவன் பாண்டியன் (கலி. 68:3-5). உழவர் மகிழ்ச்சியின நிலைக்குமாறு வையையில புதுப்புனல் வந்தது (பரி. 7:16). கரு முதிர்ந்த வாளை மீனபோல விலாப்பருக்க உண்ட உழவர் தம் சுற்றத்துடன கூடித் தொழில் செய்யப் புனற் கண பரந்தனா (பரி. 7:38,39). திருமாலுக் குரிய இருந்தையூரின ஒருபால் மென்புலத்திலும வன் புனத்திலும் வேளாண்மை செய்யும் களமரும் உழவரும் வாழும் வீதி இருந்தது (பரி. தி. 1:26,27). வயலில் விளையும் வருவாயை அறியாதவனாயத தளர்ந்த குடியுடைய உழவன விதையை உண்டாற போலக் கூற்றுவன், அதியமான் தகடூர்பொருது வீழ்ந்த எழினியின் ஆருயிரை உண்டான் என அரிசில் கிழார் கையற்றுரைத்தார் (புறம் 230:11-14). ஈரப்பருவம கழியுமுன உழுவதற்கு உதவினவாயினும் பல எருதுகளுள்ளும நல்ல எருதுகளையே உழவன் வேறு வேறாக ஆராய்ந்து தேர்ந்து கொள்வான (புறம். 289.1-3). ஈரம்பட்ட செவ்வியை யுடைய பசிய புனத்தையுடைய ஓரேருழவனைப் போலத் தன நெஞ்சம் பெரிதும் விரைவுற்றதாக வினைமுற்றிய தலைவன் பருவ வரவு கண்டு கூறினான் (குறு. 131:4-6). ஈன்றணிமை யுடைய எருமை நாகு உழவனாற் கட்டப்பெற்ற கன்றின பக்கத்தினின்றும் அகன்று செல்லாமல், பக்கத்திலுள்ள பசிய பயிர்களை மேயும (குறு. 181:3-5).

**உழவன்-உழுதொழில் செய்பவன.** உழவர் காண்க.

**உழவு-1. உழும் தொழில்.** உழவு-உழும்தொழில்-செய்து நீங்கிய எருது வைக்கோலைத் தின்றாற் போலச் சூட்டிறைச்சியும் புழுக்கலும் வேண்டுவோர்க்குக் குறையாது கொடுத்து, நீயும் உணபாயாக என்று கோதமனார் தம் தலைவனுக்கு அறிவுறுத்தினார் (புறம். 366 13,16-20). தலையாலங் கானத்துச் செரு வென்ற பாண்டியன நெடுஞ்செழியன, ஒலிக்கும் முரசு முழங்கும் பாசறைக்கண தங்கிய, வில்லினை ஏராகக் கொண்டு உழவினைச் செய்யும் புகழுடையவன (புறம். 371:13,14). வழிப்பறி செய்வோர் புலால நாற்றத்தை யுடைய விற்றொழிலாகிய உழவினைச் செய்பவராவர் (பதி. 15.12). மழை சொரிந்தமையால், பலவாக விதைத்தலை யுடைய உழவினையும், சிறிய ஏரையும் உடையோர் பகன்றை மாலையை வெள்ளிய ஆடை போலத் தலையிற் சூடி, அழகிய மணிகளை எடுப்பா (பதி. 76:10-14). கரிய மான்கள் தங்கும் பரலையுடைய கற்குவியலில் கடுங்கண் மழவர் கள வாகிய உழவிற்கு எழும் இடத்தினைக் கொண்டது ஈரப்பலாவினையுடைய ஒடுங்காடு என்னும் ஊர் (அகம். 91:10-12). பழமை மேவிய பசுங்காட்டில கொடிகளை உழக்கி, எருதுகள பூட்டிய பல ஏரால உழவு செய்யப்பெற்ற சிவந்த புன்செய் நிலத்தில், இடவேண்டியவற்றை இட்டுப் பயறு விளைத்தல் (அகம். 262:1-4). உப்புப் பாத்தியில் கடல் நீரைப் பாய்ச்சி உப்பு விளைப்போர், வானத்தை வேண்டாத உழவினையுடையவராவர் (நற். 254:10,11). "பூங்கோதாய், நின்தோளில் யான் எழுதிய கரும்பின தோற்றப் பொலிவெல்லாம் நின உழவின் (முலைகள் இடைவிடாது புணாததமையின்) பயனல்லவா, குவளை மலர் போன்ற உன கண்கள் உன் முகத்திற்குப் பொருந்த மலர்ந்து மகிழ்ச்சி கொண்டதும் நின் உழவின பயனல்லவா' என்று தலைவன தலைவியிடம் கூறினான் (கலி. 64:12-16). திருமால் எழுந்தருளியுள்ள இடத்தின் ஒரு சார், திருமகள் விரும்பும் வயல்கள் உள்ளன; அங்கே வெள்ளத்தின் ஒலிக்கு எதிரே உழவுக்குரிய ஓசை பயின்று திரிபவரும் ஆரவாரம் செய்து நாற்று நடுபவரும் கூடியிருக்கின்றனர் (பரி. தி.1:14-17).

**2. வருத்தம்.** வையையில புனல் விளையாட வந்த வருள் சிலர் புனலுக்கு எதிராகச் சென்று ஆடிய உழவினால்-வருத்தத்தால் - மெலல விளையாடினர் (பரி. 10.103,104).

**உழிஞ்சில்- வாகை.** கள்ளி நிறைந்த காட்டினை யுடைய சுர நெறியில் உள்ள உழிஞ்சில - வாகை- மரத்தினை, உள்ளே இருக்கும் ஊன் வாடிய சுரிந்த மூக்கினை யுடைய நத்தை பொரியரை யுடையது போல மூடியிருக்கும் (அகம். 53:7-9). மலைகளை யுடைய சுரவழியில, வெந்திறற் கடுங்காற்று மரக் கிளைகளில் புகுந்து வீசுவதால் உழிஞ்சிலின முற்றிய வற்றல் ஒலிக்கும் (குறு. 39:1-3). உழுஞ்சில் காண்க.

**உழிஞை - 1. முடக்கொற்றான்.** தழைத்த நெடிய பீலியால தொடுக்கப்பட்ட நீலமணி போலும் தார் பொற்றளிருடைய உழிஞையுடன் - முடக்கொற்றா

னுடன் – பொலிவுற முரசத்திற்குச் சூட்டப் பெற்றது (புறம். 50 3,4) பாண்டியன் தலையாலங்கானத்துச செருவென்ற நெடுஞ்செழியன, வேம்பின் தளிரை உழிஞைக கொடியுடன் விரவித் தொடுக்கப் பட்ட கணணியை வளையமாலையுடன அழகுபட அணிநதிருந்தான (புறம். 76.4-7). நெடுஞ்செழியன் குடுமி களைந்த சென்னியில வேமபின் தளிரொடு நெடுங்கொடி உழிஞைப் பவரைச் சூடியிருநதான் (புறம். 77:2,3). பலயானைச் செலகெழு குட்டுவனைப் 'பொன்னாற் புனையப் பெற்ற உழிஞைச் சூடிய குட்டுவ' எனறு பாலைக் கௌதமனார் விளித்தார் (பதி. 22:27). 'உளையுடைய பூக்களைக் கொண்ட வாகையை முடிவிலே பெற்ற நுணகொடி உழிஞைப் பூவையும் வெற்றி விருப்பத்தையும் உருகெழு சிறப்பையும உடைய கொன்டி மள்ளர் களிறு பெறுவாராக, எனப் பரணர் வாழ்த்தினார் (பதி. 43: 23-25). கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன, தன் நண்பனான நுண் கொடி உழிஞையின் பூவைச சூடிய அறுகையின் வருதத்தைப் போக்கும பொருட்டு மோகூர் மன்னனின (பழையனின்) முர்சதததைக் கைப்பற்றி அவனுடைய காவன்மரமான வேம்பினை வெட்டினான் (பதி. 44:10-15). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், முரசம் ஒலிக்க, வாளை உயர வீசிப் பூண் அணிந்து பொனனாற் செய்த கொடியாகிய உழிஞையின பூவைச் சூடிப் போர்க்களத்தில் ஆடுவான (பதி. 56: 4,5,8). செலவக் கடுங்கோ வாழியாதன் சிறிய இலையையுடைய உழிஞைப் பூவாற செயயப்பெற்ற மாலையைச் சூடிக் கொளளை மிகுதியாக உண்டாகுமாறு, தமிழப் படைகளைச் செறித்து, ஒரே வளைபபில் சோழ பாணடிய மன்னரை வென்றான் (பதி. 63:8-11). தூறு படர்ந்த நெருங்கின மலைகள் போன்ற உழிஞையினைச் சூடிய யானைகள், தம் அரசரின் பகைவர்தம் காவலுடைய அரண்களை இடித்தன (பட். 228-235). 'நான் (தலையிலும் மார்பிலும்) அணிந்த அணி பொன் அணியல்ல, ஆவிரம் பூவாற் செய்த கண்ணியும் உழிஞைப்பூவும் பூளைப் பூவும் உதிர்ந்த மயிற்பீலியும் விளஙகும் பூநதாரும் ஆகும் என்று உணர்வீராக' என மடலேறும் தலைமகன் கணடார்க்குக் கூறினான் (கலி. 140:4-7).

2. ஒரு திணை. பாண்மகளிர், பேரியாழிற் பாலைப் பண்ணை அமைத்துப் பணியாத மரபினை யுடைய உழிஞையை-உழிஞைத் திணையை-புகழ்ந்து பாட அவரை இனிமையாகப் பாதுகாத்து, மகிழ்ச்சியை அளித்தான் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. 46:4-7).

**உழுஞ்சில் - வாகை.** சுரத்திடத்தே, வாழும் கோட்டான்களின் துடி ஓசைபோலும் கடிய குரலோசை உழுஞ்சில் - வாகை - மரத்தின் கவடுகளி லிருநது பெடைப் பருநதினை அழைக்கும் சேவற் பருநதின் குரலோடு கலநதொலிக்கும் (புறம். 370:6-8). நீர் வற்றிய உழுஞ்சிலின் முதிர்ந்த நெற்றுக்களைக் கொணட கொத்து, கூததர் ஆடுகளத்தில ஒலிக்கும் பறையைப் போன்று விட்டுவிட்டு ஒலிக்கும் (அகம். 45:1,2). கலைமான கொம்புபோன்ற கவட்டினையுடைய குறுங்கால் உழுஞசிலின நெற்றான குலை ஆடுமகளின பறைபோல ஒலிககும (அகம. 151:7-10). உழிஞ்சில காணக.

**உழுத்ததர் - உழுந்தின் சக்கை.** பருத்தியை வேலியாக உடைய சீறூர். மன்னனின, உழுத்ததர்–உழுந்தின சக்கை-உணட ஒய்ந்த நடையுடைய குதிரை போர்க் களத்தில் கடலில மண்டும் தோணி போலப் பகைவரின் படைத்திரளைப் பிளநது சென்று போர் செய்தது (புறம. 299.1-3).

**உழுந்தினைம் புலவன் - புலவர்.** இவருடைய ஒரே பாடல் குறுந்தொகை 333-ஆம் பாடலாக அமைந்துள்ளது. குறிஞ்சித் திணையில தோழி கூற்றாக அமையும் இப்பாடலில, ஒரு வினை நிறைவுறாது குறைபட்டு நிற்பதனால உணடாகும் வருத்தம் 'பணிகதுறை வருததம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**உழுந்து - கூலவகை.** திருமண வீட்டில் உழுந்தின பருப்புடன் கூட்டிச் சமைத்த செவ்விய குழைதலையுடைய பொங்கலோடு பெரிய சோறறுத் திரளையினை உணணுதல இடையறாது நிகழும் (அகம. 86:1,2). பனிமிக்க அறசிரக்காலத்தில, குறும்பூழின் காலைப்போனற செங்கால உழுந்தின காயகளை மானினம் கவாந்துணணும் (குறு. 68:1-3). பரத்தையர் தோளுககு உழுநதின் காயகளை அடித்தற் குரிய கழுந்து உள்ள தடி உவமை (குறு. 384:1). மழை அழிந்த கார் காலத்தின இறுதியில மிக்க முனபனிபபருவத்தே, மயிர்கள் அமைநத காய்களையுடைய உழுந்தின் அகன்ற இலைகளெல்லாம் சிதையும்படி வாடைக் காற்று வீசும் (நற். 89:4-7). வயலைக் கொடியினுக்கு நெயயொடு மயக்கிய உழுந்தின் நூறு (மாவு) உவமை (ஐங. 211:1,2). குறிய வட்டின் தன்மை உடையவனே, உழுந்தினும் (உழுத்தம் பணியாரத்தினும்) துய்க்கப்பட்டிருககும கூன சாதியின் பிறப்பு நின்னின் தாழ்ந்ததோ' என்று வினைவல பாங்கின் தலைவியாகிய கூனி அத்தகு தலைவனான குறளனை வினவினாள் (கலி. 94: 27,28).

**உழுபடை - கலப்பை.** போர்க்களத்தில் வருபடையைத் தாங்கி, அது புறங்கொடுத்தலைக் கண்டு ஆர

வாரம் செய்து போர்புரியும் படை தரும் வெற்றி, உழுபடை - கலப்பை - நிலத்தினில் ஊன்றி உழும் சாலிடத்தே விளைந்த நெல்லினது பயனே யாகும் (புறம். 35:24-26).

**உழுவை** - புலி. சோழன் நலங்கிள்ளி, தெற்கிலுள்ள பொதியின் மலையையுடைய பாண்டியனின் ஏழு எயிற்கதவினை அழித்து அதனைக் கைக்கொண்டு, உழுவை-புலி-பொறியைப் பொறிக்கும் வலியுடையவன் (புறம். 33:7-9). பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை எதிர்த்துப் பொரப் பகைமன்னர் வந்த போது அவன் முழையின்கண் கிடந்த உழுவை தான் விரும்பும் இரையினைப் பெற நிமிர்ந்து வந்தாற் போன்று போருக்குச் சென்றான் (புறம். 78:2-4). வல்வில் ஓரி செலுத்திய அம்பு யானையைக் கொன்று வீழ்த்தி, பெரிய வாயுடைய உழுவையினை இறக்கச் செய்து, புள்ளிமானை உருட்டி, உரல்போலும் தலையுடைய பன்றியை வீழ்த்தி, அருகிலிருந்த புற்றினில் கிடந்த உடும்பின்மீது சென்று தைத்தது (புறம். 152:1-6). தலைவன் இரவில் வரும் வழியில் குகையில் செறியும் உழுவையும் யாளியும் உளியமும் விழுமம் தரும் பிற உயிர்களும் உளவாம் (குறி. 252-260). நன்னன் அரண்மனை வாயிலில் காணப்பெறும் கையுறைப் பொருள்களில், குகையிற் செறியும் உழுவை பாய்வதனால் தன் உடலை வெறுத்த மடக்கண் மரையான் குழவியும் ஒன்றாகும் (மலை. 505, 506). கோடை நீண்ட பெரிய மலையிடத்தே, நீரற்ற அரிய சுர வழியில் களிற்றினைக் கொன்று, மக்கள் இயங்காத இடத்தில் உழுவை திரியும் காட்டினைக் கடந்து தலைவர் பிரிந்து சென்றார் (அகம். 45:3-6). கருவுற்ற பெண் புலியின் வயவுப் பசியினை நீக்குதற்கு இரவில், மலைப்பக்கத்தே, பெரிய களிற்றினைக் கொன்ற சினமிக்க உழுவை அதனை, பாம்புமிழ்ந்த மணியின் ஒளியில் உதிரம் பட்டுக் காயுமாறு இழுத்துச் செல்லும் (அகம். 72:11-15). மூன்று குட்டிகளை ஈன்றதும் குகைக்கண் உள்ளதும் ஒய்ந்துள்ளதுமான பெண்புலி பசிமிக்கதாகப் புள்ளிகள் விளங்கும் பிளந்த வாயுடைய உழுவை, அறுகோட்டு உழைமானின் குரலை அதனைப் பற்றுவதற்காக உற்றுக் கேட்கும் (அகம். 147:4-7). தயிர் கடைவது போன்ற குரலையுடைய ஒளி பொருந்திய வரிகளையுடைய உழுவை, பேழ்வாயுடைய பெண்புலியின் பசியினைப் பொறாது, அதனை நீக்குதற் பொருட்டுச் சிறுகட் பன்றி வருவதனை எதிர்பார்த்திருக்கும் (அகம். 277:5-8). உழுவையோடு சண்டை செய்து வருந்திய நடையுடைய களிற்றின் மத்தகத்தில் உண்டாகிய நீண்ட பிளப்பாகிய புண்ணைக் கழுவி இரவில் ஆலங்கட்டியுடன் மழை பெய்தது (அகம். 308:1-3). மூங்கில் முளையினைத் தன் கிளையோடு உண்ட களிறு, நீர் விரும்பிச் செல்லும் துறையின் அருகில் தன்னைத் தாக்குதற்குப் பதுங்கியிருந்த வலிமை மிக்க உழுவையைப் பொருது கொன்று, குருதி படிந்த தன் கூரிய கொம்பினை மழையால் கழுவித் தன் பிடியொடு புணர்ந்து மலையில் துயிலும் (அகம். 332:1-9). உழுவை களிற்றினைக் கொல்ல, கரிய பிடியானை வாடிய துன்பத்தோடும் வருத்தத்தோடும் இயங்காமல், துன்புற்ற தன் கன்றினைத் தழுவிக் கொண்டு அரும்புண் அடைந்தவரைப் போல வருத்தமுற்றிருந்தது (நற். 47:1-5). வரிகளையும் பெரிய வாயையுமுடைய உழுவை ஏறு, மலையிடத்தில் களிற்றோடு போர் புரிகையில், குறவரின் இளமைந்தர் பாறையின் உச்சியில் மனச் செருக்கோடு ஏறித் தொண்டகப் பறையை முழக்க, அவ்வோசை தினைக்கதிரை உண்ண வந்த கிளிகளை அச்சுறுத்தி ஓட்டும் (நற். 104:1-6). இரவில் தலைவர் வரும் வழியில், உழுவை களிற்றினைத் தாக்கிக் கொல்லுதலால் அதனை அறிந்த பிடியானை மேகம் முழங்குவது போலப் பிளிறும் ஓசை கேட்டுத் தலைவியின் கண்கள் நீர் வடித்தன (நற். 144:1-3). இரவில் மேகந் தவழும் குறுங்காட்டில் களிற்றினை வலப்பக்கத்தில் வீழுமாறு கொன்ற வெஞ்சின உழுவை யாவரும் அஞ்சுமாறு முழங்கும் (நற். 154:4-6). அருவி ஒலிக்கும் மலைப்பக்கத்தில் ஆளி என்னும் விலங்கு, கொல்ல வல்ல நகங்களையும் அழகிய வரியையும் உடைய உழுவையாற் கொல்லப்பட்ட வலிய யானையை இரையாக இழுத்துக்கொண்டு செல்லும் (நற். 205:1-4). மழைக்கால இரவில் தலைவன் வரும் வழியில் வலிய யானையொடு போர் செய்த வாள்போலுங் கோடுகளையுடைய உழுவை, துறுகல்மிக்க சிலம்பினில் முழங்கும் (நற்.255:4,5). கொலைத்தொழிலுடைய உழுவையைக் கொன்று அதன் தோலை உடுத்துக் கொன்றை மலர் மாலை தோளில் அசைய (அயன்) தலையை அங்கையில் ஏந்திச் சிவபெருமான் காபாலம் என்னும் கூத்தினை ஆடுவார் (கலி. 1:11,12). உழுவையின் அடியினைப் போல வாழையினது வளைந்த காய் குலைகள்தோறும் தொங்கும் (கலி. 43:24,25). மதத்தையும் மருப்பினையு முடைய களிற்றினோடு அழகிய வரிகளுடைய உழுவை போர் புரியுங்கால் மணிநிறத் தும்பி, வேங்கையின் பூங்கொம்பென்று புலியைச் சூழ்ந்தும் வேங்கையின் கிளையென்று யானை முகத்தை அணுகியும் பலகாலும் திரிந்தது (கலி. 46:2-8). திருப்பரங்குன்றத்தே, கார்காலத்தில் அழும் பேதைப் பெண்டிர்க்குத் தாய்மார் உழுவை செப்புமாறு (புலிபுலி என்று சொல்லுமாறு) வேங்கை

மலர்கள் பாறைகளில் பரந்து கிடந்தன (பரி. 14:11,12).

**உழை - 1. மான்.** இலை வேய்ந்த குடிலில் இருக்கும் உழையின - மானின்-தோற்படுக்கையினையும் தழை விரவிய கண்ணியினையும் உடைய வன்சொல் இளைஞர் வில்லைக் கையிலேந்திக் கவர்த்த வழியைக் காத்தனர் (மது. 310-312). கவர்த்த வழிகளில் மூன்று குட்டிகளீன்ற பெண்புலியின் பசிபோக்க ஆண்புலி அறுகோட்டு உழைமானின் ஆண்குரலைக் கூர்ந்து கேட்கும் (அகம. 147:3-7). உமணர் வண்டிகளிற் பூட்டிய பகடுகளைத் துறை ஏற்றத்து உரப்பும் ஒலிகேட்டு உழைமான் பிணையினம் அஞ்சி ஓடும் (அகம். 173:9-11). நீரற்ற நெடுவழியில செந்நாய்க்கு அஞ்சி ஓடும புள்ளிகளை யுடைய உழை ஒருத்தல் (ஆண்மான்) விளம்பழத்தின் துளையில் கோடைக்காற்று எறிதலினால் எழும் ஒலியைக் கோவலர்தம் குழலொலி எனக் கருதிக் கேட்கும் (அகம். 219.13-16). மலையில் வீசும் மேல்திசைக் காற்றொலியை இரைவேட்டெழுந்த வயப்புலி தீண்டிய விலங்கின் அரற்றொலி யெனக் கருதி உழைமான் கூட்டம் கவர்த்த வழிகளில் கதறி யோடும் (அகம. 249:14-18). காட்டுத்தீ பரவியதால் இலையிலலாத காட்டு மரத்தின புள்ளி நிழலுக்கு உழைப்புறத்துள்ள புள்ளி உவமை (அகம. 379.19,20). அச்சிரக் காலத்தில் உழுந்தின் முதிர்ந்த காயை உழையினம கவர்நதுண்ணும் (குறு. 68:1-3). தாழையின அரும்பு முதிர்ந்து, மானுழை போலத் தலைசாய்த்து வேறுபடத் தோன்றியது (நற். 19:2-4). உழை நிமிர்ந்து தழை உணணுதலால் சிறிது வளைந்த கிளையுடைய இலந்தையின் காய்கள் பரல் மிக்க காட்டு வழியில் பரவிக் கிடக்கும் (நற். 113:1-4). குன்றத்தில் உழைமானின் பெடை தீண்டட பொற்காசு போன்ற குமிழம் பழம் பாலை வழியில் உதிரும் (நற்.274:2-5). உழையினம் மிகுந்து தோன்றித் தின்றழித்தாலும் மூதூரிடத்தே நெல்லின் புதுவருவாய் மிகுந்துள்ளது (நற். 311:1, 2).

**2. பக்கம்.** பகைவர் தூசிப் படையை அழித்துப் படைக்குப்பின் நின்று நிரையுடன் வருகினற என் தலைவனுக்கு உழையோர் - பக்கத்திருப்பவராய மறவர் - தலைவனைக் காட்டிலும இளைப்புடையோராவர்; ஆதலால் அவர்க்கு நறவும் ஊனும் நல்குமின் என்று அங்குள்ள சுற்றம் கூறியது (புறம். 262). பாசறையில் அமைத்த பள்ளியில் பாண்டியனின் உழையராக மிலேச்சர் இருந்தனர் (முல்லை. 64-66). அலை கரையை மோதும் கடல் உழை (பக்கத்தே) தலைவன் தேர் ஊர்ந்து வருதலும் உரியன் (அகம். 190:9, 10). முன்பு பிரியாக் காதலொடு உழையராய் இருந்தவர் நம் தலைவர் என்பது தோழி கூற்று (அகம். 241:3-5). காதலர் உழையராக விழவெடுக்கும் ஊர்போல் பெரிதும் மகிழுவேன் எனத தலைவி தோழியிடம் கூறுதல (குறு. 41:1,2). தலைவர் உழையராக இனமையின் வளைநெகிழ்நது தளிரைப பிசைநததுபோல மெலிந்து தலைவி வருந்தினாள் (குறு. 289: 2-4). அல்குலிற் கட்டிய பசுங்குழைத தழையினும் உழையிருநது தலைவன நீங்கான் என்பது தோழியின் சிறைப்புறக் கூற்று (குறு. 294:5-7). உழையினின்றும் போகாது தலைவன் அளி செய்யினும் முயக்கம நெகிழ்ந்தமையின் தலைவியின கண பசந்து விடும் (நற். 35:9-12). மழை பொழிந்த நள்ளிருளில தலைவர் நம் உழையராகவும் பனிக்கடுமையால் பெரிதும் வருந்தி உறஙகா திருந்தோம் என்பதை யறிந்த தலைவர் பிரிந்தமையின் அன்பில ராவர் எனத் தலைவி தோழிக் குரைத்தாள் (நற். 281:7-11). விடியலில் கிழககே தோனறும் வெள்ளி போலக் காதலி ஒருநாள் நம் உழையளாக வருமோ எனத் தலைவன் நெஞ்சு நோககிக் கூறுகிறான (நற். 356.7-9).

**3. இடம்.** பெண்ணை வேலி சூழ்ந்த உழைகண் - இடமகன்ற - சீறூரிலுள்ள நம் மனையைத் தலைவன் அறியின் நனறு எனத் தோழி கூறி இரவுககுறி நேர்ந்தாள் (நற். 392:6,7). உழையராக இருக்கும் போது சிறப்புக்களைச் செய்து புகழ்ந்து வாழ்ததி அவர் பிரிந்த அளவிலே புறத்தே பழி தூற்றும் புலலியார் நட்புப் போலத தலைவி கணகள் தன காதலனைக் கூடியிருக்கும் போது மலரன்ன தகையவாயிருந்து பிரியும் போது பழியைத் தூற்றி அழுது கொண்டுள்ளன (கலி. 25: 13-16). வருடைமான மறியை வளர்ப்பவரைப் போலத் தலைவியைப பாராட்டி உழையின் (அவளிடத்தினின்றும்) நீ பிரியின் அவளது அழகு கெடும் எனத் தோழி தலைவனிடம் கூறுதல் (கலி. 50: 21-24). பிரிவில் தலைவி ஊண் சிறிதுமின்றி உயிரினும் சிறந்த நாணுமின்றி நகுகின்றாள்; அப்பொழுதே பெணமையு மிலளாகி அழுகின்றாள்; இதனை ஓர்ந்து பார்; அங்ஙனம் ஓர்ந்து இவளுறற வருததத்தை உழைச் சென்று யாம் கேளாமோ, கேட்போம் என்று கூறி என்னை நெருங்கி வந்து காணாதீர் எனத் தலைவி தோழியை விளித்துக் கலங்கி மொழிந்தாள் (கலி. 147:8-11).

**4. பண்.** மகளிரின் மாலையிலுள்ள பூவை ஊதும் வண்டினம் யாழினைப் போன்று பாடும் பாடலைக் கேளுங்கள்; அப்பாடற் பொருள் தெரியப் புலப் படுத்தாமல் குரல் கொண்ட, கிளைக்குற்ற உழை -

கிளையாகிய இளிக்குக் கிளையாகப் பொருந்திய உழை குரலான ஆறாம் பாலையில தோன்றிய மருதப் பண-ஆகிய சுரும்பின இசையைக் கேளுங்கள் எனறு ஆடவர் சிலர் வையை நிகழ்ச்சியினைச் சுட்டினர் (பரி. 11.125-127).

**உள் - 1. உள்ளம்.** தலைவியின் நற்கவின் தொலையவும் தோள் நெகிழவும அணி நெகிழதலை அயலார் அறியவும் தனிமைத் துன்பம வருத்தவும காரணமான உள் - உள்ளத்தே - கரந்துறையும் அரிய நோயை அவனே புலப்படுத்துமாறு தோழி சொலவனமையால சூழ்சசி செயதாள் (குறி. 9-12). சூரர மகளிர் போல் நின்ற தலைவியை நோக்கி எமமை வருத்திய நீ யாரையோ என்று கேட்டுத் தலைவன சிறுபுறந் தைவர, மழைக்கு நெகிழநத மணபோனற தன் உள் அவன் அறிதல் அஞ்சித் தலைவி உள் இல் (உளளத்தொடு படாத) கடிய சொல் கூறித்தனனை விடுவித்துக் கொண்டு அஞசியோடும பெணமான் போல விரைநதாள் (அகம். 32:7-13). தலைவன் வரைவு மலிநதமை கேட்ட தோழி, நாடு வறங்கூர, கலப்பை தூஙக, கோடை நீடியகாலத்துப் பெரிய குளத்தில் மழை பொழிய, அதனை விடியலிற கண்ட பலர் உவநத உவகை யெலலாம் என உளளில் பெய்துவைத்தாற் போல உளளது எனக் கூறினாள் (அகம. 42:5-11). மலை நாடன் சாந்துபுலர் மார்பை நினைத்தால் உள்ளின (உள்ளததின) காம நோய் மிகும்; புல்லின் நீங்கும் எனத் தலைவி தோழிக் குரைததாள் (குறு. 150: 3-5). நாணத்தை நீக்கி மிகக நினைவாகி உள்நோய் மிகத் தலைவி மடலேறு மாறு செயது விட்டாள் எனத் தலைவன் தோழிக் குரைத்தல் (குறு. 173: 3-5). வெறியாட்டெடுப்பவா கூறும் கூற்றை உடனபடாது சுனையில் மலர்நத வள்ளிதழ் நீலம நோக்கி உள்வருநதித் தலைவி அழுத கண்ணளானாள் (குறு. 366: 3-6). தலைவிகுத் தன உள நோயினைத் தலைவன உரைப்ப அவள் மறுமொழி கூற வியலாதவளாய் இருந்தாள் (நற். 106:4-6). நினது உள் நோய் கூறி வருநதாதே; காதலர் வந்தார் எனத் தோழி பிரிவால் வருநதிய தலைவியிடம கூறினாள் (கலி. 34:21-23). தன மயக்கங் கண்டு தானும் மருணடு ஒளி கெடும்படி இவன் உள் நோய் யாது என்று கேட்கும் அருள் தலைவியிட மிலலை எனத் தலைவன் உரைததான (கலி. 59:14,15). மெலலப் பெருமூசசெறிந்து இவன் உள் நோய் யாது எனறு கேட்கும நோய தலைவியிடத் தில்லையென்று தலைவன் கூறினான் (கலி. 59:18,19). கண்ணிறைந்த அழகுடைய மகளிரைக் கண்டார்க்கு உள் நினற காம நோய் மிகும்படி உயிர்போகுந் துயரைச் செய்தல் பெண் தன்மையன்று எனத் தலைவன் கூறியதாகத தோழி தலைவியிடம் மொழிந்தாள் (கலி. 60: 5-7). என்னுள் உள்ள காம நோயைத் தணிக்கும் மருந்தாக நன்னுதல் தந்த இக்குதிரையை (மடன்மா) பாடுவேனோ எனத் தலைவன் கூறல் (கலி. 140: 14-16). மடனமாவில ஏறச் செய்து மன்றம் படர் விததவள் ஒருகால் என் உள் வழியளாக (உள்ளத் திடத்தினளாக) இருந்து பின் நீருள் நிழல்போல வாங்கிக் கோடற்கு அரிய ளானாள் எனத் தலைவன் கூறுதல் (கலி. 141:7-10). திங்களுள் தோன்றியிருந்த குறுமுயலிடம் தலைவி தன் உண்ணினற வருத்தத்தை உரைத்துத தன தலைவன் இருக்குமிடத்தைக் காட்டுக என்று வேண்டினாள் (கலி. 144:18, 19,24). எமக்கு இருங்குன்றத்து அடியுறைதல் எய்துக என உள் பொருந்தி வாய்மொழியில் (வேதத்தில்) அறிந்தவற்றுள் சில உரைத்துப் பெரும் புகழுடைய திருமால் பலதேவர் ஆகிய இருவரையும் தொழுது வேண்டுவோமாக என இளமபெரு வழுதியார் பாடியுள்ளார் (பரி. 15:63-66).

**2. உட்பகுதி.** நாடு வறங்கூர, கலப்பை தூங்கக் கோடை நீடிய வறண்ட காலததுக் குன்றுகளைப் போன்ற கரைகளையுடையதும் நீரினமையின் பறவைகள தங்காத உள் - உட்பகுதியில - நீரற்றதுமாகிய பெருங்குளத்தில் மழை பெய்து நீர் நிறைந்ததைத் கண்ட பலரும் பெரிதும் மகிழ்ந்தனர் (அகம். 42:5-11). இரை தேரும் ஆண்கரடி புற்றிலுள்ள நல்லரா நடுங்க முழங்கி ஊதுலைத்துருத்தி போல் உளளுயிர்த்து அதனைத் தோண்டியது (நற். 125: 1-4). பாணன கையிடத்துள்ள தண்ணுமை போல, உள் யாதுமில்லாத மேறபோர்வை யுடைய சொல்லைப பரததையரின் தாய்மாரிடத்துச் சொல்லுகினறவள் எனத் தலைவற்கு மகட்கொடை நேரும் விறலியைத் தோழி கூறினாள் (நற். 310:5-11). அரிய சுரமென்று கருதாது வலியழிந்து நெஞ்சத்தில் உள் மகிழ்வுற்றுத் தலைவர் பொருள் வயிற் பிரிந்தார் (நற். 333:5-7). (உண்மலி நெஞசத்திற்கு ஊணமலி நெஞசம் என்பது வையாபுரியார் பாடம). தலைவி அழகினைக் கண்டு தலைவன் களிற்றை ஒத்த தன் தன்மை கெட்டு மனமுடைநது உள்ளுள் (உள்ளுக்குளளே) உருகுவான போல் இருந்தான் (கலி. 60:10, 11). காமனது ஏவலால் வந்த காம நோயாகிய படை கண்டார் இகழும்படி யான் கலங்க என்னிடம் வந்து என் ஆண தன்மையின் அழகாகிய மதிலை முற்றுகை யிட்டுப் புறத்தை யெல்லாம் உடைத்துப் பின்னர் உள் அழித்தது என்று மடலேறும் தலைவன் சான்றோரிடம் கூறினான் (கலி. 139:20-23).

**3. ஊக்கம்.** இளவெளிமான் சிறிது பரிசு கொடுப்

பக் கொள்ளாது பெருஞ்சித்திரனார் தம் நெஞ்சு நோக்கி, உள்ளம உள்ளவிந்து-ஊக்கமின்றி-தணியாமல் மறம் பொருந்திய ஆளியைப் போல எழுக, செல்வோம் எனக் கூறினார் (புறம். 207:1,8,9). வாட்டாற் றெழினி யாதன் உள்ளிலோர்க்கு வலியாகித் துணை செய்வான் (புறம். 396:10).

4. உள்ளீடு. விதையில்லாத அவரைப் பிஞ்சின் பொயத்தோல் வெள்ளாட்டுக் குட்டியின், உள் - உள்ளீடு-இல்லாத வயிற்றுககுவமை (அகம். 104:8,9).

5. மனம். பனையின மடலில் கட்டிய கூட்டில் பிரிந்து வருநதும நாரை நள்ளிரவில் நரலுந்தோறும் உருகி என் உள்ளமொடு உள்-மனமும் - உடைந்து உயிர் வாழகின்றேன்; என உயிர் எத் துணை வன்மையாயுள்ளது எனத் தலைவி தோழியிடம் கூறுதல் (நற். 199:1-5).

6. மார்பு. நான் குளிதத தடத்திலே கரையில் நில்லாமல அலையில் மூழகி யெழுநது மயஙகி என மேல் விழுந்தவளை யான ஏற்றுக் கொளளாத அளவில அவள் எழுநதாள்; அவள் காம நுகர்ச்சி யறியும் பருவத்தின ளல்லள்; அவளைத் தவிரக் கோதை போல என் உள்-மார்பில்-முயங்கியவள் யாவள் எனத் தலைவன் புலந்த காதற் பரத்தையை வினவினான் (பரி. 6;87-91).

உள்ளகம் - 1. உள்ளிடம். பாதிரி மலரினது கிழிக்கப் பெற்ற உளளகம்-உள்ளிடத்தை - யாழினது நிறம் ஊட்டப் பெற்ற பச்சை ஒத்திருககும் (பெரு. 4-6). தலைவியும் தோழியும் அருவியிலும சுனையிலும ஆடியதால் உளளகம சிவநத கணணினர் ஆயினர் (குறி. 55-61). திருமாவளவன பகைவர் நகரில கொடுவில் எயினர் கொள்ளை கொணடு உணடதனால நெல இல்லாத வறிய நெற் கூடுகளின உள்ளகத்துத் தங்கி நன்பகலில் கூகைகள் குழறின (பட். 266-269). வேனிற்காலத்துத் தணணியளாய தலைவி பனிப் பருவத்தில் ஞாயிறறின கதிரைத் தனனகத்தே வாங்கி மூடிக் கொண்ட தாமரை மலரின் உள்ளகம் போன்ற சிறிய வெப்பமுடையவள் எனத் தலைவன் நெஞ்சிற்குக் கூறினான் (குறு. 376 3-6). தலைவி கூந்தலின உள்ளகம் குவளை மலரின் மணம் கமழும் (ஐங். 225: 2, 3).

2. நெஞ்சிடம். பிரிவில் தலைவி தலைவனை உள்ளுந்தோறும் உள்ளகம் – நெஞ்சிடம் - கனலுதலால் குவளையின் கரிய இதழ் ஒக்கும் நீர் மிகுநத கரிய இமைகள் பினனர் நறவமலரின சிவந்த இதழனையவாகி உலறித் துனப மெய்தி வெயயவாகக் கணணீர் சொரிந்தன (அகம் 19: 9-14).

உள்ளடி - உள்ளங்கால். பிட்டங்கொற்றன் எருத்தினத் தைக் களத்தொடு வேண்டினும் நெல்லின் குவியல் வேணடினும அருங்கலம் களிறறொடு வேண்டினும் நல்குபவன. ஆதலின அவனது உள்ளடியில்-உள்ளங்காலில்-முள்ளும நோவுமாறு உறாதொழிக; ஈவோர் அரிய இவ்வுலகத்து வாழவோர் வாழ அவன் தாள் வாழிய எனக் காரிக் கண்ணனார் அவனை வாழத்துவர் (புறம். 171: 8-15). வளைநத சிறகுகளையுடைய பறவைகளின் உள்ளடியின சுவடு பொருந்திய வரிகளைக் கொண்ட நீரவற்றிய இடஙகளில மெலலிய நுண்மணல் தோன்றும் (நற். 241: 1-3). (கொடுஞ்சிறைப்புள்ளடி எனறும பாடமுண்டு).

உள்ளம் – நெஞ்சம். மடியாத உள்ளததையும் - நெஞ்சத்தையும் - பொருளைப் பாதுகாவாது வழங்கும் வணமையையும் உடையவன சேரமான் கடுஙகோ வாழியாதன் (புறம். 8.4,5). காலையிலும மாலையிலும் பாலிற் பெய்து அடபபட்ட வரகின் சோற்றைத் தேனொடு கலந்துண்டு முயல இறைச்சியைத் தினற எனது சுற்றத்தோடு தஙகி. இலந்தை மர மோங்கிய பொதியிற்கண் மறைக்காத உள்ளமொடு வேண்டிய சொற்களைக் கூறி, அமலைக் கொழுஞ்சோறு அயினற பாணராகிய எங்களுக்குச் செலவ முழுவதும கொடுத்தவன குளமுற்றததுத துஞ்சிய கிளளி வளவனாவான (புறம். 34.8-16). குகையிலிருநது மூரிநிமிர்நது புறபபட்ட புலியேறு ஊனசையால் உள்ளம செலுத்த இரை குறித்துத் தான் வேணடுமிடத்து விரும்பிச செனறாற் போல வடபுல மனனா வாட, அவரைக் கொல்லக் கருதி மாறன வழுதி புறப்பட்டான (புறம். 52:1-6). சிஙகம போலச் சினநது மீளாத ஊககமுடைய உள்ளததினைக் கொணட படையுடை வேநதா ஒனறு கூடி என்னொடு பொருவதாகக கூறுகின்றனர்; அவரை ஆரமரில் அலறததாககித் தேரொடு புறங்காணபேன் என ஒலலையூர் தநத பூதப் பாணடியன் வஞ்சினம் உரைததான் (புறம. 71:1-9). ஆற்றல் உடைய அமைசசர், படைத்தலைவர் முதலாகியோரது வலியைப போறறாது என் உள்ளததை (சூழ்சசியை) எள்ளிய மடவோன், துயிலும் புலியை இடறும குருடன போலப் பிழைத்தல் அரிது எனச சோழன நலங்கிள்ளி கூறினான (புறம. 73:5-8). யாவரினும் முனனே நினைக்கப்படும் ஆய் அணடிரனைப பினனே நினைத்தேன்; அவ்வாறு நினைந்த குற்றத்தால் என் உள்ளம் அமிழ்ந்திப் போவதாக எனக் கூறுகிறார் முடமோசியார் (புறம். 132:1,2). சீறியாழைத் தளர்ந்த உளளத்துடன் ஒருமருங்கில் அணைத்துக் கொணடு நின் நல்லிசையை நினைந்து நான் வநதேன் எனப் பாணன் ஒருவன் அண்டிரனை நோக்கிக் கூறுவதாக முடமோசியாா பாடி

யுள்ளார் (புறம். 135:7-10). நாஞ்சில் பொருந, மற வாத உள்ளததோடு பரிசிற்கு வந்து நின்று நின் மனம் நெகிழும செவ்விபார்க்கும் காலமன்று யான் வறுமையுற்றிருக்கின்ற நிலைமை என்று நாஞ்சில் வள்ளுவனை விளித்துப் பாணன் கூறுகின்றான் (புறம. 139:8-10). முதிரமலையி லுள்ள குமணன் நீ சென்றால் மிகுதியும் கொடுப்பன என்று நின் பல் வகைப் புகழைக் கூறுபவர் நுவல, மிக விரைந்து எனது உள்ளம் செலுத்த நின்பால வந்தேன எனக் குமணனிடம் பெருஞ்சித்திரனார் கூறினார் (புறம். 160:12-16). வள்ளியோரின செவியாகிய புலத்தில் சொற்களாகிய விதையை விதைத்துத் தாம் நினைந்த பரிசிலை விளைக்கும் உரனுடை உள்ளத்தினை யுடையவரும் வரிசைக்கு வருநதும்பரிசிலான் வாழும் இல்வாழ்க்கை யுடையவருமாகியவர் பரிசிலர் (புறம். 206:2-5). இளவெளிமான் கொடுத்த சிறிது பரிசை ஏலாது பெருஞ்சித்திரனார் தம் நெஞ்சம் நோக்கி உள்ளம் ஊக்க மின்றித் தணியாமல் மறம் சான்ற யாளியைப்போல எழுக எனக் கூறினார் (புறம். 207: 1,8,9). நின்மறன் ஓழிக; நின உள்ளம் வாழ்க எனப் புல்லாற்றூர் எயிற்றியனார் கோப்பெருஞ் சோழ னிடம் கூறினார் (புறம். 213:19,20). நிரை மீட்கச் செல்லும் மறவரிடம் நிரை கவர்ந்தாரது மறமாண் பறியாது செல்லற்க; சிறக்க நின் உள்ளம் எனச் சான்றோர் ஒருவர் கூறினார் (புறம். 259:4-7). சமைத்தலை மறந்த எம் பானையை மலர்க்கும் கடனறியாளர் பிற நாட்டின்மையின் வண்மையால் எமக்கு உதவுவார் யாரென உள்ளிய உள்ளமோடு கிள்ளி வளவனின் நல்லிசை நினைநது வந்ததாக நல்லிறையனார் பாணன் கூற்றில் வைதது்ப் பாடி யுள்ளார் (புறம். 393:4-10). நெடுஞ் சேரலாதன பகைவரது மனறத்தே போதற்கு எண்ணுவாரின் உள்ளம அழியச் செயது, போக மேற்கொண்டார் வலியைக் கெடுத்தமையால் பின் செல்லுதற்கு நினைபபவர் நடுங்குதற்குக் காரணமாக நாட்டைப் பாழபடுததினான் (பதி. 13:17-19). நட்புநிலையில் தாழவுபடாத உள்ளத்தால் மனம் பொருந்தி நின் னோடு நட்புச் செய்தோர்க்கல்லது கண்ணோட் டத்தால் அஞ்சமாட்டாய் என்று வாழியாதன பண் பினைக் கபிலர் பாராட்டுவர் (பதி. 63:2,3). நின் குடியில் நினக்கு முனபிருநத அரசர்க்குப் பாது காவலைச் செயதனராய் வாழ்ந்து மன்பதையைக் காப்பதற்கு அறிவுரையை வற்புறுத்திக் கூறும் அறமறிநத உள்ளத்தை யுடைய சான்றோர் (அமைச்சர்) போனற நின சூழச்சிப் பணபினைப் பகைவர் தம் மடம் மிகுதியால அறிநதிலர் எனப் பெருஞ்சேரலிரும்பொறையிடம் அரிசில்கிழார் கூறி னார் (பதி. 72:4-7). மாமுதல (ஞாபனமாலை) தடிநத வெற்றியையும் நல்லிசையையும் உடைய முருகனின் சேவடியிற் செல்லுதற்குரிய செம்மல் உள்ளமொடு நலம்புரி கொள்கையுடன் மெய்யுணர்ந்து எஞ் ஞான்றும் தங்குதற்குரிய செலவை நீ விரும்பின், நீ கருதிய வினையின் பயனை இப்பொழுதே பெறு வாய என முருகனிடம் ஆற்றுப்படுத்துவோர் அன் பனிடம் கூறுகிறார் (முரு. 60-66). பரிசில் பெற்ற பாணன், பெறாத பாண் சுற்றத்தினை நோக்கி, நீயிரும் செம்மல் உள்ளமொடு செல்குவிர் ஆயின், எயிற்பட்டினத்தில் தேறல, சுட்ட குழல்மீன ஆகி யவை பெறுவீர் என்றுரைத்தான் (சிறு. 143-163). பரிசில் பெறப் போகும் இரவலனை நோக்கி, நீ இளந்திரையன் நாட்டிற்குச் சென்றால் அங்கு வழிப்பறி கொள்ளை செய்யும் கொடியோர் இல்லை; இடி முழங்காது; பாம்பு தீண்டா; காட்டு விலங்கினங்களும் துன்பஞ் செய்யா; நீ விரும்பிய இடத்தில தங்கிச் செல்க; நின் உள்ளம் சிறக்க; எனப் பரிசில் பெற்ற பாணன் உரைத்தான் (பெரு. 37-45). இளந்திரையன் கொடைக்கடனைச் செய்து முடித்த குவியாத உள்ளத்துடன் நல்லமைச்சுச் சுற்றம் சூழ வீற்றிருந்தான் (பெரு. 446,447). விழு மிய பொருளை ஈதல் உள்ளமொடு நல்கி இசை விரும்புபவன் நெடுஞ்செழியன் (மது. 204,205). மலைநாடன் தலைவியை முயங்குங்கால் இவளது உள்ளத்தன்மை மேல் வரைந்துகொண்டு இல்லறம் நிகழ்த்துதலா யிருக்கும் என்று கருதினான் (குறி. 199,200). பிறர்க்கீயாது தம் பெயரைத் தம்மொடு கொண்டு மாய்ந்தோர் சேயாற்று எக்கர் மணலி னும் பலராவர்; அதனால் நம் வரைந்த நாள் புக மொடுங் கழிக எனக் கருதி விரிந்த விசும்பு போன்ற உள்ளத்தோடு தன்பால பரிசில் நயந்து வந்த இர வலரைக காட்டிலும் தான் உவந்த உள்ளத்தோடு அவரை அமர்ந்தினிது நோக்கி நன்னன் ஆடை, நிணத்தடி, வெண்ணெல் அரிசி ஆகியவற்றை மிகு தியாகக் கொடுப்பான் (மலை. 552-565). 'நெஞ்சே! நீ தலைவியோடு உறையும் போது முன்னின்று பொருள்வயின ஊக்கி இப்பொழுது பின்னின்று ஒழியச் சூழ்ந்தனை; அச்சூழ்ச்சியில தவிராது நீ செல்வாயாக, நின் உள்ளம் சிறக்க' எனத் தலைவன் நெஞ்சினை நோககிக் கடிந்து கூறுகின்றான் (அகம். 19:6-8). நம் இல்லத்தில் ஊர்க்காவலர் அறியாமல் தலைவரையே விரும்பும் நம் உள்ளத்தின் வேட்கை நிறைவுற, இனனுயிர் குழைய அவர் முயங்கினார் (அகம். 22:16-18). சுடர்ந்திலங்கு எல்வளை நெகிழ்ந்த நம்மிடதது அன்பினாலே படர்ந்திருக்கும் தம் உள்ளம் பழுதுபடாதவாறு தலைவர் கடிய சுர நெறி வழியாக இரவுக் குறியிடத்து வந்து சேர்ந் தார் எனத் தோழி தலைவிக்குக் கூறினாள் (அகம். 68:

12-14,21). ஆடவர் உண்மைப் பொருளாவது அருளன்று ஆள்வினையேயாம் என்று துணிந்த உண்மையற்ற அறிவினையுடைய வலிமிக்க உள்ளமொடு மடிந்திராது தலைவர் கல்வழியே பிரிந்து செல்லின் முயக்கமின்றித் தலைவியின் அழகு கழிந்ததற்கு இரங்குநர் அல்லது அவ்வழகினை உலகில் யாராலும் மீட்டுத் தர முடியாது (அகம். 75:1-15) பிரிந்து சென்று பொருள் தேடும் பொருட்டுச் சிறந்த செம்மல் உள்ளம் துரத்தலின் வெம்முனை அருஞ்சுரம் நீந்தித் தலைவி அழச் செல்லுவீரோ எனத் தோழி தலைவனை வினவினாள் (அகம். 81.10-15). அலர் எழுந்தமையின் தலைவியை இறசெறித்தமை அறியாது பலநாளும் சுழலும் உள்ளத்துடன வருந்தும் நின்னிடம் களவொழுககத்தைக் கைவிடுக என்று எங்ஙனம் கூறுவேன் எனத் தலைவனிடம் தோழி உரைத்தாள் (அகம். 90:4-8). மலைப்பககத்து வெறுப்பில்லாத கொள்கையோடு நமக்கு உவநதளித்த அவரது இனிய உள்ளம் இன்னாத தாயினமையின் வெறுக்குமாறு நிறுத்த தலைவன அருளால் வந்த துன்பம் அவன் மார்புறத் தணியும் என்பதை அன்னை அறிந்திலள் எனத் தோழி தலைவன் சிறைப்புறத்தானாகத் தலைவியிடம் கூறினாள் (அகம். 98:1-6). ஆயமொடு பந்து விளையாடினும் தலைவி நொந்து வெம்புவாள்; இப்பொழுது வன்கணாளனை நம்பிச் சுரநெறியிற் செல்ல அவள் அடிகள் பொருத்தமானவை யல்ல; மெல்லியல் வன்மையுடையள் ஆவாளோ; ஆகாளே; இதனை நினைக்க யான் வருந்துவேன்; என் உள்ளமும் வருந்தும் என்று மகட் போக்கிய செவிலி கூறுகிறாள் (அகம். 153:1-13). கூதிர்ப்பருவத்து யாம் தமியமாக, பிரிவுத் துன்பம நெஞ்சிவ்மிக, சில்வளை நெகிழ, பேரார்வமுடைய உள்ளமொடு தலைவர் வருந்திசையை நோக்கி இறந்துபடும் துன்பத்தோடு இருந்தோம் எனத் தலைவி ஆறறாமை மீதூரக் கூறினாள் (அகம். 163:2-6). அறச்செயலிற் பிறழாது நடத்தலும் கேளிர் துன்பந் துடைத்து அவரை நல்வாழ்க்கையில் நிறுத்தலும் நாளும் முயற்சியில் வருந்தாது மடிந்த உள்ளத்தோடு இருந்தார்க்கு இல்லை என்று, தலைவர் வினை மேற்கொண்டார் (அகம். 173:1-4). அருந்தொழில் முடித்த செம்மல் உள்ளமொடு சீர்மிகு குரிசில வந்துநின்றது தலைவிக் கன்றி எனக்கும் இனிதாகியது; சிறக்க நின் ஆயுள் எனத் தோழி தலைவனைப் பாராட்டி வாழ்த்துகிறாள் (அகம.184:3-5,19). 'நெஞ்சே! ஆசை உள்ளம் மடிவின்றிச் செலுத்த நீ செல்லுதற்கு உரியை; யான் வளம் பெரிது பெறினு வாரேன்' எனப் பொருள்கடைக்கூட்டிய நெஞசிற்குத் தலைவன் உரைத்தான் (அகம். 199.15,16,24). நள்ளிரவில் சோம்ப லில்லாத உள்ளத்தோடு வேல் துணையால் இருள் பரந்த மலைவழியில் தலைவன ஆராய்ந்து பாராமல் இரவுக் குறியிடம் சென்றான் (அகம. 202: 12-14). உயிர்கலந்து ஒன்றிய பழமையான நட்பினால் குற்ற மற்ற நெஞ்சமொடு செறிந்தவர் போல உன்னைப் பிரியலம் என்று பொய்வல் உள்ளமொடு விரும்புமாறு கூறித் துன்பம் நிறைந்த வருத்தமொடு நுதல பசப்பூர நாம் அழத் தலைவர் பிரிந்தனர் எனத தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 205:1-7). தேன் கலநத இனியபாலை ஏந்திக் கூந்தலைக் கோதி விருமபுமொழி கூறிப் பருகுக என்னவும் வெறுத்த உள்ளமொடு மறுத்த சொலலளாகிப் பருகாதவள் உப்பு நீரைப் பெருமூச் செறிந்து பிறைநுதல வியர்ப்பப் பருகினாளோ என மகட் போககிய தாய் வருந்திக் கூறினாள் (அகம்.207:12-17). கங்குலும பகலும் பொருந்தி உள்ளத்திலே மூட்டப்பெற்ற அறிவினைச் சுட்டெரிககின்ற கவலையாகிய நெருப்பினை முயறசியாகிய மழையினால் அவித்து நாளும் பாலை நிலத்திருந்து வருநதுகிறோம்; [illegible] வாளோ எனப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் நெஞ்சிற்குக் கூறினான் (அகம். [illegible]) என்றும் [illegible] யாத உளளம் ஏதேனும் ஒரு [illegible] தாம கேட்டறிந்த [illegible] தொட்டியாகக் கொணடு தம் உள்ளமாகிய யானையைத் தடுத்து நிறுத்தி அறமும் பொருளும் நாடித் தம தகுதியையும் நோக்கி அதற்குப் பின் தாம் நினைத்த செயலை முடித்தல் பெரியோர் ஒழுக்கமாகும் (அகம். 286.8-13). பொருளீட்டத் துணிந்த நமமிடத்துச் சுழலும் உள்ளத்தோடு வருநதுத லொழியாது பிரிந்த நாளை எண்ணிக்கொணடு கண்ணீர் துளிப்பப் பலலி ஒலிக்குநதோறும் நல்லது கூறுக என நடுங்கி மாலைக் காலத்தொடு போர் செயகின்றாளோ எனத தலைவன தன நெஞ்சிடம் கூறினான (அகம். 289.4-17). பகலும் இரவும் வினைவயிற் பிரிதலையே நினைக்கும் உள்ளமே, 'நீ இளமை தொட்டு வாழந்த ஊரை மறந்துறையும் வளமை பெற்றாலும் பிரிவு கருதி வெய்துயிர்தது வருத்தமான துனபத்தோடு அழிந்த தலைவியின பேதுறு நிலையினை மறந்துறைதல் அரிது' எனத் தலைவன் இடைச் சுரத்தில் தன் நெஞ்சிற்கு உரைத்தல் (அகம. 299:1-4, 19-21). பனையில தஙகும் அன்றிலின துன்பக் குரலாகிய தீக்கடைகோல் கடைதலால் தன் உள்ளேகனலும் உள்ளம் மெதுவாகக் கனையெரி தோன்றுமாறு ஆயர் ஊதும் தீங்குழல் கேட்டு யான் உயிரோடிருப்பது எஙஙனம் என்று பிரிவால் வருநதும் தலைவி தோழியிடம் உரைத்தாள் (அகம. 305.12-16). குறித்த பருவத்தில் தலைவர் வந்திலர் எனக் கருதி

நினைந்தபோது, ஒன்றை விரும்பி நினைத்த உடனே உள்ளம் நினைக்கப் பட்ட அபபொருளின்பாற் சென்று நிற்பது போல, நம காதலர் வந்துநின்ற னர் எனத் தோழி தலைவன வரவுணர்ந்து தலை விககுக் கூறினாள (அகம். 317:17-21). முனனே நின்று ஆள்வினைக கெழுந்த அசைவில்லாத நம் உளளததினின்று ஆணமை நமமை வலிந்திழுக்க வும் உள் நின்ற காமம இடையிலே தடுக்கவும் பிளவு பட்ட நெஞ்சம் இருதலைக் கொளளியின் இடைப் பட்டு வருநதும் எறும்பு போனறது என இடை வழியில நெஞ்சிற்குத தலைவன உரைத்தான் (அகம். 19·5-10). வறுமையில வாடிய சுற்றத்துடன் தன் பால பாணர் வரின் வலிமை மிக்க உள்ளத்தோடு சென்று பகைவர் முனையைப் பாழபடுத்த அரண் களை இடித்துக கொணர்ந்த பேரணிகலன்களாய பொருளைப பிறரொடு ஆராயாது நன்னன் வழங் கினான் (அகம. 349:5-8). கிடுகினையும் வேலினை யும் கைககொண்டு துணிபுடைய உள்ளமொடும் செறிநத வலியோடும் அறியாத தேயத்து அருஞ சுரம சென்ற இளையோனுக்கு ஒதத என மகள் வறிய பெணடின புலவேயநத குடியில் சிலம்பு கழி நோன்பு அயர்வளோ என மகட்போக்கிய செவிலி வருந்தியுரைததாள் (அகம. 369:18-26). அருஞ்சுரம் நீநதிய வருததமொடு பொதியிலின்கண் மாலைப் பொழுதில் தனிமைத் துன்பம் ஒருசேர வந்து மிக வலியஉளளம் ஆள்வினையிற் செல்லுதலை வலியுறுத்தச் செயலற்றுத துன்புறும் நம் நிலையறி யாது தன்நிலை கருதித தலைவி வருநதுவாள எனத தலைவன் இடைச்சுரத்துத தன நெஞசிற்குரைத்தல் (அகம. 373:4-10). பகலிலும் பிரியாது மனையிலேயே தங்கிய தலைவர் இப்பொழுது இரபபோர் ஏந்திய கை நிறையப் புரப்போர் வருத்தமற்ற உள்ளத் தோடு புதிய பொருளை வழங்கி உவக்கும் அரும் பொருளை ஈட்ட மலைகடந்து சென்றுள்ளார் (அகம. 389:9-13,24). நிழலறற வழியில் ஆணமான் கானல நீரை நீரெனக் கருதிப் பருக ஓடித தனிமை யுறறதால உண்டான சுழற்சிமிகக உளளததோடு மெலிநத குரலால் தன் பிணையை அழைக்கும் (அகம். 395:7-11). மலை கடந்து சென்ற தலைவர், மயிர்ச சந்தனத்தின் மணததை உணடு, இருண்டு பலவேறு மலர்மணமும் விரவி, இமயக் கானம் போல கமழும் கூந்தலினை உடைய தலைவியின் இனலுறல் ஆகத்தைப் பருகுவது போன்ற காதல உளளததோடு முயங்குதல இனறி அங்கு நீட்டித் திரார் எனத் தோழி கூறுதல் (அகம். 399:1-5, 18). பெயல நீரினை ஏறற பசிய மட்கலம்போல உள்ளந் தாங்காத ஆசை வெள்ளத்தில் நீந்தி அரிய தொன் றினை அவாவுகின்றனை என இரவுக்குறி மறுக்கப் பட்ட தலைவன் மீண்டும் அதனை விரும்பும் நெஞ்சு நோககிக் கூறினான் (குறு. 29:2-4). காதலர் அருளா ராயினும் விரும்பாராயினும் அவரைப் பல்காற் காண்டல் உள்ளத்துக்கு இனிது என்று பிரிவில் வருந்தும் தலைவி தோழியிடம் கூறுதல் (குறு. 60:4-6). மறநத தலைவரை நினைத்தால் பிரிவுத்தீ சுடுதலின், தன் உள்ளம் வேகிறது எனத் தலைவி உரைத்தாள (குறு. 102:1). நள்ளிரவில் படுத்துத் துயிலும் யானை போல் பெருமூச்செறிந்து தன உள்ளம் மீண்டும் தலைவியிடத்தே சென்று தங்கி யுள்ளது; இதனை அவள் அறிந்தாளோ, அறிந் திலளோ என நினைந்து இயற்கைப் புணர்ச்சியின் பின் தலைவன வருந்தினான் (குறு. 142:2-5). செய் வினை முடித்த செமமல் உள்ளமொடு தலைவியை மேவிக் குவளைமலர் மணக்கும் நறுமென் கூந் தலின மெலலிய படுக்கையில் தலைவன் கிடத்தல (குறு. 270:5-8). செய்வினை முடிதத செம்மல் உள்ள மொடு வல்வில் இளைஞர் பக்கத்தே காவல் செய்யத் தலைவன் தேரில வந்தான் (குறு. 275:5-8). தலை வியின காதல்நோயைப் பிறிதாக எண்ணி வெறி யாட்டெடுத்தால் தீரும் என உணர்நத உள்ள மொடு மறியறுத்து அன்னை முருகனுக்கு வெறி யாட்டயர்ந்தாள் (நற். 47:7-10). அறிவும் உள்ளமும் தலைவர்பால் சென்றதால் தன்யாக்கை உள்ளே எதுவுமின்றி யிருந்தது எனத் தலைவி தோழி யிடம கூறினாள் (நற். 64:8,9). தோழி நகை யாடிக் கூறக் கேட்ட தலைவன் எனது துன் புற்ற நெஞ்சம் உய்யுமாறு நகாது உரைப்பாயாக; நகைத்து உரைப்பின் உள்ளம உடையும் என்று கூறினான் (நற். 75:4,5,10). அறிவின்றிப் பருவத்தை மறந்து கடல் முகந்த கரிய மேகம் தாங்கமாட் டாது பெய்த மழையைக் கார்காலம் என அயர்ந்த உள்ளத்துடன் அறியாதனவாய்ப் பிடவும் கொன் றையும் காந்தளும் மலர்ந்தன (நற். 99:5-10). அரும் பற மலர்ந்த வேங்கையில் சுரும்பு இமிரும் மலைப் பக்கம் அஞ்ச யானையைக் கொன்று அச்சமற்ற உள்ளத்துடன் சிங்கம் நடமாடும் (நற். 112:2-4). இடி முழங்கும் அச்சந்தரும் நள்ளிருளில் தலைவன் வருவான் என்பது உண்மையோ, இல்லையோ, வேறு யாதோ என ஆராய வல்ல உள்ளமொடு அயலார் அறியாதவாறு கூறிக்கொண்டு அன்னை கொடிய முகத்தினளா யுள்ளாள் எனத் தோழி தலைவன் கேட்பத் தலைவிக் குரைத்தாள் (நற். 122:5-9). உடன்போக்கினை மேற்கொண்ட தன் மகள் விளையாடிய நொச்சியையும் திண்ணையை யும் நோக்கி நினைந்தால் உள்ளம் வெந்தழி கின்றது எனத் தாய் நொந்துரைத்தாள் (நற். 184: 6-9). பெண்ணை மடலில் உள்ள கூட்டில் தங்கிய

நாரை நள்ளென் யாமத்துப் பிரிவால் வருந்தி நரலுந்தோறும் உருகிச் சேற்றுக் குழம்பு போன்ற என் உள்ளத்தோடு மனமும் உடைந்து இன்னும் உயிர் வாழ்கின்றேனே எனத் தலைவி வருந்தி உரைத்தல் (நற். 199:1-5). வலிமை மிக்க உள்ளத்தோடு சுரம்பல நீந்திப் பொருளீட்டச் சென்றாராயினும் தலைவர் கூறிய சொல பொய்க்காது வருவர் எனத தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 246:5-7). தலைவியின் துனபம் மிக்க உள்ளம் நடுங்குதலைக் காண்பதற்காக, அன்பினமையால் பொய்மையாக இடிக்கினற இடியொலி கேட்டு மயிலினமாகிய அறிவில்லாத கூட்டம ஆரவாரித்தது; அதுகொண்டு இதனைக கார்ப்பருவம என்று மயங்கேன் எனத் தோழி கூறுதல் (நற். 248:5-9). எனது நெஞ்சம் இருண்ட கூந்தலையும் மலர் போன்ற கணணையுமுடைய என உள்ளத்தைப் பிணித்துப் பற்றிக் கொண்டவளிடம் சென்று அவளது துனபத்தைத தீர்ப்போம் என்று கூறும் எனத் தலைவன உரைததான் (நற். 284:1-4). பிரிந்தோர் வருந்தும் கார்காலத்தும் வினையே நினைந்த உள்ளமொடு காதலர் விரைந்து சென்றார்; நாம் வருந்தும் துன்பத்தில உழன்று இங்குத் தங்கியுள்ளோம் எனத் தலைவி கூறுதல் (நற். 296:6-9). 'என் உள்ளமே, நீ வாழக! பலகாலும் என்னிடமிருந்து தலைவியிடம செல்லுதலால நீ வருந்தினாய்; இங்ஙனம் வருந்தியதன பயனாகக் கீழ்பால் விடியலில் தோனறும் வெள்ளி போலக் காதலி ஒருநாளேனும நம் அருகில இருப்பக் கிடைப்பாளோ' எனத் தலைவன் நெஞசு நோக்கிக் கூறினான் (நற. 356; 6-9). துறைவன் சங்கு போனற வெணமணல் உடைய இடத்தில மணநது கொணட தலைவியைப் பெருமை சான்ற உள்ளத்தால விரும்பி நோக்கி அனனை மீனுணங்கலைக் கவர வரும் புள்ளினத்தை ஓபப மெலலிய கோல் தநதாள (நற். 372.5-8). காதல் செலுத்துதலால் உளளம் வருந்தி யாமே வந்து நின்னைக் காணுங்காலம் எயதுமாயின தவறாமல் சேர்தற்கு மலைக்கு நின்னூர் எவ்விடத்தது எனக் கூறுக என்று தோழி அலல குறிப்பட்டு நீங்கிய தலைமகன் மீண்டு வந்துழிக் கேட்டாள் (ஐங். 237). நம் பிரிவினால தலைவி அழுத கண்ணளாய் அழகிய நலங்கெட்டு உள்ளத்து நினைவால் நாம் கடந்து வந்த சுர நெறியை நினைக்கும்; ஆதலால், வெம்மையான பொடியுடைய பாலை நிலத்தை நீந்தி வந்தாலும் இனிச் செலவு தவிர்க எனத தலைவன் நெஞசு நோக்கிக் கூறினான (ஐங். 330). ஒளளெரி மேய்ந்த சுரத்திடை உள்ளம் வாங்குதற் பொருட்டு நீ தநத குணங்கள் நினைத்தற்கு இனியன என்று வினை முற்றி மீண்ட தலைவன் தலைவியிடம் புகழநது கூறினான் (ஐங். 356). தலைவன் வெண்கடம்ப மரத்தின் குறுஞ்சினையை வளைக்க, உடன் போகிய தலைவி பஞ்சாய்ப் பாவைக்கும் தனக்கும் பூங்கொத்துக்களைக் கொய்தாள். அதுகண்டு அவன் உள்ளம் மகிழ்ந்தது (ஐங். 383:2-6). பெருஞ்சிறப்பினையுடைய மகன் முறுவல பூததுச் சிறுதேர் உருட்டும் தளர்நடை கணடு காதலியைப் போல மகனிடத்தும் தலைவன உள்ளம மிகுநத அன்பு கொணடிருந்தது (ஐங். 403). 'பிரிநதோர் உள்ளும் பொழுது இது; ஆதலால செறிதொடி யணிநத தலைவி உள்ளம் உவபப வலவ, தேரைச் செலுத்துக' எனறு வினைமுடித்த தலைவன பாகனிடம் கூறினான (ஐங். 487). கார்ப்பருவம இடையீடினறி வருத்துதலால நோய்மிகுகு உழலும் உள்ளமொடு நின் அழகு துணை செய்ய விரைநது வநதேன எனத் தலைவன் தலைவியிடம் மொழிந்தான (ஐங். 491). நீ தனிமை கருதாத உள்ளமோடு பொருள வயிற் செல்லுதற்குச சக்கரத்தின வாயைத் துகள் போகத் துடைக்கின்றாய்; இவளுக்குக் கோடறுபூ உதிர்வதுபோல வளை கழலுகின்றது எனத தோழி தலைவன செலவழுங்கக் கூறினாள் (கலி. 7:13-16). தலைவியைத் துறந்து பொருளீட்டச் செல்லும தலைவனை நோககி, 'நீ உரன்மிக்க உளளமுடையாய்; தேடி முடித்த செல்வத்தாலே உணடாகும பொருள்தான் இவ்வின்பம் எனறு கூறுகினறவனே, இளமையும் காமமும் நின கையிடத்து நிலலாவாய நாடோறும் கழியும்' எனத் தோழி கூறினாள் (கலி. 12:9-12). 'பொருள் வேட்கையினால உள்ளம செலுத்தப் பிரிநதுறைதலை நினையாதே; நீ தலைவி தோளில் எழுதிய தொயயிலையும மாாபிற சுணங்கையும் நினைததுப் பார்' எனத் தோழி தலைவனிடம் கூறிச செலவழுங்குவித்தாள் (கலி. 18:1-4). (துரியோதனன்) சூழச்சியால பாணடவர் இருந்த அரக்கில்லம் எரி சூழ வளிமகன (வீமன) அதனை அழித்துத் தன் உள்ளத்துககுப் பொருந்திய சுற்றத்துடன உய்ந்தான் (கலி. 25:1-8). இத்தலைவன எந்தைதன் உள்ளங் குறைபடாதபடி வேண்டுவன கொடுத்துத் தான் குறித்ததொன்றைக் கைபபற்றா மற்போகாக் குணமுடையவன எனத் தலைவியிடம் தோழி உரைத்தாள (கலி. 61:26-28). சிலம்பார்ப்பத் தெருவின்கண் தாக்கணங்கு போலத் தாக்கி நின் உள்ளத்தை அகப்படுத்திக் கொண்டு பின கைவிட்டவளை, 'நின குறை கூறி அழைத்துக் கொள்ளக் கருதிய நீ துணிநத செயலவேறொனறாயிருக்க இவள் துணிவிலள் எனக் கருதிப் பணிவுடையை போல வந்து பயனில் சொற்களைச் சொலவாயோ, அது நின்னை வருத்தாதோ' எனப் பரத்தையர்

சேரியிலிருந்து வந்த தலைவனோடு காமக்கிழத்தி ஊடலொடு கூறுகின்றாள் (கலி. 69:8-11). 'எங்குத் தங்கினாய்' எனக் கேட்ட தலைவிக்குச் சேடி, நின் பிள்ளையைக் கண்டு தாய்மார் 'யான் நோம்படி உள்ளத்தைக் கைக்கொண்டு பின்னர் என்னை நினையாத மகனல்லான் பெற்றமகன் இவன்' என்று அகன்ற இல்லத்தின் வாயிலின் எல்லையைக் கடந்து தெருவிலே வந்து தடுப்ப அவரிடத்தே தங்கினான் என்று பதிலுரைத்தாள் (கலி. 84:11-15). புனலாடிய போது இழுத்த நீர் புகழமைந்த சிறப்பினையுடைய நின் நீர்மையை யுடைய உள்ளத்தை வாங்கிக் கொள்ளுதலினாலே குற்றமற்ற புதுப்புனல் வெள்ளத்தினின்று கரையேறுதற்கு இன்னும் கரைகண்டதும் இல்லை எனத் தலைவன் பரத்தைமையைத் தலைவி குறிப்பிற் சுட்டினாள் (கலி. 98:27-29). பாண்டிய னுடைய கேடில்லாத குடிக்குப்பின் தோன்றிய பெரிய குடியிற் பிறந்த ஆயரும் ஒருங்கு நிறைந்த செருக்கினை யுடைய உவகையராய்ச் சேரக்கூடி ஏறுதழுவுங்கால் பிறர்க்குத் துன்பம் நேரும் என்னும் வருத்த மில்லாத உள்ளத்தோடு பலநிற ஏறுகளைச் சுழன்று திரியுமாறு தொழுவிடத்தே சேரப் புகவிட்டனர் (கலி. 105:1-8,22). நம்மைப் பிரிந்து உள்ளில் உள்ளத்தால் நம்மை நினையாது அமைந்திருந்தாரை உள்ளுள் உவந்து நினைக்கும் நம் நெஞ்சமும் இம் மாலையையும் ஊரார் கூறும் அலரையும் பொறாமல் நம்மை விட்டுப் போகின்றது; இனி என் செய்வேம் எனத் தோழி கேட்பத் தலைவி மாலைப் பொழுது கண்டு புலம்பிக் கூறினாள் (கலி. 118:22-25). என் உள்ளத்தைத் தம்மிடத்தே கொண்டு நீங்கினவர் எனக்குத் துணையாக இல்லாத பொழுதில் வெள்ளத்திலே அகப்பட்ட மானின் மருமத்தைப் பார்த்துக் கணை தொடுக்குங் கொடியவனைப் போல அல்லலிலே அழுந்திக் கிடந்த என்னைக் கையற வெய்துவிக்க வந்தாயோ என்று மாலைப் பொழுது கண்டு பிரிவிடை யாற்றாத தலைவி வினவினாள் (கலி. 120:10-12). முல்லையரும்பு போன்ற எயிற்றினையும் இனிய மகிழ்ச்சியையு முடைய மாதரின் அழகால் அவளிடத்தைப் பற்றிக் கொண்ட என் நெஞ்சின் உள்ளத்தைச் சுடும் காமத்தீ என் ஆருயிர் போம் வகையில் சுடும் என்று மடலேறும் தலைவன் சான்றோரிடம் கூறினான் (கலி. 139:26-29). பிரிவில் தலைவனை நினையும் தலைவியின் உள்ளம் குவியுமாறு போலக் கழியில் மலர்கள் கூம்பின (கலி. 143:36). 'வளியே, உயவுத்தேரை ஊர்ந்துவந்து, தன்னால் அளிக்கத் தக்க என் உள்ளத்திடத்தே கெடாத காம நோயைச் செய்து, என்னைக் கைவிட்ட அன்பிலாதவனை எனக்குக் காட்டுவாயாக' எனப் பிரிவாற்றகில்லாது நாணுவரை யிறந்து தலைவி கலங்கி மொழிந்தாள் (கலி.144:37-42). தலைவனின் அன்புடைமை யறிந்தே அவனோடு தலைவி நக்காள். அக்காலத்து அவள் நாணும் நலனும் உள்ளமும் புணர்ச்சியால் மிகுதியைப் பெற்றன; அவை அவன் நீங்கிய அப்பொழுதே அவனிடத்து நின்றுவிட்டன (கலி. 146:18-21). கள்ளுண்டார்க்குக் கள்ளின் மயக்கந் தோன்றவும் உள்ளத்தே துன்பந் தோன்றவும் அம் மயக்கத்தால் உண்டான மதர்ப்பே அவர்தம் நிலையை வெளிப்படுத்தி நிற்கவும் ஊரார் பழிமொழிக்கு அஞ்சி அவர் ஊக்கத்தாற் பாதுகாத்துக் களி மதரை மறைத்தனர் (பரி. 10: 65-68). காத்தலாகிய ஒரு வினைக்கண் மேவும் உள்ளத்தினர் திருமால் (பரி. 13: 49). மணிபோலும் பொறியினையுடைய ஆடும் மயிலை நோக்கி அதன் அழகையும் களிப்பையும் தன் உள்ளத்து நினைப்பவளைக் கண்டு, 'நீ நினைத்தது உணர்ந்தேன்; அதனை உரை; என்னை நோக்காது எள்ளுதலை மறைக்காதே' எனக் கூறி அவன் காதலி ஊடினாள் (பரி. 18: 7-10). பரங்குன்றத்தை அடைந்து முருகன் யானையை அலங்கரித்து உவகை மிக்க உள்ளத்தால் மணமான மகளிரும் கன்னி மகளிரும் பூசை செய்து யானையின் கவழ மிச்சிலை உண்டனர் (பரி. 19: 85-91).

2. **ஊக்கம்.** பாண்டியனுக்குத் துணையாக நாலை கிழவன் நாகன் படை வேண்டுவழி வாளுதவி, வினை வேண்டுவழி அறிவு உதவி, இவ்வாறு வேண்டுவன பலவும் உதவித் தான் பூண்ட நுகம் ஒருபாற் கோடித் தளராமற் செலுத்தும் பகடு போல ஆண்மைக் கூறுபாடு பொருந்திய உள்ளத்தையும் - ஊக்கத்தையும் - தோலா நல்லிசையையும் பெற்றுத் திகழ்ந்தான் (புறம். 179: 5-10). தன் தாக்குதலில் பன்றி இடப்பக்கம் வீழ அன்று உண்ணாமல் வழிநாள் இரைவேட்டெழுந்து களிற்றை வலம்பட வீழ்த்தும் புலி பசித்தன்ன மெலிவில்லாத உள்ளத்து உரனுடையாளர் நட்பு இயைவதாகுக எனச் சோழன் நல்லுருத்திரன் உரைப்பர் (புறம். 190: 6-12). நிலம் பின்னிடுவது போலக் காற்குளம்பை யூன்றிக் காண்போர் உள்ளத்தைக் கெடுக்கும் விரைந்த செலவினையுடைய குதிரைமேல் பகைவரைக் கொல்லும் வீரன் வந்தான் (புறம். 303:1-3). வளத்தையுடைய உள்ளமொடு பகைவர் செய்த புதிய போரை வென்று, குருதிச் செம்புனலொழுக மேலும் பல போரைச் செய்குவை எனக்களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாராட்டுவர் (பதி.36: 3, 13, 14). மலைநாடுகளைக் கைப்பற்றிப் பொருது சினந்தணிந்த செருப்

புகல் ஆண்மையினையும் தன்னைத் தடுப்பாரைத் தகைத்த ஒள் வாளினையும் ஓங்கிய உள்ளத்தையும் உடைய குருசில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 55: 18-21). மடியாத உள்ளமொடு பகைவரைத் தனனோடு சேர்த்துக்கொண்ட நெடுநுண் கேள்வியுடையவன் அந்துவன் (பதி. ப. 7: 1, 2). தான் தொடங்கிய வினையைக் கைவிடாத அசைவில்லாத முயற்சியுடன தாக்கியபோது இடப்பக்கம் வீழின் அக்களிற்றினை உண்ணாத புலியினும் சிறந்த குறைவில்லாத உள்ளம் மேன்மேலும் சிறப்பத் தலைவன் பொருள்வயிற் பிரிநதான் (அகம். 29: 1-5). இடுக்கண் கண்டு அழியாத உள்ளம் மேன்மேலும் சிறப்ப வினையை இங்கு முடித்தமையின் முடித்த அப்பொழுதே தலைவியின் வேய்புரை பணைத் தோளின் பசப்புறு பருவரல் தீர அவளை முயங்குகம் எனத் தலைவன நெஞ்சு நோக்கிக் கூறினான் (அகம். 47: 1, 2, 18, 19). மடங்காத உள்ளமொடு மதி மயக்குற்றுப் பிரிந்த தலைவர் தலைவியின் இருளைங் கூந்தல் இன்துயில் மறந்து பொருள் வயின் நீட்டித்திரார் (அகம். 233:13-15). தலைவியின் நுதலொளி மழுங்கவும் தலைவன் முயற்சி மேற்கொண்டு பொருள் ஈட்டக் கெடாத உள்ளமொடு வேல் துணையாக வெஞ்சுரம் கடந்து சென்றான் (அகம். 277:3, 4, 12). தந்தையின் காவல் மிகுதியால் தலைவியை அழைத்துவர வியலவில்லை; நீ திரும்பிச் செல்வாயாக; நின் உள்ளம் சிறப்பதாகுக எனச் செறிப்பறிவுறுத்தித் தோழி வரைவு கடாயினாள் (அகம். 288:1, 17). உலையாத உள்ளமொடு தன் கடமையாகிய வினைவயிற் செல்வ தனைத் தன்னுள் உறுதி செய்துகொணடு தலைவர் பிரிந்து சென்றுவிட்டார் (அகம். 325:14, 15, 21). வினைமுற்றி மீளும் தலைவன் இருப்பை மரங்களை யுடைய பொலிவற்ற காட்டுவழியில் மீள வேண்டும் எனனும் உள்ளமொடு ஊரினை அணுகிக் கொண்டிருநதான் (அகம. 351:8, 9). கோடு உயர்ந்த மலை பலவற்றைக் கடநது வேறு புலம் படர்நது பொருளீட்டிக் கொணரும் உள்ளத்துடனே தலைவர் பிரிந்தார் (அகம. 393.1, 2). கெடாத உள்ளமொடு வெகுண்டு காற்றைப்போல் விரைந்து வந்த அவுணர் கெடத் திருமாலின் சங்கு இடியோசை போல் முழங்கியது (பரி. 2: 36-40).

3. எண்ணம். மராமரங்களையுடைய பாலைவழியில் காதலிக்கு அணிகலன் கொணர்தல் வேணடும் என்னும் உள்ளமொடு - எண்ணத்தொடு - பொருட் சிறப்பை எடுத்துக் காட்டி நெஞ்சம் தலைவனை உந்தியது (அகம்.3:11-13). தலைவர் இங்கு வாராமல் அங்கே உறைவாராயினும் தாம் சென்ற நாட்டில் செய்யும் வினை முடிந்தபின மீளுதல் வேண்டும் என்னும் உள்ளத்தர் ஆயினும் தூது வரப்பெறில இவண் நம்பசலை மாயதல் எளிது எனத் தோழிக்குத் தலைவி கூறுதல் (அகம. 333:17-22).

**உள்ளி** – உள்ளிப்பூணடு (வெங்காயம்). கட்டிலுக்கும் காலின் குடத்திற்கும் நடுவிலுள்ள பகுதி மெலலிதாய்த் திரணடு உள்ளியின - உள்ளிபபூணடின- அடிபோல் இருக்கும் (நெடு. 121-123).

**உள்ளி விழவு** - ஒரு திருவிழா. கொங்கு நாட்டினர் மணியை இடையில் கட்டிக் கொணடு தெருவிலாடும் உளளி விழவின் ஆரவாரம் போலக் களவுச் செய்தி பலர் வாய்ப்பட்டு அலர் எழுநதது (அகம். 368: 16-19). தலைவியின் முலை விலையாக (பரிசமாக) பெறும் பொருளைக் கருதின் கழுமலத்தில் வெண்குடையொடு பகைவரை யகப்படுததிய நற்றேர்ச் சோழனின் பங்குனித் திஙகளில் விழா வெடுக்கும் உறந்தையோடு உள்ளி விழாவெடுக்கும் வஞ்சியும் சிறிதாகும் (நற். 234:6-9).

**உள்ளீடு** - 1. உள்ளிடுவது. பொன்னை நறுக்கினாலொத்த நுணணிய அரிசியை வெளளாட்டுத் தசையொடு சமைத்த சோற்றுணவில் நெய்யிழுதை உள்ளீடாக வைத்துண்ணுமாறு புல் வேய குரம்பைக குடியினர் இரவலர்க்கு வழங்கினர் (மலை. 439-443). விண, காற்று, தீ, புனல் ஆகிய ஊழிகளும அவற்றுக்குப் பின புனலினின்றும் தோனறுதலால மீண்டும் வெள்ளத்தினுட் கிடந்து முன் தோனறிய நான்கு பூதங்களுக்கும் உளளீடாகிய இருநிலத் தூழியும் தோன்றி, அளவிலலாத காலம் கழிந்த பின உயிர்கள் உளவாதற் பொருட்டுக் கேழல (வராகம்) திருககோலஙகொண்டு திருமால் உலகினை எடுத்தார் (பரி. 2:5-17).

2. காரணம். அனபு ஒவ்வாத கற்பு புலத்தலாற் சிறந்தது; அப்புலவிதான் வாயில வேண்டல, வாயில நேர்தல ஆகிய இவை உள்ளீடாக - காரணமாக - தலைவனது பரததைமையான் வருவது (பரி. 9.16-18).

**உள்ளுநர்** - நினைப்பவர். பகைவரின மன்றம் செல்ல உள்ளம் அழிந்து பின் தம் கரும வேட்கையாற் சென்றவரின் வலியைக் கெடுத்தலானே பின் செலனுதற்கு, உள்ளுநர் - நினைப்பவர் - நடுங்குதற்குக் காரணமாகப் பகைவர் நாட்டை நெடுஞ்சேரலாதன் பாழாக்கினான் (பதி. 13:17-19). வெம்மையால் வாடிய யானை நீர் காணாது பேய்த்தேரை நாடி ஓடி நீரற்ற ஆற்றில் கிடக்கும் ஓடம் போலக் கிடந்து வருந்துதற் கிடனான உள்ளுநரை நடுங்கச் செய்யும் கடுமையுடையது காடு (அகம். 29:15-19).

கருவுற்ற புலியின் பசி தீர்க்க யானையைக் கொன்ற ஆண்புலி, நலல பாம்பு உமிழ்ந்த மணி யொளியில் அதனை யிழுதது வருமவழி, வாள்வாயில் நடப் பது போன்று நடததற் கரியதாதலின் அவ்வழிச் செல்ல உள்ளுநா அஞ்சுவர் (அகம். 72:12-17). கொடு விற் கானவரின் அம்புபட்டு இறந்தவரின் உடலைப் பட்ட இடததில உயர்த்திய பதுக்கைகள் கள்ளியங் காட்டில களநதோறும தோன்றி உள்ளுநரை நடுங்கச் செய்யும் (அகம். 231:5-8).

**உள்ளூர்** - ஊரின் அகம். வீரபானதைதயுடைய கலத் தினராய் உள்ளூர்க் கண்ணே கூறிய நெடுமொழி யினை மறந்த சிறு பேராளர் போரினில் புறங் கொடுதது ஓடுங்கால், அவர்க்கு அரணாகப் பாண்டி யன் கீரஞ்சாத்தன் நிற்பான் (புறம். 178:7-11). கொட்டை போன்ற கண்ணையும் கரிய பிடர்த் தலையையும உடைய குறுமுயல் உள்ளூரிலுள்ள குறிய புதலிடத்தே துள்ளி விளையாடும் (புறம். 333:2-4). உள்ளூர்க் குருவியின் சேவல், கருப்பம் முதிர்ந்த பெண்குருவிக்கு ஈனில் அமைக்கும் பொருட்டுக் கரும்பின் மணம் வீசாத வெள்ளிய பூவினைக் கோதி எடுக்கும் (குறு. 85:2-5). ஆதி அருமனின் மூதூர், கள்ளுண்ணும் விருப்புடன் செல்வோர் கள்ளையுண்டு உள்ளூரிலுள்ள பாளை ஈன்ற நாரினை யுடைய பனையின் நுங்கையும் கைக்கொணடு பெயருதற்கு இடமாகும் (குறு. 293: 1-4). உள்ளூரிலுள்ள மாமரத்தி லிருக்கும வெள வால் உயர்நத கிளையில் தொங்கித் துயிலும் போது, அழிசி என்பவனின் காட்டிடத் துள்ள நெல்லிப் பழத்தின் இனிய புளிச் சுவையினைப் பெற்றதாகக் கனவு காணும் (நற. 87:1-4). கரிய தாளினை யுடைய புன்னையின் பெரிய அரும்பு மலர்ந்துள்ளமை உள்ளூர்க் குருவியின் முட்டையை உடைத்தாற் போன்றிருக்கும் (நற். 231:6,7).

**உளம்** – 1. உள்ளம். ஒரு மீன் வானத்தினின்றும் வீழ்ந் தது. அதனைக் கண்டு யாமும் பிறருமாகிய இர வலர் 'எம் வேந்தனாகிய கோச்சேரமான் யானைக் கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை நோயில னாகப் பெறறால் நல்லது' என்ற ிஇரங்கிய நெஞ் சத்துடன் மடிந்த உளம்-உள்ளம்-பரப்ப அஞ்சி னோம் என்று கூடலூர் கிழார் கையற்றுக் கூறி னார் (புறம். 229:12-17). எஃகு உளத்தில் பாய்ந்து செல்ல, இவ்வுலகத்தில் அருங்கடன்களைச் செய்து முடித்த பெருஞ் செயலை ஆளும் வீரனது மார் பினை வயவர் எறிந்தமையால் உடம்பும் தோன் றாது உயிர் கெட அவன் இறந்துபட்டான் (புறம். 282:1-5). சேறுபடுமாறு குருதியைச் சொரிந்து, மாற்றாரின் வேல் மார்புளம் புதைதலால் பகை வரின் நிணம்படிந்த கழலுடன் செம்மல் நிலத்தில் வீழ்ந்தான (புறம். 285: 10-12). பகைவேந்தன் சினந்து எறிந்தவேல் தலைவனின் சாந்தார் அகல மாகிய உளத்தை ஊடுருவியது. உளம்கழித்த சுடர் வேலைப் பறித்துத் தலைவன் ஓச்சிச் செலுத்திய போது,பகைவரின் யானைகள் தம் பிடிகள் நாணு மாறு புறங்கொடுத் தோடின (புறம். 308: 6-11). புறத்திணை நன்னாகனார் 'பிறர் உளத்தின்கண நிகழ்வனவற்றை என் உளத்தால் அளந்தறியும் விளங்குகின்ற புலமை அழகுடையேன்' என்று தம்மைக குறிப்பிட்டார் (புறம. 376:19). உடன போதற்குத் தலைவன் இசைந்தமையால், நம் கருத் தினை உணர்ந்து கொண்ட அறிவுடன் உளம் கரந்து உறையும் அன்னையின் கடுஞ்சொல்லினின் றும் இனித்தப்புவோம் எனத் தோழி தலைமகளிடம் கூறினாள் (அகம். 65:1,2). மேகம் மழை பெய்து குறைந்த பெயலையுடைய கூதிர்க்காலத்தின் கடை நாளில் உளத்தே வெறுப்பு மிக, தான் தனித் திருக்கப் பிரிந்து சென்ற தலைவரை எண்ணிய தலைவி வளை நெகிழ, ஆர்வமிக்க உளத்தோடு வருதிசை நோக்கித் துன்புற்றிருத்தல் (அகம். 163: 2-6). வன்கைக் கானவன் தன் வில்லை வளைத்து, உரவுக் கணையினை எய்து உளத்தில் பாய்ச்சிக் கொன்ற முள்ளம் பன்றி ஏற்றினைக் கைக் கொண்டு, மனை நாய்கள் குரைத்து விளையாடத் தன் குடிசை யுடைய சேரிக்குச் சென்றான் (நற்.285: 2-7). 'உன்னுடைய தந்தையிடத்து எங்கள் உளம் உள்ளதெனக் கூறி வளை நெகிழுமாறு நின்று வருந்தும் பரத்தையரை யாம் கண்டால் அக்காட்சி இன்னாது' என்று தலைமகன் சிறைப்புறத் தானாகத் தலைவி தன் மகனிடம் கூறினாள் (கலி. 80:12,13). விருப்பினால் ஒன்றுபட்ட காதலரின் உளத்தில் நிறைந்த நிறையாகிய வெள்ளத்தை உடைத்தது போல, வையை மலையினை ஒத்த அணைகளை உடைத்தது (பரி. 6:21,23). ஊடல் கொண்ட ஒருத்தி மேலும் புலந்து; அரக்கு நீர் நிறைந்த வட்டைக் கணவன் மார்பில் எறிந்தாள்; அந்நீர் அவன் மார்பில் இரத்தம் போல் வடிய, அவன் உளஞ் சோர்ந்து கீழே விழுந்து வணங் கினான் (பரி. 12:67-71).

2. **ஊக்கம்**. விளைந்த செவ்வியுடைய சிறிய இடம் நோக்கிக் கதிராகிய உணவைக் கொண்டு சென்று வளையில் நிறைய வைக்கும் எலியைப் போலச் சிறிய முயற்சியராய்த் தம் செல்வத்தை நுகராது இறுகப்பற்றும் உளம் - ஊக்கம் - இல்லாதவரொடு பொருந்திய நட்பு இல்லையாகுக எனச் சோழன் நல்லுருத்திரன் கூறினர் (புறம். 190:1-5). அஞ்சி வந்தடைந்த பகைவர்க்குப் புகலிடமாய், போர்

செய்யும் பகைவரின் முயற்சியுடைய உளத்தை - ஊக்கத்தை - கெடுத்த வாண்மிகு தானையுடைய வனாய் விளங்குபவன் முல்லை வேலி உடைய கோடைப பொருநன் (புறம். 205:4-6).

3. உள்ளிடம். 'எம் இறைவனாய முருகனால் இந் நோய் வநதது; இதனைத தணிககும் மருநதறி வேன' எனறு வேலன கூறினால 'நும் இறை யாகிய முருகன சினமும மதமயககமும உடைய களிற்றின மெய் உளம் - மெயயின உள்ளிடம் - ஊடுருவிச செலலும் அமபொடு வேட்டைககுச செல வதுணடோ என வினவினால் என்ன' எனறு தலைமகள் தோழியிடம கூறினாள (அகம. 388.19-26).

உளம்புநர் - அலைபபவர். ஒளி விளங்கும் மருபபினை யுடைய யானையை உளம்புநர் - அலைபபவர் - அவ்வியானையை ஓட்டும் கவணையால் பூக்களை யுடைய கொம்புகளில பூவினை உதிர்ப்பர் (கலி. 23:1,2)

உளி — 1. செதுக்கும் கருவி. கூரிய உளிகள் செதுக்கின உருக்கள் அழுநதின வலிய குறட்டில் தைத்த ஆர்கள சூழநத சூட்டினைக் கொணடது (தேர்) சககரம் (சிறு. 252,253). பூணினைத் தலையிலே பொருநதின திரணட வலிமை யுடைய வயிரம் பாயநத கோல செருகின உளிபோன்ற வாயினை யுடைய பாரைகளால் கட்டிகள கீழ மேலாகப பிறழுமாறு குததப் பட்டன (பெரு. 90-92). நாறபது யாண்டுகள் நிறைநத அழகும் புகரு முடைய மதத்கததைக் கொணட யானை போா செயது இறநதுபடத தானே வீழநத மருப்பினைச செமமைபபடுத்தி இரணடுபுறத்தையும் செதுக்கித் தச்சன் கூரிய உளியால் செயத இலைத தொழில விளஙகுமாறு அமைககப பட்டது வட்டக கட்டில் (நெடு. 115-119,123). தலைவர் செல்லக் கருதும் வழி, உளியின் வாய்போனறு கூர்மையுடைய பரற் கற் களை யுடையது (அகம. 33:10,11). கல பிளக்குமாறு ஞாயிறு காய்வதனால, பறநது செல்லும் குருகுகள வருந்துதற்கு ஏதுவாகிய வெபபமிக்க நீணட இடத் தில, உளிமுக வெமபரல செல்வோரின அடியினை வருத்தும் (அகம. 55.1-3). உமணரின வண்டிச் சககரததிலுள்ள பூண் சிதைதத நடுகல்லில் கூரிய உளியால இயறறப் பெறற கோடுகள் மறைந்த எழுததுக்கள, அவவழிச செல்லும புதியவர்க்கு வேறு பொருளினவாகப் பிறழநது காணப்படும் (அகம். 343.4-8). காயநத தலையினை யுடைய பருந் தின், உளிபோன்ற வாயையுடைய பெண பருந்து ஓமை மரத்தின் கிளையில ஏறிப் புலம்புகொள அரற்றும (ஐங். 321.1-3).

2. ஈட்டி. பரதவரின எறிஉளி - எறியீட்டி - தாக் கிய பெரியமீன், விலலினைப போலத் தாவிச் சென்று தன் புணணில ஒழுகும் குருதியால கட லின் நீர்நிறம் மாறுபட அதன பரப்பைக் கலககி, வலி குறைநது படகின் பககலில வந்துசேரும் (அகம. 210:1-6). வலிய புரிகளால முறுககுணட கயிற்றின நுனியில் கட்டிய எறிஉளியுடைய, படகிறசெலலும பரதவர் இரவில விளககொளியில மீன்களை வேட்டையாடிக் கவாவா (நற. 388:2-5).

3. பாரை. களவர் நிலத்தை அகழுங்கால இடைப படும் கலலையும மரததையும் துணிககும் கூாமை யுடைய உளி - பாரை - உடையவராக இருததல (மது. 635,641).

உளியம் - கரடி. பழமுதிர்சோலை மலையில இறங்கும் அருவியின ஓசையால பனறியோடு, பனையின செறும்பினைப போனற கரிய மயிாபொருந்திய உடமபையும வளைநத அடியையுமுடைய உளியம - கரடி - பெரிய கல் முழையில சோநதது (முரு. 311-314). இரவில தலைவன வரும மலைவழிக்கண இடும்பை தருவனவறறில உழுவை, ஆளி, உளியம முதலியன சிலவாகும (குறி. 252,260,261). விடியலில எழுந்துலவும் உளியம் இருப்பைப் பழத்தினை உணடு வெறுததால, கறையான் அமைநத புறறின நெடிய உச்சியினைத துருத்திபோல உயிர்த்துப் பெயர்த்துத் தனது இரையினை எடுததுணணும (அகம. 81.1-5). தலைவன் சென்ற நெறி மூஙகில நிறைநத காட்டில பாமபு இறநதுபடுமாறு கொடு விரல உளியம் தோண்டும வடுககள பொருந்திய புறறுக்களை உடையது (அகம. 88:13-15).

உளை - 1. தலையாட்டம். ஐவர் (பஞ்சபாணடவா) அசையும உளை - தலையாட்டம - அணிநத குதி ரையை உடையராக விளங்கினர் (புறம. 2:13). அசைநத உளையுடைய கதியைக கொணட குதிரை பூட்டப் பெறற பொறறேரில பொலி வோடு தோனறுதலால், சோழன உருவப பஃறேரிளஞ்சேட் சென்னி, கரிய கடலில உயர்ந தெழும் செஞ்ஞாயிற்றின ஒளியுடையவனாகத திகழநதான் (புறம. 4:13-16). பாணடியன பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி தன பகைவா நாட்டில், புள்ளினம ஒலிககும புகழசால் வயலி டததே வெளளிய உளையணிநத குதிரையின குளம புகள் தாவத் தேரினைச் செலுததினான் (புறம. 15:4-6). நலங்கிளளி அசைகினற உளையணிநத குதிரைகளையுடையவன (புறம. 382.4;5). இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன, புலவர் ஏத்த உயரிய புகழை நிலைநிறுத்தி, விரிநத உளையுடைய குதிரை யும் களிறும தேரும ஆகியவறறைக கூத்தர் முதலி

யோர்க்கு ஓமபாது நல்கினான (பதி. 20:14-16). உளையாற் பொலிவுபெற்றது குதிரை (பதி. 22.17). சிவநத நிறம் ஊட்டபபெற்ற உளையினை அணிந்த மனம செருக்கிய குதிரைகள் (பதி. 38:7). 'வெள்ளிய உளையை யணிநத விரைந்த செலவினையுடைய குதிரையை ஊர்நது பனிக்கடலில் சென்று அலைகள் காறறால் உளைந்து சிதறுமாறு போர் உடற்றிய கால வருததத்தினினறும நீங்குமோ' என்று கடல பிறக கோட்டிய செங்குட்டுவனைப் பரணர் சிறப் பித்துரைததார் (பதி. 41:25-27). கடல் பிறககோட் டிய செங்குட்டுவன, கூத்தரின பெருங்கிளை வாழக் கொடுத்த உளை விளங்கும் மனம் செருக்கிய குதிரை களை எணணினால அவை கடல் அலைகளைக் காட்டிலும பலவாகும் (பதி. 42.14,15,23). வெட்டப படட பிணங்களை இடறுதலால் சிவநத குருதிக் கறையுடைய குளம்பினையும் விரைந்த செலவை யுமஉடைய குதிரைககு விரிந்த உளையினைச் சூட் டிப் பகைவர் வீரம் கெடும்படி வென்ற வீரர்க்குத் தலைவன் செலவககடுங்கோ வாழியாதன் (பதி. 65: 1-4). தீ அவிழந்தாறபோனற விரி உளை சூட்டிக் காற்று கிளர்ந்தது போன்ற விரைந்த செலவினை யுடையது குதிரை (பதி. தி. 2:3,4). சாதிலிங்கம் ஊட் டின உளை பொங்க கழுததின மயிர் அசையப பால் போலும் நிறமுடைய நான்கு குதிரைகள் தேரில் பூட்டப்பட்டன (பொரு. 164,165). ஒலிக்கும் மணியினையும் வெள்ளிய உளையினையும் உடைய குதிரையோடு தன் நாட்டையும் நன்மொழிகளை யும் ஏனையோர் வியக்குமாறு காரி இரவலர்க்கு நலகினான் (சிறு. 91-95). பழம்பசி மிக்க எம் சுற்றத் தோடு, கொடுக்கக் குறையாத செலவம் பெற்று, வெளளிய உளை உடைய குதிரையுடன் யானை களையும் வாரிக் கொணடு தொணடைமான் இளந் திரையனிடமிருந்து வருகின்றோம என்று பாணன் வழியிடை எதிரபபட்ட வறிய பாணனிடம் கூறி னான் (பெரு. 25-28). தொண்டைமான் இளந்திரை யனதுபட்டினம்பாலபோனறநிறத்தையும்வெள்ளிய உளையையும் உடைய மேலதிசைக்கண உளவாகிய குதிரைகளுடன், வடதிசை வளங்களைக் கொண்டு வந்து தரும் மரக்கலங்கள் சூழ்நதிருககும் (பெரு. 319-321). குதிரை நூலோர் புகழ்நத அழகுடையன வாயக் கடற் சஙகினைப்போன்ற வெள்ளிய உளை உடையனவாய், இனங்களோடே கடும் தொழிலு டையனவாய் உள்ள நான்கு குதிரைகள் தேரில் பூட்டப்பெற்றன (பெரு. 487-489). வளைந்த உளை யாற் பொலிநத கொயயப்பெற்ற பிடரிமயிருடைய குதிரைகள் இழுக்கும் கடிவாளம நெகிழ விரைந்து செல்வதால், தாதுண்ணும் வணடுகள் மயங்கும் என்றஞ்சித் தலைவன் தேரின் மணிகளை ஒலிக்கா மல் கட்டினான் (அகம். 4:8-12). தலைவன் ஊர்நது செலலும் குதிரை, உளை அணிநததும் உலகததையே கடத்தல வலலது போனற பறவையினை ஒத்த வேக முடையதும் செருக்குடையது மாகும் (அகம. 64:1,2). விரிஉளைப பொலிந்த விரைந்த செலவையுடைய குதிரைப் படையுடன், வேண்டு புலதது இறுதத கரிகால்வளவனின் முன் நிற்க ஆற்றாராய, அவன பகைவர் ஒனபதினமரும் தம்முடைய ஒன்பது குடை களைப் பகலில போர்க்களததே போட்டு ஓடினர் (அகம. 125.16-21). தலைவன ஊர்நதுவரும் குதிரை, அழகு பொருந்த விரிந்த உளை அமைநது விரைந்த செலவினையும கனைத்தலையு முடைய வளமிக்க தாகும (நற. 121:7-9). கரையில வளர்நத வேழத்தின வெள்ளியபூ, செலவினையுடைய குதிரையின் உளை போன்றிருககும் (ஐங. 13:1,2). 'வானம் பெயல தொடங்கியமையால், விரிந்த உளையுடைய குதிரை பூட்டித் தேரைச் செலுத்துக' என்று வினை முற்றிய தலைமகன் தேர்ப்பாகனிடம் கூறினான (ஐங. 488). குதிரை மயிர் முடியின மேலே விரித்து நிலைபெறுத்தின சிவந்த உளையினை உடையது (கலி. 96:9). 'இழந்த நலத்தைத் தலைவி மீண்டும் பெறுதற்காக உளையினை யுடைய குதிரைகளைப் பூட்டிய தேரைச் செலுத்தி எம்மனை யிடத்துச் செல்லும செலவினை விரைவாயாக' என்று தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் (கலி. 124: 19-21). வையைப் புதுப்புனலாட வந்தாரிற் சிலர், தத்துதலால் மேற்கொள்ளுதற்கரிய பொங்கும் உளை யுடைய குதிரை ஏறி வநதனர் (பரி. 10:13,14).

2. பிடரிமயிர். 'என் மனை உணவைக் கைவிடுதலால் அம்மனையை இகழ்ந்து நினையாது உறையும் புல் லிய உளை - பிடரிமயிர் - போலும் குடுமியை யுடைய புதலவன, பாலில்லாத முலையைச் சுவைத் துக் கூழும் சோறும் விரும்பி, அடுகலத்தைத் திறந்து பார்க்க அங்கு ஒனறும் காணாது அழுதான்' என்று பெருஞ் சித்திரனார் கூறினார் (புறம. 160:17-21). எல்லாருடைய குதிரைகளும் வந்து சேர்ந்தன; எம் மனையில புல்லிய உளை போலும் குடுமியுடைய புதல்வனைப் பெற்ற செல்வனாகிய கொழுநன் ஊர்ந்து சென்ற குதிரை இன்னும் வாராதாயிற்று அது போரில் பட்டது போலும் என்று ஒரு தலைவி கூறினாள் (புறம்.273:2-7). குதிரையின் உளை போன்ற குடுமியுடன் புல்லிய தாடியைக் கொணட வீரன் போரிற் புள்ளிகளையுடைய யானைகளைக் கொன் றும் அமையாதவனாய்க் கேடகம் கீழ்ப்பட அதன் மேல் வீழ்ந்து கிடந்தான் (புறம். 310:4-8). கொய்யப் பட்ட உளையினையுடையது குதிரை (புறம்.387:23). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல், செவ்வு

ளைய மாவூர்ந்தும் தேர்மீதேறியும் யானையின் கழுத்தின மீதிருந்தும் தன் தானையைப் பாதுகாப்பதனால் பகைவர் அவனை அஞ்சி நீங்குவர் (பதி. 34:1, 4-7, 12). இளஞ்சேரலிரும் பொறையைப் பெருங்குன்றூர் கிழார் 'அகலற உளையினை யுடைய சிங்கததைப போன்று வீரம் பொருந்திய குருசிலே' என்று விளிததார் (பதி. 88:15). பாணடியன அரண்மனையில பந்தியில நிற்றலை வெறுத்த, பலவாகிய உளையினை யுடைய குதிரைகள புலலாகிய உணவைக குதட்டும குரல, பிற ஒலியோடு கலந்து கேட்கும் (நெடு. 93,94,100). 'நின காதலி (பரத்தை) எம்மைப்போலப புலலிய உளைபோலும குடுமியை யுடைய புதலவனைப பெற்று, நெலலுடைய நீண்ட மனையில நினனைப் பிரிநது தஙகுதற்குக் கடபபாடுடையவளா' எனறு தோழி தலைமகனை வாயில மறுத்துக கூறினாள் (அகம. 176: 18-21). போா மூணடதாகக கொடுஞ்சி நெடுந்தேரிற் பூட்டபபட்ட விரைநத செலவையும விரிநத உளையையும உடைய குதிரையைச் செலுததிப புறப்பட்ட போது நான் இனன போழதில வருவேன எனத் தலைவன கூறிய காலம இதுவாகும என்று பருவங்கணடு ஆற்றாமை கொணட தலைவி கூறினாள (அகம 194:16-19). மணல் பரவிய நீர் நிலையிடத்தே வரிசையாகப பறககும அனனப் பறவை போனற விரைநத செலவையுடைய உளையினைக் கொணட குதிரைகள் தேரில் பூட்டப பெற்றன (அகம. 234:2-4). ஏவலர் மிகவும விரைந்து முன செல்ல, விரிநத உளையினையும் கடுநடையையு முடைய குதிரை நெறியின் கண்ணே ஓடுமாறு பாகன சுடிவாளததினை வலிந்து பிடித்துத் தேரைச செலுத்துதல் (அகம். 354:5-8). குட்டுவன், அழகு பொருநதிய வளைந்த உளையினை யுடைய குதிரையை உடையவன் (அகம். 376:16,17). வெள்ளிய உளைப் பொலிந்த குதிரை பூட்டப் பெற்ற தலைவனது தேர் உருள் அலை மோதிக் கிடநத புதிய மணலில் அழுந்துதலால் செல்ல மாட்டாது சுழலும் (நற். 135:7-9). பாணர் பரிசிலாகப் பெறற விரிநத உளையுடைய குதிரையின் கவிநத குளம்பு மோதுதலால், செப்பமுற்ற மலைச் சிறுநெறியில இரவலர் மெலியாது ஏறிச் செல்வர் (நற். 185.3-6). வேற்படை யுடைய நன்னன், அழகிய விரியுளைப் பொலிந்த, விரைந்த செலவினையுடைய குதிரைப் படைகொண்ட பகை மன்னரைப் போரில் தோற்றோடச் செய்தான் (நற். 270:7-9). பனிமிக்க பருவத்தில் காதலர் விரியுளை நன்மாவினைச் செலுத்தி வருவர் என்று தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 367:10-12). விரிந்த உளையையும் மனச் செருக்கினையு முடைய குதிரை பூண்ட தேரினில் வந்த விருந்தினரை எதிர்கொள்ளுகையால் தலைவி புலவி நீஙகுதல (கலி. 75:16,17). கூடல நகர், கொய்யுளையுடைய குதிரைகள பூணட தேரால சூழப்பட்ட கொடித் தேரை உடையதாகும (பரி. 17:45).

3. சிதறுதல் (ஒலித்தல எனபர் உ.வே.சா). 'காறறால் உளைத்தலை யுடைய - சிதறுதலை யுடைய - அலை பிசிராக உடையுமபடி, வெளளிய தலையாட்ட மணிந்த விரைநத செலவினையுடைய குதிரையை ஊர்நது பனிககடலில் உழநத காலகள் வருத்தத் தினினறும நீங்குமோ' எனறு கடலபிறககோட்டிய செங்குட்டுவனைப் பரணா சிறப்பிததுரைததார் (பதி. 41 25-27).

4. பஞ்சுபோலும் துய. மருதின் பூஙகொததுககள கரிய புறவிதழினையும் மேலே உளையையும - துயயையும - கொணடிருககும (முரு. 27, 28). தினையின் உளையுடைய கதிாகளைக குருவி கவாவதால தட்டையைக கொணடு குருவி ஓபபிப பரணில தலைவியும தோழியும இருத்தல (அகம. 388.4, 5, 9). மருதமரம உளைப பூ வுடையது (ஐங. 7.4). மாங கொம்பு மலாநது, வதுவை மகளிரின மணம கமழும பொழிலைக கொறுககாநதட்டையின வெளளிய உளை துடைக்கும (ஐங. 19.1-3).

5. தலைமயிா. கலலா இளையராகிய வேடடுவா, வெணகடமபின மணம வீசும புதிய மலர்களைச் சுருணட உளை – தலைமயிா - பொருநதிய தம சென்னியில அழகு விளஙக அணிநதனர் (அகம. 83: 1, 2, 9). ஓடையிலுளள இன்னாத வழியில வழுககி விழுநது தனித்திருககும ஏற்றினுககுப் புலலிய உளையுடைய சிறுவர் இருப்பையின மலர்களைத் தம் விலலால உதிர்தது, அவற்றை உணணவரும் மானைத் துரததிவிடடு உணணக் கொடுபபர் (அகம். 107:13-18). பனையின் வெள்ளிய குருத்தோலையில வைதத, வேம்பின் நெருஙகிய வெணமலரைச் சுருணட உளையுடைய தலை விளங்குமபடி தலைவர் அணிந்து கொணடு காட்டைக கடநது சென்றாரோ எனறு தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 281).

6. தலை. பொன்னாலான தும்பையுடனே மேலே அசையும் உளைய – தலையையுடைய - பனந்தோட்டைச் செருகி வீரர் வெறியாடுங் குரவைக கூத்து அயர்ந்தனர் (புறம். 22:20-23).

7. ஆர்க்கு. அரும்பு முதிர்ந்த செம் முருக்க மரத்தின் உளையினை - ஆர்க்கினை - உடைய நெடிய பெரிய காய் பனறியின் வளைந்த கொமபினை ஒத்திருக்கும் (அகம். 223.3-5).

8. வருத்தத்தாலாகிய நடுக்கம். களளின் களிபபுமிக

அதனை அடக்க மனத்தில் உளை - வருத்தத்தா லாகிய நடுக்கம் - எழுந்தது (பரி. 10.65, 66).

**உளைப்பூ** - உள்ளே துய் உடைய பூ. உளை யுடைய பூவினைக் கொண்ட மருத மரத்தில் இனத்துடன் கூடிய நாரை இருந்தது (ஐங். 7:4).

**உளைமான்** – பிடரிமயிருடைய சிங்கம். கானவன் உளை மான் - சிங்கம் - போன்ற வலிமை யுடையவனாய்த் தினைப் புனததில் ஓங்கிய பரணின்கண கள்ளுணடு மகிழ்நதிருந்தான (அகம. 102:1, 2).

**உளைவு** - வருத்தம். தெருவில் பிள்ளையை விளை யாட்டிக் கொண்டு வரற்குச் சென்ற தோழி உளைவு- வருத்தம் -இலளாயக குழந்தைக்குப் பால் ஊட்டாததால் பால் சுரநது தாய வருந்துமளவு காலம நீட்டிதது வநதாள (கலி. 83:1-6).

**உற்கம்** – எரிகொள்ளி. எட்டுத் திசையிலும் உற்கம்- எரிகொள்ளி - எரிந்து விழுதல், பெரிய மரத்தில் இலையில்லாத நெடுங்கோடு பற்றுதல், ஞாயிறு பலவிடத்திலும் செறியத் தோன்றுதல், அஞ்சத்தக்க புட்கள் குரலிசைத்தல் ஆகிய தீய உற்பாதங்களைக் கண்டும் போர் செயயும் வலிமை யுடையவன் சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (புறம்.41:4-7,12).

**உறத்தூர்** - ஓர் ஊர். அரிமணவாயில் உறத்தூர் காணக.

**உறந்தை** - உறையூர். 'மறம் பொருந்திய சோழரது உறநதையில் - உறையூரில் - உள்ள அலைக்களதது அறம் நிலை பெற்றமையால முறைமை செய்தல் நினக்குப் புகழாகாது' எனச் சோழன குளமுற்றத் துத் துஞ்சிய கிள்ளிவளவனை மாறோக்கத்து நப்ப சலையார் பாராட்டினார் (புறம. 39:8-10). சோழன் குராபபளளித் துஞ்சிய பெருநதிருமாவளவனை, 'அறம் தங்கும் உறந்தையின் அரசன்' எனக் காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் புகழ்ந் தார் (புறம. 58:9). 'களபருகுவோர் கை நடுங்கு கையால் சிநதிய கள்ளால உண்டான சேற்றில ஆடிய பாகரேறாத யானை, நெடிய நகரிடத்து ஒலிக்கும் பறை யோசையைச் செவி தாழ்த்துக் கேட்கும் உறந்தையில் இருக்கும் சோழன் நலங் கிள்ளி, பிறரிடம் சென்று கேட்காதவாறு நல்குவன்' எனக் கோவூர் கிழார் கூறினார் (புறம். 68:15-19). உயர்நத நிலையுடன கூடிய மாடத்தை யுடைய உறந்தையின்கண் கிள்ளி வளவன உள்ளான எனப் பரிசில் பெற விரும்பும் பாணனைப் பரிசில் பெற்ற பாணன் ஆற்றுப்படுத்தினான் (புறம. 69: 12). வெண்ணெல் வயலகள வேலியாகச் சூழ்ந் துள்ள உறந்தை பெரிய வண்மையுடைய தித்தனுக் குரியது (புறம. 352: 9,10). சிறுகண் யானைகளை யுடைய தித்தனுக்குரிய உறந்தை கெடாத நல்ல புகழ வாய்ந்தது; நல்ல விளைபுலன்களால் சூழப் பெற்றது (புறம். 395:16-19). நல்ல புகழினையும் தேரினையும் உடைய சோழனது உறநதை தன் பால் வாழ்வோர் விட்டு நீங்காமைக்குக் காரண மான சிறப்பினை யுடையது (சிறு. 82,83). திருமா வளவன் தன் நாட்டிற் காடுகளை வெட்டியழித்து நாடாகச் செய்து குளங்கள் அகழ்ந்து பல்வேறு வளங்களையும் பெருகச் செய்து பெரிய நிலைகள் பொருந்திய மாடங்களமைநத உறந்தையை விரி வுறச் செயதான (பட். 284-286). ஆரவாரிக்கும் ஒலி பொருந்திய விழவினை யுடையது உறந்தை (அகம. 4:14). நெற்குவியலகள் மிகுந்த உறந்தை மழை போல வழங்கும் வணமையுடைய தித்தனுக்குரியது (அகம். 6:4,5). ஆத்திமாலை யணிந்தவரும போரிற் சிறந்தவருமாகிய சோழர்ககுரிய உறந்தையில அறம் பொருந்திய சிறந்த அவை இருந்தது (அகம். 93: 4,5). ஆதி என்னும் கதியில் தேர்சசியுற்ற நல்ல குதிரைகளை யுடைய தித்தனுக்குரிய உறநதை மதி லாகிய வேலியையும் காவற் புறங்காட்டையும் உடையது (அகம். 122:20-22). வெற்றி முரசினையும் போர் வென்றியையும உடைய சோழர்க்குரிய உறந்தை இனிய கடுப்பு மிக்க கள்ளினை யுடையது (அகம். 137:5,6). அடுதலில வல்ல சேனை யுடைய கட்டி என்பான் மெய்வலி மிக்க பாணனுடன் கூடித் திதன் வெளியனுடன் பொர வந்தபோது, தித்தன் வெளியனுக்குரிய உறந்தையின் நாளோ லக்கததினகண் எழுந்த கிணையொலி கேட்டு அஞ்சிப் பொராது ஓடினான் (அகம். 226:13-17). நீர் மோதும் வாயத்தலைகளை யுடைய உறந்தை யிலுள்ளோர், பாணர் முதலாயினார்க்குக் கொழு விய நிணத்துண்டுகள் கலந்த மெல்லிய தினைச் சோற்றையும் கருப்பம் பாகுடன் பால்பெய்து அளைந்த பசிய அவலையும் வழங்குவர் (அகம்.237: 9-14). கடல் போன்ற சேனையினையும் கைவண் மையினையும் உடைய சோழரது உறந்தை நல்ல புகழினை உடையது (அகம். 369:13,14). காவிரியின் பக்கத்ததாகிய உறந்தை வலிய கையினை யுடைய யானையினையும் கடியதேரினையுமுடைய சோழர்க் குரியது (அகம். 385: 3,4). வளம் பொருநதிய சோழர்க்குரியது உறந்தை (குறு. 116:2). கழுமலப் போரின்கண் மாற்றாரை வென்று அவர்தம் குடை யோடகப்படுத்திய வெற்றியினையும் நல்ல தேரி னையும் உடைய சோழனின் உறந்தையில் பங்குனி விழா நடைபெற்றது (நற். 234:6-8; பெரு மழை உரை). மறம் பொருந்திய சோழரது உறந்தை யிலுள்ள அவைக்களத்து அறம் கெடவறியாது நின்று நிலைபெற்றது (நற். 400:7, 8).

**உறவி** - எறும்பு. தாளாண்மை பற்றி எழுந்த தலைவனது அசைவில் உள்ளத்து ஆண்மை முன்னே இழுக்கவும் காமமானது பின்னே நின்று தடுக்கவும் அவற்றால் இருபாற்பட்ட அவன் நெஞ்சம் இருதலையும் கொள்ளியினை யுடைய துளை கொண்ட தட்டையின் உள் நின்று ஒருபக்கமும் செல்ல இயலாது தடுமாறும் உறவியை - எறும்பை - ஒத்தது (அகம. 339:6-10).

**உறழ் - 1. வாது.** கேட்டல் தொழிலில் சிறந்து, நூற்றிரளை முற்றக் கற்ற நல்லாசிரியர் காவிரிப்பூம் பட்டினத்து உறழ - வாது - செய்யக் கருதிக் கொடிகளை உயர்த்தினர் (பட். 169-171).

**2. மாறுபாடு.** தலைவியின் கண்கள் மை தீட்டப் பெற்றனவாய் மாண்புற்ற நீலமலரொடு உறழ - மாறுபாடு - கொண்டனவாய் விளங்கின (அகம. 354:12-14).

**உறி** - பண்டங்கள் வைக்கும் பொருட்டுத் தொங்கவிடும் உறி. வலிய தாம்பினை உடைய உறியை உடைய வன் இடையன (அகம. 274:6). பால் விற்கும் இடையன் கையில் பலகாலிட்டுப் பின்னிய உறி இருந்தது (நற். 142:2). முக்கோற் பகவர் உறியிலே தங்கின கமண்டலத்தையும முக்கோலையும் தோளிலே தாங்கிக் குடை பிடித்துப் பாலை வழிச் சென்றனர் (கலி. 9:1-3). கோவலர் கறவைக் கலங்கள வைத்த உறியினையும் கழுவோடு சூட்டுக் கோல் இட்டுச் சுருக்கிய தோற் பைகளையும் தூக்கிக் கொண்டு கொன்றைக் காயைத் திறந்தமைத்த குழலூதி மழையால் நனைந்த நிலத்தில் பரவினர் (கலி. 106:1-5).

**உறிக்கா** - இரண்டு தலைகளிலும் உறியினை யுடைய காத்தண்டு. உறிக்கா - உறியினை யுடைய காத்தண்டு — மேலேயிருந்ததனால் உண்டாகிய தழும்பு மிக்க மயிரெழுந்த தோட்கட்டினை உடையவர் இடையர் (பெரு. 171).

**உறுகண்** - துன்பம். தொண்டைமா னிளந்திரையன் நாட்டில் உருமேறும் இடியாது; பாம்புகளும் கொல்லுதலைச் செய்யா; காட்டிடத்துப் புலி முதலியனவும் உறுகண்—துன்பம்-செய்யா (பெரு. 41-43). வழிச் செல்வார்க்கு உறுகண் செய்யும் மழவரது சாகாடு வணிகச் சாத்தர் போகட்ட சோறு பொதி வெண்குடையைக் கிழித்துச் சென்றது (அகம்.121:11, 12). புலியேறு களிற்றுடன் போர் செய்கையில் அதனால் உண்டாகும் உறுகணுக்கு அஞ்சாத குறக் குறுமாக்கள் பெரும்பாறையின் உச்சியிலிருந்து மனச் செருக்குடன் தொண்டகப் பறையை முழக்கினர் (நற். 104: 1-5).

**உறுதி 1. உறுதிப்பாடு.** 'எடுத்த செயலை முடிவுறச் செய்யாமல இடையில் இகழ்ந்து விட்டுவிடுவது அறியாமையுடன இகழ்ச்சியும் தரும் என உறுதியை - உறுதிப்பாட்டினை -ஆராய்கையாலே, நெஞ்சமே, வினை முடிவதற்குள் திரும்பாதே' எனத் தலைவனின் அறிவு கூறும (நற். 284: 5-8).

**2. உறுவது.** சோழன இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட் சென்னியுடன பகை கொள்பவர் உளராயின தமக்கு உறுதி - உறுவது - தாமே அறிகுவர் (புறம. 61: 13-15).

**உறுப்பில்பிண்டம்** - வடிவற்ற ஊன்திரள். மக்கள் பிறப்பிற் சிறப்பில்லாத குருடு, உறுப்பில பிண்டம்—வடிவற்ற ஊன் திரள் - கூன, குறள், ஊமை, செவிடு, மா, மருள் என்று சொல்லப்பட்ட எட்டும் பேதைமைத் தன்மை யுடையன (புறம். 28: 1-4).

**உறுப்பு - 1. முழுப்பொருளின் பகுதி.** மக்கள் பிறப்பிலுள்ள எண்வகைக் குறைபாடுகளுள உறுப்பு உடலின பகுதிகள் - இல்லாத தசைத் திரளும் ஒன்றாகும் (புறம. 28: 1). வடநாட்டி லிருந்து கொணர்ந்த வட்டக் கல்லில் குடமலையின் உறுப்பினால (பகுதியாகிய சந்தனக கட்டையால்) பிற மணப் பொருள்களையும் கூட்டி உண்டாககிய சாந்தினை நினக்கு அணிவிப்போம எனத் தோழி தலைவற்குக் கூறினாள். (உறுப்பு ஆகுபெயராய்ச் சந்தனக் கட்டையைக் குறித்தது) (அகம். 340: 16-18). 'சிறந்த மகளிரின் உறுப்புககளெல்லாவற்றையும் ஒருங்குகொண்டு அயனால் ஒருவடிவாக இயற்றப் பட்டவளோ' எனக் கைக்கிளைத் தலைவன தலைவியைக் கண்டு பாராட்டினான் (கலி. 56: 7, 8).

**2. பண்ணின் பகுதி.** யாழ் வாசித்தலில் வல்லோன் பண்கள் எல்லாவற்றுள்ளும் துன்பத்தைச் செய்யும் உறுப்பு-பண்ணின் பகுதியாகிய பாலைப் பண்ணை-மாறி மாறி வாசித்தான (பதி. 65: 14, 15).

**உறுவர் - 1. அடைபவர்.** விரைந்து செலலும் குதிரையை யுடையராய் அடைக்கலம் உறுவர்க்கு - அடைபவர்க்கு-புகலிடமாகக் கடிய நெடு வேட்டுவன் விளங்கினான் (புறம். 205: 3, 4).

**2. பெரியோர்.** நீர்த் துறையில் உள்ள அறத் துறை அம்பி உறுவராயினும் - பெரியோராயினும்-சிறியோராயினும் வேறுபாடின்றி இருகரையினும மாறி மாறிக் கொண்டுபோய்ச் சேர்க்கும (புறம். 381: 23, 24).

**உறுவி** — உறுபவள். 'அன்புசெய்த நின்னைப் பிரிந்து தலைவி இங்கிருத்தலினால் அவளுக்கு வரும் துன்

பத்திற்கு அஞ்சிய என்னைக் காட்டிலும் உன்னுடன வருதற்குப பெருவிதுபபு உறுவியுடன்-உறுபவளுடன-நீ செல்லுங கானம் வெம்மை தணிந்து இனிதாகுக' எனத் தோழி விரும்பினாள (அகம. 283:1-3,16,17). பொருளவயிற் செலவைத் தலைவன் உரைத்தபோது பெருவிதுப்பு உறுவியாகிய தலைவி 'நும் செலவு மாட்சிமையுற்றுச் செப்பமுறுக' வென மயங்கிக் கூறிய நிலை மறத்தற்கரியது எனத தலைவன தன நெஞ்சிறகுக கூறினான (அகம. 299:18-21). தலைவன வினைமேற செல்லும் தன் கருத்தைக் கூறியபொழுது விடை கூற இயலாது ஞாழலின் பூங்கொத்தைக் கொய்து அதனுடன் இளந்தளிரையும் சேரப பிசைந்து உதிர்த்த அறிவு அஞர் உறுவி தலைவி எனத தலைவன் வினைமுறறி மீளுங்கால தேர்ப்பாகற்கு அவளது பண்டைநிலையைக் கூறினான (நற். 106:5-9). 'இல்வாழ்க்கையினும் சிறந்தது பொருள் என்று கருதிப பிரிந்த தலைவர் நெகிழச்சியுற்ற தோளும் வாடிய என் நிறமும் பார்த்துச் செலலுதலைக கைவிட்டாரிலர்; மேலும் இத்தகைய பெரிய துனபம் உறுவி என்ன காரியம் செய்து கொண்டனளோ எனறு ஒரு நாளும் கூறினாரிலர்' எனப் பிரிவிடை மெலிநத தலைவி கூறினாள் (நற். 130:5-10). 'வாடையே, யான் ஒருபொழுதும் நினக்குத் தீங்கு நினைத்தேனில்லை; அங்ஙனமாகவும் பொருளீட்டத் தலைவன் அகன்ற காலத்தில் உசாத்துணை யாருமில்லாது ஒருபுறத்திலிருந்து பேரஞர் உறுவியாகிய என்னை வருத்தாதே' எனப் பிரிவிடை யாறறாத தலைவி கூறினாள் (நற். 193:4-9). 'நெடிய சுவர்களால் சூழப பெற்ற, அறஞ்செய் தலையுடைய நல்லில்லில் இருந்து துன்பம உறுவியாகிய நினமகள் காதலனுடன் சென்றாள் என உடன் போகிய தலைவியை இடைச்சுரத்துக் கண்டார் அவள் தாயக் குரைத்தனர் (ஐங். 386).

**உறை - 1. ஓர் அளவு** (பேரளவிற்கு அடையாளமாக அமையும் சிற்றளவுக்குறி). காளை போன்ற மறவன் போரில் வீழத்திய களிறுகளை எண்ணினால் மழைத்துளியும் உறை-அளவுக்குறி-ஆகாது (புறம். 302:8-11). செல்வக்கடுங்கோ வாழியாதன பகைவரை அழித்துப் போர்க்களப் பரப்பில் திறையாகப் பெற்ற யானைகளையும் மரக்காலின் அளவையால் அளந்து உறையிட முடியாத உணவையும் இரவலர்க்கு அளிப்பான் (பதி. 66:6-9). செந்நெலலை மரக்காலால் அளக்கும்போது உறையைக் குவிதது வைத்தது போலக் குளவிக் கூட்டம் தம்மிற கூடி மொய்த்தன (பதி. 71:4-6).

**2. உறைதல்.** உறையால் - உறைதலால் - இறுகத் தோயநத இனிய தயிரில் குடைக் காளானின் வெள்ளிய முகைகளைப் போல் குவிந்த முகிழ்கள் தோன்றின (பெரு. 157,158).

**3. காணிக்கைப் பொருள்.** ஆடவரும் மகளிரும் பொருள்களை வழங்கி அதன் பயனாகிய இன்பத்தை நுகர வேண்டி நாடொறும் வையையில் நீராடி உறையாக - காணிக்கைப் பொருளாக - வையையாற்றில் பொன்மீன் முதலியவற்றை யிட்டனர் (பரி. 16:50-52).

**4. தங்குதல்.** செல்வக் கடுங்கோ வாழியாதன் தாள் நிழல் வாழவோர் உத்தர குருவில் வாழ்வாரைப் போலப் பெரிதும் விரும்பி நாள்தோறும் இன்பம் பொருந்திய பல் உறையை - பலநாள் தங்குதலை- பெறுவர் (பதி. 68:14). 'இனிய துயிலுக்குரிய தலைவரின் மார்பின் பொருட்டுச் சென்ற என் நெஞ்சு அவர் அருள் செய்தில ரென்று அங்கே உறை வெறுத்து இங்கு வாராதிருப்பதாக' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 40:11-17). நாம் இடையறாது வரைவு கடாயினமையின் நாணிப் பலநாள் நம்மொடு உறை (உறைதலுக்கு) காரணமான புணர்ச்சியைக் கைவிட்டுச் சேய நாட்டிற் சென்று பொருள் தேடத் தலைவன் நெஞ்சம் துணிந்தது எனபது தலைவி கூற்று (அகம். 187:2-4). 'எம்மூர்ப் பொய்கைத் துறை அருகிலிருக்கும் மரத்தில் வாழும் உடன் உறை பழகும் கூகையே, காதலர்ப் பிரிவால் உறங்காமல் இருக்கும் இரவிலே கடுங்குரல் எழுப்பி வருத்தாதே' எனத் தலைவி வேண்டுதல் (நற். 83:1-4,8,9). வெண்ணெல் கொடுத்து அதற்கு விலையாக உப்பைப் பெற்று வரும் உப்பு வணிகர் மணல் வழியைக் கடந்து அவண் உறை வெறுத்துச் சுற்றத்துடன் புலம் பெயர்ந்தனர் (நற். 183:1-5). 'நீ கண் கலங்கும்படி இவண வாராமல மலைநாடன் தன் மனைக்கண் உறை நிகழுமாயின் யான் இறந்துபடுவேன்' எனத் தோழி சிறைப்புறத்துத் தலைமகன் கேட்கக் கூறினாள் (ஐங். 269:2-5). 'மலைகள் பொருந்திய குறிஞ்சி நிலத் தலைவனுடன் சென்ற என் நெஞ்சு என்னை நினைந்து என்பால் வந்து மீண்டும ஆறுதல் கூறுமோ, அவனிடம் அதற்குச் சிறந்த உறை பொருந்துகையினாலே வாராது தங்கி விடுமோ' எனத் தலைவி வருநதினாள் (ஐங். 295). அரிய பொருளிடத்துச் செல்கின்ற ஆசையினால் உள்ளம் தூண்டுதலால் பிரிந்து உறை (உறைதலை) எண்ணாதே எனத் தோழி தலைவனை வேண்டினாள் (கலி. 18:1,2). பிறைநுதலாய், இக்களவொழுக்கத்தில் வேட்கை நீங்கி நாம் அவரைப் பேணி அவரிடத்தே உறை (உறைதலை) அவர் விரும்பிய நாளில் அவர்க்கே கொடுக்க நம்

சுற்றத்தார் விரும்பினர் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 45:23,24). 'பொன மாலையினையும் அழகிய தோளினையும் உடையாய, நின்னடியில யான உறை (உறைதற்கு) அருளாமை நினக்கு ஒத்ததோ' என்பது தலைவன கூற்று (கலி. 54:2-4). 'வனப்பாலும் சாயலாலும் கணகளாலும என் நெஞ்சாகிய அரண இடிந்து போமாறு செய்த ஒபபிலாதவளுக்கு யான வழிபட்டு உறை (உறைதலை) உலகத்தார்க்குக் காட்டமடன்மா ஏறிவநதேன்' என்பது மடலேறிய தலைவன் கூற்று (கலி. 140:9-11). நயத்தகு குமரனே, நின னடிக்கண உறை நாள்தோறும் பொலிந்து பயன் தருதலோடு சிறகக வென்று யாம் நின்னை வணங்கி வாழத்தி வேண்டுகின்றோம் எனக் குனறம்பூத னார் வேண்டினார் (பரி. 9:82-85). நானமறை கூறும் அவன பெருமைகளுள் நாமும் அறிநதவற்றைக் கூறித் திருமால, பலதேவன் என்னும் இருவரையும் தொழுது திருமாலிருங் குன்றததின் அடியில் உறை (உறைதல) எமககு உணடாகுக வென்று வேணடுவோம என இளமபெருவழுதியார் வேணடுகினறார் (பரி. 15:63-66). விரிநத மலர்களின தேனால மரங்கள நனையும் திருபபரங்குனறதது அடியினகண் உறை பொருந்தியவர் தேவருலகதது உறைதலையும் விரும்பார் (பரி. 17:5,8). யாழோசையும இயறபாட்டும் பொருந்தி வேத ஒலியும் பூவும் தீபமும் தூபமும பொருந்திய நினனடியினகண உறை எமக்கு உரிததாக எம் சுறறததோடே கூடி யாம் பிரியாதிருப்போமாக எனக குன்றம் பூதனார் வேணடுகின்றார் (பரி. 18:51-56). முருகன் வானின்கண் உறை (உறைதல) போல், இம்மண்ணுலக மக்களும் நுகாசசியை அடையும் வணணம் திருப்பரங்குனறத்துக் கடம்பின் கீழ் உறைகின்றார் (பரி. 19:1-5). வானுற வுயர்ந்த திருப்பரங்குனறத்தின் அடியில் உறை மறுபிறப்பினும் அமைவதாக என்று முருகன் திருவடியைத் தொழுது நல்லச்சுதனார் வேணடுகினறார் (பரி. 21:15-17). எமக்கு விருப்பமான சுற்றத்தோடு கூடி முருகன அடிக்கண் உறை இன்று போல் என்றும் இயையவேணடும் என்பது நல்லச்சுதனார் விருபபம் (பரி. 21:68-70).

5. துளி. நீதி வேண்டுங் காலத்து எளிய செவ்வியை உடைய மன்னர் உறை - நீர்த்துளி - வேண்டுங் காலத்துப் பெய்யும் மழைக்கு ஒப்பாவார் (புறம். 35:15,16). மலையமான் திருமுடிக்காரி மது நுகர்ந்து மகிழாது இரவலர்க் கீத்த இழையணி நெடுந்தோ அவனுக்குரிய முள்ளூர் மலையின உச்சியினகண உணடான மாரி உறையினும் பலவாகும் (புறம். 123:3-6). பேகனால் துறக்கப்பட்ட கண்ணகி கார்காலத்து மழையினது இனிய உறை வீழகின்ற ஓசையைத் தமியளாயக் கேட்டு வருந்தினாள் (புறம. 147:3-5). காளை போனற மறவன போரில் வீழ்த்திய களிறுகள் தணணிய மழை உறையினும் பலவாகும் (புறம. 302.9-11). மழையி னுடைய பெரிய உறை நீரக்குள விழும போது உண் டாகும் நீர்குமிழைப் போனறு குறுமுயலின் கண இருக்கும் (புறம. 333.1-3). 'நீவி மூவிரும ஒரு மனத்தோடு வாழவீராயின வானதது விணமீனினும, பெருமழையிற் றோனறும உறையினும் பல்லாணடுகள நெடிது வாழவீ' என ஔவையார் மூவேநதரை வாழததினார் (புறம. 367:14-18). அம்பர் என்னும ஊர்ககுரிய அருவந்தை என் வறுமையை நீககியமையால வானதது உறையினும பல்லாணடு வாழவானாக வெனக் கல்லாடனார் வாழ்ததினார் (புறம. 385:7-12). மேகம் பெரிய மலையின்கணணே விலங்கின் கூட்டம் நடுங்கும்படி இடிததுக் காற்றொடு மயங்கிய சுதழ உறையை ஆலஙகட்டியொடு சிதறியது (பதி. 50:1,2). திஙகளும ஞாயிறும் இருளை நீககும விசும்பிலிருநது சூல கொணட கரிய மேகம பெருமையுடைய உறையைச் சிதறியதால் கானம தழைத்தது (முரு. 7-9). ஓங்கு கின்ற உறை இறஙகுதல தவிர்நத உயர்சசியையுடைய வானததுத தோனறிய இந்திர விலலையொபபப் பொயகையிடததே பலவேறு நிறமுடைய பூககள மலர்நது தோனறின (பெரு. 291-294). நீரிலலா வருததம் நீங்குமாறு மின்னல இடியுடன கூடிய வானம் விரைநத உறைகளைச் சிதறிக காாபபருவம் செயதது (அகம். 4.6,7). மேகம உறை கொணடு மலைமீது ஏறியது (அகம. 139:2,3) புயல் மினனிப பருதத பலவாகிய உறைகளைச் சிதறியது (அகம். 162:5,218.3,4). வானம் கரிய பிடிகளினது கூட்டம் போலத் திரணடு களிற்றின் கை போலக் கால் இறககி, மகளிர் விளையாடும் கழஙகினை ஒதது விரையும உறைகளைச் சிதறியது (அகம். 334.5-9). உறை மிக்கு வாடைக காறறு வீசும் கூதிாப்பருவத்து நள்ளிரவில் நுளம்பு (மாட்டு ஈ) ஓசைககு வருநதிய ஆன தலையசைத்து அதனை ஓட்டும் (குறு. 86:3-5). வான் மின்னி இடித்து வீழும உறை சிதறியது (குறு. 270:1,2). யாறு அருவியைப் போன்ற பருத்த உறை சிதறி வெள்ளத்துடன ஒலித்துச் சென்றது (குறு. 271:1,2). புனத்தைச் சுடுதலால எழுந்த மணம பொருந்திய அகிற்புகை, உறையற்ற வெணமேகம் போற பரவி மலைசசாரலில் உளள குறவர் பாக்கத்துத் தங்கும் (குறு. 339.1-3). வாடைக் காற்றுடன் விடாது உறை மயக்குற்ற நடுயாமத்து நடுங்குகினற காமநோயால தலைவி துன்புறுவாள் (நற்.

262:2-5). குறவர் மூக்கிற்று வீழ்ந்த மாவடுக்களை உறையுடன் வீழ்ந்த ஆலங்கட்டியைத் தொகுப்பது போலத் தொகுத்தனர் (ஐங்.213:1-3). 'தலைவி நிறுக்கு மளவில அமையாதே விரைய வீழும் நீரிலே கிடந்து நீந்துகினற கண்ணுக்கு, உறையோடு தங்கின பூ உவமை (கலி. 121:9,10). தலைவி தந்த காமநோயால் தலைவனின உயிர், உப்புப் பாத்தியில் கிடந்த உபபால் இயன்ற பாவை உறை உற்ற தன்மை போலக் கரைந்தது (கலி. 138:14-17). என வளை கழலுமாறு எனக்கு வருத்தம் செயத தலைவ னால உணடான காமத்தீ ஆறுமபடி மேகமே, என்மீது இடைவிடாது பெயயும் உறையொடு நிற்றல் வேணடும் என ஆற்றாமை மிக்க தலைவி வேண்டினாள் (கலி. 145:55-58). மேகத்தினது வளவிய உறையைப் பெறுதற்குச் சுழன்று திரியும் வானம்பாடிக்கு அம் மேகம் பெய்தாற் போலத் தலைவன் தலைவியை முயங்கி அல்லல் தீர்த்தான் (கலி. 146:52-55). பாண்டியன் பகைவர்மீது சொரி யும் அம்புக் கூட்டத்தைப் போல விரைந்த உறை களை மேகம் சிதறின (பரி. 22:6). மூடியிருககும் ஈங்கை மலரினகண் உறை (தேன்துளி) மிகத்திரண்டி ருக்கும் (நற். 79:1). நாட்காலத்து உறை (மோர்த் துளி) தெறிப்பக் கடையும் மத்தின் ஒலியைக் கேளாத விடியற் காலத்திலேயே வெட்சித்தலை வன் கரந்தையாரின் நிரையை வில்லாற்றலால் தவர்ந்து வந்தான் (புறம், 257:10-13). ஆய்மகள் வள்ளுகிரால் தெறித்த உறை (மோர்த்துளி) குடப் பால் முற்றும் தலங்கிக் கெடுதற்குக் காரணமா னாற் போலச் செம்முது பெண்டின் காதலஞ் சிறுவன் படை முற்றும் அழிதற்குக் காரணமா னான் (புறம். 276:3-6).

6. மழை. (ஆகுபெயர்) நீட்சியுடன் உறையையும் - மழைக்கால் வீழ்ச்சியையும் - வென்று விளங்கும் கூந்தல் உடையவள் தலைவி (அகம். 46: 7, 8). பேருறை பெய்த விடியலில் உழவர் ஏரினால் செம் மண் நிலத்தை ஊனைக் கிழித்தாலொத்து உழு தனர் (அகம். 194:1-4). 'தலைவன் பொருள் தேடச் செல்லும் வழியில் உள்ள காடு உறை பெய்த பின்னர்ச் செழித்து மணம் பரப்புவதாக' எனத் தலைவி விரும்பினாள் (அகம். 345: 14-18). சூல் முதிர்ந்த பசும்பாம்பு போன்றிருக்கும் கரும்பின் குவிந்த அரும்பு அவிழுமாறு நுண்ணிய உறை துளியைச் சிதறும் வாடைக் காலம் வந்தது (குறு. 35:2-5). 'மேகமே, நல்லயாழின் முறுக்கிய நரம் பினின்று படுமலை என்னும் பண்ணினை எழுப் பினாற் போன்ற ஒலியொடு பெய்யும் உறையை யுடையையாகிக் குன்றின் கொடுமுடிகள் தோறும் பொருந்திப் பலர் தொழ வாழ்வாயாக' என வினை முற்றி மீண்ட தலைவன் தலைவியுடன் பள்ளி யிடத்தே யிருந்து மேகத்தை வாழ்த்தினான் (நற். 139:1-5). உறை பெய்யா தொழிந்த பாலை நிலத் தின்கண் அந்நிலத்தின் தெய்வமாகிய ஞாயிறு நிலம் பிளவுபடக் காய்தலாலே உலகம் துன்புற்றது (நற். 164: 1-3). தெய்வம் காக்கும் கொல்லி மலைச் சார லிலுள்ள பாவை கடுங்காற்று மோதியடித்தாலும் விரைந்து உறை வீசினாலும் இடிமோதினாலும் வேறுபல ஊறுபாடுகள் தோன்றினாலும் தன் நல்ல வடிவம் கெடாத இயல்புடையது (நற். 201:5-11).

7. மேலுறை. வேற்படையை உடைய தலைவன் போரின்கண், உரல்போன்ற அடியினை யுடைய யானையைக் கொல்லுதற் கன்றி ஒள்ளிய வாளை அதன் உறை - மேலுறை - யினின்றும் நீக்கான் (புறம். 323:5-7). அடிபிறக்கிடாத வயவர் செருக்க ளம் செல்லும் விருப்புடன் புலித்தோலாற் செய்யப் பெற்ற உறையினின்று வேலை எடுத்தனர் (பதி. 19: 3-5). வீரர் புலித்தோலால் செய்த உறையி னின்றும் புலால் நாறும் வேலை வலப்பக்கத்தே ஏந்தினமை வானில் விட்டு விளங்கும் மின்னல் பரந்தாற் போல் இருந்தது (பதி. 24: 1-3). தான் வினை முடித்துத் திரும்புவதாகக் குறித்த கார்ப் பருவம் கண்ட தலைவன், 'உறையினின்றும் உரு விய வாளுடன் கூடிய வலிய தோளை யுடையவ னும் இரவின்கண் துயிலும் சேனைகளை யுடைய வனுமாகிய வேந்தன் பாசறையில் யாம் உள் ளோம்; தலைவி தமியளாய் ஊரில் உள்ளாள், என் செய்வது' எனக் கலங்கினான் (அகம். 24:10,16 -18). திருமணத்தின்பின் தலைமக்கள் கூடும் முதல் நாள் இரவில் தலைவிக் குற்ற புழுக்கத்தைப் போக்கக் கருதி அவளின் போர்வையை ஆர்வ நெஞ்சமொடு தலைவன் வவ்வலின் உறைகழித்த வாள் போல தலைவியின் உருவம் மின்னியது என்பது தலைவன் கூற்று (அகம். 136:20-24). பகை வரைவென்று தலையாலங்கானத்துப் பாசறையில் தங்கிய பாண்டியன் நெடுஞ்செழியன் தன் உறை யினின்று நீக்கிய வாள் போல மேகம் மின்னியது (நற். 387:7-9). வையையில் நீராடிய மகளிரிற் சிலர் முகிலின் வயிற்றிலிருந்து மதியை எடுத்தது போல உறையிலிருந்து கழற்றிய வள்ளத்தில் மது வார்த் துக் கையில் ஏந்திப் பருகினர் (பரி. 10:74-77).

**உறைக்கிணறு** - சுடுமண்ணுறை செருகிய கிணறு. பல குட்டிகளை யுடைய பன்றிகளும் பல்வேறு வகைக் கோழிகளும் உறைக்கிணறுகளும் பொருந்திய புறச் சேரிகளில் ஆட்டுக் கிடாய்களோடு கௌதாரிகளும் விளையாடும் (பட். 75-77).

**உறைநர்** - தங்குவார். நின்னைக் காதலித்து உறை

நர்க்கும் - தங்குவார்க்கும்- நீ அன்பு செய்து உறை நர்க்கும் பிறர்க்கும் குமணன் தந்த செலவத்தை வழங்குவாயாக எனப பெருஞ்சித்திரனார் தம் மனைவியிடம் கூறினார் (புறம். 163:1,2,7). பொரு ளீட்டலை விரும்பி நாம் வருந்துமாறு நம்மைப பிரிநது சென்று சேணின்கண உறைநா சென்ற வழியில், இளைய பெண்யானை தளிர்களை உண ணற்குக களிறு யாமரததினை வளைத்துத தரும. ஆதலால, தலைவர் அதுகணடு விரைவில மீள்வா என்பது தோழிகூற்று (அகம் 59:7-9,16-18). நமது இன் பதனைக் கைவிட்டு உறைநர் சென்ற வழியில்பேய்த் தேருடன் மின்னும் பரறகறகள் பலவும் ஒருங்கு காணபபெறும (அகம. 67:15-18). கரடிக்குடும்பம் திளைக்கும் வெம்மை மிக்க பாலை நிலத்தைக் கடந்து சென்ற நம்தலைவர், சோழ மன்னரது வயலவளம் சிறநத ஊர்களைப் பெறுவதாயினும் ஆண்டு அமைநது உறைநர் அல்லர் எனத தோழி தலைவியைத்தேற்றினாள் (அகம.201:12-19). 'சேர்ப் பன் கொடுமையை நினைந்து நடுயாமத்திலும் துஞ சாது உறைநரை ஏனெனறு வினவாத மக்களையும் நீணட இரவையும் உடைய இவ்வூர் தங்கியிருத்தற் கேற்றதனறு' என்பது பிரிவாறறாத தலைவியின கூற்று (குறு. 145). 'பேரமர்க் கணணி, நின்னைப் பிரிந்து உறைநர் நின்தோள் துணையாகக குறித்த கார்காலத்தில் வந்தனர்; ஆதலால், நின் கூந்தல் பூவை விரும்புவதாக' எனத் தோழி தலைவிககுக கூறினாள் (ஐங. 496). உறையுநர் காணக.

**உறையனார் - புலவர்.** இவர் பாடியுளள குறுந் தொகை 207-ஆம் பாடல் தலைவனின செலவுக் குறிப்பறிந்த தோழி சொலலக் கிழத்தி உரைத்த தாக அமைந்துள்ளது. சுரம் செல் மாக்கட்கு ஒரு துணையும் இல்லை என்பதை 'இனந்தீர் பருந்தின புலம்பு கொள் தெள்விளி உயவுத் துணையாகும்' எனறு குறித்திருப்பது இவரின் புலமைச் சிறப்பைக் காட்டும்.

**உறையுள் - 1. வாழுமிடம்.** கொடையிற் சிறநத வேள் எவ்வியின் மிழலைக் கூற்றத்தில் பொருந்திய உறை யுளில் - வாழுமிடததில - உள்ள மகளிர் நுங்கின் நீரையும் கரும்பின் சாற்றையும் இளநீருடன் கலந் துண்டு கடலிற் பாய்ந்து விளையாடுவர் (புறம். 24:11-19). இவ்வுலகின்கண் நிலைத்த புகழைத் தேடியோர்க்கே உயர்நிலை உலகத்தில உறையுள் வாய்க்கும் (புறம். 50:14,15). பொகுட்டெழினி வெற்றிகொணடு விட்டுச் சென்ற ஊர்களில உள்ள மக்கள் அவன் படை வீரராலும் யானைகளாலும் துன்பம் விளையும் என்று அஞ்சி உறையுளை வெறுத்தனர் (புறம். 96:7-9). பல்யானைச் செல்கெழு குட்டுவன நாடுகளை இனிமையாகக் காவல்புரிந்து, குடிகள பகை, பசி, பிணி என்னும துன்பங் களினறி அமைதியாக வாழும் உறையுளை அமைத் துப் புரந்தான (பதி. 28.5,6). செலவக கடுங்கோ வாழியாதனின் வீரர் ஊக்கமுடைய படைவீரரை வென்று அவரின் உறையுளைக் கைககொணடனர் (பதி. 68:7,8). வானிடததே தமககுரிய உறையுளில் விளங்கிய தேவர் விருமபும் அழகிய மலைமுழைஞ்சு களிடததே பூ மிக்க சோலைகள் பொருந்தியிருந தன (குறி. 212-214). பிரிநதோர் செயலறுமபடி வந்த தடவுதலை யுடைய வாடைக காறறோடு இன்னாத உறையுளையும சில நாட்களே யுடையது, இவ்வூர் என வரைவொடு புகுதாத தலைவறகுச் சிறைப்புறமாககத தோழி கூறினாள (விரைந்து வரையா விடின தலைவி இறநதுபடுவள் எனபது கருத்து) (குறு. 55:3-5). ஞாலத்தை உறையுளாக வுடைய முனிவரும வானததை யுறையுளாக உடைய தேவரும திரு மாலை வழிபட்டனா (பரி. 3:27,28).

**2. உறைதல்.** கனவினும் பிரியாத உறையுளையும் - உறைதலையும் - மயிர்ச சாந்து பூசிய கூநதலையும் உடைய அருந்ததி போனற கற்பினை யுடைய நின மனைவியுடன் அழகுடன பொலிந்து விளங்கு வாயாக என்று இளஞ்சேர விரும் பொறையைப பெருங்குன்றூர் கிழாா வாழ்ததினார் (பதி. 89: 15-20). பொருளீட்டும வேட்கை காரணமாக வேறறு நாட்டின்கண்ணே உறையுளை விரும்பித் தலைவன சென்றான (அகம். 351:1).

**உறையுநர் – தங்குபவர்.** அருளை விருமபும் பேகனே, களங்கனிபோன்ற கரிய கோட்டையுடைய சிறிய யாழை, இசையின்பததை விரும்பி உறையுநர்–தங்கு பவர் – அவ்விசை யின்பத்தினால் தலையசைததுக் கொணடாடுமபடி வாசிதது யாம் வேணடும் பரி சில், நீ அருள செய்து, இன்னாது உறைபவளின துன்பத்தைத தீர்க்கவேணடும் எனபதே எனப் பரணர் கூறினார் (புறம். 145: 5-7, 10). ஆறலைப போர் வழிபார்த்துத் தஙகியிருக்கும் சீறூரில் உறையுநர் விட்டுப் போன மனையின் இறப்பு நிழலின ஒருபுறத்தே தங்கித் தலைவன் சுரம் கடந்து பொருள்தேடச் சென்றான (அகம். 103:6-10). கொடு முடி என்பானால் காக்கப்படுவதும் சிறந்த புகழ் உடையதுமான ஆமூரையே அடைவ தாயினும நின்னை மறந்து தலைவர் அங்கே உறையுநரலலர் எனத் தோழி தலைமகளை வற்புறுததினாள் (அகம். 159: 18-21). இன்பம் கருதி மனையாளை விட்டு நீங்காத நெஞ்சினர், நண்பரின் வறுமையையும் சுற்றத்தாரின் துன்பத்தையும் தம்மொடு உறவு கொள்ளாது உறையுநரின் பெருக்கத்தையும் கணடி

ருந்தும் ஒரேயிடத்தில் மடிந்திருப்பர் என்பது தலைவன கூற்று (அகம. 279: 1-5). 'குறித்துச் சென்ற கார்பபருவம் வந்ததும், தலைவர் வாராது உறையுநராக, இன்னும் நீவிர் உயிருடன் இருக்கின்றீரோ' எனறு கேட்பது போலத தண்ணிய கார்ப்பருவம் மழைத்துளியைத் தந்தது என்பது வருந்திய தலைவியின் கூற்று (குறு. 65: 3-5).

**உறையூர்** - சோழர் தலைநகர்களுள் ஒன்று. இது திருச்சிராப்பள்ளியை அடுத்துள்ளது. உறந்தை, கோழி என்பன மறுபெயர்கள். இங்கு வாழ்ந்த புலவர் இளம்பொன் வாணிகனார், ஏணிச்சேரி முடமோசியார், கதுவாய்ச் சாத்தனார், சல்லியன் குமாரனார், சிறுகந்தனார், பல்காயனார், மருத்துவன் தாமோதரனார், முதுகண்ணன் சாத்தனார், முதுகூததனார், முதுகூற்றனார், முதுகொற்றனார் முதலியோர் ஆவர். சோழன் நலங்கிள்ளி ஆவூரை முற்றுகையிட்ட காலத்து அதனை அடைத்துக் கிடநத நெடுங்கிள்ளி பின தப்பிச் சென்று உறையூரை அடைத்துக் கிடக்க, அதனையும் அந் நலங்கிள்ளி முறறுகை யிட்டான். அநநிலையில் கோவூர்கிழார் அவ்விருவரையும் அணுகிப் போரைக் கைவிடுமாறு அறிவுரை கூறினார் (புறம். 44,45 அடிக்குறிப்பு). சோழன் நலங்கிள்ளியிடமிருநது உறையூர்க்கு வந்த இளந்தத்தனெனனும் புலவனை ஒற்றனெனக் கருதி, அங்கிருந்த நெடுங்கிளளி கொல்ல முயன்ற பொழுது கோவூர்கிழார் அவனைப்பாடி இளந்தத்தனை உய்யக் கொணடார் (புறம். 47. அடிக்குறிபபு). சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருநதிருமாவளவனை உறையூர் மருத்துவன் தாமோதரனார் பாடியுள்ளார் (புறம். 60. அடிககுறிப்பு). கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த இடத்துச் செனறு மீண்டு அவனது உறையூருக்கு வநத பொத்தியார் யானையிருந்து இறநத கூடத்தைப் பார்த்துக் கலங்கும் பாகனைப் போல அம்மூதூரில் அவனிருந்த மன்றத்தைக் கண்டு அழுது பாடினார் (புறம். 220).

**உறையூர் இளம்பொன் வாணிகனார்** - புலவர். உறையூரைச் சேர்ந்தவர்; வணிகர். இவரது ஒரேபாடல் புறநானூற்று 264-ஆம் பாடலாக அமைந்துள்ளது. கரந்தைத் திணைக் கையறுநிலைத் துறையாக அமைநதுள்ள இப்பாடல், கன்றுடன நிரை மீட்டு வந்து பட்ட மறவனின் வீரச் சிறப்பினையும் அவனுக்கு அமைக்கப்பட்ட நடுகற் சிறப்பினையும் விளககும்.

**உறையூர் ஏணிச்சேரி முடமோசியார்** - புலவர். உறையூரைச் சார்ந்த ஏணிச்சேரி என்னும் ஊரினர். ஊரும் பெயரும் எனத் தொடஙகும் தொல்காபபிய மரபியல நூற்பாவிற்கு (74) பேராசிரியர் எழுதியவுரையில் 'உறையூர் ஏணிச்சேரி முடமோசி' என்னும் பெயரை அந்தணாக்குரியதாகக் காட்டியிருப்பது கொண்டு இவரை அநதண மரபினர் எனறு கொள்ளலாம். இவர் சேரமான் அநதுவஞ் சேரல் இரும்பொறையால் ஆதரிக்கப் பெற்றவர் என்பது, அவனோடு வேண்மாடததின் மேலிருந்து இவர் பாடினார் என்னும் புறப்பாடல் 13 - அடிக் குறிப்பினால் புலனாகினறது. ஆய் என்னும் வள்ளலைப் புறநானூற்றில் பாடாணடிணையின்கண கடைநிலை (127), வாழ்த்து (128), இயன்மொழி (129-132, 134), விறலியாற்றுப்படை (133) ஆகிய துறைகளில் சிறப்பித்துப் பாடி யுள்ளார். அவ் வள்ளலை ஆய், ஆஅய அணடிரன், அணடிரன என்னும் பெயர்களால் குறிப்பிட்டுள்ளார். குமணனை வாழ்த்திப் பாடிய புறப்பாட்டில் இவரைத் 'திருந்துமொழி மோசி' (புறம். 158:12,13) என்று பெருஞ்சித்திரனார் பாராட்டி யுள்ளமை கொண்டு இவர்தம் புலமைச் சிறப்பினை நன்கு உணர முடிகின்றது. 'இம்மைச் செய்தன மறுமைக் காமெனும் அறவிலை வணிகன் ஆயலன' எனறும் அவன் இரவலர்க் களித்த யானைகளை எண்ணினால் அவை, அவன் கொங்கரை வென்ற போது அவர்கள் இட்டுச்சென்ற வேலினும் பலவாகும் என்றும் களிறறினை மிகுதியாக வுடைய காடுகள் ஆயினது குனறத்தைப் பாடினவோ என்றும் கூறி இவர் ஆய வள்ளலின் கொடை, வீரச் சிறப்புக் களைப பாராட்டுவது நயமுடையதாக உள்ளது (புறம். 134:1, 2; 130:4-7; 131.2-4).

**உறையூர்க் கதுவாய்ச் சாத்தனார்** -- புலவர். உறையூரைச் சேர்ந்தவர். மருதத் திணையில் அமைந்த இவரது ஒரே பாடல் நற்றிணை 370-ஆம் பாடலாக அமைந்துள்ளது. தலைவி ஊடலை நீட்டிப்ப ஆற்றாத தலைவன் பாணனுக்குச் சொல்லுங்கால், அவள் புதல்வனை ஈன்று மனைக்கண் படுத்திருக்கும் போது, அவன் செனறு 'நீ புதல்வனை ஈன்றமையால் வேறு பெயரும் பெற்று முதுபெண்டு ஆகித் துயின்றனையோ' என்று கூறிக் குவளை மலரால அவளது வயிற்றினைத் தடவியமை நோக்கி மகிழ்ந்து, கண் புதைத்துக் கிடந்த காட்சியை நினைவுகூர்ந்து கூறுவது நயமிக்கதாகும்.

**உறையூர்ச் சல்லியன் குமாரனார்** - புலவர். உறையூரைச் சேர்ந்தவர். உறையூர்ச் சல்லியங் குமரன் என்றும் குறிக்கப்பட்டுள்ளார். இவரது ஒரே பாடல் குறுந்தொகையில் (309) உள்ளது. பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனுக்குத் தோழி வாயில் நேர்ந்தமையினை இப்பாடல விளக்குகின்றது. வயலில் தொழில் புரியும் உழவர், தம் தொழில் முடிக்கக்

களையாய்ப் பறித்த மலர்ந்த நெய்தலை வரப்பில போடுவர் என்றும் இன்னாத பல செய்தாலும் தலைவிக்குத் தலைவன இன்றியமையாதவன என்றும் வாயில் நேரும் தோழி தலைவனிடம் கூறுவது அவளுடைய உலகியலறிவின் சிறப்பினைக் காட்டி நிற்கின்றது.

**உறையூர்ச் சிறுகந்தன் - புலவர்.** உறையூரைச் சேர்ந்தவர். இவரது ஒரே பாடல் குறுநதொகை 257-ஆம் பாடலாக அமைநதுள்ளது. குறிஞ்சித் திணையில் அமைந்துள்ள இதனகண, பலாமரத்தின் வேர், அடி மரம், கிளை ஆகியவறறில் தொடுத்து வைததன போலப் பலாப்பழங்கள் பழுத்துத் தொங்கும் காட்சியினைக் கவினுறக் காட்டியுள்ளார். தலைவன வருந்தோறும் வெளிப்பட்டு, அவன் நீங்கினாலும் நீங்காது நின்று துன்பஞ் செய்யும் பகையாகும் என்னும் கருததில் காமததினைக் காமத்துப் பகை எனக் குறிப்பிடுவது சிறபபினது.

**உறையூர்ப்பல்காயனார் - புலவர்.** உறையூரைச் சார்ந்தவா. இவரது ஒரே பாடல் குறுநதொகை 374-ஆம் பாடலாக உள்ளது. தான அறத்தொடு நின்றமையால தலைவன் வந்து வேணடிக கொள்ளப் பெற்றோர் வரைவிற்கிசைநத பாங்கினைத் தோழி பின்னர்த் தலைவிக்கு உரைப்பதாக அமைந்துள்ளது இப்பாடல். தலைவன தலைவியரிடையே தோனறிய காதலை அறிநது அலர் கூறி ஊர் மயங்கிய மயக்கததிற்குத தூக்கணாங் குருவி நெடிய பனை மரத்தில் தொடுததுள்ள கூட்டின அரிலபடு மயக்கத்தினை உவமையாகக் கூறியுளளது நயமிக்கது.

**உறையூர் மருத்துவன் தாமோதரனார் - புலவர்.** உறையூரைச் சேர்ந்த இவர் மருத்துவத் தொழிலை மேறகொண்டவ ராவர். இவருடைய 5 பாக்களில் 2 அகநானூற்றிலும் (133,257), 3 புறநானூற்றிலும் (60,170,321) இடம் பெற்றுள்ளன. பாலைத் திணையி லமைநத இவருடைய அகப்பாக்களில ஒன்று தலைவி கூற்றாகவும் (133) மறறொன்று தலைவன் கூற்றாகவும் (257) அமைநதுள்ளன. பாடாண்டிணைக் குடை மங்கலத்துறையில் இவர் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனைப் பாராட்டியுள்ளார் (புறம். 60). பிட்டங் கொற்றனை வாகைத் திணை வல்லாண முல்லைத் துறையில் பாடியுள்ள புறப்பாடலில் (170) 'அவன் பகைவர்க்குக் கொல்லன் உலை யிடத்துள்ள அடைகல் போன்றவன்' என்று கூறி அவனது ஆண்மையைப் புலப்படுத்தியுள்ளார். பாலை நில வழியில் நீருண்பதற்காக யானைகள் யாமரததினை உரித்துச் சுவைத்திட்டுக் காய்ந்த கோதினை அவ்வழிச் செல்லும் உமணர் தீமூட்டப் பயனபடுத்தல் (அகம். 257). கானலிலுள்ள நீரால் விளைந்த உப்பினை ஏற்றிச் செல்லும வண்டிச் சகடை குழியில் அகப்பட்டபோது அதன்கண பூட்டிய எருது முயன்று இழுத்துச் செல்லுதல் (புறம். 60) ஆகிய உமணரின தொடர்பான செய்திகளை இவர் குறிபபிட்டுள்ளார். வேட்டைத் தொழில் புரிந்து உண்ணும் வேட்டுவரை இவர் 'வில்லுழுது உணமார்' எனறு நயம்படக் குறித்துள்ளார் (புறம். 170:4).

**உறையூர் முதுகண்ணன் சாத்தனார் - புலவர்.** உறையூரைச் சோநதவர். இவர் உறையூர் முதுகணணன சாத்தன எனவும் குறிப்பிடபபட்டுளளார் (குறு. 133). இவருடைய ஐந்து பாடல்கள புறநானூற்றிலும் (27, 28, 29, 30, 325) உறையூர் முதுகணணன சாத்தன என்ற பெயரில் ஒரு பாடல குறுநதொகையிலும் (குறு. 133) ஆக 6 பாடலகள சங்கத தொகை நூல்களில இடம் பெற்றுள்ளன. சோழன் நலஙகிளளியைப் பொதுவியல திணையின முதுமொழிக் காஞ்சி (27, 28, 29), பாடாணடிணையின இயன்மொழி (30) ஆகிய துறைகளில சிறப்பித்துள்ளார். வளர்நதது குறைதலும குறைநதது வளர்தலும் பிறந்தது இறத்தலும இறந்தது பிறததலும உணடு என்னும் உணமையினைத் தேயநது வளரும் திங்களைக் கொணடு அழகுற விளககியுள்ளார் (புறம். 27:11-14). சிதடு, உறுபபில பிண்டம, கூன, குறள், ஊமை, செவிடு, மா, மருள ஆகிய எட்டு வகைப் பிறப்புக்களும் பேதைமையாகும்; அவற றால ஊதியமிலலை எனறும் அறம்பொருள் இனபத்தை ஆற்றுதற்குரிய செல்வத்தை ஒருவன் அவ்வாறு பயனபடச் செயயாமை அவனைப போற்றாமையாகும் என்றும் எடுத்துககாட்டி இவர் நலங்கிளளியை அறிவுறுததுவது (புறம. 28) சிறப்பாக உள்ளது. குறிஞசித திணையில இவர் தலைவி கூற்றாக அமைததுளள குறுநதொகைப பாடலில (133) தலைவன் வரைவு நீட்டிததமையால புலம்புறறு உரம் அழிந்த நிலையிலும தலைவி உயிரோடு இருபபதற்குக் கிளி குறைத்துண்ட கூழையான தினைத்தாள் மழை பெயதமையால இலை தளிாபபதனை உவமையாகக் கூறியுள்ளார்.

**உறையூர் முதுகூத்தனார் – புலவர்.** உறையூரைச் சேர்ந்தவர். உறையூர் முதுகூற்றன், உறையூர் முதுகொற்றன், உறையூர் முதுகொற்றனார், முதுசாததனார் என்று பலவாறாக இப்பெயர் குறிக்கபபட்டுளளது. இப்பெயர்களில் வெவ்வேறு நூற்பதிப்புக் களிலுள்ள ஒன்பது பாடல்களையும் (புறம். 331; அகம. 137, 329; குறு. 221, 353, 371, 390; நற். 28, 58) முதுகூத்தனார் எனனும் பெயரிலேயே திரு. வையா

புரிப் பிள்ளை தம் சங்க இலக்கியப் பதிப்பில் தொகுத்துள்ளார். உறையூர் முதுகூத்தனார் என்னும் பெயரில் புறம். 331 (உ. வே. சா. பதிப்பு), அகம், 137, 329 (வே. வி. பதிப்பு). ஆகிய பாடல்களும் உறையூர் முதுகூற்றன் என்னும் பெயரில் குறு. 353, 371 (உ. வே. சா. பதிப்பு) ஆகிய பாடல்களும் உறையூர் முதுகொற்றன் என்னும் பெயரில் குறு. 321, 390. (உ. வே. சா. பதிப்பு) ஆகிய பாடல்களும் முதுகூத்தனார் என்னும் பெயரில் நற். 28,58 (பி.நா. பதிப்பு) ஆகியபாடல்களும் அமைந்துள்ளன. வாகைத் திணை மூதின்முல்லைத் துறையிலமைந்த புறநானூற்றுப் பாடல் தன்னிடமுள்ளது மிகவும் சிறிய அளவினதாயினும், வந்தார் பலர் எனக் கருதாத வளாய் நீண்ட பந்தரில் உணவினை முறையாக உண்பிக்கும் இற்பொலியும் மகளின் சிறப்பினைக் கூறுகின்றது (புறம். 331:6-9). தலைவன் பிரிந்தமை யால் தலைவியின் நுதல் பொலிவு இழந்தமைக்கு உறையூரிடத்தே காவிரியின் மணல் நிறைந்த பொழிலில் பங்குனி விழாக் கழிந்த நாளில், சமைத்தல் இன்மையால் தீயற்ற அடுப்புக்களையுடைய விழாக் களம் பொலிவிழந்ததை உவமையாக ஆசிரியர் சுட்டியுள்ளார் (அகம். 137:6-12). மேகம் துஞ்சுங் காட்டில் நீரின்மையால் வறிதாகிய சுனையிடத்தே புலி, குட்டி ஈனும் செய்தியினை அகப்பாட்டொன்றில் இவ்வாசிரியர் குறிப்பிட்டுள்ளார் (அகம். 329: 12,13). உறையூர் முதுகூற்றன், உறையூர் முதுகொற்றன், உறையூர் முது கூத்தனார் காண்க.

**உறையூர் முதுகூற்றன்** - புலவர். உறையூர் முதுகூத்தனார் காண்க.

**உறையூர் முதுகொற்றன்** - புலவர். உறையூர் முதுகூத்தனார் காண்க.

**உறைவி** - உறைபவள். இனமணி நெடுந்தேர் ஏறிச் சென்று, இன்னாது உறைவியின்-உறைகின்றவளின்-(கண்ணகியின்) பொறுத்தற்கரிய நினைவாலுண்டாகிய நோயைக் களைவதே தான் விரும்பும் பரிசிலென்று பரணர் பேகனிடம் வேண்டினார் (புறம். 145:8-10). 'மழைபொழிந்து கானம் மணம் வீசும் இக்காலம், தலைவர் நிலை என்னாயிற்றோ என மயங்கி நீர் சிந்தும் கண்களுடன் மனையில் வருந்தி இன்னாது உறைவி (உறையும் தலைவி) அரசன் போரினை முடித்தால் தன் பழைய நலத்தை அடையும் காலமாகும்' என்று பாசறையிலிருந்து தலைமகன் தன் நெஞ்சொடு கூறினான் (அகம். 164:4,7-11). தலைவன் வரவில்லை என்னும் கொடுமையை மெதுவாகக் கூறக் கேட்ட தோழி, தாழ்த்தாது விரைந்து வருவன் என்று கூறினாள்; அவ்வாறு கூறி இரவில் உசாத்துணை யாவதற்கு என்னுடன் துஞ்சாத உறைவி (தங்கியவளாகிய தோழி) மகிழ்ந்தது இனிதாக உள்ளது என்று தலைவி இரவுக் குறிக்கண் தலைவனிடம் கூறினாள் (அகம். 298:19-23). வினை முடித்த பின் மீளும் நம் செலவினை 'இது தோளின்துயர் நீக்கும் மருந்து' என்று படுக்கையில் கிடந்து கண்ணீர் விட்டு நிமித்தத்தைப் பரவும் உறைவியின் (உறைபவளாகிய தலைவியின்) காதிற்பட, பல்லி அறிவிக்குமோ என்று பொருள் முற்றிய தலைவன் தன் நெஞ்சொடு கூறினான் (அகம். 351:4,11-17). 'நம்மை நயந்து உறைவியின் அழகு கெடுமாறு தெளியாது தீமையுடன் கூடி இரக்கம் நீங்க மிக்க வன்மையுடன் பொருளை விரும்பி, அதற்காக முயலுதற்கு முற்பட்ட நெஞ்சமே' என்று தலைவன் பொருள் தேடவிரும்பிய தன் நெஞ்சினை விளித்தான் (அகம். 379:1-4). தலைவி தோழியை, 'நோய் நொந்து உறைவி' (உறைபவளே) என்று விளித்தாள் (குறு. 192:2). நெடுந்தொலைவினைக் கடந்து செல்லாவிடில் தலைவியின் நோயை நீக்க முடியாது என்று எண்ணி முரம்புநிலம் உடைபடுமாறு புதிய வழியினை உண்டாக்கிச் சென்று நோயால் வருந்தும் உறைவியை (தலைவியை) அடையக் காரணமானமையால், 'நீ தேரினையோ தந்தாய்; தலைவியையே தந்தாய்' என்று வினைமுற்றி வந்த தலைவன் பாகனைப் பாராட்டினான் (குறு. 400). 'உன்னை நயந்து உறைவியின் இன்னுயிர் படுந்துயரினைக் கருதாமல், எஃகு துணையாக அணங்குடைய நள்ளிரவில் ஆரம் கமழும் மார்போடு வருதல் பண்பெனப்படுமோ' என்று தோழி தலைவனிடம் கூறி இரவுக்குறி மறுத்தாள் (நற். 168:6-11). பரத்தை தலைவியை 'எம் நயந்து உறைவி' (நம்மை விரும்பி உறைபவள்) என்று அத்தலைவியது பாங்கியினுடைய பாங்காயினார் கேட்குமாறு விறலியிடம் கூறினாள் (நற். 176:1). 'தலைவ, நீ பிரிந்து சென்ற பின், நின்னை நயந்து உறைவியாகிய தலைவி ஆற்றாது என்னினும் மிகுதியாக வருந்துவாள்' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (ஐங். 273:3,4). 'நீ பிரிந்து சென்று ஈட்டும் பொருள், நின்னை நயந்து உறைவியாகிய தலைவியின் முதற் சூலிற் பிறந்த சிறுவனின் இள நகையினைக் காணும் இன்பத்தினும் மிக்க இன்பத்தினை நல்குமோ' என்று தோழி தலைவனிடம் வினவினாள் (ஐங். 309:3-5).

**உன்னம்** - 1. உன்னமரம். இலவமரம் என்றும் கூறுவர் (பதி.23:1 குறிப்புரை) இரவலர்வள்ளலைநாடி, கொடிய மறவர் அம்பு விடுதலால் இறந்தவரின் உடல்களை மூடிய புதிய கற்குவையின் மேலிருந்து பருந்து வருந்தும் உன்ன மரத்தையுடைய அரிய கவர்த்த வழிகளில் வருவர் (புறம்.3:20-24). இலையின்றி வறிதாகிய

தலையினையுடைய உன்ன மரத்தின் கிளையிலிருந்து சிள்வீடு ஒலிகக நிலம் விளைவின்றிப் பசுமை கெட்ட காலத்திலும், பரிசிலர் உவகை மிக்கவராய் உண்டு மகிழ்ந்தாடுமாறு செங்குட்டுவன் கலங்களை வழங்குவான் (பதி. 23:1-3, 8-10). களங்காய்க் கண்ணி நார் முடிச்சேரல் வலி மிக்கவனாதலின் அவனொடு போர் செய்யக் கருதுவோர் நிமித்தம் பார்க்கும் போது உன்னமரம் கரிந்து காட்டி அவர்க்கு வெற்றியின்மை யுணர்த்தும் (பதி. 40:17). நிமித்தம் மாறுபட்டாலும் பகைவரை வெல்லுமாற்றல் மிக்கவனாதலின் செல்வக் கடுங்கோ வாழியாதன், பொன் போன்ற பூவினையும் சிறிய இலையையும் புல்லிய அடியினையும் உடைய உன்ன மரத்தின் பகைவன் என்று கபிலர் அவனைப் பாராட்டியுள்ளார் (பதி. 61:5,6).

2. கருத்து. 'நம் உன்னத்தை - கருத்தை - அறிந்து கொண்ட அறிவோடு தானறிந்தவற்றை வெளியிடாது மறைத்துச் செலுத்தும் அன்னையின் கடுஞ்சொல்லினின்றும் தப்புவோம்' என்று, தலைவன உடன்போக்கிற்கு இசைந்தமையினைத் தலைவிக்குணர்த்தும் தோழி கூறினாள் (அகம். 65:1,2).

## ஊ

**ஊஉர்** - மக்கள் கூடி வாழும் நகரம். 'ஊஉரில்-நகரில்-அலரெழச் சேரியி லுள்ளார் ஆரவாரஞ் செய்ய, அன்னை நம்மை அமையாது வருத்துகின்றாள்; இனி, தனக்குரிய இல்லத்தில் அவள் தனித்துறை வாளாக' என்று உடன் போக்கு நேர்ந்த தோழி தலைவிக்குரைத்தாள் (குறு. 262:1-3). ஊர் காண்க.

**ஊஉன்** - புலால். தீயினை ஒத்த செங்காந்தளின் மழையால் செழித்தெழுந்த புதிய மொட்டினை ஊனெனக் கருதி அறியாதெடுத்த ஆண் பருந்து ஊஉன்-புலால்-அன்மை கண்டு உண்ணாது விடுத்துச் சென்றது (மலை. 145-148). ஊன் காணக.

**ஊக்கம்** - மனவெழுச்சி. இடம் சிறிதென்னும் ஊக்கம்-மனஎழுச்சி-செலுத்த ஒடுங்காத உள்ளத்துடன், வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் படையைச் சேரலாதன் பெற்றிருந்தான் (புறம். 8:3-5). செல்வக் கடுங்கோ வாழியாதனின் தாள் நிழல் வாழ்வோர் விரும்பத்தக்க சித்திரங்கள் நிலைபெற்ற பகைவரின் மதிலை அழித்தல்லது உண்ணாமல் பலபொழுதுகள் கழிய,நெஞ்சு விரும்பும் ஊக்கத்தினராய் இருந்தனர் (பதி. 68:5-7). மின்னியவுடனே காலந்தாழத்தாது இடிக்கும் இடிபோல் ஆரவாரிக்கும் ஊக்கத்தோடு வில்லை வளைத்துப் பகைவர் மார்பில் அம்பினைச் செலுத்தும் மறவர் பலருடன் யானையின் வெண் கோட்டினையும் கள்வர் கோமானாய புல்லி கைப் பற்றிக் கொணர்ந்தான (அகம. 61:6-12). உறவினர் தம் துன்பம் போக்கித் தாங்கவும் சுற்றத்தார் உண்ணவும் கேளிர் அல்லாத சுற்றததார் போன்றோர் பொருந்தி ஒழுகவும் ஆள்வினைக் கேற்ற ஊக்கமொடு விருப்பம் மிக்குச் சோழரின உறநதை போனற பெறற்கரிய நன்கலன்களை எய்துதற்கு வினையை முடித்து விட்டோம் எனத் தலைவன இடைச்சுரத்து நெஞ்சிற்குக் கூறல் (அகம். 93:1 7). கள்ளைப் பருகியவர்க்கு மயக்கம் எழ மயககத்தால உண்டான மதர்ப்பு அவர்கள் நிலையை வெளிப் படுத்தி அலர் தூற்ற, அவ்வலரை அஞ்சி ஊக்கத் தாற் பாதுகாத்து அவாகள் களிமதரை மறைத் தனர் (பரி. 10:65-68). பாணடியனது படை ஊக்கத் தினால் எங்கும் பரந்தது போல வானம் பொழிநத வெள்ளம் எங்கும் பரந்து வயல்களிற் புகுந்தது (பரி. 22:8-11). ஊக்கல், ஊக்கு காண்க.

**ஊக்கல்** - மனவெழுச்சி. முரண்மிகு சிறப்பின் உயர்ந்த ஊக்கல்-மனவெழுச்சி-உடையவனே என்று இமய வரம்பன் நெடுநசேரலாதனைக் குமட்டூர்ககண்ணனார் விளிததுள்ளார் (பதி. 11.11). தேவருலகத்தை யொத்த வளமுடைய நகரை முனபோல ஆளும் படி யுதவியவரும் வேலும் அம்பும பட்டு எங்கும் உருவி நிற்றலின குறடும் அதில தைத்த ஆர்களும் போன்ற மார்பினை யுடையவருமான ஊககலரை (ஊககலுடைய மறவாகளை) பரிசில பெறக கொணர் மின் என்று நெடுஞ்செழியன ஏவினான் (மது. 741-743). ஊக்கம், ஊக்கு காண்க.

**ஊக்கு** - ஊக்கம். முரசுமுழங்கும் வேற்படை நெருங்கிய போர்க்களத்தில் பனைமாலையையும் வீரக் கழலணிந்த அடியைபு முடைய நார்முடிச் சேரலின் படைத்தலைவர் அடங்காத பகைவரது ஊக்கு-ஊககம் - நீங்க அவர்களை ஓட்டினர் (பதி. 31. 30-33). வெம்மை மிக்க காட்டுவழி அதனை நினைப் போரை நடுங்கச் செய்வதோடு மேலும் செலலலாம் என்னும் ஊக்கினையும் போக்கிவிடும் (அகம். 29: 18,19; 231:8,9). ஊக்கம், ஊக்கல காண்க.

**ஊக்குநர்** - ஊக்கம் மேற்கொண்டவர். இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் சினந்து அழிதத பகைவரின் பேரூர்கள் விடத்தர், உடை முதலிய முள்மரங்கள் செறிந்து பேய்மகளும் கழுதும் இயங்க, நெருஞ்சி படர, மன்றங்கள் ஆரவாரம் அழியப் பாழ்பட்டன; அப்பக்கம் செல்ல ஊக்குநரின் - ஊக்கம் மேற் கொண்டவரின - வலியைக் கெடுத்து நினைப்பவர் மனம் நடுங்குமாறு அவை பாழ்பட்டன என்று குமட்டூர்க்கணணனார் கூறுவர் (பதி. 13:12-19).

பெருஞ்சேரலிரும்பொறை மதிலினிடததே யிருந்து வெளியே தோனறாமல் தமது பழியைச் செயய ஊகுநரது ஆழமான ஆழியையுடைய குறுநதாள ஞாயிலைக கொணட அரிய மதிலின் காவலைக் கைபபறறிக கொணடான (பதி. 71:11-13).

**ஊகம் - 1.** ஒருவகைப்புல். புன்புலமிக்க சிற்றூரில வேட்டுவச் சிறுவர் உடைவேல மரத்தின் வெளளிய முளளை ஊகம் புல்லின நுண்ணிய கோலிற செருகிய அம்பை வளாரால் செய்யப்பட்ட வல் வில்லில வைதது வளைத்துப் பருததி வேலியடியில் உறையும் காட்டெலியை வீழத்தக் குறி பார்ப்பர் (புறம். 324:3-8). எயினர் வாழும் குறும்பிலுள்ள உயர்நிலைவரைப்பு (மதில) ஊகம் புல்லால் வேயப் பட்டிருக்கும (பெரு. 122, 129). ஊகு காண்க.

**2. கருங்குரங்கு.** மூங்கில நிறைந்த குன்றில் குறு முலையுணணத் தாயைச் சுற்றித் திரியும் பாலுண ணும ஆட்டுக் குட்டி வெளுத்த முகமுடைய ஊகத் தின - கருங்குரங்கின் - குட்டியொடு தாவும் (புறம. 383:18,19). பசிய கண்களையுடைய ஊகம் பாம்பின் தலையைப் பிடித்தபோது அப்பாமபு அதன் கையை ஒருகால இறுகவும் ஒருகால் நெகிழவும் சுற்றுதல் போல் யாழ்க் கோட்டில் வேண்டுமிடத்து இறுக வும் நெகிழவும் நரம்பினைத துவக்கும் திவவு (வார்க் கட்டு) அமைந்திருக்கும் (சிறு. 221, 222). தினை காக் குங் குறவர் பரண்மீதேறி யானையை விரட்ட எறி யும் கவண்கல், மூங்கிலைக் கடந்து அதில வாழும் கரிய விரலையுடைய ஊகம் தன குட்டிகளோடு அஞ்சி ஓட உயிர்கவரும் கூற்றம போல விசை மாறாது சென்றது (மலை. 203-210). இனமயில் அக வும் மரஞ்செறிநத காட்டில வெளளிய முகத்தை யுடைய ஊகம் தன குட்டிகளொடு நடுங்குமாறு படுமழை பொழிநதது (குறு. 249:1-3). நீணட மயிரி னையும கடிய பற்களையு முடைய ஊகத்தின் கரிய விரலையுடைய ஆண்குரங்கு பககத்தில் தோண்டிய தால உடைந்து மலர்போல மணக்கும் பலாப்பழம் காநதள மலருடன் கமழவது சிறுகுடி (குறு. 373: 4-7). பாறையிலிருநத ஊகத்தை வெருண்டு நோக்கி வருடைமான்குட்டி இருள செறிந்த பககமலையில் ஏறியிறங்கி ஆடும் (கலி. 43:12-14).

**ஊகு – ஊகம்புல்.** வேனிற் காலத்துத் தோன்றும் அணி லின வாலைப் போன்ற கழன்றுதிர்ந்து அரியரியா கத் திரணடிருக்கும் ஊகின - ஊகமபுல்லின் – பழைய பூக்கள் வீரனின் தலைமயிர்ச் சுருளில் படிந் தன (புறம. 307:4-6). ஊகம் - 1 காண்க.

**ஊசல் - ஊஞ்சல்.** கடவுளின் நிலையை யுடைய கற்கள் ஓங்கிய நெடுவரை யுடைய இமயமலையில் கவரி போலும் கூந்தலையும் ஊசலாடுதல் விருப்பத்தினை யுங் கொண்ட சேயிழை மகளிர் அங்கே உலவும் யானைக் கூட்டத்திடையே விருந்தாக விரும்பப பெறும் பெண யானைகளை எணணப் புகுங்கால அவை மிகுதியால எணணிலடங்காது நின்றன (பதி. 43:1-7). மயிர்குறை கருவியின் மாண்கடைபோன்ற, ஊசல போல ஆடும் பூங்குழையினைப் பொறுத்த காதினையுடையவள் பாடினி (பொரு. 29,30). ஞாழல் மரககிளையில தாழைவிழுதால கட்டிய ஊசலில் நெயதல் மகளிர் விளையாடுதல வழக்கம் (அகம. 20: 5,6). அசோகமரக் கிளையில தொடுத்த நாம் ஆடி விடுத்த ஊசற்கயிற்றைத் தலைவன கணடு வருநதி மீளவானோ என அவன் கேட்பத தோழி தலைவிக குச் சொலலுவாளாயக் கூறினாள் (அகம. 38 5-8,15). இரவில 'நமதோட்டத்தில் அசோகமரக கிளையில தொடுத்த ஊசலைப் பாம்பெனக் கருதி மர முழுதும் சிதைய இடி விழுந்ததை நீ கேட்டாயோ' எனத் துயிலும் அன்னையைத் தோழி வினவினாள் (அகம். 68:4-9). தினைப்புனங் காக்கும் மகளிர்க்கு ஊசல் கட்ட மனைப்பக்கததே வெட்டாது விட்ட கிளை யில வேங்கை நிறையப் பூத்திருந்தது, மயிலின் குடுமி போலத் தோனறியது (அகம. 368:3-7). 'பெரிய கிளையில் தொடுத்த பலராடுகின்ற ஊசலின் ஏறி யிறங்கும் கயிற்றைப போலத தலைவியின பொருட் டுக் குறியிடத்துச செல்லவும் அங்கு அவளைக் காணாது மீளவுமாய் நீ மிகவும் வருந்தினை' என்று அலல குறிபபட்டு மீளும் தலைவன நெஞ் சிற்குக கூறினான (அகம. 372:7,8,14). பனைநார்க் கயிறறினால பிணிததுத் தொங்கவிட்ட ஊசலில் தன் ஆயததார் ஆட்டவும் ஆடாளாய் அழுது மீளும் பெதுமபைப் பருவக் குறுமகளை (பரத் தையை) மீட்டும் ஊசலாடுந் தொழிலில ஈடுபடுத் தாத நயனில் மாக்களோடு சேர்ந்து வேந்தனது அவைககளமும் பயனில தாயிற்று என்று தலை மகனது பரத்தையைத் தோழி சுட்டி யுரைத்தாள் (நற். 90:6-12). பாலைவழியில் வேலபோன்ற இலை யுடைய இற்றிமரத்தின நிலத்தில் படாத விழுது வைகறையில் கோடைக்காற்று வீசுநதோறும் ஊச லாடுவது போன்று கீழே துயிலும் பெணயானையை வருடும் (நற். 192:9-11). மகளிர் குணடலத்திற் கொளு விய ஊசல் போனற குமிழ மலர் மலைவழியிலுள்ள கற்பாறையினை அழகுசெய்யும் (நற். 286:1-3). கரு விரல் செம்முக மந்தி மலையருவியில் ஆடி, உயர்ந்த மூங்கிலில் ஏறி அதன் நுனியை ஊசலாகக் கொண்டு ஊசலாடி வேங்கை மலர் சுனையிலே விழும்படி அதன கிளையிலேறிக் கடுவனொடு முயங்கித் திளைக்கும் (நற. 334:1-5). 'பெரும்புனம் கவரும் சிறு கிளி ஓப்பி, வேங்கை மரத்தில் ஊசலாடி அலகுலில் தழையணிநது உம்மோடு விளையாடி வருதலினும்

இனியது முண்டோ' எனத் தோழி தலைவனிடம் கேட்டாள் (நற்.368.1-4). கிளி கடிந்தோம்பும் புனத் தயலில் ஊசலூர்ந் தாடும் போது ஒருநாள் வந்த தலைவனைச் சிறிது ஊசலாட்டுவாயாக என்ன, அவன் நனறென இசைந்து ஆட்டும்போது நான் கைநெகிழந்து அவன மார்பில பொயயாக வீழ்ந் தேன், அவன் உணமையாகக் கருதி விரைந்து எனனை எடுததுத் தழுவினன்' என்று தோழி தான் நாணின்மை செயததாகத் தலைவிக்குப படைத்து மொழிந்தாள் (கலி. 37:12-18). இனமான மீன் களைத் தாக்கி வென்ற சுறாமீனின் மருப்பாற் பலகை ,செய்து கோதது இனவணடு ஆர்க்கத் தாழாது தேன் பிலிற்றும் மலரையுடைய தாழை யின் விழுதால் திரிததிட்ட ஊசலில் தோழி தலை வியை ஊசலாட்டினாள் (கலி. 131.6-11). இளைய பெண்மான நோக்கை வெனறவளே, நின் தோளைக் கைவிட்டவனது கொடுமைத் திறங்க ளைக் கூறிப்பாடி நீ ஏறின ஊசலை யான் உயரச் செலுத்தித தாழத்து ஆட்ட நெடும் பொழுது ஆடுவாயாக என இயந்பழிக்கும தோழி தலைவி யிடம் கூறுதல் (கலி, 131:12-14). தோழி தலை வியை நோக்கி, மாயாத நோய செய்தான் கொடு மைத் திறங்கூறி நாம பாடும் மிக உயர்ந்த ஊசற் பாட்டு நீ ஒன்று பாடுக எனக் கேட்டாள் (கலி· 131:23,24). புளளினம ஒன்றன் உயிரைப் போக்கி இரையாக அதனை உண்ணாத துறைவனை நாம் பாடும் அசைந்து வருதலையுடைய ஊசற்பாட்டை நீ இயற்பழித்ததனை அழித்து இயறபட ஒன்று பாடுக எனத் தலைவி தோழியைக் கேட்டாள் (கலி. 131: 31-34). தலைவியும தோழியும் தலை வனை இயற்பழித்தும் இயற்படமொழிநதும் பாடிய ஊசற்பாட்டைத் தலைவன் மறைநது கேட்டுப் பின் தானே வந்து தோழியெனத தலைவி மருள ஊசலை யாட்டினன (கலி. 131:42-46).

**ஊசற் சீர்**– ஊசற்பாட்டு. பறவையினம் உயிர் கொன்று இரையுணணாத துறைக்குரிய தலைவனை நாம பாடும் ஊசற் சீரை-ஊசற்பாட்டை-நீ இயற்பழித்த தனை விலக்கி இயற்படஒனறு பாடுக எனத் தலைவி தோழியை வேணடினாள் (கலி. 131.31-34).

**ஊசி – 1.** தைக்கும் கருவி. மழைக்காலத்து ஞாயிறு மறைகின்ற வேளையில் கட்டில் பின்னுபவனின் கையிலுள்ள வாரைச் செலுத்தும் ஊசியைக் காட் டிலும் ஊர்கொள்ள வந்த ஆமூர் மல்லனோடு சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி பொருத போர் விரைநதது (புறம். 82:2-6). பனையின் வெள் ளிய தோட்டின் உச்சி ஊசித்தனமை பொருந்தியது (புறம் 100.3,4; பதி. 70:6,7). மீனைப் பிடித்தற்குக கயத்திலே மூழ்கி யெழும் சிரலின் அலகு வீரர் மார்பின் புணகளை இழைகொண்டு தைக்கும் ஊசிக்கு உவமை (பதி. 42: 2-4). மகளிர் கண் போன்ற செங்கழுநீர்ப் பூக்களை ஊசியாற் கோத் துச் சுற்றிக் கட்டிய மாலையைத் தலைவன் அணிந் திருந்தான் (அகம். 48:8,9). அரததினால அராவப் பட்ட ஊசியின் திரண்ட நுனி போனறது செந் நாயின் திண்ணிய பல் (அகம். 199:8,9).

2. வடக்கு. தொல் நாணமீன் (மிருகசீரிடமாகிய நட்சததிரம) துறையிடத்தே தாழக் கீழத்திசை போகாது ஊசி - வடதிசை – செலலாது கடலாற் சூழப்பெற்ற நிலத்துக்கு விளக்காக எரிபரப்பக் காற்றாற் பிதிர்ந்து விரைந்து ஒருமீன் வானத்தி னின்றும் வீழ்ந்தது. இஃது அரசனுக்கு வரும் கேட்டினை முன்னுணர்த்தும அறிகுறி யாகும் (புறம். 229:8-17).

**ஊட்டியார் – புலவர்.** அசோகந தளிரை 'ஊட்டியன்ன ஒணதளிச் செயலை' என்று புனைநது பாடிய தால ஊட்டியார் எனனும் பெயர் பெற்றார் எனபர் இவர் பாடிய இருபாடல்களும் (68, 338) அக நானூற்றில் இடம பெற்றுள. இவை குறிஞ்சித திணை இரவுக்குறி பற்றியே குறிபபிடுகினறன. அசோக மரககிளையில் கட்டிய ஊசலைப் பாம பெனக் கருதி இடியெறிந்த செயதியை 68 - ஆம பாடல் கூறும். பசும்பூட் பாணடியனை 'அறங கடைப் பிடித்த செங்கோலன்' என்றும 'மறஞ் சாயத் தெழுநத திணிதோளன்' என்றும 338 -ஆம பாடல் பாராட்டும. இப்பாடலிலேயே சேரனின கொலலிமலையும சோழனின பட்டினப் பாக்கமும் சுட்டப பெறும். ஆகவே இப்புலவர் மூவேந்தரை யும் ஒப்பப பாராட்டுதல அறியத் தகும.

**ஊடல் - காதலர்க்கிடையே எழும் அனபுப் பூசல.** பிரிந்து சென்றபோது இன்னாத காட்டிடையே துயினறே னாக, ஒரு பெணமான் தோன்றினாற் போலத தோனறிக குனிநத நோக்கொடு கைவளை கழலா மற் செறிதது நிலத்தைக் கிளைத்து நினற நினனைக் கணடு, யான் நின்பால் பேரனபு பூணடிருக்கவும் நினக்கு எனனிடத்து எவ்வாறு ஊடல வந்ததுஎன்று நின் புருவத்தையும் நுதலையும் நீவிக் கூநதலைத் தைவந்தபோது கண்விழித்துக் கனவென உணர்ந்து பின் ஏங்கிக் கவன்றேன எனத் தலைவன தலைவி யிடம் இயம்பினான் (அகம். 39: 15-24). நற்றோள் நெகிழும்படி எம்மை நீர் மறத்தற்கு யாம் நுமமை யன்றி வேறு விளையாட்டயரத் தொழிலையும் நும்மையினறிப் பிரிந்து தங்கச் சோலையையும் நும்மை நினைக்கலாகாது வருந்தும் நெஞ்சினையும் நும்மிடம் ஊடுதலையும் உடையமோ என்று

தோழி தலைவனிடம் கூறுதல் (நற். 131: 1-3, 9). எனனிடத்தே நிகழும் பிரிவுத்துன்பமெல்லாம் சேய்மையில நீங்கத் தலைவன் வந்துகூடி யான் கொணட புலவியைப் போக்குமாறு என்னைப் பணிந்துணர்த்தல் முதலிய வன்மையைச் செய்தலான அவன் பெரிதும் இனியனாயினும் அவனிடததே யான் வருத்தம் மேற்கொண்டது போல ஊடல கொளவேன என்று தலைவி தோழியிடம் கூறுதல் (நற். 217: 5-9). மணங்கமழ்கின்ற கூந்தலுடைய மகளிரிடத்துணடாய ஊடலை அது தோன றியபொழுதே தலைவன வணங்கித் தீர்த்தான் (கலி. 131:39, 40). ஊடல உணர்த்த வல்ல வாயில்கள் இரநதும பரநதும் வருநதி ஊடலுணர்த்தத் தலைவனும் காதற் பரத்தையும் கூடி மதுபருகிக் களித்தனர்; களியால் வையையில் குளித்தனர்; குளித்துக் காம மிகுதியாற் கலந்து மகிழ்ந்தனர் (பரி. 6: 101-104). வையை வெள்ளம் ஆடலியல்பு அறியாத அரிவை போலத் தான் வேண்டிய இடங்களிற் புகுந்தும் ஊடலியற்கை யறியாத ஊடலுவகையள் கணவனைக் கடந்து நீங்குமாறு போலத் தகைநத அணைக்ளைக் கடந்தும் சென்றது (பரி. 7. 17-19). தலைவியின், நறவுண்டு சிவந்த கண் ஊடலினால மேலும் சிவபபாயிற்று; தன் மாலையை யறுதது வெகுணடாள்; தலைவன் அடிவீழ்ந்து வணங்க அவன் தலைமிதித்தும் வெகுளி தீராது ஊடினாள் (பரி. 7: 65-75). புணர்ச்சி இன்பம் இயல்பானன்றி ஊடலால் உண்டாவது (பரி. 9:22). யாமத்தில் உண்டான ஊடலின் குறையாகிய இனிய கலவி நசையைத் தரும் தேனைச் சிலர் நுகர்ந்தனர் (பரி. 10:32). வையைப் புனலாடச் செல்வோர் சிலர் போர்வையால் தம்மை மூடுவார்; சிலர் ஊடுவார்; சிலர் ஊடல் நீக்குவார்; சிலர் ஊடல் உணர்வார் (பரி. தி. 2:19,20). வையைப் புனல் வழி வந்த தலைவனது பூமாலையைப்பரத்தை தனது கொண்டையில் பலரறியச் சூடினாள்; நினைக்குமளவில் நெஞ்சிற்குத் துயர் தரும் ஊடற்கேதுவாகிய இக்கொடிய செயல் தலைவன் தலைவியைச் சென்றடையுமுன் ஊரில் அலர்மொழி வாயிலாய்ப் பரவித் தலைவியின் செவியில் படுமாயின் அவள் சினந்து ஊடாளோ எனத் தோழி தலைவனிடம் கேட்டாள் (பரி. தி. 2:51-56).

**ஊண் - உணவு.** சிறுகுடிகிழான் பண்ணனின் இல்லத்தில, பழுத்த மரத்திற் புள்ளினம் ஒலித்தாற் போன்ற, ஊணால் உணடாகிய ஆரவாரம் கேட்கும் (புறம். 173:3,4). தன்பாலுள்ளது மிகச் சிறிதாயிருப்பினும், பரிசிலர் பலர் எனக் கருதாதவளாய் நீணட நெடிய பந்தரில் இருக்கச் செய்து, முறையாக ஊணினைத் தந்து உண்பிக்கும் இல்லக்கிழத்தி போலத் தலைவன் வரிசை அறிந்து கொடுத்தலில் வல்லவன் (புறம். 331:6-10). மனைக்கிழத்தி, பாணர்களை உண்பிக்கவும், பரிசிலரை ஓம்பவும், அவர்கள் ஊணால் உண்டாகும் ஆரவாரத்திடையே அச்செயலில் நீங்கா திருப்பாள் (புறம். 334:5-7). கரும்பனூர் கிழான்பாற் சென்ற பாணர் முதலியோர் ஊனும் ஊணும் உண்டு தெவிட்டி வெறுத்தால், பால்கலந்து செய்தனவும் பாகுகொண்டு செய்தனவும் ஆகிய பண்ணியங்களைக் கலந்து உணபர் (புறம். 381:1-3). பொகுட்டெழினி தனனைப் பாடிவந்த பொருநனின் பாசிவேர் போனற ஆடையை நீக்கி, நுண்ணிய கலிங்கத்தை உடுத்தச் செய்து, தேறலைப் பொற்கலங்களில் பெய்து, ஊண் முறைப்படி (உணவை உண்பிக்கும் முறைப்படி) நல்கினான் (புறம். 392:13-19). 'தாவில் நெஞ்சத்தோடு பிறர்க்குப் பகுத்துண்ணும் ஊணைத் தொகுத்தளித்துப் பிறர்க்குப பயன் படவாழ்கின்றாய் நீ' என்று களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாராட்டுகின்றார் (பதி. 38:14-16). சோழன் கரிகாற் பெருவளத்தான்பாற் சென்ற பொருநர் அவன் நலகிய ஊன்வகை, சோறு முதலியவற்றைத் தம் பற்கள் கொல்லையை உழுத கொழுப்போல முனை மழுங்குமாறு இளைப்பாற இடம் பெறாது உண்டு, ஊண் வெறுத்து ஒரு நாள் தங்கள் ஊருக்குச் செல்வேம் என்று அவன்பால் மெதுவாகக் கூறினர் (பொரு. 114-122). இல்லறத்திற்குக் கூறிய நெறி தவறாமல் நடந்து, மலைகளைக் கண்டது போல விளங்கும் நல்ல இல்லத்தில் பல்வேறு பண்டங்களோடே ஊண் மிக்கு அழகு பெற்று விளங்க மலையிடம், நிலத்திடம், நீரிடம், பிறவிடங்கள் ஆகியவற்றிலுள்ள பண்ணியம், மணி, முத்து, பொன் முதலியவற்றைப் பிற நாட்டிலிருந்து வாங்கிக் கொண்டு வந்து பண்டம் விற்கும் வணிகர்தெரு மதுரையில் விளங்கியது (மது:500-506). இரந்து பெறும் ஊணால் நிரம்பா மேனியோடு, விருந்தின் பொருட்டுச் செல்லும் தலைமை யுடைய பாணன் தன்னூர் மன்றத்தில் எத்தகையவனோ என்று வாயில் நேர்ந்த தலைமகள் வாயிலாக வந்த பாணன் கேட்பத்தோழியிடம் கூறினாள் (குறு. 33: 2-4). மந்தியும் கடுவனும் மலைப்பக்கத்தில் தினைக் கதிரைக் கொய்து அங்கையில் கசக்கித் தம் கவுள் நிறையக் கொண்டு மழைபெய்தமையால் நனைந்த முதுகுடையனவாய் இருப்பது, நோன்பியர் நீராடி நோன்பு முற்றிக் கையூண் உண்பது போன்றிருக்கும் (நற். 22:1-7). நிறைந்த மழையைக் கண்டறியாத குறைந்த ஊணுடைய இராப்பொழுதில்,

துவர் நிறமுடைய ஆடையையும் செவ்விய அம்புத் தொடையையு முடைய ஆறலை கள்வர் வம்பலர் வரும் நெறிநோக்கி இருந்தனர் (நற். 33:5-7). ஊணின்றி வாட்டமுற்ற நிரையிலுள்ள ஓராவின் மணியொலி மெல்லக் கேட்கும் தூறு நிறைந்த வழி யில் தலைவன் பொருள் தேடச் செல்லுங்கால் தலைவியொடு சென்றால் நல்லதாகும் என்று தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 37:1-4). பாறையிலே விழுந்து கிடக்கும் இனிய பலாப் பழத்தை எடுத்துககொண்டு உண்ணும் ஊணினை யும், பெருஞ்சோற்றுத் திரளையுமுடைய சிறுகுடி யில் இருக்கும், பிள்ளையால் மிடிமைப் பட்டாரின் மகள் ஆவள் தலைவி என்று தோழி கூறினாள் (கலி. 50:12-14). தலைவி கணவனைக் கைவிட்டாள் போல் தெருவில் புறப்பட்டு வெயில் தன்மேல் படச் சிற்றடியிற் சிலம்பொலிப்ப எங்கும் திரிதரும் நிலை எய்தினாள்; மேலும் ஊண் சிறிதும் இல்லா தவளாய், உடல் மெலிந்து, நாணமின்றிச் சிரித்த லையும் செய்கிறாள்; இதனை நினைத்துப் பார் என்று தோழி தலைவனிடங் கூறினாள் (கலி. 147: 3-10).

**ஊண்பித்தை - புலவர்.** ஊண்பித்தையார் என்றும் கூறப் பெறுவார். இவரைப் பெண்பாற்புலவரென் பர் உ. வே. சா. (குறுந்தொகை. பாடினோர் வரலாறு). இவர்தம் ஒரே பாடல் குறுந்தொகை 232-ஆம் பாடலாக அமைந்துள்ளது. இவர் இப்பாடலில், பாலாகிய உணவை உண்ட பெரிய பிடரியினைக் கொண்ட இரலைமான், யானை ஒடித்துண்ண எஞ் சிய யாமரத்தினது புகர்படு நிழலில் உறங்கும் காட்சியினைக் குறிப்பிட்டுள்ளார்.

**ஊணூர் - ஓரூர்.** வெண்ணெல்லை அரிபவர் தொடக் கத்தே இசைத்த தண்ணுமை ஒலி கேட்டஞ்சித் தேன்கூட்டினின்றுந் தேனீக்கள் நீங்கத் தேனடையி லிருந்து தேனை வடித்துக் கொள்ளும் குயவர் சேரி யையும் சிறிய சிலவாய மீன்களைப் பிடித்துண் ணும் பாண் சேரியையு முடையது தழும்பனுக்குரிய ஊணூர் (புறம். 348:1-5). பழம்பல்நெலலின் ஊணூர், முழங்குங்கடலின் திரைகள் காலையில் அலையும் இயல்பு வாயந்தது (அகம். 220:12,13). பெரும் பெயர்த் தழும்பனின் ஊணூர் காவல் பொருந்திய மதில் எல்லையையுடைய்து (அகம்.227:17,18).போரில் எய்திய பெரும் புண்ணால் அழகுபெற்ற தழும்ப னுக்குரிய ஊணூரிடத்து வீடுதோறும் பிச்சைக்கு வரும் பெருங்களிறு கூரையைத் தொட்டு நிற்கும் (நற். 300:9-11).

**ஊதியம் - பயன்.** குருடு, உறுப்பில்பிணடம், கூன், குறள், ஊம் (ஊமை), செவிடு, மா (விலங்கு வடிவம்), மருள் (மயங்கிய நிலை) உளப்பட எட்டும் உயிர்வாழ் வார்க்குப் பேதைத் தன்மை யுடைய பிறபபாவதல் லது இவற்றால ஊதிய மிலலை - பயனில்லை - என்று முற்காலத்தும் அறிந்தவர் கூறினர் (புறம். 28:1-5). 'பெற்றதனை ஊதியமாகிய பேறு எனக் கொண்டு, பெற்ற பொருள சிறிதாயினும் இவன செய்தது யாது எனறு இகழமாட்டேன்' என மோசி கீரனார் கொண்கானங் கிழானைப் பாடுங்கால் கூறினார் (புறம். 154:6).

**ஊதுலை - கொல்லன் ஊதுகின்ற உலை.** பொய்கைக் கரையிலுள்ள பிரப்பங்கொடி ஆம்பலிலையினைச் சுற்றிட அதனை வாடைக் காற்று புகுந்து அசைத் தலால் அது கொல்லனது ஊதுலையின துருத்தி யினைப் போலப் புடைத்துச் சுருங்கும் (அகம். 96: 3-7). தேரிற்கட்டப் பெற்ற பிளவுபட்ட வாயை யுடைய தெளிந்த ஓசை கொணட மணிகள், அரக்கினாற் செய்த கருவில் அமைத்துக் கொல்ல னது ஊதுலையின்கண் பெய்து இயற்றப்பட்டன (குறு. 155:3,4).

**ஊதுலைக்குருகு - கொல்லன் ஊதுகின்ற உலைமூக்கு.** புணர்ந்துடன் போகிய தலைமகளுக்கு வருந்திய தாய் ஊதுலைக் குருகினை - உலைமூக்கை - போலப், பெருமூசசெறிந்து உள்ளம் மெலிந்து, வேவது போலும் நெஞ்சினொடு வாய்வெருவிப புலம்பி னாள் (அகம். 55:7-9). நள்ளிரவில் இரைதேடும் ஆணகரடி பாம்புப் புற்றினைப் பெயர்தது அத னுள்ளிருக்கும் நல்ல பாம்பு நடுங்குமாறு முழங்கிக் கொல்லனின ஊதுலைக் குருகினைப போலப் பெரு மூச்செறிந்து அகழும் (நற். 125:1-4).

**ஊதை - வாடைக்காற்று.** குளிர்ந்த கடற்பரபபில், அடுப் பங்கொடி தழைத்த அடைகரையில நணடுகள் விளையாடியதனால் உணடாகிய சுவடுகளை ஊதை - வாடைக்காற்று - நுணமணல்களை விசி மறைக்கும் (பதி. 51:6-8). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வில்மறவர், பொங்குமு பிசிருடைய அலையோடும் மேகத்தோடும் பொருந்தி வரும் கடலின் ஊதையால் உடல் நடுங்குவர்; (பகைவரால் நடுங்கார்) (பதி. 60:9-11). ஊதை குவித்த உயர்ந்த மணல் மேடாகிய கரையில் தலைவி, மாலை யணிந்த ஆயத்தாரோடு வண்டலயற்றி விளையாடு வள் (அகம். 60:9-11). கார்காலம் காலையே வந்தது எனினும் மாலைப் பொழுதில, குளிர்ந்த பிடா அரும்பினை வண்டுகள் நெகிழ்த்தலால் எழுநத மணத்தினைக் கூதிர் முன்பனிக் காலங்களுக்குரிய ஊதை தூற்றும் எனப் பருவங்கண்டழிந்த தலைவி அடுத்தடுத்து விரைத்து வரும் பருவ இயலபு கூறி மேலும் வருந்தினாள் (அகம். 183:10-13).

சோலையில், புன்னை மரக் கிளையில் தங்கிய புதிய நாரை நீங்குமாறு, முன்பொருநாள் பொங்கிவரும் ஊதையொடு அலைகள் வீசவும் ஒரு தலைவன் கடலருகே தேரைச் செலுத்தி வந்தான் என்று கூறித் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள் (அகம். 190:6-10). ஊதையால் திரட்டப் பெற்ற வெள்ளிய மணலிடம் பாலைக் கண்டது போலத் தோன்றியது; அதன்கண் வாய்க்காலைக் கண்டது போலச் சுவடு உண்டாகுமாறு தலைவன் தேரைச் செலுத்திவந்தான் (அகம். 400:15,16). கழிகளிலுள்ள நீலமலர்கள் குவியும்படி மாலைக் காலத்து அலையிற் பொங்கிய பிசிராகிய துளியொடு மேகத்தைப் பொருந்திப் பிரிந்தோர் செயலறுமாறு தடவிச் செல்லும் ஊதை வீசியது (குறு. 55:1-4). மழைத்துளி மிக்கு ஊதை வீசும் கூதிர்ப்பருவ நள்ளிரவில், ஈ ஒலிக்குந்தோறும் ஆன் அசைய அதன் கழுத்தில் கட்டப்பட்டுள்ள மணி ஒலி எழுப்பும் (குறு. 86:4-6). 'கார் காலத்தை ஏற்றுக்கொண்ட மழையையுடைய ஊதையங் குளிரோடு மயங்கிக் கலந்த கூதிர்ப்பருவ மாகிய உருவத்தையுடைய கூற்றம் தலைவனைப் பிரிந்த என்னைக் கொல்ல வந்துள்ளது; என் செய்வாம்' என்று தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 197). அரும்புகள் முதிர்ந்த ஞாழலின் முட்டை போன்ற திரண்ட மலர்களை நெய்தல் மலரில் பெய்வதுபோல ஊதை தூவும் (குறு. 397:1-3). முழங்கும் அலை கொணர்ந்து கொழித்த எக்கர் மணலை ஊதை துகிலின் நுடக்கத்தைப் போலத் தூற்றும் (நற். 15:1-3). நுண் மணலாகிய துகளை முகந்தெழுந்து, வீசும் ஊதையொடு இரவுபகல் கருதாது ஒலிக்கும் ஒலியுடைய மணிகளைக் கழுத்திற் பூண்ட தலைவன் குதிரைகள் நிலவு பரந்தது போன்ற மணற் குன்றுகளில் ஏறிச்செல்லும் (நற். 163:1-5). இடந்தோறுந் துன்புறுத்தி வருத்தும் ஊதையுடன் மாலைக் காலமும் துன்பந்தருதற்கு ஏதுவாக இருந்தது என்று தோழி தலைவனிடம் கூறினாள் (நற். 183:7,8). தலைவியை மணக்கத் தலைவன் பகற்காலத்தே விரைந்து வருதலால் அவனது மாலையினும் மற்றவற்றினும் ஊதையால் தூற்றப்படும் வெண்மணல் ஒடுங்கின (நற். 278:9). கடலும் ஒலியடங்கியது; ஊதை மகரந்தத்தைக் கிண்டும் கடற்கரைச் சோலையும் பொலிவழிந்தது; மீன் துஞ்சும் இராப்பொழுதிலும் யான் துஞ்சவில்லை என்று ஆற்றானாய தலைமகன் தலைமகளை நினைத்துத் தன்னுள்ளே கூறினான் (நற். 319:1, 2, 10, 11). தலைவனை 'ஊதையஞ் சேர்ப்பன்' என்று குறிப்பிடல் (கலி. 128:19). அம்பா ஆடலைச் செய்யும் கன்னியர், முதிய அந்தண மகளிர் நோன்பு செய்யும் முறை காட்டப் பனியுடைய விடியலில் நீராடினர்; ஆடியபின், ஊதை வீசுவதால் அம்மகளிர், அந்தணர் வளர்க்கும் செந்தழல் அருகே சென்று தம் ஈர ஆடைகளை உலர்த்தினர் (பரி. 11:81-86). சுனையிலுள்ள நீலம் ஊதையால் விடுவிக்கப் பெற்ற அலர்ந்த இதழ்களைக் கொண்டிருத்தல் (பரி.11:22).

**ஊம்** – ஊமை. உலகத்து உயிர்வாழ்வோர்க்கு உண்டாகும் எட்டுவகைக் குறைபாடுகளுள் ஊம் - ஊமைத்தன்மையும் - ஒன்றாகும் (புறம். 28:1-4).

**ஊமன்** – ஊமையன். வெளிமான் துஞ்சியதை யறிந்த பெருஞ்சித்திரனார், மாரிக்காலத்திரவில், மரக்கலமொன்றிற் செல்லும் கண்ணில்லாத ஊமன் - ஊமையன் - கலம் சிதைதலால் கடலில் வீழ்ந்து கலங்குவதுபோன்று கலங்கினார் (புறம். 238:14-19). ஞாயிற்றின் வெயில் எறிக்கும் பாறையில் உள்ள வெண்ணெய் உருகுதலைக் கையில்லாத ஊமனால் தவிர்த்து நிறுத்த முடியாதவாறு போலத் தலைவன் தனது காமநோயினைத் தாங்கிக் கொள்ள முடியாது வருந்தினான் (குறு. 58:3-6). கிணற்றில் வீழ்ந்த பசு படுந்துன்பத்தை இரவில் கண்ட உயர்திணை ஊமன் அத்துயரத்தை வெளியிட முடியாமல் துன்புற்றது போலத் தலைவியின் பிரிவுத் துன்பத்தைப் பிறர்க்குச் சொல்லும் வன்மையில்லாமல் தோழி வருந்தினாள் (குறு.224:3-6).

**ஊமை** - வாய்திறவாமை. நன்னனிடத்தே செல்லும் கூத்தன் பெறும் பரிசுப் பொருள்களில் கரடியின் வளைந்த அடியினையுடைய ஊமை - வாய் திறவாமை - உடைய குட்டியும் ஒன்றாம் (மலை. 501).

**ஊர்** – 1. மக்கள் கூடிவாழும் நகரம். பாண்டியன் கருங்கை யொள்வாட் பெரும் பெயர்வழுதி இரப்போர் மனக்குறிப்பை முகத்தான் அறிந்து அவருடைய வறுமை நிலையைத் தீர்த்தலில் வல்லவன். ஆதலால் இரவலர் ஊர் இல்லாத, வருத்தம் மிகுந்த வழியைக் கடந்து வந்து அவனைக் காண்பர் (புறம். 3:17,23-26). சோழன் கரிகாற் பெருவளத்தான் இரவுபகல் பாராது பகைவரின் ஊரைச் சுட்டெரித்தலால் அவ்வூர் மக்கள் அழுது புலம்பினர் (புறம். 7:7,8). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் பகைவரின் ஊரிலுள்ள காவல் மரங்களைக் கோடரி கொண்டு வெட்டினான் (புறம். 23:8,9). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் மக்கள் செறிந்து வாழும் பல ஊர்களைக் கொண்டு விளங்குவதும் வேள் எவ்விக் குரியதுமான மிழலைக் கூற்றத்தை வென்றான் (புறம். 24:17-19). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் வீரர் கருவூரை முற்றுகையிட்டுக் காவல் மரத்தை வெட்டும்

ஓசை தனஹூரின் கண்ணே உள்ள அரண்மனையில் ஒலிக்கக் கேட்டும் அககருவூர் மன்னன் மானமினறி இனிதாக இருந்தான் (புறம். 36:9-11). சோழன் குள முற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனால முற்றுகை யிடப்பட்ட கருவூராகிய செம்மல் மூதூர் முதலை பொருந்திய நீர்மிக்க மடுவினையும் செம்பால ஆய மதிலினையும் உடையது (புறம். 37:10,11). 'முதுவா யிரவல, தேன் மணக்கும் தொணடி எம்மூர்; அங் குள்ள சேரமான் கோக்கோதை மார்பன் எம் தலைவன்; அவனைக் கண்டு சிறப்புறுக்' எனப் பொய்கையார் புலவரை ஆற்றுப் படுத்தினார் (புறம். 48:1,4-6). ஊர்தோறும் மீனசுடுகின்ற புகை யினது புலால் நாறும் நெடிய ஒழுங்கு வயலிடத் துள்ள மருத மரததின் கோடுகளைச் சூழும் (புறம். 52:8-10). எம தலைவன் சேரமான் குட்டுவன் கோதை இருநத கம்பலையுடன் கூடிய பழைய ஊர் இரவலர் காலம் பாராது தம்மூர் போலச் செல்லும் எளிமையுடையது (புறம. 54:1-4). பகைவர் நாட்டினகண் உள்ள அகன்ற இடத்தையுடைய பெரிய ஊரைத் தீயிடுக; ஆனால் அங்குள்ள இள மரங்களை வெட்டற்க எனக் காவிரிப்பூம்பட்டி னத்துக் காரிக்கண்ணனார், பாண்டியன் இலவந திகைப் பள்ளித் துஞ்சிய நன் மாறனுக்குக் கூறி னார் (புறம. 57.7,10). சேரமான பெருஞ்சேர லாதன் புறப்புண் நாணி வடக்கிருத்தலை யறிந்த பொழுது அகன்ற தெருககளையுடைய சிறிய ஊர் விழாவினை ஒழித்தது (புறம. 65:5). பாண்டியன தலையாலங கானத்துச் செருவென்ற நெடுஞ்செழி யன், 'யாம் சிறப்பும் படைப்பெருககமும் உடை யோம்; நம்முடன் பொருபவனும இளையன்' என இகழ்நது வந்த நிலையில்லாத வீரரை அவர் மக ளிர் நாணத்தால் இறந்துபடுமாறு அவர் ஊரின் கணணே சென்று அவரை அழிததான் (புறம். 78.5-12). பாண்டியன தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன் தனது பழைய ஊரின வாயிற்கணுளள குளிர்ந்த பொய்கையில மூழ்கி வேம்பணிநது போருக்கு வந்தனன் (புறம. 79:1-4). ஊரைக் கொள்ளவந்த முக்காவலநாட்டு ஆமூர் மலலனொடு, ஆத்தியால் தொடுக்கபபட்ட கண் ணியை யுடைய சோழன் போர்வைக்கோப் பெரு நற்கிள்ளி விரைந்து போர் செய்து வென்றான் (புறம். 82:4-6). இளையோன் பொருட்டு எனது வளை கழலுதலால யான் யாயை அஞசுவேன்; அவன் தோளைத் தழுவுவதற்கு அவையின்கண் உள்ளாரை நாணுவேன்; ஒரு கூற்றிற்படாது இரு கூற்றிற்பட்ட இம்மயக்கத்தை உடைய ஊர் என போல் நடுக்க முறுவதாக என்பது கைக்கிளைத் தலைவியின் கூற்று (புறம்.83). கல்லெனனும் ஒலியை யுடைய பெரிய ஊரின்கண் நடைபெறும் போர் விழாவில் வீரர்பலரும் தோள்வலி பேசி இனபுற்று வருவர் (புறம. 84:4,5). 'என தலைவனுககு ஊர் இஃது அன்மையாலும் நாடு இஃது அன்மை யாலும் அவனுக்கு இயல்பாய வெனறியை அவனது வெற்றி என்பர் சிலா; வெற்றியன்று என்பர் சிலர்' என்பது பெருஙகோழி நாயகன மகள் நககண் ணையார் கூற்று (புறம. 85:1-4). ஊர்ச்சிறுபிள் ளைகள தனது வெள்ளிய கொம்பைக் கழுவுதல காரணமாக நீர்ததுறைக்கண் பெருஙகளிறு இனி தாய் எளிதாய இருப்பதுபோல அதியமான நெடு மானஞ்சி புலவரிடம எளியனாகவும் இனியனாக வும உளளான என ஔவையாா கூறியுள்ளார் (புறம். 94:1-3). பொகுட்டெழினி வெனற ஊரில உளள மக்கள், அவன வீராககும் நீர்ததுறையை அழிககும் யானைக்கும அஞசி அவவூரில உறை தலை வெறுததனர் (புறம். 96:7-9). 'அதியமான நெடுமானஞ்சியைப் பகைததோர் அழிவர்; நெல் வளம் சிறந்த தலைமையுடைய உமது பழைய ஊர் உஙகட்கு உரிததாக வேணடுமாயின அவனுக் குத் திறை செலுததுஙகள்' எனப பகைவர்ககு ஔவையார் அறிவுரை கூறினாா (புறம. 97:17-20). 'ஊர்ச்சிறுவர் ஆடுதலினால் கலஙகும் காலளவான நீரிலும் யானையைக கொனறு வீழததும முத லையை ஒத்தவன' என அதியமான நெடுமானஞ் சியை ஔவையார் பாராட்டினார் (புறம. 104:1-4). பாரிக்குரிய பறமபுநாடு முநநூறு ஊாகளை யுடை யது. அம்முநநூறு ஊர்களையும் பரிசிலர் பாரியிட மிருநது பெறறனர் (புறம. 110.3,4). முன்னதாக நினைக்க வேணடிய ஆய்வள்ளலைப பின நினைத் தமையால் என காது, பாழடைநத ஊர்க்கிணறு போலத் தூர்ந்து போவதாக என உறையூர் ஏணிசசேரி முடமோசியார் வருநதினார் (புறம். 132: 1,3).வையாவிக் கோப்பெரும பேகனைககண்டுசிறப் புப பெறறுவரும் பாணர், ஊரினகண் இருப் பதுபோனறு சுரத்திடை யிருநதார் (புறம. 141:1-4). 'அருவி முழங்கும் உயர்ந்த மலைக்கண உள்ள சிறியஊரில, வாயிற்கண் வந்து தோனறி நின னையும நினமலையினையும் பாட, நிறுக்கலாற்றாத கணணீர் தனது மார்பகம் நனைபப அழுதவள் யார்' எனக் கபிலர் பேகனைக கேட்டார் (புறம். 143:7-15). பாமூரின்கண் பூத்த நெருஞ்சியினது பொன்நிறத்தை யுடைய பூ, எழுகின்ற ஞாயிற்றை எதிர்கொண்டாற் போல யாழபபுலவரின இரக்கும் கலம் கொணகானங் கிழானின மார்பை நோக்கி மலர்ந்தன (புறம். 155:4-8). தம் தகுதி யறியாது இளவெளிமான் தந்த பரிசிலைப்பொறாது செனற பெருஞ் சிததிரனார், குமணனைப் பாடிப் பகடு

பெற்று வந்து, இரவலர்க்கு ஈவோர் இருப்பதைக் காண்க; நின ஊரில் உள்ள காவலமரம் வருநத நான் கட்டிய யானை உனக்குத் தந்த பரிசாகும்' எனக் கூறிச் சென்றார் (புறம். 162:4-6). 'காவிரி புரக்கும் எம் ஊரின்கண் உணடும் தினறும் ஊர்ந் தும் கொண்டாடப் போவேன், இமயமபோல் நீ வாழ்க, என வேள்வி முறறிய சோணாட்டுப் பூஞ் சாற்றூர்ப் பார்ப்பான கௌணியன விண்ணந் தாயனை ஆவூர் மூலங்கிழார் வாழ்ததினார் (புறம். 166:28-34). பாரியின பறம்பு மலையிலுள்ள இனிய சுனை நீர், போயத் தேடிக்கொள்ள வேண்டாமல ஓர் ஊரினகண்ணே உடன் கிடைத்தமையால் நினைத்த பொழுது உண்பது போல் புறததிணை நன்னாகனார், ஓய்மான நாட்டு நல்லியக்கோ டனை நினைத்த போது கண்டின்புற அவாவி னார் (புறம். 176:9-13). கள்ளுக் கலத்தராய் உள் ளூரில் நெடுமொழி கூறிய படைவீரர், போரில் அஞ்சு மிடத்துப் பாண்டியன் கீரன் சாத்தன் அவர்க்கு அரணாகச்சென்று காத்தான (புறம். 178: 6-11). கோனாட்டு எறிசசிலூர் மாடலன் மதுரைக் குமரனார், ஈர்ந்தூர் கிழான தோயன மாறனை வறுமை தீர்க்க வேண்டியபொழுது அவன் அவரது உணணா மருங்குலைக் காட்டித் தன ஊர்க் கருங்கைக் கொல்லனை வேல் வடித்துத் தருமாறு வேண்டினான் (புறம். 180:10-13). பிசிராநதையார் வாழ்ந்த ஊரில் ஆன்றவிந் தடங்கிய கொளகைச் சானறோர் பலர் வாழ்நதனர் (புறம். 191.6,7). எல்லாம் எமக்கு ஊர்; எல்லாரும் எமக்குச் சுற்றத் தார் என்பது கணியன் பூங்குன்றனின் பரநத நோக்கு (புறம். 192:1). முஞ்ஞை இலைக்கறியும வரகுச் சோறும் உண்ணும் சீறூர் மன்னராயினும் எம்மிடத்துச் செய்யும் முறைமையறிந்து நடககும் குணத்தினை யுடையோரே எமமால் மதிக்கப் பெறு வர் என்பது கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் கூற்று (புறம். 197:9-14). பாரிவேள் ஊரெல்லாவற்றையும் இரவலர்க்கு வழங்கிப் புரவி பூட்டிய தேரை முல்லைக்கீந்து அழியாத நல்லிசை பெற்றான் (புறம். 201:2-5). ஐயூர் முடவனார், அகன்ற இடமுடைய பழைய ஊரில் வாழும் கலம் செய்யும் வேட்கோவனே, பெரும்புகழ் படைத்த சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனுக்குத் தாழி செய்ய உன் னால் இயலுமோ, என வினவினார் (புறம். 228: 4,15). ஆய் அண்டிரன் பாடுநர்க்குப் புரவி, களிறு, தேர் முதலியவற்றுடன் அழியாத வருவாயுடைய நாடும் ஊரும் வழங்கினான் (புறம். 240:1-3). ஒரு வீரனின் தாய் என் மகனின் செல்வமும் தலை மையும் ஊர் முன்னர்ப் பழுத்த ஆலமரத்தின்கண் பறவைகள் மிகும் புதுவருவாயை ஒக்கும் என நாளும் புகழநதாள் (புறம். 254:7-10). அகன்ற இடமுடைய பழைய ஊரில உள்ள கலஞ்செய் கோவே, 'என் கொழுநனைத் தொடர்ந்து வந்த எனக்கும் அவனுடன சேர்த்துப் புதைத்தற் குரிய அகன்ற தாழி வனைவாயாக' எனக் கணவனை இழந்த தனிமகள் புலம்பினாள் (புறம். 256:4-7). ஊரைவிட்டு நீங்காமலும் காட்டை யடையாமலும் பொருந்தாரது நிரை இருநத இடத்தை யறிந்து, வில்லாலே கரந்தையார் போரை மாற்றி இனநிரை கொணடு வந்த இவ்வீரன் யார் கொலோ என வெட்சிமறவன் தன தலைவனை வியந்து பாராட் டினான் (புறம். 257:6-10). புல் போனற தாடியை யுடைய இளைஞன் நிரை கவர வேற்றுப்புலம் சென்றுளளான், இங்குள்ள மறவர் ஒருமுறை கள் உண்பதற்குமுன் அவன் பெரிய ஆனிரையை இவ் வூர்ப் புறமெல்லாம் நிற்பக் கொணடு வந்து தருவன. அவனுக்குக் கள்ளினைப் பாதுகாத்து வைப்பாயாக எனக் கள் வழங்குவோனிடம் உலோச் சனார் கூறினார் (புறம். 258: 6-11). வீரன் ஒருவன் ஊர்முன் நடந்த பூசலில், தனனூரிலிருந்து ஆனிரை யைக் கவர்ந்து செனறோர் விடுத்த அம்பு வெள்ளத் தைத் தாங்கி ஆனிரையை மீட்டான் (புறம். 260: 12-15). ஊரை மிகவும் கடந்துள்ள முரம்பு நிலத் திலிருந்த வேங்கை மரத்தில் பூக்கள் கொத்தாக மலர்ந்தன (புறம். 265: 1, 2). தொடியுடை மகளிர் அலகுலிடத்தே தழையாக அணியப் பெறுவதும் காப்புடைய மதிலின்கண் நின்று தனது ஊர்ப் புறத்தைக் கைவிடாமல் காக்கும் மறவனின் சென்னி யில் அணியப்பெறுவதும் ஆகிய நொசசிக்கொத்துக் களை உடைய மரம், எல்லா மரங்களுள்ளும் சிறந்த அன்புடை நன்மரமாகும் (புறம். 272:2,3, 7, 8). அருந்திறல் காட்டிப் போர்புரிந்து மடியும் நிலையிலிருந்த குருசில் ஒருவன் தன் நாட்டு மருத நில ஊர்களை முன்னே வழங்கிவிட்டமையான் வறுமையுற்ற இரவலர் தலைவனுக்கு எஞ்சியதொரு கரம்பைச் சீறூரை வழங்கினான் (புறம். 285: 14-17). வலிய பனைமரம் போல் நிற்கும் வீரர், கன்றுடை மரையா உறங்கும் சீறூர்களைப் புரவாகப் பெறு தலை யாம் விரும்போம்; மருத நிலத்தூர்களைப் பெறுதலையே விரும்புவோம் எனத் தலைவன் ஒருவன உண்டாட்டு நிகழ்ந்தபோது மொழிந்தான் (புறம். 297: 6-10). பருத்தியை வேலியாக உடைய சிறிய ஊரின் மன்னன் குதிரைகள் கடல் மண்டு தோணி போல் போர் செய்தன (புறம். 299: 1-3). பெரிய ஊரின்கண் காய்ச்சப்பட்ட கள்ளைப் பெறு தற்கு வீட்டிற் புகுந்து கோய் (கள் முகககும் கலம்) தேடுவதைப் போல் வீரன் ஒருவன் தன் அண்ண

னைக் கொன்ற பகைவனைத் தேடினான (புறம்.300: 5,6). தலைமகன் 'ஒருவன தன் புகழ்பாடிப் பரவிய பாணர்க்குக் குறுகிய வழியையுடைய கரம்பைகள் நிறைந்த சிறறூர்களைவழங்கினான் (புறம். 302:5-7). சீறூர் களிறு படிதலால கலங்கிச சேறாகும் நீர் நிலையையும் முளளையுடைய் கழற்கொடியாலாகிய வேலி சூழ்ந்த குடிகளையும் உடையது (புறம். 306.1, 2). சிறிய ஊரையுடைய சிறறரசனின வேல், பெரு வேநதன் ஏறிவநத யானையின நுதலில தைத்து அழுநதிக கிடந்தது (புறம. 308:4,5). நெல்லி மரங்கள் பொருநதிய புனசெய நிலஙகளையும நடுகல பிறங் கிய பறநதலைகளையும் உடையது சீறூர் (புறம். 314:3,4). வேந்தனுக்குத துணைநினறு வெற்றியைத் தேடித தரும பெருநதகையின் ஊா அவ்வேநதன் போரில துன்புறுவா னாயின பசியால வருந்தும் (புறம. 318:1-3,9). அசைகின்ற தலையை யுடைய ஆமான்கனறைச சிறுவர்கள் தம் சிறு தேரில் பூட்டி விளையாடும் இயல்புடையது ஊர் (புறம். 319:10-12). 'பாணனே, வேநதர் தரும் பெருஞ்செல்வததைப் பரிசிலாக்குக் குறையாமல் வழங்கும தலைவனின ஊரில் நின சுறறத்துடன தங்கிச செல்வாயாக' என வீரை வெளியனார் வேணடினார் (புறம். 320:15-18). வாள்வடு விளங்கும தலையையும போரை விரும் பும் இயல்பையும உடைய தலைவன் ஊர் வன்புல மாகிய நாட்டின் கணணே உள்ளது (புறம். 321: 8-10). மருத நிலத்து ஊர்களை ஆட்சி செய்யும் அரசர்க்கு உறககம வாராமைககு ஏதுவாகிய அச் சம் தரும வேலான ஊர் வன்புலத்தின கணணே உள்ளது (புறம. 322:6-10). போரின்கண யானையை எறிதறகல்லது வாளை உறை கழிபபறியாத தலை வன் வாழும ஊர் வளம் சானறது (புறம். 323.5-7). புன்செய சூழ்ந்த ஊர்களில் உள்ள வேட்டுவச் சிறார் முள்செருகிய ஊகம் புல்லை அம்பாகக் கொணடு வளாரால அமைத்த வில்லினால் எலி வேட்டையாடுவர் (புறம. 324:3-8). குன்றாத ஈகை யுடைய நெடுநதகையின் ஊர், வேந்தர் தம தானைச் சுற்றத்துடன திரண்டு வரினும் அவர் வேண்டுவன தந்து ஓம்பும் சிறப்புடையது (புறம். 325:14,15). மெத்தென்ற நடையுடைய காட்டுப் பூனை ஊரிலுள்ள பழையதாகிய வேலியி னடியில் இரைதேடித் தங்கும் (புறம். 326:1). பசித்து வந்த சுற் றத்தாரின் பசி நீக்க வேண்டித் தன்னூரில் வாழும் சிறு புல்லாளரிடம் வரகினைக் கடனாக இரக்கும் தலைவன், அரசர் போர் குறித்துவரின் தாஙகிவெல் லும் வல்லாண்மையால் வீறுடையான்(புறம்.327:5-8). புன்செய்க் கொலலைகளையுடைய சிறிய ஊர்களில் நெற்பயிர் விளையாது; வரகும் தினையும் விளை யும் (புறம். 328:1,2). சீறூரில் வாழும் சிறுகுடிகளின் இல்லங்களில் கள்' அடப்பட்டது (புறம். 329:1). கொடுபபோர்க் குணடான துன்பத்தைப் பாராது இரவலரது வறுமைத் துனபத்தைப் பார்த்து அது நீங்கக் குறைவறக் கொடுக்கும் புகழமைந்த தலை வனின் ஊர் பகைவர்ககுப் பாம்புறையும புற்றுப் போல அச்சந் தரும் (புறம். 329.6-9). வழிவழியாக வரும வணமைக குணம் உடைய தலைவனின ஊர் பரிசிலர்ககே யன்றிப புரவரி செலுததுதற்கும் ஆற்றாத வருவாயை யுடையது (புறம். 330 5-7). சீறூர்த்தலைவன்வேட்டையாடும் இயல்புடையவன (புறம. 331 2). இவ்வூர் மறவன ஏநதும வேல பிறர் ஏந்தும் வேல் போலனறிப் பெருநதகை யுடைதது (புறம். 332:1,2): குறுமுயல் உள் ளூர்க் குறும்புதரில துள்ளி விளையாடும் (புறம. 333 3,4). மனைக்கிழததி தன்னூர் வேட்டுவக் குடிதொறும விருநதோம்பும (புறம. 333:13,14). ஊரிலுள்ள சிறுவா மனறததே ஆர்ப்பின் அது கேட்டுக் குறுமுயல அஞ்சிப் படப பைக்கண் ஒடுங்கும் (புறம். 334'1-4). மகட்கொடை நேராமையால்வேந்தன வெஞ்சினம் உறறான; ஆத லால கடததற்கரிய காவலையுடைய பழமையான ஊர் பெரிய துனபததை அடைந்துள்ளது (புறம். 336:1,2,7). மகளைததர மறுத்தமையால் வேந்தன போருக் கெழுநதான. அவனை எதிர்தது மகளின தந்தையும் போருககெழுநதான. இதனால மருத நிலததூர் பெருஙகவினை இழக்குங கொலலோ எனப் பரணர் இரஙகினார் (புறம.341:18,19). தநதை தனமகளைத தர மறுத்தமையின உயர்நத மதில பொருநதிய புரிசையும் அரிய வழிகளும் உடைய நெடிய நல்ல ஊரின்கண அரண கொள்ளுதற்குச் சார்த்திய ஏணிகள் வருநதும் போலும எனப பரணர் வருந்தினர் (புறம். 343.13 - 17). தந்தை மகட்கொடை நேர்ந்தால் வளம்செறிநத ஊர்க ளுடன விழுப்பொருளும் தரப் பெறுவான் என அணடர் நடுஙகல்லினார் அறிவுறுத்தினார் (புறம. 344:1-4). மகள் வேண்டி வந்த மன்னர் பெருமை யினையும் அவர்ககுப் பெண தர மறுத்த அண் ணனமாரின் தறுகண்மையினையும் எண்ணிய அணடர் நடுங்கல்லினார், இவர்கள் போரால் பருத்தி வேலி சூழநத வளவயல மிக்க நல்ல ஊர் என்னாகுமோ என இரங்கினார் (புறம. 345:19, 20). மன்னற்கு மகள்மறுத்தமை காரணமாக நடக்கும் போரில், நாரையால துரத்தபபட்ட வாளைமீனை நீர்விளையாட் டயரும் மகளிர் பிடித்துத் தமது மனைக்கு எடுத்துச்செல்லும் ஊர் அழிநதுபடுமோ எனப் பரணர் இரங்கினார் (புறம். 354.5-7). மகண் மறுத்த சிற்றரசனின ஊரில உள்ள மதிலுக்கு ஞாயில் இல்லை; அகழியில் நீர் இனமையால் கன்று மேய்ந்து திரியும்; ஆதலால் அவன் ஊர் அழிவது

உறுதி என்று கூறப்பட்டுள்ளது (புறம். 355:1-3). ஆனை யடுத்த ஆழ்ந்த அகழியினையும் நீண்ட மதிலினையும் உடைய ஓய்மான வில்லி யாதனின் ஊரை, அவன் மனைக்கண் தோன்றிய நறும் புகை, மழைமுகில் படிந்து மறைப்பது போல ஒருங்கு மறைக்கும் (புறம். 379:16-18). சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் ஆன்பொருநை யாற்று மணலினும் பலவாகிய ஊர்களைச் சூழ வுள்ள வயல்கள் எல்லாவற்றினும் விளைந்த நெல் லினும் பல ஊழிகள் வாழ்வானாக எனக் குண்டு கட் பாலியாதனார் வாழ்த்தினார் (புறம். 387: 34-36). அருவி யிழியும் வேங்கடத்திற்குரிய நல்லேர் முதியன் யானைகளைப் பிடித்து வந்து தன் ஊர் மன்றத்தே பிணித்து வைப்பான் (புறம். 389: 9-12). ஊரின் முன்னிடத்தில் மன்றம் இருந்தது (புறம். 390:19). ஊர் நீருண்ணும் கேணியிற் படர்ந்த பாசியின் வேரைப் போன்று பொருநன் உடுத்தி யிருந்த கிழிந்து தொங்கிய ஆடையை நீக்கிப் புத்தாடை தந்தான் பொகுட்டெழினி (புறம். 392: 13-15). வாய்மையே பேசும் சேரமான் வஞ்ச னின் ஊர் அன்புடையார் செல்லுதற்கு எளியது; பகைவர் நெருங்குதற்கு அரியது (புறம். 398:8-11). சோழன் நலங்கிள்ளி, கடற்குச் செல்லும் வழியா கிய யாற்றைச் செம்மை செய்து, அதன்வழி கடலிலிருந்து வருகின்ற ஓடங்களைச் செலுத்தித் துறை தொறும் அவற்றை நிறுத்தி வைக்கும் நல்ல ஊரையுடையவன் (புறம். 400:20-23). இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதனின் வளநாட்டு ஊர் களில் முழவு ஓசையுடன் விழாக்கள் என்றும் நடைபெறும் (பதி. 15:17,18). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் படையெடுத்தமையை அறிந்த அவனுடைய பகைவர் தம் ஊரைவிட் டகன்றனர் (பதி. 19:16). பல்யானைச் செல்கெழு குட்டுவனின் வீரரால் அழிக்கப்பட்ட பகைவர் நாடு, முருக னால் அழிக்கப் பெற்ற சூரனின் மூதூர்போலப் பொலிவழிந்தது (பதி. 26:12-14). மக்கள் புதுப் புனலுக்கு அணைகோலிய பின்னர் மூதூருக்குச் சென்று விழாவைக் கண்டு பெயர்ந்தனர் (பதி. 30: 18-20). 'பெருந்தோ ளாடவர் போரேற்று நிற்ப, தூசிப்படை வயலில் தங்குதலின் போரை விரும்பும் படைமறவருடன் நீ ஊர் முகத்துத் தங்கவேண்டா' என மறவன் தன் தலைவனை வேண்டினான் (பதி. 40:1,2). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தன் பகைவர் தந்த திறைப் பொருள்களைப் பெற்றுக் காடுகளைத் தன் அரையிலே கட்டினாற் போன்று விளங்கும் தன் பழையதாகிய புகழமிக்க ஊருக்குச் சென்றான் (பதி. 53:1-5). ஆடுகோட்பாட்டுச் சேர லாதன் பார்ப்பார்க்குப் பசுக்களுடன் குட நாட்டி லுள்ள ஓர் ஊரைக் கொடுத்தான் (பதி. ப. 6:4,5). செல்வக் கடுங்கோ வாழியாதன் தன்னைப் பாடி வரும் யாழ்ப்பாணனுக்குக் கொடுமணம் என்னும் ஊரில் செய்யப்பெற்ற அணிகலன்களையும் பந்தர் என்னும் பழைய ஊரிடத்தே விளைந்த முத்துக் களையும் தருவான் (பதி. 67:1-4). செல்வக் கடுங்கோ வாழியாதன் வேள்வி செய்து முடித்துத் திருமால் வழிபாட்டிற்கு ஓத்திரநெல் (இராசான்ன மென்னும் நெல்) விளையும் ஒகந்தூர் என்னும் ஊரைத் தேவதானமாகக் கொடுத்தான் (பதி. ப. 7: 6-9). பெருஞ்சேரலிரும்பொறை போரின் கண்ணே பகைவர் ஊர்களைச் சுடுதலினால் எழுந்த புகை திசைகளை மறைத்தது (பதி. 71:9,10). கபிலர் தம் செவ்விய நாவினால், இழிவு மிகாத கவலை யில்லாத மனத்துடன் அறமும் வீரமும் பொருந்தி விளங்கும் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் பாடிப் பரிசாகப் பல ஊர்களைப் பெற்றார் (பதி. 85:9-13). இளஞ்சேரலிரும்பொறை வஞ்சி என்னும் பெயருடைய பழைய ஊரிலே சோழனையும் மாற னையும் வென்று பெற்ற பொருளைப் பிறர்க்கு வழங்கினான் (பதி. ப. 9: 4–10). ஊர்தோறும் எடுத்த தலைமை பொருந்திய விழவின் கண்ணும் முருகன் தோன்றி அருள் செய்வார் (முரு. 220). சோழன் கரிகாற் பெருவளத்தான் பொருநனுக்குத் தண்ணிய மருத நிலம் சூழ்ந்த, அசையாத குடியிருப்புக்களை யுடைய நல்லபல ஊர்கள் பொருந்திய நாடுகளை வழங்கினான் (பொரு. 167 - 170). மாரிக்காலத்தில் விசும்பில் பரந்த மேகத்தை யொப்ப வரகு வைக் கோல் வேய்ந்த அழகிய குடியிருப்புக்கள் முல்லை நிலத்து ஊர்களில் விளங்கின (பெரு. 190, 191). பெரும்பாணன் செல்லும் வழியில், ஏனைய நாட் டிற்கு இயல்பாகிய பழைய வறுமையறியாத அசை யாத குடியிருப்புக்கள் பொருந்திய வளப்பமுடைய ஊர் இருந்தது (பெரு. 253,254). பல சமயத்தாரும் தொழும்படி எடுத்த விழாக்களாலே ஏனைய ஊர் களினும் மேலானதும் வெற்றியை யுடையதுமான ஊரை யுடையது காஞ்சி நகரம் (பெரு. 410,411). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் கடலாகிய ஆழமான கிடங்கினை யுடைய நெல்லின் பெயரைப்பெற்ற ஊரை (சாலி யூரை), கைக் கொண்டவன் (மது. 86-88). தலை யாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியன் பகைவர் நாட்டில் ஊராயிருந்த இடங் களெல்லாம் பாழாகுமாறு போர் செய்து வெற்றி பெற்றான் (மது. 158). காத்தல் தொழில் பற்றிய நுண்மையான நூல் கற்று அதன்வழியே தவறா மல் ஊர்காத்தல் தொழிலை ஊர்காப்பாளர் மேற்கொண்டிருந்தனர் (மது. 646,647). மாடங்கள்

நிறைந்த வளப்பத்தை யுடைய ஊரில் ஆறு போன்று அகன்ற தெருக்கள் இருந்தன (நெடு. 29,30). சுனையினகண் உதிர்ந்த மாங்கனியாலும் வண்டுகள் சிதறிய தேனாலும் பலவின் தீம்பழத் தாலும் விளைந்த களளினை நீர் என்று பருகிய மயில், ஊர்களில விழாக் களத்தில் கழாய்க் கயிற்றில் தாளம் தவற ஆடித் தளரும் ஆடுமகள் போல ஆடியது (குறி. 191 - 194). அசசம் தரும்இவ் வூரின் கணணே தலைவன் இரவுக் குறிக்கண் வருதல் ஒழுககமன்று என்று நினைத்த தலைவி தான் மணந்து வாழதலே ஒழுக்கநெறி எனத துணிந்தாள் (குறி. 245, 246). சோழநாடு ஒனறற் கொன்று அணணியதாய்ப் பலவாகிய ஊர் களையுடையது (பட. 28). பல்வேறு நாடுகளிலும் சென்று பழகி, உயர்நத அறிவினைப் பெற்ற சுற்றத்தினையுடைய சான்றோர், விழாக் கொண் டாடும் பழைய ஊர் ஒன்றில் கூடினாற் போலப் பல்வேறு தேயத்தும் சென்று பழகுதல் காரண மாகத் தத்தம் தாய்மொழி யலலாது வேறுபல மொழியறிவு பெற்ற வணிகர் கூடிவாழும் சிறப் புடையது காவிரிப்பூம்பட்டினம் (பட். 213-218). கரி காற் பெருவளத்தான் அரிய காவலுடைய மதி லுடன கூடிய பகைவரின் ஊர்கள் கவினழியப் பாழ் செய்தான (பட். 269, 270). மலையை யொதத உயர்ச்சியையும் வானைத் தீண்டும் மதிலினையும் உடைய நன்னனசேய் நன்னனது பழைய ஊரின் புகழ் எங்கும் பரவி யுள்ளதாகப் பரிசு பெற்ற கூத்தர், பரிசு பெற விரும்பும் கூத்தர்க்குக் கூறி னர் (மலை. 92-94). ஒரு பொருளையும் தனக்கென வைத்துக் கொள்ளாத நன்னன் வேண்மானிடம செல்கின்றோம் என. அவன் பகைப்புலத்து உரைப் பீராயின் செல்வம் நிறைந்த நன்னனின் பழைய ஊர்போன்றே பகைப்புலமும் உமக்கு நனமை செய்யும் எனக் கூத்தர் கூறினார் (மலை. 400-402). காஞ்சி மரத்தினையும் நீர் பாய்ந்து பொருகின்ற அறுகுகளையும் மெலலிய விளை நிலங்களையும் உடைய ஊர்கள் நன்னனுடைய தண்பணை நாட் டில் இருந்தன (மலை. 449, 450). காம்பினின்றும் கழன்ற இருப்பைப்பூ சிவந்த மேட்டு வழிகளில் பரவிக்கிடந்து, குருதி மீதுள்ள கொழுப்புபபோல் காட்சி யளிக்கும் சுரத்திலுள்ள சிறிய ஊரினில் குடிகள் இருந்தன (அகம். 9:6-10). ஞாயிறு மறை யினும் ஊர் சேய்மையில் உள்ளதெனறு கரு தாது விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டிய தேரில் தலைவன் மீணடான் (அகம். 9:15-17). வெற்றியை யுடைய மூதூரில் விழாக்கள் நிகழும் போது எரியும் நெய் விளக்கினின்று சுடர்விழுவது போல இலவம் பூக்கள் காற்றுப் பொர வீழ்ந்து விடியற்காலத்து மீன்போலச் சிலவாய்த் தோன்றின (அகம். 17:18-22). அலர் கூறும் பெண்டிரின் சொற் கேட்டு இவ்வூரில் தேர் வருதலை உணர்ந்து அன்னை நமமை இற்செறிததாள் எனச் சிறைப் புறத்தலைவன் கேட்கத் தோழி கூறினாள் (அகம். 20:11-16). வெள்ளிய அருவிகளை உச்சியிற் கொண்ட உயர்ந்த மலையில கூபபிடு தூரத்தில் உள்ளது எம் ஊர் எனச் சொல்ல மறந்த என் அழகு கெடுவதாக என்பது தலைவி கூற்று (அகம். 38:16-18). சேற்றில நிற்றலை வெறுத்த எருமை, ஊர் துயின்ற இருளில தலையை அறுத்துக் கொணடு, முள்வேலியைக் கொம்பினால அகற்றித் தாமரை மலரைத் தினறது (அகம். 46 1-6). வேங்கை மலர் பறிக்க மகளிர் புலி புலி என எழுப்பிய ஓசையைப் பசுக்களைக கொல்லும புலியைக் குறிக்க எழுப்பிய ஓசையெனச் சிறிய ஊரில உள்ள வில்லுடைக் கானவர் கருதினர் (அகம். 52.3-8). வெட்சி மறவர் கன்றைக் காணாது கலஙகும் கறவைகளை ஒரு சேர மன்றில் தொகுத்தமையால் சீறூரில் கல்லெனனும் ஆரவாரம் இருநதது (அகம். 63:10-13). என்றுந தனனுடன் நிற்றலை விரும்பிய பசுவைத் தழுவிககொண்டு ஏறு மாலைப் பொழு தில் ஊர்க்கண மீண்டு வந்தது (அகம். 64:11-13). தலைவன் வரைவு மலிந்தமையால் இவ்வழுங்கலூர் இராமன் அரிய மறையினை ஆய்தற் பொருட்டுப் புட்களின ஒலி இலலையாம்படி செய்த ஆலமரம் போல ஒலியடங்கப் பெற்றது (அகம. 70:15-17). சீறூர்ப் பக்கம் உள்ள புலலிய அடியினை யுடைய இத்தியின நிழல் புள்ளி பட்டதன்மை உடையதாக இருநதது (அகம். 77:12,13). நம்மைப் பிரிநதிருக்கும் தனிமையால் தம ஊரின்கணணே தனித்திருக்கும் தலைவர் என்னாகுவர் எனத் தலைவி தோழி யிடம் இரங்கிக் கூறினாள் (அகம். 78:11-13). மர நிழலாகிய பந்தரினகீழ்ப் புல்லால் வேயப்பட்ட குடில்களையுடைய வறுமைப் பட்ட சீறூரினகண் தயிர்கடைந்த திரண்ட தண்டினையுடைய மத்து, கன்று தன் வாயாற் சுவைத்திட முற்றத்தே தொங் கும் (அகம். 87:1-4). அன்பால உள்ளம் கலநது விரும்பும் சாயலையும் கரிய கூந்தலையும் உடைய தலைவியின் ஊர் காட்டின் அகத்ததாகிய நாட்டி டம் உள்ளது (அகம். 94:12-14). கொடுமை வாய்ந்த சுரத்தின்வழிச் சென்ற தம் தலைவர் பொருட்டுத் தலைவியர் இரங்குதல் இயலபென்று அறியாராய் இவ்வூர்ப் பெண்டிர் அலர் தூற்றுவர் (அகம். 95: 10-12). இருள் தங்கிய விடியற்காலத்தே வெளியே சென்ற எருமை நெய்தல் மலரைத் தின்னுதற்கிட மானதும் தாழை வேலிகளை யுடைய அழகிய தோட்டங்களை யுடையதுமான எமது ஆரவாரம்

மிக்க ஊரில் அலர் பரவியது (அகம். 100:15-18). சிறிய ஊரில உள்ள வெள்ளாட்டின் குட்டி, சிறு வருடன குதித்துச் சென்று மன்றிலுள்ள ஆத்தியின அழகிய தளிரைக் கடிக்கும் (அகம். 104:9-13). நீர்ததுறையில வழுக்கி விழுநது முடம்பட்டு வலி குன்றிய பகட்டினுக்கு ஊரில உள்ள சிறுவர் இருப்பைப் பூவைக் கொண்டு வந்து ஊட்டுவர் (அகம. 107:14-18). மலர்போன்ற மையுணட கண்ணினையும் இனிய மொழியினையும் உடைய நலனெல்லாம தரவலல தலைவி இருக்கும் ஊர் வறிய பல குன்றுகளுக்கு அப்பால உளளது (அகம். 109:1-3,15). அழுங்கலூர அலரெடுத்துத் தூற்றியமையால் நம காதலா நமமை விட்டகன்றார் எனத் தோழி கூறினாள் (அகம. 113:8,9). மாசில கற்பினையுடைய தெய்வம் போற் சிறந்த தலைவி பகைவர்க்கு அச்சம் தரும் காவலினை யுடைய முதிய ஊரிலுள்ள மனையில் உள்ளாள் என்று வினைமுற்றி மீளுந் தலைவன் தேர்ப்பாகற்குச் சொன்னான் (அகம். 114.12,13). நீங்காத விழவினையும் பகைவர்க்கு அச்சம் தரும் இயல்பினையும் உடைய பழைமை வாய்ந்த ஊரில பழியிலராயினும் அவரிடத்தும் பழியினை யேற்றிப் பலரோடும் புறங் கூறித் திரியும் அம்பல் ஒழுக்கமுடையவர் எனச் சேரியம் பெண்டிரைக் குறித்துத் தலைவி கூறுதல் (அகம். 115:1–4). அந்திக்காலத்தே கோவலர் இசைக்கும் குழலோசை நிலாமுற்றததில் வந்து ஒலிக்கும் நீண்ட மதில் சூழ்ந்தது ஊர் (அகம. 124:13-16). தினையும் அறுக்கபபெற்றன; தலைவியின் நெறறியும் காம நோய் மிக்கமையால் அழகிழந்தது; அதனால் அதனைப் பார்த்து இவ்வூர் இயைபில்லாத வற்றைக் கூறும் (அகம். 132:1-3). கார்காலம் கழிந்த வானின்கண் மதி நிறைவுற்றுக் கார்த்திகையைச் சேரும் இருளகன்ற நடுஇரவில, தெருக்களில் விளக்குகளை நிரல்பட ஏற்றி, மாலைகளைத் தொங்கவிட்டு மூதூரில் பலரும் விழாக் கொண்டாடினர் (அகம. 141:6-11). பிறிதொன்றால் தீர்த்தற்கரிய நம் துன்பம் தீரச் சிறிய ஊரிலுள்ள தலைவி வந்து கூடிச் சென்றாள் எனபது தலைவன் கூற்று (அகம. 152.1-3). 'இதுகாறும் இராக் காலங்களில் வந்து கொணடிருந்த தலைவனது தேர், அலர்தூற்றும் ஊர்ப்பெண்டிர் காணப் பகலிலும் வந்தது என வரைவு மலிந்த செயதியைத் தோழி தலைவிக்குக் கூறினாள் (அகம். 160:15-18). வணிகச் சாத்தினைக் கொன்று கொள்ளை கொள்ளுகின்ற மறவரின் பகையை அஞ்சி மக்கள் குடிபோயமையால் ஊர் பாழாயிறறு (அகம். 167:7-10). வாடிய உச்சியினையுடைய ஞெமை மரங்கள் பொருந்திய பெரிய மலை யடிவாரத்தில் உள்ள சிறிய ஊர்மக்கள் கரடி வேட்டம் ஆடுவர் (அகம். 171:7-10). 'நீ இங்கு வந்தால, ஊர் முழுதும் அலர் கூறப்பெறும்; நினனைத் தேடிப பரத்தை வருவாள்' எனபது தலைமகனை வாயில் மறுத்த தோழி கூற்று (அகம். 176:26). 'தேரில் வந்த ஒருவன் கொன்னே பூசுசூட்டி என் இளமுலை நோக்கி ஏதோ நீள நினைந்து பின் தாழ்ககாது போயினன்; அதற்கே இவ்வழுங்கலூர் என மேனி பசலை கொண்டது என்ற குறிப்பொடு நேர்க்கும் என்பது தலைமகனுக்குக் குறை நேர்நத தோழியின் படைத்துமொழி கிளவியாம் (அகம். 180:4-9,13-15). உடன் போக்கிற் சென்ற மகளைத் தேடிக் காணாது மனைக்கு மீணட செவிலி, 'பாணருடைய வாச்சியங்கள் அறாது ஒலிக்கும் இவ்வூரானது என்னைக் காட்டிலும் விருபபம் மிக்கதொரு பொருளை இழந்தது' என்று வருந்தினாள் (அகம. 189:11-15). கடலலையில் விளையாடி வரும் தலைவியை இவ்வூர், கடற்கரையில் தேரேறி வந்த தலைவனொடு சார்த்திக் கொடுமை கூறும்; அது கருதி நீ அவளை வருததாதே' என்பது செவிலிக்கு அறத்தொடு நிற்கும் தோழி கூற்று (அகம். 190:1-6). ஊர் திரண்டு வநததுபோல மிகப பலவாய வண்டிகளுடன் உப்பு வாணிகர் திரண்டு சுரவழிச் செனறனர் (அகம். 191:4-6). ஊர் முழுதும் துயிலும் யாமத்தில், சிலம்பு ஒலிககாமல் அடக்கி அச்சத்துடன் வநது தலைவனைத் தலைவி தழுவிச் சென்றாள் (அகம்.198:10,11). 'புலால் நாற்றத்துடன் கூடிய மணல் மிக்க தெருவையும் புலவேயந்த குடிசைகளையும் உடைய சிறிய ஊராயினும் ஒருநாள் தங்கினார்க்கும் தம் பதியை மறக்குமாறு செய்யும் சிறப்புடையது எம்பதி; ஆதலால் தங்கிச் செல்வாயாக' எனக் குறை நயந்த தோழி தலைவனிடம் கூறினாள் (அகம. 200:1-7). பொலிவற் றிருக்கும் மலையைச் சார்ந்து தனிமையுடையது சீறூர் (அகம். 203:15). துறைவன மூங்கிலை யொத்த நம் தோளினை நினைத்து நடுஇரவில் இங்கு வந்த போது நம்மூரின்கண் உள்ள சோலையை யுடைய பெரிய துறையின் அழகினை அமையாது புகழ்ந்தனன் என்று தோழி கூறினாள் (அகம். 210:6-10). 'நின் பிரிவால் நாங்கள் மெலிவோம்; ஆதலால் அன்னை அறியினும் அலர்கூறுகின்ற பெணடிரின் பழிச்சொற்களை எம ஊர் கேட்பினும் நீ பகலில் வருவாயாக' எனத் தோழி பகற்குறி நேர்ந்து வரைவுக்குத் தூண்டினாள் (அகம். 218:15-22). மழையற்ற சிறிய ஊரின்கண்ணே யுள்ள இருப்பையின் பூங் கொத்துக்கள் நூலினின்று கழன்று விழும் முத்துக்களைப் போல செந்நிலத்தில் பரவிக் கிடந்தன (அகம். 225:11-13). நீரற வறந்தமையான் உணவினறி வாடிய விலாப்புறஙகளை யுடைய யானைகள்,

பாழ்பட்ட ஊரில் உள்ள குடிசைகள் போல் தோன்றும் (அகம். 229.3-6). முல்லை நிலத்தைச் சார்ந்த உறைதற்கினிய ஊரில் மாலைககாலத்தில மான்கள் கூடி மகிழ்ந்து துள்ளின. வணடின் கூட்டம் முலலை மலரில் உள்ள பூம்பொடியினை ஊதியது (அகம். 234:10-15). புலி போன்ற வெட்சி மறவர் இரவில் கொள்ளியுடன் சென்று, மாற்றார் ஊரினைப் போரில் தொலைத்து ஆனிரைகளைக் கவாந்தனர் (அகம். 239:3-5). 'குறியனவும் நெடியனவு மாகிய ஊடலுரைகளைக் கூறி நேறறும் நம்முடன் இனிய பலவற்றை உரைத்த இளமை பொருந்திய நம் தலைவியின ஊரிலுள்ள மனறமும் மரங்களும் மறைந்தன' எனப் பொருள்வயிற் பிரிநத தலைவன், இடைச் சுரத்துத் தன் நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 239·2,13-15). 'வேம்பி என்னும் ஊர் போன்ற என் நலம் தொலைந்த வழியும் தலைவர் வந்து அருள் செய்யவிலலை; அங்ஙனமாகவும் பல நாளாக இவ்வூர் அம்பல் கூறுகினறதேன' எனத் தலைவி தோழிக்குரைததாள் (அகம். 249;1,2,9,10). 'யான மகிழுமாறு குதிரைகளை விரைந்து செலுத்தி வந்து ஊர்கது அணித்தாகத் தேரைக் கொண்டு வந்தனை; வாழவாயாக' என வினைமுற்றி மீண்ட தலைவன தேர்ப்பாகனை வாழத்தினான் (அகம். 254:18-20). 'மருத நிலத்தைச் சார்ந்த நம் ஊரில் பகன்றை மலரவும் பாகற்கொடி கூதாளிக் கொடியுடன கலந்து அசையவும வாடை வந்தது எனப் பிரிவிடை வேறுபட்ட தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம். 255:9-15). பழமை வாய்நத ஊரிலுள்ள கோசர்களின பயறு விளைந்த நிலத்தில புகுந்து மேய்ந்த ஆக்களுக்கு உரியவனான அன்னி மிஞிலியின் தந்தையுடைய கண்களைக் கோசர் கருணை யின்றிப் பிடுங்கினர் (அகம். 262:4-6). முசுண்டை மலர்ந்த மாலைக் காலத்தில் வெண்காந்தள் மலரணிந்து கவர்த்த கோலுடன் பகற் பொழுதில் மழையால் வருந்திய ஆனிரைகளை ஓட்டிக்கொண்டு கோவலர் ஊர் திரும்பினர் (அகம். 264:2-6). மறவர் ஊன் தின்று, தோபபி பருகிக் கோட்டான் ஒலியொடு கூடி, வெண்கடம்பு பொருந்திய சிறிய ஊரின் பக்கததே கூத்தாடுவர் (அகம. 265:15-20). 'முள்ளால் அமைந்த கூட்டில், சேவலுடன் கூடப்பெறாத அனறிற் பேடை துன் புற்று வருந்தும் இரவிலும் நும் ஊர் செல்ல எண்ணுகினறீர்; அதறகாகயான் வருந்துகின்றேன்' எனக் கூறித் தோழி தலைவனை வரைவு கடாயினாள் (அகம்.270:12-15). 'பாகனே, கற்பும் மென்மைத் தன்மையும் வாய்ந்த நம் தலைவி உறையும் இனிய ஊர் குளிர்ந்த நறிய காட்டின்கண் உள்ளது' எனத் தலைவன் உரைத்தான் (அகம். 274: 12-14). 'தலைவன் மலையில் பெய்த மழை நம் ஊரின் நீராத் துறைககண் வரும்; அதில் நம இடர் தீர முழுகுவோம்' எனப பருவங்கண டழிந்த தலைவி கூறினாள் (அகம. 278:10-15). 'அருவி இழி தரும நாடறகு நினனைக கொடுக்க நம் தந்தையும் இசைந்தனர்; பழிகூறும் இவ்வூரும் அவனுடன் நின்னைச சோததுக கூறும; நினககு உரியவன் அவனே என்று யாயும் கூறுவள; ஆதலால நாமும் மணததிற் கென்று வரைந்த நாள் விரைந்து வருக என்று மனையுறை தெய்வததிற்குப் பலி செலுத்துவோம்' எனச் சிறைபபுறத் தலைவற்குத் தோழி கூறினாள் (அகம். 282:12-18). சிறிய ஊரில் உள்ள பெண்டிர் முதிய மானகளைத் துரத்தி அவை உண்டெஞ்சிய சிலவாகிய உணவுப் பொருள்களைத் திரட்டினர் (அகம. 283:4, 5). 'காமத்தால் நம்மைக்காட்டிலும் மிக்க மயக்க முற்ற அழகிய மாமை நிறமுடைய நம் தலைவி உறையும் இனிய ஊர், மறவர் வேட்டையாடிய மானை உணணும் அழகிய காட்டினகண் உளளது' என வினைமுற்றிய தலைமகன பாகற்குச் சொனனான (அகம. 284:10-13). ஊரிலுள்ள இளைய பெண்கள் கருமபாகிய உலக்கையால, இடை நுடங்க வெள்ளிய மணலைக் குவித்துக் காஞசிமர நிழலில் தம் குடிப்பெருமையைப் பாடிக் குறறுவர் (அகம். 286:1-5). சீறூர குடிபோகப்பட்டமையின நாட்காலத்தே பலி கொடுபபாரினறிப் பொதியில (அமபலம்) பாழபட்டது (அகம. 287:5, 6). கூத்தர் இஃது எமது ஊர் எனறு சொலலுதறகிலலாத இடையூறிலலாத வாழகையுடையவர் (அகம.301.8). கூத்தர் தேரை யொலியினை யொககத தாளம் அமைத்துச் சிறிய பல வாசசியஙகளோடு பல ஊர்க்கும் சென்று கூத்தியறறுவா (அகம. 301:20, 21). கூத்தர் தம் பெரிய சுற்றததுடன் தங்கிப்போய் விட்ட மன்றினை மறுநாள காணின அக்காட்சி அழுங்கலூர்ககுத துனபம் தரும் (அகம. 301:23-25). தலைவனின் ஊர் குறிஞ்சி மரஙகள் பொருந்தியதும் இருததற்கு இனபம் தருவதும் ஆகும் (அகம. 308:16). அலையை யுடைய கடலை எலலையாக வுடைய எமது சிறிய நல்லூர் பனைமரங்களுக்கு அப்பாலாய இடத்தது எனத் தலைமகற்குக் குறை நேர்ந்த தோழி கூறினாள (அகம். 310:16, 17). பழைய ஊரின்கண் போரில வெற்றி பெற்ற வீரர் வருமாறு போலத் தலைவன பரத்தைய ரில்லத்தி லிருந்து தன மனையகம் வந்தான் (அகம். 316:6, 7). 'ஊர்தாங்க இயலாத பரத்தையருடன் தலைவன் தொடர்புடையான் எனறு அவனைப் புலத்தல் கூடாது' என வாயில நேரநத தோழி தலைவிககுக் கூறினாள் (அகம். 316:9-11). கன்றினை யுடைய

இளையபிடி, களிறுகளுடன் கூடி ஊற்றுக் கண்ணினையுடைய கிணற்றினைத் தடவிப் பார்க்கும் பொலிவற்ற இடத்தினையுடையது சிறிய ஊர் (அகம். 321 6-10). 'அலர் கூறும் இவ்வூரின்கண் நமபாற் பழி கூறுவோர் வாடுமாறு காதலர் வருவதை நீ காண்பாயாக' எனப் பிரிவின்கண் வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறுத்தினாள் (அகம். 323:1-3,7). தலை கூம்பிய குடிசைகளாகிய அழகிய குடியிருப்புக்களை உடையது சிற்றூர் (அகம. 329:4). எயினமகளிர் இருப்பைப் பூக்களை மூங்கில் குழாயில் திரட்டிக் குன்றின்கண் உள்ள தெருக்கள் தோறும் விற்கும் ஊர் பலவற்றைக் கடந்து தலைவன் பொருள் தேடச் சென்றான் (அகம. 331:5-9). வெற்றி முரசும் போர்த் திறனும் கொண்ட பாண்டியனின் மூதூராகிய மதுரை மதிலுடன் கூடியது (அகம. 335:10, 11). 'கடற் பரப்பில் அமைந்த, உறைதற்கினிய எம ஊரில் நீ இன்று எம்மிடத்தே தங்கிச் செல்லின் வரும் குறை யாது' எனத் தோழி தலைவனை வினவினாள் (அகம. 340:13,24). பகைவரின் ஆக்களைக் கவரும் பழைய ஊரினராகிய கள்வர்க்குத் தலைவன் தென்னனாவான் (அகம. 342:6,10). கிள்ளிவளவன், பகை மன்னரது ஊரினைப் பற்றிய பொழுது கோதை மார்பன் எனனும் சேரமன்னன மகிழ்ந்தனன் (அகம. 346:22-25). முதிய ஊரின்கண் உள்ள பழி தூற்றும் பெண்டிரின் அம்பலும் அலரும் நம்மிடத்தே தங்கியிருக்குமாறு தலைவன் பிரிந்தான் எனத் தலைமகள் உரைத்தாள் (அகம. 347'6-8). கடலில் முழ்கி முத்தெடுத்த பரதவர் கொற்கையோர் எதிர்கொள்ளுமாறு படகினின்றும் இறங்கும் நீண்ட கடற்கரையை யுடையது எம் சிறு நல்லூர் என்று தோழி தலைவற்குக் கூறினாள் (அகம. 350:11-15). கூத்தர் விழாக் கொண்டாடும் முதிய ஊரில் விறலியின்பின் நிற்கும் முழவன் போலக் கடுவன் பலாப்பழத்தைத் தழுவிக்கொண்டு ஆடுகின்ற மயிலின் பின்னே நின்றது (அகம். 352: 1-6). 'நின்தேரிற் பூட்டிய குதிரை ஊர் துயிலும் யாமத்தில் ஒலித்தலைத் தடுக்கத் தேரினைச் சேய்மையில் நிறுத்திக் குறியிடத்திற்கு இரவில் வந்து தலைவியின் தனிமைத் துன்பம் நீக்குவாயாக' என இரவுக் குறி நேர்ந்த தோழி கூறல் (அகம. 360:10-15). காட்டரண்களின் பக்கத்தே யிருந்த அழகிய குடியிருப்புக்களை யுடைய சிறிய ஊரின்கண்ணே மாலையில் ஆண்மான் அழைப்ப மனையைச் சூழ்ந்து வளர்கின்ற நொச்சியின்கண் பெண்மான் தங்கியிருக்கும் (அகம். 367:2-5). வண்டுமொய்க்கும் கண்ணியணிந்த மக்கள் மூங்கிற்குழாயில் முற்றிய தேனாகிய கள்ளின் தெளிவை உண்டு மகிழும் சிறு ஊரின்கண்ணே தலைவன் தலைவியரிடையே உண்டான தொடர்பு உள்ளி விழாவின் ஆரவாரம் போல அலராயிற்று (அகம். 368:14-19). 'நன்மதிப்பும் உயர்வுமிலலாது, சிறிய ஊரில வறுமையுற்ற பெண்டினது புல்வேய்ந்த குடிலாகிய, ஒரு பசு கட்டியுள்ள ஒற்றைத் தூண் கொண்ட முகப்பினையுடைய வறியமனையில் சிலம்பு கழித்துத் தலைவனுடன் தன்மகள் மணம் பொருந்தினளோ' என மகட்போக்கிய செவிலி வருந்தினாள் (அகம்.369:22-26). தலைவன் வரவுக்காக நீ அந்திக்காலத்தே கடற்கரைச் சோலையில் காத்திருக்க, யான் உன்னை விட்டு நீங்க இயலாதவளாக உள்ளேன்; இவ்வூர் அலர் கூறினும் கூறுக என்பது தோழி கூற்று (அகம். 370:13, 16). துறைவன் தன் தேரினைச் சேய்மையில் நிறுத்தித் தனியனாய் வந்து 'நும ஊர் யாது' என்று தலைவியைக் கேட்டனன் (அகம. 380: 1, 2). அருவியில் பாய்ந்த மந்தி பலாவின் பழத்தைத் தெப்பமாகக் கொண்டு பக்க மலையில் உள்ள பெரிய ஊரின்கண் பொருந்திய துறை முன்பு வந்திறங்கும் (அகம். 382:9-11). ஊரும் சேரியும் ஒரு தன்மையில அலர் கூறும்படி தலைவி தலைவனுடன் துணிந்து போனாள் (அகம.383:2-5). முயற்குட்டிகள் தாவிக் குதிக்கும் முல்லை நிலத்தில விளைந்த வரகுடன் கூடியதாய்ச் சீறூர் இருந்தது (அகம். 384:5,6). 'தோன்றலே, இடையன் தன் ஆட்டினங்களை ஒரு வழிக் கூட்டுதற்கு எழுப்பும் சீழ்க்கையொலியைக் கேட்டு அஞ்சிய குறுமுயல் மன்றத்தின்கண் உள்ள பெரிய புதரில் மறையும் முல்லை நிலத்திலுள்ள எமது சிறுநல்லூர்க்கு வந்து செல்வாயாக, எனக் கூறித் தோழி தலைவனை வரைவு கடாயினாள் (அகம். 394:12-16). கடற்கரையிடத்துள்ள நீண்ட பனைமரத்தை யுடைய நம் ஊர், மெல்லம் புலம்பன் வரைந்து எய்திய ஞான்று அலரினை விடுத்துப் புதிய தன்மை கொண்டது நகையினை விளைப்பதாகும் எனத் தோழி தலைமகளிடத்துக் கூறினாள் (அகம். 400: 19,24-26). 'தலைவர் சென்ற வழியின் கொடுமையை நினைந்து யான் வருந்துகின்றேன் என்பதை உணராது இவ்வழுங்கலூர், யான் பிரிவாற்றாது வருந்துகின்றேன் என்று வேறொன்றைக் கூறுகின்றது' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 12: 3-6). 'யான் மடன்மா ஏறுதலால தலைவியைப் பெறுவேனாக; பெற்ற பின்னர் இவ்வூர் அவளுடைய கணவன் யான் என்பதை அறிவதாக' எனத் தலைவன் கூறினான், (குறு. 14: 3-5). என் காம நோயை உணராமல துஞ்சும இவ்வூரை முட்டுவேனோ, தாக்குவேனோ, கூவுவேனோ எனத் தலைவி பிரிவாற்றாமையால் சினந்து கூறினாள் (குறு. 28). யாமத்தில் ஊர் துஞ்சும (குறு. 32:2). அயலதாகிய

இவ்விடத்தில் இங்ஙனம் சொல் வன்மையுறப் பேசும் பாணன் தன ஊர்மன்றத்தில் இன்னும சிறந்த சொல வன்மைபுடையன போலும என 'வாயில் நேர்ந்த தலைவி தோழியிடம் கூறினாள் (குறு.33.1,2). 'நீ விரும்பிய தலைவனே நின்னை வரைந்துகொள்ள வந்துள்ள இனிய செயதியைக கேட்டு, உறங்கு தலினறி வருநதும் இவ்வூர் இனபுறுக' எனத தோழி கிழத்திக்குஉரைததாள் (குறு. 34:2,3). காதலா உடனி ருபபின விழாககொணட ஊாபோலத் தலைவி மகிழ் வாள (குறு. 41:1, 2).தலைவனின் ஊரில் உளள நீர்த துறையை வெணசிறுகடுகு போன்ற ஞாழல பூ, மருத மரததின பழம் பூவோடு கலநது அழகு செய் தது (குறு. 50· 1-3). யானும தாயும தந்தையும் நினனை அத்தலைவருககே மணம் செய்து கொடுக்க விரும்பியுள்ளோம்; இந்த ஊரும் அம்பல் கூறும் வாயிலாக உங்கள் இருவரையும் சேர்த்துக் கூறு கின்றது' எனத் தோழி ஆற்றாளாய தலைமகட்குக் கூறினாள் (குறு 51:3-6). தமமூரில் உள்ள அகன்ற நீர்த்துறையில் முன்கைபற்றித் தெய்வ மகளிரைச் சுடடித் தலைவன் கூறிய சூள தம்மைத் துன்புறுத் தின எனத் தோழி கூறல் (குறு. 53:1,5–7). தலை வன் விரைய வந்து மணநது கொள்ளானா யின் இசசிறிய நல்ல ஊரில தலைவி வாழ்வது சில நாட்களே யாகும் என்பது சிறைபபுறத் தலைவற்குத் தோழி கூறியதாம் (குறு. 55.4,5). அழகிய குடிகளையுடைய பாலைநிலச சிற்றூரில் வற்றிய ஓமை மரததின் கொம்பிலிருந்து தனிமை யையும் வருத்ததையும் வெளிப்படுத்தும் குரலை யுடைய ஆண் புறாக்கள் பெடைகளை அழைக்கும் (குறு. 79:2-5). 'கடலும் கானலும் கணணுக்குத தோன்றுகின்ற, மடல்கள் தாழந்த பனை மரங் களையுடைய எம் சிறிய நல்லூர் காணுமளவு அருகில் உள்ளது; தலைவியின தனிமைததுனபம தீர வருவாயாக' எனத தோழி தலைமகற்குக கூறல் (குறு. 81:3,7). 'தலைவி குற்றும் பொழுது பாடும் வள்ளைபபாட்டைக் குறித்து இப்பேதை ஊர் குறைகூறும்; அதற்கு வருந்துதலால் பயன யாது' எனச் சிறைபபுறத் தலைவன் கேட்கத் தோழி கூறினாள் (குறு. 89:1-3,7). அஞ்சியின போர் நிகழும் ஊரில் உள்ளார் பலநாள் துஞ்சா துறையும் துனபத்தை யடைவார் (குறு. 91. 6-8). ஊர்க்கும் அணிததாகிய பொயகைக்கு அடுத் துள்ள கான்யாற்றங் கரைப் பொழிலில் யாம் கூந்தலுக்கு இட்டுப் பிசையும் எருமண் எடுக்கச் செல்வோம, தலைவி அங்கும் வருவாள் எனத் தலைவனுககுத் தோழி குறியிடம் சுட்டினாள் (குறு. 113). ஓமைப் பெருங்காடு, உமணர் பலர் சேர்ந்து தங்கிச் சென்ற பக்கத்தையும குடியிருந்த ஊர் பாழாகப் போனதைப் போன்ற தோறறத் தையும் உடையது (குறு. 124 1,2). தலைவனை நாடுகள் தோறும ஊர்கள தோறும குடிகள தோறும் தேடித் தருகுவன எனத் தோழி, பிரிவின கண் வருந்திய தலைவிக்குக் கூறினாள் (குறு. 130: 3,4). அழகிய தோளும விருமபத் தகும கணணு முடைய தலைவி இருநத ஊா நெடுநதொலைவில் உள்ளதென விரையும தன் நெஞசிற்குத தலைவன கூறினான் (குறு. 131.1-3). பெரிய ஊா துஞ்சினும் யாமரப் பூ உதிரும ஓசை கேடடுத துஞசாதிருந தோம் என முதலநாள் குறி பிழைதத தலைவன கேட்குமாறு தோழி கூறினாள் (குறு. 138). 'காதலர் சுரநெறிச் சென்றனர்; அதனால் யாம அடையும துனபத்தை இவவழுங்கலூர் எவ்வாறு அறிநததோ எனபது தலைவி கூறறு (குறு. 140 3-5). 'நம்மூரில பிரிந்தாரைச் சேர்தது வைக்கும சானறோர் இருந்தமையால, தலைவன வரைவைத தமர் ஏறறுக் கொண்டார்; அதனால நீ கவலையுறு தல ஒழிக' எனத் தோழி கூறினாள (குறு. 146). தலைவியின துயரத்தை உணர்ந்து இரஙகாத வரை உடையது இவவூர் (குறு. 159.5-7). வெள்ளிய சிறகுடைய நாரை அயிரையை ஆாதற கிடமான மரநதை எனனும் ஊர், தலைவனுடன இருககுங கால இன்பத்தையும தனியே இருககையில துனபத தையும தருகினறது எனத தோழி கூறினாள (குறு. 166). தலைவனைப பிரிநத தலைவியின நெஞ்சு ஏழு ஊரில உளள மககடகுப பொதுவா கிய தொழிலின் பொருட்டு ஓா ஊரினகண் அமைதத துருத்தி போல எலலையறியாது வருநதி யது (குறு. 172:5-7). குறை மறுக்கபபடட தலை மகன், 'நான மடனமா ஏறிவருவேன; அப பொழுது இவவூர் அவளைப் பழிககும், இதுவே செய்தற்குரியது' எனத தோழியிடம் கூறினான் (குறு. 173). 'ஐய, நின் வேட்டை நாய்களும இளைத் தன; பொழுதும் சாயநதது; மலையின உசசியில் உள்ளது எமமூர்' (ஆதலின தஙகிச செலவாயாக) எனத தோழி தலைவனிடம கூறினாள் (குறு. 179:1-3,7). 'கொடிச்சிக்குத் தழையுடை யுதவிய அசோகமரம் (அன்பு செய்தானொருவன) இருப்ப, அரலை மாலையை முருகனுக்குச் சூட்டி இவவழுங்கலூர் வெறியாட் டெடுதது மயககமுற்றது' எனபது அறத்தொடு நின்ற தோழி கூறறு (குறு. 214·3-7). பெரிய ஊர் மேற்கொணட மிக்க ஆரவாரத்தை யுடைய விழா விற்குச் செல்வோம் எனறு தலைவியைத் தோழி அழைத்தாள் (குறு. 223·1,2). தலைவர் நம்மொடு ஓர் ஊரில் வாழ்நதாலும் நாம் இருககும தெருவில வாரார் எனத தூதாக வநத தோழியிடம தலைவி கூறினாள் (குறு.231.1). வினை முடித்து மீளும்

தலைவன, 'கவலைக் கிழங்கைத் தோண்டியெடுதத
குழியில கொனறை மலர்கள் நிறைந்து பொன
வைதத பேழைபோலக் காணப்படும முலலை நிலத்
தினகண தலைவியின ஊர் உள்ளது' எனப் பாகற்
குரைத்தான (குறு. 233.1-4,7). நெலலிக் காயை
மரையின திரள் உண்ணுகினற முன்றிலையுடைய,
புலலால வேயபபடட குடிசைகளையுடையது தலை
வியின ஊர் எனப பாகனுக்குத தலைவன சொன்
னான (குறு 235 3-5). மணம வீசும முல்லை நிலத்
தினகண சிறிய ஊரில தலைவியுள்ளாள; தலைவன்
வேந்தனால ஏவப்பட்ட தொழிலை மேறகொண்டு
வேறூர் செலலினும் அங்குத தங்காது உடனே
மீள்வன எனக் கறபுக் காலததுக் கடிநகர் சென்று
வந்த செவிலி, நற்றாய்க்குக் கூறல் (குறு. 242 3-6).
எருமை இனநிரை, கழுத்தில பூட்டிய மணியொ
லிககு மாலையில ஊர் வந்து சேரும (குறு. 275:3,4).
தலைவியின மார்பில் யான் தொயயில எழுதியதை
அவளைக் காப்போா அறியார்; முறையுடைய அர
சன அவையததில யான் முறையிடின் என்னவா
கும, ஆதலால இவ்வழுங்கலூர அறிவினமை யுடை
யது எனத தலைவியைச சேட்படுததிய தோழியறி
யும்படி முன்னிலைப் புறமொழியாகத் தலைவன்
கூறினான (குறு 276). தலைவர் குறிததுச சென்ற
காரபபருவம் வருதற்கு முன்னரே இவ்வழுங்கலூர்
பிரிவுக்கு வருந்தி அவர்மீது இரங்கும் நமமைக
காட்டிலும் நம்மீது இரக்கம் காட்டும் (அவரைக்
கொடியவர் என்றும) எனறு தலைவி தோழியிடம கூறி
னாள் (குறு 289·6-8). 'தலைவன் ஒருநாள் விருநதின
னாக வந்ததற்காகப போர் நிகழும் இடததில்
உள்ள ஊரைப போலப் பல நாளும துஞ்சாளா
யினள தாய' எனத தோழி காப்பு மிகுதி கூறல
(குறு. 292 6-8). ஆதி அருமனின பழைய ஊர்
போனற அழகுடையவள் பரத்தை (குறு. 293:4,7).
ஒரு பசுவினால கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டு
வாழும செலவச் சிறபபில்லாததலைவன் வாழ்க்கை,
பெருநலம் வாய்ந்த இந்தத் தலைவி வாழ்க்கைப்
பட்டபின் விழா எடுத்தறகுரிய சிறப்பினதாயிற்று
என்று இவ்வூர் சொலலியது (குறு. 295:4-6). மறவ
ரால இறந்து பட்ட வழிபபோவார்மீது தழையை
இட்டு வைதத குவியல்கள் ஊரைப் போலத் தோன்
றும (குறு. 297.1-4). 'ஊர் துஞ்சும் யாமத்தினும்
யான் மலைநாடனையே நினைப்பதனால் என்
நெஞ்சினகண வருதலையன்றிப் பிறர்கூறும் பழிக்
கஞ்சி நேரில் வருதலை யறியான்' என்பது தலைவி
கூறறு (குறு. 302:4-8). 'உழவர் பயிர் செய்யுங்கால்
களைந்து வரப்பில் வாடவிடினும் இக்கொடியவ
ரின நிலத்தை நீங்கித் தங்குவேம என்னாது தம்மை
நீக்கிய வயலிடத்தே மீட்டும் மலரும் நின ஊரில்
உள்ள நெயதலைப்போன்ற தன்மை யுடை யோமா
யினோம்' எனப் பரத்தையிற் பிரிந்து வந்த தலைவற்
குத் தோழி கூறினாள் (குறு. 309:1-6). புன்னை மரங்
கள் செறிந்த சேரிகள் பொருந்திய இந்த ஊர் தன்
பாலுள்ள கொடுமையினால் வீணே அலர் தூற்று
கின்றது எனச் சிறைப்புறத்தில நின்ற தலைவன்
கேட்பத் தலைவி தோழியிடம் கூறினாள (குறு. 320;
7,8). விலலாற்றல வாயநத கானவர் தங்கையாகிய
தலைவி வாழும் ஊர் மலையினிடத்துள்ளது (குறு.
335:5-7). பனிககாலப் பயிரை, அருநதிய ஏற்றுடன்
கனறுகளை நினைந்து மடிசுரக்கும பசுக்கள் மாலை
நேரததில ஊருக்குத திரும்பி வரும் (குறு. 344:3-6).
வளைநத உபபங்கழி இழுமென ஒலிக்கும் அவ்வி
டத்தே கடலை வேலியாகக் கொணடிருநதது தலை
வியின் சிறுநல்லூர் (குறு. 345:5-7). துறைவர்க்கு நீ
உரியை என நம்மவர் உடன்பட்டமை கேட்டு நான்
மகிழ்ந்தேன்; இவ்வழுங்கலூர் இனியும் சேரி மகளி
ருடன சேர்ந்து அலர் கூறுமோ' எனத் தோழி
வினவினாள் (குறு. 351:4-8). 'எந்தையது எம்மூரின்
கண் கடிய பாமபுகள் ஊர்ந்து திரியும் தெருவில்
வந்து நடுங்குதற்குரிய துன்பம் களைநத நீ எம்
மைப் பிரியக கருதுவை யாயின் எம் வீட்டிற்கே
அழைத்துச் சென்று விடுவாயாக' எனப் பரததை
மைத தலைவனிடம் தலைவி கூறினாள் (குறு. 354:
3-6). சிறியவரும் பெரியவரும் வாழும் ஊரிலுள்ள
வெள்ளத்தின கரையிலுள்ள மரம் போலத் தீதில்
லாத நிலையிலிருநது நாளும் தலைவனை முயங்கு
வோம் எனபது வரைவுணர்நது மகிழ்ந்த தலைவி
கூற்று (குறு. 368·5-8). கருமணற் சேற்றையுடைய
அருவியால் கூந்தலிடத்துப் பெய்யப் படுகின்ற குவி
யல் உலர்வதன் முன் (தலைவன் வந்து சென்ற சுவடு
மறைவதறகுள) இவ்வழுஙகலூரில அலர்மொழி எழுந்
தது (குறு. 372.4-7). தூக்கணங் குருவிக் கூட்டினும்
பலவகையான மயக்கத்தை உடைய இவ்வூர் தலை
வன் வரைந்து கோடற்கு நமர் இசைந்தமையால்
ஒன்றுபட்ட கருததுடையதாயிற்று என அறத்தொடு
நின்ற தோழி கூறினாள் (குறு. 374·3-7). 'தலைவன்
தலைநாள்போல் மாறா அன்பு உடையவனாகவும்
இவ்வழுங்கலூர் என் மணங்குறித்து வநத புதிய
வரையுடையது' எனத் தன்னை நொதுமலர் வரைய
வநதபோது தலைவி அறத்தொடு நின்று அவ்
வரைவை மாற்ற முயன்றாள் (குறு. 385:5-7). ஊரால்
உண்ணப்படும் நீரையுடைய கிணற்றுப் பாசி,
மக்கள் நீர் கொள்ளுங்கால விலகியும் பின் கூடி
யும் இருக்கும் இயல்பு பசலை நோயின் இயல்புக்கு
உவமை (குறு. 399). ஆறலைத் துன்னும் மறவரின
குடியிருப்பினை உடைய சீறூரில் உள்ள சிறுவர்
வேம்பினது புள்ளி போன்ற நிழலில் அரங்கு கீறி

நெல்லிக்காயை வட்டாகக் கொண்டு பாண்டி லாடுவர் (நற். 3:2-5). கரிய உப்பங்கழி சூழ்ந்த நெய்தல் நிலத்தி லுள்ள உறைதற்கு இனிய ஊரில உப்பு வணிகரின் சகடம் மணலில அழுந்திச் செல்லுங்கால எழுகின்ற ஓசையைக் கேட்டு வயலில் உள்ள நாரை அஞ்சும் (நற். 4:9-12). 'தலைவியின் நலத்தை உண்டு உணர்ந்த நீ மணம் செய்து கொள்ளக் காலம் தாழ்த்தலால முன்னாள் தொடங்கி எம் உடனிருந்த நாணமும் நீங்கியது; இனி இவ்வூர் அலர் தூற்றுவதாக' எனத் தோழி வரைவு நீட்டித்த தலைமகற்குக் கூறல் (நற். 15: 4,5,9,10). மலைநாடன 'நின்னிற்பிரியேன்' என்று கூறிய பொய்ம்மொழியை நம்பியதால் யாம் நலனி ழந்து யாமத்தும் துயிலை இழந்தனம்; அலர் கூறும் இவ்வழுங்கலூர் எதனை இழந்ததனால் இந்த நடு யாமத்தும் துயில விலலை' என்பது தோழியின வினா (நற். 36'4, 5, 8, 9). பனைமரங்களும் மணல் மேடுகளும் சூழ்ந்த தலைவியின ஊர, பனை யோலையோடு முட்களைச் சேர்த்துக் கட்டப்பட்ட வேலியகத்துள்ளது (நற். 38:8-10). தலைவன் கொடி நுடங்கும் கடைத் தெருக்களை யுடைய பழைய ஊரில வாழும், விரைந்து செலலும் தேரையுடைய செலவனின காதலமக னாவான் (நற். 45:4, 5). கடற்றுறைவனாகிய தலைவன வாழும் சிறிய நலல ஊரின்கண், பரதவரின முன்றிலி லுள்ள புன்னை மரத்தின் நறுமலர்கள் தாழை மடலோடு கூடி மணம பரப்பும் (நற. 49:8-10). அன்பு மிகுதலாலே உள்ளங்கலந்து - நம்பால் விரும்பிய கொள்கை யுடனே என்றுந் தன நெஞ்சிலே எம்மை நினைந் துறையும் காதலியின ஊர, காடு சூழ்ந்த நாட்டின கண் உள்ளது என வினைமுற்றி மீளும தலைவன தேர்ப்பாகற்கு உரைத்தான (நற். 59:6-8). மீன்களை உணக்கும மணற்பரப்பையும் கலலென ஒலிக்கும் சேரியையும் மணங்கமழும் புன்னைப் பூக்களையும் உடைய தன அழுங்கலூர அறனிலலாதது என்பது தோழி கூற்று (நற். 63:2-6). பொங்குகின்ற பிசிரை யும் ஒலித்தலையும் உடைய அலை எழுந்து உடை கின்ற கடற்கரையிலுள்ள நெய்தல் நிலத்தினில் யாங்கள் உறையும ஊரின்கண் இன்றிரவு தங்கிச் சென்றால என்ன குறைபாடு வரும்' எனத் தோழி தலைவனை வினவிப் பிரிவாற்றாமையைக் கூறு வாள் போல வரைவு கடாயினாள் (நற். 67:10-12). எம்மூர்ப் பொய்கையைத் துழாவிச் சினைக் கெளிற்றை உண்டு, தலைவர் ஊர் செலலும் வென் னிய சிறகினையுடைய சிறிய குருகே, 'கழனி சூழ்ந்த நலல ஊரில் உள்ள அம்மகிழ்நர்க்கு என் நிலை யைச் சொல்லுவையோ, மறப்பையோ' என்பது தலைவியின காமமிக்க கழிபடர் கிளவியாகும் (நற். 70:3-9). வளப்பத்தையுடைய பழைய வூரில் தெய வத்தின் முன இடப்படும் மலரோடு கூடிய ஊன பலியை உணணவேண்டிச் செம்முருக்கின முறறிய நெற்றுப் போன்ற விரலையுடைய பேய் தான நிலைபெற்றிருக்கும் பாழமன்றத்தை மோதியெழும் (நற். 73:1-4). கண்டல் மரம் நிரம்பிய வேலியை யுடைய ஊர், சீழைக்காற்று புன்னையின் நுண்ணிய மகரந்தப் பொடியைக் குருகின வெள்ளிய முதுகில் நெருங்கத் தூர்க்கும கடறகரையில் உள்ளது (நற். 74:6-10). தலைவியின் ஊர் மெல்லிய பெரிய பழிச சொல்லைத் தூற்றுதல் உடையது (நற. 76 6). பேரூ ரல்லாத சிலவாய சேரிகளை யுடைய சிறூரினகண் பலாப்பழங்கள் நிறைந்த முனறிலில இரவில அருவி யின ஒலியைக் கேட்டு மனையோள் துயில்வாள (நற். 77:5-7). ஊரிலுள்ள மாடு மேய்க்கும் இளஞ் சிறுவர்கள் எருமையின்மீது ஏறிக்கொண்டு தனியே சிறுவீடு (சிறுமேயசசல) செய்து வருதற்கு விடியற் காலத்தே செலவர் (நற். 80:3,4). ஊர் முகத்திலுள்ள பொய்கைக் கரையருகில் நிறகும், கடவுளேறி யிருக் கும் பருத்த முதிய மரத்தில் கூகை வாழும (நற். 83: 1-4). தலைவியின கண்களிலிருந்து நீர் விழுதலா னும் தோளிலிருந்து தொடி நெகிழதலானும் அவற்றை நோக்கிப பழிகூறும இப்பழைய ஊர் அலர் தூற்றும் (நற. 85 1-3). ஊரில உள்ள மாமரத் தின் உயர்ந்த கிளையிற் சென்று பறறித் தொங்கித் துயிலும முன்போன்ற எயிற்றையுடைய வெளவால அழிசியது பெருங்காட்டிலுள்ள நெல்லிப் பழத்தின இனிய புளிச் சுவையைப் பெற்றதாகக் கனவு காணும் (நற். 87:1-4). கூத்தாடும் விழாவின் ஒலியை உடையது முதிய ஊர் (நற். 90:1). முதுவேனிலால வாடிய ஓந்தி, மரலின இளமடல போல வாடிக் கிடக்கும் வறட்சியுற்ற குனறத்தின் பக்கத்தில் வேட் டச் சீறூர் அமைந்துளளது (நற். 92'2-5). கொழுவிய காவறகாடு சூழ்ந்த சீறூர், ஆடுமகள நடந்த கயிற்றினமீது குரங்குககுட்டி பற்றி அசைய, அத னைக் கணட குறககுலச் சிறுவர் தாளங்கொட்டி மகிழும் குனறின்கண் உள்ளது; என்னாற காதலிக கப் பெற்ற தலைவி அச்சீறூரில் உள்ளாள் எனத் தலைவன் தோழனுக்கு இடன உரைத்தான் (நற்.95: 2-8). மலையமான் ஊர முனையிலுள்ள ஆனிரை களை விற்போரினால் வென்று கொண்டு வந்தான (நற். 100:7-9). மலைநாடன் கேண்மை பன்னாளின் முன்பே சென்றொழிந்தது; குறிஞ்சியிலுள்ள நல்ல ஊரின்கண இருக்கும் பெண்டிர் அதனை யறியாது இன்னும் என்மீது பழிகூறுவர் என்பது தலைவி கூற்று (நற். 116:8-12). 'நீ விருமபிச் செலலுங் காதலியின் ஊர் இப்புறவத்தி லுள்ளது; அவளை இன்னே நீ காணுமாறு விரைந்து தேரைச் செலுத்

துவேன' என வினைமுற்றித் திரும்பும் தலை மகனுக்குப் பாகன சொனனான் (நற். 121:5). 'செம்மையாகிய நீரமையும் பொதுவாகிய செயலும் உடைய நம் காதலா பழமையாகிய இவ்வூரிலிருந்து தமதாகச செயயபபடுகின்ற இலவாழககையினும் இனிது உணடோ' எனபது தலைவி வினா (நற். 130:4,5). 'இபபேரூரில உளள யாவரும் துஞ்சுவர்; விழிததியங்குபவா ஒருவருமிலலை; நாம் அவரை அடைய முடியாதவாறு மழையும் காற்றும் வீசும்; நான அழியும் நாள் இன்றுதானோ' எனத் தோழி ஆறறாளாய தலைவிககு உரைத்தாள் (நற். 132). அழகிய குடியிருபபை உடைய சீறூரில வாழ் வோர், பனையினது கரிய அடிமரம் புதைபடுமாறு மூடபபட்ட மணலமிகக முறறத்திலிருந்து அளவு படாத உணவுப் பொருளை வருகினற விருந் தினர்ககுப் பகுததுக் கொடுப்பர் (நற். 135:1-4). மலைச்சாரலில உள்ள நல்ல ஊரின்கண்ணே தலைவன் தாழ்நத கூந்தலையும் மாமையையும் உடைய காதலியுடன் முயங்கி அவளது நலனை இனிது நுகர்நதான (நற் .139:7,8). 'இராப்பொழு தாயினும் வந்த விருநதைக் கண்டு மகிழ்பவளும நல்லறம செயயும் கற்பும் மென்மையாகிய சாயலும் உடையவளுமாகிய நம காதலி உறையும் பொய் யாத வருவாயையுடைய ஊர் ஈணடுள்ள புறவில் உள்ளது' எனறு வினைமுற்றி மீளும் தலைவன் தேர்பபாகறகு உரைத்தான் (நற. 142:8-11). 'அம்பல் மிக்க பழைய ஊரின்கண் அலர் தூற்றும் வாயை யுடைய ஏதிலாட்டியர் பலரும் ஒனறு கூடி இனனா இன்னுரை கூறினர்' என மனையின கணிருந்த நற்றாய மருண்டு கூறினள் (நற. 143:7,8). விறறற் கியலாத பூக்களைக் கண்ணியாககிச் சூடிப் பித்தன் போல மடன்மா வேறிப் பல ஊர்களிலும் தலை வன் திரிந்தான் (நற். 146:1-3). 'பெண்டிர் கூறும் அம்பலை நம்பி அன்னை ஒறுத்தமையால் யான் துனபுற்றேன்; ஆதலால் இத்துன்பமெல்லாம் தீரும் படி கொண்கனொடு நீ செலல யான் உடன் பட்டேன்; அஙஙனம் சென்ற பின் இவ்வூர் அலர் தூற்றி ஒழிவதாக' எனக் கூறித் தோழி உடன் போக்கு வலித்தாள் (நற். 149:4-10). போர்த்திறமும் சினமும் கொணட பகைவேந்தன படை அலைத் தலால் ஊரில வாழும் குடிமக்களெல்லாம் குடி யோடி அகன்று விட்டமையால் நகர் பாழாயிற்று (நற். 153.7-10). பிடியைப் பிரிந்த யானைக்கன்று, சேரியிலுள்ள பெண்டிர் துணுக்குறும்படி ஊரி லுள்ள பசுவின் கன்றொடு சேர்ந்து சேரியினகண் புகும் (நற். 171:3-5). வண்டின் ஒலி அருவி யொலி யோடு ஒன்றி மெல்லென இசைக்கும் சாரலிலே, குனறை வேலியாக வுடைய ஊரில் இருப்போர் 'தலைவிபால் அப்பரத்தை மிக்க காதலுடைய ளாதலின் அத்தலைவி விருப்பத்தின்படி தலைவனை விடுத்தனள்' என்று கூறுவரோ எனப் பரத்தை கருதினாள் (நற். 176:1-4,8-11). தலைமகன் பகற் குறிவந்து மீளும்போது தலைவி, 'இவ்வூர் எவ் வண்ணமாக நமக்கமையுமோ' என மனம் அழிந்து கூறினாள் (நற். 187:6,7). மகளிர் வண்டல் விளை யாடும் கணடல்வேலி சூழ்ந்த அழகிய சிறுகுடித் தெருவினகண் நேற்றிரவு தேர் வந்துள்ளதே என ஊரில அலரெழுநததனைக் கொண்டு அன்னை இறசெறித்தாள எனச் சிறைப்புறத் தலைவன் கேட்பத் தோழி உரைத்தாள் (நற். 191:2-8). நேற்று உடன் போக்கிறசென்ற தன் மகள் போன்று காதலுடன் வருபவளை இடைச்சுரத்துக் கண்டு கலங்கிய செவிலித்தாய், தலைவியின் தந்தை ஊரில் அவர்களுக்கு விருந்தளிப்பேன் எனறும் வளப்ப முடைய அத்தந்தையின் ஊர் இதுவே என்றும் கூறினாள் (நற். 198:3-5,10,11). ஆம்பல நெருங்கிய இனிய பெரிய வயலும் பொய்கையும் உடையது ஊர் (நற். 200:6,7). பேரிரைச்ச லுடைய ஊர் தலை வன் தேர் வருதலை அலரால் நிறுத்தி வைத்து வருந்தச் செய்த தன தவற்றினை வெளிக்காட்டாது தேர் வருவதன் காரணத்தை ஆராய்ந்து வருத்தம் அடைகின்றது எனத் தோழி சிறைப்புறத்தானான தலைவன் கேட்கக் கூறி வரைவு கடாயினாள் (நற். 203:9-11). தலைவியின் புலவித் துன்பத்தைத் தலைவன நீக்கா னாயினும் அவன் இல்லாத ஊர் தலைவிக்கு இன்னாத தாகும் (நற். 216:4, 5). 'மெல்லம் புலம்ப, இரவு வருக; எனினும் பழி பரப்பும் இவ்வூர், சுறாமீனினம் மிக்க கடற்பரப் பின் துறையிடத்தும் துயிலாத கண்ணினராகிய கொடிய பெண்டிரையுடையது' எனக் கூறிய தோழி இரவுக்குறி நேர்வாள்போல மறுத்து வரைவு கடா யினாள் (நற். 223:6-9). தலைவனுக்கு யாம் இது காறும் மனமொத்து நடக்காவிட்டாலும் 'நின் முன் கையிலணிந்த அழகிய வளையல்கள் உடையும்படி அச்சேர்ப்பனை அழைத்து அணைத்து முயஙகுவா யாக' எனக்கூறிப் புலம்பியழுத இவ்வூர், யாம் இனித் தலைவன் விரும்புமாறு நடந்து கொண்டால் என்ன பாடுபடுமோ என்பது தோழி கூற்று (நற். 239:8-12). வளப்பமிக்க சேரியிலே கல்லெனனும் ஒலியுடன் வந்த தலைவனது தேர் பழி கூறும் இயல்புடைய முதிய ஊர் பெரும்பழி தூற்றுதலினாலே நில்லாது சென்றது எனத் தலைவி கூறினாள் (நற். 249:9-11). பேயினங்கள் விளக்கமுற இயங்க ஊர் முழுதும் துயில்கொண்டது (நற். 255:1). வாடைக்காற்றும் விடாத மழைத்தூவலும் பொருந்திய நடுயாமத்து ஊர் முழுதும் துஞ்சியது (நற். 262:1-3). மறையாமல்

நேராக வந்து ஊர் அலர் தூற்றுவதைப் பற்றி நாணம் காரணமாகத் தலைவி தலைவனிடம் சொல்லாவிடினும் அவள் கண்ணீர் அதனை வெளிக் காட்டியது (நற். 263:2-4,10). 'மடந்தையே, மூங்கில் நிறைந்த சிறிய மலையினகண் ஆனிரையின் கழுத் திலுள்ள தெளிந்த மணி ஒலிக்கும் எம் ஊர் உவ் விடத்தே தெரிகின்றது பார்' எனக்காட்டி உடன் போக்கில் தலைவன் தலைமகளை ஆற்றுவித்தான் (நற். 264:6-9). இடையன குராமரத்தின் வெள்ளிய பூவைச் சூடுமாறு மலர்நதிருககும் அகன்ற இடத் தையுடையது சிறிய ஊர் (நற். 266:2 4). 'தலைவன அளிபெறாமையால செயலழிநத என்நோய் பழி மொழி கூறுகின்ற அம்பலை உடைய பழைய ஊரால அறியப்பட்டது' என ஆற்றாளாய தலைவி கூறல் (நற். 272:6-10). 'தினை காவலன் அமைத்த கட்டுப்பரணைக் காட்டுமயில தாம் இருத்தற்குரிய கூடாகக் கொணடு தஙகும் எமமூர் இம்மலையின் அகத்தது; அங்கு வந்து தஙகிச் செல்வாயாக' எனத தலைவனிடம் தோழி கூறல (நற். 276:5-8). இரவுப் பொழுதில ஊரெலலாம் உறங்கும் (நற். 287:11). நொசசிமாலை சூடிய முதிய குயவன் தான் இடும் பலியை உணணுதறகு அணஙகுகளையும் காக்கை களையும் அழைக்கும் அகனற இடத்தையுடைய மன்றத்தில் வெறறியையுடைய மூதூர் திருவிழாச் செயதலை மேறகொணடது (நற். 293:1-4). மழை பெயயின் நெலலும் மழை பெயயாவிடின உப்பும விளையும் அழியா இயலபுடையது தலைவியின மூதூர் (நற். 311:1-5). தினைமுற்றிக் கொய்பதம கொண்டமையால் அதன இலைகள் காய்ந்து மலை யருவி போல் ஒலிக்கும்; ஆதலால நாம் ஊரிடத்து மீண்டும் செல்வோம் எனத தோழி சிறைப்புறத் தலைவற்கு இறசெறிப்பு அறிவுறுத்தினாள் (நற் 313: 8-11). மணல மிக்க மூதூரிலுள்ள அகனற தெருவில், கூகைச்சேவல் தன் பேடையுடன சென்று மக்களியங் காத நாற்சந்தியில் அச்சம் உண்டாமாறு கூவும (நற். 319:3-5). திருவிழா இல்லாக் காலத்துத் தழையுடை யணிநது பரததை தெருவில் சென்றபோது ஊரில் நகைப்பொலி யெழுநதது (நற். 320:1-7). அழகிய குருநது மலர்கினற காட்டின்கண நெருங்குதலும் பெரியஒலியை யுடைய நமமூரின் மரங்கள் தோன் றும் எனவினைமுற்றி மீளும் தலைவன பாகற்கு உரைத்தான் (நற். 321:9,10). உயர்ந்த பெரிய சார லிலே குறுக்கிட்ட மலையின புறததிருக்கும் பக்க மலையில ஆடி நன்கலம் பெற்ற விறலி தலைவியின் ஊரில் கூத்தயர்ந்தாள் (நற். 328:9-11). 'வெறுத் தலைக் கருதாத எம்முடைய நல்ல ஊர் மிக இனிமை யுடையது; என்று, வந்தாலும் யாதோர் ஊறு பாடும் இல்லை' என்பது இரவுக் குறிநேர்ந்த தோழி கூற்று (நற். 331:9,10). முலலைக்கொடி படர்ந்த மலைவழியாகிய சிறுநெறியை அடைக்கா மல் திறந்த வாயில்களை உடைய அழகிய குடிகள் அமைந்த சிறிய ஊரின்கண் உள்ள தெருக்களில் மலரின தாதுக்கள் எருவாக உதிரநது கிடந்தன (நற். 343:1-3). மலையைச சார்ந்துள்ள புதுவருவா யுடைய இனிய ஊரில் உள்ள மககள், யானையைத் தொலைதது முழஙகும் புலியின பெரிய பூசலை முகிலின் இடிமுழககம் எனறு கருதி உலரவிட்ட செந்தினையைக் கூட்டிக் குவிபபர் (நற். 344.9-12). அரசரது பகையால் அழிநத அரிய ஊர்முனை யடுத்த குடிகளழிநத சிறிய ஊரினகண மககளில லாத அம்பலம் இருந்தது (நற். 346 3-5). நிலாநாளில தெருவெங்கும் பேரோசையுடன ஊா விழாக கொண்டாடியது (நற். 348:3,4). சிறிய நாவினை யுடைய மணியோசை ஊரினகண் கேட்குமாறு கொன்றைக் குழலூதும ஆயர், ஆனிரையை மாலைப்பொழுதில ஓட்டிவந்தனா (நற். 364.7-10). நாம் நாணினை விட்டு அம்பலததை அடைநது தலைவன் ஊர் எஙகுள்ளது எனறு கேட்டு அறி வோமா எனத் தலைவனை இயறபழித்துத் தோழி கூறினாள் (நற். 365.2-5). கணடல மரத்தை வேலி யாக வுடையதும் உபபஙகழியால சூழபபெற்றது மான நல்ல ஊரில உளள மகளிா பரதவாதம மீனபிடிக்கும் படகின விளக்குகளை எணணுவர் (நற். 372·10-13). கடலிடதது இராபபொழுதிலே திங்கள் தோனறுதலானே வலிய அலைகள மோது வனபோல எழுநது வருதலை உடையதும் உயர்நத மணல் நிரம்பிய கொலலைகளை யுடையதும ஆகிய தம்மூரிடத்துத் தலைவி மகிழுமாறு மணநது கொளள வரல்வேணடும எனத் தோழி தலை வனை வேணடினாள் (நற்.375:5-9). தோழியால் குறைமறுககபபட்ட தலைவன, 'பனை மடலால் ஆகிய குதிரை யேறி விலைபெறாத மலாமாலை சூடி இடமகனற வைப்புக்களை யுடைய நாடுகள தோறும் ஊர்கள் தோறும் செனறு தலைவியின அழகைச் சிறப்பிததுக் கூறி மாய மாட்டேனோ' எனத தோழி கேட்குமாறு தனனுளளே கூறினான (நற். 377:1-5). பனையோலை யிட்டுக கட்டிய வேலி சூழ்ந்த அகன்ற இடததையுடைய சிறிய ஊரில், தந்தை மீன்வேட்டைக்குத் தம்மையும் உடன் அழைத்துச் செலலாமையான் வருந்தியழுத சிறுவர் நுங்கினைப் பெற்று மகிழ்ந்தனர் (நற். 392:1-6). மாலைப்பொழுது வந்தபோது ஓரையாடிய மகளிர் நீர் அலைத்தலாலே கலைநத கூந்தலைப் பிழிந்து வடித்துத் துவட்சியுற்று அழகிய வயிற்றிலடித்துக் கொண்டு ஊர் திரும்பினர் (நற். 398:3-5). தண டுறையூரனின் பரத்தையர் ஊர்துஞ்சும் யாமத்தும்

உறங்காமல் விழித்திருப்பர்; ஆதலால் தலைவன் வருவதெங்ஙனம் எனக் கூறித் தலைவி வாயில் மறுத்தாள (ஐங். 13:3, 4). புனலாடுகின்ற மகளிர்க்கு பொருந்துதற் குரிய துணையாகிய தெப்பம் செயதற்குரிய வேழத்தை மூதூர் உதவும் (ஐங். 15·1-3). தலைவர் ஊர், தாய் சாகும்படி பிறக்கும் நணடுகளையும் தாமீன்ற பிள்ளையைத் தின்னும் முதலைகளையும் உடையது (ஐங். 24:1, 2). ஊரிலுளள முதிர்ந்த மருதமரம நிற்கும் நீர்த்துறையிடத்து ஆய மகளிர் கேட்ப 'இனிப் புறத்தொழுக்கம் விருமபேன' என்று தலைவன் சூள் செய்தான் (ஐங். 31:3-4). 'தோழி, நம் ஊர்ப் பொய்கையில் பூத்த ஆம்பல்மலரின் பூந்துகள்போல் என் கண்கள் பொனனிறங் கொணடன' எனத் தலைவி கூறினாள் (ஐங். 34). 'தோழி, நம் ஊர்ப்பொய்கையிற் காணப்படும் ஆம்பல் மலரின் நார் உரிக்கப்பட்ட தண்டினது நிறம் போன்ற என் அழகு கெட்டது' எனத் தலைவி உரைத்தாள் (ஐங். 35). 'தோழி, மகிழநன யாம் அழப்பிரிந்து சென்று தன் கிழத்தியர் உறையும் ஊர்க்கண் தங்கினான் என்று நம் பாற் பண்பின்மை சுட்டி நகையாடுவர்' என அயற் பரத்தையி னுடைய பாங்காயினார் கேட்பப் பரத்தை கூறினாள் (ஐங்.40:1-3). தலைவன் ஊர், தானீன்ற தன் பிள்ளைகளையே தின்னும் முதலைகளோடு வெண்மையான மலர்களையும் கொண்ட நீர்நிலைகளை உடையது; அதனால் அவ்வூரையுடைய அவனும் தன் பொய்யை மெய்யென்று நம்பினோர் அழகு கெடச் செயயும் கொடுமையுடையவனாக இருக்கிறான் என்று தலைவி கூறினாள் (ஐங். 41). 'மகிழந, நின் ஊர் கூதிர்ப்பருவமாயின் குளிர்ந்த கலங்கல் நீரை வழங்கி வேனிற் பருவமாயின் நீலமணிபோலும் தெளிந்த நீரை வழங்கும் ஆற்றினால் அழகு பெறுகின்றது; என் கண்களோ எல்லாப் பருவத்தும் பசலை பூத்துள்ளன' என்பது தலைவி கூற்று (ஐங. 45). 'மகிழ்நனே, நின்தேர் இவ்வூரில் வாழும் பரத்தையர் பலரையும் இநதிரவிழாவின் பொருட்டு ஒருங்கு கூட்டினாற் போன்று கூட்டுதலைச் செய்தது; இனி எவ்வூர் செல்லுதற்கு இங்கு நிற்கின்றது' எனத் தலைவி கேட்டாள் (ஐங். 62). மருதப் பெருந்துறையில ஒருத்தி தலைவனோடு நீராட்டயர்ந்தனள்; அதனைக் கண்டோர் பலர்; அதனால் ஊர்முழுதும் அலரெழத் தொடங்கியது (ஐங். 75). மகிழ்நனை நோக்கி, 'இனி நீ நின் மனைக்குச் செல்லாதிருபபின், இந்தப் பெரிய ஊரின் கண் யாண்டும் அலரெழ நின்னொடு நீராடுவேன்' எனப் பரத்தை உரைத்தாள் (ஐங் 77). ஊரில் ஒழும் வளையலணிநத பரத்தையர் அனைவரும் தண்டுறை ஊரன் பெண்டுகளே எனப் பலரும் கூறுமாறு நீ என்னைப் பிரிநது செல்வாயாக' எனப் புறத்தொழுக்க முடைய தலைவனுக்குத் தலைவி கூறினாள் (ஐங். 83). கரிய கொம்பினை யுடைய புனிற்றா தன் கன்றிற்குப் பால் சுரந்து ஊட்டும் இயல்புடையது தலைவியின் தந்தை ஊர் (ஐங. 92). அழகிய நெற்றியை யுடைய தலைவியின் தந்தை ஊர், கழனிகளில் தாமரை மலரும் வளமுடையது; அஃது எருமைக் கடாக்கள் நாகுடன் உறைதற் கிடனான நீரோடை யுடைய மருத நிலததின் நடுவே யுள்ளது (ஐங. 94). தலைவன் ஊர்ந்து வரும் தேர்மணிக்குரலின் ஓசை, நம்மூர்ப் பெருங் கடலின்கண் வாழும் பறவைகளின் ஒலிபோன்று ஆனாது இசைக்கும் (ஐங். 102). நம்மூர்க்கண் இடையாமதது எம் பெருமாட்டியைக் காணத் தனியே வநத தலைவன் பெற்ற மைந்தனின் ஊர் எல்லா நலன்களும் உடையது எனத் தோழி செவிலிக்குக் கூறினாள் (ஐங். 104). புன்னைப் பூக்கள் நிறைந்த கடற்றுறைத் தலைவனை யாங்கள் தலைவன் என்று உறுதியாகக் கருதுகின்றோம்; இவ்வூரோ வேறொரு வகையாகக் கூறும்; தெய்வம் ஊரார் கூறும் வண்ணம் செய்து விடுமோ என உரைத்துத் தோழி அறத்தொடு நின்றாள் (ஐங். 110). தில்லை மரத்தாலாய வேலியை யுடைய இவ்வூரின்கண் பழிமொழி பிறவாதாயின் தலைவன் நட்புச் சிறந்ததே என வாயில் மறுக்கும் தோழி பாணனிடம் கூறினாள் (ஐங். 131). தலைவன் அருளுடையான் எனக் கூறிய பாணனிடம் தலைவன் என்பால அருளுந்திறத்தினாலன்றோ புன்னை நிறைந்த இவ்வூரில் பழிமொழி பரந்துள்ளது எனத் தலைவி குறிப்புமொழியால் கூறினாள் (ஐங். 132). 'பாணனே உன் ஊரில் திண்டேர்க் கொண்கனை விருமபிய மகளிர் தம் பண்டைய அழகை மீண்டும் பெறுவாரோ' எனத் தலைவி வினவினாள் (ஐங். 137). 'அன்பில்லாதன வாகிய கடுமொழிகளைக் கூறித் தலைவனை இந்த ஊரில் கொண்டுவந்து தராத பாணனே, நீ நற்குணம் உடையை அல்லை' எனத்தலைவி கூறினாள் (ஐங். 138). துறைவனொடு நான் எவ்வறத்தைச் செய்வேன; அவன் கொடுமையை நன்கு அறிந்திருந்தும் இவ்வூர் அவன்திறத்தில் பொய்பேசத் தலைப்பட்டுவிட்டது எனத் தலைவி வாயில் வேண்டிய தோழியிடம் கூறினாள் (ஐங். 154:3,4). நெய்தல்நிலத் தலைவனாகிய நம்பெருமான் விரைந்து மணந்து கொள்வானாயின் ஆரவாரமுடைய இவ்வூரின்கண்ணே இருந்து வாழ்தல் இனிதாகும் எனபது தலைவி கூற்று (ஐங். 181:4,5). கடலைத் தனக்கு அணிகலனாகக் கொண்ட தலைவன் ஊர், குருகு கழியிலுள்ள நெய்தல் மலரின்

கண் தங்காது கரைக்கண் உள்ள சோலையில் தங் குதற் கிடமானது (ஐங். 184). மலைநாடன் வரைதல் வேண்டி ஏறி வநத தேரிற்பூட்டிய குதிரைகள், நம் மூர்ப் பார்ப்பனச் சிறுவனைப் போன்று குடுமித் தலையை உடையன (ஐங். 202). நம்பொருட்டுத் தலைவன் அடுத்தடுத்து நம்மூர் வந்து அளிசெய்வன்; இப்பொழுது வாராமையால நுதல பசந்தது என் பது தலைவி கூற்று (ஐங். 222). நெடுமலை நாடன் இரநது குறைமுடியாமல் நம்மூரினினறும் போய் விடுவானாயின் நம் இனிய உயிரின் நிலைமை யாதாகுமோ, அறியேன எனத் தோழி தமர்க்கு அறத்தொடு நின்றாள் (ஐங். 228). 'அம்பல கூறும் பெண்டிரே யன்றி அன்னையும் நமது களவொழுக் கத்தை அறிந்தனன்; அலரும் பரந்தது; இனி ஈண்டு உறைதல் துன்பந் தருவதாகும்; ஆதலால் நும்மூர் செல்வோம புறப்படுக' என்று உடன் போக்கு நயந்த தோழி தலைவற்குக் கூறி வரைவு கடாயினாள (ஐங். 236). நாங்களே உன்னை வந்து காண்பது முறை யில்லை எனினும் காமமானது செலுத்துதலானே வர நேருமாயின் உம்மூர் ஓங்கித் தோன்றும உயர்மலைக்கு எத்திசைக்கண் உள்ளது என்பதைக் கூறுவாயாக எனத்தோழி தலைவனை வினவினாள் (ஐங். 237). ஊரில உள்ள முதுவேலன் பொய்கூறாதவன் என்பது தோழி கூற்று (ஐங். 245: 1). 'நெடிய மலைகளையும் தோட்டங்களையும் உடைய நும்மூரினின்று வரும் அருவிநீரைக் கண டாலும் நின் கொடுமை நினைந்து தலைவி அழு வாள' எனத் தோழி வரையாது வந்தொழுகும தலைவற்குக் கூறினாள் (ஐங். 251:3,4). மலைகளின் நடுவேயுள்ளது எம்மூர்; மேலும் அஃது அலர் தூற்றும் பெண்டிர் வாழும் இடத்தையும் உடையது என ததோழி தலைவனிடம் நவின்றாள் (ஐங்.279:4,5). 'மூங்கில் போன்ற தோள்களையும் தழையாடை அசையும் அல்குலினையும் உடைய என காதலி யுறையும் சிறநத நல்ல ஊர் பக்கமலையின்கண் உள்ளது எனத் தலைவன் கூறினான் (ஐங். 291). அசைந்த நடையினை உடைய கொடிச்சி உள்ள ஊர் மழைவர வறிந்து மயிலாடும் பக்கமலையில் உள்ளது (ஐங். 298: 1, 2). மூங்கிற்புதரில் தோன்றும் தீப்போல ஊரில் அலர்மொழி பரவியது (ஐங். 340: 4). தலைவி தலைவனின் சொல்லை நம்பிப் பிறர் பழியை யாண்டும் தூற்றி ஆரவாரம் செய்யும் இவ்வூரில் அலர் உண்டாகும்படி தலைவனுடன் சென்றாள் (ஐங். 372). 'அந்தணீர், நீர் வழியிடை எம்மூரின்கண் செல்லுங்கால் என் ஆயத்தாரிடம் உம்தோழி புதுநலத்துடன் பாலையைக் கடந்து சென்றனள் என்று கூறுங்கள்' எனத் தலைவி வேண்டல் (ஐங். 384). 'மடந்தையே, நல்ல மலைகள் பொருந்திய சிறப்பினை யுடைய நம்மூரின்கண் பகல்விருந்தாக நம் மனைக்கண் புகுவோம்' எனச் சுரத்து நடநது அயர்ந்த தலைவிக்குத் தலைவன் கூறினான் (ஐங். 396: 3-5). 'நீ உடன்போக்கிற் சென்ற போது வழித்துன்பம் கருதி வருந்திய என்னை விடவும் நமமூர் மிக வருந்தியது' என்று தோழி மீணட தலைவியிடம் கூறினாள் (ஐங். 398: 3-5). 'ஞாயிறும் மறைந்தது; அண்மையில எம்மூ ரல்லது வேறூரில்லை; அதனால் இரவில் தங்கிச் செல்வாயாக' எனக் கணடோர் தலைவனிடம் கூறினர் (ஐங். இ. 5: 1-3). 'மலைகள் வெம்பிய கொடிய சுரததுவழி நீ தனியே செல்ல என்னைக கைவிட்டிருத்தல் இவ்வூர்க்குச் சிரிக்கத் தக்க செய லாகும்' என்று தலைவனிடம் தலைவி கூறினாள் (கலி. 23:3-5). மனம் விரும்பிய கணவரால் நலத்தை நுகர்ந்து விடப்பட்ட மகளிர் குடியிருப்போர் போகிய பாழூரை ஒப்பர். (கலி. 23:10, 11). நம் அழகு கெட்டமை கணடு மலை மேலே மயில் ஆரவாரித்து ஆடும்படியாகவும் ஊரி லுள்ளோர் ஆரவாரித்து அலர் தூற்றும்படியாகவும் நம் தலை வர் நம்மை மறந்தாலும திருப்பரங குன்றத்து முருகன் விழாவுக்கு வருவாரன்றோ எனத் தலை வன் வரவுகண்ட தோழி கூறினாள் (கலி. 27: 13-16). 'தலைவி குறிதத இடத்து நீ வரின் நின்னைக் கண்டு விலங்கு முதலியன அஞ்சி ஓடுகின்ற ஓசை யால் இவ்வூர் புலி வநததெனறு கருதும்' எனத் தலைவனிடம் இரவுக்குறி அச்சங் கூறித் தோழி வரைவு கடாயினாள (கலி. 52: 15-18). ஊர் அலா தூற்றுகையினாலே தலைவியின் நெறறி அழகு கெட்டுப் பீர்க்கம்பூ நிறததைக் கொண்டது (கலி. 53: 14, 15). ஊரிடத்தே இளமரக்கா இருந்தது (கலி. 56: 1). 'பொனனாற் செய்த குழையை யுடை யாய், காமநோய் மிகின் யான் வருந்துகினற நிலை யைப போக்கி இவ்வூர் மனறத்தினகண் மடலேறி உன்னிடத்துப் பழியை உண்டாக்குவேன' எனக் கைக்கிளைத் தலைவ னொருவன் தலைவியிடம் கூறினான் (கலி. 58:21-23). 'மாட்சிமையற்ற இவ்வூ ரில் இனி அம்பல் அலர்க' வெனத் தோழியிடத்துக் குறைநேர்ந்த தலைவி கூறினாள் (கலி. 60:28). 'நீ அருளாயாயின் நாணமின்மையால் தலைவன் பல ரும் சிரித்து இகழ மடன்மா ஏறி ஆரவாரம் உடைய ஊரின்கண் வருவானாம்' எனத் தோழி தலைவி யிடம் கூறிக் குறை நயப்பித்தாள் (கலி. 61:22-24). நேற்று இரவு நிகழ்ந்த நகைப்புக் குரிய செயல ஊரெல்லாம் கொணடாடுதற்குப் பொருந்தியதா கும் எனத் தோழி தலைவியிடம் கூறுதல் (கலி. 65: 1,2). 'நீ பெண்பாற் பிசாசு; நான் ஆணபாற் பிசாசு; எனக்கு அருள் செய்யாது என்னை வருத்

துவாயானால இவ்வூரில நீபெறும் பலியைப் பெறா மல் நான எடுததுக கொளவேன' என முடமான முதிாநத பாா்பபான் குறியிடததுச்செல்லும தலை வியிடம கூறினான (கலி. 65:16-18). நம் ஊரிலுள்ள பெண்டிாகளெல்லாம இபபடித் துன்பம் தருவதே வாழககையாகக கொணட முதுபார்ப்பானின் செயல் நமமை நம் தலைவனை நாம் கணடு மகிழ முடியாமற் செயததோடு பெருங் கூத்தாகவும் அமைந்தது எனபது தோழி கூற்று (கலி. 65:26-29). கருங்குவளை மலரை விறபவா தலையில் சுமந்து செலலும பூவிறறங்கி ஊாபுகுநத ,வண்டுகளை யானையின மதத்தில் படிநதிருநத வண்டுகள் வர வேறறு விருந்தளித்தன (கலி. 66.1-4). ஊரன நமக் குப பறறுக கோடு அல்லன் எனச சொல்லும் மாறு பட்ட கருத்துடைய பரததையர் ஓர் ஊரில் குடி யேறற வேணடுவாராயத திரணடிருநதனர் (கலி.68: 6,7). பூணகளைத் திருததியும புனலாடுங்கால புறம் நினறு காத்தும தொய்யில் எழுதியும நம சிற்றி லிலே வநது ஏவியதைச செயதும் கூட்டததை நினைநது வருநதுகின்ற தலைவனிடத்தே கூட்டத் தை யுடையவள இவள என ஊரார் கூறுவது உண்மையோ எனத தோழி தலைவியைக் கேட்ட னள் (கலி. 76·1-5). 'தோழியே, நின்னைத் தெளி விததல அரிது, நம்முடைய வதுவையின்கண் சுற்றத் தாரை யெல்லாம் ஒனறு சேர்க்கும காரியததை இனறு இவ்வூர் செயயவிரும்புமாயின் அதற்கு நான் செயயக கடவது என்' எனத் தலைவி கூறினாள் (கலி. 76.19-22). எம் கூநதலைத் தீண்டுதற்கு இவன என்ன உரிமையுடையவன என நெஞ்சொடு கூறிப் பின்னர், இதுவும் நீ ஊரையாளும் தன்மைக் கொத்த கொடுமையுடையது எனத் தலைவனுடன் ஊடும் தலைவி கூறினாள் (கலி. 89:1,2). 'தொழுவி னுள் தழுவிக் கொண்ட ஏறெல்லாம் மேயும் நிலத்தே போன பின்னர் அழகினை யுடைய ஆய்ச்சியரும ஆயரும் வளப்பத்தினை உடைய ஊரிடத்தே குரவையாடுவர் (கலி. 104:60-62). 'தோழி, யாய் கணுக்கள் பொருந்திய கோலால் எனனை வருததியதற்கு இவ்வூர் மலரணி கண்ணிப் பொதுவனோடு கூட்டம் உணடு என்று கருதி அலர் செயதுவிட்டது; இதனால் நமக்கு மகிழ்ச்சியே' எனத் தலைவி கூறினாள் (கலி. 105:62-65). 'கடைந்த மோரைக கையால அலைக்கும் ஓசை கேட்கும அணமையில ஊர் உள்ளமையால் வெயில் வெப் பம் நீங்கச் சுனையில் ஆடி மலர்பறித்து என்னு டன் தனியே தங்கிபபின் உம் ஊர்க்குச் செல்வா யாக' என அகப்புறத் தலைவன் அத்தகு தலைவி யிடம் கூறினான் (கலி. 108:35-44). 'தலையில் மோாப்பானையுடன் அழகாலும் இளமையாலும் மிகுதியையுடையளாய்ப் பெரிய ஊர்களையும் சிறிய ஊர்களையும் ஆரவாரத்தை உண்டாக்குவாள் போல மோரொடு வந்தவளழகை நெஞ்சே, நீ காணபாயாக' என வினைவல பாங்கிற்றலைவன் வினைவலபாங்கிற் றலைவியைக் கண்டு கூறினான் (கலி. 109·5-8). தனனை நோக்கினார்க் கெல்லாம் வருத்தம் செய்யும் இயல்பினள் என்று கருதி தலைவியைக் கிளையொடும் போகச் செய்து ஊர்ப்பெணடிர் தம கொழுநரைப புறம் போகா மல் காத்தனர் (கலி. 109 22-26). ஊரார் அலரை உயர்த்துக் கூப்பிடும்படி நீ இவளைக் கைவிடுகை யினாலே மிகுகினற தன் காமநோயைத தலைவி எனனையும் உட்பட மறைத்தாள எனத் தோழி பொருள்வயிற் பிரிந்து வநத தலைவனை எதிரப் பட்டுச சொனனாள (கலி. 124:5,6). 'மடலேறிய தலைவன், வளப்பம் பொருந்திய ஊரின் மறுகின கண்ணே செனறு 'இவனொருத்தன் இவளைப் பாடும பாடலைக் கேட்பீராக' எனப் பாடத் தொடங்கினான (கலி. 138:10,11). இனிய மென்மை யினை உடையாளின் நோய் செய்யும் நோக்கில் அகப்பட்ட என்னுடைய நெஞ்சிடத்துக் காம நோயைக் கண்ணாற் கண்டும் இவ்வூரினுள்ளார் அதனைத் தீர்க்கமாட்டாராயினும் கணணோட்ட மேனும் செய்தலிலர் என்று மடலேறுவதாகக் கூறும் தலைவன் கண்டார்ககுக் கூறினான் (கலி. 140:18-20). பூப்போலுங கண்ணையும் ஐம்பாலி னையும் உடையாள் செய்த இக்காம நோயின் வருததத்தை அறிந்திருந்தும் இவ்வூரிலுள்ளார் தீர்ப்பதோர் உபாயம் அறிகின்றிலர் என மடற் கூற்றுக் கூறும் தலைவன் கண்டார்க்குக் கூறி னான (கலி. 140:22-24). அழகிய முறுவலுடையாள் செயத இக்காமநோயை அறிந்திருந்தும் இவ்வூரி லுள்ளார் அதனைத் தீர்த்தலாற்றா ராயினும் ஒரு தண்ணளி செய்தலையும அறிகினறிலர் என மடலேறுவேன் எனற தலைவன் கண்டார்க்குக் கூறினான் (கலி. 140:26-28). 'நீரில் அலர்ந்த நீல மென்று தலைவர் புகழ, அநநாளில் அவர்க்குப் பெரிய வருத்தத்தைச் செய்த என கண்கள் இப் பொழுது பீர்க்கம்பூப் போலப் பசந்தன; அதனை யும் எனவருத்தத்தையும் கண்டு அருளின்மையால் அவரை எனக்குக் காட்டாமல் ஊர் அலர் தூற்றும்' எனத் தலைவி வருநதினாள் (கலி. 143: 48-51). 'கடலே, ஊரைப் பற்றிச் சூழ்ந்து எரியும் சுடுந்தீயில் நீர்·சொரிந்தால் அதன் வேகம் தணிந்து விடும்; ஆனால் இரக்கமற்ற என் கணவன் எனது நெஞ்சிலே மூட்டிய காமத்தீ நீரினுள்ளே சென்றாலும் என்னைச் சுடுகின்றதே' எனத் தலைவி புலம்பினாள் (கலி. 144:59-62). காமநோ

யால் புலம்பும் தலைவி, 'பெரிய ஊரின் தெருவிலே, யான் ஊறுகின்ற வருத்தத்திற்குத் தீர்வு காணாமல் பெரிய உறக்கத்தைக் கொள்ளக் கருதிய சான்றீரே' என விளித்து அவரைக் காக்குமாறு வேண்டுகின்றாள் (கலி. 146:42). 'என்னைத் தெளிவித்துக் கூடினவன் காட்டிடத்துச் சென்றானோ, அன்பின்மை செய்து இவ்வூர்க்கண்ணே யுள்ளானோ அறியேன்; அவன் எவ்விடத்துள்ளான் என்பதைக் காட்டுவாயாக' எனத் தலைவி ஞாயிற்றை வினவினாள் (கலி. 147·36-41) வையை வெள்ளம் அணைகளையும் கரைகளையும் உடைப்ப அவற்றை அடைப்பதற்குக் கரைகாப்பார் உரையாகிய காவலோடே பறையொலியெழ அவற்றைக் கேட்டு ஊர் கிளர்ந்தெழுந்தது (பரி 6:23, 24). வையை வெள்ளம் கண்ட மக்கள் ஒரு பக்கத்தே ஊரைக் கடல் பெருகிவந்து சுற்றிக் கொண்டதென ஆரவாரித்தனர் (பரி. 7.29). ஊரெல்லாம் புதுப்புனல் ஆடுங்காலத்துத் தலைவன் ஊடல் கொண்ட காதலியின் காலில் விழுந்து வணங்க அவன் தலையை மிதித்த பின்னும் அவளுக்கு வெகுளி தீரவில்லை (பரி. 7.74-76). தலைவியரால் தூதாக ஏவப்பட்டுத் தலைவரோடு மீண்ட வண்டினக்கூட்டம் முரலவது அத்தலைவியர் காதலை மதிலுடை மூதூர்க்கண் வெளிப்படச் செய்தது (பரி. 8.36, 37). காமம் மிக்கெழ அதனானாகிய களிப்புப் புலப்படவும் ஊரிலுள்ளாரை மிகவும் அஞ்சி அதனைக் காதலர் ஒளிக்க முயன்றனர் (பரி. 10:63, 64). காதலர் புனலாடிய உரை மூதூரில் மலிந்தது (பரி. 12:94). வையையால் அழுங்கல் மூதூரின்கண் வாழ்வார்க்கு இன்பமும் கவினும் நன்பல உளவாயின; அதனால் இவ்வுலகு அகன்ற இடத்தை யுடைத்தாயினும் வையையின் புகழை அடக்க முடியாது (பரி. 12.100-102). வையையின் இருகரையிலும் உள்ள பொழிலின் மணத்திற்கு மேலாக அவ்வையையினது வெம்மையாலே பரவுதலையுடைய வெங்கார் மணத்தை நுகர்ந்து குதுகுதுப்பனவாகிய ஊர்கள் தோறும் புதுநீர்வரவை யுணர்த்தப் பறை முழங்கியது (பரி. 20:10-14). வையையாறு புதுநீர் வருகையால் பொலிவுற்றது என்று கண்டோர் கூறக் கேட்ட ஊர், புதுநீராடல் இன்பத்தை விரும்பித் தூசிப்படை போல நெருங்கி விரைந்தது (பரி. தி. 2:5, 6). புதுப்புனலில் நீராட வையை நோக்கிச் செல்பவரே அல்லது ஊர் நோக்கித் திரும்பிப் போவார் ஒருவரும் இலர் (பரி. தி. 2:23). சீருடையதாகிய மதுரை மாயோன் கொப்பூழில் மலர்ந்த தாமரைமலரை ஒப்ப விளங்கியது (பரி. தி. 7:1, 2).

2. தெரு. இரவுக்குறிக்கண் தலைவன் தலைவியைக் கண்டு கூடி இன்புறுதற்குத் திருப்பரங்குன்றம் பொருந்திய இடம் என்பதைக் கூடாதார்க்குக் கூறலையை மதுரை ஊரில் - தெருவில்-பரந்தது (பரி. 6: 54, 56).

**ஊர்க்குரீஇ** - ஊர்க்குருவி. ஊரினுள் இருக்கும் குரீஇயின் சேவல் சூல்முதிர்ந்த பெண் பறவைக்குக் கரும்பின் வெண்பூவைக் கோதி வந்து ஈனில் அமைத்துத் தரும் (குறு. 85 1,2). ஊர்க்குரீஇயின் முட்டையை யுடைத்தாற் போன்ற பெரிய அரும்பு மலர்ந்த புன்னை நிறைந்தது சோலை (நற். 231: 6,7).

**ஊர்காப்பாளர்** – ஊரைக்காப்பவர். ஊர்காப்பாளர் - ஊரைக்காப்பவர் - நுண்மையுடைய காவல் பற்றிய நூலின் வழியைத் தப்பாத நுண்ணிய அறிவுடையவர் (மது. 645–647).

**ஊர்கொளல்** - வட்டமாகச் சூழ்தல். ஆர்கள் சூழ்ந்த குட்டினை உடைய உருளைக்குக் கூதிர்க்காலத்தை யுடைய வானிடத்தே வடிவு நிறைதலை யுடைய வெள்ளிய மதி பால போலும் கிரணங்களைப் பரப்பி ஊர்கொளல்–வட்டமாகச்சூழ்தல் - உவமை (சிறு. 250-253). 'இவள் தந்தையின் காவலர் சோர்வுற்று இருக்கும் செவ்வியினை மறைய உணர்ந்து இரவில் வருவாயாக; வேங்கை மரங்களும் ஒளிய பூங்கொத்துக்கள் நன்கு விரியப் பெற்றன; மிக்க வெண்மையையுடைய திங்களும் ஊர் கொண்டது; ஆதலால் இரவில் வருதல் நினக்கு எளிது' எனத் தோழி தலைவற்குக் கூறினாள் (அகம். 2:14-17).

**ஊர்தி** - ஊரப்படுவது (வாகனம்). தாழ்சடைப் பொலிந்த அருந்தவத்தோனாகிய சிவபெருமானுக்கு ஊர்தி - வாகனம் - வாலிய வெள்ளேறாகும் (புறம். 1:3,13). புலவர் பாடும் புகழுடையவர், தாம் செய்யும் நல்வினையை முடித்து, வானத்தில் பாகனாற் செலுத்தப் பெறாத ஊர்தியைப் பொருந்துவர் என்று அறிவுடையார் சொல்லுவர் (புறம். 27.7-9). பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன், தான் கருதியது முடிக்கும் ஆற்றலால், மயிலை ஊர்தியாக உடைய செய்யோனாம் முருகனை ஒத்துள்ளான் என்று மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாராட்டுவர் (புறம். 56:8,14). 'ஒரு பகட்டினை யான் வேண்டி வந்தேன்' என்று புலவர் கூறுவதற்கு முன்னரே, தாமான் தோன்றிக்கோன், அவருக்கு விசும்பில் மீன்பூத்தாற் போன்ற அழகிய நிறத்தையுடைய பல ஆனிரைகளை ஊர்தியோடு நல்கினான் (புறம். 399:28-32). தலைவன் கால் கிளர்ந்தது போன்ற ஊர்தியிற் சென்றான் (பதி. தி. 1:6). அரசன் போர்வினையை வெற்றியுற ஆக்கினான்; இருசேனைகளும் ஒன்றென முரசறையப் பட்டன. அதனால் முந்திச் செல்லும் நின ஊர்தி

பின் னிலலாதவாறு விரைநது செலுத்துவாயாக என்று வினைமுற்றி மீளும் தலைமகன் தேர்ப்பாக னிடம் கூறினான் (அகம். 44:1-6). ஒற்றை உருள் பூணட ஊர்தியுடைய பரிதியஞ்செல்வன் குளிர்ந்த பொழிலில் பகல் முழுவதும் போக்கி மாலையில் மேற்கிலுள்ள பெரிய மலையில் மறைந்தான் (அகம். 360:1-3). ஏற்றினை ஊர்தியாக உடையவனை (சிவபெருமானை) ஒத்த விழுமிய பொருள் தேடத் தலைவன் சென்றான் (கலி. 150:12,13). செங்கண் மால், ஆயிரம் தலையுடைய அரவினை வாயின்கட் கொண்ட சேவலை (கருடனை) ஊர்தியாக உடைய வர் (பரி. 3:59,60).

2. நடை. வயலைக் கொடியைப் போன்று வாடிய இடையினையும் வருத்தத்தால ஊர்வது போன்ற ஊர்தியினையும் - நடையினையும்-இளமையினையு முடைய பார்ப்பான் இரவில் தூது செல்லுதல் (புறம். 305:1-3).

3. கட்டில். 'சிங்கக்கால் மேல் தைத்த ஊர்தியில்-கட்டிலில்-மெல்லிய படுக்கையில உறங்கும் நீ, என் னொடு வந்தால், காட்டுவழியில் உலவும் உண்மை யான சிங்கத்தின் குரலைக் கேட்டு அஞ்சுவை அல்லையோ' எனறு தலைவன் தலைவியிடம் கூறல் (கலி. 13:14-17).

**ஊர்முகம்** - படைகள் பொரும் இடம். 'போராக்கத்தை விரும்பிய படைத தலைவராகிய சுற்றததோடு நின் னுடைய சேனை ஊர்முகததே-படைகள் பொரும் இடத்தே-தங்காதொழிவதாக' என்று களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலைக் காப்பியாற்றுக் காப் பியனார் அறிவுறுத்தினார் (பதி. 40:1,2).

**ஊராண்மை** - ஊரையாளுந்தன்மை. 'என் கூந்தலைத் தொடுதற்கு இவன் என்ன தொடர்புடையவன்' என்று நெஞ்சோடு கூறிப் பின்னர், 'இவ்வாறு கூந்தலைப் பிடிப்பது, பாதுகாத்தல் இன்றிப் பாது காப்பவரைப் போல நடிப்பது ஊராண்மைக்கு-ஊரை ஆளுந் தன்மைக்கு - பொருந்திய கொடு மையை உடையது' என்று தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 89:1,2).

**ஊழ்** - முறை. 'உன் படைமக்கள் வறுமை நீங்கி, நின் பால் வருவார்க்கு உதவும் நட்பொடு கூடிய குண முடைய ஊழினை-முறையினை-உடையராகச் செய் யுமாறு நின் தொழில் விளங்குக' என்று சோழன் நலங்கிள்ளிபால் உறையூர் முதுகண்ணன் சாத்த னார் கூறினார் (புறம். 29:17,20-22). பருத்திப்பெண் டிரின் பஞ்சு போன்ற கொழுவிய இறைச்சித் துண் டுகளைக் கள்ளினை வார்த்த மணடையோடு ஊழாக ஒன்றுக்கொன்று மாறுபட உண்ணும் பொருட்டு நின்னைக் காண வந்தேன் என்று தேர் வண்மலையனை வடமவண்ணக்கன் பெருஞ்சாத்த னார் பாடினார் (புறம். 125:1-4). அறமில்லாத கூற் றம் வெளிமானின் உயிர்கொள்ளத் துணிந்தபோது, ஊழின் மார்பில் அறைந்து கொண்ட மகளிர் கையிலணிநத வளையல்களின் முறிகள் வாழைப் பூப் போலச் சிதறின (புறம். 237:9-11). மலைவழி களிற் செல்லுங்கால் சிலவிடங்களில், ஊழ் இறநது (முற்காலம அடிப்பட்டுப் போந்த முறைமையைக் கடந்து) நெடுந் தூரம் மணம் வீசும் மலரும் உண்டவர் மறநது உயிர் வாழ்தல் ஆற்றாத பழங்களும் உளவாகும். (மலை. 262,263). நீர்நிலையில் வாளைமீனை உண வாகப் பெற்றுண்ட நீர்நாய் அங்கே உறையும் பாம் புகளை வரால என மயங்கி மாறுகொள்ளும் முத லையோடு ஊழ்மாறுபட்டு நீங்கும் (அகம 283:1-4). உழுதலால் ஒய்ந்து நடக்கும் காளையின ஊழ் கொம்பு (தலையில முறையாக முளைத்த கொமபு) போன் றது பொரி அரையினை யுடைய கவைத்த முள்ளி னைக் கொண்ட கள்ளிமரம். (புறம். 322:1,2). 'மன் றத்தின் ஒரு பகுதியைப் பள்ளியாகக் கொண்டு, உழுதுண்போர் மனையின்கண் சென்று ஊழின (முறையாக) இரந்துண்ணும வருத்தம் பொருந்திய வாழ்வு' என்று முடமோசியார் ஆய்அண்டிரனைப் பாடுங்கால் தமது வாழ்வு பற்றிக் குறிபபிட்டார். (புறம். 375:3,6,7). பெரியவ ராயினும் சிறியவரா யினும் வருவோரை இருகரையிலும் ஊழ்மாறு உய்க் கும் அறத்துறை அம்பி போன்றவன் கரும்பனூர் கிழான் (புறம். 381:23-26). களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் ஊழின் ஆகிய உயர்ந்த பெரிய சிறப்பினை யுடைய பூழி நாட்டின் மீது படை யெடுத்து அதனைத் தன்னாட்டொடு தழுவிக்கொண் டான் (பதி. ப. 4:5,6). சோழன் கரிகாற்பெருவளத் தான், இரும்புக் காழில் கோத்துச் சுட்டு அளித்த தசைகளைப் பொருநர் தம் வாயிலிட்டுச் சூடு ஆறுவதற்காக அவற்றை ஊழின் ஊழின் (முறை முறையாக) வாயின் இடத்திலும் வலத்திலும் சேர்த்து உண்டனர் (பொரு. 105,106). தலைவியும் தோழியும மலைபபக்கத்தில் பிரம்பாற் பின்னின பரண் ஏறித் தழல், தட்டை, குளிர முதலிய கிளியோட்டும் கருவிகளை ஊழ் ஊழ் கொண்டு கிளிகளை ஓட்டி னர் (குறி. 43,44). தலைவன் இரவில் வரும் வழியில் உள்ள துன்பந் தருமவற்றுள் ஊழடிமுட்டமும் (முறையடிப்பாடாய் பின்பு வழிமுட்டாயிருக்கும் இடமும்) ஒன்றாகும் (குறி. 258). பகைவர் காவலுட்பட்டிருந்த சோழன் கரிகாற் பெருவளத்தான், களிறு தான் அகப்பட்ட குழியின் கரையினை இடித்துத் தூர்த் துத் தன் பிடியின்பாற் சென்றாற்போலப் பகைவர் தம் காவலாகிய வாட்படையை வென்று ஓட்டி

வெளிப்போந்து, தன்உருகெழுதாயத்தினை ஊழின் எய்தினான் (பட். 222-227). காம்பில் பொருந்திய வேல் யானையைக் குத்தியதுபோல, ஊழாக மலர் தலை ஒழிந்த உயர்ந்த வாழைப்பூ மலையைத் தீண்டி விளங்கியது (மலை. 129-131). புதிய மக்கள் கணணால் நோக்கினாலும் அவர்தம் தலை நடுங்கு மாறு நோய் செய்யும் பக்கமலையிடத்தே குறியன வும் நெடியனவுமாகிய குவடுகளை ஊழ்படக் கடந்து கூத்தர் சென்றனர் (மலை. 288,289). புலி பாய்ந்த மையால் இறநத தனது பெண்மானை நினைத்து நின்று ஆணமான் கூப்பிடும் காட்டுவழியைக் கூத்தர் ஊழ்படக் கடந்து சென்றனர் (மலை. 404, 405). இளவேனிற் காலத்தில், மாவின் தாதினைக் கோதிய மணிநிற இருங்குயில், ஒலிக்கும் தனது நாவின குரலால நாள்தோறும் நடுநிலைமேவிச சில கூறுவனபோல ஊழ கொண்டு கூவும் (அகம். 25.6-8). 'நெஞ்சமே தலைவியைப் பிரிந்து செல்லுதலை மறந்து, ஏந்து முலைப்பரப்பு விமமவும், அணிகள் ஒலிக்கவும் பல்லூழ் தழுவி நாடோறும் தலைவி இல்லறத் தொழிலொடு மகிழுமாறு நினைப்பா யாக' என்று தலைவன் தன் நெஞ்சொடு கூறி னான் (அகம். 51:11-14). 'வாடைக்காலத்தே இரவில் நெடுங்காலம் புறத்தே நின்று கொண்டிருக்கும் நிலை, இளமுலைகள் அழுந்த, பல்லூழ் தொடி யணிந்த கைவளைந்து புறத்தினைச் சுற்றிக் கொள்ளத் தலைவன் மார்பினை முயங்குதலினும் இனிதாகின்றது' என்று சேட்படுத்து வந்த தலை மகற்குத் தலைமகள் கூறினாள் (அகம்.58:7-9, 11-14). ஞாயிற்றின வெப்பம் விளங்கிப் பரக்கச் சுழன்று வீசும் மேல்காற்றினால் முருங்கையின் ஊழ் கழி பன்மலர் கார் காலத்து ஆலங்கட்டி போலப் பரந்து உதிரும் (அகம். 101:13-16). எவ்வி இறந்த போர்க்களத்தில், பாணர் தம் யாழின் கோடுகளை ஒடித்துப் போட்டுள்ளமை போலக் கொன்றையின் ஊழுறு விளை நெற்றுக்கள் பாறை மீது பரந்து கிடநதன (அகம். 115:8-12). நெடிய அடியினையுடைய மாமரத்தின் ஊழுறு வெண் பழத்தினை யாமை தன் பார்ப்பொடு கவர்ந்துண் ணும் (அகம். 117:15, 16). ஆண்மானின் முறுக்கிய கொம்பு, வாழையின் பெரிய பூ மடல்கள் ஊழின் முற்றி உதிர்ந்து எஞ்சிய குவிந்த மொட்டும் நீங்கிய குலையினைப் போன்றிருக்கும் (அகம். 134:9-11). 'தந்தையின் அகன்ற இடமுடைய மாளிகையில், ஊழ் அடியிட்டு நடந்தாலும் தலைவி வருந்து வாள்' என்று மகட்போக்கிய செவிலித்தாய் கூறி னாள் (அகம். 145:17, 18). மழைபெய்யும் மேகம் பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானத் துப் போரில் வென்று உயர்த்திய வேலினும் பல் லூழ் மின்னி வானில் இடியினைத் தோற்றுவித்தது (அகம. 175:10-13). பரதநை தனது வளையணிந்த முனகையினால் பிணித்த பிணிப்பினை விடுத்துத் தலைவன் சென்ற அளவில் அவள், தன் முகத்து அழகுகெட அழுது ஏக்கமுற்றுத் தேமலையும் பல் லூழ் நொடித்தலால் சிவந்த மெல் விரலினையும் கடித்த எயிற்றினையும் உடையவளாய்த் தலை வனைக் காணடற்குத் தேடிச் சென்றாள் (அகம். 176:17,22-27). மூங்கில் வேரினைப் போன்ற பருத்த மயிரினையுடைய பன்றி, சேப்பங் கிழங்கி னைத் தின்று பெண்யானை கிடந்தாற் போன்ற கல்லின்மேல், வருத்த மின்றி ஊழ் பட இறங்கி வந்தது (அகம -178:2, 4-6). பனிபபருவம் வநத போது, ஊழுறு செங்காந்தளின ஒண்பூக்கள் மலர்ந்தன (அகம். 217:10). 'தலைவியின வருத்தம் தலைவனால் வந்தது என்பதனை அறியாதவளாய் அன்னை வெறியாட்டயர்தற்கு முறபடுகின்றாள்; அதறகுமுன் நாம் நம் பண்டைக் கவின பெறத் தலைவன மார்பினை, அரும்பி வருகின்ற இள முலை மூழ்குமாறு பலலூழ தழுவுவது தக்கது ஆகும்' என்று தலைவன் சிறைப் புறத்தா னாகத் தோழி தலைவியிடம் கூறினாள் (அகம். 242 : 7-17). தலைவி தலைவனோடு உடன் போக்கு மேவிய பின்னர், வளையலைச செறித்த முனகையில ஊழபட ஏநதி மங்கையர் பாராட்டி ஊட்டவும் கிளிகள அவளது பிரிவினால இனிய பாலை உணணாதிருந்தன (அகம். 369:2-4). எறும் பின் வளைகளிலுள்ள புல்லரிசியைக் கொணடு உண்ணும் மறவர், பலலூழ் புகுந்து ஆநிரை களைக கவர்ந்தமையால் வளமுற்ற ஊரின் குடிகள நீங்கிய இடமான பாழ்பட்ட மனறத்தில் நரை மூதாளர் சூதாடலாகிய வல்லுப்போர் புரிந்தனர் (அகம். 377:3-8). திரிமரந் தேய்த்த, சுளகினால் கொழிக்கப் பெற்ற பூண்மாண்ட உலக்கையால ஊழில் குற்றித் தீட்டப் பெற்ற அரிசியைச் சுனை நீருடன் அடுப்பிலேற்றி இடையர் சமைத்தனர் (அகம். 393:8-16). கடற்கரைச் சோலையில, விழுது தாழ்ந்த தாழையின் ஊழுறு கொழுமுகை, நாரை கோதும் சிறகினைப் போல மடலகள் விரிந்து மலரும் (குறு. 228:1,2). 'இருள்கெட மின்னித் தண துளி சிதறி ஊழின் (முறைமையால்) முரசம் போல் முழங்கி இடித்துப் பெய்வாயாக' எனத் தலை வியைக் கூடிய தலைவன் மழையினை வாழ்த் தினான் (குறு. 270:1-4). 'புல்லிய புறத்தை யுடைய பெண்புறாவை இனிய ஆண்புறா பலலூழ் அழைத்து இமைப் பொழுதில் எததகைய இன பத்தை உடையதாகின்றது' என்று பருவங் கண்டு தலைவி வன்புறை எதிரழிநது தோழியிடம் கூறி

னாள (குறு. 285:4-6). ஆம்பலின் தழையுடை தேமலையுடைய தொடையில ஊழாக மாறிமாறி அசையப பொனனாற் செயத அணிகலனகளை அணிநத பரததை தலைவனைக காணும் பொருட்டு வருவாள் எனறு பரத்தையிற் பிரிநதுவநத தலைவனுககு வாயிலாக வநத தோழியிடம் தலைவி கூறினாள் (குறு. 293.5-8). காரப்பருவத்தில மேகம, கடலின நீர சிறிதென்னுமாறு உண்டு நொசசியும் முல்லையும ஊழபட அரும்பவிழந்து மலருமாறு பெயதது (நற. 115 : 4 – 7). ஊழின் இடி முழஙகாத, குறறந் தீர்நத மழையொடு சிறுசெந் நாவுடைய மணியினது ஓசை ஊரினகண்ணே ஒலிக்குமாறு ஆனிரையைச் செலுத்திக கோவலர் வர மாலைப் பொழுது விரைநது வநது கூடினால உயிர் வாழ்நதிரேன எனறு தலைவன கூறிச் சென்ற பருவம் வாக்கனட தலைவி இரங்கிக் கூறினாள (நற். 364:6-12). குளிர்நத வேனிற் காலததில் இலவமரத்தின் எரிபோலும் நிறமுடைய ஊழ்கழி பல மலர்கள் பொரியைப் போலும் பூக்களையுடைய புனக மரததின் புளளிபட்ட நிழலில் கிடந்து அழகு செய்யும் (ஐங. 368:1-3). பல்லூழ (பனமுறை) ஆராயினும் நலலூழே என்று கருதி மீளிபோனற தலைவன் காக்க எனமகள கடுவனும் அறியாத காட்டினைக் கடநது செனறாள் எனறு தலைவி உடன்போயவழித தாய இரங்கிக் கூறினாள் (ஐங. 374). உடனபோககிற் சென்ற மகளைத தேடிப பினசெனற செவிலி, அறிவரைக் கண்டு கைதொழுது அவர்களிடம பல்லூழ் மருணடு தன மகள் பற்றி வினவினாள (ஐங. 390:1,2). 'தாழிட்டு அடைததது போலக் கடுஙகாவலுடைய தாயின் முனனே நினது மலைசசாரலி லுள்ள ஊழுறு கோடல் மலர் உதவது போலத் 'தலைவியின் கை வளையலகள உக்கன' எனறு தோழி வரையாது வந்து ஒழுகும் தலைவனிடம கூறினாள் (கலி. 48: 10,11). அறிவுடையோர் தமது செல்வம் அழிவுற, வறுமையுற்று அதனைக் களையத் தக்க உறவினரிடத்தே செனறு தம் குறையினைக் கூறத தொடங்கிக் கூறமாட்டாது இருபபவரைப் போலத் தலைவன் தான கூறக் கருதியதனை எனனிடம் கூறாமல எனனைப் பல்லூழ் நோக்குகினறான என்று தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 61: 2-6). பல்லூழ தயிரைக் கடைவதனால் பரவிய புள்ளி மேல கொல்லும் ஏற்றினைத் தழுவினவனுடைய குருதி மயக்கமுறும்படி தழுவுதல் எமது தோளுக்கு அழகு மட்டுமனறு; அதனினும் சிறநத ஒன்றுமாகும் எனறு தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 106:37-39). தலைவன் ஒருவழித் தணந்தமையால, கமழுகின்ற தாது உதிர்ந்து சிந்தும்படி ஊழுற்ற இதழ்கள் விழும் குலையினை யுடைய கோடல்வீ போலத தலைவியின் முனகையினின றும வளையலகள் கழனறன (கலி. 121: 11-14). அரிய காமநோய செயதவனபால், இரவும் பகலும் துயிலதுறநது, கழியில கடலோதம் சென்று வருதல போல நீயும் பலவூழ் அவனை அடைதலை விருமபிச் சென்று வந்து தடுமாறி வருநதினாய்' என்று தலைவி தன நெஞ்சினை நோககி வருந்திக் கூறினாள (கலி. 123 16-19). மகளிர் தோள் சேர்ந்த ஆடவர் அவர் வருநதப பிரிதலும் பிரிநது செனறவா விரைநது வந்து அருளுதலும் ஆகிய இரணடும இரவும் பகலும போல, ஊழ செயது ஒருவரை ஒருவா விருமபுபவரிடத்தும உணடாகும (கலி. 145:13-16). மண்ணுலகமும் விண்ணுலகமும் பாழபட மதியும் ஞாயிறும கெடுதலால் அழகிழந்த வானமும் கெட்ட ஊழிகள் ஊழிற் கழிய அதன்பின் ஆகாய ஊழி உந்து வளி கிளர்ந்த ஊழூழ் ஊழி முதலிய ஊழிகள் தோன்றிக் கழிநதபின் திருமால, உயிர்கள் உளவாதற் பொருட்டுக் கேழல (வராகம்) வடிவு கொண்டு நிலத்தினை யெடுத்தார் (பரி. 2:3-16). சந்தன மரங்களை யுடைய ஊழான் மெலிநத கரையை உடைதது வையைப புனல் கொணர்ந்த சந்தனத்தின் புகை சூழ்நத தாரினை யுடைய மார்பில முத்தாரம் அழகுற விளங்க அணிந்து முருகன் தேவசேனையைக கூடுதற்குச் செல்ல அவள் ஊடல கொண்டு நீங்கினாள் (பரி. 9:27-29). வையையில் புதுப்புனல் வந்த போது, நீராட வேண்டிச் சிலர் குதிரை, பிடி, எருதுபூணட பாண்டில், கோவேறு கழுதை, சிவிகை முதலியவற்றை வகைவகையாகப் பணணி, ஊழூழாக வந்து நெருங்கி விரைந்தேறிச் சென்றனர் (பரி. 10: 14-18). பிரிந்தவர் வந்து கூடுதற்காக மகளிர் பரங்குன்றில் செய்யும் விழாவும் அங்ஙனம கூடிய போது அவர்கள் வையையிலும் கூடலிலும செய்யும் விருநதயர் விழாவும் காரண காரியமாகத் தம்மில் ஊழாகத் தடுமாறி வருதல் இலலற நெறி யாதலின் அவர்க்கு அது நல்ல ஒழுக்கமாயிற்று (பரி. 17: 42-46). பரங்குனறத்திற்கு வழுதியுடன் சென்றோரிற் சிலர் யாழின நாண் குரல ஒலித்த அளவில் அதற்கேற்ப ஊழுற முரசில் ஒலியெழுப்பினர் (பரி. 19:44,45). பரங்குன்றில் ஒருத்தி தன் முலையிடைப் பூசிய சந்தனததை உதிர்ததுப் பின்னும் பூசினாள்; இத்தகு மகளிரின் பல்லூழ நிகழும் செயல்களை நினைத்தால் அவை கைவல்லான வரைந்த ஓவியததின் அழகை ஒத்தனவாகும் (பரி. 21: 25-28). துடியின் தாளத்திற்குத் தகத்தன் தோளினை ஊழ்பட அசைப்பவளது கண் பிறழ்தல் அம்பு பிறழதலை ஒத்தது (பரி. 21:64,65). வையைப் புதுநீரில் செனறதொரு மலர்மாலை

நீர்கொணர்ந்த ஊழ்வகையால் எமது கொண்டை யினை வந்து பொருந்தியது என்றுகூறிப் பரத்தை அப்பூமாலையை உலகறியத் தன கொண்டையில் சூடிக் கொண்டாள் (பரி. தி. 2:51-53).

2. முதிர்வு. பாதிரியின் ஊழ்முகை-முதிர்ந்த முகை-விரித்தாற் போல அவிழ்ப் புழுக்கல் விளங்கியது (புறம். 399:7,9). பெருமூங்கில்நெல ஊழுற்றுப் பயன் படுந்தன்மை எய்தி அசைந்தது (மலை. 133). வாழை யின் குலையிலுள்ள ஊழுறு தீங்கனியாலும் பலா வின் ஊழ்படு சுளையாலும் பாறையிடத் துள்ள சுனையில் உண்டாகிய தேறலைக் கடுவன் அறியாது உண்டது (அகம. 2:1-5). சுரத்துவழியில், இலவமரத் தின் ஊழ்கழி பன்மலர்கள் விழாக்களைக் கொண்ட ஊரில், நெய்பெய்த விளக்குச்சுடர் விழுவதுபோல் காற்று வீச உதிர்ந்தன (அகம். 17:17-20). நீர் நிறம் மறையுமாறு ஊழுற்று உதிர்ந்த மலர்களால் மூடப்பெற்றுக் காட்டாறு கடுகி ஓடியது (அகம். 18: 1, 2). பனிமிக்க அற்சிரக் காலத்தில், குறும்பூழ்ப் பறவையின் காலைப் போன்ற செவ்விய காலை யுடைய உழுந்தின் ஊழபடு முதுகாயினை மான் கூட்டம் கவரும் (குறு. 68:1-3).

3. மலர்தல். - தலைவியின் மார்பில் தோன்றிய குற்றமற்ற தேமல், வேங்கையின் ஊழுறு - மலர்த லுற்ற-மலர் போல நன்னிறம் கொண்டு விளங்கி யது (அகம. 174: 10-12). காற்று மோதுதலால் கரை யில் பாயும் வெள்ளிய அலை போல, மலையில் பொருந்திய வெண்கடம்பின் ஊழ் மலர்கள் ஒரு சேர உதிர்ந்து கிடக்க, அவற்றை மழையெனக் கருதி நீர்வேட்கையால் வருந்தும் யானை அருந்தச் சென்று அலமரும் (அகம். 199 : 1-4). தலைவியின் மேனி பாழ்பட நிறைந்த பசலை, கொன்றையின் ஊழுறு மலர்களைப் போன்றிருக்கும் (அகம்.398:3-5). எதிரெதிரே உயர்ந்த மலைச்சாரலில் மாணிக்கப் பாறையில் நின்று, ஓசையுடையனவாய் இரண்டு மலையிலிருந்து விழும் அருவி தன் கிளைகளில் விழுதலால் முதிர்ந்த கொத்துக்கள் ஊழ் கொண்ட வேங்கைமரம் யானைகள் பூவொடு கூடிய நீரைச் சொரிய அழகுற மலர்ந்த தாமரையின் அல்லியில் திருமகள் வீறுபெற்றுத் திகழ்வதுபோலத் தோன் றும் (கலி. 44:2-7). பரங்குன்றத்தில் ஆம்பல், காந்தள், தோன்றி, ஊழிணர் கொண்ட நறவம் முதலிய வெல்லாம் மாலை போல மலர்நிறைந்தும், தொடுத்த மாலை போல இடையிட்டும், பிறவாறும் மலர்ந்தன (பரி. 19:75-84).

4. மலர்ந்துதிர்தல். நீ நாளும் வந்து முயங்கிய போதிலும், இன்னதனால் வந்தது என்று அறிய முடியாதபடி, தலைவியின் நீலமலர் போலும் கண்ணில், பீர்க்கின் ஊழுறு பூவின் (மலர்ந்துதிர்ந்த மலரின்) நிறத்தைப் போலப் பசலை உண்டாகியது என்று கூறித் தோழி தலைவனை வரைவு கடா வினாள் (நற். 326:6,7).

ஊழி- 1. ஊழிக்காலம் (நெடுங்காலம்). சேரமான் சிக்கற் பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதனை 'ஊழி வாழி பூழியர் பெருமகன்' என்று குண்டு கட் பாலியாதனார் வாழ்த்தினர் (புறம. 387:28). மக்கள் ஒருவரை ஒருவர் வருததாமலும், பிறர் பொருளை விரும்பாமலும், நலலறிவினராய் நன் னெறியில் நடநது, தம வாழகககைத் துணையைப் பிரியாமல், பகுததுணடு மூதத யாக்கையும் பிணியு மின்றி நெடுங்காலம் வாழுமாறு அரசியலை ஊழி செலுத்திய உரவோர் மரபில் வந்தவன், பல யானைச் செலகெழு குட்டுவன (பதி. 22:7-11). உலக நன்மக்கள் செய்த அறம் உண்டாயின், செலவக் கடுங்கோ வாழியாதன, ஆம்பல், ஆயிரவெள்ளம் என்னும் எணகளின அளவுள்ள பல ஊழி வாழ வானாக எனறு கபிலர் வாழ்ததினார் (பதி. 63:18-21). 'நின்செங்கோலின செமமையால், நலல பல ஊழிகள் நடுநிலைமையால் நிலைபெற்று மழை தவ றாமற் பெயதல் முதலியன நிகழ, நீ நின் அரிவை யொடு நோய் இலலை யாகுக' என்று இளஞ்சேரலி ரும் பொறையைப் பெருங்குன்றூா கிழார் வாழ்த் தினார் (பதி. 89:8.13,20). நின் வாழநாள் திங்கள் போன்றதாகவும், திங்கள ஆணடு போனறதாக வும், ஆண்டுஊழி போன்றதாகவும் ஊழி வெளளம் போன்றதாகவும் ஆகுக என நினைத்து யான் நின்னைக் காணபதற்காக வந்தேன' எனறு பெருங் குன்றூர்கிழார் இளஞ்சேர லிரும்பொறையிடம் கூறினார். (பதி.90:51-55). ஊழிதோறும் தனதொழி லில் வருத்தமில்லாத நான்முக ஒருவனைக் கருதி முப்பத்துமூவரும் பதினெட்டு உயர்நிலை பெற்ற வர்களும் சேர வந்து காணும் பொருட்டு முருகன் சின்னாள், தாவில கொள்கை மடநதையொடு ஆவினன் குடியில் இருத்தலு முரியர் (முரு. 164-176). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், வாயமொழியாற் புகழ் நிறைந்த பொய்யறியாத நல்ல மாந்தரொடு (அமைசசரோடு) நல்லூழி தமக்கு அடிப்பட்டு நடக்குமாறு உல கினை ஆண்டோர்தம் உயர்ந்த குடியிலுள்ளவ னாவான் (மது. 19-21). நன்றாகிய ஊழிக காலத்தை வரையப் பெற்று அறுதியாகப் பெற்ற நாள் முழுதும் நீ இனிதாக உறைவாயாக என்று மாங்குடி மருதனார், பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை வாழ்த் தினார் (மது. 781,782). தலைவி தன தோளாற்புரி யும் புனக்காவலை மேற்கொண்டாள் என்பதனை

உணர்த்தி நின்ற கிளிகள் பல்லூழி முடியினும் முடியாது நின்ற கிள்ளைகள் பல்லூழி நெடிது வாழ வன ஆகுக என்று தலைவன கூறினான் (ஐங. 281). வென்றடு தானை வேந்தனொடு இடைச்சுரத்தே ஒருபொழுது தங்கினாலும் அது ஊழியின் நெடிதாகத் தோன்றுமாதலின் தலைவியை அடைய விரைந்து செல்லுமாறு வினைமுற்றிய தலைமகன் தேர்ப்பாகனிடம் கூறினான் (ஐங. 482). பல உலகங்களில் உயிர்க ளெலலாம் தொல்லூழி பிறந்திறந்து தடுமாறித் திரியுமாறு (அயனாய்நின்று) படைத்த முதல்வன் (அரனாய) அவ்வுயிரெல்லாம் தன்பால வநது தொகுதலை விரும்பி ஊழிக்காலத்தில் ஒடுககிக கொள்வான்( கலி. கடவு.1,2). மதியமும் ஞாயிறும் அழகிழந்த இயலபினதாக விசும்பு கெட்ட ஊழிகள் முறைமுறையாகக் கழிந்தன; அதன்பினனர் உருவு காணபபடாத வளிமுதற் பூதங்களின அணுக்கள் வளரும் வான ஊழி தோன றியது; பின்னர், அவற்றிலிருந்து காற்றுத் தோன்றிய ஊழிகளும அவற்றிலிருந்து தீத்தோன்றிப் பனி மழை பெயத ஊழிகளும் பின்னர் அப்புனலி னிறும் நிலத்தின் ஊழியும் தோன றின. (பரி. 2:3-12). நெயதல் குவளை ஆமபல் கமலம் வெள்ளம் என்ற அளவுடைய காலஙகள் கழிந்தபின், உயிர்கள் உளவாதற் பொருட்டுத் திருமால அந்நிலத்தினைக் கேழல (வராகம்) வடிவங் கொண்டு எடுத்தார் (அதனால் அவர் எடுத்த கற்பம் வராக கற்பம் எனப்படும). அவ்வூழி திருமாலின் ஒரு செயலினை உணர்த்தலால், பல செயல் புரியும் அவரது ஊழியினை உணர்தல் யாவராலும் இயலாது (பரி. 2:13-18). தீ, கூற்றுவன், இயமன், ஞாயிறு ஆகியன கூடும் ஊழி முடிவில் ஏழும் ஒன்றாகிய கடலில் அழுந்தும் நில மகளைத் திருமால் கேழலாகி (வராகமாகி) தம் கொம்பினால் பெயர்த்தெடுத்தார் (பரி. 3:21-24). திருமால் நால்வகைப் பட்ட ஊழிகளிலும் எண்ணினால் (தத்துவம் இருபத்தைந்தினால்) ஆராயப்படும பெருமை உடையவர் (பரி. 3:80).

2. வாழ் நாள். பாணர், பாடுநர், பரிசிலர் முதலியோர் ஒருபொருளைத் தமது என்று வளைத்துக் கொள்வா ராயின் அதனை எம்முடைய தென்று அவர்பால் நின்றும் மீண்டு கைக்கொள்ளுதலை அறியாத பயங்கெழு உரிமையோடு கூடி, நின் ஊழி - வாழ் நாள் - அத்தன்மையவாக என்று ஆய் வள்ளலை உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் வாழ்த்தினார் (புறம். 135: 16-19). ஆண்டு தோறும் தவறாது பயமிக்க மழை சுரக்கப்பெற்று, மாந்தர்க்கு நோயில்லாத ஊழியாக, நீ பல ஆயிர வெள்ளம் வாழ்க வென்று பல்யானைச் செல்கெழு குட்டுவனைப் பாலைக் கௌதமனார் வாழ்த்தினார் (பதி. 21: 30, 31, 37). 'திறை நல்காதவர் உடம்பு நடுக்கமுற்றுத் தெய்வமெனக்கருதி வணங்குவதால், பலிகொணடு பெயரும் பேய் போலத் திறையினை மட்டும் அவர் பால் கொண்டு திரும்புகின்றாய்; அதனால் நின் ஊழி வாழ்க' என்று பெருஞ்சேர லிரும் பொறையை அரிசில்கிழார் வாழ்த்தியுள்ளார். (பதி. 71:21-24). 'நாங்கள் செல்கின்றோம்; நீ எழுந்து செலவாயாக; நின் ஊழி சிறப்பதாக' என்று வரைவு கடாவும் தோழி தலைவனிடம் கூறினாள (நற். 93: 6).

3. முறை. குழவியைக் கண்டு மகிழும் தாய் அதற்கு முலை சுரந்து பால் கொடுப்பது போல மழை தன்னை வேண்டுங் காலத்துப் பெய்து உலகு புரக்கும் நல ஊழி - முறை - எல்லார்க்கும் தவறாது வருதலைத் தலைவன தனது நடுவுநிலைமையால் உலகிற்கு நல்கினான் (கலி. 99:4-7). நயன், வாயமை, நடுவுநிலைமை முதலியன இனிக்கழிந்தன எனப் பின் வந்தோர் உரைத்துப் பெரிதும் இரங்குமாறு நன்றாக ஆண்டு இறந்த அரசனோடு அழிந்த நல்லூழியால் உண்டாகிய செல்வம் போல ஞாயிறு மறைதலால் அதனொடு பகற் காலமும் அழிந்தது (கலி. 130: 1-5). வானம் பொழிந்த நீர் தொக்கு, பாண்டியன் சேனை ஊழி ஊக்கத்தினாற் பகைவர்மேற் சேறல் போல வயல்களில் புகுந்தது (பரி. 22: 8-11).

**ஊற்றம்** - வலிமை. நின்னுடைய ஊற்றத்தை - வலிமையை-பிறர் அறியாமலும் பிறர் கூறியவற்றின் உட்கருத்தினை அறிந்து கொண்டும் பகற்போதில் வினைசெய்வார்க்கு உதவியும் மறுநாள் செய்யக் கடவனவற்றை இரவில் ஆராய்ந்தும் வினைஞர்க்குக் கூறுவாயாக என்று கோதமனார் தருமபுத்திரனுக்கு அறிவுறுத்தினார் (புறம். 366: 8-12).

**ஊற்று** - 1. ஊற்றுநீர். எயிற்றியர் நெடுங்கிணற்றில் வல்லூற் றாகிய உவரிநீரை முகந்து வந்து பழைய விளிம்பற்ற பானையில் வார்த்த உலையை முரிந்த அடுப்பிலே ஏற்றிச் சோறு சமைத்தனர் (பெரு. 97-100). தானம வெம்பிய கற்சுரத்தே கல்லூற்று நீரை ஊற்றுக் குழியில் முகந்துகொண்டு பெருங்கை யானை பிடிக்கு எதிரே சென்றது (நற். 186:1-4).

2. துணை (உறுதி). உடம்பினின்று போகின்ற உயிருக்கு ஊற்றாக - துணையாக - செந்நிறத்தையுடைய புள்ளிகளைக் கொண்ட ஆண் நண்டு பெடையொடு நிகழ்த்தும் பல மாட்சிகளையும் நினைந்து காண்க எனத் தலைவன் தலைவியிடம் அன்பொடு கூறினான் (கலி. 146: 22-24).

**ஊறல் -** ஊறிய நீர். சேற்றை நீக்கித் தோண்டுதலால் உண்டான கலங்கிய ஊறலை-ஊறிய நீரை-வரிசையாக நின்று எடுத்துண்ணும் நிறையா வாழ்க்கையுடைய வஞ்சினங் கூறும் ஆடவர் முள்ளம் பன்றியைத் தொலைத்து உடும்பினை யறுத்து அவற்றைக் கூறு செய்து பிறர்க்குக் கொடுத்தனர் (புறம். 325:4-8). கருங்கை ஆடவர் தீப்பொறி பறக்கப் பாறையைக் கல்லி யெடுத்த உவர்க் கிணற்றின் ஊறலைப் பருகக் கொங்கரின் செந்நிற ஆனிரை நிமிர்ந்து செல்லும் (அகம். 79:1-6). காட்டின் பக்கத்தே குந்தாலியால் தோண்டிய ஊற்றுக்கண் தோன்றும் ஊறலைப் பருகிய ஆனிரை மேய்தற்கு வாடுபுலம் செல்ல ஆயா கொம்பூதி அவற்றை அங்கிருந்தகற்றிக் கொன்றை நிழலில் தங்கி இளைப்பாறச் செய்தனர் (அகம். 399:6-11). மூங்கில் அழ கழிந்த மலை வழியில் பரற்கற்கள் நிரம்பிய பள்ளத்தில் ஊறலுடைய குறைந்த நீரை யானையொடு பொருத புலி உண்ணும் (நற். 333:2-4).

**ஊறு -** இடையூறு (ஊறுபாடு). உலகினை இயக்கும் காவற் சாகாட்டைச் செலுத்துவோன் மாட்சிமைப் படின் அஃது ஊறு - ஊறுபாடு - இல்லையாய் வழியை இனிதாகச் செல்லும் (புறம். 185:1-3). பாணரோடு விறலியர் உயர்ந்தோங்கு பெருமலையை ஊறின்றி ஏறிச் சென்றனர் (மலை. 40-46). வழியறியாது கலங்கி அறிவழிந்த நெஞ்சத்துக்கேடு போகக் கானவர் விரைந்து வந்து உண்டற்கினிய பழனும் கண்டோர் மலைதற்கினிய பூவுங் காட்டி ஊறு நிரம்பிய வழியைப் பரிசிலர் கடப்பதற்கு முந்துறச் சென்று வழிகாட்டுவர் (மலை. 279-285). மலையிடத்தேயுள்ள பொறுத்தற்கரிய வருத்தத்தைச் செய்யும் குழிகளிடத்துப் பிறக்கும் ஊறு மிகப்பல; ஆதலின் உள்ளே வீழாது கோலவூன்றிச் சென்மின் எனப் பரிசிலர்க்கு வழி காட்டினர் (மலை. 368-372). ஒரு சிறிதும் ஊறு இல்லாத வழிகளிலும் பலகாலும் சென்று வருபவர் நீடுதல் இன்றித் தவறு எய்துவர் (அகம். 18:10-12). இடிந்து விழும் மண்ணின் ஊறு அஞ்சும் ஒற்றையடிப் பாதையில் இன்னாமையுடைய ஏற்றமான நெறியில் வழுக்கி விழுந்து நோன் பகடு முடம்பட்டுத் தனித்துக் கிடந்தது (அகம். 107:13-15). தளிர்களைத் தின்று வெறுத்த மான்பிணை ஆண்மானைப் புணர்ந்த உவகையுடன் ஊறு இலவாய்த் துள்ளித் திரிந்தது (அகம். 234:10,11). கூத்தர் தமக்குக் கொடுத்த கூலியாகிய சிறிய உணவைப் பெற்று ஓம்பாதுண்டு தம் ஊர் இஃதென்று சொல்லுதற்கு ஊரின்றிச் சகடத்தில் ஏறிச் செல்லும் ஊறு இல்லாத வாழ்க்கையினராவர் (அகம். 301:4-8). தலைவன் இராக்காலத்தே வருதலால் ஏற்படும் ஊறுகளுக்குத் தோழி அஞ்சுதல் (குறு. 217:2). கொடுவில் ஆடவர் வம்பமாக்களைக் கொன்றொழித்த பிணத்தைத் தின்னவந்த நரி முடைநாற்றந் தாங்காமல் மீளும் சுரநெறியில் தலைவர் ஊறு இலராய் வந்து சேர்ந்தார் (நற். 164:6-11). தெய்வங் காக்கும் கொல்லிக் குடவரையில் உள்ள பாவை காற்று மோதியடித்தாலும் மழைபொழிந்தாலும் இடி இடித்து வீழ்ந்தாலும் ஊறு பல தோன்றினாலும் அழகிய தன் நல்லவடிவம் கெடாத இயல்பினது (நற். 201:5-11). தலைவன் படைக் கலங்களைப் புதியவாகப் பண்ணிப் புனையவும் படுக்கையில் புடைபெயர்ந்து கிடக்கவும் யாம் பிரிந்தால் இவள் எங்ஙனம் ஆற்றுவள் என நினைந்து நெட்டுயிர்ப்புக் கொள்ளவும் இவன் மனத்திலுள்ள காரியம் எத்தன்மையதோ எனக் கருதிக் கூட்டத்திற்கு ஊறு வருமென்று கருதியவர் நினைவிடத்தே நீ ஒழுகுதலைச் செய்யாயாய் ஏங்கி நடுங்காதே எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 17.1-4). முன்பு நாடாட்சி பெற்ற அரசர் செய்த ஊறு அஞ்சித் தம் நிழல் வந்தடைந்தார் நெஞ்சு வருந்தாதபடி பேணிக் காத்துத் தலைவர் வேற்று நாட்டில் தங்கியுள்ளார்; இளவேனிற் பருவத்தே வந்து அருள் செய்வார் என்று தோழி தலைவியைத் தேற்றினாள் (கலி. 26.18-20).

2. **புண்.** ஏனாதி திருக்கிள்ளியைப் பகைவர் காணின் புறங்கொடுத்த தோடுதலின் ஊறறியா - புண்படாத - உடம்பாகிய வடிவுடனே கண்ணுக்கினியராக இருந்தனர் (புறம். 167:5-7). வாட்படையால் உடலைப் பிழிந்தெடுத்தற்குப் பிளந்தாற் போல், பிட்டை ஊறு (பிளத்தலால் உண்டாய புண்) எய்தி மறவர் மகிழ்வர் (புறம். 373.5, 6). இமிலுடை ஏறும் மரையானினது ஏறும் முதுகிடாத வலியுடனே ஊறுபட தாக்கிப் பொருதலால் எழும் ஓசை மலைப்பக்கத்தே எழுந்தது (மலை. 330-333).

3. **உறுதல்.** வீரர் அணிந்த குருதி தோய்ந்த பனந்தோட்டினைப் பருந்து ஊனென மயங்கி ஊறு - உறுதற்கு - ஆராய்ந்தது (பதி. 51:30-32). வேள்வி செய்வோர் மான்தோலைப் போர்த்திக் கொள்ள விண்ணிலே பறக்கு மியல்புடைய பருந்து அதனை இறைச்சியென்றெண்ணி ஊறு கருதியது (பதி. 74:10-15). ஆகாயம் மறையக் காற்றைப் பிளந்து ஒண் கதிர் ஞாயிற்றை, ஊறு கருதிக் கொண்டு அன்னச் சேவல் பறந்தது (மது. 384-386).

4. **சிதைவு.** ஆண்யானை தன்னைக் கண்டு புலி அஞ்சியோடுவது நோக்கி அயலதாகிய கருங்கால் வேங்கையை, ஊறு - சிதைவு - உண்டாக முறித்துத் தள்ளித் தன் சினந் தணிந்தது (நற். 217:2-5).

5. **தொடு உணர்வு.** திருமாலை நோக்கிச் சுவைமை,

இசைமை, தோற்றம், நாற்றம், ஊறு - தொடு உணர்வு - ஆகிய புலன்களும் நீ என்று நல்லெழு நியார் குறித்துள்ளார் (பரி. 13:14, 15).

ஊன் - 1. இறைச்சி. ஊன் - இறைச்சி - துவை கறி சோறு ஆகியவற்றை உண்டு வருந்தும் தொழிலல்லது பிறிது தொழில அறியாமையின் நின்னைப் பாடுநர் கை மெலலியவாகும் எனக் கபிலர் செல்வக் கடுங்கோ வாழியாதனிடம் உரைத்தார் (புறம். 14:13-19). படைவீரர் தங்கியுள்ள நலங்கிள்ளியின் பாசறைககண்ணே அமைந்த தெருவில் ஊன் சோற்றுத் திரளைகள் பாணர்க்குக் கொடுக்கப் பெற்றன (புறம். 33.10-14). ஊனை விரும்பிய உள்ளம செலுத்த ஆணபுலி இரைகுறித்துத் தான் வேண்டியவிடத்தே விரும்பிச் சென்றது (புறம். 52:2-4). பிள்ளை இறந்து பிறப்பினும் ஊன்தடியாகிய மணை பிறப்பினும் ஆள் அன்று என்று கருதாமல் அவற்றை வாளோச்சி வெட்டுவர் (புறம். 74:1,2). பொகுட்டெழினி படையெடுத்துவிட்டுச் செல்லும் ஊரினகண் உள்ள மக்கள் விழா இல்லையாயினும் செம்மறியாட்டு ஊனுடன் தலறாமல் சுறறமொடு உணவுகொள்வாராயினும் துறையிலுள்ள நீரை அவன யானை முகந்துண்ணுமெனக் கருதி அவ்விடத்து உறைதலை வெறுப்பர் (புறம். 96:6-9). போர் செய்ய உறையினின்று எடுத்த வாள் பகைவரது காவலுடைய அரணை அழித்தலால அவர் தம் ஊனுற மூழ்கி உருவிழந்தன (புறம். 97:1-3). பாரி உயிருடனிருந்தபொழுது பறம்புமலை கொழுந்துவையையும் ஊனையுமுடைய சோற்றை விரும்பியவாறு தரும் பெருவளம் முதிர்ந்திருந்தது எனக் கபிலர் குறிப்பர் (புறம. 113:2,3). ஒரு வீரன் தான் கவர்ந்து வந்த ஆனிரையைக் கொடுத்துக் கள்ளுண்டு பச்சூன் தின்று நிணமிக்க எச்சிற் கையை விற்புறம் தடவி வேற்றுநாடு சென்றான் (புறம். 258:2-6).மயக்கங்கொண்ட யானை பெருமூச்செறிந்தது போல மையூனை நெய்யுலையிற் சொரிந்த போது ஓசை இருந்தது (புறம். 261:7,8). வீரர் அணிந்த நொச்சிமாலை அச்சந்தரும் குருதியொடு விரவி உருமாறித் துணிபட்டுக் கிடந்ததால் ஊனென்று கருதிப் பருந்து கவர்ந்து சென்றது (புறம். 271:5-8). ஆண்காட்டுப்பூனையின் வெருண்ட பார்வையினையும் பெரிய தலையையும் உடைய வேட்டுவர் பறவைகளின் ஊன் தின்பதால் புலால் கமழும் வாயினை உடையவர் (புறம். 324:1-3). வாடிய ஊனாகிய கொழுந்துண்டங்களை அரிசியுடனே நெய்கலந்து சமைத்த வெண்சோற்றை இரவலர் உண்டனர் (புறம். 328:9-12). பேய்மகளிர் பிணங்களைப் பற்றி வெளளிய ஊனைத் தின்றதால் புலால் நாறும் மெய்யராய்ச் சுடுகாட்டில் கால்பெயர்த் தாடினர் (புறம். 359:4-6). ஊனும் ஊனும் தெவிட்டி வெறுத்தால் பாலிற் செய்தனவும் வெல்லப்பாகு கொண்டு செய்தனவு மாகிய பண்ணியங்களை இனிது என்னுமாறு நன்கு கலந்து மெல்லிதிற் பருகி விருந்தாகிப் பசி போக்கியிருந்தோம் எனக் கரும்பனூர் கிழானின் விருந்தோம்பற் சிறப்பை நன்னாகனார் குறித்துள்ளார் (புறம். 381:1-4). ஈயா மன்னரின புறங்கடைத் தோன்றித் தடாரிப் பறையின் ஊனால தெற்றப்பட்ட தெளிந்த கண்ணிடத்தே அறைந்து விரலால் நொடிக்கும் நொடி விசையின் மேம்பட்ட குற்றமில்லாத தாளத்தோடு கூடிய பாட்டால் வறுமையைப் போக்க முடியாது (புறம். 381:11-15). நெய்யால் தாளிதம் செய்யப் பெற்ற ஊன் கலந்த பல்வகைச் சோற்றுடனே இன்சுவைப் பலபொருளையும் நலங்கிள்ளி நல்குவன் என அவன் பொருநர் கூறக் கேட்டதாகக் கோவூர்கிழார் பாடியுள்ளார் (புறம். 382:8-11). உண்ட நன்கலத்தில் உண்ணமுடியாது வைத்த எஞ்சியவற்றைக் கலத்தோடு எறியவும் ஊனைத் தின்றதால் பற்களின் இடையே சிக்கிய ஊனைத் தோண்டி எடுக்கவும் நிகழ்ந்த நாள்கள் உண்டே யன்றி இவ்வகையில் உண்ணக் கழிந்த நாள்களை எண்ணியறிந்திலேன எனக் கரும்பனூர் கிழான் விருநதோம்பலைப் போற்றிப் புறத்திணை நன்னாகனார் பாடுவர் (புறம். 384:21-24). சூட்டுக் கோலாற் கிழித்துச் சுடப்பட்ட வாடிய ஊனைத் தின்னவும் ஊனை வைத்த வெள்ளிய கலத்தில் ஆவின்பால் நிறைந்து வழியவும் சூடாக உண்டதால் வியர்த்த லல்லது தொழில் செய்து வியர்க்கவில்லை எனக் கிள்ளிவளவன் விருந்தோம்பியதைக் கோவூர்கிழார் குறிப்பர் (புறம். 386:4-9). அதியமான் நெடுமானஞ்சி அமிழ்தன்ன ஊன்துவை அடிசிலை வெள்ளி வெண கலத்து வைத்து ஔவையார்க்கு ஊட்டினான் (புறம். 390:17,18). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன்னை நாடிவந்த வறிய சுற்றததின் தொல் பசி வருத்தம் நீங்க அரிவாளால அறுத்த வெள்ளிய நிணத்தோடு மையூன் பெய்து சமைத்த வெண்ணெல் வெண்சோற்றைக் கள்ளின் தேறலொடு கொடுத்தான் (பதி. 12:14-18). காந்தளங்கண்ணி சூடிய கொலைவில வேட்டுவர் சிவந்த கோட்டினையுடைய ஆமான் ஊனையும் யானையின் கோட்டையும் கொடுத்துக் கள்ளைப் பெற்றனர் (பதி. 30:9-12). அரசனுக்கு அடுஞ்சோற்றில் இச்சோறு வேறு என்று சொல்லப்படாத ஊனையும் துவையலையும் உடைய உணவு பிறக்கிடாத மறவர்க்கு அளிக்கப் பெற்றது (பதி. 45:13,14). சிவந்த ஊன் தனியே

தோன்றாத வெள்ளிய துவையலையும் அவரை, துவரை முதலியவற்றைக் கலந்த வெள்ளிய நிணத்தையுடைய இறைச்சி உணவையும் மழவர் உண்டனர் (பதி. 55:7,8). ஆண்மானினது தோலை ஊனை ஒழித்துத் தீது களைந்து வட்டமாகச் செய்து அருங்கலத்தினையும் முத்தினையும் அதன் விளிம்பில கட்டிக் கருவிகளால செய்யும் தொழிலெல்லாம் செய்து முடித்து, அத்தோலைச் சேரமாதேவி வேள்வி செய்யும் பொழுது அணிந்து கொண்டாள் (பதி. 74:10-17). ஊன் வினை கடுக்கும் தோற்றத்தையும் அருவியின் ஒலிக்கும் ஒலியினையும் தேர் பெற்றிருந்தது (பதி. தி. 2:6,7). அறுகம் புல்லால் திரித்த பழுதையைத் தின்ற செம்மறிக் கடாயின் புழுக்கின தொடையை உண்ட பொருநர், காழிற் சுட்ட கொழுவிய ஊனின துண்டத்தை வாயிற் பெய்து சூடுதாங்காமல் இடப் பக்கமும் வலப்பக்கமும் ஒதுக்கி ஆற்றித் தின்றனர் (பொரு. 103-106). பகலும் இரவும் ஊன் தின்றதால் பொருநனின் பல் மழுங்கியது (பொரு. 118). எயிற்றியர் பாணருக்குத் தெய்வங்களுக்கிட்ட பலிபோலத் தேக்கிலையில் தாங்கள் அட்ட புழுக்கலையும் வாடுனையும் குவித்துத் தந்தனர் (பெரு. 100-1.5). மீன்பிடிக்கும் பாணன தோளிலுள்ள தோற்பையில் தூண்டிலில் இரையாகக் கோக்கப் பசிய ஊனை வைத்திருந்தான் (பெரு. 283-285). வல்லவன் சமைத்த பல ஊனின் கொழுவிய தசைகளையும் செந்நெல் அரிசிச் சோற்றையும் தீஞ்சுவை அமுதத்தையும் பிறவுமாகிய அடிசிலையும் விருப்பத்தோடு பாணர்க்கு இளந்திரையன் தானே நின்று ஊட்டினான் (பெரு. 472-479). போர்க்களத்தில் சமைத்த ஊனினாகிய சோற்றை வாலுவன் (பேய் மடையன்) புறங்காட்டி ஓடாத வீரர்க்கு வழங்கினான் (மது. 35-38). தெற்கேயுள்ள பரதவர் பகைவர்க்கு அச்சந் தோன்றும் வலியையும் கொழுத்த ஊனையும் சோறறையும் புலால் நாற்றமுடைய வில்லையும் கூவைககிழங்கையும் வஞ்சினங் கூறுதலையும் உடையவ ராவர் (மது. 140-144). பலரும் புகழுமாறு சமைத்த பேருன கலந்த சோற்றையும் கிழங்கையும் பிறவற்றையும் பிறர்க்குத் தருவாரிடம் எழும் ஓசை பட்டினத்தெழுந்த ஓசையை ஒத்தது (மது. 533-538). மதுரை பண்டு இடந்தோறும் கள்ளரிப்பவும் மரங்கள் தோறும் செம்மறிக்கிடாயை வெட்டவும் நிணமுடைய ஊனைச் சுட்டு உருகுதல் பொருந்தவும் நெய்கனிந்து பொரிக்கறிகள் ஆரவாரிக்கவும் தாளிப்பில் எழுந்த புகை மழைபோலத் திசை தோறும் சூழவும் வளமுடையதா யிருந்தது (மது. (753-758). மீனை வெட்டி இறைச்சியை யறுத்து ஊன் பொரிக்கும் ஆரவாரமுடைய முற்றத்தைக் கொண்ட பலரும் புகுகின்ற கள் விற்கும் மனையிடத்துக் கொடியுயர்ததப பெற்றது (பட். 176-180). நெருப்பினையொத்த செங்காந்தளின் புதிய மொட்டினை ஊனெனக் கருதி, அறியாது எடுத்த பருந்து அஃதன்மையுணர்ந்து உண்ணாது எறிந்தது (மலை. 145-148). கானவர் தேனையும கிழங்கையும் ஊன் நிறைந்த கடகத்தையும் உடையவர் (மலை. 152,155). ஆண்கழுகின் சிவந்த செவி ஊனை நறுக்கிப் பதித்து வைத்தாற்போன் றிருக்கும் (அகம். 51:5,6). மலைவழியில் நிணமாகிய ஊனைத் தின்ற மறவர் தோள் பூரிப்பச சுமை யேறறிக் கழுதையை ஓட்டிவநத வணிக வீரரின் தலையை வெட்டினர் (அகம். 89.9-13). பாலைவழியில உப்பு வணிகர் கூட்டம் சமைத்து உணடு விடுதுதுச் சென்ற கல்லடுப்பில் மழவர் மணமுணடாக ஊனைப் புழுக்கியுண்டனர் (அகம். 119:7-9). உமணர் சமைத்து விட்டுச் சென்ற கல்லடுப்பில், ஆனிரை கவர்ந்து வந்த வெட்சி மறவர் துடியின் தாளத்திற் கியையக் கூத்தாடி ஊனைப் புழுக்கித் தினறனர் (அகம். 159: 4-10). பாலை நிலததில் புலி தொலைத்துண்ட களிற்றின் எஞ்சிய ஊனை மறவர் கோலிலே கோத்தெடுத்துச் சென்றது போக விடுபட்டதை உமணர் தீககடை கோலால் வதக்கி உண்டனர் (அகம. 169:3-6). குனறத்தில் கானவன் தன சுற்றத்துடன ஆரவாரம் மிக்குச் சநதன மரததாற் சமைக்கப்பட்ட ஊன விரவிய சோற்றை உண்டான் (அகம். 172:12-14). கழுகு யாமரககிளையின கூட்டிலுள்ள தன்குஞ்சுக்கு விரைநது ஊட்டுதலின வாயினினறு வழுககிய கொழுவிய கண்ணாகிய ஊன் தடி அமமரத்தின் கீழிருந்த தொல பசியுடைய முதுநரிககு உணவாயிற்று (அகம். 193:6-10). ஊனைக் கிழித்தாற் போல செநநிறம் அமைந்த ஏருழுத ஈர மேட்டு நிலத்தில் நெடிய படைச்சால தோனறும (அகம. 194:2-4). கொடுநோக்கு ஆடவர் மலைப்பக்கம் சென்று ஆனேறறினைக் கொன்று அதன் இறைச்சியை நெருப்பில் வைத்தெடுத்து வருத்தும் இயல்புடைய பேய் போல வெளிறிய ஊனைத்தின்ற வேட்கை நீஙகத் தோப்பி பருகினர் (அகம். 265:11-17). பாலைவழியில கூரிய பற்களை யுடைய ஊனை விரும்புகினற பெணநாயினது பசி நீக்கப் பிணைமான் அலறுமாறு ஆண்மானின் தொடையைக் கவ்வித் துணித்த செந்நாய் ஏற்றை வெயிலை வெறுத்து இளைக்கும் (அகம். 285:4-7). காட்டில் வாழும் சிறறூரில புதல் போன்ற குடிலில் தேக்கிலையில குவித்த ஊன் புழுக்கினை அயரும் முன்றிலில் என மகள் தங்குவளோ என்று மகட்போக்கிய தாய் வருந்தினாள் (அகம். 315:15 - 18). வரகு நிறைந்த கூட்டின் பக்

கத்து மாலைக் காலத்தில் ஆண் காட்டுப் பூனை ஊனை விரும்பும் பெண் பூனையின் வருத்தும் பசியை நீக்கச் சேவற் கோழியைப் பிடிக்க அற்றம் பார்க்கும் (அகம். 367:6-12). அஞ்சத்தக்க கவர்த்த வழியில் குருதியாடிய புலால் நாற்றம் வீசும் பெரிய சிறகுடைய சேவற் கழுகு தன் சுற்றத்துடன் பச்சூனை மிகுதியாக உண்டு செக்கர் வானம் போல உயரப் பறக்கும் (அகம். 381:8-12). கனலும் சினத்துடன் மயங்கிய யானையின் உடலை ஊடுருவிப் போனமையால் அரக்குப் பூசினாற் போன்று ஊனிற் புரண்டு சிவந்த அம்போடு காட்டு விலங்கின் அடிவழி ஒன்றிய தலைவன் வேட்டையாடுவான் (அகம். 388.22-26). காட்டில் களிறு தன் கோட்டாற் குத்திப் புண்படுத்திய, ஓமைமரத்தின் பட்டை உரிந்த அடிப்பகுதியை நோக்கி ஊன் என்று கருதி யாமரத்திலிருக்கும் பருந்து வந்து தங்கும் (அகம். 397:10-16). வானுயர்ந்த மலையில் ஞெமை மரத்துச்சியில் ஊன் தின்ன விரும்பிப் பருந்து தங்கியிருக்கும் (குறு. 285:6-8). இரவில் வந்த நல்ல புகழுடைய விருந்தினர் உண்ணுதற்கு நெய் கலந்து கொழுவிய ஊனைச் சமைத்ததால் எழும் புகை தலைவியின் நெற்றியில் வியர்வையைத் தோற்றுவித்தது (நற். 41:6-9). கொடுவிற் கானவன் கோட்டினையுடைய பன்றியைக் கொன்று அதன் பச்சூனிற் பாய்ந்ததால் செந்நிற முற்ற அம்புபோலத் தலைவியின் சேயரி பரந்த கண்கள் தோன்றின (நற். 75.6-8). கூகையே, உனக்கு மையூனுடனே நெய் கலந்த வெண் சோற்றினை வெள்ளெலியின் சூட்டிறைச்சியுடன் நிறையத் தருவோம், நின் கடுங் குரலெழுப்பிக் காதலர் வரவை விரும்பித் துயிலாது வருந்தும் இரவில் என்னை வருத்தாதே எனத் தோழி கூறல் (நற். 83:4-9). மலைவாழநர் இறந்த யானைகளின் கோடுகளைப் பறித்துப் பாறையில் ஊன் காயுமாறு போடுவர்; பச்சூனை அழித்துப் பெரிய நகங்களைப் புதைப்பர் (நற். 114:1-3). மீன் கொழுப்பைச் சேர்த்து உருக்கிய ஊனாகிய நெய் வார்த்து மகளிர் இல்லத்தே மாலைப் பொழுதில் விளக்கு ஏற்றினர் (நற். 215:3-5). புதர்களை யுடைய மலை முழைஞ்சில் ஊனைத் தின்னும் பெண்புலியின் அஞ்சத்தக்க பசியை நீக்க மக்கள் இயங்கும் நுழைதற்கரிய சிறுவழியில் ஆண்புலி பதுங்கியிருக்கும் (நற். 322:4-7). சுரநெறியில் சேவற் கழுகு பிணங்களைத் தின்னாவாறு வெருட்டித் தன் நிழல் கண்டு மகிழும் நிணந்தின்னும் முதுநரி பச்சூனை நிறையத் தின்று வாய் வறந்து நீர் பெறாது வருந்தியது (நற். 352:3-9). மான் கூட்டங்களைத் தொலைத்துத் தன் உடன்பிறந்தோர் கொணர்ந்த நிணம் மிக்க ஊனாகிய உணவிடத்து வருகின்ற பறவைகளை எயிற்றி விரட்டினள் (ஐங். 365:1-3). 'காக்கையே, நீ உடனபோக்கு மேவிய என்மகள் வரக் கரைந்தால அன்புடைய நின் சுற்றத்தோடு உண்ணப்பச்சூன் பெய்த செவ்விய நிணமாய உணவைப் பொன்னாலாய கலத்திலிட்டுத் தருவேன்' என்று தாய் கூறுதல் (ஐங். 391).

2. தசை. ஆவினன்குடி முனிவர் மானின்தோல் போர்த்த மார்பினர்; நோன்பு மேற்கொண்டதால ஊன் - தசை - கெடுகின்ற மார்புடன் எலும்புகள் எழுந்தியங்கும் உடம்பினர் (முரு. 128-130). தேவருலகம் ஒப்ப நகரை ஆட்சி செய்யக் குறடு (குடம்) போன்ற துளைபட்ட ஊன் கெட்ட மார்போடே உயாந்த உதவி செய்த ஊக்கமுடையாரைப் பரிசில்பெறக் கொணருமாறு நெடுஞ்செழியன் ஏவினன் (மது. 741-743). வாகை மரத்தின் அடிப்பகுதியை, உள்ளே ஊன் வற்றிய கரிந்த மூக்கினையுடைய நத்தை மறைத்தது (அகம். 53:7-9). புலிக்குட்டி ஊன மறைப்பு நீங்காத வளைந்த நகத்தினை யுடையது (அகம். 147:3). மழை பெய்யாமல் வேனிற்காலத்தே உணவின்றி உடம்பில ஊன் வற்றிப்போன யானை வருந்தியது (அகம். 233.4,5).

3. உடம்பு. ஓடைகிழார் உண்ணாமையின் தன் ஊன் - உடம்பு – வாடி, கண் தெளிந்த நீரால நிறைந்து வியர்ப்புற்ற பல சுற்றத்தோடு பசிநோய் வருத்துவதை ஒருபகையாகச் சுட்டுவர் (புறம். 136:6-9). விடியலில சிறுகிணை முழக்கிப் புகழ்ந்து அவியனை வாழ்த்த அவன் எனனிடத்தே ஊன் மெலிந்து தங்கியிருந்த வறுமையைப் போக்கக் கள், கலிங்கம் முதலிய நல்கினான் என்று கிணைஞன் கூற்றில் மாறோக்கத்து நப்பசலையார் பாடுதல (புறம். 383:2-12). வறட்சி மிகுந்த காட்டில் மிகுந்த பொருளைப் பெய்து செறித்து வைத்த துணியாற் செய்த பை போலப் பாம்பு ஊன் வாடும் (அகம். 313:10-12).

4. புண். உவர்மண் சுமந்ததால் வழுக்கை பொருந்திய ஊன் - புண் - கொண்ட தலையை யுடைய சிறாருடன் புலைத்தி (வண்ணாத்தி) தன் விரலால் நெடிது பிசைந்து ஆடையின் கோடுகளி லுள்ள அழுக்கைப் போக்கினாள் (அகம். 387:4-7).

**ஊன்சோறு** - ஊனையுடைய சோறு. கொழுவிய துவையும் ஊன்சோறும்–ஊனையுடைய சோறும் - விரும்பியபடியே தரும் மிக்க செல்வம் முதிர்ந்து முன்பு எம்மோடு நட்புச் செய்தாய் எனப் பறம்பு விடுத்த கபிலர் அதனை நோக்கிப் புலம்பிக் கூறினார் (புறம். 113.2-5). சமைத்த ஊன்சோற்றை, இடும் முறைமை அறிந்த பேய் மடையன் பின்னிடாத வீரர்க்கு வழங்கினான் (மது. 35-38).

**ஊன்நெய் - ஊனாகிய நெய்.** நெய்தல் நில மகளிர் தம் மாளிகையில் மாலைக் காலத்து மீன் கொழுப்பைச் சோர்ந்து உருகிய ஊன நெய் - ஊனாகிய நெய் - வார்த்து விளக்கேற்றுவர் (நற். 215:3-5).

**ஊன்புழுக்கு - ஊனாகிய புழுக்கு.** உப்பு வணிகர் விட்டொழித்த கலலடுப்பில வில்வீரர் மணம் வீசும் ஊன்புழுக்கை - ஊனாகிய புழுக்கை - சமைத்துண்ணும் சுரம பெண்டிரொடு இயங்குதற்கு உரிய தன்று (அகம. 119:8-10). வெட்சி மறவர் கூத்தாடி ஊனபுழுக்கு உண்ணுதறகிடனான கவர்தத வழிகளைத் தலைவா கடந்து சென்றார் (அகம. 159: 10-12). தன சுற்றத்துடன் கூடி ஆரவாரத்துடன் சந்தன விறகாற சமைக்கப பெற்ற ஊனபுழுக்கைத் தலைவன உண்டான (அகம. 172:12-14).

**ஊன்பொதி பசுங்குடையார் - புலவர்.** புறநானூற்று 10, 203, 370, 378 ஆகிய நான்கு பாடல்களின் ஆசிரியா. [இப்புலவாக்கு இப்பெயர் ஊன்பொதி பசுங்குடை என்ற சொறறொடரிலிருந்து அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பர் மொ. அ. து. (ச. சி. பெ. பக. 97).] ஆனால இவர் பாடல்களில் அச்சொல்லாட்சி யில்லை. இவர் சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி, சேரமான் பாமுளூர் எறிந்த இளஞ்சேட் சென்னி, சோழன செருப்பாழி யெறிந்த இளஞ்சேட்சென்னி ஆகியோரைப் பாடியுள்ளார். களவேள்வி செய்ததை விளக்கமாகக் கூறியுள்ளார் (370). வறுமையால வாடிய பாண்சுற்றம இளஞ்சேட் சென்னி பரிசிலாகத் தந்த அணிகலன்களை முறை மாற்றிச் செவிக் கணிவதை விரலுக்கும் இடையிலணிவதைக் கழுத்திற்குமாக அணிந்ததற்கு இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது சீதை கீழே போட்ட அணிகளைக் கண்ட குரங்குகள் எடுத்து முறை மாற்றி அணிந்ததை உவமை கூறியுள்ளார் (367). தென் பரதவர், வடவடுகர் என்னும் இரண்டு இனங்களைக் குறிப்பிடுகின்றார் (378).

**ஊனம் - 1. மரக்கட்டை.** (இறைச்சி கொத்துதற்குரிய அடிமணை) இறைச்சி விற்போர் ஊனத்து - மரக்கட்டையில் - வைத்து வெட்டிய வெள்ளிய நிணமுடைய கொழுவிய இறைச்சியை ஒலியெழத் தாளிதம் செய்தனர் (பதி. 21:9-11). ஊன் விற்போர் அரிவாளால் ஊனைக் கொத்துதலை யுடைய ஊனம் போன்று வீரன உடம்பு பலவாறு சிதைந்திருந்தது (பதி. 67:16-18).

2. இறைச்சி. அரிவாளால் வெட்டச் சிவந்த ஊனமும - இறைச்சியும - கண்டார் மருளுமபடி குறைவுபடாத உணவும் ஆகிய புதுவருவாயுடையது பல்யானைச் செலகெழுகுட்டுவனது நாடு (பதி. 24:21,22,30).

# எ

**எஃகம் - 1. வேல்.** மறவன் ஒருவன் பகைவனின் பின்னணிப் படையைப் பிளந்து கொண்டு வடித்து மாட்சியுற்ற எஃகத்தை - வேலை - படைமுகத்தே ஏந்தித் தானைவீரர் தடுக்கவும் தடையைக் கடந்து சங்கிலித் தளைபூண்டு செல்லும் யானை போலக் கொலையுண்டு வீழ்ந்த மறவர் குடர் காலைத் தளைக்கவும் தோழன்பால விரைந்து உதவ வந்தான (புறம. 275.4-9). குதிரைமேல பகைவரைக் கொலலும் மறவன் ஒருவன் கூர்மையான வெந்திறல் கொண்ட எஃகுத்தினால், எதிர்ந்தார் மார்பில புண் விளைத்து அலைத்துக் கொண்டு களிறெறிந்து வீரனொருவனைப் பொர வருகிறான (புறம. 303:2-9). சிற்றூரையுடைய மன்னனது சிறிய இலைபோன்ற எஃகம பெருவேந்தன ஊர்ந்து வந்த யானையின் நுதலில் தைத்து அழுந்தியது (புறம. 308.4,5). தந்தை மகட்கொடை மறுக்கவே, வேந்தன, 'நாளை அவளை மணப்பேன, இன்றேல போர் புரிந்து நீண்ட இலைபோன்ற எஃகத்தால புண்ணுற்று வடுப்பட்ட உடம்போடு மேலுலகம் புகுவேன்' என வஞ்சினங்கூறிப் படையைக் கையில ஏந்தினான் (புறம. 341:11-16). அரசரே பொருந்தற்கு வரினும் அடங்குதல் அமையாத மகட்கொடை மறுக்கும் தந்தை, நிரைத்த காமபணிந்த எஃகத்தை நீராப்படை செய்ய வீரா வந்து சேர்ந்ததும் அவரை நீர்நிலைக்குச் செலல விடுக்கிறான (புறம. 354:1-3). இமையவரமபன நெடுஞ்சேரலாதன சிவந்த முனையுடைய எஃகத்தினால குறுக்கே தடுத்து நிற்கும் பகைவரைக் குத்த மார்பு பிளந்து வெளிப்பட்ட புண்ணுமிழ குருதியால மணிநிற இருங்கழி நிறமாறிச் சிவப்பாயிற்று (பதி. 11:7-10). கழலணிந்த மறவர் எஃகத்தைப் புலித் தோலாற் செயயப்பட்ட உறையினின்றும் எடுத்துப்பொர முற்பட்டனர் (பதி. 19:3-5). விண்ணிடை விளங்கும மின்னல் போலப் புலித்தோல உறையினின்றும கழித்த புலால் நாறும் எஃகத்தை அரசனின ஏவல வீரர் வலப்பக்கம் உயரத் தூக்கிச் சென்று பொருது பகைவர் அரணை வென்றனர் (பதி. 24:1-4). குதிரை மீதேறிக் காம்பை யுடைய எஃகத்தைப் பிடித்தெறிந்து பகைவர்க்குத் துன்பம் செய்தலை விரும்பும் நீங்காத ஆண்மையுடைய நிலையாமைத் தன்மை நெஞ்சில மிக்க வீரர்க்குத் தலைவன் இளஞ்சேரலிரும்பொறை (பதி. 90:36-39). எயினர் குறும்பு, பகைவர் நடுங்க நுதி மழுங்கிய புலால் நாறும் எஃகத்தினை மணிகட்டிய கேடகத்தோடு நிரைத்து வைத்து, நாணை யுடைய விலலைச் சார்த்தி வைத்த அம்புக் கட்டுக்கள கிடக்கும்

வீடுகளை யுடையது (பெரு. 118-121). பாசறையில் தங்கியிருந்த அரசன், பகைவர் எறிந்த எஃகம் பாயந்ததால் புண் மிகுந்து தம்முடைய பிடி யானைகளை மறந்தொழிந்த களிற்றியானைகளை நினைந்து உறங்காமல் இருந்தான (முல்லை. 68, 69,70). காம்பிலே செருகின எஃகமொடு அம்புகளும் சென்று நிலைகுலைத்தபின் நிலைகலங்கிப் பழையநிறம் கெட்ட கவசத்தொடு சகடையின் குடம்போன்ற மார்பினையுடைய ஊக்கம் கொண்ட வீரரைப் பரிசில் பெறக் கொணர்மின் என நெடுஞ்செழியன ஏவினான் (மது. 739-743). வேப்பந்தாரினைத் தலையில கட்டின வலிய காம்பினையுடைய எஃகமொடு முனசெல்லும் தானைத்தலைவன் பாசறையில் புண்பட்ட வீரரை முறையே காட்ட, அரசன் நள்ளிரவினும் உறங்கானாய், மழை பெய்த போதும் சிலரொடு சுற்றி வந்து முகமலர்ச்சியொடு நோக்கிப் பேணினான (நெடு. 176-188). காம்பிலே செருகிய எஃகம் யானையைக் குத்திற்று என்னும்படி வாழையின் பூ மலையைத் தீண்டி நின்றது (மலை.129-131). பகைவரின தலை துணியப் போரை வெல்லும் ஒள்வாள் மறவர் தம் கூரிய காம்பினையுடைய எஃகத்தைப் புதவத்தில (வாயிலில) சார்த்தி வைத்தனர் (மலை. 488-490). பிட்டன் என்பான் பகை மனனரொடு பொரும் போர்க்களத்து உயர்த்திய திருந்திய இலை வடிவினை யுடைய. எஃகம் போலத் தலைவியின் நீர்வார் கண் அருந்துயர் தரும் என்று பிரியக் கருதிய நெஞ்சிற்குத் தலைவன் கூறினான் (அகம். 77:16-19). தலைவன் தன் நெஞ்சு நோக்கி, 'தலைவி பெறற்கரியள் எனக் கருதாது நீ அருஞ்சுரம் நீந்தி என்னை இன்னற்படுத்துகின்றாய்; மறபபோர்க் குட்டுவன் பகை பெறாது சினஞ்சிறந்து செருச்செயும் வலிமையோடு கடலை முற்றி அப்பகையை விலக்கி ஓட்டுதற்குக் காரணமான மாட்சிமைப்பட்ட அவனது எஃகம் உன் மார்பில் ஊடுருவிச் சென்றழுந்தச் செருக்கொழி வாயாக' என்று கூறினான் (அகம். 212:16-21). மலைக்கப்பாலுள்ள வேறுபல மொழி பேசும் நாடு நினைந்து ஆள்வினையை விரும்பி உரன்மிகு நெஞ்சமொடு மாண்புடை எஃகம் வலக்கையில் தாங்கித் தலைவன் பிரிந்து சென்றான் (அகம். 215: 1-5). தலைவன் மின்னலைப்போல் ஒளிரும் தன் எஃகம் செல்லும் வழியை விளக்கத் தனியனாய்ப் பனி வருத்துதலையும் வெறாமல் இரவுக்குறியிடம் ஏகினான் (அகம்.272:5-7). பகைவர் ஓடுபுறம் கண்ட வெல்போர் வழுதி, போர்க்களத்து உயர்த்திய புகழ்வாய்ந்த எஃகம் போல ஒழுங்குபட மின்னி மழை பரவியது (அகம். 312:10-14).

**2. வாள்.** மகட் கொடை வேண்டி வேந்தர் பலர் பொருதனர். அப்போரை வெற்றிபெற நடத்திய அவள் தமையன்மார் போர்க்களத்தில் பகைவரைக் கொன்று அவர் குருதியை ஆறாக ஓடச் செய்து, வாய் மடிந்து வடுப்பட்ட கூரிய வாயுடைய எஃகமொடு - வாளுடனே - பஞ்சியும் களையப்படாத புண்களையுடையவராய் அஞ்சத் தக்கவராய் இருந்தனர் (புறம். 353:11-17).

**3. கோடரி.** வடிக்கபபட்ட எஃகம் - கோடரி - பாய்நததால் துணிபட்டுக் கிடந்த தடக்கையை எடுத்து உயர்த்தித் தன் காலைச் சுற்றிக் கொள்ளும் அஞ்சாத வீரரின் குடரை ஒருங்கு சேர்த்துப் பேய்மகள் அழுகுரலை எடுத்துப் பாடிக் கூத்தாடக் கழுகும் பருந்தும் வட்டமிட்டுத் திரியும், கண்டார்க்கு அச்சந்தரும் போர்க்களத்தைச் சோழன் இளஞ்சேட்சென்னி தனக்கு உரிமையாக்கிக் கொண்டான் (புறம். 370:22-27).

**4. படைக்கருவிகள்.** வாட்படை மதிலாக, வேலாகிய காவற் காட்டை உயரச் செயது, விறபொறிகள் விடுத்த கூரியமுள் அம்பினையுடைய சிவந்த வாயுடைய எஃகம் - படைக்கருவிகள் - வளைத்த அகழியினைக் கொண்ட, முரசு முழங்கும் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலின் அரணைக் கருதினால் போரெதிர்ந்து வரும் அரசர் அஞ்சி நீங்குவர் (பதி. 33:7-12).

எஃகு - **1. வேல்.** நெடுஞ்செழியன் போர்க்களத்தில் விளங்கிய இலையையுடைய எஃகு - வேல் - ஏந்தி, அரசுபட அமர்செய்து, அவர் முரசைக் கைப்பற்றினான் (புறம. 26:4-7). எஃகு விளங்கும் தடக்கையினையும் இயல்தேரினையு முடைய நலங்கிள்ளி சேட்சென்னியுடன் பொருதோர் வாழ்ந்ததனை யாம் கண்டிலம என மாடலன் மதுரைக் குமரனார் கூறுவர் (புறம். 61:13-17). எவ்வி மார்பில் எஃகுறு விழுப்புண் (வேல தைத்ததால் உண்டாய சிறநத புண்) பல என்று விடியலிற் கூறிய சொல் பொய்யாகட்டும் என்று வெள்ளெருக்கிலையார் விழைந்தார் (புறம். 233:4-8). பகைவர் எஃகுடை வலத்தராய் (வேலை வலத்தில் ஏந்தியவராய்) களிற்றுடன் வரக்கண்டு முற்பட்ட பகைவர் எறிந்த வேல் தன் மார்பில் இருந்ததை எடுத்து அவர்மீது எறிந்து மாய்த்தான் (புறம். 274:4-6). ஒரு வீரன் பகைவர் எறிந்த எஃகு நெஞ்சில் ஊடுருவிச் செல்லப் பொருது இருநில மருங்கில் தன் அரிய கடமையை முடித்தான் (புறம். 282:1, 2). களிறெறிந்து முரிந்த வடுக்களைப் பெற்ற எஃகு ஏந்திய விழுமியோர் நெருங்கிய போர்க்களத்தில் ஏழு முடிகளாற் செய்யப்பட்ட ஆரத்தை மார்பிலணிந்தவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. 45:4-6). எஃகைச் செலுத்தி, எழும் பக்கப்

படையைக் கவர்கின்ற விரைந்த தூசிப்படையை யுடைய வேந்தரும் வேளிரும் வஞ்சினம் கூறி வலி மிகுதியால் செருக்கி மோகூர் மன்னனுடன் கூடிச் செங்குட்டுவனுடன் பொர எழுநதனர் (பதி. 49:6-8). களிறாகிய அலைகள் மாறுபட்டுப் புடை பெயர அவற்றிற்கேற்ப விற்கள் அலைகளின பசாபோல் விளங்கக் கேடகத்தின் எலலையின்மேல் எஃகு ஆகிய மீன் விளங்கியது எனப் படைகள் உருவகம் செய்யப் படுகின்றன (பதி. 50:8, 9). வீரர், உடலை மூடும் கவசத்தையும் வேண்டுமென்று எண்ணாமல் எஃகு சுமந்து போர்க் களத்தில் முனனே புறப்பட்டுச் செல்லும் அஞ்சாமை யுடையவர் (பதி. 52:6,7). ஒழுங்குடைய மாற்றாராற் குலைத்தற்கரிய படை வகுப்பினையும் விடியற் காலத்தே மேகக் கூட்டததின் உச்சியை யொத்த தோற்றமுடைய பரிசைப்படையின் மேல் ஒளியுடன் விளங்கும் எஃகையும் மள்ளர் உடையராவர் (பதி. 66:10-14). களிறுடைய பெரும்போரைச் சிதைத்துத் தன் எஃகினைப் பெருஞ்சேர விரும்பொறை உயர்த்தினான் (பதி. 76:1). முருகனின் பன்னிரு கைகளுள் இரண்டு ஐயிரு வட்டமாகிய கேடகததையும் எஃகையும் வலமாகச் சுழற்றின (முரு. 111). முருகன் பகைவரை யழித்தற்கு ஏநதிய இலங்கும் இலைத் தொழிலையுடைய எஃகு போல மின்னல் மின்னியது (குறி. 51-53). நடுகலலில் நிற்கின்ற தெய்வமான வீரனுக்கு வைத்த கிடுகும் வேலும போலக் கிடுகை நிரைத்து எஃகை ஊன்றிப் போாக் களத்தே பொருதனர் (பட். 71,72, 78,79). காதலரைப் பிரிந்து வருந்தும் தலைவியை, மிகுந்த துனப முற்றவரது மார்பில் கூரிய எஃகினை எறிவாரைப் போன்று மாலைக்காலம் அலைத்தது (அகம். 71: 9-12). உள்ளுநர் உட்கும் கல்செறிந்த சிறுவழியில் தலைவன் எஃகு துணையாக இரவுக்குறி வருதல (அகம். 72:17-19; 202:11-14). தலைவன் தாரினை மார்பி லணிந்து, கண்ணியைத் தலையிற் சூடி, எஃகினை வலக்கையில் ஏந்தி யிருந்தான் (அகம். 102:11). முயற்சியால் பொருளீட்டுதற்கு நீங்காத ஊக்கத்துடன் எஃகு துணையாகப் பாலைநிலப் பகுதியைத் தலைவன் கடந்து சென்றான் (அகம். 277:3,4,12). இன்னா வெஞ்சுரத்தில் வழி பார்த்திருந்த கொடுந்தொழில் மறவர் ஆறுசெல் மாக்களின் மார்பகத்தெறிந்த எஃகுறு விழுப்புண்பட்டு மாய்ந்தோரின் நிணத்தைத் தின்னப் பருந்தின் சேவல் தன் சுற்றத்தை அழைக்கும் (அகம். 363: 9 - 14). வன்கண் ஆடவர் அம்பெறிந்ததால் மாய்ந்த பிணையை நினைத்து ஆண்மான உணவினை மறுத்து நோய்கூர்ந்து மடுவிலுள்ள சின்னீரும் பருகாது எஃகு பாயப்பெற்ற மக்களைப் போல் வருந்திக் கிடக்கும் (அகம். 371.2-8). பகைவரைக் கொல்லும் போர்க்குரிய எஃகு விளங்கும் பெரிய கையை யுடையவன் மலையன் (குறு. 198: 5,6). ஆழமான விழுப்புண் பட்டுப் புண் காயாத துன்பத்தை யுடைய மார்பில் எஃகு எறிந்தாற் போன்று என்னருகிலிருந்து பிரியாது வருநதிக் கூவும் குயிலினும் தெளிந்த நீர் ஓடும் யாறு மிகக் கொடிது எனப் பருவம் கண்டாற்றாளாய தலைவி தோழிக்குக் கூறினாள் (நற். 97:1-5). ஆரிருள் நடுநாளில் மயக்கந்தரும் சிறு வழியில் எஃகு துணையாக மலைச் சாரலிலுள்ள சிறுகுடிக்கு இரவுக்குறி வருதல் பணபெனப்படுமோ எனத் தோழி தலைவனை வினவுதல் வாயிலாக இரவுக் குறி மறுத்தாள் (நற். 168:6-11). பகைவர் தம் அரிய அரணைக் கடந்த, மாரி போன்ற வண்மையையும் கள்ளையும் திதலை பரநத எஃகினையும் உடையவன சேந்தன் (நற். 190 : 1 – 3). நெய் பூசினா லொத்த வலிய காம்பு செருகிய எஃகை உடைய செலவத் தந்தையின் இடனுடை வரைப்பில் அஞ்சில் ஓதியின அடிகள நடை பயிற்றும் (நற். 324: 5-9). முருகன் தமக்குப் பொருந்திய எஃகினை உடையவர் (பரி. 9:79). மைந்தர் வையையில் எஃகு வாள் ஆகியவற்றால் மாறுபட்டு உழக்க, தம்மிற் களிறுகள் பொருத களம் போல நாளும் வையைப்புனல் தெளிவிலதாயிற்று (பரி. 10:108-111). பொற்சிலம்பில் முத்தாகிய அரி ஆர்ப்பரிப்ப, துடியொலிக் கியைய அடிபெயர்த்துத் தோளசைத்துத் தூககிக் கள்ளுணட மகிழசசி தடுக்க ஆடுவாளது அழகு தன கணவனைக் கவரும் என்று நுனை விளங்கிய எஃகெனச் சிவந்த நோககமொடு மனைவி அவனைச் சினந்தாள் (பரி. 21: 18-22). பாண்டியனது விளங்குகினற எஃகினைப் போல மின்னல் ஒளிர்ந்தது (பரி. 22:7).

2. அரிவாள். இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் நாட்டில் வந்து தங்கிய பரிசிலர் சுற்றமொடு தம் பசிவருத்தம நீங்க எஃகால் - அரிவாளால் - அறுத்த வெள்ளிய நிணத்தொடு சோந்த கொழுவிய ஆட்டின் இறைச்சியுடன் கூடிய வெண்ணெல வெண்சோற்றை அயின்று கள்ளின் தேறலும் பருகினர் (பதி. 12: 14-18). சேம்பின் கிழங்கினைச் சமைத்த மடாவினையும் எஃகு வெட்டச் சிவந்த ஊனையும் என்றும் குறைவுபடாத உணவினையும் பெற்ற புதுவருவாய் மிக்க வளமுடையவன் பல் யானைச் செல்கெழு குட்டுவன் (பதி. 24: 20-22, 30). இறைச்சி விற்பார் எஃகினால் ஊனைக் கொத்துதற்குக் கொள்ளும் அடிமணையாகிய மரக்கட்டை ஒப்ப வீரரின உடலம் சிதைந்திருந்தன (பதி. 67: 16-18).

3. **வாள்.** ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் படையிலுள்ளோர் தம்மைத் தடுப்போரது யானையின் தொடியணிந்த கோட்டினை வெட்டும் எஃகினை- வாளினை - கொண்ட வெற்றியுடையவராவர் (பதி. 51: 29,30).

4. **கத்திரிகை.** குதிரை, எஃகுபடை - கத்திரிகை- இட்டு நறுக்கின பிடரி மயிரினை யுடையது (பதி. 62: 3; 64: 9). எஃகு இடையிலே தீண்டிய அழகைப் பெற்ற ஐம்பால போல மணல் விளங்கின (கலி. 32:1, 2).

5. **கத்தி.** எஃகுற்று - கத்தியால் அறுக்கப்பெற்று- இருபிளவாக விளங்கும் வனப்பினையுடைய மாவடு போன்ற கணகளை யுடையவள் தலைவி (அகம். 29: 5-7).

6. **வில்.** மழைபெய்து திசையை வெண்மையாக்கிய பரந்துபட்ட வெணமேகம், எஃகுறு - வில்லாகிய கருவியால் கடையப்பெற்ற – பஞ்சுத் துகள் பரந்தது போலக் காணப்பட்டது (அகம். 217: 1, 2). மழையைப் பொழிந்த இன்குரல் எழிலி, எஃகுறு பஞ்சு போன்றதாகி விடியற் காலத்தே கோடு உயர்ந்த நெடிய மலையில் இயங்கும் (நற். 247:3-5)

7. **இலை.** தமையன்மார் போருழந்து ஏந்திய வடித்த வேலின் எஃகு - இலை-போல இளையோள் சிவநத உண்கண்ணை உடையவள் (புறம். 350:7-10).

8. **கூர்மை.** புள்ளிமானின் தோலை ஊனொழித்துத் தீய பாகத்தைக் களைந்து வட்டமாக அறுத்து, அதன் விளிம்பில் அருங்கலததினையும் முத்தினையும் இனமாகக் கட்டி, எஃகுடைய–கூர்மைஉடைய - கருவியால் தோலுட் செய்யும் தொழிலெல்லாம் செய்து முடித்த அத்தோலைச் சேரமாதேவி வேள்வி செய்ய வல்லோனால் அணியப்பெற்றாள் (பதி. 74: 10-14). நெடிய முழையாகிய இருப்பிடத்தில் தங்கிய முள்ளம்பன்றி தன் எஃகுறு முள்ளினால் எய்து கொல்லுதலினால் கானவர் அழுதனர் (மலை. 300, 301). மாவண் சோழரது நெய்கனிந்த நெடு வேலின் எஃகிலை (கூர்மையான இலை) நிலவுபோல் விளங்கும் (அகம். 123:8-10).

9. **நுண்மை.** எஃகுடை எழில் நலம்-நுண்ணிய அழகின் நலம் - வாய்ந்த பரத்தையொடு தலைவன் புனலாடினான் (அகம். 116:9,10).

10. **எஞ்சுதல்.** விடியலில் திங்கள் ஒளி சுருங்கியது; முரசும் வலம்புரியும் ஆர்த்தன; இரவைப் புறங்கண்ட காலைப்போது தோன்றி எஃகு இருளை - எஞ்சிய குறை இருளை – போக்கியது (புறம். 397: 4-7).

**எக்கர் - மணல்மேடு.** காவிரி எக்கர் - மணல்மேடு - இட்ட மணலினும் பலவாக நின் வாழ்நாள் சிறப்பதாக என மாவளத்தானைத் தாமற்பல்கண்ணனார் வாழ்த்தினார் (புறம்.43:21-23). ‘தாழ்ந்த நீரையுடைய கடலிடத்து வெள்ளிய தலையை யுடைய திரையலைக்கும் செந்திலில் நெடுவேள் நிலைபெற்ற துறைக்கண் காற்றுக் குவித்த வடுவழுந்திய எக்கர் மணலினும் பலகாலம் நீ நீடுவாழிய’ என இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை மதுரை மருதனிளநாகனார் வாழ்த்தினார் (புறம். 55:17-21). அரணில தங்கிக் கள் நிறையப் பருகிக் காலங்கழித்துப் புளிச்சுவை விரும்பிய செங்கண ஆடவர் களாப் பழத்துடனே துடரிப் பழத்தைத் தின்று வெறுத்தால் ஆற்றின் எக்கரில் ஏறிக் கரிய நாவற் கனியைப் பறித்துண்பர் (புறம். 177:6-11). நெய்தல் நிலத்து ஊர்களில் யாழோசை போலும் வண்டின் பண்ணைக் கேட்டு அதற்கேற்பத் தோகையை விரித்து மயில் நிலவு போன்ற எக்கரில் ஆடும் (பொரு. 210-213). கடையாமத்தில் பெரிய காவிரி யாறு மலர் மணத்தைக் கூட்டும் எக்கரில் மன்னவனது பொருளைக் காக்கும் தொல்லிசைத் தொழில் மாக்கள் துயில் கொண்டனர் (பட். 115-121). அரச உரிமையினையும் அமைச்சர் முதலிய சுற்றத்தையும் பெரிய நாட்டினையும் பெற்றிருந்தும் பரிசிலர்க்குக் கொடாமல் தமது பெயரைத் தம் முடனே கொண்டு மாய்நதோர் சேயாற்று எக்கர் மணலினும் பலராவர் (மலை. 549-556). கீழைக் காற்றினால் அலைமோதி யுடைக்கும் எக்கரில் பழைய திமிலைச் செப்பஞ் செய்த புதுவலைப் பரதவர் அடைகரையில் வந்து கிடக்கும் ‘சுறா மீனைக் கொணர்ந்து மணங்கமழ் பாக்கத்தில் பகுத்துக் கொடுப்பர் (அகம. 10:8-12). காட்டாற்றினது, பூங்கொத்துக்களை யுடைய பெரிய கிளைகள் தாழ்ந்துள்ள எக்கரில் மெய்புகு வன்ன கைகவர் முயக்கத்தைத் தலைவன் பெற்றான் (அகம். 11:8-11). தந்தை தந்த கொழுமீன் உணங்கலிற்படும் பறவையை நெய்தல் நில மகளிர் எக்கர் மேல் நிற்கும் புனனையின் நிழலில் தங்கி ஓட்டினர் (அகம். 20:1-3). சோலையில் காஞ்சிப் பைந்தாது அணிந்த மலர் மலிந்த எக்கரில் திருமணப் பந்தர் மணப்பது போல் புதுமணங் கமழ்ந்தது (அகம். 25:3-5). வேந்தர், பூக்கள் விரிந்த அகன்ற துறைகளையுடைய காவிரிப் பேரியாற்று விரைந்தோடும் நீர் நுண்மணலை வாரிக் கொணர்ந்து குவித்த எக்கர் வெண்மணற் பரப்பையும் புதுவருவாயுடைய வளத்தையும் உடையவர் (அகம். 181:11-14). புன்னை மலரின் நுண் தாது அழகுசெய்யும் மணங்கமழ் இளமணல் எக்

கரில் தலைவி ஆயமொடு கூடி விளையாடிய போது, தலைவன தேரில வந்து மணல் வீட்டைப் புகழ்ந்து மறுமொழி பெறாது மீண்டான் (அகம். 250:2-9). மேற்கே செவ்வானம் தோன்றத் துணைபுணர் அன்றில் எக்கரின் மீதிருந்த பனையின் உள் மடலில் சென்று தஙகியது (அகம். 260 : 6, 7). நெடிய உப்பங்கழியில இரைதேடிய குறுங்கால் அன்னம் அடுமபின கொடிபடர்ந்த எக்கரில் தன் சிறகை அலகாற் கோதும் (அகம். 320:8,9). தலைவன் ஊர்நத தேர் வெணமணற் குவியல்மேலும் எக் கரிலுள்ள தாழைமட லிடத்தும் ஓடி அடுப்பங் கொடியை அறுத்துச் சென்றது (அகம். 330.11-14). வேனிற்காலததில் அறுகம் புல்லை மேய்ந்த காளை பசுக்களோடு களைப்புத் தீர நீர்பருகிக் காஞ்சி இணரின் தாது மேலேபட அங்குத் தங்கி மணல் குவிந்துள்ள எக்கரில் துயிலும் (அகம. 341:7-12). வேனிற் காலத்தில் தெளிந்த மடுவின் பக்கத்தி லுள்ள தூமணல் எக்கரில் தாது உதிரும் தண் பொழிலில் தங்கிக் காதலர் தமது வளமான இல் லத்தை மறப்பர் (அகம். 355:6–8). எக்கர் பொருந் திய ஊரின் நீர்த்துறை முன்றிலின் மணற் பரப்பில் புன்கமலர் உதிர்நது கிடப்பது, வேலனுக்கு வெறி யாட்டெடுத்த களநதொறும் செந்நெல் வான்பொரி சிதறிக் கிடப்பது போன்றுள்ளது (குறு. 53:2–5). கடலலை தவழும் புள்ளொலிக்கும் கடற்கரைச் சோலையில் புனனையுள்ள எக்கர் நிழலில் புணர் குறி வாய்த்த ஞான்று தலைவனைக் கண்டோம் எனச் சிறைப்புறமாகத் தோழிக்குத் தலைவி கூறி னாள் (குறு. 299:1-5). பரதவர் கடலிற் கொண்ட மீன் உணங்கலும் கழியிற் கொணட இறா வற் றலும் கிடந்ததால் வெண்மணல் மிகுந்த எக்கர் தொறும் புலால் நாற்றம் பரவியது (குறு. 320:1-4). அடும்பின் மலரினைச் சிதைத்து மீனருந்தும் தடந் தாள் நாரை எககரில் தங்கியிருக்கும் (குறு. 349: 1,2). பனைமரம் குருத்தொடு மறையக் காற்று தொகுத்த மணற்குவியல் மிக்க கடற்கரையில், கட லெறிந்த கருமணலாகிய சேற்றருவியால் கூந்தலுக் குப் பெய்தறகுரிய எக்கராகக் குவியபபெறற குவி யல் புலருமுனனரே ஊரில் அலரெழுந்தது எனத் தோழி தலைவிக்குச் சொல்லுவாளாய இரவுக்குறி வநத தலைவன் கேட்பக் கூறினாள் (குறு. 372). அலைகொழித்த பெரிய எக்கர் மணலை, நுணங் கிய துகிலின் நுடக்கத்தைப் போல மிகுதியாக ஊதைக் காற்றுத் தூற்றும் (நற். 15:1-3). கடலலை கொழித்த பால்நிற எக்கரில் தொடியணிந்த மகளிர் உறங்கியதால் கடற்றுறை தனிமையுடையதாயிற்று (நற். 49:1,2). கடலின் அலைகொழித்த எக்கரில் விளையாடும்போது நண்டு ஓடுமிடமெல்லாம் ஓட இயலாமல் களைப்புற்று விளையாட்டு விருப்பும் நீங்கியவள் தலைவி என்று அவளது பண்டைச் செயலை வினைமுற்றி மீளும் தலைவன் பாகற்குக் கூறினான் (நற். 106:2-4). ஈங்கை அரும்பும் அதிர லின் பூவும் உதிர்ந்து கிடக்கும் மோட்டு மணல எக்கரில் மானின் குளம்பு பட்டு அழுந்த வெள்ளியை உருக்கிச் சாய்த்தாற்போல நீர்க்குமிழி வடியும் (நற். 124:4-8). அலை கொழித்ததால் உண்டாய பெரிய எக்கரில் உள்ள தாழையின் பூ, தாது உதிர்ந்து சிறுகுடிப் பாக்கத்துப் புலால் நாற்றத்தைப் போக்கி மணங்கமழச் செய்யும் (நற். 203.1-7). உப்பஙகழி யிடத்தே இரைவேட்டெழுந்த குருகின பற்றுதலைத் தப்பி யோடிய இறவின் ஏற்றை, எறிதிரை தொகுத்த எக்கரிலிருக்கும் தாழைமலரைக் குரு கெனக் கருதி அஞ்சும (நற்.211:3-8). நொச்சியரும்பை ஒத்திருக்கும் கணணை யுடைய நண்டின் கூட்டம் எக்கரிலுள்ள ஞாழல பூவைக் காலால துழவிக் கடற்றுறையை அழகு படுத்தும் (நற். 267:1-5). சிறு குடிப்பாக்கத்தில் புலிவரிபோனற எககரில் புனனை உதிர்த்த தாதினை ஊதும் தேனோடு (பெண் வண்டு களோடு) ஒன்றி ஆண் வண்டுகளும் இன்னிசை யெழுப்பின (நற். 323:6-9). சோலையிடத்தே எக்கரி லுளள மாமரத்தின புதுப்பூ தலைவரைக் கூடிய மகளிரது மெயயின் மணம் போலக் கமழும் (ஐங். 19:1,2). எக்கரில் ஞாழல், செருந்தி முதலிய மலர்களின் மணம கமழநதது (ஐங். 141). எக்கரி லுள்ள ஞாழற் கிளையில பறவைகள் தங்கின (ஐங். 142). எக்கர் ஞாழலில் பறவைகள் ஒலித்தன (ஐங். 143). எக்கர் ஞாழல் இணர்படு பொதும்பரில குருகு உறங்கும் (ஐங். 144). எக்கர் ஞாழல் சிறியி லைப் பெருஞ்சினையில் ஓதம் வளைககும் (ஐங். 145). எக்கர் ஞாழல் அருமபுமுதிர் அவிழிணர் கமழும் (ஐங. 146). எக்கரில் ஞாழல மலர் இல்லாத மகளிர் அதன் தழையை விரும்புவர் (ஐங. 147). எக்கர் ஞாழல் இகந்துபடு பெருஞ்சினையின் மலர் இனிது கமழும் (ஐங். 148). மடந்தையி னுடைய வளரிள முலையிற் படர்ந்த சுணங்கு எக்கரிலுள்ள ஞாழற்பூப் போனறது (ஐங். 149). எக்கர் ஞாழலநறு மலர்ப் பெருஞ்சினையை அலை அசைக்கும் (ஐங். 150). கோலஞ் செய்து கொணட மகளிர் தம ஆயமோடு விரும்பி விளையாடும் வையையாற்றின் நீணடுயர்ந்த எக்கரிடத்து நுகர்ச்சியை நினைந்து தலைவர் வரு வர் எனத தோழி தலைவியிடம் கூறல (கலி. 27;19,20). இளைய மகளிரின ஐம்பால்போல் எக்கரை ஊட றுத்து நீர் ஒழுகியது (கலி. 29:6). வண்ண வண்டுகள் ஆரவாரித்து வையையின் உயர் எக்கரில் அருவி நீரால் வளர்ந்த நறுமுல்லைப் பூவின் தாதுண்ணும் இளவேனிற் காலதது வருதும் என்று

தலைவர் உரைத்துச் சென்றார் (கலி. 35:9-12). இளையவர் தம்மிற் கூடி விளையாடும் எக்கருடைய அகன்ற தெருவில் விளையாட்டிக் கொண்டுவரத் தோழி தலைவியின் மகனை அழைத்துச் சென்றாள் (கலி. 83.3, 4). பாலனன மேனியான் (பலதேவன்) அழகுபெற உடுத்த நீல ஆடையை ஒத்த கடல் வெளளிய எக்கரிடத்தே சூழ்ந்தது (கலி. 124:2-4). செக்கர் வானததைக் கொணட அந்தியம் போதில் முககோலைக் கையில் கொண்ட முதுமொழி நினைக்கும் அநதணரைப் போல இனநாரை எக்கர் மேல தங்கியிருக்கும (கலி. 126.3-5). வாடிய கழிகள் சூழநத, மலைபோல் உயர்ந்த எக்கரிடத்துத் தலைவன செய்த குறியிடத்தே தலைவி தப்பாமல் வந்து சேர்நதாள் (கலி. 127.6, 7). 'நிலாப் போன்ற ஒளியுடைய எக்கர்மேல் ஓடும் நண்டுகள் நம்மைக் கணடு வளையிற் புகுந்தன; துறைவன் செய்த கொடுமை நினைந்து நாணிப் புகுந்தனவோ' எனத் தோழி தலைவியிடம் தலைவனை இயற் பழிதது மொழிந்தாள் (கலி. 131:15-20). பல வடிவினையுடைய புள்ளினங்கள் இரைதேடித தின்று தாம விரும்பின பேடுகள் துணையாக அலை மோதும் எக்காமேல தங்கி இளைப்பாறும் (கலி. 132.1-3). கரிய மலரை யுடைய கழிமுள்ளியும் திலலையும் சூழ்நத கானலிடததுத் திரைகொணர்ந்த எக்கர்மேல் தாழைபபூ அலர்நததவைபோலத் தாழை மேல் குருகினம் தங்கும் (கலி. 133.1-5). எறியும் திரைவந்து அலைத்தலால ஊறும் நீருடைய உயர் எக்கரிடத்துப் புள்ளி அலவன் வளையினின்றும் போநது விளையாடித் திரியும் (கலி. 136:1, 2).

**எக்கி** – நீரைப் பீச்சும் கருவி (பீச்சாங்குழல்). வையைப் புனலாடச் செல்வோர் வணணநீரை எறியும எக்கியையும் - பீச்சாங் குழலையும் - பனிநீர் கலநத சந்தனத்தையும் எடுத்துக் கொண்டு குதிரைமீதும் யானைமீதும் சென்றனர் (பரி. 10:12-15).

**எகினம்** – 1. நாய். நெல்லினைப் பெறுதறகு உழும் எருதுகளும் பசுக்களும் நெருங்காவாறு ஆட்டுக் கிடாவும் எகினமும் - நாயும் - சுழன்று திரியும் சோறுடைய நல்ல இல்லங்களை யுடையது பட்டினம் (பெரு. 325,327). வீட்டின் கதவிலுள்ள துளை வழியே மழையொடு வீசுகின்ற காற்று நீரைக் கொணர்ந்து தூவுதலினால் இரவில் கூரிய பற்களை யுடைய எகினம் நடுங்கும் (நற். 132:3-5).

2. கவரிமான். அரண்மனை திரு நிலைபெற்ற தலைமையினையும் மணல பரப்பிய முற்றத்தினையும் நெடிய மயிரினை யுடைய எகினததின் - கவரிமாவின - தூய நிறத்தையுடைய ஏற்றை குறுங்கால் அன்னத்தோடு தாவித்திரியும் வாசல் முன்பினையுமுடையது (நெடு. 89-92).

3. அன்னம். தலைவியின் இல்லத்தில், ஆடை ஒலிக்கும் புலைத்தி கஞ்சிப பசையைத் துறையில் அலசி விடுவது போன்ற தூய மயிரினையுடைய எகினம்-அனனம்-தன துணையுடன் விளையாடி மகிழும் (அகம். 34:11-13).

**எச்சம்** – 1. குறைபாடு. குருடு, உறுப்பில் பிண்டம், கூன், குறள், ஊம் (ஊமை), செவிடு, மா, மருள் என்ற எட்டு வகைபபட்ட பேரெச்சம்-பெருங்குறைபாடு-உடைய பேதைப்பிறப்பால் பயனில்லை என முறகாலத்தும் அறிநதோர் கூறினர் (புறம். 28:1-6).

2. மக்கட்பேறு. வண்மையும் மாண்பும் வளனும் எச்சமும்-மக்கட்பேறும்-வழிபடும் தெய்வமும் யாவதும் தவமுடையோர்க்கு உரியன (பதி. 74:25,26).

3. எஞ்சியது. துனபம் வந்தவிடத்து உதவியவர்க்கு ஒரு துன்பம் வந்தால் உதவாதவன் தானே கெடுவன்; அது மட்டுமனறி அச் செய்ந்நன்றிக்கேடு எச்சத்துள்ளாயினும் - (அவன உடமபொழிநது உயிாபோன) எஞ்சியவிடத்தும்-அத்தீப் பயனை நுகர்விக்காமல் விடாது (கலி. 149:5-7).

**எச்சில்** – 1. உமிழ் நீர். வீரன் கட்பருகிப் பச்சூனை உண்டு, நிணம் மிக்க எச்சிலாகிய-உமிழ்நீராகிய-ஈரமுடைய கையை வில்லின் புறத்தே தடவி வேற்றுப்புலம் சென்றான் (புறம். 258:2-6).

2. புரோடாசம். இறைவன் கண்டமாகச் சிதைத்த தடியைத் தெய்வமுனிவர் எழுவரும் பெற்று அழலை வேட்டு அதனை அவியுடன் பெய்தனர். பெய்ய அவவவியோடு குண்டங்களில் நிமிர்ந்த முத்தீக் கொள்ளுதலால் எசசில்-புரோடாசம்-ஆகியஅதனை அருந்ததி தவிர ஏனைக் கார்த்திகை மகளிர் அறுவரும் அயின்றனர் (பரி. 5:38-45).

**எட்டு** – எண்ணுப்பெயர். மறையோர் மணம் எட்டில் ஐந்தாம் மணத்தைக் குறிப்பது குறிஞ்சிப் பாட்டின் இயல்பாகும் (குறி. வெ. 3). திருமால் ஒன்றென இரண்டென மூன்றென நான்கென ஐந்தென ஆறென ஏழென எட்டெனத் தொண்டென நால்வகை உலகங்களிலும இவ்வெண்களால் நவிலப்படும் சிறப்பினை உடையவர் (எட்டு எனபது ஆகு பெயராக மான் என்னும் புத்தி தத்துவத்தை உணர்த்திற்று) (பரி. 3:77-80).

**எண்** – 1. எட்டு. குருடு, உறுப்பில் பிண்டம், கூன், குறள், ஊம், செவிடு, மா, மருள் ஆகிய எண்-எட்டு-வகைப்பட்ட பேரெச்சத்தால் மக்கட்குப் பயனில்லை (புறம. 28.1-5). நாடோறும் எண் தேர் செய்யும் தச்சன் ஒரு திங்களில் கருதிச் செய்த தேர்க்காலை

யொத்த திண்ஸ்ம யுடைய பொருநன் அதியமான் (புறம். 87). பாரியது பறம்பு நாட்டின் குளத்து வளைந்த கரை எணணாட்டிங்கள் (எட்டாம் பக்கத் துப் பிறை) போன்று இருந்தது (புறம். 118:2-5). யாழின் வறுவாய் எண்ணாட் பிறை வடிவினதாக இருக்கும் (பொரு. 11,12). கரிய கடல் நடுவில் என் ணாட் பிறைமதி தோன்றியது போலத் தலைவி யின் கூந்தற் பக்கத்தே சிறுநுதல் விளங்கியது (குறு. 129:3-5). நீலமணி போலும் மிடற்றினையும் எண் கையினையும் உடையவர் சிவபெருமான் (கலி. 1:4). எண்கை யேந்தல் எனத் திருமாலைக் கடுவனிள வெயினனார் குறிப்பிடுவர் (பரி. 3:38). ஈரெண் கலைகளையுடைய மதியை உணவாகக் கொண்ட அமரர்க்கு முதல்வர் திருமால் (பரி. 3:51-53). வையை நீர் எணமதி (எட்டாம் பக்கத்து மதி) அள வாதலன்றி இருள் உவாவினை (அமாவாசையை) போல நேராகக் குறைபடாது (பரி. 11:34-38).

2. எண்ணிக்கை. கௌணியன் விண்ணந்தாயன் நீர் நாணும்படி நெய் வழங்கி எண் - எண்ணிக்கை - நாணுமாறு மிகப்பல வேள்வி செய்து மண் நாணப் புகழ்பரப்பினான் (புறம். 166:21-23). போர்க்களத் தில் படையோடு கூடித் தடுக்கும் அரிய இடங்கள் பலவற்றிலும் செலுத்திய தேரின் தேய்ந்த உருளை தான் ஊர்கின்ற போக்கில் என் கூறமுடியாத பல பசிய தலைகளைத் துமிக்கப் பல போர்களை வென்றவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. 46:8-13). பெருஞ்சேரலிரும் பொறையின் தேவி தன் கருவினை எண்ணியல் (அதன் வளர்ச்சி நிறைதற் குரிய எண்ணிக்கையாகிய பத்துத்திங்கள்) நிரம்பும் வரை யில் தாங்கிப் பேரறிவை விரும்பிச் சால்பும் செம் மையும் பிறவும் ஆகிய காத்தற்குரிய அரசின் துறைகளை முற்றக் கற்ற வீறு சால புதல்வனைப் பெற்றாள் (பதி 74:17-21). தலைவர் நாட்டில் எண் ணரும் மலைகளிலுள்ள மானியங்கிய வழிகள் யாவும் இருளில் மயங்காமல் மின்னல் வழிகாட்டச் செல்லுதற்கு அரியன அல்ல என்று தோழியிடம் தலைவி கூறினாள் (அகம். 8:5,12-14). திருமால் எண்ணிறந்த புகழினை உடையவர் (பரி. 1:60). வானத்திலுள்ள நால் எண் தேவர் (முப்பத்துமூவர்) முன்னோர் பாடிய வகையில் திருமாலைப் பாடி னர் (பரி 3:27-30). பலவாக அடுக்குதலை யுடைய ஆம்பல் என்னும் என் இனைத்து என எண்ணும் எண்ணுக்கு எல்லை அறியப்படாத வடிவினை உடையவர் திருமால் (பரி. 3:44,45). நால்வகை ஊழி களிலும் எண் (எண்ணிக்கைகளால்) நவிலப்படும் சிறப் பினை யுடையவர் திருமால் (பரி. 3:80).

3. ஆராய்தல். நிலைபெற்ற வலிமையோடு நின்னைக் கருதிப் பொர எழுந்த எண் - ஆராய்தல் - இல் லாத அறிவையுடைய நின்புதல்வர் தோற்பின் நின் பெருஞ் செல்வத்தை அவர்க்கொழிய யாவர்க்குக் கொடுப்பாய் எனத் தன் மக்களுடன் போருக்குச் சென்ற கோப்பெருஞ் சோழனிடம் புல்லாற்றூர் எயிற்றியனார் வினவினார் (புறம். 213:14-16). பள்ளத்திலும் மேட்டிலும் இயைந்து ஒருங்கு ஈண்டிய ஒலிகள் எண்ணரும் திறத்தவாய் (ஆராய்ந்து இன்ன ஒலி எனக் காணற்கு அரியவாய்) இருந்தன (மலை. 345-347).

4. என். காட்டிடத்தே பலவாகக் கிளைத்த ஈர்எண் -பசிய எள்-இளங்காயின் தன்மை மாறி முற்றிய காய்கள் ஒருபிடியில் ஏழுமட்டும் அடங்கும் இயல்பு உடையவாய் நெய் உள்ளே கொள்ளும்படி வளர்ந் தன (மலை. 104-106). மழை மிகுதியாய்ப் பொழிந்த தால் எண்ணின காய் பதனழிந்து உள்ளுருகிச் சிதட் டுக்காய் (குருட்டுக்காய்) ஆயின (குறு. 261:1,2). எண் பிழிந்தெடுக்கும் நெய்யொடு வெண்கிழியையும் விரும்பாமல் சந்தனமரம் வளர்ந்த மலைச்சாரலில் குறுக்கிட்ட பக்கமலையிடத்துள்ள ஊரில் அணி கலம் பெறும் விறலி ஆடுவள் (நற். 328:8-11).

5. எளிமை. இன்சொல்லுடன் எண்-எளிய-செவ் வியை ஆகுக எனக் கிள்ளிவளவனுக்கு ஆலூர் மூலங்கிழார் அறிவுரை கூறினார் (புறம். 40:9).

எண்கு - கரடி. மராமரத்திடத்தே தன இனமெல்லாம் ஓட, வலிந்தகப்பட்ட ஆமான கன்று, யானைக் குட்டி, வாய்திறவாத எண்கின்-கரடியின்-வளைந்த அடியினை யுடைய குட்டி முதலிய கையுறைப பொருள்கள் நன்னனின் தலைவாயிலில் நிறைந்தன (மலை. 498-501). பாலை நிலத்துள்ள இருப்பையின ஆர்க்குக் கழன்று வீழந்த புதுப் பூவைத் தின்று, நிலத்தில துகள் பரக்க ஓடி, கொன்றைப் பழங் களை உண்டு, வலிய கையுடைய எண்கின் கூட் டம் பரவிச் சென்றது (அகம். 15:13-16). சுரநெறியில இருப்பை மரத்திலிருந்து உதிர்ந்து கிடந்த ஆலங் கட்டி ஒத்த உட்டுளை யுடைய திரண்ட மலர் களைக் குட்டிகளை யீன்ற எணகின் சுற்றம் கவர்ந் துண்ணும் (அகம். 95:6-10). நள்ளிரவில் கூனிய முதுகினையும் குறுநடையினையும் உடைய எண் கின் கூட்டம் சிதலை யெடுத்த புற்றினது நெடுங் குவடு சிதைய அகழ்ந்து புற்றாஞ் சோற்றினைத் தின்னச் செல்லும் (அகம். 112:1-4). பாலைவழியில் சிதலை முயன்றெடுத்த புற்றாம் பழஞ்சோறாகிய இரையை வெறுத்தால் இருப்பையின துளையுடைய வெள்ளிய பூவைப் பெருங்கையை யுடைய எண்கின் சுற்றம் கவர்ந்துண்ணும் (அகம். 149:1-4). நிலத்தில் உதிர்ந்து கிடக்கும் காய, கனி, மலர் முதலியவற்

றைத் தின்னாது, பெருங்கை எண்கு கிளையிலுள்ள கனிபோற் சாறுமிக்க இனிய துளையுடைய மலர்களைத் தினன இருப்பை மரத்தில் ஏறும் (அகம். 171:12-15). குன்றின் பக்கத்தே பெருநகையையும் பிளநத வாயினையு முடைய எணகின் ஏற்றை இருள துணிந்து கிடந்தாற் போனற அடர்ந்த கரிய மயிரையுடைய தனனுடைய குட்டியினோடும் தோலாக வறறிய முலையைக் கொணட பிண வொடும் மகிழநது தஙகும் (அகம. 201:15-18). அரிய கானததில் எணகின கூட்டததுள்ள அழல்வாய் ஏற்றை இருப்பையின் வெணபூவை வெறுத்தால் பெருஞ்செம புறறினைத தோண்டிப் புற்றாஞ் சோறறினைத் தினனும (அகம். 247:4-7). புதர் படாநத புற்றின்கண உளள இரையை விரும்பி, வெள்ளிய பாமபுகள பிறழும்படி கைகளால அகழ்ந் தெடுக்கும எணகின குட்டிகளை உடையது மலைப் பககம் (அகம. 257:19-21). அஞ்சததகும காட்டில பூனையின அடிபோன்ற குவிநத அருமபுகளை யுடைய இருப்பையின, தநதத்தைக் கடைந்தாற் போனற மிகுதியான வெளளிய பூககளை மயிர் அடர்ந்த காலையுடைய எணகின பெருங் கூட்டம் கவர்நதது (அகம. 267:5-8). வெம்மலை அருஞ் சுரததில் இருபபையின் துளையுடைய வெண் பூக் களை எணகுக் குட்டியினம் கவரும் (அகம். 275: 11-13). பாலை நிலப்பரபபில் பெருங்கை எண் கினம் புற்றுடைச் சுவரில் குரும்பியை இரையாகத் தேரும் (அகம். 307·9-11). யானைக் கொம்பைக் கடைந்தாற்போனற இருப்பையின் வெணபூககளை ஆடு பரந்து நின்றாற்போல் காணப்பெறும குட்டி களையுடைய எண்கின கூட்டம் மரத்தில் ஏறி உருவித் தினறது போக எஞசியவற்றை எயினர் மகளிர் மூங்கிற் குழாயிற் சேர்ததுக குன்றகச் சிறுகுடியுளள தெருககள் தோறும் சென்று விற்பர் (அகம. 331:1-7). நள்ளிரவில் இரைதேடும் எண் கின ஏற்றை புற்றிலுள்ள நல்ல பாம்பு நடுங்க முழங்கிக் கொல்லனது ஊதுலைத் துருத்தி போலப் பெருமூச்செறிந்து அதனைத் தோணடும் (நற். 125: 1-5). பூழியரது நல்ல நிறத்தை யுடைய ஆட்டு மந்தை போல மாரிக் காலத்து வைகறைப் பொழுதில எண்கு மலைச்சுரத்தில மேயும் (நற். 192:3-5). கவிந்த தலையையும் பருத்த மயிரையு முடைய எண்கின் ஏற்றை கவர்த்த வழியிடததே இரவில் இரைதேர் வேட்கையிற் சென்று சிதலை முயன்றெடுத்த பாம்பு வாழும் புற்றில உள்ள சிதலை யெலலாம் ஒழிய விரைவாக நகத்தால் பறித்துக் குரும்பி முதலியவற்றை உறிஞசியுண்ணும் (நற். 325:1-6). மலையைச் சேர்ந்த சிறுநெறியில் பாம்புறைகின்ற தண்ணிய துளையுடைய புற்றை இரவில் இரைதேரும் எண்கினம் மேகம் போலச் சூழ்ந்து கொண்டு தோண்டும் (நற்.336:8-11).

**எண்கை** - எட்டுக்கை. மணிமிடற்றினையும் எண்கை யினையும் - எட்டுக்கைகளையும் - உடையவர் சிவ பெருமான் (கலி. 1:4).

**எண்கையேந்தல்** - எட்டுக்கையினையுடைய பெருமை மிக்க வர். திருமாலைக் கடுவனிள வெயினனார் எண் கை ஏநதல் எனச் சுட்டுவர் (பரி. 3:38).

**எண்ணு** - எண்ணிக்கை. வடதிசை எலலையாக உள்ள இமயமலைப் பகுதியில் வாழும் மகளிர் அங்கே உலவும் யானைக் கூட்டத்தைக் கண்டு, அக்கூட்டம் விருந்தாக விரும்பும் பெண் யானை எத்துணை என்று எண்ணப் புகுங்கால் அவை எணணு - எண்ணிக்கை - முறையில் அடங்காது நின்றன (பதி. 43:2-7). கொடிகள் அசையும் மதிலகளை எண்ணின், எண்ணுவரம்பு அறியப் படாத அருமை யுடையன (பதி. 84:8). பகை வரொடு பொருது தம்படைகள் தோற்றவிடத்து அவர் ஆர்ப்பரிக்க அதனைககண்டு மீண்டும் பொருது உயிர்கொடுத்த நாணுடை மறவர்தம் அழியாத புகழையுடைய பெயர்களைப் பொறித்த கற்கள புறங்காட்டியவரை இகழும் வழிகளின் எணணு மிகப் பலவாகும் என்பது கூத்தருக்கு வழி கூறும்போது கூறப்பட்ட செய்தியாகும் (மலை. 386-389). சுரநெறியில் அம்புபட மாய்ந்தவரைத் தழையால் மறைத்த பதுக்கைகள் எண்ணுவரம்பு அறியப்படாத அளவு இருந்தன (அகம். 109:7-9).

**எண்ணெய்** – எள்ளின் நெய். கிள்ளி வளவனைச் சினங் கொளச் செய்த நாட்டு மக்கள் கண்ட கனவுகளுள் எண்ணெய் - எள்ளின் நெய் - ஆடலும் ஒன்று (புறம். 41:8–11). முரசு கட்டில் மீதுள்ள மெல்லிய பூ எண்ணெய் நுரையை முகந்தாற்போன் றிருந்தது (புறம். 50.5-7). முன் நாள் நடநத போரில தந்தை யும் கொழுநனும் மாய்ந்தனர்; இன்றும் செருப் பறை கேட்டு விருப்புற்று மயஙகிக் கையில் வேல் கொடுத்து வெணணிற ஆடை உடுத்தி உலறிய மயிர்க்குடுமியில் எணணெய் தடவிச் செருமுக நோக்கிச் செலக என வீரத்தாய் தன் ஒரே மகனை அனுப்பினாள் (புறம். 279:3-11). தலைவனது தலை மயிர் எண்ணெய் தடவியதால் சுரிந்து வளர்ந்து நல்ல கருநிறம் பெற்றிருந்தது (குறி. 107). இரவில் மணங்கமழ வந்து நம்மோடு ஒத்து இரவில் ஒழுகிய வள், விடியற்காலத்தே கூந்தலில் வேய்ந்த விரவு மலரை உதிர்த்து விட்டு மயிர்ச்சந்தன மிட்டுக் கோதிய நறிய கூந்தலிடத்தே எண்ணெய் தடவி நம்மிடம் பொருந்தாதமுகததினளாய்த் தாய் முதவி

யலரோடு ஒத்து ஒழுகினாள் எனத் தலைவன் நெஞ்சுக்குக் கூறினான் (குறு.312:3-8). வையைக்குப் புனலாடச் சென்றோர் எண்ணெய்ப் பசை நீங்க நுண்பொடியை யிட்டுத் தேய்த்தனர் (பரி. 10:91).

எண்பதம் - எளிய செவ்வி. இன்சொல் இயம்புலதோடு எண்பதம் - எளிய செவ்வியை - உடையை யாகுக எனக் கிள்ளி வளவனை நோக்கி ஆவூர் மூலங் கிழார் அறிவுரை கூறினார் (புறம். 40:9).

எண்பேரெச்சம் - எட்டுப் பெரிய குறைபாடு. குருடும் வடிவில்லாத பிண்டமும் கூனும குறளும் ஊமும் செவிடும் மாவும் மருளும் என்னும் எண்பேரெச்சம்- எட்டுவகைப் பட்ட பெரிய குறைபாடு - உலகத்து உயிர் வாழவார்க்குப் பேதைத் தன்மை யுடைய பிறப்பாகும் (புறம. 28:1-5).

எண்மர் - எட்டுப் பேர் (அட்டவசுக்கள்). மாசற்ற எண்மரும் - அட்ட வசுக்களும்-திருமாலிடத்தே தோன்றியவ ராவர் (பரி. 3:7,10). திருந்துநூல் எண்மரும் பிற தேவரும் செவ்வேளை வழிபட இம்மண்ணுலகத் திற்கு வந்து உறையுமிடமாயிற்று திருப்பரங்குன் றம் (பரி. 8:5-11).

எண்மை-எளிமை. தம்மைப் பிழைத்தோரைப் பொறுக் கும் தலைமை சோழர் குலத்தில் பிறந்தவர்க்கு எண்மை-எளிமை-உடையது என்பதைச் சோழன் நலங்கிள்ளியின் தம்பி மாவளத்தான் காட்டினான் எனத் தாமற்பல் கண்ணனார் குறிப்பிட்டுள்ளார் (புறம். 43: 18-20). சேரமான் குட்டுவன் கோதை யிருந்த மூதூரில் தலைமையுடைய நாளோலக் கத்துச் செம்மாந்து புகுதல் இரவலர்க்கு எண்மை யல்லது அவனது வலிமைக்கு மாறுபட்டு வஞ்சினங் கூறும மன்னர்க்கு இடையன் ஆட்டினத்தோடு அணுக முடியாத புலிதுஞ்சும் நிலம் போன்று அஞ்சத்தக்க அரியதாகும் (புறம். 54:1-5, 8-13). கனி முதிர் பக்கமலைச் சாரலில் எமது தனிமையை நாடோறும் காண்டலின் எண்மை செய்தனை (எங்களை எளிமையுடையேமாய் நினைத்துவிட்டாய்) எனத் தோழி தலைவனிடம் கூறுதல் (அகம். 228: 7,8).

எதிர்குதிர் - மாறுபாடு (ஏட்டிக்குப் போட்டி என்று இப் போது வழங்கும்). மேகத்தின் இடியொலி யானை முழக்கம் போன்றது. அவ்வொலி கேட்ட கோழி அஞ்சிக் குன்றதிரக் கூவுதலானும் மதயானை அக்குரலுக்கு மாறாகப் பிளிறுதலானும் மலை முழையில் எழும் எதிரொலி எதிர்குதிராக - மாறு பாடாக - ஒலிக்கின்றது (பரி. 8: 17-21).

எதிர்ப்பை - காணுதல். தலைவன் மணக்கவரும் முரசொலி கேட்கும் நாளுக்குள் தலைவிக்கு உயிர் இருக்கும்படியான குறியை, எதிர்ப்பை- காணுதல் - பெறற்கரியதொன்றாகும் எனக் கூறித் தோழி வரைவு கடாவுதல் (நற். 93: 10-12).

எந்திரம் - 1. ஆலை. வேந்தர்க்குத் துணையாய மறவ னது ஊரில் கரும்பின் எந்திரம் - ஆலை - ஒலிக்கும் போது பக்கதது நீர்நிலையி லுள்ள இருஞ்சுவல் வாளை பிறழும் (புறம். 322: 7-10). இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதனின் பகைவர் நாடுகளில் கரும்பு வெட்டுபவர் கருப்பஞ்சாற்றைப் பிழியும் எந்திரம் ஆட்டும் சாற்றின் மிகுதியால் சாறுவிழும் தூம்பு வருந்துமாறு வளம் மிகுந்திருந்தது. இப்போது அவன படையெடுப்பால் அந்நாடுகள் காண்போர் கைபுடைத் திரங்கச் சிதைந்தன (பதி. 19: 22-27). தொணடைமான் இளந்திரையன் நாட்டில் யாளி தாக்குதலினால், யானைக் கூட்டங்கள் கலங்கிக் கதறினாற் போன்று எந்திரம் ஆரவாரிக்கும் ஓசை யுடைய, கருப்பஞ்சாற்றைக் கட்டியாகக் காயச்சும புகை சூழ்ந்த கொட்டில்கள் தோறும் வழிப் போக்கர் பலர்க்கும் கரும்பின் இனிய சாற்றினைக் கொடுப்பர் (பெரு. 258-262). மருதநிலம் பலவகை ஓசைகளுக்கிடையே கரும்பின் எநதிரம் இடும் ஓசை யினையு முடையது (மது. 258). கரும்பின் எந்திர முழக்கிற்கு யானை முழக்கு உவமை (ஐங். 55:1).

2. பொறி. திங்களும் நுழையாத உயர்ந்த, எந்தி ரம் - பொறி - பொருந்திய குறுகிய வாயிலையுடைய அரணிடததே போர்க்காலத்தில் வீரர் தங்கிக் கள் பருகினர் (புறம். 177:4-6), ஆடுகோட்பாட்டுச் சேர லாதனின மூதூர் எயிலின் வாயில மூட்டுவாய அமைந்த சிலமபொடு அணியாகிய தழை தங்கு கின்ற எந்திரம் பொருந்திய கட்டினை - உடையது (பதி. 53:5-7).

எய் - முள்ளம்பன்றி. வேலின் முனையை யொத்த கூரிய முனையுடைய ஈந்திலையால் வேயப்பட்ட எய் - முள்ளம்பன்றி - முதுகு போலும் குடிலில எயி னர் வாழ்ந்தனர் (பெரு. 87,88). நெடிய முழையில் தங்கிய கூரிய முள்ளையுடைய எய் குத்தி வருத்திய தால் கானவர் அழுதனர் (மலை. 300,301). வேங் கையின் வலிமையை அழித்த நெடுநல்யானை மதஞ் சிறந்து வழிப்போக்கரைக் கொல்லுதற்கும் எய் தோன்றுதற்கும் இடனான பரந்து பட்ட பாலை வழியில ஆள்வினை நயந்து தலைவியைப் பிரிதல் தகாதெனத் தோழி தலைவனைத் தடுத்தாள் (அகம். 307:5-9). சிறுகட் பன்றி, எய்ம்முள் போன்ற பருத்த மயிர்பொருந்திய பிடருடையது (நற். 98: 1,2). எய்ம்மான் காண்க.

எய்ம்மான் - முள்ளம்பன்றி. பெரும்புகழுடையவனாகிய காரியாதியினது குடநாட்டின்கண் எயினர் எய்து கொண்டு வந்த எய்மமானின - முள்ளம்பன்றியின்-

எறிதசை நிணங் கலந்து சமைத்த புதிய வெண் சோற்றுக் கட்டியை அக்காரியாதியின் வீரர் வருவார்க் கெல்லாம் ஒப்பக் கொடுப்பர் (புறம. 177: 12-15). எய் காண்க.

எயில் – 1. மதில். அணுகுதற்கரிய வலிமையும் கமழ்கின்ற மதமும் உடைய களிற்றின் பிடர்த்தலையிலிருந்து கருங்கை ஒள்வாட் பெரும்பெயர் வழுதி, அதன தந்தத்தைப் படைக்கலமாகக் கொணடு பகைவரின் எயிற் கதவை - மதிற் கதவை - குத்திக் கூற்றத்தின் அருந்தொழிற்கு இளையாதவனாயிருந்தான் (புறம.3.8-13). முதுகுடுமிப் பெருவழுதி பகைவர் நாட்டிற்கு யானையை ஏவி விளைநிலப் பக்கத்தையுடைய ஆரெயில் பலவற்றைக் கைபபற்றி அவ்வெயிலிற் கொண்ட அழகுபடச் செய்த நல்ல அணிகலன்களை பரிசின் மாக்கட்கு வரிசையின் நலகினான் (புறம். 6:11-16). பகைவரின் நல்லெயில் சூழ்ந்த அகலிடங்களைக் கழுதையினத்தைப் பூட்டி உழுது பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி பாழ்படுத்தினான் (புறம். 15:2,3). கானப்பேர் எனனும் எயில் பகைவர் நெருங்குதற்கரிய சிற்றரண்களால் சூழப் பெற்றது (புறம். 21:6). தென்னம் பொருப்பனாகிய பாண்டியனது நல்ல நாட்டிலுள்ள ஏழெயிலின் - ஏழாகிய மதிலின் - கதவத்தை எறிந்து கைக்கொண்டு நலங்கிள்ளி தன் புலிச் சின்னத்தைப் பொறித்தான் (புறம. 33:7-9). பகைவர் நெருங்குதற்கு அஞ்சுகின்ற மிக்க வலிமையுடைய விண்ணிடத்துத் தூங்கும் எயிலினைக் கிள்ளி வளவனின் முன்னோர் எறிந்தனர் (புறம். 39:4-6). பகைவர் ஓம்பிய மறம் நிலைபெற்ற எயிலினை ஓம்பாது எதிர்நின் றழித்து அவரைக் கொன்று அவர் முடியாகச் செய்த பசும் பொன்னால் தன் அடிபொலிய வீரக்கழல் செய்து புனைந்து கொண்ட வல்லாள னாவான் கிள்ளி வளவன் (புறம். 40:1-5). மலையாகிய பெருவில்லில் பாம்பாகிய நாணைப் பொருத்தி அம்பு கொண்டு மூவெயிலை எய்து கறைமிடற்றண்ணலாகிய சிவபெருமான் அமரர்க்கு வெற்றி கொடுத்தார் (புறம். 55:1-4). பகைவரது அரிய எயில் அவரிடத் திருப்பவும் அதனைக் கைக்கொள்ளு முன்னே நும்முடையது எனப் பாணர்க்குக் கொடுக்கும் மாவள்ளியன் சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னி (புறம். 203:9-12). 'பகைவரது அரிய எயிலைச் சூழ்ந்து வாயிதழைக் கடித்து உரப்பி நீ போருக்கு முந்துக' என வேந்தன் வீரனை அனுப்பாமல் தானே முந்துவான் என அவனது மறச்சிறப்புக் கூறப் பெறுகின்றது (புறம். 298:3-5). ஓரெயில் மன்னன், தன் இளைய மகளை மணக்க விரும்புவோர் வேந்தராயினும் தன்னை வணங்கிக் கேளாவிடின் மகட்கொடை நேரான் (புறம். 338:8,12). கிணைஞன் கிணைப்பறை முழககிக் கிள்ளி வளவனிடம் பகை மன்னனது எயிலிடத்தே கொண்ட பொருள்களைப் பரிசிலாகப் பெற வந்தேன் எனக் கூறுவதாகக் கோவூர் கிழார் பாடியுள்ளார் (புறம். 373:31-34). பொருகுட்டெழினி பகைமன்னரது அரிய எயிலைப் பொருதழித்து நிணம்படு குருதிப் பெருக்கால் உண்டாய ஈரமுடைய களத்தில் கழுதையினத்தை ஏராகப்பூட்டி உழுது வெள்ளைவரகும் கொள்ளும் வித்தினான் (புறம். 392:6-10). சிவபெருமான் எயிலை எரியூட்டிய வில்லையுடையவர் (பதி. க. வா. 3): காவலுடைய காவற்காட்டையும் ஆழ்ந்த அகழியையும் நெடுமதிலையும் நிலையான ஞாயிலையும் அம்புக் கட்டுக்களையு முடைய அரிய எயிலை உட்புக்கு அழித்து ஊர் சுட்டதால் எழுந்த புகையுண்ட விரிந்த மார்பன் இமையவரமபன் நெடுஞ்சேரலாதன் (பதி. 20.17-20). பல்யானைச் செலகெழுகுட்டுவன் போர்செய்த பகை மன்னரின் எயில்களில் மக்களின்மையின் காவல் வைக்கப்பட வில்லை (பதி. 25:5). போர் முரசு முழங்கப் போரை விரும்பிக் கொள்ளுதலில் ஒப்புமை நீங்கப் பகைவரது அரிய எயிலைப் பொருது பல்யானைச்செல்கெழுகுட்டுவன் கைக்கொண்டான் (பதி. 29:12-14). களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலின் தோள்கள், தேவருக்கு அஞ்சி அவுணர் வானத்தில் அமைத்த இயங்கும் எயிலின் கதவைக் காக்கும் கணைய மரம் போன்றன (பதி. 31:18-20). வாள்மதிலாக வேலாகிய காவற்காட்டை உயரச்செய்து விற்பொறி விடுத்த கூரிய முள்போன்ற அம்பினையும் சிவந்த வாயையுமுடைய படைக் கருவிகள் வளைந்த அகழியையும் இடிபோன்று முழங்கும் முரசினையும் கொண்ட அரிய எயிலைப் போர்செய்ய வரும் வேந்தர் கருதின் அஞ்சிப் பொராமலே நீங்குவர் (பதி. 33:7-12). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் பனை மாலையையும் பெரிய கழலையும் அணிந்து நிலைபெற்ற எயில்களை அழித்து அங்குள்ள மறவரைச் சிறைப்படுத்திக் கொணர்ந்தனன் (பதி. 37:8,9). பகைவரின் எயிலிடங்கள் சிதையுமாறு யானைப்பாகன் ஏவியதால் நார்முடிச் சேரலுக்கு நாடுகாவலைத் தொடிமருப்பு யானை அளித்தது (பதி. 38:4-6). நார்முடிச்சேரல் நிலைபெற்ற எயிலிலுள்ள மறவரை ஒலியவிந்தடங்கச் செய்தான் (பதி: 40:8). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் வான் தோய் வெண்குடை வேந்தர்தம் எயிலைப் பகுத்துக் கொள்வதில் வல்லவன் (பதி. 52:26,27,31). நின் களிறுகளைத் தடுத்து நிறுத்த முடியாது ஆதலால் நினனாற் கைக்கொண்டு பகைவர்க்குக் கொடுக்கப்

பெற்ற நிலைபெற்ற எயிலிடத்து அவற்றைச் செலுத்துவதன்றி, நின் முன்னோராற் பாதுகாக் கப்பட்ட வேந்தரது எயில்வழிச் செலுத்தாதே; வளைந்து செல்வதாயினும் வேறுவழியிற் செல்க என ஆடுகோட்பாட்டுச் சேரலாதனை நோக்கிக் காக்கைபாடினியார் நச்செள்ளையார் கூறுகிறார் (பதி. 53:10-14). எயிலை எறியும் வல்வில்லில் அம்பு களைத் தொடுத்தற் குரிய கூறுபாடுகளை எல்லாம் முற்றக் கற்று விளங்கிய பெரிய கையினையுடையவ னாவன் வானவரம்பன் என்று ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைக் கூறுவர் (பதி. 58:10-12). களிற்றுத் தொகுதி, கிடுகுப்படை, புரவி ஆகியவற்றோடு வலிய அரிய பகைவர் எயிலைப் பக்கத்தே நெருங் கும்படி வளைத்து அவ்விடத்தே செலவக்கடுங்கோ வாழியாதனின் தானை தங்கி எரிபரந் தெடுக்கும் (பதி. 62:1-5). செல்வக் கடுங்கோ வாழியாதனின் மறவர், விரும்பத்தக்க சித்திரங்கள் நிலைபெற்ற எயிலை அழித்தல்லது உண்ணாமல் பலநாள் கழித்த நெஞ்சு புகல் ஊக்கத்தினர் (பதி. 68:5-7). மதிலினிடதது வெளியே தோன்றாமல் தம் பழி யைச் செய்ய முயலும் பகைவரது ஆழ்ந்த அகழியை யுடைய குறிய படிகளைக் கொண்ட ஞாயிலைப பெற்ற அரிய எயிலினது காவலைப் பெருஞ்சேர லிரும்பொறை கைப்பற்றினான் (பதி. 71:11-13). பகைவர் தம் கொடிகள் அசையும் ஆரெயில்களின் எண்ணிக்கை எல்லை யறியப்படா. பல மாக்கள் பரந்தன, பகைப்புலம் தன்னால் வெல்லுதற்கரிய ஒன்று என்றெண்ணாமல் அதனைப் பொருதழித்த வன் இளஞ் சேர லிரும்பொறை (பதி. 84:8-10). பகைவரது ஆரெயில் அலைத்த கல்லைக் கக்கினாற் போல இடையறாது வீசும் கவணையும் நாரரி நற வையும் உடைய கொங்கு நாட்டினர்க்குத் தலை வன் இளஞ்சேர லிரும்பொறை (பதி. 88:18, 19). பகைவர் புகுதற்கரிய காவற்காட்டையுடைய மலை யிடத்தமைத்த ஐந்து எயில்களை இளஞ்சேரலிரும் பொறை எறிந்தான் (பதி. ப. 9:5). ஏற்றுக்கொடியை வலப்பக்கம் உயர்த்திய திணிதோளனும் உமைய மர்ந்து விளங்குபவனும் இமையாமுக்கண் உடைய வனும் மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு மாகிய சிவபெருமான் முருகனைக்காணவருதல் (முரு. 151-154, 174). ஓங்கிய எயிற்கதவத்தில உரு மேறு தன் கழுத்தைத் தேய்க்கும் பகைவரது தூங் கெயிலை அழித்தவன் தொடித்தோட் செம்பியன் (சிறு. 80-82). வலியமைந்த வெற்றியொடு பகை யைத் தத்தம் இடத்தை விட்டகற்றி வெற்றிவேல் மன்னரின் நிலைத்த எயிலை அழித்து அதனாற் பெற்ற பொருளைக் கொண்டு நல்லியக்கோடன் இரவலரது புன்கண் தீர்த்தான் (சிறு. 246-248). பெருமை கெடும்படி பகைவரை வென்று அவர் நாடழிய எயிலைக் கைப்பற்றி அவர்க்குதவிய சுற் றத்தின வலிமை கெடுத்தமையான் நெடுஞ்செழி யனால் செறப்பட்ட பகைவர் அவன்வழி ஒழுகினர் (மது. 186-189). தம்முடன் நட்புக் கொண்டோர் உவப்ப, எயில் பலவற்றை வென்று கொண்ட பொருளை வலிய வழங்கி மலர்தலை உலகத்தை ஆண்டு இறந்த பெருந்திறல் மன்னர் முந்நீர்த் திரையிடு மணலினும் பலராவர் (மது. 220,234-237). மதுரை அங்காடித் தெருவில் ஆடும் பல கொடி களிடையே வேறுபல பெயர்களை யுடைய அரிய பல எயில்களைக் கைப்பற்றிப் பாண்டியன் நாடோறும் உயர்த்திய நலம் பெறு புனை கொடி களும் பறந்தன (மது. 367,368). பாண்டியன் அக நாட்டினைச் சூழ்ந்துள்ள பகைவரின் எயிலிலிட்ட அணங்குடைக் கதவுகளைக் கவர்ந்தான்; கவர்ந்த தோடு பகைவர் கைதொழுது வாழ்த்தித் திறை யாகத் தந்த சீரிய கலனகளனைத்தும் பெற்றுத் தேவருலகம்போல் பொலி வெய்தி மதுரை பெரும் புகழ் அடைந்தது (மது. 693-699). கற்றரையை இடித்து இயற்றிய சிறுவாயினை யுடைய கிடங் கினைக் கொண்ட நல்ல எயிலில் வருந்திய மறச் செல்வமுடையவரைப் பரிசில் பெறக் கொணர்மின் எனப் பாண்டியன் நெடுஞ் செழியன் ஏவலரை ஏவினன் (மது. 730-731). பகை மனனரின நிலை பெற்ற எயிலகளைக் கைப்பற்றும் வலிய தாளி னைக் கொணட யானைப்படையும் மறத்தாற் சிறந்த வலியும் உடைமையால் திருமாவளவன் செங்கண்ணாற் சினந்து நோக்கி, முலலை நில மனனர் தம் வழிததோன்றல்கள் அழிய, இருங் கோவேளிர் சுற்றம்கெடச செய்தான் (பட். 277-282). திருமாவளவனின், வீரத்திருமகள் நிலை பெற்ற பெரிய தலைமையினை யுடைய எயில் மின்போன்ற ஒளி வீசித் தன் புகழை எங்கும் பரப்பியதால் பகை மன்னர் தம் ஒளிமழுங்கி வளவனின் அடிபணிந்து அவனருள் வேண்டினர் (பட். 291-294). மருதநிலம் சூழந்த கொடி யசையும் ஆரெயிலை யுடைய ஊரைப் பகைமனனர் திறையாகக் கொடுப்பவும் வேந்தன் ஏற்றுக் கொள்ளாது சினம் சிறந்து தானையுடன் போர்மேற் சென்றான் (அகம். 84: 14-17). அரசர் மனக்கோட்டந் தணிதற்குக் காரண மான எயில்போலக் காவல் சிறந்து நம்மை வருத் தியவள் பெறற்கரியள் எனத் தலைவன் நெஞ் சிற்குக் கூறினான் (அகம். 372:14-16). வெல்வேலை யும் அண்ணல் யானையும் உடைய அடுபோர் வேந்தர் பலர் ஒருங்கு கூடி முற்றுகை யிட்டு வளைத்துக் கொண்ட இடிந்த ஞாயிலை யுடைய ஒற்றை எயிலால் சூழப்பட்ட அரண்மனைக்குள்

இருக்கும் நொச்சி வேந்தனைப் போலத் தலைவி துயிலாது வருந்தினளோ, அவள் அளியள் எனத் தலைவன் இடைச்சுரத்து நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 373:15-19). பகைவரின் போர்முனையாகிய அரணை வென்ற போர்த்தொழில் வல்ல தானையையும் வண்டிமிரும் மாலையினையும் உடைய சேரன் தாக்கிய பகைவரின் எயில் போலத் தலைவியின் மேனி முழுவதும் பாழ்பட்டது (அகம். 381: 13-17). தான் மேற்கொண்ட போரில் தோற்றுப் பெயர்ந்த வேந்தன் மீளவும் தானையொடு முன் வந்து அரணில் தங்கத் தனக்குப் பற்றுக்கோடாக நிலைத்த எயிலில் தங்கியிருத்தல் இயலாமையின் அப்பகைவர் அறியாமல் வெளிப்பட்டு நன்னன் ஓங்கிய மூங்கில் வளர்ந்த காட்டிடத்து வந்து பொருது பகைவரை வென்று புகழ்பெற்றான் (அகம். 392:21-27). அஞ்சாதே, என்று துணையாக வந்த வேந்தன் கைவிட்டானாக யானைப்படையுடைய வேந்தன் மதிற்புறத்தே தங்குதலின், துன்பங் களையுநரைக் காணாது கலங்கிய உடைமதில் ஓரெயில் மன்னன் போலப் பிரிவுணர்ந்த தலைவி அழிவினால் வருந்தினாள் (நற். 43:7-12). காவலரண் சிதைய யானைப் படையைப் பரப்பி அரண்பல கடந்த வலிமிக்க தானைகளை யுடைய வழுதி பல நாள் வாழ்க வெனத் தொழுது நிற்கும் நிலைத்த எயில் உடைய குறுநில மன்னர் போல யாம் சிறிதும் வருந்தாதுள்ளோம் எனப் பரத்தை தலைவனை நெருங்கிப் பாணற் குரைத்தாள் (நற். 150:2-6). மகளிர் பொலந்தொடி போல மின்னி இன்னிசை முரசின் முழங்கிப் பகைப்படை பாயாதவாறு காத்தற்கு மன்னரின் எயில்மீது வைத்துள்ள பல கிடுகுகள் போல மேகம் தலைவன் நாட்டு மலை மீது தவழ்ந்து செல்லும் (நற். 197:8,12). வான் தோயும் மதிலில் உள்ளார் வருந்த முற்றுகை செய்து யானைப் படையோடு பகையரசன் அதன் புறத்தே தங்கிய போது மதிலிலுள்ள பெருந்தகை மறவர் பகைவர் உள்ளே புகாதபடி நல்லெயிலைக் காக்கும் வீரரை உடையம் எனக் கருதி வன்கண்மையாக இருந்தான் (நற். 287:1-4). மூன்று கண்ணையுடைய சிவபெருமான் மூவெயிலையும் வெகுள அவர் முகம் தெறுமாறு போல ஞாயிற்றின் ஒண் கதிர் சுட்டது (கலி. 2:4,5). கணிச்சிப் படையுடைய சிவன் சினந்தமையின் மூவெயில் அழிந்து உதிர்ந்தது போல ஞாயிறு தெறுகையினால் மலை பிளந்து உதிர்ந்தது (கலி. 2:5-7). வேல் தைத்துச் செறிந்த நெடுங்கதவமைத்து அடைத்து அழகு கொண்ட எயிலைக் குத்தும் களிறுபோல இடு மண்ணின் நெடுங்குவட்டை அலைகள் மோதித் தாக்கின (கலி. 135:3-5). தன் பகைவனோடு சினந்த வேந்தன் எயிற்புறத்தே சென்று தங்கிய வினையால் மதிலினுள் இருக்கும் மன்னனுக்கு வந்த வருத்தம் போலக் கடிதில் வரைவு நிகழ்தல் வேண்டி விரையும் நெஞ்சத்தாலே தலைவி பெரிதும் வருத்தம் எய்தினாள் (கலி. 149:14-16). கொன்றை மாலை யணிந்த இறைவன், இயங்கும் எயிலை அம்பு எய்கையினாலே தோன்றிய எரி விசும்பில் நிவந்து அழலுமாறு போல, ஞாயிறு தோன்றி எல்லாவிடத்தையும் சுட்டது (கலி. 150:1-3). நான்முகனாகிய பாகன் செலுத்த வேதக் குதிரைகள் பூட்டிய பூமியாகிய தேரேறி நாகம் நாணாக, மலை வில்லாகக் கொண்டு, மூவகையான அரிய எயில்களைச் சிவன் ஓர் அழலம்பினால் எரித்தார் (பரி. 5:22-26).

2. **ஊரின் பெயர்.** ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் நண்பர்களுள் நிலைபெற்ற எயில என்னும் ஊரினரான ஆந்தை ஒருவராவர் (புறம். 71:12).

**எயிற்பட்டினம் -** கடற்கரையை யடுத்த ஊர். ஓய்மான் நாட்டு நல்லியக் கோடனுக் குரியது. இதன் கடற்கரைக்கண் தாழை, செருந்தி, கழிமுள்ளி முதலியன பூத்திருந்தன; புன்னை மரங்கள் நிறைந்திருந்தன. உப்பங்கழிகள் சூழ்ந்த எயிற்பட்டினம் புலவர் பாடும் சிறப்பு வாய்ந்தது. இதனை மதிலொடு பெயரிய பட்டினம் என்று இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் குறிப்பிடுவர் (சிறு. 146-153). இம்மென்னும் முழவோசையை யுடையது எயிற்பட்டினம் (சிறு. வெ. 1).

**எயிற்றி -** வேட்டுவப் பெண். வல்லார்கிழான் பண்ணனின் பெரிய அரண் சூழ்ந்த வன்புல இருக்கையில் மன்றத்தின்கண் நிற்கும் விளா மரத்தின் கனி மனையிடத்து வீழ்ந்தவுடன் கருங்கண் எயிற்றியின் – வேட்டுவப் பெண்ணின்-மகனோடு காட்டு யானையின் கன்றும் ஓடி அக்கனியை எடுக்கும் (புறம். 181:1-3). முள்ளம்பன்றியின் இறைச்சியை உணவாகவுடைய எயினரின் தங்கையாகிய இளைய மாமை நிறம் பொருந்திய எயிற்றி எனத் தலைவியைத் தோழி குறிக்கின்றாள் (ஐங். 364:1-2). கூட்டமான மான்களை வேட்டத்தாற் கொன்று தன் தமையன் மார் கொண்டுவந்த நிறமுண்டய ஊனாகிய உணவைக் கவரவரும் புட்களை விரட்டும் அழகு மாட்சிமைப் பட்ட எயிற்றி எனத் தலைவியைத் தலைவன் சுட்டுகின்றான் (ஐங். 365:1-3). நல்லியக்கோடனின் வேலூரில் வெப்பம் மிக்க குடிலிலிருக்கும் எயிற்றியர் அட்ட இனிய புளிங்கறி யிடப்பட்ட வெவ்விய சோற்றினை ஆமானினது சூட்டிறைச்சியுடன் சிறுபாணர்க்கு வழங்குவர் (சிறு. 173-177). வெண்பல் எயிற்றியர் பூண்கட்டிய

வலிய கோல் செருகிய உளிபோலும் வாயினை யுடைய பாரைகளாலே கரம்பைநிலத்தைக் கட்டிகள் கீழ மேலாகும்படி கிளறி அங்கு எறும்புகளால் திரட்டி வைக்கப்பட்டிருக்கும புல்லரிசியை வாரி யெடுத்து வருவர் (பெரு. 91-94).

**எயிற்றியர் - வேட்டுவ மகளிர்.** எயிற்றி காண்க.

**எயிற்றியனார் - புலவர்.** எயிற்றியனார் எனும் பெயர் இயற்பெயராகத் தெரியவிலலை. காரணப்பெயராக இருககலாம என்பர் உ. வே. சா. (குறுநதொகை — பாடபபட்டோர் வரலாறு பக். 127). குறுநதொகை 286 - ஆம் பாடலொன்றே இவா பாடியது. இரந்து பின்னின்ற கிழவன் குறைமறாமற் கூறியது, ,பாஙகறகுச் சொலலியது என்ற இருதுறைகளுக்கும் ஏற்குமாறு அமைந்துள்ளது இவரது பாடல. தலைவியை உள்ளிக் காணபென் போல்வன என்று தலைவன் கூறுங்கால அவ்வாறு உளளுதற் குரிய அவளின் நலன்களை அவன அழகுற அடுக்கிக் கூறும் முறையில் புலவர் அப்பாடலைப் பாடியுள்ள நயம் பாராட்டத் தகுவதாம். தலைவியின் எயிற்றினைச் சிறப்பித்துப் பாடிய காரணம் பற்றி இவர் எயிற்றினார் எனப் பெயர் பெற்றார் எனறும் இப்பெயரே பின்னர் ஏடெழுதுவோரால் பிழைபட எயிற்றியனார் என எழுதப் பட்டதெனறும கருதுவர் மொ. அ. துரை அரங்கசாமி (ச. சி. பெ. பக. 62, 63). மற்றும் புறநானூறு 213-ஆம் பாடலைப் பாடிய புல்லாற்றூர் எயிற்றியனார் என்பாரும் இப்புலவரும ஒருவராகவேஇருத்தல கூடுமெனபதும அவர் கருதது (ஷி. பக். 68).

**எயிறு - 1. பல்.** நஞ்சினைச் சுரக்கும் எயிற்றினை-பல்லை-உடைய பாம்பின் தலை நடுங்குமாறு இடியென முழங்கும் முரசினை உடையவன் குடவர் கோவாகிய யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும் பொறை (புறம். 17:37-40). நஞசினைக் கொணட வெள்ளிய எயிற்றினை யுடையது ஐந்தலை நாகம் (புறம 37:1,2). சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைச் சினப்பித்த நாட்டு மக்கள் தீய நிமித்தமாக எயிறு நிலதததே வீழக் கனாககண்டனர் (புறம். 41:8,11). வெருகினது முளளெயிறு போல முலலை அரும்பும் (புறம்.117:8,9). முள்ளெயிற்றினை யுடையது பாம்பு (புறம. 126:18,19). பாம்பின் கூரிய எயிற்றினின்றும் பிழைத்துப் போந்த திங்களைப் போல, வெட்சி மறவரின கையினினறும் ஆனிரைகள் வீரன ஒருவனால் மீட்கப்பட்டன (புறம். 260:16-19). பெருஞ்சிக்கலகிழான் தன் மகளை வேந்தனொருவனுககு மகட்கொடை மறுக்கவே, இருவருக்கும் பகைமை மூணட நிலையில், 'கூரிய எயிற்றை உடைய இப்பெண், மரத்தில் தோன்றும் சிறுதீ அம்மரத்தையே அழிப்பது போனறு தான் பிறந்த ஊரின் அழிவுக்குத் தானே காரணம் ஆயினள்' என வருந்திப பாடுகிறார் மதுரை மருதனிள நாகனார் (புறம. 349). தலைவ னொருவனின் உரிமை மகளிரைக் குறிக்குங்கால, 'வல்லென ஒரு சொல வழங்கவேணடுமாயினும் நா அஞ்சுதற்கேதுவான முள்ளெயிறுகளை உடைய மகளிர்' என்பர் கயமனார் (புறம. 361:15,16). தலையாலங்கானததுச் செருவெனற பாணடியன நெடுஞ்செழியன வென்று தங்கியிருநததோர் போர்க்களததில் பிணங்களை யுண்ணும் பேய்மகள பனறிகளின் கொம்புபோன்ற வெள்ளிய எயிற்றால கடிததுத் தசையொடு கூடிய நிணத்தைத் தினறு சுவைகணடவளாய் அவனை வாழ்த்திப் பாடிக் கூத்தாடினள் (புறம. 371 22-27). வெளளிய நகையோடு விளங்குகின்ற எயிறுகளை யுடைய விறலியரின் பாடலைக் கேட்டுச சோலையில தங்கியிருநதான ஆடுகோட்பாட்டுச சேரலாதன (பதி. 51.20-22). நஞ்சுடனே உறைககுள் கிடநத துளையுடைய வெளளிய எயிறறினை உடைய பாமபுகள் மாளுமபடி அடிககின்ற கருடனை அணிநத கொடி யுடையவர் திருமால (முரு. 148,150,151). பனை நுங்கின் இனிய நீர் தன் பணபால தோறகுமபடியான வாயூறலைக் கொணட எயிறுகளை உடையவர் விறலியர் (சிறு. 27-31). விளஙகுகினற எயிறுகளை உடையவள் பேயமகள (சிறு 196,197). காம நுகர்சசியையன்றி வேறொனறையும் கலலாத இளையோருடனே மகிழநது புணரும் மகளிர் நேரிய கூரிய எயிறறினை உடைய வாயினர் (மது. 413,414, 420). தலையாலங்கானததுச் செருவெனற பாணடியன நெடுஞ்செழியனால கூடபபெறும் மகளிர் கூரெயிறறினை உடையவர் (மது. 708,712). மூங்கில முளை போன்ற ஒளியுடன கூடிய எயிறுகளை உடைய தலைவனின் நாய் தனககுப புதியவராகிய தலைவியையும் தோழியையும கணடவுடன வளைத்துக் கொண்டு அவர்மேல பாய்நதது (குறி. 131,132). செவ்வானில் விளங்கும பிறையை ஒத்த வளைநத வெள்ளிய கூரிய எயிற்றினை உடைய அநதணன் சிவபெருமான (அகம்.க.வா. 8,9,15). பொருள் வயிற் பிரியக் கருதிய தலைமகனிடத்துத தலைமகள் தானே குறுகவந்து தன் கூரெயிறு தோன்றச் சிறிதே அகத்தெழுந்த மெய்ம்மை யல்லாத முறுவலைக் காட்டி, அவன் வினைமேற் செல்லுதலை உடனபடாத மெய்ப்பாடுகளுடன் நின்றாள (அகம். 5:4-7,19-24). பல வேலகளை யுடைய மத்தியென் பானின கழாஅர் என்னும் ஊரின வயல்களில் வாளைமீன்களை மேயந்த கூரிய எயிற்றையுடைய நீர்நாய, பிரம்பின் தூறுகளில தங்கும் (அகம். 6:16-20).'அறிவுடைய இளைய மகளே, நினக்கு முலைகள்

அரும்பின; கூரிய எயிறுகள் ஒளிகொண்டன; நீ பேதைப் பருவத்தினை அல்லை; பெதும்பைப் பருவத்தினை யாதலின் இனி உன் தோழியருடன் எங்கணும் போகாதே' என்று செவிலித்தாய் இல்லத்திற்குள் காப்புச் செய்ததற் கஞ்சித் தலைவி தலைவனுடன் போயினள் (அகம். 7:1,2,5-13). கூரெயிற்று அரிவையாகிய தலைவனின் காதற் பரத்தை, அவன் மகனைத் தெருவில் கண்டு, அன்புடன் எடுத்து அணைத்து நின்றனள் (அகம். 16:7-11). கொற்கையம் பெருந்துறை முத்துப் போன்ற முறுவலாற் பொலிந்து விளங்கும் எயிறுகள் பொருந்திய பவள வாயினள் தலைவி (அகம். 27:9,10). 'நின்னை நினையாது யான் சிறிதும் உயிர் தரியேன்' என்று எம்மிடத்துக் கூறிய மொழியைப் பிரிவுக்காலத்து மறந்து விட்டீர் போலும்' என, மீண்டு வந்த தலைவனை நோக்கித் தலைவி தன் சிறந்த எயிறுகள் பொருந்திய பவள வாயின் இன்னகை கெட வினவினாள் (அகம்.-29:9-14). தலைவியைப் பிரிந்து பொருள்வயிற் பிரியும் தலைவன் இடைச்சுரத்தே அவள் மையெழில் மழைக்கண்ணின் தெளியா நோக்கத்தை நினைந்து மயங்கும் தன் நெஞ்சொடு கிளக்கும் போது, வெள்ளிய எயிற்றோள் எனவும் அவளைக் குறிக்கின்றான் (அகம். 33:9,10,16). 'நெடு வழிச் சென்ற காலத்து நீர் எம்மை நினைத்தும் அறிதிரோ' எனத்தலைவி தன்னைப் பிரிந்து சென்று மீண்டு வந்த தலைவனிடம் தன் முள்ளெயிற்றுப் பவள வாயின் நகை அழிய நின்று கேட்டாள் (அகம். 39:1-4). கூரிய எயிறுகளை யுடையது செந்நாய் (அகம், 53:6;285:3,4). நீரில் வளர்ந்த பைஞ்சாய்க் கோரையின் குருத்தினை யொத்த நகைப் பொலிந்திலங்கும் எயிறுகள் பொருந்திய பவள வாயினை யுடையவள் என அல்லகுறிப்பட்ட தலைவனொருவன் தன் தலைவியை நினைந்து ஏங்குகிறான் (அகம். 62:1-2). தலைவி தான் சென்று தலைவனைச் சந்திக்கும் இரவுக்குறிக்கு நேரும் இடையீடுகளையெல்லாம் அடுக்கிக் கூறும்போது, கூரிய எயிறுகளை யுடைய நாயின் குரைப்பொலியையும் கூறுகிறாள் (அகம். 122:7,8). எயிறுகள் போன்ற முட்களை யுடைய நீண்ட மடல்கள் பாதுகாத்து நிற்க மலர்கள் பலவற்றையும் தூய்மையாக ஒருங்கே விரித்து மணங் கமழும் தாழைகளை யுடையது நெய்தற் பரப்பு (அகம். 130:6-8). தலைவனின் காதற்பரத்தை தன்னை விட்டுத் தலைவியிடம் அவன் சென்ற நிலையில் சினந்து கடித்தமையினால் கூர்த்த நுனி மழுங்கிய எயிற்றளாய் அவனைத் தேடித் திரிந்தாள் (அகம். 176:24-26). இன்னகையுடையவளாய் மயிலிறகின் அடிபோலத் திரண்ட முள்ளெயிற்றுப் பவள வாயினளாகிய தலைவி வருந்துமாறு இல்லத்தினின்று பொருளவயிற் பிரிந்து போய் வேற்று நாட்டில் தங்கியிருத்தலும் நுமக்குக் கூடுமோ எனத் தோழி தலைவனைச் செலவழுங்குவித்தாள் (அகம். 179:10-14). அரத்தால் அராவப்பட்ட ஊசியின் திரண்ட நுனி போன்றனவும் திண்மையான நிலையினை உடையனவுமான எயிறுகளை யுடையவை செந்நாய்கள் (அகம். 199:8,9). கிளைத்த புதராகிய நாணலின் கிழங்கு மணலின்கண் விட்ட முளைகளை யொத்த முள்ளெயிற்றுப் பவளவாய் அரிவையாகிய தலைவி பெறுதற்கரியவள் என அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைவன் தன்னெஞ்சிற்கு அவலத் தொடு மொழிகின்றான் (அகம். 212: 4,5,8,10). தலைவர் பிரிவாராயின் தீப்பிறக்கும்படி எயிறுகளைக் கடித்து இக்கடும்பனிக்கு வருந்தி யான நடுங்குவேன் என்று தலைவி ஆற்றாமை மீதூரத் தோழியிடம் கூறினாள் (அகம். 217:19,20). வெண்பொன்னை உருக்கி வார்த்தா லொத்த வெள்ளிய கூரிய எயிறுகளையுடையது செந்நாய் (அகம். 219: 12,13). கூரிய எயிறுகளை யுடைய குறுமகளே எனத் தலைவியை விளித்துப் பேசுகிறான் தலைவன் (அகம். 203:4,5). அரவின் எயிறுகளைப் போன்ற அரும்புகள் முதிர்ந்து குரவம் மலரும் (அகம். 237:3). வளமிக்க உறையூரையே பெறுவதாயினும் நின கூரிய அழகிய எயிறுகளில் ஊறுகின்ற நீரினைப் பருகுதலொழிந்து தலைவர் பொருள்மேற் சென்றவிடத்துப் பிரிவு நீட்டித்திரார் எனத் தலைவியைத் தோழி ஆற்றுவிக்கின்றாள் (அகம். 237:14-17). கூரிய எயிறுகளை உடையவர் மகளிர் (அகம். 317:4,5). 'மழை பெய்து காட்டு வழி குளிர்ந்தபின் நின் கூரிய எயிறுகளில் ஊறுகின்ற நீரை யான் பருகுமாறு நின்னை உடன் கூட்டிச் செல்வேன்; அதற்குச் சிலநாள் அமைதியுடன் இருப்பாயாக' எனத் தலைவியை வற்புறுத்தி விட்டுத் தலைவன் பொருளீட்டப் போயினான் (அகம். 325:11-15,21). கமுகினது முற்றாத பசுங்காய் நீரினும் இனியவாய்க் கூரிய எயிறுகளில் அமிழ்த மூறும் செவ்வாயினை யுடைய ஒண்டொடிக் குறுமகளாகிய தலைவியை உடன்கொண்டு போவதாயின் வெவ்விய சுரங்களும் நமக்கு அரியவல்ல' எனப் பொருள்கடைக் கூட்டிய நெஞ்சினைக் கழறித் தலைவன் செலவழுங்கினான் (அகம். 335:23-26). கூரிய எயிறுகளையுடைய அரவுகளோடு வலிய சுறாமீன்களும் திரியப் பெறும் கழிகள் நிறைந்த வழிகளில் தலைவர் சென்றனரே என்று தலைவி அவல முற்று அழகு கெடுவாள் (அகம். 340:8-12). கூரிய அழகிய வெள்ளிய எயிறுகளை யுடையவர் மகளிர் (அகம். 344:4). பொருள்வயிற் பிரிந்து போகும் தலைவன் முள்ளெயிற்றுச் சின்மொழி அரிவையாகிய தலைவியின் தோள்களை

நினைந்து ஏங்குகின்றான் (அகம். 361: 13, 14). முள்ளெயிற்றுப் பவள வாயினளாய தலைவி, தானமர் துணைவனுடன் போய், அறியாத் தேயத்தில் சிலம்பு கழித்து வதுவை அயர்தல் கொடிது என மகட்போகிய செவிலி மனமழிந்து கூறுகிறாள் (அகம். 385:15-18). காட்டுப் பூனையின் கூரெயிறுகளைப் போன்ற அரும்புகளை யுடையது காட்டு மல்லிகை (அகம. 391:1, 2). தலைவியை இயற்கைப் புணர்ச்சியிற் கூடி நலம் பாராட்டும் தலைவன் செறிந்த எயிறுகளையுடைய அரிவை என அவளைக் குறிக்கின்றான் (குறு. 2:4). அமிழதத்திற் பொதிந்துள்ள செவ்விய நாவானது அஞ்சுமபடி முளைத்த நேராகி விளங்கும் கூரிய எயிறுகளை யுடைய அரிவை என மடற்கூற்றுக் கூறும் தலைவன் தன் தலைவியைக் குறிப்பான் (குறு. 14:1, 2). தன்னைக் காதலால் வருத்தமுறச் செய்த தலைவி, முளை போலும் ஒளியுடைய எயிற்றள் எனத் தலைவன் தன் பாங்கற்குக் கூறுகின்றான் (குறு. 119:3, 4). பொருள்வயிற் பிரிந்த தலைவர் இன்னும் மீண்டு வநதிலரே எனக் கவன்றிருந்த தலைவியைப் பார்த்து முல்லையின் தொகுதியான முகைகளையே எயிறுகளாகக் கொண்டு நகைக்கிறது கார்காலம் (குறு. 126). தலைவியிடத்துத் தலைவன் தன்பால் பரத்தைமை இலலையென்று கூறித் தெளிவிக்கும் போது, அவன்பால் அக்குற்றமுண்மை உணர்ந்த தலைவி அவனை வெறுத்து, 'ஐய, நும்மொடு மகிழ்ந்து சிரித்த எம் தூய வெள்ளெயிறுகள் விரைந்து முறிவனவாக' எனச் சினந்துரைத்தாள் (குறு. 169:2, 3). முலலை மென்கொடி எயிறென அரும்பும் நாடன் எனத் தன்னைப் பிரிந்து பருவ வரவின் கண்ணும் மீளாத தலைவனைக் குறிக்கின்றாள் தலைவி (குறு. 186:2, 3). தலைவனுக்கு உடன் போக்கு நேர்ந்த தோழி அதனைத் தலைவிக்கு அறிவிக்கும் போது, தலைவரோடு நெல்லிககாயினைத் தின்ற முள்ளெயிறுகள் விளங்கும்படி நீ தொலை நாட்டின்கண் யானையின் அடிச்சுவட்டு நீருண்பதனை யான் கருதினேன் என மொழிந்தாள் (குறு. 262:4, 5, 8). பொருள்வயிற் பிரியக் கருதிய நெஞ்சினை மறுத்துச் செல வழுங்கும் தலைவன், பெரிய உலகத்தில் நிறைந்த பயனையுடைய பெருவளம் ஒருங்கே வாய்ப்பதாயினும் கரும்பின் அடிப்பகுதியில் வெட்டிய துண்டத்தை உண்டாற் போன்ற சுவையுடைய வெள்ளிய எயிற்றிடத்தே ஊறிய இனிய நீரையுடைய குறுமகள் தனித்திருக்க உணர்ந்தோர் ஆள்வினையின் பொருட்டுப் பிரியார் என அவளைப் பிரிதற்கருமை பேசுகின்றான் (குறு. 267). தலைவியைத் தோழி வாயிலாய்ப் பெற எண்ணி அவளிடம் இரந்து பின்னிற்கும் தலைவன், முள்ளெயிற்றுக் கொடிச்சி எனத் தலைவியை மொழிந்து அவளோடு தனக்குள்ள முன் பழக்கத்தைக் குறிப்பாகத தோழிககுப புலப்படுத்துகின்றான் (குறு. 286:1, 4). வரைவிடை ஆற்றாளாய தலைவியை ஆற்றுவிக்கலுறும் தோழி, விளங்கும் எயிறுகள் தோன்றத் துறைவனோடு சிரித்து மகிழ்ந்ததனால் உணடான பலன் பழைய அழகுகெட வருந்துவது தானோ, எனத் தலைவனை இயற்பழித்தாள் (குறு. 381). 'கூரிய எயிறுகளை யுடைய மெல்லியல் மடந்தையை இராப் பொழுதில இச்சுரத்தின் கண் அழைத்துப்போகும இவ்விளையோன் உள்ளம் இடியினும் கொடியது' எனத தலைவியை உடன கொண்டு போகும் தலைவனை இடைச் சுரத்துக் கண்டோர் கூறினர் (நற். 2: 6-9). 'வெள்ளிய எயிற்றினை யுடையவளே வருந்தாது ஏகுவாய்' எனத் தலைவன் அன்போடு தலைவியை அழைத்துக் கொண்டு உடன் போயினான் (நற். 9: 8). தலைவனோடு தனக்குப் புணர்ச்சி நேர்ந்த களததைப் பார்த்துத் தலைவி பழைய நினைவு மீதூர்ந்து அழுது நிற்ப, அது கண்ட செவிலி அவளழுவதன காரண மறியாபல, ஏன் அழுகிறாய், விளங்கும் உன் எயிற்றினை முததங்கொள்வேன், அழாதே என மென்மையுற இனமொழி கூறினாள் (நற். 17: 3-7). மூவன் எனபானைப் போரில் வென்று அவனது நிரம்பிய வலிமைகொண்ட முள்போன்ற கூரிய எயிறுகளைக் கொணர்நது வைதை இழைதத வாயிற் கதவினை யுடைய தொணடி நகாககுத் தலைவன் கணைக்கா லிரும்பொறையன் (நற்.18: 2-5). கூரிய எயிற்றினை யுடையவள் தலைவி (நற். 26: 7, 9). 'நீர் பொருள நசையாற் செல்லும் இப்போது கூரிய எயிற்றினையுடைய தலைவியொடும் செல்லுவீராயின் அது மிக நன்று' என வரைவிடை வைத்துப் பிரியும் தலைவனிடம் தோழி கூறினாள் (நற். 37: 3, 4). பொருள்வயிற் பிரிந்த தலைவன் மலைமேல் ஊர்ந்து செல்லும் திங்களை நோக்கி, முளளெயற்றினையும் திலகமிட்ட மணங் கமழும் அழகிய நெற்றியையும் உடைய [illegible] நிரம்பிய மதித்திங்கள் எம்முடையதும் ஒன்றுணடு எனத் தலைவியின் முகமதியை நினைந்தான் (நற். 62: 4-7). ஊரின்கண் உள்ள மாமரத்தில் வாழும் முள்ளெயிற்று வெளவால் துயிலும்போது சோழரது அழிசியம் பெருங்காட்டு நெல்லிப் பழத்தின இனிய புளிச்சுவையைத் தான் பெற்றதாகக் கனவு கண்டது (நற். 87: 1-4). முல்லையரும்பு போன்ற இலங்கெயிற்றை யுடைய இன்னகை மடந்தையாகிய தலைவியின் நுதல் பசப்ப, அவள் தொடர்பினை நீ எவ்வாறு விட்டனை, எனத தலைவனை நொந்து வினவினாள் தோழி (நற். 108: 7-9).

'தலைவியின் சிறிய முள்ளெயிறு தோன்ற அவள் முறுவல் கொள்ளும் முகததை யான் காண இப் போது வநத விருநது இனி எப்போதும் வருவதாக, யானும் தொடர்ந்து அவள்முறுவல் முகத்தைக் காண்பேனாக' என விருந்து வாயிலாகப் புக்க தலைவன் தனக்குள் சொலலிக் கொணடான் (நற். 120:10-12). இரவில் தெருவில உதிரும் மழைத் துளியைக காற்றின சாரல கதவின துளைவழியே வீசுவதனால வீட்டினுள் கிடக்கும் கூரெயிற்று நாய்கள் நடுங்குமெ (நற. 132 3-5). தினைப்புனங் காப்பதற்குத தோழியை ஏவும தந்தை, 'குறு மகளே, நீ புனத்திற்குச் செல்லாயோ; விரைவிலே செல, நின் முளளெயிற்றை முத்தங் கொள்வேன்' என இனிமையுற ஏவினன (நற். 134:7-9). தலைவன் பொய பாராட்டிப் பேசியது கேட்ட தலைவிக்கு முள்ளெயிற்று முறுவல தோன்றியது (நற். 155:8,9). நேரிய வெள்ளிய எயிறுகளையுடைய விறலி, வாயி லாக வந்து நின்றாள் (நற். 170:2,4). நேர்மையுற்று விளங்கிய வெள்ளிய எயிறுகளை யுடையவள் என உடன்போன தலைவியைக் குறித்து இடைச்சுரத் துக் கண்டாரிடம் செவிலி கூறினாள் (நற். 198:7). கூரிய எயிற்றினை யுடைய மகளிரை விளித்து அவர்க்குப் பாணனின பொய்ம்மையைப் புகலு மாறு குயவனிடம் வேணடுகிறாள தோழி (நற். 200:4-11). நின்னைக் காண்பதற்கு யான் வர வேண்டிய குறியிடம் யாதெனக் கூறு, நின் கூரெயிறறை முத்தங் கொள்வேன் எனத் தலைவி யிடம் வேண்டினன் தலைவன (நற். 204:1-6). மந்தி முள்ளெயிற்றினை உடையது (நற் 233:1,2). 'கூர்மை யும் அழகும் கொண்ட வெள்ளிய எயிறுகளை யுடைய குறுமகளே' எனத் தோழியைத் தலைவி விளித்தாள் (நற். 240:2). மகளிர், விளங்கிய எயிறு களின அழகிய இன்னகை உடையவர் (நற். 267:3). புதலவனின் அழகிய எயிறுகளினின்று தோனறும் விருப்பம் மிக்க மாட்சிமைப்பட்ட நகையினையும் கருதாமல் தலைவன் எப்போதும் பொருள்வயிற் பிரிவான் (நற். 269:4,8). 'இம்முல்லைக் கொடி நின் எயிறுகளைப் போனற அரும்புகளை ஈனும் பொழு தில் யான் மீண்டு வந்து நின்னை எய்துவேன்' எனத் தலைவியிடம் கூறித் தலைவன் பொருள்வயிற் பிரிந்தான (நற். 316:2,6). பாண்மகள் முள்ளைப் போனற கூரிய எயிற்றினள் (ஐங். 47:1). பாண் மகளது வெள்ளிய எயிற்றினை யுடைய மடமகள் வரால சொரிந்த வட்டியுள் பழைய வெண் ணெல்லை நிறைத்தனள் (ஐங். 48:1-3). தலைவி கொற்கை முன்றுறையின் முததினை ஒக்கும் எயிறு கெழு துவர் வாயினள் (ஐங். 185:1,2). கடற்கரைச் சோலை யுள்ள துறையில் வளையணி முன்கை யினையும் வாலெயிற்றுப் பொருந்திய இனிய நகை யினையும் உடைய இளமகளிர் விளையாடினர் (ஐங். 198:1,2). 'செறி எயிற்றோயே' எனத் தலைவியைத் தோழி விளித்தல் (ஐங். 241:4). குன்றக் குறவன் காதல் மடமகள் முளை போன்ற ஒள்ளிய எயிற்றை யுடைய இளையளாயினும் தன்னை வருத்தினாள் எனத் தலைவன் தோழிக்குக் கூறல் (ஐங். 256). வெஞ்சுரத்தில் கூரிய எயிற்றினையுடைய செந்நாய் வயாநோயுற்ற பிணவிற்கு இரையாகக் கள்ளியங்காட்டில் பன்றியை எதிர்பார்க்கும் (ஐங். 323:1-3). 'முள்ளெயிற்றரிவை' எனத் தலைவன் தலைவியைக் குறிப்பிடுதல் (ஐங். 495:5). தலைவியின் முள்போன்ற முனையினையுடைய நாணல் முளை போன்ற எயிற்றிடத்து ஊறும் இனிய நீரைக்கள்ளி னும் மகிழசெயயும் எனத் தலைவன் பாராட்டி னான் (கலி. 4:13,14). ஊறுநீர் அமிழ்தினை ஒக்கும் எயிற்றினை யுடையவளே எனத் தலைவியைத் தலைவன விளித்தல் (கலி. 20:11). பொருள்வயிற் பிரிநத தலைவன் திருந்திய எயிறிலங்கும் தலைவி யின் தேன் போலும் மொழியினை நினைத்து அவளது அருந்துயர் துடைக்க மீண்டான (கலி. 29: 24-26). தண்ணருவியின அருகேயுள்ள நறுமுல்லைப் போது மகளிர் எயிற்றை ஒக்கும் (கலி. 32:16,17). 'இனனகை இலங் கெயிற்றுத் தேமொழியினையும் துவர்ச செவ்வாயினையு முடைய நன்னுதால்' எனத் தோழியைத் தலைவி விளித்தல் (கலி. 55:4,5). வளைந்த முனகையையும் வெள்ளிய எயிற் றினையு முடைய அழகிய நல்லாளே, நின தட மென்தோள் கண்டார்க்கு அணங்காகும் என்ப தனை அறிதியோ, அறியாயோ எனத் தலைவியைக் கைக்கிளைத் தலைவன் வினவினான் (கலி. 56:19-21). 'கூரெயிற்று முகைவெண்பல் கொடிபுரையும் நுசுப் பினாய்' எனத் தலைவியை விளித்துக் கைக்கிளைத் தலைவன் பேசுகிறான் (கலி. 58:4). 'முல்லை முகை யொடு மாறுபாடு கொள்ளும் எயிற்றாய்' எனத் தலைவியைத் தலைவன் விளித்தல் (கலி. 64:17). 'அழகிய பரத்தையின் முயக்கத்தில் இலங்கெயிறு பதிந்ததால் உண்டாய சிவந்த வடுவைக்காட்டி நாணமின்றி வரின் தலைவனோடு துனித்திருப் பேன் என்று கூறுவேன், ஆனால் அவனைக் காணில் நெஞ்சம் தவற்றை மறந்து என்னை விடுத்து அவனிடத்தே தாழும்' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 67:14-17). பரத்தை யர் செய்த நகக்குறியாலாய வடுக்களும் வாலெயிறு உற்ற வடுக்களும் ஒள்ளிதழ் சோர்ந்த நின கண்ணி யும் அவர் வெகுண்டு அடிக்கச் சிவந்த நின் மார் பும் தவறாதலுக்கு அமையாவோ என்று ஊடிய தலைவி தலைவனை வினவினாள் (கலி. 88:11-14).

'இந்த ஒப்பற்ற வெள்ளிய ஏற்றின் கழுத்திலே கிடப்பவன் முள்ளெயிற்றினையும் அழகினையு முடைய இத்தலைவியைப் பெறுவான்' என்ற பேச்சு ஆயரிடையே எழுந்தது (கலி. 104:18,19). 'கொலைத் தொழிலையுடைய கண்ணையும் கூரிய எயிற்றையும் தளிர்மேனியையும் உடைய வனப்புக் கொண்ட மாயோய, நான் விரும்பற்குரியராய் நின்னிற் சிறந்த மகளிர் நிலவுலகத்தினமையை நீ தெளிவாயாக' எனத் தலைவியிடம் திருமாலடியைத் தலையால் வணங்கித் தலைவன் சூளுற்றான் (கலி. 108:52-56). 'உன் சுற்றத்தார் உரையாடலைத் தவிர்க என்றனரே யன்றி முயங்குதலைத் தவிர்க்கு மாறு கூறவில்லை; ஆதலால் என்னை மெல்ல முயங்குக; நான் நின் முள்ளெயிறூறிய நீரை உண்பேன்' என வினைவல பாங்கின் தலைவியிடம் அத்தகு தலைவன் கூறினான் (கலி. 112:17-20). ஞாயிறு மலை சேர மெல்ல இருளாலே உலகு நிறைந்து மரமெலலாம் பொலிவழிய இலையெல்லாம் குவிய நாற்றிசையும் நடுக்குறும ஊழிக் காலத்தில் கூற்றுவன் விளக்கம் அமைந்த செக்கர் வானிடத்து நுதியை யுடைய பிறையை எயிறாகக் கொண்டு பல்லுயிரையும் சேரக் கொள்ளுதறகு நக்காற்போலும் அச்சநதரும் கடிய மாலை இருந்தது (கலி. 120:3-9). முல்லை முகையை ஒககும் இலங் கெயிற்றையும் மகிழ்ச்சியையு முடைய மாதருடைய அழகாலே அவளிடத்தைப் பற்றிக் கொண்ட என் நெஞ்சிடத்து உள்ளத்தைச் சுட்டெரிக்கும் காமத்தீ உயிர் போம்படி விடாது சுடும் எனத் தலைவன் கூறுதல் (கலி. 139:26-29). அன்னமென் சேக்கையுள் இரவில் தலைவியைத் துன்னிக் கூரெயிற்றின் நீரை நுகர்ந்து அளி செய்து நீங்கியதால் தலைவி தோளமெலிந்து கண்ணீர் முலைமேல் விழ அவனைத் தேடுதற்கு மனஞ்சுழன்று புலம்பினாள் (கலி. 146:4-9). சுனையில் விளையாடும் கூரிய எயிற்றையுடைய மகளிர் முலை மேலணிந்த பூண்களோடு மாரனை ஒத்த கணவர் மார்பணிகள் மயங்கின (பரி. 8:118,119). 'நின்னை அறியாமல் மயங்கி யகப்பட்ட கூரிய எயிற்றினையுடைய மகளிரியல்பு, மழைபெய்தலை எதிர்நோக்கி வருந்தும் சோலையின் இயல் பொக்கும்' என்று முருகனை நோக்கித் தேவ சேனை கூறினாள் (பரி. 9:33,34). வையைக்குப் புனலாடச் சென்ற அழகிய அணியினையும் இலங் கெயிற்றினையுமுடைய மகளிரால் வையை அழகு பெற்றதோ, வையைப் பெருக்கால் மகளிர் அழகு பெற்றனரோ என்பதை ஆராய்பவர் தேர்ந்து கூறுதல் அரிதாயிருந்தது (பரி. 22:31-34).

2. யானைக்கொம்பு. யானையின் இரும்பிடர்த் தலையிலே இருந்து அவ்வியானையின் எயிறே - கொம்பே - படையாகப் பகைவரின் மதிறகதவைக் குத்திக் கொலைத்தொழில் புரிவதில் கூறறுவனுக் கிளையாதவன எனக் கருங்கை ஒள்வாள் பெரும் பெயர் வழுதியின் மறத்தை இரும்பிடர்த்தலையார் சிறப்பித்துள்ளார் (புறம. 3:9,11-13). மறககுடி மறவனொருவன் தடுத்தற் கரிய போரில் பகைவரை மேற்செல்லாதவாறு தடுத்துத் தான் முன்னின்று வெட்டி வீழ்த்திய களிறறின் எயிற்றிடத்தே வைத்து வளைவாகிய தன வாளை நிமிர்த்துக் கொண்டு, தனக்குப் புறங்காட்டியோடும் பகை வீரனைக் கண்டு நகைத்தான் (புறம். 284:4-8). மூங்கில் முளைபோலும் எயிற்றினையுடையது கரிய பெண்யானை (பெரு. 53). நாற்பது ஆணடுகள் நிறைந்து, முரசென்று மருளும வலிய காலகளையும் உயர்ந்த அழகினையும் புகர் நிறைந்த மத தகத்தினையும் உடையதாயப் போரில் மேமபட்டுச செலலும் யானை பொருது பட்டபின், அதனிடத் தினின்று தானே வீழ்ந்த எயிறறைக கனமும் செம்மையு மொப்ப இருபுறத்தையும் செதுதித் தச்சன சிற்றுளியால் வேலைப் பாடுகளியற்றி அமைக்கப்பட்டது பாண்டிமா தேவியின் கட்டில் (நெடு. 115-123).

**எயின்** - வேட்டுவக்குடி. பாணர் கொடிய வில்லையுடைய எயினக் குடியினர் - வேட்டுவக குடியினர் - உள்ள அரணிலே சென்று தங்கின், ஈந்தின விதை போன்ற நெலலரிசிச் சோற்றை உடும்பின பொரியலொடு இடந்தோறும் பெறுவர் (பெரு. 129-133).

**எயினந்தை மகனார் இளங்கீரனார்** - புலவர். குறுந்தொகையில் 116, நற்றிணையில் 3, 62, 113 ஆக நான்கு பாடல்களைப பாடிய இளங்கிரனாரும் அகம். 3, 225, 239, 289, 299, 361, 371, 395, 399 நற்றிணை 269, 308, 346 ஆகப பன்னிரு பாடல்களைப் பாடிய எயினந்தை மகனார் இளங்கீரனாரும் ஒருவரே. எயினந்தை மகனார் எனப்படுதலாலும் பாலைத் திணையையும் பாலை நில வேடரையும் பலவாறாகப் பாடியிருத்தலாலும் இவரை வேட்டுவ மரபின ரென்பர். இவர் பாடலகள் பெரும்பாலும் பொருள் வயிற்பிரியக் கருதிய தலைமகன் நெஞ்சிற்குச் சொல்லிச் செல வழுங்கினவாகவும் பிரிந்த தலை மகன் இடைச் சுரத்து அழுங்கியனவாகவுமே உள்ளன. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலை மகன் தன்நெஞ்சிற்குச் சொல்லியது என்ற துறையில் குறிஞ்சித் திணைககண் ஒருபாடலும் (குறு. 116) இவராற் பாடப் பட்டுள்ளது. அப்பாடலில், தலைவியின கூந்தல் சோழரின் உறந்தைப் பெருந்துறை நுண் மணல் போல நன்னெறிப்பட்ட தண்மையுடையது

எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. தலைமகன் பொருள் வயிற் பிரியக் கருதிய நிலையில் தலைவியின் ஆற்றாமை கண்டு அவனும ஆற்றானாய்ச் செல வழுங்குவதாய் அமைந்த நற்றிணைப் பாடலில் (308) செலவழுங்கும் தலைவனின் நெஞ்சிற்கு ஈர மணணால் இயற்றப்பட்ட பசுங்கலம் பெரு மழைக்கு ஆற்றாது கரையும் தன்மையினை உவமை கூறியுள்ளது நயம் வாய்ந்ததாகும். மரத்து நிழலிற் சிறுவர் நெலலிவட்டாகிய பாண்டில் ஆடுவதும் (நற். 3), ஒள்ளிழை மகளிர் பிறையினைத் தொழுவதும் (அகம். 239), தலைவன் பிரிந்து சென்ற நாட்கணக்கைத் தலைவி சுவரில் கோடிட்டு எண்ணுவதும் (அகம. 289), தேவர்க்கு அவியுணவாக வேள்விக் குண்டத்தில் யாமையை வைத்து மூடுவதும் (அகம். 361) இவர் பாக்கள் கூறும் சிறப்புச்செய்திகளாம். இவர் சோழரையும் சேரரையும் பெயர் சுட்டாமலும் உறந்தையையும் கொல்லியையும் பெயர் சுட்டியும் பாடியுள்ளார்.

**எயினந்தையார் – புலவர்.** எயினனைத் தந்தையாக உடைமையின் எயினந்தை எனப்பெயர் பெற்றார்; ஆர் சிறப்பு விகுதி (நற்றிணை-பி. நா. பாடினோர் வரலாறு பக். 26). இவர் பாடலில் 'ஓரெயில் மனனன் போல' எனவரும் உவமையால் இவர் இப்பெயர் பெற்றிருக்கக் கூடும் எனக் கருதுவாரும் உளர். எயினந்தை மகனார் இளங்கீரனார் எனபதால இவா இளங்கீரனாரின் தந்தை என்பதும் புலனாம். இவர் பாடியதாகவுள்ள ஒரே பாடல நற்றிணையில் 43-ஆம் பாடலாக இடம் பெற்றுள்ளது. பாலையின் கொடுமையை அப்பாடலில் நன்கு சிறப்பித்துள்ளார். துணையாக வந்த அரசன் கைவிட அப்போது யானைப்படையை உடைய பகைவேந்தன் தன் மதிற்புறத்துத் தங்க, தன் துன்பங் களையுநரைக் காணாமல் கலங்கிய உடை மதிலையுடைய ஓரெயில் மன்னனைத் தலைவியின் அழிவிற்கு உவமை காட்டுவது நயம்படவுள்ளது.

**எயினர் - வேட்டுவர்.** ஆதி என்பானது குடநாட்டில் எயினர்-வேட்டுவர்-தந்த முள்ளம் பன்றியது தசையின் நிணமிக்க வெண்சோற்றுக் கட்டியை அரணிடத்துள்ள ஆடவர் வருவார்க்கெல்லாம் வரையாது வழங்குவர் (புறம். 177:12-15). பகைவரது பாழ்பட்ட ஊரில் அடியில் தொடுதோலணிந்து துடிமுழக்கிக் கொடுவில் எயினர் கொள்ளையடித்ததால் நெல்லில்லாத வறிய நெற் கூடுகளின் உள்ளிடத்திருந்து வளைவாய்க் கூகை பகலிற் குழறும் (பட். 265-268). துடியினையும் கொடிய வில்லினையுமுடைய எயினர் வழிப்பறி செய்யும் சுரநெறிச் செல்லப் பருந்தின் பேடை ஊனுணவு கிடைக்குமென்று தன சேவலை அழைக்கும் (அகம். 79:12-15). கொடிய வில்லையுடைய எயினரின் ஊரிலிருந்து ஆறலைக்க முயலும் கொலைத்தொழில் மறவர் வில்லிட மாய்ந்தோரின் பிணத்தை ஆலமரத்திலிருந்து காக்கைக் கூட்டம் கவரும் (அகம். 319:1-5). எறும்பு வளை போன்ற குறிய பல சுனைகளைக் கொண்ட உலைக்கல் போன்ற வெவ்விய பாறை ஏறிக் கொடிய வில்லையுடைய எயினர் தம் அம்புகளைத் தீட்டுவர் (குறு. 12:1-3). எயினர் சிலைமரத்தாற் செயத வில்லையும் அம்பையும் கையிற்கொண்டு செந்துவராடை உடுத்திருப்பர் (ஐங். 363:1,2). எயினர் முள்ளம் பன்றி இறைச்சியை உணவாகக் கொள்வர் (ஐங். 364:1).

**எயினன் - வள்ளலின் பெயர்.** வண்மையுடைய எயினன் என்பானது வாகை என்னும் ஊரைப் போன்ற வள் தலைவி (புறம். 351.6,7). முருகன் போல் வன்மையுடைய எயினன் பேராற்றலுடன் மிஞிலியொடு பொருது களஞ்சிவப்ப வீழுப்புண்பட்டு வீழந்து கிடப்ப, ஞாயிறறின் வெங்கதிர் அவன் மேல் தாக்காமல் பறவைகளின் பெருங்கூட்டம் விசும்பிடை வட்டமிட்டு நிழல் செய்தது (அகம். 181:5-10).

**எரி – 1. தீ.** இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி பகைவர்தம் காவலமைந்த மருத நிலத்தூர்கள் பாழாக நாட்டினை எரி-தீ - ஊட்டினான் (புறம். 16: 16,17). தொழில் புனைந்த நல்ல இல்லங்களை வெம்மையான எரி அழிக்கக் கனையெரி முழங்கிய பக்கத்தைப் பார்த்து நண்ணார் நாணத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் நாடொறும் கொடுவினை பல புரிந்தான் (புறம். 23:9-13). கிள்ளிவளவன் உடன்று நோக்குமிடமெல்லாம் எரிதவழும் (புறம். 38: 5). கிள்ளிவளவன் காறறோடு எரி நிகழ்ந்தாற் போன்ற செலவினையுடைய போர்த் தொழில் மிக்கவன் (புறம். 41:16-18). எரிபோலும் விளங்கிய சடையையுடையவர் நீல மணிமிடற்றையுடைய சிவபெருமான (புறம். 56:1,2). இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறனிடம் காரிக்கண்ணனார், 'நீ பிறர்நாடு கொள்ளுங்காலை, அவர் இடமகன்ற பேரூரை எரியாறசுடுக; ஆனால் காவல் மரத்தை வெட்டுதல் தவிர்க' எனக் கூறினார் (புறம். 57: 5, 7, 10). கிள்ளி வளவன் ஒள்ளிய எரியை ஒக்கும் நிறம் பொருந்திய பசும்பொன்னாற் செய்யப் பெற்ற பூணினையுடையவன் (புறம். 69:15,16). கடலாற் சூழப்பட்ட உலகத்துக்கு விளக்காகக் கனையெரி பரப்பக் காற்றாற் பிதிர்ந்து கிளர்ந்து விண்ணினின்று ஒருமீன் விழுந்தது அரசனுக்குத் தீதாயிற்று

(புறம். 229:10-12). ஆய் அண்டிரன் காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப மேலோருலகம் எய்த அவனது உடம்பு கள்ளியம் பறந்தலையின் ஒருபக்கத்தே தங்கி ஒள்ளெரி சுட மாய்ந்தது (புறம்.240.3-10). பொய்கை யில் எரி போன்ற நிறமுடைய பூக்கள் மலர்ந்தன (புறம். 249:3). வீட்டின் இறவாணத்தில் செருகப் பட்டபோது தீக்கடைகோல ஒடுங்கியிருந்து கடை யப்பெறற போது கனையெரியை வெளிப்படுத்து வது போல அதியமான் நண்பரிடம அமைதியாக விருந்து வலிமையைக் காட்ட வேண்டிய பகைவரி டத்துப் பலருமறிய தன் வலிமையைக் காட்டுவான் (புறம். 315:3-7). தந்தை மகட்கொடை மறுத்ததால் மணக்கவிரும்பிய தலைவன் புகைபடு கூரெரி பரப் பிப் பகைமை மேற்கொண்டு பண்பிலலாத மறச் செயல் செய்து ஊரைத் தீக்கிரையாக்கினான் (புறம். 344:5-9). கேணியிற் பூவாத எரிபோலும் பெரிய பொற்றாமரை மலரைப பாணன தன் சென்னியில் அணிதல் (புறம. 364.2,3). தன வேந்தன் புறங் கொடுத்த பறந்தலையில, மாடங்களைபபற்றி எரிக் கும் எரிபோலக் களிறு பகைவர் படையுள் புகுந்து அழித்துப் பின் வீரன் தாக்கக கொம்பொடிந்து இடியேறுண்ட மலைபோல வீழ்ந்தது (புறம. 373: 19-22). சிவபெருமான எரியை எள்ளுவது போன்ற சிவந்த நிறத்தினை யுடையவர்; எயிலை எரியூட்டிய வில்லை யுடையவர் (பதி. க. வா. 1,3). இமையவரம் பன் நெடுஞ்சேரலாதன தான் அழிக்கக் கருதிய நாட்டிற் சென்று தங்கிப் பகைவர் முனையை எரி பரப்பினன் (பதி. 15:1,2). பகைவா முனைகளைச சுடும கனையெரி வீசுதலின் கடலபிறக கோட்டிய செங்குட்டுவன் அணிந்த மாலையின் இதழகள் கவினழிந்தன; மார்பிற் பூசிய சந்தனம் புலர்ந்தது (பதி. 48:10-12). பெருஞ்சேரலிரும்பொறை சினந் தெழுந்து சென்று வைதத போர் எரி பகைவர் ஊரைக் கவர்ந்து சுடுதலால எழுந்த புகை திசையை மறைத்தது (பதி. 71:9, 10). சேரனின் சேனை எரிநிகழந்தன்ன நிறுத்தற்கரிய சீற்றத்தை யுடையது (பதி. தி. 1:7). குதிரைக்கு எரியவிழ்ந்தது போன்ற தலையணியைச சூட்டினர் (பதி. தி.2:3,4). எரி தழைத்தாற் போன்ற இதழில்லாத பொற்றா மரையைப் பொருநனின சுருண்ட கரிய மயிரிலே கரிகால் வளவன் சூட்டினான் (பொரு. 159,160). ஞாயிற்றின் வெம்மையில குல்லை கரியவும் மரக் கிளைகளை எரி தினனவும் பெரிய மலையில் அருவி பாய்தல் நீங்கவும் கருவி வானம் கடல் நீர் கொள்ள மறக்கவும் பஞ்சம் உண்டாகிய பண்பில காலத்தும் காவிரி நாடு புரக்கும் (பொரு. 234-237,248). பேய் மகள் எரி மறிந்தன்ன நாவினள் (சிறு. 196). காண்டவ வனத்தை எரியூட்டிய கணையை உள்ளடக்கிய தூணியினையும் பூத்தொழில் பரந்த கச்சையினையு முடைய புகழ்வாய்ந்தவன அருச்சுனன் (சிறு. 238.239). நெடுஞ்செழியன் காறறென விரைந்துசென்று நாடுகெட எரி பரப்பித் தலையாலங் கானத்தில் பகைவர் அஞ்சத் தங்கி அரசுபட அமருழக்கி முரசுகொண்டு களவேள்வி செய்தான் (மது. 125-130). பாண்டியன் தலையா லங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனபகை வர் நாட்டிறகுச் சென்று அவாதம் காவலுடைய பொழிலைக் கெடுத்து. மருதநிலங்களை எரியுண ணச் செய்து, நாடென்னும் பெயரைக் காடென மாற்றினான (மது. 152-156). மலைப் பக்கத்துள்ள பெரிய மூங்கிற் புதரினை அதனிடததே தோன றிய மிகக எரி சுட்டழித்ததால் அங்கு ஓயநதிருநத யானைகள் மேயபுலம புகுந்தன (மது. 301-303). எரி நிமிர்ந்தாறபோன்ற பகைவர் படையின நடுவே சென்று களிறுகளை வெட்டிக் கொனறு விழுப் புண்பட்டு மறவர் வீழ்ந்தனர் (மது. 734-736). மன னை எரிபோற் பொஙகிப பகைவரை யழிககப் பாசறையில தங்கினான் (நெடு. வெ.). எறுழம பூ எரி நிறததை ஒததது (குறி. 66). அசோகநதளிர எரி போல விளஙகும் நிறமுடையது (குறி. 105). கன லும் எரி போனற ஒளளிய பூங்கொததுக்களைக் கூத்தர் சுறறத்தோடு சூடுதல (மலை. 159). மரா மரம் எரி கானறனன பூஙகொத்துககளை யுடை யது (மலை. 498). எரி கொழுநதுவிட்டெரிவது போன்று விரிந்து விளங்கும் புரிசடையினையுடை யவர் சிவபெருமான (அகம். க. வா. 10). வெம்மை குறையாத எரியுகு பறநதலையில் மெலிநத யானை நீரைக காணாது பேய்த் தேரை நாடி ஓடும் (அகம. 29:15-17). முள முருககின் எரியை யொ்தத பூஞ்சினையில வணடினம் முரலும் (அகம. 41 2, 3). மூங்கில் ஒன்றோடொனறு உராயநததால எழுந்த எரி சூறைக காற்றொடு சேர்ந்து மேலெ ழுநது பக்கமலையில் பாய அங்குளள மூங் கில கணுக்கள வெடித்த ஒலி கேட்டுக குரங் கினம் அஞ்சி யோடும (அகம. 47:4-8). மலை தோறும் உலாந்த பெரிய மூங்கில் உராயந்து பற்றிய எரி காற்று வீச மிகுந்து தோனறுவது மீன் பிடிக்கும் பரதவரின படகுகளின செறிநத விளககுக்களைக் கடலிற் கண்டது போல் காட்சி யளிக்கும் (அகம. 65:9-13). எரியினது வெபபம் தவழந்த பாலைநிலத்தில மரங்களின இலை முத லியன கரிநது வீழ்நதன (அகம். 75:4,5). எரியை யொத்த பன்மலர்களும் தலைமாறும்படி வைத்து நெல்லரிபவர் கட்டிய பெரிய நெற்கட்டுக்களைக் கட்குடித்த உழவர் களத்திற்குச் சுமநது செல்வர் (அகம். 84:11-13). கனையெரி பரந்த கானத்து எழினி

பணித்த வினையை முடிக்க அம்பு தொடுத்தலில் வல்ல மறவர் கட்பருகிச் சென்று பகைவரை வென்று ஆனிரை கவர்ந்து வந்தனர் (அகம். 105: 10–15). எரி கொழுந்துவிட்டாற்போல இதழ் விரிந்து மலர்ந்த தாமரைப் பூ தோன்றும் (அகம். 106:1; 116:1). எரி பரந்தன்ன இலவ மலரைக் கரிபரந தன்ன காயா மலரின் வாடலொடு கான்யாறு சுமந்து சென்றது (அகம். 133:8–10). அருஞ்சுரத்தே மூங்கிற் புதரில தோன்றிய மேலகாற்றால் வளர்க் கபபட்ட மிகுந்த எரியின் கொழுந்து மேலெழுந்து குகைகளிடத்து முழங்கும் (அகம. 143:6-8). வேனிற் காலத்தே ஞாயிறு சுடும் வெம்மையான காட்டில் பெருங்காற்றால் மூங்கில் உராய்ந்து உண்டாய கூரெரி மலைக்குவட்டையும் பசுமையறச் செய்தது (அகம. 153:8-11). ஞாயிறு காயும் அரிய வழியில் எரி பரந்த வியன்காட்டில் யானை பேய்த்தேரை நீர் எனக் கருதிக் கையை நீட்டி வாயைத் திறந்து நீர் பெறாது வருந்திச் செல்லும் (அகம். 179:2-6). பாதிரி யின் புதுமலரை எரிபோன்ற இதழை யுடைய அலரியோடு இடையிடையே விரவித் தாழும் பூவோடு கட்டி உமணர் தலையிற் கண்ணியாகச் சூடினர் (அகம். 191:1-4). வானவனது கொல்லிக் குடவரையில் அந்திப் பொழுதில் பெருமரங்களை வெட்டிய புனங்களில் எரி போன்ற ஒளியுடைய திருமணி இமைக்கும் (அகம். 213:12-15). தண்பெருஞ் சாரலில் வண்டு தங்கும் எரிபோன்ற தோன்றி மல ரோடு வேங்கைப்பூ கமழும் (அகம். 218:20-22). வேனிற்காலத்து எரி பற்றி எரித்தமையால் கரிந்து போன பாலைநிலத்தில் மழைபெய்யாது போகவே உணவு பெறாமல் யானைகள் உடல்மெலிந்து வருந் தும் (அகம. 233:3-5). எரியினால் சுடப்பட்டுப் பண்படுத்தப் பெற்ற கொல்லையில் விளைந்த தினைக்கதிர்கள் தலைதாழ்த்திருந்தன (அகம். 288: 5). தலைவரது பிரிவுத்துன்பத்தைத் தாங்கிய நெஞ் சகத்துப் பனையில் தங்கிய அன்றிலின் துன்பக் குரலாகிய தீக்கடைகோல் கடைதலால் கனலும் கனையெரி மிகுமாறு ஆயர் ஊதும் குழலிசை கேட்டு யான் எங்ஙனம் உயிர் வாழ்வேன் எனத் தலைவி தோழியிடம் கூறுதல் (அகம். 305:11-16). வேறு உணவின்மையின் வேங்கையின் எரியை ஒத்த மலராகிய உணவையுண்டு களிறு தன் நுத லினமேல் வலிமை குன்றிய பெருங்கையை வைத்து வருந்தியது (அகம். 349:10-12). காற்றொடு கூடிய கனையெரி அழித்ததால் இலை யில்லாத பாலை நிலக் காட்டில் மானின் முதுகிலுள்ள புள்ளிகளைப் போன்ற நிழலில் தலைவன் இளைப்பாறுதற்குத் தங்குவான் (அகம். 379:18-21). கண்கள் நோக்கித் தந்தமையாலே தோன்றிய காமமாகிய ஒள்ளிய எரி தலைவியின் எலும்பினைப் பொருந்திச் சுட்டு வருத்தியது (குறு. 305:1, 2). பரந்துபட்ட கூரெரி கானத்தை எரிப்ப மரங்க ளெல்லாம் தீப்பட்டன (நற். 177:1, 2). வேங்கைமலர் எரி போன்றது (நற். 216:6). மந்தியின் குட்டி குன்றின் பக்கத்திலுள்ள முற்றத்தினின்று போகாமல் எரி கொழுந்து விட் டாற் போன்ற மலர் செறிந்த பூங்கொத்துக்களை யுடைய வேங்கைக் கிளையில் இருந்து தலைவியின் கையகத் திருந்த தேன் கலந்த இனிய பாலைக் கவர்ந்தது (நற். 379:1-5). எரிமருள் வேங்கையில் இருந்த மயில் இழையணி மடந்தை போல் தோன் றும் (ஐங். 294:1, 2). எரிபரக்கும் இடத்தை யுடைய கோடுயர்ந்த மலைகடந்து தலைவர் சென்றார் (ஐங். 318:4,5). எரிகவர்ந்துண்ட வெயில் மிக்கது நெடிய இடைச்சுரம் (ஐங். 324:1;360:1). எரிபோன்ற ஒளி கால்வது மாவின் இளந்தளிர் (ஐங்.349:2,3). ஒள்ளெரி மேய்ந்த சுரம் யானை பிணித்த பொன்புனை கயிறு போன்றது (ஐங். 356:2,3). எரிபோன்ற நிற முடைய இலவம் பூவும் பொரிபோன்ற புன்கம் பூவும் புள்ளிநிழலிற் கோலஞ்செய்யும் (ஐங். 368:1,2). பாலை நிலத்தில் உலர்ந்த மூங்கிலில் தோன்றிய காற்றால் வளர்ந்த கூரெரிச் சுடரை விடுகின்ற நெடுங்கொடி வெடிப்புடைய குகைகளில் முழங்கும் (ஐங். 395:1-3). பூக்கள் மிக்க இலவமரத்தி லேறிய மயில் எரிபுகு மகளிர் போல் தோன்றும் (ஐங். தி. 3:2,3). செருமிகு சினவேந்தன் வெகுண்டு சென்ற பகைப்புலத்தை எரி தின்றாற் போல எரிதின்ற கரியினையுடைய வறந்த இடத்தில் உணவு காணா மல் மடமான் ஆண்மானோடு பேய்த்தேரை நீர் எனக் கருதி ஓடும் (கலி. 13:1-4). பாண்டவர் ஐவரும் அரக்கில்லத்தின் அகத்தே இருக்க (துரியோதனன்) சூழ்ச்சியால் அவ்வில்லம் எரி சூழ்ந்தாங்கு, உள்ளே களிறு இருக்க உலர்ந்த மூங்கிலுடைய உயர்மலை தீப்பற்றி அவற்றை வளைத்துக் கொண்டது (கலி. 25:1-6). எரிபோன்ற நிறத்தினது இலவமலர் (கலி. 33:10). முதிர்ந்த கொத்துக்கள் அலர்ந்த முழவு போலும் தாளினையுடைய வேங்கையைக் கபிலர் எரிவேங்கை என்பர் (கலி. 44:4). தலைவியின் எழுச்சி மிக்க அழகு பக்கமலையி லுள்ள எரி போலும் வேங்கையின் பூங்கொத்தை ஒத்தது (கலி. 45:16-19). எரிபோலும் நிறத்தையுடைய இதழ்கள் வாடி யுதிரப் பரத்தையரைப் புணர்ந்தமையைச் சான்றாக எமக்குக் கூறும் கண்ணியுடன் எம்மில் லம் வந்துள்ளாய் எனக் காமக்கிழத்தி தலைவ னிடம் கூறுதல் (கலி. 78:13,14). எரிசுற்றி விளங்கும் கணிச்சிப்படையை யுடைய சிவபெருமான் சூடிய பிறையிடத்துள்ள சிவந்த மாலை போல ஏற்றின் குருதிதோய்ந்த கொம்பில் குடர்கள் சுற்றிக் கிடந்

தன (கலி. 103:25-27). எரிபரந்த நெய்யுள் கிடந்த மெழுகு நிலையில்லாது மெல்ல உருகித் தேய்வது போலத் தலைவி தந்த, தன் இயல்புகள் அழிதற்குக் காரணமான வருத்தத்தையுடைய காம நோயிலே தலைவன் உயிர் அழுந்தித் தேய்ந்தது (கலி. 138: 20-23). 'காமநோய் என் மனத்தைச் சுழற்றி எரியாகச் சுடினும் தோன்றாமல் மனத்துள்ளே மறைப்பேன்' எனத் தன் ஆற்றுந்தன்மை கூறித் தலைவி தான் இறக்குமுன் துன்பந் துடைக்குமாறு சான்றோரை வேண்டுகிறாள் (கலி. 144:51-55). வானமே, நீ நின் முகிலினத்தோடு வந்து என் கண்ணீர்க் கடலை முகந்து, என்னைத் துறந்து என் தொடியை நெகிழ்த்தவன் சென்ற கானத்தில் எரிமிக்குச் சுடாமல் பரந்து முழங்கி மழை பொழிவாயாக எனத் தலைவி வேண்டினாள் (கலி. 145:18-22). மயக்க மிக்க மான் பிணைபோல யான் மயங்குமாறு வெவ்விய காமநோயைச் செய்யும் மாலைப்பொழுது தோன்றி அதனுடன் மயங்கி எரியின் கொழுந்து போல் இரவுக் காலமும் வந்ததாயின் யான்படும் வருத்தத்தை என்னைப்போல் வருந்தும் மகளிரிடையே கூறுவேன் எனத் தலைவி கலங்கி மொழிந்தாள் (கலி. 146:32-35). கொன்றை மாலை யணிந்த இறைவன், இயங்கும் எயிலாகிய திரிபுரத்தை எய்கையினாலே தோன்றி எரி விசும்புற நிவந்து அழலுமாறு போலச் செறிந்த கதிரையுடைய ஞாயிறு எல்லாவிடத்தும் சுட்டது (கலி. 150:1-3). திருமால் எரிமலரை வென்ற கண்ணை யுடையவர் (பரி. 1:6). பெரிய மலையை எரி சூழ்ந்தது போல் திருமால் பொன்னாலான ஆடையை உடுத்துள்ளார் (பரி. 1:9,10). அணியின் சுடர் எரியை ஒக்கும் (பரி. 1:14). எரிபோற் கனன்று அமையாத மழுப்படை ஏந்தியவர் சிவபெருமான் (பரி. 5:34). முருகன் பிறந்த அன்றே இந்திரன் முனிவர்க்குக் கொடுத்த வரத்தைக் கடந்து எரியுமிழும் வச்சிரப் படைகொண்டு அவனை யெறிந்தான் (பரி. 5:50-52). எரிபோன்ற மலராகிய தாமரையில் தோன்றிய அயனால் வீழ்த்தப்பட்ட பெருவாரியை (ஆகாய கங்கையை) சடையின் தாங்கியவர் சிவன் (பரி. 9:4-6). திருமால் நிறத்தால் எரியையொத்த வெட்சிமலரை இடையிட்டுக் கட்டிய புரிமலர் நறுந்தார்த் துழாயை மார்பில் அணிந்தவர் (பரி.13:59,60). எரியின்கண் உருகும் அகிலும் ஆரமும் கமழும் பரங்குன்றத்துச் செவ்வேளின் திருவடிக்கண் சுற்றமுடன் நீங்காதிருக்கக் குன்றம் பூதனார் வேண்டுவர் (பரி. 18:53-56). வேங்கைப் பூங்கொத்து எரிநிறம் ஒக்கும் (பரி. 19:77). செவ்வேள் ஊர்தியாகக் கொண்டிருப்பது எரியையொத்த பொன்னோடை நடுவே கிடந்து விளங்கும் சென்னியையுடைய யானையாகும் (பரி. 21:1,2).

**2. விளக்கு.** அரண்மனையின் அந்தப்புரத்தில் யவனர் இயற்றிய பாவை விளக்கில் நெய்பெய்து திரிகொளுத்தி நிமிர் எரியை-மேனோக்கி எரியும் விளக்கை-நெய் வற்றியபோது நெய்வார்த்தும் ஒளி மழுங்கியபோது தூண்டியும் மகளிர் இருள் நீக்கினர் (பட். 101-107). நெடுங்கால் மாடத்து எரியும் ஒள்ளிய எரியைக் கண்டு கடலில் மீன்பிடிக்கும் படகுகளை யுடைய பரதவர் எண்ணுவர் (பட். 111,112). காற்றினால் நீரிடைப் போழ்ந்து வரும் மரக்கலத்தினை நீகான் (மாலுமி) மாட ஒள்ளெரியால் (மாடத்தின்கண் உள்ள ஒளி பொருந்திய கலங்கரை விளக்கினால்) அறிந்து கொண்டு அகன்ற துறைப் பக்கம் சேர்த்தான் (அகம். 255:1-6). திருப்பரங் குன்றத்துக்கு அடியவர் கோலெரி விளக்கு, இசையியங்கள், சந்தனம் முதலிய விரைகள், அகிற்புகை, கொடிகள் முதலியவற்றை எடுத்துச் சென்றனர் (பரி. 17:5,6).

**3. வெம்மை.** ஆள் நடமாட்டமற்ற சுரநெறியில் கதிரவன் காய்தலால் நீளெரி - மிகுந்த வெம்மை - பரவியது (அகம். 51:1,2). எரிவாய்க் கோடை மூங்கிலை மோதி ஞெமை இலையை உதிர்த்துக் கள்ர் நிலத்துத் துகளை முகந்து சுழன்றடித்தது (அகம். 353:7-9).

**4. காமத்தீ.** குயில் கூவும் இளவேனிலில் பிரிந்துறைய அஞ்சாத தலைவன் செய்த கொடுமையை மறைப்பவும் கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போல் அழகு நலம் கெடுமாறு என்னுடைய நெஞ்சம் எரி - காமத்தீ - பற்றி என்னைச் சுடுமாயின் யான் என் செய்வேன் எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 34:9-11). தலைவியின் அழகாலே அவளிடத்தைப் பற்றிக் கொண்ட என் உள்ளத்தைச் சுட்டெரிக்கின்ற எரி ஆருயிர் போம்வகையில் இடையறாது சுடும் என்று மடலேறுந் தலைவன் சான்றோரிடம் கூறினான் (கலி. 139:26-29).

**5. எரிமீன்.** அகன் ஞாலம் பெரிது வெம்பினும், வானகத்தே எரி-எரிமீன்கள்-மிகுதியாகத் தோன்றினும் விண்மீன் புகையினும் நெற்சோற்றைப் பொரிக்கறியுடனும் சூட்டிறைச்சியுடனும் உண்டு, 'விளைத்த ஒன்று வெள்ளம் என்னும் அளவாக விளையக் கொள்க' எனப் பரிசிலர் வாழ்த்துமாறு வரையாது வழங்குகின்ற பெருஞ்சாத்தனின் தாளாண்மை வாழ்க என மதுரை நக்கீரர் பாடியுள்ளார் (புறம். 395:33-40).

**6. ஆதித்த மண்டிலம்.** எரி-ஆதித்த மண்டிலம்-சினந்தணிந்த மாலைப் பொழுதில் இலையுதிர்ந்த மரக்கிளையில் தங்கிய புறாவின் புலம்பொலி கேட்டுத் தலைவி நலிந்தாள் (நற். 305:6-8).

7. கவலை கங்குலும் பகலும் தம்மொடு பொருந்தி உள்ளத்திலே மூட்டப்பெற்று அறிவினைச் சுடும் கூரெரியை-கூர்த்த வலையாகிய நெருப்பை- ஆள் வினையாகிய மழையால் அவித்து நாடோறும் காட்டிலே துன்புற்று வருந்துகின்றோம் என்று பொருள்வயிற் பிரிந்து போகும் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 279:6-9).

8. அங்கியங்கடவுள். திருமண நாளில் தன் துணையாகிய மடநதையொடு அந்தணன் எரியை-அங்கியங் கடவுளை-வலம் வருவது போல் அன்னம் தன் பெடையொடு பொய்கையில் தாமரை மலரைச் சுற்றித் திரியும் (கலி. 69:1-7).

9. கார்த்திகை. எரி என்பது அங்கியைத் தெய்வமாக உடைய கார்த்திகையைக் குறிக்க வந்துள்ளது (பரி. 11:2).

10. வேள்வித்தீ. விளையாடு மகளிர் தாயருகே நின்று தவத் தைந்நீராடுதல் தீயினையுடைய எரிப் பக்கம்-வேள்வித் தீப்பக்கம்-இருந்து மிக்க தவத்தைச் செய்ததன் பயன் என்று கருதப்படுகிறது (பரி. 11:88-92).

எரிக்கொடி - ஒளிக்கொடி. எரிக்கொடி - ஒளிக்கொடி- வளைந்த சிவந்த மலை போலச் சுடர்ப்பூண் விளங்கும் தலைவனது உயர்ந்த அழகிய மார்பு தோன்றும் (ஐங. 353:1,2).

எரிநகை - வெட்சிமலர். திருமால் எரிநகையை-வெட்சி மலரை-இடையிட்டுக் கட்டிய புரிமலர் நறுந்தார்த் துளசியை மார்பி லணிந்துள்ளார் (பரி. 13:59,60).

எரிமலர் - எரிபோன்ற தாமரைமலர். திருமால் எரி மலரை-தாமரைமலரை-வென்ற கண்ணை யுடையவர் (பரி. 1:6). எரிமலராகிய தாமரையின்கண் வீற்றிருக்கும் நான்முகன் வீழத்திய பெருவாரியை (ஆகாயகங்கையை) தம் சடையிலே தாங்கியவர் சிவபெருமான் (பரி. 9:4-6).

எரு - துகள் (பொடி). புலவர் வஞ்சியைப் பாடப் படைக்கலத்தைத் தாங்கிய மறவர் தாதாகிய எரு - துகள் - பொருந்திய மறுகினை யுடைய பாசறையில் பொலிவுபெறத் தங்கியுள்ளனர் (புறம். 33:10, 11). தாதாகிய எருவை யுடைய தெருவில் போதொடு தழைத்த வேளையினது வெண் பூவைத் தயிரிற் பெய்து ஆயர்மகள் அழகிய புளிங்கூழ் அட்டனள் (புறம். 215:2-4). புலைத்தி வெளுத்த தூய வெள்ளாடையை உடுத்துத் தாதெரு தெருவில் அழுக்குப் படிய இருந்து பலருக்கும் இன்றியமையாத செயலைச் செய்துதவிய தலைவனுக்குப் போர்க்களத்தில் துணையாக ஒருவருமில்லை (புறம். 311:2-5). கிடாயின் நெடுந்தாம்பு தொடுத்த குறிய முளைகளை யுடைய முன்றிலில் செம்மறியாட்டோடு வெள்ளாடு கிடக்கும் இடுமுள்வேலியினை யுடைய எருமிகுகின்ற ஊரில் கோவலர் வாழ்ந்தனர் (பெரு. 152-154). மேகத்தை ஒத்த வளமிக்க யானைகளை யுடைய தாதாகிய எருக்கள் செறிந்த நன்னன் முன்றிலை எய்திக் கூத்தர் இன்னியங்களை இயக்கினர் (மலை. 530-535). பெணயானை குழியிலகப்படக் களிறு பிளிறிய ஒலிக்கஞ்சி ஓடிய யானைக்குட்டி தாதெரு மறுகினையுடைய மூதூரில எருமை நல்லானின் முலைமாந்தும் (அகம. 165: 1-5). யாம் எம் கூந்தலுககிடும் எருமண் கொணரப் பொழிலுக்கு வருவோம், அங்குத் தலைவியும் வருவாள் எனத் தலைவனிடம் தோழி குறியிடம் பெயர்த்துக் கூறினாள் (குறு. 113:4-6). ஈன்று அணித்தாகிய எருமையின் கன்று பசிய மலரின தாதாகிய எருவில படுத்துத் துயில கொள்ளும் (நற். 271:1, 2). அழகிய குடிகளுள்ள சீறூரில் தாதெரு மறுகிலிருக்கும் கடவுள் தங்கிய ஆலமரத்தின் நெடிய விழுது அங்குள்ள பசுவின் முதுகைத் தீண்டும் (நற். 343:2-4). தொழுவை விட்டு ஆயர் ஏற்றைத தழுவிக் கொண்டு சென்றதும் காதலையுடைய மகளிரும் அவர் கணவரும தாதெரு மன்றத்தில் குரவைக் கூத்தாடினர் (கலி. 103:58-62). காஞ்சிப் பூவின் தாது உதிர்ந்தாற் போன்ற தாதெரு மன்றத்து மகளிர் குரவைக் கூத்தயர்தல் (கலி. 108.60, 61).

எருக்கம் – எருக்குச்செடி. நல்லனவற்றிலும் தீயனவற்றிலும் வைத்தெண்ணப்படாத குவிந்த பூங் கொத்தினையும் புல்லிய இலையையுமுடைய எருக்கம் - எருக்குச் செடியின – பூவாயினும் ஒருவன உடையனவற்றைத தெய்வங்கள் விரும்பேம் என்னா (புறம். 106:1-3). காமம் மிகவும் முதிர்ந்தால் குதிரையெனக் கொண்டு பனைமடலை ஊர்வர்; பூவெனக் குவிந்த அரும்பை யுடைய எருக்கங் கண்ணியையும் சூடுவர் (குறு. 17). தலைவன் குறுமுகிழ் எருக்கினாலாய கண்ணியைச் சூடி உண்ணாத குதிரையைப் பனைமடலாற்செய்து அதற்கு மணி கட்டிக் கச்சையைப் பூட்டி அதன் மேலேறித் தெருவில் வந்தான் (நற். 220:1-4). எருக்கு காண்க.

எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார் - புலவர். இவரது ஊராகிய எருக்காட்டூர் தஞ்சை மாவட்டத்தில் நன்னிலம் வட்டத்தில் உள்ளது. தாயன் என்பானுக்கு மகனாதலின் தாயங்கண்ணனார் என வழங்கப் பெற்றார். கண்ணனார் என்னும் இயற் பெயரை யுடைய இவர் எருக்காட்டூரைத் தாயமாக (பிரம தேயமாக) பெற்றமையால் எருக்காட்டூர்த் தாயங்கண்ண

னார் எனப் பெயர் பெற்றார் என்று கொள்வாரு முளர் (உ. வே. சா.-புறம். பாடினோர் வரலாறு, பக். 9). அகம். 149, 319, 357; புறம். 397-ஆகிய நான்கு பாடல்களைப் பாடிய இவரும் அகம் 105, 132, 213, 237; புறம். 356, குறு. 319; நற். 219-ஆகிய ஏழு பாடல்களைப் பாடிய தாயங்கண்ணனாரும் ஒருவரே என்பர் பி. நா. இவர் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் வணமையைப் புகழ்ந்த இரவலர் கவலை யின்றி இருத்தலைப் புறம். 397 - இல் குறிபபிட்டுள்ளார். வேந்தரின் பேரியாற்றுத் துறையாகிய முசிறியில யவனர் பொன கொணர்ந்து தந்து மிளகு பெற்றுச்சென்ற செய்தியும் முசிறியை வளைத்துப் பொருது பாண்டியன் ஒருவன் படிமம் வவ்விய செய்தியும் இவரால் அகம். 149 - இல் குறிக்கப்பட்டுள்ளன. காடு வாழ்த்து எனனும் துறையில் இவர் பாடிய புறம். 356-ஆம் பாடல் தொல்காப்பியர் கூறும் காடு வாழ்ததை ஒட்டி அமைந்துள்ளது. எழினி, காவிரி, உறந்தை பற்றிய குறிப்புகள் இவர் பாடல்களில் (முறையே அகம். 105, 213, 237-இல்) உள்ளன. குரா அரும்பைப் பாம்பின் பல்லோடு இவர் உவமித்துள்ளார் (அகம். 237).

**எருக்கு** – எருக்கஞ்செடி. குவியிணர் எருக்கின்-எருக்கஞ் செடியின் - பூவாலாய கண்ணியைக் கூத்தர் தலையிற சூடியும் அவர் மகளிர் ஆவிரம் பூமாலையினை மார்பிலசைய அணிந்தும் குறுநெடுந தூம் பொடு முழவிசைப்பச் சில்லரி ஒலிக்கும சிறுபல்லியத்தொடு பல ஊர் சென்று கூததாடுவர் (அகம். 301:11-21). தலைவன தான கொணட காமம் மடல் மாவைத் தந்ததாகவும் ஊரார் எடுக்கும் அலர் எருக்கின் பூமாலையைத் தந்ததாகவும் கூறினான் (நற். 152:1,2). தலைவியைப் பெற மடலூர்தலே வழியெனக் கருதிய தலைவன் மடன்மாவிலே சூட்ட வேண்டி நூலாலே நீலமணி போன்ற பீலியையும் பூளைப் பூவையும ஆவிரை மலரையும் எருக்கின் பூவோடு தொடுதது ஊர்த்தெருவிலே தலைவியைப் பாடுவான (கலி. 138:8-10). ஆவிரைப் பூவோடு எருக்கின் பிணையலங் கண்ணியையும் அணிந்து பனைமடலாற் செய்யப் பெற்ற குதிரையினை மணிகள் ஆர்ப்ப ஏறி, என்னால் தாங்க முடியாத துன்பத்திற்கு இளைப்பாறுதலாகத் தலைவியின் திறத்துப் பாடுவேன் எனத் தலைவன் கூறுதல் (கலி. 139:8-13). எருக்கம் காண்க.

**எருத்தம்** - 1. கழுத்து. முருகன் களிறூர்ந்தது போல யானையின் புகழ் பொருநதிய பொலனணி எருத்தம் - கழுத்து - மேல் பொலிநத நின் பலர்புகழ் செல்வத்தைக் கண்டோம் என இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனிடம் குமட்டூர்க்கண்ணனார் கூறினார் (பதி. 11:5,6;18-20). பெருஞ்சேரலிரும்பொறை தன் போர் வன்மையைக் கணடு தனது செங் கோலின் கீழ அடங்காததால் பகையரசர்தம் யானையின் எருத்தம் பொலிவழிய வில்லின நாணை யறுத்து அவருடைய முரசின்கண்ணைக் கிழித்துப் பட்டத்து யானையின் கோட்டை யறுத்தான் (பதி. 79: 10-13). நான்கு கொம்பினையும் எழில் நடையினையும் தாழபெருந் தடக்கையினையும் உடைய யானையின் எருததம் ஏறிய திருக்கிளர் செல்வன் இந்திரன் (முரு. 157-159). விரவிய பூககளாலாய மாலை எருத்தத்தில தாழநது விளங்கியது (மது. 718). கோவலர் இமிலையுடைய காளையின எருததத்தில் தாழுமாறு பூட்டிய துளையுடைய மூங்கிறகுழாய் நிறைய மிகுநத உணவினை எடுத்துச் செலவர் (அகம. 253: 13-16). கூரிய அலகினையும் அழல் தளிர்ததது போன்ற அழகிய செறிநத மயிரினையுமுடைய மனையுறையும் கோழியின மறமுடைய சேவல போர் புரியுங காலை அதன எருததத்திலுள்ள மயிர் போனறு நிமிர்ந்து செறிந்த பொங்கழல போன்ற முருக்க மரத்தின ஒண்பூங் கொததுககள் காணப்பெறும் (அகம. 277:13-17). வையைக்குச் செல்லுகினற வேட்கை முநதுற மாலைகளை முறைமாறி யணிநத மைநதரும் மகளிரும் மணற் குவட்டின உயர்நத எருத்ததைத மோதிய பெரும புனலைச் சென று குறுகினர் (பரி. 20: 20-24). எருத்து – 1. காண்க.

2. **தோள்.** மால்வரைச் சீறூர் மக்கள் ஆணபன்றியின ஓசைகேட்டு மருணடு எருத்தத்து-தோளில-வலிய வில்லினைக் கொண்டு செப்பஞ்செயத அம்பினை யெடுத்துக் கொணடு காட்டிட மெலலாம் அதனைத் தேடித் திரிந்தனர் (அகம். 171: 8-11). வேங்கைப் பூங்கொத்தைச் சூடி, வளைந்த வலிய வில்லை எருத்தத்து இருததிப் பலாசசுளையால் விளைந்த தேறலை இளையரொடு மாந்தி, நாய் பின்னே வர வேட்டைக்குச் சென்ற குறவன அமபெய்து புதரில பதுங்கி யிருந்த முள்ளம் பன்றியைக் கொன்றான் (அகம். 182: 1-8).

3. **பிடர்.** குதிரைநூலுக்குப் பொருந்திய பிறப்பினையும் நீலமணி பதித்த நெற்றிச சுட்டியினையும் கொய்மயிர் எருத்தத்தினையும்-பிடரினையும்-உடைய குதிரை நான்கு பூட்டிய தேரில் சுரநெறி கடந்து மெல்லம்புலம்பன் வருதல் (அகம். 400: 5-19). மிளகினை இட்டு வைத்தாற்போன்ற சுவையுடைய உகாயின் காயை உண்ட வருத்தமிக்க புறா கிளை மீதேறி உண்டதன் தவறு நினைந்து பொறிகள் விளங்கிய எருத்தத்தை வெறிபபினால் சிலிர்க்கும்

(நற். 66: 1-5). பாலின் நிறம் போலும் வெள்ளிய ஏற்றினது எருததத்திலே பாயநதவனைப் பொறா மல் மேறசெனறு குத்தும் இளைய கரிய ஏற்றின தோற்றம் பானமதியைச் சேர்ந்த அரவினை அது மறைத்த தன்மையை விடுவிக்கும் நீனிற வண்ணனா கிய மாயோனின் தோற்றத்தினை ஒத்தது (அகம். 104: 35-38). நடுவே பாய்ந்து எருத்ததகதைத் தழுவிக் கிடந்தானோடே பரண்மேற் பாயும் வெள்ளேறு வானத்தே அரவினால் சிறிது விழுங்கப்பட்டு அவ் வரவுடனே வானத்திற் செல்லும் பான்மதியை ஒத்தது (கலி. 105:43-46). எருத்து-2 காண்க.

**எருத்து - 1.** கழுத்து. எதிரியை எறியும் காலம் வாய்த்த வன இடம் காட்டுதலால் முகக்கருவி பொருத சிவந்த வாயையுடைய குதிரைகள் மான் முதலிய வற்றின் எருத்தை - கழுத்தை - கவ்விக் குருதி பருகிய புலி போன்றன (புறம். 4:7-9). அசைந்த தன்மை யோடு பெருத்த எருத்தினையும் பரந்த அடியோடு வெகுண்ட நோக்கினையும் விளங்கிய கோட்டினை யும் உடைய களிறறைப் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, பகைவரது காவலுடைய கயத்தின் கண படிவித்தான் (புறம். 15:7-10). பரந்த அடி யோடு பணைதத எருததினை யுடையது களிறு (புறம். 22:4). நினனை இழிததுரைப்போர் எருத்துத் தாழவும் புகழபாடுவோர் பொலிவு பெறவும் இனறு கண்டாற் போல நின்னைக் காணகுவம் எனக் கிள்ளிவளவனிடம் ஆவூர் மூலங்கிழார் கூறினார் (புறம். 40:6-9). செல்வக்கடுங்கோ வாழி யாதனுக்கு மாறுகொணடோரின் மதிலை யழிதத நறிய கவுளையும் பூவேலை செயயப் பெற்ற பட்ட மணிந்த பணைதத எருததினையும் உயர்ந்த கோட்டையும் இரும்பிணர்த்தடக்கையையும் உடைய யானைகளைத் திறையாகப் பகை மன்னர் அளித்த னர் (புறம். 387:5-12). தாரணிந்த எருத்தினையும் நீண்டவள்ளுகிரினையும் உடைய சிங்கம் நடமாடும் மலைச்சாரலில் பிற விலங்கினக் கூட்டங்கள் நெஞ் சதிர்ந்து தலைகாட்டா (பதி. 12:4-6). ஓடை விளங்கும் உருகெழு புள்ளி கொண்ட நெற்றியை யுடைய பொன்னாற் செய்த அணிபூண்ட யானை யின் வலிமைமிக்க எருத்தில் இருந்து வீரர் பொருது மைந்தர் மாறுநிலை தேய, போர்கெடப் பகை யரசரை வெலவர் (பதி.34:6-11). பொறிக்கப்பட்டன போலும் புள்ளிகளை யுடைய எருத்தினையும் புல்லிய புறத்தினையும் உடைய பருந்தினது பெடையைச் சேர்ந்த சேவல் போர்க்களத்திற் கிடந்த பிணங்களைத் தின்னச் சென்றது (பதி. 36:7-9). பொறிக்கப்பட்டன போன்ற புள்ளிகளை யுடைய எருத்தினையும் புல்லிய புறத்தினையு முடைய புறாவின் கூட்டம் வேலமரத்தில் சிலந்தி கட்டிய வலையைக் கண்டு அஞ்சியது (பதி. 39:10-13). பாடினி நாணத்தால் சாய்ந்த நலங்கிளர் எருத்தினை உடையவள் (பொரு. 31). உழவர் வெற்றியுண்டாக நடக்கும் வலிமை பொருந்திய எருத்தினை யுடைய ஊக்கம் மிக்க எருதுகளை உடையவர் (சிறு. 189,190). கமுகினது நீலமணியை ஒத்த எருத்தில் கொழுமடல் விரிந்த குலையில் காய்கள இனிமையுற முற்றின (நெடு. 23-26). பரணிலிருந்து கானவன் எய்த அம்பு பட்டுப் புண் கூர்ந்து இருள் துணிபட்டுக் கிடப்பது போல இரும் பிணர் எருத்தினையுடைய பன்றி வீழ்ந்து கிடக்கும் (மலை. 243-247). பொறிக்கப்பட்டன போலும் வெண்ணிற எருத்தினையும் ஊனாற் செய்து பதித்தது போலும் செஞ்செவியையும் குருதி படிந்த செவ்வாயினையும் உடைய எருவை யாமரக் கிளை யிலிருந்து தன் குஞ்சுக்கு ஊட்டிய கொழுங்கண் ஊன்தடி வழுக்கி வீழ்ந்து தொல்பசி மிக்க முது நரிக்கு உணவாயிற்று (அகம். 193:4-10). குட்டிகளை ஈன்று காக்கும் வாலாநோய் கொண்ட பெண்புலிக்கு மானதசைஉணவு தருதற்கு நள்ளிரவில் குகையுடைய மலைக்கு இரைவேட்டெழுநத பனநதுணடு போன்ற எருத்தினையும் பல்வரிகளையுமுடைய பெரிய ஆண் புலி ஆமான அலற அதன ஏறறினைத் தொலைத்து மலைப் பாறை சிவப்ப இழுத்து வநதது (அகம். 238:2-9). தொடுத்து அமைக்கப்பட்ட பல மலர் மாலையின் தொகுதியைப் பொதிநது கட்டிவைத்த குடையை ஒத்த, கமுகமரம் காய்த்தல் பொருந்திய எருததினை யுடையது (அகம். 335:13,14). நீலமணி போனற நிறமிக்க எருத்தையும் அழகிய பீலியையு முடையது மயில (அகம். 358:1,2). காட்டுப்பூனை தன் பிணவின் பசிநீங்கத் தளிர்போன்றகதுப்பினை யும் செறிந்த மயிருடைய எருத்தினையும் கதிர்த்த சென்னியினையும் முருக்கமபூப் போன்ற சூட்டி னைக் கொண்ட நெற்றியினையும் உடைய சேவலை மாலைப்பொழுதில் அற்றம் பார்க்கும் (அகம். 367: 6-12). பாலைநிலத்தே கொடிப்பின்னலில் மறைந் திருந்த வேட்டுவனின் ஒலிக்கஞ்சி முதுகிற் கோடு களையும் நீலமணி போன்ற கணணையுமுடைய காடைப்பெடை, நுண்பொறி யணிந்த எருத்தினை யும் கூர்முள் கொண்ட சிவந்த காலையும் உடைய தன் சேவலை அழைக்கும் (அகம். 387:9-12). அருஞ் சுரத்தின் பொரிகாற் கள்ளியின் கவட்டிலிருந்து புள்ளிகளையுடைய மயிர்பொருந்திய எருத்தினைக் கொண்ட குறுநடைப் புறாப்பெடை இரைவேட் டெழுந்த சேவலை நினைந்து கூவும் (குறு. 154:3-7). காட்டிடத்தில் மெல்லிய மயிலின் எருத்துப்போலக் காயாவின் பூக்கெழு பெருஞ்சினை தோன்றும்

(குறு. 183 : 5 - 7). மழைபொழிந்த காட்சிக்கினிய பொழுதில் அழகு விளங்கிய தோகையை மெல்ல விரித்தாடும் நீலமணி போன்ற எருத்தினையுடைய மயில் போல மலர்பெய்த நின் கூந்தலை வீசும் காற்று விரித்துவிடச் செல்க என உடன்போக்கில தலைவியிடம் தலைவன் கூறினான (நற். 264:2-6). சுரநெறியில் கவிழ்நத மயிர் பொருந்திய எருத்தை யுடைய ஆண செநநாய் இரக்கத்தால் பன்றிக் குட்டியை உணவாகப் பற்றாமல் விட்டுச செல்லும் (ஐங. 397:1-3). வலியினையுடைய பாாவையினையும் வலிய எருத்தினையும் உடைய கலைமான் கொமபு போலே திருகி முறுக்குண்ட தாழநத தாடியினை யுடையவர் மறவா (கலி. 15:5-7). வெம்மையுடைய அரிய காட்டில பெருமையுடைய எருத்தினையும் அழகையுமுடைய ஏறறினபின பிணை நீங்காமல திரியும் (கலி.20:20-23). மலையில் பெருங்களிறறினத் தோடு பருத்த எருததினையும் மிகக வலியினையு முடைய புலி மாறுபாட்டாலே போா செய்யும் (கலி. 48.6,7). பொயயைப பலகாலும் அனுபவித்த பரத்தையரைக கூடிய தலைவன் எருததின்கண் மறையாமல் கிடக்கும் தொடிததழும்பைக காணப் பொய்சசூளுறற பாணன் வாரானோ எனத் தலை வனிடம் காமககிழத்தி கூறினாள் (கலி. 71:14-16). ஏறு தழுவியவருள ஒருவன நீலமணி போன்ற நிறத்தையுடைய நெடிய தோள்களால் ஏற்றின் எருத்தை இறுகத்தழுவிக் கழுத்தோடே சேர்நதி ருக்கும் இமிலிடைத தோன்றி அதனை வருத்தி னான (கலி. 102:25-27). கொலலுதலையுடைய ஏற் றின் எருத்தில் தங்கினவரை நேற்றுக் கண்டும் இனறும் சினந்து வருகின்ற ஏற்றைத் தழுவச் சாற்றுவாராகிய நல்ல ஆயர் மக்கள் மடவரே எனறு கண்டவர் கூறினர் (கலி. 102:30-32). ஆயர் மகன் ஏற்றின் சருச்சரையுடைய எருத்தில் பாயநது அதற்கிட்ட மாலைபோல அதனைத் தழுவினான (கலி. 103.33-35). மயிலினது எருத்தை மாறுபடும் காயாம் பூவாற் செய்த கணணியை ஆயர் அணிந் தனர் (கலி. 103:59). இந்த வெள்ளேற்றின் எருத் தினைத் தழுவி அடககுவோன் கூரிய எயிற்றையும் அழகையுமுடைய இவளைக் கூடுவான் என அறி வீதது ஆயர் தம் மகளைப் பரண்மேல் நிறுத்தி னர் (கலி. 104:18,19,25-28). பால்நிற வெள்ளை ஏற்றின் எருத்தின்மேல் பாய்ந்தவனைப் பொறாது இளங்கரிய ஏறு குத்தியது (கலி. 104:35,36). குரால் நிறத்தினை யுடைய ஏறு உயர்ந்த இமிலையும் கணிச்சியைக் கொண்ட சிவபெருமானின் மணி மிடற்றழகு போலக் கரிய சருச்சரையை யுடைய எருத்தினையும் பெற்றிருந்தது (கலி. 105:13,14). கொம்பைப பிடித்தும் மார்புறத் தழுவியும் எருத் திடை அடங்கியும் இமில் முறியும்படி தழுவியும் ஆயர் ஏறுகளை அடக்க முயனறனர் (கலி. 105:30, 31). 'மயிலின் எருத்து நிறத்தையுடைய மாயோய்' என முல்லை நிலத் தலைவியைத் தலைவன் விளித் தல் (கலி. 108:38). திருமாலின தொடியும் உநதியும் வாகுவலயமும் தாளும் தோளும் எருத்தும் பெரி யன (பரி. 13:52,53). இரு படபபொறியை யணிந்த எருத்தினையுடைய வரைகெழு செல்வனாகிய ஆதி சேடனது திருக்கோயில் நல்வினையின விழுப் பயனைத துயககும துறககமபோல் விளங்கும் (பரி. தி.1:46-49). எருததம - 1 காணக.

2. பிடரி. சீறூர் மன்னன் புரவி படைமுகத்தைப் பிளநது செலல, நெய்மமிதி யருநதிய ஒழுஙகுறக் கத்தரிக்கப்பெற்ற எருத்தினை - பிடரியை - உடைய தண்ணடை மனனரின தாருடைப புரவி அஞசிப் பின்னினறன (புறம். 299). மரலாகிய உணவை யுணட பெரிய எருததினை யுடைய இரலைமான யானை ஒடிததுண டெஞசிய யாமர வரிநிழலில் துஞசும் (குறு. 232.3-5). மணஙகமழும் முல்லை நிலத தில கானஙகோழியின் சேவலுடைய ஒள்ளிய புளளிகளைக் கொணட எருததில தணதுளி துளிப் பப் புதாநீர் ஒழுகும் (குறு. 242.1-3). மாலைப் பொழு தில் காட்டினகண கரிய எருததினையுடைய இரலை தனது மடப்பிணையைத் தழுவியது (நற. 69 4). விரைநதோடும் வலிய காலினை யுடைய புரவி யின் கொயம மயிர் எருத்தினகண கட்டிய மணி ஒலிக்க அதனை நின தேரிற பூட்டிச் செலுததுக எனப் பாகறகுத் தலைவன கூறினான (நற். 81:2-5). முள்ளம் பன்றியின் முட்போன்ற பருத்த மயிரை யுடைய எருததும சிறு கண்ணு முடைய பன்றி தினைப்புனத்தில் மேயச் சென்ற போது பல்லியடிக்க அதனால் தீமை வருமெனக கருதித் திரும்பியது (நற். 98:1-6). தலைவியின தந்தை கரிய அணலையும எருத்தினையும வலியதடககையையும் வலவிலலோடு கூடிய அம்பையும் வனமையையும் உடையவன் (நற். 198:9-11). மழை பெயத கார்ப் பருவத்தில் மடப்பிணையைத் தழுவிய கரிய எருத் தினையுடைய கலைமான் வேலமரககிளையின் வரி நிழலில் தங்கும் (நற். 256:7-10). வையைப் புனலாட மைந்தரும் மகளிரும் யானை எருததினமேல் ஏறிச் செனறனர் (பரி. 6:33). எருத்தம் - 3 காண்க.

எருது - மாடு. எருதுகள் - மாடுகள் - இளையவாக லின் நுகம் பூணடிருத்தலை உணரா; அவை பூட்டபபெற்ற சகடத்தில் பணடம் மிகுதியாக வைக்கப்பட்டுள்ளது. பளளத்தில் இறங்கினாலும் மேட்டில் ஏறினாலும் சகடத்திற்கு வரும் இடை யூற்றினை யார் அறிவார் எனறு கருதிய உமணர்

அச்சுமரத்தின்கண்ணே அடுத்துச் சேம அச்சினைக் கட்டி வைத்திருப்பர் (புறம். 102:1-5). ஈரச்செவ்வி யுள்ள நிலத்தை விரைநதுழப் பல்லெருத்துள்ளும் நல்லெருதை உழவன் ஆராய்ந்து தேர்ந்தெடுப்பான் (புறம். 289:1-3). எருதுகளைப பிணித்து அவற்றின் காற்கீழ்ப் பெயது கடா விடுதலின்றி இளைஞர் காலால் மிதிததெடுத்த சிலவாக விளைந்த வரகின் குவியலை ஒரு சீறூர்த் தலைவன் வளைத்துக் கொணட கடனளிததவர்க்குக் கொடுத்தது போக எஞ்சியதைப பசித்த பாணருக் களித்தான் (புறம். 327:1-4). தலைவியின உடன் பிறந்தோர் அவளை மணக்க வந்த வேநதருடன் பேரமர் செய்தலின் பிணக்குவியல் வைக்கோற் போராகவும் களிறு வைக்கோலை மிதித்தொதுக்கும் எருதாகவும் கொண்டு தம வாளாண்மைக் கேற்ப நாடோறும் வாளுழவு செய்யும் மாண்பினராவர் (புறம். 342: 11-15). பிணங்களாகிய பல போர் அழியும்படி வளைத்து யானை எருதாக வாட்படையைப் பனை மடலாகக் கொணடு செலுத்தி இளஞ்சேட் சென்னி அதரி திரித்தான் (புறம். 370:15-17). நெடுஞ் செழியன குறையுடலங்களாய் விழும் பிணங்கள் குவியப் பிணக்குவையாகிய போரையழித்து யானை யாகிய எருத்தை வாளாகிய பனைமடல் கொண்டு செலுத்திப் போர்க் களத்தில அதரி திரித்தான (கடா விட்டான) (புறம. 371:15-17). சாகாட்டின சக் கரம் வயறசேற்றிற் புதைய, பூட்டப்பெற்ற நல் லெருது சேற்றினின்று நீக்க முயன்று இழுக்கும் போது, சாகாட்டை ஓட்டுபவர் ஊக்குதறகு எழுப்பும் ஆரவாரத்தை யன்றி வேறு ஆரவாரத் தைப் பலயானைச் செல்கெழு குட்டுவன நாடு அறியாது (பதி. 27:10-15). சிறுதுளைக் கொடு நுகத்தில் எருதுகள் ஒருவழிப் படுமாறு நிரலே கட்டிய பெருநகயிறறையுடைய சகட ஒழுங்கினைப் பக்கததேயிருந்து வலிமையுடையவர் காக்கப் பல் எருத்துக்களை யுடைய உமணர் ஊர் சென்று உப்பை விலை கூறி விற்பர் (பெரு. 61-65). காவிரிப பூம்பட்டினத்தில் குளிர்ந்த சிறிய குளங்களைக் கொண்ட முற்றத்தை யுடைய பெரிய எருத்திற்கு வைக்கோலிடும் சாலைகள பல இருந்தன (பட். 51,52). உழவர் தரும் உணவைச் சுற்றத்துடன் உணடு வயலில் எருதுகளையடித்து உழும் உழவ ரின ஏர்மஙகலப் பாட்டிற்கிசைய யாழிலே மருதப பணணை எழுப்பித தங்கிச் செனமின் எனக் கூத்தர் ஆற்றுபபடுத்தப் பெறுவர் (மலை. 468-470). கொககின பார்வைக்கஞ்சிய நணடு தாழையின் வேரிடததுள்ள வளைக்கு, ஆயர் கட்டிய கயிற்றை அறுததுக் கொணடோடும் எருத்தினைப் போல விரையும (குறு. 117:1-4). கவணை யொத்த பூட்டுங் கயிறு பொருதமையால் வருந்தும் உமணரின் எருத்துகளை யுடைய வண்டியின் தொகுதியை வரி சையாக நிறுத்தினாற் போலப் பாலை நிலக் காட் டில் உலர்ந்த கிளைகள் தோன்றும் (குறு. 388:3-7). அழகிய இளவேனிற் பருவத்து விடியலில உழவர் கடாவிட்டுப் போரடித்து நெல்லைக் குவித்து மருத மரநிழலில எருதொடு வதிவர் (அகம்.37: 5, 15-17). எருதை ஓட்டிப் போரடிககும் உழவர் செப்பம் செய்த களம போன்ற அகன்ற பாறையில் குறவர் தினையை அதரி திரிக்க (போரடிக்க) இரவில் உறங் கும் களிற்றினை எழுப்புவர் (நற். 125.9 12). நல்ல எருது முனபுள்ள நடையின் சிறபபு நீங்கிற்றென்று அதனை உழவர் புல்லுடைத் தோட்டத்திலே தொழில் செய்யாதபடி விடுவர் (நற். 315:4,5). தம் எருதை உழுதற் றொழில் செய்யாமல் ஓட விடும் முறைமை வேளாளர்க்கில்லை (பரி. 20:62,63).

**எருந்து - கிளிஞ்சில்.** உப்பு வணிகர் வண்டியோடு வந்த மந்தி எருநதின் - கிளிஞ்சிலின் - வயிற்றிலே முத்துககளைப் பெய்து அதனைக கிலுகிலுபபை யாகக் கொணடு உமட்டியர் ஈன்ற பிள்ளை களோடு விளையாடும் (சிறு. 55-61).

**எருமண் - வண்டற்பொருக்கு மண்.** (எருமணம் எனவும் பாடம்) கூந்தலுக்கு எருமண் - வண்டல் பொருக்கு மண - கொணர்வதற்காக ஊர்ப் பொய்கைககுப் பக்கத்திலிருக்கும் கான்யாற்றிடத்து உள்ள பொழி லுக்குத் தோழியும் தலைவியும் சென றனர் (குறு. 113:5,6).

**எருமை - 1. காரான்.** சேரமான் கருவூரேறிய ஒள் வாட் கோபபெருஞ் சேரல் இரும்பொறையின கானக நாட்டினில எருமை - காரான - போலும் வடிவுடைய கருங்கல்லின இடையே நிறைந்த பசுக்கள் போன்று யானைகள் பரவி நின்றன (புறம். 5:1-3). மருதநிலத்து ஊர்களில வாழும் எருமையின் பெரிய கொம்பு போனறது நெடிய முற்றிய பசிய பயற்றின் நெற்று (புறம். 297:1-3). கரும்பின பாத்தியில் பூத்த நெய்தல், இருங்கண் எருமையின கூட்டத்தை வேறிடததுச் சென்று மற் றோரிரையைத் தினனாது தன்னையே தின்னுமாறு செயது தடுக்கும (பதி. 13:3,4). கொழுமீன துணி பட நடந்து வளளிதழ்க் கழுநீர் மேயந்த பெரிய வாயுடைய எருமை மிளகுக் கொடி படர்ந்த பலா நீழலில் மஞ்சள் மெல்லிலை முதுகினைத் தடவ, தேன்மணங் கமழ அசையிட்டு, உதிர்ந்து கிடக்கும் காட்டுமல்லிகை மலர்ப்படுக்கையில துயிலும் (சிறு. 41-46). ஆய்மகள் மோர் விற்றதனாலாய உணவுப் பொருளால் சுற்றத்தாரை உண்ணச்செய்து நெய் விற்ற விலைக்குக கட்டிப் பசும்பொன்னையும்

விரும்பிப் பெறாமல் பாலெருமையையும் நல்ல பசுவையும் கன்றையும் வாங்கினாள் (பெரு. 162-165). நிலங்களில் விளைந்த செந்நெற் கதிரைத் தின்ற வயிற்றினையுடைய எருமையீன்ற கன்றுகள் நெற்கூடுகளின் நிழலிலே உறங்கும் (பட். 13-15). வெண்ணெல் அறுப்போர் எழுப்பும் தண்ணுமை ஒலிக்கு அஞ்சிச் செங்கண்ணையுடைய எருமையினத்தைப் பிரிந்து கடா விரைந்தோடும் (மலை. 471-473). மூங்கிற் குழாயில் தோய்த்த எருமைத் தயிர் நன்னன் தலைவாயிலில் கையுறைப் பொருளாக வைக்கப் பெற்றது (மலை. 523). இரும்பால் இயன்றது போன்ற கருங்கோட்டெருமை தெளிந்த கயம் கலங்க, ஆம்பலிலை கிழிய, குவளை மலர்களைத் தின்று, காஞ்சியின நுண்தாது முதுகிலே உதிர அசையிட்டுக்கொண்டு கொட்டிலிற் புகும் (அகம். 56:2-7). குடநாட்டில் எருமை தாமரையைத் தின்று வெறுப்பின் முடமுதிர் பலாவின் கொழுநிழற்கண் தங்கும் (அகம். 91:15-17). தாழை வேலியை யுடைய தோட்டங்களில் விடியலிற் சென்ற எருமை நெய்தலம் புதுமலரைத் தின்னும் (அகம். 100:16-18). வலிமை மிக்க தலைமையினை யுடைய எருமைக் கடா பனிமலர்ப் பொய்கையில் பகல் முழுவதும் கிடந்து மடப்பமுடைய கண்களைக் கொண்ட மாட்சிமைப்பட்ட எருமை நாகினைத் தழுவிப் படப்பை எய்திப் பழனத்தில் தங்கியது (அகம். 146: 1-4). மடப்பிடி குழியில் வீழக் களிறு சிறுவர் ஒலிக்கஞ்சி ஓடிய சிவந்த வாயினையுடைய யானைக் கன்று மூதூரிலுள்ள எருமை நல்லானின் முலைப் பால் மாந்தும் (அகம். 165:1-5). பெண் கோலம் பூண்டு ஆடும் பேடியின் பின்புறம் சென்று மேல் வளைந்த கைபோன்ற காண்பார்க்கு நகைதோன்று மாறு பருத்த முறுக்கேறிய கொம்பினை யுடைய எருமையின் மயிரால் அழகு பெற்ற கரிய தோலை யுடைய பெரிய முதுகில் மாடு மேய்க்கும் சிறுவர் ஏறித் தொலைவினில் உள்ளார்க்குத் துறுகல் மேலுள்ள மந்திபோல் தோன்றுவர் (அகம். 206: 2-6). பொய்கையில் ஆம்பல் மலர் மேய்ந்த நெறி மருப்பினையுடைய தண்ணிய முதிர்ந்த எருமைக் கடா இரவெல்லாம் சேற்றுக் குழம்பில் துயின்று, விடிந்ததும் வரால்மீன் துணிய நடந்து, பகன்றைக் கொடியைச் சூடிப் போரினைச் செய்யும் மள்ளரைப் போல் ஊரில் புகுந்தது (அகம். 316: 1-7). ஈன்றணிமையுடைய பெரிய மருப்பினைக் கொண்ட எருமையாகிய காரான், உழவன் கட்டி வைத்த கன்றை விட்டகலாது பக்கத்துள்ள பசிய பயிர்களை மேயும் (குறு. 181:3-5). திரிமருப்பினையும் இருணிறத்தினையும் உடைய எருமையானினது கழுத்திற் கட்டிய மணி தனிமைத் துன்பம் மிகுதற்குக் காரணமான யாமத்து அது நடக்குந்தோறும் ஒலிக்கும் (குறு. 279:1-3). உழவன் மலை கண்டன்ன உயர்ந்த பல நெற்கூடுகளையும் எருமைகளையும் உடையவன் (நற். 60:1,2). ஊர்ச் சிறுவர் பெரிய தலையை யுடைய எருமைக் காரானின் இனிய பாலை மிகுதியாகக் கறக்கக் கன்றை அகற்றிவிட்டுச் சிறு மேய்ச்சலுக்காக விடியற் காலத்தே அதன்மீது ஏறிச் செலவர் (நற். 80:1-4). காணத்தக்க நல்ல இல்லத்தில் தடமருப் பெருமையின் இளநடைக் கன்றுகளைத் தூண்தொறும கட்டியுள்ளனர் (நற். 120:1,2). கழுநீர் மேய்ந்த கரிய காலையுடைய எருமை பழனத் தாமரை மலர் தின்பதை வெறுத்துத் தணடினைக் கைக் கொண்ட வீரர் போலச் செருக்கி நடந்து பக்கத் துள்ள குன்று போலக் குவிநத வெணமணலில் துயிலும் (நற். 260:1-4). செழுந்தண மனையில ஈன்றணிமை யுடைய எருமையின் பெருஞ்செவிக் கன்று பூக்களின பசிய தாதாகிய எருவில தங்கித் துயிலகொள்ளும் (நற். 271:1-3). வளைந்த கொம்பினையும் வலிய பிடரியினையும் உடைய எருமைக் கடா இளநடையுடைய நாரையினம் அஞ்சியோட ஆழமான தண்கயத்தில் துடுமெனப் பாய்ந்து, காலையில் உழுத தொழிலின் வருத்தம் நீங்கி மருதமரத்தின் இனிய நிழலில் தங்கும் (நற். 330: 1-5). நெறிந்த கொம்பையுடைய நீலநிற எருமைக் கடா மணமலர்கள் உளள பொயகையில ஆமபலைக் கெடுக்கும் (ஐங். 91:1,2). கருங்கோட்டினையும் செங்கண்ணினையும் உடைய எருமைப் புனிற்றா தன் அன்பு சிறநத கன்றுக்கு ஊறும் பாலைக் கொடுக்கும் (ஐங். 92:1,2). எருமைக்கடா இனங்கள் நன்றாக மேயந்தமையால் பசுமையான செங்கருங்காலிப் பூ, ஆம்பல் ஆகியவற்றைத் தின்னா (ஐங். 93:1,2). வீரர் போனற வளைந்த கொம்பையுடைய எருமை, மகளிர் போனற துணையொடு நிழல் முதிர் இலஞ்சிப் பழனத்தில் தங்கும (ஐங். 94 : 1-3). கருங்கோட்டெருமை கயிற்றை அறுத்துக் கொண்டு சென்று நெல்லின் நெடுங் கதிரை விடியலில் மேயும் (ஐங். 95:1,2). அழகிய நடையுடைய எருமை உழக்கிய சேற்றில் நீலமணி போன்ற நெய்தலும் ஆம்பலும் செருக்கி வளரும் (ஐங். 96:1,2). பகன்றை வெண்மலரைக் கொம்பிற் சூடிய கருந்தாள் எருமையைக் கண்டு அதன் கன்று அஞ்சும் (ஐங். 97:1,2). தண்புன லாடும் தடங்கோட்டெருமை திண்ணிதாகப் பிணிக்கப் பட்ட ஓடம்போல் தோன்றும் (ஐங. 98:1,2). வயலருகில் இருக்கும் பலாமரத்தில் முயிறு மொய்க்கும் கூட்டை, எருமை கழனியிலுள்ள நெற்கதிரொடு கெடுக்கும் (ஐங். 99:1,2). புனலாடு மகளிர் விட்டுச்

சென்ற ஒளிபொருந்திய அணிகலன்களை மணல் மேட்டின உச்சியில எருமை காலாற கிளைக்கும். (ஐங் 100.1,2). ஏறாகிய எருமையை ஏறும் கூற்று வலிய நெஞ்சைக் கால் விளிம்பால பிளந்து சீற்ற மொடு அவனது ஆருயிரைக் கொண்டபோது, இறைவன் இத்தன்மையனோ என்று கூறும்படி காற்றுப்போல விரைந்து வந்த காரியாகிய ஏற்றை அடக்கி அதனமேல ஆயாமகன் தோனறினான (கலி. 103:40-45). கொணடுவந்த மணலைத தாழப பரப்பி இலலத்தைச் செம்மண பூசி நாகெருமை யின கொம்பை நட்டுத் தெய்வமாக எண்ணிச் சுற றததார் பெண்ணுக்குத திருமணம செய்வர் (கலி. 114 12-14). என முனகை பறறித் தெளிவித்துக் கூடியவன பால கறக்கப் பெறாத எருமைகளை யுடைய காட்டைக் கடநது சென்றானோ, அன்பி லார் செயலை என்பாற செய்து இவ்வூரிலேயே உளளானோ எனத் தலைவி பிரிவால் கலங்கி ஞாயிறறை நோக்கி வினவினாள் (கலி. 147.35-39).

2. கூற்றுவன. பல்லுயிரும் வருந்தும் ஊழிமுடிவில் பசுங்கட் கடவுளாகிய உருத்திரன் வருததததைச செய்த ஏற்றெருமையின - ஏறாகிய எருமையை ஏறுகினற கூறறுவனின - நெஞ்சைப பிளந்து அவன் குடரைக கூளிககிட்டு அதன வயிறறை நிறைவித தான (கலி. 101:24-26). எருமையின பெரிய ஆணை யையும இகழும் ஆற்றலையுடைய முருகன திரு வுள்ளம் வேறுபடுதறகு முனனரே தலைவி சென்று மணியடித்து முருகனை இறைஞ்சி, தலைவன் பொய்ச்சூள செய்ததால அவனுககு வரும துன பத்தை ஆற்றுவாள் எனத் தலைவியின கற்பு நிலையைத் தோழி தலைவனுக்கு உணர்த்தினாள் (பரி. 8:86-89).

3. குறுநில மன்னன். நுண்பூணணிந்த எருமையென் பானுககுரியது குடநாடு (அகம. 115.5). வடுகர் பெரு மகனாகிய பேரிசை வாய்ந்த எருமை யென்பான கோவலர்தம் தொழுவததுளள கன்றுடைய பெரிய ஆநிரையைக் கவர்நது தன் மனறத்தே நிறைத் தான். அவனாட்டைச் சார்ந்தது அயிரியாறு (அகம். 253.16-20).

**எருமையூரன் – குறுநில மன்னன்.** நெடுஞ்செழியன் ஆலங்கானததில் சேரலன், செம்பியன், திதியன், எழினி, நாரால் அரிக்கப்பட்ட நறவினைப் பருகும் எருமையூரன, இருஙகோவேணமான, பொருநன் என்னும் எழுவா நலவலம் அடங்க ஒருபகலில முரசமொடு வெணகொற்றக் குடையையும அகப் படுத்தித் தன் புகழ் பரவ அவரைக் கொன்று கள வேள்வி செய்தபோது வெற்றிவீரர் பெரிதும் ஆர்ப்பரித்தனர் (அகம். 36:13-23).

**எருமை வெளியனார் - புலவர்.** இக்காலத்திய மைசூரும் மைசூர் நாடுமாகிய பண்டைய 'எருமை நாட்டு வெளியம்' என்ற ஊரினராகலின் இவர் எருமை வெளியனார் எனப்பெயர் பெற்றார் (த.வ.க.பக்.330). இனி, எருமைவெளி என்பதையே ஊர்ப்பெயராக வும் குறிப்பர் (உ. வே. சா. - புறம். பாடினோர் வரலாறு). இவரால் பாடபபட்டனவாக அகப்பாடல ஒன்றும் புறப்பாடல் இரண்டும் உள்ளன. பாலைததிணை யிலமைநத அகப்பாடல அகநானூறு 73-ஆம் பாட லாகவும் தும்பைத் திணையிலமைந்த புறப்பாடல் புறநானூறு 273,303 – ஆம் பாடல்களாகவும் உள் ளன. இருளில் நோக்கும் காட்டுப்பூனையின கண் ணொளி கதிர்விட்டொளிரும் தலைவியின முத்து மாலைக்கும் பரணமீது இருந்து தினைப்புனங் காப்போனின் கையிலுள்ள கொள்ளிக் கட்டை யின் சுடர்ப்பொறி,வானத்துமின்னலுக்கும் உவமை களாக வரும் அகபபாடல் பகுதிகளால் இவர் தம் புலமை நலம் இனிது விளங்கும். புறப்பாடல் இரணடிலும் குதிரை மறம் என்னும் துறை இவரால் மிகச் சிறபபாகப் பாடப்பட்டுளளது.

**எருமை வெளியனார் மகனார் கடலனார் – புலவர்.** இவர் தந்தையார் எருமை வெளியனாரும் புலவராவார். எருமை நாட்டு வெளியம் என்ற ஊரினரெனவும் எருமை வெளி என்ற ஊரினரெனவும இருவகை யில கருதப்படுவர் (த. வ. க. பக. 330). இவர் பாடிய தாகவுள்ள ஒரேபாடல் (அகம. 72) குறிஞ்சித் திணை யில் தலைமகன் இரவுக்குறிக்கண சிறைப்புறததா னாகத் தலைமகள தோழிககுச் சொல்லியது என்ற துறையில் அமைந்துள்ளது. இருளைக் கிழிப்பது போல மின்னி மழைபொழிந்த நள்ளிரவில் புற்றத் தில மின்மினி மொய்பபது கொலலன இருமபைக் காயச்சியடிக்கும் போது சிதறும் பிதிர்போல உள்ள தென்றும் புற்றில் புற்றாஞ்சோற்றினைத் தோண் டும் பெருங்கைக் கரடி இருமபுவேலை செய்யும் கொல்லனபோல் உள்ளதென்றும் இவர் புனைந்து கூறும் உவமைகள் நயமானவை. கருக்கொணட பெணபுலியின பசியைப் போக்க யானையைக் கொனற ஆண்புலி, அவ்வியானையை இரவில் பாம்புமிழந்த மணியொளியில் இழுத்து வரும் என்று தலைவன் பொருள் தேடச் சென்ற சுர நெறி யின் கொடுமையை இவர் புலபபடுத்துவார்.

**எருவு -** எரு. மனையுறை குருவி முற்றத்தில் உலர வைத்த உணங்கலைத் தின்று மன்றத்திலுள்ள எரு வாகிய நுண்ணிய துகளிலே குடைந்து விளையாடி வீட்டின் இறப்பிலுள்ள சேக்கையில் தம் குஞ்சுக ளோடு மாலைப்பொழுதில் தங்கும்(குறு. 46:2-6). எரு காணக.

**எருவை** – 1. பருந்தினம். யானைக் கூட்டம் பொருத இடமகனற போர்க்களத்தில் விணணிற பறக்கும் எருவையை - பருநதினத்தை - தினனாமற் செல்ல முடியாதவாறு பசிய ஊன தடி தடுததது (புறம். 64: 3, 4). அறத்தைத தெளிய உணர்நத மாட்சிமைப் பட்ட அந்தணரது அவைககண வேதநெறியை நனகுணர்நதோர் முன்னின்று காட்ட, கற்புடை மகளிரொடு வட்ட வடிவினையுடைய பலபடையாக அமைக்கபபெற்ற மதிலாற சூழபபட்ட வேள்விச சாலையில எருவை விழுஙகுவதாகச செயயபபட்ட இடத்து யூபமாகிய நெடிய தூணை நாட்டி, வேத வேளவித் தொழில் முடிதத பயனை நன்கறிநத அறி வாளன் கரிகாற பெருவளததான (புறம். 224·4-10). போர்க்களததில் துணிபட்டுககிடந்த தொடியுடைத் தடக்கையை மேலே உயர்த்தித் தன் காலைச சுற்றிய வீரரின குடரை ஒருஙகு சோததுப் பேயமகள் அழுது கூததாடக் கழுகுகளோடு சிவநத செவியுடைய எருவைகளும் வட்டமிட்டன (புறம். 370:22-26). பேயொடு நரிக்கூட்டம் திரியும் அஞுசத்தகக போர்க் களததில நிணநதினனும் செஞுசெவி எருவையும் கூடியிருக்கும (புறம. 373.36-39). போரில பட்டுக் கிடந்த யானை, குதிரை, வீரரின் பிணஙகளை யுண் ணுதறகுப பொறிக்கபபட்டன போனற புள்ளி களையுடைய கழுததினையும் புல்லிய புறததையு முடைய எருவைப் பெடையைப் புணரும் சேவல் உசசிக கொண்டையை யுடைய புலலூறு எனனும் பறவையோடு வநதது (பதி. 36:6-10). நிணமிகக அமாக்களப்பரப்பில சிறகுகளை யுடைய எருவைக் கூட்டம குருதியார்ந்தது (பதி. 67:8,9). ஓமை மரத்தில முட்டையிட்டு அடைகாக்கும் பேடைககு உணவு தருதற்குச் சென்ற செஞ்செவி எருவை மலைப் பக்கத்து மரை யாவினை வலம்படத் தொலைச் சிப் புலிதின்று விடுத்த ஊனைக் கொள்ளை மாநதர் போலக் கவரும் (அகம். 3:2-10). பாலை நிலததே யாமரக்கிளையில ஊன் விருப்பத்தோடு தங்கியிருக்கும் பெடைமுகம் நோக்கி ஊனைப பதித்தாற் போனற அஞ்சததக்க சிவந்த செவியை யுடைய எருவைச சேவல வெயிலமிக்க வேனிற் காலததுச் சிறகு கரிந்து தீயுமாறு இரைகொணரப் பறநதது (அகம். 51:2-7). பாலையாகிய பாழ் நிலததே போர் செய்து விழுப்புணபட்டு வீழநத மறவர் உடம்பிலிருந்து குடரை இழுககும் செஞ் செவி எருவைக்குக் குடத்திலிருநது ஓலையை யெடுக்கும் ஆவண மாக்கள் உவமையாவர் (அகம். 77:6-11). அருஞ்சுரத்தில கலைமானைக் கொன்று புலவுப்புலி தினறு விடுத்த எஞ்சிய முடைநாற்றங் கொணட தசையிடத்துப பெருந்தலை எருவை யொடு பருநது வந்து தஙகித் தின்னும் (அகம். 97: 1-8). பாலை நிலத்தில் பன்றியைக் கொன்று ஆண் செநநாய் அதனை இழுதது வரக் கீழே படிந்த அதன குருதியை அருநதிய எருவையின சிவந்த செவி, போர்க்களத்தில் மறவரின விழுபபுண்ணை ஆராய இரவில் எடுத்துச் செல்லும் விளககுப்போல் தோனறியது (அகம. 111:10-14). ஆறலை கள்வர் அம்பினால வழிபபோக்கரைத் தொலைத்த அஞு சத்தகக காட்டு வழியில ஊன் விருமபிய செஞுசெவி எருவைச் சேவலகள தம் பெடைகளை அழைக்கும் (அகம். 161:2-7). குருதிநிறச் செவ்வாயினையும் பொறிதத போலும் வெணணிறக் கழுத்தினையும் ஊனை அணிநதது போலும செஞுசெவியினையும் உடைய எருவை யாமரததிலுள்ள தன குஞ்சுககு ஊட்டிய கொழுங்கண் ஊனதடி வழுக்கி வீழ அது கீழேயிருந்த தொலபசி மிகுந்த முதுநரிககு உண வாயிற்று (அகம். 193·4-10). மறவர் வழிபபோக்க ரைக் கொன்றுயர்த்திய அச்சநதரும் பதுககையின் மேல தஙகிக கூர்நுதிச் செவ்வாயினை யுடைய எருவைச சேவல் அதன் கீழுள்ள பிணததின் கண மணியைத் தோணடிஎடுத்துச சென்று தன பெடை யின் வாயில் இடும் (அகம. 215.10-15). பாலைநில வழியில் தன் இனததை நீஙகிய எருவை இரையை எறிந் தெடுததறகு மேலே பறநது வட்டமிட்டுக காலம் பார்க்கும் (அகம. 285·11,12). எருவையின பெரிய சிறகினை அமபில வைத்துக் கட்டுதல மரபு (அகம. 291·10-12). அஞுசததக்க காட்டுநெறியில சிறுகுடி மறவரின் ஏறுகோட்பறை முழக்கததைக கேட்டு எருவைசசேவல் தன் பெரிய சிறகை விரித்துப பறநது செலலும் (அகம். 297: 16-18). வெஞுசுர நெறி யில் மாயநது கிடந்த வம்பலருடைய பிணத்தின குருதியாடிய எருவைச சேவல தங்கியதால யாமரத் தின வெணணிறக் கொம்புகள் வம்ப வடுகரின பைந்தலையைச் சிதைத்துக் கொனற இளமபெருஞ் சென்னியின யானைக்கொம்புகள் போலச செநநிற மாயின (அகம. 375: 7-16). அஞ்சத் தக்க கவர்தத வழியில குருதி யாடிய புலவு நாறும் பெரிய சிறகினையுடைய எருவைச் சேவல் தன் சுற்றமாகிய கூட்டததுடன் பசிய ஊனை நிறையத் தின்றதைப் பிற பறவையினத்திற்கு அறிவிப்பன போல உயரப் பறந்து செவ்வானம போன்று விசும்பினை அழ குறுததும் (அகம. 381: 8-12). பாலை நிலக் கவர்த்த வழியில் வமபமாக்கள் வருதலை நோக்கிச் செங் கணை தொடுத்த சினந்த நோக்கினைக் கொண்ட ஆறலை கள்வா முழக்கும் தண்ணுமை ஒலி கேட்டு அஞ்சிய எருவைச் சேவல் தன் சுற்ற மிருக்குமிடம் செல்லும் (நற். 298: 1-5). குருதி போனற சிவந்த செவியையுடைய எருவை காட்டகத்துப் பதுக்கைக் குவியலுக் கிடையே கடுமுடை நாற்றததைப்

பார்க்கும் (ஐங். 335: 2-4).

2. **கொறுக்கச்சி** (கொறுககாந்தட்டை). சாரலிலுள்ள ஆழமான குளத்துக்குப பக்கத்துள்ள பாசி, நடந்து செலலுமபோது வழுக்கி வீழ்த்து மாதலின், பற்றுக்கோடாகச் சிறு மூங்கிற்கோலையும் எருவை-கொறுக்கசசி - மெனகோலையும் கொண்டு செல்மின் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் பெற்றனர் (மலை. 219-224). மலையருவி கொணர்ந்த புதிய கதிரையுடைய எருவையைக் கயத்தில் நீராடும் யானை கவளமாக உண்ணும் (குறு. 170: 2,3). பெரிய மலைபபககத்துள்ள சிறுகுடியில் எருவை வளர்ந்து நீண்டு செழித்திருந்தது (நற். 156: 7). மலைவழியில சந்தன மரத்தின நறுமணம் கமழும் முழையாகிய பிளப்பிடத்து எருவையின் நறும்பூ நீண்டிருந்தது (நற். 261: 8-10). மூஙகில் நெருங்கிய மலையிடத்தில் எருவை நீண்டு வளர்ந்திருந்தது (நற். 294: 3,4). கரையிலிருநது சாய்ந்து வளைந்த எருவையை முட்டுகினற பலநிற மலர்கள் நிறைநத சுனை இந்திர வில்லை வளைத்த வானம் போன்றிருந்தது (பரி. 18: 48-50). சுனையருகில கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தளும் எருவையது நறுந்தோட்டை யுடைய பூவும் எரியிணர் வேங்கையும் இருந்தன (பரி. 19: 76,77).

3. **பைஞ்சாய்க் கோரை**. தலைவி ஆயத்தாரோடு விளையாடப் பறித்துக் குவித்த மலர்களுள் எருவையும்-பைஞ்சாய்க்கோரையும்-ஒன்று (குறி. 68). பன்றி முகத்தால் உழுதமையால் எருவை விளைந்த கரமபு நிலம் நெலவிளைநத வயலைப் போலக் கிளர்ந்து தோனறும் (ஐங. 269: 1,2).

**எல் - 1. விளக்கம்**. புன்னைப் பூமாலை சூடிய ஆடவர் எல்வளை-விளக்கம் பொருநதிய வளை-அணிந்த மகளிர்க்குக் கூத்தாட்டினுள் தலைக்கை கொடுப்பர் (புறம். 24:7-9). நெற்கதிர்களைக் கவர வரும் பறவைகளை ஓட்டுவதற்காக எல்வளை மகளிர் நீர்த்துறைக் கண் நிற்கும் மருத மரத்தினமேல் ஏறித் தெளிந்த குரலாற் பாடுவர் (பதி.27:6,7). தலைவியும் தோழியும் மதங்கொண்ட யானை யொன்று தமது மேல் வெகுண்டு வந்த நிலையில், அதற்கஞ்சிப் பிழைக்குமிடம் வேறு அறியாராய் நாணத்தை மறந்து எல்வளை ஒலிக்கத் தலைவனிடம் விரைந்து சென்றனர் (குறி. 165-168). இரவுக் குறிக்கண் தலைவன் வரவை எதிர்பார்த்துச் சுடர் விட்டு விளங்கும் எல்வளை நெகிழக் காத்திருக்கும் தலைவியிடம் பொருந்திய உள்ளம் பழுதின்றாகத் தலைவன் வந்தான் (அகம். 68:10-14). தலைவியின் எல்வளை நெகிழ்ந்த நிலையினைப் பார்த்து அது தலைவனின மார்பினை உறுவதாலே தணிவதான காம நோயென அறியாத அன்னை கையற்ற நெஞ்சினளாய்க் கட்டுவிச்சியைக் காரணம் வினவினாள் (அகம். 98:4-8). உமணரின் அன்புடைய இளைய மகளாய தலைவி சிலவாகிய திரண்ட எல்வளைகள் ஒலிக்கக் கைவீசி நடந்து நெல்லுக்கு நேர் கல்லுப்பு என விலை கூறிச் சென்றாள் (அகம. 140: 5-8). பொருளீட்டும் வினையை விரும்பிப் பிரியும் நெஞ்சினனான தலைவன் தலைவி அமைதியுறுமாறு வற்புறுத்தி அவளது கையினை எடுத்து நல்ல மாட்சிமையுற்ற எல்வளைகளைத் திருத்திச் சென்றான் (அகம். 173:4-7). பெருமலையினைக் கடந்து பொருள் தேடச் சென்ற தலைவர், அணிகளையும் அழகினையும் உடைய நம்தோள் எல்வளை நெகிழ மெலிந்து அழகு கெடுமாறு நாம் செயலற்றிருககத் தாம் இரும்பினா லியன்ற உயிருடையார் போல பிரிந்திருக்கும் வன்மையுடையோ ரானார் எனப் பிரிவாற்றாத தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம. 185:1-5, 13). தழுமபன் என்பானின ஊணூர்க்கு அப்பால் உள்ளதாய மருங்கூர்ப் பட்டினததுள்ள எல்லுமிழ் கடைத்தெரு மிக்க ஓசையை உடையது (அகம். 227:17, 18, 20-22). சேய்மைக் கண்ணும் சென்று விளக்கம் தரும் எல்வளை கழன்ற முன் கையும் பெரிய தோளும் நல்லெழில் அழியாமல் தொல்லெழில் பெறுமாறு யாம் சென்று தலைவனைக் கூடுதல தக்கது எனத் தலைவியிடம் தோழி கூறினாள (அகம். 242:13-17). வேனிற்காலத்துப் பாலை வழியே தலைவனுடன் போகும் தலைவி, அழகு பொருநத நுண்ணிய திரண்ட எலவளை ஒலிக்கும் முன் கையினை யுடைய மூங்கில் போலும் தோள்களை விளங்க வீசி நடக்கும் வன்மையுடையளானாள் (அகம். 257:1, 2, 9-12). நம்மைப் பிரிந்து செனற தலைவர் பழியுடையோ ராகார்; நயந்து வநதோரை விடாமற் பற்றிக் கொள்ளுதலை அறியாத, எல்வளை நெகிழவிட்ட நம் தோள்களே தவறுடையவை, எனப் பிரிவிடை ஆற்றாளாய தலைவி தோழிக்குரைத்தாள் (அகம். 267:13-17). வளப்பம் மிக்க ஊரனாகிய தலைவன பரத்தைமையுடையனா யிருந்தும் அவனை எல்லினன் (விளக்கமுடையவன்) என்று ஏற்றுக் கொண்டனள் தலைவி (குறு. 45:3,4). 'தலைவர் பொருளைத் தேடி வருவதற்குக் காட்டைக் கடந்து போனார்; யான் தொகுதியான எல்வளைகள் நெகிழ ஏங்கிப் படுக்கையின்கண் துன்புறுகின்றேன்' எனத் தலைவி வருந்திக் கூறினாள் (குறு. 216:1-4). சூரியன் மறைய எல்லறு (விளக்கமற்ற) பொழுதில் முல்லை மலரும் காலத்தை மாலையென்பர் அறிவு மயங்கியோர் (குறு. 234:1-3). மூங்கிலைப் போனற தோள்களில் எல்வளை யணிந்த

மகளிர் துணங்கைக் கூத்தாடுவர் (குறு. 364:5,6). தன் எல்வளை நெகிழச் செய்த தலைவனைக் குறித்துத் தலைவி துன்புறுதலின் அவள் நெஞ்சம் அவ்வளைவிட்டு அவன்பால் சென்றது (நற். 56:4,5). கைவல் வினைஞன் வாளரத்தால் அராவிய வளைந்த அழகிய எல்வளையும் அகன்ற தொடியும் அணிந்த முன்கையினை யுடைய தலைவியின் நோக்கு தலைவனைத் தோழியிடம் இரந்து பின்னிற்க ஏவியது (நற். 77:8-12). பரத்தையின் கூந்தலைப் பற்றி யீர்த்து, அவள் கையிலுள்ள வெள்ளிய கோற்றொழிலமைந்த எல்வளையைத் தலைவன் கழற்றிக் கொண்டான் (நற். 100:3-5). தலைவனோடு தலைவி கொண்ட களவுக் காதலில் இடையிடையே பிரிவின் உண்மையைத் தானும் சிறிது உணர்வான் போல அவள் தந்தை, தன்னிடத்துத் திருந்திய கோற்றொழில் அமைந்த எல்வளை வேண்டிய அவளுக்குத் தலைவனின் பிரிவின் மெலிவிலும் கழலாத சிறிய வளையைச் செய்தணிவித்தான் (நற். 136:1,4-9). 'பாணனே, தன் மாணலத்தோடு கையில் உள்ள அழகிய எல்வளையும் இழந்த தலைவியின் பிறைபோலும் அழகிய நுதலிற் பரவிய பசலையை உன மெல்லிய பணிமொழி போக்காது' எனத் தலைவனின் தூதாக வந்த பாணனிடம் தோழி கூறினாள் (நற். 167:5-7,9-11). 'வாடையே, என் பருத்த தோளிலேற்றிய எல்வளையை நெகிழச் செய்த காதலா பொருள்வயிற் பிரிந்தாராகத் தனித்திருந்து துன்புறும் என்னைநீ வருத்தாதே' எனப் பிரிவிடை யாற்றாளாய தலைவி அதனை இரங்கி வேண்டினாள் (நற். 193:6-9). தனது மெய்யினை மெலிவித்து எல்வளையை நெகிழ்த்த தலைவனின குன்றத்துக் கொடுமுடிகளில் தவழ்ந்து பாறைகளில் அளாவிய காற்று, பசலை பாய்ந்த தன் ஆகத்தைத் தீண்டினாலன்றித் தான் பிழைக்க மாட்டாத ஆற்றாமைத் துயரினைச் சிறைப் புறமாக நிற்கும் தலைவன் கேட்குமாறு தலைவி தோழியிடம் கூறினாள் (நற். 236:7-10). 'நின் முன் கையி லணிந்த நெடிய கோற்றொழி லமைந்த எல்வளை உடையும்படி அசசேர்ப்பனை அழைத்து அணைத்துக் கொள்வாயாக' எனத் தலைவியை நோக்கி அவளூர் அலரெடுத்தது (நற். 239:9-11). மருங்கூர்ப் பட்டினம் போன்ற தலைவியின் நெருக்கமான அழகிய எல்வளை நெகிழ்ந்தமை கணட அன்னை அவளை இற்செறித்தாள் (நற். 258:2,10,11). தலைவியை மனைக்குச் செலுத்தி, விட்டுத் தமர் தினைக் கதிர்களைக் கொய்யத் தொடங்கியதனால் இனிய சொல்லும் எல்வளையு முடைய குறுமகளைத் தினைப்புனத்தில தலைவன் இனிக்காண இயலாது (நற். 306:3-5,9-11). 'என் கோற்றொழி லமைந்த அழகிய எல்வளையை நெகிழ்த்த நும்மை யான் புல்லவும் செய்யேன்; அன்பிலலாத நும்மிடத்துப் புலத்தலும் இல்லேன்' எனப் பரத்தையிற் பிரிநது மீண்டுவந்த தலைவனைத் தலைவி மறுத்து நொந்து கூறினாள் (நற் 340:1,9,10). தலைவனுக்குக் குறைநேர்ந்து பின் தன்னிடம் வந்து குறை நயந்து நிற்கும் தோழியின் குறிப்புக்களை எல்வளை யணிந்த தலைவி ஏற்கவில்லை (நற். 342 4-7). சிலவாகிய விளங்கிய எல்வளை நெகிழுமாறு தலைவி தலைவனோடு கடற்கரையில் அலவனைப் பிடித்து ஆட்டி விளையாடினாள் (நற். 363:8-10). என முன்கையிலணிநதிருந்த அழகிய எல்வளை நெகிழ்ந்து வீழ்நதது தலைவரை யான் நினைத்தத பயன எனத் தோழியிடம் கூறினாள் தலைவி (ஐங 20 4,5). நாளதோறும் இலலத்திறகு வேண்டிய பொருளகளைத் திரட்டிக் கொணடு வருவதற்காகக் காலநதாழ்த்த தலைவனுக்குப் புறததொழுக்கம் உளதாயிற்று என்று எணணி 'எலவளை நெகிழுமாறு நீ ஏன மெலிந்து வருந்துகிறாய்' எனத் தலைவியைத் தோழி ஆற்றுவிததாள் (ஐங். 27). 'பாணனே, துறையினையுடைய கொணகன் பிரிந்தானாக, யான் மெலிந்ததனால் என் முன்கையிற் பொருந்திய எலவளை கழன்று வீழ்ந்த நிலையினை அவனிடம் உரைத்தறகுரிய நீ காணபாயாக' என்றாள் தலைவி (ஐங். 140). 'இப் பொழுது புறததொழுககமுடைய தலைவன் முனபு என்னைத் தெளிவித்துச் சூளுற்ற சொல இனனும் என் முன்கையிற் பொருநதிய எலவளைகளை நெகிழாமற் காத்து நிறுத்தியுள்ளது' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (ஐங். 165), 'சேர்ப்பனே, சங்கினை யறுத்துச் செய்யப்பட்ட எலவளை யணிந்த தலைவியை நீ விரும்புவாயானால முறைப்படி மணநது கொளவாயாக' எனக் குறை வேணடிய தலைவனிடம் தோழி கூறினாள் (ஐங். 196). 'இலங்கி நெகிழும் எல்வளையினையுடையாய், நின மெலிந்த நெற்றி பசலை நீங்கி அழகுறுமாறு நின்னை உடன்போக்கிற்கு அழைத்துச செலலத தேரினை யுடைய கொண்கன் வந்தனன்' எனத் தலைவியிடம் தோழி கூறினாள் (ஐங். 200:1,2). குனறக்குறவன் கடவுளைப் பேணி இரந்து வேண்டிப் பெற்ற எல்வளைக் குறுமகள் தலைவி (ஐங். 257:1,2). தலைவியின் எல்வளை நெகிழுமாறு தலைவன் அவளைப் பிரிநதான் (ஐங். 471:1-3). தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதித் தேர்ச் சக்கரததின் வாயைத் துகள் நீங்கத் துடைக்கும் போதே தலைவியின அழகினை யுடைய எல்வளை காந்தட்பூ உதிர்வதுபோல முன் கையினின்றும கழன்றது (கலி. 7:13-16). 'எல்வளைகளையுடையாய், நீ என்னோடு அருஞ்சுரத்தில் வரு

யையாயின நின் மெல்லிய அடிகள் அங்குள்ள கற்களை மிதித்துக் கறுக்குமல்லவோ' எனத் தலைவன் தனனோடு வருகிறேன என்ற தலைவியிடம மறுத்துக் கூறினான (கலி. 13:10-13). தன்னெதிர் கூறுவனவற்றையே தானும் கூறும் நின பக்கமலை போல நீ கூறுவனவற்றையே கூறுபவள் இலங்குகின்ற அழகிய எலவளை அணிந்த தலைவி என அவள பணைபைத் தலைவனிடம தோழிகூறினாள் (கலி. 46:25-27). கடுங்காவலை உடைய அன்னையின் முன்னிலையிலேயே தலைவியின எல்வளைகள் கழன்று விழுந்து அவளதுகாதல மெலிவைக்காட்டிக் கொடுக்கின்றன (கலி. 48:10,11). நாள்தோறும் புதுப்புது மகளிரை மணந்து தலைவன் எல (விளக்கம்) பெறறான் எனத் தலைவி புலந்து கூறுதல் (கலி. 75:14). 'எல்லிழாய்' எனததோழியைத் தலைவி விளித்தல் (கலி.81:16). இலங்குகின்ற அழகிய எலவளையினையுடைய தலைவியின நலம் வளர முதலில் நல்கிய தலைவன் பினனர் அவள் மேனி கெட அழுமாறு அவளுக்கு அருளாமற் கைவிட்டான் (கலி. 125:12-14). பிரிவு நீட்டித்த தலைவனோடு பகலும் இரவும் கூட்டமின்றிக் கழிந்தன என்றெணணி அழுது, நொந்துயிர்த்த தலைவி எல் (விளக்கத்தையுடைய) இராக்காலத்தே அவன் மார்பைத் தழுவி நலம் பெற்றாள் (கலி. 142.60-66). எல்லிழாய (விளக்கமுடைய அணிகளணிந்தவளே) எனத் தலைவன தலைவியை விளித்துப பிரியேன் என்று கூறிப் பின் பிரிந்தான் (கலி. 146:11).

**2. இரவு.** தானை மறவனின் தலைவனான வேந்தன, பகை வேந்தன் ஊர்ந்து வரும் யானையை எறிவதற்கன்றிப பிற வீரரை எறிவதற்கு வேலை ஏந்தாத கருத்தினனாயப் பாசறையிலிருந்து எல்லிடை-இரவிடை-தன் நெடுமனைக்குச் சென்றான் (புறம். 301:14-16). படல் கட்டிய முற்றத்தில் சிறுதினையைத் தெளித்து அவற்றை உணணவரும் புறாக்களையும் காடைகளையும் பிடிப்பதற்கு இயலாதவாறு பொழுது எல்லின்று (இரவாயிற்று) (புறம். 319:5-7). முல்லை நிலததே கடல்போல் ஒலிக்கும் ஆட்டு மந்தையிடத்து எல்லிடைச்செல்வீராயின, அங்குள்ள இடையரால் பாலும் பாற்சோறும் பெறுவீர் எனக் கூத்தர் ஆற்றுப்படுத்தப் படுகின்றனர் (மலை. 415-417). 'சநதனம் பூசிய மாலை பூண்ட மார்பனாய் நீ எல்லினில வந்து நின் மார்பு வடுக்கொளத் தலைவியை முயங்கிப் போதல் எனக்கும் இனிதேயாயினும் அதனால் எம் ஆரவாரமிக்க ஊரின்கண் அம்பல எழுந்தது' எனத் தோழி தலைவனிடம் அலரறிவுறுத்தி வரைவு கடாவினாள் (அகம். 100:1-4,15-17). தொலை நாட்டிற்குச் சென்று அரும் பொருளீட்டிவரத் துணிந்த நெஞ்சோடு பாலை நிலத்திற் போன தலைவனுக்கு மலை சேர்ந்த சில குடிப பாக்கததினர் எல் விருந்து செயதனர் (அகம். 187:3,4,12,13). கடலாடிக் களைத்த மகளிரோடு மைந்தர் உப்பு மேட்டிலேறிநின்று எல்படக்கரைக்கு மீணடு வரும் படகுகளை எண்ணுவர் (அகம. 190:1-3). 'நீர் எம்சேரிக்கு வந்து பகற்பொழுதினை எம்முடனே கழிதது எலலுற நுமது நல்ல தேரினைப் பூட்டிச் செலலலாம், இது நுமக்கு இசைவதுவோ' எனத் தலைவனிடததுத் தோழி குறை நயந்து கேட்டாள் (அகம. 200 6-14). 'பொழுது எலலினறு (இரவாயிற்று); அனறியும், தலைவி நம் இன்னுயிர்த் துணைவரான தலைவர் வருவரோ எனச் சிலவாகிய திரணட எலவளைகளைச் செறித்தவாறே பலமுறையும் மனையின் புறத்தே வந்து நாம் வரும வழியை நோக்கி வருந்தியிருப்பாள். ஆகலின் பாகனே, தேரை விரைநது செலுத்துக' என வினைமுடித்து மீளும் தலைவன் தன பாகனுக்குக் கூறினான (அகம. 224:1,15-18). புலிபோல முழங்கும் செங்கண ஆடவர் தீக்கொள்ளியோடும் அமபொடும் எலலின்கண் மாற்றார் ஊர்களைப் போரினில் தொலைத்துப் பல ஆனினங்களைக் கவர்ந்தனர் (அகம. 239:3-5) எல் வந்தக்கால் இவள் எந்நிலை யடைவாளோ எனத் தலைவனாற் கூடப் பெறாத தலைவியினது நிலைமைக்குத் தோழி இரங்கிக் கூறினாள் (அகம். 260:10,11). புலிகளையுடைய கொடிய சுரநெறியில் கூரிய பற்களையுடைய மெலலியல மடநதையாகிய தலைவியை முன்னாக விடுத்து எல்லிடைச் செல்லும் இவ் விளையோன உள்ளம் இடியினுங் கொடியது என உடன்போககினைக கணடோர் தமக்குள கூறினர் (நற். 2:5-10). எலலினகண் ஒலிககின்ற குளிர்ந்த கடலில சுடர் விளக்கங்களைக் கொணடு தலைவியின் சுற்றத்தார் மீன வேட்டைக்குச் சென்றனர் (நற். 67:8,9). தலைவன் பொருள்வயிற் பிரிநதபின் தலைவி பகற்காலஞ் சென்ற மாலைப் பொழுதோடு எல் வந்துசேரப் பனி விழும் யாமத்தில் கண்கள் நீர் பொழிய அழுதாள் (நற். 241:9-12). தலைவனோடு அருஞ்சுரங்கடந்து உடன்போகுந் தலைவி எல்லின்கண் தங்கிய சீறூர்ப் பெண்டிர்க்குப் பெரிதும் இரக்கத்தை ஏற்படுத்தினாள் (ஐங். 382:2-5). 'என்னை வருத்தும் பகற்பொழுது போய் இரவுப்பொழுதாகட்டும் என்று விரும்பி அப்பகலை வெறுப்பேன்; அதுபோய் எல்லிய காலை (இரவான காலத்து) அவ்விரவையும் வெறுப்பேன், இந்நிலையில் யானுற்ற அல்லலைக் களைவாரில்லை' எனத் தலைவன் பிரிந்து நீட்டிக்கும் நிலையில் தலைவி புலம்புகிறாள் (கலி. 144:52-54).

**3. இருள்.** தோழியரோடு தலைவி கடலில் விளை

யாடிக் கானலில் சிறுவீடு கட்டிச் சிறுசோறிட்டு ஓய்நதிருக்கையில அங்குவநத தலைவன், 'நல்லீரே, பகலும எல்லினறு - இருணடது - யானும் தளர்ச்சி யுடையேன என்று கூறித் தனனை விருந்தாக ஏற்க வேண்டினான் (அகம். 110:5-14). மழை பெய்தலை மறந்த மூங்கில வற்றிய நெறியில் வணிகர் திரளை அலைததிடும மறவரின் தலைவர் எல்வரக் கள்ளிற் குரிய விலைப் பொருள பெறாராய் யானையின் கொம்பை எடுதது வருவதற்குப புன்றலைப் புதல் வரை ஏவுவர் (அகம. 245.5-12). இம்மாலைப் போதில் நீ எம் சிறுகுடிக்கு வரின எமர் விரைந்து நின்னை எதிர்கொணடு அழைத்து, 'எலலின்று (பொழுது இருணடது) அதனால் இப்பொழுது செல் லற்க' எனறு கூறுவர் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (அகம. 300:13-19). 'காதலியின் நகை முகம் பெறுதற்கு எல இடைபபடா முன்னரே மரங்கள் அடர்நத காட்டு நெறியில் விரைந்து தேரைச் செலுததுக' என வினைமுடித்து மீளும தலைவன் தோபபாகற்குச சொனனான் (அகம. 344: 6-13). எலலிறறு (இருள வநதது) என்று எண்ணாத வனாயத தலைவன வேலினைக் கைககொண்டு கொடிய மலைவழி கடந்து தலைவியைக் காண இரவுக்குறி வநதனன் (அகம. 362:1-8). கடற் கரையில வணடல விளையாட்டினை நம்மோ டாடிய தோழியராகிய இளமகளிர் ஆட்டம் முடித்துச் செலகின்றனர்; பகலும் எலலின்று, அதனால நாமும் செலவோம் எனத தலைவியைத் தோழி அழைத்தாள் (அகம. 370:1,2). பொழுதும் எலலின்று; மழையும் ஒழியாமற் பெயதது; அன்னை யின் காவலும் மிகுந்து இருந்தது. எனவே, அந்த இரவில் தனனைக் காணறகு வந்த தலைவனைச் சநதிககத் தலைவியால இயல வில்லை (குறு. 161). 'காட்டில நீ கடமாவை வேட்டை யாடியதால் பகலும் எலலினறு (இருணடது); நாயகளும் இளைத்தன; ஆகலின ஐயனே, நீ இப்பொழுது செல்லாமல இதோ தோனறுகின்ற எம்மூரில இரவு தங்கிச் செலக,' எனத் தலைவனைத் தோழி வேண்டினாள் (குறு. 179:1-3). 'பகலும எலலின்று; ஆறலை கள்வரின் தண்ணுமைக் குரலின் ஒலியும் கேட்கும்; இவ்விரவு போக்கினைத தவிர்ந்து நாளை செல்வாயாக' எனப புணர்ந்துடன் போகும் தலைவனைக் கண்டோர் விலககினர் (குறு. 390). பகலிலே மகளிர் புறங்கடையில உகுத்த பலிச் சோற்றை யுணடு எலபட மீன் கடையில் நிழலிற் குவித்த இறாமீனைக் கவர்ந்து தினற காககை தோணியின் பாய்மரததிற் சென்று தங்கும் (நற். 258:5-10). பொழுதும் எலலினறு; அதோ எம் சிறு நல்லூர் தோன்றுகிறது; சிறிதே விரைந்து வருவா யாக என்று உடன்போக்கின்கண்ணே தலைவன் தலைவியிடம் கூறினான் (நற். 264:6-9). முல்லைத் தலைவன் ஆற்றிடைத் தலைவியொடு உரையாடிப் பின் 'பொழுது எலலிறறு' எனக் கூறி அவளைக் கூட்டத்திற்கு இசைவித்தான் (கலி. 117:13).

4. பகல். வில்லாகிய ஏரால் உழுதுணபவராகிய மறவர் எல் - பகல் - முழுதும், வேட்டையாடித திரியும் கலவியில்லாத சுஎட்சியை யுடையவா (புறம. 170:3,4). தொண்டைமான இளநதிரையன நாட்டில் உமணர் செல்லும நெடுவழி எலலிடை வழிப்போ வோர்க்கு ஆறலை கள்வரின் அச்சமினறிப பாது காவல உடையதா யிருக்கும் (பெரு. 65,66). 'தினைப புனத்தில் படிகின்ற பறவைகளை ஓட்டி எலபட வருவீராக' எனச் செவிலி தலைவியையும தோழி யையும விடுத்தாள் (குறி. 38,39). தோழியரோடு தலைவி கடலில விளையாடிக கானலில சிறுவீடு கட்டிச் சிறுசோறிட்டு ஓய்நதிருககையில அங்கு வநத தலைவன, 'நலலீரே, எலலும எலலினறு (இருணடது); யானும் தளர்சசியுடையேன' எனறு கூறித தனனை விருந்தாக ஏறக வேணடினான (அகம. 110.5-14). பரததையரொடு தலைவன புதுபபுன லாடினான எனற செயதி, எவ்வியெனபான தன பகைவரை யழித்து உறததூரிடததே படையாளர்க களிதத களளுடன கூடிய சோறறினால எலலில எழுநத ஆரவாரம் போல அலரயிறறு (அகம. 266.1-15). கடற்கரையில வணடல விளையாட்டினை நம் மோடு ஆடிய தோழியராகிய இளையமகளிர் ஆட்டம் முடித்துச செல்கினறனர்; எலலும இருணடது; அதனால நாமும விரைநது செலவோம் எனத தலைவியைத் தோழி அழைத்தாள (அகம். 370:1,2). காட்டில நீ கடமாவை வேட்டையாடிய தால எலலும கழிநது மிக இருண்டது; நாயகளும் இளைததன; ஆதலினால ஐயனே நீ இபபொழுது செல்லாமல் இதோ தோனறுகினற எமமூரில் இரவு தங்கிச் செல்க எனத் தலைவனைத தோழி வேண டினாள் (குறு. 179.1-3). எலலும் கழிநது இருண் டது; ஆறலை கள்வரின் தணணுமைக குரலின ஒலியும் கேட்கும்; இவ்விரவு போக்கினைத் தவிர நது நாளை செல்வாயாக, எனப புணர்நதுடன போகும தலைவனைக் கணடோர் விலக்கினர் (குறு. 390). 'மடநதையே, நாம் நம்மூர்க்கு எல்விருந்தாகிப் புகு வோம் எனத் தலைவியை உடன்கூட்டிச் செலலும் தலைமகன் கூறினான் (ஐங. 396.3-5). எல் உறு வதற்குக் கார்ணமான ஞாயிறு தன் கதிர்களை மடக்கி மறைவதனால் பகலுககு எல்லையாகிய மாலை வந்தது (கலி. 129:3-7).

5. ஒளி. 'எலலுறும்-ஒளியையுடைய முல்லை மலர்கள்

மணம் வீசுதற் கிடமாகிய கூந்தலை யுடைய இவள் நமக்கு எத்தகைய உறவினளோ' என்று ஊடல் தணியாத தலைவியை உறவில்லாதவள் போலக் கூறித் தலைவன் நொந்தான் (குறு. 19:4,5). தலைவனின் குன்றத்தின்கண் எல்லுமிழ்ந்து வல் லிடி முழங்கும் இரவின் நடுயாமத்தில் மின்னிச் செல்லும் முகில் மழை பொழியும் (நற். 68:7-10). ஞாயிற்று மண்டிலத்தின் எல் விசும்பிற் படர விளங்கிய கதிர்கள் மழுக்க மடைந்து இருள்வத னாலே தலைவியை எய்தப்பெறாத தலைவனுக்குத் தனிமைத் துன்பம் தோன்றியது (நற். 152:3,4).

6. ஞாயிறு. எல் - ஞாயிறு - தோன்றிய காலத்தில் அழகிய சிறகுகளையுடைய வண்டுக்கூட்டம் சுனைப் பூக்களிற்சென்று ஆரவாரிக்கும் திருப்பரங்குன்றத் தில் முருகன் விரும்பி யுறைவான் (முரு. 74-77). 'மடந்தையே, யான் நின்னோடிருந்து பறவைகளை யோட்டுதற்கு நுந்தையின் இடமகன்ற தினைப் புனத்திற்கு எற்பட வரலாமா, நாமிருவரும் புணர்ந்து விளையாடுதற்குப் பண்டு நாம் எதிர்ப் பட்டுப் புணர்ந்த மலைச்சாரலுக்கு வரலாமா எனத் தலைவியைத் தலைவன் குறியிடம் கேட் டான் (நற். 204:1-4).

7. பெருமை. கற்களையுடைய கவர்த்த நெறியிற் போயின் அங்குள்ள சீறூர்களின் பக்கத்தில் இத்தி மரத்தின் புள்ளிபட்ட நிழலில் எல்வளி-பெருங் காற்று-அலைக்கும் (அகம். 77:12-14).

8. அழகு. தலைவியின் கூந்தலையும் தேமலையும் முலையையும் நோக்கி, 'நீ பெரிதும் எல்லினை- அழகுடையை - எனப் பலமுறையும் கூறி அவள் தோளை அடங்கத் தழுவிய அன்னை நீள நினைந்து அவளைப் புறம் போகாமல் அரிய காவலில் வைத்தாள் (அகம். 150:1-6).

9. மாலைக்காலம். 'அங்கே ஒலிப்பது எல்லில்- மாலைக் காலத்தில் - ஊரை வந்தடையும் பசுக் களின் கழுத்து மணி ஓசையோ, வினைமுடித்து மீளும் தலைவனின் தேர்மணி ஓசையோ, காண் போம் வா' எனத் தலைவன் வரும் பருவத்தில் தோழி தலைவியை அழைத்தாள் (குறு. 275).

**எல்லரி** - சல்லி என்னும் இசைக்கருவி. காட்டகத்து வேட்டை மேற்கொண்டிருந்த வல்விலோரியைப் பாணன் தனது கூட்டத்துடன் பண்பாடி, பெரு வங்கியம் இசைத்து, எல்லரி - சல்லி - வாசித்துப், பாராட்டினான் (புறம். 152:13-16). கூத்தர் தம் முடன் எடுத்துச் செல்லும் இசைக்கருவிகளுள் விளக் கமுடைய தாளத்தைக் கொண்டு ஒலிக்கும் வலிய வாயையுடைய எல்லரியும் ஒன்றாகும் (மலை. 10).

**எல்லி** - 1. இரவு. பசலைக் கொடி போன்று வாடிய இடையினையும் தளர்ந்த நடையினையும் உடைய பார்ப்பான் எல்லி - இரவு - வந்து அரசரிடைச் சொல்லிய சொற்கள் சிலவாகும். அதன் பயனா கப் போர் நின்றது (புறம். 305). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மாதேவி பகலெல்லாம் ஆற் றியிருந்து எல்லியில் சிறிது நேரம் துயின்றாலும் அந்நேரத்தும் கனவு கண்டு வருந்தினாள் (பதி. 19: 11-13). பிரிவாற்றாமையால் அழும் தலைவி, மனை யைச் சார்ந்துள்ள பனைமரத்தில் வாழும் மடிந்த வாயினையுடைய அன்றில் தன் துணை எல்லியில் பிரியினும் துயிலாதன வாதலைக் காட்டி அதன் காரணமாகக் கண்ணீர் வந்ததென மறைத்துக் கூறினாள் என்பது தோழி கூற்று (அகம். 50:10-14). பல கறவைகளையும் ஒருங்கே தந்து அடைத்த, விரைநத நடையினையுடைய வெட்சி மறவர் கல் லென் சீறூரில எல்லித் தங்கினர் (அகம். 63:11-13). மர நிழலாகிய பந்தரையும் புல்லால் வேயப்பெற்ற குடில்களையுமுடைய வறுமைப்பட்ட சிறிய ஊரின் கண எல்லித் தங்கி விடியலிற் போகி மிகவும் துன் புற்றாய்; இனி இன்புறுக என வினைமுற்றி மீளுந் தலைமகன் இடைச்சுரத்துத் தன் நெஞ்சிற் குக் கூறினான் (அகம. 87:3-11). செந்நாய், பன்றி யைக் கொன்று ஈர்த்துச் சென்றமையால் ஒழுகிக் கிடக்கும் குருதியைப் பருகிய பருந்தின் செவிகள் இரண்டும் போர்க்களப் பரப்பில் எல்லியில் வீரர் களின் மார்பில் பட்ட புண்களை ஆராயக் கைக் கொண்ட விளக்குகளைப் போன்று தோன்றும் (அகம். 111:10-14). 'தலைவனே, தலைவி கலங்கி அழுதலாலும் உப்பங்கழியி லுள்ள சுறா வெறிந் தமையால உண்டான புண்பட்ட காலுடன் உப் பங்கழியிற் செல்லக் கோவேறு கழுதைகள் தளர்த லாலும் நீ எல்லியிற் செல்லாது கழி சூழ்ந்த எமது நாட்டில் தங்கிச் சென்றால் குறையுண்டோ' எனத் தலைமகனிடம் தோழி வினவினாள் (அகம். 120: 10-13). உயர்ந்த மலைச்சாரலில் உள்ள கோங் கம்பூ எல்லியில் வானில் விளங்கும் விண்மீன்களு டன் சேர்ந்து விளங்கும். காற்றால் அவை உதிரும் போது பரணின் மீதுள்ள கானவர் கையினின்றும் விடுத்த பந்தம்போன்று தோன்றும் (அகம்.153:13-18). பதுக்கையிடத்து அயலதாகிய கோங்கின்மீது படர்ந்து எல்லி மலர்ந்த பசிய அதிரற் கொடியைக் காட்டுயானை விடியற் காலையில் அரும்புடன் இழுத்துக் கவளமாக உண்ணும் (அகம். 157:5-8). பொலிவற்ற இடத்தினை யுடைய மன்றினையும் அழகிய குடியிருப்பினையும் உடைய சீறூரின் கண்ணே எல்லித் தன் துணைவனுடன் தங்கியிருப் பாளோ, அன்றி ஆறலைப்போரை அஞ்சாத தன்

தலைவனுடன் அவன் முன்னே நடந்து செல்வாளோ என மகட்போககிய செவிலி தன் மகளை நினைநது மிக வருந்தினாள (அகம. 321 : 10 - 13). 'வேங்கை மரத்தின் பூக்கள் உதிரப்பெற்ற குணடுக் கல, பெரிய புலிக்குட்டியைப் போலக் காணப் படும் காட்டிடதது எலலி வரும் தலைவரது கள வொழுககததிற்கு, வெண்ணிலவே, நீ நன்மை தருவாய அலலை' எனபது தோழி முன்னிலைப் புறமொழியாகத் தலைவறகுக் கூறி இரவுக்குறி மறுத்தது (குறு. 47). இலலத்தரசி எலலி வந்த விருநதினர் உணண வேணடி நெய்யை அளாவ விட்டுக் கொழுவிய தசையைச சமைததாள் (நற். 41·6,7). எலலித தோய்த்த சோறறின கஞ்சியிட்டு ஆடையைப புலைததி (வணணாததி) புலாத்துவள (நற. 90.3,4). வேநதன் நேறறு எலலியில போர் முடித்து நினனைச் செலல விடுததான என்று வருந்தாதே; விரைத்து தேரைச செலுததித் தலைவி யினபால் யான சேர்ப்பேன எனத தலைவற்குத தேர்ப்பாகன கூறினான (நற. 121.5,6). களளியின மேலே படர்ந்து தழைத்த முல்லையின மலரை இடையன் எலலியில பறிதது வெளிய பனங்குருத தின் போழுடன சேர்ததுத தொடுதது மாலையாக அணிவான் (நற். 169:4-8). கணடல மரங்களாகிய வேலி சூழ்ந்த அழகிய சிறிய குடித்தெருவின் கண்ணே நேற்று எல்லி ஒருதேர் வந்துளதே யென உரையாடி ஊர்முழுவதும் அலர் எழுந்தது (நற். 191:5-7). ஞாயிறறின் கதிர் மழுக்கம் அடைநதது. அதனால எலலியும் பூவுதிர்நத கொடி போலப் பொலிவினறி இருந்தது (நற். 218:1,2). 'நெய்தல நிலத் தலைவனே, நீ பகல் வருவதனால ஊரலர் உணடாகித் தலைவி இற்செறிககப்படுவள். அதனால் எலலி வருவாயாக; இரவில் வரின தூஙகாத கண்ணையுடைய பெணடிரையும் உடையது இவ்வூர்' எனத் தோழி இரவுக்குறி நேர்வாள் போல மறுத்து வரைவு தோன்றக்கூறல் (நற். 223: 4-9). கோவலர், வெட்டுணட பெருமரத்தின் வேரடிக் கட்டையை எலலியில் எரியூட்டுவர் (நற். 289:7,8). முள்ளூர் மனனனாகிய மலையமான திருமுடிககாரி குதிரை மேறசென்று எல்லியில் திரட்டிக் கொணாநத இனநிரைககுரிய மறவர் அவனொடு எதிர்ந்து போாமுனையில் மாணடனர் (நற். 291: 7-9). புன்னைமரம் எல்லி போன்ற இருணட நிறத்தை உடையது (நற. 354:5). எல்லிக்காலத்தில புணர்சசிக் குரியனவறறை அணிகின்ற இயல்பை யுடையவன் எனத் தலைவனைத தோழி கூறல் (கலி. 52:11). 'பரததைமைக குணமுடையவனே, இவவிடத்து எலலிக காலததே வருவதற்கு நீ புறத்துப் போய்க் கணட புதுமை என்ன' எனத் தலைவனிடம் தலைவி புலந்து கூறினாள் (கலி. 93: 2-4). பிரிவினாற் புலமபும் தலைவி, தனனை வருத்துகின்ற பகற்பொழுது நீங்கி எலலிக் காலம் வருக என்று கருதிப பகற்பொழுதை வெறுத்தாள் (கலி. 144:52).

2. இருள். ஆனிரையை மீட்கக் கருதிய மறவர் நெல்லி மரங்கள் நிறைந்த எலலி - இருள் - மிகுந்த நீணட வழியில் செனறனர் (அகம். 67:6-8).

3. பகல். 'தலைவன ஏறிவரும் தேரிற பூட்டப்பட்ட குதிரைகள் எல்லி - பகல் - இரவு என்று பாராமல மணிகள் ஒலிபப மணற குனறுகளில ஏறி வருநதி வந்தன. அவன மணம பேச வந்தமையான அக குதிரைகள இனிக் களைப்பாறுவனவாக எனத் தோழி வரைவு மலிநத செய்தியைத தலைவிககுக கூறல (நற். 163.1-7).

எல்லு - 1. விளக்கம். சோழன இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஒனனார் நாட்டில எலலு-விளக்கம்- உணடாக இட்ட நெருபபின் ஒளி ஞாயிறறின செக்கர் நிறம் போலத தோனறியது (புறம. 16:7,8).

2. பகல். இமையவரமபன நெடுஞ்சேரலாதனின மாதேவி எலலு – பகல் - எலலாம் ஆற்றியிருநது இரவிற் சிறிதுநேரம துயினறாலும அநநேரததும கனவு கணடு வருநதினாள (பதி. 19·11-13). கவாதத கோலினை யுடைய கோவலா, எலலுபபொழுதில் பெயத மழையில நனைநத பல பசுததிரளொடு நீா விளங்கும மாலை அணிநதவராய ஊரிடதது மீணடனர் (அகம. 264·4-6). பரதவர் திணணிய படகுடன சென்று எல்லுப்பொழுதில மீனபிடிததல தொழிலைச செயவர் (அகம. 340 18, 19). வேட்டுவன எலலுப் பொழுதில உடுமபைக கொன்றும் நுணலை மணவெட்டியால பறித்தும ஈயலைச சேகரிததும் வளைதடியால முயலெறிநதும் கொணட வறறைத் தன் தோளில சுமந்து இலலம சேர்ததுப பின களளருந்தி மயங்கிக் கிடநதான் (நற. 59·1-5).

எல்லை – 1. பகல். சோழன் கரிகாற் பெருவளத்தான் எல்லை - பகல் – இரவு என்று பாராது பகைவர் நாட்டைச் சுட்டெரித்து அவர் அழுது கூவுகினற ஆரவாரததோடு கொள்ளைகொளள விருமபினான் (புறம். 7:7-9). 'நேற்று எலலை நின்னாலே எறியப் பட்டவனின் தம்பி சினந்து ஒருவீட்டினுள்ளே கள் முகக்கும் கலத்தைத் தேடுவது போல நின்னைத் தேடுகிறான்; ஆதலால் நீ உய்தல் அரிது' என மறவனொருவன் கூறினான் (புறம. 300). கருமபனூர் கிழானின் கொடை வளத்தால் உணடு எஞ்சியவற்றைக் கலத்துடன் எறியவும ஊனைத் தினறதால் பற்களினிடையே சிககிக் கொண்ட ஊனைத் தோணடி யெடுக்கவும நிகழ்நத நாட்கள் உண்டே

யன்றி உண்ணாது சென்ற எல்லை எண்ணியறிந்தி லேன் என்று புறத்திணை நன்னாகனார் கூறுதல் (புறம்.384:21-24).கரிகாற்பெருவளத்தானை அடைந்த பொருநரின் பற்கள் எல்லையும் இரவும் ஊன் தின்ற மையால் கொலலையை யுழுத கொழுவொப்ப முனை மழுங்கின (பொரு. 117, 118) பல்லுயிர்க்கும் மாட்சிமைப் படுதற்குக் காரணமான எல்லைப் பொழுதை வழங்குங் கதிரோன் தன் இயலபுக்கு மாறாகப் பல கதிர்களைப் பரப்புதலினால் வற் கடம் உண்டாயிற்று (பொரு. 232, 233). கொழிய லரிசியால் கூழாக்கி அகன்ற வாயை யுடைய தட்டுப் பிழாவிலே உலர ஆற்றி நல்ல முளையை இடித்து அதனைக் கூழிலே கலந்து, இனிமை பிறக் கும்படி இரண்டு எல்லையும் இரணடு இரவும் அரிக்காமல் வைத்து முற்றின கள்ளை மீனுடன் நெய்தனில மக்கள் விருந்தினர்க்கு அளிததனர் (பெரு. 275-282). மேகம் கீழக்கடலில் நீரை முகந்து மேற்றிசைக் கடலருகின மலையிடத்தே தங்கி இரவும் எல்லையும் ஒழிந்த இடததை அறியாது பள்ளமும் மேடுமாகிய பலவிடத்தும் நீர் நிரம்பு மாறு பெருமழை பொழிந்தது (மது. 238-244). பல கதிர்களை யுடைய ஞாயிறு ஏழு குதிரை பூண்ட தேரேறி எல்லை செல்ல மேற்கே யுள்ள மலை யடைந்து மறைந்தது (குறி. 215,216). நம் தாய் அலர்கூறும் பெண்டிர் சொல்லைக்கேட்டுப் பெரிய துறையகத்து எல்லையும் இரவும் கலலெனனும் ஒலியுடன் ஒரு தேர் வருதல் உண்டு எனறு எண்ணி இல்லின்கண் காவற்படுத்தினள் எனத் தோழி சிறைப்புறத் தலைவன் கேட்பத் தலைவிக்கு உரைத்தாள் (அகம். 20:11-16). நேறறு எல்லை தினைப் புனத்திற்கு வந்த தலைவன் புரவலன் போலும் தோற்றத்திற்கு மாறாக இரவலன் போல் பணிமொழி கூறித் தோழியை இரந்துபின் நின்றான் (அகம். 32: 1 - 4). பல்கதிர் ஞாயிறு எல்லையை மெல்ல மெல்லப் போக்கி மேற்றிசை யில் மறையும் மலையை அடைந்தது (அகம். 120: 4,5). எல்லையும் இரவும் என்றிலலாது கல்லெனும் ஒலியுடன் மேகம் பெரிய மழையைச் சொரிந்தது (அகம். 178:17,18). 'கானலில் ஒரு பக்கத்தே பல வாய நும் குணங்களை யாங்கள் பாராட்ட எல் லையை எம்மொடு கழித்து, இரவு வரின் நும்ஊர் செல்லலாம்; அன்றி இரவில் எம்பதியில் தங்கு வீராயின் யாங்களும் இயன்ற அளவு பேணுதல் செய்வோம்' என்பது தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி கூற்று (அகம். 200:9-13). வேண்டுமளவு தழைதின்று வெறுத்த இளைய பெண்மான ஆண் மானுடன் கூடி மகிழந்து துள்ளித் திரியவும், அழகிய சிறகினை யுடைய வண்டின் கூட்டம் முல்லை மலரில் உள்ள பூம்பொடியினை விரும்பி ஊதவும் எல்லை கழிந்து பொலிவற்ற மாலைப் பொழுது வந்தது (அகம். 234:10-24). உலகு புடை பெயர்வது போலும் புடைபெயர்ச்சியை யுடைய வங்கத்தை இரவும் எல்லையும் ஓரிடத்தும் தங்குத லின்றிக் காற்று அசைத்துச் செலுத்தக் கடல் நீரைப் பிளந்துகொண்டு செல்லுமாறு நீகான் செலுத்தினான் (அகம். 255:1-6) மலைநிறம் விளங்க, வண்டினம் பாய்நது ஊத, குருகினம் ஒலிப்ப, நண்டு தனது வளையிற் சேர, அலைஒலித்தல் அவிய, மீன்படகுகள் வேட்ட மாடுதலை நீங்கச் செக்கர் வானம் தோன்ற, அன்றில் பனையின் அகமடலில் சேர, புன்னையின் நறியமலர் பொன் னிறங்கொள்ள, எல்லையை மெல்லப் போக்கி ஞாயிற்று மண்டிலம் வெம்மை குறைய, இரவு வந்தது (அகம். 260:1-10). வினைவயிற் பிரிந்த உள்ளமே, 'எல்லையும் இரவும் நினைத்துப் பழகிய ஊரைப் பிரிந்து உறைதல் நமக்கு முடியுமாயினும், பொருள்வயிற் பிரிவை உரைத்த போது வருந்திய தலைவியின நிலையை மறத் தல் முடியாத தாக உள்ளது' என்று இடைச் சுரத்துத் தலைவன் தனது நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 299:1-4,20,21). கடற்கரைச் சோலையில் தலைவியுடன் எல்லையைக்கழித்த தலைவன் அவ ளுக்கு ஆறுதல் கூறித் தோழியுடன் செல்லுமாறு சொன்னான் (அகம். 300:5-9). தன் நெஞ்சம் கவர்ந்த தலைவன் சென்ற சுரநெறியை நினைந்து கண்ணீர் மல்கப் பெருமூச்சு விட்டு இரவும் எல்லை யும் தலைவி வருந்தினாள் (அகம். 313:3-6). பருவங் குறித்துச் சென்ற தலைவன், பருவம் வந்த பின்பும் வாராமையால் மனம் வருந்திய தலைவி, 'மணல் யிறந்தோர் நாள் முறையாகக் கழியப் பகலிலும் வந்திலர்; எல்லா எல்லையின் முடிவாகிய இரவி லும் வந்திலர்; யாண்டுளர் கொல்லோ' என வருந் தினாள் (குறு. 285:1-3). 'பறவைகளும் ஒலித்தன; மலர்களும் குவிந்தன; கடற்கரைச் சோலையும தனிமையை மிகவுடையதாயிற்று; வானமும் நம் மைப் போன்றே மயக்கம் உடையதாகி எல்லை கழியப் பொலிவழிந்தது; என் நிலையைத் தலை வற்கு உரைப்பார் உளராயின் இன்னும் உயிர் வாழ்வேன்' என வரைவிடை முனிந்த கிழத்தி தோழிக்குக் கூறினாள் (குறு. 310). 'எல்லை கழிய முல்லை மலர ஞாயிற்றின் வெப்பம் குறைந்த செயலற்ற மாலைக் காலத்தை இரவு வரம்பாகக் கொண்டு நீந்தினம்; அதன்மேல் வரும் இரவு வெள்ளத்தைக் கடப்பது எங்ஙனம்' என்பது பிரி வின்கண் வருந்தும் தலைவி கூற்று (குறு. 387). கடனீர்ப் பரப்பின்கண் அமைந்த பெரிய துறையின்

கண்ணே மணல்மேடு இடிந்து சரிந்த கரையில் தங்கும் குருகுகளின் வரிசையை எண்ணித் தலைவி தலைவனுடன் எல்லையைக் கழித்தாள் (நற். 159: 1-5). 'மேகங்கள் நீங்கிச் செல்லும் வானில் மாறி மாறி விழித்து மூடி இமைப்பது போல ஞாயிறு தோன்றித் தோன்றி மறையாநிற்ப, எல்லை கழிந்து மாலைப்பொழுதோடு இராக்காலமும் வந்தது; அதனால் நாம் அழுது வருந்துகின்றோம்; இந் நிலையில் தலைவர் நம்மை நினைக்க வில்லை போலும்' என்பது தலைமகள் கூற்று (நற். 241:1,7-12). 'தலைவர் வருவேம் என்று சொல்லிச் சென்ற பருவமும் வந்து நீங்கியது; எல்லையும் இருள் மிக்க நடுயாமத்துக் காரிருளோடு ஒன்றியது; மழையும் பெய்தது; இனிமாலைப்பொழுதும் காணின் நான் உயிர்வாழேன்' என்று வரைவிடை மெலிந்த தலைவி கூறினாள் (நற். 364:1-6,11,12). ஞாயிறு மேற்றிசையில் மலையை அடைய, நாரையின் கூட்டம் வானில் நெருங்கிப் பறந்து செல்ல, முல்லை மலர, எல்லையை மெல்ல மெல்லப் போக்கி மாலைப் பொழுது வந்தது (நற். 369:1-5). முல்லைப்பூவைக் குருந்தம் பூவோடே முடியிலே சூடிக் குளிர்ந்த பொழிலிடத்து அகன்ற பாறையிலே ஆயத்தோடே விளையாடுகையினாலே எல்லை போய் இராப்பொழுது வந்து தோன்றிற்று என விளைவிலபாங்கின் தலைவன் தலைவியிடம் கூறினான் (கலி. 113:23-26). காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாய தலைவி, 'மடமையுடைய நெஞ்சே, பொறுத்தற்கரிய காமநோயைச் செய்தவனிடத்தே எல்லையும் இரவும் துயிலைக் கைவிட்டுக் கழியில் ஓதம் போவது வருவதாய்த் தடுமாறும் தன்மைபோல, நீ சென்றும் வந்தும் தடுமாறுகின்றாய்; இதுதான் நீ பெற்றது' என நெஞ்சு நோக்கிக் கூறி வருந்தினாள் (கலி. 123:16-19). மயங்கிய இருள் உலகிடத்தே வரும்படி எல்லைக்கு ஒரு வரம்பாகிய துன்பம் மிகும் மாலைக்காலம் வந்தது (கலி. 129:6,7). மடலேறுகின்ற தலைவன், 'யாமத்தும் எல்லையும் மனவருத்தமாகிய அலைகள் அலைத்தலினால் மடன்மாவின் மேல் இருப்பதாக மனத்தாற் கருதி மடன்மா ஒரு தெப்பமாகக் காமக் கடலை நீந்துவேன்' எனச் சான்றோர்பால் உரைத்தல் (கலி. 139:14,15). பிரிவு நீட்டித்த விடத்துப் பெருந்திணைத் தலைவி நாணுவரை யிறந்து கலங்கிச் சான்றோரிடம், எல்லையும் இரவும் கூட்டமின்றிக் கழிந்தன வென்று சொல்லி யழுதாள் (கலி. 142:61). கடலை நோக்கிப் பாடும் நாணுவரை யிறந்த பெருந்திணைத் தலைவி, 'என்னைக் கூடிய கேளிர் வந்து கூடுங்காலம் யாதென்று அறியேன், ஆதலால் என்னை வருத்தும் எல்லை போய் இரவாகுக என்று பகற்பொழுதை முனிகுவன்' என்றாள் (கலி. 144:51,52).

2. வரம்பு. தென்திசைக்கண் குமரியும் வடதிசைக்கண் இமயமும் கிழக்கிலும் மேற்கிலும் கடல்களும் எல்லை-வரம்பு-ஆகக்கொண்டு யானைக்கட் சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறையின் முன்னோர் ஆண்டனர் (புறம். 17:1,2). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் வடதிசை எல்லை இமயமும் தெற்கே குமரியும் ஆகிய அவற்றின் இடையேயுள்ள அரசரை முரசுடைப் பெரும்போர் கெடும்படி வென்றான (பதி. 43:7-9). பெரும்பாணனை ஆற்றுப் படுத்தும் பாணன 'நீர்ப்பெயற்றுறை' என்னும் ஊரின் எல்லையைக் கடந்து செல்லுமாறு ஆற்றுப படுத்தினான் (பெரு. 319). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் தெற்கே குமரியையும் வடக்கே இமயத்தையும் கிழக்கேயும் மேற்கேயும் கடலையும் எல்லையாகக் கொண்டுள்ள பெருநிலப் பரப்பில வாழ்வோரெல்லாம் தன ஏவல் கேட்கச் சிறந்து விளங்கினான (மது. 70-74). கலலென்னும் ஓசையை யுடைய மாலைப்பொழுது பெரிய ஊரின எல்லையாய இடமெல்லாம் புகுந்து நயந்தோர்க்கு நோயைச் செய்து கழிந்தது (மது. 556-558). தலைவன குறித்துச் சென்ற பருவம் வந்தும் அவன வாராமையால மனமழிந்த தலைவி, மலையிறந்தோர் நாள முறையாகக கழியவும் வந்திலர், எல்லாப் பகலிலும் பகலின எல்லையாகிய இரவிலும் வந்து தோன்றார், எங்குள்ளாரோ என்று வருந்தினாள் (குறு. 285:1-3).

3. அளவு. நின்வலிமை பிறரறியாவாறு காத்தும் பிறர் கூறும் மொழியின பொருள் தெரிந்து ஞாயிற்றின பகற்கால எல்லை – அளவு – முயற்சிக்கு உதவியும் இரவின் எல்லையாகிய மறுநாள செய்ய விருப்பத்தை ஆராய்ந்து வினைஞருக்கு உரைத்தும் வாழ்க எனத் தருமபுத்திரனுக்குக் கோதமனார் அறிவுறுத்தினார் (புறம் 366·9-12). 'பாலைவழியாக உடன்போய் மீண்டு வந்தமையால் என வாடிய தோளையும் நுதலையும் கண்டு நீவருந்தாதே; வருந்தினால் தலைவற்கு அஃது எல்லையிலலாத துன்பத்தைத் தரும்' எனத் தன்னைக் கண்டு ஆற்றாளாய தோழிக்குத் தலைமகள் உரைத்தாள் (ஐங். 392). தோழி, தம்மைத தலைவன வரைந்து கொள்ளும் நல்ல நாள் தம்மிடத்தே வரும் எல்லையில தம் நாணத்தைத் தாங்குவார், நல்வினையைச் செய்தார்கொல் எனத் தலைவி கூறல் (கலி. 39:30-32). அறிவினாலும் வீரத்தாலும் பிறரைப் போர் வெல்லும் மதுரையி லுள்ள மைந்தரும் மகளிரும் இரவுநீங்கிய எல்லையில் பரங்குன்றை நோக்கிப் புறப்பட்டனர் (பரி. 19:8,8).

4. ஞாயிறு. 'மழை இடத்தை மறைப்பதனால் வானம் தெரியவிலலை; மழைநீர் எங்கும் பரத்த லால் நிலம தெரியவில்லை; எல்லை - ஞாயிறு - சென றமையால இருள் மிகப் பரந்தது; பலருந் துஞ்சும நள்ளிரவில் எம் சிற்றூரை யாங்ஙனம் அறிநது வநதாய; யான நோவேன' என்று தோழி தலைவனிடம் கூறினாள் (குறு. 355). இரவு நெடும் பொழுதுடையதாயக் கழியும்; எமககுளள காமமும் கண்ணுறஙகவொட்டாது பெருகும்; கடலும் இடை யறாது ஒலித்து நம்மை வருத்தும்; இந்நிலையில் இராப பொழுதைக் கடந்து எல்லை தோன்ற விலலை; தலைவனை ஆராயாது கொண்ட நட்பு அயறபெணடிர் அலர் தூறறிப் பசலையைப் பாடு மாறு வாயததது எனத் தோழி கூறினாள் (நற். 378). எல்லை சென்றபின் மலர்கள் கூம்பின (நற். 385:1).

5. இறுதி. அலர்மிகுந்தவழி வருந்திய தலைவியிடம் தோழி, மலைநாடனோடு அமைந்த நம் தொடர்பு நிலம் பெயரினும் நீரும் தீயும் பிறழினும் அலை கடலுக்கு எலலை - இறுதி - தோனறினும் பழிச் சொல்லுக்கஞ்சிக் கெடாது என்று கூறினாள் (குறு. 373:1-4).

6. நாளை. வினைவல பாங்கின் தலைவன் தலை வியை ஆற்றிடைக் கண்டு நின்னொடு சிலமொழி கூறின் குற்றமென்ன என்று கூற அவள், 'ஏதமன்று; எல்லை - நாளை - வருவதற்கு இப்பொழுது போக விடு' எனறு பதிலுரைத்தாள் (கலி. 113:11-13).

**எலி** – ஒருவகை உயிரினம். சோழன் நல்லுருத்திரன், விளைந்த செவ்வியை யுடைய சிறிய இடத்தைப் பார்த்து வளைந்த கதிராகிய உணவைக் கொண்டு முழையின்கண்ணே நிறைய வைக்கும் எலிபோலும் சிறிய முயற்சியுடையராய்த் தம் செல்வத்தை நுக ராது இறுகப் பிடிக்கும் ஊக்கமில்லாதவரின் நட்பு தனக்கு இல்லையாகுக எனப் பாடுகின்றார் (புறம். 190:1-5). தம் வீட்டில் உணவில்லாமையால் இடந் தோறும் மாறிமாறி அகழ்நது உணவுபெறாது இல் லெலி வாடி மடிந்தது எனத் தம் வறுமையைப் பெருங்குன்றூர் கிழார் புலப்படுத்துவர் (புறம். 211: 17-19). உயர்ந்த மலையிடத்து வாழும் புலி பார்த்து வீழ்த்திய களிறாகிய இரை தப்பி விடுமாயின் தனக்கு இரையாதற்குப் போதாத எலியைப் பார்த்து வீழத்தாது (புறம். 237: 15-17). முறத்தில் உலர்த்திய வெளளெள்ளைக கவர்ந்துண்ட குறும் பூழ்ச்சேவல், கோங்கினது கொட்டையைப் போன்ற வளைந்த காதுகளை யுடைய கொல்லை வரப்பில் வாழும் எலியை அலைக்க, அவ்வெலி வரகின் தோகையிடத்துச் சென்று மறையும் (புறம். 321:1-6). பேய்கள் மட்டும் நடமாடும் நள்ளிரவில் இல் லெலியை இரையாகக் கொள்ளுதற்கு வல்வாய்க் கூகை உள்ளம் அழியுமாறு குழறுவது, களவுப் புணர்ச்சிக் குள்ள இடையூறுகளுள் ஒன்றாகும் (அகம். 122:12-14). காந்தட் பூப்போன்ற கொண்டை யுடைய சேவற்கோழி, தலைவனொடு கூடியிருந்த இனபத்துயிலை எழுப்பியதால் நள்ளிருள் யாமத்து இல்லெலி பார்க்கும் காட்டுப்பூனைக் குட்டிககு அல்கிரையாகுக எனத்தலைவி கடுமொழி கூறினாள் (குறு. 107). 'கூகையே, யாட்டின் இறைச்சியுடனே நெய் கலந்த வெண்சோற்றை வெள்ளெலியின் சூட்டிறைச்சியோடு நினக்கு நிறையத் தருவேன்; காதலர் வருகையை விரும்பி, உறங்காமல் உள்ளம் சுழலும் போழ்தில அஞ்சுமாறு கடுங்குரலெடுத்துக் குழறாதே' எனத் தலைவி அதனை வேணடினாள் (நற். 83: 4-9).

**எவ்வம்** - வருத்தம். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிளளி வளவனைச் சினப்பித்தோர் நாடு, கனவிலும் நனவிலும் தீயனவற்றைக் கண்டு அவற்றால் அவன் படையெடுபபை யுணர்ந்து மயங்கிப் பிள்ளைகளின் பூங்கண்ணை முத்தங் கொண்டு மனைவியர்க்குத் தம் எவ்வம்-வருத்தம்-தோன்றாமல் மறைக்கும் துன்பத்தை யுடைய ஆடவரோடு மிக்க கலக்க முற்றது (புறம். 41:11-18). 'உடம்புமெலியும் பசியால் வருந்திய மகவுக்குப் பாலில்லாத வறிய முலையினை யுடைய என் மனைவியின் எவ்வம் நோக்கி அதனைத் தீர்த்தற் குரியவன் நீயென நினைந்து நின்பால் வந்தேன்' எனப் பெருந்தலைச் சாத் தனார் குமணனிடம் கூறினார் (புறம். 164: 1-8). 'மிகப்பே ரெவ்வம் உற்றாலும் யாம் சிறிதும் அறிவில்லாதோருடைய செல்வம் பயன்படாமையின் அதனை நினைக்க மாட்டோம்' எனக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார் தமக்குப் பரிசில் நீட்டித்த சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனிடம் கூறினார் (புறம். 197: 15, 16). வானுலகம் அடைந்த தலைவன் விட்ட விளை நிலங்களை உழுதுண்பா யாயினும் இரந்துண்ண எழுந்து எவ்வங்கொள்வா யாயினும் இரண்டும் நின விருப்பத்திலேயே உள்ளன எனப் பாணருள் ஒருவன் மற்றொருவனிடம் கூறினான் (புறம். 260: 9-11). 'பெரிய சுற்றத்திற்குத் தலைமை தாங்கி அவர்தம் வறுமையைக் களைதற்காகப் பல அரிய நினைவுகளால உண்டாகும் எவ்வத்தினால் துன் புற்றதற்கு மாறாகச் சோழன் செருப்பாழி எறிநத இளஞ்சேட் சென்னி வழங்கிய அருங்கலவெறுக்கை பெற்றுப் பொருநன் பெருமகிழ்ச்சி யெய்தினான் (புறம். 378:11,12,22-24). 'உணடு கை ஈரமாதலைத் துறந்து வருந்தும் என் பெரிய சுற்றம் மிகுந்த

எவ்வத்தை விடுமாறு கொழுநிணங்கலந்த உணவும் ஆடையும் பிறவும் அளித்துக் காப்பாயாக' எனக் கிணைப்பொருநன் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனை வேண்டினான் (புறம். 393:10-19). எவ்வுயிர்க்கும் எவ்வம் செய்யக் கருதாது விளக்க முற்ற கொள்கையோடு குட்டுவன கடவுளைப் பேணும் பொருட்டு வேள்வி செயயத தொடங்குவன் (பதி.21:3,5,6). பாடினி செந்நிலத்திலே நடத்தலால தன் அடிகள கொப்புளங் கொண்ட எவ்வத்தினை, இலையிலலாத மராமரத்தின் வறுநிழலில் தங்கி ஆற்றுவள் (பொரு.43-51). பரிசில் தருவாரை விரும்பித் தனனைத் தான் வெறுத்தல் மிக்க எவ்வமொடு கூடிய வறுமை ஆற்றுப்படுத்துதலாலே வழி வருத் தம் தீர்ந்திருநதான சிறுபாணன (சிறு. 38-40). 'இப் பொழுதே வருகுவர்' எனறு ஆய்மகள் கூறிய விரிச்சியினைக் கேட்ட பெருமுது பெண்டிர் வினைவயிற் பிரிந்த தலைவர் வருவது உறுதி; நீ நினது மனத் தடுமாற்றத்தால உளதாய எவ்வத்தி னைப் போககுக' எனத் தலைவியை ஆற்றுவித்த னர் (முலலை. 11-21). பொருள் வயிற் பிரிந்து நம் காதலிக்கு நல்ல அணிகலன்களை ஈட்டி வருவோம் என்று என்னை உந்துகின்ற நெஞ்சமே, நாம் போகும் வழியிடையே அவள் கண்கள் தோன்றி நம் போக்கினைத் தடுக்கும் போது அந்த எவ் வத்தை நீ கூறும் வாயமை போனற பொய்ம் மொழி களையுமோ எனத் தலைவன பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சினை வினவினான் (அகம். 3: 12-18). நம் தலைவர் வெறுப்பில்லாத கொள்கை யுடன், நமக்கு உவந்தளித்த அவரது இனிய உள் ளம் இப்போது இன்னாவாயினமையின் நாம் வெறுக்குமாறு நம்மிடத்தே நிறுத்திய அருளின் எவ்வம் அவர் மார்பினாலேயே தணியு மெனபதை அன்னை அறிந்திலள்' எனத் தலைவியிடம் தோழி கூறினாள் (அகம். 98:2-6). 'பிரிவாற்றாமையாகிய நோயுற்ற என் கையறு நெஞ்சத்து எவ்வம் நீங்கு மாறு என்னுடம்பை விட்டு உயிர் பிரிந்து அவர் பொருள்தேடச் சென்ற சேய்மை யிடத்திற்கே தானும் செல்வதாக' எனத் தலைமகள் நொந்து கூறினாள் (அகம். 113:21-27). 'பிரிந்து சென்ற தலைவர் இந்த மாலைக் காலத்திலும் என்னை நினைந்திலரே" என்று நம்மை வெறுத்திருக்கும் தலைவியின் எவ்வம் நீங்குமாறு நாம் உடனே சென்று அவளைக் காண்போம்; தேரினை விரைந்து செலுத்துவாயாக' என்று வினைமுடித்து மீளும் தலைவன பாகனுக் குரைத்தான் (அகம். 114:6-8, 15, 16). சேற்றிலழுநதிய உப்புவண்டியின் எவ்வம் நீங்க அதனை இழுப்பதற்கு எருது வருந்தி உயிர்த் தல் (அகம். 140:12-15). பிரிந்து சென்ற தலைவனை நினைந்து அவன் வரும் திசைநோக்கி இறத்தற் கேதுவான எவ்வத்தோடிருக்கும தலைவி இரங்கத் தக்கவள் என்னாது வாடை அவளை வருத்தியது (அகம். 163:4-10). நள்ளிரவில், தாழைமரத்தின் தாழ்ந்த கிளையில எவ்வமொடு தளர்ந்திருக்கும் கடற்காக்கை, சுறாமீன் இயங்கும் இடத்திலுள்ள வெள்ளிய இறாலைப் பறறியுண்பதாகக் கனவு காணும் (அகம. 170:9-12). தலைவனோடு தலைவி உடன்போக்குப போய்விட்ட நிலையில் நினைவு மலிந்த எவ்வமொடு செவிலி திசையெல்லாம் தேடி மனையினகண் மயங்கியிருந்தாள் (அகம். 189:9-12). 'நெஞ்சே, எய்துதற்கு எளியளல்லாத தலைவியை எயதக் கருதி நீஙகாத எவ்வத்தினை எனபாற் சேர்த்திய நீ, குட்டுவனின் வேல நின மார்பிலே தைத்து அழுநதிடச் செருக்கழிவாயாக' என அலல குறிபபட்ட தலைவன தனனெஞ்சினைக் கடிநது உரைத்தான (அகம. 212: 16,20-24). 'தலைவனின் பெண்டிர் தாம் விரும்பியபடி யெல்லாம் எம்மை இகழநது உரைப்பதற்கெதிராக யாம் அவர் சேரிக் கண் செனறால், ஆதன எழினியின வேல அழுநதப் பெற்ற யானையின் எவ்வம் போல அம்மகளிர் வருந்துவர்' எனப் பரத்தை தன் பாங்காயினார்க் குக் கூறினாள் (அகம. 216 : 5,6,13 - 16). தேரில் வந்த தலைவன் விளையாட் டாயமொடு சிற்றி லிழைத்து மனை புறநதநத தலைவியைத் தனனொடு கூடி மனைக்கிழமை பூணுமாறு கேட்டவுடன அவள் உவகைக் கண்ணீரை மறைப்பத் தலை இறைஞ்சினாள். அவளின் வேட்கை அறிந்த தலை வன் அவளைப் பிரிந்து செல்லப் பெரிய எவ்வம் உற்றான் (அகம. 230:6-16). 'வாடையானது காலந் தாழ்க்காது தலைவரிடம் சென்று அவரது பிரிவின நீட்டிபபையும் நம் தனிமைத் தன்மையையும் அவ ரிடம் கூறி அவர் கருத்து அறியுமாயின நனறுமன்; ஆனால அஃது அவ்வாறு செய்யாமல் நாம் கண் கலங்க நமக்கே எவ்வம் செய்கிறது' எனப் பிரிவின் கண் தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம். 243: 8-14). தலைவனைக் கண்ட தலைவி அவனைக் கூடாமையால் அரும்படர் எவ்வமொடு பெருந் தோள் மெலிந்தாள் (அகம். 250:10). 'பொருள்வயிற் பிரிந்து அருஞ்சுரங்கடந்து சென்ற தலைவர், பிரி வாற்றாது கலங்கிய நின் கண்பனி துடைக்க விரைந்து வந்தனர்; இனி நின் எவ்வம் தீர்க' எனத் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (அகம். 269:1, 13,24,25). 'நம்மைப் பிரிந்து பொருளீட்டச் செல்வார்' என்று நாம் மிக்க துனபத்தால் எப் போதும் வருந்தும் ஆற்றாமையினை யுடைய நெஞ் சத்தின் எவ்வம் நீங்கி யகலுமாறு தலைவர் மையும் தம்மொடு கூட்டிச் செல்லத் துணிந்தன

என்று தலைவியிடம் தோழி உவந்து மொழிந்தாள் (அகம். 285:1-3,12-14). தலைவியினால் தானுற்ற எவவத்தைத் தலைவன நாள்தோறும் தோழியிடம் கூற ஏனலிடத்து வருவான் (அகம். 288:5,6). 'நாம் நம ஊரை மறந்திருக்க வல்லமையுடையேமாயினும் நமமால் முன்னர்ப் பிரிவுணர்த்தப்பட்ட நிலையில் துனபந்தரும் எவ்வத்தால் அழிந்த பெரிதும் விதுப்பினை யுறறவளான காதலி பேதுற்ற நிலையினை மறந்திருத்தல் அரிது' எனப் பிரிந்துசெல்லும் தலைவன இடைவழியில் தனனுள்ளத்தொடு உரைத்தான (அகம.299:2-4,20,21). 'தோழி, வாடைக்காற்றினால் நடுக்கம் மிகும் வருத்தமுடைய நள்ளிரவில் ஒனறித் தழுவும் ஒருயிர் மாக்களும் புலம்புவர்; அருளில்லாத நம் தலைவர் பொருள்வயிற் பிரிந்தாராக, எவ்வநதாங்கிய இடும்பை நெஞ்சத்தினளாகிய யான் எங்ஙனம் ஆற்றி யிருப்பேன்' எனப் பிரிவுணர்த்தப் பட்ட தோழிக்குத் தலைமகள் உரைத்தாள் (அகம.305:3-11). 'சேர்ப்பனே, மலரினையொதத மையுண் கண்ணளான என தோழியின் எவ்வம் நீங்க நீ அருளாது பொய்ப்பினும அவள் தோளைப புதிதாகத் தழுவிய அன்று நீ கூறிய சூளும் பொயயோ' எனப் பகற்குறியிடத்துத் தோழி கூறித் தலைவனை வரைவு கடாவினாள் (அகம். 320:5-7,13,14). பொருளவயிற் பிரிநத தலைவனிடத்து யாரேனும் சென்று தலைவியின எவ்வ மிகுதியை உரைப்பாராயின் அம்மொழிகளைக் கேட்டு அவனால் துன்பந் தாங்கியிருத்தல் இயலாதெனத் தோழி தலைவியை ஆற்றுவிததாள் (அகம.333:4-6). 'பன்னாளும் நின் எவ்வம் நீஙகப் பகற்பொழுதிலே வநது புனனைச் சோலையின் இன்னிழலில் தலைவியொடு பொழுதைக கழித்து மாலையிற் போகும் நீ, இன்று அவ்வாறு போதலை விட்டு எம் ஊர்க் கண் தங்குக' எனத் தலைவனைத் தோழி வேண்டினாள் (அகம். 340:1-5,12,13). நமகையில் இலங்குகினற வளை நெகிழுந்த எவ்வத்தைத் தலைவனிடம் காட்டி, 'யாம் தனிததிருக்க, நீ பொன்னை விரும்பி அருளிலலாதவனாய் இவ்வாறு பிரிதல் தகாதென அவனைக் கழறிப் புலப்போம வா' எனத் தோழியைத் தலைவி அழைத்தல் (அகம். 355:10-14). 'நெஞ்சே, யாம் பன்மலை வியனசுரம் எவ்வங் கூர இறநதனம்; ஆதலால், முள்ளெயிற்று அரிவையாகிய தலைவியின தோளை நினைத்தல் ஒழிவாயாக' என்று பொருள்வயிற் பிரிந்து போகும் தலைவன தன் நெஞ்சிற்குக் கூறினான (அகம். 361: 13-16). 'தினைப்புனங் காத்திருந்த நம்மைநோக்கி, 'மடநல்லீரே, அம்பு பாய்ந்ததால் புண்மிக்கு எவ்வமொடு வந்த யானை நும் புனத்தின்வழிப் போனதோ எனக் கேட்டுச் சென்ற தலைவனது மார்பையும் அழகையும் விரும்பி இங்கு நாம் வருந்தும் எவ்வத்தினை அன்னை உரைராளாய் வெறியாடல் வேண்டி வேலனை யழைத்தாள்' என்று தோழி யிடம் கூறினாள் தலைவி (அகம். 388:4-19). 'நம் கண்களிலிருந்து, நீரொழுகும் எவ்வம் தீரத் தலைவர் இப்போது வருவாராயின் நன்று' எனப் பிரிவிடை ஆற்றாத தலைவி தோழியிடம் ஏங்கிக் கூறினாள் (அகம். 395:3-5). அணிகள் தாம் அணியப் பெற்ற நிலையிலிருந்து நெகிழ்தற்கு ஏதுவாகிய எவ்வம் மிகுமாறு நினைவுமிக்க வருததத்துடன் இருக்கும் தலைவிக்குத் தலைவன் அருளாதவனானான (அகம். 398:1,2,6). பிரிந்து போன தலைவன், இரைதேடும் நாரைக்கு எவ்வமாகத் தூவுகின்ற நீர்த்துளிகள் கொண்ட வாடைக் காற்றினையுடைய கூதிர்ப் பருவத்திலும் வந்திலன் (குறு. 103:3-5). 'தலைவர் பிரிநததனால் வலிமையழிந்து இங்கே யான் பொறுத்துக் கொண்டுள்ள எவ்வத்தை இவ்வூர் எங்ஙன மறிந்தது' என்று குறிபபாகத தோழியைத் தலைவி இகழ்தல் (குறு. 140.3-5). தலைவியின் நுணுகிய சிற்றிடைக்கு எவ்வமாக அழகிய மெல்லிய மார்பகம் நிறையப் பருத்துப் பெருமையையும தேமலையு முடைய முலைகள் வளர்நதன (குறு. 159:2-4). தலைவன் பிரிநததமையினால் வளர்பிறை போல் மேன்மேல் பெருகி, முனகையிலிருந்து வளையை நெகிழச் செய்த எவ்வநோயோடு தலைவி மெலிநதாள் (குறு. 289:1-4). 'எமமூரில் நஞசின் கடுமையுடைய பாம்புகள் ஓடும் தெருவில் முனபு நடுங்குதற் குரிய மிக்க எவ்வத்தைக் களைந்து நீ காத்த எம்மை இப்போது வெறுத்துப் பிரிவாயாயின் எம்முடைய வீட்டிற்கே அழைத்துச் சென்று விடுவாயாக' எனறு பரத்தையிற் பிரிந்து மீணடு வந்து வாயில வேணடிய தலைவனிடம் தோழி கூறினாள் (குறு. 354:3-6). 'தோழி, பொறுத்தற் கரிய நினைவா லெழும் எவ்வத்தை இன்று நாம் அடைந்தாலும் என் நோயைத் தீர்க்கும் வழி வெறியாடலே யென்று தெளிந்த வேலன் அந்நோயைப் போக்கும் மருந்தினை அறியாதவனென்பதை அனனை அறியும் பொருட்டு நம் தலைவர் இரவுக்குறிக்கண் இங்கே வாராதிருப்பாராக' எனத் தலைவி கூறுதல் (குறு. 360:1-4,8). எவ்வம் மிகுகின்ற அருஞ்சுரங்கடந்து பொருளீட்டப் பிரியும் தலைவனைத் தோழி தடுத்தாள் (நற்.46:4,9-11). 'நெடுங்காலத்திற்கு முன்னுண்டாகிய ஆழ்ந்த பெரிய புணணின்வாய் ஆறாத எவ்வத்தையுடைய மார்பில் வேலை எறிந்தாற் போலக் குயிலின் குரலால் வருந்தி யிருக்கின்ற என்னைத் தெளிந்த நீரையுடைய ஆறு மிக வருத்துகின்றது' என்று தலைவி தோழியிடம் கூறினாள்

(நற். 97:1-4). பிரிவிடை ஆற்றாளாகிய தலைவி, 'வெளியிட்டுக் கூறுதற்கியலாத என் எவ்வத்தைக் கேட்பாயாக' என அதனைத் தோழியிடம் கூறுதல் (நற். 109:4-5). 'தலைவரின் பிரிவால் யானுறும் எவ்வநோய் விரிந்த கடல்நீர் சூழ்ந்த நிலத்தின் எல்லையளவும் கடந்தது' எனத் தலைவி நோதல் (நற். 130:10-12). இற்செறிக்கப் பட்ட தலைவியைக் கூடப் பெறாத தலைவன் வருந்திய எவ்வமொடு பெரிதும் நெஞ்சழிந்தான் (நற். 253:3) தலைவியின் உடம்பெங்கும் பரந்து எவ்வம் கூர்ந்த ஏமுறு துயரத்தைக் கண்டு வருந்திய செவிலி அவளுக்கு அத்துயரம் தலைவனிடத்துக் காதலால் வந்த தென அறியாமல் வெறியாட்டு அயர்ந்தாள் (நற். 273:1-4). பொருள்வயிற் பிரிந்து பொருள் முடியா நின்ற தலைமகன் நெஞ்சம் ஆற்றாமல் தலைவி யிடம் மீளக்கருதிய போது, 'எடுத்த செயலை முடிவுபெறச் செய்யாது எவ்வம் செய்தல் இகழ்ச்சி யைக் கொடுக்கும்' என அவன் அறிவு தடுத்தது (நற். 284:5-8). 'எவ்வம் எல்லை கடந்து தன்னை நலிகின்றது' எனத் தலைவன் ஒருவழித் தணந்த நிலையில் தலைவி நொந்து தோழிக்குரைத்தாள் (நற்.338:4). தலைவன் தந்த காமநோயினால் தலைவி பசந்தாள் என உணராத அன்னை பன்னாளும் எவ்வ நெஞ்சமொடு தெய்வத்தைப் பேணி வருந் தினாள் (நற். 351:3-5). தலைவியிடத்துக் காதலுற்று அவளை எய்தும் வகைநாடி வருந்திய தலைவன் ஆறுதல் அடையும்படி அவனது மையல் நெஞ்சின் எவ்வம் தீர்க்கும் மருந்தானாள் தோழி (ஐங். 59:1-3). தலைவனோடு தலைவி உடன் போனாள் என வருந்தி யிருந்த தாயின் எவ்வ நெஞ்சிற்கு ஏமமாக அவனோடு அவள் மீண்டு வந்தாள் (ஐங். 393:3-5). புணர்ச்சியின் பின்னர்த் தன்னிடத் துத் தலைவன் நிகழ்த்திய மிகப் பெரிய அன்புச் செய்கைகள் ஒரு பிரிவையுடையன என்று தலைவி நெஞ்சழிவோடு கலங்கிய எவ்வத்தளாயினாள் (கலி. 4:22,23). 'தலைவனோடு உடன் போக்கு மேவிய கற்புடையாளைக் குறித்து எவ்வம் படரன்மின்' எனத் தலைவியைத் தேடி வந்து தம்மை வினவிய செவிலிக்கு முக்கோற் பகவர் மொழிந்தனர் (கலி. 9:22). 'இழைகள் நெகிழ்ந்து விழும்படி நம்மை எவ்வமுறுத்தினோன் குன்றாயிருந்தும் அதன் பக்க மலைமேல் கட்டப்பட்ட தேனடை மேகத்திடை நுழையும் திங்கள் போலத் தோன்றுகிறது; இதற் குக் காரணம் என்ன' எனத் தோழி தலைவனை இயற்பழித்துத் தலைவியிடம் வினவினாள் (கலி. 42:22-24). 'என் தோழி தன்னெவ்வம் மிகவும் அதற்குக் காரணமாக நீ செய்த அருளின்மையை என்னிடமும் வெளியிடாது மறைத்தாள்' என்று தலைவியின் கற்புத்தன்மையைத் தோழி தலைவ னிடம் கூறினாள். (கலி. 44.8,9). 'மயக்கமுற்றவள் போல நீ பிறர் எவ்வத்தை அறியாதவளாயக் கேட்டாக்கு யாதொன்றும் சொல்லாமல் போகின் றவளே' எனக் காமஞ்சாலா இளமையோளிடத்துக் காதலுற்ற கைக்கிளைத் தலைவன் அவளை நிறுத் திச் சொல்லாடினான் (கலி. 56:28,29). 'நல்லாய், பேரமர்க் கண்ணை யுடைய நின்தோழி (தலைவி) உறுத்தின பொறுத்தற்கரிய எவ்வம் என் உயிரை வாங்கும்; அஃது உயிரை வாங்காதபடி அது தீர்தற் கான மருந்தை அருளாய்' எனத் தோழியிடம் தலை வன் குறைநயந்து நின்றான் (கலி. 60.15-18). தலைவ னிடத்தே தங்கள் உள்ளம் உள்ளதாகக் கூறி வளை நெகிழ எவ்வம் உழக்கும் வேற்று மகளிரைக் காணும் காட்சி தனக்கு இன்னாதது என்கிறாள் தலைவி (கலி. 80:11-13). தலைவன் தன் காதல் மகளிரின் நலத்தை உண்கையினால் உயவின்றி மெலிந்த அம் மகளிரின் எவ்வநோயைக் காண்பது தலைவிக்கு இன்னாதது (கலி. 80:15-17). தலைவியை அடை தற்கு ஏறுதழுவிய தலைவனால் வருந்திய ஏற்றை யுடைய நல்லார் தங்கள் ஏற்றினது வருத்தத்தைக் கண்டு அவனைக் குறித்துப் பகையின்றி எழுந்த னர் (கலி. 102.28,29). தலைவியோடு புணர்ச்சி நேராத நிலையில் தலைவனுக்கு எவ்வம் மிகுதை யினால் அவனது உயிர், வெண்ணெயைக் கடைந் தெடுத்த பாலபோல பயனற்றதாயிற்று (கலி. 110: 16-19). தலைவன் பொருள்வயிற் பிரிந்த காலத் துத் தலைவி தன் எவ்வ நோயினைத் தோழியிடத் தும் வெளியிடாது மறைத்தாள் (கலி. 124:6,10,14). தலைவியின் கையில் வளையினை நெகிழச் செய்த எவ்வநோய் தீருமாறு இவளுக்கு அருள் செய்து வரைந்து கொள்வாயாக எனத் தலைவனைத் தோழி வரைவு கடாவினாள் (கலி. 127:19,22). தலைவி 'தன்னுட் கையாறெய்திடு கிளவிகளால் நெஞ்சழிந்து அயலோர் அறிந்த எவ்வம் மேலிட்டு வருகையினால் பித்தேறுதலை நீ அவளை மணந்து கொண்டு போகக்குவாய்' எனத் தலைவனுக்குத் தோழி கூறுதல் (கலி. 129 21,22). பிரிந்தாரது எவ் வம் மிகுதற்குக் காரணமான மயக்கத்தையுடையது மாலைப்பொழுது (கலி. 134:10). தீராத காமநோ யைச் செய்த தலைவரைக் கண்ணாற் காணாமல் நினைக்கையினால் தலைவி எவ்வத்துள் ஆழ்ந்து கவலை கொண்ட நெஞ்சினளானாள் (கலி. 134:11-13). தலைவனைப் பிரிந்து மாலைப் பொழுதில் கையறு நெஞ்சினளாய்க் கலக்கத்துள் ஆழ்ந்திருக் கும் தலைவியை நோக்கி எவ்வத்தால் இயன்றன போல இலைகளெல்லாம் கூம்பின (கலி. 134:20-22). 'எவ்வநோயைத் தாங்க மாட்டாமையினால் உண்

டான இடும்பைக்கு இளைப்பாறுதலாக் மட லூர்ந்து தலைவியைக் குறித்துப் பாடுவேன் என்று சான்றோரிடம் தலைவன் கூறினான் (கலி. 139:10-13). 'தேன்போலும் மொழியினையுடைய் தலைவி காமுறுத்திய காமமாகிய் கடலில் அகப்பட்டு இர வும் பகலும் எவ்வமாகிய அலைகள் வந்து அலைக் கையினால் மடன்மா்வினை ஒரு தெப்பமாகக் கொண்டு தலைவன் கடலை நீந்தினான் (கலி. 139: 14-17). தலைவியிடத்து வந்த தலைவன், 'கொத் தான கூந்தலை உடையவளே, உனக்குற்ற எவ் வத்தை யான் நினக்கு வந்து கூறுமளவும் என் இன் னுயிர் போகாமல் இருந்ததே, அதனைப் பாராய்' என்று மயலுறுத்தி அவளை மருவினான் (கலி. 144: 11-14). தலைவனொடு சென்ற தன் நெஞ்சினைத் தேடித் தருமாறு, தன் உள்ளத்தில் நின்ற எவ் வத்தைத் தலைவி திங்களிலுள்ள குறுமுயலுக்குக் கூறியவுடன் அஃது அத்திங்களோடு போய் வெண் மேகத்தில் ஒளித்துக் கொண்டது (கலி. 144:24,25). 'பலரையும் துயிற்றும் இராக்காலமே, யானுற்ற எவ்வத்தை நினக்குரைப்பின் அது கேட்டு நீயும் மிக வருந்தித் துயில் கொள்ளாயாகலின் என் நோயை நினக்குச் சொல்லேன்' எனத் தலைவி கலங்கி மொழிந்தாள் (கலி.146:36,37). 'என்னுள் தோன்றிய எவ்வம் பிறரால் அழித்தற்கரிய அரணின் தன் மையை உடையது' எனத் தலைவி கூறுதல் (கலி. 146:46). உலகிற்கு எவ்வம் செய்த சூரபன்மா வாகிய மாமரத்தை முருகன் வெட்டினார் (பரி. 19:101).

**எவ்வி** - ஒரு வள்ளல். நல்ல ஊர்கள் பொருந்திய ஓம்பாத ஈகையுடைய பெரிய வேளாகிய எவ்வியது நீர்வழங்கும் வாய்த்தலைகளை யுடைய மிழலைக் கூற்றத்தைக் கொண்டவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் (புறம். 24:17-19,23). 'பாரிமகளிரை மணக்க' என்னும் கபிலர் வேண்டுகோளை இருங்கோவேள் ஏலாது மறுத்தபோது அவர், 'இம்மகளிர் எவ்வியின் தொல்குடியிற் படுவார்களாக; இவர் கைவண் பாரி மகளிர் எனறு உன் தகுதி யறியாது கூறிய என் தேற்றாப் புன் சொல்லைப் பொறுப்பா யாக' என்று கூறினார் (புறம். 202:14-16). பெரிய பாண் சுற்றத்தின் தலைவனும் பேரணிகலத்தை உடைய போரடுதானையைக் கொண்டவனுமாகிய எவ்வி மார்பில் வேல் தைத்த விழுப்புண் பல என்று விடியலில் கூறிய சொல் பொய்யாகட்டும் என வெள்ளெருக்கிலையார் பாடியுள்ளார் (புறம். 233:4-8). வாட்போரில் எவ்வி பகைவரைக் கொன்று விழுப்புண்பட்டு வீழ்ந்த போர்க் களத்தில் பாணர் தொழுதற்குரிய மரபினையுடைய யாழின் கோடு களை ஒடித்தெறிந்தனர் (அகம். 115:7-9). தன் தமையன்மார் பிடித்து வந்த வாளை மீனைப் பாண்மகள் விற்றுப் பழஞ்செந்நெல் பெறாமல் முத்தையும் நன்கலத்தையும் பெறுதற் கிடனான நாட்டையும் பல வேலினையும் உடைய எவ்வி நன் மொழி கூறி யடக்கவும் அடங்கானாய் அன்னி என்பான், திதியனது காவன்மரத்தை வெட்ட விரும்பி அவனொடு பொருது மாய்ந்தான் (அகம். 126:7-17). நீடூர்க்கு உரியவனான வாய்வாள் எவ்வி தன் ஏவலைக் கேளாத பகைவரின் வலிமையைக் கெடுத்து அரிமணவாயில் உறத்தூரில் பகற் போதில் வீரர்க்குக் கள்ளும் பெருஞ்சோறும் வழங்கிய போது ஆரவாரம் மிகுந்தது (அகம். 266: 10-15). பொலம்பூண் எவ்வியின் நீழல் என்னும் ஊர் போன்றவள் நலம்பெறு பணைத்தோளை யும் நன்னுதலையு முடைய அரிவையாகிய பரத்தை (அகம். 366:12,13). எவ்வியை யிழந்தமையால் வறிய யாழ்ப் பாணரின் தலை பொற்றாமரை மலர் சூடாமல் பொலிவிழந்தது (குறு. 19:1,2).

**எவ்வை** - எம்தங்கை. தலைவனை எம்மிடம் வருதல் வேண்டுகிறோம் என எவ்வை - எம்தங்கையாகிய தலைவி-கூறுகிறாள்; அதனைப் பொருந்தோம் என்பது போலவே விரும்புகிறோம் என்று பரத்தை தலைமகட்குப் பாங்காயினாரிடத்துக் கூறினாள் (ஐங். 88:2-4). தலைவன் எவ்வைக்கு (தலைவிக்கு) பெரிதும் அளி செய்கிறான் என்று கூறுவர்; அதற்குக் காரணம் அவள் பண்புடைமை யன்றி வேறில்லை என்று காதற்பரத்தை பாணனுக்குக் கூறுவாளாய்த் தலைவிக்குப் பாங்காயினார் கேட்ப வஞ்சகமாக இகழ்ந்து கூறினாள் (ஐங். 89).

**எழாஅல்** - 1. யாழ். பல்வேறு வகைப் பாடல்களை யும் பற்றித் தோன்றும் இசைப் பயனை யுடைய எழாஅலை - யாழை - கூத்தர் தலைவன் கொண் டிருந்தான் (பொரு. 56,57).

2. யாழ் நரம்பின் ஓசை. பாணன் பொன்புனை நரம் பின் இனிய ஒலியுடைய சீறியாழின் எழாஅல் - ஓசையை - எழுப்புவதில் வல்லவன் (நற். 380:7-9).

**எழால்** – 1. புல்லூறு. யானை, குதிரை என்னும் விலங்குகளும் மறவருமாகிய பட்ட பிணத்தை உண்ணும் பொருட்டு எருவைச் சேவலும் உச்சிக் கொண்டையை யுடைய எழாலும் – புல்லூறும் - கீழே தாழ்ந்து பறந்தன (பதி. 36:7-10). நிழலற்ற பாலைநிலத்தே எழால் எறிதற்குக் குறி பார்க்க அதனை யறிந்து காடைச்சேவல் தப்பி உலர்ந்த புதரை விடுத்துப் பழைய அம்பலத்தில் வழிபார்த்து ஆறலை கள்வர் தங்கும் குடியோடிப் போன பாழ் மனையின் இறப்பினது நிழலில் தங்கி நெட்டுயிர்க்

கும் (அகம். 103:1-9). குன்று கெழு சிறுநெறியில் வங்கா என்னும் பறவையைப் பிரிந்த அதன் பேடை மேல் எழால் இரையாகக் கொள்ள வீழ, அது தன் ஆண் பறவையைக் காணாது குறிய பல ஒலிகளால் அகவும் (குறு. 151:1-4).

2. இசை. பாணர் படுமலைப்பாலை என்னும் பண்ணை வாசித்த போது உண்டாய எழாலின் - இசையின் - வானத்திடத்தே எழுகின்ற நல்ல உச்ச ஒலியை ஒப்ப மழை பெய்த ஓசை கேட்டது (குறு. 323:2-4).

எழில் - 1. அழகு. இன்னகை மகளிர் ஏந்தெழில் - மிக்க அழகு - பொருந்திய குளிர்ந்த கண்ணினை உடையவர் (புறம். 116:3). சாந்து பூசப்பெற்றுப் பல நல்ல இலக்கணத்தைப் பொருந்திய ஏந் தெழிலை உடைய மார்பினன் குமணன் (புறம். 161: 26,27). யானை, இரும்பாற் செய்யப்பட்ட பூணை நுனியிற் செறிக்கப்பட்ட உயர்ந்த, எழில் மிக்க - கொம்பினை உடையது. (புறம். 369:1,2;370:20). சிவபெருமான் இரண்டுருவாய் இருவகையான் அணிகள் அணிந்த எழில் தகையர் (பதி. க. வா.7,8). கழுத்தில் மாலையணிந்து எழிலிய சேரலாதனின் போர்வல் யானை தெர்டி சிதைந்த மருப்பினை யுடையது. (பதி. 15:22,23). துலாமரம் தூக்கிய மதி லிடத்தனவாகிய நல்ல, எழில்மிக்க கதவுகளைக் களிறுகள் கொம்பால் குத்தின (பதி. 16:4-6). முள் முருங்கையின் பூக்கள் நீரிலே கிடத்தலால் எழிலிய நெருப்பினை ஒத்து அடைகரை காணப்பட்டது (பதி. 23:20). களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலின் அகன்ற மார்பு, வடக்குத் தெற்காகச் செல்லும் வழி யைத் தடுத்து விளங்குகின்ற கோட்டினை யுடைய தாகி எழிலிய பனிமிக்க இமயமலைபோன்றது (பதி. 31:14-17). வேனிற்காலத்தே குளிர்ச்சியின் பொருட் டுச் சோலைகளில் வாழும் பேரெழில் இலவாழ்க்கை யுடையவன் கடல்பிறக் கோட்டிய செங்குட்டு வன் (பதி. 48:15). ஏந்தெழில் மார்பினை யுடைய வீரர்க்கு ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் கவசம் போல் விளங்கினான் (பதி. 58:11,12). பூணணிந்து எழிலிய வனைந்துவரல் இளமுலையையும் மாண்வரி அல்குலையும் மலர்ந்த நோக்கினையும் மூங்கிலை ஒத்து எழிலிய பணைத்த தோள்களையும் உடைய வள் சேரன்மாதேவி (பதி. 65:6-8). மெய்சிதைந்து அச்சிதைந்த வடுக்களாலே, பூசின் சாந்தினது எழிலை மறைத்த வீரர் பெருமகன் செல்வக் கடுங் கோ வாழியாதன் (பதி. 67:17,18). செல்வக்கடுங் கோ வாழியாதன் அணங்கெழில் (நோக்கினாரை வருத்தும் அழகு) பொருந்திய மலரிரைப் பிணிக் கும் மணங்கமழ் மார்பன் (பதி. 68:19, 20). நான்கு கொம்புகளையும் எழில் நடையினையும் தடக்கை யினையும் உடைய யானை எருத்தத்தே திருக்கிளர் செல்வனாகிய இந்திரன் ஏறி ஆவினன்குடி சென் றனன் (முரு. 157-159). விறலி, ஓடி யிளைத்து வருந்திய நாயின் நாக்கினது நல்ல எழிலை வருத்தி வயங்கிழை அணியாமையாலே பொலிவிழந்த அடி யினை உடையவள் (சிறு. 16-18). சாதிலிங்கம் வழித்த போர்வையினையும் தச்சர் தொழில் முடிந்தபின் ஊர்ந்து பார்த்துப் பெயர் பெற்ற எழில் நடையுடைய தேர், எருது முதலியவற்றை யும் பரிசிலர்க்கு நல்லியக்கோடன் வழங்கினான் (சிறு. 256-261). மடவரன் மகளிர் நறவம் பூவின் இதழைப் பெயர்த்தமைத்தாற் போன்ற நல்லெழில் மழைக்கண் உடையவர் (பெரு. 386,387). பொலி வினை யுடைய மகரக்குழை யிட்ட அழகுக்குப் பொருந்திய உயர்ந்து தோன்றும் எழிலினைக் கொண்ட மழைக்கண மடவரல் மகளிர், பூந்தட்டி லிட்ட பிச்சியின் அரும்பு மலர்ந்து மாலைப பொழுதை அறிவிக்க விளக்கேற்றினர் (நெடு. 38-42). யானை ஏந்தெழில் வரிநுதலையுடையது (நெடு. 116,117). உகிருடைய அடியினைக் கொண்டது ஓங்கெழில் யானை (பட். 231). வதுவை செய்து கொண்ட மணமகள் போல் மணக்கும் வண்டு கமழ் கூந்தலினையும் மாட்சிமைப் பட்ட நுணங் கெழில் ஆகத்தினையுமுடையவள் மடந்தை (மலை. 30,31). நன்னன், வனைபுனை எழில் முலையையும் மூங்கில் போன்ற தோளையும் மலர் போன்ற மழைக்கண்ணையுமுடைய மங்கையர்க்குக் கணவன் (மலை. 57,58). நல்லெழில் நெடுந்தேர் வழியிலே ஓடி வந்தாற் போல் கல்லின் மேலவரும் யாறுகள் முழைஞ்சுகளிலே வீழ்ந்து மாறாது ஒலிக்கும் (மலை. 323, 324). ஏந்தெழில ஆகத்துப் பூந்தார் குழையத் தலைவன் பரத்தையொடு புனலாடி னான் (அகம். 6:10,11). தன் கடற்பிறந்த முத்தின் ஆரம், குறவர் தந்த சந்தின் ஆரம் ஆகிய இரு பேராரத்தையும் தன்மார்பில் தென்னவன எழில் பெற அணிநதான் (அகம். 13:1,6). தலைவன் பிரியும் போது நீலமலரின் பெருமை குறை தற்குக் காரணமான தலைவியின் மையெழில் மழைக்கண்கள் தெளியாது மயங்கி யிருந்தன (அகம். 33: 9, 10). தென்றற் காற்றால் தோன்றிய மாந்தளிர் எழில்தகையுடனும் வளப்பத்துடனும் திகழ்ந்தது (அகம். 37: 6,7). நறிய நுதலையும் பல்லிருங்கூந்தலையும் உடைய மெல்லியல் மடந்தை யின் நல்லெழில் ஆகத்தைத் தலைவன் சேர்தல் (அகம். 43:10-12). தலைவன் பிரிவால் தலைவியின் மேனி மாமை நிறம் நீங்கி நுண்ணிய பசலைபரந்து பீர்க்கின் எழில் மலர் நிறம் எய்தியது (அகம். 45

6-8). தலைவியின் மைஎழில் உண்கண் கலுழத் தலைவன பொருளவயிற்பிரிதல் (அகம். 81:14, 15). தலைவி நெயதலின கூம்புவிடு நிகர்மலர் போன்ற ஏந்தெழில் மழைக்கண உடையவள் (அகம். 83: 12, 14). மதர்தத எழிலைக் கொண்ட மாணிழை மகளிரின பூணுடை முலைபோலக்கோங்கம் மலர்ந் தன (அகம். 99:3, 5). தலைவன் பிரிவில் மதர்எழில் மழைககண கலுழப் பெருநாணணிந்த சிறுமென் சாயலுடைய தலைவி மாணலம் சிதைய ஏங்கி அழத் தொடஙகினாள் (அகம். 120:6-9). தலைமகன் பிரிவில் வேறுபட்ட தலைவி, எழுதெழில் மழைக்கண் கலுழ நோய் கூர்ந்து அறிவு பிறிதாகி மயங்கியதாகத் தோழியிடம் கூறினாள் (அகம். 135:4-6). தலைவன் பிரியுமெனக கருதியதால் செழியனின் பொதியின் மலைப் பக்கத்துள்ள நல்லெழில் வாய்ந்த மூங்கில் போனற தலைவியின் தோள் தொல் கவின் தொலைந்தன (அகம். 137:12-16). அம்பின் வேகம் போலச் செல்லுதலைப் பழகிய எழில்நடைப புரவி பூட்டிய தேரில் தலைவன இரவுக்காலஙகளில் தலை வியைக் காணவந்தான் (அகம். 160:11, 15). அகன்ற மலையில் உள்ள காட்டில் ஆராயந்து அறுத்த மூஙகில் துண்டை ஒதத தலைவியின் தோள் தலை மகன் பிரிவால் எழில் அழிய வாட்டமுறும் (அகம். 171:1-3). பரத்தை தன் குறுந்தொடி அணிந்த முன் கையினால் பிணித்த பிணிப்பினைத் தலைவன் விடுத்துச் சென்றதற்கே சினந்து தன்முகத்து எழு தெழில சிதைய அழுது ஊரில தேடிச் சென்றாள் (அகம். 176:16-26). நீரை மறைத்த பூவை உயிர்ப்பி னால நீக்கித் தெளிநத நீரைப் பருகிய திரிமருப் பினை யுடைய எழிறகலைமான காட்டில் புள்ளி களையுடைய தன் பிணையொடு தங்கியது (அகம். 184:10-12). ஒளியுள்ள வளைநெகிழ மெலிந்து நல் லெழிலுடைய மூங்கில் போன்ற தோளும் பெரிய அழகு கெடச் செயலற்ற நெஞ்சமொடு தலைவி வருந்தப் பிரிநது இரும்பினாலியனற உயிருடையார் போலத தலைவர் வன்மைய ராயினார் (அகம். 185: 1-5). பொன்னாலாகிய விட்டு விளங்கும் எழில் ஒளி நுடங்கும் அழகுமிக்க ஓடையணிந்த வினைநவில் யானையை உடையவன் பாணடியன் (அகம். 201: 1-3). மன்னர்வழியை யறுத்த மழுவாள் நெடி யோனான பரசுராமன் முயன்று அரிதில் முடித்த வேள்வியில கயிற்றை அரையிற் கட்டிய காணத் தக்க அழகினையுடைய அரிய காவலைக் கொண்ட நெடுந்தூணபோலத் தலைவியின் யாவரும் காண லாகா மாணெழில் மார்பினை நினையுந் தோறும் தலைவன் நெஞ்சம் வருந்தியது (அகம். 220:5-10). வயல்வளம செறிந்த தண்சாய்க்கானம் எனனும் ஊரிலுள்ள அழகிய தணணிய மூங்கிலை ஒக்கும் எனறு கடற்கரைச் சோலையில் ஆயததாா ஆராய்ந்து பாராட்டிய தலைவியின தோள்கள் நல்லெழில் சிதையாமைக்கு ஏதுவாய பாதுகாவ லினைக் கூறுக எனத் தலைவனைத் தோழி வினாவினாள் (அகம. 220:18-22). திரண்ட எழிலாற் பொலிவுபெற்ற வலிய தோளினை யுடைய ஆட்டனத்தியின் நலன்நயந்து காவிரி வவ்வியது (அகம். 222:6-8). தலைவன் தேரிற் சென்று தலைவியை நெருங்கியதும் எழில்மிக்க செவ்வரி பரந்த மையுண்கண்ணில் உவகைக் கணணீர் வரு தலை மறைததுச் சிறிது தலைதாழ்த்தினள் (அகம. 230:11-15). அன்னை வெறியாட் டெடுக்குமுன் தலைவியது பணைத்தோளின் நல்லெழில் அழிவின் றித் தொல்கவினைப் பெற இளமுலை மூழ்கப் பல முறை வெற்பனின் மணந்த மார்பை முயங்கல் இனிது எனத் தோழி சிறைப்புறத் தலைவன் கேட் பத் தலைவிக்குக் கூறினாள் (அகம். 242: 14-17,22). எருதின் திமிலில கிடக்கும் கயிறறைப் போலத் தூறு பற்றி இழுத்தலால் உதிர்ந்த பூமாலை மார் பில் எழிலுடன அசையத் தலைவன் இரவுககுறி வந்தான (அகம். 248:11-14). முசுண்டை என்பான அகவுநர் இரப்பின் நாடொறும் அவர்க்குப் பொற் பூணினைக கொம்பிற் செறித்துப் பொலந்தாரி னைக் கழுத்திற் பூட்டிச் சந்தனம் பூசிய உயர்ந்து அசையும் எழிலுடைய இமிலின் ஏற்றினை முன்ன நிறுத்தி நிறைய உணவைக் குவித்து நெடு தேரைக் களிறறொடு வழங்குவான் (அகம. 249:4-9, முசுண்டை என்பானின் வேம்பி என்னும் ஊா போன்ற நல் எழிலுடைய என் இளநலம் தொலை யினும் தலைவர் அருள் செய்ய வில்லை எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (அகம். 249:9,10). மையெழில் உண்கண் மடந்தையொடு தலைவன் வையைப் புதுப்புனலாடுதல் (அகம். 256:10,11). நரந் தம நாறும் கூந்தலுடைய இளந்துணை மகளி ரொடு புனலாடிய போது தலைவனை அவர்கள் ஏந்தெழில்மழைக்கண் கொண்டு நோக்குந்தோறும் வேட்கை தவிரானாய்க் காமஞ்சிறநதான் (அகம். 263:4-8). கமழும் மணமுடைய கூந்தலையும் நல் லெழில் மழைக்கண்ணையு முடைய நம் காதலியின் பணைத்தோளது மாண்கவினை அருஞ்சுரம் கடந்து வந்து நீ உள்ளினை எனத் தலைவன் இடைச்சுரத் தில் நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 291:21-25). பிரிவில் தலைவி நுதல் பசந்து தோள் மெலிந்து அகன்ற எழிலுடைய அல்குலின் அழகிய வரிகள் வாடப் பகலும் இரவும் மயங்கிக் கண் பனிசோர வருந்தினாள் (அகம. 307:1-5). பரத்தையரது நலம் பாராட்டி எழில் நடையாற பொலிந்து, அவரொடு புனலாடு விழவிற் கலந்துகொள்ளச் செல்லுதல்

நினக்குத் தக்கதாம் எனத் தோழி தலைமகனிடம் கூறி வாயில் மறுத்தாள் (அகம். 326:7,8). நல்லிசை வாய்ந்த திரையன் என்பானது பவத்திரி எனனும் ஊர் போன்ற தலைவியின் நல்லெழிலும் இளமையும் தொலையத் தலைவன் பிரிந்த வழியாகிய உப்பங்கழி ஓதம் மிகுந்துள்ளது (அகம். 340:6-9). மூங்கில் போன்ற தோளையும் சுணங்கணிந்த பூணுடைய மென்முலையைக் கொண்ட நல்லெழில் மார்பையும் முயஙக விரும்பி மீளக்கருதிய நெஞ்சினைத் தலைவன் இடைச்சுரததுக் கழறினான (அகம். 343: 1-3,15). தலைவி ஏநதெழில் மழைக்கண் உடையவள் (அகம். 350:8). வேனிறகாலத்தே வெங்காட்டில மடப்பிணை தழுவிய, விளங்கும் புள்ளிகளையுடைய அறுகோட்டு எழிற்கலை நீரறற கயம நோக்கிச் சென்று நீர் பெறாது நீர்வேட்கையால உண்டான துனபத்தில் தழை உண்ணுதலை மறந்து வருந்தியது (அகம்.353:10-14). நீலமணிபோன்ற நிறமுடைய கழுத்தினையும் அழகிய தோகையினையுமுடைய மயில்கள் இனிதாகிய குரலைபபெற்றனவாய ஓரிடததே கூடி ஆடுந்தன்மையால் எழிலநலம் தோன்றும் (அகம். 358: 1-4). கரிய எழிலுடைய நீலமலர் போனற கண்களுடைய பிணைமான நோக்கம் போன்ற தலைவியின் நோக்கம் பெருங்கவின் கொள்ளப் பிரிநத தலைவர் வந்துவிட்டாா (அகம். 363: 17-19). வற்றிப்போன மரக்கொம்பு போன்ற கவைத்த மருபபினையுடைய எழிறகலைமான் பேய்ததேரை நீரெனக் கருதியோடி நீர் காணாது வருந்திப் பிணைமானை அழைக்கும் (அகம். 395: 8-11). தண்ணிய பொய்கையில் எழில் வாய்ந்த மலர்களையுடைய, துளையுள்ள திரண்ட தண்டினைக் கொண்ட ஆம்பலைப் பறிப்போர் நீர்வேட்கையால் வருந்தினாற் போலத் தலைவியின் இடைமுலைக் கிடநதும் தலைவன் நடுங்கினான் (குறு. 178:1-4) தலைவனின் மார்பு நமககு உரியதாதற்குக் காரண மாகிய குற்றமில்லாத நட்பு எழில் மிக உடைய தாயிற்று எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (குறு. 247: 1,6,7). இனறு மெலிநதுள்ள இம்மூஙகில் போன்ற எழில் மென்தோளை அணைந்த அந்நாளில் பிழையா வஞ்சினம் செய்த கள்வனும் கடப்பாட்டாளனும் புணைபோல் துணையாதற் குரியவனும் தலைவனே என அவன கேட்பத் தலைவி தோழிககு உரைத்தல் (குறு. 318: 5-8). செலவுக் குறிப்பறிநது வருந்தும் தலைவியின கண்ணிதழின விளிமபைக்.கடந்து ஊறும் கண்பனி மதர்த்த எழிலுடைய பூண்களைத் தன்பாற் கொண்ட வனமுலையை நனைத்தது (குறு.348:4,5). தலைவன்களவு நீட்டிப்பதனால் தலைவியின் கண் களினின்று வழியும் கண்ணீர்த்துளிகள் பட்டு அவள் தோள்களின் மூங்கிலை யொத்த எழில் குறைந்தது (குறு. 357: 1,2). பெருந்தோட் குறுமகள் குவளையன்ன ஏந்தெழில் மழைக்கண் உடையவள் (நற். 6: 3,4). பொரிபோன்ற பூவையுடைய புன்க மரததின் எழில்மிக்க ஒள்ளிய தளிரைச் சுணங்கணி வன முலையின் வீற்றுத் தெய்வம் கொள்ளுமாறு அப்பி நிழலிடத்துத் தங்கி மணலிடத்து வண்டலயர்ந்து வருந்தாதேகுக என்று உடன்போக்கு மேவிய தலைவியிடம் தலைவன் கூறினான் (நற். 9:5-9). நொது மலர் உள்ளவிடத்து நின் எழில நலம் தொலைய அழாதே எனத் தோழி தலைவியை வேண்டுதல (நற்.13·1,2). கானத்தில் தலைவனைச சநதித்த இடங் கணடதும் தடுதது நிறுத்த வியலாது தலைவியின் ஏநதெழில மழைககண நீர் பெருககிக் கலுழநதன (நற். 17: 3-5). தலைவனது செலவுக் குறிபபறிநத தலைவி தனது எழுதெழில் உணகண பாவை கணணீர் வெள்ளததில உழலும் நாள இன்னே வநதது போலும் எனத் தோழியிடம் உரைத்தாள (நற். 177: 7-10). யாமததுக் காமநோய் நலிய நல லெழில் குறைந்து துனப மிகக மனததளாயத் தலைவி படருழநதாள் (நற். 262: 3-5). மலைநாடன் புணரின தனது எழில நிறகும் எனறும் பிரியின் மணிமிடை பொன போனற மாமை கெடப பசலை தனது அணிநலம் சிதைக்கும் எனறும் தலைவி தோழியிடம் கூறினாள (நற். 304: 4-7). தெருவில இளைய பரத்தை ஒருத்தி வநததற்கே ஊரார் ஆரவாரிக்க ஆயதொடி யணிநத எழில் மாமேனி மகளிர் காவல் செறியச் செயது தம் கொழுநரைக் காத்து நனமை எயதினர் (நற். 320:3-10). கொடிசசி கையில வைத்திருந்த தேன்கலந்த பாலை வேங்கை மரத்தி லிருநத மந்தியின் குட்டி கவர்ந்தமையின் எழுதெழில சிதைய அழுத அவள் கணகள் மழை பெய்த நீரை ஏற்ற குவளைமலர் போன்றன (நற். 379:1-9). எழுதெழில மழைக்கண (நற். 385:7). பொழுது சாய்ந்தது; மனைக்குச் செலவோம் எனத் தோழி கூறத் தலைவி ஒனறும கூறாது நிற்ப, நலல மார்பின்கண் இளமுலை நனைய மாண்எழில் மலர்க்கண் தெளிநத நீரை உகுத்தன (நற். 398:7-10). எழில்தகை இளமுலை பொலியப பொரிப்பூம் புன் கின் தளிரை அப்பும் இளவேனிற் பொழுதில் தலைவர் வந்திலர் (ஐங். 347). தலைவர் வநதனர்; நீ நின் நலலெழில அல்குல் வாடிய நிலை தீர்க எனத் தலைவியை நோக்கித் தோழி கூறல (ஐங். 351:3-5). எரிக்கொடி வளைந்த சிவநத மலைபோலச் சுடர்ப் பூண விளங்கும் ஏந்தெழில் மார்பினை நீ இனிது முயங்குமாறு, பிரிநது செனற தலைவர் வந்துவிட்டார் எனத் தோழி தலைவிக்கு அவர்தம் வரவுரைத்தனள் (ஐங். 353). 'வம்பமாரியைக் காரெனக்

கருதிப் பேதையங் கொன்றை மலர்ந்தது கருதிப் 'பருவம் வந்தது; தலைவர் வந்திலரே' எனக் கவலற்க; அவர் நின் தகைஎழிலை வாட்டுநர் அல்லர் எனத் தோழி தலைவியை வற்புறுத்தினாள் (ஐங். 462). மூங்கிலின எழிலையும் அணைபோன்ற மென்றோளையும் உடைய வணங்கொடாவிக்கும் கூந்தலுடையாளாகிய உமை, இறைவன் அமர்பல கடந்து நீறணிந்து பாண்டரங்கமாடுங்கால் தாளத்தின் இடைநிகழும் காலத்தினை யுடைய தூக்கைத் தருவாள் (கலி. க. வா. 1:8-10). புணர்ச்சிக்குப்பின் தலைவியின் நுண்ணெழிலையும் மாமையையும் உடைய சுணங்கணி யாகத்தை விடாது நோக்கியும் அமையாது தலைவியின் ஒண்ணுதல் நீவுவது கொண்டு தலைவனது செலவுக்குறிப்பைத் தலைவி உணர்ந்தாள் (கலி. 4:17-19). ஞாயிற்றின் வெம்மை மிகுதியால் வண்டு பொருந்தும் கமழ்கின்ற மதநீரை முன் பெற்று இப்பொழுது தளர்ந்த எழில் வேழம் நீரற்ற நிலத்தை உழும் கலப்பை போல மருப்பூன்றிக் கையை நிமிர்த்துக் கிடந்தன (கலி. 8:2-5). மாணிழை மடவரலாகிய தலைவி ஆணெழில் அண்ணலாகிய தலைவனொடு அருஞ்சுர வழியிற் சென்றாள் (கலி. 9:10-11). வீட்டிடத்துப் பல்லியும் பாங்கொத்திசைத்தன; நல் எழில் உண்கண் இடப் பக்கம் துடித்தன; ஆதலால் கானஞ் சென்றவர் நம் நலம் சிதைக்க மாட்டார்; விரைவில் மீள்வர் எனத் தலைவி தோழிக்குக் கூறினாள் (கலி. 11: 19-22). என்னுடன் வெஞ்சுரத்துக்கு நீ வரின் முகில் துளி பொழியப்பட்ட தளிர் போன்ற எழில்மேனி கவின வாடத் தூற்றை மறைத்து முழங்கும் அழலின் நடுவே ஊடறுத்து வந்த காற்று வீசினால் அவ்வெழில் வாடுவாய் எனத் தலைவியிடம் தலைவன் கூறினான் (கலி. 13:18-21). 'எழுச்சியையுடைய நீலத்தின் ஏந்தெழிலை உடைய இரண்டாகிய மலர் போலும் அகன்ற மையுண் கண்ணினாய்' எனத் தலைவன் தலைவியை நலம் பாராட்டினான் (கலி.14:2). அசோகினது தளிரை ஒக்கும் எழில் நலம் வாய்ந்தவள் தலைவி (கலி. 15:12). துயிலின்றிப் பசந்த கண் வருந்தினவாய் நீர்மல்க நிறம் வாடி அழகு கெடுதற்கும் வளைகள் முன் கையினின்றும் கழல வெற்றியை உடைய எழில் அழிவதற்கும் அஞ்சாமல் தலைவியைத் தலைவர் பிரிந்து அகன்றார் (கலி. 16: 1-3). தொல்லெழில் தொலைந்து தலைவி துயருழப்பத் தலைவன் பகைவர் தந்த நாட்டைக் காவல் புரியப் பிரிந்து சென்றான் (கலி. 17:5,6). தலைவியின் எழிலும் தோற்றப் பொலிவும் கெடும்படி நாடு காவலுக்குத் தலைவன் பிரிதல் (கலி. 17:13,14). மாட்சிமைப்பட்ட எழிலுடைய மூங்கிலை வென்ற தோளினாய் என்பது தலைவியைக் குறிக்கும் விளி (கலி. 20:15). அம்பு ஊடறுத்துச் செல்ல வியலாதவாறு செறிந்த சுற்சுளை யுடைய அரியவழியில் பெருமை யுடைய கழுத்தினையும் எழிலையு முடைய ஆண்மான் பின் பிணைமான் நீங்காமல் திரியும் (கலி. 20:21-23). மலையகத்து யானைகள் இருக்கும்போது, உலர்ந்த மூங்கில் தீப்பற்றி வளைத்துக் கொள்ளக் கணைய மரம் போன்ற தடக்கையை யுடைய எழில் வேழம் தீயை மிதித்து வழியுண்டாக்கித் தன் இனத்தைக் காத்தது (கலி. 25;5-11). தலைவியின் கரிய எழிலுடைய நீலமலர் போலும் மையுண்கண்ணை அவள் மகிழும்படியாகத் தலைவன் மருவுதல் ஊட்டினான் (கலி. 27:17). பூவினது எழிலை இழந்த தலைவியின் கண்கள் உறக்கத்தைக் கொண்டு ஆற்றியிராமல் தனிமை நோயால் வருந்தின (கலி. 28:18,19). வயவு நோய் தொல்லெழிலைக் கெடுக்குமளவன்றி மிக வருத்தியது (கலி. 29:1). மூங்கிலின் எழிலை யுடைய அணை போலும் மெல்லிய தோளையும் மானினது நோக்கையும் உடைய பரத்தையருடன்கூடித் தலைவன் தலைவி துன்பமுறுமாறு அவளைப் பிரிந்து மறந்துள்ளான் (கலி. 30:9,10). தலைவியது பூவின் எழிலுடைய மையுண் கண் வருந்தப் பிரிந்தவர் வேனில்வந்தும் வந்திலர் (கலி. 33:8,9). வெற்பன் மணம் செய்து கொள்ள வந்துள்ளான்; இனி, பூவினது எழிலையுடைய நின் உண்கண் பொலிக எனத் தோழி தலைவியிடம உரைத்தாள் (கலி. 39:50,51). தான் கூடின மகளிருடைய தொல்லெழில் கெடின் அவரைக் காட்டிலும் தலைவன் வருத்தமுறுவான் (கலி. 40:17,18). தலைவியின் தளிரன்ன எழில்மேனி அழகு கெடுமாறு தலைவன் நோய் செய்தான் (கலி. 40:20). ஒடுங்காத எழில்வேழம் தான் விரும்பிய பிடிக்குற்ற சூலால் உண்டான வயா நோய்க்கு மனம் பொருந்தித் தீங்கட் கரும்பினை முறிக்கும் (கலி. 40: 26-28). புதரின் தழையை விரும்பி யுண்ட, இணைந்த கொம்புகள் எழில் கொண்ட, மலை நடந்தா லொத்த நடையினால் விளங்கும் எழில் யானைகளை உடையவன் மலைநாடன் (கலி. 43: 20-22). புகரினையுடைய மதத்தினையும் எழிலையுமுடைய யானைகள் பூவோடு கூடிய நீரைத் திருமகள்மேல் சொரிதல் (கலி. 44:5-7). போதெழில் மலர் உண்கண்ணினை யுடையவள் தலைவி (கலி. 49:10). முரண் செய்த புலியை நீடிய மருப்பினை யுடைய எழில் யானை கோட்டினது நுனியாற் குத்தி மார்பினைப் பிளந்து இகல் தீர்ந்தது (கலி. 52: 1-4). கண்டார் காதல் கொள்ளக் காரணமான மானோக்கின் மடநல்லாய், நலம் நெருங்கின நின் எழில் நின்னைக் கண்டாரை மயக்க

முறுத்தும் என்பதை அறிதியோ, அறியாயோ எனக் கைக்கிளைத் தலைவன் தலைவியை வினவினான் (கலி. 56:16-18). ஏந்து கோட்டு எழில் யானைகளை யுடைய பகைவர்க்குப் பாண்டியன் வேல் துன்பஞ்செய்து சிவந்தது போலத் தலைவியின் கண்கள் சிவந்தன (கலி. 57:8-11). பேரெழில் மலருண்கண் உடையவள் தலைவி (கலி. 58:2). கூர்மையுடைய எழிலையும் ஒள்ளிய தித்தியாகிய வரி நிறைநத அல்குலையும் உடையவளே எனத் தலைவியைத் தோழி விளித்தல் (கலி. 60:3,4). 'அலர்ந்த செவ்வி குலைந்து முற்றின எழிலை யுடைய நீல மலரென்று பிறர் கூறும்படி வருத்தமுற்ற மாவடு போன்ற உணகண்ணுக்கும் மற்றுமுள்ள எல்லா உறுப்புககளுக்கும் பெரிய பசப்புண்டென்று சொல்லுக' எனத் தலைவி தலைவனிடம் கூறினாள் (கலி. 64:20 22). தலைவியின சுணங்கணிநத பூண் கொண்ட ஆகம் வேங்கைப் பூவினது முற்றின எழிலைக்கொண்டது (கலி. 64:26,27). உததம இலக்கணங்கள் ஓங்கும் சிறந்த எழிலையுடைய யானையின் கமழும் நாற்றத்தினையுடைய மதநீரிற் படிந்த வண்டுகள, நீல மலரை விற்பவர் வயலிற பறித்த மலர்களைத் தலையிற் சுமநது கொண்டு வந்த போது அம்மலர்களைச் சூழ்ந்து ஊர் புகுந்த வணடுக்கு அம்மதநீரை விருந்து செய்தன (கலி. 66:1-4). 'எழிலை யுடைய மையுண்கணணினைக் கொண்ட பரத்தையர் தம் கோதைகளால் அலைத்த புண்ணையும் வடுவையும் காட்டித் தலைவன அன்பின்றி வரின், யான் புலப்பேன் எனறிருப்பேன்; ஆனால் செயலற்ற நெஞ்சு அவனைக் கண்டால் கூடுவேன என்று கூறுகிறது' எனத் தன் நிலையைத் தலைவி தோழிக்குரைத்தல் (கலி. 67:6-9). புதிதாகக் கூடிய எழிலையுடைய பரத்தையரின் இலங்கெயிறு உறுதலின் நனிச்சிவந்த வடுக்காட்டித் தலைவன் நாணின்றித் தலைவியிடம் வருதல் (கலி. 67:14,15). தளிரிடத்தே வீழ்ந்து அழகு பொலிவு பெற்ற தாது போலும் எழிலையுடைய தலைவியின் மாமையையும் சுணங்கையும் கவர்ந்து கொண்ட தலைவன் பின்னர் அவற்றை அவளுக்கு அளிக்கத் தவறினான் (கலி. 77:8,9). என்கண் பூவினது எழிலையுடைய நலம் போம்படி பொன்னெனப் பசந்தன, தொன்னலம் இழந்த கண் துயில் பெறலையும் யான் வேண்டேன; பரத்தையர் நீ செய்த கொடுமைகளை என்னிடம் வந்து வருந்திக் கூறாதிருந்தால் போதும் எனத் தலைவி தலைவனிடம் ஊடலொடு மொழிந்தாள் (கலி. 77:12-15). தந்தையின் தொடியைத் தன் மகன் கையிலிட்ட பரத்தையின் செயல்கண்ட தலைவி தன் மகனை நோக்கி, 'அஞ்சாதே நீயும் தவறிலை; நின் கையில் இதனையிட்ட பூவின் எழிலையுடைய உண்கண் கொண்ட பரத்தையும் தவறிலள்; இதனை உன் கையிலணிந்தவள் யார் என்று வினவிய யானே தவறுடையேன்' என உரைத்தாள் (கலி. 84:36-41). உன் தநதை கூறிய பொய்ச்சூளை மெய்யாகத் தெளிந்து பூவினது எழிலையுடைய உண்கண் பனி பரப்பக்கண் துயிலாது வருந்தும் உன் தாயருக்குள்ள பங்கை உண்பாயாக எனத் கூறித் தலைவி தன் குழந்தைக்கு உணவு ஊட்டினாள் (கலி. 85:26-28). 'மென்தோளாய், நின் நல்லெழிலை எனக் கருள்வாயாக; யான் அதனை நுகர்வேன்' எனத தலைவன் தலைவியிடம் கூறினான (கலி. 90'26). ஏநதெழில் மார்ப, எனத் தலைவனை விளித்து நீ எங்குச் சென்று இஙகு வந்துள்ளாய் என அவனது பரதநதைமை தோன்றத் தலைவி வினவினாள் (கலி. 96 1-4). ஒழுகும் அறல் நெறித்த கதுபபாக, பிறழும கயல் மாட்சிமைப்பட்ட எழிலுடைய உண்கண்ணாக, கார்மலர் வேய்ந்த கமழ்பூம் பரப்பில் நாணுசசிறை யழித்துப் பாளனைப் புணையாகக் கொண்டு புதுபபுனலாடினையோ என்று வினவு முகத்தான் தலைவனது பரத்தைமையைத் தலைவி சுட்டினாள் (கலி. 98:13-19). தன் கொம்பின் வலியழியத் தழுவியவனை அலைத்துத் திரிந்து உழக்கும் குறையாத சீற்றத்தையுடைய எழிலேறு அஞ்சுதற்குக காரணமான மருந்தினை ஆயர் புகைக்க அதற்கு வெகுணடு திரியும் கொலகளிறுபோல் அவ்வேறு காணப்பட்டது (கலி. 104:41-44). குறையாத சீரும நோககினார் கணணை வாங்கிக் கொள்ளும் எழிலும கொணட ஆய்ச்சியரும் ஆயரும் வளபபமுடைய ஊரிலே குரவையாடினர் (கலி. 104:60-62). மாலையே, வலியில்லையாம்படி துறந்தாரை நினைத்தலின் கயம் பூத்த போது போல் குவிந்த என் எழிலுடைய நலத்தை எள்ளுகின்றாய்; ஆனால், வண்டு ஆர்ப்ப மலரும் கோட்டுப் பூப்போலக் காதலரைப் புணர்ந்தவர் அழகை நீக்காய்' எனத் தலைவி மாலைப் பொழுது கண்டு இரங்கிக் கூறினாள் (கலி. 118:9-12). கோதை ஆயமும் அன்னையும் அறியத் தலைவியின் பூவின் எழிலை யுடைய கண்கள் புகழ் நலனை இழக்கக் காதல் செய்தருளாது தலைவர் பிரிந்து சென்றார் (கலி. 122:1-3). 'மாட்சிமையுடைய எழிலையும் காதலையுமுடைய மகளிரொடு பொருந்தித் தலைவன் நம் வருத்தத்தைக் காணும் பண்பில னாதலை அறிவேன்; அறியினும் பேணி அவன் சிறிது அளித்தக்கால் நாணற்று நெஞ்சம் நெகிழ்தலும் காண்பன்' எனத் தலைவி தன் இயல்பைத் தோழிக்கு உரைக்கின்றாள் (கலி. 122:8-11). மாலையில் கோவலரது தீங்குழலால் நெஞ்சு வருந்தத் தலைவியது பூவின் எழிலைக்கொண்ட உண்

கண் தனிமை கொண்டு வருந்தும் (கலி. 130:14-16). நோக்குங்கால் அந்நோக்கினாலே பிறர்க்கு வருத்த முண்டாகும் பூவினது அழகைத் தன்னிடத்தே கொண்ட புகழ்சால் எழிலுடைய உண்கண்ணி னாய் எனத் தோழி தலைவியை விளித்தாள் (கலி. 131:4,5). மழை விரும்பும் பெரிய கூந்தலையும் மதர்த்த நோக்கினது எழிலையுடைய கண்ணினை யும் கடலிற் பிறந்த முத்தின் அழகை ஒக்கும் முறு வலையு முடையவளே, நின்பால் நோய் செய்தான் திறன் கிளந்து ஊசற்பாடல் ஒன்று பாடுக என்று தலைவியைத் தோழி கேட்டாள் (கலி. 131:21-24). எழில் மருப்பினையுடையஎழில் வேழம், மிகுதியாய்ச் சொரியும மதத்தால் பாகனுக்குச் செய்யும் தொழில்களைத் தவிர்ந்து, தன்னை நெறிப்படுத் தும் தோட்டியையும் கைகடந்து செல்லுதல் (கலி. 138:1,2). மாணிழை மார்தரார் அழகால் வந்த வருத்தம் என்று கூறும்படி காமனது ஆணையால் வந்த காம நோயாகிய படை என்னைக் கண்டார் இகழுமாறு யான் கலங்க வந்து என் ஆண்டன்மை யின் எழிலாகிய மதிலை முற்றியுடைத்துப் பின் உள்வாயை அழிக்கின்றது என்று மடலேறுந் தலை வன் சான்றோரிடம் கூறினான் (கலி. 139.20-23). காமக் கடும்பகை ஆண்மையை அழித்தவால் மட லேறும் வடிவுகொண்டு தோன்றிய தனக்கு எழில் நுதலினைக் கொண்ட தலைவி தந்த மடன்மா ஏம மாயிற்று எனத் தலைவன் சான்றோரிடம் உரைத் தான் (கலி. 139:24,25). நகுதற் குறிப்பினைப் பிற ரறியாமல் கண்ணினும் முகத்தினும் நகுபவள் இப் பொழுது பெண்தன்மை யின்றி எல்லோரும் கேட் பக் கூறிப் பெருகச் சிரித்து, சிரித்த அப்பொழுதே பூ வெடித்த தன்மையை ஒத்த புகழமைந்த எழிலு டைய கண்கள் அழகுடைய இமை நீர் மல்க அழும் (கலி. 142:7-12). நல்லெழில் மார்பனைக் கூடித் தலைவி தேற்றாவின் விதைகொண்டு தெளிவித்த நீர்போலத் தன் சிதைவு தெளிந்து பழைய நலத் தைப் பெற்றாள் (கலி. 142:64-66). வறங்கூர் வானத்து மழைத் துளிக்காகத் திரிந்து வருந்தும் வானம்பாடிக்கு மேகம் மழை பெய்தாற் போல் நல்லெழில் மார்பன் முயங்கியமையின் தலைவி அல்லல் தீர்ந்தாள் (கலி. 146:52-55). தலைவி காத லன் வரக்கண்டு துயரமெல்லாம் மறந்து நாணம் தோன்ற இறைஞ்சி மெய்யிடத்தே அழகும் மனத் திடத்தே நகையும் தோன்ற நல்லெழில் மார்ப னிடத்துச் சேர்ந்தாள் (கலி. 147:67-71). சங்கைப் போன்ற திருமேனியினையும் மூங்கில் முளையை உண்ணும் எழில் வேழக் கொடியினையும் கலப்பை யாகிய படையினையும் ஒற்றைக் குழையினையும் உடைய பலதேவனாகவும் திருமால் இருக்கிறார் (பரி. 1:3-5). திருமால் எழில் மார்பினை யுடையவர் (பரி. 1:60). யமன் தன் மெய்யிற் பிரித்து வெள் ளாட்டு எழில் மறியைச் செவ்வேளுக்குத் தந்தான் (பரி. 5:61,62). தலைவி முல்லையின் முகையை வென்று எழில் வாய்ந்த முத்தை ஏய்க்கும் வெண் பல்லை யுடையவள் (பரி. 8:76). வானவன் மகளாய தேவசேனையின் மாணெழிலையுடைய மலருண்கண் கொண்ட மடமொழியவராகிய பாங்கியர் வள்ளி யின் தோழிமாருடன் போர் செய்ய அஞ்சி முரு கனைச் சூழ்ந்துகொண்டனர் (பரி. 9:57-60). எழில் மாடத்தில் செய்து வைத்த வேங்கையைக் கண்ட பெண்யானை அதனை உண்மையான புலியெனக் கருதி அது களிற்றின்மேல் பாயும் என்றெண்ணி அஞ்சித்தன்மேலிருந்த மகளிர் நடுங்கும்படி பாகருக் கடங்காமல் சிதைந்தது (பரி.10:45-48). எழில் வேழத் திற்கு (யானைக்கு) பிறப்பு நாள் பரணி; பரணியால் அதனையுடைய மேடராசி ஈண்டு எழில் வேழம் எனக் குறிக்கப்பட்டுள்ளது (பரி.11:2). தைந்நீராடும் பொழுது வேயின் எழிலை வென்ற தோளழகு உள்ள ஒருத்தி நீலமலரைத் தன் காதில் செருகிக் கொணடாள் (பரி. 11:93,94). வையைப் புனலாடும் போது காதலனிடம் ஊடிப் புலந்து நின்ற ஒருத்தி பூ நாற்றத்தையும் எழிலையு முடைய அரக்கு நீரால் நிறைக்கப்பட்ட வட்டை அவன் மார்பி லெறிய அந்நீர் அவளது எழில் உண்கண்ணின் வேலேறு போலும் நோக்கம் பட்ட புண்ணிற் குருதி சோர்வது போலச் சோர்ந்தது (பரி. 12:66-70). எல்லா மலர்களும் மணக்கின்ற இரு கரை களுக்கிடையே சென்று, மாலையில் தெளிந்து அணைகளால் தேங்கி நின்று வையைநீர் துறக்க உலகத்தின் எழிலைக் காட்டும் (பரி. 12:81-84). பரங்குன்றத்தின்கண் ஓவியந்தீட்டப்பெற்ற எழிலு டைய அம்பலம் அம்பினது ஏத்தொழில் நிலை பெற்ற காமவேளின் படைக்கொட்டிலை ஒக்கும் (பரி. 18:27,28). கரையிலிருந்து சாய்ந்து வளைந்த கொறுக்காந்தட்டையை முட்டும் பலநிற மலர்கள் நிறைந்த சுனை, எழிலணிந்த திருவில்லை வளைத்த வானம் போன்று காணப் பட்டது (பரி. 18:48-50). தன்னொடு பொருது மாறுபடும் புலியைப் பிளந்த புகர்நுதலை யுடைய எழில்யானையின் கோட்டின் கறையை மேகம் மழை பெய்து தெளிவுறக் கழுவி யது (பரி. 20:3-5). பரங்குன்றத்தில் பலவாறு திகழும் மகளிருடைய செயல்களை நினைப்பின், அவை கைவல்லான் எழுதிய ஓவியத்தின் எழில் போன்றன (பரி. 21:27-29). நீலமணி போன்ற நிற முடைய மயிலைத் தொழிலானும் எழிலானும் மாறுபட்டு ஒளிவிளங்கும் மகளிர் களிறனைய தம் கணவன்மாரொடு குளவாய்நகர் அமர்ந்தானை

இறைஞ்ச வந்தனர் (பரி.தி. 1:61-64). எழில் வானம் நிலம் தெரியாதவாறு மிகுந்த மழை பொழிந்தது (பரி.தி. 2:1,2). பாண்டியனின கூடன் மாநகரில் மணிபோன்ற எழிலையும் மாந்தளிர் போன்ற மேனியையும் முத்துப் போன்ற பற்களையும் பவளச் செவ்வாயினையு முடைய குலமகளிர் தம் கொழுநரொடு வையைப் புனலாடப் புதுநீர் வடிய விலலை (பரி.தி. 2:46-50).

2. எழுச்சி. போர்நிகழும் காலமாதலின் தனித்துறையும் மனைமகளிர் இனிப் பூசு கொள்ளார் என்று கருதிப பூவிற்கும் பெண்டு எம்மினும் பேரெழில-பெரிய எழுச்சி-குன்றிப் பிறர்மனை புகுவாளோ என மறக்குடிமகள் அவள் பொருட்டு இரங்கிக் கூறுவள் (புறம். 293:4-6). விறலியர் மலர்ந்த வேங்கை மரம் போன்று வயங்கிழை யணிநது எழிலும் அழகும் சிறநதனர் (பதி. 40:22,23). ஏநதெழிலையும் குளிர்ந்த கணகளையும் விறலியர் பெற்றிருநதனர் (பதி. 54:4). ஒணணுதலையும் குறும்பல் கூந்தலையும் மடப்பமுடைய நோக்கையும் முத்துவடம் அசையும் வனமுலையையும் கூர்மையுடைய எழில்நலத்தையும் கொணட ஒரு பரத்தையொடு தலைவன புனலாடினான (அகம். 116:6-10). உப்பங்கழியிலுள்ள சுறா மீன் எறிந்ததால் தேர்ப்பாகன நிறுதத எழிலும் பயனும் குனறிய குதிரைகள விரைந்து செல்லும் நடையைத் தவிர்ந்தன (அகம். 190:11-14). ஏற்றின் தன்மை பொருநதிய எழில் நடை உடையவன ஆட்டனத்தி (அகம். 236:14,16). நுண்ணிய நிறம பொருந்திய தளிரை ஒத்த எழில் நலம் உடைய தன் மகளின துயர்க் காரணம் அறிய அன்னை வெறியாட்டெடுத்தாள் (அகம். 242:7-12). வல்வினை யுடைய கொடுநோக்கு ஆடவர், குன்றினை அடைந்து இனிய முழக்கம் செய்யும் எழில் ஏற்றினைக் கொன்று அதனது தசையை நெருப்பிலிட்டுத் தினற வேட்கை தீரத் தோப்பியைப் பருகினர் (அகம். 265: 11-17). அன்னை களவொழுக்கத்தை அறிந்தவள் போல அவன் யாங்குளன் என வினவுவள்; அவள் தலைவனின் எழில் முதலியவற்றை என்னால அறிதலும் உரியள் என்று தோழி தலைவன சிறைப்புறத்தானாக வரைவு கடாயினாள் (நற். 145: 5-8). எழில் நீலத்தின் ஏந்தெழிலை உடைய இரண்டாகிய மலர் போலும் அகன்ற மையுண்கண்ணினாய் எனத் தலைவன் தலைவியின் நலம் பாராட்டினான (கலி. 14: 2). தலைவியின விருப்பம் பொருநதிய எழில் அழகு வாடுமபடி நீ கெடுத்தது மலையிலுள்ள எரிபோலும வேங்கையின் பூங்கொத்தை அவள் அழகு ஒக்கும் என்னும் பொறாமையினாலோ எனத் தோழி தலைவனை வினவினாள் (கலி.45: 16-19). பக்கம் உயர்ந்த எழில் மகாணட அகனற அல்குலையுடைய கொடியை ஒககும் பரத்தையரின் முலை மூழ்கியதால், தன்மார்பிற் பூசிய சநதனம் அழியத் தலைவன் பண்பின்றித் தலைவியிடம் வருதல் (கலி. 67: 10,11). ஊடல் கொண்டு ஒருத்தி வண்ணநீர் பூரித்த வட்டினைத் தன் காதலன் மார்பில் எறிய அவன் ஊடல் தணிக்க வீழ்ந்து வணங்கினான. வணங்கியவனை வட்டெறிந்ததால வீழ்ந்ததாகக் கருதி அவள் அஞ்சி மயங்கி அவனது நல்ல அழகுடைய எழில் ஆகத்தைச சேர்ந்தாள் (பரி. 12: 68-74).

3. உயர்ச்சி. சோழன் முடித்தலைக கோப்பெருநற் கிள்ளி புலிததோலாற் செயயப் பட்ட கலசம் சிதைய எய்கணை கிழித்த பகட்டெழில-பரந்து உயர்ந்த-மாாபினனாய்க கூற்றம் போனற களிறறின் மேல் உள்ளான் (புறம். 13: 1-4). பூண சுமநது அழகிய பெருமையுடைய எழிலிய செம்பொறி பொருந்திய மார்பினையுடைய பீடுகெழு நெடுநதகை சோழன் நலங்கிள்ளி (புறம். 68: 4-7). மடநதை சுணங்கணிந்து எழிலிய அணனாந்து நிறகும் இளமுலையும் பணைத்தோளும் உடையவள (புறம். 354: 8,9).

4. பெருமை. அற்ற கோட்டையுடைய எழிற்கலை-பெரியகலைமான்-புலியிடத் தகப்பட, சிறுகன்றை அணைத்துக் கொண்ட பெணமான பூளைச்செடி ஓங்கிய பறநதலையில் ஆளற்ற அருஞ்சுரததில வேளை வெண்பூவைக் கறிக்கும் (புறம். 23: 18-22).

5. அழகுடைய பீலி (ஆகுபெயா). தலைவர் நம்மோடு கூடியதனாற் பெற்ற பயன எழில-அழகுடைய பீலி-உதிர்ந்த மயில் போலப் பொலிவிழநத நாணத்தால் நாம் நடுங்கச சிலம்பு முதலிய அணிகலன் ஒலிப்பப் படுக்கையிலே கிடந்து உலமர நமக்குக் காமத்தீத் தோன்றியது எனறு தலைவி தோழிக்குக் கூறினாள் (கலி. 137: 5-7).

எழிலி - 1. மேகம். எழிலி - மேகம் - தோயும் இமிழிசை அருவி பொருந்திய பொன்னிறம் கொணட நெடிய உச்சியை யுடையது இமயம் (புறம். 369: 23,24). தண்துளி பல பொழிந்து எழிலி முழங்கும் மலை போல வானளாவ நெற்குவியலைக குவிததுள்ளனர் (புறம். 391: 1-3). உயிர்கள் அழியப் பல ஆணடுகளாக நடுங்கச் செய்து உலகத்தைப் பாதுகாத்தலை ஏற்றுக் கொணட தணணியல் எழிலி பெய்யாது மாறி மழை பொயத்தாலும் சேரலாதன் பரிசிலர்க்குப் பொருளைத் தருதலிற் பொய்க்க மாட்டான் (பதி. 18: 8-12). மனனுயிர் அழியப் பல ஆணடு மாறித் தண்ணியல எழிலி பெய்யா விடினும் இமையவரம்பன நெடுஞ சேரலாதன்

இரவலர்க்கு வயிற்றுப் பசி மிகும்படியாகக் குறைவாகக் கொடுக்க மாட்டான் (பதி. 20:24-26). கடலில் நீரைப்பருகி வலமாக எழுந்து மலைக ளிடத்தே தங்கிப் பின் விரைந்த செலவையுடைய எழிலி பெருமழை பெய்தது (முல்லை. 4-6). பறை போல் ஒலிக்கும் எழிலி மண்ணகமெல்லாம் குளிர்ப் பத் தண்மழை பொழிந்து இடிமுழக்கம் தவிர்ந்தது (அகம். 23:1,2). புள்ளிகளையும் வரிகளையுமுடைய வானம்பாடி பாடவும் அருளாது துளி துறந்து எழிலி நீங்குதலின் மேட்டுப்பகுதியில் உள்ள மரம் பொலிவழிந்தன (அகம். 67:1-4). மலை உச்சி யில வளைந்துள்ள நிறம் பொருந்திய வானவில்லை யும் முரசம் போன்ற முழக்கினையு முடைய எழிலி கடல்நீரைப் பருகி வலப்பக்கமாகச் சூழ்ந்து திசை மறையுமாறு மழை பொழிதலின் காட்சிக்கு இனிமைபொருந்தி நாடு அழகு பெற்றது (அகம். 84: 1-5). செழியன் ஆலங்கானத்தில் அமர்கடந்து உயர்த்திய வேலினும் பலபடியாக மின்னி முர சென விசும்பில் இடிமுழக்கித் திருமால் மார்பி லணிந்த மாலை போல விண்ணில் வான வில்லை வளைத்து நிலம் பயன்களை விளைக்கத் தண் பெயல் எழிலி பரவி இறங்கிப் பொழிந்தது (அகம். 175:10-18). மிக உயர்ந்த விசும்பிடத்து நீர் மிக்க நிறைந்த சூலினைக் கொண்ட தண் குரல் எழிலி ஒள்ளிய மின்னல்கள் தோன்றப் பெய்தமையால் மாலைக் காலம் இருண்டது (குறு. 314:1-3). நிலம் நீர் நிறையக் குன்றம் தழைக்கப் பைஞ்சுனைப் பயிர்கள் வளரக் குறவர் அழித்த குறைபட்ட நறைக்கொடி மீண்டும் வளர்ந்து சந்தன மரத்தைச் சுற்றிச் செழிக்க மழைபெய்யும் தொழிலையுடைய எழிலி பெய்து தென்திசை எழுந்தது (நற். 5:1-6). 'எழிலியே, தலைவியைப் புணர்ந்தினிது நுகர்ந்த சாரலிலுள்ள நல்லூரில் விரவு மலர்கள் உதிர வீசி இரவில் பெய்துதவியமையால் உலகிற்கு ஆதார மாகப் பலர் தொழக் குன்றின் கோடுதோறும் பொருந்தி நீ உலாவுக' எனத் தலைவன் மழையை வாழ்த்தினான் (நற். 139). இன்குரல் எழிலி கீழ்க் கடலில் நீர் முகந்து மேற்குப் பக்கம் எழுந்து இருண்டு உலகம் விளங்கக் கம்மாளர் செம்பினாற் செய்த பானையைக் கடைந்தாற்போல மின்னி எவ் விடத்தும் பெய்யும் தன் தொழிலை மேற்கொண் டது (நற். 153:1-4). வானம் மலைமுழை போன்ற மையிருள் பரப்பிப் பலவாய இடியொலி கொண்ட எழிலி முழங்குவதும் நீங்கவில்லை (நற். 154:1-3). மின்னலால் இருளினைப் பிளந்து முழங்கும் குரலை யுடைய எழிலி சூல் முதிர்ந்தமையால் பெய்து தனது கடன் தீர்த்தது (நற். 228:1,2). வலிமையொடு இக்கல்கொண்டு சினந்து புலியைக் கொன்ற யானையின் செங்கோட்டைக் கழுவி இன்குரல் எழிலி மழை பொழிந்து வில்லாலடித்த பஞ்சு போல வெண்மேகமாக மாறிக் கோடுயர்ந்த நெடிய மலையினில் இயங்கும் (நற். 247:1-5). முல்லையைக் காட்டி இவை நின் பல்போல் மலரும் காலத்து வருவேம் என நின் நுதலைத் தடவிச் சென்ற தலைவர் நம்பால் விருப்ப முடையராய் வாராத பொழுதில் சுரநெறியில் மலைப்பக்கம் மறையக் காலிறங்கித் தண்மேகம் விண்ணிடத்தே இடியிடித்து மழை பெய்தது ஆதலால், மணிநிற எழிலி அறியாமை யுடையது எனத் தோழி பிரி விடை மெலிந்த தலைமகளை வற்புறுத்தினாள் (நற். 316). முதற்பெயலைப் பொழிந்த தண்ணிய எழிலியால் அழகு பெற்ற காட்டில் அகன்ற மேலிட மெல்லாம் பரந்த விரைந்து செல்லும் சிவந்த மூதாயினை (தம்பலப்பூச்சியை) கண்டும் கொண்டும் சிறிது நீ விளையாடுக என் உடன் போக்கில் தலைவியிடம் தலைவன் கூறினான் (நற். 362:3-6). இடைச்சுரத்து எழிலி உலாவியது கொண்டு கார்ப்பருவம் வந்ததாகக் கருதித் தன் காதலியை ஆற்றுவிக்கத் தன் மார்பிற் பூசிய சந்தனத்திலும தண்ணியனாய்த் தலைவன் வரு கிறான் எனக் கண்டார் கூறினர் (நற். 394:7-9). மழையைப் பெய்துவிட்டுச் செல்லும் எழிலி தாம் முன் தங்கிய மலையிடத்தே சென்று சேர்ந்தன (நற். 396:1). குன்றக் குறவன் தன் தொழிலுக்கு மழை வேண்டி ஆர்ப்பின் எழிலி நுண்பல துளியைப் பொழியும் (ஐங். 251:1,2). ஒளி நிறைந்த எழிலி மிக்க துளியைச் சிதறிக் கார்ப் பருவத்தைத் தொடங்கியது (ஐங். 411:1,2). வானில் வளைத்து ஒலியையுடைய எழிலி தலைவன் தேரிற் செல்லுதல் தடைப்பட மழை பொழியத் தொடங்கியது (ஐங். 428:1,2). நீர்ப்பட எழிலி வீசுதலால் கானம் மழை பெய்தலை ஏற்றுக் கொண்டது (ஐங். 433: 2,3). வறந்த உலகம் செழிக்க ஒலிக்கும் ஓசையை யுடைய எழிலி மழைபொழிந்து கார் காலத்தைத் தோற்றுவித்தது (ஐங். 452:1,2). அரசு பகை தணிந்து எல்லோரும் மீளும் வண்ணம் முரசொலி போல இடித்து ஒலியுடைய எழிலி கார்காலத்தைத் தொடங்கியது (ஐங். 455:1, 2). இயற்கை நலம் தொலைந்து இங்கு யாம் துயருழப்பத் துறந்து சென்ற காதலர் செல்லும் அரிய வழியில் கல்லின் மேலுண்டான வெம்மை நீங்க மழை பொழிக என இனிய ஓசையை யுடைய எழிலியை இரத்தல் நமது கற்பிற்கு இயைவதோ என்த் தலைவி தோழியைக் கேட்டாள் (கலி. 16:5-8). வலப்பக்க மாக உயர்ந்தெழும் எழிலியும் பெரிய விசும்பும் நிலனும் நெடிய இமயமுமாகத் திருமால் திகழ்

கிறார் (பரி. 1:47,48). கார் காலத்தை எதிர்ந்த நிறைந்த சூலை யுடைய எழிலி எங்கும் பரந்து இருப்பது போல் கடற்பரப்பினுள் பரந்து சுற்றிய சூர்மாவைச் செவ்வேள் அழித்தார் (பரி. 18:1-4). எழிலி இசை ஒலிக்கின்ற இடங்களில் மேலே எடுத்துக்காட்டப் பெற்ற சாந்தாற்றி போலத் தம் இரு சிறகுகளையும் விரித்துப் பொறிகளை யுடைய மயில்கள் ஆடின (பரி. 21: 30-32). விண்ணிற் பொருந்திய எழிலி மழை வளம் பெருக்க அந்நீர் மலையினின்றும் இழிந்து நான் மாடக் கூடலார் எதிர் கொள்ள வந்தது (பரி. தி. 1:1-3).

2. மழை. காலந்தப்பாத எழிலி – மழை - பெய்யும் காலத்தைப் பார்த்துச் சிறு நுண் எறும்புகள் வரிசையாக முட்டை கொண்டு மேட்டு நிலத்தை அடையும் (புறம். 173:5-7).

3. கார்ப்பருவம் (ஆகுபெயர்). தண்மையும் இடிமுழக்க முமுடைய எழிலியில்-முகிலையுடைய கார்ப்பருவத் தில் - கடல்நீரை முகந்து கொண்ட நிறைந்த சூலை யுடைய மேகம் மினனலுடன் வலப்பக்கமாக எழுந்து முழங்கி, வெயிலால் வருந்திய மடப்பிடி களிற்றொடு வெள்ளத்தில் முழுகி இன்புற நிலனும் விசும்பும் நீரியைந்து ஒன்றும்படி நாழிகை வட்டி லால் பொழுதறிவதன்றிக் கதிரவனைக் காண இயலாது மக்கள் அஞ்சுமாறு எங்கும் பரவலாகப் பெருமழை பெய்தது (அகம். 43:1-8).

எழினி - 1. அதியமான் நெடுமானஞ்சி. இவன் குதிரைமலைக் குரியவன்; கூர்வேலையும் கூவிளங் கண்ணியையும் வளைந்த பூணையு முடையவன்; கடைஎழுவள்ளல்களுள் ஒருவன் (புறம். 158:8, 9). கன்றை மேவிய ஆனிரை காட்டிடத்தே ஏதமின்றித் தங்கவும் வழிப்போக்கர் வேண்டுமிடத்துத் துன்ப மின்றி உறையவும் களத்தில் நெற்பொலி காவ லின்றி யிருக்கவும் பகைகடிந்து செங்கோலாட்சி புரிந்தவன்; வையகம் புகழ்ந்த போர் செய்யும் ஒள்வாளை யுடையவன்; பொய்யாதவன். இவன் பொருது மாய்ந்ததும் ஈன்றோள் நீத்த குழவி போலச் சுற்றத்தினர் வருந்தத் துன்பமிக்க நெஞ்ச மொடு உலகு கவன்றது. உழவன் விதையை உண் பது போலக் கூற்றுவன் எழினியின் உயிர் பருகி னான் எனத் தகடூர் பொருது வீழ்ந்த எழினி குறித்து அரிசில்கிழார் பாடியுள்ளார் (புறம். 230). பந்து புடைத்தனன தாளத்துடன் கூடிய அடி யீட்டினையும் சிலவகைச் செலவினையு முடைய குதிரைகளை யுடைய பல்வேல் எழினி ஏவிய பணியை முடிக்க மறவர், கட்பருகிய மகிழ்ச்சியால் முனைகடந்து ஆனிரை கவர்ந்து வந்தனர் (அகம். 105:9-15). வெம்போரில் பகைவரை நடுநிலை யுண்டாகும்படி வஞ்சியாது எதிர்நின்று கொல்லும் பல வேற்படையுடைய எழினி மறவருடன் சென்று போர் முனையில் தனக்குரிய ஆநிரையைக் கைக் கொண்ட பகைவரிட மிருந்து அதனை மீட்டுக் காத்தான் (குறு. 80:4-7).

2. பொகுட்டெழினி (அதியமான் மகன்). அதியர்கோமா னாகிய கொடும்பூணணிந்த எழினியின் நெடுங் கடை நின்று பொருநன் மாக்கிணை முழக்கப் பாசிவேர் போன்ற கிழிந்த ஆடையை நீக்கி நுண ணூற் கலிங்கம் உடுகசுச் செய்து, தேட்கடுப்பன்ன நாட்படுதேறலையும் பொலங்கலத்தில் உணவினை யும் அவன் அளித்தான். அமிழ்தம் போன்ற கரும் பினை அயல் நாட்டினின்று கொண்டு வநதவனின் வழித்தோனறல். மன்னர்தம் அரிய எயிலைக் கடந்து களந்தோறும் வெள்வாய்க்கழுதைப் புல்லி னம் பூட்டி உழுது வெள்ளை வரகும் கொள்ளும் விதைத்த உழவன என்று இவனது மறத்தை ஔவையார் சிறப்பித்துள்ளார் (எழினி என்பது பொகுட்டெழினி எனத் துறைக்குறிப்பு கூறும்) (புறம். 392).

3. அதியர் மரபினன். செழியன் ஆலங்கானத்தில் சேரல், செம்பியன், திதியன், போர்வல்யானை பொலம் பூண் எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் எனனும் எழுவரது வெற் றிகள் சாய ஒரு பகலில் முரசொடு வெண்கொற்றக் குடைகளைக் கைப்பற்றி வீரர் ஆர்ப்பரிக்கக் கள வேள்வி செய்தான் (அகம். 36:13-23).

4. திரை. பாசறையில் வன்கண்மையுடைய யவன ரால் புலிச்சங்கிலி யிடப்பட்ட நல்ல இல்லில் திரு மணி விளக்கினை எரியவைத்துத் திண்ணிய கயிற் றின் எழினியை - திரையை-வளைத்த புற அறைக்கு உள்ளறையுள் மிலேச்சர் பக்கத் திருப்ப அரசன் படுத்திருந்தான் (முல்லை. 61-67).

எழு – 1. கணையமரம். சேரமான் செல்வக் கடுங்கோ வாழியாதன் அங்குசத்தால் கொலை யானையை ஏவிப் பகைவரின் காவலையுடைய எழு - கணைய மரம் - முறிபடச் செய்தான் (புறம். 14:1-3). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மறம் மிக்கு எழுந்த போரை வென்ற எழு மரத்தொடு மாறு படும் தோளினை யுடையவன் (புறம். 39:10,11). சோழன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நலங் கிள்ளி சேட் சென்னியின் எழுவொடு மாறு படும் திணிந்த தோளினை மாறுபட்டோர் வாழ்ந்ததும் அவன் திருவடியை அடைய வல் லோர் வருந்தியதும் இல்லை (புறம். 61:16-19). அதியமான நெடுமானஞ்சியின் முழந்தாளளவு

நீண்ட கை எழுமரம் ஒக்கும் (புறம். 90:10,11). போர்முனைக்கண் பகைவரது மாறுபாடு அடங்கப் பொருதலால் தேய்ந்து குறைந்த நுனை பொருந்திய கோட்டுடன் அதியமானின் நெடுமானஞ்சியின் கூட்டமான யானை போகக் கண்ட அவன் பகைவர் தமது மதில் வாயிற் கதவங்களையும் எழு மரங்களையும் புதியனவாக இடுதற்குப் பழையன போக்கினர் (புறம். 98.1-4). மகண் மறுத்தமை காரணமாக வேந்தன் போர் தொடங்க, அவளின் தந்தையும் போரக்கெழுந்து அரைத்த மண்ணாலாகிய மதிலினக்கண் பொருந்திய திண்ணிய கதவில் எழு மரம் பொருத்தினான் (புறம். 341.3-5). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் பகைவர் மதிலைக் கைக்கொண்டு அரணுள் புகுந்து மதிற் கதவங்களைக் காக்கும் எழு மரம் போன்ற திணிந்த கைகளை உயர வீசித் துணங்கை ஆடினான் (பதி. 45 9-12). எழுவொடு மாறுபடும் திணிந்த தோளையும் இயல்தேரையும் உடைய குட்டுவன், பகைவரது இமயத்தில் வில்லைப் பொறித்தான் (சிறு. 47-49). பேகன் முதலாகக் காரி ஈறாகவுள்ள வள்ளல் எழுவரும் எழு மரத்தொடு மாறுபடும் தம் திணிந்த தோளில் கொடையாகிய செல்விய நுகத்தைப் பூண்டிருந்தனர் (சிறு. 111-113). பெரிய தேரினையும் எழு மரத்தை மாறுபடும் திண்ணிய தோளையும் உடைய பாண்டியன் நெடுஞ்செழியன் தன்னுடன் பகைத்த எழுவரையும் ஆலங்கானத்து வென்றான் (அகம். 209:3-6). எழுஉ காண்க.

2. ஏழு. அதியமான் நெடுமானஞ்சி ஏழு அரசர்க்குரிய ஏழுபொறியை - ஏழிலாஞ்சினையை - நாடி வெற்றி பெறும் போராற்றல் மிக்கவன் (புறம். 99: 7,8). வானிற் றோன்றிய தீ நிமித்தங் கண்டு கூடலூர்கிழார், இறைறை ஏழாம் நாள் மன்னன் இறப்பான் என அஞ்சினார். எழுநாளும் (ஏழாம்நாளும்) வந்தது; கோச்சேரமான் யானைக்கட் சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறையும் துஞ்சினான் (புறம். 229 15-17,22). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் பகை மன்னரின் எழு முடிகளைக்கொண்டு அமைத்த அணி பொருந்திய மார்பினை உடையவன் (பதி. 14: 11). ஏழு அரசர்களை வென்று கொண்ட எழு முடிகளாற் செய்த அணிபொருந்திய இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதனின் மார்பு, உயர்ந்த மகளிரின் மையுண்ட கண்கள் துயிலுவதற்கு இனிதாகிய படுக்கையாகும் (பதி. 16 17,18). களங்காய்க்கண்ணி நார் முடிச்சேரல் எழு முடிகளா லாகிய மாலையணிந்த திருமகள் பரவிய மார்பை யுடையவன் (பதி. 40: 13). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் எழுமுடிகளாலாகிய அணியினை மார்பில் அணிந்திருந்தான் (பதி. 45.6). எழு நிலைகளையுடைய உயர்ந்த மாடத்தின இடமெல்லாம் பொன்னும் மணியும் சிறந்து விளங்கின (முல்லை. 86). திருவிழாவிற்குக் காப்பு கொண்ட எழுநாள் இறுதியில் நீராடுகின்ற மக்கள் ஆரவாரித்தாற் போன்று மதுரை நாளங்காடியில் பேராரவாரம் எழுந்தது (மது. 427,428). ஊரார் கூறும் அலர் முழக்கம் கேட்ட தலைவி எழு நண்டுகளால் மிதிக்கப்பெற்ற அத்திப் பழம் குழைவது போல வருந்தினாள் (குறு. 24:3-6). நள்ளியின் காட்டிலுள்ள இடையருக்குரிய பசுக்கள் உண்டாக்கிய நெய்யுடன், தொண்டியில் விளைந்த வெண்ணெல் லரிசிச் சோற்றை எழு கலத்தில் ஏந்திக் கொடுத்தாலும் தலைவியின் துயர் தீருமாறு விருந்துவரக் கரைந்த காக்கைக்கு அப்பலி சிறிதேயாம் என்பது தோழி கூற்று (குறு. 210). அகன்ற நிலத்தையே அளக்கும் மரக்காலாகக் கொண்டு எழு முறை அளக்கத்தக்க பெரிய நிதியைப் பெறுவதாயினும் தன்னைக் கவர்ந்த தலைவியை நீங்கிப் பொருள் தேட வருதல் இயலாது எனத் தலைவன் நெஞ்சினுக்கு உரைத்தான் (நற். 16:7-11). நீல வானில் தோன்றி எல்லோராலும் தொழப்படுகின்ற முனிவரின் தோற்றமாகிய எழு மீன்களைப் போலப் பெரிய கடற்பரப்பில் சிறிய வெண்மை நிறம் வாய்ந்த நீர்க்காக்கைகள் பலவும் நீராடின (நற். 231:1-4). தலைவன் ஒருநாள் நம் இல்லம் வந்ததற்கு அவன் பெண்டிர் (பரத்தையர்) பொறாது அனலிற்பட்ட மெழுகு போல எழு நாள் வரை அழுதனர் என்று பலரும் கூறுவர் என்பது தலைவி தோழியிடம் கூறிய கூற்றாகும் (ஐங். 32). திருமால் எழு கைகளை யுடையவர் (பரி. 3 38).

**எழுத்து** - 1. வரிவடிவம். பகைவர் எய்த அம்பை மார்பில் ஏற்று மடிந்த மறவர்க்குச் சின்னமாக எடுக்கப் பெற்ற நடுகல் அவர்தம் பெயரும் பீடும் எழுதப் பெற்ற எழுத்தினை - வரிவடிவத்தினை - உடையது (அகம். 53:10,11). கடுங்கண் மறவர் அம்பு தேய்த்தமையால், பக்கம் மெலிந்த நடுகல்லில் பெயரும் பீடும் விரியத் தோன்றுமாறு பொறித்த எழுத்துக்கள் இருந்தன (அகம். 297:6-8). வணிகரின் வண்டியிலுள்ள உருளையின் பூண் சிதைத்தமையால் நடுகல்லில் கூரிய உளியால் பொறிக்கப் பெற்ற எழுத்துக்கள் கோடு தேய்ந்து உருமாறி அவ்வழியே செல்லும் வம்பலர்க்கு வேறு பொருள் தருவனவாய்ப் பிறழ்ந்து காணப்படும் (அகம். 343: 4-8). மறவரின் அம்புபட்டு மாய்ந்தோர்க்குப் பீடும் பெயரும் எழுதி அமைத்த எழுத்துடை நடுகல் போல யானையின் பிணர் இருந்தது (ஐங். 352:1-3).

2. சித்திரம். திருப்பரங்குன்றத்தில் அகலிகை,

கௌதமன், இந்திரன், முதலியவரின் உருவங்கள் வரையப் பெற்ற எழுத்து-சித்திரம்-நிலை பெற்ற மண்டபங்கள் இருந்தன (பரி. 19:50-56).

**எழுதாக்கற்பு** - எழுதாக்கல்வி (வேதம்). பார்ப்பன மகனே, நீ கற்ற எழுதாக் கற்பில் - வேதத்தில் - பிரிந்த தலைவியரையும் தலைவரையும் சேர்த்து வைத்தற் குரிய மருந்தும் உண்டோ எனத் தலைவன் கழறிய பார்ப்பனப் பாங்கனுக்குக் கூறினான் (குறு. 156:4-7).

**எழுநிலைமாடம்** - ஏழு நிலைகளை உடைய மாடம். ஏழு நிலைகளோடு கூடிய மாடத்தின் இடமெல்லாம் பொன்னும் மணியும் சிறந்து விளங்கின (முல்லை. 86).

**எழுமகளிர்** - ஏழு தெய்வமகளிர். வானத்து வடபால் உறைகின்ற எழுமகளிருள் கடவுட் கற்பினை யுடைய அருந்ததி நீங்கலாக ஏனைய கார்த்திகை மகளிர் அறுவரும் வேள்வித் தீயிலிட்ட கருவை உண்டனர் (பரி. 5:43-45).

**எழுமரம்** - கணையமரம். அதியமான் நெடுமானஞ்சி எழுமரம் – கணையமரம் - ஒக்கும முழந்தாளிலே பொருந்திய பெரிய கையை உடையவன் (புறம். 90:10).

**எழுமீன்** - விண்மீன் வடிவிலுள்ள ஏழு முனிவர். நீல வானில உலகத்தாரால் தொழப்படும் தகுதியுடைய முனிவரின் தோற்றமாக எழுமீன் விளங்கும் (நற். 231:1,2).

**எழுமுடி** - வெல்லப்பட்ட ஏழரசரின் முடிப் பொன்னால் ஆகிய மாலை. இது சேர மன்னர்க்குரியது. இமைய வரம்பன் நெடுஞ்சேரலாதன் (பதி. 14:11; 16:17,18). களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல் (பதி. 40:13). கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் (பதி. 45:6) ஆகிய மூவரும் எழுமுடி அணிந்திருந்தனர்.

**எழுவர்** – 1. ஏழுபேர் (இருபெருவேந்தர், ஐம்பெருவேளிர்). பாண்டியன் நெடுஞ்செழியன் தலையாலங்கானம் என்னுமிடத்தில தன்னை எதிர்த்த எழுவர் - இரு பெருவேந்தர், ஐம்பெருவேளிர் – நல்வலியை வென்றான (புறம. 19:17; 76:12). பாண்டியன நெடுஞ்செழியன தலையாலங்கானம என்னுமிடத்தில் சேரன், சோழன, திதியன், எழினி, எருமையூரன், இருங்கோ வேண்மான், பொருநன் என்னும் எழுவரை ஒரு பகற்பொழுதில் வென்றான் (அகம். 36:20; 209.3-6).

2. ஏழரசர். அதியமான் நெடுமானஞ்சி எழு பொறியைத் தனதாகப் பெற்றும் அதற்குரிய எழுவர்-ஏழரசர்–மீது படையெடுத்துச் சென்று வெற்றி பெற்றான் (புறம். 99:7-10). ஞாயிறு சூழும் இப்பெரிய உலகு ஒரு பகற்பொழுதில் எழுவரை-ஏழரசரை-தலைவராகப் பெற்ற இயல்பு கொண்டது (புறம். 358:1,2).

3. வள்ளல்எழுவர். பாரி, ஓரி, காரி, எழினி, பேகன், ஆயஅண்டிரன், நள்ளி என்னும் வள்ளல எழுவர் மாயந்த பிறகு, குமணன் இரவலரின் துன்பத்தைத் தீர்தது வந்தான (புறம. 158:17-20). எழுவர் (ஏழு வள்ளலகள) பூண்டிருந்த கொடையாகிய செவ்விய நுகத்தை ஓயமானாட்டு நல்லியககோடன் தாங்கினான் (சிறு. 113-115).

**எழூஉ** - கணையமரம். அதியமான் நெடுமானஞ்சியின களிறுகள் எழூஉவால்-கணைய மரத்தால-தடுக்கப பட்ட கதவைப பொருது பகைவரது களிற்றினை யுடைய அரணை யழித்தமையால் தநதத்தில் உள்ள கிம்புரிகள் கழன்றன (புறம. 97.8-10). களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலின முழவுத தோளகள, தேவருககு அஞ்சி வானத்தில அவுணர் அமைதத இயஙகும அரணததின கதவைக் காககும் எழூஉப போன்றன (பதி. 31.18-20). ஆடுகோட்பாட்டுச சேரலாதனின யானை எழூஉவினால காக்கப்பட்டு இரும்பினாற் பிணித்தலை யுடைய கதவததைக கண்டால் குத்துக்கோலையும் கடந்து சென்று அக கதவைத் தன கொம்பால குததி அழிக்கும (பதி. 53:15,16,21). பெரும் பாணன ஊர்ந்து செலலும் சகடம் எழூஉ இரண்டு சேர்ந்தா லொதத பருதத கைகளுடன் வலிய பாரையும் உடையது (பெரு. 48). எழூஉப் போன்ற திண்ணிய தோளை யுடைய இளம்பெருஞ் சென்னி செமபினை ஒதத மதிலை யுடைய பாழி என்னும அரணை அழிதது வடு கரை வென்றான (அகம்.375: 10-14). எழு-1 காணக.

**எழூஉப்பன்றி நாகன் குமரனார்** - புலவர். இவரது இயற பெயர் குமரனார் என்றும் தந்தைபெயர் நாகன என்றும கூறுவர். பனறி எனபது இவர் ஊர்ப் பெயராகலாம. அகநானூற்றில் இவர் பாடிய இரு பாடல்கள் (138,240) இடம் பெற்றுள்ளன. மலை நாடன் சிறைப்புறத்தானாகத் தாய் வெறியாட்டு எடுத்தமையைத் தலைவி கூறுவதாக அமைநதது ஒரு பாடல் (138). இரவுக்குறி வந்த தலைமகனுக்குப பகற்குறி தோழி நேர்நதமையைக் கூறுவது மற்றொரு பாடல் (240). தென்னவன் பொதியில் பற்றிய குறிப்பும் நாகம் மணியுமிழும் செய்தியும் 138 - ஆம் பாடலிலும் பரதவர் தம் சில பழக்க வழக்கங்கள் 240 - ஆம் பாடலிலும இடம்பெற்றுள்ளன.

**என்** - 1. இகழ்ச்சி. மறவரை ஓடுபுறங்கண்ட என்-

இகழ்ச்சி-அற்ற சிறப்பினையுடைய முள்ளூர் மலை யுச்சியில் காணடற்கரிய இடத்தில் சோழன் தங்கி யிருந்தான் (புறம். 174.12-14). கைப்பொருள் இல்லா விடினும் இரவன்மாககள் களிற்றொடு நெடுந்தேர் வேணடின பகைவரிடம் உள்ளவற்றைக் காட்டித் தரும் கடப்பாடுடைய தானைத்தலைவன் உள்ளிய கருத்து எள் கூறும் தன்மை உடையதன்று என மாங்குடிகிழார் அவனைப் பாராட்டுவர் (புறம். 313). நனனன் இழை சென்றவிடம் தெரியாத நுணணிய நூலாற செய்த எள்ளற்ற ஆடையைச் சிறப்புண்டாகுமபடி கூத்தருககுக் கொடுத்து உடுககச் செயதான (மலை. 561,562). ஊரவரின் அலரை அஞ்சினால் காமம் மெலிவடையும். ஊரவர்தம் எள்ளறும் பொருட்டு அதனைவிட்டு விட்டால் நாணம் மட்டுமே எஞ்சியிருக்கும் எனத் தோழியிடம் தலைவி கூறினாள் (குறு. 112:1,2). நினைக்குந்தோறும வருநதும் நின் காம நோய்க்கு இளைப்பாறுதலாகக் குறிதத நாள் தப்பாது எள் ளற்ற காதலர் வந்து சேர்ந்தார் எனத் தலைவி யிடம் தோழி உரைத்தாள் (கலி. 35:22-25).

2. தானியவகையில் ஒன்று. கைம்மை நோன்பால் வருந்தும் பெண்டிர், அணிலது வரி போலும் வளைந்த வெள்ளரிக்காயின் விதைபோன்ற நல்ல வெள்ளிய நறுநெய் தீண்டாமல் இலை யிடையே கிடந்த கையாற் பிழிந்து கொள்ளபபட்ட நீர்ச் சோற்றுத் திரளை வெள்ளிய எள் அரைத்த சாந் தோடும் புளி பெய்து சமைத்த வேளையிலையாகிய வெந்த உணவோடும் உண்டு பரற்கற்கள் பெய்த இடத்தில பாயின்றிப் படுப்பர் (புறம். 246:4-10). புள்ளிகளைப் புறததே கொணட குறும்பூழ்ச் சேவல் முற்றததில வைத்துச் சுளகிடை உலர்த்திய மேந் தோல் போக்கிய வெள்ளிய எள்ளைக் கவர்ந்துண டது (புறம். 321:1-3).

3. குற்றம். எள்-குற்றம்-தீர இயற்றப்பட்ட நிழல் காண்டற்குரிய கண்ணாடி மண்டிலத்தி னகத்தே வாயினால் ஊதப் பெற்ற ஆவி மெல்ல மெல்லக் குறைந்தழியும் (அகம். 71:13-15).

**எள்ளுநர்** - இகழ்வோர். நிலம் பின்னிடுவது போல் காற்குளம்பை ஊன்றிக் காண்போர் ஊக்கத்தைக் கெடுக்கும் விரைந்த செலவினை யுடைய குதிரை மேல் ஏறிய தன்னை எள்ளுநரை-இகழ்வோரை - கொல்லும காளையாகிய வீரன், எதிர்ந்தோர் மார்பை வேலால் குத்திப் புண்செய்தான் (புறம். 303:1-4). எள்ளுநரை வஞ்சியாது எதிர்நின்று கொன்ற சக்கரப்படை யுடையவர் திருமால் (பரி. 1:58).

**எளியோர்** – **எளிமையுடையவர்.** கிள்ளி வளவனிடத்து முறைவேண்டுங்காலத்துச் செவ்வி எளியோர் மழை வேண்டுங்காலத்து மழை பெற்றவரோடு ஒப்பர் (புறம். 35:15,16).

**எற்படுபொழுது** - **ஞாயிறுமறையும் மாலைக்காலம்.** எற் படுபொழுதில் - ஞாயிறுமறையும் மாலையில் - மலைமீது இனத்தினின்றும் தலைமயங்கித் தான் சென்று சேருமிடம் காணாத காட்டில் கலைமான் பிணையைக் குரல் கொடுத்தழைப்பின், அவ்வோ சையைக் குகையில் கிடக்கும் பெரும் புலி செவி சாய்த்துக் கேட்கும் (புறம். 157:8-12).

**எற்றம்** - துணிவு. தன்மனத்தே எற்றமிலாட்டி-துணி வில்லாதவள்-பித்தேறினாள் என்று கூறி இக்காம நோயுற்றறியாதோர் என்னை இகழ்ந்து சிரிக்கட் டும் என்று கடலை நோக்கித் தலைவி நாண் கடந்து கலங்கி மொழிந்தனள் (கலி. 144:63, 64).

**எறியுளி** - வீசுதற்குரிய உளி. பரதவர் எறியுளியால் எறி யப்பெற்ற பெருமீன் புண் உமிழ் குருதியால் கடல் நீரைக் களஙகப்படுத்தி வானவில்போல் தோன்று மாறு விண்ணிலே தாவிப் பின் கடலில் வீழ்ந்து உழக்கித் தோணியின் பக்கத்தே சென்றது (அகம். 210:1-6). கொல்லுந் தொழிலிற் பொலிந்த கூர்வாய் எறியுளியைப் புடகுடைய பரதவர் சுறாமீன் மீது எறியக் கரையிலிருநத அன்னக்கூட்டம் அஞ்சி ஓடும் (குறு. 304:1-6). முறுககிய கயிற்று நுனியிற் கட்டிய எறி உளியையுடைய திண்திமில் பரதவர் ஒள்ளிய விளக்கை ஏற்றிக் கொண்டு நள்ளிரவில் மீன வேட் டைக்குச் சென்று பிடித்த மீன்களை விடியலில் கடற்கரைச் சோலையில் குவித்துப் புன்னை வரி நிழலிருந்து சுற்றத்தொடு தேறல் பருகி மகிழ்வர் (நற். 388:3-9).

**எறும்பி** – எறும்பு. பாலைநிலத்துக் கவர்த்த வழியில் எறும்பியின் - எறும்பின் - வளைகளைப் போன்ற குறிய பலவாகிய சுனைகளையுடையதும் உலையின் பட்டடைக் கல்லை ஒத்த வெம்மை கொண்டது மாகிய கற்பாறை ஏறிக் கொடுவில் எயினர் அம்பு தீட்டுவர் (குறு. 12:1-4). உறுவி, எறும்பு காண்க.

**எறும்பு** - எறும்பி. பொய்க்காத மழை பெய்யும் காலத்தை யறிந்து சிறுநுண் எறும்புகள் வரிசை யாகத் தம் முட்டைகளை மேட்டு நிலங்கொண்டு செல்லும் (புறம். 173:5-7). முரசிலுறையும் கடவுளை வழிபட உயர்ந்தோன் ஏந்திய பெறற்கரிய பிண்டத் தைக் கொள்ள இயலாது கருங்கட்பேய்மகள் தன் கைபுடைத்து நடுங்கக் குருதி தூவிய நிறைந்த கள்ளையுடைய பெரிய பலியை வியத்தகு மரபின் எறும்பும் மூசாதிருப்ப அவற்றைக் காக்கையும்

பருந்தும் உண்டன (பதி. 30:34-39). வாடிய நிலத்தில் சிதறிக் கிடக்கும் சிறிய புல்லரிசியை வரிசையாகச் சென்று நுண்ணிய பல எறும்புகள் தம் வளையில் வைக்கத் தாம் விதைத்து விளையாத அவ்வரிசியை மறவர் அகழ்ந்தெடுத் துண்ணுவர் (அகம். 377:1-4). உறுவி, எறும்பி காண்க.

**எறுழ் - 1. வலிமை.** யானையை வென்ற எறுழ்-வலிமை-உடையவன் திருமாவளவன் (புறம். 7:6). யானைகளை அகப்படுத்தும் பெரிய குழியிடத்து விழிப்புடன் செல்லாது அகப்பட்டுக் கொண்ட பீடுடை எறுழ் கொண்ட கோடு முற்றிய கொல்களிறு நிலைசரியக் குழியைத் தூர்த்துத் தன்னினத்தைச் சென்று சேர்ந்தது; (புறம். 17:14-19). தேவருக்கு அஞ்சி ஆகாயத்தில் அவுணர் அமைத்த இயங்கும் மதிலின கதவைக் காக்கும் கணைய மரம் மேலெழுந்தாற் போன்ற பருத்த அழகிய எறுழ் கொண்ட முழவனைய தோளினை யுடையவன் களங்காய்கக்கண்ணி நார்முடிச்சேரல் (பதி. 31:18-20). மறவர் தொடி விளங்கும் வலிமிக்க முனகையினையும் எபபொழுதும் பொருது புண்கள் அறாத எறுழ நிறைந்த தோளினையும உடையவர் (பதி. 80:6,7). பருதத அழகிய எறுழ் கொண்ட திணி தோளையும் முறுக்குண்ட உடம்பையும் கொண்ட முழுவலி மாக்கள் எருதுகள் பூட்டப்பெற்ற உப்பு வணடிகளைப் பக்கத்திருந்து காத்தனர் (பெரு. 60-63). வம்பலர் கரிய வில்லை ஒச்சிய இடமகன்ற எறுழ் கொண்ட தோளினை யுடையவர் (பெரு. 74,76). மத்தளம் தங்களுக்கு நடுவே முழங்க வில் பயின்ற எறுழ் உடைய இடத்தோளை எடுத்து வலப்பககத்திலே வளைந்து பகற்பொழுதில் எயின்மறவர் தம்குடியிருப்பில் மகிழ்வுடன் ஆடுவர் (பெரு. 144-146). பகைவர் வில்லை வளைத்தேவுதல் காரணமாகத் தம்பால் விரைந்து வரும் அம்பின் விசையைத் தாங்கும் மார்பினையும் குதிரையைச் செலுத்தி வேண்டுமளவில் பிடிக்கும் எறுழ கொண்ட தோளினையும் உடைய மறவரைப் பரிசில் பெறக் கொணர்மின் என நெடுஞ்செழியன் ஏவலரை அனுப்பினன் (மது. 729,730). மதுரை மூதூரின் அகன்ற நெடிய தெருவில் படலைக் கண்ணியையும் பருத்த அழகிய எறுழ் கொண்ட திண்தோளையும் முறுக்கேறிய உடம்பினையும் கொண்ட முழுவலி மாக்கள் தேறல் மாந்தி மகிழ் சிறந்து முன்னும் பின்னும் தொங்கலாக விட்ட துகிலினை யுடையராய் மழை பெயவதையும் பொருட்படுத்தாது தாம் வேண்டுமிடங்களில் திரிந்தனர் (நெடு. 29-35). பகை மன்னர் அடிவீழ்ந்து வணங்குதலால் அவர் முடியிற் சூடிய பசிய மணி உராயப் பெற்ற பருத்த அழகிய எறுழ் கொண்ட கழற்காலினை உடையவன் திருமாவளவன் (பட். 294,295). வேந்தன் யாமத்தில் எடுத்தபின் உறையீற் செறிக்காத வாளைக் கொண்ட எறுழ் மிக்க தோளையும் வன்மை மிக்க சினத்தையும் உடையனாய்ப் பாசறையில் தங்கியிருந்தான் (அகம். 24:16-18). யாளிக்கு அஞ்சித் தன் இனத்தைத் தன்னைச் சூழும்படி செய்து கொள்ளும் எறுழ் விளங்கும் ஆற்றலைக் கொண்ட களிறு, தன் கடுஞ்சூல் மடப்பிடியை ஏமுறத் தழுவவும் அஃது அஞ்சி நடுங்கியது. (அகம். 78:1-6). திரண்ட பனை போன்ற பருத்த அழகிய எறுழ் கொண்ட தடக்கையினை யுடைய களிறு, மலையிடத்தே மரம் விழச் சாய்த்துப் புலி கதறக் குத்தித் தினைப்புனத்தைக் கவர்ந்துண்டது (அகம். 148:1-6). பரதவர் கோமானாகிய பல வேலையுடைய மத்தி வலிய வில்லையும் எறுழ் கொண்ட தோளையும உடையவன் (அகம். 226:7,8). எறுழ உடைத்தாகிய நோககினையும் வலிய கழுத்தையும் கலைமானின் கொம்பு போல் திருகி முறுக்குண்டு தாழ்ந்த தாடியினையும் உடையவர் மறவர் (கலி. 15.5-7). மலையில களிற்றினத்தோடு பருத்த கழுத்தினையும் எறுழ முன்பினையும் உடைய பெரியபுலி இகலினாற் பொருநது (கலி. 48: 6,7).

**2. ஒருவகைமரம்.** மழையை நோககி மலர்நத மணிநிறப் புதரில் நல்ல பூங் கொததுக்களை யுடைய எறுழ மரத்தின மலர் மழைக்காலம நீங்கியதால் தன்னிறம் மாறி வெண்மை யாயிற்று (நற். 302:4,5). விரிந்த பூஙகொத்துக்களை யுடைய ஒளி பொருந்திய எறுழ் மரத்தின மலர் முருகன் அமர்ந்த மலையில பரவிககிடநதது (ஐங. 308 2-4). எறுழம் காண்க.

**எறுழம் - ஒருவகை மரம்.** தோழியும் தலைவியும் பாறைமீது பறித்துக் குவித்த மலர்களுள் எரியையொத்த எறுழம் மரப்பூ ஒன்றாகும் (குறி. 66). எறுழ் -2. காண்க.

**என்பு - எலும்பு.** பாண் சுற்றததினர் கடும்பசியால் இளைத்தமையான் உடும்புரித்தாற் போனறு அவரது என்பு-எலும்பு-தோன்றுமாறு விலாப்புடை தெரிநதது (புறம. 68:1,2). அதியமான் என்போடு கூடிய ஊன்தடி உளதாகிய இடமுழுவதும் எங்களுக்கு அளிப்பான; அது கழிநததே என ஔவை யார் தமது கையறுநிலைப் பாடலில குறிபபிட்டுள்ளார் (புறம். 235.6). சுடுகாட்டில நெஞ்சம் விரும்பிய காதல்மகளிர் அழுத கண்ணீர் எனபு கிடக்கும் சுடலையின வெண்ணீற்றினை அவித்தது (புறம். 356:4-6). சிறுசிறு வெள்ளிய என்புகள கிடக்கும நெடுவெண்களரில் காககையும கூகையும கூடிப்

பகலிலும் கூவும் (புறம். 362:16-18). முனிவர் விரத மிருந்து உண்ணாமையால் தசை கெடுகின்றமார் புடன் என்புகள் எழுந்தியங்கும் உடம்பினராவர் (முரு. 129,130). கரிகால் வளவன் பொருநனிடம் ஒன்றிய கேளிர்போல உறவு கொள்ளுதலை விரும்பி முகமன் மொழிந்து கண்ணிற் காணும்படி அண்மை யில் இருக்கச் செய்து கண்ணாற் பருகுந் தன்மை யொத்த பார்வையாலே, உருகும் வெண்ணெய் முதலியன போன்று என்பு நெகிழுமாறு குளிர்ச்சி கொள்ளச் செய்து விருந்தோம்பினான (பெரு. 73-78). அன்பும் மடனும் சாயலும் இயல்பும் என்பை யும் நெகிழச் செயயும் இன்சொலலும் இன்ன பிற பண்புகளும் உடையவள் தலைவி (அகம். 225:1,2). நீண்ட கவர்த்த வழிகளையுடைய கல் பொருந்திய நிலத்தில் காய்ந்து கிடக்கும சிதைந்த வெள்ளிய என்புகளை ஒட்டகம் தின்று பசிதீரும் (அகம். 245: 17–19). தலைவி நம்பால் இரங்க வில்லை. தோழி நம்மைப் பனைமடற் கலிமாவிற்கு மணியும் தாரும் பூட்டி அதன மேலேறி வெள்ளெனபு அணிந்து நாணம் நீக்கிப் பிறர் எள்ள ஒருநாள் தெருவில் வருமாறு தூண்டுகிறாள். நான் மட லேறாது வேறென் செய்வது என்பது படத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவானாய்த் தோழி கேட்பக் கூறி னான் (குறு. 182). 'கண் தரவந்த காமத் தீயானது எமது என்பினைப் பொருந்திச் சுட்டு வருத்தும் பொழுதும், சென்று முயங்கற்கு இயலாதவாறு நாம் தலைவரைக் காண்டல் அரியமாயினேம்; அவ ரும் வந்து நம் துன்பத்தை அகற்றவில்லை' எனக் காப்பு மிகுதிக்கண் தலைவி ஆற்றாமை தோன்றத் தன்னுள்ளே கூறினாள் (குறு. 305:1-4).

**என்றூழ்** - 1. வெம்மை. மராமரத்தி லிருந்து பூக்கள் கீழே விழுமாறு அலைத்த மணமுடைய தென்றல் சுரநெறியிற் செல்லும் மன்னர்தம் சுருண்ட மயிரில் அபபூக்களைச் சொரியும், என்றூழ் - வெம்மை- நெடிது நிலைத்த பொலிவழிந்த ஊரில் முட்டை யிட்டு அடைகாக்கும் பருந்து ஓமைமரங்களில் தங் கும் (அகம். 21:12-15). கோடை நீடிய வறண்ட காலத்துப் பறவை தங்காத நீரற்ற உள்ளிடத்தே என்றூழ் மிக்க பெரிய குளம் நிறைய விடியலில் பெரு மழை பொழிந்தது (அகம். 42:6-10). என்றூழ் தாங் காது வருநதிய புன்தலை மடப்பிடி களிற்றொடு பெருவெள்ளத்தில் மூழ்கிப்படியுமாறு நிலனும் விசும் பும் நீரியைந்தொன்ற மேகம் பெருமழை பெய்தது (அகம். 43:3-8). கதிரவன் கல்பிளக்கத் தெறுதவி னால் மேலேபறந்து செல்லும் குருகு உருகுதற் கேதுவான என்றூழ் மிக்க நெடுவழி அடியை வருத்தும் உளிமுக வெம்பரலுடையது (அகம். 55: 1-3). என்றூழ் பொருந்திய நீண்ட வழி பறந்து வந்த வாவற்பேடை, பகலிற் கனிபெறாது முன் னாள் பெற்றதை நினைந்து வருந்தி வேறு புக லிடம் காணாமல ஏங்குதற் கிடனாகவும் துறுகல் லைத் தீண்டிக் காற்றசையும் போது யானை கையைத் தூக்கியது போல் தோற்றமளிக்கும் விழு துடைய இற்றிமரததைக் கொண்டதாகவும இருந தது (அகம். 57:1-9). கரடி இருப்பைபபூவை வெறுத துப் புற்றில் இரைதேடும் பாலைநிலததில் என்றூழ மிகுந்த நெடுவழியில் மராமரத்தின் உலர்நத கிளை யிலேறிப் பருந்து தனிமையுறறு வருந்தும் (அகம். 81:1-9). பரதவர் உப்பங்கழியாகிய வயலில் உழா மல் விளைவித்த வெண்கல உப்பின் விலைகூறி என்றூழ் பொருந்திய பிளந்த வெடிப்புககளை உடைய மலை வழியே உமணர்தம காதன மகள் சென்றாள் (அகம். 140:1-5). அருஞ்சுரத்தில் என்றூழ் பொருந்திய நெடுவழியில் மணலில அழுநதிய வண்டியை இழுத்துச சென்ற எருத்தின் முயறசி வெற்றியைக் கண்டு உமணர் எழுப்பிய சீழ்கை ஒலியும் மணி ஒலியும் ஆறலைகள்வருக்கு அஞ்சிக் காட்டினுட் பதுங்கிய வழிப்போக்கருககுப் பாது காப்பை உணர்த்தும் (அகம. 191:4-10). நிலம் நீரற றுச் சுனை வறப்ப மலையின குவடு பொடிநது உதிரக் கடுங்கதிர் தெறுதலால் என்றூழ மிகக, மூங்கில் பட்டுப் போன பரந்த பாலை நிலததில் புலியை வென்ற அஞ்சததக்க பெரிய யானை மத நீர் ஓய்ந்து வருநதி வறறல மரம் நிறதும் ஓரிடததே பிடியொடு வதியும் (அகம. 295:1-7). வடககிலுள்ள பாணன் என்பானின் நல்ல நாட்டில், வானததின ஒளியுடைய கண்ணாகிய கதிரவனின் என்றூழ மிக்க நெடிய வழியில், ஆளைக் கொல்லும யானை வழிப்போக்கர் வருகையை எதிர்பாாத்திருககும் (அகம். 325:16-19). என்றூழ மிகுநத வெஞ்சுரததில வீரர்க்கு நட்ட நடுகலலை ஆளெனக கருதி உதைதத காட்டுயானையின பெரிய நகம் பனங் காயின் சிதைநத தோடு போல ஒடியும் இடததில் ஆறலைகள்வர் வழிபபோககர் இன்மையால தம் வறுமையைக் களைய வழியின்றி வருந்துவர் (அகம. 365:4–9). களிறு மண்ணில் ஊன்றிய மருபபினை அசைத்துப் பெயர்க்க இயலாமல் வாய்நிறையுமாறு புகுத்திய வலியற்ற தடக்கை குன்று புகு பாமபு போல் தோன்றும் என்றூழ் பொருந்திய கடிய சுரநெறிகளைத் தலைவர் கடநது சென்றார் (அகம். 391:10-14). வெள்ளிய ஆடையை விரிததாற் போன்ற வெயில் விளங்கிய என்றூழ் மிக்க குன் றின் பக்கத்தே பசியுடைய செந்நாய் மரையாவைக் கொன்று உண்டு ஒழிந்த மிச்சில, சேய்நாட்டுக்கு அருஞ்சுரம் வழிச் செல்வோர்க்கு உணவாகும் (நற்.

43:1-5). அஞ்சுரத்தில் என்றூழ் மிகுந்த நெடிய வழியில் கரிய மேகம் போன்ற யானையின் விலாப் புறம் தீண்டுதலால் பொரிந்த அரையினையும் புழற் காயினையு முடைய கொன்றை மரம், குன்றில் நீடிய சடையொடு ஆடா மேனியுடன் உறையும் தவசியர்போல் தோன்றும் (நற். 141:1-6). தலைவன் பிரிவுக்கு வருந்தி என்றூழ் நிலைகொண்ட நீண்ட சுரத்து நெறி கடந்து சென்றான் (நற. 226.5-7). என்றூழ் மிக்க நெடிய வழியில் நொடித்துவிட் டாற் போன்ற காய்கள் ஒலியெழும்பத் தெறிக் கின்ற கள்ளியின் கிளையிலேறித் தனியேயிருக்கும் புலவிய புறா தான் விரும்பிய பெடையை அழைக் கும் (நற். 314:9-12). ஓமை மரககிளையை ஒடித்துத் தழையைத் தின்ற உயர்ந்த மருப்புடைய களிறு புள்ளியுடைய நீண்ட கையைச சுருக்கி வேறு வழி யிற் செல்லத் தொடங்கிய அளவில பிறிதொரு பிடியை நினைத்துச் செல்வதாகக் கருதி என்றூழ் மிக்க மலைப் பிளப்பிட மெலலாம எதிரொலிக்க மடப்பிடி புலம்பிக் கதறியது (நற். 318). எரி கவர்ந் துண்ட என்றூழ் மிக்க நீணட வழியில சிறிது உறங்கினாலும் தலைவியைக் கனவிற காணபேன எனத் தலைவன் தோழியிடம கூறினான (ஐங.324). என்றூழ் நீடிய சுரநெறியைத தலைவா கடநது சென்றார் (ஐங. 336:4) நினனை நினைநது வந்த தால் எரிகவர்ந்துணட எனறூழ் பொருந்திய நெடு வழி அரியவாயினும் எளியவாயின எனத தலைவன தலைவியிடம் உரைத்தான (ஐங். 360).

2. கோடைக்காலம். அரசுரிமையை வலியுடைய விழு மியோன் பெற்றால என றூழ்-கோடைக்காலததில்- உலர்ந்த வெள்ளிய கிடேசசினது (நெட்டி) சுள்ளி யைப் போல நொய்தாம் எனச் சோழன நலங் கிள்ளி கூறுகின்றான் (புறம். 75:6-12). கடல் குறை பட நீரைமுகந்து கொண்டு செல்லும் மேகம் வேண்டியவிடத்துப் பெயலை முறையாகப் பெய்து வளமழை நீங்கிய என்றூழ் காலை மன்பதை உண ணுதற்காகக் கங்கையில் வெள்ளம் நிறைந்து தோனறியது (புறம. 161:1-7). தறியிலே கட்டப் பட்ட யானை வருந்திப் பெருமூச் செறிந்தாற் போன்று காற்று மோதுதலால் உண்டாகும் ஒலி யைக் கொண்ட மூங்கில்கள் என்றூழ நிலைபெற்ற சுரநெறியில் இருந்தன (நற். 62:1-3).

3. கதிரவன். ஒளிர்கின்ற என்றூழ்-கதிரவன்-மலை யிற்சென்று மறையும் (குறு. 215:1,2). பரங்குன்றத்து மண்டபத்தில் தீட்டியுள்ள நாண்மீன்களையும் விண்மீனகளையும் உடைய சுடர்ச் சக்கரத்தைப் பொருந்திய என்றூழ் முதலாகவரும் கோள்களின் நிலைமையைச் சிலர் கண்டனர் (பரி. 19:46,47).

# ஏ

ஏ - 1. அம்பு. பகைவர் மதில்களை எறியும் வலிய விற் படையினை ஏந்தி ஏ-அம்பு-எய்யும் தொழிலின் கூறுபாடெல்லாம் விளங்கிய தடக்கையினை யுடை யவன ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 58:10). கானத்தில் பரண்மேலிருக்கும் சேணோன் எய்த ஏவொடு பன்றி ஓடி வீழ்ந்து இறந்து கிடந்தது (மலை. 242-247). ஏத்தொழில் (அம்பின் வேகம் போலச் செல்லுதல்) பழகிய குதிரைகளைத் தலைவன் தன் தேரில் பூட்டியிருந்தான் (அகம. 160:11). தலைவன பொருரீட்டச் சென்ற வெஞ்சுரம் வனகணமை யுடைய ஆறலை களவர் வழிபபோக்கரின் மேல் ஏவினை எய்ய முயலும் மறைவிடங்களை யுடையது (அகம. 365:7,9). தலைவியின கண்கள் ஏவொத்து தலைவனுக்கு நோய செயதன (குறு. 72.1,2). வேட்கை மிகுதியாலுற்ற ஆசைப்பெருக்கம் துன புறுத்த வெயதுயிர்த்து ஏமானபிணை (அம்புபட்ட மான பிணை) போலத தலைவி நிலையில தோழி வருநதமுறறாள் (நற. 61:2,3). ஏஎ-1 காணக.

2. பெருககம் (உயாசசியுமாம). ஏ - பெருகிய (உயர்நத) - கற்கள பொருநதிய சுர நெறியில தலைவன சென றான (அகம. 177 8). ஏகல அடுககம (பெரிய மலைப பகக்ம) இருள செறிநத குவட்டில குறிஞசி நிலதது ஊா அமைநதிருததல (நற். 116:10,11). ஏகல (பெரிய மலை) மேலே சரக்கொனறையின கிளைகளில அழ கிய கொடிபோன்ற பூங்கொத்துக்கள மேமபட மலரும் (நற். 296:4,5).

3. இறுமாப்பு. தலைவியைக் குறித்து அலர் பேசு வோரின ஏச் சொல் - இறுமாபபுடைய சொல் - அழியுமாறு தலைவன் வருவான (அகம். 323:1-3). வையையாற்றில் ஒருவர்மேல ஒருவர் நீரை வீசி யாடும மகளிருள் தோற்றுக கணபுதைதத ஒருத் தியை வெனறவன் தன ஏககழுததில (இறுமாபபுடைய கழுததில்) அணிந்திருந்த பொனனாணால கட்டிச் சிறையாகப பிடிததாள (பரி. 7:53-56).

ஏஎ - 1. அம்பு. பகைவர் தன்னை இகழும் நெஞ்சத் தோடு கூறும் ஏஎச் சொல் - அமபு போன்ற சொல் - வெளிப்படுதற்கு நாணியே தலைவன் பொருள் வயிற் பிரிந்தான் (அகம். 111:1,2). ஏ-1 காண்க.

2. சாமவேதம். ஏஎ—சாமவேதம் - திருமாலின் தன் மைகளைக் கூறும் (பரி. 3:62).

ஏஎர் - 1. அழகு. மிக்க ஏஎர் - அழகு - பொருந்திய மூங்கில போலும் தோளை யுடையவள தலைவி (அகம். 2:11). மகளிர் விளங்கிய பற்களின் ஏஎர்

பொருந்திய இன்னகை யுடையவர் (நற். 267:3). போரில் பெரிய புண்ணால் ஏஎர் பெற்ற தழும்ப னுடையது ஊனூர் (நற். 300:10). தலைவி, குவளை மலர் போலும் மையுண்ட கண்ணை யுடைய ஏஎர் பொருந்திய மெல்லியல் மகளாவாள் (ஐங். 72:3). இந்த ஒப்பற்ற வெள்ளிய ஏற்றின் கழுத்தில் கிடக்கும இவன கூரெயிற்றினையும் ஏஎரினையும் உடைய இவளைக் கூடுவான் (கலி. 104:18,19). தம் முள் வேற்றுமை காணப்படாத ஏஎர் உடைய இரு வரும் (திருமகளும் பூமகளும) தத்தம் அழகையெல்லாம் இவளுக்குக் கொடுத்தனர் கொலலோ எனக் காமஞ் சாலா இளமையோள்வயின் காதலுற்ற தலைவன ஐயுறுகிறான் (கலி. 109:17,18). 'நிரம்பிய ஆணி கலனகளும் ஏஎரும் உடைய இள நல்லாய், நீ இழைத்து விளையாடும் சிற்றிலை யானும் சிறிது புனைவேன்' எனக் கூறி முல்லை நிலத் தலைவன் தலைவியோடு சொலலாடினான் (கலி. 111:8,9). 'தலைவனுக்கு இசைந்து கூடுவதனால்,' பின் பிரிவு நேர்ந்து கண் பசந்து தோள் மெலியினும் அவற் றினால் நமக்கு ஏஎர் உணடு' எனத் தலைவி அவ னோடு கூட்டத்திற்கு இசைதல (கலி. 112:24,25). தலைவியின் ஏஎர் ஆகிய காமனது ஆணையால் வந்த படை தலைவனின ஆணழகாகிய மதிலை உடைத்து உள்வாயிலை அழித்தது (கலி. 139:21-23). அமரர் ஏஎர் விளங்கும் பூணினை யுடையவர் (பரி. 3:15).

2. கலப்பை. தேர் பரந்து சென்ற விளை நிலங்கள் சேறுபடுதலால் பின் அவை ஏஎர் பூட்டி உழவேண் டாதன வாகும் (பதி. 26:1).

**ஏஎறு** - ஆண் விலங்கு. தலைமையுடைய ஏஎறு - ஆண் விலங்கு - பாம்பின புற்றினைக் குத்தி மண்பட்ட கொம்பினை யுடையதாய்த் தன் இளைய பசுவி னைத் தழுவிக் கொண்டு ஊரின்கண் மீளும் (அகம். 64:10-13). வலிமை மிக்க திண்மையையும் தலைமை யையும் உடைய ஏஎறு பகலெல்லாம் பொய்கையில் சுழனறு பின்னர் நாகெருமையைத் தழுவித் தோட் டங்களில் மேய்ந்து வயலகளில் தங்கும் (அகம். 146: 1-4). ஈன்று காவறபட்டிருந்த பெண்புலியின் பசி தீர்க்க இரைதேடி யெழுநத ஆண்புலி, வளைந்த கொம்பினையும் தலைமையையும உடைய ஆமான் ஏஎற்றினை வலம்படக் கொன்று இழுத்துச் செல் லும் (அகம். 238:2-9). ஏறு - 1 காண்க.

**ஏடு-1.** இதழ். பொற்றாமரைப்பூ ஒருவனால் செய்யப் பட்ட தன்றித் தனக்கென ஏடு - இதழ் - இல்லா தது (பொரு. 159).

2. மேன்மை. மகளிர் தாம் எடுத்துச் செல்லும் பிள் ளைக்குக் காவலாக வேம்பின் ஏட்டிலையை - மேன்மையான இலையை - பூவோடு அணிந்திருத் தல் (பெரு. 59).

**ஏணி** - 1. படிமரம். பகைவேந்தரின் மதிலைக் கவர் வதற்கு எடுத்த ஏணி - படிமரம் - தூது வந்த பார்ப்பானின சந்து மொழிகேட்டு மாற்றப்பட் டது (புறம். 305:2-5). மகட்கொடை மறுத்த தந்தை யின் மேல் போர் தொடுத்தோர் அவன் அரணைக் கவர்தற்கு அதில வாய்ப்பாகச் சார்த்திய ஏணி, மறவர் பலரும் ஏறிப் போர் செய்தலால் வருந் தும் (புறம். 343:13-15). நெற்கூடு, நீணட ஏணிக்கு எட்டாத நெடிய வடிவினை யுடையது (பெரு. 245, 247). மாடம் தனனிடத்துச் சார்த்திய ஏணியால் ஏறுதற்கரிய தலையினையுடையது (பெரு. 347,348), கள்வர் நூலேணியை இடையிற சுற்றித் தாம் களவாடற்குரிய இடம் பார்த்துப் பதுங்கியிருப்பர் (மது. 640,642). வானத்தில் ஊர்ந்து செல்லும் மதியம் வரையின்மேல் தங்கினால் அதனைத் தேனிறாலெனக் கருதி அதனை அழித்தற்குக் கானக நாட்டினர் கண்ணேணி அமைப்பர் (கலி. 39:8-10).

2. எல்லை. உலகம் நீர் செறிந்த பெரிய கடலை ஏணியாக - எல்லையாக - உடையது (புறம். 35:1,3; 137:2). பாசறை அளவிடப்படாத ஏணியினையும் பாசறைக்குரிய இயல்புகளும் பொருந்தியது (பதி. 24:14;81:14; பதி.தி. 4:10). அரிய வழிகளை அடைத் தற்கு முள்வேலி யிடுவதை அறியாத ஏணியை உடையது கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவனின் பகைவர் நாடு (பதி. 45:15). ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் பகைவர் பாசறை நிலவகலம் குறைபட இட்ட ஏணி கொணடது (நிலத்தின் பரப்பினும் பாசறைகள் மிகுதி) (பதி. 54:12). உலகம் முழங்கு கடலை ஏணியாகக் கொண்ட அகன்ற இடத்தை யுடையது (மது. 199).

3. கோக்காலி. ஏறாவேணி – கோக்காலி - மேல் கட்குடம் வைக்கப் பெற்றிருத்தல் (பதி. 43:33).

**ஏணிச்சேரி** - ஊர். உறையூரை அடுத்த இச்சிற்றூரில் முடமோசியார் வாழ்ந்தமையால் இவர் ஏணிச்சேரி முடமோசியார் எனப்பெயர் பெற்றார்.

**ஏணிப்படுகால்** - மேகலை. வையையில் புனலாடப் புறப்பட்ட மகளிர் மேகலையாகிய ஏணிப்படு காலை இறுகக் கட்டினர் (பரி. 10:11).

**ஏணிப்புலம்** - பாசறை. நிலத்தின் அகலம் குறைபட இடப்பட்ட ஏணிப்புலம் - எல்லையைக் கொண்ட பாசறை–உடைய பகைவர் நாட்டிடத்தே மேற் செல்லும் தானையை யுடைய இறைகிழவோன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 54:12,17).

**ஏத்தம்-ஓசை.** நன்னன் நாட்டுப் பக்கமலை யிடத்து நிழலில் தங்கியிருந்து கூத்தரால் கேட்கப்படும் ஒலிகள் பலவற்றுள் கரும்பைச் சாறுகொள்ளும் ஆலையின் ஏத்தமும்–ஓசையும்–ஒன்று (மலை. 341).

**ஏதப்பாடு - குற்றம்.** ஊர்க்காவலர் கள்வரைக் கண்ணாற் காணாதிருக்கவும் அவரால் வரும் ஏதப்பாடு - குற்றம் - கருதி இங்கே கள்வரைக் கண்டோம் என்பர் (கலி. 81:25,26).

**ஏதம் - துன்பம்.** காதலனைத் தொலைத்த ஆதிமந்தி போலத் தனக்குற்ற ஏதத்தை – துன்பத்தை – நாடு தோறும் ஊர்தோறும் சென்று சொல்லிப் பெரிதும் பேதுறுதலினின்றும் தலைவீ உய்ந்தாள் (அகம். 236:16–21). தலைவியின நோய் தன்னால் வந்த தன்று; தலைவனால் வந்தது என வெறியயரும் அன்னைக்கு முருகன் கூறுவானாயின் அதனால் அவனுக்கு ஏதமுண்டோ எனத் தோழி தலைவன் கேட்குமாறு தலைவியை வினவினாள் (நற்.173:4–10). ஒத்த குடிச் சிறப்புடைய நின்னோடே யான் சில மொழி கூறின் ஏதமில்லை எனத் தன்னைத் தடுத்துப் பேசிய வினைவல பாங்கிற்றலைவனிடம், ‘அதில் ஏதமன்று; யான் நாளை வருவதற்கு என்னை இப்பொழுது போகவிடு’ என்றாள் வினைவல பாங்கிற் றலைவி (கலி. 113:12,13).

**ஏதிலர் - அயலார்.** இப்பொழுது உனது மேனியில் ஏதிலர் - அயலாராகிய பரத்தையர் - மேலுள்ள மணம் வீசுகின்றது எனத் தலைவி பரத்தையர் பால் சென்று மீண்ட தலைவனிடம் கூறினாள் (பரி. 8:47-50).

**ஏதிலவர் - அயலவர்.** ‘யானுற்ற காமநோயால் வருந்தும்போது எனக்கு உசாத்துணையானவர் இளைய பிள்ளைகளும் ஏதிலவருமே - அயலவருமே - அன்றிப் பிறரில்லை’ என முன்பு மடலேறித் தலைவியை அடைந்த தலைவன், பாங்காயினார்க்குக் கூறினான் (கலி. 138:24,25).

**ஏதிலன் - அயலான்.** ஏதிலன் - அயலான் - பொய்ம் மொழியினை நம்பி அழகிய வளஞ்செறிந்த செல்வ மாளிகை தனித்தொழியத் தலைவி அவனுடன் போயினள் எனச் செவிலி வருந்துதல் (அகம். 117: 3,4).

**ஏதிலாட்டி - அயலாள்.** தலைவர்பால் சென்ற என் நெஞ்சம், அவர் அருள் செய்யாமையால் கலங்கி இங்கு வந்து, அது பிரியுமுன் னிருந்த நலனை இழந்துவிட்ட என்னை யறியாமல், ‘இவள் ஏதிலாட்டி - அயலாள் - என்று கருதி என்னைத் தேடிச் சென்றதோ’ எனத் தலைவி தோழியிடம் கூறி வருந்தினாள் (நற். 56:7-10).

**ஏதிலார் - அயலார்.** ‘கையிற் பொருளில்லாதவர்க்குத் தம்மாற் காதலிக்கப்பட்டார் என்ன செய்யமுடியும் என்று ஏதிலார் - அயலார் - கூறும் சொற்களைப் பொருளாக மதித்தாயோ’ எனக் கூறித் தோழி தலைவனைச் செலவழுங்குவித்தாள் (கலி. 14:12,13). ‘நன்மைக் குணமுடையார் தாம் கூறிய மொழியிடத்து உயிராகிய உண்மை கெடார்; நீ கூறிய சொல் மாறிப் பொருள்வேட்கை யுற்றாய்; அதுபற்றி நினக்கு ஏதிலாராகிய நான் கூறுவது என்ன பயன் தரும்’ எனத் தோழி தலைவனிடம் வினவிப் பிரிவு மறுத்தாள் (கலி. 22.6-8). பரத்தைமை ஒழுக்கமுடைய தலைவனை, ‘எரிபோலும் நிறத்தை யுடைய இதழ்கள் வாடி உதிர ஏதிலாரை (அயலாராகிய பரத்தையரை) புணர்ந்தமைக்குச் சான்று கூறும் கண்ணியை யுடையவனே’ எனத் தலைவி விளித்தாள் (கலி. 78:13,14). முடியிலே பொருந்தும் மாலை போல யாம் வாட ஏதிலாராகிய பரத்தையரது தொடியினாலுற்ற வடுவினைக் காட்டி இங்கு எம் இல்லில் வநதாய் எனக் கூறித தலைவி பரத்தைமையொழுக்கமுடைய தலைவனிடம் ஊடினாள் (கலி. 78:21,22). ‘ஐயனே, எம்முடைய மகரக் குழையை நீ வாங்கிக் கொண்டு போய் எம்மிடத்தே மீண்டு வருந்தோறும் எம்முடைய வறிய கூந்தலில நின்னை யாங்கள் வைத்துக் கொள்வது நுந்தையின் மார்பிற் கோதையை அறுத்து நீ விளையாடுதற்கே யாகும்; நீ அங்ஙனம் விளையாடினால யாமும் எமக்கு ஏதிலா ராகிய பரத்தையர்பால் அவன் வைத்த அன்பு தேயக் காண்போம்’ என்று சிறைப்புறத்தா னாகிய பரத்தைமைத் தலைவன் கேட்கத் தலைவி மகனுக்கு உரைத்தாள் (கலி. 80: 22-26). ஏதிலாராகிய பரத்தையா எம்மை இகழ்ந்து நினக்கு அணிவித்த மோதிரங்கள் யாவை, யாம் அவற்றைக் காண்போம் எனத் தலைவி தன் மகனிடம் கேட்டாள் (கலி.84:20,21) சுட்டின மாலையை நின் கூந்தலில் சூட்டுவேனோ என்ற தலைவனிடம் ஏதிலாராகிய எம் சுற்றத்தார் சூட்டின பூவைக் கொள்ளும் நீ மிகவும் பேதைமை உடையாய் எனத் தனக்கும் தலைவனுக்கும் இடையே நிகழ்ந்த உரையாடலைக் கூறித் தலைவி தோழியைத் தாய்க்கு அறத்தொடு நிற்க வேண்டினாள் (கலி. 111: 12-15). ‘நின்பால் கொண்ட காதல் மிக்க காமம் கலக்குதலாலே என் நெஞ்சு எனக்கு ஏவல் செய்யவில்லை’ எனச் சொன்ன கைக்கிளைத் தலைவனிடம் உனக்கு ஏதிலாராகிய நான் கூறிய பொயயைத தெளியும் தன்மை எங்ஙனம் உண்டாயிற்று எனக் கைக்கிளைத் தலைவி கேட்டாள் (கலி. 113: 19-21). பிரிவால் மெலிந்தழியும் தலைவி திங்களை விளித்துக் காதலன் அருளாமையால் செய்த மனக்

கலக்கம் உறுகின்ற என் காம நோய்க்கு நின்னை ஒழிய ஏதிலார் எவரும் ஒரு மருந்தைத் தெளிவித்துக் கூறார்; ஆதலால் நீயே அவன்பாற் சென்று என் குறை முடிப்பாய்' என்று அதனிடம் கூறிப் புலம்பினாள் (கலி. 145: 47-50).

**ஏதிலாள்** - அயலாள். என் மகன்மேல் உள்ள ஆசையால இங்கு வந்து, பூணினை யுடைய முதிர்ந்த முலைகளால நின மார்பொடு பொருத ஏதிலாளாகிய - அயலாளாகிய - பரத்தை முடியினின்றும் உதிர்ந்து நின ஆடையில் சிந்திக்கிடக்கும் துகளை விளக்கக காற்றின எதிரே நின்றாய், இங்ஙனம் நிலலாதே போ' எனத் தலைவி பரத்தைமைத் தலைவனைக் கடிந்தாள் (கலி. 81: 29-32). நீராடும் தலைவன தனது மாலையைக் காதற்பரத்தை அறியாதபடி இற்பரத்தைக்குப் புனலின்வழி விட்டானாக அதனை ஏதிலாள் கூந்தலிற் கண்ட பரத்தை மாலையைத தருக என்று கேட்டாள் (பரி. தி. 2. 34-36).

**ஏதிலார்** - அயலார். புள்ளினம் துணையோடு சேர்ந்தமையால் எழுப்பும் ஒலி நமக்குத் துன்பம் தரும் என்பதை நினையாது பிரிந்த ஏதிலாளராகிய- அயலாராகிய- தலைவர் வரின, 'என் கூந்தலை அழகு செய்யாதீர், எம்மைத் தீண்டாதீர் என மொழிவேன்' என்று பிரிவிற் கவன்ற தலைவி தோழிக்குரைததாள் (குறு. 191). 'தலைவர் நாம வாழும் ஊரில் வாழ்ந்தும் நம சேரி வருவதில்லை; வரினும் ஏதிலாளர்க்கு உரிய சுடுகாட்டைப் பார்ப்பது போல நம்மைக் கண்டு ஒன்றும் பேசாமல் செல்லுவார்' எனத் தலைவி வாயிலாகப புக்க தோழிக்குச் சொலலல (குறு. 231) 'அன்பிலராய்ப் புறத்தொழுககம் உடைய ஏதிலாளர் பொருட்டு என கணகள் ஆம்பற்பூவின் தாதுபோலும் நிறததை அடைந்தன' எனத் தலைவி வாயில் வேண்டி வந்தார் கேட்பத் தோழிக்குரைத்தல் (ஐங். 34).

**ஏதிலாளன்** - அயலான். ஏதிலாளன - அயலான் - கூறிய காதல மொழிகளை நம்பி, பெரிய நிலமும் வெப்பம் பொறாது பெருமூச்சு விடும் காட்டு வழியே தலைவி சென்றாள் என மகட்போக்கிய தாய் கவன்றாள (அகம. 275:10,14,15). கடற்சேர்ப்பனைக குறித்து, 'அவன் நுமக்கு நட்புடைய னலலன்; ஏதிலாளன் ஆயினான' என்று பலரும் கூறுவர் என்பது பாணற்கு வாயில் மறுக்கும் தோழி கூற்று (நற். 74:5,6). குருகுகள் ஆரவாரிக்கும் வயற்கரையிலே கடவுளேறிய எரிபோனற பூவையுடைய வேங்கை மரத்திற் கட்டிய கட்டுப் பரண அருகிலே திருமாவுண்ணி ஏதிலாளன் ஒருவன செயலால் கவலை கொண்டு ஒரு முலையை அறுத்தாள் (நற். 216:6-9). 'என் தோழியின் இயலும் அணியும் வருந்த ஏதிலாளன் போல நீ பிரிந்ததன் பொருட்டு என் கண்கள் மார்பின் அணி நனையுமாறு நீர்சிந்தின' என்பது ஒருவழித் தணந்து வந்த தலைவன் கேட்பத் தோழி கூறியது (ஐங். 232).

**ஏதிலான்** - அயலான். அறிவில்லாத அமைச்சன் காரியத்தைப் புலப்படுத்தப் படைவலி இல்லாத அரசனது நாட்டில் ஏதிலானாகிய - அயலானாகிய - பகையரசன் வந்து தங்கினான் (கலி. 27:7,8). முடிக்கும் பூ இதுவென் றறியாத என்னுடைய மயிரில் ஏதிலான் கையாலே புனைநத கண்ணியை நான் முடித்தேன் என்று தாயறியின் என்னை வெகுளுவாள் எனத் தலைவி கூறல் (கலி. 107:14-16).

**ஏதின் மாக்கள்** - அயலார். 'நன்மை தருவன போலவும் முறைமையுடையன போலவும் முனனோர் பின் பற்றி யொழுகின போலவும் கூறி அன்புடைய நும்மைப பிரிப்பதற்கு முயலும் ஏதின மாக்களின் - அயலாரின - சிறப்பில்லாத மொழிகளைக் கேளாமல இன்றுபோல ஒனறி யிருபபீராக' எனக் காவிரிபபூம பட்டினத்துக காரிக் கண்ணனார், சோழன குராப்பள்ளித துஞ்சிய பெருந்திருமாவளவனும் பாண்டியன் வெள்ளியமபலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்ததைப் பாராட்டி அறிவுரை கூறினார் (புறம. 58:24-28). தலைவி குற்றும் பொழுது பாடும் வள்ளைப் பாட்டில் தலைவன பெயரைக் குறிததுப் பாடினது பற்றி ஏதின் மாககள் குறை கூறினர் எனத தோழி சிறைப்புறத் தலைவன கேட்பத் தன்னெஞ்சிற்குக் கூறினாள; (குறு. 89:1,2,7).

**ஏது** - காரணம். 'முன்பு அன்பு செய்து கூடி இப்பொழுது ஆயத்தாரும் தாயும் அறியும்படி கண்கள் நலத்தை இழக்கச் செய்து ஏது - காரணம் - இன்றி நம்மைத் துறந்தாரிடத்தே வெறுப்புக் கொண்டாய்' என்று காமஞ்சாலாத் தலைவியிடம் தோழி கூறினாள் (கலி. 122:1-4).

**ஏந்தல்** - தலைவன். பரவிய அடிகளைப் பெற்ற களிற்றினத்தின் ஏந்தல் - தலைவன் - வந்து கைக்கொள்ளும் கரும்புத் தோட்டத்தின் பாத்தியின்கண் வீழ்ந்தழிந்த கருமபுகளின கணுக்களுக்கு இடையேயுள்ள பகுதியைப் போனறு வாடிய ஒற்றை மூங்கிலை உடையது சுரம (குறு. 180:1-4). 'எட்டுக் கைகளுடன் கூடிய ஏந்தல்' எனத் திருமாலைக் கடுவன் இளவெயினனார் விளிக்கின்றார் (பரி. 3:38).

**ஏம்** - 1. இன்பம. போர்வைக் கோப்பெருநற்கிள்ளி போர்க்களத்தில் தனக்கெதிராகத் தோளவலிபேசி

ஏமுற்று - இன்பமுற்று - வந்த மள்ளர் அஞ்சத் தக்க ஆற்றலுடையவன் (புறம். 84:5, 6). தலைவி ஏமுறுதற்குக் காரணமான வஞ்சினத்தைத் தலைவன் வாய்மையிற் கூறி அவளைத் தேற்றினான் (குறி. 210). 'தளர்ந்த நெஞ்சம் ஏமுறுமாறு நாம் சென்று தலைவியின் நலத்தைப் பெறுதற்குத் தேர் விரைந்து செல்வதாக' என வினைமுடித்து மீளும் தலைவன் பாகனை விரைவு படுத்தினான (அகம். 34:9, 10, 18). மழை பொழிதலால் நிலம் அழகு பெற்ற ஏமுறு பொழுதில் தலைவி சிற்றூரிலிருக்கத் தலைவன் பாசறையிலிருந்து வருந்தல் (அகம். 84: 4, 5, 10, 17). 'தலைவியின் இருண்ட மெல்லிய கூந்தலகத்து ஏமுறு துயிலை நாளைப் பகற்குறிக்கண் பெறுக' எனத் தலைவனைத் தோழி இரவுக்குறி மறுத்தாள் (அகம. 92:7-13). ஆணமான் விருப்பமிக்க பெண்மானுடன் ஏமுற வதிதல் (அகம். 139:10, 12; 154:8, 9). வறுமையுற்றோர் தாம் விரும்பும் இனிமை பொருந்திய நண்பருடன் ஏமுற இயைந்து மகிழ்ந்திருத்தல் இயலாது (அகம். 151:1-3). மயில் தன் அழகிய கலாவத்தை விரித்து ஏமுற அகவும் (அகம். 194:11, 12, 15). இளைய பெண்யானை இனத்துடன ஏமார்ப்ப (இன்பமடைய) புலியாகிய பகையை வென்ற புண்மிக்க ஆண்யானை கையை உயர்த்திப் பெருமூச்செறியும் (அகம். 202:2-4). 'நம் இல்லில் விருந்தாற்றுதற்குப் பொருளீட்டச் சென்ற தலைவர் ஏமுறு விழுநிதி எளிதில் எய்துக' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (அகம். 205:13, 14). என் மகளை உடன்கொண்டு போன காளையிடத்தே அவள்கொண்ட அன்பின் உறுதியை முன்னமே அறிந்திருப்பின் அவளது முலைப்பரப்பில் அவன் கொள்ளும் ஏமுறு துயிலை யான் இனிது கூட்டி வைத்திருப்பேன்' என மகட்போக்கிய தாய் மனமழிந்து கூறினாள் (அகம். 263:9, 10, 13-15). மான் ஏமுற்ற அழகிய வேனிற் காலத்தில் யான் மீண்டும் வருவேன் எனக் கூறித் தலைவன் பிரிந்து சென்றான் (அகம். 317:14, 17). நின் ஏமுறு புணர்ச்சியாகிய இன்துயிலை மறந்து தலைவர் பிரிவு நீட்டித்திரார் எனத் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (அகம். 393:21, 25, 26). தலைவன் தன் பாங்கனை, 'இளைஞர் ஏமுறுதற்குக் காரணமான நட்புடையோய்' என விளித்தான் (குறு. 129:1). பலரும் தொழுமாறு தோன்றி ஏமுற விளங்கிய ஞாயிற்றினும் தலைவனின் சொல் வாயமை சான்றது (நற். 283:6-8). மன்னுயிர் ஏமுறும்படி அகன்ற ஆறுகள் உலகத்தைப் பாதுகாக்கும் (கலி. 34:1, 3). 'வாய்மொழிப் புலவ, யாம் ஏமுறு நெஞ்சத்தேமாய்ச் சுற்றமொடு நின திருவடிக்கண் பொருந்தி என்றும் பொலிக என நின் திருவடியைத்தொழுது பரவுகின்றோம்' என்றுதிருமாலைத்தொழுதல் (பரி. 1:62-65). வையையே, இன்று நின்பால் நீராடிப் பயன் பெற்றாறபோல் பயன்பெற்று நின்னைப் பாராட்டித் துன்பு நீங்கி யாம் ஏமாக்க (இன்புறுவேமாக) எனப் புனலாடுவோர் வேண்டினர் (பரி. 7:84-86). தாம்வேண்டும் பட்டினமெய்திக் கரைசேரும் ஏமுறு நாவாயின் வரவை எதிர்கொள்வார்போல் முகைப் பருவ மகளிர் வையைப் புனலை எதிர்கொண்டனர் (பரி. 10:19,38-40).

2. மயக்கம். அயன், அரி, அரன் என்னும் மூவரும் தலைவராக வேண்டித் தேவர்க ளெல்லோரும் ஏமுறும் - மயக்கமுறும் - ஞாலத்தின்கண் தோன்றித் திருவாவினன்குடியில் முருகனைக் காண வந்தனர் (முரு. 162,163,174). வெம்மை மிக்க நெறியென்று நினையாது ஏமுற்று அநநெறியில் தலைவன் பொருளீட்டப் பிரிந்தான் (அகம். 69:9,12). 'இரவுக்குறி வந்து மீளும் நீ, நின் சிறுகுடி சேர்ந்தவுடன் இங்கே யாம் ஏமுறு துயரத்தினின்றும் நீங்குமாறு நின் ஊது கொம்பினைச் சிறிதே ஊதல் வேண்டும் எனத் தோழி தலைவனை வேண்டினாள் (அகம். 318:10-15). தலைவிக்கு அசோகந் தழையுடை கொடுத்துக் காமநோய் செய்தவன் தலைவன் என்பதை அறியாது ஊரார் அரலை மாலை சூட்டி முருகனுக்கு வெறியெடுத்து ஏமுற்றனர் (குறு. 214: 3-7). சூல்முதிர் இளம்பிடி ஏமுற்றுத் தன் வயிறறுச் சூல பிணடமாகி வழுவி விழுமாறு மூங்கில் முளையைத் தினனும் (நற. 116:3-5). இடையன் வாய் குவித்து ஊதும் சீழ்க்கை யொலியின் குறிப்பில் ஏமார்த்து ஆட்டின் தொகுதி இடம்பெயராது தங்கும் (நற். 142:4-7). மடனமா பண்ணி வரும் தலைவனுடன் திரிதரும் சிறுகுறுமக்கள் பேரேமுறுநர் (பெருமயக்கமுடையவர்) (நற். 220:3,4,7). தலைவியின் உடம்பெங்கும் பரந்து துன்பம் தரும் ஏமுறு துயரத்தைக் கண்ட செவிலி வருந்தி வெறியயர்ந்தாள் (நற. 273:1-4). பிரிவாற்றாது தலைவி பெரிதும் கலங்குவாள் எனப் பகைவர் ஏமுறு கடுந் திண்டேர் கடவித் தலைவன் விரைந்து மீண்டான் (கலி. 27: 24-26).

3. பாதுகாவல். கழனி நடுவே ஏமுற்று - பாதுகாவலுற்று - கடல்நடுவே கலம் போலத் தோன்றும் ஓரெயில் மன்னன் தன்னை வணங்காதவர்க்கு மகளைக் கொடுக்கமாட்டான் (புறம். 338: 9-12). முருகனின் அறுமுகத்துள் ஒரு முகம் மெய்ந்நூல்களாலும் கண்டுணர்த்தமாட்டாத பொருள்களைச் சான்றோர் ஏமுறும்படி ஆராய்ந்து உணர்த்தித் திங்களைப் போலத் திசைகளை விளக்குவிக்கும் (முரு. 97,98). மலைச் சாரலில வலிமை மிக்க

ஆண்யானை தன் பெரிய கையினால் ஏமுறத் தழுவி நிற்கவும் முதற் சூலை யுடைய இளைய பெண்யானை யாளிக்கு நடுங்கும் (அகம். 78:1,4-6). செம்மறி யாட்டின் தொகுதி ஏமார்ப்ப (பாது காவலடைய) இடையன் தீக்கடை கோலினின்று சிறுதீ வளர்த்துச் சீழ்க்கை ஒலி எழுப்புவான் (அகம். 274: 4-9). நீ யாம் உரைப்பதைக் கேட்டருள்வாயானால் இன்றிரவு எமர் குறையிரந்து வேண்ட எம் சிறு குடிலில் நீ தங்கி ஏமுறவும் இன்புறவும் யாம் விருந்தயர்தலைப் பொருநதுவோம் எனத தோழி தலைவனை வேண்டினாள் (அகம். 300:19-22). திருமால், தனக்குப் பகையாயினார் உயிரின்கண் அதனை மாற்றுதல தொழிலும் உறவாயினார் உயிரின்கண் அதற்கு ஏம் ஆற்றல் (ஏமஞ்செய்தல) தொழிலும உடைய ரல்லர் (பரி. 4·52,53).

4. பித்து. மடலேறுந் தலைவன் விற்பதற்காகாத பயனற்ற பூவின கண்ணி சூடி நல்ல ஏமுறுவலன் - பித்தேறியவன் - என்று கண்டோர் கூறும்படி திரிநதான் (நற். 146·1-3). ஊரனே, நின புகழ் பாடும் பாணனும் ஏமுற்றான; நின் மொழிதேறும் பெண்டிரும் ஏமுற்றார்; பரத்தைமை நெஞ்சுடைய நீயும ஏமுற்றாய்; பெண்டிர் அகபபடுதற்குக் காரணமான வலையென்று ஊராரால சிரிக்கப் படும் நின்தேரும் நின்னினும் ஏமுற்றது என்று தலைவனிடத்துத் தலைவி ஊடினாள் (கலி. 74:7-16). நினனை யான் அறிந்ததும் இலலாதபோது, பேரே முற்றார் (பெரிய பித்தேறினார்) போல முன்னின்று என்னை விலக்கும் நீ யார் என வினைவல பாங் கின் தலைவனால் தடுக்கப்பட்ட தலைவி அவனை வினவினாள் (கலி. 113:4,5). யானுற்ற காமநோயி னைத தாமுற்று அறியாதவர்கள் எனனைக் கண்டு 'மனத் துணிவில்லாதவள் எவ்வளவு ஏமுற்றாள்' எனறு இகழ்நது சிரிப்பாராயின சிரிக்கட்டும் எனப் பிரிவாற்றாத தலைவி கலங்கிப புலம்பினாள் (கலி. 144:63,64). பிரிவாற்றாது கலங்கிய தலைவி தன்னை அணுகிக் கண்ட மகளிரைக் கடிந்து இங்கு ஏமுற்றா ரைக் கண்டீரோ எனச் சினநதாள் (கலி. 147:12).

5. களிப்பு. ஏமுறு - களிப்புப் பொருந்திய - பெரு மீன் பரதவரால் எறியப்பட்ட உளி தாககிய பொழுது கடலைக கலக்கி வலியழிந்து துறையைச் சேரும் (அகம். 210:1-6).

**ஏமம் - பாதுகாவல்.** சிவபெருமான் எல்லாவுயிர்க்கும் ஏமமாகிய - பாதுகாவலாகிய - அருந்தவத்தினர் (புறம். 1:11,13). பாணடியன் கருங்கை ஒள்வாட் பெரும் பெயர் வழுதி, ஏம் முரசம இழுமென முழங்க ஆணைச் சக்கரம செலுத்தியவன (புறம். 3: 3,4). சோழன இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஏம நன்னாடாகிய பகைவர் நாட்டினை எரியூட் டிப் போர் செய்ய, அவன் கருத்திற்கேற்ப அவனு டைய களிறுகள் பொருதன (புறம். 16:17-19). சேர மான் யானைக்கட் சேய் மாந்தாஞ்சேர லிரும் பொறை, தன் நாட்டிற்குப் புதுப்பறவை வரினும் நாட்டை விட்டுப் பழம்பறவை போகினும் தீ நிமித்தமாகக் கூடிய அவற்றால் நடுக்கமுறுதலை யறியாத ஏமமாகிய காப்பினை உடையவன் (புறம். 20:18,19). சேரன் இமயமலையின்கண் சூட்டப்பட்ட ஏம விற்பொறியை உடையவன் (புறம். 39:15). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவ னைச் சினப்பித்த பகைவேந்தரின் நாட்டில் ஆட வர் கனவிலும் நனவிலும் தீ நிமித்தம் கண்டு, அவன் படையெடுப்பை உணர்ந்து மையல் கொண்ட ஏமமில்லாத இருக்கையராய் வருந்துவர் (புறம்.41:11-13,17). உள்ளூரிற் கூறிய நெடுமொழியைப் போர்க் களத்தில மறந்த சிறுபேராளர் பகைவர்க்கு அஞ்சியோடுங்காலை, பாண்டியன் கீரஞ்சாத்தன் அவர்க்கு ஏமமாகத் தான் முந்துறுவான் (புறம். 178:8-11). கோப்பெருஞ்சோழன் அஞ்சினார்க்கு ஏமமாகும் தாள்களை யுடையவன் (புறம்.213:20,21). ஒரு பெண்ணுக்காக வேந்தரால் முற்றுகையிடப் பட்ட ஏமம் பொருந்திய சிறபபினையுடைய மருத நிலத்து நல்ல ஊர் இனி என்னாகுமோ என இரங்குகிறார் படைமங்க மன்னியார் (புறம். 351:5-12). இரவைப் புறங்கண்ட காலைப் பொழுதில் ஞாயிறு தோன்றிக் குறையிருளை அகற்றும் ஏமப் பாசறைக்கண் வைகறையோசையைக் கேட்பதற்குத் துயிலெழுவாயாக எனக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைக் கிணைப்பொருநன் துயிலெடுத் துப் பாடினான் (புறம். 397:6-9). முருகப் பெருமான் அவுணர்க்கு ஏமஞ் செய்யும் சூரனாந் தன்மையை உடைய மாமரத்தின் அடியை வெட்டியவர் (பதி. 11:4-6). இளஞ்சேர விரும்பொறை தன் நாட்டு உயிர்களுக்கு அச்சமில்லாமல் ஏமமாகிய மாந்தரஞ் சேரலின் மருகன் (பதி. 90:2,13). விரும்பத் தகும் தும்பி ஏம இன் துணையாகிய பெடையைத் தழுவித் தாமரை மலரின் பீடத்தில் துயில் கொண்டு எழுந்து சீகாமரம் என்னும் பண்ணைப் பாடும் (சிறு. 73-77). தம் வண்டிகளைப் பக்கத்தில் பலரும் பாதுகாத்து வர உப்பை விலைகூறி விற்கும் உமணர் ஊர் தோறும் செல்லும் நெடுவழி பகலிடை வழிப்போ வோர்க்கு ஏமமாகும் (பெரு. 63-66). தன் பரிசிலை விரும்பித் தன்பால் வந்தோர்க்கு ஏமமாகிய கைவண் மையையுடைய தலைவன் காஞ்சியிலே யிருக்கிறான் எனத் தொண்டைமான் இளந்திரையனைக் குறித் துப் பெரும்பாணன் ஆற்றுப்படுத்தப் படுகின்றான் (பெரு. 420,421). பெரிய ஒழுக்கத்தினை யுடைய

மெய்க்காப்பாளர், ஏமமாகச் சூழ்ந்திருக்கத் தலைவன் பாசறைக்கண் இருந்தான் (முல்லை. 54). ஊர் காப்பாளர் இரவில் நன்கு காவல் புரிதலால் மதுரை நகரில் தெய்வங்கள் உலவும் கங்குலும் யாமமும் அச்சமறியாது ஏமமாகிக் கழிந்தன (மது. 651-653). இராக்காலம் தன்னிடத்தினின்றும் போகின்ற வைகறை ஏமவைகறை எனப்படும் (மது.686). 'தமியேமாய் யாங்களே துணிந்த ஏமஞ்சால் அருவினையாகிய இக்களவுமணம் நிகழ்ந்த முறையை நீயுணரச் சொல்லுத லமைந்தேன், சினவாமற் கேட்பாயாக' என்று செவிலியிடம் தோழி அறத்தொடு நிற்கின்றாள் (குறி.32-34). புல்லூற்றினால் எற்றுதற்குக் குறிவைக்கப்பட்ட குறும்பூழ்ச் சேவல் ஏமம் பொருந்திய இடத்திற் சென்று தங்க எண்ணித் தான் இருந்த நிழலற்ற காய்ந்த சிறுதூறு தனித்தொழியப் போய்ச் சீறூரின் மனை இறப்பு நிழலில் தங்கிப் பெருமூச்செறியும் (அகம்.103:1-9). அதிகன் என்பான் புட்களுக்கு ஏமமாகிய பெரும்புகழை உடையவன் (அகம். 142:12,13). பொருள்வயிற் பிரிந்த தலைவன் இடைச்சுர மருங்கில் சில்குடிப் பாக்கத்து வாழ்வோர் இரவில் விருந்து செய்ய ஏமத்துடன் தங்கி மேற்சென்றான் (அகம். 187:12,13). உப்பு வணிகரின் வண்டிகளை இழுத்துவரும் எருதுகளின் மணியொலி, அவ்வணிகர் எழுப்பும் சீழ்க்கை யொலியோடு விரைந்து சென்று ஓமை மரக்காட்டில் வரும் புதியராய வழிப்போக்கர்க்கு ஏமஞ் செப்பும் (அகம். 191:4-10). இற்செறிக்கப்பட்டிருக்கும் தலைவி 'நின்னோடு காதல் நீங்காத புணர்ச்சியினால் தோளழகு கெடாண்மைக்கு ஏதுவான ஏமத்தினை யாம் தெளியுமாறு சொல்வாயாக' எனத் தோழி இரவுக்குறி வரும் தலைவனை வினவி வரைவு கடாவினாள் (அகம். 220:15,20-22). பிரியும் தலைவன் கார்காலத்திற்கு முன்பே வருவதான ஏமத்தினைத் தலைவியிடம் செய்து பிரிந்தான் (குறு.200:7). பிரிந்துசென்ற தலைவர் நமக்கு அச்சந்தரும் துயரத்தைச் செய்யாமல் விரைந்து வருவர் எனும் தோழியின் ஆறுதல் மொழி தலைவியின் நோய் மலி நெஞ்சிற்குச் சிறிது ஏமமாகும் (நற். 133:7-11). 'நின் அழகிய நலங்கருதி யான் இரவுக் குறிக்கு வருங்காலத்து நின் மேனியொளியே எங்கும் பரவி இருளைப் போக்குவதாகத் தோன்றுதலால் இம்மலையடியிலுள்ள வழி எனக்கு ஏமமாகும்' எனத் தலைவியிடம் தலைவன் கூறினான் (நற். 192:10-12). 'தலைவிக்குப் பலநாளும் விருப்பமூட்டும் மிக்க இனிய சொற்களைச் சொல்லி அவ்வாறு சொல்லியபடி நடத்தல் அவளுக்கு ஏமமாகும் என்று அருளாதவனாய் நீ மயங்கினாய்' எனத் தோழி தலைவனை வரைவு கடாவினாள் (நற். 396:9-11). 'துன்பமிக்க நின்நெஞ்சிற்கு ஏமமாக நின்மகள் தன் காதலன் முன்னுறுமாறு மீண்டு வந்தனளோ, எனத் தலைவனுடன் போன தலைவி மீண்டுவந்தகாலை நற்றாயிடம் அயலோர் வினவினர் (ஐங். 393:3-5). 'இவ்வுலகிற்குஏமம் என்று கூறும்படியாக ஒலிக்கும் நின் முரசினது ஏமத்தினின்றும் நீங்கினவளல்லாத இவளை நீ அருளிப் பாராய்' எனத் தலைவியை நீங்கியிருந்த தலைவனிடம் சான்றோர் கூறினர் (கலி. 99:14-16). மடலேறும் தலைவன், 'காமமாகிய கடிய பகை என் ஆண்மையை அழிக்க இங்ஙனம் தோன்றிய எனக்கு அழகிய நுதலினையுடைய தலைவி தந்த இம்மடன்மா ஏமமாயிற்று' என்றான் (கலி. 139:24,25). திருமால் அருளைக் குடையாகவும் அறத்தைக் காம்பாகவும் கொண்டு மூவேழுலகத்தையும் தனியே காக்கும் ஏமத்தை உடையவர் (பரி. 3:74-76). 'இவையும் உவையும் அவையும் பிறவுமாகி நின்னிடத்திலிருந்து பிரிந்து நின்னால் ஏமம் செய்யப்பெற்றன எல்லாம் பின்னும் நின்னோடே பொருந்தின' என்று கடுவன் இளவெயினனார் திருமாலைப் பாடுகிறார் (பரி. 4: 33-35). வையையாற்று வெள்ளம் மலை போலும் இருகரை ஏமத்திற்கு அடங்கி, நுரைபல சுமந்து, பூவேய்ந்து பொழில் புகுந்தது (பரி. 7:40-42). பூவில் வீழும் வண்டு பின்னர் அப்பூவைத் தனியே விட்டுப் போவது போலப் போகாமல் எம்மை யாம் விரும்புகின்ற கணவர் ஏமமாக எய்துக என்று மகளிர் வையையை வேண்டினர் (பரி. 11:118, 119). மேகம் மாநிலந் தோன்றாமல் மிகுதியான மழை பொழிவதை மேற்கொண்டு உலகிற்கு ஏமமாகிய நீரைப் பொழிந்தது (பரி. தி. 2:1,2).

2. **இன்பம்.** ஏமமாக – இன்பமாக – இந்நிலத்தை ஆண்டோர் சிலரே (புறம். 360:8,9). கடல் சூழ்ந்த இப்பெரிய நிலவுலகிற் சிறிதும் பிறர்க்கின்றித் தாமே ஆண்ட ஏமங்காவலர் அக்கடற்கரை மணலினும் பலர் (புறம். 363:1-4). இரவைப் புறங்கண்ட ஏமவைகறையில் வஞ்சன் என்பானின் நெடுமனை குறுகிக் கிணைஞன் தடாரியை முழக்கினான் (புறம். 398:6,12). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் காண்போர்க்கு ஏமமாகிய சிறப்புமிக்க விழாவினையுடைய திருமாலை யொத்த நல்ல புகழில் குறைதலில்லாத வீரன் (பதி. 15:38-40). செல்வக் கடுங்கோ வாழியாதனின் படைமறவர் பகைவரின் உறைவிடத்தைத் தாம் பெற்றாலன்றி அச்சத்தை யறியாத ஏம வாழ்க்கையையுடைய உத்தரகுருவில் வாழ்வாரைப் போல இனிய இன்பம் பொருந்திய பலநாள் உறைதலைப் பெறார் (பதி. 68:8, 12-14). மலையிடத்தே யெழுந்து திசையெல்லாம் ஒலிக்கும்

ஓசைகளுள் முதல் நாளில் பூத்த வேங்கைப் பூவைக் கொய்து சூடுதற்கு மகளிர் புலிபுலியென்று கூப்பிடும் ஏமப்பூசலும் ஒன்று (மலை. 305,306). மழையின்மையால் நாடு வறுமை கூரவும் கலப்பைகள் தொழிலறவும் கோடை நீண்ட காலத்தே குளங்களெல்லாம் நிறையுமாறு பெருமழை பொழிந்த வைகறை ஏமவைகறை எனப்படும் (அகம். 42:5–10). சேவலங்கொடியினையுடைய முருகவேள் காப்ப உலகம் ஏமவைகலை எய்துகின்றது (குறு. க. வா. 5,6). தலைவனொடு கூடியிருந்த ஏம இன்துயிலினின்றும் தன்னை எழுப்பிய கோழிச் சேவல் காட்டுப் பூனையின் குட்டிக்கு இரையாகித் துன்பத்தை எய்துக என்றாள் தலைவி (குறு. 107). மனறத்தின்கண் வேங்கைமரம் மலரும் செவ்வியைப் பார்த்துச் சிறுவர் அம்மரத்தின்மேல் ஏறாமல் செய்த ஏமப்பூசல் வானளாவிய மலைமுழையின்கண் எதிரொலிக்கும் (குறு. 241:3–6). 'பிணிமுகமூர்ந்த வெல்போர் இறைவனே, யாம் ஏம வைகலைப் பெறுவேமாக, யாமும் எம் சுற்றமும் நின்னைப் பரவுகின்றோம்' என்று நல்லழிசியார் முருகனைப் பாடுகிறார் (பரி. 17:49–53). மதுரைப் பேரூரிலுள்ளார், வேதமோதுவார் ஒலி எழுப்ப ஏமம் தரும் இன்துயில் எழுவதல்லது வஞ்சி, உறையூர்களில் உள்ளார் போலச் சேவற்கோழி எழுப்பும ஒலியால் எழுவதில்லை (பரி. தி. 7,8–11).

**ஏர்** – 1. அழகு. இளஞ்சேரலிரும்பொறை பரிசிலர் வியக்க உவகையின் முப்பத்திராயிரம் காணம் கொடுத்து அவர் அறியாமல் ஊரும் மனையும் வளம் மிகப் படைத்து ஏரும் - அழகும் – இன்பமும் இயல்வரப் பரப்பினான் (பதி.ப. 9). வேப்பிலையை இடைமிடைந்த கண்ணியையும் மிக்க ஏரினையும் வலிமையினையும் கொண்ட திண்தோளையும், முறுக்குண்ட உடம்பினையும் பெற்ற முழுவலிமாக்கள் உமணரின் உப்பு வண்டிகளைப் பக்கத்து நின்று காத்தனர் (பெரு. 59–63). மகளிர் மாந்தளிரின் ஏர் ஒத்த நிறமுடையவர் (மது. 706,707). படலைக் கண்ணியையும் பருத்த ஏரினையும் வலிமையினையும் பெற்ற தோளையும் முறுக்குண்ட யாக்கையையும் பெற்ற முழுவலிமாக்கள் தேறல் மாந்தி மதுரை அகல்நெடுந்தெருவில் மழையையும் பொருட்படுத்தாது வேண்டியவிடத்துத் திரிந்தனர் (நெடு. 29–35). அரக்கு விரிந்தன்ன பருத்த ஏர் உடைய மலையெருக்க மலரைத் தலைவியுடன் தோழி பறித்துப் பாறையின்கண் குவித்தாள் (குறி. 96–98). பசிய மணிகளோடு மாறுபட்ட பருத்த ஏர் உடைய வலிய கழற்காலையுடைய பொற்றொடிப் புதல்வர் ஓடியாடினர் (பட். 294,295). செவ்வரி பரந்த ஏர் பெற்ற உண்கண்ணில் நீர்த்துளிகளும் நில்லாமல் வீழ்கின்றன (அகம். 144:2). உயர் மருப்புடைய யானை பனைத்திரள் போன்ற பருத்த ஏர் உடைய வலிய தடக்கையால் மலையின் மரம்படத் தொலைத்துப் புலியைக் குத்தித் தினைப்புனம் கவர்ந்தது (அகம். 148:1–6). தலைவியின் ஏர் பொருந்திய நுண்ணிய கூந்தல் ஓரியின் கொல்லி மலையில் கார் காலத்து மலரும் பூக்களை ஒப்ப மணக்கும் (அகம். 208:21–24). நின் கூரிய ஏர் பொருந்திய வாலெயிறு ஊறிய நீரைப் பருகாமல் உறந்தை எய்தினும் தலைவர் சென்ற வினையிடத்துத் தங்கார் என்று தலைவியிடம் தோழி கூறி ஆற்றுவித்தாள் (அகம். 237:14–17). வடுகர் நள்ளிரவில் சென்று பகைவரை வென்று ஏர் மிக்க ஆனினங்களைக் கவர்ந்தனர் (அகம். 253:10,11,18). தலைவன் மையெழில் உண்கண் மடந்தையொடு வையையில் ஏர்தரு புதுப்புனல் ஆடியது அலராகியது (அகம். 256:10–13). 'மலைச்சுர நெறியில் பிரிந்து சென்ற தலைவர் பழியுடையரல்லர்; அவரைப் பிணித்துக் கொள்ளாது வாளால் அரிந்து செய்யப்பெற்ற ஏர் கொண்ட ஒளியுடைய வளையலை நெகிழ்த்த தோளே தவறுடையன' எனத் தலைவி தோழியிடம் உரைத்தாள் (அகம். 267:13–17). 'இனிய தேன் ஒழுகும் பலாக்கனிகளை உள்ளிட்ட ஏர் பொருந்திய செல்வங்களையுடைய எந்தையும் மலைநாடனுக்கு மகட்கொடை நேர்ந்தனன்' எனத் தோழி சிறைப்புறத் தலைவனிடம் கூறல் (அகம். 282:10–12). கொய்யத் தகுந்த குழையாகிய தளிரின் ஏர் ஒத்த அழகுடையவள் தலைவி (அகம். 319:12,13). கூரிய ஏர் கொண்ட வாலெயிற்றினள் ஒண்ணுதல் மகள் (அகம். 344:4; நற். 240:2). வினை முற்றிய தலைவன் வருகையால் திருந்திழையணிந்த தலைவி விருந்தேர்-புத்தழகு-பொலியப் பெற்றாள் (அகம். 384:13,14). தலைவனது பிரிவினால் தலைவியின் வளையணிந்த ஏர் பொருந்திய மென்தோள் நெகிழ்ந்தன (குறு. 377:2). சீறூரில் கைவல் வினைஞன் வாளரத்தால் அராவிய வளைந்த ஏர் பொருந்திய ஒளியுடைய வளையலை உடையவள் தலைவி (நற். 77:8,9). மக்களியங்குதற்கரிய, ஏர் பொருந்திய கவர்த்த வழியில் ஈங்கை மலர், மகளிர் மணலிடத்து விளையாடும் கழங்கு போலக் கற்பாறையில் உதிர்ந்து பரவிக் கிடக்கும் (நற் 79:1–4). குறுமகள் கையில் ஏர் பொருந்திய எல்வளை அணிந்திருந்தாள் (நற். 167:10). மருங்கூர்ப்பட்டினம் போன்ற தலைவியின் நெருங்கிய ஏர் பொருந்திய எல்வளை தலைவன் பிரிவால் கழன்றன (நற். 258:10,11). ஊரனை உள்ளி முன்கையிலணிந்த தலைவியின் ஏர் பொருந்திய எல்வளை நெகிழ்ந்தோடின (ஐங். 20:4,5). தலைவன் தேர்,

ஏர் உடைய பாசடும்பின் கொடி சிதைய அதனை ஊர்ந்து இழிந்து நெய்தலை மயக்கியது (ஐங். 101). பிரிவில் தலைவியின் ஏர் திகழ் ஒண் ணுதல் பசந்தது (ஐங். 225:4). இனைய ஏர் உண்கண் (ஐங். 378:5). மழை பெய்ததால் வயலெல்லாம் ஏர் பரவியிருந்தது (ஐங். 417:2). ஏர்கலந்து தேனுண்ணும் வண்டுகள் மொய்ப்ப மலரணிந்த கூந்தலுடையவள் எம்மை முயங்கினள் எனத் தலைவன் கூறினான் (ஐங். 417: 2-4). மேகம் அதிரும்பொழுது ஓய்வின்றி நலிந்து நொந்த உள்ளமொடு தலைவியின் ஏர் நினைந்து விரைந்து வந்ததாகத் தலைவன் தலைவியிடம் கூறல் (ஐங். 491). பிரிவால் வருந்தும் தலைவியின் முன் கையிலுள்ள ஏர் உடைய எல்வளை கோடற்பூ விழுவது போலக் கழன்றுவிழும் (கலி. 7:15,16). தலைவி இலங்குகின்ற ஏர் உடைய எல்வளையணிந் துள்ளாள் (கலி. 46:27). மலைப்பக்கம் மணக்கும் கூரிய ஏர் உடைய அலர்களைக் கொண்டது காந் தள் (கலி. 59:3). 'பிறை புரை ஏர்நுதால்' எனத் தோழியைத் தலைவி விளித்தல் (கலி. 67:19). குற ளன் கூனியை நோக்கிக் 'கலப்பையில் பொருந்திய கொழுவைப் போன்று முடங்கி மடங்கி வலிய முறித்து விட்டாற்போன்ற நிறைந்த ஏரால் என் னைத் தாங்கவியலாத காம நோயைச் செய்தாய்; நீ அருளுவாயாயின் என் உயிருண்டு' எனக் கூறி னான் (கலி. 94:9-12). சிறிய களிப்பினை யுடைய ஏர் உடைய உண்கண் அழும்படி காதலியைச் சில நாள் பிரிந்து பின்னர்த் தலைவன் கூடினான் (கலி. 97:26,27). பெடை மயிலை ஒப்பார் தம்கண் பொலிவு பெற்று ஏறுகோள் விழவின் ஏரினை முழுமையாகப் பார்க்கும் பரணைப் பெறுவாரா கில் சிறப்பாகும் என்று சுற்றத்தார் கூறல் (கலி. 102:15,16). ஏர் உடைய தழையை உடுத்து இலங் கும் இளமைப் பருவத்து எல்வளை யணிந்தாளது எழுச்சி உடைய நலம் மேன்மேலும் வளர்ந்து செல்லுமாறு தலைவன் அருள் செய்தான் (கலி. 125: 12.13). அழகிய சீர்பெற்ற செறிந்த ஏர் கொண்ட முறுவலை உடையவள் தலைவி (கலி. 140: 26,27). வையையிற் புனலாட ஏர் உடைய அணிகளை அணிந்து மைந்தரும் மகளிரும் சென்றனர் (பரி. 6: 27). நீராடற்கமைந்த அணியினையும் மாலையை யும் அணிந்த ஆடவர் ஏரணி கொண்ட மகளி ரோடு இன்புறுதற்குப் பாகோடு கூடிய இள மதுவைப் பருகினர் (பரி. 11: 62-66). பூவணிந்த செறிவால் சுனைகள் ஏர் துளும்புகின்றன (பரி. 18: 32,33). ஏர் வயலில் (அழகாகிய வயலிலே) நறவாகிய புனலை விட்டுக் காமமாகிய கலப்பையால் எம் எருது சோம்பிக் கிடவாமல் உழும் பழைய சாலே எனத் தலைவியின் ஆயத்தார் பரத்தையரை வைத னர் (பரி. 20: 52-54). தன் கணவன் ஒலிக்கும் துடியின் தாளத்திற்கேற்ப முத்துமாலை அசைய ஆடுபவளின் ஏர், வாடைக் காற்றினால் ஆடை அசையவும் அணி அசையவும் ஆடும் பூங்கொம்பு உளதாயின அதன் அழகை ஒக்கும் (பரி. 21: 60-63). ஏரணி இலங்கெயிற்று இன்னகையவரால் வையை அழகு பெற்றதோ, வையை வெள்ளத்தால் அவர் அழகு பெற்றனரோ என்பதைத் தேர்தல் அரிது (பரி. 22:31-34). வையை, நீரை அணியாகக் கொண்ட தென்று அதனை விரும்பி மதுரைமக்கள் ஏர் பொருந்திய அணிகளைப் பூண்டு சென்றனர் (பரி. தி. 2:9,10).

2. கலப்பை. தென்னம் பொருப்பன் நன்னாட்டில் ஏரால் உழுதுண்டு வாழும் உழவரின் பெரிய மனையிலுள்ள மகளிர் குளத்துக் கீழ் விளைந்த களத்தில் கொள்ளப் பட்ட வெண்ணெல்லை வேட்டுவன் மான்தசை சொரிந்த கடகமும் ஆய் மகள் தயிர் கொண்டுவந்த பானையும் நிறைய முகந்து கொடுப்ப அவர்கள் மகிழ்ந்து திரும்பினர் (புறம். 33: 1-7). கல்லை யுடைத்துண்டாக்கிய உவர் நீர் ஊறும் கிணறுகளையும் வில்லை ஏராகக் கொண்டு உழுதுண்ணும் வாழ்க்கையையும் உடைய சீறூர்த் தலைவன் ஒருவன், வறுமைமிக எய்தினும் ஆண்மையால் இல்லது படைக்கவும் வல்லவனா யிருந்தான் (புறம். 331:1-6). 'களிறு, குதிரை முதலியன மாய்ந்தமையின் பரிசில் பெறுதற்கில்லாமல் உவகை யின்றி இரப்போர் வருந்தும் போர்க்களத்துக் காலாட்களாகிய வைக்கோலைக் கடாவிட்டோதுக் கிப் போரெனக் குவித்த வாளாகிய ஏரையுடைய உழவ' என்று சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலா தனைக் கழாத் தலையார் விளித்துப் புகழ்ந் துள்ளார் (புறம். 368: 10-13). அம்புமழை பொழிந்து குருதி தோய்ந்த போர்க்களத்தில் தேர்கள் ஏராக விடியற்காலம் சென்று வேல் முதலிய படைக்கருவி களை நீட்டி மாற்றார்ப் படைக்கலங்கள் கீழ் மேலாக மறிக்கப்பட்டு ஆழ்ந்தமைந்த படைச்சாலில் வேலையும் கணையமரத்தையும் விதைத்துப் பிணங் களாகிய பயிரை விளைத்தான் சேரமான் கட லோட்டிய வெல்கெழுகுட்டுவன் (புறம். 369:9-14). முரசு முழங்கும் புகழமைந்த பாசறையில் தங்கி வில்லை ஏராகக் கொண்டு போராகிய உழவினைச் செய்யும் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனது நல்லிசை உள்ளிக் கிணைஞன் பரிசில் பெற வந்ததாகக் கல்லாடனார் பாடியுள்ளார் (புறம். 371:12,13). ஏரினால் உழு துண்டு வாழும் உழவர் மனையிற் சென்று கிணை ஞர் இரந்து அவர் நல்கும் உணவைப் பெற்று வாழும் வருந்திய வாழ்க்கையை மேற்கொண்டிரு

தனர் (புறம். 375:5-7). பல யானைக் கூட்டத்தோடு வெல்கொடி நுடங்கும் படையாகிய ஏரை உடைய உழவன் என இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் சிறப்பிக்கப்படுகிறான் (பதி. 14:16,17). புதிய ஏரைப் பூட்டி உழும் உழவர் கொன்றைப் பூவைச் சூடினர் (பதி. 43:16). வானம் மழை பெய்யப் பல வாக விதைத்தலையுடைய சிறிய ஏரினைக் கொண் டோர் பகன்றைமாலை சூடினர் (பதி. 76:10-13). பரிசிலர் பிறரைக் கூறும் புகழாகிய விதையாலே பிறர் பொருளை நச்சுதலாகிய ஏருழவினையுடைய வர் (மலை. 60). வெட்சியாரின் போர் முனை சென்று பொருது வில்லேர் வாழ்க்கையுடைய விழுத் தொடை மறவர் ஆனிரை மீட்டு மாய்ந்தனர் (அகம். 35:4-6). கழனியில் ஏர் புகுத்து அரிதாளொடு மண் கட்டிகள் புரள, நிலம் பிளக்குமாறு எருது பூட்டி உழுத உழவரின் ஓசை நிலந்தொறும் பரவி யது (அகம். 41:4-7). காட்டிடத்துள்ள கவர்த்த வழியல்லது மழைவளம் விரும்பாத வில்லேருழவரா கிய ஆறலைகள்வர் சுற்றத்துடன் சென்று வேட்டை யாடுவர் (அகம். 193:1-3). பெருமழை பொழிந்த விடியற்காலத்து ஏர் பூட்டி உழுதமையால் மேல் கீழாகப் பெயர்க்கப்பட்ட செம்மண் நிலத்தின் படைச் சாலில் உழவர் விதை விதைத்தனர் (அகம். 194:1-5). ஈரச் செவ்வியுடைய தண்ணிய புனத்தை ஈரம் காய்வதற்குமுன் ஓர் ஏரையுடைய உழவன் உழுவதற்கு விரைதல் போலத் தன் நெஞ்சம் தலை வியை அடைய விரைவதாக வினைமுற்றிய தலை வன் கூறினான் (குறு. 131:4-6). வில்லேருழவரின் வெம்முனைச் சீறூரில் சிறுவர் அரங்கிழைத்து நெல்லிக்காயை வட்டாகக் கொண்டு விளையாடு வர் (நற். 3:3-5).

3. ஒப்பு. பாம்பேர் மருங்குல் (சிறு. வெ. 2:2). தினைத் தாள் வேய்ந்த வீட்டில் பிணைஏர்-மான்பிணையை ஒத்த - நோக்கினை யுடைய மனைவி கொடுப் பத் தேன்பிழி தேறலை மாந்திக் கணவன் மகிழ்ச்சி மிக்குத் தினைப்புனங்காவல் மறந்தான் (குறி. 153-157). மணியேர் ஐம்பாலினை யுடையவள் தலைவி (அகம். 8:15). இருளேர் கூந்தலைத் தலை வன் நீவுதல் (அகம். 155:4). இரவுக்குறிக்கண் தலைவன் வருதற்கு நேரும் இடையூறுகளை யெண் ணித் தலைவியின் கண்கள் நெய்தற் பூவினது மணியேர் மாணலம் நீங்கிப் பொன்னேர் வண்ணம் கொண்டன (அகம். 290:8-16). தலைவி மலரேர் உண் கண் உடையவள் (அகம். 320:6). மாலைக் காலத்தில் கயலேர் கண்ணினையுடைய கனங்குழை மகளிர் கையே துணையாக நெய்வார்த்து ஏற்றிய விளக்கு தலைவிக்குத் துயரை எழுப்பியது (குறு. 398:3-5). பொன்ஏர் மேனி (நற். 10:1). தலைவியின் மலரேர் கண்கள் பிரிவுணர்ந்தமையின் நீர் மல்கின (நற். 33:12). மயக்குறுமகளின் மலரேர் கண் கலுழும் (நற். 66:10,11). மணியேர் நெய்தல் (நற். 78:2). முகையேர் இலங்கெயிறு (நற். 106:7). மாயோள் மணியேர் ஐம்பால் உடையவள் (நற். 133:5). குறு மகள் பிறையேர் திருநுதலுடையவள் (நற். 167:11), தலைவி முருந்தேர் வெண்பல்லினள் (நற். 179:10). குறுமகள் கயலேர் உண்கண் உடையவள் (நற். 220:9). பசந்த தலைவியின் கண்கள் ஆம்பலின் தாதேர் நிறம் எய்தின (ஐங். 34:2-4). முத்தேர் வெண்பல் முகிழ்நகை மடவரல் (ஐங். 380:2). பொன்னேர் மேனி மடந்தை (ஐங். 388:4). முத்தேர் முறுவல் (கலி. 64:29). பிறையேர் நுதலியர் (பரி. தி. 2:30).

4. எழுச்சி. பாழூரிடத் துள்ள பசலை நிறங் கொண்ட நெருஞ்சிப்பூ ஏர் – எழுச்சி – கொண்ட ஞாயிற்றை எதிர்கொள்ளும் (புறம். 155:4 5). விளங்குகின்ற பூவையுடைய கரும்பின் ஏர் கழையில் தங்கிய வெண்குருகு நரல வாடை வீசியது (அகம். 13:21-23). கார்காலத்தில் மழையினால் செழித்த பித்திகத்தின் ஏர் மிக்க மணமுடைய அரும்பின் சிவந்த புறம் போன்று தலைவியின் கொழுங்கடை மழைக்கண் இருந்தது (அகம். 42:1-4). பகலில் பெய்த மழையால் ஏர்தரு கடிய வெள்ளம் தெருக்கள் தோறும் புகுந்தது (அகம். 264:5-8). ஏர்தரு தெரு வில் பாணன் கையிலுள்ள சீறியாழ் வண்டு போல ஒலிக்கும் (நற். 30:2-4). தித்தியையும் ஏர்கொண்ட இளைய வன முலையையும் தலைவிபெற்றிருந்தாள் (நற். 160:4). 'ஆய் அண்டிரன் சேர்த்து வைத்த யானைத்திரள் போலப் பலப்பல உருவத்தோடு ஏர்தரு மழையே' எனத் தலைவி மேகத்தை விளித்தாள் (நற். 237:7-10). மணமும் அழகும் கொண்ட அவர்களையுடைய காந்தளின் குளிர்ந்த ஏருருக் கொண்ட துடுப்பு என்று கூறும்படி தலைவி யின் திரண்ட மெல்லிய முன்கை இருந்தது (கலி. 59:3,4). அழகுடைய தழையை உடுத்து இலங்கும் இளமைப் பருவத்து எல்வளை அணிந் தாளது ஏர் உடைய நலம் மேன்மேல் வளர்ந்து செல்லுமாறு தலைவன் அருள் செய்தான் (கலி. 125:12,13). பிரிவில் வருந்தும் தலைவியின் மதி யொத்த வாண்முகம் விளங்கப் புது நலம் ஏர்தர நின்தேர் குதிரையைப் பூண்பதாக எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் (கலி. 126:21,22). அழகிய இடமகன்ற ஏர் பொருந்திய வானத்தில் திகழும் திங்களும் கதிரவனும் நீயே எனத் திருமாலைக் கடுவனிள வெயினனார் குறிப் பிடுவர் (பரி. 1:41,42). செவ்வேள் ஞாயிற்றின் ஏர் போலும் நிறவழகுடையவர் (பரி. 5:12). தலைவி

துணி நீங்கக் காதலனது நல்ல ஏர் கொண்ட அழகிய ஆகத்தை அடையுமாறு செய்வதில் வையைப்புனல் வல்லமையுடையதாகும் (பரி. 12:73-75).

**5. பொருந்துதல்.** செவ்வரி ஏர் கொண்ட - பொருந்திய - மையுண்கணணினையுடைய அரிவையர் நல்லியக் கோடனின நல்லியலபுகளைப் பாராட்டினர் (சிறு. 215). தலைவன் துறந்தமையின் தலைவியின் இறையோ (சந்துபொருநதிய) முன்கையினின்றும் வளை நீங்கின (ஐங. 163.3,4). தலைவன் சூளுற்ற சொல் தலைவியின இறையேர் முன்கையினின்றும் எல்வளையைக் கொணடு சென்றது (ஐங. 165:3,4).

**6. கலை.** ஏர்வினை - கலைத் தொழில் - அமைந்த வளங்கெழு திருநகர் புலமபத் தலைவி ஏதிலன பொய்ம்மொழி நம்பி உடனபோக்கு மேவினாள் என மகட்போககிய செவிலி கூறினாள் (அகம். 117: 3-4). தலைவி அழகுமிகும் ஏர்வினை பொலிவு பெற்ற பாவை நடை பயின்றாற்போன்ற நடையினை யுடையவள (அகம். 142:21,22).

**7. தோற்றப் பொலிவு.** வலிமையால எதிர்ந்தோரைப் புறமகணட வேநதன மறம் பாடிய பாடினி ஏர் - தோற்றப பொலிவு - உடைய சிறநத பல கழஞ்சாற் செய்யப்பட்ட சீருடை அணிகலன பெற்றாள் (புறம். 11:9-13). நெடுவேள ஆதன எனபானின் போநதை எனனும் ஊா ஏர் பொருந்திய வயலையும் நீர் பரந்த கழனியையும் உடையது (புறம். 338: 1,4).

**8. உழவுத் தொழில்.** தொண்டைமான இளந்திரையன நாட்டில் வழிப் போவாரை அலறத் தாககிக் கைப்பொருளைக கவரும் களவையே ஏா வாழ்க்கை - உழவுத் தொழில வாழ்க்கை - போலத தொழிலாகக் கொணட கொடியோர் இலலை (பெரு. 39-41).

**9. எருது.** நெடுஞ்செழியன் ஏவல் கேட்டு வாழாத பகைவர் நாடுகள் நலல ஏர் - எருது - உழுத விளைகின்ற வயலிடத்தே பல்மயிர்ப் பிணவொடு ஆண பனறி ஓடித திரியுமாறு பாழபட்டன (மது. 173-176).

**ஏர்தேறுவர்** — ஒப்பனை செயயும் வணணமகளிர். பெறறு வளர்தத தாயையும் கருதாது ஊருமசேரியும் அலரெழக் காடும் சோலையும் அவனொடு செல்லத துணிநது பல நாடுகளையும் தேயததையும் கடநத சிறிய வனகண்மையுடைய என மகளுக்கு ஏர்தேறுவர் - ஒப்பனை செயயும்வணண மகளிர் - போல வயலைக் கொடியே, நீ வாடியிருக்கிறாய், வாழி என மகட்போக்கிய தாய் வயலையிடம் கூறினாள் (அகம. 383:1-6).

**ஏரகம்** - முருகனின் ஆறு படைவிடுகளுள் ஒன்று. அறுவகைத் தொழிலில் வழுவாது, தொல்குடிப் பிறப்பினராய், நாற்பத்தெட்டாண்டு மாணியாய நின்று, அறன்நவில கொளகையராய், மூவகை வேள்விச் செல்வததையுடைய இருபிறபபாளராகிய அந்தணர் வழிபடும காலததை அறிநது, பூணூலையும் புலராத ஆடையையும அணிநது உச்சிக் கூப்பிய கையினராய் முருகனைப் புகழநது ஆறெழுத் தடக்கிய அரிய மநதிரததை ஓதி, நறுமலர் எநதி வாழததப பெரிது உவநது முருகன ஏரகம் என்னும் பதியில் உறைதலும உரியன (முரு. 176-189).

**ஏராளர்** — ஏரையுடைய உழவர். பெருஞ்சேரலிரும்பொறையின் நாட்டிலுள்ள ஊர்களில வானம மழை பொழியப் பலவாக விதைததலை யுடைய உழவினைச செயயும் ஏராளர் - ஏரையுடைய உழவா- பகன்றை மாலை சூடி ஒளியுடைய அழகிய மணியைப் பெறுவர் (பதி. 76:10-15). ஏரோா - காண்க

**ஏரி** — நீர் நிலை. ஏரியாலும ஏறறததினாலும் பிற நாட்டில் தோனறும் வளமெலலாம் கரிகாலன நாட்டின அரிகாலினகீழ உதிர்கினற நெல்லளவே ஆகும் (பொரு. வெ. 1). இமமையிலும மறுமையிலும உணடாகிய காம இனபததினைக் கொடுத்தற்குரிய இணைநத ஏரிகளையுடையது காவிரிபபூமபட்டினம் (பட். 39).

**ஏரோர்** - ஏரையுடைய உழவர். 'ஏரோாக்கு - உழவர்க்கு - நிழல் செயத செங்கோலினை யுடையை' என நலலியக் கோடனை நீ பாராட்டினால ஆடை தேறல முதலியன நல்குவான் எனச சிறுபாணனை பரிசில் பெற்ற பாணன ஆற்றுப்படுததுகிறான (சிறு 232-237). ஏராளர் - காணக.

**ஏவலாளன்** - ஏவிய பணியைச் செய்பவன். 'நினைத்தனவற்றை முடித்தலால் அவரவா ஏவலாளனும் - ஏவிய பணியைச செயபவனும் - நீயே' எனக் கடுவன இளவெயினனார் திருமாலைக் குறிபபர் (பரி. 4.72).

**ஏழ்** - 1. ஏழு. 'பொதியின மலையையுடைய பாணடியனது நல்ல நாட்டுள்ளும ஏழாகிய அரணிடத்துள்ள கதவை அழிததுக் கைபபற்றிப் புலி இலச்சினையைப் பொறிக்கும ஆற்றல் உடையை' எனச சோழன் நலங்கிள்ளியின வீரத்தைக் கோவூர் கிழார் ஏத்துவர் (புறம. 33:7-9). வல்வில் ஓரியை ஒரு செல்வத தோன்றல் எனக் கருதித தலைவன தன பாணசுற்றத்துடனே அவனை வணஙகிப பல இயங்களை இயககி மூவேழ் துறையையும் முறையாற் பாடி முடித்தான் (புறம. 152.14-20). கௌணியன் விண்ணந்தாயனை 'மூவேழ் வேள்வித் துறையையும் குறைவினறி முடித்த புகழமைந்த தலைமையை உடைய உரவோர் மருக' என ஆவூர் மூலங்கிழார் விளித்துப் பாடுவார் (புறம். 166 8,9).

'ஏழ்நரம்பின்கண்ணும் உரிமை யுடையாய்' எனத் திருமாவளவனை முடத்தாமக் கண்ணியார் விளிப்பார் (பொரு.63). திருமாவளவன் விருந்தோம்பியபின் தன் காலாலே ஏழடி பின்னே நடந்துவந்து பொருநனை வழியனுப்பினான் (பொரு. 166). ஏழ் புணர் சிறப்பின் (இசையேழும் தன்னிடத்தே கூடின தலைமையினை யுடைய) இனிய நரம்புடைய சிறிய யாழைப் பண்களை மாறிமாறி வாசித்து மகளிர் தம்மை விரும்பின கணவரைக் கூடினர் (மது. 559-561). பலகதிரையுடைய ஞாயிறு ஏழ் குதிரை பூட்டிய தேரேறிப் பகல் நீங்கத் தாழ்ந்து மலை சேர்ந்து மறைந்தது (குறி. 214-216). மழை வளத்தால் இளங்காயாகிய தன்மை நீங்கிய எள்ளின் கரிய காய் ஒரு பிடியிலே ஏழ்காயாக நெய் உள்ளே நிறையுமாறு வளர்ந்தன (மலை. 103,106). 'என்னைப் பிரிந்து தலைவர் வருந்துவர் எனக் கருதியே ஏழ் ஊரிலுள்ளார்க்குப பொதுவாகத் தொழில் செய்ய ஓரூரில அமைத்த உலையிற் செறித்த துருத்திபோல எல்லையறியாது என் நெஞ்சம் வருந்துகிறது' எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (குறு. 172:3-7). விரும்புவார்க்கு நேயமாய் விரலால் வாசிக்கப்பட்டு ஒலிக்கும நரம்பு ஏழும் தம் பயன கெட, தானக்கோலில் அகப்பட்டு இடைநின்ற நரம்பு அற்றுப்போம் யாழினும் பொருள் நிலையில்லாதது (கலி. 8:9-11). ஏழ்நரம் பாற் கூட்டிய இனிய ஓசைகள் யாழிடத்தே பிறந் தனவாயினும் பாடுவார்கருப் பயன் கொடுத்தலல் லது அவ்வோசைகள் யாழுக்குப் பயனைத் தாரா (கலி. 9:18-20). ஒவ்வொன்றும் ஏழவகைப் பட்ட மூன்றுலகமும் உலகிலிருக்கும் உயிர்க் கூட்டமும் திருமாலிடமிருந்து தோன்றியவை என்பதை வேதம் அறிந்து கூறும் (பரி. 3:9-11). கீழேயுள்ள ஏழ்உலகத்தையும் திருமால் எஞ்சாது தன் அடியால் அளந்தார் (பரி. 3:20). அருளைக் குடையாகவும் அறத்தைக் காம்பாகவும் கொண்டு மூவேழ்உலகத்தையும் இருநிழல் படாமல் ஒரு குடைநிழலில் காக்கும் காப்பை உடையவர் திருமால் (பரி. 3:74-76). திருமால் ஏழென (அகங்காரம்) எட்டென (மான்) தொண்டென (மூலப்பகுதி) நால்வகை ஊழிகளிலும் எண்களால் நவிலப்படும் சிறப்பினை யுடையவர் (பரி. 3:79,80). இந்திரனுக்குக் கொடுத்த வரத்தை மாற்றாது, உலகேழும தன் மெய்ம்மையை வியக்குமாறு சிவபெருமான் கருவைச் சிதைத்தார் (பரி. 5:32-35). சிவபெருமான் சிதைத்த கருவை ஏழ் (ஏழு) முனிவரும் வேள்வீயிலிட்டு அதனை எடுத்துத் தம் மனைவியர்க் களிக்க அருந்ததி நீங்கவாக ஏனை அறுவரும் அதனை அயின்றனர் (பரி. 5:36-45). பாலை ஏழினையுமுடைய புரிநரம்பின்கண் இனிய கொளையைத் தருகின்ற யாழும் மிடற்றுப்பாடலும் தம்முளொக்க வங்கியம் அவற்றின் சுருதியை அளந்து நிற்ப, முழவெழுந்தார்ப்ப அரங்கேறிய தலைக் கோல் மகளிரும் பாணரும் ஆடலைத் தொடங்கினர் (பரி. 7:77-80). ஏழ் துளையுடைய வங்கியத்தும் ஐந்து துளையுடைய வங்கியத்தும் பிறந்த இசைச் சுருதியைப் போலவே தும்பியும் வண்டும் மிஞிறும் ஆர்த்தன (பரி. 8:22,23). ஏழ் உலகும் ஆளி எனச் செவ்வேளை நல்லந்துவனார் குறிப்பிடுவர் (பரி. 8:64). எம் கணவரும் யாமும் கிழவர் கிழவியர் எனப்படாமல் ஏழ்காறும் (ஏழாம் பருவமாகிய பேரிளம் பெண் வரைக்கும்) இளமை எய்திச் செல்வமும் சுற்றமும் பெற்று நிலை பெறுக எனச் சிலர் வையையை வேண்டினர் (பரி. 11:120, 121). இம் மூவேழுலகத்துயிர்களெல்லாம் திருமாலிடத்துளவாயின (பரி. 13:23). "செவ்வேள் விரும்பி வீற்றிருப்பது மேலோர் நாவிலிருந்தெழும் புகழ் நிறைந்து ஏழிலைப் பாலையை யுடைய தாழ்வரையாகிய இலகடத்தையும் அருவியாகிய முகபடாத்தினையும் உடைய யானையைப் போன்று வானுற உயர்ந்த தண்பரங்குன்றம் (பரி. 21:12-15).

2. எழுச்சி. 'ஏழ் - எழுச்சி - உடைய மணியையும் நிறம் பொருந்திய பொறிகளையும் கண்ணிற் பொருந்திய செவியையும் பிளவுபட்ட நாவையுமுடைய நிறம் பொருந்திய பாம்பு தன் தோலை உரிதது நீக்கினாற் போல வறுமையின் நீங்கிப் பிறர்க்கு யாம் வழங்க எமக்கு வேண்டுவன நல்கி விடை தருக' எனச் சோழன் நலங்கிள்ளியிடம் கிணைப்பொருநன் வேண்டினன் (புறம். 382: 13-17).

**ஏழ்புழை** - ஏழ் துளையையுடைய வங்கியம். ஏழ் துளை யுடைய வங்கியத்திலும் ஐந்து துளை யுடைய வங்கியத்திலும் பிறந்த இசைச் சுருதி போன்றே தும்பியும் வண்டும் மிஞிறும் ஒலித்தன (பரி.8:22,23).

**ஏழகத்தகர்**-ஆட்டுக்கிடாய். காவிரிப்பூம் பட்டினத்தைச் சார்ந்த பண்டக சாலையின் முற்றத்தில் கூரிய நகத்தினையும் வளைந்த காலையும் உடைய ஆண் நாய் ஏழகத் தகரொடு தாவிக் குதித்தல் (பட். 140, 141).

**ஏழகம்**-ஆடு. ஏழகத் தகர் காண்க.

**ஏழில்** - 1. ஏழிற்குன்றம். 'பெரிய ஊரிலுள்ளார் துஞ்சினும் எம் இல்லத்திற்கு அயலதாகிய ஏழிலுக்கு-ஏழிற்குன்றத்துக்கு - மேலுள்ள நொச்சியின் மலர் உதிரும் ஓசையினைக் கேட்டவாறு யாம் இரவெல்லாம் துயிலாதிருந்தோம்' என்று தோழி முதல்நாள் குறிபிழைத்த தலைவன் சிறைப்புறத்தே நிற்கையில் கூறினாள் (குறு. 138).

2. ஏழிலைப் பாலை மரம். 'பெரிய ஊரிலுள்ளார் துஞ்சினும் எம் இல்லத்திற்கு அயலதாகிய ஏழிலுக்கு - ஏழிலைப் பாலை மரத்துக்கு - அப்பாலுள்ள நொச்சியின் மலர் உதிரும் ஓசையினைக் கேட்டவாறு யாம் இரவெல்லாம் துயிலா திருந்தோம்' என்று தோழி முதல்நாள் குறிபிழைத்த தலைவன் சிறைப்புறத்தே நிற்கையில் கூறினாள் (குறு. 138. உரைவேறுபாடு).

**ஏழில் நெடுவரை** - ஏழிற்குன்றம். தலைவியின் கூந்தல் நன்னனது ஏழில் நெடு வரையின்-ஏழிற்குன்றத்தின்-பாழியென்னும் பக்கமலை யிடத்தே களித்தாடும் மயிலின் கலாவம் போன்றது (அகம். 152:3,12-14).

**ஏழிற்குன்றம்** - குன்றின் பெயர். கானமர் செல்வி அருளினமையால் பல்படைப் புரவி எய்திய புலவன் பாடியது இனமான மேகங்கள் தவழும் ஏழிற்குன்றம் (அகம். 345:4-7). நன்னனது நல்ல நாட்டின் கண் உள்ளது ஏழிற்குன்றம் (அகம். 349:8,9; நற்.391: 6,7).

**ஏழின் கிழவன்.** குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு நரம்புகளுக்கும் உரிமையுடையவன். கரிகாற் பெருவளத்தானைக் கண்டு பரிசில் பெற்று வரும் பொருநன் பரிசில் பெற விரும்பும் பொருநனை 'ஏழின் கிழவ' என விளித்தான் (பொரு. 63).

**ஏழுலகம்** - ஏழுவகை ஞாலம். திருமால் மூவேழ் உலகினுள் கீழாக உள்ள ஏழுலகத்தையும் எஞ்சாமல் அளந்த அடியினையுடையவர் (பரி. 3:20). ஏழுலகங்களையும் ஆள்பவராகிய முருகனின் பரங்குன்றத்தின் மேல் நீ ஆணையிட்டாய்; அதன்பால் நீ கொண்ட அன்பு இரங்கத் தக்கது என்று தோழி பொய்ச் சூளுரைத்த தலைவனிடம் உரைத்தாள் (பரி. 8:64).

**ஏழுலகமாளி** - ஏழுலகங்களையும் ஆள்பவன் (முருகன்). ஏழுலகமாளி - ஏழுலகங்களையுமாள்பவன் - ஆகிய முருகனின் பரங்குன்றின்மேல் தலைவன் பொய்ச் சூள் செய்வதற்குத் தோழி இரங்கினாள் (பரி.8:64).

**ஏழுறுமுனிவர்** - ஏழு முனிவர்கள் (கடவுட் கற்பு வாய்ந்த அருந்ததி முதலாகிய எழு மகளிரின் கணவன்மார்). ஏழுறு முனிவர், இறைவன் துண்ட மாக்கிய வசிதடியை அவ்வாறே தம் மனைவியர் உண்டு கருத்தரித்தால் நிறைவயின் சாலார் என்று கருதி வேள்வியில் இட்டுப் பின்னர் அளித்தனர்; அதனை அருந்ததி யொழிய மற்றைய அறுவர் அயின்று முருகனை ஈன்றனர் (பரி. 5:36-47).

**ஏழை** - பேதை. இனிய நகையுடன் கூடிய பற்களையுடைய ஏழையை - பேதையாகிய தலைவியை - கூந்தல் வாரிவிட்டும் மருங்கில் ஏற்றியும் நற்றாய் காத்தாள் (அகம்.195:8-10). 'மதத்தான் அறிவிழந்து பரிக்கோ லெல்லையில் நில்லாத கடிய களிறறை யொப்பவனான தலைவன் என்னைப் பலகாலும் தொழுதான்; தொட்டான்; ஆதலால் அவன் குணத்தில் ஏழைத் தன்மை இல்லை' எனத் தலைவி தலைவனியல்பைத் தோழிக்குக் கூறல் (கலி. 55:19-22). ஏற்றைத் தழுவினவனுடைய சென்னியிற் கிடந்த குவியல் முல்லைப்பூங்கண்ணியைக் கொம்பிலே எடுத்துக் கொண்டு வந்து அலைத்த ஏழையாகிய பெரிய ஏறு துள்ளுகையினாலே அப்பூ வந்து என் கூந்தலுக்குள் வீழ்ந்தது எனத் தோழிக்கு அறத்தொடு நிற்கும் தலைவி கூறினாள் (கலி. 107:6-9). 'தோழீ, நீ தலைவனிடத்தே சென்று, 'எம் சுற்றத்தார் நொதுமலர்க்கு மணம் பேசுவதைக் கண்டும் அவ்வதுவை நினக்காம்படி மணந்து கொள்ளும் மதியறியா ஏழைத் தன்மையுடையவனா யிருக்கின்றாய் என்று அவனைச் சிரித்துவாராய்' எனத் தலைவி தோழிக்கு உரைத்து வரைவு முடுக்கியது (கலி. 114:3-6).

**ஏழையர்** - பேதையர். தலைமகற்குத் தலைவி குறை நேர வேண்டும் எனக் கருதிய தோழி, 'நீ அருளாயாயின் உயிர் வாழேன்' எனத் தலைவன் உரைப்பன்; அதனால் நற் குடிப்பிறந்தார் ஏழையராய் -பேதையராய்-இருப்பர் எனப் பலர் அவனைக் கண்டு கூறும் சொல்லால் நினக்குப் பழி வரும்; ஆதலால் இந்நிலையை நாம் ஆராய்ந்து பார்த்தல் நன்று' எனத் தலைவிக்குக் கூறினாள் (கலி.47:15-18).

**ஏற்பார்** - பெறுபவர். கூடலிலும் செவ்வேள் பரங்குன்றத்திலும் வாழ்வோர் ஈவாரைக் கொண்டாடுவர்; ஏற்பார்-பெறுபவர்-அடையும் இன்பத்தைக் கண்டு தாமும் உவப்பர் (பரி. தி.11:1,2).

**ஏற்றம்** - 1. நீரிறைக்கும் கருவி. 'சிறுகுடி கிழான் பண்ணனின் உழவு வினைக்குரிய பகடுகளையும் ஏற்றத்தையும் நாடொறும் பாடிக் கிணைப்பறையைக் கொட்டேனாயின் வழுதி என் பெரிய சுற்றத்தைப் புரத்தற்கு வேண்டும் அருள் செய்யாது போவானாக' என மதுரை அளக்கர் ஞாழலார் மகனார் மள்ளனார் கூறல் (புறம். 388:11-16). பாண்டியன் நெடுஞ்செழியன் நாட்டிலுள்ள ஊர்களில் எழும் பல்வேறு வகைப்பட்ட ஓசைகளில் ஏற்றத்துடன் இயங்கும் அகன்ற பன்றிப்பத்தரின் ஓசையும் ஒன்றாகும் (பது. 90,91).

2. மேடு. இடிந்து விழும் மண்ணின் இடையூற்றினை அஞ்சுவதான ஓரே துறையினை யுடைய

ஒடையிலுள்ள ஏற்றம் - மேடு - கொண்ட நெறியில் சென்ற பகடு வழுக்கி வீழ்ந்தது (அகம். 107:13-15). உப்பு வணிகர் நீண்ட கயிற்றால் பிணித்த வண்டியினைப் பகடுகளின் வலிய பிடரியில் பூட்டி, ஏற்றம் வாய்ந்த துறைகளில் அவற்றை உரப்பி ஒட்டினர் (அகம். 173:9,10).

**ஏற்றார்** - ஏற்றவர். போரெதிர்ந்து ஏற்றாராகிய அவுணரின் பெருமிதம் கெட கடலிற் புகுந்திருந்த சூரபன்மாவாகிய மாமரத்தை அழித்த வேலை யுடையவர் செவ்வேள் (பரி. 18:1-4).

**ஏற்றியல்** - இடபராசி. நிறம் பொருந்திய வெள்ளி. ஏற்றியலை - இடபராசியை - சேர்ந்தது (பரி.11:4).

**ஏற்றூர்தியான்** - காளை ஊர்தியுடைய சிவன். அஞ்சத்தக்க சுரவழியைக் கடந்து ஏற்றூர்தியானை - சிவனை - ஒத்த பொருள் தேடச் சென்றவர் 'நீ நலனிழந்து வருந்த அப்பொருளை நினையார்' எனக் கூறித் தோழி தலைவியை ஆற்றுவித்தாள் (கலி.150:12-14).

**ஏற்றெருமை** - ஏறாகிய எருமை ஏறும் கூற்றுவன். (ஆகுபெயர்). ஊழிமுடிவில் சிவபெருமான் வருத்தத்தைச் செய்த ஏற்றெருமையின் - ஏறாகிய எருமை ஏறுகின்ற கூற்றுவனின் - நெஞ்சைப் பிளந்து அவன் குடரைக் கூளிக் கிட்டான் (கலி. 101: 24-26). இறைவன் ஏற்றெருமையது (ஏறாகிய எருமையின்) நெஞ்சைக் கால் விளிம்பாற் பிளந்து சினத்துடன் அவன் உயிரை வாங்கினான் (கலி. 103:44,45).

**ஏற்றை** - 1. ஆண் விலங்கு. ஆம்பலினது அகன்ற இலையின் நிழற்கண் கதிர்போலும் கோட்டையுடைய நத்தையின் சுரிமுகத்தை யுடைய ஏற்றை - ஆண் நத்தை - நாகாகிய பெண் நத்தையுடன பகற்காலத்தே மணங்கூடும் வளமுடையது சோழ நாடு (புறம். 266:3-6). ஒய்மான் வில்லியாதன் கிணைப்பொருநர்க்குக் குறுகிய கால்களை யுடைய ஏற்றையின் (ஆணபன்றியின்) கொழுவிய ஊன் துண்டங்களை நறுநெய்யிற் பொரித்து நாட்காலையில் சோற்றுணவோடு அளித்துப் பசி தீர்ப்பான் (புறம். 379:8-10). குறுகிய கால்களை உடைய ஏற்றையைப் பெண்பன்றியுடன் புணரவிடாமல் பலநாள் குழியிலே நிறுத்தி நெல்லை யிடித்த மாவாகிய உணவினை உண்ணச் செய்து வளர்த்த அதன் கொழுவிய நிணத்தையுடைய தசையைப் பட்டின மருங்கிற் பெறுவீர் எனக் கூறிப் பரிசு பெற்ற பெரும்பாணன, பரிசு பெற விரும்பும் பாணனை ஆற்றுப்படுத்தினான் (பெரு. 342-345). அரண்மனையின் வாயிலில் தூய நெடிய மயிரினையுடைய கவரிமா ஏற்றை குறிய காலினையுடைய அன்னத்தோடே தாவித் திரியும் (நெடு. 90-92). காவிரிப்பூம் பட்டினத்துப் பண்டக சாலையின் முற்றத்தில் கூர்மையான உகிரையும் வளைந்த காலையும் உடைய ஏற்றை (ஆண்நாய்) ஏழகத்தகரொடு (ஆட்டுக்கிடாயுடன்) குதித்து விளையாடும் (பட். 140,141). நன்னன் வேண்மானின் அரண்மனைத் தலைவாயிலிலே காணப்பட்ட பல் வேறு வகைக் கையுறைப் பொருள்களில் அரக்கைப் பரப்பினா லொத்த சிவந்த நிலத்திற் கிடந்த சுக்கான் கல்லில் தவழும் உடும்பினது வளைந்த காலையுடைய ஏற்றையும் ஒன்றாகும் (மலை. 507, 508). புற்றாஞ் சோறாகிய இரையினை யுடைய பெரிய கையோடு கூடிய ஏற்றையின் (ஆண்கரடியின்) தொங்கும் தோலுறைக்குள் பொருந்தி யிருக்கும் கூரிய நகம் பற்றிக் கொள்வதால் புற்றிலுள்ள பாம்பு தன் வலிகெட்டழியும் (அகம். 8:1-4). பெரிய ஆண்பன்றியினைக் கொன்ற பிளந்தவாயையுடைய ஏற்றை (ஆண்புலி) பலாமரங்கள் செறிந்த பக்கமலைகளில் புலால் நாற அதனை இழுத்துச் செல்லும் (அகம். 8:5-7). மலைக்குகையில் ஈன்று காவற்பட்ட மென்மையும் ஈன்ற அணிமையும் உடைய பெண் நாயின் பசி போக்கச் செந்நாய் ஏற்றை ஆண்பன்றியினைத் தாக்கியது (அகம். 21:16-18). மழை பெய்யும் நள்ளிரவில் மின்மினி மொய்த்திருக்கும் முரிந்த இடத்தினையுடைய புற்றினைப் பெரிய கையினை யுடைய ஏற்றை (ஆண்கரடி) மின்மினிகள் ஓடப் பெயர்த்துப் புற்றாஞ் சோற்றினைத் தோண்டி யெடுக்கும் (அகம். 72:1-5). நன்கு பற்றும் திறன் உடைய செந்நாயின் ஏற்றை ஆண்பன்றியைக் கொன்று விரைந்து ஈர்த்துச் செல்லும்போது வழியெல்லாம் ஒழுகிய குருதியினைப் பருந்து பருகும் (அகம். 111:10-12). குன்றிமணி போன்ற கண்களையும் நல்ல நிறம் வாய்ந்த மயிரையும் மெல்லிய கால்களையும் தாடியினையும் உடைய வெள்ளெலி ஏற்றை சிவந்த பரல்கள் மிக்க வன்னிலத்தைக் கிளறிப் போகட்ட புழுதியில் வேங்கைப் பூக்கள் விழுந்துகிடப்பது வெறியாடுகளம் போல் தோன்றியது (அகம். 133:1 4). மூன்று குட்டிகளை ஒருசேரப் பெற்று முடக்கமான இடத்திலே பாறையின் பிளப்பாகிய குகையிற் கிடந்த மெலிவுற்ற பெண் புலியின் பசி நீக்கக் கருதிப் புள்ளிகள் விளங்கும் பிளந்தவாயையுடைய உழுவை ஏற்றை ஆண்மானினது குரலினை உற்றுக் கேட்கும் (அகம். 147:3-7). பெரிய மலையின் அடிவாரத்துள்ள சிறிய ஊரில் மருண்ட மக்கள் பலர் கொல்லுதலில் வல்ல ஏற்றையின் (ஆண்கரடியின்) ஒலியினைக் கேட்டுச் செப்பம் செய்த அம்பினையும் வில்லினையும்கொண்டு இடம் தொறும் பரவினர் (அகம். 171:8-11). மலைச்சாரலில் பெரியகையினையும் பிளந்த வாயினையும் உடைய

கரடி ஏற்றை இருளைத் துணித்து வைத்தாற் போன்ற திரண்ட மயிரினையுடைய குட்டியுடனும் திரங்கிய முலையினையுடைய பெண்கரடியுடனும் மகிழ்ந்திருக்கும் பாலைநிலத்து வழியே தலைவன் பொருள் தேடச் சென்றான் (அகம். 201.15-19). தலைவன் ஊர் சருச்சரை பொருந்திய வயிற்றினையும் பிளந்த வாயினையும் உடைய நந்தின் ஏற்றை ஆரலமீன் சானறாகப் பொய்கையில் சங்கொடு மணம் புணரும் நீர்வளம் நிறைந்தது (அகம். 246' 1-4). பெருஞ்சுற்றத்தினையும் வெவ்விய வாயினையும் உடைய ஏற்றை (ஆண்கரடி) இருப்பைப் பூவைத் தின்று வெறுத்ததால் செம்மண் புற்றினது உச்சியினைப் பெயர்க்கும் (அகம். 247.4-7) ஊனை விரும்பும் பெண்நாயின் மிக்க பசியினைப் போக்குதற்கு, இளைய பெண்மான் கதற ஆண்மானின் தொடையைச் சிதைத்த செந்நாய் ஏற்றை வெயிலை வெறுத்து இளைக்கும் (அகம். 285:4-7). இறந்துபட்ட பார்ப்பனனின் குருதியுடன் தொங்கிக் கிடந்த குடலைக் கடித்து மராவுள்ள நெறியில் நரி ஏற்றை பரற்கற்கள் மின்னும் கண்ணொளியைக் கவரும் கவர்த்த நெறியின்கண் கள்ளி நீழலில் ஊனையிட்டுத் தங்கும் (அகம். 337.14-17). யாமரத்தின் நிழலில் இளைப்பாறத் தங்கி நீண்ட செவியினையும் குட்டையான காலினையும் உடைய ஏற்றையின் (ஆண்கழுதையின்) முதுகிலிட்ட பண்டப் பொதியினை இறக்கிவைத்து அதன் தளர்ச்சியைப் போக்கிய வணிகர்க்கு உசாத்துணையாகத் தலைவன் இருந்தான் (அகம். 343: 10-14). வரகு நிறைந்த கூட்டின் ஒரு பக்கத்தே குவிந்த அடியினையும் பசிய கண்ணினையுமுடைய காட்டுப் பூனையின் ஏற்றை ஊனை விரும்பும் பெண்பூனையின் பசியை நீக்கக் கோழிச் சேவலைப் பிடிக்க அற்றம் பார்க்கும் (அகம். 367:6-12). ஆறு செல் வம்பலர் அலற ஏற்றை (ஆண்புலி) குருதியாற் சிவந்த நிலத்திடத்தே தன் காலை வளைத்துத் தாவிப் பெருங்களிற்றை வலத்தே வீழ்த்திய வெற்றியால் வெற்பிடம் எதிரொலிக்க முழங்கும் (அகம். 389:18-23). நெடுங்கை யானையின் கடும்பகையால் வருந்திய குறுங்கை யுடைய கொல்வல்ல ஏற்றை (ஆண்புலி) செந்நாயை அகப்படுத்தும் செவ்வியை எதிர்பார்க்கும் (குறு. 141:3-6). கடற்றுறையிலுள்ள கொடுங்கால் முதலை ஏற்றை வழியிடத்தே பிறர் செல்லுவதைத் தடுக்கும் (குறு. 324:1,2). மிக்க வலிமையுடைய பெரிய புலியேற்றை பிளந்த வாயையுடையதாய்த் தலைமையுடைய யானையின்மீது பாய்ந்து அதன் வெள்ளிய கொம்பினால் தானே குத்துண்டு தன் குருதியால் அக்கொம்பினைச் செம்மையுறச் செய்து வேங்கை மரத்தின் வாடிய பூவையுடைய கிளையைப் போல இறந்து கிடந்தது (குறு. 343). நீண்டமயிரையும் கூரிய பற்களையுமுடைய கருங்குரங்கினது கூரிய விரல்களையுடைய ஏற்றை பக்கத்தே தோண்டியதனால உடைந்து, மலரின் மணத்தை வீசும் பலாப்பழம் காந்தளம் சிறுகுடியெங்கும் மணக்கும் (குறு. 373.4-7). குறுகிய முன்னங் கால்களை யுடைய கொல்லுதலில் வல்ல புலி ஏற்றை பொலிவு பெற்ற நெற்றியைக் கொண்ட பிடியானை புலம்புமாறு களிற்றைத் தாக்கிக் கொல்லும் (நற். 36:1-4). அழகிய வரியையும் அகன்ற வாயையுமுடைய உழுவை ஏற்றை களிற்றுடன் செய்யும் போரைக் கண்டஞ்சாத குறவரின் இளமைந்தர் ஆண்டுள்ள பெரும்பாறையின் உச்சியில் ஏறி முழக்கும் தொண்டகச் சிறுபறையின் ஓசைக்குத் தினைக் கதிரில் படியும் கிளிகள் அஞ்சி ஓடும் (நற். 104 1-6). இரைதேடும் கரடியின் ஏற்றை புற்றினைப் பெயர்த்து அதன்கண் உறையும் நல்ல பாம்பு நடுங்குமாறு முழங்கிக் கொல்லன் ஊதுகின்ற துருத்தி போலப் பெருமூச்சு விட்டுத் தோண்டும் (நற். 125 1-4). சிவந்த கண்களை யுடைய கொல்லுதலில் வல்ல புலி ஏற்றை வில்லுடை வீரர் மிக்கிருத்தலை நோக்கியும் அஞ்சாது, குட்டிகளை யீன்ற பெண்புலியின் நோயும் பசியும் தீர்க்கக் களிற்றியானையின்மீது பாயும் (நற். 148.6-10). மேகந் தவழும் குறுங்காட்டினில் களிற்றை வலத்தே வீழ்த்திய வெஞ்சினமும் அகன்ற வாயையுமுடைய உழுவை ஏற்றை யாவரும் அஞ்சுமாறு முழங்கும் (நற். 154:4-6). கழியிடத்துக் குருகின் குத்துக்குத் தப்பிப் பிழைத்த இறாவின் ஏற்றை தாழையின் வெள்ளிய பூவையும் கொக்கெனக் கருதி அஞ்சும் (நற். 211.4-8). பாலைவழியில் பசிமிக்க பிடியானை உதைத்து மேற்பட்டையைப் பெயர்த்த ஓமையின் சிவந்த அடிமரம் ஞாயிறு எழுந்த காலையில் வாள்போலும் நிறமுற்ற வரி பொருந்திய ஏற்றையோடு (ஆண்புலியோடு) போர் செய்த யானையின் புண்பட்ட கால்போல விளங்கித் தோன்றும் (நற். 279·5-8). கானவன் வெய்யவில்லை வளைத்து வலிய கணையை எய்து நெஞ்சிலே பாயத்துக் கொன்ற முள்ளம் பன்றி ஏற்றையைக் கைக்கொண்டு வேட்டையில் பெற்ற வெற்றி உவகையுடன் மனைக்குச் சென்றான் (நற். 285:2-6). கவிந்த தலையும் பருத்த மயிரும் கொண்ட எண்கின் ஏற்றை இரைதேடியுண்ணும் விருப்பத்தினால இரவிலே சென்று கறையான் கூட்டம் செய்துயர்த்திய, பாம்புகள் வாழ்கின்ற புற்றில் உள்ள சிதலையெல்லாம் ஒருங்கே ஒழியும்படி பெரிய நகங்களாலே பறித்து உள்ளிருக்கும் குரும்பி முதலிய வற்றை உறிஞ்சி இழுக்கும் (நற். 325:1-5). கானவன் மலை வழியிலுள்ள சிறிய புழை அருகில் பதுங்கி

நின்று, தினைக் கதிரை அழித்த சிலிர்த்த மயிர் மிக்க பிடரியை யுடைய வெண்கோட்டு ஏற்றை (ஆண்பனறியை) வில்லினால் எய்து கொன்று மனைவியிடம் நல்க, அவள் அதனை அறுத்துத் தன் சுற்றமாகிய குடிகளுக்குப் பகுத்துக் கொடுத்தாள் (நற். 336.2-6). குறுகிய முன்னங் கால்களை யுடைய புலிஏற்றை பெரிய புதர்கள் மிக்க காட்டிடத்தே தளர் நடையினை யுடைய யானையின கன்றைக் கொல்வதற்கு ஏற்ற காலம் பார்ததுப் பலா மர நிழலில் ஒளிந்திருக்கும் (ஐங். 216:1-4). பெண் நாயைக் கூடிய செந்நாயேறறை குட்டிகளையுடைய பெணமானை இரக்கங் காரணமாக இரையாக வேட்டங் கொள்ளாது விடுத்து வறிதே சென்றது (ஐங். 354:1,2). இருபக்கமும் கவிழந்து தூங்கும் மயிர்பொருந்திய கழுத்தையுடைய செந்நாய ஏற்றை இரக்கததால் குட்டிகளையுடைய பெண்பன்றியை வேட்டங் கொள்ளாது சுரநெறியில் வறிதே செல்லும் (ஐங். 397:1-3).

2. சேரன் படைத்தலைவருள் ஒருவனின் பெயர். சோழன் பெருமபூட் சென்னியின் படைத்தலைவனாகிய பழையன், சேரன படைத்தலைவர்களாகிய நன்னன், ஏற்றை, அத்தி, கங்கன, கட்டி, புன்றுறை என்பாருடன பாசறைக் கண் பொருது வீழ்ந்தான் (அகம். 44:7-11).

**ஏறாவேணி** - கோக்காலி. கடல் பிறக் கோட்டிய செங்குட்டுவன் நாளோலக்கத்தில் ஏறாவேணியின்கண - கோக்காலியின்கண - நிரம்புதலும் குறைதலும் அறியாத நிறைந்து நெடிது இராத குடங்களிலிருந்து கள்ளைக் கூத்தர்க்கு வழங்கினான் (பதி. 43:32-35).

**ஏறு** - 1. ஆண்விலங்கு. சிவபெருமானது ஊர்தி வெண்மை நிறம் பொருந்திய ஏறு (காளை); அவரது கொடியும் ஏறு என்று கூறுவர் (புறம. 1:3,4). சோழன் உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னியின் வீரர் போர்க்களத்தைத் தமதாக்கிக் கொண்டு போர் செயதலின அவர்கள் காலினின்று நீங்கிய வேலைப் பாடமைந்த கழலகள் கொல்லுதலை யுடைய ஏற்றின் கொம்பு போன்றன (புறம். 4:3,4). பாண்டியன இலவந்திகைப பள்ளித் துஞசிய நனமாறன சினததால் ஏற்று வலன உயர்த்திய, (காளையை வெறறியாக உயர்ததிய) அழலை போலும் சடையையும் மழுப்படையையும் நீலகணடததையும் உடைய சிவனை ஒததான் என நக்கீரனார் பாராட்டுகின்றார் (புறம். 56:1,2,11). மாலைக் காலத்தில் இனத்தினின்றும பிரிநது தானசேரும் சேர்க்கையைக் காணாத மானினது ஏறு, பெணமானை விரும்பி அழைக்கும ஒலியை முழையின்கண உளள புலி செவி சாய்த்துக் கேட்கும் (புறம். 157:9-12). அரையத்தைச் சார்ந்த மலைப்பக்கத்தில் வேட்டுவன் அலைத்தலால் தனக்குப் புகலிடம் காணாத கடமா ஏறு சாரலில் கிடக்கும் மணி கிளரவும் சிதறிய பொன் விளங்கவும் விரைந்தோடியது (புறம். 202:1-4). தம்மாற் கொள்ளப்பட்ட ஏறுடன் கூடிய ஆனிரை முன்னே போக மீட்க வருவாரைக் குறித்து அந்நிரையுடன் போகாது வெட்சி மறவர் காட்டின்கண் மறைந்திருந்தனர் (புறம். 259:1-3). கூரிய கொம்புகளை யுடைய பெருமைபொருந்திய இரண்டு ஏறுகளை (காளைகளை) பொரச் செய்து வெற்றி பெற்ற ஏற்றின் தோலை மயிர்சீவாது போர்த்து முரசம் அமைப்பது மரபு (புறம். 288:1-4). கண்டாரைக் கொல்லும் ஏறு (காளை) திரியும் மன்றம் கண்டு மக்கள் அஞ்சுவது போலப் பாசறைக்கண் தலைவன் இருப்பது கேட்டும் பகைவா அஞ்சுவர் (புறம். 309:4-6). புல் வளர்ந்த நிலத்திற் பரந்து மேய்ந்த பல ஆக்களோடு கூடிய நெடிய ஏறு மரநிழலில் தங்கி அசையிடக் கோவலர் முல்லைப் பூவைப்பறிப்பர் (புறம். 339:1-3). இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் பகைவர் ஊரில் உள்ள வயல்கள் ஏறு தம்முள் பொருதமையான் சேறுபட்டு உழாமலே விதைக்கப்பட்டன (பதி. 13: 2). பல்யானைச் செல்கெழு குட்டுவனின் ஆற்றல் அறியாமல் பொருதவரது வானளாவிய மாடங்கள் மிக்க ஊர்கள் மக்கள் போக்குவரவற்றமையின் முட்செடிகள் மண்டித் தூர்ந்து காட்டுப் பசு ஏறுடன் கூடியுறையும் காடுகளாயின (பதி. 23:11-17). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் வீரர்க்குள் ஏறு போன்றவன் (பதி. 38:10). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் முழவு ஒலிக்கின்ற மகளிர் ஆடும் துணங்கைக் கூத்திற்குத் தெப்பமாக முழங்குதலில் வல்ல ஏறு (காளை) போல முதற்கை கொடுத்து அவருடன் ஆடுவான் (பதி.52:14-16). பெருஞ்சேரலிரும்பொறை கழுவுள் என்னும் ஆயர் தலைவனுக்குரிய ஞாயிலை வென்றான். அது கண்ட ஆயர் ஏற்றொடு கன்றுகள் பொருந்திய ஆனிரையைச் சேரன்பால் அளிப்ப, வீரர் போர் செய்தலை விடுத்தனர் (பதி. 71:13-15). மேகம் உரிய காலத்தில் மழை பெய்யக் காட்டில் இனமாகத் தங்கிய மடப்பத்தையுடைய பெண்மான் ஏற்றோடு கூடிச்சென்றது (பதி. 89:1,2). தண்புனல் ஆடுவோரது முழக்கத்தோடு கலந்து வெம்போர் புரியும் வீரரது கிணைப்பறை ஒலிப்ப உணவுடைய நல்ல வீடுகளில் ஏறு (காளைகள்) ஒன்றோடொன்று மாறாக முழங்கின (பதி. 90:43-45). நான்முகனைப் பழைய நிலையில் நிறுத்தவேண்டித் திருவாவினன் குடி உறையும் முருகன் முன்னர்த் தோன்றிய கடவுளருள் வெள்ளிய ஏற்றினைக் கொடியாக எடுத்த உருத்திரனும் ஒருவனாவான் (முரு. 151-154).

பழமுதிர் சோலையில் அருவி வீழும் ஓசை கேட்டுக் கரிய கொம்பினையுடைய காட்டுப் பசுவின் நல்ல ஏறு முழங்கின (முரு. 314-316). முருகன் ஏற்றூர்தி யுடைய சிவபெருமானின் மகன் (முரு. வெ.1). பசிய கோரையை அடியிலே குத்தியெடுத்த மண்பொருந் திய கரிய ஏறு தம்மிற் பொருதலையால் நிலம் உழா மல் நடுவதற்கேற்ற சேறாயிற்று (பெரு.209-211). தென்திசைக்கண் வாழும் பரதவர்க்கு ஏறு போன்ற வன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டி யன் நெடுஞ்செழியன் (மது. 144). வேங்கைப் பூவைப் பறிக்கும் மகளிர் புலிபுலியெனறு கூறும் ஆரவார மும் கரிய நிறத்தையுடைய ஏற்றை (ஆணபன்றியை) கொல்லுகின்ற வலிய புலியின் ஆரவாரமும் பிற ஆரவாரங்களும் மலையிடத்து அருவி முழக்கோடு மாறிமாறி ஒலித்தன (மது. 296-299). விடியற்காலத் தில் நாழிகை கூறுவோர் நாழிகை கூற, பள்ளி எழுச்சி முரசு ஒலிக்க, ஏறு (காளை) தம்முள் மாறு பட்டு முழங்க, சேவற் கோழிகள் கூவின (மது. 671-673). கொல்லுதற் றொழிலை யுடைய ஏற்றின் தோலை மயிர் சீவாமற் போர்த்த பெரிய கண்ணை யுடைய முரசம் இடையறாது முழங்கப் பகைவர் படைக்கு நடுவே சென்று பொருது வீரர்கள் யானைகளை அழித்தனர் (மது. 732-736). பருவம் பொய்யாத மேகம் உலகெங்கும் குளிருமாறு கார்காலத்து மழையைப் பெய்தலான் வந்த வெள்ளத்தை வெறுத்த கோவலர் ஏறுடைய இனங் களையும் பசுக்களையும் மேட்டு நிலத்தில் மேய விட்டனர் (நெடு. 1-4). களவொழுக்கத்தினகண் தலைவியைக் கூடிய தலைவன் ஆவைப் புணர்ந்த ஏறுபோல அவளோடு ஊர்வாயில் வரை வந்து அவளை விடுத்துப்போனான் (குறி. 235-237). காவி ரிப்பூம் பட்டினத்து அட்டிற் சாலைகளில் சோறு வடித்த கொழுங்கஞ்சி யாறுகள் போலப் பரந் தொழுகி ஏறு பொருதலால் சேறாகி, அதன்மீது தேர் ஓடுவதால் துகளாய்ப் பரவி ஆண்டுள்ள ஓவி யம் பொருந்திய வெண்மையான அரண்மனை களை அழுக்குறச் செய்யும் (பட். 43-50). நிரையி னின்றும் பிரிந்த அசையும் இமிலினை யுடைய ஏறும் (காளையும்) போர் செய்தலை இயல்பாகக் கொண்ட மரையானினது விடையும் கோவலரும் குறவரும் ஆர்க்கும்படி முதுகிடாத வலிமையுடன் புண்ணுண்டாம்படி முட்டிப் பொருதன (மலை. 330-333). நல்லேறு (ஆண் எருமைகள்) வள்ளிதழ்க்குள வியும் குறிஞ்சியும் வாடும்படி தம்மிற் பொருதன (மலை. 334,335). நிரையைக் காவல செய்யும் இடை யர் வேற்றுப புலங்களிலே சென்று மேய்த்துவந்த ஏறு பொருந்திய ஆனிரைகளில் வெள்ளிய சங்கு போன்ற பசுக்கள் தந்த இனிய 'பாலைக் கோவ லரின் மகளிர் கூத்தரின் வருத்தம் நீங்க அளிப்பர் (மலை. 408-410). நன்னன் சேய நன்னன் இலம்படு புலவரின் ஏற்ற கை நிறைய அணிகலன்களை மிகுதியாக அளித்ததோடு தேர், யானை, குதிரை, ஒலிக்கும் மணி ஆரவாரிக்கும் ஏறு பொருந்திய பெரிய பசுத்திரள் ஆகியவற்றையும் நல்கினான் (மலை. 570-576). மணிமிடற்று அந்தணனாகிய சிவ பெருமான் ஊர்தி ஏறாகும் (அகம. க.வா. 7). மகட் போக்கிய செவிலித்தாய் சுரத்திடைப பெண் மானைக் கண்டு இனிய முழக்கம் கொண்ட ஏறுடை இனததிலுள்ள உயிர்ப்புத் தோன்றும் இளையமானே, நின்னை விருமபிக் கேட்கின்றேன்; 'என்மகள் செல்லும் நெறியினைக் கூறுவாயாக' எனக் கேட்டாள் (அகம். 7:9, 10). எழினியின ஏவிய செயலை முடிக்கும் மறவர் பிழிந்த தேனாற் சமைந்த நறிய கள்ளை உணட மகிழச்சியினால பகைவர் போர்முனையை வெனறு ஏற்றுடன் கூடிய பருத்த மெலலிய மடியையுடைய ஆனினத தைக் கொணர்ந்தனர் (அகம. 105.10-15). புலி, பாறையிற் கிடத்தி வயிறு நிறையத் தினறுவிடுத்த மான ஏற்றின் காயநத தசையை வழிச் செல்லும வம்பலர் மூங்கிலரிசியுடன ஒருங்கு கூட்டித தயிரி னைப் பெய்து நிணத்தினை உருகச செயது சமைத்த வெள்ளிய சோற்றினைத் தேககிலையில் வைத்து உண்பர் (அகம். 107:4-10). காட்டுவழியில மழவரது சாகாடு கிழித்த வழிப் போககா உணடு எறிந்த சோறு பொதிந்த வெள்ளிய பனை ஓலையா லாகிய குடையினைச் சூறாவளி எடுக்க அதனால எழுந்த ஒலியினைத் தன் துணையின குரலென எண்ணி அஞ்சிய கருமுக முசுவின் ஏறு (ஆண கருங் குரங்கு) அதனை அழைக்கும் (அகம். 121:11-15). தலைவியைக் கூட வேண்டு மென்னும் பெரு விருப்புடன வினைமுற்றி மீளும் தலைவன முறுக கிய கொம்பினை யுடைய ஏற்றொடு பெணமான் கூடும் கூட்டம் தடைபடாதவாறு குதிரை பூட்டிய தேரை மெலலச் செலுத்துமாறு பாகனை வேணடி னான் (அகம். 134:7-14). வேங்கடத்துக்கு அப்பால் உளள வெள்ளிய நிணச்சோறறை உணவாகக கொண்ட வடுகர், பகைவர் போர்முனை சென்று ஏறு பொருந்திய ஆனிரையைக் கவர்வதற்காக முதிர்ந்த நறவினைக் கொறறவைக்கு நாட்பலி கொடுப்பர் (அகம். 213:3-8). முலலை நிலததில தழையினை மிகத்தின்று வெறுதத இளைய பெண் மான் ஏறுபுணர் உவகையுடன இடையூறின்றித் துள்ளியது (அகம. 234:10,11). ஆட்டன அததி ஏறு போன்ற எழுச்சி பொருந்திய நடையினையும பொலிவுற்ற தோளினையும தொகுதியான கரிய சுருளைப் பொருநதிய தலை மயிரினையும் உடை

யவன் (அகம். 236:14-16). தூறுகள் பற்றி இழுத்த லால் அறுபட்டுப் புரிகள் அவிழ்ந்து தோளிடத்தே கிடக்கும் பூக்கள் உதிர்ந்த மாலையானது ஏற்றி னது திமிலின்கண் கிடக்கும் கயிற்றைப் போன்று அழகுற அசையத் தலைவன் தலைவியின் இல்லம் வந்து நின்றான் (அகம். 248:10-14). முசுண்டை என்பான் கிணைப்பறை முழக்கிப் பாடும் பாணர் வேண்டின் நாள்தோறும் பொற்பூணினைக் கொம் பில் செறித்துப் பொன்னரி மாலையினைக் கழுத் தில் பூட்டிச் சந்தனம் பூசிய உயர்ந்த அழகிய திமி லினை உடைய ஏற்றினை முன்னர் நிறுத்தி, மிக்க உணவினைக் குவித்து நீண்ட தேரினை யானை யுடன் அளிப்பான் (அகம். 249:3-9). கோவலரின் கூப்பீட்டொலியை அறிந்து பசு இனத்தைத் தம் மிடத்து அணைத்துக்கொண்டு வரும் அசையும் இமில்களையுடைய நல்ல ஏறு (காளைகளின்) கழுத் தில் தொங்கப் பூட்டியுள்ள மூங்கில் குழாய் நிறை யுமாறு ஆயர் உணவு கொண்டு செல்வர் (அகம். 253:12-16). கொடுநோக்கு ஆடவராகிய எயினர் எழுச்சியுள்ள ஏற்றினை (காளையை) கொன்று அதன் கொழுப்புப் பொருந்திய நிணத்தை நெருப்பிலிட் டுத் தின்றனர் (அகம். 265:11-17). ஏறு (காளை) களுடன் கூடிய பசுவினமாகிய நிரைகளை வெட்சி யாரிடமிருந்து மீட்கும் போரிற் பட்ட கரந்தை வீரர்க்கு இளையோர் கல்நட்டு அதற்கு மஞ்சள் பூசிக் கரந்தைக் கண்ணி சூட்டியபின தம் ஊர் ஏகினர் (அகம். 269:3-13). நாட்காலத்தே பலி கொடுப்பா ரின்றிப் பாழ்பட்ட சுரைக்கொடி படர்ந்த அம்பலத்தில் உள்ள கரிய அடி பொருந் திய கந்து (தெய்வம் உறையும் தறி) மரைஏறு (ஆண மரைமான்) உராய்ந்தமையால் அசையும் நிலை பெற்றது (அகம். 287:3-6). மேகம் மழையாகிய வளத் தினைத் தராமையால் காடுகள் காய்ந்து இலைகள் இல்லாதனவாக ஏறு பொருந்திய ஆயமாகிய ஆனி ரைகள் பலவற்றையும் பசிவருத்தக் குளங்கள் நீரற வற்றிய கோடை உண்டாயிற்று (அகம். 291:1-4). பெண்மான்பால் விருப்பம் மிக்க ஏறு இருப்பை மரத்தின் வெள்ளிய பூவினைத் தான் உண்ணாது, பெண்மான் உண்ணுவதற்காகத் தனது ஆண் குரல் தோன்ற அதனை அழைகதும (அகம். 321:4-6). போரில் பிறக்கிடாத வீரம் மிகக ஏற்றுரிவை போர்க்கப் பெற்ற முரசம் வெற்றியுடன இழு மென ஒலித்தது (அகம். 334:1,2). அசையும் இமில் கொண்ட நலல ஏறு அறுகம் புல்லைத் தினறு அறல நீரைப் பருகி மாலைபோன்ற காஞ்சிபபூக களின் நுண்தாது மேலே உதிர மணல் மேட்டில் துஞ்சும் (அகம. 341:4-11). ஞாயிறு மறையும் மாலைப் பொழுதில் கலக்கமுற்ற முதிய ஏறு தன்

ஆண்குரல் தோன்ற மனையைச் சூழ்ந்து வளரும் நொச்சியின்கண் உள்ள பெண்மானை அழைக்கும் (அகம். 367:1-4). குன்றநாடன் வேனிலின் வெம் மையை ஆற்றாத ஆன்ஏறு போலத் தலைவியின் நலத்தை விரும்பி மெலிந்தான் (குறு. 74:4,5). பாம் புகளின் தலைகள் துண்டாகும்படி வலிய இடி முழங்குகின்ற நள்ளிரவில் பல பசுக்கள் உள்ள தொழுவத்தில் நல்ல ஏறு இயங்குதொறும் ஒற்றை மணிக்குரல் ஒலித்தலைப் பிரிந்து சென்ற நம் தலைவர் அறிவரோ எனப் பிரிவிடைக் கவன்ற தலைவி தோழிக்குரைத்தாள் (குறு. 190:3-7). காட்டி லுள்ள மான் ஏறு பெண்மானுடன் நீல மணி ஒழுகினாற் போன்ற கரிய கொடியாகிய அறு கினது மெல்லிய தண்டினை வயிறார உண்டு துள்ளும் (குறு. 256:1-3). மாலைக் காலத்தில் ஊர் வந்தடையும் ஏறுடைய பசுவினம் கழுத்திற் பூண்ட மணிஓசையோ, வினைமுற்றி மீளும் தலை வனின் தேர்மணி ஓசையோ என முல்லைக் கொடி படர்ந்த குன்றின்மீது ஏறிக் கண்டு வருவோம், வருக என்று தோழி தலைவியை அழைத்தாள் (குறு. 275). மரையானினது கருமையும் பெருமையும் உடைய ஏறு இனிய புளிப்புடைய நெல்லிக்கனி யைத் தின்று அருகிலுள்ள மலர்கள் நடுங்கும்படி வெப்பமாக உயிர்த்து மலைச்சுனை நீரைப் பருகும் (குறு. 317:1-4). கார்காலத்துக் குரிய மழை மாலை யில் வந்தபோது மான் ஏறு மடப்பிணையைத் தழுவி மயக்கம் மிக்குக் காட்டி லுள்ள புதலில் மறைந்து ஒடுங்கும் (குறு. 319:1,2). தலைவன் இர வுக்குறியில் தலைவியின் இல்லத்திற்கு வந்து மீளுங் கால் மன்றத்திலுள்ள மரையா அஞ்சி ஓட அதன் ஏற்றினைக் கொன்று செங்கண் இரும்புலி முழங் கும் (குறு. 321:3-6). முறுக்கிய கொம்புடைய பெருமை பொருந்திய நல் ஏறு மென்மையும் மடப்பமும் உடைய பெண்மானுடன் மலர் செறிந்த தூற்றின் கண் பகற்பொழுதைக் கழித்து மாலையில் செழும் பயற்றினைக் கறிக்கும் (குறு. 338:1-4). பனிக்காலத் தில் மாலையில் மேய்புலத்தின்கண் உள்ள பயிரை அருந்திய அண்ணல் ஏற்றொடு அலைதாடியையும் பருத்த மடியையு முடைய பசுக்கள் பாலை ஒழுக விட்டுத் தம் கன்றை நினைந்து, நிரையின் நீங்கி ஊரிடத்தே மீளும் (குறு. 344:2-6). கண்ணி அணிந்த கொம்பை யுடைய அண்ணல் நல்லேறு அறுகம் புல்லைக் கடித்துத் தின்னும் மடப்பம் பொருநதிய மலைப் பசுவைப் பார்த்துப் பெருமூச்சு விட்டு உகாஅய் மரநிழலில் தங்கும் (குறு. 363.1-4). குறி யிடத்துத் தலைவன தலைவியைக் கூடியபினனர் ஏற் றினைப் பிரிகின்ற பெண்மானைப் போல் தலைவி பிரிந்து தன் சிறுகுடிக்குச் சென்றாள் (நற். 204:8-10).

களர் நிலத்துச் சென்ற பிணைமான் மருண்டு விழிக்கும் தன் குட்டிகளுடன் கூட்டத்தினின்று இரிந்தோடுதலும் அதனிடத்துக் கொண்ட மிக்க விருப்பால் இரலை ஏறு அதனைத் தேடுகிறது (நற். 242:7-10). எருமை ஏற்றினம் செங்கருங்காலி மலர்களையும் ஆம்பல் மலர்களையும் மேய்ந்து பொழிலின்கண் அவற்றை இல்லை யாக்கின (ஐங். 93: 1,2). நல்ல ஏற்றினைத் தொடர்ந்து பசுக்கள் செல்லும் கார்ப் பருவம் வந்ததும் தலைவியை நினைத்துத் தலைவன் நெஞ்சு வருந்தியது (ஐங். 445: 3,4). ஏறு (காளைகள்) கோட்டுமண் கொண்டு மாறுபட, இடியேறு எதிரொலிக்கக் கலைமான்கள் பிணைமான்களுடனும் மறிகளுடனும் சுழலக் கார்ப்பருவந் தொடங்கியது (ஐங். 493). வறண்ட நிலத்திலுள்ள மடமான்கள் உணவுகளைக் காணாவாய்த் திரிமருப்பு ஏறொடு பேய்த்தேரை நீரென்று கருதி ஓடின (கலி. 13: 2-4). காடு நெருங்குதற்கரிய வெம்மையது எனத் தலைவன் கூறி உடன் அழைத்துச் செல்ல மறுத்தபோது கல்செறிந்த அரிய வழியில் பிணைக்க கழுத்தினையும் அழகினையும் உடைய ஏற்றின்பின் நீங்காமல் திரியும் பெண்மானையும் காண்பீராதலால் எம்மையும் உடன் அழைத்துச் சென்மின் எனத் தலைவி வேண்டினாள் (கலி. 20: 20-23). தன் மகனுக்குப் பரத்தையர் அணிவித்த அணிகளுள் நறாவிதழ் போன்ற சிவந்த விரலுக்குப் பொருந்தச் சுறாவேறு பொறித்த மோதிரத்தைக் கண்டு அதன் வாயிலாக அப்பரத்தையின் கருத்தறிந்ததாகத் தலைவி கூறினாள் (கலி. 84: 22-24). மகட்கொடை நேர்ந்த ஆயர் ஒருசேரக் கூடிக் கூர்மையாகக் கொம்புகளைச் சீவி ஏறுகளைத் தொழுவின்கண் புகுத்தனர் (கலி. 101: 6-9). தோன்றிய நிமித்தத்தைப் பார்க்கில் மதத்தையுடைய களிற்றினும் கறுகண்மையுடைய ஏற்றை (காளையை) நீ கை நெகிழவிடாது கொள்வாய்; இவ்வாய மகள் தோளே ஏனைய மகளிரின் தோள்களைவிட வெற்றிக் கொடியை உண்டாக்கின எனத் தோழி தலைவனிடம் உரைத்தாள் (கலி. 101: 36-38). கொல்லேற்றினை அடக்குவோர்க்கே எம் மகளைத் தருவோம் என ஆயர் கூறினர் (கலி. 101: 41,42). ஏறு வருந்தின; இடையரும் புண்மிக்கார்; பொதுவரோடு தாம் கூடுதற்குரிய நிமித்தம்பெற்று மகளி ரெல்லோரும் முல்லையை யுடைய பொழிலிடத்தே விளையாடப் புக்கனர்; நாமும் செல்வோம் எனத் தோழி தலைவியை அழைத்தாள் (கலி. 101: 47-50). பொருகின்ற புகற்சியை யுடைய நல்ல ஏற்றைத் தழுவுபவரே அடையக் கூடிய மாந்தளிர் போலும் மேனியள் என்று பறையறைந்து அறிவிக்கப்பட்டவள் இவள் என்று தலைவியின் எழில் நலம் சிறப்பிக்கப் 'பெறுதல்' (கலி. 102: 9-12). ஏறு தழுவியவருள் ஒருவன் கரிய நிறத்தை யுடைய நெடிய தோள்களாலே ஏற்றின் கழுத்தை இறுகத் தழுவீ அதனை வருத்தினான் (கலி. 102: 25-27). தலைவனால் தழுவப்பட்ட ஏற்றையுடைய நல்லவர் அவ்வேற்றின் வருத்தங் கண்டு வெகுளாது எழுந்தனர் (கலி. 102: 28, 29). நேற்றுக் கொல்லு தலையுடைய ஏற்றினது கழுத்திலே தங்கினவர்களைப் பார்த்திருந்தும் இன்றும் உடலுகின்ற ஏறுதழுவச் சாற்றுவாராகிய ஆயர் மக்கள் அறிவில்லாதவரே எனக் கண்டோர் கூறினர் (கலி. 102:30-32). இறைவன் சூடிய பிறை போலும் வளைந்த கொம்பையுடைய சிவந்த காளையினையும் பொருகின்ற மாறுபாட்டினையும் வலிமையும் பொருந்திய பிற ஏறு பலவற்றையும் தொழுவினுள் விடுகையினாலே புகை சூழ்ந்த அத் தொழுவம் சிங்கமும் குதிரையும் களிறும் கராமும் ஒரு சேரக் கூடி யிருக்கும் முழையினைக் கொண்ட மேகம் தவழும் மலையிடம் ஒக்கும் (கலி. 103: 15-21). தொழுவினுட் காளைகளைத் தழுவுவதற்கு விரும்பிப் புகுந்த பொதுவரைத் தெரிந்து ஏறு குத்தின (கலி. 103:22,23). பகையான காளையை விரும்பிப் போக்குவன வாகிய ஏற்றின் குருதி தோய்ந்த கொம்புகளில் அவ்வேறுகளைத் தழுவ வந்தோரின் குடர்கள் சுற்றிப் பிணித்தன (கலி. 103: 24,27). கொம்புகளிலே சுற்றிக் குடர்கள் பிணித்த ஏற்றின் முன் நின்று ஆடி அக்குடரை இரண்டு கையாலும் ஒருவன் வாங்கினான் (கலி. 103:28,29). போரைக் கொண்டாடும் ஏற்றின கழுத்திலே பாய்ந்து அதற்கு இட்டமாலை போல அதனை ஓர் ஆயர்மகன் தழுவினான் (கலி. 103: 33-35). மறுவினை யுடைய ஏற்றின மேலிருந்து ஆடிவிட்டுப் பின்னர் நீர்த்துறை யிடத்துத் தெப்பத்தின் மேற் கிடந்து அதனைத் தள்ளுகின்றவனைப் போன்று ஓர் ஆயர்மகன் தோன்றினான (கலி. 103: 37-39). காற்றைப் போன்று விரையும் காளையாகிய காரியை வலியடங்கத் தழுவி அதன் மேல் ஏறி நின்ற பொதுவன் ஏற்றெருமை ஏறுகின்ற கூற்றுவ னுடைய நெஞ்சை வடிம்பாலே பிளந்து அவன் உயிர் கொண்ட இறைவன் போல் தோன்றினான் (கலி. 103:40-45). செறிந்த வல்லமையுடைய வெள்ளேற்றின் அழகை யுடைய பக்கத்தே திங்களிற் கிடக்கின்ற மறுப்போல ஓர் ஆய மகன் பொருந்திக் கிடந்தான் (கலி. 103: 47-49). புலித் திரளும் களிற் றினமும் தம்முள் மாறுமாறாய்ப் பொருதாற்போலப் பொதுவர் பொருது ஏறுகளைத் தழுவிக் கொண்டு எல்லாரும் ஒருங்கே தொழுவை விட்டகனறனர் (கலி. 103:56-58). கொல்லுதலையுடைய ஏற்றின் கொம்புக்கு அஞ்சுபவனை

(ஏறுதழுவ அஞ்சுபவனை) ஆயமகள் மறுமையிலும் முயங்காள் (கலி. 103:63,64). அஞ்சாராய் உயிரைப் பொருட்படுத்தாது கொலைத் தொழிலை யுடைய ஏறு தழுபவரையே ஆயர் மகள் தோள் பொருந்துவன; வருந்தித் தழுவுவதற்கு நெஞ்சில்லாரைப் பொருந்தா (கலி. 103:65-67). கொலைத் தொழிலையுடைய ஏற்றுக் கொம்பிடையே, தாம் விரும்பும் மகளிருடைய மார்பின் முலையிடையே வீழ்வாரைப் போல வீழின் எம்மினத்து ஆயர் தத்தம் மகளிர்க்கு முலைவிலை வேண்டார் எனப்பாடி ஆயமகளிர் குரவை யாடினர் (கலி. 103:71-73). வெள்ளேற்றுக் கழுத்திலே கிடப்பவன் கூரிய எயிற்றினையும் அழகினையும் உடைய இவளைப் பெறுவான் என்றனர் (கலி. 104:18,19). குரால்நிறக் கண்ணினையுடைய கொலையேறு அடக்குபவன் மான் போலும் நோக்குடைய இந்நல்லாளைக் கூடுவான் என ஒப்பித்து ஆயர்தம் மகளைப் பரணில் நிறுத்தினர் (கலி. 104:22,23). புகைவலம்வர விடப்பட்டு நிறுத்தப்பட்டனவாகிய ஏறு பறைமிக் கொலிக்கப் பலரும் ஆரவாரிக்க உள்ளே புகுந்த வலிகுறையாத ஆயரை எதிர்த்துத் தாக்கின (கலி. 104:29-31). ஏற்றின்மேல் நிலைபெறும் மிக்க விருப்புடைய கருநிற ஆயன் ஒருவன் பரணைவிட்டிறங்கி, வேல்முனைபோன்ற கூரிய கொம்பு கண்டு அஞ்சாமல் வெள்ளை நிறக் காளை மீது பாய்ந்தான் (கலி. 104:32–35). குறையாத சினத்தினையும் அழகினையும் உடைய ஏறு தன் முன்வந்த பலரும் அஞ்சி நடுங்கி அலறிப் புடைத்துக்கொண்டு ஓடும்படி அவர் எலும்புகளை முறித்துக் குடர்களைச் சரித்து மேலுந் தழுவ நின்றவனை அலைத்து வருத்தும் (கலி. 104:39–42). தோள் வலியால் காளை தழுவ முயன்று புகழ் கெடாதபடி அதன் உடலைத் தழுவிக் கை நழுவி முன்னே வீழந்த இளைஞன் மீது பாயாது செல்லும் புகர் நிறததினையுடைய ஏற்றின் தோற்றத்தைப் பார் எனத்தோழி தலைவிக்குக் காட்டினாள் (கலி. 104:45-48). கொம்புமார்பில் படுதலைத் தாங்கிக் கொள்பவரும் அதன் மீது பாய்பவரும் அதன் கொம்புகளிடையே நுழைபவரும் வென்று அடக்குவோம் என வீரம் பேசுவோருமாகியவர் மீதும் ஏறு எதிர்நின்று பொருது அவர்களின எலும்புகளை முறிததுத் தசைகளைச் சிதறச் செய்தன (கலி. 104:51-56). தொழு விடத்துத் தழுவிக் கொண்ட ஏறு அனைத்தும் மேயும் நிலத்தே போக சீரினையும அழகினையும் உடைய ஆய்ச்சியரும் ஆயரும் ஊரில் குரவை அயர்ந்தனர் (கலி. 104 60-62).பொதுவனுடைய கொலை ஏற்றின் கொம்புகள் குறிசெய்த மார்பைப் பாடுவோம, வாருங்கள் எனத் தோழி தலைவியையும் ஆயத்தையும் அழைத்தாள் (கலி. 104:63,64). ஆயர்மகன் ஆயத்தோடே நாம் ஆடும் குரவைக் கூத்திலே நம்மை அருமை செய்தான்போல் நோக்கி நமக்கு வருத்தத்தைத் தரும் நோயைச் செய்தல், நிறம் பொருந்திய கண்ணையுடைய கொலை ஏற்றை யான் கொண்டேன் என்னும் மனச் செருக்கினாலன்றோ எனத் தலைவி தோழியிடம் கூறினாள் (கலி. 104:69-72). கொள்ளற்கரிதாக நிறுத்திய கொலை ஏற்றுக் காரியின் சினத்திற் கஞ்சானாய்த் தழுவின பொதுவனுக்கே சுற்றத்தார் மகிழ்ந்து அலர் கூறிய ஊரிலுள்ளாரை உச்சி மிதித்துத் தலைவியைக் கொடுத்தனர் (கலி. 104:73-76). தொழுவினுட் புகுந்து கொம்புகளைப் பற்றியும் மார்பில் அணைத்தும் கழுத்தைக் கட்டிக் கொண்டும் இமில் முறியும்படி ஏறியமர்ந்தும் தம் தோளுக்கிடையே கழுத்தைப் புகுதவிட்டு நெருக்கியும் கொம்புகளின் குத்துக்களைத் தாங்கியும் தம்மை அடக்கவந்த ஆயர்களை ஏறு தம் நீண்ட கொம்புகளால் தாக்கித் தம்மைத் தழுவ விடாமல் தடுத்தன (கலி. 105:30-34). நடுவே பாய்ந்து கழுத்தைத் தழுவிக் கிடந்தவனோடே வெள்ளேறு பரணின் மேலே தாவிப் பாய்ந்தது (கலி. 105.43,44). ஏறும் பொதுவரும் தம்மின் மாறுபட்டுப் போராடிய தொழுவம இருபெருவேந்தர் பகைத்துப் போரிட்ட போர்க்களத்தை ஒக்கும் (கலி. 105:47-49). கழுத்தை மறைக்கும் அசையும் இமிலுடைய நல்லேறு தழுவிய பொதுவன் முகம் நோக்கி மகிழ்ச்சியால் ஆயமகள் கண்கள் இமையாவாயின (கலி. 105:50-52). கூந்தலில் வெண்ணெயின் நாற்றம் நீங்கி முல்லைப் பூவின் மணம் கமழ்ந்ததற்கு எம் சுற்றத்தார் மனங்கலங்கி அவன் தழுவின கொல்லேறு போலச் சினந்தமை என்ன பயனைத் தந்தது எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 105; 53-56). முன்பு காலாலே வெட்டிப் புழுதியை மேலே எழுப்பியனவும் இப்பொழுது கொம்பால் நிலத்தைக் குத்தி ஒன்றோடொன்று மாறுபட்டு முழங்கி மண்டிப் பாய்ந்து செல்லும் அசையும் இமிலையுடையனவு மாகிய நல்லேறு களம் புகும் வீரர் வனப்பு ஒத்துக் காணப்பட்டது (கலி. 106: 7-10). தமக்குள் ஒன்றோடொன்று தாக்கித் தம் கூரிய கொம்புகளால் எவ்விடத்தும் குத்துவதால் உடம்பிலிருந்து குருதி வடியும் ஏறு அனைத்தும் நாட்காலை மழை பொழியும் மேக நிரையை ஒத்தன (கலி. 106:11-14). போரிடும் ஏறுகளுக் கிடையே வேறு காளைகளைப் புகுத்தி அவற்றைப் பிரித்து ஆயர் பசு மந்தையுடன் மேல்புலத்திற்கு ஓட்டிச் சென்றனர் (கலி. 106:15-17). ஏறுகள் தத்தம் இனங்களைப் பிரிக்கும் ஆயர் ஓடுமாறு மிதித்து, ஓடாமல் நின்றவரின் எதிர் சென்று

அவரைக் கொம்பாலே குத்திச் சாடி உழலை கோத்த மரம்போல் துளைத்தன (கலி. 106:20-22). காளைகள் துளைத்த தம் புண்களினின்று வடியும் குருதி வழுக்குதலாலே மணலை அள்ளிக் கையைப் பிசைந்து தாழ்க்காது கடலுக்குள்ளே பரதவர் தெப்பத்தை ஏறினாற்போல ஆயர் ஏறு தழுவினர் (கலி. 106:23-25). ஏறு தம் கொம்பால் தோண்டிய குடர்களை எடுத்துச் செல்லும் பருந்தின் வாயிலிருந்து அவை தப்பி ஆலமரத்திலும் கடம்பமரத்திலும் வீழ்ந்தன; அவை ஆண்டுறையும் தெய்வங்கட்கு மகிழ்ச்சியுண்டாதற்கு அணிவித்த மாலைகள் போல விளங்கின (கலி. 106:26-29). ஏற்றினை (ஏறுகளை) மேய்புலத்தில கொண்டுவந்து விட்ட அன்பு மிக்க காதலருடைய கையைக் கோத்து ஆயமகளிர் இன்பமுற்றுக் குரவையாடுவர் (கலி. 106:31-33). கொலை ஏறு சாடிய புண்கள் முலையின வெமமையாலே ஆறும்படி ஒற்றி முயங்கிப் பொதிந்து விடுவோம் எனப பாடி ஆய்ச்சியர் குரவையாடினர் (கலி. 106·34-36). தயிரைக் கடைவதால் பாய்ந்த புள்ளிகளின்மேல் ஏறு கழுவினவனுடைய குருதி மயங்கும்படி தழுவுதல் எம் தோளிற்கு அழகுமட்டுமன்று; சிறபபுமாகும் என ஆய்ச்சியர் பாடிக் குரவையயர்நதனர் (கலி. 106·37-39). பொருகின்ற ஏற்றின் கொம்பைக் கண்டு ஆயர் அஞ்சுதலும் காளையைத் தழுவாதவருடைய புண்படாத் தோளை ஆய்ச்சியர் விரும்புதலும் ஆகிய இரண்டும் ஆயர் குடியிற் பிறந்தாரிடம் இலலை (கலி. 106:40-42). இதோ போகும் இவளுடைய கணவன் கொல்லேற்றினைத் தழுவினான் என ஊரார் புகழ்ந்து சொல்கினற சொல்லைக் கேட்டு நாம் மோரை விற்றுப் பெறும் செல்வத்தை நம் கணவன் தருவானோ எனப் பாடி ஆய்ச்சியர் குரவையாடினர் (கலி. 106:43-45). ஏற்றையும் காதலரையும் பாதுகாத்துச் சுரும்பினம் ஒலிக்கின்ற கானத்தை (முலலை நிலததை) நாம் பாடித் திருமாலைப் பரவுவோம்; அதன் பயனாக எம் பாணடியன் பகைவரிடம் திறைகொண்டு அவர் நாட்டை வெல்வானாக எனப்பாடி மகளிர் குரவையாடினர் (கலி. 106·47-50). ஆட்டிடையர்க்கும் பசு இடையர்க்குமாகக் கோவினத்தையுடைய நம் சுற்றததார் எம் கொல்லேற்றினைத தழுவுதலே செய்யததக்கதென்று தொழுவினுள் பல ஏற்றினைப் புகவிட்டனர் (கலி. 107:2-4). உன்னுடைய மயக்கு மொழி கேட்டு நான் மயங்கேன்; நீ பல பசுக்களையும் தெவிட்டாமற் கூடும் ஏறுபோல நாடோறும் பதின்மரை ஒருவரைப்போல விருப்ப முற்றுச் சேர்வாய் என அகப்புறத் தலைவி அகப்புறத்தலைவனைச் சாடினாள் (கலி. 108:46-49). பசுவினத்தில் பிற பசுக்களுக்கு ஒப்புக் கூறப்படும் உயர்ந்த இளம்பசு போர்த்தொழில் வல்ல ஏற்றினுக்கு ஈன்ற இளைய எருது கொல்லர் வண்டியை இழுத்து இளமையால் செம்மாத்தல் போலப் பலரும் பாராட்ட மோர்க் கூடையுடன் வந்த இவள் செம்மாந்த அழகைப்பார் என வினைவல பாங்கின் தலைவன் வினைவலபாங்கின் தலைவியைக் கண்டு தன் நெஞ்சிற்குரைத்தான் (கலி. 109:3-7). இராப் பொழுது வந்ததும் பசுவினத்திரளுககுள் இடிபோல் முழங்கும் ஏறு நாகுகளுடன கூடி நின்றன; அவை போல நாமும் கூடிச் சேரப் போதற்கு உடம்படுவாயாக வென வினைவல பாங்கின் தலைவன் வினைவல பாங்கின் தலைவியை அழைததான் (கலி. 113:26-29). செறிந்த மழையிடடதது ஏறு (எருமைக் கடா) போலத் தலையைச் சாயத்து யான் கூறியவறறிற்கெதிராகச் சில சொற்களைக கூறிக கூட்டததையே நினைந்து மயக்கமுறறவனே, என வினைவல பாஙகின் தலைவி வினைவல பாங்கின் தலைவனை விளிததாள் (கலி. 116·13-15). கொலலேற்றுச சுறவினம் (ஆண்சுறாவின் திரள்) மயக்கத்தை உடைய மாலைக் காலததே கானல் வழிப்போவாரைப் போகவொட்டாது தடை செய்யும (கலி. 123·9). வழியின அருமையைக் கருதாமல் ஏற்றூர்தியுடைய சிவபெருமானை ஒத்த அருமபொருட்குச சென்றவர் நீ உருவிழநது வருந்துவதை அறியின அப்பொருளைப் பெரிதாக எண்ணாது மீள்வர் எனத் தோழி தலைவியை ஆற்றுவிததாள் (கலி. 150·12-14). நிறம்பொருந்திய வெள்ளி ஏற்றியலை (இடபராசியை) சேர்ந்தது (பரி. 11:4).

2. எறிதல். வளைந்த சிறகினையும் கூரிய நகத்தையுமுடைய பருந்தின் ஏறு – எறிதலை – குறித்து அதற்கு அகப்படாமல் தப்பித் தன்னை வந்தடைந்த புறாவின் அழிவை நீக்கத் துலாக் கோலில் புகுந்த சோழன சிபியின் மரபில் வந்தவன் மாவளத்தான் (புறம். 43:4-8). கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின போர்முரசத்தின் முழக்கம் பகைவர் மேல் படைக்கருவிகளை எடுததேறு (எடுத்து எறிதலை) ஏவியது (பதி. 41:23). படைக் கருவிகளைப் பகைவர்மேல எடுத்தேறு ஏவுகின்ற குறுந்தடி புடைத்தலால் அதிரும் தோலால் போர்க்கப் பெற்ற முரசம் முழங்குவது போலக் கார்காலத்து மேகம் முழங்கிற்று (பரி. 84:1-3). பாலைநிலத்தே புல்லூற்றினால் ஏறு குறிக்கப்பட்ட குறும்பூழ்ச் சேவல் தானிருந்த சிறு துற்றினைவிட்டு உறைவோர் விட்டுப்போன மனையின இறப்பு நிழலில் ஒரு பக்கத்தே தங்கும் (அகம். 103·1-7). வழியிற் செல்லும் மக்கள் அறுத்துப் போட்ட பிரண்டைக்

கொடி இடியால் ஏறு பெற்ற பாம்பின் துண்டம் போலக் காட்டிற் கிடக்கும் (அகம். 119:5-7). காட்டில் இனத்தைப் பிரிந்த பருந்து உயர்ந்த மரத்தில் ஏறி உணவைஏறு குறித்து வாய்ப்புநோக்கியிருக்கும் (அகம். 285:9-12). சிவன் சினத்தலினால் முப்புரம் ஏறு பெற்று உதிர்வனபோல் ஞாயிற்றின் வெம்மையால் வரைபிளந்து சிதறி வீழ்ந்தது (கலி. 2:6,7).

3. இடியேறு. பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி இளமைக் காலத்தும் பகைவரைக் காணப் பொறாத, போரின்கண் மாட்சிமைப்பட்ட பாண்டியர் குடியுள் ஏறு - இடியேறு- போல்வான் எனக் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார் போற்றுகிறார் (புறம். 58:7,8). ஞாயிற்று வெம்மையால் காய்ந்த புல்லையுடைய காடு தளிர்க்குமாறு நடுக்கத்தைச் செய்யும் ஓசையுடைய உரும் ஏற்றுடனே மேகம் மழை பெய்தது (புறம். 160:1-3). 'நீ வேள்வி முடித்துப் புகழ்பரப்பி இன்று போல் வாழ்க; குடகு மலைக்கண் முகிலின் ஏறு முழங்கி மழைதரப் புது நீரையுடைய காவிரி யாற் புரக்கப்படும் எங்கள் ஊர் சென்று உண்டும் தின்றும் ஊர்ந்தும் யான் நின்னைக் கொண்டாடுவேனாக' எனச் சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனை ஆவூர் மூலங்கிழார் வாழ்த்தினார் (புறம். 166:26-31). மேகத்திலுள்ள ஏறு அச்சமுடைய பாம்பின் தலை துணிபடவும் நீண்ட மலை பிறழவும் சிறுமலை பொடிபடவும் விழுந்தது (புறம். 211:1-4). போரில் இறந்து நடுகல்லான வீரனை நோக்கிப் பகைவர்க்கு வானேறு போன்ற நின் தாள்நிழற்கீழ் வாழ்ந்த பரிசிலரது செல்வமே யன்றி வேந்தரது மடியாத வென்றியும் நின்னொடு கழிந்தது எனச் சோணாட்டு முகையலூர்ச் சிறு கருந்தும்பியார் இரங்கினார் (புறம். 265.6-9). ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் மேகங்கள் தவழ்கின்ற பெரிய மலையில் பாம்புகளை உருட்டி அவற்றின் சினமிக்க வன்மையைக் கெடுக்கும் மேகத்தில் தோன்றும் ஏறனையவன் (பதி. 51:25-28). கருக்கொண்ட மறக்குடி மகளிர் யானை தாக்க எதிரே வரினும் பாம்பு தன்மேற் செல்லினும் மேகத்திலுள்ள வலிய ஏறு இடிப்பினும் அஞ்சார் (பெரு. 134-136). தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் மரங்களைச் சுட்டு, மலைகளை நீறாக்கும் பெருமையினையுடைய ஏறனையான் (மது. 62,63). மூங்கில் வளரும் சாரலில் களிற்றினம் நடுங்க ஒலிக்கும் உருமேற்றுடன் பரந்து மேகம் மழை பெய்தது (மது. 242-244). கடல குறைபடும்படி நீரை முகந்துகொண்டு முரசு முழங்கினாற் போன்ற இனிய குரலையுடைய உருமேற்றுடன் கூடிய மேகம் மின்னி மலைமேல் மழை பொழிந்தது (குறி. 47-53). வானில் ஏறு முழங்கினும் அதற்கெதிராகப் பாசறைக்கண் மதங் கொண்ட களிறு முழங்கும் (அகம். 144:11-13). குறும்பொறை என்னும் மலை விசும்பினின்று ஏறு ஒலிக்கும் நெடிய உச்சியையும் நறிய பூக்கள் பொருந்திய சாரலையும் உடையது (அகம். 159:13,14). மேகம் நள்ளிரவில் பெரிய மலையின் உச்சி அதிரச் சூழ்ந்துகொண்டு வாள்போல் மின்னி பருத்த மழைத்துளிகளைச் சிதறி ஏற்றுடன் பரந்தது (அகம். 218:3-6). ஆதி மந்திக்கு அவள் கணவனைக் காட்டிக் கடலில் மறைந்த மருதியைப் போல் புகழ் பெறுதற்குப் பல நாளும் வலிய ஏற்றுடன் கூடி இரவெல்லாம் மழை பொழிந்ததால் ஈரம் மிக்க சேற்றுவழியில் தலைவனைத் தேடிச் செல்வோம் எனத் தோழி சிறைப்புறத் தலைவன் கேட்பத் தலைவியிடம் கூறினாள் (அகம். 222:10-15). தலைவியின் கூந்தலை ஒத்த மேகம் வானத்து விளங்கும் ஞாயிற்றின் ஒளி மழுங்குமாறு பரவிப் பாம்பின் படம் அழிய இடிக்கும் கடிய குரலினையுடைய ஏற்றோடு ஆலங்கட்டியுடன் கூடிய மிக்க துளிகளைப் பெய்து கால் இறங்கியது (அகம். 323:9-13). சுரபுன்னை மரங்கள் நிறைந்த மலைச் சாரலில் மேகம் வலமாக எழுந்து கூத்தரது முழவம் அதிர்ந்தாற் போன்ற முழக்கத்தினையுடைய ஏற்றொடு கூடி நள்ளென் யாமத்து மிக்க மழை பொழிநதது (அகம். 328:1-3). திசையெல்லாம் மறையப் பரவிக் கால் இறங்கி ஏற்றினையுடைய மேகம் பெருமழை பொழிந்தது (அகம். 364: 1,2). பலநாள் வந்து பணிமொழி பேசிய தலைவன் இப்பொழுது எங்கு உள்ளானோ என நினைந்து வேற்று நாட்டுப் புலங்களில் ஏறுடைய மேகம் பெய்த மழைநீர் கலங்கி வருவது போல என் நெஞ்சம் கலங்குகின்றது எனத் தோழி தலைவிக்கு இரக்கம் உண்டாகும்படி கூறிக் குறை நயப்பித்தாள் (குறு. 176). பாம்பின் படத்தையுடைய பெரிய தலையைத் துண்டுபடச் செய்யும் ஏற்றோடு கூடிய நடுநாள் இரவில தலைவன தலைவியை அடைந்தான் (குறு. 268 3-6). சுனையில் நீர் நிறையவும் மலைப்பக்கத்தில் அருவிகள் ஆரவாரிக்கவும் கான் யாற்றைக் கடக்கப் பற்றுக்கோடாக அமைந்த மூங்கிலும் முழுகுமாறு வெள்ளம் பெருகிக் காட்டிற் செல்லவும் தழங்குகுரல் ஏறொடு முழங்கி விரைவில் மழை பெய்ய வானம் மின்னியது (நற். 7:1-6). பாம்பின் தலை துணிந்து விழும்படி சினநது வலமாக எழுந்து மிக்க முழக்கத்தை யுடைய நல்லேறு குமுறித் திரிகின்ற முகில் சூழ்ந்த கார்ப் பருவத்து மாலையில் தலைவி எய்தும் பெருந்

துன்பம் தன்னால் தாங்க முடியாது எனத் தோழி தலைவன் பிரிவின்கண் கூறினாள் (நற். 37: 7-11). மலைப்பிளப்பிடமெல்லாம் எதிரொலி எழ, பாம் புகள் துறுகல்மீது புரளுமாறு துன்புறுத்திக் கடிய முழக்கமிக்க ஏறொடு மேகம் விடாமழை பெய்தது (நற். 51: 2-5). மேகம கரிய கடல நீரை முகந்து அருவிநீர் ஓடும் இடபபரப்பெல்லாம மறையப் பரவி மலை கண்விழித் திமைத்தாற்போல மின்னி ஒலிக்கின்ற வலிய ஏறறோடு மழை பெயதது (நற். 112: 6-9). மிகக ஓசையை யுடைய ஏறு பாம்பின கவின் அழியுமாறு மலைமேல மோதிக் கரிய இளம்பிடி வருந்துமாறு களிற்றின் மேல் விழுந்து அதனைக் கொன்றது (நற. 114:9-12). கதிரவன் தோன்றாதபடி மறைதத சூல் நிறைந்த மேகம் இருள் நிறைநத வானத்தில் மினனி அதிரும் ஏறொடு நடுயாமத்தில் பெருமழை பெயதது (நற. 261: 1-5). தலைவனை நமக்குத் தருதற்பொருட்டு மேகம் மலையை வலம சூழ எழுநது வானம் அதிருமபடி ஏற்றொடு மழை பெயதது எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (ஐங. 469. 2-4). காளைகள் கோட்டுமண் கொணடு மாறுபடவும் ஏறு காளைகளின் முழக்கத்திற்கு எதிராக முழங் கவும் கலைமானகள் பிணைகளுடனும் மறிகளுட னும் துள்ளித் திரியவும காரபபருவம் தொடங் கியது (ஐங். 493). ஏறு ஒலிககும் இராக்காலத்துத் தலைவியைக் கூடும் செல்வி பெறாது தலைவன் வருந்தினான் (கலி. 46: 10). கூடலின மணமுரசு காற்றொடு மயஙகிய கடலெனவும் கடலைக் குடிக் கும் மேகக் குரலெனவும் இந்திரனது அதிர்க்கும் பெரிய உரும் ஏறு எனவும் அதிர, அதற்கு மாறாகச் செவ்வேளின் பரங்குனறம் முழங்கியது (பரி. 8:29-35). சூல முதிர்நத முகில் மலையொமுங்கைச் சூழ்ந்து அதன் கல துணிபட எறிந்து உடலுகினற உரும் ஏற்றினம் ஆர்ப்ப மழை பெயதது (பரி. 20: 1-3).

4. **தலைவன்** (ஆகுபெயர்). கள்ளாகிய உணவினை யுடைய குடநாட்டாரின ஏறே என இளஞ்சேரல இரும்பொறை விளிக்கபபெறறான (பதி. 90: 26). முருகன அருள பெற்றான ஒருவன பெற விருமபும ஒருவனிடம 'மைநதர்கது ஏறே, பலர் புகழ நன மொழிப் புலவா ஏறே' என முருகனைப் பாராட்டு மாறு கூறினான (முரு. 264,268). காளையை ஊர் தியாகக் கொண்ட சிவபெருமானின மகனான முருகன் 'ஏறூர்ந்தான் 'ஏறே' என விளிக்கப்பட்டு தல (முரு. வெ. 1).

5. **ஏறுதல்.** தன்னிடத்துச் சாத்திய ஏணியால் ஏற்றரும் - ஏறுதற்கரிய - தலைமையினை யுடைய மாடம் தேவர் உலகுக்கு முட்டுக் காலாக ஊன்றி வைத்த ஒரு பற்றுக் கோடு போல விணதோய உயர்ந்திருந்தது (பெரு. 346-348). தொண்டையர்க குரிய வேங்கடம் மேகங்கள் தவழும் ஏறறரும் உச்சியினின்று இழியும் அருவியுடையது (அகம. 213: 1-3).

6. **ஏறுகோள்** (ஏறுதழுவுதல்). முன்னைநாளில் கொல்லுதலையுடைய ஏற்றின் கழுத்திலே அகப் பட்டுக் கிடந்தவரைக் கண்டும் மாறுபாடு மிக்க ஏறுகோளை - ஏறு தழுவுதலை - இன்றும் அறிவிப பாராகிய ஆயா அறிவிலலாதவரே எனறு கண டோர் கூறினர் (கலி. 102: 30-32).

**ஏறூர்ந்தான்**-ஏற்றினை ஊர்ந்தவனாகிய சிவபெருமான். ஏறூர்ந்தான் - ஏற்றினை ஊர்ந்தவனாகிய சிவ பெருமான் - மகனாவான் ஏறுபோன்ற முருகன (முரு. வெ. 1:3).

**ஏறை** - ஏறைக்கோன். குறிஞ்சி நிலததலைவன: விலலும் வேலும வலலவன; காநதள பூவால தொடுத்த கண்ணியன, புலவர்பால பேரன்பினன. தனக்குரியோா பிழை செயயின அதனைப பொறுத துக் கொள்ளுதல், பிறர் வறுமைக்காகத் தான நாணுதல், போாக்களததில் பிறரால பழிககப்ப டாத வலியனாதல, அரசுடைய அவைக்களததில மேம்பட்டு நடததல ஆகிய நறபணபுக ளெலலாம பிறர்க்குத தகுவன வல்ல; பெருங்கல நாடனாகிய ஏறைக்குத தகும் எனக் குறமகள் இளவெயினியாா சிறப்பித்துள்ளாா (புறம. 157).

**ஏறைக்கோன்** - குறிஞ்சிநிலத் தலைவன். ஏறை காண்க.

**ஏனம்** - 1. பன்றி. கடுங்கண கானவர் குழியிலே மறைந்திருந்து அகத்திப் பூவினை ஒத்த வளைந்த கொம்பினை யுடைய ஏனம்-பன்றி-நீருணணவரும வரவினைப் பார்பபர் (பெரு. 109,110). மலை யைச் சார்நத காட்டினகண பரண்மீது இருந்தவன எய்த அமபு தைத்து நெறிகெடக கிடநத ஏனம இருள் அறறுக் கிடந்தாற் போல தோனறியது (மலை. 245-247).

2. **பன்றியின் கொம்பு** (ஆகுபெயா). மதிலின் கதவு களைச் சிதைததால் நுனி முறிந்து, ஏனம - பனறி யின கொம்பு - போலத தோனறும குறுகிய மருப பினைக் கொணட இளங்களிறுகள் பிளிறும் பாச றைககண இமய வரமபன தஙகியிருநதான (பதி. 16:6-8).

**ஏனல்** - தினைப்புனம். சோழன நலங்கிள்ளியின பகை வர், காட்டுக் கோழிச் சேவல் ஏனல் - தினைப் புனம் - காப்போரைத் துயில் உணர்த்தும் காட்டில

உள்ளனர் (புறம். 28:8,9). ஏனல் உழுது பயிர் செய்யும் குன்றவர் தம் மனைக்கு வரும் விருந்தினர்க்குத் தினைமாவை அளித்துண்பர் (பதி. 30:22-24). ஏனல் காக்கின்ற கொடிச்சியர் ஆரவாரிக்குந் தோறும் கிளிகள் தம் இனமென்று கருதிப் பல காலும் அழைக்கும் (அகம். 12:6,7). நேற்று அழகிய அணிகலன் அணிந்துவந்த தலைவன் நம் ஏனலிடத்து வந்து புரவலன் போன்ற தோற்றத்திற்கு முரணாக என்னிடம் இரவலன் போலப் பணிமொழி கூறினான் எனத் தோழி தலைவியிடம் குறை நயப்பக் கூறினாள் (அகம். 32:1-4). தான் எய்த கணையால் புண்பட்டோடிய யானை சென்ற வழியை வினவிக் கொண்டு ஏனல் பக்கத்தில் தலைவன் வந்து நின்றான் (அகம். 82:12-14). தலைவன் பல நாளும் வந்து தலைவியைக் கூடும் குறியிடமாகிய ஏனலில் கதிர்கள் கொய்யப்பட்டு விட்டமையால் தலைவி இற்செறிக்கப் பட்டாள் (அகம். 118:12,13). எம் தலைவி ஆயத்துடன் தழலை வாங்கியும் தட்டையோப்பியும் காக்கும் ஏனலிடத்து மழை பொழிந்து காத்தலும் செய்வாயோ, என்று தோழி மேகத்தைப் பார்த்துக் கேட்டாள் (அகம். 188:10-14). தலைவன் தலைவியிடம் தன் துனபத்தைக் கூற, வளைந்த கதிர்களை யுடைய ஏனலிடத்தே வைகலும் வருவான் (அகம. 288:5,6). ஏனல் காப்பார் விடுகின்ற கவண் கல்லின் ஒலிக்கு அஞ்சிய யானையால் கைவிடப்பட்ட மூங்கில் மீனெறி தூண்டிலைப் போல் மேலே செல்லும் (குறு. 54). ஏனல் காக்கும் குறவர் விலங்கினைக் கொன்று அதன் உடலினின்றும் பறித்த அம்பு போன்ற செவ்வரி படர்ந்த கண்களையுடையவள் தலைவி (நற். 13: 3,4). மலையிடத்தே வாழும் வேட்டுவரின் மகள் ஏனல் காவலை மேற்கொண்டாள் என்று தலைவனிடம் கூறுமாறு தலைவி கிளியைத் தூதனுப்பினாள் (நற். 102:7-9). மலைக்கு அயலிடத்தே தழைத்த ஏனலில் பெண்யானையை விட்டு நீங்கிய களிறு நெருங்குவதைக் கண்ட குறவர் ஆர்ப்பரித்தனர் (நற். 108:1-5). தழைத்த கதிர்களை உடைய ஏனல் காக்குமிடத்திற்கு வந்து தலைமகன் தலைவியைப் புல்லினான் (நற். 128:7-9) கதிர் சாய்ந்து விளங்கி நிற்கும் ஏனலில் இருப்பவளாகிய தலைவியின் இனிய சொற்களை அங்குத் தினையுண்ண வரும் கிளிகளும் அறியும் என்பது தலைவன் கூற்று (நற் 209:4-6) சிறுகிளிகள் படிந்துண்ணும் பெரிய கதிர்களையுடைய ஏனலை இனி நீ காவல் புரிக எனத் தாய தலைவியிடம் கூறினாள் (நற். 389:6,7). மெல்லியல்புடைய நம் காதலி காத்தற்கு ஏதுவாகும்படி ஏனலில் பரவி வரும் இக்கிளிகள் நம்திறத்தில் நன்மையே செய்தன எனத் தலைவன் கூறினான் (ஐங். 288). தலைவியின் குரலோசையைக் கிளியின் ஓசையெனக் கருதிப் பக்கமலையில் வாழும் கிளிகள் யாவும் ஏனலில் வந்துபடியும் என்று எம் சுற்றத்தார் கருதி அவள் காக்கும் காவற்றொழிலையும் விலக்குவார் போலும் எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் (ஐங். 289:1-3). ஏனலில் கிளியினம் படியாமல் ஓட்டிப் பாதுகாக்கும் புனத்துக்கு அயலில் இட்ட ஊசலில் தோழி ஆடினாள் (கலி. 37:12-14). ஏனலின் பரணிடத்து எரிந்த அகிலின் புகையால் ஒளி மழுங்கிய மதியம் வானிடத்தே சென்று மலையில் தங்கினால், அதனை அம்மலையில் வைத்த தேனிறால் என்று கருதி அதனை அழித்தற்குக் கண்ணேணி சமைத்திருக்கும் கானக நாட்டை யுடையவன் தலைவன் எனத் தோழி தாயர்க்குக் கூறி அறத்தொடு நின்றாள் (கலி. 39: 7-10). படிகின்ற கிளிகள் பரக்கும் பசிய கதிரையுடைய ஏனலில் கிளியைக் கடிதலை மறப்பித்துத் தலைவன் தலைவியைத் தன்வயத்தளாக்கி விட்டதனால் அவன் இடைவிடாது நினைத்தலைத் தலைவி விரும்புவாள் எனத் தோழி கூறினாள் (கலி. 50:9-11). இரவுக்குறியிடத்துத் தலைவன் வருவானாயின் அவன் செய்யும் குறிகளாலே ஏனல் காப்பவர் களிறு வந்ததென் றெண்ணிக் கொள்ளியையும் கல்லையும் கவணையும் வில்லையும் உடையராய் ஆரவாரிப்பர் எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் (கலி. 52:12-14).

2. தினை. கொல்லைக்கண் கோடை மிகுதியான் ஈன்றலைப் பொருந்தாத ஏனற்கு மின்னும் இடியும் கொண்ட மழைத் துளியை வானம் சொரிந்தாற் போலக் குமணன் இரவலர்க்குக் கொடுத்த புகழைப் பெருஞ்சித்திரனார் ஏத்தினார் (புறம். 159:16-20). தம்மில் விளையாடிப் பொரும் யானைக் கன்றுகளின் ஒன்றோடொன்று சேர்ந்த கைகளையொப்ப ஏனல் கதிர்கள் முற்றித் தம்மிற் பிணைந்து நின்றன (மலை. 107,108). ஏனல் காக்கும் பரண் மீதுள்ள கானவன் கையில் உள்ள கொள்ளியின் தீப்பொறி போன்று மின்னி மழைபெய்தது (அகம். 73:14-17). எம்மால் பாதுகாக்கப்பட்டு வந்த ஏனலும் முற்றிக் கதிர்கள் அரியப்பட்டன என்று கூறித் தோழி தலைவனை வரைவு கடாயினாள் (அகம். 132:1). கிளி தான் கொய்த தினைக்கதிரைச் சுமக்கலாற்றாது கீழே போட அதனைக் காட்டுக் கோழிச்சேவல் கவர்ந்து உண்ணும்படி யாங்கள் காவல் செய்த ஏனல் வளைந்த கதிர்களை ஈன்று முற்றின என்று கூறித்தோழி இற்செறிப்பு உணர்த்தினாள் (அகம். 192:5-8). மலைச்சாரலில் குன்றவர் உழுது விளைத்த பெரிய கதிர்களையுடைய ஏனல்

கிளிகள் கொய்து கொண்டு செல்லுமாறு முதிர்ந்து கிடந்தது (அகம். 302:9-11). மூங்கிற் குழாயில் அடைக்கப்பட்டு முதிர்ந்த கள்ளினை மகளிர் கொடுக்க உண்டு மலையின்கண் அமைந்த ஏனல் விளைந்த புனத்தைக் காக்கும் தொழிலைக் குறவர் மறந்தனர் (அகம். 348:7-10). பருத்தியை இடையிலே விதைத்த ஏனல் முதிர்ந்த புனத்தில் குருவி ஓட்டு பவளின் பெரிய கண்கள் பூவினை ஒத்துச் சுழலும் தன்மை யுடையன எனப பாங்கற்குத் தலைவன் உரைத்தான் (குறு. 72). மரங்களை வெட்டிச் சுட்ட கொல்லையில் தழைத்த ஏனலில் வீழ்கின்ற கிளி களை ஓட்டும் தலைவியின் கையிலுள்ள குளிர் என்னும் கருவி இசையொடு பொருந்தி இனிய தாளத்தையும் உடையது (குறு. 291:1-3). ஏனலஞ் சிறு தினையைக் காக்கின்ற பரண் மேலுள்ள குற வனது கொள்ளிக் கட்டைக்கஞ்சி ஓடிய யானை விசும்பிலிருந்து வீழும் விண்மீனொளியைக் கண் டஞ்சும் (குறு. 357:5-7). மலைச்சாரலில் பெண் யானையின் கையை ஒத்த பெருங் கொத்திலுள்ள ஏனலை உண்ணும் கிளிகளை ஓட்டும் குறமகளின் கையிலுள்ள குளிர் எனனும் கருவி சிலம்பைப் போல ஒலிக்கும் (குறு. 360:4-7). மலைநிலத் தலை வனுடன் நாம் கூடி விளையாடிய போது ஏனல் கதிர்களைக் கொள்ளாதொழிந்த யானைகளுக்கும் கிளிகளுக்கும் என்ன கைம்மாறு செய்ய வல்லோம் எனத் தலைவி கூறினாள் (நற். 194.1,2,8-10). தலை யில் துய்யினை யுடைய ஏனலின் இளங்கதிர்கள் பால்கொண்டு முற்றித் தலை சாய்த்து மூடியிருந்த தோடுகள் நீங்கத் தலைப்பட்டன (நற். 206:1,2). ஏனலின் கதிர்கள் விளைவு முற்றிப் புலரும் செவ்வியை எய்தியுள்ளன வாகலான், பெருங்கல் நாடனுடைய நட்பு சிறிது போழ்தில் தேய்ந்து இல்லது போலத் தோன்றக் காண்கின்றேன் எனத் தோழி தலைவியின இற்செறிப்பை அறிவுறுத்துத் தலைவனை வரைவு கடாயினாள் (நற். 259:7-10). மலைப்பக்கத்து ஏனலாகிய செந்தினையின் கதிர் களைப் படிந்துண்ணும் கிளிகளை ஓப்பச் சென்ற விடத்துத் தலைவியை முருகவேள் அணங்கினான் என்று கட்டுவிச்சி கூறுவாளோ எனத தோழி சிறைப்புறத் தலைமகன் கேட்பக் கூறினாள் (நற். 288:7-10). ஆண்பன்றி, தன் பெணபன்றியுடன் சென்று திரண்ட தாளினை யுடைய ஏனலைக் கவர்ந்துண்ணக் கானவன் வில்லினால் கொன் றான் (நற். 336.1-4). மலைப்பக்கத்தே செழிப்புற வளர்ந்த நீலமணிபோலும் தோட்டினையும் கரிய நிறத்தையும் உடைய ஏனல கரிய பிடியானையின் பெரிய கையைப் போல வளைந்திருக்கும் (நற். 344:1-3). ஆண்பன்றி கானவர் உழுது விளைத்த வளைந்த கதிரையுடைய ஏனலை உண்டு புலிக் கஞ்சாது மலைச்சாரலில் துஞ்சும் (நற். 386:1-5). பொன்போன்ற முதிர்ந்த ஏனலைக் கரிய நிற முடைய கேழல் தின்னும் (ஐங். 263:1,2). மலை நாட்டில் குறவனுடைய மென்சொல் மடமகள் புன்செய் நிலத்தே உழுது விதத்திய ஏனலில வீழும் கிளிகள் பலவற்றையும் ஓட்டினாள் (ஐங். 283 1-3). குறமகள் காக்கும் ஏனலின் பெரிய கதிரினைப் பக்க மலையில் வாழும் மயில் வஞ்சகமாகக் கவர்ந்தது (ஐங். 296:1,2). மகளிர் நாணி இறைஞ் சும் நிலைபோல முற்றித் தாழநத ஏனலை உருவி, சந்தன மர உரலிலே பெய்து, யானைக் கொம் பால் செய்த உலக்கையால் குற்றுதல் வழக்கம் (கலி. 40:2-5).

**ஏனாதி** – **வேந்தர் படைத் தலைவர்க்கு வழங்கும் பட்டப்பெயர்.** தமிழ் வேந்தர் படைத் தலைவர்கசு ஏனாதி, காவிதி முதலிய பட்டங்கள் தந்தும் நாடும் ஊரும் தந்தும் சிறப்புச செய்தல (தொல. பொருள்.63. நச்சினார்க் கினியர் உரை). ஏனாதி திருக் கிள்ளி (புறம். 167. அடிக்குறிப்பு) **மலையமான் சோழிய** ஏனாதி (புறம். 174. அடிக்குறிப்பு) சோழிய ஏனாதி திருக்குட்டுவன (புறம். 394. அடிககுறிபபு) ஏனாதிப் பாடி (கலி. 81.18) காண்க.

**ஏனாதி திருக்கிள்ளி** - **குறுநில மன்னன்.** சோழநாட் டுக் குறுநில மன்னருள் இவனும் ஒருவன். சோழ வேந்தர்க்குப் படைத் துணையாயப் பலபோர் களைச் செய்து வெற்றி தேடித் தந்தமையான் ஏனாதி என்னும் பட்டம் பெற்றிருக்கலாம். இவனைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார், 'கிள்ளியே, பலபோர் செய்த மையால் வடுவாய்ந்த நின்மேனி பார்பபதற்கு அழகற்றதாக வுள்ளது. வீரத்தாலும் கொடை யாலும் புகழுடைமையால நீ கேட்பதற்கு இனியை; ஆனால் நின் பகைவர் போர்க்கஞ்சிய மையால வடுப்படாத காட்சிக்கினிய மேனியை உடையவர்; வீரமும் கொடையும் இனமையால புகழ்பெறாதவராவர்' எனக் குறிப்பாகப புகழந்து பாடியுள்ளார் (புறம். 167).

**ஏனாதிப்பாடி** - **குடியிருப்பு.** ஏனாதிப் பட்டம் பெற் றோன் பரத்தையர்க்கென அமைத்த குடியிருப்பு. முதலில் இசைவளர்கக் துணையாயத் தலைவியின் வீட்டில் இருந்த பாணன் பினனர்த தலைவனது பரததைமைக்குத் துணையான போது, 'நீ எங் குளனாய' எனக் கேட்ட தலைவிக்குத தான் (பரத்தையர் வாழும்) ஏனாதிப் பாடியத்தில்-குடியிருப பில்-இருப்பதாக வாய்தவறிக் கூறினான (கலி.81:18).



ஐ – 1. ஐந்து. பெரிய மலைமுழைஞ்சின்கண்ணே ஐந்தலை - ஐந்துதலை - உடைய நாகம் புகுந்த நிலையில் இடி இடித்தது (புறம். 37:1-4). இமையவரம்பன் தம்பி பல்யானைச் செல்கெழு குட்டுவன் இருபத்து ஐயாண்டு அரசு வீற்றிருந்தான் (பதி. ப. 3). முருகப்பெருமானின் திருமுடி ஐவேறு உருவின் செய்வினை முற்றியது (முரு. 83, 84). முருகவேளின் பன்னிரு கைகளுள் ஒருகை ஐயிருவட்டம் (ஐந்தாகிய பெருத்த வரிசை) சுழற்றும்; ஐயிரண்டாகிய பத்துத் திருமுகத்தினை யுடைய கேடகம் சுழற்றும் என்றும் உரைப்பர் (முரு. 110, 111). ஐவகையாக வகுத்த கூந்தலினையுடைய மடவீரே, நும் வாயிற் பொய்ச் சொற்களும் உளவாமோ என்று தலைவியையும் தோழியையும் நோக்கித் தலைவன் வினவுதல் (அகம். 48:17-19). அரக்கர் கோமானான இராவணன் ஐயிரு தலையினன் (கலி. 38:3). தலைவியிடத்து மிகுந்த காதலுற்று வருந்தும் தலைவன், 'ஐவாயரவின் பார்வையில் அகப்பட்டு வருந்தி மேற்செய்யும் செயலை அறிந்திலேன்' என்று அவளிடமே கூறினான் (கலி.62:12, 13). 'ஐந்தலை (ஐந்து திருமுடிகள்) உடைய சிவனும் அவனாலுண்டாகும் சங்காரமும் நீ' என்று திருமால் துதிக்கப்படுகிறார் (பரி. 3:43,44). கடுவனிளவெயினனார் திருமாலை ஐங்கைமைந்த என விளித்துப் பாடுவார் (பரி. 3:37). முருகன் வள்ளியை மணந்த ஞான்று ஐயிரு நூற்று (ஆயிரம்) கண்களை யுடையவனான இந்திரனின் மகள் தேவசேனை கண்கள் நீரைப் பொழிந்தமை போலப் பரங்குன்றில் மழை பெய்தது ((பரி. 9:8-11). வையைப் புனலாட்டில் மகளிர் கண்கள் ஐவிரை மாண் பகழி (ஐந்தாகிய விரைமாண்ட காமன் கணை) போன்றிருந்தன (பரி. 10:97-99). திருப்பரங்குன்றம் மலைகளுக் குரிய ஐவளமும் பொலிந்தது (பரி. 18:15). திருப்பரங் குன்றத்தில் இளமகளிர் விளையாட்டாக உதிர்த்த இளந்தளிர்கள் சுனைமலர்களோடு பொருந்தி ஐந்தலை யரவு போல் தோன்றின (பரி. 19:67-72).

2. தலைவன். என் ஐ - தலைவன் - தன் நாடு இழந்த வறுமையால் புல்லரிசி யுணவை உண்டும் பகைவர் அஞ்சத்தக்க பெரிய தோளையுடையவன்; போரையேற்று என் ஐ போர்க்களம் புகுந்தால் எதிர்த்து வந்த வீரர்க்கு அச்சந்தருவான் (புறம். 84). என் ஐக்கு ஊர் இஃதல்லாமையானும் என் ஐக்கு நாடு இஃதல்லாமையானும் அவனுக்கு இயல்பான வென்றியை அவனது வென்றியென்று ஒரு சாராரும் வென்றி அன்றென்று மறுசாராரும் கூறுவர் (புறம். 85:1-4). என் ஐ என்று அதியமான் நெடுமானஞ்சியை விறலிகூற்றில் ஔவையார் குறித்தல் (புறம். 89:9). என் ஐ மார்பில் புண்ணும் வெய்ய என்று தலைவனின் இறுதிக்கு ஏதுவாய் அவனுற்ற போர்ப் புண்ணைக் குறித்துத் தலைவி கூறுதல் (புறம். 280:1). 'யான் விருந்தினர் வரப்பெறுவேனாக; என் ஐயும் வேந்தனொடு கூடிப் போய் மாற்றார் நாட்டினைக் கைப்பற்றி வரும் சிறப்புடைப் பகையினைப் பெறுவானாக' என்று மறக்குடி மகள் நடுகல் வழிபாடு செய்தாள் (புறம். 306:4-7). பகைவேந்தன் சினந்தெறிந்த வேல் என் ஐயின் சந்தனம் பூசிய மார்பினுள்ளே சென்றது எனச் சீறூர் மன்னனொருவனின் புறங்காட்டாப் பேராண்மையை அவன் மனைவி கூறுகிறாள் (புறம். 308:6,7). 'பாசறைக்கண் இவனிருக்கின்றான் என்று பகைவர் வெருவுதற்குக் காரணமாகிய ஒப்பற்ற ஒளி என் ஐயிடத்தே உள்ளது' என்றவாறு ஒரு தலைவனின் மறப்புகழ் பேசப்படுகிறது (புறம். 309:5-7). இளவேனிற் காலத்தில் மீண்டு வருவேன் என்று கூறிப் பிரிந்த தலைவன் மீளாமை கண்ட தலைவி வேம்பின் ஒள்ளிய பூ வருவாய் என் ஐ என்னுடனில்லாமலும் கழிவதுவோ எனக் கலங்கி மொழிந்தாள் (குறு. 24:1,2). என் மாமைக் கவின் எனக்கு அழகு பயந்து நிற்காமலும் என் ஐக்கு இன்பம் பயந்து உதவாமலும் பசலையால் உண்ணப்படும் என்று தலைவனின் பிரிவாற்றாத தலைவி கூறினாள் (குறு. 27:3-5). 'என்னிடத்திலிருந்து நீங்கியொழுகும் என் ஐக்கு யான் இப்போது பரிதலை யொழிந்தேன்' என்று பரத்தையிற் பிரிந்த தலைவனைக் குறித்துத் தலைவி கூறுதல் (குறு. 203:5,6). தலைவன் வரைபொருட்குப் பிரிந்த காலத்தில் தலைவி, 'அன்னை பாதுகாத்து வளர்த்த என் பெண்மை நலத்தை என் ஐ கொள்ளை கொண்டான்' என்று தோழிக்கு உரைத்தாள் (குறு. 223:6,7). 'தன் மலைச்சாரலில் உள்ள மரத்தின் பூவை என் ஐ தானும் மலைந்தான்; அதன் தழையே எனக்கும் தழையாயின' என்று கூறித் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றல் (ஐங். 201).

3. இறைவன். வருத்துதற்கரிய மிக்க வலியையுடைய என் ஐ - இறைவன் - எனப் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை இடைக்குன்றூர் கிழார் குறிப்பிடுவார் (புறம். 78:2). 'முழாப்போலும் தோளினையுடைய என் ஐயொடு போரிடுவதாக நீர் சொல்லும் சொல்லை அவனை எதிர்ப்பட்டுக் காணுமுன்னே பாதுகாத்துக் கொண்மின' என்று ஔவையார் அதியமானின் பகைவரிடம் கூறினார் (புறம். 88.2,6). பகைவரின் ஆனிரை

கவர்ந்து வரும் என் ஐக்குப் பக்கமறவராய் நிரை கொண்டு வருவோர் அவனினும் பெரிய இளைப்பை யுடையர் (புறம். 262:5,6).

4. தந்தை. 'தலைவனைப் பிரியுங்காலத்து மெலிவி லும் கழலாத சிறுதொடியைச் செய்து அணிவித்த என் ஐ-தந்தை-பலகாலம் வாழ்வானாக' எனத் தலைவி வாழ்த்தினாள் (நற். 136:4-9). என் ஐ ஏவல் இளையரொடு வேட்டைமேற் சென்றதனால் தினைப்புனங் காவலை அன்னை நமக்களித்தாள் என்று தோழி தலைவியிடம் கூறினாள் (நற். 389: 3-7).

5. வியப்பு. முருகப்பெருமானின் பன்னிரு கைக ளுள் ஒருகை ஐயிருவட்டம் - வியப்பையும் கரு மையையு முடைய பரிசை - திரிக்கும் (முரு. 110, 111). யவனர் இயற்றிய வினைமாண் பாவை கைகளில் ஐ மிக்க அகல் ஏந்தியிருத்தல் (நெடு. 101, 102). ஐயறிவு (வியக்கததக்க அறிவு) நீங்குமாறு அகற் றும் செயலறவாகிய துன்பத்துடன அழகிய மேகங் களை அகன்ற வானம் உண்டாக்க, மாலைக் காலம் ஞாயிற்றைப் போக்கியது (அகம். 71:7-9). அனல் காற்று வீசுதலால் அரும்புகள் முதிர்ந்த முருக்கமரத்தின் கிளை பொருந்திய பெரிய கல்மீது முருக்க மலர் விழுந்து கிடக்கையில், அக்கருங்கல் தீப்பிழம்பால் மூடப் பெற்ற யானை போனறு ஐயெனத் தோன்றும் (அகம். 223:5-7). 'நின நுதல் ஐதேய்ந்தன்று (வியப்பினையுடையதாயத் தேய்ந்தது) ஆயி னும் அது பிறையன்று' எனத் தலைவியைத் தலை வன் பாராட்டினான் (கலி. 55:9). 'எம் கணவர் ஐ அமர் வெல்க' என மகளிர் முருகனை அருச் சித்து வேண்டினர் (பரி. 8:108). மாலிருஞ்சோலை மலை யென்னும் ஐயிருங்குன்றத்தின்கண் திருமால் தன் முன்னோனான பலதேவனோடு கூடி நிற்கிறார் (பரி.15:26-28). வையை நீர் விளையாட்டிற்குச் செல் லும் தளிரியல் மகளிர் ஐயென்று (வியந்து) பாராட்டு தற் குரிய புகையினராய, ஆடையினராயச் சென் றனர் (பரி. தி. 2:12,15).

6. அழகு. தினைப்புனங்காவல் முற்றிய நிலையில நம் ஊரைக் குறிததுத் தலைவனுக்கு அறிவித்தலை மறந்தேன. அதனால யான் ஐ-அழகு-தேயவேனாக' எனத் தோழி வருந்தினாள (அகம. 38:15-18). பிரிநத பின் தலைவி கணணீரோடு ஐ மென் தூவியாலான அணையில் தஙகி மையல கொண்ட இருக்கையளாய் மாலைப் பொழுதில் மனம் நடுஙகுவாள் எனத் தலைவன பிரிந்து போகும் போது நினைந்து வருந்தினான (அகம். 289:13-17). தலைவி ஐயென (அழகிதாக) மெலிநத இடையினையுடையவள் (அகம். 319.6,7). 'ஐயென அசைகின்ற வெயிலின் வெம் மையை உட்பொதிந்து பின்னர் ஞாயிறு மறையக கூம்பிய தாமரையின் உள்ளிடததைப் போன்று தலைவி சிறுவெம்மையள்' எனத் தலைவன் தன னெஞ்சிற்குக் கூறினான் (குறு. 376:4-6). போர் வினை முடியாமையினால் கார்காலம் வந்தபோதும் தலைவியிடம் மீளப்பெறாத தலைவன் அந்நிலை யில் அவள் விடுத்த தூதுமொழிகளைக் கேட்டு ஐயவாயின (அழகியவாயின) செய்யோள் கிளவி என இரங்கினான் (ஐங். 441).

7. மென்மை. மாலையில் மேறகு மலையைச் சேரும ஞாயிறு பாம்பினால் விழுங்கப்படும திங்களைப போல் ஐயென - மெல்ல - மறையும் (அகம. 114:4-6).

8. விரைவு. தலைவர் எனனைப் பிரிந்திருக்கும் இக் காலத்திலும் வானில் பிறை ஐயென-விரைவாக - தோனறியதே என்று தலைவி வருநதிக கூறினாள் (குறு. 307:2,3).

9. ஒலிக்குறிப்பு. சேற்றின்கண நிற்றலை வெறுத்த சிவந்த கண்ணை யுடைய எருமை நளளிரவில ஐயெனறு ஒலித்தல் (குறு. 261:3,4).

ஐஇய - ஐயன என்னும் சொல் விகியேற்று அளபெ டுத்து வருதல் (குறு. 179:3; கலி. 6:6).

ஐங்கூந்தல் - குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்ற ஐந்து வகையான கூந்தல். மணம நாறும் ஐங்கூநதலையுடைய மகளிாககு அருஞ்சுரம போதலரிதென்று தலைவன் தலைவியொடு உடன போதலை மறுததான் (அகம. 65:17-20). 'சிலவாகிய ஐங்கூந்தலை யுடைய தலைவியினது ஆகத்திற் பொருநதி மனையிலேயே தங்கி விடின வறுமைக்கு அஞ்சுகின்றாய்; களிறு பொருநதிய குனறு கடநது ஈட்டி வருதலும செயதிலை' எனறு தலைவன பொருள்வயிற் பிரிந்து சென்ற இடைசசுரததுத் தன்னெஞ்சொடு வருந்திக கூறினான (அகம.123:6,7). 'பொருள் வயிற் பிரிநத தலைவர் நின கரிய ஐஙகூந தலிற் பெறும இனிய துயிலை மறந்து பிரிவை நீட்டித்திரார்' என்று தோழி தலைமகளை ஆறறு விததாள (அகம. 233:14,15). பாதிரி மலர்களை அதிரல மலரொடு கலநது நின் ஐஙகூநதலில செருகிக் கொணடு முனனே நடப்பாயாக என்று உடன போககின்கண தலைவன தலைவியிடம கூறினான் (அகம. 261.1-3,8). பகுபபு நீஙகாத ஐங கூந்தலாகிய கொயசுவலை யுடைய குதிரை எனறு தலைவி தலைவனின பரததையைக கூறுதல (கலி. 96:8,18). தலைவி தன ஐங் கூநதலை உலாததி நிறகையில அது வெணணெய மணம நீங்கி முலலை மணம் வீசக கணட சுற்றத்தினர் சினங் கொணடனர் (கலி. 105:53-56).

ஐந்து - எண்ணுப்பெயர். விசும்பின்கண் நிலவும் வெண் திங்கள் மூவைந்து நாட்களில் முறையே முதிர்ந்து கடல் நடுவே காணப்படுவது போன்ற வட்டமான தடாரிப் பறையை இசைத்துப் பொருநன் நலங் கிள்ளியின் புகழ் பாடினான் (புறம். 400:1-4). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் நாண்மீன் களும் கோண்மீன்களும் திங்களும் ஞாயிறும் நெருப்புமென்ற ஐந்தும் ஒருங்கு கூடியது போன்ற விளக்க முடையவன் (பதி. 14:3.4). சொல்லிலக் கணம், பொருளிலக்கணம், சோதிடம், வேதம், நெஞ்சம் என்ற ஐந்தையும் ஒருங்கு போற்றி அவையே துணையாக உயிர்கட்கு வருத்தம் சூழா மல் விளங்கிய கொள்கை யுடையவன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் (பதி. 21:1-3). நீர், நிலம், தீ, வளி, விசும்பு என்னும் ஐந்தும் அளந்து முடிவு காணப்படினும் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் யாராலும் அளந்தறிதற்கரிய பெருமையினையுடை யவன் (பதி. 24:15,16). இளஞ்சேரலிரும்பொறை சோழ பாண்டியராகிய இருபெருவேந்தரும் விச்சி யெனனும் குறுநில மன்னனும் வீழுமாறு அவர்தம் மலையிடத் தமைந்த ஐந்தெயில்களை எறிந்தான் (பதி. ப.9:4,5). மழுவாள் நெடியோரான சிவபெரு மான திக்குக்களையுடைய விசும்போடு நீரும் நில னும் தீயும் வளியுமாகிய ஐந்தையும் சேரப் படைத் தவர் (மது. 453-455). குறிஞ்சிப்பாட்டு மறையோர் மணமெட்டினுள் ஐந்தாம் மணமான கந்தருவ மணத்தின் பண்புகளிற் குறையாதது (குறி. வெ.2). 'மாயோய், தீ, வளி, விசும்பு, நிலம், நீர் ஆகிய ஐந் தும் நின்னிடத்தினின்றும் தோன்றிப் பரந்தவை யென்று வேதங்கள் கூறுதலால் அதையே யாமும் கூறிப் பரவினோம்' என்று கடுவனிள வெயினனார் திருமாலை வாழ்த்துவார் (பரி. 3:4,10,11). ஐம் பெரும் பூதங்களில் ஐந்தாவதான நிலத்தின் சிறப் புப் பண்பாம் நாற்றம் ஐந்தென்ற எண்ணுப் பெயரால் குறிக்கப் பெறுதல் (பரி. 3:78). திருமா லின் அன்பர் செவி முதலாய இநதிரியம ஐந்தை யும் மயக்கமற நீங்கியவர் (பரி. 4:1,2). 'புலன்கள் ஐந்தனுள் ஒன்றாகிய ஓசையால அறியப்படும் ஆகாயமும் நீயே; ஓசையும் ஊறும் ஒளியும் சுவை யும் நாற்றமும் என்ற ஐந்துடன முற்றிய நில னும் நீயே' என்று நல்லெழுநியார் திருமாலைப் பாடுவார் (பரி.13:17,18,22). கார்மேகம், காயாமபூ, கடல், இருள், நீலமணி என்னும் அவை ஐநதையும் ஒக்கும் திருமேனியை உடையவர் திருமால் (பரி. 13:42,43).

ஐம்பால - 1. ஐந்து பகுபபுடைய கூந்தல் (குழல, அளகம, கொண்டை, பனிச்சை, துஞசை). விறலியர் புரியவிழும ஐமபாலகளை யுடைய கூநதல விறலியா எனப் படுதல் (பதி. 18:4,6). உமட்டியர் உளரியல் ஐம் பாலுடையவர் (சிறு. 60). தலைவன் இயற்கைப் புணர்ச்சியில் தலைவியின் ஐம்பால் அழகைப் புகழ்ந்து பேசுதல் (குறி. 139). வதுவை புரிந்த மகளின் மணத்தை வண்டுகள் கொண்டதற்குக் காரணமான ஐம்பாலினையுடைய மடந்தை (மலை. 30,31). மழைத்துளி வீழ்தலால் நனைந்த ஐம்பால் மகளிர் முதுகில் படிந்து மறைத்தல் (அகம். 8:15,16). மேகம் என்னுமாறு முதுகிலே தாழ்ந்திருண்ட. கொத்தான ஐம்பாலையுடைய குறுமகள் என்று தலைவன் தலைவியைக் குறித்துத் தன்னெஞ்சொடு கூறினான் (அகம். 126:19-21). செவிலி தலைவியது ஐம்பாலாகப் பகுக்கப்பட்ட கூந்தலை அதனிடத்து அணியப் பெற்ற மாலையுடன் கையாற் பற்றி இரக்கமின்றி அவள் முதுகில் எறிகோலால் அடித்தனள் (அகம். 145:18-20). தலைவியது ஐம் பால் நன்னனுடைய பாழிச்சிலம்பின் களிமயில் கலாவம் போன்றது என்று தலைவன் தன்னெஞ் சொடு பாராட்டினான் (அகம். 152:3,12-14). பொருள்வயிற் பிரியக் கருதிய தலைவன் தலைவி யிடம் அப்பொருளின் சிறப்பைக் கூறி அவளது ஐம்பாலை நீவிப் பிரிதல் (அகம். 155:1-4). 'காடு கடந்து பிரிந்த தலைவர் பிரிவை நீட்டிப்பினும் பெண்யானையின் பெரிய கையினை யொப்பச் சேரக்கட்டி நெய்யணிந்து நறுமணமுடைய நின் ஐம்பாலின்கண் மலர் சூட்டுதலை நினைந்து விரைவில் வருவர்' என்று தலைவியைத் தோழி ஆற்றுவித்தாள் (அகம். 177:4-6,12,13). நறுமணப் பண்டங்கள் கமழ்கின்ற வண்டுகள் மொய்க்கும் ஐம்பாலையுடைய அணங்குசால் அரிவை என்று தலைவியைத் தலைவன் தன்னெஞ்சொடு பாராட்டி னான் (அகம். 181:23,25). தலைவனின் நெஞ்சம் ஐம்பாலை யுடைய அணங்குசால் அரிவையாகிய தலைவியை விரும்பி இரவுக் குறிக்கண் அருஞ் சுரங்கடந்து வருமாறு அவனைத் தொல்லைப் படுத்தியது (அகம். 212:3,8,11,12). புறத்தில் தாழ்ந்து தோளில் படிந்து தும்பியாகிய வண்டின் கூட்டத் தைப் போலும் கருநிறம் வாய்ந்த ஐம்பாலை முழுவதும் வாரிக் காட்டு மல்லிகை மலரோடு குவளைமலரை வைத்துத் தொடுத்த மணமிக்க மாலையைச் சூட்டிய நின் மண்ணார் கூந்தலில் மருவிய துயிலை மறந்து தலைவர் தாம் பிரிந்து சென்றவிடத்தில் துயிலுதல் இயலாது; அதனால் விரைந்து மீளுவர் எனத் தோழி தலைவியை ஆற்றுவிததாள் (அகம். 223:9-16). மணங்கமழ் ஐம்பால மடந்தையே எனத் தோழி தலைவியை விளித்தல் (அகம். 295:21). சிறுவயதில் தலைவி யின ஐம்பாலைத் தலைவனும் தலைவனின

ஓரியைத் தலைவியும் பற்றி யிழுத்துச் செவிலியர் தடுக்கவும் தவிராது சிறுபோர் செய்தனர் (குறு. 229:1-4). தலைவியோடு கடலில் நீராடி எழுந்தபின் தலைவன் அவளது முதுகிலே தாழ்ந்திருண்ட ஐம்பாலைப் பிழிந்து துவட்டினான (நற். 96:4-6). தலைவன் நெய்ம்மணம் வீசும் பரத்தையின் ஐம் பாலைப் பற்றியிழுத்து அவள் கைகளிலணிந்திருநத வளைகளைக் கவர்ந்து விளையாடினான் (நற். 100: 8-5). நீலமணி போலும் ஐம்பாலை யுடைய மாயோள் என்று தலைவி குறிக்கப் பெறுதல் (நற். 133:5). சந்தனத்தோடு பலவாகிய பொருள்களையும் சேர்த்தமைக்கப் பெற்ற சாநது பூசிய ஐம்பாலை அழகு பெறத் தலைவி வாரி முடித்தாள் (நற். 140:2, 3). 'ஐம்பாலாகப் பகுக்கப்பட்ட தேம்பாய் கூந்தலா கிய ஓதியையுடைய தலைவியின் கண்களைக் காணு முன், யான் நயன் முதலிய பண்புகள உடையவனா யிருந்தேன்' என்று தலைவன் தன தோழனிடம் கூறினான் (நற். 160). அழகிய மலர்களாகிய கழி முள்ளியின நுண்ணிய பூமாலையைத் தலைவி நீலமணி போனற தன ஐம்பாலில் வண்டுகள் மொய்க்கும்படி சூடி யிருந்தாள் (நற். 245.2,3). காட்டுமலலிகை, பாதிரி, செங்கருங்காலி மலர் களைக் கொய்து ஒருசேர உள்ளே செறித்திருந்த பூஞ்செப்பினைத திறநது வைத்தாற் போன்ற நறுமணம் ஒருங்கமையப் பெற்று, அழகிய நல்ல நிறம்பொருந்திய நீலமணி போலும் ஐமபாலாக முடித்தற்குரிய மகளிர் தம் நறுங்கூநதலில் அருமை யாகப் பெறும் பெரிய பயனைப் பிரிந்துறை மரபின் பொருள் படைத்தோர் மறந்தனரோ எனக்கூறித் தலைவனைத் தோழி பிரிவினின்றும் விலக்கினாள் (நற். 337). நீலமணி போலும் ஐம்பாலை மாசு நீங்கத் தூய்மை செய்து விளக்கி முல்லை மலர் களை வண்டுகள் சூழும்படி முடித்திருககும் மெல் லிய கூந்த லணியிலே கிடந்து துயில்வதனை யொழிந்து, வாடைக்காற்று வீசும் கூதிர்க்காலத்தில் தலைவியைப் பிரிவோர் மடவோர் எனறு தலை வன் பொருள்வயிற பிரியக் கருதிய தன்னெஞ சிற்கு உலகியல் உணர்த்தினான (நற. 366.4-7,11, 12). மணம்பொருநதிய மலர்களையணிந்த ஐம்பால் மகளிர் பலரும் தைந்நீராடும் தண் கயம்போலத் தலைவனின் மார்பு பரத்தையர் பலராலும் தோயப் பெறுவது (ஐங். 84'3-5). இளமகளிரது ஐம்பால் போல இளவேனிற் காலத்தில் எக்கரை உடறுத்து நீர் ஒழுகும் (கலி. 29:6,9). கத்திரிகை யினால் மட்டஞ்செயத, கார்மேகத்தின் அழகைப் பெற்ற ஐமபால் போல் மணல் விளங்கியது; அவ் வைம்பாலிற் கிடந்த அணியும் பொன்மாலையும் போலே அம்மணலிற் கிடந்த பன்னிற மலர்களும் வேங்கைப் பூக்களும் தோன்றின (கலி. 32:1-5). கைக்கிளைத் தலைவர் இருவரின் காதலுக்குட் பட்ட காமஞ்சாலா இளமகளிருள் ஒருததி மணங் கமழும் கடைகுழன்ற ஐம்பாலினை யுடையவள்; மற்றொருத்தி கோதுதலுற்ற கடை குழன்ற ஐம பாலினை யுடையவள் (கலி. 57:1;58:1). தலைவியின இளமைப்பருவம் நீங்குதலால் பின்னப் பெறறு இருண்ட அவளது ஐம்பாலைக்கணடு தலைவனின அறிவு முதலியன அவனை விட்டு நீங்கும்படி அவள நடந்து போனாள் (கலி. 59:7-9). சினமொழியினை யுடையாளாகிய தலைவியின ஐம்பாலைப பின்னி முடிக்கின்ற இளம் பருவத்தே அவளுககுத தலை வனின் உறவு பொருந்தியது (கலி. 125:16,17).

**2. ஐந்நிலப் பகுதிகள்** (குறிஞ்சி, முலலை, பாலை, மருதம, நெய்தல்), பாண்டியன் தலையாலங்கானததுச் செரு வென்ற நெடுஞ்செழியனின் நாடு ஐம்பால திணை யும்-ஐந்நிலப்பகுதிகளும்-அழகுற அமைந்த சிறப்பு மிககது (மது. 326).

**ஐம்பாலார்** - ஐந்து பகுதியாகிய கூந்தலை யுடைய மகளிர். மணங் கமழும் ஐமபாலாரிடத்து - ஐந்து பகுதியாகிய கூநதலை உடைய மகளிர் (பரத்தை யர்) இடதது - உண்டாகும ஊடலை அது கண்ட பொழுதே வணங்கித் தீர்ப்பவன் எனத் தலை வனின பரத்தைமையைத் தலைவி கூறினாள (கலி. 131;39,40).

**ஐம்பாலாள்** - ஐந்து பகுதியாகிய கூந்தலையுடையவள். கடைகுழன்று தழைககின்ற ஐம்பாலாள் - கூநதலை உடையவள்-செயத இக்காமநோயின் வருத்ததை யறிந்தும் இவ்வூரினர் அதனைத தீரபபதோர் வகையறிந்திலர் என்று மடலேற்றம் கருதிய தலை வன் கண்டோர்க்குக் கூறினான் (கலி. 140'23,24).

**ஐம்புலம்** – ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனனும் ஐந்து புலன்கள். 'ஐம்புலததை நுகர்வனவாகிய காமுகப்பன்றிகள் நுகர்கின்ற தொட்டியே' என்று தலைவியின் ஆயத்தார் பரததையைப் பழிததனர் (பரி. 20:50,51).

**ஐம்புழை** – ஐந்து துளைகளையுடைய புல்லாங்குழல. திருப்பரங்குனறத்திற்கும் மதுரைக்கும் இடையி லுள்ள வழியில ஐம்புழையில – புல்லாங்குழலில - பிறநத இசைச் சுருதியினை யொதது வணடுகள் ஒலிததன (பரி. 8.22,23).

**ஐம்பெரும்பூதம்** - நிலம், நீர், தீ, வளி, வெளி என்ற ஐந்து பெரிய தோற்றங்கள். நிலனும் விசும்பும வளி யும் தீயும நீருமென்ற ஐம்பெரும பூதத்து இயறகை போலச் சேரமான பெருஞ்சோறறு உதியஞ சேர லாதன் பகைவரைப் பொறுத்தலும் பொறுக்கும் அளவு கடந்த பகைவரை அழித்தற் கியறறும்

சூழ்ச்சியது அகலமும் அவரை அழித்தற் கேற்ற வலியும அவரை அழித்தலும் வழிபடும் பகைவர்க் குச் செயயும அருளும் உடையவன் (புறம். 2:1-8).

**ஐமார் - உடன்பிறந்தார்.** மகள்மறுத்த ஏதுவினால் போருக் கெழுநத வேந்தருடன் மகட் கொடை நேராத தந்தையும் அவள் தன் ஐமாரும் - உடன் பிறந்தாரும் - பொருது வாளுழவு செயதனர் (புறம். 342:11-15). மகட்கொடை வேணடிவநத மன்னரின் செல்வததினைப பொருட்படுத்தாமல, குடிமை, ஆணமை முதலிய பண்புகளைக் கருதி அவளதன் ஐமார் மகட்கொடை மறுததனர் (புறம். 345:12-14). மன்னனின் மகளைக் கோடறகு மகட் கொடை வேண்டி வந்த மன்னரொடு பொருதமையால் உண்டான புண்ணில இடப்பட்ட சீலையும் நீககப் படாதவராய், அஞ்சத்தக்க தகுதிப்பாட்டினை உடையராய நினறார் இவள்தன் ஐமார் என் மகட் கொடைமறுத்த தமையனமார் பெருமை கூறபபடு கிறது (புறம்.353:11-17).

**ஐய** – ஐயன் என்றும் சொல் விளியேற்று ஐய என வரு தல். அகம், *81:15,92 5, 143:8, 307.6*; குறு. *139:6, 169:2, 196 6*; நற். *20:1, 46 4, 71:6, 124.4, 227:9, 266.7, 292.9, 318:1, 354.11, 368:10*; ஐங். *44:3, 332 5, 389:4*; கலி. *7.4, 18:2, 19:3, 22:11, 14, 17, 25.12, 37.15, 49:23, 80:14, 18,22, 125:7*; பரி. *8.70, 9:34*.

**ஐயம் - ஒருபொருள குறித்த பலதலை உணர்வு.** சோழன் மாவளத்தானும், தாமப்பல் கணணனாரும வட் டாடியவழிக் கைகரபபச சோழன வெகுணடு வட்டால் எறிய, சோழனை நோக்கி 'நின் பிறப் பின்கண் ஐயம் உடையேன்' எனத் தாமப்பல் கணணனார் கூறினார் (புறம். 43: 12). கசடு நிறைநத காட்சி நீங்காத நெஞ்சத்துத் தெளிவிலலா தோர் அறவினையைச் செய்வதற் குரிய வாய்ப்பு உணடானபோது அதனைச் செய்யலாமோ, செய யாது ஒழியலாமோ என்று ஐயம் நீங்கார் (புறம். 214: 1-3). தனனைப் பறறிக் கேட்டல் அல்லது காணாது பல யாண்டுகள் கழிய வழுவின்றிப் பழகிய உரிமையுடையா னாயினும் நேரில வருதல் அரிது எனப் பிசிராந்தையார் வருகையில் ஐயம் கொள்ளனமின் என்று அறிவுடையாளரை நோக் கிக் கோப்பெருஞ் சோழன் கூறுதல் (புறம். 216:1-5). கொடுக்கக் கொடுக்கக் குறையாத வளம் நிறைந்த ஐயம் நீஙகிய சிறப்பினை உடையவன் பல்யானைச் செல்கெழுகுட்டுவன் (பதி. 21: 16). பிரிந்து சென்ற காதலர் வருவரோ, வாராரோ என ஐயுறும் நெஞசினை நோக்கித் தலைவி, அவர் வாரார்; நீ ஐயம் நீங்கித் தெளிவாயாக எனறு கூறினாள் (அகம். 303: 15, 16). மலைநாடன் தலைவியின் மெல்லகம் பெற்றமையைக் குறிகளால் அறிந்த அன்னை, மையலுற்று ஐயம் இனறிக் கடுமையான குரலெடுத்துத் தலைவியைக் கூவினாள் (நற். 297: 8-11). தலைவனுடைய பரத்தையர் தமமைவிட்டு அவன் நீங்குவானோ என்ற ஐயமில்லாதவர்; ஒரு தலையாக நீஙகான் என்ற துணிவுடையவர் (கலி. 82: 33). 'அணைமெனதோளாய், நின்னை விட்டு யான் நீங்கினால பரததையரிடத தல்லது நீங்க மாட்டேன என்னும ஐயத்தால என்னை முனியாதே' எனத் தலைவன் தலைவியைப் பணிந்தான் (கலி. 91: 6,7). 'தலைவியின மலா உண கண்ணில் நீரைக் காணுங்கால் நீ அருநதவ முதல்வன போல் யாரிடத் தும் பொய் கூறாய் என ஐயமற்று உலகம் நின்னைப் புகழ்கினற தனமை கெடாதோ' எனத் தோழி தலைவனை வினவினாள (கலி. 100: 7-10). 'கனவில் வருந தலைவன எனமேனி வேறுபாட்டினைக் கணடு நநதலைவியோ அல்லளோ என ஐயங கொணடு பிரிந்து செல்வானேல் கள்வன என்று எல்லோருங் கேட்ப விரையக் கூவுவேன் எனத் தலைவி கூறினாள் (கலி. 147:50-52).

**ஐயர் – 1. தமையனமார்.** முன்னிரவில தலைவியின் தந்தை கடல அலைகளில் உழந்த படகின்கண் இருந்து விளக்கொளியால மீன் கூட்டங்கள் வாழும் இடங்களை அவளுடைய ஐயர்க்கு – தமையன் மாருக்கு - காட்டுதல் (அகம். 240:4–7). 'நின் ஐயரது புலிபோன்ற தலைமைத் தன்மையை நினைத்துக் கலங்காமல் தலைவனோடு உடன் போக்கிற்குத் துணிவாயாக' எனத் தோழி தலைவியிடம் கூறி னாள் (அகம். 259:16-18). பெரிய கற்களை யுடைய மலைபபக்கத்துத் தலைவியின் ஐயர் உழுதவிடத்துக் கரும்பென வளம்பெற்று அழகுறப் பெருங்கதிரை யுடைய தினை விளைந்தது (அகம். 302:9-11). 'பல் வகை மீனகளை வேட்டையாடும என் ஐயர் ஏறிச் சென்ற மீன்படகுகள் மீண்டுவரும் காலமாயிற்று; இதற்குள் வருபவராகிய தலைவர் இன்னும் வந்திலர்' என்று தோழி சிறைப்புறத் தலைவன் கேட்பக் கூறினாள் (குறு. 123:4,5). பெரிய மலையின் பக்கத்தில் தலைவியின் ஐயர் உழுது விதைத்த செந்தினைக் கதிர் கொய்யப் பெற்றன (நற். 122: 1,2). அறத்தொடு நின்ற தோழியின் கூற்றைச் செவிலி நெஞ்சினால் உணர்ந்து நற்றாய்க்கு அறத்தொடு நிற்கும் தன்மைபடக் கூற, நற்றாயும் (தலைவியின்) ஐயர்க்கு உய்த்துரைத்தாள் (கலி. 39: 20,21).

**2. முனிவர்.** உயர்நிலை உலகத்திலுள்ள ஐயரை - முனிவரை-இன்புறச் செய்தவன் செல்வக்கடுங்கோ

வாழியாதன் (பதி. 70:19). முருகனின் பன்னிரு கைகளில் ஒன்று விண்ணுலகிற்குச் செல்லும் முறைமையினை யுடைய ஐயர்க்குக் காவலாக உள்ளது (முரு. 107,108). சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின் அவற்றின் மாசினைக் கழுவி விளங்கும் புகழினை முன்போல் நிறுத்துதல், ஆசறு காட்சி ஐயர்க்கும் எளியதன்று (குறி. 15-18). மாலைப் பொழுதில் ஐயர் செந்தீயை ஆவுதி செய்து எழுப்ப என் கையறு நெஞ்சம் கனன்று காமத் தீயைக் கொளுத்தும் எனத் தலைவி வருந்துதல் (கலி. 130:8-10).

3. அந்தணர். வையைநீர் தேன் கலக்கப் பெற்று வழுவழுப்புடைத்தாயிற்று என்று கருதி ஐயர் - அந்தணர் - அந்நீரினாலே வாய்கழுவ வில்லை (பரி. தி. 2:62,63).

4. கணவன்மார். குறமகளிர் தத்தங் கேள்வரைத் தெய்வமென்று தொழுது எழுதலாலே அவர்தம் ஐயரும் - கணவன்மாரும் - தாம் தொடுத்த அம்பு இலக்குத் தப்பாராயினர் (கலி. 39:16-18).

**ஐயவி** – 1. வெண்சிறுகடுகு. அதியமான் நெடுமானஞ்சி ஐயவியை-வெண்சிறுகடுகினை-காவலாகப் புகைத்தாலும் விரைய வந்து புறத்தே நின்று உயிரைக் கொண்டு போகும் கூற்றத்தை ஒத்தவன் (புறம். 98:15-17). 'வேந்தனுக்கு ஏற்பட்ட விழுமத்தைத் தானேற்றுப் புண்பட்ட நெடுந்தகையின் புண்களை ஐயவி தூவிக் காக்க வருக' எனத் தோழியரைத் தலைவி அழைத்தாள் (புறம். 281:4-9). போர்க்களத்திலிருந்து புண்ணுற்று வந்த வீரரின் புண்களைக் காக்க வேம்பின் தழையொடிப்பதும் காஞ்சி பாடுவதும் நெய்யுடைக் கையால் ஐயவி புகைப்பதுமாகிய செயல்களை மேற்கொள்ளுதல் மரபு (புறம். 296:1,2). கொக்கின் குஞ்சு, அடைகரையில் மீனை மேய்ந்தபின் ஆரல்மீன் ஈன்ற ஐயவி போன்ற முட்டைகளையும் இறால் மீன் குஞ்சுகளையும் தாய்தரப் பெற்றுண்ணும் (புறம். 342:7-10). வையத்தையும் தவத்தையும் சீர்தூக்கினால் தவத்துக்கு வையம் ஐயவி அளவும் நேர் படாது (புறம். 358:3,4). குறமகள், கோழிக்கொடியோடே உருகெழு வியன்நகரை அமைத்து நெய்யொடு ஐயவியை அப்பி, மந்திரங்களை ஓதி, முருகனை வழிபட்டனள் (முரு. 287,228). அகிலையும் சந்தனத்தையும் அழித்துத் திருத்திய மேட்டு நிலத்தே விதைத்த தோரை நெல்லும் நெடிய தாளினையுடைய ஐயவியும் ஐவன நெல்லொடு பிணக்கங் கொண்டு செழித்து வளர்ந்தன (மது. 286-288). அரண்மனை முற்றம் ஐயவி அப்பி வைத்த நெய்யணிந்த நெடிய நிலையினையும் வென்றெழு கொடியோடு யானைகள் சென்று புகும்படி உயர்ந்த கோபுர வாயில்களையும் உடையது (நெடு. 86-88). உழாது களைக் கொட்டால் அடி வரைந்து கொத்தும் தோட்டங்களில் ஐயவி செறிந்து விளைந்தன (மலை. 122,123). ஐயவி போன்ற ஞாழலின் சிறிய பூக்கள், மருதமரத்தின் பழம் பூவோடு பரந்து தலைவன் ஊரிடத்துள்ள நீர்த்துறையை அணிசெய்தன (குறு. 50:1-3). ஈன்றணிமை பொருந்திய தலைவி ஐயவி அப்பி எண்ணெய் தேய்த்து நீராடுதல் (நற். 40:7-9). கடுஞ்சூலுற்று மகவு ஈன்ற தலைவி, நெய்யுடனே ஐயவியைக் கலந்து பூசிய மாளிகையில் படுத்துக் கிடந்தாள் (நற். 370:2-4).

2. துலாமரம். மலைகளொடு மாறுபடக் கட்டிய புறமதிலையும் நாடு கண்டாற் போன்ற கணை துஞ்சும் இடைமதிலையும் கணைய மரங்கள் பல செறிந்த, புனிற்று மகள் பூசிக்கொள்ளாத ஐயவி-துலாமரம் - தூக்கிய மதிலின் கதவுகளையும் தாக்கிச் சிதைத்து நுனி முரிந்த மருப்பொடு பாசறையில் களிறு முழங்கும் (பதி.16:1-8). கணைய மரம் செறிக்கப்பட்ட மதிலின் வாயிலிடத்தே தொங்குமாறு கட்டப்பட்ட விசையையுடைய வில்லாலும் ஊடுருவுமாறு எய்ய முடியாத வன்மையுடைய ஐயவி அமைக்கப்பட்டிருத்தல் (பதி. 22:21-23).

**ஐயள்** - 1. மெல்லியள். உடன்போக்கிற் செல்வாரை இடைச்சுரத்திற் கண்டார், 'கூரிய பற்களை யுடைய ஐயள் - மெல்லியள் - ஆகிய மடந்தை முன்னே செல்ல இராப்பொழுதில் பின்னே செல்லும் இவ் விளையோனது உள்ளம் மலையை எறியும் இடியினும் கொடிது' என்றனர் (நற். 2:6-10). மடவேற விழையும் தலைவனின் நெஞ்சினை வருத்தமுறச் செய்தவள், ஓவியன் எழுதியதைப் போன்ற அழகினை யுடைய ஐயள் ஆகிய மாயோள் ஆவள் (நற். 146:8-11).

2. அழகுடையவள். குன்றக் குறவனின் காதன்மடமகள் வரையர மகளிரை யொத்த மென்மைத் தன்மையள்; ஐயள் - அழகுடையவள் - அரும்பிய முலையள் (ஐங். 255:1-3).

**ஐயன்** - முருகன். 'தையலாய்' யானை மருப்பினாலும் சந்தன மரத்தினாலும் செய்த உலக்கையாலே, ஐவன நெல்லை உரலிலே பெய்து குற்றி, ஐயனை - முருகனை - புகழ்வது போல மலைநாடனை நாம் புகழ்ந்து பாடுவோம் எனத் தோழி தலைவியிடம் கூறினாள் (கலி. 43:1-7).

**ஐயன்மார்**–தமையன்மார். தலைவனின் கண்ணி தலைவி

யின் கூந்தலில் ஏறுமாறு அதனை அவன் தழுவிய ஏறு அவளுக்குத் தந்ததென்று பிறர் சொல்லக் கேட்டுத் தந்தையுடன் ஐயன்மார் - தமையன்மார் - எல்லாம் கூடியிருந்து தெய்வமாகிய மால் இவளுக்கு இவனென வந்து காட்டிற்று என மகிழ்ந்து தலைவனுக்கு மகட்கொடை நேர்ந்தனர் (கலி. 107:30-34).

**ஐயாதிச் சிறுவெண் தேரையார் - புலவர்.** இவருக்கு ஐயாதிச் சிறுவெண்டரையார் என வேறு பெயரும் உண்டு. ஐயாதி என்னும் ஊரைச் சேர்ந்தவர். ஐயாதி என்பதுவே இடைககாலத்தே ஐயாறு ஆயிற்றோ எனச் சிலர் ஐயுறுவர். தேரையார் என்னும் பெயர் பிற்கால வழக்கிலும் உண்டு. புறநானூற்றின 362 – ஆம் பாடலைப் பாடிய சிறுவெண்டேரையாரும் இவரும் ஒருவரே என்பது சிலரது துணிபு. இவர்தம் புறநானூற்று 363 – ஆம் பாடல், இருங்கடலுடுத்த இப்பெருங்கண் மாநிலத்தைத் தாமே யாண்ட ஏமங் காவலர் பலர் தம் நாட்டைப் பிறர் கொளச் சென்று மாய்ந்தனர் என்று நிலையாமை உணர்த்தி இன்னா வைகல் வாராமுன் தவ வினையைச செயக என்று அறன் வலியுறுத்துகிறது.

**ஐயிருதலையின் அரக்கர் கோமான் – இராவணன்.** இமய மலையை வில்லாக வளைதத ஈர்ஞ்சடை இறைவன், இறைவியுடன் கயிலை மலையில அமர்நதிருந்த போது ஐயிருதலையின் அரககர் கோமான-பத்துத் தலையையுடைய அரக்கர் அரசனான இராவணன- கயிலை மலையை எடுத்தற்குக் கையைக் கீழே செருகித் தடக்கையினாலே எடுக்கலாற்றாது வருந்தினான் (கலி. 38:1-5).

**ஐயிருநூற்று மெய் நயனத்தவன் - இந்திரன்.** செவ்வேள், மையணிந்த கண்ணையுடைய மான் மகளாகிய வள்ளியைக் களவின்கண் மணந்த ஞான்று ஐயிருநூற்று மெய்நயனத்தவன்-மெய்யினிடத்தே ஆயிரம் கண்களை உடையவனான இந்திரன் - மகளாகிய தேவசேனையின் கண மழை பெய்தது போலப் பரங்குன்றின்கண் மழை பொழிந்தது (பரி. 9:8-11).

**ஐயூர் - ஓரூர்.** ஐயூர் பாண்டிய நாட்டிலுள்ள சிற்றையூர், பேரையூர் என்ற இரணடிலே ஒன்றினைச சார்நது இருத்தல் வேணடும் என்றும் சோழ நாட்டில் திருச்சிராப் பள்ளிக்குத தெற்கே இருக்கும் குளத்தூரைச் சார்ந்தது எனறும் தமிழப் புலவா வரலாற்றுக் களஞ்சியம் கூறும் (த. வ. க. பக். 351). ஐயூர் முடவனார், ஐயூர் மூலங்கிழாா ஆகிய இருவரும் இவ்வூரைச் சேர்ந்தவராவா.

**ஐயூர் முடவனார் - புலவர்.** ஐயூர் கிழாா, உறையூர் முடவனார், ஐயூர் மூவனார் என்னும் வேறுபெயர்களும் இவருக்கு உண்டு (த. வ. க. பக். 351). ஐயூர் மூவனார் என்பது புறப்பாட்டு ஏடுகளிற் காணப் படுகிறது (நற். 206:ஔவை. து. உரை). புறத்தில் 51, 228, 314, 399; அகத்தில் 216; குறுந்தொகையில் 123, 206, 322; நற்றிணையில் 206, 334 ஆக 10 பாடல்களை இவர் பாடியுள்ளார். இவர் முடவராதலின் தாமானதோன்றிக்கோனைப் பாடி ஊர்தியும் பகடுகளும் பரிசாகப் பெற்றார். ஆதனெழினி, பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி, சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளி வளவன் ஆகியோரையும் பாடியுள்ளார். நுண்ணிய தூண்டிற் கோலால் பாண்மகள் மீன் பிடித்து வஞ்சி விறகிற் சுட்டுத் தந்தைக்கு அளிப்பதையும் (அகம். 216) இறந்தோர் உடலைத் தாழியிற் புதைக்கும் வழக்கத்தையும் (புறம். 228) செல்லிக் கோமான் ஆதன் எழினியைப் பற்றியும் (அகம். 216) மருவின் இனியவும் உளவோ என்னும் நீதியையும் (குறு. 322) செம்முகமந்தி அருவியில் திளைத்து ஊசலாடி வாகைப்பூ சுனையில் உதிருமாறு சுடுவனொடு திளைக்கும் செய்தியையும் (நற். 334) இவர்தம் பாடல்கள் அறிவிக்கின்றன.

**ஐயூர் மூலங்கிழார் - புலவர்.** மூலம் என்னும் நாண்மீனால் மூலங்கிழார் என்னும் பெயர்பெற்றார் என்பர் டாக்டர் உ.வே.சா. மூலம் என்ற ஊருக்கு உரிமையாளர் என்று தமிழ்ப்புலவர் வரலாற்றுக் களஞ்சியம் கூறும் (பக். 352). இவர் புறநானூற்றில் 21 – ஆம் பாடலைப் பாடியவர். இப்பாடலில் 'வேங்கைமார்பன்' என்னும் தலைவனாற் பாதுகாக்கப் பெற்ற கானப்பேரென்னும் ஊரில் அமைந்திருந்த அரணின் அமைதி கூறப் பெற்றுள்ளது. இவரால் பாடப்பட்டோன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப் பெருவழுதி ஆவான். இப்பாடலில் உள்ள 'செந்தீமாட்டிய இரும்புண் நீரினும் மீட்டற் கரிது' என்ற உவமை சிறப்பினது.

**ஐயை - தித்தன் மகள்.** இவள் தந்தை உறையூர்க் குரியவன். ஐயை பரல்கள் இடப்பெற்ற சிலம்பினையும் ஆம்பல் மாலையினையும் வளைபொலிந்த முன் கையினையும் மூங்கிலை யொத்த தோளினையும் உடையவள் எனச் சிறப்பிக்கப் பெற்றுள்ளாள் (அகம். 6:1-4).

**ஐவகை - 1.** ஐந்து கூறுபாடு. தலைவியும் தோழியும் ஐவகை வகுத்த கூந்தலினையும் அழகிய நுதலினையும் மையீர் ஓதியினையும் உடையவா (அகம். 48:17,18).

2. ஐந்து கூறுபாட்டினையுடைய கூந்தல் (ஆகுபெயர்). தலைவியின் நீலமணி ஒளிவிட்டாற் போனற கூநதலிற் புழுகு பூசி அன்னை ஐவகை - ஐந்து வகை

யாக முடித்த கூந்தலை - தலைவன் பாராட்டி னான் (கலி. 22:12,13).

**ஐவர்** - 1. பாண்டவர் ஐவர். சேரமான் பெருஞ்சோற்றுதியஞ்சேரலாதன், அலங்குளைப் புரவிகளையுடைய ஐவரோடு (பாண்டவரோடு) நிலத்தைத் தம தாக்கிக் கொண்ட (துரியோதனன் முதலாகிய) நூற்றுவர்கள் அனைவரும் பொருது போர்க்களத்தில் படுந்துணையும் பெருஞ்சோற்றினை இருபடைகளுக்கும் வரையாது வழங்கினான் (புறம். 2:13-16). யானைப் பிணத்தைக் குருதியாறு இழுத்துக் கொண்டு செல்லுமாறு போர்க்களத்தில் நூற்றுவரும் படும்படி கொன்று போரினை வென்ற ஐவர் போலத் தன்மேல் சினந்து வந்த ஒன்னார் ஒழிய வென்று தொண்டைமான் இளந்திரையன் ஆரவாரித்தான் (பெரு. 414-419). ஆதித்தன் போலும் முகத்தையுடையவன் (திருதராட்டிரன) மக்களுள் மூத்தவனாகிய துரியோதனன் சூழ்ச்சியால், அரக்குமாளிகைக் குளிருந்த ஐவரையும் எரி சூழ்தல் (கலி. 25:1-4). வரிபுனை வலவில்லை உடைய ஐவர் நூற்றுவர் மடங்க அட்ட போர்க்களம் போல ஏறுகொள்ள வல்லவருடன் எதிர்ந்த ஏற்றினது முழக்கத்தோடு இயங்கள் ஆரவாரிக்கும தொழு விளங்கியது (கலி. 104:53-59).

2. ஐம்பெருங்குழுவினர். (அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், சாரணர் என்னும் ஐம்பெரும் குழுவினர்). 'பொன்னால் செய்யப் பெற்ற பேரணிகலன்களையுடைய ஐவரும்-ஐம் பெருங்குழுவினரும் -மறமுடைய குறுநிலமன்னரும் பிறரும் நின வாய்மொழிகேட்ப, அறங்கூறு அவையத்தார் அறத்தின் தன்மையைப் புகழ்ந்து வாழ்த்த, இலங்கிழை மகளிர் தரும் காம பானத்தை உண்டு மகிழ்ந்து நினககென வரைந்த ஊழிமுழுதும்வாழ்வாயாக' என மாங்குடிமருதனார் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனை வாழ்த்துகிறார் (மது. 775-782).

3. ஐந்துகோள் (இராகு, கேது ஒழிந்த செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, என்னும் ஐந்து கோள்). கடுவனிள வெயினனார் திருமாலை, ஐம் பூதமும் ஞாயிறும் திங்களும் வேள்வி முதல்வனும் ஐவரும் - ஐந்து கோளும்-அசுரர்களும் ஆதித்தர் பன்னிருவரும் வசுக்கள் எண்மரும் பதினொரு கபிலரும் அச்சுவினி தேவரும் தருமனும் மடங்கலும் மூவேழுலகமும் அவ்வுலகுயிர்களும் ஆகி விரிந்தவனே எனப் போற்றுகிறார் (பரி. 3:4-10).

4. ஐம்பூதம். ஐவருள்-விசும்பும் வளியும் தீயும் நீரும் நிலனுமாகிய ஐம்பூதங்களுள் - ஒருவனாகிய தீக்கடவுள் சிவபெருமானின் கருவைத் தன் அங்கையில் ஏந்தினான் (முரு. 254).

**ஐவர்கள்** - நம்பி மூத்தபிரான், பருதியஞ்செல்வன், காமன், சாமன், ஆனேற்றுக் கொடியோன் என்னும் ஐவர்கள். நம்பி மூத்த பிரானின் நிறததினையொத்த வெண்கடம்பும் ஞாயிற்றின் நிறத்தினை யொத்த செருந்தியும் மீனேற்றுக் கொடியோனாகிய காமனின் நிறத்தினை யொத்த காஞ்சியும் அவன்தம்பி சாமனின் நிறத்தினை யொத்த ஞாழலும் சிவபெருமானின் நிறத்தை ஒத்த இலவமும் ஆகிய மலர்கள் பிறமரங்களுடன் அழகுபெற மலருமாறும் பிரிந்தார்க்குத் துன்பம் தருமாறும் இளவேனிற் பருவம் வந்தது (கலி. 26:1-8).

**ஐவளம்** - ஐந்து வகையான மலை வளம் (அரக்கு, இறலி, செறதேன, மயிற்பீலி, நாவி எனனும் ஐவளம்). திருப்பரங்குன்றம் மலைகளுக் குரிய ஐவளமும் பொலிந்த அழகுடையது (பரி. 18.15).

**ஐவனம்**-மலைநெல். வேடர் சுட்டெரித்து உண்டாக்கிய கொல்லையில் ஐவனத்தோடு - மலைநெலலோடு- விதைத்து இருட்சியுற அழகு பெற்றுக் கோடை மிகுதியால் ஈனறலைப் பொருந்தாத தினைக்கு வானம் மழைத்துளியைச சொரிநதது (புறம். 159: 15-19). ஐவனம் காப்பார் காவலுககாக இடப்பட்ட தீ அவிநத காலத்து ஒளி திகழ் மாணிகக மணி செறிநத இருளை அகற்றுதல (புறம். 172:6,7). அகிலையும் சந்தனத்தையும் வெட்டிய மேட்டு நிலத்தில் விதைத்த தோரை நெலலும் நெடிய தாளினையுடைய வெணசிறுகடுகும ஐவனமும் குறிஞ்சிநிலததில் செழித்து வளர்நது அதன் வளம் காட்டும் (மது. 286-288). கூத்தர் முனனிய திசையில் ஐவனமும் வெண்ணெல்லும் பால்கட்டிச் சிறிது முற்றிக் காற்றால் ஊடறுக்கப்பட்டு நன்றாக விளைந்திருக்கும் (மலை. 114,115). காந்தளையே இயற்கை வேலியாக உடைய சிற்றூரில உள்ளார் அருவி பாயும் பரந்த நிலத்தில் ஐவனம் விதைத்து, இடையிலே களையாக முளைத்த மலை மல்லிகையையும் பசிய மரலையும களைந்தெறிவர் (குறு. 100:1-3). தலைவன் மேகங்கள் பொருந்தும் மலைப்பக்கத்தில் ஐவனம் விதைத்து அருவியினாலே விளைவிக்கும் நன்னாட்டை யுடையவன் (குறு. 371:2,3). கொடிச்சி தன் தந்தையின் முகில் தவழும் பெரிய மலை வளத்தைப் பாடி, ஐவனத்தைக் குற்றுவாள் (நற். 373:2-4). பெருஞ்சினங் கொண்ட ஆண்பன்றி, துறுகற்கள் நிறைநத மலைப் பக்கத்தே வில்லேந்தி நிற்கும் குறவரை வெருட்டி அவராற் காக்கப்படும் ஐவனம் கவரும் (ஐங். 267: 1-3). குறமகள், மெல்லிய தினைமாவினை உண்டு, ஐவனத்தில் படியும் சிறுகிளிகளை ஓட்டுவாள் (ஐங். 285:1-3). புலியைக் கொன்ற யானையின மருப்பி

னாலும் சந்தன மரத்தினாலும் செய்த உலக்கையால, ஐவனத்தைப் பாறையாகிய உரவிலே பெய்து தலைவியும் தோழியும் குற்றினர் (கலி. 43:1-4).

# ஒ

**ஒக்கல் - சுற்றம்.** வரகரிசியைப் பாலிற் பெய்து அடப்பட்ட சோற்றைத் தேனோடு கலந்துண்டு முயலின் கொழுவிய சூட்டிறைச்சியைத் தின்ற ஒக்கலொடு-சுற்றத்தோடு - வேண்டுமொழி பேசிக் கொழுஞ் சோறு அருந்திய பாணர்க்குக் கிள்ளிவளவன் அகலாச் செல்வமளித்தான (புறம். 34:9-15). கோட்பாடில்லாதவன் உடம்பைப் போல் புல்லென்ற இரும் பேரொக்கலை உடையவனாய்ப் பாணன் வறுமை தீர்ப்பாரை நாடி உலகமெலலாம் சுற்றுதல் (புறம். 69:5-7). அதியமான் நெடுமானஞ்சி செல்வமுண்டாயின் உணவு கொடுத்து இல்லையாயின் உள்ளதனைப் பலரோடு உண்ணும் இலலோரொக்கலுக்குத் தலைவன் (புறம். 95:6-8). பொகுட்டெழினி படையெடுத்து வெற்றிகொண்டு விட்டுச் சென்ற ஊரிலுள்ளோர், யாறுங் குளனு முதலாயவற்றின் துறை நீரை அவன் யானை முகந்துண்ணும் எனக் கருதி, விழா இல்லை யெனினும் செம்மறியாட்டுத் தசையைத் தினற ஒக்கலொடு அங்குத் தங்குதலை வெறுத்ததனால் பகை அவனுக்கு எழுந்தது (புறம். 96:7-9). புல்லென்ற ஒக்கலையும் மிக்க பசியையுமுடைய இரவலனாகிய பாணன் பேகனிடம் ஆற்றுப்படுத்தப்படுதல் (புறம். 141:6). சுரத்தின்கண் நடந்து வருநதிய ஒக்கல் பசித்தமையின் கபிலர் பேகனின் வாயிலில் நின்று அவனையும் அவன் மலையையும் வாழ்த்திப் பாடினார் (புறம. 143:8-12). வேட்டைக்கு வந்த நள்ளி காட்டிடத்து வன்பரணரையும் அவர் சுற்றத்தையும் கண்டு அவர்தம் வழி நடை வருத்தத்தையும், மிடியையும் நோக்கி நிணமுடைய மானின கொழுந்தடியை விரைந்து தானே சுட்டு 'நும் இரும்பேரொக்கலொடு தின்மின்' எனத் தந்தான் (புறம். 150:3-13). பசியால் வருத்தமுற்ற என் ஒக்கலும் உவப்ப யானும் இனபுற நீ உவந்து விடை தநது அனுப்புவையாயின சிறு அளவின தான பொருளையும் ஏறபேன எனறு குமணனிடம் பெருஞ்சித்திரனார் கூறினார் (புறம. 159.21-25). ஒக்கலொடு கூடிவாழும இலவாழ்க்கை ஒருவனை நன்னெறிக்கண் செலல வொட்டாது காலைத் தளைக்கும் ஆதலால உயதல இயலாது (புறம. 193: 3,4). கோப்பெருஞ்சோழனின் உயிரைக் கவர்ந்த கூறறினை வைவோம்; துனபுறற ஒககலைத் தழுவி வாரீர் என்று வாயமொழிப் புலவரைப பொத்தியார் அழைத்தார் (புறம். 221.7-10). கரிகாற் பெருவளத்தான் துணையாகிய இனத்துடன் மது நுகர்ந்து பெரிய பாண் ஒக்கலாகிய சுற்றத்தைப் பாதுகாத்தவன் (புறம். 224:2,3). வேள்எவ்வி இரும் பாணொக்கலுக்குத் தலைவன் (புறம். 233:5,6). முதிய வாக்கினை யுடைய ஒக்கலொடு கூடிய பரிசிலர் இரங்க வெளிமான் துஞ்சினான் (புறம். 237:12,14). இறுதியாக வந்த வறுமையை யுடைய ஒக்கலுக்குத் தலைவனான இரவலனுக்கு ஒரு தலைவன் கரம்பைச் சீறூர் நல்கினன் (புறம். 285:16,17). பாணனே, பரிசிலர்க்கு என்றும் குறையாதளிக்கும் வண்மை யுடைய நெடுந்தகை காக்கும் ஊர்க்குச் செல்லுங் காலை நீ வேட்டுவன் இல்லத்தில் சந்தனக் கட்டைகளால் சுடப்பட்ட இறைச்சியை நின் இரும்பேரொக்கலொடு ஒருங்கினிது உண்டு அங்கே தங்கிச் செல்வாயாக என்று பாணன் ஆற்றுப்படுத்தப் படுகிறான் (புறம். 320: 12-18). தான் விளைத்த வரகைக் கடன் நல்கியவர்க்கும் பாணர்க்கும் கொடுத்துவிட்டுத் தன் ஒக்கலின் வறுமையைக் களையப் புல்லாளரிடம் போய்ப் பின்னும் வரகு கடன் இரக்கும் நெடுந்தகை ஒருவன் தன்மீது போர்குறித்து வரும் பெருவேந்தரையும் வெல்ல வல்லவன் (புறம். 327). ஒரு தலைவி காரணமாக நேர்ந்த போரில் அழிந்தோர் அழிய எஞ்சியோரது ஒக்கலும் பாதுகாப்பாரின்றி மடியும் என்று அண்டர்மகன் குறுவழுதியார் இரங்கிப் பாடுகிறார் (புறம். 346:5,6). பசி தின்னலால் வருத்தமுற்ற இரும் பேரொக்கலின் பொருட்டு உணவை நோக்கமாகக் கொண்டு நின்னை நாடிவந்தேன் என ஊன்பொதி பசுங்குடையார் சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ்சேட்சென்னியிடம் கூறினார் (புறம். 370:3,4). சோழன் செருப்பாழி யெறிந்த இளஞ்சேட்சென்னி அளித்த அருங்கல வெறுக்கையைக் கண்ட இரவலரின் இலம்பாடு உழந்த இரும்பேரொக்கல் அவற்றை அணியுமுறை யறியாது விரற் கணிவதைச் செவிக்கும் செவிக்கணிவதை விரற்கும் இடைக்கணிவதைக் கழுத்துக்கும் கழித்துக்கணிவதை இடைக்குமாக மாறிமாறி யணிந்தனர் (புறம்: 378:11-17). ஆதனுங்களைப்போல நீயும் பசித்த என் ஒக்கலின் துன்பம் தீருமாறு வீறுசால் நன்கலங்களைப் பரிசாக நல்குமதி எனறு பரிசிலர் நல்லேர்முதியனை வேண்டுதல் (புறம்.389:12-15). ஊர்க்கு முனனிடததே உள்ள மன்றத்தில் தங்கியிருந்த தளர்ந்த நடையினை யுடைய இரும்பேரொக்கல் என்னைப் பிரிந்து வருந்திய பெரியதோர் தனிமைத் துயரை யான் அகற்றுமாறு எனக்கு அதியமான் போரோடே செந்நெல் வழங்கினான என்று பொருநன் ஒருவன கூற்றாக ஔவையார் பாடியுள்ளார் (புறம். 390:19-22). எம்முடைய வேங்கட நாடாகிய வடபுலம் வறங்

கூர்ந்ததனால் அங்கிருந்து இங்கு வநது தங்கிய எம் இரும்பே ரொக்கல் இவ்விடத்தினின்றும் நீங்குதலைக் கைவிடும் பண்பில்லாதது என்று கூறிப் பொறையாற்றுக்கிழானிடம் கலலாடனார் பரிசில் வேண்டினார் (புறம். 391:7-9). 'உணவினை மறந்த என் இருமபேரொககலின் மிகுந்த துன்பம் நீங்குமாறு நலகுக' எனச சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனிடம் நல்லிறையனார் இரந்து வேண்டினார் (புறம். 393:10,11,19). 'என் இரும்பே ரொக்கல் பெரிய தனிமைத் துயரை யடைநதாலும் நெருங்குதற்கரிய பரிசிலைத் தருவானெனக் கருதி நான சோழிய ஏனாதி திருக்குட்டுவனிடம் எனறும் செல்லேன் என அவனைப் புகழாப் புகழ்ச்சியாகப பாடினார் எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரனார் (புறம். 394:16-18) எம் இருமபேரொக்கல் உவக்குமாறு மீட்டும் மீட்டும் கொடுத்தான என்று வாட்டாற்றெழினியாதனை மாஙகுடிகிழார்பாராட்டுவர் (புறம். 396:23,24). எம் ஒக்கல் நிறைய உண்ணுமாறு சேரமான் வஞசன் தான உணணும கலததில் உள்ள துணடிதத மானிறைச்சி யாகிய வறுத்த பொரிக்கறியையும கொக்குகிர் போன்ற நெல்லரிசிச் சோற்றையும் அரவுறழ ஆரம், பூந்துகிற் கலிங்கம் ஆகியவற்றையும் நல்கினான் எனறு அவனைத் திருத்தாமனார் பாடியுள்ளார் (புறம். 398:23-29). இமையவரமபன் நெடுஞசேரலாதனின் கேட்டற்கினிய செல்வநிலை கேட்டுக் காணடல விருப்பொடு வந்து தங்கிய தம் இரும்பேரொக்கல் முந்தைப் பசியினால வாடிய துன்பம் நீங்குமாறு ஊனும் வெண்ணெல் வெணசோறும் கள்ளின தேறலும் நல்கினான எனக் குமட்டூர்க் கண்ணனார் கூறியுள்ளார் (பதி. 12:9-18). பசியுடைய ஒக்கலை அப்பசி நீங்குமாறு செய்த புகழ் மேவிய தோன்றலே என்று செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் விளிப்பர் (பதி. 64:19,20). 'நீ நின் நெடுமொழி ஒக்கலொடு செலவக் கடுங்கோ வாழியாதனைப் பாடிச் சென்றால் கொடுமணமென்னும் ஊரிலுண்டான கலனகளைப் பந்தர் என்னும் ஊரிலுண்டான முத்தோடு பெறுவாய்' என்று பாணன் ஆற்றுப்படுத்தப் படுகிறான் (பதி. 67:1-4). 'இசை நரம்புகள் ஏழிறதும் உரிமையுடையோனே, அடுகின்ற பசியால வருந்தின நினனுடைய இரும்பேரொக்கலொடு நீடு பசி நின்னைக் கைவிடுதல விரும்புவையாயின் உடனே சோழன கரிகாற்பெருவளத்தானிடம் செல்ல எழுவாயாக' எனறு பரிசில் பெற்றுவந்த பொருநன் பெறாத பொருநனை ஆற்றுபபடுத்துகிறான (பொரு. 61-63). உப்பினறி வேகவிட்ட வேளையின கீரையை இரும்பேரொக்கலொடு ஒருங்குடன் உண்ணும் அழிபசி வருததம் நீங்க யாம் நல்லியக்கோடனிடம் யானையும் தேரும் பரிசில பெறறு வந்தனம்; நீவிரும் இவ்விடத்திருந்த நும் இரும்பேரொக்கலினது தலைமையுடைய நெஞ்சுடனே செல்குவிராயின் இன்ன பிற பரிசில்களையும் பெற்று வரலாமெனப் பரிசில்பெற்ற சிறுபாணன பெறாத பாணனிடம் கூறி ஆற்றுப்படுததல் (சிறு. 137-145,261). பழம் பசிமிக்க இரும்பேரொக்கலொடு தாம் பிறர்க்குக் கொடுககவும் மாளாத பெருஞ்செல்வம், குதிரை, யானை ஆகியவற்றைத் தொணடைமான் இளந்திரையனிடமிருநது பெற்றமையைப் பெரும் பாணன் கூறுதல (பெரு. 25-28). தொணடைமான இளந்திரையனைப் பரிசில குறித்துப் பாடிச் சென்றால் இரும்பேரொக்கலும் ஒருங்கு உடுக்க ஆவியன்ன ஆடையைப் பெரும்பாணர் பெறுவர் (பெரு. 460-470). பெரிய உறவு முறையும் ஓரின ஒக்கலுமுடைய பரதவர் பிளளைகள் கடலிறாககளின சூட்டைத் தினறும் வயலாமையின புழுக்கிறைச்சியை யுண்டும் அடபபம் பூவை அணிநதும் ஆமபற் பூவைச் சூடியும திரிதல் (பட். 61-64). பலவேறான உயர்ந்த அறிவுகள் நிரமபப் பெற்ற ஒககலாகிய சானறோர் கூட்டம் திருவிழா அயரும மூதூர்க்கண் சென்று கூடுதல் (பட். 214,215). வழிவநத வருததத்தைக் கைவிட்டிருந்த பேரணிகலனகளைப் பெறும் கூத்தருடைய ஒககலுககுத தலைவனைப பரிசு பெற்று வரும் கூத்தன விளிதது ஆற்றுப்படுத்தல் (மலை. 49, 50). வளமிய பல புது வருவாயினை யுடைய கானவர் சிறுகுடிககண் சென்று கூததர் தங்கின் தம் இருமபேரொககலுடன் அங்குளள உணவுகளை மிகவும பெறுவா (மலை. 155-157). கலலெனனும் ஆரவாரத்தை யுடைய சான்றோ ராகிய ஒக்கல் இருககினற நலல மண்டபததிடத்து நனனன இருததல் (மலை. 549). இரும்பேரொக்கலொடு தங்கி ஆடியபின் கூததர் கைவிட்டுபபோன கூத்தாட்டரங்கம் மறறை நாளில் பார்பபோர்க்கு பொலிவற்ற காட்சியைத் தரும் (அகம். 301:23-25). வறுமையால் வாடிய பாணர் ஒக்கல் தன்னைப் பாடி வருவாராயின் தன் பகைவர் அரணெறிந்து பெற்ற பேரணிகலனகளை நன்னன் அவர்க்கு வழங்குவான் (அகம். 349:5-8). ஓரூரில் தங்கி உப்புவிற்ற உமணர், தனியே அங்கிருப்பதை வெறுத்த ஒக்கலொடு வேற்றூர் செல்லுதல் முநதைய ஊரிலுள்ளார்க்கு இன்னாமையைத் தரும் (நற். 183: 2-5). தழும்பன எனபான் நெய் வடிந்தாலொத்த பிசிரடங்கிய நரம்பு பூட்டிய யாழையுடைய இரும்பாணொககலுக்குத் தலைவன் (நற். 300: 8-10).

**ஒக்கூர் மாசாத்தனார்** - புலவர். ஒக்கூர் எனனும்

ஊரினர். பாண்டிய நாட்டில் திருக்கோட்டியூரின் அருகில் இவ்வூர் உள்ளது. இவர் பாடியனவாகப் புறத்தில் ஒரு பாடலும் (248) அகத்தில் ஒருபாடலும் (14) காணப்படுகின்றன. தன் பெருவளக் கொழுநன் மாய்ந்தானாகப் பொழுது இடையீடு பட்டு அல்லியுணவை யுண்ணும் பெண்ணொருத்தியின் தாபத நிலையினைப் புறப்பாடலில் இவர் நன்கு புலப்படுத்தி யுள்ளார். தலைவியின் ஆற்றாமைச் சொற்களைக் கொண்டு மொழிந்து பாணன் தன் பாங்காயினார் கேட்பச் சொல்லிய தாக அமைந்த அகப்பாடல் முல்லைத் திணையின் முதல், கரு, உரிப் பொருள்களைத் திறம்படப் புனைகிறது.

**ஒக்கூர் மாசாத்தியார்** - பெண்பாற் புலவர். பாண்டி நாட்டுத் திருக்கோட்டியூருக்கு அருகிலுள்ள ஒக்கூர் என்னும் ஊரினரான இவரது இயற்பெயர் மாசாத்தி என்பதாம். புறம். 279; அகம். 324, 384; குறுந்தொகை 125, 139, 186, 220, 275 ஆக எட்டுப்பாடல்கள் இவருடையவாகக் கிடைத்துள்ளன. இவரது புறப்பாடல் மூதின்முல்லைத் துறைக்கண் முன்னிற்கும் சிறப்புடையது. முதனாட் போரில் தந்தையும் அடுத்த நாட் போரில் கணவனும் மறப்போருடற்றி மாயந்த நிலையில் ஒரு மறக்குடி மகள் மூன்றாவது நாளும் போர்ப்பறை கேட்டுத் தன் ஒரே சிறு மகனைச் செருமுகம் நோக்கிச் செல்கென விடுக்கும் கடுந் துணிவை அப்பாடல் உணர்த்தும். அகபபாடல் இரணடும் வினைமுற்றி மீளும் தலைவன் நிலைகளை உழையர் கண்டு கூறுவன. அவற்றுள் ஒன்றில் (384) பாகனின் விரைநத தேரோட்டம் தலைவனால் அழகாகவும் சிறப்பாகவும் பாராட்டப் பெறுகிறது. குறுந்தொகைப் பாடல்கள் ஐந்தினுள் நான்கு முல்லைத் திணையைச் சிறப்புற விளக்குகின்றன. பிரிந்த தலைவன மீளாத நிலையில முலலை முகைகளை எயிறுகளாகக் கொணடு கார்காலம் தன்னை நோககி நகைப்பதாகத் தலைவி நெஞ்சழிவது (குறு. 126) நயம்படவுள்ளது. அதில் முல்லை முகைகளை எயிறுகளாக உருவகித்த புலவர் பின்னர் இருபாடல்களில (குறு 186,220) எயிறுகளையே அவற்றிற்கு உவமையாக்கிக் கூறுவதும் நோக்கத் தகும்.

**ஒகந்தூர்** - ஓர் ஊர். செல்வக் கடுஙகோ வாழியாதன திருமாலைத் தன் மனனுறப் பெற்று அக்கடவுளுககு அக்கினி கோத்திரத்திற்குரிய நெல் விளைவை யுடைய ஒகந்தூர் என்னும் ஊரைத் தேவதான மாகக் கொடுத்தான (பதி. ப. 7.8,9).

**ஒசியல்** - ஒடிந்த கிளை (ஆகுபெயர்). 'தலைவர் நுகர்ந்த என் பெண்மைநலம் பெருங்களிறு உண்ணும் பொருட்டு வளைக்க வளைந்து நிலத்தில் வீழாத நாருடைய ஒசியல்-ஒடிந்தகிளை-போன்றது' என்று தலைவி தோழியிடம் நொந்து கூறினாள் (குறு. 112: 3-5).

**ஒட்டகம்** – ஒருவகை விலங்கு. எயிற் பட்டினத்தில் மிகுகின்ற அலைகள் கொண்டு வந்து ஒதுக்கிய மணமுடைய அகில் விறகு, உயர்ந்த நிலையினை யுடைய ஒட்டகம் உறக்கத்தே கிடப்பது போன்றிருத்தல் (சிறு. 154, 155). பாறையிடத்தே உலர்ந்து கிடக்கும் சுள்ளி போலும் வெள்ளிய எலும்புகள் வேகம் வாய்ந்த கால்களை யுடைய ஒட்டகத்தின் மிக்க பசியினைப் போக்கும் (அகம். 245:17, 18).

**ஒட்டியோர்** - நட்புக் கொள்ள விரும்பியோர். பெரியோர் தம்பால் ஒட்டியோர் - நட்புக் கொள்ள விரும்பியோர் - திறத்து அவர்தம் பண்பு நலன்களை முன்னரே ஆராய்ந்து பின்னர் நட்புக் கொள்ளுவதல்லது முன்னர் நட்புக் கொண்டு பின்னர் ஆராய மாட்டார் (நற். 32:7-9).

**ஒடியல்** - ஒடிந்த கிளை. கொல்லையிற் கோவலர் இரவில் வெட்டித் தொங்கும்படி விட்டு வந்த பெரிய மரத்தின் ஒடியல் - ஒடிந்த கிளை - போலத் தலைவரால் யான் அருளப் பெறாது துன்புறுகின்றேன் என்று தலைவி கூறினாள் (நற். 289:7-9). [ஒடியல் என்பதற்கு மாறாக வேரடி என்றும் பாடமுண்டு.]

**ஒடிவு** - தவிர்தல். தகடு ரெறிந்த பெருஞ்சேர லிரும்பொறையின் வீரர் ஒடிவு - தவிர்தல் - இல்லாத பகை உடையவரிடம் சென்று எம் அரசனுக்குத் திறை இடுக எனக் கூறினர் (பதி. 80:8–10).

**ஒடிவை** – இடையறவு. ஆடியதற்குக் கூலியாகக் கொடுப் போர் கொடுத்துத் தீர்த்த சிறிய உணவுப் பொருளைக் கூத்தர் ஒடிவை - இடையறவு - இன்றியும் ஓம்பி வைக்காமலும் நன்கு உண்டு ஒழிப்பர் (அகம். 301:4, 5).

**ஒடு** - ஒருவகை மரம். சிறிய மனை முன்றிலில் ஒடு மரத்தின் வலிய கழிகளாலான படல் சார்த்தப் பட்டிருததல் (புறம. 325:7, 8).

**ஒடுக்கம்** – ஒடுங்கிய நிலை. ஆனிரை கவர்ந்தேகும் வெட்சி மறவர் அதனை மீட்க வரும் கரந்தை மறவரைக் கருதித் தழையால் மூடப்பட்ட பெருங் காட்டின்கண் தலைமறைந்திருந்த மறவரின் ஒடுக்கத்தை - ஒடுங்கிய நிலையை - காணாமல் அக் கரந்தை மறவரின் தலைவன் செல்லுதல் நன்றன்று (புறம். 259:1-4). களிற்றை இரையாகப் பார்க்கும்

புலியைப் போல மதுரை ஊர்காப்பாளர் விழித்த கண் இமைக்கு மளவில் மறையும் கள்வரின் ஒடுக் கத்தைப் பார்த்து ஒற்றறிவர் (மது. 642, 643, 647). 'நீ தலைவியை வரைந்து கொள்வாயாயின் அவ் வாறு வரையும் ஒழுக்கத்தினை யாம் புதியவர் போல நோக்கி அவளது புதுநாணொடுக்கத்தையும் காண்போம்' என்று தோழி தலைவனை வரைவு கடாவினாள் (அகம். 112:17-19). தலைவியை மணக்க வேண்டித் தலைவன் புதியவன் போல வருகையில் தலைவி வதுவை நாணொடுக்கம் கொள்ளுவாள் (நற். 393.11-13; கலி. 52.24, 25). இரவுக்குறிக்கண் நீ அழைக்கின்ற அழைப்பினைச் செவி கருவியாக ஓர்த்ததனா லுண்டான மன வொடுக்கத்தாலே தலைவி உயிர்வாழும் நாள் சிறக்கப் பெற்றாள் (கலி. 48:8,9). திருமாலின் அவதரித்தலாகிய வருத லும் மீண்டு சென்று அடங்குதலாகிய ஒடுக்கமும் காற்றின்கண் உள்ளன (பரி. 4:32).

**ஒடுங்காடு** - ஒடுமரங்கள் நிறைந்திருந்தமையால் பெயர் பெற்றதோர் ஊர். குடநாடு நீண்ட அடியைக் கொண்ட ஆசினிப் பலாமரங்களை உடைய ஒடுங் காடு என்னும் ஊர்க்கு அப்பால் இருப்பது (அகம். 91:12,17).

**ஒடுங்கார்** - பகைவர். ஒடுங்காரோடு - பகைவரோடு - உடன்று அவர் தானைமீது பாண்டியன் சொரியும் அம்புக் கூட்டத்தைப் போல் மழைத்துளிகள் சிதறின (பரி.22:5,6).

**ஒண்மை**- 1. அறிவுடைமை. செல்வக்கடுங்கோ வாழியா தனை, விளையாட்டினும் பொய்யாத வாய்மையன் எனவும் பகைவர்தம் புறஞ்சொல் கேளாத குற்றம் நீங்கிய ஒண்மை-அறிவு-உடையவன் எனவும் கபிலர் சிறப்பிக்கிறார் (பதி. 70:12,13). செலவுணர்த்திய தலைவனிடம் தலைவி எதிரில் நின்று பிரியின் ஒழி வேம் என்று கூறும் ஒண்மை இல்லாதவளாவாள் (அகம். 319:15,16).

2. ஒளி. தலைவன் மகன் கண்ணாலும் நுதலாலும் கதுப்பாலும் தன்னை தழுவுகின்ற தாயர்க்கு ஒண்மையை-ஒளியை-கொடுப்பான் (கலி. 83:17,18). திருமாலின் மணமும் ஒண்மையும் காயாம் பூவி டத்தே உள்ளன (பரி. 4:29).

**ஒத்து** - தாளம். வையைக்கண் புனலாட வந்தோர் அங்குள்ளாரை நோக்கி, ஆடல்மகளிர் முழவு முத லிய இசைக் கருவிகளின் ஓசையுடைய ஒத்தினை - தாளத்தை - சீர்தூக்கிக் கையால் அளத்தலைக் காணுங்கள் என்று கூறினர் (பரி. 12:42-44).

**ஒதுக்கம்** - 1. நடை. பாலைநிலத்தில் உடன் போக்கு மேவிய காலைத் தலைவன் தலைவியிடம் வளை யல்கள் ஒலிக்கக் கைகளை வீசிக் காற்சிலம்புகள் முரல மெல்லிய ஒதுக்கமொடு - நடையொடு - மெல்லச் செல்லுமாறு வேண்டினான் (அகம். 261: 5,6). நம் காதலர் வந்து விடுவர் என்னும் சொல் உண்மையாதலைக் காண உடல்வளைந்து நடக்கும் ஒதுக்கம் அழகுபெற நடந்து வருக என்று தலைவி யிடம் தோழி கூறினாள் (அகம். 323:4-6). ஒதுக்கு - 1 காண்க.

2. நடையாலாயவடு (ஆகுபெயர்). நண்டுகளின் ஒதுக் கம் - நடையால் உண்டானவடு - நீரருகில் சேர்ந்து கிடந்தாற் போலப் பரதவையர் தம் உகிரால் பிளந்த வடுவும் எயிறு அழுந்தின வடுவும் தலை வன்பால் காணப்பட்டன (கலி. 88:10-13).

**ஒதுக்கிடம்** — ஒதுங்கியிருக்குமிடம். முதுநரி தசையைத் தின்று வறிய இடத்திலுள்ள பேய்த்தேரினை நீரெனக் கருதி அலைந்து வெயிலுக்கு ஒதுக்கிடம் பெறாது கறகுவியலின் நிழலில் வருந்தியது (நற். 352:5-9).

**ஒதுக்கு** - 1. நடை. ஆய் அண்டிரனது புலி நடமாடும் பெரிய மலைப்பாதையில ஏறுதலான வருத்த மடைந்த மெல்லிய ஒதுக்கின - நடையையுடைய - விறலி பின்னே வரப் பாணன் முன்னே சென்றான் (புறம். 135:1-4). களிற்றிரையைத் தேர்வதற்கு அங்கு மிங்கும் கூர்ந்து நோக்கும் நோக்கத்தோடு செல லும் ஒதுக்கினையுடைய புலி தன்னைப் பிற உயிர் காணாவண்ணம மறைந்தியங்கும் (அகம். 22:14,15). இடை யாமத்தின்கண் அழகு மிக்க பாவை நடை பயின்றாற் போன்ற ஒதுக்கினை யுடையளாய்த் தலைவி இரவுக்குறி வந்தாள் (அகம். 142: 20-22). பிரிவில் வேங்கைமலர் போன்ற தேமலுடன ஆற் றாமை மீதூர மெல்லிய ஒதுக்கினால் குறுக அடி யிட்டவள் தலைவி என்று தலைவன் பாசறைக கண் தனது நெஞ்சிற்குக் கூறினான் (அகம். 174: 10-14).

2. இயங்குதல். நலங்கிள்ளியின் பனிமலர்க்கா ஒதுக்கு-இயங்குதல-இனிய மணல் செறிந்த புதுப் பூம்பள்ளியுடையது (புறம். 33:19,20). கோடை வெம் மையால் ஒதுக்கு அரிய வழி என்று எண்ணாமல் தலைவர் பொருள்வயிற் பிரிந்தார் (கலி. 150:15,16).

3. ஒதுங்குதல். மிக்க தீ எரித்து அழித்தலினால் மரங்களெல்லாம் அழிந்த காட்டகத்து. ஒதுக்கும்- ஒதுங்கியிருத்தற்கும் — நிழல் இல்லாத கொடிய சுரநெறியில் தலைவர் சென்றார் (நற். 177:1-3). கற்குவியல்களை உடைய ஒதுக்கு அரிய நெறிகளில் யானையின் பகையும் கருதாது இரவுப் பொழுதில் எப்படி வந்தாய் எனத் தோழி தலைவனை வின வினாள் (ஐங். 362:1-3).

4. ஒருபுறம். வெயிலால் வெப்பமுற்ற பரல்மிக்க பள்ளத்தின் ஒதுக்கில் - ஒருபுறத்தில் - உள்ள கிணற்றை யடைந்து அதில் ஆயர் தோண்டிய சிறு குழியி லுள்ள நீரை யானைகள் உணணும் (நற். 240:6-9).

**ஒப்புரவு – உலக இயல்பு.** தோழி தலைமகளிடம் சென்று 'தலைவன் ஊர்கின்ற மடல்மாவை ஈர்த்து வரும் மக்கள் ஒபபுரவு-உலக இயல்பு - அறிந்திருப் பின் எம்மைப் பார்த்து இவர் தலைவிக்கு அயலாம் தன்மை உடையவர் என்று சொலலாடார்' என்று கூறினாள் (நற். 220'2-10).

**ஒருகண் இரும்பறை - தடாரிப்பறை.** பெரிய களிறறின் அடிபோலத் தோனறும் ஒருகண் இரும்பறை - ஒருகண்ணினை உடைய தடாரிபபறை - உடைய வன் இரவலன் (புறம். 263.1,2). ஒரு கணமாக்கிணை காண்க.

**ஒருகண் மாக்கிணை - தடாரிப்பறை.** அதியர்கோமான் பொகுட்டெழினியின் பெருமனை முற்றத்தில் விடி யற்காலையில் பொருநன் ஒருவன பானையின் அடிச் சுவடுபோன்ற வட்டமான ஒருகண்மாக் கிணை - தடாரிபபறை - அறைந்து அவன் புகழ் பாடினான (புறம.. 392:1-10). சோழிய ஏனாதி திருக்குட்டுவனிடம விடியறகாலத்தே கிணைப் பொருநன் ஒருவன் ஒருகண் மாக்கிணை அறைந்து வாடாவஞ்சி பாடி வெஞ்சின வேழத்தைப் பரிசிலா கப் பெற்றான் (புறம். 394:3-12). ஒருகண் இரும் பறை காணக.

**ஒருகால்ஊர்தி - ஒற்றைஉருள்பூண்டதேர்.** பலபூக்களை யுடைய தணபொழிலில பகல்முழுவதும் போக்கி ஒருகால் ஊர்தி - ஒற்றைஉருள்பூணட தேரினை - உடைய கதிரவன் மேற்கில் உள்ள மலையில் மறைநதான (அகம். 360:1-3).

**ஒருகுழை ஒருவன் - ஒற்றைக் குழையை உடைய பல ராமன்.** நீர்பொருகின்ற கரையில் பூங்கொத்துக்கள் பொருந்தி நிற்கும் வெண்கடம்பு ஒருகுழை ஒரு வனை - ஒற்றைக்குழையுடைய பலராமனை - போல மலர்ந்து அழகுபெற இளவேனில் வந்தது (கலி. 26: 1-8). திருமகள் வீறறிருக்கும் மார்பனாய்த் திகழ் வதோடு சங்கை ஒத்த வெண்ணிற மேனி உடை யவனும் யானைக் கொடியை உயர்த்தியவனும் கலப்பைப் படை ஏந்தியவனும் ஒருகுழை ஒரு வனும் (ஒற்றைக் குழை அணிநதவனும்) ஆகிய பல தேவனாகவும் திருமால் திகழகின்றார் (பரி. 1:1-5). ஒருகுழையவன் காண்க.

**ஒருகுழையவன் – ஒற்றைக் குழை உடைய பலராமன்.** ஆயாகள் ஒருங்கு கூடி ஏறுகளை ஆராய்ந்து ஒரு குழையவன் - பலராமன் - மார்பில் உள்ள மாலை போன்று ஒளி மிகுந்த செம்மறுவினை யுடைய வெள்ளை ஏற்றைத் தொழுவிடத்தே புகவிட்டனர் (கலி. 105:7,11,12,22) ஒருகுழை ஒருவன் காண்க.

**ஒருகைமுகன் – விநாயகன்.** முருகப் பெருமான் திரு மாலின் மருகனும் ஈசனாகிய சிவனின் மகனும் ஒருகைமுகன் - விநாயகப் பெருமான் - தம்பியுமா வார் (முரு. வெ. 7).

**ஒருகைமுகன்தம்பி - முருகன்.** முருகப்பெருமான் திரு மாலின் மருகன்; ஈசனாகிய சிவனின் மகன்; ஒருகை முகன் - விநாயகப்பெருமானின் - தம்பி (முரு.வெ. 7).

**ஒருசிறைப்பெரியனார் - புலவர்.** இஃது இயற்பெயரா, காரணப்பெயரா என்பது தெரியவில்லை. பெரியன் என்ற பெயர் அக்காலத்தில் வழக்கில் இருந்த தென்பதனைப் 'பொறையாற்றுக் கிழான் பெரியன்' என்பதனால் அறியலாம். நற்றிணையில் 155 - ஆம் பாட்டின் ஆசிரியர் பராயனார் ஆவார். [பாட்டில் 'ஒருசிறை' என்ற தொடர் வருகின்றது. அதனைப் பாடியவர் ஒருசிறைப் பெரியனார் ஆகலாம் என்று ஒருகருத்து உண்டு (த.வ.க.பக். 358).] [நற் றிணை 155-ஆம் பாடலில் ஒருசிறை என்ற தொடர்வருவதால் அத்தொடர் கொண்டு ஒரு சிறைப் பெரியனார் என்றழைக்கப்படும் புலவர் இவர் எனவும் கருதலாம். பெரியனார் என்பது பராயனார் எனத் திரிந்திருக்கலாம்; அல்லது மேலே குறிப்பிட்ட நற்றிணைப் பாடலில் தொழுதனெம் என்ற சொல் வருவது கொண்டு இப்பாடலின் ஆசிரியருக்குப் பராயனார் என்றும் பெயர் வழங் கப்பட்டிருக்கலாம் என்பர் துரை அரங்கசாமி (ச.சி.பெ.பக். 96).] இவர் பாடிய பாடலாகப் புற நானூற்றில் ஒருபாடலும் (137) குறுந்தொகையில் ஒருபாடலும் (272) நற்றிணையில் ஒருபாடலும் (121) காணப்படுகின்றன. நாஞ்சில் வள்ளுவனைப் பற்றிப் புறத்திலும் கலைமான் மார்பினின்று பறித்த அம்பினை ஒத்த சிவந்த கண்ணுடை யவள் கொடிச்சி என்பதனைக் குறுந்தொகை யிலும் வரகைக் கறித்துக் கலைமான் காட்டில் பிணையொடு வதிதலை நற்றிணையிலும் இவர் குறிப்பிடுவர்.

**ஒருத்தல் - ஆண்விலங்கு.** மலைமுழைக்கண் துயிலை வெறுத்து மூரிநிமிர்ந்த ஒருத்தல் - ஆண்புலி - தான் குறித்த இரைவேட் டெழுந்தாற் போலப் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி வடபுலம் நோக்கிப் போர்வேட்டெழுந்தான் (புறம். 52:1-5). தான தாக்கிய பன்றி இடப்பக்கம் வீழ அன்று உண்ணாமல் மறுநாள் மலையிடத்து உணவு வேட்டெழுந்த களிற்றொருத்தலை வலப்

பக்கத்தேவீழ்த்தும் புலிபசித்தாற்போலும் வலியை யுடையோர் நட்புடன் பொருந்திய நாட்கள் உள வாகுக என்று சோழன் நல்லுருத்திரன் கூறுகின் றான் (புறம். 190.8-12). ஏந்தின கொம்பையுடைய தன் இனத்தைப் பிரிந்த ஒருத்தல் (ஆண்யானை) கானவருடைய தினைப்புனம் புகுந்து உணணும் (மலை. 297-299). மருதநிலத்தில் நெல் அரிவார் எழுப்பிய தண்ணுமை ஒலிக்கு அஞ்சிச் செங்கண் எருமையினத்தைப் பிரிந்த ஒருத்தல் (எருமைக் கடா) சினந்து எதிர்ந்து வருதலைப் பேணிச் செல்க எனக் கூத்தரை ஆற்றுப்படுத்தல் (மலை. 471-473). கடத்தற்கரிய பாலைவழிகளில் மூங்கில்கள் கரிந்து சாய்ந்துள்ள சிறிய வழியிடத்தே காட்டை மேம் படுத்தச் சொலற்குக் காரணமான நிமிர்ந்த கோட் டினை யுடைய ஒருத்தல் (ஆணயானை) காவல் பூண்டிருக்கும் (அகம்.65:15-17). வணடுகள் ஒலிக்கும் மதத்தினையும் புள்ளிகளையுடைய நெற்றியையும் கொண்ட களிற்று ஒருத்தல் (ஆணயானை) இன் பமுறத் தழுவவும் கடுஞ்சூல் மடப்பிடி யாளியை நினைத்து அஞ்சி நடுங்கும் (அகம். 78:1-6). சுர நெறியில் மதநீர்வற்றி மறைந்த கவுளை யுடைய, வெயில் தீய்த்தலாலே வருந்திய கொம்புகளைக் கொண்ட ஒருத்தல் (ஆணயானை) தன் பெரிய கையால் நீரின் பொருட்டுக் கிணற்றில் பன்முறை யும் துழாவியது (அகம். 207:7-10). வெண்பொன் ஒழுகினால் ஒத்த வெள்ளிய பற்களையுடைய செந் நாய்க்குப் புள்ளிகளை யுடைய உழை ஒருத்தல் (ஆணமான) அஞ்சும் (அகம். 219'12,13). பாலைவழி யில் தன் பகையாகிய புலியினது நிறத்தை யுடைய வேங்கை மரத்தொடு மாறுபட்டு, முழுவலியுடைய ஒருத்தல் (களிற்றியானை) அதனொடு போர் மலைந்து தாக்கிக் களங்கொள் வீரர் போல் முழங் கும் (அகம். 227:8-11). புலியொடு பொருது வருந் திய நடையினை யுடைய ஒருத்தலின் (களிற்றி யானையின) நீண்ட பிளப்பாகிய மத்தகப்புண் ணைக் கழுவி இரவில் முகில் மழை பொழிந்தது (அகம். 308:1-3). இரவுக்குறி வந்த தலைவனிடம் பகற்காலத்து வந்து தலைவியின் கூந்தலாகிய மெல் லணையில் துயின்று, காவலாளர்க்கு மறைந்து காவல் கொண்ட புனத்தை வளைதது உணட பெரிய களிற்று ஒருத்தல் போலப் பொழுதுபட மீளுமாறு தோழி கூறினாள் (அகம். 308 13-15). புலியுடன் போர் செய்து வடுப்பொருந்திய கொம் பினையுடைய ஒருத்தலின் (களிற்றின்) பொருட்டுக் கலக்கமுற்ற பெண்யானை சென்ற அடிகள் பதித லால் சுரத்திடையே குழிகள் உண்டாயின (அகம். 379:24-27). ஆளி ஒருத்தல் (ஆண்ஆளி) அண் ணல்யானை வருந்தும்படி அதன் கொம்பினைப் பறித்து அதன் குருத்தினைத் தின்னும் (அகம். 381: 1-3). தான் எய்த அம்பொன்று பாய்ந்ததால் புண பட்டுத் தப்பி ஓடிய ஒருத்தல் (களிற்றியானை) நும் கொல்லைவழியாக ஓடியதாவென்று தலைவன் தலைவியையும் தோழியையும் கேட்டான் (அகம். 388: 11-13). பெருமையுடைய ஒருத்தல் (ஆணயானை) மரம் அசையும்படி குத்திப் பிளந்து புண உணடாக் கிய சிவந்த ஓமையின் அடி மரத்தை நோக்கி ஊன் எனக் கருதிப் பருந்து வந்து தங்கும் (அகம். 397:10-13). ஒருத்தல் (எருது) வெறுத்து உழாமல் சோம்பிக் கிடக்க மான் வெம்மையால் புழுங்கிய மழையற்ற முல்லை நிலத்தில் பாம்புகளின் படம் அவிய இடியோடு கலந்து மழை பெய்தது (குறு. 391:1-4). வேனிற் குன்றத்தில் உலர்ந்த கிளைகளை யுடைய ஓமை மரத்தைக் குத்திய உயர்ந்த கொம்பை யுடைய ஒருத்தல் (ஆணயானை) மலை அடிவாரததில் மேக முழக்கத்தைக் கூர்ந்து கேட்கும (குறுந். 396: 3-6). நாக மரங்களுள்ள செல்லுதற்கரிய கவர்தத வழியில் சினமிக்க சிறுகட் பனறி ஒருத்தல சேறு பூசிய முதுகில் புழுதி படிய சுருக்குவார் வைதத வெறும்பிளப்பில் விழுந்தது (நற. 82:6-9). வறணட குனறத்து உச்சியின் பககத்திலுள்ள வேட்டுவச் சேரியில் கிணற்றினின்று ஆனிரை உணண எடுத்து வைத்த நீர்ப்பத்தரைத தன இளமபிடியும கனறும உண்ண, அப்பத்தரின் வாயை மூடிய விற பொறியை விலககிக் களிறறொருத்தல அவற்றை உணபித்துச் செலலும் (நற். 92.4-9). பாலை வழியில களரின் புழுதி படிநத கடுநடை ஒருத்தல (ஆண யானை). வழிச் செல்லுபவரைக் கொல்லவிரும்பிச் சுரநெறியைக் குறுக்கிட்டு அயலார் யாரையும் காணாது சினமிகுந்து பனைமரததைத் தாககிப பின் சினமடங்கும் (நற். 126:3-6). மலைமுழையிலே இனிய குட்டிகளை ஈன்று கிடநத பெணபுலியின நோயும் பசியும் தீர்க்க ஆண்புலி சினஞ்சிறந்து ஓஙகிய கொம்பினை யுடைய ஒருத்தலின (ஆண யானையின) முகத்திலே பாயும (நற். 148:7-10). மலை யில பிடியொடு புணர்ந்த முகத்தில புள்ளியைக் கொண்ட ஒருத்தலின் (ஆணயானையின) தூககிய கைபோலத் தோடு தலைதாழத்த தினைக்கதிரைப் பவளச செவ்வாய்ப் பைங்கிளிகள் கவரும் (நற். 317:1-4). சிறிய கணணும் பெருஞ் சினமு முடைய பனறி ஒருத்தல் கானவர் உழுது விளைத்த தினைக்கதிரைத் தினறு மலைப் பிளப்பிலுள்ள புலிக்கஞ்சாது மூஙகில வளாநத மலைச சாரலில் உறங்கும் (நற். 386:1-5). சிறிய கணணையும் மிக்க வெகுளியையும் உடைய பனறி ஒருத்தலொடு குறிய முன்கால்களை யுடைய பெரிய புலி போரி டும் (ஐங். 266:1,2). சிறிய கண்ணையும் பெருஞ

சினகுதைபமுடைய பன்றி ஒருத்தல் மலைச்சாரலில் விலலேநதிக் காவல புரியும் குறவரை ஏமாற்றி ஐவன நெல்லைக கவர்ந்துண்ணும் (ஐங். 267:1-3). பாிககோலாற குத்தவும் தன்நெறியில நில்லாத கடிய செலவினை யுடைய களிற்றொருத்தல் மெல்லிய யாழோசையின எல்லையிலே தங்கினாற்போல அனபுற்றுத் தாழநது குற்றேவல் மகளாகிய என் கூற்றின எல்லையிலே தங்கிப போகா தொழிந்தாா எனத் தோழி கூறினாள (கலி. 2:25-29). பால் போனற மருப்பினையும் உரல போனற பரநத அடியினையும் கமழும் மதத்தினையும் உடைய இனததைப பிரிந்த ஒருத்தல (ஆணயானை) வழியைக காவல கொளளும் (கலி. 21:1-3). தான் இருநது தேனுண்ட பூ தனித்துக் கிடக்க, வேறு பூககளைச சென்றடைநத தும்பி, ஒருத்தலோடு (ஆணயானையோடு) புலி போர் செயயும் போது பெருங்கை மாககினை எனறெண்ணிப் புலியை அஞ்சுவிப்பும் மத நீர் மணததால் யானையை அணுகியும் மாறி மாறிச சென்றது, இருபேரரசாகளை நடட்புச் செயயக் கருதிய சான்றோர் இருவரிடததும் மாறி மாறிச் செலவது போல இருநதது (கலி. 46 1-8).

**ஒருதூக்கின்னியம்** – எழுவகைத் தூக்கினுள் ஒன்றினைப் பொருந்திய இனியவாச்சியம். நம்மவர் பலவேறு குரலையுடையனவாகிய ஒருதூககின்னியம்–தாளத்தின வழிபபடும ஒருதூககினை யுடைய இனிய வாசசியம–கொணடு காட்டிற்பொருநதிய நெடிய முருகனைப பாடும பாட்டிற்குப் பொருநத வெறியாட்டுச செயயும பெரிய களம் சிறபபுற மெலல ஆடுதலை விருமபினர் என இரவுக்குறிச் சிறைப் புறமாகத் தோழி தலைவியிடம கூறினாள் (அகம். 382 4-7).

**ஒருநிலைப் பொய்கை** - வற்றாத பொய்கை (சரவணப் பொய்கை) திருபபரஙகுன்றின்கண் அமைநதுள்ள அருவி வீழுகினற நிரல்பட்ட சுனை, இமயமலையிடத்துள்ள ஏனைச சுனைகளிலும சிறப்பு எய்தி முருகனை ஈனற தாமரை மலர் பொருந்திய ஒருநிலைப பொய்கையை - வற்றாத பொய்கையை- ஒக்கும் (பரி. 8:12-16).

**ஒருமரப்பாணி** - ஒருதோணி (ஒரே மரத்தால் செய்யப்பட்ட தோணி எனறும கூறுவர்). கங்கையாற்றினைக் கடந்து போகும் மக்கள ஒரு மரப்பாணியை (ஆங்குவருகின்ற) - ஒரே தோணியை - எதிர்பார்த்து நெடிது நிற்றல் போல இளநதிரையனின அரண்மனை முற்றத்தில பல மனனர்கள திறைப் பொருளுடன் உள்ளே நுழையும் காலததை எதிர்பார்த்து நெடிது காததுநினறனர் (பெரு. 431-435).

**ஒருமுலைஅறுத்த திருமாவுண்ணி** - ஒரு கொங்கையை அறுத்த திருமாவுண்ணி என்ற பெண். வேங்கைமரத் திறகட்டிய கட்டுப்பரண் அருகில் அயலான் ஒருவன் செயததனாலாய கவலை வருத்துதலாலே ஒரு முலை அறுத்த திருமாவுண்ணியின் செயலைககேட்டவரில் அவளபால் அன்புவைத்தவர் மாத்திரம் வருநதுவரே யன்றிப் பிறர் வருநதுபவ ரலலர். அவ்வாறே தலைவரைப் பிரிநத யான் வருநதும் அளவு பிறர் வருந்துபவரலலா எனக் காதல பரத்தை கூறினாள (நற். 216·6-11).

**ஒருமையோர்** - ஒருதன்மையுடையோர். உலகம் முழுவதையும் பொதுமையினறித தமககே உரித்தாக ஆண்டு வெணகுடை நிழறறிய ஒருமையோாககும் -ஒருதன்மை உடையோர்க்கும் - கலவி இல்லாத ஒருவனுக்கும் உணபது நாழி; உடுப்பவை இரணடே; பிறவு மெல்லாம் ஒரொக்கும் எனறு மதுரைக் கணககாயனார் மகனார் நககீரனார் கூறுகிறார் (புறம. 189.1-6).

**ஒருஉத்தனார்** – புலவர். இப்பெயர் இயற்பெயரா, காரணபபெயரா என்பது தெரிய வில்லை. [எண்ணுப் பெயராகிய ஒருத்தன் எனபதின் வேறுபடுத்துதறகு இவர் பெயா ஒருஉத்தனார் என நின்றது என்பர் (த. வ. க. பக். 359). இவர்தம் ஒரேபாடல் புறநானூற்றில 275-ஆக அமைநதுள்ளது. எருமை மறம் எனும் துறையமைந்த இப்பாடல் வீரன் ஒருவனது கால், சங்கிலியால தளைக்கப் பட்ட யானையைப் போலக் கொலையுணட மறவர் தம் குடரால் தளைக்கப் பெறவும் கன்றைநோக்கி வரும் கறவை போலப பகைவரால் வளைக்கப்பட்டிருநத தோழன் பால் விரைந்து வந்தனன் என்னும செய்தியைக் குறிக்கிறது.

**ஒரோடோகத்துக் கந்தரத்தனார்** - புலவர். கந்தரத்தனார் என்ற பெயரில அகநானூற்றில மூனறு பாடல் களும (23,95,191) குறுநதொகையில் ஒரு பாடலும் (155) நற்றிணையில் நான்கு பாடல்களும (116,146, 238,306) காணப்பெறுகின்றன. அகநானூறு 23,95-ஆகிய இரண்டில் மட்டும் ஒரோடகத்துக் கந்தரத்தனார் எனற பெயர் காணப்படுகிறது. அகநானூறு 191 - இல் உரோடோக கவுணியன் என்ற பெயர் குறிக்கப பெற்றுள்ளது. குறுந்தொகைப் பாடலில் உரோடகம் என்னும் அடைமொழியுடன் பெயர் காணப்படுகிறது. இதே பெயருடன் நற்றிணை 306-இல் குறிக்கப்பட்டுள்ளது. கந்தரததனார் என்ற பெயரில் நற்றிணை 116,146-ஆம் பாடல்களும், கருவூர்க் கந்தரத்தனார் எனற பெயரில் நற்றிணை 238-ஆம் பாடலும் காணப்படுகின்றன. [உரோடகததுக் கந்தரத்தனார், ஊரோடகத்துக் கந்தரத்

னார், ஒரோடகத்துக் கந்தரத்தனார் என்று பல வாறு பிரதிகளில் உள்ளன என்று உ. வே. சா. கூறுவர் (குறுந்தொகை. பாடினோர் வரலாறு. பக். 124). சிவலின் முள்போல் செம்முல்லை யரும்பு இருப்ப தாயும் சங்குடைந்தாற்போல் வெண்காந்தள் மலர் இருப்பதாயும் (அகம். 23) ஆலங்கட்டி சிதறிக்கிடத் தல் போல் இருப்பைப் பூ சிதறிக் கிடப்பதாயும் (அகம். 95) இப்புலவர் கூறியது இயற்கைப் புல மைக்கு நல்ல சான்றுகளாகும். இருப்பைப் பூவைக் கரடிக்கூட்டம் விரும்பிததின்னுதல இவர் பாடலில் (அகம். 95) குறிக்கப் பெறும். உரோடோகத்துக் கந்தரத்தனார், கந்தரத்தனார் காண்க.

**ஒல்லாதார்** - பகைவர். பகையாய் வந்த மல்லர்களின் மறத்தை யழித்த மலர் மாலை யணிந்த மார்பின னான மாயவன் தன் ஒலலாதார் - பகைவர் - எல் லோரும் சினந்து வந்து தன்னை எறிதலினாலே அவர்கள் அனைவரும் நடுங்கி ஓடும்படியாக எறிந்த ஆழி, அப்பகைவர்தம் யானையின் மத்தக ததைச சென்று தாக்கியது (கலி. 134:1-3). ஒல்லார் காணக.

**ஒல்லார்** - பகைவர். அணி வகுக்கப் பெற்ற இளைய வீரருடன் செல்லும் ஒல்லார் தம - பகைவர்தம் - யானைப் படையைக் காணின் நொடிப்போதேனும் நில்லாது சென்று தாக்கும் தானைகளை உடைய வன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் (பதி. 54: 15-17). சோழரது வழித்தோன்றலாகிய வல்லம் கிழவோனாகிய நல்லடி என்பான் இருப்பவும் அவன் ஒல்லார் அவன நாட்டைப் பற்ற முயறசி செய்தனர் (அகம். 356·12-15). ஒல்லாதார் காண்க.

**ஒல்லையூர்** - ஓர் ஊர். புதுக்கோட்டைத் தனியரசின் கீழிருந்த ஊர்களுள் ஒன்று. இப்பொழுது அதற்கு உலிய மங்கலம் என்ற பெயர் வழங்குகிறது. சோழ நாட்டிற்கும் பாண்டிய நாட்டிற்கும் எல்லையாக ஓடும் தென வெள்ளாற்றின் தெனகரையான தென் கோனாட்டின் மேலைப்பகுதி ஒல்லையூர் நாடா கும் (புறம். 242. ஔவை. து. உரை). ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் இறந்துபடக குடவாயிற் கீரத்தனார் முலலை மலரை நோக்கி, 'இளையோர் சூடார், மகளிர் பறியார், பாணன் சூடான், பாடினி அணியாள, ஆண்மைமிக்க போரில் வல்ல வல்வேல் சாத்தன மாயந்த பின் ஒல்லையூர் நாட்டில் நீயும் பூக்கக் கடவையோ' என்று கையறு நிலையில் இரங்கிப் பாடியுள்ளார் (புறம். 242).

**ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்** - வீரத்தலை வன். பெருஞ்சாத்தன என்னும் இயற்பெயரை யுடைய இவன் தென்வெள்ளாறறின தென்கரைக கோனாட்டு மேலைப பகுதியான ஒலலையூரில் வாழ்ந்த கிழானொருவனுக்கு மகன். இவனைப் பாடியவர் குடவாயிற் கீரத்தனார். கையறுநிலைத் துறையில் இவனை அவர் பாடிய ஒரே பாடல் புறநானூற்றில் (242) அமைந்துள்ளது. அப்பாட லில், 'ஆணமை தோன்ற ஆடவர்க் கடந்த வல் வேற் சாத்தன்' என்று குறிக்கப்படுவது கொண்டு இவனது போர்த்திறனை உணரலாம். தன் நாட்டு மக்களிடத்தும் பாணன், பாடினி போன்ற கலைஞ ரிடத்தும் இவன் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தவன; அவரும் இவனிடத்து அன்புபூண்டிருந்து இவன இறந்த பினனர்த தாம் பூச்சூடி இனபுறுதலையும் தவிர்நது பெரிதும் துயருற்றனர். அநநிலையில் எவரா லும் சூடப்படாது பூத்திருந்த முல்லையை நோக்கி, 'முலலையும பூத்தியோ ஒல்லையூர் நாட்டே' என்று கீரத்தனார் கையற்று வினவுவது நெஞ்சை நெகிழ்விககும பகுதியாகும்.

**ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன்** - அரசப் புலவன். பூதப்பாண்டியன், ஒல்லையூரைப் பகைவரிடமிருந்து வெனற சிறபபால ஒல்லையூர் எனற அடைமொழி யொடு சேர்த்து அழைககப்பட்டான. பூதபபாண்டி என்னும் இவன பெயரைத் தாங்கிய ஊரொனறு இன்றும் பாணடிய நாட்டில உளளது. இவனுக குத் திதியன், மாவன், ஆநதை, அநதுவஞ்சாத்தன, ஆதனழிசி, இயக்கன முதலியோர் கணபோனற நண்பராவர். இவன அரசமாதேவி பெருங்கோப் பெண்டு நலலிசைப் புலமை எயதியவள்; பாணடி யன் இறந்த ஞானறு தீப்பாய்நது துறக்கம எய திய கற்பினள். 'சிறந்த பேரமருணகண இவளினும் பிரிக' எனத் தனமனைவியைப பிரிவதாகக் கூறும் வஞ்சினம் இலலறச் சிறப்புணர்த்துவதாகும. 'அற நிலை திரியா அனபின் அவையத்துத் திறனில ஒரு வனை நாட்டி, முறைதிரிந்து மெலிகோல் செயதே னாகுக' எனபது ஆட்சிச் சிறப்புக் காட்டும். 'கண் போல் நண்பிற் கேளிரொடு கலந்த இன்களி மகிழ நகை இழுக்கியவன் ஆவேன்' என்பது நட்பின பெருமை காட்டும். 'தென்புலங் காவலின் ஒரீஇப பிறர் வன்புலம் காவலில் யான் மாறிப் பிறப்பே னாக' என்பது நாட்டுபபற்றைப புலப்படுததும். இவ்வாறாக இவன் வஞ்சினம் கூறும் புறம 71-ஆம பாடல் அறம் செறிநததாக உளளது. இப் புறப்பாடலே யன்றி அகம் 25-ஆம் பாடலும இப பாணடியன் இயற்றியதாகும். இளவேனிற் புனை வும் திதியனைப் பறறிய குறிப்பும இவன் பாடலில் (அகம. 25) காணப்படும். வண்டுகள் உதிர்நத கோங்கின தாது இலவ மலரில் படிநதிருபபது பொற்சுண்ணம விற்போர் பவளச் செபபில் பொன் சொரிந்து வைத்தாற் போனறது எனபது நயமான பகுதியாகும்.

**ஒலி – 1.** தழைத்தல். வீர முரசம் பொலிவு பெற மயி லின் ஒலி-தழைத்த-நெடும் பீலியால தொடுக்கப் பட்ட ஒள்ளிய பொறியுடைய நீலமணி போனற மாலையை உழிஞைத் தளிருடன் சூட்டுதல் (புறம. 50:3,4). நறு நாறறமுடைய ஒலி கூந்தலை யுடைய விறலியர் வடித்து முறுக்கப்பட்ட நரம்புகளை உடைய சிறிய யாழை வாசிததல் (புறம். 109:15,16). நீர் நிறைநத பள்ளத்தில் விதைத்த விதது, நீர் இன்மையால் சாவாது கரும்பு போல ஒலிக் கும் (புறம. 137.5,6). நாஞசில வள்ளுவன் ஒலியி ரும் கூந்தலை யுடைய ஆயிழை கணவ னாவான (புறம. 138: 8). 'தழைத்த மயிலின் பீலி ஒன்றாகக் குவிந்தாற் போனற உன் மனைவியின் ஒலி மென் கூந்தலுககுப் புகை கொள்ளுவித்துத் தண்கமழ் மாலையைச் சூட்டுக' எனப பேகனை அரிசில் கிழார் வேண்டுகிறார் (புறம. 146: 9,10). ஒலி மென கூந்தலையுடைய அரிவை சீறூரில் நடுகல் தொழுது பரவினாள் (புறம். 306:3,4). கடல் சார்ந்த நெயதற் பகுதியில், சிறு வெள்ளுப்பைப் பெருங்கல் நாடு களுக்குக கொண்டு செனறு விற்றுவரும் உமணர் தம் குடி ஒலிக்கும் (புறம். 386: 16,17). திருக்குட்டு வன் ஒலி வாய்ந்த கதிர்கள் பொருந்திய கழனிகள் சூழ்ந்த வெண்குடை என்னும் ஊர்க்குரியவனா வான் (புறம். 394:2,3). ஊர், ஒலி தெங்கும் மருதும் பூம்பொய்கைகளும் உடையது (பதி. 13: 7-9). ஒலி நெடும் பீலி ஒல்க மெல்லியல் களிமயில் அகவும் (நெடு. 97-99). ஒளி பொருந்திய நெற்றியினையும ஒலி மென் கூநதலையும் உடையவள் தலைவி (குறி. 1,2; அகம். 191: 15, 16; 334: 16,17; நற். 139: 7). தலைவி புலிப்பல் கோத்த புலம்பு மணித் தாலியை யும் ஒலி வாய்ந்த அசோகந்தளிரால் ஆகிய தழை யுடையால் மாணபுறும் அல்குலினையும் உடைய வள் (அகம். 7: 18,19). ஒலி மூங்கில் ஒன்றொடு ஒன்று உரசித்தேய்வதால் எழும் ஒள்ளிய தீபபொறி காட்டினை அழித்தல் (அகம். 39: 6,9). சூறாவளியால் கொழுந்து விட்டெரியும் காட்டுத்தீ, ஒலிதலையினை யுடைய மூங்கிலை ஒலியுணடாகத் தாக்கும் (அகம். 47: 3-5). தலைவி தோழியரோடு செனறு, புலிபுலி எனறு ஆரவாரித்து ஒலி கிளைகளை யுடைய வேங்கையின பூவினைக் கொய்வ்ள் (அகம். 48: 5-7). நெறிசெல வம்பலர், இரும்புலி தின்று துறந்த மானுணங்கலை ஒலி மூங்கில் அரிசியொடு சேர்த்துத் தயிரினைப் பெய்து சமைத்த வெணசோற்றினைத் தேக்கிலையில் வைத்து உண்ணுவர் (அகம். 107:4-10). வேனில் வெங்காட்டில் விரைந்தடிக்கும் காற்று ஒலி மூங்கிலின் கணுக்களைத் தாக்கித் தீப்பொ றியை எழுப்பியது (அகம். 153: 8-10). ஒலி தண்டினை யும் நெறகளையும் உடைய மூங்கில மறவர்தம் வில் அம்பினால் பிளந்திடப் பசுமையற்று வாடியது (அகம். 185: 6-8). தளிரவிளங்கும் வேங்கை மரத்தின் ஒலி பொருநதிய பெருஞ்சினையில் தங்கிய தண் துளிகளைக் காற்று பெஃலென வீசி உதிர்க்கும் (அகம். 298.4-6). மௌனமைத் தன்மையுடன் ஒலி கூடிய தலைவியின் கூந்தலைத் தாய் பன்முறை நோக்குவாள் (அகம். 302:14,15). 'மாலையின் மணங் கமழும் புதுமையுற ஒலித்த கூந்தலை யுடைய இன்னகை இளையோள் ஆரத் தழுவிக் கொள்ளு மாறு தலைவன் மலர்ந்த மாாபு மன்னுக' எனத் தோழி வாழத்தல் (அகம். 314: 20-22). தலைவியை 'ஒலி பல கூநதலையுடையாய்' எனத் தோழி விளித் தல (அகம். 356: 16). 'நினது ஒலி கூநதலைப் புனைக' என்று செவிலி தன்மகளிடம் கூறுதல் (அகம். 369: 11). கழாஅர் முன்துறை, ஒலி கதிர்களை உடைய கழனிகளைக் கொணடது (அகம்.376:4). அழகு மிக்க மயிலின ஒலி பொருந்திய தோகையினை ஒத்த, மயிர்ச்சாந்து பூசிய தணணறுங் கூந்தலை யுடையவள் தலைவி (அகம. 393:22, 23). மயிலின் தோகையன்ன தலைவியின் ஒலிமென கூந்தல் தலை வனுக்கு உரியது (குறு.225.6, 7). காட்டாற்றின் கரையில் ஒலி நெடுந்தோகை அசைய நடந்து ஆடும் மயில்கள் அகவும் (குறு. 264:1-3). காற்றுச் சுழன்று வீசும் காட்டில ஒலி (தழைத்த) வலிய ஈத்த மரங்கள் உள்ளன (நற். 2:2). வெண்மணற்படப் பையில் ஒலி (தழைத்த) முற்றிய பனையோலை யோடு முட்களைச் சேர்த்துக் கட்டப்பட்ட வேலி யகததுப் பனைமரங்கள் உயர்நது வளர்ந்தன (நற். 38:8-10). ஒலிகதிர்களையுடையதினைப்புனம் காவல் புரிந்தபோது தலைவன தலைவியின சிறுபுறம் தழுவுதல் (நற். 128:6-9). அரிசிலாற்றின் கருமணல் போன்றது தலைவியின் விரிந்த ஒலி கூந்தல் (நற்.141: 11-12). தலைவியின் தாழ்ந்த ஒலி கூந்தலைப் போல மேகம் கால் வீழ்த்தது (நற். 197:5, 6). தன், ஒலி பல் கூந்தலில் அழகுபெறப் புனைந்த கோதையை வாடும்படி செய்த பகைவன் தலைவன் என ஊட லில் தலைவி கூறுகிறாள் (நற். 260:8-10). தலைவி மயிலின் கலாபம் போன்ற ஒலிமென் கூந்தலை யுடையவள் (நற். 265:8, 9). தலைவி வேங்கையின் புதுமலர்களை மிக அழகு பொருந்திய ஒலி பல் கூந்தலில் அணிபெறச் சூடுதல் (நற். 313:1-4). நிலா நாளில் ஒலி பேர் ஒலியுடன், தெருவெங்கும் கூடி ஊர் திருவிழாக் கொண்டாடும் (நற். 348:2-4). விழா நாள் போன்று நறுமணம் கமழும் ஒலி கூந்தலையும் மாமை நிறத்தினையும் உடையவள் தலைவி (ஐங். 306:4). தலைவி கண்டவரை வருத்து கின்ற விரிந்த ஒலி கூந்தலையுடையவள் (கலி.64:5,6). அகன்ற வயலிடத்தே ஒலி செந்நெற் கிடையே

தாமரை பூத்திருந்தது (கலி. 79:1, 2). தலைவி பூப போலுங் கண்ணையும் ஒலி ஐம்பாலினையும் உடையவள் (கலி. 140:22, 23). பலவாய ஒலி கூந் தலை யுடையாள் ஒருத்தி தன் பண்பெல்லாம் ''ய்த்துத் தன்னைத் துறந்தவனை உள்ளி நெட் டுயிர்த்தாள் (கலி. 145:7, 8). முருகப் பெருமான், தேர்ச் சக்கரம் போன்ற ஒலி கடப்பமலர் மாலையை அணிந்தவர் (பரி. 5:81). மகளிர் ஒலி துயல் இருங கூந்தலை உடையவர் (பரி. 22:46). நீலமணி போன்ற நிறமும் அழகும் நெறியும் செறிந்து ஒலி பொலி கூந்தலை யுடைய மகளிர் தங்கணவ ரோடு வநது குளவாய் அமர்ந்துள்ள திருமால் கோயிலை வணங்குவர் (பரி. தி. 1:60-63).

2. ஓசை. பகைவர்தம் இனநிரை செலலும் இடத் தைப் பார்த்துக் கையாற் சுட்டி மெல்ல எண்ணி, வில்லாலே கொணடு வந்த கரந்தை மறவன, பால் பெய்யப் படாமையின் வெண்முகம் தோன்றாத பானையொடு விடியலில் மத்தொலியும் வெட்சியார் நாட்டில் கேளாது அவ்வானிரையைப் பிறர்க்கு வழங்கினான் (புறம். 257:8-13). செழுமையுடைய மனையில் நிணம் பொருந்திய இறைச்சியை வேக வைத்துத் தாளிதம் செய்யும் ஓசை கடல் ஒலி போன்றிருக்கும் (பதி. 21:10-12). கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவனின், ஒன்றோடு ஒனறு கலத்தலை யுடைய முரசின் முழங்கொலி கேட்ட பகைவர் அஞ்சி யோடினர் (பதி. 50.10). குடககோ இளஞ்சேர லிரும் பொறையின் படை யிருககை, பலவேறு குரலையுடைய பறவைகளின் ஒலி எழுந் தது போனற ஆரவாரததை உடையது (பதி. 84: 20,24). கடலுடன் காவிரி கலக்கும் ஒலி மலிந்த புகார் முகத்தே பரதவர் தீது நீங்கக் கடலாடினர் (பட். 97-99). மகளிர் ஒலி செய்யும் மூங்கிலாற் செய்த தட்டையைப் புடைத்துப் புனங்களில படியும் கிளிகளை ஓட்டுவர் (மலை. 328,329). வில் லின் ஒலிக்கு அஞ்சின செங்கண் மரையேறு குறுங். காட்டில் விரைந்தோடும் (மலை. 406,407). 'குதிரை பூட்டிய தேரொலி கேட்பின் திரிமருப்பு ஏற்றொடு பிணைமான் நடுநாளிற் கொணட புணர்சசி நிகழ மாட்டா' எனத் தலைவன் பாகனிடம் கூறினான (அகம். 134:9-14). கிளைத்துச் சூல்கொண்டு இறைஞ் சிய கதிர்களையுடைய வயலின் நெல் ஒலி செயயும் பசிய பள்ளங்களைத் துழாவி வாடைக் காற்று வீரைந்து வீசியது (அகம். 243:6-8). பெருஞ்சுற்றத் தோடு கூடிய கூத்தர், மழைபெய்யுங்கால நீரின் கண் எழுப்பும் தேரையின் ஒலி போலத் தாளம் அமைத்துச் சிறுபல்லியம் இயக்கிப் பல ஊர்களில் கூத்தாடுவர் (அகம். 301:18-23). தேரில் கட்டப் பட்டிருக்கும் குதிரைகள் ஒலி தரும் நாவினை யுடைய மணிஒலிக்க ஓடும் (அகம். 344:8,9). வலம் புரி முத்தினை மூழ்கி எடுத்த பரதவர் ஒலியைத் தன்னிடத்தே யுடைய சங்குகள் ஆர்க்கும்படி படகை விட்டு இறங்குவர் (அகம். 350:11-13). தினைப்புனங் காப்பார் விடும் கவண் கல்லின ஒலிக்கு அஞ்சிய காட்டு யானை பசும் மூங்கிலைக் கைவிட்டுச் செலலும் (குறு. 54.2,3). தலைவன் ஒலி எழும வெள்ளருவி இழிதரும் மலைநாடன் (குறு. 88.1). ஓங்கு மலைச்சாரலில் ஒன்றோடு ஒன்று உராய்ந்து ஒலி எழுப்பும் மூங்கில் ஓங்கி வளர்ந்திருககும் (குறு. 253:5). உப்பங்கழியில் இரை தேர்ந்துண்ட குருகு அடைகரையில் தாழையிடததே கூடிப் பெருங்கடல் அலையின் ஒலியில் துஞ்சும் (குறு. 303: 1-3). புது மழை நிரம்பிய பள்ளங்கள் தோறும் தவளை கறங்குதலானே தலைவன் வரும தேரிற் கட்டிய மணி ஒலியைத் தலைவி கேட்க முடிய வில்லை (நற். 42:3-5). செவ்வேர்ப் பலாவின் சுளை யுடைய முன்றிலில் மனைவி இரவுப்பொழுதில் வெள்ளிய அருவியின் ஒலி கேட்டு உறங்குவான் (நற். 77:4-6). பாக்கத்திலுள்ள கூடியினர் இரவில் கடலலை செய்யும் ஒலிகேட்டுத் துயில்வர் (நற். 159:9-11). புள்ளினங்கள் செய்யும் ஒலியைத் தலை வன் தேரிற்கட்டிய மணியோசை எனக கருதித் தலைவியின் நெஞ்சழிந்தது (நற். 178:9). மெலல வருதலின் இனிய ஒலி யிழந்த குதிரை தண்ணிய இளம்பயிர்களை மிதித்து வரத் தலைமகனது தேர் வந்தது (நற். 181:10-12). ஒலி செயகின்ற பெரிய கடற் பரப்பினையுடையவன் தலைவன் (நற். 254:5). தலைவனின் தேரிற் கட்டப்பட்ட சிறிய நாவினை யுடைய மணியின் தெளிந்த ஓசையைப் போல மீனைத் தின்னுதற்கு வநது கூடும புள்ளின் குரல் ஒலி இருநதது (நற். 267:9,10). நள்ளிரவில் பறவையொலியைக் கேட்குந்தோறும், தலைவன் ஊர்ந்து வரும் தேரின மணியோசையோ என் றெண்ணிய தலைவி துயில் மறநதனள் (நற். 287:9-11). ஒலிகள் அவிந்து அடங்கி இரவு நடுயாமம அடைந்ததும் பாக்கத்திலுள்ளார் துயினறனர் (நற். 303:1,2). 'புன்னை மலரில தேனுணட வண்டி னங்கள் ஒலிப்பதால், தலைவன ஏறி வருகின்ற தேரின் ஒலி கேட்பது அரிதா யிருககினறது' எனத் தோழி கூறினாள் (நற். 311:9-11). கடலும் ஒலி யடங்கி விட்டது (நற். 319:1). திங்களும் வானில் எழுந்து தோன்றும், பொங்கு திரைககடலும் ஓசை யடங்கவில்லை; ஓதமும் ஒலி மிகுநத கரையை மோதிச்செலலும் எனக் கூறிபபிரிவினால் தலைவி வருந்துதல் (நற். 335:1-3). அடும்பின் கொடிகள் துண்டுபட ஆழி செலுத்தி வரும தலைவனுடைய

தேரின் இனிய ஒலி இரவு இத்துணைப் பொழுதாகியும் தோன்றிய பாடில்லையே' எனத் தலைவி வருந்தினாள் (நற். 338:2,3). பெருங்கடற்கரையில் வாழும் சிறுவெண்காக்கை கழியின்கண் எழும் நீர்த்துவலையின் பேரொலியைக் கேட்டு உறங்கும் (ஐங். 163:1,2). தொண்டிப் பட்டினத்தில் உள்ள கடலின் ஒலியுடைய அலைகளைப் போன்று இரவிலும் தலைவியை எண்ணித் தலைவன உறங்கவில்லை (ஐங. 172.2-4). தலைவியின் சிறு நுதல் இனிய ஒலி உடைய தொண்டி போன்றது (ஐங. 179:3,4). வேனிற் பருவத்தே அரச மரதது இலைகளின ஒலிககு அஞ்சிய பறவைகள் அம் மரத்தின் பழஙகளை உண்ணாது வேற்றிடம் செல்லும் (ஐங். 325:1,2). உருமேறு இடித்தலால் எழும் ஒலி நறும்பூஞ் சாரலில் ஒலிப்பதால அங்கு வாழும் சிறுகுடியினர் உறக்கம் கலைந்து எழுவர் (கலி. 45:5-7). கார் காலத்துக் கடிய உருமேற்றின் ஒலிபோல இசைக் கருவிகள ஒலித்தன (கலி. 105:24). 'வருநதி யுயிர்க்கும் தலைவியின் பொருட்டு ஓடுகின்ற ஒலியினை யுடைய தேரை விரைந்து செலுத்துக எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாவினாள் (கலி. 135:19,20). திமில் களிறாக, திரையொலி பறையாக, புள்ளினம் காலாட் படையாக, வேநதன் பகைமேல படையெடுத்துச் சென்றது போல் கடல் திகழ்ந்தது (பரி. 149.1-3). திருப்பரங்குன்றத்தில் செவ்வேளைப் பணிய வந்தவருள் சிலர் யாழினது நாண் குரல் ஒலித்த அளவிலே அத்தாளத்திற்கு ஏற்ப முரசின் ஒலியை எழுப்புவர் (பரி. 19:44,45). வையைப் புதுநீர் வருகையை மக்கட்கு உணர்த்த ஊர்கள் தோறும் பறை ஒலி எழுந்தது (பரி.20:13,14).

3. ஆரவாரம். நீண்டொலி (பெரியதாய் ஆரவாரிக்கும்) கடல் குறையுமாறு முகில் நீரை முகத்தல் (புறம். 161:1). பழுத்த மரத்தின் கண்ணே புள்ளினம் ஒலித்தாற்போன்று (பண்ணன் இல்லத்தில) ஊண் ஒலி- உண்ணுதலால் உண்டாகிய ஆரவாரம் - கேட்கும் (புறம்.173:3,4). ஒரு தலைவனின் மனைவி, பாணர் களை உண்பிக்கவும் பரிசிலரை ஓம்பவும் அவர்கள் உண்பதனால் உண்டாகும் ஒலி நீங்காதிருந்தது (புறம். 334: 6,7). கடலினது ஒலி கொண்ட தானையை யுடையவன் வேந்தன் (புறம். 377: 29, 30). கரும்பனூர் கிழான் ஒலி மிக்க வெள்ளருவி பொருந்திய வேங்கட நாட்டின் தலைவன் (புறம். 381:22,25). மருதநில நாடு ஒலி உடைய பல விழாக்கள் மலியும் புது வருவாயினை உடையது (பதி. 22:30,31). களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைப் பகைத்த பகைமன்னருடைய மறவர் நிலைபெற்ற மதிலிடத்தே ஊக்கமிழந்து ஒலி அவிந்து ஒடுங்கினர் (பதி. 40:8). கடலின்கண் இறாலைத் தின்று கடற்கரை யிடத்துப் புன்னையில் தங்கிய நாரைகள் திரை யொலிக்கு வெருவிப் பனைமடலிலே சென்று தங்கும் (பொரு. 203-207). அகன்ற உலகம், உயர்ந்தெழும் அலைகளை உடையதும் நீர்ப்பரப்பை உடையதுமான ஒலியுடைய முந்நீரை எல்லையாகக் கொண்டது (மது.1-4). போர்க்களத்தில் பேய்மகளிரின் இணைத்த ஒலி மிக்கு முழங்குகின்ற துணங்கைக் கூத்தின் சீர்க்கு ஏற்பக் குறைத்தலைப் பிணம் எழுந்து நின்று ஆடியது (மது. 25-28). சிறிய குடிகளாய்ப் பெரிய தொழில்களைச் செய்வாருடைய ஒலி ஒழியாத புது வருவாயினை உடையது முதுவெள்ளிலை என்னும் ஊர் (மது. 118-122). தென்றிசைக்கண் வாழும் பரதவர் வஞ்சினம் கூறுபவர்; ஒலி உடைய குடியிருப்பினை உடையவர் (மது. 143,144). தண்பரங்குன்றில், விழாக் கொண்டாடும் ஆரவாரமும் புதுநீர் விழவின் ஒலியைத் தம்மிடத்தே கொண்ட மகளிர் கூட்டம் தத்தம் கணவரொடு நீராடும் ஓசையும் மிக்கன (மது. 264-266). கள் விற்கும் மனை முற்றம், மீனைத்தடிந்தும் இறைச்சியை அறுத்தும் அவ்விருவேறு தசையினையும் பொரிக்கும் ஒலி உடையது (பட். 176,177). அருமறைச் செய்தி பேச இராமன் ஆலிலிருந்த புட்களின ஆரவாரத்தை அடக்கினாற் போல, வதுவை கூடியதால் அழுங்கல் ஊரின் அலர் ஒலி அடங்கியது (அகம். 70:15-17). கொடைக் கடன் ஏற்ற கோடாத நெஞ்சினை யுடைய உதியன் என்பானது அட்டில் போல அருவிகள் ஒலி மிக்கு மலையினின்று இழியும் (அகம். 168:6-8). ஒலி மிகும் அலைபொருந்திய கடலில் உப்பை விளைப்பார் உமணர் (அகம். 169:5,6). பெருஞ்சோற் றுதியன் சேரலாதன் மேற்சென்று செய்த ஒலி மிக்க போர்க்களத்தில் இயவர் ஆம்பலங் குழலினை இசைத்தது போலத் தலைவி ஏங்கி அழுதாள் (நற். 113:9-12). ஒலி செய்யும் வெள்ளருவி இழியும் ஓங்குமலை நாடன் தலைவன் (ஐங். 205:3). 'எம்மனையை நீ மணஞ்செய்யக் குறித்த மனையாகக் கருதி ஒலி செய்து கொண்டு பொலிக பொலிக எனக்கூறிப் புகுந்த நின் புலைத்தொழிற் பாணனை யாங்கள் கண்டனம்' எனக் காமக்கிழத்தி தலைவனிடம் ஊடினாள் (கலி. 68:18,19). அணிகலன் ஒலிப்ப ஓடும் விளையாட்டு மகளிரின் ஓதைக்கு ஆரல் மீனைத் தின்ற பறவைக்கூட்டம் அஞ்சி உயர்ந்த கிளையிலேறி மகளிர் அலைத்த நோயைத் தமர்க்கு உரைப்பன போல் பல்குரல் பயிற்றும் உயர்ந்த போர்களால் உண்டாகிய ஒலி உடைய நல்ல ஊரன் தலைவன் (கலி. 75:3-9). 'ஆயி

ழையாகிய பரத்தை ஆர்க்கும் ஒலி கேட்டுத் தாழாது நீ எழுந்து போனது தவறாக அமையுமோ' எனக் காமக்கிழத்தி தலைவனைச் சினந்து கேட்டல் (கலி. 90:13,14). புள்ளினம் இரைமாந்திப் புகலிடம் சென்றமையான் வள்ளிதழ் கூம்பிய உப்பங் கழி ஒலியடங்கித் துயில் கொள்வது போல் தோன்றல் (கலி. 121:4-6). அந்திப் பொழுதில் முக்கோல் அந்தணர் முதுமொழியை நினைவார் போல நாரையினம் ஒலியைக் கைவிட்டு மணல் மேட்டில் தங்கியிருக்கும் (கலி. 126:3-5). மிக்க ஒலியினை யுடைய மறமிக்க தானையால் பகைவர் உயிரை அகற்றும் விறல்மிகு வலியும் ஒலியும் பொலிந்து புழுதியை உழுமாறு போலப் பகைவர் மார்பினை உழும் கலப்பைப் படையை உடையவன் பலதேவன் (பரி. 13:30-33).

4. சொல். திருமாலின் உருவமும் ஒலியும் - சொல்லும் - விசும்பின் கண்ணே உள்ளன என்று கடுவனிளவெயினனார் குறிப்பிடுவர் (பரி. 4:31). தம்முள் பகைத்து எழுந்து போர் செய்த மன்னவர், அப்போரினை ஒழித்துச் சந்து செய்ய மனத்தான் இயையினும் உலக மாந்தரிடையே எழும் ஒலிக்கு (பழிச்சொல்லுக்கு) அஞ்சிப் பின்னும் வருநதி நிற்றல் (பரி. 10:59-62).

5. இசை. குழலின் ஒலி – இசை - எழ முழவு, மத்தரி முதலிய இசைக்கருவிகளின் தாளத்தை நிருத்தத்தின்கண் ஒக்கத் திகழும் ஆடன மகளிா தம் நேரிறை முன்கையால அதனைச் சீர்தூக்கி அளந்து நின்றனர் (பரி. 12:40-44).

**ஒலியல்** - 1. தழைத்தல். இருங்கோவேளைக் கபிலர், 'ஒலியல – தழைத்தல் - பொருந்திய கண்ணியை உடைய புலிகடிமால்' என விளித்தல் (புறம். 201: 15;202.10). ஒலியல் பொருந்திய நீண்ட கூந்தலைக் குறமகள் கையாற் கோதிக் கொண்டு பெரிய மலைச்சாரலில் குறிஞ்சிப்பண் பாடினாள் (அகம். 102:4-6).

2. வளையமாலை. பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வேம்பின் தளிரை உழிஞைக் கொடியுடனே விரவிச் செறியத் தொடுக்கப்பட்ட கண்ணியை ஒலியல் மாலையொடு - வளைய மாலையொடு - சூடிப் பொரச சென்றான் (புறம. 76:4-7,13).

3. மாலை. செவ்வேளின் உடையும் ஒலியலும் - மாலையும் - சிவந்த நிறமுடையன (பரி. 19:97).

**ஒழுக்கம்** - 1. ஒழுக்கநெறி. தந்துமாறனிடம் சங்கவருணர், 'நாடோறும் நினக்குரிய ஒழுக்கத்தில் குன்றாதொழிக, பரிசில் நச்சுபவரை ஓம்புக' என்று அறிவுரை கூறியுள்ளார் (புறம். 360:13,14). அந்தணர், சிறந்த வேதங்களை விளங்கும்படி ஓதி, விழுமிய தலைமையொடு பொருந்திய ஒழுக்கம வாய்ந்து, உலகிற்கு ஒருதாமாகி, உயர்நிலை உலகத்தை இங்கிருந்து எய்தும் அறநெறி பிழையா அன்புடைய நெஞ்சங் கொண்ட பெரியோராவர் (மது. 468-474). அமணர் சென்ற காலத்தையும் வருகின்ற காலத்தையும் இன்று இவ்வுலகினில தோன்றிய ஒழுக்கமொடு நன்கு உணர்ந்தவராவர் (மது. 477,478). நல்லோர் குழுமிய அவைக்களத்தே புதியவர் தாம் கற்றவற்றை மனங்கொளக் கூற மாட்டார் ஆயினும், அதனை மறைத்து அப்பொருளைத் தப்பின்றாக எல்லார் மனமும் கொள்ளும் படி சோர்வின்றி விளக்கிக் காட்டி நன்முறையில் நடக்கும் ஒழுக்கம் வாய்ந்தவரைச் சுற்றமாகக் கொண்டவன் நன்னன் (மலை. 77-80). தொன்றியல் மரபில் நீ தலைவியை வரைந்து கொள்ளும் ஒழுக்கத்தினைக் கண்கொள நோக்கி யாம் அயல வீருந தினர் போல அவளது புது நாண ஒடுக்கமும் காணுவோம்' எனத் தோழி தலைவனிடம் கூறி வரைவு கடாயினாள் (அகம். 112:16-19). வெஞ்சொற் கூறும் சேரிப் பெணடிர், பழியிலலாதவ ரிடத்தும் பழியேற்றிப் பலரிடமும புறங்கூறித் திரியும் அம பல் ஒழுக்கத்தை உடையவ ராவர் (அகம். 115.2-4). அறனலலவற்றை எனறும் விழையா உள்ளம் விழையினும், தாம கேட்ட கேள்வியறிவை அங்குசமாகக கொண்டு உள்ளமாகிய யானையை மீட்டு, அறனும பொருளும் வழுவாமல ஆராய்நது தம் தகவுடைமை நோக்கி உயர்ந்த நெறியில் நிற்றல பெரியோாது ஒழுக்கமாகும் (அகம். 286:8-13). தன் கொழுநனது குடி வறுமை எய்தியது எனத் தந்தையினது செலவ மிக்க உணவை நினையாளாய வேளை விட்டு வேளை உண்ணும் வன்மை யுடையவளை நோககி 'இந்த அறிவும் ஒழுக்கமும் எங்கு உணர்நதனள்' என்று நற்றாய் உடனபோய தன் மகளை வியந்து வருந்திக் கூறினாள் (நற. 110:9-13). முககோற் பகவராய அந்தணர் கமண்டலம் பொருந்திய உறியினையும் முக்கோலையும் தோளிலே வைத்து, குடை நிழலிலே வெம்மையான காட்டிடத்தே போதலை இயல்பாக உடைய ஒழுக்கத்தினை உடையவர் (கலி. 9:1-5). குறறமின்றி மாணபுறற ஒழுக்க நெறியால் பகைவர்க்குக கொடுமையும் தன்னிழல் சேர்ந்தார்க்கு நன்மையும் செயதமையால் உலகில் வாழவோர் அனைவரும் முரசுடை மன்னனைத் தொழுதேததினர் (கலி. 100:2-6). மன்னவன் தன் விளங்கிய ஒழுக்கத்தால் நனனெறியில உயிர்களைக் காத்துப பின்னர்த் தொல்வினைப் பயனைத் துய்க்கத் துறக்கம் வேணடிச் சென்றது

போல் பகலைக் கழித்து ஞாயிறு மலையைச் சேர்ந்தது (கலி. 118:1-4). பொருளில்லாதோர் நிகழ்த்தும் இல்லற ஒழுக்கம் போல் இருங்கழியின் மலாகள் கூம்பின (கலி. 148:6).

2. நீரொழுகுதல். கோடைக் காலமாயினும் தப் பாது ஒழுக்கம் - நீர் ஒழுகுதல் - உடைய காவிரி புரக்கும் நன்னாட்டுப் பொருநன் கிள்ளிவளவன் (புறம. 393.22-24).

**ஒழுக்கு - 1. வரிசை.** மழை பெய்யும் காலத்தைப் பார்த்துத் தம்முட்டைகளைக் கொண்டு சிறுநுண் எறும்பு ஒழுக்கு-வரிசை-உடன் மேட்டுநிலத்தினை யடையும் (புறம. 173.5-7). கடற்கரையின்கணணே நின்று, சங்குகளைக் குலையாகத் தொடுத்தாற் போனற குருகுகளின் ஒழுக்கு எண்ணிப் பகற பொழுதைத தலைவனுடன் தலைவியும் தானும் போகியதாகத் தோழி கூறினாள் (நற். 159:3-5).

2. ஒழுகுதல் பழையன் எனபானது மோகூரிடத்து மழை ஒழுக்கு நீடையறாததால் விளையுள் பெருகியது (மது. 507,508).

3. நீட்சி. சேரனது கொல்லிமலையின் மூங்கில் ஒழுக்கு-நீட்சி-போன்ற பருத்த தோளினை உடையவள் தலைவி (அகம். 213:16).

**ஒழுகை - சகடம்.** பாரி மகளிர் ஈத்திலையை யுடைய குப்பையின்கண் ஏறி உமணர் உப்புச் செலுத்தும் ஒழுகையை-சகடத்தை-எண்ணுவர் (புறம். 116: 7,8). செங்குட்டுவன மோகூர் மன்னனின் முரசங் கொணடு அவன காவல் மரமாகிய வேம்பினை அடியோடு வெட்டி வீழ்த்தி ஒழுகையில் ஏற்றி யானைகளைப் பகடுகளாகப் பூட்டிச் செலுத்தினான் (பதி. 44: 14-17). செங்குட்டுவன் பழையன் என்பவனின காவல் மரமாகிய வேம்பினது அடி மரத்தை வெட்டி மங்கல அணிகளை இழந்த பெணடிரின் கூந்தலைக் களைந்து திரிக்கப் பெற்ற கயிற்றினால் யானைகளை ஒழுகையிற் பூட்டி அக்காவல்மரத்தை அதன் மேலேற்றித் தனது கோ நகர்க்கு எடுத்துச் சென்றான் (பதி. ப. 5: 13-17). வலிய எருத்தினை யுடைய உப்புவணிகரின் ஒழுகையொடு வந்தமந்தி கிளிஞ்சலில் முத்தினை யிட்டுக் கொற்கைத் துறைமுகத்தில் அவ்வணிகர்தம் புதல்வரொடு கிலுகிலி யாடும் (சிறு. 55-62). முடலை யாக்கை முழுவலி மாக்கள் நுகத்தின்கண்ணே எருதுகள் பூட்டிய உமணரின் உப்பு ஒழுகையைப் பக்கத்தே யிருந்து காத்தனர் (பெரு. 61-63). நுளையர்கள் வலையில் மீன்களை முகந்து சுற்றத் தாருடன் உப்பு வாணிகர் செலுத்தும் ஒழுகையில் பூட்டப் பெற்ற எருதுகளைப் போலக் கூடி ஆரவாரம் பெருக இழுத்தனர் (அகம். 30:1-7). உப்பங் கழிகளில் விளைநத வெண்கல்லுப்பினது விலை கூறும் உப்பு வாணிகர் தம்முடைய ஒழுகையில் பூட்டப் பட்ட எருதுகள் பலவற்றையும் நாற்றிசையிலும் மேயவிட்டு ஓய்வுபெறச் செய்தனர் (அகம். 159: 1-4). ஒழுகையை எருதுகளின் கழுத்தில் பிணித்து யாற்றின்கரையில் அசசகடங்களை ஏற்றுகின்ற பொழுது அவ்வெருதுகளை உமணர் உரப்பும் ஒலி கேட்டு அஞ்சி உழைமானும் பிணையும் ஓடின (அகம. 173: 9-11). உப்பு வாணிகரது ஒழுகையொடு வந்த கோழிப்பேடை அஞ்சி ஓடக் கடலில் இடிபோலும் ஒலியுடைய அலை யெழுந்து விழும் (அகம். 310: 14-16). உமணர் பகடுகளை நுகத்தில் பிணித்து ஒழுகையை இரவில் சுரநெறியில் ஓட்டிச் செல்வர் (அகம். 329: 5-7). உப்பு வணிகரின் எருதுகள் பூட்டிய ஒழுகையின் தொகுதியை வரிசையாக நிறுததினாற் போன்று காட்டில் உலர்ந்த மரக்கிளைகள் தோன்றின (குறு. 388: 4,5). மருத நிலத்து உமணர் தம்நாட்டில் விளைந்த நெல்லை எடுத்துச் சென்று நெய்தல் நிலத்தில் விற்று ஆங்கு விளைநத உப்பைப் பெற்றுக் கொணடுபோய் விலைகூறி நீண்டநெறியில் ஒழுகையை ஓட்டிக் கொண்டு நிலாப் போன்ற மணற் பரப்பைக் கடந்து செல்லுவர் (நற். 183:1-3). கல்உப்புக்களை ஏற்றி நீண்ட வழிகளில் செலுத்தும் ஒழுகை நிரையாகச் செறிந்து செல்லுமாறு உரப்பி ஓட்டும் உப்பு வணிகரின் பேரொலிபோலத் தலைவனின நட்பு அலருக் கிடமாகின்றது எனத் தோழி கூறினாள். (நற். 354:8-11).

**ஒள்வாளமலை - வென்றிக்கூத்து.** ஞிமிலி என்பான் புள்ளிற்கு ஏமமாகிய பெரும்புகழ் அதிகனைக் கொன்று வாகைசூடி ஒள்வாளமலை - வென்றிக் கூத்து - ஆடினான் (அதிகனைக் கொன்று என்பதிலும் எயினற்கொன்று என்பதே சிறந்த பாடமாகக் கருதலாம்) (அகம். 142:11-14).

**ஒளி - 1. விளக்கம்.** ஒளி-விளக்கம்-மிக்கு நீரும் நெருப்பும் காற்றுமாகிய இவற்றின் மிகுதிப்பாடுகளை யொத்த சினம் பொருந்திய போரை யுடையவன் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதி (புறம். 51:3-4). உயர்ந்த கொம்பேந்திய மலையை யொக்கும் வலிய களிற்றை அதன் ஒளி விளங்கும் பட்டம் பொலிய ஏறிச் செம்மாந்து செல்லுதலை விரும்பிப் பெருஞ்சித்திரனார்குமணனிடம்யானைப் பரிசில் வேண்டினார் (புறம். 161:17-20). பிட்டங் கொற்றன், யானையது வெண்கோடு தந்த ஒளி விளங்கும் முத்தத்தை விறலியர்க்குக் கொடுப்பான் (புறம். 170:10-11). ஐவன நெல்லைக் காப்பார்

காவற் கிடப்பட்ட தீ அழியின ஒளி விளங்கும் மாணிக்கம் செறிவான இருளைப் போககும் வன் புலமாகிய மலைநாட்டை உடையவன பிட்டங் கொறறன (புறம. 172:7,8). விசும்பில் பல மீன்களும் ஒளி கெடும்படி ஞாயிறு தோனறும் (பதி. 64'12,13). கணகளின் இமைக ளிரணடினையும் குவிததுப பார்ததற்குக் காரணமாவதும கட்புலனால் நோககு வாா கணணிடங்கள் எல்லாவற்றினும் சென்று விளங்குவதுமாகிய ஒளியினை யுடையவர் முருகப் பெருமான (முரு. 3). பாடினி கிளியினது வாயொடு ஒபபினையுடைய ஒளிவிடுகினற உகிரினை யுடைய வள (பொரு 34,47). அதிகமான நெடுமானஞ்சி வலி யினை யுடைய சினம நின்றெரியும ஒளி திகழும் நெடிய வேலினையுடையவன (சிறு. 102,103). கடவு ளா வீதியுலா வருகையில எடுககபபடும் கொடிகள் காறறில அசைதலால மாடததின நிலாமுறறந் தோறும இருநது விழாககாணும் மகளிாதம ஒண குழை திகழும் ஒளிபொருநதிய திருமுகம தோனறி மறைதல (மது. 448-452). கரிகாற பெருவளததானை வழிபடாத வேந்தா அரசிழததலின் தாம் ஒளி யிழநது பினனர் அவ்வொளி தோனறும்படியாக அவனுடைய வீரககழலணிநத கால்களில் தம முடி படிய வணங்குவா (பட். 292-294). ஞாயிறறு மண் டிலம விளஙகும ஒளியினை யுடையது (அகம. 11.1). தெளளிய ஒளியினையுடைய அழகிய இடமகன்ற பெரிய வானம களஙகமற விளஙகத் திங்கள் உரோ கிணியைக கூடும நாளில திருமணம செயதல (அகம. 136 3,4,8). மழை பெயது நாளகழிநத வெணமேகம உயர்நத மலையில தவழும் வைகறைப பொழுது, புதலகள ஒளி சிறநதிருககக் காணடற் கினியதாய இருக்கும் (அகம. 139.6-8). முருகவேள் பவழததை யொதத சிவநத நிறததையும திகழும் ஒளியையும உடையவர் (குறு. க. வா. 2,5). அவரைப பூக்கள் கிளி யின்மூக்கினையொத்த வடிவோடு ஒளிவிடும தன்மை யன (குறு. 240:1,2). வெநதுகள பரநத சுரநெறியில தலைவனுடன போன தலைவியின மலா போனற கண்கள அநநெறியின வெமமையாலே சிவந்து ஒளி மழுங்கிக கலகக மடைந்தனவோ எனறு நற றாய மருணடு கூறினாள (நற். 66:5-7,11). தலைவி யின நுதலொளி பாமபினால் கவர்நது கொள்ளப் பட்ட திஙகளைப போல மஙகியது (நற். 128:2). ஞாயிறு ஆகாயததிலே பரநத ஒளியை யுடையது (நற். 163.9,10). ஒளியிழாய் எனறு தோழியைத தலைவி விளித்தல (கலி. 16:13;35:16). நீலமணி ஒளிவிட்டாற் போனற தலைவியது கூந்தலில நெயபூசித தாயர் அதனை ஐவகையாக முடித்த இளமைப் பருவததைத் தலைவன பாராட்டி னான் (கலி. 22:12, 13). யானை இலஙகொளி மருப்பினை யுடையது (கலி. 23.1). 'தலைவி குறிக் கும் இரவுக்குறிக்கண் நீ வருவை யாயின் ஆண் டுளள தினைக் காவலர் ஒளிதிகழும் கொள்ளி யேந்தியவராய்க் களிறு வந்ததெனறு ஆரவாரிப் பர்' என்று தலைவனைத தோழி விலக்கி வரைவு கடாவினாள (கலி. 52:11-14). விளங்குகின்ற ஒளி யினை யுடைய அணிகள் விளங்க அந்த விளக்கத் தால மினனல் என்னும் படியாகக் கைககிளைத தலைவன கணட காமஞ சாலா இளமையோள் பநதொடு ஒதுஙகிப் புறபபட்டுச் சென்றாள் (கலி. 57:3, 4, 7). கூடின மகளிர் புனலாடுதறகுத தெப்ப மாகிய தலைவனது மாாபில, அபபுனலாட்டுப பெறாது ஊடின மகளிர் ஒளிவிட்ட சாதிலிஙகம் இருந்த செப்பினை எறிநதனா (கலி 72:15, 16). நீர்த துறையில் பகன்றைப பூவுடன வளாநத தாமரை முகை காண்போர் கண கூசுமபடி ஒளி விடட வெளளி வள்ளத்தாலே களளுணபவள முகம போலத தளைவிட்டு நெகிழநதது (கலி. 73: 1-5). திகழகினற ஒளியையுடைய முததை விளிம பிடத்தே அருமபாக அழுததிப பவழததாற செய்த வட்டப்பலகையைச் சுமநது நிற்குமாறு அமைத்த யானைப பாவையை ஈாதது வருமாறு தலைவி தன மகனை அழைததாள (கலி. 80.4-9). தலை வியை அடைவதறகு ஏறு தழுவிய பொதுவனாகிய முல்லைத தலைவன வலிமையினது ஒளியுடையவன (கலி. 102 36, 37). ஒருகுழையவனாகிய நமபி மூதத பிரானுடைய திருமாாபில விளஙகும் ஒளளியசிவநத மாலை போல ஒளிமிகும் செமமறுவினை யுடைய வெள்ளை யேற்றையும் பிற வணண ஏறுகளையும ஆயர் தழுவும பொருட்டுத தொழுவததில புகுத தினர் (கலி. 105.11-22). தலைவன ஒருவழித்தணநத காலததிலதலைவி ஒளளிய சுடரினையுடைய ஞாயிற றின மிகக விளக்கத்தால தன ஒளி கெடுகினற உசசிக காலதது மதி போல நலமிழநத முகத்தளா னாள(கலி.121:15-18). கானலதுறையிடத்து விளககம மிக்க நிலவை யொககும் வயஙகொளி எக்கர்மேல் ஓடி யாடிய நணடுகள் நம்மைக் கணடு அஞசி அளை புகுநதன எனத் தலைவி கூறல (கலி. 131: 17,18). தலைவி மழைககு நடுவே மினனலைப போல் தோனறித் தன ஒளியோடு உருவையும் தலைவனுககுக் காட்டி அவன நெஞசததை அவள புகும் வழியாகக் கொணடாள் (கலி. 139:5-7). விசுமபிடத்தும் ஞாலத்திடததும் பரக்கும பல கதிர்களை யுடைய ஞாயிற்றின ஒளியுள்ள இட மெல்லாம் காறறு செலலும் (கலி. 144:39-41) மந் திரங்களான் உயாந்த வேள்வித்தீயை முறையாக மூட்டி விளக்க மிக்க அவ்வொளியை யுடைய ஒண் சுடரினது பெருக்கததை உணடாககிக் கொளளு

கல் திருமாலினது வெளிப்பாடாகும (பரி. 2:63, 64,65). திருமால் ஞாயிற்றின் ஒளியுமாவார் (பரி. 3:67). வையையில நீராடற் கமைந்த அணிகளை யணிந்த ஆடவர் ஒளிதிகழ் பொன்னரி மாலை யினை யுடைய மகளிரோடு இன்புறும்பொருட்டுப் பாகோடு கூடிய இளமதுவினை நுகர்ந்தனர் (பரி. 11:62-66). இளவேனிற் காலத்தில் வையை யாறு ஒளிகிளர் வானத்தின்கண் விமானமுடைய வர் ஊர்ந்து திரியும் விமானங்களைக் காட்டும் தெளிந்த நீரோட்டததை யுடையது (பரி. 11:70-73). ஒளி திகழும் படப்பொறியினை யுடைய அச்சத் தைத் தருகின்ற நாகமெனப் பாம்பிற்குரிய அடை மொழிகள் அதன் பெயர்த்தாய நாகலிங்க மரத் திற்கு அமைதல் (பரி. 12:4). வையைப் புனலின் வருகையைக் கேட்ட மதுரை மகளிருட் சிலர் மின்ன லைப் போல் விளங்கும் ஒளியுடைய அணிகலன் களை அணிந்து கொண்டனர் (பரி. 12:9-11). திரு மால் நானிலத்தை நடுக்கமற எடுத்தற்குரிய இலங் கொளி மருபபின் களிறாகவும் (வராகமாகவும) வடி வெடுத்தவர் (பரி. 13:34 36). திருமால ஒள்ளொளி யினை யுடையவர் (பரி. 15:55). மிளிருகினற சுடர் வாய்ந்த விளங்கொளி நுதலாரும் ஒளியுடைய தலைக்கோல அணிகள் தங்கிய ஒண்ணுதலோரும் பிறமகளிரும் அவர்தம் ஆடவரும இடையறாது வந்து இருந்தையூரமர்ந்த செல்வனை வணங்குவர் (பரி. தி. 1:34,37,45). தெளிந்த ஒளியால் விளங்கும் சிலம்பினை அணிந்த மகளிர் தத்தம் கணவரொடு சென்று, குளவா யமாந்தானை வணங்கித் துன்பு நீங்கி இனபுறுவர் (பரி. தி. 1:61-63). விளங்குகின்ற ஒளியினை யுடைய பாற்கடலைக் கடைந்த காலத் தில் மத்தாக இருந்த மந்தர மலைக்கு நாணாகி யிருந்தவன (ஆதிசேடன) (பரி. தி. 1:64-71).

2. கதிர். பாசறைக்கண் வாள்கள் மழை மினனுப் போல மிக்க ஒளியோடு - கதிரோடு - வெற்றியுண் டாக மின்னி அம்புகளாகிய மழைத்துளிகள் பொழிந்தன (புறம். 372:3,4). மெல்லெனத திங்க ளாகிய சுடரும் தன ஒளியாகிய நிலவு குறையத் தொடங்கிற்று என்று இரவுப் பொழுதின் விடிவு கூறிக கிணைப்பொருநன சோழன குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைக் கிணை கொட்டித் துயிலெழுப்பினான் (புறம். 397:3-9). நூலாற்கட்டப் படாத நுண்மையையும் பிணக்கத்தையு முடைய பொன்னரி மாலையை வெள்ளிதாகிய ஒளியை யுடைய முத்தத்தோடே பாடினி யணியுமாறு கரி காற்பெருவளத்தான் பரிசில் வழங்கினான் (பொரு. 161, 162). வெப்பத்தையுடைய ஒளி சினம மாறிக் குறையும்படி ஞாயிறு மேற்குமலையில் மறையும் (மது.545-547). ஏனலஞ்சிறுதினை காக்கும் சேணோ னது கொள்ளிக் கட்டைக்கு அஞ்சிப் பெயர்ந்த யானை விண்மீன் வீழ்வதனா லுண்டான சுடரொ ளியைக் கண்டு வெருவும் (குறு. 357:5-7). பரதவர் இரவில் கொளுத்தும் நெருங்கிய கதிர்களையுடைய ஒண்சுடர் இளஞாயிற்றின் எதிரொளி போல் தோன்றும் (நற். 219:6-8). மலை நிலத்தில் பன்றி பறித்தலாலே வெளிப்பட்ட பலவான திருமணி களின் ஒளிதிகழும் விளக்கததில் கன்றை யீனற மடப்பிடி, தன்னைக் களிறு புறங்காப்பக் கன் றொடு வதியும் (நற். 399:4-7). ஞாயிற்றின் ஒளியை மூடிமறைக்க இயலாதது போல நேற்று நின் காதலி யைத் தழுவி நீ புனலாடிய அலரை மறைக்க இயலாது என்று தலைவி தலைவனொடு புலந்து கூறினாள் (ஐங். 71). இளவேனிற் காலத்தில வெயிலொளியைக் கண்டறியாத விரிந்த மலரை யுடைய குளிர்ந்த பொழிலில் குயில் கூவும் (கலி. 30:7,8). அழகிய குளிர்ச்சியோடு விளங்கும் ஒளி யாகிய பதினாறு கலைகளும் பொருந்திய நிறை மதியின் நிலவை உணவாக வுடைய அமரர்க்குத் திருமால் முதல்வர் (பரி. 3:51-53).

3. அழகு. 'மணல மேடாகிய கரையிடத்தே ஆயத் தாரோடு சென்று வண்டலியற்றி விளையாடினா லும் உன்ஒளி-அழகு-வாடும்' என்று தலைவியைத் தாய் இற்செறிததாள் (அகம். 60 7-15). தலைவியின் நுதல் ஒளிமழுங்கவும் தலைவன் ஊக்கத்துடன் பொருளீட்டுதற்காகப் பிரிந்தான் (அகம். 277:3,4). அரவினால் விழுங்கப்பட்ட மதிபோலத் தலைவியின் நுதல்ஒளி மழுங்கியது (அகம். 313:7). தலைவனிடத் துக் காதலால தலைவியின் மேனி ஒளி மிக்கு வேறு பட்டது (நற். 297:2). தலைவியின கூட்டத்தில் இடையறவுகொண்டு நீ பொருள்வயிற் பிரிவாய் எனக்கேள்விப்படுவாளாயின் அவள் நெஞ்சுடைந்து ஒளி கெடுவதோடு அமையாமல் இறந்து படுவாள் என்று கூறித் தலைவனைத் தோழி தடுத்து நிறுத் தினாள் (கலி. 10:8,9). தலைவியின் நுதல் தலைவன் அருள் செய்யுங்காலத்து ஒளிசிறநது அவன் அருள் செய்யாக் காலத்துப் பசந்து காட்டும் (கலி. 25:21,22). இளவேனிற் காலத்துக் காமன் விழாவில் தலைவி ஒளிகெடுமாறு தலைவன் பரத்தையருடனே விளை யாடுவான் (கலி. 30:13,14). தலைவன ஒருவழித் தணந்தகாலத்து ஊரிலுள்ளார் அலர் தூற்றுகையி னால் தலைவியின நறுநுதல் ஒளிகெட்டுப் பீர்க் கம்பூவின் அழகைத் தான்கொண்டு பிறையினது அழகை இழந்தது (கலி. 53:14,15). தலைவியைக் காதலித்துத் தலைவன் தன் ஒளிகெட உள்நோயுற் றான் (கலி. 59:14). ஒளி பூத்த நுதலினை யுடைய பரத்தையரோடு தலைவன் கூடுதலால் உண்டான பூணின்வடு அவனிடத்துக் கிடததலின் அவர்க்கும்

அவனுக்கும் ஓரணியாகப் பொலிவு தோனறியது (கலி. 66:19). தலைவனை நெடுநாள் பிரிநதிருக்கும் தலைவியது கெட்டுப்போன ஒளிபோலப பகற் பொழுது மாய்ந்து மாலை வந்தது (கலி. 143:39-41).

**4. நிறம்.** மகளிர் மார்பகத்துச் சுணங்கு வேங்கை மலரைபபோல் ஒளி-நிறம-திகழதல (புறம.352.12-14). விளங்கும் ஒளி வாய்ந்த நிழறகணுள்ள அறல போலக் குழனற கூநதலினை யுடையவள் தோழி (அகம. 265:7-9). தலைவியது உருததெழு வனமுலை யில ஒளி பெறுமாறு தலைவன தொயயில எழுதி னான (குறு.276.3,4). ஒளி பசநது மினனிழை நெகிழு மாறு மெலிநது தொன்னலம இழந்த என தோள இரஙகத தககது என்று தலைவி தலைவன் மீளாத நிலையில பருவஙகணடு கூறினாள் (ஐங. 455:3-5). திருமால்ன திருமேனியது விளககமிகக ஒளி சிறப பினையுடைய இருணட நீலமணியை யொக்கும் (பரி. 2.52). வையைப புனலாட்டில் பாயந்துவந்த ஒருததியின் மாவடுப்பிளப்பினை யொத்த மை விளங் கும் கணணொளியால் அந்தச செம்புனல் இருண்டு கரும்புனலாயிற்று (பரி. 7:57-60). காதற்பரததையது ஒளி கிளரும் உண்கண் அவள் கள்ளுணபதனாலும புனலாடுவதனாலும புலந்து நோககுவதனாலும் ஒள்ளொளி சிவநதது (பரி. 16:39,40). ஒள்ளொளி மணிபோலும் பொறியினை யுடைய ஆலும் மயிலை நோககி யிருந்த கானவனிடம் அதுபற்றி அவன் காதலி ஊடினாள் (பரி. 18:7-10).

**5. கலவியால் வந்த நிறம்.** வையையில் புனல் வந தமை கேடட மதுரை மகளிருட் சிலர் கண்ணா டியை விளக்கித தம வணணமும் தேசும் ஒளியும் - காதலா கலவியால் வந்த நிறமும் - அதன்கண நோககினர் (பரி. 12:19-21).

**6. நன்மதிப்பு.** பாசறைக்கண் உள்ள தலைவனின ஒப்பற்ற ஒளி - நன்மதிபபு - பகைவர் வெருவுதற குக காரணமாயிற்று (புறம். 309:5-7).

**ஒளியர் - ஒளிநாட்டார்.** [ஒளி நாடென்பது செநதமிழ் சேர்ந்த பனனிரு நிலத்தில ஒன்று (தொல. சொல. எச்சம். சூ. 4. நச்சா. உரை).] ஒளியர் - ஒளிநாட்டார் - பணிந்து ஒடுங்கத் திருமாவளவன தான் கருதிய போர்த துறைகளெல்லாம பொருது முடித்தான் (பட். 273,274).

**ஒளியோர் - கல்வியால் விளக்கமுடையோர்.** 'கபிலர் முத லிய ஒளியோர் - கல்வியால விளககமுடையோர் - பிறநது பாடிய இவ்வுலகத்தின்கண யாம் பாட மாட்டோம் என்று அடஙகியிருததலும் அரிது; அத னால் யாமும் இயனற அளவு நினனைப் பாடு வோம்' எனறு பொருநதி விளங்கிரனார் சேரமான மாந்தரஞ் சேரலிரும் பொறையைப் பாடினார் (புறம. 53:9-15).

**ஒற்கம் - 1. வறுமை.** தனக்குச சிறுவிளைவாக வந்த வர கினை முனனைக கடன நலகியவாககும பாணர்க் கும் கொடுத்துத தீர்த்த நெடுநதகை தன சுறறததா ரது ஒறகததை – வறுமையை - களைய வேணடிப பினனும தனனூர்ச சிறுபுல்லாளரிடம போய வரகு கடன இரந்தான (புறம. 327:2-7).

**2. தளர்ச்சி.** தனககு நேர்நத ஒறகத்துள் - தளர்சசிக் கண – உதவியவர்ககு ஓர் ஒறகம உற்றால 'தான் உதவாதவன தானே தானாகத தேயவது மன்றி அச்செயந நன்றிககேடு அவனுடமபினை ஒழிநது உயிர்போன விடததும அவனை நுகர்விககாமல போகாது (கலி. 149 5-7).

**ஒற்று - உளவு.** ஆறலை களவர் அமபெயதலால் இறநத வமபலரது புணணினினறு வழியும் குருதியைக் குடித்த காக்கைகள் ஒறறு - உளவு - அறிதறகுச் செல்லும் உளவாளிகளைப போல ஒடுங்கிய குரலின வாய அஙகுளள மனையிடத்தே சென்று தங்கும (அகம. 313:13-16).

**ஒன்றார் - பகைவர்.** ஒனறார் - பகைவா - தேயதத செலவ எனச் செவவேளை விளிதது, 'எம சுற்றத் தோடு கூடி நின அடிககண உறைதல எமககு ஒனறு போல எனறும இயைக' எனறு நலலசசுதனார வேண்டினார் (பரி. 21.68-70).

**ஒன்றுமொழிதல – 1. வஞ்சினம் கூறுதல.** பாணடியன தலையாலஙகானததுச செருவென்ற நெடுஞ்செழி யன தனககெதிராக வநத ஒனறுமொழி-வஞ்சினங கூறிய-வேநதர் இருவரை வருததுதறகரிய போர்க் களததினகண மாயபபொருது அவருடைய முரசத தைக கவர்நது கொணடான (புறம. 25:5-7). பல யானைச செலகெழு குட்டுவனின பகைவராகிய முர சுடை அரசரும குறுநில மனனரும அவனுககெதி ராக ஒனறு மொழிநது (வஞ்சினம கூறி) போராக் கெழுநதபோது கடலிடத்தவும காட்டிடததவு மான அரணகளைக கொணடிருந்தும் அவறறால வலிமை பெறாதவராய அவாகள நடுஙகுமபடி அவன முரசு முழஙகியது (பதி. 30.30,31,43,44). மோகூர் மனனனான பழையனுககுத துணையாகி மொயவளஞ செருக்கி ஒனறுமொழிநது வநத வெலபோா வேந்தரும வேளிருமாகிய கூட்டம் நடுஙகுமபடி மேறசென்று கடலபிறககோட்டிய செஙகுட்டுவன அவனுடைய காவலமரமான வேம் பினை யறுததான (பதி. 49:7-9,16,17). செலவககடுங் கோ வாழியாதன் இடியினைப் போனற முரசுத தோடு ஒனறுமொழிநது பகைவரது வேலேந

திரண்ட போர் கெடும்படி அழித்தான் (பதி. 66:4,5). பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஒன்றுமொழி தென் பரதவர்க்குப் போரேறு போன்றவன் (மது. 143,144). அன்னி மிஞிலி யென்பாள் தன் தந்தையின் கண்களை அருளின்றிக் களைந்தவரான ஒன்றுமொழிக் கோசரைத் திதியனது அழுந்தூரிடத்தே கொல்வித்துச் சினந் தணிந்தாள் (அகம. 196 8 - 12). நன்னனது காவலமரமான நறிய மாமரததை வெட்டி அவன நாட்டினுள் புகுந்த ஒன்றுமொழிக்கோசர் வன்கட் சூழச்சியும உடையவர் (குறு. 73.2-5).

2. பொருந்த உரைத்தல். தாம் கூறிய வஞ்சினத்தைத் தப்பாது முடித்த தலைவனோடு ஒன்றுமொழி-பொருந்த உரைக்கும்- மறவராய கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனின் வீரர் முரசுடைய பெரிய போரின்கண் எதிர்த்த அரசர் பட்டழியுமாறு பொருது வென்றனா (பதி. 41:17-19).

3. உண்மை சொல்லல். ஒன்று மொழிந்து- உண்மை சொலலி-ஐம்புலன்களும் அடங்கிய கொள்கையை உடைய மேலோர் இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் பதியை விட்டுச் செல்லாது அவன நாட்டிலேயே தங்கி இன்புற விழைவர் (பதி. 15:29-32).

**ஒன்னலர் - பகைவர்.** பெருந்தகை மறவனொருவன் தன்மேல் வந்த பகைக்களிற்றின்மேல் தன் கைவேலை எறிந்துவிட்டுத் தொடர்ந்து வேலேந்திக் களிறூர்ந்துவந்த ஒன்னலரை - பகைவரை - கைகளால வளைததுத் தழுவித் தனது மெயவலியால் அவர் மெயயை உயரத்தூக்கி நிலத்தில் மோதினான (புறம். 274:2-7). ஒன்னாதார், ஒன்னாதோர், ஒன்னார் காணக.

**ஒன்னாதார் - பகைவர்.** கடல் நடுவே சூரனின் காவல் மரமான மாமரத்தை வெட்டியெறிந்த முருகப் பெருமான தம் ஒன்னாதாரை-பகைவரை - மாயஞ்செயது கொலலாமல வென்று கொலபவர் (கலி. 27: 15, 16). ஏந்திய கொமபுகளையும் எழிலையும் கொண்ட யானைகளை யுடைய ஒன்னாதாரைப் பாணடியன் வேல வருத்துமாறு போலக் காமஞ்சாலா இளமையோளின் கண்கள் சிவந்து கைக்கிளைத தலைவனை வருத்தின. (கலி. 57:9-11). ஒன்னலர், ஒன்னாதோர், ஒன்னார் காண்க.

**ஒன்னாதோர் – பகைவர்.** நெருங்குதற் கரிய களிற்றி யானையின மதம்பட்ட நிலைமை போல அதியமான நெடுமானஞ்சி தன் ஒன்னாதோர்க்கு -பகைவர்க்கு - இன்னாதவன் (புறம. 94:3-5). ஒன்னலர், ஒன்னாதார், ஒன்னார் காண்க.

**ஒன்னார் - பகைவர்.** 'இறைவ, நின் ஒன்னாரது-பகைவரது - நாட்டைச் சுடும் பல மணமும் கமழ்கின்ற புகை படுதலால் நின் கண்ணி வாடுவதாக' எனப் பாணடியன் பலயாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் பாடினார் (புறம். 6:21, 22). பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதியின ஒன்னார் கேடயத்துடனே வேலேந்தியவராய் அவனது தூசிப் படையின் வலியைக் கெடுக்கும் ஆசையால் வந்து, கெடுக்கமாட்டாமையால் அவ்வாசை ஒழிய வசைகொண்டு வாழ்ந்தனர் (புறம. 15:12-16). சோழன நலங்கிள்ளியின் போர்க் களிறுகள் தம கோடுகளின் நுனைமுகம் தேய மடுதது ஒன்னாரது காவலையுடைய மதிலைக் குத்துவன (புறம. 31.7,8). சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன நாட்டில் விண்ணுலக நுகர்ச்சி கூடுதலின் பரிசிலர் அவனது ஒன்னார் நாட்டில் இருபபினும் அவன நாட்டையே நினைப்பர் (புறம. 38:17,18). அசுரர்க்கு ஒன்னாராகிய தேவரும் அணுகுதறகரிய மிக்க வலியை யுடைய தூங்கெயிலைச் செமபியன எறிநதான் (புறம். 39:4-6). 'மாற, நின் வேல ஒன்னாரை அழிககினும அழிக்க; நீ அவர் தம காவல் மரங்களை வெட்டுதல மட்டும் தவிர்க' எனப பாண்டியன் இலவந்திகைப்பள்ளித்துஞ்சிய நன்மாறனைக் காவிரிப்பூம பட்டினத்துக் காரிக் கண்ணனார் பாடினார் (புறம். 57:8-10). அதியமான் நெடுமானஞ்சி வெற்றிதரும் தப்பாத வாளை ஏந்தி ஒன்னாரைக் களத்தின்கண் படுமாறு வென்ற வீரவளை பொருந்திய தடக்கை யுடையவன் (புறம். 91:1-3). நெடுமானஞ்சி ஒன்னாரின கடிமதில் அரண்பல கடந்தவன் (புறம. 92:4-6). மலையமான் திருமுடிக்காரி ஒன்னார் யானையினது பட்டத்தின் பொன்னைக் கொண்டு பாணர்க்குப் பொற்றாமரை சூட்டிய சிறந்த தலைமையினையும் புறக்கொடாத மேற்கோளினையுமுடைய உரவோன் மருகன் (புறம். 126:1-4). பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனின் முனனோர் தம் ஒன்னார் வாட அவர்தம அருங்கலன்களைக் கவர்ந்துவநது பொன்னுடைய நெடுநகர் நிறைய வைத்தவர் (புறம். 198:15-17). சேரமான் பாமுளூரெறிந்த நெய்தலங்கானல் இளஞ்சேட்சென்னி தன ஒன்னாரது ஆரெயிலை வென்று கைப்பற்றுமுன்னரே தன கையில் உள்ளது போலப் பாணர்க்குப் பரிசிலாகக் கொடுக்கும் வண்மையுடையவன் (புறம். 203:9-11). வெட்சி மறவனாகிய தலைவன் ஒன்னாரது தூசிப்படையை முறித்துப் பெயர்ந்து போகிற தனது படைக்குப் பின்னே நின்று கவர்ந்த ஆனிரையோடு வந்தான (புறம். 262:4,5). ஒன்னாருடைய படைக்கலங்களின முகம் சிதையும்படி தங்கள் படைக்கலங்களால அவரை வெலலுதல் வீரர்

யாவர்க்கும் எளிது (புறம். 309:1,2). இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன் தன் ஒன்னார் அழியும்படி எழுச்சியொடு படையெடுத்துச் சென்று அவரின் வெற்றியுடைய யானைப்படை அலறுமாறு அவரை வஞ்சியாது எதிர்நின்று பொருது வெல்லுவான (பதி. 20:10–13). களங்காயக்கண்ணி நார்முடிச் சேரல தன ஒன்னார் அழியப் போருக்குரிய தும்பைப் பூவைச் சூடினான (பதி. 40:9). கடலபிறக கோட்டிய செங்குட்டுவன தன தூசிபபடையான புன்லை ஒனனாரது நலல புகழ் இவ்வுலகத்தினின் றும் கெட்டு ஓட அவரது சினமாகிய தீ அழியும்படி அவர்தம நாடுகளில நிரப்பினரன (பதி. 50:11-16). செல்வககடுங்கோவாழியாதன் இடிபோனறு முழங்கும் முரசத்தோடு வஞசினங்கூறி ஒனனாரது வேலுடன திரணட போர் சிதையுமபடி அழித்தான (பதி. 66:4,5). இளஞ்சேரலிருமபொறை கடல சூழநத அகலிடமான உலகததில் திசைகளிலெல்லாம் தம பெயா பரவிய ஒன்னார் தேயும்படி வெற்றியை அடைந்தான (பதி. 88.3,4,14). குடபுலங்காவலர் மருமானாகிய குட்டுவன ஒன்னாருடைய வடபுல இமயததில் தனது விலலினைப் பொறித்தவன (சிறு. 47-49). தெனபுலங்காவலர் மருமானாகிய செழியன் ஒனனாருடைய நிலததை மாறுபாட்டால கைக்கொணடவன (சிறு. 63-65). குணபுலங் காவலர் மருமானாகிய தொடிததோட் செம்பியன் ஒனனாருடைய தூங்கெயிலை எறிநதவன் (சிறு. 79-82). பாண்டியன் தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியனின் படைத்தலைவர் தம் படைமேல மிக்கு வருகின்ற ஒன்னார் படையை நடுவே தவிர்தது அவரைக்கெடுத்த போர் விருப்பம கொண்டவர் (மது. 725,726). முருகவேள் தன ஒனனாரைக் கொல்லுதற்கு ஏந்திய விளக்கமிக்க இலைத் தொழிலை யுடைய வேல்போன்றது மின்னல (குறி. 51-53). சேரலாதன தன ஒனனாா தனககுப பணிநதளிதத திறைப் பொருளான நன கலஙகளை மாநதை யெனனும தன நனனகர் முற்றத்தில் குவித்து வைத்தான (அகம். 127:3, 6-9). மிஞிலியென்பான ஒன்னார் பாதுகாக்கும் அரண்களை வெனறு கடந்த மிக்க பெருந்தானையினை யுடையவன் (அகம. 181:3–5). வெல்போர் வழுதி ஒனனார் ஓடும் புறக்கொடையினைக் கணடவன் (அகம். 312:10–12). வெனவேற் பொறையன் ஒனனாரது தேயம் பாழ்படுமாறு அழிக்கும் வலியினையுடையவன் (அகம். 338:12,13). ஒன்னாரை ஒருசேர அழிக்கும் திருமாலின் ஆழிப்படையது உடல் கூற்றத்தையொககும் (பரி. 2:49,50). வையையாறு தனனிடத்துப் புனலாடும் மகளிருடையவும் மைந்தருடையவுமான ஆடையணிக ளெல்லாவற்றையும் கவர்ந்துகொள்ளும் இயல்பினால் அது பாண்டியன் தன் ஒன்னார் நாட்டிடைப் புக்க தன்மையை உடையது (பரி. 7:48–50). அவுணராகிய ஒன்னாரை நேர்படப் பொருது கொனற திருமாலின் இருங்குன்றம் மயில்கள் அகவுதலாலும் குயில்கள் கூவுதலாலும முழைக்கண் எழுகின்ற எதிரொலி குறையாதிருககும் (பரி. 15:40-45). ஒனனலர், ஒனனாதார், ஒன்னாதோர் காணக.

## ஓ

**ஓ** - தங்குதல். ஞாயிற்று மணடிலம் கீழ்க்கடலிடத்தே எழக் கண்டாற் போன்று இருவகைக் கருவிகளும் தாம் செல்லுதற் குரிய பொருள்கள்மேற செனறு ஓ - தஙகுதல் - இலலையாக உளளததுளளே ஒளிர்வதும உள்ளத்திற்குச் சேயததாய் நினறே விளங்குவது மாகிய ஒளியானவர் முருகன (முரு.23).

**ஓகை** - மகிழ்ச்சி. உழாது விளைவிககும் உழவராகிய பரதவர் ஓகையுடைய - மகிழசசியுடைய - உபபு வணிகர் உவா நிலத்து விளையும உப்பைக் கழியிடததுள்ள சோலையில குவிதது வைபபா (நற். 331:1-3).

**ஓங்கல்** - 1. உயர்ச்சி. பாணடியன் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி உவா நாளின் மதிபோலும் வடிவினையுடைய ஓங்கல் - உயர்ச்சி - பொருநதிய வெணகொறறக குடையை உடையவன் (புறம. 3:1). வேங்கட மலையிற பெயத ஓஙகலை உடைய வானத்திலிருந்து பொழிநத மழைததுளியிலும் பல ஆண்டுகள் வாழவானாக எனக கலலாடனார் அமபர்கிழான் அருவந்தையை வாழ்ததுகிறார் (புறம், 385:9-12). செருப்புகல ஆணமையும் தடுப்பாரைத தகைக்கும் ஒள்வாளும் ஓஙகல் மிகக ஊககமும் உடையவன ஆடுகோடபாட்டுச சேரலாதன (பதி. 55:19-21). 'ஓஙகல வெறப' எனத தலைவன விளிககப பெறுதல (அகம. 18.8; குறு. 355:5; ஐங. 231:1). கரிய குரஙகு மூங்கிலிற் பாயதலின் உதிரும வெணணெல் பாறையிற் பரவி உகிர் நெரி ஓசையைப போலத் துள்ளிப் பொரியும் ஓங்கல மலைகளை உடைய சுரநெறியில் தலைவர் சென்றார் (அகம. 267:9-13). கோடை நீடிய நனந்தலையில் புலியை வெனற ஓங்கல் யானை, மதநீர் ஓய்ந்து வருந்தி, வற்றல் மரங்கள நிற்கும் ஒரு பக்கத்தே பிடியுடன் தங்கும் (அகம். 295:3-6). நீரற்ற பாலை வழியிலுள்ள வேனிலால் தீய்நத மராமரத்தின் ஓங்கல் கிளையில் மலர்ந்த பூஙகொத்தைத் தேனும் தும்பியும் ஊதி அதன் கண் ஒன்றுமின்மையின் உண்ணாமல் வறிதே

பெயரும் (குறு. 211:4-7). நள்ளிரவில் ஓங்கல் வெணமணலிலுள்ள புன்னை மரத்தின் மலர்களைப் பறிக்கும மகளிர் ஆயம் தலைவனது தேரைக் கண்டது (குறு. 311:3-7). ஊர் நடுவே நின்ற மாமரத்தின் ஓங்கல் கிளையில் தொஙகிக் கொண்டே உறங்கும் வெளவால், சோழன் அழிசியது பெருங்காட்டு நெல்லிக் கனியின் புளிச் சுவையை நுகர்வதாகக் கனாக்கணடது (நற். 87:1-4). ஓங்கல் உடைய அலைகளைக் கொண்ட கடலில் நீராடும் மகளிர் அணிந்து கழிதநெறிந்த மலர்களைப் பசு தினனும் (நற். 395:6-8).

2. மலை. ஓஙகல் - மலை - மேலுள்ள வேங்கைப் பூக்கள் புலியின் புள்ளிகளைப் போலத் தோன்றுதலால பெண்யானைகள் அஞ்சி ஓடும (அகம். 228:10-12).

**ஓச்சம்** - மிகுதி. கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவனின் வீரர், பெரும்போரில் பகையரசர் பட்டழியவும் அவர் மீதுள்ள சினம் ஓச்சம - மிகுதி - அடைய அவருடைய தலைகளைத தோமரததால இடிததனர் (பதி. 41:18-21).

**ஓச்சுநர்**–செலுத்துநர். தீமபுளியினையும் உப்பினையும் உணக்கிய மீன துணியலையும் ஏற்றின, நாவாய் ஓச்சுநர்-செலுத்துநர்-பிற நாட்டு மீகாமரோடு ஒன்று கூடினர் (மது. 318-323).

**ஓசனை** - யோசனை என்னும் தூரம். வையையில் வெள்ளம் வருவதைக் கேட்ட மகளிர் மாலையைப் பூண்டும் ஓசனை தூரம் கமழும் வாசனைப் பொருள்களை மேனியிற் பூசியும் புனலாடச் சென்றனர் (பரி. 12:24,25).

**ஓசை** - ஒலி. பொழில் தோறும் காவல் மரங்களை வெட்டும் ஓசை - ஒலி - ஊர் மதில் எலலையில் அரண்மனையுள்ளும் கேட்டது (புறம. 36:8-10). நெய்யுலையில் சொரியப் பட்ட ஆட்டிறைச்சியின் ஓசை மையலயானை நெட்டுயிர்ப்புக் கொண்டது போன்றிருந்தது (புறம். 261:7,8). இடையன் இருளில குறுநரி ஓட்டும ஒலி பன்றியின பெருங் கூட்டத்தை ஓட்டற்குத் தினைப்புனம காப்போர் ஊதும் கரிய கொமபு ஓசையுடன் ஒரு சேர இசைக்கும் (அகம. 94:8-11). பெருமலைச் சிறறூரில் கொலைத்தொழில் வல்ல ஆணகரடியின ஓசையைக் கேட்டு மருண்ட மாந்தர் பலரும் தம் தோளில் வில்லை இட்டுவைததுச் செப்பம செய்த அம்புடன காட்டிட மெல்லாம் தேடினர் (அகம். 171:8-11). பாலைநிலத்தே பெரும்புலி களிற்றியானையைத் தாக்கி வீழததி முழங்கும் ஓசையையும் எயினர் கள்ளுண்டு களித்து முழங்கும் துடி முழக்கத்தையும் கேட்டுத் தலைவி அஞ்சினாள் (அகம். 261:12-15). கருங்குரங்கு மூங்கிலில் பாய்ந்ததால் மூங்கில் வெண்ணெல் வெப்பமுடைய பாறையில் உதிர்ந்து நகத்தை நெரிக்கின்ற ஓசை போலப் பொரிந்தன (அகம். 267:9-12). ஆறலை கள்வர் தீட்டிய அம்பின் செப்பம் காணும் பொருட்டுத் தம் அம்பை நகநுனியிலே புரட்டும் ஓசை போல ஆண்பல்லி ஒலித்துத் தன் துணையை அழைக்கும் (குறு. 16:1-4). உமணர் வெணகல் உப்பின் விலைகூறி ஆனிரையை எழுப்புதலால் நெடிய நெறியிற் செலுத்தும் சகடம் மணலில் செல்லும்போது எழும் ஓசையைக் கேட்டு வயலிலுள்ள கருங்கால் வெணகுருகு அஞ்சியோடும் (நற். 4:7-11). புலியேறு களிற்றைக் கொன்று அஞ்சுமாறு முழங்கும் ஓசையைக் கேளாது உறங்குகிறாயோ எனத் தோழி தலைவியைக் கேட்டாள் (நற. 154:4-7). ஆராய்ந்து அளவிடப்படாத பல்வேறு ஓசை ஒலிக்கக் கரைக்காவலரை அழைககின்ற பறையறைய வையைப் புனல் வந்தது (பரி. 10:7,8).

**ஓட்டை** - திண்மையின்மை. வையைப் புனலாட வந்த கூட்டத்தில் ஒருவன பூங்கொம்பு போனறவளின குவிமுலைகளைக் கூர்ந்து நோக்க அவனைஓட்டை மனவன் - திண்மையற்ற மனத்தன - உரமிலி, என எள்ளினர் (பரி. 12:50,51).

**ஓடம்** - தோணி. அகலிரு வானமாகிய கடலில் இயங்கும் ஓடம் போலப் பகற் பொழுதில் தோனறிய பல்கதிர் ஞாயிறு காட்சியளித்தது (அகம். 101:12,13).

**ஓடை** - 1. யானையின் நெற்றிப்பட்டம். பெரும்பெயர் வழுதியின் யானை, பொன்னாலியன்ற ஓடையையும - நெற்றிப் பட்டத்தையும் - புகரணிந்த மத்தகத்தையும் உடையது (புறம். 3:7). மலையமான் திருமுடிக்காரி, பகைவரது யானையின் ஓடைப் பொன்கொணடு செய்த வாடாத் தாமரையைப் பாணர் சென்னியில் சூட்டிய உரவோன் மரபில் வந்தவன் (புறம். 126:1-4). பனை யொக்கும் பெரிய கையொடு முத்துப்பட முற்றிய உயர்நத கோட்டினையுடைய மலை ஒக்கும் வலிய களிறு ஒளிதிகழும் ஓடை பொலியப் பக்கத்தே படுமணியிரட்ட, அதனமேல் ஏறிச செம்மாந்து போதலை நச்சினேன் எனப் பெருஞ்சிததிரனார் குமணனிடத்துப் பரிசு வேண்டினார் (புறம். 161:16-20). பொனனாற் செய்யப்பட்ட ஓடையணிந்த அண்ணல் யானை தன் கோட்டின் கூரிய நுனியால் குத்துவதாயினும் மறவர் புறங்கொடாத புகழை யுடையவர் (புறம். 287:5-8). மறக்குடித் தலைவன பெரும் போரினைக கெடும படியாகத் தாககி அண்ணல் யானைகள் அணிந்த பொனனாற் செயயப்பட்ட ஓடையைப் பரிசிலர்க்கு வழங்குவான் (புறம. 326:13-15). இமி

ழிசை அருவியினையும், பொன்னுடைய நெடிய உச்சியினையும் உடைய இமயத்தைப்போல, ஓடை யணிந்த நுதலினைக் கொண்ட கன்றுகளையுடைய பிடியொடு கூடிய களிற்றினைப் பரிசிலாகப் பரணர் வேண்டுவர் (புறம். 369:23-28). சேரன் மார் பிலணிந்த மாலை அவன ஏறிய யானையின் நுதலிலணிந்த ஓடையொடு விளங்கியது (பதி. 11: 16-18). குதிரை மீது இவர்ந்தும் தேர் ஊர்ந்தும் ஓடை விளங்கும் புகர் நுதலினை உடைய யானை எருத்தின்மீதிருந்தும் நிலததிடத்திருநதும் பொரும் வீரர்க்குப் பாதுகாப்பாக இருப்பவன களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல (பதி. 34:4-12). வாடா மாலை (பொனனரிமாலை) ஓடையொடு கிடந்து அசையவும படுமணி யிரட்டவும் கடுநடையினை யும் கூற்றுவனை ஒத்த வலிமையினையும உடைய, காற்று எழுந்தால ஒத்த களிற்றின மேல் செவ் வேள ஏறி வருதல் (முரு. 79-82). விழுமிய முக படாததையும் விளஙகுகின்ற ஓடையையும் கடுஞ் சினத்தையும் கமழ கடாஅத்தையு முடைய தலை யையும் மலையை யொத்த தோறறததினையும் உடைய யானை போர்க்களத்தே சினஞ் சிறந்து பகைவரைக் கொனறது (மது. 43-48). ஒளி விளங் கும் ஓடையொடு பொலிநத போர் வினையிற் பழ கிய யானையின நீண்ட கை அறறு நிலமிசை விழும்படி பெருஞ்செயல புரியும் மறவர் யானை யைக் கொனறனர் (நெடு. 168-171). பகையொடு பாசறையில் தங்கிய, ஓடையணிந்த மழகளிற்றா னாகிய வேநதன வாடை வருததவும் தலைவியின் தோளை விரும்பான போலும (நெடு. வெ. 2). இர வில் கொழுமீன கொள்பவர் இருங்கடலிற் செலுத் தும் தோணியிற் கொளுத்திவைத்த விளக்கு, வேந் தனது பாசறைக்கண்ணே உள்ள யானையினுடைய ஓடையின் ஒணசுடர்போலத் தோன்றும் (அகம. 100: 6-10). விறறபோர்ப் பாணடியன, பொனனாலான அழகு மிகக ஓடையணிந்த வினைநவில் யானை களைக் கொணடவன் (அகம். 201:1-3). பெரிய மலை யினின்றும் இழிதரும் வெள்ளருவி, ஓடையணிந்த யானையின் மீது எடுத்த வெண்துகிற் கொடி யினை ஒப்பத் தோன்றும் (அகம். 358:12-14). இரை விரும்பிக் கிடந்த முதுவாய்ப் பல்லி சிற்றளவில தடைப்படுத்தினும் ஓடை அணிந்த யானையிற் செல்லும் உயர்ந்தோரும் மேற்செல்லாது அவ்விடத தினின்றும் திரும்புவர் (அகம. 387:16-19). மன்னர் தம் போர் யானையின புகர்முகத்தே அணியப் பெற்ற பொன்னாலான ஓடையின் புனைநலம் போல மலையின் மீதுள்ள கொன்றைக்கிளைகளில் பூங்கொத்துக்கள் மலரும் (நற். 296:1-5). ஓடை யணிநத இளைய களிற்றின் தலையில் தொங்கும் மூவடம் போலக் கையாற் புனைந்த மூவடம் புதல் வனின் மெல்லிய தலையில் தாழத் தொங்கியது (கலி. 86:1,2). ஒண்ணுதலில் திலகமாகிய ஓடையை யும் தொய்யி லெழுதிய வனமுலையாகிய கோட் டினையும் தலைக்கோலமாகிய அங்குசத்தையும் மகரக் குழையாகிய மணிகளையும் தலைப்பணியா கிய மெத்தையினையும் உடையவளாகப பரத்தை புது யானையாகப் புனையப்பட்டுள்ளாள் (கலி. 97: 11-14). திருப்பரங்குன்றததின மழை முழங்கிய சிகரமும் இருளை அடர்நது பிளககும் கொடி மின்னலும் செவவேள் ஊர்நத களிறறு யானை யையும் அதன் ஓடையையும் ஒககும் (பரி. 18.23-37). செவ்வேள ஊர்தியாகக் கொண்ட பிணிமுகம் எனனும் யானை எரிபோனறு விளங்கும் ஓடை யையும் பொருசமங்கடந்த புகழினையும உடையது (பரி. 21:1,2).

2. நீரோடை. வேதமாகிய ஓடையில மலர்ந்த தாமரைப பூவினுள் பிறந்தோனும் அவனுடைய தநதையும் திருமாலே எனறு அநதணர் அருமறை மொழியும் (பரி. 3:12-14).

3. குன்றின் பெயர். ஓடைக்குனறம் காண்க.

**ஓடைக்குன்றம் - குன்றின் பெயர்.** பட்டத்து யானை மீது அசையும் துகிற் கொடிபோல ஓடைக் குன்றத் துள்ள ஞெமை மரததினமீது சிலமபி பின்னிய வலை மேலைக் காற்றால் அசைந்தது (அகம். 111: 3-6).

**ஓணம் - திருவோணமாகிய நன்னாள்.** அவுணர் கூட்டத் தைக் கொனற பொலநதார் மாயோனாகிய திரு மால பிறநத திருவோணமாகிய நன்னாளிலே மற வர் களிறுகளை ஒனறோடு ஒன்று பொருமாறு செலுத்துவர் (மது. 590-597).

**ஓத்திரநெல் - இராசான்னம் என்னும் நெல்.** செலவக் கடுங்கோ வாழியாதன் மாய வணணனாகிய திரு மாலை மனம பொருந்தப் பெற்று அத்தெயவத் திற்கு ஓத்திரநெல் விளையும் ஒகந்தூரைத் தேவ தானமாகத் தந்தான் (பதி. ப. 7:8,9).

**ஓத்திரம் - மரவகை.** அருஞ்சுரத்தைக் கடந்து செலலும் வழிப்போக்கர் அதன வெப்பத்தை ஆற்றுவதற்குப் பெரிய வெள்ளிய ஓத்திர மரத்தின பூங்கொததுக் களைச் சென்னியில் அணிநது செல்வர் (ஐங். 301: 1,2).

**ஓதஞானி - புலவர்.** ஓதஞானி என்ற தொடர்க்குப் பரந்த அறிவினை உடையவர் என்பது பொருள். இவர் கருவூரைச் சேர்ந்தவர் என்ப (த.வ.க.பக்.359). குறுந்தொகை 71-ஆம் பாட்டின்கீழ் கருவூர் ஓத ஞானி எனவும் 227-ஆம் பாட்டின்கீழ் "ஓதஞானி

எனவும் வருதலின் இருவேறு புலவர்களாகத் தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம் கூறும் (பக். 359-360). உ.வே.சா. இக்கருத்தினரே (குறு. பாடினோர் வரலாறு பக. 135). மருநதெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே (குறு. 71) என்னும் அடியும் கூழை நெய்தல் (குறு. 227) என்னும் தொடரும் சிறப்பின.

**ஓதம் - 1. நீர்ப்பெருக்கு.** சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ் சேர லிரும் பொறையின் வீரர் வெறி யாடும் குரவைக் கூத்தொலி, ஓதம்-நீர்ப்பெருக்கு - உடைய கடல் ஒலிபோலக் கிளர்ந்து பொங்கியது (புறம். 22:22-24). வங்கத்தில் வரும் பலவேறு பண்டங்களும் கடலினின்று ஓதம் கரிய கழியின்வழிப் புகார்முகத் தேறிப் பரக்கின்ற பொழுது பட்டினதது இறங்கும் (மது. 540-542). தெளிநத கடற்றிரை யோடே காவிரிப்புனல் கலக்கின்ற புகார் முகத்தே மிக்க ஓதத்தின் ஒலி நிறைந்திருந்தது (பட். 97,98). உப்பங்கழியில் ஒல்லென்னும் ஒலியுடன ஓதம மிகுந்தது (அகம். 340:8,9). உப்பங் கழியில் இலைக்குமேல் உயர்நது தோன்றும் நெய்தற்பூ கழியின்கண் ஓதம் மிகுந்தோறும் குளததில் மூழ்கும் மகளிரது கணபோலத் தோன்றும் (குறு. 9:4-6). கடறகரைப் பரப்பில் நின்ற தாழை கழியிலிருந்து நீர் குறையுங்கால் தாழ்ந்தும் கழியில் ஓதம மிகும் போது உயர்ந்தும் அலைதலைப் போலத் தலைவியின் நெஞ்சம் வருநதியது (குறு. 340:4-7). நிலாவை யொத்த மணற்பரப்பி லுளள நெடிய புனனைக் கிளையில் இருக்கும் சூல் மூதிர்ந்த வெண்குருகு அலையால் உண்டாகும் ஓதம் கணடு அஞ்சும (நற. 31:9-11). ஞாயிற்றின் சுடர் மழுங்கும் மாலைப் பொழுதில், கடல் பெரு முழக்கம் செய்யக் கானலில் பூககள் மலரக் கரிய கழியின் ஓதம் மனை யெல்லையைக் கடக்க, நெய்தல் கூம்பப் பறவைகள் கூடு சேர்ந்தன (நற். 117: 1-5). உப்பு விளையும சேற்றினையுடைய வளைந்த கழியிடத்து ஊர்நது செலகின்ற கடலின் ஓதம் ஓடிப பரந்தது (நற். 211:1,2). திங்கள் வானில் தெளிவாக விளங்கியமையால் பொங்கும் அலைகளையுடைய கடல் மிக்கொலித்தது; ஒலி மிகுத்து ஓதமும் கரையை மோதிப் பெயர்ந்து சென்றது (நற். 335.1-3) வெள்ளாங்குருகின் பார்ப்பு இறந்ததைச் காணச்சென்ற நாரை பனைதத்துத் துடிதத தால் சிதைநத நெய்தல் மலர் கழிக்கண் பெருகிய ஓதத்துடன் மிதந்து போகும் (ஐங். 155:1-4). கருங் கழியில் ஓதம் போலதும் வருவதுமாயத் தடுமாறுந் தன்மை போலக் காப்பு மிகுதிக்கண்பட்ட தலைவியின் நெஞ்சம் தலைவன்பாற் செல்வதும் மீள்வதுமாய்த் துன்புற்றது. (கலி. 123:18,19). ஞாயிறு மறைகின்றமையால் கடலில் ஓதத்தால் ஏறுகின்ற நீர் கரையைச் சேர்ந்தது (கலி. 134:6).

**2. அலை.** காவிரி கடலுடன் மண்டும் பெருந்துறையின்கண் ஓதம் - அலை - இறாமீனொடு வந்து மாலையோடு மீளும் (அகம். 123:11-13). மிகுதியான பழைய நெல்லை யுடைய ஊணூரின்கண் முழங்கும் கடலின் ஓதம் காலையில் சுழனறு அலையும் (அகம். 220:12,13). தலைவன் இளையருடன் தலைவியின் சீறூர் வரின் அவளுடைய சுற்றத்தார் அனபுடன் 'பொழுது மயங்கிவிட்டது; நீர்ததுறையும் ஓதம் பெருகி ஏறலின சுறாவும் பகையாயின; இரவும் வந்தது, ஆதலால் தங்கிச் செல்க' என வேண்டுவர் (அகம். 300:14-19). கடற்றுறைக்கண மணற்பரப்பில் உள்ள ஞாழல் மரத்தின பெரிய கிளையை ஓதம் சூழும் (ஐங். 145).

**3. கடல்.** பெரிய உப்பங்கழியின் பக்கலிலே ஓதம்-கடல - நீரால் மலர்ந்த சிறுகரு நெய்தலமலர் கண போன்று விளங்கும் (அகம். 230:1,2). கழியிடத்துள்ள நெயதற பூவும் கருங்குவளைப பூவும் குவிய ஓதம் இடையறாது அலைவீசும் (அகம. 350:1,2) இரவு நடு யாமத்து ஓதம் ஒலியவிந்தது (நற். 319:1). வையை வெள்ளத்தைக் கண்டு பலவாறு உரைத்த மக்களுள் ஒருசாரார் ஊரினை ஓதம் வளைத்துக் கொண்டது என்றனர் (பரி.7:29).

**4. வெள்ளம்.** இருந்தையூரின் ஒருபால் ஓதத்தால் - வெள்ளத்தால் - எழும் ஓசைக்கு மாறாக உழவர் உழவுக் குரிய ஓசை எழுப்பினர் (பரி. தி. 1:14,15).

**ஓதலாந்தையார் - புலவர்.** இவர் குறுந்தொகையில் மூனறு பாடல்களையும் (12, 21, 329) ஐங்குறுநூற்றில் பாலைத்திணை பற்றிய நூறு பாடல்களையும் பாடியுள்ளார். பாலைத் திணை பாடுவதில் வல்லவர். எறும்பியளையைக் குறும்பல்சுனைக்கு உவமை காட்டுதல் (குறு. 12); ஆலங்கனி புதுக்கலம் போன்றது (ஐங். 303); இடியிற்பட்ட தீப்போல இலவமலர் உதிர்தல் (ஐங். 320); ஊரலர் பரத்தற்கு மூங்கிலில் தீபரவுதலை உவமை காட்டுதல் (ஐங். 340); புன்கம் பூ பொரிபோ லிருத்தல் (ஐங். 347); சுரத்தில் ஒள்ளெரி தொடர்ந்து படர்ந்து எரிதல், யானை பிணித்த பொன்புனை கயிற்றினைப் போலிருத்தல் (ஐங். 356) இங்ஙனம் வரும் பகுதிகள் இப்புலவரின் இயற்கைப் புனைவுக்குத் தக்க சான்றுகளாகும். ஒத்திரமலரைச் சுரநெறியில் செல்வோர் வெம்மை தணியச் சென்னியிற் சூடுதல் (ஐங். 301); வேங்கை மலர் கொய்வோர் பஞ்சுரப்பண் பாடுதல் (ஐங். 311) ஆகிய பழக்க வழக்கங்களும் சுட்டப்பட்டுள.

செந்நாய் ஏற்றை மறியுடைய மான்பிணையைக் கொள்ளாது செல்லுதலையும் (ஐங். 354) அது குருளைப் பன்றியைக் கொள்ளாது செல்லுதலையும் (ஐங். 397) இவர் புலப்படுத்தி அருளறம் காட்டுவர். தலைவன் காடு கடந்து சென்று ஈட்டும் பொருள், புதல்வன் முறுவல் காண்டலின் இனிதோ எனத் தோழி கேட்டல் (ஐங். 309) குழந்தைச் சிறப்பை நன்கு காட்டவல்லது. பாலைவழி, தலைவன் ஒண்ணுதல் அரிவையை உள்ளுந தொறும் வெம்மை தணிந்து தணணிய தாயிற்று என்றல் (ஐங். 322) பாலைவழியில நீர் நசைக்கு ஊக்கிய யானை இயம் புணர் தூம்பு போல உயிர்ககும் எனக்கூறி அதன் வெம்மை காட்டுதல் (ஐங். 377); உன் கிளையோடு நீ உண்ணப் பச்சூன் பெய்த பைந்நிண வல்சியைப் பொலம்புனை கலத்தில் தருகுவென்; தலைவனுடன போன என் மகள மீணடுவரக் கரைக எனக் காக்கையை நோக்கித தாய் கூறுதல் (ஐங். 391) முதலிய பகுதிகள் நயமுடையன.

ஓதி – 1. கூந்தல். 'பண்ணனது சிறுகுடிக்கண் பூத்த பாதிரியின் மணங் கமழும ஓதியினையும் - கூநதலையும் - ஒண்ணுதலையும இனிய நகையையும் உடைய விறலியொடு கிள்ளிவளவனிடம் செல்வை யாயின் செல்வத்தை யுடையை ஆகுவை' எனப் பாணன் ஆறறுப்படுத்தப் பட்டான் (புறம். 70: 13-16). அதியமான் நெடுமானஞ்சியின் பகை வரைப் பார்த்து ஔவையார், 'நீவிர் திறை கொடுத்து உயம்மின்; என்சொல்லைத் தேறீராயின் மென்தன்மையும் கழன மணியினது கனியால் வகுக்கப் பெற்றுச் சுருட்டப்பட்ட இனமாகிய ஓதியினையும் குறுந்தொடியினையுமுடைய நும் உரிமை மகளிரது தோளைப் பிரிந்துறைவது திண்ணம்' என்று கூறினார் (புறம. 97:20-25). சிலவாகிய ஓதியினையுடைய இளையோர் தோள் வடுப்படப் பல முட்டுக்களையும தூக்கிச் சென்றனர் (புறம். 139: 1, 2). 'வானுறை மகளிர் இகல்கொள்ளும் நலமும் தலைக்கலனால் மறைக்கப்பட்ட வணடு மொய்க்கும் கூந்தலும் ஒடுங்கீர் ஓதியும் உடைய கொடுங்குழை கணவ' என இமய வரம்பன் நெடுஞ்சேரலாதன் விளிக்கப் பெறுதல் (பதி. 14:13-15). தகடூ ரெறிந்த பெருஞ்சேர லிரும்பொறையின் தேவி, ஒடுங்கிய தண்ணிய ஓதியினை உடையவள் (பதி. 74:17). திருப்பரங் குன்றத்தில் செவ்வேளை வழிபட வரும் சூரரமகளிர், தோழியர் ஆய்ந்த, கடையொத்த நெய்ப்பினைக் கொண்ட ஓதியை யுடையவர் (முரு. 20). வாழைப்பூவினை ஒத்த ஓதியினையும் அவ்வோதியில் சூடும் வேங்கைமலரை ஒத்த தேமல்களையும் உடையவள் விறலி (சிறு.21-24). பாண்டியனைப் பிரிந்த தேவி, நுதலிடததே கைசெய்யாமல் உலறிக் கிடந்த சிலவாகிய மெத்தென்ற ஓதியினையும் மகரக் குழையைக் களைந்த வறிதான காதினையும் உடையளாய்ப் பொலிவின்றி இருந்தாள் (நெடு. 138-140). நீராடுகையில் தளர்ந்த தலைவியைத் தலைவன் எடுத்து, 'அழகிய சிலவாகிய ஓதியை உடையாய அசசம் தவிர்க; நின அணி நலம் நுகர்வேன்' எனக் கூறி நுதலநீவி நீடு நினைந்து முகநோக்கிச் சிரித்தான் (குறி. 178-183). வளைந்த நுண்ணிய ஓதியினை யுடைய மகளிர், உலக்கையாற குற்றுவதனால் உரலி விருந்து எழும் ஒலி மலையிலுள்ள ஆந்தையின ஒலியொடு மாறி மாறி ஒலிக்கும் (அகம். 9:11-13). வண்டு படியும் ஓதியினை உடையவளே எனத தலைவன் தலைவியை விளித்தல (அகம். 39:14). தலைவியும் தோழியும் ஐவகையாக வகுத்த கூநதலினையும அழகிய நுதலினையும் கரிய நெயதத ஓதியினையும் உடையவர் (அகம. 48: 17,18). 'பொலிவுற்ற ஓதியினை உடையாய்' எனத தோழி தலைவியை விளிததல (அகம். 65: 8). தலைவி ஒடுங்கிய குளிர்ந்த ஓதியினையும் மாமை நிறத்தினையும் உடையவள (அகம். 86:31). தலைவன் அருள் செய்யாமையின், தலைவியின கரிய ஓதி சூழ்ந்த ஒண்ணுதல் பசப்பினைக் கொணடது (அகம். 102: 16–19). கடை யொத்த குளிர்ந்த ஓதியினை உடையவள் தலைவி (அகம. 107: 22). தலைவி அழகிய சிலவாகிய ஓதியும் ஆராயநத அணிகளும் உடையவள் (அகம். 129: 18). தலைவியை, 'ஒடுங்கிய கரிய கூந்தலை உடையவளே' எனத் தோழி விளித்தல் (அகம். 160: 1). தலைவன, 'நறிய நெற்றியையும் கரிய பெரிய கூந்தலையும் உடையவளே' எனத் தலைவியைப் பாராட்டல் (அகம். 173: 4,5). கொல்லி மலையின் கார் காலத்து மலரொப்ப மணங்கமழும் அழகும் மென்மையும் பொருந்திய ஓதியினை உடையவள் மாயோளாகிய தலைவி (அகம். 208: 22–24). 'பொலிவுபெற்ற ஓதியினையுடைய தலைவி ஏற்றினது மணி ஒலியையும் கோவலர் ஊதும் குழலோசையுடன செவ்வழிப் பண்ணையும் கேட்டு என்ன ஆவாளோ' எனத் தலைவன் வருந்தினான் (அகம். 214: 9-13). 'பொலிவுற்ற ஓதியினை உடைய மகளுக்கு மணம்' என்று கூறி உறவினர் வதுவை அயர்ந்தனர் (அகம். 221: 3,4). மென்மையான தேமலையும் கூரிய எயிற்றினையும் கரிய நெடிய ஓதியினையும் ஒளிபொருந்திய நெற்றியினையும் உடையவள் தலைவி (அகம். 230:4,5). 'நீர் வாரும் உண் கண்ணையும் மேனியிற் படர்ந்தபசலையையும் உடைய தலைவியின் மின்னலை ஒத்த ஓதியின்பின்னலாய (ஒப்பனையற்ற) பிணிப்பு நீங்கத்தேரை

விரைந்து செலுத்துக்' எனத் தலைவன் பாகனிடம் கூறினான் (அகம். 234: 16-18). புதுமலர்த் தேனொழுகும் ஓதியினை உடைய தலைவியது நுதலை நீவி, குவிமுலை ஆகத்து இன் துயிலை விரும்பினையாயின் புன்னையந்தண் பொழிற்கண வருவாயாக' எனத் தோழி தலைவனிடம் பகற்குறி நேர்ந்தாள் (அகம். 240: 10-15). 'நந்தன் வெறுகைகை எய்தினும் இனித் தலைவர் அங்குத்தங்கார்; எனவே தோளும் வளை செறியப்பெறும் ஓதி சூழந்த நுதலின பசலையும் மாயும்' எனத்தோழி தலைவன வருகை குறித்துத் தலைவியிடம் உரைத்தாள் (அகம். 251:1-6). சுரநெறியில் தன்னுடன் செல்லுதற்குத் தலைவி பொலிவு பெற்ற ஓதியை நெருங்க வாரி வெண்கடம்ப மலரைச்சூடி அதிற்படியும் வண்டுகளைக் கடிய அறியாதவளாய் அணிகொள வளை யொலிப்பக் கைவீசி நடக்கும் வன்மை பெற்றுவிட்டாள் எனத் தலைவன் அவள் நடையை வியந்து பாராட்டினான (அகம். 257: 4-12). கரிய நெடிய ஓதியினையும் மாமை நிறத்தையும் உடையவள் தலைவி (அகம். 279: 17). தலைவன, தலைவியின் பொலிவு பெற்ற ஓதியைத் தடவி அளி செய்தான் (அகம். 311: 7). தலைவீ காந்தள் மணங்கமழும் நறுநுதலினையும் அள வொத்த நெய்த்த ஓதியையு முடைய மாமை நிறத்தினள் (அகம. 338: 7,8). 'நம்மொடு நன்மொழி நவிலும் பொலிவு பெற்ற ஓதியையும் அழகிய அணிகளையும் உடைய தலைவியின் குணங்களை நினைத்து நிழலற்ற சுரநெறியில் மயங்குவாய் அல்லையோ' எனப் பிரியக் கருதிய நெஞ்சிற்குத் தலைவன் கூறுதல் (அகம். 353: 15-23). நன்னனது அழகிய பறமபு போன்ற குளிர்ந்த ஓதியினை உடையவளே எனத்தலைவியைத் தோழி விளித்தல் (அகம. 356:19,20). 'கழுவுளின் காமூரில் பூதம் தநத வேங்கை மலர்போல கமழும் அழகிய சிலவாகிய ஓதியினை உடைய தலைவியின் மடப்பமாகிய தகைமையினை நினைப்பாய் ஆயினை' எனத் தலைவன் இடைச்சுரத்துக்கண் தன் நெஞ்சை நோக்கிக் கூறினான் (அகம். 365:11-15). 'மையீரோதி மடவோய்' எனத்தலைவி விளிபெறல் (அகம். 386:10). மையீரோதி மட நல்லீர் எனத் தலைவி தோழியரைத் தலைவன் விளித்தல் (அகம். 388:10). ஒடுங்கிய நெயப்பை யுடைய ஓதியையும் ஒள்ளிய நுதலையும உடைய குறுமகள் தலைவி (குறு. 70:1). 'பிரிந்த ஏதிலாளராகிய தலைவர் மீண்டு வந்தால் மலர்களால் பொலிவு பெற்ற என ஓதியினை அணி செய்தலை ஒழிக, எம்மையும் தொடாது ஒழிக என்று கூறுவம்' எனப் பிரிவிடை ஆற்றாளாகிய தலைவி கூறுதல் (குறு. 191:5-7). ஓரியின் கானந் தீண்டி வீசும் காற்றுப் போல் கமழும் நெறியடு கூந்தலாகிய கரிய நெய்ப்பினைக் கொண்ட ஓதி யுடையவள் மரயோளாகிய தலைவி (குறு. 199:3-5). அழகிய சிலவாகிய ஓதியை உடைய தலைவியின் ஆய்வளை நெகிழும்படி தலைவன் பிரிந்து சென்றான் (குறு. 211:1,2). தினையைக் காவல செய்யும் கொடிச்சி, புறத்தே தாழும் அழகிய சிலவாகிய ஓதியினை உடையவள் (குறு. 214:2,3). 'அழகிய சிலவாகிய ஓதியையும் தன் நெஞ்சத்தைப பிணித்த பெருந்தோளையும் உடைய குறுமகளது மெல்லாகத்தை ஒருநாள் புணரப் பெறின் அரைநாள் வாழககையும் விருமபேன்' எனபது தலைவன் கூற்று (குறு. 280:2-5). நீ அறிவு முதிர்ச்சி யடைந்தும் எம் இல்லிற்கு இல்லறம் நடத்த வருகுவை என்று கூறித் தலைவியின் பொலிவுற்ற ஓதியைத் தலைவன் நீவினான் (குறு. 379:3-6). கூரிய எயிற்றையுமபொன்னைப் பொதிந்து வைத்தாற்போன்ற சுணங்கையும் கரிய ஓதியினையும் பெருந்தோளையும் உடையவள் தலைவி (நற். 26:7-9). தலைவி, மென்மையையும் கரிய ஈரிய ஓதியினையும் பெரிய மடப்பத்தையும் உடையவள் (நற். 29:10,11). கரிய ஈரிய ஓதியினை உடையவள் தலைவி (நற். 57:10). 'பொலிவுற்ற ஓதியினை உடைய தலைவி பெரு விதுப்புற நீவிர் பிரிதல் வல்லிரோ' எனத் தோழி தலைவனை வினவினாள் (நற். 71:6,11). பெதும்பைப் பருவப் பரத்தை அழகிய சிலவாகிய ஓதியினை உடையவள் (நற். 90.8,9). குட்டுவனது குடமலைச் சுனையின் வண்டு படும் கரிய இதழை உடைய குவளை மலரைச் சூடுதலானே மணம் கமழும் அழகிய சிலவாகிய ஓதியினை உடையவள் தலைவி (நற். 105:7-10). பொலிவுற்ற ஓதியை உடையாய் எனத் தலைவியைத் தோழி விளித்தல் (நற். 129:3). தலைவி ஐம்பகுதியாக வகுக்கப்பட்ட, நுதலின் மேலே பொலிவு பெற்ற, தேன்பரவிய கூந்தலாகிய ஓதியை உடையவள் (நற். 160:6,7). வாழைத்தாற்றின் கூரிய கொழுமுகை, மெல்லியல் மகளிரின் முடித்துப்போட்ட ஓதி போல காணப்படுதல் (நற். 225:3,4). பின்னிய குளிர்ந்த ஓதியை உடையவள் தலைவி (நற். 227:4). செறிந்த ஓதியையும் புனைந்த கலன்களையும் உடையவள் தலைவி (நற். 252:12). செறிந்த ஓதியை உடையாய், எனத் தலைவி விளிக்கப் பெறுதல் (நற். 274:6). எம் மனையகத் திருந்த பொலிவுற்ற ஓதியை உடைய மகளிடம் நம்பும் மொழிகளைக் கூறி உடன் கொண்டுபோன தலைவனை ஈன்றதாய் பெருந்துன்ப முறுவாளாக என நற்றாய் உரைத்தல் (நற். 293:6-9). அழகிய சிலவாகிய ஓதியினை யுடைய தலைவியின் பஞ்சு போன்ற மெல்லடி செல்வத் தந்தையின் பெருமனையில் நடை பயிற்றும் (நற். 324:6-9). தலைவி குளிர்ச்சி

பொருந்திய மலர் மாலையையும் ஒண்ணுதலையும் பெதும்பைப் பருவத்தின் நன்னலம் பெற்ற ஓதியினையும் உடையவள் (நற். 339:7-9). அழகிய சிலவாகிய ஓதியினை உடைய தலைவியின் தோளில் துயிலுவதை நீ இன்பமாய்க் கொள்ள வில்லை; என்பால் கண்ணோட்டம் கொண்டு தலைவிக்குத் தலையளி செய்க எனத் தோழி தலைவனிடம் கூறுதல் (நற். 355:8-11). மெல்லிய அழகிய சிலவாகிய ஓதியினையுடையாய் எனத் தலைவியைத் தலைவன் விளித்தல் (நற். 370:7). அழகிய சிலவாகிய ஓதியை உடைய பாண்மகள், சில மீன்களைக் கொடுத்து அதற்கு விலையாக மிகுதியான நெல்லைப் பெறுவாள் (ஐங். 49:1,2). தனனிடமிருந்து தலைவனைப் பிரியச் செய்து ஓதியை யுடைய தன் ஒளி நுதலில் பசலை பாயுமாறு செய்யும் மகளிர் தாதுண் வண்டினும் பலர் என்பதை அறியாதவள் மடவளாகிய பரத்தை எனத் தலைவி கூறல் (ஐங். 67:4,5). நறுந் தண் மார்பனாகிய தலைவன் அருள் செய்யாமை யானே சிலவாகிய நிரைத்த ஓதியினையுடைய தலைவியின் நுதலில் பசப்புற்றது (ஐங். 222:2-4). நேரிய வளையல்கள் இணைந்த கையினையும் இணைந்த தண்ணிய ஓதியினையும் உடையவளே எனத் தலைவி விளிக்கப் பெறுதல் (ஐங்.269:3,4). அழகிய சிலவாகிய ஓதியினையுடைய கொடிச்சியின் கண் போல் மலர்தல் பைஞ்சுனையிற் பூத்த குவளை மலர்க்கும் அரிதாகும் (ஐங். 299:2-4). நின் அழகிய மெல்லிய ஓதியினை யுடைய தலைவி நீ சென்று திரும்பி வரும்வரை உயிருடன் இருப்பா ளாயின் மீண்டும் வந்து எம்மொடு இன்ப நுகர்ச்சி கொள்க எனப் பிரியலுற்ற தலைமகனுக்குத் தோழி கூறினாள் (ஐங். 368:4,5). உடன் போக்கு மேவிய அழகிய சிலவாகிய ஓதியை உடைய என்மகள் வெஞ்சின விறல்வேல் காளையொடு மீண்டும் வரச் சிறு கருங் காக்கையே, நீ கரைவாயாக என நற்றாய் வேண்டுதல் (ஐங். 391:5,6). உடன் போக்குச் சென்று மீண்டு வந்த சிலவாகிய ஓதியும் மடப்பமும் பொருந்திய பிணைமானை ஒத்த தலைவியைக் காண வருமாறு அயலிலாட்டியரைத் தாய் அழைத்தாள் (ஐங். 394:3-5). தலைமகன், கார்ப்பருவம் வரக் கண்டு அழகிய சிலவாகிய ஓதியினையுடைய தலைவியை நினையுந் தோறும் உறக்கமின்றி நெஞ்சம் சுழன்றான் (ஐங். 448:4-6). 'கத்திரிகை இடையிட்ட விளங்குகின்ற நெய்த்த ஓதியினை உடையாய்' எனத் தலைவி விளிக்கப்பெறல் (கலி. 36:23). 'கருமையினையும் நெய்ப்பினையு முடைய ஓதியினையும் மடப்பத்தையுடைய மொழியினையும் உடையாய்' எனத் தலைவி விளிக்கப் பெறல் (கலி. 150:23).

2. ஓந்தி (இடைக்குறை). கூரிய வாலையுடைய ஓதியின் - ஒந்தியின் - கரிய தாடியைப் போலத் தாதுறு குவளைப்போது கட்டவிழ்ந்து மலர்ந்தது (அகம். 125:5,6). காட்டில் வற்றல் மரத்திலுள்ள பொன்னிறம் வாய்ந்த ஓதி வெயிலால் அழகிழந்த ஊரில் வருத்தத்துடன் ஞெமை மர உச்சியில் மெலமெல ஏறும் (அகம். 145:3-5). தலைவன் பிரிந்து சென்ற சுரத்தில் கருக்கரிவாளைப் போன்ற முதுகையுடைய முதிய ஆண் ஓதி ஆறுசெல் மாக்கள் நிமித்தமாகக் கொள்ளுமாறு தங்கியிருத்தல் (குறு. 140 : 1-3). வேனிற் காலத்து வறனுற்ற குன்றத்தின் உச்சியில் வருந்திய நடையையுடைய ஓதியாகிய வழலை தன் துணையோடு, வரிகளையுடைய மரலின் இளமடல் போல வாட்டமுற்றுக் கிடந்தது (நற். 92:2-4). வேனிற்காலத்தில் தன் நிறத்தை மாற்றிக் கொள்ளும் இயல்புடைய முதிய ஓதி வருந்தியவிடத்து அவ்வழியே செல்லும் பாணர்தம் யாழிசையைக் கேட்டு வருத்தம் தீர்தலால் யாமரத்தின் மீது ஏறும் (நற். 186:5-7).

3. மயிர்ச்சுருள். 'கரிய வண்டுகள் ஒலிக்கின்ற கூந்தலையும் ஓதியையும் - மயிர்ச்சுருளையும் - உடைய ஒளி பொருந்திய நெற்றி அணிகொள, அமர்த்த நோக்கும் மென்சொல்லும் உடைய நின் தேவியைக் காண்பதற்கு ஒருநாள் நின் புரவி நெடுநதேரைப் பூணுக' எனக் குடக்கோச் சேரலிரும்பொறையைப் பெருங்குன்றூர் கிழார் வேண்டினார் (பதி. 81:27-32).

ஓதிமம் - அன்னம். புனலாடு மகளிர் இட்ட பொலங் குழையினை இரையெனக் கொண்ட சிசிலிப பறவை அந்தணர் அருங்கடன் இறுத்த வேள்வித தூணில் தங்கியிருந்தமை யவனர் மரக்கலக் கூம பின் மேல் இட்ட ஓதிமம் - அன்னம் - வடிவிற செய்த விளக்குப் போலத் தோன்றியது (பெரு. 312-317).

ஓதிமவிளக்கு - அன்ன விளக்கு. ஓதிமம் காண்க.

ஓது - ஓத்து. மான் போலும் நோக்கினை யுடைய மடந்தை தனக்குத் துணையாகக் கொள்ளும் திருமண நாளிலே ஓதுடை - ஓத்தினை உடைய - அந்தணன் எரிவலஞ்செய்வான் போல, அன்னம் தன் பெடையோடு பொய்கையிடத்து மலர்ந்த தாமரை மலரைச் சூழத் திரிந்தது (கலி. 69:1-7).

ஓதை - 1. ஓசை. சேரமான் பெருஞ்சேரலாதன் புறப் புண் நாணி வாளொடு வடக்கிருந்த நாளில் பல ஓசைகளோடு உழவர் உழுதொழில் செய்யும் ஓதையும் - ஓசையும் - ஒழிந்தது எனக் கழாத்தலையார் கையறுநிலையிற் பாடியுள்ளார் (புறம். 65:4). முது வெள்ளிலை என்னும் ஊரில் வேனிற் காலத்தே

வானம் பொய்ப்பினும் வெண்மீன் திசை திரிந்து தெற்கு ஏகினும் யாறுகளில் வெள்ளம் மாறாது பாய்கையினாலே விளைவு பெருகிய வயலிடத்து முற்றிய நெற்கதிர் காற்றான் அசைதலால் ஓதை எழுந்தது (மது. 107-110). மருதநிலத்தி லுண்டா கும பல்வேறு ஓசைகளுள் கரும்பு ஆலையிடத்து உண்டாகும் ஓதையும் ஒன்றாகும் (மது. 258). 'வயலில் எருத்தை அடித்து உழும் உழவரது ஏர்மங்கலப் பாட்டின் ஓதையோடு பொருந்த யாழினால் மருதப் பண்ணை இசைத்து இளைப் பாறிச் சென்மின்' எனக் கூத்தன் ஆற்றுப்படுத்தப் படுகின்றான் (மலை. 469,470). ஆராய்ந்த எருது களைப் பூட்டி உழவர் ஏர் ஓட்டுதலால் எழும் ஓதை புலந்தோறும் பரவியது (அகம். 41:6,7). இருந் தையூரின் ஒரு பக்கத்தே வெள்ளத்தால் எழும் ஒலிக்கு எதிராக உழவர் உழவுக்குரிய ஓதையை எழுப்பினர் (பரி. தி. 1:14,15).

2. ஆரவாரம். காட்டாற்றின் நெடுஞ் சுழியில் வீழ்ந்த கடுங்கண் யானையினது சினத்தைத் தணி யச் செய்து, பெரிய கம்பத்திலே சேர்த்தற்குப் பாகர் விரவுமொழிப் பேச்சுகளைப் பேசுவதனால் ஓதை - ஆரவாரம் - எழுந்தது (மலை. 325-327). உண்டு எஞ்சிய பலாப் பழத்தின் விதைகளைப் பயன் கோடற்காகச் சிறுவர் கன்றுகளைப் பிணித் துக் காந்தள் துடுப்புப் போலும் மடலாலே யடித் துக் கடா விடுதலால் ஓதை உண்டாகியது (மலை. 336-339). இன்னிசை முழங்கும் இரவில் கள்ளுண்ட களிப்பினையுடைய உழவர் வைகறைப் பொழுதில் ஆட்களை அழைப்பதனால் ஓதை உண்டாயிற்று (அகம். 37:1,2). நீர் நிறைந்த வயலில் பூவோடு ஆம் பல் மலரினைக் கொய்யச் சிலம்பு முதலியன ஒலிப்ப ஓடும் விளையாட்டு மகளிரின் ஓதைக்கு அஞ்சி ஆரல்மீனை உண்ணும் பறவையினம் உயர்மரம் ஏறித் தங்கும் (கலி. 75:1-6).

ஓப்புநர் - ஓட்டுவார். நெல்விளைந்த கழனியிடத்துப் படும் புள்ளை ஓப்புநர் - ஓட்டுவார் - பனங்கருக் காகிய விறகினால் மீனைச்சுட்டு அதனுடன் கள் ளையும் சேர்த்து உண்டும் அமையாமல் தெங்கின் இளநீரை உதிர்ப்பர் (புறம். 29:13-16).

ஓம்புநர் - காப்போர். பரிசில் பெற்ற கூத்தன் பரிசில் பெற வரும் கூத்தனிடம், "நீ செல்லும் வழியில் எதிர்ப்படும் நாடு காக்கும் வீரரிடம் யாம் நன்ன னைக் காணச் செல்கின்றோம் என்று கூறினால் தசைகளையும் கிழங்குகளையும் மிகுதியாகத் தந்து உண்ணச் செய்து உம்மை ஓம்புநர் - காப்பார் - அல்லது வருத்த மாட்டார்' எனக் கூறினான் (மலை. 40? 426). பாண்டிய நாட்டில் உள்ள பிசிராந்தை என்னுயிர் ஓம்புநன் ஆவான்; அவன் யான் செல்வ முடைய காலத்து வாரா னாயினும் துன்புறுங் காலத்துத் தவறாமல் வருவான் என்று வடக்கிருந்த கோப்பெருஞ்சோழன் சான்றோர்க்குக் கூறினான் (புறம். 215:6-9).

ஓம்புநன் - காப்போன். ஓம்புநர் காண்க.

ஓமை - ஒருவகை மரம். முதலையின் தோல் போல் இருக்கும் கரிய அடிப்பகுதியையுடைய ஓமை மரக் கிளையில் ஈன்று காவல் காக்கும் பேடைக்கு எரு வைச்சேவல் மரையாவின் தசையைக் கவரும் (அகம். 3:1-5,10). முதிய பாலைக்காட்டில் ஓமை மரங்கள் உலர்ந்திருந்தன (அகம். 5:8). மலையிலுள்ள சிதறிய தலையினையுடைய ஓமை மரங்களில் பருந்து ஈன்று காவல் செய்யும் (அகம். 21:15,16). பாழ்பட்ட நாட்டு அஞ்சத் தக்க கவர்த்த வழிகளில் கடுங்கால் ஓமை மரத்தின் மீது இருக்கும் வெண்தலைப் பருந்து கேட்போர்க்கு இரக்கம் உண்டாகுமாறு தனது பெடையை அழைக்கும் (அகம். 117: 5-7). ஓமை மரங்களை யுடைய வெப்பமிக்க காட்டில் உமணரின் வண்டிகளை இழுத்து வரும் எருது களின் கழுத்துமணி ஓசை உமணர் எழுப்பும் சீழ்க்கையொலியொடு சேர்ந்து காட்டுவழி வரும் வம்பலர்க்குக் காப்பாக அமையும் (அகம். 191:7-10). நிழலற்ற ஓமை மரத்தினை யுடைய நீர் இல்லாத நீண்ட சுரத்தைக் கடந்து தலைவன் பொருள் தேடச் சென்றான் (அகம். 223: 8,9). அடியிலே தெய்வம் உறையும் ஓமை மரங்கள் முல்லை திரிந்த பாலைப் பரப்பிலே இருந்தன (அகம். 297: 11). கிளைத்த அடியினையுடைய ஓமை மரங்கள் உயர்ந்துள்ள காட்டின் நீண்ட வழியே தலைவி தலைவனுடன் சென்றாள் (அகம். 369:16-21). பொரி பொருந்திய அடியினை யுடைய ஓமை மரத் தினை ஆண்யானை குத்தியமையால் பட்டை உரிந்து தோன்றிய சிவந்த அடிமரத்தினை யாமரத் தில் உள்ள பருந்து ஊன் எனக் கருதி வந்து தங்கும் (அகம். 397:10-13). காட்டு யானையால் மேற்பட்டை உரித்துத் தின்னப்பட்ட பொரிந்த அடியையுடைய ஓமை மரத்தின் வற்றல் கிளையிலிருந்து தனிமை யையும் வருத்தத்தையும் வெளிப்படுத்தும் குரலு டன் சேவற் புறா பெடையை அழைக்கும் (குறு. 79:1-4). பாலை நிலத்தில் உள்ள ஓமை மரங்களை யுடைய பெரிய காடு, உமணர் சேர்ந்து கடந்து சென்ற விரிந்த பாழான ஊர்போலக் காட்சி யளித்தது (குறு. 124:1,2). பாலை நிலத்திலுள்ள ஓமை மரத்தின் கிளையிருந்த, இனத்தினின்றும் பிரிந்த பருந்தின் தனிமையைத் தோற்றுவிக்கும் ஒலி சுரம் செல் மக்கட்கு உயவுத் துணையாகும்

(குறு. 207: 2-4). புல்லிய அடியை யுடைய ஓமை மரங்கள் கன்றில்லாத ஒற்றைப் பசுவை நிழலினால் தம்பால் வரச் செய்யும் பாலை நிலங் களைக் கடந்து தலைவன் பொருள் தேடச் சென் றான (குறு. 260:8,9). உலர்ந்த கிளையை யுடைய ஓமை மரத்தினைக் குத்திய களிறு, வேனிற்குன்றத் தின் அடிவாரத்தில முழங்கும் இடி ஒலியைக் கூர்ந்து கேட்கும் (குறு. 396.3-6). ஓமை மரங்கள் நெருங்கிய காடு உப்புப் பூத்த களரையுடையதாகவும் மிகுந்த வெப்பமுடையதாகவும் செல்லுதற்கரிய நெறியுடை யதாகவும இருக்கும் (நற். 84:8,9). புல்லிய இலையை யுடைய ஓமை மரங்கள் செறிந்த புலி வழங்கும் சுரநெறியில் தலைவன் பொருள் தேடச் செல்வான் (நற். 107: 6, 7; ஐங். 316: 4, 5). மலையருவியின் கண்ணே பொருந்திய நீரில்லா நீண்ட நெறியில் பிடியின் பசி போக்கக் களிறு முறித்துத் தள்ளிய வளைந்த அடியினையுடைய ஓமை மரம் சுரத்தில் செல்பவருக்குத் தங்கு நிழலாகும் (நற். 137: 4-8). யாமரங்கள் உயர்ந்து ஓமை மரங்கள் நீடிய காடிடை யிட்ட சுரத்து வழியில் தலைவியைத் தலைவன் கொண்டுதலைக் கழிந்தான் (நற். 198:1-3). பாலை வழியில் ஓமை மரத்தின் பட்ட கிளைகளுள் மறைந்து தங்கிச சிள்வீடு ஒலிக்கும (நற். 252:1,2). பாலை வழியில் பசியை யுடைய பிடி உதைத்து மேற்பட்டையைப் பெயர்தெடுத்த ஓமையின சிவந்த அடிமரம் ஞாயிற் றொளியில் ஆண் புலியோடு போர்செய்த யானையின் புண்ணை யுடைய கால் போல் விளங்கும் (நற். 279: 5-8). பருத்த அடியையுடைய ஓமையின் கிளையிலுள்ள இலை தீய்ந்தமையால் புள்ளிபட்ட நிழலில் தலை வன தலைவியுடன் தங்கியிருந்த போது அவர்களை நடுக்கப் படுத்தாது யானை ஓமைமரத் தழையை ஒடித்துத்தின்றது (நற். 318:2-5). பருந்தின பேடை விரிந்த தலையையுடைய ஓமை மரத்தின் கிளையி லேறிக் கேட்போர் தனிமைத் துன்பம் கொள்ளு மாறு சேவலை அழைக்கும் (ஐங். 321:1-3).

**ஓய்மான் நல்லியக் கோடன்** - குறுநில மன்னன். சிறந்த கொடை வள்ளல். ஓய்மான் நாட்டு நல்லியக் கோடன் என்றும் இவனை வழங்குவர் (சிறு. அடிக் குறிப்பு). இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் இவனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு சிறுபாணாற்றுப்படை பாடி யுள்ளார். இவன் பேகன் முதலிய வள்ளல் எழுவர்க்குப் பின் வாழ்ந் தவன் என்பதும் இவன் காலத்தில் இவனையொத்த வள்ளல் யாரும் இருந்திலர் எனபதும் இவன் ஆண்ட ஓய்மான் நாட்டில் கிடங்கில் (இன்றைய திண்டிவனத்தைச் சார்ந்த ஊர்களில ஒன்று) மாவிலங்கை, எயிற்பட்டினம், வேலூர் (இன்றைய உப்பு வேலூர்) ஆகிய ஊர்கள் சிறநது விளங்கின என்பதும் சிறு பாணாற்றுப்படையால் விளங்குகின்றன. இவன நாகர் வகுப்பினுள் ஒரு பிரிவாகிய ஓவியர் குடியிற் பிறந்தவன் என்பர் உ. வே. சா. புறத்திணை நன்னாகனார் இவனைத் தாம் பாடிய ஒரே பாடலில் (புறம். 176) 'இல்லோர் கூறும் புகழை மாலையாக உடையவன்; வளமிக்க மாவிலங்கை என்னும் ஊர்க்குத் தலைவன்; புலவர் வேண்டும் பொழுது வேண்டும் பொருள் கொள்ளுதற் கேற்ற செல்வி யுடையவன்' எனப் பாராட்டி யுள்ளார். ஓவியர் பெருமகன் காண்க.

**ஓய்மான் நல்லியாதன்** - குறுநில மன்னன். ஓய்மான் நல்லியக் கோடனுக்குப் பின ஓயமானாட்டை மாவிலங்கை என்னும ஊரிலிருந்து ஆண்ட இவனது பெயர் ஓய்மான் விலலியாதன என்ற பாடவேறு பாட்டோடும காணப்படுகின்றது (புறம. 376: உ.வே. சா.பதிப்பு). இவனைப் பாடிய புறத்திணை நன்னா கனாராலேயே பாடப்பட்ட மற்றொரு புறப் பாடலின்கீழ (புறம். 379) ஓய்மான் வில்லியாதனைப் பாடியது எனத் தெளிவாக வரும் குறிப்பினைக் கொணடு இவனுக்கும் அப்பெயரையே துணிவர் ச. வையாபுரிப்பிள்ளை (ச.இ.). இவன் இரவலர்க்கு எளிவந்து அளிசெய்பவன் என்பதைக் கிணைப் பொருநன் கூற்றில் வைத்து அழகுறப பாடி யுள்ளார் நன்னாகனார். மாலைப் போழ்தில் தன் மனையகத்து வநது நெற்கூட்டி னடியில் நின்ற வறிய பொருநனது இடையில் சிதறிக் கிழிந் திருந்த உடையை மாற்றி வேறுடை தநது அணி வித்துப் பின் கள்ளும இறைச்சியும் உண்பித்து அவ்விரவுப் போழதிலேயே மிக்க செல்வத்தையும் நலகினான் என்று இவனை அப்பொருநன பாராட்டுகின்றான். தனனிடத்துப் பரிசில் பெற் றோர் பிறரிடத்துச சென்று இரகக வேண்டாத அளவு பெரும்பொருளை நலகும் இவன பணபும் அப்பாடலில சிறப்பாகப் புலபபடுத்தபபடுகினறது.

**ஓய்மான் வில்லியாதன்** - குறுநில மன்னன். இவன இலங்கை எனனும் ஊர்க்குத் தலைவன் (புறம். 379). இவ்விலங்கை ஓய்மான நல்லியக்கோடன் ஆணட மாவிலங்கை என்பதும் வில்லியாதன் ஓயமான நலலியக்கோடனின் பரம்பரையைச் சார்நதவன் என்பதும் ஊகித்து அறியப்படுகின்றன. புறத திணை நன்னாகனார் புறநானூற்றில் இரு பாடல் களால் (376,379) இவனைப் பாராட்டியுள்ளார். தம்மை அன்புடன் வரவேற்றுச் சிறந்த ஆடை அணிகளையும் உணவையும் தந்தான எனறும் அதனால் தமக்குப் பிறன்கடை செலலும் நிலை

இல்லாதாயிற்று என்றும் பாராட்டியுள்ளார் (376). ஓய்மான வில்லியாதனிடம் பெருவளம் பெற்ற கிணைப் பொருநன் அவன் சிறப்பைக் கூறல (379).

**ஓய்மானாடு** - தொண்டை நாடும் நடுநாடும் அடங்கிய பெருநிலப்பகுதி. இதனை நல்லியக்கோடன் ஆண்ட மையான் ஓயமானாட்டு நல்லியக் கோடன என அழைக்கப் பெற்றான (பத்துபபாட்டு - பாடப்பட்டோர் வரலாறு - உ.வே.சா).

**ஓரம்போகியார்** - புலவர். இப்பெயர் ஓரம்போதியார் எனறும் ஓரோ போகியார் என்றும் சில ஏடுகளில் உள்ளது (புறநானூறு-பாடினோர் வரலாறு,பக். 11). இவர் ஐங்குறுநூறு மருதத்திணையில் 100 பாடல்களும் அகநானூறறில் 2 பாடல்களும் குறுந்தொகையில் 5 பாடலகளும் நற்றிணையில் 2 பாடல்களும் புற நானூற்றில் 1 பாடலும் ஆக 110 பாடல்கள் இயற்றியுள்ளார். இவற்றில் 107 பாடல்கள் மருதத் திணையின் வளததைப் புலப்படுத்துவன. இவர் தமிழ்நாட்டரசர் மூவராலும் பிற கொடைஞரா லும் நன்கு மதிக்கப் பெற்றவர். சேரமான் ஆத னெழினி, சோழன் கடுமான கிள்ளி, பாண்டியன. மததி, விராஅன ஆகியோர் இவரால் பாடப்பட்ட வராவர். இவர் பாடலில ஆமூர், இருப்பை, கழார், தேனூர் ஆகிய ஊர்களும் காவிரி, வையை ஆறுக ளுும இந்திரவிழவு, தைநீராடல முதலியனவும் குறிப்பிடப் பெறறுள்ளன.

**ஓரான்வல்சி** – ஓராவினால் பெறும் வளத்தினால் ஆன எளியவாழ்வு. 'ஒரு பசுவினால வரும் ஊதியம் கொணடு உண்ணும் செல்வச சிறப்பில்லாத நின் குடும்பவாழ்க்கை, மிக்க அழகுடைய இளைய தலைவி உனக்கு வாழ்க்கைப் பட்டதனால் இப் பொழுது விழாவுக்குரிய வளம் பெறறது; இதத கைய தலைவியை நததுப் பரத்தைவயிற செனற னையே' எனத தோழி தலைவனை இடிததுரைத தாள் (குறு. 295.3-6).

**ஓரி** - வள்ளல் எழுவருள் ஒருவன். அம்பு எய்தலில் மிக்க ஆற்றலுடைய னாதலின் வல்வில் ஓரி என்ப. இவன் எயத அம்பு யானையை வீழ்த்தி, புலியைக் கொனறு, புள்ளிமான் கலையை உருட்டி, பன் றியை வீழ்த்தி, ஆழ்ந்த புற்றின்கண் கிடக்கும் உடும் பில் தைத்து நின்றது என வன்பரணர் இவன் வில் லாற்றலைப் பாராட்டுவர் (புறம். 152:1-6). காட்டில் வேட்டை யாடும்பொழுது வந்த வன்பரணர்க்கும் அவர் சுற்றத்தார்க்கும் தான் யார் என்பதையும் சொல்லாமல் தான் வேட்டையாடிய மானின் கொழு விய தசைப்புழுக்குடன் மதுவையும் தந்து உண்ணச் செய்து நல்ல பொன்னை மணித் திரளுடன் தந் தான் (புறம். 152). இரப்போர்க்கு இழையணி யானையை வழங்கும் ஓரியின் கொடை மிகுதியால பசிமறந்த பாண்சுற்றம் தமக்குரிய ஆடலும் பாட லும் மறந்தது என வன்பரணர் அவன கொடையை ஏத்துவர் (புறம். 153). பரிசில் தாழ்த்த ஓரியிடம், 'மழைபோல வரையாது கொடுக்கும் வண்மையுடை யோய், நீ எனக்கு வழங்கா யாயினும் நின்னை வெறேன்; வாழ்வாயாக' எனக் கழைதின் யானை யார் பாடினார் (புறம். 204:12-14). காரி என்னும் பெயருடைய குதிரையைக் கொண்ட காரியுடன், ஓரி என்னும் பெயருடைய குதிரையைக் கொண்ட ஓரி போர் செய்தான (சிறு. 110,111). பழங்கள் மிக்க பலாமரங்கள் நிறைந்த கொல்லிமலை ஓரிக்கு உரி யது (அகம். 208:21,22). முள்ளூர் தலைவன் காரி, நல்லிசை ஓரியைக் கொன்று அவனுக்குரிய கொல்லி மலையைச் சேர மன்னர்க்கு உரிமை யாக்கினான (அகம். 209:12-15). கைவண்மை யுடைய ஓரி திண் ணிய தேரையுடையான் (குறு. 199:2,3). வெம்போர் செய்யும் வீரர்தம் தலைவனாகிய ஓரி சிறந்த கொடைஞன் (நற். 52:8,9). மழையன்ன கொடையும் கள்ளுணவுமுடைய ஓரியின் கொல்லி மலையிலிருக் கினற செருக்கிய மயில் போன்றவள் தலைவி (நற். 265:7,8). பழைமை யாகிய வெற்றியை யுடைய கொலலிமலைத் தலைவன் ஓரியைக் கொன்ற காரி, ஓரியின் தெருவில புகுநததைக் கண்ட ஓரியைச் சார்ந்தோர் பேராரவாரம செய்தனர் (நற். 320:4-7).

2. ஆண்மயிர். கோவலர் பசுவைக் கறந்த கையி லுள்ள பாலைத் தம் ஓரியில் - மயிரில் - தடவுவர் (பெரு. 172). உடன் போக்கிற் செல்லும் காதலரை இடைச்சுரத்திற் கண்டோர், 'இளமையில் இவள் ஐம்பாலை இவன பிடித்து இழுக்கவும் இவனது ஓரியை இவள் வளைத்து இழுகக ஓடவும் சிறு சண்டையிட்டவர் இனறு இணைபிரியாத துணை வராயினர்; என்னே ஊழின வலிமை' என வியந் தனர் (குறு. 229). காவலிற் பட்ட தலைவி இரவுக் குறிக்கண் தலைவன் வரவறிந்து ஓரி சிதைய, தோகை மெலிய, மயில் வலையிலகப்பட்டு வருநதி யதைப் போல வருநதினாள் (ஆடவன் மயிரைக் குறிக் கும் ஓரி என்ற சொல இங்கே ஆண் மயிலின் கொண்டையைக் குறித்தது (குறு. 244:4-6). அழகு செய்யப் பெற்ற முது கிலே கிடக்கின்ற ஓரியையுடைய தலைவன், நொது மலர் வரைய வந்த விடத்தும் தான் வரைய முய லாது வருந்தினான் என்று ஊரார் கூறுவர்; ஆத லால், விரைந்து வரைந்து கொள்ளுமாறு சொல்லி வா எனத் தலைவி தோழியை வேண்டினாள் (கலி. 114:1-6).

3. தேன் முதிர்தலாற் பரக்கும் நீலநிறம். பாரியின் பறம்பு மலையில் உழவர் உழாமலே விளையும் நான்கு பொருள்களுள் அழகிய நிறமான ஓரி-நீல நிறம் - பரந்தமையால் கூட்டிலிருந்து ஒழுகும் முதிர்ந்ததேன் ஒன்றாகும் (புறம்.109:7,8). நன்னனது அரண்மனைத் தலைவாசலில் நிறைந்திருந்த கையுறைப் பொருள்களில், முற்றியமையால் ஓரி பரந்த சிறந்த தேனையுடைய இறால்களும் இருந் தன (மலை. 524,525).

4. ஆண்குரங்கு. பாரியின் குன்றத்தில் ஓரி-ஆண் குரங்கு-பாய்தலின் தேனிறால் சிதைந்து தேன் சொரியும் (புறம். 109:7,8).

5. பிடரிமயிர். கரிகாற் பெருவளத்தான் சாதிலிங்கம் ஊட்டின உளை அசைய ஓரி-பிடரிமயிர்-நுடங்கும் நான்கு குதிரைகளைப் பூட்டிய தேரைப் பொரு நர்க்கு வழங்கினான் (பொரு. 164,165).

6. நரி. சோழன் கரிகாற் பெருவளத்தான் தன் னொடு பகைத்தவர் நாட்டைப் பாழ்செய்தமையின் அங்கு நெருஞ்சியும் அறுகம்புல்லும் மண்ட, கொடிய வாயையுடைய ஓரி -நரி- பிறர்க்கு அச்சந் தோன்ற ஊளையிட்டது (பட். 256,257).

7. குதிரையின் பெயர். ஓரிக்குதிரை காண்க.

**ஓரிக்குதிரை** - குதிரையின் பெயர். ஓரிக்குதிரையைக் கொண்ட ஓரி, காரிக் குதிரைக் காரியுடன் பொரு தான் (சிறு. 110,111).

**ஓரியர்** - மோரியர். மோரியர் என்பது ஓரியர் என வழங்கும் (த. பே. பக். 628). மோரியர் காண்க.

**ஓரிற்பிச்சையார்** - புலவர். இவர் இயற்பெயர் தெரிந் திலது. இவரது ஒரே பாடல் குறுந்தொகையில் (277) இடம் பெற்றுள்ளது. பல வீடுகளிற் சென்று ஐயம் பெற்றுண்ணும் இரவலரது பிச்சை போலாது ஒரு வீட்டிற் பெற்றுண்ணும் அறிவரது பிச்சையை ஓரிற் பிச்சை என்று இவர் குறித்துள்ளார். இச்சிறப்பு நோக்கி இவர் ஓரிற்பிச்சையார் என்னும் பெயர் பெற்றுள்ளார்.

**ஓரேருழவர்** - புலவர். இவர் இயற்பெயர் தெரிய வில்லை. வினைமுற்றி மீளும் தலைமகன் தலை மகளைக் காண்டற்கு விரையும் தன்னெஞ்சிற்கு ஈரச் செவ்வியில் விதைத்தற் பொருட்டுக் கொல் லையை உழுதற்கு விரையும் ஓர் ஏர் உழவனை உவமை கூறிய சிறப்பால் இவர் இப்பெயர் பெற் றார் (குறு. 131) தம்முடைய பிறிதோர் செய்யுளில் (புறம். 193) இல்லறத்தை வெறுத்துக் கூறுதலின் இவர் துறவறத்தில் விருப்புடையாரென்று கருத இடமுண்டு. மேற்கூறிய இரு செய்யுட்களே (குறு. 131; புறம். 193) இவர் இயற்றியவை. [குறுந் தொகை 131-ஆம் செய்யுளை நக்கீரர் இயற்றிய தாக வையாபுரிப்பிள்ளை கொள்வர்.]

**ஓரேருழவன்** - ஓர் ஏருடைய உழவன். இவன் மழை யீரம் வீண்படாமல் ஓர் ஏரைக்கொண்டே உழ வேண்டியவனாதலால் விரைந்து செயற்படுவான். வினைமுற்றி மீளும் தலைமகன் நெஞ்சம் தலை வியை அடைய விரையும் விரைவுக்கு ஓரேருழவன் விரைவு உவமையாக வந்தது (குறு. 131).

**ஓரை** - ஒருவகை விளையாட்டு. ஓரை ஆயத்து - விளை யாட்டுக் கூட்டத்தில் - ஒண்டொடிமகளிர் கேழற் பன்றி உழுத கருஞ்சேற்றைக் கிளறின் யாமை ஈன்ற புலால் நாறும் முட்டையைத் தேன் மணக் கும் ஆம்பற் கிழங்கொடு பெறுவர் (புறம். 176:1-4). மகள் உடன்போக்கு மேவுதலை அறியின் காவல் பொருந்திய பெருமனையில் அவள் செல்லுமிடந் தோறும் உடம்பின் நிழல்போலச் சென்று, மாலை யணிந்த ஆயமொடு விளையாட்டினை மேற் கொண்டு சிலம்பொலிப்ப அவள் விளையாடுமிடந் தோறும் 'அகலா திருந்திருப்பேன் எனத் தலை வனுடன் போயின மகளை நினைந்து செவிலி வருந்திக் கூறினாள் (அகம். 49:13-18). மாலை யணிந்த ஆயமொடு வண்டல் இயற்றி ஓரை ஆடி னாலும் மகள் மேனிவாடும் எனச் சினக்கும் தாய், தலைவன் களவுப் புணர்ச்சி விரும்பிப் பகற் குறி வருதலை அறியின் இற்செறிப்பாள் எனத் தோழி தலைமகற்குக் கூறி வரைவு கடாயினாள் (அகம். 60:10-15). சிறப்புமிக்க இல்லத்தில் சிலம் பொலிக்க ஓரை ஆயமொடு சிறிது நேரம் பந்து விளையாடினும் சீறடி நோகுமென்று கருதி வருக என்றழைத்துத் தாய் பொற்கிண்ணத்தில் பாலூட்டு வாள் (அகம். 219:1-7). பூந்தாதாற் செய்யப் பெற்ற தண்பனியிற் கிடந்த பாவை, காலை வெயிலிற் கிடந்து வருந்தும் துன்பத்தினை நீக்குக என ஓரையாயம் கூறக் கேட்டும் அதனைச் செய்யாமல் தலைவி வருந்தினாள் (குறு. 48:1-4). கடலைச் சார்ந்த அடைகரையில் ஓரைமகளிர் நண்டினை அலைக்க, அது துன்புற்று ஓடுங்கால் கடலலை அடித்துச்சென்று அதன் துன்பத்தை நீக்கும் (குறு. 316:4-7). அடும்புமலரைக் கலந்து நெய்தல் மல ரோடு தொடுத்த மாலையணிந்த நீர்வார் கூந்தலை யுடைய ஓரைமகளிருக்கு அஞ்சி நண்டு கடலிற்கு விரைந்தோடும் (குறு. 401:1-4). விளையாடும் ஆய மோடு ஓரையாடாது மகளிர் இல்லிடத்துச் செறிந் திருத்தல் அறனுமன்று; ஆக்கமும் தேயும் (நற். 68: 1-3). மகள் உடன்போக்கு மேவியதறிந்து மணல் பரப்பிய மாளிகை முற்றத்து ஓரை ஆயமும் ஆடு

